# ஸ்ரீமத் கம்பராமாயணம்

## சுந்தர காண்டம்

௨

மகாமகோபாத்யாய, டாக்டர்
உ. வே. சாமிநாதையர் நூல்நிலையம்
திருவான்மியூர், சென்னை-41

உ

மகாமகோபாத்யாய டாக்டர் உ. வே. சாமிநாதையர்
நூல் நிலைய வெளியீடு - 15

ஸ்ரீ

# கம்பராமாயணம்

# சுந்தர காண்டம்




பல பிரதிகளை ஆராய்ந்தும், ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்புக்களின் உதவியைகொண்டும் திருந்திய மூலபாடம், நூதனமாக எழுதிய பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன்



நூல் நிலையத்தின் பதினான்காவது ஆண்டு மலராக
வெளியிடப்பெற்றது



துன்முகி ௵ மாசி மீ

அடையாறு] 1957 [சென்னை-20.

பாரத அன்னையின் அருந்தவப் புதல்வரும்,

உலகவாம் அறிவும் ஆற்றலும் அமைந்தவரும்,

சால்பு மிக்க சீரிய தமிழரும்,

மகாமகோபாத்யாய டாக்டர் ஐயரவர்கள்பால்

பெருமதிப்புக் கொண்டவருமான

ஸசிவோத்தம, டாக்டர்,

**ஸ்ரீ. C. P. இராமஸ்வாமி ஐயர்**

அவர்களுக்கு

இப்பதிப்பு

மிகுந்த நன்றியுடன்

ஸமர்ப்பணம் செய்யப்பெறுகிறது.




# உள்ளுறை

உ

ஸ்ரீராமஜயம்

# பதிப்புரை

**கற்பா ரிராம பிரானை யல்லால் மற்றுங் கற்பரோ**
**புற்பா முதலாப் புல்லெறும் பாதியொன் றின்றியே**
**நற்பா லயோத்தி யில்வாழுஞ் சராசரம் முற்றவும்**
**நற்பா லுக்குய்த் தனன் நான்முகனுர்பெற்ற நாட்டுளே.**

(திருவாய்மொழி).

மகாமகோபாத்யாய தாக்ஷிணாத்ய கலாநிதி டாக்டர் ஸ்ரீ ஐயரவர்கள் இந்நூற்றாண்டில் வாழ்ந்த தமிழ் மகோபகாரிகளுள் மிகச் சிறந்தவராக விளங்கினமை உலகம் அறிந்ததே. அவர்கள் கம்பராமாயணத்தில் மிகுந்த ஈடுபாடுடையவர்களாக இருந்தார்கள். தம் ஆசிரியர்பால் கம்பராமாயணம் கேட்ட செய்தியை அவர்கள் தம், "என் சரித்திரத்தில்" (பக்கம் 533) விளக்கமாகக் கூறியிருக்கிறார்கள். சங்க இலக்கியங்களை நாடி அவர்கள் நாடெங்கும் அலைந்தபோது, ஆங்காங்கே சிறந்த புலவர்களின் இல்லங்களிலிருந்து தமக்குக் கிடைத்த அரிய இராமாயண ஏடுகளையும் அவர்கள் சேகரித்து வந்தார்கள். அவற்றையும் அச்சுப் பதிப்பு இராமாயண நூல்களையும் ஒப்பிட்டு, சிறந்த பாடங்களைக் காண்பதில் அவர்கள் பற்பல ஆண்டுகளைச் செலவிட்டிருக்கிறார்கள். அவ்வாராய்ச்சிக் காலங்களில் அவர்கள் அவ்வப்பொழுது கண்ட முடிவுகளையும், கருத்துக்களையும் வழக்கம்போல் தம் கைப்புத்தகங்களிலும், தனிக்குறிப்புப் புத்தகங்களிலும் குறித்துவைத்தார்கள். இவ்வாறு பல ஆண்டுகள் கம்பராமாயணத்திற்காகச் செலவிட்ட அவர்களே இந்நூலை வெளியிடாமற் சென்றது தமிழகத்தின் பாக்கியக் குறைவேயாகும்.

ஸ்ரீ ஐயரவர்கள் காலத்துக்குப்பின் அவர்களுடைய அருந்தனமான ஓலைச் சுவடிகளைக்கொண்டு இந்நூல்நிலயத்தை நிறுவி, இதன் கௌரவ அமைச்சராகப் பல்லாண்டுகள் பணியாற்றி வந்த அவர்களின் தனயரான ஸ்ரீமான் கலியாணசுந்தரையரவர்கள் இந்நூல் நிலயத்தின் முதற் கடமை கம்பராமாயணப் பதிப்பை எடுத்துக்கொள்வதே என்று கொண்டு, அம்முயற்சியில் பல ஆண்டுகள் ஈடுபட்டனர். அவர்களின் முயற்சியினால், **பாலகாண்டமும், அயோத்யா காண்டமும்** வெளிவந்தன. இவற்றைப் பதிப்பிப்பதில் பெரும்பங்கை ஏற்றுக்கொண்ட வித்வான் எஸ். ஜி. கணபதி ஐயர், எம். ஏ., வித்வான் வி. மு. சுப்பிரமணிய ஐயர் எம். ஏ., ஆசிரியர் எல். ஸ்ரீநிவாஸ ஐயர் ஆகியோர்க்குத் தமிழுலகம் பெரிதும் கடமைப்பட்டுள்ளது. பின்பு ஆரணிய காண்ட

மும், கிட்கிந்தா காண்டமும் ஆராயப்பெற்று வந்தகாலத்தில் ஸ்ரீ கலியாணசுந்தரையர் அவர்கள் காலமானது மிகவும் வருந்தத் தக்கதாகும்.

அந்நிலையில், அண்ணுமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தரும், அருங் கலை விநோதருமான டாக்டர் ஸி.பி. இராமஸ்வாமி ஐயரவர்கள் அப் பல் கலைக்கழகத்தையும், இந்நூல் நிலயத்தையம் கம்பராமாயணப் பதிப்பு முயற்சியில் ஒன்றுபடுத்தித் தமிழ் உலகுக்கு நன்மைபுரிய வேண்டு மென்று கருத, அக்கருத்தைப் பல்கலைக்கழகத்தினரும், இந்நூல்நிலய அத்யக்ஷகரான ஸ்ரீமதி ருக்மிணி தேவியார் அவர்களும் ஏற்றுக்கொண்ட னர்; அவர்களின் ஆலோசனைப்படி சுந்தரகாண்டம் விரிந்த ஆராய்ச்சி செய்யப்பெற்று ஸ்ரீ ஐயரவர்களின் பதிப்பு முறையில் வெளியிடப் பெறவேண்டுமென்று தீர்மானிக்கப் பெற்றது. அத்தீர்மானத்தை ஒட்டி இவ்விரு நிலயங்களும் கூடி உழைத்து 19—2—55 அன்று ஸ்ரீ ஐயரவர் களின் நூருவதாண்டு விழாவன்று, சென்னைக் கவர்னர் ஸ்ரீ ஸ்ரீ பிரகாசா அவர்களின் தலைமையில், காலஞ்சென்ற ஸ்ரீ இராமஸ்வாமி நாயுடு அவர் களால் சுந்தரகாண்டத்தின் முதற்பகுதி வெளியிடப்பெற்றது.

அப்பால், பல்கலைக்கழக ரிஜிஸ்ட்ரார் அவர்கள் அனுப்பிய எண் 577 B/55; 5-4-55 தேதிஉள்ள கடிதத்திருல் பல்கலைக்கழகம் இந்நிலயத் துடன்கொண்ட கூட்டுமுயற்சி நின்றிடவே, இந்நூல் நிலயத்தின் ஆட் சிக் குழு, தன் 10-4-55, தேதிக் கூட்டத்தில் ஸ்ரீ ஐயரவர்கள் கொண்ட பாடங்களையும், அவர்கள் குறித்துவைத்த குறிப்புக்களையும் விடாமற் கொண்டு, நிலயத்திலுள்ள சுவடிகளையும் பிற கருவிகளையும் மற் ருெரு முறை ஆராய்ந்து, சுந்தரகாண்டப் பதிப்பொன்றைப் பதவுரை, விளக்கவுரை முதலியவற்றுடன் இந் நூல் நிலயம் வெளியிடவேண்டு மென்று முடிவு செய்தது. அம் முடிவின் விளைவே இப்பதிப்பாகும்.

**இப்பதிப்புக்கு உதவிய கருவிகள்**

I. இப்பதிப்பிற்குப் பயன்பட்ட சுவடிகளுள் இந்நிலயத்திலுள் ளவை 18; பிற இடங்களிலிருந்து பெற்றுப் பார்த்தவை 34; அச்சுப்புத் தகங்கள் 10 ஆகும். அவற்றை ஒருவாறு பிரதேச வாரியாகப் பகுத் துக்கொண்டு ஆராய்வதற்கு இடமிருந்ததால், அவ்வாறு செய்து கொள்ளப்பட்டன. அவற்றுள், இந்நூல் நிலயத்தின் **சுவடிகளின் விளக் கம்** என்ற வெளியீட்டின்படி உள்ள, 357-8, 361-2, 366-9, 398, என்ற ஒன்பது ஓலைச் சுவடிகளும், ஒரு பழைய காகிதப் பிரதியும் தென்பாண்டி நாட்டைச் சார்ந்தவை என்பது அச்சுவடிகளிற் கண்ட குறிப்புக்களால் அறியப்பெறும். அவை காலத்தால் பழமையும் வாய்ந்தவை; சிறந்த புலவர்களின் இல்லங்களிலிருந்து பெறப்பெற்றவை. அவையாவும் இக் காண்டத்தில் 16 படலங்களையும் 1295 பாடல்களையும் கொண்டுள் ளவை. 1951-ஆம் ஆண்டில் ஆழ்வார் திருநகரிலிருந்து ஸ்ரீ பெரியன் வெ. நா. ஸ்ரீநிவாஸையங்கார் அவர்களால் வெளியிடப்பெற்ற சுந்தரகாண்டம்

இச்சுவடிகளில் சிலவற்றைப்பின்பற்றி அச்சிடப்பெற்றதாகக் காண்கிறது. ஸ்ரீ ஐயரவர்களின் கைப்புத்தகங்களிற் கண்டதிருத்தங்களுட் பெரும்பாலன இச் சுவடிகளிற் காணும் பாடங்களாகும். இப்பிரதிகள் பல வழிகளுள் தம்முள் மிகுந்த ஒப்புமை உடையனவாயினும், பாட பேதங்கள் சுவடிகள் தோறும் பல காணப்படுகின்றன. இவற்றுள் சிறந்த பாடமெனத் தேர்ந்தெடுப்பதற்கு அரிய முயற்சி வேண்டுவதாயிற்று.

இச்சுவடிகளுள் சிறந்தனவாகக் கொண்டவற்றைப் பற்றிச் சில கூறுவோம்.

எண் 366 ஸ்ரீ இரத்தினக் கவிராயர் வீட்டுப் பிரதி; அது கொல்லம் 806 (கி. பி. 1630) இல் எழுதப் பெற்றது; எண் 358, கொல்லம் 918. (கி.பி. 1743) இல் தொடங்கி, கொல்லம் 363, (கி.பி. 1777) இல் முடிவு பெற்றது. இதன் முடிவில், "நாலு தேசங்களிலுமுள்ள இராமாயணச் சுவடிகள் 49 ஐப் பாடம் வைத்துக் கொண்டு சோதித்துக் கொல்லம் 918 ஆம் ஆண்டுமுதல் 953ஆம் ஆண்டு ஏவிளம்பி வருஷம் ஆவணி மாதம் 9ங் தேதிவரை பிழைதிருத்தி இராமாயணம் திருவேங்கடம் எழுதிவைத்த ஏடு. 977-ஆம் ஆண்டு கோட்டாற்றில் வைத்தியநாதன் செட்டியார் இராமாயணம் வாசிக்க வைத்தபோதும் இராமாயணம் இராமஸ்வாமியும் ஒருதரம் பிழை பார்த்தான்" என்ற குறிப்பு காணப் படுகிறது. அன்றியும், ஒவ்வொரு காண்டத்தின் இறுதியிலும் அது எழுதி முடிந்த காலமும் குறிக்கப்பெற்றிருக்கிறது. எண் 367, ஸ்ரீ ஈசுவரமூர்த்திக் கவிராயர் வீட்டுப் பிரதியாகும். இதன் காலம் தெரிய வில்லையாயினும் இதன் பாடங்கள் சிறந்தனவாகக் காணப்படுகின்றன. எண் 398, ஒரு பழைய குறிப்புரையாகும். இதுவும் மேற் கூறிய ஏடுகளின் வரிசையையே சார்ந்தது. இதனில் மூலமில்லாவிட்டாலும், எடுத்துக்கொள்ள வேண்டிய, பாடல்களையும் விடவேண்டிய பாடல்களையும் திட்டப்படுத்துவதற்கும், பொருளின் அருமையைக் காண்பதற்கும் இது பயன்பட்டது. இப்பதிப்பில், உரைப்பகுதியில் **பழைய உரை** என்று குறித்திருப்பன இச்சுவடியிலிருந்து எடுக்கப்பெற்றனவே. இவ்வுரைச் சுவடியைப்பற்றி ஸ்ரீ ஐயரவர்கள் எழுதிவைத்துள்ளதாவது:- "பரம்பரையாகக் கேட்டுவந்தவர் பாடம் சொல்லியபோது ஒருவர் குறித்ததாகத் தெரிதலால், இது நூலின் பெருமையைக் காட்டக் கூடியது......பழைய கருத்து விளங்குவதாக உள்ளது...... சிறந்த தமிழ்ப் பண்டிதர்களிருந்த ஊரிலிருந்தவருடைய கருத்தாகத் தெரிந்தமையின் இது மிகவும் தழுவுதற்குத் தக்கதாயிற்று. இவ்வுரைக்கு ஏற்ற பாடங்கள் பழைய கையெழுத்துப்பிரதிகளில் காணப்படுகின்றன". இவற்றோடு இவ்வரிசையைச் சார்ந்த ஒரு பழைய காகிதப் பிரதியும் இங்கு உண்டு. இவை யாவும் ஒருவகையினவாகக் கொள்ளத்தக்கன.

II. (கி. பி. 1889-93 வரை) தேவனும்பட்டணம் திருவேங்கட முதலியார் குமாரர் சடகோபமுதலியார், சித்திரபானு-விய ஆண்டு

களில் எழுதிய பழைய காகிதப்பிரதியொன்று மேலேகாட்டிய சுவடிக ளோடு பெரும்பான்மை ஒத்தும், சிறுபான்மை வேறுபட்டும் 1326 செய்யுட்களைக் கொண்டுள்ளதாய் இருக்கிறது. இதனை ஒட்டி 360, 365, 378 எண்கள் கொண்ட 3 ஓலைச்சுவடிகள் முறையே 1325, 1321, 1327 செய்யுட்களைக் கொண்டுள்ளன. இந்நான்கும் ஒருவகையெனக் கொள்ளற்பாலன.

**III.** எண்கள் 359, 377, என்ற இரண்டு சுவடிகள் மற்றொரு வகை. இவற்றிலுள்ள செய்யுட்டொகை, முறையே 1345, 1315 (?) இவற்றின் பாடங்கள் பற்பல இடங்களில் மிகச் சிறந்துள்ளன.

**IV.** பழைய அச்சுப் புத்தகங்களுக்கு ஒத்த பாடங்களைக் கொண் டுள்ள சுவடிகள் 364, 774 எண்கள் உடையவை. இவற்றிலுள்ள பாடல் கள் 1338, 1359. திரிசிரபுரம் கோவிந்தப் பிள்ளை, இராமாநுஜப் பிள்ளை, சுந்தரநாதன் பிள்ளை, சடகோபராமாநுஜாசாரியார் (முதற்பதிப்பு) இரா மரத்னமையர் ஆகியோரின் பதிப்புக்கள் இச்சுவடிகளின் பாடங்களையே பெரும்பாலும் கொண்டவை. இவை சோழநாட்டுக்கு உரியன ஆக லாம்.

**V.** 'யாழ்ப்பாணம் வண்ணார்பேட்டை வெள்ளாழன் முருகர் அம் பிகைபாகன்' என்றவரால் தாருண வருஷம் பங்குனி மாதம் எழுதப் பெற்றதும், ஸ்ரீ ஐயரவர்களால் ஆலங்குடிப் பிரதி என்று குறிக்கப் பெற்றதுமான (375-ம் எண்) சுவடி ஒன்று, பாடல்களையும் படலப் பெயர் களையும் பெரும்பாலும் முதற்பகுதியிற் குறிக்கப் பெற்ற தென்பாண்டிச் சுவடிகளைப் போலப் பெற்றிருந்தும், 20 படலங்களையும் 1359 செய்யுள் களையும் கொண்டுள்ளது. இச்சுவடியில் பிறசுவடிகளிலும் அச்சுப்புத்த கங்களிலும் காணாத பல அதிகப்பாடல்கள் உண்டு. அன்றியும், இதில் பாடல் தோறும் வேறு பாடங்கள் காண்கின்றன. இ∴து ஒரு தனிவகை.

இவ்வாறு இங்குள்ள பிரதிகள் 5 வகைகளில் பிரிக்கத் தக்கனவாக உள்ளன.

இவற்றிலிருந்தும், பல கம்பராமாயண அச்சுப்பிரதிகள், விமர் சனங்கள், கட்டுரைகள் முதலியவற்றிலிருந்தும் கிடைத்த பாடபேதங் களை வரைந்து கொண்டோம். இவற்றை ஆராய்ந்து, ஸ்ரீ ஐயரவர் களின் திருத்தங்களையும் பின்பற்றி, மூலபாடங்களைத் தயாரித்துக் கொண்டோம். இவ்வாறமைந்த மூலபாடம் தென்பாண்டிநாட்டுப் பிரதி களைப் பெரும்பாலும் ஒத்துள்ளது என்னலாம். சமீபகாலம் வரையில் கம்பராமாயண அச்சுப் பதிப்புக்கள் பலவும் ஒன்றுபோல் அமைந் திருக்க, அவற்றை எளிதில் ஒதுக்கத் துணியாது சுவடிகளின் ஆராய்ச்சி யால் பெற்ற நூதன பாடங்களைப் புகுத்துவதில் மிகுந்த அச்சமும் கவனமும் நிதானமும் கொண்டோம். அச்சுப் புத்தகங்களிலும் பிற நல்ல சுவடிகளிலும் அவ்வாறே உள்ள செய்யுட்களை அவ்வாறே

கொண்டும், வேறுபடும் இடங்களில், ஒரு செய்யுளில் பல சுவடிகளி லிருந்து பல மாற்றங்களைக் கொள்ளாமல், முழுச் செய்யுளும் நல்ல சுவடிகளில் எவ்வாறு அமைந்துள்ளதோ, அவ்வாறே கொண்டும் பதிப் பித்துள்ளோம்.

**படலப் பெயர்கள்**

ஒவ்வொரு வகைச் சுவடிகளிலும் படலப்பெயர்கள் மாறிக்கிடக் கின்றன. இப் பெயர்மாறுபாடுகள் பிற்காலத்தில் சுவடி எழுதுவோர் களாலும், படிப்போர்களாலும் ஏற்பட்டிருக்கும் என்பது எம் கருத்து. பழைய அச்சுப் புத்தகங்களில் உள்ள படலப் பெயர்களும் செய்யுட் களும் பெரும்பாலும் சோழநாட்டுப் பிரதிகளைப் (வகை iv) பின்பற்றி யுள்ளன. இப்பெயர்கள் படிக்கிறவர்களிடம் இப்பொழுது ஊன்றிவிட் டன. காண்டத்தின் கதைப்பொருளுக்கும், செய்யுள்களின் முறைகளுக் கும் அமைப்புக்களுக்கும், தென்பாண்டி நாட்டுப் பிரதிகளைப் பெரும்பா லும் பின்பற்றுவதை மேற்கொண்டுள்ள இப்பதிப்பு, படலப் பெயர்களை அச்சுப் பதிப்புகளில் உள்ளபடியே ஏற்றுக்கொண்டுள்ளது. என்பது குறிக்கத்தக்கது. அவ்வாறு செய்ததிலும் **காட்சிப் படலம்**, **நிந்தனைப் படலம்** என்றுள்ளனவற்றை, **காட்சிப் படலம்** என்ற ஒன்றேயாகத் தொகுத்துள்ளோம். இவ்வாறு செய்வதற்குக் காரணம் சுந்தரகாண் டப் படலப் பெயர்கள் யாவும் அநுமன் செயலாகவே அமைந்திருத்த லாலும், நிந்தனை, அவ்வாறு இல்லாமையாலும், காட்சி, நிந்தனை என்ற இரு படலங்களிலுள்ள செய்தி எல்லாம் அநுமன் காட்சியாகவே அமையுமாதலாலும், அவ்வாறு சேர்க்கப் பெற்றது. இப்படலங்கள் பழைய சுவடிகள் பலவற்றில் **காட்சி** என்னும் பெயரையோ, **நிந்தனை** என்னும் பெயரையோ பெறுமல், சானகி சோகப்படலம், வந்தனைப் படலம் என்று குறிப்பிடப்பெற்றுள்ளன. 374 என்ற எண்ணுள்ள ஒரு சுவடியில்தான் **காட்சி**, **நிந்தனை** என்ற பிரிவுகள் காணப்படுகின்றன என்பதும் கவனிக்கத்தக்கது. இவ்வாறு **காட்சி** என்ற ஒரே பெயருடன் அமைத்த முறை இந்நூல் நிலையத்துடன் சேர்ந்து ஆராய்ந்த அண்ணு மலைப் பல்கலைக்கழகப் பதிப்பிலும் அமைந்திருப்பது நோக்கத்தக்கது. இப்பதிப்பிலுள்ள படலங்கள் 14.

**செய்யுட்கள்.** இனி, இப்பதிப்பில் 1296 செய்யுட்கள் அமைந் திருக்கும் முறையைக் காண்போம். சுவடிகள் ஒவ்வொன்றிலுமுள்ள செய்யுட்களின் தொகைகளை மேலே குறிப்பிட்டுள்ளோம். அவற்றில், 1 வகைச் சுவடிகளிலுள்ள செய்யுட்டொகை 1295. இப் பதிப்பு முறை இவ்வகையையே சாரும். ஆனால் கடல்தாவு படலத்தில் 75ஆம் செய் யுளின் கீழ் அதிகப் பாடலாகக் காட்டப்பெற்ற பரவுக்குரல் என்று தொடங்கும் செய்யுள், தனியே பொருள் தொடர்பு இல்லாமையாலும், சந்தம் மாறுபட்டுள்ளமையாலும், இவ்வகையிலுள்ள சிறந்த ஒரு 367-

ஆம் சுவடியில் அப்பாடல் இல்லாமையாலும் இப்பதிப்பில் விடப்பெற்றது. உருக்காட்டு படலத்தின் இறுதியில் 606ஆம் செய்யுளும், சம்புமாலி வதைப் படலத்தின் முதற்செய்யுளான 812-ஆம் செய்யுளும் 1-ம் வகைச் சுவடிகளிலும், அச்சுப்பிரதிகளிலும் இல்லை. இவை பொருள் தொடர்புக்கு இன்றியமையாதனவாய் இருப்பதோடு வேறுவகைச் சுவடிகளுள் சிறந்தனவற்றில் காணப்பெறுவதாலும், இவைவேண்டு மென ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு உள்ளமையாலும் இப்பதிப்பில் நூதனமாகச் சேர்க்கப்பெற்றுள்ளன. இவ்வாறு இப்பதிப்பில் இக்காண்டச் செய்யுட்களின் தொகை 1295 — 1+2=1296 ஆயிற்று. இவ்விதம் இப்பதிப்பில் மூலபாடமாகக் கொள்ளப்பெற்ற 1296 செய்யுட்களை அன்றி, அச்சுப் புத்தகங்களிலும் சுவடிகளிலும் கண்டுள்ள பிறபாடல்கள் அதிகப்பாடல்களாகக் கொள்ளப்பெற்று ஆங்காங்கு உரிய செய்யுட்களின் கீழ் காட்டப்பெற்றுள்ளன. அச்சுப் புத்தகங்களில் கண்ட பல பாடல்கள் விடப் பெற்றமைக்குக் காரணங்கள் ஆங்காங்குங் குறிக்கப்பெற்றுள்ளன, ஆகவே, சுந்தரகான்டத்திற் குரியனவாகக் கிடைத்த செய்யுள்கள் யாவும் மூலபாடமாகவோ, அதிகப் பாடல்களாகவோ இப்பதிப்பில் வந்துள்ளமை காணலாம்.

இப்பதிப்பில், அச்சுப்புத்தகங்கள் பலவற்றுள்ளும் திருவடிதொழுத படலத்துள் காணப்பெறும், மதுவனச் செய்தி விடப்பெற்றுள்ளது. அநுமன் முதலியோர் மதுவனத்தில் நிகழ்த்திய வரலாறு பிற்காலச் சுவடிகள் பலவற்றிலும் அச்சுப் புத்தகங்களிலும் காணப்படுகின்றன. சில சுவடிகள் இதற்கெனவே **மதுவனப்படலம்** என்ற பெயரால் ஒரு தனிப்படலத்தையும் பெற்றுள்ளன, இச்செய்தி தென்னாட்டில் வழங்கும் வால்மீகி ராமாயணத்திலும் அத்யாத்மராமாயணத்திலும் உள்ளனவே; எனினும், கம்பர் தம் இராமாயணத்தை நடத்திக்கொண்டு செல்லும் முறைக்கும், அவர் அநுமனிடம் கொண்ட பெருமைக்கும் அநுமன் இராமபிரானை விரைவில் காணவேண்டுமென்று கூறிய கொள்கைக்கும் (1255) பிற நேர்மைகளுக்கும் ஒப்ப இவ்வரலாறு கம்பர் கருத்துக்கு ஒவ்வாதது என்று கருதப்பெற்றது. வடநாட்டிலும், வடமேற்கு நாட்டிலும் வழங்கிவரும் வான்மீகி இராமாயணங்களில் இவ்வரலாறு காணப்படுவதன்று என்று அறிஞர் கூறுவர். பழைய கம்பராமாயணச் சுவடிகளும் இவ்வரலாற்றைக் கூறவில்லை. கம்பர் கூறுத தொன்றைப் பிற்காலத்துத் தமிழறிஞர் தம் நாட்டில் வழங்கும் வான்மீகத்துக் கொப்ப அமைக்கவேண்டுமென்று கருதியோ, சில இடங்களில் வருணனையோ கதை நிகழ்ச்சியோ விரிவாக இருக்கவேண்டுமென மதித்தோ, தம் பாடல்களும் இப்பெருங் காப்பியத்தில் இருக்க விரும்பியோ, வெள்ளி பாடல் போல ஆங்காங்குச் சிலபாடல்களை இயற்றி இடைச் செருகலாக இப்பகுதியையும் அமைத்துள்ளார் என்பது கொள்ளத்தகும்.

பாடல்களுக்குக் கதைப் பகுதியை ஒட்டித் தலைப்புக்கள் கொடுக்கப்பெற்றுள்ளன. செய்யுள்களில் சீர்கள் பிரித்தமைப்பதிலும், சந்திகளைப் பிரித்துக் காட்டுவதிலும். நிறுத்துப் புள்ளிகளைச் செய்யுள்களுக்குள்ளேயே அமைத்துக் காட்டுவதிலும் இக்காலத்தில் நாட்டிற் பற்பல கருத்துக்கள் தோன்றியுள்ளன. சந்தமே பாடல்களுக்கு உயிரான படியால், அதனைக் குறைவுபடுத்தல் இழுக்காகும் என்றெண்ணிச் சீர்களை மட்டும் பிரித்துக்காட்டிப் பாடல்களின் ஓசைப்பயனைக் கெடுக்காது பாதுகாக்கப் பெற்றுள்ளது. அடிகளில் இறுதிகளில் மட்டும் பொருளும் ஓசையும் கெடாதமுறையில் சந்திகள் பிரித்துக் காட்டப்பட்டுள்ளன. உரைப் பகுதியில், பதவுரை (விளக்கம், மேற்கோள், ஒப்புமை, இலக்கணக்குறிப்பு ஆகியவற்றைக்கொண்ட) விஷேடவுரை, செய்யுள்கள் சுவடிகளில் இடமாறுபாடு பெற்றுள்ளமை, அதிகப் பாடல்கள் முதலியவற்றைக் காட்டும் குறிப்புக்கள், பிரதிபேதங்கள் என்றவை காணலாகும். பழைய உரையில் காணும் சில அரிய கருத்துக்கள் (அவை சில இடங்களில் யாம்கொண்ட கருத்துக்கு மாறுயிருப்பினும்) அவற்றின் நயம் நோக்கி ஆங்காங்கு எடுத்துக்காட்டப் பெற்றுள்ளன. தொடர்களுக்கு யாம்கொண்ட பொருளினும் வேறுபட்ட முறைகளிற் பொருள்கள் தொனிக்கும் இடங்களும் ஆங்காங்கே சுட்டப்பெற்றுள்ளன. வான்மீகம் முதலிய நூல்களினின்று இந்நூல் மாறுபட்ட இடங்களும், இதில் விளக்கமாகக் கூறப்படா இடங்கள் வான்மீகம் போன்றவற்றால் விளக்கமடையும் பகுதிகளும் குறிக்கப் பெற்றுள்ளன. மேற்கோள்களும் ஒப்புமைகளும் ஸ்ரீ ஐயரவர்களின் பதிப்புக்களின் தனிச் சிறப்புக்களாகும், அவற்றைத் தேடி அமைப்பதில் அவர்கள் தம் ஆயுள்முழுமையும் செலவிட்டார்கள் என்பது மிகையாகாது, அவர்கள் எழுதிவைத்த குறிப்புக்களைப் பயன்படுத்திக் கொண்டு, மேலும் இயன்றவரையில் அவர்களுடைய முயற்சிகளைப் பின்பற்றிச் செல்ல முயன்றுள்ளோம். பிரதிபேதங்கள் பாடல்கள் தோறும் மலிந்து கிடக்கின்றன என்பது உண்மையாயினும் அவற்றுள் (1) எழுதுவோரால் நிகழ்ந்த எழுத்துப்பிழைகளையும், (2) ஓரெழுத்துக்குப் பதிலாய்ப் பிறிதோரெழுத்தைக்கொண்டு பொருள் வேற்றுமை இல்லா இடங்களையும்விட்டு, சிறந்தனவற்றை மட்டும் வரிகளைச் சுட்டி அமைத்துள்ளோம். செய்யுள் முதற்குறிப்பகராதி, அரும்பதங்கள் முதலியவற்றின் அகராதி, நூலில்வந்துள்ள புராண வரலாறுகள் முதலியவை அநுபந்தங்களாகச் சேர்க்கப்பெற்றுள்ளன.

இக்காண்டத்தில் சிறந்த பாடல்களென ஸ்ரீ ஐயரவர்கள் குறித்தவை:-

1, 17, 60, 94, 118, 128, 131, 141, 147, 150, 151, 152-55, 167, 197, 226, 257-60, 287, 314-18; 337, 344, 348-50, 352-55, 395-97 401-02, 404-05, 435-38, 441-42, 452, 459, 461, 465-67, 484; 495

497, 549-50, 552-53, 561-62, 598-601; 612, 636-44, 658, 665, 672-73, 675, 677; 730, 733-36, 740; 754, 781-86, 792-94, 802, 808, 810; 821, 829-30, 839, 848, 855, 862; 864-65, 908, 927; 932-3, 956, 970; 985, 996-97, 999-1001, 1018; 1076, 1087, 1134, 1138-41. 1155-58, 1163, 1166, 1169-71; 1211-12, 1217, 1238, 1249-51,1253-54, 1270-76, 1278, 1281, 1286-87.

**இப்பதிப்பில் எடுத்துக் காட்டிய நூல்கள் முதலியவற்றின் முதற் குறிப்பகராதி:-**

அக்நிவேசியராமாயணம் (வட)
அகநா - அகநானூறு
அத்யாத்மராமாயணம் (வட)
அபிதானசிந்தாமணி
அரிச்சந்திர - அரிச்சந்திரபுராணம்
அறநெறிச் - அறநெறிச்சாரம்
அறப்பளீச் - அறப்பளீச்சர சதகம்
ஆளுடைப்பிள்ளைதிருவந் - ஆளுடைப்பிள்ளையார் திருவந்தாதி
இயற்பா
இராசராசனுலா
ஐங்குறு - ஐங்குறு நூறு
கந்தபு - கந்தபுராணம்
கல்லா - கல்லாடம்
கலிங்கத்-கலிங்கத்துப்பரணி
கலித் - கலித்தொகை
காஞ்சிப் - காஞ்சிப்புராணம்
குமாரசம்பவம் (வட)
குற்றாலநாதருலா - திருக்குற்றாலநாதருலா
குறள் - திருக்குறள்
குறிஞ்சிப் - குறிஞ்சிப்பாட்டு
குறுந் - குறுந்தொகை
கூர்ம - கூர்மபுராணம்
சம்பூராமாயணம் (வட)
சிலப் - சிலப்பதிகாரம்
சிறுபாண் - சிறுபாணாற்றுப்படை
சீவக-சீவகசிந்தாமணி
சுந்தரர்தே - சுந்தரர் தேவாரம்
சூடா நிகண்டு-சூடாமணி நிகண்டு
சூளா - சூளாமணி
செவ். பாகவத - செவ்வைச் சூடுவார் பாகவதம்
தக்க - தக்கயாகப்பரணி
திணைமாலை - திணைமாலை நூற்றைம்பது
திரிகடு - திரிகடுகம்
திருச்சிற் - திருச்சிற்றம்பலக்கோவையார்
திருஞான தே - திருஞானசம்பந்தர் தேவாரம்
திருநாவுக். தே - திருநாவுக்கரசர் தேவாரம்
திருப்பாவை
திருமுருகு - திருமுருகாற்றுப்படை
திருவரங்கக் கலம்பகம்
திருவரங்கத்தந்தாதி
திருவாச - திருவாசகம்
திருவால - திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்
திருவிருத் - திருவிருத்தம்
திருவிளையாடற் - பரஞ்சோதி திருவிளையாடற்புராணம்
திருவெங்கைக் - திருவெங்கைக் கோவை
திவ்யப்-திவ்யப்ரபந்தம்
திவ்திருவாய் - திவ்யப்ரபந்தம் திருவாய்மொழி
திவாகரம் - திவாகரநிகண்டு
தேசிகப்பிரபந்தம்
தொல் - தொல்காப்பியம்
தொல் நச் - தொல்காப்பியம் நச்சினார்க்கினியர்
நளவெண்பா
நற் - நற்றிணை
நாச்சியார் திருமொழி
நாலடி - நாலடியார்
நான்மணிக் - நான்மணிக்கடிகை
நீதிவெண்பா
நெடுநல் - நெடுநல்வாடை
நைட - நைடதம்
பஞ்சரத்னத்திருப்புகழ்
பதிற் - பதிற்றுப்பத்து
பரி - பரிபாடல்
பிரபுலிங்கலீலை

புறநா - புறநானூறு
பு. வெ - புறப்பொருள்வெண்பா மாலை
பெரியதிருமொழி
பெரிய பு - பெரியபுராணம்
பெரியாழ்வார் திருமொழி
பெருங் -பெருங்கதை
பெரும்பாண் - பெரும்பாணாற்றுப் படை
பெருமாள் திருமொழி
மகாபரத சூடாமணி
மகாபாரதம்-வியாசபாரதம் (வட)
மதுரைக் - மதுரைக்காஞ்சி
மதுரைச் சொக். உலா - மதுரைச் சொக்கநாதர் உலா
மணி - மணிமேகலை
மநுதர்ம - மநுசாஸ்திரம் (வட)
மலைபடு - மலைபடுகடாம்
முருகு - திருமுருகாற்றுப்படை
முதனூல் - வான்மீகிராமாயணம் (வட)
மூதுரை
வலிவலமும்மணிக் - வலிவலமும் மணிக்கோவை
வான்மீகம் - வான்மீகிராமாயணம் (வட)
விநாயகபு - விநாயகபுராணம்

உரைகளில்; இக்காண்டத்திலிருந்து மேற்கோளாகக் காட்டப் பெற்றவை, இப்பதிப்பிற் கொண்டதொடர் எண்கள்; பிறகாண்டங்களி லிருந்து எடுக்கப்பெற்றவை இராமரத்னமைய்யர் பதிப்பைப்பின்பற்றி யவை.

கடந்த ஆயிரம் ஆண்டுகளால் கம்பராமாயணம் பலவாருக மாறு பட்டு வந்துள்ள நிலைமையைக் காணும்போது கம்பநாடார் இயற்றி யருளிய உண்மையான காப்பியத்தை உள்ளபடி உலகம் காண்பது அரிது என்பது எங்கள் ஆராய்ச்சியால் கண்ட துணிவு; எனினும் முடிந்தவரையில் கிடைத்த கருவிகளையெல்லாம் பயன்படுத்திக் கொண்டு இயன்றவரையில் முயன்று, இப்பதிப்பை உலகுக்கு அளிக் கின்றோம். இப்பதிப்பு ஸ்ரீ ஐயரவர்களின் உள்ளத்துக்கு உவந்ததாய் அமையவேண்டுமென்பதே எங்கள் பேரவா. அஃது ஒருவாறு நிறை வேறி யிருக்குமேல் அதுவே யாங்கள் கருதும் பெரும்பயனாகும்.

இறைவன் அருள் ஒன்றே இம் முயற்சிக்கு மூலதனமும் ஊற்றமு மாகும். எடுத்துக்கொண்ட இப்பணிக்கு ஏற்ற தகுதி எங்களிடம் இல்லை என்பதை நாங்கள் நன்ருக அறிவோம். ஸ்ரீ இராமபிரான், தெய் வப்புலவரான ஸ்ரீ கம்பநாட்டாழ்வார், ஸ்ரீ ஐயரவர்கள், தமிழன்னை இவர் களிடம் யாங்கள் கொண்டுள்ள பெருமதிப்பும் பணிவுமே எங்கள் உரிமைகளாகும். சோர்வு அறியாமை முதலியவற்ருல் நேர்ந்திருக்கும் குறைகளை அன்பர்கள் பொறுத்துக்கொண்டு, இதனை அன்புடன் ஏற்று, இஃது இன்னும் பயனுற அமைவதற்கு வழிகளை அருளி ஊக்க வேண்டு கிறோம்.

**நாராய ணுய நமவென்று நன்னெஞ்சர்**
**பாராளும் பாதம் பணிந்தேத்து மாறறியேன்**
**காராரு மேனிக் கருணு கரமூர்த்திக்**
**காரா தனையென் னறியாமை யொன்றுமே.**

இப்பதிப்புக்கு வழக்கம்போல் ஐயரவர்களின் குறிப்புக்களையும், அவர்கள் கையாண்ட புத்தகங்களையும் அளித்து உதவிய அவர்களின் பௌத்திரர் ஸ்ரீ. க. சுப்பிரமணிய ஐயரவர்களுக்கு எங்கள் அன்பு நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இப்பதிப்புக்குப் பூர்ண ஆதரவுகாட்டி ஊக்கமளித்துவரும், இந்நூல் நிலைய ஆட்சிக் குழுவினருக்கும், அத்யக்ஷர் ஸ்ரீமதி ருக்மணி தேவியார் அவர்களுக்கும் இந்நூல் நிலையம் பெரிதும் கடைமைப் பட்டுள்ளது.

இப்பதிப்பு முயற்சியில் இதன் தொடக்கமுதல் பாடதிட்டம் செய்வதிலும், உரை எழுதுதல் முதலிய பல துறைகளிலும் முழுமையும் ஈடுபட்டவர் ஸ்ரீமான் பண்டிதர் எல். ஸ்ரீநிவாஸ ஐயரவர்கள், அவருக்கு உதவியாயிருந்து பணி ஆற்றியவர், வியாகரண சிரோமணி ஸ்ரீ. தி. இராமாநுஜ ஐயங்கார் அவர்களாவர். அவ்விருவரின் சிறந்த இராம பக்தியும், ஆழ்ந்த அறிவும், சலியா உழைப்பும், நீண்ட பொறுமையுமே இப்பதிப்பு இந்நிலையில் அமைவதற்குப் பேருதவியாயின. அவர்களுக்கு ஸ்ரீராமபிரான் திருவருள் என்றும் நிலைத்திருக்க வேண்டுமென்று அவன் திருவடிகளை வணங்குவதைவிட வேறு கைம்மாறு எதுவும் செய்யக் கூடியதன்று. சென்னை ஜெயலக்ஷ்மி அச்சகத்தார் இப்பெரிய பதிப்பை மிகுந்த அன்புடனும், பொறுமையுடனும் அச்சிட்டுக் கொடுத்தமைக்கு அவர்கள்பால் இந்நிலையம் தன் நன்றியைத் தெரிவித்துக்கொள்கின்றது.

அடையாறு;
19—2—57.



# நான்முகம்

*உரைக்க வல்லே னல்லே னுன் னுலப்பில் கீர்த்தி வெள்ளத்தின்*
*கரைக்க ணென்று செல்வன்நான் காதல் மைய லேறினேன்*
*புரைப்பி லாத பெரும்பரனே பொய்யி லாத பரஞ்சுடரே*
*இரைத்து நல்ல மேன்மக்க ளேத்த யானு மேத்தினேன்.*

(திருவாய்மொழி)

உலகம் உய்யும் பொருட்டு நம் பண்டைச் சான்றோர்கள் அளித்தருளிய நூல்களாகிய அரும்பெரு நிதியங்களுள் இராமாயணம் மிகச் சிறந்ததென்பது யாவரும் ஒப்புக்கொண்டதொன்றே. 'வாங்கரும் பாத நான்கும் வகுத்த வான்மீகி யென்பான், தீங்கவி செவிகளாரத் தேவரும் பருகச் செய்தான்' என்று கம்பநாட்டாழ்வார் கூறியருளியபடி, ஸ்ரீ வான்மீகி முனிவர் வடமொழியில் இயற்றிய இதிகாசமான இராமாயணமே ஆதிகாவியம் என்ற சிறப்புப் பெற்று, இப்பாரத நாட்டுக் காவியங்களுள் காலத்தால் முந்தியதும் காவியங்களுட் சிறந்ததும் ஆகும் என்பர். அதனைப் பின்பற்றி .வடமொழியிலும், பிற மொழிகளிலும் பிற்காலத்தில் எழுந்த இராமாயண நூல்களும் தனிப்பாடல்களும் அளவிறந்தனவாம்.

அமிழ்தினும் இனிய நம் தமிழ்மொழியில், இராமாயண வரலாற்றைக் கூறும் நூல்கள் சங்க காலத்திலேயே இருந்து வந்தன என்பது தொல்காப்பிய உரை, யாப்பருங்கல விருத்தி, வீர சோழிய உரை என்ற உரைகளாலும், ஆசிரியமாலை என்ற தொகை நூலாலும், பிறவற்றாலும் புலப்படுகின்றது. தமிழிலுள்ள முதற் பெருங் காப்பியங்களிலும் இராமகாதை நிகழ்ச்சிகள் சுட்டப்பெற்றிருப்பதும் யாவரு மறிந்ததே. அன்றியும், இராமபிரான் வணக்கமும் அவனுக்குரிய கோயில்களும், வழிபாட்டு முறைகளும் ஆழ்வார்களின் காலத்திற்கு முந்தியே தமிழ் நாட்டில் நிலைத்துவிட்டன என்பதை அவர்களுடைய அருளிச் செயல்களினின்றும் காண்கிறோம்.

இராமாயணம் என்னும் பெயர். வான்மீகி முனிவர் இந்நூலுக்கு இராமாயணம் என்ற பெயரையே இட்டனர் என்பது அந்நூலின் இரண்டாவது, மூன்றாவது, நான்காவது சர்க்கங்களால் தெரியவருகிறது. இச் சொல்லுக்கு இராமகதையை அறிவிக்கும் நூல் என்றும், இராமனைப் பொருளாகக்கொண்ட நூலென்றும், இராமனை அடையக் கருவியாயிருக்கும் நூலென்றும் பெரியோர் பொருள் கூறுவர்.

'சில இடங்களில் இராம சரிதத்தை மொழிவதும், மற்றை முழுவதும் சீதையின் விருத்தாந்தத்தையே உரைப்பதும் ஆகிய இராமாயணம் என்கிற காவியத்தைச் செய்தனர்' என்று வான்மீகி ராமாயணத்தின் நான்காவது சர்க்கக் குறிப்பினாலும்,இராமாயண பாராயணத்தை ஸ்திரீப் பிரஸங்கம் என்று கூறும் ஒரு வடமொழிப் பழமொழியாலும், 'சிறையிருந் தாள் ஏற்றம் கூறும் நூல்' என்னும் தமிழ்ச் சான்றோர் கூற்றாலும், இராமாயணம் என்னும் தொடர் சீதாதேவியை அறிவிக்கும் பிரபந்தம் என்ற பொருளையும் தரும் என்பது அறியக்கிடக்கும். இதனை முன் பொருளில், ராம + அயனம் என்றவைகொண்ட தொடர்மொழியாகவும் பின் பொருளில், ராமாண + அயநம் என்றவை கொண்ட தொடர்மொழியாகவும் கொள்வர்.

இந்நூல் வடமொழியிலேயே இராமசரிதமென்றும், இராவணவதம் என்றும் வேறு பெயர்களாலும் குறிக்கப் பெற்றமை வான்மீகத்தாலேயே தெரிய வருகின்றது. ஆயினும் இராமபிரான் வரலாற்றைக் கூறும் வாசிஷ்டராமாயணம், போதாயனராமாயணம், அத்யாத்மராமாயணம். ஆனந்தராமாயணம், அத்புதராமாயணம் முதலிய வேறு நூல்களும் இராமாயணப் பெயர்களே கொண்டுள்ளனமை கருதத்தக்கது.

தமிழில், திருவள்ளுவமாலையில் உள்ள ஒரு பாடலால் (30) இந்நூல் சீராமகதை என்று வழங்கப் பெற்றமை தெரிய வருகின்றது. மற்றும் கம்பராமாயண அச்சுப் புத்தகங்களிற் காணப்பெறும் காப்பு முதலிய செய்யுட்களிலும், தற்சிறப்புப்பாயிரச் செய்யுட்களிலும் இராமன் திருக்கதை, இராமகாதை, காகுத்தன் கதை, இராமன் கதை, மாக்கதை, இராமகதை, இராமாவதாரம் முதலிய பெயர்களால் இந்நூல் குறிக்கப் பெற்றமை அறியலாம். பெருந்தொகை என்னும் தொகுப்பு நூலில் இராமாவதாரம் என்ற பெயரால் இந்நூல் குறிக்கப்பெற்றுள்ளது, சிலர் இராமாவதாரம் என்ற பெயரே கம்பர் இந்நூலுக்கு இட்டபெயர் என்றும் கூறுவர்.

எனினும், இராமாயணம் என்னும் பெயராலேயே இந்நூல் பெரியோர்களால் தொன்றுதொட்டு வழங்கப்பெற்று வருகின்றது என்ற உண்மையைத் தக்கயாகப்பரணி உரையாசிரியர் வாக்காலும் (தக்க. 163 உரை) தெரிந்து கொள்ளலாம். மேலும், தமிழில் வெண்பா யாப்பில் வழங்கி வந்ததாகத் தெரியவரும் இராமாயண நூல் அப்பெயராலேயே வழங்கிவந்த தென்பது யாப்பருங்கல விருத்தி, வீரசோழிய உரை முதலியவற்றாலும் தெரியக்கிடக்கும். அன்றியும், இப்பொழுது நாட்டில் கிடைக்கப்பெறும் சுவடிகளுள் ஒன்றேனும் இராமாயணம் என்ற பெயரையன்றி வேறு எப்பெயரையும் பெற்றில்லாமையாலும் நாடெங்கும் இந்நூல் கம்பராமாயணம் என்ற பெயர் கொண்டே வழங்கி வருவதாலும் அப்பெயரையே இப்பதிப்பும் மேற்கொண்டுள்ளது.

**ஆசிரியர்**

கம்பராமாயணம் என்பது, வால்மீகிராமாயணம்,என்பது போலவே, கம்பரால் இயற்றப்பெற்ற இராமாயணம் என்ற பொருள் கொண்டுள்ளது. கம்பர் என்ற பெயருக்குக் காரணம், அவர் பிறந்த ஊர், வாழ்ந்த ஊர், காலம் முதலியவற்றை இக்காலத்து அறிஞர் பலர் துருவி ஆராய்ந்து தத்தம் கருத்துக்களை வெளியிட்டுள்ளனர்.

கம்பர் கவிதையின் சிறப்பை உலகம் நன்கறிந்துள்ளது. 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்ற உரையாசிரியர் கூற்று ஒரு பழமொழியாகவே வழங்குவதாயிற்று. உலக மகா காவியங்களுள் ஒன்றெனக் கம்பராமாயணம் இன்று புகழப்பெற்றுவருவது மிகப் பொருத்தமுடையதாகும். இவ்வளவு பெருமைகளுக்கும் காரணமான அவருடைய கவிதைச்சிறப்புக்கள் யாவும் சுந்தரகாண்டமான இப்பகுதியில் அமைந்திருக்கக் காண்கிறோம். அவற்றை முற்றிலும் எடுத்துக் காட்டுவது இங்கு இயலாதாயினும், இங்கொன்று அங்கொன்றாகவேனும் இந் நூன்முகத்தில் கூறுவது இன்றியமையாததாகும். அவ்வாறுசெய்யுமுன் இக்காண்டத்தின் பெயர், இதனிலமைந்துள்ள பொருள், முதனூலுடன் இக்காண்டம் கொண்டுள்ள தொடர்பு, வேற்றுமைகள் முதலியன பற்றிச் சில கூறுவாம்.

சுந்தரகாண்டம். இராமாயணத்தின் ஐந்தாவது காண்டமாக இஃது அமைந்துள்ளது. பிற காண்டங்கள் இராமபிரானின் இளமைப்பருவம், அவன் சரித நிகழ்ச்சிகள் அமைந்த இடங்கள், அவன் இயற்றிய செயல்கள் முதலியவற்றைப் பற்றிப் பெயர்பெற்றிருப்பன போலவே, இக்காண்டமும் (1) அவனுடைய சௌந்தர வடிவை விளக்கும் பகுதியை இடையிலே கொண்டிருப்பதால் அப்பெயர் பெற்றது என்று கொள்வதே ஏற்புடையது. ஆனால், பிற காண்டங்களிலெல்லாம் இராமனுடைய வரலாறு நேர்முகமாகப் பெரும்பாலும் அமைந்திருக்க, இவ்வொரு காண்டமே அவ்வரலாற்றின் ஒரு சிறு பகுதியைக் (கடைசிப் படலத்தின் இறுதியில், மிகக் குறுகிய அளவில்) கொண்டுள்ளது நோக்கத்தக்கதாகும்; இவ்வாறு காப்பியத் தலைவனின் வரலாற்றுப் பகுதியை நேரடியாக விரித்துக் கூறாவிடினும், அவன் பெருமைகள் யாவும் வேறெந்தக் காண்டத்திலும் இவ்வளவு விளக்கமாய்க் காணுதபடி இக்காண்டத்தில் பிராட்டி, அநுமன் இவர்களின் வாக்குக்களாலும் செயல்களாலும் விளங்குவது இதன் ஒரு தனிச் சிறப்பாகும். (2) இன்னும், கற்புக்கரசியான பிராட்டியின் மனப் பண்பின் அழகை வடித்து இக்காண்டம் காட்டுவதால் இப்பெயர் பெற்றதென்றும், (3) சுந்தரன் என்று அழைக்கப்பெறும் அநுமனின் உயர் பண்புகளையெல்லாம் இக்காண்டம் காட்டுவதால் இப்பெயர் பெற்றதென்றும், இன்னும் பலவாறாகவும் இப்பெயர்க்குப் பொருள் கூறுவர். பெயர்க்காரணம் யாதாயினும், இராமாயணமகாகாவியத்திற்குச்

சௌந்தரியத்தை அளிப்பது இச் சுந்தரகாண்டமே யாகும். ஒரு சுவடியில் இக் காண்டத்திற்குச் சௌந்தர்ய காண்டம் என்ற பெயர் காண்பதும் நோக்கத்தக்கது. இராமாயண பாராயணத்தில் நம்பிக்கை யுள்ளவர்கள் இச் சுந்தரகாண்ட பாராயணத்தை மிக்க ஏற்றமாகக் கொள்வர். அதற்கேற்ற பெருமையும் இதற்கு அமைந்திருப்பதை எவரும் எளிதிற் காணலாம்.

இக் காண்டத்தின் தனிச் சிறப்பு. இராமாயணத்தை ஒரு நாடகமாகக் கொள்வோமாயின் நாடகத்தின் சந்திகளான முகம், பிரதிமுகம், கருப்பம், விளைவு, துய்த்தல் என்ற ஐந்தனுள், முதல் மூன்றும் முன் காண்டங்களில் அமைந்திருப்பதையும், இக்காண்டத்தில் விளைவு இருத்தலையும் நாம் காணலாம்; உயுத்த காண்டம் துய்த்தலாகும். கதைப் பகுதியின் உச்ச நிலையை நாம் இங்குக் காண்பதோடு, அதன் முடிவுக்கு விதையும் இதனிலேயே அமைந்திருப்பது நமக்குப் புலப்படுவதாகும். இவ்வாறு இக்காண்டம் இராம காதையின் மையத்தையும், உச்சத்தையும் அடைந்திருப்பது இதன் தனிச் சிறப்பு; இச் சிறப்பை ஒட்டியே கம்பராமாயணப்பாடல் தொகையில் ஏறக்குறைய மூன்றில் ஒரு பகுதியை முதல் நான்கு காண்டங்களில் அமைத்து, அவ்வளவுக்கு ஒத்த ஒரு பகுதியை உயுத்த காண்டத்திலும் வைத்து, அவ்விரண்டு பெரும்பகுதிகளுக்கும் இடையே ஏறக்குறைய 1300 செய்யுட்கள் கொண்ட இக்காண்டத்தை நடுநாயகமாகக் கம்பநாட்டாழ்வார் அமைத்தனர் போலும்.

அன்றியும், சுந்தரகாண்டம் இராமாயணவரலாறு முழுவதையுமே தன்னுள் சுருக்கமாகக் கொண்டுள்ளது என்றும் கூறலாம். பிராட்டி, அநுமன் இவர்களின் கூற்றுக்களைத் தொகுத்துப் பார்ப்போமானால் இதன் உண்மை புலப்படும். இராமபிரானின் அவதாரம் முதல் அவன் இராவண வதம் செய்து முடிசூடும் வரையிலுமுள்ள செய்திகள் யாவும் இங்குக் குறிக்கப் பெற்றுள்ள பெருமை இதற்குண்டு.

மற்றும், கம்பர் இக் காண்டத்தை ஒரு காவியத்தினுள் மற்றொரு காவியமாகத் தொகுத்தளித்தனரோ என்று தோன்றும்படி, காவிய இலக்கணங்கள் பலவும் இதனுள் அமைந்து கிடக்கவும் காண்கின்றோம். கவிஞர் தம் கலைத்திறனால், உட்காவியமாகிய இக்காண்டத்தில் இலங்கை நகரின் பெருமைகளையும், இராவணனின் ஆற்றல்களையும், அவன் இழைத்த கொடுமைகளையும், மிகவும் விரித்துக் காட்டி, அவன் அழிவை நாம் விரைவில் எதிர்பார்க்குமாறு அமைத்துள்ள அருமை மிகவும் போற்றத்தக்கது.

இக் காண்டத்தால் அரக்கர் நாகரிகத்தை நாம் தெற்றென அறிகிறோம். அரக்கர் புறப்பொருளின் துறைகள் பலவற்றுள்ளும் மேம்பாடுற் றிருந்தமையும், அவர்களின் உள்ளம் மறத்திலும், களியாட்டத்தி

லும், தற்பெருமையிலும் மூழ்கிக் கிடந்தமையும், அக்காரணத்தினல் அவர்கள் தம் அழிக்கமுடியாத பெருமைகளை அழித்துக் கொண்டமையும் இக்காண்டத்தால் அறிவிக்கப்படும் உண்மைகளாம். அன்றியும், அரக்கர்களால் புறக்கணிக்கப் பட்டதும், ஆனல் என்றும் அழியாதது மான அறத்தின் தன்மைகளையும், அரக்கர்களால் அதற்கு விளைந்த இன்னல்களையும் இக் காண்டத்தால் நாம் தெளிவாக அறிந்து, முடிவில் அறமே வெல்லும் என்னும் நம்பிக்கையையும் அடைகிறோம்.

இக்காண்டம் அறத்திற்கும் மறத்துக்கும் உள்ள போராட்டத்தின் உச்ச நிலையைச் சித்திரிக்கின்றது; அதனேடு அறத்தின் வெற்றியையும், மறத்தின் சோக முடிவையும் சுட்டுகின்றது. பிராட்டி, அநுமன் ஆகிய இருவர் இக்காண்டத்தில் நம் கருத்தைப் பெரிதும் கவருபவர் ஆவர். இவ்விருவருடைய பெருமைகளையும் கல்வியிற் பெரியார் மிகுந்த திறமையுடன் நமக்குச் சித்திரித்துக் காட்டியுள்ளார். அநுமனைப் போன்ற வேறொரு தூதனை (சேவகனை, அடியவனை) நாம் வேறு எங்கும் காண்பது அரிது. அவனுடைய முயற்சிகளே இக்காண்டம் முழுமையும் பரவிக் கிடக்கின்றன. பிராட்டியை நாம் சில படலங்களிலே மட்டும் காண்கிறோம். அக் குறுகிய பகுதியில் பிராட்டியின் அகத்தூய்மை, மனவலிமை முதலிய பல நம் கண்முன் நிலைநிறுத்தப் பெற்றுள்ளன. கொடுமைத் தீயில் வாட்டி வதக்கப்பெற்றும், முன்னிலும் பன்மடங்கு ஒளிவிட்டு விளங்கும் அறப்பொன்னே நம் முன் காட்சியளிக்கின்றது என்னலாம்.

'சீதை என்றால் துக்கம் போம்' என்ற பழமொழி இக்காண்டம் படித்தவர்களுக்கே பொருளாகும். தூய்மை தீமையால் செய்யப்படும் இன்னல்களுக்கு உட்பட்டும் முடிவில் வெற்றியடையும் என்பதற்கு இக்காண்டம் சிறந்ததோர் எடுத்துக்காட்டு. இதுவே இராமாயணம் நமக்கு ஊட்டும் படிப்பினையும் ஆகும்.

**கம்பரும் வான்மீகியும்:-** 'தேவ பாடையி னிக்கதை செய்தவர், மூவரானவர் தம்முளு முந்திய, நாவி னுருரை யின்படி நான்றமிழ்ப், பாவினுலி துணர்த்திய பண்பரோ' என்று ஆசிரியர் கூறியபடி, அவருடைய அருளிச்செயலாகிய இந்த இராமாயணத்திற்கு வான்மீகியின் நூலே முதனூலாகும். இதன் கதைப் போக்கும், வருணனைகளிற் பலவும் அம் முதனூலையே ஒத்திருக்கின்றன; எனினும் பற்பல இடங்களில் கம்பராமாயணம் அம்முதனூலிலிருந்து சிறிது சிறிது மாறிச் செல்வதை நாம் காண்கிறோம்; அவையாவும் கம்பரின், இராமபக்தியையும் கலைத்திறனையும் நன்கு விளக்குவனவேயன்றி வேறல்ல. (அவ்வாறு மாறுபடும் பகுதிகளைச் செய்யுள்களின் உரைகளில், முடிந்தவரையில் அங்கங்கே சுட்டியிருக்கிறோம்.) (வான்மீகத்தையும் இக்காப்பியத்தையும், ஒன்றோடொன்று ஒப்பிட்டுப் பார்ப்பவர்க்கு அவ்விரண்டும் ஒன்றையொன்று துணை செய்து விளக்குவனபோல் உள்ளமை காணலாம், அவ்விரண்டுக்கும் முரண்பாடு எங்கும் இல்லை என்பதையும் நாம் உணரவேண்டும்.

கம்பநாடர் தமிழ் நாட்டிலேயே பிறந்து, தமிழ் நாகரிகத்திலே ஊறித் தமிழ்க் கல்வியிலே திளைத்தவர். ஆனால், அவர் தமிழ் நாகரிகம் என்ற ஒன்றைப் பிரித்துக் கண்டவ ரல்லர், பாரதப் பண்பு எங்கும் நிறைந்துள்ளமையை உணர்ந்த அவர், வேறுபாடு எதனையும் காணமல், வடமொழியையும் தமிழையும் சமநோக்குடன் போற்றுபவர். எனினும், அவர் தமிழ் நூல் கருத்துக்களில் நன்கு ஊறினவராதலால், தமிழ் மரபை ஏற்றவாறு பின்பற்றிச் செல்கின்றார் என்பதையும் நாம் மறத்த லாகாது. மேலும் அவர் தாம் காவியம் பாடுவதான கருத்தைக் கொண்ட வர். சிந்தாமணி, சிலப்பதிகாரம் முதலான காப்பியங்கள், சங்கநூல்கள், திருக்குறள் முதலிய நீதிநூல்கள் ஆகியவற்றிலுள்ள மரபுகள் முதலியன அவர் அகக் கண்களின் முன் நின்றன. இவற்றோடு, கதை சொல்லும் முறையில் அவர் நன்கு பழகியவர்; கதைப் பிரசங்க காலங்களில் கேட் பவருக்குச் சுவைப்பன யாவை என்பதை அவர் நன்கு உணர்ந்தவர். அவருக்கிருந்த இராமபக்தி அளவு கடந்தது. அவர் தம் கதாநாய கனுக்கும் நாயகிக்கும் சிறிதும் குறையுண்டாகலாகா தென்ற கொள் கையுடையவர். இக்காரணங்களே அவர் முதனூலிலிருந்து சிற்சில இடங் களில் மாறிச் சென்றமைக்குக் காரணங்களாகும். இனி, அவர், தாம் எடுத்துக்கொண்ட கதையை நடத்திச் செல்லும் முறையும், முதனூலி லிருந்து மாறும்போது கையாளும் அவரது கவித்திறனும் நமக்குப் புலனாகும். இனி, இவை படலந்தோறும் காணப்பெறுவனவற்றைத் தொகுத்துக் கூறுவோம்.

1. கடல்தாவு படலத்தில் அநுமனின் பேருருவுக்கும், அவனுடைய தெய்வத் திருமேனிக்கும், அவனுடைய விரைவுக்கும் கம்பர் கையாண் டுள்ள உவமைகளின் போக்கைக் காண்க, (இவ்வாறே நூல் முழுவதும் அவர் சென்றுள்ளார்). இக்காண்டத்தின் நிகழ்ச்சிகளுக்கெல்லாம் அநுமனே காரணனாதலால், அவனைப்பற்றி வருணனைகள் பலவற்றையும் தொகுத்துக் கூறுவதற்குக் கடல்தாவு படலத்தையே அவர் இடமாகக் கொண்டனர் போலும். இப் படலமே காண்டத்தின் முகப்புப் படலம் என்னலாம்.

இப்படலத்தில் பேசப்படுவர் நால்வர்; அவர்கள், அநுமன், மைந் நாகன், சுரசை, அங்காரதாரை ஆவர். கதையில் அவரவர்கள் ஏற்றுக் கொள்ளும் நிலைமையையும், அவரவர்களின் பெருமைகளையும் பிற சிறப் புக்களையும் நோக்கி, அவற்றிற்கேற்ப உவமைகள் அளவிலும் கம்பீரத் திலும் சிறந்துள்ளமை நோக்கத்தக்கது.

இனி, வான்மீகத்தினால் அறியலாகும் இப்படலச் செய்திகளில் அதிகமானவை பின்வருமாறு:— அநுமன் வானத்திற் படர்ந்த வழி சாரணர் செல்லும் வழியாகும்; மைந்நாகத்தின் மற்றொரு பெயர் ஸுநாபம்; சுரசை என்றவள் நாகமாதா; அவளுடன் போரிடுகையில்

அநுமன் தன் உடலைப் பல படிகளாக வளர்த்துக்கொண்டு, நூறு யோசனைவரை பரந்த உரு எடுத்துப் பிறகு தன்னைக் கட்டைவிரல் அளவுக்குச் சுருக்கிக் கொண்டான். மூன்றாவது தடையாக வந்தவளின் பெயர் ஸிம்ஹிகை என்பதும். அவளுடைய உயிர்நிலை மார்பிலிருக்கக் கண்டு அதனைக் கிழித்து அவளை அநுமன் கொன்றான் என்பதும் நாம் வான்மீகத்தால் அறிகிறோம், அநுமன் இலங்கையையில் இறங்கிய மலையின் பெயர் லம்பகம் என்று அந்நூல் கூறும்.

அத்யாத்ம ராமாயணத்தில், அநுமன் முதலில் சுரசையைச் சந்தித்துப் பின்னரே மைந்நாகத்தைக் கண்டான் என்று கூறப்பட்டிருக்கிறது.

2. ஊர்தேடு படலம். இது முதனூலையே பெரிதும் தழுவிச் செல்லினும், பல பகுதிகளில் இப்படலத்தைக் கம்பர் தமக்குரிய படைப்பாகவே அமைத்துச் செல்வது நோக்கத்தக்கது. சுந்தரகாண்டத்தை நாம் ஓர் உபகாவியமாகக் கொள்ளுமிடத்து இப்படலம் அதன் நாட்டுப் படலமும் நகரப்படலமும் மாகும். (சுவடிகளிற் பல இப்படலத்தைப் பல படலங்களாகப் பிரித்துக்கொண்டமை உரையிற் கூறப்பட்டுள்ளது). இராவணன் ஆட்சியில் அரக்கர் நாகரிகத்தை நாம் இங்குப் பரக்கக் காண்கிறோம். இப்பகுதியில் வான்மீகத்தில், அநுமன் மலைமீது நின்று இலங்கையை நோக்கியபோது, இராவணனுடைய ஒப்பற்ற ஆற்றலையே கண்டு வியந்ததாகக் கூறப்பெற்றுள்ளது; ஆனால் கம்பர் இந்நிலையில் அநுமன் அந்நகரின் அமைப்பையும். மக்களின் இணையற்ற ஆற்றலையும், அவர்களின் செல்வ வாழ்க்கையையும் கண்டு வியந்ததாகவே பாடல்கள் அமைத்துள்ளார்.

ஊருக்குள் அநுமன் புகுந்து சென்ற இடங்களைக் கூறும்போது ஆசிரியர் நகரின் அமைப்பைக் கூறிக்கொண்டே செல்கின்றார். இங்கு, பரிபாடல், பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை போன்ற தமிழ் நூல்களுக்கேற்ப நகர வருணனைகளை அவர் விரிவுபடுத்திக் கூறியுள்ளமை நோக்கத்தக்கது. இலங்கை நகரம் வட்டவடிவான தென்பதும், எழுநூறு யோசனை பரப்புள்ள தென்பதும், மூன்று பெரும்பகுதிகளையும் கணக்கற்ற தெருக்களையும் அது கொண்டிருந்தது என்பதும், கடலரண், மலையரண், காட்டரண், மதிலரண், அகழியரண் ஆகியவற்றைக்கொண்டுள்ள தென்பதும், அவ்வப்பகுதிகளின் இடத்திற்கும் பெருமைக்கும் ஏற்ப, மக்கள் ஆங்காங்கு வாழ்ந்து வந்தனர் என்பதும் இங்குக் கூறப்பெறுகின்றன. கட்டிடங்கள், சோலைகள் முதலியனவும் இடங்களுக்கு ஏற்ற சிறப்புடன் அமைந்துள்ளமை விளங்கும். இவ்வருணனைகளால் இலங்கை ஒரு நாட்டின் நகரமாயிராமல் அதுவே ஒரு நகர நாடாக (சிடி - ஸ்டேட்) இருந்தமையையும் இப்படலத்தில் காண்கிறோம். (ஆனால் அந்நகரத்திற்கப்பாலும் நாட்டுப்புறங்கள் இருந்த

செய்தி எரியூட்டு படலத்தால் அறியப்படுகிறது.) அந் நகர மக்களின் அகப்புற வாழ்க்கைகள் ஆத்மிகத்துடன் ஒட்டாமல், ஆணவத்தின் உச்சநிலையை அடைந்த செய்தியை இப்படலம் நமக்குக் காட்டுவதாயிருக்கிறது.

இப்படலத்தில், கதைப்பகுதிகளிலும் கம்பர் வான்மீகியினின்று பல இடங்களில் மாறுபட்டுச் செல்கின்றார். கம்பருக்குக் கதை அமைக்கும் ஆற்றலோடு, பாத்திரங்களைச் சித்திரிக்கும் வன்மையும் ஒரு தனிச் சிறப்பாக அமைந்துள்ளது. இலங்கை நகரியாள் ஒரு கொடிய நிசாசரியாகவே முதனூலில் காட்சியளிக்கின்றாள்; ஆனால் கம்பராமாயணமோ அவளைக் கௌரவமுள்ள நகர்க்காவற்றெய்வமாகக் காட்டுகின்றது. இது, சிலப்பதிகாரம் போன்ற நூல்களிற் கண்ட தமிழ் மரபை ஒட்டியுள்ளது; அவளுடைய உருவ வருணனை மதுராபுரித்தெய்வத்தின் உருவ வருணனையை ஒத்திருக்கிறது, அவள்மீது அநுமன்கொண்ட வெற்றியும் நாடகத்துக்குரிய ஒளி, ஒலி முதலியவற்றுடன் மிளிர்கின்றது.

நகருக்குள் அநுமன் புகுந்து மனைகளையெல்லாம் ஆராய்ந்து சென்றதைக் கூறும்போது, முதனூல், இராவணன் உறவினர், படைத்தலைவர் முதலிய பலர் பெயர்களைக் கூறிச் செல்கின்றதேயன்றி, அவர்களுள் ஒருவரையாவது அநுமன் நெருங்கிக் கண்ட கதையை விரித்துக் கூறவில்லை. கம்பரோ அவ்வாறு பல பெயர்களைக் கூறாது, கும்பகருணன், வீடணன், இந்திரசித்து இம்மூவரின் நிலையை நமக்கு அநுமன் வாயிலாக அறிவுறுத்துகின்றார். இவை பின்நிகழும் வரலாறுகளுக்கு முன்னுரைகள் போலும்.

இராவணனையும் மண்டோதரியையும் அநுமன் கண்ட விதம் குறிப்பிடத்தக்கது. முதனூல் அவர்கள் தங்கியிருந்த இடம் புட்பக விமானம் என்று கூறும். அங்கு இராவணன் ஒரு முகமும் இரண்டு கரங்களுமுடையவனாகவே காணப்படுகின்றான். அவன் அநுமனால் முதலில் மெச்சப்படுகின்றான். பிராட்டி விஷயத்தில் அவன் நடந்து கொண்ட பான்மையை நினைத்து அநுமன் வருந்துகின்றான். அவனிடம் கோபிக்கவோ, அவனைக் கொல்லவோ அப்பொழுது அநுமன் எண்ணியதாக முனிவர் கூறவில்லை; பிறகே மண்டோதரி காணப்படுகின்றாள். அநுமன் அவள் அங்க லக்ஷணங்களைக் கண்டு அவளே பிராட்டியெனக் கொண்டு மகிழ்ந்து கூத்தாடுகின்றான்; அப்பொழுது அவன் ஆடிப் பாடினன்; ஆனால் சடுதியில் அவன் மனம் ஆராய்ச்சியில் ஈடுபட்டது; 'பிராட்டிக்கு உறக்கம் வராதே! உணவும் அலங்காரங்களும் அவள் கொள்ளாளே! பான பூமியை அவள் எட்டியும் பாராளே! இவள் யாரோ ஒருத்தி' என்று அவன் முடிவு செய்துகொண்டு வெளியேறுகிறான். இவை வான்மீகியின் கூற்றுக்கள்; இங்குப் பிராட்டியின் கற்பைப் பற்றி அநுமன் ஐயங்கொண்டதாகக் குறிப்பில்லை,

இவ்விடத்தில் கம்பர் காட்டும் காட்சி பெரிதும் வேருக உள்ளது இராவணன் காணப்பட்ட இடமும், அவன் உருவமும், நேரமும் மாறி விட்டன, அவனைக் கண்ட அநுமன் கருதினவும் கம்பரால் படைக்கப் பெற்றவை; மண்டோதரியை அவன் கண்ட காட்சி வருணனையால், கம்பர், அநுமன் இராமபிரான்பாலும், பிராட்டிபாலும் வைத்திருந்த பற்றின் உயர்வைப் புலப்படுத்துகின்ருர். இப்பகுதியின் அருமைகளை உரையில் ஒருவாறு விளக்கியுள்ளோம். இவ்வாறு இந்நூல் முதனூலுக்கு வேறுபட்டவையெல்லாம், பின்னோர் வேண்டும் விகற்பங் கூறுதல் ஏற்புடைத்தே என்னுங் கொள்கையில் அமைந்தன எனக் கொள்ளற்பாலன.

ஊர்தேடு படலம் சுந்தரகாண்டத்தினுள் மிகப்பெரிய படலங்களுள் ஒன்று. இங்கு நாம் இராவணனை அவன் உறக்கத்தில் காண்கிருேம்; அநுமனின் அற்புதமான அருங்குணங்களையும் ஆற்றல்களையும் நாம் இங்கு நன்கு உணர்கிருேம்.

3 காட்சிப் படலம். சுந்தரகாண்டம் இராமாயணத்தின் இதயம் என்ருல், இப்படலம் சுந்தரகாண்டத்தின் இதயம் என்னலாம். பிராட்டியின் நிலையும், அதனை அநுமன் கண்டதும், இராவணன் அவளைக் கண்டு சென்றதும், பிராட்டி தன் உயிரை விடத் துணிந்ததும், அநுமன் அங்குத் தோன்றி ஆறுதல் புரிந்ததுமான செய்திகளை இப்படலம் கொண்டுள்ளது. இப்பதிப்பில் இப்படலம் அமைதி பெற்றிருக்கும் தன்மை முன்பே குறிக்கப்பெற்றது.

இலங்கை முழுமையும் தேடியும் பிராட்டியைக் காணுமல் மனமுடைந்த மாருதி புலம்பியதை வான்மீகி 73 சுலோகங்கள் கொண்ட ஒரு ஸர்க்கத்தில் கூறுகின்ருர்; அதன்பின் அசோகவனத்தின் வருணனையை 52 சுலோகங்கள் கொண்ட மற்றெரு ஸர்க்கத்தில் அமைக்கின்ருர். ஆனல் கம்பரோ, அநுமன் வருந்தியதை 9 செய்யுட்களில் கூறி அசோக வன வருணனையைக் காட்சிப்படலத்திலும் பொழிலிறுத்த படலத்திலும் ஆங்காங்கே விரிவாக விளக்கிச் செல்கின்ருரேயன்றி, முதனூலிலிருப்பது போல முகப்பிலேயே அமைக்கவில்லை. இதனல் அநுமன் பிராட்டியைக் காண்பதிற் கொண்ட விரைவு விளங்குவதாகும்.

அசோக வனத்தில் இருந்த பிராட்டியின் துயர நிலை இரு கவிஞர்களாலும் மிகச் சுவைபட உரைக்கப்பட்டுள்ளது. பல உவமைகள் இரண்டு ஆசிரியர்களாலும் ஒரு படித்தாகவே அமைக்கப்பெற்றனவெனினும், முனிவரின் உவமைகள் கருத்துக்கும் தத்துவ உண்மைக்கும் ஒட்டினவையாய் அமைந்திருக்க, கம்பரின் உவமைகள் பெரும்பாலனவும் கட்புலனுக்கும் உலக வாழ்வுக்கும் ஏற்ப அமைந்துள்ளமை கண்டு மகிழத்தக்கது. பிராட்டி, இராமபிரான் உருவம், செயல்கள் முதலியன பற்றித்தான் நினைவு படுத்திக் கொண்டதும், அவனை விட்டுப் பிரிந்தமை

யால் தான் படும் துயரைப் பற்றிப் பிரலாபித்ததும் அமைந்த அழகிய கவிகள் நம்மை அசோகவனத்துக்கே அழைத்துச் செல்கின்றன. பிராட்டியின் துயர்நிலையை (332-358) 27 செய்யுட்களில் வருணித்த கம்பர் அதனைத் தம் கூற்றாகவே கூறியுள்ள நயமும் நோக்கத்தக்கது; இத்துயர் அவள் நாள்தோறும் அநுபவித்து வந்ததாகும். சொல்லவேண்டிய இடம் நோக்கி, அவற்றை ஆசிரியர் இங்குத் தொகுத்துள்ளார் என்பது கருதற்பாலது.

கதையின் போக்கிலும் இப்படலத்தில் சில மாற்றங்களைக் கம்பர் செய்துள்ளார். அவற்றுள் சிறப்பானது திரிசடை தன் கனவைக் கூறுதலாகும். "இராவணன் பிராட்டியை அசோக வனத்திற் கண்டு சென்றபின், அவன் ஏவலினால் அரக்கிமார் அவளிடம் கடுஞ்சொற்களைக் கூறி அச்சுறுத்த, பிராட்டி மிகவும் மனமுடைந்து வருந்தி, தன் உயிரை மாய்த்துக்கொள்ளத் தீர்மானித்து, அதனை அரக்கிகள் காதுகளில் விழும்படி சொல்ல, அதைக் கேட்ட சிலர் இராவணனிடம் அச்செய்தியைத் தெரிவிக்க ஓடினர்; எஞ்சிய பலர் பிராட்டியிடம் கொடுமையாகப் பேசினர். அப்பொழுது சிறந்த ஞானியான திரிசடை என்ற அரக்கி, (வான்மீகத்தில் சுந்தரகாண்டத்தில் திரிசடை வீடணன் மகள் என்று குறிப்பிடவில்லை; அந்நூல் பிறிதோரிடத்தில் (ஸர்க். 37. சுலோ. 12) வீடணனின் மூத்த மகளான அனலை என்பவள் தன் தாயினால் பிராட்டியிடம் அனுப்பப்பெற்று அவளுடன் அன்பாக நடந்து வந்தாள் என்று கூறுகிறது). அவ்வரக்கியரை நோக்கித் தான் கண்ட கனவுகளையும், தான் பிராட்டியிடம் கண்ட (இடக்கண் துடித்தல் முதலிய) சில நற்சகுனங்களையும் கூறி, அவர்களுக்கு அச்சத்தை உண்டாக்கினாள்' என்று கூறப்பட்டுள்ளது. (இவ்வாறே அத்யாத்மராமாயணமும், திரிசடை தான் கனவு கண்ட வரலாற்றை அரக்கியருக்குக் கூறிய நேரத்தையும் இடத்தையும் கூறிப் பின், இவ்வாறு கூறக்கேட்ட அரக்கியர் திகிலடைந்து வாளாவிருந்து நித்திரையினால் அவசமாயினர் என்று முடிக்கிறது). அச்சொற்களைப் பிராட்டி கேட்டாளென்றோ கேட்கவில்லையென்றோ அந்நூல்களில் கூறப்படவில்லை; கேட்டிருப்பாளாயினும் அதற்கு அவள் செவி சாய்த்தவளாகக் காணவில்லை. அவள் தான் முன் உயிர் துறப்பதாகக் கொண்ட எண்ணத்தையே மேலும் கொண்டு, உடல் நடுநடுங்க, வாய் உலர, ஸ்ரீராமபிரானைத் தியானித்துக் கொண்டே, ஒரு மஹாவிருக்ஷத்தைக் கிட்டி, 'என் பின்னலைக்கொண்டு பந்தித்து இக்கணமே உயிர் துறப்பேன்' என்று மரத்தைப் பிடித்துக் கொண்டு நின்றபோது, அவளுக்குச் சிறந்த பல நற்சகுனங்கள் தோன்ற, அவள் சிறிது மகிழ்ந்தாள் என்றும், இவற்றையெல்லாம் கண்டும் கேட்டுங் கொண்டிருந்த அநுமன் தன்னுள் பலவாறு ஆராய்ந்துகொண்டு, இராமகதையைச் சொல்லிக்கொண்டு அவளிடம் நெருங்கினான் என்றுமே வான்மீகம் கூறும்.

இவ்வரலாற்ருல் திரிசடையின் கனவைக் கேட்ட அரக்கியர் பிராட்டியை அச்சுறுத்தியவர் என்பதும், அவர்கள் பிராட்டியிருந்த இடத்திலிருந்து வெகுதூரத்திலிருந்தவரல்லரென்பதும், கருதக் கிடைக்கின்றன, அவர்களின் அருகில் இருந்த பிராட்டி தற்கொலை செய்துகொள்ளச் சென்ருள் என்றும் பெறப்படுகிறது. (திரிசடை கூறிய சொற்களைக் கேட்டு அரக்கியர் விலகிச் சென்றனர் என்றும், அச்சமயம் நோக்கிப் பிராட்டி மரத்தினடி சென்ருள் என்றும் வான்மீகியின் கதைப் போக்கில் ஊகிக்க வேண்டியிருக்கிறது).

கம்பரோ இங்குத் தம் கதையை வேறுவிதமாக அமைத்துக் கொள்கின்ருர் இராவணன் அசோகவனத்தை அடைவதற்கு முன், அரக்கியர் யாவரும் நள்ளிரவில் சற்று அயர - (359) - அப்பொழுது திரிசடையும் (வீடணன் மகள்; பிராட்டிக்கு அன்பினுல் தாய் போன்ற தூயவள்) பிராட்டியும் தனித்திருந்த நிலையில், பிராட்டி தனக்குண்டான சில நற்சகுனங்களைத் திரிசடையிடம் கூறி வினவ, திரிசடை தான் கண்ட கனவை அவளிடம் கூறித் தேற்றினுள் என்று கனவின் காலத்தையும் இடத்தையும் கம்பர் மாற்றிக் கொண்டனர். பின்பு சிறிது நேரம் கழித்து இராவணன் வந்து போனபின், அவன் கட்டளையால் அரக்கியர் பிராட்டியைத் துன்புறுத்த, திரிசடை தன் கனவுகளை நினைவூட்டித் தேறுதல் கூற, அக்கனவுச் செய்தியை அரக்கியரும் முதன் முதல் அறிந்து அடங்கினர் (487) என்றும், ஆனுல், இராவணனை அஞ்சி அவர்கள் அவ்விடத்தைவிட்டு அகலவில்லை, என்றும், அதன்மேல், அநுமன் அவர்களைத் தன் விஞ்சையால் அயர்வுறச் செய்தான் என்றும் கம்பர் கூறுகின்ருர். அயர்ந்த சமயம் நோக்கிப் பிராட்டி தன் நிலையைக் குறித்துப் பலவாறு வருந்திப் பின் தற்கொலை செய்துகொள்வதே முடிவு என்று கொண்டு, ஒரு புதரை அடைந்தாள் என்று அவர் அமைக்கின்ருர்.

இம்மாற்றத்தால் கதைத்தொடர்பு பொருத்தமாயுள்ளமை நோக்கி இன்புறத்தக்கது. இங்கு, மற்ருெரு செய்தியையும் நாம் உட்கொள்ளுதல் நலமாகும். பிராட்டியின் துயரத்தையும் அநுமன் கண்ட செய்தியையும் இக்காண்டத்தில் தெரிவிப்பதே எல்லா இராமாயண நூல்களின் கோள்களாகும். அவை பிராட்டியையும் அவள் துயர்நிலையையுமே கூறுவதோடு நிற்க, கம்பநாட்டாழ்வார் அவள் கற்புநிலையையும், தூய்மையையும், தவத்தையுமே சிறப்பாக எடுத்துக் கூறுகின்ருர். இஃது ஆசிரியரின் உயர் குறிக்கோள்களை நமக்குப் புலப்படுத்துவதாகும்.

இப்படலத்தில் இராவணன் பிராட்டியைச் சந்தித்த முறையும் நோக்கத்தக்கது. இராவணனை இக்காண்டத்தில் மூன்றிடங்களில் நாம் காண்கிருேம்; முதலில் ஊர்தேடு படலத்தில் அவன் உறக்கநிலையில் காட்சியளிக்கிருன்; மூன்ருவதாக, பிணிவிடு படலத்தில் தன் புண்பட்ட

ஆணவம் பொங்கி எழுகிற நிலையில் அவனிருப்பதை நாம் காண்கிறோம். இப்படலத்தில் தீய எண்ணத்தினுல் குழைந்து எளிமையுற்ற இவன் கோலத்தைக் கம்பர் நமக்குப் படம் எழுதிக் காட்டுகின்றார். இவன் கொடுமையால் பிராட்டி உள்ளத்தின் சோபை பல்லாயிரம் மடங்கு அதிகமாக ஒளி வீசுவதற்கு இக்காட்சி மிகவும் பயன்படுகின்றது. தீமையே உருக்கொண்ட இராவணனையும், அறமே உருக்கொண்ட சீதையையும், அவ்வறத்தைக் காக்க மறைவில் பதுங்கியிருந்த தூய்மை, உண்மை இவற்றின் உருவினனான அநுமனையும் நாம் இங்குக் காண்கிறோம். இங்குத் தீமையும் தூய்மையும் நேருக்கு நேர் நின்று வாதாடுவதையும் நாம் காண்கிறோம்.

இராவணன் அசோக வனத்தில் பிராட்டியைக் கண்டநேரம் கடை யாமம் என்று தெரியவருகிறது. இலங்கை நகரத்தினர் செய்த வேத கோஷங்களைக்கேட்டு விழித்தெழுந்து இராவணன் பிராட்டியை நினைத்து அசோக வனத்துக்கு வந்தான் என்று முதனூல் கூறும். அங்கு இராவணனுடைய வருகை மிகச் சில சுலோகங்களாலேயே கூறப்பட் டுள்ளது. அவனுடைய பராக்கிரமம் ஆடம்பரம் முதலியன வருணிக்கப் படவில்லை. கம்பரோ இங்கு அவன் வருகையை 19 எழுசீர்க்கழிநெடி லடி ஆசிரிய விருத்தங்களால் விரித்து விளக்கியுள்ளார். பெரிய விழாவில் உலா வருவதுபோல அவன் வருகின்றான். இந்த இடத்தில் தவத்தின ளான பிராட்டியின் நிலையைக் கூற, தனியே ஒரு ஸர்க்கம் வான்மீகத்தில் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளது. இராவணன் பிராட்டியிடம் விண்ணப் பித்துக் கொள்வது இரண்டு நூல்களிலும் ஒரு மாதிரியாகவே அமைந் துள்ளது. பிராட்டி இராவணனிடம் பேசியது அவனுக்குச் செய்த உப தேசம் என்று வான்மீகி கூறியதுபோலவே, கம்பரும், 'மல்லொடு திர டோண் மைந்தர் மனம் பிறிதாகும் வண்ணம் சொன்னாள்' (445) என்று கூறுகின்றார். இரு ஆசிரியர்களும் பிராட்டி இராவணனுக்கு நல்லுப தேசமே புரிந்தனள் என்பர். ஆனால் முதனூலார், 'ஸௌந்தரவதியும், தவம் பூண்டவளும், கற்புடையவளும், தன் பர்த்தாவையே தியானித் துக் கொண்டிருப்பவளுமான சீதை துக்கத்தில் மூழ்கினவளாய், அழு பவளாய், நடுநடுங்கியவளாய், ஒரு துரும்பை இடையில் கிள்ளிப் போட்டு, (புன் சிரிப்புடையவளாய்ப்) பதிலுரை மொழிந்தாள்' என்று கூறக் கம்பர், 'தீந்தன செவிகள் உள்ளந் திரிந்தது; சிவந்த சோரி; பாய்ந் தன கண்கள்; ஒன்றும் பரிந்திலள் உயிர்க்கும் பெண்மைக், கேய்ந்தன வல்ல வெய்ய மாற்றங்க ளினைய சொன்னாள்' என்று கூறுகின்றார்: இவ்வாறு இரு நூலாரும் அமைத்துக் கொண்டவற்றிற் கேற்ப, இருவரும் காட்டிய பிராட்டியின் பதிலுரைகள் வெவ்வேறான தொனிகளுடனே அமைந்துள்ளமை நோக்கத்தக்கது. அவன் மறு மொழிகளின் போக்கும், இரண்டு நூல்களிலும் தனித்தனி முறையிலே அமைந்து செல்வதும் நோக்கி இன்புறத்தக்கது. இப்பகுதியிலும் கம்ப

ரியற்றியது ஒரு நாடகமே, அநுமன் தன்னை அறிமுகப்படுத்தலிலும் கம்பர் போக்கு நோக்கத்தக்கதாகும்,

முதனூலில் "பிராட்டி தன் உயிரைமாய்த்துக் கொள்ளும் கொடிய நிலையில் நிற்பதைக் கண்ட அநுமன், மரக்கிளையில் தான் ஒளிந்துகொண்டிருந்த இடத்திலிருந்தே ஸ்ரீராமசரிதத்தை அடிமுதல் கூறத்தொடங்க, அதனைக் கேட்ட பிராட்டி வியப்புற்று மரக்கிளையை நோக்கி, அநுமனைக் கண்டாள்' என்றும், 'அதன்மேல் அநுமன் கீழே இறங்கி வந்து பிராட்டியைக் கண்டு அவள் யாரென்று ஆராய்ந்து, முடிவில் அவள் பிராட்டியாய் இருக்கலாமோ என்று எண்ணி வினவினான்'' என்றும், ''அதன்மேல் பிராட்டி தன்னைப் பற்றிய வரலாறுகளைக் கூறினளென்றும்'' விரிக்கக்பெற்றுள்ளது. மேலே குறித்தவை 68 சுலோகங்களைக் கொண்ட 3 ஸர்க்கங்களில் அந்நூலில் கூறப்பெற்றுள்ளன. கம்பரோ, இவ்விளக்கங்களையெல்லாம் இங்கு எழுப்பாமல். ''ஈதலா திடமும்வேறில்லை என்றொரு. போதுலா மாதவிப் பொதும்ப ரெய்தினள்' (509) என்று கூறி, அடுத்த பாடலில், அண்டர்நா யகனரு டூதன் யானெனுத், தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினான்' என்று கொண்டு காட்டுகிற திறம் உணரத்தக்கது. அவன் இடம் நோக்கிச் சுருக்கமாகத் தன்னைப் பிராட்டிக்கு அறிமுகப் படுத்திக் கொள்ளும் பான்மையும் அருமையும் போற்றத்தக்கனவாம்.

6. உருக்காட்டு படலம் பிறகு, பிராட்டி அநுமனை இராமபிரானின் திருமேனியின் இயல்பை விளக்கக் கேட்டதும், அநுமன் அதனை விரித்துரைத்தமையும் இரு நூல்களிலும் மிக மேன்மையாகவே அமைந்துள்ளன. ஆனால் முதனூலில் இராமனின் குணப்பண்புகள் அதிகமாகக் கூறப்பெற்றிருப்பதோடு. அங்கவருணனைகள் முகத்திலிருந்து தொடங்கியிருப்பினும், பிறகு அடிவரையில் நேராகச் செல்லாமல் சாமுத்திரகாலக்ஷண ரீதியாய் உறுப்புக்களின் உறுதி, நீளம், சமம், உயரம், நிறம் முதலிய பண்புகளால் ஒத்துள்ளனவற்றை ஒருமித்துக் கூறும் முறையில் அமைந்துள்ளது. நம் ஆசிரியரோ, கேட்ட வினவுக்கு ஏற்ற விடையாக, தனக்கு இராமபிரான் பெருந்தெய்வமாகையால், அவன் உருவ வருணனையைப் பாதாதி கேசமாக, உவமை முகத்தால் வருணித்திருக்கிற செவ்வி படித்து இன்புறற்பாலது. இவ்வடையாளங்களையும், இராமபிரானுடைய நிலையையும், தன்னுடைய வரலாற்றையும் சொல்லி, அநுமன் பிராட்டியிடம் இராமபிரானது கணையாழியைக் கொடுத்ததாக வான்மீகம் கூற, கம்பர், அநுமன் இராமபிரானின் திருமேனி வருணனைகளைச் சொல்லி முடித்து, அவன் பிராட்டிக்கெனக் கூறியனுப்பிய சில அடையாள உரைகளைக் கூறி, அதன்பின்பே ஆழியைக் கொடுத்தான் என்கின்றார். இவ்வாறு செய்த சிறிய மாறுதல்களால் கம்பர் தாம் கூற எடுத்துக் கொண்ட நிலைகளைச் சுவை ததும்பவும் இயற்கைக்கு ஏற்றவாறும் அமைத்துக் காட்டும் திறனை நாம் உணர்கிறோம்,

கணையாழி கண்ட பிராட்டியின் நிலையை உணர்ச்சி ததும்பக் கவிக் கூற்றாகக் கம்பர் விவரித்த முறை பெரிதும் சுவையுடையதாகும். அப்பொழுது அவள் அநுமனைப் பாராட்டிக் கூறியதாக எழுதப்பெற்ற இரண்டு செய்யுட்களும் இரண்டு மாணிக்கங்களே. கணையாழி கண்ட பிராட்டியின் மகிழ்ச்சியையும், அவள் அநுமனுக்குக் கூறிய நன்றியையும் வான்மீகம் மிகச் சுருக்கமாகக் கூறி, அவள் இராமபிரானைப் பற்றி வினவியதை மிகுத்துச் சொல்லுகின்றது. கம்பரோ இதற்கு நேர்மாறான முறையைக் கையாள்கின்றார். இராமபிரானைப் பற்றி அநுமன் கூறும் தன் விடையில் சீதையை விட்டு அவன் பிரிந்தது முதல், அப்பிரானின் கட்டளையால் பிராட்டியை நாடித் தான் பிரிந்தகாலம் வரையிலுள்ள வரலாற்றை (ஆரணிய, கிட்கிந்தா காண்டச் செய்திகளை) இங்குப் பிராட்டியிடம் கூறி, அப்பெருமானுடைய துயர் நிலையை நன்கு உணருமாறு உணர்ச்சியுற அமைக்கின்றார். வான்மீகமோ இவ்வரலாற்றுச் செய்திகளை அநுமன் பிராட்டியின் அருகே வருமுன்னமே, மரத்தின் மீதிருந்தபடியே, அநுமன் கூற்றில் வைத்துச் சொல்கின்றது.

இவ்வாறு இப்படலத்தில் கம்பர் முதனூலிலிருந்து கொண்ட மாறுபாடுகள் யாவும் தொடர்பு, நேர்மை, பயன் ஆகியவற்றைக் கருதிக் கையாளப் பெற்றவை என்பது தெளிவு. இன்னும் அநுமன் தன் பேருருவைத் தோற்றுவித்த காலத்தையும் கம்பர், வான்மீகி கூறியதனின்று மாற்றியுள்ளதும் நோக்கத்தக்கது.

5. சூடாமணிப் படலம். வான்மீகத்தில் அநுமன் பிராட்டியைத் தான் சுமந்து செல்வதாகப் பிரேரேபித்து அவ்வாறே எடுத்துச் செல்லும் ஆற்றலைத் தான் உடையவன் என்பதைக் காட்டுவதற்காகத் தானே தன் பேருருவைக் காட்டினான் என்று கூறப்பெறுகிறது; அதனைக் கண்ட பிராட்டி அவன் ஆற்றலை மெச்சினளாயினும், அவனுடன் தான் வரலாகாதென்பதற்குரிய காரணங்களை விளக்கி அவனுடைய வேண்டுகோளை மறுத்தனள் என்று கூறப்பட்டிருக்கிறது. கம்பரோ இந்த நிகழ்ச்சியின் இடத்தையும் மிக அழககாக மாற்றி அமைத்து, அநுமனுடைய பெருமையைச் சிறக்கவைத்துள்ளார்.

பிராட்டி இராமபிரானிடம் சொல்வதற்காகச் சில அடையாளங்களைக் கூறியபோது முதனூல், காகாசுர விருத்தாந்தத்தை மிக விரிவாகக் கூறியிருக்கக் கம்பர் அதனை மிகச் சுருக்கி அமைத்ததன் காரணத்தைச் செய்யுள் 683 இன் உரையில் எடுத்துக் காட்டியுள்ளோம். வான்மீகத்தில் சுந்தரகாண்டத்தில் இதே வரலாறு 38ஆம் ஸர்க்கத்தில் ஒருமுறை மிக விரிவாகவும், 40ஆம் ஸர்க்கத்தில் மற்றொரு முறை மிகச் சுருக்கமாகவும், பின்பு 67ஆவது ஸர்க்கத்தில் பின்னும் அநுமன் இராமபிரானிடம் கூறியதாகச் சற்று விரிவாகவும் ஆக மூன்றிடங்களில் சொல்லப்பெற்றுள்ளது. கம்பர் இவ்வரலாற்றைக் காட்சிப் படலத்

துள் பிராட்டி தனக்குத் தானே நினைவூட்டிக் கொண்டதாக ஒரு செய்யுளினும் (357), அவள் அநுமனிடம் அடையாள மொழியாகக் கூறிய ஒரு செய்யுளினும் (683) மிகவும் சுருக்கமாக அமைக்கின்றார். (சில பிரதிகளில் இப்பின் பகுதி, ஒன்றிற்கு மேற்பட்ட சில பாடல்களைப் பெற்றிருத்தலையும், அவை ஏற்றுக் கொள்ளப்படாமைக்கு உரிய காரணங்களையும் (683ஆம் செய்யுளின்) உரையிற் காட்டியுள்ளோம்.)

இவ்வாறு முதனூல் குறிக்கும் பொருள்களை அவற்றைக் கூறும் முறையையும், அந்நூல்கையாளும் வகைகளையும் முற்றிலும் கம்பர் பின்பற்றாது விட்டமையால் உண்டான பயன்களை இருநூல்களையும் ஒப்பிட்டுக்காண்பவர் நன்கு உணரலாம். இவையன்றி முதனூலிற் காணாத சில வரலாறுகளையும் கம்பர் கையாளுகின்றார். உதாரணமாகக் காட்சிப் படலத்தில் பிராட்டி இராமபிரானை நினைத்துப் பிரலாபித்தபோது 353 ஆம் செய்யுளிற் கூறிய வேதிகைச் செய்தியையும், பிராட்டி பிரானுக்குக் கூறியனுப்பிய அடையாள மொழிகளில் 684ஆம் செய்யுளில் கிளிக்குப் பெயர் வைத்த செய்தியையும் கூறலாம். இவையும் மேற் காட்டிய காரணங்களால் அமைந்தனவே.

சூடாமணிப் படலத்துடன் அநுமனை இலங்கைக்கு அனுப்பிய காரியம் வெற்றியுடன் முடிந்துவிட்டது. என்றாலும், ஆற்றலும் அறிவும் மிக்க தூதனான அநுமன் அதனோடு திரும்பிவிட எண்ணவில்லை. அவ்வாறு அவனைச் செய்யத்தூண்டியது அவனது கோபக்குணமே என்பது பொழிலிறுத்த படலத்தில் அவன் தனக்குள் கூறிக்கொண்டவற்றால் புலனாகுமெனினும், பிணிவிடு படலத்திலுள்ள செய்யுட்களால் அவ்வாறு அவன் செய்தது அறிவின் காரணமாகவும் நீதியின் காரணமாகவும் அமைந்ததென்பது விளங்கும்.

**6-11. போர்ப் படலங்கள்.** இனிவரும் படலங்கள் யாவும் - (திருவடிதொழுத படலம் நீங்கலாக) அநுமன் அரக்கர்களுடன் செய்த போர்களையே விளக்குவன. அநுமன் தான் ஒருவனாக நின்று இராவணனின் வளத்தை நிர்மூலமாக்கிப் பெருஞ்சேனைகளை அழித்த வீரத்தையும் ஆற்றலையும் நாம் இங்கே காண்கின்றோம். அநுமன் பெயரால் இக்காண்டம் அமைந்தது என்பார் கூற்றுக்கு இப்பகுதி உறுதி அமைக்கின்றது. காண்டத்துக்குள் காண்டம்போல அமைந்த இப்பகுதியில் முதற் படலமான பொழிலிறுத்த படலம் முதற் பகுதியிலுள்ள கடல்தாவு படலத்தை ஒத்திருக்கிறது. பிணிவிடுபடலத்தில் கூறியவாறு அவன் ஊரினைச் சுற்றி இழுத்துச் செல்லப்பட்ட வரலாறு, முன்னாள் இரவு அவன் தன்னந்தனியனாய் ஊர் சூழ்ந்ததை ஒத்திருக்கிறது; அவன் இராவணனைச் சந்தித்ததும், வாலில் எரியூட்டப் பெற்றதும் அவன் பிராட்டியைச் சந்தித்துச் சூடாமணியைப் பெற்றதற்கு நேர் எதிர்மாறான காட்சிகளாக அமைந்துள்ளன. ஆகவே காண்டத்தை இருபிரிவுகளாக்கிப் பிராட்டியாகிய அறத்தையும் இராவணனாகிய மறத்தையும் எதிரெதிர் நிறுத்தி

வைத்தது போலும், அவ்விரண்டிலும் அநுமனுகிய ஒரு சத்புருஷன் தோய்ந்து புறப்படுவது போலும் இப்பகுதிகள் அமைந்துள்ள பான்மை நோக்குவார்க்கு இன்பமளிப்பதாகும்.

பொழிலிறுத்த படலம் போருக்குத் துவக்கமாகும்; கிங்கரர், சம்பு மாலி, பஞ்சசேனுபதிகள், அக்க குமாரன் இவர்களின் வதைகள் ஆகி யவை போர் படிப்படியாக முன்னேறும் வரலாற்றைக் காட்டுவன. இந்திரசித்து அநுமனைப் பாசத்தால் கட்டியது அநுமனின் நோக்கத்தின் வெற்றிக்கு வாயிலாக அமைந்ததேயன்றி வேறன்று; பிணிவிடு படலத் தில் அவன் கூறும் (1062 - 66) செய்யுட்கள் இக்கருத்தினை மெய்ப்பிக் கும்; அநுமன் வாலில் இட்ட தீ இராவணன் தன் ஊரில் இட்ட தீயா கவே முடிந்தது. இவ்வாறு நாம் இப்பகுதி முழுவதிலும் ஜயவீரனை அநுமனையே காண்கின்றோம்.

ஒவ்வொரு படலத்திலும் ஒரே விதமான போரையே நாம் காண் கின்றேமெனினும் ஆசிரியர் அதனைக் கூறும் திறத்தால் நாம் புதிய புதிய விஷயங்களையே படிப்பதுபோன்ற உணர்ச்சியையே உண்டாக்கு கின்ருர்.

இப்பகுதியின் செய்திகளிலும் முதனூலினின்று சிற்சில மாற்றங் களைக் கம்பர் செய்கின்ருர். வான்மீகிராமாயணம், அத்யாத்மராமாய ணம் ஆகிய முன்னூல்களின்படி அசோகவனம் அழிந்த செய்தியை இராவணனுக்கு அறிவித்தவர் அவ்வனத்திலிருந்த அரக்கியர்; கம்பரோ அவ்வாறு செய்தவர் பருவத்தேவர் என்கிருர். முதனூலில் அநுமன் தன் பகைவர்களிடம் தன்னைப் பற்றியும் தன் தலைவனை சுக்கிரீவன் ஆற்ற லைப் பற்றியும் அடிக்கடி கூறின செய்தி அங்குக் குறிக்கப்பட்டிருக் கிறது; கம்பர் அநுமன் அவ்வாறு இராவணன் முன்னிலையில் மட்டுமே கூறியதாகக் குறிக்கின்ருர். ஏழு மந்திரி குமாரர்கள் வதை என்ற வரலாறு வான்மீகம், அத்யாத்மராமாயணம் என்ற இரண்டிலும் காட்டப்பெற்றிருக்க, கம்பர் அதனை அறவே விடுத்தார். சம்புமாலி வதை அத்யாமத்தில் இல்லை.

சிற்சிலவிடங்களில் கம்பர் முதனூலிலிருந்து மாறுபட்டிருந்தாலும். போர்களைப் பற்றிய விளக்கங்களிலும் அவற்றின் முடிவுகளிலும், எல்லா நூல்களும் ஒருபடித்தாகவே செல்கின்றன. இவற்றுள், கம்பர் கையாண்ட போர் வருணனை குறிக்கத்தக்கது. நால்வகைப் படை களின் அமைதி, அவை எடுத்துச் சென்ற ஆயுதங்களின் தன்மையும் பயனும், அரக்கர்களிட்ட வீரப்போர், அப்போர்களில் அநுமன் பட்ட இன்னல்கள், அவன் அவர்களைக் கொன்றவிதம் ஆகிய ஒவ்வொன்றும் படிப்படியாகவும், நுட்பமாகவும், ஒன்றேடொன்று மாறியும், சிறந்த உவமைகளோடும் வருணிக்கப்பட்டுள்ள நேர்மை போற்றத்தக்கது. பொழிலிறுத்த படலத்தில் அநுமனை 'அன்றுலகெயிற்றிடை கொளேன

மெனலானுன்' (698) 'ஊழியினிறுதிக் காலத்துருத்திர மூர்த்தி யொத்தான்' (736) என்று கம்பர் தாமே கூறியதற்கொப்ப அவனுடைய அழிப்புச் செயல்களை வருணித்துள்ள முறைகளும் மிகவும் வியக்கத்தக்கன. கிங்கரர் வதைப் படலத்தில் கிங்கரரின் போர்க் கோலத்தையும் அவர்களின் புறப்பாட்டையும் கேட்டவரும் அஞ்சும் வகையில் 14 செய்யுட்களில் ஒரு சந்தத்தில் அமைத்து, போரின் நிகழ்ச்சியை மற்றும் 15 செய்யுட்களில் மாற்றுச் சந்தத்திலும், போரின் முடிவை 15 செய்யுட்களில் வேருெரு சந்தத்தில் அமைத்துள்ளமை படிப்பவர்க்கு இறும்பூது விளைப்பதாகும்; சம்புமாலி, பஞ்சசேனுபதிகள், அக்ககுமாரன், இந்திரசித்து ஆகியோர் தரத்தில் சிறந்திருப்பது போலவே, அவர்கள் போர்த்திறமும் படிப்படியாகச் சிறந்திருத்தலையும், அவர்களுள் ஒவ்வொருவருக்கும் ஏற்ப அநுமனுடைய போர்முறையும் ஓங்கிவருவதையும் உள்ளபடி உணர்ந்து அப்படலங்கள் அமைக்கப்பெற்றுள்ளன. இப்போர்கள் சதுரங்க சேனைகளுடன் இடப் பெற்றவை. அவை ஒவ்வொன்றையும் அநுமன் அழித்தமுறையை,ஓரிடத்தில் சொன்னது போல் பிறிதோரிடத்தில் சொல்லாமலும் படிப்பவர் மனம் சலிப்புருமலும் செல்வதும், இடங்களுக்கு ஏற்ப ஆசிரியர் சந்தங்களை அமைத்துக்கொண்டு போரை நடத்திச் செல்வதும், இடையிடையே உபதேசமொழிகள் போன்று தத்துவங்களை உரைப்பதும், தமிழிலக்கண வழக்குகளையொட்டித் துறைகள் அமைப்பதும் கண்டு இன்புறத்தக்கன.

பாசப்படலத்தினின்று கதையின் போக்கு மாறிவிடுகின்றது. இந்திரசித்தின் பெருமையும் அவன் போருக்கெழுந்தமையும் 23 பாடல்களில் கூறப்படுகின்றன. அவனைக் கண்ட அநுமன் 'ஒன்றே இனி வெல்லுதருேற்ற லடுப்பது' (1004) என்று கூறத் தொடங்கி விட்டான். 30 பாடல்கள் இரு வீரரிடையே நடந்த போர் நிகழ்ச்சியைக் கூறுகின்றன. தோல்வி கண்ட இந்திரசித்து தன்னுற்றலை இகழ்ந்து, தெய்வ ஆற்றலை நாடுகிருன்; தெய்வத் திறத்திற்குக் கட்டுப்பட்டு அநுமன் கண்முகிழ்க்கிருன்; அரக்கர்கள் தாம் வென்றுவிட்டதாகக் கருதி மகிழ்கின்றனர். ஆனுல் அநுமனின் தோல்வி மேலும் அரக்கரின் அழிவுக்கு அடிகோலியதை அவர்கள் அப்பொழுது உணரவில்லை.

பிரமாத்திரத்தின் தன்மையையும் அஃது அநுமனைக் கட்டியிருந்த நிலைமையினின்று விடுபட்ட விதத்தையும் பற்றி வான்மீகம் கூறுவதினின்று கம்பர் மாறுபடுகின்ருர். வான்மீகி. "அநுமன்தான் இறப்பில்லாதவன் என்பதை அறிந்தனன்; அவன், 'பிரமன் தன் அஸ்திரத்திற்கு க்ஷணகாலம் அடங்கியிருத்தல் வேண்டும் என்று கூறியதை அறிந்து அந்த அஸ்திரத்துக்கு அடங்கியிருந்தான்; இராவணனைக் காண்பதற்கு உதவியாகுமே யென்று அவன் கட்டுப்பட்டவன் போலவே நடந்து கொண்டான்; அரக்கர்கள் சணல் நார்களாலும் மரப் பட்டைகளாலும்

அவனைக் கட்டினார்கள்' அவனை அஸ்திரம்விட்டு நீங்கியதற்குக் காரணம் அது பிறிதொரு பிணியை ஏற்றுக் கொள்ளாது என்பதனாலேயாம். இந்திரசித்து இதனை அறிந்துகொண்டு மிகவும் வருந்தினான்; பிரமாத்திரம் பழுதானால் பிற வேறு அத்திரமும் செல்லாதே என்று அவன் ஏங்கினான். ஆனால் அநுமன் தான் அத்திரத்தால் விடுபட்டதாகக் காட்டிக்கொள்ளவில்லை'' என்று கூறினர்.

கம்பரோ, பிரமாத்திரம் பாம்பின் உருவில் அமைந்திருந்தது என்றும், அதைப் பிடித்து இழுத்துக் கொண்டே அரக்கர் சென்றனர் என்றும், பின்பு இராவணன் அநுமன் வாலுக்கு நெருப்பிடக் கட்டளையிட்டபோது ''ஆய காலத்தயன் படையோ டிருப்பவா காதனவிடுகை, தூய பாசமெனப் பலவுங் கொணர்ந்து பிணிமின்' என்ன, அமரர்போர் வென்றான் தெய்வப் படைக்கலத்தை விட்டான்'' (1160) என்று கூறுகிறார். இங்குக் கூறியவற்றால் வான்மீகத்தின்படி பிரமாத்திரம் என்பது கண்ணுக்குத் தோன்றாத ஓர் ஆற்றல் என்பதும், அது மந்திரத்தால் தூண்டப்பட்டு, அம்மந்திரச் செயலுக்கு இழுக்கு உண்டாம் போது தானே அகல்வதென்றும் கொள்ளத்தக்கதாகும். கம்பரின் கருத்தின்படி அது போட்டுக் கழற்றும்படி கண்ணுக்குத் தோன்றும் ஒரு பொருளாகு மென்பதாகிறது. உயுத்த காண்டத்தில் வரும் அஸ்திரங்களுக்கும் அவர் அவ்வாறே கொள்வர்.

12. பிணிவிடு படலம், பாசப்படலத்துடன் அநுமனிட்ட போர்முடிவடைகிறது. இராவணனைக் காணவேண்டும் என்று விரும்பிய அநுமனுக்கு வாய்ப்பு கிடைக்கிறது. இங்கு இராவணன் விசித்திரமான கோலமளிக்கின்றான். அவன் இதுகாறும் பெற்றது தோல்வியே; அவன் குமாரர்களில் ஒருவன் இறந்து பட்டான்; சேனைத் தலைவர் பலர் மாண்டனர்; சேனையிற் பெரும்பகுதி ஒழிந்தது, என்றாலும், அநுமன் பிடிபட்ட செய்தியைக் கேட்க மிகுந்த ஆடம்பரக் கோலத்துடன் அவன் காட்சியளிக்கின்றான். அவனுடைய இழிகுணத்தைக் காட்டவே அவனைக் கம்பர் இங்கு இவ்வாறு வருணிக்கின்றார் போலும். வான்மீகத்தில், இராவணன் அநுமனுடன் நேர்முகமாகப் பேசவில்லை. அமைச்சனான பிரகத்தனைக் கொண்டே அங்கு அவன் அநுமனை வினவுகின்றான். அநுமனுடைய மறுமொழி கம்பரால் மிகவும் கம்பீரமாக அமைக்கப் படுகின்றது. அவர் இங்கு அநுமன் வாயிலாக இராமபிரானின் பரத்வத்தை உறுதிப்படுத்துகின்றார். மானம், காமம் என்ற வெறிகளின் வசப்பட்ட இராவணனுக்குக் கோபமே எழுகிறது. அதன் முனையை வீடணன் ஒருவாறு மழுங்குவிக்கின்றான். அநுமன் வந்த காரியம் முடிவடைய இராவணனே தன் நகரின் அழிவுக்கு அவன் கையில் கருவியைத் தானே கொடுக்கிறான். அடுத்த காண்டம் இராவணன் முடிவைக் கூறப்போகின்றது; அதன் முன்னறிவிப்பாக அநுமன் இலங்கையை எரித்தொழிக்கிறான்.

13. எரியூட்டு படலம் ஓர் அரிய கற்பனை, பல சந்தங்கள் இங்குக் கையாளப்படுகின்றன. எரி ஊரைப் படிப்படியாகக் கௌவுகிறது. இப் படலத்தில் அமைந்துள்ள உவமைகள் யாவும் பொருள் நிறைந்தவை. இங்கும் அநுமன் ஒரு சிறிய போர் நடத்தவேண்டியதாகிறது. இச் செய்தி முதனூலில் இல்லை. பிராட்டியிடம் அநுமன் மிகச் சுருக்க மாகவே கடைசியாக விடைபெற்றுக் கொள்கிறானென்பது கம்பர் மதம். எங்குத்தான் இட்ட தீ அசோகவனத்திலும் பரவிப் பிராட்டியை ஊறுபடுத்தி விட்டதோ என்று அநுமன் மனமயங்கிப் பிரலாபித்ததாக வான்மீகி ஓர் ஸர்க்கம் அமைப்பர்; அவ்வாறு கம்பர் செய்யவில்லை. அவன் துயர்ப்படவே கம்பர் இடம் கொடுக்கவில்லை. இது வான்மீகி கூறியவற்றைக் கம்பர் தாம் மறுமுறையும் திரும்பக் கூறாது, அங்கு விளக்கமாகக் கூறப்படாதனவற்றை மட்டும் எடுத்தியம்புவதாகக் காண்கிறது. இந்நோக்கத்தோடு காண்பார்க்குக் கம்பராமாயணம் வான்மீகிராமாயணம் இரண்டையும் படிப்பதனாலேதான் இராமகதை யின் நுட்பம் புலனாகும் என்ற கருத்து தோன்றுவது இயல்பு.

14. இனி, திருவடி தொழுத படலத்துக்குச் செல்வோம். கம்பர் தாம் கூற எடுத்துக் கொண்ட (இராமாயணக் கதையில் வரும்) பெரு முயற்சிகளைப் பற்றி விளக்கும் போதெல்லாம் முயற்சியின் தொடக்கத் தையும் அதன் பயனையும் மிக மிக விரிவாகவும், பல உவமைகளின் உதவியாலும் பரக்கக் கூறி, அம்முயற்சி கைகூடியபின். பாத்திரங்களை மிகவும் அவசரமாகத் திரும்பிவரச் செய்கிற யுக்தியைக் கையாள்வதை நூலிற் பலவிடங்களிலும் காணலாம். அதை ஒட்டியே, பிராட்டியைக் காணும்பொருட்டுச் சுக்கிரீவனால் விடப்பெற்ற அநுமனையும் அவனுடன் சென்றவர்களையும் அவர்கள் புறப்பட்டுச் சென்ற வரலாற்றையும் மிக விரிவாகவும் அவர்கள் திரும்பிய வரலாற்றை மிகச் சுருக்கமாகவும் அமைத்துள்ளார். ஆனால், செய்யுள்களின் அளவு சுருங்கச் சுருங்க, செயல்கள், பண்புகள் ஆகியவை அதிகச் செறிவுற்று அமையும் வண்ணமும், பாத்திரங்களின் குணங்கள் அதிக ஒளியுடன் விளங்கும் வண்ணமும், சுவைகள் மிக ஓங்கி ஒளிரும் வண்ணமும் அமைத்துக் காட்டுவதற்குரிய வல்லமை அவரிடம் பெரிதும் அமைந்திருக்கிறது.

அநுமன் இலங்கைக்கு எரியூட்டி, சோலையிலிருந்த பைந்தொடியின் தாள்களிற் பணிந்து, வீரன் பூங்கழல் தொழுது வாழ்த்தி, விசும்பிடைக் கடிது சென்று, தன் வரவை நெடிது பார்த்து நின்றகுன்றிடைக் குதியும் கொண்டான்; அப்பொழுது அவனைக் கண்ட நண்பர்கள் மேற் கொண்ட மகிழ்ச்சிச் செயல்கள் மிகப்பல. அவர்களுக்கெல்லாம், 'ஞாலநாயகன் தேவி சொல்லினள் நன்மை' யென்று மிகச் சுருக்க உரையால் தான் சென்று வெற்றியுடன் திரும்பியதைச் செப்பித் தன் னுடைய வெற்றியைத் தானே கூற வெள்கினான்; பிறகு அங்கதன் முதலி யோர் 'ஆவதவ் வண்ணலுள்ளத் தருந்துய ரகற்ற லேயாம்' என்று

கூறி, அநுமனை முன்னே யனுப்பித் தாங்கள் பின்தொடர்ந்ததாக அமைத்தது விரைவு நிகழ்ச்சியை நன்கு தெரிவிப்பதாகும். (அநுமன் மதுவனம் அடைந்து காலங் கடத்தினன் என்று கொள்ளுதல் பொருந் தாது என்பதற்குக் காரணங்களைப் பிறிதோரிடத்திற் காட்டி யுள்ளோம்.) இப்படலத்தில் பிராட்டியின் தவ நிலையையும், கற்பின் சிறப்பையும் அநுமன் இராமபிரானிடம் கூறிய முறை மிக மிக வியக்கத் தக்கது. முதனூல் அநுமன் இலங்கையிற் கண்டதையும் செய்த தையும் மட்டுமே விளக்கிக் கூறியதாகக் காட்டிச் செல்ல, கம்பர் அப் பகுதியைச் சுருங்க அமைத்துப் பிராட்டியின் மேன்மையைப் பல உருவகங்களால் இரக்கமும் பெருமிதமும் கொள்ளுமாறு அமைக்கும் பெற்றி மிகவும் போற்றத்தக்கது.

இராமபிரானை அநுமன் காண்டலையும், அவன் பிராட்டியைத் தான் கண்ட தன்மையைக்கூறியதையும் கம்பர்கூறும் திறம் மிகமிக அருமை யானது. உணர்ச்சிகளைத் தெரிவிக்கும் பாடல்களின் செறிவும் ஓசை யும் கம்பருக்கே உரிய தனிச் சிறப்பாகும். கற்பின் இலக்கணத்தை உலகுக்குக் கற்பிக்கவே பிறந்த பிராட்டியின் பெருமையைக் கூறும் இக்காவியத்திற்கு, கற்பின் மகுடாபிஷேகமாக இப்பகுதி அமைந் துள்ளமை கண்டு இன்புறத்தக்கது. 'என் பெருந் தெய்வமையா' என்று சுந்தரனுன அநுமன் தன் அரும்பெரும் வெற்றிகளுள் பெரும் வெற்றியாக இக் கற்புத்தெய்வக் காட்சியைப் பாராட்டிய பான்மை நோக்கற்பாலது இப்பகுதி இக்காண்டத்தின் முடிவாக அமைவ தும் ஒரு சிறப்பாகும். இராமாயணத்தின் ஒப்புயர்வற்ற தலைவன் இராம பிரானே; அவன் இக்காண்டம் முழுவதிலும் அருவ நிலையில் நின்று அதனைத் தொழில்படுத்துகின்றுன்; அவனைப்பற்றியும் இப்பகுதியில் 'யாருளர் தன்மை தேர்வார்' (1292) என்ற முடிவுக்கு நாம் வருகிறேம்; எவர்க்கும் அறியவொண்ணுத சச்சிதாநந்த நிலையிலே அவனைக் கம்பர் நிறுத்திக் காட்டியதும் இப்பகுதியிலேதான். கம்பருடைய கவித்திற னுக்கு இதனை விஞ்சியதோர் இடமில்லை என்றே துணிந்து கூறலாம். அவர் இக்காண்டத்தை அடுத்த காண்டத்தோடு தொடர்பு படுத்தித் 'தென்றிசைப் பரவைகண்டார்' என்று முடித்ததும் பொருத்தமே. 'ஆண்டகை கண்டான்' என்று தொடங்கி, 'உடன் பொருந்திப் போவார் கண்டார்' என்று முடிந்திருப்பது இக் காண்டம் முழுவதும் ஒரு காட்சிக் காண்டமாகும் என்பதைத் தெரிவிக்கும். இக் காண்டம் கடற்கரையில் தொடங்கிக் கடற்கரையிலேயே முடிவதும் கண்டு இன்புறத்தக்கது.

**கம்பரின் கவித்திறம்.** கம்பராமாயணம் தமிழிலுள்ள காவியங் களுள் சூடாமணியாய் விளங்குவதற்குக் காரணம் ஆசிரியருடைய பக்தியும் கல்வித்திறமுமேயாகும். அவர் வாழ்ந்த காலத்தில் தமிழகம் கடவுள் பக்தியில் தோய்ந்திருந்தது. கடவுள் பக்தியிலும் ஒழுக்கமே

தலைசிறந்தது என்ற பிறமதப் போதனைகள் மக்களின் மனத்தில் குழப்பத்தை உண்டாக்கியிருந்த (நான்கு முதல் ஏழாம் நூற்றாண்டு வரையுள்ள) காலத்துக்குப்பின், சங்கரர் இராமாநுஜர் போன்ற பெரியோரும், நாயன்மார்களும், ஆழ்வார்களும் நாட்டில் தோன்றிச் சமய உணர்ச்சிக்கு மறுமலர்ச்சி அளித்திருந்தனர். பாரத நாடெங்குமே அம்மலர்ச்சி விளங்கிவந்தது. கோயில் பூசைகளும், விழாக்களும் மலிந்திருந்தன. மக்களின் மனம் ஆண்டவனிடமும் அடியார்களிடமும் மிகுந்த பக்தியில் ஈடுபட்டிருந்தது. சோழர் அரசாட்சியும் தன் முன் அடிமை நிலையிலிருந்து விடுபட்டுத் தன் குடைக்கீழ் மிகப் பெரிய சாம்ராஜ்யம் ஒன்றைத் தோற்றுவிக்கும் ஆற்றலைக் கொண்டு விளங்கியது. நாடும் பகையும் பசியும் நீங்கி வளனும் வசியும் பெற்று விளங்கி வந்தது.

இக்காலத்திலே நாட்டில் இராமாயணப் பிரசங்கங்கள் ஆங்காங்கே மிகுதியாக நடைபெற்றுவந்தன. இச் சூழ்நிலையில் சிறந்த இராம பக்தரும், கல்வியிற் பெரியாரு மாகிய கம்பர், 'ஆசைபற்றி யறையலுற்றேன்' என்று தாம் கூறியபடி இக் காவியத்தை இயற்றி இலக்கிய உலகில் தம் பெயரை என்றும் அழியாது நிலைநாட்டிச் சென்றார் என்று கூறுதல் பொருந்தும். 'பத்தர் சொன்னவும் பன்னப் பெறுபவோ' என்று அவர் கூறியதும் காண்க. 'சடையன் வெண்ணெய்நல்லூர்வயிற் றந்ததே' என்றமையால் சடையப்ப வள்ளலின் சம்பந்தமும் இதன் ஆக்கத்திற்குப் பெரிதும் உண்டு என்று கொள்ளலும் ஆகும்.

பொருள்களையும் நிகழ்ச்சிகளைமம் விளக்குவதிலும், அவற்றை முறைப் படுத்திப் படிபடியாய்க் கொண்டு செலுத்துவதிலும், உவமைகளைப் பொருள்களின் பெருமை சிறுமைகளுக் கேற்பத் தேர்ந்தெடுத்து அமைப்பதிலும், மிக நுணுகிய கருத்துப் பொருள்களையும் கண்முன் காட்டுவதுபோல நிறுத்துவதிலும், தத்துவப் பொருள்களை எளிய நிகழ்ச்சிகளின் வாயிலாய் எடுத்துப் புகட்டுவதிலும், அறத்துறைகளையும், ஒழுகலாறுகளையும், நீதிகளையும் இடங்கள் தோறும் தோற்றுவித்தலிலும் காவியத்தின்பாவிகத்தை இடைறாமல் நிலைநிறுத்திக் கொண்டே போவதிலும், பழையபுராணங்களை நினைவூட்டுமாறு அவற்றின் நிகழ்ச்சிகளையெல்லாம்உவமை வாயிலாக அமைத்துச் செல்வதிலும், தமிழ்ச் சொற்களின் இனிமை, எளிமை, ஆழமுடைமை முதலிய அழகுகள்புலப்படுமாறு அமைத்துச் செல்வதிலும், காட்சிகளில் ஒளியும் ஓசையும் நிறமும் அமையுமாறு வருணனைகளையும் உரையாடல்களையும் அமைத்துக் காவியத்தை நாடகமாக்கிச் செல்வதிலும், சொற்களாலும் சந்தங்களாலும் பாடல்களுக்கு ஏற்ற இசையூட்டிச் சந்தர்ப்பங்களைத் தெளிவுபடுத்தலிலும் இன்னும் அறிவால் அளக்கவும்சொற்களால் உரைக்கவும் முடியாத உயர்ந்த நிலையில் நம் கவிஞர் பெருமான் தம் இராமாயணத்தை யாத்து உலகுக்கு அருளியுள்ளார். அவருடைய இயற்கைப் பொருளறிவு, மானிடர் இயல்பறிவு, தத்துவ உண்மைப் புலமை, சமய நூல்களில் தேற்றம்,

நீதி நூல்களில் துணிவு, பல்கலைத் தெளிவு, கட்டுரை வன்மை இன்னோரன்ன பல துறைகளில் அவருக்குள்ள பெருமையை நாம் நூலின் ஒவ்வோரிடத்திலும் காண்கிறோம். கடல் தாண்டுதல், பொழிலிறுத்தல், எரியூட்டுதல் போன்ற கதையற்ற பகுதிகளையும் எவ்வளவு சுவையுள்ளனவாக அவர் அமைத்துக் காட்டுகின்றார்! ஊர்தேடுபடலத்தில் நேர்ந்துள்ள அந்தியிருள், சந்திரோதயம், இரவில் நகரின் உறக்கநிலை போன்றவை உலகம் போற்றத் தக்க இலக்கியத் துணுக்குகள். அரக்கியரிடம் நாம் காணும் இன்பக் கலைகள்தாம் என்னே! இவ்வளவு சிறப்புக்களையும் அவர்களுடைய அரக்கத் தன்மையோடு கூட்டிக் குழைத்து அவற்றினிடம் நாம் தோயாமலும் விலகி நிற்க மாட்டாமலும் அவர் செய்து விடுகிறார்.

பிராட்டி, அநுமன், இராவணன் இம்மூவருமே இக்காண்டத்தின் சிறந்த பாத்திரங்கள். அவர்களைப் பற்றி நாம் எத்தனை முறை இக்காண்டத்தைப் படித்தாலும் புதியன புதியனவாக நமக்கு அறிவு தோன்றும்படி ஆசிரியர் கூறிச் செல்வதன் மர்மத்தை நாம் எவ்வாறு உணரக்கூடும்! பிராட்டியிடம் கலப்பற்ற தூய்மையையே நாம் காண்கிறோம். அநுமனிடம் தன் கவலையினாலும் சோர்வினாலும் மிகச் சில இடங்களில் தவறுதல்களைக் காண்கிறோம்; இராவணனைக் கொன்று விட அவன் பல சமயங்களில் முயல்கிறான்; மண்டோதரியைப்பார்த்துப் பிராட்டிபால் தவறெண்ணம் கொள்கிறான்; பிராட்டியைத் தான் எடுத்துச் சென்று காப்பாற்றி விடலாமென்று கருதுகிறான்; ஊரைக் கொளுத்திவிட்டு அசோக வனம் யாதாயிற்றோ என்று கவல்கிறான்; இவை யாவும் அவன் மண்ணிற் பிறந்தவன் என்பதைக் காட்டுகிறது. எனினும் அவன் தூய்மையும், தைரியமும், ஆற்றலுமே நம் கண்முன் நிற்கின்றன. இராவணன் யானைகளை வென்றவன்; கயிலையைக் கலக்கியவன்; மூவுலகுக்கும் இறைவன்; தேவர்களைப் பணிகொள்பவன்; பல்கலைச் செல்வன்; எனினும் அவன் அரக்க குணமே மேலோங்கி நிற்கிறது. இவ்வாறு செய்வித்தது கம்பரின் கவித்திறன்.

அங்காரதாரை, இலங்கைமாதேவி, கும்பகருணன், வீடணன், அக்கன் இந்திரசித்து முதலியவர்களைப் பற்றிக் கூறும் பகுதிகள் அவரவர்களுடைய உருவம், குணம், செயல்களை நம் கண்முன் நேரில் நிறுத்தப் பெற்றவையாகும். கம்பநாடகம் என்னும் பெயர் இவ்வாறு பாத்திரங்களைக் காவியத்தில் காட்டிய திறத்தாலேயே இந்நூலுக்கு ஏற்பட்டதாகலாம்.

**உவமைகள்;** கம்பர் தம் வருணனைகளைச் சுவைபட அமைக்க உதவியாயிருந்த பலவற்றுள் அவருடைய உவமைகளே சிறந்தனவாகும். இக்காண்டத்தில் அமைந்துள்ள உவமைகளைமட்டும் தொகுத்து ஆராய்வது பயனுறுவதாகும். மலை, கடல், சோலை என்ற

நிலத்திணைப் பொருள்களையும். சந்திரோதயம். இருள் சூழ்தல் போன்ற இயற்கைக் காட்சிகளையும், மக்களின் மேனி, உருவமைப்பு, குணம், செயல் முதலியவற்றின் வருணனைகளையும் அவர் கூறும்போது அவர் கையாளும் உவமைகளின் பொருத்தங்கள் மிகச் சிறந்தனவாகும். பற்பல உவமைகளால் பொருளின் பற்பல தன்மைகளை அவர் விளக்குவது கூர்ந்து நோக்கத்தக்கது. காட்சிப் பொருள்கள், புராண வரலாறுகள், கருத்துப் பொருள்கள், நீதிகள், தத்துவ உண்மைகள் ஆகிய பலவும் அவருக்கு உவமைகளாகின்றன.

**சொல்வளம்** : கம்பரின் சொல்வளமோ ஆழங்காண முடியாதது தொன்று. அவர் உணர்ச்சிக் கொத்த சொற்கள் வேண்டிய இடங்களில் அவர் கண்முன் தாமே வந்து நிற்கின்றன. இடத்திற்கேற்ற சந்தமும், அச்சந்தத்திற்கேற்ற சொற்களும் கம்பருக்கு அமைந்துள்ளன போல் வேறு சில புலவர்க்கே அமைந்துள்ளன. சுவைகளை மிகுதிப் படுத்தப் பாத்திரங்களின் செயல்களை அவர் வினைச்சொற்களால் அடுக்கிச் செல்லும் அழகினை இக்காண்டத்திற் பலவிடங்களில் நாம் காண்கிறோம். ஒரே பொருளில் வெவ்வேறு சொற்களை அமைப்பதிலும், முரணணி தோன்ற அவற்றைக் கையாள்வதிலும் அவர் மிகுந்த வல்லமையுடையவர். வடசொற்களைக் கையாள்வதில் அவர் நமக்குச் சிறந்த வழிகாட்டிச் செல்கின்றார். எளிமையும் நேர்மையும் அவர் பாடல்களின் இலக்கணமாதலின் அவற்றில் பொருள் இடர்ப்படுவதற்குரிய இடங்கள் அருகியுள்ளனவே என்று கூறிவிடலாம். ஆனால், பாடபேதங்கள் அளவுகடந்து போய்விட்டமையால் ஆசிரியருடைய கருத்து இன்னது என்று அறியமுடியாதபடி பல இடங்களில் இடர்ப்பட வேண்டிய நிலைமையும் வந்து விடுகிறது.

**சுவைகள்** : சுவைகளை நோக்கும்போது இக்காண்டம் ஒரு சுவைக் களஞ்சியம் என்றே கூறவேண்டும். ஒன்பான் சுவைகளும் அவற்றின் விளைநிலங்களோடு இங்குக் காணப்பெறுகின்றன; அவற்றை ஆராய்வது ஓர் அருங்கலை விநோதமாகும். அச்சுவைகள் யாவும் சிறந்த புஷ்டியுள்ள உருவத்தோடு அமைந்திருப்பன இக்காண்டத்தின் தனிச்சிறப்பாகும். சுவைகளை அடுக்கிக் கூறுதலிலும், நேர் எதிரிடையான சுவைகளை ஒருமித்துக் கூறுதலிலும் கம்பர் கைதேர்ந்தவர் என்பதை ஆங்காங்கே உரைகளில் விளக்கியுள்ளோம்.

**தமிழ் மரபு** : தமிழ் நூல்களினுடையவும் தமிழ் மரபுகளினுடையவும் ஆன சாயைகள் காண்டத்திற் பலவிடங்களிலும் வீசுவதையும் நாம் முன்பே குறித்துள்ளோம். இன்ன இன்ன மரபுகள் தமிழ்நாட்டுக்கே உரியன என்று கூறுவது முற்றிலும் இயலாவிடினும், நூலைப் படிக்கும் போது கம்பர் தமிழகத்திற்கே உரிய பழக்க வழக்கங்களையும், பேச்சு முறைகளையும் ஆண்டுள்ளமை தோன்றும் இடங்கள் பலவாகும். அவற்றை விரிக்கிற் பெருகும்.

**கதை நிகழ் காலம்:** இனி, இக்காண்டத்திற் கூறப்பெறும் நிகழ்ச்சிகளுக்குரிய காலம் யாதாகும் என்று ஆராய்வது ஒரு விநோதமாகும், அநுமன் இலங்கையில் வந்திறங்கியது மாலை நேரம்; அப்பொழுது சேய்மையிலிருந்து நகரைக்காண அவனால் முடிந்தது. பிறகு அந்தி இருள் சூழ்ந்தது; உடனே சந்திரோதயம் உண்டாயிற்று. அப்பொழுது அநுமன் இலங்கை மதிலைக் கடந்து நகரினுட் புகுந்தான். அவன் இடைநகரை அடைந்த நேரம் நள்ளிரவு. அவன் அசோகவனத்தில் புகுந்ததும் நள்ளிரவே; அல்லு நள்ளூறப் பொருந்தலும் காவலரக்கியர் துயின்றனர்; திரிசடையும் பிராட்டியும் பேசிக்கொள்ள நேரம் வாய்த்தது. அதன் பின்னரே இராவணன் அங்கு வந்தனன்; அநுமன் சூடாமணியைப் பெற்றுக்கொண்டபோது பொழுது விடிய வில்லை. ஆனால் அவன் பொழிலிறுக்கத் தொடங்கினபின் சந்திராத்தமனமும், சூரியோதயமும் கூறப்பெற்றுள்ளன. இதுகாறும் கூறப்பெற்றகதை நிகழ்ச்சிகள் அநுமன் இலங்கையிற் புகுந்த ஓரிரவில் நடந்தவை.

பிறகு அன்றைப்பகலில் கிங்கரர், சம்புமாலி, பஞ்சசேனாபதிகள், அக்ககுமாரன் ஆகியோர் பட்டனர். ஆனால் அநுமன் பாசத்தால் கட்டுண்ட நேரம் இன்னதென்று புலனாகவில்லை. இராவணன் அநுமன் வரவை நோக்கி வீற்றிருந்த காலை அவனுடலிலிருந்த மணிகள் இருளை நீக்கின (1083) என்று கூறியிருத்தலால், அந்நேரம் முன் இரவாகலாம் என்றுகொள்ளக் கிடக்கிறது. மேலும், அப்படலத்தில் வாலிலிட்ட நெருப்போடு ஊரைச் சூழச் சென்ற அநுமன் 'அற்றை அவ்விரவில்' (1174) என்று தான் முதனாளிரவில் காணாத இடங்களையும் 'இற்றை இவ்விரவில்' கண்டு சென்றனன் என்று சூசிப்பதாக அமைந்துள்ளமையும் காணத்தக்கது. அன்றியும் இலங்கையெரியூட்டு படலம் 1201. செய்யுளில் அநுமன் இட்டதீ 'வெண்கதிர்த் திங்களைச்' சென்றுற்றதையும், 1202 ஆம் செய்யுளில், 'பருதி பற்றிப் பைங்கனல் நிமிர்ந் தெழுந்ததையும்' கூறினமையால் இரவெலாம் அநுமன் ஊரைச் சுட்டெரித்து, சூரியனும் சந்திரனும் ஒருங்கே காணப் பெறும் விடியிற் காலத்திலும் அவ்வாறே நின்ற செய்தி கூறப்படுவதாகக் கொள்ளலாம். இவற்றோடு திருவடிதொழுத படலத்தில் ஊரைச் சுட்டெரித்துவிட்டுத் திரும்ப மலைமீது நின்ற அநுமனை, ஆங்கொரு குடுமிக் குன்றை அருக்கனின் அணைந்து நின்றான் என்று உவமித்தது அப்பொழுது சூரியன் நன்றாக உதித்துவிட்டதைத் தெளிவுறுத்துவது போலக் காண்கின்றது. ஆகவே அநுமன் இலங்கையிற் கழித்த காலம் முதல்நாள் ஓரிரவும் மறுநாட்பகலும் அதை யொட்டிய இரவும் எனக் கொள்ளலாம்.

மேலே கூறியவை யாவும் சூசகங்களே. இவை ஆராயற்பாலன, இவ்வாறே இராமாயணத்தில் விளங்கவேண்டிய பகுதிகள் பல உள்ளன.

**கம்பர் சமயம்.** கம்பநாடர் பழமையான வேத சமயக்கொள்கையை முற்றிலும் நம்பியவர்; ஊரும் பேருமற்ற மூலப்பொருளே

முப்பெருங்கடவுளாக விளங்குகின்ருர் என்றும், அம்மூலப் பொருளே இராமபிரானுக அவதரித்துள்ளார் என்றும் அவர் கண்டறிந்தார். அறத்தின் நலிவு நேரும்போதெல்லாம் இவ்வவதாரம் நிகழும் என்பது நம்மவர் கொள்கை. கம்பர் அம்முழுதற் கடவுள் திருமாலே என்று கொண்டிருந்தாலும், பிறசமயங்களெல்லாம் ஒரே உண்மைச் சமயத்தின் வெவ்வேறு பிரதிச் சாயல்களே என்றும், எல்லாம் ஒன்றுபடக் காண்பதே உண்மைச் சமய உயர்வு என்றும் அவர் நன்கு உணர்ந்து, அவ்வுண்மையை உலகுக்குக் காட்டவே, தம் காவியத்தைப் பயன் படுத்த முயன்ருர். சிவபெருமானிடம் அவர் கொண்ட சிறப்பும், பெருநோக்கமும் இக்காண்டத்திற் பல இடங்களில் காணப்படுகிறது. மறத்தின் பான்மைகளையெல்லாம் அவர் விரித்துக் காட்டி, அதனை வென்று அறத்தின் ஆட்சியை நிலைக்கச் செய்வதே இயற்கையின் தத்துவம் என்பதையும் அவர் இக்காவியத்தால் நன்கு நிலை நிறுத்தியுள்ளார் என்னலாம்.

**முடிவுரை.** இவ்வுண்மைகளை நிலைநாட்டக் காவிய உருவமே மிகவும் ஏற்றது என்பதை அவர் தம் கல்வி கேள்விகளால் உணர்ந்து, அவ்வுணர்ச்சியின் பயனுய் இந்த இராமகாவியத்தை இயற்றி உலகுக்குப் பணியாற்றத் துணிந்தார், வடமொழி தென்மொழிகளாகிய இரண்டிலும் காணப்பெறும் பண்டை இலக்கியப் பண்புகள் யாவற்றினும் தாம் இரண்டறக் கலந்து தோய்ந்து தம் அறிவினுல் வழியொன்றை வகுத்துக்கொண்டு, பழமைக்கு முரண்படாமலும், உண்மை சிறிதும் மாசுபடாமலும், காவியங்களுக்குள் சிரோமணியென என்றென்றும் உலகம் கொண்டாடத்தக்க முறையில் தம் இராமாயணத்தை அவர் யாத்தருளினுர். அன்றியும் இக்காவியம் எங்கும் கம்பரே நிலவிவருவதை நாம் காணலாம். காவியப் பண்புகளுக்குக் கம்பராமாயணத்தை விஞ்சியதொரு இலக்கியத்தை உலகம் காணமுடியாது என்று சொல்லும்படி அவர் செய்துவிட்டார். தமிழ்மொழியின் எளிமையும் வளமும் அவர் அறிவையும் உணர்ச்சியையும் உள்ளபடி எடுத்துக்காட்ட ஏற்ற நிலமாய் அமைந்தன; வடமொழி, தென்மொழி நூல்களில் தாம் பெற்ற அறிவாகிய நீரிலே இராமகதையென்னும் விதையைத் தோய்த்து ஊறவைத்து, பக்தி, என்னும் நீரை நீதியுடைமை. நெறியுடைமை என்னும் மடைகளினுற் பாய்ச்சி, சொல்வன்மை, உவமைச் சிறப்பு என்னும் எருவிட்டு, இந்தியப் பண்பென்னும் அறப்பயிரை வளர்த்துச் காவியமாகிய அறப்பயனை அறுவடை செய்து, அமுதமாக்கி, சுவைகளாகிய தேனுடன் கூட்டி, 'சேர்ந்துண்ணவாரும் ஜகத்தீரே!' என்று உலகத்துக்குப் பெருஞ்சோற்று விழாவினை அவர் என்றென்றும் அளித்து வருகின்ருர் என்றுகொள்வதே சாலப் பொருந்தும்.

ஆசிரியர் வான்மீகி, காளிதாசன், பவபூதி, போஜன் ஆகிய வடமொழி நூலாசிரியர்களின் போக்குக்களையும், தமிழ்ச் சங்கநூல்கள்,



பெருங்காப்பியங்கள், ஆழ்வாராதிகளின் அருளிச் செயல்கள் ஆகிய யாவற்றையும், கேட்டும், நன்கு பயின்றும் உள்ளவராதலின் அப்பெரு நூல்களின் சுவைகளெல்லாம் ஒருங்கு சேர அமைவதற்குக் கம்பராமா யணம் ஏற்ற கருவூலமாயிற்று.

காவியத்தின் சிறப்பு அதன் பொருளிலும் அதன் ஆசிரியரிடத் திலுமே காணப்படும். இவ் விரண்டினுலும் கம்பராமாயணம் பெருமை யுற்று விளங்குகிறது. இதன் அருமை பெருமைகள் எல்லாம் ஒருவ ரால் எடுத்துரைக்க முடியா.

'நற்கு ணக்கட லாடுதல் நன்றரோ' என்று கல்வியிற் பெரியார் கூறி யருளியபடி இந்நூலின் பெருமையில் நம் அறிவளவில் திளைத்து மகிழ் வதே அல்லாமல், இஃது இத்தன்மைத்து என்று எடுத்துக்கூற நாம் தகுதியுடையோம் அல்லோம். மேலும் இராமசரிதமே ஒரு சாகரம். ஆத லால், ''கடல்கண்டோம் என்பர் யாவரே முடிவிற்கண்டார்'' என்ற கல்வியிற் பெரியார், கூற்றும் எம் தகுதிக்கு ஓர் ஏற்ற எடுத்துக் காட் டாகும். எம்மையும் இக் கைங்கரியத்தில் ஒருவாறு ஈடுபடும் வாய்ப்பில் கூட்டுவித்த இறைவனருளைப் போற்றுவதன்றி வேறு செய்யக் கூடிய தொன்றுமின்று. இதில் நேர்ந்துள்ள பிழைகள் யாவற்றையும் அவ் வருள் பொறுத்துக் கொண்டருளுமாக.

வாக்குத் தூய்மை யிலாமை யினுலே
மாதவா வுன்னை வாய்க்கொள்ள மாட்டேன்
நாக்கு நின்னை யல்லா லறியாது
நான தஞ்சுவ னென்வச மன்று
மூக்குப் பேசுகின் ருனிவ னென்று
முனிவா யேலுமென் னுவினுக் காற்றேன்
காக்கை வாயிலுங் கட்டுரை கொள்வர்
கார ணுகரு ளக்கொடி யானே

(பெரியாழ்வார் திருமொழி)

—★




உ

ஸ்ரீராமஜயம்

# கம்பராமாயணம்

## ரு. சுந்தரகாண்டம்

## 1. கடல்தாவு படலம்

—★—

### கடவுள் வாழ்த்து

1. *அலங்கலிற் றோன்றும் பொய்ம்மை யரவெனப் பூத மைந்தும்*
*விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபா டுற்ற வீக்கம்*
*கலங்குவ தெவரைக் கண்டா லவரென்ப கைவி லேந்தி*
*இலங்கையிற் பொருதா ரன்றே மறைகளுக் கிறுதி யாவார்.*

கடல்தாவு படலம் - (மகேந்திரமலையில் நின்ற) அநுமன் தென் கடலைத் தாவிக் கடந்த செய்தியைக் கூறும் படலம் என்று விரியும்.

**(பதவுரை).** அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு என - மாலையினிடத்தில் (விபரீதமாகக்) காணப்பெறும் பொய்மையான பாம்பென்ற எண்ணம் போல, பூதம் ஐந்தும் விலங்கிய விகாரப்பாட்டின் - ஐந்து பூதங்களும் தம் நிலைகளிலிருந்து மாறுபட்டுத் தோன்றும் வேறுபாடுகளின், வேறுபாடு உற்ற வீக்கம் - மாறுதல் அடைந்த மிகுதித் தோற்றம், எவரைக் கண்டால் கலங்குவது - எவரைப் பார்த்தவுடனே நீங்கிவிடுமோ, அவர் - அக்கடவுளே, மறைகளுக்கு இறுதி ஆவார் - வேதங்களின் முடி

வான உபநிடதங்களின் பொருளாவார்; (அவர்) அன்றே கை வில் ஏந்தி இலங்கையில் பொருதார் - அவரே அல்லரோ கையில் வில்லை ஏந்தி இலங்கையில் போரிட்டார், என்ப - என்று ஆன்றோர் கூறுவர்.

(விளக்கவுரை). ஒவ்வொரு காண்டத்தையும் கடவுள் வாழ்த்தோடு தொடங்குவதே இவ்வாசிரியர் முறை. இப் பாடலில் மறைகளுக்கு இறுதியாவார் இலங்கையிற் பொருதார் என்றதால், காவியத்தலைவனும் தாம் வழிபடு கடவுளுமாகிய இராமபிரானே பரம்பொருள் என்று துணியப்பெற்றது.

அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவு: அலங்கல் - மாலை; இது பழுதையைப் பாம்பென மருள்வது போன்றது; இதனை வடநூலார், 'ரஜ்ஜு ஸர்ப்ப பிராந்தி' என்பர். ஒப்பு: 'மையறு மாலை வந்து மயக்குமோ ரரவு போலும்' (செவ். பாகவத. 4. 4: 88.) பூதமைந்தின் விகாரப்பாடே உலகம்; ஒப்பு: 'நிலந் தீ நீர்வளி விசும்போ டைந்துங் கலந்த மயக்க முலகம்' (தொல். மரபு; 89.) வீக்கம் - மிகுதி; அதாவது, கட்புலனும்படி பருத்துத் தோன்றும் பலவகைத் தோற்றங்கள்; இது நுண்பொருளாக இருந்த தன்மாத்திரைகள் பலவேறு உருவங்கொண்ட பருப்பொருள்களாகி வளர்ந்த தன்மையை உரைப்பது. கலங்குவது - மாயைத் தோற்றம் நீங்கி உண்மை வெளிப்படுவது. அன்று, ஏ, என்ப: அசைகளும். ஆம்; சீவக. 39. நச். உரை. எவர், அவர் என்பன, பரம்பொருளைக் குறிப்பன.

'மாலையின் வடிவிலே பாம்பென்று தோன்றும் பிரமையானது போலப் பஞ்சபூதமும் மெய், வாய், கண், மூக்கு, செவியென்னும் பொறியாகி விலங்கி, சத்த, பரிச, ரூப, ரஸ, கந்தமென விகாரப்பட்டதனால், சர்வேசுவரனைப் பற்றுமல் வேறுபட்ட சம்சாரப் பெருமை எவரைக் கண்டால் ஒழியும்? அந்த மூர்த்தி கையிலே சிலை கொண்டு இலங்கை கட்டழித்தவன் என்று பெரியோர் உரைப்பர்; அந்தப் பெருமாளே வேதத்திற்கு ஆதி மூர்த்தி; அவரைச் சேவிக்கின்றேன் என்று கொள்க. 'அலங்கல் - ஒளி என்று ஒரு பொருளும் உண்டு' என்பது பழைய உரை.

இதன்பின், அடியிற் காணும் இரண்டு செய்யுட்கள் ஒரு சுவடியில் அதிகமாகக் காணப்படுகின்றன.

அ. சென்றன னிராமன் பாதஞ் சிந்தையில் நிறுத்தித் திண்டோள்
வன்றிற லநுமன் வாரி கடக்குமா றுளத்தி னெண்ணிப்
பொன்றிணி சிகர கோடி மயேந்திரப் பொருப்பி னேறி
நின்றிடுந் தன்மை யெம்மால் நிகழ்த்தலாந் தகைமைத் தாமோ.

ஆ. இமையவ ரேத்த வாழு மிராவண னென்னு மேலோன்
அமைதிரு நகரைச் சூழ்ந்த வளக்கரைக் கடக்க வீரன்
சுமைபெறு சிகர கோடித் தொன்மயேந் திரத்தின் வெள்ளிச்
சிமையமே னின்ற தேவன் தன்மையிற் சிறந்து நின்ருன்.

இவற்றுடன் கிட்கிந்தாகாண்டத்தின் மகேந்திரப் படலத்தில் இறுதியிலுள்ள நான்கு (26-29) செய்யுட்களும் முறை மாறி, இச் சுவடியில் இங்குக் காணப்படுகின்றன.

(பிரதிபேதம்) 1. தோன்று பொய்ம்மையாமெனப்.
3. அவரென்பர்.
4. பொருதாரென்றே. (1)

நூல்

## அநுமன் துறக்க நாடு காண்டல்

2. ஆண்டகை யாண்ட வானோர் துறக்கநா டருகிற் கண்டான்
ஈண்டது தான்கொல் வேலை யிலங்கையென் றைய மெய்தா
வேண்டரும் விண்ணு டென்னும் மெய்ம்மைகண் டுள்ள மீட்டான்
காண்டகுங் கொள்கை யும்ப ரில்லெனக் கருத்துட் கொண்டான்.

ஆண்தகை - ஆண்மையிற் சிறந்தோனுன அநுமன், ஆண்டு - அப்பொழுது (தான் பேருருக்கொண்டு நின்ற நிலையில்), வானோர் துறக்க நாடு அருகில் கண்டான் - தேவர்கள் வசிக்கின்ற சுவர்க்க உலகத்தைத் தன் அருகிலே பார்த்தான்; 'ஈண்டது தான் கொல்-இங்குள்ளது தானே, வேலை இலங்கை என்று-கடல் சூழ்ந்த இலங்காபுரி' என்று, ஐயம் எய்தா - ஐயம் அடைந்து, வேண்டு அரும் விண்ணுடு என்னும் - காண வேண்டுவது இல்லாத தேவர் உலகம் என்ற, மெய்ம்மை கண்டு - உண்மையை அறிந்து, உள்ளம் மீட்டான் - மனத்தைத் திருப்பிக்கொண்டான்; காண் தகும் கொள்கை - தான் தேடிக் காணத்தக்க கோட்பாடு, உம்பர் இல் என - வானுலகில் இல்லை என்றும், கருத்து உட்கொண்டான் - எண்ணங் கொண்டான்.

வேண் தரு விண்ணுடு - விருப்பத்தைத் தரும் விண்ணுடு என்று பொருள் கொள்வாரும் உளர்; 94. அநுமன் விசுவருபம் எடுத்து நின்ற நிலை; 587-593; கிட்கிந்தா. மகேந்திரப். 26. ஐயம்: துறக்கமோ இலங்கையோ என்ற தடுமாற்ற உணர்ச்சி, காண்டகு கொள்கை உம்பர்

இல் என்றது, தேவர்கள் இராமபிரானுக்குக் கேடு சூழார் ஆதலானும், இராவணன் சீதையை எடுத்துச் சென்றமையைச் சம்பாதியால் முன் அறிந்தமையாலும் என்க; கிட்கிந்தா. சம்பாதிப்.64-65.

(பி-ம்.) 1. ஆண்டவ்வானோர் : நாடருகர் கண்டான்.
2. ஈண்டிது.
3. வேண்டரு ; வேண்டக : விண்ணுடென்று : உள்ளமீண்டான்.
4. காண்டகு கொள்கை ; காண்டரு கொள்கை; காண்டகு தோகை ; காண்டகு மிலங்கை. (2)

## அநுமன் இலங்கையைக் கண்டு ஆரவாரித்தல்

3. *கண்டன விலங்கை மூதூர்க் கடிபொழிற் கனக நாஞ்சில்*
*மண்டல மதிலுங் கொற்ற வாயிலு மணியிற் செய்த*
*வெண்டளக் களப மாட வீதியும் பிறவு மெல்லாம்*
*அண்டமுந் திசைக ளெட்டு மதிரத்தோள் கொட்டி யார்த்தான்.*

இலங்கை மூதூர் - இலங்கை என்ற பழமையான நகரத்தின், கடி பொழில் - காவலுள்ள சோலைகளையும், கனக நாஞ்சில் - பொன்னாலான மதில் உறுப்புக்களையும், மண்டல மதிலும் - வட்டமான கோட்டைச் சுவரையும், கொற்றம் வாயிலும் - வெற்றியை விளக்கும் கோபுர வாயிலை யும், மணியிற் செய்த வெண் தள களப மாட வீதியும் - மணிகள் அழுத் தப் பெற்று வெண்மையான சுண்ணச் சாந்து தீற்றிய மாடங்களையுடைய வீதிகளையும், பிறவும் எல்லாம் கண்டனன் - ஒழிந்த பிறவற்றையும் அநுமன் கண்டு, அண்டமும் திசைகள் எட்டும் அதிர - அண்டங் களும் எட்டுத்திசைகளும் நடுங்கும்படி, தோள் கொட்டி ஆர்த்தான் - தன் தோள்களைக் கொட்டிக் கொண்டு ஆரவாரம் செய்தான்.

நாஞ்சில் - அம்பு ஏவும் புழைகள் அமைந்த இடம்; 'இது ஞாஞ்சில், ஞாயில் என்றும் வழங்கும் ; இதனைக் குருவித்தலை என்பாரும் உளர்' சீவக. 105. குறிப். மண்டலம் - வட்டம் ; மண்டல மதில் என்றமை யால் இலங்கை வட்டவடிவமானது என்பது விளங்கும். தளம் - சாந்து. பச்சைக் கற்பூரம் முதலிய வாசனைக் குழம்பு பூசப்பெற்ற மாடங்களை யுடைய வீதி என்னலும் ஒன்றும் ; வெண்டளம் - பச்சைக் கற்பூரம் ; 'வெண்டளக் கலவைச் சேறும்' ; 'வெண்டளச் சேறிடு பரணி' (பால. நாட்டுப். 12; கிட்கிந்தா. பம்பைப். 16.) தோள் கொட்டி ஆர்த் தல், வீரரின் மகிழ்ச்சிச் செயல்; 830, 947, 1016 ; ஆரண்ய. சடாயு வுயிர். 118 ; கிட்கிந்தா. வாலிவதைப். 3.

(பி-ம்.) 1. கண்டனெனிலங்கை: மூதூர்கடிபொழில்.
2. மண்டிலமதிலும்.
3. வெண்டளக்கனகமாட; வெண்டளத்தரளமாட: பிறவுமென்ன; பிறவுமென்னு.
4. எட்டுங்குலுங்கத்; எட்டு நடுங்கத். (3)

## அநுமன் தாளால் அழுந்திய மகேந்திரத்தில் நிகழ்ந்தவை.
### 4 - 13.

4. *வன்றந்த வரிகொ ணுகம் வயங்கழ லுமிழும் வாய*
*பொன்றந்த முழைக டோறும் புறத்துராய்ப் புரண்டு போந்த*
*நின்றந்த மில்லா னூன்ற நெரிந்துகீ ழுழுந்தி நீலக்*
*குன்றந்தன் வயிறு கீறிப் பிதுங்கின குடர்கண் மான.*

அந்தம் இல்லான் - சிரஞ்சீவியான அநுமன், நின்று ஊன்ற - (அம் மலையின்மீது) நின்று (தன் கால்களை) ஊன்றி அழுத்த, நீலக் குன்றம் நெரிந்து கீழ் அழுந்தி - நீல நிறத்தையுடைய அம்மகேந்திரமலை நொருங்கிக் கீழே அழுந்தி, தன் வயிறு கீறிப் பிதுங்கின குடர்கள் மான - அதன் வயிறு (உள்ளிடம்) கிழிந்து வெளியில் பிதுங்கின குடல்களை ஒப்ப, பொன்தந்த முழைகள் தோறும் - பொன்னைத் தம்மிடமிருந்து கொடுத்த (அல்லது, பொன்னால் அமைந்த) அம் மலைக்குகைகள் ஒவ்வொன்றினின்றும், வன் தந்த வரி கொள் நாகம் - வலிமையான பல் வரிசைகளைக் கொண்ட பாம்புகள், வயங்கு அழல் உமிழும் வாய - எரிகின்ற (விஷ) நெருப்பைக் கக்குகின்ற வாயை உடையனவாய், புறத்து - வெளியே, உராய் புரண்டு போந்த - உராய்ந்து புரண்டு வெளிப்பட்டன.

அநுமன் அந்தமில்லான்; 85, 560; உத்தர. அநுமப். 36-39. மான: உவம உருபு. குடர் - குடல் என்பதின் போலி. பொன் தந்த முழை; பின்னும், 'பொன் பிறழ் சிமயக்கோடு' (7) என்பர். வன் தந்த வரி கொள் நாகம்; வலிய பற்களையும் தம் உடல்மேல் பல வரிகளையும் கொண்ட பாம்புகள் எனினும் ஆம். முழைகளிலிருந்து வெளிப்பட்ட நாகங்களுக்கு, குன்றத்தின் வயிறு கிழிந்து வெளிப்பட்ட குடல்கள் உவமை; இவ்வாறே வடமொழிச் சம்பூராமாயணமும் கூறும். 'அந்தமில் லான் நின்று ஊன்ற' என்றதனைப் பின்வரும் 5-13 கவிகளிலும் கூட்டிப் பொருள் கொள்க.

(பி-ம்.) 1. வயங்கனல் : வாயால்.
2. புரண்டு பேர்வ; புரண்டு போவ; புரண்டு வீழ; புரண்டு வீழ்வ.

3. நெரிந்து கீழுழுந்து; நெரிந்துகீழிருந்தி; நெரித்து கீழுழுந்த: நெளிந்து கீழுழுந்தி.

4. குன்றுந்தன்: வயிறு பீறி: பிதுங்கிய: குடரைமான; குடர் களம்மா. (4)

5. *புகலரு முழையுட் டுஞ்சும் பொங்குளைச் சீயம் பொங்கி*
*உகலருங் குருதி கக்கி யுள்ளுற நெரிந்த வூழின்*
*அகலரும் பரவை நாண வரற்றுறு குரல வாகிப்*
*பகலொளி கரப்ப வானை மறைத்தன பறவை யெல்லாம்.*

புகல் அரும் முழையுள் துஞ்சும் - (மற்றவை) நுழைவதற்கு (அஞ்சும்) அரிய குகைகளில் உறங்குகின்ற, பொங்கு உளை சீயம் - மேலோங்கிப் பரந்து விளங்கும் பிடரி மயிர்களையுடைய சிங்கங்கள், பொங்கி - (அச்சத்தாலும் கோபத்தாலும்) மேற் கிளம்பி, உகல் அரும் குருதி கக்கி - சிந்துதல் இல்லாத தம் இரத்தத்தைக் கக்கிக் கொண்டு, உள் - குகைகளின் உள்ளே, உற நெரிந்த - மிகவும் நெரிந்தன; பறவை எல்லாம் - (அம்மலையில் வாழ்ந்த) எல்லாப் பறவைகளும், ஊழின் - உகாந்த காலத்து, அகல் அரும் பரவை நாண - அகன்றதும் கடத்தற்கு அரியதுமான கடலும் நாணும்படி, அரற்றுறு குரல ஆகி - கதறும் பெருங்குரலோடு, பகல் ஒளி கரப்ப வானை மறைத்தன - சூரியனின் ஒளி மறையும்படி (எழுந்து) வானத்தை மறைத்து விட்டன.

முழை புகல் அருமை: அதன் வாய் சிறிதானமையின் எனலும் ஆம். ஊழின் என்பதற்கு, வரிசை வரிசையாக என்று பொருள் கொண்டு நெரிந்த என்பதனோடும் கூட்டி உரைக்கலாம்.

(பி-ம்.) 1. சிங்கம் பொங்கி; சிங்கம் போகா.
3. அகலிரும் பரவை: நாணவாற்றுறு: ஆர்ப்புறு குரலவாகி.
4. பரப்பவானம்; பரப்புவானை. (5)

6. *மொய்யுறு செவிக டாழ்ந்து முதுகுற முறைகா றள்ள*
*மையுறு விசும்பி னூடு நிமிர்ந்தவான் மதிய மஞ்ச*
*மெய்யுறத் தழீஇய மெல்லென் பிடியொடும் வெருவ லோடும்*
*கையுற மரங்கள் சுற்றிப் பிளிறின களிநல் யானை.*

களி நல் யானை - (அம்மலையிலிருந்த) மதங்கொண்ட சிறந்த ஆண் யானைகள், மொய் உறு செவிகள் தாழ்ந்து முதுகு உற - (அச்சத்தால்) வலிமை பொருந்திய தம் காதுகள் தாழ்ந்து முதுகுகளிற் படிய, முறை

கால் தள்ள - வரிசையாய்க் கால்கள் அடியெடுத்து வைக்கும் வலி யின்றித் தள்ளாட, மை உறு விசும்பின் ஊடு நிமிர்ந்த வால் - மேகங்கள் நிறைந்த வானத்திடத்தே தூக்கிய தம் வால்களினல், மதியம் அஞ்ச - (வானத்திலுள்ள) சந்திரன் பயப்பட, மெய் உற தழுவிய மெல்லென் பிடியொடும் - தம் உடலை இறுகத் தழுவிய மென்மையான பெண் யானைகளுடனும், வெருவலோடும் - (தாம் கொண்ட) அச்சத்தோடும், மரங்கள் கை உற சுற்றி பிளிறின - மரங்களைத் தம் துதிக்கைகளால் சுற்றிக் கொண்டு முழக்கமிட்டன.

இச் செய்யுளில், அஞ்சிய யானைகளின் மெய்ப்பாடுகள் விளக்கப் பெற்றன; பின்னும் (1216) இவற்றையே ஆசிரியர் வேறு விதமாகக் கூறுவர். அச்ச நிலையில் யானையின் செவிகள் பின் தாழ்தல்; 'தானப்பிடி செவி தாழ்த்திட' (சுந்தரர் தேவா. 79 : 5.) யானையின் வால் இராகு வுக்கு உவமிக்கப் பெற்றது.

(பி-ம்.) 1. செவிகடாவி ; செவிகடாந்தம் ; செவிகடாழ ; செவிகடாழ்த்து.
2. வாலதியமஞ்சின் ; வான்மதியமஞ்சின் ; வான்மதியமஞ்சி.
3. மெய்யொடு பொருந்துமென்னப் ; மெய்யொடுந்தழீஇய ; மெய்யொடு தழீஇய ; மெய்யெனத்தழீஇச்செலன்ன ; மெய் யுறத்தழீஇயவாகிப் : பிடியொடு ; பிடிக்குலம்.
4. கையுறு : மரங்கள் பற்றி. (6)

7. *பொன்பிறழ் சிமையக் கோடு பொடியுறப் பொறியுஞ் சிந்த*
*மின்பிறழ் குடுமிக் குன்றம் வெரிநுற நெரியும் வேலை*
*புன்புற மயிரும் பூவாக் கட்புலம் புறத்து நாறு*
*வன்பறழ் வாயிற் கௌவி வல்லிய மிரிந்த மாதோ.*

பொன் பிறழ் சிமயம் கோடு - பொன்மயமாக விளங்குகிற சிகரமாகிய உச்சி, பொடி உற - நீருகி, பொறியும் சிந்த - தீப்பொறி சிந்த, மின் பிறழ் குடுமிக் குன்றம் - மின்னல் போல் ஒளி வீசும் உச்சியையுடைய மகேந்திர மலையின், வெரிந் - முதுகு, உற நெரியும் வேலை - மிகவும் நொருங்கும் போது, வல்லியம் - (அங்கிருந்த) புலிகள், புறம் புன் மயிரும் பூவா, கண் புலம் புறத்து நாறு வன் பறழ் - உடலின் மேற்புறத்தேயுள்ள அற்பமான உரோமம் முளையாதனவும், கண்ணுகிய இந்திரியம் வெளியே தோன்று தனவுமான (தம்) வலிய குட்டிகளை, வாயில் கௌவி இரிந்த - தம் வாய் களில் கௌவிக்கொண்டு நிலை தடுமாறி ஓடின. மாது, ஓ: அசைகள்.

பிறழ்தல் - விளங்குதல், சிமயக்கோடு: ஒரு பொருட் பன்மொழி. 'வெரிநுற விரியும் வேலை - திருவடியின் பாதம் பட்டு முதுகும் இரண் டாகப் பிளக்கிற வேலை' என்பது பழைய உரை. புறம் - உடலும் ஆம்;

'பைம்புறப் படுகிளி' (ஐங்குறு. 260.) பூத்தல் - முளைத்தல். பறழ் - குட்டி. இச் செய்யுள், புலியின் அச்ச நிலையைக் குறித்தது. புலி தன் குட்டியைக் கௌவிச் செல்லுதல்; கூர்ம. சம்புத்தீவின். 29. புலி தன் குருளையைக் காத்தல்; ஆரண்ய. சூர்ப்பணகைப். 102; சீவக. 1134; புறநா. 42 : 10.

(பி-ம்.) 1. சிமயக்குன்றம்: பொடியுஞ் சிந்த.
2. மின்பிறழலங்கல் வீரன்: வெரிநுற விரியும் வேலை. (7)

8. *தேக்குறு சிகரக் குன்றந் திரிந்துமெய்ந் நெரிந்து சிந்தத்*
*தூக்குறு தோலர் வாளர் துருதத்தி னெழுந்த தோற்றம்*
*தாக்குறு செருவி னேர்ந்தார் தாளற வீசத் தாவி*
*மேக்குற விசைத்தா ரென்னப் பொலிந்தனர் விஞ்சை வேந்தர்.*

(அநுமன் தன் காலை ஊன்றியதால்), தேக்கு உறு சிகரம் குன்றம் திரிந்து மெய் நெரிந்து சிந்த - தேக்கு மரங்கள் அடர்ந்த உச்சியோடு கூடிய மகேந்திரமலை நிலைகெட்டு உடல் நொருங்கிச் சரிய, விஞ்சை வேந்தர் - (அங்குத் தங்கியிருந்த) வித்தியாதர மன்னர்கள், தூக்குறு - தூக்கிப் பிடித்த, தோலர் - கேடயங்களை உடையவர்களாகவும், வாளர் - வாள்களையுடையவர்களாகவும், துருதத்தின் - வேகமாக, எழுந்த தோற்றம் - வானத்தில் எழுந்த காட்சி, தாக்கு உறு செருவில் நேர்ந்தார் தாள் அற வீச மேக்கு உற தாவி விசைத்தார் என்ன - மோதிச் செய்கிற போரிலே (எழுந்த) பகைவர்களின் முயற்சி அற்றுப் போகுமாறு (தம் வாள்களை) வீசுவதற்காக மேலெழுந்து தாவி விரைவாகச் சென்றனர் என்று சொல்லுமாறு, பொலிந்தனர் - விளங்கினுர்கள்.

தோல் - கேடயம் அல்லது பரிசை; 'தோலின் பெருக்கமும்' (தொல். பொருள் : 67); 'மழையென மருளும் பஃறோல்' (புறநா. 17 : 34.) நேர்ந் தார் - எதிருற்ற பகைவர். தாள் - முயற்சி; பாதமும் ஆம். விஞ்சையர், பதினெண் தேவகணத்தவருள் ஒரு வகையினர். விஞ்சை வேந்தர் வாளேந்துவது; பெரியபு. ஏனாதிநாய. 3. விஞ்சையர் அஞ்சி எழுந்தமை அவர் தம் பகைவர் மீது போருக்கெழுந்தது போன்றிருந்தது.

இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் பாடல் காணப்படுகிறது.

பெருஞ்சிலம் பறையின் வாழும் பெருவலி யரக்கர் யாரும்
பொருஞ்சின மடங்கல் வீரன் பொறுத்திட மிதித்த லோடும்
அருஞ்சின மடங்கித் தத்த மாதரைத் தழுவி யங்கம்
நெரிஞ்சுறக் கடலின் வீழ்ந்தார் நெடுஞ்சுரு மகர நுங்க.

(பி-ம்.) 1. குன்றமதிர்ந்து.
2. தோலர் கோலர் : துரிதத்தின்.
3. தாக்குற மிதித்தலோடும் தானவர் தவறி வீழ்ந்தார் : செருவி னேரார் : தாளூற விசித்தாவி ; தாளறவிசித்தாவி.
4. மேக்குற விரிந்தாரென்னப் ; மேக்குறவெழுந்துபோசி; மேக்குற வெழுந்தாரென்ன. (8)

9. தாரகை சுடர்கண் மேக மென்றிவை தவிரத் தாழ்ந்து
பாரிடை யழுந்து கின்ற படர்நெடும் பனிமாக் குன்றம்
கூருகிர்க் குவவுத் தோளான் கூம்பெனக் குமிழி பொங்க
ஆர்கலி யழுவத் தாழுங் கலமென லாயிற் றன்றே.

தாரகை சுடர்கள் மேகம் என்று இவை தவிர-நட்சத்திர மண்டலம் சூரிய சந்திர மண்டலங்கள், மேகமண்டலம் என்ற (முன் உயர்) நிலைகளி னின்றும் நீங்க, தாழ்ந்து - (கீழே) தாழ்வுற்று, பார் இடை அழுந்துகின்ற நெடும் படர் பனிமா குன்றம் - தரையினுள் அழுந்துகின்ற நீண்டு படர்ந்த குளிர்ச்சி பொருந்திய மகேந்திர மலை, கூர் உகிர் குவவு தோளான் -கூரிய நகங்களையும் திரண்ட தோள்களையுமுடைய அநுமன், கூம்பு என -பாய்மரம் என்னும்படி, ஆர்கலி அழுவத்து குமிழி பொங்க ஆழும் கலம் எனல் ஆயிற்று - கடலின் ஆழமான இடத்தில், நீர்க் குமிழிகள் பொங்கு மாறு, ஆழ்ந்து செல்லும் மரக்கலம் என்று சொல்லும்படி ஆயிற்று. அன்று, ஏ: ஈற்றசைகள்.

பாரிடை அழுந்துகின்ற குன்றம் ஆர்கலி அழுவத்து ஆழும் கல மெனல் ஆயிற்று என்க. அழுந்தும் மலைக்குக் கடலில் ஆழ்கலம் உவமை; 91 ; அயோத்யா. பள்ளியடைப். 68; குறுந். 240: 6-7. பனிமாகுன்றம் -பனிதோய்ந்த பெரிய குன்றம் எனலும் ஆம். குவவு-திரட்சி ; பருமையும் ஆம். கூம்பு - பாய்மரம் ; 'வங்கத்தின் கூம்பேறு மாப்பறவை போன் றேனே' (பெருமாள்திருமொழி, 5 ; 5.) அழுவம் - பள்ளம் ; 'கடன் மண் டழுவத்து' (மலைபடு. 528.)

(பி-ம்.) 1. தாரகைச்சுடர்கள் : தவிர்ந்து தாழ்ந்து.
2. பனிநெடும்படர் மாக்குன்றம் : பணிமாக்குன்றம்.
3. குமிழியோங்க.
4. கலமெனவாயிற்றன்றே. (9)

10. தாதுகு நறுமென் சாந்தங் குங்குமங் குலிகந் தண்ணென்
போதுகு பொலந்தா தென்றித் தொடக்கத்த யாவும் பூசி
மீதுறு சுனைநீ ராடி யருவிபோ லெகினம் வீழ்வ
ஓதிய குன்றங் கீறிக் குருதிநீர் சொரிவ தொத்த.

(மலையில் தங்கியிருந்த அரமகளிர்), தாது உகு - பொடியாக உதிர்ந்த, நறு - வாசனையுள்ள, மென் சாந்தம் - மென்மை பொருந்திய சந்தனம், குங்குமம் - குங்குமப்பூ, குலிகம் - சாதிலிங்கம், தண் என் போது உகு பொலம் தாது - குளிர்ந்த பூக்கள் சிந்தும் பொன்னிறமான மகரந்தங்கள், என்று இ தொடக்கத்த யாவும்-என்று சொல்லப்பெறும் இவை முதலான வாசனைப் பொருள்கள் எல்லாவற்றையும், பூசி - பூசிக்கொண்டு, மீது உறு சுனை நீர் - மலையின் மேலே உள்ள சுனைநீரிலே, ஆடி - நீராடி, அருவி வீழ்வ போல் - (அதனால் நிறம் மாறின) அருவி (அச்சுனையினின்றும்) கீழே விழுவது போல, எகினம் வீழ்வ - (அம்மலையிலுள்ள) அன்னப் பறவைகள் (மரங்களிலிருந்தும் உகும் சாந்தம் முதலியவை தம்மீது விழுதலால் நிறம் மாறி, அச்சத்தால் மேலிருந்து கீழே) வீழ்வன, ஓதிய குன்றம் - (அவ்வீழ்ச்சி) சொல்லப்பெற்ற மலைப்பாறைகள், கீறி - உடல் கிழிந்து, குருதிநீர் சொரிவது ஒத்த - இரத்தப் பெருக்குக்கள் பாய்தலை ஒத்தன.

அன்னத் தொகுதிகளின் வீழ்ச்சிகள் அருவி வீழ்ச்சிக்கு ஒத்தன; குருதி நீர் சொரிவதும் ஒத்தன என்க. அருவிநீர், பலநிறப்பொருள்களைப் பூசி மகளிர் நீராடினமையால் நிறம் மாறிற்று; அன்னங்கள் பலநிறப் பொருள்கள் தம் மீது விழுந்தமையால் நிறம் மாறின. இவ்விரு மலைக் காட்சிகளும் ஒன்றுக்கொன்று உவமையாயின. குலிகம் - இங்குலிகம் என்பதன் முதற்குறை. நீர், மலைப்பொருள்களின் சேர்க்கையால் நிறம் மாறும் என்பது; பால. ஆற்றுப். 8.

(பி-ம்.) 1. குலிகந்தண்டேன்.
2. பொலந்தாரென்றித்; பொலந்தாதென்ற: தொடக்கத்திற் பொலிந்த யாவும்.
3. சுனைநீர்விசியருவி; சுனைநீர்வீசுமருவி: அருவியோடுலகின் வீழ்வ; அருவிபோயுலகின் வீழ்வ.
4. குன்றங் கீண்டு குருதிநீர் சொரிந்தாலொத்த. (10)

11. *கடலுறு மத்தி தென்னக் கார்வரை திரியுங் காலை*
*மிடலுறு புலன்கள் வென்ற மெய்த்தவர் விசும்பி னுற்றார்*
*திடலுறு கிரியிற் றந்தஞ் செய்வினை முற்றி முற்றா*
*உடலுறு பாசம் வீசா தும்பர்ச்செல் வாரை யொத்தார்.*

கார்வரை - (மேகம் படிந்ததால்) கரிய நிறம் பெற்ற மகேந்திரமலை, கடல் உறு மத்து இது என்ன - கடலில் (கடைவதற்காக) இட்ட மத்தாகும் இது என்று சொல்லும்படி, திரியும் காலை - சுழலும் போது, மிடல் உறு புலன்கள் வென்ற மெய் தவர் விசும்பின் உற்றார் - வலிமை மிக்க புலன்களை வென்ற உண்மைத் தவசிகள் வானத்தை அடைந்தனர்;

(அவர்கள்), திடல் உறு கிரியில் - மேட்டுப் பாகங்களையுடைய மலையில் தம் தம் செய்வினை முற்றி - தாம் தாம் செய்யவேண்டிய (யோகம் முதலிய) தொழில்களை முடித்து, உடல் உறு பாசம் முற்றா வீசாது -உடலை ஒட்டிய பற்றினை முடித்து அதனை வீசாமல், உம்பர் செல்வாரை - (உடலோடு) வானுலகுக்குச் செல்பவர்களை ஒத்தார்கள்.

மெய்த்தவசிகள் வானில் நின்றமை அவர்கள் உடலோடு வானுலகம் செல்கையை ஒத்தது என்க. வரை அசைய முனிவர்கள் அச்சத்தால் சிதறியோடுதல்; உத்தர. வரையெடுத்த. 69.

(பி-ம்.) 1. கனவரைதிரியுங்காலை ; கருவரைதிரியுங்காலை.
2. விசும்பின் மொய்த்தார்.
3. தத்தஞ் செய்வினை : முற்றா, துடலுறு.
4. உடலுறுபாசத்தோடும் : செல்வாருமொத்தார். (11)

12. *வெயிலியற் குன்றங் கீறி வெடித்தலு நடுக்க மெய்தி*
*மயிலியற் றளிர்க்கை'மாதர் தழீஇக்கொளப் பொலிந்த வானோர்*
*அயிலெயிற் றரக்க னள்ளத் திரிந்தநா ளணங்கு புல்லக்*
*கயிலையி லிருந்த தேவைத் தனித்தனி கடுத்தல் செய்தார்.*

வெயில் இயல் குன்றம் - ஒளி பொருந்திய மலை, கீறி வெடித்தலும் -கிழிந்து வெடித்தவுடனே, மயில் இயல் தளிர்க்கை மாதர் - மயில் போன்ற சாயலையும், தளிர் போன்ற மென்மையான கைகளையும் உடைய (தேவ) மாதர்கள், நடுக்கம் எய்தி - நடுக்கம் அடைந்து, தழீஇக் கொள - தழுவிக் கொள்ள, பொலிந்த - (அதனால்) விளக்கமடைந்த, வானோர் - தேவர்கள், அயில் எயிறு அரக்கன் - கூரிய பற்களையுடைய இராவணன், அள்ள - வாரி எடுக்க, திரிந்த நாள் - (கயிலை) சுழன்ற அந் நாளில், அணங்கு - தெய்வப்பெண்ணான உமாதேவி, புல்ல - (சிவபெருமானை அச்சத்தால்) தழுவிக்கொள்ள, கயிலையில் இருந்த தேவை -கயிலையிலிருந்த சிவபிரானை, தனித்தனி கடுத்தல் செய்தார் - தனித் தனியே ஒத்தார்கள்.

வெயில் - ஒளி ; 'மணியிழையின் வெயில்புடை பெயர்வன' (பால. நாட்டுப். 42.) அள்ளுதல் - குவிந்து கிடப்பதை வாரி எடுத்தல்; இதனால், இராவணன் கயிலையை எடுத்தது, பிரயாசையின்றி என்பதாம். திரிதல் - நிலை திரிந்து ஆடுதல்; சுழலுதல். தேவு + ஐ = தேவை ; தே - கடவுளாகிய சிவபெருமான். அணங்கு தேவைப் புல்லியது ; உத்தர. வரையெடுத்த. 70.

(பி-ம்.) 1. குன்றங்கீண்டு.
2. மயிலியற்றேவிமார்கள்.
3. அரக்கன்றள்ள.
4. தனித்தனிக்கடுத்தல். (12)

13. *ஊறிய நறவை யுண்ட குற்றந்த முணர்வை யுண்ணச்*
*சீறிய மனத்தர் தெய்வ மடந்தைய ரூட றீர்வுற்*
*ருறின ரஞ்சு கின்ரு ரன்பரைத் தழுவி யும்பர்*
*ஏறின ரிட்டு நீத்த பைங்கிளிக் கிரங்கு கின்ருர்.*

**ஊறிய நறவை உண்ட** குற்றம் - பல நாட்களாய் ஊறிக்கிடந்த கள்ளைத் (தம் காதலர்) பருகிய குற்றமானது, தம் **உணர்வை உண்ண** - தாம் அவர்பால் கொண்டிருந்த உணர்ச்சி பயனுருமல் அதனை அழிக்க, **சீறிய மனத்தர் தெய்வ மடந்தையர்** - கோபித்த மனத்தவரான தேவ மாதர், **ஊடல் தீர்வுற்று** - (அதன் காரணமாகத் தம் காதலரிடம் கொண்ட) பிணக்கு (மலையதிர்ச்சியாலுண்டான அச்சத்தால்) நீங்கி, **ஆறினர் அஞ்சுகின்ருர்** - சினம் ஆறி அச்சங்கொண்டவர்களாகி, **அன்பரைத் தழுவி உம்பர் ஏறினர்** - தம் அன்பர்களைத் தழுவிக்கொண்டு வானத்தில் ஏறியவர்; **இட்டு நீத்த பைங்கிளிக்கு இரங்குகின்ருர்** - (அவ்வாறு விரைந்து செல்லும் போது) தாம் விட்டு நீங்கிய பைங்கிளிகளுக்காக மனம் வருந்துகிருர்கள்.

இங்கு, தேவமாதரின் ஊடலைத் தீர்க்க அச்சம் ஒரு கருவியாயிற்று. மகளிர் விட்டு நீத்த பைங்கிளிக்கு இரங்குவது, பிராட்டி அயோத்தியை விட்டு இராமபிரானேடு கானகம் வந்தபோது, சுமந்திரனிடம் தன் கிளியைப் பற்றிக் கூறியதாக உள்ள செய்தியை நினைவுறுத்துகின்றது; 551; அயோத்யா. தைலமாட்டு. 40.

(பி-ம்.) 1. ஊறியநறவுமுற்றகுற்றமும்: நறவையுண்டவூற்றந்தம்முணர் வையுண்ண.
2. மனத்தின் தெய்வ.
3. ஆறிநின்று; ஆறினரிறைஞ்சுகின்ருர்.
4. ஏறிநின்றிட்டுநீத்த. (13)

## அநுமன் கடல் கடக்க விரைதல்
### 14 - 17.

14. *இத்திற நிகழும் வேலை யிமையவர் முனிவர் மற்றும்*
*முத்திறத் துலகத் தாரு முறைமுறை விசும்பின் மொய்த்தார்*
*தொத்துறு மலருஞ் சாந்துஞ் சுண்ணமு மணியுந் தூவி*
*வித்தக சேறி யென்ருர் வீரனும் விரைவ தானுன்,*

இத்திறம் நிகழும் வேலை - இவ்வாறு (அநுமன் தாள் ஊன்றலால்) பல நிகழ்ச்சிகள் உண்டானபோது, இமையவர், முனிவர், மற்றும் முத்திறத்து உலகத்தாரும் - தேவர், இருடிகள், இன்னும் மூவகைப்பட்ட சுவர்க்கம், பூமி, பாதலம், என்னும் மூன்று உலகப் பெரியோர்களும், முறை முறை - வரிசை வரிசையாக, விசும்பின் மொய்த்தார் - வானத்தில் கூடினர்; (அவர்கள்) தொத்து உறு மலரும் - கொத்தாக உள்ள பூக்களையும், சாந்தும் - சந்தனத்தையும், சுண்ணமும் - நறுமணப் பொடிகளையும், மணியும் - இரத்தினங்களையும், தூவி - (அநுமன் மீது) வாரியிறைத்து, 'வித்தக - அறிஞனே! சேறி - செல்வாயாக', என்றார் - என்று மொழிந்தனர்; வீரனும் விரைவதானான் - வீரனான அநுமனும் விரைவு கொள்ளலானான்.

வித்தகன் - தூதனும் ஆம், செல் + தி = சேறி.

(பி-ம்.) 1. முனிவர் மற்றை ; முனிவர் முற்றும்.
2. உலகத்தோரும் ; உலகுளோரும் : விரைவின் மொய்த்தார்.
3. மலருந்தூவி ; தூசும்விசி ; இனையதூவி.
4. வித்தக சென்றீ யென்றார். (14)

15. குறுமுனி குடித்த வேலை குப்புறு கொள்கைத் தாதல்
வெறுவிது விசயம் வைகும் விலங்கற்றோ ளலங்கல் வீர
சிறிதிதென் றிகழற் பாலை யல்லைநீ சேறி யென்றாங்
குறுவலித் துணைவர் சொன்னா ரொருப்பட்டான் பொருப்பை யொப்பான்.

'விசயம் வைகும் விலங்கல் தோள் அலங்கல் வீர - வெற்றி தங்கும் மலை போன்ற தோள்களையும் வெற்றி மாலைகளையும் உடைய வீரனே! குறுமுனி குடித்த - குறுகிய வடிவமுள்ள அகத்தியர் பருகிய, வேலை - இச்சமுத்திரம், குப்புறு கொள்கைத்து ஆதல் - தாண்டிக் கடக்கக் கருதுவது, வெறுவிது - பயனற்றது; இது சிறிது - இஃது அளவில் மிகச் சிறியது, என்று இகழற்பாலை அல்லை - என்று நினைத்து, (இக்கடலை நீ) இகழலாகாது; நீ சேறி - நீ (கருத்துடன்) செல்வாயாக,' என்று - என்று, உறு வலி துணைவர் ஆங்கு சொன்னார் - மிக்க வலிமையையுடைய நண்பர்கள் அப்பொழுது கூறினார்கள்; பொருப்பை ஒப்பான் ஒருப்பட்டான் - மலையை ஒப்பவனாகிய (அநுமன்) அச்சொற்களுக்கு இசைந்தான்.

விலங்கல் - மலை. குறுமுனி வேலை குடித்த வரலாறு; ஆரண்ய. அகத்தியப். 37. குப்புறுதல் - தாண்டிக் கடத்தல். உறு வலி; உறு - மிகுதிப் பொருளை உணர்த்தும் உரிச்சொல்; 'உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாங் கொக்கு' (மூதுரை. 16.) துணைவர்: அங்கதன்,

சாம்பன் முதலியோர். விசயம் வைகும் என்பதனை நீ சேறி என்பதனுடன் கூட்டி, 'வெற்றி உனக்கு உண்டாகும் நீ செல்வாயாக' என்று வாழ்த்துடன் விடை கொடுத்ததாகவும் கொள்ளலாம். இச்செய்யுளுக்கு, அநுமனுக்குக் கடல்கடத்தல் எளிதென்று கூறித் துணைவர் ஊக்கப் படுத்தினர் என்று வேறு பொருள் காண்பதும் உண்டு.

(பி-ம்.) 1. குப்புறுங்கொள்கை; குளப்புறு கொள்கை: வேலை பொருளெனக் குறித்துத் தாண்டல்.

2. விசயமென்னே.

3. சிறுவிதென்றிகழ்தற்பாலை: சேறியென்னு. (15)

16. இலங்கையி னளவிற் றன்று லிவ்வுரு வெடுத்த தோற்றம்
விலங்கவு முளதன் றென்று விண்ணவர் வியந்து நோக்க
அலங்கருழ் மார்பம் முன்றாழ்ந் தடித்துணை யழுத்த லோடும்
புலந்தெரி மலையுந் தாளும் பூதலம் புக்க மாதோ.

'எடுத்த இவ்வுரு தோற்றம் - (அநுமன்) எடுத்த இப்பேருருவின் உயர்ச்சி, இலங்கையின் அளவிற்று அன்று - இலங்கை வரையில் சென்று ஒடுங்கும் நிலைமை உடையது அன்று; விலங்கவும் உளது அன்று - தடைப்படுத்தத் தக்கதும் அன்று;' என்று - என்றுசொல்லிக் கொண்டு, விண்ணவர் வியந்து - (அப்பேருருவைக்கண்டு) தேவர்கள் வியப்படைந்து, நோக்க - அவனைப்பார்க்க, அலங்கல் தாழ் மார்பன் முன் தாழ்ந்து - (அவன் தன்) மாலைகள் தொங்கி விளங்கும் மார்பு முன்புறமாக வளைந்து, அடித்துணை அழுத்தலோடும் - இரு பாதங்களையும் மலையில் அழுத்த, புலன் தெரி மலையும் - இடங்கள் விளங்கும் மகேந்திரமும், தாளும் - அதன் சுற்றுப் புறங்களாகிய சிறு குன்றுகளும், பூதலம் புக்க- பூமிக்குள் அழுந்தின. ஆல், மாது, ஓ: அசைகள்,

'விலங்கவும் உளதென்றென்று' என்ற பாடங்கொண்டு, 'அவ்விலங்கையையும் கடந்து அப்பாலும் செல்ல வலியுளது என்று பல முறையும் கூறி' என்று சிலர் பொருள் கொள்வர். இத்தோற்றம் இலங்கையின் அளவிற்றன்று; 37. தோற்றம் - உயர்ச்சி; 'நிலையிற்றிரியாதடங்கியான் தோற்றம்' (குறள். 124.) அலங்கல் தாழ் மார்பன்; 58; இந்திரன் அநுமனுக்கு இளமையில் ஒரு பொற்றாமரைமலர் மாலை அளித்தனன் என்பர். தாழ் - தாங்கும் என்பதும் ஆம்; 'ஆரந்தாழ்ந்த அம்பகட்டு மார்பின்'; (முருகு. 104.) தாள், பாத சைலம் என்னும் பிரதேசம்; தாள் என்பதற்கு. 'அநுமனின் பாதம்' என்று பொருள் கொள்ளின், தரையுள் கால்கள் புகுவது, கடல் கடத்தற்குத் தடையாகுமாதலால்

அப்பொருள் சிறவாது என்க. தாழ்ந்து, என்றமையால் மார்பம் தாழ்ந்தது இயற்கையென்றும், அழுத்தல் என்றதால் அழுத்தியது செயற்கை என்றும் கொள்க.

(பி-ம்.) 1. அளவிற்சென்ருலிவ்வுரு.
2. உளதென்றென்று : வியந்து நோக்கா ; வியந்து நோக்கி.
3. அலங்கற்ருழ்மார்பன்; அலங்கற்ரேுள்மார்பன்: முன்ருழ்த்து.
4. பொலங்கெழுமலையும். (16)

17. *வால்விசைத் தெடுத்து வன்ருண் மடக்கிமார் பொடுக்கி மானத்*
*தோல்விசைத் துணைகள் பொங்கக் கழுத்தினைச் சுருக்கித் தூண்டிக்*
*கால்விசைத் திமைப்பில் லோர்க்கும் கட்புலந் தெரியா வண்ணம்*
*மேல்விசைத் தெழுந்தா னுச்சி விரிஞ்சனு டுரிஞ்ச வீரன்.*

வீரன் - அநுமன், வால் விசைத்து எடுத்து - வாலை வேகமாக வீசி, வன் தாள் மடக்கி - வலிய கால்களை மடக்கி, மார்பு ஒடுக்கி - மார்பை ஒடுக்கிக் கொண்டு, மான - பெரிய, விசை - வெற்றியுடைய, தோல் துணைகள் - இரு தோள்களும், பொங்க - பூரிக்க, கழுத்தினை சுருக்கி தூண்டி - கழுத்தை உள்ளுக்கிழுத்து முன்னே தள்ளி, கால் விசைத்து - காற்றுப் போல் வேகத்தை உண்டாக்கி, இமைப்பு இல்லோர்க்கும் - கண்ணிமைத்தல் இல்லாத தேவர்கட்கும், கண் புலம் தெரியா வண்ணம் - கண் பார்வைக்குத் தெரியாதபடி, மேல் விசைத்து - மேல் நோக்கி வேகமெடுத்து, உச்சி விரிஞ்சன் நாடு உரிஞ்ச-மிக மேலேயுள்ள பிரமனது உலகும் உராய, எழுந்தான்-(மகேந்திரத்தினின்று வானத்தே) எழுந்தான்.

வீரன் எழுந்தான் என்க. கடல் கடக்க எழுந்த அநுமனின் உடலுறுப்புக்களின் செயல்களை இச்செய்யுள் சித்திரிக்கின்றது. வான் மீகத்திலுள்ள இப்பகுதி ஒப்பு நோக்கத்தக்கது. அங்கு, அநுமன் தன் துணைவர்களைப் பார்த்துச் சில சொற்களைக் கூறிவிட்டு, தன்னைக் கருடனைப் போல் நினைத்துக் கொண்டு மேலே பாய்ந்தான் என்ற செய்தி களும் கூறப்பட்டுள்ளன. தோல்: தோள் என்பது எதுகை நோக்கித் திரிந்தது.

(பி-ம்.) 2. தோள் விசைத்து; தோள்கள் பொங்க: சுருக்கித் தூண்டும்.
3. கால்விசைத்தடக்கை நீட்டிக்; கால்விசைத்தடக்கிநீட்டிக்: கட்புலங் கதுவா வண்ணம்.
4. விரிஞ்சிநாடுரிஞ்ச; உரிஞ்சும் வீரன். (17)

## அநுமன் வேகத்தால் நிகழ்ந்தவை
### 18 - 23.

18. *ஆயவ னெழுத லோடு மரும்பணை மரங்க டாமும்*
*வேயுயர் குன்றும் வென்றி வேழமும் பிறவு மெல்லாம்*
*நாயகன் பணியீ தென்னு நளிர்கட லிலங்கை தாமும்*
*பாய்வன வென்ன வானம் படர்ந்தன பழுவ மான.*

ஆயவன் - (அவ்வாறெழுந்த) அநுமன், எழுதலோடும்-எழும்போது, அரும் பணை மரங்கள் தாமும் - அரிய பெரிய கிளைகளையுடைய மரங்களும், வேய் உயர் குன்றும் - மூங்கில்கள் உயர்ந்து (வளர்ந்துள்ள) குன்றுகளும், வென்றி வேழமும்-வெற்றியையுடைய யானைகளும், பிறவும் எல்லாம் - மற்றவை எல்லாமும், நாயகன் பணி ஈது என்னு - (எல்லோருக்கும்) நாயகனுன இராமபிரானுக்கு (நாம் செய்யும்) தொண்டு இஃதாகும் என்று, தாமும் - அம்மரங்கள் முதலியனதாமும், நளிர் கடல் இலங்கை பாய்வன என்ன - குளிர்ந்த கடலால் சூழப்பெற்ற இலங்கையை நோக்கிப் பாய்ந்து செல்வன என்று சொல்லும்படி, வானம் பழுவம் மான - ஆகாயம் ஒரு சோலை போல விளங்க, படர்ந்தன - சென்றன.

பழுவம் - மரச்சோலை. இச்செய்யுள் தற்குறிப்பேற்றவணி.

(பி-ம்.) 1. மரங்கள் யாவும்.
2. குன்றம் வென்றி.
3. பணியிதென்னு: நளிகடல்: இலங்கைகாறும்.
4. படர்ந்தன வழுவமான; படர்ந்தன வெழுவமான; படர்வனவெழுவலான; (18)

19. *இசையுடை யண்ணல் சென்ற வேகத்தா லெழுந்த குன்றும்*
*பசையுடை மரனு மாவும் பல்லுயிர்க் குலமும் வல்லே*
*திசையுறச் சென்று சென்று செறிகட லிலங்கை சேரும்*
*விசையில வாகித் தாழ்ந்து வீழ்ந்தன வென்ன வீழ்ந்த.*

இசை உடை அண்ணல் - புகழையுடைய பெரியோனுன அநுமன், சென்ற வேகத்தால் - தாவிப்போன வேகத்தால், எழுந்த - தாமும் உடனெழுந்த, குன்றும் - குன்றுகளும், பசை உடை மரனும் - ஈரப்பசையையுடைய மரங்களும், மாவும் - யானை முதலிய விலங்குகளும், பல் உயிர்க் குலமும் - மற்றும் பல ஜீவராசிகளும், வல்லே - விரைவாக, திசை உற - அநுமன் சென்ற திசையை அடைய, சென்று சென்று - போய்ப்போய். செறி கடல் இலங்கை சேரும் விசை இலவாகித் தாழ்ந்து வீழ்ந்தன என்ன - நெருங்கிய கடல் சூழ்ந்த இலங்கையை அடைதற்குரிய வேகம் இல்லாதவைகளாகித் தாழ்வடைந்து வீழ்ந்தன என்னும்படி, வீழ்ந்த - விழுந்தன.

உயிர்க்குலம்: குலம் - கூட்டம். நெடுவழிச் செல்லும் ஒருவனைச் சுற்றத்தார் சிறிது தூரம் உடன் வந்து வழியனுப்பி நிற்பதுபோல அநுமன் பின் மரங்களும் பிறவும் சென்று நின்றன என்று வான்மீகத்தில் கூறப் பெற்றுள்ளதை இது நினைப்பூட்டுகின்றது.

(பி-ம்.) 1. விசையுடையண்ணல்.
2. மாருமாவும்.
3. தள்ளி விழ்வன. விழ்வன போல. (19)

20. மாவொடு மரமு மண்ணும் வல்லியு மற்று மெல்லாம்
போவது புரிந்த வீரன் விசையினுற் புணரி போர்க்கத்
தூவின கீழு மேலுந் தூர்ந்தன சுருதி யன்ன
சேவகன் சீரு முன்னஞ் சேதுவு மியன்ற மாதோ.

வீரன் போவது புரிந்த விசையினுல் - அநுமன் போவதற்கு எடுத்துக் கொண்ட வேகத்தினுல், மாவொடு மரமும் மண்ணும் வல்லியும் மற்றும் எல்லாம்-விலங்குகளும் மரங்களும் மண்ணும் கொடிகளும் பிற யாவும், புணரி போர்க்க - கடல் மூடும்படி, தூவின - இறைந்தவைகளும், கீழும் மேலும் - கீழேயும் மேலேயும், தூர்ந்தன - தூர்த்தவைகளுமாக (ஆகி), சுருதியன்ன சேவகன் - வேதம் போன்ற வீரனுன இராமபிரான், சீரு முன்னம் - (வருணன் மீது) சினங்கொள்வதற்கு முன்பே, சேதுவும் - அணையாகவும், இயன்ற - அமைந்தன. மாது, ஓ: அசைகள்.

இனி, 'சுருதியன்னசேவகன்' என்பது, அநுமனையே உணர்த்துவதாக வும் கொள்வர். அநுமன் சுருதியன்னவன் என்று பின் (34,790) கூறு வதையும் காண்க. வடமொழிச் சம்பூராமாயணத்தில், 'அநுமன் சென்ற விசையால் மரங்கள் முதலியன ஆங்காங்கு வீழ்ந்து கிடப்பவை, இராமன் இனிக் கட்டப் போகும் சேதுவுக்கு நூல் பிடித்தற்கு நாட்டிய முளைகள் போலும்' என்று கூறியுள்ளமையும் இங்கு நோக்கத்தக்கது. கம்பரின் கவிமரபான, மேல் நிகழ்வதனை முன் குறித்தற்கு இஃது ஓர் உதாரணம்; பால. ஆற்றுப். 9; தாடகைவதைப். 75; அயோத்யா. கைகேசி சூழ் வினைப். 84; ஆரண்ய. சூர்ப்பணகைப். 96 முதலியவற்றையும் காண்க.

(பி - ம்.) 1. மரனுங்கல்லும் : வல்லியும் பிறவு மெல்லாம்.
2. புரியும் வீரன் : புணரி போர்ப்ப.
3. தூர்த்தன சுருதி ; துரந்தன சுருதி.
4. சேவகன் சேராமுன்னம் : சேதுவும் தெரித்த மாதோ. (20)

**21.** *கீண்டது வேலை நன்னீர் கீழுறக் கிடந்த நாகர்*
*வேண்டிய வுலக மெல்லாம் வெளிப்பட மணிகள் மின்ன*
*ஆண்டகை யதனை நோக்கி யரவினுக் கரசன் வாழ்வும்*
*காண்டகு தவத்த னானேன் யானெனக் கருத்திற் கொண்டான்.*

நல் வேலை நீர் கீண்டது - நல்ல கடலின் நீர் பிளந்தது; கீழ் உற கிடந்த - (அக்கடலின்) கீழாகக் கிடந்த, நாகர் வேண்டிய உலகம் எல்லாம் - நாகர்கள் விரும்பி வாழும் (பாதல) உலகம் முழுமையும், வெளிப்பட - (அவன் கண்களுக்குத்) தோன்ற, மணிகள் மின்ன - (அங்குள்ள) இரத்தினங்கள் ஒளிவீச, ஆண்தகை - ஆண்மைக் குணம் நிரம்பிய அநுமன், அதனை நோக்கி - அக்காட்சியைப் பார்த்து, 'யான் அரவினுக்கு அரசன் வாழ்வும் காண்தகு தவத்தன் ஆனேன் என - யான் பாம்புகளுக்கு அரசனான ஆதிசேஷன் வாழுமிடத்தையும் காணத்தக்க தவமுடையன் ஆனேன்' என்று, கருத்தில் கொண்டான் - கருதினான்.

வாழ்வும் என்ற உம்மையால் சுவர்க்கலோகம் கண்டதோடு நாகருலகத்தையும் கண்டேன் என்றதாகக் கொள்க.

(பி - ம்.) 2. உலகமெங்கும்; உலகமின்ன.
3. அரவினுக்கரசர்; அரவினுக்கரசின்.
4. தவத்தினானேன்: நானெனக்களிப்பு. (21)

**22.** *வெய்துவான் சிறையி னானீர் வேலையைக் கிழிய வீசி*
*நொய்தினி லமுதங் கொண்ட நோன்மையை நுவலு நாகர்*
*உய்துநா மென்ப தென்னே யுறுவலிக் கலுழ னூழின்*
*எய்தின னாமென் றஞ்சி யலக்கணுற் றிரியல் போனார்.*

வான் சிறையினால் - (கருடன்) தன் பெரிய இறக்கைகளினால், நீர் வேலையை கிழிய வீசி - நீர் நிறைந்த கடலைப் பிளக்கும்படி வீசி, வெய்து நொய்தினில் அமுதம் கொண்ட நோன்மையை - விரைவாகவும் எளிதாகவும் அமுதத்தை எடுத்துக்கொண்ட வலிமையை, நுவலும் நாகர் - (எப்பொழுதும்) சொல்லிக்கொண்டிருக்கும் நாகர்கள், (அநுமன் சென்ற வேகத்தால் வேலை நன்னீர் கிழிவது கண்டு), 'ஊழின் உறுவலிக் கலுழன் எய்தினன் ஆம் - நம் விதியினால் பேராற்றல் படைத்த கருடன் (திரும்பவும்) வந்து விட்டனன்; நாம் உய்தும் என்பது என்னே - நாம் பிழைப்போம் என்பது எவ்வாறு?' என்று அஞ்சி அலக்கண் உற்று இரியல் போனார் - என்று பயந்து துன்பமுற்று நிலை கெட்டோடினர்.

நோன்மை - பெருமையும் ஆம். நாகர் - நாகலோகத்துப் பாம்புச் சாதியர். கருடன் தன் தாயை அடிமைத் தன்மையினின்று விடுவிக்கும்

பொருட்டுத் தேவர்களுடன் போரிட்டு அவர்களை வென்று அமுதத்தை நாகலோகத்துக்குக் கொண்டுவந்தனன்; பின்பு அவ்வாறு கொண்டு வரச் செய்த தன் மாற்றாந்தாயின் மக்களை ஏமாற்றிப் பின்னும் அதனை எடுத்து வானுலகுக்குச் சென்றனன் என்ற வரலாறு **வியாசபாரதம்,** அநுசாஸன பர்வம். 29 ஆம் அத்தியாயத்தில் கூறப்பட்டிருக்கிறது. முன் 21 ஆம் செய்யுளில் சொல்லப்பெற்றிருக்கிற செய்தியை ஒட்டி இதனைப் பாம்புகளின் செய்தியாகக் கூறுவதே பொருந்துவதாகும். ஊழின், முறைப்படி என்றும் ஆம்.

(பி-ம்.) 1. எய்துவான் சிந்தை: சிந்தை நன்னீர்; சிறையினன்னீர்: கிழித்துவீசி.
2. நொய்தினமுதம்: நோன்மையே நுவலுநாகர்: நுகருநாகர்; நுவலநாகர்.
3. கலுழனுழி.
4. எய்தினுறுமென்றெண்ணி: என்றெண்ணிமறுக்கமுற்று. (22)

23. *துள்ளுறு மகர மீன்க டுடிப்புறச் சுறவு தூங்க*
*ஒள்ளிய பனைமீன் றுஞ்சத் திவலைய தூழிக் காலின்*
*வள்ளுகிர் வீரன் செல்லும் விசைபொரு மறுகி வாரி*
*தள்ளிய திரைகண் முந்துற் றிலங்கைமேற் றவழ்ந்த மாதோ.*

ஊழி திவலையது காலின் - உகாந்த காலத்தில் உண்டாகும் நீர்த் திவலைகளோடு கூடிய காற்றுப் போல, வள் உகிர் வீரன் செல்லும் விசை பொரு - வலிய நகங்களையுடைய அநுமன் செல்லுதலின் வேகத்தைப் பொறுக்கமாட்டாமல், துள்ளுறு மகர மீன்கள் துடிப்பு உற - கடலில் துள்ளும் இயல்பையுடைய மகரமீன்கள் (மரண வேதனை பெற்று) துடிப்படைய, சுறவு தூங்க - சுறுமீன்கள் அசைவற்றுக் கிடக்க, ஒள்ளிய பனைமீன் துஞ்ச - ஒளி பொருந்திய பனைமீன்கள் சாக, வாரி மறுகி தள்ளிய திரைகள் - கடல் கலங்கி (அதனல்) வீசிய அலைகள், முந்து உற்று - முன்னே சென்று, இலங்கை மேல் தவழ்ந்த - இலங்கை மீது மெதுவாகப் பாய்ந்தன. மாது, ஓ: அசைகள்.

பனைமீன் - மீனினத்தில் ஒன்று; 50. திவலைய வாரி என்றும் கூட்டிப் பொருள் கூறலாம். முந்துற்று - அநுமனுக்கு முன்னே தாம் செல்வன போலச் சென்று.

(பி-ம்,) 1. துள்ளிய மகரமீன்கள் துடிப்பற: சுற்றுந்தூங்க.
2. தெள்ளிய பனைமீன்: துஞ்சித்திவலைய; துஞ்சுந்திவலைய: துவலை யோடுழிக்காலின்; துவலையவ்வூழிக்காலின்.
3. விசைபொர.
4. துள்ளிய கடலம்மூதூர்; தள்ளிய கடலம் மூதூர்: முந்துற்ற திலங்கை. (23)

## விசும்பில் விரைந்து செல்லும் அநுமன் தோற்றம் 24-35.

24. இடுக்குறும் பொருள்க ளென்னு மெண்டிசை சுமந்த யானை
நடுக்குற விசும்பிற் செல்லு நாயகன் றூத னாகம்
ஒடுக்குறு கால வன்காற் றடியொடு மொடித்த வந்நாள்
முடுக்குறக் கடலிற் செல்லு முத்தலைக் கிரியு மொத்தான்.

அநுமனின் வலி.

எண் திசை சுமந்த யானை நடுக்குற - எட்டுத் திக்குக்களையும் சுமந்து நின்ற திசையானைகள் நடுக்கமடைய, விசும்பில் செல்லும் நாயகன் தூதன் - (விசையுடன்) வானத்தில் செல்கின்ற இராமதூதனை அநுமன், நாகம் ஒடுக்குறு காலம் - (ஆதி சேஷனுக்கும் வாயுவுக்கும் போட்டி வந்த போது) அவ்வாதிசேஷன், (மேருவைத் தன் உடலால் வளைத்துப் படத்தால்) ஒடுக்கிக் கவித்துக் கொண்டிருந்த காலத்தில், வன் கால் தடியொடும் ஒடித்த அந்நாள் - வலிய வாயு மின்னலுடன் அம்மலையை ஒடித்த அன்று, முடுக்குறக் கடலில் செல்லும் முத்தலைக் கிரியும் ஒத்தான் - வேகமாகச் செலுத்தப் படக் கடலில் பெயர்ந்து செல்லும் திரிகூட மலையையும் ஒத்தான்; இடுக்கு உறும் பொருள்கள் என் ஆம் - அவன் வழியின் இடையிலே உள்ள பொருள்களின் நிலை யாது ஆகும்? (எல்லாம் அழியும் என்றபடி.)

முத்தலைக்கிரி - திரிகூடமலை; இது மேருவின் சிகரங்கள் மூன்றால் ஆனது. முன்பு சேடனுக்கும் வாயுவுக்கும் நேர்ந்த பிணக்கினால், சேடன் அக்கிரியைப் பிடித்துக் கொள்ள, வாயு அதனைப் பெயர்த்தெறிய, அதுவே நெடுந்தூரம் சென்று கடலில் விழுந்தது; பின்பு அதன்மீது இலங்காபுரி கட்டப்பட்டது என்பது வரலாறு. 'திருவனந்தாழ்வான் சண்டை நீக்க வந்த பெரியதிருவடியைக் கண்டு படத்தை ஒடுக்குகிற போது' என்ற பழைய உரைப் பகுதியால் இப்பிணக்கில் கருடபகவானுக்கும் ஒரு பங்கு உண்டு என்பதாயிற்று; செய்யுள் 35 காண்க. இலங்கையை நோக்கித் தாவும் அநுமனுக்கு, வாயுவால் தள்ளப்பட்டுக் கடலில் வேகமாகச் சென்ற திரிகூடம் ஒப்பாயது, அவன் இரு தோள்களும் தலையும் முக்குன்றுகள் போல் தோன்றினமையாலும், அவன் தெற்கு நோக்கிச் செல்லும் வேகத்தாலும் என்க.

(பி-ம்.) 1. இடுக்குறு பொருள்கள்: சுமந்த நாகம்.
2. நடுக்குறு விசும்பு.
3. காலவன்காற்: அடியொடு முடித்த; இடியொடுமொடிய.
4. கடல்மேற் செல்லும்: கிரியை யொத்தாள். (24)

25. *கொட்புறு புரவித் தெய்வக் கூர்நுதிக் குலிசத் தாற்கும்*
*கட்புலங் கதுவ லாகா வேகத்தாற் கடலு மண்ணும்*
*உட்படக் கூடி யண்ட முறவுள செலவி னொற்றைப்*
*புட்பக விமானந் தானவ் விலங்கைமேற் போவ தொத்தான்.*

கொட்பு உறு (தெய்வப்) புரவி கூர் நிதி தெய்வ குலிசத்தாற்கும் - சுழன்று ஓடுகின்ற உச்சைச்சிரவம் என்னும் (தெய்வக்) குதிரையினையும், கூர்மையான நுனியையுடைய தெய்வத் தன்மையுள்ள வச்சிராயுதத்தையுமுடைய இந்திரனுக்கும், கண் புலம் கதுவலாகா வேகத்தால் - கண்ணாகிய புலத்தால் பற்ற முடியாத வேகத்தாலும், கடலும் மண்ணும் உட்படக் கூடி - கடலும் நிலமும் தன்னுள் அடங்கும்படிப் பெரிதாகி, அண்டம் உற உள செலவின் - அண்டமுகடு அளாவச் செல்லும் செலவினாலும், ஒற்றைப் புட்பக விமானந்தான் அவ் இலங்கைமேல் போவது ஒத்தான் - நிகரற்ற புட்பக விமானம் இலங்கை மீது செல்வதை (அநுமன்) ஒத்தான்.

அண்டம் உட்பட என்று கூட்டிப் பொருள் கொள்ளலும் ஆம். புட்பக விமானம் முன்பு பிரமதேவனால் குபேரனுக்கு அருளப்பெற்றது. அதனை இராவணன் குபேரனிடமிருந்து பற்றிக் கொண்டான்; அவ் விமானம் அண்டமும் தன்னுள் அடங்கத்தக்க பெருமையும் மிகுந்த வேகமும் உடையது. இங்குப் புட்பக விமானம் அநுமனுக்கு உவமை. கொட்புறுதல் - வட்டமிடுதல்; 'கொட்புறு கலினப் பாய்மா' (பால. மிதிலைக்காட்சிப். 13.) தெய்வ, என்பதனை புரவியுடனும் கூட்டுக. இந்திரன் ஆயிரங் கண்ணனாதலின், 'குலிசத்தாற்கும் கட்புலம் கதுவலாகா வேகத்தான்' என்றார். 'அண்டம் உற உள செலவின் - அநேக அண்டங்கள் வைத்தாலும் கடக்கும் செலவு' என்பது பழைய உரை. ஒற்றை என்றது தனிச்சிறப்புடைமையால் என்க.

(பி-ம்.) 1. குலிசத்தானும்.
2. வேகத்தான் கடலும்.
3. உட்படக்கூட்டி: உட்படக்குலவுமண்டகோடிபோமரக்கன்.
4. தானிவ் விலங்கை: இலங்கையில்: போயதொத்தான், (25)

26. *விண்ணவ ரேத்த வேத முனிவர்கள் வியந்து வாழ்த்த*
*மண்ணவ ரிறைஞ்சச் செல்லு மாருதி மறமுற் கூர*
*அண்ணல்வா ளரக்கன் றன்னை யமுக்குவெ னின்ன மென்னுக்*
*கண்ணுத லொழியச் செல்லுங் கயிலையங் கிரியு மொத்தான்.*

விண்ணவர் ஏத்த - தேவர்கள் துதிக்க, வேத முனிவர்கள் வியந்து வாழ்த்த - வேதம் உணர்ந்த முனிவர்கள் வியப்படைந்து வாழ்த்துக் கூற, மண்ணவர் இறைஞ்ச - பூமியிலுள்ளோர் வணங்க, செல்லும் மாருதி - போகும் அநுமன், மறம் முன் கூர - பகைமை முன்னே மிக, 'இன்னம் அண்ணல் வாள் அரக்கன் தன்னை அமுக்குவென் என்று - மறுபடியும் பெருமைபொருந்திய சந்திர ஹாஸம் என்னும் வாளையுடைய இராவணனை அழுத்துவேன்' என்று, கண்ணுதல் ஒழிய - சிவபிரானைத் தன்னிடம் இல்லாமற் செய்து கொண்டு, செல்லும் - போகும், கயிலை அம் கிரியும் ஒத்தான் - கயிலை என்ற அழகிய மலையையும் ஒத்தான்.

மாருதி கிரியும் ஒத்தான் என்க. மறமுற் கூர என்பதனை அநுமனோடும் கயிலையோடும் சேர்த்துப் பொருள் கூறுக. அண்ணல் வாள் - சிவபெருமான் அருளிய வாள் எனினும் பொருந்தும். கண்ணுதல் - நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான். கயிலை மறம் கூர்ந்தது; முன் இராவணன் தன்னைப் பெயர்த்துச் சலிக்கச் செய்தமையால். கண்ணுதல் ஒழியச் சென்றது: முன் அவர் இராவணன் பிழை பொறுத்து அவனை விடுவித்து அருள் புரிந்தது போல் இம் முறையும் செய்யாதிருக்க வேண்டி என்க.

(பி-ம்.) 1 முனிவர் தாம் வியந்து; முனிவரர் வியந்து; முனிவரருவந்து.
2. மறமுட்கூர; மறமுட்கூட.
3. அமுக்குவானின்ன; அமுக்குவமின்ன; அமுக்குவனின்று: இன்னமென்ன.
4. கிரியை யொத்தான். (26)

27. கேழுலா முழுநி லாவிற் கிளரொளி யிருளைக் கீறப்
பாழிமா மேரு நாண விசும்பிடைப் படர்ந்த தோளான்
ஆழிசூ ழுலக மெல்லா மருங்கனன் முருங்க வுண்ணும்
ஊழிநாள் வடபாற் றோன்று மூவாமுழு மதியு மொத்தான்.

கேழ் உலாம் முழு நிலாவில் - (வெண்மை) நிறம் விளங்குகின்ற (பௌர்ணமி) முழு நிலாப் போல, கிளர் ஒளி - தன்னிடம் விளங்கும் ஒளி, இருளைக் கீற- இருளைப் பிளந்து செல்ல, பாழி - பருத்த, மாமேரு நாண - மகாமேரு என்னும் மலை வெட்கமுற, விசும்பிடை படர்ந்த தோளான் - வானத்தின் இடையே பரந்த தோள்களின் பெருமையை உடைய அநுமன், ஆழி சூழ் உலகமெல்லாம் - கடல் சூழ்ந்த உலகம் முழுமையும், அருங்கனல் முருங்க உண்ணும் ஊழி நாள் - தாங்குதற்கரிய தீ அழித்து உண்ணுகிற யுகாந்த காலத்தில், வடபால் - வடக்கே,

தோன்றும் - காணப்படும், உவா முழு மதியும் ஒத்தான்-பௌர்ணமியில் தோன்றும் பூர்ண சந்திரனையும் ஒத்தான்.

மேரு அநுமனுக்கு உவமை; 28. (ஆழி சூழுலகமெல்லாம்;) அயோத்யா. கைகேசி சூழ்வினைப். 107. முருங்குதல் - அழித்தல், எரித்தல். சந்திர சூரியர்கள் திசைமாறிச்செல்லுதல் உற்பாதமாகும்; சூரியன் இவ்வாறு செல்லுதல் 30 ஆம் பாட்டில் கூறப்படும். இங்கு அநுமன் உவாமதிக்கு ஒப்பு.

(பி-ம்:) 1. இருளை நீக்கி; இருளைக்கீறும்.
2. விசும்புறப்படரும்.
3. உலகுமுற்றும்; இலங்கை முற்றும்.
4. உவாவெழுமதியுமொத்தான்: மதியமொத்தான். (27)

28. *மாணியாம் வேடந் தாங்கி மலரயற் கறிவு மாண்டோர்*
*ஆணியா வுலகுக் கெல்லா மறப்பொரு ணிரப்பு மண்ணல்*
*சேணுயர் நெடுநாட் டீர்ந்த திரிதலைச் சிறுவன் றன்னைக்*
*காணிய விரைவிற் செல்லுங் கனகமால் வரையு மொத்தான்.*

மாணி ஆம் வேடம் தாங்கி - பிரமசாரியாகிற வடிவங்கொண்டு, மலர் அயற்கு அறிவு மாண்டு - தாமரை மலரில் வாழும் பிரமதேவர் போல் அறிவிற் சிறந்து, உலகுக்கு எல்லாம் ஓர் ஆணி ஆ அறப்பொருள் நிரப்பும் அண்ணல் - உலகங்களுக்கு எல்லாம் ஒப்பற்ற அச்சாணிபோல் நின்று அறத்தின் பொருளை நிரம்பச் செய்யும் மேலோனான அநுமன், நெடு நாள் தீர்ந்த - நீண்ட காலமாகத் தன்னை விட்டுப் பிரிந்த, சேண் உயர் திரிதலை சிறுவன் தன்னை - மிக வளர்ந்த திரிகூடம் என்னும் மைந்தனை, காணிய - காணும் பொருட்டு, விரைவில் செல்லும் - வேகமாகப் போகின்ற, கனக மால் வரையும் - பொன்மயமான மேருவையும் ஒத்தான்.

மலரயற்கு, கு வேற்றுமை மயக்கம். அநுமன் மாணிவடிவினன்: கிட்கிந்தா.மராமரப். 21. உலகுக்கோர் ஆணி; 591. அறப்பொருள்-அறத்தையும் அதன் துணைக்காரணமாகவுள்ள பொருளையும் என்றும் பொருள் கொள்வர்: மேருவின் பகுதியே திரிகூடமாதலின் அது மேருவின் மைந்தனாகக் கூறப்பட்டது. மேருவைப்போல் பொன்னிறமும் (73) பெருமையும் கொண்டவன் அநுமன் என்பது கருதத்தக்கது.

(-பி-ம்.) 1. மலரயற்கரியவாயோர்; மலரயற்கறிவுமீயும்.
2. ஆணியாயுலகுக்கு.
3. நெடுநாடய்ந்த; நெடுநாடீர்த்த; நெடுங்காறீர்த்த.
4. காணிடவிரைவிற்; காணுமாறெல்லை. (28)

29. மழைகிழித் துதிர மீன்கண் மறிகடல் பாய வானம்
குழைவுறத் திசைகள் கீற மேருவுங் குலுங்கக் கோட்டின்
முழையுடைக் கிரிகண் முற்று முடிக்குவான் முடிவு காலத்
தழிவுறக் கடுகும் வேகத் தாதையு மனைய னானான்.

மீன்கள் மழை கிழித்து உதிர - வான்மீன்களாகிய நட்சத்திரங்கள் மேகங்களைக் கிழித்துக் கொண்டு கீழே உதிர, மறி கடல் பாய - மடங்கி விழும் அலைகளையுடைய கடல்கள் தரைமீது பாய்ந்தோட, வானம் குழைவு உற-வானுலகு நிலை தளர, திசைகள் கீற - திசைகள் பிளவுபட, மேருவும் குலுங்க - மேருமலையும் அசைந்தாட, கோட்டின் முழை யுடை கிரிகள் முற்றும் முடிக்குவான் - சிகரங்களில் குகைகளை யுடைய (பிற) மலைகள் எல்லாவற்றையும் அழிக்கும் பொருட்டு, முடிவு காலத்து - யுகம் முடியும் காலத்தில், அழிவுற - அவ்வுலகங்கள் யாவும் அழிவடைய, கடுகும் - விரைந்து செல்லும், வேக தாதையும் அனையன் ஆனான் - வேகத்தையுடைய தந்தையான வாயு போன்றவனா கவும் அவ்வநுமன் ஆயினான்.

மீன்கள் மழைகிழித்துதிர்தல்; 214. உதிர்தல் முதலிய செயல்கள் அநுமன் செலவாலும் ஊழிக்காற்றாலும் விளைவன. அநுமன் தன் தாதையை ஒத்தல்; 739.

(பி-ம்.) 1. மழை கிழிந்துதிர; மழை குழைத்துதிர.
2. குழையுற: திசைகள் கீறி; தரைகள் கீற: குலுங்கக் கோட்டி.
3. முடுகுவான் முடிவு; மூடுவான் முடியுங்காலத்து.
4. தடுக்கும் வேகத்: அனையதானான். (29)

30. தடக்கைநா லைந்து பத்துத் தலைகளு முடையான் றானே
அடக்கியைம் புலன்கள் வென்ற தவப்பய னறுத லாலே
கெடக்குறி யாகி மாகம் கிழக்கெழு வழக்கு நீங்கி
வடக்கெழுந் திலங்கை செல்லும் பருதிவா னவனு மொத்தான்.

நாலைந்து தடக்கை பத்து தலைகளும் உடையான் தானே - இருபது பெரிய கைகளும், பத்துத் தலைகளும் உடைய இராவணன் தானே, ஐம்புலன்கள் அடக்கி வென்ற தவப் பயன் - தன் ஐம்புலன்களையும் (தம் இச்சைப்படியே செல்லாதபடி) அடக்கி அவற்றை வென்று செய்த தவத்தினால் ஆகிய பயன்கள், அறுதலாலே - அற்றுப் போனமையாலே, கெட - அவன் கெடுவதற்கு; குறி ஆகி - ஓர் அடையாளமான உற்பாத

மாகி, மாகம் - ஆகாயத்திலே, கிழக்கு எழு வழக்கு நீங்கி - கிழக்கே எழுதலாகிய தன் வழக்கத்தினின்று மாறி, வடக்கு எழுந்து - வடக்கே உதித்து, இலங்கை செல்லும் - இலங்கையை நோக்கித் தெற்கே செல்லும், பருதி வானவனும் ஒத்தான் - சூரிய தேவனையும் ஒத்தான்.

முன், 27 ஆம் செய்யுளில், 'வடபாற்றேன்றும் உவாமுழுமதியும் ஒத்தான்' என்பதோடு ஒப்பிடுக. சூரிய சந்திரர்கள் திசை தடுமாறல் உற்பாதக் குறிப்பாம். தவப்பயன் உள்ளமட்டும் கேடு அணுகா தென்பதும், அஃது அற்றவுடன் தீவினைப் பயனுகிய கேடுகள் அணுகும் என்பதும் இங்குக் காட்டப் பெற்றன; இவ்வாறு கூறிச் செல்வது கவி மரபு; 460; 1135. இராவணன் தவச்சிறப்பு; உத்தர. இராவணன் பிறப்புப். 26.

(பி-ம்.) 1. தலையொடுமுடையோன்.
2. தவப்பயனறுதலோடும்; அறைதலோடும்; பயனளித்த வெல்லாம்.
3. கெடற்குறியாகி; கெடக்குறியாகிமாகக்; கெடக்குறிகாட்டும்: கிழக்கெழுந்தன்மை.
4. இலங்கைச்செல்லும். (30)

31. *புறத்துற லஞ்சி வேறோ ரரணம்புக் குறைதல் போக்கி*
*மறத்தொழி லரக்கன் வாழு மாநகர் மனுவின் வந்த*
*திறத்தகை யிராம னென்னுஞ் சேவகற் பற்றிச் செல்லும்*
*அறத்தகை யரசன் றன்போ ராழியு மனைய னுனன்.*

மறம் தொழில் அரக்கன் வாழும் மாநகர் புறத்து உறல் அஞ்சி - கொடுந் தொழிலையுடைய அரக்கனுன இராவணன் வசிக்கும் பெரிய நகரத்தின் புறத்திலே தங்குதலிலும் பயந்து, வேறு ஓர் அரணம் புக்கு உறைதல் - பிறிதொரு பாதுகாவலிடத்தில் புகுந்து தங்குதலை, போக்கி - (இப்பொழுது) நீக்கிக்கொண்டு, மனுவின் வந்த - வைவசுவத மனுவின் குலத்தில் தோன்றிய, திறத்தகை இராமன் என்னும் சேவகன் பற்றிச் செல்லும் - வலிமை மிக்கோனுன இராமன் என்னும் வீரனைத் துணையாகக் கொண்டு செல்லும், அறத்தகை அரசன் தன் போர் ஆழியும் - அறத்தைத் தன்னியல்பாகக் கொண்ட மன்னனுகிய தருமதேவதையினது போர் செய்யும் தன்மையையுடைய ஆஞ்ஞா சக்கரமும், அனையன் ஆனுன் - போன்றவனுக (அநுமன்) ஆனுன்.

இங்கு, அநுமன் அறக்கடவுளின் ஆழிக்கு உவமை. வலிமையற்ற அவ்வாழி இப்பொழுது துணைவலி கொண்டு சென்றமை கூறப்பட்டது; 'அறம்புகாநகர்'(118) என்றமை பின்னும் கூறப்படும். அறத்தகை அரசன்

போர் ஆழி என்பதற்குப் பிறர் வேறு வேறு பொருள் கூறுவர் ; 'தன்மஞ் செய்யும் அரசரது ஆஞ்ஞாசக்கரம்' என்பது பழைய உரை. மனுவின் வந்த இராமன் என்றது மானிடனான இராமன் என்ற ஒரு பொருளேயும் சுட்டுகிறது ; இராவணன் மானிடனால் கொல்லப்படுவான் என்ற உண்மை பற்றி.

(பி-ம்.) 1. வேறொரண்டம்புக்; வேறோராண்மைபுக்.
2. மாணகர்.
3. திறத்தொழிலிராமன்.
4. அரசன்றிண்போராழி: போராழி. (31)

32. அடலுலாந் திகிரி மாயற் கமைந்ததன் னாற்றல் காட்டக்
குடலெலா மவுணர் சிந்தக் குன்றெனக் குறித்து நின்ற
திடலெலாந் தொடர்ந்து செல்லச் சேண்விசும் பொதுங்கத் தெய்வக்
கடலெலாங் கடக்கத் தாவும் கலுழனு மனைய னானன்.

அடல் உலாம் திகிரி மாயற்கு அமைந்த தன் ஆற்றல் காட்ட - வலிமையுள்ள சக்கரப்படையையுடைய திருமாலுக்கு இயைந்த தன் வலிமையைத் தோற்றுவிக்க, அவுணர் எலாம் குடல் சிந்த - (அமுதத்தைக் காத்திருந்த) அசுரர் யாவரும் தம் குடல்கள் சிந்த, குன்றெனக் குறித்து நின்ற திடல் எலாம் தொடர்ந்து செல்ல - குன்றுகள் என்று சொல்லபட்டு நின்ற மேட்டிடங்களையெல்லாம் தொடர்ந்து கடக்க, சேண் விசும்பு ஒதுங்க - வானம் தூரத்தில் விலக, தெய்வக் கடல் எலாம் கடக்க தாவும் - தெய்வக்கடல் யாவற்றையும் கடக்கும் பொருட்டுத் தாவும், (இவ்வாறு தன் தாயின் அடிமைத் தன்மையை நீக்கும் பொருட்டு வானுலகிலிருந்து நாகவுலகத்திற்கு அமுதம் கொண்டு வந்த), கலுழனும் அனையன் ஆனான் - கருடனை ஒத்தவனுமாக அநுமன் ஆனான்.

கருடன் அமுதம் கொண்டு வந்த வரலாறு; மகாபாரதம், ஆதி பர்வம் 20-29 அத்தியாயங்களில் கூறப்பெற்றுள்ளது. அநுமனுக்குக் கருட வேகம் அளித்தது; உத்தர. அநுமப். 13.

(பி-ம்) 1, அடலெலாம்: திகிரிப்புத்தேளடியவனாற்றல் கண்டு: அமைந்தன வாற்றல்.
2. குடரெலாம்: குன்றெலாங் குறித்து.
3. திடலெலாஞ் சுமந்து செல்லச்; திடரெலாஞ்சருகிற் போகச்: சேணிடைப் பரந்து தேங்கும்.
4. கலங்கத்தாவும். (32)

33. *நாலினோ டுலக மூன்று நடுக்குற வடுக்கு நாகர்*
*மேலின்மே னின்ற காறுஞ் சென்றகோ லத்தின் விண்டு*
*காலினு லளந்த வான முகட்டையுங் கடக்கக் கால*
*வாலினு லளந்தா னென்று வானவர் மருளச் சென்ருன்.*

அடுக்கு மேலின்மேல் நின்ற நாலினோடு மூன்று நாகர் உலகம் காறும் நடுக்குறச் சென்ற - அடுக்குக்கள் ஒன்றன் மேலொன்ருக நின்ற ஏழு தேவருலகங்கள் வரை யாவும் நடுங்கச் சென்று நின்ற, கோலத்தின்- உருவத்தினையுடைய, விண்டு - மகாவிஷ்ணு, காலினுல் அளந்த வான முகட்டையும் - (வாமனுவதாரத்தில் திரிவிக்கிரமப் பேருருக் கொண்டு) தம் காலினுல் (ஓரடியாக) அளந்த வான முகட்டையும், கடக்க - அப்பாற் செல்ல, (அநுமன்) கால வாலினுல் அளந்தான் என்று - அநுமன் காலனை ஒத்த தன் வாலினுல் அளந்தான் என்று, வானவர் - தேவர்கள், மருள - அஞ்சும்படி, சென்ருன் - போனுன்.

'விண்டு காலினுல் அளந்த வானமுகட்டை அநுமன் வாலினுல் அளந் தான்' என்றது முன், 'கழற்கால் மாயன், நெடுமையால் அன்றளந்த உலகெல்லாம் தன்மனத்தே நினைந்து செய்யும், கொடுமையா லளந்தானை' **அயோத்யா.** குகப். 69 ஆம் செய்யுளை நினைப்பூட்டுகின்றது. காலவால்: அடுத்த செய்யுளில் வால், காலபாசத்தை ஒத்தது என்று கூறியதைக் காண்க.

(பி-ம்.) 1. அடுக்கிநாகர்; நடுக்கிநாகர்; நடுங்கிநாகர்.
2. நின்றுகாறுஞ்: சென்ற காலத்தின்; சென்ற கூலத்தன் விண்டு; சென்ற கூலத்தின் விண்டு; சென்றவன் வலத்திற் பண்டு; சென்ற கோலத்தன்.
3. வானக்கடையையுங்கடக்கலான: கடக்கச்சால; கடக்கத்தாவி.
4, மருளப் போனுன். (33)

34. *வெளித்துப்பின் வேலை தாவும் வீரன்வால் வேத மேய்க்கும்*
*அளித்துப்பி னநும னென்னு மருந்துணை பெற்ற தாயும்*
*களித்துப்புன் ருெழின்மே னின்ற வரக்கர்கண் ணுறுவ ரென்ன*
*ஒளித்துப்பின் செல்லுங் கால பாசத்தை யொத்த தன்றே.*

வெளி துப்பின் வேலை தாவும் - பரந்த வெளிப் பரப்பையும் பவழத் தையும் உடைய கடலைத் தாவுகிற, வேதம் ஏய்க்கும் வீரன் வால் - வேதத்தை ஒக்கும் வீரனை அநுமனின் வாலானது, களித்து புன் தொழில் மேல் நின்ற அரக்கர் கண்ணுறுவர் என்ன - கட்குடித்து,

(அற நூல்கள் விலக்கும் கொலை, களவு முதலாம்) இழி தொழில்களை மேற்கொண்டிருந்த அரக்கர்கள் தன்னைக் கண்டுகொள்வார்களே என்று, அளி - கருணையையும், துப்பின் - வலிமையையும் கொண்ட, அநுமன் என்னும் அருந்துணை பெற்றதாய் - அநுமன் என்னும் அரிய உதவியைப் பெற்றதாகி, பின் ஒளித்து செல்லும் காலபாசத்தை ஒத்தது- (அவ்வநுமனுக்குப்) பின்னே (தன்னைப் பிறர் காணாதபடி) ஒளித்துக் கொண்டு போகும் யம பாசத்தை ஒத்தது. உம், அன்று, ஏ: அசைகள்.

துப்பின் வேலை - வலிமையை உடைய கடல் என்னலும் ஆம். வால், கால பாசத்தை ஒத்தது என்க. இச்செய்யுளை அடியொற்றிய அருணசலக்கவிராயர் தம் இராம நாடகத்தில், 'வீசிய வால் யம பாசமதாகப் பாய்ந்தானே அநுமான்' என்று சிறப்பித்ததும் நோக்கற்பாலதாம். அநுமன் வேதத்துக்கு ஒப்பானவன்; 20,790. வால் வேதத்துக்கு ஒப்பானது என்றும் கூறுவர்; 'வால் வேதம் போல் அளவு காணாதபடி நீளும்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. விளித்துப்பின்: மேகமேய்க்கும்.
2. அநுமனென்றோர்: அறந்துணைபெற்றதாயும்.
3, கண்ணுறுவராமென் (று); கண்டிடுவராமென் (று). (34)

35. மேருவை முழுதுஞ் சூழ்ந்து மீதுற்ற வேக நாகம்
கார்நிறத் தண்ண லேவக் கலுழன்வந் துற்ற காலைச்
சோர்வுறு மனத்த தாகிச் சுற்றிய சுற்று நீங்கிப்
பேர்வுறு கின்ற வாறு மொத்ததப் பிறங்கு பேழ்வால்.

பிறங்கு பேழ் அ வால் - விளங்குகின்ற பெரிய அந்த வாலானது, கார் நிறத்து அண்ணல் - கரிய நிறத்தையுடைய பெரியோனாகிய திருமால், ஏவ - கட்டளையிட, கலுழன் வந்து உற்ற காலை - கருடன் வந்து அடைந்தபோது, மேருவை முழுதும் சூழ்ந்து மீதுற்ற வேக நாகம் - மேருவை முழுமையும் (தன் உடலால்) சுற்றிக் கொண்டு அதன் மேலே (தன் படத்தைத்) தூக்கிப் பிடித்த கொடிய வேகத்தையுடைய (ஆதி சேஷனாகிய) பாம்பு, சோர்வுறு மனத்தது ஆகி - (கருடனைக் கண்டு அச்சத்தால்) சோர்வடைந்த மனத்தையுடையது ஆகி, சுற்றிய சுற்று நீங்கி - தான் மலையைச் சுற்றிப் பிணித்திருந்த பிணிப்பு நீங்கி, பேர்வு உறுகின்றவாறும் - பெயர்கின்ற தன்மையையும், ஒத்தது - ஒத்திருந்தது.

வால், நாகம் பேர்வுறுகின்றதை ஒத்தது என்க. இங்குக் கூறப் பெற்ற வரலாற்றின் விளைநிலம் விளங்கவில்லை.

(பி-ம்.) 1. சூழ்ந்துமீதுற.
2. கார்நிறக்கடவுளேவ: காலை.
3. சோர்வுற: மனத்தவாகி.
4. ஒத்ததிற்பிறங்கு: பிறங்கு நீள்வால். (35)

## அநுமன் வேகத்தால் நிகழ்ந்தவை 36-39.

36. *குன்றொடு குனிக்குங் கொற்றக் குவவுத்தோட் குரக்குச் சீயம்*
*சென்றுறு வேகத் திண்கா லெறிதரத் தேவர் வைகும்*
*மின்றொடர் வானத் தான விமானங்கள் விசையிற் றம்மில்*
*ஒன்றொடொன் றுடையத் தாக்கி மாக்கட லுற்ற மாதோ.*

குன்றொடு குனிக்கும் - மலையோடு ஒப்பக் கூறப்படும், கொற்றம் - வெற்றியையுடைய, குவவு தோள் - பருமனைக்கொண்ட தோள்களை யுடைய, குரக்கு சீயம் - வானரர்களுள் சிங்கம் போன்றவனுன அநுமன், சென்று உறு - சென்றதால் உண்டான, வேகம் திண் கால் - வேகமுள்ள வலிய காற்று, எறிதர - வீச, மின் தொடர் வானத்து ஆன - ஒளியொடு தொடர்ந்துசெல்லும் வானத்தில் பறக்கும், தேவர் வைகும் விமானங்கள் -தேவர்கள் தங்கும் விமானங்கள், விசையில் - காற்றின் விசையினுல், தம் மில் ஒன்றொடு ஒன்று தாக்கி உடைய - தாம் ஒன்றோடொன்று மோதிக் கொண்டு உடையும்படி, மா கடல் உற்ற - கரிய கடலை அடைந்தன.

விமானங்கள் உற்ற என்று கூட்டுக. அநுமனைக் குரக்குச் சீயம் என்றது; கிட்கிந்தா. மராமரப். 38; உயுத்த. நாகபாசப். 142. குரக்கு: குரங்கு என்றதன் விகாரம். மாது, ஓ: அசைகள்.

(பி-ம்:) 1. குன்றொடுங்குனிக்கும்.
2. சென்றுறவேகத்: வேகத்தின் கால்.
3. வானத்தானவ்விமான ; வானத்தூன்ற : விசையத்தம்மின் ; விசையிற் சிந்தி.
4. ஒன்றிலொன்றுடையத்தாக்கியுவர்க்கடலூடுவீழ்ந்த: ஒன்றினென்று. (36)

37. *வலங்கையின் வயிர வேதி வைத்தவன் வைகு நாடும்*
*கலங்குற வேகு வான்றன் கருத்தென்கொ லென்னுங் கற்பால்*
*விலங்கயி லெயிற்று வீரன் முடுகிய வேகம் வெய்யோர்*
*இலங்கையி னளவன் றென்னு விம்பர்நா டிரிந்த தன்றே.*

வலங்கையின் வயிர ஏதி வைத்தவன் வைகும் நாடும் - தன் வலக் கையில் வச்சிராயுதத்தைப் பிடித்த இந்திரன் தங்கும் தேவருலகும், கலங்குற - கலக்கமடையும்படி, ஏகுவான் தன் - செல்கின்ற அநுமனு டைய, கருத்து என் கொல் - எண்ணம் யாதாகும், என்னும் கற்பால் - என்னும் நினைப்பால், இம்பர் நாடு - இவ்வுலகமானது, விலங்கு அயில் எயிற்று வீரன் - (வரிசையினின்று) விலகிக் (கோணலாய் உள்ள) கூரிய பற்களையுடைய அநுமன், முடுகிய வேகம் - வலியோடும் செல்லும்

வேகம், வெய்யோர் இலங்கையின் அளவு அன்று - கொடியரான அரக்கர் வாழும் இலங்கை காறும் அன்று (அதற்கப்பாலும் செல்வதாக உளது), என்று - என்று எண்ணி (அஞ்சி), அன்று இரிந்தது - அப்பொழுது வெருவி ஓடிற்று. ஏ: அசை.

இச்செய்யுள், அநுமன் வேகத்தால் இவ்வுலகம் அடைந்த நிலையைக் கூறிற்று. வயிர வேதி வைத்தவன் நாடும், இம்பர் நாடு நோக்கி இரிந்தது என்று கூட்டிப் பொருள் உரைக்கினும் அமையும். வைகும் நாடும்; உம்மை உயர்வு சிறப்பு. அநுமன்செலவு இலங்கையினளவன் றெனப் பிறர் அயிர்த்தல்; 16.

(பி-ம்.) 2. கலங்குவதேகுவான்; கலங்கிய தோங்குவான்; கலங்கிட வோங்குவான்; கலங்குவ பொங்குவான்.
3. முடுக்கியவேகம்; முடுகுறவீரம்: வெய்யோன்.
4. விசும்பர் நாடிரிந்ததன்றே: எண்ணு விழ்ப்ப நாடிருந்ததன்றே: உம்பர் நாடிரிந்ததப்பால். (37)

38. *ஓசனை யுலப்பி லாத வுடம்பமைந் துடைய வென்னத்*
*தேசமு நூலுஞ் சொல்லுந் திமிங்கில கிலங்க ளோடும்*
*ஆசையை யுற்ற வேலை கலங்கவன் றண்ணல் யாக்கை*
*வீசிய காலின் வீந்து மிதந்தன மீன்க ளெல்லாம்.*

உலப்பிலாத உடம்பு ஓசனை அமைந்துடைய என்ன - கெடுதலில்லாத உடம்பு ஒரு யோசனை தூரம் அமைந்ததாய் உடையனவென்று, தேசமும் நூலும் சொல்லும் - உலகிலுள்ள பெரியோர்களும் சாத்திர நூல்களும் பேசும், திமிங்கிலகிலங்களோடும் - திமிங்கிலகிலங்களென்னும் பிராணிகளோடும், ஆசையை உற்ற வேலை கலங்க - திக்குக்களின் எல்லை வரையில் பரந்துள்ள கடல்கள் கலக்கமடைய, அன்று அண்ணல் யாக்கை வீசிய காலின் - அப்பொழுது பெரியோனுை அநுமன் உடலிலிருந்து வீசிய (பெருங்) காற்றினல், மீன்கள் எல்லாம் வீந்து மிதந்தன - அக்கடலிலுள்ள மீன் வகைகள் யாவும் இறந்து மிதந்தன.

உலப்பிலாத ஓசனை என்றும் கூட்டலாம். திமிங்கிலகிலம் - திமிங்கிலத்தை விழுங்கியுண்ணும் ஒருவகைக் கடல்வாழ் பிராணி. தேசமும் நூலும் சொல்லும் என்றமையால், இப்பிராணி சாதாரணமாக மக்கள் கண்களுக்குப் புலப்படுவதன்று என்றபடி. மிகப்பெரிய திமிங்கிலகிலங்களும் மிகச் சிறிய மீனினங்களும் ஒருங்கே இறந்தன என்க.

(பி-ம்.) 1. உடையவென்று.
2. தேசமுந்திசையுஞ்செல்லும்: திமிங்கிலக்குலங்களோடும்.
3. ஆசையையொத்த வேலை: கலந்தவன்றண்ணல்.
4. காலின்வீழ்ந்து; காலின் வந்து; காலின்மாண்டு. (38)

39. பொருவரு முருவத் தன்னன் போகின்ற போது வேகம்
தருவன தடக்கை தள்ளா நிமிர்ச்சிய தம்மு ளொப்ப
ஒருவருங் குணத்து வள்ள லோருயிர்த் தம்பி யென்னும்
இருவரு முன்னர்ச் சென்ற லொத்தவவ் விரண்டு பாலும்.

பொருவு அரும் உருவத்து அன்னன் - ஒப்புமை கூறுதல் அரியதான பேருருவங் கொண்ட அநுமன், போகின்ற போது - (கடலைக் கடந்து) செல்கின்ற போது, வேகம் தருவன - அவன் செலவுக்கு வேகத்தை உதவுவனவும், தள்ளா நிமிர்ச்சிய - நீங்காத உயர்வையுடையனவும், தம்முள் ஒப்ப - ஒன்றுக்கொன்று இணையாயுள்ளனவுமான, தடக்கை - அகன்ற (இரு) கைகளும், அ இரண்டு பாலும் - (அநுமனுக்கு) அவ்விரு பக்கங்களிலும், ஒருவு அரும் குணத்து வள்ளல் - நீங்குதலில்லாத நற்குணங்களையுடைய வள்ளலாகிய இராமபிரான், ஓர் உயிர் தம்பி - ஒப்பற்ற உயிர்போன்ற தம்பியான இலக்குவன், என்னும் இருவரும் - என்ற இருவரும், முன்னர் சென்றல் ஒத்த - முன்னே வழிகாட்டிக் கொண்டு சென்றமையை ஒத்தன.

தடக்கை (ச்செலவு) இருவரும் முன்னர்ச் சென்றல் ஒத்த என்க; தடக்கை இருவரும் ஒத்த என்றும் கூட்டலாம். ஓருயிர்த்தம்பி என்றதற்கு ஓருயிரும் வேறுடலுமாக அமைந்த தம்பி என்றும் பொருள் கொள்ளலாம். இராமன் இலக்குவனைத் தன் உயிராகக் கருதியது; ஆரண்ய. மாரீசன்வதைப். 248; கிட்கிந்தா. வாலிவதைப். 26. அநுமன் தடக்கைகளின் இவ்வருணனை, ஒரு நற்பணியை மேற்கொண்டு நம்மனோர் அயலிடம் நோக்கிப் புறப்படுங்கால், 'முன்னும் பின்னும் மற்றிரு பக்கங்களிலும், வில்லேந்திய கையினராய் இராம லக்குமணர் உடனிருந்து காப்பாராக' எனச் சிந்தித்துச் செல்லும் வழக்கை நினைப்பூட்டுகின்றது.

(பி-ம்:) 1. போகின்ற பொழுது.
2. தருமடல் முன் கைதாவு நிமிர்ச்சியிற் கிடந்த சாயல்.
3. தருமநற்குணத்திராமனுயிரெனுந்தம்பிமாரின்: ஒருபெருங் குணத்து வள்ளல்; ஒருவயிற்றம்பியென்னும்.
4. இருவருமென்னச்சென்றார்: ஒத்தனவிரண்டுபாலும்; ஒத்தன விரண்டுகையும்; ஒத்தன விரண்டு தோளும். (39)

வேறு.

## மைந்நாக மலையின் தோற்றம் 40 - 46

40. இந்நாக மன்ன னெறிகாலென வேகும் வேலைத்
திந்நாக மாவிற் செறிகீழ்த்திசை காவல் செய்யும்
கைந்நாக மந்நாட் கடல்வந்ததொர் காட்சி தோன்ற
மைந்நாக மென்னு மலைவா னுற வந்த தன்றே.

இ நாகம் அன்னுன் - (மேரு) மலையொத்த இந்த அநுமன், எறி கால் என - மோதித் தாக்கும் புயல் என்னும்படி, ஏகும் வேலை - விரைவாகச் செல்லும்பொழுது, மைந்நாகம் என்னும் மலை - மைந்நாகம் என்ற பெயரையுடைய மலையானது, திக் நாக மாவில் - திக்குக்களில் உள்ள யானைகளாகிய விலங்குகளில், செறி கீழ் திசை காவல் செய்யும் கை நாகம் - அடர்ந்த கீழ்த்திசையைத் தாங்கிக் காத்து வரும் துதிக்கையையுடைய (ஐராவதம் என்னும்) யானை, அ நாள் - அக்காலத்தில், கடல் வந்தது ஓர் காட்சி தோன்ற - திருப்பாற் கடலிலிருந்து எழுந்து வந்தது போன்று தோன்றுமாறு, வான் உற - வானத்தைப் பொருந்தும்படி, வந்தது - (கடலினுள் இருந்து எழுந்து) வந்தது. அன்று, ஏ: அசைகள்.

அநுமன் சென்ற வழியில், கடலிலிருந்து எழுந்து நின்ற மைந்நாக மலையின் வருணனையை இனி எடுத்துக் கொள்கின்ருர். கைந்நாகம் போல மைந்நாகம் வந்தது என்றது சொல்லணி. அமுதம் பெறப் பாற்கடலைக் கடைந்த போது அதனின்றும் தோன்றிய பலவற்றுள் ஐராவதமும் ஒன்று என்பது ஐதிகம். மைந்நாகம் என்பது இமவானுக்கும் மேனைக்கும் பிறந்தது என்பர். இது கடலடைந்த வரலாறு மேலே கூறப்படும்; 55. திக் நாகம் - திங்நாகம் என்ருயிற்று. எட்டுத்திக்குக்களிலும் எட்டு யானைகள் பூமியைச் சுமந்து நிற்கின்றன என்பர்; அவற்றுள் இந்திர திக்காகிய கீழ்த்திசைக் காவலுக்குரியது அவனது வாகனமான ஐராவதமாகும். 'அறிவு முதிர்ந்த சேஷனுக்கு எவ்வளவு பெருமையுண்டோ அவ்வளவு பெருமை வாய்ந்த ஐராவதம்', என்பது பழைய உரை. கை நாகம் - கைமலையாகிய ஐராவதமும் என்னலும் ஒன்றும். கைநாகம் இல்பொருள் உவமை. வான் உற வந்தது என்றமையால் வழி மறித்து நின்றது என்றது பெறப்பட்டது. இது கடலிற் செல்லும் அநுமனுக்கு உண்டான முதல் தடை; இது நட்பினுல் விளைந்தது என்பது பின்னே பெறப்பெறும். நாகமா: இருபெயரொட்டு.

(பி-ம்.) 1. காலெனவேகுமெல்லை; ஏகுமேல்வை.
2. தென்னுகமண்ணிற்; தென்னுகமாவிற்: கீட்டிசைதான்சுமக்கும்.
3. வந்தெழுகாட்சி; காட்சிமான; காட்சிதோன்றும்.
4. மைநாகமேலுமலைவானுற. (40)

41. *மீயோங்கு செம்பொன் முடியாயிரம் மின்னி மைப்ப*
*ஓயா வருவித் திரளுத்தரி யத்தை யொப்பத்*
*தீயோ ருளரர் கியகாலவர் தீமை தீர்ப்பான்*
*மாயோன் மகரக் கடனின்றெழு மாண்ப தாகி*

மீ ஓங்கு செம்பொன் ஆயிரம் முடி - (தன்) மேல் ஓங்கிய செம்பொன்மயமான ஆயிரம் சிகரங்கள், (மாயோனின் ஆயிரம் முடிகளை

ஒப்ப), மின் இமைப்ப - ஒளி வீசவும், ஓயா அருவித் திரள் - (அதன்மீது) வற்ருது (எப்போதும் நீர் பெருகி வரும்) அருவிகளின் தொகுதிகள், உத்தரியத்தை ஒப்ப - (அவன்) மேலாடையை ஒத்து விளங்கவும், தீயோர் உளராகியகால் அவர் தீமை தீர்ப்பான் - கொடியோர்கள் தோன்றித் தீமைகளைப் புரியும் காலத்தில் அத் தீயோரால் விளையும் தீமையைத் தீர்க்கும் பொருட்டு, மாயோன் - திருமால், மகரக் கடல் நின்று எழும் - மகரமீன்கள் வாழும் திருப்பாற் கடலிலுள்ள (தன் பள்ளியினின்றும்) எழுந்து வரும், மாண்பது ஆகி - சிறப்புக் கொண்டு (வானுற வந்தது).

இச்செய்யுள் தொடங்கிப் பின் 51 ஆம் செய்யுள் வரை இவ்வாறே முடியும். முடி ஆயிரமுடைமை, மின் இமைத்தல், உத்தரியம் விளங்கல், கடலிலிருந்து எழல் முதலியன மாயோனுக்கும் மைந்நாகத்துக்கும் உள்ள ஒற்றுமைகள். மாயோனுக்கு ஆயிரந்தலைகளுடைமை ஸஹஸ்ர சீர்ஷாபுருஷ: என்ற வேதவாக்கியத்தில் காண்க. ஹிரண்யநாபம் என்று மைந்நாகத்துக்கும் ஒரு பெயருள்ளமை கருதத்தக்கது; அது பொன் பெற்றுள்ளமையை அப்பெயர் விளக்கும். உத்தரியத்துக்கு அருவி; 411; பால. வரைக் காட்சிப். 45; கிட்கிந்தா. கார்காலப். 42.

(பி-ம்.) 1. என்றிமைப்ப; மின்னிமைக்க; மின்னிசைப்ப.
2. உத்தரியத்தை யொத்த.
3. உளராகிய நாளவர்; உளராகிய காவலர்.
4. கடல்வந்தெழு. (41)

42. நூலேந்து கேள்வி நுகரார்புல னேக்க லுற்ருர்
போலேந்தி நின்ற தனியாண்மெய் பொருது நீங்கக்
காலாழ்ந்த ழுந்திக் கடல்புக்குழிக் கச்ச மாகி
மாலேந்த வோங்கு நெடுமந்தர மேயு மான

நூல் ஏந்து கேள்வி - சாத்திரங்களில் கூறப் பெறும் அறிவை, நுகரார் - (தக்க ஆசிரியர் மூலம் கேட்டு, நுணுகி உணரும்) உணர்வு பெருது, புலன் நோக்கல் உற்ருர் போல் - புலன் வழியே சென்று உலக இன்பங்களை நுகரும் தன்மையுற்றவர்கள் (அழுந்து வதைப்) போல, ஏந்தி நின்ற தனியாள் - (கடல் கடையும் போது மந்தரகிரியைத்) தாங்கிநின்ற (துணையற்றுத்) தனியளான நிலமகள், மெய் பொருது - உடல் (பாரம்) தாங்க மாட்டாமல், நீங்க - (இடம் விட்டுப் பெயர்ந்து) தளர, கால் - (மந்தரகிரியின்) அடிப்பாகம், ஆழ்ந்து அழுந்தி கடல் புக்குழி - கீழே சென்று அழுந்திக் கடலினுள் புகுந்த காலை, மால் - திருமால், கச்சம் ஆகி - ஓர் ஆமையாகத் தோன்றி,

ஏந்த - (தன் முதுகில்) தாங்கிக் கொள்ள, ஓங்கும் - (அழுந்திய கடலி னின்று) மேலெழுந்து நிற்கும், நெடு மந்தரமேயும் - நீண்ட மந்தர மலையையும், மான - ஒப்ப (வந்தது.)

தனியாள் மெய் பொருது நீங்கியது; 'அவனி, நிலை தளர்ந்திட வனந் தனும் கிழுற நெளித்தான்' பால. அகலிகைப். 23. நுகரார் - முற் றெச்சம். நுகரார், உற்றுர் வாழ்க்கையில் ஆழ்ந்து அழுந்தி வினையுள் புகுவதுபோல மந்தரம் கடலுள் அழுந்திப் புக்கது என்க.

(பி-ம்.) 1. நுகராப்புலன்,
2. தனியாமை; தனியான்மெய்; தனியாண்மை; அவனியாள் மெய்; தரையாள்மெய்; நீங்கிக்.
3. அழுத்திக்கடல்; அழுந்தக்கடல்.
4. மந்தரந்தன்னைமான; மந்தரவெற்புமான; மந்தரம் போலெழுந்த; மந்தரமேவுமான. (42)

43. *தள்ளற் கருநற் சிறைமாடு தழைப்பொ டோங்க*
*எள்ளற் கருநன் னிறமெல்லை யிலாது பொங்க*
*வள்ளற் கடலைக் கெடநீக்கி மருந்து வௌவி*
*உள்ளூற் றெழுமோ ருவணத்தர சேயு மொப்ப*

தள்ளற்கு அரு நல் சிறை மாடு தழைப்பொடு ஓங்க - பிறரால் நீக்கு தற்கு அரிய நல்ல இறகுகள் பக்கங்களில் தழைத்து எழ, எள்ளற்கு அரு நல் நிறம் எல்லை இலாது பொங்க - இகழ்தற்கு முடியாத நல்ல நிறவொளி வரம்பில்லாமல் எழுந்து வீச, வள்ளல் கடலை கெட நீக்கி - வளப்பம் பொருந்திய கடலைக் கெடும்படி கிழித்துக்கொண்டு, மருந்து வௌவி - (தான் முன் கொண்டு வைத்த) அமுதத்தைப் பற்றிக் கொண்டு, உள் ஊற்று எழும் - அதன் உள்ளிருந்து மேற்கிளம்பி வரும், ஓர் உவணத்து அரசேயும் ஒப்ப - ஒப்பற்ற கருடராசனையும் ஒப்ப (வந்தது.)

கருடன் அமுதம் கொண்டு வந்த வரலாறு: முன் 32 ஆம் செய் யுளின் குறிப்பைக் காண்க. கருடனுக்கும் மைந்நாகத்துக்கும் ஒப்புமை சிறகுடைமை, நிறம் பொங்கல், மருந்து பெறல், கடல் நீங்கி வெளி வருதல் ஆகியவற்றுல் அமைந்தன.

(பி-ம்.) 1. கருதற்கிறை.
2. எல்லையிலாதபுல்ல.
4. அரசேயுமொத்த: ஒத்தான். (43)

44. *ஆன்றாழ் நெடுநீரிடை யாதியொ டந்த மாகித்*
*தோன்றாது நின்றா னருடோன்றிட முந்து தோன்றும்*
*மூன்றா முலகத் தொடுமுற்றுயி ராய முற்றும்*
*ஈன்றானை யீன்ற சுவணத்தனி யண்ட மென்ன*

ஆன்று ஆழ் நெடு நீரிடை - மிகவும் ஆழ்ந்துள்ள பெரும் பிரளயக் கடலிடத்து, ஆதியோடு அந்தம் ஆகி தோன்றாது நின்றான் - தன் தோற்றமும் முடிவும் (இவை என்று) தோன்றா வண்ணம் நிறைந்து நின்ற திருமாலின். அருள் தோன்றிட-(உலகங்களைப் படைக்க வேண்டுமென்ற) திருவருள் உதிக்க, முந்து தோன்றும் - முதலாக உற்பவித்தவனும், மூன்றாம் உலகத்தொடும் முற்று உயிராய முற்றும் ஈன்றானை - சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூன்று உலகங்களையும், (அவற்றில் வாழும்) நிறைந்த உயிர்களாகிய எல்லாவற்றையும் உற்பத்தி செய்பவனுமான பிரமனை, ஈன்ற - பிறப்பித்த, தனி சுவண அண்டம் என்ன - ஒப்பற்ற பொன்னிற முட்டை போலவும் (வந்தது.)

திருமாலுக்குரிய நாராயணப் பெயர் அவன் நீரிடை நின்றமையால் வந்தது என்பர். ஊழிக்குப் பின் நெடுநாள் கடலில் அவன் அறிதுயில் கொண்டு நின்று, பின்பு அருள் தோன்ற, அவனிடமிருந்து சுவண அண்டம் ஒன்று உண்டாயிற்று; அதனின்று பிரமன் தோன்றி உலகங்களைப் படைத்தனன் என்பது வரலாறு. பிரமனுக்கு இரணிய கர்ப்பன் என்ற பேருண்மையையும் நோக்குக. நீரிலிருந்து தோன்றும் சுவண அண்டம் நீரிலிருந்து எழுந்த பொன்மலையான மைந்நாகத்துக்கு ஒப்பு. ஈன்றானை ஈன்ற என்றது; 'மூன்றுலகு மீன்றானை முன்னீன்றானை. (அயோத்யா. குகப். 65.)

(பி-ம்.) 1. ஆன்றாநெடு ; ஆன்றார்நெடு : அந்தமாகத்.
2. அருட்டோன்றிட ; முந்து தோன்றி ; முன்பு தோன்றும்.
3. உயிராயமற்றும். (44)

45. *இந்நீரி லென்னைத் தருமெந்தையை யெய்தி யன்றிச்*
*செந்நீர்மை செய்யே னெனச்சிந்தனை செய்து நொய்தின்*
*அந்நீரில் வந்த முதலந்தண னாதி நாளம்*
*முந்நீரில் மூழ்கித் தவமுற்றி முளைத்த வாபோல்*

அந்நீரில் நொய்தின் வந்த முதல் அந்தணன் - அப்பிரளயக்கடலில் விரைவில் வெளிவந்த முதல் அந்தணனை பிரமன், 'இந்நீரில் என்னை தரும் எந்தையை - இக்கடலினிடத்து என்னைத் தோற்றுவித்த என் தந்தையாகிய திருமாலை, எய்தி அன்றி - நேரில் அடைந்தால் அல்லாமல்,

செந்நீர்மை செய்யேன் என சிந்தனை செய்து - நான் செய்ய வேண்டிய மேலான செயல்களைச் செய்யத் தொடங்க மாட்டேன்' என்று எண்ணி, ஆதி நாள் - (தான் தோன்றிய) முதல் நாளில், அ முந்நீரின் மூழ்கித் தவம் முற்றி முளைத்தவா போல் - அக்கடலிலேயே முழுகித் தவம் செய்து முடித்து (பின்னும் அதனின்று) வெளியே எழுந்தது போல் (வந்தது.)

பிரமன் திருமாலை நோக்கி நீரில் தவம் செய்தமை; *செவ், பாகவ.* 3.3:8. பிரமன் இங்கு மைந்நாகத்துக்கு உவமை.

(*பி-ம்.*) 1. எய்திவாழ்த்திச் ; எய்தியின்றிச் ; எய்தியேயுச்.
2. செய்ந்நீர்மை ; சென்னீர்மை: செய்வேனெனச் சிந்தை தெரிந்து.
3. அந்தணனுதியந்நாள் ; அத்தணனுகிநாளும் : ஆதிநாளும் : ஆதிநாளின். (45)

46. *பூவாலிடை யூறு புகுந்து பொருது நெஞ்சில்*
*கோவாமுனி சீறிட வேலை குளித்த வெல்லாம்*
*மூவாமுத னுயகன் மீள முயன்ற வந்நாள்*
*தேவாசுரர் வேலையில் வந்தெழு திங்க ளென்ன*

பூவால் - (திருமகளின் பிரசாதமாகக் கொண்டுவந்து இந்திரனுக்கு அளிக்கப்பெற்றதும், அவனால் இகழப்பட்டதுமான) பூமாலை காரணமாக, இடையூறு புகுந்து - துன்பம் விளைந்து, நெஞ்சில் பொருது - மனத்தில் பொறுக்கமாட்டாது, கோவா முனி சீறிட - கோபிக்கும் இயல்பை யுடைய துருவாச முனிவர் கோபித்துச் சபிக்க, வேலை குளித்த எல்லாம் - கடலினுள் மூழ்கிப் போன இந்திரச் செல்வங்கள் எல்லாம், மீள - திரும்பிவரும்படி, மூவா முதல் நாயகன் - என்றும் அழியாத ஆதி நாயகனான திருமாலின் (அருளின்படி), 'தேவாசுரர் முயன்ற அந்நாள் (திருப்பாற்கடலைக் கடைந்தெடுப்பதான) தேவர்களும் அசுரர்களும் முயற்சி செய்த அக்காலத்தில், வேலையில்-அக்கடலில், வந்து ஏழு திங்கள் என்ன - தோன்றி எழுந்த சந்திரன் என்னும்படி (மைந்நாகம் எழுந்தது).

இச்செய்யுளில் குறித்த வரலாறு; பால. அகலிகைப், 17-24. கோவாமுனி - கோபத்திற் சிறந்த முனிவரான துருவாசர்; அவர் கோபத்திற் சிறந்தவர் என்பது அவருக்குக் கோப பட்டாரகர் என்ற ஒரு பெயருண்மையாலும் விளங்கும். இவர் 'வெய்யமுனி' என்றும், 'வெஞ்சொன்மாமுனி' என்றும் கூறப் பெறுவர். இச்செய்யுளில் மைந்நாகம் சந்திரனுக்கு உவமிக்கப்பட்டது.

(*பி-ம்.*) 1. இடையூறு புகுந்த : பொருத நெஞ்சில்.
2. வேலை குடித்த ; வாரிகுடித்த.
3. முயன்ற நாளத்.
4. வந்தெழுந்திங்கள். (46)

## மைந்நாகம் எழுந்த காலத்து நிகழ்ந்தவை

## 47—51.

47. *நிறங்குங்கும மொப்பன நீனிறம் வாய்ந்த நீரின்*
*இறங்கும்பவ ழக்கொடி சுற்றின செம்பொ னேய்ந்த*
*பிறங்குஞ்சிக ரப்படர் முன்றி றொறும்பி ணுவோ*
*டுறங்கும்மக ரங்க ளுயிர்ப்பொ டுணர்ந்து பேர*

நிறம் குங்குமம் ஒப்பன - நிறத்தில் குங்குமத்தை ஒப்பனவும், நீல் நிறம் வாய்ந்த - நீல நிறம் பொருந்தினவும், நீரின் இறங்கும் பவழக் கொடி சுற்றின - நீரில் இறங்கியுள்ள பவழக்கொடிகள் சுற்றப் பெற்றன வும், செம்பொன் ஏய்ந்த - செம்பொன் பொருந்தினவும், பிறங்கும் - ஒளிவீசுவனவுமான, சிகரம் படர் முன்றில் தொறும் - தன் சிகரங்களை ஒட்டிப் படர்ந்துள்ள முகப்புக்கள் தோறும், பிணுவோடு உறங்கும் மகரங்கள் - பெட்டைகளோடு துயிலும் மகர மீன்கள், உயிர்ப்பொடு - பெருமூச்சு விட்டுக் கொண்டு, உணர்ந்து - துயிலுணர்ந்து, பேர - இடம் விட்டுச் செல்ல (மைந்நாகம் எழுந்தது.)

நீல்: கடைக் குறை.

(பி-ம்.) 1. நீர் நிறம் வாய்ந்த.
2. செம்பொனேந்த.
3. சிகரம்படர்; சிகரப்பிடர்: முன்றிலிற்றம்பிணுவோடு.
4. உயிர்ப்பொடுமிழ்ந்து வீங்க: உணர்ந்து பேர்வ. (47)

48. *கூன்சூன்முதி ரிப்பி குரைக்க நிரைத்த பாசி*
*வான்சூன்மழை யொப்ப வயங்கு பளிங்கு முன்றில்*
*தான்சூலி னுளிற் றகைமுத்த முயிர்த்த சங்கம்*
*மீன்சூழ்வரு மம்முழு வெண்மதி வீறு கீற*

வான் சூல் மழை ஒப்ப - வானத்திலுள்ள கருவுற்ற மேகங்களை ஒத் திருக்கும்படி, நிரைத்தபாசி - (அம்மலைமீது) வரிசையாகப் படிந்த பாசி கள், வயங்கு - விளங்குகின்ற, பளிங்கு முன்றில் - பளிங்குப் பாறைகளா லான முகப்புக்களில், கூன் சூல் முதிர் இப்பி குரைக்க - வளைந்து சூல் முதிர்ந்திருக்கும் சிப்பிகள் ஒலிக்க, சங்கம் - சங்கு, சூலி நாளில் - கரு வுயிர்த்த காலத்தில், தான் உயிர்த்த தகை முத்தம் - தான் ஈன்ற சிறந்த முத்துக்களால், மீன் சூழ் வரும் - விண் மீன்கள் தன்னைச் சுற்றி வரும், அ வெண் முழுமதி - அழகிய வெண்மையான பூர்ண சந்திரனின், வீறு கீற - பெருமையைக் குறைக்க (மலை மேலே தோன்றிற்று.)

இப்பி குரைத்தலுக்கு மேக முழக்கமும், நிரைத்த பாசிக்கு மேகமும், பளிங்கு முன்றிலுக்கு வானமும், முத்துக்களுக்கு விண்மீன்களும், சங்கத்துக்கு வெண்மதியும் உவமைகளாயின.

(பி-ம்.) 1. இப்பி குரைத்த-
2. பளிக்குமுன்றில்.
3. சூலநாளில்; தாளமுயிர்த்த.
4. மீன் சூழ வெழும்; மீன் சூழ வேகும்: வீறு சேற. (48)

49. *புல்லாயிர மாயிரங் காசினம் பாடி மைக்குங்*
*கல்லார்சிம யத்தடங் கைத்தல நீண்டு காட்டித்*
*தொல்லார்கலி யுட்புக மூழ்கி வயங்கு தோற்றத்*
*தெல்லாமணி யீட்ட முகந்தெழு வானு மென்ன*

பல் ஆயிரம் ஆயிரம் காசு இனம் பாடு இமைக்கும் - பல்லாயிரக் கணக்கான மணி வகைகள் அழகுடன் ஒளிவீசும், கல் ஆர் சிமயத் தடம்- கற்கள் நிறைந்த கொடுமுடியிடங்கள் ஆகிய, கைத்தலம் நீண்டு காட்டி - கைத்தலங்களை மேலே நீட்டிக் காட்டிக் கொண்டு, தொல் ஆர்கலியுள் புக மூழ்கி - பழமையான கடலினுள் (முத்துக் குளிப்பவன்) ஆழப்புகும்படி முழுகி, வயங்கு தோற்றத்து எல்லா மணி ஈட்டம் முகந்து - ஒளிமிகுந்த பலவகை மணித் தொகுதிகளை முகந்துகொண்டு, எழுவானும் என்ன - நீர்மேல் எழுகின்றவனும் என்னும்படி (மைந்நாகம் மேலெழுந்தது.)

சிகரங்கள் கைகளாகவும், அங்குள்ள மணிகள் மூழ்கி எழுபவன் முகந்து வரும் மணிகளாகவும் கூறப்பட்டன.

(பி-ம்.) 2. தடக்கைத்தலம்: நீண்டுகாட்ட.
3. தொல்லார்கடலுட்.
4. எல்லார்மணியீட்டம்: ஈட்டமுவந்தெழுகின்றதென்ன; முகந்தெழுகின்றதென்ன. (49)

50. *மலையிற்பொலி மாக நெடுங்கொடி மாலை யேய்ப்ப*
*வினையிற்பொலி வெள்ளரு வித்திர டுங்கி வீழ*
*நினைவிற்கட லூடெழ லோடு முணர்ந்து நீங்காச்*
*சுனையிற்பனை மீன்றிமி லோடு தொடர்ந்து துள்ள*

நினைவில் - (மலையானது) நினைப்புடன், கடலூடு எழலோடும் - கடலினூடே நிமிர்ந்து மேலே வர, மலையில் பொலி மாக நெடுங்கொடி மாலை ஏய்ப்ப - மலைகளில் விளங்குகின்ற, ஆகாயமளாவிய நீண்ட கொடி வரிசைகளைப் போலவும், வினையில் பொலி - நல்வினைகளைப் போலவும்

விளங்கும், வெள் அருவித் திரள் - வெண்ணிறமான அருவிகளின் வெள்ளத் தொகுதிகள், தூங்கி வீழ - அசைந்து கீழே விழ, பனைமீன் திமிலோடு நீங்காச் சுனையில் - பனைமீன்களும் திமில் என்னும் மீன்களும் தாம் நெடு நாட்களாக நீங்காமல் வாழ்ந்து வந்த சுனைகளிலிருந்து, உணர்ந்து - (நிகழ்ச்சிகளை) உணர்ந்து, தொடர்ந்து துள்ள - ஒன்றை யொன்று தொடர்ந்து துள்ளவும் (மலை எழுந்தது.)

நீரினுள் மலை அழுந்திக் கிடந்த வரையில் ஓட்டமின்றிக் கிடந்த அருவிகள் மலை மேலெழலும் ஓட்டம் பெற்று விழ, அவ்வதிர்ச்சியால் சுனையிற் கிடந்த மீன்கள் அருவிகளுடன் தொடர்ந்து துள்ளின என்க. அருவிக்குக் கொடிகள்; தக்க. 257, 634. அருவியில் வெள்ளம் தொடர்ந்து வருவதற்கு முன் செய்த வினை உவமை; பால. ஆற்றுப், 17; சீவக. 2752. பனைமீன், திமில்: கடலில் வாழும் மீனினங்களிற் பெரியன. பனைமீன்: 23; தக்க. 384 உரை.

(பி-ம்.) 1. மாலையொப்ப; மாலையேய.
2. வினையிற்றிரள்; வினையிற்றிகழ்: திரள் தாங்கி வீழ.
3. கடலோடெழுலோடு; நிமிர்ந்து நீங்காச்.
4. சுனையிற் பொலிமீன்: மீன்றுயிலோடு. (50)

51. *கொடுநாலொ டிரண்டு குலப்பகை குற்ற மூன்றும்*
*சுடுஞானம் வெளிப்பட வுய்ந்த துயக்கி லார்போல்*
*விடநாக முழைத்தலை விம்ம லுழந்து வீங்கி*
*நெடுநாள் பொறையுற்ற வுயிர்ப்பு நிமிர்ந்து நிற்ப*

கொடும் - கொடுமையான, நாலொடு இரண்டு குலப் பகை - ஆறென்று சொல்லப்படும் பகைக்கூட்டத்தையும், மூன்று குற்றமும் - மூன்றாகிய குற்றங்களையும், சுடு - சுட்டெரிக்கிற, ஞானம் - மெய்யுணர்வு, வெளிப்பட - தோன்ற, உய்ந்த - (அவற்றினின்று விடு பட்டு) கடைத்தேறிய, துயக்கிலார்போல் - பற்று நீங்கிய பெரியோர் போல, முழைத்தலை - (மலைக்) குகைகளிலே, நெடுநாள் விம்மல் உழந்து - நீண்ட காலம் அடைபட்டு மூச்சுவிடக் கூடாமையால் விம்மி வருந்தி, வீங்கி - உடல் பருத்து, பொறை உற்ற - கட்டுப்பட்டுக்கிடந்த, விட நாகம் - நச்சுப்பாம்பின், உயிர்ப்பு - மூச்சு, நிமிர்ந்து நிற்ப - மேற் கிளம்பி நிற்க (மலை எழுந்தது.)

குலப்பகை: அரிஷ்டவர்க்கம் எனப்படும்: அவை, காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதம் என்பன. மூன்று குற்றம் - ஐயம், திரிபு, அறியாமையால் விளையும் குற்றங்கள்; 'தனம், குலம், கல்வி என்று குற்றம் மூன்று,' என்பது பழைய உரை. உற்றது

துய்க்கிலார் என்று பாடம் கொண்டு, 'உள்ள பதார்த்தத்தை அருந்தாத யோகியர்' என்றும் அவ்வுரை வகுக்கும். துயக்கு - பற்று. குலப்பகை முதலியவற்றால் பிணிப்புண்ட உயிர் முழையில் உழந்த நாகத்துக்கும், அவ்வுயிர் ஞானம் வெளிப்பட்டு உய்ந்தமை, மலை வெளிவர நாகம் உயிர்ப்புப் பெற்றமைக்கும் உவமைகளாகும்.

(பி-ம்.) 1. குலப்பகை மூன்று குற்றம்.
2. சுடர் ஞானம்: உற்றதுய்க்கிலார்; உய்த்த துய்க்கிலார்; உற்றவை துய்க்கிலார்.
3. உழந்து நீங்கி; உழன்று நீங்கி.
4. உயிர்ப்பை நிமிர்ந்து நீக்க; உயிர்ப்பு நிறைந்து வீங்க. (51)

## அநுமன் மைந்நாகத்தைக் கண்டு அயிர்த்தல்

52. *எழுந்தோடி விண்ணோடு மண்ணொக்க விலங்கு மாடி*
*உழுந்தோடு காலத் திடையும்பரி னும்ப ரோங்கிக்*
*கொழுந்தோடி நின்ற கொழுங்குன்றை வியந்து நோக்கி*
*அழுந்தாமனத் தண்ண லிதென்கொ லெனுவ யிர்த்தான்.*

இலங்கும் ஆடி உழுந்து ஓடு காலத்து இடை - விளங்குகின்ற கண்ணாடியில் உழுந்து உருண்டோடும் காலத்துள், எழுந்து ஓடி - (மைந்நாகம்) நீரினின்று மேலே எழுந்து பரந்து, விண்ணோடு மண் ஒக்க - வானும் மண்ணும் ஒன்றாகும்படி, உம்பரின் உம்பர் ஓங்கி - வானிலும் மேலிடங்களிலும் பரந்து, கொழுந்து ஓடி நின்ற கொழும் குன்றை - (குன்றின்) நுனிகள் பரந்து நின்ற வலிய மைந்நாகத்தை, அழுந்தா மனத்து அண்ணல் - உள்ளழுந்திப் போகாத மனத்தையுடைய பெரியோனான அநுமன், நோக்கி வியந்து - பார்த்து வியப்படைந்து, இது என்கொல் எனு - இது யாது என்று, அயிர்த்தான் - ஐயங்கொண்டான்.

உழுந்தோடு காலம் விரைவைக் குறிப்பது; 1032. கிட்கிந்தா. வாலி வதைப். 61.

(பி-ம்.) 1. எழுந்தோங்கி: விலங்குமோடி.
2. உம்பரினும்பரெங்கும்; உம்பரோடிம்ப ரெங்கும்.
3. கொழுந்தோட நின்ற; கொழுந்தோங்கி நின்ற: நின்றநெடுங் குன்றை.
4. அழுங்காமனத்: இதென்னோவெண· (52)

## அநுமன் மைந்நாகத்தைக் கீழுறத் தள்ளி மேலெழுதல்.

53. *நீர்மேற் படர்நன் னெடுங்குன்று நிமிர்ந்து நிற்றல்*
*சீர்மேற் படரா தெனச்சிந்தை யுணர்ந்து செல்வான்*
*வேர்மேற் படவன் றலைகீழ்ப்பட நூக்கி விண்ணோர்*
*ஊர்மேற் படரக் கடிதும்பரி னூடு பாய்ந்தான்.*

'நீர் மேல் படர் - கடல் நீரின்மேல் படர்ந்துள்ள, நல் நெடும் குன்று - நல்ல நீண்ட மலையான மைந்நாகம், நிமிர்ந்து நிற்றல் - (தன் செலவுக்கு இடையூறாக) மேலோங்கி நிற்கும் செயல், சீர் மேல் படராது - நல்லதை மேற் கொண்ட செய்கை ஆகாது' என - என்று, சிந்தை உணர்ந்து செல்வான் - மனத்திலே எண்ணி ஏகும் அநுமன், வேர் மேல் பட, வன் தலை கீழ் பட நூக்கி - அடிப்புறம் மேலே செல்லவும் வலிய தலைப்புறம் கீழே செல்லவும் ஆக, (அம்மலையைத் தலை கீழாகத்) தள்ளி, விண்ணோர் ஊர் மேல் படர - தேவரூர் மேல் தான் பரவும் வண்ணம், உம்பரின் ஊடு கடிது பாய்ந்தான் - வானின் வழியே விரைந்து எழுந்தான்.

சீர் மேல் படராது என்பதற்குச் சிறப்பாகாது என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி - ம்.) 1. படரா நெடுங்குன்று; படர்குன்றினிற் கோடு நிமிர்ந்து; படர் குன்றி னிறங்கொடு நிற்றலின்று.
2. உணர்ந்த செல்வன்; உணர்ந்து செம்மல்.
4. தலைகீழ்ப்பட நோக்கி.
4. உம்பரின் மீதுயர்ந்தான். (53)

## மைந்நாகம் மீண்டும் எழுந்து அநுமனோடு கூறல்

### 54 - 58

54. *உந்தாமு னுலைந்துயர் வேலை யொளித்த குன்றம்*
*சிந்தாகுல முற்றது பின்னருந் தீர்வி லன்பால்*
*வந்தோங்கி யாண்டோர் சிறுமானிட வேட மாகி*
*எந்தாயிது கேளென வின்ன விசைத்த தன்றே.*

உயர் வேலை ஒளித்த குன்றம் - (அலைகள்) உயர்கின்ற கடலினுள் விழுந்து மறைந்திருந்த அம் மைந்நாகமலை, உந்தா முன் - அவ்வாறு அநுமன் தள்ளினவுடனே, உலைந்து சிந்தாகுலம் உற்றது - வலிகெட்டு மனத்துயர் கொண்டது; பின்னரும் - அவ்வாறாகிய பின்னும், தீர்வில் அன்பால் - (மனத்திலிருந்து) நீக்க முடியாத அன்பினால், ஆண்டு - அவ்விடத்தில், ஓர் சிறு மானிட வேடம் ஆகி - சிறிய மானிட உருவ

மொன்று எடுத்துக் கொண்டு, வந்து ஓங்கி - அநுமன் அருகில் வந்து நிமிர்ந்து நின்று, 'எந்தாய் - என் தந்தையே! இதுகேள் என-யான் கூறும் இதைக் கேட்பாய்' என்று, இன்ன - (பின்வரும்) இம்மொழிகளை, இசைத்தது - சொல்லிற்று. அன்று, ஏ: அசைகள்.

(பி - ம்.) 1. உலைந்துயிர்
2. தீரவன்பால்.
3. மானுடவேடமாகி.
4. இன்னதிசைத்ததன்றே; இசைந்ததன்றே. (54)

55. *வேற்றுப் புலத்தோ னலனைய விலங்க லெல்லாம்*
*மாற்றுச் சிறையென் றரிவச்சிர மாண வோச்ச*
*வீற்றுப் படநூ றியவேலையின் வேலை யுய்த்துக்*
*காற்றுக் கிறைவ னெனைக்காத்தன னன்பு காந்த.*

'ஐய - ஐயனே! வேற்றுப் புலத்தோன் அலன் - யான் பகைவரிட மிருந்து வந்தவன் அல்லன்; அரி - இந்திரன், விலங்கல் எல்லாம் சிறை மாற்று என்று - மலைகளின் சிறகுகளை யெல்லாம் போக்கு என்று (சொல்லி), வச்சிரம் மாண ஓச்ச - தன் வச்சிராயுதத்தை நன்றாக ஓங்கி வீச, வீற்றுப்பட - துண்டுபட, நூறிய வேலையின் - வெட்டிய போது, காற்றுக்கு இறைவன் - வாயுதேவன், அன்பு காந்த - (அவனுக்கு என்பாலுள்ள) அன்பு விளங்க, எனை வேலை உய்த்துக் காத்தனன் - என்னைக் கடலினுள் செலுத்திக் காத்தனன்.

முன் மலைகளுக்குச் சிறகுகள் இருந்தன; அவற்றால் அவை பல இடங்களுக்கும் சென்று ஊறு விளைக்க, இந்திரன் தன் வச்சிராயுதத் தால் அச்சிறைகளை அரிந்தனன் என்பது புராண வரலாறு.

(பி-ம்.) 1. வேற்றுப்புலத்தோரெனலைய; வேற்றுப்புலத்தோரென்றலைய: புலத்தோரெனவல்லை.
2. என்று தன் வச்சிரமான தெய்வ: சிறைவாசவன் வச்சிரமான தேவி; சிறை யென்று தன் வச்சிரந் தன்னிற்றேவன்.
3. வீற்றுப்படை நூறிய.
4. காத்தனனன்புகூர. (55)

56. *அன்னானருங் காதல னுதலி னன்பு தூண்ட*
*என்னாலுனக் கீண்டு செயற்குரித் தாய தன்மை*
*பொன்னார்சிக ரத்திறை யாறினை போதி யென்றே*
*உன்னாவுயர்ந் தேனுயர் விற்கு முயர்ந்த தோளாய்.*

'உயர்விற்கும் உயர்ந்த தோளாய் - உயர்ந்துள்ளவை அனைத்திலும் உயர்ந்துள்ள தோள்களையுடையோனே! அன்னான் - அந்த வாயு தேவனின், அரும் காதலன் ஆதலின் - அருமை மைந்தன் நீ ஆகையால், அன்பு தூண்ட ஈண்டு என்னால் உனக்கு செயற்கு உரித்தாய தன்மை - அன்பினால் தூண்டப்பட்டு (நடுக்கடலாகிய) இவ்விடத்தில் என்னால் உனக்குச் செய்யத் தக்கதான செயல், பொன் ஆர் சிகரத்து-(என்னுடைய) பொன் நிறைந்த சிகரத்தில், இறை - சிறிது நேரம், ஆறினை போதி - இளைப்பாறிப் போவாயாக, என்றே உன்னு - என்று சொல்வதேயாகும் என்று கருதி, உயர்ந்தேன் - கடலின் மேல் வந்தேன்.

(பி-ம்.) 1. நெடுங்காதலன்: தூண்டி.
2. ஆயதின்மை.
3. சிகரத்திடையாறி: ஆறிப்பின்போவை யென்னு: போதி யென்னு. (56)

57. *கார்மேகவண் ணன்பணி பூண்டவன் காலின் மைந்தன்*
*தேர்வான்வரு கின்றனன் சீதையைத் தேவ ருய்யப்*
*பேர்வானயல் சேறி யிதிற்பெரும் பேறி லென்ன*
*நீர்வேலையு மின்ன துரைத்தது நீதி நின்றாய்.*

(அன்றியும்), 'நீதி நின்றாய் - நீதிமுறைவழி நின்றோனே! நீர் வேலையும்- நீர் நிறைந்த கடலும், 'கார்மேக வண்ணன் பணி பூண்டவன் - கரிய நிறத்தோனான இராமபிரான் இட்ட கட்டளையை மேற்கொண்டவனும், காலின் மைந்தன் - காற்றின் மகனுமான அநுமன், தேவர் உய்ய - தேவர்கள் ( அரக்கர்களிடமிருந்து) உய்திபெறும் பொருட்டு, சீதையை தேர்வான் பேர்வான் வருகின்றனன்-சீதாப்பிராட்டி இருக்கும் இடத்தை நாடுவதற்காக (மகேந்திர மலையினின்று)பெயர்ந்து வருகின்றனன்: அயல் சேறி - அவனருகிற் செல்வாய்; இதில் பெரும் பேறு இல் - (இவ்வாறு அவனுக்கு, உதவி செய்வதான) இதனைக் காட்டிலும் பெறக்கூடிய பெரிய பேறு (வேறு) இல்லை;' என்ன - என்று, இன்னது - இச் சொற்களை, உரைத்தது - சொல்லிற்று.

நீர்வேலை என்றது இங்கு வருணனை. செல்+தி=சேறி.

(பி-ம்) 1. பூண்டது காலின் மைந்தன் ; பூண்டருங்காலின் மைந்தன்; பூண்டனன் காலின் மைந்தன்.
2. வருகின்றவன் சீதையை.
3. சேறியெனிற் பின்னொரு பேறிலென்ள: இதற்கொரு பேறிலென்ன; இதிற் பெறும் பேறிலென்ன.
4. நீர் வேலையுமென்னை யுரைத்தது; நீர் வேலையுமன்னதுரைத்தது: நீதிநின்றோய். (57)

58. நற்றாயினு நல்ல னமக்கிவ னென்று நாடி
இற்றேயிறை யெய்தியி சைந்தது கோடி யென்னால்
பொற்றாரகன் மார்பத மில்லுழை வந்த போதே
உற்றார்செயன் மற்றுமுண் டோவென வுற்று ரைத்தான்.

(இன்னும் அவன்)' 'பொன் தார் அகல் மார்ப - பொன்மாலை விளங்கும் அகன்ற மார்பை உடையவனே! 'இவன் நல் தாயினும் நமக்கு நல்லன் என்று நாடி - இம் மைந்நாகம் பெற்ற தாயைவிட என் போன்றவர்க்கு நல்லவன் என்று கொண்டு, இற்றே-இப்பொழுதே, இறை எய்தி - சிறிது நேரம் என்னை அடைந்து, என்னால் இசைந்தது கோடி - என்னால் (அளிக்கப்படுவனவற்றுள்) நீ ஏற்றுக் கொள்ளத்தக்கதைக் கொள்வாயாக; தம் இல் உழை வந்த போதே - (தக்கவிருந்தினர்) தம் வீட்டினிடம் வந்த காலத்திலேயே, உற்றார் - அவ்வீட்டுக்குரியோர், செயல் மற்றும் உண்டோ-(இவ்வாறு உபசரிப்பதைக் காட்டிலும்)செய்யத்தக்கது வேறு ஏதேனும் உண்டோ?' என உற்று உரைத்தான் - என்று (அநுமனைக்) கிட்டி நின்று(மைந்நாகன்) கூறினான்.

'நற்றாயினும் இவன் நல்லன்' என்றது அநுமன் கருத வேண்டியதாக மைந்நாகன் கூறினான். பொற்றாரகல் மார்பன்; 16, குறிப்பு.

(பி-ம்.) 1. நல்லனெனக்கிவன் : என்ன நாடி.
2. இற்றேவிரைவெய்தினன்; இற்றேகடிதெய்தி: இறையெய்தினனேயது கோடி.
3. தம்மில்லுறை: வந்தபோதின் ; வந்தபோழ்தின்.
4. மாறுமுண்டோவென. (58)

## அநுமன் மைந்நாகத்தை நோக்கிக் கூறல் 59-61

59. உரைத்தானுரை யாலிவ னூறில னென்ப துன்னி
விரைத்தாமரை வாண்முகம் விட்டுவி ளங்க வீரன்
சிரித்தானள வேசிறி தத்திசைச் செல்ல நோக்கி
வரைத்தா ணெடும் பொற்குடு மித்தலை மாடு கொண்டான்.

வீரன் - வீரனான அநுமன், உரைத்தான் உரையால் - சொன்ன மைந்நாகனின் சொற்களால், 'இவன் ஊறு இலன் - இவன் குற்றமற்றவன், என்பது உன்னி - என்று எண்ணி; விரை தாமரை முகம் வாள் விட்டு விளங்க - மணமிக்க தாமரை போன்ற தன் திருமுகம் ஒளி வீசி விளங்கும்படி, சிறிது அளவே சிரித்தான் - சிறிதளவு புன்னகை கொண்டு, அத் திசை நோக்கி செல்ல - (மைந்நாகன் நின்ற) அத்திசையைப் பார்த்துச்

சென்று, தாள் வரை நெடும் பொன் குடுமி தலை மாடு கொண்டான் - தாழ்வரைகளைப்(பக்கத்திலே கொண்ட)நீண்ட பொன் சிகரத்தின் உச்சியின் அருகில் நின்றான்.

ஊறு - குற்றம்; 89. ஒருவர் சொல்லிலிருந்து அவர் குணத்தைக், காண்பதில் அநுமன் வல்லன் என்பதாகிறது. 'அநுமன் தன் கையினால் மலையைத் தழுவிப் புன்சிரிப்புக் கொண்டு வானத்தை அடைந்தான்' என்று முதனூல் கூறும்.

(பி - ம்.) 1. உரையாதலினூறிலன்; உரையாலவனூறிலன்.
2. அளவேதிரிந்தத்திசை.
3. வரைத்தாமநெடுங்குடுமித்தலை : மாடு கண்டான். (59)

60. வருந்தேன துவென் றுணை வானவன் வைத்த காதல்
அருந்தேனினி யாதுமென் னாசை நிரப்பி யல்லால்
பெருந்தேன்பிழி சாரநின் னன்பு பிணித்த போதே
இருந்தே னுகர்ந் தேனிதன் மேலினி யீவ தென்னோ.

(அநுமன் மைந்நாகத்தை நோக்கி), 'வருந்தேன் - நான் பிரயாணத்தால் சோர்வடையேன்; அது - அவ்வாறு சோர்வடையாமை,'என் துணை வானவன் வைத்த காதல் - எனக்குத் துணையாக நிற்கும் தேவனான இராமபிரான் என்னிடம் வைத்த அன்பின் பயனாகும்; இனி - இனியும், என் ஆசை நிரப்பி அல்லால் யாதும் அருந்தேன் - (பிராட்டியைக் கண்டு பிடித்தலாகிய) என் விருப்பம் கைகூடினாலல்லாமல் எதனையும் உண்ணேன்; நின் அன்பு-உன்னுடைய அன்புடைமை, பெரும் தேன் பிழி சார - நிறைந்த தேன் இரசம் பொருந்த, பிணித்த போதே - என்னை உன் வசமாகக் கட்டியபோதே, இருந்தேன் நுகர்ந்தேன் -(உன்னிடம்)தங்கி (நீ கொடுத்தவற்றை) உண்டவனானேன்; இனி இதன் மேல் ஈவது என்னோ - இனி இதற்கு மேலாக நீ கொடுக்கக் கடவது யாது?' (என்றான்.)

வானவன் வைத்த காதல் என்றதால் அநுமனின் பணிவும், பக்தியும் புலனாயின. அநுமன் தன் ஆற்றலைப் பாராட்டாமை பின்னும், 1254-55 செய்யுட்களாலும் காணப்பெறும். முதனூலில் அநுமன் இவ்விடத்தில், 'மகிழ்ந்தவன் ஆகிறேன்; அதிதிபூசை செய்யப்பட்டது; இச்சினம் போகக்கடவது; எனது காரியம் செய்தற்குரிய காலம் ஏவுகின்றது; பகலும் கழிந்துவிடுகிறது; இச் செயலில் நடுவில் தங்கி நிற்பதில்லை யென்று என்னால் பிரதிஞ்ஞையும் செய்யப்பட்டுள்ளது' என்று கூறினமை ஒப்பிடத்தக்கது.

(பி - ம்.) 1. வருந்தேலிது; வருந்தேலது: அதுநின்றுணைவானவன்.
2. யாதுமொரன்றுரை.
3. நிரப்பினல்லால்: பெருந்தேன்மொழிசார: சமுவுன்னன்பு.
4. நுகர்ந்தேனெனலாயதிதன்மற்றென்னே: இதனூங்கினி யீவதுண்டோ. (60)

61. *முன்பிற்சிறந் தாரிடை யுள்ளவர் காதன் முற்றப்*
*பின்பிற்சிறந் தார்குண நன்றிது பெற்ற யாக்கைக்*
*கென்பிற்சிறந் தாயதொ ரூற்றமுண் டென்ன லாமே*
*அன்பிற்சிறந் தாயதோர் பூசனை யார்க ணுண்டே.*

poetic philosophy

முன்பின் சிறந்தாரிடை காதல் உள்ளவர் - வலியாற் சிறந்த பெரியாரிடம் அன்பு சார்ந்துள்ளவர்கள், (காதல்) முற்ற - (அவ்வன்பு) முதிர, பின்பிற் சிறந்தார் - பிறகு வாழ்க்கையில் சிறந்தோராவர்; குணம் நன்றிது - (இவ்வாறு சார்பினல் உண்டாகும்) பண்பு நல்லதே ஆகும்; (அன்றியும்), பெற்ற யாக்கைக்கு - ஒருவர் அடைந்த உடலுக்கு, என்பில் சிறந்தாயது ஓர் ஊற்றம் உண்டு என்னலாமே - அவ் யாக்கையினுள்ளிருக்கும் எலும்பைக் காட்டிலும் (அதற்கு) வலிமை கொடுக்கும் பகுதி வேறு ஏதேனும் உண்டு என்று கூறக்கூடுமோ? (இல்லை, என்றபடி); (இவற்றைப்போல்), பூசனை - வழிபாட்டுக்கு, அன்பின் சிறந்து ஆயது ஓர் ஊற்றம், யார் கண் உண்டு - அன்பினும் சிறப்பானதான வலிமை எவரிடம் உண்டு? (இல்லை, என்றபடி.)

அன்பே பூசனைக்குச் சிறப்பைத் தருவது; அவ்வன்புள்ளபோது உணவருந்துதல் போன்ற புறத்தொழில்கள் இல்லாமலிருந்தாலும் குற்றமில்லை என்று அநுமன் மைந்நாகத்தினிடம் கூறுகின்றான்; இவ்வுண்மையை உலக வாழ்க்கையிலிருந்து ஒன்றையும், காட்சிப் பொருளான மற்றொன்றையும் உதாரணங்களாகக் காட்டுகின்றான். குணம் நன்றிது: நன்றிது - நல்லது; 'நங்கைக் கறிவின்றிறம் நன்றிது' (அயோத்யா. நகர் நீங்கு. 117.) வலியோரைச் சேர்ந்தவர் வலியுறுவர் என்பதற்குச் சுக்கிரீவனுடைய வரலாறு சான்றாகும். யாக்கைக்கு என்பு ஊற்றம் அளிப்பது என்னும் கருத்தை, 'என்பென்பது யாக்கை' (உயுத்த. மருத்துமலைப். 4.) என்று பின்னும் வலியுறுத்துவர்; குறள். 72 ஐயும் காண்க. பூசனைக்கு அன்பு ஊற்ற மளிப்பதென்னும் உண்மைக்குச் சபரி, கண்ணப்பர் வழிபாடுகள் சான்றாகும். இக்கருத்து முன், குகனிடம் இராமபிரான் கூறிய மொழிகளாலும் (அயோத்யா. கங்கைப். 41-42) தெரியப்படும். 'அன்பின் வழியது உயிர்நிலை' குறள். 80 என்பதும் ஒப்பிடற்குரியது.

(பி - ம்.) 1. முன்பிற் சிறந்தாயகலிடையுள்ளவர்: இடையுற்றவர்.
2. குணத்தென்றிவர் ; குணத்தோன்றிவைபெற்ற ; குண நன்றிவைபெற்ற ; குணத்தோன்றினர்.
3. சிறந்தாயொருற்ற : ஊற்றமென்றெண்ணலாமே.
4. யார்கனுண்டோ ; யாவையையா ; யாதலுண்டோ. (61)

## அநுமன் மைந்நாகத்தைப் பாராட்டி மேலுஞ் செல்லுதல்.

62. *ஈண்டேகடி தேகி விலங்க லிலங்கை யெய்தி*
*ஆண்டானடி மைத்தொழி லாற்றலி னுற்ற லுண்டே*
*மீண்டா னுகர் வேனுன் விருந்தென வேண்டி மெய்ம்மை*
*பூண்டானவன் கட்புலம் பிற்பட முன்பு போனான்.*

மெய்மை பூண்டான் - சத்தியமே விரதமாகக் கொண்ட அநுமன், (மைந்நாகத்தை நோக்கி), 'ஈண்டே - இப்பொழுதே, கடிது ஏகி - விரைவிற் சென்று, விலங்கல் இலங்கை எய்தி - திரிகூடமலைமீதுள்ள இலங்கை நகரை அடைந்து, ஆண்டான் - என்னை ஆட்கொண்ட இராமபிரானுக்குரிய, அடிமைத் தொழில் - அடிமைப் பணிகளை, ஆற்றலின் - செய்தலை விட, ஆற்றல் உண்டே - வேறு யான் செய்யத்தக்க நற்காரியம் உள்ளதோ ? (இல்லை என்றபடி) ; மீண்டால் - (அப்பணியை, நிறைவேற்றித்) திரும்பினால், நுன் விருந்து நுகர்வேன் - நீ அளிக்கும் விருந்தை உண்பேன், என வேண்டி-என்று சொல்லி (விடைதர) வேண்டி, அவன் கட்புலம் பிற்பட - அம்மைந்நாகத்தின் பார்வை பின்னிட, முன்பு போனான் - முன்னோக்கிச் சென்றான்.

அடிமைத் தொழிலாற்றலின் ஆற்றலுண்டே, என்றமையில் களைப்பாற்றலில் பணியாற்றலே சிறந்தது என்றதும் தொனிப்பது காண்க. 'மீண்டால் நுகர்வேன்' என்றதைக் காக்க, பின், 'மைந்நாகமென்ன நின்ற குன்றையும் மரபினெய்தி' என்று (1246) கூறியதைக் காண்க. இங்கு, மைந்நாகத்தைத் தடவிக்கொடுத்து விட்டுச் சென்றான் என்று முதனூல் கூறும்.

(பி-ம்.) 1. ஈண்டியானேகியிலங்கையில் விலங்கலெய்தி: இலங்கை விலங்கலெய்தி.
2. ஆற்றலியற்றலுண்டேல் ; ஆற்றியென்னுற்றலுண்டேல்:
3. நின்விருந்து : நின்விருந்தென விளம்பிமெய்மை : வேண்டுமெய்ம்மை.
4. பூண்டானிவன் ; பூண்டானவன். (62)

## அநுமன் விரைவு 63-65

63. *செவ்வான்கதி ருங்குளிர் திங்களுந் தேவர் வைகும்*
*வெவ்வேறு விமானமு மீனெடு மேக மற்றும்*
*எவ்வாயுல கத்தவு மீண்டி யிரிந்த தம்மில்*
*ஒவ்வாதன வொத்திட வூழிவெங் காலு மொத்தான்.*

(அநுமன் சென்ற வேகத்தால்), செவ்வான் கதிரும் - சிவந்த வானில் விளங்கும் கதிர்களையுடைய சூரியனும், குளிர் திங்களும் - குளிர்ச்சி பொருந்திய சந்திரனும், தேவர் வைகும் வெவ்வேறு விமானமும் - தேவர்கள் தங்கியிருக்கும் வெவ்வேறான விமானங்களும், மீனெடு - நக்ஷத் திரங்களும், மேகம் - மேகங்களும், மற்றும் எ வாயவும் - பிற எல்லா இடங்களில் உள்ளனவும், உலகத்தவும் - (பிற எல்லா) உலகங்களில் உள்ளனவும், ஈண்டி - (வேகத்தால்) ஒருங்கே தொக்கு, இரிந்த தம்மில்- (பின்) விலகினவற்றுள், ஒவ்வாதன ஒத்திட - ஒருவகையாலும் முன் ஒத்திராதவை ஒத்திட, (இவ்வாறு அநுமன்) ஊழி வெம் காலும் ஒத் தான் - ஊழிக்காலத்தில் வீசும் கடுங்காற்றையும் ஒத்தான்.

செவ்வான் என்றமையால் அந்திக்காலம் குறிக்கப்பெற்றது. ஊழிக் காற்றால் வான மண்டலங்களில் உண்டாகும் குழப்பம் அநுமன் வேகத் தால் உண்டாயிற்று என்க.

(பி-ம்.) 2. வெவ்வேறாணங்களும்; வெவ்வேறு மானங்களுமின்னெடு.
3. இருந்த தம்மின்; விரிந்த தம்மில்.
4. காற்று மொத்தான். (63)

64. *நீர்மேற்கடன் மேனிமிர் கின்ற நிமிர்ச்சி நோக்காப்*
*பார்மேற்றவழ் சேவடி பாய்நடவாப்ப தத்தென்*
*தேர்மேற்குதி கொண்டவ னித்திறஞ் சிந்தை செய்தான்*
*ஆர்மேற்கொலென் றெண்ணி யருக்கனு மைய முற்றான்.*

நீர்மேல் கடல் மேல் - நீரைத் தன்மீது கொண்ட கடலின் மீது, நிமிர் கின்ற நிமிர்ச்சி நோக்கா - உயர்ந்து செல்கின்ற அநுமனின் எழுச்சியைப் பார்த்து, 'தவழ் சேவடி - (அநுமனின்) சிவந்த பாதங்கள், பார்மேல் பாய் நடவா பத்து - பூமியின்மீது பாய்ந்து நடக்காத இளம் பருவத்திலே, என் தேர் மேல் குதிகொண்டவன் - என் தேர்மீது குதித்த இவன், இ திறம் - இவ்வாறு, ஆர்மேல் சிந்தை செய்தான் கொல் என்று - யார்மீது (பாயக்) கருதினனோ?' என்று அருக்கனும் எண்ணி ஐயமுற்றான் - சூரியனும் நினைத்துச் சந்தேகங் கொண்டான்.

இத்திறம் என்பதற்கு இவ்வித வேகங்கொண்டு என்று பொருள் கொள்ளலும் அமையும். அநுமன் இளமையில் அருக்கன்மீது பாய்ந்த வரலாறு: உத்தர. அநுமப். 14, 15.

(பி-ம்.) 1. நீர்மா கடல்: நிமிர்ச்சி நேரப்; நிமிர்ச்சிநேராப்: தளிர்ச்சேவடி: சீரடிபாய்.
2. பார்நடவாப்.
4. திறன்சிந்தை. (64)

65. *வாளொத்தொளிர் வாலெயி றூழின் மருங்கி மைப்ப*
*நீளொத்துயர் தோளின் விசும்பு நிறைந்த மெய்யில்*
*கோளொத்தவன் மேனி விசும்பிரு கூறு செய்யும்*
*நாளொத்தது மேலொளி கீழிரு ளுற்ற ஞாலம்.*

வாள் ஒத்து - வாள் போன்று, ஒளிர் வால் எயிறு - ஒளி வீசும் பெரிய பற்கள், மருங்கு - இருபுறங்களிலும், ஊழின் - முறையே, இமைப்ப - ஒளி செய்ய, நீள் ஒத்து உயர் தோளின் - நீளத்தில் ஒன்றுக்கொன்று ஒப்புடைத்தாகி உயர்ந்து நிற்கும் தோள்களுடன் கூடிய, கோள் ஒத்தவன் மேனி - இராகு அல்லது கேது என்னும் கிரகம் போன்ற அநுமனுடைய உடல், விசும்பு நிறைந்த மெய்யில் - வான் முழுமையும் நிரம்பிய தன்மையால், விசும்பு இரு கூறு செய்யும் நாள் ஒத்தது-ஆகாயத்தை இரு பிரிவுகளாகச் செய்யும் காலத்தை ஒத்தது; மேல் ஞாலம் ஒளி கீழ் ஞாலம் இருள் உற்ற - அவனுக்கு மேலுள்ள உலகங்கள் ஒளியையும் கீழுள்ள உலகங்கள் இருளையும் அடைந்தன.

அநுமன் வானத்தின் குறுக்கே விசும்பு நிறைந்து படர்ந்ததால் அவனுக்கு மேலுள்ள பகுதிகள் ஒளியையும் கீழுள்ள பகுதிகள் இருளையும் அடைந்தன என்க. கோள் ஒத்து என்றமையால் இராகு கேதுக்களால் கிரகணம் உண்டாகிச் சூரியன் ஒளி மறைபடுவதை இங்குக் கருதினதாகவும் கொள்ளலாம். 'சூரியனை மறைத்து ஆகாசத்தை இரண்டுவிதப் படுத்துகின்ற கிரகணகாலம் போல' என்பது பழைய உரை. அநுமன் பகைமை கொண்டு சூரியன் மீது பாய்ந்ததை முன் செய்யுளிற் கூறி, அச் சூரியப் பகையான கோளை அவன் ஒத்திருந்தான் என்று இங்குக் கூறுவதன் கருத்தொற்றுமையும் கருதத்தக்கது. சூரியப் பகை கேது என்ற வசனத்தையும் நோக்குக. அநுமன் வானில் பரந்து சென்றமையால் கதிரவன் மறைக்கப்பட்டு இருளும், அவன் எயிற்றொளியால் பகலும் தோன்றின என்று நயம்பட இச் செய்யுளுக்கு உரை கூறுவாரும் உளர்.

இதன்பின் இரு சுவடிகளில் பின்வருமாறு ஓர் அதிகப்பாடல் காணப்படுகிறது:—

விண்ணோரது கண்டன ருள்ளம் வியந்து மேன்மேற்
கண்ணோடிய நெஞ்சினர் காதல் கவற்ற லாலே
எண்ணோ டியைந்து துணையாகு மியக்கி யாய
பெண்ணோடிறை யின்னன பெற்றி யுணர்த்தி னாரால்.

(பி-ம்.) 1. வாளெயிறு : எயிற்றாழின்.
2. நிரம்புமெய்யன்; நிரம்புமெய்யின்.
3. கோளொத்தபொன்மேனி : கூறுசெய்ய.
4. நாளொத்தனமேலொளி: மேல்வெளிபோலொளிகிழிருளூற்று. (65)

## சுரசை தோன்றுதல்

66. மூன்றுற்ற தலத்திடை முற்றிய துன்பம் விப்பான்
ஏன்றுற்று வந்தான் வலிமெய்மை யுணர்த்து நீயென்
றான்றுற்ற வானோர் குறைநேர வரக்கி யாகித்
தோன்றுற்று நின்றாள் சுரசைப்பெயர்ச் சிந்தை தூயாள்.

ஆன்று உற்ற வானோர் - (அங்கே) நிறைந்து வந்த தேவர்கள், (சுரசை என்பாளை நோக்கி), 'மூன்று உற்ற தலத்திடை - வான், மண், பாதலம் என்று மூன்றாக உள்ள இடங்களில், முற்றிய துன்பம் - முதிர்ந்த துன்பங்களை, வீப்பான் - அழிக்கும் பொருட்டு, ஏன்றுற்று - உடன்பட்டு, வந்தான் - வந்தவனாகிய அநுமனின், வலி மெய்மை - வலிமையின் உண்மையை, நீ உணர்த்து என்று - நீ எங்கட்குத் தெரிவி, என்று, குறை நேர' வேண்டிக் கொள்ள, சுரசைப் பெயர் சிந்தை தூயாள் - சுரசை என்னும் பெயரையுடைய தூய மனமுடைய மாது, அரக்கி ஆகி-ஓர் அரக்கி உருவம் எடுத்தவளாகி, தோன்றுற்று நின்றாள் - (அநுமன் கண்களில்) தோன்றி நின்றாள்.

சுரசை, தக்கன் மகளும் காசிபர் மனைவியும் ஆவள். இவளை நாக மாதா என்று வான்மீகம் கூறும். இவள் தோற்றம் அநுமனுடைய பிரயாணத்தில் உண்டான இரண்டாவது இடையூறு. இது பகைமை உருவத்தில், வலிமையை அறியும் காரணமாக, நண்பர்களால் விளைந்தது.

(பி-ம்.) 1. வீய்ப்பான்.
2. ஏன்றுற்று நின்றான் : வலியெம்மை : உணர்த்தியென்னா ; உணர்த்தி நீயென்,
3. ஆன்றுற்று.
4. பெயர்சிந்தை. (66)

## சுரசை, அநுமன் உரையாடல் 67-70.

67. *பேழ்வாயொ ரரக்கி யுருக்கொடு பெட்பி னோங்கிக்*
*கோள்வாயரி யின்குலத் தாய்கொடுங் கூற்று முட்க*
*வாழ்வாயெனக் காமிட மாய்வரு வாய்கொ லென்னு*
*நீள்வாய்விசும் பிற்றன துச்சி நெருக்கி நின்றாள்.*

(அச்சுரசை), பேழ் வாய் ஓர் அரக்கி உரு கொடு - பெரிய வாயைக் கொண்ட அரக்கியின் உருவத்தைக் கொண்டு, பெட்பின் ஓங்கி - பெருமையோடு உயர்ந்து, (அநுமனை நோக்கி), 'கோள் வாய் அரியின் குலத்தாய் - வலிமை பொருந்திய குரங்கினத்தில் வந்தவனே! கொடும் கூற்றும் உட்க வாழ்-கொடிய யமனும் அஞ்ச வாழ்கின்ற, வாய் எனக்கு- வாயையுடைய எனக்கு, ஆமிடமாய் வருவாய் கொல் - (எனக்கு உரிய) மாமிச உணவாக வருகின்றாய் போலும்,' என்னு - என்று சொல்லிக் கொண்டு, தனது உச்சி வாய் நீள் விசும்பின் நெருக்கி நின்றாள் - தன் தலையால் இடமகன்ற வானத்தை நெருக்கிக்கொண்டு (உயர்ந்து) நின்றாள்.

பேழ் - பெருமை; பேழ்வாய் - பிளந்தவாயும் ஆம். பெட்பு - பெருமை; பெட்பின் ஓங்கி - விருப்பொடு வளர்ந்து என்று கூறினும் அமையும். கோள் - குற்றமும் ஆம். ஆமிடம் - மாமிசம்; ஆமிஷம் என்பதன் திரிபு; **ஆரண்ய. கவந்தப். 24.** கூற்றும் உட்க வாழ்வாய் என்று அநுமனைப் புகழ்ந்ததாகவும் கொள்வர்.

(பி - ம்) 1. பேழ்வாயரக்கி; பேழ்வாயொடரக்கி: பெட்பினோங்க.
2. அரியின்னுருத்தாய் : கூற்றமுட்க.
3. எனக்காமுணவாய் : எனக்கிடமாய்.
4. விசும்புந்தனதுச்சிநெருக்க நின்றாள்: நெருங்கிநின்றாள். (67)

68. *தீயேயென லாய பசிப்பிணி தீர்த்தல் செய்வான்*
*ஆயேவிரை வுற்றெனை யண்மினை வண்மை யாள*
*நீயேயினி வந்து நிணங்கொள் பிணங்கெ யிற்றின்*
*வாயேபுகு வாய்வழி மற்றிலை வானி னென்றாள்.*

(அவள் மேலும்), 'வண்மையாள - பெருங்கொடையாளனே! தீயே எனலாய பசிப்பிணி தீர்த்தல் செய்வான் ஆயே-நெருப்பென்று சொல்லத் தக்க என் பசியாகிய நோயைத் தீர்க்கும் பொருட்டு ஆகியே, விரைவுற்று எனை அண்மினை - வேகங் கொண்டவனாய் என்னை நெருங்கினாய்; இனி நீயே வந்து - இனி நீயாகவே என்னிடம் வந்து, நிணம் கொள் பிணங்கு எயிற்றின் வாயே புகுவாய் - மாமிசங்களைத் தம்மிடம் கொண்ட வரிசை

யின்றி மாறிக் கிடக்கும் பற்களை உடைய என் வாயினுள் புகுந்து கொள்வாய்; வானின் மற்ற வழி இலை என்றாள் - வானத்தில் நீ செல்வதற்குரிய வழி வேறொன்றில்லை' என்று கூறினாள்.

பசிப்பிணி - பசியாகிய நோய்; புறநா. 173,11; மணி. 11; 80-81; 28: 217. விரைவுற்றனை - முற்றெச்சம். நிணம், முன் அவள் உண்ட உயிர்களின் மாமிசம்.

(பி.-ம்.) 1. தீர்த்தல் செய்ய.
2. உற்றனையண்மினை : அன்பினை வழாமையயான; அன்பின் வழாமையான; அன்பின்வழாமையுள்ளாய்; அன்பின் வழாமைவல்லெ; அண்மினை யாண்மையாள.
4. புகலாய்வழி மற்றிலை. (68)

69. *பெண்பாலொரு நீபசிப் பீழை யொறுக்க நொந்தாய்*
*உண்பாயென தாக்கையை யானுத வற்கு நேர்வல்*
*விண்பாலவர் நாயக னேவ லிழைத்து மீண்டால்*
*நண்பாலெனச் சொல்லின னல்லறி வாள னக்காள்.*

நல் அறிவாளன் - (அச்சொற்களைக் கேட்ட) நல்ல அறிவை ஆள்கின்றவனான அநுமன், 'நீ ஒரு பெண்பால் - நீ ஒரு பெண்; பசி பீழை ஒறுக்க நொந்தாய் - பசியாகிய துன்பம் உன்னை வருத்த நீ வருந்தினாய்; விண்பாலவர் நாயகன் ஏவல் இழைத்து மீண்டால் - தேவர்களின் நாயகனான இராமபிரானின் கட்டளையை நான் செய்து முடித்து மீண்டால், எனது ஆக்கையை யான் உண்பாய் என நண்பால் உதவற்கு நேர்வல் - அப்பொழுது என் உடலை யானே 'என்னை உண்'என்று நட்புரிமையுடன் உனக்கு உதவுவதற்கு இசைவேன்;' என சொல்லினன் - என்று சொன்னான்; நக்காள் - (அச் சொற்களைக் கேட்ட சுரசை) சிரித்தாள்.

அறிவாளன் என்றமையால் அவள் உண்மை நிலையை ஒருவாறு அநுமன் ஊகித்துக் கொண்டனன் என்பதாகிறது; பின்பு அவன் அவளைக் கொல்லாமல் வென்று ஏகுவதாலும் அது புலப்படும். சுரசையின் நகை, இகழ்ச்சியால் தோன்றியது.

(பி.-ம்.) 1. பீழையுறுத்தல்பேர; பீடையொறுத்தல் பேர; பீழையுறுத்தல் போல; பீடைபொறுத்ததொத்தாய்.
2. நேர்வேன்; நேர்வன்.
3. விண்பால் வரநாயகன்.
4. நண்பானுணச் சொல்லினன்; அன்பானுணச்சொல்லினன். (69)

70. *காய்ந்தேழுல கங்களுங் காணநின் யாக்கை தன்னை*
*ஆர்ந்தேபசி தீர்வெனி தாணையென் றன்னள் சொன்னாள்*
*ஓர்ந்தானுமு வந்தொரு வேனின தூழில் பேழ்வாய்ச்*
*சேர்ந்தேகு கின்றேனெனை யாமெனிற் றின்றி டென்றான்.*

அன்னள்-அச்சுரசை, 'ஏழுலகங்களும் காண - ஏழென்று கூறப்படும் உலகங்களில் உள்ளோர் யாவரும் காணும் வண்ணம், காய்ந்து - கோபித்து, 'நின் யாக்கை தன்னை ஆர்ந்தே பசி தீர்வென்; உன் உடலைத் தின்றேதான் பசி தீர்வேன்; இது ஆணை என்று சொன்னாள் - இது சத்தியம் என்று.சொன்னாள் ; ஓர்ந்தானும் - (அவள் கருத்தை) அறிந்தவனாகிய அநுமனும், உவந்து - மனமகிழ்ந்து, ' ஒருவேன்-நீங்க மாட்டேன்; நினது ஊழ் இல் பேழ்வாய் சேர்ந்து ஏகுகின்றேன் - உன் ஒழுங்கற்ற பெரிய வாயினுள் அடைந்து போகின்றேன் ; ஆம் எனில் எனை தின்றிடு- உன்னால் இயலுமானால் என்னைத் தின்றுவிடு' என்றான்-என்று கூறினான்.

ஆணை - கட்டளையும் ஆம்; சபதம் என்றும் கொள்வர். ஊழ் - முடிவும் ஆம்.

(பி-ம்.) 1. **கார்ந்தேழுலகங்களும்: நின்கற்பின்யாக்கை**
2, **தீர்வனிக்காலையென்றன்னைசொன்னாய் : நின்னாணையென்று.**
3. **ஓர்ந்தியானுமுகந்து : இகந்தொருவேன்.**
4. **வலையாமெனிற்றின்றிடு.** (70)

## அநுமன் பேருருக் கொள்ளுதல்

71. *அக்காலை யரக்கியு மண்ட மனந்த மாகப்*
*புக்காலிறை யாத புழைப்பெரு வாய்தி றந்து*
*விக்காதுவி ழுங்கநின் றாளது நோக்கி வீரன்*
*திக்காநெறி வாய்சிறி தாம்வகை சேணி னீண்டான்.*

அக்காலை - (இவ்வாறு அநுமன் கூறின) அப்பொழுது, அரக்கியும் - அரக்கி உருவத்தில் நின்ற சுரசையும், அண்டம் அனந்தமாக புக்கால் நிறையாத புழை பெருவாய் திறந்து - அண்டங்கள் எல்லையற்றனவாக வந்து நுழைந்தாலும் நிரம்பாத துவாரம் போன்ற தன் பெரிய வாயை மேலும் பெரிதாக்கி, விக்காது விழுங்க நின்றாள் - தடை பட்டு விக்கல் எழாமல் (அநுமனை) விழுங்கும் பொருட்டு நின்றாள் ; வீரன் அது நோக்கி- வீரனான அநுமன் அவள் நிலையை நோக்கி, திக்காம் நெறி வாய் - திசைகளின் எல்லை வரை நீண்ட அவள் வாய், சிறிது ஆம் வகை - சிறியது ஆகும் வகையில், சேணின் நீண்டான் - வானத்தில் பேருரு எடுத்தான்.

விக்காது விழுங்குதல்; 'விழுங்குகின்றேன் விக்கினேன்' (திருவா., 415.) சொற்களை நினைப்பூட்டுகின்றது முதனூல் சுரசை படிப்படியாக நூறு யோசனை தூரம் வரை உயர்ந்ததாகவும், அதற்கேற்ப அநுமனும் உயர்ந்ததாகவும் கூறும்.

(பி-ம்:) 1. அனந்தமாகி.
2. புழைப்பெருவாய்ப்புழுங்கா : பெரும்வாய்.
3. வீரன் நோக்கி 4. திக்காரவள் வாய். (71)

## அநுமன் சுரசை வாயுட்புக்கு மீளல்.

72. *நீண்டா னுடனே சுருங்காநிமிர் வாயி டத்தின்*
*ஊண்டா னெனவுற் றொருயிர்ப்புயி ராத முன்னம்*
*மீண்டா னதுகண் டனர்விண் ணுறை வோர்க ளெம்மை*
*ஆண்டா னிவனென் றலர்தூய்நெடி தாசி சொன்னார்.*

நீண்டான் - பேருருக்கொண்ட அநுமன், உடனே சுருங்கா-உடனே தன் உருவிற் சுருங்கி, நிமிர் வாயிடத்தின் - உயர்ந்தோங்கிய சுரசையின் வாயினிடத்தில், ஊண்தான் என-அவள் தின்னும் ஓர் ஊண் என்னும்படி, உற்று - வாயினுள் புகுந்து, ஒரு உயிர்ப்பு உயிராத முன்னம் - அவள் ஒரு மூச்சு விடுவதற்கு முன்னே, மீண்டான் - வெளிப்பட்டான்; விண் உறைவோர்கள் அது கண்டனர் - தேவர்கள் அச்செயலைக் கண்டவர்களாய், 'இவன் எம்மை ஆண்டான் - இவ்வநுமன் எங்களைக் காப்பாற்றினான்' என்று - என்று சொல்லிக்கொண்டு, அலர் தூய் - மலர்களைத் தூவி, நெடிது ஆசி சொன்னார் - பெரிய வாழ்த்து மொழிகளைக் கூறினார்கள்.

சுருங்கா, அநுமன் கட்டைவிரலளவு சிறிய உருவத்தில் சுருங்கினன் என்று முதனூல்கூறும். ஆண்டான்: துணிவு பற்றி வந்த காலவழுவமைதி.

(பி-ம்.) 1. நிமிர்வாள் வயிற்றின்; நிமிர்வாயினூடு; நெடியாள் வயிற்றின்.
2, மாண்டானென; மூண்டானென; உயிராத முன்னர்.
3. உறைவோர்கள் மெய்ம்மை.
4. ஆண்டான்வலன். (72)

## அநுமனின் மேற் செல்கை 73-75.

73. *மென்மேற் படர்மெய் யினதானவள் வீக்க நீங்கித்*
*தன்மே னியளா யவள்தாயினு மன்பு தாழ*
*என்மேன் முடியா தனவென்றினி தேத்தி நின்றாள்*
*பொன்மே னியனு மினிதாசி புனைந்து போனான்.*

மென்மேல் படர் - மேன்மேலும் விரிவடையும், மெய்யினது ஆன வள் - உடலினைப் பெற்ற சுரசை, வீக்கம் நீங்கி - பருத்த தன்மையை விட்டு, அவள் தன் மேனியளாய் - அவள் தன் முன்னை வடிவு கொண்ட வளாகி, தாயினும் அன்பு தாழ - தாயை விட அன்பு தழைய, (அநுமனை நோக்கி), 'மேல் முடியாதன என் - இனி மேலே உன்னால் முடியாத காரியங்கள் யாவை?' என்று - என்றுகூறி, இனிது ஏத்தி நின்றாள் - அநுமனை இனிமையாகப் புகழ்ந்து நின்றாள்; பொன்மேனியனும் - பொன்னிறம் வாய்ந்த திருமேனியையுடைய அநுமனும், இனிது ஆசி புனைந்து - அவளுக்கு இனிமையாக ஆசிமொழிகளைக் கூறி, போனான் - மேலே சென்றான்.

தன்மேனியள் ஆகி என்றமையால் அரக்கியுருவம் விடுத்துச் சுயவுருவம் பெற்றாளென்பதாயிற்று. அநுமன் பொன்மேனியன்.

(பி-ம்.) 1. **மின்மேற்படர்நோன்மையினுமுடல்விங்கிநீங்கத்; நோன்மையினுளுடல் வீக்கம் நீங்கி; நோன்மையினுமுடல் வீக்க் நீங்கித்.**

4. **நெடிதாசி புனைந்து; நெடிதாகிப்பணிந்து** (73)

74. ***கீதங்க ளிசைத்தனர் கின்னரர் கீத நின்ற***
***பேதங்க ளியம்பினர் பேதைய ராடன் மிக்க***
***பூதங்க டொடர்ந்து புகழ்ந்தன பூசு ரேசர்***
***வேதங்க ளியம்பினர் தென்றல் விருந்து செய்ய.***

தென்றல் விருந்து செய்ய - தென்றல் (வீசுதலினால் அநுமனுக்கு) விருந்தளிக்க, கின்னரர் கீதங்கள் இசைந்தனர் - கின்னரர்கள் பாடல்களைத் (தம் வீணைகளில்) இசைத்து வாசித்தனர்; பேதையர் கீதம் நின்ற பேதங்கள் இயம்பினர் - பெண்டிர் கீதங்களிலுள்ள வகைகளைப் பாடினர்; ஆடல் மிக்க பூதங்கள் - ஆடலில் சிறப்புற்ற பூதங்கள், தொடர்ந்து புகழ்ந்தன - அப்பாடல்களை ஒட்டிப் புகழ்ச்சியுரைகளைக் கூறின; பூசுரேசர் - அந்தணத் தலைவர்கள், வேதங்கள் இயம்பினர்- வேத மந்திரங்களைக் கூறி ஆசீர்வதித்தனர்.

அநுமன் செல்ல இவை நிகழ்ந்தன என்க. விருந்துக்குப் பின் ஆடல் பாடல் முதலியன நிகழ்ந்தன என்று கூறிய நயம் ஓர்க.

(பி-ம்.) 1. **கீதங்களியம்பினர்.**

2. **பேதங்களிசைத்தனர்.**

3. **பூதங்குடுறந்து.**

4. **விருந்து செய்த.** (74)

75. *மந்தார முந்து மகரந்த மணந்த வாடை*
*செந்தா மரைவாண் முகத்துச் செறிவேர் சிதைக்கத்*
*தந்தா முலகத் திடைவிஞ்சையர் பாணி தாழாக்*
*கந்தார வீணைக்களி செஞ்செவிக் காது நுங்க.*

மந்தாரம் உந்து மகரந்தம் மணந்த வாடை - மந்தாரம் என்னும் தெய்வ மலர்களினின்று செலுத்தப்பெற்ற பூந்தாது கலந்த காற்று, செந்தாமரை வாள் முகத்து - (அநுமனின்) செந்தாமரை போன்ற ஒளி வீசும் முகத்தினிடத்து, செறி - நெருங்கியுள்ள, வேர் சிதைக்க - வேர் வையை நீக்க, விஞ்சையர் - வித்தியாதரர்கள், தம் தாம் உலகத்திடை - தத்தம் உலகங்களில் (நின்று கொண்டு), பாணி தாழா - தாளம் குறையாத, கந்தாரம் - கந்தாரப்பண் (பாடுதலாகிய) வீணைக்களி - வீணையின் தேனை, செம் செவி காது நுங்க - அநுமனின் செம்மையான செவிகளின் துவாரங்களின் (ஊட்டுவிக்க அவன் அதை) நுகர்ந்து (போனான்).

அநுமன் முகத்துக்குச் செந்தாமரை; 'வதனத் தாமரை நாப்பண் ஆம்பல் விரிந்தாலன்ன சிரிப்பான் அறிவாளன்' (கிட்கிந்தா, மகேந்திரப். 20.) கந்தார வீணை, 175, 'கந்தாரம் சுரபேதம்' என்பது பழைய வுரை. காது - துளை, ஊசிக்காது என்பது போல.

இதன்பின் பல சுவடிகளில் பலபிரதிபேதங்களுடன் பின் வருமாறு ஒரு பாடல் காணப்படுகிறது:—

பரவுக்குரல் பணிலக்குரல் பணையின்குரல் பறையின்
விரவுக்குரல் சுருதிக்குரல் விசயக்குரல் விரவா
அரவக்குல முயிருக்குக வசனிக்குர லடுபோர்
உரவுக்கரு டனுமுட்கிட வுயிர்க்கின்றன வொருபால்.

ஒரு சுவடியில் பின்வரும் ஓர் அதிகப் பாடலும் காணப்படுகிறது.

வானோர் பசுந்தருவின் மாமலர்கள் தூவ
ஏனோரு நின்றுசய முண்டென விளம்பத்
தானோர் பெருங்கருட னென்னவெதிர் தாவிப்
போனான் விரைந்துகடி தேபோகு மெல்லை.

(பி-ம்.) 1. மந்தாரமுந்தும் : மலர்ந்த வாடை
2. முகத்திற்குறுவேர் : செறிவேர் சிதைப்பத்.
3. பாணி தன்ன ; பானி தாழ.
4. வீணைக்கனி ; வீணைத்தொனி : செஞ்செவி தாழ்த்து நுங்க (75)

## வேறு

### அங்காரதாரை தோற்றம் 76—80.

76. *வெங்கார் நிறப்புணரி வேறேயு மொன்றப்*
*பொங்கார் கலிப்புன றரப்பொலிவ தேபோல்*
*இங்கார் கடத்திரெனை யென்னு வெழுந்தாள்*
*அங்கார தாரைபிறி தாலால மன்னுள்.*

(அவ்வாறு அநுமன் சென்ற வழியிலே), பிறிது ஆலாலம் அன்னுள் - வேருேர் ஆலகால விடத்தை ஒத்தவளான, அங்காரதாரை - அங்காரதாரை என்ற பெயரையுடைய ஓர் அரக்கி, 'எனை இங்கு கடத்திர் ஆர் என்னு - என்னை இவ்விடத்தில் தாண்டிச் செல்வீர் யார்?' என்று வினவிக் கொண்டு, அ பொங்கு ஆர்கலிப் புனல் - அந்தப் பொங்குகின்ற கடல் நீர், வேறேயும் ஒன்று வெம் கார் நிற புணரி தர - மற்ற ஒரு கொடிய கருநிறக் கடலை உண்டாக்கிக் கொடுக்க, பொலிவதே போல் விளங்குவது போல், எழுந்தாள் - (அக்கடலினின்று தோன்றி) நின்ருள்-

அங்காரதாரையின் தோற்றம் ஆலகாலம் போன்றும், கடலிலிருந்து தோன்றி எழுந்த மற்ருெரு கடல் போன்றும் இருந்தது. அங்காரதாரை: தணலின் கொழுந்து போன்றவள்; அவள் ஒரு சாயாகிராஹி; நிழலைப் பிடிப்பவள்; அவள் பெயர் ஸிம்ஹிகா என்று முதனூல் கூறும். இஃது அநுமன் கடல் தாவுங்கால் உண்டான மூன்ருவது தடை: இது பகைமையால் விளைந்தது.

(பி-ம்.) 1. வேறேயுமொன்றைப்.
3. கடத்திரெனவெண்ணுவெழுந்தாள்.
4. பெரிதாலாலமன்னுள் : தாரையவளாலாலமன்னுள். (76)

77. *காதக் கடுங்குறி கணக்கிறுதி கண்ணுள்*
*பாதச் சிலம்பினொலி வேலையொலி பம்ப*
*வேதக் கொழுஞ்சுடரை நாடிநெறி மேனுள்*
*ஓதத்தி னேடுமது கைடவரை யொத்தாள்.*

காத கணக்கு இறுதி - ஒரு காத எல்லை அளவுள்ள (பொருள்களின்) அளவின் முடிவை, கடும் குறி கண்ணுள் - வேகத்தால் குறிக்கின்ற கண்களையுடைய அங்காரதாரை, பாத சிலம்பின் ஒலி - (தன்) பாதங்களிலுள்ள சிலம்புகளினின்றெழும் ஓசை, வேலை ஒலி பம்ப - கடலொலி போல் முழங்க, மேல் நாள் - மிகப் பழைய காலத்திலே, வேதக் கொழும் சுடரை - வேதத்தின் முடிவான திருமாலைக் குறித்து, நெறி நாடி - வழி-

யைத் தேடிக் கொண்டு, ஓதத்தின்-கடலிலே, ஓடு-ஓடிவந்த, மதுகைட வரை - மது, கைடவர் என்ற அசுரர்களை, ஒத்தாள் - ஒத்திருந்தாள்.

கணக்கு - அளவு. 'அங்காரதாரையின் கண் காதத்தின் எல்லை அளாவியிருக்கும்' என்பது **பழைய உரை**. மதுகைடவர் இருவரேயா யினும் ஒருமித்தே செயலாற்றி வந்தமையால் ஒருவரே போலாயினர். அவ்விரு அசுரர்களும் பிரமனிடமிருந்து வேதங்களைப் பறித்துக் கொண்டு கடலினுள் மறைய, அப்பிரமதேவனின் வேண்டுகோளால் திருமால் ஹயக்ரீவ அவதாரம் எடுத்து அவர்களை அழித்தனர்; இவர்களுள் மது கும்பகர்ணனாகவும், கைடவன் அதிகாயனாகவும் தோன்றி இராமலக்ஷ் மணர்களால் பின்னும் அழியுண்டனர்; **உயுத்த.** அதிகாயன்வதைப். 67-76. இச்செய்யுளும் 78-79 செய்யுட்களும் ஒரு தொடராகி 79 இல் உள்ள, நின்றாள் என்பதனோடு முடியும்.

(பி-ம்) 1. கணத்திறுதி கண்ணுள்.
2. சிலம்பினொடு.
3. நாடி நெடு மேனுள்; நாடியமர் மேனுள்.
4. ஓதத்தினூடு வரு கைடவனை; ஓதத்தினோடுவரு கைடவனை; ஓதத்தி னூடுவருகைடவரை. (77)

78. *துண்டப் பிறைத்துணை யெனச்சுட ரெயிற்றாள்*
*கண்டத் திடைக்கறை யுடைக்கடவுள் கைம்மா*
*முண்டத் துரித்தவுரி யான்முளரி வந்தான்*
*அண்டத் தினுக்குறை யமைத்தனைய வாயாள்.*

(அவள்), பிறை துணை துண்டம் என - பிறையின் இரு துண்டங் கள் என்று சொல்லத்தக்க, சுடர்-ஒளிவீசும், எயிற்றாள் - இரு வளைந்த கடைப் பற்களையுடையவள்; கண்டத்து இடை கறை உடை கடவுள்-கழுத்தின் இடையிலே (விஷமாகிய) நீலக்கறையையுடைய சிவபெரு மான், கைம்மா முண்டத்து உரித்த உரியால் - யானையின் உடலிலிருந்து உரித்தெடுத்த தோலினால், முளரி வந்தான் அண்டத்தினுக்கு - தாமரையிலிருந்து தோன்றின பிரமன் படைத்ததான பிரமாண்டத்திற்கு, உறை அமைத் தனைய வாயாள் - மேற்போர்வை இட்ட தொத்த வாயினையுடையவள்.

எயிற்றாள், வாயாள் என்க. முண்டம் - உடல். சிவபெருமான் கஜசம்ஹாரம் செய்தது தாருகவனத்தில்; இச்செய்தி பின்னும் 139 ஆம் செய்யுளுள்ளும் வருகின்றது.

*(பி-ம்)* 3. உரித்த உடையாள்.
4. அமைத்த பில வாயான். (78)

79. *நின்று ணிமிர்ந்தலை நெடுங்கடலி னீர்தன்*
*வன்று ளலம்பமுடி வான்முகடு வெளவ*
*அன்றுய் திறத்தவ னறத்தை யருளோடும்*
*தின்று ளொருத்தியிவ ளென்பது தெரிந்தான்.*

நெடும் அலை கடலின் நீர் தன் வன் தாள் அலம்ப - நீண்ட அலைகளை யுடைய கடல் நீர் தன்னுடைய வலிய கால்களை அலம்ப, முடி வான் முகடு வெளவ - தலை வான உச்சியைப் பற்ற, நிமிர்ந்து நின்றுள் - உயர்ந்து நின்ற (அந்த அங்காரதாரையை), ஆய் திறத்தவன் - ஆராய்ந்து பார்க்கும் ஆற்றல் பெற்ற அநுமன், அன்று - அப்பொழுது, இவள் அறத்தை அருளோடும் தின்றுள் ஒருத்தி என்பது - இவள் அறத்தை யும் அருளையும் ஒருங்கே அழித்த ஒருத்தி என்று, தெரிந்தான் - அறிந்து கொண்டான்.

கடல், தாள் அலம்புவது, வடிம்பலம்பநின்ற பாண்டியன் வர லாற்றை நினைப்பூட்டுகிறது. ஆய்திறத்தவன் - அநுமன்; ஓர்ந்தான் என்று முன்னும் (70) கூறியது காண்க. 'முன்னம் சகலமும் ஆய்ந்தவன்' என்பது **பழைய உரை.** அருளோடும்; ஓடு என்பது இங்கு எண்ணுப் பொருளது; உடனிகழ்ச்சிப் பொருளுமாம்.

(பி-ம்) 1. நின்றுணெடுங்கடை நிறைந்து நிமிர்நீர்தன்; நின்றுணெடுங் கடனிறைந்து நிமிர்நீர்தன்.
2. அலம்ப முடியால்.
3. வன்றுளடித்தவளறத்தை; வன்றுணிறத்த வளறத்தை. (79)

80. *பேழ்வா யகத்தலது பேருலக மூடும்*
*நீள்வா னகத்தினிடை யேகுநெறி நேரா*
*ஆள்வா னணுக்கனவ ளாழ்பில வயிற்றைப்*
*போழ்வா னினைத்தினைய வாய்மொழி புகன்றுன்.*

ஆள்வாள் அணுக்கன் - தன்னை ஆள்பவனுகிய இராமபிரானின் அந்தரங்கத் தொண்டனுகிய அநுமன், பேர் உலகம் மூடும் நீள் வானகத் தின் இடை - பெரிய உலகத்தை மூடிக் கவிந்திருக்கும் நீண்ட ஆகாயத் தின் இடையே, பேழ்வாய் அகத்து அலது - அங்காரதாரையின் பெரிய வாயினுள் (செல்வது) அல்லாமல், ஏகும் நெறி நேரா - தான் செல்லு வதற்கு உரிய வழி வேறு காணுதவனுகி, அவள் ஆழ் பில வயிற்றை - அவ்வரக்கியின் ஆழ்ந்த குகைபோன்ற வயிற்றை, போழ்வான் நினைத்து - பிளக்க எண்ணி, இனைய வாய்மொழி புகன்றுன் - இத்தகைய (பின்வரு வனவான) உறுதிமொழிகளை (அவனை நோக்கிக்) கூறினன்.



ஆழ்வான் என்ற சொல் ஆள்வான் என்று திரிந்ததாகவும் கொள்ள லாம்; ஆராவமுதாழ்வான் என்றது போல. 'ஆழ்வான் அனுக்கன்-பெருமாளுக்கு அந்தரங்கன்' என்பது பழைய உரை. அநுமன் கூறியதனை அடுத்த செய்யுளிற் காண்க.

(பி-ம்.) 1. பேழ்வாயகத்தலகு பேருலகை மூடும்.
2. ஏங்கு நெறி காணு; ஏகு நெறி காணுன்.
3. வாழ்வானனுக்கவளர்வாள்; வாழ்வாயரக்கியவளாழ்பில வயிற்றை.
4. நினைந்தினைய. (80)

## அநுமன், அங்காரதாரை உரையாடல். 81—82.

81, *சாயா வரந்தழுவி னுய்தழிய பின்னும்*
*ஓயா வுயர்ந்தவிசை கண்டுமுணர் கில்லாய்*
*வாயா லளந்துநெடு வான்வழி யடைத்தாய்*
*நீயாரை யென்னையிவ ணின்றநிலை யென்றான்.*

'சாயா வரம் தழுவினுய் - (எதிர்ப்பட்டோர்) நிழலைப் பற்றி ஈர்க்கும் வரத்தினால் என்னை ஈர்த்தாய்; தழிய பின்னும் - அவ்வாறு ஈர்த்த பிறகும், ஓயா உயர்ந்த விசை கண்டும் - என்னுடைய ஓய்வு அடையாமல் ஓங்கி வளர்ந்த வேகத்தைப் பார்த்தும், உணர்கில்லாய் - (என் வலிமையை) நீ அறிந்து கொள்ளவில்லை; நெடுவான் வாயால் அளந்து வழி அடைத்தாய் - நீண்ட வானத்தை உன் வாயினால் அளந்து (நான் செல்லும்) வழியை அடைத்து விட்டாய்; நீ யாரை - நீ யார்? இவண் நின்ற நிலை என்னை - இக் கடலினிடையே நின்ற காரணம் யாது?' என்றான்-என்று அநுமன் அவளை வினவினான்.

அநுமன் இவள் தன்மையை முன்பு வானர வேந்தனால் அறிவிக்கப் பட்டிருந்தனன் என்று முதனூல் கூறும். தழிய - தழுவிய: சீவக. 2026.

(பி-ம்.) 1. சாயா சலந்.
2. ஓயாதுயர்ந்த; ஓயாதெழுந்த: கண்டுமுணர்கல்லாய்; உணர்வில்லாய்.
3. வான்முகடடைந்தாய். (81)

82. *பெண்பா லெனக்கருது பெற்றியொழி யுற்றால்*
*விண்பா லவர்க்குமுயிர் வீடுவது மெய்யே*
*கண்பா லடுக்கவுயர் காலன்வரு மேனும்*
*உண்பா லருத்தியதொ ழிப்பதரி தென்றாள்.*

(அச்சொற்களைக் கேட்ட அங்காரதாரை), 'பெண்பால் என கருது பெற்றி ஒழி - நீ, (என்னை) ஒரு பெண் என்று நினைக்கும் தன்மையை நீக்கிவிடு; உற்றால் - என் எதிர்வந்தடைந்தால், விண்பால் அவர்க்கும்- (சாவில்லாத) அமரர்க்கும், உயிர் வீடுவது மெய்யே-உயிரழிவு உண்டாவது உறுதியேயாம்; உயர் காலன் கண்பால் அடுக்க வருமேனும் - வலிமையில் ஓங்கிய யமன் என் கண்ணிடமாக அடுத்து வருவானானாலும், உண்பால் அருத்தியது - அவனை (யான்) உண்ண விரும்பியதை ஒழிப்பது அரிது - நீக்குவது அரிது' என்றாள் - என்று கூறினாள்.

(பி-ம்.) 1. பெற்றியொடுமுற்றால்.

2. உயர்வீடுறுதல் மெய்யே; உயிர் வீடுறுதல் மெய்யே.

4. உண்பாலொருத்தியது; ஒருத்தியிது; உண்பானருத்தியது: ஒழிப்பரிய தென்றாள். (82)

## அநுமன், அங்காரதாரையைக் கொன்று இலங்கைக்கு ஏகுதல் 83-89

83. *திறந்தாள் வயிற்றின்வழி யண்ணலிடை சென்றான்*
*அறந்தா னரற்றிய தயர்த்தமர ரெய்த்தார்*
*இறந்தா னெனக்கொடொ ரிமைப்பதனின் முன்னம்*
*பிறந்தா னெனப்பெரிய கோளரி பெயர்ந்தான்.*

(இவ்வாறு சொல்லிய அங்காரதாரை), திறந்தாள் - தன் வாயைத் திறந்தாள்; அண்ணல் இடைவழி வயிற்றின் சென்றான் - பெரியோனான அநுமன் அவ்வாயின் வழி (புகுந்து) வயிற்றினுள்ளே சென்றான்; அறம் அயர்த்து அரற்றியது-தரும தேவதை செயலற்று வாய்விட்டுக் கதறிற்று; இறந்தான் என கொடு அமரர் எய்த்தார் - அவன் இறந்தனன் என்று நினைத்துக் கொண்டு தேவர்கள் இளைப்புற்று வருந்தினார்கள்; இமைப்பதனின் முன்னம் - கண்ணிமைக்கும் நேரத்துக்குள்ளே, பிறந்தான் என - அவன் மீண்டும் பிறந்தான் என்று சொல்லும்படி, பெரிய கோளரி - பெரிய வலிய சிங்கம் போன்ற அநுமன், பெயர்ந்தான் - (அவள் வயிற்றினின்று) வெளிப்பட்டான், தான்; அசை.

கோளரி பிறந்தான் என - திருமால் நரசிங்கமாய்ப் பிறந்தது போல, பெயர்ந்தான் - அவள் குடலைக் கிழித்துக் கொண்டு வெளிப்பட்டான், என்றும் கூறலாம். இதன் பின் ஒரு பாட்டு இருக்க வேண்டுமென்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

*(பி-ம்.)* 1. திறந்தாளெயிற்றையவள்; வயிற்றையவள்.

2. அயர்ந்தமரரெய்த்தார். (83)

84. *கள்வா யரக்கிகத றக்குடர் கணத்தில்*
*கொள்வார் தடக்கையன் விசும்பின்மிசை கொண்டான்*
*முள்வாய் பொருப்பின்முழை யெய்திமிக நொய்தின்*
*உள்வா ழரக்கொடெழு திண்கலுழ னொத்தான்.*

கள் வாய் அரக்கி கதற - கள்ளுண்ட வாயையுடைய அரக்கியாகிய அவ் அங்காரதாரை கதற, வார் குடர் கொள் தடக்கையன் - அவளுடைய நீண்ட குடல்களை அகன்ற கைகளிற் கொண்ட அநுமன், கணத்தில் விசும்பின்மிசை கொண்டான் - ஒருகண நேரத்துள் வானத்தின்மீது சென்றான்; (அவ்வாறு சென்றவன்) முள் வாய் பொருப்பின் முழை எய்தி - முட்கள் பொருந்திய மலைக்குகையொன்றனுள் சென்று, மிக நொய்தின் - மிக எளிமையாக, உள்வாழ் அரகொடு எழு - அக் குகையினுள்ளே வாழும் பாம்புகளைப் பற்றிக்கொண்டு மேலெழும்; திண் கலுழன் ஒத்தான் - வலிய கருடனை ஒத்தான்.

அங்காரதாரை வாய்க்கு முழையும், அவள் பற்களுக்கு முட்களும், அவள் குடல்களுக்குப் பாம்புகளும் உவமை. முன் 4 ஆம் செய்யுளில் பாம்புகள் குடல்களுக்கு ஒப்பிடப்பட்டமை நோக்கத்தக்கது. குடர் : குடல் என்பதின் போலி. அரவு என்பது, அர எனக்குறுகி நின்றது.

*(பி-ம்.)* 1. அரக்கிசடரக்குடர்.
2. கொள்வாய் தடக்கையன்; தடக்கையின் விசும்பின்மிசை கொண்டான்.
3. முள்வாய் பொருப்பு; முள்வார்: முறையெய்திமிக நொய்தின்.
4. அராக்கொடெழு. (84)

85. *சாகா வரத்தலைவ ரிற்றிலக மன்னான்*
*ஏகா வரக்கிகுடர் கொண்டுட னெழுந்தான்*
*மாகால் விசைக்கவட மண்ணிலுற வாலோ*
*டாகாய முற்றகத லிக்குவமை யானான்.*

சாகா வரத் தலைவரில் திலகம் அன்னான் - சாகாமையாகிய வரம் பெற்ற பெரியோர்களான சிரஞ்சீவிகளுள் சிறப்பெய்தி விளங்குபவனான அநுமன், ஏகா - (அவள் வயிற்றினுள்) சென்று, அரக்கி குடர் உடன் கொண்டு எழுந்தான் - அரக்கியின் குடல்களைத் தன்னுடன் எடுத்துக் கொண்டு (மேலே) எழுந்தான்; (அத் தோற்றத்தால் அவன்) மாகால் விசைக்க - பெரிய காற்று வீச, வடம் மண்ணில் உற - கயிறு தரையில் கிடக்க, வாலோடு ஆகாயம் உற்ற - (தன் பின்னே உள்ள) வாலோடு வானத்தை அடைந்த, கதலிக்கு - காற்றாடிக்கு, உவமை ஆனான் - ஒத்தான்,

காற்றூடி (பட்டம்) விளையாட்டு தமிழகத்துப் பிள்ளைகளின் ஆடல்களில் ஒன்று. அநுமன் சாகாவரம் பெற்றமை; 'ஒருநாளும் வீளியா நாளும் உறுக' என்று அவன் இளமைப் பருவத்தில் பிரமதேவன் கொடுத்த வரத்தால் என்க; உத்தர. அநுமப். 38; பிராட்டியும், இராமபிரானும் இவ்வாறே பின்னும் வாழ்த்துவர்; 561; உயுத்த, மருத்து. 114. திலகம் - நெற்றிப் பொட்டு; சிறந்த அழகைச் செய்வது.

(பி-ம்.) 1. சாகாமிருகத்தலைவர்: திலதமன்னுன்.
2. கொண்டிடையெழுந்தான்.
3. மாகால் விசைப்ப; மாகாலடிப்ப. (85)

86. *ஆர்த்தனர்கள் வானவர்க டானவ ரழுங்கா*
*வேர்த்தனர் விரிஞ்சனும் வியந்துமலர் வெள்ளம்*
*தூர்த்தன னகன்கயிலை யிற்றொலை விலோனும்*
*பார்த்தனன் முனித்தலைவ ராசிகள் பகர்ந்தார்.*

வானவர்கள் ஆர்த்தனர்கள் - தேவர்கள் மகிழ்ச்சியில் கூச்சலிட்டனர்; தானவர் அழுங்கா வேர்த்தனர் - அசுரர்கள் (அச்சத்தால்) மனம் வருந்தி வியர்த்து நின்றூர்கள்; விரிஞ்சனும் - பிரமனும், வியந்து - ஆச்சரியப்பட்டு, மலர்வெள்ளம் தூர்த்தனன் - மலர்களை வெள்ளமாகத் தூவி (அநுமன் கடக்கும் கடலை) நிரப்பினுன்; அகன் கயிலையில் தொலை விலோனும் பார்த்தனன் - அகன்ற கயிலாய மலையில் வாழும் அழிவற்றவனை சிவபெருமானும் பார்த்து மகிழ்ந்தான்; முனி தலைவர்கள் ஆசிகள் பகர்ந்தார் - முனிவர்களில் பெரியோர் வாழ்த்துரைகள் கூறினர்.

ஆர்த்தனர்கள்; கள், விகுதிமேல் விகுதி. இங்குத் திருமாலைக் குறிப்பிடாதது அவனே இராமபிரானுக அவதரித்தமை பற்றி; இவ்வாறே பிற இடங்களிலும் காணலாம்; பால. கையடைப். 12; கடிமணப். 83.

(பி-ம்.) 1. ஆர்த்தார்கள் : தானவரழிந்தார்; அழிந்தே.
2. வேர்த்தார்.
3. தூர்த்தான்; கயிலையிற்றுயில்வோனும்.
4. பரர்த்தான். (86)

87. *மாண்டா ளரக்கியவள் வாய்வயிறு காறும்*
*கீண்டா னிமைப்பிடையின் மேருகிரி கீழாய்*
*நீண்டான் வயக்கதி நினைப்பினெடி தென்னப்*
*பூண்டா னருக்கனுயர் வானின்வழி போனுன்.*

அரக்கி மாண்டாள் - அங்காரதாரையாகிய அரக்கி இறந்தாள்; அவள் வாய் - அவளுடைய வாயை, வயிறு காறும் கீண்டான் - வயிறு வரை யில் கிழித்தவனை அநுமன், இமைப்பிடையின் - கண்ணிமைக்கும் நேரத்தினுள், மேரு கிரி கீழாய் நீண்டான் - மேரு கிரி தாழும் வண்ணம் பேருருக் கொண்டான்; நினைப்பின் நெடிது என்ன வயக்கதி பூண்டான் - மனவேகத்தினும் நீண்டது என்று சொல்லுமாறு விரைவு கொண்டான்; அருக்கன் உயர் வானின் வழி போனான் - சூரியன் செல்லும் உயர்ந்த வான வழியே சென்றான்.

கீண்டான், நீண்டான், பூண்டான் என்பனவற்றை முற்றெச்சங்க ளாகவும் கொண்டு பொருள் கொள்ளலும் ஆம், நினைப்பினும் என்பதனுள் உம்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது. சில சுவடிகளில் இதன் பின் 'ஊறுகடி' (89) என்ற செய்யுள் அமைந்துள்ளது.

(பி-ம்.) 1. வயிறு கால்கள்; வயிறு தானும்.
2. இமைப்பினிடை மேருகிரி கிழா.
3. நெடிதென்னப்.
4. பூண்டானெருத்தனெடு; அருக்கனெடு: பூண்டரனெருத்துயர் வானின் வழி. (87)

88. *சொற்றார்கள் சொற்றபகை பல்தொகைய தன்றே*
*முற்று முடிந்தநெடு வானினிடை முந்நீர்*
*இற்றாவி யெற்றெனினும் யானினி யிலங்கை*
*உற்றால் விலங்குமிடை யூறென வுணர்ந்தான்.*

சொற்றார்கள் - முன் எனக்குச் சொன்னவர்களான (சுக்கிரீவன், சம்பாதி) முதலியோர்கள், சொற்ற - சொன்ன, பகை - வழிப்பகைகள்? பல் தொகையது அன்றே - பல தொகையினவாக உள்ளன அல்லவா, எற்று எனினும் - அப்பகைத்தொகை எதுவானாலும், முற்று முடிந்த - முடிவில்லாது அமைந்த, முந்நீரில் நெடு வானின் இடை தாவி - இக்கட லின் மீது நீண்ட வானின் வழியே தாவிச் சென்று, யான் இலங்கை உற்றால் - நான் இலங்கையை அடைந்தால், இனி - அதன்மேல், இடை யூறு விலங்கும் -இடையூறுகள் நீங்கும், என உணர்ந்தான் - என்று அநுமன் உணர்ந்தான்.

கடலில் உள்ள பல பகைவர்களைப் பற்றிச் சுக்கிரீவன், சம்பாதி முத லியோர் அநுமனுக்கு எச்சரிக்கை செய்திருப்பதாக முதனூல் கூறும்.

(பி - ம்.) 1. சொற்ற தொகை யல்லதுணை யொன்றே: பல்தொகைய தொன்றே
2. முற்று முடித்த நெடு; முற்றார்முடிந்தநெடு.
3. இற்றாரியற்றெனினும்.
4. உற்றால் விலக்குமிடை. (88)

௮௯. *ஊறுகடி தூறுவன வூறிலற முன்னுத்*
*தேறலி லரக்கர்புரி தீமையவை தீர*
*ஏறும்வகை யிங்குளதி ராமவென வெல்லாம்*
*மாறுமதின் மாறுபிறி தில்லென வலித்தான்.*

ஊறு - துன்பங்கள், கடிது ஊறுவன - விரைவில் நேர்கின்றன; (ஆனால்), ஊறு இல் அறம் உன்னு தேறல் இல் அரக்கர் - கேடில்லாத அறத்தை எண்ணுமலும் தெளிவு பெருமலும் இருக்கும் அரக்கர்கள். புரி - செய்கிற, தீமை அவை தீர - கொடுமைகளானவை தீர, ஏறும் வகை - கடைத்தேறும் வழி, இங்கு உளது-இங்கு இருக்கிறது; (அஃது), இராம என - இராம என்று கூற, எல்லாம் மாறும் - எல்லா இடையூறுகளும் மாறிவிடும்; அதின் - அதைவிட, மாறு பிறிது இல் - வேறு பிறிதொரு வகையும் இல்லை: என வலித்தான் - என்று (அநுமன்) உறுதி செய்து கொண்டான்.

இச் செய்யுளில் அநுமன் இராமநாமத்தை ஜபிக்கத் தொடங்கினன் என்பது புலப்படும். இராமநாமத்தினல் இடையூறு நீக்கும் சிறப்பு இங்குக்கூறப்பெற்றது. 'நன்மையும் செல்வமும்' என்று தொடங்கும் பாயிரச் செய்யுளும், கிட்கிந்தா. சம்பாதிப். 48ல், வானரவீரர் இராமநாமங் கூறச் சம்பாதி இழந்த தன் சிறை தழைக்கப் பெற்ற வரலாறும், வாலி வதைப் படலம், 'மும்மைசால் உலகுக்கெல்லாம்' என்ற செய்யுளும் இக்கருத்தை வலியுறுத்தும்.

(பி - ம்.) 1. ஊழிலறமுன்னு.
2. தேறிலியரக்கர்: தீமையது தீர.
3. ஏறுவகையாண்டையவிராம; ஏறுவகையெங்குளதிராம; இங்குளவிராம.
4. பிறிதில்லென மதித்தான்; வருத்தான். (89)

## வேறு.

## அநுமன் பவழ மலையில் பாய்தல் 90-91.

90. *தசும்புடைக் கனக நாஞ்சிற் கடிமதி றணித்து நோக்கா*
*அசும்புடைப் பிரசத் தெய்வக் கற்பக நாட்டை யண்மி*
*விசும்பிடைச் செல்லும் வீரன் விலங்கிவே றிலங்கை மூதூர்ப்*
*பசும்புடைச் சோலைத் தாங்கோர் பவழமால் வரையிற் பாய்ந்தான்.*

அசும்பு உடை பிரசம் - கசிவு உடைய தேனைக் கொண்ட, கற்பக தெய்வ நாட்டை அண்மி - கற்பக மரங்களையுடைய தேவருலகை அணுகி, விசும்பு இடை செல்லும் வீரன் - வான வழியே செல்லுகின்ற

வீரனான அநுமன், தணித்து - குனிந்து, தசும்பு உடை - பொற்குடங்களையுடைய, நாஞ்சில் - நாஞ்சில் என்னும் கோட்டையுறுப்புக்களைக் கொண்ட, கனக கடிமதில் - பொன்னாலான காவல் மதிலை, நோக்கா - பார்த்து, வேறு விலங்கி - வழியை மாற்றிக்கொண்டு, இலங்கை மூதூர் ஆங்கு - இலங்கையான பழைய நகரத்தினைச் சார்ந்த ஓர் இடத்தில், புடை பசும் சோலைத்து - பக்கங்களில் பசுமையான சோலைகளைக் கொண்ட, ஓர் பவழமால் வரையில் பாய்ந்தான் - ஒரு பெரிய பவழ மலையிலே பாய்ந்தான்.

இம்மலையின் பெயர் இலம்பம் என்று முதனூல் கூறும். தணித்து - வேகத்தைக் குறைத்து என்றும் கூறலாம். விலங்கி - மதிலைவிட்டு விலகி என்றும் பொருள் கொள்வர்.

*(பி - ம்.)* 1. கடிமதிற்ரித்து நோக்கா; தனித்து நோக்கா.
2. அசும்பிடைப்பிரசம்.
3. விலங்கெறியிலங்கை; விலங்கல் மேலிலங்கை.
4. பசுஞ்சுடர்ச்சோலை. (90)

௯௧. *மேக்குறச் செல்வோன் பாய வேலைமே லிலங்கை வெற்பு*
*நூக்குறுத் தங்கு மிங்குந் தள்ளுறத் துளங்கு நோன்மை*
*போக்குறற் கிடையூ ருகப் புயலொடு பொதிந்த வாடை*
*தாக்குறத் தகர்ந்து சாயுங் கலமென வாயிற் றன்றே.*

வேலை மேல் மேக்கு உற செல்வோன் பாய - கடலின்மீது மேலாகச் செல்லும் அநுமன் (கீழ்நோக்கிப்) பாய, இலங்கை வெற்பு - இலங்கையிலுள்ள பவழ மலையானது, நூக்குறுத்து - சாய்ந்து, அங்கும் இங்கும் தள்ளுற - அப்புறமும் இப்புறமும் தள்ளப்பட்டுத் தடுமாற, துளங்கும் - அசையும், நோன்மை - தன்மை, புயலொடு பொதிந்த வாடை - மழையொடு சேர்ந்த பெருங்காற்றினால், போக்குறற்கு - (கடலிற் செல்லும் கலத்தின்) செல்கைக்கு, இடையூறு ஆக - துன்பமாக, தாக்கு உற - மோதப்பட, தகர்ந்து - சிதைந்து, சாயும் - கடலிலே சாய்கிற, கலம் என ஆயிற்று - மரக்கலம் என்று சொல்லும்படி ஆயிற்று. அன்று, ஏ: அசைகள்.

வெற்பு கலமென ஆயிற்று என்க. மலை கலமெனச்சாய்தல்; 9. நூக்குறுத்தல் - சாய்த்தல்; 'நூக்கலாகலாத காதல்', (ஆரண்ய. மாரீசன் வதைப். 90). இடையூறு; உற்பாதம் எனக் கொண்டு, மலை தகர்ந்தது, இலங்கை அழிந்துபோமென்றதைக் காட்டும் உற்பாத மாகவும் கொள்க.

(பி - ம்.) 1. விலங்கிநீரிலங்கைவெற்பு; விலங்கல் மேலிலங்கை மூதூர்.
2. தூக்குறுத்து: தள்ளுற நுடங்கு நோன்மை.
3. போக்கினுக்கிடையூருக; போக்கினர்க்கிடையூருக.
4. நுகர்ந்து சிந்தும்: கலமெனத்தக்கதன்றே; கலமெனத்தகர்ந்த தன்றே. (91)

## அநுமன் இலங்கையைக் கண்டு வியத்தல் 92-95

92. *மண்ணடி யுற்று மீது வானுறு வரம்பின் றன்மை*
*எண்ணடி யற்ற குன்றி னிலைத்துநின் றுற்று நோக்கி*
*"விண்ணிடை யுலக மென்னு மெல்லியன் மேனி நோக்கக்*
*கண்ணடி வைத்த தன்ன விலங்கையைத் தெரியக் கண்டான்."*

அடி மண் உற்று - அடிப்புறம் நிலத்திற் படிந்து, மீது-உச்சி, வான் உறும் - வானத்தைப் பொருந்தி நிற்கும், வரம்பின் தன்மை - அளவின் எல்லையை, எண் அடி அற்ற - எண்ண முடியாத, குன்றின்-அம்மலையில், நிலைத்து நின்று - உறுதியாக நின்று கொண்டு, உற்று நோக்கி - கூர்ந்து பார்த்து, விண்ணிடை உலகம் என்னும் மெல்லியல் - வானுலகம் என்னும் பெண்ணனவள், மேனி நோக்க - தன் உடலழகைப் பார்க்க, கண்ணடி வைத்தது அன்ன - கண்ணுடி வைத்தது போன்ற, இலங்கையை - இலங்காபுரியை, தெரிய கண்டான் - நேரே தெரியப் பார்த்தான்.

இலங்கை வானிலுள்ள பொருள்கள் யாவும் பெற்றிருத்தலால் விண்ணுலக மென்னும் மெல்லியல் காணும் கண்ணடி என்று கூறப் பட்டது. 'மண்ணடி யுற்ற மீது வானுற-இலங்கைக் கோட்டை பாதலத் தில் அடியும் சுவர்க்கத்தில் முடியும் செல்ல; எண்ணடியுற்ற குன்று - எண்ணுகிறதுக்கு முதலான குன்று' என்பது **பழைய உரை.**

(பி-ம்.) 1. வானுற வரம்பின்றன்மை ; வானுற்ற வரம்பின்றன்மை.
2. எண்ணடியுற்ற குன்று : குன்றத்தலத்தினின்றெய்தநோக்கி.
3. மெல்லியள்மேனி.
4. இலங்கையைக் கண்ணிற் கண்டான். (92)

93. *நன்னகர் தன்னை நோக்கி நளினக்கை மறித்து நாகர்*
*பொன்னக ரிதனை யொக்கு மென்பது புல்லி தம்மா*
*அந்நக ரிதனி னன்றே யண்டத்தை முழுது மாள்வான்*
*இந்நக ரிருந்து வாழ்வா னிதுவதற் கேது வென்ருன்,*

நல் நகர் தன்னை நோக்கி - அழகிய அந்த இலங்கா நகரத்தைப் பார்த்து, நளினக்கை மறித்து - அநுமன் தாமரை போன்ற தன் கைகளை மறித்து அசைத்து, 'நாகர் பொன்னகர் இதனை ஒக்கும் என்பது புல்லிது- தேவருடைய பொன்னகரான அமராவதி இதற்குச் சமான மாகும் என்று கூறுவது இழிவுடைத்து; இதனின் அந் நகர் நன்றே - இதனைவிட அவ்வமராவதி அழகுடையதோ? (இல்லையென்றபடி.) அண்டத்தை முழுதும் ஆள்வான் - அண்டம் முழுமையும்ஆட்சிபுரியும் இராவணன், இந்நகர் இருந்து வாழ்வான் இது - இந்த நகரத்தில் இருந்து கொண்டு வாழ்கின்றான் என்னும் இவ்வுண்மை, அதற்கு ஏது - பொன்னகரினும் இது சிறந்தது என்பதற்குக் காரணமாகும்', என்றான் - என்று சொன் னான். அம்மா: வியப்பிடைச் சொல்.

93-95 செய்யுட்கள் ஒரு தொடர். கை மறித்தல் - ஒவ்வாமையைக் குறிக்கும் செயல்; 238; அயோத்யா. நகர்நீங்கு. 136; சீவக. 1227. அமராவதி இராவணனுக்கு உட்பட்டிருக்க, அதனைவிட்டு இந்நகரி லிருந்து ஆள்வது இதன் சிறப்பைக் காட்ட ஏது என்றனன் என்க.

(பி.ம்.) 1. நன்னகரதனை.
2. பொன்னகரதனை; பொன்னுலகிதனை.
3. அதனினன்றேல்; அந்நகரத்துநின்றே.
4. இருந்துவாழான்; வாழ்வானதுவிதற்கேது (93)

94. *மாண்டதோர் நிலத்திற் றாமென் றுணர்த்துதல் வாய்மைத் தன்றால்*
*வேண்டிய வேண்டி னெய்தி வெறுப்பின்றி விழைந்து துய்க்கும்*
*ஈண்டரும் போக வின்ப மீறில தியாண்டுக் கண்டாம்*
*ஆண்டது துறக்க மஃதே யருமறைத் துணிவு மம்மா.*

வேண்டிய வேண்டின் எய்தி - விரும்பியவற்றை விரும்பிய வண்ணமே அடைந்து, வெறுப்பு இன்றி விழைந்து துய்க்கும் - வெறுப் பில்லாமல் விரும்பி நுகரும், ஈண்ட அரும் போக இன்பம் - தொகுப் பதற்கு அரிய அனுபவ இன்பம், ஈறு இலது யாண்டு கண்டாம் - முடி வில்லாத தன்மையை எங்குக் காண்கின்றோமோ, ஆண்டது துறக்கம்- அவ்விடத்ததே சுவர்க்கம் ஆகும்; அரு மறை துணிவும் அஃதே - அருமையான வேதங்களின் முடிந்த கருத்தும் அதுவே ஆகும்; (ஆத லால்), அது மாண்ட ஓர் நிலத்திற்று ஆம் - அச்சுவர்க்கம் சிறப்பமைந்த ஓர் இடத்தில் உள்ளது, என்று உணர்த்துதல் வாய்மைத்து அன்று - என்று கூறுதல் உண்மையாகாது. ஆல்: அசை; அம்மா: வியப்பிடைச் சொல்.

92 ஆம் செய்யுளில் இலங்கை சுவர்க்கத்தின் பிரதிபிம்பம் என்றும், 93 இல் அது சுவர்க்கத்திலும் சிறந்ததென்றும் கூறி, இச்செய்யுளில் அதுவே சுவர்க்கமென்று வற்புறுத்தப்பெறுகின்றது. அன்றியும், சுவர்க்கத்தின் சிறப்பு போகத்தால் அமையுமே அன்றி இடத்தால் அமையாதென்பதும் விளங்கும்.

(பி - ம்.) 1. மாண்டதோர் தலத்திற்; தவத்திற்.
2. வேண்டிய வேண்டுஞ் செல்வம்; வேண்டியவேண்டு நீதி: விழைந்த துய்க்கும்.
3. ஈண்டிருபோக: ஈறிலதென்று கண்டால்: யாண்டிற் கண்டால்.
4. ஆண்டிது: மறை துணிவு. (94)

95. *உட்புல மெழுநூ றென்ப ரோசனை யுலக மூன்றில்*
*தெட்புறு பொருள்க ளெல்லா மிதனுழைச் செறிந்த* வென்றால்
*நுட்புல நுணங்கு கேள்வி நுழைவின ரறிவி னோங்கும்*
*கட்புல வரம்பிற் றன்றே காட்சியுங் கரையிற் றம்மா.*

உட்புலம் - இலங்கை நகரின் உள்ளிடப் பரப்பு. எழுநூறு ஓசனை யென்பர் - எழுநூறு யோசனை என்று அறிந்தோர் கூறுவர்; உலக மூன்றில் தெட்பு உறு பொருள்கள் எல்லாம் - உலகங்கள் மூன்றிலும் தெளிவாய் அறியப்படும் எல்லாப் பொருள்களும், இதன் உழை செறிந்த- இந்த இலங்கா நகரத்தினிடத்தில் நிறைந்துள்ளன; என்றால் - என்று கூறினால், நுண்புலம் நுணங்கு கேள்வி நுழைவினர் - நுண்ணறிவும் நுணுகிய கேள்வியும் அமைந்து (பொருள்களின்) ஊடுருவிச் சென்று ஆராயும் அறிவு பெற்றவரின், அறிவின் ஓங்கும் கண் புல வரம்பிற்று அன்று-அறிவினால் ஓங்குகிற அறிவுக்கண்ணின் எல்லையிலும் அடங்கியது என்று கூறுவது பொருந்தாது; (அன்றியும்) காட்சியும் கரையிற்று: கண்ணால் காணக்கூடியதும் ஓர் எல்லையுள் அடங்கும் என்பது ஆகி விடும். (ஆகவே, அவ்வாறு கூறுதல் தகாது என்றபடி.) அம்மா: வியப்பிடைச் சொல். ஏ: அசை.

இலங்கையின் பரப்பு எழுநூறென்றும், அதனுள் மூவுலகப் பொருள்களும் அடங்கியுள்ளன வென்றும் கூறுவது பொருந்தாது; ஏனெனில், அறிஞர் அறிவிற்கும் காட்சிக்கும் அவை கடந்து நிற்பதால் என்பது கருத்து. இலங்கையின் பரப்பளவு எழுநூறு யோசனை: 324. தெட்பு - தெளிவு; தெட்புறுபொருள் என்பதற்கு 'முதிர்ந்த பதார்த்தம், என்பது பழைய உரை. நுட்புலம் நுணங்கு கேள்வி, என்பது, 'நுணங்

கிய கேள்விய ரல்லார் வணங்கிய, வாயின ராத லரிது' என்ற குறளை (419) நினைப்பூட்டுகின்றது. நுட்புல நுணங்கு கேள்வி நுழைவினர் கட்புல வரம்பு என்றதற்கு அறிஞரின் அகக்கண் எல்லையென்றும், காட்சி என்பதற்குப் பிறர் புறக்காட்சி என்றும் பொருள் கொண்டு, கருத்தாலும், கண்ணாலும் காணக்கூடாப் பெருமைவாய்ந்தது இலங்கை என்று கொள்க.

92-95. செய்யுட்கள் அடுத்த ஊர்தேடுபடலத்திற்கு முகவுரை போல் அமைந்துள்ளமை நோக்கத்தக்கது. இதன்பின் ஒரு சுவடியில் ஒரு செய்யுள் காணப்படுகிறது.

> என்றுதன் னிதயத் துன்னி யெறுழ்வலித் தடந்தோள் வீரன்
> நின்றன னெடிய வெற்பி னினைப்பரு மிலங்கை மூதூர்
> ஒன்றிய வடிவங் கண்டாங் குளத்திடைப் பொறுக்க லாற்றான்
> குன்றுறழ் புயத்து மேலோன் பின்னருங் குறிக்க லுற்றான்.

*(பி - ம்.)* 2. இதனுழை செறிந்த தென்றால்.
3. நுழைவினரெனினு நோக்கும்; நுழைவினருணர்வினேனுங்கும்: விழைவிலரெனினு நோக்கும்; நுழையினர் நாவினேனுங்கும்; நுழைவிலரெனினு நோக்கும்; நுழைவிலவெனினு நோக்கும்.
4. வரம்பிற்றாமே: காட்சியின் கரையிற்றாமோ; காட்சியின்கரை களம்மா. (95)

கடல்தாவு படலம் முற்றும்



## 2. ஊர்தேடு படலம்

### இலங்கை நகர வருணனை 96 - 136

96. *பொன்கொண் டிழைத்தமணி யைக்கொடு பொதிந்த*
*மின்கொண் டமைத்தவெயி லைக்கொடு சமைத்த*
*என்கொண் டியற்றியவெ னத்தெரி விலாத*
*'வன்கொண்டல் விட்டுமதி முட்டுவன மாடம்.'*

ஊர்தேடு படலம் - அநுமன் இலங்கையில் பிராட்டியைத் தேடி அலைந்த செய்தியைக் கூறும் படலம் என்று விரியும்.

இப்படலம் பல சுவடிகளில் 1. நிலாத்தோற்றுப்படலம் (96 - 154); 2. இலங்கை மாதேவிப்படலம் (155 - 190); 3. ஊர்தேடு படலம் (191 - 329) என்று மூன்று படலங்களாகக் காண்கின்றது.

இச்செய்யுள் முதல் 136 ஆம் செய்யுள் முடிய பவழ மலையில் நின்றுகொண்டு இலங்கையை நோக்கிய அநுமன் கண்டனவும், எண்ணியவும், சொல்லியவுமான செய்திகளைக் கூறுவன.

மாடம் - (இவ்விலங்கை நகர வீதிகளிற்காணும்) மாடங்கள், பொன் கொண்டு இழைத்த - பொன்னைக் கொண்டு செய்யப்பெற்றன; மணியைக் கொடு பொதிந்த - இரத்தினங்களைக் கொண்டு பொதிந்தன; மின் கொண்டு அமைத்த - மின்னலைக் கொண்டு அமைக்கப்பெற்றன; வெயிலைக் கொடு சமைத்த - சூரிய ஒளியைக் கொண்டு ஆக்கப்பெற்றன; (என்று இவ்வாறு மயங்குவதல்லாது), என் கொண்டு இயற்றிய என - எதனைக்கொண்டு கட்டப்பெற்றன என்று, தெரிவு இலாத - அறிய முடியாதனவாயிருக்கின்றன; (அவை) வன் கொண்டல் விட்டு - வலிய மேக மண்டலத்தைக் கடந்து, மதி முட்டுவன - சந்திரமண்டலத்தை முட்டிக் கொண்டிருக்கின்றன.

இனி, 'வன்கொண்டல் விட்டுமதி முட்டுவன மாடம் என் கொண்டியற்றிய வெனத் தெரிவிலாத' என இயைத்துப் பொருள் கொள்ளலும் ஆம்.

(*பி-ம்.*) 1. பொன் கொண்டிழைத்து.
2. மின் கொண்டிமைத்த.
3. இயற்றியதெனத்; தெரிகிலாத.
4. வன்கொண்டலொப்ப; வன்கொண்டருவிமதி. (1)

97. *நாகால யங்களொடு நாகருல குந்தம்*
*பாகார் மருங்குதுயி லென்னவுயர் பண்ப*
*ஆகாய மஞ்சவகன் மேருவை யனுக்கும்*
*மாகால் வழங்குசிறு தென்றலென நின்ற.*

(அம் மாடங்கள்), நாகாலயங்களொடு - தேவர் வாழும் மாளிகைகளோடு கூடிய, நாகர் உலகும் - தேவ உலகும், தம் - இலங்கையிலுள்ள மாடங்களின், பாகு ஆர் மருங்கு - (தம்) பகுதியாய் விளங்கும் இடை நிலத்தில், துயில் என்ன - தங்குவன என்று சொல்லும்படி, உயர் பண்ப - உயர்ந்து நிற்கும் தன்மையுடையனவாய், ஆகாயம் அஞ்ச - வானம் அஞ்சும்படி, அகல் மேருவை அனுக்கும் - அகன்று நிற்கும் மேரு மலையை வருத்தி நிலை தளரச் செய்யும், மா கால் - பெருங்காற்று, வழங்கு சிறு தென்றலென நின்ற - (மென்மையாக) வீசும் சிறிய தென்றல் காற்றென்னும்படி வலியை யிழக்கச் செய்து அவை நின்றன.

இச் செய்யுளில் இலங்கை மாடங்களின் உயர்ச்சியும் வலியும் கூறப் பெற்றன. தேவ உலகு அம்மாடங்களின் நடுவிடத்தில் தங்குவன போன்ற உயர்ச்சியும், மா கால் தென்றலென நின்ற வலிமையும் அவை பெற்றிருந்தன என்க. நாகாலயங்கள் என்பதற்குப் பாதாள உலகக் கட்டிடங்கள் என்றும் பொருள் கொள்வர். இவ்வாறு பொருள் கொள்ளின் 'பாகார் மருங்கு துயில் என்ன' என்றதற்குத் தம் பக்கத்திலே இணையற்றமையால் சோர்வுற்றுக் கிடக்கும் வண்ணம் இவை பெருமையற்று என்று பொருள் கொள்தல் பொருந்தும். 'நாகநீணகரொடு நாக நாடதனொடு, போகநீள் புகழ் மன்னும் புகார் நகர்' (சிலப். மங்கல. 21-22) என்றதனோடு இது ஒக்கும். 'நாகலோகமும் சுவர்க்கமும் சுற்றிலே கிடப்ப' என்பது பழைய உரை. அனுக்கும் - வருந்தும்; 'தீங்கரும் பனுக்கிய திருந்து தோள்கள்' (சீவக. 1942.); அனுக்குதல், அசைத்தலும் ஆம். மாகால், வாயுதேவன் என்று கூறினும் பொருந்தும். மாகால், சிறு தென்றல் என்றது முரண்தொடை. மாகால் தென்றலென நின்றது இராவணன் ஆணைக்கு அஞ்சி என்று கொள்வாரும் உளர்.

(பி-ம்.) 2. மருங்குதுயில் வென்ன; மருங்குமிலவென்ன.
4. தென்றலென நின்று; தென்றலென வந்த; தென்றல்வருகின்ற.

(2)

98. *மாகாரின் மின்கொடி மடக்கின ரடுக்கி*
*மீகார மெங்கணு நறுந்துகள் விளக்கி*
*ஆகாய கங்கையிணை யங்கையினி லள்ளிப்*
*பாகாய செஞ்சொலவர் வீசுபடு காரம்.*

காரம் - அம்மாளிகைகள், பாகு ஆய செஞ்சொலவர் - சர்க்கரைப் பாகு போன்ற இனிய சொற்களைப் பயிலும் பணிப்பெண்டிர், மா காரின் மின்கொடி - பெரிய மேகங்களில் விளங்கும் மின்னற்கொடிகளை, மடக்கினர் அடுக்கி - மடக்கித் (துடப்பமாக) அடுக்கிவைத்து, மீ காரம் எங்கணும் - மேல் மாளிகையின் எல்லா இடங்களிலும் உள்ள, நறும் துகள் விளக்கி - (அங்குச் சிந்திக் கிடக்கும்) நன்மணம் பொருந்திய கலவைப் பொடிகளான குப்பைகளை அகற்றி, அங்கையினில் ஆகாய கங்கையினை அள்ளி - தம் உள்ளங்கைகளால் வான கங்கையின் நீரைப் (பிரயாசை யின்றி) எடுத்து, வீசுப்டு - வீசித் தெளிக்கப்படுகின்றன.

செஞ்சொலவர்: இங்குத் தெய்வ மாதர்களைக் குறித்தது. பாகு- அழகும் ஆம். காரம் - மாளிகை; அகாரம் என்பதன் முதற்குறை. மீ காரம் - மேற்றளம். நறுந்துகள் விளக்குதல்: ஒப்பு : 'தம் பொன் மேனி நிமிர்ந்த தண் சாந்தமும், வம்புண் கோதையர் மாற்று மயலரோ' (சீவக. 128.) படுகாரம் - சாமர்த்தியம் என்று பொருள் கூறுவாரும் உளர். 'மேற்றளங்களிலுள்ள குங்குமத் துகள்களை விளக்கி, ஆகாய கங்கை நீரைக் கையிலே முகந்து தெளிக்கும் சாமர்த்தியம் அழகாயது' என்பது பழைய உரை.

(பி-ம்.) 4. வீசுபடகாரம். (3)

வேறு

99. *பஞ்சி யூட்டிய பாடமை கிண்கிணிப் பதுமச்*
*செஞ்செ விச்செழும் பவழத்தின் கொழுஞ்சுடர் சிதறி*
*மஞ்சி னஞ்சன நிறமறைத் தரக்கியர் வடித்த*
*அஞ்சி லோதியோ டமைவன வவைதமக் குவமை.*

பஞ்சி ஊட்டிய-செம்பஞ்சுக் குழம்பு பூசிய, பாடு அமை கிண்கிணிப் பதுமம் - வேலைப்பாடுகள் அமைந்த சதங்கை அணிந்த தாமரை போன்ற பாதங்களின், செம் செவி - சிவந்து அழகு வாய்ந்த தன்மை, செழும் பவழத்தின் கொழும் சுடர் - செழுமையான பவழத்தின் நிறைந்த ஒளியை, சிதறி - எங்கும் வீசி, மஞ்சின் அஞ்சன நிறம் மறைத்து - மேகத்தின் (இயல்பான) மைபோன்ற கரிய நிறத்தைப் போக்கி, அரக்கியர் வடித்த அம் சில் ஓதியோடு அவை தமக்கு உவமை அமைவன - அரக்கியர்கள் வாரி முடித்த அழகிய சிலவாகிய (செந்நிறக் கூந்தலை ஒத்து) அக்கூந்தல்களுக்கு ஒப்பாந் தன்மையைப் பெற்றன.

பணியாளரான தேவமாதரின் பாத வொளி, அருகிற் கிடந்த மேகங்களின் மீது வீச, அவற்றின் கரிய நிறம் மாறிச் செம்மை நிறம் உண்டாகி, அரக்கியரின் கூந்தலை ஒத்தது என்பது கருத்து. மஞ்சின் அஞ்சன

நிறத்தை அரக்கியரின் மேனிக்கு ஒப்பிட்டுப் பொருள் கூறுவதும் ஒரு நயம்; 'காற் சிவப்பினுல், கறுத்த உடம்பு எரிக்குஞ்சியை ஒத்தது' என்பது பழைய உரை, பவழத்தின் சுடர் என்பதற்கு விரல்களின் ஒளி என்று கூறுதலும் ஆம். செவி: செவ்வி என்பதன் விகாரம்,

(பி-ம்.) 1. பாட்டிசைக் கிண்கிணி; பரட்டிசைக் கிண்கிணி; பாட்டமை கிண்கிணி; பாடகக் கிண்கிணி.
2. கொழுஞ்சுடர் சிதற.
4. அஞ்சி லோதியோ டுவமையவ் வவர்க்குறு முவமை; உவமைய தாய்புற மமைவ; உவமைய வர்க்குற வமைவ; உவமையும் வாய்ப்புற வமைந்த. (4)

100. *நான நாண்மலர்க் கற்பக நறுவிரை நான்ற*
*பானம் வாயுற வெறுத்ததா ளாறுடைப் பறவை*
*தேன வாம்விரைச் செழுங்கழு நீர்த்துயில் செய்ய*
*வான யாறுதம் மரமியத் தலந்தொறு மடுப்ப.*

நான கற்பக நாள் மலர் நறு விரை நான்ற பானம் - (வானிலுள்ள) கஸ்தூரி மணம் மிகுந்த கற்பக மரங்களின் அன்று பூத்த மலர்களின் நல்ல மணத்தோடு சொரிந்த தேன், வாய் உற - தம் வாயில் வந்து புக, வெறுத்த - (தெவிட்டி) வெறுத்த, ஆறு தாள் உடை பறவை - அறு காற்பறவையான வண்டு, தேன் - (தம்) பெண் வண்டுகள், அவாம் - விரும்பி உறைகின்ற, வானயாறு விரை செழுங்கழு நீர்-ஆகாய கங்கையி லுள்ள மணமுள்ள செங்கழுநீர்ப் பூவில், துயில் செய்ய - சென்று உறங் கும்படி, தம் அரமிய தலம் தொறும் மடுப்ப - (அவ் வானயாறு) மாடங் களின் நிலாமுற்றங்கள் தோறும் வந்து நிறைய (அம்மாடங்கள் நின்றன.)

நிலாமுற்றங்களின் உயரம் இதனுல் விளங்குவதாகும். பானம் இங்குத் தேனைக் குறித்தது; தேன் - பெண்வண்டு. அரமியம் - உப் பரிகை; ஹர்ம்யம் என்ற வட சொல்லின் சிதைவு.

வானநாட்டுக் கற்பக மலரின் தேனையுண்டு வெறுப்புற்ற வண்டுகள் அரமியத் தலத்துள்ள செங்கழுநீர்த் தேனை விரும்பியுண்டு அங்குத் துயில் செய்யும் என்பதும் ஆம்.

(பி-ம்.) 1. நறுவிரை நாற; கற்பக நறை நான்ற.
3. தேன வாமலர்ச்; தேன வாவிச்.
4. தலந்தொறு மடுத்த; தலத்தொடு மடுத்த. (5)

101. *குழலும் வீணையும் யாழுமென் றினையன குழைய*
*மழலை மென்மொழி கிளிக்கிருந் தளிக்கின்ற மகளிர்*
*சுழலும் நன்னெடுந் தடமணிச் சுவர்தொறுந் துவன்றும்*
*நிழலுந் தம்மையும் மெய்ம்மைநின் றறிவரு நிலைய.*

குழலும் வீணையும் யாழும் என்றினையன - குழல், வீணை, யாழ் என்று கூறப்படும் இத்தகைய இசைக்கருவிகள், குழைய - தளர்ந்து போக, மென் மழலை மொழி - மெல்லிய மழலைச் சொற்களை, இருந்து கிளிக்கு அளிக்கின்ற மகளிர் - தாம் இருந்துகொண்டு கிளிக்குப் பழக்குகின்ற மாதர்கள், சுழலும் நல் நெடும் தடமணி சுவர் தொறும் - ஒளி சுற்றி வருவனவும் நல்ல இலக்கணங்கள் அமைந்தனவுமான நீண்டு உயர்ந்த மணிகள் பதித்த சுவர்கள் தோறும், துவன்றும் நிழலும் - (ஒன்று பலவாகத்) தோன்றும் தம் நிழல்களையும், தம்மையும் - தம்மையும், மெய்ம்மை நின்று அறிவு அரு நிலைய - உண்மையாக அறிய முடியாத நிலைமையிலிருந்தன அம்மாடங்கள்.

மகளிர் சொல்லின் இனிமை; 'வீணையும் குழலும் பாலும் அமுதமுங் கரும்புந் தேனும், பாணியாழ் கனியும் வென்ற பைங்கிளி மழலைத் தீஞ்சொல்' (சீவக. 1500.) வீணை வேறு; யாழ் வேறு; மழலை - இளஞ்சொல்; 'மெய்பெறு வெழுத்துயிர்க்கு மழலைவாய்' (சீவக. 181.) என்றமையால் மழலை மெய்பெறாது என்பதாயிற்று. மெய்ம்மை நின்று அறிவராத்-தன்மை, நிழலா, மகளிரா என்றறிய முடியாமல் மயங்கும் நிலை.

(பி-ம்:) 1. இனையன குழையயும்
2. மழலையர் மொழி
3. நன்னெடுஞ் சுடர்மணி
4. வேற்றுமை தெரிவரு நிலைய; வேற்றுமை யறிவரு நீரார். (6)

102. இனைய மாடங்க ளிந்திரற் கமைவர வெடுத்து
வனையு மாட்சிய வென்னிலச் சொல்லுமா சுண்ணும்
அனைய தாமெனி னரக்கர்தந் திருவுக்கு மளவை
நினைய லாமன்றி யுவமையு மன்னதா நிற்கும்.

இனைய மாடங்கள் - இத்தகைய மாடங்கள், இந்திரற்கு அமைவர எடுத்து வனையும் மாட்சிய என்னில் - தேவேந்திரன் வாழ்தற்குப் பொருந்தக் கட்டப் பெற்று அழகு செய்யப்பட்ட பெருமை பொருந்தியன என்று கூறினுல், அச்சொல்லும் - அவ்வாறு கூறும் பேச்சும், மாசு உண்ணும் - குற்றப்படும்; அனைய தாம் எனின் - அவ்வாறு இந்திர மாளிகைக்கு ஒப்பாகக் கூறுதலே மாசாகும் என்னும்போது, அரக்கர் தம் திருவுக்கும் - அரக்கர்களின் செல்வத்திற்கும், அளவை - எல்லையை, நினையலாம் அன்றி - மனத்தாலே நினைக்கலாமேயன்றி, உவமையும் அன்னதா நிற்கும் - உவமை கூற முயன்ருல் அச்சொல்லும் மாசுண்டதாகவே அமையும்,

'அனையதாமெனின்..............நிற்கும்' என்ற பகுதிக்கு, அவ்வாறு இந்திரற்கு எடுத்து வனையும் மாட்சிய என்று கூறினால், அரக்கர் செல்வத்திற்கும் ஓர் அளவை நினைக்கக் கூடியதாகும்; இந்திரச் செல்வத்தோடு கூறும் உவமையும் மாசுறும் என்று வேறு விதமாகவும் பொருள் கூறுவர். 'அனையதாமெனின் மாசுண்பதே மெய்யானபோதே அரக்கர் செல்வம் இந்திரற்காம் என்றால், அவன் பாத்திரமல்லனாகையால் உவமை யில்லை' என்பது **பழைய உரை**. இச்செய்யுள் 'வில்லொக்கும் நுதலென்றாலும் வேலொக்கும் விழியென்றாலும், பல்லொக்கும் முத்தென்றாலும் பவழத்தை யிதழென்றாலும், சொல்லொக்கும் பொருளொவ்வாவாற் சொல்லலா முவமையுண்டோ, நெல்லொக்கும் புல்லென்றாலும் நேருரைத்தாகவற்றே' என்ற (**ஆரண்ய**. மாரீசன்வதைப். 74.) ஆம் செய்யுளின் கருத்தை ஒருவாறு ஒத்திருப்பது நோக்குக. திரு - அழகும் ஆம்; 'திரு வென்பது கண்டாரால் விரும்பப்படும் தன்மை நோக்கம்' (திருச்சிற். 1. உரை).

(பி-ம்.) 1.—2. அமைவுற எடுத்த; எடுத்த, மனையின் மாட்சிய; அனைய மாட்சிய.
4. நினைய லாமெனில்: உவகையும் அன்னதாய். (7)

103. *மணிக ளெத்துணை பெரியன மால்திரு மார்பின்*
*அணியுங் காசினு மகன்றன வுளவெனி லரிதால்*
*திணியு நன்னெடுந் திருநகர் தெய்வமாத் தச்சன்*
*துணிவின் வந்தவன் தொட்டழ கிழைத்தவத் தொழில்கள்,*

மணிகள் எத்துணை பெரியன- பிற இரத்தினங்கள் எவ்வளவு பெரியனவா யிருந்தாலும், மால் - திருமாலினுடைய, திருமார்பின் - திருமகள் (தங்குகிற) மார்பில், அணியும் காசினும் - அவர் அணிகின்ற கவுத்துவ மணியைக் காட்டிலும், அகன்றன உள எனில் அரிது - அகன்றுள்ளவை உண்டு என்று சொல்லில், அவ்வாறு சொல்லுதல் அரிதாகும்; (அதைப் போல), தெய்வ மா தச்சன் - தேவர் சிற்பியான பெரியோன், துணிவின் வந்து - சிறந்த உறுதிப்பாட்டுடன் வந்து, நல் நெடும் திரு நகர் - நல்ல இலக்கணங்களமைந்த நீண்ட அழகிய இலங்காபுரியிலே, அவன் தொட்டு அழகு இழைத்த அத்தொழில்கள் - அவன் தன் கைகளினால் தொட்டு அழகிட்ட அச் சிற்ப வேலைகள், திணியும் - இணையற்ற அழகினால் செறிந்து விளங்கும். ஆல்; அசை.

'திரு நகர் திணியும்' என்று கூட்டியும் பொருளுரைக்கலாம்; திருமால் திருமார்பில் அணியும் காசினுக்கு வேறெந்தப் பெரிய மணியும் ஈடாகாதது போல, நகர்க்கு வேறு எந்நகரும் ஈடாகாது என்பது கருத்து. 'காசினியில் வரையனைத்துங் காயாவண்ணன் கடைந்தெடுத்த கவுத்துவத்தின் சீர்மைக் கொவ்வா, காசி முதலாகிய நன்னகரி யெல்லாம்

கார்மேனி யருளாளர் கச்சிக் கொவ்வா' என்ற **தேசிகப் பிரபந்தம்,** அம்ருதாஸ்வாதிநீ 66 ஆம் செய்யுளடியோடு ஒப்பிடுக. 'இந்தக் கவி அன்மயப்பொருள்' என்பது **பழைய உரை.** தெய்வத் தச்சன் நகர் இழைத்தமை. பின்னும் (123) ஆம் செய்யுளிற் கூறப்பெறும். திருமார்பு: அழகிய மார்பும் ஆம்.

(பி-ம்.) 1. மணிக ளெத்துணை பெரியவும்.
2. காசினுக் ககன்றன.
3. திணியு நன்னகர்த் திருமனை.
4. வந்தனன் ளெட்டழகு. (8)

104. *மரம டங்கலுங் கற்பக மனையெலாங் கனகம்*
*அரம டந்தையர் சிலதிய ரரக்கியர்க் கமரர்*
*உரம டங்கிவந் துழையரா யுழல்குவ ரொருவர்*
*தரம டங்குவ தன்றிது தவஞ்செயத் தகுமால்.*

(மேலும், அந்நகரில்), மரம் அடங்கலும் கற்பகம் - மரங்களெல்லாம் கற்பக மரங்களே; மனை எலாம் கனகம் - வீடுகள் யாவும் பொன்னாலானவையே; அரக்கியர்க்கு அரமடந்தையர் சிலதியர் - அரக்கிமார்க்குத் தேவமாதர் பணிப்பெண்கள்; அமரர் உரம் அடங்கி வந்து உழையராய் உழல்குவர்-தேவர்கள் தம் வலிகுன்றி (இந்நகர்க்கு) வந்து (அரக்கர்க்கு) அருகு நின்று குற்றேவல் செய்பவராய்ச் சூழ்ந்துவருவர்; இது - இவ்வாறு அமைந்த இத்தன்மை, ஒருவர் தரம் அடங்குவது அன்று - ஒருவர் தகுதியின்பால் அடங்கக் காண்பது அன்று; (ஆதலால்), தவம் செயத் தகும் - தவமே எவரும் செய்யத்தக்கதாகும். ஆல்: அசை.

இவையெலாம் ஒருவர்க்கு வாய்ப்பன அல்ல; தவத்தினுல் பெற்றவையேயாகும்; ஆகவே எவரும் தவஞ் செய்வாராக என்பது கருத்து. ஒருவர் தரம் அடங்குவதன்று, என்றதற்கு, 'தவம் ஒருவர் கீழ் அடங்குவதன்று; ஆதலால் எவரெவர் செய்தாலும் ஆகும்' என்பது **பழைய உரை.** தவத்தின் பெருமை; 'வேண்டிய வேண்டியாங் கெய்தலால் செய்தவ. மீண்டு முயலப் படும்' (குறள். 265;) இந்நூல், 105, 113, 198, 1277; ஆரண்ய. சூர்ப்பணகைப். 18; மாரீசன்வதைப். 133; முதலியனவும் தவத்தின் பெருமைகளைக் கூறும்.

(பி-ம்.) 2. அரமடந்தைய ரரக்கியர் சிலதிய ரமரர்.
3. உழல்பவ ரொருவர்.
4. தவஞ்செய்த தவமால்; தவத்துறுஞ் செயுலே. (9)

105. *தேவ ரென்பவர் யாருமித் திருநகர்க் கிறைவற்*
*கேவல் செய்பவர் செய்கிலா தவரெவ ரென்னின்*
*மூவர் தம்முளு மிருவரென் ருலினி முயலில்*
*தாவின் மாதவ மல்லது பிறிதொன் று தகுமோ.*

தேவர் என்பவர் யாரும் - தேவர்கள் எல்லோரும், இ திருநகர்க்கு இறைவற்கு - இந்த அழகிய இலங்கை நகரின் மன்னனுகிய இராவண னுக்கு, ஏவல் செய்பவர்-பணிபுரிபவரே; செய்கிலாதவர் எவர் என்னின் - அவ்வாறு அவனுக்கு ஏவல் தொழில் செய்யாதவர் யாவர் என்று கூறு மிடத்து, மூவர் தம்முளும் இருவர் - மும் மூர்த்திகளுள் (பிரமனை அன்றி சிவபிரான், திருமால்) என்ற இருவரே, என்ருல் - என்னும்போது, இனி முயலில் - இனி முயற்சிசெய்யின், தா இல் மா தவம் அல்லது பிறிது ஒன்று தகுமோ - குற்ற மற்ற பெரிய தவமுயற்சி அன்றி வேருேர் முயற்சி செய்யத் தக்கதாகுமோ? (ஆகாது என்றபடி).

தவத்தின் பெருமை; 104 ஆம் செய்யுளின் குறிப்பைக் காண்க.

*(பி-ம்.)* 1. யாவருந் திருநகர்க்.
2. ஏவல் செய்கிலா ரேவரே யெண்வகை யுருவன்.
3. மூவர் தம்முளு மொருவனங் குழையனு முயலும்; மூவர் தம் மினு மதிகனென் ருலவன் முயலும்: அதிகமென் ருலிவன் முயன்ற. (10)

106. *போரி யன்றன தோற்றவென் றிகழ்தலிற் புறம்போய்*
*நேரி யன்றவன் றிசைதொறு நின்றமா நிற்க*
*ஆரி யன்றனித் தெய்வமாக் களிறுமோ ராழிச்*
*சூரி யன்றனித் தேருமே யிந்நகர்த் தொகாத.*

போர் இயன்றன - போரிட்டவைகளாய், தோற்ற - தோற்றுப் போயின, என்று இகழ்தலில் - என்று இகழப்பட்டமையால், புறம் போய் - அப்பாற் சென்று, நேர் இயன்ற வன் திசை தொறும், நேராகவுள்ள வலிய திசைகள் தோறும், நின்ற மா - நின்ற திக்கயங்கள், நிற்க - ஒரு புறம் நிற்க; ஆரியன் - ஐயனுர் என்னும் சாத்தாவின், தனி தெய்வ மா களிறும் - ஒப்பற்ற தெய்வத்தன்மை வாய்ந்த (வாகனமான) யானையும், சூரியன் - சூரியனுடைய, ஓர் ஆழி தனி தேருமே - ஒற்றைச் சக்கரத்தையுடைய ஒப்பற்ற தேருமே, இந்நகர் - இந்த இலங்கா புரியில், தொகாத - சேராதன; (பிற யானைகளும் தேர்களும் இங்குள்ளன என்றபடி.)

'தோற்ற அட்டகசங்களை எண்ண வேண்டாம்; ஆரியனுன பெருமான் திருத் தேரும் யானைகளும், ஆதித்தன் தேருமொழிய, மிகுந்த பொருளெல்லாம், இலங்கையி லுண்டெனக் கொள்க' என்பது பழைய உரை,

(பி-ம்,) 1. போரி யைந்தன.
2. நின்ற கைமாக்கள்.
3. ஆரியன்றனி யைங்கரக் களிறு; ஆரியன்றன தெய்வதப் பரியும். (11)

107. *வாழு மன்னுயிர் யாவையு மொருவழி வாழும்*
*ஊழி நாயகன் றிருவயி றொத்துள திவ்வூர்*
*ஆழி யண்டத்தி னருக்கன்ற னலங்குதேர்ப் புரவி*
*ஏழு மல்லன வீண்டுள குதிரைக ளெல்லாம்.*

இவ்வூர் - இந்த இலங்காநகரமானது, வாழும் மன்னுயிர் யாவையும் ஒருவழி வாழும் - உலகில் வாழும் நிலைபெற்ற உயிர்களெல்லாம் ஓரிடத்தில் கூடி வாழும், ஊழி நாயகன் திருவயிறு ஒத்துளது - ஊழி இறுதியின் உறையுளாக விளங்கும் நாயகனான திருமாலின் திரு வயிற்றை ஒத்திருந்தது: ஆழி அண்டத்தின்-வட்டமாயுள்ள அண்டத்திலுள்ள (குதிரைகளுள்), அருக்கன்தன் - சூரியனுடைய, அலங்கு தேர் - அசைகின்ற தேரில் கட்டியுள்ள, புரவி ஏழும் அல்லன - குதிரைகள் ஏழும் அல்லாதன வான, குதிரைகள் எல்லாம்-எல்லாக் குதிரைகளும், ஈண்டு உள - இங்கு இருக்கின்றன.

முன் செய்யுளில் யானைகளையும் தேரையும் சொல்லி, இங்குக் குதிரைகளைக் கூறியது.

(பி-ம்,) 1. ஒருவழி வாழ.
4. ஏழு மல்லதீங் கிண்டுள புரவிக ளெல்லாம்; குதிரையு மெல்லாம். (12)

108. *தழங்கு பேரியி னரவமும் தகைநெடுங் களிறு*
*முழங்கு மோதையு மூரிநீர் முழக்கொடு முழங்கும்*
*கொழுங்கு ரற்புதுக் குதலையர் நூபுரக் குரலும்*
*வழங்கு பேரருஞ் சதிகளும் வயின்றொறு மறையும்.*

தழங்கு பேரியின் அரவமும் - ஒலிக்கின்ற முரசின் ஒலியும், தனி நெடும் களிறு முழங்கும் ஓதையும் - சிறப்பமைந்த பெரிய யானைகள் முழங்கும் முழக்கமும், மூரிநீர் முழக்கொடு முழங்கும் - பெரிய நீரை யுடைய கடலின் முழக்கொடு கலந்து ஒலிக்கும்; கொழும் குரல் புது குதலையர் - வளப்பம் பெற்ற குரலோடு, (பேசும் போதெல்லாம்) புதியனவாகத் தோன்றும் குதலைச் சொற்களை வழங்கும் மகளிருடைய நூபுரக் குரலும் - சிலம்பின் ஒலியும், வழங்கு பேர் அருஞ் சதிகளும்- அவர்கள் செய்யும் பெரிய அரிய தாளவொத்துக்களும், வயின் தொறும்- இடந்தொறும், அறையும் - ஒலிக்கும்.

முதலிரண்டடிகளில் படைக்களிப்பும், பின் இரண்டடிகளில் மகளிர் கலைக்களிப்பும் கூறப்பெற்றன. வயின்றொறு மறையும் என்றதற்கு இடந்தோறும் ஒன்று கூடி அடங்கும் என்றும் பொருள் கொள்ளலாம், குதலை - திருந்தாமொழி.

(பி-ம்.) 1. தழங்கு பேரியி னுர்கலி தகைநெடுங் களிறு.
2. ஓதையின் மூரிநீர்: முழக்கினும் முழங்கும்.
3. கொழுங்கு ழற்புதுக் குதலையர்: நுபுரக் குரலின்.
4. வழங்கு மேகலைக் கிண்கிணி: வயின்றொறு மலையும். (13)

109. *மரக தத்தினு மற்றுள மணியினு மமைத்த*
*குரக தத்தனித் தேரெலா முறைந்திடுங் கூடம்*
*இரவி வெட்கிட விமைக்கின்ற வியற்கைய வென்றால்*
*நரக மொக்குமா னன்னெடுந் துறக்க மிந் நகர்க்கு.*

மரகதத்தினும் மற்றுள மணியினும் அமைத்த - மரகதத்தினாலும் பிற மணிகளாலும் அமைக்கப்பெற்ற, குரகத தனி தேர் எலாம் உறைந்திடும் கூடம் - குதிரைகள் கட்டிய ஒப்பற்ற தேர்களெல்லாம் தங்கியிருக்கும் தேர்ச்சாலைகள், இரவி வெட்கிட இமைக்கின்ற இயற்கைய - கதிரவனும் நாணும்படி ஒளி வீசும் தன்மையன, என்றால் - என்று கூறினால், இ நகர்க்கு - இந்த இலங்காபுரிக்கு (ஒப்பிடும்போது), நல் நெடும் துறக்கம் - நல்லதென்று எல்லாராலும் சிறப்பிக்கப் பெறும் பெரிய சுவர்க்கம், நரகம் ஒக்கும் - நரகத்துக்கு ஒப்பான இழிவடைவதாகும். ஆல்: அசை.

நல்நெடுந்துறக்கம் - அழகிய பெரிய சுவர்க்கம் என்னலும் ஆம். 'அமராவதியும் நரகமா மந்தமா நகர்க்கே' என்ற *பிரபுலிங்கலீலையின்* செய்யுட்பகுதியை இஃது ஒக்கும்.

(பி-ம்.) 1. மணியினும் வனைந்த.
2. தேரெலா மிமைப்பில் பல்கோடி; தடந் தேரினமலைவபயில் கொட்டில் : தேரெலா மமைப்பன கூடம்.
3. இரவி வெட்கிநின் றிமைக்கின்ற. (14)

110. *திருகு வெஞ்சினத் தரக்கருங் கருநிறந் தீர்ந்தார்*
*அருகு போகின்ற திங்களு மறுவற்ற தழகைப்*
*பருகு மிந்நகர்த் துன்னொளி பரத்தலிற் பசும்பொன்*
*உருகு கின்றது போன்றுள துலகுசூ ழுவரி.*

அழகைப் பருகும் இ நகர் துன் ஒளி பரத்தலில் - அழகை உட்கொண்டு விளங்கும் இந்த நகரத்தின் நிறைந்த ஒளியின் பரவுதலால், திருகு வெம் சினத்து அரக்கரும் கரு நிறம் தீர்ந்தார் - மாறுபட்ட கொடிய சினத்தை (இயற்கையாகக்) கொண்ட அரக்கரும் தம் கரிய நிறத்தினின்று நீங்கினர்; அருகு போகின்ற திங்களும் மறு அற்றது - (மாடங்களுக்கு) அருகே செல்கின்ற சந்திரனும் தன் இருட்கறை நீங்கப் பெற்றது; உலகு சூழ் உவரி - உலகைச் சூழ்ந்து நிற்கும் (கருங்) கடல், பசும்பொன் உருகுகின்றது போன்றுளது - பசும்பொன் உருகுவது போன்று பிரகாசித்தது.

அழகைப் பருகும் என்பதற்கு, காண்போர் விரும்பிப் பருகுவது போன்ற என்றும் பொருள் கூறலாம்.

(பி-ம்.) 1. திருகு நுஞ்சினத் தரக்கருங்: அரக்கர்தம்.
2. மறுவற்றவழகை.
3. துன்னொளி பாய்தலின். (15)

111. *அண்ட முற்றவும் விழுங்கிரு ளகற்றிநின் றகல்வான்*
*கண்ட வத்தனிக் கடிநகர் நெடுமனை கதிர்கட்*
*குண்ட வாற்றலென் றுரைப்பரி தொப்பிடிற் றம்முன்*
*விண்ட வாய்ச்சிறு மின்மினி யென்னவும் விளங்கா.*

அ தனி கடி நகர் - அந்த ஒப்பற்ற காவலமைந்த நகரிலுள்ள, நெடு மனை - உயர்ந்த மாடங்கள், அண்டம் முற்றவும் விழுங்கு இருள் அகற்றி நின்று - அண்டங்கள் முழுவதும் விழுங்குவதுபோல் சூழ்ந்திருந்த இருளைப் போக்கி நின்று, அகல் வான் கண்ட - அகன்ற ஆகாயமளாவி நின்றன; அ ஆற்றல் - அத்தகைய வலிமை, கதிர்கட்கு உண்டு என்று உரைப்பரிது-பன்னிரு சூரியர்களுக்கும் (பிற ஒளிகட்கும்) உண்டு என்று கூறுதல் இயலாது; ஒப்பிடில் - (அக்கதிர்களுக்கும் இந்நகர மாடங்களுக்கும்) ஒப்புமை கூறுவோமானல், தம்முன் - அம்மாடங்களின் முன்னே, விண்ட வாய் சிறு மின்மினி என்னவும் விளங்கா - பிளந்த வாயையுடைய சிறிய மின்மினிப் பூச்சிகள் என்று சொல்லும்படியும் (அவை) பிரகாசிக்கமாட்டா.

கதிர்கள் மின்மினி என்னவும் விளங்காமை; தக்க. 88. இக்கருத்தினைப் பின்னும் 193 ஆம் செய்யுளிலுங் காண்க.

(பி-ம்.) 1. அகற்றுநின் றலரி; அகற்றிநின் றலர்வ.
2. கண்ட வாற்றினிக் கடிநகர்.
3. உண்ட வாற்றினென் றுரைப்பரி தொப்பிடிற் றன்முன்; உண்ட மாற்றமொன்று.
4. மின்மினி என்னவும் விளங்கான். (16)

12. *தேனுஞ் சாந்தமு மான்மதச் செறிநறுஞ் சேறும்*
*வான நாண்மலர் கற்பக மலர்களும் வயமாத்*
*தான வாரியி னீரொடும் படுத்தலிற் றழீஇய*
*மீனுந் தானுமோர் வெறிமணங் கமழுமால் வேலை.*

தேனும், சாந்தமும், மான்மத செறி நறும் சேறும், வான மலர் நாள் கற்பக மலர்களும் - தேன், சந்தனம், கத்தூரி கலந்து சேர்ந்த நறு மணக் கலவைக் குழம்பு, வானில் என்றும் மலர்ந்து விளங்கும் அன்று பூத்த கற்பக மலர்கள் (ஆகியவை), வயமா தான வாரியின் நீரொடும் - வலிமை மிகுந்த யானைகளின் மதவெள்ளத்துடன் (கலந்து), வேலை படுத்தலில் - கடல் நீரோடு கலத்தலினால், தானும் - அவ்வேலையும், தழீஇய மீனும் - அதனிலுள்ள மீன்களும், ஓர் வெறி மணம் கமழும் - ஒப்பற்ற நறுமணம் வீசுவன வாகும். ஆல்: அசை.

மணப்பொருள்களின் கலப்பினால் கடல்நீர் மணம் பெறுதல்; பால. நாட்டுப். 11; நைடத. நாட்டுப். 11. முன் 10 ஆம் செய்யுளில் மணப் பொருள்கள் கலத்தலினால் நீரிலுள்ள அன்னங்கள் நிறம் மாறினமை கூறப்பெற்றது; இங்கு மீன்கள் மணம் பெற்றமை கூறப்பெற்றது. தேன் பூசப்படும் பொருள்களில் ஒன்று.

(பி-ம்.) 2. கற்பக வலர்களும் வயமரன்.
3. தான வாரியு நீரொடு மடுத்தலிற் றழீஇய; தரன வாரிய நீரொடு.
4. கமழுமாம் வேலை; கமழுமவ் வேலை. (17)

113. *தெய்வத் தச்சனைப் புகழ்துமோ செங்கண்வா ளரக்கன்*
*மெய்யொத் தாற்றிய தவத்தையே வியத்துமோ விரிஞ்சன்*
*ஐயப் பாடிலா வரத்தையே மதித்துமோ வறியாத்*
*தொய்யற் சிந்தையேம் யாவரை யாதென்று துதிப்பேம்.*

(இந்நகர்ப் பெருமையைக் காணுமிடத்து), தெய்வ தச்சனை புகழ்துமோ - (இதனை அமைத்துக் கொடுத்த) தேவ சிற்பியான விசுவகருமனைப் புகழ்வோமோ? செங்கண் வாள் அரக்கன் மெய் ஒத்து ஆற்றிய தவத்தையே வியத்துமோ - சிவந்த கண்களையுடைய கொடிய அரக்கனான இராவணன், தன் உடலை வருத்திச் செய்த தவத்தை வியப்

போமோ? விரிஞ்சன் ஐயப்பாடு இலா வரத்தையே மதித்துமோ - பிரம தேவன் எவரும் ஐயுற இடமிலாது அளித்த வரத்தை மதிப்போமோ? அறியா - இன்னதென்று சொல்லுதற்கு அறியாத, தொய்யல் சிந்தையேம் - தளர்ந்த மனமுடைய யாம், யாவரை - மேற்கூறிய மூவருள் எவரை, யாது என்று துதிப்பேம் - எவ்வாறு புகழ்வோம்?

இலங்கையைத் தெய்வத்தச்சன் இயற்றியது; 103. மெய், உண்மையும் ஆம். அரக்கன் தவத்தொழில்; 105. வாளரக்கன் - வாளேந்திய அரக்கன் எனினுமாம். தொய்யல் - சஞ்சலம்.

(பி-ம்.) 2. வியத்துமோ விதியோன்.
4. சிந்தையாம்; சிந்தையேன்: துதிப்பாம்; துதிப்பேன் (18)

வேறு.

114. வானும் நிலனும் பெறுமாறினி மற்று முண்டோ
கானும் பொழிலு மிவைசெங்கன கத்தி னாலும்
ஏனம் மணியா லு மியற்றிய வேனும் யாவும்
தேனும் மலருங் கனியுந்தரச் செய்த செய்கை.

கானும் பொழிலும் இவை - காடும் சோலைகளும் ஆகிய இவை, செம் கனகத்தினாலும் ஏனை மணியாலும் இயற்றியவேனும் - செம்பொன்னாலும் பிற மணிகளாலும் இயற்றப்பட்டிருந்தும், யாவும் - அங்குள்ள மரங்களெல்லாம், தேனும், மலரும், கனியும் தர செய்த செய்கை- தேன், மலர், பழம் ஆகியவற்றை இயற்கை மரங்களைப் போல் தரப் பண்ணின செயல், வானும் நிலனும் இனி பெறுமாறு மற்றும் உண்டோ- விண்ணுலகமும் மண்ணுலகமும் இவ்வாறு பெறும் வழி வேறெங்கேனும் உண்டோ? (இல்லை என்றபடி).

இவ்வற்புதம் இராவணன் தவத்தால் விளைந்தது என்பது கருத்து. இக்கவி விற்பூட்டுப் பொருள்கோளின் பாற்படும். ஏனம்மணி என்பதில் மகரவொற்று எதுகை நோக்கி மிக்கது.

(பி-ம்.) 1. வானும் நிலனு மதில்மற்றினி மாறு முண்டோ; நிலனு மெனு மற்றினு மாறு முண்டோ.
3. ஏனைமணி தன்னி னியற்றிய வேனும் யாவும்: இயற்றியவேறும் யாவும்.
4. தேனுங் கனியு மலருந்தரச். (19)

115. நீரும் வையமு நெருப்புமே னிமிர்நெடுங் காலும்
மாரி வானமும் வழங்கல வாகுந்தம் வளர்ச்சி
ஊரி னிந்நெடுங் கோபுரத் துயர்ச்சிகண் டுணர்ந்தால்
மேரு வெங்ஙனம் விளர்க்குமோ முழுமுற்றும் வெள்கி,

ஊரின் இநெடும் கோபுரம் - இலங்காபுரியிலுள்ள இந் நீண்ட கோபுரங்கள், தம் வளர்ச்சி - தம் உயரத்தால், நீரும், வையமும், நெருப்பும் மேல் நிமிர் நெடுங்காலும், மாரி வானமும் வழங்கல ஆகும் - நீர், பூமி, நெருப்பு, மேலே நிமிர்ந்து ஓங்கும் பெருங்காற்று, மேகங்களைக் கொண்ட ஆகாயம் (என்ற ஐம்பூதங்களும்) இந் நகரத்துள் புகுந்து சஞ்சரிக்க முடியாதனவாகச் செய்யும்; உயர்ச்சி கண்டு உணர்ந்தால் . அக்கோபுரங்களின் உயரத்தைப் பார்த்து மனத்தில் எண்ணினால், மேரு- மேருமலையானது, வெள்கி - வெட்க முற்று, முழுமுற்றும் - தன் உருவம் முற்றும், எங்ஙனம் விளர்க்குமோ - எவ்வாறு வெளுப்புற்றுச் சோருமோ;-?

நீர் முதலியன வழங்கலவாகும் என்றமையால் ஊழியணுகாதது என்பது கூறப்பெற்றது; இவ்வாறே 118 ஆம் செய்யுளும் கூறும். அன்றியும், ஐம்பூதங்களும் கலந்த மயக்கம் உலகம் என்ற இயற்கைக்கு மாறாக அமைந்தது இலங்கை என்ற கருத்தும் இங்குத் தொனிப்பது காண்க; இப்பொருளில், வழங்கல், செய்தல் என்று பொருள்படும். முழு முற்றும்; *சீவக.* 1870. இச் செய்யுளின்பின் சில சுவடிகளில் **'தீய செய்குநகர்'** (117) என்ற செய்யுள் காணப்படுகிறது.

(பி-ம்.) 2. வாரி வானமும்: ஆகுந்தன் வளர்ச்சி.
3. ஊரி னன்னெடுங் கோபுரத்து; ஓரி னின்னெடுங் கோபுரத்து.
4. எங்ஙனம் வெளுக்குமோ: உட்குமோ வுடன்முற்றும் வெள்கி. (20)

116. *முன்னம் யாவரு மிராவணன் முனியுமென் றெண்ணிப்*
*பொன்னின் மாநகர் மீச்செலான் கதிரெனப் புகல்வார்*
*கன்னி யாரையி னுயர்ச்சிகண் டிதுகடப் பரிதென்*
*றுன்னி நாடொறும் விலங்கினன் போதலை யுணரார்.*

முன்னம் - முன்பு, யாவரும் - எல்லோரும், கதிர் - சூரியன், கன்னி ஆரையின் - காவன்மிக்க மதில்களின், உயர்ச்சி கண்டு - உயர்ச்சியைப் பார்த்து, 'இது கடப்பரிது என்று உன்னி - இம்மதில்களை கடப்பது என்றால் இயலாதது' என்று எண்ணி, நாடொறும் - தினந்தோறும், விலங்கினன் போதலை - அம்மதில்களினின்று விலகிப் போதலை, உணரார் - உணராதவர்களாய்' 'இராவணன் முனியும்' என்று எண்ணி பொன்னின் மாநகர் மீ செலான் எனப் புகல்வார் - '(அவ்வாறு கடந்தால்), இராவணன் கோபிப்பான்' என்று நினைத்துப் பொன்னாலாகிய அந்தப் பெரிய நகரத்தின் மேலே செல்வதில்லை' என்று கூறினர். (அவ்வாறு அவர்கள் கூறியது குற்றம் என்றபடி).

இக்கருத்து பின்னும் 158 இல் கூறப்படும்.

(பி-ம்.) 1. முளியுமென் றஞ்சிப்.
2. கதிரென்பர் புலவர்.
3. கன்னி யாரையி னொளியிலிற் கண்வழுக் குறுதல்: உயர்ச்சி யென்றிது.
4. போதலை உணரா. (21)

117. *தீய செய்குந ரமரரா லனையவர் சேரும்*
*வாயி லல்லதோர் வரம்பமைக் குவெனென மதியாக்*
*காய மென்னுமக் கணக்கறு பதத்தையுங் கடக்க*
*ஏயு நன்மதி லிட்டனன் கயிலையன் றெடுத்தான்.*

அன்று கயிலை எடுத்தான் - முன்னொரு காலத்தில் கயிலாய மலையைத் தூக்கிய இராவணன், 'தீய செய்குநர் அமரர் - தனக்குத் தீமை செய்பவர் தேவர்; (ஆகையால்), அனையவர் - அத்தேவர், சேரும் ஓர் வாயில் அல்லது - வரக்கூடிய ஒரே வழியை அல்லது (அதாவது, நகர வாயில் அல்லது), வரம்பு அமைக்குவென் தடை அமைப்பேன், என மதியா - என்று எண்ணி, காயம் என்னும் கணக்கு அறு அ பதத்தையும் கடக்க - ஆகாயம் என்ற எல்லையற்ற அந்த இடத்தையும் தாண்டி அப்புறம் செல்லும் படியாக, ஏயும் நல் மதில் இட்டனன் - பொருந்த வலியமைந்த மதிலைச் சுற்றி அமைத்தனன், ஆல்: அசை.

இதுவும் மதிலின் வருணனை. காயம் - ஆகாயம்; முதற்குறை. பதம் - இடம். 'இந்தக் கோட்டை வாசலிலே தேவர்கள் வருவதொழிய மற்றப்படி வரமாட்டார் எனப் பொருள்' என்பது பழைய உரை. தேவர்கள் வருவதற்கு வாயிலை விட்டு, பிற இடங்களை மதிலால் அடைத்து விட்டான் என்க. இப்படிக்கன்றி, தேவர்கள் வருவதற்கே வழியில்லாமல் மதில் அமைத்தனன் என்ற பொருளும் அமைவது காண்க.

(பி-ம்.) 1. தீய செய்பவர் தேவரால்: எனையவர் சேரும்.
2. லில்லதோர்: அமைக் குவமென.
3. பதத்தையுங் கடந்த.
4. நன்மதி லெடுத்தனன். (22)

118. *கறங்கு கால்புகா கார்புகா கதிர்புகா கனலி*
*மறம்பு காவெனின் வானவர் புகாரெனல் வம்பே*
*திறம்பு காலத்தும் யாவையுஞ் சிதையினுஞ் சிதையா*
*அறம்பு காமையா லழியுமிப் பதியென வயிர்த்தான்.*

(இந்நகரினுள்), கறங்கு கால் - சுழன்று வீசும் காற்றுக்கள், புகா - நுழைய மாட்டா; கார் - மேகங்கள், புகா - புகமாட்டா; கதிர்புகா -

சூரியன் கதிர்கள் நுழையமாட்டா; கனலி - நெருப்பின், மறம்-கொடுஞ் செயல்கள், புகா - புகமாட்டா; எனின் - என்று கூறுமிடத்து, வானவர் புகார் எனல் வம்பே - தேவர்கள் (மறங்கொண்டு) புகார் என்று கூறல் வீண் சொல்லே; திறம்பு காலத்தும் - உலகம் மாறுபட்டழியும் ஊழிக் காலத்திலும், யாவையும் சிதையினும்-பிற எல்லாம் அழியினும், சிதையா அறம் - அழிவுபெறாத அறம், புகாமையால் - இந்நகரினுள் புகாமையால், இப்பதி அழியும் என - (வேறு வகையால் அழிவைப் பெறமாட்டாத) இந்நகரம் அழிவடையும் என்று, அயிர்த்தான் -(அநுமன்)சந்தேகித்தான்.

இப்பாடல் ஒரு சுவடியில் இல்லை'

(பி-ம்.) 1. கதிரவ னொளிபுகா மறலி.
2. மறம்பு காதினி வானவர் புகரரென்கை வம்பே: மறம்புகா
3. திறம்பு காலங்கள் யாவையும். [தெனில்.
4. அறம்பு காதிந்த வணிமதிட் கிடக்கைநின் றகத்தின். (23)

119. *கொண்டல் வான்றிரைக் குரைகட லிடையதாய்க் குடுமி*
*எண்ட வாவிசும் பெட்டநின் றிமைக்கின்ற வியல்பால்*
*பண்ட ராவணைப் பள்ளியா னுந்தியிற் பயந்த*
*அண்ட மேயுமொத் திருந்ததிவ் வணிநக ரமைதி.*

கொண்டல் வான் திரை குரை கடல் இடையது ஆய் - மேகங்கள் படிந்த பெரிய அலைகள் ஒலிக்கின்ற கடலின் இடையே (நகரம்) உள்ள தாய், குடுமி - (மாடங்களின்) சிகரங்கள், எண் தவா விசும்பு எட்ட நின்று - எண்ணின் அளவுக்கு உட்படாத உயரத்தில் உள்ள ஆகா யத்தை எட்டும்படி நின்று, இமைக்கின்ற இயல்பால் - ஒளிவீசும் தன்மையால், இ அணி நகர் அமைதி - இந்த அழகிய நகரத்தின் அமைப்பு, அராவணை பள்ளியான் பண்டு உந்தியில் பயந்த - பாம்புப் படுக்கையைக் கொண்ட திருமால் முன் தன் உந்தி நின்றும் பெற்ற, அண்டமேயும் ஒத்திருந்தது - (இரணிய கருப்பம் என்னும்) பொன் முட்டையையும் ஒத்தது.

இலங்கை பொன்னாலமைந்த தாதலின் அது இரணிய கருப்பம் ஒத்தது என்க. 'ஈன்றானை யீன்ற சுவணத்தனி யண்டம்' (41) என்று முன்னே கூறினமையும் காண்க. எண் தவா - நினைக்க முடியாத உயரத்தி லுள்ள எனினும் அமையும்.

(பி-ம்.) 1. கொண்ட வான்றிரைக்.
2. இமைக்கின்ற வெழிலால்; அழகால்.
3. பண்டை யாலிலைப் பள்ளியா னுந்தியிற் பயந்த.
4. அகநக ரமைதி. (24)

120. *பாடு வார்பல ரென்னின்மற் றவரினும் பலரால்*
*ஆடு வாரெனி னவரினும் பலருள ரமைதி*
*கூடு வாரிடை யின்னியங் கொட்டுவார் வீடில்*
*வீடு காண்குறுந் தேவரால் விழுநடங் காண்பார்.*

(நடனத்தில்), பாடுவார் பலர் என்னின் - வாய்ப்பாட்டுப் பாடுவார் பலர் என்ருல், அவரினும் மற்று பலர் ஆடுவார் - அவர்களைக் காட்டிலும் பிற பலர் ஆடுபவர்கள்: எனின் - இவ்வாறு கூறினல், அமைதி கூடுவார் - சுருதி கூட்டுவாரும், இடை இன்னியம் கொட்டுவார் - நடுவே மத்தளம் முதலிய இனிய வாத்தியங்கள் கொட்டுவாரும், அவரினும் பலர் உளர் - ஆடுபவர்களை விடப் பலர் உளர்; (இவ்வாறு அந்நகர் வாழ்வோர்), வீடில் வீடு காண்குறும் தேவரால் - தடையில்லாத விடுதலையைக் காண விரும் பும் தேவர்களால் (செய்யப்படும்), விழு நடம் காண்பார் - சிறந்த நடனங்களைக் காண்பார்கள். ஆல்: அசை.

அரக்கர் காண்பார் என்று வருவிக்கப்பட்டது. தேவரால் என்பதில், ஆல், என்பதனை அசையாகக் கொண்டு அரக்கர் ஆடத் தேவர் காண் பார் என்று முடிப்பதும் ஒன்று. அமைதி கூடுவார் இடை இன்னியம் என்பதற்குச் சுருதியோடு பொருந்த வாரினல் பிணிக்கப்பெற்ற இனிய மத்தளம் என்றும் பொருள் கூறுவர்.

(பி-ம்.) 1. பல ரெண்ணின்.
2. ஆடு வார்கண்மற் றவரினும்.
3. கொட்டுவார் முட்டில்.
4. வீடு காண்குறு தேவரால். (25)

121. *வான மாதரோ டிகலுவர் விஞ்சையர் மகளிர்*
*ஆன மாதரோ டாடுவ ரியக்கிய ரவரைச்*
*சோனை வார்குழ லரக்கியர் தொடர்குவர் தொடர்ந்தால்*
*ஏனை நாகிய ரருநடக் கிரியையாய்ந் திருப்பார்.*

(நடனமாடுவதில்), விஞ்சையர் மகளிர் வான மாதரோடு இகலுவர்- வித்தியாதரப் பெண்கள் தேவமாதரோடு போட்டியிட்டு நடனமாடுவர்; ஆன மாதரோடு - அப்படி இகலிய விஞ்சையர் மாதரோடு, இயக்கியர் ஆடுவர் - இயக்கமாதர் போட்டியிட்டு ஆடுவர்; அவரை - அவ்வியக்கி யரை, சோனை வார் குழல் அரக்கியர் - கருமேகம் போன்ற நீண்ட கூந்தலையுடைய அரக்கர் மாதர்கள், தொடர்குவர்-தொடர்ந்து போட்டி யிட்டு ஆடுவார்கள்; அவ்வாறு தொடர்ந்தால் - தொடர்ந்து ஆடுமிடத்து, ஏனை-எஞ்சியிருந்த, நாகியர்-நாகலோக மகளிர், அரு நட கிரியை ஆய்ந்து இருப்பார் - நடனத்துக்கு வேண்டிய அரிய கிரியைகளை ஆராய்ந்திருப் பார்கள்.

(பி-ம்.) 4. நடச் சதியமைத் திடுவார். (26)

122. *இழையு மாடையு மாலையுஞ் சாந்தமு மேந்தி*
*உழைய ரென்னநின் றுதவுவ நிதியங்க ளொருவர்*
*விழையும் போகமே யிங்கிது வாய்கொடு விளம்பில்*
*குழையு நெஞ்சினுல் நினையினு மாசென்று கொள்ளும்.*

நிதியங்கள் - சங்கம் முதலிய ஒன்பது நிதிகளும், உழையர் என்ன நின்று-ஏவலாளர் என்று சொல்லும்படி அமைந்து, (அரக்கியர்களுக்கு), இழையும், ஆடையும், மாலையும், சாந்தமும் ஏந்தி உதவுவ - அணிகலன் களையும், ஆடைகளையும், மாலைகளையும், சந்தனங்களையும் கைகளிற் சுமந்து கொண்டு உதவுவனவாம்; இங்கு ஒருவர் விழையும் போகமே இது - இவ்விலங்கையிலுள்ள அரக்கியர் ஒருவர் விரும்பிப் (பெறும்) போகமே இத்தகையது ஆகும்; வாய் கொடு விளம்பில் குழையும் - போகத்தின் சிறப்பை வாயினுல் சொல்லப்புகின் வாய் சோர்வுறும்; நெஞ்சினுல் நினையினும் மாசென்று கொள்ளும் - மனத்தால் நினைத்தால் (அச்சிறப்பு மனத்துக்கு எட்டாததலால்) நினைப்பதும் குற்றமாகும்.

இலங்கையிலுள்ளவர் விரும்பிய மாத்திரத்தில் நுகரும் போகம் சொல்லுக்கும் நினைப்பிற்கும் எட்டாது என்றபடி. நிதியங்கள் ஒன்பதா வன: மகாபதுமம், பதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம் நீலம் வரம் என்பன. நிதியங்கள் உதவுதல்; ஒப்பு: ஆரண்ய. மாரீசன் வதைப். 19. நினையினும் மாசு கொள்ளுதல்; ஒப்பு: பால. தாடகை வதைப். 5-6;சீவக. 1186.

(பி-ம்.) 1. இழையு மாலையு மாடையும்.
2. உழைய ரென்றுவந் துதவுவா ரும்பர்மா மகளிர்:
உதவுவா ரமரர்தம் மகளிர்.
4. நினைப்பினு மாசென்று. (27)

123. *பொன்னின் மால்வரை மேன்மணி பொழிந்தன பொருவ*
*உன்னி நான்முகத் தொருவனின் றூழ்முறை யுரைப்பப்*
*பன்னி நாள்பல பணியுழந் தரிதினிற் படைத்தான்*
*சொன்ன வானவர் தச்சனு மிந்நகர் துதிப்பான்.*

இந் நகர் - இந்த இலங்கா நகரை, நான்முகத்தொருவன் - பிரமதேவ னுல், உன்னி நின்று- ஆராய்ந்து, ஊழ் முறை பன்னி உரைப்ப - அமைக்க வேண்டிய முறையை விளக்கிச் சொல்ல, சொன்ன-அவ்வாறு சொல்லப் பெற்ற, வானவர் தச்சன் - தெய்வத் தச்சனுன விசுவகருமன், துதிப்- பான் - யாவரும் கண்டு கொண்டாடும் வண்ணம், பொன்னின் மால்வரை

மேல்-பொன்னாலாகிய பெரிய மேருவின் மீது, மணி பொழிந்தன பொருவ- இரத்தினங்களைப் பொழிவதை ஒக்கும்படி, பலநாள் பணி உழந்து - பல நாட்கள் தொழிற்பட்டு வருந்தி, அரிதினில் படைத்தான் - அருமையாக உண்டாக்கினான். ஆம்: அசை.

சொன்ன என்றதற்கு, முன்னே 103-ஆம் செய்யுளில் சொல்லப்பட்ட என்றும் பொருள் கொள்ளலாம். துதிப்பான் படைத்தான் என்க.

(பி.-ம்.) 1. பொழிந்தனன் பொருந்தி; பொழிந்தெனப் பொருந்தி.
2. ஊழ்முறை யுரைக்க.
3. பணியுழன் றரிதினிற்.
4. இந்நகர் துதிப்பாம். (28)

*124. மகர வீணையின் மந்தர கீதத்து மறைந்த*
*சகர வேலையி னார்கலி திசைமுகந் தழுவும்*
*சிகர மாளிகைத் தலந்தொறுந் தெரிவையர் தீற்றும்*
*அகரு தூமத்தி னழுந்தின முகிற்குல மனைத்தும்.*

மகர வீணையின் மந்தர கீதத்து - (அந்நகரில்) மகரமீனின் உருவம் பொருந்திய வீணையிலிருந்து எழும் படுத்தலோசையினுள், சகர வேலையின் ஆர்கலி மறைந்த - சகரர்களால் தோண்டப்பெற்ற கடலின் பேரொலிகள் அடங்கி விட்டன; சிகர மாளிகை - (அந்நகரத்து), சிகரங்களை யுடைய மாளிகைகளின், திசைமுகம் தழுவும் தலம் தொறும் - எல்லைப் புறம் மட்டும் செல்லும் (மேல்) தளங்கள் தோறும் (வாழும்), தெரிவையர் - பெண்டிர், தீற்றும் - (தம் கூந்தலுக்கு) ஊட்டும், அகரு தூமத்தின் - அகிற்புகைப் பரப்பில், முகிற்குலம் அனைத்தும் அழுந்தின - மேகக்கூட்டம் முழுமையும் அடங்கிவிட்டன.

கீத ஒலியின் பெருமையும், அகிற்புகையின் பெருமையும் இங்குக் கூறப்பட்டன; இவற்றால் பெண்டிரின் கலைச் சிறப்பும் கூறியவாறாம். 'மந்தர, மத்திம, தாரமிவை' (கல்லா. 21. 50); 'மந்தரம்-மிகத்தாழ்ந்த ஒலியுள்ளது', ('மகாபாரத சூடாமணி. 46. குறிப்); 'மார்பு, தொண்டை சிரம் இவற்றிலிருந்து வெளியாகும் நாதங்கள் முறையே மந்தரம், மத்யம், தாரம் என்று பெயர் பெறும்' ராகவிபோதம். 1. 12 ஆவது சுலோகம்.

(பி.-ம்.) 1. கீதத்தின் மறைந்த.
2. திசைமுகந் தடவும்.
3. தெரிவையர் நிவந்த. (29)

**125.** *பளிக்கு மாளிகைத் தலந்தொறு மிடந்தோறும் பசுந்தேன்*
*துளிக்குங் கற்பகத் தண்ணறுஞ் சோலைக டோறும்*
*அளிக்குந் தேறலுண் டாடினர் பாடின ராகிக்*
*களிக்கின் றுரலாற் கவல்கின்று றொருவரைக் காணேம்.*

பளிங்கு மாளிகைத் தலந்தொறும் - பளிங்குக் கற்களால் அமைக்கப்பெற்ற பெரிய மாளிகைகளின் (பற்பல) இடங்களிலெல்லாம், கற்பகம் இடந்தொறும் பசுந்தேன் துளிக்கும் தண் நறும் சோலைகள்தோறும் - கற்பக மரங்கள் இடம் தோறும் புதிய தேனைத் துளிக்கின்ற குளிர்ந்த மணமிக்க சோலைகள் தோறும், அளிக்கும் - (காதலர்) அளிக்கின்ற, தேறல் உண்டு - கள்ளைப் பருகி, ஆடினர் பாடினர் ஆகி - ஆடினவராகவும் பாடினவராகவும் ஆகி, களிக்கின்றுர் அலால் - கள் மயக்கத்தால் செருக்குற்றிருக்கின்றவர்களை யல்லாமல், கவல்கின்றுர் ஒருவரைக் காணேம் - கவலையால் வருந்துவோர் ஒருவரையும் யாம் காணவில்லை.

கவல்கின்றுர் ஒருவர் என்றது சீதாப்பிராட்டியைக் குறிக்கும் என்று கருதுவாரும் உளர். பளிக்கு: வலித்தல் விகாரம்.

(பி-ம்.) 1. மாளிகைத் தடந்தொறும்; வேதிகைத் தடந்தொறும்.
3. ஆடுநர் பாடுந ராகி.
4. ஒருவரைக் காணேன். (30)

**126.** *தேறன் மாந்தினர் தேனிசை மாந்தினர் செவ்வாய்*
*ஊறன் மாந்தின ரின்னுரை மாந்தின ரூடல்*
*கூறன் மாந்தின ரணையவர்த் தொழுதவர் கோபத்*
*தாறன் மாந்தின ரரக்கியர்க் குயிரன்ன வரக்கர்.*

அரக்கியர்க்கு உயிர் அன்ன அரக்கர் - அரக்க மகளிர்களுக்கு உயிர் போன்ற அவர்களின் தலைவர்களான அரக்கர், தேறல் மாந்தினர் - (அம் மகளிர் அளித்த) மதுவைப் பருகினர்; தேனிசை மாந்தினர் - (அவர்கள் பாடும்) தேன்போல் இனிய இசையைப் பருகினர்; செவ்வாய் ஊறல் மாந்தினர் - அம்மகளிரின் சிவந்த வாயில் ஊறிவரும் (அதரபானமாகிய) அமுதத்தைப் பருகினர்; இன் உரை மாந்தினர் - அவர்களின் இனிய பேச்சுக்களைக் கேட்டனர்; ஊடல் கூறல் மாந்தினர் - அம்மகளிர் ஊடல் கொண்டு பிணங்கிக் கூறும் கடுஞ்சொற்களை விருப்புடன் ஏற்றனர்; அனையவர் தொழுது - அவ்வாறு ஊடல் கொண்டு உரைக்கும் மகளிரை வணங்கி, அவர் கோபத்து ஆறல் மாந்தினர் - அவர்களின் கோபம் ஆறிய நிலையை இன்பத்துடன் ஏற்றுக் கொண்டனர்.

(பி-ம்.) 3. தொழுதலாற் கோபத்; தொழுவெழு கோபத்; தொழுதனர் கோபத், (31)

127. *எறித்த குங்குமத் திளமுலை யெழுதிய தொயில்கள்*
*கறுத்த மேனியிற் பொலிந்தன வூடலிற் கனன்று*
*மறிக்க ணோக்கியர் மலரடிப் பங்கயப் பஞ்சில்*
*குறித்த கோலங்கள் பொலிந்தில வரக்கர்தங் குஞ்சி.*

இளமுலை குங்குமத்து எழுதிய எறித்த தொயில்கள் - அரக்கியரின் இளமுலைகளில் குங்குமக் குழம்பினால் எழுதினவும் ஒளி வீசுவனவுமான வரிக் கோலங்கள், கறுத்த மேனியில் பொலிந்தன - அரக்கரின் கரிய உடல்களில் விளங்கின; (ஆனால்), ஊடலில் கனன்று மறிக்கண் நோக்கியர் - ஊடற் பிணக்கத்தில் கோபித்து நோக்கிய மான் போன்ற கண்களை யுடைய அரக்கியரின், பங்கய மலரடி பஞ்சில் குறித்த கோலங்கள் - தாமரை மலர் போன்ற பாதங்களில் செம்பஞ்சுக் குழம்பினால் எழுதிய கோலங்கள், அரக்கர் தம் குஞ்சி பொலிந்தில - அரக்க ஆடவர்களின் தலைமயிரின்கண் விளங்கவில்லை.

எறித்தல்-ஒளிவீசுதல். தொய்யில் மேனியிற் பொலிந்தமை கூடலில்; குஞ்சியிற் பொலியாமை ஊடலில்; ஊடலில் தலைவர் தலைவியின் கால் களில் விழுந்து வணங்குதல் இங்குக் குறிக்கப்பட்டது. பொலியாமைக் குக் காரணம் செம்பஞ்சுக் குழம்பின் நிறமும் அரக்கர் குஞ்சியின் நிறமும் ஒன்றானமையால் என்க. மறி - மான்.

(பி-ம்.) 1. எழுதிய தொழில்கள்; எழுதிய தொய்யில்.
2. பொலிந்தன ரூடலிற்.
3. மறுத்து நோக்கிய; மறித்த நோக்கியர்: மலரடி மஞ்சனப் பஞ் சிற்; மலரடி மஞ்சுளப் பஞ்சி.
4. பொலிந்தன வரக்கர். (32)

128. *விளரிச் சொல்லியர் கோதையால் வேலையுண் மிடைந்த*
*பவழக் காடெனப் பொலிந்தது படைநெடுங் கண்ணால்*
*குவளைக் கோட்டகங் கடுத்தது குளிர்முகக் குழுவால்*
*முளரிக் கானக மானது முழங்குநீ ரிலங்கை.*

முழங்கு நீர் இலங்கை - ஒலிக்கின்ற நீர் சூழ்ந்த இலங்கையானது, விளரிச் சொல்லியர் கோதையால் - விளரி என்னும் பண்போன்ற பேச் சினையுடையவரின் (செங்) கூந்தலால், வேலையுள் மிடைந்த பவழக்காடு என பொலிந்தது - கடலில் செறிந்த பவழக்காடு போல விளங்கிற்று; படை நெடும் கண்ணால் - அவ்வரக்கியரின் வாட்படைபோன்ற நீண்ட கண்களினால், குவளை கோட்டகம் கடுத்தது - கரிய குவளை மலர்கள் நிறைந்த நீர் நிலையை ஒத்தது; குளிர் முக குழுவால் முளரி கானகம் ஆனது - அவர்களின் குளிர்ந்த முகங்களின் கூட்டத்தால் தாமரைக் காடாகவும் ஆயிற்று.

இலங்கை பொலிந்தது, கடுத்தது, ஆனது என்க. விளரி - இளமையும் ஆம்; **பிங்களம்.** கோட்டகம் - குளம்; 'கோட்டகம் நிலைப்பட நிறைந்தன' (சீவக. 41).

(பி-ம்.) 1. சொல்லியர் வாயினுல்; சொல்லியர் மிகுதியால்; சொல்லிய ரோதியால்; சொல்லியர் கூந்தலால்: வேலைமேல் மிடைந்தது.
2. பவளக் கோடெனப்.
4. கானமு மொத்தது. (33)

## வேறு

129. *எழுந்தனர் திரிந்து வைகு மிடத்ததா யின்று காறும்*
*கிழிந்தில தண்ட மென்னு மிதனையே கிளப்ப தல்லால்*
*அழிந்துநின் ருவ தென்னே யலருளோ ஞதி யாக*
*ஒழிந்தவே றுயிர்க ளெல்லா மரக்கருக் குறையும் போதா.*

'அண்டம் - இவ்வண்டமானது, இன்று காறும் - இன்று வரையில், எழுந்தனர் திரிந்து வைகும் இடத்ததாய் - (இலங்கை நகர) அரக்கர்கள் எழுந்து இங்குமங்கும் அலைந்து தங்கி இருக்க இடந்தருவதாய், கிழிந்திலது - பிளவாமல் நின்றது' என்னும் இதனையே - என்று (யாவரும்) கூறும் இப்பெருமையையே, கிளப்பதல்லால் - வியந்து பாராட்டுதலல்லாமல், அழிந்து நின்று - மனம் மாய்ந்து நின்று, ஆவது என்னே - ஆகக்கூடியது என்ன; (ஒருவிதமாகக் சொல்வோமானுல்), அலர் உளோன் ஆதியாக - தாமரையில் உறைபவனுன பிரமன் முதலாக, ஒழிந்த வேறு - மீதியுள்ள மற்ற, உயிர்கள்எல்லாம் - உயிர்ப் பொருள்கள் யாவும், அரக்கருக்கு உறையும் போதா-இலங்கையில் வாழும் அரக்கர்களைக் கணக்கிடுவதற்கு உறையிடவும் போதாதனவாம்.

இலங்கை மக்களின் பெருக்கம் இச்செய்யுளில் கூறப்பட்டது. அந்நகர மக்கள் நடமாட இவ்வண்டம் இடம் கொடுத்ததும் அவர்களின் பெருந்தொகையால் அண்டம் கிழிபடாம லிருப்பதுவே வியப்பென்று கூறினமையால், அரக்கர்களின் தொகையின் மிகுதியும் மற்று அண்டத்து உயிர்களின் சிறுமையும் சுட்டப்பெற்றன. இக்கருத்தையே பின் அடி வேருெரு வகையாக விளக்குகின்றது. உறை - பெரிய எண் கணக்கைக் குறிப்பிட அடையாளமாக வைக்கும் சிறு பொருள்: 'உறையிடவும் போதார் கணக்கு வரம்புண்டோ' 605; கிட்கிந்தா. தானைகாண். 38.

(பி-ம்.) 2. கிழிந்தில வண்ட கோள மிதனையே கிளப்பி னல்லால்.
3. அழிந்துநின் றுறுவ தென்னே; அயனுளோ ஞதி யாக.
4. ஒழிந்தபே ருயிர்க ளெல்லாம். (34)

130. காயத்தாற் பெரியர் வீரங் கணக்கில ருலகங் கல்லும்
ஆயத்தார் வரத்தின் றன்மை யளவற்ரு ரறித றேற்ரு
மாயத்தா ரவர்க்கெங் கேனும் வரம்புமுண் டாமே மற்ருேர்
தேயத்தார் தேயஞ் சேறல் தெறுவிலார் செருவிற் சேறல்.

(இலங்கை நகர அரக்கர் யாவரும்), காயத்தால் பெரியர் - உடலின் உருவ அளவினுல் பெரியவர்கள்; வீரம் கணக்கு இலர் - வீரத்தன்மையி லும் அளவிட முடியாதவர்கள்; உலகம் கல்லும் ஆயத்தார் - உலகத் தையே பெயர்த்தெடுக்கும் சூழ்ச்சியை உடையவர்; வரத்தின் தன்மை அளவற்ருர் - அளவற்ற வரங்களைப் பெற்றவர்; அறிதல் தேற்ரு மாயத்தார் - பிறரால் அறியமுடியாத மாயச் செயல்களைச் செய்பவர்கள்; அவர்க்கு வரம்பும் எங்கேனும் உண்டாமே - அவர்களின் (தொகைக்கும் ஆற்றலுக்கும்) எல்லை என்பது எங்காவது உண்டாகுமா? (இல்லை என்ற படி); (ஆதலால்), மற்ருேர் தேயத்தார் -பிற நாட்டினர், தேயம் சேறல்- இந்த இலங்கை நாட்டை அடைவதென்பது, தெறுவிலார் செருவில் சேறல் - போர் வலிமையற்ற பதடிகள் போர்முகத்துக்குப் போவது போலாகும்.

'தேயத்தார் தேயம் சேறல் தெருவிலோர் தெருவிற் சேறல்' என்று பாடங் கொண்டால், ஒரு தெருவிலிருந்து மற்றொரு தெருவுக்குச் செல்லுதல் ஒரு தேயத்திலிருந்து மற்றொரு தேயத்துக்குப் போவது போலாம் என்பது பொருளாம். இச்செய்யுள் அரக்கர்களின் பெருமை களைக் கூறவந்ததேயன்றி, நகரத்தின் விரிவைக் கூருமையால் இப்பாடம் சிறக்காதென விடப்பெற்றது.

(பி-ம்.) 1. காயத்தாற் பெரிய வீரங்.
2. அளவிற்ரு மறிதல்.
4. தேயத்தார் தேயம் சேறல் தெருவிலோர் தெருவின் சேறல்;
தேயத்தார் தேயஞ் சேர்ந்தாற் றேர்விலார் செருவிற் சேறல். (35)

131. கழலுலாங் காலுங் கால வேலுலாங் கையுங் காந்தும்
அழலுலாங் கண்ணு மில்லா வாடவ ரில்லை யன்ஞர்
குழலுலாங் களிவண் டார்க்குங் குஞ்சியாற் பஞ்சி குன்ரு
மழலையாழ்க் குதலைச் செவ்வாய் மாதரு மில்லை மாதோ.

கழல் உலாம் காலும் - வீரக்கழல்கள் இயங்குகின்ற கால்களும், கால வேல் உலாம் கையும் - யமன் போன்ற கொடிய வேல் இயங்கும் கை களும், காந்தும் அழல் உலாம் கண்ணும் - ஒளி வீசும் நெருப்பு விளங்கும் கண்களும், இல்லா - இம் மூன்றையும் பெருத, ஆடவர் இல்லை - ஆண் கள் (அந்நகரில்) இல்லை; அன்ஞர் - அவ்வாடவர்களுடைய,

களி வண்டு ஆர்க்கும்-தேனைக்குடித்து மயங்கும் வண்டுகள் ஒலிக்கின்ற, குழல் உலாம்-சுருண்டு அசையும், குஞ்சியால்-தலைச்சிகையால், பஞ்சி குன்று-அவ்வாடவர் வணங்குதலால்தங்கள் பாதத்திற் பூசிய செம்பஞ்சுக் குழம்பு குறையாத, மழலை யாழ் குதலை செவ்வாய் - இனிய ஒலியை யுடைய யாழிசை போன்ற குதலை மொழியையும் சிவந்த வாயையும் உடைய, மாதரும் இல்லை-அரக்கர் மாதரும் இல்லை. மாது, ஓ: அசைகள்.

ஆடவர் வீரமும், காதலும் இங்குக் கூறப்பெற்றன. ஊடற்காலத் தில் மாதரை ஆடவர் வணங்குதல் மரபு. 'அன்னார் குழலுலாங் களி வண்டார்க்குங் குஞ்சியாற் பஞ்சி குன்று என்பது. முன் சொன்ன ஆட வர்கள் திங்குழல் போலிசைக்கும் வண்டார்க்குங் குஞ்சியினுல், ஊடிக் கொண்டு மாதர் மிதிக்கத் தலையிலே ஏற்றதினுலே செம்பஞ் சழியாத பதத்தை யுடையவர்களுமில்லை அந்த இலங்கைப் பெண்களில்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. கழலிலாக் காலுங் கால வலியிலாக் கையுங் காந்தும்.
2. அழலிலாக் கண்ணும்.
3. குழலிலாக் களிவண் டார்க்கும் : குழலுலாய்க் களிவண் டார்க் குங் கோதையி லாரு மோசை.
4. மழலையஞ் சொல்லி லாத மாதரு மில்லை மாதோ. (36)

132. கள்ளுறக் கனிந்த பங்கி யரக்கரைக் கடுத்த காதல்
புள்ளுறத் தொடரு மேனி புலா லுறக் கடிது போவ
வெள்ளுறுப் பெயிற்ற செய்ய தலையின கரிய மெய்ய
உள்ளுறக் களித்த குன்றி னுயர்ச்சிய வோடை யானை.

ஓடை யானை - (அங்நகரத்து) முகபடாங்களை யுடைய யானைகள், காதல் புள் உற தொடரும் - ஆசையால் வண்டுகள் நெருங்கித் தொடர்கின்ற, மேனி - தம் உடல்கள், புலால் உற - புலால் நாற்றம் வீசும் படி, கடிது போவ - விரைவில் செல்வன ; வெள் உறுப்பு எயிற்ற - வெள்ளை நிறத்தையுடைய தந்தங்களையுடையன ; செய்ய தலையின - சிவந்த நிறத் தலைகளையுடையன ; கரிய மெய்ய - கருநிறமான உடல் களையுடையன ; உள் உற களித்த - மனத்தில் மிகுதியாகக் களிப்புக் கொண்டன ; குன்றின் உயர்ச்சிய - குன்றுபோல உயர முடையன : (ஆதலால்) கள் உற - தேன் போல், கனிந்த - சிவந்த, பங்கி-தலைமயிரை யுடைய, அரக்கரை கடுத்த - அரக்கர்களை ஒத்தன.

'உற்ளுறக் குனித்த என்ற பாடங்கொண்டு' உள்வளைய வளைத்த என்று பழையஉரை கூறும். இச்செய்யுள் அரக்கருக்கும் யானைகளுக்கும் சிலேடையாக அமைந்துள்ளது. கள்-தேன்; தேனின் நிறம் சிவப்பு. கனிந்த-சிவந்த. யானையின் தலை சிவப்பாவது அதனிலுள்ள செந்நிறப் புள்ளிகளால் என்க.

(பி-ம்.) 2. புள்ளூறத் தொடர்வ மேனி.
3. தலையன கரிய மெய்ய.
4. உள்ளூறக் குனித்த. (37)

133. *வள்ளிநுண் மருங்கு லென்ன வானவர் மகளி ருள்ளம்*
*தள்ளுறப் பாணி தள்ளா நடம்புரி தடங்கண் மாதர்*
*வெள்ளிவெண் முறுவ றோன்று முகத்தியர் வெள்கு கின்றார்*
*கள்ளிசை யரக்கர் மாதர் களித்திடு குரவை காண்பார்.*

வள்ளி நுண் மருங்குல் என்ன - கொடியை யொத்த தம் நுண்ணிய இடையைப் போல, உள்ளம் தள்ளுற - மனமும் தடுமாற, பாணி தள்ளா நடம் - தாளம் தாழாத நடனத்தை, புரி - செய்யும் இயல்பினர்களான. தடங்கண் மாதர் வானவர் மகளிர் - அகன்ற கண்களையுடைய மாதர் களான தேவமகளிர், வெள்ளி வெண் முறுவல் தோன்றும் முகத்தியர் - வெள்ளிபோல் வெளுத்த பற்கள் விளங்கும் முகத்தினை உடையவராய், வெள்குகின்றார் - நாணமடைகின்றவர்களாகி, கள் இசை அரக்கர் மாதர்- கள் குடித்துப்பாடும் அரக்கர் மாதர்கள். களித்திடு குரவை - ஆடும் குரவைக்கூத்தை, காண்பார் - காண்பார்கள்.

வானவர் மகளிர், அரக்கர் மாதர் ஆடும் குரவை காண்பார் என்க; குரவை - கைகோத்தாடல். 'சில தெய்வப்பெண்கள் ஆடுமிடத்தில் அரக்கர் மாதர் கள்ளுண்டு புடைவைவிட்டு ஆடுகிறது கண்டு வெட்கினர், இதுபொருள்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. மருங்கு லன்ன: மருளி னுள்ளம்.
2. பாணி தள்ள ; பாணி தாழா.
3. வெள்ளிய முறுவ றோன்று மடந்தையர்.
4. களித்திடுங் குரவை. (38)

134. *ஒறுத்தலோ நிற்க மற்றெம் முயர்படைக் கொருங்கிவ் வூர்வந்*
*திறுத்தலு மெளிதா மற்றும் யாவர்க்கு மியக்க முண்டே*
*கறுத்தவா ளரக்கி மாரு மரக்கருங் கழித்து வீசி*
*வெறுத்தபூண் வெறுக்கை யாலே தூருமிவ் வீதி யெல்லாம்.*

ஒறுத்தலோ நிற்க-நம்படைகள் வந்து போர் புரிதல் என்பது இருக்கட்டும்;எம் உயர் படைக்கு-எங்கள் உயர்ந்த வானரப்படைக்கு,இவ்வூர்- இந் நகரினுள், ஒருங்கு வந்து-ஒருமிக்க வந்து, இறுத்தலும் எளிது ஆம்-

தங்குவதும் எளிதாகலாம்; மற்றும்-அப்படியிருந்தாலும், யாவர்க்கும் இயக்கம் உண்டே - அவ்வாறு வந்து தங்கும் படைவீரர் யாவர்க்கும் இங்கு நடமாட்டம் (நடமாட இடம்) கிடைக்குமோ? (கிடைக்காது என்றபடி.); (ஏனெனில்), கறுத்த வாள்-கரிய ஒளியையுடைய, அரக்கிமாரும் அரக்கரும் - அரக்கியர் அரக்கராகிய இந் நகரத்தோரெல்லாம், கழித்து - கழற்றி, வீசி வெறுத்த - வீசி வெறுப்புடன் எறிந்த, பூண் வெறுக்கையாலே - அணிகலச் செல்வங்களாலே, இ வீதி எல்லாம் தூரும் - இவ் விலங்கை வீதிகளெல்லாம் தூர்ந்து விடும். மற்று; அசை.

கறுத்து - ஊடலிற் கோபம் கொண்ட எனலும் ஆம். 'இந் நகருக்கு வருவதே பிறர்க்கு எளிதன்று; எம்படை எளிதில் இங்கு வருவதாயினும், வீதிகளில் இயங்குவது அரிது' என்று சொல்லும் முகத்தால் அந்நகரின் செல்வப் பெருக்கை அநுமன் கொண்டாடினுன் என்க. மக்கள் கழித்து வீசிய பூண்களால் வீதிகள் இயங்க முடியாமற் போயிற்று என்பதாம்; ஒப்பு: 'அவிரிழை சுமக்க லாற்ரு தங்கலார் பரிந்து நீத்த, திவளொளி மணியு முத்துஞ் சிந்திய முன்றில் தோறும், குவிமுலைக் கயவாய்ச் செங்கட் குடம்புரை செருத்தன் மேதி, கவையடி பெயர்ப்ப மாழ்கிக் கால்தளர்ந் தொதுங்கு மன்றே' (நைடதம். நாட்டுப். 19): நளவெண்பா. 13.

இச் செய்யுளில், 'தூர்ந்தது வீரையெல்லாம்' என்று பாடங் கொண்டு, 'இந்த அரக்கரைக் கொல்லுகிற காரிய மிருக்கட்டும்; அரக்கர் அரக்கியர் புணர்தற்கு வெறுத்தெறிந்த ஆபரணத்தாற் கடல் மேடானபடியினுலே நம்முடைய வானரம் முதல் உலகத்தோர் எல்லோரும் வரலாம் என்று அநுமார் நினைத்தார். இது பொருள்' என்று பழையவுரை கூறும்.

(பி-ம்.) 1. மற்றேரு முயர்படைக் கொருங்கிவ் வூர்வந்; மற்றேரு முயர்படை யொருங்கி வூர்வந். மற்றேரு முயர்படை யொதுங்கி யூர்வந்.
2. யாவர்க்கு மிலக்க முண்டாம்.
3. களித்து வீசி.
4. தூர்ந்தது வீரை யெல்லாம்; தூருமிவ் வேலை யெல்லாம். (39)

135. வடங்களுங் குழையும் பூணு மாலையுஞ் சாந்தும் யானைக்
கடங்களுங் கலின மாவி லாழியுங் கணக்கி லாத
இடங்களி னிடங்க டோறும் யாருெடு மடுத்த வெல்லாம்
அடங்கிய தென்னி லென்னே யாழியி னுழ்ந்த தூண்டோ.

(மகளிர் அணியும்) வடங்களும் - ஆரங்களும், குழையும் - குண்டலங்களும், பூணும் - அணிகலன்களும், மாலேயும்-பூமாலேகளும், சாந்தும்-சந்தனங்களும், யானேக் கடங்களும் - யானேகளின் மதப்பெருக்குக்களும், கலின மா விலாழியும் - கடிவாளம் கொண்ட குதிரைகளின் வாய் நுரைகளும், கணக்கிலாத - கணக்கிடமுடியாதனவாய், இடங்களின் இடங்கள் தோறும் - பல்வேறு இடங்களிலும், யாற்றெடு மடுத்த எல்லாம் - ஆறுகளோடு ஒன்று சேர்ந்தனவாகிய எல்லாம், அடங்கியது என்னின் - (கடலினுள்) அடங்கி விட்டது என்றல், ஆழியின் ஆழ்ந்தது என்னே உண்டு - கடலினும் ஆழமாக உள்ளது யாது உண்டு? ஓ: அசை.

விலாழி ஆழியின் ஆழ்ந்தது; ஒப்பு; பால. மிதிலேக்காட்சிப். 7.

(பி-ம்.) 3. இடங்களு மிடங்க டோறும் யாற்றெடு மெடுத்த வெல்லாம். (40)

methodical mind.

136. விற்படை பெரிதென் கேனே வேற்படை மிகுமென் கேனே
மற்படை யுடைத்தென் கெனே வாட்படை மலிவென் கேனே
கற்பணந் தண்டு பிண்டி பாலமென் றினைய காந்து
நற்படை பெரிதென் கேனே நாயகற் குரைக்கு நாளில்.

a warrior.

நாயகற்கு உரைக்கும் நாளில் - (இவ்வூரின் படைநிலைமையைப் பற்றித் தலைவஞன இராமபிரானிடம் கூறும்போது, 'விற்படை பெரிது என்கேனே - விற்களைத் தாங்கிய படைவீரர்களின் தொகையே பெரிது என்று துணிந்து கூறுவேனே? வேற்படை மிகும் என்கேனே - வேல்களையுடைய படைவீரர்கள் மிகுதியாய் உள்ளனர் என்பேனே? மல்படை உடைத்து என்கேனே - மல்லர்களின் படையை அந்நகர் பெற்றிருக்கிறது என்பேனே? வாள்படை மலிவு என்கேனே - வாளேந்திய படை மிகுதியாக உள்ளது என்பேனே? கற்பணம், தண்டு, பிண்டிபாலம் என்று இனைய காந்தும் நற்படை பெரிது என்கேனே - கப்பணம், தண்டு, பிண்டிபாலம் என்ற இத்தகைய ஆயுதங்கள் விளங்கப்பெற்ற சிறந்த படையே பெரிது என்பேனே? (யாது பெரிது என்பேன்?)'

மல்லர், ஆயுதமின்றித் தம் புயவலி கொண்டு போரிடுவோர். கற்பணம்: கப்பணம் என்றது எதுகை நோக்கித் திரிந்தது. கப்பணம் - நெருஞ்சி முள் செறிந்தன போல இரும்பால் அமைத்த ஓர் ஆயுதம்: சீவக. 285; மதுரைக்காஞ்சி. 597, உரை. பிண்டிபாலம் - ஓர் எறிபடை. காந்துதல் - ஒளிவீசுதல்.

(பி-ம்.) 1-4. என் கோயான் (இவ்வாறே செய்யுள் முழுமையும்.)
4. நற்படை யுடைத்தென் கேனே. (41)

## கதிரவன் மறைதலும் இருள் பரவுதலும். 137-146.

137. *என்றன னிலங்கை நோக்கி யினையன பிறவு மெண்ணி*
*நின்றவ ணரக்கர் வந்து நேரினு நேர்வ ரென்னுத்*
*தன்றகை யரிய மேனி சுருக்கியச் சாரல் சார்ந்து*
*குன்றிடை யிருந்தான் வெய்யோன் குடகடற் குளிப்ப தானுன்.*

இலங்கை நோக்கி - (அநுமன் பவழமலையிலிருந்து) இலங்கையைப் பார்த்து, என்றனன்-என்று தனக்குள்ளே கூறிக்கொண்டு, இனையன-இத் தகையனவான, பிறவும் - பிறவற்றையும், எண்ணி நின்று - எண்ணிக் கொண்டு நின்று, 'அவண் அரக்கர் வந்து நேரினும் நேர்வர் என்னு-அவ்வி டத்தில் அரக்கர் வந்து எதிர்ப்பட்டாலும் படுவர்' என்றெண்ணி, தன் தகை அரிய-தன் தன்மை போன்று அரியதான, மேனி-தன் உருவத்தை, சுருக்கி-சிறிதாக்கிக் கொண்டு, அ குன்றிடை சாரல் சார்ந்து இருந்தான்-அம்மலையின் சாரலை அடைந்திருந்தான்; வெய்யோன் குடகடல் குளிப்பது ஆனுன்-அப்பொழுது சூரியன் மேலைக் கடலில் மறையலானுன் (அஸ்தமித்தான்),

இவ்வாறே முதனூலிலும் அநுமன் மலைமீது இறங்கிய பின்னேதான் சூரியன் அஸ்தமித்தான் என்று கூறப்படுகிறது.

(பி-ம்.) 1. பலவு மெண்ணி.
2. நின்றவா ளரக்கர் வந்து; நின்றவ னரக்கர் வந்து.
3. தன்றகை யனைய மேனி: சுருக்கியச் சாளச் சாரல். (42)

வேறு

138. *ஏய்வினை யிறுதியிற் செல்வ மெய்தினுன்*
*ஆய்வினை மனத்திலா னறிஞர் சொற்கொளான்*
*வீவினை நினைக்கிலா னொருவன் மெய்யிலான்*
*தீவினை யெனவிருள் செறிந்த தெங்குமே.*

ஏய்வினை - (முன் பிறப்பில் செய்து) அமைந்த நல்வினையினுல், இறுதி இல் செல்வம் எய்தினுன்-எல்லையற்ற செல்வம் அடைந்தவனும், (ஆனுல்), மனத்து ஆய்வினை இலான் - மனத்தினுல் ஆராய்ந்து காரியங்கள் செய்தல் இல்லாதவனும், அறிஞர் சொல் கொளான் - அறிவுடைய பெரியோர் களின் சொற்களை ஏற்காதவனும், வீவினை நினைக்கிலான் - தனக்கு அழிவுண் டென்பதை நினையாதவனும், மெய்யிலான் - உண்மையற்றவனு மான, ஒருவன் - (இத்தகைய) ஒருவன், தீவினை என - செய்த பாவம் என்று கூறும்படி, எங்கும் இருள் செறிந்தது - எல்லாப்புறங்களினும் இருள் வந்து சூழ்ந்து கொண்டது. ஏ: அசை.

தீவினை கருநிறமுடையது என்பது கவிமரபு.

(பி-ம்.) 2. மனத்தினு லறிஞர்.
3. நினைக்கிலா வொருவன் மெய்மையால்: ஒருவ... மெய்மை யான்.
4. இருள் சிறுமை தீரவே. (43)

139. கரித்தமூன் றெயிலுடைக் கணிச்சி வானவன்
எரித்தலை யந்தண ரிழைத்த யானையை
உரித்தபே ருரிவையா லுலகுக் கோருறை
புரித்தன னுன்முக னென்னும் பொற்பதே.

(அவ்விருள்), கரித்த மூன்று எயில் உடை - மூன்று மதில்களைக் கரியாக்கிய செயலை உடைய, கணிச்சி வானவன் - மழுவென்னும் ஆயுதத்தையுடைய தேவனான சிவபெருமான், எரிதலை - வேள்வி நெருப்பினிடம், அந்தணர் - (தாருகாவன முனிவர்களான) அந்தணர்கள், இழைத்த - தோற்றுவித்த, யானையை உரித்த பேர் உரிவையால் - யானையைக் கொன்று அதனை உரித்த பெரிய தோலைக் கொண்டு, நான்முகன் உலகுக்கு ஓர் உறை புரித்தனன் - பிரமன் உலகுக்கு ஓர் உறையாக அமைத்தான், என்னும் - என்று சொல்லும், பொற்பது - தன்மையுடையது. ஏ: அசை.

முன் 78 ஆம் செய்யுளில் கூறியது இங்குக் கருதத்தக்கது. கரித்த மூன்று எயில் உடை வானவன்; இது வடமொழிநடை. இச்செய்யுளில் சிவபெருமானின் வீரச் செயல்களான திரிபுரசங்காரம், கஜசங்காரம் ஆகிய இரண்டும் சுட்டப்பெற்றன. கணிச்சி - குந்தாலியும் ஆம். புரித்தனன்; புரிந்தனன் என்பது எதுகை நோக்கி வலிந்தது.

(பி-ம்.) 1. கரிக்கமூன்.
4. புரித்தன னுன்முகன் போர்த்த போன்றதே; (44)

140. அணங்கரா வரசர்கோ னளவி லாண்டெலாம்
பணங்கிளர் தலைதொறு முயிர்த்த பாய்விடம்
உணங்கலி லுலகெலா முறையி னுண்டுவந்
தினங்கெரி புகையொடு மெழுந்த தென்னவே.

அணங்கு அரா அரசர்கோன் - வருத்தும் பாம்புகளுக்கு அரசனான ஆதிசேடன், அளவில் ஆண்டெலாம் - எல்லையில்லாத காலமெல்லாம், பணம் கிளர் தலை தொறும் - படம் விளங்கும் (தன் ஆயிரம்) தலைகளினின்றும், உயிர்த்த - வெளிப்பட்டுச் சொரிந்த, பாய் விடம் - பரவும் விடமானது, உணங்கல் இல் உலகெலாம் - குறைதல் இல்லாத உலகங்களெல்லாவற்றையும், முறையின் - வரிசையாக, உண்டு வந்து - அழித்து,

இணங்கு எரி புகையொடும் எழுந்தது - (அதனோடு) சேர்ந்த நெருப்போடும் புகையோடும் எழுந்தது, என்னவே - என்று சொல்லுமாறு, (இருள் செறிந்தது).

'அக்கினியானது விடத்தைக் கவர்ந்து தன் புகையுடனே கூட்டிக் கெடாத உலகமெங்கும் எழுகின்றது ஒத்தது இருள்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 2. பணங்களின் தலைதொறும். 4. எழுகிற் றென்னவே. (45)

141. *வண்மைநீங் காநெடு மரபின் வந்தவப்*
*பெண்மைநீங் காதகற் புடைய பேதையைத்*
*திண்மைநீங் காதவன் சிறைவைத் தானெனும்*
*வெண்மைநீங் கியபுகழ் விரிந்த தென்னவே.*

வண்மை நீங்கா - கொடைத்தன்மை நீங்காத, நெடு மரபின் வந்த - நீடிய குலத்திற் பிறந்த, அ பெண்மை நீங்காத கற்புடைய பேதையை - அந்தச் சிறந்த பெண்மைத் தன்மை நீங்காத கற்புடைய பேதையளான சீதாப்பிராட்டியை, திண்மை நீங்காதவன் - வலிமை நீங்காத இராவணன், சிறை வைத்தான் - கொடிய சிறையில் இட்டான், எனும் - என்ற, வெண்மை நீங்கிய புகழ் - பழி, விரிந்தது என்னவே - (உலகமெங்கணும்) பரவியது என்று சொல்லும்படி, (இருள் செறிந்தது.)

நெடுமரபின் வந்த என்பதற்கு நெடிய இட்சுவாகு குலத்திற் புகுந்த என்றும் பொருள் கொள்ளலாம். பெண்மை நீங்காத கற்பு: அறக்கற்பாகும்; 'தற்காத்துத் தற்கொண்டாற்பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்' (குறள். 56.) என்றபடி, தன் கணவன் புகழைக் காப்பதே விரதமாகக் கொண்டவளாதலால், பிராட்டி, 'சொல்லி னுற்சுடுவேனது தூயவன், வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்' (624) என்ற கொள்கையுடன் சிறையிருந்த ஏற்றமே இராமாயணம் கூறும் பொருளானதால் அவள் பெண்மை நீங்காத கற்பு இங்குக் கூறப்பெற்றது என்க. 'திண்மை நீங்காத வன் சிறை' என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம், வெண்மை நீங்கிய புகழ்; கருநிறமடைந்த புகழ்; பழி; அபகீர்த்தி. புகழின் நிறம் வெண்மை என்பது கவி மரபு; பால. நகரப். 34; உலாவியற். 50.

(பி-ம்.) 1. மரபின் வந்தவன். 3. சிறைவைத் தானென. (46)

142. *அவ்வழி யவ்விருள் பரந்த வாயிடை*
*எவ்வழி மருங்கினு மரக்க ரெய்தினர்*
*செவ்வழி மந்திரத் திசைய ராகையால்*
*வெவ்வழி யிருடா மதித்து மீச்செல்வார்.*

அ வழி - அவ்வாறு, அ இருள் - (மேற்கூறியவாறு செறிந்த) அந்த இருள், பரந்த ஆ இடை-பரந்த அந்நேரத்தில், அரக்கர் எ வழி மருங்கினும் எய்தினர் - அரக்கர்கள் எல்லா இடங்களிலும் வந்து அடைந்தவர்களாய், மந்திர செம் வழி திசையர் ஆகையால்-மந்திரங்களின் உதவியால் செம் மையான வழிகளாகப் பல திசைகளிலும் செல்லத்தக்கவர் ஆதலினாலே, வெம் இருள் வழிதர - கொடிய இருளும் அவர்களுக்கு வழி கொடுக்க, மதித்து - அவ்விருளைக் குழைய நசுக்கி, மீ செல்வார் - மேலே செல்வர்,

மதித்து-மதங்கொண்டு என்று கூறலும் ஆம்; 'மதித்த களிற்றினின்' (919.). இருள் வெவ் வழிதர, என்பதற்கு, இருள் வெவ்விதாய் வழியவும் என்றும் பொருள் கொள்வர்.

பி-ம் : 2. அரக்க ரேகினர்.
3. தெவ்வழி யந்தரத் திசைய ராயினும்.
4. மிதித்து மீச்செல்வார். (47)

*143. இந்திரன் வளநகர்க் கேகு வாரெழில்*
*சந்திர னுலகினைச் சார்கு வார்சலத்*
*தந்தக னுறையுளை யணுகு வாரயில்*
*வெந்தொழி லரக்கன தேவன் மேயினர்.*

அயில் - வேற்படைகொண்ட, வெம் தொழில் அரக்கனது ஏவல் மேயினர்-கொடிய போர்த் தொழிலைக் கொண்ட இராவணனின் கட்டளை யைத் தாங்கிய அரக்கர், இந்திரன் வள நகர்க்கு ஏகுவார் - இந்திரனது வளப்பம் மிக்க நகராகிய அமராவதிக்குச் செல்வார்; எழில் சந்திரன் உலகினை சார்குவார் - அழகிய சந்திர மண்டலத்தை அடைவார்; சலத்து- நீங்காத கோபமுள்ள, அந்தகன் உறையுளை அணுகுவார் - கூற்றுவன் உறையுமிடத்தை நெருங்குவார்கள்.

இச்செய்யுள் அளைமறிபாப்புப் பொருள்கோள்.

(பி-ம்.) 1. ஏகு வாரிகல்.
2. சார்கு வார்கலித்; சாரு வார்சலித்.
3. அணுகு வாரியல்; அணுகு வாரழல். (48)

*144. பொன்னகர் மடந்தையர் விஞ்சைப் பூவையர்*
*பன்னக வனிதைய ரியக்கர் பாவையர்*
*முன்னினர் பணிமுறை மாறி முந்துவார்*
*மின்னின மிடைந்தென விசும்பின் மேற்செல்வார்.*

பொன்னகர் மடந்தையர் - தேவமாதர், விஞ்சை பூவையர் - வித்தி யாதர மகளிர், பன்னக வனிதையர்-நாக கன்னியர், இயக்கர் பாவையர்-

இயக்கர் பெண்கள், பணி முறை மாறி - இலங்கையில் தாம் செய்ய வேண்டிய தொழில் முறைகளை முடித்து, முன்னினர் முந்துவார் - ஒருவர் முன்னே ஒருவராகத் திரும்புபவர்களாய், மின் இனம் மிடைந்தென - மின்னல்களின் தொகுதிகள் செறிந்தாற் போல, விசும்பின் மேல் செல்வார் - ஆகாய வழியாய் மேலே செல்வாராயினர்.

பணிமுறை - குற்றேவல் தொழில் முறைக ளென்னலு மாம்.

(பி-ம்.) 3. மாற முந்துவார்.
4. விசும்பின் மீச்செல்வார். (49)

*145. தேவரு மவுணருஞ் செங்க ணுகரும்*
*மேவரு மியக்கரும் விஞ்சை வேந்தரும்*
*ஏவரும் விசும்பிரு ளிரிய வீண்டினர்*
*தாவரும் பணிமுறை தழுவுந் தன்மையார்.*

தா அரும் பணிமுறை தழுவும் தன்மையார் - தவறுதல் இல்லாத தொழில் முறையை மேற்கொள்ளும் தன்மையரான, தேவரும், அவுணரும், செம் கண் நாகரும், மேவரும் இயக்கரும், விஞ்சை வேந்தரும், ஏவரும் - தேவர், அசுரர், சிவந்த கண்களையுடைய நாகர், விரும்பத்தக்க (உடற் பொலிவையுடைய) இயக்கர், வித்தியாதர மன்னர் ஆகிய பல் கணத்தவர்களும், விசும்பு இருள் இரிய ஈண்டினர் - ஆகாயத்தில் செறிந்திருந்த இருள் நீங்கும்படி நெருங்கி வந்தார்கள்.

இருள் இரிந்தது, அவர்களின் உடல் ஒளியினால்,

(பி-ம்) 1. தேவரு முனிவரும்.
3. யாவரும் விசும்பிருள். (50)

*146 சித்திரப் பத்தியிற் றேவர் சென்றனர்*
*இத்துணை தாழ்த்தனம் முனியு மென்றுநம்*
*முத்தினு ரங்களும் முடியு மாலையும்*
*உத்தரீ யங்களும் சரிய வோடுவார்.*

சித்திர பத்தியில் சென்றனர் தேவர் - ஓவியங்களின் வரிசைகள் போலச் சென்றவர்களான தேவர்கள், 'இ துணை தாழ்த்தனம், முனியும் என்று - இது காறும் தாமதித்து விட்டோம்; (இராவணன்) கோபிப்பான்' என்றெண்ணி, தம் முத்தின் ஆரங்களும், முடியும், மாலையும், உத்தரீயங்களும் சரிய - தம் முத்து மாலைகளும் கிரீடங்களும், பூமாலைகளும் மேலாடைகளும் உடல்களிலிருந்து சரிந்து கீழே விழ, ஓடுவார் - ஓடுவாராயினர்.

(பி-ம்.) 3. முடியின் மாலையும்.
4. இரிய வோடுவார். (51)

## சந்திரோதய வருணனை 147-155:

147. தீண்டருந் தீவினை தீக்கத் தீந்துபோய்
மாண்டற வுலர்ந்தது மாரு திப்பெயர்
ஆண்டகை மாரிவந் தளிக்க வாயிடை
ஈண்டற முளைத்தென முளைத்த திந்துவே.

தீண்ட அரும் தீவினை தீக்க - நெருங்குவதற்கு அருமையான பாவங்கள் சுட்டெரிக்க, அறம் - தருமமானது, தீந்துபோய்- எரிந்து போய், மாண்டு - இறந்து, அற உலர்ந்தது-முற்றிலும் காய்ந்தது; மாருதி பெயர் ஆண்டகை மாரி - மாருதி என்ற பெயரையுடைய பெரியோனாகிய மழை, வந்து அளிக்க -தோன்றி அருள்புரிய, ஆயிடை -அந்நேரத்திலே, ஈண்டு (அறம்) முளைத்து,-மறுபடியும் தருமம் முளைத்தது, என- என்று சொல்லுமாறு, இந்து முளைத்தது - சந்திரன் உதயமாயிற்று, ஏ: அசை.

மாண்டு அற உலர்ந்தது, மிகுதியாக முற்றும் உலர்ந்தது என்னலும் ஆம். ஈண்டு அறம்-மிகுந்த அறமும் ஆம். இது சந்திரோதய வருணனை. அறம் பயிருக்கும், தீவினை எரிக்கும், அநுமன் மாரிக்கும் உவமைகள். சந்திரோதயம் அறத்தின் தோற்றமாகக் கூறப்பட்டது.

(பி- ம்:) 4. அற மெழுந்தது. (52)

148. வந்தன னிராகவன் றூதன் வாழ்ந்தனன்
எந்தையே யிந்திர னுமென் றேமுரு
அந்தமில் கீழ்த்திசை யளக வாணுதல்
சுந்தரி முகமெனப் பொலிந்து தோன்றிற்றே.

'இராகவன் தூதன் வந்தனன்-இராகவனின் தூதனை அநுமன் (இலங்கைக்கு) வந்து விட்டான்; எந்தையே இந்திரன் வாழ்ந்தனன் ஆம்-என் தலைவனான இந்திரன் வாழ்வடைந்து விட்டான் ஆவன், என்று - என்றெண்ணி, ஏமுரு - மகிழ்ச்சியடைந்து, அந்தம் இல் கீழ்த்திசை - எல்லையற்ற கிழக்குத்திசையாகிய, அளக வாள் நுதல் சுந்தரி - அளகம் பொருந்திய ஒளிமிக்க நெற்றியையுடைய சுந்தரியின், முகம் என-முகம் என்று கூறும்படி, இந்து பொலிந்து தோன்றிற்று - சந்திரன் விளங்கி உதயமாயிற்று. ஏ; அசை.

இந்து முன் 147 ஆம் செய்யுளிலிருந்து வருவிக்கப் பெற்றது. சந்திரோதயத்தால் கீழ்த்திசை விளங்கிற்று என்பது பொருள். கிழக்குத் திசைக்குரிய கடவுள் இந்திரனாகையால் எந்தை இந்திரன் என்னப்பட்டது; எந்தை, இங்குத் தலைமைப் பொருளில் வந்தது. சந்திரன் கீழ்த்திசையாகிய பெண்ணின் முகமெனக் கூறப்பெற்றான். பெண்ணின் முகத்துக்குச் சந்திரன் உவமை; 'பசு வெண்டிங்கள் தோன்றியாங்குக் கதுப்

பயல் விளங்கும் சிறுநுதல், '(குறுந். 129. 4-5); ஒப்பு: தக்க. 25-,42. அளகம் - முன்னுச்சி மயிர். சுந்தரி - அழகிய பெண். சுந்தரி, அயிராணிக்கும் ஒரு பெயர்; இந்திரன் எழுச்சியடைவானென இந்திராணி மகிழ்ந்தாள் என்ற நயமும் காணத்தகும். 'இனி இந்திரனே சுவாமியாவனெனச் சந்தோஷத்துடன் மதியம் எழுந்தது' என்பது பழைய உரை; இதன்படி, 'எந்தை' என்று கூறியது சந்திரன் என்க.

இங்குக் கூறிய வருணனையால் உதித்த இந்து முழுமதி என்பதும், அநுமன் இலங்கையுட் புகுந்த நாள் பௌர்ணமி என்பதும் பெறப்படும். ஆனால் 138-141 செய்யுட்களில் சந்திர உதயத்திற்கு முன்னுள்ள அந்தி இருள் வர்ணிக்கப்பட்டுள்ளது. அன்றியும், வான்மீகி ராமாயணத்தில் இப்பகுதிக்கு உரையெழுதுங்கால், திலகர் இந்நாள் சுக்லபக்ஷ ஏகாதசியென்று கூறியுள்ளார்; அவ்வாறே அக்நிவேச்ய ராமாயணத்திலும் கூறப்பட்டிருக்கிறது. இவை ஆராயத்தக்கன.

(பி-ம்.) 1. வாழ்ந்தனம். (53)

149. *கற்றைவெண் கவரிபோல் கடலின் வெண்டிரை*
*சுற்றுநின் றலமரப் பொலிந்து தோன்றிற்றால்*
*இற்றதென் பகையென வெழுந்த விந்திரன்*
*கொற்றவெண் குடையெனக் குளிர்வெண் டிங்களே.*

'என் பகை இற்றது என எழுந்த - எனது அரக்கராகிய பகை அழிந்தது' என்று (மகிழ்ச்சியோடு) எழுந்த, இந்திரன்-இந்திரனுடைய, வெண் கொற்ற குடை என - வெண் கொற்றக் குடை என்னும்படி, குளிர் வெண் திங்கள் - குளிர்ச்சி பொருந்திய வெண்மையான சந்திரன், கடலின் வெண் திரை கற்றை வெண் கவரி போல் சுற்றும் நின்று அலமர - கடலிலுள்ள வெள்ளை நிறமுள்ள அலைகள் (அவ்விந்திரன் புறப்படுகையில் வீசும்) தொகுதியாயுள்ள வெண்சாமரைபோலச் சுற்றிலும் நின்று வீச, பொலிந்து தோன்றிற்று - விளங்கித் தோன்றிற்று. ஆல், ஏ: அசைகள்.

திங்களுக்கு வெண் குடையும், திரைக்குக் கவரியும் உவமைகளாயின. அலைகளுக்குச் சாமரை; 422; தக்க. 284. பொலிந்து தோன்றிற்று; 148. இப்பாடலுள், குடைநாட்கோள் என்னும் புறத்துறை தொனிப்பது காண்க. இங்குக் கூறிய குடையின் வட்ட வடிவு கொண்டு உதித்தது முழுமதி என்ற கருத்து உறுதிப்படும்.

(பி-ம்.) 2. சுற்றிநின் றலமர.
3. பகையெனப் பொலிந்த விந்திரன். (54)

150. *தெரிந்தொளிர் திங்கள்வெண் குடத்தி னுற்றிரை*
*முரிந்துயர் பாற்கடன் முகந்து மூரிவான்*
*சொரிந்ததே யாமெனத் துள்ளி மீனெடும்*
*விரிந்தது வெண்ணிலா மேலுங் கீழுமே.*

வெண்ணிலா - வெண்மையான நிலாவானது, மூரி வான் - பெரிய வானம், தெரிந்து - ஆராய்ந்து, ஒளிர் திங்கள் வெண் குடத்தினுல் - ஒளிவீசுகின்ற முழுமதியாகிற வெள்ளைக் குடங்கொண்டு, திரை முரிந்து உயர் பால் கடல் முகந்து - அலைகள் மடிந்து விழுந்து (பின்பு) உயரும் திருப்பாற் கடலிலிருந்து (பாலை) மொண்டெடுத்து, சொரிந்ததே ஆம் என - பொழிந்ததாம் என்று சொல்லும்படி, துள்ளி மீனெடும் - துளிகளாகிய நட்சத்திரங்களோடும், மேலும் கீழும் விரிந்தது - வானமண்டலத்தின் மேலேயும் கீழேயும் பரவிற்று. ஏ: அசை.

நிலவிற்குப் பாற்கடல்: பால. மிதிலைக்காட்சிப். 146. சந்திரனுக்குக் குடமும் நிலவுக்கு அதனின்று சொரிந்த பாலும்: சீவக. 1541. வான் சொரிந்ததேயாமென நிலா விரிந்தது என்க.

(பி - ம்.) 1. குடத்தி னுற்றிசை.
2. முந்து மூரிவான்.
3. துள்ளும் மீனெடும்.
4. விரிந்தது தண்ணிலா. (55)

151. *அருந்தவன் சுரபியே யாதி வானமா*
*விரிந்தபே ருதயமா மடிவெண் டிங்களா*
*வருந்தலில் பசுங்கதிர் வழங்கு தாரையாச்*
*சொரிந்தபா லொத்தது நிலவின் றோற்றமே.*

அருந்தவன் சுரபியே ஆதி வானமா - அரிய தவத்தினையுடைய வசிட்ட முனிவரிடமுள்ள காமதேனுவே அடிவானமாகவும், மடி - (அச்சுரபியின்) மடியானது, விரிந்த பேர் உதயமாம் வெண் திங்களா - பரந்த பெரிய உதயமாகிற வெண்ணிறச் சந்திரனாகவும், வருந்தலில் வழங்கு தாரை பசுங்கதிரா - வருத்தமின்றி எளிதில் சொரியும் பாலின் ஒழுக்கே (சந்திரனின்)இளங் கதிர்களாகவும், சொரிந்த பால் ஒத்தது நிலவின் தோற்றம் - (அச்சுரபி) பொழிந்த பாலை ஒத்திருந்தது நிலவின் தோற்றம். ஏ: அசை.

அடிவானத்தில் சந்திரன் உதயமாகி அதினின்று புறப்பட்ட கதிர்களாலான நிலாப் பெருக்கு, சுரபியின் மடியிலிருந்துதாரையாக வெளிவந்த பால் பெருக்குக்கு உவமை; முன் பாடலில் நிலவிற்குக் கடலிலிருந்து

மொண்ட பாலை உவமையாகக் கூறி, இச்செய்யுளில் சுரபியின் பாலை அந்நிலவுக்கு உவமையாகக் கூறப்பெற்றது. நிலவுக்குப் பால் உவமை: பால. உண்டாட்டுப்.8; உயுத்த, இலங்கை கேள்விப். 8; நற். 196. 1-2; சிலப். 13: 27-8; மணி. 6. 6-8.; சீவக. 1541, 2669; தக்க, 605; அன்றியும், 'வால்வெண் ணிலவுல காரச் சுரக்கும்வெண் டிங்களென்னும், பால்விண் சுரவி' என்ற திருவிருத்தத்தின்(73)விரிவாகவும் இச்செய்யுள் அமைந்துள்ளமை நோக்கத் தக்கது. 'அந்தி வான்மிசை' என்று பாடங் கொண்டு, சுரபியைச் சிவந்த நிறமுடைய நந்தினியாகக் கூறுவாரும் உளர்.

(பி-ம்.) 1. சுரபிபேர லாதி வான் மிசை: அந்தி வான்மிசை; ஆதி வானவள்.
2. பேரு தயமு மிளிர்வெண் டிங்களா; விரிந்தபே ருலகெலாம் விளக்கு மாமதி.
3. தாரைகள்; தாரையாய்ச். (56)

*152. எண் ணுடை யநுமன்மே லிழிந்த பூமழை*
*மண்ணிடை வீழ்கில மறித்தும் போகில*
*அண் ணல்வா ளரக்கனை யஞ்சி யாய்கதிர்*
*விண்ணிடைத் தொத்தின போன்ற மீனெலாம்.*

மீன் எலாம் - (வானத்தில் தோன்றிய நட்சத்திரங்கள் எல்லாம், எண் உடை அநுமன் மேல் இழிந்த பூ மழை - (காரியத்தில்) கருத்துடைய அநுமன்மீது (வானவர்களால் தூவப்பெற்று) விழுந்த பூமாரி, அண்ணல் வாள் அரக்கனை அஞ்சி - பெருமை பொருந்திய வாளேந்திய அரக்கனை இராவணனுக்குப் பயந்து, மண்ணிடை வீழ்கில மறித்தும் போகில-நிலத்தில் விழாதனவாயும், திரும்பவும் (மேலே) செல்லாதனவாயும், ஆய் கதிர் விண் இடை-தெளிவான சந்திர ஒளியோடு கூடிய ஆகாயத்தினிடத்து, தொத்தின போன்ற - தொங்கிக் கொண்டிருந்தன போன்றிருந்தன.

சந்திர சூரியர்கள் இலங்கையுட் புக அஞ்சி நின்றமை போல நட்சத்திரங்களும் நின்றன என்பதும் பொருளாகக் கொள்க. 'எண்ணுடை அநுமன்' என்பதற்கு யாவராலும் மதிக்கத்தக்க அநுமன் என்றும் பொருள் கொள்ளலாம். இச் செய்யுட் கருத்துடன், 'உம்பர் தூவிய தண்மலர்வீழ், தாராகணமு நில்லா காற்றிற் சூழ்வளந்தா னெக்குமே' (திருவரங்கத் தந்தாதி. 77.) என்றது ஒப்பு நோக்கத் தக்கது.

(பி-ம்.) 2. மறிந்து போகில.
4. விண்ணிடைத் தங்கின போன்ற மீனெலாம். (57)

153. எல்லியி னிமிரிருட் குறையு மிவ்விருள்
கல்லிய நிலவின்வெண் முறியுங் கௌவின
புல்லிய பகையெனப் பொருவ போன்றன
மல்லிகை மலர்தொறும் வதிந்த வண்டெலாம்.

மல்லிகை மலர்தொறும் வதிந்த வண்டு எலாம் - மல்லிகை மலர்கள் ஒவ்வொன்றிலும் தங்கிய வண்டுகள் யாவும், எல்லியின் நிமிர் இருள் குறையும் - இரவிலே எழுகின்ற இருளின் துண்டங்களும், இ இருள் கல்லிய நிலவின் வெண் முறியும் - இந்த இருள் தோண்டிய நிலவின் வெண் துண்டங்களும், கௌவின - (ஒன்றையொன்று) கௌவிக் கொண்டனவாய், புல்லிய பகை என பொருவ போன்றன - நெருங்கிய பகையெனக் கொண்டு ஒன்றோடொன்று போரிடுவது போன்றிருந்தன.

'சந்திரனு லொழிந்த இருள் துண்டம் துண்டமாகி, அந்தச் சந்திரன் எடுத்த சிற்றுருவில் போர் பண்ணுகிறது போல: மல்லிகை, சந்திரன் என்க சிற்றுரு' என்பது பழைய உரை.

(பி.ம்.) 1. அவ்விருட்.
4. பொதிந்த வண்டெலாம். (58)

154. வீசுறு பசுங்கதிர்க் கற்றை வெண்ணிலா
ஆசுற வெங்கணு நுழைந்த ளாயது
காசுறு கடிமதி லிலங்கைக் காவலூர்த்
தூசுறை யிட்டது போன்று தோன்றிற்றே.

பசும் கதிர் கற்றை வீசுறு வெண் நிலா - குளிர்ச்சி பொருந்திய கிரணத் தொகுதிகளை வீசும் வெண்மையான நிலா, ஆசு உற-விரைவாக, எங்கணும் நுழைந்து அளாயது - எல்லா இடங்களிலும் புகுந்து பரவிய தானது, காசு உறு மதில் இலங்கை கடி காவல் ஊர் - மணிகள் பதித்த மதில் சூழ்ந்த இலங்கையென்னும் மிக்க காவலையுடைய ஊருக்கே, தூசு உறை இட்டது போன்று தோன்றிற்று - வெள்ளைத் துகிலால் உறை யிட்டது போலத் தோன்றிற்று. ஏ: அசை.

முன் 139 ஆம் செய்யுளில் இருள் சூழ்ந்தமைக்கு யானையுரிவையால் உறையிட்டதைச் சொல்லியது போல, இங்கு நிலவின் செறிவுக்குத் தூசுறையிட்டமை உவமிக்கப்பெற்றது. தூசு - வெள்ளாடை. இச் செய்யுட்கருத்து. 'எம் மூர்ப்பருங்குன்ற மாளிகை நுண்கள பத்தொளி பாயநும்மூர்க், கருங்குன்ற வெண்ணிறக் கஞ்சுக மேய்க்குங் கனங் குழையே' (திருச்சிற். 15,) என்பதனோடு ஒப்பிடத்தக்கது. இச் செய்யுளுடன், பல சுவடிகளில் நிலாத்தோற்றுப்படலம் முற்றும்.

(பி-ம்.) 2. எங்கணு நுழைந்த: நுழைந்த ளாயிது; நுழைந்த தாயிது.
3. கடிநக ரிலங்கை: இலங்கைக் காவலூர்; காவலர்.
4. தூசிடை: இட்டன போன்று: தோன்றிற்றுல். (59)

155. *இகழ்வரும் பெருங்குணத் திராம னெய்ததோர்*
*பகழியின் செலவென வநுமன் பற்றினுல்*
*அகழ்புகுந் தரண்புகுந் திலங்கை யாங்கவன்*
*புகழ்புகுந் துலாயதோர் பொலிவும் போன்றதே.*

இகழ்வு அரும் பெருங்குணத்து - இகழ்ச்சி என்பது இல்லாத சிறந்த குணங்களையுடைய, இராமன் எய்தது ஓர் பகழியின் செலவு என - இராமபிரான் ஏவிய ஒப்பற்ற அம்பின் போக்கைப் போன்ற, அநுமன் - அநுமனின், பற்றினுல் - துணையினுல், (அங்நிலவு). இலங்கை - இலங்கை யிலுள்ள, அகழ் புகுந்து - அகழியினுள் நுழைந்தும், அரண் புகுந்தும் - பிற காவலிடங்களுள் நுழைந்தும், ஆங்கு - அவ்விடங்களில், அவன் புகழ் புகுந்து உலாயது ஓர் பொலிவும் போன்றது - அவ்விராமபிரா னுடைய புகழ் புகுந்து பரவியது போன்ற சிறப்பையும் ஒத்தது. ஏ: அசை.

இதுகாறும் இலங்கையினுள் புக இயலாமல் நின்ற நிலா அநுமன் பற்றினுல் புகுந்தது என்க. அவன் புகழ் என்பதற்கு அநுமன் புகழ் என்று பொருள் கூறுவாரும் உளர். இராவணன் அரணையும் அகழியை யும் கடந்து அவன் கீர்த்தி அழியும் படி அந்தக் கீர்த்தியிலே புகுந்து உல வினது போன்றது அநுமன் மகேந்திரத்தில் நின்று சுவேல பர்வதத்திற் குப் பாய்ந்து நின்ற நிலை' என்று இச்செய்யுளுக்குப் பழைய உரை வேறொரு விதமாகப் பொருள் கூறும். இராமன் பகழியின் செலவு அநு மன் செலவுக்கு ; 239.

பல சுவடிகளில் இச்செய்யுள் முதல் இலங்கை மாதேவிப்படலம் தொடங்கும்.

(பி-ம்.) 3. இலங்கை யன்னவன். (60)

## அநுமன் இலங்கையுள்ளே புக எண்ணுதல்

156. *அவ்வழி யநுமனு மணுக லாம்வழி*
*எவ்வழி யென்பதை யுணர்வி னெண்ணினுன்*
*செவ்வழி யொதுங்கினன் றேவ ரேத்தப்போய்*
*வெவ்வழி யரக்கரூர் மேவன் மேயினுன்.*

செவ்வழி ஒதுங்கினன் அநுமனும் - சிறந்த வழியிலேயே ஒழுகும் இயல்பினனான அநுமனும், தேவர் ஏத்த போய் - தேவர்கள் புகழக் கடல் கடந்து சென்று, வெம் வழி அரக்கர் ஊர் மேவல் மேயினன்- கொடிய நெறியைப் பின்பற்றும் அரக்கர்களின் ஊராகிய இலங்கையை அடைவதை மேற்கொண்டு, அவ்வழி - அப்பொழுது, எவ்வழி அணுகல் ஆம் வழி என்பதை - எந்த வழியாக (அந்நகருள்) செல்லலாம் என்பதை, உணர்வின் எண்ணினன் - உணர்ந்து ஆலோசித்தான்.

அநுமன் ஒரு பூனையின் அளவாகத் தன் உடலைச் சுருக்கிக் கொண்டு இலங்கையினுள் புகத் தொடங்கினான் என்று முதனூல் கூறும். தேவர் ஏத்தச் சென்றமை; 26. செவ்வழி ஒதுங்கினன் என்பதற்குப் பகைவர் ஊரினுள் நேரான வழியில் புகுவது ஒவ்வாதென்று ஒதுங்கினவனாக, என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. அணுக லாம்வகை.
3. செவ்வழி யொழுக்கினன்.
4. அரக்கரூர் வாயின் மேயினான். (61)

வேறு

## அநுமன் இலங்கையின் மதிலையும்வாயிலையும் கண்டு வியத்தல்

### 157-168.

157. *ஆழியக ழாகவரு காவமரர் வாழும்*
*ஏழுலகின் மேலைவெளி காறுமுக டேறிக்*
*கேழரிய பொன்கொடு சமைத்தகிளர் வெள்ளத்*
*தூழிதிரி நாளுமுலை யாமதிலை யுற்றான்.*

(அநுமன்), ஆழி அகழாக - கடலே அகழியாகக் கொண்டு, அருகா- கெடாத, அமரர் வாழும் ஏழ் உலகின் மேலை வெளிகாறும் - தேவர்கள் வாழ்கின்ற ஏழ் உலகங்களுக்கும் மேலே உள்ள வெளிவரையிலும், முகடு ஏறி - தன் உச்சியால் உயர்ந்து, அரிய கேழ் பொன்கொடு சமைத்த - அருமையான நிறமுடைய பொன்னால் அமைக்கப்பெற்ற, ஊழி கிளர் வெள்ளத்து திரி நாளும் உலையா - ஊழிக் காலத்தில் பொங்கு கின்ற வெள்ளப்பெருக்கால் (உலகமெல்லாம்) மாறியழியும் நாளிலும் அழியாத, மதிலை - (இலங்கை ஊர்ப்புற) மதிலை, உற்றான் - அடைந்தான்.

அருகா என்பதை ஆழியோடும் கூட்டலாம்: அச்சொற்கு, அருகிலே என்று பொருள் கூறுதலும் அமையும். ஆழி அகழானது: 'கருங்கடலை கழுது நீருங் கண்டிரால்' உயுத்த. இலங்கைகேள்விப். 20.

(பி-ம்.) 1. அரி தாயமரர் வாழும்.
2. ஏழுலகின் மேலும்வெளி: மேலவெளி.
3. சமைந்துகிளர் வெள்ளத். (62)

158. *கலங்கலில்க டுங்கதிர்கண் மீதுகடி தேகா*
*அலங்கலயில் வஞ்சகனை யஞ்சியெனி னன்றால்*
*இலங்கைமதி லிங்கிதனை யேறலரி தென்றே*
*விலங்கியகல் கின்றனவி ரைந்தென வியந்தான்.*

'அலங்கல் அயில் வஞ்சகனை அஞ்சி - மாலையணிந்த வேற்படையேந்திய வஞ்சகனான இராவணனுக்குப் பயந்து, கலங்கல் இல் கடும் கதிர்கள் - நிலை கலங்குதலில்லாத வெப்பமான சூரியனின் கிரணங்கள், மீது - இந்நகர்மதிலின் மீது, கடிது ஏகா எனின் அன்று - விரைவில் செல்லா, என்று கூறின், பொருந்தாது; (அக்கதிர்கள்), இங்கு இலங்கை மதில் இதனை ஏறல் அரிது என்றே - இங்குள்ள இலங்கையின் மதிலாகிய இதனை ஏறுதல் முடியாது என்று அறிந்தே, விலங்கி - (அம்மதிலை) விட்டு நீங்கி, விரைந்து அகல்கின்றன - வேகமாக அப்பாற் செல்கின்றன, என வியந்தான் - என்று (அநுமன் அம்மதிலின் உயரத்தை) வியந்தான். ஆல்: அசை.

வஞ்சகன் என்றது, அவனுடைய இயற்கையான மாயைகளையும் பிராட்டியை அவன் வஞ்சனையால் அபகரித்த செயலையும் உட்கொண்டு என்க. முன் 116 ஆம் செய்யுளில் இலங்கைமதிலின் ஒளிச் சிறப்பால் கதிரவன் விலகிச் சென்றான் என்றமையையும் ஒப்பிடுக.

(பி-ம்.) 2. அஞ்சியென லன்றால்.
4. அகல் கின்றளர் விளித்தென வியந்தான். (63)

159. *தெவ்வளவி லாதவிறை தேறலரி தம்மா*
*அவ்வளவ தன்றரண மண்டமிடை யாக*
*எவ்வளவி னுண்டுவெளி யீறுமது வென்னு*
*வெவ்வள வரக்கனை மனக்கொள வியந்தான்.*

'தெவ் அளவு இலாத - பகைவர்களோ அளவற்றவர்களாக இருக்கின்றனர்; இறை - சிறிதளவும், தேறல் - (அவர்களுடைய வலிமைகளை) அறிந்துகொள்ளுதல், அரிது-ஆகாததாயிருக்கிறது; அரணம் - கோட்டையானது. அண்டம் இடையாக வெளி எ அளவின் உண்டு அ அளவல் அன்று - அண்டப் பரப்பை இடையிலே உள்ளதாகக் கொண்டாது

எவ்வளவு இடைவெளி உண்டோ அந்த அளவுடன் நிற்பதன்று; (அதனினும் பெரிது); ஈறும் அது - இதன் எல்லேயும் அவ்வாறே முடிவற்றது;' என்று-என்றெண்ணி, வெம் வள அரக்கனை-கொடிய வளப்பம் மிக்க இராவணனை, (அவன் பெருமையை), மனம் கொள - மனத்திலே எண்ண, வியந்தான் - வியப்படைந்தான் அம்மா: வியப்பை உணர்த்தும் இடைச்சொல்.

அண்டம் இடையாக என்பதற்கு அண்டம் வருந்த என்றும் பொருள் கொள்வர். வெம் வள அரக்கன் - கொடுமையே செல்வமாகக் கொண்ட அரக்கன் என்றும் கொள்ளலாம்; வெம்மை, வலியுமாம். 'பொல்லாத வளத்தையுடைய இராவணனை' என்பது, பழைய உரை.

(பி-ம்.) 1. இடைச் சேறலுள தென்றூல். (64)

160. *மடங்கலரி யேறுமத மால்களிறு நாண*
*நடந்துதனி யேபுகுது நம்பிநனி மூதூர்*
*அடங்கரிய தானையயி லந்தகன தாணைக்*
*கடுந்திசையின் வாயனைய வாயிலெதிர் கண்டான்.*

மடங்கல் அரி ஏறு - கூற்றுவன் போன்ற கொடிய ஆண் சிங்கமும், மத மால் களிறும்-மதங்கொண்ட பெரிய ஆண் யானையும், நாண நடந்து-வெட்கும்படி நடந்து, நனிமூதூர் தனியே புகுதும் நம்பி-மிகப்பழைய நகரமான இலங்கையினுள் துணையின்றித் தனியனாய்ப் புகும் பெரியோனாகிய அநுமன், அடங்கரிய தானை - கணக்கில் அடங்குதற்கு அரிதான மிகுந்த சேனைகளையுடைய, அயில் அந்தகனது - சூலப்படையை ஏந்தும் யமனது, ஆணை - கட்டளையையுடைய, கடும் திசையின் வாய் அனைய - கொடிய திசையின் வாயிலை ஒத்த, வாயில் - (இலங்கை நகரக் கோபுர) வாயிலை, எதிர் கண்டான் - முன்னே கண்டான்.

மடங்கல் - கூற்றுவன்; 'மடங்கல் உண்மை மாயமோவன்றே, (புறநா. 363. 9); மடங்கல்-யாவும் தன்னிடம் மடங்கிவிழச் செய்யும் ஆற்றலுடைமையும் ஆம்; சிங்கத்துக்கே ஒரு பெயருமாம். ஆடவரின் நடைக்குச் சிங்கநடையும், யானையின் நடையும்; ஒப்பு; பால. கார்முகப். 32. நம்பி - ஆடவரிற் சிறந்தவன். நனிமூதூர்; 170. அந்தகனது திசை - தென்திசை. இலங்கை நகர்க் கோட்டைவாயில் யமலோக வாயிலுக்கு உவமை, புகுந்த அந்நியர் மீளாமையால் என்க.

(பி-ம்.) 4. கடுந்திறலின் வாயனைய. (65)

161. *மேருவை நிறுத்திவெளி செய்ததுகொல் விண்ணோர்*
*ஊர்புக வமைத்தபடு கால்கொலுல கேழும்*
*சோர்வில நிலைக்கநடு விட்டதொரு தூணோ*
*நீர்புகு கடற்குவழி யோவென நினைந்தான்.*

'மேருவை நிறுத்தி வெளி செய்தது கொல் - மேருமலையைக் கோபுரமாக நிற்கச் செய்து (அதினில், வாயிலாக) இடைவெளி உண்டாக்கியதோ? (அன்றி), விண்ணோர் ஊர் புக அமைத்த படுகால் கொல்- தேவர்கள் இலங்கை நகருள் புகுவதற்காக ஏற்படுத்திய ஏணியோ? உலகு ஏழும் சோர்வில நிலைக்க நடு விட்டது ஒரு தூணோ - ஏழு உலகங்களும் தளர்வற்றனவாய் நிலைத்து நிற்கும் பொருட்டு நடுவே கட்டி விட்ட ஒரு தூணோ? கடற்கு நீர் புகு வழியோ - கடலை நிரப்புவதற்கு நீரைப் புகவிட அமைத்த ஒரு வழியோ?' என நினைந்தான் - என்று (அநுமன்) எண்ணினான்.

மேருவை நிறுத்தி வெளி செய்தது; ஒப்பு. 'கடவுள் மால்வரை கண்விடுத் தன்ன' சிறுபாண். 205-206. விண்ணோரூர் புக என்றமைத்து அமராவதிக்குச் செல்ல என்றும் பொருள் கூறலாம். படுகால் - ஏணி; சீவக. 2872. நச். உரை. இச் சொல், படிக்கால் எனவும் வழங்கும். கடற்கு நீர் புகுவழி; தெருக்களை ஆறுகளாகக் கொள்வது கவிமரபு; பல தெருக்களும் ஆங்குக் கூடுவது கருதத்தக்கது: நீர்புகு கடற்கு வழியோ என்று மாற்றி, எல்லா ஆறுகளும் புகும் கடலுக்கு வழியாமோ என்றும் பொருள் கூறலாம்.

(*பி-ம்.*) 1. நிறுத்திவழி:
2. ஊர்புக படைத்தபடி.
3. நிலைத்தநடு. (66)

162. *ஏழுலகின் வாழுமுயிர் யாவையு மெதிர்ந்தால்*
*ஊழின்முறை யின்றியுட னேபுகுமி தொன்றோ*
*வாழியரி யங்குவழி யீதென வகுத்தால்*
*ஆழியுள வேழினள வன்றுபகை யென்றான்.*

ஏழ் உலகின் வாழும் உயிர் யாவையும் - ஏழு உலகங்களிலும் வாழ்கின்ற உயிர்கள் யாவும், எதிர்ந்தால் - (இந்நகரினுள் நுழைய) வந்தால், ஊழின்முறை இன்றி - வரிசைக்கிரமம் இல்லாமல், உடனே - ஒருமிக்க, புகும் - (இவ்வாயிலினுள்) புகும்; இது ஒன்றோ - (இதன் பெருமைக்கு இடம்) இஃது ஒன்றுதானோ? வாழியர் - (இந்நகரில்) வாழ்கின்றவர்கள், இயங்கும் வழி ஈது - நடமாடும் வழி இதுவேயாகும், என - என்று, வகுத்தால் - (இதன் அளவை) ஆராய்ந்து பார்த்தால், பகை-எமக்குள்ள

பகை, ஆழி ஏழின் அளவு உள அன்று - சமுத்திரங்கள் ஏழின் அளவே உண்டு (என்று எண்ணுதல்) தகாது; (அவற்றிற்கு மிக்குளவாம், என்ற படி.) என்றான் - என்று எண்ணினான்.

வகுத்தால், என்பதற்கு அமைத்தால் என்று பொருள் கூறுதலுமுண்டு.

(பி-ம்.) 2. ஊழ்முறையில் வாயில்வழி யேபுகினு மொவ்வா: ஊழ்முறையி னன்றி; முறையி தன்றி: உட னேபுகுத லுண்டோ; புகுவ தொன்றே.

3. ஈதென மதித்தே; ஈதென விலங்கும்; ஈதென மலைந்தால்; ஈதென மதித்தான்.

4. படை யென்றான்; பகை வென்றான். (67)

163. *வெள்ளமொரு நூறொடிரு நூறுமிடை வீரர்*
*கள்ளவினை வெவ்வலி யரக்கரிரு கையும்*
*முள்ளெயிறும் வாளுமுற முன்னமுறை நின்றார்*
*எள்ளரிய காவலினை யண்ணலு மெதிர்ந்தான்.*

ஒரு நூறொடு இருநூறு வெள்ளம் மிடை வீரர் - முந்நூறு வெள்ளம் என்ற எண்ணிக்கை கொண்ட நெருங்கிய படை வீரர்களாகிய, கள்ள வினை - வஞ்சத்தொழிலும், வெம்வலி - கொடிய வலிமையும் (கொண்ட), அரக்கர் - அரக்கர்கள், இருகையும் - வாயிலில் இரண்டு பக்கங்களிலும், முள் எயிறும் - முள் போன்ற கூரிய பற்களும், வாளும் - வாட்களும், உற - கொண்டு, முன்ன முறை நின்றார் - போருக்கு முற்பட்டவர் களாய் முறையில் நின்றார்கள்; எள் அரிய காவலினை - (அத்தகைய) தள்ளுதற்கு அருமையான காவலை, அண்ணலும் - பெரியோனான அநுமனும், எதிர்ந்தான் - முன்னே கண்டான்.

(பி-ம்.) 1. நூறொடொரு நூறுமுடை வீரர்.

2. வாளுமிக மின்னமுறை நின்றார். (68)

164. *சூலமழு வாளொடயி லேமர முலக்கை*
*காலவரி விற்பகழி கப்பண முசுண்டி*
*கோலகணை நேமிகுலி சஞ்சுரிகை குந்தம்*
*பாலமுத லாயுதம் வலத்தினர் பரித்தார்.*

சூலம்................பாலம் முதல் ஆயுதம் - சூலம்...............பாலம் முதலிய படைகளை, வலத்தினர் - வலிமையுடைய (அக்காவலரக்கர்), பரித்தார் - தாங்கி நின்றார்கள்.

மழு - கோடாலி; பரசும் ஆம். அயில் - வேல். தோமரம் - தண்டு. கால வரி வில் - கூற்றுவன் போன்ற கட்டமைந்த வில். பகழி - அம்பு. கப்பணம் 136 ஆம் செய்யுளின் குறிப்பைக் காண்க. முசுண்டி-ஒரு போர்க்கருவி. கோல - அழகிய. கணை - கணையம்; வளைதடி. நேமி - சக்கரம். குலிசம் - வச்சிராயுதம் போன்ற வாள். சுரிகை - பத்திர மென்னும் ஒருவகை வாள். குந்தம்-கைவேல். பாலம் - பிண்டி பாலம்: தலையிலே பீலி கட்டப்பட்டு எறிவதொரு படை; சீவக. நச்-உரை, 2269.

(பி-ம்.) 3. **கோல்கணைய; கோல்கதையு.**
4. **பரித்தனர் வலத்தார்; வலித்தனர் பரித்தார்.** (69)

165. *அங்குச நெடுங்கவ ணடுத்துடல் விசிக்கும்*
*வெங்குசைய பாசமிவை வெய்யபயில் கையர்*
*செங்குருதி யன்னசெறி குஞ்சியர் சினத்தோர்*
*பங்குனி மலர்ந்தொளிர் பலாசவன மொத்தார்.*

(அக்காவலர்), அங்குசம் - அங்குசம் என்னும் ஒருவகைப்படையும், நெடும் கவண் - கவண்கல்லைச் சுழற்றும் நீண்ட கயிறும், அடுத்து உடல் விசிக்கும் - பகைவரை நெருங்கி அவர் உடலை இறுகக் கட்டும், வெம் குசைய பாசம் - கொடிய கச்சுப் போன்ற பாசக்கயிறும், இவை - ஆகிய இவற்றை, பயில் வெய்ய கையர் - பயிற்சி செய்த கொடிய கைகளை யுடையவர்; செம் குருதி அன்ன - சிவந்த இரத்தம் போன்ற நிறங் கொண்ட, செறி குஞ்சியர் - அடர்ந்த தலைமயிரையுடையவர்; சினத் தோர் - (காரணமின்றியே) சினங்கொள்பவர்; பங்குனி-பங்குனி மாதத் திலே, மலர்ந்து - பூத்து, ஒளிர் - ஒளிவீசுகின்ற, பலாச வனம் ஒத்தார் - புரசமரக் காட்டை ஒத்திருந்தார்கள்.

குசை - கச்சு; கடிவாளமும் ஆம். புரசம்பூ செந்நிறமானது; பங்குனித் திங்களில் புரசமரங்கள் இலைகளின்றிக் கொம்புகளும் பூக்களுமே நிறைந்து நிற்கும் என்பது கருதத்தக்கது.

(பி-ம்:) 1. **நெடுங்கவ ணயிற்சிலை வழங்கும்; அடற்சிலை வழங்கும்.**
2. **வெங்குலிச பாசம்.**
4. **பலாசவன மொப்பார்.** (70)

166. *அளக்கவரி தாகிய கணத்தொடய னிற்கும்*
*விளக்கின மிருட்டினை விழுங்கியொளி கால*
*வளக்கரிய காலன்மன முட்குமணி வாயில்*
*இளக்கமில் கடற்படை யிருக்கையை யெதிர்ந்தான்.*

(அநுமன்), அயல் - (மேலே சுட்டிய தரைக்காவலர் நின்ற இடத்திற்கு) அயலிலே, அளக்க அரிதாகிய கணத்தொடு - அளவிடுதற்கு முடியாத கூட்டத்தோடு, நிற்கும் - நிறுத்தப்பெற்றிருந்த, விளக்கு இனம் - விளக்கு வகைகள், இருட்டினை விழுங்கி - இருளை அகற்றி, ஒளி கால - வெளிச்சத்தைக் கொடுக்க, வள கரிய காலன் மனம் உட்கும் மணி வாயில் - மிகவும் கரிய கூற்றுவனின் மனமும் அஞ்சத்தக்கதும், மணிகளால் ஆனதுமான வாயிலில், இளக்கம் இல் - தளர்ச்சியில்லாத, கடல் படை இருக்கையை - கடல் போன்று மிகுந்த படையின் இருப்பிடத்தை, எதிர்ந்தான் - எதிரில் கண்டான்.

(பி-ம்.) 1. அளக்கவரி தாயதொர்: கணக்கொட ல்.
2. இருட்டனை.
3. உளக்கடிய; அளக்கரிய உளக்கரிய: மனனுட்கு. (71)

*167. எவ்வமர ரெவ்வவுண ரெவ்வருள ரென்னே*
*கவ்வைமுது வாயிலி னெடுங்கடை கடப்பார்*
*தெவ்வரிவர் சேமமிது சேவகனும் யாமும்*
*வெவ்வமரின் மேலினியெ னுய்விளையு மென்றான்.*

(அநுமன்), 'கவ்வை-ஆரவாரம் மிக்க, முது வாயிலின் நெடுங்கடை - பழைமையான கோட்டைவாயிலின் நீண்ட ஓரத்தை, எ அமரர், எ அவுணர் - எத்தேவர், எவ்வசுரர், கடப்பார் - தாண்டுவார்? எவ்வர் உளர்-பிற எவர் கடக்கும் ஆற்றல் பெற்றவர் உள்ளார்கள்? என்னே - இதன் பெருமைதான் யாதேயாகும்? இவர் தெவ்வர் - இத்தகைய ஆற்றலுள்ளவர் (எம்) பகைவர்; இது சேமம் - (இவ்வளவு வலிமையுள்ள) இது (அவர்களின்) பாதுகாவல்; சேவகனும் யாமும் - வீரனாகிய இராமபிரானும் (வானரர்களாகிய) யாங்களும், இனிமேல் வெம் அமரின் - இனி நிகழ்த்தப் போகும் கொடிய போரில், எனுய் விளையும்-யாதாய் முடியுமோ?' என்றான் - என்று தனக்குள்ளே கூறிக்கொண்டான்.

(பி-ம்.) 1. எவ்வவுண ரேவருள ரென்னே.
2. நெடுங்கடல் கடப்பார்.
4. வெவ்மமர் தொடங்கிடி னெனுய்விளையு மென்றான். (72)

*168. கருங்கடல் கடப்பதரி தன்றுநகர்க் காவல்*
*பெருங்கடல் கடப்பதரி தெண்ணமிறை பேரா*
*தருங்கடன் முடிப்பரி தாரமர் கிடைப்பின்*
*நெருங்கமர் விளைப்பர்நெடு நாளென நினைந்தான்,*

(மேலும் அநுமன்), 'கருங்கடல் கடப்பது அரிது அன்று - கரிய கடலைத் தாண்டுவது அரிய செயலன்று; நகர் காவல் பெரும் கடல் கடப்பது அரிது - இந்நகரின் காவலாகிய பெரிய கடலைத் தாண்டுவது (மிக) அரிது; ஆர் அமர் கிடைப்பின் - பெரிய போர் ஏற்பட்டால், நெடு நாள் நெருங்கு அமர் விளைப்பர்-நீண்டகாலம் நெருங்கிய போரிடுவர்; எண்ணம்-(பிராட்டி இருக்கும் இடத்தை நாடிக் காணவேண்டுமென்ற) நினைப்பு, இறை பேராது - சிறிதும் நீங்காமல், அரும் கடன் - (இராமபிரானுக்கு நான் ஆற்ற வேண்டிய) அரிய கடனை, முடிப்பது அரிது - செய்து முடிப்பது இயலாதது), என நினைந்தான் - என்று எண்ணினான்,

காவலரோடு போரிட நேருமானால், கொண்ட கருத்தும் ஆற்றவேண்டிய கடனும் பிழைபடும் என்று எண்ணினான்; அடுத்த செய்யுளில் அநுமன் ஒரு முடிவுக்கு வருவதைக் காண்க.

இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் பாடல் காணப்பெறுகிறது. இது 88 ஆம் செய்யுளை ஒட்டி அமைந்திருத்தலைக் காண்க,

ஊறுமிக வேயுறினும் யானுமமர் தேரேன்
தேறலி லரக்கர்புரி தீமையது தீர்வுற்
றேறுவகை எங்குள விராமனிடை யல்லால்
மாறுமதி வேறுபிறி தில்லென மதித்தான்.

(பி-ம்:) 1. தன்றிநகர் காவல்.
2. எண்ணமிறை பேரின்.
3. தாமமர் கிடைப்பின்.
4. நெருங்கடல் விளைப்பர். (73)

## அநுமன் மதிலைக் கடக்கத் துணிதல்

*169. (வாயில்வழி சேறலரி தன்றியும் வலத்தோர்*
*ஆயிலவர் வைத்தவழி யேகலழ கன்றால்)*
*காய்கதி ரியக்கின்மதி லைக்கடிது தாவிப்*
*போயிநகர் புக்கிடுவெ னென்றுரரயல் போனான்.*

'வாயில் வழி சேறல் அரிது - இக் கோட்டை வாயிலினுள் புகுந்து நகர்க்குள் செல்லுதல் அரியது; அன்றியும் - அல்லாமலும், வலத்தோர் ஆயில் - வலிமையுடையவரானால், அவர் வைத்த வழி ஏகல் அழகன்று - அப்பகைவர்கள் அமைத்த வழியே செல்லுதல் (வலிமைக்கு) அழகாகாது; காய் கதிர் இயக்கு இல் மதிலை-காய்கிற சூரியனின் சஞ்சரிப்பு

இல்லாத அம்மதிலை, கடிது தாவி போய் - விரைவில் தாவிச் சென்று, இநகர் புக்கிடுவென் - இந்நகரினுள் புகுவேன்,' என்று ஓர் அயல் போனான் - என்று எண்ணி (அக்கோட்டை வாயிலின்) அயலிடம் ஒன்றுக்குச் சென்றான். ஆல்: அசை,

ஆயில், என்றதற்கு ஆராயுமிடத்து என்றும் பொருள் கொள்ளலாம். பகைவர் வைத்த வழி சேறல் வீரர்க்கு அழகன்று; ஒப்பு; பாரதம்; சராசந்தன்வதை. சூரியன் செல்லமுடியாத மதில், 158.

**(பி-ம்.) 1. வாயின்வழி சேரல்.**
**2. ஆயிலவர் வைகும்வழி; வைக்கும்வழி.** (74)

### வேறு

## இலங்கா தேவியின் தோற்றம் 170-76

170. *நாணா ளுந்தா னல்கிய காவ னனிமூதூர்*
*(வாணா ளன்னாள் போவதன் மேலே வழிநின்றாள்)*
*தூணா மென்னுந் தோளுடை யானைச் சுடரோனைக்*
*காணா வந்த கட்செவி யென்னக் கனல்கண்ணாள்.*

(அப்பொழுது), நாள் நாளும் - தினந்தோறும், தான் காவல் நல்கிய நனி மூதூர் - தான் காவல் புரிந்து வந்த மிகவும் பழைய ஊரான இலங்கா புரியின், வாழ்நாள் அன்னாள் - வாழ்வுக்காலம் போன்றவளும், கனல் கண்ணாள் - நெருப்பினைக் (கக்கும்) கண்களை உடையவளுமான (இலங்காதேவி), சுடரோனைக் காணா வந்த கட்செவி என்ன - சூரியனைக் கண்டு வந்த (இராகு அல்லது கேது என்ற) பாம்பு போல, தூண் ஆம் என்னும் தோள் உடையானை - தூண் என்று சொல்லத்தக்க தோள்களை உடைய அநுமனின், மேலே போவதன் வழிநின்றாள் - மேலே செல்லும் வழியில் வந்து நின்றாள்.

இது முதல் 176 ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர். வாழ்நாள் அந்நாள் போவதன் மேலே வழிநின்றாள் என்று கூட்டி, தன் வாழ்நாள் அன்றோடு முடியும் வழியில் நின்றவள் என்றும், அந்த மூதூரின் வாழ்வுக் காலம் அந்நாளொடு அழிவுறும் என்பதை முன்னிட்டுக்கொண்டு நின்றவள் என்றும், தான் நல்கிய காவல் போவதன் மேலே வழி நின்றாள் என்று கொண்டு, தான் புரிந்து வந்த நகர்க் காவலுக்காகப் போகின்ற காரணத்தாலே மதிலின் மேல் வழியிலே நின்றவள் என்றும் பொருள் கொள்வர். மூதூர் வாழ்நாள் அன்னாள் - மூதூரின் உயிரே போன்றவள் என்றும், அம்

மூதூரோடு ஒத்த வாழ்நாளை உடையவள் என்றும் கொள்க. தோளுடையாளை; ஐ, வேற்றுமை மயக்கம். சுடரோன் அநுமனுக்கும், கட்செவி இலங்காதேவிக்கும் உவமைகள்.

(பி-ம்) 2, வாளு எந்நாள். (75)

171. *எட்டுத் தோளா ளுலு முகத்தா ளுலகேழும்*
*தொட்டுப் பேருஞ் சோதி நிறத்தாள் சுழல்கண்ணள்*
*முட்டிப் போரின் மூவுல கத்தை முதலோடும்*
*கட்டிச் சீறுங் காலன் வலத்தாள் கமையில்லாள்.*

(அவள்), எட்டு தோளாள் - எட்டுத் தோள்களையுடையவளும், நாலு முகத்தாள்-நான்கு முகங்களையுடையவளும், உலகு ஏழும் தொட்டு பேரும் சோதி நிறத்தாள் - ஏழுலகங்களையும் தொட்டுத் திரும்பும் ஒளியையுடைய மார்பினை உடையவளும், சுழல் கண்ணள் - நாற்புறமும் சுழன்று வரும் கண்களையுடையவளும், மூவுலகத்தை போரின் முட்டி - மூன்று உலகங்களையும் போரிலே எதிர்த்துத் தாக்கி, முதலோடும் கட்டி சீறும் - அடியோடு கட்டிக் கோபிக்கின்ற, காலன் வலத்தாள் - கூற்றுவனைப் போன்ற வலிமையுடையவளும், கமை இல்லாள் - பொறுமை இல்லாதவளுமாக (அவ்விலங்காதேவி தோன்றினள்.)

(பி-ம்.) 2. சோதி வலத்தாள் ; சூல வலத்தாள்.
3. முட்டிப் பேரின்.
4. சீறுங் காவன். (76)

172. *பாரா நின்ற ளெண்டிசை தோறும் பலரப்பால்*
*வாரா நின்ற ரோவென மாரி மழையேபோல்*
*ஆரா நின்ற ணூபுர மச்சந் தருதாளாள்*
*வேரா மெய்யாள் மின்னி னிமைக்கு மிளிர்பூணள்.*

அச்சம் தரு தாளாள் - (கண்டவர்க்கு) அச்சத்தை விளைவிக்கும் கால்களை உடையவளும், நூபுரம்-(அக்கால்களில் அவள் அணிந்திருந்த) காற்சிலம்புகள், மாரி மழையே போல் - மழைக்கால மழையைப் போல, ஆராநின்றன் - ஒலிக்க நின்றவளும், வேரா மெய்யாள் - வியர்த்த உடலினை உடையவளும், மின்னின் இமைக்கும் மிளிர் பூணள் - மின்னலைப் போல் ஒளிவிடும் பிரகாசமுள்ள அணிகலங்களை உடையவளுமான அவ்விலங்காதேவி, எண்திசை தோறும் அப்பால் பலர் வாரா நின்றாரோ என - எட்டுத் திக்குக்களிலும் அப்பாலுள்ள நெடுந்தூரங்களினின்று வெவ்வேறான அந்நியர் பலர் வருகின்றனரோ என்று, பாரா நின்றாள் - (அத்திசை தோறும்) பார்த்து நின்றாள்.

'பலரப்பால் வாரா நின்ருரோவென உலகம் எண்ணிப் பயப்பட ஒலிக்கும் சிலம்பினுள்' என்று பழைய உரை கூறும். தோறும், என்றமையால் அடிக்கடி ஒவ்வொரு திசையையும் பார்த்து நின்ருள் என்க.

(பி-ம்.) 4. வேரா நின்ருள். (77)

173. *வேல்வாள் சூலம் வெங்கதை பாசம் விளிசங்கம்*
*கோல்வாள் சாபங் கொண்ட கரத்தாள் வடகுன்றம்*
*போல்வா டிங்கட் போழி னெயிற்ருள் புகைவாயில்*
*கால்வாள் காணிற் காலனு முட்குங் கதமிக்காள்.*

(அவள்), வேல்..............கரத்தாள் - வேல், வாள், சூலம், கொடிய கதை, பாசம், ஊதும் சங்கு, அம்பு, ஒளிதாங்கிய வில் (ஆகிய எட்டு ஆயுதங்களை எட்டுக்) கைகளில் கொண்டவள்; வட குன்றம் போல்வாள் - மேருமலையைப் போன்ற பெரிய வலிய உடலமைப்புக் கொண்டவள்; திங்கள் போழின் எயிற்ருள் - சந்திரனின் பிளவு போன்ற வளைந்த பற்களையுடையவள்; வாயில் புகை கால்வாள் - வாயினின்று புகையைக் கக்குவாள்; காணில் - காணும்போது, காலனும் உட்கும் கதம் மிக்காள் - கூற்றுவனும் அஞ்சத்தக்க மிக்க கோபம் கொண்டுள்ளவள்.

(பி-ம்.) 1. வீசுறு பாசம்: மிளிர்சங்கம்.
2. கோல்வாள் குந்தம்: குடகுன்றம்.
3. திங்கள் பொழியு மெயிற்ருள்; போலு மெயிற்ருள். (78)

174. *அஞ்சு வணத்தி னுடை யுடுத்தா ளரவெல்லாம்*
*அஞ்சு வணத்தின் வேக மிகுத்தா ளருளில்லாள்*
*அஞ்சு வணத்தி னுத்தரி யத்தா ளலையாரும்*
*அஞ்சு வணத்தின் முத்தொளி ராரத் தணிகொண்டாள்.*

(அவள்), அஞ்சு வணத்தின் ஆடை உடுத்தாள் - ஐந்து நிறங்களாகிய ஆடையை உடுத்திருந்தாள்; அரவெல்லாம் அஞ்சு உவணத்தின் வேகம் மிகுத்தாள் - பாம்புகளெல்லாம் (கண்டு) பயப்படும் கருடனைப் போன்ற கடுவேகம் கொண்டவள்; அருள் இல்லாள் - இரக்கம் என்பதே இல்லாதவள்; அம் சுவணத்தின் உத்தரியத்தாள் - அழகிய பொன்னுலான மேலாடையுடையவள்; அலை ஆரும் - அலை பொருந்திய, அம் - (கடல்) நீரில், சு - அழகான, வள் - ஒளி பொருந்திய, நத்தின் முத்து ஒளிர் ஆரத்து அணி கொண்டாள் - சங்கினின்று பிறந்த முத்துக்கள் ஒளிவீசும் மாலையாகிய அணிகலனைத் தரித்திருந்தாள்.

ஐந்து நிறங்கள்: வெண்மை, செம்மை, கருமை, பொன்மை, பசுமை என்பன. ஐந்நிற ஆடை உடுத்தல்; அயோத்யா. நகர்நீங்கு. 194; பெருங். 1: 42: 102; 2: 5: 128; 3: 1: 95—100. மஞ்சு வணத்தின் முத்து என்று பாடங் கொண்டு, இளமை பெற்றவள் நத்தின் முத்தம் என்றும் சிலர் பொருள் கூறுவர்; மஞ்சு - இளமை. இச்செய்யுள் யமகம் என்னும் சொல்லணி பெற்றது.

(பி-ம்.) 2. வேக மதித்தாள்.
4. முத்தொளி யாரத். (79)

175. *சிந்தா ரத்தின் செச்சை யணிந்தா டெளிநூல்யாழ்*
*அந்தா ரத்தின் நேர்வரு சொல்லா ளறைதும்பி*
*கந்தா ரத்தி னின்னிசை பன்னிக் களிகூரும்*
*மந்தா ரத்தின் மாலை யலம்பு மகுடத்தாள்.*

(அவள்), ஆரத்தின் - சந்தனத்தின், சிந்து - சிந்திப்பரவிய, செச்சை - கலவைப் பூச்சை, அணிந்தாள் - தரித்திருந்தாள்; யாழ் தெளி நூல்-யாழைப்பற்றித் தெளிவாய்க் கூறும் நூல்களில் (குறித்தபடி அமைந்த), அம் தாரத்தின் நேர் வரு சொல்லாள் - அழகிய தாரம் (என்ற எடுத்தலோசைக்கு) ஒத்த குரலோடு பேசுபவள்; அறை தும்பி - ஒலிக்கும் வண்டுகள், இன் கந்தாரத்தின் இசை பன்னி - இனிய காந்தாரம் என்னும் பண்ணின் இசையைப் பாடிக்கொண்டு, களி கூரும் - மிக்க களிப்புடன் அமர்ந்திருக்கும், மந்தாரத்தின் மாலை அலம்பும் - (தேவதருக்களுள் ஒன்றான) மந்தார மலர்களால் ஆன மாலை அசைந்தாடுகின்ற, மகுடத்தாள் - முடியையுடையவள்,

சிந்து ஆரம் - சிந்து நாட்டிலிருந்து பெற்ற சந்தனம் என்றும், கடலிலிருந்து பெற்ற முத்துக்களாலான என்றும் பிறர் பொருள் கூறுவர். பின் பொருள் கூறுபவர் செச்சை என்பது சட்டையைக் குறிக்கும் என்பர். செச்சை - மெய்ப்பூச்சு; ஆரண்ய. விராதன்வதைப்; 9; சீவக. 1080; தக்க. 742; இது சர்ச்சா என்னும் வடமொழியின் சிதைவு. தாரம் - வல்லோசை. மந்தார மாலையில் வண்டு பாடுதல்; 'மந்தார மாலை மலர் வேய்ந்து' மகிழ்ந்து தீந்தேன், கந்தாரஞ் செய்து களிவண்டு முரன்று பாட, (சீவக. 1959.) இச்செய்யுள் திரிபு என்றும் சொல்லணியின் பாற்படும்.

(பி-ம்.) 3. இன்னிசை பாடிக் களிகூரும். (80)

176. *எல்லா முட்கு மாழியி லங்கை யிகன்மூதூர்*
*நல்லா ளவ்வூர் வைகுறை போலும் நயனத்தாள்*
*நில்லாய் நில்லா யென்றுரை நேரா நினையாமுன்*
*வல்லே சென்றாண் மாருதி கண்டான் வருகென்றான்.*

எல்லாம் உட்கும் - எல்லாப்பிராணிகளும் அஞ்சும், ஆழி இலங்கை இகல் மூதூர் நல்லாள் - கடல் சூழ்ந்த இலங்கை என்னும் வலியின் மிக்க பழைய ஊருக்கு நன்மை செய்பவளான இலங்காதேவி, அவ்வூர் வைகு உறை போலும் நயனத்தாள் - அந்த ஊர் தங்கி உறைவதற்கு அமைந்தது போன்ற கண்களை உடையவள்; (அநுமன் மதில்மீது வருவது நோக்கி), 'நில்லாய் நில்லாய் என்று-நிற்பாயாக, நிற்பாயாக' என்று, உரை நேரா - சொல்லிக்கொண்டு, நினையாமுன் - நினைக்கும் நேரத்துக்குள், வல்லே சென்றாள் - (அவன் முன்னே) விரைவிற் சென்றாள்; மாருதி - அநுமனும், கண்டான் - (அவள் தன்னை நோக்கி வருவதைக்) கண்டு, 'வருக என்றான் - வருவாயாக' என்றான்.

எல்லாம் உட்கும் என்பதை ஆழியுடனேயும், நல்லாள் என்பதினோடும் தனித்தனியே கூட்டியும் பொருள் உரைக்கலாம். அவ்வூர் வைகுறை போலும் நயனத்தாள் என்பதற்கு, 'கண்ணுள் வைத்து இமையால் மூடிப் பாதுகாத்தல்' என்று கூறுவது போன்ற பொருள் கொள்க. நினையாமுன் என்றதற்கு, மாருதி அவளைக் கண்டு அவள் கருத்தை அறிய முயலாமுன் என்றும் பொருள் கொள்ளலாம். மாருதி கண்டான், வருக என்றான் என்றதில் அமைந்துள்ள நாடகநயத்தை ஓர்க.

(பி-ம்.) 2. வைகுறை யொக்கு நயனத்தாள்.
3. என்றுரை நேர்வா ணினையாமுன். (81)

## அநுமனும் இலங்காதேவியும் எதிர்தல் 177-80

177. *ஆகா செய்தா யஞ்சலை போலு மறிவில்லாய்*
*சாகா மூலந் தின்றுழல் வார்மேற் சலமென்னும்*
*பாகா ரிஞ்சிப் பொன்மதி லுவிப் பகையாதே*
*போகா யென்றாள் பொங்கழ லென்னப் புகைகண்ணாள்.*

பொங்கு அழல் என்ன புகை கண்ணாள் - பொங்கி எழுகின்ற நெருப்புப் போன்று புகையும் கண்களையுடைய அத்தேவி, 'சாகா மூலம் தின்று உழல்வார் மேல் சலம் என் ஆம் - இலைகளையும் வேர்களையும் தின்று திரியும் (வானரர்) மேல் என் கோபம் என்ன பயனுள்ளது? (எனினும்), அறிவில்லாய் - புத்தியற்றவனே! ஆகா செய்தாய் - இவ்வூரில் எவராலும்

செய்யத் தகாத செயலைப் புரிந்தாய், அஞ்சலை போலும் - (இங்குள்ள காவலைக் கண்டு) நீ அஞ்சினாயல்லை போலும்; பாகு ஆர் பொன் இஞ்சி மதில் தாவி பகையாதே - அழகு நிறைந்ததும் பொன்னாலானதுமான கோட்டை மதிலைத் தாவி எனக்குப் பகை செய்யாதே; போகாய் - போவாயாக', என்றாள் - என்று அதட்டிக் கூறினாள்.

சாகமூலம் என்ற வடமொழித் தொடர் எதுகை நோக்கி நீண்டது சாகா மூலம் தின்றுழல்வார் என்றதனாலும், பின்னும் 189 ஆம் செய்யுளில், 'குரங்கொன்றுன்னைத் தீண்டிக் காய்ந்தவன்று' என்று கூறினமையாலும், 195 ஆம் செய்யுளில் - 'தன்றகை யரிய மேனி சுருக்கி' என்று கூறினமையாலும், அநுமன் வானர உருவத்திலேயே இலங்கையினுட் புகுந்தான் என்பது கம்பர் கருத்தாகும் என்று கொள்ளற்பாலது. இஞ்சி, மதில் ; ஒரு பொருட் பன்மொழி.

(பி-ம்.) 2. தின்றுழல் வார்பால்.
3. தாவிப் பதையாதே.
4. பொங்கன லென்னப். (82)

178. *களியா வுள்ளத் தண்ணன் மனத்திற் கதமூள*
*விளியா நின்றே நீதி நலத்தின் வினையோர்வான்*
*அளியா னிவ்வூர் காணு நலத்தா லணைகின்றேன்*
*எளியே னுற்றால் யாவ துனக்கிங் கிழவென்றான்.*

களியா உள்ளத்து - (இயல்பிலே) செருக்கடையாத உள்ளத்தையுடைய, அண்ணல் - பெரியோனான அநுமன், மனத்தில் கதம் மூள - (இலங்காதேவியின் சொற்களால்) மனத்திலே கோபம் எழ, விளியா நின்று - (அக்கோபத்தை) அழித்து, நீதி நலத்தின் வினை ஓர்வான் - நீதி நெறி வழியே செய்யப்படும் நற்செயலை அறிந்துணரும் அவன், (அவளை நோக்கி), 'அளியான்-ஆசையுடையோனாய், இவ் ஊர் காணும் நலத்தால் அணைகின்றேன்-இந்த நகரைப் பார்க்க வேண்டும் என்ற நல்லெண்ணத்தால் வருகின்றேன்; எளியேன் - எளியவனான யான், உற்றால் - இங்கு வந்தால், உனக்கு இங்கு இழவு யாவது - உனக்கு இவ்விடத்தில் நஷ்டம் என்ன ?' என்றான் - என்று அமரிக்கையாய்க் கூறினான்; ஏ; அசை.

விளித்தல் - அழித்தல். அளியான் - இரங்கத்தக்கவன் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்வூர் நீதி நலத்தின் வினையோர்வான் காணும் நலத்தால் அணைகின்றேன். என்று ஒரு தொடராக்கியும், பொருள் காண்பர். இழவு என்ற சொல்லின் தொனியை ஓர்க.

(பி-ம்.) 1. கதமுழ்க.
3. அளியா லிவ்வூர் : நலத்தி லணிகின்றேன்;
நலத்தா னணிகின்றேன்.
4. இழிவென்றான். (83)

179. என்று முன்ன மேகென வேகா தெதிர்மாற்றம்
சொன்னாய் நீயே யாவ னடாதொல் புரமட்டான்
அன்னா ரெய்தற் கஞ்சுவ ரம்மா யளியத்தாய்
உன்னா லெய்து மூர்கொ லிவ்வூரென் றுறநக்காள்.

என்று முன்னம் - என்று அநுமன் கூறுமுன்னே, (அவள் அவனை நோக்கி), 'ஏகு என நீயே ஏகாது - போ என்று நான் சொல்ல நீயாகச் செல்லாமல், எதிர் மாற்றம் சொன்னாய் - எதிர்மொழி பேசினாய்: அடா (நீ) யாவன் - அடே! நீ யார்?, தொல் - பழைமையான, புரம் - முப்புரங் களையும், அட்டான் அன்னார் - எரித்த சிவபிரான் போன்றவரும், எய்தற்கு அஞ்சுவர் - (இவ்வூருக்குள்) வருவதற்கு அஞ்சுவரே! அளியத்தாய் - இரங்கத்தக்கவனே! இ ஊர் உன்னால் எய்தும் ஊர்கொல் - இந்த நகரம் உன்னால் வரத்தக்க (எளிய) நகரமோ?' என்று - என்று கூறி, உற - மிகுதியாக, நக்காள் - நகைத்தாள். அம்மா : வியப்பிடைச்சொல்.

ஏகென ஏகாது நீயே எதிர்மாற்றம் சொன்னாய் என்று இயைத்துப் பொருள் கோடலும் ஆம். அடா, என்பது இழிந்தோனை நோக்கிக் கூறும் விளி; அடாவென்பது அழித்துரை; தக்க. 508. உரை. அம்மா: அசைச் சொல்லும் ஆம் நகைத்தது, இகழ்ந்து என்க.

(பி-ம்.) 3. அன்னா ரேனு மஞ்சுவ ரெய்தற் களியுற்றால். (84)

180. நக்காளைக்கண் டையன் மனத்தோர் நகைகொண்டான்
அக்கா லீதா ரார்சொல வந்தா யுனதாவி
உக்கா லன்றி யோடலை யென்றா ளினியிவ்வூர்
புக்கா லன்றிப் போகலெ னென்றான் புகழ்கொண்டான்.

ஐயன் - பாராட்டுதற்குரிய அநுமன், நக்காளைக் கண்டு - சிரித்த வளாகிய இலங்காதேவியைப் பார்த்து, மனத்து ஓர் நகை கொண்டான் - மனத்துள் தானும் நகைத்தான்; அக்கால் - அப்பொழுது, (அவள் அநுமனை நோக்கி), 'ஆர் தான் சொல நீ வந்தாய் - யார் அனுப்ப நீ வந்தாய்? உனது ஆவி உக்கால் அன்றி ஓடலை - உன் உயிர் சிந்தி அழிந்தால் அல்லாமல் நீ ஓடமாட்டாய் போலும்'! என்றாள் - என்று கூறினாள்: புகழ் கொண் டான் - புகழ் பெற்றவனான அநுமன், (அவளுக்கு மறுமொழியாக), 'இனி

- இதன்பிறகு, இ ஊர் புக்கால் அன்றி போகலென் என்றான்-இந்த நகரினுள், புகுந்தபின் அல்லாமல் திரும்பமாட்டேன்' என்று கூறினான்.

உற நக்கானுக்கெதிர் மனத்து நகை கொண்டது, இவ்விருவருக்கும் உள்ள பண்பாட்டு வேற்றுமையைப் புலப்படுத்தியது.

(பி-ம்.) 1. ஐய னடித்தோர் நகை கொண்டான்.
2. நக்காய் நீயரர் யார்சொல வந்தாய்.
3. உக்கா லேதா மோடலை; உக்கா லேயா னுண்டுது மென்று ளினி.
4. அன்றிப் போகிலன்: புகழ் மிக்கான். (85)

## இலங்காதேவி அநுமன் நிலைகண்டு ஏங்கி நிற்றல்

181. *வஞ்சங் கொண்டான் வானர மல்லன் வருகாலன்*
*துஞ்சுங் கண்டா லென்னை யிவன்சூழ் திரையாழி*
*நஞ்சங் கொண்ட கண்ணுத லைப்போ னகுகின்றான்*
*நெஞ்சங் கண்டே கல்லென நின்றே நினைகின்றாள்.*

'வரு காலன் என்னை கண்டால் துஞ்சும் - என்னைப் பகைத்து வரும் காலனும் என்னைக் கண்டால் இறப்பான்: இவன் - இவன், திரை சூழ் ஆழி - அலைகள் சூழ்ந்துள்ள கடலிலிருந்து (எழுந்த), நஞ்சம் கொண்ட கண்ணுதலைப் போல் - விடத்தை உட்கொண்ட நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானைப் போல், நகுகின்றான் - சிரிப்புக் கொள்கின்றான்; வஞ்சம் கொண்டான் - வஞ்சனையை மனத்தில் கொண்டவனாயிருக்கிறான்; வானரம் அல்லன் - உண்மைக் குரங்கு அல்லன்:' (என்று), நெஞ்சம் கண்டு - அநுமனின் மனத்தை நோக்கி, கல் என நின்று - கல்லைப் போல அசையாமல் நின்று, நினைகின்றாள் - எண்ணுவாளாயினள். ஏ : அசைகள்.

நஞ்சங்கொண்ட கண்ணுதலைப் போனகுகின்றான், என்றமையால் அநுமன் ருத்ராம்சமானவன் என்பதை நினைப்பூட்டுவதையன்றி, அவன் நகையால் திரிபுரம் அழிந்தது போல் இலங்கையும் அவனால் எரியூட்டப் பெறும் என்பதையும் முன் கூட்டிக் குறிப்பதான தொனி நயம் அமைந்திருத்தல் காண்க. சிவபெருமானே அநுமனாக வந்தார் என்பது, 'புராரி மற் றியானே வாத, சேயெனப் புகன்றான்' (*பால*, திருவவதாரப். 28.)

இதன்பின் சிலபிரதிகளில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

கண்ட வனப்பான் மேனி கரக்குங் கருமத்தால்
கொண்டல் செறிப்பான் வானர மென்றுங் கொளலன்றே
அண்ட மனைத்தும் பூரண னாகு மவனாகும்
சண்டை கொடுத்துங் கொள்வ னெனத்தான் சலமுற்றாள்.

(பி-ம்.) 4. நெஞ்சங் கண்ட; நெஞ்சங் கண்டேன் கல்லென வென்றே. (86)

## இலங்காதேவி அநுமனோடு போர் புரிதல் 182-85

182. *கொல்வா மன்றேற் கோளுறு மிவ்வூ ரெனல்கொண்டாள்*
*வெல்வாய் நீயேல் வேறி யெனத்தன் விழிதோறும்*
*வல்வாய் தோறும் வெங்கனல் பொங்க மதிவானில்*
*செல்வா யென்னு மூவிலை வேலைச் செலவிட்டாள்.*

(இலங்காதேவி), 'கொல்வாம் - இவனைக் கொல்வோம்; அன்றேல்-அப்படி இவனைக் கொல்லாது விட்டு விட்டால், இவ்வூர் - இந்த நகரம், கோள் உறும் - இவனால் அழிவடையும்;, எனல் கொண்டாள் - என்று கருதினவளாய், (அநுமனை நோக்கி), நீ வெல்வாயேல் வேறி - நீ வெல்ல வல்லவனாகில் வென்று கொள்', என-என்று கூறி, வெம் கனல் தன் விழி தோறும் வல் வாய் தோறும் பொங்க - கொடிய நெருப்பானது தன் (எட்டு) விழிகளிலும், (நான்கு) வலிய வாய்களிலும் நின்று பொங்கியெழ, மதிவானில் செல்வாய் என்னு - சந்திரன் விளங்கும் வானிடத்தை நீ அடைவாய்'; என்று (அநுமனை நோக்கிக்) கூறிக்கொண்டு, மூ இலை வேலை-தன் முத்தலைச் சூலத்தை, செல விட்டாள் - அவ்வநுமன் மீது செல்ல எறிந்தாள்.

கோள் உறும் -கொலையுறும் என்றுமாம்; கோள்-கொலை: 'கோணினை குறித்து வந்தான் கட்டியங்காரன்'(*சீவக.* 264.) சூலமெறிதல்; *ஆரண்ய.* சடாயு வுயிர்; 117. மதிவானில் செல்வாய் என்பதற்கு 'அளவிடும் விண்ணிலே இனி நின்னுயிர் போகப் போவாய்' என்பது *பழைய உரை.*

(பி-ம்.) 1. கொல்லா நின்றே கோளுறு; கொல்வா னன்றே; கொல்வா னின்றே.,
2. வெல்வாய் நீயே வெற்றி.
3. வெங்கனல் கால மதில்வாயில்.
4. செல்வா யென்றே. (87)

183. *தடித்தா மென்னத் தன்னெதிர் செல்லுந் தழல்வேலைக்*
*கடித்தா னாகம் விண்ணின் முரிக்குங் கலுழன்போல்*
*ஒடித்தான் கையா லும்ப ருவப்ப வுயர்காலம்*
*பிடித்தா னெஞ்சந் துண்ணென வெண்ணம் பிழையாதான்.*

**தடித்து** ஆம் என்ன - மின்னலே ஆகும் என்று சொல்லத்தக்கதாய், தன் எதிர் செல்லும் தழல் வேலை-தன் எதிரே வந்த நெருப்பொத்த சூலா

யுதத்தை, எண்ணம் பிழையாதான் - தான் நினைத்ததைத் தவறாது முடிக்கும் (ஆற்றலமைந்த) அநுமன், கடித்தான் - தன் பற்களால் கடித்து, உம்பர் உவப்ப - தேவர்கள் மகிழும் வண்ணமும், உயர் காலம் பிடித்தாள் நெஞ்சம் துண்ணென - நெடுங்காலம் வாழ்ந்தவளான இலங்கா தேவியின் மனம் திடுக்கிடும்படியும், (அச்சூலத்தை), கையால் - கைகளால், விண்ணில் கலுழன் நாகம் முரிக்கும் போல் ஒடித்தான் - வானத்தில் நின்று கருடன் பாம்பொன்றை முறிப்பதுபோல் ஒடித்தான்.

(பி-ம்) 2. கடித்தார் நாகம்.
3. உவப்ப வொளிர்சூலம்.
4. பிடித்தாளனெஞ்சந். . . . பிழையாதாள். (88)

184. *இற்றுச் சூல நீறெழல் காணு வெரியொப்பாள்*
*மற்றுத் தெய்வப் பல்படை கொண்டே மலைவாளை*
*உற்றுக் கையா லாயுத மெல்லா மொழியாமல்*
*பற்றிக் கொள்ளா விண்ணி லெறிந்தான் பழியில்லான்.*

சூலம் இற்று நீறு எழல் காணு - (தன்) சூலம் முறிந்து துகள் எழக் கண்டு, எரி ஒப்பாள் - நெருப்புக்குச் சமானமானவளாய்க் (கொதித்தெழுந்து), மற்று பல் தெய்வ படை கொண்டே மலைவாளை உற்று - வேறு பல தெய்வப்படைகளைக் கொண்டு மலைபவளான அவளை நெருங்கி, ஆயுதம் எல்லாம் - (அவள் கையாண்ட) ஆயுதங்கள் எல்லாவற்றையும், பழியில்லான் - குற்றமில்லாதவனான அநுமன், ஒழியாமல் - மிச்சமில்லாமல், கையால் பற்றிக் கொள்ளா - கைகளால் பிடுங்கி, விண்ணில் எறிந்தான் - வானத்தில் வீசி எறிந்தான்.

பழியில்லான் என்றது, பெண்ணாகிய அவளைக் கொல்லலாகாதென்று கருதியதால் என்க.

(பி-ம்.) 1. சூல மண்ணுறு காலத் தெரி; சூல நீறெழு காலத் தெரி; சூல மெண்ணுறு காலத் தெரி; நீறெழ லோடு மெரி.
2. கொண்டு மலைவாள்மேல்; கொண்டு மலைவாளை.
3. ஆயுத மொன்று மொழியாமல்: ஒழியாமை.
4. பழியற்றான்; பழியோர்வான். (89)

185. *வழங்குந் தெய்வப் பல்படை காணுண் மழைவான்மேல்*
*முழங்கும் மேக மென்ன முரற்றி முனிகின்றாள்*
*கழங்கும் பந்தும் குன்றுகொ டாடுங் கரமோச்சித்*
*தழங்குஞ் செந்தீச் சிந்த வடித்தா டகவில்லாள்.*

தகவு இல்லாள் - நற்குண மற்றவளான இலங்காதேவி, வழங்கும் - (தான்) வீசும், தெய்வப் பல்படை காணுள் - பல தெய்வப் படைகளும் போனவிடம் காணுதவளாய், மேல் வான் முழங்கும் மழை மேகம் என்ன - மேலேயுள்ள வானத்தில் முழங்கும் மழை கொண்ட மேகம் போல, முரற்றி - ஆரவாரித்து, முனிகின்றுள் - கோபிப்பவளாகி, தழங்கும் செந்தீ சிந்த - ஒலிக்கின்ற செந்நெருப்பு சிந்தும்படி, குன்று கொடு - குன்றுகளைக் (கைகளிலே) எடுத்து, கழங்கும் பந்தும் ஆடும் - கழற்சிக் காய்களாகவும் பந்துகளாகவும் விளையாடுகின்ற, கரம் ஓச்சி - கைகளை உயர்த்தி, அடித்தாள் - (அநுமனைத் தன் கைகளால்) அடித்தாள்.

அநுமன் தன்மீது வீசப்பெற்ற ஆயுதங்களைப் பற்றி எறிதலோடு நின்று, தான் போர் செய்யாமையால், மலைவான்மேல் என்ற பாடம் கொள்ளாது நீக்கப்பட்டது. தகவு - அருள், தெளிவு, பெருமை என்ற வேறு பொருள்களும் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. மலைவான்மேல்; மலைவான்வான்.
2. உரப்பி முரல்கின்றுன்; முதிர்கின்றுள்; முயல்கின்றுள்; முரிகின்றுள்.
4. தகையில்லாள்; தகைவில்லாள். (90)

## இலங்காதேவி தோல்வியுற்று வீழ்தல்

186. அடியா முன்ன மங்கை யனைத்து மொருகையால்
பிடியா வென்னே பெண்ணிவள் கொல்லிற் பிழையென்னு
ஓடியா னெஞ்சத் தோரடி கொண்டா னுயிரோடும்
இடியே றுண்ட மால்வரை போன்மண் ணிடைவீழ்ந்தாள்.

அடியா முன்னம் - அவள் அடிக்கும் முன்னே, அங்கை அனைத்தும்-அவளுடைய அழகிய கைகள் எட்டினையும், ஒரு கையால் பிடியா-தன் ஒரு கையினுல் பிடித்துக் கொண்டு, 'என்னே - என்ன இது, இவள் பெண், கொல்லில் பிழை - இவள் ஒரு பெண்ணுதலின் இவளைக் கொல்வதாஞல் பிழையாகும்', என்னு - என்று, ஓடியான் - சோர்வற்றவனுகி, நெஞ்சத்து - அவள் மார்பிலே, ஓர் அடி கொண்டான் - ஓர் அடி அடித்தான்; (அவள்), இடி ஏறு உண்ட - பேரிடியால் தாக்கப்பட்ட, மால் வரைபோல் - பெரிய மலையைப் போல, உயிரோடும் - உயிருடன், மண்ணிடை வீழ்ந்தாள் - தரையிலே விழுந்தாள்.

என்னே - என்பது வெறுத்துக் கூறியது. ஓடி - சோர்வு; தளர்ச்சி இனி. 'ஓடியா நெஞ்சத்து' எனும் பாடத்தைக் கொண்டு, ஓடிந்து போகாமனத்தைக் கொண்டவனுய் என்றும், ஓடிந்துபோகாத (வலிய)

அவள் மார்பில் என்றும் பொருள் கொள்ளலும் அமையும். அடி கொண்டான் என்பதை அடித்தலைக் கொண்டான் என்று விரித்துப் பொருள் கூறப்பெற்றது.

(பி-ம்.) 1. ஒருகையிற்.
3. கொடியா ணெஞ்சத் ; ஒடியா நெஞ்சத்.
4. இடியே றுண்ட நாக மெனப்பா ரிடைவீழ்ந்தாள். (91)

## இலங்காதேவி தன் வரலாறு கூறுதல் 187—190.

187. *விழுந்தா ணொந்தாள் வெங்குரு திச்செம் புனல்வெள்ளத்*
*தழுந்தா நின்ரு ணான்முக னூர்த மருளூன்றி*
*எழுந்தாள் யாரும் யாவையு மெல்லா வுலகத்தும்*
*தொழுந்தாள் வீரன் றூதுவன் முன்னின் றிவைசொன்னாள்.*

விழுந்தாள் நொந்தாள்-விழுந்தவளாகிய இலங்காதேவி வருந்தினாள்; வெம் குருதி செம்புனல் வெள்ளத்து அழுந்தா நின்றாள் - வெப்பமான குருதியாகிய செந்நீர் வெள்ளத்துள் அழுந்தினாள்; நான்முகனார் தம் அருள் ஊன்றி - முன் பிரமதேவர் தனக்கு அருளிய கட்டளையைத் தன் மனத்திற் பதிய வைத்து, எழுந்தாள் - எழுந்த வளாகி, எல்லா உலகத்தும் யாரும் யாவையும் தொழும் - உலகங்கள் எல்லாவற்றிலுமுள்ள உயர்திணைப் பொருள்களும் அஃறிணைப் பொருள்களும் ஆகிய யாவையும் வணங்கும், தாள் - திருவடிகளை யுடைய, வீரன் - இராமபிரானின், தூதுவன் முன் நின்று - தூதனான அநுமன்முன் நின்று, இவை சொன்னாள் - பின்வருவனவான இவற்றைக் கூறினாள்.

அருள் ஊன்றி - அருளைப் பற்றுக் கோடாகக் கொண்டு, என்னலும் ஒன்றும்.

(பி-ம்.) 1. செங்குரு திச்.
2. அருள்முன்னி.
3. எல்லா வுலகென்றும் ; எல்லா வுலகேழும்.
4. தொழுந்தா ளீசன். (92)

### வேறு

188. *ஐயகே ளபய நல்கு மயனரு ளமைதி யாகி*
*எய்தியிம் மூதூர் காப்பெ னிலங்கையா வேனும் யானே*
*செய்தொழி லிழுக்கி யுள்ளந் திகைத்திந்தச் சிறுமை யுற்றேன்*
*உய்தியென் றளித்தி யானு முணர்த்துவ லுண்மை யென்றாள்.*

(இலங்காதேவி அநுமனை நோக்கி), 'ஐய - வணங்கத்தக்கவனே! கேள் - கேட்பாயாக; அபயம் நல்கும் - அடைந்தோர்க்கு அடைக்கலம் அருளும், அயன் - பிரமதேவனுடைய

அருள் அமைதியாகி - அருள் பொருந்தி, இ மூதூர் எய்தி - இப்பழைய ஊரை அடைந்து, காப்பென் - காவல் புரிந்து வருகிறேன்; யானே இலங்கை ஆவேனும் - யானே இலங்கை (இலங்கா தேவி) என்னும் பெயருடையவளும் ஆவேன்; செய் தொழில் இழுக்கி - நான் செய்யக் கடவ காவல் தொழில்களில் தவறுண்டானமையால், உள்ளம் திகைத்து - மனம் மயங்கி, இந்த சிறுமை உற்றேன் - இப் பிழைக்கு உரியளானேன்; உய்தி என்று அளித்தி - பிழைத்துப்போ என்று அருளுவாயாக; யானும் உண்மை உணர்த்துவல் - நானும் எனது உண்மை வரலாற்றினைச் சொல்வேன், ' என்றாள் - என்று கூறினாள்,

பிரமன் அபயம் அளித்த வரலாறு அடுத்த செய்யுளால் விளங்கும். இலங்கையாவேனும் யானே; காவற்கடவுள் தன்னையே நகராகவும் கூறுகின்றாள் எனினும் பொருந்தும்; சிலப்பதிகாரத்தில் மதுரையின் காவற்கடவுள் மதுராபதி என்ற பெயர் கொண்டமையும் நோக்குக. உண்மை - தேவரகசியமும் ஆம்.

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

ஆயவ னருளால் மீட்டு மந்தரி யறைந்தாண் முன்னாள்
மாயமா நகரந் தன்னை வகுத்தய னென்னும் மேலாம்
தூயவ னென்னை நோக்கிச் சுந்தரீ காப்பா யென்றுங்
கேயின னிதற்கு நாம மிலங்கையென் றெவரும் போற்ற.

(பி-ம்:) 1. ஐயகேள் வைய நல்கும்; ஐயகே ளுலக மீன்ற : அமைதி யாக.
2. இலங்கைமா தேவி யென்பேர்; என்பேன்; இலங்கையா ளெனும்பேர் யானே ; இலங்கையா ளென்னும் யானே; இலங். கையா ளென்பேர் முன்னாள்.
3. இழுக்கி னுலே திகைத்தனன் சிறுமை :சிறுமை செய்தேன்.
4. அளித்தி யாயி னுணர்த்துவல். (93

189. *எத்தனை காலங் காப்பென் யானிந்த மூதூ ரென்று*
*முத்தனை வினவி னேற்கு முரண்வலிக் குரங்கொன் றுன்னைக்*
*கைத்தலந் தன்னாற் றீண்டிக் காய்ந்தவன் றென்னைக் காண்டி*
*சித்திர நகரம் பின்னைச் சிதைவது திண்ண மென்றான்.*

'முத்தனை - பற்றற்ற அப்பிரமனை, யான் இந்த மூதூர் எத்தனை காலம் காப்பென் என்று - நான் இந்தப் பழைமையான நகரத்தை எவ் வளவு காலம் காப்பேன் என்று, வினவினேற்கு-வினவிய எனக்கு, முரண் வலி குரங்கு ஒன்று - மிக்க வலிமை வாய்ந்த ஒரு குரங்கு, உன்னைக் கைதலம் தன்னால் தீண்டி - உன்னைத் தன் கையினால் தொட்டு, காய்ந்த

அன்று - பகைத்த அந்நாளில், என்னைக் காண்டி - என்னைக் காண்பாயாக; சித்திர நகரம் - அழகிய நகரமாகிய இலங்கை, பின்னை-(அந்நிகழ்ச்சிக்குப் பிறகு, சிதைவது திண்ணம் - அழிவது உறுதி. என்றான் - என்று கூறினான்.),

(பி-ம்.) 1. காலங் காப்பல்; மூதூ ரென்றும்.
3. கைத்தல மதனாற் காய்ந்த வன்றுவந் தென்னைக்.
4. தீர்வது திண்ணம். (94)

190. அன்னதே முடிந்த தைய வறம்வெல்லும் பாவந் தோற்கும்
என்னுமீ தியம்ப வேண்டுந் தகையதோ யினிமற் றுன்னால்
உன்னிய வெல்லா முற்று முனக்குமுற் றாத துண்டோ
பொன்னகர் புகுதி யென்னாப் புகழ்ந்தவ ளிறைஞ்சிப் போனாள்.

'ஐய - ஐயனே! அன்னதே - பிரமன் சொன்னதே, முடிந்தது - நிகழ்ந்தது; அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்னும் ஈது - அறம் வெற்றியடையும், பாவம் தோல்வி அடையும் என்னும் இவ்வுண்மை, இயம்ப வேண்டும் தகையதோ - ஒருவர் எடுத்துச் சொல்ல வேண்டியதோ? (இல்லை என்றபடி); இனி உன்னால் உன்னிய எல்லாம் முற்றும் - இனிமேல், உன்னால் கருதப்பெற்றவை யாவும் கைகூடும்; உனக்கும் 'முற்றாதது உண்டோ - (இவ்வளவு வல்லமையுள்ள) உன்னால் முடியாதது ஒன்று உண்டோ? பொன் நகர் புகுதி - பொன்னாலாகிய இந்நகரினுள் நுழைவாய்'; என்னா - என்று, புகழ்ந்தவள் இறைஞ்சிப் போனாள் - புகழ்ந்தவளாகி வணங்கிச் சென்றாள். மற்று : அசை.

புகழ்ந்து அவள் இறைஞ்சிப் போனாள், என்று பிரித்துப் பொருள் கொள்ளலுமாம். சில சுவடிகளில் இச்செய்யுளுடன் இலங்காதேவிப் படலம் முற்றும் என்றும், இதன்பின் ஊர்தேடுபடலம் என்றும் குறிக்கப்பெற்றுள்ளன.

(பி-ம்.) 4. புகுதி யென்று புகன்றய னுலகம் புக்காள். (95)

## அநுமன் இலங்கையுட் புகுதல்

191. வீரனும் விரும்பி நோக்கி மெய்ம்மையே விளைவு மஃதென்
றாரியன் கமல பாத மகத்துற வணங்கி யாண்டப்
பூரிய ரிலங்கை மூதூர்ப் பொன்மதி றாவிப் புக்கான்
சீரிய பாலின் வேலைச் சிறுபிரை தெளித்த தன்னான்.

வீரனும் - வீரனான அநுமனும், விரும்பி நோக்கி - (செல்லுகின்ற இலங்காதேவியை) அன்புடன் பார்த்து, 'மெய்ம்மையே - (அவள் கூறி

யது) உண்மையே: விளைவும் அஃது - நடக்கப் போவதும் அதுவே, என்று - என்று மனத்துள் எண்ணி, ஆரியன் கமலபாதம் அகத்து உற வணங்கி - ஏற்றுதற்குரிய (பெரியோனான) இராமபிரானின் தாமரை போன்ற திருவடிகளை மனத்திற் பொருத்தி வணங்கி, சீரிய பாலின் வேலை -சிறந்த பாற் கடலில், சிறுபிரை தெளித்தது அன்னான்-சிறு உறைமோர்த் துளி தெளித்தது போன்றவனாக, ஆண்டு - அப்பொழுது, அ பூரியர் இலங்கை மூதூர் - உலகமறிந்த கீழ்மக்களின் பழைமையான நகராகிய இலங்கையினுள், பொன் மதில் தாவி - பொன்னாலான கோட்டை மதிலைக் கடந்து, புக்கான் - புகுந்தான்.

'மெய்ம்மையே ; விளைவுமஃது,' என்று அநுமன் கூறினவை, அறம் வெல்லும் பாவம் தோற்கும் என்று இலங்காதேவி கூறியதை ஒட்டி என்க. அநுமன் மதிலைத் தாவி இலங்கையில் சத்ருக்களின் பிரதான ஸ்த லத்திலே தன் இடக்காலின் அடிவைப்பையே மங்களமாய் முதலில் வைத்துப் புகுந்தான் என்று முதனூல் கூறும். பாலுறு பிரை : பால. மிதி லைக்காட்சிப். 41 ; ஆரண்ய. மாரீசன்வதைப். 35. மகிழ்ச்சி ததும்பிய நகரினுள் அம்மகிழ்ச்சியைக் கெடுத்து அவலம் நிரம்ப அநுமன் புகுந் தமையால் 'சீரிய பாலின் வேலை சிறுபிரை தெளித்தது அன்னான்' என்னப் பட்டது. 'திருப்பாற்கடலிலே சிறு மோர்த்துளி விழுந்தால் அஃது எப்படி எங்கும் பரக்குமோ அப்படி எங்குந் தேடினான் ; இனித் தேடின விதம் விரித்துரைக்கின்றார்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. மேன்மையே விளையு.
4. தெறித்த தன்னான். (96)

## இலங்கையின் ஒளிச் சிறப்பு 192-194

*192. வான்றொடர் மணியிற் செய்த மையறு மாட கோடி*
*ஆன்றபே ரிருளைச் சீத்துப் பகல்செய்த வழகை நோக்கி*
*ஊன்றிய வுதயத் துச்சி யொற்றைவா னுருளைத் தேரோன்*
*தோன்றினன் கொல்லோ வென்ன வறிவனுந் துணுக்கங் கொண்டான்'*

வான் தொடர் - வானளவு தொடர்ந்துள்ளனவும், மணியிற் செய்த - இரத்தினங்களால் அமைக்கப் பெற்றனவும், மை அறு - குற்றமற்றன வுமான, மாட கோடி - கணக்கற்ற மாடங்கள், ஆன்ற - நிறைந்த, பேர் இருளை - பெரிய இருட்டை, சீத்து - நீக்கி, பகல் செய்த - பகலாகச் செய்த, அழகை நோக்கி - அழகைப் பார்த்து, 'ஊன்றிய உதயத்து உச்சி- நிலைபெற்ற நிறைந்த உதயகாலத்து வளர்ச்சியிலே, வான் ஒற்றை உருளைத் தேரோன்-வானத்திலே செல்லும் ஒற்றைச் சக்கரத் தேரோனான சூரியன்

தோன்றினன் கொல்லோ - உதித்துவிட்டானோ.' என்று - என்று, அறிவனும் - அறிவிற் சிறந்த அநுமனும், துணுக்கம் கொண்டான் - திடுக்கிட்டான்.

அறிவனும், என்றதில் உம்மை உயர்வு; அவனும் துணுக்கங் கொள்ளக்கூடியதாய் அந்நகர ஒளி விளங்கியது. அவன் துணுக்கங் கொண்டமைக்குக் காரணம் இரவில் பிராட்டியிருக்கும் இடத்தைத் தேடிவிட வேண்டுமென்ற தன் கருத்து வீணாகிவிடுமோ என்ற எண்ணத் தாலும். ஆம்.

(பி-ம்.) 1. வான்றொடு மணியிற் செய்த.
2. பகல்செய்த வமைவு நோக்கி.
3. வாளுருளைத் தேரோன்.
4. கொல்லோ வென்றங் கறிவனுந்: துணுக்க முற்றான். (97)

193. மொய்ம்மணி மாட மூதூர் முழுதிரு ளகற்றுந் தானே
மெய்ம்மையை யுணர்வி னானே மிகையென விலங்கிப் போனான்
இம்மதி லிலங்கை நாப்ப ணெய்துமேற் றன்மு னெய்தும்
மிம்மினி யல்ல னோவவ் வெயிற்கதிர் வேந்த னம்மா.

'மொய் மணி மாட மூதூர்-நெருங்கிய மணிகளால் அமைந்த மாடங்கள் நிறைந்த பழைமையான அவ்வூர், தானே - (பிற உதவியின்றி) தானாகவே, இருள் முழுது அகற்றும் மெய்ம்மையை - இருள் முற்றிலும் நீக்கி விடும் உண்மையை, உணர்வினன் - உணர்ந்தவனாகி, அ வெயில் கதிர் வேந்தன் - அந்த வெயிலாகிய கிரணங்களையுடைய மன்னனான சூரியன், மிகை - தான் அந்நகருக்கு வருவது தேவையற்றது, என - என்றெண்ணி, விலங்கிப் போனான் - அவ்விலங்கையை விட்டு விலகிச் சென்றான்; (அவ்வாறன்றி), இ மதில் இலங்கை நாப்பண் எய்து மேல் - இந்த மதில்கள் சூழ்ந்த இலங்கையின் நடுவே (அவன்) வருவானானால், தன்முன் - தன் (சூரியன்) முன்னே, எய்தும்-வரும், மிம்மினி அல்லனோ - மின்மினிப் பூச்சியைப் போல் ஒளிகெட்டுப் போகானோ? ஓ: அசை; அம்மா: வியப்பிடைச்சொல்.

இதுவும் நகரின் ஒளியை வியந்தவாறு. சூரியன் இலங்கையுட் புகாமைக்குக் காரணம் முன்னும் கூறப்பட்டது, 116; 158. சூரியன் முன் மின்மினி; தக்க. 88 உரை: மின்மினி எதுகை நோக்கி மிம்மினி என்றாயிற்று. உணர்வின் னானே மிகை என்று விரித்துப் பொருள் கொள்ளலும் பொருந்தும்.

(பி-ம்.) 1. முழுவிரு ளகற்றி நின்ற: இருட் படலை யோட்டும்.
2. மெய்ம்மையை யுணர்ந்து நானு: உணர்ந்ததாலோ; உணர்ந்தான் போலும்; உணர்ந்து யானே; உணரில் யானோர்; உணரினனும் : மிகை யென விலங்கி யோடா.

3. எய்துமேற் றன்பா லெய்தும் ; மற் றென்பா லெய்தும் ; எய்து மேற் றனக்கு முன்னு.
4. வேந்த னென்றான். (98)

194. பொசிவுறு பசும்பொற் குன்றிற் பொன்மதி னடுவட் பூத்து
வசையற விளங்குஞ் சோதி மணியினு லமைத்த மாடத்
தசைவிலிவ் விலங்கை மூதூ ராரிரு ளின்மை யாலோ
நிசிசர ராயி ஞூர்ந நெடுநகர் நிருத ரெல்லாம்.

'பொசிவுஉறுபசும்பொன்குன்றில்-நெகிழ்ந்துருகும்இயல்பையுடைய பசிய பொன்மயமான திரிகூடமலையின்மீது, பொன்மதில் நடுவண் பூத்து - பொன்னாலாகிய மதில் சூழ்ந்த உள்ளிட நடுவிலே தோன்றி, வசையற விளங்கும் சோதி மணியினுல் அமைத்த - குற்றமற விளங்குகிற ஒளி வீசும் மணிகளால் அமைக்கப் பெற்ற, மாடத்து - மாடங்களை உடையதும், அசைவு இல் - நடுக்கமற்றதுமான, இ இலங்கை மூதூர்-இந்த இலங்கை யென்னும் பழைய நகரில், ஆர் இருள் இன்மையாலோ - அவ்வூரில் நிறைந்த இருள் இல்லாமையாலோ, அ நெடு நகர் நிருதர் எல்லாம் - அந்த நீண்ட நகரில் வாழும் அரக்கர் யாவரும், நிசிசரர் ஆயினர் - இரவில் சஞ்சரிக்கிறவராக ஆனர்கள் !'

அரக்கர் இயல்பிலே நிசிசரர்; அவ்வாருனமைக்கு இங்கு ஒரு காரணம் காட்டப்பட்டது.

(பி-ம்.) 3. அசைவிலா விலங்கை; இசையினு லிலங்கை மூதூ ரிருளின்மை யாத லாலே.
4. நிசிசர ராயிற் றம்மா. (99)

## அநுமன் இலங்கை வீதிகளில் கண்ட காட்சி 195-215

195. என்றன னியம்பி வீதி யேகுத லிழுக்க மென்னுத்
தன்றகை யரிய மேனி சுருக்கிமா ளிகையிற் சாரச்
சென்றன னென்ப மன்னே தேவருக் கமுத மீந்த
குன்றென வயோத்தி வேந்தன் புகழெனக் குவவுத் தோளான்.

தேவருக்கு அமுதம் ஈந்த குன்றென - தேவர்களுக்கு அமுதத்தைக் கடைந்து உதவிய மந்தரகிரி போன்றனவும், அயோத்தி வேந்தன் புகழ் என - அயோத்தி மன்னனின் புகழ் என்று சொல்லத்தக்கனவுமான, குவவு - பருத்து விளங்குகின்ற, தோளான் - தோள்களையுடைய அநுமன், என்றனன் இயம்பி - என்று இவ்வாறு (தனக்குள்ளேயே) சொல்லிக் கொண்டு, வீதி ஏகுதல் இழுக்கம் என்னு - வீதியின் (நடுவே,

தன் சுய உருவத்துடன்) செல்லுதல் தவறு என்றெண்ணி, தன் தகை அரிய - தன் தன்மையைப் போன்று அரியதாயிருந்த, மேனி - உடலை, சுருக்கி - சிறியதாக்கிக்கொண்டு, மாளிகையில்சார - மாளிகைகளை ஒட்ட நெருங்கி, சென்றனன் - போனான், என்ப - என்று கூறுவர், மன். ஓ: அசைகள்.

அநுமன் தன் மேனி சுருக்கி, மாளிகை சாரச் சென்றது அச்சத்தினா லன்று என்பது கூறப்பட்டது. மந்தரமலை திருப்பாற்கடலைக் கடைய மத்தாக அமைந்து உதவிற்று என்பது வரலாறு. அயோத்தி வேந்தன்- தசரதன், இராமன் என்ற இருவருள் எவரேனும் ஒருவரைக் கொள்ளலா மாறு அமைந்துள்ளது. இராமன் புகழ் அநுமனுக்கு: 228; 243. மலையை ஒத்த பெருமையும், சுழற்சியும், புகழை ஒத்த விரிவும், தூய்மை யும் கொண்ட தோள்கள் என்க. தன் தகை அரிய மேனி; 137. தகை - தகுதியுடைமை; உளப்பண்புகளைக் குறித்தது. என்ப: முன்னூலாசிரி யர்களைக் குறித்தது.

(பி-ம்.) 1. என்றன வியம்பி: என்றன னியம்ப: ஏகும திழுக்கம்.
2. தன்றகை யனைய மேனி: தன்றகை யரிய மேனி தவிர்ந்தணு வுருவு கொண்டே: மா ளிகையின் சாரல்.
3. சென்றனன் மாட மூடு.
4. குலவு தோளான். (100)

196. ஆத்துறு சாலை தோறு மானையின் கூடந் தோறும்
மாத்துறு மாடந் தோறும் வாசியின் பந்தி தோறும்
காத்துறுஞ் சோலை தோறுங் கருங்கடல் கடந்த காலால்
பூத்தொறும் வாவிச் செல்லும் பொறிவரி வண்டிற் போனான்

கருங் கடல் கடந்த காலால் - கரிய கடலைத் தாவிச் சென்ற (தன்) கால்களால், (அநுமன்), ஆ துறு சாலை தோறும் - பசுக்கள் நிரம்பிய கொட்டில்கள் தோறும், ஆனையின் கூடம் தோறும் - யானைக் கொட்டா ரங்கள் தோறும், மா துறு மாடம் தோறும் - பலவகை விலங்குகள் நிற்கும் இடங்கள் தோறும், வாசியின் பந்தி தோறும் - குதிரைச்சாலை கள் தோறும், கா துறும் சோலை தோறும்-காவல் நெருங்கும் சோலைகள் தோறும், பூ தொறும் வாவி செல்லும் பொறி வரி வண்டின் - ஒவ்வொரு பூவிலும் விடாமல் இருந்து, பிறகு தாவிச் செல்கிற புள்ளிகளும் கோடு களும் அமைந்த வண்டினைப்போல, போனான் - அநுமன் அவ்வீதிகளிற் சென்றான்.

பல இடங்களிலும் நுழைந்து ஆராய்ந்து அங்குத் தங்காமல் சென்று வந்தமை கூறப்பட்டது; வண்டு சிறிய உருவமும், இடந்தோறும் விடா மற் செல்லுகையும் விரைவும் உடைமையால் உதாரணமாயிற்று. மாத்து உறு மாடம் தோறும் என்று கொண்டு பெருமை பொருந்திய மாடங்கள்

தோறும் என்றும் பொருள் கூறுவர்; மாத்து - பெருமை; மகத் என்பதன் திரிபு; தேவா. திருநா. 1406: திருச்சிற். 373. உரை. காத்து உறு சோலை என்றும் பிரிக்க. காற்று என்பது எதுகை நோக்கிக் காத்து எனப் போலியாக வந்தது எனலும் ஆம்.

(பி:-ம்.) 1. யானையி னேளி தோறும்.
3. கருங்கடல் கடந்த தாளான்.
4. தாவிச் செல்லும். (101

197. *பெரியநா ளொளிகொ ணானு விதமணிப் பித்திப் பத்தி*
*சொரியுமா நிழலங் கங்கே சுற்றலால் காலின் றோன்றல்*
*கரியனாய் வெளிய னாகிச் செய்யனாய்க் காட்டுங் காண்டற்*
*கரியனா யெளிய னாந்தன் னகத்துறை யழகனேபோல்.*

பெரிய நாள் ஒளி கொள் - பெரிய நட்சத்திரங்களின் ஒளிகளைக் கொண்டுள்ள, நானாவித மணி பித்தி பத்தி - பலவிதமான இரத்தினங்கள் இழைக்கப் பெற்ற சுவர் வரிசைகள், சொரியும் - வீசுகின்ற, மாநிழல் - சிறந்த ஒளிகள், அங்கங்கே சுற்றலால் - இடங்கள் தோறும் சூழ்தலினாலே, காலின் தோன்றல் - வாயுகுமாரனான அநுமன், காண்டற்கு-தூலக் கண்களால் பார்ப்பதற்கு, அரியனாய்-அருமையானவனாகவும், எளியனாம் - அன்புடன் நாடுபவர்க்கு எளியவனாகவும் இருந்து, தன் அகத்து உறை அழகனே போல்-தன் நெஞ்சிலே எப்பொழுதும் தங்கியிருக்கிற அழகான இராமபிரானே போல் (தானும்), கரியனாய் - (ஓரிடத்தில்) கரிய நிறத் திருமாலாகவும், வெளியன் ஆகி - மற்றோரிடத்தில் வெள்ளை நிற நான்முகனாகவும், செய்யனாய் - (பிறிதோரிடத்தில்), செந்நிற உருத்திரனாகவும், காட்டும் - தன்னைத் தோற்றுவிப்பான்.

இச் செய்யுளில் அநுமன் திருமாலுக்கு உவமையாய்க் கூறப்பட்டனன்; 229: 329 செய்யுட்களையும் காண்க. இன்னும் இராமபிரான் மும்மூர்த்திகளின் ஒருரு என்பதும் இங்குக் கூறப்பட்டது. இவ்வாறே, 1122; பால. திருவவதாரப். 137; கடிமணப். 61. ஆகிய செய்யுட்களில் கூறப்பெற்றமை காண்க; 'முன்னைவண்ணம் பாலின்வண்ணம் முழுதும் நிலைநின்ற, பின்னைவண்ணம் கொண்டல்வண்ணம் வண்ணமெண்ணுங்கால்,பொன்னின்வண்ணம் மணியின்வண்ணம் புரையுந்திருமேனி'; (பெரியதிருமொழி. 4. 9. 8.) என்ற பகுதியும் நோக்கத்தக்கது. நானாவித மணிப் பித்தியின் வழியே அநுமன் சென்றமையால் அம் மணிகளின் பலவித ஒளிகள் அவன்மீது பட, அவன் கருமை முதலிய பலவித ஒளியுடையவனாய் விளங்கினான் என்பதாம்; ஒப்பு; பால. மிதிலைக் : 16, அழகன்-சுந்தரன்; இராமன்: 390; பால. மிதிலைக்காட்சி. 39; அயோத்யா. நகர்நீங்கு. 188. கிட்கிந்தா. அரசியற். 37; உயுத்த. கும்பகருணன்வதைப். 354. நானாவித மணி பித்தி பத்தி; வடமொழித்தொடர்.

(பி-ம்.) 1. பெரியதா யொளி; ஒளிக ணுறு விதி.
2. சொரியுமா நிழல்க ளாங்கு.
3. வெளிய ருகுஞ் செய்யனுய்க்; சேயனுய்க்; செய்யதாற் காட்டும்.
4. எளிய னுன்றன்: எளிய னுய்த்தன். (102)

198. *ஈட்டுவார் தவம லான்மற் றீட்டினு லியைவ தின்மை*
*காட்டுவார் விதியா ரின்னுங் காண்கிற்பார் காண்மி னம்மா*
*பூட்டுவார் முலைபொ ருத பொய்யிடை நையப் பூநீர்*
*ஆட்டுவா ரமரர் மாத ராடுவா ரரக்கர் மாதர்.*

விதியார் - விதித்தற் கடவுளாகிய பிரமதேவர், ஈட்டுவார் - தேடிச் சேர்ப்பவர், தவம் அலால் - தவத்தை ஈட்டுவது அல்லாமல், மற்று ஈட்டினுல் - பிற செல்வம் முதலியவற்றைச் சேகரித்தால், இயைவது இன்மை- பொருத்தமாவது இல்லாமையை, காட்டுவார் - பல வழிகளில் தெரிவிப்பார்; இன்னும் காண்கிற்பார் - மேலும் காட்சிவாயிலாக அறிய விரும்புவோர், காண்மின் - பாருங்கள்; அமரர் மாதர் - தேவமாதர், பூட்டுவார் முலை பொருத பொய் இடை நைய - இறுக்கிக் கட்டப்பட்ட கச்சணிந்த தனபாரத்தைத் தாங்க மாட்டாததும், இருப்பது பொய் என்று சொல்லத் தக்கதுமான இடுப்பு வருந்த, பூ நீர் - மலர்கள் நிறைந்த நீரைக்கொண்டு, ஆட்டுவார் - முழுக்காட்டுவார்கள்; அரக்கர் மாதர் ஆடுவார் - அவர்களால் அரக்கர் மாதர் நீராடுவார்கள். அம்மா. வியப்பைக் குறிக்கும் இடைச்சொல்.

இயைவது - நன்மை இயைவது என்றும் கூறலாம், பொய் யிடை; 'பொய்யோ வெனுமிடையாள்' (அயோத்யா. கங்கைப். 1.) பூநீர் - பன்னீரும் ஆகும். அரக்கியர் அடைந்த சிறப்பைக் கண்டு தவமே ஈட்டத்தக்கது என்று அறிக என்பது கருத்து; 'வேண்டின வேண்டினர்க்களிக்கும் மெய்த்தவம்' ஆரண்ய. அகத்தியப்; 8; ஒப்பு: குறள். 37, 265.

இச்செய்யுள் சில சுவடிகளில் கானகமயில்கள் (199) என்ற செய்யுளுக்குப் பின் அமைந்திருக்கிறது.

(பி-ம்.) 2. காட்டுவார் விதியார... து; காண்பிப்பார் காண்மினம்மா. (103)

199. *கானக மயில்க ளென்னக் களிமட வன்ன மென்ன*
*ஆனன கமலப் போது பொலிதர வரக்கர் மாதர்*
*தேனுகு சரளச் சோலைத் தெய்வநீ ராற்றிற் றெண்ணீர்*
*வானவர் மகளி ராட்ட மஞ்சன மாடு வாரை*

தேன் உகு சரள சோலை - தேனைச் சிந்தும் தேவதாரு மரங்கள் அடர்ந்த சோலைகளில், தெய்வநீர் ஆற்று தெள் நீரில் - தெய்வத் தன்மை வாய்ந்த ஆகாய கங்கையின் தெளிந்த நீரில், வானவர் மகளிர் மஞ்சனம் ஆட்ட - தேவமாதர் நீராட்ட, கானக மயில்கள் என்ன - காட்டிலுள்ள மயில்கள் என்று சொல்லும்படியும், களிமட அன்னம் என்ன - களிப்பு நிறைந்த இள அன்னப் பறவைகள் என்று சொல்லும்படியும், அரக்கர் மாதர் - அரக்கியர், ஆனன கமலம் போது பொலிதர - தம் முகங்களாகிய தாமரை மலர்கள் விளங்க, மஞ்சனம் ஆடுவாரை - நீராடுவாரையும்,

இனி, கானக மயில்க ளென்ன களிமட வன்னமென்ன, ஆனன கமலப் போது பொலிதர வானவர் மகளிர் ஆட்ட அரக்கர் மாதர் மஞ்சன மாடு வாரை'' என இயைத்துப் பொருள் கோடலு மமையும். 'சரளச் சோலை, அசையும் சோலை' என்பது பழைய உரை. இதுமுதல் 215 முடிய உள்ள செய்யுள்கள் 216 ஆவதிலுள்ள நாடி என்பதனோடு முடியும்.

(பி-ம்.) 2. ஆனனங் கமலப் போதிற்.
3. சாரற் சாலை. (104)

**200.** *இலக்கண மரபிற் கேற்ற வெழுவகை நரம்பி னல்யாழ்*
*அலத்தகத் தளிர்க்கை நோவ வளந்தெடுத் தமைத்த பாடல்*
*கலக்குற முழங்க நோக்கிக் கன்னியர் சேடி மார்கள்*
*மலர்க்கையான் மாடத் தும்பர் மழையின்வாய் பொத்து வாரை*

இலக்கண மரபிற்கு ஏற்ற - நூல் வழக்குப் பொருந்த அமைத்த, எழுவகை நரம்பின் நல் யாழ் - ஏழுவகையான நரம்புகளைக் கொண்ட நல்லிலக்கணங்களமைந்த யாழை, அலத்தக தளிர்க்கை நோவ - செம்பஞ்சுக் குழம்பு பூசிய தம் தளிர்போன்ற கை (விரல்கள்) நோவ, அளந்து எடுத்து அமைத்த பாடல் - சுருதிக் கேற்ப அளந்து வாசிக்க எடுத்து அமைத்த பாடல், கலக்குற - கலைந்து போகும்படி, (மழை) முழங்க - மேகம் இடிக்க, நோக்கி - (அதனைக்) கண்டு, கன்னியர் சேடிமார்கள் - தேவ கன்னியர்களான (அரக்கியர்) பணிப்பெண்கள், மலர் கையால் - மலர்போன்ற தம் கைகளால், மாடத்து உம்பர் மழையின் வாய் - மாடங்களுக்கு மேலேயுள்ள மேகங்களின் வாய்களை, பொத்துவாரை - மூடுவாரையும்,

ஏழு நரம்புகள் ; 'இளி, விளரி, தாரம், குரல், துத்தம், கைக்கிளை, உழை என்று முறையே ஏழு நரம்பியன்ற பின்னர்,' (சிலப். 1 : 8 : 31, அரும்பதவுரை.). கன்னியர் சேடிமார்கள் என்பதற்கு - வடசேடி, தென்சேடி, என்ற வித்தியாதர நாட்டு மகளிர் என்றும்பொருள் கொள்வாருமுளர்.

(பி-ம்.) 1. மரபுக் கேற்ற ; மரபிற் கேற்க.
2. அளந்தெழுந் தமைந்த.
3. கலக்குறு முழவி தென்னக்; கலக்குற முழங்கிற் றன்று சேடியர் கன்னி மார்தம்.
4. வரனத் தும்பர். (105)

201. *சந்தப்பூம் பந்தர் வேய்ந்த தமனிய வரங்கிற் றங்கிச்*
*சிந்தித்த துதவும் தெய்வ மணிவிளக் கொளிருஞ் சேக்கை*
*வந்துற்ற நிருத்த மாக்கள் விளம்பின நெறிவ ழாமல்*
*கந்தர்ப்ப மகளி ராடு நாடகங் காண்கின் றுரை*

சந்த பூம் பந்தர் வேய்ந்த தமனிய அரங்கில் - அழகிய பூக்களாலாகிய பந்தலைக் கொண்டு விதானமாக அலங்கரிக்கப் பெற்ற பொன்னுலாகிய நாடகசாலையில், சிந்தித்தது உதவும் தெய்வ மணி விளக்கு ஒளிரும் சேக்கை தங்கி - நினைத்ததைக் கொடுக்கும் தெய்வத்தன்மை பெற்ற சிந்தாமணி என்னும் இரத்தினம் விளக்காக ஒளி வீசும்படி அமைந்த ஆசனங்களில் அமர்ந்துகொண்டு, வந்துற்ற நிருத்த மாக்கள் விளம்பின நெறி வழாமல் - (களத்தில்) வந்து நின்ற ஆடலாசிரியர் முதலியோர் சொன்ன வழி பிசகாமல், கந்தர்ப்ப மகளிர் ஆடும் நாடகம் - கந்தருவ மகளிர் ஆடிக்காட்டும் நாடகத்தை, காண்கின்றுரை - காண்கின்றவர் களையும்,

ஆடுகின்றவர் கந்தர்ப்ப மகளிரும் காண்கின்றவர் அரக்கரும் என்க, நிருத்த மாக்கள் - நட்டுவர் முதலியோர் ; நர்த்தகர் என்று வடமொழியில் கூறப்படுபவர்,

(பி-ம்.) 1. அரங்கிற் றந்தம்.
2. விளக் கெரியுஞ் சேக்கை.
3. வந்தொத்து நிருத மாக்கள் : துருத மாக்கள் : ஒத்துந் துருத மாக்கள்: விளம்பித நெறி; விளம்புநன் னெறி. (106)

202. *திருத்திய பளிக்கு வேதித் தெள்ளிய வேல்க ளென்னக்*
*கருத்தியல் புரைக்கு முண்கட் கருங்கயல் செம்மை காட்ட*
*வருத்திய கொழுநர் தம்பால் வரம்பின்றி வளர்ந்த காமம்*
*அருத்திய பயிர்க்கு நீர்போ லருநற வருந்து வாரை*

திருத்திய பளிங்கு வேதி - செவ்வனே அமைக்கப்பெற்ற பளிங்கு மேடைகளிலே (இருந்து), தெள்ளிய வேல்கள் என்ன - தெளிவாகிய (கூரிய) வேல்கள் என்று சொல்லத் தக்கனவும், கருத்து இயல்பு உரைக்கும் - மனத்தின் தன்மையைப் புலப்படுத்துவனவாயுமுள்ள, உண் கண்

கருங்கயல் - மைதீட்டப்பெற்ற தம் கண்களாகிய கரிய கயல் மீன்கள் செம்மை காட்ட - சிவந்து தோற்றும் வண்ணம், வருத்திய - (தம் பிரிவினால்) வருத்த முண்டாக்கிய, கொழுநர் - கணவன்மார்கள், தம்பால் - தம்மிடத்து, வரம்பு இன்றி - எல்லையில்லாமல், அருத்திய - அன்புடன் விளைவித்து, வளர்ந்த காம பயிர்க்கு - வளர்ச்சியுற்ற காமமாகிய பயிருக்கு, நீர்போல் - (மேலும் வளரும்பொருட்டுப் பாய்ச்சிய) தண்ணீரைப் போல், அரு நறவு - சிறந்த கள்ளை, அருந்துவாரை - பருகுகின்றவர்களையும்,

அரக்கியர், வருத்திய கொழுநர்பால் கொண்ட ஊடலால் கண்கள் சிவக்க, அக்கணவர்கள் அன்புச் சொற்களால் அவர்களின் ஊடல் தீர்க்கக் காமம் வளர்ந்து, மது பானமும் செய்கின்றவர்கள் என்க. கொழுநர் தம்பால் என்றதற்குக் கொழுநரிடம் என்றும் பொருள் கொள்வர். கருத்தியல்பு கண்ணுரைத்தல்; 'பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்கும்' (குறள். 709.) கோபத்தால் கண் வேல் போலாதல்: 'கண்களால் வடித்த வெங்குருதி வேல்விழிக்கு மாதர்' (பால. உண்டாட்டுப். 22.) வருத்திய என்பதற்குக் கலவியில் ஈடுபடச் செய்த அல்லது பயிலச் செய்த என்ற பொருள் கொண்டு, அப்பொழுது கருங்கண் செம்மையடையும் இயல்பைக் கூறினதாகவும் பொருள் அமைக்கலாம், ஒப்பு: 'வாயின் சிவப்பை விழிவாங்க...... தோயக் கலவி அமுதளிப்பீர்' (கலிங்கத்துப். கடைதிறப்பு : 61.). 'மைவாயருகு, வெளியவாயசில கெண்டைபுண்டரிக மலரினும், செய்யவாய்' (தக்க. கடைதிறப்பு. 24.) காமப்பயிருக்கு நறவு நீர் பாய்ச்சல் - காமபானம் அருந்துதல், காமத்திற்கு உத்தீபகம் நறவு ஆதலால்: மதுரைக்காஞ்சி. 780. நச். உரை; சீவக. 98. நச். உரைகளை நோக்குக.

(பி-ம்.) 2. செம்மை நாட்ட.
3. வளர்ந்த காதல். (107)

203. *கோதறு குவளை நாட்டங் கொழுநர்கண் வண்ணம் கொள்ளத்*
*தூதுளங் கனியை வென்று துவர்த்தவாய் வெண்மை தோன்ற*
*மாதரு மைந்தர் தாமு மொருவர்பா லொருவர் வைத்த*
*காதலங் கள்ளுண் டார்போன் முறைமுறை களிக்கின் றூரை*

கோது அறு குவளை நாட்டம் - குற்றமற்ற நீலமலர் போன்ற அரக்கியர் கண்கள், கொழுநர் கண் வண்ணம் கொள்ள - (வீரர்களான) தம் கணவர் கண்களின் சிவப்பு நிறத்தைத் தாம் கொள்ள, தூதுளங் கனியை வென்று துவர்த்த வாய் வெண்மை தோன்ற - தூதுளங் கனியைத் தம் நிறத்தால் வென்று (அதனைவிடச்) சிவப்பமைந்த தம் வாய் வெளுத்துக்

காட்ட, மாதரும் மைந்தர் தாமும் ஒருவர்பால் ஒருவர் வைத்த - மகளிரும் அவர்கள் கணவரும் ஒருவரிடம் ஒருவர் கொண்ட, காதல் அம் கள்ளுண்டார் போல் - காதலாகிய கள்ளை உண்டவர்களைப் போல், முறை முறை களிக்கின்றாரை - மாறிமாறி மகிழ்பவரையும்,

இதுவும் கலவியைப் பற்றியது; முன் செய்யுளின் குறிப்பைக் காண்க. காதலைக் கள்ளென்பது; குறள். 1145, 1281; சீவக. 233. களிக்கின்றாரை - கள்குடிக்கின்றவரை என்றும் கூறலாம்.

(பி-ம்.) 1. கோதறுங் குவளை: கொழுநர்க ணூட்டங்: கொழுநர்த மழகு கொள்ளத்.
2. கனியை வென்ற.
3. ஒருவர்போ லொருவர் வைத்த.
4. காதலிற் கலவி யாடிக் கலந்துளங் களிக்கின் றாரை. (108)

204. விற்படர் பவழப் பாதத் தலத்தக மெழுதி மேனி
பொற்பள வில்லா வாசம் புனைநறுங் கலவை பூசி
அற்புத வடிக்கண் வாளிக் கஞ்சன மெழுதி யம்பொன்
கற்பகங் கொடுக்க வாங்கிக் கலன்றெரிந் தணிகின் றாரை

(சில அரக்கியர்), வில் படர் பவழ பாதத்து - ஒளி பரவி வீசுகின்ற பவழ மொத்த (நிறமமைந்த) தம் பாதங்களில், அலத்தகம் எழுதி-செம்பஞ்சுக்குழம்பினாலே கோலஞ் செய்து, அளவு இல்லா பொற்பு மேனி - எல்லை கூறமுடியாத அழகு வாய்ந்த தம் உடலிலே, வாசம் புனை நறுங் கலவை பூசி - வாசனை கூட்டப்பெற்ற மணம் மிகுந்த சந்தனக் கலவையைப் பூசி, அற்புத கண் வடி வாளிக்கு - வியக்கத்தக்க கண்ணாகிய கூர்மையாக்கிய அம்புக்கு, அஞ்சனம் எழுதி - மை இட்டு, அம்பொன் கற்பகம் - அழகிய பொன்னாலான கற்பக மரங்கள், கலன் கொடுக்க - அணிகலன்களைக் கொடுக்க, வாங்கி தெரிந்து அணிகின்றாரை - பெற்றுப் பொறுக்கியெடுத்து அணிந்து கொள்பவர்களையும்,

வடிக்கண் - மாவடுபோன்ற கண் எனினும் ஆம்; 'நெடுமரக் கொக்கினறு வடி விதிர்த்த' (பெரும்பாண், 309.); 'வடுப்பிளவனைய கண்ணாள்' (*சீவக.* 1573). கண் வாளிக்கு; *பால.* ஆற்றுப்., பூக்கொய். 4. கண்ணுக்கு அஞ்சனம் எழுதுதல்; 212. இக் கவியில் குறித்த பொருள்கள் யாவற்றையுமே கற்பகம் கொடுத்ததாகக் கொண்டும் பொருள் கூறுவர்.

(பி-ம்.) 3. வாளி னஞ்சன மெழுதி யந்தில். (109)

205. புலியடு மதுகை மைந்தர் புதுப்பிழை யுயிரைப் புக்கு
நலிவிட வமுத வாயா னச்சுயிர்த் தயிற்க ணல்லார்
மெலிவுடை மருங்குன் மின்னி னலமரச் சிலம்பு விம்மி
ஒளிபட வுதைக்குந் தோறு மயிர்புள குதிக்கின் றாரை

அயில் கண் நல்லார் - வேல் போன்ற கண்களையுடைய அரக்கியர், புலி அடு மதுகை மைந்தர் - புலியை எதிர்த்துக் கொல்லவல்ல வலிமை வாய்ந்த தம் கணவர்களான வீரர்கள் (செய்த), புது பிழை - (தமக்குச் செய்த) புதிய பிழையானது, புக்கு - மனத்துள் புகுந்து, உயிரை நலிவு இட - உயிரைத் துன்புறுத்த, அமுத வாயால் - அமுதம் நிறைந்த தம் வாய்களினால், நச்சு உயிர்த்து - விஷமூச்சு விட்டு, மெலிவு உடை மருங்குல் மின்னின் அலமர - தம் மெல்லிய இடைகள் மின்னலைப் போல் நெளிந்து வருந்த, சிலம்பு விம்மி ஒளிபட - காற்சிலம்புகள் பொங்கி ஒலிக்க, உதைக்குந் தோறும் - (பிழை செய்த அவர்களை) உதைக்கும் போதெல்லாம், மயிர் புளகு உதிக்கின்றாரை - மயிர் சிலிர்க்கப் பெறுகின்றவரையும்,

மெலிவு உடை மருங்குல் - இயல்பாகவே பாரந்தாங்காது வருந்தும் இடை என்னலும் ஆம். இச்செய்யுள்களெல்லாம் அரக்கிமார்களைப் பற்றியே கூறுகின்றமையால் புளகுதிக்கின்றவர்களும் அவர்களே என்று கொள்ளப்பட்டது. புளகுதித்தல், கணவன்மாரை உதைக்க வேண்டி வந்த மருட்கையால் என்க. அன்றி, புளகுதிக்கின்றவர் கணவர் என்று பொருள் கூறுவாரும் உளர்.

(பி-ம்.) 1. புலிபடு மதுகை.
2. நலியுடை யமுத வாயார் நச்சுயிர்த் தலக்க ணல்லார்.
4. மயிர்ப்புறம் பொடிக்கின் றாரை. (110)

206. உள்ளுடை மயக்கா லுண்கண் சிவந்துவாய் வெண்மை யூறித்
துள்ளிடைப் புருவங் கோட்டித் துடிக்கவேர் பொடிக்கத் தூய
வெள்ளிடை மருங்கு லார்தம் மதிமுகம் வேறொன் றாகிக்
கள்ளிடைத் தோன்ற நோக்கிக் கணவரைக் கனல்கின் றாரை

தூய வெள் இடை மருங்குலார்-தூய வெளி இடம் என்று சொல்லத் தகும் இடையையுடைய அரக்கியரிற் சிலர், உள் உடை மயக்கால் - தாம் அருந்திய கள்ளினாலுண்டான மனமயக்கத்தினால், உண் கண் சிவந்து - மையுண்ட தம் கண்கள் சிவந்து, வாய் வெண்மை ஊறி - வாய் வெண்ணிறம் உண்டாகி, துள் புருவம் இடை கோட்டி துடிக்க - துள்ளி அசைகின்ற புருவ நடு வளைந்து துடிக்க, வேர் பொடிக்க - வேர்வை நீர் அரும்ப, கள் இடை - தாம் குடிக்கும் கட்பாத்திரத்தினுள்ளே, தம் மதிமுகம்

வேறொன்றாகித் தோன்ற - சந்திரன் போன்ற தங்கள் முகங்கள் (முன்னை நிலைகெட்டுப்) பிறிதொன்றாக மாறிப் பிரதிபிம்பிக்க, நோக்கி - அதனைப் பார்த்து, கணவரைக் கனல்கின்றாரை - (அப்பிரதிபிம்பத்தை, கணவன் கள்ளினுள் ஒளித்து வைத்த அவனுடைய மற்றொரு காதலி என்றெண்ணித்) தம் கணவன்மாரை கோபிக்கின்றவர்களையும்,

கள்ளுண்டார் கண்சிவத்தல்: 'மைதாழ் கருங்கண்கள் சிவப்புற வந்து தோன்ற' (பால. பூக்கொய். 16.). துள் இடை - துடிக்கும்போது என்றும் பொருள் கூறுவர். வெள்ளிடை மருங்குல் - வெட்டவெளி போன்ற சூன்யமான இடை; 'வெளியன்னதோர் இடையாள்' (அயோத்யா. கங்கைப். 2.) கணவரைக் கவல்கின்றாரை என்ற பாடத்துக்கு, தம் மாறுபாட்டைக் கண்டு தம் கணவர் கவல்வரே என்று வருந்துகிறவரை என்று பொருள் கூறுவர்; இக் கருத்து, பரஞ்சோதி திருவிளை. 52: 74 ஆம் செய்யுளில் வருவதைக் காண்க.

இதன்பிறகு சில ஏடுகளில், 'நலனுறு கணவர்' (208) என்ற செய்யுள் காணப்படுகிறது.

(பி-ம்) 2. துள்ளுறப் புருவங் கோலி: துள்ளுடைப் புருவம்: துடிப்பவேர் பொடிப்பத் தூங்கும்.
4. கணவரைக் கவல்கின் றாரை (111)

207. *ஆலையின் மலையிற் சாலி முளையினி லமுத வாசச்*
*சோலையிற் றுவச ரில்லிற் சோனகர் மனையிற் றூய*
*வேலையிற் கொளவொ ணாத வேற்கணார் குமுதச் செவ்வாய்*
*வாலெயிற் றூறு தீந்தேன் மாந்தினர் மயங்கு வாரை*

ஆலையில் - கரும்பிலும், மலையில் - மலைகளிலும், சாலிமுளையினில் - சாலி என்னும் நெல் முளையிலும், அமுத வாச சோலையில் - இனிய மணம் பொருந்திய சோலைகளிலும், துவசர் இல்லில் - கள் விற்போர் வீடுகளிலும், சோனகர் மனையில் - யவனர்களின் வீடுகளிலும், தூய வேலையில்- தூய்மையான பாற் கடலிலும், கொள ஒணாத - பெற்றுக் கொள்ளமுடியாத,வேல் கணார் குமுத செவ்வாய் வால் எயிற்று ஊறு தீந்தேன்-வேல் போன்ற கண்களையுடைய தம் மனைவியரின் குமுதம் போன்ற சிவந்த வாயிலுள்ள வெண்மையான பற்களிலே ஊறிவரும் இனிய தேனை, மாந்தினர் மயங்குவாரை - பருகி மயங்கிக் கிடப்பவர்களையும்,

இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் காதலுற்ற அரக்கர் நிலைகளைக் கூறும். தேன் அல்லது தேன் போன்ற இனிய பொருள்கள் கிடைக்கும் இடங்கள் பலவற்றைக் கூறி, அவற்றினும் இனியது காதலியர் வாயில்

ஊறும் நீர் என்றதாம். ஆலை - கரும்பு: ‘ஆலையஞ்சிலைவேள்’ (கந்த. காமதகன. 90.); ஆலை, கரும்பாட்டும் இயந்திரமும் ஆம். சாலி முளையிலிருந்து மதுவெடுத்தல்; பெரும்பாண். 275-281. நச். உரை. துவசர்கள் விற்போர். சோனகர் - யவனர்: நெடுநல். 101, நச். உரை. தூய வேலையில் கிடைப்பது, அமுது. வாலெயிற்றூறு தீந்தேன்: ‘பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி, வாலெயி றூறிய நீர்’ (குறள் 1121.) இந்நீரினைத் தந்தாமிர்த பானம் என்பர்.

(பி-ம்.) 1. ஆலையின் மலரிற் சாரல் முழையினில்: ஆலையி னணிநிலா மண்ட பத்திடை யமுத வாசச்: அமுத வாரிச்
2. மனையிற் றுப்பு.
4. வாலெயி றூறு தீந்தேன்: மாந்திட: மாந்தியே. (112)

*208. நலனுறு கணவர் தம்மை நவையுறப் பிரிந்து விம்மும்*
*முலையுறு கலவை தீய முள்ளிலா முளரிச் செங்கேழ்*
*மலர்மிசை மலர்பூத் தென்ன வளைக்கையால் வதனந் தாங்கி*
*அலமரு முயிரி னோடு நெடிதுயிர்த் தயர்கின் றாரை*

நலன் உறு - நன்மைமிக்க, கணவர் தம்மை - தம் கணவன்மாரை, நவை உற பிரிந்து-தாம் துன்பமுறப் பிரிந்து, விம்மும் முலை உறு கலவை தீய - பொங்கி யெழுகிற மார்பில் பூசிய கலவைச் சந்தனம் தீந்து போக, முள்ளில்லா செம் கேழ் முளரி மலர்மிசை மலர்பூத்தென்ன - (தண்டிலே) முள்ளில்லாத சிவந்த நிறத்தையுடைய ஒரு தாமரை மலர் மேலே மற்றொரு தாமரை மலர் பூத்தது என்று சொல்லும்படி, வளை கையால் வதனம் தாங்கி - வளையணிந்த கையினால் முகத்தைத் தாங்கிக் கொண்டு, அலமரும் உயிரினோடும் - வருந்துகின்ற தமது உயிரோடு, நெடிது உயிர்த்து - பெருமூச்சு விட்டுக்கொண்டு, அயர்கின்றாரை - சோர்கின்றவரையும்,

இது, பிரிவுநிலையில் மகளிர் துயரம் கூறியவாறு. முள்ளிலா முளரி, மலர் மேல் மலர் பூத்திருத்தல்; இல் பொருளுவமைகள்; ஒப்பு: ‘கையெனும், கொய்யா மலரான் மலர் கொய்துறுவாள்’ (ஆரணிய. மாரிசன் வதைப். 215.); ‘வாண்முகம், பங்கயத்தை மற்றோர் பங்கயத்து வைத்த பான்மை போல், அங்கை சேர்த்தி’ (நைடத. கைக்கிளைப். 1.); குஸுமே குஸுமோத்பத்தி;’ (போஜ சரித்திரம்.). துயரில் மகளிர் கையை முகத்தில் வைத்தல்: ‘ஒரு கை, முடியொடு கடகஞ் சேர்த்தி’ (முல்லைப். 75-6.)

(பி-ம்.) 1. நலனுறு குமரர் தம்மை: பிரிந்து நல்கி.
3. மலர்க்கையால் வதனந் தாங்கி.
4. உலவரு முயிரினொடு நெடிதுயிர்த் துயிர்க்கின் றுரை. (113)

209. ஏதியங் கொழுநர் தம்பா லெய்திய காத லாலே
தாதியங் கமளிச் சேக்கை யுயிரிலா வுடலிற் சார்வார்
மாதுயர் காத றூண்ட வழியின்மேல் வைத்த கண்ணுர்
தூதியர் முறுவ னேக்கி யுயிர்வந்து துடிக்கின் றுரை

ஏதி அம் கொழுநர் தம்பால் - படைக்கலம் தாங்கும் தம் அழகிய கணவர் மீது, எய்திய - தாம் கொண்ட, காதலாலே - காதலின் காரண மாக, (அவர் பிரிய, அப் பிரிவைத் தாங்க மாட்டாமல்), உயிரிலா உடலின் - உயிரற்ற உடலைப் போல (உணர்வழிந்து), தாது இயங்கு அமளி சேக்கை சார்வார் - பூந்தாது (பரந்து) விளங்கும் மெத்தை யமைந்த படுக்கையில் வீழ்வார்; (பின்பு), மா துயர் - மிக்க துன்பமான, காதல் தூண்ட - தம் காதல் (உணர்ச்சியை) எழுப்ப, வழியின் மேல் வைத்த கண்ணுர் - தம் கணவர் திரும்பி வரும் வழியை நோக்கி அதன் மீது அமைத்த கண்களையுடையவர்களாய், தூதியர் முறுவல் நோக்கி - தாம் (அவர்கள் பால்) தூதுவிட்ட மகளிர் செய்யும் புன்சிரிப்பைப் பார்த்து, உயிர் வந்து துடிக்கின்றுரை - போன உயிர் திரும்பவும் வரப் பெற்று (மகிழ்ச்சியால்) துடிக்கின்ற தலைவியரையும்,

ஏதி அம் கொழுநர் பிரிய என்றமையால், பிரிவு நாடு காவல் பொருட்டு என்பது பெறப்படும். தம்மீது பிரிவாகிய படைக்கலம் ஏந்திய கொழுநர் என்றும் கொள்ளலாம். அமளியஞ் சேக்கை; சீவக 1941. வழியின் மேல் கண் வைத்தல் : *நள*. சுயம்வர. 60; 'வழி மேல் விழி வைத்து வாடாமல்' (*தனிப் பாடல்*). தூதியர் : கணவர் விட்ட தூதியரும் ஆம். உயிரிலா உடலில் என்றமையால், கணவர் உயிராகவும் மனைவியர் உடலாக வும் கொள்ளப் பெற்றனர் என்க. ஒப்பு : 'உடம்புயி ரைத்தொடர் கின்றதை யொத்தாள்'(பால. கடிமணப். 91). இச் செய்யுளில் முறுவல், போன உயிரை மீட்கும் வல்லமை பெற்றமை கூறப்பட்டது.

(பி-ம்.) 1. எய்திய சலத்தர் வைகும்.
2. உடலிற் சாய்வார். (114)

210. சங்கொடு சிலம்பு நூலும் பாதசா லகமுந் தாழப்
பொங்குபேர் முரச மார்ப்ப வில்லுறை தெய்வம் போற்றிக்
கொங்கலர் கூந்தற் செவ்வா யரம்பையர் பாணி கொட்டி
மங்கல கீதம் பாட மலர்ப்பலி வகுக்கின் றுரை

சங்கொடு, நூலும் சிலம்பும், பாதசாலகமும் தாழ-(தாங்கள் குனிந்து கும்பிட்டமையால், கையிலணிந்த) சங்கு வளையல்களும், (கழுத்தில ணிந்த) மங்கல நாண்களும், (காலில் அணிந்த) சிலம்பும், பாதசாலக மென்ற அணிகளும், தாழ - தொங்க, பொங்கு பேர் முரசம் ஆர்ப்ப -

பொங்கி ஒலிக்கின்ற பெரிய முரசங்களும் ஆரவாரிக்க, கொங்குஅலர் கூந்தல் செவ்வாய் அரம்பையர் பாணி கொட்டி, மங்கல கீதம் பாட—மணம் வீசும் மலரணிந்த கூந்தலையும் சிவந்த வாயையும் உடைய தேவமாதர்கள் தாளங் கொட்டி மங்கல கீதங்களைப் பாட, இல் உறை தெய்வம் போற்றி மலர் பலி வகுக்கின்றாரை - வீட்டுத் தெய்வங்களை வாழ்த்திப் பூப்பலி இடுகின்றவர்களையும்,

சங்கு - சங்கினை அறுத்துச் செய்யப்படுகின்ற வளை. நூல் - அரைநூன்மாலை, மேகலை, ஆகியவும் ஆம். பாதசாலகம் - பாதசரம் என்றும் வழங்கும் ஒரு காலணி. பாதசாலம், பாதசாலகம் என்று எழுத்துப் பேறு பெற்றது. பாதசாலகம் : பால. கோலங்காண். 22, தாழ - தொங்க : 'ஆரந் தாழ் மார்பன்' என்பது போல. கொங்கு அலர் - தேனோடு கூடிய மலரும் ஆம். 'பாணி - பாடற் பல்லியம்' என்பது பழைய உரை. மலர்ப்பலி - புஷ்பாஞ்சலி : பூப்படை : இல்லுறைத் தெய்வத்திற்குப் பூப்பலி இடுதல் : நெடுநல். 43. நச். உரை; சிலப். 9. 1-2 அடியார்க் ; சீவக. 2394 : இது பண்டைக் காலந் தொட்டு மாலைக் காலத்திலே தமிழ்நாட்டு மகளிர் செய்து வரும் ஒரு மங்கலச் சடங்கு.

(பி-ம்.) 1. சாலகமுந் தள்ளிப்.
2. பொங்குபன் முரசம் : தெய்வம் பேணி.
4. மலர்ப் பள்ளி வகுக்கின்றாரை ; மறிப்பலி வகுக்கின் றாரை.

(115)

211. இழைதொடர் வில்லும் வாளு மிருளொடு மலைய யாணர்க்
குழைதொடர் நயனக் கூர்வேல் குமரர்நெஞ் சுருவக் கோட்டி
முழைதொடர் சங்கு பேரி முகிலென முழங்க மூரி
மழைதொடர் மஞ்ஞை யென்ன விழாவொடு வருகின் றாரை

இழை தொடர் வில்லும் வாளும் - (தாம் அணியும்) அணிகலன்களினின்று தொடர்ந்து எழும் (வடிவத்தில்) வில்லும் வாளும் போன்ற ஒளிக் கதிர்கள் எல்லாம், இருளொடு மலைய - இருட்டொடு எதிர்த்து (அதனைஒழிக்க), யாணர் குழை தொடர் நயனம்- அழகிய காதணிகள் வரையில்நீண்ட தம் கண்களாகிய, கூர்வேல்-கூரிய வேலாயுதங்களை, குமரர்-இளங் காதலர்களின், நெஞ்சு உருவ கோட்டி - நெஞ்சில் ஊடுருவிப் பாயும்படி வளைத்துச் செலுத்தி, முழை தொடர் சங்கு - உள் துளையுடைய சங்குகளும், பேரி - முரசங்களும், முகிலென முழங்க - மேகங்கள் குமுறுவன போல ஒலிசெய்ய, மூரி மழை தொடர் மஞ்ஞை என்ன - மேகத்தைக் கண்டு களித்து ஆடும் மயில்கள் என்னும்படி, விழாவொடு-மங்கலவிழாவில் ஈடுபட்டு, வருகின்றாரை-வருகின்ற புதுமணப் பெண்களையும்,

வில், வாள், வேல் என்னும் போர்ப் படைகள் இங்கு அரக்கிமார்களுக்கு அமைக்கப்பட்டன; தம் காதலரைத் தம் வசப்படுத்த இவை பயன்படுவன. வில், வாள் என்பன ஒளிப் பொருளும் உடையன. 'இதனை மீமிசை' என்னும் பழைய உரை. ஒப்பு : 'விற்றவழ வாணிமிர மெய்யணிகள் மின்ன' (பால, கோலங்காண். 27). விழி குழை தொடர்தல்: 'குழையொன் றிரண்டு விழியணங்கே' (தனிப்பாடல்). கோட்டுதல்-வளைத்துச் சுழற்றிப் பார்த்தல். சங்கு பேரி முழை தொடர் முகிலென, என்று மாற்றி, சங்கும் பேரியும் மலை முழைகளிலே இடிக்கும் மேகம் போல என்றும் பொருள் கொள்ளலாம். குமரரைத் தொடரும் அரக்கியர்க்கு மழையைத் தொடரும் மஞ்ஞையை உவமையாக்கியதாகவும் கொள்க. விழா - கொண்டாட்டமும் ஆம்.

(பி-ம்.) 2. குழைதொடு நயனம்.
3. சங்கம் பேரி. (116)

212. பள்ளியின் மைந்த ரோடு மூடிய பண்பு நீங்கி
உள்ளிய கலவிப் பூச லுடற்றுதற் குரிய நெஞ்சர்
மெள்ளவே யிமையை நீக்கி யஞ்சன விழுது வேய்ந்த
கள்ளவா ணயன மென்னும் வாளுறை கழிக்கின் றாரை

பள்ளியில் - படுக்கையிலே, மைந்தரோடு - தம் கணவரோடு, ஊடிய பண்பு நீங்கி - பிணங்கிய தன்மை நீங்கி, உள்ளிய - மனத்திலே விரும்பிய, கலவிப் பூசல் உடற்றுதற்கு உரிய நெஞ்சர் - புணர்ச்சிப் போரைப் புரிவதற்கு அமைந்த மனத்தைக் கொண்ட மகளிர், மெள்ளவே இமையை நீக்கி - மெதுவாகக் கண்ணிமைகளைத் திறந்து, அஞ்சன இழுது வேய்ந்த கள்ள வாள் நயனம் என்னும் வாள் - மை என்ற நெய் பூசப் பெற்ற கள்ளத் தன்மையை உடையதும் ஒளி பொருந்தியதுமான கண் என்ற வாட்படைகளை, உறை கழிக்கின்றாரை - அவற்றின் உறைகளினின்று வெளியே எடுப்பவர்களையும்,

உடற்றுதல் - பகைத்தல் ; போர் புரிதல்; கலவிப் பூசல் உடற்றுதற்கு வாளுறை கழிக்கின்றார் என்க. இமை, இங்கே வாளுறை ஆயிற்று. பார்வையை இனிமைபோல் காட்டி ஆடவரின் உயிரையே உண்ணும் ஆற்றல் படைத்தலால் கள்ளம் என்றார். உறை கழித்தல் - கண்ணின் உறையாகிய இமையைத் திறந்து பார்த்தல்.

(பி-ம்.) 3. வெள்ளிய முறுவல் கொண்டாங் கஞ்சனம் விழையத் தீட்டும்.
4. கள்ளவா ணெடுங்க ணென்னும்; கள்ளவா ணயன மூடு மிமையுறை. (117)

213. *ஓவிய மனைய மாத ரூடின ருணர்வோ டுள்ளம்*
*மேவிய கரண மற்றுங் கொழுநரோ டொழிய மீண்டு*
*தூவியம் பேடை யென்ன மின்னிடை துவள வேகி*
*ஆவியுந் தாமு மேபுக் கருங்கத வடைக்கின் றூரை*

ஓவியம் அனைய மாதர் - சித்திரத்தில் எழுதிய படம்போன்ற அழகினையுடைய மகளிர், ஊடினர் - பிரிந்த தம் கணவர்பால் ஊடல் கொண்டவர்களாய், உணர்வோடு உள்ளம் மேவிய கரணம் மற்றும் - உணர்ச்சியும் உள்ளத்துக்கு உரியனவான மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்னும் அந்தக்கரணங்களும், பிறவும், கொழுநரோடு ஒழிய - கணவர்பால் செலுத்தப் பெற்றவைகளாய்த் (தம்மிடமிருந்து நீங்கிப் போக), தூவி அம் பேடை என்ன - மெல்லிய இறகுகளையுடைய அழகிய அன்னப் பேடைபோல, மின் இடை துவள-மின்னல் போன்ற மெல்லிய இடை தள்ளாட, மீண்டு - (தாம் முன்பு திறந்து வைத்திருந்த கதவினிடத்திற்கு) மறுபடியும், ஆவியும் தாமுமே புக்கு ஏகி - உயிரும் தாமுமாகவே புகுந்து சென்று, அரும் கதவு அடைக்கின்றூரை-அருமையான கதவை அடைக்கின்றவர்களையும்,

பிரிதலால் ஊடலுற்ற மகளிர்நிலை இங்குக் கூறப்பெற்றது. மீண்டு-உள்ளம் முதலியன மீளப்பெற்று, என்றும், புக்கு - தம் அறையினுட் புகுந்துகொண்டு, என்றும் பொருள் கொள்ளலாம். கதவு அருமை (யால்) அடைக்கின்றூர் என்று மாற்றி, தளர்ச்சியுற்ற நிலையில் அடைப்பதற்கும் முடியாதிருந்து அடைக்கின்றூர் என்றும் கொள்ளலாம்,

(பி-ம்.) 1. ஊடின வுணர்வோ டுள்ளம்.
2. மேவிய கரண முற்றுங்: ஒழிய யாணர்.
3. துவள வெய்தி; வெள்கி.
4. தாமு மேசென் றருங்கத (வு). (118)

214. *கின்னர மிதுனம் பாடக் கிளர்மழை கிழித்துத் தோன்றும்*
*மின்னெனத் தரளம் வேய்ந்த வெண்ணிற விமான மூர்ந்து*
*பன்னக மகளிர் சுற்றிப் பலாண்டிசை பரவப் பண்ணைப்*
*பொன்னகர் வீதி தோறும் புதுமனை புகுகின் றூரை*

பண்ணை பொன்னகர் வீதி தோறும்-மகளிரின் கூட்டம் நிறைந்ததும் பொன்னாலாகியதுமான அவ்விலங்கை நகர் வீதிதோறும், கின்னர மிதுனம் பாட - ஆண் பெண்களான கின்னரப் பறவைகளின் இரட்டை (மேலே) பாடவும், சுற்றி பன்னக மகளிர் பலாண்டிசை பரவ - (நிலத்திலே) சூழ்ந்து நாகமகளிர் பல்லாண்டுப் பாட்டுக்களைப் பாடிப் புகழவும், கிளர்மழை கிழித்துத் தோன்றும் மின் என - விளங்கு

கின்ற மேகத்தைக் கிழித்துக்கொண்டு புலப்படும் மின்னலைப் போன்ற, தரளம் வேய்ந்த - முத்து (மாலைகள்) சூட்டப்பெற்ற, வெண்ணிற விமானம், ஊர்ந்து - வெண்மையான விமானங்களில் ஏறி ஊர்ந்து, புதுமனை புகுகின்றாரை - புதிய வீடுகளில் குடிபுகுகின்றவர்களையும்,

புதுமனைபுகுதல், மணமான பெண்ணைப் புதிதாகக் கணவன் வீட்டுக்குக் கூட்டிப் போதலாம். இது வதூகிரகப் பிரவேசம் என்றும், நூதன கிரகப் பிரவேசம் என்றும் கூறப்படும். மணமாகாத பெண்ணையும் மணத்தின் பொருட்டு மணமகன் இல்லத்திற்கு அழைத்துச் செல்லுதலும் ஆம்; அடுத்த செய்யுளில் புதுமணம் புணர்தல் கூறப்பெற்றிருப்பதையும் நோக்குக. புதிதாகக் கட்டிய வீட்டினுள் நல்ல வேளையில் புகுதல் என்றும் இதற்குப் பொருள் கூறுவர். கின்னரம் ஒருவகைப் பறவைக்குப் பெயர்; கின்னரங்கள் ஆண் பெண் பிரியாமலிருக்குமென்றும், அவை இனிமை யாகப் பாடும் என்றும் கூறுவர்; பெரும்பாண். 494. கின்னர மிதுனம்; அயோத்யா. சித்திரகூடப். 12; சீவக. 657. நச். உரை.

(பி- ம்:) 1. வெண்மழை; விண்மழை; கிளைமழை.
2. மின்னிடைத். 3. பலாண்டொலி: பாடப் பண்ணைப். (119)

215. கோவையுங் குழையு மின்னக் கொண்டலின் முரச மார்ப்பத்
தேவர்நின் றாசி கூற முனிவர்சோ பனங்கள் செப்பப்
பாவையர் குழாங்கள் சூழப் பாட்டொடு வான நாட்டுப்
பூவையர் பலாண்டு கூறப் புதுமணம் புணர்கின் றாரை

கொண்டலின் - நீருண்ட மேகம் போல, முரசம் ஆர்ப்ப - முரசங்கள் முழங்க, தேவர் நின்று ஆசி கூற - தேவர்கள் நின்று கொண்டு ஆசி மொழிகளைக் கூற, முனிவர் சோபனங்கள் செப்ப - இருடிகள் வேத மந்திரங்களால் மங்கல வாழ்த்துக்களைக்கூற, பாவையர் குழாங்கள் பாட்டொடு சூழ - மகளிர்க் கூட்டங்கள் பாடிக்கொண்டு சூழ்ந்துவர, வான நாட்டுப் பூவையர் பலாண்டு கூற - தேவமாதர் பல்லாண்டு பாட, கோவையும் குழையும் மின்ன-தம் மாலைகளும் குண்டலங்களும் மின்ன, புதுமணம் புணர்கின்றாரை - புதிதாகத் திருமணம் செய்துகொள்பவர்களையும்,

கோவை - மேகலைக் கோவையும் ஆகலாம்.

இதன்பின் ஓர் அதிகப்பாடல். சில சுவடிகளில் காணப்படுகிறது.

இத்திற மனந்த கோடி யிராக்கதக் குழுவி னுள்ளோர்
தத்தம செய்கை யெல்லாந் தனித்தனி நோக்கித் தாங்கா

தெத்திற மிவர்தம் சீரை யெண்ணுவ தெனவே யண்ணல்
உத்தமன் றேவி தன்னை யொழிவற நாடிப் போனான்.

(பி-ம்.) 2. தேவர்வந் தாசி கூற.
4. பூவையர் வாழ்த்தல் கூற. (120)

## அநுமன் கும்பகருணனைக் காண்டல் 216-227

216. *இயக்கிய ரரக்கி மார்க ணாகிய ரெஞ்சில் விஞ்சை*
*முயற்கறை யிலாத திங்கண் முகத்தியர் முதலினோரை*
*மயக்கற நாடி யெங்கும் மாருதி மலையின் வைகும்*
*கயக்கமி றுயிற்சிக் கும்ப கன்னனைக் கண்ணிற் கண்டான்.*

(இவ்வாறாகிய), இயக்கியர் - இயக்கமாதர்கள், அரக்கிமார்கள் - அரக்கமாதர்கள், நாகியர் - நாகமாதர்கள், எஞ்சில் விஞ்சை - குறை வில்லாத வித்யாதர நாட்டினரான, முயல் கறை இலாத திங்கள் முகத்தியர் - முயல்போலக் காணப்படும் களங்கமில்லாத பூர்ணசந்திரனை யொத்த முகத்தையுடையவர்கள், முதலினோரை - முதலானவர்களை, எங்கும் மயக்கு அற நாடி-எல்லா விடங்களிலும் தெளிவுபட ஆராய்ந்து, மாருதி - அநுமன், மலையின் வைகும் - மலைபோலப் பெரிய உருவத்தோடு படுத்துக் கிடந்த, கயக்கம் இல் துயிற்சி - கலக்கம் இல்லாத தூக்கத்தைக் கொண்டிருந்த, கும்பகன்னனை-கும்பகருணனை, கண்ணில் கண்டான் - தன் கண்களால் நேரே பார்த்தான்.

முயல்கறையிலாத திங்கள் முகம், இல் பொருள் உவமை. மாருதி, மருத்தின் மைந்தன் ஆதலின் மாருதி எனப்பட்டான்; தத்திதாந்த நாமம். கும்பகன்னன் - குடம்போன்ற காதையுடையவன்; அவன் மலைபோன்ற உருவினன்; 'நெடுவரைபோல் நீண்ட உருவன்' (உத்தர. இராவணன் பிறப்பு. 14.) கயக்கமில் துயிற்சி; 'இடைபுகலரியதோருறக்கம்' (224:) கயக்கம், சோர்வும் ஆம். கண்களால் காண்டல்; 630; 1269.

(பி-ம்.) 1. நாகிய ரின்சொல் விஞ்சை: செஞ்சொல் விஞ்சை: விஞ்சை மாதர்.
2. முயற்கறை மலராத் திங்கள்.
3. நாடி யேகு மாருதி.
4. துயிற்சி யானைக் கருணனை. (121)

வேறு

217. *ஓசனை யேழுகன் றுயர்ந்த தும்பரின்*
*வாசவன் மணிமுடி கவித்த மண்டபம்*

*ஏசற விளங்குவ திருளை யெண்வகை*
*ஆசையி னிலைகெட வகற்றி யான்றது.*

வாசவன் மணிமுடி உம்பரின் கவித்த - இந்திரனுடைய இரத்தினங்கள் பதித்த கிரீடத்தை உச்சியில் கவிக்கப் பெற்ற, மண்டபம் - கும்பகருணன் இருந்த மண்டபமானது, ஏழு யோசனை அகன்று உயர்ந்தது - ஏழு யோசனை தூரம் அகலமுள்ளதாய், அவ்வாறே உயரமும் பெற்றிருந்தது; ஏசற விளங்குவது - குற்றமற ஒளிகொடுப்பது; இருளை - இருட்டை, நிலைகெட - நிற்க இடமின்றி, எண்வகை ஆசையின் அகற்றி - எட்டுத் திக்குக்களிலும் ஓட்டி, ஆன்றது - ஒளியுடன் அமைந்தது.

கும்பகருணன் மனை அமைந்த வரலாற்றை உத்தர. இராவணன் பிறப்பு. 70. ஆம் செய்யுளிலும் காண்க. ஏசுற என்று பாடங்கொண்டு, இந்திரனின் பட்டாபிஷேக மண்டபமான சுதர்மை என்றது இகழ்ச்சியுற என்றும் பொருள் கூறுவர்.

(பி-ம்.) 3. ஏசுற விளங்குவ(து.)
4. நிலைகெட வலைக்க வான்றது. (122)

218. *அன்னத னடுவணோ ரமளி மீமிசைப்*
*பன்னக வரசெனப் பரவை தானெனத்*
*துன்னிரு ளொருவழித் தொக்க தாமென*
*உன்னருந் தீவினை யுருக்கொண் டென்னவே*

அன்னதன் நடுவண் - அந்த மண்டபத்தின் நடுவில், ஓர் அமளி மீமிசை - ஒரு படுக்கையின்மீது, பன்னக அரசு என - பாம்புகளுக்கு அரசனை ஆதிசேடன் போலவும், பரவைதான் என - கடலே என்று சொல்லும்படியும், துன் இருள் ஒருவழி தொக்கது ஆம் என - நெருங்கிய இருளெல்லாம் ஓரிடத்தில் திரண்டு நின்றது என்று சொல்லும் படியும், உன்ன அரும் தீவினை உரு கொண்டென்னவே - நினைக்கவும் முடியாத பாவங்கள் ஓருருவம் கொண்டன போலவும், (கும்பகருணன் உறங்கினான்.)

இது முதல் 224 முடிய கும்பகருணனின் உறக்கநிலை கூறப்பட்டது. இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் பாடல் அதிகமாக உள்ளது.

கிடந்தனன் வடவரை கிடந்த போலிரு
தடம்புயந் திசைகளை யளக்கத் தாங்கிய
உடம்புறு முயற்சியி னுறங்கி னன்கடை
இடம்பெறு தீவினை யாவு மேத்தியே.

(பி-ம்.) 1. அந்நகர்: அன்னதி னடுவதோர். 123)

219. முன்னிய கனைகடன் முழுகி மூவகைத்
தன்னியல் கதியொடுந் தழுவித் தாதுகு
மன்னெடுங் கற்பக வனத்து வைகிய
இன்னிளந் தென்றல்வந் திழுகி யேகவே

தாது உகு மன் நெடும் கற்பக வனத்து வைகிய - மகரந்தங்களைச் சிந்துகிற, நிலை பெற்ற பெரிய கற்பகக் காட்டில் தங்கியிருந்த, இன் இளம் தென்றல் - இனிய இளமையான தென்றற் காற்றானது, முன்னிய கனைகடல் முழுகி - (தன்) எதிராகவுள்ள ஒலிமிக்க கடலில் குளித்து, தன் இயல் மூவகை கதியொடும் தழுவி - தனக்கு இயல்பான மூன்று வகையான நடையை(சமயோசிதமாகக்) கொண்டு,வந்து இழுகி ஏகவே- (அம்மண்டபத்துள்) வந்து (அவன் உடலின் மீது) வீசிச் செல்லவும், (அவன் உறங்கினான்.)

கற்பகக் காட்டுத் தென்றல், கடலில் முழுகி, மூவகைக் கதியுடன் அவன்மீது வீசிச் சென்றது என்க. தென்றலின் மூவகைக்கதி; மந்தநடை, இடைநிலைநடை, கடுநடை என்பனவாம்; இதனை மந்த, மத்ய, துரித கதிகள் என்பர். இயல் கதியொடும் என்பதனை இயலோடும் கதியோடும் என்று பிரித்துக் கூட்டி, இயலாகிய குணங்களோடும், கதியாகிய நடைகளோடும் என்றும் பொருள் கொள்ளலாம். குணங்களாவன; சைத்யம், ஸௌரப்யம், மாந்த்யம் என்பன; ஒப்பு: குமாரஸம்பவம். சர்க். - 1, 15; 'குளிர்ச்சி, மந்தம், பரிமளம் ஆக, கதி மூன்றனையும்' என்பது பழைய உரை. தென்றல் இழுகுதல். 269.

(பி-ம்.) 1. சுரநதி முழுகி ; கனைகடல் முகிழும் ; கனைகடல் முழ்கி ; கனைகடன் முழுக்கு.
2. கதியொடு ; கதியொடு தழுவத்.
3. மன்னிய : வனத்துள் : வனத்த ளாவியங் (கு)
4. இழுக்கி யேறவே. (124)

220. வானவர் மகளிர்கால் வருட மாமதி
ஆனனங் கண்டமண் டபத்து ளாய்கதிர்க்
கானகு காந்தமீக் கான்ற காமர்நீர்த்
தூநிற நறுந்துளி முகத்திற் றூற்றவே.

வானவர் மகளிர் - தேவமாதர், கால் வருட - (அவன்) கால்களைத் தடவிப் பிடிக்கவும், ஆனனம் மாமதி கண்ட - (அத்தேவமாதர்களின்) முகங்களாகிய முழுமதிகளைக் கண்ட, மண்டபத்துள் - (அந்த) மண்டபத்துள், ஆய் கதிர் கால் நகுகாந்தம்-சிறந்த ஒளிக்கதிர்களை வீசி விளங்கும்

சந்திரகாந்தக் கற்கள்,மீ கான்ற காமர் தூ நிற நறும் நீர்துளி-மேலே கக்கிய இனிய, தூயநிறத்தையுடைய, மணமுள்ள நீர்த்துளிகள், முகத்தில் தோற்றவே - (உறங்கும் கும்பகருணனின்) முகத்தில் விழுந்து தோற்ற மளிக்கவும், (அவன் உறங்கினான்.)

நகு காந்தம் ஆய் கதிர் கால் - சிறந்த ஒளி வீசும் காந்தக் கற்களால் விளங்கும் தூண்கள் என்றும் பொருள் கூறலாம். தேவமாதர் முகங்கள் திங்கள்களாகத் தோன்றின.

(பி-ம்.) 1. மகளிர்தாள்.
3. காமநீர்.
4. முகத்திற் றெறுத்தவே. (125)

221. *மூசிய வுயிர்ப்பெனு முடுகு வாதமும்*
*ஆசையின் புறத்திடை யளவி வன்மையால்*
*நாசியி னளவையி னடத்தக் கண்டவன்*
*கூசினன் கொதித்தனன் விதிர்த்த கையினான்,*

மூசிய உயிர்ப்பு எனும் முடுகு வாதமும் - (அவனுடைய) அடர்ந்த (வெளிவிடும்) மூச்சுக்காற்று என்று சொல்லப்படும் கடுங் காற்றும், ஆசையின் புறத்திடை அளவி - (உலகின்) எல்லைப்புறம் வரையில் வியாபித்து, வன்மையால் - (அதனை அவன் உள்ளிழுக்கும்) வலிமையினால், நாசியின் அளவையின் நடத்தக் கண்டு - அவன் நாசி வரையில் மீளத் திருப்பப்படுவதைப் பார்த்து, அவன் - அநுமன், விதிர்த்த கையினான் - உதறிய கைகளை உடையவனாய், கூசினன் - அக்காற்று தன் மேலே படுமோ என்று உடல் கூசி, கொதித்தனன்-(கும்பகருணனின் கொடிய உருவங்கண்டு) மனக்கொதிப்புக் கொண்டான்.

கும்பகருணன் உறக்க நிலையைக் கூறும் செய்யுட்கட் கிடையே அநுமனின் செயலாக இச் செய்யுள் கூறப்பெற்றது. முடுகு வாதம்; அடுத்த பாடலில் உலகெலாம் துடைக்கு மாருதம் என்று கூறப் படுவது. கண்டவன் - கண்ட அநுமன் எனவும் கொள்ளலாம். கொதித்தனன் என்றது அடுத்த செய்யுளில் கேழில் வெங் கொடியவன் என்று குறிக்கப்படும், அவன் கொடுமை நோக்கி என்க. 'குதித்தனன் விதிர்த்த கையினான்' என்று பாடங் கொண்டு, அநுமன் அக்காற்றிலே சிக்கி அரிதில் வெளியே வந்தனன் என்று கூறுவது அநுமனின் பேராண்மைக்குப் பொருந்தாது; கொதித்தனன் என்பதே பழைய சுவடிகளில் காணும் பாடம். கும்பகருணனின் முடுகு வாதமொத்த மூச்சுக் காற்றின் கொடுமை, 'திண்டிறல் வீரர்வாயிற் றிறத் தலுஞ் சுவாதவாதம், மண்டுற வீரரெல்லாம் வருவது போவதாகிக், கொண்டுறு தடக்கைபற்றிக் குலமுடை வலியினாலே, கண்டுயி

லெழுப்பவெண்ணிக் கடிதொரு வாயில்புக்கார்' (உயுத்த. கும்பகருணன். 50.). 'விதிர்த்தல் - புகழ்தல்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 2. வாசலின் புறத்திடை நிறுவி வன்மையால்.
4. கூசினன் குதித்தனன். (126)

222. பூழியின் றொகைவிசும் பணவப் போய்ப்புகும்
கேழில்வெங் கொடியவ னுயிர்ப்புக் கேடிலா
வாழிய வுலகெலாந் துடைக்கு மாருதம்
ஊழியின் வரவுபார்த் துழல்வ தொத்தவே.

பூழியின் தொகை - (எழும்) புழுதியின் கூட்டம், விசும்பு அணவ போய் புகும் - வானத்தைத் தழுவ (அவ்வளவு உயரம்) சென்றடையும் படி (விடும்), கேழ் இல் வெம் கொடியவன் உயிர்ப்பு - ஒப்பற்ற கொடியவனை (அக்கும்பகருணனின்) மூச்சுக்காற்றுக்கள், கேடிலா வாழிய உலகெலாம் துடைக்கும் மாருதம் - அழிதலில்லாமல் (நெடுங்காலமாக) வாழ்வடைந்த எல்லா உலகங்களையும் (ஒருமிக்க) அழிக்கும் (சண்டமாருதம் என்ற) பெருங்காற்று, ஊழியின் வரவு பார்த்து - ஊழி முடிவின் வருகையை எதிர்பார்த்து, உழல்வது ஒத்த - அதுவரை ஒருவாறு (திரிந்து கொண்டிருந்ததை) ஒத்தன. ஏ: அசை.

ஊழியின் வரவு பார்த்து உழல்வது ஒத்த; ஒப்பு: 224, 317. 'இந்தக் கவிப் பொருள் : சண்டமாருதம் ஊழிக்காலம் வந்ததோவென்று பார்ப்பது போன்று மூச்சு வெளியிலே புறப்பட்டது; அந்த வாயு நமக்கு இன்னும் காலம் வரவில்லையென்று பின்வாங்கலொத்தது நாசியிலே திரும்ப வந்து புகுந்தது' என்பது பழைய உரை.

இதன்பின் ஒரு பாடல் இருந்திருக்க வேண்டுமென்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு. கிடைத்த ஏடுகளில் அத்தகைய பாடல் இல்லை.

(பி-ம்) 2. கேழில்வெங் கிளர்கிடை யுயிர்ப்புக் கேடிலா.
4. ஊழியி னிறுதிபார்த் (து.) (127)

223. பகையென மதியினைப் பகுத்துப் பாடுற
அகையில்பேழ் வாய்மடுத் தருந்து வானெனப்
புகையொடு முழங்குபே ருயிர்ப்புப் பொங்கிய
நகையிலா முழுமுகத் தெயிறு நாறவே

மதியினை பகையென பகுத்து - பூரண சந்திரனைத் தன் பகையென்று கொண்டு அதனை இரண்டாகப் பிளந்து, அகை இல் பேழ்வாய் - கேடு

அடையாத தன் பெரிய வாயின் (இரு பக்கங்களிலும்), பாடு உற - பொருந்த, மடுத்து - புகுத்தி, அருந்துவான் என - அப்பிளவுகளை உண்பவன்போல, புகையொடு முழங்கு பேர் உயிர்ப்பு பொங்கிய நகையிலா முழுமுகத்து - புகையோடு (தான் விடும் குறட்டின்) பெரு முழக்கும் கூடிய மூச்சினைப் பொங்கி விடுவதும், ஒளியில்லாததுமான தன் பெரிய முகத்தில், எயிறு தோன்ற - கடைவாய்ப் பற்கள் (வெளியே புறப்பட்டுத்) தோன்றவும், (உறங்கினன்,) ஏ: அசை.

நகையில்லாத முகம் - பிரஸன்னமில்லாத முகம்; இயற்கையில் கடுகடுத்த முகம்.

(பி-ம்.) 1. மதியினை முறித்துப் பாடுறும்.
2. அகைபெரு வாய்; மடுத் தருந்துந் தன்மைபோல்; மடுத் துருத்து வானெனை.
3. புகையென.
4. நகை நிலா. (128)

**224.** தடைபுகு மந்திரந் தகைந்த நாகம்போல்
இடைபுக லரியதோ ருறக்க மெய்தினன்
கடையுக முடிவெனுங் கால மோர்ந்தயல்
புடைபெய ராநெடுங் கடலும் போலவே.

தடைபுகு மந்திரம் தகைந்த நாகம் போல் - வேகத்தைத் தடுத்து அடங்கச் செய்யும் மந்திரத்தால் தடையுண்ட நல்ல பாம்பைப் போலவும், கடையுக முடிவெனும் காலம் ஓர்ந்து - (நான்கென்னும் யுகங்களின்) கடைசி யுகத்தின் இறுதியில் தோன்றும் பெரும் பிரளய காலத்தை எதிர்பார்த்து, அயல் புடை பெயரா - பக்கத்திலே இடம் பெயராது அடங்கிக் கிடக்கும், நெடும் கடலும் - பெருங் கடலையும், போல - போலவும், இடைபுகல் அரியது ஓர் உறக்கம் எய்தினன் - இடையே எதுவும் புகுந்து கலைக்க முடியாத ஒப்பற்ற பேருறக்கத்தில் அவன் வீழ்ந்திருந்தான்.

கும்பகருணன் உறங்கிக்கிடந்ததற்கு மந்திரத்தால் தடையுண்ட நாகத்தின் கிடைக்கையும், காலம் பார்த்து நிற்கும் கடலின் அடக்கமும் உவமைகள்; ஒப்பு: 317. நாகம் மந்திரத்தில் பிணியுறல்; நான்மணிக். 10.

ஒரு சுவடியில், இதன் பின்வரும் அதிகப் பாடலொன்று காணப்படுகிறது.

குடந்தருஞ் செவிகளுங் குன்ற நாணுறத்
தடந்தரு கரங்களுந் தாளுந் தாங்குறக்
கிடந்ததோ ரிருளெனக் கிடந்து ளான்றனை
அடைந்தன னஞ்சுறு தநும னுண்மையான்.

(பி.ம்.) 1. தடையுறு மந்திரம்.
2. இடையுற வரியதோர்.
3. காலம் பார்த்தயல். (129)

வேறு.

225. ஆவ தாகிய தன்மைய வரக்கனை யரக்கர்
கோவெ னுநின்ற குணமிலி யிவனெனக் கொண்டான்
காவ னுட்டங்கள் பொறியுகக் கனலெனக் கனன்றான்
ஏவ னேவிவ னிறைவர் மூவர்க ளெனுமீட்டான்.

ஆவதாகிய தன்மைய அரக்கனை - இவ்வாறு உறங்கும் தன்மைகளைப் பெற்ற அரக்கனை (அநுமன் கண்டு), 'இவன் மூவர் இறைவர்கள் ஏனும் ஈட்டான் - இவன் (இராவணன் முதலான) மூன்று (அரக்க) மன்னர்கள் என்னும் தொகுதியுடன் உள்ளவன்; ஏவனோ - (அவர்களில் இவன்) யாவனோ?' (என்று முதலில் எண்ணிப் பின்பு), 'இவன் அரக்கர் கோ எனு நின்ற குணமிலி - இவன் அரக்கர் மன்னனாகிய குணமற்ற இராவணனே!' எனக் கொண்டான் - என்று நிச்சயித்துக் கொண்டவனாய், காவல் நாட்டங்கள் பொறி உக - காப்பதில் வல்ல கண்கள் தீப்பொறி சிந்த, கனலெனக் கனன்றான் - நெருப்பே என்று சொல்லுமாறு கோபங் கொண்டான்.

(பி-ம்.) 1. ஆவ தாகிய வரக்கனை யநுமனு மரக்கர்.
3. கனலெழக் கனன்றான்.
4. ஏவ னேவிவன் மூவரி னொருவனு மீட்டான்; நேர்வ னேவிவன் மூவரி லென்றுள மிசைத்தான்: இறைவரி னொருவரென் றிசைந்தான். (130)

226. குறுகி நோக்கிமற் றவன்றலை யொருபதுங் குன்றத்
திறுகு திண்புய மிருபது மிவற்கிலை யென்னு
மறுகி யேறிய முனிவெனும் வடவைவெங் கனலை
அறிவெ னும்பெரும் பரவையம் புனலினு லவித்தான்.

மற்று - பிறகு, குறுகி நோக்கி - அவனை நெருங்கிப் பார்த்து, 'அவன் - அவ்விராவணனுக்குரிய, தலை ஒருபதும் - பத்துத் தலைகளும்

குன்றத்து இறுகு திண்புயம் இருபதும் - மலைகளைப் போன்று இறுகி யுள்ள வலிய இருபது புயங்களும், இவன் கு இலை - (இங்குப் படுத்திருக் கும்) இவனுக்கு இல்லை;' என்னு-என்றுகண்டு,(அநுமன்), மறுகி-கலங்கி, ஏறியமுனிவு எனும் வடவை வெம் கனலை-(தன்னிடம் உண்டாகி) முன் னேறி நின்ற கோபம் என்ற வடவாமுகாக்கினி என்னும் கொடிய நெருப் பை, அறிவு எனும் பெரும் அம் பரவை புனலினுல்-அறிவு என்னும் பெரிய அழகிய கடல் நீரால், அவித்தான் - அணைத்தான்.

அறிவினுல் சினம் தணித்தல்: 'அறிவென்னு நீரால் அவித்தொழுக லாற்றின்' (அறநெறிச். 81.) அறிவெனும் பரவை: 'அறிவென்னும் அளக்கர்' (பால. அரசியல். 5) ஒப்பு: நள. 1. 86; நாலடி. 68.

(பி-ம்.) 1. ஒருபதுங் குறித்த.
2. இருபதிங் கிவனில னென்னு. (131)

227. அவித்து நின்றெவ னுகிலு மாகவென் றங்கை
கவித்து நீங்கிடச் சிலபக லென்பது கருதாச்
செவிக்குத் தேனென விராகவன் புகழினைத் திருத்தும்
கவிக்கு நாயக னனையவ னுறையுளைக் கடந்தான்.

இராகவன் புகழினை செவிக்கு தேனென திருத்தும் கவிக்கு நாயகன்- இராமபிரானின் புகழை, கேட்டவர் செவிக்குத் தேன் என்று சொல் லும்படி திருந்தத் தெரியப்படுத்தும் வானரத் தலைவனுன அநுமன், அவித்து நின்று - தன் கோபத்தைத் தணித்துக் கொண்டு நின்று, 'எவனுகிலும் ஆக என்று - இங்குக் கிடப்பவன் எவனுகிலும் ஆகட்டும்' என்றும், 'சில பகல் நீங்கிட என்பது கருதா - இவன் சில காலம் உறங்கியே கிடக்கட்டும்' என்றும் எண்ணி, அங்கை கவித்து - தன் உள்ளங் கையைக் கவித்துக் (கூறி), அனையவன் - அக்கும்பகருணனின், உறையுளை - மாளிகையை, கடந்தான் - தாண்டிச் சென்ருன்.

திருத்துதல், சொல்லுதலும் ஆம்: 'திருத்தாய் செம்போத்தே' (பெரிய திருமொழி. 10. 10. 1.) அநுமன் இராமன் புகழாகிய இராமா யணத்தைச் சொல்பவன் என்பது, 'வைதேஹீ ஸஹிதம்' என்று தொடங்கும் வால்மீகிராமாயண பாராயண சுலோகத்தில், 'ப்ரபஞ்ஜன ஸுதே வாசயதி' என்ற பகுதியால் விளங்கும் என்பர். இனி, இராகவன் புகழைத் திருத்தும் கவிக்கு நாயகன் - இராமாயணமாகிய மாலைக்கு நடுநாயக மணியாக விளங்குபவன் என்றும் பொருள் கொள்வர்; 'ராமாயண மஹாமாலா ரத்னம் வந்தே அநிலாத்மஜம்' என்ற சுலோகப் பகுதியையும் காண்க.

(பி-ம்) 1. எவனுயினு மாக.
2. கவித்து நீசிட சில்பகல்.
3. தேனன்ன விராகவன். (132

## அநுமன் மேலும் பல இடங்களிலும் தேடல் 228-229

*228. மாட கூடங்கண் மாளிகை யோளிகண் மகளிர்*
*ஆட ரங்குக ளம்பலந் தேவரா லயங்கள்*
*பாடல் வேதிகை பட்டிமண் டபமுதற் பலவும்*
*நாடி யேகின னிராகவன் புகழெனு நலத்தான்.*

இராகவன் புகழ் எனும் நலத்தான் - இராமபிரானின் புகழே ஒரு வடிவு கொண்டு வந்ததோ என்னும் சிறப்புடைய அநுமன், (மேலும்), மாடம், கூடங்கள், மாளிகை ஒளிகள், மகளிர் ஆடு அரங்குகள், அம்பலம், தேவர் ஆலயங்கள், பாடல் வேதிகை, பட்டிமண்டபம் முதல் பலவும் - மாடம், கூடம், மாளிகை வரிசைகள் என்று பெயர் அமைந்த மனைகளிலும், அவற்றின் பகுதி வரிசைகளிலும், மகளிர் விளையாடும் மேடைகள், சபைகள், கோவில்கள், இசை அரங்குகள், கல்வி மண்டபங்கள் முதலான பலவிடங்களிலும், நாடி - பிராட்டியைத் தேடிக்கொண்டு, ஏகினன் - சென்றான்.

அநுமன் இராகவனின் புகழினைத் திருத்துவன் என்று முன் செய்யுளி லும், இராகவன் புகழே அவன் என்று இச்செய்யுளிலும் தொடர்ந்து கூறினமையின், இராமாயணத்தில் அநுமன் ஏற்கும் நிலையைப்பற்றிக் கம்பர் கொண்ட கருத்தை நாம் உணரலாம். 243 ஐயும் காண்க. மாடம் - உபரிகையுள்ள வீடு; வீடு; மாடக்கோயில். கூடம் - வீடு; வீட்டின் கூடம்; தாழ்வாரம்; யானைச்சாலை;. மேலிடம்; அரண்மனை; மாடமுள்ள பெருவீடு. வீடு. ஒளி - வரிசை; பால. மிதிலைக் காட்சிப். 22. அம்பலம் - பலர்கூடும் சபை. வேதிகை - மேடை. பட்டி மண்டபம் - புலவர் சொற்பொழிவு நிகழ்த்தும் இடங்கள்: பால. நகரப். 62; மணி. 2. 61; சிலப். 5. 102.

(பி-ம்.) 1. மாளிகை யொழுங்குகள்.
4. நாயகன் நலனெனு நலத்தான். (133

*229. மணிகொள் வாயிலிற் சாளரத் தலங்களின் மலரில்*
*கணிகொ ளுளத்திற் காலெனப் புகையெனக் கலக்கும்*
*நுணுகும் விங்குமற் றிவனிலை யாவரே நுவல்வார்*
*அணுவின் மேருவி னுழியா னெனச்செலு மறிவோன்.*

ஆழியான் என - சக்ரதாரியான திருமாலைப் போல, அணுவின் - (மிக நுணுகிய) அணுவிலும், மேருவின்-(மிகப் பெரியதான) மேருவிலும், செலும் - செல்லக்கூடிய, அறிவோன் - அறிவையுடைய அநுமன், மணிகொள் வாயிலில், சாளரத் தலங்களில் - இரத்தினங்கள் பதித்த (மனை) வாயில்களிலும், பலகணி இடங்களிலும், மலரில் - பூக்களிலும், கணிகொள் நாளத்தில் - நுட்பமாய் அறியக்கூடிய மலர்த் தண்டுத் துவாரங்களிலும், கால் என - காற்றுப் போலவும், புகை என - புகையைப் போலவும், கலக்கும் - சேர்வான்; நுணுகும் - நுட்பமாகப் புகுவான்; வீங்கும் - பருமனாகி வளர்வான்; இவன் நிலை யாவரே நுவல்வார்- இவன் தன்மையை யார் அறிந்து சொல்வர்? (ஒருவரும் சொல்ல இயலார் என்றபடி.) மற்று : அசை.

அநுமனின் நிலையின் அருமை கூறப்பெற்றது. ஆழியானின் அருமை நிலை;, 'அணுவினைச் சதகூறிட்ட, கோணினுமுளன் மா மேருக்குன்றினும் உளன்' (*உயுத்த*. இரணியன் வதைப். 124.). அநுமன் திருமாலுக்கு உவமை; 197, 329. காலெனப் புகையெனக் கலத்தல் முதலியன: *ஒப்பு* ; 'காலினும் புகையினும் நொய்தாம்' (*நீதி வெண்பா*.). கால் வேகத்துக்கும், புகை நுட்பத்துக்கும் என்க.

(*பி-ம்.*) 1. சாளரத் தாள்களின் மலரில்.
2. காலினும் புகையினும் கலக்கும்.
3. மற் றவனிலை.
4. ஆழியா னெனச்செலு மநுமன். (134)

## அநுமன் வீடணனைக் காணல் 230-232

*230. ஏந்த லிவ்வகை யெவ்வழி மருங்கினு மெய்திக்*
*காந்தண் மெல்விரன் மடந்தையர் யாரையுங் காண்பான்*
*வேந்தர் வேதியர் மேலுளோர் கீழுளோர் விரும்பப்*
*போந்த புண்ணியன் கண்ணகன் கோயிலுட் புக்கான்.*

ஏந்தல் - பெரியோனான அநுமன், காந்தள் மெல் விரல் மடந்தையர் யாரையும் காண்பான் - (பிராட்டியை நாடிச் செல்கையில்), செங்காந்தள் போன்ற மெல்லிய விரல்களுடைய மகளிர் யாவரையும் காண்பவனாகி, இவ்வகை-(முன் கூறிய) இந்த முறையில், எ வழி-மருங்கினும் எய்தி - (தான்) செல்லும் வழியில் எல்லா இடங்களிலும் சென்று, வேந்தர், வேதியர், மேலுளோர், கீழுளோர் விரும்பப் போந்த புண்ணியன் - அரசர், அந்தணர், தேவர், நாகர் (முதலியோர் பலரும்) விரும்பும் வண்ணம் தோன்றிய புண்ணியவானான வீடணனுடைய, கண் அகன் கோயிலுள் - இடமகன்ற அரண்மனையினுள், புக்கான் - நுழைந்தான்.

அநுமன் பிராட்டியை நாடி மடந்தையர் தங்குமிடங்களாகப் பார்த்துச் சென்றான் என்பது கூறியவாறு. வீடணன் புண்ணியன்: உத்தர. இராவணன் பிறப்பு. 20. காந்தட்பூ, உள்ளங்கை போன்று சிவந்தும், விரல்கள் போல விரிந்த இதழ்களைப் பெற்றும் காணப்பெறும்.

(பி-ம்.) 3, வானவர் மேலுளோர். (135)

231. பளிக்கு வேதிகைப் பவழத்தின் கூடத்துப் பசுந்தேன்
துளிக்குங் கற்பகப் பந்தரிற் கருநிறத் தோர்பால்
வெளுத்து வைகுத லரிதென வவருரு மேவி
ஒளித்து வாழ்கின்ற தருமமன் னான்றனை யுற்றான்.

பளிங்கு வேதிகை - பளிங்குக் கற்களாலான மேடைமீது, பவழத்தின் கூடத்து - பவழமயமான மண்டபத்துள், பசுந்தேன் துளிக்கும் கற்பக பந்தரில் - புதிய தேனைத் துளித்துக் கொண்டிருக்கும் மலர்களை யுடைய கற்பக விதானத்தின் கீழ், கருநிறத்தோர்பால் வெளுத்து வைகுதல் அரிது என - (தான் வாழ நேர்ந்த கரிய நிற அரக்கரிடையே (தன் இயற்கை நிறமான) வெண்மை நிறங் கொண்டு தங்குதல் அரியது என்று எண்ணி, அவர் உரு மேவி - அவ் அரக்கர்களின் கரிய உருப் பொருந்தி, ஒளித்து வாழ்கின்ற தருமம் அன்னான் தனை - தன்னை மறைத்துக்கொண்டு வாழ்கின்ற தருமதேவதையை ஒத்த வீடணனை, உற்றான்- அடைந்தான்.

தருமத்தின் நிறம் வெண்மை என்பது கவிமரபு. அறம் நகர் புகாமை முன்னே (118) கூறப்பட்டது. அறத்தின் நிறம் மாறித் தோற்றமளித்தல்; 'ஆரருள் சுரக்கும் நீதியற நிறங்கரிதோ' (உயுத்த. வீபீடணன். 137.) என்று இராமபிரானைக் கண்ட வீடணன் கூற்றாக வருவதையும் ஒப்பிடுக.

(பி-ம்.) 1. கூட்டத்தின் பசுந்தேன்.
2. கருநிறத் தோரை.
3. வெளித்து; விளித்து: வைகுவ தரிதென.
4. தருமமொப் பாள்றனை. (136)

232. உற்று நின்றவ னுணர்வைத்தன் னுணர்வினு லுணர்ந்தான்
குற்ற மில்லதோர் குணத்தின னிவனெனக் கொண்டான்
செற்ற நீங்கிய மனத்தின னுருதிசை சென்றான்
பொற்றை மாடங்கள் கோடியோர் நொடியிடைப் புக்கான்.

உற்று நின்று - (வீடணனை) நெருங்கி நின்று, அவன் உணர்வை - அவனுடைய மனப்பண்பை, தன் உணர்வினால் - தன் ஆராய்ச்சியறி

வால், உணர்ந்தான்-கண்டறிந்து கொண்டான்: 'இவன் - இவ்வீடணன், குற்றம் இல்லது ஓர் குணத்தினன்-மாசு அற்றதான ஒப்பற்ற தூய்மைக் குணம் கொண்டவன்' என கொண்டான்-என்று தெரிந்து கொண்டான்; (அதனுல்), செற்றம் நீங்கிய மனத்தினன்-(அவனிடம்) பகைமை நீங்கிய செம்மனத்தைக் கொண்டு, ஒரு திசை சென்ருன் - பிறிதொரு வழியிலே போய், ஓர் நொடி இடை - நொடி நேரத்தினுள், பொற்றை மாடங்கள் கோடி புக்கான் - மலைகளை ஒத்த பற்பல மாளிகைகளுள் புக்கு நாடினுன்.

ஒருவன் உணர்வைத் தன் உணர்வினுல் உணர்தல் மதியூகிகளுக்கு அமைவதோர் ஆற்றலாகும். அநுமன் இந்த ஊகத்தில் சிறந்தவன் என்பதை நூலெங்கும் காணலாம். 'பொற்றை - மலை: 'பொற்றை மால் வரைகளோ' (உயுத்த இலங்கைகாண். 22.). 'பொற்றையுற்றெடுத் தான்' (தேவாரம்.). பொற்ற மாடங்கள் என்ற பாடங்கொண்டு, பொன்னுலமைந்த மாடங்கள் என்றும் கூறுவர். நொடி - கைந்நொடிப் பொழுது. கோடி - மிகப் பெரிய தொகையைக் குறித்தது.

(பி-ம்.) 1. உணர்வினு லுணர்ந்து.
2. குணமுள னிவனெனக் கொண்டான்.
3. ஒருசிறை சென்ருன்.
4. பொற்ற மாடங்கள். (137)

## அநுமன் இந்திரசித்தை அணுகல் 233-237

233. முந்த ரம்பையர் முதலினர் முழுமதி முகத்துச்
சிந்து ரம்பயில் வாய்ச்சியர் பலரையுந் தெரிந்து
மந்தி ரம்பல கடந்துதன் மனத்தின்முன் செல்வான்
இந்தி ரன்சிறை யிருந்தவா யிலின்கடை யெதிர்ந்தான்.

(அம்மாளிகளில்), முந்து - முதன்மை வாய்ந்த, முழுமதி முகத்து சிந்துரம் பயில் வாய்ச்சியர் அரம்பையர் முதலினர் பலரையும் தெரிந்து - பூரண சந்திரனெத்த முகங்களிலே சிவப்பு நிறம் ஊட்டப்பெற்ற வாய்களையுடைய அரம்பை முதலிய மகளிர் பலரையும் பார்த்துவிட்டு, பல மந்திரம் கடந்து-(பின்னும்) பல வீடுகளையும் தாண்டி, தன் மனத்தின் முன்செல்வான்-தன் மனவேகத்தினும் கடிய வேகத்தில் சென்று கொண்டிருந்த அநுமன், இந்திரன் இருந்த சிறை வாயிலின் கடை-முன் இந்திர சித்தினுல் பிடிக்கப்பட்டு, இந்திரன் இருந்த சிறைவாயிலின் இடத்தை, எதிர்ந்தான் - எதிரே கண்டான்.

இஃது இந்திரசித்தின் மனே. சிந்துரம் பயில்தல் - சிவப்பு நிறம் ஊட்டுதல்; வாய்க்குச் சிவப்பூட்டும் பொருள்களில் அலத்தகம் ஒன்று கும்; சீவக. 2446. மந்திரம் - அகங்கள்.

(பி-ம்.) 2. வாய்ச்சியர் யாரையும்.
3. கடந்தவன் மனத்தின். (138)

234. ஏதி யேந்திய தடக்கையர் பிறையெயி றிலங்க
மூது ரைப்பெருங் கதைகளும் பிதிர்களு மொழிவார்
ஓதி லாயிர மாயிர முறுவலி யரக்கர்
காது வெஞ்சினக் களியினர் காவலைக் கடந்தான்.

(அங்கு), ஓதில் - சொல்லப்போனல், ஏதி ஏந்திய தடக்கையர் - ஆயுதங்களை ஏந்திய அகன்ற கைகளைக் கொண்டவரும், காது வெஞ்சின களியினர் - பகைவரைக் கொல்லவல்ல சினமாகிய கள்ளை அருந்திய வரும், பிறை எயிறு இலங்க - தம் பிறைகளை ஒத்த பற்கள் தெரியும் படி, மூதுரை பெரு கதைகளும் - பழைமையாகச் சொல்லப்பட்டு வரும் பெரிய கதைகளையும், பிதிர்களும் - விடுகதைகளையும், மொழிவார் தமக்குள் பேசிக் கொண்டிருப்பவருமான, ஆயிரம் ஆயிரம் உறுவலி அரக்கர் - பல ஆயிரம் மிக்க வலிமை பெற்ற, அரக்கர்கள் அமைந்த, காவலை - காவலிடத்தை, கடந்தான் - (அநுமன்) தாண்டி உள்ளே சென்றுன்.

உறுவலி - பெருவலி; 'உறுமீன்வருமளவும்' (மூதுரை. 16) என்பது போல. மூதுரை - பழமொழிகளும் ஆம். 'பிதிர்கள், வழக்கு அழிப் பாங்கதைகள்; இவற்றை உறக்கம் வராதபடி உரைப்பர்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 3. உணர்விலி யரக்கர்; முரண்வலி யரக்கர்.
4. காதும் வெஞ்சினக் களிற்றினர். (139)

235. முக்க ணேக்கினன் முறைமக னறுவகை முகமும்
திக்கு நோக்கிய புயங்களுஞ் சிலகரந் தனையான்
ஒக்க நோக்கியர் குழாத்திடை யுறங்குகின் ருனைப்
புக்கு நோக்கினன் புகைபுகா வாயினும் புகுவான்.

புகை புகா வாயினும் புகுவான் - புகையும் நுழைய இயலாத இடங் களிலும் நுழைய வல்லவனுன அநுமன், புக்கு - (இந்திரசித்தின் பள்ளி யறையினுட்) புகுந்து, முக்கண் நோக்கினன் முறை மகன் - மூன்று கண்களின் பார்வையை உடைய சிவபிரானின் மகன் முறை பெற்ற கும ரக்கடவுள், அறு வகை முகமும், திக்கு நோக்கிய புயங்களும் சில கரந்

தனையான் - தன் ஆறு முகங்களுள்ளும், திக்குக்களை நோக்கி வளர்ந்த பன்னிரு கைகளுள்ளும் சிலவற்றைஒளித்துக் கொண்டு (ஒருமுகமும்இரு கைகளுமே காட்டித் தன்னைத் தோற்றுவித்த தன்மையை) ஒத்தவனாய், ஒக்க நோக்கியர் குழாத்திடை உறங்குகின்றானை - (ஒருவர் போலவே அனைவரும்) ஒரேபடியாகத் (தன்னையே) நோக்கிக் கொண்டிருப்பவரான மகளிரின் கூட்டத்தினிடையில் தூங்குபவனான (இந்திரசித்தை), நோக்கினன் - பார்த்தான்.

புகைபுகா வாயினும் புகுவான்; 'காலெனப் புகையெனக் கலக்கும்' (229). புகை, மிக நுண்ணிய இடங்களிலும் புக வல்லது; 'புகுமே புகையும், புகற்கரிய பூழை நுழைந்து' (*நாலடி.* 282). முருகன் - அழகன். 'முருகனற்போற்' (அகநா. 1; 2) என்றதில் முருகன் என்ற சொற்கு மகாவீரன் என்று பொருள் கொள்வர். 'சில கரந்தனையான்' என்றது, வீடணனைக் கூறும் போது, 'ஒளித்து வாழ்கின்ற தருமமன்னான்' (231) என்றது போல. இந்திரசித்தினை, 'முக்கண் நோக்கினன் மகன்' என்றது, அவனது வீரத்தையும் எழிலையும் குறித்து நின்றது. 'ஒக்க நோக்கியர் - அவயவ முழுதும் அழகிய பெண்கள்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. முதன்மக னறுவகை முகனும். (140)

236. வளையும் வாளெயிற் றரக்கனோ கணிச்சியான் மகனோ
அளையில் வாளரி யனையவன் யாவனோ வறியேன்
இளைய வீரனு மேந்தலு மிருவரும் பலநாள்
உளையும் வெஞ்சம மிவனுட னுளதென வுணர்ந்தான்.

'அளையில் வாள் அரி அனையவன் - மலைக் குகையில் கிடக்கும் கொடிய சிங்கம் போன்றவனான இவன், வளையும் வாள் எயிற்று அரக்கனோ - வளைந்த ஒளியுள்ள பற்களையுடைய ஓர் அரக்கனோ? கணிச்சியான் மகனோ-மழு என்னும் படையையுடைய சிவபெருமானின் மகனான முருகனோ? யாவனோ - வேறு யாவனோ? அறியேன் - அறிந்துகொள்ள இயலவில்லை; (எவனேயாயினும்), இளைய வீரனும் ஏந்தலும் இருவரும் - இலக்குவனும் இராமபிரானும் ஆகிய இருவரும், பலநாள் இவனுடன் உளையும் வெம் சமம் உளது - அநேக நாட்கள் இவனுடன் செய்ய வேண்டிய கொடிய போர் (முன்னே) நிற்கிறது'; என உணர்ந்தான் - என்று அநுமன் உணர்ந்து கொண்டான்.

வாள் எயிறு - வாள் போன்று கூர்மை உடைய எயிறு எனலும் ஆம். கணிச்சி - மழு; கோடாலி. உளையும் - வருத்தும். சமம் ; ஸமரம் என்ற வட சொற்றிரிபு : இது சமர் எனவும் வழங்கும்.

(பி-ம்.) 2. வாளரி மாயனே யாரென வறியேன்.
3. வீரனு மேந்தலு மிவனெடு நெடுநாள்.
4. உளைய வுள்ளபோ ருளதென வுள்ளத்தி னுணர்ந்தான்; உளையு முள்ளம்போர் விளைத்தனூான் றுணர்த்துமென் றுணர்ந்தான்.
(141)

237. இவனை யின்றுணை யுடையபோ ரிராவண னென்னே
புவன மூன்றையும் வென்றதோர் பொருளெனப் புகறல்
சிவனை நான்முகத் தொருவனைத் திருநெடு மாலாம்
அவனை யல்லவர் நிகர்ப்பவ ரென்பது மறிவோ.

(மேலும் அநுமன்), 'சிவனை, நான் முகத்து ஒருவனை, திருநெடு மாலாம் அவனை அல்லவர் - சிவபிரான், நான்முகக்கடவுளான பிரமன், திருநெடுமால் ஆகிய முப்பெரும் தேவர்களே அல்லாத பிறர், நிகர்ப் பவர் என்பதும் - போரில் இவனுக்குச் சமானமானவர் என்று கூறு வதும், அறிவோ - அறிவுடைமையாகுமோ? (ஆகாது; உண்மை இப்படி யிருக்க), இவனை - இத்தகைய வீரனை, இன் துணை உடைய போர் இராவணன் - இனிய உதவியாளனுகைப் பெற்ற போரில் விருப்பமுள்ள இராவணன், புவனம் மூன்றையும் வென்றது ஓர் பொருள் என புகறல் என்னே - இம் மூன்று உலகங்களையும் வெற்றி கொண்டது குறிக்கத் தக்கது என்று கூறுவதில் பெருமை யாது?

'இந்தக் கவிப் பொருள் - இந்திரசித்தைத் துணைவனுகைப் படைத்த இராவணன் மூன்று லோகமும் வென்றது அருமையன்று. மும்மூர்த்தி யிலே ஒருவரை ஒப்பாக்க வேணும் இந்திரசித்துக்கு' என்பது **பழைய உரை.** முன் செய்யுளில் வாளெயிற்றரக்கனே என்று இந்திரசித்தைக் கண்டு ஐயங்கொண்ட அநுமன் அவ்வையம் நீங்கிய நிலையை அடைந் தான் என்க.

(பி-ம்.) 1. உடையனு மிராவணற் கென்னே.
2. பொருளெனப் புகலேன்; புகலேம்,
4. அல்லது நிகர்பிறர்; அல்லது நிகர்நிற்ப ரென்பது மறியோம்.
(142)

## அநுமன் பிற இடங்களிலும் தேடுதல் 238-239

238. என்று கைம்மறித் திடைநின்று காலத்தை யிகப்ப
நன்று போவதென் றுயிர மாயிரத் தடங்காத்
துன்று மாளிகை யோளிக டுரிசறத் துருவிச்
சென்று தேடின னிந்திர சித்தினைத் தீர்ந்தான்,

(அநுமன்), என்று கை மறித்து - முன்கூறிய சொற்களைச் சொல்லி (நிகர் இல்லை: பொருள் என்னே என்று கூறியதற்கு ஒப்பக்) கையை மறித்து வீசி, 'இடை நின்று காலத்தை இகப்பது அன்று, போவது என்று '(இவ்வாறு இப்பொழுது நாட வேண்டாத) இடங்களில் நின்று காலத்தைக் கழிப்பது செய்யத்தக்கது அன்று; போவதே செய்யத் தக்கது' என்றெண்ணி, இந்திரசித்தினை தீர்ந்தான் - இந்திரசித்தை விட்டு நீங்கி, ஆயிரம் ஆயிரத்து அடங்கா - ஆயிரம் ஆயிரம் என்ற கணக்கில டங்கா, துன்று - நெருங்கிய, மாளிகை ஒளிகள் - மாளிகை வரிசைகளை, துரிசு அற துருவி சென்று தேடினன் - பழுதில்லாமல் துருவி ஆராய்ந்து கொண்டே (பலவிடங்களுக்கும்) சென்று (பிராட்டியைத்) தேட லாயினன்.

இந்தக் கவி விற்பூட்டு. கைமறித்தல்: உடன்படாமைக்கு அறி குறி: 93; அயோத்யா. நகர் நீங்கு. 136; சீவக. 1227. இகத்தல் - கடத்தல்.

(பி-ம்:) 1. காலத்தை யிழப்ப.
2. அன்று போவதென்று.
3. மாளிகை துரிசறத் துருவினன் றொடர்ந்து. (143)

*239. அக்கன் மாளிகை கடந்துபோய் மேலதி காயன்*
*தொக்க கோயிலுந் தம்பிய ரில்லமுந் துருவித்*
*தக்க மந்திரத் தலைவர்கண் மனைகளுந் தடவிப்*
*புக்கு நீங்கின னிராகவன் சரமெனப் புகழோன்.*

புகழோன் - புகழ் வாய்ந்த அநுமன், அக்கன் மாளிகை கடந்து மேல் போய் - அக்க குமாரனின் மாளிகையைக் கடந்து அப்பாற் சென்று, அதிகாயன் தொக்க கோயிலும்-அதிகாயன் வசித்த அரண்மனை யிலும், தம்பியர் இல்லமும் - தம்பியர் வாழ்ந்த மனைகளிலும், துருவி - ஆராய்ந்து தேடி, தக்க மந்திரத் தலைவர்கள் மனைகளும் - தகுதி வாய்ந்த அமைச்சர் தலைவர்களின் வீடுகளிலும், இராகவன் சரமெனபுக்கு, தடவி- இராமபிரானின் அம்பைப் போலப் புகுந்து ஆராய்ந்து, நீங்கினன் - அப்பாற் சென்றான்.

அக்கன், இந்திரசித்தின் தம்பி: இராவணனுக்கு மண்டோதரியிடம் தோன்றினவன். அதிகாயன் - இராவணனுக்குத் தான்யமாலினி என்ற மனைவியிடம் பிறந்தவன். தம்பியர் இராவணனுக்குப் பிறமனைவியரிடம் தோன்றியவ ராகலாம். இராகவன் சரமெனப் புகுதல்: 155; கிட்கிந்தா. கிட்கிந்தைப், 12; உயுத்த, அங்கதன் தூது; 13.

(பி-ம்.) 2. கோயிலும் பொருநர்க ளில்லமுந் துருவித்.
3. மனைகளுந் தாவி.
4. இராகவன் கழலெனப் புகழோன். (144)

## அநுமன் இடைநகர் அகழியைக் கடத்தல் 240 - 50

240. *இன்ன ராமிரும் பெரும்படைத் தலைவர்க ளிருக்கைப்*
*பொன்னின் மாளிகை யாயிர கோடியும் புக்கான்*
*கன்னி மாமதிற் புறத்தவன் கரந்துறை காண்பான்*
*சொன்ன மூன்றினு ணடுவண தகழியைத் தொடர்ந்தான்.*

இன்னர் ஆம் - இத் தன்மையராகிய, இரும் பெரும் படைத் தலைவர்கள் இருக்கை ஆயிர கோடி பொன்னின் மாளிகையும் புக்கான்-மிகப் பெரும் சேனைத் தலைவர்களின் வாழ்விடங்களான பொன்னாலான ஆயிர கோடி மாளிகைகளினுள்ளும் புகுந்து (நீங்கி), கன்னி மாமதில் புறத்து - அழியாத பெரிய மதிலினுள்ளே, அவன் - அவ்விராவணன், கரந்து உறை காண்பான் - ஒளித்து வாழும் இடத்தைக் காணும் பொருட்டு. சொன்ன மூன்றினுள் - கூறப்பெற்ற மூன்று அரண்களுள், நடுவணது - மற்ற இரண்டுக்கும் இடையில் உள்ளதான, அகழியை - அகழியை, தொடர்ந்தான் - சார்ந்தான்.

அவன் கரந்துறை காண்பான் என்று கொண்டு, அநுமன் அவ்வூர்ச் சுருங்கையைக் கண்டான் என்றும் பொருள் கொள்ளலாம். சொன்ன மூன்றினுள் நடுவண தகழி என்பதற்கு, இலங்கை நகர்க்கு உண்டெனச் சொல்லப்பட்ட மூன்று அகழிகளுள் நடுவில் உள்ளதான அகழி என்பது பொருள். முதல் அகழி, கடல் (157); இரண்டாவதும் இங்குக் கூறப்படுவதுமானதும் நடுவணது; மூன்றாவது அகழி, 261 ஆம் செய்யுளில் கூறப்படுவதான இராவணன் அரண்மனையைச் சூழ்ந்த அகழி. இவற்றால் இலங்கா நகரம் முப்பகுதிகளைப் பெற்றிருந்தமை புலப்படும். அன்றியும், அகழி என்பதற்கு ஒருவகை அரண் என்றும் பொருள் கொள்வர்; அரண்கள் நான்கென்பர்; *குறள்: 742;* ஒன்பதென்பாரு முளர்; *அபிதானசிந்தாமணி*. ஆனால், நூல்களில், காட்டரண், அகழி, மதில் என்ற மூன்றே அதிகமாகக் கூறப்படுகின்றன; *சிலப். 15: 207-217; பால.* நகரப். 8-21; பகுதிகளைக் காண்க. இவற்றுள் இது நடுவணது.

(பி-ம்.) 1. இன்ன ராகிய விரும்படைத் தலைவர்க ளிருக்கை.
3. கன்னி மாநகர்ப் புறத்தவன். (145)

241. *தனிக்க டக்களி றெனவொரு துணையிலான் றூய*
*பனிக்க டற்பெருங் கடவுடன் பரிபவந் துடைப்பான்*
*இனிக்க டப்பதன் றேழ்கடல் கிடந்ததென் றிசைத்தான்*
*குனிக்க டற்கதிர் தொடர்ந்தவ னகழியைக் கண்டான்.*

கனிக்கு - (கதிரவனைக் கனி என்று கருதி) அக்கனியைப் பறிப்பதற்காக, அடல் கதிர் - வெங்கதிர்களை உடைய சூரியனின் மீது, தொடர்ந்தவன் - எழுந்து பாய்ந்தவனான அநுமன், தனி கடம் களிறு என ஒரு துணையிலான் - ஒப்பற்ற மதயானையைப் போலப் பிற துணை வேண்டாமல் (தானே தனியே), தாய - (தன்னைத்) தாவியதால், பனிக் கடல் பெருங் கடவுள் - குளிர்ச்சி பொருந்திய கடலின் பெரிய கடவுளான வருணன், தன் பரிபவம் துடைப்பான் - தனக்கு உண்டான இகழ்ச்சியைத் தீர்க்கும் பொருட்டு, இனி கடப்பதன்று ஏழ் கடல் கிடந்தது என்று இசைத்தான் - இனி தாண்டுதல் இயலாது; ஏழு கடல்களாகப் பெருகிக் கிடக்கின்றது; என்று மனத்திற் சொல்லிக் கொண்டு, அகழியைக் கண்டான். (அங்குக் கிடந்த அகன்ற) அகழியைத் தான் எதிரிலே கண்டான்.

அநுமன் கதிர் தொடர்ந்தமை; உத்தர. அநுமப். 11-12. துணையிலான் - அசகாய சூரன். கடற்கடவுள்-வருணன். 'இந்தக் கவிப்பொருள் அநுமார் ஒரு கடலைக் கடந்ததனாலே அந்தக் கடலினிறைவன், தன்பழி ஒழிக்க, ஏழு கடலும் கூட்டி வந்து கிடந்தது போன்ற அகழியைக் கனிக்காக ஆதித்தனைத் தொடர்ந்தவன் கண்டான்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. துணையிலான் ருனும்.
3. இனிக்க டப்பரி தேழ்கடல்.கிடந்ததென் றிசையும். (146)

242. *பாழி நன்னெடுங் கிடங்கென வுணர்வெனேல் பல்பேர்*
*ஊழி காலநின் றுலகெலாங் கல்லினு முலவா*
*ஆழி வெஞ்சினத் தரக்கனை யஞ்சியாழ் கடல்கள்*
*ஏழு மிந்நகர்ச் சூலாயகொ லாமென நினைந்தான்.*

(அவ்வகழியைக் கண்டு அநுமன்), 'பாழி - பெரிய, நல் நெடும் கிடங்கு என-சிறந்த நீண்ட அகழியென்று, உணர்வெனேல்-எண்ணுவேனானால் (அஃதன்று); பல் பேர் நின்று ஊழி காலம் உலகெலாம் கல்லினும் - பல பேர் நின்று, ஊழி என்னும் நீண்ட கால எல்லையாக உலகம் முழுமையும் பெயர்த்தாலும், உலவா - இவ்வாறு செய்து அமைக்க முடியா: ஆழ் கடல்கள் ஏழும் - ஆழமாயுள்ள ஏழு சமுத்திரங்களும், ஆழி வெம் சினத்து அரக்கனை அஞ்சி - ஆஞ்ஞா சக்கரத்தைத் தரித்த கொடிய சினத்தையுடைய இராவணனுக்கு அஞ்சி, இ நகர் சூலாய

கொல் ஆம் - இந்நகரத்தைச் சூழ்ந்து கொண்டன, போலாம்; என நினைந்தான் - என்று எண்ணினன்.

இவ்வகழியின் பெருமை தோண்டும் மனிதர்கள் தொகையாலும், காலத்தாலும், இடப்பரப்பாலும் அளவு கடந்து நிற்பினும், அவ்வாறு தோண்ட முடியாத அளவு உள்ளது; ஆகவே ஏழு கடல்களே, இராவணன் ஆணைப்படி, இவ்வாறு அகழியாகக் கிடந்தன என்றெண்ணினன் என்க; முன் 60, 000 சகரர் தோண்டியது ஒரு கடல் என்றதை உட்கொண்டு இவ்வாறு கருதினன். ஆழிவெஞ்சினம் - கடல்போல் பொங்கும் சினம் என்றும் கூறுவர்.

(பி-ம்.) 1. கிடங்கெனப் பகர்வரேற் பல்பேர்.
2. கல்லினு முடியா.
4. கொலாமென விசைத்தான். (147)

243. ஆய தாகிய வகன்புன லகழியை யடைந்தான்
தாய வேலையி னிருமடி விசைகொண்டு தாவிப்
போய காலத்தும் போக்கரி தாமென்று புகன்றான்
நாய கன்புகழ் நடாயபே ருலகெலா நடந்தான்.

நாயகன் புகழ் நடாய பேருலகெலாம் நடந்தான் - இராமபிரானின் புகழ் பரவிய உலகங்களிலெல்லாம் தானும் வியாபித்தவனன் அநுமன், ஆயது ஆகிய-(முன் கூறியபடி) ஏழு கடல்களாக விரிந்தது ஆகிய, அகன் புனல் அகழியை அடைந்தான்-அகன்று நீர் நிறைந்த அகழியை நெருங்கி, தாய வேலையின் - முன் தாவிய கடலிடம் (கொண்ட விசையை விட), இரு மடி விசை கொண்டு-இரு மடங்கு விசை கொண்டு, தாவி போய காலத்தும் - தாவிச் சென்றும், போக்கு அரிது ஆம் என்று புகன்றான் - இதனைத் தாண்டிப் போதல் அரிது என்றான்.

நாயகன்; தன் நாயகன் என்றும், இக்காப்பிய நாயகனென்றும் கூறலாம். நாயகன் புகழ்; 228.

(பி-ம்.) 2. விசைகொடு தாவி.
3. போக்கரி தென்பது புகன்றான்.
4. புகழ் நடந்தபே ருலகெலா. (148)

244. மேக்கு நால்வகை மேகமுங் கீழ்விழத்
தூக்கி னுலன்ன தோயத்த தாய்த்துயர்
ஆக்கி னன்படை யன்ன வகழியை
வாக்கி னுலுரை வைக்கவு மாகுமோ.

மேக்கு நால்வகை மேகமும் - மேலே உள்ள, நான்கு வகைகளாக வுள்ள மேகங்களும், கீழ் விழ - (வான நிலையினின்று) தரையில் விழவும், தூக்கினால் அன்ன - (அம்மேகங்களைச்)சுமந்தாற் போன்ற, தோயத்ததாய் - நீர்ப் (பெருக்கை) கொண்டதாயுள்ளதும், துயர் ஆக்கினான் - உலகங் களுக் கெல்லாம் துயரை உண்டாக்கினவனான இராவணனின், படை அன்ன-சேனைகள் போன்றதுமான, அகழியை-அகழியின் பெருமையை, வாக்கினால் - சொற்களினால், உரை வைக்கவும் ஆகுமோ - சொல்லவும் முடியுமோ? (முடியாது என்றபடி,)

நால்வகைமேகம்: 'அம்புத நால்களா னீடுங் கூடல்' (திருஞான. தேவாரம்); 'புட்கலா வருத்தமுன்னா, வென்றிகொ ணான்கு மேக வேந்தரை வரவழைத்தான்' (திருவால. திருவிளையாடற், நான்மாடக்: 4); 'வென்றிப் புட்கலா வருத்தமுதற் புயல்க ணான்கை (கடம்பவனப். இலீலாசங். 12); மேகங்கள், ஸம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த் தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என ஏழென்பாரு முளர். 'மேக்கு நால்வகை மேகம், - உயர்ந்த நானா நிறத்தையுடைய மேகம் ஏழும்' என்பது பழைய உரை, இராவணன் என்னும் பெய ருக்குக்' 'கூச்சலிடச் செய்பவன் என்பது பொருள்:' ஆகவே, அவனைத் துயர் ஆக்கினான் என்றார். அகழிக்குப் படை; *பால.* நகரப், 19.

ஒரு சுவடியில் இச்செய்யுள் பின்வருமாறு மாறிக் காண்கிறது.

மேக்கு லாவிய மேகமெ லாம்படிந்
தூக்கி யுண்டெழுந் தோயத்தி னேங்கிட
வாக்கி னன்கடல் போலிவ் வகழியை
வாக்கி னாலுரை வைக்கலு மாகுமோ.

**(பி-ம்)** **1. மேக்கு லாவிய மேகமும்.**
**2. தாக்கி னாலன்ன.**
**4. வாக்கி னாற்சொலு வாய்மையர் யாவரே.** **(149)**

**245.** ***ஆனை மும்மத மும்பரி யாழியும்***
***மான மங்கையர் குங்கும வாரியும்***
***நான மாதர் நறைகுழ லாவியும்***
***தேனு மாரமுந் தேய்வையு நாறுமே.***

(அவ்வகழியில்), ஆனை மும்மதமும் - யானைகளின் மூன்றுவித மதப் பெருக்கங்களும், பரி ஆழியும் - குதிரைகளின் வாய் நுரைகளும்; மான - பெருமையுள்ள, மங்கையர் குங்கும வாரியும் - மகளிர் பூசிக் குளித்த குங்கும நீரின் பெருக்கமும், நானம் மாதர் - நீராடும் மகளிர், குழல்

நறை நாவியும் - கூந்தலிற் பூசியிருந்த மணமிக்க கத்தூரியும், தேனும் - மலர்களிலுள்ள தேனும், ஆரமும் - மாலைகளும், தேய்வையும் - மற்றுமுள்ள, கலவைப் பூச்சுக்களும், நாறும் - கமழும். ஏ : அசை.

யானையின் மும்மதங்கள், கரமதம், கபோலமதம், பீஜமதம் என்பன. நானம்: ஸ்நானம் என்ற வட சொல்லின் சிதைவு. ஆழி - விலாழி என்பதன் முதற்குறை. தேய்வை - துவர், விரை, ஓமாலிகை முதலியன. கடல் பிறபொருள்களால் மணம் பெறுதல்; 112.

(பி-ம்.) 1. ஆனை மும்மத மும்பொழி யாழியும்.
2. வான மங்கையர்: குங்கும வாசமும்.
3. நான மார்ந்த நறைக்குழ லாவியும்.
4. நாறுமால். (150)

246. உன்ன நாரை மகன்றில் புதாவுளில்
அன்னம் கோழிவண் டானங்க ளாழிப்புள்
கின்ன ரங்குரண் டங்கிலுக் கஞ்சிரல்
சென்னங் காகங் குணலம் சிலம்புமே.

(இன்னும், அவ்வகழியில்), உன்னம் ....................குணலம் - உன்னம், நாரை, மகன்றில், புதா, உளில், அன்னம், கோழி, வண்டானம், சக்கரவாகம், கின்னரம், குரண்டம், கிலுக்கம், சிரல், சென்னம், காகம், குணலம் ஆகிய நீர்வாழ்ப் பறவைகள், சிலம்பும் - ஒலித்துக் கொண்டிருக்கும். ஏ : அசை.

உன்னம் - அன்னப் பறவைகளுள் ஒன்று. நாரை, பெருநாரை, மரக்காறுரை என்று பலவகைப்படும். மகன்றில் - இணை பிரியா நீர்வாழ் பறவை. புதா, போதா என்பதன் விகாரம்; நாரை வகைகளுள் ஒன்று. உளில் - உள்ளான்; இஃது உள்ளு என்றும் பெயர் பெறும். கோழி, இங்கு நீர்க்கோழி. வண்டானம் - பெருநாரை. கின்னரம் - ஒருவகையான பாடும் பறவை. குரண்டம் - நீர்க்காகம்; கொக்கு என்பாரும் உளர். கிலுக்கம், சென்னம், குணலம் என்பன, நீர்ப்பறவை வகைகள். சிரல் - மீன்கொத்தி. இவ்வாறே நீர்வாழ் பறவைகளின் பெயர்கள் சிலப். 10: 114-9 இலும், பெருங். 1.51: 68-71 இலும் கூறப்பட்டிருப்பன காண்க.

(பி-ம்.) 1. உன்னு நாரை. (151)

247. நலத்த மாதர் நறையகி லாவியும்
அலத்த கக்குழம் புஞ்செறிந் தாடின
இலக்க ணக்கரி யோடிள மென்னடைக்
குலப்பி டிக்குமொ ரூடல் கொடுக்குமால்.

நலத்த மாதர் நறை அகில் ஆவியும் - அழகிய மகளிர் (கூந்தலுக்கு ஊட்டும்) மணமிக்க அகில்புகையும், அலத்தகக் குழம்பும் - (அவர்கள் காலிற் பூசிய) செம்பஞ்சுக் குழம்பும், செறிந்து ஆடின இலக்கணக் கரியோடு - மிகுதியாய்த் (தன் உடம்பில் பூசிக் கொள்ளும்படி அவ்வகழி நீரில்) குளித்து வந்த உத்தம இலக்கணங்களமைந்த ஆண்யானைகளோடு, இள மென்னடை குல பிடிக்கும் - இளமையான, மெதுவான நடையையுடைய உத்தம ஜாதிப் பிடிகளுக்கும், ஓர் ஊடல் கொடுக்கும் - ஓர் ஊடலை விளைவிக்கும். ஆல், அசை.

அகழியிற் குளித்து வந்த ஆண்யானையின் மீது அகில் மணமும் அலத்தகச் சேறும் காணப்படுவதைக் கண்டு, அது வேறொரு பிடியோடு கூடி வந்ததென்றெண்ணி, அதன் பிடி ஊடலுறும் என்க. பிடிக்கும் என்ற உம்மையால் அவ்வூர் மகளிர்க்கு ஊடலுண்டாவது உறுதியெனக் கூறப்பட்டது.

(பி-ம்.) 1. நகிலகி ளாவியும்; நறையகி ளாவியும்.
3. இலக்கணக்களி றேடின. (152)

248. *நறவு நாறிய நாணறுந் தாமரை*
*துறைக டோறு முகிழ்த்தன தோன்றுமால்*
*(சிறையி னெய்திய செல்வி முகத்தினோ*
*டுறவு தாமுடை யாரொடுங் கார்களோ.)*

நறவு நாறிய - தேன் மணம் வீசிய, நாள் நறும் தாமரை - அன்று பூத்த மணமிக்க தாமரை, துறைகள் தோறும் - அவ்வகழியின் துறைகளிலெல்லாம், முகிழ்த்தன தோன்றும் - கூம்பித் தோன்றும்; சிறையின் எய்திய செல்வி-சிறை புக்கவளாகிய பிராட்டியின், முகத்தினோடு உறவு உடையார் - முகத்தோடு ஒக்கும் சம்பந்தம் பெற்றவர், தாம் ஒடுங்கார்களோ - தாமும் ஒடுங்கிவிடமாட்டார்களோ ? ஆல்: அசை.

தாமரை இரவில் குவிந்து காண்பதற்குக் காரணம் கற்பிக்கப்பட்டது. பிராட்டியின் முகத்துக்குத் தாமரை உவமை: இவ்வொப்புமை கருதி அவை ஓரினமாய் உறவு கொண்டு வருந்தினவாகக் கூறப்பட்டன. சிறையினெய்திய செல்வி - பிராட்டி.

(பி-ம்:) 1. நாணுறுந் தாமரை.
2. முகிழ்த்திடை தோன்றுவ. (153)

249. *பளிங்கு செற்றிக் குயிற்றிய பாயொளி*
*விளிம்பும் வெள்ளமு மெய்தெரி யாதுமால்*
*தெளிந்த சிந்தைய ருஞ்சிறி யார்களோ*
*டளிந்த போதறி தற்கெளி தாவரோ.*

பளிங்கு செற்றி குயிற்றிய-பளிங்குக் கற்களைச் செதுக்கி இழைத்த, பாய் ஒளி விளிம்பும் - (படித்துறைகளின்) பரந்த ஒளி கொண்ட (படியின்) ஓரமும், வெள்ளமும் - (அதனை அடுத்த) நீரும், மெய் தெரியாது - (பளிங்கோ நீரோ என்ற ஐயந் தீர்ந்து) உண்மை வெளிப்படாது நிற்கும்; மால் தெளிந்த சிந்தையரும் - மயக்கம் நீங்கித் தெளிந்த ஞானம் கைவரப் பெற்ற மனத்தையுடையவர்களும், சிறியார்களோடு - (அம் மயக்கத்தோடு வாழும்) சிறியவர்களோடு, அளிந்த போது - கூடிய போது, அறிதற்கு - அவ்விருவரையும் வேறு படுத்திக் காண்பதற்கு, எளிது ஆவரோ - எளிமையில் இடம் கொடுப்பவராவார்களோ? (ஆகார் என்றபடி.)

முதலிரண்டடிகளிற் கண்ட கருத்து முன். பால. நகரப். 20. ஆம் செய்யுளிலும் காண்கிறது. பளிங்கு, தெளிந்த சிந்தையருக்கும், உள்ளே பாசி முதலியன கொண்ட நீர் சிறியோருக்கும் ஒப்பு.

(பி.-ம்.) 1. பாலொளி.
2. தெரி யாமை நூல்; தெரி யாதுமேல். (154)

250. *நீல மேமுத லன்மணி நித்திலம்*
*மேல கீழயல் மாறொளி வீசலால்*
*பாலின் வேலை முதற்பல வேலையும்*
*கால்க லந்தன வேயெனக் காட்டுமால்.*

நீலமே முதல் நன்மணி - நீலம் முதலான நல்ல இரத்தினங்களும், நித்திலம் - முத்துக்களும், மேல கீழ் அயல் மாறு ஒளி வீசலால் - மேலேயும் கீழேயும் பக்கங்களிலும் மாற்றொளிகளை வீசுதலால், பாலின் வேலை முதல் - பாற்கடல் முதலான, பல வேலையும் - பல கடல்களும், கால் - ஊழிக் காற்றினால், கலந்தனவே என - கலந்துவிட்டன என்று, காட்டும் - தோற்றுவிக்கும். ஆல், அசை.

நன்மணிகள்: வயிரம், மரகதம், மாணிக்கம், புருடராகம், வயிடூரியம் நீலமணி, கோமேதகம் என்பன. கடல்கள்: உப்பு, கரும்பு, கள், நெய், தயிர், பால். சுத்தநீர் என்றவை. கால்கலத்தல் - கிளைகளாகிக் கலத்தல் என்றும் கூறுவர். கடல் கால் கலத்தல்; ஆரண்ய. கரன்வதைப். 25.

(பி.-ம்.) 2. மேல கீழபல் வேறொளி: மேலுங் கீழபல் வீறொளி.
4. கால்க லந்தன வோவெனக் காட்டுமே; கால்கி ளர்ந்தன வேயெனக் காட்டுமே. (155)

## அநுமன் இடைநகருட் புகுந்து தேடல் 251-52

251. *அன்ன வேலை யகழியை யார்கலி*
*என்ன வேகடந் திஞ்சியும் பிற்படத்*
*துன்ன ருங்கடி மாநகர் துன்னினான்*
*பின்ன ரெய்திய தன்மையும் பேசுவாம்.*

அன்ன - அப்படிப்பட்ட, வேலை அகழியை - கடலை ஒத்த அகழியை, ஆர்கலி என்னவே - ஒரு பெருங்கடலைத் தாண்டுவது போலவே, கடந்து - தாண்டி, இஞ்சியும் பிற்பட - மதிலும் தன் பின்னாக, துன்னரும் கடி மாநகர் துன்னினான் - நெருங்குதற்கரிய காவலையுடைய பெரிய இடை நகரினுள் (அநுமன்) புகுந்தான்; பின்னர் - அதன்பிறகு, எய்திய தன்மையும் - உண்டான செய்தியையும், பேசுவாம் - சொல்லுவோம்.

அன்னவேலை - அப்பொழுது, என்றும் பொருள் கொள்ளலாம். அநுமன் முன் தாண்டிய கடலின் தன்மைகளை முன் படலத்தில் (95) செய்யுட்களில் கூறி, இப் படலத்தில் இலங்கை நகரினுள் அவன் தாண்டிய அகழியின் பெருமைகளை 11 செய்யுட்களில் இங்குக் கூறினார். இடை நகரைப் பற்றிய இச்செய்தி முதனூலில் காணப்படவில்லை.

(பி-ம்.) 3. துன்னு மாகடி மாநகர்; துன்னு யர்கடி மாநகர். (156)

252. *கரிய நாழிகை பாதியில் காலனும்*
*வெருவி யோடு மரக்கர்தம் வெம்பதி*
*ஒருவ னேயொரு பன்னிரண் டியோசனைத்*
*தெருவு மும்மை நூ றுயிரந் தேடினான்.*

காலனும் வெருவி ஓடும் அரக்கர் தம் வெம்பதி - யமனும் அஞ்சி ஓடத்தக்க அரக்கர்களின் கொடிய அந்நகரினுள், கரிய நாழிகை பாதியில் - இருண்ட இரவின் இடைக்காலமான நடுநிசியில், ஒரு பன்னிரண்டு யோசனை - பன்னிரண்டு யோசனைப் பரப்புள்ள, மும்மை நூறுயிரம் தெருவும் - மூன்று லக்ஷங்களான தெருக்களிலும், ஒருவனே - தான் ஒருவனாகவே (அநுமன்), தேடினான் - பிராட்டி இருக்கும் இடத்தை நாடித் தேடினான்,

(அநுமன்) புறநகரைத் தேடியது அஸ்தமனம் முதல் நள்ளிரவு வரை என்பது இச்செய்யுளால் பெறப்படும். இந்நகர்ப்பகுதியில் அரசர்கள் வைகினர் என்பது 261 ஆம் செய்யுளால் தெரிகின்றது. கரிய நாழிகை; 'கரிய நாழிகை யூழியின் பெரியன,' (பெரியதிருமொழி: 8.5:6.)

(பி-ம்.) 1. கருவி நாழிகை. 2. வெருவு செய்யும்.
3. பன்னிரு யோசனை. 4. மூன்றுநூ றுயிரம். (157)

## இடை நகரின் உறக்கநிலை 253-60

253. *வேரியு மடங்கின நெடுங்களி விளைக்கும்*
*பாரியு மடங்கின வடங்கியது பாடல்*
*காரிய மடங்கினர்கள் கம்மியர்கண் மும்மைத்*
*தூரிய மடங்கின தொடங்கிய துறக்கம்.*

(அந்நள்ளிரவில்), வேரியும் அடங்கின - கட்குடிப்போர்களின் முழக்கும் அடங்கின; நெடுங் களி விளைக்கும் பாரியும் அடங்கின - மிகுந்த களிப்பை உண்டாக்கும் வாத்தியங்களும் முழக்கொழிந்தன; பாடல் அடங்கியது - களிப்பால் பாடுபவர்களின் பாடலும் ஒய்ந்தது; கம்மியர்கள் காரியம் அடங்கினர்கள்-தொழிலாளர்கள் தம் தொழில் அடங்கினர்; மும்மைத் தூரியம் அடங்கின - மூன்று வகையான முரசுகள் ஓய்ந்தன; உறக்கம் தொடங்கியது - (யாவர்க்கும்) தூக்கம் தொடங்கியது.

வேரி - வண்டு. 'வாமசமயம் போல் இரவு கள்ளுண்பதும் உண்டு உறங்கினர்' என்பது பழைய உரை. பாரி - இரவில், குறித்த காலத்தில் காவலர் முழக்கும் ஒருவகை வாத்யம்; இஃது இன்னும் சில கோயில்களில் அடிக்கப்படுகின்றன என்பர். கம்மியர், கர்மியர் என்பதன் சிதைவு. கம்மியர் - கம்மாளரும் ஆம். மும்மைத் தூரியம் - தியாகம், வீரம், மணம் ஆகிய மூவகை முரசுகள்.

(பி-ம்.) 1. நெடுங்கடல் விளம்பும்.
2. கம்மியர்கள் வெம்மை. (158)

254. *இறங்கின நிறங்கொள்பரி யேமமுற வெங்கும்*
*கறங்கின மறங்கொளெயில் காவலர் துடிக்கண்*
*பிறங்கின நறுங்குழல ரன்பர்பிரி யாதோர்*
*உறங்கினர் பிணங்கியெதி ரூடினர்க ளல்லார்.*

நிறம் கொள் பரி - பல நிறங்களைக் கொண்ட குதிரைகள், இறங்கின - தலை சாய்ந்து உறங்கின; மறம் கொள் எயில் காவலர் துடி கண் ஏமம் உற எங்கும் கறங்கின - வீரம் கொண்ட மதில் காவலர்கள் (அடிக்கும்) துடிகளின் கண்கள் ஊர்ப் பாதுகாவல் அமையும் வண்ணம் எங்கும் ஒலித்தன; எதிர் பிணங்கி ஊடினர்கள் அல்லார் - கணவரோடு அவர் பிரிவுக்கு எதிராகப் பிணங்கினவர்களாய் (ஊடலடைந்த) மகளிர்களல்லாதவர்களும், அன்பர் பிரியாதோர் பிறங்கின நறுங்குழலர் - தம் கணவரு

டன் கூடியிருப்பவர்களும், விளக்கமும் மணமும் மிக்க கூந்தலையுடைய வர்களுமான மகளிர், உறங்கினர் - தூங்கினர்.

இதனால், ஊடின மகளிர் உறங்கவில்லை என்பதாம். துடி - இரவில் கொட்டும் ஒரு காவல் பறை; யாமபேரியுமாம்.

(பி-ம்,) 1. நிறங்கொள்கரி.
3. பிறங்கினர் நறும்: நறுங்குழல ரன்புபிரி யாதோர். (159)

255. *வடந்தரு தடங்கொள்புய மைந்தர்கல விப்போர்*
*கடந்தன ரிடைந்தனர் களித்தமயில் போலும்*
*மடந்தையர் தடந்தன முகட்டிடை மயங்கிக்*
*கிடந்தனர் நடந்தது புணர்ச்சிதரு கேதம்.*

வடம் தரு தடம் கொள் புய மைந்தர் - மாலை வடங்களை அணிந்த பரந்த தோள்களையுடைய அரக்கர் குல மைந்தர்கள், கலவிப் போர் கடந்தனர் இடைந்தனர் - புணர்ச்சியாகிய போரை முடித்துக் களைப் படைந்தவராய், களித்த மயில் போலும் மடந்தையர் - களிப்புற்ற மயில் கள் போன்ற தம் காதலிமாரின், தடம் தன முகட்டிடை மயங்கி கிடந் தனர் - பருத்த தன முகடுகளில் சோர்ந்து கிடந்தனர்; புணர்ச்சி தரு கேதம் நடந்தது-புணர்ச்சியாலுண்டான களைப்பு நடைபெறுவதாயிற்று.

வடம் - இரத்தினங்கள், முத்துக்கள் இவற்றாலான வடங்களுமாம். நடந்தது - இவ்விதமாகக் கழிந்தது என்றும் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. புடந்தரு குடங்கொள்.
2. கடைந்தனர்.
3. மடந்தையர் முலைக்குவ டுழக்குமணி மார்பர். (160)

256. *வாமநறை யின்றுறை நுகர்ந்தவர் மறந்தார்*
*காமநறை யின்றிறம் நுகர்ந்தவர் களித்தார்*
*பூமநறை வண்டுறை யிலங்கமளி புக்கார்*
*தூமநறை யின்றுறை யயின்றிலர் துயின்றார்.*

வாம துறையின் நறை நுகர்ந்தவர் - வாம மார்க்கத்தின் பகுதியான கள்ளைப் பருகியவர், மறந்தார் - தம்மை மறந்து மயங்கிக் கிடந்தார்கள்; காம நறையின் திறம் நுகர்ந்தவர் களித்தார் - காமபானமான கள்ளின் திறனைப் பருகியவர்கள் களிப்படைந்து, பூம நறை வண் துறை - மிக்க வாசனையை உடைய, வளப்பமுள்ள இடமாகிய பள்ளியறையில்,

இலங்கு அமளி புக்கார் - விளங்கும் படுக்கையில் புகுந்து, தூம நறையின் துறை அயின்றிலர் - அகில் முதலிய நறுமணப் புகைகளால் உண்டாகும் இன்பத்தையும் பெருமல், துயின்றார் - தூங்கினர்கள்.

வாம மார்க்க உபாசனைப் பொருள்கள் ஐந்தினுள், கள் ஒன்று; *தக்க. 24. உரை.* 'காமநறையின் துறை பயின்றிலர்-மன்மதன் உரைத்த சாத்திரத்தின்படி கிரீடை பண்ணுமல் உறங்கினர்' என்பது பழைய உரை. இங்குப் பாடம் வேறு. பூம - மிகவும் அதிகமான; வடசொல்.

(*பி-ம்.*) 1. வாமநறையின்றிற.
2. நறையின்றுறை: துறந்தனர் களித்தார்.
3. அலங்கமளி புக்கார். 4. பயின்றிலர் துயின்றார். (161)

257. *பண்ணிமை யடைத்தபல கட்பொருநர் பாடல்*
*விண்ணிமை யடைத்தன விளைந்ததிருள் வீணைத்*
*தண்ணிமை யடைத்தன தழங்கிசை வழங்கும்*
*கண்ணிமை யடைத்தன வடைத்தன கபாடம்.*

பல கட்பொருநர் - பலரானவரும் கள்ளுண்டவர்களுமான கூத்தர்களின், பாடல் பண் இமை அடைத்த - பாடற்பண்கள் பாடப்படுதல் ஓய்ந்தன; விண் இமை அடைத்தன - வானம் (ஒளி இழந்து) கண் மூடிற்று; இருள் விளைந்தது - இருள் பெருகிற்று; தழங்கு இசை வழங்கும் - ஒலிக்கும் இசையை உண்டாக்கும், வீணை-வீணையினுடைய, தண் இமை - குளிர்ந்த ஸ்வரஸ்தானங்கள், அடைத்தன - அடைப்புண்டன ஆயின; கண் இமை அடைத்தன - மக்களின் கண் இமைகளும் மூடின; கபாடம் அடைத்தன - கதவுகளும் மூடப்பட்டன.

பண் இமை அடைத்தன என்பதற்கு, குழல் முதலிய துளைக்கருவிகளின் இசையும் பாட்டுக்களும் ஒலி அவிந்தன என்றும் பொருள் கூறுவர். 'பண்ணிமை - பண்ணின் கண்; விண்ணிமை அடைத்தன - மேகமும் கண்ணுறங்கின' என்பது பழைய உரை. விண் இமை அடைத்து அன விளைந்தது இருள் என்று பிரித்துப் பொருள் கொள்வதும் பொருந்தும். இசை வழங்கும் கண் இமை அடைத்தன என்று கொண்டு.-இசையைத் தரும் துளைக்கருவிகளின் கண்களும் ஊதப்படாமல் நின்றன என்றும் பொருள் காண்பர்.

(*பி-ம்*). 1. கட்பொருநர் பல்பேய்: பல மெய்ப்பொருநர் பாடல்.
3. தண்ணுமை யடைத்தன தயங்கிருள் வழங்கும். (162)

258\. விரிந்தன நரந்தமுதல் மென்மலர் களாகத்
துரிஞ்சிவரு தென்றலுணர் வுண்டய லுலாவச்
சொரிந்தன கருங்கண்வரு துள்ளிதரு வெள்ளம்
எரிந்தன பிரிந்தவர்த மெஞ்சுதனி நெஞ்சம்.

நரந்தம் முதல் - நரந்தம் முதலானவற்றின், மென் மலர்கள் விரிந்தன - மெல்லிய மலர்கள் மலர்ந்தன; பிரிந்தவர் தம் - காதலரைப் பிரிந்தவர்களுடைய, ஆகத்து - உடல்களிலே, உரிஞ்சி வரு தென்றல் - உராய்ந்து வரும் தென்றற் காற்றானது, உணர்வு உண்டு - அவர்களின் உணர்ச்சிகளைக் கவர்ந்து, அயல் உலாவ - வெளியே செல்ல, கருங்கண் - அவர்களுடைய கரிய கண்களினின்று, வரு துள்ளி தரு வெள்ளம் - வெளிப்படுகின்ற கண்ணீர்த் துளிகளாலான நீர்ப்பெருக்கு, சொரிந்தன - மிகுதியாக விழுந்தன; எஞ்சுதனி நெஞ்சம் - (காதலர்பிரிய) மிஞ்சியிருந்த அவர்களின் நெஞ்சுகள், எரிந்தன - விரகத்தால் வெந்துகொண்டிருந்தன.

நரந்தம் - நாரத்தை; நரந்தம்புல் என்பாரும் உளர். இது நடுயாமத்தில் மலரும் என்பது பெறப்படுகிறது. ஆகத்து - என்பதற்கு, இடம் தோறும் என்றும் பொருள் கூறுவர். எஞ்சு - நாணம் முதலியன ஒழிந்து மிஞ்சிய என்றும் கூறலாம்.

(பி-ம்.) 1. மென்மலர் வளாகத். 4. எஞ்சுதனி னெஞ்சம். (163)

259\. இளக்கமிழு தெஞ்சவிழு மெண்ணரு விளக்கைத்
துளக்கியது தென்றல்பகை சோரவுயர் வோரின்
அளக்கரொ டளக்கரிய வாசையுற வீயா
விளக்கென விளங்குமணி மெய்யுறு விளக்கம்.

பகை சோர உயர்வோரின் - பகைவர்கள் சோர்வடையுங் காலத்தில் தாம் தலையெடுப்பவர்களின் செயலைப் போல, இளக்கம் இழுது எஞ்ச - உருகி இளகும் தன்மையையுடைய நெய் வற்றிப் போக, விழும் எண் அரும் விளக்கை - அணையும் எண்ணமுடியாத விளக்குக்களை, தென்றல் துளக்கியது - தென்றற் காற்று அசைத்துவிட்டது; (அவ்வாறு விளக்கணைந்தவிடத்து), அளக்கரொடு அளக்கரிய ஆசை உற - கடலோடு ஒப்பிடுதற்கு முடியாதபடி வளர்ந்த (காதலரிடையேயுள்ள) ஆசையைத் தூண்டுவதற்கு, மணி மெய் உறு விளக்கம் - (மகளிரின்) அழகிய மேனியின் ஒளி, வீயா விளக்கு என விளங்கும் - அணையா விளக்காக ஒளி வீசின.

'ஆடவருக்கும் பெண்ணுக்குங் கலவியிலே கடலுக்கு மிகுதியான ஆசை பொருந்தும்படிக்கு எரிந்த விளக்கைக் காற்றவித்தவுடனே, அந்தப் பெண்கள் அழகிய மேனியின் ஒளியாகிய விளக்கு பரந்தது; உலகத்

கத்திலே ஒருவன் சத்துரு மடிந்தால் எப்படித் தலை யெடுப்பான்: அப்படி ஒத்ததெனப் பொருள்' என்பது பழைய உரை. மகளிர் மேனிக்கு விளக்கு: 275; பால. நகரப். 51. இனி, மெய் உறு மணி விளக்கம் என இயைத்து, அன்னோர் மெய்யிற் பொருந்திய இரத்தினங்களின் ஒளி எனவும் கொள்ளலாம். சில பிரதிகளில் இப்பாடல் இல்லை.

(பி-ம்.) 1. இளக்கரிழு தெஞ்ச: என்னும் விளக்கை.
3. ஆசையுற வீசா; ஆசைவளி வீச.
4. விளக்கினம் விளக்குமணி மெய்யுறு விளக்கம் ;
விளக்கொளி யெனச்சுழல்வ மெல்லியர்கண் மேனி. (164)

260. நித்தநிய மத்தொழில ராய்நிறையு ஞானத்
துத்தமரு றங்கினர்கள் யோகியர் துயின்றார்
மத்தமத வெங்களி றுறங்கின மயங்கிப்
பித்தரு முறங்கின ரினிப்பிறரி தென்னும்.

நித்த நியமத் தொழிலராய் - நாள் தோறும் செய்ய வேண்டிய கருமங்களைச் செய்து முடிப்பவராகி, நிறையும் ஞானத்து உத்தமர் - நிறைந்த அறிவினையுடைய மேலோர்களும், உறங்கினர்கள் - தூங்கினார்கள்; யோகியர் துயின்றார் - யோக நிலையில் நிற்பவர்களும் உறங்கினார்கள்; மத்த மத வெம் களிறு மயங்கி உறங்கின; - மயக்கத்தைத் தருகின்ற மதம் பிடித்த கொடிய ஆண்யானைகளும் மயங்கி உறங்கின; பித்தரும் உறங்கினர் - பித்துக் கொண்டவர்களும் உறங்கினர்; இனி - இவ்வாறுள்ள நிலைமையில், பிறர் இது என் ஆம் - பிறருடைய உறக்கமாகிய இந்நிலை யாது ஆகும்?

'நித்தநியமத் தொழில் முடித்து நெடுவானத் துத்தமரும்' என்று பாடங்கொண்டு, 'அரக்கரேவிய வேலைகள் செய்து, உறங்கா அமரரும் உறங்கினர்' என்று பழைய உரை கூறும். எளிதில் உறங்காதவர்களும் உறங்கினர் என்க.

(பி-ம்.) 1. தொழின் முடித்து நெடுஞானத்: நெடுவானத்.
3. உறங்கின வுறங்காப்.
4. பிறர்க ளென்னும். (165)

## அநுமன் அகநகர் அடைந்து தேடுதல் 261-280

261. ஆயபொழு தம்மதி லகத்தரசர் வைகும்
தூயதெரு வொன்றொடொரு கோடி துருவிப்போய்த்
தீயவ னிருக்கையயல் செய்தவக ழிஞ்சி
மேய்து கடந்தனன் வினைப்பகையை வென்றான்.

ஆய பொழுது - (இவ்வாறு நகர் முழுதும் உறங்கிக் கிடந்த) நள்ளிரவுப் பொழுதில், வினைப் பகையை வென்றான் - வினைகள் என்னும் பகைகளை வென்றவனான அநுமன், அம் மதில் அகத்து - இடைநகரத்தைச் சூழ்ந்திருந்த அம்மதில்களின் உள்ளே, அரசர் வைகும் - அரசர்கள் வசிக்கின்ற, தூய - சுத்தமான, ஒன்றொடு ஒரு கோடி தெரு - இரண்டு கோடித் தெருக்கள், துருவி போய் - ஆராய்ந்து கொண்டு சென்று, தீயவன் - கொடியவனான இராவணனின், இருக்கை அயல் செய்த- இருக்குமிடத்தைச் சூழ்ந்து பக்கத்தில் அமைத்த, மேயது அகழ் இஞ்சி- பொருந்திய அகழியையும் மதிலையும், கடந்தனன் - தாண்டினான்.

செய்யுட்கள் 197-215 இல் அநுமன் கணக்கற்ற அரக்கர் மாளிகைகளிலும், 216- 240 செய்யுட்களில் கும்பகருணன், வீடணன், இந்திரசித்து, அக்கன், அதிகாயன், படைத்தலைவர் ஆகியோர் இருந்த பொன்னின் மாளிகை ஆயிர கோடிகளிலும் தேடி, 241-250 செய்யுட்களில் இடைநகர் அகழி தாண்டி, 251-216 செய்யுட்களில் மும்மை நூறுயிரம் கொண்ட தெருக்களடர்ந்த அவ்விடை நகரினையும் துருவி, இச்செய்யுள் முதல், படலம் முடியும் வரை, இராவணனும் அவன் உரிமை மகளிரும் வாழ்ந்த அகநகரில் தேடிய செய்தி சொல்லப்படுகிறது.

வினைப்பகை - ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் என்ற கர்மங்களான பகைகள். 'எனைப்பகை யுற்றாரு முய்வர் வினைப்பகை, வீயாது பின்சென் றடும்' (*குறள்*. 207) என்பதில், வினைப்பகை என்பதற்குத் தீவினையாகிய பகை என்று *பரிமேலழகர்* உரை கூறுவர். அநுமன் வினை வென்றவன்: 264. மேயது - எதிர்ந்தது என்றும் கூறலாம்.

(பி-ம்.) 4. மீயது கடந்தனள். (166)

வேறு.

262. *போரி யற்கை யிராவணன் பொன்மனை*
*சீரி யற்கை நிரம்பிய திங்களாய்த்*
*தார கைக்குழு விற்றழைத் தோங்கிய*
*நாரி யர்க்குறை வாமிட நண்ணினான்.*

போர் இயற்கை இராவணன் பொன்மனை - பிறரோடு போரிடுவதையே இயற்கையாகக் கொண்ட இராவணனுக்குரிய அழகிய மனை, சீர் இயற்கை நிரம்பிய திங்களாய் - சிறந்த இயல்புகளான (கலைகள் பதினாறும்) நிரம்பிய சந்திரனை, தாரகை குழுவில் தழைத்து ஓங்கிய - (அச்சந்திரனைச் சூழ்ந்து,) நட்சத்திரக் கூட்டங்கள் (ஒளி) சிறந்து விளங்கின போல் விளங்கிய, நாரியர்க்கு உறைவு ஆம் இடம் - (அவனுடைய

உரிமை) மகளிர்க்கு வாழ்வதற்கு அமைந்த இல்லங்களை, நண்ணினன்- அடைந்தான்.

இராவணன் மனை திங்களுக்கும், நாரியர் இல்லங்கள் தாரகைக் குழுவிற்கும் உவமை. போரியற்கை இராவணன், 'போரிராவணன்' (237) என்றது போல.

(பி-ம்.) 3. தாரகைக்குழு விற்றழு விந்தொடர். (167)

263. *முயற்கருங்கறை நீங்கிய மொய்ம்மதி*
*அயிர்க்கும் வாண்முகத் தாரமு தன்னவர்*
*இயக்கர் மங்கையர் யாவரும் மின்புற*
*நயக்கும் மாளிகை வீதியை நண்ணினன்.*

முயல் கரும் கறை நீங்கிய மொய் மதி - முயல் என்று கூறப்படும் கரிய மறு இல்லாத ஒளி நிரம்பிய பூர்ண சந்திரனும், அயிர்க்கும் - இவர் யாரோ என்று சந்தேகிக்கும் (அழகினையுடைய), வாள் முகத்து - ஒளி பொருந்திய முகத்தினையுடைய, ஆர் அமுது அன்னவர் - நிறைந்த அமுதம் போன்ற மென்மையுடையவர்களான, இயக்கர் மங்கையர் யாவரும் - இயக்க மகளிர் எல்லோரும், இன்புற நயக்கும் மாளிகை வீதியை - மகிழ்ந்து விரும்பித் தங்கும் மாளிகைகள் நிறைந்த வீதியை, நண்ணினன் - (அநுமன்) அடைந்தான்.

இராவணன் தங்கிய அகநகரில் முதல் வீதி இயக்கர் மங்கையர் வாழும் வீதி என்பதாயிற்று. இவர்கள் நிலை இச் செய்யுள் முதல் 274 செய்யுள் முடியக் கூறப்படும். கறை நீங்கிய மதி: 216: இல்பொருள் உவமை, அமுதன்னவர்; ஒப்பு: 'அமிர் தன்ன சாயல்' (*சீவக. 8.*) என்றதற்கு, நச். உரையைக் காண்க. அமுதன்னவர் - அமுது போன்றவர் என்று அவர்களின் முழு உருவுக்குமே பொருந்தவும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 2. அயர்க்கும் வாண்முகத்: மயக்கும் வாண்முகப் பங்கயம் வாய்த்துள.
3; மங்கைய ரெண்ணருங் கோடியோர்; யாவரு மீண்டினர்; யாவரு மெய்தியே. (168)

264. *நுழைந்த பேரொளி மொய்மணித் தாதொறும்*
*இழைந்த நூலினு மின்னிளங் காலினும்*
*நுழைந்து நொய்தினின் மையற நோக்கினன்*
*விழைந்த நீவினை வேரற வீசினன்,*

விழைந்த தீவினை - அவாவினால் உண்டான தீவினைகளை, வேர் அற வீசினான் - வேரற்றுப் போக அறுத்தெறிந்த அநுமன், (அம்மாளிகைகளின்) பேர் ஒளி தழைந்த - மிக்க ஒளி பொருந்திய, மொய் மணி தாள் தொறும் - நெருங்கிய மணிகள் இழைத்த தாழ்ப்பாள்கள் தோறும், இழைந்த நூலினும் - மென்மையாக இழைக்கப் பெற்ற நூலைக் காட்டிலும், இன் இளம் காலினும் - இனிய இளங்காற்றைக் காட்டிலும், நொய்தினின் - நுட்பமாக, நுழைந்து - புகுந்து, மை அற - பழுது நீங்க, நோக்கினான் - பார்த்தான்.

கால் - வழி அல்லது இடமும் ஆம்; கால் - வழி; (*பிங்.*) விழைந்த தீவினை; 'அவாவென்ப வெல்லா வுயிர்க்குமெஞ் ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து' (குறள். 361) என்றமை போல, அவாவினால் பிறந்த தீவினை என்று பொருள் கூறப்பட்டது. அநுமன் தீவினை அகன்று நின்றமை; 261. நூலினும் காலினும் நுழைந்தான்; ஒப்பு: 229; 235. மை அற நோக்குதல், ஐயம் திரிபு அற நோக்குதல்,

(*பி-ம்.*) 1. தழைந்த மெய்யொளி பெய்ம்மணித் தாழ்தொறும்; தழைந்த மாளிகைச் சாளரத் தாழ்தொறும்: தழைத்த மெய்யொளி.
2. இழைத்த.
3, நுழைத்து: மெய்யுற நோக்கினான்; எங்கணு நோக்கினான்.
4. விழைந்ந வெவ்வினை; விழைத்த தீவினை; விளைந்த தீவினை.(169)

**265.** ***அத்தி ரம்புனை யானை யரக்கன்மேல்***
***வைத்த சிந்தையர் வாங்கு முயிர்ப்பினர்***
***பத்தி ரம்புரை நாட்டம் பதைப்பறச்***
***சித்தி ரங்க ளெனவிருந் தார்சிலர்.***

சிலர் - அவ்வியக்கியர்களுட் சிலர், அத்திரம்புனை யானை அரக்கன் மேல்-(மதனன்) அம்புபட்ட மதயானை போன்ற அரக்கனாகிய இராவணன் மீது, வைத்த சிந்தையர் - வைத்த மனத்தையுடையவர்களாய், வாங்கும் உயிர்ப்பினர் - அவனை அடையமுடியாமல் ஏங்கி விடும் பெருமூச்சு விட்டுக்கொண்டு, பத்திரம்புரை நாட்டம் பதைப்பற - அம்பு போன்ற தம் கண்கள் அசைதல் இல்லாமல், சித்திரங்கள் என இருந்தார் - சித்திரங்கள் போல இருந்தனர்.

மதனன் அம்பு பட்டது, பிராட்டிபால் தான் கொண்ட காதலால் என்க. 'அத்திரம் புரை' என்று பாடங் கொண்டு. அதில் அத்திரம் என்றது அத்ரி என்ற வடசொல்லின் திரிபாகக் கொண்டு, மலையை யொத்த யானைகளின் படையை உடைய அரக்கன் என்றும் சிலர் பொருள் கூறுவர். சித்திரங்கள், அவர்கள் அசைவில்லாமல் இருந்த நிலையைக் குறித்தன,

(பி-ம்.) 1. அத்தி ரம்புரை யானை.
2. உயிர்ப்பிஷர். 3. பத்தி/ரம்புனை. (170)

266. அள்ளல் வெஞ்சிலை மாரனை யஞ்சியோ
மெள்ள வின்கன வின்பயன் வேண்டியோ
கள்ள மென்கொ லறிந்திலங் கண்முகிழ்த்
துள்ள மின்றி யுறங்குகின் றூர்சிலர்.

சிலர் - வேறு சில இயக்கியர், கண் முகிழ்த்து - கண்களை மூடிக் கொண்டு, உள்ளமின்றி - (தூங்கும்) மனமின்றி, உறங்குகின்றூர் - உறங்குவது போலப் பாசாங்கு செய்கின்றனர்; (அவ்வாறு அவர்கள் செய்தற்குக் காரணம்), அள்ளல் வெம் சிலை மாரனை அஞ்சியோ - சேற்றில் வளரும் (கரும்பாகிய) கொடிய வில்லையுடைய மாரனிடம் அச்சங்கொண்டோ? (அல்லது), மெள்ள - மெதுவாக, இன் கனவின் பயன் வேண்டியோ - (இராவணனைப் பற்றி) இனிய கனவு காணும் பயனை விரும்பியோ? கள்ளம் அவர்களுடைய (உள்ளமின்றி உறங்குவதன்) கள்ள எண்ணம், என் கொல், அறிந்திலம் - எதுவோ? நம்மால் அறிய முடிய வில்லை.

கண் முகிழ்த்தல், அச்சத்தின் குறிப்பு. கள்ளம்; உறக்கத்தை ஏமாற்றிக் இராவணனோடு துய்ப்பதான கனவுப் பயன் கொள்ள விரும்புதல்.

(பி-ம்.) 1. வள்ளல் வெஞ்சா மாரனை.
2. மெள்ள வேகன வின். (171)

267. பழுதின் மன்மத னெய்கணை பன்முறை
உழுத கொங்கைய ரூச லுயிர்ப்பினர்
அழுது செய்வதெ னூணை யரக்கனை
எழுத லாங்கொலென் றெண்ணுகின் றூர்சிலர்.

சிலர் - இன்னும் சில இயக்கியர், மன்மதன் எய் பழுதில் கணை - மன்மதன் எய்த (குறி) தவறுதலில்லாத அம்புகள், பல் முறை உழுத கொங்கையர் - பல தடவை ஊடுருவி உழுது துன்புறுத்திய கொங்கையராய், ஊசல் உயிர்ப்பினர் - ஊஞ்சல் போலப் போவதும் வருவதுமான மூச்சின் இயக்கத்தைப் பெற்றவர்; 'அழுது செய்வது என்? - அழுவதால் ஆகும் பயன் என்ன?, ஆணை அரக்கனை எழுதலாம் கொல் - (மூவுலகும்) ஆஞ்ஞை செலுத்தும் இராவணனின் உருவை எழுதலாமோ?' என்று எண்ணுகின்றூர் - என்று எண்ணமிட்டுக் கொண்டிருந்தனர்.

ஊசல் உயிர்ப்பினர் : ஒப்பு : 'ஆருயிர் நின்றூசலாட' பால. கைய டைப். 11). அரக்கனை எழுதியாவது மனவருத்தம் தீர்த்துக் கொள்ள விரும்பினர் என்க. அன்றி, அவன் உருவம் எழுதவும் வராதே என்று வருந்தினர் என்றும் கொள்ளலாம். எழுதலாமென்பதை, மடலேறு குறிப்பாகவும் கொள்வர்.

(பி-ம்.) 1. மன்மதன் வெங்கணை.
3. செய்வதென் னுட லரக்கனை; ஆனை யரக்கனை. (172)

268. ஆவ தொன்றரு ளாயென தாவியைக்
கூவு கின்றிலை கூறலை சென்றெனுப்
பாவை பேசுவ போற்கண் பனிப்புறப்
பூவை யோடும் புலம்புகின் றூர்சிலர்.

சிலர் - (இன்னும் வேறு) சில இயக்கியர், கண் பனிப்பு உற - தம் கண்களினின்று நீர் துளிக்க, பூவையோடும் - (தாம் வளர்க்கும்) நாகணவாய்ப்புட்களோடும், பாவை பேசுவ போல்-சித்திரப் பதுமை பேசுவது போல, 'ஆவது ஒன்று அருளாய் - (எனக்கு) ஆகவேண்டிய காரியம் ஒன்றனையும் செய்வாயில்லை : எனது ஆவியை - என் உயிர் போன்ற இராவணனை, கூவுகின்றிலை-கூப்பிடவில்லை ; சென்று கூறலை - அவனிடம் சென்று என் நிலையைக் கூறுவதும் இல்லை'; எனு புலம்புகின்றூர் - என்று (ஒவ்வொருவரும் தனித் தனியே) புலம்புகின்றூர் ஆயினர்.

(பி-ம்.) 1. ஆவ மென்றரு ளாய்; ஆவ வென்றரு ளாய்; ஆவ வொன்றரு ளாய்.
2. கூறலை சென்றெனப். 3. கண் பசப்புற. (173)

269. ஈரத் தென்ற லிழுக மெலிந்துதம்
பாரக் கொங்கையைப் பார்த்தந்தப் பாதகன்
வீரத் தோள்களின் வீக்கமெண் ணுவுயிர்
சோரச் சோரத் துளங்குகின் றூர்சிலர்.

ஈர தென்றல் - குளிர்ச்சியான தென்றற் காற்றானது, இழுக - மெதுவாக வீச, மெலிந்து - (விரகத்தால் உடல்) மெலிவடைந்து, தம் பாரக் கொங்கையைப் பார்த்து - பாரமான தம் தனங்களைப் பார்த்து, அந்த பாதகன்-(தங்களிடம் அருள்புரியாத) அந்தக் கொடியவனான இராவணனின், வீர தோள்களின் வீக்கம் எண்ணு-வீரம் பொருந்திய தோள்களின் பெருமையையும் நினைத்து, உயிர் சோர சோர-உயிர் மிகவும் சோர்வடைய, சிலர் துளங்குகின்றூர் - (வேறு) சில இயக்கியர் துடிக்கின்றூர் ஆயினர்.

தலைவனை நினைந்த தலைவி தன் கொங்கையைப் பார்த்தல்; பால. கார்முகப். 50; நவ. 1. 49. தென்றல் இழுகுதல்; 219. சோரச் சோர - அடுக்கு; மிகுதிப் பொருளது.

(பி-ம்.) 1. தென்ற லிழுக்க மெலிந்ததம். 2. பார்த்திந்தப் பாதகன்.
3. வீக்க மெனுவுயிர். (174)

270. *நக்க செம்மணி நாறிய நீணிழல்*
*பக்கம் வீசுறு பள்ளியிற் பல்பகல்*
*ஒக்க வாசை யுலர்த்த வுலர்ந்தவர்*
*செக்க வான்றருந் திங்களொத் தார்சிலர்.*

சிலர் - இன்னும் சிலர், நக்க - ஒளிபெற்ற, செம்மணி-சிவந்த மாணிக்கக் கற்களில், நாறிய - தோன்றிய, நீள் நிழல் - நீண்ட ஒளிகள், பக்கம் வீசுறு - பக்கங்களிலே வீசும், பள்ளியில் - படுக்கையில், பல்பகல் - பல நாட்களாக, ஒக்க ஆசை உலர்த்த - ஒருமிக்க அவர்களின் ஆசையைக் காய்விக்க, உலர்ந்தவர் - மெலிந்து போனவர்களாய், செக்க வான் தரும் திங்கள் ஒத்தார் - சிவந்த அந்தி வானத்தில் தோன்றும் பிறைச் சந்திரனைப் போல ஒளி மங்கியிருந்தார்கள்.

செக்க வான்றரு திங்கள் என்றமையின் மாலைக் காலத்துத் தோன்றும் பிறை ஆயிற்று: 'திங்களொத்தார், கீற்றுப் பிறையைப் போலத் தேய்ந்தார்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. நாறிய நாணிழல். 2. வீசுறு மானிகைப் பல்பகல்.
3. உலக்க வுலந்தவர். 4. செக்கர் வான்றரு. (175)

271. *வாளி னாற்றிய கற்பக வல்லியர்*
*தோளி னாற்றிய தூங்கம ளித்துயில்*
*நாளி னாற்செவி யிற்புகு நாமயாழ்த்*
*தேளி னாற்றிகைப் பெய்துகின் றார்சிலர்*

வாளின் - ஒளியினால், ஆற்றிய - அளிக்கப் பெற்ற, கற்பக வல்லியர்-கற்பகக் கொடிபோன்ற இயக்க மகளிர், தோளின் - டோளியைப் போல, நாற்றிய - தொங்கவிட்ட, தூங்கு - தொங்குகின்ற, அமளி துயில் நாளினால்-படுக்கையில் துயிலும் பொழுதில், செவியில் புகு-தம் காதுகளிற்புகும், நாமயாழ் தேளினால் - அச்சத்தைத் தரும் யாழின் பாடலாகிய தேளினால், சிலர் - சில இயக்கிமார்கள். திகைப்பு எய்துகின்றார் - சோர்வுற்று மயக்கமடைகிறவர்கள் ஆயினர்.

தூங்குதல் - தொங்குதல்: 'தூங்கு சிறைவாவல்' என்றது போல; தூங்குதல் அசைதலும் ஆம். தோள்: டோல் என்ற வடசொற் றிரிபு; டக்கா - தக்கை, டமருகம்-தமருகம் என்று வருவனபோல. நாளி ஞல்: ஆல் உருபு மயக்கம். தோளின் ஆற்றிய எனப்பிரித்து கை யால் ஆட்டப் பெற்ற என்றும் பொருள் கொள்ளலாம். யாழ்த்தேள் பாடலரவு (287) என்றது போல.

(பி-ம்.) 1. வாளி னுற்றெளிர். 2. தூளி னுற்றிய.
3. நாளு நாட்செவி. 4. ஏழி னுற்றிகைப்: எய்துகின் ருர்சிலர் (176)

272. கவ்வு தீக்கணை மேருவைக் கால்வளைத்
தெவ்வி னுன்மலை யேந்திய வேந்தருேள்
வவ்வு சாந்துதம் மாமுலை வெளவிய
செவ்வி கண்டு குலாவுகின் ருர்சிலர்.

சிலர் - (வேறு) சில இயக்கியர், மேருவைக் கால் வளைத்து - மேரு மலையை (வில்லாக்கி அதன்) இரு கோடிகளையும் வளையச் செய்து, கவ்வு - அதனில் மாட்டிய, தீ கணை - தீயைக் கக்கும் (மாலாகிய) அம்பை, எவ் விஞன் - ஏவினவனுக்குரிய, மலை - கயிலை மலையை, ஏந்திய-பெயர்த்துத் தாங்கிய, ஏந்தல் - அரசனுன இராவணனின், தோள் - தோள்களில், வவ்வு சாந்து - பற்றிய சந்தனக் கலவையை, தம் மாமுலை வெளவிய செவ்விகண்டு-(தழுவிய காலத்தில்) தம் பெரிய தனங்களால் அபகரிக்கப் பெற்றுள்ள, அழகைத் தம் கண்களால் பார்த்து, குலாவுகின்ருர் - மகிழ் கின்ருர் ஆயினர்.

கவ்வு தீக்கணை என்பதற்கு, பட்ட இடத்தில் பற்றும் இயல்புள்ள நெருப்பை யுடைய அம்பை என்றும் பொருள் கொள்ளலாம். 'ஈரம்பு கண் டிலம் ஏகம்பர் தம் கையில், ஓரம்பே முப்புரம் உந்தீ பற' என்ற திரு வாசகப் பகுதி இங்கு நினைக்கத்தக்கது. மேரு வில்லானது திரிபுர சங்கா ரத்தில்; எவ்வுதல்-ஏவுதல்; 'மறைந்து வில்லால், எவ்விய தென்னை யென் ருன்' (கிட்கிந்தா, வாலிவதைப். 116.) 'கவ்வு-அண்டத்தைப் பற்றும்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. கவ்வு திண்டிறல். 2. ஏந்துதோள்; ஏந்திய வேந்துதோள்.

273. கூடி நான்குயர் வேலையுங் கோக்கநின்
ருடி னுன்புக ழுங்கை நரம்பினுல்
நாடி நாற்பெரும் பண்ணு நயப்புறப்
பாடி னுன்புகழ் பாடுகின் ருர்சிலர்.

சிலர் - (இன்னும்) சில இயக்கமகளிர், நான்கு உயர் வேலையும் கூடி கோக்க - நான்கு திசைளிலும் உள்ள பெரிய சமுத்திரங்களும் ஒன்று சேர்ந்து பிரளயமாக, நின்று ஆடினன் புகழ்-(அப்பொழுது) நின்று தாண்டவம் புரிந்த சிவபெருமானின் புகழை, நாடி - ஆராய்ந்து, அங்கை நரம்பினால் - தன் அகங்கையின் நரம்புகளினால், நால் பெரும் பண்ணும் - நான்கு பெரிய பண்களையும், நயப்பு உற பாடினன்-இனிமை பொருந்தப் பாடினவனாகிய இராவணனின், புகழ் - கீர்த்தியை, பாடுகின்றார்கள்-பாடிக் களிக்கின்றார்கள்.

கயிலையின் கீழ் அகப்பட்ட இராவணன் பாடியது; 'அன்னதே கருமமென்று வரக்கனு மறிவுட் கொண்டு, தன்னது தலையிலொன்றைத் தடித்துத்தன் கையிற் சேர்த்த, இன்ன வின்னரம் பிற்றுத்தங் கிளைமுதலிசைக ளேழால், பன்னருஞ் சாம கீதம் பரிவுடன் பாட லுற்றான்' உத்தர. வரையெடுத்த. 74. நாற்பெரும் பண்; சிலப். வேனிற். 39-41; நான்கு வேதங்களாகிய பெரும் பாடல்கள் என்னலும் ஒன்றும். நயப்பு உற - சிவபெருமானுக்கு அன்பு உண்டாகுமாறு என்று பொருள் கூறுவதும் ஆம்.

(பி-ம்.) 3. மண்ணு நயப்புற.
4. பாடி னுன்பெயர் பாடுகின் றார்சிலர். (178)

274. *இனைய தன்மை யியக்கிய ரீண்டிய*
*மனையொ ராயிர மாயிரம் வாயில்போய்*
*அனைய வன்குலத் தாய்வளை யாரிடம்*
*நினைவி னெய்தின னீதியி னெய்தினான்.*

நீதியின் எய்தினன் - நீதி நெறியில் நடப்பவனான அநுமன், இனைய தன்மை இயக்கியர் - இவ்வகையான நிலைகளிலிருந்த இயக்கியர்கள், ஈண்டிய - நிறைந்த, ஓர் ஆயிரம் ஆயிரம் மனை வாயில் போய் - ஒப்பற்ற ஆயிரம்ஆயிரமான வீடுகளின் வாயில்களினுள் நுழைந்து சென்று,(பிறகு), அனையவன் குலத்து - அந்த இராவணன் குலத்தைச் சார்ந்த, ஆய் வளையாரிடம்-ஆராய்ந்த வளைகளணிந்த அரக்கியர் இருப்பிடத்தை, நினைவின்-(தான் வந்த காரியமான பிராட்டியைத் தேடும்) எண்ணத்தோடு, எய்தினன் - அடைந்தான்.

(பி-ம்.) 1 இயக்கிய ரெய்திய; இயக்கிய ரேழையர்.
2 ஆயிர மாயிர கோடியாம்.
3 குலத் தாயிழை யாரிடம். (179)

வேறு.

275. *எரிசுடர் மணியின் செங்கே ழிளவெயி லிடைவி டாது*
*விரியிருள் பருகி நாளும் விளக்கின்றி விளங்கு மாடத்*
*தரிவையர் குழுவு நீங்க வாசையுந் தாமு மேயாய்*
*ஒருசிறை யிருந்து போன வுள்ளத்தோ டூடு வாரும்*

(அவ்வரக்கியருட்சிலர்), விளக்கு இன்றி - விளக்கில்லாமலே, எரி சுடர் - ஒளி வீசுகின்ற கிரணங்களையுடைய, மணியின் - மாணிக்கங்களின், செம் கேழ் இள வெயில் - சிவந்த நிறத்தையுடைய மெல்லிய ஒளி, இடை விடாது விரி - இடை விடாமல் பரவுகின்ற, இருள் நாளும் பருகி - இருளை எப்பொழுதும் அழித்து, விளங்கும் மாடத்து ஒரு சிறை - விளங்குகின்ற மாளிகையின் ஒரு புறத்திலே, அரிவையர் குழுவு நீங்க - சேடிமாரின் கூட்டம் விலக, ஆசையும் தாமுமேயாய் இருந்து - (இராவணன் மீது வைத்த) காதலும் தாமுமேயாகத் (தனித்து) இருந்து, போன - அவன்பாற் சென்ற, உள்ளத்தோடு - மனத்தோடு, ஊடுவாரும் - பிணக்குற்று இருப்பவர்களும்,

இச்செய்யுள் முதல் 286 ஆம் செய்யுள் வரை ஒரு தொடராய் இராவணன் உரிமை மகளிரான அரக்கியர் நிலைமை கூறும். மணி விளக்கால் விளங்கும் மாடம்: 193: 194. ஆசையும் தாமுமே புகுதல்; 'ஆவியும் தாமுமே புக்கு' (213) என்றது போல. மனத்தொடு ஊடுதல்: குறள். 1248. 1291, 1292.

(பி-ம்,) 3 அரிவையர் தம்மில் முந்து மாசையுந் தாமு மாயங்(கு).
4 ஒரு திசை. (180)

276. *நகையெரிக் கற்றை நெற்றி நாவிதோய்ந் தனைய வோதி*
*புகையெனத் தும்பி சுற்றப் புதுமலர் பொங்கு சேக்கை*
*பகையென வேகி யான்ற பளிங்குடைச் சீதப் பள்ளி*
*மிகையொடுங் காத காம விம்மலின் வெதும்பு வாரும்*

நகை எரி கற்றை நெற்றி - விளங்குகின்ற நெருப்புத் தொகுதியின் நுனியில், நாவி தோய்ந்தனைய - கஸ்தூரி பூசி விளங்கியது போன்ற, ஓதி - கூந்தலை, புகை என தும்பி சுற்ற - (அந்நெருப்பினின்று எழும்) புகையென்று எண்ணி வண்டுகள் சுழன்று ஓட, புதுமலர் பொங்கு சேக்கை - புதுப் பூக்கள் பரப்பப் பெற்று விளங்கும் (தம்) படுக்கையை, பகை என - (தமக்குத் துன்பத்தை விளைக்கும்) பகை என்று, (அரக்கியர் எண்ணி), ஏகி - அதனை நீங்கிச் சென்று, ஆன்ற பளிங்கு உடை சீத பள்ளி - அகன்ற படிகக் கற்களால் அமைந்த குளிர்ந்த படுக்கையில் (படுத்து), மிகை ஒடுங்காதகாம விம்மலின் - மிகுதல் குறையாத காம உணர்ச்சியின் மிகுதியால், வெதும்புவாரும் - (உள்ளம் வெந்து) வாடுபவர்களும்,

காமத்தால் வெதும்பும் அரக்கியர் தம் மலர்ப்படுக்கையை வெறுத்து, பளிங்குப் படுக்கைக்குச் சென்றும் அங்கும் வெதுப்படங்கப் பெறுமல் வருந்தினர் என்பது கருத்து. அரக்கியர் கூந்தலின் நுனியிற் பூசப்பெற்ற நாவியைத் தீச் சுடரின் புகையென வண்டுகள் அணுகாது நாற்புறமுஞ் சுழன்றேடின என்பதாம்; இது மயக்க அணி. நாவிதோய்ந்த ஊைய, புகையென தும்பி சுற்ற என்றும் கூட்டி உரைக்கலாம். மிகை ஒடுங்காத காமம் - அதிகரித்துக் கொண்டே செல்லும் காமம்.

(பி-ம்.) 1. கற்றை தெற்றி; நாவிதோய்த் தனைய.
3. பகையென வேகி யாணர்ப்.
4. மிகையுயி ரோடுங். (181)

277 *சவிபடு தகைசால் வானம் தானெரு மேனி யாகக்*
*குவியுமீ னுர மாக மின்கொடி மருங்கு லாகக்*
*கவிரொளிச் செக்கர் கற்றை யோதியா மழையொண் கண்ணு*
*அவிர்மதி நெற்றி யாக வந்தியா ளொக்கின் றுரும்*

(அவ்வரக்கியர்களுள்), சவி படு - ஒளி வீசுகின்ற, தகை சால் வானம் தான் - சிறப்பு மிக்க வானமே, ஒரு - ஒப்பற்ற, மேனி ஆக - உடலாகவும், குவியும் மீன் - கூட்டமாகச் சூழ்ந்து விளங்கும் நட்சத்திரங்கள், ஆரமாக-முத்து மாலையாகவும், மின் கொடி - மின்னற்கொடிகள், மருங்குல் ஆக - இடையாகவும், கவிர் ஒளி செக்கர் கற்றை - முருக்கமலர் போல் விளங்கும் செவ்வானத் தொகுதி, ஓதி ஆ - கூந்தலாகவும், மழை - மேகமானது, ஒண் கண் ஆ - ஒளி பொருந்திய கண்களாகவும், அவிர் மதி நெற்றி ஆக - விளங்கும் பிறைச் சந்திரன் நெற்றியாகவும் (அமைந்த), அந்தியாள் - மாலைக்கால தேவதையை, ஒக்கின்றுரும் - ஒக்கின்றவர்களும்,

சூரியனைப் பிரிந்து பொலிவிழந்து நிற்கும் அந்திவானம், தம் தலைவனை இராவணனை விட்டுப் பிரிந்த அரக்கியர்க்குவமை. 'திங்கள் வாணுதல் முயற்கறைத் திலகமும் செவந்த. மங்குலாடையு மயங்கிருளோதியும் வான்மீன், பொங்கு மாரமும் பொலிந்துதன் கொண்கனைப் பொருப்பன், மங்கை தேடிவந் தாளென வந்தது மாலை' என்ற திருவிளை. விறகுவிற்ற. 22 ஆம் செய்யுள் இங்கு ஒப்பிடத்தக்கது.

(பி-ம்.) 3 மழையுண் கண்ணர்; கண்ணய்; யுண்கண்ணு.
4 அந்திவா ளெக்கின் றுரும். (182)

278. *பானலுண் கண்ணும் வண்ணப் படிமுறை மாறப் பண்ணைச்*
*சோனைபோன் றளிகள் பம்புஞ் சுரிகுழற் கற்றை சோர*
*மேனிவந் தெழுந்த மாட வெண்ணிலா முன்றி னண்ணி*
*வானமீன் கையின் வாரி மணிக்கழங் காடு வாரும்*

மேல் நிவந்து எழுந்த மாட வெள் நிலா முன்றில் நண்ணி - மேலே உயர்ந்தெழுந்த மாளிகையின் வெண்மையான நிலா வீசும் அரமியத் தலத்தை அடைந்து, கையின் வானமீன் வாரி - தம் கைகளினால் வானத் திலுள்ள நட்சத்திரங்களை வாரி எடுத்து, பானல் உண் வண்ண கண்ணும் படிமுறை மாற - நீலோற்பலமலரை வென்ற நிறமமைந்த கண்களும் ஏறி இறங்க, பண்ணை அளிகள் - கூட்டமாகவுள்ள வண்டுகள், சோனை போன்று பம்பும் - மேகம் போலப் பொங்கி நிறையும், சுரிகுழல் கற்றை சோர-சுருண்ட கூந்தல் தொகுதிகள் சோர்வடைய, மணி கழங்கு-(அந்த நட்சத்திரங்களாகிய) இரத்தினக் கழங்குகளை, ஆடுவாரும் - விளையாடு வாரும்,

கழங்காடுங் காலத்து நிகழும் நிகழ்ச்சிகள் இங்குக் கூறப்பட்டன. வெண்ணிலா முன்றில்; வெண்ணிலவு வீசும் மேன்மாடியிடம்; அரமியம். கண்படிமுறை மாறுதல்; 'பொங்கி மீதெ ழுந்து போய்ப் பிறழ்ந்து பாய்த லின்றியே. செங்க யற்கண் புருவந் தம்மு ளுருவஞ் செய்யத் திரியுமே' (சீவக. 1953), என்றது போலக் கூடத் திரிதல். வண்ணம் படிமுறை மாற, என்று கொண்டு, கழங்குகளின் பலநிறங்களின் வரிசைகள் பிரதி பலிக்கப் பெற்று, பலநிறங்களாக மாறிவர என்றும் பொருள் கூறுவர். பம்புதல் - நிறைதல்; ஒலித்தலும் ஆம்; 'பம்பி மேகம் பரந்தது' (பால. ஆற்றுப். 3.).

(பி-ம்.) 1. வண்ணப் பணிமுறை மாற.
2. சோனைமென் றளிர்கள்.
3. மேனிமிர்ந் தெழுந்த. (183)

279. உழையுழைப் பரந்த வான யாற்றுநின் றும்பர் நாட்டுக்
குழைமுகத் தவர்க டந்த புனல்குளிர்ப் பிலவென் றூடி
இழைதொடுத் திலங்கு மாடத் திடைதடு மாற வேறி
மழைபொதுத் தொழுகு நீரான் மஞ்சன மாடு வாரும்

(அவ்வரக்கிமார்களிற் சிலர்), உழை உழை பரந்த வான யாற்று நின்று - மேல் மாடங்களுக்கருகில் இடங்கள் தோறும் பரந்தோடிய ஆகாய கங்கையிலிருந்து, உம்பர் நாட்டு குழை முகத்தவர்கள் தந்த - தேவலோகத்திலுள்ள குழைந்த முகத்தையுடைய மாதர்கள் கொண்டு வந்து கொடுத்த, புனல் - அவ்வாற்று நீர், குளிர்ப்பு இல என்று-போதிய குளிர்ச்சி பெற்றிருக்கவில்லை என்று, ஊடி-கோபித்து, இழை தொடுத்து இலங்கும் மாடத்து - அணிகள் வரிசையாகத் தொடுத்து விளங்கும் மாடி யிலே, இடை தடுமாற - தங்கள் இடைகள் வருந்த, ஏறி-ஏறிச் சென்று, மழை பொதுத்து-மேகத்தைத் துளையிட்டு, ஒழுகும் நீரால் - அதனின்று வடியும் தண்ணீரால், மஞ்சனம் ஆடுவாரும் - நீராடுகின்றவர்களும்,

குழைமுகம் - குழையோடு கூடின முகம் என்றும் கொள்ளுவர். அரக்கியர் மஞ்சனமாடுதல் முன் 198, 199 ஆம் செய்யுட்களிலும், மழையின் வாய் பொத்துதல் 200-ஆம் செய்யுளிலும் வந்துள்ளமை காண்க. இப்பாடலின் கருத்துக்கு ஒப்பு : உயுத்த. இரணியன் வதை. 4.

(பி-ம்.) 2. குழைமுகத் தாயந் தந்த.
3. இழைதடுத் திலங்கு மாடத். (184)

280. *பன்னக வரசற் செங்கேழ்ப் பணுமணி வலியிற் பற்றி*
*இன்னுயிர்க் கணவ னீந்தா னீதென விருத்தி விஞ்சை*
*மன்னவர் முடியும் பூணு மாரமும் பணய மாகப்*
*பொன்னினம் பலகைச் சூது துயில்கிலர் பொருகின் ருரும்*

(இன்னும் சில அரக்கியர்), துயில்கிலர்-தூக்கம் பிடிக்காதவர்களாய், 'இன் உயிர் கணவன் - எங்கள் இனிய உயிர் போன்ற கணவனுன இராவணன், பன்னக அரசன் - பாம்புகளுக்கு இறைவனுன ஆதிசேடனின், பணு செம் கேழ் மணி - படங்களிலுள்ள சிவந்த நிறமுள்ள மணிகளை, வலியில் பற்றி-வலிமையால் பறித்து, ஈந்தான்-எனக்குக்கொடுத்தான்,ஈது என இருத்தி - அவை இவை என்று அம்மணிகளைச் சூதாடுங்கருவிகளாக வைத்தும், விஞ்சை மன்னவர் - வித்யாதர அரசர்களுடைய, முடியும், பூணும் ஆரமும் - கிரீடங்கள், அணிகலன்கள், முத்து மாலைகள் ஆகிய வற்றையும், பணயமாக - பந்தயங்களாக வைத்து, பொன்னின் அம் பலகை - பொன்னுலாகிய அழகிய சதுரங்கப்பலகையிலே, சூது பொருகின்ருரும் -சூதாட்டம் ஆடுகின்றவர்களும்,

பணு, வடசொல். பணயம் - சூதாடுதற்கு வைக்கும் பந்தயப் பொருள்; நள. 2. 45. 'இராவணன் ஈந்தான் என்ற வாசகம் சூதாடும் இரண்டு பெண்களும் தாம் தாம் கூறினர் என்று மத்திம தீபமாகக் கொள்க' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. வலிதிற் பற்றி.
2. ஈந்தா னுமெள: ஈந்தா னென்பதோர் களிப்பின்.
3. மாலையும் பணைய மாக.
4. பொன்னினன் பலகை. (185)

281. *தென்னவென் றமுதப் பாடல் சித்திய ரிசைப்பத் தீஞ்சொல்*
*பன்னக மகளிர் வள்வார்த் தண் ணுமைப் பாணி பேணப்*
*பொன்னகர்த் தரளப் பந்தர்க் கற்பகப் பொதும்பர்ப் பொற்ருேன்*
*இன்னகை யரம்பை மாரை யாடல்கண் டிருக்கின் ருரும்*

(இன்னும் சிலர்), கற்பகப் பொதும்பர் - கற்பகச் சோலையினிடத்து, பொன்னகர் தரள பந்தர் - அமராவதியிலிருந்து கொணர்ந்த முத்துப் பந்தரின் நிழலிலே, சித்தியர்-சித்தர் சாதி மகளிர், தென்ன என்று அமுதப்

பாடல் இசைப்ப-தென்ன என்னும் இசைக் குறிப்புடன் அமுதமயமான பாடலைப் பாட, தீம் சொல் பன்னக மகளிர் - இனிய சொற்களைப் பேசும் நாகலோகத்துப் பெண்கள், வள் வார் தண்ணுமை பாணி பேண - வளப்பம் மிக்க வார்க்கட்டினையுடைய மத்தளத்தில் தாளங்களை முழக்க, பொன் தோள் இன் நகை அரம்பைமாரை - அழகிய தோள்களையும் இனிய பற்களையும் உடைய அரம்பையர்களை, ஆடல் கண்டு - (ஆடச் செய்து) அவ்வாடலைக் கண்டு, இருக்கின்றாரும் - மகிழ்ச்சியுடன் இருப்பவர்களும்,

நாடகம் காண்பது: 120, 133, 201. பொன்னகர் - இலங்கையும் ஆம். இன் நகை அரம்பைமாரை - இனிய (புன்) சிரிப்போடு கூடிய தெய்வமகளிரை என்னலும் ஒன்றும்.

(பி-ம்,) 1. தென்னகு குடமுட் பாடல்.
2. மகளிர் வார்ந்த தண்ணுமை பாணி பேணி.
3. பொன்னகு தரளப் பந்தர்: பொற்றுள், (186)

282. *ஆணியிற் கிடந்த காத லகஞ்சுட வருவி யுண்கண்*
*சேணுய ருறக்கந் தீர்ந்த சிந்தையர் செய்வ தோரார்*
*வீணையுங் குழலுந் தத்தம் மிடறும்வேற் றுமையிற் றீர்ந்த*
*பாணிதள் ளாத பாட லமுதுகப் பாடு வாரும்*

ஆணியில் கிடந்த காதல் - ஆணி (அறைந்தது) போல் தம்மிடம் அழுந்திக்கிடந்த காதல், அகம் சுட - (இராவணன் பிரிந்திருந்தமையால்) தம் மனத்தை எரிக்க, அருவி உண்கண் - அருவி போன்ற கண்ணீர் சொரியும் கண்களில், சேண் உயர் உறக்கம் தீர்ந்த சிந்தையர் - மிக ஆழ்ந்த உறக்கம் பெறாத மனத்தை உடையவராகி, செய்வது ஓரார் - தாம் அப்பொழுது செய்யத் தக்கது இன்னதென்று அறியாதவர்களாய், வீணையும் குழலும் தத்தம் மிடறும் வேற்றுமையில் தீர்ந்த - வீணையும், புல்லாங் குழலும், பாடுகின்ற தங்கள் குரலும் வேற்றுமையில்லாது ஒத்திருந்ததும், பாணி தள்ளாத - தாளத்தில் தவறாததுமான, பாடல் - பாட்டுக்களை, அமுது உக - அமுதம் ஒழுகும்படி (இனிமையாக), பாடுவாரும் - பாடுகின்றவர்களும்,

ஆணியில் கிடந்த - அச்சாணிபோல் உறுதியுடன் இருந்த என்றலும் அமையும். 'ஆணியிற் கிடந்த காதல், நெஞ்சில் ஆப்பறைந்தது ஒத்தது' என்பது **பழைய உரை** சேண் உயர்-நெடுங்காலமாக என்றும் பொருள் கொள்வர். மிடறு- சரீர வீணையென்பர். மிடறு; இங்கு, கண்டப் பாடலாம்; கருவிப்பாடலும் கண்டப் பாடலும் வேற்றுமை தீரப் பாடல்; சீவக. 658; 723. பாணி தள்ளுதல் - தாளம் பிசகுதல்.

(பி-ம்.) 1. அருவிப் புண்கண்.
3. வேற் றுமையுந் தீர்ந்த.
4. பாணியி னளந்த பாடல். (187)

283. தண்டலை வாழை யன்ன குறங்கிடை யல்குற் றட்டில்
கொண்டபூந் துகிலுங் கோவைக் கலன்களுஞ் சோரக் கூர்ங்கள்
உண்டல மந்த கண்ணு ரூசலிட் டுலாவு கின்ற
குண்டலந் திருவில் வீசக் குரவையிற் குழறு வாரும்

கூர்ம் கள் உண்டு - போதை மிக்க கள்ளைப் பருகி, அலமந்த கண்ணார் - (அதனால்) கலங்கிய கண்களை உடைய (சில) அரக்கியர், தண்டலை வாழை அன்ன குறங்கிடை - தோட்டத்திலுள்ள வாழை போன்ற தங்கள் தொடைகளினிடத்தும், தட்டு அல்குலில் - தேர்த் தட்டுப் போன்ற அல்குலினிடத்தும், கொண்ட - உடுத்த, பூம் துகிலும் - அழகிய ஆடையும், கோவை கலன்களும் - மேகலை, காஞ்சி என்னும் அணிகலன்களும், சோர - தளர்ந்து சரியவும், ஊசலிட்டு உலாவுகின்ற குண்டலம்-ஊசலாடுவது போல் முன்னும் பின்னும் அசைந்தாடும் குண்டலங்கள், திரு வில் வீச-அழகிய ஒளியை வீசவும், குரவையில்-குரவைப்பாட்டுக்களைப் பாடி ஆடுவதில், குழறு வாரும் - தடுமாறுகிறவர்களும்,

கூர்ங்கள் உண்டு அரக்கியர் குரவையாடல்; 'கள்ளிசை யரக்கர் மாதர் களித்திடு குரவை' (133.) குரவைக் கூத்தின் இலக்கணங்களைச் சிலப்பதிகாரம் 17 ஆவது ஆய்ச்சியர் குரவையிலும், 24. குன்றக் குரவையிலுங் காண்க. குழறுதல், ஆரவாரித்தல் என்றும் கூறுவர்.

(பி-ம்.) 3. உண்டல மந்த கண்ணே டூசலிட்(டு) (188)

284. நச்செனக் கொடிய கண்ணார் கள்ளொடு குருதி நக்கிப்
பிச்சரிற் பிதற்றி யல்குற் பூந்துகிற் கலாபம் பீறிக்
குச்சரித் திறத்தி னோசை களங்கொளக் குழுக்கொண் டண்டிச்
சச்சரிப் பாணி கொட்டி நிறைதடு மாறு வாரும்

நச்சு என கொடிய கண்ணார் - விஷம் என்று சொல்லத்தக்க கொடுமை வாய்ந்த கண்களையுடைய அரக்கியர் சிலர், கள்ளொடு குருதி நக்கி - கள்ளையும் இரத்தத்தையும் பருகி, பிச்சரில் பிதற்றி - பித்தர்களைப் போலப் பிதற்றிக் கொண்டு, அல்குல் பூந்துகில் கலாபம் பீறி - தம் அரையில் கட்டியுள்ள அழகிய ஆடைகளையும் மேகலையையும் கிழித்துக் கொண்டு, குச்சரி திறத்தின் - கூர்ஜரப்பண்ணின், ஓசை - பாடும் ஓசை, களம் கொள - அவர்களின் மிடற்றிலே தோன்ற, குழுக் கொண்டு - கூட்டமாக, அண்டி - கூடி, சச்சரி பாணி கொட்டி - சச்சரி என்னும் கருவியை முழக்கி, நிறை தடுமாறுவாரும் - தம் மனநிலை தடுமாறி ஆடுகின்றவர்களும்,

குச்சரித்திறம்; கூர்ஜரப்பண்: குச்சரி, ஓர் இராகத்தின் பெயரும் ஆம்; குர்ச்சரி எனவும் படும்; மகாபாரத சூடாமணி, 4: பக். 94-99. சச்சரி - ஒரு தாளவிசேடம்: ஒரு தோற்கருவியுமாம். நிறை தடுமாறல்;

'நிறையாது மில்லை நெருப்பிற் சுடு காம முண்டேல்' (சீவக. 1963) என்றதுபோல. நிறை - அச்சம், நாணம் முதலிய பெண்டிர்க்குணம் நிறைந்த தன்மை.

(பி-ம்.) 1. நச்செனக் கொடிய நாகக் கள்ளொடுங் குருதி நக்கி. (189)

285. *தயிர்நிறக் கள்ளுண் டுள்ளந் தள்ளத்த மறிவு தள்ளப்*
*பயிருறத் தெய்வ மென்மேற் படிந்தது பார்மி னென்னு*
*உயிருயிர்த் திரண்டு கையு முச்சிமே லுயர நீட்டி*
*மயிர்சிலிர்த் துடலங் கூசி வாய்விரித் தொடுங்கு வாரும்.*

தயிர் நிற கள் உண்டு - தயிர் போன்ற நிறமமைந்த கள்ளைப் பருகி, உள்ளம் தள்ள - தத்தம் மனம் தள்ளாட, தம் அறிவு தள்ள - தம் புத்தியும் தடுமாற, பயிர் உற - கூப்பாடுமிக, 'தெய்வம் என்மேல் படிந்தது பார்மின் - தெய்வம் என்னிடம் ஆவேசம் கொண்டது; பாருங்கள்'; என்னு - என்று கூறி, உயிர் உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, உச்சிமேல் இரண்டுகையும் உயர நீட்டி - தம் தலைமீது இருகைகளும் உயரும்படி அவைகளைச் சேர்த்து நீட்டி, மயிர் சிலிர்த்து - உரோமங்கள் சிலிர்ப்படைந்து, உடலம் கூசி - உடலும் நடுங்கி, வாய் விரித்து - வாயை அங்காத்து, ஒடுங்குவாரும் - பிறகு தாம் ஓய்ந்து நிற்பவர்களும்,

வாய் விரித்து - கொட்டாவி விட்டு எனலும் ஆம்; பேசி என்றும் கூறுவர். தெய்வமுற்றோர் செயல்கள்; குறுந். 105: சிலப். 3; 13: அடி; பெருங் 37: 245. 'இந்தக் கவி, ஆசைப்பட்ட பெண்களும் இராவணன் வரவு சொல்லுவது; பேயேறினதனுற் பொருள்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. தயிர்நிறத் துறுகள் ளுள்ளந்தள்ளுற வறிவு தள்ளிப்.
2. பயில்வுறத்.
3. வாய்விதிர்த் தொடுங்கு வாரும். (190)

286. *இத்திறத் தரக்கி மார்க ளீரிரு கோடி யீட்டம்*
*பத்தியி னுறையும் பத்திப் படர்நெடுந் தெருவும் பார்த்தான்*
*சித்திய ருறையும் மாடத் தெருவும்பின் னுகச் சென்றுன்*
*உத்திசை விஞ்சை மாத ருறையுளை முறையி லுற்றுன்.*

இத்திறத்து - இவ்வாறு கூறப்பட்ட இயல்புகளையுடைய, ஈரிரு கோடி ஈட்டம் அரக்கிமார்கள் - இராவணனின் உரிமைமகளிரான நான்கு கோடி என்னும் தொகையுள்ள அரக்கியர்கள், பத்தியின் - இராவணனிடம் கொண்ட அன்போடு, உறையும் - வாழும், பத்தி படர் நெடும்

தெருவும் பார்த்தான் - வரிசையாகப் படர்ந்து செல்லும் நீண்ட தெருவிலும் (பிராட்டியை) அநுமன் தேடிப் பார்த்தான்; சித்தியர் உறையும் மாட தெருவும் - சித்தர் சாதி மகளிர் வாழ்கின்ற மாடங்களை உடைய தெருவும், பின்னுக சென்றுன் - தாண்டிச் சென்றுன்: உத்திசை - நடுவிலே, விஞ்சை மாதர் உறையுளை - வித்தியாதர மகளிர் தங்கும் மனைகளை, முறையில் - தான் சென்ற முறையில், உற்றுன். அடைந்தான்.

இதுகாறும் அநுமன் இலங்கையின் அகநகரிலே இராவணன் உரிமை மகளிர்களுள் இயக்கியர், அரக்கிமார்கள், சித்தியர் ஆகியோர் வாழ்ந்த வீதிகளைக் கடந்து, நகரின் நடுவிடமான வித்தியாதர மகளிர் தங்கிய வீதிக்கு வந்தான் என்பது கூறப்பட்டது. அதற்கப்பாலும் அவன் செல்ல வேண்டிய இடங்கள் பல உண்டென்பது., உத்திசை என்பதால் சுட்டப்பட்டது. உகரச்சுட்டு எதிரில் உள்ளதையும் குறிக்கும். யக்ஷ வித்யாதர மாதர்களின் இயல்புகளையும் செயல்களையும் முன்னும் பின்னும் வைத்து. இடையிலே அரக்கியரின் இயல்புகளையும் செயல்களையும் விறித்துக் கூறிய நயம் நோக்கத்தக்கது. பத்தியின் உறையும் என்பதற்குப் பத்திபத்தியாக வாழும் என்றும், ஈரிரு கோடியீட்டம் என்பதைத் தெருவுடன் கூட்டியும் பொருள் உரைப்பர்.

(பி-ம்.) 1. இத்திறத்தரக்கர் மாதர்.

2. பத்தியி னுறையுந் தெய்வப்; பத்திய ருறையும் பத்திப் படை நெடுந்; பத்தியைக் கடந்து பின்னும் பத்துநூ ருன கோடி.

3. சித்தியர் தேவர் மாதர். (191

வேறு.

287. வளர்ந்த காதலின் மகளிர்கண்
மணிமுடி யரக்கனை வரக்காணுர்
தளர்ந்த சிந்தைத மிடையினும்
நுடங்கிட வுயிர்கொடு தடுமாறிக்
களந்த வாநெடுங் கருவியிற்
கைகளிற் செயிரியர் களைகண்ணு
அளந்த பாடல்வெவ் வரவுதஞ்
செவிபுக வலம்வர வுயிர்க்கின்றுர்.

மகளிர்கள் - விஞ்சை மகளிர்கள், வளர்ந்த காதலில் - (தம்மிடம் இராவணன் மீது உண்டாகி) வளர்ச்சியுற்ற காதலினுலே, மணி முடி அரக்கனை வர காணுர் - மணிகள் பதித்த முடிகளை அணிந்த இராவணனை வரக்காணுதவர்களாய், தளர்ந்த சிந்தை - தம்முடைய வருந்திய மனம், தம் இடையினும் நுடங்கிட - தம் இடையைக் காட்டிலும் நொய்மையாக நடுங்க, உயிர்கொடு தடுமாறி-உயிரை விடமாட்டாமல் (உடல், மனம், முதலியவற்றில்) தடுமாற்றம் அடைந்து, செயிரியர்-இசைப்பாணர்கள், களம் தவா-தம் மிடற்றேடு மாறுபடாத, நெடும் கருவியில்-நீண்ட

யாழாகிய இசைக்கருவியில், கலை கண்ணு - அதனைப்பற்றுக் கோடாகக் கொண்டு, கைகளில் அளந்த பாடல் - (இசையிலக்கணங்களிற் கூறிய அளவில்) கைகளால் அளந்தெடுத்துப் பாடிய பாடல்களாகிய, வெவ் அரவு - கொடிய நாகம், தம் செவி புக - தம் செவிகளுள் நுழைய, அலம் வர உயிர்க்கின்றார் - துன்பம் உண்டாகப் பெருமூச்சு விடுகின் றனர்.

செயிரியர் - யாழ்கொண்டு பாடும் பாணர்; கூத்தரும் ஆம்; 'செயி ரியர் மகர யாழின் தேம்பிழி தெய்வ கீதம்' (பால. கார்முகப். 40.); 'விறலிய ரோடு நல்யாழ்ச் செயிரியர்' (பால. எழுச்சிப். 61.). களம் - மிடறு; 284. கலைக்கண்ணால் அளந்த பாடல் என்பதும் பாடம். அளந்த பாடல் - தாளத்துக்கு ஒத்து அளவிட்ட பாடல் என்றும் கூறலாம். விரகத்தால் சோர்வடைந்தவர்க்கு இசை அரவு போன்றது; 'ஆவிசோர வெதும்பு மாதர்த மின்செவிப், பையரா நுழைகின்ற போன் றன பண்கனிந்தெழு பாடலே' (அயோத்யா. கைகேசிசூழ். 54); முன் இசையைத் தேள் என்றதும் (271) நோக்குக.

பி-ம். 1. வளர்ந்த காதலர் மகரிகை நெடுமுடி யரக்கனை.
2. உயிரொடு தடுமாறி.
3. கிளர்ந்த கானெடு கருவியிற்: செயிரியர் கலைக்கண்ணால்.
4. அலமர லுறுகின்றார். (192)

288. புரியு நன்னெறி முனிவரும்
புலவரும் புகலிலாப் பொறைகூர
எரியும் வெஞ்சினத் திகலடு
கொடுந்திறத் திராவணற் கெஞ்ஞான்றும்
பரியு நெஞ்சின ரிவரென
வயிர்த்தொரு பகையொடு பனித்திங்கள்
சொரியும் வெங்கதிர்ப் பணைமுலைக்
குவைசுட வமளியிற் றுடிக்கின்றார்.

பனி திங்கள் - குளிர்ந்த சந்திரன், 'இவர் - இம்மகளிர், எரியும் வெம் சினத்து இகல் அடு கொடும் திறத்து இராவணற்கு - நெருப்புப் போல் எரியும் கொடிய சினத்தினால் பகைவர்களைக் கொல்கின்ற கொடிய வலி மையுடைய இராவணனிடம், நன்னெறி புரியும் முனிவரும் புலவரும் புகல்இலா பொறை கூர - நன்னெறியிலேயே நிற்கும் இருடிகளும் தேவர் களும் வாய்விட்டுச் சொல்லமாட்டாது சகித்துக் கொண்டிருக்க, எஞ்ஞான்றும் பரியும் நெஞ்சினர் - (இவனிடம் இவர்கள்) எல்லா நாட் களிலும் அன்பு கொள்ளும் மனத்தையுடையவர்களாக இருக்கின்றனர்;' என - என்று, அயிர்த்து - சந்தேகித்து, ஒரு பகையொடும் - (அதன் காரணமாகத் தான் கொண்ட) ஒரு பகைமையுடன், சொரியும் வெம் கதிர் - வீசும் கொடிய கிரணங்கள், பணை முலை குவை சுட - தம் பருத்த

தனத்தொகுதிகளை எரிக்க, அமளியில் - தம் படுக்கைகளில் (இருந்து கொண்டு), துடிக்கின்றார் - (அவ்வெப்பத்தைத் தாங்கமாட்டாமல்) துடிக்கின்றார்கள்.

'இந்தக் கவியில், எல்லார்க்கும் பகையான இராவணனிடத்திலே இவர்கள் விருப்பமாயிருக்கலாமோ'ரென்று சந்திரன் வாட்டுவதொத்தது பொருள்' என்பது பழைய உரை. புலவர் - தேவர்; புலமையுடையோர் என்றும் கொள்ளலாம். காதலினால் வருந்தும் மகளிரைத் திங்கள் வருத்தும் என்பது கவிமரபு; 'போதச் சொரிந்ததே நீணிலா வென்னு நெருப்பு' (நள. *1.* 102.).

(பி-ம்.) 1. நன்னெடு முனிவரும்.
2. வெஞ்சமத் திகலடுந் திறல்புரி:
4. வெங்கதிர் துணைமுலைக் குவைசுடக் கொடிகளிற். (193)

289. *சிறுகு காலங்க ளூழிக ளாம்வகை திரிந்துசிந் தனைசிந்த*
*முறுகு காதலின் வேதனை யுழப்பவர் முயங்கிய முலைமுன்றில்*
*இறுகு சாந்தமு மெழுதிய குறிகளு மின்னுயிர்ப் பொறையீர*
*மறுகு வாட்கண்கள் சிவப்புற* நோக்கினர் மயங்கின ருயிர்க்கின்றார்.

(அவர்கள்), முறுகு காதலின்-முதிர்ந்த காதலினாலே, சிறுகு காலங்கள் - (இராவணனைப் பிரிந்து நிற்கும்) சிறிய அளவுள்ள பொழுதுகளும், ஊழிகள் ஆம் வகை - கற்பகாலம் போல நீண்டனவாகத் தோன்றும் படி, சிந்தனை திரிந்து சிந்த - மனம் மாறிச் சிதற, வேதனை உழப்பவர் - துன்பமுற்று வருந்துகிறவர்களாய், முயங்கிய முலை முன்றில் - முன் இராவணனைத் தழுவிக் கிடந்த முலைத்தடத்தில், இறுகு சாந்தமும், எழுதிய குறிகளும் - படிந்து இறுகிய சந்தனக் குழம்பும், இராவணன் செய்த நகக்குறிகளும், இன் உயிர்ப்பொறை ஈர - அம் மாதர்களின் இனிய உடலைப் பிளக்க, மறுகு வாள் கண்கள் சிவப்பு உற நோக்கினர் மயங்கினர் உயிர்க்கின்றார் - சுழல்கின்ற ஒளி வீசும் தம் கண்கள் சிவக்க நோக்கி, மயங்கி, பெருமூச்சு விடுகின்றார்கள்.

சிறுகு காலங்கள் ஊழிகள் ஆம்; 'ஊழியிற் பெரிதால் நாழிகை என்னும்' (திவ்ய. பெரியதிரு). 'முலை முன்றில் இறுகுஞ் சாந்தம்-இராவணனுடனே கூடின காலம் அவன் மார்பிற் சந்தனங்கள் முலை மத்தியிலே கிடக்கக் கண்டு' என்பது பழைய உரை. தலைவன் எழுதிய நகக்குறிகளைக் கண்ட தலைவியின் மனநிலை: கலிங்கத். கடை-திறப்பு. 27. எழுதிய குறிகள், பணி மகளிர் தமக்கு அலங்காரமாக எழுதிய தொய்யிற் குறிகளும் ஆம். வாட்கண் - வாள்போன்ற கண் எனினும் ஆம். உயிர்ப் பொறை - உடல்; 554.

(பி-ம்) 1. முயங்கினர் முலைமுன்றில். 3. எழுதுநற் குறிகளும்.
4. மறுகிவாட் கண்கள். (194)

## அநுமன் மண்டோதரியைக் காண்டல் 290-293

290. *ஆய விஞ்சையர் மடந்தைய*
*ருறைவிட மாறிரண் டமைகோடி*
*தூய மாளிகை நெடுந்தெருத்*
*துருவிப்போய்த் தொலைவின்மூன் றுலகிற்கும்*
*நாய கன்பெருங் கோயிலை*
*நண்ணுவான் கண்டன னளிர்திங்கள்*
*மாய நந்திய வாண்முகத்*
*தொருதனி மயன்மகண் மணிமாடம்.*

ஆய - இவ்வாறான, விஞ்சையர் மடந்தையர் - வித்தியாதர மகளிரின், உறைவிடம் - தங்குமிடங்களாகிய, ஆறிரண்டு கோடி தூய மாளிகை அமை - பன்னிரண்டு கோடி எண்ணுள்ள, தூய்மையான மாளிகைகள் அமைந்த, நெடும் தெரு துருவிப் போய் - நீண்ட தெருக்களையெல்லாம் துருவி ஆராய்ந்து கொண்டே சென்று, தொலைவு இல் - தோல்வியில்லாதவனும், மூன்று உலகிற்கும் நாயகன் - மூன்றுலகங்களுக்கும் தலைவனுமான இராவணனின், பெரும்கோயிலை - பெரிய அரண்மனையை, நண்ணுவான் - அணுகும் அநுமன், நளிர் திங்கள் மாய - குளிர்ந்த பூரணசந்திரனும் (தான் ஒப்பாகாமையால் அழிந்து) சோர்வு அடையும்படி, நந்திய - விளங்கிய, வாள் முகத்து - ஒளி தங்கிய முகத்தையுடைய, ஒரு தனி - ஒப்பற்ற, மயன் மகள் மணி மாடம் கண்டனன் - மயனின் மகளான மண்டோதரியின் அழகிய மாளிகையைக் கண்டான்.

மயன் - அசுரர் சிற்பி. மண்டோதரி: பால் ஆடை போன்ற மெல்லிய வயிற்றினள்: இது வடசொல். மந்தோதரி என்றும் அழைக்கப்படுவாள் ; மந்தோதரி - மெல்லிய வயிற்றை உடையவள்.

(பி-ம்.) 2. நெடுந்தெருத் துறந்துபோய்த் தொலைவின்மூன் றுலகுக்கு.
4. மயன்மகளுறைமாடம். (195)

291. *கண்டு கண்ணெடுங் கருத்தொடுங்*
*கடாயினன் காரணங் கடைநின்ற*
*துண்டு வேறொரு சிறப்பெங்க*
*ணுயகற் குயிரினு மினியாளைக்*
*கொண்டு போந்தவன் வைத்ததோ*
*ருறையுளாங் குலமணி மனைக்கெல்லாம்*
*விண்டு வின்றிரு மார்பினின்*
*மணியொத்த திதுவென வியப்புற்றான்.*

கண்டு - (அம்மாடத்தைப்) பார்த்து, கண்ணொடும் கருத்தொடும் கடாயினன் - (புறக்கருவியாகிய) கண்களாலும், (அகக்கருவியாகிய) நினைப்பாலும் அளந்து, 'வேறொரு சிறப்பு - (பிற மாளிகைகளுக்கு இல்லாத) பிறிதொரு தனிச்சிறப்பு, உண்டு - இம்மாளிகைக்கு உண்டு; குல மணி மனைக்கெல்லாம்-சிறந்த மணிகளாலான மாளிகைகளுக் கெல்லாம், இது விண்டுவின் திருமார்பினின் மணி ஒத்தது - இம்மாளிகை திருமாலின் அழகிய மார்பில் விளங்கும் கௌத்துவமணியைப் போலச் சிறந்து விளங்குகின்றது; காரணம் கடை நின்றது - (யான் இந்நகருக்கு வந்த) காரணம் முடிவை அடைந்துள்ளது; எங்கள் நாயகற்கு உயிரினும் இனியாளை - எங்கள் தலைவனான இராமபிரானுக்கு உயிரைக் காட்டிலும் இனியவளான பிராட்டியை, அவன் கொண்டு போந்து - அவ்விராவணன் கொண்டுவந்து, வைத்தது ஓர் உறையுள் ஆம் - வைத்துள்ள ஓர் இடம் இது ஆகும்;' என - என்றெண்ணி, வியப்புற்றான் - ஆச்சரியப்பட்டான்.

கவுத்துவம் மணிகளுள் எல்லாம் சிறப்புற்றது போல இம்மாடம் பிற மாடங்களுள், சிறந்திருப்பதைக் கண்டான். கௌத்துவத்தின் சிறப்பு: 103. கடாயினன், வினவி ஆராய்ந்தான் என்றும் கூறலாம். வியப்புற்றான் - சினந்தான் என்றும் கொள்ளலாம். 'சினமும் சினக்குறிப்பும் அதிசயமும் வியப்பே' (பிங்களம்).

(பி-ம்.) 1. கருத்தொடு முயிரொடுங் காரணங்.
2. உயிரினு முரியாளைக்.
3. வைத்ததோ ருறையுள்கொல்.
4. விண்டு வின்றட மார்பினின். (196)

292. அரம்பை மேனகை திலோத்தமை
யுருப்பசி யாதியா யவர்காமன்
சரம்பெய் தூணிபொற் றளிரடி
கரந்தொடச் சாமரை தடுமாறக்
கரும்பை யின்சுவை கற்பித்த
சொல்லியர் காமரங் கனிகின்ற
நரம்பி னின்னிசை செவிபுக
நாசியிற் கற்பக விரைநாற

(அங்கு), அரம்பை, மேனகை, திலோத்தமை, உருப்பசி ஆதியாயவர் - அரம்பை முதலியோரான தேவ கணிகைகள், காமன் சரம் பெய் தூணி - மன்மதன் தன் புஷ்ப பாணங்களை வைக்கும் அம்புப் புட்டிலாகிய கணைக்காலில் விளங்கும், பொன் தளிரடி - அழகிய (மாந்) தளிர் போன்ற அடிகளை; கரம் தொட - தங்கள் கைகளால் தொட்டு வருடவும், சாமரை தடுமாற - சாமரைகள் மாறிமாறி வீசவும், கரும்பை

இன் சுவை கற்பித்த சொல்லியர் - (தங்கள் சொற்களின் இனிமை யால்) கரும்புக்கு இனிய சுவையைக் கற்றுக்கொடுத்த இனிய சொற் களையுடைய மாதர்கள், காமரம் கனிகின்ற - காமரம் என்னும் பண் கனிந்து பொழிகின்ற, நரம்பின் இன் இசை செவி புக - (யாழ்) நரம்புகளி லிருந்து இனிய கீதத்தின் ஓசை செவிகளிலே நுழையவும், நாசியில் கற் பக விரை நாற-மூக்கிலிருந்து கற்பக மலரின் மணம் வெளிப்படவும், (துயிலுறும் தையலை (294) கண்டான்.,)

'காமன் சரம்பெய் தூணி; பால. அகலிகை. 10; 'ஆடுதசை பிறங் காது வற்றுது மயிரகன்று.' நீடாது குறுகாது நிகரமைந்த வளவினவாய்ச் சேடாவ நாழிகையிற் புடை திரண்டு தேனெய்பெய், வாடாத காம்பே போல் கணைக்காலின் வனப்பினவே' (சீவக. 176.). 'மன்மதன் அம்பறுத் தூணி போன்ற கணைக்கால்' என்பது *பழைய உரை*. காமரம் கனிதல்; அயோத்யா. நகர் நீங்கு. 201. காமரம், சீகாமரம் என்னும் பண். நாசியில் கற்பகம் நாறுதல் உத்தமமகளிர் இலக்கணம்.

(*பி-ம்.*) 1. ஆதி யாயவர் மாரன்; ஆதியர் மலர்க்காமன்.
2. தூணி போற்றளிரடி தாந்தொடச் சாமரை பணிமாற.
3. கரும்பை யுஞ்சுவை கைப்பித்த சொல்லியர்.
4. காமரங் கனியாழின்: நாசியாற் கற்பக. (196)

*293.* *விழைவு நீங்கிய மேன்மையோ*
*ராயினுங் கீழ்மையோர் வெகுள்வுற்றல்*
*பிழைகொ னன்மைகொல் பெறுவதென்*
*றையுறு பீழைபோற் பெருந்தென்றல்*
*உழையர் கூவப்புக் கேகெனப்*
*பெயர்வதோ ரூசலி னுளதாகும்*
*பழையம் யாமெனப் பண்பில*
*செய்வரோ பரிணதர் பயமோர்வார்.*

விழைவு நீங்கிய மேன்மையோர் ஆயினும் - பற்று நீங்கிய பெருங் குணமுடையோர்களே ஆனாலும், கீழ்மையோர் வெகுள்வுற்றல் பெறு வது பிழைகொல் நன்மைகொல் என்று - கீழ்க்குணமுடையோர் (தம் மீது) சினங்கொண்டால் (அதனுல்) விளைவது தீமையோ நன்மையோ என்று, ஐயுறு பீழை போல் - சந்தேகப்பட்டுத் துன்புறுவது போல, பெருந் தென்றல் - பெருமை மிக்க தென்றலானது, உழையர் கூவ - (மண்டோதரியின்) அருகிலுள்ள ஏவலாளர்கள் அழைக்க, புக்கு - அவ்வரண்மனையினுள் புகுந்து, ஏகு என - (திரும்பிப்) போ என்று அவர் கள் சொல்ல, பெயர்வது - திரும்பிச் செல்வதான, ஓர் ஊசலின் உள தாகும்-ஓர் ஊஞ்சலைப் போல் முன்னும் பின்னும் அசையும் தன்மைய தாகும்; பரிணதர் - சான்றோர், பயம் ஓர்வார் - அச்சத்தினுல் வரும் பயனை

ஆராயும் திறத்தையுடையவராய், யாம் பழையம் என - யாம் நீண்ட காலமாகப் பழகி வந்தவர் தாமே என்று, பண்பு இல - (இடத்திற்குத் தக்க) பண்பு இல்லாத செயல்களை, செய்வரோ - செய்வார்களோ? (செய்ய மாட்டார் என்றபடி.)

விழைவு - விருப்பம்; பற்று. கீழ்மையோர் வெகுளியினால் தமக்குக் கேடு வந்து விடாதென்றதை அறிந்தும், அதற்கு இடங் கொடாமல் வாழ்வதே 'மேலோர் இயல்பு என்பது கூறப்பட்டது. மேலோர் தென்றலுக்கும், கீழோர் உழையர்க்கும் உவமைகள். பரிணதர் - பக்குவமுற்ற அறிவினர்; சான்றோர்,; இச் சொல் பருணிதர் என்றும் வழங்கும்; பால மிதிலைக்காட்சிப். 106; உயுத்த. படைத்தலைவர்: 10. இச் செய்யுள் வேற்றுப் பொருள் 'வைப்பணி. 'பரிணதர் பழையம் யாமெனப் பண்பில செய்வரோ' என்பது, பழைய மெனக் கருதி 'பண்பல செய்யும், கெழுதகைமை கேடு தரும்' என்ற குறளை (700) அடியொற்றி வந்துள்ளமை காண்க. இவ்வாறே இராவணன் கட்டளைக்குத் தென்றல் அஞ்சுவதை; ஆரண்ய, மாரீசன்வதைப். 163-167. செய்யுட்களிற் காண்க. ஊசலின் உளதாகும் - போவதும் வருவதுமாக நிற்கும். பண்பில செய்தல்-இங்கு அறவும் பழகியிருந்தாலும் பிறர் மனையிலே தன் விருப்பப்படி புகுதல்,

**(பி-ம்.)** 1. மேன்மைய ராயினும்,
2. பிழையோர் பெருந்தென்றல்; பிழையாற் பெருந்தென்றல்.
4. பண்பல செய்வரோ பருணிதர் பயனோர்வார். (197)

## அநுமன் மண்டோதரியைப் பிராட்டி என்று மயங்கிப் பின்தெளிதல் 294-297

294. இன்ன தன்மையி னெரிமணி
விளக்கங்க ளெழில்கெடப் பொலிகின்ற
தன்ன தின்னொளி தழைப்புறத்
துயிலுறுந் தையலைத் தகைவில்லான்
அன்ன ளாகிய சானகி
யிவளென வயிர்த்தகத் தெழுவெந்தீ
துன்னு தன்னுயி ருடலொடு
சுடுவதோர் துயருழந் திவைசொன்னான்.

தகைவு இல்லான் - (எவராலும்) தடுக்கப்படுதல் இல்லாத அநுமன், இன்ன தன்மையின் - இப்படிப்பட்ட தன்மையிலே, எரி மணி விளக்கங்கள் எழில் கெட-ஒளி வீசுகின்ற மணிகளாலான விளக்குகள் தம் அழகு கெடும்படி, பொலிகின்றது அன்னது-ஒளி வீசுகின்றது என்று சொல்லும் படி, இன் ஒளி தழைப்பு உற துயிலுறும் தையலை - தன் இனிய மேனி

ஒளி தழைந்து விளங்கத் தூங்குகின்ற மரிடந்தையான மண்டோதை ையை, 'இவள்-இங்கு உறங்கும் இவள், அன்னள் ஆகிய-(நான் நாடி வந்த) அந்த, சானகி என - சானகியோ ?' என்று, அயிர்த்து - சந்தேகித்து, அகத்து எழு - தன் மனத்தில் எழுகின்ற, வெம் தீ - கொடிய நெருப்பு, தன் உடலொடு துன்னு உயிர் சுடுவது ஓர் துயர் - தன் உடலோடு பொருந்திய உயிரையும் சுடுவதான ஒப்பற்ற துயரத்தில், உழந்து - வீழ்ந்து வருந்தி, இவை சொன்னன் - பின்வரும் சொற்களைக் கூறினன்.

மகளிர் மேனி ஒளியின் சிறப்பு; 259. எதனாலும் அறிவு தடையுறாத அநுமன் இந்நிலையில் கலங்கினன் என்பது கூறத் தகைவில்லான் அயிர்த்தான் எனப்பட்டது. சானகி - சனகன் மகள் : தத்திதாந்தநாமம்.

(பி-ம்.) 1. எழில்மணி விளக்கங்க ளியல்கெடப்.
2. தழைவுறத் துயில்கொளுந்.
4. துன்னு மாருயி ருடலொடு; துன்னுயிர்ப்பு யிருடலொடுஞ். (199)

295. *எற்பு வான்றொடர் யாக்கையாற்*
*பெறும்பய னிழந்தெனெ னிதுநிற்க*
*அற்பு வான்றளை யிற்பிறப்*
*பதனொடு மிகந்துதன் னருந்தெய்வக்*
*கற்பு நீங்கிய கனங்குழை*
*யிவளெனிற் காகுத்தன் புகழோடும்*
*பொற்பும் யானுமிவ் விலங்கையு*
*மரக்கரும் பொன்றுது மின்றென்றான்.*

(இக்காட்சியைக் கண்டதால்), 'என்பு தொடர் வான் யாக்கையால் - எலும்புகளின் பிணிப்பினால் அமைந்த சிறந்த இவ்வுடலை யெடுத்தமையால், பெறும் பயன் இழந்தனென் - நான் பெற வேண்டிய பயனையும் பெறாதவனானேன்;, இது நிற்க - இக்குறை இருக்கட்டும்; இ கனங்குழை - கனவிய குழைகளையுடைய இம்மாது, அன்பு வான் தளை அதனொடு இல்பிறப்பும் - அன்பு என்பதான சிறந்த பிணிப்பையும் நற்குடிப் பிறப்பையும், இகந்து - புறக்கணித்து, தன் அரும் தெய்வ கற்பும் நீங்கியவள் எனின் - தன் அரும் தெய்வத் தன்மை வாய்ந்த கற்பினின்றும் பிறழ்ந்தாள் என்றால், காகுத்தன் புகழோடும் பொற்பும் - இராமபிரானின் புகழும் ஒளியும், யானும், - (அவனடியவனென்ற) யானும், இவ் இலங்கையும் அரக்கரும்-(இக்கொடுமைக்குக் காரணமான) இந்த இலங்கை நகரும் (இங்கு வாழும்) அரக்கர்களும், இன்று - இப்பொழுதே, பொன்றுதும் - அழிவோம்'; என்றான் - என்று சொல்லிக் கொண்டான்.

இச் செய்யுள் இராவணனுக்குரிய அரண்மனையுள் உத்தம லக்ஷணங்கள் பொருந்திய ஒரு மாது உறங்கிக் கொண்டிருப்பதை அநுமன் கண்டு, அவள், தான் நாடி வந்த பிராட்டியேயாமென்றும், அப்பிராட்டி மதிமயங்கித் தவறிழைத்து விட்டாளென்றும் எண்ணி வருந்தினன் என்று கூறும். அடுத்த செய்யுளோ, அவள் அங்க லக்ஷணங்களால் மானிட மாது அல்லளென்று உணர்ந்து, அவள் முகத்தில் தன் காதலனைப் பிரிந்த துயர் காணப் படாமையால், அவள் சீதையல்லள் என்றும் அவன் முடிவு கட்டினன் என்று கூறும். முதனூலில் இராவணன் இல்லத்தில் அநுமன் கண்ட மாதினை, அவள் சீதையே யென்று கருதித் தான்வந்த காரியம் வெற்றியுற்றது எனக் கொண்டு, பின்பு ஆராய்ந்து, அவள் முகத்தில் துயரம் காணாமையால் சீதையல்லள் என்ற முடிவுக்கு வந்தான் என்றே கூறப் பெற்றுள்ளது. அவள் தவறிழைத்தாள் என்று அநுமன் கருதியதாக முதனூலில் கூறப்பெறவில்லை.

(பி-ம்.) 1. யாக்கையாற் பெரும்பயன்; இகழ்ந்தனென்.
2. இழந்தனள்; இழந்தருந் ததிபோலும்; அழிந்து மற்றருந் தெய்வக்
3. கற்பு நீங்கினள் கனங்குழை.
4. பொன்றுவ தின்றென்றான். (200)

296. மானு யர்த்திரு வடிவின
ளவளிவண் மாறுகொண் டனள்கூறில்
தானி யக்கியோ தானவர்
தையலோ வையுறுந் தகையாளுள்
கானு யிர்த்ததா ரிராமன்மே
னோக்கிய காதலொன் றதுகாணேன்
மீனு யர்த்தவன் மருங்குரு
நிற்குமே நினைந்தது மிகையென்றான்.

(அநுமன் பின்னும் ஆராய்ந்து), 'அவள் - அப்பிராட்டி, மானுயர் திருவடிவினள் - மானிட மகளிரின் அழகிய வடிவினையுடையவள்; இவள் - (இங்குக் காணப்படும்) இவளோ, மாறுகொண்டனள் - (அம் மானிட வடிவினின்றும்) மாறான வடிவைக் கொண்டிருக்கிறாள்; கூறில் - (ஆராய்ந்து) கூறப்புகுந்தால், தான் - இவள், இயக்கியோ, தானவர் தையலோ (என) - இயக்க குலமகளோ, அசுரகுல மகளோ என்று, ஐயுறும் தகையாளுள் - சந்தேகிக்கும் தன்மையளா யிருக்கின்றாள்; (இவளிடம்) கான் உயிர்த்த தார் இராமன் மேல் நோக்கிய காதல் ஒன்று அது காணேன் - நறுமணம் கமழும் மாலையையுடைய இராமன் மீது

உற்ற காதலின் (விரக) நிலை எதையும் காணேன்; மீன் உயர்த்தவன் - (இவள் சீதையாயின்), மீன் கொடி பிடித்தவனான மன்மதன், மருங்கு உறு நிற்குமே-இவளிடம் அணுகாது நிற்பனே? (இராமனை விட்டுப் பிரிந்ததனால் உண்டாகும் விரகாவத்தை இவளிடம் காணப் பெறவில்லையே என்பதாம்). நினைந்தது மிகை-(இவளைச் சானகி என்று) நான் எண்ணியது உண்மைக்கு விஞ்சியது' என்றான் - என்று உணர்ந்தான்.

வடிவு நோக்கி, பிறப்பு அறிய முயலுதலால் அநுமன் சாமுத்ரிகா லக்ஷணம் அறிந்தவன் என்பதாகிறது. கான்-மணம். 'கான்பொழிற்றழீஇய வடகரை' (மதுரைக். 337. நச். உரை.) 'மீனுயர்த்தவன் மருங்குறு நிற்குமே - மன்மதன் வந்து வருத்தவில்லை' என்பது பழைய உரை. முன் செய்யுளில் சானகி கற்புநீங்கிய நிலையினளாக ஆகிவிட்டனளோ என்றையுற்று, மேலும் ஆராய்ந்து, அவள் சானகி யல்லள் என்று துணிகின்றான். மிகை கண்டு வருந்துதல் இங்குக் காணப்படும்.

(பி-ம்.) 1. திரு வடிவு மின்னவள் மாறு; திருவடிவினள் வழிவழி.
3. கானு யர்த்ததா ரிராமன்மே னேக்கிய காதல் காரிகை யார்க்கு.
4. மீனு யர்த்தவன் மருங்குதான் மீளுமோ நினைந்தது மிகையென்றான். (201)

297. இலக்க ணங்களுஞ் சிலவுள
வென்னினு மெல்லைசென் றிறுக்கில்லா
அலக்க ணெய்துவ தணியதுண்
டென்றெடுத் தறைகின்ற திவள்யாக்கை
மலர்க்க ருங்குழல் சோர்ந்துவாய்
வெரீஇச்சில மாற்றங்கள் பறைகின்றாள்
உலக்கு மிங்கிவள் கணவனு
மழிவுமிவ் வியனகர்க் குளதென்றான்.

(மேலும் அவன், மண்டோதரியைப் பார்த்து), 'சில இலக்கணங்களும் உள - (இவள் பால் உத்தம மகளிர்க்குரிய சிறந்த) சில இலக்கணங்களும் இருக்கின்றன; என்னினும்-என்றாலும், இவள் யாக்கை-இவளுடைய உடல், எல்லை சென்று இறுக்கு இல்லா அலக்கண் எய்துவது அணியது உண்டு என்று எடுத்து அறைகின்றது - நெடுந்தூரம் சென்றும் தங்குதலில்லாத (முடிவில்லாத) துன்பத்தை இவள் அடைவது அண்மையில் உளது என்பதை எடுத்துரைக்கின்றது; இவள் மலர் கருங்குழல் சோர்ந்து - இவள் மலர் சூடிய கரிய கூந்தல் அவிழ்ந்து, வாய் வெரீஇ - வாய் குழறி, சில மாற்றங்கள் - சில வார்த்தைகளை, பறைகின்றாள் - (உறக்கத்திலே) பேசுகின்றாள்; இவள் கணவனும் இங்கு உலக்கும் - இவளுடைய கணவனும் இங்கு இறப்பான்; இ வியன் நகர்க்கும்

அழிவு உளது - இந்த அகன்ற நகருக்கும் நாசம் (அண்மையில்) இருக்கிறது;' என்றான் - என்று சொல்லிக்கொண்டான்.

பறைதல் - சொல்லுதல்: மலைநாட்டு வழக்கு.

(பி-ம்.) 1. சென் றுறுகில்லா.
4. உள்ளமு மழிவுமிவ் வுயர்நகர்க்.

## அநுமன் இராவணன் மனையிற் புகுதல் 298-300

298. என்று ணர்ந்துநின் றேமுறு
நினைவின னிற்கவித் திறனென்னாப்
பின்று சிந்தையன் பெயர்ந்தன
னம்மனை பிற்படப் பெருமேருக்
குன்று யர்ந்ததற் கையுற
வோங்கிய கொற்றத்து மணிக்கோயில்
சென்று புக்கன னிராவணற்
கெடுப்பருங் கிரியெனத் திரடோளான்.

இராவணற்கு எடுப்ப அரும் கிரி என திரள் தோளான்-இராவணன் பெயர்த்தெடுப்பதற்கு முடியாத மலை என்று சொல்லத்தக்கவாறு திரண்ட தோள்களையுடைய அநுமன், என்று - (இவள் சீதையல்லள் என்றும், இவளுக்கும் இவள் கணவனுக்கும் இவள் ஊருக்கும் அலக்கண் வரும்) என்றும், உணர்ந்து நின்று - (உண்மையை) அறிந்து நின்று, ஏம் உறு நினைவினன் - இன்ப முற்ற எண்ணத்தை உடையவனாய், 'இ திறன் நிற்க என்னா - இந்தச் செய்தி நிற்கட்டும்' என்று, பின்று சிந்தையன் - மீண்ட மனத்தினனாய், அ மனை பிற்பட பெயர்ந்தனன் - அந்த மண்டோதரியின் மாடம் பின்னே செல்ல, முன்னே சென்றான்; (அவன் முன்னே நின்ற) பெருமேரு குன்று உயர்ந்ததற்கு ஐயுற ஓங்கிய - பெரிய மேருமலை உயர்ந்து (மாளிகையாகிவிட்டதோ) என்று ஐயுறும்படி உயர்ந்த, கொற்றத்து மணி கோயில்- இராவணனுடைய வெற்றி மிகுந்ததும் மணிகளால் அமைந்ததுமான அரண்மனையை, சென்று - அடைந்து, புக்கனன் - நுழைந்தான்.

ஏம் - இன்பம்; 'ஏமுற வினிதி னேம்பி' (உயுத்த. விபீடணனடைக். 114.): சீதை அல்லள் என்றதினால் உண்டான இன்பம். பின்றுதல் - பிற்படுதல்; மீளுதல்: உயுத்த. விபீடணனடைக். 109: கும்பகன்னன். 35.

(பி-ம்:) 1. ஏமுறு மிந்நிலை நிற்க; ஏமுறு நிலையினி னிற்க.
2. பெயர்ந்தன னெடுமனை பிற்படப்.
3. குன்று குன்றிய தகையுற; குன்று யர்ந்தபோற் றகையுற: குன்று யர்ந்ததென் றையுற.
4. கிரியன்ன திரடோளான்.

299. நிலந்து டித்தன நெடுவரை
துடித்தன நிருதர்தங் குலமாதர்
பொலந்து டித்தநுண் மருங்குல்போற்
கண்களும் புருவமும் பொற்றோளும்
வலந்து டித்தன மாதிரந்
துடித்தன தடித்தின்றி மதிவானம்
கலந்தி டித்தன வெடித்தன
பூரண மங்கலக் கலசங்கள்.

(அநுமன் இராவணன் அரண்மனையினுள் புகுந்த போது), நிலம் துடித்தன - இலங்கையில் பல இடங்களும் துடித்தன; நெடு வரை துடித்தன - (அங்குள்ள) நீண்ட மலைகள் துடித்தன; நிருதர் தம் குல மாதர் பொலம் துடித்த நுண் மருங்குல் - அரக்கர்களின் சிறப்புற்ற மாதர்களின் அழகு விம்மிய நுண்ணிய உடம்புகளில், கண்களும் புருவமும் பொன் தோளும் வலம் துடித்தன - கண்கள், புருவங்கள், அழகிய தோள்கள் ஆகியவற்றுள் வலப்புறம் உள்ளவை துடித்தன; மாதிரம் துடித்தன - திக்குக்களெல்லாம் துடித்தன; மதிவானம் - சந்திரன் விளங்கும் வானத்திலுள்ள மேகங்கள், கலந்து - ஒன்றோடொன்று கூடி, தடித்து இன்றி - மின்னலில்லாமல், இடித்தன - இடியை உண்டாக்கின; மங்கல பூரண கலசங்கள் வெடித்தன - மங்களகரமாக வைக்கப் பெற்ற நீர் நிறைந்த குடங்கள் தாமே பிளந்தன. போல்: அசை.

இவை யாவும் அநுமன் இராவணன் மனையுட் புகுந்தபோது உண்டான உற்பாதங்கள். நுண் மருங்குல் போல என்பதற்கு நுண்மருங்குலும் என்றும் பொருள்கொள்க. மருங்குல் - உடம்பு, பெரும்பாண். 352 நச். உரை; இடையும் ஆம். மாதர்க்கு வலப்புறம் துடித்தல் தீமை காட்டும் குறியாம். 363.

(பி-ம்,) 1. நெடுவரை பொடித்தன.
2. பொலந்து டித்தன மருங்குல்போல். 3. நெடுவானம். (204)

300. புக்கு நின்றுதன் புலன்கொள
நோக்கினன் பொருவருந் திருவுள்ளம்
நெக்கு நின்றன னீங்குமந்
தோவிந்த நெடுநகர்த் திருவென்று
எக்கு லங்களில் யாவரே
யாயினு மிருவினை யெல்லார்க்கும்
ஒக்கு மூழ்முறை யல்லது
வலியதொன் றில்லென வுணர்வுற்றான்.

(அநுமன்), புக்கு நின்று - (அவ்விராவணன் மாளிகையிற்) புகுந்து நின்று, தன் புலன் கொள நோக்கினன் - தன் அறிவு பதிய அவனை (உற்றுப்) பார்த்து, பொருவு அரும் திரு உள்ளம் நெக்கு நின்றனன் - ஒப்பில்லாத சிறப்பு வாய்ந்த தன் மனம் உருகி நின்று, 'அந்தோ. இந்த நெடு நகர் திரு நீங்கும் - ஐயோ இந்த நீண்ட நகரின் செல்வங்கள் யாவும் இவன் பொருட்டு அழியுமே!' என்னு - என்று இரங்கி, 'எக்குலங்களில் யாவரே ஆயினும் இருவினை எல்லார்க்கும் ஒக்கும் - எக்குலத்து எத்தகையரே ஆனாலும் நல்வினை தீவினைகள் யாவர்க்கும் ஒருவிதமாகவே பயனளிக்கும்; ஊழ் முறை அல்லது வலியது ஒன்று இல் - விதி முறை என்ற ஒன்றினைவிட வலிமையுடையது பிறிதொன்றும் இல்லை;' என உணர்வுற்றான் - என்றெண்ணினான்.

கும்பகன்னன் முதலியோரைக் கண்டு சினந்த அநுமன், இராவணனைக் கண்டு அவன் தீமையால், சிறப்பு வாய்ந்த அந்நகர் அழியுமே என்ற இரக்கமே முதலிற் கொண்டமையை எண்ணி,'பொருவரும் திருவுள்ளம்' என்று அநுமனின் உள்ளப் பெருமை விளக்கப் பெற்றது. ஊழ்முறையல்லது வலியதொன்றில்லை; ஒப்பு: குறள். 380.

(பி-ம்.) 1. புலன்கொடு நோக்கினன்.
2. நீங்குமன்றே. 4. எல்லோர்க்கும். (205)

## அநுமன் இராவணனைக் காண்டல் 301-312.

*301.* நூற்பெ ருங்கட னுணங்கிய
கேள்வியா னோக்கினன் மறங்கூரும்
வேற்பெ ரும்படை புடைபரந்
தீண்டிய வெள்ளிடை வியன்கோயில்
பாற்பெ ருங்கடற் பன்மணிப்
பஃறலைப் பாப்பிடைப் படர்வேலை
மாற்கருங் கடல் வதிந்ததே
யனையதோர் வனப்பினிற் றுயில்வானை.

பெருங் கடல் நூல் நுணங்கிய கேள்வியான் - பெரிய கடல் போன்று விரிந்த நூல்களையெல்லாம் நுணுகிக் கேட்டறிந்த அநுமன், மறம் கூரும் வேல் பெரும்படை புடை பரந்து ஈண்டிய - வீரம் மிகுந்த அளவுமிக்க வேற்படையாளர்கள் பக்கங்களில் சூழ்ந்து நெருங்கிய, வெள்ளிடை - வெளிப்புறங்களையுடைய, வியன் கோயில் - பெரிய அரண்மனையினிடத்து, பெரும் பால் கடல் - பெரிய பாற்கடலிலே, பல் மணி பல் தலை பாப்பு இடை - பல இரத்தினங்களைக் கொண்ட பல படங்களையுடைய பாம்பின் மீது, படர் வேலை மால் கருங்கடல் - படர்ந்த கரை

களையுடைய பெரிய கருங்கடல் ஒன்று, வதிந்ததே அனையது ஓர் வனப்பினில் துயில்வானை - தங்கியிருந்தது போன்ற ஓர் அழகுடன் தூங்குகின்ற இராவணனை, நோக்கினன் - பார்த்தான்,

நோக்கினன் என்பதற்கு நோக்கின அநுமன் என்று பொருள் கொள்வாரும் உளர்; நூல் கடல்: 'நூற்கட லன்னவர் சொற்கடல் நோக்கி' (பால. கடிமணப். 99.) நுணங்கிய கேள்வி: 'நுணங்கிய கேள்வியர்' (குறள்,419). மால் கருங்கடல் என்பதற்குத் திருமாலாகிய கரிய கடல் என்றும் பொருள் கொள்வர். இராவணன் கருங்கடலை ஒத்தது; 1084. கடல் கடல்மீது வதிதல்; 76.

(பி-ம்.) 1. மறங்கூறும். 2. வேற்பெ ருங்கடல்.
3. பஃறிரைப் பரப்பிடை; பரப்புடை.
4. மாற்பெ ருங்கடல்; வீரிந்ததே யனையதோர்: வனப்பினன். (206)

302. குழவி ஞாயிறு குன்றிவர்ந்
தனையன குருமணி நெடுமோலி
இழைக ளோடுநின் றிளவெயி
லெறித்திட விரவெனும் பொருள்வீய
முழைகொண் மேருவின் முகட்டிடைக்
கனகனை முருக்கிய முரட்சீயம்
தழைகொ டோளொடுந் தலைபல
பரப்பிமுன் றுயில்வதோர் தகையானை

குழவி ஞாயிறு - இளஞ்சூரியன், குன்று இவர்ந்தனையன - உதயகிரியின் மேல் ஏறினாற் போன்றனவாகிய, குருமணி நெடு மோலி - நல்ல நிறத்தையுடைய இரத்தினங்கள் பதிப்பிக்கப் பெற்ற பெரிய கிரீடங்கள், இழைகளோடு நின்று - அணிகலங்களோடு கூடி, இளவெயில் எறித்திட - மெல்லிய ஒளி வீசவும், இரவு எனும் பொருள் வீய - (அவ்வாறு வீசுதலால்)இரவு என்று சொல்லப்படும் பொருள் அழியவும்,முழைகொள் மேருவின் முகட்டிடை-குகைகளைக் கொண்ட மேருமலையின் உச்சியில், கனகனை-இரணியனை,முருக்கிய முரண் சீயம்-கொன்ற வலிமை கொண்ட நரசிம்ம மூர்த்தி, முன்-முன்னே, தழைகொள் தோளொடும்-மிகுதியான பல தோள்களோடும், பல தலை பரப்பி - பல தலைகளையும் பரப்பிக் கொண்டு, துயில்வதோர் தகையானை - உறங்குவது போன்ற ஒரு தன்மையையுடையவனை,

இச்செய்யுள் முதல் 313 ஆம் செய்யுள் வரை ஒரு தொடர்; 313 இல் உள்ள கண்டனன் என்பதனுடன் முடியும். குழவி ஞாயிறு இளவெயி லெறித்திடுவதுபோல் மோலி இழைகளோடு நின்று எறித்திட என்க. பல என்பதனைத் தோள்களோடும் கூட்டுக. நரசிங்கம் தோன்றினமை; உயுத்த. இரணியன்வதைப். 130-134.

(பி-ம்.) 1. குன்றில்வந் தனையன குருமணி.
3. மேருவின் பொகுட்டிடை. (207)

303. குழந்தை வெண்மதிக் குடுமிய
னெடுவரை குலுக்கிய குலத்தோளைக்
கழிந்து புக்கிடை கரந்தன
வனங்கவேள் கடுங்கணை பலபாய
உழந்த வெஞ்சமத் துயர்திசை
யானையி னொளிர்மருப் புற்றிற்ற
பழந்த ழும்பினுக் கிடையிடை
யேசில பசும்புண்க ளசும்பூற

குழந்தை வெண்மதி குடுமியன் - இளமையான வெண்மதியைத் தன் சடையில் கொண்ட சிவபெருமானுக்குரிய, நெடுவரை - உயர்ந்த மலையான கயிலாயத்தை, குலுக்கிய - குலுக்கியசைத்த, குலத்தோளை- சிறந்த தோள்களை, கழிந்து - கடந்து, புக்கு - உடலினுட் புகுந்து, இடை கரந்தன - அவ்வுடலின் இடைகளிலே ஒளித்தனவான, அனங்க வேள் பல கடுங்கணை - மன்மதனுடைய கொடிய பல அம்புகள், பாய - ஊடுருவிச் செல்லவும், வெம் சமத்து உழந்த - கொடிய போரிலே வருந்திய, திசை உயர் யானையின் - திக்குக்களைக் காவல் புரிந்திருந்த உயர்ந்த யானைகளின், ஒளிர் மருப்பு உற்று-ஒளி பொருந்திய கொம்புகள் பதிந்து, இற்ற - ஒடிந்த, பழம் தழும்பினுக்கு இடையிடையே - பழைமையான தழும்புகளுக்கு இடைகளில், சில பசும்புண்கள் - சில புதிய புண்கள், அசும்பு ஊற - குருதி கசிந்து கொண்டிருக்கவும்,

அசும்பூற என்பதனை, அடுத்த செய்யுளில் வரும் உயிர்த்துயிர் தேய்வானை என்பதனோடு கூட்டுக. குழந்தை வெண்மதி - இளம்பிறை. குடுமி - சடையுச்சி. அனங்கவேள் - மன்மதன். அவன் கணையைக் கடுங்கணை என்றது, வரை குலுக்கிய குலத்தோளைக் கழிந்தமையால். இராவணன் மன்மதன் கணையால் அடியுண்டது: **உயுத்த-இராவணன்: 244.** திசை யானையின் மருப்பு இற்றது: **உயுத்த. இராவணன். 212.**

(பி-ம்.) 2. கரந்தன வனங்கன்வெங் 3. ஒளிமருப்பு. (208)

304. ஆய பொற்றலத் தாய்வளை
யரம்பைய ராயிர ரணிநின்று
தூய பொற்கவ ரித்திர
ளியக்கிடச் சுழிபடு பசுங்காற்றின்
வீய கற்பகத் தேன்றுளி
விராயன வீழ்தொறு நெடுமேனி
தீய நற்றொடிச் சீதையை
நினைதொறு முயிர்த்துயிர் தேய்வானை

பொன் தலத்து ஆய - பொன்னகரமான தேவநகரத்து உள்ள, ஆய் வளை அரம்பையர் ஆயிரர் - ஆராய்ந்தெடுத்த வளையல்களணிந்த தேவ மாதர் ஆயிரம் பேர்கள், அணி நின்று-அவன் அருகிலே நின்று, தூய பொற் கவரித்திரள் இயக்கிட - தூய்மையான பொற்பிடியிட்ட சாமரைகள் பலவற்றையும் வீச, சுழிபடு பசுங்காற்றின் - (அதனாலே) சுழித்து எழுகிற இளங் காற்றினால், கற்பக வீய - கற்பக மலர்களிலுள்ள, தேன் துளி விராயன வீழ் தொறும் - தேன் துளிகள் விரவி விழுந்தோறும், நெடு மேனி தீய - அவனுடைய பெரிய உடல் தீயவும், நல் தொடி சீதையை நினைதொறும் - நல்ல வளையலணிந்த சீதையை அவன் நினைக்குந்தோறும், உயிர்த்து - பெருமூச்சுவிட்டு, உயிர் தேய்வானை - தன் உயிர் தேய்வுறு வானை,

அணிநின்று - வரிசையாக நின்று என்னலும் ஆம். உயிர்த்து - தீய்ந்த மேனி உயிர்பெற்று என்றும் கூறலாம், தீய்தல் உயிர்த்தல் ஆகிய இரு எதிரிடைச் செயல்கள் ஒரே இடத்தில் ஒரே காலத்தில் நிகழ்வனவாகக் கூறுதல் ஒரு நயம்; ஒப்பு. 337.

(பி-ம்.) 1. ஆயினர் பலர்நின்றார்; ஆயிர ரயல்நின்று.
2. தூய வுக்கங்க ளியக்கினர் துயில்வரச் சூழ்பெரும் பசுங்காற்றின்.
3. வீய கற்பகத் தேன்றுளி வீரன்மேல் வீழ்தொறும். (209)

305 சாந்த ளாவிய கலவைமேற்
றவழ்வுறு தண்டமிழ்ப் பசுந்தென்றல்
ஏந்து காமவெங் கனலினுக்
குமிழதட் டுருத்தியி னுயிர்ப்பேறக்
காந்தண் மென்விரற் (சனகிமேன்
மனமுதற் கரணங்கள் கடிதோடத்
பாந்த ணீங்கிய முழையெனக்
குழைவுறு நெஞ்சுபாழ் பட்டானை

கலவை அளாவிய சாந்துமேல் - பலவகைக் கலவைகள் கலந்தசந் தனப் பூச்சின் மீது, தவழ்வுறு - மெதுவாக வீசுகின்ற, தண்தமிழ் பசும் தென்றல் - குளிர்ந்த இனிய இளம் தென்றற்காற்றானது, ஏந்து காம வெம் கனலினுக்கு - (இராவணன்) கொண்டுள்ள காமமாகிய கொடிய நெருப்புக்கு, உமிழ் அதள் துருத்தியின் உயிர்ப்பு - புசுத்துகிற தோல் துருத்தியின் காற்றாக, ஏற - (இந்நெருப்பின்மீது) ஏற, மனம் முதல் கர ணங்கள் - அவனுடைய மனம் முதலான அந்தக்கரணங்கள், காந்தள் மென் விரல் சனகி மேல் கடிது ஒட - செங்காந்தளின் அரும்பு போன்ற விரல்களையுடைய சானகியின் பால் விரைவாகச் செல்ல, பாந்தள் நீங்கிய

முழை என - புாம்பு நீங்கிய பொந்துபோல, குழைவுறு நெஞ்சு - தன் நெகிழ்ச்சி பெற்ற உள்ளம், பாழ் பட்டானை - வலிகெட்டு அழிந்துபோனவனை,

தமிழ் - இனிமை: 'இனிமையும் நீர்மையுந் தமிழெனலாகும்' (*பிங்கள நிகண்டு*). தமிழ் தென்றல் - தமிழுடன் பிறந்த தென்றல் என்றும் கூறலாம். துருத்தி - கொல்லுலைத் துருத்தி. அதள்-தோல். மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்பன அந்தக் கரணங்கள்; அவற்றின் கொடுமை நோக்கிப் பாந்தள் என்றார்.

(பி.-ம்.) 1. தவழ்புயற் றண்டமிழ்ப். 2. ஏய்ந்த காமவெங் கனல்; ஏந்து காலவெங் கனல்: வேய்ந்த வெங் கனலினுக் கிருமடி: கனலினுக் கிருமடி. துருத்தியி; கனலுயிர்த் திருமடி துருத்தியி. 3. சனகிபான் மனமுதல். (210)

வேறு

306. *கொண்டபே ரூக்க மூளத் திசைதொறுங் குறித்து மேனாள்*
*மண்டிய செருவின் மானத் தோள்களால் வாரி வாரி*
*உண்டது தெவிட்டிப் பேழ்வாய்க் கடைகடோ றொழுகிப் பாயும்*
*அண்டர்தம் புகழிற் றோன்றும் வெள்ளெயிற் றமைதி யானை*

கொண்ட பேர் ஊக்கம் மூள - தான் இயற்கையாகக் கொண்ட மனக்கிளர்ச்சி மேலும் மிக, மேல் நாள் - முன்பு, திசைதொறும் குறித்து- திக்கு விஜயம்(எல்லைகளின் வெற்றி)செய்ய எண்ணி, மண்டிய செருவின் -அடர்த்து வந்த போரில், மான தோள்களால் - தன் பெரிய (இருபது) கைகளாலும், வாரி வாரி உண்டது - வாரி வாரி எடுத்து வாயிலிட்டது, பேழ்வாய் தெவிட்டி - தன் பெரிய வாயில் தேக்கெடுத்து, கடைகள் தோறும் ஒழுகி பாயும் அண்டர்தம் புகழில் - தன் கடைவாய் தோறும் ஒழுகி வெளியே ஓடும் தேவர்களின் புகழினைப் போல, தோன்றும் - காணப்படும், வெள் எயிற்று அமைதியானை - வெண்மையான (கோரப்) பற்களின் தோற்றத்தையுடையவனை,

தோள் - கை, *சீவக*, 10 நச். உரை. புகழ் - வெண்மைநிறமுடையது; 141. ஆம் செய்யுளின் அடிக்குறிப்பைக் காண்க. இராவணனுடைய கடை வாய்ப்பற்கள் அவன் உண்ட தேவர்களுடைய புகழ்தெவிட்டி வாயின் இருபுறமும் வழிகின்றது என்று சொல்லும்படி கடையெயிறுகள் வெண்மையாய் விளங்கின என்பதாம்.

(பி-ம்.) 1. கொண்ட பேருறக்க மூள. 2. மண்டிய பெரும்போர் தன்னில்: செருவின் வீரத்தோள். (211)

307. *வெள்ளிவெண் சேக்கை வெந்து பொறியெழ வெதும்பு மேனி*
*புள்ளிவெண் மொக்கு ளென்னப் பொடித்துவேர் கொதித்துப் பொங்கக்*
*கள்ளவிழ் மாலை தும்பி வண்டொடுங் கரிந்து சாம்ப*
*ஒள்ளிய மாலை தீய வுயிர்க்கின்ற வுயிர்ப்பி னானை*

வெள்ளி வெண் சேக்கை - அவன் படுத்திருந்த வெள்ளிபோல் வெளுத்த படுக்கை, வெந்து பொறி எழ - (அவன் உடல் வெப்பத்தால்) வெந்து தீப்பொறி எழ, வெதும்பும் மேனி - அவனுடைய வெந்து நிற்கும் உடலிலே, வேர் - வியர்வை, புள்ளி வெண் மொக்குள் என்ன - புள்ளி புள்ளியாக, வெள்ளைக் கொப்புளங்கள் என்னும்படி, பொடித்து - அரும்பி, கொதித்துப் பொங்க - வெப்பமாகிப் பொங்கி எழ, (அதனால்), கள் அவிழ் மாலை - தேனைச் சொரியும் பூமாலை, தும்பி, வண்டொடும் கரிந்து சாம்ப - (தம்மீது மொய்க்கும்) தும்பி, வண்டு இவற்றோடு தீய்ந்து அழிய, ஒள்ளியமாலை தீய - ஒளிவீசும் முத்துமாலை வெந்து போக, உயிர்க்கின்ற உயிர்ப்பினானை - விடுகின்ற பெருமூச்சு எறிபவனை,

தும்பி, வண்டு என்பன வண்டின் பேதங்கள். தும்பி வண்டு என்று கொண்டு தும்பியையுடைய வண்டு என்று கூறுவாரும் உளர்; தும்பி - வண்டின் தேன் நுகரும் கருவி.

*(பி-ம்.)* 1. வெள்ளிவெண் செச்சை வேய்ந்து பொடி.
2. பொடித்தது கொதித்துப் பொங்க.
3. மாலைத் தும்பி.
4. ஒள்ளிணர்த் தொங்கல் தீய. (212)

308. *தேவிய னேமி யானிற் சிந்தைமெய்த் திருவி னேகப்*
*பூவிய லமளி மேலாப் பொய்யுறக் குறங்கு வானைக்*
*காவியங் கண்ணி தன்பாற் கண்ணிய காத னீரின்*
*ஆவியை யுயிர்ப்பென் றோது மம்மியிட் டரைக்கின் றானை*

தே இயல் நேமியானில் - தெய்வத் தன்மை பொருந்திய சக்கரப் படையையுடைய திருமாலைப் போல, சிந்தை - மனமானது, மெய்திருவின் ஏக - உண்மைத் திருவாகிய பிராட்டிபால் செல்ல, பூ இயல் அமளி மேலா - பூக்கள் இயன்ற படுக்கையின் மீது, பொய் உறக்கு உறங்குவானை - பொய்யாக உறங்குகின்றவனும், காவி அம் கண்ணிதன் பால் கண்ணிய காதல் நீரின் - நீலமலர் போன்ற அழகிய கண்களையுடைய சீதாப்பிராட்டியிடம் வைத்த காதல் என்னும் நீரால், ஆவியை - தன் உயிரை, உயிர்ப்பு என்று ஓதும் அம்மி இட்டு - பெருமூச்சு என்று சொல்லும் அம்மியிலே இட்டு, அரைக்கின்றானை - அரைக்கின்றவனும் ஆனவனை,

உறங்குவானை, அரைக்கின்றனை என்பன இராவணனைக்குறிக்கும். முதல் இரண்டு அடிகள், திருமால், இராமபிரான், இராவணன் மூவர்க்கும் தனித்தனியே பொருந்தும். திருமாலுக்குக் கூறும்போது மெய்த்திரு இலக்குமியையும்,பொய்யுறக்கு அவன் யோக நித்திரையையும்குறிக்கும்; இராமபிரானும் பிராட்டியை நினைத்துத் தரைமீது படுத்து உறங்காமலிருத்தலைக் குறிக்கும். அம்மியிட்டரைத்தல்; 968; ஆரண்ய. கரன்வதை. 74. காதலால் பொய்யுறக்கு உறங்குதல்; 266: கலித். மருதம். 10-25; நைடத. மணம். 42.

(பி-ம்.) 1. தேவியை நேமியானிற்: சிந்தைமேற் றிருவை வைத்த.
3. காத விரால். (213)

309. *மிகுந்தகை நினைப்பு முற்ற வுருவழிப் பட்ட வேலை*
*நகுந்தகை முகத்தன் காத னடுக்குறு மனத்தன் வான்றேன்*
*உகுந்தகை மொழியாண் முன்னி யொருவகை யுள்ளி னுள்ளே*
*புகுந்தன ளன்றே யென்று மயிர்புறம் பொடிக்கின் றானை*

நினைப்பு முற்ற மிகும் தகை - நினைத்தல் மேலும் மேலும் அதிகப்பட, உருவழி பட்ட வேலை - பிராட்டியின் வடிவம் தன் கண்ணிடத்தே தோன்றிய பொழுது, (அவன்), காதல் - காதலால், நகும் தகை முகத்தன் - நகைக்கும் தன்மை கொண்ட முகத்தனும், நடுக்குறு மனத்தன் - நடுங்கும் மனத்தனும் (ஆகி), வான் தேன் உகும் தகைமொழியாள் - சிறந்த தேனைச் சிந்தும் தன்மை போன்ற பேச்சினையுடைய அம்மாது, ஒருவகை முன்னி - ஒருவகையில் எண்ணி, உள்ளின் உள்ளே புகுந்தனள் அன்றே என்று - தன் மனத்தின் உள்ளே திண்ணமாகப் புகுந்துவிட்டனளோ என்றெண்ணி, புறம் மயிர் பொடிக்கின்றானை - வெளியே மயிர்க்கூச் செறிகின்றவனை,

உரு வழிப்பட்ட - உரு வெளித் தோற்றமாகத் தென்பட்ட. தகை மொழியாள் - தடுத்துப் பேசியவள் என்றுங் கொள்ளலாம். இவ்வாறே பிராட்டியின் உருவெளித் தோற்றங் கண்டு இராவணன் மகிழ்ந்தது: 1092; ஆரண்ய. மாரீசன், 148 செய்யுட்களிலும் காண்க.

(பி-ம்.) 1. மிகுந்தன னினைப்பு; உகுந்தகை நினைப்பு; உருவெளிப் பட்ட வேலை.
2. காத னடுக்குறு மெய்யன் வார்தேன்.
3. முன்ன மொருவகை யுறையு ளுள்ளே; முன்னின் றொருவகை: உள்ளத் துள்ளே. (214)

310. *மென்றொழிற் கலாப மஞ்ஞை வேட்கைமீக் கூர மேலும்*
*குன்றொழித் தொருமாக் குன்றி னரிதிற்சேர் கொள்கை போல*
*வன்றொழிற் கொற்றப் பொற்றோள் மணந்திடுமடந்தை மார்கட்*
*கொன்றொழித் தொன்றி னேக வரியதோ ளொழுக்கி னானை*

மென் தொழில் கலாப மஞ்ஞை - நுண்ணிய வேலைப்பாடுகள் அமைந்த தோகையையுடைய மயில், வேட்கை மீ கூர - ஆசை மிக, குன்று ஒழித்து - (தான் முதலில் தங்கியிருந்த) குன்றத்தை விட்டு, மேலும் ஒரு மா குன்றின் அரிதில் சேர் கொள்கை போல - மற்றொரு பெரிய குன்றில் மிகுந்த முயற்சி செய்து ஏற இயலாதது போல, வன் தொழில் கொற்றம் பொன் தோள் மணந்திடும் மடந்தைமார்கட்கு - (இராவணனுடைய) வலிய தொழிலும் வெற்றியும் பொருந்திய அழகிய தோளில் கூடியிருக்கும் அவன் காதல் மகளிர்க்கு, ஒன்று ஒழித்து ஒன்றின் ஏக - (தாம் தழுவியிருக்கும்) ஒரு தோளை விட்டு மற்றொரு தோளுக்குச் செல்ல, அரிய - (முடியாதபடி) அருமை வாய்ந்த, தோள் ஒழுக்கினனை-தோள் வரிசையைப் பெற்றவனை,

ஒரு தோளை மணந்த மாது மற்றொரு தோளை மணக்க விரும்பியும், செல்ல முடியாமல் அமைந்திருக்கும் தோளொழுக்கம் என்க; இவ்வாறு செல்ல முடியாமை 'தோள் கண்டார் தோளே கண்டார்' (பால. உலாவியற். 19.) என்றது போல்' அத்தோளின் வனப்பாலே ஆகலாம்; அன்றி உயர்ச்சியாலும் ஆகலாம். இச்செய்யுளுக்கு வேறு விதமாகவும் பொருள் கூறுவர்; 'இராவணன் ஒரு தோள் புணர்ந்த மாதர் பின்னும் ஒரு தோளை இச்சித்துச் சென்று கூடுகிறது, ஒரு மலையில் மயில் ஒரு மலையிலே பெயர்ந்தது போன்றது' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. மீக்கூறு மேனும்; மீக்கூரு மேனு.
3; மணந்திடு மயிலே யன்னர்;மணந்தரு மயில்போல் மாதர்.
4, அரியதோ ரொழுக்கி னனை. (215)

வேறு

311. *தழுவா நின்ற கருங்கடன்மீ துதய கிரியிற் சுடர்தயங்க*
*எழுவா னென்ன மின்னிமைக்கு மார்பந் திகழு மியல்பிற்று*
*முழுவா னவரா யுலகமொரு மூன்றுங் காக்கு முதற்றேவர்*
*மழுவா ணேமி குலிசத்தின் வாய்மை துடைத்த வலியானை*

தழுவா நின்ற கரும் கடல்மீது உதய கிரியில் - தன்னைத் (உதய கிரியை) தழுவி நின்ற கரிய கடல் மேலே விளங்கும் உதய கிரியில், சுடர் தயங்க எழுவான் என்ன - கிரணங்கள் ஒளிவீச உதிக்கும் சூரியனைப் போல, மின் இமைக்கும் - (பூண்டுள்ள அணிகளின்) ஒளிவீசும், மார்பம்- மார்பானது, திகழும் இயல்பிற்று ஆ - விளங்கும் இயல்பினை உடையதாகி, முழு வானவராய் - தெய்வத்தன்மை முற்றிலும் பெற்றவராய், ஒரு மூன்று உலகும் காக்கும் முதல் தேவர் - மூன்று உலகங்களையும் காக்கும் தலைமைத் தேவர்களின், மழுவாள் நேமி குலிசத்தின் - மழுப்படை, சக்கரம், வச்சிராயுதம் என்ற படைகளின், வாய்மை - உண்மை வலிமையை, துடைத்த வலியானை-அழித்த வலிமையுள்ளவனை.

மார்பம் திகழும் வலிமை இயல்பிற்று, துடைத்தானை என்றும் பொருத்தலாம். தழுவா நின்ற - புவியைத் தழுவா நின்ற என்றும் கூற லாம். கருங்கடல் அவன் கரிய உடலுக்கும்,உதயகிரி அவன் மார்புக்கும், சூரியன் ஆரத்து மணிக்கும் உவமைகள். மின்னிமைக்கும் ஒளி: தன் மார் பில் தைத்த யானைக் கொம்புகளை ஒடித்து, தங்கிய கொம்புகளின் மீது அவன் பதித்து வைத்த மணிகளின் ஒளியும் ஆகலாம். குலிசம் என்பத னால் இந்திரன் கூறப்பட்டான். பிரமன், இராவணன் தாதையாதலாலும், அவன்பால் அன்பு கொண்டு அடங்கி நடந்தவனாகையாலும் அவன் விடப்பட்டனன் என்க; 105, 1081 ம்காண்க. மழுவாள் என்பதில் வாள் என்பதைப் பிரமனின் ஆயுதமாகக் கொண்டு,அவனைக் கூட்டிப் பொருள் கொள்வாரும் உளர்.

(பி-ம்.) 2. மின்னிமைக்கு மாரம் புரளு மியல் பிற்றாய்; ஆரந் திகழு மியல் பிற்றாய்.
4. வாய்மை துடைத்த மார்பானை. (216)

வேறு

312. தோடுழுத தார்வண்டுந் திசையானை
மதந்துதைந்த வண்டுஞ் சுற்றி
மாடுழுத நறுங்கலவை வயக்களிற்றின்
சிந்துரத்தை மாறு கொள்ளக்
கோடுழுத மார்பானைக் கொலையுழுத
வடிவேலின் கொற்ற மஞ்சித்
தாடொழுத பகைவேந்தர் முடியுழுத
தழும்பிருந்த சரணத் தானை

தார் தோடு உழுத வண்டும் - (இராவணன் மார்பிலணிந்த) மாலையி லுள்ள மலர் இதழ்களைக் கிளறி மொய்த்த வண்டுகளும், திசையானைமதம் துதைந்த வண்டும் - (அவனுடன் போரிட்ட) திக்குக் கயங்களின் மதத் தில் நெருங்கி மொய்த்த வண்டுகளும், சுற்றி-ஒன்றொடொன்று சுழன்று, மாடு உழுத நறும் கலவை - பக்கங்களில் மொய்த்துக் கிளறிய (அவன் மார்பில் பூசிய) மணமுள்ள கலவைச் சந்தனமானது,வய களிற்றின் சிந்து ரத்தை மாறு கொள்ள - (அவன் போரிட்ட) வலிய யானைகளின் நெற்றி யில் அணிந்த குங்குமத்தை மோத, (அது அவன் மார்பிலும், கலவை, யானைகளின் முகங்களிலும் படியும் வண்ணம்) மாறுபடச் செய்யும்படி, கோடு உழுத மார்பானை - அவ்வியானைகளின் கொம்புகள் குத்திக் கிளரப் பெற்ற மார்பு உடையவனை, கொலை உழுத வடி வேலின் கொற்றம் அஞ்சி - கொல்லுதலைச் செய்யும் கூரிய வேலின் வலிமையைக் கண்டு அஞ்சி, தாள் தொழுத பகை வேந்தர் - (அவன்) தாள்களில் விழுந்து வணங்கிய பகையரசர்கள். முடி உழுத - தம் கிரீடங்கள் (தொழும் போது) உராய்ந்த, தழும்பிருந்த சரணத்தானை - (அவ்வுராய்

தல்களினால் உண்டான புண்கள் காய்ந்த) தழும்புகள் இருந்த பாதங்களை உடையவனை,

பகை வேந்தர் கோடுழுத மார்பினையுடைய இராவணனின் கைவேலைக் கண்டு அஞ்சி, அவன் தாள்களில் விழுந்து முடிகள் பட வணங்க, அச் செயல்களால் உண்டான தழும்புகள் நிறைந்த சரணம் என்க. மார்பின் சிறப்பைக் கூறும்போது, அவன் பூசிய கலவைச் சந்தனமும் யானைகளின் சிந்துரமும் மாறுபட அவன் போர் புரிந்தனன் என்பதும், அவ்வியானைகள் குத்திய கொம்புகளை அவன் தன் மார்பால் ஏந்திக் கொண்டனன் என்பதும் கூறப்பெற்றன. இராவணன் கை வேலின் பெருமை; **உயுத்த.** வேலேற்றபடலம். 26, 27; **உத்தர.** இராவணன் பிறப்புப். 64. முடியுழச் சரணத்தில் தழும்பேறல்: **பால.** அரசியற். 8; **ஆரண்ய.** மாரீசன். 6; **நள.** கலிநீங்கு. 63: 'மாந்தையிலே வாழு மகுடத் தியாகியுனக், கேந்துந் தழும்போ விரண்டுளவால் - வேந்தர், முடித்தழும்புன் காலிலே முத்தமிழோர்க் கீயும், படித்தழும்புன் கையிலே பார்' (தனிப்பாடல்).

(பி-ம்.) 1. வண்டும் துற்ற; வண்டும் சுற்ற.
3. கோடுழுத மார்பே போல். (217)

**வேறு**

## அநுமன் இராவணனைக் கொல்ல நினைத்தல் 313-15

313. *கண்டனன் காண்ட லோடுங் கருத்தின்முன் காலச் செந்தீ*
*விண்டன கண்கள் சிந்தி வெடித்தன கீழு மேலும்*
*கொண்டதோ ருருவ மாயோன் குறளினுங் குறுகி நின்றான்*
*திண்டலை பத்துந் தோள்க ளிருபதுந் தெரிய நோக்கி.*

மாயோன் கொண்டது ஓர் உருவ குறளினும் - திருமால் (முன்) கொண்ட ஓர் உருவமாகிய வாமன வடிவத்தினும், குறுகி நின்றான்- குறுகிய உருவத்தோடு (அங்கு) நின்ற அநுமன், திண் தலைபத்தும் - அந்த இராவணனுடைய வலிய தலைகள் பத்தும், தோள்கள் இருபதும் - தோள்கள் இருபதும், தெரிய - (தன் முன்) தென்பட, நோக்கி கண்டனன்-பார்த்து (இவன் இராவணன் என்பதைத்) தெரிந்து கொண்டான்.; காண்டல் ஓடும் - அவ்வாறு பார்த்தவுடன், கருத்தின் முன் - அவன் மனத்தின் முன்னதாக, கண்கள் - (அவ்வநுமனுடைய) கண்கள், கீழும் மேலும் வெடித்தன - அடிப்புறமும் மேற்புறமும் (உள்ள இமைகள்) வெடிப்புண்டவை ஆகி, கால செம் தீ சிந்தி விண்டன, ஊழிக் காலத்துச்செந்தீயைச் சிந்திக் கொண்டு திறந்தன.

இனி, செந்தீ காலச் சிந்தி என இயைத்து, சிவந்த நெருப்பைக் கக்கும்படிச் சிந்திக்கொண்டு எனப் பொருள் கூறலும் அமையும்.

301 முதல் இச்செய்யுள் வரை ஒரு தொடர். சில பிரதிகளில் இச் செய்யுளின் பின் இரண்டடிகள் முதலிலும், முன் இரண்டடிகள் பின்னும் அமைய எழுதப்பெற்றுள்ளன, இதுகாறும் சிறிய உருவங் கொண்டே அலைந்த அநுமன், இப்பொழுது இன்னும் சிறியதோர் உருவங் கொண் டான் என்க. வாமனாவதாரச் செய்தி: பால. வேள்விப். 18-38. அநுமன் உறக்கத்தில் கண்ட இராவணன் ஒரு தலையும் இரண்டு கைகளுமே கொண்டிருந்தான் என்று முதனூல் கூறும்.

(பி-ம்.) 1. கருத்தின்முள் காலச் செந்தீ.
2. விண்டன கண்கள் கீண்டு வெடித்தன. (218)

## வேறு.

314. தோளாற்ற லென்னுகு மேனிற்குஞ் சொல்லென்னும்
வாளாற்றற் கண்ணாளை வஞ்சித்தான் மணிமுடியென்
தாளாற்ற லாலிடித்துத் தலைபத்துந் தகர்த்துருட்டி
ஆளாற்றல் காட்டேனே லடியேனாய் முடியேனே.

(அநுமன், தான் கொண்ட சினத்தில் பின்வருமாறு தனக்குள்ளே கூறிக்கொண்டான்:) 'வாள் ஆற்றல் கண்ணாளை - வாளின் ஆற்றலைச் செய்யும் கண்களையுடைய பிராட்டியை, வஞ்சித்தான் - வஞ்சனையால் கவர்ந்து வந்த இவ்விராவணனின், மணிமுடி-மணிகள் பதித்த கிரீடங்களை யும், என் தாள் ஆற்றலால் இடித்து-என் கால் வலியினால் சிதறச் செய்து, தலை பத்தும் தகர்த்து-இவன் பத்துத் தலைகளையும் சிதறிவிழச் செய்து, உருட்டி - தரையில் உருட்டி, ஆள் ஆற்றல் காட்டேனேல் - என் ஆண்மைத் திறத்தை (இப்பொழுது) தோற்றுவிக்காமல் போவே னானால், அடியேனாய் முடியேனே - நான் (என் இராமபிரானுக்கு) அடி யவன் என்ற பெருமை இல்லாமல் போவேனே! (அன்றியும்), தோள் ஆற்றல் என் ஆகும் - என் தோள் வலிமை தான் யாது பயன்படும்? மேல் நிற்கும் சொல் என் ஆம் - எதிர்காலத்தில் நிற்கும் புகழ்ச்சொல் யாதாகும்?

'இராவணனுடைய தோளாற்றலும் புகழும் என் முன்யாது பயன் படும்என்று அநுமன் கொண்டதாக முதலடிக்குச் சிலர் பொருள் கூறுவர்' அன்றியும், 'ஆளாற்றல் காட்டேனேல்' என்றதற்கு, 'என் அடிமைத் திறத்தைக் காட்டாமல் நிற்பேனேல்' என்றும் பொருள் கூறலாம். வாளாற்றற் கண்ணாள்; ஒப்பு: 'வாள் கொண்ட கண்ணார்' பால. (உலாவி யற்: 19.); 'வாளுற்ற' கண்ணாள்'(சீவக. 10.)சொல்-புகழ்; குறள். 387.

(பி-ம்.) 2. வாளாற்று கண்ணானை; வாளாற்றுங் கண்ணானை. மணிமுடியை.
3. தகர்த்தின்றென்; தகர்த்தென்றன்; தகர்க்கின்றேன், (219)

**315.** *நடித்துவாழ் தகைமையதோ வடிமைதா னன்னுதலைப்*
*பிடித்தவா ளரக்கனுர் யான்கண்டும் பிழைப்பாரோ*
*ஒடித்துவான் றோளனைத்துந் தலைபத்து முதைத்துருட்டி*
*முடித்திவ்வூர் முடித்தான்மேன் முடிந்தவா முடிந்தொழிக.*

'அடிமை தான் நடித்து வாழ் தகைமையதோ - அடிமைத் தன்மை என்பது (உண்மைச் செயலில் காட்டாமல்) வெளி வேடத்தால் நடித்து வாழும் தன்மையதோ? நன்னுதலை - அழகிய நெற்றியையுடைய பிராட்டியை, பிடித்த - கவர்ந்த, வாள் அரக்கனுர் - கொடிய அரக்கன், யான் கண்டும் - யான் நேரே பார்த்தும், பிழைப்பாரோ-அவன் உயிரோடு தங்குவானே? வான் தோள் அனைத்தும் ஒடித்து - அவனுடைய பெரிய தோள்கள் அனைத்தையும் ஒடித்து, தலைபத்தும் உதைத்து உருட்டி - அவன் பத்துத் தலைகளையும் உதைத்து உருளச் செய்து, இவ்வூர் முடித்து - இவ்வூரையும் அழித்து, முடித்தால் - முடிப்பேனுனல், மேல் முடிந்தவா முடிந்து ஒழிக - மேலே நடக்கிறபடி நடந்து தீரட்டும்.

நடித்துவாழ்தல். ஒப்பு: நடிப்பதோ அடிமை: திருவா. 15.' அரக்கனுர், பிழைப்பரோ' என்றது, இகழ்ச்சிக்குறிப்பிற் கூறிய பன்மை:

(பி-ம்.) 2. பிடித்துவர ரக்கனுர்.
4. முடிவதெலா முடிந்தொழிக. (220)

## அநுமன் சினம் நீங்கிப் பெயர்தல் 316.

**316.** *என்றூக்கி யெயிறுகடித் திருகரமும் பிசைந்தெழுந்து*
*நின்றூக்கி யுணர்ந்துரைப்பா னேமியா னருளன்ருல்*
*ஒன்றூக்கி யொன்றிழைத்த லுணர்வுடையோர்க் குரித்தன்ருல்*
*பின்றூக்கி லிவைசாலப் பிழைபயக்கு மெனப்பெயர்ந்தான்.*

என்று - இவ்வாறு சொல்லி, ஊக்கி - மனத்தில் ஊக்கமுற்று, எயிறு கடித்து - தன் பற்களைக் கடித்துக் கொண்டும், இருகரமும் பிசைந்து-தன் இரண்டு கைகளையும் பிசைந்து கொண்டும் எழுந்து நின்று- உயர்ந்து நின்று, (பின்), ஊக்கி உணர்ந்து உரைப்பான் - (இவ்வாறு கோபித்துச் செயலில் இறங்கி நின்று, பிறகு) மனத்தில் ஆராய்ந்து, உணர்ந்து, (பின் வருமாறு) சொல்லிக் கொள்ளலாயினன்; 'ஒன்று ஊக்கி ஒன்று இழைத்தல் உணர்வுடையோர்க்கு உரித்தன்று-ஒன்று செய்ய முயன்று வேருென்றைச் செய்தல் அறிவுடையோர்க்கு உரியதன்று: (அன்றியும்), நேமியான் - இறைவனுன இராமபிரான், அருள் அன்று- அருளுடன் பணித்த கட்டளையும் அன்று; பின்-பிறகு, தூக்கில் - சீர் தூக்கிப் பார்த்தால், இவை - யான் எண்ணிய இச் செயல்கள், சால - மிகவும், பிழை - குற்றத்தை, பயக்கும் - உண்டாக்கும்'; என - என்று எண்ணி, பெயர்ந்தான் - சினம் ஆறிக் கடந்தவனுனன். ஆல்; ஈரிடங்களிலும் அசை.

எயிறு கடித்தல், கை பிசைதல் என்பன சினமேற் கொண்டவர் மெய்ப்பாடுகள். ஊக்கி உணர்ந்து என்று கூட்டி, வலிய முயன்று ஆலோசித்து என்றும் பொருள் கூறலாம். நேமியான் - சக்கரத்தையுடையவன்; திருமால்; நேமி - ஆணையும் ஆம்.

(பி-ம்.) 2. நேமியோன் பணியன்றல்.
3. உணர்வுடைமைக் குரித்தன்றல்.
4. இதுசாலப் பிழையாகும். (221)

317. *ஆலம்பார்த் துண்டவன்போ லாற்றலமைந் துளரெனினும்*
*சீலம்பார்க் குரியோர்க ளெண்ணுது செய்பவோ*
*மூலம்பார்க் குறினுலகை முற்றுவிக்கு முறைதெரினும்*
*காலம்பார்த் திறைவேலை கடவாதக் கடலொத்தான்.*

சீலம் - ஒழுக வேண்டிய முறையை, பார்க்க உரியோர்கள் - கருதத்தக்கவர்கள், ஆலம் பார்த்து உண்டவன் போல் - ஆல கால விடம் எழுந்து வரப்பார்த்து (அதனை) உண்ட சிவபிரானைப் போன்ற, ஆற்றல் - வலிமை, அமைந்துளர் எனினும் - பெற்றுள்ளார் என்றாலும், எண்ணுது - (தாம் செய்யும் கருமத்தில் பயனைக்) கருதாமல், செய்பவோ - (காரியங்களைச்) செய்வார்களோ? (செய்யார் என்றபடி); மூலம் பார்க்குறின் - இதற்கு ஆதாரம் பார்க்குமிடத்து, உலகை முற்றுவிக்கும் முறை தெரினும் - உலகத்தை முற்றிலும் அழிக்கும் வழியைத் தான் தெரிந்து கொண்டிருந்தாலும், காலம் பார்த்து - (தான் அவ்வாறு செய்யக் கடவ) காலத்தை எதிர்நோக்கி, வேலை - கடல், இறை கடவாது - சிறிதும் மீறுது; அ கடல் ஒத்தான் - அக்கடலைப் போல அநுமன் அடங்கியிருந்தான்.

இச் செய்யுள் கவிக்கூற்று. காலம் பார்த்துக் கடல் அடங்கியிருத்தல், 224: 'காலங் கருதி யிருப்பார் கலங்காது ஞாலம் கருது புவர்' (குறள். 485.) அநுமன் சினமடங்கி நிற்றலை அயோத்யா காண்டத்தில் நகர் நீங்கு, 141, இலக்குவன் நிலையோடு ஒப்பிடுக.

(பி-ம்.) 1. ஆலம்பாத் துண்டவன்; ஆலமேற் றுண்டவன்:
ஆற்றலமர்ந் துளதெனினும்; அமைந் துளதெனினும்.
2. சீலம்பார்த் திடுபெரியோ ரெண்ணுது செய்வாரோ:
பார்த் துரியார்கள்: செய்குவரோ.

3. முடிவிக்கு முறைத்தெனினும்; முடிக்கும்வலி யுடைத்தெனினும்
4. பார்த் துயருலகம் கடவாத; பார்த் துயர்வேலை கடவாத;
கடவாத கடல். (222)

318. இற்றைப்போர்ப் பெருஞ்சீற்ற மென்னோடு முடிந்திடுக
கற்றைப்பூங் குழலாளைச் சிறைவைத்த கண்டகனை
முற்றப்போர் முடித்ததொரு குரங்கென்றுன் முனைவீரன்
கொற்றப்போர்ச் சிலைத்தொழிற்குக் குறையுண்டா மெனக்குறைந்தான்.

(அநுமன்), 'இற்றை போர் பெரும் சீற்றம் - இப்பொழுது போரிடுவதாக (நான் கொண்ட) பெரும் கோபம், என்னோடு முடிந்திடுக - (வெளிக்கிளம்பாமல்) என்னுள்ளேயே அழிந்து விடட்டும்; பூங் கற்றை குழலாளை சிறை வைத்த கண்டகனை - அழகிய, அடர்ந்த கூந்தலையுடைய பிராட்டியைச் சிறையில் வைத்த கொடியோனை, ஒரு குரங்கு - ஒரு குரங்கானது, முற்ற - அவன் ஒழியும்படி, போர் முடித்தது என்றால் - போர் செய்து முடித்தது என்றால், முனைவீரன் கொற்றப் போர் சிலை தொழிற்கு - போர் வீரனான இராமபிரானின் வெற்றியைத் தரும் போரைச் செய்யும் வில் தொழிலுக்கு, குறை உண்டாம் - குறைவு ஏற்படும்' என - என்றெண்ணி, குறைந்தான் - தன் கோபம் தணிந்தான்.

கண்டகம் - முள்; முள்ளைப் போல் வருத்துகிறவன் கண்டகன். முனை-போர். இராமபிரானின் வில்லின் ஆற்றலுக்குக் குறை உண்டாகக் கூடாது என்றமை; 624. அநுமன் பின்னும் ஒரு முறை தன் கோபம் தணித்துக் கொண்டமையை, 1097-1102 ஆம் செய்யுட்களிற் காண்க.

(பி-ம்.) 1. சீற்றம் இங்ஙனே அமர்ந்திடுக.
4. குறைவுண்டா மென. (223)

319. அந்நிலையான் பெயர்ந்துரைப்பா னுய்வளைக்கை யணியிழையார்
இந்நிலையா னுடன்றுயில்வா ருளரல்ல ரிவனிலையும்
புன்னிலைய் காமத்தாற் புலர்கின்ற நிலைபூவை
நன்னிலையி னுளளென்னு நலனெனக்கு நல்குமால்,

அந்நிலையான் - அவ்வாறு கோபந்தணிந்த நிலையில் நின்ற அநுமன், பெயர்ந்து உரைப்பான் - மேலும் பின்வருமாறு சொல்லிக்கொண்டான்; 'ஆய் வளைகை அணி இழையார் - ஆராய்ந்தெடுத்த வளைகளையணிந்த கைகளையுடையவர்களும், அழகிய அணிகலன்களை அணிந்தவர்களு

மாகிய மாதர்கள், இந்நிலையான் உடன் துயில்வார் உளர் அல்லர் - இந்த நிலையிலுள்ள இவனருகிலே தூங்குபவர்களாக எவரும் இலர்; இவன் நிலையும் - இவனுடைய நிலைமையும், புல் நிலைய காமத்தால் புலர்கின்ற நிலை - அற்பத் தன்மை பொருந்திய காமத்தினால் காய்கின்ற நிலையாயிருக்கின்றது; (இக்காட்சிகள்)' பூவை - நாகணவாய்ப் புள் போன்றவளான பிராட்டி, நல் நிலையில் உளள் - நல்ல நிலைமையில் இருக்கின்றாள். என்னும் நலன் - என்ற நற்செய்தியை, எனக்கு நல்கும் - எனக்குக் கொடுக்கும்.' ஆல்: அசை.

பெயர்ந்து உரைப்பான் என்பதற்குத் தான்கொண்ட நிலைமாறி உரைப்பான் என்றும் பொருள் கொள்ளலாம். 'இவன் புலர்கின்ற நிலை எனக்கு நலன் நல்கும் என்க. நல் நிலையில் உளள் - கற்பு நெறியில் உள்ளாள் என்றும் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. அணியிழையாள். 2. உடன்றுயில் வாளல்லள்.
3. புரள்கின்றுனிலை. 4. நலமெனக்கு நல்குமால். (224)

## அநுமன் பிராட்டியைக் காணாமைக்கு வருந்துதல் 320-328

320. *என்றெண்ணி யீண்டினியோர் பயனில்லை யெனநினையாக்*
*குன்றன்ன தோளவன்றன் கொடுங்கோயிற் புறங்கொண்டான்*
*நின்றெண்ணி யுன்னுவா னந்தோவிந் நெடுநகரில்*
*பொன்றுன்னு மணிப்பூணா ளிலளென்னப் பொருமுவான்.*

என்று எண்ணி - இவ்வாறு எண்ணி, 'இனி ஈண்டு ஓர் பயன் இல்லை - இனிமேல் இங்கே (நிற்பதால்) ஒரு பயனும் இல்லை; என நினையா - என்று எண்ணி, குன்று அன்ன தோளவன் தன் - குன்று போல் உயர்ந்த தோள்களை உடைய இராவணனுடைய, கொடுங் கோயில் - வளைந்த அரண்மனையை, புறம் கொண்டான் - விட்டு நீங்கி, நின்று எண்ணி உன்னுவான் - நின்று நினைத்து ஆராய்பவனாய், 'அந்தோ - ஐயோ, இ நெடு நகரில் - இப்பெரிய நகரத்தில், பொன் துன்னும் மணி பூணாள் இலள் - பொன்னிற் பதித்த இரத்தின அணிகலன்களைப் பூணும் பிராட்டி இல்லை' என்ன - என்று எண்ணி, பொருமுவான் - விம்மி வருந்துவானாயினன்.

அந்தோ! பாகதச்சொல். கொடுங்கோயில் - கொடுமைக்கிடமான இராவணன் வசிக்கும் அரண்மனை எனலும் ஆம்.

(பி-ம்.) 2. கோமனைபிற் படப்பெயர்ந்தான்
3. நெடுநகரம்.
4. பூணு மிலரென்ன: பொருமினுன். (225)

321. கொன்ருனே கற்பழியாக் குலமகளைக் கொடுந்தொழிலால்
தின்ருனே வப்புறத்தே செறித்தானே சிறையறியேன்
ஒன்ருனு முணரகிலேன் மீண்டினிப்போ யென்னுரைக்கேன்
பொன்ருத பொழுதெனக்கிக் கொடுந்துயரம் போகாதால்.

'கற்பு அழியா குல மகளை-தன் கற்பில் சிதைதலில்லாத நற்குலத்திற் பிறந்த மகளான பிராட்டியை, கொடும் தொழிலால் - கொடிய கொலைத் தொழிலால், கொன்ருனே - கொன்று ஒழித்து விட்டானே? (அல்லது), தின்ருனே-அல்லது தின்று விட்டானே? (அல்லது), அ புறத்தே சிறை செறித்தானே - அல்லது வெகு தூரத்திலுள்ள வேருேர் இடத்திலே சிறை வைத்தானே? அறியேன் - என்னல் அறிந்து கொள்ள முடியவில்லை; ஒன்ருனும் உணரகிலேன் - ஒரு வழியாலும் தெரிந்து கொள்ள மாட்டாதவனு யிருக்கிறேன்; இனி - இனிமேல், மீண்டு போய் -திரும்பிப் போய்,என் உரைக்கேன்-என்ன சொல்லவல்லேன்!,இ கொடும் துயரம் - (பிராட்டியைக் காணவியலாத) இந்தக் கொடிய வருத்தம், பொன்ருத பொழுது - (நான்) சாகாவிட்டால், எனக்கு போகாது - என்னிடமிருந்து நீங்காது. ஆல்: அசை.

அநுமன் துயர நிலை இங்குக் கூறப்பட்டது. இவ்வாறே 328 ஆம் செய்யுள் வரை இந்நிலையில் அவன் கருதியவையே கூறப்படும். மீண்டினிப் போய் என்னுரைக்கேன் என்றது, தன்னை அனுப்பிய அங்கதன் முதலினேர்க்கும், இராமபிரான் சுக்கிரீவன் முதலினேர்க்கும் என்க.

(பி-ம்:) 2. தின்ருனே வெப்புறத்தே செறித்தானே சிறைசிறியேன். (226)

322. கண்டுவரு மென்றிருக்குங் காகுத்தன் கவிக்குலக்கோன்
கொண்டுவரு மென்றிருக்கும் யான்முடித்த கோளிதுவால்
புண்டரிக நயனத்தான் பாலினியான் போவேனே
விண்டவரோ டுடன்வீயா தியான்வாளா விளிவேனே.

'காகுத்தன் கண்டுவரும் என்றிருக்கும் - இராமபிரான், யான் சீதையைப் பார்த்து வருவேன் என்று எண்ணியிருப்பான்; கவி குல கோன் - வானரகுலத்தின் அரசனுன, சுக்கிரீவன், கொண்டு வரும் என்று இருக்கும் - யான் சீதையை மீட்டுக் கொண்டு வந்துவிடுவேன் என்று

எண்ணியிருப்பான்; (ஆனால்), யான் முடித்த கோள் இது-யான் செய்து முடித்த குற்றம் இதுவாக இருக்கிறது; புண்டரிக நயனத்தான் பால் யான் இனி போவேனோ - தாமரைக் கண்ணனை இராமபிரானிடம் யான் இனி போகக் கடவேனோ? விண்டவரோடு - என்னைச் சொல்லியனுப்பிய அங்கதன் முதலானவரோடு, யான் உடன் வீயாது - நான் சேர்ந்து சாகாமல், வாளா - நான் வீண்பட்டு, (தனியே) விளிவேனோ-சாவேனோ? ஆல்: அசை.

பிராட்டியிருக்குமிடத்தை அறிதலே இராமபிரானின் குறிக்கோள். சுக்கிரீவனது குறிக்கோளோ அவளை மீட்டு இராமபிரானிடம் சேர்ப்பது ஆகும். இக்கருத்து அநுமன் கூறின வாக்கில் தொனிப்பது காண்க. கோள் இது என்றது, ஒன்றும் செய்து முடிக்காது நின்ற நிலையைக் குறித்தது. கோள் - தீமையும் ஆகும். விண்டவரோடுடன் வீயாது யான் வாளா விளிவேனோ, என்றதற்குப் போரில் பகைவர்களைக் கொன்று தானும் சாகாமல் வீணே மடிவேனோ என்றும் பொருள் கூறுவர்; விண்டவர் - பகைவர், 'இந்தச் சத்துருவான அரக்கரைக் கொல்லாமல் வெறுமே சாகேன்' என்பது **பழைய உரை.** விண்டவர் - பிரிந்தவரான வானரர் என்றும் பொருள் கொள்ளலாம். கண்டு வரும்......கொண்டு வரும்: ஒப்பு. 613. காகுத்தன்: ககுஸ்தன் மரபிற்றோன்றினவன்; இது தத்தி தாந்த நாமம்.

(பி-ம்.) 1. கவிக்குலத்தோன். 2. யானிழைத்த கோளிதுவால். 4. வீயா யான்வாளா விளிவேனோ. (227)

323\. *கண்ணியநாள் கழிந்துளவாற் கண்டிலெனுற் கனங்குழையை*
*விண்ணடைது மென்றுரை யாண்டிருத்தி விரைந்தயான்*
*எண்ணியது முடிக்ககிலேன் யான்முடியா திருப்பேனோ*
*புண்ணியமென் றொருபொருளென் னுழைநின்றும்* போயதால்.

'கண்ணிய நாள் கழிந்துள - சுக்கிரீவன் கருதி அனுப்பிய தவணைக் காலம் கழிந்து விட்டது: கனங்குழையைக் கண்டிலென் - பிராட்டியைக் கண்டேனில்லை; விண் அடைதும் என்றுரை-(மகேந்திரமலையை யடைந்த வானர வீரர்கள் பிராட்டியைக் காணாமையால்) இறந்துபடுவோம் என்று நிச்சயித்தவரை, யாண்டு - அவ்விடத்தில், இருத்தி - இருக்கச் செய்து, விரைந்த - விரைவாக இவ்விடம் வந்த, யான் - நான், எண்ணியது முடிக்ககிலேன் - கருதிய காரியத்தைச் செய்து முடிக்க வில்லை; யான் முடியாது இருப்பேனோ - நான் இறந்து போகாமல் வீணே உயிருடன் இருப்பேனோ? புண்ணியம் என்று ஒரு பொருள் - நல்வினை

என்று சொல்லப்படும் ஒரு பொருள், என் உழை நின்றும் போயது - என்னிடமிருந்து நீங்கிவிட்டது. ஆல்: அசைகள்.

கணங்குழை - கனவிய குழையணிந்த பெண். சுக்கிரீவன் தவணையிட்ட காலம்: 'ஆண்டு கடந்தப் புறத்து மெப்புறத்து மொருதிங்களவதியாகத்,தேண்டியிவண் வந்தடைதிர்' (கிட்கிந்தா. நாடவிட்ட. 32.) விண்ணடைது மென்றவர் அங்கதன் முதலினோர்; கிட்கிந்தா. சம்பாதிப்படலம். 4-21 செய்யுட்களில் காண்க. முடியாது என்றதற்குக் காரியத்தை முடிக்காமல் என்றும் பொருள் கொள்வர்.

(பி-ம்.) 1. கண்டிலமாற் கனங்குழையை.
3. என்னியது முடித்திலே னினி: என்ணியது முடித்திலனே னினி; இனிமுடியா திருப்பேனோ. (228)

324. ஏழுநா றோசனைசூழ்ந் தெயில்கிடந்த விவ்விலங்கை
வாழுமா மன்னுயிர்யான் காணாத மற்றில்லை
ஊழியான் பெருந்தேவி யொருத்தியுமே யான்காணேன்
ஆழிதா யிடராழிக் கிடையேவீழ்ந் தழிவேனோ.

'ஏழுநூறு ஓசனை சூழ்ந்து எயில் கிடந்த இ இலங்கை - எழுநூறு யோசனை என்ற தூரம் (உட்புலம்) சுற்றிலும் மதிலுள்ளதாகிய இவ்விலங்கையில், வாழும்-வாழ்கின்ற, மாமன் உயிர் - சிறந்தநிலைபெற்ற உயிர்ப்-பிராணிகளுள், யான் காணாத இல்லை - நான் பார்க்காதது ஒன்றுமில்லை; ஊழியான் பெருந்தேவி ஒருத்தியுமே - ஊழியிறுதியிலும் தான் நிற்பவனை இராமபிரானின் பெருமை தங்கிய பிராட்டி ஒருத்தியையே, யான் காணேன் - நான் காணவில்லை; ஆழி தாய் - (ஒருநீர்க்) கடலைத் தாவி, இடர் ஆழிக்கு இடையே - துன்பமாகிய மற்றொரு கடலினுக்கு நடுவே, வீழ்ந்து அழிவேனோ - விழுந்து அழிந்து விடக் கடவேனோ? மற்று: அசை.

ஓசனை - யோசனை; நான்கு குரோசங் கொண்ட நீட்டலளவை என்பர். இலங்கை உட்புலம் எழுநூறு யோசனை 95. பெருந்தேவி ஒருத்தியுமே யான் காணேன்; முன்பு 'கவல்கின்றார் ஒருவரைக் காணேன்' (125) என்றதனோடு ஒப்பிடுக. பெருந்தேவி-சீதாப்பிராட்டி; 'உன் பெருந்தேவி '1270' என்று பின்னுங் கூறுவர். திருக்கச்சி அத்திகிரியில் கோயில் கொண்டருளிய திருமால் தேவி பெருந்தேவி எனப்படுவதும் இங்கு நோக்கத்தக்கது. ஆழிதாய் ஆழி வீழ்தல்: ஒரு கடலின்

கரையைக் கண்டவன் மற்ருெரு கடலில் வீழ்ந்தான் என்றது ஒரு நயம்; ஒப்பு; பால, பரசுராமப். 42.

(பி-ம்.) 1. கிடந்த திவ்விலங்கை.
3. பெருந்தேவி ஒருவரையும்: ஒருத்தியுமே யாெருருவன்.
4. இடராழி யிடையே. (229

325. வல்லரக்கன் றனைப்பற்றி வாய்பத்துங் குருதிவரக்
கல்லரக்குங் கரதலத்தாற் காட்டென்று காண்கேனே
எல்லரக்கு மயிலார்வே லிராவணனு மிவ்வூரும்
மெல்லரக்கி னுருகிவிழ வெந்தழலிட் டேகேனே.

'வல் அரக்கன் தனை - கொடிய அரக்கனான இராவணனை, கல் அரக்கும் கரதலத்தால் வாய் பத்தும் குருதி வர பற்றி - மலையையும் நொறுக்கிப் பொடியாக்கும் (வலியுடைய) என் கைகளினால், அவன் பத்து வாய்களினின்றும் குருதி கொட்டுமாறு (இறுகப்) பிடித்துக் கொண்டு, காட்டு என்று - (பிராட்டியை வைத்திருக்கும் இடத்தைக்) காட்டுவாயாக என்று கேட்டு, காண்கேனே - (அவன் காட்ட நான்) காண மாட்டேனே? (அல்லது), எல் - சூரியனை, அரக்கும் - (தன் மிக்க ஒளியால்) வருத்தும், அயில் ஆர் வேல் இராவணனும் - கூர்மை பொருந்திய வேலாயுதத்தையுடைய இராவணனும், இ ஊரும் - இந்த இலங்கையும், மெல் அரக்கின் - மெல்லிய அரக்குப் போல, உருகி விழ - உருகி விழும்படி, வெம் தழல் இட்டு - கொடிய நெருப்பை வைத்துவிட்டு, ஏகேனே - திரும்பிச் செல்ல மாட்டேனே?

இச்செய்யுள் 'வல்ல ரக்கரின் மால்வரை போய்விழுந், தல்ல ரக்கினுருக்கழல் காட்டயற், கல்ல ரக்குங் கடுமைய வல்லநின், சில்லரக்குண்ட சேவடிப் போதென்ருன்,' (அயோத்யா. நகர்நீங்கு. 225.) என்ற செய்யுளை நினைப்பூட்டுகின்றது.

(பி-ம்.) 1. வாயாறு குருதியுகக்.
3. எல்லாக்கு மயினுதிவேல்.
4. வெந்தழலால் வேய்கேனே. (230)

326. வானவரே முதலோரை வினவுவெனேல் வல்லரக்கன்
தானொருவ னுளனாக வுரைசெய்யுந் தருக்கிலரால்
ஏனையவ ரெங்குரைப்பா ரெவ்வண்ணந் தெரிக்கேனே
ஊனொழிய நீங்காத வுயிர்சுமந்த வுணர்விலியேன்.

'ஊன் ஒழிய - இவ்வுடம்பு நீங்கும்படி, நீங்காத உயிர் - என்னை விட்டுப் போகாத உயிரை' சுமந்த - தாங்கிக் கொண்டிருக்கிற, உணர்விலியேன் - உணர்ச்சி அற்றவனாகிய நான், வானவரே முதலோரை வினவுவெனேல் - தேவர் முதலானவர்களை (பிராட்டி இருக்கும் இடத்தைக் காட்டும்படி) கேட்பேனேயானால், வல் அரக்கன் தான் ஒருவன் உளனாக - வலிய அரக்கனை இராவணனாகிய ஒருவன் உயிருடன் இருக்க, உரை செயும் தருக்கு இலர் - விடை கூறும் மனவலிமை பெற்றவராகார்; ஏனையவர் எங்கு உரைப்பார் - பிறர் எவ்வாறு சொல்லுவார்? எவ்வண்ணம் தெரிக்கேனே - (பிறகு நான் அவள் இருக்கும் இடத்தை) எப்படித் தெரிவிக்கப் போகிறேனோ? ஆல், அசை,

இஃது அநுமன் தன்னைத்தான் வெறுத்துக் கொண்டு கூறியது.

(பி-ம்.) 3. ஏனையர்கள் : தெரிகேனே.
4. ஊனழிய : உணர்வில்லேன். (231)

327. எருவைக்கு முதலாய சம்பாதி யிலங்கையிலத்
திருவைக்கண் டனெனென்று னவனுரையுஞ் சிதைந்ததால்
கருவைக்கு நெடுநகரைக் கடலிடையே கரையாதே
உருவைக்கொண் டின்னமுநா னுளனாகி யுழல்வேனே.

'எருவைக்கு முதலாய சம்பாதி - கழுகினங்களுக்குத் தலைவனான சம்பாதி, அ திருவை - திருமகளாகிய அப் பிராட்டியை, ' இலங்கையில் கண்டனென் என்றான் - இலங்கையில் இருக்கக் கண்டேன்' என்று கூறினன்; அவன் உரையும் சிதைந்தது - அவன் பேச்சும் பழுதாகிவிட்டது; கரு வைக்கும் நெடுநகரை, பிரமதேவனால் கருப்பம் அமைத்துப் படைத்த இந்தப் பெரிய இலங்கை நகரைக், கடலிடையே கரையாதே - கடலின் இடையிலே புகுத்திக் கரைக்காமல், நான் இன்னமும் உருவை கொண்டு உளென் ஆகி உழல்வேனோ-நான் இனியும் என் உடலைத் தாங்கிக் கொண்டு உயிருடன் இருப்பவனாகி வருந்துவேனோ? ஆல் : அசை.

சம்பாதி கூறியதைக் கிட்கிந்தா. சம்பாதிப். 64 ஆம் செய்யுளிற் காண்க, திரு-இலக்குமி. அநுமன் இராமபிரானைத் திருமாலாகவும், சீதாப் பிராட்டியைத் திருமகளாகவும் கொண்டே கூறிவருவதை இந்நூலில் பல இடங்களிற் காணலாம். கரு வைக்கும் நெடுநகர்; கரு வைத்தல்-கட்டடம் அமைக்கத் தொடங்குகையில் முதலில் செய்யும் சடங்கு; இச்சடங்கில் பொன் மணிகள் முதலிய அரிய பொருள்களை அடியிலிட்டு அதன்

மீது அஸ்திவாரம் போடுதல் மரபு; இதனை, 'பருமணிக்கரு திருவிருத்தியே'என்று கலிங்கத்துப். கோயில்பாடியது, 2. என்ற பகுதியாலும் அறியலாம்; இன்னும் 'போக்கரு மரபின், தொன்மா விலங்கைக் கருவொடு பெயரிய' (சிறுபாண். 118-119) என்ற அடிக்கு, 'கருப்பதித்த முகூர்த்தத்தாலே ஒருவராலும் அழித்தற்கரிய முறைமையினையுடைய இலங்கை' என்ற, நச். உரையையும் காண்க. மேலும், 'கருவொடு பெயரிய காண்பினல்லில் (நெடுநல். 114) என்ற அடிக்கு, 'புதைத்த கருவோடே பெயர் பெற்ற காட்சிக்கினிய நன்முகிய இல்; என்றது, கருப்பக்கிரகம் என்றவாறு' என்ற, நச், உரையும் நோக்கத்தக்கது. கரு என்பதற்கு, அகம் என்று பொருள் கொண்டு, பிராட்டியைத் தன் அகத்தே வைத்திருக்கும் நகர்எனப் பொருள் கூறுவாரும் உண்டு.

(பி-ம்.) 2. அவ்வுரையுஞ் சிதைந்ததால்.
3. கடலிடையே கரையாதென்.
4. உருவைக்கண் டின்னுநா னுளனுகி. (232)

328. *வடித்தார்பூங் குழலாளை வானறிய மண்ணறியப்*
*பிடித்தானிவ் வடலரக்க னெனுமாற்றம் பிழையாதால்*
*எடுத்தாழி யிலங்கையினை யிருங்கடலி னிட்டிவனை*
*முடித்தாலே யான்முடிதன் முறைமன்ற வென்றுணர்வான்.*

'வடித்து ஆர் பூம் குழலாளை - வாரிவிட்டாற்போல் விளங்கும் அழகிய கூந்தலையுடைய பிராட்டியை, இ அடல் அரக்கன் - இந்த வலிய அரக்கனான இராவணன், வான் அறிய மண் அறிய - தேவர்களும் பூவுலகத்தாரும் அறியும்படி, பிடித்தான் - பற்றிக் கொண்டான், எனும் மாற்றம் - என்ற சொல், பிழையாது - வீணாகாது; ஆழி இலங்கையினை - கடல் சூழ்ந்த இவ் விலங்கையை, எடுத்து - (நான்) பெயர்த் தெடுத்து, இரும் கடலின் இட்டு - பெரிய சமுத்திரத்தில் எறிந்து, இவனை முடித்தாலே - இவனையும் கொன்றொழித்த பிறகுதான், யான் முடிதல் மன்ற முறை - யான் சாதல் சிறந்த முறையாகும்'; என்று உணர்வான் - என்று உன்னினான். ஆல்: அசை.

வடி தார் என்று பிரித்து நன்முக வகுக்கப் பெற்ற மாலை அணிந்த என்றும் பொருள் காணலாம்; வடிதார் என்பது வடித்தார் என எதுகை நோக்கி வலிந்தது. ஆழி இலங்கை - வட்ட வடிவமான இலங்கை எனலும் ஆம், மன்ற அசையும் ஆம்.

(பி-ம்.) 1. வடித்தாய்பூங் குழலாளை. 2. பிடித்தானிவ் வல்லரக்கன்.
3. இலங்கைதனை யிருங்கடலிட் டின்றிவனை.
4. முடிதல் நன்றென்று முடிகின்றான்: முனிகின்றான். (233)

## அநுமன் அசோகவனத்தைக் காண்டல்

329. எள்ளுறையு மொழியாமல் யாண்டையினு முளனுகி
(உள்ளுறையு மொருவனைப்போ லெம்மருங்கு முலாவினுன்)
புள்ளுறையு மானத்தை யுறநோக்கிப் புறம்பேர்வான்
கள்ளுறையு நறுஞ்சோலை யயலொன்று கண்ணுற்ருன்.

எள் உறையும் ஒழியாமல் - எள் தங்கும் சிறிய இடமும் விடாமல், யாண்டையினும் - எல்லா இடங்களிலும், உளனுகி - இருப்பவனுகி, உள் உறையும் ஒருவனைப் போல் - தன் உள்ளே தங்கும் அவ்விறைவனுகிய இராமபிரானைப் போல், எ மருங்கும் உலாவினுன் - எல்லா இடங்களிலும் அலைந்து திரிந்த அநுமன், (அவ்வாறு திரிந்த போது), புள் உறையும் - பறவைகள் தங்கும், மானத்தை - விமானம் போல் இருந்த ஒரு சயித்தியத்தை, உற நோக்கி - தெரியப்பார்த்து, புறம் பேர்வான் - வெளியே வருபவனுய், கள் உறையும் நறும் சோலை ஒன்று-தேன் தங்கும் மணம் மிக்க சோலை ஒன்றை, அயல்-அயலிலே, கண் உற்ருன் - 'கண்டான்.

'உள்ளுறையும் ஒருவன்; வானின் றிழிந்து வரம்பிகந்த மாபு தத்தின் வைப்பெங்கும், ஊனு,முயிரு முணர்வும் போ லுள்ளும் புறனு முளனென்ப' (அயோத்யா. மந்திரப். 1,); 'அந்தர்யாமியான விஷ்ணுவைப் போல்' என்பது பழையஉரை. உறை - இடம்: தங்குதல்.

(பி-ம்.) 1. யாண்டையினு முளனுய்த்தன்.
2. எம்மருங்கு முலாவுவான்.
3. மாவனத்தைப் புறநோக்கி யயல்.
4. கள்ளுறையு மலர்ச்சோலை.

ஊர்தேடு படலம் முற்றும்.

# 3. காட்சிப் படலம்.

## அநுமன் அசோகவனம் புகுதல் 330-331

330. *மாடு நின்றவம் மணிமலர்ச் சோலையை மருவித்*
*தேடி யிவ்வழிக் காண்பெனேற் றீருமென் சிறுமை*
*ஊடு கண்டிலெ னென்றபி னுரியதொன் றில்லை*
*வீடு வென்மற்றிவ் விலங்கன்மே லிலங்கையை வீட்டி.*

காட்சிப் படலம் - அநுமன் அசோக வனத்தில் பிராட்டியைக் கண்ட செய்தியைக் கூறும் படலம் என்று விரியும். இப்படலம் அச்சுப் பிரதிகளில் (330-406) காட்சிப் படலம் என்றும், (407-488) நிந்தனைப் படலம் என்றும் இரண்டாகப் பிரிந்து காண்கிறது. சுவடிகளில் வேறு வேறு விதமான பெயர்களுடன் பல பிரிவுகள் காணப்படுகின்றன. அவை இப்பதிப்பில் அங்கங்கே குறிக்கப் பெற்றுள்ளன.

மாடு நின்ற - அருகே இருந்த, அ மணி மலர் சோலையை - அந்த அழகிய மலர்கள் நிறைந்த சோலையை, மருவி-(அநுமன்) அடைந்து, 'இ வழி தேடி காண்பெனேல்-இவ்விடத்தில் பிராட்டியைத் தேடிக்கண்டு கொண்டேனுயின், என் சிறுமை தீரும் - என் துன்பம் நீங்கிவிடும்; ஊடு- அச்சோலையின் உள்ளே, கண்டிலென் என்றபின் - நான் காணவில்லை என்ற பிறகு, இ விலங்கல் மேல் இலங்கையை - இந்தத் திரிகூடமலைமீ துள்ள இலங்கைநகரை, வீட்டி - அழித்து, வீடுவென் - யானும் இறப் பேன்; மற்று உரியது ஒன்று இல்லை - வேறு யான் செய்தற்கு உரிய காரியம் ஒன்றும் எனக்கு இல்லை';

இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடர். மணிமலர் சோலை - இரத்தினங்கள் போல் ஒளிவீசும் பூக்கள் விளங்கும் சோலை எனலும் ஆம்; இராவணன் தவப்பயனுல் இரத்தினங்களே மலர்களாக விளங்கும் சோலை என்றும் கூறலாம்; அ என்ற சுட்டு முன் (329 இல்) குறித்த அசோக வனத்தைக் குறித்தது. சிறுமை - குறையும் ஆம்; குறள். 769. 'விலங்கல்மே லிலங்கையை வீட்டி வீடுவென் - மகாமேருவின் முடியிலே செய்தஇலங்கையை அழித்துப்பின் மரிக்கிறேன் என்றார்' என்பது பழைய உரை.

ஒரு சுவடியில், இச் செய்யுள் சானகி சோகப் படலம் என்ற தலைப் பின் கீழ் 2 ஆம் செய்யுளாகவும் அதன் முதற் செய்யுள் அடியிற் காணு மாறும் உள்ளது,

எயிலி னுட்படு நகரின்யோ சனையெழு நூறும்
அயிலி னிற்பட ரிலங்கைமற் றடங்கலு மணுகி
மயல றத்தனி தேடிய மாருதி வனசக்
குயிலி ருந்தவச் சோலைகண் டிதயத்திற் குறித்தான்.

(பி-ம்.) 1. மாடு நின்றவிம் மருமலர்ச் ; மதுமலர்ச்.
2. தேடி யவ்வழிக் : இவ்வழிக் காணுமேற்.
3. கண்டிலெ னென்னிற்பின் ; எனிற்பின்னர்: உரியவொன் றில்லை.
4. விலங்கல்மேல் விலங்கலை : மற்றிவ் விலங்கையாம் விலங்கலை வீழ்த்தி ; மற்றிவ் வரக்கரோ டிலங்கையை வீட்டி. (1)

331. என்று சோலைபுக் கெய்தின னிராகவன் றூதன்
ஒன்றி வானவர் பூமழை பொழிந்தன ருவந்தார்
அன்று வாளரக் கன்சிறை யவ்வழி வைத்த
துன்ற லோதிதன் னிலையினிச் சொல்லுவான் றுணிந்தாம்.

என்று-இவ்வாறு தீர்மானம் செய்து,இராகவன் தூதன்-இராமபிரான் தூதனை அநுமன், சோலைபுக்கு எய்தினன்-அவ்வசோகவனம் என்னும் சோலையுள் புகுந்தான்; வானவர்-தேவர்கள், ஒன்றி-ஒன்றாகத் திரண்டு, பூமழை பொழிந்தனர் உவந்தார் - மலர்களை மழைபோல (அநுமன்மீது) பொழிந்து மகிழ்ந்தார்கள்; வாள் அரக்கன் - வாள் ஏந்திய அரக்கனாகிய இராவணன், அன்று அ வழி சிறை வைத்த-முன் அச்சோலையி னிடத்தில் காவலில் வைத்திருந்த, துன்று அல் ஓதி தன் - அடர்ந்த இருள் போன்ற கூந்தலையுடைய பிராட்டியினுடைய, நிலை-அப்பொழுது இருந்த நிலைமையை, இனி சொல்லுவான் துணிந்தாம் - இனி யாம் சொல்லத் துணிந்தோம்.

இச் செய்யுள் கவிக்கூற்று. இராகவன் - ரகு வம்சத்திற் பிறந்தவன்; தத்திதாந்த நாமம். வாள் அரக்கன்-சிவபிரானிடமிருந்து பெற்ற சந்திரஹாஸம் எனும் வாளையுடைய இராவணன் என்னலும் ஆம். துன்றலோதி: அடையடுத்த ஆகுபெயர். இதன்பின் ஓர் ஏட்டில், அடியிற் காணும் ஒரு செய்யுள் அதிகமாக உள்ளது.

அஞ்ச னத்தொளி ரமலனை மாயையி னகற்றி
வஞ்ச கத்தொழி லிராவணன் வவ்வினன் கொடுவந்
திஞ்சி யுட்படு மிலங்கையின் சிறையில்வைத் திடவோர்
தஞ்ச மற்றிலை தானொரு தனியிருந் தயர்வாள்.

(பி-ம்.) 2. ஒன்ற வானவர்: பூமழை சொரிந்தனர்: மழை பொழிந்துநின் றுவந்தார்.
3. அன்றவ்: அவ்வுழி வைத்த.
4. ஓதிதன் றுயரினை: எடுத்தினிச் சொல்வாம். (2)

## அநுமன் கண்ட பிராட்டி துயர்நிலை. 332-358

332. *வன்ம ருங்கில்வா ளரக்கியர் நெருக்கவங் கிருந்தாள்*
*கன்ம ருங்கெழுந் தென்றுமோர் துளிவரக் காணு*
*நன்ம ருந்துபோ னலனற வுணங்கிய நங்கை*
*மென்ம ருங்குல்போல் வேறுள வங்கமு மெலிந்தாள்.*

கல் மருங்கு எழுந்து - (வலிய) கல்லிடத்து முளைத்து வளர்ந்து, என்றும் ஓர் துளி வர காணு - எப்பொழுதும் ஒரு துளிநீர்கூடத் தன் மேல் விழ வருவதைக்காணுத, நல் மருந்து போல் - சிறந்த சஞ்சீவி என்னும் ஓடதி போல, நலன் அற உணங்கிய (செழுமை அன்றி) அழகு கெட்டு வாடிப்போன, நங்கை - பிராட்டி, மெல் மருங்குல் போல்- (அவளுடைய) மெல்லிய இடை போல, வேறு உள அங்கமும் - வேருக உள்ள அவயவங்களும், மெலிந்தாள் - மிகவும் இளைத்துப் போனவளாய், மருங்கில் - பக்கங்களில், வல் - வலிய, வாள் - வாள் ஏந்தியவர்களான, அரக்கியர் நெருக்க-காவல் புரியும் அரக்கர் மாதர்கள் (அச்சமுறுத்தி) இடைவிடாது வருத்த, அங்கு இருந்தாள் - அவ்வ சோகவனத்தில் (வருந்திச் சிறையில்) இருந்தாள்.

வாளரக்கியர்: கொடிய அரக்கியரும் ஆம், நன் மருந்து - நோய் நீக்கி, உயிரைக் ,காக்க வல்ல மிருத சஞ்சீவினி என்னும் ஓடதி; ஒப்பு; 'வீயுமுயிர் மீளும், மருந்துமென லாகியது வாழிமணி யாழி' (558). கீழ் ஈர நைப்பும், மேல் மழைத்துளியுமின்றி கல்லின் இடையே வளரும் வாடி உலர்ந்த நிலையிலுள்ள ஓடதி, 'இராமபிரானின் தண்ணளி பெருமல், வன்னெஞ்ச முடைய அரக்கியர் இழைத்த துயரத்தில் ஆழ்ந்த பிராட்டிக்கு உவமை. 'வாளரக்கியர் பலமுகத் தார் எழுநூறு பேர்; நன் மருந்து - மிருத சஞ்சீவினி' என்பன பழைய உரை. நலம் - அழகும் ஆம். நங்கை - வடிவிற் சிறந்த பெண். மென்-

மருங்குல் - மெல்லிய இடை; இடை மெல்லியதாய் இருப்பது மகளிர் **உத்தம லக்ஷணம்.**

(பி-ம்.) 1. மருங்குவாள்; மருங்குல்வாள்: நெருக்கவாங்கு; நெருங்கிவந்.
2. எழுந்தொன்று மோர்: எழுமருவியிற் சுலுழ்ந்திடுங் கண்ணுள்.
3. நல்லறத் தொருதனி நங்கை. (3)

333, *துயிலெ னக்கண்க ளிமைத்தலு முகிழ்த்தலுந் துறந்தாள்*
*வெயிலி டைத்தந்த விளக்கென வொளியிலா மெய்யாள்*
*மயிலி யற்குயின் மழலையாண் மானிளம் பேடை*
*அயிலெ யிற்றுவெம் புலிக்குழாத் தகப்பட்ட தன்னுள்*

துயில் என - தூக்கம் என்று சொல்லும்படி, கண்கள் இமைத்தலும் முகிழ்த்தலும் - கண்கள் இமைகளைக் கொட்டுதலும், மூடுதலும், துறந் தாள் - நீங்கினவளும், வெயில் இடை தந்த விளக்கு என - வெயிலின் இடையே ஏற்றி வைத்த ஒரு விளக்கைப் போல, ஒளி இலா மெய்யாள் - பிரகாசம் இல்லாத உடம்பை உடையவளும், மயில் இயல் குயில் மழ லையாள் - மயில் போன்ற சாயலையும் குயில் போன்று இனிய இளஞ் சொற்களையுடையவளுமான பிராட்டி, இளம் மான் பேடை - இளம் பெண்மான், அயில் எயிற்று வெம் ,புலி குழாத்து-கூரிய பற்களையுடைய கொடிய புலிக்கூட்டத்தில், அகப்பட்டது அன்னுள் - அகப்பட்டுக் கொண்டதை ஒத்து வருந்தினுள்.

இமைத்தலும் முகிழ்த்தலும் உறக்கத்துமுன் நிகழும் மெய்ப்பாடு கள். பிராட்டி அசோகவனத்தில் உறங்கவில்லை என்பது, 'துயிலிலை யாத லில் கனவு தோன்றல'(368)என்று பின்திரிசடை கூறுவதாலும் அமையும். வெயிலிடை விளக்கு; ஒப்பு: 'பகற் கொண்ட சுடர் போன்ருள் (கலித். நெய்தல். 15. 10); 'பகலெரிசுடரின்' (நற். 128. 1.) மயிலிற் குயின் மழலையாள்: இல் பொருளுவமை. மானிளம் பேடை பிராட்டிக்கும், அலெயிற்று வெம் புலிக் குழாம் அவளைச் சூழ்ந்து காவலிருந்த அரக்கி யர்க்கும் உவமைகள். புலிக் குழாத் தகப்பட்ட மான்: ஒப்பு: வி. பா, சூதுபோர். 251.

(பி-ம்.) 1. துயிலறக் கண்கள்: கண்கள் விழித்தலும்.
3. மானினம் பேடை.
4. குழாத் திடைப்பட்ட தன்னுள்; குழாத்திடைப் புக்கத; புக்கதனை யாள்; குழாத்தடை பட்டதன்னுள்: அகப்பட்ட வன்னுள். (4)

334. விழுதல் விம்முதன் மெய்யுற வெதும்புதல் வெருவல்
எழுத லேங்குத லிரங்குத லிராமனை யெண்ணித்
தொழுதல் சோருத றுளங்குத றுயருழந் துயிர்த்தல்
அழுத லன்றிமற் றயலொன் றுஞ் செய்குவ தறியாள்.

விழுதல் - கீழே விழுதல், விம்முதல் - தேம்பியழுதல், மெய் உற வெதும்புதல் - உடல் மிகவும் வெப்பமுறுதல், வெருவா - அஞ்சி, எழுதல் - மீண்டும் எழுந்திருத்தல், ஏங்குதல் - கவலையால் வருந்துதல், இரங்குதல் - வருந்தி அழுதல், இராமனை எண்ணி தொழுதல் - இராமபிரானை மனத்தால் நினைத்து வணங்குதல், சோருதல் - தளர்வுறுதல், துளங்குதல் - நடுங்குதல். துயர் உழந்து உயிர்த்தல் - துன்பத்தால் வருந்திப் பெருமூச்சு விடுதல், அழுதல் - வாய்விட்டழுதல், அன்றி - ஆகிய இச் செயல்கள் அல்லாமல், மற்று அயல் ஒன்றும் - பிற செயல் ஒன்றும், செய்குவது அறியாள் - தான் செய்வது அறியாதவளாய் இருந்தாள்.

'இராமனை எண்ணி' என்பதை நடுநிலை அணியாகக் கொண்டு தொழுதல் முதல் அழுதல் வரையில் உள்ள எல்லாச் செயலிலும் கூட்டிப் பொருள் கொள்ளத்தக்கது. 'அயல் ஒன்று செய்குவது அறியாள்' என்றதால் இராமபிரான் நினைவேயன்றி, தனக்குரியதாக வேறு ஒரு செயல் இல்லாதவளாய் இருந்தாள் என்பதாம்.

(பி-ம்.) 1. மெய்யுறு: வெதும்புறல் வெருவி.
2. ஏங்குத லிராமனை யுளத்திடை யெண்ணித்.
3. உழந் திருத்தல்.
4. ஒன்று செய்குவது. (5)

335. தழைத்த பொன்முலைத் தடங்கடந் தருவிபோற் றாழப்
புழைத்த போலநீர் நிரந்தரம் பொழிகின்ற பொலிவால்
இழைக்கு நுண்ணிய மருங்குலா ளிணைநெடுங் கண்கள்
மழைக்க ணென்பது காரணக் குறியினுல் வகுத்தாள்.

இழைக்கும் நுண்ணிய மருங்குலாள் - நூலிழையைவிட நுட்பமான இடையை உடைய பிராட்டி, நீர் - (அவள் கண்களினின்று வழிந்த) கண்ணீர், புழைத்த போல - துளைபட்டு விழுவன போல, தழைத்த - செழித்து ஓங்கிய, பொன் முலை தடம் கடந்து - பொன்னிறமான தனங்களான இடத்தைத் தாண்டிச் சென்று, அருவி போல் தாழ - (மலையினின்றும் விழும்) அருவிகளைப் போல இறங்கி, நிரந்தரம் பொழிகின்ற

பொலிவால்-இடைவிடாமல் சொரிகின்ற தோற்றத்தினால், இணை நெடும் கண்கள்-தன்னுடைய இரண்டு நீண்ட கண்களை, மழைக் கண் என்பது-மழையையுடைய கண் என்று சொல்லப் படுவதை, காரணக் குறியினால் - காரண இடுகுறிப் பெயர் என்னும் விதிக்கு ஒத்திருக்கும்படி, வகுத்தாள் - இலக்கணத்திற்கு ஓர் உதாரணமாக ஆக்கிக் கொண்டாள்.

'தழைத்த பொன் முலை' என்பதில் தழைத்த என்ற சொல்லைப் பொன்னுக்கும் முலைக்கும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். 'நீர் அருவி போல்' என்றமையால், முலைத் தடம் என்பதை முலையாகிய மலையிடம் என்க. இழை நுண்மையால் மருங்குலுக்கு உவமை; 'இழைந்த நூலிணை மணிக்குடஞ் சுமக்கின்ற தென்ன, குழைந்த நுண்ணிடை' (அயோத்யா. சித்திரகூடப். 9.) மழைக்கண்: குளிர்ந்த நோக்கம் உடைய கண் என்ற பொருளில் பொதுவாக மகளிர் கண்ணுக்குக் காரணப் பெயராகக் கூறப்படும். இங்குச் சீதை தன்கண்கள் மழை போல் நீர் பொழிகின்றமையால் அவற்றைக் காரண இடுகுறிக்கு உதாரணமாகச் செய்தாள் என்க. சீதையின் கண்ணை மழைக்கண் என்பது; ஆரண்ய. மாரீசன். 250.

(பி-ம்.) 1. மென்முலைத்: கிடந் தருவிபோய்த்தாழ: அருவிபோற் கண்கள்: போய்த் தாழாப்,
2. புழைத்த நீரவை நிரந்தரம் பொலிகின்ற பொலிவரள்: புழைத்தல்: பேரநீர்; கோலநீர்: பொழிவால்.
3. இழைத்த நுண்ணிய: நுண்ணிடை: மருங்கிலான்: மருங்குலரலிழைநெடுங். 4. குறியென. (6)

336. *அரிய மஞ்சினோ டஞ்சன மிவைமுத லதிகம்*
*கரிய காண்டலுங் கண்ணினீர் கடல்புகக் கலுழ்வாள்*
*உரிய காதல ரொருவரோ டொருவரை யுலகில்*
*பிரிவெ னுந்துய ருருவுகொண் டாலன்ன பிணியாள்.*

அரிய - மஞ்சினோடு - காண்பதற்கு அருமையான மேகத்தோடு, அஞ்சனம் முதல்-மை முதலான, இவை அதிகம் கரிய காண்டலும்-இவை போன்ற மிகக் கருநிறமுடைய பொருள்களைப் பார்க்குமிடத்தும், கண்ணின் நீர் கடல் புக கலுழ்வாள் - (இராமபிரான் திருமேனி தன் நினைவுக்கு வருவதால்) கண்ணீர் (ஆறாகப் பெருக்கெடுத்து ஓடிக்) கடலில் போய்ச் சேர வருந்தி அழுவாள்; உலகின் - இவ்வுலகத்தில், உரிய காதலர் ஒருவரோடு ஒருவரை - ஒருவர்பால் ஒருவர் உரிமையாகக் கொண்ட உண்மைக் காதலரான தலைவன் தலைவியாகிய இருவருள்

ஒருவர் மற்றெருவரை, பிரிவு எனும் துயர் - பிரிவது எனும் துன்பமே உருவு கொண்டால் அன்ன பிணியாள் - ஒரு வடிவம் கொண்டுள்ளது போன்ற நோயை யுடையவளாய் இருந்தாள்.

இராமபிரானைப் பிரிந்த பிராட்டி, அப் பெருமான் திருமேனிக்கு ஒருவாறு நிகர்ப்பனவான நீருண்ட மேகம், மை முதலாம் பொருள்களைக் கண்ட போது, அப்பெருமானது திருமேனியின் நினைப்பை அவை தூண்டினமையால், அப்பெருமானைத் தான் பிரிந்திருக்கும் துயர் தாங்காமல் கண்ணீர் விட்டு வருந்தினுள் என்க. பிரிந்து வருந்தும் தலைவன் தலைவியர், தம்மைப் பிரிந்தோர் திருமேனிக்கு ஒப்பான பொருள்களைக் கண்டு வருந்துதல்; கிட்கிந்தா. பம்பைப். 25-32 செய்யுட்களில் இராமபிரானின் கூற்றுக்களால் நன்கு புலப்படும். தலைவன் தலைவி என்னும் இருவருள் ஒருவரை ஒருவர் பிரிந்து வருந்துவது என்னும் தன்மை ஓர் வடி வெடுத்துள்ளது போன்று சீதை விளங்கினுள் என்பதாம். பிரிவுத்துயர் உருவு கொண்டாலென இருத்தல்: ஒப்பு; 'அவலமீதென,வெழுதிய படிவமொத்து' (அயோத்யா, கிளைகண்டு. 49.) 'பிரிவரும் துயர் - பிரிக்க வரும் துயர்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. அஞ்சன முதலின வதிகம்: இவை முதலாய.
2. கரிய காணினும்: கண்ணுநீர்: கலுழ்ந்தாள்.
3. உரிய தாமனத் தொருவரோடு.
4. பிரிவெ னுந்துணை யுருவு. (7)

337. துப்பி னுற்செய்த கையொடு கால்பெற்ற துளிமஞ்
சொப்பி னுன்றனை நினைதொறும் நெடுங்கண்க ளுகுத்த
அப்பி னுனனைந் தருந்துய ருயிர்ப்புடை யாக்கை
வெப்பி னுற்புலர்ந் தொருநிலை யுருதமென் றுகிலாள்.

துப்பினுல் செய்த - பவழத்தால் செய்யப் பெற்ற, கையொடு கால் பெற்ற - கைகளோடு கால்களையும் பெற்ற, துளி மஞ்சு-நீர்த் துளிகளைப் பொழியும் நீருண்ட மேகத்தை, ஒப்பினுன் தனை-ஒப்பாகவுடைய இராமபிரானை, நினைதொறும் - எண்ணும் பொழுதெல்லாம், நெடும் கண்கள் உகுத்த - நீண்ட கண்கள் சிந்தின, அப்பினுல் நனைந்து - நீரால் நனைந்து ஈரமாகி, அரும் துயர் உயிர்ப்பு உடையாக்கை - பெருந் துன்பத்தால் உண்டாகும் பெருமூச்சுடைய உடலினது, வெப்பினுல் - வெப்பத்தினுல், புலர்ந்து - உலர்ந்து, ஒரு நிலை உருத-எப்பொழுதும் ஒருநிலை அடையாத, மென் துகிலாள் - மெல்லிய ஆடையை உடையவளாய் இருந்தாள்.

இராமபிரான் துளி மஞ்சொப்பது நிறத்தாலும் செயலாலும் என்க. இராமபிரான் திருமேனி மேகம் போன்று கரியதாகவும், உள்ளங்கைகளும் உள்ளங்கால்களும் பவழம் போன்று சிவந்து மிருந்தமையால், துப்பினுற் செய்த மஞ்சு ஒப்பான் என்னப் பட்டது; இஃது இல் பொருளுவமை. அவனுடைய பிரிவினுல் வருந்தும் பிராட்டி எப்பொழுதும் கண்ணீர் பெருக்கியதால் அவள் அணிந்திருந்த மென் துகில் நனைந்தும்,. அவள் ஏக்கத்தால் விடும் பெருமூச்சினுல் ஏற்படும் உடல் வெப்பம் படிவதால் உலர்வதுமாகி அடிக்கடி நனைதல் உலர்தல் என்னும் நிலைமை அடைந்திருந்தது என்க. துகில் நனைதலும் புலர்தலும் ; பால. மிதிலைக்காட்சிப். 4.

பி-ம் 1. துப்பி னுற்பொலி; துப்பினுற்சில; கைகொடு : கால்பெறத்.
3. துய ருழக்குறு மாக்கை.
4. புலந் தொரு. (8)

338. அரிது போகவோ விதிவலி கடத்தலென் றஞ்சிப்
பரிதி வானவன் குலத்தையும் பழியையும் பாராச்
சுருதி நாயகன் வரும்வரு மென்பதோர் துணிவால்
கருதி மாதிர மனைத்தையு மளக்கின்ற கண்ணுள்.

'விதிவலி கடத்தல் - விதியின் வலிமையைக் கடந்து செல்லுதல் என்பது, போகவோ அரிது என்று-போகமுடியாத அரிய காரியம் ஆகும் என்று, அஞ்சி - பயந்து, சுருதி நாயகன் - வேதங்களுக்குத் தலைவனான இராமபிரான், பரிதி வானவன் குலத்தையும் பழியையும் பாரா -(தான் அவதரித்த) சூரிய பகவான் திருக் குலத்தின் சிறப்பையும், (அந்தக் குலத்திற்குத் தன்னுல் இப்பொழுது ஏற்பட்டுள்ள) நிந்தனையையும் பார்த்து, வரும் வரும் என்பதோர் துணிவால் - அப்பழியை நீக்கிக் கொள்ள வேனும் விரைவில் வருவான் என்ற நிச்சய புத்தியினுல், கருதி - அவனது வருகையை எண்ணி, மாதிரம் அனைத்தையும் அளக்கின்ற கண்ணுள் - எல்லாத் திசைகளையும் துழாவிப் பார்க்கும் கண்களை யுடையவளானுள்.

விதிவலி கடக்க முடியாதது என்று அறிந்தும், இராமபிரான், தன் பால் கொண்டுள்ள அன்பினுல் வந்து மீட்காவிடினும், தன் குலத்தின் பெருமையைக் காப்பாற்றவும், தன் மனைவியைப் பிறனொருவன் அபகரித்துச் சென்ற பழியைப் போக்கிக் கொள்ளவுமாவது திண்ணமாய் வருவான் என்ற உறுதியோடு அவன் வரும் வழியை நாடி நாற்றிசையும், பார்த்திருந்தாள் என்க; ஒப்பு: 'தன் வீரங்காத்தலை வேண்டென்று வேண்டுவாய்' (636.) பரிதிவானவன் குலம் பழியற்றது: அயோத்யா. பள்ளியடைப். 92; கிட்கிந்தா. வாலிவதைப்: 87. இராமனைச் சுருதி நாய

கன் என்பது; 20, 632. உயுத்த. அங்கதன். 21. மாதிரம் அளத்தல்: கண்ணுக்கு எட்டும் வரையில் நான்கு திசைகளையும் திரும்பிப் பார்த்தல்; ஒப்பு: 'பாழ்படு திசையெலாம் பரிந்து பார்க்குமே' (நைடத.) அன்னத் தைக். 71.) வரும் வரும் என்ற அடுக்கு, துணிவுபற்றியது.

(பி-ம்.) 1. அரிது போகலோ; அரிது போதலே விதிமுறை.
3. வருவனு மென்பதோர். (9)

339. கமையி னுடிரு முகத்தயற் கதுப்புறக் கதுவிச்
சுமையு டைக்கற்றை நிலத்திடைக் கிடந்ததூ மதியை
அமைய வாயிற்பெய் துமிழ்கின்ற வயிலெயிற் றரவில்
குமையு றத்திரண் டொருசடை யாகிய குழலாள்.

கமையினுள்-பொறுமையையுடைய சீதையின், திரு முகத்துஅயல்-அழகிய முகத்திற்குப் பக்கங்களில் உள்ள, கதுப்பு உற - கன்னங்களில் பொருந்த, கதுவி-பற்றிக் கொண்டு, சுமை உடை-பாரமுடைய, கற்றை-கூந்தலின் தொகுதி, நிலத்து இடை கிடந்த தூ மதியை-பூமியினிடத்துக் கிடந்த களங்கமற்ற முழுமதியை, அமைய - நன்றாய்ப் பொருந்த, வாயில் பெய்து உமிழ்கின்ற - வாயில் இட்டு மீண்டும் வெளியே உமிழ்ந்து வெளியிடுகின்ற, அயில் எயிற்று அரவில்-கூரிய பற்களையுடைய இராகு என்னும் கோளாகிய பாம்பைப் போல, குமை உற திரண்டு-குவிந்து சேர்ந்து, ஒரு சடை ஆகிய குழலாள், ஒரு சடையாகத் திரிந்துள்ள கூந் தலை யுடையவளாய் இருந்தாள்.

சீதை கமையினுள்: பால. மிதிலைக் காட்சிப். 25. கமை - க்ஷமை என்ற வட சொல்லின் திரிபு. உற கதுவி - நன்றாகப் பற்றிக் கொண்டு எனலும் ஆம். முகம் தெரிய, கதுப்புக்கள் வரை மயிர்த் திரள்கள் கவிந்து ஒரு சடையாக விளங்கும் கூந்தலைப் பிராட்டி அடைந்திருந்தாள்; இதில் பிராட்டியின் முகம் மாசற்ற முழுமதிக்கும், அவள் கூந்தலின் தலைப்பகுதி இராகு என்னும் கோளாகிய பாம்பின் தலைப்பகுதிக்கும், ஒரு சடையாய் இருந்த கரிய கூந்தல் அப்பாம்பின் உடலுக்கும் உவமைகள். நிலத்திடைக் கிடந்த தூ மதி - பிராட்டியின் திருமுகத்திற்கு இல் பொருளுவமை. சீதையின் கூந்தல்சடையாயினமை அது நெய் தடவி வாரி முடிக்காமையால்: ஒப்பு. உயுத்த, மாயாசனகப். 93: பெருங்: 4: 7: 103-4: குறுந்: 192-6; பு. வெ. 223. உரை. கணவனைப் பிரிந்துறையும் மகளிர் கூந்தல் புனையாமை மரபு.

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப்பாடல் உள்ளது.

கண்ணி னீர்ப்பெருந் தாரைகள் முலைத்தடங் கடந்து
மண்ணின் மீதிடைப் புனலென வழிந்தவை யோட
விண்ணை நோக்குறு மிருகரங் குவிக்கும்வெய் துயிர்க்கும்
எண்ணு மாறிலாப் பிணியினு ளிவையிவை யியம்பும்.

(பி-ம்.) 1. கமையனுள்: கதுப்புறக் கவ்வீச்.
2. கரு நிறத்திடை; கறை நிறத்திடைக்: நிலத்திடை வீழ்ந்த.
3. அமையிற் பெய்துபின் னுமிழ்கின்ற. (10)
4. குமையறத்.

340. *ஆவி யந்துகில் புனைவதொன் றன்றிவே றறியாள்*
*தூவி யன்னமென் புனலிடைத் தோய்கிலா மெய்யாள்*
*தேவு தெண்கட லமிழ்துகொண் டனங்கவேள் செய்த*
*ஓவி யம்புகை யுண்டதே யொக்கின்ற வுருவாள்.*

(அப்பிராட்டி) ஆவி அம் துகில் - உடலுக்கு உயிர் போற் சிறந்த ஆடை, புனைவது ஒன்று அன்றி - தான் உடுத்துக் கொண்டிருப்பது ஒன்றே அல்லாமல், வேறு அறியாள்-வேறு ஒரு மாற்று ஆடை உடுத்து அறியாதவள் தூவி அன்ன மென் புனலிடை - (காக்கையின்) இறகு போன்ற தெளி; வான மென்மையான நீரில், தோய்கிலா மெய்யாள் - படிந்து குளிக்காத உடலையுடையவள்; தேவு தெண்கடல் - வெதய்த் தன்மை பொருந்திய தெளிந்த திருப்பாற் கடலில் உண்டான, அமிழ்து கொண்டு - தேவா மிர்தத்தைக் கொண்டு, அனங்கவேள் செய்த - மன் மதன் செய்து அமைத்த, ஓவியம் - சித்திரம், புகை உண்டதே ஒக்கின்ற - புகை படிந்து மங்கிப் போனதைப் போன்ற, உருவாள் - உருவத்தை யுடையவளாக இருந்தாள்.

குலமகளுக்குத் துகில் உயிரினும் சிறந்த நாணைக் காக்கின்றதாதலின், ஆவி அம் துகில் என்னப்பட்டது; ஆவி அம்துகில்; ஒப்பு அயோத்யா. தைலமாட்டுப். 10.; புறநா. 398; சீவக. 1094; திருமுருகு. 138. சீதை, குளிக்காமலும், ஒரு துகிலோடும், தலையை வாரிப் பின்னாமலும் இருந்தும் அவள் மாசுபடியாமலும், நோயின்றியும் இருந்தது, தண்டகாரணியத்தில் இருந்த காலை, அத்திரி முனிவர் மனைவி அனசூயா தேவி அளித்த நல் வரத்தால் என்க; ஆரண்ய. விராதன். 5. தூவியன்ன மென்புனல்: தூவி - பறவையின் இறகு. இங்குக் காக்கையின் இறகைக் குறிப்பிட்டது; 'மறுவில் தூவிச் சிறு கருங் காக்கை' (ஐங்குறு. 391 : 1.) காக்கை இறகு போல் தெளிந்த நீர் என்னும் உலக வழக்கையும் நோக்குக. 'தூவி அன்னமென்புனல்' என்பதற்கு

அன்னத்தின் இறகு போன்று மென்மையான நீர் எனப் பொருள் கொள் வாருமுளர். கணவனைப் பிரிந்த மகளிர் செயல்; 339 ஆம் செய்யுளின் உரையைக் காண்க. இனி, சீதை இராமபிராேைடு வனம் வந்த போது ஒற்றைத் துகிலோடே வந்தாள் என்பதும் இங்கு நோக்கத் தக்க தாகும்; 549. அமிழ்து கொண்டு அனங்கவேள் செய்த ஓவியம்; பால. மிதிலைக்காட்சிப். 5. ஓவியம் புகையுண்டது; 1073: நெடுநல். 147 'ஆவியந்துகில் புனைவது ஒன்றன்றி வேறறியாள் - திருமேனி வாடுந் தோறும் ஆத்துமாவுக்கு நிகரான புடைவையை இறுக்குகின்றதே யன்றி ஒன்றும் அறியாள். தேவு தெண் கடல் - தெய்விகமான திருப்பாற் கடல்.' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. துகி லங்கமொன்றன்றி வேறறியாத்: புனைவதை யன்றி.
2. தூவி யன்னமோர் புன்விடை: தோய்கிலா ததுபோல்;
அன்னமொன் றகன்புனற் றோய்கிலா மெய்யாள்.
3: தேவுதண்
4. உண்டதை. (11)

341. கண்டி லன்கொலா மிளவலுங் கனைகட னடுவண்
உண்டி லங்கையென் றுணர்ந்தில ருலகெலா மொறுப்பான்
கொண்டி றந்தமை யறிந்தில ராமெனக் குழையாப்
புண்டி றந்ததி னெரி நுழைந் தாலெனப் புகைவாள்.

'இளவலும் கண்டிலன் கொல் - இளையபெருமானுன இலக்குவனும் (மானைப் பிடிக்கச் சென்ற இராமபிரானைக்) காணவில்லை போலும்; (அப்படிக் கண்டிருந்தாலும்) கனைகடல் நடுவண் - ஒலிக்கும் கடலின் நடுவில், இலங்கை உண்டு என்று - இந்த இலங்கை உள்ளது என்று, உணர்ந்திலர் ஆம் - அவ்விருவரும் அறிந்தாரல்லர் போலும்; உலகு எலாம் ஒறுப்பான் - எல்லாவுலகங்களையும் வருத்தும் இராவணன், கொண்டு இறந்தமை-என்னை அபகரித்துக் கொண்டு கடந்து வந்ததை, (அவ்விராம லக்ஷ்மணர் இருவரும்) அறிந்திலர் ஆம் என-அறியவில்லை போலும்' என்று, குழையா - சோர்ந்து வருந்தி, புண் திறந்ததில் எரி நுழைந்தால் என - திறக்கப்பட்ட புண்ணில் நெருப்பு உள் நுழைந்தது போல, புகைவாள் - வருந்துவாள். ஆம்: அசை.

புண்ணில் தீப்புகுதல்; 342; பால. கையடைப். 11. புண், பிரிவினுல் உண்டானதாகவும், தீ இச் செய்யுள்களில் குறித்த நினைப்புக்களால் உண்டானதாகவும் கொள்க. புகைதல் - வருந்துதல்; சீவக. 13.

(பி-ம்.) 1. கடனடுவின்.
2. உணர்ந்திலன்; அறிந்திலர்; உலசெலா முடிப்பான்.
3. கொண்டு வந்தமை; கொண்டிருந்தமை; அறிந்திலன்கொல்.
4. புலர்வாள்; புரள்வாள். (12)

342. *மாண்டு போயின னெருவையர்க் கரசன்மற் றவரோ*
*டாண்டை யென்னிலை யுரைப்பவ ரில்லையிப் பிறப்பில்*
*காண்ட லோவரி தென்றுளம் விம்முறுங் கலங்கும்*
*மீண்டு மீண்டுபுக் கெரிநுழைந் தாலென மெலிவாள்.*

'எருவையர்க்கு அரசன் - கழுகினங்களுக்கு அரசனான சடாயு, மாண்டு போயினன் - இறந்து போய் விட்டான் போலும் (ஆதலின்), அவரோடு என் நிலை ஆண்டை உரைப்பவர் இல்லை - (அந்த இராம லக்ஷ்மணர்களிடம்) என் நிலைமையை அங்குத் தெரிவிக்கக் கூடியவர் வேறு ஒருவரும் இல்லை; (ஆதலால்), இப்பிறப்பில் காண்டலோ அரிது - இப்பிறப்பில் (யான் அந்த இராமலக்ஷ்மணர்களைக்) காண்பது என்பதோ நடக்கக் கூடாத காரியமாகும்'; என்று-என்று பலகூறி, உளம் விம்முறும் - மன ஏக்கத்தினால் வருந்துவாள்; கலங்கும் - மனக் கலக்கம் அடைவாள்; மீண்டும் மீண்டும் எரி புக்கு நுழைந்தால் என-(திறந்த புண்ணில்) திரும்பத் திரும்ப நெருப்புப் புகுந்தது போல, மெலிவாள் - சோர்ந்து வருந்துவாள். மற்று: அசை.

ஆண்டை, ஐயீற்றுடைக் குற்றியலுகரம். மீண்டு மீண்டு: அடுக்கு விரைவுப் பொருளது. முன் செய்யுளில் உள்ள புண் திறந்ததில் என்பதை இங்கும் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது. எரி நுழைந்தால் என - எரியில் புகுந்தாற் போல என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. எருவைகட் கரசன்; மற்றுள்ளோர்; மற்றினியார்.
2. என்னிலை அறிவுறுப் பார்கள்; அறிவிப்பா ரில்லை.
3. அரிதென் றென்று.
4. புக்கெரி நுழைவாளென; மீண்டு புக்கெரி நுழைவன வாமென. (13)

334. *என்னை நாயக னிளவலை யெண்ணிலா வினையேன்*
*சொன்ன வார்த்தைகேட் டறிவில ளெனத்துறந் தானோ*
*முன்னை யூழ்வினை முடிந்ததோ வென்றென்று முறையால்*
*பன்னி வாய்புலர்ந் துணர்வுதேய்ந் தாருயிர் பதைப்பாள்.*

'எண் இலா வினையேன் - கணக்கற்ற பாவவினைகளைச் செய்த நான், இளவலை சொன்ன வார்த்தை கேட்டு - இளைய பெருமானை இலக்குவனை நிந்தித்துக் கூறிய கொடுமொழிகளை (அவ்விளைய பெருமான் கூறக்) கேட்டு, நாயகன் - எனது தலைவனான இராமபிரான், என்னை அறிவு இலள் என துறந்தானோ - என்னை அறிவில்லாதவள் என்று எண்ணி வெறுத்து நீக்கி விட்டானோ? (அல்லது), முன்னை ஊழ்வினை முடிந்ததோ-நான் முற்பிறப்பில் செய்த தீயவினைகளால் இவ்வாறு எனக்குத் துன்பம் வந்து முடிந்து விட்டதோ?' என்று என்று - என்று பலவாறுசொல்லி, முறையால் - ஒன்றன்பின் ஒன்றாக (வரிசையாக), பன்னி-பிரலாபித்து, வாய் புலர்ந்து - (துயரின் வெம்மையால்) வாயும் (நாவும்) வறண்டு போய், உணர்வு தேய்ந்து - அறிவும் சோர்ந்து அழிந்து, ஆருயிர் பதைப்பாள் - அரிய உயிர் துடித்து வருந்துவளாயினாள்.

இளவலைச் சொன்ன வார்த்தை; ஆரண்ய. சடாயுவுயிர். 4, 12, 13. 'எண்ணிலா சொன்ன வார்த்தை' என்று இயைத்து, 'ஆராயாமல் அல்லது அறிவின்றிக் கூறிய கொடிய மொழிகளை' என்று பொருள் கொள்ளினும் அமையும். பன்னுதல் - பலமுறை விளக்கிக் கூறுதல்.

(பி-ம்,) 1. என்ன நாயக: என்னுேர் நாயக; ளிளவலை யானகற் றிடவே.
2. அறிகில ளெனத்: துணிந்தானோ.
2. என்றெண்ணி முறையால்.
4. பன்ன: வாய்மலர்ந்து. (14)

344. அருந்தும் மெல்லடை காரிட வருந்துமென் றழுங்கும்
விருந்து கண்டபோ தென்னுறு மோவென்று விம்மும்
மருந்து முண்டுகொல் யான்கொண்ட நோய்க்கென்றுமயங்கும்
இருந்த மாநிலஞ் செல்லரித் தெழவுமாண் டொழுதாள்.

'இருந்த மாநிலம் - தான் உட்கார்ந்து இருந்த இடத்தை, செல் அரித்து எழவும் - கறையான் அரித்துப் புற்றாகக் கிளம்பவும், ஆண்டு எழாதாள் - அவ்விடத்தை விட்டு எழாத அச்சீதை, 'அருந்தும் மெல் அடகு - உண்ணத்தக்க மெல்லிய இலையுணவை, ஆர் இட அருந்தும் - (யான் அங்கு இல்லாமையால்) யார் கலத்தில் பரிமாற இராமபிரான் அருந்துவார்?' என்று அழுங்கும்-என்று சொல்லி வருந்துவாள்; 'விருந்து கண்ட போது - அவ்வனத்தில் விருந்ினராக (ஒரு முனிவர் முதலிய யாரேனும் தன் இருப்பிடத்திற்கு வரக்) கண்ட போதில், என் உறுமோ-என்ன துன்பத்திற்கு உள்ளாவரோ?' என்று - என்றெண்ணி, விம்மும் ஏங்கி வருந்துவாள்; 'யான் கொண்ட நோய்க்கு - யான் கொண்டு

வருந்தும் மனப்பிணிக்கு, மருந்தும் உண்டு கொல் என்று - பரிகாரமாய்க் கொடுக்கும் ஔடதமும் ஒன்று உண்டோ?' என்று மயங்கும்-மயங்கிச் சோர்வாள்.

மெல்லடகு என்பதற்கு உப லக்ஷணத்தால் கந்த மூல பலங்களையும் கூட்டிக் கொள்க. ஆரிட அருந்தும் என்றது, கணவனுக்கு அமுது படைத்தல் மனைவியின் தலைமைப் பணிவிடை யாதலானும், அவன் விருப்பொடு உண்ணக் காண்பதே மனைவியின் மகிழ்ச்சிக் குரியதாத லாலும் அதைத் தான் செய்யாமை நோக்கி. குறுந். 167. மெல்லடகு மென்று - மென்று தின்பதற்கு உரிய கீரை முதலிய இலையுணவு. மனைவி யில்லாதவன் விருந்தினரை ஏற்று உபசரிக்கும் கடப்பாடு உடையன் அல் லன் ஆதலால், விருந்து கண்டபோது தான் உபசரிக்க முடியாமை பற்றி இராமபிரான் மனம் வருந்துவாரோ என்று வருந்தினுள் என்க. ஆசை நோய்க்கு மருந்து இல்லை; ஒப்பு; பால-மிதிலைக்காட்சிப்: 80; நற். 80. 9. இருந்த மானிலம் செல்லரித்து எழவும் ஆண்டு எழாதாள் என்றமையால் பிராட்டி, தன்பிரிவு நிலையில் செல்லரித்தல் முதலிய தன் உடற்கு உறும் துன்பங்களை உணர்ந்தாள் அல்லள் என்க

(பி-ம்,) 1. அருந்து மெல்லமு தாரிட.
2. எண்ணுறுமோ.
3. யானுறு நோய்க்கென வருந்தும்: என்று வருந்தும்.
4. இருந்த மண்ணிடை: செல்லரித்திடினும். (15)

345. வன்கண் வஞ்சனை யரக்கரித் துணைப்பகல் வையார்
தின்ப ரென்னினிச் செயத்தக்க தென்றுதீர்ந் தானே
தன்குல லப்பொறை தன்பொறை யெனத்தணிந் தானே
என்கொ லெண்ணுவ தென்னுமங் கிராப்பக லில்லாள்.

அங்கு இராப்பகல் இல்லாள் - அங்கு இரவு பகல் என்றும் வேறு பாடின்றி எப்பொழுதும் வருந்துபவளான பிராட்டி, 'வன்கண் வஞ்சனை அரக்கர் - கொடுமையும் வஞ்சனையுமுடைய அரக்கர்கள், இத் துணை பகல் வையார் - இவ்வளவு நாட்கள் (உயிரோடு என்னை) வைத்திருக்க மாட்டார்; தின்பர் - என்னைத் தின்று விடுவார்; என் இனி செயத்தக்கது என்று - இனிமேல் (நாம்) செய்யக்கூடியது என்ன இருக்கிறது? (ஒன்று மில்லையென்றபடி), என்று தீர்ந்தானே - என்று நினைத்து (என்னைத் தேடு வதை விட்டு) இராமபிரான் நீங்கினுரோ? (அல்லது), தன் குலப்பொறை- தான் பிறந்த குலத்திற்கு உரிய பொறுமையை, தன் பொறை என - தனக்கு உரிய வலிமையாகத் தாங்கிக் கொண்டு, தணிந்தானே - கோபம் அடங்கி ஆறினுரோ? என் கொல் எண்ணுவது என்னும் - என்னவென்று நான் நினைப்பேன்? என்று வருந்துவாள்.

இராப்பக லில்லாமை: இரவிலும் உறக்கமில்லாமையால். தன் குலப் பொறை - தன் குலத்துதித்த முன்னோர்களான இட்சுவாகு, மாந்தாதா, திலீபன், ரகு, பகீரதன் முதலினோர் புரிந்த பொறுமை மேற்கொண்ட தவம் முதலியன. பொறையுடைமை; 'அறிந்தாதல் மடமையானாதல் ஒருவன் தமக்கு மிகை செய்த வழித்தாமும் அதனை அவன்கட் செய்யாது பொறுத்தலை யுடையராதல்; நெறியி னீங்கிய செய்தாரையும் பொறுக்க வேண்டும்' (குறள். பரிமே. உரை.) இனி, குலப்பொறை- தன் குலத்திற்குஉரிய அரசியற் பாரம் பொறுத்தல் எனக்கொண்டு, தீர்ந்தானோ என்றதற்கு, என்னைத் தேடாது வனத்தைவிட்டு அயோத்திக்குச்சென்று விட்டாரோ என்னலும் ஆம். இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப்பாடல் உள்ளது.

மாய மானின்பின் றொடர்ந்தநாண் மாண்டன னென்று
வாயி னொலெடுத் துரைத்தது வாய்மைகொ ளிளையோன்
போய வன்செயல் கண்டுடல் பொன்றின னுகும்
ஆய தின்னதென் றறிந்திலே னென்றென் று மயர்வாள்.

(பி-ம்.) 1. வஞ்சக வரக்கர்.
2. தீர்ந்தாரோ.
3. குலப்பொறை தன் குறையெனத்; குலப்பொறை யிதுவெனத் தான்றவிர்ந்தானோ; குலப்பொறை யிதுவென்று தான்றவிர்ந்தானோ: தவிர்ந்தானோ: துணிந்தரனோ.
4. கொலெண்ணுவ தென்றெண்ணும்: என்னுவே னென் றெண்ணி: இராப்பக லிகல்வாள். (16)

346. பெற்ற தாயருந் தம்பியும் பெயர்த்தும்வந் தெய்திக்
கொற்ற மாநகர்க் கொண்டெழுந் தார்களோ குறித்துச்
சொற்ற வாண்டெலா முறைந்தன்றி யந்நகர்த் துன்னான்
உற்ற துண்டெனப் படருழந் துருதன வுறுவாள்.

'பெற்ற தாயரும்- தன்னைப் பெற்ற தாய்மார்களும், தம்பியும்- தம்பியாகிய பரதனும், பெயர்த்தும் வந்து எய்தி- மறுபடியும் திரும்பிவந்து கானையடைந்து, கொற்ற மாநகர் கொண்டு எழுந்தார்களோ - வெற்றியிற் சிறந்த அயோத்திமா நகருக்கு இராமபிரானை அழைத்துக் கொண்டு சென்று விட்டார்களோ? குறித்து சொற்ற ஆண்டு எலாம் - (பதினான்கு என்று) அறுதியிட்டுக் கூறிய வருடங்கள் முழுவதும், உறைந்து அன்றி - காட்டில் தங்கியிருந்தால் அல்லது, அ நகர் துன்னன் - அந்த

அயோத்தி நகரை இராமபிரான் அடையமாட்டான்: (ஆதலால்), உற்றது உண்டு எனு-ஏதோ ஆபத்து அவ்விருவருக்கும் நேரிட்டது உண்மையாய் உள்ளது' என்று எண்ணி, படர் உழந்து - துன்பத்தில் வருந்தி, உறுதன உறுவாள்- அது வரையில் அடையாத பெரிய துன்பங்களை அடைந்து வருந்துவாள்.

கோசலையே இராமபிரானைப் பெற்ற தாய்; ஆயினும் தாயர் என்பது மூவரும் அவருக்குத் தாயராக விளங்கினமை கொண்டு. தம்பி என்று ஒருமையிற் கூறியது, பரதனே அரசுரிமையைப் பிரதிநிதியாக ஏற்றிருப்பதாலும், சத்ருக்கன். பரதன் நிழலென அவனைத் தொடர்பவன் ஆதலாலும். பரதனையும் சத்துருக்கனையும் வேறுபடுத்தாது ஒருவனாகக் கருதிக் கூறியது என்க. பெயர்த்தும் வந்து என்றது, முன் சித்திரகூடத்தில் வந்து அழைத்த செய்தியைக் குறிப்பிட்டபடி. கொற்றமாநகர் - பிறரால் வெல்லப்படாத வெற்றி வலிமையுடைய நகர்; அதாவது அயோத்யா என்ற வடமொழிப் பெயருக்குப் பரியாயப் பெயர் எனக் கொள்ளலாம். குறித்துச் சொன்ன ஆண்டு பதினான்கு என்பது; அயோத்யா. கைகேசிசூழ். 107; நகர்நீங்கு 22. சொற்ற ஆண்டெலா முறைந்தன்றி யந்நகர்த் துன்னான் என்றது, இராமபிரான் தன் பிதுர்வாக்கிய பரிபாலனத்திற் கொண்டுள்ள உறுதியிற் சிறிதும் மாறுபடான் என்ற சீதையின் உள்ளத் துணிவைத் தெரிவித்ததாகும். இச் செய்யுளில் பிராட்டி ஓர் ஐயத்தை முதலிற் கொண்டு, பிறகு தானே அதனைத் தீர்த்துக் கொண்டமை காண்க. உற்றது - ஏற்பட்ட ஆபத்து; 'உற்றவிடத்தில் உயிர் வழங்குந் தன்மையோர்' (மூதுரை. 6.)

(பி-ம்.) 1; தம்பியர் பெயர்த்தும்: பெயர்ந்து வந்தெய்தக்.
2. கொண்டிறந் தார்கொலோ: எழுந் தார்கொலோ; அணைந் தார்களோ.
4. உருதநோ யுறுவாள். (17)

347. முரனெ னத்தகு மொய்ம்பினோர் முன்பொரு தவர்போல்
வரனும் மாயமும் வஞ்சமும் வரம்பில வல்லார்
பொரநி கழ்ந்ததோர் பூசலுண் டாமெனப் பொருமாக்
கரனெ திர்ந்தது கண்டன ளாமெனக் கவல்வாள்.

முரன் எனத்தகும் - முரன் என்று சொல்லத்தக்க, மொய்ம்பினோர் - வலிமையுடையோர்கள், முன் பொருதவர்போல் - முற்காலத்தில் திருமாலுடன் போர் செய்தவர் போல, வரம்பு இல வரனும், மாயமும் வஞ்சமும் வல்லார்-எல்லையற்ற வரங்களும், மாயைகளும், வஞ்சகத் தொழில்களும் வல்லவர்கள், பொர நிகழ்ந்ததோர் பூசல் உண்டாம் என-போர் செய்ய உண்டான ஒரு சமர் ஏற்பட்டது போலும் என்றெண்ணி, பொரு

மா - வருந்தி, கரன் எதிர்ந்தது கண்டனள் ஆம் என-கரன் முன் எதிர்த்துப் போர் புரிந்ததை நேரில் கண்டவள் போல, கவல்வாள் - கவலையால் வருந்துவாள்.

முரன்: ஓர் அசுரன்; திருமாலால் கொல்லப்பட்டவன்; ஆகவே, திருமாலுக்கு முராரி என்ற ஒரு பெயரும் உண்டாயது. கரன் எதிர்ந்தது கண்டனள் ஆம் என: 'கரனோடு இராமபிரான் எதிர்த்துப் போர் புரிந்து அவர்களை வென்று அழித்து வந்தபோது அவன் தன் மேனியிற் பல புண்பட்டு உதிரம் பெருகி யோடியதை அப்பொழுது கண்டவள் போல' என்ற வான்மீகத்தின் கருத்தை இஃது அடியொற்றி வந்தது என்க. பிராட்டி கரன்எதிர்ந்தது கண்டது; ஆரண்ய, கரன்வதைப். 64, 65, 187. 'கரன்நெரித்து அது கண்டனள் ஆம் என' என்ற பாடம் கொண்டு, கைகளை நெரித்துக் கொண்டு அப்போரை நேரில் முன் பார்த்தது போல இப்பொழுதும் பாவித்து என்று பொருள் கூறுதலும் ஆம். பெரும் துக்கம் அல்லது அச்சம் உண்டான இடத்து மகளிர் தம் கைகளை நெரித்தல் இயல்பு; 'கையைக் கையி னெரிக்கும்' (அயோத்யா; நகர்நீங்கு. 11.) 'முரனெனத் தகு மொய்ம்பினோர் - முரன் என்னும் அரக்கனை போன்ற பலவான்கள், அது கண்டனள் - அவர் பொர வந்ததும், பெருமாள்கூடப் போகிறதும், உருவெளித் தோற்றமாகக் கண் முன்னே அந்தப் போர் கண்டவள்' என்பது பழைய உரை.

இது முதல் 355ஆம் வரையுள்ள செய்யுட்கள் சுவடிகளில் இடம் மாறி அமைந்துள்ளன.

(பி-ம்.) 1. முரனெனத்: முரண்மி குத்திடும்.
2. மாயமும் வல்லபோ ரரக்கர்போய் மறித்துப்.
3. பொரநினைந்ததோர்.
4. கரனெரித்தது: கரனெரிந்தது: கலுழ்வாள். (18)

349. *தெம்ம டங்கிய சேணிலங் கேகயர்*
*தம்ம டந்தைநின் றம்பிய தாமென*
*மும்ம டங்கு பொலிந்த முகத்தினன்*
*வெம்ம டங்கலை யுன்னி வெதும்புவாள்.*

கேகயர் தம் மடந்தை - கேகய அரசர் மரபில் உதித்த பெண்ணான கைகேயி, 'தெம் மடங்கிய சேண் நிலம் - பகைவர்கள் அஞ்சித் திரும்பி யோடும்படியான (வெற்றி மேம்பாட்டோடு கூடிய) கோசல நாடு, நின் தம்பியது ஆம் என - உன் தம்பியாகிய (பரதனுடையது) ஆகும் என்று' சொல்ல, (அது கேட்டதும்), மு மடங்கு பொலிந்த முகத்தினன்-

முன்னிலும் மூன்று மடங்கு சிறந்து ஒளியால் விளங்கிய முகத்தை யுடையவனாய்த் தோன்றிய, வெம் மடங்கலை - வலிமை மிக்க சிங்கம் போல் விளங்கிய இராமபிரானை, உன்னி - நினைத்து, வெதும்புவாள் - வாடி வருந்துவாள்.

தெம் அடங்கிய - பகைவர்கள் தம் வலி குன்றியிருந்த என்றும் பொருள் கொள்ளலாம். கேகயராச புத்திரி கைகேயி; இது தத்தி தாந்த நாமம். மும்மடங்கு பொலிந்த முகத்தினன் வெம்மடங்கல் - மும் மடங்கு சிறந்து ஒளிவீசும் முகத்தையுடைய சிங்கம். இதனால், இராம பிரான் அரசியலை ஏற்பதினும் கானில் சென்று தவசியமத்தில் இருப் பதைப் பெரிதும் விரும்பினான் என்பதும், அக்கானக வாழ்க்கைக்குச் சிறிதும் அஞ்சாதவன் என்பதும் விளங்குவது காண்க: ஒப்பு: 349; அயோத்யா. கைகேசிசூழ். 108. மடங்கல் - யாரையும் எதிர்த்துத் தன்னடிக்கீழ்ப் படுத்தி அடக்கும் வலியுடைமையால் சிங்கத்திற்குப் பெயராயிற்று. இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

(பி-ம்.) 1. சேணிடைத் திங்களின்; சேணுடைத் திங்களும்.
2. அம்ம டங்கிய வம்புயந் தன்னினும்.
3. முகத்தினள். (19)

349. மெய்த்தி ருப்பத மேவென்ற போதினும்
இத்தி ருத்துறந் தேகென்ற போதினும்
சித்தி ரத்தின லர்ந்தசெந் தாமரை
ஒத்தி ருந்தமு கத்தினை யுன்னுவாள்.

மெய் திருப்பதம் - உண்மையான (அழியாத) செல்வமான அரசியற் பதவியை, மேவு என்ற போதினும்-நீ அடைவாயாக என்று (தயரதனை தந்தை) கூறிய காலத்திலும், இ திரு துறந்து ஏகு என்ற போதினும் - இந்த அரசுரிமைச் செல்வத்தை நீ நீக்கிவிட்டு வனத்திற்குச் செல் என்று கைகேயி சொன்ன போதும், சித்திரத்தின் அலர்ந்த - (வர்ணங்களைக் கொண்டு அழகுறச்) சித்திரிக்கப் பெற்ற உருவத்தில் மலர்ந்து விளங்கும், செந்தாமரை ஒத்திருந்த - செந்தாமரை மலரை ஒத்து விளங்கிய, முகத்தினை - திருமுகத்தின் அழகை, உன்னுவாள்-அடிக்கடி நினைத்துக் கொண்டிருந்தாள்.

'மெய்த்திருமேவு, இத்திருதுறந்து ஏகு' என்று சொன்ன இரு சமயங் களிலும் ஒத்திருந்தது இராமன் முகம் என்றமையால் அவன் விருப்பு வெறுப்பில்லாமல் இன்பதுன்பங்களை ஒருபடித்தாய் நினைக்கும் தன்மை

யுடையவன் என்பதாம்; ஒப்பு: அயோத்யா. மந்திரப். 70; கைகேசி 108: நகர்நீங்கு. 170: காளிதாஸ. ரகுவம்சம். 12: 81. சித்திரத்தில் அலர்ந்த முகம்: என்றும் ஒரே நிலையிலுள்ளமை குறிக்கப்பட்டது. சித்திரத்தின் என்பதற்கு விசித்திரமாக, (அதாவது சம்பவிக்கக்கூடாத அதிசயமாக) என்று பொருள் கொள்வாரும் உளர்.

(பி-ம்.) 2. ஏகென் றியம்பவும். 3. சித்திரத்து மலர்ந்த.
4. ஒத்திருக்கு முகந்தினை. (20)

350. *தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணன்*
*வாங்கு கோல வடவரை வார்சிலை*
*ஏங்கு மாத்திரத் திற்றிரண் டாய்விழ*
*வீங்கு தோளை நினைந்து மெலிந்துளாள்.*

கங்கை தேங்கு திருமுடி செங்கணன் - கங்கை வெள்ளம் தங்கியிருக்கப் பெற்ற அழகிய சடை முடியையும், சிவந்த கண்களையுமுடையவனான சிவபிரானுடைய, வாங்கு கோல வடவரை வார்சிலை - வளைத்த அழகிய வடமேருமலை போன்ற நீண்ட வில்லை, ஏங்கு மாத்திரத்து - சபையிலிருந்த சனகன் முதலியவர்கள் இவ் விராமன் வளைக்க முடியுமோ என்று ஐயங் கொண்டு இருந்த நிலையின் (அக் கண நேரத்திலேயே), இற்று இரண்டாய் விழ - வலி குன்றி இரு துண்டுகளாய் ஒடிந்து விழ, வீங்கு தோளை - (அவ்வெற்றியால் முன்னினும்) பூரித்து விளங்கிய இராமபிரானுடைய திருத் தோள்களை, நினைந்து மெலிந்துளாள் - (அடிக்கடி) எண்ணி (அவற்றைக் காணா ஏக்கத்தால்) மெலிந்து இருந்தாள்.

சனகன் சபையிலிருந்தோர் அனைவரும் வியப்படைய வடவரை போன்ற சிவதனுசை ஒரு நொடியில் வளைத்த பெருமான் இப்பொழுது என்னை இவ்வரக்கர் பால் நின்று மீட்காது இருக்கிறாரே என்று ஏங்கினாள் என்க. வில்லின் வரலாறு; பால. கார்முகப். 12-14. வில் இற்று இரண்டாய் விழுந்தது; பால. கார்முகப். 33, 34.

(பி.-ம்.) 1. முடிச் செவ்வியோன்.
3. மாத்திரையிற்; மாத்தி ரத்திரண் டாய்விழ.
4. வெதும்புவாள்; மெலிகுவாள். (21)

351. *இன்ன லம்பர வேந்தற் கியற்றிய*
*பன்ன லம்பதி னாயி ரம்படை*
*கன்னன் மூன்றிற் களப்படக் கால்வளை*
*வின்ன லம்புகழ்ந் தேங்கி வெதும்புவாள்.*

அம்பர வேந்தற்கு - தேவர் அரசனான இந்திரனுக்கு, இன்னல் இயற்றிய - துன்பத்தைச் செய்த, பல் நலம் பதினாலாயிரம் படை - பலசிறப்பமைந்த பதினாலாயிரம் என்று விளக்க மாய்ச் சொல்லும் (கரன் முதலியோரின் சிறந்த அரக்கர்) படைகளை, கன்னல் மூன்றில் - மூன்று நாழிகை நேர அளவுக்குள் (அதாவது ஒரு முகூர்த்த நேரத்தில்), களப்பட - போர்க்களத்தில் பட்டு அழிய, கால் வளை வில் நலம் - இரு முனைகளிலும் வளைந்த விற் போரின் சிறப்பை, புகழ்ந்து - பலவாறு புகழ்ந்து, ஏங்கி - (அத்தகைய ஏக வீரனான இராமபிரான் இப்பொழுது இந்நிலையில் உள்ள தன்னை மீட்காமல் இருப்பது நோக்கி) ஏக்கமுற்று, வெதும்புவாள் - வேவது போன்ற துயரால் வாடி வருந்துவாள்.

அம்பர வேந்தன் - தேவர்க்கரசனான இந்திரன்: வேந்தன் என்ற சொல்லே இந்திரனைக் குறிக்கும்; 'வேந்தன் மேய தீம்புனலுலகமும்' (தொல். அகத். 5.) கரன் படை இந்திரன் முதலிய தேவர்க்குத் துன்புறுத்தியது; ஆரண்ய. கரன்வதைப் 36. கன்னல் - நாழிகையை அளவிட்டுக் கூறும் கரகம் போன்ற ஒரு பாத்திரம்; அது முதலாகு பெயராய் அளவிடும் நாழிகைக்கு வழங்குவது. கன்னல் மூன்றில் கரன் முடிந்தது: 'மூத்த மொன்றின் முடிந்தவர்' (ஆரண்ய. கரன்வதை. 189.); 'வில்லொன்றிற் கடிகை மூன்றி லேறினர் விண்ணி லென்றாள்' (ஆரண்ய, மாரீசன்வதைப். 64.)

இச் செய்யுள் பின்வருமாறு ஒரு சுவடியில் காணப்படுகிறது.

இன்னல் செய்கர னாதிய ரோடெழும்
பன்னு வெள்ளக் கணக்குறும் பல்படை
கன்னன் மூன்றிற் களப்படக் கொன்றபோர்
வின்ன லத்தினை யுன்னி விரும்புவாள்.

(*பி-ம்.*) 1. வேந்தற் கியம்பிய.
2. பன்ன ரும்பதி; பன்ன லம்பல் பதினா யிரம்படை; பதினா யிரம் பல்படை.
3. கன்ன லொன்றிற்,
4. ஏற்றி வெதும்புவாள்,

352. *ஆழ நீர்க்கங்கை யம்பி கடாவிய*
*ஏழை வேட னுக் கெம்பிநின் றம்பிநீ*
*தோழன் மங்கை கொழுந்தி யெனச்சொன்ன*
*வாழி நண்பினை யுன்னி மயங்குவாள்.*

ஆழம் நீர் கங்கை - ஆழமான நீரையுடைய கங்கையாற்றிலே, அம்பி கடாவிய - தோணியைச் செலுத்திய, ஏழை வேடனுக்கு - ஓர் எளிய வேடனான குகனுக்கு, 'எம்பி-இந்த என் தம்பியான இலக்குவன், நின் தம்பி - உன் தம்பி; நீ தோழன் - நீ எனக்கு நண்பன்; மங்கை - இச்சீதை, கொழுந்தி-உன் மைத்துனி;' என சொன்ன-என்று பரிவோடு உறவாக்கிச் சொன்ன, நண்பினை - நட்பின் சிறப்பை, உன்னி - நினைந்து, மயங்குவாள் - கலக்கமுற்று வருந்துவாள். வாழி; அசை.

வனத்தில் வசிக்கும் நாகரிகம் இல்லாதவனும் கல்வி அறிவு இல்லாதவனும் ஆதலின் 'ஏழை, வேடன்' எனப்பட்டது; ஏழைமை, 'நுண்ணுணர் வின்மை வறுமை' என்றமையால். இச் செய்யுளால் இராமபிரானது, சௌலப்ய குணம் நன்கு விளங்குவது நோக்கத்தக்கது. இச் செய்தி; அயோத்யா, கங்கைப். 45, 68; குகப். 15. செய்யுட்களால் விளங்கும். மேலும் இச் செய்யுள், 'ஏழை யேதலன் கீழ்மக னென்னு திரங்கி மற்றவற் கின்னருள் சுரந்து, மாழைமான் மட நோக்கியுன் தோழி யும்பி யெம்பியென் றொழிந்திலை யுகந்த, தோழ னீயெனக் கிங்கொழி யென்ற சொற்கள் வந்தடி யேன்மனத் திருந்திட, ஆழி வண்ண நின் னடியிணை யடைந்தேன் அணிபொழில் திருவரங்கத் தம்மானே' என்று திருமங்கைமன்னன் அருளிச்செய்த (பெரியதிருமொழி. 5. 8: 1) பாசுரத்தை அடியொற்றி யமைந்ததும் காண்க. கொழுந்தி: கொழுந்தன் என்பதன் பெண்பால் வி. பா. 13-ஆம் போர். 244. மயங்குதல்; ஏழை வேடனிடம் காட்டிய பரிவு தன்மாட்டுக் காட்டாது இதுகாறும் இருப்பது என்னே என்று எண்ணியதால் ஏற்பட்டது என்பதாம்.

(பி-ம்.) 1. ஆழிநீர்க் கங்கை. 2. எம்பிநுந் தம்பிநீ. 3. எனச்சொன. 4. ஆழி நண்பனை: நண்பனை: உன்னி வருந்துவாள். (23)

353. *மெய்த்த தாதை விருப்பின னீட்டிய*
*கைத்த லங்களைக் கைகளி னீக்கிவே*
*றுய்த்த போது தருப்பையி லொண்பதம்*
*வைத்த வைதிகச் செய்கை மனக்கொள்வாள்.*

(மணவினையின் போது) மெய்த்த தாதை - உண்மையறிவுமிக்க தன் தந்தையாகிய சனகர், விருப்பினன் - ஆசையுடையவராய், நீட்டிய கை தலங்களை - நீட்டிய தன் கைகளை, கைகளின் நீக்கி - அவர் சனகர் கைகளினின்றும் நீக்கி, வேறு உய்த்த போது - வேறு இடத்தில் என்னை இருக்கச் செய்த, காலத்தில் (இயற்றிய), தருப்பையில் - (கல்லின்மீது வைக்கப் பெற்ற) தருப்பை மீது, ஒள்பதம் வைத்த. - ஒளி பொருந்திய எனது பாதத்தை (தம் வலக்கை யால் பற்றித்) தூக்கி வைத்த, வைதிகச் செய்கை-(ஸப்தபதி என்னும்) வேத நெறிச் செய்கையை, மனக்கொள்வாள் - மனத்தில் நினைத்துக் கொள்வாள்.

பிராட்டி, தன் மண வினையில் நிகழ்ந்த பாணிக்ரஹணம், ஸப்தபதீ என்ற கிரியைகளை நினைத்து இவ்வாறு கூறினாள் என்க. பாணிக்ரஹணம்; தந்தை தன் மகளின் கைகளை மணமகன் கைகளால் பற்ற ஒப்படைத்தல். ஸப்தபதீ: மணமகள் மணமகனுடன் ஏழடி வைத்துச் செல்லுதல்.

(பி-ம்.) 1. விரும்பின னீட்டிய: தந்தை விருப்பொடு நீட்டுதன்.
2. கைத்த லத்தினைக்: கைகளை நீக்கி.
3. தருப்பையி லுண்பதம்; உருப்பயி லுண்பதம்.
4. வேதிகைச் செய்கை; வேதியிற் செய்தி, (24)

354. உரங்கொ டேமலர்ச் சென்னி யுரிமைசால்
வரங்கொள் பொன்முடி தம்பி வனைந்திலன்
திரங்கு செஞ்சடை கட்டிய செய்வினைக்
கிரங்கி யேங்கிய தெண்ணி யிரங்குவாள்.

தம்பி - தன் தம்பியாகிய பரதன், உரிமை சால் வரம் கொள் - தன் தாயினால் உரிமை மிக்க வரமாகக் கொண்ட, உரம் கொள் பொன் முடி - சிறப்பமைந்த பொற் கிரீடத்தை, தே மலர்ச் சென்னி வனைந்திலன் - அழகியமலர் சூடிய தன் தலையில் சூட்டிக் கொள்ளாதவனாகி, திரங்கு செஞ் சடை கட்டிய - திரித்து விட்ட சடையைக் கட்டிக் கொண்ட, செய் வினைக்கு - செய்கைக்கு, இரங்கி ஏங்கியது எண்ணி - (இராமபிரான்) மனமிரங்கி வருந்தியதை நினைத்து, இரங்குவாள் - தான் வருந்துவாளாயினாள்.

பரதன் சடை புனைந்தது கண்டு இராமபிரான் வருந்தியது; அயோத்யா. கிளைகண்டு. 5. உரம் கொள் இ வரம் என்றும் இயைக்கலாம். திரங்கு - சுருங்கு என்னலும் ஆம்.

சில சுவடிகளில் இதன்பின், 'மழுவின்வாளி(356')என்று தொடங்கும் செய்யுள் காணப்படுகிறது.

(பி-ம்.) 1. சென்னி யுரிமையால்.
2. தம்பி மலேந்திலன் ; மலேகிலாச்.
3. சிரங்கொள் செஞ்சடை கட்டிய நீவினேக்.
4. ஏங்குவ தெண்ணி : இனேகுவாள், (25)

355. பரித்த செல்வ மொழியப் படருநாள்
அருத்தி வேதியற் கான்குல மீந்தவன்
கருத்தி னுசை கரையின்மை கண்டிறை
சிரித்த செய்கை நினேந்தழி சிந்தையாள்.

பரித்த - (தந்தை சொற்படித் தான்) தாங்க ஏற்றுக் கொண்ட, செல்வம் - அரசியற் செல்வம், ஒழிய-தன்னேவிட்டு நீங்க, படரும் நாள் - காட்டுக்குச் சென்ற அன்று, அருத்தி வேதியற்கு - ஆசைமிக்க அந்தண ரான திரிசடன் என்பவருக்கு, ஆன்குலம் ஈந்து - பசுக்கூட்டங்களேத் தானமாகக் கொடுத்து, அவன் கருத்தின் ஆசை - அவ்வேதியன் உள்ளத்தின் ஆசையின், கரை இன்மை - எல்லேயற்ற நிலேமையை, கண்டு - பார்த்து, இறை சிரித்த செய்கை - சிறிது (இராமபிரான்) சிரித்த செயலே, நினேந்து - எண்ணி, அழி சிந்தையாள் - அழிந்த மனமுடையவ ளானுள்.

இராமபிரான் அரசியற் செல்வத்தைத் தாங்க ஏற்றுக்கொண்டது, தந்தை தயரதன் விருப்பிஞல் என்பதும், தன் விருப்பு அன்று என்பதும்; அயோத்யா. மந்திரப். 70. இராமபிரான் நகர் நீங்கும் போது வேதியற்கு ஆன் குலம் ஈந்தசெய்கை, இங்குக் குறிப்பிட்டது அல்லால் அயோத்தியா காண்டம் நகர்நீங்கு படலத்தில் காணப்பெறவில்லே. இவ்வாறு ஓரிடத் தில் நிகழ்ந்த செயலே அங்கே கூருமல் பிறிதோரிடத்தில் குறித்து விளக்கு வது இந்நூலாசிரியரின் போக்கு ஆகும்.

(பி-ம்.) 1. பருத்த செல்வம்.
2. வேதியர்க் காக்குலம்; ஆகுலம்.
4. நினேந்தெழுஞ் சிந்தையாள்; அழுஞ் சிந்தையாள்; எழு செய்கை யாள்: நினேந்துயிர் தேம்புவாள். (26)

356. மழுவி னுன்முன் மன்னரை மூவெழு
பொழுது நூறிப் புலவுறு புண்ணினீர்
முழுகி னுன்றவம் மொய்ம்பொடு மூரிவில்
தழுவு மேன்மை நினேந்துயிர் சாம்புவாள்.

மழுவினன் - மழு என்னும் கோடாலியைத் தன் படைக்கலமாய்க் கொண்டவனும், மன்னரை - அரசர்களை, முன் மூ எழு பொழுது நூறி - முன்னே இருபத்தொரு தலைமுறை வரையில் தொடர்ந்து அழித்து புலவு உறு புண்ணின் நீர் - மாமிச நாற்றம் பொருந்திய அவர்கள் இரத்தத்தில், முழுகினன் - நீராடினவனுமான பரசுராமனுடைய, தவம் - தவப்பலன்களை, மொய்ம்பு ஒடு - அவன் வலிமையோடு, மூரி வில் - வலிமையுடைய அவனுடைய வில்லையும், தழுவு - தாங்கி எடுத்துக் கொண்ட, மேன்மை நினைந்து - (இராமபிரானது) வெற்றி மேம்பாட்டை நினைந்து, உயிர் சாம்புவாள் - உயிர் ஒடுங்கி வருந்துவாள்.

தன் தந்தையாகிய ஜமதக்நி முனிவரை ஆராயாது வாளினால் வெட்டி வீழ்த்திய கார்த்தவீரியனென்னும் அரசனையும் மற்ற அரச பரம்பரையினரையும் இருபத்தொரு தலைமுறை வரை பரசுராமன் எதிர்த்துத் தன் கோடாலியால் அழித்து அந்த இரத்த வெள்ளத்தில் மூழ்கித் தன் பிதுர் தர்ப்பணம் செய்தான் என்பதும், அந்த இரத்த வெள்ள மடு குருக்ஷேத்திரத்திற்கு அருகேயுள்ள ஸ்யமந்த பஞ்சகம் என்னும் ஐந்து குளங்களாக அமைந்துள்ளது என்பதும் மகாபாரதத்தில் உள்ள வரலாறுகள். பரசுராமன் அரச பரம்பரையினரைக் கோடாலியால் அழித்து அந்த இரத்த வெள்ளத்தில் மூழ்கியது; பால. பரசுராமப். 13. இராமன் பரசுராமன் வில்லையும் அவன் தவம், வலிமை எல்லாவற்றையும் அபகரித்துக் கொண்டது; பால. பரசுராமப். 39, 40. பரசுராமனிடமிருந்து இராமபிரான் பற்றிக் கொண்ட வில்லே திருமால் வில்லாகிய விஷ்ணு சாபம் என்னும் கோதண்டமாகும். அந்த வில்லை இராமபிரான் வருணதேவனிடம் கொடுத்து வைத்தான் என்பதும், பிறகு கரனோடு போர்புரிந்த போது அவனால் தன் வில் ஒடிபட்டுப் போக, உடனே வருணதேவன் அந்த வில்லை இராமபிரானிடம் கொடுத்தான் என்பதும் அறியற்பாலன: பால. பரசுராமப். 45; ஆரண்ய. கரன்வதைப். 178.

(பி-ம்.) 1. மழுவில் வாளினில்; மழுவின் வாளினன்; மழுவின் வாளிமுன்; வாயினன் மன்னரை.
2. புலவெழு புண்ணினீர்: புலவுபுண் ணீரிடை.
3. முழுகி னனவை: முழுகு கின்றவன் முன்பொடு: முழுகு நற்றவன்.
4. தழுவு மெய்ம்மை. (27)

357. ஏக வாளியவ் விந்திரன் செம்மன்மேல்
போக வேவி யதுகண் பொடித்தநாள்
காக முற்றுமோர் கண்ணில வாக்கிய
வேக வென்றியைத் தன்றலை மேற்கொள்வாள்.

ஏகவாளி - ஓர் அம்பு, அ இந்திரன் செம்மல் மேல் - அந்த இந்திர குமாரனை (காக வடிவோடு வந்த) சயந்தன் மீது, போக ஏவி-போய்த் தாக்குமாறு தூண்டி, அது கண் பொடித்த நாள் - அந்த வாளி அவன் கண்ணை அழித்த போது, காகம் முற்றும் - காகக் கூட்டம் முழுவதும், ஓர் கண் இல ஆக்கிய - ஒரு கண் அற்றனவாய்ச் செய்த, வேக வென்றியை - மிக்க விரைவில் உண்டான பெரும் வெற்றியை, தன் தலை மேல் கொள்வாள் - தன் தலை மேற் கொண்டது போல (நினைத்துப் பாராட்டி மகிழ்வாள்.)

சயந்தன் மீது இராமன் ஏவியது, தருப்பைப் புல்லில் மந்திரித்து விட்ட அக்கினி அத்திரம் ஆதலின், இங்கு வாளி என்றதை அஸ்திரத்திற்கு உரிய பரியாயப் பெயராகக் கொள்க இவ்வரலாற்றைப் பிராட்டி தான் அநுமனிடம் பின் கூறும் அடையாள மொழியாகக் கூறினமை (693) ஆம் செய்யுளிற் காண்க. இராமபிரான் காகத்தின் கண்ணைப் பறித்தது; 'சித்திரகூடத் திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட, அத்திரமே கொண்டெறிய வனைத்துலகுந் திரிந்தோடி, வித்தகனே யிராமாவோ நின்னபய மென்றழைப்ப, அத்திரமே யதன்கண்ணை யறுத்ததுமோ ரடையாளம். (பெரியாழ்வார். 3. 10; 6.),

(பி-ம்.) 1. இந்திரன் காதன்மேல்.
2. போக பேவியது.
4. வென்றி நினைந்துற விம்முவாள். (28)

358. *வெவ்வி ராதனை மேவருந் தீவினை*
*வவ்வி மாற்றருஞ் சாபமும் மாற்றிய*
*அவ்வி ராமனை யுன்னித்தன் னாருயிர்*
*செவ்வி ராதுணர் வோய்ந்துட றேம்புவாள்.*

வெம் விராதனை - கொடிய விராதன் எனும் அரக்கனை, மேவு அரும் தீவினை வவ்வி-அவனிடம் பொருந்திய கொடிய பாவ வினைகளைப் பற்றிப் போகச் செய்து, மாற்று அரும் சாபமும் மாற்றிய - (அவனுக்கு ஏற்பட்டிருந்த) போக்குதற்கு அரிய சாபத்தையும் நீங்கச் செய்த, அ இராமனை உன்னி - அந்த இராமபிரானை அடிக்கடி நினைத்து, தன் ஆருயிர் செவ் இராது - தன் அரிய உயிர் நன்றாக நிலை பெற்றிராமல், உணர்வு ஓய்ந்து - அறிவு தளர்ந்து, உடல் தேம்புவாள் - உடல் தேம்பி அழுவாளாயினள்.

விராதன் அரக்கருள் மிகக் கொடியவன்; ஆதலால் வெவ்விராதன் எனப் பெற்றது; 'வெய்யோர் யாரே வீர விராதன் துணை வெய்யோர்';

ஆரண்ய. மாரீசன். 184) என்று மாரீசன் இராவணனுக்கு எடுத்துக் கூறியது நோக்குக; அவ் விராதனையும் அழித்த போர் வன்மையைக் குறித்தே, இராமபிரான் விராதவதபண்டிதன் என்று ஆன்றோரால் பாராட்டப் பெற்றான். விராதன் சாபம் நீங்கியது; ஆரண்ய. விராதன். 46. விராதன் சாப வரலாறும் அவன் செய்த தீச் செயல்களும்; ஆரண்ய. விராதன். 63-69. இப்பகுதியில் பிராட்டி முன் நிகழ்ந்த வற்றை முறைமாறி நினைந்தமைஅவள் துயர்நிலையைச் சித்திரித்ததாகும். மேலும் சுந்தரகாண்டத்தில் பிற காண்டச் செய்திகளும் அடங்கியுள்ள மைக்கு இப்பகுதி ஒரு சான்றாகும்.

இச் செய்யுளின்பின் ஒரு சுவடியில் அடியிற் கண்ட மூன்று செய்யுள்கள் அதிகமாக உள்ளன.

அ. இன்ன வெண்ணி யிடருறு வாள்மருங்
குன்னொ ராயிர கோடி யரக்கியர்
துன்னு காவலுட் டுய திரிசடை
என்னு மங்கை துணையின்றி வேறிலாள்.

ஆ. தருமநீதி தழுவிய சிந்தைகொண்
டுரிய வீடணன் தந்தரு ளொண்டொடி
திரிச டைக்கொடி நாடொறுந் தேற்றுஞ்சொல்
அருளி னாற்றன தாவிபெற் றுய்ந்துளாள்.

இ. அன்ன ளாய வருந்ததிக் கற்பினள்
மன்னு சோலையின் மாருதி யும்வரத்
தன்னி டந்துடித் தெய்துறச் சானகி
என்னு மங்கை யினிதிருந் தாளரோ.

(பி-ம்.) 1. மேல்வருந் தீவினை.
3. மாற்றிய, தவ்விராமனை; அவ்விராமனை மாற்றித்தன்; எண்ணித் தன் னுருயிர். (29)

காவலரக்கியர் துயிலுதல்.

359. இருந்தனள் திரிசடை யென்னு மின்சொலால்
திருந்தினா ளொழியமற் றிருந்த தீவினை
அருந்திற லரக்கிய ரல்லு நள்ளுறப்
பொருந்தலுந் துயினறைக் களிபொ ருந்தினார்.

இருந்தனள் - (சீதைக்கு இனியவளாக) இருந்தவளான, திரிசடை என்னும் இன் சொலால் திருந்தினள் - திரிசடை என்னும் பெயருடையவளும் இனிய சொற்களால் சிறந்தவளுமான அரக்கி, ஒழிய - தவிர, மற்று இருந்த - மற்று அங்குச் சீதைக்குக் காவலாக இருந்த, தீவினை அரும் திறல் அரக்கியர் - கொடுந்தொழிலும் மிக்க வலிமையும் வாய்ந்தவர்களான அரக்கியர்கள், அல்லும் நள் உறப் பொருந்தலும் - இரவும் நடுச்சாமம் ஆக அடைந்த போது, துயில் நறைக் களி - தூக்கமாகிய போதை மயக்கத்தில், பொருந்தினர்-ஈடுபட்டிருந்தார்கள்.

இருந்தனள்- சீதை இருந்தனள் என்று பொருள் கூறுவாருமுளர். துயில் நறைக் களி என்பதற்கு, தூக்கமோடு கட்குடித்த மயக்கமும் என்று பொருள் கூறுதலும் அமையும். வான்மீகத்தில் இராவணன் அசோக வனத்திற்குச் சென்று பிராட்டியை அச்சுறுத்தித் திரும்பியபின், அவன் ஏவலுக்கு உட்பட்ட அரக்கியர் அவளைத் துன்புறுத்தத் தொடங்கிய போது, வயது முதிர்ந்தவளும் விசேஷ அறிவு படைத்தவளுமான திரிசடை யென்பவள் பிற அரக்கியரை அடக்கி அவர்களுக்கு அறிவுறுத்தினள் என்று கூறப்பட்டது; கம்பர் இடம் மாற்றியமைத்தமை நோக்குக. அநுமந்நாடகத்தில், ஸரமா என்பவள் இங்ஙேயில் பிராட்டிக்கு ஆறுதல் கூறியதாகக் கூறப்பட்டுள்ளது.

(பி-ம்.) 1. இன்சொலில்; இன்சொலத்.
2. திருந்திழை யொழிய.
3. அரக்கியர் யாரு மாயிடை; அள்ளு நள்ளுறப்.
4. பொருந்தலு நறவொடு துயில்பொ ருத்தினர்; பொருந்தருந் துயிலிடைக் கண்பொ ருந்தினர்; நறவுறு களிபொ ருந்தினர். (30)

## பிராட்டி திரிசடையிடம் கூறல் 360-64

360. *ஆயிடைத் திரிசடை யென்னு மன்பினுல்*
*தாயினு மினியவ டன்னை நோக்கினள்*
*தூயநீ கேட்டியென் றுணைவி யாமெனு*
*மேயதோர் கட்டுரை விளம்பன் மேயினள்.*

ஆயிடை - (அரக்கியர் தூங்கிக் கொண்டிருந்த) அப்பொழுது, திரிசடை யென்னும் - திரிசடை யென்று பெயர் சொல்லப்படும், அன்பினுல் தாயினும் இனியவள் தன்னை - அன்பில் தாயைவிட இனிமை மிக்கவளை, நோக்கினள் - பிராட்டி பார்த்தவளாய், 'என் துணைவி ஆம் தூய நீ கேட்டி - எனக்குத் துணைவியான தூய்மை பொருந்திய நீ கேட்பாயாக' எனு - என்று சொல்லி, மேயது ஓர் கட்டுரை - பொருத்தமானதும்

பொருள் அடங்கியதுமான ஓர் உறுதிமொழியை, விளம்பல் மேயினுள் - சொல்லலுற்றுள்.

ஆயிடை; அ இடை: சுட்டு நீண்டு இடையில் யகரமெய் தோன்றிற்று. தாயின் அன்பு; 'தாயொக்கு மன்பில்' (பால. அரசியற். 4.)

(பி-ம்.) 1. ஆயிடைச் சானகி யன்பி னுக்கொரு. அன்பினுள்; அன்பினில்
2. தாயினு மனையவள்; தாயெனத் திரிசடை தன்னை நோக்கியே.
3. தூயைநீ: நீநனி கேட்டியென் றுணைவி நீயெனு; துணைவி யென்றுசிர்; துணைவி நீயென; துணைவி யாமென. (31)

361. *நலந்துடிக் கின்றதோ நான்செய் தீவினை*
*சலந்துடித் தின்னமுந் தருவ துண்மையோ*
*பொலந்துடி மருங்குலாய் புருவங் கண் ணுதல்*
*வலந்துடிக் கின்றில வருவ தோர்கிலேன்.*

'பொலன் துடி மருங்குலாய் - பொன்னுலாகிய உடுக்கை போன்ற இடையையுடைய திரிசடையே! புருவம் கண் நுதல் - புருவமும் கண்ணும் நெற்றியும், வலம் துடிக்கின்றில - வலப்பக்கம் துடிக்கவில்லை; (அதாவது இடப்பக்கத்தே துடிக்கின்றன); நலம் துடிக்கின்றதோ - எனக்கு நன்மை விரைந்து வருகின்றதோ? (அல்லது), நான் செய் தீவினை - அல்லாமல், நான் முன் செய்த கொடிய வினை, துடித்து - விரைந்து எழுந்து, இன்னமும் சலம் தருவது உண்மையோ - இனி மேலும் தணியாத தீமையைத் தருவது நிச்சயமோ? வருவது ஓர்கிலேன் - இதனால் வருவதோர் பயனை யான் அறியமாட்டாதவளாய் இருக்கிறேன்:

பொலன் துடி - அழகிய உடுக்கை என்னலும் ஒன்றும். நலம் - புண்ணியமும் ஆம். (இச்செய்யுள் முதல் அடுத்த 364 வரை ஒரு தொடராக உள்ளன.

ஒரு பிரதியில் இச் செய்யுளின் பின் அடியிற் காணுமாறு ஒரு பாடல் அதிகமாக உள்ளது.

தாட்சியின் றெனத்திரி சடையுஞ் சாலவும்
மாட்சியி னமைந்தது மலரு ளாள்தொழும்
காட்சியா யிக்குறி கருதுநீ காலையில்
ஆட்சியே கடனென வறிந்து நல்குவாய்.

(பி-ம்.) 1. நலந்தூடிக் கின்றது; நலந்துடிக் கின்றதோர் நான்.
2. தருவ தோவிடர்.
3. பொலன்துடி: கண்முதல்.
4. துடிக்கில வினி. (32)

362\. *முனியொடு மிதிலையின் முனைவன் முந்துநாள்*
*துனியறு புருவமுந் தோளு நாட்டமும்*
*இனியன துடித்தன வீண்டு மாண்டென*
*நனிதுடிக் கின்றன வாயி னல்குவாய்.*

முனைவன் - தலைவனான இராமபிரான், முனியொடு மிதிலையின் முந்து நாள் - விசுவாமித்திர முனிவருடன் மிதிலை நகரில் வந்த அன்று, துனிஅறு - குற்றமற்ற, புருவமும் தோளும் நாட்டமும் - புருவம், தோள், கண் ஆனவை, இனியன துடித்தன - இனிமை விளைப்பனவாக (இடம்) துடித்தன; ஈண்டும் - இப்பொழுதும், ஆண்டு என - மிதிலையில் அப்பொழுது துடித்தன போல, நனி துடிக்கின்றன - நன்றாய்(இடப்பக்கம்) துடிக்கின்றன; வாயில் நல்குவாய்-இதன் காரணத்தை அன்புடன் தெரிவிப்பாயாக.

மகளிர்க்குக் கண் புருவம் நெற்றி முதலியன இடம் துடித்தல் வரும் நன்மையை உணர்த்துவதும், அவை வலம் துடித்தல் தீமையை உணர்த்துவதுமான அறிகுறிகள். குளா. 1218; கலி, 101. 46 உரை: சிலப். 5. 237-9; சீவக. 2173. வாயில் - திறம் அல்லது பலனும் ஆம்.

(பி-ம்.) 1. முதல்வன் வந்தநாள்; முனைவன் வந்தநாள். 2. துனியுறு.
3. இனியன விடந்துடித் துள்ள தன்றுபோல்.
4. நவையி னண்ணலாய்: வாயி னல்லவாய்; ஆய்ந்து நல்குவாய் (33)

363\. *மறந்தனெ னிதுவுமோர் மாற்றங் கேட்டியால்*
*அறந்தரு சிந்தையென் னுவி நாயகன்*
*பிறந்தபார் முழுவதுந் தம்பி யேபெறத்*
*துறந்துகான் புகுந்தநாள் வலந்து டித்ததே.*

'மறந்தனென் - நான் உன்னிடம் சொல்ல மறந்து விட்டேன்; இதுவும் ஓர் மாற்றம் கேட்டி - இந்த ஒரு வார்த்தையையும் நீ கேட்பாயாக; அறம் தரு சிந்தை என் ஆவி நாயகன் - அறத்தை விளைவிக்கின்ற மனமுடைய என் பிராண நாயகனான இராமபிரான், பிறந்த பார் - பிறப்பினால் தனக்குரிய பூமி ஆட்சியை, முழுவதும் - முற்றிலும், தம்பியே பெற - தன் தம்பியாகிய பரதனே அடையும்படி, துறந்து - விட்டு நீங்கி, கான் புகுந்த நாள் - தண்டக வனம் சென்ற அன்று, வலம் துடித்தது - (என் கண், 'புருவம், நெற்றி எல்லாம்) வலப்புறம் துடித்தன.' ஆல், ஏ: அசைகள்.

இராமன் அறந்தரு சிந்தையன்; 1123; பிறந்த பார் - மூத்த மைந்தனாகப் பிறந்ததாலே அவனுக்கு உரிமையாகிவிட்ட பார். தம்பியே:

ஏகாரம் தேற்றப் பொருளது. மகளிர்க்கு வலம் துடித்தல், தீயகுறி: 361.

(பி-ம்.) 1. மறந்தன ளீதுமோர்: மாற்றங் கோடியால்.
2. அறந்தெரி,
4. துறந்தகான்: கான் புகுதுநாள்: துடித்ததால்; துடித்தவால். (34)

364. *நஞ்சனை யான்வனத் திழைக்க நண்ணிய*
*வஞ்சனை நாள்வலந் துடித்த வாய்மையால்*
*எஞ்சலில் நன்மையா லிடந்து டிக்குமால்*
*அஞ்சலென் றிரங்குவா யடுப்பதி யாதென்றுள்.*

'நஞ்சு அனையான் - விஷம் போன்று கொடிய தன்மையுடைய இராவணன், வஞ்சனை இழைக்க வனத்து நண்ணிய நாள் - என்னை (அபகரித்து வருவதான) வஞ்சனையைச் செய்ய (பஞ்சவடிக்) காட்டில் வந்த அன்று, வலம் துடித்த வாய்மையால் - (என் கண், புருவம் நெற்றி எல்லாம்) வலம் துடித்த உண்மையாலும், எஞ்சலில் நன்மையால் - குறைவு படாத நன்மையுடன், இடம் துடிக்குமால்-அவை(இப்பொழுது) இடப்புறமாய்த் துடிக்கின்றன ஆதலாலும், அஞ்சல் என்று இரங்குவாய் - என்னைப் பயப்படாதே என்று நீ இரங்கிச் சொல்வதற்கு, அடுப்பது - என் பால் வந்தடையும் நற் செயல், யாது என்றுள் - எது வாயிருக்கலாம்?' என்று (பிராட்டி திரிசடையைப் பார்த்துக்) கேட்டாள். ஆல்; அசை.

'அஞ்சலென் றிரங்குவாய்' என்பதனை விளியாகவும் கொண்டு பொருள் கூறலாம்.' வலந்துடித்தலாலும், இடந் துடித்தலாலும் எனக்கு முன் தீமை விளைந்ததும் நன்மை விளைந்ததும் என் அனுபவத்தில் யான் அறிந்துள்ளேன். இப்பொழுது அவை இடந்துடிக்கின்றன; ஆதலால், யான் படும் துன்பத்திற்கு ஆறுதலாக இப்பொழுது எனக்கு என்ன நன்மை உண்டாகும்' என்று சீதை திரிசடையிடம் கேட்டாள் என்க.

(பி-ம்.) 1. நஞ்சனை யானெனைக் கவர நண்ணிய: இழைத்த நாளிடை; இழைக்கு நாளிடை.
2. வஞ்சனை யால்வலம்; வஞ்சனை நாளுமென்; வஞ்சனைகளினுல்வலந் துடித்ததரல்.
2. எஞ்சல வீண்டுதாம்: எஞ்சலில் நன்மைநா ளிடந்து டிக்குமால்: துஞ்சலி லீண்டுதாம்; துஞ்சல வீண்டுதாம்.
4. அஞ்சலென் றறிந்துரை: இரங்குதற் கடுப்பதி: அடுப்பதேதென்றுள். (35)

## திரிசடை பிராட்டியிடம் நற்குறிப்பயன் கூறல்

365. *என்றலுந் திரிசடை யியைந்த சோபனம்*
*நன்றிது நன்றெனு நயந்த சிந்தையாள்*
*உன்றுணைக் கணவனை யுறுவ துண்மையால்*
*அன்றியுங் கேட்டியென் றறைதன் மேயினுள்.*

என்றலும் - என்று பிராட்டி சொல்லியதும், திரிசடை - திரிசடை என்பவள், 'இயைந்த சோபனம் - இவை உனக்கு உண்டாகும் மங்கள மாகும்; நன்றிது நன்று எனு - இவ்வாறு அமைந்தது உனக்கு மிக்க நன்மை தருவது' என்று சொல்லி, நயந்த சிந்தையாள் - சீதைபால் அன்பு கொண்ட மனத்தினளாகி, 'உன் துணைக் கணவனை உறுவது உண்மை - உன் துணைவரான இராமபிரானை நீ அடைதல் திண்ணம்; அன்றியும் - அது அல்லாமலும், கேட்டி என்று - யான் கூறுவதைக் கேட்பாயாக' என்று, அறைதல் மேயினுள்-திரிசடை சொல்லத் தொடங்கினுள். ஆல்: அசை.

சோபனம் - சுபம் அளிக்கும் செயல்; மங்களம். சோபனம் இயைந்த - உனக்குண்டான இந்தத் துடிக் குறிகளால் உனக்கு மங்களம் உண்டாயின; என்றும் பொருள் கூறலாம். நன்றிது நன்றிது; அடுக்கு, துணிவும், மகிழ்வும் பற்றி வந்தது; நன்றிது - நல்லது ; இது: அசை நிலை; 'நன்றிது நன்றி தென்னு' (அயோத்யா, நகர்நீங்கு: 117.) இது நன்று நன்று - இது உனக்கும் உலகுக்கும் நன்மை தருவதாகும் என்றும் பொருள் கொள்ளலும் ஆம்.

(பி-ம்.) 1. இயைக சோபனம்: இழைத்த சோபனம்; இசைந்த சொப் பனம். 2. நயத்த: சிந்தையால்.
3. உன்றனிக் கணவனை: உண்மை நீ. (36)

## திரிசடை தான் கண்ட நிமித்தமும் கனவும் அவற்றின் பயனும் கூறல் 366-82

366. *உன்னிறம் பசப்பற வுயிரு யிர்ப்புற*
*இன்னிறத் தென்னிசை யினிய நண்பினுல்*
*மின்னிற மருங்குலாய் செவியின் மெள்ளவே*
*பொன்னிறத் தும்பிவந் தூதிப் போயதால்.*

மின் நிற மருங்குலாய் - மின்னல் போன்ற நிறமும் உருவும் உடைய சீதையே! உன் நிறம் பசப்பு அற - உன் மேனியில் உண்டான பசப்பு நிறம் நீங்க, உயிர் உயிர்ப்பு உற – உன் உயிர் இனி அழியாது இருக்க, இன் நிற தென் இசை - இனிய இயல்பையும் அழகிய இசையையு முடைய, பொன் நிற தும்பி - ஒரு பொன் நிறமான வண்டு (பொன் வண்டு), வந்து - உன் அருகே வந்து, செவியில் - உன் காதில், இனிய நண்பினால் - இனிமையைத் தரும் அன்பால், மெள்ள ஊதி போயது - மெதுவாக ஊதிப் போயிற்று, ஏ. ஆல்: அசைகள்.

மருங்குல்-இடையுமாம். பசப்பு-பசலை நிறம்; இது தலைவனைப் பிரிந்து வருந்தும் தலைவியின் உடலில் உண்டாகும் ஒரு பொன்னிறத் தேமல்; இதனைப் பசலை நோய் என்பர். 'வண்டு உன் செவியில் மெல்ல ஊதிப் போன நற்குறியால் உன் பசலை நோய் நீங்க, நீ உன் கணவனை இராமபிரானை அடைவாய், என்றும், 'நீ உன் உயிரைப் போக்கிக் கொள்ளாது இனி நெடிது வாழ்வாய்' என்றும், திரிசடை பிராட்டிக்கு உறுதி கூறினள் என்க. 'இன்னிறத் தேனிசை' என்று பாடங் கொண்டு நிற தேன் இன் இசை என இயைத்து நல்ல நிறத்தையுடைய தேன் போன்ற இனிய இசையெனப் பொருள் கொள்ளலும் ஆம்; நிறத் தேன் - நல்ல பொன்னிறமான தேன். 'வண்டு பிராட்டி செவியிலே வந்து சொல்லத் திரிசடை கனக்கண்டது' என்ற பழைய உரை யின்படி வண்டுதியது திரிசடையின் கனவின் காட்சி யாகலாம் என்றும் கொள்க. இவ்வுரையின்படி 'துயிலிலை' என்று தொடங்கும் (368) ஆம் செய்யுள் இச் செய்யுளுக்கு முன்னே இருத்தல் நன்று.

(பி-ம்.) 1. உன்னுளங் குளிர்ப்புற வுயி: பசப்புற. பயப்புற; பசும்புற.
2. இன்னிறத் தேழிசை; தேனிசை; நட்பினல்; நண்பினும்.
3. மின்னுறழ் மருங்குலாய்; மின்னிய மருங்குலால்; செவியின் மெல்லவோர்: மெல்லென; மெல்லவே.
4. போனதால். (37)

367. *ஆயது தேரினுன் னுவி நாயகன்*
*ஏயது தூதுவந் தெதிர்த லுண்மையால்*
*தீயது தீயவர்க் கெய்த றிண்ணமென்*
*வாயது கேளென மறித்துங் கூறுவாள்.*

'ஆயது தேரின்-இவ்வாறு (உன் செவியில் வண்டு ஊதிப் போயதை) ஆராய்ந்து பார்க்குமிடத்து, உன் ஆவி நாயகன் - உன் பிராண நாதனை இராமபிரான், ஏயது - ஏவப்பெற்ற, தூது வந்து, - ஒரு தூதன் வந்து, எதிர்தல் உண்மை - உன்னைக் காண்பது நிச்சயம்; தீயவர்க்கு தீயது

எய்தல் திண்ணம்-கொடியவரான இராவணன் முதலிய அரக்கர்களுக்குக் கேடு வந்து சேர்வது நிச்சயம்; என் வாயது கேள் - என்னிடம் நிகழ்ந்த செய்திகளையும் நீ கேட்பாயாக' என - என்று, மறித்தும் கூறுவாள் - மீண்டும் சொல்வாளாயினள். ஆல்: அசை.

என் வாயது - யான் சொல்வனவற்றையும் என்னலும் ஒன்றும்; வாய் - வார்த்தை; உண்மையும் ஆம்; 'பொய் சேண் நீங்கிய வாய் நட்பினையே' (மதுரைக். 198.)

(பி-ம்.) 2. ஏயதோர் தூது; எதிர்த லென்னுமால்: எதிர்தல் திண்ணமே.
3. தீயவை தீயவற். 4 வாய்மொழி யிதுவென. (38)

368. துயிலிலை யாதலிற் கனவு தோன்றல
அயில்விழி யன்னைகண் ணமைய நோக்கினேன்
பயில்வன பழுதில பண்பி னுண்டன
வெயிலினு மெய்யன விளம்பக் கேட்டியால்.

'அயில் விழி அன்னை - வேல் போன்ற விழிகளையுடைய தாயே! துயில் இலை ஆதலில்-நீ தூங்குவதே இல்லையாதலால், கனவு தோன்றல - உனக்குக் கனவுகள் உண்டாவன அல்ல; கண் அமைய நோக்கினேன்- (நான் ஒரு கனவை) நன்றாகக் கண்ணுற் கண்டேன்; பயில்வன பழுது இல - என் கனவில் தோன்றுபவை பழுதுறாமல் பலிப்பன; பண்பின் ஆண்டன - சிறப்புக் குணங்களை ஆண்டு கொண்டவை; வெயி லினும் மெய்யன-சூரியனைப் போல் உண்மையானவை; விளம்பகேட்டி- யான் சொல்லக் கேட்பாயாக? ஆல்: அசை.

பண்பின்-குணச்சிறப்பைத் தம்மிடம் கொண்டவை; 'பண்பெனப் படுவது பாடறிந் தொழுகுதல்' (கலித். 133: 8. (வெயிலினும் மெய்யன: ஒப்பு. 'காலை யன்ன சீர்சால் வாய்மொழி' (பதிற். 21. 4); 'வாய்மை வயங்கிய வைகல்' (பரி. 2. 54); 'வாய்மையன்ன வைகலொடு' (கலித். 35: 24.)

(பி-ம்.) 1. துயலலை: தோன்றலில்
2. அயிலிணை யனையகண்: அயில்விழி யொருகன வமைந்து நோகினேள்.
3. பழுதில பண்பு தூயன; பரிவி னுண்டன.
4. மெய்யன வுரைத்தல் மேயினுள். (39)

369. எண்ணெய்தன் முடிதொறு மிழுகி யேறியே
திண்ணெடுங் கழுதைபேய் பூண்ட தேரின்மேல்
அண்ணல்வே லிராவண னரத்த வாடையன்
நண்ணினன் றென்புலம் நவையில் கற்பினாய்.

'நவை இல் கற்பினாய் - குற்றமற்ற கற்புடைய சீதையே! அண்ணல் வேல் இராவணன் - பெருமை தங்கிய வேலேந்திய இராவணன், அரத்த ஆடையன் - சிவந்த ஆடையை அணிந்தவனாய், எண்ணெய் தன் முடி தொறும் இழுகி - எண்ணெயைத் தன் (பத்துத்) தலைகளின் மீதும் வழியப் பூசிக்கொண்டு, கழுதை பேய் பூண்ட - கழுதைகளும் பேய்களும் பூட்டப் பெற்ற, திண் நெடும் தேரின் மேல் ஏறி - வலிய பெரிய தேரின் மீது ஏறி, தென்புலம் நண்ணினன் - தெற்குத் திசையைப் போயடைந்தான். ஏ: அசை.

வேல் அண்ணல் இராவணன் என்றும் மாற்றிப் பொருள் கொள்ளலாம், அ ண் ண ல் வே லி ரா வ ண ன்: ஒப்பு: 26; 152. எண்ணெய் தேய்த்திருத்தல், செவ்வாடையுடுத்திருத்தல், தேரிற் போதல், தென் திசை நோக்கிச் செல்லல் போன்று காணுங் கனவுகள் வரப்போகும் கேட்டுக்கு அறிகுறிகள். நவையில் கற்பினள்; ஒப்பு: 561, 1005, 1169; ஆரண்ய சடாயுவுயிர்; 39; உயுத்த. மீட்சிப். 84, அரத்தம் - ரக்தம் என்னும் வடமொழியின் திரிபு, வான்மீகத்தில் திரிசடை கனவில் இராவணனைக் கண்ட செய்தி மிக விரிவாகக் கூறப்பட்டுள்ளமை, சுந்தர. 27 ஸர்க்கம் 36-43 சுலோகங்களிற் காண்க.

(பி-ம்.) 1. எண்ணெய் பொன்முடி: இழுகி யீறிலாத்.
2. கழுதையே பூண்ட.
3. அண்ணலவ் விராவணன்.
4. நண்ணின னமன்புலம். (40)

370. மக்களுஞ் சுற்றமும் மற்று ளோர்களும்
புக்கன ரப்புலம் போந்த தில்லையால்
சிக்கற நோக்கினென் றீய வின்னமும்
மிக்கன கேட்கென விளம்பன் மேயினாள்.

'மக்களும் சுற்றமும் - இராவணனுடைய மக்களும் உறவினரும், மற்றுளோர்களும் - அவனைச் சேர்ந்த மற்ற அரக்கர்களும், அ புலம் - அத்தென்திசை, புக்கனர் - புகுந்து சென்றார்கள்; போந்தது இல்லை - அவர்கள் ஒருவரும் திரும்பி வரவில்லை; சிக்கு அற நோக்கினென் - தடை

யின்றித் தெளிவாக (இக் கனவுக்களைக்) கண்டேன்; தீய - இவை தீமை உண்டாக்கக் கூடியவை; இன்னமும் மிக்கன - இவற்றை விட இன்னம் அதிகமானவற்றை, கேட்கென - நீ கேட்பாயாக, என்று, விளம்பல் மேயினுள் - (திரிசடை) சொல்லத் தொடங்கினுள். ஆல்: அசை.

இன்னமும் மிக்கன தீய - இன்னமும் கொடிய தீமையை உண்டாக்குவன என்றும் கொள்ளலாம். 'கேட்க என' என்பது கேட்கென எனத் தொகுத்து நின்றது.

(பி-ம்.) 2. புக்கன ரப்புறம்: புக்கனர் புலம்பினர்: பெரருந்திற் றில்லையால்.
3. திக்குற| நோக்கினன்; சிக்குற நோக்கினன்.
4. கேட்டியால் விளைவு கூறுகேன். (41)

371, ஆண்டகை யிராவணன் வளர்க்கு மவ்வனல்
ஈண்டில பிறந்தவா லினங்கொள் செஞ்சிதல்
தூண்டரு மணிவிளக் கழலுந் தொன்மனை
கீண்டதால் வானவே றெறியக் கீழைநாள்.

'ஆண்டகை இராவணன் வளர்க்கும் - ஆண்மைக் குணத்திற் சிறந்த இராவணன் (தன் வீட்டில் வைத்துக் காப்பாற்றி) வளர்த்து வருவதான, அ அனல் - (அவனுடைய) அந்த வைதிக அக்னி, ஈண்டில - வளர்ந்தோங்காமல் அழிந்தன; இனம் கொள் செம் சிதல் பிறந்த - கூட்டங் கொண்ட செந்நிறக் கறையான்கள் (அவ்வனல் இருந்த இடத்தில்) தோன்றி வளர்ந்தன; தூண்டு அரு மணி விளக்கு - தூண்டுதல் இல்லாது எப்பொழுதும் ஒளிவீசும் இரத்தின விளக்குகள், அழலும் - பிரகாசமுறும், தொல் மனை - நெடுங் காலமாய் உள்ள மாளிகை, வான ஏறு எறிய - ஆகாயத்தில் உண்டான பேரிடி தாக்க, கீழை நாள் - விடியற் காலையில், கீண்டது - பிளவுகள் பட்டு இடிந்தது,' ஆல் என்பன: அசைகள்.

கீழைநாள் - நான்காம் யாமம் என்பாரும் உளர். இவை எல்லாம் விடியற் காலத்தில் திரிசடை கண்ட கனவுகள்; விடியற் காலையிற் கண்ட கனவுகளின் பயன் உடனே ஏற்படும். மணிவிளக் கழலும் தொன்மனை: ஒப்பு: 'மணிவிளக் கழலுஞ் சேக்கை' (யா. கா. 43. மேற்கோள். மார்க்கண்டேயனுர் காஞ்சி.)

(பி-ம்.) 2. ஈண்டின விறந்தவால்; ஈண்டில விறந்தவால்; செஞ்சிகை
3. விளக் கொளிருந்.
4. வானிடி யேற்றின் கிழைநாள். (42)

**372.** *பிடிமதம் பிறந்தன பிறங்கு பேரியும்*
*இடியென முழங்கின விரட்ட லின்றியே*
*தடியுடை முகிற்குல மின்றித் தாவில்வான்*
*வெடிபட வதிருமா லுதிரு மீனெலாம்.*

'பிடிமதம் பிறந்தன - (பெண் யானைகளுக்கு) மதநீர் உண்டாயின; பிறங்கு பேரியும் - சிறப்புடன் விளங்கும் முரசங்களும், இரட்டல் இன்றியே - பிறர் முழக்காமலே, இடி என - இடிபோல, முழங்கின - தாமே ஒலிப்பன ஆயின ; தடி உடை முகில் குலம் இன்றி - மின்னலைத் தன்னிடம் கொண்ட மேகக் கூட்டம் இல்லாமலே, தாவு இல் வான் - ஆதாரமற்ற வானம், வெடிபட - வெடி பட்டுப் போக, அதிரும் - அதிர்ச்சியடையும்; மீன் எலாம் உதிரும் - (வானில் உள்ள) நட்சத்திரங்களெல்லாம் கீழே உதிர்ந்து விழும். ஏ, ஆல் : அசைகள்.

இச்செய்யுளுக்கு ஒப்பு: 299; ஆரண்ய. கரன்வதைப். 72. விண்மீன்கள் உதிரல், தீய சகுனம்: ஆரண்ய. விராதன். 28; சூளா. 1224.

(பி-ம்). 2. முழங்குமா லிரட்ட லின்றியே.
3. தடியொடு : முகிற்குல மின்ன : தாவிவான். (43)

**373.** *விற்பக லின்றியே யிரவு விண்டற*
*எற்பக லெறித்துள தென்னத் தோன்றுமால்*
*மற்பக மலர்ந்ததோண் மைந்தர் சூடிய*
*கற்பக மாலையும் புலவு காலுமால்.*

வில் பகல் இன்றியே - ஒளியோடு கூடிய பகற் பொழுது உண்டாகாமல் இருக்கவே (விடிவதற்கு முன்னமே,). இரவு விண்டு அற - இராப்பொழுது கெட்டு ஒழிய, எல் பகல் எறித்துளது என்ன - சூரியன் பகலில் ஒளிவீசியது என்று சொல்லும்படி, தோன்றும் - விளங்கும்; மல் பக மலர்ந்த தோள் - வலிமை மிகுந்து விளங்கத் தோன்றும் தோள்களையுடைய, மைந்தர் சூடிய - அரக்கர் மைந்தர்கள் தரித்திருந்த, கற்பக மாலையும் - கற்பக விருக்ஷத்தின் மலர்களால் தொடுத்த மாலைகளும், புலவு காலும் - (அதற்குரிய தெய்வ மணம் வீசாமல்) புலால் நாற்றத்தைச் சொரியும். ஆல் என்பன : அசைகள்.

'விற்பகல் தோன்றும்' என்று கூட்டிப் பகலிலிடும் இந்திரச் சிலை தோன்றிற்று என்று பொருள் உரைப்பாருமுளர்.

(பி-ம்:) 1, விற்பக லீண்டியே : விற்பகல் விடுந்து : இரவு விண்டர : இரவு விண்ணிடை.
2. எற்பக லுதித்தன னென்னத் ; எற்பக வெரிந்துள.
4. புலவுங் காலுமே. (44)

374. திரியுமா லிலங்கையும் மதிலுந் திக்கெலாம்
எரியுமாற் கந்தர்ப்ப நகர மெங்கணும்
தெரியுமான் மங்கல கலசஞ் சிந்தின
விரியுமால் விளக்கினை விழுங்கு மாலிருள்.

இலங்கையும் மதிலும் திரியும் - இந்த இலங்கை நகரும் (இதனைச் சூழ்ந்துள்ள) மதில்களும் சுழலும் ; திக்கு எலாம் எரியும் - (இந்த இலங்கையைச் சூழ்ந்த) எட்டுத் திக்குகளும் தீப்பற்றி எரியும் ; எங்கணும் கந்தர்ப்ப நகரம் தெரியும் - கந்திருவ நகரங்கள் எங்கும் தோன்றும் ; மங்கல கலசம் - மங்களமாக அமைக்கப் பெற்ற பூர்ண கும்பங்கள், சிந்தின விரியும் - நீரைச் சிந்திக் கொண்டு விரிந்து உடையும் ; விளக்கினை இருள் விழுங்கும் - நகரில் உள்ள விளக்கின் ஒளியை இருட்டு விழுங்கி அவித்து விடும். ஆல் என்பன ; அசைகள்.

கந்தர்ப்ப நகரம், கந்தர்வ நகரம், என்ற வடசொல்லின் திரிபு; கந்தர்வர்களின் பட்டணம் என்பது பொருள். இது வானத்தில் தோன்றி மறையும் என்றும், இது கண்ணிற் பட்டால் அரசனுக்கும் நாட்டிற்கும் அச்சத்தை விளைக்கும் என்றும் கூறுவர். 'கந்தர்வநகர லேகேவ பச்யத ஏவ நச்யதி' (காதம்பரி) ; 'ஸர்வதிகுத்தம் ஸததோத்திதம் ச பயதம் ந்ருபதி ராஷ்ட்ராணும்' (வராகமிகிரர்); இது பேய்த்தேரும் ஆகும் என்பர். 'கந்தர்வநகரம் - மன்மதன் படைவீடான சோலை' என்பது பழைய உரை. விரியும் மால் விளக்கினை என்றும் கூட்டிப் பொருள் கூறுவர்.

இதன் பின் 'விண்டொடர்' (376) என்று தொடங்கும் செய்யுள் சில சுவடிகளிற் காணப்படுகின்றது.

(பி-ம்.) 1. திரிந்துள விலங்கையும்.
2. கற்பக நகர : கற்பகக் காவு மெங்கணும் : கற்பகந் தாமு மெங்கணும்.
3. கரியுமால் மங்கல : திரியுமான் மங்கலக்.
4. விரிந்தொளிர் விளக்கினை: விளக்கினை யிருள்வி ழுங்குமால். (45)

375. *தோரண முறியுமாற் றுளங்கிச் சூழிமா*
*வாரண முறியுமால் வலத்த வான்மருப்*
*பாரண மந்திரத் தறிஞர் நாட்டிய*
*பூரண குடத்துநீர் நறவிற் பொங்குமால்.*

தோரணம் முறியும் - தோரணக் கம்பங்கள் முறிந்து விழும்: சூழி மாவாரணம் - முகபடாம் அணிந்த பெரிய யானைகளின், வலத்த வான் மருப்பு - வலிய நீண்ட தந்தங்கள், துளங்கி - நடுங்கி, முறியும் - முறிந்து கீழே விழும்; ஆரண மந்திரத்து அறிஞர் நாட்டிய - வேத மந்திரங்களால் தேர்ந்த அறிவுடைய அந்தணர்கள் ஸ்தாபித்த, பூரண குடத்து நீர் - பூர்ண கும்பத்தில் உள்ள நீர், நறவில் பொங்கும் - கள்ளைப் போலப் பொங்கி மேலே வழியும்.' ஆல் என்பன; அசைகள்.

நறவு பொங்குதல்: 'காய்ச்சப் பொங்குவது கூழ்; காய்ச்சாமற் பொங்குவது கள்' என்ற உலகவாக்கையும் காண்க.

(பி-ம்.) 1. தோரண முறிந்தது துணியச் சூழிமா: முறியுமா றுளங்கி: துலங்கு சூழிமா.
2. வாரண நெடுந்துணை மருப்பொ டிந்தன:
3. மந்திர மமைய வோதிய: அறிஞ ராட்டுறு.
4. கும்பநீர்: கடத்துநீர்: நறவு பொங்குமால். (46)

376. *விண்டொடர் மதியினைப் பிளந்து மீனெழும்*
*புண்டொடர் குருதியிற் பொழியும் போர்மழை*
*தண்டொடு திகிரிவா டனுவென் றின்னன*
*மண்டமர் புரியுமா லாழி மாறுற.*

'மீன் - நட்சத்திரங்கள், விண் தொடர் - ஆகாயத்தில் தொடர்ந்து செல்லும், மதியினைப் பிளந்து - சந்திர மண்டலத்தைப் பிளந்து கொண்டு, எழும் - எழுந்து மேலே செல்லும்: போர் மழை - போர்த்தது போல் வானிற் கவிந்துள்ள மழை, புண் தொடர் குருதியில் - புண்ணிலிருந்து தொடர்ந்து வழியும் இரத்தம் போல, பொழியும் - பெய்யும்; தண்டு ஒடு திகிரி வாள் தனு என்று இன்னன - தண்டு, சக்கரம், வாள், வில் முதலிய போர்க்கருவிகள், ஆழி மாறு உற - கடல் மாறுபாடுற்றுக் கொந்தளிக்க, மண்டு அமர் புரியும் - (பிறர் தூண்டுவாரின்றித்) தாமே ஒன்றுக் கொன்று பகைத்துப் போர் புரியும்.' ஆல் என்பன, அசைகள்.

சந்திர மண்டலத்திற்கும் மேலுள்ளது நட்சத்திர மண்டலம் ஆதலால், சந்திரனைத் தொளைத்துக் கொண்டு நட்சத்திரங்கள் கீழே விழும் என்ற பொருள்பட 'மீன் விழும்' என்ற பாடம் கிடைத்தால் சிறக்கும். குருதியில் பொழியும் என்பதில், இல் உருபு இரண்டாம் வேற்றுமையில் மயங்கி வந்ததாகக் கொண்டு இரத்தத்தை மழையாகப் பெய்யும் எனப் பொருள் கோடலும் அமையும். ஆழி மாறுற-கடலொலி பின்னிட்டு அடங்க, என்றும் கூறலாம். நட்சத்திரங்கள் உதிர்வது; 372. சில சுவடிகளில் இதன் பின் 'தோரணமுறியு' (375) என்று தொடங்கும் பாடல் காணப்படுகிறது.

(பி-ம்.) 1. விண்டொடு : மதியொளி கெடுத்து மீனெழும் : பிளந்து மின்னெழும் : மீதெழும்.
2. குருதி பொன் பொழியும் ; குருதியாற் பொழியும் பொன்மழை; குருதிநீர் பொழியும் வான்மழை : பொழியும் பொய்மழை.
3. தண்டொரடு சக்கரந் தனு ; தண்டொடு மகரமீன் றனு: சுரிகைவாள்.
4. மண்டமர் புரிந்தன மைந்த ரின்றியே : மாலுற : மாதுற. (47)

377. *மங்கையர் மங்கலத் தாலி மற்றவர்*
*அங்கையின் வாங்குவா ரெவரு மன்றியே*
*கொங்கையின் வீழ்ந்தன குறித்த வாற்றினுல்*
*இங்கிதி னற்புத மின்னுங் கேட்டியால்.*

'மங்கையர் - அரக்கமகளிர்களுடைய, மங்கல தாலி - திருமங்கலியம் அமைந்த தாலி, மற்றவர் எவரும் அங்கையின் வாங்குவார் அன்றி - பிறர் யாரும் கையினுல் இழுத்து நீக்குதல் இல்லாமலே, கொங்கையின் வீழ்ந்தன - அம்மகளிரின் கொங்கைகள் மீது (தாமே அறுந்து) வீழ்ந்தன ; குறித்த ஆற்றினுல் - யான் இங்குக் குறிப்பிட்டுக் கூறிய விதத்தால், இங்கு இதின் அற்புதம் - இங்கு நிகழ்ந்த இத்தீக்குறிகளின் ஆச்சரியத்தை, இன்னும் கேட்டி - மேலும் நீ கேட்பாயாக' (என்று திரிசடை சொல்லத் தொடங்கினுள்.) ஏ, ஆல் : அசைகள்.

வாங்குதல் - நீக்குதல் ; 'வாங்குமின் மனத்துயர்' (உயுத்த. மீட்சிப் : 278.) தாலி தானே அறுந்து தன் கொங்கையில் வீழ்தல் தீக்குறி. தாலி வாங்குதல் ; 661, 1047 ; உயுத்த. மகரக்கண்ணன். 4.

(பி-ம்.) 1. மற்றையர். 2. வாங்கினு ரெவரு மின்றியே.
3. விழ்ந்தன கொழுங்கண் ணுலிகள் : குறித்த கொள்கையால்
4. இன்ன மெண்ணுகோ. (48)

378. மன்னவன் றேவியம் மயன்ம டந்தைதன்
பின்னவி ழோதியும் பிறங்கி வீழ்ந்தன
துன்னருஞ் சுடர்சுடச் சுறுக்கொண் டேறிற்ருல்
இன்னலுண் டெனுமிதற் கேது வென்பதே.

மன்னவன் தேவி அம் மயன் மடந்தை தன் - எங்கள் அரசனுன இராவணன் தலைவியும் அந்த மயன் மகளுமான மண்டோதரியினுடைய, பின் அவிழ் ஓதியும் - பின்னல் அவிழ்ந்த கூந்தலும், பிறங்கி வீழ்ந்தன - மாறுபட்டு அலங்கோலமாகக் கீழே வீழ்ந்தனவாய், துன் அரும் சுடர் சுட - நெருங்குதற்கு அரிய நெருப்புச் சுடுதலால், சுறுக்கொண்டு ஏறிற்று - தீய நாற்றம் மேற்கொண்டு எரிந்து மேலே பற்றி எழுந்தன; (ஆதலால்), இதற்கு ஏது - இந்த என் கனவுக்குப் பலன், இன்னல் உண்டு எனும் என்பதே - அரக்கர்க்குப் பெரும் துன்பம் வருவது என்று தெரிவிப்பதே ஆகும். ஆல் அசை.

அம் மயன் மடந்தை - அழகிய மயன் மகள் எனலும் ஆம். சுறுக்கொள்ளுதல் - தீப்படுகின்ற தசை மயிர் முதலியவற்றிலிருந்து உண்டாகும் கெட்ட நாற்றம் கொள்ளுதல்; உயுத்த மந்திரப். 13; ஆளுடைய பிள்ளை. திருவந். 25; தக்க. 184; அரிச்சந்திர. மயான. 35; திருவால. 37-67. இதற்கு ஏது-இக்கனவுக்குக் காரணம் எனலும் ஆம்.

(பி-ம்.) 2. பின்னிய வோதியும் பிரிந்து வீழ்ந்தன
3. சுறுக்கொண் டேறின. 4. ஏது வென்றதே; ஏது வீதெனு. 49)

379. என்றிவை யியம்பிவே றின்னுங் கேட்டியால்
இன்றிவ ணிப்பொழு தெதிர்ந்த தோர்கனு
வன்றுணைக் கோளரி யிரண்டு மாறிலாக்
குன்றிடை யுழுவையாங் குழுக்கொண் டீண்டியே.

என்று இவை இயம்பி - என்று கனவின் நிகழ்ச்சிகளைக் கூறி, 'வேறு - (யான் கண்ட கனவின்) வேறு செய்திகளையும், கேட்டி - நீ கேட்பாயாக; இன்று இவண் இப்பொழுது-இன்று இவ்விடத்தில் இந்நேரத்தில் (அதாவது யான் விழித்துக் கொள்ளுமுன்), எதிர்ந்தது ஓர் கனு - ஒரு கனவு தோன்றிற்று; வன் துணை கோளரி இரண்டு - வலிமை வாய்ந்த ஒன்றுக்கொன்று துணையாய் அமைந்த இரு ஆண் சிங்கங்கள், மாறு இலா குன்று இடை - ஒப்பில்லாத ஒரு மலையினிடத்து, உழுவை ஆம் குழு கொண்டு - புலிக்கூட்டங்களை உடன் துணையாகக் கொண்டு வந்து, ஈண்டியே - நெருங்கியே. (வளைந்தன நேர்ந்தன 380). ஆல்: அசை.

369 முதல் 378 முடியவுள்ள செய்யுட்களில் திரிசடை, இராவண னுக்கும் அவன் நகருக்கும் விளையவிருக்கும் அழிவுகளைக் காட்டிய கனவுகளைக் கூறி, இனி, பிராட்டிக்கு வரப்போகும் நன்மையைக் குறிக் கும் அவற்றைக் கூறத் தொடங்குகிறாள். கோளரி இரண்டு-இராமலக்ஷ் மணர்கள். உழுவையாம் குழு - வானரக் கூட்டம். மாறிலாக் குன்று- இலங்கையில் உள்ள திரிகூடமலை.

(பி-ம்.) 1. என்றன ளியம்பி. 2. எழுந்த தோர்கனு.
4. உழுவையங் குழக்கொண். (50)

380. *உரம்பொரு மதமலை யுறையு மவ்வனம்*
*நிரம்புற வளைந்தன நெருக்கி நேர்ந்தன*
*வரம்பறு பிணம்படக் கொன்று வாழுந்தம்*
*புரம்புக மயிலையுங் கொண்டு போனவால்.*

'உரம் பொரு மதமலை - வலிமையொடு தாக்கிப் போர்புரியும் மதங் கொண்ட யானைகள், உறையும்-வாழும், அ வனம் - அந்தக் காடு, நிரம்பு உற - நிரம்ப, வளைந்தன - (கோளரி இரண்டும் உழுவையாங் குழுவும்) வளைந்து சுற்றிக் கொண்டு, நெருக்கி நேர்ந்தன - எதிர்த்துத் தாக்கின; வரம்பு அறு பிணம் பட கொன்று - எல்லையற்ற பிணங்கள் விழுந்து அழியும்படி (பகையான அவ்வியானைகளைக்) கொன்று, வாழும் தம் புரம் புக - தாம் வாழும் தமது நகரை அடைய, மயிலையும் கொண்டு போன - ஒருமயிலையும் (தம்முடன்) கொண்டு போயின. ஆல்: அசை.

மதமலை இராவணனையும். வளைந்தன, நேர்ந்தன என்பன இரண்டு கோளரிகளாகிய இராமலக்ஷ்மணர்களையும், மயில் பிராட்டியையும், புரம் அயோத்யா புரத்தையும் குறிப்பன.

(பி-ம்:) 1. வரம்பிலா மதகரி; மாகரி; மதகரிக் குழுக்கள் வாழிடம்
2. வளைத்தன; உளைத்தன: நெருங்கி.
3. குரம்பறு பிணம்: கொன்றுமாறிலாப்: கொன்று வாசினுல்
4. புரம்புக விருந்ததோர் மயிலும். (51)

381. *ஆயிரந் திரிவிளக் கமைய மாட்டிய*
*சேயொளி விளக்கமொன் றேந்திச் செய்யவள்*
*நாயகன் றனிமனை நின்று நண்ணுதல்*
*மேயினள் விடணன் கோயின் மென்சொலாய்.*

'மென் சொலாய் - மென்மையான சொற்களையுடைய சீதையே! ஆயிரம் திரி விளக்கு - ஆயிரம் திரிகளோடு விளங்கும் விளக்குகள், அமைய மாட்டிய-பொருந்துமாறு மாட்டப் பெற்ற, சேய் ஒளி விளக்கம் ஒன்றுஏந்தி - சிவந்த ஒளியையுடைய விளக்கு ஒன்றை ஏந்திக்கொண்டு, செய்யவள்-சிவந்த நிறமுடைய ஒரு பெண், நாயகன் தனி மனை நின்று - (இந்த இலங்கைக்குத்) தலைவனான இராவணனுடைய ஒப்பற்ற அரண் மனையில் நின்று, வீபீஷணன் கோயில்-வீணன் மாளிகையை, நண்ணு தல் மேயினள் - அடையலானாள்.

ஆயிரம் திரி விளக்கு - ஆயிரம் திரிகளோடு கூடிய ஒரு விளக்கும் ஆம். செய்யவள்-திருமகள்; இராஜ்யலக்ஷ்மி என்னலும் ஒன்றும். மாட்டு தல்-தீபற்றும்படி. ஏற்றுதலும் ஆம்.

(பி-ம்) 1. திருவிளக்கு. 2. சேயொளித் தீபமொன் றேந்திச்: சேயவள். 3. நாயகன் றன்மனை; திருமனை; கோயிலி னின்று: நன்னுதல். 4. மெய்ம்மையாய். (52)

382. *பொன்மனை புக்கவப் பொருவிற் போதினில்*
*என்னை நீ யுணர்த்தினை முடிந்த தில்லென*
*அன்னையே யதன்குறை காணென் றாயிழை*
*இன்னமுந் துயிலென விருகை கூப்பினாள்.*

'பொன்மனை புக்க - பொன்மயமான (வீடணன்) மாளிகையில் புகுந்த, அ பொருவு இல் போதினில் - அந்த ஒப்பற்றதான நற்சமயத் தில், என்னை நீ உணர்த்தினை - என்னை நீ(என் துயிலினின்றும்)எழுப்பினாய்; முடிந்தது இல் என - (அதனால்) யான் கண்ட அக் கனவு முடிவு பெற வில்லை' என்று (திரிசடை) கூற; ஆயிழை - ஆராய்ந்து அணிந்த அணி களையுடைய பிராட்டி, 'அன்னையே - தாயே! அதன் குறை காண் என்று - நீ கண்ட அக் கனவில் எஞ்சியதை நீ காண்பாயாக; 'என்று, (அதற்காக), முழ் துயில் என - மேலும் நீ தூங்குக' என்று சொல்லி, இருகை கூப்பினாள் - (பிராட்டி) தன் இரு கரங்களையும் குவித்துக் கும்பிட்டுத் (திரிசடையைக் கேட்டுக் கொண்டாள்.)

'பொன்' என்று பிரித்து அந்த ராஜ்ய லக்ஷ்மி என்று பொருள் கொள் வதும் அமையும். திரிசடையைச் சீதை அன்னை என்பது; 360, இதன் பின் ஒரு சுவடியில் அடியிற்காணுமாறு ஒரு செய்யுள் அதிகமாக உள்ளது.

மீட்டுமத் திரிசடை யென்னு மென்சொலாள்
தோட்டடம் பொருகுழைத் தொண்டைத் தூய்மொழி
கேட்டிவெங் கடுவெனுக் கிளருற் பாதமாய்
நாட்டினை யாவரு நடுக்கங் காண்டுமால்.

(பி-ம்.) 1, பொன்னகர் புக்கதப்.
3. அன்னைமற் றதன்குறை காணுதற்கு நீ. 4. துயில்கென.(53)

## அநுமன் பிராட்டியிருக்கை காணுதல்

383. இவ்விடை யண்ணலவ் விராம னேவிய
வெவ்விடை யனையபோர் வீரத் தூதனும்
அவ்விடை யெய்தின னரிதி னேக்குவான்
நொவ்விடை மடந்தைதன் னிருக்கை நோக்கினுன்.

இ இடை - இந்தச் சமயத்தில், அண்ணல் அ இராமன் - பெருமை தங்கிய அந்த இராமபிரான், ஏவிய-(சீதையைத் தேடி வரும்படி) அனுப்பிய, வெம் விடை அனைய போர் வீர தூதனும், - காண்போர்க்கும் அச்சத்தை உண்டாக்கும் இடபம் போன்ற போர் வீரம் பொருந்திய தூதனும், அரிதின் நோக்குவான் - பலவித கஷ்டங்களோடு எங்குந் தேடிப்பார்த்து வந்தவனுமான அநுமன், அ இடை எய்தினன்-அந்த இடத்தை அடைந்தவனுய், நொ இடை மடந்தை தன் இருக்கை நோக்கினுன் - (மென்மையால்) வருந்தும் இடையையுடைய சீதையின் இருப்பிடத்தைப் பார்த்தான்.

இவ்விடை; இங்கு 'இடை' காலத்தைக் குறிப்பது. அவ்விடை; இங்கு 'இடை' இடத்தைக் குறிப்பது. விடை - இடபம்; இது ஆண்மைக் குணம், பெருமிதத் தோற்றம், சிறந்த நடை முதலியவற்ருல் சிறந்தது பற்றி அநுமனுக்கு உவமையாகியது. நொவ்விடை: நொவ்வு இடை என்றும் பிரிக்கலாம். நொவ்விடை, நொந்த இடையுடையவள் என்பதும் ஆம். 'நொவ்விடைக் குயிலே' (430) என்று பின்னும் கூறுவர்.

(பி-ம்.) 1. இவ்விடை விடையென; இவ்வயி னிராகவக் கடவு ளேவிய.
2. அனையதோர்: வீரர்வீர னும்.
3. அவ்விடை யணைந்துநின் றரிதி னேக்கினுன். (54)

## துயிலுணர்ந்த அரக்கியர் நிலை 384-89

384. அவ்வயி னரக்கிய ரறிவுற் றம்மவோ
செவ்வையி றுயினமைச் செய்த தீங்கென
எவ்வயின் மருங்கினு மெழுந்து வீங்கினர்
வெவ்வயின் மழுவெழுச் சூல மேந்தியே.

அவயின் - அப்பொழுது, அரக்கியர் - (சீதைக்குக் காவலாக அங்கிருந்த) அரக்க மகளிர், அறிவுற்று - (துயில் நீங்கி) அறிவையடைந்து, அம்மவோ - ஐயோ! செவ்வை இல் துயில் - நல்லது அல்லாத தூக்கம், நமை ஈங்கு செய்தது என - நமக்கு (இந்தக்கேட்டை) இப்பொழுது செய்து விட்டது என்று, எழுந்து - எழுந்திருந்து, வெம் அயில் மழு எழு சூலம் ஏந்தி - கொடிய வேல், கோடாலி, வளைதடி' சூலம் முதலிய படைகளை ஏந்திக் கொண்டு, எ வயின் மருங்கிலும் - எல்லா இடங்களிலும், வீங்கினர் - நிறைந்து கூடினர்,

359 ஆம் செய்யுளில் 'அல்லு நள்ளுறப் பொருந்தலும் துயினறைக் களிபொருந்தினர்' என்று கூறியபடி, தூங்கிக் கொண்டிருந்த அரக்கியர் இப்பொழுது விழித்தெழுந்தனர் என்க. அவ்வயின்: 'வயின்' காலத்தைக் குறிக்கும். எவ்வயின்: 'வயின்' இடத்தைக் குறிக்கும், 'வயின் மருங்கு' என்பன: ஒரு பொருட் பன்மொழி. 'அயில்' என்பதற்குக் கூர்மை எனப் பொருள் கொண்டு அதனை 'மழு, எழு, சூலம்' என்னும் எல்லாவற்றுக்கும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். அம்மவோ: ஓகாரம் புலம்பலில் மிகுந்து வந்தது: அம்ம: இரக்கத்தை யுணர்த்தும் இடைச்சொல். 'துயில் நமை தீங்கு செய்த என' என்றும் பிரித்தும் பொருள் கொள்ளலாம்; வீங்குதல் - மிகுதலும் ஆம். இச்செய்யுள் முதல் 389 ஆம் செய்யுள் முடிய அரக்கியர் நிலை கூறப்படும்.

இதன்பின் 'ஆயிடையுரை' (390) என்று தொடங்கும் செய்யுள் பல சுவடிகளில் காணப்படுகின்றன.

*(பி-ம்.)* 1. அம்மவோர்: அம்மயாம்.
2. துயிள்நமை செய்த: செவ்விதன் நனந்தலுற் நதுவுந் தீதெனு; செய்த தீதெனு,
3. எழுந்து பொங்கினர்; எழுந்து நீங்கினர்.
4. எவ்வையில்: வெவ்விய மழுமுதற் படைகொள் வெங்கையார்: சூல வெங்கையார். (55)

385. *வயிற்றிடை வாயினர் வளைந்த நெற்றியில்*
*குயிற்றிய விழியினர் கொடிய நோக்கினர்*
*எயிற்றினுக் கிடையிடை யானை யாளிபேய்*
*துயிற்கொள்வெம் பிலனெனத் தோட்ட வாயினர்.*

வயிற்றிடை வாயினர் - (அவ்வரக்கியர்) வயிற்றின் இடையே வாய் உடையவர்கள்; வளைந்த நெற்றியில் - முன்னே வளைந்துள்ள நெற்றியில், குயிற்றிய - பதிக்கப் பெற்றது போன்ற, விழியினர் - விழிகளையுடைய

வர்கள்; கொடிய நோக்கினர் - கொடுமையான பார்வையையுடையவர் கள்: எயிற்றினுக்கு இடை இடை - ஒரு பல்லுக்கும் மற்றொரு பல்லுக் கும் நடுவே, யானை, யாளி, பேய் - யானை, யாளி, பேய் என்றன, துயில் கொள் வெம் பிலன் என - தூங்கும் பயங்கரமான குகை போன்ற, தொட்ட - பெரிய, வாயினர் - வாயை யுடையவர்கள்.

அரக்கியர் பற்களுக்கு இடை இடையே, யானை யாளி பேய் முதலி யவை தங்கித் தூங்கும் என்பதும், வாய் பெரிய பிலம் போன்றது என் பதும் ஆம். யாளி; யானை போன்று துதிக்கையும் சிங்கம் போன்ற கொடிய பற்களும், நகங்களும், வாலும் இறகுகளும் உடைய ஒரு கொடிய விலங்கு; இவ்வித விலங்கு இப்பொழுது அழிந்து போயிற்று என்பர், தொட்ட வெம் பிலன் என வாயினர் - தோண்டப்பட்ட பயங்கரமான முழை போன்ற வாயையுடையவர் என்பாரும் உளர். தொட்ட என்பதைத் திசைச் சொல்லாகக் கொண்டு பெரிய என்று பொருள் கூறப் பெற்றது: தொட்ட என்பது அருவா நாட்டுச் சொல் லாகிய திசைச்சொல். இச் செய்யுள் சில சுவடிகளில் இல்லை; வேறு சில சுவடிகளில் இதன்பின் 'கரிபரிவேங்கை' (388) என்று தொடங்கும் செய்யுள் காணப்படுகிறது.

(பி-ம்.) 4. தோட்ட வாயினர். (56)

386. ஒருபது கையின ரொற்றைச் சென்னியர்
இருபது தலையின ரிரண்டு கையினர்
வெருவரு தோற்றத்தர் விகட வேடத்தர்
பருவரை யெனமுலை பலவு நாற்றினர்.

(மேலும் அவ்வரக்கியர்) ஒருபது கையினர் ஒற்றை சென்னியர் - பத்துக் கைகளையும் ஒற்றைத் தலையையும் உடையவர்கள்; இருபது தலையினர் இரண்டு கையினர் - இருபது தலைகளையும் இரண்டு கைகளையும் உடையவர்கள்: வெருவரு தோற்றத்தர் - யாவரும் கண்டு அஞ்சும் தோற்றத்தை யுடையவர்கள்: விகட வேடத்தர்-மாறுபட்ட வடிவத்தை உடையவர்கள்; பருவரை என - பருத்த மலை போல, முலை பலவும் - பல முலைகளையும், நாற்றினர் - தொங்கவிட்டுக் கொண்டிருப்பவர்கள்,

'முலை பலவும் நாற்றினர்; பலவும் என்பது, ஒருவருக்கு இரண்டுக்கு மேற்பட்டதைக் குறிப்பது, ஒரு சுவடியில் இதற்குப் பின் அடியிற் காணுமாறு ஒரு பாடல் அதிகமாக உள்ளது.

சிரமொரு மூன்றினுர் திருக்கு மூன்றினுர்
கரமொரு மூன்றினுர் காலு மூன்றினுர்
உரமுறு வனமுலே வெரிநின் மூன்றுளார்
பொருவரு முலகையும் புதைக்கும் வாயினுர்.

(பி-ம்.) 2. இருபது முலேயின ரிரண்டு கையினர். (57)

387. *சூலம்வாள் சக்கரந் தோட்டி தோமரம்*
*காலவேல் கப்பணங் கற்ற கையினுர்*
*ஆலமே யுருவுகொண் டனேய மேனியார்*
*பாலமே தரித்தவன் வெருவும் பான்மையார்.*

(இன்னும் இவ்வரக்கியர்) சூலம்.........கற்ற கையினுர் - சூலம், வாள், சக்கரம், தோட்டி, தோமரம், யமன்போன்றவேல், கப்பணம் ஆகிய படைக் கருவிகளேப் போரிடக் கற்றுக்கொண்ட கைகளே யுடையவர்; ஆலமே உருவு கொண்டனேய மேனியார் - விஷமே ஓர் உருவெடுத்துக் கொண்டாற் போன்ற கரிய உருவத்தை யுடையவர்கள்; பாலமே தரித்தவன் வெருவும் பான்மையர் - கபாலத்தைக் கையி லேந்திய வயிரவ மூர்த்தியே கண்டு அஞ்சும் தன்மையுடையவர்கள்.

இப்படைப் பெயர்களின் விளக்கங்களே 136, 164, 173 செய்யுட் களின் உரைகளில் காண்க. பாலம்: கபாலமென்பதின் முதற்குறை இச் செய்யுள் சில சுவடிகளில் இல்லே. ஆலமே......மேனியார்; ஒப்பு: ஆரண்ய. கரன்வதைப்: 11.

(பி-ம்.) 1. வாலமே தரித்தவன்; ஆலமே தரித்தவன். (58)

388. *கரிபரி வேங்கைமாக் கரடி யாளிபேய்*
*அரிநரி நாயென வணிமு கத்தினர்*
*வெரிநுறு முகத்தினர் விழிகண் மூன்றினர்*
*புரிதரு கொடுமையர் புகையும் வாயினுர்.*

கரி - யானே, பரி - குதிரை, வேங்கை - வேங்கைப்புலி, மா கரடி - பெருங்கரடி, யாளி - யாளி, பேய் - பிசாசு, அரி - சிங்கம், நரி - நரி, நாய் - நாய், என - என்ற (மிருகங்கள்), அணி முகத்தினர் - பூண்ட முக முடையவர்; வெரிந் உறு முகத்தினர் - முதுகிற் பொருந்திய முகத்தை யுடையவர்கள்; விழிகள் மூன்றினர் - மூன்று விழிகளேயுடையவர்; புரி தரு கொடுமையர் - செய்யும் கொடுந்தொழில்களே யுடையவர்கள்; புகையும் வாயினுர் - (சீற்றத்தால்) புகையும் வாயையுடையவர்கள்.

(பீ-ம்.) 1. கரடி பேயரா.
2. நரி நாயன: நாயென வணில் முகத்தினர்.
4. கொடுமையாய்ப் புகையும். (59)

389. *எண்ணினுக் களவிட லரிய வீட்டினர்*
*கண்ணினுக் களவிட லரிய காட்சியார்*
*பெண்ணெனப் பெயர்கொடு திரியும் பெற்றியார்*
*துண்ணெனத் துயிலுணர்ந் தெழுந்து சுற்றினர்.*

எண்ணினுக்கு அளவு இடல் அரிய-எண்களைக் கொண்டு அளவிட முடியாத, ஈட்டினர் - வலிமை உடையவர்கள்: கண்ணினுக்கு அளவு இடல் அரிய காட்சியார் - கண்களால் பார்த்து அளவிட முடியாத தோற்றத்தவர்; பெண் என பெயர் கொடு திரியும் பெற்றியார் - பெண் என்ற பெயரை வைத்துக்கொண்டு சஞ்சரிக்கும் தன்மை யுடையவர் கள்; துண் என - திடுக்கென்று, துயில் உணர்ந்து - தூக்கத்தினின்றும் விழித்துக் கொண்டு, எழுந்து சுற்றினர் - எழுந்து வந்து (சீதையின் இருப் பிடத்தைச்) சுற்றிக் கொண்டனர்.

எண்ணினுக்கு அளவு இடல் அரிய-மனத்திற்கு யோசித்து அளவிட முடியாத என்றும் பொருள் கொள்ளலாம். பெண்ணெனப் பெயர் கொடு திரியும் பெற்றியர்: பெண் என்று ஒரு பாகுபாட்டின் பெயரைக் கொண்டிருப்பது அவர்களுக்கு ஒரு சலுகைக்கு இடமாகுமே தவிர உண்மையில் ஆண்மையிற் சிறந்தவர் என்பதாம்; ஒப்பு. 'பெண்ணி வளென்னுந் தன்மை யெளிமையின் பாலதே' (பால. தாடகை. 65.) துண்: அச்சத்தையும் விரைவையும் உணர்த்தும் நிகழ்ச்சிக் குறிப்பு; 'அவ்வயின் அரக்கியர் அறிவுற்று' என்று 384, இல் கூறியதோடு, 'துண் ணெனத் துயிலுணர்ந்து' என்று இங்குக் கூறியதைப் பொருத்துக.

(பீ-ம்.) 3. திரியுங் கூற்றினர்.
4. துயிலெழுந் துணர்ந்து. (60)

## பிராட்டி வருந்தலும் அநுமன் அணுகலும் 390-91.

390. *ஆயிடை யுரையவிந் தழகன் றேவியும்*
*தீயனை யவர்முக நோக்கித் தேம்பினள்*
*நாயகன் றூதனும் விரைவி னண்ணினன்*
*ஓய்வில னுயர்மரப் பணையி னும்பரான்.*

ஆயிடை - அப்பொழுது, அழகன் தேவியும்- அழகனுகிய இராம பிரான் தேவியாகிய பிராட்டியும், உரை அவிந்து - பேச்சு அடங்கி, தீ அனையவர் முகம் நோக்கி - தீப்போல் கொடிய அவ்வரக்கியர் முகங் களைப் பார்த்து, தேம்பினுள் - ஏங்கி வருந்திஞள்; நாயகன் தூதனும் - இராமபிரான் தூதனுன அநுமனும், விரைவில் நண்ணினுன் - வேகமாக அங்கு வந்து, ஒய்வு இலன் - தாமதிக்காதவனுய், உயர் மர பணையின் உம்பரான் - உயர்ந்து வளர்ந்திருந்த ஒரு மரத்தின் கிளை மீது ஏறி யிருந்து, (நோக்கினுன்.)

இச் செய்யுள் அடுத்த செய்யுளிலுள்ள நோக்கினுன் என்பதுடன் முடியும். இராமபிரானை அழகன் என்பது: 197; பால, மிதிலைக்காட்சிப். 39. அநுமன் ஏறியிருந்த மரம் சிம்சுபா என்னும் பெயருடையது; 'நஞ்சிய லரக்கியர் நடுவ ணுயிடைச். சிஞ்சுப வனத்திடைச் சிறைவைத் தானரோ' (ஆரண்ய, சடாயுவுயிர், 146.) தையலை வணங்கற் கொத்த விடை பெறுந் தன்மை நோக்கி, ஐயநா னிருந்த காலை' என்று அநுமன் பின்னே (1281) கூறுதலால், அவன் மரப்பணையும்பர் இருந்த காரணம் தெரிய வருகிறது.

(பி-ம்.) 1. ஆயபோ தறிவழிந் தமலன் றேவியும்: உரைதவிர்ந்: உறை மறந். 2. தீவினை யவர்வர நோக்கி: தீயவர் முகச்சினம், 3. ஒய்வில துயர்: ஒய்வின னுயர்மரப் பொதும்பி னும்பரான். (61)

391 அரக்கிய ரயின்முத லேந்து மங்கையர்
நெருக்கிய குழுவினர் துயிலு நீங்கினுர்
இருக்குநர் மற்றிதற் கேது வென்னெனப்
பொருக்கென வவரிடைப் பொருந்த நோக்கினுன்.

அரக்கியர் - காவலிருந்த அரக்க மாதர்கள், அயில் முதல் ஏந்தும் அங்கையர் - வேல் முதலிய படைகளை ஏந்திய அகங்கைகளை யுடைய வர்களாகவும், நெருக்கிய குழுவினர் - அடர்ந்த கூட்டத்தவர்களாகவும், துயிலும் நீங்கினுர் - தூக்கம் நீங்கி விழித்தவர்களாகவும், இருக்குநர் - காவல் புரிந்து கொண்டு இருக்கிருர்கள்; இதற்கு ஏது என் என - இதற் குக் காரணம் என்னவென்று, பொருக்கு என - விரைவாக, அவர் இடை - அவ்வரக்கியருக்கு நடுவே, பொருந்த நோக்கினுன்-(அநுமன்) உற்றுப்பார்த்தான். மற்று; அசை.

அரக்கியர் ஆயுதங்கள் ஏந்தியிருந்தது: 384, 387. நெருக்கிய குழுவினர் - ஒருவரை யொருவர் நெருக்கி நிற்கும்படியான கூட்டமாய் உள்ளவர் என்றலும் ஆம். பொருக்கு - விரைவுப் பொருளையுணர்த்தும் சொல்; பால. திருவவதாரப். 42; உயுத்த. கும்பகருணன். 112. இச் செய்யுளில் அநுமன் ஆராய்ச்சிக்குக் காரணங்கள் கூறப்பட்டுள்ளன.

(பி-ம்.) 1. அரக்கிய ரெறிபடை யேந்து; ஏந்துங் கையினர்; அங்கையார்.
2. நெருக்கினர் குழுவினர்.
3. இருக்குநர் பலரிதற்: ஏது வுண்டெனுப். (62

## அநுமன் பிராட்டியைக் காண்டல் 392-95.

392. *விரிமழைக் குலங்கிழித் தொளிரு மின்னெனக்*
*கருநிறத் தரக்கியர் குழுவிற் கண்டனன்*
*குருநிறத் தொருதனிக் கொண்ட லாமெனத்*
*திருவுறப் பொலியுமோர் செல்வன் றேவியை.*

குருநிறத்து - சிறந்த (கரு) நிறத்தோடு கூடிய, ஒரு தனி கொண்டல் ஆம் என-ஓர் ஒப்பற்ற நீருண்ட மேகம் போல, திரு உற பொலியும் -அழகு நன்கு அமைய விளங்கும், ஓர் செல்வன் தேவியை-ஒரு சீமானுன இராமபிரான் தேவியாகிய பிராட்டியை, விரி மழை குலம் கிழித்து-விரிந்து பரவிய மேகத்தின் கூட்டத்தைக் கிழித்துக் கொண்டு, ஒளிரும் மின் என - ஒளி வீசிக் கொண்டு விளங்கும் மின்னலைப் போல, கரு நிறத்து அரக்கியர் குழுவில் - கரிய நிறத்தை யுடைய அரக்கியர் கூட்டத்திடையே, கண்டனன் - (அநுமன்) பார்த்தான்.

விரிமழைக் குலம் கரு நிறத்து அரக்கியர்க்கும், மின் பிராட்டிக்கும், கொண்டல் இராமபிரானுக்கும் உவமைகளாக உள்ளன. இராமபிரான் கொண்டல் வண்ணன்; அயோத்யா. மந்திரப். 89; ஆரண்ய சூர்ப்பணகைப். 51; கரன்வதைப் 179.

(பி-ம்.) 1. விரிமலர்க்: குலங்கிழித் தோங்கு.
3. அருநிறத்: உருநிறத் தொருதனிக் கொண்ட லூழியான்: உருநிறத் துருப்பழி யாத வூழியான்; உருநிறந் தொருவழி யாய வூழியான்.
4. கருநிறத் தழகனுக் கமைந்த காந்தையை; தருநிறத் தழகமைந் திருந்த தானத்தை: இருநிறத் துற்றவெற் றியைந்த காந்தத்தை. (63)

393. கடக்கரு மரக்கியர் காவற் சுற்றுளாள்
மடக்கொடி சீதையா மாத ரேகொலாம்
கடற்றுணை நெடியதன் கண்ணி னீர்ப்பெருந்
தடத்திடை யிருந்ததோ ரன்னத் தன்மையாள்.

கடல் துணை நெடிய - கடல் அவ்வளவு நீண்ட, தன் கண்ணின் - தன் கண்களினின்றும் பெருகி வந்த, நீர் பெரும் தடத்திடை : நீராகிய பெரிய தடாகத்தின் நடுவில், இருந்தது ஓர் - இருந்ததாகிய ஒரு, அன்ன தன்மையாள் - அன்னத்தைப் போன்ற தன்மையையுடைய இவள், கடக்கரும் - கடந்து செல்வதற்கு அரிய, அரக்கியர் காவல் சுற்று உளாள் - அரக்கியர்களுடைய காவலைத் தன் சுற்றிலும் அமையப் பெற்றிருக்கிறாள்: (ஆதலின்), மடக்கொடி சீதையாம் மாதரே ஆம் - இளங் கொடி போன்ற சீதையாகிய பெண்மணியே யாவள். கொல், அசை.

அரக்கியர் காவல் சுற்றில் இருப்பதாலும், கண்ணீர் வெள்ளத்திடை இருந்து வருந்துவதாலும் இவள் சீதாப் பிராட்டியே என்று அநுமன் நிச்சயித்தான். ஏகாரம் தேற்றப் பொருளது. கண்ணீர் வெள்ளத்தைத் தடாகம் என்றதற்கு இணங்க அவ் வெள்ளத்திடை யிருந்த பிராட்டியை அன்னம் எனப் பொருத்தம் பெறக் கூறப் பெற்றமை நோக்கத் தக்கதாம். பிராட்டியின் கண்ணுக்குக் கடல் உவமை: 'கடலினும் பெரிய கண்கள்' (ஆரண்ய. மாரீசன் 70.) சீதையை அன்னம் என்பது; பால. மிதிலைக்காட்சிப். 82: கோலங்காண், 43; கடிமணப். 96; அயோத்யா. கிளைகண்டு. 87; ஆரண்ய. சடாயு காண். 42; கிட்கிந்தா. வாலிவதைப். 78. கண்ணி னீர்த்தடம்; 'கண்ணினீர்க் கடலிற் கண்டேன்' (1279.)

(பி-ம்.) 1. தொடற்கரு மரக்கியர்: குழுவிற் சுற்றிட: சூழ வைகுவாள்.
2. மடக்கொடி சானகி யிவள்மற் றேகொலாம்.
3. நெடியதின்.
4. அன்ன தன்மையால். (64)

394. எள்ளரு முருவுள விலக்க ணங்களும்
வள்ளறன் னுரையொடு மாறு கொண்டில
கள்ளவா ளரக்கனக் கமலக் கண்ணனார்
உள்ளுறை யுயிரினை யொளித்து வைத்தவா.

எள்ளரும் உரு உள-பழிப்பில்லாதவைகளாய் அங்கங்களின் உருவங்கள் அமைந்துள்ளன; இலக்கணங்களும் - (அவ்வங்கங்களின்) லக்ஷணங்களும், வள்ளல் தன் உரையொடு-வள்ளல் தன்மை மிக்க இராமபிரான் எனக்கு எடுத்துக் கூறிய சொற்களோடு, மாறு கொண்டில - வேறுபட்டன அல்ல; கள்ளவாள் அரக்கன் - வஞ்சனை யுடைய வாளேந்திய அரக்கனாகிய இராவணன், அ கமலக் கண்ணனுர் - செந்தாமரை இதழ் போலும் கண்களையுடைய அந்த இராமபிரானுடைய, உள் உறை உயிரினை - இதயத்துள் தங்கிய உயிர் போன்ற சீதா தேவியை, ஒளித்து வைத்த ஆ - இவ்வாறு ஒளித்து வைத்த அக்கிரமம் என்னே.

கள்ள வாள் அரக்கன் - இராவணன் சீதையைக் கள்ளன் போல் மறைந்து வந்து அபகரித்துச் சென்றமையைக் குறிப்பிட்டபடி. ஒளித்து வைத்த ஆ; ஆ: ஆறு என்பதின் கடைக்குறை; ஒப்பு, சிவமான வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ' (திருவா. திருத்தெள். 4.) இராமபிரான் கண்களுக்குத் தாமரை; பால கார்முகப். 42: 62; அயோத்யா. மந்திரப். 51: ஆரண்ய, சடாயு காண். 13. சீதை இராமபிரான் உயிர் போன்றவள்; 525, 566; ஆரண்ய. சடாயுவுயிர். 158. இராமபிரான் பிராட்டியின் இலக்கணங்கள் கூறியது; கிட்கிந்தா. நாடவிட்ட. 32-66.

(பி-ம்.) 1. உருவினல் லிலக்கணங்களும்: உருவினவ்.
3. அரக்கனற் கமலக்.
4. ஒளிக்க வொண்ணுமோ. (65)

395. மூவகை யுலகையும் முறையி னீக்கிய
பாவிய ருயிர்கொள்வா னிழைத்த பண்பிதால்
ஆவதே யரவணைத் துயிலி னீங்கிய
தேவனே யவனிவள் கமலச் செல்வியே.

'மூவகை உலகையும் - சுவர்க்கம், பூமி, பாதலம் என்று மூன்று வகைப்பட்ட உலகங்களையும், முறையின் நீக்கிய - நன்னெறியினின்றும் விலகச் செய்த, பாவியர் உயிர் கொள்வான் - பாவியர்களான அரக்கரின் உயிரை வாங்கும் பொருட்டு, இழைத்த பண்பு இது ஆவதே - செய்த செயலே இது ஆகும்; அவன் அரவணை துயிலின் நீங்கிய தேவனே-அந்த இராமபிரான் பாம்புப் படுக்கையில் அருந்துயில் புரிதலினின்று போந்த திருமாலே ஆவன்; இவள் கமலச் செல்வியே - இப்பிராட்டி செந்தாமரை நாயகியான அந்தத் திருமகளே ஆவள். ஆல்: அசை.

ஏகாரங்கள் தேற்றப் பொருளில் வந்தன. முறையி னீங்கிய - முறை கெடச் செய்த எனலும் ஆம். சிறையிருந்த சீதையைக் கண்ட அநுமன் சீதையின் அவதார உண்மையை அறிந்து கொண்டான் என்று கூறப்பெற்றது. இவ்வாறே இராமலக்ஷ்மணர்களைக் கண்டவுடன் அவன் அவர்களின் அவதார உண்மை அறிந்து கொண்டது; 'கிட்கிந்தா. மராமரப். 57. சில சுவடிகளில் இதன் பின் எள்ளரும் (394) என்று தொடங்கும் செய்யுள் காணப்படுகிறது.

(பி-ம்.) 2. பாவிதன் னுயிர்கொள்வான்: உயிர்கெட விழைத்த.
3. ஆவதே யையன்மென் றுயிலு நீங்கிய; அனந்தல் நீங்கிய. (66)

## அநுமன் மகிழ்தல்.

396. *வீடின தன்றறன் யானும் வீகலேன்*
*தேடினென் கண்டனென் றேவி யேயெனு*
*ஆடினன் பாடின னண்டு மீண்டும்பாய்ந்*
*தோடின னுலாவின னுவகைத் தேனுண்டான்.*

'அறன் வீடினது அன்று - தருமம் அழிந்தது அன்று; யானும் வீக லேன் - யானும் இனி இறக்க மாட்டேன்; தேடினென் கண்டனென் - இதுகாறும் தேடி வந்த யான் இப்பொழுது கண்டு கொண்டேன், தேவியே எனு - இவள் சீதாதேவியே ஆவள்' என்று, உவகை தேன் உண்டான் - ஆனந்தமாகிய மதுவைக் குடித்த அநுமன், ஆடினன் - (அந்தச் சந்தோஷ மிகுதியால்) கூத்தாடினன்: பாடினன் - (பலவாறு புகழ்ந்து) பாடினன்; ஆண்டும் ஈண்டும் பாய்ந்து ஓடினன் உலாவினன்- அங்கும் இங்கும் தாவிப் பாய்ந்து ஓடிச் சஞ்சரித்தான்.

அறம் வீடினது அன்று, பிராட்டியைக் காணமையால் அறமும் தன்னை விட்டு அழிந்து ஒழிந்தது என்று முன் அநுமன் நினைத்தானு தலின், (323). யானும் வீகலேன்; முன் தான் இறந்து விடுவதாகத் தீர் மானித்தானுதலின், (330). ஆண்டும் ஈண்டும் பாய்ந்தோடியது:வானரத் திற்கு மகிழ்ச்சியில் இயல்பாய் உண்டாகும் செயல். உவகைத் தேனுண்டான்; மதுவுண்டோர் செயல் ஆடலும் பாடலும் ஆண்டும் ஈண்டும் உலாவுதலும் ஆம், என்க. அறம் அழியாதது; 397, 399. சில சுவடிகளில் இதன்பின் மூவகை (395) என்ற பாடல் காணப் படுகிறது.

(பி-ம்.) 1. விடின தீவினை: விகிலேன்.
3. அங்கு மிங்கும். (67)

## பிராட்டியின் தூய்மை கண்டு அநுமன் வியந்து பேசுதல்.

## 397-405.

397. மாசுண்ட மணியனுள் வயங்கு வெங்கதிர்த்
தேசுண்ட திங்களு மென்னத் தேய்ந்துளாள்
காசுண்ட கூந்தலாள் கற்புங் காவலும்
ஏசுண்ட தில்லையா லறத்துக் கீறுண்டோ.

'மாசு உண்ட மணி அனுள் - அழுக்குப் படிந்த இரத்தினத்தைப் போன்றவளும், வயங்கு வெம் கதிர் தேசு உண்ட திங்களும் என்ன - விளங்கும் வெப்பம் மிக்க சூரிய கிரணங்களால் ஒளி உண்ணப்பட்டு ஒளிமங்கின சந்திரன் என்னும்படி, தேய்ந்து உளாள் - ஒளி குறைந்து இருந்தவளும், காசு உண்ட கூந்தலாள் - அழுக்கு மூடிய கூந்தலை யுடையவளுமான பிராட்டியின், கற்பும் காவலும் - கற்பு நிலையும், தன்னை வழுப்படாமல் தற்காத்துக் கொண்ட தன்மையும், ஏசு உண்டது இல்லை ஆல்-இழிவு படவில்லை ஆதலின்; அறத்துக்கு ஈறு உண்டோ-தருமத்திற்கு அழிவு உண்டாகுமோ? (ஆகாது என்றபடி.)

வெங்கதி ருண்ட திங்க ளென்னத் தேய்தல்; ஒப்பு: 'வெயிலிடைத் தந்த விளக்கென ஒளியிலா மெய்யாள்'; (333) கற்பு - ஆன்றோர்களும், கணவனும் கற்பித்த நன்னெறியில் நிற்றல். காவல்-தன்னைக் காத்துக் கொள்ளுதல்; 'காவலுனே பாவையர்க் கழகு' என்றாராகலின்; 'தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற் காத்துச் சோர்விலாள் பெண்' (குறள், 56) என்றமையும் நோக்குக. அறம் அழியாதது; 396, 399. அநுமன் மண்டோதரியைக் கண்டு மனங் கலங்கிக் கூறியவற்றோடு (295) இங்குக் கூறுவனவற்றை ஒப்பிடுக. சில சுவடிகளில் இதன் பின் 'மூவகையுலகை' (395) என்று தொடங்கும் செய்யுள் காணப்படுகிறது.

(பி-ம்.) 1. மாசுடை மணியன்னுள்: வயங்கு மேனியும்; வெங்கதிர்க், கேசுண்ட. 2. தேசுடைத் திங்களும்.
3. காசுடைக் கூந்தலாள்; கற்புங் காதலும்.
4. ஏசுடைத் தில்லையால். (68)

398. புனைகழ லிராகவன் பொற்பு யத்தையோ
வனிதையர் திலகத்தின் மனத்தின் மாண்பையோ
வனைகழ லரசரின் வண்மை மிக்கிடும்
சனகர்தங் குலத்தையோ யாது சாற்றுகேன்.

கழல் புனை இராகவன் பொன் புயத்தையோ - வீரக்கழல் அணிந்த இராமபிரானுடைய அழகிய புயங்களையோ, வனிதையர் திலகத்தின் - மகளிர்க் கெல்லாம் திலகம் போன்ற பிராட்டியின், மனத்தின் மாண் பையோ - மனத்திற் கொண்ட கற்பின் உறுதிப் பாட்டின் சிறப் பையோ, வனைகழல் அரசரின் - புனைந்த கழல்களையுடைய மற்ற அரசர்கள் பலரினும், வண்மை மிக்கிடும் - வள்ளற் றன்மையில் சிறந் தோங்கும், சனகர் தம் குலத்தையோ - சனகராசனது குலத்தின் சிறப் பையோ, யாது சாற்றுகேன் - எதைப்புகழும் திறமையுடையவ னுவேன்!

பிராட்டி தன் கற்பின் வலியால் இராவணனை அழிக்க வல்ல ஆற்றலுடையவளெனினும், அது தன் கணவனுன இராமபிரான் புய வலிக்குக் குறைவாகும் என்று அடங்கி இருந்தது நோக்கி இராமன் பொற்புயத்தைப் புகழ்வதோ என்ருன் அநுமன். அநுமனும் இராமன், புகழுக்குக் குறையுண்டாகும் என்று எண்ணி இராவணனை அழிக்காது ஒதுங்கி வந்தது; 318. பிராட்டி இராவணனையும் இலங்கை யையும் அழிக்கவல்ல கற்பின் ஆற்றல் அமைந்தவள்; 624. சனகர் குலம் வண்மையில் மிக்கது; 438. ஓகாரம், ஐயப்பொருளது. இச் செய்யுட் கருத்தைப் பின் திருவடி தொழுத படலம், 1270-72 ஆம் செய்யுட்களின் கருத்தோடு ஒப்பிடுக.

(பி-ம்.) 1. புனைபுக ழிராகவள்: இராகவன் புயத்தை யோபுகழ்.
2. மரபின் மாண்பையோ.
3. வனைக ழுலரக்கரின் வன்மை; வன்மை: கண்ணிய: வண்மை விக்கிடும்: சனகர் குலத்தையோ தருமங் காத்தபேர்.
4. யாரைச் சாற்றுகேன்; யாதைச் சாற்றுகேன்; அனகர்தங் குலத்தையோ யாரைப் போற்றுகேன். (69)

399. தேவரும் பிழைத்திலர் தெய்வ வேதியர்
ஏவரும் பிழைத்தில ரறமு மீறின்ருல்
யாவதிங் கினிச்செய லரிய தெம்பிராற்
காவவென் னடிமையும் பிழைப்பின் ருமரோ.

தேவரும் பிழைத்திலர் - தேவர்களும் தம் நிலையில் தவறிக் கேடுற்றா ரல்லர்; தெய்வ வேதியர் ஏவரும்-தெய்வத் தன்மையுடைய அந்தணர் எல்லாரும், பிழைத்திலர் - தம் நிலைமையில் தவறிக் கேடுற்றாரல்லர்; அறமும் ஈறு இன்று - தருமமும் அழிவடையாது; எம்பிராற்கு ஆவ என் அடிமையும் - எங்கள் தலைவரான இராமபிரானுக்குச் செய்ய வேண்டிய எனது அடிமைத் தொழிலும், பிழைப்பின்றும்-தவறில்லாதது ஆகும்; இனி இங்கு செயல் அரியது யாவது - இனிமேல் இவ்விடத்தில் என்னால் செய்ய முடியாதது எது? (எல்லாம் முடியும் என்றபடி.) ஆல். அரோ: அசைகள்.

எம்பிராற்கு யாவதிங்கினிச் செயல் அரியது என்றும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன. அறமு மீறின்றால்; 396. 397 ஆவ: அதிசயக் குறிப்பும் ஆம்.

(பி-ம்.) 1. பிழைக்கிலர்: தேவவேதியர்.
2. யாவரும் பிழைத்திலர்: அறமு மிற்றில.
3. ஆவ திங்கினிச்.
4. ஆவதென் னடிமையும் அமைப்பின் றாமரோ: ஆவதென் னடி மையு மிழப்பின் றாமரோ: பிழைத்தின் றாமன்றே. (70)

400. *கேழிலா ணிறையிறை கீண்ட தாமெனின்*
*ஆழியான் முனிவெனு மாழி மீக்கொள*
*ஊழியி னிறுதிவந் துறுமென் றுன்னினேன்*
*(வாழிய வுலகினி வரம்பி னாளெலாம்.)*

'கேழ் இலாள் - ஒப்பில்லாதவளான பிராட்டியின், நிறை இறை கீண்டது ஆம் எனின் - கற்பு சிறிது பிளவு பட்டது என்றால், ஆழியான் - ஆழியேந்திய திருமாலாகிய இராமபிரானுடைய, முனிவு எனும் ஆழி - கோபமாகிய கடல், மீ கொள - மேலே பொங்கி எழ, ஊழியின் இறுதி வந்து உறும் என்று உன்னினேன் - (உலகமெல்லாம் அழியும்) யுக முடிவுக்காலம் வந்து விடும் என்று எண்ணினேன்; (பிராட்டியின் நிறை தவறாமையால்), இனி, உலகு வரம்பில் நாள் எலாம் வாழிய - இனி உலகங்கள் யாவும் எல்லையில்லாக் காலம் வாழக் கடவனவாக.

நிறை-மனத்தைக் கற்பின்நிலையில் நிறுத்தல்; 'மகளிர் நிறைகாக்குங் காப்பே தலை' (குறள்: 57.) ஆழியான் - பாற் கடலைத் தனது இருப் பிடமாகக் கொண்ட திருமாலாகிய இராமபிரான் என்றேனும், ஆணை யாகிய சக்கரத்தையுடைய இராமபிரான் என்றேனும் பொருள் கொள்ளலாம். வாழிய: வியங்கோள் வினைமுற்று.

(பி-ம்.) 1. கேளலா ணிறை; கேழுளாள் நிறைமுறை கீண்ட.
2. ஆழியா னம்பெனு மனலி மீக்கொள; வாழியான் முனி வெனும் வடவை மீக்கொள: வடவை மீக்கொளின்.
3. உறுமென் றெண்ணிலேன். 4. வாழிய ருலகினி. (71)

401. வெங்கனன் முழுகியும் புலன்கள் வீக்கியும்
நுங்குவ வருந்துவ நீக்கி நோற்றவர்
எங்குளர் குலத்தில்வந் தில்லின் மாண்புடை
நங்கையர் மனத்தவ நவிலற் பாலதே.

வெம் கனல் முழுகியும்-கொடிய பஞ்சாக்னியின் இடையேயிருந்தும், (தவஞ் செய்தும்), புலன்கள் வீக்கியும் - ஐம்புலன்களைக் கட்டி அடக்கியும், நுங்குவ அருந்துவ - விழுங்கத்தக்கவைகளும், பருகத்தக்கவைகளுமான உணவுகளை, நீக்கி - தவிர்த்து, நோற்றவர் - தவம் செய்தவர், எங்குளர்-எங்கிருக்கிறார்கள்? குலத்தில் வந்து - நற்குலத்தில் தோன்றி, இல்லின் மாண்பு உடை-இல்லறத்திற்குரிய சிறப்பையுடைய, நங்கையர் மனதவம் - மகளிர் தம் மனத்திற் கொண்ட கற்பின் நெறியாகிய தவத்தின் சிறப்பு, நவிலல் பாலதே - நம்மால் சொல்லும் திறமுடையதோ? (இல்லை என்பதாம்.)

முனிவர் கடுந்தவ நெறியினும், நங்கையர் மேற்கொள்ளும் கற்பின் நெறியாகிய தவமே சிறப்புடைத்து என்பதாம். பிராட்டியின் தவச்சிறப்பு: 403; அயோத்யா. கங்கைப். 2. 'வெங்கனல்..................நோற்றவர்; ஒப்பு. காயிலை தின்றுங் கானி லுறைந்துங் கதிதேடிக், தீயிடை நின்றும் பூவலம் வந்துந் திரிவீர்காள்' (திருவரங்கக் கலம்பகம். 18).

(பி.-ம்.) 1. வெங்கனல் வீக்கியும் புனலில் மூழ்கியும்: மூழ்கியும் புனல் வெறுத்து மேல்: புனலுள் வீக்கியும்.
2. நுங்குவ தருந்துவ; நுங்குவ முதலிய: நீங்க.
3. எங்குள குலனில் வந்; இங்கித குலத்தின் வந்; எங்குள துலகின் மற் றில்லை மாண்புடை.
4. நங்கைய ரிவளன்றி நவிலற்: மனத்தறம்: மனத்தவம் நன்று நன்றரோ. (72)

402. பேணநோற் றதுமனைப் பிறவி பெண்மைபோல்
நாணநோற் றுயர்ந்தது நங்கை தோன்றலால்
மாணநோற் றீண்டிவ ளிருந்த வாறெலாம்
காணநோற் றிலனவன் கமலக் கண்களால்.

'நங்கை தோன்றலால் - இப்பிராட்டி உலகில் தோன்றியதால், மனை பிறவி - உயர்குலப் பிறப்பு என்பது, பேண - தன்னை யாவரும் விரும்பிப் போற்ற, நோற்றது - தவஞ்செய்தது; பெண்மை போல் - பெண்தன்மை உயர்வடைந்ததே போல, நாணம் - மகளிர்க்குச் சிறந்த குணமான நாணம் என்பதும், நோற்று உயர்ந்தது - தவம் செய்து உயர் நிலையை யடைந்தது; ஈண்டு இவள் மாண நோற்று இருந்த ஆறு எலாம் - இப்பிராட்டி சிறப்பாகத் தன் கற்பினைக் காத்தலாகிய தவத்தைச் செய்து இங்கு இருந்த தன்மையை எல்லாம், அவன் - அந்த இராமபிரான், கமலக் கண்களால் காண நோற்றிலன் - தாமரை மலர் போன்ற அழகிய தன் கண்களாற் காணத்தவஞ் செய்தானல்லன்.

பிராட்டியால் மனைப்பிறவி பேண நோற்றது; 'தன்குலந்தன்ன தாக்கி' (1272) என்பதாலும், 'இறப்பிறப்பென்ப தொன்றும்............ களி நடம் புரியக் கண்டேன்' (1273) என்பதாலும், விளங்குவன காண்க. 'நங்கை தோன்றலால் மனைப்பிறவி, பெண்மை, நாணம் ஆகிய மூன்றும் நோற்று உயர்ந்தன; ஆயினும் அவள் தவத்தைக் கண்களாற் காண அவன் நோற்றிலன்' என்பன அநுமன் கருதியவை. இவள், அவன் என்பனவற்றில் உள்ள சுட்டுகள் உலகறி சுட்டுகள்.

(பீ-ம்.) 1. பேணநோற்றதுமனம் பேதை பெண்மைபோல்.
2. நாணைநோற்றுயர்ந்தனள் நங்கை யின்னுமே.
3. இருந்த மாண்பெலாம்.
4. காணநோற்றிலன்கொலாங் கமலக். (73)

408. *முனிவர்க ளருந்தவர் முறையின் நின்றுளார்*
*இனியவ டானலா தியாரு மில்லையால்*
*தனிமையும் பெண்மையுந் தவமு மின்னதே*
*வனிதையர்க் காகநல் லறத்தின் மாண்பெலாம்.*

அவள் தான் அலாது யாரும் இல்லையால் - இவள் அந்தப் பிராட்டியே யல்லாது வேறு யாரும் இல்லை ஆதலால், முனிவர்கள் அருந்தவர் - முனிவர்களாகிய அரிய தவசியர், இனி முறையின் நின்றுளார் - இனி, தமக்குரிய தவம் ஒழுக்கம் முதலியவற்றில் முறை தவறாமல் நின்று வாழ்வார்; தனிமையும் - தனித்திருப்பதும், பெண்மையும் - பெண் தன்மையும், தவமும் - கற்பைக் காத்தலாகிய தவமும், இன்னதே - இதுவேயாகும்; நல்ல அறத்தின் மாண்பு எலாம் - அரிய தருமத்தின் சிறப்பெல்லாம், வனிதையர்க்கு ஆக - மகளிர்க்குச்சிறப்பை அளிக்கும் வகையில் பொருந்துவன ஆகுக.

பிராட்டியின் தவச்சிறப்பால் இராவணன் முதலிய கொடிய அரக்கர்கள் அழிவர்; ஆதலால் முனிவர்கள், அருந்தவர் இனி முறையின் நின்றுளார். என்று உறுதி கூறினன் அநுமன். அவள் என்றது இராமபிரான் தேவியாகிய சீதாதேவியே என்னுங் குறிப்பைச் சுட்டுவது. முறையின் நின்றுளார் என்பதற்கு, அவர்கள் தத்தம் நெறியில் நின்ற தன் பயனே இதுவாகும் என்றும், வனிதையர்க்காக அறத்தின் மாண்பெலாம் என்பதற்கு, இவள் மேற்கொண்ட அறச் சிறப்பெலாம் பிற மகளிரின் சிறப்பையே ஒட்டி ஆகும் என்றும் வேறு பொருளுங் காணலாம்.

(பி-ம்.) 1. முனிவர ரக்கியர் முறையி னிங்கினுர்: முனியுறு மரக்கர்தங் குலமுடிப்பதற் (கு); முனிவிலா வருந்தவர் முறையி னின்றுளார்.
2. இனியவ டானல்லா லாரு மின்மையால்.
3. தளிமையும் பெருமையும்.
4. வனிதைகண் ணுகுக நல். (74)

404. தருமமே காத்ததோ சனக னல்வினைக்
கருமமே காத்ததோ கற்பின் காவலோ
அருமையே யருமையே யாரி தாற்றுவார்
ஒருமையே யெம்மனோர்க் குரைக்கற் பாலதோ.

தருமமே காத்ததோ - தருமந்தான் (இவளது கற்பு நெறியைக்) காத்ததோ?, சனகன் நல்வினை கருமமே காத்ததோ - சனக மன்னனுடைய புண்ணிய கருமமே இவளை இவ்வாறு காப்பாற்றியதோ?, கற்பின் காவலோ - இவள் மேற்கொண்ட கற்பின் நெறியே இவளைக் காத்து வருகின்றதோ?, அருமையே அருமையே-இவளுடைய இத்தவ நெறி மிகவும் அருமையானதே!, இது ஆற்றுவார் யார் - இத்தகைய கற்பாகிய தவத்தைச் செய்பவர் வேறு யாருளர்? (ஒருவரும் இல்லை); ஒருமையே-(இதுபிராட்டிக்கு அமைந்த) தனிப்பட்ட சிறப்பே ஆகும்; எம்மனோர்க்கு உரைக்கல் பாலதோ-என் போன்றவர்க்கு இதன் சிறப்பு எடுத்துரைக்க முடியுமோ? (அன்று.)

தருமமும், சனகன் செய்து வரும் புண்ணிய வினைகளும், கற்பு என்ற காவலும் பிராட்டியை இவ்வாறு இவ்வுயரிய தவநெறியில் வைத்துக் காத்து வருகின்றன என்பது அநுமன் கொண்ட துணிவு. கற்பின் காவல்; குறள். 57. அருமையே அருமையே என்ற அடுக்கு வியப்பின் வந்தது. ஒருமையே - ஒருமிக்க என்றும் பொருள்கொள்ளலாம்: இச்செய்யுளுடன் 398 ஆம் செய்யுளில் அமைந்த கருத்தையும் ஒப்பிடுக. உரைக்கற் பாலதோ - 401 ஆம் செய்யுளின் உரையில் காண்க.

(பி-ம்.) 1. சழக்கன் றன்வினை: சழக்கன் றீவினை.
3. அருமைமற் றூரி தாற்றுவார்.
4. ஒருமையோ டெம் மனோர்க் (கு) (75)

405. செல்வமோ வதுவவர் தீமை யோவிது
அல்லுநன் பகலுநின் றமர ராட்செய்வார்
ஒல்லுமோ வொருவர்க்கீ துறுகண் யாதினி
வெல்லுமோ தீவினை யறத்தை மெய்ம்மையால்.

செல்வமோ அது - (அரக்கர்களுடைய) செல்வமோ (யான் இலங்கை நகரில் முன் கண்ட) அத்தகைய சிறப்புடையது; அவர் தீமையோ இது - அவ்வரக்கர் செய்யும் கொடிய செயலோ (இப்படிப் பிராட்டியை வருத்துவதான) கொடிய நிலையாய் இருக்கிறது; அமரர் அல்லும் நல் பகலும் நின்று ஆள் செய்வார் - தேவர்கள் அவ்வரக்கர்களுக்கு இரவிலும் நற்பகலிலும் ஓயாமல் நின்று அவர்களிட்ட பணிகளைச் செய்கிறவர்களாய் உள்ளார்; ஈது ஒல்லுமோ ஒருவர்க்கு - இத்தகைய நிலையில் ஒருவர் (தம் கற்பு நெறியைக் காத்துக் கொண்டு இருப்பது என்பது பிராட்டியை யன்றிப் பிறர்க்குச்) செய்யக் கூடியதாகுமோ? (ஆகாது); உறுகண் இனி யாது - இனி இதனிலும் வேறு நிகழக்கூடிய துன்பம் யாதே ஆகும்? (ஆதலின்) மெய்ம்மையால் - உண்மையில், தீவினை அறத்தை வெல்லுமோ - பாவம் தருமத்தை வென்றுவிடுமோ? (வெல்லாது என்றபடி).

அரக்கர் செல்வத்திற் சிறந்துள்ளார்; கொடுந்தொழிலும் மிக்கவர்: அவர்களுக்குத் தேவரும் அல்லும் பகலும் இட்ட பணி புரியும் ஏவலாளர்களாய் உள்ளார்; இந்நிலையில் அவ்வரக்கர் செல்வத்தை விரும்பியும், அவர்களுடைய கொடுமைக்கு அஞ்சியும், பிறர் தமக்கு உதவிபுரிவார் இன்மை அறிந்தும் பிற மகளிர் அரக்கருக்கு இணங்கியே விடுவர்; ஆதலின் பிராட்டியின் கற்பின் தவநிலையின் சிறப்பு பிறமகளிரால் செய்யக் கூடிய தரத்தினதன்று என்றும், தருமத்தைப் பாவம் வெல்லாது என்றும் அநுமன் அறிந்து கொண்டான். தருமத்தைப் பாவம் வெல்லாது; 'அறம் வெல்லும் பாவந் தோற்கும்' (190) என்று இலங்கைமாதேவி அநுமனுக்கு முன் உறுதி கூறிப் போந்ததையும் நோக்குக. மேலும் இந்த இராமசரிதமே அறம் வெல்லும் பாவந்தோற்கும் என்ற தத்துவத்தை உட்கிடையாய்க் கொண்டு அமைந்துள்ளது என்பதை இது போலப் பல இடங்களில் விளங்க வைத்துள்ளமை நோக்கற் பாலதாம். இனி ஒல்லுமோ ஒருவர்க்கு ஈது, இவ்வாறு நன்மை தீமை இரண்டிலும் தன் சிறப்பே மேலாகக் கொண்ட இவ்விராவணனைப் போலப் பிறர் அடைவதற்கு வலிவுடையவர் ஆவரோ? இதைவிட உலகுக்குத்

துன்பம் வேறுயாது உளது? இனி, தருமத்தைத் தீவினை (பாவம்) தன் வலிமையினால் வென்று விடுமோ என்று அநுமன் கருதி வருந்தினான் எனப் பொருள் கோடலும் அமையும்.

(பி-ம்.) 1. செல்வமோ வி.'. திவர் : செல்வமோ தேவர்செய் தீமைதான் கொலோ.
2. அல்லினும் பகலினு மமரர்: பகலினு மரக்கற்காட் செய்வார்.
3. ஒல்லுமே யொருவர்க்கிவ் வுறுகண் யாதினி.
4. அறத்தை மென்மையால்; அறத்தை வீட்டியே. (76)

## அசோக வனத்துள் இராவணன் தோன்றுதல் 406-25

406, *என்றிவை யினையன வெண்ணி வண்ணவான்*
*பொன்றிணி முதுமரப் பொதும்பர்ப் புக்கவண்*
*நின்றன னவ்வழி நிகழ்ந்ததி யாதெனில்*
*துன்றுபூஞ் சோலைவா யரக்கன் றோன்றினான்.*

என்று இவை இனையன எண்ணி - இவ்வாறு இவற்றையும் இவை போன்ற பிறவற்றையும் நினைத்து, வண்ண வான் பொன் திணி முது மரப் பொதும்பர் புக்கு - அழகியதும் உயர்ந்ததுமான பொன்னால் அமைந்த முற்றிய அம்மரத்தில் ஒரு பொந்தில் புகுந்து, அவண் நின்றனன் - அங்கு (அநுமன் ஒளிந்து) நின்றான்; அ வழி - அவ்விடத்தில், (அப்பொழுது), நிகழ்ந்தது யாது எனில் - நடந்தது என்னவென்றால், துன்று பூம் சோலை வாய் - பூக்கள் அடர்ந்த அவ்வசோக வனத்தினிடத்து, அரக்கன் தோன்றினான் - இராவணனான இராக்கதன் வந்தான்.

இராவணன் வருகையையும் அதன்பின் நடந்த செயல்களையும் அசோகமரப் பொந்திலிருந்தே அநுமன் நோக்கினான் என்று அபிஷேக நாடகமும், இலைச் செறிவுகளுள் மறைந்து நின்றான்; அப்போது விடியற்கால வேளை என்று வான்மீகமும் கூறுகின்றன. பொன்றிணி முதுமரம்; 114. பொதும்பு - மரப்பொந்து; (பிங்களம்).

அச்சுப்புத்தகங்கள் பலவற்றில் இதனுடன் காட்சிப்படலம் முடியும்; அவற்றில் இச்செய்யுளின் பின் உள்ளவை நிந்தனைப்படலமாகும்; பல சுவடிகளில் இப்படலம் வந்தனைப்படலம் என்று பெயரிடப்பெற்று மேலும் 37 செய்யுட்களுக்கு அப்பெயரே நீடிக்கும். இப்பெயர்கள் இங்குக் கொள்ளப்படாமை இந்நூல் முகவுரையால் விளங்கும்.

(பி-ம்.) 1. எண்ணி மாருதி.
2. பொன்றிணி நெடுமரப் பொதும்பர்ப் புக்கவன்.
3. நின்றவ னவ்வழி: நிகழ்ந்த தென்னெனில்.
4. துன்றிருஞ் சோலை. (77)

வேறு

407. *சிகரவண் குடுமி நெடுவரை யெவையு*
*மொருவழித் திரண்டன சிவண*
*மகரிகை வயிர குண்டல மலம்பு*
*திண்டிறல் தோள்புடை வயங்கச்*
*சகரநீர் வேலை தழுவிய கதிரி*
*றலைதொறுந் தலைதொறுந் தயங்கும்*
*வகையபன் மகுட மிளவெயி லெறிப்பக்*
*கங்குலும் பகல்பட வந்தான்.*

சிகர வண் குடுமி - சிகரங்களாகிய வளமுள்ள முடிகளையுடைய, நெடுவரை எவையும் - நீண்ட மலைகள் எல்லாம், ஒரு வழி திரண்டன சிவண - ஓரிடத்தில் சேர்ந்து வந்தன போல, மகரிகை - மகரவடிவாய் உள்ள தோள்வளையல்களும், வயிர குண்டலம் - வயிரம் பதித்த மகர குண்டலங்களும், அலம்பு - அசைந்தாடப் பெற்ற, திண் திரள் தோள் புடை வயங்க - மிக்க வலிமையுடைய தோள் (இருபதும்,) இரு பக்கங் களிலும் விளங்கவும், சகர நீர் வேலை - சகரர்களால் தோண்டப் பெற்ற நீரை மிகுதியாகவுடைய கடலை, தழுவிய கதிரின் - தழுவியெழும் சூரிய னைப் போல, தலைதொறும் தலைதொறும் தயங்கும் - ஒவ்வொரு தலையி லும் விளங்கும், வகைய - தன்மையையுடைய, பல் மகுடம்-(பத்தான) பல மகுடங்கள், இள வெயில் எறிப்ப-இளவெயிலைப்போல ஒளி வீசவும், கங்குலும் பகல் பட - அந்த இராப்பொழுதும் பகல்போல விளங்கவும், வந்தான் - (அந்தப் பிராட்டியிருந்த அச்சோலையிடத்திற்கு இராவணன்) வந்தான்.

வேலையின் நீர் இராவணன் கரிய மேனிக்கும், அதில் தோன்றும் கதிரின் ஒளி அவன் அணிந்திருந்த பத்துக் கிரீடங்களின் ஒளிக்கும் உவமை. பத்துச் சூரியர் கடலில் தோன்றுமேல் அதற்கு இராவணன் கிரீடங்கள் உவமை; ஆதலால் இஃது இல் பொருளுவமை ஆகும். கங்குலும் பகல்படுதல், இராவணன் அணிந்துள்ள மகரிகை, குண்டலம், கிரீடங்கள் முதலியவற்றால் உண்டான ஒளி மிகுதியால் என்க. சிவண, வயங்க, எறிப்ப, பகல்பட வந்தான் என இயைத்து முடிவு செய்க. மகரிகை - மகர வடிவு பெற்ற ஓர் ஆரமும் ஆம். சகரவேலை - கீழைக் கடல்.

(பி-ம்.) 1. சிகரவெண் குடுமி: திரண்டன்ன சிவண.
2. குண்டல மிலங்குந் திண்.
4. வகையில்பன்; பகையில்பன்; வகையூல் பொன்: இளவெயில் பரப்ப.

408. உருப்பசி யுடைவா ளேந்தின டொடர
மேனகை வெள்ளடை யுதவச்
செருப்பினைத் தாங்கித் திலோத்தமை செல்ல
வரம்பையர் குழாம்புடை சுற்றக்
கருப்புரச் சாந்துங் கலவையு மலருங்
கலந்துமிழ் பரிமள கந்தம்
மருப்புடைப் பொருப்பேர் மாதிரக் களிற்றின்
வரிக்கைவாய் மூக்கிடை மடுப்ப

உருப்பசி உடைவாள் ஏந்தினள் தொடர - ஊர்வசி என்னும் தேவமாது உடைவாளைக் கையில் தாங்கிக் கொண்டு தன்னைப் பின் தொடர்ந்து வரவும், மேனகை வெள்ளடை உதவ - மேனகை என்பாள் பக்கத்தில் இருந்து வெற்றிலை (மடித்துக்) கொடுத்துக் கொண்டு வரவும், செருப்பினை தாங்கி திலோத்தமை செல்ல - திலோத்தமை என்னும் தேவமாது இராவணனுடைய செருப்புக்களைக் கையில் ஏந்தினளாய் உடன் போகவும், அரம்பையர் குழாம் புடை சுற்ற - பிற தேவ மாதர்களின் கூட்டம் நாற்புறங்களிலும் சுற்றி விளங்கவும், கருப்புர சாந்தும் கலவையும் - தான் அணிந்துள்ள பச்சைக் கற்பூரம் சேர்ந்த சந்தனக் குழம்பும் கலவையும், மலரும் - மலர்களும், கலந்து - ஒன்று சேர்ந்து, உமிழ் - வெளியே வீசும், பரிமள கந்தம் - சிறந்த நறுமணம், மருப்பு உடை பொருப்பு ஏர் - தந்தங்களை யுடைய மலைகளை ஒக்கும், மாதிர களிற்றின் - திக்கு யானைகளின், வரி கை வாய் மூக்கிடை மடுப்ப - கோடுகள் அமைந்த துதிக்கைகளிலுள்ள நாசித்துவாரங்களில் நிறைந்து தங்க.

உருப்பசி, ஊர்வசி என்ற வடசொல்லின் திரிபு. வெள்ளடை - வெற்றிலை. இது உபலக்ஷணத்தால் வெற்றிலையோடு கூடிய பிற தாம்பூலப் பொருள்களையும் குறிக்கும். பரிமளகந்தம் - ஒருபொருட் பன்மொழி. செருப்பு - அடிநிலை. முதலிரண்டடிகளில் தெய்வ மகளிர் மூவர் பெயர்கள் கூறப்பட்டன ஏர் - ஒப்பு; 'முத்தேர் முறுவலார்' (இனியது நாற்பது 2.) இராவணன் அணிந்து சென்ற சந்தனம் மலர் முதலியவற்றின் நறுமணமும் திசையானைகளின் மூக்கிலும் போய் மடுத்த என்றதால் அவற்றின் நறுமணத்தின் சிறப்பும் மிகுதியும் கூறப் பெற்றது. மூக்கு: துதிக்கையும் ஆம்: 'நெடுமூக்கிற் கரியினுரி மூடிக்கொண்டார்' (தேவா. திருநாவுக். பொது); தக்க. 273; கந்தம் 'மாதிரக்களிற்றின் மூக்கிடை மடுத்தல்' (குமரகுரு. பிரபந். 61: 1).

(பி-ம்.) 1. உடைவா ளெடுத்தனள்; எடுத்தயல் தொடர.
2. திலோத்தமை யேக:
3. பரிமளங் கமழ்ந்து.
4. மருப்பிடைப் பொருப்பின்.

409. நானநெய் விளக்க நாலிரு கோடி
நங்கைய ரங்கையா லெடுப்ப
மேனிமிர்ந் துயர்ந்த முடிகளின் மணியின்
விரிகதி ரிருளெலாம் விழுங்க
கான்முத லொடர்ந்த நூபுரஞ் சிலம்பக்
கிண்கிணி கலையொடுங் கலினப்
பானிறத் தன்னக் குழாம்படர்ந் தென்னப்
பற்பல மழலையும் பகர

நான நெய் விளக்கம்-கஸ்தூரி முதலிய வாசனைப் பொருள்கள் கலந்த நெய்விட்டு (ஏற்றப்பெற்ற) விளக்குகள், நால் இரு கோடி - எட்டுக் கோடி எண்ணுள்ளனவற்றை, நங்கையர் அம் கையால் எடுப்ப - மகளிர் தம் அழகிய கைகளால் எடுத்துவர, மேல் நிமிர்ந்து உயர்ந்த - மேலே எழுந்து விளங்கிய, முடிகளின் மணியின் - அவ்விராவணன் கிரீடங்களில் உள்ள இரத்னங்களிலிருந்து, விரி கதிர் - விரிந்த சுடரின் ஒளி, இருள் எலாம் விழுங்க - அவ்விரவின் இருட்டை யெல்லாம் உண்டு அழிக்க, கால் முதல் தொடர்ந்து - (உடன் செல்லும் மகளிர் தம்) பாதங்களைத் தொடர்ந்து (அணியப் பெற்ற), நூபுரம் சிலம்ப - சிலம்புகள் ஒலிக்க, கிண்கிணி கலையொடும் கலின - சதங்கைகள் மேகலையுடன் சேர்ந்து ஒலி செய்ய, பால் நிறத்து அன்னக் குழாம் படர்ந்தென்ன - பால் போன்ற வெண்ணிறத்தையுடைய அன்னங்களின் கூட்டம் நடந்து வருவன போல, பற்பல மழலையும் பகர - பலவகைப் பட்ட மழலைச் சொற்கள் ஒலிக்கவும்,

கலை: மேகலை என்பதின் முதற்குறை. மங்கையர்க்கு அன்னக்கூட்டமும், அம்மங்கையரின் மழலைச் சொற்களுக்கு அன்னங்களின் ஒலியும் உவமைகள். 'மழலையும் பகர-நல்ல கீதம் பாட' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. நானநெய் விளக்கு; மங்கைய ரங்கையில்.
2. மேனிவந் தெழுந்த மணியுடை யணியின்: மேனிலத் தெழுந்த: மேனியி லணிந்த மணிவகை யணியி னிருளெலாம் விழுங்க.
3. கலையொடுங் கலிப்பப்.
4. படர்ந் தென்னப் பாவையர் புற்பலர் படர; பற்பல மங்கையர் படர. (80)

410. அந்தரம் புகுந்த துண்டெனு முனிவுற்
றருந்துயி னீங்கின னன்றே
சந்திர வதனத் தருந்ததி யிருந்த
தண்ணறுஞ் சோலையிற் றுன்னே
மந்திரம் யாதோ யாரொடும் போமோ
வென்றுதம் மனமறு குதலால்
இந்திரன் முதலோ ரிமைப்பிலா நாட்டத்
தெனைவரு முயிர்ப்பவிந் திருப்ப

'அந்தரம் புகுந்தது உண்டு என - ஏதோ தீங்கு வந்தது உண்டு என்று, முனிவுற்று அருந்துயில் நீங்கினன் அன்றே - (இராவணன்) கோபங்கொண்டு தன் அரிய தூக்கத்தை விட்டு நீங்கி இங்கு வந்தான் அல்லவா? சந்திரவதனத்து அருந்ததி இருந்த - பூர்ண சந்திரன் போல விளங்கும் அழகிய முகத்தையுடைய சீதாப்பிராட்டி சிறையிருந்த, தண் நறும் சோலையில் தானோ - குளிர்ந்த மணமிக்க அசோக வனம் என்னும் சோலையின் இடத்தில் தானோ? மந்திரம் யாதோ - இரகசியம் என்னவோ? யாரொடும் போமோ - இவன் கொண்ட சீற்றம் வேறு யாரோடு சென்று தணியுமோ?' என்று தம் மனம் மறுகுதலால் - எனப் பலவாறு எண்ணித் தம் மனம் சஞ்சலப்பட்டு வருந்துதலால், இந்திரன் முதலோர் இமைப்பிலா நாட்டத்து எனைவரும் - இந்திரன் முதலாக உள்ள இமையா நாட்ட முடைய எல்லாத் தேவர்களும், உயிர்ப்பு அவிந்து இருப்ப - (அச்சத்தால்) மூச்சு அடங்கி இருக்க,

அந்தரம் - தீமை; அயோத்யா. கைகேசி சூழ்வினைப். 40. மந்திரம் - இரகசியமான ஆலோசனை. இச்செய்யுள் தேவர் அயிர்த்தமையைக் கூறுவது.

(பி-ம்.) 1. அந்தரம் புகுவ துண்டெனா; அந்தரம் புகுதற் குன்லினன் முனிவுற் றருந்துயி னீத்ததோ வதன்றேற்.
2. சோலையின் றனையோ.
4. இமைப்பில நாட்டத்; நாட்ட முகிழ்த்தன ருயிர்ப்ப: உயிர்ப் பமைந் திருப்ப. (81)

411. நீனிறக் குன்றி னெடிதுடன் றாழ்ந்த
நீத்தவெள் ளருவியி னிமிர்ந்த
பானிறப் பட்டு மாலையுத் தரியம்
பசப்புற பசும்பொனா ரத்தின்
மானிற மணிக ளிடையுறப் படர்ந்து
வருகதி ரிளவெயில் பொருவச்
சூனிறக் கொண்மூச் சுழித்திடை கிழிக்கு
மின்னென மார்பினூ றுளங்க

நீல் நிற குன்றின் - நீல நிறத்தையுடைய குன்றில், நெடிது உடன் தாழ்ந்த - நீண்டு நெருங்கித் தாழ்ந்து விழுதலையுடைய, நீத்த வெள் அருவியின் - நீத்தமாகிய வெள்ளிய அருவியைப் போல, நிமிர்ந்த - நீண்டு விளங்கிய, பால் நிற பட்டு மாலை உத்தரியம்-பால் போன்ற வெண்ணிறப் பட்டாகிய மாலை போல் விளங்கும் மேலாடை, பசப்பு உற - நிறவேறு பாடுற்று விளங்க, பசும் பொன் ஆரத்தின் - பசிய பொன்னால் செய்யப்

பட்ட ஆரத்தில் விளங்கும், மால் நிற மணிகள் - சிறந்த ஒளியோடு கூடிய இரத்தினங்கள், இடையுற படர்ந்து - இடையிடையே பரந்து விளங்கி, வரு கதிர் இளவெயில் பொருவ - உதிக்கின்ற சூரியனுடைய இளவெயிலுக்கு ஒப்பாக, சூல் நிற கொண்மூ சுழித்து - கருக் கொண்ட நீல நிற மேகத்தைச் சுழித்துக் கொண்டு, இடை கிழிக்கும் - அதனிடையே கிழித்து விளங்கும், மின் என - மின்னலைப் போல, மார்பின் நூல் துளங்க - மார்பில் அணிந்துள்ள பூணூல் அசைய,

இராவணன் உடல் நீலமலைக்கும், அவன் மார்பிலிருந்து தொங்கும் வெண்பட்டு உத்தரியம் மலையின் அருவிக்கும், அவன் மார்பில் அணிந்த மணிகள் இடையிடையே வீசும் ஒளி, இளவெயிலுக்கும், மார்பில் அசைந்து விளங்கும் பூணூல் கரிய மேகத்தைக் கிழித்துக் கொண்டு விளங்கும் மின்னலுக்கும் உவமைகள். நூலுக்கு மின்னல்; ''விண்ணிழந்த மின் போலும் நூன் மார்பா'' (நள. 1: 10.)

(பி-ம்.) 1. நெடிதுறத் தாழ்ந்த; நெடிதினிற் சூழ்ந்த நீர்த்தவெள் ளருவி.
2. பானிறப் பட்டின் மாலையுத் தரியம்.
3. மானிறப் புடவி யுடையுறப் பரந்த வளர்கதிர் இடையுறப் பிறந்து; இடையுறப் படர்ந்த வான்கதிர்.
4. கொண்மூச் சுழியிடை கிழிக்கு மின்னென மார்புநூல் தோன்ற. (82)

412. தோடொறுந் தொடர்ந்த மகரவாய் வயிரக்
கிம்புரி வலயமாச் சுடர்கள்
நாடொறுஞ் சுடருங் கலிகெழு விசும்பி
னாளொடு கோளினை நக்கத்
தாடொறுந் தொடர்ந்து தழங்குபொற் கழலின்
தகையொளி நெடுநிலந் தடவக்
(கேடொறுந் தொடர்ந்த முறுவல்வெண் ணிலவின்
முகமல ரிரவினுங் கிளர)

தோள் தொறும் தொடர்ந்த - ஒவ்வொரு தோளிலும் பூணப் பெற்றுள்ள, மகரவாய் வயிர கிம்புரி வலய மா சுடர்கள் - மகரமீனின் வாய்வடிவமாய் அமைந்தனவும், வயிர மணிகள் பதித்துச் செய்யப் பட்டனவுமான தோள்வளைகளின் பெருஞ்சுடர்கள், நாள்தொறும் சுடரும் - ஒவ்வொரு நாளும் ஒளி வீசுகின்ற, கலி கெழு விசும்பின் - மிகத் தழைந்துள்ள ஆகாயத்தில் உள்ள, நாளொடு கோளினை நக்க - நட்சத்திரங்களோடு கிரகங்களையும் தம் நாவினால் நக்குவன போல விளங்க, தாள் தொறும் தொடர்ந்து - இரண்டு கால்களிலும் பூட்டப் பெற்று, தழங்கு பொற்கழலின் - ஒலிக்கின்ற பொன்னாற் செய்யப்பட்ட வீரக் கழல்களின், தகை ஒளி - சிறந்த ஒளியானது, நெடு நிலம் தடவ-நீண்ட நிலத்தைத் தடவி வர, கேள் தொறும் தொடர்ந்த -

தன்னுடன் வரும் சுற்றத்தார் ஒவ்வொருவரிடத்தும் தொடர்ந்து செல்லு கின்ற, முறுவல் வெள் நிலவின் - புன்சிரிப்பாகிய வெள்ளிய நிலவினால், முக மலர் - அவன் முகங்களாகிய தாமரை மலர்கள், இரவினும் கிளர - அந்த இரவுப் பொழுதினும் விளங்கி ஒளி வீச,

நக்கல் - தடவி அழித்தலும் ஆம். முகமலர் - முகமாகிய தாமரை மலர்கள்; முகங்கள் பத்து ஆதலின் பன்மையாகக் கொள்ளப்பட்டது. மலர் என்று அடையன்றித் தனித்து வந்ததால் அது தாமரை மலரையே குறிக்கும்; 'பூவெனப்படுவது பொறிவாழ்பூவே' என்றமையால்; தாமரை இரவில் மலராது; மேலும் அது நிலவைக்கண்டு கூம்புமேயன்றி மலராது எனினும், இங்கு மலர்ந்தது என்றமையால், இது வேற்றுமையணியில் வந்த உருவகமாகும். கலி கெழு விசும்பு - ஒலியைப் பரப்புவதிற் சிறந்த (இடமான) ஆகாயம் என்னலும் அமையும். கழலின் தகை ஒளி நெடு நிலம் தடவ-கழலின் சிறந்த ஒளி நெடிய தூரம் பூமியிற் படிவதால் இருள் அகன்று சென்றது என்க. 'கிம்புரி வலயம் - பூண்கட்டிய வாகு வலயம்; தோள்வளை' என்பது பழைய உரை.

(*பி-ம்.*) 1. மகரிகை வயிரக்; கிம்புரி வயிரமாச் சுடர்கள்.
2. நாடொறுந் தொடரும். 3. தயங்கு பொற்.
4. காடொறுந் தொடர்ந்த: கோடொறுந் தொடர்ந்த: முகமலர்ந் திரவிருள் குலவ: முகமலர் கதிரிருள் கிழிய: முகமலர் நிலவினுங் கிளர. (83)

413. *தன்னிறத் தோடு மாறுதந் திமைக்கு*
*நீவியின் றழைபட வுடுத்த*
*பொன்னிறத் தூசு கருவரை மருங்கி*
*றழுவிய விளவெயில் பொருவ*
*மின்னிறக் கதிரிற் சுற்றிய பசும்பொன்*
*விரற்றலை வீறொளிக் காசின்*
*கன்னிறக் கற்றை நெடுநிழல் பூத்த*
*கற்பக முழுவனங் கவின*

தன் நிறத்தோடு மாறு தந்து இமைக்கும் - தனது மேனியின் கரிய நிறத்தோடு வேறுபட்டு ஒளி வீசும், நீவியின் தழைபட உடுத்த - கொய்சகத்தின் தழைப்பு உண்டாகுமாறு உடுத்த, பொன் நிற தூசு - பொன்னிறமான பட்டாடை, கருவரை மருங்கில் தழுவிய இளவெயில் பொருவ - கரிய மலையினிடையே பொருந்திய இளவெயிலை ஒத்திருக்க, மின் நிற கதிரின் சுற்றிய பசும்பொன் - மின்னல் போன்ற நிறமுடைய ஒளியினால் சூழ்ந்துள்ள பசும் பொன்னாலான, விரல்தலை - விரல்களி னிடத்து, வீறு ஒளி காசின் - (மோதிரங்களிலிருந்து) விளங்கும் சிறந்த

ஒளிகளையுடைய இரத்தினங்களாகிய, கல் நிற கற்றை - கற்களின் ஒளித் தொகுதி, நெடுநிழல் - நீண்ட ஒளியோடு கூடிய, பூத்த-மலர்ந்த, கற்பக முழுவனம் கவின - பெரிய கற்பக வனம்போல அழகுடன் விளங்க,

இராவணன் மேனி கருவரைக்கும், அவன் அணிந்த பொன்னிறத் தூசு இளவெயிலுக்கும் உவமைகளாயின. பொன்னிறத் தூசு - பீதாம்பரம், பசும் பொன்: முதலாகு பெயராய் மோதிரங்களைக் குறித்தன. சூசு - இரத்தினப் பொதுப் பெயர் (பிங்களம்). நெடு நிழல் பூத்த - நீண்ட நிழலிடையே மலர்ந்த என்னலும் ஒன்றும். 'கற்பக முழு வனம் கடுப்ப' என்று பாடங்கொண்டு,'இந்தக் குணங்களினாலே கற்பகச் சோலையொத்தான் இராவணன்' என்று பழைஉரை பொருள் கூறும்.

(பி-ம்.) 1. மாறுகொண் டிமைக்கு நீவியந்: நீவியின் மேற்பட வுடுத்த.
2. தூசுங் கருவரை: புதுவெயில் பொருவ.
3. கதிரிற் செற்றிய: விரலணி யவிரொளிக் காசின்.
4. நன்னிறக் கற்றை; நெடுஞ்சுடர் பூத்த; நெடுநிறம் பூத்த: கற்பக நெடுவனம்: முழுவனம் கடுப்ப. (84)

414. *சன்னவீ ரத்த கோவைவெண் டரள*
*மூழியி னிறுதியிற் றழுவி*
*பொன்னெடு வரையை தொத்திய கோளு*
*நாளுமொத் திடையிடை பொலிய*
*மின்னொளிர் மௌலி யுதயமால் வரையின்*
*மீப்படர் வெங்கதிர்ச் செல்வர்*
*பன்னிரு வரினு மிருவருந் தவிர*
*வுதித்ததோர் படியொளி பரப்ப*

சன்ன வீரத்த - தான் அணிந்திருந்த சன்னவீரம் என்னும் வீரசங்கிலியிலே உள்ள, கோவை வெள் தரளம் - கோவையாக அமைக்கப்பெற்ற வெள்ளிய முத்துக்கள், ஊழியின் இறுதியில் - யுக முடிவுக் காலத்தில், பொன் நெடு வரையை - பொன் மலையாகிய மேரு வென்னும் நெடிய மலையை, தழுவி தொத்திய - தழுவித் தொத்திக்கொண் டிருக்கும், கோளும் நாளும் ஒத்து - கிரகங்களையும் நட்சத்திரங்களையும் ஒத்தனவாக, இடை இடை பொலிய - இடையிடையே விளங்கவும், மின் ஒளிர் மௌலி - மின்னலைப்போல் ஒளி வீசும் (பத்துக்) கிரீடங்களும், உதயமால் வரையின் மீ படர் - உதயகிரியின் மேலே படர்ந்து தோன்றும், வெம் கதிர் செல்வர் பன்னிருவரினும் - சூரியர் பன்னிருவர்களி னுள்ளேயும், இருவரும் தவிர-இருவரும் நீங்க, உதித்தது ஓர் படி - மற்றைப் பதின்மர் சூரியர்களும் உதித்த ஓர் தன்மையில், ஒளி பரப்ப - ஒளிகள் எங்கும் பரவச் செய்யவும்,

சன்னவீரம் - மகாவீரர் அணியும் ஒரு வகை வெற்றிமாலை; 'துன்னு கோளினொடு தாரகை தொடுத்த துழனிச் சன்ன வீரம்' (**ஆரண்ய.** விராதன். 12.) பெரிய. கண்ணப்ப. 59; 'காத்தவாமையோடுங் கபாலமுங் கோத்த சன்ன வீரங்குலாவவே' என்ற(தக்க. 341.)கண்ணிக்கு அமைந்த உரையில் 'இவையிரண்டும் சன்னவீரம்; வீரக்குறியாரமென்பாரும், வாகுவலயமென்பாரும், பதக்கமென்பாருமுளர்; அவை பொருளல்ல; வீரசங்கிலிக்குப் பெயர்' என்று கூறினமையும் நேர்க்குக. 'மாறிப் போகும் தோள் மாலை' என்பது பழைய உரை. இராவணன் உடல் மேருவுக்கும், சன்னவீரத்தில் உள்ள முத்துக்கள் அம்மேருவைத் தழுவித் தொத்தியுள்ளனவான நாட்களுக்கும், கிரகங்களுக்கும், இராவணன் அணிந்திருந்த கிரீடங்கள், ஆதித்தர் பன்னிருவரில் இருவர் ஒழிந்த பதின்மருக்கும், இராவணன் உருவம் உதயமால் வரைக்கும் உவமைகளாயின. சன்னவீரத்த என்பதற்கு, சன்னவீரத்திலுள்ள மணிகளும், கோவை வெண் தரளம் என்பதற்கு, மாலைகளிலுள்ள வெண்முத்துக்களும் என்று பிரித்துப் பொருள் கொள்வாருமுண்டு. ஊழியின் இறுதியில் தழுவிப் பொன்னெடு வரையைத் தொத்திய, என்றமையால், யுக முடிவுக் காலத்தில் எல்லாம் அழிந்தும் தான் மட்டும் அழியாது நிலைபெறும் தனிச் சிறப்புடையது மேரு மலையென்பதும், அதனைத் தழுவிக் கோளும் நாளும் நிற்கும் என்பதும் பெறலாயின:ஒப்பு. 'ஒத்தக் கடை யுகமுற்றுழி யுறுகால் பொர வுடுமீன், தொத்தப்பொலி கனகக்கிரி வெயில்சுற்றிய தொத்தான்' (உயுத்த. பிரமாத்திரப். 117.)

(பி-ம்.) 1. இறுதியிற் றனித்த.
2. வரையிற் றெரத்திய; வளையத் தொற்றிய.
3. மீப்பட வெங்; செங்கதிர்ச்.
4. இருவரைத் தவிர: இருவரைத் தவிர்வுற் றுதித்ததோர். (85)

415. *பயிலெயிற் றிரட்டைப் பணைமருப் பொடியப்*
*படியினிற் பரிபவஞ் சுமந்த*
*மயிலடித் தொழுக்கி னனையமா மதத்த*
*மாதிரக் காவன்மால் யானை*
*கயிலையிற் றிரண்ட முரண்டொடர் தடந்தோள்*
*கனகன துயர்வரங் கடந்த*
*அயிலெயிற் றரியின் சுவடுதன் கரத்தா*
*லலைந்தமாக் கரியினின் றஞ்ச*

பயில் எயிற்று இரட்டை - பொருந்திய பற்களாகிய இரண்டு, பணை மருப்பு ஒடிய - பருத்த தந்தங்கள் ஒடிந்து போக, படியினில் - பூமியில், பரிபவம் சுமந்த-அதனால் ஏற்பட்ட அவமானத்தைத் தாங்கினவும், மயில் அடித்து ஒழுக்கின் அனைய - மயிலின் அடிபோன்ற, (மூன்று பிளவாய்ப் பிரிந்து செல்கின்றன ஒத்த), மா மதத்த-பெரிய மதப் பெருக்

கையுடையனவுமான, மாதிர காவல் மா யானை - திக்குகளைக் காவல் புரியும் பெரிய யானைகள், கயிலையில் திரண்ட - கயிலை மலை போல் திரண்டு எழுந்த, முரண் தொடர் - வலிமை பொருந்திய, தடம் தோள் கனகனது - பெரிய தோள்களையுடைய இரணியனுடைய, உயர் வரம் கடந்த - பெற்று உயர்ந்த வரங்களை வென்று அழியச் செய்த, அயில் எயிற்று அரியின் - கூரிய பற்களையுடைய நரசிங்கத்தின், சுவடு - அடிச் சுவடுகளை, தன் கரத்தால் - தன்னுடைய துதிக்கையால், அளைந்த - துழாவிய, மா கரியின்-பெரிய யானை போல, நின்று அஞ்ச - (இராவணன் வருவதைக் கண்டு) அசையாது நின்று பயப்பட,

மாதிரக் களிறுகள் எல்லாம் ஒரு புறத்து இரண்டு ஆக நான்கு தந்தங்களை யுடையன என்பது 'பயிலெயிற்றிரட்டைப் பணை மருப்பு' என்பதால் விளங்கும். பரிபவம் - அவமானம். மயிலடித் தொழுக்கின் மதம் - மயிலின் அடி போன்று மூன்று பிளவாய் ஓடும் யானையின் மும்மதம்; மயிலடி மூன்று பிளவுள்ளது என்பதும், அதனை மூன்று பிரிவாய் உள்ள நொச்சியிலைக்கு உவமையாகவும் கூறப் பெற்றிருப்பதும் காண்க; குறுந். 138. கனகன் தோளுக்குக் கயிலை மலை உவமை. சிங்கத்தின் சுவடு கண்டு அஞ்சும் யானை போல, மாதிரக் கரிகள் இராவணன் அடிச்சுவடுகளைக்கண்டு, அவன் தம்மை முன்போல் அடக்க வருகின்றான்போலும் என்று அஞ்சின என்க. இராவணன் திக்கஜங்களின் மருப்பினை ஒடித்தது; ஆரண்ய. சடாயு வுயிர் 42. 'அளந்த மாகரியின் நின்றஞ்ச - சர்வேசுவரன் பாதத்தை அளந்த கஜேந்திர ஆழ்வான் முன்பு முதலையினு லெப்படிப் பயந்தது; அப்படி இராவணன் வரவு குறித்து அஷ்ட கஜங்கள் பயப்பட' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. பயிலெயிற் றிரட்டை முரட்பணை
2. மயிரடித்: ஒழுக்கி யணைய்மும் மதத்து மாதிரங்.
3. முரண்டொகு தடந்தோள்: உயர்வனங் கடந்த:
4. கரத்தால் வளைந்தமா கரியுநின் றஞ்ச. (86)

416. அங்கயற் கருங்க ணியக்கியர் துயக்கி
லரம்பையர் விஞ்சையர்க் கமைந்த
நங்கையர் நாக மடந்தையர் சித்த
நாரிய ரரக்கியர்முதலாம்
குங்குமக் கொம்மைக் குவிமுலைக் கனிவாய்க்
கோகிலந் துயருறுங் குதலை
மங்கைய ரீட்ட மால்வரை தழீஇய
மஞ்ஞையங் குழுவென வயங்க

அம் கயல் கரும் கண் இயக்கியர் - அழகிய கயல் மீன்போல் விளங்கும் கரிய கண்களையுடைய இயக்கர் குலமகளிர், துயக்கு இல் அரம்பையர் - மனச் சோர்வு இல்லாத தேவமகளிர், விஞ்சையர்க்கு அமைந்த நங்கையர் - வித்தியாதரர் இனத்திற்குரிய மகளிர், நாகமடந் தையர் - நாக கன்னியர்கள், சித்த நாரியர் - சித்த குலமகளிர், அரக்கியர் - இராக்கத மகளிர், முதலாம் - இவர்களை முதன்மையாகக் கொண்ட, குங்கும கொம்மை குவிமுலை - குங்குமம் அணியப் பெற்றவையும், பருத்தவையும், குவிந்த உருவம் உடையனவுமான கொங்கைகளையும், கனிவாய் - கொவ்வைக் கனி போன்ற வாய் உதடுகளையும், கோகிலம் துயருறும் குதலை - குயிலும் (நாணி) வருந்தும் குதலை மொழிகளையும் உடைய, மங்கையர் ஈட்டம் - மகளிர் கூட்டம், மால்வரை தழீஇய மஞ்ஞை அம் குழு என - பெரிய மலையைத் தழுவி அகலாது வாழும் மயில்களின் கூட்டம்போல, வயங்க - விளங்க,

கோகிலம் துயர் உறுதல் - அம்மகளிர்போல இசையுடன் தனக்குக் கூவ இயலாமையால் என்க. குதலை - பொருள் பொருந்தாது பேசும் இளங் குழந்தைகளின் மொழி. மஞ்ஞை வரை தழுவி வாழ்தல்; 310;

(பி-ம்.) 1. துவக்கி லரம்பையர்.
3. குங்குமக் கலவைக் குவி; கோகிலந் துயர்ந்தமென்;
4. குழுவென மயங்க.

417 தொளையுறு புழைவேய்த் தூங்கிசைக் கானம்
துயலுரு தொருநிலை தொடர
இளையவர் மிடறு மின்னிலை யியக்க
கின்னர முறைநிறுத் தெடுத்த
கிளையுறு பாடல் சில்லரிப் பாண்டி
றழுவிய முழவொடுங் கெழுமி
அளையுறை அரவு மமுதுவா யுகுப்ப
வண்டமும் வையமு மளப்ப

தொளை உறு - பல தொளைகள் பொருந்திய, புழை வேய் - (உட் புறம் உள்ளீடு இல்லாத) புழையாய் அமைந்துள்ள மூங்கிலாகிய குழலிடத்து உண்டாகும், தூங்கு இசை கானம் - மென்மையான ஓசையையுடைய பாட்டு, துயல் உருது ஒரு நிலை தொடர - கேட டையாமல் ஒரு வழியில் ஒத்துப் பெருகி ஓட, இளையவர் - இள மகளிர்களுடைய, மிடறும் கண்டத்தின் குரலும், இன்நிலை இயக்க - இனிய நிலையில் (மேற்கூறிய வேய்ங்குழலுக்கு ஒத்துப்) பாட, கின்னரம் முறை நிறுத்து எடுத்த - கின்னரம் என்னும் ஒருவகை யாழ் முறைப்படி அளந்தெடுத்து இசைத்த, கிளை உறு பாடல் சுரங்களோடு நிறைவுற்ற பாட்டு, சில்லரிப் பாண்டில் தழுவிய முழ வொடும் - சிறு பருக்கைக் கற்களோடு கூடிய சலங்கைகளையுடைய

பாண்டில் (என்னும் தாளக் கருவியைத்) தழுவி ஒலிக்கும் மத்தளத் தோடும், கெழுமி - ஒத்து இசைத்து, அளை உறை அரவும் - புற்றில் வாழும் பாம்பும், அமுது வாய் உகுப்ப - (விஷத்தைக் கக்கும் தன் வாயி னின்றும்) அமிர்தத்தைச் சொரிய, அண்டமும் வையமும் அளப்ப - புற அண்டங்களையும் இந்தப் பூமியையும் அவ்விசை அளப்பதுபோலப் பரவ,

தூங்கிசை - செய்யுட்குரிய நால்வகை ஓசைகளுள் ஒன்றும் ஆம். துயல்வு - கேடு. கின்னரம் - ஒருவகையாழ்; பெரியாழ்வார். திருமொழி; 3. 6:5; கின்னர முறை, கின்னர கீதம் என்றது போலவும் ஆம்; 'கின்னர கீதத்துக் கேள்வி மாந்தர்' (பெருங். 37. 108); கின்னர கீதம் - கின்னரப் பறவை கேட்டு வருதற்குரிய கீதம்; (சீவக. 660); கின்னர சாதியாரின் கீதமும் ஆம்; (சீவக. 3068). சில்லரிப்பாண்டில் என்பது தாளக் கருவி களுள் ஒன்று; 419. சில்லரி - சிலவாகிய அரிகளையுடைய, பாண்டில் - கஞ்சதாளம்; சிலப். 26.194. அரும்பதவுரை. கிளையுறு பாடல்; கிளை - பண்ணின் திறமும் ஆம்; 'பண்ணும் கிளையும் பழித்த தீஞ்சொல்' (சிலப். 14:166. அடியார்க். உரை.); கிளை யென்னும் நரம்பின் இசை யென்றும் கொள்ளலாம். அரவு அமுதுகுப்பப் பாடுதல்; (தேவா)

*(பி-ம்.)* 1. தொளையுறு முழை: தூக்கிசைக் கானம்.
2. இன்னிசை யெழும்பக்: அந்நிலை யிசைப்ப; அந்நிலை யியக்க.
3. முழவொடு கெழுமி.
4. அளையுறு மரவு. **(88)**

418. *அன்னபூஞ் சவுக்கஞ் சாமரை யுக்க*
*மாதியாய் வரிசையி னமைந்த*
*உன்னரும் பொன்னின் மணியினிற் புனைந்த*
*வுழைக்குலம் மழைக்குல மனைய*
*மின்னிடைச் செவ்வாய்க் குவிமுலைப் பணைத்தோள்*
*விங்குதே ரல்குலார் தாங்கி*
*நன்னிறக் காரின் வரவுகண் டுவக்கும்*
*நாடக மயிலென நடப்ப*

அன்ன - அத்தன்மையதாக, மழைக்குலம் அனைய - மேகத்தின் கூட்டத்தைப் போன்று (கரு நிறமாய்) உள்ள, மின் இடை - மின்னல் போன்ற நுட்பமான இடையையும், செவ்வாய் - சிவந்த வாயையும், குவிமுலை - குவிந்து (பருத்த) முலைகளையும், பணை தோள் - மூங்கில் போன்ற (மென்மையும் வழவழப்பும் அமைந்த) தோள்களையும், வீங்கு தேர் அல்குலார் - பெரிய தேர் போன்ற அல்குலையுமுடைய அரக்க

மாதர், பூம் சவுக்கம் - பூக்களால் தொடுக்கப்பட்ட நாற்கோணச் சதுரமாய் அமைந்த விதானம், சாமரை - வெண் சாமரைகள், உக்கம்-ஆலவட்டங்கள்,, ஆதியாய் வரிசையின் அமைந்த - இவை முதலாக (அரசர்க்குரிய)வரிசையில் அமைந்திருந்தவைகளையும்,உன்னரும் பொன்னின்-நினைத்தற்கு அரிய சிறப்புடைய பொன்னாலும், மணியினில் - இரத்தினங்களாலும், புனைந்த - அழகுற அமைக்கப் பெற்ற, உழை குலம் - மான்களையும், தாங்கி - ஏந்தி எடுத்துக் கொண்டவர்களாய், நல் நிற காரின் வரவு கண்டு உவக்கும் - நல்ல கரு நிற மேகத்தின் வரவைப் பார்த்து மகிழ்ச்சியுறும், நாடக மயில் என - நடனமிடும் மயிலே போல, நடப்ப - இராவணனோடு உடன் நடந்து செல்ல,

அன்ன, என்பது முன் நிகழ்ந்தவை; அன்ன சவுக்கம் என்னலும் ஆம்; அசையும் ஆம். உக்கம்: பெருங். 1. 34. 213; திருப்பாவை, 20. பொன்னின் மணியினிற் புனைந்த உழைக் குலம் ஏந்திச் சென்றது, பிராட்டி மானிடத்தில் பெரும் பற்றுடையவள் என்பது அனுபவத்தால் அறிந்து என்க. மழைக் குலமனைய...........அல்குலார், என்றமையால் அவர்கள் அரக்கியர் எனக் கொள்ளத்தக்கதாம். மயில் காரின் வரவு கண்டு உவப்பது; நள, 3: 93: வி. பா. வசந்த. 5. 'பூஞ்சவுக்கம் - பூவினாற் செய்த இளைப்பாறுமிடம்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. பூஞ் சதுக்கம்: ஆதியாம் வரிசையின்.
2. புனைநீத விழைக்குல மழைக்கருங் கடைக்கண்.
4. மயிலென நடிப்ப. (89)

419. தந்திரிக் கண்ணிற் றாக்குறு கருவி
 தூக்கின ரெழுவிய சதியின்
முந்துறு குணிலோ டியைவுறு குறட்டிற்
 சில்லரிப் பாண்டிலின் முறையின்
மந்தர கீதத் திசைப்பதந் தொடர்ந்த
 வகையுறு கட்டளை வழாமல்
அந்தர வானத் தரம்பையர் கரும்பின்
 பாடலா ரருகுவந் தாட

தந்திரிக் கண்ணில் - நரம்புத் தானங்களில், தாக்குறு கருவி-இசைக்கும் கருவியாகிய யாழை, தூக்கினர்-வாசிப்பவர்களாய், எழுவிய சதியின்-ஆராய்ந்து எழுப்பிய சதிகளின் படி, முந்துறு-முற்பட்டு முழங்கும், குணிலோடு இயைவு உறு குறட்டில்-கொட்டி முழக்கும் குறுந்தடியோடு பொருந்திய குறடு என்னும் தோற்கருவியிலும், சில்லரி பாண்டிலின் - சிறு

பருக்கைக் கற்களோடு கூடிய சலங்கைகளையுடைய கஞ்ச தாளக் கருவியிலும், முறையின் - இசை நூலில் வகுத்த முறைப்படி, மந்தர கீதத்து இசைப்பதம் தொடர்ந்த - படுத்தலோசையில் இசைப் பாட்டு தொடர்ந்துள்ள, வகை உறு கட்டளை வழாமல் - பலவகைப் பட்ட விதி தவறாமல், அந்தர வானத்து அரம்பையர் - ஆகாய வெளியில் உள்ள சுவர்க்கத்தில் வாழும் தெய்வமகளிர், கரும்பின் பாடலார் - கரும்பைப் போல இனிய சுவையை ஊட்டும் பாடலில் வல்லவர்களாக, அருகில் வந்து ஆட - இராவணன் அருகே வந்து நின்று நடனம் செய்ய,

தந்திரிக் கண்ணில் - தந்திரிகரம் என்ற யாழுறுப்பினிலுள்ள கண் களில் என்றும் கூறலாம். தந்திரிகரம் என்பது 'செங்கோட்டி யாழின் அறுவகை யுறுப்பினுள் ஒன்று; அது நரம்பு துவக்குதற்குத் தகைப் பொழிய இருசாணுல்விரல், நீளமாகக் குறுக்கிடத்துச் சேர்த்தும் ஐம்பத்தோருறுப்பு' (சிலப். 13;109, அடியார்க். உரை.) கருவி - யாழ்க் கருவி. சதி - தாளவொற்று; பெருங். 4: 12: 171. 'குறடு வாத்திய பேதம்' பழைய உரை; அது குணில்கொண்டு முழக்கப்படுவது. குணில்- குறுந்தடி; 'கன்று குணிலா கனியுகுத்த மாயவன்' (சிலப். 17: 19). சில்லரிப் பாண்டில்: 417. மந்தர கீதம்; 124. கட்டளை - ஓசைக் கட்ட ளைக் கூறுபாடுகள்; சிலப். 3:45; அரும்பத உரை.

(பி-ம்.) 1. தந்திர நெறி; எழுவிதச் சதியின்; எழுமுகச் சதியின்.
2. முந்துறக் குணிலோ டியைவுறு; குணிலிட் டிரட்டிய குறட்டில்.
3. பதந்தொடர வகையுறு; தொடர்ந்து வளையுறு கட்டளை.
4. கரும்பிற்; கரும்பி னமுதப்பாட் டருகுற வந்தான்; அருகுற வந்தார். (90)

420. அந்தியி னனங்க னழல்படத் துரந்த
வயின்முகப் பகழிவா யறுத்த
(வெந்துறு புண்ணின் வேல்நுழைந் தென்ன)
வெண்மதிப் பசுங்கதிர் விரவ
மந்தமா ருதம்போய் மலர்தொறும் வாரி
வயங்குநீர் மாரியின் வருதேன்
சிந்துநுண் டுளியின் சீகரத் திவலை
யுருக்கிய செம்பெனத் தெறிப்ப

அந்தியின் அனங்கன்-மாலைப்போதில் மன்மதன், அழல்பட துரந்த - நெருப்புப் போலச் சுட ஏவிய, அயில் முக பகழி வாய் அறுத்த - கூரிய நுனியையுடைய அம்புகளைக்கொண்டு அறுத்தவையான, வெந்துறு புண்ணின் - வெந்திருக்கிற புண்களில், வேல் நுழைந்தென்ன - வேல்

நுழைந்தாற்போல, வெண்மதி பசும் கதிர் விரவ - வெள்ளிய சந்திர னுடைய (குளிர்ந்த) இள நிலவு கலந்துகொள்ள, மந்த மாருதம் - இளந்தென்றற் காற்று, மலர் தொறும் போய் - ஒவ்வொரு மலரிலும் சென்று, வாரி வரு - வாரிக்கொண்டு வருகின்ற, வயங்கு நீர் வாரியின் - விளங்கும் நீரையுடைய மழையைப் போன்ற, தேன் - தேனினின்றும், சிந்து நுண் துளியின் - சிந்துகின்ற நுட்பமான துளிகளின், சீகரத் திவலை - துளித்திவலைகளால், உருக்கிய செம்பு என தெறிப்ப - உருக்கிய செம்பு வீழ்வது போலத் தன்மீது தெறிக்க,

அந்தியின் அனங்கன் - மாலைப் பொழுதுக்கு உரியவனான மன்மதன் என்றலும் ஆம்; அனங்கன் அதிகாரம் மாலையில் மிகும் ஆதலின்; 'காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலை மலருமிந் நோய்' (குறள். 1227.) அனங்கன் அம்பு அழல்போல வருத்தும் என்பது: பால. மிதிலைக் காட்சிப். 42, 43; நள. 1. 112. புண்ணில் வேல் நுழைதல்; அயோத்யா, கைகேசி சூழ். 20; கிளைகண்டு. 58; கலித். 83.30. விரகதாபத்தில் வருந்தும் இராவணனுக்குச் சந்திரன் நிலவு புண்ணில் வேல் நுழைவது போலவும், சீகரத்திவலை உருக்கிய செம்பு போலவும், உடலை வருத்தியது என்க. மூன்றாமடியில் தென்றலின் செயல் கூறப்பட்டது.

(பி-ம்.) 1. அந்திவே ளநங்கன்: தழல்பட: அலர்மலர்ப் பகழி.
2. வேனுழைந் தாங்கு: நுழைந் தன்ன.
3. நீர் மம்மரின் வருதேன்: நீர்வாரியின் வரு தேன்:மாருதம் பன் மலரிடைத்தாதும் தேனொடு மளாவி வானதிநீர்.
4. சிந்துநுண் டுளிகள். (91)

421. *இழைபுரை மருங்கு லிறுமிறு மெனவு*
*மிறுகிலா வனமுலை யிரட்டை*
*உழைபுகு செப்பி னொளிதர மறைத்த*
*வுத்தரீ யத்தின ரொல்கிக்*
*(குழைபொருங் கமலங் கோட்டினர் நோக்குங்*
*குறுநகைக் குமுதவாய் மகளிர்*
*மழைபுரை யொண்கண் செங்கடை யீட்ட*
*மார்பினுந் தோளினும் வயங்க)*

இழைபுரை மருங்குல் - (நூலின் மெல்லிய) இழையை யொத்த இடை, இறும் இறும் எனவும் - ஒடிந்து விடும், ஒடிந்து விடும் என்று கண்டோர் சொல்லவும், இறுகிலாவன முலை இரட்டை - ஒடியாது விளங்கும் அழகிய இரு கொங்கைகள், உழை புகு செப்பின் - உள்ளே புகுந்த செப்புப் போல, ஒளிதர - விளங்க, மறைத்த - அம்முலைகளை

மறைத்த, உத்தரீயத்தினர் - மேலாடையை உடையவர்களாய், ஒல்கி-குழைந்து, குழை பொரும் கமலம் கோட்டினர் நோக்கும் - குழை என்னும் காதணியோடு போரிடுவதுபோல அது வரையில் சென்றுள்ள தாமரை மலர் போன்ற தம் கண்களை வளைத்து (இராவணனைப்) பார்க்கும், குறுநகை குமுத வாய் மகளிர் - புன் சிரிப்பையுடைய ஆம்பல் போன்ற சிவந்த வாயையுடைய பெண்களுடைய, மழை புரை - மேகத்தைஒத்துக் கரு நிறமாய் விளங்கும், ஒண் கண் செங்கடை ஈட்டம் - ஒளிபொருந்திய கண்களின் சிவந்த கடைக் கண்களின் கூட்டம், மார்பினும் தோளினும் வயங்க -இராவணனுடைய மார்பிலும் தோள்களிலும்விளங்க,

மருங்குலுக்கு இழை; 335. இறும் இறும்; அடுக்கு விரைவும் அச்சமும் கொண்டு வந்தது. முலை உழை புகு செப்பின் ஒளிதரல்; ஒப்பு; 'மணிலினுண் மறைந்த வாயிலி கும்பம் போல் .........முலையாள்'' (குற்றுலநாதருலா. 210.) உழைபுகு செப்பு - உத்தரீயத்தின் உள்ளே செப்பு புகுந்து ஒளிந்து கொண்டது என்றும் கூறலாம். குழை பொருங் கமலம்; குழை பொரும் என்ற அடையால், கமலம் கண்ணிற்கும், முகத்துக்கும் ஆம்: 'குழை பொரு கமலம் கோட்டினர் - குண்டலம் தயங்கும் முகத்தைக் கவிழ்ந்துகொண்டு வருகிறார்கள், அந்தப் புரத்துப் பெண்கள்' என்பது பழைய உரை. மகளிர் நோக்க வருதல்: ஒப்பு: 'தாதவிழ் கூந்தன் மாதர் தனித் தனி நோக்கத்' (உயுத்த. கும்பகருணன். 3. ) ஒல்குதல் - குழைதல், ஒதுங்குதல், எதிர் கொள்ளல் என்று பல பொருள்களிலும் வருதல் காண்க; உயுத்த. கும்பகருணன் 35; சீவக. 319, 472, 595, 654. மகளிர் கண்கள் ஆடவர் மார்பிலும் தோளிலும் படுதல்; *பால, மிதிலைக்காட்சிப்.* 36; **ஆரண்ய.** சூர்ப்பணகைப். 27.

(பி-ம்.) 1. இழைபொரு மருங்கு: இறுமிறு மென்றேங்குதற் கெழுமுலை யிரட்டை: இறுக்கலா வனமுலை. 2. உழை பொரு.
3. குழைபுகு கமலம்; குழைபுகு நயனங்: கோட்டியே நோக்கும்.
4. தடங்கண்: செங்கிடை யிட்ட: தோளினு மலைய. (92)

422. *மாலையுஞ் சாந்துங் கலவையும் பூணும்*
*வயங்குநுண் டுசொடு காசும்*
*சோலையின் றெழுதிக் கற்பகத் தருவு*
*நிதிகளுங் கொண்டுபின் றெடரப்*
*பாலின்வெண் பரவைத் திரைகருங் கிரிமேற்*
*பரந்தெனச் சாமரை பதைப்ப*
*வேலைநின் றுயரு முயலில்வான் மதியின்*
*வெண்குடை மீதுற விளங்க*

சோலையின் தொழுதி கற்பக தருவும் - (மற்றும் வேண்டியனவற்றை வேண்டியவாறு அளிக்கவல்ல) சோலைபோல் அடர்ந்த கற்பக விருக்ஷமும், நிதிகளும் - சங்கம் பதுமம் முதலிய நவநிதிகளும், மாலையும் - பல விதப் பூமாலைகளையும், சாந்தும் - சந்தனத்தையும், கலவையும் - வாசனைப் பொருள்கள் கலந்த களபத்தையும், பூணும்-அணிகளையும், வயங்கு நுண் தூசொடு காசும்-விளங்கும் மென்மையான ஆடைகளோடு இரத்தினங்களையும், கொண்டு பின் தொடர - எடுத்துக்கொண்டு தன்னைத் தொடர்ந்துவர, பாலின் பரவை வெண்திரை - பாற்கடலின் வெண்ணிற அலைகள், கரும் கிரிமேல் பரந்தென - கரிய மலை மீது பரவிப் படிந்தாற் போல, சாமரை பதைப்ப - சாமரங்கள் இரு புறங்களிலும் அசைந்து வீச, வேலை நின்று உயரும் முயல் இல் வால் மதியின் - கடலிலிருந்து மேன்மேலே உயர்ந்து தோன்றும் முயல் என்னும் கறையற்ற வெண்ணிற முழுச்சந்திரனைப்போல, வெண்குடை - வெள்ளைக் குடை, மீது உற விளங்க - மேலே அழகு பொருந்த விளங்க,

காசு - பொற் காசும் ஆம். நவநிதிகள்: பதுமம், மகாபதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், நந்தம், நீலம், கர்வம் என்பன. இராவணன் வானவரை வென்று, அவர்களிடமிருந்த கற்பகம் நவநிதி முதலியவற்றைக் கொண்டுவந்துள்ளான் எனக் கொள்க. தொழுதி - தொகுதி; கூட்டம். பாற்கடலின் அலை வெண்சாமரைக்கும், கருங்கிரி இராவணனுடைய உருவுக்கும் உவமை. பரவைத் திரை சாமரைக்கு; சீவக. 2369; மதுரைச் சொக். உலா. 80-81. இராவணனுடைய வெண்குடையை முயலில் வெண்மதி என்றது, இல்பொருளுவமை. சந்திரனிடத்துள்ள கறையை முயல் என்றும் மான் என்றும் கூறுவது கவி மரபு. சாந்து - வாசனைச் சாந்துமாகும்.

(பி-ம்.) 1. நுண் டுகிலொடு காசும்; தூசொடு மணியும்.
2. சோலையின் றுழனிக்; றெகுதிக்; நிதியமுங் கொண்டு.
3. பாய்ந் தெனச் சாமரை; பாலின்வெம் பரவை யொருகருங் கிரி மேற் படர்ந்தெனச் சாமரை பயில.
4. வெண்மதியின்: வசண்மதியின். (93)

423. ஆர்கலி யகழி யருவரை யிலங்கை
யடிபெயர்த் திடுதொறு மழுத்த
நேர்கரும் பரவைப் பிறழ்திரை தவழ்ந்து
நெடுந்தடந் திசைதொறும் நிமிரச்
சார்வருங் கடுவி னெயிறுடைப் பகுவா
யனந்தனுந் தலைதடு மாற
வூரிநீ ராடை யிருநிலப் பாவை
முதுகுளுக் குற்றன ணெளிய

ஆர்கலி அகழி - கடலை அகழியாக உடைய, அரு வரை இலங்கை - பெரிய திரிகூடமலை மீதுள்ள இலங்கை, அடி பெயர்த்திடும் தொறும் - (இராவணன்) அடிகளை மாறி மாறி வைத்து நடக்கும்போதெல்லாம், அழுத்த-(அவ்வடிகள்) அழுத்துவதால், நேர் கரும் பரவை பிறழ் திரை-எதிரேயுள்ள பெரிய கடலினின்று எழுந்து விளங்கும் அலைகள், தவழ்ந்து-பாய்ந்து, நெடும் தடம் திசை தொறும் நிமிர - நீண்ட இடமகன்ற அந் நகரத்தின் எல்லாத் திசைகளும்போய் மிகுந்து நிரம்ப, சார்வு அரும் - அணுகக்கூடாத, கடுவின் எயிறுடை - விஷப்பற்களையுடைய, பகுவாய் அனந்தனும் - பிளப்புண்டது போன்ற பெரிய வாயையுடைய ஆதி சேடனும், தலை தடுமாற - பாரம் தாங்கமாட்டாமல் தலைகள் நிலை பெயர்ந்து ஆட, மூரி நீர் ஆடை இருநில பாவை-வலிய கடல் நீரை ஆடையாக உடுத்த பூமியாகிய மகள், முதுகு உளுக்குற்றனள் நெளிய - முதுகு வலி தாங்காமல் நெளிந்து கொடுத்து வருந்தி நெளிய,

உளுக்குறல் - சுளுக்கு ஏற்பட்டு வருந்துதலும் ஆம். இலங்கை உட்குழியவும் அதனால் கடல் நீர் அதனுட் புகவும், ஆதிசேடன் தலைகள் தடுமாறவும், பூமி முதுகு சுளுக்கேறி வருந்தவும், இராவணன் நடந்து சென்றான் என்றது, அவனது உடல் வலிமையை உயர்வு நவிற்சியாகச் சிறப்பித்தது எனற்பாலதாம். கருமை - பெருமை; (திவாகரம்); கருமையும் ஆம்.

(பி-ம்:) 1. ஆர்தரு மகழி: ஆரல்துன் றகழி; ஆரைதுன்றகழி.
2. நேர்தரும் பரவை; நேர்பொரும் பரவை
3. சார்தரும்: சார்கருங்.
4. இருநில மடந்தை: மூரல: தளர. (94)

424. கேடகத் தோடு மழுவெழுச் சூல
மங்குசங் கப்பணங் கிடுகோ
டாடகச் சுடர்வா ளயில்சிலை குலிச
முதலிய வாயுத மனைத்தும்
தாடகைக் கிரட்டி யெறும்வலி தழைத்த
தகைமையர் தடவரை பொறுக்கும்
சூடகத் தடக்கைச் சுடுசினத் தடுபோ
ரரக்கியர் தலைதொறுஞ் சுமப்ப

தாடகைக்கு இரட்டி எறும்வலி தழைத்த - தாடகைக்கு இரு மடங்கு மிக்க வலிமை தழைந்துள்ள, தகைமையர் - தகுதியுள்ளவர்களும், தடவரை பொறுக்கும் - பெரிய மலையைத் தாங்கும், சூடக தட கை - வளையல்கள் அணிந்த பெரிய கைகளையுடையவர்களும், சுடு சினத்து - நெருப்புச் சுடுவது போன்ற கொடிய கோபமுடையவர்களு

மான அடுபோர் அரக்கியர்-பகைவரை அழிக்கும் போரிற் சிறந்த அரக்க மாதர்கள், கேடகத்தோடு - பரிசை என்னும் ஆயுதத்தோடு, மழு - கோடாலியும், எழு - இருப்புலக்கையும், சூலம் - திரி சூலமும், அங்குசம்- மாவெட்டியும், கப்பணம் - இரும்பினுல் ஆன ஆனை நெருஞ்சி முள் ஆயுதமும், கிடுகு ஓடு - பலகையால் செய்த கேடகம் போன்ற ஒரு போர்க் கருவியோடு, ஆடக சுடர் வாள் - பொன்போல் ஒளி வீசும் வாளும், அயில் - வேலும், சிலை - வில்லும், குலிசம் - வச்சிராயுதமும், முதலிய ஆயுதம் அனைத்தும் - (இவை) முதலான ஆயுதங்கள் எல்லா வற்றையும், தலைதொறும் - தத்தந்தலைகளில் எல்லாம், சுமப்ப - தாங்கிச் சுமந்துகொண்டு வர,

ஆடக சுடர் வாள் - பொன்னுல் அலங்கரிக்கப்பெற்று ஒளி வீசும் வாள் என்னலும் ஒன்றும். தாடகையின் தோற்றம்; பால. தாடகை வதைப். 48-56. சூடகம் - மகளிர் முன்கையில் அணியும் ஒரு வகை வளையல்; 'சூடக வால் வளை சூட்டிட நீட்டும் ஏடவிழ் மாலை' (பால. கார்முகப். 33.); *சீவக.* 2052. தடவரை பொறுக்கும் கை: 185. எறும் வலி - ஒரு பொருட் பன்மொழி.

(பி-ம்.) 1. மழுவெழு முசல மங்குசங் கன்னகங் கிடுகொ(டு).
2. சுடர்க்கோ லயில்சிலை.
3. எறும்வலித் தகைத்த; வலித் தடக்கைத் தகைமையர்: தடவரை போலும். 4. சுமக்க. (95)

425. விரிதளிர் முகைபூக் கொம்படை முதல்வே
ரிவையெலா மணிபொனுல் வேய்ந்த
தருவுயர் சோலை திசைதொறுங் கரியத்
தழலுமி ழுயிர்ப்புமுன் றவழத்
திருமக ளிருந்த திசையறிந் திருந்துந்
திகைப்புறு சிந்தையால் கெடுத்த
தொருமணி நேடும் பஃறலை யரவி
னுழைதொறு முழைதொறு முலாவி.

விரிதளிர் - விரிந்து விளங்கும் துளிர்களும், முகை - அரும்புகளும், பூ - மலர்களும், கொம்பு - சிறு கிளைகளும், அடை - இலைகளும், முதல்- அடி மரமும், வேர் - வேர்களும், இவையெலாம்-ஆகிய இவை எல்லாம், மணி பொன்னுல் வேய்ந்த - மணிகளாலும் பொன்னுலும் வேய்ந்தன போன்ற, தரு உயர் சோலை - மரங்கள் உயர்ந்து விளங்கிய அச்சோலை, திசைதொறும் - (இராவணன் பார்க்கும்) திசைகளில் எல்லாம், கரிய -

கரிந்துபோகும்படி, (இராவணன்), தழல் உமிழ் உயிர்ப்பு முன் தவழ - (விரகத்) தீயைக் கக்கும் பெருமூச்சு தன் முன்னே தவழ்ந்து செல்ல, திருமகள் இருந்த திசை அறிந்திருந்தும் - திருமகளாகிய பிராட்டி இருந்த இடம் தான் அறிந்திருந்தும், திகைப்பு உறு சிந்தையால் - (இப் பொழுதுள்ள விரகதாபத்தால்) அறியமாட்டாது திண்டாட்டமுறும் மனத்தோடு, கெடுத்தது ஒரு மணி நேடும் - கெட்டுப் போக்கிய ஒப்பற்ற நாகரத்தினத்தைத் தேடிச் செல்லும், பஃறலை அரவின் - பலதலைகளை யுடைய பாம்பினைப்போல, உழைதொறும் உழைதொறும்-ஒவ்வோரிட மும் விடாமல், உலாவி - அலைந்து செல்வதை மேற்கொண்டு,

அசோக வனத்தில் உள்ள மரங்களின் தளிர் முதலிய உறுப்புக்கள் எல்லாம் இராவணன் தவச் சிறப்பால் பொன்னாலும் மணியாலும் வேய்ந் தன போன்றிருந்தன என்பதாம்; 114. இராவணன் காமத் தீயிலிருந்து எழும் புகைபோன்ற பெருமூச்சினால் அச்சோலை கரிந்துபோயிற்று: காமத்தீயால் தளிர் முதலியன கரிதல்: பால. மிதிலைக் காட்சிப். 50, 81; ஆரண்ய. மாரீசன். 90, 91. இராவணன் பத்துத் தலைகளையுடைமை யால் பஃறலை அரவுக்கு உவமையாயினன்; மணியைத் தேடும் அரவுக் குச் சீதையைத் தேடிச் சென்ற இராவணன் உவமை. பாம்பு தான் இழந்த மணியைத் தேடுதல்; 554; அயோத்யா, தைலமாட்டு. 63; சிலப். 13, 58; மணிமே. 7:131; சீவக. 1508.

(பி-ம்.) 1. பூக் கொன்னடை முதலாய் மேம்படு மணிபொன்னாற் செய்த: முதல்வேர் பழமொடு மணிபொனால்: பழமிவை மணி.
2. தருவமர் சோலை: தருவமை சோலை யிடந்தொறு மரக்கன் ருன்விடு முயிர்ப்பு.
3. இருந்து திகைப்புறுஞ்; திகைப்புறு மவன்றனக் கெடுத்த.
4. தேடும் ப.'.றலை; தேடு ப.'.றலை. (96)

## அநுமன் இராவணனை நோக்குதல்

426. *இனையதோர் தன்மை யெறுழ்வலி யரக்க*
*ரேந்தல்வந் தெய்துகின் றானை*
*அனையதோர் தன்மை யஞ்சனைச் சிறுவன்*
*கண்டன னமைவுற நோக்கி*
*வினையமுஞ் செயலும் மேல்விளை பொருளு*
*மிவ்வழி விளங்குமென் றெண்ணி*
*வனைகழ லிராமன் பெரும்பெய ரோதி*
*யிருந்தனன் வந்தயன் மறைந்தே.*

இனையது ஓர் தன்மை - இப்படிப்பட்ட ஒப்பற்ற இயல்புகளோடு கூடிய, எறுழ் வலி அரக்கர் ஏந்தல் - மிக்க வலிமையுடைய இராக்கதர் அரசனை, வந்து எய்துகின்றானை-அங்குவந்து அடைகின்ற இராவணனை,

அனையது ஓர் தன்மை அஞ்சனை சிறுவன் கண்டனன் - (முற்கூறிய) அப்படிப்பட்ட இயல்புடைய அஞ்சனாதேவி புதல்வனான அநுமன் பார்த்து, அமை உற நோக்கி - அமைதியோடிருந்து ஆலோசித்து, வினையமும் செயலும் மேல் விளை பொருளும் - (இராவணன் மேற்கொள்ளும்) உபாயமும், செய்கையும், அவற்றால் விளையும் பயனும், இ வழி விளங்கும் என்று எண்ணி - இப்பொழுது (இவ்விடத்தில்) நன்கு புலப்படும் என்று நினைத்து, வனை கழல் இராமன் பெரும் பெயர் ஓதி - வீரக் கழல் புனைந்த இராமபிரானின் பெருமை பொருந்திய (பெரும் நலத்தைத் தரும்) பெயரை வாயால் உச்சரித்து ஜபித்துக்கொண்டு, அயல் வந்து மறைந்து இருந்தனன் - அருகே வந்து ஓரிடத்தில் மறைந்து கொண்டிருந்தான். ஏ: அசை.

எறுழ்வலி - ஒரு பொருட்பன் மொழி; 424. வினையமும் செயலும் என்பவை, பிராட்டிக்கு ஏற்கப் பொருள் கொள்ளலும் ஒன்றும். இராமன் பெயரைப் பெரும் பெயரென்றது; அப்பெயரை ஓதுவார் இடையூறு நீங்குவராதலால்; 'பேரினால் வரு மிடையூறு பெயர்கின்ற பயத்தால்' (அயோத்யா. மந்திரப். 39); 'நன்மையுஞ் செல்வமு நாளு நல்குமே, தின்மையும் பாவமுஞ் சிதைந்து தேயுமே, சென்மமு மரணமு மின்றித் தீருமே, இம்மையே ராமவென் றிரண்டெ ழுத்தினால்' பாயிரம். 2); 'மும்மைசால் உலகுக்கெல்லாம் மூல மந்திரத்தை முற்றும், தம்மையே தமக்கு நல்குந் தனிப்பெரும் பதத்தைத் தானே, இம்மையே யெழுமை நோய்க்கு மருந்தினை யிராமனென்னும், செம்மை சேர் நாமந் தன்னைக் கண்களிற் றெரியக் கண்டான்' (கிட்கிந்தா) வாலிவதைப். 71) முதலியவற்றாலும் பிறவற்றாலும் அறியக் கிடக்கும்; இராம நாமத்தைப் பெரும் பெயரென்றது; திருமால் ஆயிர நாமங்களில் ராம நாமம் சிறப்புடையது; 'ஸஹஸ்ர நாம தத்துல்யம் ராம நாம வராநநே' என்று ஆன்றோர் பணித்தார் ஆதலின்.

(பி-ம்.) 1. அரக்கர்க் கேந்தல்: அரக்கர்க் கிறைவன்வந் தெய்தினனது போது. 2. அஞ்சனை சிறுவன்.
3. வினையமுஞ் செய்து: விளங்கு மொன்றிவ்.
4. ஓதி வந்தய லிருந்தனன் மறைந்து: வந்தயல் சார்ந்தான். (97)

## இராவணனைக்கண்டு பிராட்டி அஞ்சுதல்

427. ஆயிடை யரக்க னரம்பையர் குழுவு
மல்லவும் வேறய லகல
மேயினன் பெண்ணின் விளக்கெனுந் தகையா
ளிருந்துழி யாண்டவள் வெருவிப்
போயின வுயிர ளாமென நடுங்கிப்
பொறிவரி யெறுழ்வலிப் புகைக்கண்
காய்சின வுழுவை தின்னிய வந்த
கலையிளம் பிணையெனக் கரைந்தாள்

ஆயிடை - அப்பொழுது, அரக்கன் - அரக்கனுன இராவணன், அரம்பையர் குழுவும் - (தன்னுடன் வந்த) தேவமகளிர் கூட்டமும், அல்லவும் - அவரல்லாத பிற கூட்டங்களும், வேறு அயல் அகல - வேருகப் பக்கத்தில் அகன்று செல்ல, பெண்ணின் விளக்கு எனும் தகையாள் இருந்துழி - பெண்களுள் விளக்கு என்று சொல்லும் தகுதியுடைய சீதாதேவி இருந்த இடத்திற்கு, மேயினன் - போய் அடைந்தான்; ஆண்டு அவள் வெருவி - (அவன் வரவு கண்டு) அப்பொழுது, அப்பிராட்டி அஞ்சி, போயின உயிரள் ஆம் என நடுங்கி - போய்விட்டதென்று சொல்லத்தக்க உயிரினையுடைவள் போல நடுங்கி, பொறி வரி எறுழ் வலி - புள்ளிகளும், கோடுகளும் பொருந்திய மிக்க வலிமை வாய்ந்த, புகை கண் காய் சின உழுவை - புகைகின்ற கண்களையும் பகைக்கின்ற கோபத்தையுங் கொண்ட புலி, தின்னிய வந்த - தின்னும் பொருட்டு எதிர்ப்பட்ட, கலை இளம் பிணை என - கலைமானின் இளம் பெண் மான்போல, கரைந்தாள் - உருகி வருந்தினுள்.

சீதை பெண்ணின் விளக்கு: 'மங்கையர்க்கு விளக்கன்ன மான்' (அயோத்யா. கங்கைப் 16). போயின உயிரள் என்பது வடமொழி நடை; அழிந்த சிந்தையள்' என்றாற் போல; ஆரண்ய. சூர்ப்பணகை. 72, எறுழ்வலி; 424, 426. காய்சின உழுவை இராவணனுக்கும், கலையிளம் பிணை பிராட்டிக்கும் உவமைகள். பிராட்டி புலியிடை அகப்பட்டமான்; 333.

(பி-ம்.) 1. ஆயிடை யரக்க னரிவையர் குழுவோ டடைந்தன னகத்தருந் துயர்: அரக்க னரிவையர் குழுவும்: அல்லவு மெல்லவே யகல.
2. மேயினள்: யாண்டவண் மேவப்.
3. போயின வுயிரிப் போதென நடுங்கிப்: எறுழ்வலித் தறுகட்.
4. காய்சின வேங்கை:இளம் பெடையெனக். (98)

வேறு

## இருவர் நிலையினையும் அநுமன் காண்டல்

428. *கூசி யாவி குலைவுறு வாளையும்*
*ஆசை யாலுயி ராசறு வானையும்*
*காசில் கண்ணிணை சான்றெனக் கண்டனன்*
*ஊச லாட லொழிந்த வுள்ளத்தான்.*

ஊசல் ஆடல் ஒழிந்த உள்ளத்தான் - ஊஞ்சலாடுவது போலச் சஞ்சலப் படுவதினின்றும் விடுபட்ட மனத்தையுடைய அநுமன், கூசி ஆவி குலைவு உறுவாளையும் - (அச்சத்தால்) உடல் கூச்சம் கொண்டு உயிர் தடுமாறி நடுங்குகின்ற பிராட்டியையும், ஆசையால் உயிர் ஆசு அறுவானையும் - காம இச்சையால் உயிரின் கட்டு (பற்றுக உள்ள பிணைப்பு)

அறுபடும் நிலையில் உள்ள இராவணனையும், காசு இல் கண் இணைசான்று என-குற்றமற்ற இரு கண்களும் சாட்சியாக, கண்டனன்-பார்த்தான்.

ஆவி குலைவுறுவாளை - இந்த இராவணனால் இப்பொழுது தன் கற்பிற்கு என்ன கேடுவருமோ என்று அஞ்சி உயிர் பதைத்த சீதா தேவியை. ஆசையால் உயிர் ஆசு அறுவானை - தான் கொண்ட தீய காம இச்சையால் தன் உயிரின் கட்டுக்குலைந்தழியும் நிலையில் உள்ள இராவணனை; ஆசு - பற்றுக்கோடான அச்சு; 'ஆசா கெந்தை' (புற. 230). உயிர் ஆசழிதல்; 'விளிந்தாரின் வேறல்லர் மன்ற தெளிந்தாரில். தீமை புரிந் தொழுகுவார்' என்றமையும் நோக்குக; (குறள். 143). ஆவி குலையுறுதலால் பிராட்டியின் கற்பின் நிலை மாறவில்லையென்பதையும், இராவணன் ஆசையால் உயிர் ஆசு அழியும் நிலையில் இருந்ததால், அவன் அழிவது திண்ணம் என்பதையும் சான்றுகளாக நேரில் அநுமன் கண்டனன் என்க; அதுவரை பிராட்டியின் கற்புநிலை நன்னிலையில் உள்ளதோ இல்லையோ என்று ஐயமேற்கொண்டு ஊசலாடு நிலையில் இருந்த உள்ளத்து அநுமனுக்கு இப்பொழுது அவ் வையம் தீர்ந்ததாலும் தீய காமத்தின் வயப்பட்ட இராவணன் இனி அழிவது திண்ணம் என்ற உறுதியாலும், ஊசலாட லொழியு முளத்தின னான் அநுமன் என்பதாம். ஊசலாடல்; ஒப்பு. பால. கையடை. 11; ஆரண்ய, சடாயுவுயிர். 150. கண்ணிணை; அநுமனுக்கும்பிராட்டிக்கும் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. குலையுறு; குலைந்துறு; கொலையுறு; குழைவுறு வாளையும்.
2. ஆசழி வானையும்; சோர்ந்தழி வானையும்.
3. கண்ணிணைச் சான்றெனக்; கண்டான்.
4. ஆடி யுளையும்; ஆட லொழிந்தன; ஆடு முளமெலிந் தோதுவான்; உளமொழிந் தோதுவான்; உளத்தினன். (99)

## அநுமன் பிராட்டியை வாழ்த்தல்

429. *வாழி சானகி வாழியி ராகவன்*
*வாழி நான்மறை வாழிய ரந்தணர்*
*வாழி நல்லற மென்றென்று வாழ்த்தினன்*
*ஊழி தோறு முயர்வுறுங் கீர்த்தியான்.*

ஊழிதோறும் உயர்வு உறும் கீர்த்தியான் - ஒவ்வொரு யுகத்தும் மேன்மேலும் வளருங் கீர்த்தியையுடைய அநுமன், 'வாழி சானகி - சானகி நெடுங்காலம் சிறந்து வாழ்வாளாக; வாழி இராகவன் - இராம பிராமனும் சிறப்புடன் வாழ்வானாக; வாழி நான் மறை - நான்கு வேதங்களும் வாழ்வனவாக; வாழியர் அந்தணர் - அந்தணர்கள் வாழ்வாராக; வாழி நல்லறம் - உலக நன்மைக்குக் காரணமான தருமம் வாழ்வதாக;

என்று என்று - என்று பல முறை களிப்பின் மிகுதியால் கூறி, வாழ்த்தினன் - வாழ்த்தி மகிழ்ந்தான்.

சீதை வாழ்வுறலால் இனி இராமபிரான் வாழ்வதற்கு இடமாகும்; இராமபிரான் வாழவே வேதங்களும், அவற்றை ஓதி யுணரும் அந்தணர்களும், அவ்வேதங்களால் விளையும் தருமங்களும் வாழும் என்பவற்றை வரிசைப்பட அமைத்துக் கூறி, ஒன்றுக்கொன்று உள்ள தொடர்பையும் காட்டி, அவை அனைத்திற்கும் பிராட்டியின் வாழ்வே மூலாதாரம் என்பதையும் அநுமன் உய்த்துணர்ந்து வாழ்த்தியது இங்கு நோக்கத்தக்கது. இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் அதிகப்பாடல் காணப்பெறுகின்றது.

என்ன வாழ்த்திய மாருதி யீதுநாம்
இன்னும் காண்டு மெனமறைந் தெய்தினன்
சொன்ன வாளரக் கன்சுடு தீச்சுடும்
அன்னை வைகுறும் அவ்விடத் தாயினன்.

(பி-ம்.) 2. வாழி யிமையவர்; வாழி யந்தணர். 3. என்றென; என்றுற. 4. ஊழி தோறும் புதிதுறும்; உலாவுறும்; உயர்ந்தெழு; உயர்பெரு சீர்த்தியான். (100)

## இராவணன் பிராட்டியை இரத்தல் 430-43

430. அவ்வி டத்தரு கெய்திய ரக்கன்றான்
எவ்வி டத்தெனக் கின்னரு ளீவது
நொவ்வி டைக்குயி லேநுவல் கென்றனன்
வெவ்வி டத்தை யமுதென வேண்டுவான்.

வெம் விடத்தை அமுது என வேண்டுவான் - கொடிய விஷத்தை அமுதமென எண்ணி அதை அடைய விரும்பி (நாசமடையும் நிலையில் உள்ள இராவணனுன), அரக்கன் - இராக்கதன், அ இடத்து அருகு எய்தி-அப்பிராட்டியிருந்த இடத்திற்கு அருகே அடைந்து, 'நொ இடை குயிலே-(உடலைத்தாங்காது வருந்தும்) நுட்பமான இடையையுடைய குயில் போன்றவளே! எனக்கு இன் அருள் ஈவது எ இடத்து-எனக்கு நீ நல்லருள் புரிவது எப்பொழுது? நுவல்க என்றனன் - நீ சொல்லுவாயாக' என்று கேட்டான். தான்: அசை.

இது முதல் 14 செய்யுட்கள் இராவணன் பிராட்டியிடம் கூறியவை. நுவல்க என்றனன் என்பது நுவல்கென்றனன் என்று ஆனது தொகுத்தல் விகாரம். எவ்விடத்து என்பதில் இடம் காலத்தைக் குறித்து வந்த

இடைச்சொல். தனக்கு விடம்போன்ற பிராட்டியை இராவணன் தன் தீவினை தூண்ட அமுதமென நினைத்தான் என்பதும், அவ்விடத்தை விரும்பியதால் அவன் அழிவது திண்ணம் என்பதும் பெறக்கிடக்கும். நொவ்விடை; 383.

(பி-ம்.) 1. எய்தி யமர்ந்தனன்.
3. நுவல்வா யென்றான். (101)

431 ஈசற் காயினு மீடழி வுற்றிறை
வாசிப் பாடழி யாத மனத்தினன்
ஆசைப் பாடுமெய்ந் நாணு மடர்த்திடக்
கூசிக் கூசி யிவையிவை கூறினன்.

'ஈசற்கு ஆயினும் - சிவபெருமான் திறத்து ஆயினும், ஈடு அழிவு உற்று-தன் வலி தொலையப் பெற்று, இறை - சிறிதும், வாசிப்பாடு அழியாத மனத்தினன் - தன் பெருமிதம் அழிவுறாத மனத்திடத்தையுடைய இராவணன், ஆசைப்பாடும் - தான் பிராட்டி பால்கொண்ட ஆசையும், மெய் நாணும்-(ஒரு பெண்ணுக்குத் தான் தோல்வியுறுவதா என்ற) உண்மையான வெட்கமும், அடர்த்திட - தன்னை வருத்த, கூசி கூசி - மேன்மேலும் கூச்சமுற்றவனாகி, இவை இவை கூறினன் - பின்கண்ட இவ்விஷயங்களைப் பலவாறு (பிராட்டியை நோக்கிக்) கூறினன்.

இச்செய்யுள் கவிக்கூற்று. ஈசற்காயினும்; உம்மை உயர்வு சிறப்பு. வாசிப்பாடு - மேம்பாடு என்னலும் ஆம்; தக்க 179: இது கன்னடத்தில் வழங்குவது. இராவணன் ஆசை மேலிடத் தன் நாணத்தை மறந்தும், நாணம் இடையிடையே தூண்டுவதால் பேசக் கூச்சமேற்கொண்டும் ஆசை, வெட்கம் என்ற இரண்டிலும் நீங்காது தத்தளிக்கும் நிலையில் இவை கூறினன் என்க.

(பி-ம்.) 1. ஈடொழி யாதுயர்; ஈடழி யாதுயர்; ஈடழி யாநிலை.
3. ஆசைப் பாடுமந் நாணும்: நாணு மயர்த்திடக்; அடர்ந்திடக்.
4. இனையன கூறினன். (102)

432. இன்றி றந்தன நாளையி றந்தன
என்றி றந்தருந் தன்மையி தாலெனைக்
கொன்றி றந்தபின் கூடுதி யோகுழை
சென்றி றங்கி மறந்தரு செங்கணாய்.

'குழை சென்று இறங்கி - குழை என்னும் காதணி வரையிற் சென்று இறங்கிப் பாய்ந்து, மறம் தரு செம் கணூய் - கொடுமையைச் செய்கின்ற சிவந்த கண்களையுடையவளே! இன்று இறந்தன-இன்று உன்னை அடையலாமென்று நான் எண்ணிய பலநாட்களும் கழிந்துபோயின; நாளை இறந்தன - நாளை அடையலாம் என்று நான் எண்ணியிருந்த பல நாட்களும் கழிந்துபோயின; என் திறம் தரும் தன்மை இதால் - என்பால் நீ அருளும் தன்மை இவ்வாருக இருக்கிறபடியால், எனை கொன்று இறந்த பின் - நீ (என்னை அடையாமல் பிடிவாதஞ் செய்வதால் என்னைக்) கொலை செய்து அதனுல் யான் இறந்தபிற்பாடு, கூடுதியோ - நீ என்னைச் சேரப் போகிருயோ ?

'என்னைக் கொன்று, நீ என்னை யடையாமல் வருந்தி இறப்பேன்; அவ்வாறு யான் இறப்பது உன் பொருட்டாதலால் அக்கொலைக்கு நீயே காரணமாவாய்' என்பது இராவணன் கருத்து. இன்று இறந்தன நாளை இறந்தன; ஒப்பு. 1136. குழை சென்று இறங்குங் கண், என்றமையால் பிராட்டியின் கண்களின் பெருமையும், நீண்மையுங் குறித்தபடியாம்; ஒப்பு. 'குழையொன் றிரண்டு விழியணங்கே' (தனிப்பாடல்). இறங்கி மறந்தருதல் கண்களுக்கு இயற்கையாயுள்ள கருணையினின்றும் இறங்கிக் கொடுமையைச் செய்தலும். ஆம்.

இப்பாடல் பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு மாறி உள்ளது.

இன்று நாளை யருளுந் திருவருள்
என்று கொண்டிட ராலழி வேனைநீ
கொன்றி றந்தனை கூடுதி யோகுழை
நின்று றங்கி மறந்தவர் செல்வியே.

(பி-ம்.) 1. இன்றி றந்தனன் நாளை யிறந்தனன்; இரந்தனன்: இன்று நாளை யருளுந் திருவருள்.
2. என்று கொண்டிட ராலழி வேனை நீ: என்றி றந்தரு தன்மையி தாலெனக்(கு): தன்மையி னுலெனைக்.
3. கொன்றி றந்தனை கூடுதியோ; கொன்று றும்படிக் கொண்டனை யோகுழை.
4. சென்று றங்கி. (103)

433. உலக மொன்ரு டிரண்டு மோம்புமென்
அலகில் செல்வத் தரசிய லாணையில்
திலக மேயுன் றிறத்தனங் கன்றரு
கலக மல்ல தெளிமையுங் காண்டியோ

'உலகம் ஒன்றொடு இரண்டும் - உலகங்கள் மூன்றையும், ஓம்பும் - பாதுகாத்து வரும், என் - என்னுடைய, அலகு இல் செல்வத்து - கணக்கற்ற செல்வத்தையுடைய, அரசியல் ஆணையில் - அரசாட்சியின் கட்டளையில், திலகமே - பெண்களுக்குள் திலகம் போன்றவளே, உன் திறத்து - உன் பொருட்டாக, அனங்கன் தரு கலகம் அல்லது - மன்மதன் என்பாற் செய்யும் கலகமே அன்றி, எளிமையும் காண்டியோ - எனக்கு இழிவைத் தரத்தக்க வேறு செயல் ஒன்றை நீ என்பாற் கண்பாயோ? (காண இடமில்லை என்றபடி.)

'அனங்கன் தரும் கலகத்தை நீ உண்டு பண்ணுவது அல்லாமல் மூவுலகாட்சி செய்யும் என்னை ஓர் இழிந்த தன்மையனாகவும் செய்கின்றாயோ?' என்று பொருள் கொள்ளலும் ஆம்; காண்டல் - உண்டாக்குதல்; 'முனைவன் கண்டது முதனூலாகும்' (தொல். பொருள்: 649). ஒப்பு 'நாமவே னரபதி யுலகங் காத்த நாள், காமவேள் கவர்கணை கலந்த தல்லது, தாமவேல் வயவர்தந் தழலங் கொல்படை, நாமநீர் வரைப்பக நலிவ தில்லையே' (சூளா, 53.) 'கலகமல்லது எளிமையும் காண்டியால் - மதனன் கலகத்தை நீக்கினால், நான் அடிமை செய்யும் எளிமையையும் பின்னிட்டுக் காண்பாய்' பழைய உரை.

(பி-ம்.) 1. உலக மூன்று மொருங்குட னோம்புமென்: ஓம்பினேன்.
2. ஆணையால்.
4. கலக மானது காணுதியோ கண்ணால்: கலக மன்னது காணுதியோ கண்ணால். (104)

434. பூந்தண் வார்குழற் பொற்கொழுந் தேபுகழ்
ஏந்து செல்வ மிகழ்ந்தனை யின்னுயிர்க்
காந்தன் மாண்டிலன் காடுக டந்துபோய்
வாய்ந்து வாழ்வது மானிட ரோடன்றோ.

'பூம் தண் வார் குழல் பொன் கொழுந்தே - பூக்கள் சூடப் பெற்ற குளிர்ச்சியுள்ள நீண்ட கூந்தலையுடைய பொன்னின் சுடர் போன்ற சீதையே! புகழ் ஏந்து செல்வம் இகழ்ந்தனை - புகழைத் தாங்கி விளங்கும் என் பெரும் செல்வத்தை மதிக்காமல் இகழ்ந்து பேசுகிறாய்; (ஆனால்), இன் உயிர் காந்தன் - உன் இனிய பிராணநாதனான இராமன், மாண்டிலன் - இறவாமல் தப்பி, காடு கடந்து போய் - வன வாசத்தை முடித்து அயோத்தி சென்று, வாய்ந்து வாழ்வது - (நலம் பொருந்தி வாழ்வதாயினும்), அவனுடன் நீ வாழ்வது, மானிடரோடு அன்றோ - மனிதர்களோடு கூடிய அற்ப வாழ்வு அல்லவோ?

புகழேந்து செல்வம் - யாவரும் புகழும் பெருமையையுடைய மூவுலக ஆட்சி. இகழ்ந்தனை - வலிய வருவதை வேண்டாவென்று இகழ்ந்தவளாகி என்னலும் அமையும். இகழ்ந்தது: 'உலகமீரேழு

மாளுஞ் செல்வத்து ளுறைதி' (ஆரண்ய. சடாயுவுயிர். 68) என்று இரா வணன் முன் கூறியதை அவள் இகழ்ந்தது ஆம். மாண்டிலன்-மாள்வது திண்ணம் அப்படித்தப்பிப் பிழைத்தாலும், என்ற குறிப்பு; மானிடர் வாழ்வு அற்பமானது, தன்னுடைய வாழ்வு மிகப் பெரியதும் சிறப்பமைந் ததுமாகும் என்பதைக் குறிப்பிட்டபடி.

(பி-ம்.) 1. கொழுந்தே புகல். 2. செல்வ மிழுந்தனை.
3. மாண்டனன். 4. மானிடர் வாழ்வன்றே. (105)

435. நோற்கின் றார்களு நுண்பொரு ணுண்ணிதில்
பார்க்கின் றாரும் பெறும்பயன் பார்த்தியேல்
வார்க்குன் றாமுலை யென்சொன் மவுலியால்
ஏற்கின் றாரொ டுடனுறை யின்பமால்.

'வார் குன்றா முலை - கச்சுக்குள் அடங்காத தனங்களையுடையவ வளே! நோற்கின்றார்களும் - விரதங்கள் முதலியவற்றை நோற்று வருகிற தவசியர்களும், நுண் பொருள் நுண்ணிதில் பார்க்கின்றாரும் - நுட்பமான தத்துவப் பொருள்களை அறிவால் ஆராய்ந்து பார்க்கும் ஞானிகளும், பெறும் பயன் - அடையும் பயனை, பார்த்தியேல் - ஆராய்ந்து பார்ப்பா யானால், (அவர்கள் அடையும் அப்பயன்),என் சொல்-என் வார்த்தையை, மவுலியால்-தம் தலையால், ஏற்கின்றாரொடு-ஏற்றுப் பணி செய்கிற தேவர் களோடு, உடன் உறை இன்பம் - கூடி வாழும் இன்பமேயாகும். ஆல்: அசை.

வார் குன்றாம் முலை எனக் கொண்டு, கச்சணிந்த குன்று என்று சொல் லத் தக்க முலை என்று பொருள் கோடலும் அமையும். 'தவத்தாலும் ஞானத்தாலும் பெறும் பயன் தேவ உலகு வாழ்வு; அத்தேவர்களோ என் கட்டளைகளைத் தம் தலையால் ஏற்கின்றவர்; ஆகவே என் பெருமை இன்னதாகும். அத்தகைய யானே உன் சொற்படி நடக்க இருக்கும் இப் பெரு வாழ்வை நீ இகழ்வது ஏன்?' என்பது இராவணன் கருத் தாகும். நுண்பொருள் என்பதற்கு விரதங்களாலும் அறிவாலும் அறிய முடியாது நுட்பமாய் விளங்கும் கடவுள் எனப் பொருள் கொள்வாரும் உளர். 'இந்தக் கவிக்குப் பொருள்: தவம் பண்ணுவோரும் சகல நூல்களைத் தெரிவோரும் பெறும் பயன் தங்களை எல்லோரும் வந்து வணங்க வேண்டும் (என்பது). அப்படி ஒரு காரியம் நீ செய்யாதிருக்கை யிலே, நான் நல்ல வார்த்தை சொல்லித் தலையாலிரக்கச் செய்தேயும் ஏன் கிருபை பண்ணுகின்றிலை என்றான்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. நோன்பொடு நுண்ணிறிற்: நோன்பொரு ணுண்ணிதிற்.
2. பெறுபயன்: பார்த்தியால்; பார்த்தியே; பார்த்தியோ.
3. முழலை யரசய்சொல்; முழலை யாசய்மனத் தேநயந்(து).
4. இனிதுரை. (106)

436. *பொருளும் யாழும் விளரியும் பூவையும்*
*மருள நாளு மழலை வழங்குவாய்*
*தெருளு நான்முகன் செய்ததுன் சிந்தையில்*
*அருளு மின்மருங் கும்மரி தாக்கியோ.*

'பொருளும்-(குதலைச் சொற்களையுடைய) குழந்தைகளும், யாழும்-வீணையும், விளரியும் - தைவதம் என்னும் இசைச் சுருதியும், பூவையும் - நாகணவாய்ப்புள்ளும், மருள-மயக்கமடைந்து ஏங்க, நாளும் - என்றும், மழலை வழங்குவாய் - மழலை மொழி பேசுபவளே! தெருளும் - அறிவால் தெளிவடைந்த, நான்முகன் - பிரமதேவன், உன் சிந்தையில் அருளும் - உன் மனத்தில் இரக்கமும், மின் மருங்கும் - மின்னல்போன்ற இடையும், அரிது ஆக்கியோ செய்தது - இல்லாமல் செய்தோ படைத்தது?

பொருள் என்பது இங்கு இளம் மக்களைக் குறித்தது; 'தம்பொருள் என்பதம் மக்கள்' (குறள். 63): 'தாரகனைப் பொருது பொன்றுவித்த பொருளினை முன் படைத்த புனிதன்' (தேவாரம் — 632:9). பிராட்டி மற்றைய மகளிர் போல் குழந்தைப் பருவத்தில் மட்டுமன்றி என்றும் மழலைச் சொல் பொருந்தியவள் என்பதும், அதனால் இளமை மாறாத் தன்மையள் என்பதும் கொள்ளற்பாலதாம். மழலை: 'மெய் பெறு எழுத்து உயிர்த்தல்' (சீவக. 181.) அறிவிற் சிறந்தவனாய் இருந்தும் நான்முகன் உன்னைப் படைத்ததில் உனக்கு அருளில்லாத சிந்தையையும், மின்போலத் தோன்றி மறையும் இடையையும் உண்டாக்கி விட்டானே' என்று அந் நான்முகன்பால் இராவணன் குறைகூறுவதாகவும் கொள்ளலாம்.

(பி-ம்.) 2. மருளு நாளு.
3. தெருளி னுன்முகன்: செய்தது சிந்தையில்.
4. அருளு நின்மருங் கும்; அருளு மென்மருங் கும்மில தாக்கியோ; அரி தாகவோ. (107)

437. *ஈன்டு நாளு மிளமையு மீண்டில*
*மாண்டு மாண்டு பிறிதுறு மாலைய*
*வேண்டு நாள்வெறி தேவிளிந் தாவினி*
*யாண்டு வாழ்வ திடருழன் ருழ்தியோ.*

'ஈண்டு - இவ்வுலகில், நாளும்-வாழ்நாளும், இளமையும் - இளமைப் பருவமும் (கழிந்து விட்டால்), மீண்டில - திரும்பியடையப் பெருதவைகளாய், மாண்டு மாண்டு - அடிக்கடி சிறிது சிறிதாகக் கழிந்து, பிறிது உறு மாலைய - வேறுபட்டு அழியும் தன்மையையுடையன; (ஆகையால்), வேண்டு நாள்-யாவரும் விரும்பி (இன்பம் அடையக் கூடிய) இளமைக் காலம், வெறிதே விளிந்தால் - பயனன்றி வீணே அழிந்தால், இனி யாண்டு வாழ்வது-நீ இனி எப்பொழுது நல் வாழ்வை அடைந்து இன்புற்றிருப்பது? இடர் உழன்று ஆழ்தியோ - (ஆதலால் நீ எப்பொழுதும்) துன்பத்தில் அழுந்தியிருக்க விரும்புகின்ருயோ?

ஈண்டு - விரைவில், என்று பொருள் கொண்டு, 'மாண்டு மாண்டு பிறிதுறு மாலைய' எனக் கூட்டலும் ஒன்றும்; ஈண்டு - விரைவு; (திவாகரம்.) மாண்டு மாண்டு: அடுக்கு விரைவுப் பொருளது. நாள் மாண்டு போதல்: ஒப்பு. 'நாளது சின்மையும்' (தொல்.)இளமை பிறிதுறுதல்: மணி. 23:28.

(பி-ம்.) 1. இளமையு மென்றிவை.
2. பிறந்துறு மாலைய: பிறிதுறு மாதலால்.
4. உழந் தாழ்தியோ: யாண்டு வாழ்வி டருழந் தீதியோ. (108)

438. *பெண்மை யும்மழ கும்பிற ழாமனத்*
*திண்மை யும்முதல் யாவையுஞ் செய்யவாய்க்*
*கண்மை யும்பொருந் திக்கரு ணைப்படா*
*வண்மை யென்கொல் சனகன் மடந்தையே.*

'சனகன் மடந்தையே - சனகராஜன் மகளே! பெண்மையும் - பெண்தன்மைக்கு இருக்க வேண்டிய குணமும், அழகும் - அப்பெண்மைக்குச் சிறப்பைத் தரும் அழகும், பிறழா மன திண்மையும் - தன் நிலையில் மாறுபடாத மன உறுதியும், முதல் யாவையும் - இவை முதலாய (பெண்களுக்கு அமைய வேண்டிய) நற்குணங்க ளெல்லாம், செய்யவாய் - சிறப்புள்ளனவாக (நீ அமையப் பெற்றும்), கண்மையும் பொருந்தி - கண்ணேட்டமும் பொருந்தி, கருணைப்படா வண்மை - இரக்கங் கொள்ளாத தன்மை பெற்றிருத்தல், என் கொல்-ஏனே?

சனகன் மடந்தையே! என்று விளித்தது சனகனுக்கு உள்ள கண்மை, கருணை முதலிய உயர் குணங்கள் உனக்கு இல்லையே என்று குறிப்பிட்டபடி; கண்மை - இரக்கம்; 'கண்ணுக் கணிகலம் கண்ணேட்டம்' (திரிகடுகம் 52.) வண்மை - வள்ளல் தன்மையும் ஆம்; வண்மை

இல்லாக் கொடுமையை வஞ்சப் புகழ்ச்சியாகக் கூறியது எனக் கொள்ளினும் அமையும். 'கண்மையும் பொருந்தி - காணக்கண்ணும் பொருந்தி' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. பிறங் கில்மனத்: பிறழார் மனத்.
2. செய்யவால்.
3. கருணைப்படர்.
4. வனச மடந்தையே: சனகரின் மாண்டவா. (109)

439. *இழவெ னக்குயி ரெய்தி னு மெய்துக*
*குழைமு கத்துநின் சிந்தனை கோடினுல்*
*பழகி நிற்புறு பண்பியை காமத்தோ*
*டழகி னுக்கினி யாருள ராவரே.*

'குழை முகத்து நின் சிந்தனை கோடினுல் - வாடிக் குழைந்த முகத்தோடு உன் மனமும் என் மீது இரக்கங் கொள்ளாது மாறுபட்டால், எனக்கு உயிர் இழவு எய்தினும் - (அது தாங்கமாட்டாமல்) என்னுடைய உயிர் அழிவதை அடைந்தாலும், எய்துக - அடையட்டும்; (அதற்கு யான் வருந்தவில்லை. பின் எதற்கு வருந்துகின்றேனென்றால்), பழகி நிற்பு உறு - என்னொடு பழகி நிலை பெற்று விளங்கும், பண்பு இயை - நல்ல தன்மை பொருந்திய, காமத்தோடு அழகினுக்கு - காமம் அழகு என்பவற்றிற்கு, இனி யார் உளர் ஆவர் - இனி என்னை யன்றி வேறு யார் உனக்கு ஏற்றவராக ஆகிறவர் உள்ளார்? (ஒருவரும் இல்லையே; இதற்கு வருந்துகிறேன் என்றபடி). ஏ:ஈற்றசை.

குழை முகம் - குழைகளோடு கூடிய முகம் என்றும் பொருள் கொள்வர். 'பழகி நிற்புறும் பண்பு இயை காமத்தோடு அழகு' இதனைப் பிராட்டிக்கு இயைத்துப் பொருள் கோடலும் அமையும். அழகினுக்கு இனி யார் - உன் அழகுக்கு இனிதாம் வகையில் உள்ள ஆடவர், என்றும் பொருள் கொள்ளல் ஒன்றும்.

(பி-ம்.) 1. எனக்குயிர்க் கெய்தினும்: இழவெ னக்குவந் தெய்துவ தெண்ணிலாய். 2. கோடினுய்.
3. பழிக ணிற்புறும்: பழுதி லற்புதப் பாவைநின் காமப்பேர்: பழகி னிற்புறுங் காமத்தின் பண்பி யைந்து.
4. அழகி னுக்கணி: அழகி னுக்குரி யாருளர் யாவரோ. (110)

440. *வீட்டுங் காலத் தலறிய மெய்க்குரல்*
*கேட்டுங் காண்டற் கிருத்திகொல் கிள்ளை நீ*
*நாட்டுங் கானெடு நல்லறத் தின்பயன்*
*ஊட்டுங் காலத் திகழ்வ துறுங்கொலோ*

'கிள்ளை - கிளி போன்றவளே! வீட்டும் காலத்து - (மாரீசன் இராம னைக்) கொன்ற பொழுது, அலறிய மெய்குரல் கேட்டும் - அவன் வாய் விட்டு அலறிய அவனுடைய உண்மைக் குரலை நீ உன் காதாற் கேட்ட பிறகும், நீ காண்டற்கு இருத்தி கொல் - அவனை நீ மீண்டும் பார்க்கலாம் என்று எண்ணி இருக்கிறாய் போலும்; நாட்டுங்கால் - உனக்கு உண் மையை உறுதியாக எடுத்துக் கூறுமிடத்து, நெடு நல் அறத்தின் பயன் - நெடுங்காலமாய்ச் செய்த நல்ல தருமங்களின் பயனை, ஊட்டுங் காலத்து- நீ அனுபவிக்கும்படி உனக்கு விதி எடுத்து ஊட்டுவதுபோல அளிக்கின்ற காலத்தில், இகழ்வது உறும் கொலோ-அதனை அவமதித்துத் தள்ளுவது பொருந்திய செய்கையாகுமோ? (ஆகாது என்றபடி).

'அலறிய மெய்க்குரல் - 'ஹா ஸீதே! லக்ஷ்மணா' என்றது, பெருமாள் உரைத்தது என இராவணன் சொன்னான்' என்பது **பழைய உரை.** இத னால் இராமன் இறந்தானென்பதை இராவணன் குறிப்பித்தான்.

(பி-ம்.) 3. நாட்டுங் காலத்து நல்: நல்வளத் தின்பயன்.
4. ஊட்டுங் காலமற் றிகழ்வதென் னாக்கமோ. (111)

441. *தக்க தென்னுயிர் வீடுறத் தாழ்கிலாத்*
*தொக்க செல்வந் தொலையு மொருத்திநீ*
*புக்கு யர்ந்த தெனும்புகழ் போக்கிவே*
*றுக்க தென்னு முறுபழி கோடியோ.*

'தக்கது என் உயிர் வீடு உற - எல்லாவிதத்திலும் சிறந்த என் உயிர் அழிய, தாழ்கிலா தொக்க செல்வம் - குறைவடையாது திரண்ட (யான் அடைந்துள்ள) செல்வம், தொலையும் - வீணே அழிந்து போகும்; ஒருத்தி நீ புக்கு உயர்ந்தது எனும் புகழ் போக்கி - நீ ஒருத்தி என் மனை யில் புகுந்து என் குலம் உயர்வுற்றது என்று சொல்லும் புகழை நீக்கி, வேறு உக்கது - மாறாக அழிவுற்றது; என்னும் - என்று உலகம் சொல்லக் கூடிய, உறுபழி - பெரும் பழியை, கோடியோ - நீ கொள்வாயோ?

'நீ என்பால் அருள்புரியாயேல் யான் இறப்பேன்; யான் இறந்தால் என் தவத்தாலும் ஆற்றலாலும் யான் தேடிய இவ்விலங்கைச் செல்வம் அழியும்; நீ என்பால் வந்து என் செல்வத்தை வளர்த்தாய் என்று புகழ்ச் சொல்லைக்கொள்ளாது, பெருஞ் செல்வத்தை அழித்தாய் என்று உலகம் கூறும் பெரும் பழியை ஏற்றுக்கொள்வாயோ' என்று இராவணன் கூறியது, 'என் செல்வமும் வாழ்நாளும் நிலைப்பது உன்னால்' என்பதைப் பிராட்டியிடம் உறுதிபடக் கூறியது ஆகும். உறுபழி - பெரும்பழி ''உறுமீன் வருமளவும் வாடியிருக்குமாங் கொக்கு' (மூதுரை. 16).

(பி-ம்.) 1. மிக்க வென்னிடர் விட்டக லாதெனிற்: வீடெனிற் ருழ்கிலா (து).
2. செல்வ முலேயும்; செல்வந் தொலேக்கும்; செல்வந் தொலேய.
3. புக்கு யர்ந்த பெரும்புக ழோடும் யான்.
4. உறுபுகழ்; உறுமொழி. (112)

442. தேவர் தேவியர் சேவடி கைதொழும்
தாவின் மூவுல கின்றனி நாயகம்
மேவு கின்றது நுன்கண் விலக்கினே
ஏவ ரேழையர் நின்னி னிலங்கிழாய்.

'இலங்கிழாய் - விளங்கும் அணிகளுடைய பெண்ணே! தேவர் தேவியர் - தேவர்களும் அவர்களுடைய தேவியர்களான தெய்வமகளிரும், சேவடி கை தொழும் - உனது சிவந்த பாதங்களேக் கைகூப்பி வணங்கும் படியாக, தாவு இல் மூ உலகின் தனி நாயகம்- கேடில்லாத மூவுலகங் களுக்கும் ஒப்பற்ற தனி ஆட்சி, நுன்கண் மேவுகின்றது - உன்பால் வந் தடைகின்றதை, விலக்கினே - அதனே வேண்டாம் என்று நீ விலக்கு கின்ருய்; நின்னின் ஏவர் ஏழையர் - உன்னேப் போல யாவர் அறிவில்லாத பிறர் இருக்கிருர்கள்?

'நுன் கண் விலக்கினே - உன் கண்ணுலே பார்த்து என்னேக் கெடுத் தாய்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 2. மூவுல குந்தனி. 3. நின்கண்.
4. யாவ ரேழையர்; யாவர் நின்னி லறிவில ரேந்திழாய். (113)

443. குடிமை மூன்றுல குஞ்செயுங் கொற்றத்தென்
அடிமை கோடி யருளுதி யாலெனு
முடியின் மீது முகிழ்த்துயர் கையினன்
படியின் மேற்படிந் தான்பழி பார்க்கலான்.

பழி பார்க்கலான் - பழி என்பதைச் சிறிதும் சிந்தியாத இராவணன், (இவ்வாறு கூறி, மேலும்), 'மூன்று உலகும் குடிமை செய்யும் - மூன்று உலகத்தவரும் (தனக்குக் கீழ் அடங்கிய) குடிகளாக வைத்து ஆட்சி புரியும், கொற்றத்து - வலிமை அல்லது வெற்றியையுடைய, என் அடிமை கோடி - என்னே அடிமையாகக் கொண்டு, அருளுதி - எனக் கருள் (நீ) புரிவாயாக;' எனு - என்று கூறி, முடியின் மீது முகிழ்த்து உயர் கையினன் - தன் தலேகளின் மீது குவித்து உயர்ந்த கைகளே யுடையவனுய், படியின் மேல் படிந்தான் - தரைமீது விழுந்து வணங் கினுன். ஆல்: அசை.

குடிமை செய்தல்: ஆரண்ய. சடாயுவுயிர். 31. குடிமை பரம் பரையாய்ச் செய்யும் அடிமை; இதனைக் கொத்தடிமை என்பர். பல சுவடிகளில் இதோடு வந்தனைப்படலம் முற்றும் என்றும், இதனை அடுத்து நிந்தனைப் படலம் என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. வேறு சிலவற்றில் இதன் பின்வருவது உருக் காட்டுப் படலம் என்று குறிக்கப் பெற்றுள்ளது.

(பி-ம்.) 2. அடிமை கொண்டி தருளுதி.
4. படியின் மேல்விழுந் தான். (114)

வேறு

## பிராட்டியின் மறுமொழிகள். 444-65

444. *காய்ந்தன சலாகை யன்ன வுரைவந்து கதுவா முன்னம்*
*தீந்தன செவிக ளுள்ளந் திரிந்தது சிவந்த சோரி*
*பாய்ந்தன கண்க ளொன்றும் பரிந்தில ளுயிர்க்கும்* பெண்மைக்
*கேய்ந்தன வல்ல வெய்ய மாற்றங்க ளினைய சொன்னாள்.*

காய்ந்தன சலாகை அன்ன - (நெருப்பிலே பழுக்கக்) காய்ந்த இரும்புக்கம்பி போன்ற, உரை-(இராவணனின்) கடுஞ் சொற்கள், வந்து கதுவா முன்னம்-(தன்னிடம்) வந்து பற்றிக் கொள்ளு வதற்கு முன்னே, செவிகள் தீந்தன - (பிராட்டியின்) காதுகள் நெருப்பாற் சூடுண்டன போலக் கருகிப் போயின; உள்ளம் திரிந்தது - (அவள்) மனம் வெப்பம் மேலிட்டு மாறுபா டடைந்தது; சிவந்த சோரி கண்கள் பாய்ந்தன-சிவப்பான குருதி கண்களிற் பாய்ந்தன; உயிர்க்கும் ஒன்றும் பரிந்திலள்-தன் உயிரைக் காத்துக் கொள்ளும் பொருட்டுச் சிறிதும் அவள் அநுதாபம் கொள்ளாதவளாய், பெண்மைக்கு ஏய்ந்தன - பெண் தன்மைக்குப் பொருந்தினவையும், வல்ல - சிறப்பானவையுமான, வெய்ய இனைய மாற்றங்கள் - சொல்லளவில் கடுமையானவையுமான இத்தகைய சொற்களைப் (பின் கண்ட வாறு) சொன்னாள்.

பெண்மைக்கு ஏய்ந்தன அல்ல வெய்ய மாற்றங்கள் எனக்கொண்டு, பிராட்டி பெண் தன்மைக்குப் பொருந்தாக் கொடுஞ் சொற்கள் கூறினாள் என்று உரை கூறுவாரும் உளர். 'உண்டான பெண்கள் சொல்லுந் தரவல்லாதன வாகிச் சுத்த வீரவான்கள் சொல்வது போல' என்பது பழைய உரை. இது முதல் 465 ஆம் செய்யுள்வரை, பிராட்டி கூறும் உரைகள். அவை இராவணனுக்கு அவள் கூறும் அறவுரைகளாகக் கொள்வதும் உண்டு.

சில சுவடிகள் இச் செய்யுள் முதல், **உருக்காட்டுப் படலம்** என்றும், வேறு சில, **திருவாழி காட்டுப் படலம்** என்றும் கூறும்.

(பி-ம்,) 3. **கண்க ளென்றும் பரிந்தில ளுயிர்க்குப் பெண்மை: ஒன்றிப், பரய்ந்தில வுயிர்ப்பும்.**

4. **அல்லால் வெய்ய; அல்ல வெய்ய; சிற்றங் கொண் டினைய.** **(115)**

445. ***மல்லொடு திரடோண் மைந்தர்***
***மனம்பிறி தாகும் வண்ணம்***
***கல்லொடுந் தொடர்ந்த நெஞ்சங்***
***கற்பின்மேற் கண்ட துண்டோ***
***இல்லொடுந் தொடர்ந்த மாதர்க்***
***கேய்வன வல்ல வெய்ய***
***சொல்லொடுந் தொடர்கை கேட்டுத்***
***துரும்பினை நோக்கிச் சொல்வாள்.***

இல் ஒடும் தொடர்ந்த மாதர்க்கு - இல்லறத்தோடு பிணைந்துள்ள குல மாதர்களுக்கு, ஏய்வன அல்ல - பொருந்துவன அல்லாத, வெய்ய- கொடுமை வாய்ந்த, சொல்லொடும் தொடர்கை கேட்டு - சொற் களோடும் பொருந்திய (இராவணனின் தீய) வார்த்தைகளைக் கேட்டு, துரும்பினை நோக்கி - தன் எதிரே ஒரு துரும்பைப் (போட்டு) அதனை நோக்கி, சொல்வாள் - (பின்வருமாறு பிராட்டி) பேசுவாளாயினள்: (ஆதலின்) மல் ஒடும் திரள் தோள் மைந்தர் - வலிமையுடன் திரட் சியுங் கொண்ட தோளினையுடைய ஆடவரான வீரர்களின், மனம் பிறி தாகும் வண்ணம் - தீய மனம் மாறி நல்வழியில் செல்லும்படிச்செய்வ தற்கு, கல்லொடும் தொடர்ந்த நெஞ்சம் - கல்லைப்போல உறுதியான நெஞ்சினைக்கொண்ட, கற்பின் மேல் - கற்பினைக்காட்டிலும், கண்டது உண்டோ - (வேறொன்று) யாரேனும் கண்டது உள்ளதோ? (இல்லை என்றபடி).

இச்செய்யுள் கவிக்கூற்று. பிராட்டி, இராவணன் முன் ஒரு துரும்பைப் போட்டு, அதை நோக்கிக் கூறியதாகவே **வான்மீகமும்** கூறுவது காண்க. துரும்பைப் போட்டு அதனோடு கூறியது, அவ்விராவணனை முன்னிலைப் படுத்திப் பேச விருப்பமின்றியும், அவனைத்தான் ஒரு துரும்பாக மதித் தும் என்று கொள்ளத் தக்கதாம். கல்லொடும் - ஒடு என்பது இங்கு உவமைப் பொருளில் வந்தது. 'ஒரு பெண்ணை விரும்பிவந்தவன் மனத்தை முறிக்கிறதற்கு நெஞ்சு திடமாயிருக்கிறதற்குக் கற்பல்லாமல் வேறொன்று மில்லை' என்பது **பழைய உரை.**

(பி-ம்.) 1. மல்லடு திரடோள். வஞ்சன்; மல்லொடுந் தொடர்தோள்: பிறிதாகும் வன்மை. 2. தொடர்ந்து.
3. இல்லொடு பிறந்த: தொடர்ந்த மாக்க ளியைந்தன வல்லால் நீயும்: மாதர்க் கியைந்தன வல்ல.
4. சொல்லிது தெரியக் கேட்டி; சொல்லது தெளியக் கேட்டி: சொல்லொடு தொடரேல் கேட்டி. (116)

446. மேருவை யுருவ வேண்டின் விண்பிளந் தேக வேண்டின்
ஈரேழு புவனம் யாவும் முற்றுவித் திடுதல் வேண்டின்
ஆரியன் பகழி வல்ல தறிந்திருந் தறிவி லாதாய்
சீரிய வல்ல சொல்லித் தலைபத்துஞ் சிந்து வாயோ.

அறிவு இலாதாய் - அறிவற்றவனே! ஆரியன் பகழி - இராமபிரானின் அம்பு, மேருவை உருவவேண்டின் - மேருமலையைத் துளைத்துச் செல்ல விரும்பினாலும், விண் பிளந்து ஏக வேண்டின் - ஆகாயத்தைப் பிளந்து கொண்டு அப்பால் செல்ல வேண்டுமானாலும், ஈர் எழு புவனம் யாவும் - பதினான்கு உலகங்கள் எல்லாவற்றையும், முற்று வித்திடுதல் வேண்டின் - அழித்துவிடுதலை எண்ணினாலும், வல்லது - வல்லமையுடையதாகும்; அறிந்திருந்து - இதனை நீ தெரிந்திருந்து, சீரிய அல்ல சொல்லி - சிறப்பில்லாத தீய வார்த்தைகளை (என்னிடம்) கூறி, தலை பத்தும் சிந்துவாயோ - உன் தலைகள் பத்தும் அறுந்து கீழே சிந்தி விழும்படிச் செய்துகொள்வாயோ?

ஆரியன் - யாவரும் பூசிக்கத் தக்கவன்; இங்கு இராமபிரானைக் குறித்தது. அறிந்திருந்து என்றது, முன் தாடகை, விராதன், கரதூடணதியர், மாரீசன் முதலிய அரக்கர்கள் இராமபிரானால் அழிந்ததை நினைப்பூட்டியதாகும். தலைபத்தும்: உம்மை, ஒன்றும் ஒழியாது, எல்லாவற்றையும் என்பதைக் குறிப்பிட்ட முற்றும்மை. மேருவையுருவ வேண்டின்; ஒப்பு. ஆரணிய. சடாயுவுயிர். 62.

(பி-ம்.) 1. விண்கிழித் தேக வேண்டில்.
2. ஈரேழு புவன மூன்றும்: புவன முற்றும்: புவன மற்றும்: புவன முற்று மற்றும்வித் திடுதல் வேண்டில்; புவன மெல்லா மெரிப்படுத் தேக வேண்டில்.
4. சீரிய வல்லை சொல்லித்: சிந்து வாயே. (117)

447. அஞ்சினை யாத லாலே யாண்டகை யற்ற நோக்கி
வஞ்சனை மானென் றேவி மாயையால் மறைத்து வந்தாய்
உஞ்சனை போதி யாகில் விடுதியுன் குலத்துக் கெல்லாம்
நஞ்சினை யெதிர்ந்த போது நோக்குமே நினது நாட்டம்.

'அஞ்சினை ஆதலால் - நீ இராமபிரான் எதிர்வர அச்சங் கொண்டாய் ஆதலால், வஞ்சனைமான் ஒன்று ஏவி - வஞ்சத் தன்மையான ஒரு மானை ஏவி விட்டு, ஆண்டகை அற்றம் நோக்கி-இராமபிரான் இல்லாத சமயத்தை எதிர்பார்த்து, மாயையால் மறைத்து வந்தாய்-உன் உருவத்தை நீ கற்ற மாயை வித்தையால் மறைத்துக்கொண்டு (ஒரு துறவி வடிவத்தோடு என்னை அபகரித்துச் செல்ல) வந்தாய், உஞ்சனை போதி ஆகில் - நீ உய்திபெற்றுப் பிழைத்துப் போக விரும்பினால், விடுதி - என்னை இராமபிரானிடம் கொண்டு போய் விட்டுவிடு; உன் குலத்துக்கெல்லாம் நஞ்சினை எதிர்ந்த போது - உன் குலமாகிய அரக்கர்களுக் கெல்லாம் விடம் போன்ற (இராமபிரானை) நீ எதிரிட்டுப் போர் செய்யும் போது, நோக்குமே நினது நாட்டம் - உன் கண்கள் நேர் நின்று (அவனை) பார்க்கும் திறமையுடையவை ஆகுமோ? (ஆகா என்றபடி). ஏ: அசை.

'உன் குலத்துக் கெல்லாம் நஞ்சு' என்பதற்குச் சீதை எனப் பொருள் கொள்வதும் ஒன்றும்; 'சனகி யெனும் பெரு நஞ்சுன்னைக் கண்ணாலே நோக்கவே போக்கியதே உயிர்' (உயுத்த. இராவணன் வதைப். 220.) 'நோக்குமோ நினது நாட்டம்'; ஒப்பு. 'பெருமாள் கண் வட்டத்திலே நின்று நீ தப்புவாயோ? புலி முன்னே நிற்கும் நாய் போல பதினாலாயிரம் பேரைத் தனியே நின்று கொன்று சூறையாடிய தனி வீரத்துக்குப் பிரதிக்கிரியையாக மாரீசனைக் கொண்டு நீ பண்ணின கிரித்திரிமத்திலே கண்டிலோமோ? அவ்வாண்புலிகள் நாற்றங் கெட்டு நின்றால் பின்பன்றோ உன் வெற்றியும் ஆண்பிள்ளைத் தனமும் காணலாம்' (பெரிய வாச்சான்பிள்ளைத் தனிச்லோக வாக்கியங்கள்). நோக்குமோ- என்னை நோக்குமோ? இறந்து படுமே என்றும் பொருள் கொள்வர். அற்றம் - தொழிற் பெயர்; அற்றம் - இல்லாத சமயம்; 'அருந்தவன் தந்தையை யற்ற நோக்கியே' (பால. திருவவதாரப். 41.) உஞ்சனை உய்ந்தனை என்பதன் போலி,

(பி-ம்.) 1. அஞ்சினை யாத லானன் றூரிய னற்ற நோக்கி: ஆத லாலாண் டாரிய னித்தல் நோக்கி, ஆத லாலே யாண் டொரீஇ யற்ற: ஆரியன் பிரிந்து போக. 2. மறைத்து வைத்தாய். 3. போதி யாயின். 4. நோக்குமோ நினது; நஞ்சினை நயந்து நோக்கக் கடவதோ வுனது நாட்டம். (118)

448. *பத்துள தலையுந் தோளும் பலவுள பகழி தூவி*
*வித்தக வில்லி னாற்குத் திருவிளை யாடற் கேற்ற*
*சித்திர விலக்க மாகு மல்லது செருவி லேற்கும்*
*சத்தியை போலு மேனுட் சடாயுவாற் றரையின் வீழ்ந்தாய்.*

மேல் நாள் - முன்னே (நீ என்னைக் கவர்ந்து வந்த போது), சடாயு வால் தரையில் வீழ்ந்தாய் - சடாயுவால் தாக்கப் பெற்றுத் தரையில் விழுந்தவனே! பத்து உள தலையும் - உனது பத்தாக உள்ள தலைகளும், தோளும் - இருபது தோள்களும், பலவுள பகழி தூவி - பற்பல வகை யாயுள்ள அம்புகளைப் பரக்க ஏவி, வித்தக வில்லினுக்கு - அதிசயிக்கத் தக்க (கோதண்டம் என்னும்) வில்லையுடைய இராமபிரானுக்கு, திரு விளையாடற்கு ஏற்ற-திருவிளையாட்டுப் போன்ற செய்கைக்குத் தக்கன வான, சித்திர இலக்கம் ஆகும் அல்லது - அதிசயிக்கத்தக்க குறியாக அமையும் அல்லாமல், செருவில் ஏற்கும் - போரில் அவரோடு எதிர்த்து நிற்கத்தக்க, சத்தியை போலும்-(நீ) வலிமையுடையை போலும்! (வலி மையுடையை அல்லை என்பதாம்).

வித்தகவில் - அரிய சிறப்பமைந்த வில்; வித்தகம் - சாமர்த்தியமும் ஆம்; 'வித்தகமும் விதி வசமும்' (பால. கார்முக. 19). திருவிளையாடல் - உன்னோடு போர் புரிதல் இராமபிரானுக்கு ஒரு விளையாட்டுச் செயலே ஆகும் என்பதாம்; 'கூனி கூன்போக வுண்டை செறித்தபோ தொத்த தன்றிச் சினவுண்மை தெரிந்தில்லை' உயுத்த, கும்பகருணன். 17) என்று இராவணன் கூறிய வாற்றாலும், 'இராவண வேட்டம் போய்மீண் டெம் பிரா னயோத்தி யெய்தி' (உயுத்த; மீட்சிப். 305) என்றமையாலும் விளக்கமாகும். 'சித்திர விலக்கம்' என்றது பத்துத் தலைகளும் இருபது கைகளும் உடைய அதிசய உருவம் உடைமைபற்றி. சித்திரம் - அதி சயம்; 'சித்திரமிது வொப்பது' (பால. கார்முகப். 15) 'சித்திர விலக்கம்- ஓவியம்போல் ஓரிலக்காகி நிற்பை' என்பது பழைய உரை. இராவணன் சடாயுவால் அடிபட்டு விழுந்தது; ஆரண்ய சடாயுவுயிர். 126.

(பி-ம்.) 1. பகழி தூவும்: பகழி யேவி: பகழி தூவ.
2. திருவிளை யாட்டுக் கேற்ற.
3. விளக்க மாவ தல்லது: விலக்க மாவ தல்லது.
4. சத்தியை போலின் மேனாள்: சடாயுவைத் தரையில் வீழ்த்தாய்: அந்நாட் சடாயு. (119)

449. *தோற்றனை பறவைக் கன்று துள்ளுநீர் வெள்ளம் சென்னி*
*ஏற்றவன் வாளால் வென்று யின்றெனி னிறத்தி யன்றே*
*நோற்றநோன் புடைய வாணாள் வரமிவை நுனித்த வெல்லாம்*
*கூற்றினுக் கன்றே வீரன் சரத்துக்குங் கூறிற் றுண்டோ.*

அன்று பறவைக்குத் தோற்றனை - நீ அன்று பறவையாகிய சடாயு வுக்குத் தோற்றுக் கீழே விழுந்தாய்; துள்ளு நீர் வெள்ளம் - (செருக் கினால்) துள்ளிக் குதித்துக் கொண்டு வரும் நீர்ப் பெருக்கையுடைய கங்கையை, சென்னி ஏற்றவன் - தன் தலைமீது (சடையிலே) ஏற்று

அடக்கிக் கொண்ட சிவபெருமான், வாளால் வென்ருய் - (உனக்கு அளித்த) சந்திரஹாசம் என்னும் தெய்வத்தன்மையுடைய வாளினுல் (நீ அந்தச் சடாயுவை அவனது இறகுகளை வெட்டி) வெற்றிகொண் டாய்; இன்று எனின் இறத்தி அன்றே - (அவ்வாள் உன்னிடம்) இல்லை யென்ருல் நீ அன்றே இறந்து போயிருப்பாய்; நோற்ற நோன் புடைய - நீ செய்த தவவிருதங்களால் அடைந்த, வாணுள் வரம் இவை நுனித்த எல்லாம் - (முக்கோடி) வாழ்நாள் (மானிடர் வானரம் ஒழிந்தவர்களால் அழிக்கப் பெருத) வரம் முதலிய நீ தேடிப் பெற்றவை யெல்லாம், கூற்றினுக்கு அன்றே கூறிற்று - யமன் உன்னை அணுகாத தற்கு அல்லவா கூறப்பட்டது; வீரன் சரத்துக்கும் கூறிற்று உண்டோ - இராமபிரான் பாணமும் அணுகாது என்று கூறி உனக்கு வரம் அளித்த துண்டோ? (இல்லை யென்றபடி.)

சிவபிரான் வாளை இராவணன் பெற்றிராவிட்டால் அவன் சடாயு வால் இறந்தேயிருப்பான் என்பதும், இராவணன் பெற்ற வரன்களெல் லாம் அவனை யமன் அணுகாதிருக்கக் குறித்தவையே யன்றி இராம பிரான் அம்பு அணுகாதிருக்க அன்று என்பதும், இராமன் அம்பு கூற்றினும் ஆற்றல் மிக்கது என்பதும் அறியற்பாலனவாம்.

இச் செய்யுள் முதல் 456 ஆம் செய்யுள் முடிய உள்ளவை பல சுவடிகளில் பலவிதமாக வரிசை மாறி அமைந்துள்ளன.

(பி-ம்.) 3. வாணுள் வாழ்வினைத் துணித்த வெல்லாம்.
4. சரத்துக்குங் குறித்த துண்டோ: குழைத்த துண்டோ: கூற்றி னுக் கமைய வீரன் சரமினிக் கொடுக்குங் கண்டாய். (120)

450. பெற்றுடை வரனும் நாளும் பிறந்துடை யுரனும் பின்னும்
மற்றுடை யெவையுந் தந்த மலரவன் முதலோர் வார்த்தை
விற்ரெடை யிராமன் கோத்து விடுதலும் விலக்குண் டெல்லாம்
இற்றுடைந் திறுதன் மெய்யே விளக்கின்முன் னிருளுண் டாமோ

பெற்றுடை வரனும் நாளும் - நீ பெற்றுள்ள வரன்களும் வாழ் நாளும், பிறந்து உடை உரனும் - நீ (அரக்கர் குலத்தில் பிறந்து அப் பிறப்பால்) அடைந்த வலிமையும், பின்னும் மற்று உடை எவையும் - பிறகு நீ வெற்றி முதலிய பிறவற்ருல் அடைந்த எல்லாவற்றையும், தந்த - உனக்கு அளித்த, மலரவன் முதலோர் வார்த்தை - பிரமதேவன் முதலா னோர் சொன்ன உறுதி மொழிகளால் ஆனவை, இராமன் வில் தொடை கோத்து விடுதலும் - இராமபிரான் தன் வில்லில் அம்பைப் பூட்டி விடும் அளவில், எல்லாம் விலக்கு உண்டு - அவ்வரன்கள் முதலாயின பாது காவல்கள் யாவும் விலக்கப்பட்டு, இற்று உடைந்து இறுதல் மெய்யே -

கட்டழிந்து உடைபட்டு அழிதல் திண்ணமே யாகும்; விளக்கின் முன் இருள் உண்டாமோ-விளக்குக்கு முன்னே இருள் இருக்குமோ? (இராது என்றபடி).

விளக்கு இராமபாணத்துக்கும், இருள் இராவணன் பெற்ற வரன்கள், ஆயுள் முதலிய வற்றிற்கும் உவமைகள். இராமபிரான் கணையின் முன் இராவணன் வாழுள், வரம் வலி முதலியன அழியும் என்பது; 'புரம் பற்றிய போர்விடை யோனருளால், வரம்பெற்றவு மற்றுள விஞ்சைகளும், உரம்பெற் றனவா வனவுண் மையினேன், சரம்பற்றிய சாபம் விடுந்தனையே' (ஆரண்ய. சடாயுவுயிர். 101.) என்ற சடாயு கூற்றினும் வலியுறுத்தப் பெற்றது காண்க. விளக்கின் முன் இருள்; நாலடி 3 - 4; கலித்: 105: 37-8. விளக்கின் முன் இருள் உண்டாமோ என்றது எடுத்துக் காட்டு உவமை. இராமனை விளக்காகவும் இராவணன் முதலிய அரக்கர்களை இருளாகவும் கொள்ளலும் ஆம்; ஒப்பு. 'துன்னிரு ளிடையதோர் விளக்கிற் றேன்றினன்' (ஆரண்ய. கரன்வதைப். 114.) முன் செய்யுளில், இராமபிரானின் சரத்துக்கு வரன்களினுல் விலக்கு அமையவில்லை என்று கூறி, அவ்வரம் முதலியவற்றையும் அழிக்கும் ஆற்றல் உள்ளது அச்சரம் என்பது இங்கே கூறப்பட்டது. இச் செயல்களால் வரவலிமையால் இராவணன் செருக்குற்றிருத்தல் தகாது என்று பிராட்டி அவனுக்கு அறிவுறுத்தினுள் என்பதுமாம்.

(பி-ம்.) 1. பெற்றுடை வாளு நாளும்; பெற்றுநீ வாழு நாளும்: பிறந்துள வலியும் பின்னும்.
2. மற்றும்யா தெவையு மீசன் மலரய னென்போர் வார்த்தை.
3. விடுத்தலும் விலக்குண்.
4. இற்றிடைந் திறுதல்; இற்றுடைந் திடுதல்; அற்றிடைந்(து:) இருளு முண்டோ. (121)

451. *குன்றுநீ யெடுத்த நாடன் சேவடிக் கொழுந்தா லுன்னை*
*வென்றவன் புரங்கள் வேவத் தனிச்சரந் துரந்த மேரு*
*என்றுணைக் கணவ னுற்றற் குரனிலா திற்று வீழ்ந்த*
*அன்றெழுந் துயர்ந்த வோசை கேட்டிலை போலு மம்மா.*

நீ குன்று எடுத்த நாள் - நீ கயிலை மலையை எடுத்த அன்று, தன் சேவடிக் கொழுந்தால் - தன் சிவந்த பாதத்தின் நுனிவிரலால், உன்னை வென்றவன் - உன்னை அம்மலையின் அடியில்வைத்து அழுத்தி வென்ற சிவபெருமான், புரங்கள் வேவ - முப்புரங்கள் வெந்து நெருப்பால் எரிந்து அழியும்படி, தனி சரம் துரந்த - ஒப்பற்ற பாணத்தை விடுவதற்கு இடமாய் அமைந்த, மேரு - மேரு போன்ற திரியம்பகம் என்ற சிவ

தனுசு, என் துணை கணவன் ஆற்றற்கு - என் வாழ்க்கைக்குப் பெருந் துணையாகிய என் கணவனான இராமபிரான் வலிமைக்கு, உரன் இலாது- வலி இல்லாமல், இற்று வீழ்ந்த அன்று - (அவ்வில்) முரிந்து வீழ்ந்த போது, எழுந்து உயர்ந்த ஓசை - எழுந்து ஓங்கி எங்கும் பரவிய பேரொலியை, கேட்டிலை போலும் - நீ கேட்கவில்லை போலும். அம்மா: வியப்பை உணர்த்த வந்த இடைச்சொல்.

சேவடிக் கொழுந்து: கொழுந்து - நுனி; பால. திருவவதாரப். 59; உலாவியற். 50. இராமபிரானால் ஒடிந்து விழுந்தபோது அந்தச் சிவபிரான் வில்லின் ஓசை நீ கேட்கவில்லை போலும். கேட்டிருந்தால் பெருமானின் வில் திறமையை அறிந்து நீ என்னை இங்கு அபகரித்து வந்து இவ்வாறு புன்மொழி பகரமாட்டாய் என்று பிராட்டி கூறினாள். அம்மா என்ற இடைச்சொல் இராவணனது ஆராயாது செய்யும் அம்மூடச் செயலுக்கு இரங்கியதாகவும் பொருள் படநின்றது என்னலாம். இராமபிரான் ஒடித்த வில்லைச் சிவபிரான் திரிபுரம் எரிக்கக் கொண்ட வில்லாகிய மேருமலை எனக் கூறியது: மேருப்போன்ற வலியுடையது என்றும், மேரு வாகிய வில்லைப்போல் இதனையும் சிவபெருமான் வில்லாகக் கொண்ட சிறப்புப் பற்றியும் என்க; பால. பரசுராமப், 26. உரன்; உரம் என்பதில் போலி. வில்லொடிந்து விழுந்த போது உண்டான ஓசை; பால. கார்முகப், 35; எழுச்சிப். 5; பரசுராமப், 34.

(பி-ம்.) 1. நாட்டன் சேவடிக். 2. வேறு தனிச்சரந்.
3. இற்று வீழ்ந்தது.
4. அன்றுயர்ந் தெழுந்த: போலு மையா; போலு மேயால். (122)

வேறு

452. மலையெடுத் தெண்டிசை காக்கு மாக்களை
நிலைகெடுத் தேனெனு மாற்ற நேருநீ
சிலையெடுத் திளையவ னிற்கச் சேர்ந்திலை
தலையெடுத் தின்னமு மகளிர்த் தாழ்தியோ.

'மலை எடுத்து-கயிலை மலையை நீ எடுத்து, எண்திசை காக்கும் மாக்களை - அஷ்டதிக்குகளிலும் நின்று அவற்றைப் பாது காத்து வரும் யானைகளை, நிலை கெடுத்தேன் எனும் மாற்றம் நேரும் நீ - அவை நிலை கெட்டுத் தோற்றோடும் படிச்செய்தேன் என்று பெருமைப்படப் பேசிக் கொள்ளும் நீ, இளையவன் சிலை எடுத்து நிற்க சேர்ந்திலை - இளைய பெருமானான இலக்குவன் வில்லை ஏந்தி என்னைக் காவல் புரிந்து நிற்கும் போது (நீ) வரவில்லை; தலை எடுத்து இன்னமும் மகளிர்த் தாழ்தியோ - (அத்தகைய ஆண்மை அற்ற நீ உன்) பத்துத் தலைகளையும் எடுத்துக் (குனிந்து கொண்டு) பெண்களை வணங்கி நிற்பாயோ?

இளையவன் எதிர் நிற்க அஞ்சி ஒளிந்து வந்து என்னை அபகரித்து வந்த நீ, அந்த இராம லக்ஷ்மணர்களைப் போரில் எதிர்கண்டால் உன் ஆண்மையற்று வெட்கிப் பெண்கள் போலத் தலைகளைக் குனிந்து கொள்வாயோ என்பதும் ஆம்; ஆண்மை இழந்து காமத்தால் நிலைகெட்டு மகளாகிய தன்னிடம் வணங்கி நிற்பதையும் இழித்துக் கூறியதுமாம். இராவணன் இலக்குவனுக்கு அஞ்சினமையைப் பிராட்டி முன்பும் சுட்டியது: ஆரண்ய. சடாயுவுயிர். 84. மகளிர்த் தாழ்த்தியோ என்றதனால் நீ தாழத்தக்கவன் இராமபிரானை புருஷோத்தமனே என்று குறிப்பித்த படியும் ஆம். தலையெடுத்து என்பதற்கு வீரமற்றவனான நீ ஆண்களைப் போல நிமிர்ந்து நின்று என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. திசை தாங்கு மாக்களை.
2. நிலையெடுத் தேனெனும்; ஆற்ற நேருநீ: ஆற்ற னெஞ்சநீ.
3. இளையவன் றிறத்துச் சேர்ந்திலை.
4. இன்னமுந் தளிரத் தாழ்த்தியோ; இன்னமுந் தாளிற் றாழ்தியோ; இன்னமும் புவியிற் றாழ்தியோ. (123)

453. *ஏழைநீ யொளித்துறை யின்னி டத்தென*
*வாழியெங் கோமக னறிய வந்தநாள்*
*ஆழியு மிலங்கையு மழியத் தாழுமோ*
*ஊழியுந் திரியுநின் னுயிரொ டோயுமோ.*

'ஏழை-அறிவில்லாத மூடனே! நீ ஒளித்து உறை - நீ ஒளிந்து வாழும் இடம், இன் இடத்து என-இன்ன இடத்தில் உள்ளது என்று, வாழி எம் கோமகன் அறிய வந்த நாள் - உலகுக்கு நல் வாழ்வை அளிக்கும் எங்கள் சக்கரவர்த்தி குமாரனான இராமபிரான் அறிய வந்த காலத்து, ஆழியும் இலங்கையும் அழிய தாழுமோ-(இந்த இலங்கையைச் சூழ்ந்து தடையாக இருக்கும்) கடலும், இந்த இலங்கையும், அழிந்து போவதோடு அடங்கிப்போமோ? (அடங்காது); நின் உயிரொடு ஓயுமோ-உன் உயிரை ஒழிப்பதோடு ஓய்ந்து போகுமோ? (போகாது); ஊழியும் திரியும்-ஊழிக் காலமும் திரிந்து மாறுபாடு அடையுமே.

ஏழை - அறிவின்மையை குறித்தது, ஒளித்துறை, கரந்துறை போல ஆம். ஊழித் தீயும் இராமபிரான் சினத்திற்கு எதிர் நிற்கும் ஆற்றலில்லாது அழிந்து போகும் என்றும் பொருள் கொள்ளலாம். இனி ஊழியும் திரியும் என்பதற்கு, யுக முடிவுக் காலத்தை எதிர் நோக்கி அடங்கியிருக்கும் தீ முதலியன தம் நிலைமாறித் தோன்றி உலகங்களை அழிக்கும் எனக்கோடலும் அமையும். அடுத்த 454 ஆம் செய்யுளும் இக்கருத்தை வலியுறுத்துவது காண்க.

(பி-ம்.) 1. ஏழைநின் ஞெளித்துறை; ஏழையா ஞெளித்துறை; ஏழைநீ யிருக்குறு மிடமி தாமென: ஒளித்துறை யின்ன தாமென.
2. ஆழியெங் கோமகன்: அறிந்து வந்தநாள்; அறிந்து வந்த போ(து)
3. ஆழிசூ ழிலங்கையோ டடங்குமோ சரம்; மறியத் தாழுமோ;
4. ஊழியுந் தீயுமுன். (124)

454. *வெஞ்சின வரக்கரை வீய்த்தும் வீயுமோ*
*வஞ்சனை நீசெய வள்ளல் சீற்றந்தான்*
*எஞ்சலி லுலகெலா மெஞ்சு மெஞ்சுமென்*
*றஞ்சுகின் றேனிதற் கறமுஞ் சான்றரோ.*

'வஞ்சனை நீ செய-நீ என்னை வஞ்சத்தால் அபகரித்து வந்ததான ஒரு தீவினையைச் செய்ய, வள்ளல் சீற்றம்தான் - அதனால் இராமபிரானுக்கு உண்டாகும் கோபம், வெம் சின அரக்கரை வீய்த்தும் வீயுமோ - கொடிய சினத்தையுடைய அரக்கர் சமூகத்தை அழித்தும் அதனோடு அக்கோபம் அழிந்து விடுமோ? எஞ்சல் இல் உலகு எலாம் - குறைவு படாத உலகங்கள் முழுவதும், எஞ்சும் எஞ்சும் என்று - குறைவு பட்டழியும் என்பது உறுதி என்று நினைத்து, அஞ்சுகின்றேன் - பயப்படுகின்றேன்: இதற்கு அறமும் சான்று - அவ்வாறு அழியும் என்பதற்கு அறநூல்களே ஏற்ற எடுத்துக் காட்டாகும். அரோ: அசை.

எஞ்சுதல் - அற்றொழிதல்; 'வழியெஞ்ச லெஞ்ஞான்று மில்' (குறள். 44.) எஞ்சும் எஞ்சும் என்ற அடுக்கு நிச்சயப் பொருளைக் குறித்தது. அறம் - அறக்கடவுளும் ஆம். அறமும்: உம்மை உயர்வு சிறப்பு. 'ஏக: பாபீ குருதே பலம் புங்க்தே மஹாஜந:' என்ற வடமொழி வாக்கும் இங்குக் கருதத்தக்கது. அற்பன் ஒருவனால் உலகங் கேடுறுமே என்று பிராட்டி வருந்துகின்றாள் என்க. இராவணன் வஞ்சனை கேட்டு இராமபிரான் சீற்றங் கொண்டது; ஆரண்ய. சடாயு வுயிர். 201-206. அரோ: இங்கு வினைப்பொருளை யுணர்த்துவது மாம்.

(பி-ம்.) 1. வீத்து மீள்வதோ.
4. அஞ்சின னென்பதற் கறமெய்ச் சான்றரோ. (125

455. *அங்கண்மா ஞாலமும் விசும்பு மஞ்சவாழ்*
*வெங்கணாய் புன்றொழில் விலக்க வுட்கொளாய்*
*செங்கண்மா னுன்முகன் சிவனென் றேகொலோ*
*எங்கணா யகனையு நினைந்த தேழைநீ,*

"அம் கண் மா ஞாலமும்-இடமகன்ற பெரிய இவ்வுலகும், விசும்பும்-வானுலகும், அஞ்ச - நடுங்க, வாழ் - வாழ்கின்ற, வெங்கணாய் - கொடியோனே! ஏழை நீ-அறிவில்லாத நீ, எங்கள் நாயகனையும் - எங்கள் தலைவரான இராமபிரானையும், செம்கண் மால்-சிவந்த கண்களையுடைய திருமால், நான்முகன்-நான்கு முகங்களையுடைய பிரமதேவன், சிவன்-சிவபிரான், என்றேகொல்-என்றோ, நினைந்தது - எண்ணிக் கொண்டாய்? புன் தொழில் விலக்க உள்கொளாய்-(ஆதலால் உன் இந்த) இழிசெயலை விட்டுவிடச் சிந்திப்பாயாக.

அங்கண் மா ஞாலம் - அழகிய இடமுடைய பெரிய பூமி; ஞாலம், விசும்பு என்பன இடவாகு பெயர்களாய், அங்கு வாழும் மானிடர்களையும் தேவர்களையும் குறிப்பன. இராவணன் மூவுலகங்களையும் அஞ்ச அடக்கி ஆள்பவனாய் இருக்க, இங்குப் பூமியையும் வானையும் சொல்லி நிறுத்தியது, உபலக்ஷணத்தால் பாதள உலகையும் வருவித்துக் கொள்ள என்க. இராமபிரான் முத்தேவரினும் சிறந்த பரம்பொருளாவர் என்பது: 1117, பால. திருவவதாரப். 137; கடிமணப் 61, 69; உயுத்த. மீட்சிப்; 136. 'விலக்க மேற் கொள்ளாய் - பொல்லாப்புச் செய்யாதே என்றாலும் கேளாய்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 2. **வெங்கணா யுன்றொழில்: வெங்கணாய் நின்வலி விலக்கும் வீறிலாச்; விலக்க மேற்கொளாய்.**
3. **சிவனென் றென்கொலாம்.**
4. **நினைத்த தேழைநீ.** (126)

456. *மானுய ரிவரென மனக்கொண் டாயெனின்*
*கானுயர் வரைநிகர் கார்த்த வீரியன்*
*தானொரு மனிதனால் தளர்ந்து ளானெனில்*
*தேனுயர் தெரியலான் றன்மை தேர்தியால்.*

'இவர் மானுயர் என- இந்த இராமலக்ஷ்மணர்கள் மனிதர்கள் என்று, மனம் கொண்டாய் எனின் - நீ (மதிக்காது) மனத்திலே (தாழ்வான எண்ணம்) கொண்டாய் என்றால், கான் உயர் வரை நிகர் கார்த்தவீரியன் தான் - காடுகளால் உயர்ந்து விளங்கும் பெரிய மூங்கிற் புதரே போன்ற (ஆயிரங் கைகளையுடைய) கார்த்த வீரியார்ச்சுனன் என்பவன்தான், ஒரு மனிதனால்-பரசுராமன் என்ற ஒரு மனிதனால், தளர்ந்துளான் எனில்-சோர்வுற்று அழிந்தான் என்றால், தேன் உயர் தெரியலான் - தேனை மிகுதியும் உடைமையால் சிறப்புற்ற மாலையணிந்த இராமபிரானின், தன்மை - (அந்தப் பரசுராமனையும் வென்று அவன் செருக்கடக்கிய) தன்மையை, தேர்தி - அறிவாயாக. ஆல்: அசை,

மானுயர்: மாநுஷர் என்ற வடசொல்லின் திரிபு: 296, 456; நீலகேசி. 86.

கானில் உயர்ந்து ஓங்கி வளர்ந்துள்ள மூங்கில் புதர்போலப் பல கைகளைக் கார்த்தவீரியன் உடைமையால் அவனுக்குக் கானுயர்வரை உவமையாயிற்று; காடுகளால் உயர்ந்துள்ள மலை எனக் கொண்டு கார்த்தவீரியன் கைகளுக்கு மலைமீது உயர்ந்து விளங்கும் காடுகளில் உள்ள பல மரங்களும், அவன் உடலுக்கு மலையும் உவமையாகக் கொள்ளலும் அமையும். கார்த்தவீரியன் இராவணனை வென்றான்; அக்கார்த்த வீரியனைப் பரசுராமன் என்ற மனிதன் வென்றான்; அப்பரசுராமனை இராம பிரான் வென்றான்; ஆகவே இராமபிரான் பெருமை அறியத்தக்கது என்பது பொருள். இவ்வரலாற்றையே முன்னும் பிராட்டி இராவணனுக்குச் சுட்டிக்காட்டியது; ஆரண்ய. சடாயுவுயிர். 63.

(பி-ம்.) 1. மானுடர்: மனங்கொண் டாயெனிற்.
2. கானுறும் வரை: கானுயர் வாரைநீ காத்த வீரியன்.
3. மனிதனாற் றவத்து ளோரெனில்; தலத்து ளானெனில்.
4. தேனுயர் கொன்றையான்: தேனலர். (127)

457. இருவரென் றிகழ்ந்தனை யென்னின் யாண்டினும்
ஒருவனன் றேயுல கழிக்கு மூழியான்
செருவருங் காலமென் மெய்ம்மை தேர்தியால்
பொருவருந் திருவிழந் தாவி போன்றுவாய்.

'பொருவு அரும் திரு இழந்து ஆவி போன்றுவாய் - ஒப்புமை அற்ற அரிய பெரும் பாக்கியத்தை இழந்து (உன்) உயிரைப் போக்கிக்கொள்ளும் துர்ப்புத்தியுடையவனே! 'இருவர் என்று இகழ்ந்தனை என்னின் - இராம லக்ஷ்மணர் இருவர்தாமே என்று அவர்களை நீ இகழ்வாயானால், யாண்டினும் - எப்பொழுதும், உலகு அழிக்கும் ஊழியான் - (ஊழிக் காலத்தில்) உலகமனைத்தையும் அழிக்கும் பிரளய காலாக்னி ருத்திரனான சிவபிரான், ஒருவன் அன்றே - பிறிதொரு துணையன்றித் தான் ஒருவனாக இருப்பவன் அல்லனோ? செரு வரும் காலம் - இராமபிரானுக்கும் உனக்கும் போர் நிகழும் போது, என் மெய்ம்மை - யான் கூறும் (இந்த) உண்மையை, தேர்தி - தெளிவாய் அறிந்து கொள்வாய். ஆல்: அசை.

ஒருவன் அன்றே உலகு அழிக்கும் ஊழியான் - ஒப்பற்ற இராம பிரானே ஊழிக் காலத்தில் எல்லா உலகங்களையும் அழித்திருக்கும் பிரளய காலாக்னி ருத்திரன் ஆவன் என்னலும் ஆம்; அன்று: அசை;,'கற்பினும் நாணுச் சிறந்தன்று' என்பது போல. இராமபிரானைப் பிரளய காலாக்னி ருத்திரனாகக்கொண்டு வழிபடும் மந்திரங்களும், வழிபாட்டு முறைகளும் உண்டு. முன் செய்யுளில் இராமன் மானிடன் என்று இகழப்படாமைக்கும், இச்செய்யுளில் துணையற்றவன் என்று இகழப்படாமைக்கும் கார

ணங்கள் காட்டப்பெற்றன. மானிடர் என்றும், இருவரே என்றும் இகழ்தல் பொருந்தாது என்பதை இராமபிரானே, சூர்ப்பணகையிடம், 'ஈண்டிருவர் மானிடரென்னுது வல்லையாயின்......................கொணருதியே நின்னெதிரே கோறும்' என்று கூறினமை ஒப்பு நோக்கத்தக்கது; (ஆரண்ய. சூர்ப்பணகைப். 137.)

(பி-ம்.) 1. என்னின் யாண்டெல்லை; என்னி லாண்டெலாம்; எண்ணில் யாண்டினும்; எண்ணிலா வுயிருக்கு.
2. ஒருவ னென்றெ: உலகளிக்கும். 3. காலவர் மேன்மை.
4. ஆயுள் பொன்றுவரய்; திருவிழந் தநாயம் பொன்றுவாய்: திரு வழிந்(து). (128)

458. *பொற்கணுன் றம்பியென் றினைய போர்த்தொழில்*
*விற்கணுண் பொருததோ ளவுணர் வேறுளார்*
*நற்கணுர் நல்லறந் துறந்த நாளினும்*
*இற்கணு ரிறந்தில ரிறந்து நீங்கினுர்.*

'பொன்கணுன் - பொன்னிறமான கண்களையுடைய இரணியாட்சன் என்றும், தம்பி என்று - இரணியனுக்குத் தம்பி என்றும் சொல்லப்படும், இனைய - இத்தன்மையயான, போர்த் தொழில் வில் கண் நாண் பொருத தோள் - போர்த் தொழிலுக்குரிய வில்லின் நாண் உராயப்பட்ட தோளினையுடைய, வேறு உளார் அவுணர் - வேறு உள்ள அசுரர்கள், நல்கண் ஆர் - நல்வழியிற் பொருந்தியுள்ள, நல்லறம் துறந்த நாளினும் - சிறந்த தருமத்தைக் கைவிட்டு ஒழுகிய காலத்தும், இல்கணுர் இறந் திலர் - பிறர் மனைவியரிடத்துத் தவறி நடந்தவர் இல்லாதவராகி, இறந்து நீங்கினுர் - இறந்தொழிந்தார்கள்.

'தம்பி பொற்கணுன் என்று' என மாற்றியும் பொருள் கொள்ளலாம். இரண்யாட்சன் இரணியனுடைய தம்பி என்பது; 'நினக்குப் பின்னேன் பொன்கணுன்' (உயுத்த. இரணியன். 121.) என்று பிரகலாதன் இரணி யனை நோக்கிக் கூறுவதாலும், செவ். பாகவத. 7: 2: 38-ம் செய்யுளாலும் அறியக் கிடக்கும். இரணியாட்சனைத் தமயனென்றும் இரணியகசி புவைத் தம்பி என்றும் மாறுபட்டுக் கூறுவாரும் உளர். இவர்கள் இரு வரும் இரட்டையர் என்று சப்தகல்பத்ருமம். என்னும் வடமொழி அக ராதியும், அறப்பளீச்சுரசதகம் என்னும் தமிழ் நூலும் கூறும்; ஆதலின் இவர்கள் இருவரும் தம் தாயின் ஒரே கருப்பத்தில் முன்னும் பின்னும் தோன்றினவராதலால், இரணிய கசிபுவைத் தமயன் என்றும், இரணி யாட்சனைத் தம்பி என்றும் கொள்வாராயினர். 'பொற்கணுன் தம்

முனென்று' எனப் பாடம் கிடைப்பின் இடர்ப்பாடின்றி பொருள் காண இடமாகும். 'நாண் பொருத தோள்' பால. கார்முகப். 47.

(பி-ம்.) 1. என் றினையர்.

2. விற்கொணுண் பொருவுதோள்; பொருததோள் வீரர்: விற்கண்ண ரெவரினும் வீரர் வேறுளார்.

3. நற்கணு நல்லறந் தடிந்த போதினும்; நற்றவந் துரக்க ணுளினும்.

4. இற்கணுல்: இற்கணு ருவந்தினி திருந்து வாழ்ந்தனர். (129)

## வேறு

459. பூவிலோ னுதி யாகப் புலன்கள்போ நெறியிற் போகாத்
தேவரோ வவுணர் தாமோ நிலைநின்று வினையிற் றீர்ந்தார்
ஏவலெவ் வுலகுஞ் செய்யச் செல்வநிற் கிசைந்த தென்ருல்
பாவமோ முன்னீ செய்த தருமமோ தெரியப் பாராய்.

புலன்கள் போம் நெறியில் போகா - தம் ஐம்புலன்களும் செல்லும் வழியில் செல்லாத (அவற்றை அடக்கி நன்னெறியிற் செலுத்துகிற), பூவிலோன் ஆதியாக தேவரோ - தாமரை மலரில் தோன்றிய பிரமன் முதலிய தேவர்களோ, அவுணர் தாமோ - (புலன்கள் வழிச்செல்லும் இயல்பினை உடைய) அசுரர்களோ, நிலை நின்று - (அழிவடையாமல்) நிலைத்து நின்று, வினையில் தீர்ந்தார் - பாவங்களிலிருந்து விடுபட்டவர்கள்? எவ் உலகும் நிற்கு ஏவல் செய்ய - எல்லா உலகங்களும் உனக்கு ஏவல் புரியும்படி, செல்வம் இசைந்தது என்ருல் - (உயர்ந்த) செல்வம் (உனக்கு அமைந்தது என்ருல், (அது), முன் நீ செய்த தருமமோ, பாவமோ - முன்னே நீ செய்த அறவினைகளினுலா? அல்லது தீவினைகளினுலா? தெரிய- (இவ்வுண்மை) விளங்க, பாராய்-ஆலோசித்துப்பார்.

வினையில் தீர்ந்தார் என்பதற்குத் தாம் தாம் எடுத்துக்கொண்ட தொழில்களில் முற்றுப் பெற்ருர் என்றும், கருமங்களினின்று விடுபட்டவர் ஆனுரென்றும் பொருள் கொள்ளலாம். புலன்கள் வழி போகும் இயல்பினையுடைய அரக்கனுய்ப் பிறந்தும், நீ புலன்களை வென்று தவமாகிய தருமத்தைச் செய்து செல்வம் பெற்றனை; இப்பொழுது புலன்களின் வழி சென்று பாவத்தைப் பெற்று அழிவுருதே என்பது பிராட்டி இராவணனுக்குக் கூறிய அறிவுரை. இப்படிக்கின்றி, தேவர் அவுணர் என்ற உதாரணத்தை ஒன்ருகவும், தருமம், பாவம் என்ற உதாரணத்தை மற்ருென்ருகவும் கொள்ளலும் ஆம். முன் நீ செய்த தருமம் என்பதில், முன், என்றதற்கு இப்பிறவியிலேயே முன்னுளில் என்று பொருள் கொண்டு, இப்பொழுது நீ செய்யும் பாவம் அச் செல்வத்தை

அழிக்கும் என்று சுட்டியதாகும். மூன்றாமடிக்கு, 'ஏவர்மூ வுலகின் செல்வ மெய்தின ரிசையி னேழாய்' என்ற பாடங்கொண்டு, 'தேவரோ அவுணரோ வினையிற் றீர்ந்தா ரென்பதை நீ உற்றுப் பார்; அப்படி அரக்கர் தாழ்ந்தவரா யிருக்கையிலேயும் உன்னைப் போல யாவர் மூவுல கின் செல்வ மெய்தினர்? ஆகையாலே நீ பெற்றது தான் பாவத்தினாலோ தன்மத்தினாலோ என்று விசாரி; இனிப் பாவம் 'செய்யாதே என்று வாக்கியப் பொருள்' என்று பழைய உரை பொருள் கூறும். இராவணன் அரக்கனேயாயினும், கொடுமை கருதி அவுணனென இங்குக் கூறப்பட் டது என்னலாம்.

(பி-ம்.) 1. புலன்கள் பொய் நெறியிற்; நெறியிற் போதாத்; நெறியிற் போக் காத். 2. தனை நின்று.

3. ஏவர்மூன் றுலகிற் செல்வ மெய்தின ரிசையி னேழாய்: ஏவரெவ் வுலகு செய்யச் செல்வநிற் கியைந்த தோராய்: நிற் கியைந்த தேராய்: நிற் கிசைந்த வென்றால்.

4. முன்னர்ச் செய்த: தெளியப்; தெரிந்து பார்க்கிள். 130)

460. *இப்பெருஞ் செல்வ நின்க ணீந்தபே ரீசன் யாண்டும்*
*அப்பெருஞ் செல்வந் துய்ப்பா னின்றுமா தவத்தி னன்றே*
*ஒப்பருந் திருவு நீங்கி யுறவொடு முலக்க வுன்னித்*
*தப்புதி யறத்தை யேழாய் தருமத்தைக் காமி யாதே.*

பேர் ஈசன் நின் கண் ஈந்த இ பெரும் செல்வம் - மகேசுவரனை சிவபெருமான் உன்னிடங் கொடுத்த இந்தப் பெரிய செல்வங்கள், மாத வத்தின் யாண்டும் நின்று - (நீ) பெரிய தவநெறியில் (அதாவது, உன் தருமத்தில்) எப்பொழுதும் நிலை பெற்று, அ பெரும் செல்வம் துய்ப் பான் அன்றே - (இவ்வாறு இறைவன் அருளால் பெற்ற) அப்பெரும் செல்வத்தை நுகரும் பொருட்டன்றோ? ஏழாய் - (இதன் உண்மையை உணரும்) அறிவில்லாதவனே! ஒப்புஅரும் திருவு நீங்கி-ஒப்புமை சொல்ல முடியாத பெரும் செல்வம் நீங்கினவனாகி, உறவொடும் உலக்க உன்னி - (உன்) உறவினர்களோடும் அழிய எண்ணி, தருமத்தைக் காமியாதே - (நீ) ஒழுக வேண்டிய கடமையை விரும்பாமல், அறத்தைத் தப்புதி- அறநெறியைத்தவறிப் பாவவழியில் நடக்கின்றாய்.

'இனி 'ஈசன்.................இன்றும் மாதவத்தனன்றே' என்றபாடங் கொண்டு, அ பெரும் செல்வம் துய்ப்பான் - எப்பொழுதும் அந்தப் பெரும் தவமாகியசெல்வத்தை (உலகம்பின்பற்றி) ஈடேறும் பொருட்டு, இன்றும் மாதவத்தன் அன்றே - இன்றும் (தக்ஷிணாமூர்த்தியாய்த்) தவ நியமத்தினனாக விளங்குகின்றானல்லவா' என்று பொருள் கொள்ளலும்

அமையும். இதனால் உலகம் தவநெறிப்பட்டு நற்கதியடையக் கருதி ஈசன் தவநிலையில் விளங்குகின்றான் என்று பொருள் கொள்ளலும் ஆகும். இக் கருத்தைக் குமாரஸம்பவத்தில் காளிதாச மஹாகவியும், திருமால் திறத்தில், 'பாரின்பால் விசும்பின் பாலும்..............ஈரைம்பான் ஊழிக்காலம் இருந்தவமியற்றியிட்டான்' (பால, வேள்வி. 17) என்று கம்ப நாடரும் தெளிவுறுத்தியுள்ளமை நோக்கத் தக்கதாம்.

இச்செய்யுளில், அறம் தருமம் என்றவை ஒரு பொருளையே குறிக்குமேனும் அறம் இம்மை, மறுமை, வீடென்னும் மூன்றனையும் பயப்பதான யாவர்க்கும் பொதுவென்றும், தருமம் அவரவர் நிலைக்குத் தக்கவாறு ஒழுகவேண்டிய கடமையென்றும் கூறலாம். அறம் தப்பலாகாது என்பதும், தருமம் செய்யவேண்டிய கடமை என்பதும் இச்செய்யுளில் குறித்தபடி. 'மாதவத்தின் நின்று' என்பதற்கு, 'தவம் செய்வார் தங்கருமஞ் செய்வார்' என்ற குறளின் (266)படி, சிறந்த சுதர்மத்தில் நிலை பெற்று என்று பொருள்கொள்ளப்பட்டது. 'அப்பெரும் செல்வம் துய்ப்பான்' என்றதற்கு வீடுபேறாகிய செல்வத்தை நீ நுகரும் பொருட்டு என்றும் பொருள் கொள்ளலாம். 'இனி தருமத்தைக் காமியாதே' என்றதற்கு, 'பெண்களுக்கு உரிய தருமமாகிய இல்லறக் கற்பு நெறியில் உள்ள என்னைத் துராசை கொண்டு அடைய விரும்பாதே' என்று இராவணனை இடித்து நல்லறம் உபதேசித்தாள் பிராட்டி என்று பொருள் கோடலும் அமையும்.

(பி-ம்.) 1. ஈந்ததோ ரீசன், ஈந்தபே ரீசன்றன்பால்; ஈந்தபே ரின்னம் யாண்டும்.
2. துய்ப்பா னினிதுமா; மாதவத்தை நன்றே: மா தவத்த னென்றே; நினது மா தவத்தி னன்றே; செல்வந் துய்த்தற் கின்னுமத் தவஞ்செய்யாமல்.
3. திருவி லிங்கி; திருவு நீங்க வுறவொடு மிறக்க வுள்ளித்: உறவொடு முன்னி யுள்ளம்; உலக்க வெண்ணித்; உலக்க வுள்ளம்.
4. தப்புதி மறத்தை; தப்புதி யதற்கே; காமி யாயோ. (131)

461. *மறந்திறம் பாத தோலா வலியின ரெனினு மாண்டார்*
*அறந்திறம் பினரு மக்கட் கருடிறம் பினரு மன்றே*
*பிறந்திறந் துழலும் பாசப் பிணக்குடைப் பிணியிற் றீர்ந்தார்*
*துறந்தரும் பகைகள் மூன்றுந் துடைத்தவர் பிறர்யார் சொல்லாய்.*

மறம்திறம்பாத - வலிமையில் மாறுபடாத, தோலா - தோல்வியடையாத, வலியினர் எனினும் - பலமுள்ளவர் ஆனாலும், அறம் திறம்பினரும்- தருமத்தினின்று மாறுபட்டுப் பாவவழியில் நடந்தவர்களும், மக்கட்கு அருள் திறம்பினரும் - மனிதர்களிடத்தில் இரக்கமின்றி மாறிக்கொடுமை

யாக நடந்தவர்களும், மாண்டார் அன்றே -(அவர்கள் செய்த அத்தீவினைகளால்) மாண்டு ஒழிந்தார் அல்லவா? துறந்து - உலகப்பற்றுக்களை விட்டு, அரும் பகைகள் மூன்றும் துடைத்தவர் - அரிய உட்பகைகளாம் காமம், வெகுளி மயக்கம் என்ற மூன்றினையும் வென்று அழித்தவர்கள், பிறந்து இறந்து உழலும் - மீண்டும் மீண்டும் பிறந்து இறந்து வருந்தியலை யும், பாச பிணக்கு உடை பிணியில் தீர்ந்தார் - உலக பந்தமாகிய வலையில் கட்டுப் படுத்தும் நோயினின்றும் நீங்கினவர்; பிறர் யார் - (அவரன்றி) வேறு யாவரே (உளர்)?(அப்பிணியிலிருந்து நீங்கியவர் எவரும் இலர் என்றபடி.) சொல்லாய் - இதனை நீ சொல்வாயாக.

அறமும் அருளும் அற்றவர் வலியராயினும் இறந்தனர் என்றது, இராவணனுக்கு, இரணியன் முதலானோரைச் சுட்டிக் கூறியதும், தவம் செய்து பிறப்பு இறப்பு நீங்கி நற்கதியடைந்த (துருவன் முதலிய) ஆன்றோர்களையும் நினைப்பூட்டி நல்வழியில் நடக்குமாறு பிராட்டி உபதேசித்ததும் ஆம்.

(பி-ம்.) 1. மறந்திறம் பாதோ ராவி வலி: மறம் திறம் பாத தோளாய் வலிமையிற் செருக்கி மாட்சி.
2. வானோர்க் கருடிறந் தவரு மன்றே: அருள்துறந் தவரு மன்றே.
3. பிறந்தி ருந்து: பாசப் பிணியறப்: பிணியாற் போந்தார்: பிணியிற் போந்தார். (132)

462. *தென்றமி ழுரைத்தோன் முன்னாத் தீதுதீர் முனிவர் யாரும்*
*புன்றொழி லரக்கர்க் காற்றே நோற்கிலம் புகுந்த போதே*
*கொன்றரு ளுன்னா லன்னார் குறைவது சரதங் கோவே*
*என்றனர் யானே கேட்டே னியதற் கியைவ செய்தாய்.*

'புகுந்த போதே-(இராமபிரான்) தண்டகவனத்தில் வசிக்கப் புகுந்த அப்பொழுதே, தென் தமிழ் உரைத்தோன் முன்னா - இனிய தமிழ் மொழிக்கு (அகத்தியம் என்னும் இலக்கணம்) வகுத்துரைத்த அகத்திய முனிவரைத் தலைவராக உடைய, தீது தீர் முனிவர் யாரும் - தவநியமங்களால் குற்றங்களினின்றும் நீங்கிய பரிசுத்தர்களான (அங்கிருந்த) முனிவர் அனைவரும், 'புன் தொழில் அரக்கர்க்கு ஆற்றேம் - யாங்கள் இழி தொழில்களைப் புரியும் அரக்கர்களுடைய கொடுமைகளைப் பொறுக்க வல்லமையற்றோர்களாய், நோற்கிலம்-தவம் முதலிய நியமங்கள் செய்யாதவர்கள் ஆனோம்; கொன்றருள் - அக்கொடிய அரக்கர்களைக் கொன்று எங்களுக்கு அருள் செய்வாய்; கோவே - அரசனே! உன்னால் அன்னார் குறைவது - உன்னால் அக்கொடிய அரக்கர்கள் அழிவது, சரதம் - நிச்சயம்;' என்றனர் - என்று (இராமபிரானிடம்) கூறி முறையிட்டுக் கொண்

டனர்; யானே கேட்டேன் - யானே அவர்கள் முறையீட்டை நேரில் இருந்து கேட்டேன்; நீ அதற்கு இயைவ செய்தாய் - நீயும் அம் முனிவர்கள் வேண்டிக் கொண்டதற்குப் பொருத்தமானவற்றைச் செய்துள்ளாய்.

அகத்தியர் தென் தமிழ் உரைத்தது; 'நீண்ட தமிழால் உலகை நேமியி னளந்தான்', 'தழற்புரை சுடர்க்கடவுள் தந்ததமிழ் தந்தான்' 'என்றுமுள தென்றமிழியம்பு மிசைகொண்டான்' (ஆரண்ய. அகத்தியப். 36, 41, 47.) தண்டகவனத்து முனிவர் இராமபிரானிடம் அரக்கர் கொடுமை கூறிக் குறையிரந்தது; ஆரண்ய. அகத்தியப். 12-16. யானே; ஏகாரம் தேற்றப் பொருளது. யானே என்பது பிறர் சொன்னதை அறிந்து சொல்வது அன்று; யானே அங்கிருந்து நேரில் என் செவியாற் கேட்டேன் என்பதாம். தென் தமிழ் - தென்னாட்டில் வழங்கும் மொழியாகிய தமிழ்; இனி, தென் தமிழ் என்பதற்குத் தேன்போன்ற இனிய தமிழ் என்றும் பொருள் கொள்ளலாம்; தென் என்பதற்கே இனிமை அல்லது அழகு என்னும் பொருள்கள் உண்டு. (பிங்களம்) தென் - தேன் என்பதின் குறுக்கல் விகாரம். இராவணன், முனிவர் கூற்றுக்கு இயைவ செய்தது, பிராட்டியை அபகரித்து வந்து சிறை வைத்துத் துன்புறுத்துவதால் தன் உயிர்க்கே உலை வைத்துக்கொள்வதான செயலைச் செய்தது. முறையிட்டுக்கொண்ட முனிவர்களுள் அகத்தியர் இருந்ததாக முன் இந்நூலில் கூறப்படவில்லை யாதலின், முன் - தலைமை என்று மட்டும் கொள்ளப் பெற்றது.

(பி-ம்.) 1. தென்றமி ழிசைத்தோன்; தென்றமி ழுரைத்தோ னாதி முனிவரரெவருந் தீய; முன்னைத் தீதறு; முன்னாட் டீதறு; முன்னுடீதுதீர்: முன்னுய்த்; முன்னாந்.
3. கொன்றரு ணின்றால்.
4. யானுங் கேட்டேன்: இசைந்த செய்தாய்; இசைவ செய்தாய். (133)

463. *உன்னையுங் கேட்டு மற்றுன் னாற்றமு முடைய நாளும்*
*பின்னையிவ் வரக்கர் சேனைப் பெருமையு முனிவர் பேணிச்*
*சொன்னபி னுங்கை மூக்கு மும்பியர் தோளுந் தாளும்*
*சின்னபின் னங்கள் செய்த வதனை நீ சிந்தி யாயோ.*

முனிவர் - அத்தண்டகாரணிய முனிவர்கள், பேணி - விரும்பி, உன்னையும் - உன் வரலாற்றையும், உன் ஊற்றமும் - உன் வலிமையையும், உடைய நாளும் - நீ அடைந்துள்ள பெரு வாழ் நாளையும், இ அரக்கர் சேனை பெருமையும் - இங்கு உனக்குத் துணையாய் அமைந்துள்ள இராக்கத சேனைகளின் பெருக்கத்தையும், சொன்னபின் - (குறிப்பிட்டுக்) கூறிய பிற்பாடு, கேட்டு - (தானும் பிறவழிகளால்) கேட்டு அறிந்து, பின்னை - அதன் பிறகு, உங்கை மூக்கும் உம்பியர் தோளும் - உன்

தங்கையான சூர்ப்பணகையின் மூக்கையும் உன் தம்பியர் முறையோர்களான கரன் முதலினோர் தோள்களையும் கால்களையும், சின்ன பின்னங்கள் செய்த அதனை - கண்ட துண்டங்களாக வெட்டிய இராம லக்குமணர்களின் அந்தப் பராக்கிரமத்தை, நீ சிந்தியாயோ-நீ நினைக்கமாட்டாயோ? முற்று: அசை.

பேணிச் சொன்னபின் - இராமபிரானைப் புகலாய் அடைந்து பேணி முறையிட்டுக் கொண்ட பிறகு என்று பொருள் கூறலும் அமையும்: உங்கை மூக்கை இலக்குவனும், தம்பியர் தாளையும் தோளையும் இராம பிரானும் என்று கொள்க.

(பி-ம்.) 2. முனிவர் பேசிச்.
3. நும்பியர் தோளும்: தோளு நாளும்.
4. செய்த வதனையும்; செய்த வவனையும்; செய்த வவனை நீ; செய்தா னதனை நீ தெரிந்தி லாயே. (134)

464. *ஆயிரந் தடக்கை யானின் னைந்நான்கு கரமும் பற்றி*
*வாய்வழி குருதி சோரக் குத்திவான் சிறையில் வைத்த*
*தூயவன் வயிரத் தோள்க டுணித்தவன் றொலைந்த மாற்றம்*
*நீயறிந் திலையோ நீதி நெறியறிந் திலாத நீசா.*

'நீதி நெறி அறிந்திலாத நீசா - நூல்களில் கூறப்பட்டுள்ள நீதி மார்க்கத்தை அறியாத இழிந்த நடையுடையவனே! நின் ஐ நான்கு கரமும் பற்றி - உனது இருபது கைகளையும் பிடித்துக் கொண்டு, வாய் வழி குருதி சோர குத்தி-உன் பத்து வாய்களின் வழியாகக் குருதி சொரியும்படி தன் கைகளால் குத்தி, வான் சிறையில் வைத்த-பெருஞ் சிறையில் உன்னை அடைத்து வைத்த, தூயவன் - சிறப்பமைந்தவனான, ஆயிரம் தட கையான் - ஆயிரம் பெரிய கைகளையுடைய கார்த்தவீரியனுடைய, வயிர தோள்கள் - வயிரம் போல் உறுதிவாய்ந்த (ஆயிரம்) தோள்களை, துணித்தவன் - வெட்டித் தள்ளின பரசுராமன், தொலைந்த மாற்றம்-(இராமபிரான் முன் வலியழிந்து) தோற்றோடிய செய்தியை, நீ அறிந்திலையோ-நீ அறிய வில்லையோ?

பரசுராமன் கார்த்த வீரியன் தோள்களை வெட்டி அழித்தது. 456; பால. பரசுராமப். 12; ஆரண்ய. சடாயுவுயிர். 63. கார்த்தவீரியனுக்குத் தலை ஒன்று என்று, தக்க. 417. உரை கூறும். அவனுக்குக் கைகள் ஆயிரம். முன் 456-ஆம் செய்யுளிலும் கார்த்தவீரியனை அழித்த பரசுராமன் தோல்வியுற்றமையைப் பிராட்டி குறிப்பிட்ட செய்தி கூறப்பெற்றமை, அங்கு இராமபிரானை மனிதனென்று இகழலாகாது என்பதற்கும், இங்கு அவன் பராக்கிரமத்தைக் குறிப்பதற்கும் என்க. இதனால்

பிராட்டி, இராவணனை நோக்கி, 'உன் இருபது தோள்களையும் பற்றி உன்னைச் சிறையிட்ட கார்த்தவீரியனை எதிர்த்து, அவன் ஆயிரங்கரங்களையும் அறுத்து அழித்த பரசுராமனை வலிகுன்றித் தோற்றோடச் செய்த இராமபிரான் பராக்கிரமம் நீ அறியாயோ? என்னைச் சிறையிட்டு என் முன் தகாதவை பேசி, இராமபிரான் பகைமைக்கு நீ பெரிதும் ஆளாகிறாயே! நீ எங்ஙனம் வாழ்வாய்? நீ மாள்வது திண்ணம்' என்று அவனுக்கு அறிவுறுத்தினாள் என்க,

(பி-ம்.) 1. தடக்கை யாலன்றைந்நான்கு; தடக்கையா லுன்னைந் நான்கு; தடக்கையா னின்னைஞ் ஞான்கு.
4. நீதிநிலை; ஏகுநெறி; நீச. (135)

465. *கடிக்கும்வா ளரவுங் கேட்கு மந்திரங் களிக்கின் றோயை*
*அடுக்குமீ தடாத தீதென் றறிவினா லேதுக் காட்டி*
*இடிக்குந ரில்லை நீயே யெண்ணிய தெண்ணி யுன்னை*
*முடிக்குந ரென்ற போது முடிவின்றி முடிவ துண்டோ.*

'கடிக்கும் வாள் அரவும் மந்திரம் கேட்கும் - கடித்து (விடமூட்டிக் கொல்லும்) கொடிய பாம்பும் (ஜபிக்கப்பட்ட) மந்திரத்தைக் கேட்டு அடங்கி நடக்கும்; களிக்கின்றோயை - (தன்னிச்சைப் படியே) மதங் கொண்டு திரியும் உன்னை, அடுக்கும் ஈது அடாதது ஈது என்று - இது செய்யத்தக்கது, இது,செய்யத் தகாதது என்று, அறிவினால் ஏது காட்டி - தங்கள் அறிவின் சிறப்பால் தக்க உதாரண மூலம் எடுத்துக்காட்டி, இடிக்குநர் இல்லை - இடித்துரைக்கும் தக்க அறிவாளிகளான மந்திரத் தலைவர்கள் (உனக்கு) இல்லை; நீ எண்ணியதே எண்ணி - (உன் மந்திரத் தலைவர்கள்) நீ எவ்வாறு எண்ணுகிறாயோ அவ்வாறே தாமும் எண்ணி, (அதாவது, உன் எண்ணத்தை மறுக்காது பின்பற்றி), உன்னை முடிக்குநர் - உன்னை அழிப்போர்களாய் இருக்கிறார்கள்; என்ற போது -(இவ்வாறுள்ள) சூழ்நிலை உனக்கு ஏற்பட்டுள்ள போது, முடிவு இன்றி முடிவது உண்டோ - உனக்கு அழிவு என்பதன்றி வேறு (நன்மை) உண்டாவது உண்டோ? (இல்லை என்றபடி).

பாம்பு மந்திரங்கேட்டு அடங்கும் என்பது; 'கதந்தவிர மந்திரத்தினாற் பிணிப்பர் மாநாகம்' (நான்மணிக். 10); 'இமிழ்வினை யிச்சையினிடுக்கட் பட்ட, மகிழ்மணி நாகர்'' (பெருங் 2. 20; 52-3). இடித்துரைப்பாரில்லாத அரசன் கேடடைவன் என்பது;'இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன், கெடுப்பா ரிலானுங் கெடும்' (குறள். 448). இடிக்குநரில்லை; ஒப்பு: கலி: 321. குறள்; 447. 784; குறுந்: 58-1. 444 ஆம் செய்யுள்முதல் இதுவரையில் பிராட்டி இராவணனுக்குக் கூறிய அறவுரைகளுமாம்.

(பி-ம்.) 1. கடிக்கும்வல் லரவுங்.
2. அடுக்குமீ தடாதென் ருன்ற வேதுவோ டறிவு காட்டி: அறி விஞே டேதுக் காட்டி; அறிவிஞ லெடுத்துக் காட்டி.
3. இல்லை யுள்ளா ரெண்ணிய.
4. முடிக்கின்ற போழ்து முன்னி முடிவின்றி யறிவ துண்டோ: அன்றிப் பின்னு முண்டோ: முடிந்த துண்டோ. (136)

வேறு

## இராவணன் சினத்தல் 466-67

466. *என்ற றத்துரை கேட்டலு மிருபது நயனம்*
*மின்றி றப்பன வொத்தன வெயில்விடு பகுவாய்*
*குன்றி றத்தெழித் துரப்பினன் குறிப்பதென் காமன்*
*தன்றி றத்தையுங் கடந்தது சீற்றத்தின் றகைமை.*

என்று - மேற்கூறியவாறு, அறத்து உரை கேட்டலும் - தருமத்திற்கு ஏற்ற வார்த்தைகளைப் (பிராட்டி எடுத்து உரைக்கக்) கேட்டதும், இருபது நயனம் - (இராவணனின்) இருபது கண்களும், மின் திறப்பன ஒத்தன - (மேகத்தினின்று) மின்னல்கள் பிளந்துகொண்டு வீசுவன போல் ஆயின; (அவன்), வெயில் விடு-வெயில்போல் வெப்பத்தை வெளி விடுகின்ற, பகுவாய் - பிளந்த பெரிய (தன் பத்து) வாய்களாலே, குன்று இற - மலைகளும் ஒடிந்து விடும்படி, தெழித்து உரப்பினன் - அதட்டிக் கர்ச்சித்தான்; குறிப்பது என் - வேறு எதை எடுத்துரைப்பது? சீற்றத்தின் தகைமை-(அவன்) கோபத்தின் தன்மை, காமன் தன் திறத்தையும் கடந்தது - மன்மதனுடைய வல்லமையையும் மீறிவிட்டது (என்பதாம்).

அறத்துரை: இதுவரை பிராட்டி இராவணன் தனக்குச் செய்த தீங்குகளையும், கூறிய தகாத கொடு மொழிகளையும் பாராட்டாது, இனியாவது நல்வழிப்பட்டு உய்யலாகாதா என்ற பரம கருணை மேலீட்டால் அவனுக்குத் தருமத்தை உபதேசித்தாள் என்பது பெறப்படும். வான்மீகத்திலும் இவ்வாறே பிராட்டி கூறியது அறவுரை என்றே குறித்திருப்பதும் நோக்கத்தக்கது. (சுந்தர, 21, 6). நயனம் மின் திறப்பன ஒத்தன: இராவணன் உருவத்திற்கு மேகமும், அவன் இருபது கண்களினின்று வீசிய கோபக் கனல்களுக்கு மேகத்தைக் கிழித்துக்கொண்டு வெளியே ஒளி வீசும் மின்னல்களும் உவமைகள். இராவணன்கொண்ட காமத்தை அவனது சீற்றம் வென்றுவிட்டது.ஒரு சுவை மற்ருென்றை வென்றமை: 1002; ஆரண்ய. சடாயுவுயிர். 60; சீவக. 758; அடுத்த செய்யுளில் சீற்றமும் காமமும் எதிரெதிர் சமநிலையில் நின்று போரிட்டதையும், 470 ஆம் செய்யுளில் சீற்றத்தைக்காமம் வென்றதையும் கூறுவது காண்க.

(பி-ம்.) 1. என்றிறத் துரை; என்ற சொற்செவி கேட்டலும்; என்றுரைத் தது; என்று ரைத்தலு மிருபது நயனமு மழலின்.
2. மின்றி றத்தன; மின்றி ருந்தின: மின்றி றப்பன போல்வயின் (வெயில்); கான்றிடப் பருவாய்.
3. குன்றுறத்; தின்றுறத்: செகுப்பருங் காமன்;குறிப்பருங் காமன்; உரப்பின குறிப்பெருங் காமன்.
4. காமத், தின்றிறத் தையும். (137)

467. *வளர்ந்த தாளினன் மாதிர மனைத்தையு மறைவித்*
*தளந்த தோளின னனல்சொரி கண்ணின னிவளைப்*
*பிளந்து தின்பெனென் றுடன்றுநின் றனனடி பெயரான்*
*கிளர்ந்த சீற்றமுங் காதலு மெதிரெதிர் கிடைப்ப.*

(இராவணன்) வளர்ந்த தாளினன்-(எழுந்து நின்றதனுல்) வளர்ந்தன போன்று உயர்ந்த கால்களை யுடையவனுகவும், மாதிரம் அனைத்தையும் மறைவித்து அளந்த தோளினன் - திக்குகளை எல்லாம் மறையச் செய்து (அத்திக்குகளை) அளப்பன போல (எங்கும் பரந்து விளங்கிய) தோள்களை யுடையவனுகவும், அனல் சொரி கண்ணினன் - நெருப்பைக் கக்கு கின்ற கண்களையுடையவனுகவும், 'இவளைப் பிளந்து தின்பென் என்று- இந்தச் சீதையை (இப்பொழுதே) பிளந்து தின்று விடுகிறேன்' என்று சொல்லி, கிளர்ந்த சீற்றமும் காதலும் எதிர் எதிர் கிடைப்ப - (ஓங்கி) எழுந்த சினமும் காமமும் ஒன்றுக் கொன்று எதிர்த்து நெருங்கித்தாக்கிப் போரிட,அடி பெயரான்-(சீதை இருக்குமிடத்தை நோக்கி)அடியெடுத்து முன் செல்லாது, உடன்று நின்றனன் - (அவள் மீது) சினந்து நின்றுன்.

ஒரு பெண் தனக்கு இயையாமலும், தன்னைச் சிறிதும் மதிக்கா மலும் தனக்குப் புத்திமதி கூறுவதா என்று எழுந்த கோபமும், அவள் பால் தான் கொண்டுள்ள காமமும் ஒன்றை யொன்று வெல்ல முடியாது எதிர்த்து வலிதாய்ப் போரிட, இராவணன் ஒரு வழியும் செல்லாது தடையுற்று நின்றுன் என்க. இதனுல், சீற்றமும் காமமும் ஒன்றுக் கொன்று எதிரிட்டுத் தடை செய்தமையையும், சினத்தின் மெய்ப்பாடு கள் கூறப்பட்டமையும் காண்க. ஒப்பு. பால. கையடைப்.13.

(பி-ம்.) 1. நாணினன்; நாளினன்: அனைத்தையு மறிவித் (து).
2. அவளைப்.
3. தின்பதென்று; தின்ப னென்றுநின் றனனடி பெயராள்: உடன்றனன் பெரியவ டன்பால்; உடன்றனன் நின்றனன் பெயரான்; உடற்றினன்: நின்றனன்: பெயராக்; பெயரக்,
4. காதலு மிடையிடை. (138)

## இராவணன் நிலைகண்ட அநுமன் நினைவு 468-69

468. *அன்ன காலையி லநுமனு மருந்ததிக் கற்பின்*
*என்னை யாளுடை நாயகன் றேவியை யென்முன்*
*சொன்ன நீசன்கை தொடுவதன் முன்றுகைத் துழக்கிப்*
*பின்னை நின்றது செய்குவெ னென்பது பிடித்தான்.*

அன்ன காலையில் - (இவ்வாறு இராவணன் உடன்று நின்ற) அப்பொழுது, அநுமனும் - (மரத்தின் கிளையில் ஒளிந்திருந்த) அநுமனும், அருந்ததி கற்பின் - அருந்ததி போன்ற கற்பு நெறியையுடைய, என்னை ஆளுடை' நாயகன் தேவியை - என்னை அடிமையாகக்கொண்டுள்ள தலைவனை இராமபிரான் தேவியாகிய இப்பிராட்டியை, என் முன் சொன்ன நீசன்-என் எதிரே தகாத மொழிகள் பேசிய இழிந்தோனை இவ்விராவணன், கை தொடுவதன் முன் - கையினால் தொட்டுத் துன்புறுத்துவதன் முன்னுக, துகைத்து உழக்கி - (அவனைக் கால்களால் நன்ருக) மிதித்து வருத்திக் கொன்று, பின்னை நின்றது - அதன் பிறகு உள்ளவற்றை, செய்குவென் என்பது பிடித்தான் - செய்வேன்' என்பதை உறுதி செய்து கொண்டான்.

'என்னை ஆளுடை நாயகன்' என்பதை அநுமன் கூற்ருகவேனும், கவிக் கூற்ருகவேனும் கொள்ளலாம். என்னை ஆளுடை நாயகன்; ஒப்பு: 136, 1124; பால. திருவவதாரப். 26. உழக்கி-வருத்திக்கொன்று. அநுமன் இராவணனைக் கொல்வதே முதற் காரியமாக எண்ணியது; 469. பின்னை நின்றது, பிராட்டியை இராமபிரான்பால் எடுத்துச் செல்வது, இலங்கையை அழிப்பது என்பன. பிடித்தல்-உறுதியாய்க் கொள்ளுதல்; 'பெருமானுரை பிடித்தேம்' (உயுத்த,' நிகும்பலைப். 143).

(பி-ம்.) 3. முன்னுதைத் துருட்டிப்; முன்றலை துளக்கிப்.
4. செய்குவ மென்பது; என்பதும். (139)

469. *தனிய னின்றனன் றலைபத்துங் கடிதுகத் தாக்கிப்*
*பனியின் வேலையி லிலங்கையைக் கீழுறப் பாய்ச்சிப்*
*புனித மாதவத் தணங்கினைச் சுமந்தனன் போவென்*
*இனிதி னென்பது நினைந்துதன் கரம்பிசைந் திருந்தான்.*

'தனியன்-துணையற்றுத் தனியனுய் உள்ள யான், நின்றனன்-நிற்கின்ற இவ்விராவணனின், தலைபத்தும் கடிது உக தாக்கி-தலைகள் பத்தும் விரைவில் அற்றுவிழ இவனை எதிர்த்து மோதிக் கொன்று, இலங்கையை பனியின் வேலையில் கீழ் உற பாய்ச்சி-இந்த இலங்கை நகரையும் குளிர்ந்த கடலில் உள்ளே புகும்படிச் செலுத்தி, புனித மா தவத்து அணங்கினை - பரிசுத்தமான கற்பின் தவத்தினளான பிராட்டியை, சுமந்தனன் இனிதின் போவென் என்பதும் நினைந்து-எடுத்துக்கொண்டு இனிதாகப் போவேன்'

என்பதையும் (அநுமன்) எண்ணி, தன் கரம் பிசைந்து இருந்தான் - தன் கைகளைப் பிசைந்துகொண்டு (அவனைக் கொல்வதற்கு உரிய சமயத்தை) எதிர்பார்த்திருந்தான்.

'தனியன்' என்பதை இராவணனுக்குக் கூட்டிப் பொருள் கூறலும் ஒன்றும். தவத்தணங்கு; 'தவம் செய்த தவமாம் தையல்' (1275) என்றமை காண்க. கரம் பிசைதல்-வீரர்களுக்குப் போர்க்கெழுமுன் உண்டாகும் மெய்ப்பாடு; 316.

(பி-ம்.) 1. தனியின்; நின்றவன்: கடிதிறத். 2. வேலைசூழிலங்கையைக், 3. புனிதன்: அணங்கினைக் கொண்டுடன். போவன்: போவான்; போதல். 4. நினைத்தனன். (140)

## இராவணன் சினந்து மறுமொழி கூறுதல் 470–78

470. *ஆண்ட வாளரக் கன்னகத் தண்டத்தை யழிப்பான்*
*மூண்ட காலவெந் தீயென முற்றிய சீற்றம்*
*நீண்ட காமநீர் நீத்தத்தின் வீவுற நினைவின்*
*மீண்டு நின்றொரு தன்மையா லினையன விளம்பும்.*

ஆண்டு அ வாள் அரக்கன் - அப்பொழுது அந்தக் கொடிய அரக்கனை இராவணனுடைய, அகத்து - மனத்தில் உண்டான, அண்டத்தை அழிப்பான் மூண்ட கால வெம் தீ என - இவ்வண்ட கோளகையில் அடங்கிய உலகங்களை அழிக்கும் பொருட்டு எழுந்து படர்ந்த யுகாந்த காலத் தீயைப் போல, முற்றிய சீற்றம்-முதிர்ந்து நின்ற கோபம், நீண்ட காம நீர் நீத்தத்தின்-(பிராட்டி பால்கொண்ட) மிகுந்த காமமாகிற நீரின் வெள்ளத்தில், வீவு உற - அழிந்து போக, நினைவின் மீண்டு நின்று - தன் சுயநினைவைத் திரும்பியடைந்து நின்றவனாகி, ஒரு தன்மையால் - ஒரு நிலையில், இனையன விளம்பும் - பின்வருமாறு பேசுவானானான்.

சீற்றத்தைத் தீ என்றதற்கு ஏற்ப, அதனை அவித்த காதலை நீர் என்றார். ஒப்பு: 'தீராத காமத் தழலைத்தன் செம்மையெனும் நீராலவித்துக் கொடுநின்று' (நள. 1, 86,). சினம் காதலுக்குத் தோற்றுப்போதல்: 'தொகுதரு காதற்குத் தோற்ற சீற்றத்தோர்'; 'சினத்தொடு காதலன் சேக்கைப் போரிடை, மனத்துறை காதலே வாகை கொண்டதே' (பால. உண்டாட்டுப். 44, 61.) அரக்கன்னகத்து: செய்யுள் நோக்கி னகரம் மிகுந்தது.

(பி-ம்.) 1. ஆண்டைவாள்: ஆண்டவ்வா ளரக்கன் சகதண்டத்தை: அரக்கன் றனைத்தண் டத்தை; அரக்கன் கதத்தண் டத்தை. 2. தீயினை; தீயின: முடுகிய சீற்றம். 3. அவிவுறு நிலையின்: அவிவுற நிலையின்; வீழ்வுற நினையின்; நவிவுறு நிலையன்: அவிந்தக் கொடியோன். 4. தன்மையா லிவையிவை; தன்மையி னினையன, (141)

வேறு

471. கொல்வெனென் றுடன்றே னுன்னைக்
கோறலென் குறித்துச் சொன்ன
சொல்லுள வவற்றுக் கெல்லாங்
காரணந் தெரியச் சொல்லின்
ஒல்வதீ தொல்லா தீதென்
றெனக்குமொன் றுலகத் துண்டோ
வெல்வதுந் தோற்ற றானும்
விளையாட்டின் விளைந்த மேனாள்.

'(இராவணன்), 'உன்னைக் கொல்வென் என்று உடன்றேன்-உன்னைக் கொல்வேன் என்று கோபித்தெழுந்தேன்; கோறலென் - (ஆனால் நான் உன்னைக்) கொல்ல மாட்டேன்; குறித்து சொன்ன அவற்றுக்கு எல்லாம் - என்னைக் குறித்துச் சொன்ன குற்றச்சாட்டுகளுக்கெல்லாம், காரணம் தெரியச் சொல்லின் - காரணங்காட்டி உனக்கு விளங்கச் சொல்வதானால், சொல் உள - தக்க மாற்றுச் சொற்கள் என்னிடத்து உள்ளன; (அவை கிடக்க), எனக்கு ஒல்வது ஈது ஒல்லாது ஈது என்று - எனக்குச் சாதிக்கக் கூடியது அல்லது சாதிக்க முடியாதது என்று, ஒன்று உலகத்து உண்டோ - ஒரு காரியம் இந்த உலகத்தில் இருக்கிறதோ? (இல்லை என்றபடி); மேனாள் - முன்னர், வெல்வதும் தோற்றல் தானும் -யான் வெற்றியடைந்ததும் தோற்றதும் என்று சொல்பவை எல்லாம், விளையாட்டின் விளைந்த - விளையாட்டால் நடந்தவையேயாம்.

சொல் உள - நீ சொன்னவற்றிற்கு மாற்றாகச் சொல்லக் கூடிய வசனங்கள் உள என்பது பொருள். வெல்வது - முன் திக் விஜயம் செய்து அடைந்த வெற்றிகள். தோற்றது - வாலியிடத்தும், கார்த்த வீரியனிடத்தும் சிறை அடைந்தமை, சடாயுவால் தாக்கப் பட்டுத் தேரழிந்து கீழ் வீழ்ந்தமை முதலியன. விளையாட்டு - ஊக்கத்தோடு இல்லாது, பொழுது போக்குக்காக வேடிக்கையாகச் செய்த செயல்கள்.

(பி-ம்.) 1. என் றடர்ந்தேன்: உடன்றேன் பின்னுங் கொல்வது குறித்து மேனாள்: கொல்கிலென்: கொல்வது குறித்துச்,
2. சொல்லிய வவதி முன்னே துணிகில னெனவும் சொல்லி.
3. ஒவ்வதிங்: ஒல்லுவ தொல்லா தீதென்று; ஒல்வதீ தெல்லாந் தீதென் றெமக்கு மொன் றுயர்ந்த துண்டோ:
4. வெல்வது தோற்ற றானும். (142)

472. ஒன்றுகே ளுரைக்க நிற்கோ ருயிரென வுரியோன் றன்னைக்
கொன்றுகோ ளிழைத்தா லீநின் னுயிர்விடிற் குற்றங் கூடும்
என்றனு ருயிரு நீங்கு மென்பதை யியைய வெண்ணி
அன்றுநான் வஞ்சஞ் செய்த தாரெனக் கமரி னேர்வார்.

ஒன்று உரைக்க கேள் - யான் ஒன்று கூறுகின்றேன்; நீ கேட்பாயாக; நிற்கு ஓர் உயிரென உரியோன் தன்னை - உனக்கு ஒப்பற்ற உயிரே என்று நீ கருதும் உன் கணவனான இராமனை, கொன்று கோள் இழைத்தால் - யான் கொன்று என் வலிமையைக் காட்டினால், நீ நின் உயிர் விடில் - (அதனால் வருந்தி), நீ உன் உயிரைவிட்டால், குற்றம் கூடும் - (நான் உன்னை அடைவதாக மேற்கொண்ட காரியத்திற்குக்) குற்றம் ஏற்படும்; என்றன் ஆருயிரும் நீங்கும் - (உன்னை இழந்ததனால்) என்னரிய உயிரும் போய்விடும்; என்பதை இயைய எண்ணி - என்னும் இவற்றைப் பொருந்த ஆராய்ந்து, அன்று நான் வஞ்சம் செய்தது - அன்று நான்வஞ்சனையால் மாய வேடம்பூண்டு உன்னைக் கவர்ந்து வந்ததாகும்; ஆர் எனக்கு அமரில் நேர்வார் - (யான் நேரே சென்றால்), யாரே எனக்கு எதிராகப் போரில் எதிர்நிற்க வல்லவர்?

குற்றங் கூடுதல் என்பதற்குப் பெண் கொலை என்ற பாவம் என்னைச் சாரும் என்று உரை கூறுவாரும் உளர். இராவணன் சீதையைக் கொல்ல எழுந்தமை, 467, 478; முதலிய இடங்களில் தெளிவாய்க் காணப் பெறுவதால், அது பொருத்தமாகாது.

(பி-ம்.) 1. கேளுரைப்பன்: உயிரன்ன வுயிரோன் றன்னை.
2. கொன்றபோ திறப்பாய் நீயு மென்பது குறித்துப் பின்னர்: கூற்றங் கூடும்: கூற்றுங் கூடும்.
3. என்றெனு ருயிரும்: என்றென்னு ருயிரும்: என்பதை யெண்ணி யன்றே.
4. அமரி னேற்பார். (143)

473. *மானென்ப தறிந்து போன மானிட ராவார் மீண்டி*
*யானென்ப தறிந்தால் வாரா ரேழைமை யெண்ணி நோக்கல்*
*தேனென்ப தறிந்த சொல்லாய் தேவர்தாம் யாவ ரேயெங்*
*கோனென்ப தறிந்த பின்னைத் திறம்புவார் குறையி னல்லால்.*

'தேன் என்பது அறிந்த சொல்லாய்-தேன் என்று அறிந்து கொள்ளக் கூடிய இனிய சொற்களையுடையவளே!, மான் என்பது அறிந்து போன மானிடர் ஆவார் - (மாரீசனை, மாயமானாக யான் அனுப்பியதை உணரமாட்டாது) உண்மை மான் என்று நம்பிச் சென்ற (வலியில்லா அற்ப) மனிதர்களான அவ்விருவரும், மீண்டு - திரும்பி வந்து, யான் என்பதறிந்தால் - (அம்மானை ஏவியதும் உன்னை அபகரித்துச் சென்றதும்) இராவணனாகிய யான் என்பதை அறிந்தார்களானால், வாரார் - (அச்சமேற்கொண்டு, 'உன்னைத் தேடி மீட்டுப்போக(இங்கு)வரமாட்டார்; ஏழைமை எண்ணி நோக்கல் - (யான் உன்னை வஞ்சகமாய் அபகரித்து வந்தது என்)

கோழைத்தனம் என்று நினைத்துக் கொள்ளாதே; எம் கோன் என்பது அறிந்த பின்னை - (இது செய்தது) இராவணனாகிய எம் கோமான் என்று அறிந்துகொண்ட பிறகு, யாவரே தேவர் தாம் - எத் தேவரே தாம், குறையின் அல்லால் - மனவேகம் குறைந்து பின்வாங்குவ தல்லாமல், திரம்புவார் - எனக்கு மாறாக மீறி நடப்பார்?

ஏழைமை எண்ணி நோக்கல் - உன் அறியாமையால் வேறு இழிவாக என்னை எண்ணி நோக்காதே என்றலும், உன் அறியாமையால் அவ் விருவரும் உன்னை இங்கு வந்து மீட்டுக்கொண்டு போவர் என்று எண்ணிப் பாராதே என்றலும் அமையும். தேன் என்பது அறிந்த சொல்லாய் - இனிமை என்பது பயின்ற சொல்லையுடையவளே என்று பொருள் கொள்ளலும் தகும்; தேன் - இனிமை; 'தேனுறை தமிழும்' (கல்லாடம். 9); அறிந்த - பயின்ற; 'களவறிந்தார் நெஞ்சிற் கரவு' (குறள். 288), 'எம் கோன்' தேவர் கூற்று. மீண்டியான்(மீண்டு+யான்); குற்றியலிகரம்: நன். சூ. 93. 'மானென்பதறிந்து-மான் யான் விட்டேனென்ப தறிந்து, மானிடர் ஒரு போக்குக் காட்டிக் கொண்டு போனார்கள்; கோனென்ப தறிந்து பின்னைத் திரம்புவர் குறையினல்லார் - ஒரு காரியம் நான் செய்தேனென்றால், அத்தேவர்களறிந்தாலும், எங்களிறைவன் செய்தா னென்பாரல்லாமல் மாறுபடார்; தாழ்வர்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. மானென்ப தறிந்து போனார்: மானிடர் வாரார் மீண்டு.
2. அறிந்து தேரா வேழமை: யாரோ வேழைநீ யெண்ணி.
3. தேவர்தா மவுணர் தாமெங்.
4. அறிந்து பின்னை; கொள்வரோ குறைவ தல்லால். (144)

474. வென்றோரு மிருப்ப யார்க்கு மேலவர் விளிவி லாதோர்
என்றோரு மிருப்ப வன்றே யிந்திர னேவல் செய்ய
ஒன்றாக வுலக மூன்று மாள்கின்ற வொருவன் யானே
மென்றோளா யிதற்கு வேறோர் காரணம் விரிப்ப துண்டோ.

'மென் தோளாய்-மென்மையான தோள்களையுடையவளே!, வென்றோரும் இருப்ப - என்னை வென்றவர்கள் என்று நீ கூறிய வாலி முதலினோர் வாழ்ந்திருக்கவும், யார்க்கும் மேலவர் விளிவு இலாதோர் என்றோரும் இருப்ப - எல்லோருக்கும் மேலவரும்,சாவு அற்றவர்களுமான தேவர்கள் என்பாரும் பார்த்து இருக்கவும், அன்றே-அல்லவா, இந்திரன் ஏவல் செய்ய - (தேவர்க்கரசனான இந்திரன் என் ஏவற்படியடங்கி எனக்கு) ஊழியம் செய்ய, யானே ஒன்றாக உலகம் மூன்றும் ஆள்கின்ற ஒருவன் - யானே மூவுலகங்களையும் சேர்த்து ஆள்கின்ற ஒருவனாக இருக்கிறேன்; இதற்கு வேறு ஓர் காரணம் விரிப்பது உண்டோ-இதற்கு (என் ஆற்றல் அல்லாமல்) வேறு ஒரு காரணம் யான் விரித்துரைக்க வேண்டுவது இருக்கிறதோ? (இல்லை என்றபடி).

மேலவர் - என்பதற்குத் திரிமூர்த்திகள் என்று கூறுவாருமுளர். அடுத்த 475 இல் மூவரைத் தான் வென்றதாக இராவணன் கூறிக்கொள்வது காண்க.

(பி-ம்.) 2. என்றுரு மிருக்க வன்றே: இருக்க யானவ்.
3. ஒன்றேவிவ் வுலக: ஒன்றுத வுலக; ஒன்றுயில் வுலக மூன்று மாள்கின்ற வொருவ னென்றால்: ஒருவன் றனே.
4. விரிப்ப தென்னே: விரிப்ப தென்னே. (145)

475. மூவருந் தேவர் தாமு முரணுக முற்றுங் கொற்றம்
பாவைநின் பொருட்டி ஞலோர் பழிபெறப் பயன்றீர் நோன்பின்
ஆவியன் மனிதர் தம்மை யடுகிலே னவரை யீண்டுக்
கூவிநின் றேவல் கொள்வென் காணுதி குதலைச் சொல்லாய்.

'குதலை சொல்லாய் - குதலைமொழி பேசுபவளே! மூவரும் - திரிமூர்த்திகளும், தேவர் தாமும்-மற்ற இந்திராதி தேவர்களும், முரண் உக-வலி சிந்த, முற்றும் கொற்றம் - குறையின்றி முற்றுப் பெறும் எனது வெற்றி, பாவை நின் பொருட்டினுல்-பாவை போன்ற உன் காரணமாக, ஓர் பழி பெற-ஒரு நிந்தனையை அடைய, பயன் தீர் நோன்பின்-பயனற்ற தவவிரத வாழ்க்கையை மேற்கொண்ட, ஆ இயல் மனிதர் தம்மை-பசுப் போன்ற வலியற்ற தன்மையுடைய மனிதர்களான அந்த இராமலக்ஷ்மணர்களை, அடுகிலென் - கொல்ல மாட்டேன்; அவரை - அந்த இராமலக்ஷ்மணரை, ஈண்டு-இவ்விடத்தில், கூவி-கூவி அழைத்து, நின்று ஏவல் கொள்வென்-என் எதிரில் நின்று யான் கட்டளையிட்ட பணிவிடைகளைச் செய்யுமாறு அடிமை கொள்வேன்; காணுதி - இதனை நீ நேரில் காண்பாயாக.

ஆ இயல் மனிதர்; பசு சாதுவான பிராணி ஆதலின், அதுபோன்ற வலியற்ற மனிதர் என்றது; 'ஆ இயல் மனிதரும் நோன்பினை உடையவருமான இவர்களை அடுவது, மூவரையும் வென்ற என் வீரத்துக்குப் பழியாகும்; ஆகவே அடுகிலேன்' என்றான். குதலை - இனியமொழி; 'குதலைச் செவ்வாய்க் குறுந்தொடி மகளிர்' சிலப். 30 : 114.

(பி-ம் :) 1. முரணுற முற்றுங்; முரணுறச் செயுமென்.
2. பழிவரப்: பயின்றீர் நோன்பின்; பயன்றீர் நொய்தாம்; பயின்ற நோன்பின்.
3. ஆவியின் மனிதர்; ஆவியர் மனிதர்; அவரை யீண்டக்.
4. கூவநின் : கூவிநின் னேவல் செய்யக் காணுதி. (146)

476. *சிற்றியற் சிறுமை யாற்றற் சிறுதொழின் மனித ரோடே*
*முற்றிய தாயின் வீர முனிவென்கண் விளையா தேனும்*
*இற்றையிப் பகலி னெய்தி னிருவரை யொருகை யால்யான்*
*பற்றினென் கொணருந் தன்மை காணுதி பழிப்பி லாதாய்.*

'பழிப்பு இலாதாய் - நிந்தனைக்கு இடம் அற்றவளே! (அதாவது, எல்லா உத்தம குணங்களும் லக்ஷணங்களும் அமையப் பெற்றவளே என்பதாம்), சிற்றியல், சிறுமை ஆற்றல் சிறு தொழில் மனிதரோடு - அற்பத்தன்மையும், அற்ப வலிமையும், அற்பச் செயலுமுடைய மனிதர்களோடு, முற்றியது ஆயின் - பகைமை முற்றுமேயானல், வீர முனிவு என் கண் விளையாதேனும் - என் வீரத்திற்கு ஏற்ற சினம் என்னிடம் உண்டாகாதென்றாலும், இற்றை இ பகலில் - இன்று இம் முகூர்த்த நேரத்திற்குள்ளேயே, நொய்தின் - எளிதாக, இருவரை ஒரு கையால் - இந்த இராமலக்ஷ்மணர் இருவரையும் என் ஒரு கையால், யான் பற்றினென் கொணரும் தன்மை - யான் பிடித்து இங்குக் கொண்டுவரும் என் வல்லமையை, காணுதி - நேரிற் பார்ப்பாயாக. ஏ: அசை.

இராவணன் பிராட்டியைக் கண்டு மேற்கூறியவாறு பேசிய காலம் இராப்போது ஆகும்; 'கங்குலும் பகல்பட வந்தான்' என்றமை நோக்குக. 407, ஆகலின் இங்குப் பகல் என்பதற்கு ஒரு முகூர்த்தம் என்று பொருள் கூறப்பெற்றது; பகல் - முகூர்த்தம்; 'பகலே நாளொரு முகூர்த்தம்' (சூடா. நிகண்டு.) பற்றினென் - பற்றி: முற்றெச்சம். சிறு தொழின் மனிதர்; 'சிறுமானிடர் பொருளோ'; (பால. பரசுராமப். 19).

(பி-ம்:) 1. மனிச ரோடே; மறவ ரோடே
2: முற்றிய தாவில் வீர; முற்றிய தாய வீர; முற்றிய முரண்போர் செய்யும்: முனிவென்கண் முளையா தேனும்.
3; இற்றையிற் பகலின்; இற்றையப் பகலின்: பகலி னெய்தி; ஏகி: ஒருகை யாலே.
4. பற்றிநின் றேவல் கொள்ளல் காணுதி: பழுதில் லாதாய். (147)

477. *பதவியின் மனித ரேனும் பைந்தொடி நின்னைத் தந்த*
*உதவியை யுணர நோக்கி னுயிர்க்கொலைக் குரிய ரல்லர்*
*சிதைவுற லவர்க்கு வேண்டிற் செய்திநீ யென்று செப்பில்*
*இதமுனக் கிதே யாகி லியற்றுவென் காண்டி யின்னும்.*

'பைந்தொடி - பசிய வளையல் அணிந்தவளே! இன்னும் - மேலும், பதவி இல் மனிதர் ஏனும் - (அந்த இராம லக்ஷ்மணர்) நற்பதவி இல்லாத அற்ப மனிதர்களே ஆனாலும், நின்னை தந்த - உன்னை யான் அடையும்

படிக் கொடுத்த, உதவியை - உபகாரத்தை. உணர நோக்கின் - நன்முக் ஆலோசித்துப் பார்க்குமிடத்தில், உயிர் கொலைக்கு உரியர் அல்லர் - உயிரைக் கொல்வதற்கு உரியவர் ஆகமாட்டார்; அவர்க்குச் சிதைவு உறல் - அவர்கள் அழிவு அடைவதே. வேண்டில் - நீ விரும்பினால், செய்தி நீ என்று செப்பில்-'அதைச் செய்வாய்' என்று எனக்கு நீ சொன்னால், ஈதே உனக்கு இதம் ஆகில் - அவர்களைக் கொல்வதாகிய இதுவே உனக்கு நன்மையானால், இயற்றுவென் - நான் அதைச் செய்து முடிப்பேன்; காண்டி - அதனை நீ காண்பாயாக.

இன்னும் காண்டி - மேலும் அதனையும் யான் செய்வதை நீ பார்ப்பாயாக! என்னலும் ஆகும்.,

(பி-ம்.) 1. பதவிய மனித ரேனும்; பதவியன் மனித ரேனும்; பதறிய மனித ரேனும்: நினைத்த தந்த; நினைத் தந்தந்த.
3-4. சிதைவுற லினக்கு மொவ்வர தென்பது தெளிந்தேன் பின்னும்: இதமுனக் கீதே யாகி லியற்றுவ லின்னுங் கேட்டி.
3. வேண்டிச் செய்திநீ தேர்ந்த தின்றி; வேண்டிச் செய்திறன்; தேர்ந்த தெண்ணின்: தேர்ந்த தின்றின்: 4. காண்டி யின்னே; காண்டி பின்னும். (148)

478 பள்ளநீ ரயோத்தி நண்ணிப் பரதனே முதலி னோராண்
டுள்ளவர் தம்மை யெல்லா முயிர்குடித் தூழித் தீயின்
வெள்ளநீர் மிதிலை யோரை வேரறுத் தெளிதி னெய்திக்
கொள்வெனின் னுயிரு மென்னை யறிந்திலை குறைந்த நாளோய்.

'குறைந்த நாளோய் - தேய்ந்து போன வாழ்நாட்களை யுடையவளே! பள்ள நீர் அயோத்தி நண்ணி - ஆழமான நீர் வளம் மிக்க அயோத்தி நகரை யான் அடைந்து, பரதனே முதலினோர் ஆண்டு உள்ளவர் தம்மை எல்லாம் - பரதன் முதலாக உள்ள ஆங்கிருப்பவர்களை யெல்லாம், உயிர் குடித்து - உயிரைப் பருகி, ஊழி தீயின்-யுகாந்த காலத்து எழும் தீயைப் போல, வெள்ள நீர் மிதிலையோரை - நீர்ப்பெருக்குடைய மிதிலா நகரத்தில் உள்ள உன் தந்தை முதலியோர்களை, வேர் அறுத்து - வேரோடு அழித்து ஒழித்து, எளிதின் எய்தி - பிரயாசையின்றி உடனே இங்குத் திரும்பி வந்து, நின் உயிரும் கொள்வென் - உன் உயிரையும் போக்கி விடுவேன்; என்னை அறிந்திலை - யான் எத்தகைய திறமுடையவன் என்பதை நீ அறியவில்லை.' (என்று கூறினான்).

பள்ள நீர் அயோத்தி - பள்ளமான நீர் நிரம்பிய அகழிகள் சூழப்பெற்ற அயோத்தி என்னலும் அமையும்; அயோத்தி அகழ் சூழ்ந்தது; பால. நகரப். 14. பரதனே என்று ஏகாரம் தேற்றத்தால் கூறியது, இராமபிரானிடத்தில் மிகுந்த பற்றுடையவனும், அவனது வரவை எதிர்

நோக்கித் தவ நியமத்தில் இருப்பவனும், அவ்விராமன் ஆணைப்படி அயோத்தியையும் அங்குள்ளாரையும் காத்து வருபவனும் ஆதல் பற்றி; பரதனுடைய வீரத்தைப் புகழ்ந்தது என்னலும் ஆம். இதுகாறும் இரா வணன் பிராட்டியிடம் இதமாய்ப் பேசுபவன் போல் காட்டி, அவள் ஒன் றுக்கும் கட்டுப்படாமை கண்டு, இச் செய்யுளில் அவன் கோபத்துடன் பேசுவது காண்க; பிராட்டியின் பொருட்டு, அவள் உறவினர் யாரையும் அழித்து விடுவதாக அச்சுறுத்தினமை, பேதம் என்னும் மூன்றுவது உபாயமாகும்.

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு சில பாடல்கள் அதி கமாக உள்ளன.

அ. என்றன னெயிறு தின்று வெரியெழ விழித்து நோக்கி
நி..... லத் தாவி நிலனெளி கலனிற் றேய
மின்றனை மின்சூழ்ந் தன்ன வரம்பையர் சூழ மெல்லச்
சென்றவன் றன்னைச் சார்ந்தாள் மயனருள் திலக மன்னுள்.

ஆ. பொருக்கென வவனி......க...கொடி முறுவல் பூப்ப
அரக்கர்கோ மகனை நோக்கி யாண்மையன் றழகு மன்றால்
செருக்குறு தவத்தைக் கற்பின் தெய்வத்தைத் திருவை யின்னே
வெருக்கொளச் செய்வ தையா வெனவின விளம்ப லுற்றுள்.

இ. செம்மலர்த் திருவி னுளுஞ் சிறப்புறு திலத மன்னுர்
வெம்மையுற் றுன்மேல் வீழ்வார் வெள்கியே நகைசெய் தோதத்
தம்மனத் தாசை வேறேர் தலைமகற் குடையா டன்னை
அம்மலற் றிறைஞ்சும் வேட்கை யாடவற் குரிய தன்றே.

ஈ. புலத்தியன் மரபின் வந்து புண்ணியம் புரிந்த மேன்மைக்
குலத்தியல் பதனுக் கென்றும் பழியன்றே வென்றுங் கொள்ளாய்
வலத்திய லாண்மைக் கீது மாசென மதிப்பி.................
...........................................................................

உ. வாசமென் குழலி னுரால் மண்ணினில் வானில் யார்க்கும்
நாசம்வந் தேன்று......மறைகளே நவிலு மாற்றம்
பூசல்வண் டுறையுந் தாரா யறிந்துநீ புகழாற் பொற்பாற்
றேசுடை யவளோ வென்னிற் சீதையுந்..............

(பி-ம்.) 2. உள்ளுளோர் தம்மை; உள்ளுரார் தம்மை உள்ளுறை பவரை யெல்லாம்.
4. என்னை அறிகிலே.

## இராவணன் பிராட்டியை அச்சுறுத்தல்

479. *ஈதுரைத் தழன்று பொங்கி யெரிகதிர் வாளை நோக்கித்*
*தீதுயிர்க் கிழைக்கு நாளுந் திங்களோ ரிரண்டிற் றேய்ந்த*
*தாதலிற் பின்னர் நீயே யறிந்தவா றறிதி யென்னுப்*
*(போதரிக் கண்ணி னளை யகத்துவைத் துரப்பிப் போனான்)*

ஈது உரைத்து (இராவணன்) இவ்வாறான சொற்களைச் சொல்லி, அழன்று பொங்கி - கோபம் மிகுந்து கிளம்பி, எரி கதிர் வாளை நோக்கி- நெருப்பைப்போல் ஒளிவீசும் தன் கையிலுள்ள வாளைப் பார்த்து, (பின் பிராட்டியை நோக்கி), 'உயிர்க்கு தீது இழைக்கும் நாளும்-உன்னுயிரைப் போக்கவேண்டிய காலமும், திங்கள் ஓர் இரண்டில் தேய்ந்தது-இரண்டு மாதங்களில் முடிந்துவிடும்; ஆதலின் - ஆகையினாலே, பின்னர் நீயே அறிந்த ஆறு அறிதி என்னு-பிறகு உனக்கு எதுதோன்றியதோ அவ் வாறு அறிந்து நடந்து கொள்க' என்று சொல்லி,போது அரி கண்ணினளை- தாமரை மலர் போன்ற செவ்வரி படர்ந்த கண்களையுடைய பிராட்டியை, அகத்து வைத்து - ஆசையால் தன் மனத்தில் இருத்தி வைத்தவனாய், உரப்பி போனான் - (பயந்து தன் வயப்படும் வண்ணம் வெளிப்படை யாய்) கடுமொழிகளால் அதட்டி அவ்விடம் விட்டுச்சென்றான்.

இராவணன் வாளை நோக்கிக் கூறியது, 'இந்த வாளால் உன்னைக் கொல்வேன்' என்பதைக் குறிப்பிட்ட படியுமாம். வீரன் தன் ஆயு தத்தை நோக்கிப் பேசுதல்; 985: பால. தாடகைவதைப். 51; வேள் விப். 48; கலித். குறிஞ்சிப், 3:22: அகநா. 326: 12; சீவக. 266. சூளா. அரசியல். 35. பிராட்டிக்கு இரண்டு மாதம் தவணை வைத்தது; வான்மீகம். சுந்தரகாண்டம். சருக்கம் 22. சுலோகம் 8. அகத்து வைத்து. என்பதற்குப் பிராட்டி எங்கும் தப்பிப் போகச் சிறிதும் இடமின்றி அரக்கியர் சூழ்ந்த சிறையினுள் வைத்து. எனப் பொருள் கொள்வதும் ஒருவாறு பொருந்தும். தேய்ந்தது என்று இறந்த காலத் திற் சொன்னது, துணிவுபற்றி வந்த கால வழுவமைதி என்க.

(பி-ம்.) 1. எதிரெதிர்.
2. தீதுயிர்த்திழைக்கும் நாளுந் திங்களோ ரொன்றுந் தேய்ந்தால்: நாளில் திங்களோ ரிரண்டுந் தேய்ந்த: திங்களொன் ருண்டிற் றேய்ந்த; திங்களா றிரண்டிற் றேய்ந்த.
3. பின்னை நீயே: ஆதலி னன்னதென் றறிந்தவா றறிதி யென்னுப். (150)

## இராவணன் அரக்கியர்க்குக் கட்டளையிடல்

480. *அஞ்சுவித் தானு மென்மை யறிவுறத் தேற்றி யானும்*
*வஞ்சியிற் செவ்வி யாளை வசித்தென்பால் வரச்செய் யீரேல்*
*நஞ்சுமக் காவெ னென்னு நகையிலா முகத்துப் பேழ்வாய்*
*வெஞ்சினத் தரக்கி மார்க்கு வேறுவே றுணர்த்திப் போனான்.*

'வஞ்சியில் செவ்வியாளை-பெண்களுள் சிறந்த அழகுள்ள சீதையை, அஞ்சுவித்தானும் - பயமுறச் செய்தேனும், மென்மை - மென்மையாய் அறிவு உற தேற்றியானும் - புத்தியிற் படும்படி தெளியச் சமாதானங்கள் சொல்லியேனும், வசித்து - என் வசப்பட்டவளாகச்செய்து, என் பால் வர செய்யீரேல் - என்பால் வருமாறு செய்யாது போவீரானால், உமக்கு நஞ்சு ஆவென் என்று - உங்களுக்கு நான் விஷம் போற் கொடியவனாவேன்' என்று, நகையிலா முகத்து பேழ்வாய் - சிரிப்பு என்பதே இல்லாத கொடிய முகத்தையும் பிளவுபட்ட பெரிய வாயையுமுடைய, வெம் சினத்து அரக்கிமார்க்கு-கொடிய கோபத்தையுடைய அரக்கியர்களுக்கு, வேறுவேறு-ஒவ்வொருவருக்கும் தனித் தனியாக, உணர்த்தி போனான் - புத்தியிற் படும்படி அறிவுறுத்தி, (இராவணன் தன்னிருப்பிடம் நோக்கிச்) சென்றான்.

அஞ்சுவித்தானும், தேற்றியானும் என்பவற்றில் உள்ள ஆனும் என்பன ஆயினும் என்பதின் தொகுத்தல் விகாரங்கள். அறிவு உற - நல்லறிவு உண்டாக; அதாவது பிராட்டி தனக்கு இணங்குவதே அவளுடைய நல்லறிவாகும் என்பது இராவணன் கருத்து. வஞ்சி - பெண்; பிங்களம்; வஞ்சி; கொடியுமாம்.

(பி-ம்.) 1. மேன்மை யறிவுறத்: தேற்றி யேனும்.
2. வருவீ ரன்றேல்; வரச்சொல் லீரேல்.
3. ஆவே னென்று நகையெயிற் றுடைய பேழ்வாய்.
4. வேறுவே றுரைத்துப் போனான். (151)

## அரக்கியர் பிராட்டியைக் கனன்று கூறல் 481-85

481. போயின னரக்கன் பின்னைப் பொங்கரா நுங்கிக் கான்ற
தூயவெண் மதிய மொத்த தோகையைத் தொடர்ந்து சுற்றித்
தீயவல் லரக்கி மார்க டிரண்டெழுந் துரப்பிச் சிந்தை
மேயின வண்ண மெல்லாம் விளம்புவான் றொடங்கி னரால்.

அரக்கன் போயினன் - இராவணன் அவ்விடம் விட்டுத் தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தான்; பின்னை-பிறகு, பொங்கு அரா நுங்கி கான்ற- சீறியெழும் இராகுவாகிய பாம்பு விழுங்கி வெளியே உமிழ்ந்த, தூய வெண் மதியம் ஒத்த-தூய்மையான வெண்ணிறச் சந்திரனைப் போன்ற, தோகையை - மயில் போன்ற பிராட்டியை, தீய வல் அரக்கிமார்கள் - கொடுமையும் வலிமையும் வாய்ந்த (அங்குக் காவலிருந்த) அரக்கியர்கள், தொடர்ந்து சுற்றி - தொடர்பாகச் சுற்றிக் கொண்டு, திரண்டு எழுந்து-ஒன்று கூடி எழுந்து வந்து, உரப்பி-அதட்டி, சிந்தை மேயின வண்ணம் எல்லாம் - தம் மனம் போனபடி யெல்லாம், விளம்புவான் தொடங்கினர் - சொல்லத் தொடங்கினர். ஆல்: அசை.

இராவணன் முன்னின்று விடுபட்ட பிராட்டிக்கு இராகுவினின்று விடுபட்ட மதியம்: ஒப்பு: திருவிளை. 1: 70. அரவு மதியை நுங்குதல்; 'அரவு நுங்கு மதியினுக் கிவணோர் போலக்' குறுந். 395: 4; 'நாகத்தால் விழுங்கப்பட்ட நகை மதிக் கடவுள் போல' சீவக. 2610; கலி. 15: 17; அகநா. 144: 5. உரப்புதல் - அதட்டுதல்; 479. தோகை: சினையாகு பெயராய் மயிலைக் குறித்துப் பின் அம்மயில் போன்ற சாயலுடைய பிராட்டிக்கு உவமையாகுபெயராகிற்றதலின் இங்கு இருமடி யாகு பெயர்.

(பி-ம்.) 1. பொங்கரா விழுங்கிக் கான்ற.
2. மதியை யொத்தார் தூயவள் தொடர்ந்து.
3. டெழித்திழித் துரப்பிச்.
4. விளம்புவா னுடன்று மிக்கார்; விளம்புவான் துணிந்தார் மன்னே. (152)

வேறு

482. *முன்முன் னின்றார் கண்கனல் சிந்த முடுகுற்றார்*
*மின்மின் னென்னுஞ் சூலமும் வாளும் மிசையோச்சிக்*
*கொன்மின் கொன்மின் கொன்று குறைத்துக் குடராரத்*
*தின்மின் றின்மின் னென்று தெழித்தார் சிலரெல்லாம்.*

சிலர் எல்லாம் - சில அரக்கிமார்கள், கண் கனல் சிந்த - தமது கண்களினின்று நெருப்பு சிதறி விழ, முன் முன்நின்றார்-ஒருவர் முன் ஒருவராக முந்திக் கொண்டு நின்றவர்களும், முடுகுற்றார் - விரைந்து பிராட்டியை நெருங்கினார்களுமாகி, மின்மின் என்னும் - மினுமினு என்று ஒளி வீசும், சூலமும் வாளும் மிசை ஓச்சி - சூலத்தையும் வாளையும் மேலே வீசி, கொன்மின் கொன்மின்-இவளைக் கொல்லுங்கள் கொல்லுங்கள்;கொன்று குறைத்து-கொன்று இவள் உடலைத் துண்டங்களாக்கி, குடர் ஆர தின்மின் தின்மின் என்று - வயிறு நிறையும்படி தின்னுங்கள் தின்னுங்கள் என்று சொல்லி, தெழித்தார் - அதட்டினார்கள்.

முன்முன், மின் மின் என்னும் அடுக்குகள் எண்ணுப் பொருளன. கொன்மின் கொன்மின்,தின்மின் தின்மின் என்னும் அடுக்குத் தொடர்கள் விரைவுப் பொருளனவும், வெகுளிப் பொருளனவும், ஆம். இவை இராவணன் கட்டளையிட்டபடி அரக்கியர் பிராட்டியை அஞ்சுவித்தமை; குடர் - வயிறு;'குடல் என்பதின் போலி; 'குடரிலே நெடுங்காலம் கிடந்தேற்கு' (அயோத்யா குகப். 70.)

ஒரு பிரதியில் இச் செய்யுள் முதல் உருக்காட்டு படலம் தொடங்குகிறது.

(பி-ம்.) 1. சிந்தி: முடுக்குற்றார்.
2. வாளும் மவை: வேலு மிசை; வேலு மிவையோச்சி.
3. கொன்று குவித்துக்;கொன்று முரித்துக். (153)

483. *வையந் தந்த நான்முகன் மைந்தன் மகன்மைந்தன்*
*ஐயன் வேத மாயிரம் வல்லோ னறிவாளன்*
*மெய்யன் புன்பால் வைத்துள தல்லால் வினைவென்றோன்*
*செய்யும் புன்மை யாதுகொ லென்றார் சிலரெல்லாம்.*

சிலர் எல்லாம்-வேறு சில அரக்கிமார்கள், 'வையம் தந்த நான்முகன் மைந்தன் - உலகங்களைப் படைத்த பிரமதேவனுடைய புதல்வனான புலத்தியனது, மகன் மைந்தன் - மகனான விச்ரவஸ் என்னும் முனிவரின் குமாரனான இவ்விராவணன், ஐயன் - மூவுலகுக்கும் தலைவன்; வேதம் ஆயிரம் வல்லோன் - ஆயிரம் சாகைகளோடு கூடிய சாமவேத முழுவதும் தேர்ந்தறிந்தவன்: அறிவாளன் - அறிவிற் சிறந்தோன்; உன் பால் மெய் அன்பு வைத்துளது அல்லால் - (அத்தகைய இவன்) உன்னிடம் உண்மையான ஆசை வைத்திருப்ப தல்லாமல், வினை வென்றோன்-தான் மேற்கொண்ட காரியங்களி லெல்லாம் வெற்றி கொண்டவன்; (அப்படியிருக்க), செய்யும் புன்மை யாதுகொல் என்றார்-நீ செய்யும் அறிவில்லாக் காரியம் என்னை?' என்று இதமாய் அறிவுறுத்தலானார்.

பிரமன் குமாரர் புலத்திய முனிவர்; அப்புலத்தியர் குமாரர் விச்ரவஸ் முனிவர்: விச்ரவஸ் மைந்தன் இராவணன் என்பது குலமுறை உரைத்தபடி; இராவணன் குலமுறை: உத்தர. திருவோலக். 17. வேதம் ஆயிரம் வல்லோன்: இராவணன் சாம வேதத்தில் தேர்ச்சி யுள்ளவன்; 'சாம கீதம் பரிவுடன் பாட லுற்றான்': உத்தர. வரையெடுத்த. 74:இனி, பல கிளைகளோடு கூடிய நான்கு வேதங்களையும், தனுர்வேதம் முதலிய பிற வேதங்களையும் அவற்றின் அங்கங்களையும் உணர்ந்தவன் என்று கூறலும் அமையும். இராவணன் வேதமாயிரம் அறிந்தமை: உத்தர. இராவணன் பிறப்புப்: 17; ஐயன்-தலைவன்; ஐ-தலைவன்: 'என்னை முன் நில்லன்மின்' குறள்: 771; ஐயன் - அரசன்; அழகுடையவன் என வேறு பொருள்களும் தரும். இது, இராவணன் கட்டளையிட்டுச் சென்றபடி, அரக்கியர் அறிவுறத் தேற்றியது.

(பி-ம்.) 1. வையந் தந்தான்.
2. வல்லான்.
3. வைத்தன னல்லால் வினைவேறே; வைத்துள னல்லால்.
4 யாதுள தென்றார். (154)

484. *மண்ணிற் றேய்வோர் மானிடர் தத்தம் வழியோடும்*
*பெண்ணிற் றீயோய் நின்முதன் மாளும் பிணிசெய்தாய்*
*புண்ணிற் கோலிட் டாலன சொல்லல் பொதுநோக்காய்*
*எண்ணிற் காணாய் மெய்ம்மையை யென்றார் சிலரெல்லாம்*

சிலர் எல்லாம் - மற்றும் சில அரக்கியர்கள்; (பிராட்டியை நோக்கி), 'மானிடர் - மனிதர்கள், மண்ணில் - பூமியிலே, தேய்வோர் - பிறந்து அழியும் இயல்புடையவர்கள்; பெண்ணில் தீயோய்-பெண்களாகப் பிறந்தவர்களுள் கொடியவளே! (நீயோ, எனில்) நின் முதல்-உன் காரணமாக, தத்தம் வழியோடும் மாளும் பிணி செய்தாய் - அம்மானிடர் யாவரும் தங்கள் தங்கள் குலங்களோடும் அழிந்து போகத் தக்க துன்பத்தைச் செய்தவள் ஆனாய்; (இராவணனிடம்) புண்ணில் கோல் இட்டால் அன சொல்லல் - புண்ணிலே கோலை இட்டது போன்ற (கொடுஞ்சொற்களைப்)பேசாதே; மெய்ம்மையை - உண்மையை, பொது நோக்காய் - பொதுவாகக் காணமாட்டேனென்கிறாய்; எண்ணில் காணாய் - நினைத்தும் அறியமாட்டாதவளாகிறாய்'; என்றார் - என்று கூறினார்கள்.

தத்தம் விதிப்படி தாம்தாம் மாயும் இயல்புடைய மானிடர்களை உன் காரணமாக ஒருமிக்கத் தம் குலத்தோடு நீ மாயச் செய்கின்றாய் என்று கூறினர் என்க. இராவணன், அவள் கொடுஞ் சொல் கேட்டு மானிட வர்க்கத்தையே ஒழித்துவிடுவன் என்பது கருத்து. மானிடர், இராம லக்ஷ்மணர்களைக் குறிப்பதாகவும் பொருள் கொள்வர். நின்முதல் என்பதில் முதல் என்பதற்கு வமிசம் என்றும் பொருள் கொள்ளலும் ஒன்றும். புண்ணில் கோல் இட்டது, முன்பே பிராட்டியை அடையாமையால் உண்டான மன வருத்தத்தோடு கொடுஞ் சொல்லைக் கூட்டிக் கூறியது. கோல்: இங்கு ஆயுதப் பொது. புண்ணிற் கோலிடுதல்: ஒப்பு: அயோத்யா. கைகேசிசூழ். 20; கிளைகண்டு; 58; ஆரண்ய. சடாயு. வதைப், 165: கலித். 83: 30; 84: 30; 120: 17; பெருங். 1. 54: 46: 4. 13. 130. பொது நோக்காய் எண்ணில் மெய்ம்மை காணாய் என்பதற்குச் சமநிலையாக ஆராய்ந்தால் உண்மை உனக்கு விளங்கும் என்றும் பொருள் கூறலாம்.

*(பி-ம்.)* 1. மண்ணிற் றீய மானுயர்; மண்ணிற் றீயோர் மானுயர்; மண்ணிற். றூய மானிடர்: தத்தம் வலியோடும்.
2. மாயும் பிணிசெய்தாய்.
3. சொல்லிப் பொதுநோக்கா:நோக்கால்;நோக்கல்:நோக்கா(து).
4. எண்ணிக் காணாய்: மெய்ம்மையும்; எம்மையும்.

*485.* புக்க வழிக்கும் போந்த வழிக்கும் புகைவெந்தீ
ஒக்க விதைப்பா னுற்றனை யன்றோ வுணர்வில்லாய்
இக்கண மிற்று யுன்னின மெல்லா முயிர்வாழா
சிக்க வுரைத்தோ மென்று கதித்தார் சிலரெல்லாம்.

சிலர் எல்லாம் - (மற்றுமுள்ள) சில அரக்கியர், 'உணர்வு இல்லாய்-ஆராய்ந்து உணரும் சக்தியற்றவளே!, புக்க வழிக்கும் - நீ வந்து புகுந்த

உன் கணவன் மரபுக்கும், போந்த வழிச்கும் - நீ பிறந்த உன் தந்தை மர புக்கும், புகை வெம் தீ - புகையோடு கூடி எரியும் கொடிய தீயை, ஒக்க விதைப்பான் உற்றனை அன்றோ - ஒருசேர விதையிடுவதாகும் காரியத்தை மேற்கொண்டுள்ளாய் அல்லவா? இ கணம் இற்றாய் - (நாங்கள் கூறும் புத்திமதியை நீ கேட்டு அதன்படி நடக்காவிட்டால்), இந்த க்ஷணமே நீ அழிந்தவள் ஆவாய்; உன் இனம் எல்லாம் - உன் இனத்தார் எல்லாரும், உயிர் வாழா - உயிரோடு பிழைத்திருக்க மாட்டார் கள்; சிக்க உரைத்தோம் - (உன் மனத்திற் பதியும்படித்) தெளிவாய்ச் சொல்லிவிட்டோம்;' என்று கதித்தார் - என்று கோபித்துச் சொன்னார் கள்.

'சிக்க-உறுதியாக' என்பது பழைய உரை, சிக்க-அகப்பட; சீவக, 1890 உரை; சிக்க என்பதைத் திசைச் சொல்லாகக் கொண்டு சிக்க வுரைத்தல் சுருக்கமாய்ப் பேசுதல் எனப் பொருள் கொள்வாரும் உளர்; சிக்க: வடுகுச்சொல், இனம் என்றதால் பெண்ணினமே இனி வாழா தென்றும், உன் சுற்றத்தா ரெல்லோரும் இனி வாழாரென்றும் கூறின தாகவும் கொள்ளலாம். புக்க வழி - பிறந்தகுலம்; போந்தவழி-மணம் செய்து கொண்டு போயடைந்த குலம் எனக் கொள்ளலும் அமையும். புக்க - பிறவியால் புக்க. சில சுவடிகளில் இச்செய்யுளும் அடுத்த செய்யு ளும் இடம் மாறி உள்ளன. இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணு மாறு ஒரு செய்யுள் அதிகமாக உள்ளது.

என்றா ரின்னு மெத்தனை சொற்கொண் டிதமாறக்
கன்றா நின்றார் காலு மெயிற்றார் கனல்கண்ணார்
ஒன்றோ மற்று மாயிர கோடி யுளரம்மா
பொன்றா வஞ்சங் சொண்டவ ரின்னும் புகல்கின்றார்.

(பி-ம்.) 1. புகழ்வெந்தீ; புகவெந்தீ.
2. ஒக்க விசைப்பா னுற்றனை: விளைப்பா னுற்றனை
3. முற்றோ யுன்னின; மற்றா யுன்னின; மிற்றா றுன்னின; எல்லா மினிவாழா: இனிவாழாய்; வாழாச்.
4. உரைத்தே மென்று தெழித்தார்; கொதித்தார்; செறுத்தார்; உரைத்தோ மீதறி யென்றார். (156)

## பிராட்டி வருந்துதல்

486. கொல்வா னுற்றோர் பெற்றிமை யாதுங் குறையாதோன்
வெல்வா னெங்கோன் றின்னுமின் வம்மி னிவண்மெய்யை
வல்வாய் வெய்யோ னேவலி னென்னு மனம்வைத்தார்
நல்வாய் நல்லாள் கண்கள் கலுழ்ந்தா ணகுகின்றாள்.

... கொல்வான் உற்ருேர் - பிராட்டியைக் கொல்லும் பொருட்டு எழுந்துவந்த அரக்கியர், 'எம் கோன் பெற்றிமை யாதும் குறையா தோன்-எங்கள் அரசஞன இராவணன் காரியத்தைச் செய்து முடிக்கும் முறையில் சிறிதும் குறையாதவன்; வெல்வான் - அவன் வெற்றியடை வான்; வெய்யோன் - அவன் கொடியவன்; வல் வாய் ஏவலின் - கடுஞ் சொல்லிற் கூறிய அவன் கட்டளையின்படி, வம்மின் - வாருங்கள்; இவள் மெய்யை தின்னுமின் - இந்தச் சீதையின் உடலைக் கொன்று தின்னுங் கள்;' என்ன மனம் வைத்தார் - என்று சொல்லி அச் செயலைப் புரிய மனம் கொண்டார்கள்; நல்வாய் நல்லாள் - நல்ல அறமொழிகளைக் கூறிய உத்தம மகளாகிய பிராட்டியும், கண்கள் கலுழ்ந்தாள் - கண்களினின் றும் நீர் சொரிந்தவளாகி, நகுகின்ருள் - தன் துயர நிலையைக் கருதித் தானே சிரித்துக் கொண்டாள்.

பெற்றிமை-முறை அல்லது தகுதி. நல்வாய் நல்லாள்-இராவண னுக்கு அறமொழி கூறிய பிராட்டி; நல்ல குணங்களமைந்த பிராட்டி என்னும் ஆம். நகுதல்; துயர மிகுதியிற் ருேன்றும் மெய்ப்பாடுகளில் ஒன்று. 'கொல்வான் உற்ருேர் - இந்தப் பிராட்டிக்காக நம்மை ஒருவர் கொல்ல வேண்டுமென்று வந்த போதிலும்; தின்னுமின் - நாம் (இவள்) மெய்யைத் தின்போம்; வல்வாய் வெய்யோன் - இயமன்; ஏவலில் - அவன் தூதரைப் போல; மனம் வைத்தாள் - பிராட்டி கேட்டாள், என் பன பழைய உரை.

ஒரு சுவடியில் இச் செய்யுள் இல்லை. மற்ருேர் சுவடியில் இப்பாடல் பின்வருமாறு காணப்படுகிறது.

கொல்வான் வந்த மானிட ரோடக் குலமெல்லாம்
வெல்வா ளெங்கோ னேகினன் யாமு மிவண்மெய்யை
வல்வா யின்க ணுங்குதும் வம்மி னெனுமேல்வை
நல்லா ளுந்தன் னங்கம் நடுங்கித் துயருற்ருள்.

(பி-ம்.) 1. பெற்றியும் யாதும்; குறையாதாள்; குலையாதாள்.
2. வெல்வா னங்கோன்: வம்மென் பவர்மெய்யும்.
3. னேவலு மெல்லா மனம்வைத்தாள்.
4. நல்லா ளல்ல: கலுழ்ந்தே நகுகின்ருள். (157)

## திரிசடை அரக்கியருக்கு அறிவுறுத்தல் 487-88

487. இன்னே ரன்ன வெய்திய காலத் திடைநின்ருள்
முன்னே சொன்னேன் கண்ட கனவின் முடிவம்மா
பின்னே வாளா பேதுறு வீரேற் பிழையென்ருள்
அன்னே நன்றென் ருரவ ரெல்லா மறிவுற்ருர்.

இன்னோர் அன்ன - இத்தகைய அவலநிலை, எய்திய காலத்து - பிராட்டிக்கு நேர்ந்தபொழுதில், இடை நின்றாள் - அங்கு அவர்கள் இடையே நின்ற திரிசடை என்பவள், (பிராட்டியை நோக்கி) கண்ட கனவின் முடிவு முன்னே சொன்னேன் - (நான்) கண்ட கனவினால் ஏற்படும் முடிவுகளை முன்னமே சொன்னேன்; வாளா பேதுறுவீரேல்-வீணே மயங்கி வருந்துவீரானால், பின்னே பிழை என்றாள்-பிறகு அது பெருந்தவறாக முடியும் என்று (எடுத்துக்) கூறினாள்; (அதனையும், அக்கனவின் வரலாறுகளையுங் கேட்டு), அவர் எல்லாம் - அந்த அரக்கியரெல்லாம், அறிவுற்றார் - நல்ல அறிவு அடைந்தவர்களாகி, அன்னே நன்று என்றார் - தாயே நீங்கள் கூறியது நல்லது' என்று (திரிசடையிடம்) கூறினார்கள். அம்மா, இரக்கப் பொருளில் வந்த இடைச் சொல்,

வான்மீகத்தில் சுந்தர. 27 ஆம் சருக்கத்தில், இராவணன் அசோக வனத்திற்கு வந்து திரும்பிய பின், அவன் ஏவலினால் அரக்கியர் பிராட்டியை அச்சுறுத்த, அதனால் பிராட்டி, தன் உயிரை மாய்த்துக் கொள்ள நிச்சயித்த போது, திரிசடை அவ்வரக்கியர்களை நோக்கித் தான் கண்ட கனவைச் சொல்லி அவர்களைச் சாந்தப் படுத்தினாள் என்று சொல்லப் பெற்றுளது. ஆனால், இந் நூலிலோ 366—381 ஆம் செய்யுட்களில் அரக்கியர் உறங்கிக் கொண்டிருந்தபோது திரிசடை பிராட்டியிடம் கனவைக் கூறி அவளைத் தேற்றினாள் என்று கூறப்பெற்றுளது. முதனூலை ஒட்டி இச் செய்யுள் திரிசடை அரக்கியருக்குக் கூறியதாகப்பொருள் கூறுவது முன் கதைப் போக்கிற்கு ஒவ்வாதாதலால், திரிசடை தான் முன்னே கூறிய கனவைப் பிராட்டிக்கு நினைப்பூட்டிய தாகவும், அதனை முதன் முதல் கேட்டு அரக்கியர் அறிவுற்று அடங்கினார்கள் என்றும் பொருள் கூறப்பெற்றது. அம்மா, கேட்பிக்கும் பொருளை உணர்த்தும் இடைச் சொல்லும் ஆம்: தொல், இடையியல். 271. இங்கு அம்மா என்று நீண்டொலித்தது இசைநிறை பொருட்டு.

(பி-ம்) 1. இன்னோ ரன்னா ரெய்திய; இன்னோ ரன்ன தோதிய.
3. வாளாற் பெய்துறு வீரேர் பிழை; பேதுற்று வீரோ:பிழையென்ன.
4. அன்ன தேறென் றன்னவ ரெல்லா மகல்வுற்றார்: அவிவுற்றார்! அமைவுற்றார். (158)

488. *அறிந்தா ரன்ன முச்சடை யென்பா ளவள்சொல்லப்*
*பிறிந்தார் சீற்ற மன்னனை யஞ்சிப் பிரிகில்லார்*
*செறிந்தா ராய தீவினை யன்னார் தெறலெண்ணார்*
*நெறிந்தா ரோதிப் பேதையு மாவி நிலைநின்றாள்.*

முச்சடை என்பாள் அவள் அன்ன சொல்ல - திரிசடை என்பவள் அவ்வாறு கூற, செறிந்தார் ஆய தீவினை அன்னார்-பிராட்டியை

நெருங்கிச் சூழ்ந்திருந்த தீவினை போன்ற அவ்வரக்கியர், அறிந்தார் - தம் நிலையை உண்மையாய் அறிந்தவர்களாகி, சீற்றம் பிறிந்தார் - கோபத்தினின்றும் மாறுபட்டவர்க ளானார்கள்; மன்னனை அஞ்சிப் பிறிகில்லார் - (ஆயினும்; அவர்கள்) தங்கள் அரசனான இராவணனுக்கு அஞ்சி அவ்விடத்தின் காவலைவிட்டு நீங்காதவர்களாய், தெறல் எண்ணார் - அவளைப் பகைத்து வருத்துவதை நினைக்காதவர்கள் ஆயினர்; நெறிந்தார் ஓதி பேதையும் - சுருண்டு விளங்கும் அடர்ந்த கூந்தலை யுடைய அப்பிராட்டியும், ஆவி நிலை நின்றாள் - தன் உயிர் (ஒருவாறு) நிலைத்திருக்க லானாள்.

நெறிந்தார் ஓதி; 'நெறிந்தகருங் குழன்மடவாய்' பெரியாழ்வார் திருமொழி. 3: 10: 1.

இதன்பின் ஒரு பிரதியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

> தீயோர் செய்கை தானு மிராம னொருதேவித்
> தாயா டுன்பு மாருதி கண்டே தளர்வெய்தி
> மாயா தொன்றே யன்றி மனத்தே மலிதுன்பத்
> தோயா துன்னிச் சோர்பவ னென்றங் குணர்வுற்றான்.

(பி-ம்.) 1. அறிந்தாள் போலு; அறிந்தா ளன்பின்; அதுசொல்லப்.
2. மன்னவ னேவற் பிறழ்கில்லார்.
3. செறிந்தார் சுற்றுந் தீவினை நீங்குஞ் செயலென்ன; செறிந்தாரந்தச் செய்யவள் செப்புஞ் செயல்பற்றி; செறிந்தார் சுற்றுந் தீவினை நீங்குந் திறலென்ன.
4. நிலைபெற்றாள். (159)

காட்சிப் படலம் முற்றும்.

## 4. உருக்காட்டு படலம்

### அநுமன் அரக்கியரை உறங்கச் செய்தல்

489. *காண்டற் கொத்த காலமு மீதே தெறுகாவல்*
*தூண்டற் குற்ற தீயவ ரெல்லாந் துயில்வுற்ருர்*
*ஈண்டத் துஞ்சும் விஞ்சைகள் செய்தா னிகல்வீரன்*
*மாண்டற் ருரா மென்றிட வன்ரு ரயர்வுற்ருர்.*

உருக்காட்டுபடலம் - அநுமன் தன் விசுவருபத்தைப் பிராட்டிக்குத் தோற்றுவித்து அவளுக்குத் தன் மெய்ம்மையை உணர்த்திய செய்தியைக் கூறும் படலம் என்று விரியும்.

இகல் வீரன் - போரிற் சிறந்த வீரனுன அநுமன், 'தெறு காவல் தூண்டற்கு உற்ற தீயவர் எல்லாம் - வருத்தும் காவலை மேன்மேலும் தூண்டுவதற்குப் பொருந்திய கொடிய அரக்கியர் எல்லாரும், துயில்வு உற்ருர்-தூங்கத் தொடங்கினர்; 'காண்டற்கு ஒத்த காலமும் ஈதே - பிராட்டியைக் காண்பதற்கு ஏற்ற காலமும் இதுவேயாகும்;' (என்றெண்ணி). ஈண்டத் துஞ்சும் - (அவர்களை) நன்ருகத் தூங்கச் செய்யும், விஞ்சைகள் செய்தான் - (துயில்தற்குரிய) மந்திரங்களை உச்சரித்து ஏவினுன்; மாண்டு அற்ருர் ஆம் என்றிட - மாண்டு ஒழிந்தார் என்று சொல்லும்படி, அன்னுர் அயர்வுற்ருர் - அவ்வரக்கியர் சோர்ந்து கிடந்தனர்.

அரக்கியர் விழித்திருந்தால், தான் பிராட்டியுடன் பேசவிட மாட்டார்; ஆதலின், அவர்கள் அயர்ந்து உறங்குமாறு மந்திரப் பிரயோகம் செய்தான் அநுமன் என்பதாம். அநுமன் மந்திரத்தால் அரக்கியரைத் தூங்க வைத்த செய்தி; 1282. மேலும், அநுமன் எல்லாக் கலைகளிலும் வல்லவன் ஆதலால், அவனுக்கு மந்திர வித்தையிலும் தேர்ச்சியுண்டு என்பது பெறப்படும்; 'இல்லாத வுலகத் தெங்கு மிங்கிவ னிசைகள் கூரக், கல்லாத கலையும் வேதக் கடலுமே' (கிட்கிந்தா. மராமரப். 20.) விஞ்சை; வித்யா என்னும் வட சொல்லின் திரிபு, இது வித்தை, விச்சை, விஞ்சை யெனத் திரிந்தும் வரும். காவல் அரக்கியர் உறங்குமாறு அநுமன் விஞ்சை செய்ததாக வான்மீகத்தில் இல்லை.

(பி-ம்.) 1. தெறுகாதல்.
2. தூண்டற் கொத்த சிந்தையி னுருந் துயில்கில்லார்.
சிந்தையர் முன்னே துயில்வுற்ருர்: சிந்தையி னுளுந் துயருற்ருள்: துயிலுற்ருர்.

3. வேண்டத் துஞ்சா ரென்றொரு விஞ்சை வினைசெய்தான்: வேண்டிற் றுஞ்சார்.

4. மாண்டற் குற்றா ராமென: ஆண்டுக் குற்றா ரானவ ரெல்லாம்; எல்லா மவியுற்றார்: (1)

## பிராட்டி வருந்துதல் 490-497.

490. *துஞ்சா தாருந் துஞ்சுதல் கண்டா டுயராற்றாள்*
*நெஞ்சா லொன்று முய்வழி காணா ணெகுகின்றாள்*
*அஞ்சா நின்றாள் பன்னெடு நாளு மழிவுற்றாள்*
*எஞ்சா வன்பா லின்னப கர்ந்தாங் கிடருற்றாள்.*

துஞ்சாதாரும் - ஒரு போதும் தூங்காதவர்களான காவல் அரக்கியரும், துஞ்சுதல் கண்டாள்-அப்பொழுது தூங்குவதைப் பார்த்தவளும், துயர் ஆற்றாள் - தனக்கு நேர்ந்துள்ள துன்பத்தைத் தாங்க முடியாதவளும், நெஞ்சால் ஒன்றும் உய்வழி காணாள் - அத்துன்பத்தினின்றும் தப்பிப் போவதற்கு வழி ஒரு சிறிதும் மனத்தால் எண்ணிக் காணாதவளும், நெகுகின்றாள் - மனம் உடைகின்றவளும், அஞ்சா நின்றாள் - அச்சமேற்கொண்டவளும், பல் நெடு நாளும் அழிவுற்றாள் - பலநெடு நாட்களாய்க் கேடடைந்தவளுமான பிராட்டி, எஞ்சா அன்பால்-இராமபிரான்பால் கொண்ட குறையாத அன்பினால், ஆங்கு இன்ன பகர்ந்து-அப்பொழுது பின் வருமாறு இவற்றைச் சொல்லி, இடர் உற்றாள்-வருந்தினாள்.

துஞ்சாதாரும்: உம்மை, உயர்வு சிறப்பின்பாற் படும். துஞ்சாதாரும் துஞ்சுதல்: முரண் தொடை என்னும் அணி. நெஞ்சால் காணாள் என்பதில் காணுதல் ஆராய்ந்தறிதல் என்பதாம்; இது, ஒன்றன் செயலை மற்றொன்றின் மேலேற்றிக் கூறுதலாகிய உபசார வழக்கு. இது நெஞ்சு என்னும் அகக்கண்ணால் யோசித்துப் பார்ப்பது என்னும் பொருளினையுட்கொண்டது. பல் நெடு நாள் - பல நீண்ட நாட்கள். பகர்ந் தாங்கு: ஆங்கு அசை நிலையும் ஆம்: 'ஊடலி னுண்டாங்கோர் துன்பம் புணர்வது' (குறள். 1307., பரிமேல், உரை.) இனி, எஞ்சா வன்பால் எனக்' கொண்டு, தன்னிடமுள்ள குறையாத கற்பின் உறுதியை மேற்கொண்டவளாய், என்று பொருள் கோடலும் அமையும்; வன்பு - உறுதி: 'பழிதீர் மாமை வன்பி னாற்றுத லல்லது செப்பிற் சொல்ல கிற்றும் (குறுந். 368.) பிராட்டி வருந்திக் கூறியவை, பின்வரும் 7 செய்யுட்களிற் காணப்படும்.

(பி-ம்.) 1. கண்டே துயருற்றாள்; துயராற்றா.

2. நெஞ்சா ளொன்றா லுய்வழி காணாள்: நினைகின்றாள்: ஒன்றோவுய்வழி.

3. நின்றாளன்னெடு: நாளுமயர் வுற்றாள்: அயர்கின்றாள். (2)

வேறு

491. கருமே கநெடுங் கடல்கா ரனையான்
தருமே தமியேன் றனதா ருயிர்தான்
உருமே றுமிழ்வெஞ் சிலைநா ணொலிதான்
வருமே யுரையாய் வலியார் விதியே.

'வலி ஆர் விதியே - வலிமை மிகுந்த ஊழ் விதியே! கரு மேக நெடும் கடல் கா அனையான் - கரிய மேகம், நெடிய கடல், சோலை இவை போன்ற (கரிய திருமேனி நிறமுடைய) இராமபிரான், தமியேன் தனது ஆருயிர் தான் தருமே - (அவரைப் பிரிந்து) தனியே இருந்து (இன்னல்களுக்குள்ளாகி வருந்துபவளான) என் அரிய உயிரையும் இங்கு வந்து காத்தருள்வாரா? உறும் ஏறு உமிழ் வெம் சிலை நாண் ஒலி தான் - பெரிய இடி போன்ற பெரு முழக்கத்தை உமிழும் (இராமபிரானது) கொடிய கோதண்டத்தின் நாணோசையும், வருமே - இங்கு வந்து என் காதில் படுமோ?' உரையாய் - நீ எனக்கு எடுத்துரைப்பாயாக.

இச்செய்யுள் முதல் 497 முடிய சீதையின் பிரலாபம். வலியார் விதி; விதி வலிது என்பதாம்; 'ஊழிற் பெருவலி யாவுள' (குறள். 380.) இராமாயணமே விதியின் வலியை எங்கும் வற்புறுத்துவது என்பது நோக்கத்தக்கது. இராமபிரானுக்குக் கருமேகம், கடல், கா என்பவற்றை உவமை கூறியது, அவற்றின் நிறம் பற்றியும், அப் பெருமான் கருமேகம் போல உலகின் வெம்மையைப் போக்கித் தண்மையை அளிப்பவன் ஆதலானும், கடல் போன்ற பெருந்தன்மையும்; சமயம் வந்துழி உலகை அழிக்கும் ஆற்றலும் அமைந்தவனுதலானும், கற்பகச்சோலைபோன்ற கொடை வண்மையுடையவனு தலானும் என்க; 'மறிகடலோ மழை முகிலோ..................வடிவென்பது'; 'மேகந்தனி வருகின்றது மின்னேடென' (அயோத்யா. கங்கை. 1, 4) என்பவற்றாலுங் அறியலாம். சிலை நாண் ஒலிக்கு இடி; அயோத்யா. நகர் நீங்கு. 124. தருமே, வருமே என்பன வற்றில் உள்ள ஏகாரங்கள் வினப் பொருளில் வந்தவை.

(பி-ம்) 1. கா ரனையான்.
2. தனியே னெனதா ருயிர்தான்.
3. உறுமே றுறழ்.
4. வலியார் வலியே: வலிசேர் விதியே. (3)

492. கல்லா மதியே கதிர்வா ணிலவே
செல்லா விரவே சிறுகா விருளே
எல்லா மெனையே முனிவீர் நினையா
வில்லா ளனையா தும்விளித் திலிரோ.

'கல்லா மதியே - கல்வியறிவில்லாச் சந்திரனே! கதிர் வாள் நிலவே- மிக்க ஒளியுடைய நிலாவே! செல்லா இரவே - போகாது தங்கி நிற்கும் இராப் பொழுதே! சிறுகா இருளே - குறைபடா இருட்டே! எல்லாம் எனையே முனிவீர் - நீங்கள் எல்லோரும் என் ஒருத்தியையே சினந்து வருத்துகிறீர்கள்; நினையா வில்லாளனை - என்னைப்பற்றிச் சிறிதும் நினைக் காத வில் வீரனை இராமபிரானை, யாதும் விளித்திலிரோ-யாதும் கோபிக்க மாட்டீரோ?

கல்லாமதி என்றது - துயருற்ற பெண்ணை அத்துயரினின்றும் காக்க வேண்டுமே அல்லாமல் மேலும் துயருறுத்துதல், கல்வி அறிவு இல்லாக் கயவர் செயல் ஆதலாலும், நீதியே அறியாது தன்னை வருத்துவதாலும் என்க. நிலவு, பிரிந்து விரகதாபத்தில் உள்ளோரை நெருப்புப் போல் சுட்டு வருத்தும் என்பது; 'வயங்கனல்வாய் மின்ருெத்து நிலா' பால. கடிமணப். 7; 'நீணிலாவென்னும் நெருப்பு' (நள. 1: 102). பிரிந்தோர்க்கு இரவு புலராது நீட்டிக்கும் என்பது; 'இருளானது தா னெனையூழி கொலாம்' (பால. கடிமணப். 9.) இரவையும் இருளையும் பிரித்துக் கூறியபடி; ஒப்பு: பெருங். 33: 203-5. கதிர்வாள் - ஒரு பொருட் பன்மொழி. விளித்தல் - கோபங் கொள்ளுதல்; 'விளிந்தாரே போலப் பிறராகி' (பழமொழி. 182). வில்லாளனை என்ற குறிப்பால், அவனிடம் வில் இருக்கிறது, அதனால் அவன் உங்களை அழித்து விடுவான் என்ற அச்சம் போலும் என்பது உணரக்கிடக்கும். கேட்கும் செவிப் புலன் இல்லாத மதி, நிலவு, இரவு, இருள் முதலியவற்றைக் கேட்குந போலச் சொல்லும் இது, மரபு வழுவமைதியின் பாற்படும். வரும் செய்யு ளிலும், இவ்வழு வமைதி தொடர்வது காண்க.

(பி-ம்.) 1. கல்லார் மதியே: கல்லார் பதியே: கதிர்வா ளிலவே; கதிர்கா ளிலவே. 2. செல்லா விருளே சிறுகா விரவே.
3. மெனை நீர் முனிவீர்; முனிவீர் நிலைய; முனைவீர் நினையா.
4. வில்லா ளனில்யா தும்விளம் பிலிரோ; விளிந் திலிரோ. (4)

483. *தழல்வீ சியுலா வருவா டைதழீஇ*
*அழல்வீ ரெனதா வியறிந் திலிரோ*
*நிழல்வீ ரையனு னுடனே நெடுநாள்*
*உழல்வீர் கொடியீ ருரையா டிலிரோ.*

கொடியீர் (மதியும் நிலவும் இரவும் இருளுமாகிய) கொடியோர் களே! தழல் வீசி உலா வரு வாடை தழீஇ-நெருப்பை (நாற்புறமும்)

வீசிக்கொண்டு உலாவி வரும் வாடைக் காற்றைத் தன்னுடன் சேர்த்துக் கொண்டு, அழல்வீர் - என்னை எரித்து வருத்துகின்றீர்; எனது ஆவி அறிந் திலிரோ - என் உயிர் படும் துன்பத்தை நீங்கள் அறிய வில்லையோ? நிழல் வீரை அனன் உடனே - (தன் திருமேனியின்) ஒளியால் கடல் போன்ற இராமபிரானுடனே, நெடுநாள் உழல்வீர் - பலகாலமாகச் சேர்ந்து வனத் தில் பழகியுள்ளீர்கள்; உரை ஆடிலிரோ - (அப்பெருமானிடம்) யான் படும் துயரைச் சொல்லமாட்டீர்களோ?

வாடைக் காற்று இயல்பாகவே வெப்பமிக்கது; அது பிரிந்தாரை வருத்தும் மதி, நிலவு, இரவு, இருள் என்பனவற்றோடு சேர்ந்துகொண்ட தால் பிராட்டிக்குப் பெருந்துயர் மேலிட அவ் வாடையை நோக்கிக் கூறுவாளாயினள். வாடை பிரிந்தாரை வருத்தும்; கிட்கிந்தா. கார் காலப். 13; குறுந். 35:5. கொடியீர் என்று பன்மையிற் கூறியது, முன் செய்யுளில் தன்னை வருத்தியதாகக் கூறிய, மதி, நிலவு, இரவு, இருள் என்பனவற்றையும் இங்குக் கூட்டிக் கூறியதாகும். நிழல் - ஒளி; 'நிழல் கால் நெடுங்கல்' சிலப், 5:127; 'நிழலுறு மதியம்' (சீவக. 408.) தழீஇ - அளபெடை. கடல் இராமபிரான் திருமேனிக்கு உவமை; 'மறி கடலோ மழை முகிலோ'; 'நீர்வீரையனுன்' (அயோத்யா. கங்கைப். 1; உயுத்த. படைத் தலைவர். 84.). வீரை - கடல்; (பிங்களம்). இராம பிரான் வனத்தில் பல ஆண்டுகள் பல இடங்களிலும் நிலவு, இருள், இரவு, என்று பாராட்டாது அலைந்து திரிந்து வாழ்ந்தவனுதலால், நெடுநாள் உழல்வீர் என்றுள். 'இவ்வளவு பழக்கம் இருந்தும் அப்பெருமானிடம் சொல்லி, என் துயர் நீக்கி, என்னை மீட்டுப்போகச் செய்யாது என்னையும் வருத்துகின்றீரே' என்ற ஆற்றுமையால், 'கொடியீர்' என்றுள். 'என தாவி அறிந்திலிரோ' என்றதில், ஆவி என்றதற்கு உயிர்போன்ற இராம பிரான் என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. வீசி யுலாய்வரு. 2. அறிந் திலரோ.
3. வீரை யனுருடன்: நிழல்சே ரயனு ருடனீர்.
4. உரையா டிலரோ. (5)

**494.** *வாரா தொழியா னெனும்வன் மையினுல்*
*ஓரா யிரகோ டியிடர்க் குடைவேன்*
*தீரா வொருநாள் வலிசே வகனே*
*நாரா யணனே தனிநா யகனே.*

வலி சேவகனே - வலிமை மிக்க வீரனே! தனி நாயகனே - ஒப்பற்ற கடவுளே! நாராயணனே-நாராயணனென்னும் திருநாமம் உடையவனே!

வாராது ஒழியான் எனும் வன்மையினல் - (எனது நாயகனை இராம பிரான்) வராமல் இருக்கமாட்டான் என்ற உறுதியால், ஒரு நாள் தீரா - ஒரு நாளும் நீங்காத, ஓர் ஆயிர கோடி இடர்க்கு உடைவேன் - எண்ண வொண்ணுப் பல கோடித் துன்பங்களுக்கு உள்ளாகி வருந்துபவ ளாயினேன்.

(பி-ம்.) 1. எனும்வண் மையினல்; எனும் வாய்மையினல்
2. ஈரா யிரகோடி: இடர்க் குடையேன்.
3. தீரா யொருநா ளருள். (6)

495. *தருவொன் றியகா னடைவாய் தவிர்நீ*
*வருவென் சிலநா ளினின்மா நகர்வாய்*
*இருவென் றனையின் னருடா னிதுவோ*
*ஒருவென் றனியா வியையுண் ணுதியோ.*

'தரு ஒன்றிய கான் அடைவாய் - மரங்கள் பொருந்திய காட்டை என்னுடன் அடைய விரும்புபவளே! நீ தவிர் - அவ்வாறு நீ கான் வரும் எண்ணத்தை விடுவாயாக; சில நாளினின் - சில நாட்களுள், வருவென் - யான் திரும்பி வந்து விடுவேன்; மாநகர் வாய் இரு - (இந்த அயோத்தி யாகிய) பெரிய நகரத்திலேயே இருப்பாயாக;' என்றனை-என்று எனக்கு அன்று எடுத்துக் கூறினீர்; ஒரு என் தனி ஆவியை உண்ணுதியோ - (அப்படிப்பட்ட நீவிர்) ஒருத்தியாய்ப் பிரிந்து இங்குப் பல துயருக் குள்ளாய் வருந்தும் என் உயிரை, (நீரே இங்கு வந்து என்னை மீட்காமல்) வருத்துகின்றீரோ ? இன் அருள் தான் இதுவோ - (அல்லது), இதுதான் நீவிர் என்பாற் காட்டிய இனிய அருள் போலும்.

இராமபிரான் பிராட்டியைக் காட்டிற்கு வரவேண்டாம் என்றது; அயோத்யா. நகர் நீங்கு. 221. 'காட்டில் நீவிர் என்னருகில் துணை யிருக்கும்போதே எனக்கு ஏதேனும் துயர் வரும் என்று அன்பினல் அஞ்சி, எனக்குத் துயர் சிறிதும் விளைக்கக் கருதாததுபோல், என்னைக் காட்டிற்கு வரவேண்டாம் என்று தடுத்துச் சொன்ன நீர், இப்பொழுது உம்மைப் பிரிந்து இக்கொடிய சிறைப்பட்டு வருந்தும் என்னைப் பற்றிச் சிறிதும் நினையாதிருப்பதாகிய இதுதான் உமது அருள் இருந்தவாறு' என்று கூறிப் பிராட்டி வருந்தினள் என்க. உயிரை உண்ணுதி; உண்ண ஒண்ணுத ஒன்றை உண்ணுவதாகக் கூறுவது மரபுவழுவமைதி. 'உமது விருப்பின்படி நான் அயோத்தியில் இராது உம்முடன் வனம் வந்த கோபத்தால் அதற்கு ஒரு தண்டனையாக யான் உம்மைப் பிரிந்து இத் தகைய துயரில் வருந்தவேண்டுமென்று இருக்கிறீரா?' என்று பிராட்டி கருதியதும் ஆம். என் ஆவியைப் போக்க எண்ணுபவர் இராவணனும்

அவன் ஏவலில் என்னை அச்சுறுத்தி வருத்தும் இவ்வரக்கியரும் அல்லர்; நீரேதான் போலும்' என்பதும் ஆம்.

(பி-ம்.) 3. அருடா னிதுவேல். (7)

நெஞ்சொடு கூறுவதில்.

496. பேணும் முணர்வே யுயிரே பெருநாள்
நாணின் றுழல்வீர் தனிநா யகனைக்
கா ணுந் துணையுங் கழிவீ ரலிர்நான்
பூணும் பழியோ டுபொருந் துவதோ.

பேணும் உணர்வே - யான் விரும்பிக் காத்து வரும் என் அறிவே! உயிரே - என் உயிரே! பெருநாள் - பல நாட்களாக, நாண் இன்று உழல்வீர் - வெட்கமில்லாமல் என்னோடு கூட இருந்து நீங்களும் துயருக்கு உள்ளாகின்றீர்கள்; தனி நாயகனை - ஒப்பற்ற என் நாயகனை இராமபிரானை, காணும் துணையும் - யான் காணுமட்டும், கழிவீர் அலிர் - என்னை விட்டு நீங்கமாட்டீர்கள் போலும்; நான் பூணும் பழியோடு பொருந்துவதோ - நான் ஏற்றுக்கொண்டுள்ள பழியோடு நீங்களும் பொருந்தி வருந்துவதோ?

நாணின் றுழல்வீர் என்றது, 'நாணு லுயிரைத் துறப்பர்' என்ற குறள். கருத்தை (1017) ஒட்டிக் கூறியது. 'உணர்வே, உயிரே, நீவிர் என்னை விட்டு நீங்குவதே தக்கதாகும். அவ்வாறின்றி என்னை நீங்கள் பிரியா திருப்பதால் எனக்குண்டாய பழி உங்கட்கும் உண்டாகும்' என்று கூறியதாம். அன்றியும் பூண்டுள்ள இப்பழியோடு இருந்து யான் வாழ வேண்டு மென்பது உங்கள் விருப்பம்போலும் என்று பிராட்டி, தன் அறிவையும் உயிரையும் நோக்கி வெறுத்துக் கூறியதும் ஆம். இவற்றால் பிராட்டி இப்பழியோடு உயிர் வாழ விரும்பவில்லை யென்பது விளங்கும். இனி, இது பிராட்டி தன் உயிரும் உணர்வும் தன்னை விட்டு நீங்காமை யைக் குறித்து வருந்திக் கூறினதும் ஆம். இராமபிரானைக் காணும் விருப் பத்தால், தான் உயிர்வாழ்வதைக் குறித்து, அவ்வாறு காத்திருப்பது பழியைச் சுமந்துகொண் டிருத்தலாகு மாதலால், அவர் வருகைக்கு இனிக் காத்திராமல் தன் உயிரை விட்டுப் பழி நீங்கக் கருதிக் கூறினதா கவும் கொள்ளலாம். அன்றியும், உயிர் தானாகவே நீங்காமையால் தான் மேற்கொள்வதாக இருக்கும் தற்கொலை புரிந்து கொள்ளுதலால் உண் டாகும் பழி உயிரையும் உணர்வையும் சாருமே என்று இரங்கினமையும் தொனிக்கும். முன் செய்யுளில் வந்ததுபோல் இங்கு, உணர்வையும் உயிரையும் நோக்கிக்கூறியது மரபுவழுவமைதி எனக் கொள்க. இன்று, இன்றி என்னும் எதிர்மறைக் குறிப்புவினையெச்சத்தின் திரிபு ஆகும்.

(பி-ம்.) 1. பேணுன் னலனென் னுணர்வே பெரிதா: உயிரே யொரு நாள்; உயிரே பெருகும்.
2. நாணென் றுழல்வீர்: நனிநா யகனைக்.
3. காணுந் தனையும்; காணும் மளவும். (8)

497. முடியா முடிமன் னன்முடிந் திடவும்
படியே ழுநெடுந் துயர்பா விடவும்
பொடியேய் நெறிவந் துவனம் புகுதும்
கொடியான் வருமென் றுகுலா வுவதோ.

முடியா முடிமன்னன் முடிந்திடவும் - அழியாது நெடுநாள் வாழ்ந்து முடி சூடியிருந்த சக்கரவர்த்தியாகிய தசரதர் இறந்து போகவும், படி ஏழும் நெடும் துயர் பாவிடவும் - (அவனது பிரிவால்) ஏழு உலகங்களிலும் நீண்ட துயர் பெருகி வருத்தவும், பொடி ஏய் - மணற்பொடிகள் பொருந்தியுள்ள, நெறி வந்து - வழியே புறப்பட்டு வந்து, வனம் புகுதும் கொடியான் - காட்டில் வசிக்கப்புகுந்த கொடிய நெஞ்சினனான இராமபிரான், வரும் என்று குலாவுவதோ - (இப்பொழுது என் மீது மனமிரங்கி என்னை விடுவித்துப் போக) வருவானென்று நான் கொண்டாடிக் கொண்டு மகிழ்ந்திருப்பதோ? (அது தகாது என்றபடி.)

'இராமபிரான் கொடியானாதலால் தன்னை மீட்க வரமாட்டான்; ஆதலால் அவனை எதிர்பாராது இறத்தலே நன்று' என்று பிராட்டி முடிவு கட்டினாள் என்க. அறுபதாயிரம் ஆண்டு குறையாத வலியோடு உலகை ஆண்டு வந்த சக்கரவர்த்தி இறப்பதற்குக் தான் காரணமாகி அவர் இறந்தமையாலும், தன்னுடைய வனவாசத்தால் உலகமேழும் பெருந்துயர் கொள்ளவும், அவற்றைப் பொருட்படுத்தாது இரக்கமின்றி வனம் சென்றமையாலும் அவனைக் கொடியான் எனக் கூறினள் என்க. பிரிவாற்றா நிலையில் தலைவனைத் தலைவி கொடியான் என்றல்; குறுந். 252-2; „78-4; அகநா. 163: 12. படி ஏழு என்றது இப் பூமியின் பகுதிகளாகிய ஏழு தீவுகளைக் குறிப்பதாகவும் கொள்ளலாம். முடியா முடி மன்னன் என்பது முரண்தொடை என்னும் அணி.

(பி-ம்) 3. மடியே னுடன்வந்; மடியா நெறிவந்.
4. கொடியார்; குலாவுதிரோ; குறிப்பதுவோ. (9)

## பிராட்டி உயிர்விடத் துணிதல் 498–509

498. என்றென் றுயிர்விம் மியிருந் தயர்வாள்
மின்றுன் னுமருங் குல்விளங் கிழையாள்
ஒன்றென் னுயிருண் டெனினுண் டிடர்யான்
பொன்றும் பொழுதே புகழ்பூ ணுமெனா

என்று என்று - என்று பலவாறு சொல்லி, உயிர் விம்மி-உயிர் விம்ம லெடுத்து வருந்தி, இருந்து அயர்வாள் - இருந்து தளர்ச்சியுறுபவளும், மின் துன்னும் மருங்குல் விளங்கிழையாள் - மின்னல் தங்கியது போன்ற மெல்லிய இடையையும், பிரகாசிக்கின்ற ஆபரணங்களையுமுடையவளு மான பிராட்டி, 'என் உயிர் ஒன்று உண்டு எனின் - என் உயிர் என்பது ஒன்று உள்ளது என்று சொல்லும் வரை, இடர் உண்டு - என்னைத் துன் பமும் விடாது இருக்கும்; (ஆதலால்), யான் பொன்றும் பொழுதே-யான் இறக்கும் பொழுது தான், புகழ் பூணும் - புகழ் பெறுவேனவேன், என - என்று எண்ணி,

என்றென்று - அடுக்கு மிகுதிப் பொருளில் வந்தது. துன்னும் என் பதை உவமவாசகமாகக் கொண்டு, மின்னல் போன்ற மருங்குல் எனப் பொருள் கொள்ளலுமாம். விளங்கிழையாள் என்பது பெயரளவாகப் பிராட்டியைக் குறிப்பது. இது முதல் 509 ஆம் பாடல் வரை குளகமாகி, அதிலுள்ள எய்தினுள் என்ற வினையோடு இயைந்து முடிவு பெறும்.

(பி-ம்) 1. என்றென் றுளம்விம்மி: இருந் தழிவாள்.
2. மின்றுன்று மருங்குல். (10)

தனிமொழி.

499. *பொறையிருந் தாற்றியென் னுயிரும் போற்றினேன்*
*அறையிருங் கழலவற் காணு மாசையால்*
*நிறையிரும் பல்பக லிருதர் நீணகர்ச்*
*சிறையிருந் தேனையும் புனிதன் றீண்டுமோ.*

'அறை இரும் கழல் அவன் காணும் ஆசையால் - ஒலிக்கின்ற பெரிய வீரக்கழல் அணிந்த இராமபிரானை (யான்) காணலாகும் என்ற ஆசையால், இருந்து - இங்கே இருந்து, பொறை ஆற்றி - (என் துன்பங்களையெல் லாம் பொறுத்துக் கொண்டு, என் உயிரும் போற்றினேன் - என் உயிரை யும் (போக்கிக் கொள்ளாமல்) காத்து வந்தேன்: நிறை இரும் பல் பகல் - குறையாது நிறைந்த பெரிய பல நாட்கள், நிருதர் நீள் நகர் - அரக்கர் கள் வாழும் இந்தப் பெரிய இலங்கை நகரில், சிறை இருந்தேனையும் - சிறைப்பட்டிருந்த என்னையும், புனிதன் தீண்டுமோ - அந்தப் பரிசுத்த மான இராமபிரான் ஏற்றுக் கொள்வாரோ?

அசோக வனத்தில் பிராட்டி இராமபிரானைக் காணவே உயிர் வைத் திருந்தமை; உயுத்த. மாயாசனகப். 22; பிராட்டிகளங்காண். 31. தான் பிறனால், அபகரிக்கப்பட்டுச் சிறை வைக்கப்பெற்றவள் ஆதலின், தன்னை ஏற்றுக் கொள்வது பழிக்கு இடமாகும் என்பது கருதியே இராமபிரான்

இங்கு வந்து தன்னை மீட்காது விட்டு விட்டனன் என்பது பிராட்டி கொண்ட துணிபாகும். புனிதனான இராமபிரான் நிந்தைக் கிடமான தன்னை ஏற்க மாட்டான் என்ற கருத்தால், சிறையிருந்தேனையும் என்று தன்னை இழித்து உம்மையில் கூறினாள் என்க. பின்வரும் உண்மையைப் பாத்திரத்தின் வாயிலால் முன்னறிவிப்பதான கவிமரபும் இங்குக் காண்க. இச்செய்யுள் முதல் 508 முடியப் பிராட்டி தனக்குண்டான பழியைக் குறித்து உயிர் விடத் துணிந்தமை கூறப்படும்.

(பி-ம்.) 1. ஆற்றினே னுயிரும். 2. கழ லரக்கர் மாயையால்.
3. நிறைவரும் பல்பகல். 4. சிறையிருந் தேனையப். (11)

500. *உன்னின வுன்னின வுணர்ந்து சூழ்ந்தவர்*
*சொன்னன சொன்னன செவியிற் றூங்கவும்*
*மன்னுயிர் காத்திருங் காலம் வைகினேன்*
*என்னின்வே றரக்கியர் யாண்டை யார்கொலோ.*

**உன்னினின உன்னின உணர்ந்து** - (இராவணன் என்பால்) எண்ணிய எண்ணத்தைப் பலமுறை யான் அறிந்தும், **சூழ்ந்தவர்** - என்னைச் சூழ்ந்து காவலாய் உள்ள அரக்கியர், **சொன்னன சொன்னன**-பலமுறை சொன்ன வையான கொடுஞ் சொற்கள், **செவியில் தூங்கவும்** - என் காதுகளில் புகுந்து தங்கி ஒலித்துக் கொண்டிருக்கவும், **மன் உயிர் காத்து இரும் காலம் வைகினேன்** - நிலைத்துள்ள என் உயிரைக் காப்பாற்றிக்கொண்டு நெடுங் காலம் (இவ்வரக்கர் ஊரில்) தங்கி வாழ்ந்து வந்துள்ளேன்; **என்னின் வேறு அரக்கியர்** - (ஆதலின்), என்னைவிட வேறு கொடிய அரக்கியர், **யாண்டை யார் கொலோ**-எங்கு இருப்பாரோ? (இரார் இன்பதாம்.)

பிற ஆடவனான இராவணன் தன்னை விரும்பியது பலமுறை அறிந்தும், அவன் கருத்திற்கிணங்குமாறு அரக்கியர் தன்னை வருத்திக் கூறிய கடுஞ் சொற்களைப்பல முறை கேட்டுமுள்ள யான் இது காறும் உயிர் வைத்துக் கொண்டிருப்பது தவறு. அவ்வாறான நிலை தனக்கு ஏற்பட்ட பின்னும் அவற்றைப் பொருட்படுத்தாத வலிய நெஞ்சம் தான் கொண் டிருப்பதால் தன்னினும், கொடுமையும் வலிமையும் வாய்ந்த அரக்கியர் வேறு இருக்க முடியாது என்று பிராட்டி தன்னை நிந்தித்துக் கொண் டாள் என்பதாம்; உன்னின உன்னின, சொன்னன சொன்னன என் னும் அடுக்குகள் மிகுதிப் பொருளை உணர்த்துவன. மன்னுயிர் என் றது, போயிருக்க வேண்டிய உயிர் போகாது நிலைத்திருக்கும் வன் மையை உணர்த்துவது மாகும். இனி, 'வைகினேன் என்னின்' என்று இயைத்து யான் தங்கியிருந்தேன் என்று சொல்வதானால், எனப் பொருள் கூறலும் அமையும். கொல், ஓ என்பன அசைகளாகவும் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. உன்னினர் பிறரென வுணர்ந்து முய்ந்தவர்; உன்னின பலவென வுணர்ந்த ரக்கியர். உன்னரு முளஞ்சுட வொறுக்குந் தீயவர்.
3. மன்னுயி ரகத்திருங்: காத்திது காலம்; காத்தருங் காலம்.
4. என்னின்மிக் கரக்கியர்; என்னின்மற் றரக்கியர் யாவ ரீண்டையார். (12)

501. *சொற்பிரி யாப்பழி சுமந்து தூங்குவேன்*
*நற்பிறப் புடைமையு நாணு நன்றரோ*
*கற்புடை மடந்தையர் கதையு ளோர்கடாம்*
*இற்பிரிந் துய்ந்தவர் யாவர் யானலால்.*

'பழி பிரியாச் சொல் - நிந்தனை நீங்காப் பழிச் சொற்களை, சுமந்து - தாங்கிக் கொண்டு, தூங்குவேன்-கவலையற்று இருக்கின்ற என்னுடைய, நல் பிறப்பு உடைமையும், நாணும் - (பெண்களுக்குரிய சிறப்புக்களான) நல்ல குடிப்பிறப்பும் நாணம் என்னும் உயர் குணமும், நன்று - மிக நன்றாக இருக்கின்றன! (இல்லை என்று இகழ்ந்தபடி); கதையுளோர்கள் கற்புடை மடந்தையர் - சரித்திரங்களிற் சொல்லப்பட்டுள்ள கற்புடைய மகளிராய் உள்ளோர்கள், இல் பிரிந்து-இல்வாழ்க்கைக் குரிய முறையான நிலையிலிருந்து வேறுபட்டு, உய்ந்தவர் - உயிர் வாழ்ந்தவர், யான் அலால் யாவர் - யான் அல்லாது வேறு யார் உள்ளார்கள்? (ஒருவரும் இல்லை என்றபடி). அரோ, தாம்: என்பன அசைகள்.

'இற் பிரிந்த நிலையில் கற்புடைய மகளிர் உயிர் நீத்தவர் என்பது சரிதவாயிலாய் அறியப்படுவதால், தான் உயிர் வாழ்வது கற்பிற்குக் குறைவாகும்; ஆதலின், இறத்தலே மேல்' எனப் பிராட்டி துணிந்தாள் என்பது பெறப்படும். சொற் பிரியாப் பழி, 'வார்த்தையினால் அளவிடப்படாத அபகீர்த்தி' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. சொல்தெரி யாப்பழி; சொற்றிரி யாப்பழி; தூங்கவென்; தூங்கவே.
3. கற்புடை மங்கையர்; மடந்தையர்க் குரிய காட்சியின்; கதையிற் றுனுளோர்.
4. இற்பிரிந் துயர்ந்தவர்; இற்பிறந் துயர்ந்தவ ரென்னில் யாவரே. (13)

502. *பிறர்மனை யெய்திய பெண்ணைப் பேணுதல்*
*திறனல தென்றுயிர்க் கிறைவன் றீர்ந்தனன்*
*புறனலர் தூற்றவே பொழுது போக்கியான்*
*அறனல தியற்றிவே றென்கொண் டாற்றுகேன்.*

பிறர் மனை எய்திய பெண்ணைப் பேணுதல் - அயலார் வீட்டை அடைந்த ஒரு பெண்ணை விரும்பித் (திரும்பி) அழைத்துக் கொள்ளுதல், திறன் அலது என்று-செம்மையின்பாற் பட்டது அன்று என்று, உயிர்க்கு

இறைவன் நீர்ந்தனன் - என் பிராண நாதனான இராமபிரான் என்னைக் கைவிட்டு விட்டான்; புறன் அலர் தூற்றவே - வெளியே (உலகத்தார்) பழிச்சொற்களைக் கூறி நிந்திக்க, பொழுது போக்கி - என் வாழ் நாட்களின் காலத்தைக் கழித்துக்கொண்டு, அறன் அலது இயற்றி - இல்லற தருமத்திற்கு வேறான பாவத்தைச் செய்து, வேறு என் கொண்டு யான் ஆற்றுகேன்-வேறு எந்த நன்மையடையும் பொருட்டு யான் உயிர் வைத்திருக்கக்கடவேன் ?

தான் இனி உயிர் வாழ்தல் அறத்திற்கு மாறுவது, ஆதலால் உயிர் நீத்தலே சிறப்பாகும் எனப் பிராட்டி துணிவு கொண்டாள் என்க. ஆற்றுதல் - உய்தல்: (பிங்களம்). செய்யுள் 499 இல், 'புனிதன் நீண்டுமோ' என்று வினவி, இங்கு, 'இறைவன் நீர்ந்தனன்' என்று முடிவு கட்டினள் என்க,

(பி-ம்.) 1. பிறர்மனை மேவிய.
2. திறனல வென்றுயிர்க்.
3. புறமலர் தூவிடப்; புறனலன் மருளுறப்; புறனல நமருறப் போது: பொறைநல மெய்திட வுயிரைப் போக்கியான்.
4. அறமல வியற்றி: யா னென்கொண்: வே றென்கொ டாற்று கேன். (14)

503. *எப்பொழு திப்பெரும் பழியி னெய்தினேன்*
*அப்பொழு தேயுயிர் துறக்கு மாணையேன்*
*ஒப்பரும் பெருமறு வுலக மோதயான்*
*துப்பழிந் துய்வது துறக்கந் துன்னவோ.*

'எ பொழுது இ பெரும் பழியின் எய்தினேன் - எப்பொழுது யான் இந்தப் பெரும் நிந்தனைக்கு உள்ளானேனோ, அ பொழுதே உயிர் துறக்கும் ஆணையேன் - அந்த நேரத்திலேயே என் உயிரை விட்டுவிட வேண்டிய கட்டுப்பாட்டையுடைய யான், ஒப்பு அரும் - நல்லோரால் ஒப்புக் கொள்ள முடியாத, பெரு மறு - பெரிய பழியாகிய குற்றத்தை, உலகம் ஓத-உலகில் உள்ளோர் கூற, யான் துப்பு அழிந்து-யான் தகுதி கெட்டு, உய்வது - உயிர் வாழ்ந்து இருப்பது, துறக்கம் துன்னவோ - சுவர்க்கத்தை அடையலாம் என்ற எண்ணங்கொண்டோ ? (அடைய முடியாது என்பதாம்).

ஒப்பு அரும்-உவமை எடுத்துக் கூற முடியாத என்றலும் அமையும். உலகம் - உலகிலுள்ள மேலோர். துப்பு - தூய்மை அல்லது பொலிவு (பிங்களம்.) என்னலும் தகும், இதனால், பிராட்டி தான் உயிர் துறக்காமையால் இம்மை மறுமைப் பேறுகள் அழியும் என்று வருந்துவாள்

ஆயினள். இங்கு, எப்பொழுது அப்பொழுது என்று கேள்வியும் விடையுமாக அமைந்துள்ளது, 'யதா ததா' என்ற வட மொழி நடையை மேற் கொண்டது என்பர். இப்பொழுதாவது உயிர் விடுவதே சிறந்தது எனப் பிராட்டி துணிவு கொண்டனள் என்க.

(பி-ம்) 2. துறக்க லாநமால்; துறத்த லாமுறை: துறக்க வாகுமால்.
3. பெரும்பழி யுலக மோத; பெரும்பழி யுலகி னெய்தயான்.
4. துறக்கந் துன்னுமோ; துன்னவே. (15)

504. *அன்பழி சிந்தைய ராய வாடவர்*
*வன்பழி சுமக்கினுஞ் சுமக்க மற்றியான்*
*துன்பழி பெரும்புகழ்க் குலத்துட் டோன்றினேன்*
*என்பழி துடைப்பவ ரென்னின் யாவரே.*

அன்பு அழி சிந்தையர் ஆய ஆடவர் - (என்பால்) அன்பு அழிந்த மனமுடையவரான ஆண் மக்களான இராம லக்ஷ்மணர், வன் பழி சுமக்கினும் சுமக்க - (என்னை மீட்காது இறக்க விடுத்த) கொடிய பழியைத் தாங்கினும் தாங்குக; யான் துன்பு அழி பெரும் புகழ் குலத்துள் தோன்றினேன் - யான் துன்பம் என்பது இல்லாத பெரிய புகழையுடைய குலத்தில் பிறந்துள்ளேன்; (ஆதலால்), என் பழி துடைப்பவர் என்னின் யாவர் -எனக்குண்டான நிந்தனையைப் போக்குபவர் என்னைவிட வேறு சிறந்தவர் யாரே இருக்கின்றனர்? (ஒருவரும் இல்லை என்பதாம்). மற்று, ஏ: அசைகள்.

'பெருமையும் சிறுமையும் தான்தர வருமே' என்றபடி, 'யான் இப்பொழுது இறப்பதால்தான் என் பழி என்னை விட்டு நீங்கும்' என்று பிராட்டி தீர்மானித்தாள் என்க; இது தன் பெருமைக்குத் தானே பொறுப்பாளி என்று பிராட்டி துணிந்து கூறியதாகும். பிராட்டி, தான் பிறந்த குலப் பெருமையையும், புகுந்த குலப் பெருமையையும் நிலை நிறுத்தி அவற்றை உலகில் என்றும் பிரகாசிக்கச் செய்தவள் என்பது அநுமன் வாக்கால் பின் வலியுறுத்தப் பெறுவதும் நோக்குக; 1272. புகழ்க்குலம்; 'வானுயர் தோற்றம்; வான்றோய் குடி' (குறள். 272. உரை) என்றமை போல இலக்கணை வழக்கு. 'துன்பு அழி' குலம் என்றதற்கு, உலகப் பெருந்துயர்களை நீக்கும் பெரும் குலம் என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. சிந்தைய ரான.
2. சுமக்கவுஞ் சுமக்க; சுமக்க மானவர்.
4. என்னில் யாவரே; எண்ணில் யாவரே. (16)

505. வஞ்சனை மானின்பின் மன்னைப் போக்கியென்
மஞ்சனை வைதுபின் வழிக்கொள் வாயெனு
நஞ்சனை யானகம் புகுந்த நங்கையான்
உய்ஞ்சனெ னிருத்தலு முலகங் கொள்ளுமோ.

'வஞ்சனை மானின் பின் - வஞ்சனை (செய்ய எண்ணிப் பொய்யாக வந்த) மானின் பின்னே, மன்னைப் போக்கி - (அதனைத் தனக்குப் பிடித்துத் தரும்படி என்) தலைவனுன இராமபிரானைப் போகச் செய்து, என் மஞ்சனை வைது - என் மைந்தன் போன்ற இலக்குவனை (அடாத மொழிகளால்) திட்டி, பின் வழி கொள்வாய் எனு - இராமபிரான் சென்ற இடத்தை நாடிச் செல்' என்று அனுப்பிவிட்டு, நஞ்சு அனையான் அகம் புகுந்த நங்கை யான் - கொடிய விஷம் போன்ற இராவணன் இருப்பிடத்தில் வந்து புகுந்துகொண்ட பெண்ணுன நான், உய்ஞ்சனென் இருத்தலும்-இறவாமல் உயிர் வைத்துகொண்டு இருப்பதையும், உலகம் கொள்ளுமோ - உலகத்திலுள்ள மேலோர் ஏற்றுக் கொள்வார்களோ? (மாட்டார்.)

'ஆதலால், யான் இப்பொழுதே இறத்தல் நலம்' என்று கருதினுள் என்க. மஞ்சன், உய்ஞ்சனென் என்பவை போலிச் சொற்கள்; 'எழுந்தனர் மஞ்சு தோய்புய மஞ்சரே' (அயோத்யா. கைகேசி. 55.). இலக்குவனைப் பிராட்டி தன் மைந்தன் எனக் கூறியது, தமயன் மனைவி தாய்க்கு நிகரானவள் என்ற முறை பற்றியும், இலக்குவன் வனம் வரும் போது அவன் தாயாகிய சுமித்திராதேவி. அவனிடம் 'இனி உனக்கு இராமனே தந்தை, சீதையே தாய்' எனக் கூறி (அயோத்யா. நகர்நீங்கு. 150) அனுப்பியபடி அவன் இராமனையும் சீதையையும் தந்தை தாயர் எனக் கருதி வழிபட்டு வந்தமையும் உட்கொண்டு. கூறியதும் ஆம். மைத்துனனை மஞ்சன் என்றது அன்பு பற்றிய மரபு வழுவமைதி யாகவும் கொள்ளலாம். சீதை, இலக்குவனை இழித்துரைத்தது; ஆரண்ய. சடாயுவுயிர். 4, 12, 13. உலகம் - உயர்ந்தோர். நங்கை - இகழ்ச்சிக் குறிப்பு.

(பி-ம்.) 1. போக்கினேன்.
2. வழிக்கொள் வாயென்று; என்றேன்.
4. உஞ்சலு மிருத்தலும்; உஞ்சினி யிருக்கவும். (17)

506. வல்லியன் மறவர்தம் வருக்க மாசற
வெல்லினும் வெல்கபோர் விளிந்து வீடுக
இல்லிய லறத்தையா னிறந்து வாழ்ந்தபின்
சொல்லிய வென்பழி யவரைச் சுற்றுமோ.

வல் இயல் மறவர் தம் வருக்கம் மாசு அற - வலிய தன்மை வாய்ந்த வீரர்களான இராம லக்ஷமணர் தம் வம்சத்தின் குற்றம் நீங்க, வெல்லினும் வெல்லுக - இராவணன் முதலிய அரக்கர்களை வென்றாலும் வெல்லட்டும்; (அன்றேல்), போர் விளிந்து வீடுக - போரில் இறந்து அழிந்தாலும் அழியட்டும்; இல் இயல் அறத்தை யான் இறந்து வாழ்ந்த பின் - இல்லறத்திற்கு உரிய தருமத்தை யான் கடந்து போய்த் தவறான வழியில் உயிர்வாழ்ந்த பிறகு, சொல்லிய என் பழி - உலகம் சொல்லியதான எனக்கு ஏற்பட்ட பழி, அவரைச் சுற்றுமோ - அந்த இராமலக்ஷ மணர்களைச் சூழுமோ? (சூழாது என்பதாம்.)

வல்லியல் மறவர் தம் வருக்கம் ஆசு அற எனக் கொண்டு - வலிமை பொருந்திய கொடியோரான இராவணன் முதலிய அரக்கர் குலம், பற்றுக் கோடு அற்று அடியோடு அழிய எனவும் பொருள் கொள்வாரும் உளர்; இனி, வருக்க மாசு - கூட்டமாகிய குற்றம், அற - நீங்க, எனப் பொருள் கோடலும் அமையும். இறத்தல் - நெறி கடந்து செல்லுதல்; குறள். 145, 971; குறுந். 209: 3. இராமலக்ஷமணர்கள் தம் வீரத்தையும் வெற்றியையும் நிலைநாட்ட இங்கு வந்து போரில் இராவணன் முதலிய அரக்கர்களை அடியோடு அழித்துத் தமக்கு ஏற்பட்ட பழியை நீக்கிக் கொள்ளலாம்; ஆனால் என்னை ஏற்றுக் கொள்வர் என்ற உறுதிக்கு இடமில்லை; ஆதலால் என் பழியை யானே நீக்கிக் கொள்ளவேண்டும். அப் பழி யான் இப்பொழுதே இறப்பதால்தான் நீங்கும் என்று பிராட்டி துணிந்தாள் என்க. அன்றியும், தன் பழிக்குத் தானே காரணம் என்றும், அஃது அவர்களைச் சூழாது என்றும் அவள் கொண்டு, அவர்கள் போருக்கு வருதல் தம் மானங் காத்தற் பொருட்டே யன்றி தனக்குண்டான பழியை நீக்குதற் கன்றென்றும் பிராட்டி கருதினாள் என்னலாம்; 'உன்னைமீட் பான்பொருட் டுவரி தூர்த்தொளிர், மின்னைமீட் டுறுபடையரக்கர் வேரறப், பின்னைமீட் டுறுபகை கடந்தி லேன்பிழை, என்னை மீட் பான்பொருட் டிலங்கை யெய்தினேன்' (உயுத்த. மீட்சிப். 68) என்று பின் இராமபிரான் கூறியவையும் காண்க.

(பி-ம்.) 1. வடுவிற் றீர்பவர்; வலியிற் றீர்ந்தவர்.
2. போ ரன்றி மீளுக; போர் வெலாது மீளுக.
3. வல்லிய லறத்தை : இறந்து போனபின்; இகந்து வாழ்ந்தபின்; இகழ்ந்து வாழ்ந்தபின்; இழிந்து வாழ்ந்தபின்.
4. வன்பழி: பழி பிறரைச்: பழி யாரைச் சூழுமோ. (18)

507. வருந்தலின் மானமா வனைய மாட்சியார்
பெருந்தவ மடந்தையர் முன்பு பேதையேன்
கருந்தனி முகிலினைப் பிரிந்து கள்வனூர்
இருந்தவ ளிவளென வேச நிற்பெனோ.

மானம் வருந்தலில் - தன் மானத்திற்குத் துன்பம் ஏற்பட்ட இடத்தில், மா அனைய மாட்சியார் - கவரிமான் போன்ற தன் உயிர் துறக்கும் மேன்மைக் குணமுடைய மேலோரான, பெரும் தவ மடந்தையர் முன்பு - சிறந்த (கற்பு நெறியாகிய) தவத்தையுடைய குலமகளிர் முன்னே, பேதையேன்-அறிவிலியாகிய யான், கரும் தனி முகிலினை - கரிய ஒப்பற்ற மேகம் போன்ற திருமேனியுடைய இராமபிரானை, பிரிந்து - விட்டு நீங்கி, 'கள்வன் ஊர் இருந்தவள் இவள் என - இவள் கள்வனான இராவணனுடைய இலங்கையில் உயிர்வாழ்ந்து இருந்தவள்' என்று, ஏச நிற்பெனோ - (அம்மகளிர் என்னைப்) பழித்துப் பேச அதைப் பார்த்துக் கொண்டிருப்பேனோ? (மாட்டேன்.)

'ஆதலால், இப்பொழுது இறப்பதே மேல்', என்று பிராட்டி துணிந்தனள் என்க. வருந்தலில் - துன்பம் வந்த விடத்து. மானமா - மானத்தையே பெரிதாக எண்ணி உயிர்விடும் கவரிமான், எனவும் பொருள் கொள்ளலாம். மானத்திற்கு மான்: 'மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்' (அயோத்யா. மந்திரப். 7); மயிர் நீப்பின் வாழாக் கவரிமா' (குறள். 969); வான்மயிர் துடக்கிற் றனுயிர் வாழாப், பெருந்தகைக் கவரி யன்ன பீடழிந்து' (பெருங். 35. 233-4).

(பி-ம்.) 1. காட்சியில் 2. பெருந்தகை மடந்தையர்: பேதையின். 3. கருந்தனி முதலினைப். 4. இவளென வெய்தி. (19)

508. அற்புத னரக்கர்தம் வருக்க மாசற
விற்பணி கொண்டருஞ் சிறையின் மீட்டநாள்
இற்புகத் தக்கலை யென்னின் யானுடைக்
கற்பினை யெப்பரி சிழைத்துக் காட்டுகேன்.

'அற்புதன் - அதிசயிக்கத்தக்க குணச்சிறப்புடைய இராமபிரான், அரக்கர்தம் வருக்கம் ஆசு அற - இராக்கதர்களுடைய இனம் பற்றுக் கோடின்றி அடியோடு அழிய, வில்பணி கொண்டு - வில்லின் தொழிலைக் கொண்டு (போர் செய்து இராவணன் முதலினோரை வென்று), அரும் சிறையின் மீட்ட நாள் - கொடிய இச்சிறையினின்று என்னை மீட்கும் போது, 'இல் புக தக்கலை என்னின் - நீ என் வீட்டில் வந்து என்னோடு வாழத் தகுதியுடையவள் அல்லள்' என்று சொல்லி (என்னை ஏற்றுக் கொள்ள மறுத்து விட்டால்), யானுடை கற்பினை - (உண்மையாய்) யான் கொண்டுள்ள கற்பின் நிலையை, எ பரிசு இழைத்து காட்டுகேன் - எவ்விதத்தால் விளக்கிக் காட்டும் வலிமையுடையவளாவேன்? (காட்டும் வழி எனக்கு இல்லை).

ஆதலால், யான் இப்பொழுது இறந்து படுதலே சிறந்தது என்பதாம். அற்புதன் - வியக்கத்தக்க அனந்த கல்யாண குணங்களையுடையவன்: கடவுள்; 'அற்புத னற்புத ரேயறி யுந்தன், சிற்பத மொப்பதோர் மொய்க்கொடு சென்றான்' (பால. வேள்விப், 22). பரிசு-விதம்; 'பகர்மின் வந்தபரி சென்றே' (பால. தாடகை வதைப். 52). இழைத்தல் - செய்தல்; 'யான் முடித்த கோளிதுவால்' (322). 'இல் புகத்தக்கலை' என்றது; பிராட்டி, இராமபிரான் நோக்கத்தை முன்னறிந்து கூறியதும் ஆம் உயுத்த. மீட்சிப். 68.

*(பி-ம்)* 1: அற்புத வரக்கர்தம்: வருக்க மாண்டற.
2. கொண்டிருஞ் சிறையின்.
3. தக்கிலை; என்னி லென்னுடைக்; என்னில் யானருங். (20)

509. *ஆதலா விறத்தலே யறத்தி னாறெனாச்*
*சாதல்காப் பவருமென் றவத்திற் சாம்பினர்*
*ஈதலா திடமும்வே றில்லை யென்றொரு*
*போதுலா மாதவிப் பொதும்ப ரெய்தினாள்.*

'ஆதலால் - ஆகையினால், இறத்தலே - (யான் இப்பொழுது) இறந்து போதலே, அறத்தின் ஆறு என - தருமத்தின் வழிச் செல்வதாகும் என்று தீர்மானித்து, சாதல் காப்பவரும் - யான் இறவாமல் என்னைக் காவல் செய்து வரும் அரக்கியரும், என் தவத்தில் சாம்பினர் - யான் முன் செய்த ஏதோ ஒரு தவப்பயனால் ஓய்ந்து உறங்கிக் கிடக்கின்றனர்; ஈது அலாது வேறு இடமும் இல்லை என்று-இது அல்லாமல் வேறு சமயமும் கிடைப்பதற்கு இடமில்லை என்று நினைத்து, போது உலாம் ஒரு மாதவி பொதும்பர் எய்தினாள் - (அருகே யிருந்த) மலர்கள் அசைந்து விளங்கிய ஒரு குருக்கத்திப் புதரை அடைந்தாள்.

அறத்தினாறு - தருமத்தின் வழி அல்லது முறை; 'செய்கை யன்றோ வறஞ் செய்யுமாறென்றான் (பால. தாடகை. 67); 'அறத்தா றிதுவென வேண்டா' (குறள். 37.) சாம்புதல் - உணர்வழிந்து ஓய்தல்; சீவக; 811. மாதவி - ஒருவகைக் கொடி; இது வடமொழிப் பெயர். 'இதனைத் தமிழில் குருக்கத்தி என்று கூறுவர். இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு இரண்டு அதிகப் பாடல்கள் உள்ளன.

அ. சுற்றிய கொடியொன்றைத் துணித்துத் தூயளோர்
பொற்றடங் கொம்பினிற் பூட்டிப் பூமியே
நற்றவ முடையள்யா னாகி னாயகன்
வெற்றிசேர் திருவடி மேவுவே னென்றாள்.

ஆ. என்றருந் ததிமனத் தெம்மை யாளுடைத்
துன்றருங் கற்பினுள் சுருதி நாயகன்
பொன்றரு மலர்ப்பதம் வழுத்திப் பூங்கொடி
தன்றனிக் கழுத்திடைத் தரிக்கு மேல்வையின்.

மற்ெறாரு பிரதியில் பின்வரும் ஓரதிகப் பாடல்உள்ளது.

எய்தினள் பின்னுமெண் ணுத வெண்ணியீங்
குய்திற மில்லையென் றெருப்பட் டாங்கொரு
கொய்தளிர்க் கொம்பிடைக் கொடியிட் டேதலை
பெய்திடு மேல்வையிற் றவத்தின் பெற்றியால்

(பி-ம்.) 3. ஈதலா விடமும்; ஈதலா லிறையும் : என்றிரும்.
4. பொதும்பர் புக்கினுள். (21)

## அநுமன் தன்னை இராமதூதனெனப் பிராட்டியிடம் தெரிவித்தல் 510-513

510. *கண்டன னநுமனுங் கருத்து மெண்ணினுன்*
*கொண்டனன் றுணுக்கமெய் தீண்டக் கூசுவான்*
*(அண்டர்நா யகனரு டூதன் யானெனுத்*
*தொண்டைவாய் மயிலினைத் தொழுது தோன்றினுன்.)*

அநுமனும் கண்டனன் - (அவ்வாறு பிராட்டி உயிர் விடத் துணிந்து முற்பட்டதை) அநுமனும் பார்த்தான்; கருத்தும் எண்ணினுன்-(பிராட்டி கொண்ட) எண்ணம் இது என்பதையும் ஊகித்துக் கொண்டான்; துணுக்கம் கொண்டனன் - அச்சத்தால் நடுக்கம் கொண்டு, மெய் தீண்ட கூசுவான் - பிராட்டியின் திருமேனியைத் தீண்டி விலக்கு வதற்கு மனம் கூசுபவனுய். 'அண்டர் நாயகன் அருள் தூதன் யான் எனு - நான் தேவர் தலைவனுன இராமபிரான் அருள் செய்து அனுப்பிய தூதனு வேன்' என்று, தொண்டை வாய் மயிலினை - ஆதொண்டைக்கனி போன்ற வாயையுடையவளும், மயில் போன்றவளுமான பிராட்டியை, தொழுது தோன்றினுன் - வணங்கினவனுக அவள் முன் தோன்றி நின்றுன்.

மாதவிப் பொதும்பர் எய்தியதை (509) அநுமன் கண்டனன் என்று முடிக்க. பின் திருவடி தொழுத படலத்தில் அநுமன் இராமபிரானிடம் கூறிய போது 'அன்னதோர் பொழுதி னங்கை யாருயிர் துறப்பதாக, உன் னினள் கொடியொன் றேந்திக் கொம்பொடு முறைப்பச் சுற்றித், தன் மணிக் கழுத்திற் சார்த்து மளவையிற் றடுத்து நாயேன், பொன்னடி வணங்கி நின்று நின்பெயர் புகன்ற போழ்தில்' (1283) என்று கூறியிருத் தலால், பிராட்டி அப்பொழுது செய்த செயல் புலனுகின்றது. இவ்வாறு

ஓரிடத்தில் நிகழும் நிகழ்ச்சிகளிற் சிலவற்றை அங்கங்கேயே சொல்லாமல் பின்பு தகுந்த பிறிதோரிடத்தில் கூறுவது ஆசிரியர் மரபு. வான்மீகத்தில், இங்கு, பிராட்டி தன் சடையைக் கையில் பிடித்துக்கொண்டு 'இறக்கத் துணிந்து, ஒரு மரக்கிளையைப் பற்றிக் கொண்டு நின்றாள்' என்று கூறப் பட்டிருக்கிறது. இவ்வாறு பிராட்டி தற்கொலை செய்துகொள்ளத் துணிந்தமையை ஆசிரியர் இங்குத் தாம் நேரில் கூறுவது தகாதெனக் கருதிப் பின் அநுமன் வாக்கில் (1283) தெரியவைத்த நயம் ஆய்ந்து நோக்கத் தக்கது. அண்டர் நாயகன்-இராமபிரான்: ஒப்பு: உயுத்த. அங்க தன். 21. தொண்டை-ஆதொண்டைக்கனி; இது முதற்குறை. தொழுது தோன்றினன்; ஒப்பு. அயோத்யா. கிளைகண்டு. 52. இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் பாடல் காணப்படுகிறது.

தோன்றினன் றனதுருக் காணத் தூயவன்
மூன்றுல கினுக்குமோ ரன்னை மொய்ம்மலர்
தேன்றிக டிருவடி சென்னி யாற்றொழு
தான்றபே ரன்புகொண் டறைதன் மேயினன்.

(பி-ம்.) 1. அநுமனுங் கடிதி னீக்கினன்; கண்ணிற் காணுமுன்.
2. நாயக னருட்டுதன். 4. தொழுது சொல்லினன். (22)

511. அடைந்தனெ னடியனே னிராம னாணையால்
குடைந்துல கனைத்தையு நாடுங் கொட்பினல்
மிடைந்தவ ருலப்பிலர் தவத்தை மேவலால்
மடந்தைநின் சேவடி வந்து நோக்கினேன்.

'மடந்தை-மடந்தையே! இராமன் ஆணையால் அடியனேன் அடைந் தனென் - இராமபிரான் கட்டளைப்படி அடியேன் இங்கு வந்து அடைந் தேன்; உலகு அனைத்தையும் குடைந்து நாடும் கொட்பினல் - உலக மெல்லாம் துருவி (உன்னைத்) தேடிக்காணும் கொள்கையினல், மிடைந்த வர் - நெருங்கிச் சென்றவர், உலப்பு இலர் - அளவுகடந்த பலர் ஆவர்; தவத்தை மேவலால் - (நான் முன் செய்த) நற்றவப்பயனை இப்பொழுது அடைந்த படியால், நின் சேவடி வந்து நோக்கினேன் - (இங்கு வந்து) உன் சிவந்த பாதங்களைத் தரிசனம் செய்யப் பெற்றேன்.

கொட்பு - கோட்பாடு; மணி. 21: 77. மடந்தை : அண்மைவிளி. இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் ஓரதிகப் பாடல் உளது.

நோக்கினே னரக்கியர் நுனிப்பில் கோடியர்
நீக்கினர் துயிலினை நின்னைக் காணுதற்
காக்கிய காலம்பார்த் தயல்ம றைந்துபின்
தாக்கணங் கவர்துயில் கண்டு சார்ந்துளேன்.

க. 48.

(பி-ம்.) 2. அனைத்தினு நாடுங்.
3. அளப்பிலர் : உலப்பிலாத் தவத்தை : உலப்பிலாத் துயிலின் மேவலால். (23)

512. ஈண்டுநீ யிருந்ததை யிடரின் வைகுறும்
ஆண்டகை யறிந்திலனதற்குக் காரணம்
வேண்டுமே யரக்கர்தம் வருக்கம் வேரொடு
மாண்டில வீதலான் மற்றும் வேண்டுமோ.

ஈண்டுநீ இருந்ததை - இங்கே நீ இருப்பதை, இடரின் வைகுறும் ஆண் தகை - உன் பிரிவால் துன்பத்திற் கிடந்து வருந்தும் ஆடவரிற் சிறந்த இராமபிரான், அறிந்திலன் - அறிந்தானல்லன்; அதற்குக் காரணம் வேண்டுமே - அவ்வாறு அவன் அறியவில்லை என்பதை (நிரூபிக்கக்) காரணம் சொல்ல வேண்டுமானுல், அரக்கர் தம் வருக்கம் வேரொடு மாண்டில - அரக்கர் கூட்டம் அடியோடு இன்னும் அழியவில்லை; (என்பதே ஆகும்): ஈது அலால் மற்றும் வேண்டுமோ-இது அல்லாமல் வேறு காரணம் கூற வேண்டுமோ?

காரணம் வேண்டுமே - காரணம் கூற வேண்டும் அல்லவா? அக்காரணம் யாதெனில், என, உடன்பாட்டுப்பொருளில் கூறுவதும் அமையும். ஆண்டகை அறிந்திலன்; 1288.'உன் பிரிவு அல்லாது வேறுஎந்த இடர்கள் வரினும் அவற்றை அவன் எளிதிற் போக்கும் திறம் வாய்ந்தவன்; உன் பிரிவே அவனை இடரில் ஆழ்த்திப் பெரிதும் வருத்துகின்றது' என்பதை உய்த்துணர வைப்பதாகும். மேலும், இராமபிரான் தன்மீது அன்பில்லாது உபேட்சையாய் இருக்கிருன் என்று பிராட்டி கொண்ட சந்தேகம் தீர, அநுமன் காரணங் காட்டியதுமாகும்: பிராட்டி அவ்வாறு எண்ணங் கொண்டு கூறியவை அனைத்தையும் அநுமன் மறைந்திருந்து கேட்டிருந்தானுதலின்.

(பி-ம்.) 1. இடரில்; வைகுமவ். 3. வேண்டுமேர.
4. மாண்டில வாதலான்: மாறுவே றுண்டோ. (24)

513. ஐயுற லுளதடை யாள மாரியன்
மெய்யுற வுணர்த்திய வுரையும் வேறுள
கையுறு நெல்லியங் கனியிற் காண்டியால்
நெய்யுறு விளக்கனுய் நினையல் வேறென்ருன்.

'நெய் உறு விளக்கு அனுய் - நெய் நிறைந்த தீபம் போன்றவளே! ஐயுறல் - (என்னைப்பற்றியும், இராமபிரான் உண்மைநிலையைப் பற்றியும்) நீ சந்தேகம் கொள்ள வேண்டா: அடையாளம் உளது - (நீ தெரிந்து

கொள்ளும் வண்ணம் இராமபிரான் உனக்குத் கொடுத்தனுப்பிய) அடையாளப் பொருளும் என்னிடம் இருக்கிறது; ஆரியன் மெய் உற உணர்த்திய உரையும் - (அதுவன்றி), போற்றத்தக்க இராமபிரான் (நீ உண்மையை அறியும்படி என்மூலம்) அறிவுறுத்திய அடையாளச் சொற்களும், வேறு உள-வேறு இருக்கின்றன; கை உறு நெல்லி அம் கனியில்-கையில் கொண்டு நோக்கும் நெல்லியின் முதிர்ந்த கனி போல, காண்டி-(அவற்ருல் உண்மையை) நீ கண்டுகொள்வாயாக; வேறு நினையல் - என்னைப் பற்றி வேறு சந்தேகமாக எண்ணுதே;' என்ருன் - என்று அநுமன் விண்ணப்பித்துக் கொண்டான். ஆல்; அசை.

அடையாளப் பொருள்: இராமபிரான் கணையாழி என்பது 552;மெய்யுற உணர்த்திய அடையாள உரை, பின், 549 முதல் 551 வரை உள்ள செய்யுள்களால் விளங்கும். கையுறு நெல்லியங்கனி, அதன் உட்புறத்தினும் வெளிப்புறத்தினும் உள்ளவற்றைப்பளிங்கு போலத் தெரியஉணர்த்தும் தன்மை வாய்ந்தது; ஆதலின், ஐயப்பாட்டிற்கு இடமின்றி ஒன்றை விளக்க இதனை உவமையாகக் கொள்வது மரபாகும்; 676; பால. திருவவதாரப். 121; உயுத்த. மீட்சி. 93. நெய்யுறு விளக்கு: நெய் நிறையப் பெற்ற விளக்கு சுடர் வீசி எழுந்து விளங்கும்; அது போல நீயும் இனித் துயர் நீங்கி, இராமபிரான் அருள் பெற்றுச் சிறந்து விளங்குவாய் என்ற குறிப்பினை உட்கொண்டு அநுமன் இவ்வுவமை கூறிப் பிராட்டியைத் தேற்றினுன் என்பது புலப்படும். நினையல் வேறு, என்பதற்கு நீ உயிரை மாய்த்துக் கொள்வதாகத் தீர்மானித்த செய்கையை மனத்திலும் நினையாதே' என்று தடுத்துக் கூறியதும் ஆம். இனி வேறு நினையல் என்றது, பிராட்டி நினைத்த தற்கொலை செய்து கொள்வதான கொடுஞ் செயலைத் தன் வாயால் சொல்ல விருப்பமின்றி, அநுமன் வேறு என்று குறிப்பினுல் உணர்த்தினுன் என்பதும் ஆம்.

(பி-ம்.) 1. ஐயுறேல்: உனதடை யாளம். (25)

வேறு

## பிராட்டி மனந்தேறி அநுமனை வினவுதல் 514-16

514. என்றவ னிறைஞ்ச நோக்கி யிரக்கமு முனிவு மெய்தி
நின்றவ னிருத னல்ல னெறிநின்று பொறிக ளைந்தும்
வென்றவ னல்ல னுகில் விண்ணவ னுக வேண்டும்
நன்றுணர் வுரையுந் தூய னவையிலன் போலு மென்னு.

என்று அவன் இறைஞ்ச - இவ்வாறு அநுமன் (சொல்லிப் பிராட்டியை) வணங்கி நிற்க, நோக்கி - (பிராட்டி அவ்வநுமனைப்) பார்த்து,

'இரக்கமும், முனிவும் எய்தி நின்றவன் - (தன் துயர் கண்டு) இரக்கமும், வருத்தமும் அடைந்து நின்ற இவன், நிருதன் அல்லன் - அரக்கன் ஆகமாட்டான்; நெறி நின்று பொறிகள் ஐந்தும் வென்றவன் - நல்லொழுக்கத்திலே நின்று ஐந்து பொறிகளையும் வென்ற முனிவர் போன்றவன் ஆவன்; அல்லன் ஆகில் - அவ்வாறு அல்லனுனல், விண்ணவன் ஆக வேண்டும்; ஒரு தேவனுக இருக்க வேண்டும்; உணர்வு நன்று - (இவனது) உணர்ச்சியும் நன்ருயுள்ளது; உரையும் தூயன் - பேச்சுத் தூய்மையும் உடையவனுய் இருக்கிருன்; நவை இலன் போலும் - இவன் குற்றமில்லாதவன் போலும்;' என்னு - என்று பிராட்டி கருதி,

இதுவும் அடுத்து வரும் இரு பாடல்களும் குளகமாகி 516 இல் உள்ள, 'வீரநீ யாவன் என்ருள். என்பதோடு இயைந்து முடிவு பெறும்' இதுமுதல் பிராட்டியின் ஆராய்ச்சித் திறன் 3 செய்யுட்களில் கூறப்படும். அநுமன் இரக்கமும் முனிவும் எய்தியது, பிராட்டி தன் உயிரை மாய்த்துக் கொள்ளும் நிலைமை வந்துவிட்டதே என்று என்க. முனிவு - வருத்தம்; 'முனிவிகந் திருந்த இரவல'; (சிறுபாண். 40. நச். உரை). இனி, முனிவு என்பதற்கு, பிராட்டியின் துயருக்குக் காரணமான இராவணன் பால் அநுமன் கொண்ட கோபம் என்று கொள்ளலும் ஒன்றும். இனி இரக்கமும் முனிவும் எய்தி, என்பதைப் பிராட்டிக்கு இயைத்து, தன்னைத் தேடி இங்கு வந்ததால், இவன் பெருந் துயருக் குள்ளாயிருப்பானே என்ற இரக்கமும் வருத்தமும் அவள் கொண்டாள் என்றும் கொள்ளலாம்.; இரக்கமும் முனிவும் பின் 'துன்பமும் உவகையுஞ் சுமந்த உள்ளத்தாள்' (583) என்றமைபோல. போலும் என்ற சொல்லால், பிராட்டி இன்னும் அநுமன்பால் கொண்டுள்ள ஐயம் நீங்காமை உணரப்படும். இவ்வையப்பாடு பிராட்டியின் உள்ளத்தில் இருந்த தென்பது அடுத்த செய்யுளில் தெளிவுறக் குறிப்பிட்டுள்ளமை நோக்கத் தக்கது. அநுமனை, ஐம்பொறி வென்ற முனிவனுகவும் தேவனுகவும் பிராட்டி கருதியது: முனிவரும் தேவரும் இராவணனுடைய பகைவராய் அவனுல் துன்புறுத்தப் படுபவராதலின், அம் முனிவரையும் தேவரையும் காத்து, இராவணன் முதலிய அரக்கர்களை அழித்து அருள் புரிவதாக அவதாரத்திற்கு முன்பும், பின்பு தண்டகாரணியத்தும், பெருமான் அன்னேர்க்கு அபயம் அளித்துள்ளமையால், அம் முனிவரிலோ தேவரிலோ இவன் ஒருவனுக இருக்கலாம் என்பது பிராட்டியின் எண்ணம் என்க. நன்று உணர் உரையும் தூயன் என்று கொண்டு, நன்ருக உணர்ந்து சொல்லக்கூடிய வார்த்தைகளிலும் தூயன் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்வாறு கூறியதால் அநுமன் திரிகரண சுத்தியுடையவன் என்று பிராட்டி அறிந்து கொண்டாள் என்க. அநுமனை முதன் முதலாகக் கண்ட பிராட்டி அவனைப் பற்றி நினைத்தவை இங்குக் கூறப்பட்டன. இவ்வாறே அவனை முதன்முதல் கண்ட இராமபிரான் கூறினமையும் காண்க; கிட்கிந்தா. மராமரப். 21-22.

(பி-ம்.) 1. என்றவ னிறைஞ்சி நோக்கி யிரக்கமு மெலிவு மெய்தி இறைஞ்சி யேத்த. 2. நின்றனன்: பொறிகளைந்து. 3. விண்ணவ னுதல் வேண்டும். 4. நன்றுள வுரையும். (26)

515. *அரக்கனே யாக வேறோ ரமரனே யாக வன்றிக்*
*குரக்கினத் தொருவ னேதா னுகுக கொடுமை யாக*
*இரக்கமே யாக வந்திங் கெம்பிரா னுமஞ் சொல்லி*
*உருக்கியென் னுணர்வைத் தந்தா னுயிரிதி னுதவி யுண்டோ*

'அரக்கனே ஆக - இவன் இராக்கதனே ஆனாலும் ஆகட்டும்; வேறு ஓர் அமரனே ஆக - அவ்வாறு அரக்கனன்றி. வேறு ஓர் தேவனே ஆகட்டும்; அன்றி - அவ்வாறும் அல்லாமல், குரங்கு இனத்து ஒருவனே தான் ஆகுக - (நேரில் காண்பது போல) குரங்கு இனத்தில் ஒருவனாகவே ஆகட்டும்; கொடுமை ஆக-இவனால் எனக்கு மேலும் தீமையே ஆனாலும் ஆகட்டும்; இரக்கமே ஆக-உண்மையில் இரக்க மேலிட்டுச் செய்யும் நல்வினையே ஆனாலும் ஆகட்டும்;வந்து இங்கு எம்பிரான் நாமம் சொல்லி-(நான் உயிர்விடத்துணிந்த இப்போது) இங்கு (என் எதிரில்) வந்து, என் தலைவரது திருநாமத்தைச் சொல்லி, என் உணர்வை உருக்கி-என் உணர்ச்சியை உருகச் செய்து, உயிர் தந்தான் - (இறக்கத் துணிந்த) என் உயிரை (மீண்டும்) கொடுத்தான்; இதின் உதவி உண்டோ - இதை விடச் சிறந்த உதவி வேறு உண்டோ? (இல்லை என்றபடி).

அநுமனை, முதலில் அரக்கனாக இருக்கலாம் என்று பிராட்டி கருதியது, அங்கு அவளது சூழ்நிலையின் இயற்கையால்; அமரன் என்று கருதியது, முன் (514) 'விண்ணவனுதல் வேண்டும்' என்று எண்ணிய கருத்தின் படி; குரக்கினத்தொருவன் என்றது, அநுமன் உருவை நேரில் பார்த்த படி; உண்மையாய் அவ்வுருவனாகவே இருக்கலாம் என்று கருதியதுமாம். அரக்கனே ஆக, என்பதை, கொடுமையாக என்பதோடும், அமரனே ஆக என்பதை இரக்கமேயாக என்பதோடும். நிரனிறையாக இயைத்துப் பொருள் கொள்ளலும் தகும். இதனில் வந்துள்ள ஏகாரங்கள் தேற்றப் பொருளை உணர்த்துவன. எம்பிரான் நாமம் சொன்னது: 'அடைந்தனெ னடியனே னிராம னாணையால்' 511 என்று கூறியதால். இவ்வாறே 'இராமநாமத்தைக் கூறியதால் நீ யாராயிருப்பினும் உன்னிடம் பேசுவேன்' என்று பிராட்டி அநுமனிடம் கூறியதாகப் பாஸன் இயற்றிய அபிஷேக நாடகமும் கூறும்; மேலும் இதனை அநுமன் இராமபிரானிடத்தும் அறிவித்தது (1284) இலும் காண்க. உணர்வு, ஆன்மாவும் ஆம். திவ்ய. இயற். 1, 67.

(பி-ம்.) 1. அரக்கனே யாக வல்லோ ரமரனே யாக வல்லைக்: அமலனே யாக வின்றிக். 2. குரக்கினத் தலைவ னேதான். 4. உருக்கியென் னுணர்வு தந்தா யுயிர்க்கிதி னுறுதியு ண்டே. (27)

516. எனநினைத் தெய்த நோக்கி யிரங்குமெ னுள்ளங் கள்ள
மனனகத் துடைய ராய வஞ்சகர் மாற்ற மல்லன்
நினைவுடைச் சொற்கள் கண்ணீர் நிலம்புகப் புலம்பா நின்றான்
வினவுதற் குரிய னென்னா வீரநீ யாவ னென்றாள்.

என நினைந்து - என்று பலவாறாக எண்ணி, எய்த நோக்கி - (அவ்வநுமனைச்) செவ்வையாய்ப் பார்த்து, 'என் உள்ளம் இரங்கும்-என் மனம் (இவன் விஷயத்தில் உண்மை யென்றே) இரக்கமடைந்து உருகுகின்றது; கள்ளம் மனன் அகத்து உடையராய-மனத்தில் திருட்டு எண்ணமுடையவரான, வஞ்சகர் மாற்றம் அல்லன் - வஞ்சகரான அரக்கரது வார்த்தைகளை யுடையவன் அல்லன்; நினைவு உடை சொற்கள் - நல்ல எண்ணத்தோடு உடைய வார்த்தைகளை, கண்ணீர் நிலம் புகப் புலம்பா நின்றான் - தன் கண்ணீர் தரையில் விழ வாய் விட்டு அழுது கொண்டே பேசுகின்றான்; வினவுதற்கு உரியன்-(ஆதலின் இவன்) உசாவி அறிதற்கு உரியவனாவன்;' என்னா - என்று தீர்மானித்து, 'வீர நீ யாவன்' என்றாள் - 'வீரனே நீயார்' என்று வினவினாள்.

'என நினைந்தெய்த நோக்கி யிரங்குமெ னுள்ளம்'; ஒப்பு: 'என்பன பலவு மெண்ணி யிருவரை யெய்த நோக்கி, அன்பினனுருகுகின்ற உள்ளத்தன்;' (கிட்கிந்தா. மராமரப். 11). 'இவன் பால் என் மனம் இரங்குகின்றது; இவன் பேசும் மொழிகளும் வஞ்சகத் தன்மையுடையன அல்ல; உள்ளம் உருகிக் கண்ணீர் விட்டுக் கொண்டே பேசுகின்றான்; ஆதலால் இவன் வினவுதற்கு உரியன்' எனப் பிராட்டி தீர்மானித்தனள் என்க. உள்ளம் இரங்குதல், கண்ணீர் நிலம்புக நிற்றல் ஆகியவை அன்பின் விளைவுகள்: 'அன்பிற்கு முண்டோ வடைக்குந்தாழார்வலர் புன்கணீர் பூசல் தரும்' (குறள், 71). நினைவு உடைச் சொற்கள் - அவன் பேசும் சொற்கள் அவன் மனத்திற் கொண்டதை உடன் கொண்டவையாய் இருக்கின்றன என்னலும் அமையும்; அதாவது, மனம் வேறு, சொல் வேறாக இல்லை என்றபடி. நினைவு-வருத்தமும் ஆம்; கிட்கிந்தா. கிட்கிந்தைப். 132; சீவக, 333. உரை. ஆதலால் அநுமனது மனம், வாக்கு செய்கை என்னும் திரிகரணங்களின் சுத்தியைப் பிராட்டி ஊகித்து அறிந்து, பின் அவனோடு பேசத் தொடங்கினாள் என்க: 514. உரையையும் காண்க. 'வீர' என்ற சொல்லால் அநுமனைப் பிராட்டி அழைத்தது, அவன் மேற்கொண்ட செயற்கரிய செயலையும் ஆற்றலையும் குறிப்பிட்டுப் பாராட்டியதோடு, அவன் தன் வீரத்தன்மையால் சிறந்து என்றும் அழியாப் பெரும் புகழ் எய்த வேண்டு மென்று அருள் புரிந்து வாழ்த்தியதும் ஆம். மேலும் 561 இல், அநுமனைப் பிராட்டி 'வீர' என்ற சொல்லால் சிறப்பிப்பது காண்க.

(பி-ம்.) 1. எனநினைந் தினிதி னேக்கி யிரங்குவான்:, எனமொழிந் தெய்த நோக்கி யிங்கிவ னுணரிற் கள்ளம்; எனவுரைத் தினிதி னேக்கி யிரங்குவோ னுள்ளங் கள்ளம்.
2. மனநினை வுடைய ராய வஞ்சக: வஞ்சக மார்க்க னல்லன்; வஞ்சக மாற்ற மல்லன்.
3. நினைவுறுந் தூயன் கண்ணீர்.
4. வினவுதற் குரியேன் யானே: என்ன வீரநீ யாரை யென்றாள். (28)

## அநுமன் தன் வரலாறு கூறல். 517-25

517. *ஆயிடைத் தலைமேற் கொண்ட வங்கைய னன்னை நின்னைத்*
*தூயவன் பிரிந்த பின்னைத் தேடிய துணைவன் றொல்லைக்*
*காய்கதிர்ச் செல்வன் மைந்தன் கவிக்குல மதனுக் கெல்லாம்*
*நாயகன் சுக்கி ரீவ னென்றுள னவையிற் றீர்ந்தான்.*

ஆயிடை - அப்போது, தலை மேல் கொண்ட அம் கையன் - தலை மீது குவித்து வைத்துக் கொண்ட அழகிய கைகளையுடைய அநுமன், 'அன்னை - தாயே! தூயவன் நின்னை பிரிந்த பின்னை - பரிசுத்தனை இராம பிரான் உன்னைப் பிரிந்த பிறகு, தேடிய - தேடிப்பெற்றுக்கொண்ட, துணைவன்-நண்பனும், தொல்லை-மிகப் பழமையான கால முதல் (சிறந்து வாழும்), காய் கதிர் செல்வன் மைந்தன் - எரிக்கும் கிரணங்களையுடைய கடவுளான சூரியனது குமாரனும், கவிக்குலம் அதனுக்கு எல்லாம் - குரங்கின் குலங்களுக்கெல்லாம், நாயகன் - தலைவனும், நவையில் தீர்ந் தான் - குற்றங்களினின்றும் நீங்கினவனுமான, சுக்கிரீவன் என்று உளன்- சுக்கிரீவன் என்ற பெயரோடு ஒருவன் இருக்கின்றான்,

தலைமேற் கை குவித்து நிற்றல் தன் பணிவைக் காட்டும் மெய்ப் பாடு. தூயவன் என்று இங்கு இராமபிரானைக் கூறியது, அப்பெருமான் பால் பிராட்டி கூறிய குற்றச் சாட்டு உண்மையன்று என்பதைக் குறிப் பிட்டபடியுமாம். சுக்கிரீவன் - அழகிய கழுத்தையுடையவன் என்னும் பொருள் கொண்ட வடமொழிப் பெயர்; (சு - அழகிய, கிரீவன் - கழுத் தையுடையவன்). சுக்கிரீவன் காய் கதிர்ச் செல்வன் மைந்தன்: பால. திருவவதாரப். 27. 'தேடிய துணைவன்-உறவு கொண்ட தம்பி' என்பது பழைய உரை. இவ்வுரையால் சுக்கிரீவனை இராமபிரான் தன் தம்பியாகக் கொண்டமை குறிக்கப்படுகிறது.

(பி-ம்.) 1. ஆயசொற் றலைமேல் கொண்ட: கொண்ட மாருதி.
2. துணைவன் தன்னைப்: பிரிந்த பின்னர்த்; பின்பு.
3. காய்கதிர்க் குரிய மைந்தன்: கவிக்குல மவற்றுக். (29)

518\. மற்றவன் முன்னோ னந்நா ளிராவணன் வலிதன் வாலின்
இற்றுறக் கட்டி யெட்டுத் திசையினு மெழுந்து பாய்ந்த
வெற்றியன் றேவர் வேண்ட வேலையை விலங்கன் மத்தில்
சுற்றிமா நாகந் தேய வமுதெழக் கடைந்த தோளான்.

'அவன் முன்னோன் - அந்தச் சுக்கிரீவனுடைய தமயனான(வாலி)என்பவன், அ நாள்-முற்காலத்தில், இராவணன் வலி இற்று உற - இராவணனுடைய வலிமை அழிந்து ஒழிந்து அடங்க, தன் வாலில் கட்டி - தன் வாலினால் அவனைக் கட்டி, எட்டு திசையினும் எழுந்து பாய்ந்த வெற்றியன்-எட்டுத் திக்குக்களிலும் எழுந்து தாவிச் சென்ற வெற்றியையுடையவன்; தேவர் வேண்ட - தேவர்கள் அவனிடம் பிரார்த்தித்துக் கொள்ள, வேலையை - பாற்கடலை, விலங்கல் மத்தில் - (மந்திரகிரி என்னும்) மலையாகிய மத்தில், மா நாகம் சுற்றி - (கடை கயிறாக அந்த மலையில்) வாசுகி என்னும் பெரிய பாம்பைச் சுற்றி தேய - அதனுடல் தேயும்படி, அமுது எழ கடைந்த தோளான் - அமுதம் தோன்றக் கடைந்த தோள் வலியுடையவன். மற்று, அசை.

முன்னோன் - முன் பிறந்த தமயன். வாலி இராவணனைத் தன் வாலிற் பிணித்துத் திரிந்தது; உயுத்த. அங்கதன்றூதுப். 24; வாலி கடல் கடைந்து அமுதம் ஈந்தது; கிட்கிந்தா. மராமரப். 79: வாலிவதைப். 17. 18, 144; உயுத்த. அங்கதன்றூதுப். 24, வாலி கடல் கடைந்து அமுதம் ஈந்த வரலாறு காஞ்சிப்புராணம் மணிகண்டேச்சுரப் படலத்து விரிவாகக் கூறப்பெற்றுள்ளமையும் காணலாம்.

(பி-ம்.) 1. முன்னோன் வாலி; முன்னோன்; முன்னுள் இராவணன் வலியை.
2. இற்றுகக் கட்டி: எழுந்து யர்ந்த.
3. வேலையில்: மத்தால். 4. சுற்றிய நாகம். (30)

519\. அன்னவன் றன்னை யுங்கோ னம்பொன்று லாவி வாங்கிப்
பின்னவற் கரசு நல்கித் துணையெனப் பிடித்தா னெங்கள்
மன்னவன் றனக்கு நாயேன் மந்திரத் துள்ளேன் வானின்
நன்னெடுங் காலின் மைந்த னுமமு மநும னென்பேன்.

'அன்னவன் தன்னை - (அத்தகைய வலிமை வாய்ந்த) அவ்வாலியை, உம் கோன் - உங்கள் தலைவனான இராமபிரான், அம்பு ஒன்றால் ஆவி வாங்கி - ஓர் அம்பினால் அவன் உயிரைப் போக்கி, பின்னவற்கு அரசு நல்கி - அவன் தம்பியாகிய சுக்கிரீவனுக்கு அவனுடைய (வானர) அரசப் பதவியைக் கொடுத்து, துணை என பிடித்தான் - அந்தச் சுக்கிரீவனைத் தனக்குத் துணைவனாக ஆக்கிக் கொண்டான்; நாயேன் எங்கள் மன்னவன் தனக்கு மந்திரத்து உள்ளேன்-எளியேனாகிய யான் எங்கள் அரசனான

அந்தச் சுக்கிரீவனுக்கு மந்திர ஆலோசனைக் குழுவில் ஒருவனாக இருப்பவன்; வானின் நல் நெடும் காலின் மைந்தன் - ஆகாயத்தில் உலாவும் மிகவும் பெரிய வாயுதேவனுடைய புத்திரனாவேன்; நாமமும் அநுமன் என்பேன் - என் பெயரும் அநுமன் என்று சொல்லப் பெறுவேன்.

மந்திரத்து உள்ளேன் - இரகசிய ஆலோசனைக் குழுவில் ஒருவனாக உள்ளேன்: மந்திரம் - இரகசிய ஆலோசனை: (பிங்களம்). காற்று வானில் சஞ்சரிப்பதாதலின், வானின் நன் நெடும் கால் எனப்பட்டது. நாமமு மநும னென்பேன்: ஒப்பு: கிட்கிந்தா. மராமரப். 17.

(பி-ம்.) 1. உன்கோன். 2. பின்னவர்க் கரசு;
3. மந்திரத் துள்ளோன்.
4. இன்னெடுங் காலின்: அநும னென்பார்; அநும னென்பேர் (31)

520. *எழுபது வெள்ளங் கொண்ட வெண்ணன வுலக மெல்லாம்*
*தழுவிநின் றெடுப்ப வேலை தனித்தனி கடக்குந் தாள*
*குழுவின வுங்கோன் செய்யக் குறித்தது குறிப்பி னுன்னி*
*வழுவில செய்தற் கொத்த வானரம் வானி னீண்ட.*

'வானரம் - (எங்கள் அரசனான சுக்கிரீவனுக்குட்பட்ட) வானரங்கள், எழுபது வெள்ளம் கொண்ட எண்ணன - எழுபது வெள்ளம் என்னும் எண்ணின் தொகையை யுடையன: உலகம் எல்லாம் தழுவி நின்று எடுப்ப - உலகங்கள் யாவற்றையும் தம் (கைகளால்) அணைத்து எடுக்கக் கூடியவை: வேலை தனி தனி கடக்கும் தாள - கடலை ஒவ்வொன்றும் தாண்டிச் செல்லவல்ல முயற்சி உடையன; குழுவின - கூட்டமாக உள்ளன; உம் கோன் செய்ய குறித்தது - உங்கள் தலைவனான இராமபிரான் செய்யக் குறித்ததை, குறிப்பின் உன்னி - குறிப்பினால் ஆராய்ந்துணர்ந்து, வழுவில செய்தற்கு ஒத்த - அக்காரியங்களைத் தவறாகாமல் திறமையாகச் செய்து முடிக்க அமைந்தன; வானின் நீண்ட - ஆகாயம் போல எங்கும் பரந்து உள்ளன.

அநுமன் தன் வலி கூறாது, மற்ற வானரங்களின் வலிமையைக் கூறியது அவனுடைய தற்புகழ்ச்சி யில்லா அடக்கத்தைக் குறிப்பதாகும். அநுமன் தற்புகழ்ச்சி யற்றவன்: 1253-54. வெள்ளம் - ஒரு பெரிய எண்; (பிங்களம்) தாள் - முயற்ச்சி; 'வியன் ஞாலம் தாளிற்றந்து' (புறநா, 18); தாள - கால்களையுடையன என்றும் பொருள்கொள்வர். வானின் - நீண்ட ஆகாயத்தை விட, என எல்லைப் பொருளாகவும் கொள்ளலாம். வான், மற்ற பூதங்களிலும் பெரிதாதலின், பெருமைக்கு அது எடுத்துக்காட்டாயிற்று.

க. 49.

(பி-ம்.) 1. எண்ணிலா வுலக.

2. தழுவிநின் றெடுப்பர்; தழுவிநின் றெடுக்கும் வேலை: தாவுந் தாளார்: தழுவுந் தாளார்; நடக்குந் தாளிற்.

3. குழுவின முங்கோன்: உங்கோன் யாது குறித்தவை செய்மி னென்ன: குறித்தது குறித்துப் பின்னும்.

4. வானரச் சேனை மாதோ. (32)

521. *துப்புறு பரவை யேழுஞ் சூழ்ந்தபா ரேழு மாழ்ந்த*
*ஒப்புறு நாகர் நாடு மும்பர்நின் றிம்பர் காறும்*
*இப்புறந் தேடி நின்னை யெதிர்ந்தில வென்னி னண்டத்*
*தப்புறம் போயுந் தேட வவதியி னமைந்து போன.*

'துப்பு உறு பரவை ஏழும் - வலிமை பொருந்திய கடல்கள் ஏழும், சூழ்ந்த பார் ஏழும் - அக் கடல்கள் சூழ்ந்துள்ள ஏழ் பிரிவுகளாய் உள்ள பூமியும், ஆழ்ந்த ஒப்பு உறு நாகர் நாடும் - கீழே ஆழ்ந்துள்ள அழகு பொருந்திய நாகர்கள் வாழும் பாதாள உலகமும், உம்பர் நின்று இம்பர் காறும் - சுவர்க்க நாடுமுதல் இவ்வுலகமாகிய பூமி வரையிலும் உள்ள மேலுலகங்கள் வரையிலும், இ புறம் தேடி - இந்த இடங்களிலெல்லாம் தேடி, நின்னை எதிர்ந்தில என்னின் - உன்னைக்காண முடியாதனவானால், அண்டத்து அ புறம் போயும் தேட - இவ்வண்ட கோளகைக்கு அப்பா லுள்ள புற அண்டங்களிலும் சென்று தேடிப் பார்க்க, அவதியின் - ஒரு குறிப்பிட்ட கால எல்லைக்குள், அமைந்து போன - உட்பட்டுப் போயுள்ளன.

துப்பு உறு பரவை - பவழக் கொடிகள் உள்ள கடல் என்னலும் ஆம். பரவை ஏழு-உவர் நீர், நன்னீர், கருப்பஞ்சாறு, பால், தயிர், மது, நெய் இவற்றைத் தனித்தனியாக உடைய ஏழு கடல்கள் என்பன. பார் ஏழு- ஏழு தீவுகளாய் உள்ள பூமி; அவை நாவலந்தீவு, இறலித்தீவு, கிரௌஞ் சத்தீவு, குசைத்தீவு, இலவந்தீவு, தெங்கந்தீவு, புட்கரத்தீவு என்பன. உம்பர் நின்று இம்பர்காறும் உள்ளவை, வானேழ் உலகங்கள்; அவை: சத்தியலோகம், தவலோகம், சனலோகம், மகாலோகம், சுவர்லோகம், புவலோகம், பூலோகம் என்பன. ஒப்பு - அழகு; 'ஒப்புடை யொருவனை யுருவழிய' (தேவாரம். 474.7); இப்பொருளில் ஒப்பு என்பதுஒப்பனை யென வும் வரும். நாகர் நாடும் என்றதை உபலட்சணமாகக் கொண்டு, கீழேழ் உலகங்களையும் கூட்டியுரைத்ததும் ஆம். கீழேழ் உலகங்களும் மேலேழ் உலகங்களும் சேர்ந்தவை இவ் வண்ட கோளகை எனப்படும். இதற்கு அப்பாலும் பல அண்டங்கள் உள்ளன என்பது நூன் மரபு. அதுவே புற அண்டம் எனப்படும். அவதி-கால எல்லை. சுக்கிரீவன் பிராட்டியைத் தேடிவர வானரங்களுக்குக் குறிப்பிட்ட கால எல்லை ஒரு மாதம் என்பது, கிட்கிந்தா. நாடவிட்ட. 11.

(பி-ம்.) 2. ஒப்பரு நாக நாடு மும்பரு மிம்பர் நாடும்: உம்பரி னிம்பர் காறும். 3. எதிர்ந்தில மென்னில்; எதிர்ந்தில தென்னில். 4. அப்புற மேயுந் தேட: தேடு மமைதியின்: அமைந்த துன்னி, (33)

522. *புன்றொழி லரக்கன் கொண்டு போந்தநாட் பொதிந்த தூசில்*
*குன்றினெம் மருங்கி னிட்ட வணிகலக் குறியி னாலே*
*வென்றியா னடியேன் றன்னை வேறுகொண் டிருந்து கூறித்*
*தென்றிசைச் சேறி யென்றா னவனருள் சிதைவ தாமோ.*

'புன் தொழில் அரக்கன் கொண்டு போந்த நாள் - இழி தொழிலை யுடைய அரக்கனான இராவணன் உன்னை அபகரித்துக் கொண்டு போன அக்காலத்து, எம் குன்றின் மருங்கின் இட்ட - யாங்கள் இருந்த இருசியமுக பருவதத்தில் (எங்கள்) அருகே (நீ) போகட்ட, தூசில் பொதிந்த அணிகல குறியினாலே - துணியில் முடிந்து வைத்த உன் ஆபரணங்களின் அடையாளத்தால், வென்றியான் - வெற்றியையுடைய இராமபிரான், அடியேன் தன்னை - அடியேனாகிய என்னை, வேறு கொண்டு இருந்து - தனியே வேறு இடத்தில் அழைத்துவைத்துக் கொண்டு இருந்து, கூறி - (சில முக்கிய அடையாளச் செய்திகளைச்) சொல்லி, தென் திசை சேறி என்றான் - நீ தெற்குத் திசை நோக்கித் தேடிச் செல்வாயாக என்று கட்டளை யிட்டான்; அவன் அருள் சிதைவது ஆமோ - அவனுடைய அருளோடு கூடிய ஆசி பழுது படுமோ? (படாது; ஆதலின் யான் உன்னை வந்து காணப்பெற்றேன் என்று அநுமன் கூறினான்.)

புன் தொழில் - பிறன் மனைவியை அபகரித்த இழி தொழில்; 'பிறன் கடை' நின்றாரிற் பேதையா ரில்' (குறள். 142.) பிராட்டிதன் அணிகலன்களை முடிந்து போகட்ட இச் செய்தி ஆரணிய காண்டத்தில் கூறப்பெறாமல், பின் கிட்கிந்தா காண்டம், கலன்காண் படலத்தில் கூறப்பட்டது. அணிகலக் குறியினாலே அரக்கன் தென்றிசை சென்றானென்பது அறியப் பட்ட தென்க. வேறு கொண்டிருந்து கூறியது; (கிட்கிந்தா. நாட விட்ட.32-72. அணிகலனை வீழ்த்திய செய்தி: புறநா. 378: 18-20.

(பி-ம்.). 1. பொதிந்து தூசின். 2. குன்றினின் மருங்கின். (34)

523. *கொற்றவற் காண்டுக் காட்டிக் கொடுத்தபோ தடுத்த தன்மை*
*பெற்றியி னுணர்தற் பாற்றோ வுயிர்நிலை பிறிது முண்டோ*
*இற்றைநா ளளவு மன்னா யன்றுநீ யிழித்து நீத்த*
*மற்றைநல் லணிகள் காணுன் மங்கலங் காத்த மன்னோ.*

'அன்னுய் - அன்னையே! கொற்றவற்கு ஆண்டு காட்டி கொடுத்த போது - (நீ போகட்ட அந்த அணிகலன்களை) இராமபிரானுக்கு அப்பொழுது காட்டி, (அவரிடம் யாங்கள்) கொடுத்த போது, அடுத்த தன்மை - (அப்பொழுது அவருக்கு) ஏற்பட்ட நிலைமையை, பெற்றியின் - (இப்பொழுது யான் எடுத்துக் கூறும்) விதத்தில், உணர்தல் பாற்ருே - அறியக் கூடியதோ? உயிர்நிலை பிறிதும் உண்டோ - அவர் உயிர் நீங்காது தங்கியிருப்பதற்குக் காரணம் வேறு உண்டோ? நீ இழித்து நீத்த மற்றை நல் அணிகள் - நீ அன்று கழற்றிப் போகட்ட, அந்த மற்ற அணிகளே, இற்றை நாள் அளவும் உன் மங்கலம் காத்த - இன்று வரை உன் திருமங்கலியத்தைக் (அதாவது சுமங்கலித் தன்மையை) காப்பாற்றின'. மன், ஓ: அசைகள். காண்: முன்னிலை அசை.

அணிகலன்களைக் கண்ட இராமபிரான் நிலை; கிட்கிந்தா. கலன் காண். 4-26. 'அவ்வணிகளைக் கண்டே தன் உயிர் வைத்துக் கொண்டிருக்கிருன்; இன்றேல் முன்னமே இறந்து போயிருப்பான்' என்றதைத் தெளிவாய்க் கூறக் கூசி அநுமன், 'உன் மங்கலம் காத்த' என்று வேறு வகையால் கூறியது; இது பிறிதினவிற்சியணி எனப்படும். மகளிருடைய மங்கல அணி மற்ற அணிகளைத் தன்னெடு கூட வைத்துக் காக்கும் சிறப்புடையது; இங்கு, அம்மங்கலத்தை மற்றை அணிகள் காத்தன என்று கூறியது, முரணணியோடு தொடர்ந்த வேற்றுப்பொருள் வைப்பணி என்னலும் ஆம். மங்கலம் மற்றை அணிகளுக்கு அணி; பால. கோலங்காண். 7. மங்கலம், இலக்கணை என்னும் வழக்கு. இது மங்கலத்தாலி என்றும், திரு என்றும் கூறப்பெறும்.

(பி-ம்.) 1. கொற்றவற் கொண்டு காட்டிக்.
2. பெற்றியா னுணர்வு பெற்ருே ருயிர்நிலை: உணரப் பாற்ருே; உணரற் பாற்ருே.
3. இற்றைநா ளளவும் பொன்ருன்; இற்றை நாளளவு மன்னுவன்று; அற்றைநா ளளவும் பொன்னே யன்றுநீ: நீ கழித்து நீத்த; நீ யிட்டு நீத்த.
4. அணிகள் தானுன்: காணின் மனங்கலங் காதோ வென்ருன்: காத்த மாதோ. (35)

524. *ஆயவன் றன்மை நிற்க வங்கதன் வாலி மைந்தன்*
*ஏயவன் றென்பால் வெள்ள மிரண்டினே டெழுந்த சேனை*
*மேயினன் ருெடர்ந்து தீரா வினையவன் விடுத்தா னென்னைப்*
*பாய்திரை யிலங்கை மூதூர்க் கென்றனன் பழியை வென்ருன்.*

பழியை வென்ருன்-நிந்தனைகளைக் கடந்தவனுன அநுமன், 'ஆயவன் தன்மை நிற்க - அந்த இராமபிரானுடைய தன்மை இவ்வாருக, தென்பால் ஏயவன் - (இராமபிரான் விருப்பப்படி சுக்கிரீவனுல்) தெற்கு நோக்கி ஏவப் பெற்றவனும், எழுந்த சேனை வெள்ளம் இரண்டினேடு

மேயினன் - இரண்டு வெள்ளம் பொருந்திய வானர சேனேயோடு பொருந்தினவனும், தொடர்ந்து தீரா வினையவன் - தொடர்ந்து வந்த நீங்காத முயற்சியையுடையவனும், வாலி மைந்தன் அங்கதன் - வாலியின் மைந்தனுமான அங்கதன், பாய் திரை இலங்கை மூதூர்க்கு என்னை விடுத்தான் - கடலின் அலைகள் பாயப்பெற்ற இலங்கை என்னும் இப்பழைய நகருக்கு என்னை அனுப்பினான்;, என்றனன் - என்று (பிராட்டியிடம்) கூறினன்.

அங்கதன் அநுமனை ஏவவில்லை; சாம்பவன் சொல்ல அநுமன் தானே உடன்பட்டு வந்தான்; ஆயினும் தான் செய்யும் பணியைத் தன் தலைவன் மேலேற்றிக் கூறியது, அநுமனது தன்னடக்கமும், தன் தலைவனிடத்துக் கொண்டுள்ள மதிப்பும் விளக்குவதாக உள்ளது.

(பி-ம்.) 1. ஆயவன் றன்மை யாக வருக்கன்சேய் வாலி சேயை.
2. ஏயவன் றன்பால்; ஏயினன் றென்பால். ஏயின தென்பால்.
3. மேயினன் படர்ந்து தீர; மேயினன் புணரிதீரத் திருந்தவன்; மேயினர் படர்ந்து தீரா வினையவன்; மேயின விடாது தீர வினையினின்.
4. பாய்புன லிலங்கை: பழிப்பி லாதான். (36)

525. *தேண்டினேன் கண்டேன் வாழி தீதிலே னெங்கோ னேவிப்*
*பூண்டமெய் யுயிரோ போகாப் பொய்யுயி ரோடு நின்றான்*
*ஆண்டகை நெஞ்சி னின்று மகன்றிலை யழிவுண் டாமோ*
*ஈண்டுநீ யிருக்க வாண்டங் கெவ்வுயிர் விடுமி ராமன்.*

'எம் கோன் ஏவி-(இவ்வாறு) எம் மன்னனால் ஏவப்பெற்று, தேண்டினேன் - அடியேன் உன்னைத் தேடி, கண்டேன் - கண்டு கொண்டேன்; தீது இலேன்-(அவ்வாறு கண்டு கொண்டமையால்)பழியற்றவனானேன்: ஆண் தகை - ஆடவர்களுள் சிறந்தவனான இராமபிரான், போகா பொய் உயிரோடு நின்றான் - தன் உடலிலிருந்து போக மாட்டாததும் உண்மைத் தன்மை யற்றதுமான மூச்சுக்காற்றோடு இருக்கின்றான்; (உயிரற்றவன் போல் நடமாடுகின்றான்); பூண்ட மெய் உயிரோ - அவன் தரித்துள்ள உண்மை உயிரான நீயோ எனின், நெஞ்சின் நின்றும் அகன்றிலை-அவன் மனத்திலிருந்தும் நீங்காம லிருக்கின்றாய்: ஈண்டு - இவ்விடத்தில், நீ இருக்க - மெய் உயிராகிய நீ இருக்கவும், ஆண்டு-அப்பொழுது, அங்கு இராமன் எ உயிர் விடும் - அங்கு இராமபிரான் எந்த உயிரை விடுவான்? அழிவு உண்டாமோ-அவன் உயிருக்கு அழிவு உண்டாகுமோ? (ஆகாது என்றபடி). வாழி, அசை.

அநுமன் பிராட்டியின் அணிகலன்களைக் கண்ட இராமபிரானின் நிலையை, 'கொற்றவற்கு... அடுத்த தன்மை பெற்றியினுணர்தற் பாற்றோ? உயிர்நிலை பிறிது முண்டோ? இற்றை நாளளவு மன்னு யன்றுநீ யழித்து

நீத்த மற்றை நல்லணிகள் காணுன் மங்கலங் காத்த மன்னே?' என்று கூறி (523) அடுத்த செய்யுளில், 'ஆயவன் தன்மை நிற்க' என்று தொடங்கி, தான் இலங்கைக்கு அனுப்பப் பெற்ற செய்தியைக் கூறினன்; இவ்வாறு, இராமபிரானின் துயர்நிலையைச் சுட்டிக் கூறியதால், தன் உயிர்க் கணவனுக்கு யாது நிகழ்ந்ததோ என்றறிய ஆவலுடன் நின்ற பிராட்டிக்கு, அவன் நன்னிலையைக் கூறுவதற்காக இறுதியில் இச் செய் யுளிலுள்ள செய்தியைக் கூறினுன் என்க.

உடலின் அசைவுக்குக் காரணமான மூச்சுக்காற்றைப் பொய்யுயிர் என்றும், உணர்ச்சியின் அசைவுக்குக் காரணமான பிராட்டியை மெய் யுயிர் என்றும் காட்டியபடி. பிராட்டியே அவன் உயிர் என்றும், அவளைப் பிரிந்தமையால் உணர்ச்சியற்றவனுனெனென்றும், அநுமன் சமத்காரமாக இங்குக் கூறினுனென்பதாம். இந்நிலையைப் பின்னும் 565-66 ஆம் செய்யுட்களில் விவரிப்பது காண்க.

அச்சுப் புத்தகங்களிலும் பல ஓலைச்சுவடிகளிலும் இச் செய்யுள் '**கண்டபி னிளைய வீரன்**' என்ற 565 ஆம் செய்யுளுக்குப் பின் காணப் படுகிறது. எம்மிடமுள்ள ஓர் ஓலைச்சுவடியில் மட்டும் இங்கே அமைக் கப் பெற்ற முறையில் உள்ளது. பொருட் பொருத்தத்துக்கும் தொடர் புக்கும் இதுவே நேரிதாகக் காண்பதால் இவ்வாறே கொள்ளப் பெற்றது.

(*பி-ம்.*) 1. **தேண்டிநேர்; என்கோன்; எங்கோ னேடு; எங்கோ னுகம்; எங்கோனேவ.**

2. **உயிரேபோகப் பொய்யுயிர் போல நின்ற; உயிரே நீயப்பொய் யுயிர் போயே நின்ற; நின்றுன்: உயிரோய் பூதப் பொய்யுயிர் போயே நின்றுன்.**

4. **ஈண்டுநீ யிருந்தாய்: யாண்டெங்.** (37)

## இராமபிரான் திருமேனி எப்படித்து என்று பிராட்டி வினவுதல்.

526. *இஃதவ னிசைத்த லோடு மெழுந்தபே ருவகை பொங்கி*
*வெய்துயிர்ப் பொடுங்கி மேனி வானுற விம்மி வீங்க*
*உய்தல்வந் துற்ற தோவென் றருவிநீ ரொழுகுங் கண்ணுள்*
*அய்யசொல் லவன்றன் மேனி யெப்படித் தறிவை யென்ருள்.*

இஃது அவன் இசைத்தலோடும் - இதனை அநுமன் சொன்னவுடன், எழுந்த பேர் உவகை பொங்கி-மேற் கிளம்பிய பெரும் மகிழ்ச்சி எழுந்து

ஓங்கி, வெய்துயிர்ப்பு ஒடுங்கி - பெருமூச்சு விடுதல் அடங்கி, மேனி வான் உற விம்மி வீங்க - தன் உடம்பு நன்ருகப் பூரிப்பு அடைந்து பருத்துத் தோன்ற, 'உய்தல் வந்து உற்றதோ என்று - தனக்கும் ஒரு வாழ்வு வந்துற்றதோ' என்று (எண்ணி), அருவி நீர் ஒழுகுங் கண்ணுள் - அருவி போல நீர் பெருகும் கண்களையுடைய பிராட்டி, (அநுமனைப் பார்த்து), 'அய்ய - ஐயனே! 'அவன் தன் மேனி எப்படித்து அறிவை-அந்த இராமபிரானுடைய திருமேனி எவ்விதமானது என்று நீ அறிந்து கொண்டாய்? சொல் என்ருள் - நீ எனக்கு எடுத்துச் சொல்வாயாக' என்ருள்.

வானுற - நன்ருக: 'வரியணி சுடர் வான் பொய்கை' (பட்டினப். 38). மெலிந்த மேனி அநுமன் கூறிய சந்தோஷச் செய்தி கேட்டுப் பூரித்ததை, உயர்வு நவிற்சியாக வானுற விம்மி வீங்கி என்று மிகைப்படுத்திக் கூறியதுமாம். கண்ணில் நீரொழுகுதல், மகிழ்ச்சியால்; இதனை ஆனந்த பாஷ்பம் என்பர் வடமொழியில். ஐய சொல் அவன் என இயைத்து - அழகிய சொற்களையுடைய அவ்விராமபிரான் என்று பொருள் கூறலும் ஒன்றும். எப்படித்து அறிவை என்றது; அநுமன் இராமபிரானை நேரில் கண்டு அவனுல் அனுப்பப் பெற்றவன்தான் என்பதை உறுதியாய் அறியும் பொருட்டும், இரர்மபிரான் திருமேனியின் லக்ஷண உண்மையை இவன் எவ்வளவு தூரம் அறிந்து கொண்டிருக்கிருன் என்பதைத்தெரிந்து கொள்ளும் பொருட்டுமாம், எ படித்து, என்பதற்கு எது போன்றிருக்கும் என்றும் பொருள் கொள்ளலாம், படி - உவமம்: 'படியுரைத் தெடுத்துக் காட்டும்' (527) என்று அடுத்த செய்யுளிலும் காண்க.

(பி-ம்.) 1. எய்தவ னுரைத்த லோடு; எய்தின வுரைத்த லோடும்: ஈதவ னுரைத்த லோடும் எழுந்துபே ருவகை யேற.
2. வெய்துற வொடுங்கு மேனி வானுற விம்மி யோங்க: வெய்துற வோங்கி. 3. வந் தடுத் ததோ.
4. அனையன் மேனி; ஐயன் மேனி: எப்படித் தறிதி; எப்படித் தறிவி. (38)

## அடிமுதல் முடியீருக இராமபிரானின் திருமேனி யழகை அநுமன் கூறுதல். 527-47.

527. *படியுரைத் தெடுத்துக் காட்டும் படித்தன்று படிவம் பண்பின்*
*முடிவுள வுவமைக் கெல்லா மிலக்கண முரைக்கின் முந்தா*
*துடியிடை யடையா ளத்தின் ருெடர்வையே தொடர்தி யென்னு*
*அடிமுதன் முடியீ ருக வறிவுற வநுமன் சொல்வான்.*

'துடி இடை -உடுக்கை போலும் இடையையுடையாய்! 'படிவம் - இராமபிரானின் திருமேனி, படி உரைத்து எடுத்து காட்டும் படித்து அன்று - உவமான வாயிலாய்ச் சொல்லி நிருபிக்கும் தன்மையுடையது

அன்று; **உவமைக்கு எல்லாம் இலக்கணம் பண்பின் முடிவு உள**-உவமை கூறுவதற்கு எல்லாம் இலக்கண நூல்கள் முறைப்படி வரையறுத்துத் தெரிவித்துள்ள முடிவுகள் இருக்கின்றன; **உரைக்கின் முந்தா**-(அவ்விலக்கண நூல்களைப் பிரமாணமாகக் கொண்டு இராமபிரான் திருமேனிச் சிறப்பைக்) கூறுவோமானால் சிறப்புள்ளவை ஆகா; **அடையாளத்தின் தொடர்வையே தொடர்தி**-யான் கூறும் அடையாளப் பொருள்களுக்கு ஒருவாறு உள்ள ஒற்றுமையை மட்டும் நீ பின்பற்றி ஏற்றுக்கொள்வாயாக: '**என்னு**-என்று கூறி, **அடி முதல் முடி ஈறு ஆக**-இராமபிரானுடைய திருவடி முதல் திருமுடி ஈருக உள்ள அங்க லட்சணங்களை, **அறிவு உற**-பிராட்டி அறிந்து கொள்ளும்படி, **அநுமன் சொல்வான்** - அநுமன் சொல்வானுனன்.

'படியெடுத்துரைத்துக் காட்டும் படித்தன்று' என்றதைப் பின்னடிகள் பொருத்திக் காட்டுவதாகும். இலக்கண நூல்கள் கூறும் உவமைகள் சிறந்தவை எனினும், 'அவ்வுவமைகள் இராமபிரான் திருமேனியின் அங்கங்களுக்கு ஏதோ ஓரளவில் ஒப்புமை ஆகுமேயன்றி முற்றும் பொருந்துவன அல்ல.என்பதையும், வேறு சொல்லத் தகுதியான உவமை இன்மையையும் அநுமன் தெரிவித்துத் தான் பிழைபடச் சொல்லியதாகக் கருதாது, ஏற்ற பெற்றி ஒற்றுமையை மட்டும் ஏற்றுக்கொண்டு தான் கூறுவதைக் கேட்டருள வேண்டுமென்று இராமபிரான் திருமேனிச் சிறப்பைக் கூறத் தொடங்கினன்' என்க. 'அடி முதல் முடிஈருக் தேவர்களைப் பாதாதி கேசமும் மனிதர்களைக் கேசாதிபாதமும் வருணித்துக் கூறுதல் மரபு. இராமபிரான் பரம்பொருளின் திருவவதாரமாதலால், இங்குப் பாதாதி கேச வருணனையாகக் கூறத் தொடங்கினன் அநுமன் என அறியற்பாலதாம். இதனை, ஆபாதசூட வருணனை என்று கூறுவர்; **வி. பா.** இராசசூய. 78, 'பெருமாளழகு அடியேனுற் சொல்லப்படாது; சொன்னது கொண்டு தேவரீ ரறிந்தபடி அளவிட்டுக் கொள்ளும்' என்பது **பழைய உரை**,

(*பி-ம்.*) 1. படியெடுத் துரைத்துக் காட்டும் ; படியுரைத் தேதுக் காட்டும்: காட்டும் படியதோ வடிவு பண்பின்; காட்டும் படியில வாகும் பண்பின்.

2. முடிவில வுவமைக் கெல்லா மிலக்கண முரைக்கு முன்னர்த்.

3. தொடர்வையேல் ; தொடர்வைநீ. 4. சொன்னுன். (39)

### வேறு

528. *சேயிதழ்த் தாமரை யென்று சேணுளோர்*
*ஏயின தன்றுணை யெளிய தில்லையால்*
*நாயகன் றிருவடி குறித்து நாட்டுகில்*
*(பாய்திரைப் பவழமுங் குவளைப் பண்பிற்ருல்)*

'நாயகன் திருவடி - நம் தலைவனான இராமபிரானுடைய அழகிய பாதங்கள், சேய் இதழ் தாமரை என்று - சிவந்த இதழ்களையுடைய தாமரைப் பூ என்று, சேண் உளோர் - பண்டைப் புலமையோர், ஏயின்-பணித்துள்ளாராயின், குறித்து நாட்டுகில்-அத் திருவடிகளுக்கு உவமையாகக் குறிப்பிட்டு நிலை நிறுத்தப் புகுந்தால், அதன் துணை - அத்தாமரையைப்போல, எளியது இல்லை - (அத்திருவடிகள்) அவ்வளவு தாழ்வுடையன அல்ல; பாய் திரை பவழமும் குவளைப் பண்பிற்று - பாய்ந்தோடும் அலைகளையுடைய கடலில் உண்டாகும் பவழமும் (இராமபிரான் திருவடிகளின் முன்) குவளைப் பூப்போலக் கருமையாக நிறங்குன்றிப் போகும். ஆல்: அசை.

சேணுளோர் - புராதன காலத்திலிருந்த புலவர் பெருமக்கள்; சேண் என்பது, இங்குக் காலத்தைக் குறிப்பிட நின்றது - எளியது. சௌலப்பியத் தன்மை; அதாவது, அடைந்தோர்க்கு எளிதில் அருள் புரிவதில் உள்ள சிறப்பு எனக் சொள்ளலும் ஆம்; இஃது இராமபிரான் திருவடி அகலிகைக்கு அருள் புரிந்ததையும், விராதனுக்குத் திவ்ய உரு அளித்து நற்கதி அளித்ததையும் உட்கொண்டு குறிப்பிட்டபடியுமாம். பவழமும்: உம்மை, உயர்வு சிறப்பு. 'பவழமும் குவளைப் பண்பிற்றால்;' ஒப்பு. ஆரண்ய. கரன்வதைப். 42; கிட்கிந்தா, நாடவிட்ட. 49; வி. பா. சடாசுரன்வதைச். 6.

(பி-ம்.) 2. ஏயினதன்றுணை; ஏயின தென்றுணை. 3. நாட்டுறின்.
4. பவளமும் குன்றும் பண்பினால். (40)

529. *தளங்கிளர் கற்பக முகிழுந் தண்டுறை*
*இளங்கொடிப் பவழமுங் கிடக்க வென்னவை*
*துளங்கொளி விரற்கெதி ருதிக்குஞ் சூரியன்*
*இளங்கதி ரொக்கினு மொக்கு மேந்திழாய்.*

'ஏந்திழாய்-தரித்துள்ள ஆபரணங்களையுடையவளே! தளம் கிளர் கற்பக முகிழும் - இதழ்கள் மிகுந்த கற்பக மரத்தின் அரும்புகளும், தண் துறை இளம் கொடி பவழமும் - குளிர்ந்த நீர்த்துறைகளையுடைய (கடலில் உள்ள) இளம் பவழக் கொடியும், கிடக்க - ஒருபுற மிருக்கட்டும்; அவை என் - அவற்றால் என்ன பயன்? துளங்கு ஒளி விரற்கு எதிர் - விளங்கும் ஒளியையுடைய (இராமபிரான்) விரலுக்கு ஒப்பு, உதிக்கும் சூரியன் இளம் கதிர் - காலையில், கிழக்கே உதிக்கும் சூரியனது இளங் கிரணங்கள், ஒக்கினும் ஒக்கும் - ஒருவாறு ஒப்பு ஆனாலும் ஆகலாம்.

தளம் - கொழுந்தும் ஆம். கிளர்தல் - விளங்குதலும் ஆம். கிடக்க என்பது, அலட்சியப் பொருளில் கூறும் சொல், 'ஒக்கினும் ஒக்கும்'

என்றமையால். ஒப்பென்று கூறுவது பெரிதும் ஒவ்வா தென்றபடி; ஒக்கினும், என்பதில் உள்ள உம்மை எதிரது தழுவிய எச்ச உம்மை. ஏந்திழாய், இங்குப் பெண்ணே என்ற பொருளளவில் வந்தது.

(பி-ம்.) 1. தளங்கெழு. 2. விளங்கொளிப் பவளமுங். 3. விரலுக்குச் சொல்லிற். (41)

530. *சிறியவும் பெரியவு மாகித் திங்களோ*
*மறுவில பத்துள வல்ல மற்றினி*
*எறிசுடர் வயிரமோ திரட்சி யெய்தில*
*அறிகிலெ னுகிர்க்கியா னுவம மாவன.*

'திங்களோ-சந்திரனோ (இராமபிரான் கால் விரல்களின் நகங்களுக்கு உவமையாகக் கூறுவோமென்றால்), சிறியவும் பெரியவும் ஆகி-சிறியவை யாகவும் பெரியவையாகவும் மாறுபட்டு இருந்து, மறு இல-மறு அற்றன வாய், பத்து உள அல்ல - பத்து ஆகும் எண்ணிக்கை யுடையதன்று; மற்று இனி-அஃது அல்லாமல், எறி சுடர் வயிரமோ-ஒளி வீசும் வயிரமென் னும் இரத்தினங்களைக் கூறுவோமானால், திரட்சி எய்தில-(அவை இராம பிரான் கால் விரல் நகங்களைப் போலத்) திரண்ட வடிவத்தையுடையன அல்ல; (ஆதலின்), உகிர்க்கு உவமம் ஆவன யான் அறிகிலென் - நகத் துக்கு ஒப்பாகக் கூறப் பொருள் ஒன்றையும் யான் அறிய முடியவில்லை.

இராமபிரான் கால் நகங்கள் சிறியனவும் பெரியனவுமாக உள்ளன; மறுவற்றிருப்பன; பத்தாய் உள்ளன; ஆதலின் ஒன்றேயாகி யுள்ளதும், மறு உள்ளதுமான ஒரு சந்திரனை எப்படி உவமை கூற முடியும்? வயிரமோ திரட்சி யடையாது; பலவிதமான உருவத்தோடு கூடியது; ஆதலின் அதுவும் உவமையாகாது என்றபடி.

(பி-ம்.) 1. பெரியவு மாகத் திங்கள்தான்; மாகத் திங்களோ. 2. பிறிதிலோர் பத்தெனப் பின்னு மாறுநீ: மறுவில்பத் துளவில வுரைக்கின் மற்றினி. 3. வயிரமே புகழ்ச்சி யெய்தல. 4. நா னுவமை யாவன. (42)

531. *பொருந்தின நிலனெடு போந்து கானிடை*
*வருந்தின வெனினது நூலை மாறுகொண்*
*டிருந்தது நின்றது புவனம் யாவையும்*
*ஒருங்குடன் புணர்வன வுணர்த்தற் பாலதோ.*

(இராமபிரான் உள்ளங்கால்கள்), நின்றது புவனம் யாவையும் - நிலை பெற்ற இந்த உலக மெல்லாவற்றையும், ஒருங்கு உடன் புணர்வன -

ஒரே சமயத்தில், (திருவிக்கிரம அவதாரத்தில்), ஒருசேர அளக்கப் பொருந்தி யிருந்தன; (அப்படிப் பட்ட திருவடிகள் இப்பொழுது), நில னெடு பொருந்தின போந்து கான் இடை வருந்தின எனின் - தரையில் நடந்து சென்று காட்டி னிடையே வருந்தின என்றால், அது - அப்படிச் சொல்வதானது, நூலை மாறுகொண்டிருந்தது - (தர்க்கம் முதலிய) நூல்களின் கொள்கைகளுக்கு மாறுபாடாக இருந்ததாகும்; (ஆதலின்), உணர்த்தல் பாலதோ-அப்பாதங்களின் பெருமை எடுத்துத் தெரிவிக்கக் கூடியதோ? (முடியாது என்றபடி.)

இராமபிரான் திருவடிகளின் லக்ஷணங் கூறுமிடத்து நேரில் உவமை சொல்லாமல், திருமால் உலகெலாம் அளந்த திரிவிக்கிரமாவதாரச் செய் தியைக் கூறி, அங்கு வியாபகமாகவிருந்த திருவடி ஒரு சிறிய நிலப் பகுதியில் வியாப்பியமானதைக் கூறுவது நூலுக்கு முரணானது என்று கூறப்பட்டது. முன்னே (528) திருவடிச் சிறப்பைக் கூறிப் பின் 529, 530 களில் விரல் நகங்களைக் கூறி, இங்கு உள்ளங்காலைக் கூறினரென்க. பழைய உரை, 'நூலை மாறு கொண்டு' என்பதற்குச் சாமந்த லட்சண நூலைப் பழித்து' என்று பொருள் கூறுகிறது.

(பி-ம்.) 1. பொருந்தில; பொருந்திய: நிலமிசைப்: பொருந்து கானிடை.
2. வருந்தில வெனின்: வருந்தியு மிலக்கண நூலே: நூலு மாறு கொண்டு. 3. இருந்தன வவன்பதம்.
4. ஒருங்குடன் கொணர்வது: உணர்வதை: ஒளிப்பதை ஒளிக்கற் பாலதோ; புணரவ.'.துரைக்கற். (43)

532. *தாங்கணைப் பணிலமும் வளையுந் தாங்கரா*
*வீங்கணைப் பள்ளியா னெனினும் வேறினிப்*
*பூங்கணைக் காற்கொரு பரிசு தான்பொரும்*
*ஆங்கணைக் காவமோ வாவ தன்னையே.*

'அன்னையே - தாயே! அணை தாங்கு பணிலமும் - அணை போன்று பல வரம்புகளையுடைய சங்கும், வளையும்-சக்கரமும், தாங்கும் - கையில் ஏந்தியுள்ள, வீங்கு அரா அணை பள்ளியான்-பருத்த அரவாகிய படுக்கை மீது பள்ளி கொண்டுள்ள திருமாலான இராமபிரானுடைய, பூம் கணை காற்கு-அழகிய கணைக்காலுக்கு, தான் பொரும் கணைக்கு ஆம் ஆவமோ -அவன் போரிடும் அம்புகளுக்கு இருப்பிடமாகும். (அக்ஷய மென்னும்) அம்புப்புட்டிலோ, ஒரு பரிசு எனினும்-ஒருவிதமாக ஒப்பாகும் என்றாலும், இனிவேறு (ஆவமோ) - இனி வேறு அம்புப்புட்டிலோ, ஆவது-உவமை ஆகும்? (ஆகாது என்பதாம்)

வளை - சக்கரம் என்னும் படை; உக்கிரகுமார பாண்டியனும், கரி காலனும். வளை என்னும் சக்கரப் படை கொண்டிருந்தமை நோக்குக. பரிசு - ஒரு விதம் அல்லது தன்மை; 'பகர்மின் வந்த பரிசு' (பால. தாடகைவதைப். 52.), இதன்பின் ஓர் ஏட்டில் பின்வருமாறு ஒரு செய் யுள் அதிகமாக உள்ளது.

நிலைபெற வயனிருந் தியற்று நீலத்தின்
சிலைமணி வள்ளமு முவமை சேர்கல
அலவன தென்பரா லறிவி லோரவர்
உலைவரு திருமுழங் காலுக் கொப்புண்டோ.

(பி-ம்.) 1. தாங்கணைச் சார்ங்கமும்; தாங்கணைப் பல்லமும்; தாங்கலாச் சக்கரம் வளையுந் தாங்கிநீர்.
2. வீங்கணைப் பணிமிசை மேக மன்னவன்; வீங்குபாம் பணைத். துயில் மேக மன்னவன். 3, பரிசி னும்பொரு.
ஆங்கணை யாவமே யாவ தென்னவே; ஆங்கணைக் காலவை யாவ மென்னவே. (44)

533. *அறங்கிளர் பறவையி னரசி னோங்கிய*
*பிறங்கெருத் தனையன வெவரும் பெற்றுடை*
*மறங்கிளர் மதகரிக் கரத்தை மாற்றின*
*குறங்கினுக் குவமையிவ் வுலகிற் கூடுமோ.*

'(இராமபிரானின் தொடைகள்), அறம் கிளர் - தருமமே (ஒரு வடி வெடுத்து வந்தாற்) போல் விளங்குகின்ற. பறவையின் அரசின் - பறவை களுக்கு அரசனான கருடனின். ஓங்கிய பிறங்கு எருத்து அனையன - உயர்ந்து விளங்கும் கழுத்தினை ஒப்பன; எவரும் பெற்றுடை - யாவரும் (உவமையாகச்) சொல்வதற்குப் பொருந்திய, மறம் கிளர் மதகரி கரத்தை - வலிமை விளங்கும் மதயானையின் துதிக்கையை, மாற்றின - (உவமைக்கு ஒப்பாகாமல் செய்து அவற்றைப்) புறக்கணித்தன; குறங் கினுக்கு - (இத்தகைய இராமபிரான்) தொடைகளுக்கு, உவமை - உவ மைப் பொருள்களும், இவ்வுலகில் கூடுமோ-இந்த உலகத்தில் உள்ளவை ஆகுமோ? (ஆகா, என்றபடி.)

கருடன் தருமம் விளங்குவதற்குக் காரணமானவன் என்பது கூறப் பெற்றது. இவ்வுலகில், என்றமையால் பரமபதத்தில் எழுந்தருளியுள்ள பெரிய திருவடியின் திருக்கழுத்தே உவமையாகுமென்றும், இவ்வுலகில் உவமிக்கத்தக்க பொருளில்லையென்றும் காட்டியவாறு.

(பி-ம்.) 1. அரச னுண்டெழிற்; அரச னேடெழிற்; அரசன் மெய்யொடு.
2; அனையன பெயரும் பெற்றுடை; அணைவன பெயரும் பொற்புடை.
3. கரி கரமும்; கரிக் காதத்தை வவ்வின; கரமு நாணின.
4. உலகங் கூடுமோ. (45)

534. *வலஞ்சுழித் தொழுகுநீர் வழங்கு கங்கையின்*
*பொலஞ்சுழி யென்றலும் புன்மை பூவொடு*
*நிலஞ்சுழித் தெழுமணி யுந்தி நேரினி*
*இலஞ்சியும் போலும்வே றுவமை யாண்டரோ.*

'பூ ஒடு - தாமரைப்பூவிலே, நிலம் - உலகங்களையும், சுழித்து எழு-வளைத்து ஒன்று சேரத் தோற்றுவித்த, மணி உந்தி - (இராமபிரானுடைய) அழகிய திருவுந்தி, வலம் சுழித்து ஒழுகு நீர் வழங்கு கங்கையின் - வலப்பக்கமாய்ச் சுழித்துப் பெருகியோடி நீரை வழங்குகின்ற கங்கை நதியின், பொலம் சுழி என்றலும்-அழகிய நீர்ச்சுழி ஆகும் என்று கூறலும், புன்மை-இழிவுடைத்தாகும்: இனி நேர்-இனி ஒப்பாவது, இலஞ்சியும் போலும். - மகிழமலரே போலும்; வேறு உவமை யாண்டு - வேறு உவமானம் எங்குள்ளது? (இல்லை என்றபடி). அரோ : அசை.

உலகங்களைத் தன் உந்தித் தாமரையினின்றும் அளித்த வரலாற்றைத் திருமாலின் அவதாரமாகிய இராமபிரான் மேலேற்றிக் கூறியது என்க. உந்திக்குக் கங்கை நீர்ச் சுழியை உவமை கூறியது; 'அங்கை போல் வயிறணிந்த வலஞ்சுழியமை கொப்பூழ், கங்கையின் சுழிய லைக்கும்' (சீவக.172). கங்கைச் சுழி ஓரிடத்தில் நிலைபெறாது ஆதலின், அவ்வுவமை புன்மை என்றதாம். இலஞ்சியும் போலும், என்றமையால் அதுவும் நேரான உவமை ஆகாது என்பதும், வேறு உவமை இல்லாமை பற்றி அதனை ஒருவாறு உவமையாகக் கூற வேண்டுவதாயிற்று என்பதும் ஆம். பூ என்று பிறிதொரு அடைமொழியின்றித் தனித்துவரின் அது தாமரைப் பூவையே குறிக்கும்; 'பூ வெனப்படுவது பொறிவாழ் பூவே' என்றாராகலின்; பூவொடு - வேற்றுமை மயக்கம். அரோ, வினாப் பொருளில் வந்தது. இவ்வாறு ஒலி வேறுபாட்டால் எதிர்மறைப் பொருள் உணர்த்தப் படுவதை வடநூலார் காகு என்பர்.

(பி-ம்.) 1. வலஞ்சுழிந்(து): நீர் வாங்கு. 2, சுழி யென்னினும்.
3. நிலஞ்சுழிந்(து); நிலஞ்சுழி யுந்தியே யுரைக்கின்: பொலஞ்சுழி யுந்தியை யுரைக்கி னேரினி.
4. இலஞ்சியம் போதும் ; போதில்; ஒக்கினு மொக்கு மேந்திழாய். (49)

535. *பொருவரு மரகதப் பொலங்கொண் மால்வரை*
*வெருவுற விரிந்துயர் விலங்க லாகத்தைப்*
*பிரிவற நோற்றன ளென்னிற் பின்னையத்*
*திருவினிற் றிருவுளார் யாவர் தெய்வமே.*

'தெய்வமே - என் தெய்வமான பிராட்டியே! பொரு அரு பொலம் கொள் மரகத மால் வரை-ஒப்பு அற்ற அழகைக் கொண்டுள்ள மரகதம் என்னும் இரத்தின மயமான பெரிய மலை, வெரு உற - அஞ்சும்படி, விரிந்து உயர் - அகன்று ஓங்கி வளர்ந்துள்ள, விலங்கல் ஆகத்தை - மலை போன்ற (இராமபிரானுடைய) திரு மார்பை, பிரிவு அற நோற்றனள் என்னில் - நீங்காது எப்பொழுதும் சேர்ந்து வாழும்படித் திருமகள் தவம் செய்துள்ளாள் என்றால், அத் திருவினில் திரு உளார் பின்னை யாவர் - அந்தத் திருமகளினும் பாக்கியமுள்ளவர் வேறு யாரே உளர்?

மரகத மலை இராமபிரான் மார்புக்கு உவமை. மரகதமலை இராமபிரானுக்கு; பால, திருவவதாரப். 12; மிதிலைக்காட்சிப். 53-56; ஆரண்ய. சூர்ப்பணகைப். 114. திரு, திருமாலாகத்தை எப்பொழுதும் பிரிந்தவள் அல்லள் என்பது, திருமால் வாமன உருவெடுத்து மாணியாய் வந்த போதும் திருமகள் அப்பெருமானது மார்பைப் பிரியாமையால் அதைப் பிறர் அறியாமலிருக்கத் தன் மேல் இருந்த மான் தோலால் மறைத்துச் சென்றார் எனக் கூறப் பெறுவதாலும் பெறப்படும். சீதையாகிய உண்மைத் திரு இராமபிரானைவிட்டு நீங்கவே இல்லை; இராமபிரானால் சிருஷ்டிக்கப் பெற்ற மாயாசீதையையே இராவணன் அபகரித்துச் சென்றனன் என்பது, அத்யாத்மராமாயணம், ஆரண்ய, சருக். 7.

(பி-ம்.) 1. புலங்கொள்; புயல்கொள்; பொன்கொள்.
2. விரிந்துயிர்: விரிந்தழ கிருந்த மார்பினைப்.
3. பிரிவுற நோற்றுளள்: பரிவுற.
4. திருவினிற் றிரிவிலார்: செல்வமே. (47)

536. *நீடுறு கீட்டிசை நின்ற யானையின்*
*கோடுறு கரமெனச் சிறிது கூறலாம்*
*தோடுறு மலரெனச் சுரும்பு சுற்றறுத்*
*தாடுறு தடக்கைவே றுவமை சாலுமோ.*

'தோடு உறு மலர் என-இதழ்கள் பொருந்திய தாமரை மலரென்று, சுரும்பு சுற்று அறு-வண்டுகள் சுற்றுவதை நீங்காத, தாள் துறு தடக்கை -இராமபிரானுடைய முழந்தாளைப் பொருந்தி விளங்கும் பெரும் கைகள், கீழ்திசை நின்ற யானையின் - கீழ்த்திசையைத் தாங்கி நின்ற அயிராவதம்

என்னும் யானையின், கோடு உறு - வரைகள் பொருந்திய, நீடு உறு கரம் என - நீண்ட துதிக்கையென்று, சிறிது கூறலாம் - சற்றே உவமை கூறலாம். வேறு உவமை சாலுமோ - வேறு உவமானம் சொல்லத் தக்க தாகுமோ? ஆகாது என்றபடி.

நீடுறு என்பதைக் கீழ்த்திசைக்கும் இயைத்துப் பொருள் கூறுவாரும் உளர். கீழ் திசை=கீட்டிசை; நிலைமொழியீற்று ழகரம் ளகரமாகிப் பின் ளகரம் டகரமாகத் திரிந்தது. கீட்டிசை; திருவிளை. திருநகரங்காண். 43. மலர் என்பது பொதுப் பெயராய் வந்ததால் தாமரை மலரைக் குறித்தது. தோடுறு மலரெனச் சுரும்பு சுற்றுதல் என்பது மயக்க வணியின் பாற்படும். தாள் இங்கு முழந்தாளைக் குறித்தது; கைகள் முழந் தாட்களைத் தொடுமாறு நீண்டிருப்பது உத்தம புருஷ லக்ஷணம்; இவ் வாறு அமையப்பெற்றவனை வடமொழியில் ஆஜாநுபாஹு என்பர்; இக் கருத்தைக் கொண்டே இராமபிரானைத் தாழ் தடக்கையன் என்று சொல்வது; ஆரண்ய. மாரீசன் 149. இராமபிரான் கைக்கு யானையின் துதிக்கை: ஆரண்ய. சூர்ப்பணகை. 14; தாள் துறு தடக்கை; ஒப்பு; புறநா: 14: 11.

(பி-ம்.) 2. கூறலாத். 3. சுருப்புச் சுற்றுறுத். 4. தாடொடு தடக்கை. (48)

537. *பச்சிலைத் தாமரை பகல்கண் டாலன*
*கைச்செறி முகிழுகிர் கனக னென்பவன்*
*வச்சிர யாக்கையை வகிர்ந்த வன்றொழில்*
*நிச்சய மன்றெனி னையம் நீங்குமே.*

'பசுமை இலை தாமரை - பசிய இலைகளோடு கூடிய தாமரை மலர், பகல் கண்டால் என-சூரியனைக் கண்டது போல (விளங்கும்), கைசெறி-கைகளிற் பொருந்திய, முகிழ் உகிர்-அரும்பு போன்ற நகங்கள், கனகன் என்பவன் - இரணியன் என்பவனுடைய, வச்சிர யாக்கையை-வயிரம் போன்று உறுதியுடைய உடலை, வகிர்ந்த வன் தொழில்-(நரசிங்கமாகி முன்)பிளந்த வலிய செய்கை, நிச்சயம் அன்று எனின்-நிச்சயமான செய்தி இல்லை என்று ஐயுற்றுச்சொன்னால், ஐயம்-அச் சந்தேகம், (இராமபிரான் நகங்களை நேரில் கண்டவிடத்து), நீங்கும் - தானகவே நீங்கிவிடும். ஏ; அசை.

பச்சிலைகள், இராமபிரான் திருமேனிக்கும், பகல் கண்ட தாமரை, அவன் கைகளுக்கும் உவமைகள். கை உகிர், சிவப்பானவை; அரும்புகள் போன்றவை: கூரியவை; இவ்வுகிர்களே கனகன் வச்சிர யாக்கையை முன் பிளந்த வலிமையுடையன. இராமபிரானின் கை

விரல் நகங்களின் செந்நிறமும், உறுதியுடைமையும், இவ் வரலாற்றில் உண்டாகும் ஐயத்தை நீக்கும் என்றபடி. கனகன்- ஹிரணியன் என்பதின் பரியாயப் பெயர். ஒரு சுவடியில் இதன் பின், கடற்படு என்று தொடங்கு . (539) செய்யுள் காணப்படுகிறது.

(பி-ம்.) 2. செறி நகமுதற் கனக: கனக மேனியான்.
3. யாக்கையைக் கிழித்த வார்த்தைதான்: வகிர வன்றெழில்.
4. நிச்சய மாமெனில் நிலையை நீங்குமோ: ஐய நீக்குமே. (49)

538. *திரண்டில வொளியில திருவுஞ் சேர்கில*
*முரண்டரு மேருவின் சிலையின் மூரிநாண்*
*புரண்டில புகழில பொருப்பொன் றொன்றுபோன்*
*றிரண்டில புயங்களுக் குவமை யேற்குமோ.*

(தோள்களுக்கு மலைகளை உவமை கூறினால், அம் மலைகள்), திரண்டு இல - உருவில் திரட்சி பெற்றிருக்கவில்லை; ஒளி இல - நல்ல காந்தியைப் பெற்றிருக்கவில்லை; திருவும் சேர்கில - வெற்றித் திருவும் சேரப் பெறவில்லை; முரண் தரு மேருவின் - வலிமையையுடைய மேருமலை போன்ற, சிலையின் - வில்லினுடைய, மூரி நாண் புரண்டு இல - வலிய நாண் புரளப் பெறவில்லை; புகழ் இல - பலராற் புகழப் பெறவில்லை; பொருப்பு - மலை, ஒன்று ஒன்று போன்று - ஒன்று மற்றொன்று போன்று, இரண்டு இல - சமானமாய் இரண்டு மலைகளாக இல்லை; ஆதலால், புயங்களுக்கு- (இராமபிரான்) திருத்தோள்களுக்கு, உவமை ஏற்குமோ-(மலையென்று சொல்லும்) உவமை ஏற்புடைத் தாகுமோ? (ஆகாது என்றபடி.)

இங்கு உவமானமாகக் கூறப் பெறும் மலைகள் உபமேயமான இராமபிரான் தோள்களுக்குப் பல விதங்களால் தாழ்ந்தன என்று விளக்கப் பெற்றது. இச்செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

(பி-ம்) 1. திரண்டில திறலில; திருவின் சேர்வில.
2. முரண்டெழு: முரண்டரு சிலையொடு கெழுவு மூரி நாண்.
3. பொருப்பென் றொன்றுபோன்; பொருப்பு மொன்றுபோன்.
4. உவமை யொக்குமோ; உவம மேற்குமோ; உவமை யெய்துமோ.

539. *கடற்படு பணிலமுங் கன்னிப் பூகமும்*
*மிடற்றினுக் குவமையென் றுரைக்கும் வெள்ளியோர்க்*
*குடற்பட வொண்ணுமோ வுரகப் பள்ளியான்*
*இடத்துறை சங்கமொன் றிருக்க வெங்ஙனம்,*

'உரகப்பள்ளியான் இடத்து உறை சங்கம் ஒன்று இருக்க - ஆதி சேடனுன பாம்பின் படுக்கையை யுடைய திருமாலின் இடக்கரத்தில் பொருந்திய பாஞ்சசன்யம் என்னும் சங்கம் ஒன்று சிறப்பான உவமையாக இருக்க, கடல் படு பணிலமும் - கடலில் உண்டாகும் சங்கும், கன்னிப் பூகமும் - இளமையான கமுக மரமும், மிடற்றினுக்கு உவமை என்று உரைக்கும் வெள்ளியோர்க்கு- (இராமபிரானுடைய) கழுத்துக்கு உவமையாகக் கூறும் சிற்றறிவுடையோருக்கு, உடன்பட ஒண்ணுமோ- எங்களால் இணங்க முடியுமோ? (முடியாது என்பதாம்).

கடல் படு பணிலம் - கடலில் தோன்றும் சாதாரண சங்கு. பாஞ்சசன்னியம்; பஞ்சசனன் என்னும் அசுரன் உடலில் பிறந்த சங்கம். இதனைத் திருமால் தம் இடக் கரத்தில் வைத்துள்ளார்; இது சங்குகளுள் உயர்ந்தது; நாச்சியார் திருமொழி 7:2. கன்னிப் பூகம் கழுத்துக்கு உவமை; சீவக. 169. வெள்ளியோர் - அறிவு கேடர்: பால. வேள்விப் 29; குறள். 714. காளிங்கர் உரை. உடன்பட என்பது எதுகை நோக்கி உடற்பட என வலித்தது.

*(பி-ம்.)* 2. என் றுரைக்க: உரைக்கு மெல்லியோர்.
3. உன்னுமே; ஒன்றுமோ; எண்ணுமே.
4. சங்கமொன் றிருப்ப: இருக்க வெய்துற்ருன். (51)

540. *அண்ணறன் றிருமுகங் கமல மாமெனில்*
*கண்ணினுக் குவமைவே றியாது காட்டுகேன்*
*தண்மதி யாமென வுரைக்கத் தக்கதோ*
*விண்ணுடல் பொலிந்தது மெலிந்து தேயுமால்.*

'அண்ணல்தன் திருமுகம் கமலம் ஆம் எனில் - இராமபிரானுடைய திருமுகம் தாமரைப் பூவுக்கு உவமையாம் என்று கூறினுல், கண்ணினுக்கு உவமை வேறு யாது காட்டுகேன் - அப்பெருமான் கண்களுக்கு வேறு எதை உவமையாக எடுத்துக்காட்ட வல்லவனுவேன்? (அதுவல்லாமல்), அது - சந்திரனது, உடல் விண் பொலிந்து - தன் உடல் ஆகாயத்தில் (ஒருமுறை) விளங்கி, மெலிந்து தேயுமால் - நாளும் குறைந்து அழியும்; (ஆதலால்), தண்மதி ஆம் என உரைக்க தக்கதோ - (இராமபிரானின் திருமுகத்துக்குக்) குளிர்ந்த சந்திரன் உவமை ஆகும் என்று உரைக்கத் தகுதியுடைத்தாகுமோ? (ஆகாது என்றபடி). ஆல்; அசை.

இச் செய்யுளுக்கு ஒப்பு: பால. அரசியற். 9

(பி-ம்.) 3. தண்முதி றிகரென; எள்மதி பிறிதிலே யின்னுங் கூறுமேல்.

4 வெண்மதி பொலிந்தது: திண்ணுடல் பொலிந்தது: விண்மதி பொலிந்ததோ மெலிந்த தேயலால்; வெண்மதி பொலிவில மெலிந்து தேய்தலால்: வெண்மதி பொலிந்துடன் மெலிந்து தேயுமால். (52)

## வேறு

541\. *ஆரமு மகிலு நீவி யகன்றதோ ளமலன் செவ்வாய்*
*நாரமுண் டலர்ந்த செங்கேழ் நளினமென் றுரைக்க நாணில்*
*ஈரமுண் டமுத மூறு வின்னுரை யியம்பா தேனும்*
*மூரல்வெண் முறுவற் பூவாப் பவழமோ மொழியற் பாற்றே.*

'ஆரமும் அகிலும் நீவி - சந்தனக் குழம்பும் அகிற் குழம்பும் தடவப் பெற்று, அகன்ற தோள் அமலன் செவ்வாய் - அகன்று விளங்கும் தோள்களையுடைய பரிசுத்தனை இராமபிரானுடைய சிவந்த வாய், நாரம் உண்டு அலர்ந்த செம் கேழ் நளினம் என்று உரைக்க நாணில்-நீரையுண்டு வளர்ந்து மலர்ந்த சிவந்த நிறமுடைய தாமரை யென்று சொல்ல வெட்கப்படுவோமானல், ஈரம் உண்டு-(இராமபிரான் திருவாய் போல) ஈரத் தன்மையைத் தன்னிடம் கொண்டு, அமுதம் ஊறு - அமிர்தம் ஊறி, இன் உரை இயம்பாதேனும்-இனிய மொழிகளைப் பேசா விட்டாலும், மூரல் வெண் முறுவல் பூவா - பற்களாகிய வெள்ளிய புன்சிரிப்பைத் தோற்றச் செய்யாத, பவழமோ மொழியப் பாற்று - பவழமோ உவமை என்று மொழியத் தகுதியுடைத்தாகும்? (ஆகாது என்றபடி). ஏ; அசை.

நாரம் - நீர், நளினமென்று உரைக்க நாணுவது; அது சிறந்த உவமை ஆகாது என்று தெரிந்தும், அதனைக் கூறுவதால், அதற்கு ஈரத்தன்மையும், அமுதப் பெருக்கும், இனிய உரையும் இல்லாமையோடு, வெண் முறுவலும் பூவாமையால் அதனையும் இராமபிரான் திருவாய்க்கு உவமை கூற முடியாது என்பதாம்: வாய்க்கு உபமானங்களாய்ச் சொல்லப் பெறும், செந்தாமரைமலர், பவழம் என்பன உபமேயமான இராமபிரான் திருவாய்க்கு ஒப்புமை அல்ல என்பது விளங்குவதால், இது வேற்றுமை அணி ஆகும். இராமபிரான் புன்முறுவலோடு இன்மொழி பயிலும் தன்மையுடையவன்.

*(பி-ம்.)* 1. ஆரமுண் டகிலும்: நீவும் மகன்ற: அகன்றதோ ரமலன்.
2\. செங்கேட் குமுதமென் றுரைக்கி னுணும்: உரைக்க நாணும்.
3\. அமுத மூறு மின்னுரை.
4\. பவளமும் மொழியற் பாற்ரூ: பாற்றே. (53)

வேறு

542. முத்தங் கொல்லோ முழுநிலவின்
முறியின் றிறமோ மொழியமிர்தின்
கொத்தின் றுள்ளி வெள்ளியெனத்
தொடுத்த கொல்லோ துறையறத்தின்
வித்தின் முளைத்த வங்குரங்கொல்
வேறே சிலகொன் மெய்ம்முகிழ்த்த
தொத்தின் றொகைகொல் யாதென்று
பல்லுக் குவமை சொல்லுகேன்.

'பல்லுக்கு உவமை - இராமபிரானுடைய பற்களுக்கு உவமை, முத்தம் கொல்லோ - முத்துக்களோ? முழு நிலவின் முறியின் திறமோ- பூரண சந்திரனுடைய துண்டங்களின் வரிசையோ? மொழி அமிர்தின் கொத்தின் - சொல்லப்படுகிற அமிர்தத்தின் திரளின், துள்ளி - துளிகளை, வெள்ளியெனத் தொடுத்த கொல்லோ-வெள்ளி யென்று சொல்லும்படி சேர்த்து வைக்கப்பட்டனவோ?, துறை அறத்தின் - (முப்பத்திரண்டு) வகைகளாக உள்ள தருமத்தினுடைய, வித்தின் முளைத்த-வித்தினின்றும் முளைத்த, அங்குரம் கொல் - முளைகளோ? வேறே சிலகொல் - உவமையாகச் சொல்லக்கூடிய வேறு சிலவோ? மெய் முகிழ்த்த-சத்தியமாகிய மரத்தில் அரும்பின, தொத்தின் தொகை கொல் - பூங்கொத்தின் தொகுதியோ? யாது என்று சொல்லுகேன் - எது என்று யான் நிச்சயித்துக் கூறுவேன்? கொல், ஐயப்பொருளன.

வேறே சில கொல்: இங்குச் சொல்லாதவையும், பிறரால் உவமை சொல்லப்பட்டனவையுமான, முல்லை, முருந்தின் அடி முதலியவற்றைக் குறிப்பிட்டதாம். அறம் முப்பத்திரண்டு வகைப்பட்டது போல, இராமபிரான் பற்களும் முப்பத்திரண்டாக உள்ளன என்பதைத் தெரிவிப்பதாகும். இராமபிரான் சத்தியவாக்கு உள்ளவனுதலால் அவன் வாயில் முளைத்து விளங்கும் பற்கள் அந்த ஸத்தியத்தின் அரும்புகள் எனச்சிறப்பிக்கப்பெற்றன.

(பி-ம்.) 1. முறியின் றிறனே முறையமுதத்: திறனே மொழியிரச: முறியின் றிரளோ: முறையமிர்தின்.
2. தொத்தின் றுமுனி : வெள்ளி யினத்தொத்த: வெள்ள மெனத் தொடுத்த: வெள்ளி யிடைக்குறைத்த முறியோ கொள்ளறத்தின்.
4. கொத்தின் றொகை: தொகையோ யாதென்று: பல்லிற் குவமை கூறிடுகேன்.

543. *எள்ளா நீரிந் திரநீலத் தெழுந்த கொழுந்து மரகதத்தின்*
*விள்ளா முழுவா ணிழற்பிழம்பும் வேண்டவேண்டு மேனியதே*
*தள்ளா வோதி கோபத்தைக் கௌவ வந்து சார்ந்ததுவும்*
*கொள்ளா வள்ள றிருமூக்கிற் குவமை பின்னுங் குறிப்பாமோ'*

'(இராமபிரான் திருமேனி), எள்ளா நீர் இந்திர நீலத்து - இகழப் பெருத நீரோட்டமுள்ள இந்திரநீலக் கல்லினிடத்து, எழுந்த கொழுந்தும் -மேற்கிளம்பி விளங்கும் ஒளிக் கொழுந்தும், மரகதத்தின் விள்ளா முழு வாள் நிழல் பிழம்பும் - மரகத மென்னும் பச்சை இரத்தினத்தின் விண்டு நீங்காது முழுதாய் உள்ள நீண்ட ஒளியின் தொகுதியும், வேண்ட வேண் டும் மேனியது-(தாம் இராமபிரானின் அந்தத் திருமேனியின் ஒளியை அடைய) வேண்டுமென்று தவம் செய்யும்படியான நிறத்தையுடையது; தள்ள - விட்டு நீங்காத, ஓதி - பச்சோந்தி, கோபத்தை - இந்திரகோபம் என்னும் பூச்சியை, கௌவ வந்து சார்ந்ததுவும் - கௌவிக் கொள்ள அருகில் வந்து சேர்ந்தது என்று சொல்வதும், கொள்ளா - ஏற்றுக் கொள்ளப்படாது; (ஆதலால்), வள்ளல் திரு மூக்கிற்கு - இராமபிரா னுடைய அழகிய மூக்குக்கு, உவமை பின்னும் குறிப்பு ஆமோ - வேறு உவமானம் குறிப்பிடத் தக்கனவாமோ? (ஆகா என்றபடி). ஏ: அசை.

ஓதி, ஓந்தி என்பதின் இடைக்குறை; கிட்கிந்தா. நாடவிட்ட. 52. கோபம், இந்திரகோபம் என்பதின் முதற் குறை; கிட்கிந்தா. கார்காலப். 29. ஓந்தி பசுமை நிறத்தோடு உருவிலும் பொருந்தியிருப்பதால் அதனை மூக்குக்கும், இந்திரகோபம் என்னும் பூச்சி உருவிலும் செந்நிறத்திலும் ஒற்றுமையாய் இருப்பதால், அதனை அதரத்திற்கும் உவமையாகக் கூறுவது கவிமரபு. எள்ளாநீ ரிந்திரநீலம் - இகழ்ச்சியில்லா நீரிலெழுந்த அழிவில்லா நீலம். 'வேண்ட வேண்டமேனி-அவைவந்து விரும்பக் கைக் கொள்ளுமேனி' என்பது பழைய உரை. இதன்பின் சில சுவடிகளில் பின் வரும் அதிகப் பாடலொன்று காணப்படுகிறது,

எள்ளற் கரிய நிலையுளதா யிசைந்து தம்மி லிணையொத்து
தள்ளப் படாத நிலையாகி சாகத் திரிகை வகையொழுகி
அள்ளற் பள்ளத் தகன்புனலி னமைந்த வாவி யுள்வளரும்
வள்ளைத் தண்டின் வனப்பழித்த மகரக் குழையின் குழையம்மா.

இப்பாடல் சில பிரதிபேதங்களுடன் 538 ஆம் செய்யுளை யடுத்துச் சில பிரதிகளில் காணப்படுகின்றது.

(பி-ம்.) 1. எள்ளா நிலத்திந் திர; நிறத்திந் திா: கொழுந்தின்.
2. முழுமா நிழற்: வெள்க விளங்கும் மேனியரோ; வேண்ட வேண்டுந் தகைமையதோ.

3. கன்னா ரோதி: சார்ந்தனவும் ; சார்ந்திடினும்.

4. வள்ளற் றிரு: உவமை யின்னும்; குனிப்பரிதே; குனிப்பாமோ; குறியாமோ. (55)

544. பனிக்கற் சுரத்துக் கரன்முதலோர்
கவந்தப் படையும் பல்பேயும்
தனிக்கைச் சிலையும் வானவரு
முனிவர் குழுவுந் தனியறமும்
இனிக்கட் டழிந்த தரக்கர்குல
மென்னுஞ் சுருதி யீரிரண்டும்
குனிக்கக் குனித்த புருவத்துக்
குவமை நீயே கோடியால்.

'பனி கல் சுரத்து - குளிர்ந்த மலைகளோடு கூடிய கொடிய கானகத்தில், கரன் முதலோர்-கரன் முதலிய அரக்கரின், கவந்த படையும்-குறையுடல்களாகிய சேனைகளும், பல் பேயும் - பல பேய்களும், தனி கை சிலையும் - ஒப்பற்ற (இராமபிரானின்) கையில் உள்ள வில்லும், வானவரும்-தேவர்களும், முனிவர் குழுவும் - இருடிகளின் கூட்டமும், தனி அறமும் - ஒப்பற்ற தருமமும், 'இனி அரக்கர் குலம் கட்டழிந்தது என்னும் சுருதி ஈர் இரண்டும் - இனி அரக்கர் கூட்டம் அடியோடு அழிந்தது' என்று கூறும் வேதங்கள் நான்கும், குனிக்க - கூத்தாட, குனித்த புருவத்துக்கு - வளைத்த இராமபிரான் புருவங்களுக்கு, உவமை நீயே கோடி - உவமையை நீயே கண்டு கொள்வாயாக. ஆல், அசை.

சிலை குனித்தலாவது, இராமபிரான் போரில் வில் வளைத்ததைக் குறிப்பதாம். கரன் போரில் கோபத்தால் இராமபிரானுடைய புருவங்கள் துடிக்க, அவன் வில் வளைய, கரன் முதலிய அரக்கர் படை வீரர்கள் தலை யிழந்து அவர்களின் கபந்தங்கள் கூத்தாடின; அங்குப் பேய்கள் பிணங்களையுண்டு கூத்தாடின; வானவர் முனிவர் குழுவும், அறமும், சுருதிகளும், 'இனி அரக்கர் குலம் அழிந்தது' என்று கூத்தாடின; எனத் தொடர்ந்து நிகழ்ந்த செய்திகளை ஒன்று கூட்டிக் குறிப்பிட்டபடி. இனிக் கவந்தப் படை முதல், சுருதி ஈறாக எல்லாம், 'அரக்கர் குலம் இனி அழிந்தது' எனறு கூத்தாடின, என்று இயைத்தும் பொருள் கூறலாம்: 'சுருதி ஈரிரண்டும்' - என்பதற்கு, நான்கு வேதங்களின் துணை கொண்டு வேள்வி புரிபவர்களும் என்றும் சிலர் பொருள் காண்பர். உவமை நீயே கோடி என்றது, அநுமன் தன்னாற் கூற இயலாது என்பதையும், பிராட்டி இராமன் திருவுருவ இலக்கணங்களை நன்கு தெரிந்து கொண்ட அநுபவம் உடையவள் என்பதையும் கருதிக் கூறியதாகும். இது, உடனவிற்சியணியும், முறையிலுயர்நவிற்சியணியும் ஆம். கரன் விசுவரஸ் முனிவரின் மற்றொரு மனைவியான கும்பீநசி என்னும் அரக்கிக்

குப்பிறந்து, இராவணனுக்குத் தம்பி முறையை யுடையவன். இவன் ஜனஸ்தானத்தில் வசித்து வந்த இராவணன் தங்கையான சூர்ப்பணகைக்குப் பாதுகாவலாய் இருந்தான். இவன் தம்பியர் தூடணன், திரிசிரன் என்பவராவர். கவந்தம் - குறையுடல். போரில் பல ஆயிரக் கணக்கான படை வீரர்களும் யானை குதிரைகளுடன் மடிந்தால் கபந்தம் எழுந்து ஆடும் என்பர்: இதனை அட்டையாடல் என்று நச்சினார்க்கினியர் கூறுவர். போர்க்களத்தில் கவந்தம் ஆடுதல்; 976,77; பால. வேள்விப் 54; ஆரணிய. கரன்வதைப். 119; உயுத்த. மூலவதைப். 228. கட்டு அழிந்தது என்று எதிர்காலத்தில் நிகழ வேண்டியதை, இறந்த காலத்திற் கூறியது துணிவு பற்றி வந்த கால வழுவமைதியாகும். கோடி - கொள்+தி. புருவம் குனித்தல், சினத்திற் றோன்றும் மெய்ப்பாடு; சிலப். 3; 13 உரை; நள. 2; 21. 'இத்தனை பேரும் ஆட வளைந்த பெருமாள் புருவம் கண்ட நீரே அதற்கு உவமை சொல்லும் என்றான் அநுமன்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. ஏனிக்கச்: கவந்தக் குலமும். 2. தனிக்கச் சிலை.
3. இனிக்கட் டழியு மரக்கர்.
4. குனிக்குங் குனித்த: குனிக்கும் புருவத்துக்கு: நீயே கொள்ளுதியால். (56)

545. வருநாட் டோன்றுந் தனிமறுவும்
வளர்வுந் தேய்வும் வாளரவம்
ஒருநாட் கவ்வு முறுகோளு
மிறப்பும் பிறப்பு மொழிவுற்ற
இருநாற் பகலி னிலங்குமதி
யலங்க லிருளி னெழினிமுற்கிழ்ப்
பெருநா ணிற்பி னவனெற்றிப்
பெற்றித் தாகப் பெறுமன்னே.

'வருநாள் தோன்றும் தனி மறுவும்-தான் தோன்றின காலத்திலேயே உடன் தோன்றின ஒப்பற்ற களங்கமும் (அல்லது கறையும்), வளர்வும் தேய்வும் - சில நாட்கள் வளர்வதும் சில நாட்கள் குறைந்து போவதுமான செயல்களும், வாள் அரவம் ஒரு நாள் கவ்வும் உறு கோளும் - ஒளியுடைய (அல்லது வாள் போலக் கொடிய), (இராகு அல்லது கேது என்னும் கிரகமாகிய) பாம்பு, (பௌர்ணமி என்னும்) ஒரு தினத்தில் கவ்விக் கொள்வதால் உண்டாகும் பெருந் துன்பமும், இறப்பும் பிறப்பும் - ஒரு நாள் இல்லாமலே மறைந்து போதலும், பிறகு ஒரு நாள் மறுபடியும் தோன்றுதலும், ஒழிவு உற்ற - ஆகிய இக்குறைகள் நீங்கப் பெற்ற, இரு நால் பகலில் - எட்டாவது தினத்தில் (அதாவது அட்டமித்திதியில்), இலங்கும் மதி-விளங்கும் சந்திரன், அலங்கல் இருளின்-மனம்தயங்குதற்கு

உரிய இருட்டினிடத்து, எழில் நிழல் கீழ்-வலிய நிழலின் கீழ், பெரு நாள் நிற்பின்-பல நாட்கள் ஒரே நிலையில் நிற்குமானால், அவன் நெற்றி பெற்றித்து ஆகப் பெறும் - இராமபிரானுடைய திருநெற்றியின் தன்மையை உடையதாக உவமை கூறப் பெறுவதாகும். மன், ஓ: அசைகள்.

சந்திரன் அதனிடம் தோன்றும் மறு இன்றி, வளர்வு தேய்வு இன்றி, இராகு கேது என்னும் கோட்களால் விழுங்கப்படும் துன்பத்திற்கு ஆளாதலின்றி, அமாவாசையன்று அழிவதும், அது கழிந்த மூன்றும் நாள் மறுபடி தோன்றுவதும் இல்லாததாய், எட்டாம் நாளில் விளங்குவது போல (அர்த்தசந்திரனாகி), என்றும் இருள் நிழல் கீழ் நிலை பெற்றுப் பல காலமும் இரவு பகலிலும் இருக்குமானால், அப்பொழுது அந்த மதி இராமபிரான் நெற்றிக்கு உவமையாகக் கூறும் நிலைமையை அடையும் என்பதாம். இஃது இல்பொருள்உவமை. நெற்றி பாதி மதி போன்று விளங்குவது: குறுந். 129: 3-5; சிலப். 2: 38-41 உரை; இருள் நிழலாவது, இராமபிரானது சென்னிமீது விளங்கும் குழற்கற்றை. இராகு கேதுக்கள் என்னும் கோட்களாகிய பாம்புகள் சந்திரனையும் சூரியனையும் முறையே பௌர்ணமி அமாவாசை தினங்களில் பற்றிப் பின் உமிழ்கின்றன என்பது புராண வரலாறு. அலங்கல் இருள் - மனம் தத்தளித்தற்கு உரிய இருட்டு. எழில் நிழல் - வலிய நிழல்; எழில், வலிமை அல்லது அடர்த்தி; (பிங்களம்)

(பி-ம்.) 1. வளராரும். 2. கவ்வ வொருகோளும்; கவ்வ வருகோளும்: ஒழிவுற்றால்; ஒழிவற்றால்; ஒழிவின்றி. (57)

546. *நீண்டு குழன்று நெய்த்திருண்டு நெறிந்து செறிந்து நெடுநீலம்*
*பூண்டு புரிந்து சரிந்துகடை சுருண்டு புகையு நறும்பூவும்*
*வேண்டு மல்ல வெனத்தெய்வ வெறியே கமழு நறுங்குஞ்சி*
*ஈண்டு சடையா யினதென்றான் மழையென் றுரைத்த விழிவன்றே*

'நீண்டு - நீளமாகி, குழன்று - சுருண்டு, நெய்த்து - பசப்புத் தன்மையுடையதாகி, (அதாவது பளபளப்போடு கூடிப் பசைத் தன்மையும் பெற்று), இருண்டு - இருள் போலக் கரு நிறமுடையதாகி, நெறித்து - படிப்படியாய்ப் படிந்து, செறிந்து - அடர்ந்து, நெடு நீலம் பூண்டு - நெடுகலும் கருநிறத்தைத் தன்னிடம் கொண்டு, புரிந்து - புரிகளாக முறுக்கப் பெற்று, சரிந்து-பின்புறமாய்க் கீழே தாழ்ந்து, கடை சுருண்டு - நுனி சுருளுடைத்தாகி, புகையும் நறும்பூவும் வேண்டும் அல்ல என - அகில் முதலிய வாசனைப் புகையும் மணமிக்க பூக்களும் வேண்டுவன அல்ல என்று சொல்லும்படி, தெய்வ வெறியே கமழும் - தெய்வத் தன்மை பொருந்திய மணமே வீசும், நறும் குஞ்சி - இயற்கை மணம் தானாக வீசும் சிறந்த (அல்லது நல்ல) குழல், ஈண்டு சடை ஆயினது

என்றால் - இப்பொழுது சடையாகியிருக்கிறது என்று சொன்னால், மழை என்று உரைத்தல் - (இப்பொழுது) அதற்கு மேகத்தை உவமையாகக் கூறுதல், இழிவு அன்றோ - குறைவு ஆகும் அல்லவா? (அபசாரமாகும் ஆதலின் என்பதாம்)

குழல் நெறிந்திருத்தல்: 610; பெரியாழ்வார் திருமொழி, 3; 10: 1. உத்தம லக்ஷணமமைந்தவர் குழல் இயற்கை மணமுடைமை; குறுந். 2. நறும் குஞ்சி - அழகிய குழல்; அல்லது சிறந்த குழல்; 'நறுநுதல்' என்பது போல.

(பி-ம்.) 1. நீண்டு சுழன்று; நீண்டு சுருண்டு: நெறித்துச் செறிந்து நிறங்கரிதாய்.
2. பூண்டு பொலிந்து: பூண்டு பிரிந்து: புரிந்து கடைசுருண்டு புகையு நறும்பூ வேணியவும்.
3. வேண்டுகில்ல நேதனத்தெய்வ: கமழு மென்குஞ்சி.
4. ஈண்டுஞ் சடைமற் றிதுவென்றான்: ஆ யினதென்றால்: இழிவாமால். (58)

547. புல்ல லேற்ற திருமகளும் பூவும் பொருந்தப் புவியேழின்
எல்லை யேற்ற நெடுஞ்செல்வ மெதிர்ந்த ஞான்று மஃதன்றி
அல்ல லேற்ற கானகத்து மழியா நடைய யிழிவான
மல்ல லேற்றி னுளதென்றான் மத்த யானை வருந்தாதோ.

'புல்லல் ஏற்ற திருமகளும் - எப்பொழுதும் தழுவியுறைதலைப் பெற்றுள்ள இலக்குமி தேவியும், பூவும் - பூமிதேவியும், பொருந்த - தன்னிடத்தில் வந்து தங்கும்படி, புவி ஏழின் எல்லை ஏற்ற நெடும் செல்வம் - ஏழு கண்டங்களாயுள்ள பூமியின் அளவைத் தன்னிடங் கொண்ட பெரும் அரசியற் செல்வத்தை, எதிர்ந்த ஞான்றும் - (தன் முயற்சியின்றித் தன் தந்தை அளிக்கத் தான் ஏற்றுக் கொள்ள) எதிர்ப்பட்ட பொழுதும், அஃது இன்றி - அவ்வரசியற் செல்வம் தனக்கு இல்லாமற் போக, அல்லல் ஏற்ற கானகத்தும் - துன்ப மேற்கொண்ட காட்டில் (அலைந்து நடக்க வேண்டியிருந்த) பொழுதும், அழியா-குறைவு படாது, ஒத்து விளங்கிய, நடையை - இராமபிரானுடைய நடையின் சிறப்பை, இழிவான மல்லல் ஏற்றின் உளது என்றால் - உவமையாற் கீழ்ப்பட்ட வளமை பெற்ற ஒரு காளை மாட்டினிடம் உள்ளது என்று உவமித்துக் கூறுவதானால், மத்த யானை வருந்தாதோ - (அவ்வேற்றினும் உயர்ந்த) மதயானை வருத்த மடையாதோ?

இன்ப துன்பங்களை இராமன் ஒருபடித்தாகக் கருதுபவன் ஆதலின், அரசியற் செல்வம் பெற்றபோது எவ்வாறு இருந்தானோ, அதே போல்

அச் செல்வத்தை இழந்து கானில் அலைந்த காலத்தும் இருந்தான் என்பது அவனுடைய நடையின் மேலேற்றி விளக்கியது என்க. ஒப்பு: 348, 349. இராமபிரானுடைய நடைக்கு, ஏற்றின் நடையும், யானையின் நடையும் ஒப்பாகக் கூறியுள்ளமை; 'மால் விடையும் பொன், நாகமு நாகமு நாண நடந்தான்' (பால; கார்முகப். 32); 'விடையன்ன தோர் நடை' (அயோத்யா, கங்கைப் 2). மல்லல்-உரிச்சொல்; 'மல்லல்வளனே' (தொல். உரி. 7.). 527. ஆம் செய்யுள் முதல் இச் செய்யுள் முடிய அநுமன் பிராட்டிக்கு இராமபிரானின் திருமேனியழகை எடுத்துக் கூறியதாகும். இக்காண்டத்திற்குச் சுந்தரகாண்டம் என்னும் பெயர் வந்தமைக்கு இப்பகுதி இங்குள்ளமையே காரணமென்று பெரியோர் கூறுவர். அநுமன் கூறிய உரைகளுட் பல இராமபிரானின் அவதார உண்மையைச் சுட்டுவனவாக உள்ளமையும் நோக்கத்தக்கது: அப் பிரானின் திருமேனி உவமைகளை விஞ்சியது என்று அநுமன் பலவிடங்களிலும் கூறினமையையும் காண்க.

(பி-ம்.) 1. புல்ல நோற்ற ; புல்ல லேற்றத்; புல்லி யேற்ற: பொருந்திப் பொலிந் திலங்க.
2. எல்லை யற்ற; பெருஞ்செல்வ; அல்ல லேற்ற நெடுஞ் ; அ∴ தின்றி; அ∴தில்லா.
3. கானத்து வழியர் ; கானத்தி லழியா ; கானகத் தினடைந்த போது மடல மைந்த: நடைநாணழியாதாய்.
4. ஏற்றி னடையதென்றால்: உளதன்றால். (59)

## அநுமன் கூறிய அடையாள உரைகள் 548-51

548. *இன்ன மொழிய வம்மொழிகேட் டெரியி னிட்ட மெழுகென்னத்*
*தன்னை யறியா தழிவாளைத் தரையின் வணங்கி நாயகனார்*
*சொன்ன குறிகொ ளடையாளச் சொல்லு முளவா லவைதோகை*
*அன்ன நடையாய் கேட்கவென வறிவ னறைவா னாயினான்.*

இன்ன மொழிய - இவ்விதமாக (இராமபிரானுடைய திரு மேனியின் அங்க அடையாளங்களை அநுமன்) எடுத்துக் கூற, அம்மொழி கேட்டு - அச் சொற்களைக் கேட்டு, எரியின் இட்ட மெழுகு என்ன-நெருப்பிடை இட்ட மெழுகு போல, தன்னை அறியாது அழிவாளை-தன்னைத் தான் அறியாது உணர்ச்சி யிழந்தவளாய்ச் சோர்ந்து அழியும் நிலையில் இருந்த பிராட்டியை, தரையில் வணங்கி - (அநுமன்) பூமியில் படிந்து வணங்கி, 'நாயகனார் சொன்ன குறி - தலைவரான இராமபிரான் (என்னிடம் உனக்கு அறிவிக்குமாறு) சொல்லியுள்ள குறிப்புக்களும், கொள் அடையாளச் சொல்லும் உள - நீ ஏற்கத் தக்க அடையாளமான வார்த்தைகளும் உள்ளன; அவை - அவற்றை, தோகை அன்ன நடையாய் - மயில்போலும் நடையுடைய பிராட்டியே! கேட்க என - அவற்றை

நீ கேட்டருள்வாயாக' என்று. அறிவன் அறைவான் ஆயினன் - மிக்க அறிவுடையவனன அநுமன் சொல்லத் தொடங்கினன்.

தோகை அன்ன நடை - மயில் போலும், அன்னம் போலும் நடை என்னலும் ஆம். மயில் நடையை மகளிர் நடைக்கு உவமிப்பது; **ஆரண்ய. சூர்ப்பணகைப். 31;** **முருகு.** 205; **பெரும்பாண்.** 331; **மதுரைக்காஞ்சி,** 608. **அடையாளச் சொல்:** **பெருங்.** 1: 54· 105; 56·184.

(*பி-ம்.*) 1. என்ன மொழிய: மொழிகேளா வெரியின்.
2. அயர்வாளைத்.
3. சொன்னகுறியுண்; சொன்ன மொழியுண்: உளவாற் றெழு தகைய; உளதா லவைதோகை.
4. கேட்டியென; கேட்கென்ன வறிய வறைவான்; கேட்கென்னு வறிய வறைவ தாயினன்; கேளென்ன வடைய வறைவான்; கேட்டி யென வறைய வறைவான்; கேட்டருளென் றவ னுங் கூறத் தொடங்கினனல்: அறிய வுரைப்பா னுயினன் (60)

## வேறு

549. *நடத்தலரி தாகுநெறி நாள்கள்சில தாயர்க்*
*கடுத்தபணி செய்திவணி ருத்தியென வச்சுற்*
*றுடுத்ததுகி லோடுமுயி ருக்கவுட லோடும்*
*எடுத்தமுனி வோடுமய னின்றதுமி சைப்பாய்.*

'நெறி நடத்தல் அரிது ஆகும் - வனத்தின் வழி நடந்து செல்லுதல் துன்பம் மேற்கொள்வதாகும்; நாள்கள் சில-நான் வனத்தில் போயிருக்க வேண்டிய நாட்களோ சிலவே; தாயர்க்கு அடுத்த பணி செய்து இவண் இருத்தி - என் தாய்மாருக்குத் தக்க பணிவிடைகளை நீ செய்துகொண்டு இந்த அயோத்தி நகர் அரண்மனையிலே இருப்பாயாக;' என - என்று யான் கூற, அச்சுற்று - அந்தச் சொல்லைக் கேட்டு அச்சமுற்று, உடுத்த துகிலோடும்-அப்பொழுது உடுத்திக்கொண்டிருந்த உடையோடேயே, உயிர் உக்க உடலோடும் - உயிர் நீங்கிய நிலையில் இருந்த தன் உட லோடும், எடுத்த முனிவோடும் - (தன்னை வரவேண்டாம் என்று கூறிய தால்) என்மேற் கொண்ட கோபத்தோடும், அயல் நின்றதும்-என்னருகே வந்து நின்றதையும், இசைப்பாய் - பிராட்டியிடம் நீ அடையாள மொழி யாகச் சொல்வாயாக.

இராமபிரான் பிராட்டிக்கு அடையாளமாகக் கூறுமாறு அநுமனி டம் கூறியவை: **கிட்கிந்தா. நாடவிட்ட.** 67-72. உடுத்த துகிலோடும் என்றமை; உடுத்த உடையோடு புறப்பட்டு விடுதல் என்ற உலக வழக்கை

மேற்கொண்டு, மற்றென்றையும் எடுத்துக் கொள்ளாமல் உடனே புறப் பட்ட விரைவைக் குறிப்பதாகும். உயிர் உக்க உடலோடும் என்றது; தன்னை விட்டு இராமபிரான் நீங்கும் விஷயத்தைக் கேட்டதும், பிராட்டி யின் நிலை உயிரற்ற உடலின் நிலையை அடைந்தது என்பதாம். நாள்கள் சில என்று குறிப்பிட்டது: உள்ள நாளைச் சொன்னால் அது அதிக வருத் தத்தைத் தருமாதலாலும், அவ்வாண்டுகளை எளிதில் கழித்து வந்து விடுவ தாகத் தைரியங் கூறும் முகத்தாலும் என்க. இதுபோலவே, இராம பிரான் வனவாசத்திற்கு அயோத்தியை விட்டுப் புறப்படுங்காலை, தன் தாயாகிய கோசலா தேவிக்கு, 'எத்தனைக்குள வாண்டுகளீண்டவை பத்து நாலும் பகலல்லவோ வென்றான்'; (அயோத்யா. நகர்நீங்கு. 22) என்று கூறியதும் இங்கு நோக்கற்பாலதாம். அயோத்யா. நகர்நீங்கு. 228 ஆம் செய்யுளில் பிராட்டி 'சீரந்துணிந்து புனைந்தனள்' என்றமை யால், துகில் என்றது மரவுரியைக் குறித்தது ஆம்.

(பி-ம்.) 1. தாய்க்கு. 2. என வச்சொற்கு.
3. உடுத்ததுணி யோடும்; உடுத்த துணி வோடும்: உடலுக்கவுயி ரோடும். 4. நின்றகுறி யென்றான். (61)

550. *நீண்டமுடி வேந்தனருளேந்திநிறை செல்வம்*
*பூண்டதனை நீங்கிநெறி போதலுறு நாளின்*
*ஆண்டநக ராரையொடு வாயிலக லாமுன்*
*யாண்டையது கானெனவி சைத்ததுமி சைப்பாய்.*

'நீண்ட முடி வேந்தன் - நெடுங்காலமாய் (அறுபதினாயிரம் ஆண்டு களாய்த்) தரித்து வந்த கிரீடத்தையுடைய அரசனாகிய தசரத சக்கரவர்த் தியின், அருள் ஏந்தி - அருளிய கட்டளையைத் தாங்கி, நிறை செல்வம் பூண்டு - நிறைந்த அரசாட்சிச் செல்வத்தை ஏற்றுக்கொண்டு, அதனை நீங்கி-(பிறகு) அவ்வரசியலுரிமையை விட்டு, நெறி போதல் உறு நாளில்- காட்டுக்கு வழி மேற் சென்ற அப்பொழுது, ஆண்டு அ நகர் ஆரை ஒடு வாயில் அகலா முன் - அந்த அயோத்தி நகரின் மதிலோடு கூடிய கோட்டை வாயிலைக் கடப்பதற்கு முன்னமே, 'கான் யாண்டையது என இசைத்ததும் - காடு எங்கே இருக்கிறது? (இன்னும் காணோமே)' என்று பிராட்டி கேட்டதையும், இசைப்பாய்-நீ அவளிடம் அடையாள மொழியாகச் சொல்வாயாக.

ஒப்பு: சிலப். 10. 41; நள. 2; 61. நீண்ட முடி என்றது, இக்ஷ் வாகு முதல் நீண்ட காலமாக வரும் பரம்பரையைக் குறித்தது என்க.

(பி-ம்.) 1. அருள் வேண்டி; அருள் வேண்ட: எய்திநிறை.
3. ஆண்டநகர் வாயிலக லாமுனவ ணீதான்.
4. யாண்டையகல்; யாண்டையிது; ஈண்டையது காணென; யாண்டுவன மென்றனை யெனக்குறி யிசைத்தான். (62)

551. *எள்ளரிய தேர்தரு சுமந்திர னிசைப்பாய்*
*வள்ளன்மொழி வாசக மெனத்துயர் மறந்தாள்*
*கிள்ளையொடு பூவைகள் கிளர்த்தல்கிள வென்னும்*
*பிள்ளையுரை யின்றிற முணர்த்துதி பெயர்த்தும்.*

'எள்ளரிய தேர் தரு சுமந்திரன் - இகழ்தற்கு அரிய தேரைச் செலுத்துவதில் வல்லவனை சுமந்திரன், 'வள்ளல் மொழி வாசகம் இசைப்பாய் - வளமை மிக்க சொற்களாலான செய்தி கூறுவாய்', என - என்று கேட்க, துயர் மறந்தாள் - தன் துயரை மறந்தவளாகிய பிராட்டி, 'கிள்ளையொடு பூவைகள் - (நான் வளர்த்து வந்த) கிளிகளையும் நாகணவாய்ப் புட்களையும், கிளர்த்தல் கிள - வளர்த்தலைச் சொல்லுவாயாக' என்னும் - என்று கூறிய, பிள்ளை உரையின் திறம் - (கபடமற்ற) குழந்தைப் பேச்சின் தன்மையை, பெயர்த்தும் - மீண்டும், உணர்த்துதி - (அவளுக்குத்) தெரிவிப்பாயாக.

இச்செய்தி; 'அன்னவள் கூறுவா ளரசர்க் கத்தையர்க், கென்னுடை வணக்கமுன் னியம்பி யானுடைப், பொன்னிறப் பூவையுங் கிளியும் போற்றுகென், றுன்னுமென் றங்கையர்க் குணர்த்துவா யென்றுள்' (அயோத்யா. தைலமாட்டு, 40.) என்பதால் விளங்கும். கிள-கிளக்க என்ற பொருளில் கொள்க. 'தேரின் மேலேறி வந்த சுமந்திரருடன் செய்தி சொல்லியனுப்பும்போது நீர் அவரைப் பார்த்து, என் தங்கைமார்களுடன் உங்கள் தமக்கையாகிய சீதை ஸ்ரீ ராமனுடைய வசனத்தினல் மனோதுக்கம் தணியப்பட்டாளென்றும், தான் வளர்த்த கிளிக்கும் பூவைக்கும் சொற்கள் கற்பித்து இளைக்காமல் காப்பாற்றச் சொன்னளென்றும் சொல்லும்' (என்றனள்) என்பது பழைய வுரை. சுமந்திரன் - நல்ல ஆலோசனையுடையவன் என்று பொருள்: இவன் இக்ஷ்வாகு வமிசத்தில் வம்ச பரம்பரையாய் அரசர்க்கு மந்திரத் தொழில் புரிந்து வந்தவன். வள்ளல் மொழி என்றதற்குத் தயரத மன்னன் கூறிய கட்டளை என்றும், பிறவாறும், பொருள் கொள்வர்.

(பி-ம்.) 1, சுமந்திர னெனும் பேர்: இசைப்பான்.
2. வள்ளலருள் வாசக மிதென்று நனிவந்தென்: வாசக மனத் துயர்.
3. கிளத்தல்கிள; வளர்த்தல்கிள; வளர்த்தகிளை பேணும்.
4. பிள்ளையொடு தன்றிறம்: பிள்ளை மொழியின்குறி பிரித்தவை புகன்றுள: உணர்த்தினை பெயர்ந்தாய். (63)

## அநுமன் திருவாழி காட்டுதல்

552. *மீட்டுமுரை வேண்டுவன வில்லையென மெய்ப்பேர்*
*தீட்டியது தீட்டரிய செய்கையது செவ்வே*
*நீட்டிதென நேர்ந்தனனெ னாநெடிய கையால்*
*காட்டினனொ ராழியது வா ணுதலி கண்டாள்.*

'மீட்டும் உரை வேண்டுவன இல்லை என- திரும்பவும் நான் அடையாளமாகச் சொல்ல வேண்டியவை இல்லை என்று, 'மெய்ப்பேர் தீட்டியது - உண்மைத் திருப்பெயர் பொறிக்கப் பெற்றது; தீட்டரிய செய்கையது - பிறரால் சித்திரித்தற்கரிய வேலைப்பாட்டினை யுடையது; செவ்வே நீட்டு இது என-நேரே இதனை நீ பிராட்டியிடம் கொடு' என்று, நேர்ந்தனன் - இராமபிரான் இதனை என்னிடங் கொடுத்தான்;' எனா - என்று அநுமன் கூறி, ஓர் ஆழி - ஒரு மோதிரத்தை, நெடிய கையால் காட்டினன் - தன் நீண்ட கரத்தால், (இதனை ஏற்றுக் கொள்வாய் என்று) பிராட்டிக்குக் காட்டினான்; அது-அம்மோதிரத்தை, வாள் நுதலி கண்டாள்- ஒளி தங்கிய நெற்றியையுடைய பிராட்டி அதனைப் பார்த்தாள்.

மீட்டும் உரை வேண்டுவன இல்லை: உரைக்க வேண்டிய அடையாளச்செய்திகள் இன்னும் பல இருந்தாலும் பிராட்டிக்கு விரைவில் ஆறுதலும் உறுதியும் அளிக்க வேண்டி, கூறிய இவையே போதும் என்று அநுமன் குறைத்துக் கொண்டதைக் குறிப்பதும் ஆகும். இராமபிரான் கூறிய மற்றும் சில செய்திகள். கிட்கிந்தா. நாடவிட்ட. 67-72 செய்யுட்களால் அறியப்படும். மெய்ப்பேர்-இராம நாமம்; 'இராம னெனப் பெயரீந்தனனன்றே' (பால. திருவவதாரப். 140;) 'மும்மைசா லுலகுக் கெல்லாம்......செம்மைசேர் நாமந் தன்னைக்' (கிட்கிந்தா. வாலிவதைப். 71); 'ஸஹஸ்ர நாம தத்துல்யம் ராம நாம வரானனே' என்பவைகளால் நன்கு விளங்கும். இத்தகைய மெய்ப்பேர் தீட்டிய திருவாழி பிராட்டியின் ஐயப்பாட்டை நீக்கு மென்ற துணிவால் அநுமன் காட்டினன் என்க. இச் செய்தி, 'மைத்தகுமா மலர்குழலாய் வைதேவி விண்ணப்பம், ஒத்தபுகழ் வானரக்கோ னுடனிருந்து நினைத்தேட, அத்தகுசீ ரயோத்தியர்கோ னடையாளமிவை மொழிந்தான், இத்தகையா லடையாள மீதவன்கை மோதிரமே' (பெரியாழ்வார் திருமொழி 3: 10-8.) ஆலும் விளங்கும். மோதிரத்தில் பெயர் பொறித்தல்; சீவக. 1040; கலித். 84: 23; பெருங் 3. 9; 70; 4. 9; 8-9.

(பி-ம்) 1. மீட்டுமுள யாவையும் விளம்பியவன் மெய்ப்பேர்.
2. தீட்டியது மாருதி யெடுத்துநனி செவ்வே.
3. நீட்டியது காணெனமுன் னேநெடிய கையால்.

## ஆழி கண்ட பிராட்டியின் நிலையும் செயல்களும் 553-58

553. *இறந்தவர் பிறந்தபய னெய்தினர்கொ லென்கோ*
*மறந்தவ ரறிந்துணர்வு வந்தனர்கொ லென்கோ*
*துறந்தவுயிர் வந்திடைதொ டர்ந்ததுகொ லென்கோ*
*திறந்தெரிவ தென்னைகொலி நன்னுதலி செய்கை.*

இ நல் நுதலி செய்கை - இந்த அழகிய நெற்றியையுடைய பிராட்டியின் செயலானது, இறந்தவர் பிறந்த பயன் எய்தினர் செய்கை கொல் என்கோ - (வாழ்க்கையை, நற்கர்ரியத்திற் செலுத்தாமல்) வீணே போக்கியவர் பிறவியின் பயனாகிய நற்பணிகளைச் செய்தோர் அடையும் பயனாகிய நற்பதவியை அடைந்தவர் செய்கை என்று சொல்லுவேனோ? (அல்லது), மறந்தவர் அறிந்து உணர்வு வந்தனர் செய்கை கொல் என்கோ-கற்றுத் தேர்ந்த அரிய ஒன்றை மறந்து போனவர் பின் அதிர்ஷ்ட வசத்தால் தம் உணர்வுக்கு அது வரப்பெற்றவர் அடைந்த நிலை என்று சொல்லுவேனோ? (அல்லது), துறந்து அ உயிர் வந்து இடை தொடர்ந்தது கொல் என்கோ - (ஒருவருக்கு) உயிர் நீங்கிப் போய்ப் பிறகு தக்க சமயத்தில் மீண்டும் அவ்வுயிர் வந்து சேர்ந்த நிலை என்று சொல்லுவேனோ? திறம் தெரிவது என்னை கொல் - பிராட்டி அடைந்த நிலைமையின் விதத்தை எங்ஙனம் யான் அறிந்து சொல்வது?

இதுமுதல் 6 செய்யுட்கள் கவிக்கூற்று; அல்லது, அநுமன் நினைத்தவையாகவும் கூறலாம்.

செய்கை என்பது பிற இடங்களிலும் கூட்டப் பெற்றது. மேற்கூறிய மூன்று அரிய சம்பவங்களோடு ஒப்பிட்டுப் பார்த்து, அவற்றால் மனத் திருப்தியடையாமல் வேறு எங்ஙனம் அறிந்து சொல்வேன் என்று கவி, சிந்தனை மேற்கொண்டார் என்க. இச் செய்யுளும் பின்வரும் ஐந்து செய்யுட்களும் மோதிரக் காட்சியால் பிராட்டி அடைந்த மெய்ப்பாடுகளையும் செயல்களையும் சித்தரிப்பன; இறந்தவர் பிறந்த பயன் எய்தினர் என்கொல் - உயிர் நீங்கியவர்கள் உடனே பிறப்பின் பயனான வீட்டின்பத்தை அடைந்த நிலை பெற்றனர் என்றும் பொருள் கொள்ளலாம். பிறந்த பயன் எய்துதல்: அயோத்தியா. மந்திரப். 28; மந்தரை சூழ்ச்சிப். 56, 58; நாலடி. 7. இறக்கத் துணிந்த பிராட்டிக்கு எய்திய பெரும் இன்பத்திற்கு உவமை இவ்வாறு கூறப்பெற்றது. இடை - தக்க சமயத்தில்; 'உடையோர் போல விடையின்று குறுகிச்;' (புறநா. 54.). இங்குத் தக்க சமயமாவது - உடல் கெடுமுன் என்பதாம்; 'இறந்தவர் பிறந்தபயன்-மனுஷ சனனம் எடுத்ததற்குப் பலனான பரமபதம் உடனே பெற்றது போல' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. இறந்தனர்; இறந்த பொருள் வந்துபயன்; இறந்தவள் பிறந்த பய னெய்தினன்; இழந்தபொருள் வந்துபய னெய்தினகொ லென்கோ,

2. மறந்தனர்; மறந்தவள்; மறந்தன ரிறந்துணர்வு: வந்ததுகொல்; வந்தனகொல்.

3. வந்துடல்; வந்துடன்; வந்திடை துடித்தது.

4. என்னைகொலம் மங்கைமகிழ் செய்கை: என்கொலிவ ணன்னு தலி செய்கை. (65)

554. *இழந்தமணி புற்றர வெதிர்ந்ததென லானுள்*
*பழந்தன மிழந்தன படைத்தவரை யொத்தாள்*
*குழந்தையை யுயிர்த்தமல டிக்குவமை கொண்டாள்*
*ஒழிந்தவிழி பெற்றதொ ருயிர்ப்பொறையு மொத்தாள்.*

புற்று அரவு- புற்றில் வாழும் இயல்புடைய பாம்பு, இழந்தமணி- தான் இழந்த தன் மணியாகிய நாகரத்தினத்தை, எதிர்ந்தது- மீண்டும் நேரே கண்டு கொண்டது, எனல் ஆனுள்- என்று சொல்வதற்கு ஒப்பா னுள்: இழந்தன பழம் தனம்- தாம் இழந்தனவான தமது பழைய செல் வங்களை, படைத்தவரை ஒத்தாள் - மீண்டும் பெற்றவர் அடைந்த நிலைக்கு ஒப்பானுள்: மலடி குழந்தையை உயிர்த்ததற்கு உவமைகொண் டாள் - (பல காலமாய்) மலடியாய் இருந்த ஒருத்தி பின் ஒரு குழந்தை யைப் பெற்றெடுத்த நிலைக்கு ஒப்பானுள்; ஒழிந்த விழி பெற்றதோர் உயிர்ப் பொறையும் ஒத்தாள் - பார்வை அற்றுப் போன விழிகளைத் திரும்பப் பெற்ற ஓர் உடம்பு அடைந்த இன்ப நிலைக்கு ஒப்பானுள்;

பாம்பு இரவில் தன்னிடம் இருக்கும் அரிய இரத்தினத்தை வெளியே கக்கி அதன் ஒளியால் அங்குமிங்கும் அலைந்து தன் இரை தேடுமென்பதும், அந்த மணி காணுமற் போனுல் இரவில் அது வழி யறி யாததோடு அதன் அருமையை நினைந்து பெரிதும் வருந்தும் என்பதும் நூன் மரபு: அயோத்யா. தைலமாட்டுப். 63; மணி. 7: 131; சிலப். 13. 58. சீவக. 1508. பழந்தனம் - பழமையான குல தனமும் ஆம்; பழந்தனம் இழந்து பெற்ற நிலை: கலித். 107: 10. மலடி; மக்கட் பேறு அடைதற்குரிய பருவம் கடந்து மலடி என்று சொல்லத் தக்க நிலையில் இருந்த மாது; 'மலடி வயிற்று மகன் போல' (பஞ்சரத்னத் திருப்புகழ்;) உயிர்ப்பொறை - உடம்பு.

(பி-ம்.) 1. இழந்தமணி பெற்றரவி னின்பமென லானுள்: புற்றர வெழுந்த.

2. பழந்தன மறைந்தன படைத்தவரை யொத்தாள்; மறைந்தது படைத்தவரை யொத்தாள்; மறைந்தன பரித்தவரை யொத்தாள்: இழந்தன படைத்தவரு மொத்தாள்.

4. உழுந்த; இழந்துவிழி பெற்றவர்த மின்பமு மடைந்தாள். (66)

555. *வாங்கினண் முலைக்குவையில் வைத்தனள் சிரத்தால்*
*தாங்கினண் மலர்க்கண்மிசை யொத்தின டடந்தோள்*
*வீங்கினண் மெலிந்தனள் குளிர்ந்தனள் வெதுப்போ*
*டேங்கின ளுயிர்த்தனளி தின்னதென லாமே.*

வாங்கினள் - பிராட்டி அந்த மோதிரத்தைத் தன் கையினுல் பெற்றுக் கொண்டாள்; முலைக்குவையில் வைத்தனள் - தன் தனங்களின் முகட்டிலே வைத்து அணைத்துக் கொண்டாள்; சிரத்தால் தாங்கினள் - தலைமேல் அதனை வைத்து ஏற்றுக்கொண்டாள்; மலர் கண் மிசை ஒத்தினள் - தாமரை மலர் போன்ற தன் கண்களின் மீது வைத்து ஒற்றிக் கொண்டாள்; தடம் தோள் வீங்கினள்-அந்த மகிழ்ச்சியால் (இராமபிரானையே நேரில் அடைந்தவள் போல்) தன் பெரிய தோள்கள் பூரிக்கப் பெற்றுள்; குளிர்ந்தனள் - (உள்ள மகிழ்ச்சியால்) குளிர்ப்படைந்தாள்; மெலிந்தனள் - (மறுபடியும் இராமபிரானைத் தான் அடையாத நிலையை யுணர்ந்து ஏக்கத்தால்) உடல் இளைப்படைந்தாள்; வெதுப்போடு ஏங்கினள் - வாட்ட மடைந்து அதனுல் ஏக்க முற்றுள்; உயிர்த்தனள்-பெருமூச்சு விட்டாள்; இது இன்னது எனல் ஆமே - பிராட்டி கொண்ட இந் நிலைமை இன்ன தன்மையது என்று சொல்லுதற்கு ஆகுமோ?

முலைக்குவையில் வைத்தல்; தன் தலைவனைப் பிரிந்த தலைவி அவனது பொருளைக் கண்டக்கால் அதனை, அவனை நேரிற் கண்டது போலத் தழுவிக் கொள்ளுதல் இயல்பு. இக்கருத்து; 'உச்சிமேல் வைத்துக் கொண்டுகந்தனளால் மலர்க்குழலாள் சீதையுமே' பெரியாழ்வார். 3. 10: 9; பிராட்டியின் இச்செயல்களைப் பின் அநுமன் இராமபிரானிடம் கூறுதல். 1286, 1287. பிராட்டியின் அணிகலன்களைக்கண்ட இராமபிரானின் உணர்ச்சிகள் இங்கு ஒப்பு நோக்கத் தக்கன; கிட்கிந்தா. கலன் காண். 5-11. இவ்வாறு தலைவன் தலைவியரிடை நிகழும் நிகழ்ச்சியை, மருட்கை என்னும் மெய்ப்பாடு என்பர் இலக்கண நூலார். 'மோதிரத்தைப் பெருமாள் என்று நினைந்து பூரிப்பதும், அவனல்ல வென்று வாடுவதும் இந்தக் கவிப் பொருள்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. வைத்தனள் சிரத்தில். 2. தடங்கண்மிசை; ஒற்றினள்.
3. வீங்கினள் குளிர்த்தனள் வியர்த்தனள் வெதுப்போ.
4. இதென்னதென லாமே; ஏங்கின ளிளைத்தன ளிதென்ன வென லாமோ. (67)

556. *மோக்குமுலை வைத்துறமு யங்குமிழி நன்னீர்*
*நீக்கிநிறை கண்ணிணைத தும்பநெடு நீள*
*நோக்குநுவ லக்கருது மொன்றுநுவல் கில்லாள்*
*மேக்குநிமிர் விம்மலள்வி ழுங்கலுறு கின்றுள்,*

(மேலும் பிராட்டி அம் மோதிரத்தை) மோக்கும் - மோந்து பார்ப் பாள்; முலை வைத்து உற முயங்கும் - தனங்களின் மேலே வைத்து நன்ருகத் தழுவிக் கொள்வாள்; இழி நிறை நல் நீர் நீக்கி - கண்களிலிருந்து வழிந்து விழும் நிறைந்த தன் ஆனந்தக் கண்ணீரைத் தன்கையாற் போக்கி, கண் இணை ததும்ப-(மீண்டும் தன்) இரண்டு கண்களிலும் அக் கண்ணீர் ததும்பியெழ, நெடு நீள நோக்கும் - நெடு நேரம் அந்த மோதி ரத்தை நன்ருகப் பார்ப்பாள்; நுவலக் கருதும் - அதனேடு பேச எண்ணு வாள்; ஒன்றும் நுவல்கில்லாள் - ஒன்றும் பேச முடியாமல் மௌனமாய் இருப்பாள்; மேக்கு நிமிர் விம்மலள்-மேலே ஓங்கிய ஏக்கத்தை உடைய வளாகி, விழுங்கல் உறுகின்ருள் - அவ்வேக்கத்தை அடக்க முயற்சி செய்வாளாயினள்

அம்மோதிரத்தைப் பெருமானுகக் கருதி முயங்கினள்; மகிழ்ச்சி மேலிட்டுப் பார்த்தாள்; ஆனந்தத்தால் கண்ணீர் மீண்டும் பெருக, அதனுல் பார்க்க முடியாது நின்ருள்; பேச எண்ணினுள்; மகிழ்ச்சி மிகுதி யால் உண்டான விம்மலால் பேச முடியாது நின்ருள்; அவ்விம்மலை உள்ளே அடக்க முயற்சி செய்தாள்; இவ்வாறு திருவாழி கண்ட பிராட்டி நிலையிருந்தது என்க. அரிய பொருளை மூக்கால் முகர்ந்து மகிழ்தல் ஒரு மெய்ப்பாடு. தலைவரோடு தொடர்புடைய பொருள்களைத் தழுவுதலும் பாராட்டிப் போற்றுதலும் மகளிர் இயல்பு; 555. குறுந். 361. 4-6; தஞ்சைவாணன். 129. விம்மலள் விழுங்கலுறுகின்ருள் என்றதற்கு, விம்மாதவளாய் அம் மோதிரத்தை விழுங்கத் தொடங்கினுள் என்றும் பொருள் கூறலாம். 'பெருமாளென மகிழ்வதும், அல்லவென்று வருந்து வதும், ஆமென்று ஊடுவதும், அல்லவென்று வாய் மூடுவதும், மோதி ரத்தை விழுங்குவோமென்பதும் பொருள்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. வைத்தற: முயங்கு மொளிர் நன்னிர்; நெடுநன்னிர்.
2. நீங்கியிரு கண்ணெளி ததும்பநெடு நேரம்: தழும்புபட நீள.
3. ஒன்றும் நுவல்.
4. வீக்கில ளிரங்கினள் விழுங்கலுறு கின்ருள்; விம்மலின் விழுங்க விழை கின்ருள்; விம்மலின் விளங்கிமிகு கின்ருள்; விழுங்க வெழு கின்ருள்; விழுங்கவிரை கின்ருள், (68)

557. *நீண்டவிழி நேரிழைதன் மின்னினிற மெல்லாம்*
*பூண்டதொளிர் பொன்னனைய பொம்மனிற மெய்யே*
*ஆண்டகைதன் மோதிரம டுத்தபொரு ளெல்லாம்*
*தீண்டளவில் வேதிகைசெய் தெய்வமணி கொல்லோ.*

நீண்ட விழி நேரிழை தன் மின்னின் நிறம் எல்லாம்-நீண்ட விழிகளை யுடைய பிராட்டியின் மின்னுதலையுடைய (அதாவது ஒளிவீசுகின்ற)

உருவம் யாவும், ஒளிர் பொன் அனைய பொம்மல் நிறம் பூண்டது - ஒளி வீசுகின்ற பொன் போன்ற பொலிவு நிறத்தைப் பூண்டது; ஆண்டகை தன் மோதிரம் அடுத்த பொருள் எல்லாம் - ஆடவரிற் சிறந்த இராம பிரானுடைய திருவாழி தன்னை அடுத்த பொருள்களை யெல்லாம், தீண்டு அளவில் - தொட்ட மாத்திரத்தில், வேதிகை செய் - (பொன்னாக) மாற்று கின்ற, மெய்யே தெய்வ மணி கொல்லோ-உண்மையாகவே ஒரு தெய் வத்தன்மை வாய்ந்த ரசகுளிகையோ? (அல்லது ஒரு தெய்வமணியோ?)

நிறம் - உருவம்; **உயுத்த.** வருணனைவழிவேண்டு. 23; மருத்து மலைப். 90; நாகபாசப். 119, 230; சிலப். 26: 41; **திருக்கோவையார்.** 58. உரை. பொம்மல் - பொம்மை, அதாவது பதுமை என்றும் கூறுவர்; பொம்மலாட்டம் என்பதையும் நோக்குக. பொம்மல், மகிழ்ச்சியும் ஆம்; (அயோத்யா. மந்திரப்: 79). வேதிகை செய் தெய்வ மணி: ஸ்பரிசவேதி, தரிசனவேதி என்று இரண்டு உண்டு: இங்குக் கூறப் பட்டது தரிசன வேதி என்க.

(பி-ம்.) 1. தன் மேனிநிற மெங்கும்.
2. பூண்டதொளி பொன்: பூண்டதெழில் பொன்னனைய பொம் மல் நிறமேய.
4. தீண்டவில் வேதனைசெய்: வேதைபுரி தெய்வ. (69)

558. *இருந்துபசி யாலிடரு ழந்தவர்க ளெய்தும்*
*அருந்துமமு தாகியத றத்தவரை யண்மும்*
*விருந்துமென லாகியது வீயுமுயிர் மீளும்*
*மருந்துமென லாகியது வாழிமணி யாழி.*

மணியாழி-அந்த அழகிய மோதிரம், பசியால் இருந்து இடர் உழந்த வர்கள் - பசியினால் இருந்து வருந்தினர்கள், எய்தும் - அடைந்த, அருந் தும் அமுது ஆகியது - உண்ணுவதற்கமைந்த அமுதமும் போல் ஆனது; அறத்தவரை அண்மும் - இல்லற நெறியில் வாழ்வாரை வந்தடைந்த, விருந்தும் எனல் ஆகியது - விருந்தாளியை ஒத்தது என்று சொல்லத் தக்கதாயும் அமைந்தது; வீயும் உயிர் மீளும் மருந்தும் எனல் ஆகியது - அழியும் நிலையில் இருந்த உயிர் மீண்டு பிழைத்தற்குக் காரணமான ஔடதம் என்று சொல்லத் தக்கதாயும் ஆகியது; வாழி - அது வாழ்வ தாகுக.

அறத்தவர் - இல்லறத்தவர்: விருந்தாளிகளை உபசரித்து அமுது அளித்து ஆதரிப்பவர் அவரே ஆதலின்; 'இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு' என்ற மையால்; (குறள், 81.) உயிர் மீளும் மருந்துமெனலாயது: 1285.

மருந்து, மரணத்தைப் போக்குவது; இது மிருத சஞ்சீவினி என்னும் ஓடதி.

(பி-ம்.) 1. இருந்தபரி; எய்தி. 2. அறத்தவரை யெய்தும்.
3. வீடுமுயிர் மீளும். 4. ஆகியதவ் வாழி; வள்ளல்மணி யாழி (70)

## பிராட்டி அநுமனைப் பாராட்டி வாழ்த்துதல் 559-561

559. *இத்தகைய ளாகியுயி ரேமுறவி ளங்கும்*
*முத்தநகை யாள்விழியி னாலிமுலை முன்றில்*
*தத்தியுக மென்குதலை தள்ளவுயிர் தந்தாய்*
*உத்தமவெ னாவினைய வாசகமு ரைத்தாள்.*

இத்தகையள் ஆகி - இப்படிப்பட்ட நிலைமையில் இருப்பவளாகி, உயிர் ஏம் உற - உயிர் மகிழ்ச்சி ஓங்க, விளங்கும் - விளங்கிய, முத்த நகையாள் - முத்துக்களை யொத்த பற்களையுடைய பிராட்டி, விழியின் ஆலி முலை முன்றில் தத்தி உக-விழிகளிலிருந்து நீர்த்துளிகள் தனங்களின் முகடுகளில் தாவிக் குதித்துக் கீழே விழ, மென் குதலை தள்ள - மென்மை யான தன் குதலைச் சொற்கள் தடுமாற, (அநுமனை நோக்கி), 'உத்தம - யாவரினும் சிறந்தவனே! உயிர் தந்தாய்-நீ என் உயிரை அளித்தாய்' எனா - என்று, இனைய வாசகம் உரைத்தாள் - பின்வரும் வார்த்தைகளைச் சொல்வாளாயினாள்.

இதுவரை மகிழ்ச்சிக்கு இடமேயின்றி வருந்தியிருந்த பிராட்டிக்கு இனி, தன் தலைவனை இராமபிரானைத் தான் காண இடம் ஏற்பட்டது என்ற மகிழ்ச்சியால் புன் சிரிப்புத் தோன்றினதாதலின், இங்கு, 'முத்த நகையாள்' எனச் சிறப்பித்தது என்க. இங்கு விழிகளிலிருந்து தோன்றி விழுந்த ஆலி, ஆனந்தக் கண்ணீர் என்றும், பேச்சுத் தடுமாற்றங் கொண்டது, மகிழ்ச்சிப் பெருக்கால் என்றும் கொள்ளற்பாலதாம். இனி இத்தகைய உதவியளித்த அநுமனுக்குஇது காறும் நன்றி தெரிவிக்காத தன் குறையை நினைந்தமையால் விழிநீர் பெருகி விழ, மொழி தடுமாற்ற மும் ஏற்பட்டது என்னலும் ஆம்.

(பி-ம்.) 1. இத்தகைய ளாகவுயிர்: ஏமுற விரங்கும்.
3. உயிர்தந்த. (71)

வேறு

560. *மும்மையா முலகந் தந்த முதல்வற்கு முதல்வன் றாதாய்ச்*
*செம்மையா லுயிர்தந் தாய்க்குச்செயலென்னுலெளிய துண்டே*
*அம்மையா யப்ப னாய வத்தனே யருளின் வாழ்வே*
*இம்மையே மறுமை தானு நல்கினை யிசையோ டென்றாள்.*

'மும்மையாம் உலகம் தந்த - சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூவுலகங்களையும் படைத்த, முதல்வற்கு முதல்வன் - ஆதித் தந்தை யாகிய பிரமனுக்கும் தந்தையாய் உள்ள திருமாலாகிய இராமபிரா னுடைய, தூதாய் - தூதனாகி வந்து, செம்மையால்-உன் திறமையினால், உயிர் தந்தாய்க்கு - என் உயிரை அளித்த உனக்கு, என்னால் செயல் எளியது உண்டே - என்னால் செய்யக் கூடிய கைம்மாறு அவ்வளவு எளி தாக என்னிடம் உள்ளதோ? அம்மையாய் அப்பனாய அத்தனே-எனக்குத் தாயாகவும், தந்தையாகவும் கொள்ளத்தக்க என் தெய்வமே! அருளின் வாழ்வே - கருணைக்கு வாழும் இடமாய் உள்ளவனே! இம்மையே - இவ்வுலகத்திலேயே (அல்லது இப் பிறவியிலேயே), மறுமை தானும் - இனி மறு உலகமாகிய மோட்சத்தில் அடையக் கூடிய இன்பத்தையும், இசையோடு - புகழோடு கூட, நல்கினை - எனக்கு நீ அளித்தாய்;' என்றாள் - என்று (பிராட்டி அநுமனுக்கு அன்பு மொழி) கூறினாள்.

உலகந்தந்த முதல்வர்க்கு முதல்வன்; ஒப்பு: 'மூன்றுலகு மீன்றானை முன்னீன்றானை': (அயோத்யா. குகப். 65). இது, பிராட்டி இராமபிரா னைத் திருமாலென்றறிந்து கூறினது. செயலென்னா லெளிய துண்டே: ஒப்பு: 'செய்யாமற் செய்த உதவிக்கு வையகமும் வானகமும் ஆற்றல் அரிது' (குறள். 101). 'இம்மையே மறுமைதானும்' என்பதற்கு இம் மைப் பயனையும் மறுமைப் பயனையும் என்றும் பொருள் கொள்ளலாம்; ஒப்பு. பெருங். 3. 24: 70. இம்மை இன்பம்; இராமபிரானை அடையலாம் என்ற ஓர் உறுதியையும், இறக்கத் துணிந்த தன் உயிரை அளித்து இசையை உண்டாக்கியதையும் குறிக்கும்; மறுமை, தான் செய்து கொள்ள நினைத்த தற்கொலையால் வரும் மறுமைக் கேட்டைத் தவிர்த்து மறுமையிலும் புகழோடு அடையும் கதியைக் குறிக்கும். மும்மை உலகு, என்பதற்கு முக்காலங்களிலும் வாழும் உலகு என்றும், அவன், அவள், அது என்ற முப்பாகுபாடுகளையுடைய உலகு என்றும், இன்னும் வேறு வகைகளிலும் பொருள் கூறுவர். உயிர் தந்தாய் என்றதற்கு, உயிராகிய இராமபிரானை நான் அடையச் செய்தாய் என்றும் பொருள்கொள்ளலாம். அம்மையா யப்பனாய; 'அம்மையே அப்பா' (திருவா. 536.) அத்தன் - பெரியோன் என்ற பொருளில், தெய்வமே என்றனள். 'இசைபட வாழ்த லதுவல்ல தூதிய மில்லை யுயிர்க்கு' (குறள். 231) என்றமையால், 'நல்கினை இசையோடென்றாள்' என்க. இச் செய்யுளில் பிராட்டியின் நன்றியறிவு கூறப்பெற்றது. 'இராம மந்திரம் சொன்னதனால் அத்தன்' என்பது பழைய உரை.

(பி-ம்) 1. முதல்வற்கு முதல்வி முற்றும்; முதல்வர்க்கு முதல்வ முற்றும்: முதல்வற்கு முலக முற்றும்: முதல்வ மற்றும்; முதல்வற்கு முதலி; முதல்வா முற்றுஞ்.
2. செயலென்னா லாவ துண்டே.

3. அத்தனுய வப்பனே: தத்தை யாய வப்பனே.

4. இம்மையே யெழுமை: நல்கினை யுயிரொடு: இசையா மென்ருன். (72)

561. *பாழிய பணைத்தோள் வீர துணையிலேன் பரிவு தீர்த்த*
*வாழிய வள்ள லேயான் மறுவிலா மனத்தே னென்னின்*
*ஊழியோர் பகலா யோதும் யாண்டெலா முலக மேழும்*
*ஏழும்வீ வுற்ற ஞான்று மின்றென விருத்தி யென்ருள்.*

'பாழிய பணை தோள் வீர - வலிமை பொருந்திய பருத்த தோள்களை யுடைய வீரனே! துணையிலேன் பரிவு தீர்த்த வள்ளலே - ஒரு துணையு மற்ற என்னுடைய துன்பத்தைப் போக்கிய வண்மையுடையோனே! யான் மறு இலா மனத்தேன் என்னில் - யான் குற்றமற்ற மனமுடையவ ளானல், ஊழி ஓர் பகலாய் ஓதும் யாண்டு எலாம் - ஓர் ஊழிக் காலம் ஒரு பகலாகக் கணக்கிடக் கூடிய பல ஆண்டுகளும், உலகம் ஏழும் ஏழும் வீவு உற்ற ஞான்றும்-பதினுன்கு உலகங்களும் அழிவுற்ற மகாப் பிரளய காலத்தும், இன்று என வாழிய இருத்தி என்ருள் - இன்றைக்கு நீ இருக்கும் வண்ணமே வாழ்ந்து இருப்பாயாக' (என்று அருள் கொண்டு அநுமனைப் பிராட்டி வாழ்த்தினுள்.)

பாழி - மிடுக்கும் ஆம். பாழிய பணைத்தோள் வீரன்; 'பாழியந்தடந் தோள் வீர மாருதி' (கிட்கிந்தா. மராமரப். 33). மறு - கற்புக்குக் குற்றம். ஊழி; 'செல்லும் உலகங்கள் எல்லாவற்றினும் சென்று உலவித் தான் அழியாமல் நிற்றல் கொள்க; அது காலமென்கிற பொருள்; கழிந்துவளர் கிழமையில் ஒழிந்தவூழி............என்பது மாடலம்;' (தக்க. 337. உரை.); ஊழி வெள்ள வரம்பின......செருமிக்கு;' பதிற். 90. 53:4). 'மனிதர்க்கு ஒரு வருஷம், தேவர்க்கு ஒரு நாள்; அந்தத் தேவர் கால அளவின்படி கணக்கிடப்பட்ட ஆயிரம் சதுர் யுகங்கள்கொண்ட காலம் பிரமதேவர்க்கு ஒரு பகல்; அப் பிரமனுக்கு ஒரு பகல் முடியுங் காலத் தில் ஒரு பிரளயம் உண்டாகும்; அவ்வாறு கணக்கிடப் பெற்ற நாட்களின் தொகை முடிந்து நூறு வருஷங்கள் ஆனுல் மகாப்பிரளயம் உண்டாகும். அந்த மகாப் பிரளயம் உண்டானுலும் நீ அழியாது இருப்பாயாக என்று அநுமனுக்கு அருள் சுரந்து பிராட்டி வரம் அருளினுள். அக்காரணம் பற்றியே அநுமன் என்றும் சிரஞ்சீவியாய் இருந்து அடுத்த பிரம பட்டத்தை அடைய இப்பொழுது தவம் செய்து கொண்டிருக்கிருன்' என்று ஆன்ருேர் கூறிய நூல் துணிபாம். இன்றென - இன்று நீ இருப் பது போல, இளமையோடே மூப்பு, பிணி முதலியன இன்றி என்பதாம். அநுமனுக்கு அழிவில்லா ஆயுள் பட்டம். முன், இந்திரன், சூரியன், வருணன், யமன், குபேரன், சிவபிரான், பிரமன், விசுவகருமன், யாவரும்

அருளியுள்ளார்; உத்தர. அநுமப், 34-40. அஃது இங்குப் பிராட்டி முகத்தாலும், பின் உயுத்த. மருத்துமலைப் 114. இல் இராமபிரானாலும் உறுதி செய்யப் பெற்றுள்ளது என்பது கொள்ளத்தக்கதாம். இங்குப் பிராட்டி 'மறுவிலா மனத்தே னென்னின்' என்பது போல் பின் 'கற்பதனில், தூயே னென்னிற் றெழுகின்றே னெரியே யவனைச் சுடலென்றாள்' (1169) என்றமையும் நோக்கத் தக்கதாகும்.

(பி-ம்.) 1. பாழியம் புயந்து வீர; பாழியாம் பணைத்தோள்.
2. வாழியாய் வள்ளலே.
3. பகலாம் போழ்தும்: பகலாய்ப் பின்னு மழிவிலா துலக மேழும்.
4. ஏழும்வீ யுற்ற போது மின்றெனை: ஆழியுள் ளளவும் நீயே யழிவிலா திருத்தி யென்றாள்: வீவுற்ற வன்றும். (73)

## பிராட்டி இராமபிரானைப் பற்றி வினவுதல்

562. *மீண்டுரை விளம்ப லுற்றாள் விழுமிய குணத்தோய் வீரன்* (1)
*யாண்டையா னிளவ லோடு மெவ்வழி யெய்திற் றுன்னை* (2)
*ஆண்டகை யடியே ன்றன்னை யார்சொல வறிந்தா னென்றாள்* (3)
*தூண்டிரண் டனைய தோளா னுற்றது சொல்ல லுற்றான்.*

மீண்டு உரை விளம்பல் உற்றாள் - மறுபடியும் பிராட்டி அநுமனை நோக்கிச் சில சொல்லத் தொடங்கினளாய், 'விழுமிய குணத்தோய் - சிறந்த நற்குணங்களையுடைய அநுமனே! வீரன் - இரகுவீரனான இராமபிரான், இளவலோடும் யாண்டையான் - இளையபெருமானோடு எவ்விடத்தில் உள்ளான்? எவ்வழி எய்திற்று உன்னை - அவன் எவ்விடத்தில் உன்னை அடைந்தது? ஆண்டகை அடியேன் தன்னை யார் சொல அறிந்தான் - ஆடவரிற் சிறந்த இராமபிரான் அடியாளாகிய என் நிலையை யார் சொல்ல அறிந்தான்?' என்றாள் - என்று கேட்டாள்; தூண் திரண்டனைய தோளான் - தூண் திரண்டுள்ளன போன்ற தோள்களையுடைய அநுமனும், உற்றது சொல்லல் உற்றான் - நிகழ்ந்த செய்திகளைப் பிராட்டிக்குச் சொல்லத் தொடங்கினான்.

பிராட்டி 'அடியேன்' என்று தன்னைச் சொல்லிக் கொண்டது, இராமபிரான்பால் தான் கொண்டுள்ள பணிவைக் குறிப்பதாகும். விழுமிய குணத்தோய் என்றது, முன் 559 இல், 'உத்தம' என்று கூறியதைப் பின்பற்றியது என்க. அநுமன் தோளுக்குத் தூண் உவமை; 'தூணு மென்னுந் தோளுடையானை; 170.

(பி-ம்.) 1. விழுமியோர் குணத்தோய்; விழுத்தவ குணத்தோய்.
2. ஈண்டையரன்; ஈண்டுதான்.
3. அடியேன் தன்மை; அறிந்த தென்றுன்.
4. தூண்டிரண் டனதோ ளானும்; தூண்டிரட் டடந்தோ ளானும்; தூண்டரு தடந்தோ ளானும்; சோற லுற்றுன். (74)

## அநுமன் இராமபிரானது வரலாறு கூறல் 563-82

564. *உழைக்குலத் திசையு மாய வுருவுகொண் டுறுதல் செய்தான்*
*மழைக்கரு நிறத்து மாய வரக்கன்மா ரீச னென்பான்*
*இழைத்தட மார்பத் தண்ண லெய்யப்போய்* வையஞ் சேர்வான்
*அழைத்தவல் லோசை யுன்னை மயக்குதற்* கண்ணல் சொல்லால்.

'மழை கரு நிறத்து மாய அரக்கன் மாரீசன் என்பான் - மேகம் போன்ற கரிய நிறத்தையுடைய மாயையில் வல்ல அரக்கனுன மாரீசன் என்பவன், உழை குலத்து இசையும் மாய உருவு கொண்டு - மான் இனத்துக்குப் பொருந்துவதான மாய உருவத்தை எடுத்துக் கொண்டு, உறுதல் செய்தான் - வந்து சேர்ந்தவனுகி, இழை தட மார்பத்து அண்ணல் எய்யப் போய் வையம் சேர்வான் - அணிகளால் விளங்கும் பெரிய மார்பையுடைய பெரியோனுன இராமபிரான் அம்பினுல் எய்யத் தரையில் விழுபவனுய், அண்ணல் சொல்லால் - இராமபிரானுடைய சொல்லைப் போல, அழைத்த வல் ஓசை-கூப்பிட்ட பேரொலி, உன்னை மயக்குதற்கு - உன்னை மயக்கி வருந்தச் செய்வதற்கேயாகும்.

இதுமுதல் 582 முடிய அநுமன் கூறியவை.

இழைத் தட மார்பு என்றது, அப்பொழுது இராமபிரான் மார்பில் ஆபரணங்கள் இல்லை எனினும் உபசார வழக்காகக் கூறியது என்க; அன்றி இழை என்பதற்குப் பூணூல் என்று பொருள் கொள்ளலும் ஏற்புடைத்தாகும். மாரீசன் அழைத்த வல் ஓசை; 'பகுவாயினுல், அட்ட திக்கினும் மப்புற மும்புக, விட்ட ழைத்தொரு குன்றென வீழ்ந்தனன்' (ஆரண்ய, மாரீசன்வதைப், 247.) இவ்வோசை, 'ஆ சீதே!, ஆ. லக்ஷ்மணு!' என்றதாக வான்மீகம். கூறும்.

(பி-ம்) 1. உழைக்குலத் தீய மாய; குலந் தீய: அனைய மாய; உளபோல் மாய; குலத் தியலு பாய; குலத் திசைந்த மாய: இறுதல் செய்தான்; உறுவல் செய்தான்.
3. அன்ன லேவு பட் டரக்கன் மாள்போ (து): எய்யவே வையஞ் சேர்ந்தான்; எய்யப்போய் வெய்ய சொல்லால்.
4. அழைத்தவவ் வோசை யுன்னை மயக்கு தற் கரக்கன் சொல்ல; அழைத்தபொய்க் குரலி னேசை மயக் கிய துன்னை யம்மா; அழைத்தவப் பொழுதே, (75)

564. *இக்குர லிளவல் கேளா தொழிகென விறைவ னிட்டான்*
*மெய்க்குரற் சாபம் பின்னை விளைந்தது விதியின் மெய்ம்மை*
*பொய்க்குர லின்று பொல்லாப் பொருள்பின்னர் பயக்கு மென்பான்*
*கைக்குரல் வரிவில் லானு மிளையவன் வரவு கண்டான்.*

'இறைவன் - இராமபிரான், இக்குரல் இளவல் கேளாது ஒழிக என- இந்த மாரீசன் கூவிய இந்த ஓசையைத் தம்பியாகிய இலக்குவன் கேட்காமல் போகட்டும் என்று, மெய் குரல் சாபம் இட்டான் - உண்மையான தன் வில்லின் நாண் ஒலியை உண்டாக்கினான்; பின்னை விளைந்தது விதியின் மெய்ம்மை - பிறகு நிகழ்ந்தவை விதியின் உண்மைச் செயலே ஆகும்; பொய்க்குரல் - மாரீசன் கூவிய பொய்யான குரல், இன்று பின்னர் பொல்லாப் பொருள் பயக்கும் என்பான் - இன்றே பிறகு ஒரு விபரீதமான தீங்கை உண்டாக்கும் என்று எண்ணிய, கை குரல் வரி வில்லானும் - கையில் பொருந்திய கட்டமைந்த வில்லையுடைய இராமபிரானும், இளையவன் வரவு கண்டான் - தம்பியாகிய இலக்குவன் தன் எதிரே வருவதைப் பார்த்தான்.

சாபம் - வில். விதியின் மெய்ம்மை; இராமபிரானுக்கோ பிராட்டிக்கோ விளைந்த தீங்குகள் அவர்கள் செய்த வினையின் வழியே வந்தது என்று சொல்வது தகாது; ஆதலால், முன் தேவர்களுக்கும் தண்டகாரணிய முனிவர்களுக்கும் அருள் புரிவதாக அபயமளித்த கடமையை நிறைவேற்ற வந்த செய்கையெனக் கொள்ளற்பாலதாம்; விதி-கடமை: 'விருந்தொடு நிற்றல் விதி, (திணைமாலை. 112) என்பதையும் நோக்குக, அன்றியும், மானிடனாக உள்ள நிலையில் இராமபிரான் விதியின் செயலை ஒப்புக் கொண்டதாகவும் கொள்ளலாம்: 'விதியின் பிழை நீயிதற் கென்னை வெகுண்டது' என்று, முன் (அயோத்யா, நகர்நீங்கு. 133). கூறியதையும் காண்க, கைகுரல் - கையில் பொருந்திய: 'குரலமை யொருகாழ் விரன்முறை சுற்றி' (கலித். 54 : 7-8). இம், மாரீசன் அழைத்த ஓசையை இளவல் கேளாது இருக்க இராமபிரான் தன் வின்னாணொலி எழுப்பியதாக உள்ள செய்தி முதனூலாகிய வான்மீகத்தில் இல்லை; இந் நூலாசிரியரும் இச் செய்தியை முன் ஆரண்ய காண்டத்தில் கூறாமல் இங்குக் கூறியது வழி நூன் மரபை மேற்கொண்டது என்க. இவ்வாறு ஓரிடத்தில் நிகழ்ந்த செய்தியை அங்கே கூறாமல் பிறிதோரிடத்தில் கூறுதல் இந் நூலிற் பல இடங்களில் காணலாம். பொல்லாப் பொருள் பின்னர் பயக்கும்: 'மாள்வதே பொருளாக வந்தானலன், சூழ்வதோர் பொருளுண்டிவன் சொல்லினால், மூள்வதே' (ஆரண்ய. மாரீசன்வதைப். 252). இளையவன் வரவு கண்டது: ஆரண்ய. சடாயுவுயிர்நீத்த, 150.

(பி-ம்) 1, இறைவ னீட்டு.
2. விதியின் வெம்மை; விதியின் மென்மை; விதியின் மேன்மை : மெய்க்குர லன்று பொய்யா மென்றனன் விதியின் கொட்பால்,

3. பொய்க்குர லன்று போலாம்: பொய்க்குர லன்று மெய்யர மென்றுநீ மறுக்கப் போனுன்: பொருள் பின்பு பயக்கும்; பின்பு பொருந்தும்: குரலன்று பொய்யா மென்றனன் பயக்குங் கொட்பால்: அன்று பொய்யா மென்றுநீ மறுகப் போனுன்.

4. கைக்குண வரிவில்; கைக்குறு வரிவில்; கைக்குல வரிவில். (76)

565. *கண்டபி னிளைய வீரன் முகத்தினுற் கருத்தை யோர்ந்த*
*புண்டரி கக்க ணுனு முற்றது புகலக் கேட்டான்*
*வண்டுறை சாலை வந்தா னின்றிரு வடிவு காணுன்*
*உண்யிடு ரிருந்தா னின்ன லுழத்தற்கே வேது வன்ருே.*

'கண்டபின் - இலக்குவனைக் கண்டபிறகு, இளைய வீரன் முகத்தினுல் - தம்பியும் வீரனுமாகிய இலக்குவனுடைய முகக் குறிப்பினுல், கருத்தை ஓர்ந்த புண்டரிகக் கணுனும் - அவன் மனக் கருத்தை உணர்ந்து கொண்ட தாமரை போன்ற கண்களையுடைய இராமபிரானும், உற்றது புகல கேட்டான் - அங்கு நடந்த செய்தியை இலக்குவன் சொல்லக் கேட்டான்; வண்டு உறை சாலை வந்தான்-(பூக்களில்) வண்டுகள் மொய்த்துக் கொண்டிருந்த பன்னசாலை வந்து சேர்ந்தான்; நின் திரு வடிவு காணுன் - அங்கு உன் அழகிய உருவைக் காணுதவனுகி, உயிர் உண்டு இருந்தான் - உயிர் உள்ளது என்னும் நிலையில் மட்டும் இருந்தவனுனன்; இன்னல் உழத்தற்கே ஏது அன்ருே - இவ்வித நிலையடைந்து துன்பத்தில் வருந்துவதற்கே காரணம் அல்லவா?

முகத்தினுல் கருத்தை யோர்தல்; குறள். 708. இராமன் குறிப்பினு லறிபவன்: 1268; 'இங்கிதஜ்ஞாஸ்து கோஸலா;' என்று கூறியபடி கோசல நாட்டு மக்களுக்கே இவ்வாற்றலுண்டு என்பர்; பிராட்டி இலக்குவன்பாற் கொண்ட மன வேறுபாட்டை அவன் முகம் எடுத்துக் காட்ட, அதனை இராமபிரான் உணர்ந்து கொண்டான் என்பதாம். இராமபிரானைப் புண்டரிகக் கண்ணுன் என்பது; 577: கிட்கிந்தா. மராமரப். 35, 36 'புண்டரிகம்:. புண்டரிகமென்பது செந்தாமரைக்குப் பெயரன்ருயின், தந்திரவுத்தியராலும், தொடர் நிலைச் செய்யுளாலுமுணர்க' என்ற தக்கயாகப் பணி 22 இன் உரைக் குறிப்பும் கவனிக்கத்தக்கது. வண் துறை சாலை எனப் பிரித்து, வளமான இடத்தையுடைய பன்னசாலை என்றும், வளமான கோதாவரி நதித்துறையை யடுத்த பன்னசாலை யென்றும் கொள்ளலாம். உண்டு உயிர் இருந்தான் - உயிர் ஒன்று மட்டும் இருந்தது என்னும்படி செயலற்றுப் பெருந்துயரில் மூழ்கியிருந்தான்.

(பி-ம்.) 1. கண்டன னிளைய வீரன் முகத்தினுல் கருத்தை யோர்ந்தப்.

4. உண்டுயி ருழந்தான்; இழந்தான்; ஏதுவானுன்; உழப்புதற் கேது வொன்ருே: (77)

566. அந்நிலை யாய வண்ண லாண்டுநின் றன்னை நின்னைத்
துன்னருங் கானும் யாறு மலைகளுந் தொடர்ந்து நாடி
இன்னுயி ரின்றி யேகு மெந்திரப் படிவ மொப்பான்
தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயுவை வந்து சார்ந்தான்.

'அன்னை-தாயே! அந்நிலை ஆய அண்ணல் - அப்படிப்பட்ட நிலையில் இருந்த இராமபிரான், இன் உயிர் இன்றி ஏகும் எந்திர படிவம் ஒப்பான்- இனிய உயிர் இல்லாது செல்லும் எந்திரப் பாவை போன்றவனாய், ஆண்டு நின்று - அவ்விடத்தினின்று, நின்னை - உன்னை, துன் அரும் கானும் யாறும் மலைகளும் தொடர்ந்து நாடி - அணுகுவதற்கு அரிதான காடு களையும் நதிகளையும் மலைகளையும் வரிசையாகத் தேடிக் கொண்டு, தன் உயிர் புகழ்க்கு விற்ற - தன் உயிரைப் புகழுக்கு விலையாக அளித்த, சடாயுவை வந்து சார்ந்தான் - சடாயு என்னும் கழுகரசன் விழுந்து கிடந்த இடத்தை வந்து அடைந்தான்.

இராமபிரான் தன் உணர்ச்சியை இழந்து அலைந்தான்; அதனால் அவன் எந்திரப் பாவைக்கு ஒப்பிடப்பட்டான் என்க; 'பொய்யுயிரோடு நின்றான்' (525) ஐயும் காண்க. 'புகழெனி னுயிருங் கொடுக்குவர்' (புறநா. 182: 5) என்பதற்கு, இச்சடாயுவே ஏற்ற சான்று; ஆதலால், 'தன்னுயிர் புகழ்க்கு விற்ற சடாயு' என்ன அவர் சிறப்பிக்கப் பெற்றார் என்க. இச் சடாயுவின் பெருமை, சம்பாதி, 'பைந்தா ரெங்க ளிராமன் பத்தினி, செந்தாள் வஞ்சி திறத்தி றந்தவன், மைந்தா ரெம்பி வரம்பில் சீர்த்தியோ, டுய்ந்தா னல்ல துலந்த துண்மையோ' என்று பாராட்டிப் பெரு மகிழ்ச்சி கொண்டதாலும், (கிட்கிந்தா. சம்பாதிப் 44), வீடணன் அபயமென்ற டைந்த காலை, இராமபிரான், 'தெய்வ மரணமென் றுதை பெற்ற தென் வயின் வழக்கன்றோமோ' என்று இச் சடாயுவையே எடுத்துக் காட்டாகக் கொண்டு அவ் வீடணனை ஏற்றுக் கொண்ட தாலும், (உயுத்த. விபீடண. 116), சுக்கிரீவன் இராவணன் ஒருபது முடியையும் தான் ஒருவனே சென்று பற்றி வந்து இராமபிரான் அடியிணைக் கீழிட்ட காலை, 'காட்டிலே கழுகின் வேந்தன் செய்தன காட்டமாட்டேன்' என்று அப் பெருமான் முன், தன் ஆற்றலின் குறையை எடுத்துக் கூறி வருந்து முகத்தால் பாராட்டி யுள்ளமையாலும், (உயுத்த. மகுடபங்கப். 34) நன்கு விளங்கு வன காணலாம். இதனாலன்றோ, திருஞானசம்பந்த நாயனாரும், புள்ளி ருக்கு வேளூர்த் திருபதிகத்தில் 'மெய்சொல்லா விராவணனை மேலோடி யீடழித்துப், பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே' என்றும் பிறவாற்றானும் பாராட்டுவாராயினர்.

(பி-ம்.) 1. வண்ண மாண்டு; வள்ள லாண்டு: ஆண்டகன் றன்னை.
2. துன்னிருங்: கான யாறும்.
3. இன்னுயி ரன்றி; இன்றி யேங்கும்: படிவ மன்னன்; படிவ மேய் வான்;, படிவ மெய்யான். 4. வந்து கண்டான். (78)

567. *வந்தவன் மேனி நோக்கி வானுயர் துயரின் வைகி*
*எந்தைநீ யுற்ற தன்மை யியம்பென விலங்கை வேந்தன்*
*சுந்தரி நின்னைச் செய்த வஞ்சனை சொல்லச் சொல்ல*
*வெந்தன வுலக மென்ன நிமிர்ந்தது சீற்ற வெந்தீ.*

'சுந்தரி - அழகுள்ளவளே! வந்து அவன் மேனி நோக்கி - இராமபிரான் வந்து, அந்தச் சடாயுவின் உடலைப் பார்த்து, வான் உயர் துயரின் வைகி - மிகவும் பெரிய துன்பத்தில் அழுந்தியிருந்து, 'எந்தை நீ உற்ற தன்மை இயம்பு என - எம் தந்தையே! நீ அடைந்த இந் நிலைமையைச் சொல்வாயாக' என்று கேட்க, இலங்கை வேந்தன் நின்னை செய்த வஞ்சனை சொல்ல சொல்ல-இலங்கைக்கு அரசனான இராவணன் உன்னை வஞ்சித்து அபகரித்து வந்த செய்தியைச் சொல்லிக் கொண்டு வரும் அளவிலேயே, சீற்ற வெம் தீ - இராமபிரானுடைய கோபமாகிய கொடிய தீ, உலகம் வெந்தன என்ன - உலகம்யாவும் வெந்து போயின என்று சொல்லும்படி, நிமிர்ந்தது - மேற் கிளம்பி எழுந்தது.

வானுயர் - ஒருபொருட் பன்மொழி. சுந்தரி-எல்லா லக்ஷணங்களும் நிரம்பியவள். பிராட்டியைச்சுந்தரி என்றது; பால. கார்முகப் 57. சீற்றத்துக்குத் தீ; 470; அயோத்யா. நகர்நீங்கு. 115, 126; இராமபிரான் இங்குக் கொண்ட சீற்றம். ஆரண்ய. சடாயு உயிர். 201-207.

(பி-ம்.) 2. எந்தையே: உற்றதென்னை.
3. சுந்தரி நினக்குச் செய்த.
4. வெந்ததெவ் வுலகு மென்ன வெழுந்தது. (79)

568. *சீறியிவ் வுலக மூன்றுந் தீந்துகச் சினவா யம்பால்*
*நூறுவெ னென்று கைவி லுேக்கிய காலை நோக்கி*
*ஊறொரு சிறியோன் செய்ய முனிதியோ வுலகை யுள்ளம்*
*ஆறுதி யென்று தாதை யாற்றலிற் சீற்ற மாறி.*

'சீறி - கோபித்து, இ உலகம் மூன்றும் தீந்து உக - இந்த மூவுலகங்களும் எரிந்து பொடியாய்ச் சிந்த, சினவாய் அம்பால் - கோபத்தை வாயினின்று பொழியும் அம்பினால், நூறுவென் என்று - அழிப்பேன் என்று, கை வில் நோக்கிய காலை - (இராமபிரான்) தன் கையில் உள்ள வில்லைப் பார்த்த போது, தாதை-தந்தையாகிய சடாயு, நோக்கி - அவ்வாறு சினந்ததைப் பார்த்து, 'ஒரு சிறியோன் ஊறு செய்ய-ஓர் அற்பன் உனக்குத் துன்பத்தை உண்டாக்க, (அதன் பொருட்டு), உலகை முனிதியோ - எல்லா உலகங்களையும் நீ கோபித்து அழிக்கின்றாயோ? (ஆதலால்), உள்ளம் ஆறுதி என்று-மனம் ஆறுவாயாக' என்று, ஆற்ற

லின் - (சமாதானம் கூறித்) தணியச் செய்ததினால், சீற்றம் ஆறி-இராம பிரான் தன் கோபத்தைத் தணித்து கொண்டு,

இந்தச் செய்யுளும் அடுத்ததும் சேர்ந்து குளகமாகி முடியும். சடாயுவை இராமலக்ஷ்மணர் தம் தாதை என்றலும், சடாயு அவர்களைத் தன் மைந்தர் என்றலும் சடாயு தயரதன் நண்பன் என்ற முறை பற்றி; 567; ஆரண்ய. சடாயுகாண். 39, 48; சடாயுவுயிர். 140; 182; உயுத்த. விபீடண. 116; அங்கதன்றூது. 5. உள்ளம் ஆறுதி யென்று தாதை ஆற்றலில் சீற்றம் ஆறி என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம்; ஊறு; உறு என்னும் வினையினடியாகப் பிறந்த முதனிலை திரிந்த தொழிற் பெயர். நூறுவென் - இடித்து அழிப்பேன் என்றும் பொருள் கூறலாம்.

(பி-ம்.) 1. சீறிய வுலகும்; சீறிமற் றுலக: தீர்ந்துறச்.
2. காலை வெய்தின்; காலை யெய்தி.
3. உலகை வேகம்.
4. சீற்ற மாற்றி. (80)

569. *எவ்வழி யெய்திற் றன்னா னியாண்டையா னுறையுள் யாது*
*செவ்வியோய் கூறு கென்னச் செப்புவா னுற்ற காலை*
*வெவ்விய விதியின் கொட்பால் வீடினான் கழுகின் வேந்தன்*
*எவ்வியல் வரிவிற் செங்கை யிருவரு மிடரின் வீழ்ந்தார்.*

'செவ்வியோய் - மேன்மைக் குணமுடையோனே! அன்னான் எவ் வழி எய்திற்று - அந்த இராவணன் எவ்விடத்தில் சென்றான்? யாண்டை யான் - அவன் எங்கே உள்ளவன்? உறையுள் யாது - அவன் இருப்பிடம் எது? கூறுகென்ன - சொல்விராக' என்று (இராமபிரான் சடாயுவை நோக்கிக்) கேட்க, கழுகின் வேந்தன் - கழுகுகளுக்கு அரசனான சடாயு, செப்புவான் உற்ற காலை - அதற்கு மறுமொழி சொல்லத் தொடங்கிய போது, வெவ்விய விதியின் கொட்பால் - கொடிய விதியின் சுழற்சியால், வீடினான்-(அச்சடாயு) இறந்து விட்டான்; எவ்வு இயல் வரிவில் செங்கை இருவரும் - அம்புகளை ஏவுதற்கு ஏற்ற கட்டமைந்த வில்லை ஏந்திய சிவந்த கைகளையுடைய இராம லக்ஷ்மணர்களாகிய அவ்விருவரும், இடரின் வீழ்ந்தார் - (அது கண்டு) துன்பத்தில் விழுந்து வருந்தினார்கள்.

எய்துதல் - அடைதல்; 'ஏமம் வைக லெய்திற்றா லுலகே' (குறுந். 1). கொட்பு - சுழற்சி; 25; பால. மிதிலைக்காட்சிப். 13. எவ்வுதல்; கிட்கிந்தா. வாலிவதைப். 116. இராமபிரான் கேட்ட வினாக்களுக்கு விடை பகர்வதன் முன்னே சடாயு உயிர் நீத்தது; ஆரண்ய. சடாயுவுயிர். 214.

(பி-ம்.) 1. எவ்வழி யாகப் போனன் யாண்டவ னுறையு ளெற்கே: ஏகிற் றன்னுன்; ஏகி யுற்ருன்; எய்திற் றென்ருன்.
2. செப்பு கென்னச்; கூறு கென்னுச் செப்புவா னுற்ற காலே.
3. வெவ்வியல்; வவ்விய; வெவ்விய தீயின்: கோட்பால்.
4. எவ்விய வரிவில்; வெவ்விய வரிவில்: வெவ்வியல் வரிவில்;

570. அயர்த்தவ ரரிதிற் றேறி யாண்டொழிற் ருதைக் காண்டுச்
செயத்தகு கடன்கள் யாவுந் தேவரு மருளச் செய்தார்
கயத்தொழி லரக்கன் றன்னே நாடிநாங் காண்டு மென்னுப்
புயற்ருெடு குடுமிக் குன்றுங் கானமுங் கடிது போனுர்.

'அயர்த்தவர் - இவ்வாறு வருந்திச் சோர்ந்த இராம லக்ஷமணர், அரிதில் தேறி-(முடியாத நிலேயில்) ஒருவாறு தேறுதல் அடைந்து, ஆண் தொழில் தாதைத்கு - ஆண்மைத் தொழிலேச் செய்த தந்தையாகிய அச் சடாயுவுக்கு, ஆண்டு செயத்தகு கடன்கள் யாவும் - அவ்விடத்தில் செய்யத்தக்க கடமையாகிய ஈமச் சடங்குகளேயெல்லாம், தேவரும் மருளச் செய்தார் - தேவர்களும் கண்டு வியப்பினுல் மதி மயங்கும்படி செவ்வையாகச் செய்து முடித்தனர்; (பின்னர்) 'கய தொழில் அரக்கன் தன்னே - கீழ்ப்பட்ட செயலேயுடைய அரக்கனை அந்த இராவணனே, நாடி நாம் காண்டும் என்னு - நாம் தேடிக் கண்டு பிடிப்போம்' என்று, புயல் தொடு குடுமி குன்றும் கானமும் கடிது போனுர் - மேக மண்டலத்தைத் தொடும் சிகரங்களேயுடைய மலேகளும் காடுகளும் கடந்து விரைவில் சென்ருர்.

செயத்தகு கடன் - மைந்தர் தந்தைக்குச் செய்யத் தக்க பிதுர்க் கடனை இறுதிச் சடங்குகள். தேவரும் மருள என்றது, பெருமான் கையால் உத்தர கிரியை செய்த பேறு பிறர் எவர்க்கும் கிடைக்காத நிலேயைக் கருதி மருண்டது என்க. ஏனெனில், தேவர்க்கும் கிடைக்காத பேரின்ப மோட்ச நிலேயைச் சடாயு பெற்ருனுதலால்; இதனே 'சீதங் கொண் மலரு ளோனும் தேவரு மென்ப தென்னே, வேதங்கள் காண்கி லாமை வெளிநின்றே மறையும் வீரன், பாதங்கள் கண்ணிற் பார்த்தான் படிவங்கொள் நெடிய பஞ்ச, பூதங்கள் விளியு நாளும் போக்கிலா வுலகம் புக்கான்' என்று முன் விளக்கப் பெற்றுள்ளமை நோக்கற்பாலதாம்; ஆரண்ய. சடாயுவுயிர். 215. கயத் தொழிலரக்கன் என்றது, 'பிறன் கடை நின்ருர் பேதையா ரில்' (குறள். 142) என்றமையால்.

(பி-ம்.) 1. அயயர்த்தனர்: யாண்டெழிற் ருதைக் காண்டு; யாண்டொழி தாதைக் கன்று.
2. கடன்மை; கடன்க ளெல்லாம்: யாவுஞ் செய்தனர் செய்த பின்னர்: தேவரும் புகழச் செய்தே.

3. நாடினர் காண்டும்: என்னப்.
4. கடந்து போனர். (82)

571. *அவ்வழி நின்னைக் காணு தயர்வினு னரிதிற் றேறிச்*
*செவ்வழி நயனஞ் செல்லு நெடுவழி சேறு செய்ய*
*வெவ்வழ றன்னி லுற்ற மெழுகென வழிய மேனி*
*இவ்வழி யினைய பன்னி யறிவழிந் திரங்க லுற்ருன்.*

'அவ்வழி - அவ்விடங்களிலெல்லாம், நின்னைக் காணுது - உன்னைக் காணுமல், அயர்வினன் - வருந்தியவனுன இராமபிரான், அரிதில் தேறி - மிக்க பிரயாசையோடு தேறுதல் அடைந்து, செல்லும் நெடுவழி - தான் செல்லும் நீண்ட வழியை, நயனம் - அவனது கண்கள், செவ்வழி - நன்ருக, சேறு செய்ய - நீரினுல் சேருக்க, வெவ் அழல் தன்னில் உற்ற மெழுகு என - கொடிய நெருப்பில் இடப்பட்ட மெழுகு போல, மேனி அழிய - (வருத்தத்தால் உருகி) உடல் அழிய, இவ்வழி இனைய பன்னி - இந் நிலையில் பின்வரும் இச் சொற்களைக் கூறிப் புலம்பி, அறிவு அழிந்து- அறிவு நிலை கெட்டு, இரங்கல் உற்ருன் - வருந்தினுன்.

செவ்வழி என்பதில் வழி என்பது வினையெச்ச விகுதி: தொல். சொல். 231.

(பி-ம்.) 1. அவ்வழி யரிது காணுர்; அவனைக்காணுர்; தேடிக் காணு: காணு தயர்பவர்; அயர்வினுர்.
2. செவ்விழி நீர தாகும்; செவ்விழி நீர்தான் செல்லு; செவ்வழி நீர தாகுஞ் செல்வழி; செவ்வழி யுளத்தார் பின்னு நெடுநெறி தேடிச் சென்ருர்.
3. வெவ்வழலுற்ற மெல்லென் மெழுகென: வழியு மெய்யன்: மெழுக்கென வுருகு மெய்யன்,
4. அறிவிழந்து: இரங்கி நைந்தான். (83)

வேறு

572. *கன்மத்தை ஞாலத் தவர்யாருள ரேக டந்தார்*
*பொன்மொய்த்த தோளான் மயல்கொண்டு புலன்கள் வேருய்*
*நன்மத்த நாகந் தலைசூடிய நம்ப னேபோல்*
*உன்மத்த னுன் றனையொன்று முணர்ந்தி லாதான்.*

'ஞாலத்தவர் உளர் யாரே கன்மத்தை கடந்தார் - உலகத்தில் உள்ளோர் யாரே முன் செய்த வினைப் பற்றைக் கடந்து சென்றவர்? (ஒருவரும் இல்லை என்றபடி); பொன் மொய்த்த தோளான் - திருமகள் அகலாது தங்கியுள்ள தோள்களையுடைய இராமபிரான், மயல் கொண்டு- புத்தி மயக்கம் கொண்டு, புலன்கள் வேருய் - ஐம்புல நுகர்ச்சியிலும்

வேறு பட்டு நிற்க, தனை ஒன்றும் உணர்ந்திலாதான் - தனது நினைவு சிறிதும் இல்லாதவனாகி, நல் மத்தம் நாகம் தலை சூடிய நம்பனே போல் - நல்ல ஊமத்தம் பூவையும் பாம்பையும் தன் தலையில் சூட்டிக் கொண்டுள்ள கடவுளாகிய சிவபெருமானைப் போல, உன்மத்தன் ஆனான் - மயக்கங் கொண்டவனானான்.

இது முதல் 5 பாடல்களில், இராமபிரான் நிலையும், செயல்களும், கூற்றும் கூறப்பெறும். வினைகடத்தல் அரிது; 'போகுவ தயலே நின்று போற்றினும் போதல் செய்யும்' (உயுத்த. கும்பகருணன் வதைப். 165);, 'ஊழிற் பெரு வலி யாவுள' (குறள். 380);, 'கடப்பா ரெவரே கடுவினையை; 'பண்டை வினைப்பயனைப் பாரிடத்திலார் கடப்பார்; (நள. 12: 52. 92;), 'அவ்வினையை வெல்லுவகை யார் வல்லாரே'; (வி. பா.13 ஆம் போர்ச், 131). பொன் மொய்த்த தோளான் என்பதற்குப் பொற்கவசமணிந்த தோளான் என்றும், பொன்னாலான அணிகள் பொருந்திய தோளான் என்றும் பொருள் கூறுவாரும் உளர்; அவை வனவாசத்திலுள்ள இராமபிரானுக்குச் சிறவா; பொன் - அழகும் ஆம். மத்தம்; பால. அகலிகை, 52. ஊமத்தம் என்பதின் முதற்குறை. நம்பன்-கடவுள்; இங்குச் சிவபெருமான்; 'நம்பன் மாதுலன் வெம்மையை நண்ணினான்;' (பால. ஆற்றுப், 3;) 'நாதா வெனவும் நக்கா வெனவும் நம்பா வென நின்று' (சம்பந்தர். தேவாரம். திருப்பழனம்; 1,) நம்பன் - நமக்குச் சிறந்தவன். உன்மத்தன் - பித்தன்; திருவாசக. பிரார்த்தனைப். 3.

(பி-ம்.) 1. ஞாலத் தவரா ருளரே: யாருளர் கடக்க வல்லார்.
2. பொன்வைத்த.
3. நன்மத்த ராகத் தயல் சூடிய: நாகத் தொடுசூடிய.
4. உன்மத்த னாகித் தனை. (84)

573. *போதாயின போதுன தண்புன லாடல் பொய்யோ*
*சீதாபவ ழகொடி யன்னவட் டேடி யென்கண்*
*நீதாதரு கிற்றிலை யேனெருப் பாதி யென்னாக்*
*கோதாவரி யைச்சினங் கொண்டனன் கொண்ட லொப்பான்.*

'கொண்டல் ஒப்பான் - மேகம் போன்ற இராமபிரான், கோதாவரியை - கோதாவரி என்னும் நதியை (நோக்கி), 'போது ஆயின போது - சூரியோதயமான போது, பவழக்கொடி அன்னவள் சீதா - பவழக் கொடி போன்ற சீதை, உன தண்புனல் ஆடல் பொய்யோ - உன் குளிர்ந்த நீரில் தினந்தோறும் வந்து ஆடியது பொய்யா? அன்னவள் தேடி என் கண் நீ தா - அவ்வாறுள்ள அவளை தேடிக்கொண்டு வந்து நீ என்னிடம் தா; தருகிற்றிலையேல் - தரமாட்டாது போவாயெனில், நெருப்பு

ஆதி-(நீ என் அம்பினால்) நெருப்பாக எரிந்து வரண்டு போவாய்' என்னு - என்று, சினம் கொண்டனன் (அந்நதியை நோக்கிக்) கோபங் கொண்டு கூறினான்,

'பஞ்சவடியில் இருந்த போது நாள்தோறும் சீதை உன்னிடம் காலையில் நீராடினள்; ஆதலால் அவளை நீ நன்கு அறிவாய்: அவளை நீ தேடித்தா' என்றான். போது - பொழுது; சூரியன்: (பிங்களம்); 'போதும் சென்றது' அயோத்யா. வனம்புகு. 19: 'வந்தது மாலை புகுந்தது போது' (வலிவலமும்மணிக். 6). மகளிர் பொழுது விடிந்து (அதாவது சூரியோதயம் ஆன பிறகே) நதி முதலிய நீர் நிலைகளில் முழுக வேண்டும் என்பது நீதி நூல் விதியாதலின், 'போதாயின போதே தண்புனலாடல்' என்றார். வடமொழிச் சொல் சீதா என்பது தமிழில் சீதை எனற்பாலது எதுகை நோக்கி வடமொழியில் உள்ளபடி இயல்பாய் நின்றது. கோதா வரி, கோதாவிரி யெனவும் வழங்கும்: ஆரண்ய. சூர்ப்பணகைப், 1; சடாயுவுயிர். 80. 'சீதா பவளக்கொடி - சீதையான பவளக் கொடியை' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. போதாயின கன்புனல்: போதுதண் பூம்புன லாடல்; போதே பொலிவாகிய கண்புனல் மாற லில்லான்: உனகண் புனல்; தண்புன லாட்டல்.

2. சீதார் பவளக்; சீதாய் பவழக் கொழுந்தன் னதுதேடி; சீதார்ப் பவழக் கொழுந்தன் னது தேடி; சேதார்ப் பவழக் கொழுந்தன் னனைத்தேடி: கொழுந்தன் னதுதேடி.

3. நெருப் பாக்குவ னின்னை யென்னுக். (85)

574. குன்றேகடி தோடினை கோமளக் கொம்ப ரன்ன
என்றேவியைக் காட்டுதி காட்டலை யென்னி னிவ்வம்
பொன்றேயமை யும்முனு டைக்குல முள்ள வெல்லாம்
இன்றேபிள வாவெரி யாக்கரி யாக்க வென்றான்.

'குன்றே - ஏ மலையே! கடிது ஓடினை - விரைவில் ஓடினை; கோமள கொம்பர் அன்ன - அழகிய பூங் கொம்பு போன்ற, என் தேவியை காட்டுதி - என் தேவியாகிய சீதையை என்னிடம் காட்டுவாயாக; காட்டலை என்னில்-(நீ) காட்டாவிட்டால், உன் உடை குலம் உள்ள எல்லாம்- உனது குலத்தைச் சேர்ந்தவையாய் உள்ள மலைகளை எல்லாம், இன்றே பிளவா - இன்றே பிளந்து, எரியா - எரித்து, கரியாக்க - கரியாகச் செய்ய, இ அம்பு ஒன்றே அமையும் - இந்த என் அம்பு ஒன்றே போது மானதாகும்,' என்றான் - என்று இராமபிரான் கோபித்துக் கூறினான்.

இராமபிரான் இடம் விட்டுப் பெயரக் கூடாத நதியையும்' மலையை யும், 'சீதையைத் தேடித் தா' என்றும், 'காட்டுதி' என்றும் கூறியது,

அவன் தன் தேவியைப் பிரிந்த துயரால் ஏற்பட்ட உன்மத்த நிலையால் என்க. கோமளம் - மென்மையும் ஆம். கொம்பர் - ஈற்றுப் போலி. இவ்வாறே பிற நூல்களிலும் துயர் நிலையில் அஃறிணைப் பொருள்களை விளித்தல் காண்க; சீவக. 1519.

(பி-ம்.) 1. கடி தேகினை; கடி தோடின; கடி தோடியென் னுருயிர்க் கொம்பி னன்ன: ஓடினற் கோமளக்; ஓடியென் கோமளக்.
2. யென்னி லவ்வம்(பு)
3. உன்னு டைக்குல முள்ள தெல்லாம்.
4. எரிவாய்க் கரி. (86)

575. பொன்மானுரு வாற்சில மாயை புணர்க்க வன்றோ
என்மானகல் வுற்றன ளிப்பொழு தென்க ணென்னு
நன்மான்களை நோக்கிநுந் நாமமு மாய்ப்பெ னின்றே
வின்மான்கொலை வாளியி னென்று வெகுண்டு நின்றான்.

'பொன் மான் உருவால் - பொன் போன்ற மானின் வடிவத்தைக் கொண்டு, சில மாயை புணர்க்க அன்றோ - சில வஞ்சனைகளைச் செய்த தால் அல்லவா, என் மான் இப்பொழுது என் கண் அகல்வுற்றனள் - என் மான் போன்ற சீதை இப்பொழுது என்னிடமிருந்து பிரிந்து விட்டாள்', என்னு - என்று கூறி, நன் மான்களை நோக்கி - அக்காட்டில் தென்பட்ட அழகிய மான்களைப் பார்த்து, 'வில் மான் கொலை வாளியின் - என் வில்லில் பூட்டிய பெருமை பொருந்தியவையும் கொல்லும் திறம் வாய்ந்தவையுமான அம்பினால், இன்றே - இற்றைக்கே, நும் நாமமும் மாய்ப்பென் - உங்கள் பெயரும் இல்லாதபடி அழிப்பேன்', என்று - என்று சொல்லி, வெகுண்டு நின்றான் - (இராமபிரான்) கோபித்து நின்றான்.

இச் செய்யுள், ஒன்றின் குற்றத்தை அவ்வினத்தோடும் அது சம்பந்த மான மற்றவற்றோடும் சாட்டுதல் ஆகும். இவ்விதம் இராமபிரான் கோபம் கொண்டமை; ஆரண்ய. சடாயுவுயிர். 204-207; கிட்கிந்தா. கிட்கிந்தைப். 6. ஒருவர் செய்த குற்றத்திற்காக அவரினத்தையே அழிக் கத் துணிதல்: அயோத்யா. கைகேசி சூழ்வினைப். 22; நகர்நீங்கு. 122. 'வின்மான்-வில்லுக்குச் சுவாமியான இராமன்' என்பது பழைய உரை.

(பி-ம்.). 1. உருவாய்ச் சில; உருவாய்க் கொடு: மாயை புணர்த்த லாய்மற்.
2. அகல் வுற்றதிப்: இப்பொழு தீதி றென்னு: இப்பொழு தின்க ணென்னு.
3, மாய்ப்ப னின்றென். 4. வின்மாண்: குலவாளியின். (87)

576. *வேறுற்ற மனத்தவ னின்ன விளம்பி நோவ*
*ஆறுற்ற நெஞ்சிற் றனதாருயி ரன்ன தம்பி*
*கூறுற்ற சொல்லென் றுளகோதறு நன்ம ருந்தால்*
*தேறுற் றுயிர்பெற் றியல்புஞ்சில தேற லுற்றான்.*

'வேறு உற்ற மனத்தவன் - இப்படி மாறுபட்ட மனமுள்ள இராம பிரான், இன்ன விளம்பி நோவ - இவை போன்று பல சொல்லி வருந்த, ஆறுற்ற நெஞ்சில் - ஆறிய மனத்தையுடைய, தனது ஆருயிர் அன்ன தம்பி - தன் அரிய உயிர் போன்ற தம்பியான இலக்குவன், கூறு உற்ற - சொல்லிய, சொல் என்று உள - சொற்களென்றுளவாகிய, கோது அறு நல் மருந்தால் - குற்றமற்ற நல்ல ஔடதத்தினால், தேறுற்று - தேறி, உயிர் பெற்று - உயிரை நன்னிலையில் அடையப் பெற்று, (அதாவது முன்னிருந்த உன்மத்தத் தன்மை நீங்கிச் சுய அறிவு பெற்று), இயல்பும் சில தேறல் உற்றான் - (உன்னை அடையத் தக்க) சில முறைகளையும் ஆராயத் தொடங்கினான்.

வேறுற்ற மனம், ஆறுற்ற மனம் என்று இரு மனப் பான்மைகள் இங்குக் குறிக்கப் பெற்றமையும், அவற்றின் நிலைமைகளையும் காண்க. பதற்றமுற்ற நிலையில் தெளிவின்மையும், அஃதில்லாத நிலையில் தெளிவுண்மையும் உள்ள செய்தி இங்குக் காட்டப் பெற்றதென்க. இயல்பு - இயல்வு; உபாயம்; முறை; திவ். இயற். 1: 12. இதன்பின் இரு சுவடிகளில் அடியிற் காணுமாறு ஒரு பாடல் அதிகமாக உள்ளது.

தவந்தந்த நெஞ்சிற் றனதாருயிர்த் தம்பி யோடும்
நவந்தந்த குன்றுங் கொடுங்கானமு நாடி யேகிக்
கவந்தன்றனை தாவி கவர்ந்தொருக் காலு நீங்காச்
சிவந்தந்து மெய்ம்மைச் சபரிக்குத் தீர்ந்து வந்தான்.

(பி-ம்.) 1. இன்னதோர் விம்ம னேவ: விம்ம னேயால்; வெம்மை நோயால்.
2. ஆருயி ராய தம்பி.
3. சொல்லொன் றுள.
4. இயல்வுஞ்சில: இயல்புஞ்சில சொல்ல லுற்றான்; சொல்ல லுற்றேன். (88)

577. *வந்தானிளை யானெடு வானுயர் தேரின் வைகும்*
*நந்தாவிளக் கின்வரு மெங்குல நாதன் வாழும்*
*சந்தார்தடங் குன்றினிற் றன்னுயிர்க் காத லோனும்*
*செந்தாமரைக் கண்ணனு நட்டனர் தேவ ருய்ய.*

'வான் உயர் தேரின் வைகும் - ஆகாயத்தில் சிறந்த தேரிலே இருந்து செல்லும், நந்தா விளக்கின் வரும் - தூண்டாது ஒளி வீசும் விளக்கைப் போல உள்ள (சூரியன்) வழித்தோன்றலான, எம் குல நாதன் வாழும் - எங்கள் குலத்திற்குத் தலைவனான சுக்கிரீவன் வாழ்கின்ற, சந்து ஆர் தடம் குன்றினில் - சந்தன மரங்கள் அடர்ந்ததும், இடமகன்றதுமான (இருசிய மூகம் என்னும்) மலையில், இளையானொடு வந்தான் - இளைய பெருமானான இலக்குவனோடு இராமபிரான் வந்தான்; (அங்கு), செந்தாமரைக் கண்ணனும் தன் உயிர் காதலோனும் - சிவந்த தாமரை இதழ் போன்ற கண்களையுடைய இராமபிரானும் அவர் உயிர் போன்ற அன்புடைய சுக்கிரீவனும், தேவர் உய்ய - தேவர்கள் ஈடேறி நன்னிலை அடையும் பொருட்டு, நட்டனர் - நட்புக் கொண்டார்கள்.

நந்தா விளக்கு - தூண்டாது ஒளிரும் விளக்கு; *பால*. கோலங்காண். 23; *அயோத்யா*. நகர்நீங்கு. 114; கிளைகண்டு. 60. சந்து ஆர் தடம் குன்று - அழகு பொருந்திய பெரிய மலை என்னலும் ஒன்றும். தேவர் துயர் நீக்கவே இராமபிரான் அவதரித்தது ஆதலால் தேவருய்ய எனப் பெற்றது. இச் செய்யுளில் பல செய்திகளைச் சுருக்கிக் கூறும் அழகு அமைந்திருப்பதைக் காண்க. இராமனும் சுக்கிரீவனும் கொண்ட நட்பின் வரலாற்றை இப் படலத்தில் முன் 519 இல் கூறி, அச் செய்திகளை விடுத்துப் பிறவற்றை இங்கே கூறினர்.

(*பி-ம்.*) 1. வானுறு தேரின்.
2. விளக்கந் தருமெங்குல நாதன் வைகும்: வரு நங்குல: வருமென்குல.
3. குன்றிடைச் சார்ந்தபின் கதிரின் சேயும்: தன்னுயிர்க் காதலோடும். **(89)**

578. *உண்டாயது மற்றது முற்று முணர்த்தி யுள்ளம்*
*புண்டானென நோவுற விம்முறு கின்ற போதில்*
*எண்டா னுழந் திட்ட நும் மேந்திழை யாங்கள் காட்டக்*
*கண்டா னுயர் வேதமும் போதமும் காண்கி லாதான்.*

'உயர் வேதமும் போதமும் காண்கிலாதான் - சிறந்த வேதங்களினாலும் (அதனால் அடையக்கூடிய) மெய்ஞ் ஞானத்தாலும் கண்டறிய முடியாத இராமபிரான், உண்டாயதும் - தனக்குண்டான துன்பத்தையும், மற்றதும் - (அதன்பின் நிகழ்ந்த) மற்றவற்றையும், முற்றும் உணர்த்தி - முழுவதும் சொல்லி, உள்ளம் புண் தான் என நோவு உற விம்முறுகின்ற போதில் - மனம் புண்பட்டதென்று சொல்லும்படி துன்பத்தை அடைந்து, விம்மலுற்று வருந்திய போது, எண் தான் உழந்து இட்ட - (நீங்கள்) மனம் வருந்திப் போகட்ட, நும் ஏந்திழை-உம்முடை

அணிகலன்களை, யாங்கள் காட்ட கண்டான் - யாங்கள் அவனுக்கு எடுத்துக் காட்டப் (அவன்) பார்த்தான்.

'எண்டானுழந்திட்ட - தேவரீர் திருவுளத்திலே எண்ணித் திருப்பரிவட்டத்திலே பொதிந்தெறிந்த ஆபரணம்' என்பது *பழைய உரை.*

(பி-ம்.) 1. உண்டாகிய காரிய முற்றும்; உண்டாய நட்பின ருற்றதெல்லா முணர்த்தி யுள்ளம்; முற்றது முற்று.
2. புண்டானுற நோயுற: போழ்தின்.
3. எண்டா னுழைந்திட்டனன்; எண்டா னிழந்திட்டன னேந்திழை; அயர்ந் திட்டநின் னேந்திழை,
4. கண்டானிறை: உயர் போதமும் வேதமும். (90)

579. *தணிகின்றநெஞ் சிற்றொடர் வெம்மையத் தன்மை தன்னை*
*துணிகொண்டிலங் குஞ்சுடர் வேலவன் றூய நின்கண்*
*அணிகண்டுழி யேயமு தந்தெளித் தாலு மாறாப்*
*பிணிகொண்டது பண்டதுண் டாயினும் பேர்ப்ப தன்றால்.*

'துணி கொண்டு இலங்கும் சுடர் வேலவன் - பகைவர் உடலைத் துண்டமாக்கி விளங்கும் ஒளிபொருந்திய வேலையுடைய இராமபிரான், தூய நின் கண் அணி கண்டுழியே - பரிசுத்தமான உனது திருமேனியில் அணிந்திருந்த அணிகலன்களைப் பார்த்தவுடனே, அது பண்டு உண்டாயினும் - துயரமானது முன்பே உன் பிரிவினால் உண்டாகியிருந்தும், தணிகின்ற நெஞ்சில், - (எங்கள் சொற்களால்) தணிந்து வருகின்ற நெஞ்சில், தொடர்-தொடர்கின்ற, அ வெம்மை தன்மை தன்னை-அந்தக் கொடிய துயர உணர்ச்சியை, அமுதம் தெளித்தாலும் ஆறா பிணி கொண்டது - அமுதத்தைத் தெளித்தாலும் நீங்காத (புதிய) பிணிப்பைக் கொண்டு விட்டது; பேர்ப்பது அன்று-(அது) மாற்றுவது இயலாதது. ஆல்: அசை.

துணி கொண்டிலங்குஞ் சுடர் வேல்: சூளா. 1327. இராமபிரான் வேல் கொண்டவன்; பால. தாடகைவதைப். 64, அணிகலம் கண்ட இராமபிரானடைந்த துயர் நிலை: 523; 525; கிட்கிந்தா. கலன்காண். 5-9. 'தன்மயத் தன்மை தன்னை' என்று பாடங்கொண்டு, 'பிரமையாகிய மதியை என்றதும், அதன் நிறம் போன்ற உள்ளக் கறுப்பை யென்றதும் ஆம்' என்பது *பழைய உரை.*

(பி-ம்.) 1. நஞ்சொற் றொடர் தன்மைய தன்றுதன்மை; அன்பிற்றொடர் தன்மைய தன்றுமின்றிற்-(றுணி): தன்மயத் தன்மை தன்னை.
2. தூயை நின்கன்.
3. அணிகண்டனன் கண்டமு தங்குடித் தாலு மாறுப்.
4: பிணிகொண்டனன் பின்னெவ ரோவது போக்க வல்லார்: கொண்டது கண்டதுண் டாயினும். (91)

580. *அயர்வுற்றரி திற்றெளிந் தம்மலைக் கப்பு றத்தோர்*
*உயர்பொற்கிரி யானுளன் வாலியென் றோங்க லொப்பான்*
*துயர்வுற்றவி ராவணன் வாலிடைப் பண்டு தூங்க*
*மயர்வுற்றபொ ருப்பொடு மால்கட லாவி வந்தான்.*

'அயர்வு உற்று - (இராமபிரான்) மனப் பிணியினால் சோர்வடைந்து, அரிதில் தெளிந்து-(பின்பு) மிக்க பிரயாசையால் தெளிவுற்று, அம் மலைக்கு அப்புறத்து-அந்த இருசியமுக மலைக்கு அப்பால் உள்ள, ஓர் உயர்பொன் கிரியான் உளன் - ஓர் உயர்ந்த அழகான மலையையுடையவனாக இருப்பவனும், வாலி என்று ஓங்கல் ஒப்பான் - வாலி என்று (பெயர் கொண்டு), மலை போன்றிருப்பவனும், துயர்வு உற்று - (அவன் வாலில் சிக்கிக் கொண்டதால்) துன்ப முற்றவனாய், அ இராவணன் - அந்த இராவணன் என்பவன், வாலிடை பண்டு தூங்க - தன் வாலின் இடையே கட்டப் பட்டு முன் ஒருகாலத்தில் தொங்கி அசைந்து கொண்டிருக்க, மயர்வு உற்ற பொருப்பொடு மால் கடல் தாவி வந்தான் - (அவன் வேகத்தால்) மயங்கிய மலைகளையும் பெரிய கடல்களையும், தாவிக் கொண்டு வந்தவனு மான,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம்; அரிதில் தெளிந்து, ஆயானை ஓர் அம்பினில் ஆருயிர் வாங்கி, என இயைக்க. பொற்கிரி - பொன்னை யுடைய மலை என்றலும் ஆம். இராவணன் வாலியின் வாலிற் கட்டத் தொங்கி வருந்தியது: 519; உயுத்த. அங்கதன்தூதுப். 24. வாலிடைத் துயருற்ற இராவணன், என இயைத்தலும் ஒன்றும். வாலி தாவிச் சென்ற வேகத்தில் பொருப்பும் கடலும் மயர்வுற்ற என்க. தூங்கல் - தொங்கல்.

(பி-ம்.) 1. அயர்வுற் றெளிநிற்: அப்புறத்தே.
2. கிரியுற்றுளன்: கிரி மேலுளன் வாலிமற் றூழி யுள்ளோன்.
3. அயர்வுற்ற விராவணன்.
4. மயர்வற்ற: வயமுற்ற: வயமுற்றிய பொருப்பொடு: பொருப் பொடு மாழ்கடல். (92)

581. *ஆயானையொ ரம்பினி லாருயிர் வாங்கி யன்பிற்*
*றாயான்வயி னவ்வர சீந்தவன் சுற்று சேனை*
*மேயான்வரு வாயென விட்டனன் மேவு காறும்*
*ஏயானிருந் தானிடை திங்க ளிரண்டி ரண்டும்.*

'ஆயானை - அத்தகைய வாலியை, ஓர் அம்பினில் - (இராமபிரான் தன்) ஓர் அம்பினால், ஆருயிர் வாங்கி - அவனுடைய அரிய உயிரைக்

கவர்ந்து கொன்று, அன்பில் தூயான் வயின் - தன்னிடம் அன்பினுல் நட்புப் பூண்ட பரிசுத்தனுன சுக்கிரீவனிடத்தில், அ அரசு ஈந்து-அந்த வாலியின் வானர அரச பதவியைக் கொடுத்து, அவன்- சுக்கிரீவனே, சுற்று சேனே மேயான்-தன்னேச் சூழ்ந்துள்ள சேனேகள் கூடினவனுய், வருவாய் என விட்டனன் - வருவாயாக என்று சொல்லி அனுப்பிவிட்டு, மேவுகாறும் - அவன் வருமளவும், திங்கள் இரண்டு இரண்டும் - நான்கு மாத காலம், இடை - அந்த இருசியமுக மலேயிடத்து, ஏயான் இருந்தான் - தங்கியிருந்தான்.

ஏயான் - பொருந்தினவனுக இருந்தான்; அதாவது, தங்கியிருந்தான் என்பதாம்; ஏய்தல் - பொருந்துதல், நான்கு மாதங்கள் தங்கியிருந்தது மாரிக் கால மாகிய அக் காலத்தில் வானரப் படைகளேத் திரட்டிப் போர்க்கெழுதல் கூடாமையோடு, தவ நியமத்தில் உள்ள வானப்பிரஸ்தர்களும், துறவிகளும், மாரிக்காலத்தில் ஓரிடம் விட்டு வேறிடங்களுக்குச் செல்லாது சாதுர்மாஸ்ய விரதம் அனுஷ்டிக்க வேண்டும் என்ற முறையை அனுசரித்தும் என்க, மநுதர்ம. 6: 10, இராமபிரான் நான்கு மாதங்கள் காத்திருந்தது: கிட்கிந்தா, அரசியற். 44.

(பி-ம்.) 2. ஈந்துநின் சுற்று; ஈந்துனேச்: சுற்றுறு சேனேசுற்ற: சுற்றுஞ் சேனே.
3: மேயாவரு: மேயாய்வரு வாயென வேவிப்பின் மேவு காறும்: வருவானென.
4. ஏயாவீருந் தான்; ஏயாதிருந் தான்; மதியைந்தினில் மாறியெய்த: இடர் திங்க ளிரண்டு மூன்றும். (93)

582. *பிற்கூடிய சேனேபெ ருந்திசை பின்ன வாக*
*விற்கூடுநு தற்றிரு நின்னிடை மேவ வேவித்*
*தெற்கூடுரு வக்கடி தேவினன் சேர்ந்த தென்ன*
*முற்கூடின கூறினன் காலமோர் மூன்றும் வல்லான்.*

'வில் கூடு நுதல் திரு - வில்லே ஒத்த நெற்றியையுடைய திருவான பிராட்டியே! பின் கூடிய சேனே - (அந்த நான்கு மாதங்களுக்குப்) பிறகு வந்து சேர்ந்த அந்த வானர சேனேகள், பெரும் திசை பின்ன ஆக - பெரிய திசைகள் தமக்குப் பிற்பட்டுப் போக முன்னேறிச் சென்று, நின் இடை மேவ - நீ இருக்கும் இடத்தைத் தேடி அடையுமாறு, ஏவி - அவற்றை அனுப்பி, தெற்கு ஊடு உருவ - (என்னேத்) தெற்குத் திசையை ஊடுருவித்தேட, கடிது ஏவினன் - விரைவாகச் செல்லும்படி (இராமபிரான்) தூண்டியனுப்பினுன்; சேர்ந்தது என்ன - யான் இங்கு வந்து சேர்ந்தது இது' என்று, காலம் ஓர் மூன்றும் வல்லான் - முக்கால நிகழ்ச்சிகளேயும் அறியவல்ல அநுமன், முற்கூடின

கூறினன் - முன்னே நடந்த செய்திகளையெல்லாம் எடுத்து உரைத்தான்.

திசை பின்னதாக மேவ என்றமையால், திசை கடந்தும் அப்பாற் செல்ல என்பதாம். பிராட்டி நுதலுக்கு வில்; அயோத்யா. சித்திரகூடப். 13, 17; ஆரண்ய. மாரீசன்வதை. 74.

(பி-ம்.) 1. பெருந்திசையன்னவாக: திசை மூன்றின் மேலும்.
2. நின்னடி மேவ; மின்னிடை மேவ; நின்னிட மேவ.
3. உருவிற் கடிதேவின னென்னை யென்ன; தெற்கூடெமைக் கடிதேவிடச் சேர்ந்த தென்ன; கடிதேகெனச் சேர்ந்த தென்ன.
4. முற்கூறிய கூறினன். (94)

வேறு

## இராமபிரானது துயர் கேட்ட பிராட்டி நிலை

583. *அன்பின னம்மொழி யுரைக்க வாரியன்*
*வன்பொறை நெஞ்சினன் வருத்த முன்னுவாள்*
*என்புற வுருகின ளிரங்கி யேங்கினள்*
*துன்பமு முவகையுஞ் சுமந்த வுள்ளத்தாள்.*

அன்பினன்- (இராமபிரானிடத்தும் பிராட்டியிடத்தும்) பேரன்பு பூண்ட அநுமன், அம் மொழி உரைக்க - அவ்வாறு நடந்த செய்திகளை எடுத்துக் கூற, வன் பொறை நெஞ்சினன் ஆரியன் - மிக்க பொறுமை கொண்ட மனமுடையவனாகிய இராமபிரானுடைய, வருத்தம் உன்னுவாள் - துன்பத்தை நினைப்பவளும், துன்பமும் உவகையும் சுமந்த உள்ளத்தாள் - வருத்தமும் மகிழ்ச்சியும் மிகுதியாய்த் தாங்கிய மனமுடையவளுமான பிராட்டி, என்பு உற உருகினள் - அவ்வருத்தம் எலும்பிலும் பட்டுக் கரைவுற உருகினாள்; இரங்கி ஏங்கினள் - மனம் இரக்கமுற்று அதனால் ஏக்கமடைந்தாள்.

இராமபிரான் துயர் நிலையைக் கேட்ட பிராட்டியின் மனநிலை இங்குக் கூறப்பெற்றது. வன் பொறை நெஞ்சினன் என்றது, பொறுக்க முடியாத பிராட்டியின் பிரிவாகிய துன்பத்தைப் பொறுத்திருந்த மன உறுதியைக் குறிப்பிட்டதாகும். எவ்வளவு துன்பம் வரினும் அதனால் மனம் மாறாத பொறுமை கொண்டவன் என்றும் ஆம். துன்பம் சுமந்தது: இராமபிரான் தன் பிரிவாற்றாது வருந்திய நிலைக்குத் தான் வருந்தியது; உவகை சுமந்தது; தன்பால் இராமபிரான் கொண்ட அன்பை நினைத்ததால் உண்டான மகிழ்ச்சியால்; இது முரணணி. இனி, என்புற வுருகினள்,

இரங்கி யேங்கினள் என்றதை உவகையால் என்புற உருகினள், துன்பத்தால் இரங்கி யேங்கினள் என எதிர் நிரனிரையணியாக்கிப் பொருள் கொள்ளலும் அமையும். 'வன் பொறை நெஞ்சினன் என்றது, வன் பொறை நெஞ்சினனுகி நம்மைக் கவனியானென்றிருந்தோமே என்றது' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. அன்பினம் முறையிவை யுணர்த்த: அன்பின ஏிவ்வுரை யுணர்ந்த
2. நெஞ்சினின்; உன்னினள்.
3. என்பற: ஏங்கினுள்.
4. துன்பமு மின்பமுஞ்: சுமந்த நெஞ்சினள். (95)

## பிராட்டி அநுமனைக் கடல் கடந்தவாறு வினவுதலும் அவன் விடையும் 584-86

584. *நையுறு சிந்தைய ணயன வாரியின்*
*தொய்யல்வெற் சுழியிடைச் சுரிக்கு மேனியள்*
*ஐயநீ யளப்பரு மளக்கர் நீந்தினை*
*எய்திய தெப்பரி சியம்பு வாயென்ருள்.*

நை உறு சிந்தையள் - (துன்பத்தால்) நைந்து போன மனத்தை யுடையவளும், நயன வாரியின் தொய்யல் - கண்ணீரினுல் உண்டான நீர்ப்பெருக்கின், வெம் சுழியிடை - கொடிய சுழலின் இடையே, சுரிக்கும் மேனியள்-சுழல்கின்ற உடம்பை யுடையவளுமான பிராட்டி, (அநுமனை நோக்கி), - 'ஐய-ஐயனே! நீ அளப்பரும் அளக்கர் நீந்தினை - நீ அளக்க முடியாத பெரிய கடலை நீந்தி, எய்தியது எப்பரிசு - இங்கு வந்து சேர்ந்தது எவ்விதத்தினுல்? இயம்புவாய் என்ருள் - எனக்கு எடுத்துரைப்பாயாக', என்று கேட்டாள்.

தொய்யல் - பெருக்கு; பால. எழுச்சி. 20. தொய்யல் - சேறு எனலும் ஆம்: (பிங்களம்.); சேற்றுச் சுழலில் அகப்பட்டோர் மீண்டு கரையெழுதல் அரிதாதலின், பிராட்டியின் துயருக்கு அஃது உவமிக்கப் பட்டது என்னலும் ஆம். அநுமனைப் பிராட்டி, ஐய என்றது, முன் 560 இல், 'அம்மையாயப்பனுய அத்தனே' என்றமை போல. பரிசு - விதம்; 532.

(பி-ம்.) 1. நைவுறு: சிந்தையி னயன: வாரியள்.
2. தொய்யில்: தொய்யுறு மிடையினள் பின்னுந் தூயதோர்: சுழியிடைச் சுழிக்கு: சுருங்கு மேனியள்.
3. அளக்கர் தாண்டியிங் (கு); 4. இயம்பு வாயென. (96)

585. *சுருங்கிடை யுன்னொரு துணைவன் றூயதாள்*
*ஒருங்குடை யுணர்வினோ ரோய்வின் மாயையின்*
*பெருங்கடல் கடந்திடு மென்னும் பெற்றிபோல்*
*கருங்கடல் கடந்தனென் காலி னாலென்றான்.*

'சுருங்கு இடை-சுருங்கிய இடையையுடைய பிராட்டியே! உன் ஒரு துணைவன் தூய தாள் - உன்னுடைய ஒப்பற்ற துணைவனான இராம பிரானுடைய பரிசுத்தமான பாதங்களிலே, ஒருங்கு உடை உணர்வினோர் - ஒன்றுபட்ட உணர்ச்சியையுடைய மேலோர், ஓய்வின் மாயையின் - ஒழிதல் இல்லாத மாயையாகிய, பெருங்கடல் - பெரிய கடலை, கடந்திடும் என்னும் பெற்றி போல் - கடந்திடுவர் என்னும் தன்மைபோல, காலினால் கரும் கடல் கடந்தனென் - கால்களால் கரிய கடலைத் தாண்டி வந்தேன்;' என்றான் - என்று (அநுமன்) கூறினான்.

சுருங்கிடை கருங்கடல் கடந்தனென் என்று இயைத்து, சுருங்கிய கால அளவில் கருங்கடலைக் கடந்தேன் எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும். கருங்கடல் - பெரிய கடல் என்றலும் ஆம்; கருமை-பெருமை. இறைவன் அடி சார்ந்தாரே மாயைப் பெருங்கடல் கடப்பர் என்பது; 'பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா ரிறைவனடி சேராதார்' குறள். 10. மாயைக் கடல் கடந்து வீடு பெறுதல்; 1186. அநுமன் இராமபிரானைப் பரம்பொருளாகக் கூறியதற்கு இச் செய்யுளும் ஒரு மேற்கோள்.

(பி-ம்.) 1. நின்னுறு துணைவன்; நின்னுயிர்த் துணைவன்.
2. ஒருங்கிடை; ஒருங்குட னுணர்ந்தவ ரொழிவில் மாயையின்: ஓவின் மாயையின்; பொய்யின் மாயையின்.
3. கடந்தனர் பெயரும்; கடந்துவான் பெயரும்: பெற்றியால். (97)

586. *இத்துணைச் சிறியதோ ரெண்ணில் யாக்கையை*
*தத்தினை கடலது தவத்தி னாயதோ*
*சித்தியி னியன்றதோ செப்பு வாயென்றாள்*
*முத்தினு நிலவினு முறுவன் முற்றினாள்.*

முத்தினும் நிலவினும் முறுவல் முற்றினாள் - முத்துக்களையும் நிலாவையும் விட ஒளியில் மேம்பட்ட பற்களையுடைய பிராட்டி, 'இத்துணை சிறியது எண் இல் ஓர் யாக்கையை - இவ்வளவு சிறியதான எண்ணுவதற்கு இடமில்லாத ஒரு சிறு உடலைக் கொண்ட நீ, கடல் தத்தினை - கடலைத் தாண்டினாய்; அது - அச் செய்கை, தவத்தின் ஆய தோ - உன் தவ வலிமையால் ஆனதோ? சித்தியின் இயன்றதோ - மந்திர சித்தியினால் அமைந்ததோ? (அல்லது காய சித்தியினால் நடந்ததோ?)

செப்புவாய் - தெரியச் சொல்லுவாயாக;' என்றாள் - என்று பிராட்டி (அநுமனை நோக்கிக்) கேட்டாள்.

அணிமா, மகிமா, கரிமா, லகிமா, பிராப்தி, ப்ராகாம்யம், ஈசத்துவம், வசித்வம் என்னும் அட்டமாசித்திகளின் சாதனங்களால் எனப் பொருள் கூறுவாரும் உளர்.

(பி-ம்.) 1. இத்துணை சிறியவோ வென்னும் யாக்கையை: ஏணில் யாக்கையை: சிறியதோர் யாக்கை யாற்கடல்.
2. நத்துறு கின்றதுன், 3. சித்தியி னின்றதோ. (98)

## அநுமன் தன் பேருரு எடுத்துக் காட்டுதல் 587-93

587. சுட்டின னின்றனன் றொழுத கையினன்
விட்டுயர் தோளினன் விசும்பின் மேக்குயர்
எட்டரு நெடுமுக டெய்த நீளுமேல்
முட்டுமென் றுருவொடு வளர்ந்த மூர்த்தியான்.

தொழுத கையினன் - கூப்பித் தொழுத கைகளையுடையவனும், விட்டு உயர் தோளினன்-விரிந்து உயர்ந்த தோள்களையுடையவனும், விசும்பின் மேக்கு உயர் - ஆகாயத்தின் மேலே உயர்ந்து, எய்த நீளுமேல் - அடையும்படி அதற்கு மேலும் நீண்டு செல்லுமானல், எட்டு அரு நெடு முகடு முட்டும் என்று - எட்டுவதற்கு அரிய (அண்ட கோளகையின்) மேல் உச்சித் தளம் தலையில் முட்டி (அண்டம் இடியும்) என்று எண்ணி, உருவொடு-அந்தப் பேருருவத்தோடே, வளர்ந்த மூர்த்தியான் - வளர்ந்து கொண்ட திரு உருவத்தை யுடையவனுமான அநுமன், சுட்டினன் நின்றனன் - பிராட்டிக்குத் தன் பேருருவைக் குறிப்பிட்டுக் காட்டினவனாய் நின்றான்.

மூர்த்தி - வடிவம்; 'முற்றுறப் பொலிதரு மூர்த்தி யான்றனை' பால. திருவவதாரப். 72. அநுமன் தான் விரும்பியபடிப் பேருருவும் சிறிய உருவும் எடுக்க வல்லவன்; 71, 72, 229; கிட்கிந்தா. மகேந்திரப். 12. 26-9; உத்தர, அநுமப். 7.

(பி-ம்.) 1. சுட்டினன்; சுட்டி நின் றெழுந்தனன்.
2. விசும்பு மேக்குயர்; விசும்பின் மேலுயர்.
3. நெட்டரு நெடுமுக டெய்த; எய்தி யப்புறம்; எய்தி மீளுமேல்.
4. முட்டுமொன் றுருவொடு; முட்டுமென் னுருவொடு; உருவொடும் வளர்ந்த. (99)

588. செவ்வழிப் பெருமையென் றுரைக்குஞ் செம்மைதான்
வெவ்வழிப் பூதமோ ரைந்தின் மேலதோ
அவ்வழித் தன்றெனி னநுமன் பாலதோ
எவ்வழித் தாகுமென் றெண் ணு மீட்டதே.

செவ்வழி பெருமை என்று உரைக்கும் செம்மை தான் - செம்மையான வழியிலே பெருமை யென்று சொல்லப்படும் சிறப்பானது, வெம் வழி பூதம் ஓர் ஐந்தின் மேலதோ - வலிமையைத் தம்மிடம் கொண்டு இயங்கும் ஐந்து பூதங்களினிடமுள்ளதோ? அ வழித்து அன்று எனில் - அவ்விடத்தில் அல்லாவிடில், அநுமன் பாலதோ - இந்த அநுமன் இடத்தே உள்ளதோ? எ வழித்து ஆகும் - (இவ்விரண்டனுள்) எவ்விடத்தில் உள்ளதாகும்? என்று எண்ணும் ஈட்டது - என்று எண்ணி (ஐயப்படக்கூடிய) பெருமையையுடையதாயிற்று (அநுமனுடைய உருவம்). ஏ: அசை.

பெருமை - பருமை; பெருமை என்பது ஐம்பூதங்களின் தொகுதியினுள் அடங்கியதோ, அன்றெனில் அநுமன் இடத்தே உள்ளதோ என்று ஐயப்படக் கூடியதாய் இருந்தது அநுமனுடைய பேருரு; அதாவது, அப்பேருரு ஐம்பூதங்களின் பெருமையையும் கடந்து நின்றது என்று கூறியவாறும். அநுமன் பேருருவின் பெருமை; 'சேணுயர்பெருமையோர் திறத்த தன்றெனு, நாணுறு முலகெலா மளந்த நாயகன்' 591.

(பி-ம்.) 1. பெருமைகண் டுரைக்கிற் சீரிதாம்.
4. எவ்வழித்தாக்கும்: தாகுமொன்(று):றென்னு மீட்டதே. (100)

589. ஒத்துயர் கனகவான் கிரியி னோங்கிய
மெய்த்துறு மரந்தொறு மின்மி னிக்குலம்
மொய்த்துள வாமென முன்னும் பின்னரும்
தொத்தின தாரகை மயிரின் சுற்றெலாம்.

கனக வான் கிரியின் - பொன்மலையாகிய பெரிய மேருவில், ஓங்கிய மரம் தொறும் - ஓங்கி வளர்ந்த மரங்களிலெல்லாம், மின்மினி குலம் மொய்த்து உளவாம் என - மின்மினிப் பூச்சிகளின் கூட்டங்கள் நெருங்கியுள்ளன போல, ஒத்து உயர் மெய் - (அநுமனின்) ஒருபடித்தாக உயர்ந்துள்ள உடலில், துறு - நெருங்கிய, மயிரின் சுற்று எலாம் - உரோமங்களின் சுற்றுப்புறங்களான இடங்களிலெல்லாம், முன்னும் பின்னரும் - முன்புறத்தும் பின்புறத்தும், தாரகை தொத்தின - நட்சத்திரக் கூட்டங்கள் தொத்தினவையாய் விளங்கின.

கனகவான் கிரி அநுமனுக்கும், அக்கிரியில் வளர்ந்தோங்கிய மரங்கள் உரோம ராசிகளுக்கும், அம்மரங்களைச் சுற்றி விளங்கும் மின்மினிக் கூட்டங்கள் அநுமன் உரோமங்களைச் சூழ்ந்து தொத்தியுள்ளன போல விளங்கிய தாரகைகளுக்கும் உவமை. அநுமன் பொன்மேனியனுத லாலும், பேருருக் கொண்டமையாலும் மேருமலைக்கு உவமை கூறப் பட்டது. அநுமன் பொன்மேனியன்; 73, 1041; மேலும் அநுமனைக் 'காஞ்ச நாத்ரி கமநீய விக்ரஹம்' என வடமொழியில் ஆன்றோர் சிறப்பித் துள்ளமையும் இங்கு நோக்கற்பாலது; ஒப்பு: வி. பா புட்பயாத்திரை; 52. ஒத்துயர் என்பதை, கிரி, மயிர் ஆகியவற்றோடும் கூட்டிப் பொருள் கூறலாம்.

(*பி-ம்.*) 1. குன்றி னோங்கிய. 2. மெத்துறு; மெய்த்தொறு.
3. மொய்த்தன வாமென; மொய்த்துள தாமென. (101)

590. *கண்டல மறிவொடு கடந்த காட்சியன்*
*விண்டல மிருபுடை விளங்கும் மெய்ம்மையக்*
*குண்டல மிரண்டுமக் கோளின் மாச்சுடர்*
*மண்டல மிரண்டொடு மாறு கொண்டவே.*

கண் தலம் ஒடு அறிவு கடந்த காட்சியன்-கண்ணொடு அறிவையும் கடந்த தோற்றத்தனுன அநுமனுடைய, விண் தலம் - ஆகாயத்தி னிடத்து, இருபுடை-இரு புறங்களிலும்,விளங்கும்-விளங்கிய, மெய்ம்மை அ குண்டலம் இரண்டும் - தன்மையுடைய அவனது காதின் குண்டலங் கள் இரண்டும், அ கோளின் - ஆகாயத்தில் விளங்கும் அந்த ஒன்பது கோள்களுள், மா சுடர் மண்டலம் இரண்டு ஒடு - மிக்க ஒளியையுடைய சூரிய சந்திர மண்டலங்கள் இரண்டோடு, மாறு கொண்ட - வேறு பட்டு விளங்கின. ஏ: அசை.

கண்ணுலும் அறிவாலும் அறியமுடியாத தோற்றத்தன், மாறு - பிரதி; ஒப்பு என்னலும் ஆம். சுடர் மண்டலம் இரண்டொடு என்பதற்கு இரு சூரிய மண்டலங்கள் என்று இல் பொருளுவமையாகவும் கொள்ள லாம். பேருருவெடுத்த அநுமனின் குண்டலங்களுக்கு உவமைகள்: கிட்கிந்தா. மராமரப். 35; பிலநீங்கு, 31.

(*பி-ம்.*) 1. கண்டில ரமரருங் கருத்திற் காட்சியன்; அறிவுருக் கடந்த காட்சிய; அறிவொடுங்.
2. விண்டலத் திருபுடை; விண்டலந் திருவொடும் விளங்கும் மெய்யினுன்; விண்டலத் திருவொடும்; விளங்கு மேன்மைய; திருப்புடை விளங்கு மேன்மைய: மெய்ம்மையால்: விளங்கு மேனியான். (102)

591. ஏணில தொருகுரங் கீதென் றெண்ணலா
ஆணியை யநுமனை யமைய நோக்குவான்
சேணுயர் பெருமையோர் திறத்த தன்றெனு
நாணுறு முலகெலா மளந்த நாயகன்.

ஈது ஒரு குரங்கு ஏண் இலது என்று - இது ஒரு எளிய குரங்கு; வலிமையில்லாதது என்று, எண்ணலா - நினைக்கக் கூடாத, ஆணியை அநுமனை - அச்சாணி போன்ற அநுமனை, அமைய நோக்குவான் - நன்றாகப் பார்ப்பவனான, உலகு எலாம் அளந்த நாயகன் - உலகங்களை யெல்லாம் அளந்தவனான திருமால், சேண் உயர் பெருமை - மிக உயர்வான பெருமை, ஓர் திறத்தது அன்று எனு - ஒரு இடத்தே மட்டும் உள்ளது அன்று என்று, நாண் உறும் - வெட்கமுறுவான்.

ஏண்-வலிமை: அயோத்யா. கைகேசிசூழ். 46. ஆணி-மாற்றுயர்ந்த பொன் ஆணியும் ஆம். அநுமனுக்கு ஆணி; 28; கிட்கிந்தா. மராமரப். 21; சேண் உயர் - மிக்க உயர்ந்த; ஒருபொருட் பன்மொழி. அநுமனின் பெருமை; 588. உலகெலாமளந்த நாயகன் நாணுறும்: 'கண்டிலனுலக மூன்றுங் காலினுற் கடந்து கொண்ட, புண்டரீகக்கணுழிப் புரவலன் பொலன்கொள் சோதி, குண்டலவதனம்' கிட்கிந்தா. மராமரப். 35. உலகெலாமளந்த நாயகன் என்பதற்குச் சூரியன் என்றும் பொருள் கொள்வர்.

(பி-ம்.) 1. ஏணில வொரு: ஏணி லாவொரு: குரங் கிவனொன் றெண்ணிய: ஈதென் றுன்னிய: எண்ணினுல்; எண்ணரிலா; எண்ணலாள்.
2. வாணுத லநுமனை வரைந்து நோக்கியே; நோக்குவாள்.
3. பெருமையோர் திறத்தின் றேயெனு: சேணுய ரிவனுருத் திறத்தி னுலென்றுள். (103)

592. எண்டிசை மருங்கினு முலகம் யாவினும்
தண்டலி லுயிரெலாந் தன்னை நோக்கின
அண்டமென் றதினுறை யமரர் யாரையும்
கண்டனன் றானுந்தன் கமலக் கண்களால்.

எண் திசை மருங்கினும் - எட்டுத் திக்குக்களின் இடத்தும், உலகம் யாவினும் - எல்லா உலகங்களிலும், தண்டல் இல் உயிர் எலாம் - தடையுறாத உயிர்கள் யாவும், தன்னை நோக்கின - (அநுமனாகிய) அவனைப் பார்த்தன; தானும் - அவ்வநுமனும், தன் கமலக் கண்களால் - தனது தாமரை மலர் போன்ற கண்களினால், அண்டம் என்றதின் உறை - வான அண்டத்தில் வாழும், அமரர் யாரையும் - தேவர்கள் எல்லாரையும், கண்டனன் - நேரில் பார்த்தான்.

அநுமன் விசுவரூபம் எட்டுத் திக்குக்களில் உள்ள உலகங்கள் எல்லாவற்றிலும் உள்ள யாவையும் தடையின்றிப் பார்க்கும்படியும், அண்டங்களிலுள்ள அமரர்களையும் அவன் காணும்படியும் விளங்கியது. இதனால் அநுமனது பேருருவின் பெருமை விளங்குவதாகும். மருங்கு - இடம். தண்டல் இல்-தடைபடுதல் இல்லாத; 'தண்டலில் தவஞ் செய்வோர்' (ஆரண்ய. மாரீசன்வதைப். 162).

(பி-ம்.) 1. உலகம் யாவையும். 2. தண்டலி லுலகெலாம்: நோக்கிய (104)

593. *எழுந்துயர் நெடுந்தகை யிரண்டு பாதமும்*
*அழுந்துற வழுத்தலி னிலங்கை யாழ்கடல்*
*விழுந்தது நிலமிசை விரிந்த வெண்டிரை*
*தழைத்தன புரண்டன மீனந் தாமெலாம்.*

எழுந்து உயர் நெடும் தகை - இவ்வாறு மேலே ஓங்கி வளர்ந்த பெரியோனாகிய அநுமனது, இரண்டு பாதமும் - இரு பாதங்களும், அழுந்துற அழுத்தலில் - கீழே அழுந்தும்படி அழுத்தினபடியால், இலங்கை - இலங்கைத் தீவு, ஆழ் கடல் விழுந்தது - ஆழ்ந்த கடல் நீரில் அழுந்தியது: வெண் திரை நில மிசை விரிந்த - வெண்மையான அலைகள் பூமியின் மேலே படர்ந்து பெருகினவாகி, தழைந்தன - எங்கும் நிறைந்தன; மீனம் தாமெலாம் புரண்டன - மீன்கள் எல்லாம் அந்த அலைகளின் நீரில் புரண்டு ஓடின.

இலங்கைத் தீவைச் சூழ்ந்த கடல் பொங்கி யெழுந்ததால் இலங்கை மூழ்கியது போலாயிற்று என்பது பொருள்.

(பி-ம்.) 1. நெடுந்திசை; நெடுவரை:
2. அழுந்துற வழுந்தலில்; மிதித்தலின்: இலங்கை யார்கலி.
3. எழுந்தது நிலமிசை: விரிந்து.
4. விழுந்தன புரண்டன; தழங்கின புரண்டன; தவழ்ந்தன புரண்டன; தவழ்ந்தன வழிந்தன; கிளர்ந்தன புரண்டமீன் கிளைகள் யாவையும். (105)

## 'இவ்வுரு அடக்குவாய்' என்று பிராட்டி வேண்டுதல் 594-95

594. *வஞ்சியம் மருங்குலம் மறுவில் கற்பினள்*
*கஞ்சமும் புரைவன கழலுங் கண்டிலாள்*
*துஞ்சின ரரக்கரென் றுவக்குஞ் சூழ்ச்சியாள்*
*அஞ்சினெ னிவ்வுரு வடக்கு வாயென்றாள்.*

வஞ்சி அம் மருங்குல் - வஞ்சிக் கொடி போன்ற அழகிய இடையையுடைய, அ மறு இல் கற்பினள்-அந்தக் குற்றமற்ற கற்புடைய பிராட்டி,

கஞ்சமும் புரைவன - செந்தாமரை மலர்களையும் ஒத்திருப்பனவான, கழலும் கண்டிலாள் - அநுமனுடைய அடிகளைக் கூடக் கண்டாளில்லை; அரக்கர் துஞ்சினர் என்று உவக்கும் சூழ்ச்சியாள் - அரக்கர்கள் இனி இறந்தவர் என்று எண்ணி மகிழ்கின்ற யோசனை யுடையவளாய், (அநுமனை நோக்கி), 'அஞ்சினென்-காண யான் அச்சமுறுகின்றேன்; இவ்வுரு அடக்குவாய் - இந்த உன் பேருருவை அடக்கி முன்போல இருப்பாய்' என்றுள் - என்று கேட்டுக் கொண்டாள்.

வஞ்சி - கொடி என்ற பொருளிலேயே வரும்; மறுவில் கற்பினுள்; ஒப்பு: 369; 561. 1169; ஆரண்ய. சடாயுஉயிர். 39; உயுத்த மீட்சிப். 84. சூழ்ச்சி - கருத்து.

(பி-ம்.) 1. வஞ்சியாம் மருங்குலாள்; வஞ்சிநுண் மருங்குறு மறுவில்.
2. கஞ்சமும் புணர்வன; பொருவன; புரையவன்: கஞ்சமென் மலர்புரை கழலுங் கண்டிலள்.
3. உணரும் சூழ்ச்சியாள்: துஞ்சுசுறு மரக்கனு மென்னுஞ் சூழ்ச்சியாள்.
4. அடங்குவா யென்றுள்.
சில சுவடிகளில் 3-4. அடிகள் மாறியுள்ளன. (106)

595. *முழுவது மிவ்வுருக் காண முற்றிய*
*குழுவில துலகினிக் குறுகு வாயென்றுள்*
*எழுவினு மெழிலிலங் கிராமன் றோள்களைத்*
*தழுவின ளாமெனத் தளிர்க்குஞ் சிந்தையாள்.*

எழுவினும் எழில் இலங்கு - திரண்ட தூணினும் அழகு விளங்கும், இராமன் தோள்களை - இராமபிரானுடைய தோள்களை, தழுவினள் ஆம் என - தழுவிக் கொண்டவள் போல, தளிர்க்கும் சிந்தையாள் - மகிழ்ச்சி தழைத்தோங்கிய மனத்தையுடைய பிராட்டி, (அநுமனை நோக்கி), 'உலகு - இந்த உலகம், இவ்வுரு முழுவதும் காண - இந்த உன் பேருரு முழுவதையும் பார்ப்பதற்கு, முற்றிய குழு இலது - வலிமை மிகுந்த சாமர்த்தியம் உடையதன்று; (ஆதலால்), இனி குறுகுவாய் - இனி நீ முன்னிருந்த உருவிற் குறுகியிருப்பாயாக', என்றுள் - என்று கேட்டுக் கொண்டாள்.

உலகு - உலகில் உள்ள பிராணிகள். தோள்களுக்கு எழு; 562. அயோத்யா. குகப். 33; ஆரண்ய. கரன்வதைப்; 19; அயோமுகிப். 85. அநுமன் பெருமையை நன்கு உணர்ந்தமையால் இனி இராமபிரான் தன்னை வந்து ஏற்றுக் கொள்வான் என்ற துணிவு மேலீட்டின் பிராட்டி, இராமன் தோள்களைத் தழுவினளாமெனத் தளிர்க்குஞ் சிந்தையளானுள் என்க. குழு - கூட்டம் என்னலும் ஆம்.

(பி-ம்.) 1. முழுவது நின்னுருக்; முழுவது முன்னுருக்.
2. குழுவின துலகினி; குழுவில ருலகிடைக்.
3. எழில்விளங் கிராமன்; விளக் கிராமன்; திரள்புயத் திராமன்.
4. தளிர்க்குந் தன்மையாள். (107)

## அநுமன் பேருரு ஒடுங்குதலும், பிராட்டி அவனைப் பாராட்டுதலும் 596-601

596. *ஆண்டகை யநுமனு மருள தாமெனு*
*மீண்டனன் விசும்பெனும் பதத்தின் மீச்செல்வான்*
*காண்டலுக் கெளியதோ ருருவங் காட்டினுன்*
*தூண்டரு விளக்கனு ளினைய சொல்லினுள்.*

விசும்பு எனும் பதத்தின் மீ செல்வான் - ஆகாயம் என்னும் இடத்தினும் மேலாக வளர்ந்து செல்பவனுன, ஆண்டகை அநுமனும் - ஆடவரிற் சிறந்த அநுமனும், 'அருள் அதாம் என - உமது அருளின்படியே ஆகட்டும்' என்று, மீண்டனன் - மீண்டு ஒடுங்கினவனுகி, காண்டலுக்கு எளியது ஓர் உருவம் காட்டினன் - பார்ப்பதற்கு எளிதான ஒரு (தன் பழைய) உருவத்தைக் காட்டி நின்றுன்; (அதுகண்டு), தூண்டு அரு விளக்கு அனுள் - தூண்டுதல் இல்லாத விளக்கைப் போன்ற பிராட்டி, இனைய சொல்லினுள் - பின்வருமாறு (அநுமனை நோக்கிச்) சொல்வாளாயினள்:

தூண்டரு விளக்கு - நந்தா விளக்கு; 577. பதம் - இடம்; 'பதங்களேழுமதன் விடுகவடு தந்த' (தக்க. 147). காண்டலுக் கெளியதோர் உருவங் காட்டல், திருமுருகு. 290. சிலப். 9. 33-36.

(பி-ம்.) 1. அநுமனு மனைய தாமென.
2. பதத்தை மீச்செல்வான்; பதத்தை விட்டுநேர்.
3. காண்டலுக் குரியதோ ருருவு; அரியதோ ருருக்க ரந்தபின்.
4. தூண்டலில்; விளக்கன்னுள்; இனிய சொல்லினுள். (108)

வேறு

597. *இடந்தா யுலகை மலையோடு*
*பிடித்தாய் விசும்பை யிவைசுமக்கும்*
*படந்தா ழரவை யொருகரத்தாற்*
*பறித்தா யெனினும் பயனின்ருல்*
*நடந்தா யிடையே யென்ருலு*
*நாணு நினக்கு நளிகடலைக்*
*கடந்தா யென்ரு லென்னுகுங்*
*காற்ரு மனைய கடுமையாய்.*

'காற்று ஆம் அனைய கடுமையாய் - காற்றே ஒப்பாகும் என்று சொல்லத் தக்க வேகமுள்ளவனே! 'மலையோடும் உலகை இடந்தாய் - மலைகளோடு உலகத்தை நீ பெயர்த்தெடுத்தாய்; விசும்பை இடித்தாய் - ஆகாயத்தை இடித்துப் பிளந்தெறிந்தாய்; இவை சுமக்கும் படம் தாழ் அரவை ஒரு கரத்தால் பறித்தாய் - இவை முதலிய வற்றைத் தாங்கும் படம் தழைந்துள்ள பாம்பாகிய ஆதிசேடனை உன் ஒரு கரத்தினால் பறித்து இழுத்து வெளியே எறிந்தாய்;' எனினும் - என்று சொன்னாலும், பயன் இன்று - (அது உன் திறமைக்குப்) பயனுவதோர் சிறப்பாகாது; இடையே நடந்தாய் என்றாலும் - இக் கடலினிடையே நீ நடந்து வந்தாய் என்று சொன்னாலும், நினக்கு நாண் ஆம் - உன் பெருமைக்கு அது வெட்கத்தை உண்டாக்கும்; (அவ்வாறாக), நளி கடலை - பெரிய இந்தக் கடலை, கடந்தாய் என்றால் - நீ (பிரயாசையுடன் தாண்டி வந்தாய்) என்று சொன்னால், என் ஆகும் - அதனால் உனக்கு என்ன பெருமை உண்டாகும்? (அது உன் ஆற்றலுக்குச் சிறுமையே ஆகும் என்றபடி).

இடத்தல் - தோண்டிப் பெயர்த்தெடுத்தல்; 'படைத் திடந்துண்டு மிழ்ந்த பார்' (முதல் திருவந்தாதி,2). அநுமன் காற்றுக்கு நேரான வேக முடையவன்; 29. 'சிறியதோர் எண்ணில் யாக்கையை, தத்தினை கடலது தவத்தி னுயதோ' (586) என்று தான் வினவியதைக் குறித்து இவ்வாறு பிராட்டி கூறினாள் என்க. இது முதல் 5 செய்யுட்கள் பிராட்டி அநும னைப் புகழ்தலாம். என்னுகும் என்பதால், 'இவ்வளவு ஆற்றல் நீ படைத் திருக்கப் பகைவருலகம் எவ்வாறு ஆகும்?' என்பது போன்ற பிறபொரு ளும் தொனித்தல் காண்க.

(*பி-ம்.*) 1. இடந்தாய் மலையை யுலகோடும்: மலையேழுமெடுத்தாய்; பிடித்தாய்; எடுத்தாய்.
2. அரவைக்கரதலத்தாற்: அரிதன்றால்; பழுதன்றால்; பயமின்றாம்.
3. நடந்தாயிறையே: நாணுநிற்கும்: நனிகடலை; நளிர்கடலை.
4. கடந்தாயென்றல்: என்றாலென்றாலும்; காற்றே மன்ன; காற்று மென்னும். (109)

598. *ஆழி நெடுங்கை யாண்டகைத னருளும் புகழு மழிவின்றி*
*ஊழி பலவு நிலைநிறுத்தற் கொருவ னீயே யுளையானாய்*
*பாழி நெடுந்தோள் வீராநின் பெருமைக் கேற்பப் பகையிலங்கை*
*ஏழு கடற்கு மப்புறத்த தாகா திருந்த திழிவன்றே.*

'பாழி நெடும் தோள் வீரா- பருத்து நீண்ட தோள்களையுடைய வீரனான அநுமனே! ஆழி நெடும் கை ஆண்டகைதன் - சக்கரத்தை ஏந்தும் நீண்ட கையையுடைய திருமாலாகிய இராமபிரானின், அரு ளும் புகழும் அழிவு இன்றி - கருணையும் கீர்த்தியும் அழியாமல், ஊழி

பலவும் நிலை நிறுத்தற்கு - பல ஊழிக் காலமும் நிலைபெறச் செய்வதற்கு, நீ ஒருவனே உளை ஆனாய் - நீ ஒருவனே உள்ளவனாக ஏற்பட்டுள்ளாய்; நின் பெருமைக்கு ஏற்ப - உன்னுடைய பெரும்புகழுக்குத் தக்கவாறு, பகை இலங்கை - (நம்) பகைவர்களான இராவணன் முதலிய அரக்கர் வாழும் இந்த இலங்கை நகரம், ஏழு கடற்கும் அப்புறத்தது - ஏழு கடல்களுக்கும் அப்பாலுள்ளதாக, ஆகாது இருந்தது இழிவு அன்றோ - இராமல் (இந்த ஒரு கடலினிடையிலேயே) இருந்தது (உன் பெருமைக்கு) ஒரு குறைவு அன்றோ?

அநுமனுடைய வீரமே தனக்கும், தேவர்கள் இருடிகள் முதலிய நல்லோர்களுக்கும், அறத்திற்கும், சிறப்பு அளிப்பதால், அதனைப் பாராட்டு முகமாய் அவனைப் பிராட்டி, 'வீரா' என்றே விளித்துப் பெருமைப்படுத்தினாள் என்க. இது போலப் பல இடங்களிலும் தொடர்ந்து பிராட்டி அநுமனை 'வீரா' என்றே அழைப்பது நோக்கத் தக்கதாம்; 516, 561.

(பி-ம்.) 2. நீயே உளனானால். 3. ஏற்ற பகை.
4. அப்புறத்த தாகா தொழிந்த திகழ்வன்றோ; அப்புறத்தின ரழிந்த தினியென்றாள். (110)

599. *அறிவு மீதே யுருவீதே யாற்ற லீதே யைம்புலத்தின்*
*செறிவு மீதே செயலீதே தேற்ற மீதே தேற்றத்தின்*
*நெறியு மீதே நினைவீதே நீதி யீதே நினக்கென்றால்*
*வெறிய ரன்றே குணங்களால் விரிஞ்சன் முதலா மேலானார்.*

'நினக்கு - உனக்குள்ள, அறிவும் - அறிவும், உருவும்-தோற்றமும், ஆற்றல் - வலிமையும், ஐம்புலத்தின் செறிவும் - ஐந்து இந்திரியங்களின் அடக்கமும், செயலும் - செய்யும் தொழிலும், தேற்றம் - மனத்தெளிவும், தேற்றத்தின் நெறியும் - அத்தெளிவின் வழியாகிய பயனும், நினைவும் - எண்ணமும், நீதி - முறைமையும், ஈதே என்றால் - இதுவே என்று சொன்னால், விரிஞ்சன் முதலாம் மேலானார் - பிரமன் முதலிய மேலோரான தேவர்கள், குணங்களால் வெறியர் அன்றே - தம் குணங்களால் வெறுமையுடையவரல்லரா?

ஈதே என்பதை, அறிவு முதல் நீதி வரை ஒவ்வொன்றிலும் கூட்டி உரை செய்க. அறிவு முதலாக நீதி இறுதியாக உள்ள சிறப்புக்களெல்லாம் உன்னிடமே சிறப்பாக அமைந்துள்ளனவென்றால், நீயே பிரமாதி தேவரினும் மேலானவன் என்று பிராட்டி அநுமனைப் புகழ்ந்து பெரிதும் பாராட்டினாள் என்க. உத்தம ஆடவர்க்குரிய உயர்ந்த குணங்கள் இச் செய்யுளில் கூறப்பெற்றுள்ளமை காண்க. ஈதே என்பதற்கு உன்னிடமுள்ள இதுவே சிறந்ததென்றும் பொருள் கொள்ளலாம்; இவ்வாறு

எல்லா நல்லியல்புகளுள் ஒத்துப் பொருந்தின உத்தம புருஷன் அநுமன் என்க. வெறுமை - இலாமை.

(பி-ம்.) 1. ஈதே யரும்புலத்தின். 2. தோற்றத்தின்.
3. நிலே யீதே நினேவு மீதே நினக்கென்ருல்.
4. வெறிய ரன்ரே: குமாங்களாம் விரிஞ்ச னன்ன மேலானேர்: முதலா மேலவர்கள்; முதலா மேலோரே. (111)

600 மின்னே ரெயிற்று வல்லரக்கர் வீக்க நோக்கி வீரற்குப்
பின்னே பிறந்தா னல்லாதோர் துணையி லாத பிழைநோக்கி
உன்னு நின்றே னுடைகின்றே னெழிந்தே னெல்லா முயிருயிர்த்தேன்
என்னே நிருத ரென்னுவார் நீயே யெங்கோன் றுணையானல்.

'மின் நேர் எயிற்று வல் அரக்கர் - மின்னலே யொத்து (ஒளி வீசும்) பற்களேயுடைய வலிய அரக்கர்களுடைய, வீக்கம் நோக்கி - பெருக்கத்தைப் பார்த்து, வீரற்கு - இரகுவீரனை இராமபிரானுக்கு, பின்னே பிறந்தான் அல்லாது-பின்னே தம்பியாகப் பிறந்த இலக்குவனே அல்லாது, ஓர் துணே இலாத பிழை நோக்கி - வேருேர் துணே இல்லாத குறையைப் பார்த்து, உன்னு நின்றேன் உடைகின்றேன் - ஆலோசனே செய்து வருந்துகின்ற யான், எல்லாம் ஒழிந்தேன் - (இப்பொழுது) எல்லாச் சந்தேகங்களும் நீங்கினவளானேன்; உயிர் உயிர்த்தேன் - மூச்சு விட்டுக் களேப்புத் தீர்ந்தவளானேன்; நீயே என் கோன் துணே ஆனல் - நீயே என் தலேவனுன இராமபிரானுடைய துணேவன் ஆனுய் என்ருல், நிருதர் என் ஆவார் - இனி அரக்கர்கள் என்ன தன்மையை அடைவார்? (அழிவர்); என்னே - என்ன ஆச்சரியம்!

வீக்கம் - பெருக்கு. இராமபிரானுக்குப் பின்னே பிறந்தார் பரதன், இலக்குவன், சத்துருக்கன் என மூவர் உள்ளாரெனினும் பெரும்பாலும் இராமபிரானுடன் தொடர்ந்து பணி புரிந்து வந்த இலக்குவனே பின்னே பிறந்தவன் எனச் சிறப்பிக்கப் பெறுவான்; அயோத்யா. நகர்நீங்கு. 192; குகப். 68; பெருங் 3: 24: 90-92: இலக்குவன் ஒருவனே இராமபிரானுக்குத் துணேவனுய் இருந்த குறை அநுமனுல் நீங்கப் பெற்றது என்பது பிராட்டியின் துணிவு. உயிர் உயிர்த்தல்; ஓர் அரிய காரியம் நிறைவேறிய பொழுது அதுகாறும் தான் அடைந்திருந்த சிரமம் நீங்கியதற்கு அறிகுறியாய்ப் பெருமூச்சு விடுதல்.

(பி-ம்.) 1. மின்னு ரெயிற்று; வல்லாக்கன்: அரக்கர் மிகுதி கண்டென் வீரனுக்குப்.
2. பின்னே னெழிந்து துணேயில்லாப் பெற்றி நோக்கிப் பேதுற்றே.

3. நின்றே யுடைகின்றேன்: உன்னு வென்ற னுளத்தயர்வ தொழிந்தே னெல்லா முயிருயிர்த்தேன்: ஒழிந்தேனையம்.
4. இவனே யெங்கோன் றுணையென்றால். (112)

601. *மாண்டே னெனினும் பழுதன்றே யின்றே மாயாச் சிறைநின்று*
*மீண்டே னென்னை யொறுத்தார் தங்* குலங்க ளோடும் வேரறுத்தேன்
*பூண்டே னெங்கோன் பொலங்கழலும் புகழே* யன்றிப் புன்பழியும்
*தீண்டே னென்று மனமகிழ்ந்தா டிருவின்* கழுத்துத் திருவன்னாள்.

திருவின் கழுத்து திரு அன்னாள் - திருமகளின் கழுத்தில் விளங்கும் திருமங்கல்யம் போன்ற பிராட்டி, 'மாண்டேன் எனினும் பழுது அன்றே - இனி யான் இறந்து போனாலும் தவறு அன்று; (ஏனெனில்), இன்றே மாயா சிறை நின்று மீண்டேன் - இன்றைக்கே யான் நீங்கல் இல்லாத இச் சிறையினின்றும் மீண்டேன் ஆனேன்; என்னை ஒறுத்தார் தம் குலங்களோடும் வேர் அறுத்தேன் - என்னை வருத்திய அரக்கர்களை அவர்கள் இனங்கள் எல்லாரோடும் வேரொடு அறுத்து அழித்தேன்; என் கோன் பொலம் கழலும் பூண்டேன் - என் தலைவனான இராமபிரானுடைய பொற் கழல் அணிந்த பாதங்களையும் (அடைந்து என் சிரத்திற்கு ஆபரணமாகத்) தரித்துக் கொண்டேன்; புகழே அன்றி புன் பழியும் தீண்டேன் - (இனியான்) புகழ் அல்லாமல், இழிவான பழியையும் அடைய மாட்டேன்;' என்று மனம் மகிழ்ந்தாள் - என்று சொல்லி மனம் களிப்புற்றாள்.

மீண்டேன், வேர் அறுத்தேன், பூண்டேன், என்பன உறுதி பற்றி வந்த கால வழுவமைதி என்க. திருவின் கழுத்துத் திரு: இஃது ஆசிரியர் கம்பநாடர் தாம் பிறந்த ஊராகிய திருவழுந்தூர் ஆமருவியப்பன் விஷயமாய்த் திருமங்கை மன்னன், 'திருவுக்குந் திருவாகிய செல்வா' (பெரிய திருமொழி, 7. 7: 1) என்று அருளிய திருவாக்கை அடியொற்றிக் கூறியது என்னவும் கொள்ளலாம். இக் கருத்தை உட்கொண்டே, கம்பநாடர் முன், 'மானணி நோக்கினார்தம் மங்கலக் கழுத்துக் கெல்லாம், தானணி யான போது தனக்கணி யாது மாதோ;, (பால. கோலங்காண். 7) என்று கூறிப் போந்தமையும் ஆம். இச் செய்யுள் பிராட்டி தெளிவு பெற்ற நிலையை உறுதியாகக் கூறும். மாண்டே னெனினும் பழுது அன்றே - முன்பு முடிவு செய்தபடி மாண்டு போயிருந்தாலும் பழுதாயிருக்குமே என்று பிராட்டி எண்ணியதாகவும் பொருள் கொள்வர்.

(பி-ம்.) 1. மாயச் சிறை.
2. என்னைக் கவர்ந்தானைக்; யொறுத்தாரைக்.
3. பொலன் றாளும்.

4. தீண்டேனெனத்தன் னுளம்மகிழ்ந்தாள்: திருவின் கழுத்துந் திருவனையாள்: முகத்துத் திருவன்னாள்; முகத்துத் திருவானான்; திருவனையாள். (113)

## அநுமன் வானரப் படையின் பெருமை கூறல் 602-606

602. *அண்ணற் பெரியோ னடிவணங்கி*
*யறிய வுரைப்பா னருந்ததியே*
*வண்ணக் கடலி னிடைக்கிடந்த*
*மணலிற் பலரால் வானரத்தின்*
*எண்ணற் கரிய படைத்தலைவ*
*ரிராமற் கடியார் யானவர்தம்*
*(பண்ணைக் கொருவ)னெனப் போந்தே*
*னேவக் கடவ பணிசெய்வேன்.*

'அண்ணல் பெரியோன் - மிகவும் பெருமை வாய்ந்த அநுமன், அடி வணங்கி - பிராட்டியின் திருவடிகளை வணங்கி, அறிய உரைப்பான் - (அவளை நோக்கிப் பின்வருமாறு) தெரியச் சொல்லலுற்றான்; 'அருந்ததியே - அருந்ததி போன்று கற்பிற் சிறந்தவளே! இராமற்கு அடியார் - இராமபிரானுக்கு அடியாரான, எண்ணற்கு அரிய வானரத்தின் படைத் தலைவர் - எண்ணிக் கணக்கிடுவதற்கு முடியாத வானரப் படைகளின் தலைவர்கள், வண்ணக் கடலின் இடை கிடந்த மணலில் பலர் - கரு நிறத்தோடு கூடிய கடலின் இடையே கிடக்கின்ற மணலை விடப் பலர் ஆவர்; யான் அவர் தம் பண்ணைக்கு - யான் அவ்வானரப் படைத் தலைவர் கூட்டத்தில், ஒருவன் என போந்தேன் - ஒருபணியாளனாக அமைந்தவனாவேன்; ஏவ கடவ பணி செய்வேன்-அவர்கள் ஏவத் தக்க பணிகளைச் செய்பவனாவேன். ஆல், அசை.

பிராட்டியை அருந்ததி என்றல், 612. மிகப் பெரிய எண்ணை மதிப் பிடுங்காலை கடல் அல்லது நதியின் மணலுக்கு ஒப்பிட்டுக் கூறுவது தமிழ் நூல் வழக்கு; புறநா. 9, 43, 55, 136, 363. இஃது, அநுமன் அண்ணற் பெரியோனாயினும், தற்புகழ்ச்சியை விரும்பாது தன்னைக் குறைத்துக் கூறிக் கொண்டதாகும். அநுமன் தற்புகழ்ச்சியை விரும்பாமை; 1253. இங்கு, அநுமன் இவ்வாறு தன்னைக் குறைத்துக் கூறிகொண்டது: தன் னினும் சிறந்த படைத் தலைவரான வானரவீரர் எண்ணற்கரியர், இராம பிரானுக்கு அடியராய் உள்ளார் என்று எண்ணிப் பிராட்டி தான் சிறை வீடு பெற்று இராமபிரானை அடைதல் திண்ணம் என்ற உறுதியடைதற் பொருட்டும் ஆம். பண்ணை - கூட்டம்; இங்குச் சேனைத் தொகுதி. பண்ணைக்கு ஒருவன் - பண்ணை யாளாகிய ஒருவன் என்பதும் தொனிப்,

பது காண்க. அநுமன் பிராட்டி முன் தன்னைத் தாழ்த்திக் கூறிக் கொண்டாலும், நாம் அவனைத் தாழ்ந்தோனாய்ச் சிறிதும் கருதக் கூடாது என்று அவனது பேருரு எடுத்த தோற்றத்தையும் ஆற்றலையும் நினைப்பூட்டி முன்னதாகவே அண்ணற் பெரியோன் என்று சிறப்பிக்கப்பெற்றது இங்கு உய்த்துணரத் தக்கதாம்.

ஏவற் கூவற் பணி செய்வேன், என்ற பாடங்கொண்டு 'ஒருவன் ஏவ, அவன் ஒருவனை ஏவ, அவன் செய்வது ஒத்தவன் நான்' என்று பழைய உரை உள்ளது. இதனால் அநுமன் தான் அடியானுக்கடியனாய் இருந்து பணி செய்பவன் என்று தெரிவித்ததாகும்.

(பி-ம்.) 1. அண்ணற் கரியா ளடிவணங்கி யநும னுரைப்பா னருந்ததியே.
2. வண்ணக் கடலின் கரைகிடந்த மணலிற் பெரிதாம் வானரங்கள்: கிடந்த மலையிற் பெரிய வானரங்கள்: மணலிற் பெரிதால்.
3. அடியா ரானவர்தம்.
4. பண்ணைக் கொருவ னிவன்போந்தே னேவற் கூவப் பணி செய்வேன்; ஏவற் கூவற் பணி. (114)

603. *வெள்ள மெழுப துளதன்றே வீரன் சேனை யிவ்வேலைப்*
*பள்ள மொருகைந் நீரள்ளிக் குடிக்கப் போதும் பான்மையதோ*
*கள்ள வரக்கர் கடியிலங்கை காணா தொழிந்த தாலன்றே*
*உள்ள துணையு முளதாவ தறிந்து பின்னு முளதாமோ.*

'வீரன் சேனை - இராமபிரான் உடன் வரும் வானரப்படை, வெள்ளம் எழுபது உளது - எழுபது வெள்ளம் என்னும் கணக்கைக் கொண்டுள்ளது; இ வேலை பள்ளம் நீர் ஒரு கை அள்ளிக் குடிக்க போதும் பான்மையதோ - (அவ்வானரச் சேனைக்கு) இந்தக் கடலின் ஆழமான நீர் முழுவதும் தலைக்கு ஒரு கை யெடுத்துக் குடிப்பதற்கேனும் போதுமான தன்மை உடையதோ? (போதாது என்பதாம்); கள்ள அரக்கர் கடி இலங்கை - திருட்டுக் குணமுடைய அரக்கர்களுக்குப் பாதுகாவலாக உள்ள இவ்விலங்கை, காணாது ஒழிந்ததால் அன்றே - (இது காறும் அவ் வானரப் படைவீரர்கள்) காணாது ஒழிந்து மறைந்திருப்பதால் அல்லவா, உள்ள துணையும் உளது ஆவது - இது வரைக்கும் நிலைத்திருப்பது ஆகின்றது; அறிந்து பின்னும் உளது ஆமோ - (அவ்வானரப்படைகள் இலங்கை இன்ன இடத்தில் உள்ளது என்பதைத்) தெரிந்து கொண்ட பின்னும் அது நிலைத்திருக்குமோ? (அழிந்து போகும் என்பதாம்). அன்று, ஓ: அசைகள்.

வெள்ளம் - மிகப் பெரிய ஒரு பேரெண்: வானர சேனை எழுபது வெள்ளம் என்னும் தொகையினது; 520; கிட்கிந்தா. நாடவிட்ட. 2; உயுத்த. அங்கதன்றூதுப், 1. கள்ளம் - வஞ்சகமும் ஆம்.

(பி-ம்.) 1. வெள்ள மேழு பத்துளதால்; எழுப துளதம்மா.
2. அள்ளிப் பருகப்; குடிக்கச் சாலும்
3. அரக்க ரிவ்விலங்கை.
4. உள்ள தனேயும்: உள்ள திதுவு மவரறிந்தால் பின்னு மிலங்கை யுளதாமோ: அறிந்த பின்னும். (115)

604. *வாலி யிளவ லவன்மைந்தன்*
*மயிந்தன் றுமிந்தன் வயக்குமுதன்*
*நீல னிடபன் குமுதாக்கன்*
*பனசன் சாம்ப னெடுஞ்சாம்பன்*
*கால னனைய துன்மருடன்*
*கரம்பன் கவயன் கவயாக்கன்*
*ஞால மறியு நளன்சங்கன்*
*விந்தன் றுவிந்தன் மதனென்போன்.*

'வாலி இளவல் - வாலியின் தம்பியாகிய சுக்கிரீவன், அவன் மைந்தன் - அந்த வாலியின் மகனுன அங்கதன், மயிந்தன் - மயிந்தன், துமிந்தன்-துமிந்தன், வய குமுதன் - வலிமை மிக்க குமுதன், நீலன்...... சாம்பன் - நீலன், இடபன், குமுதாக்கன், பனசன், சாம்பன், நெடுஞ் சாம்பன், காலன் அனைய துன்மருடன் - யமன் போன்ற ஆற்றலுடைய துன்மருடன், கரம்பன் ........... கவயாக்கன் - கரம்பன், கவயன், கவயாக்கன், ஞாலம் அறியும் நளன் - உலகம் நன்கு அறியும் நளன், சங்கன்......மதன் - சங்கன், விந்தன், துவிந்தன், மதன்,

இதில் பல வானர வீரர்களின் பெயர்கள் கூறப்பெற்றுள்ளன; இவ் வாறே அடுத்த செய்யுளிலும் வரும். நீலன் வானரப் படைகளுக் கெல்லாம் தலைவனுகக் கருதப்படுகிருன். நெடும் சாம்பன் - சாம்ப வான்; இவன் வெகுகாலமாக உள்ளவனுதலால் நெடுஞ்சாம்பன் எனப் பெற்றுன். சாம்பவன் நெடுங்காலமாக உள்ளவன்; பால. திருவவதாரப். 26; எழுச்சிப். 8; கிட்கிந்தா. மகேந்திரப். 5.

(பி-ம்.) 1. மைந்தன் வசந்தன்; மைந்தன் வயந்தன்.
2. குமுதாக்கன் பாசன் சாம்ப னெடும் பாதன்; பனச னெடியதிறற் சாம்பன்; சாப நெடும்பாதன்.
3. கால என்ன துன்மருடன் காம்பன்: துன்மருடன் கவயன் கடிய கவயாக்கன்: காமன் கவையன் கவையாக்கன்.
4. ஞால மறியு நற்சங்கன் வினதன் துவி: நளன் சங்கன் வசன்றன் றுவன்றனள னென்பான்; நளன்சங்கன் சிங்கன் விந்தன் மதனென்பான்; கேசரி ரோமற் கிளவல் நளனென் போன்; துவிந்தன் நளனென்பான். (116)

605. தம்பன் றூமத் தனிப்பேரோன்
 றதியின் வதனன் சதவலியென்
றிம்ப ருலகோ டெவ்வுலகு
 மெடுக்கு மிடுக்க ரிராமன்கை
அம்பி னுதவும் படைத்தலைவ
 ரவரை நோக்கி னிவ்வரக்கர்
வம்பின் முலையா யுறையிடவும்
 போதார் கணக்கு வரம்புண்டோ.

தம்பன் - தம்பன், தூமத் தனிப்பெயரோன் - தூமன் என்ற ஒப்பற்ற பேருடையவன், ததியின் வதனன் - ததிமுகன், சதவலி-சதவலி, என்று-என்று சொல்லப்படும், இம்பர் உலகோடு எவ்வுலகும்-இவ்வுலகத்தோடு மற்ற எல்லா உலகங்களையும், எடுக்கும் மிடுக்கர் - தூக்கி எடுக்கக் கூடிய வலியுடையோர்கள்; இராமன் கை அம்பின் உதவும் படைத்தலைவர் - இராமபிரான் கையில் உள்ள அம்பைப் போலத் தவறாது உதவிபுரியும் வானரப் படைத்தலைவர்கள் ஆவர்; வரம்பு உண்டோ - அவ் வானர வீரர்களின் கணக்குக்கு ஓர் எல்லை உண்டோ? (இல்லை என்பதாம்); அவரை நோக்கின் - அப்படைத் தலைவர்களைக் கருதுமிடத்து, வம்பின் முலையாய் - கச்சணிந்த தனங்களையுடையவளே! இவ் அரக்கர் - இந்த இலங்கையில் உள்ள அரக்கர்கள், உறை இடவும் போதார் - உறையாக வைப்பதற்கும் போதமாட்டார்கள்.

ஆசிரியர் கம்ப நாடர், வேகத்திற்கும் காரியத்தைத் தவறின்றி முடிக்கும் திறமைக்கும் இராமபிரான் அம்பை உவமையாகக் கூறுவது இந் நூலிற் பலவிடங்களிற் காணலாம்; 155; கிட்கிந்தா. கிட்கிந்தைப். 12; உயுத்த. அங்கதன்றூதுப். 13. இவ்விரு செய்யுட்களில் வானரப் படைவீரர்களின் பெயர்கள் கூறப்பெற்றுள்ளன. இப்பெயர்களிற் பல கிட்கிந்தா. தானைகாண் படலத்திலும் வருவன காணலாம். உறையிடப் போதாமை; 129.

அச்சுப் புத்தகங்களிலும் பல ஏட்டுச் சுவடிகளிலும் இச் செய்யுளுடன் இப் படலம் முடிகின்றது. வானரத் தலைவர்களின் பெயரைக் கூறுதலுடன் இப் படலத்தை முடித்து, அடுத்த படலத்தில் பிறிதொரு செய்தியைத் தொடங்குவதில் இவ்விரண்டையும் இணைக்கத்தக்க உதவியில்லாமல் போவது கண்கூடு. ஸ்ரீ ஐயரவர்கள் 'இதன் பின் ஒரு செய்யுள்' என்று தம்குறிப்பில் குறித்திருப்பதையும், இரண்டு அச்சுப் புத்தகங்களில் அதிகப் பாடலாக ஒரு செய்யுள் சுட்டப் பெற்றிருப்பதையும் அவ்வாறு சுட்டப் பெற்ற செய்யுள் சில பாடபேதங்களுடன் ஐந்து ஏட்டுச் சுவடிகளில் காணப்பெறுவதையும் கொண்டு, அஃது இப் படலத்திற்கு இறுதிச் செய்யுளாகக் காட்டப்பெற்றிருக்கிறது.

(பி-ம்.) 1. தம்பன் றூதன் தனிப்; தம்பன் றும்பன் றனிமயிந்தன்; சசியின் வதனன்; தம்பள் றூர்த்தன் றிறற்சிங்கள்; தருக்கும் வசந்தன் சத.
2. மிடுக்கார்; மிடுக்கோர். 3. அன்பின் முந்தும்; உதவு படைத்.
4. போதா கணக்கு; போதாக் கணக்கு; போதா ரரக்கர் வரம் புண்டோ: கணக்கும் வரம்புடைத்தால். (117)

606. சென்றே னடியே னுனக்கின்னல்
சிறிதே யுணர்த்து மத்துணையும்
அன்றே யரக்கர் வருக்கமுட
னடைவ தல்லா தரியின்கை
மன்றே கமழுந் தொடையன்றே
நிருதன் குழுவு மாநகரும்
என்றே யிறைஞ்சிப் பின்னருமொன்
றிசைப்பா னுணர்ந்தா னீறில்லான்.

'அடியேன் சென்றேன் - அடியவனாகிய யான் இராமபிரானிருக்கும் இடத்துக்குச் சென்று, உனக்கு இன்னல் - உனக்கு நிகழ்ந்திருக்கிற துன்பத்தை, சிறிதே-சிறிதளவே, உணர்த்தும் அத்துணையும் - தெரிவித்த அப்பொழுதே, அரக்கர் வருக்கம் - அரக்கர் வமிசம் முழுமையும், உடன் அடைவது அல்லாது - (அவ்வானரர்கள் கையில்) ஒருமிக்க அகப் படுவதோடு அன்றி, நிருதன் குழுவும் மாநகரும்-இராவணனின் உறவினர்க் கூட்டங்களும் (இந்த இலங்கையாகிய) பெரிய நகரமும், அரியின் கை - குரங்குகளின் கைகளில், மன்றே கமழும் தொடை அன்றே - மணம் வீசும் மாலையாக ஆகிவிடு மல்லவா? (சின்னபின்னமாகப் பிய்க்கப்படு மல்லவா?) என்றே- என்று தெளிவாகவே (அநுமன் பிராட்டியிடம்) சொல்லி, இறைஞ்சி - வணங்கி, பின்னரும்-பிறகும், ஈறில்லான் - இறுதி யற்றவனாகிய அநுமன், ஒன்று இசைப்பான் உணர்ந்தான் - ஒன்று சொல்ல நினைத்தான். அன்றே: அசை.

இச்செய்யுள் அச்சுப்பிரதிகளில் இல்லாமல் இங்குச் சேர்க்கப்பெற் றமைக்குக் காரணம் 605-ஆம் செய்யுளின் உரைக்குறிப்பிற் காண்க. 'அரியின்கைத் தொடை' ஒரு பழமொழி. உணர்ந்தான் என்று இங்குக் கூறிமுடித்ததை, 607 ஆம் செய்யுளில் விளக்கி, உணர்வு கொண்டான் என்று கூறப்பெற்றது.

(பி-ம்.) 1. உணர்ந்தின்னல்; உனதின்னல்: உரைத்த பொழுதன்றே.
2. அல்லா லரியின்கை. 3. நிருதர் குழுவு. (118)

உருக்காட்டு படலம் முற்றும்

# 5. சூடாமணிப் படலம்

## 'பிராட்டியைக் கொண்டகல்வதே கருமம்' என்றெண்ணி அநுமன் வேண்டுதல் 607-616

607. *உண்டுதுணை யென்னலெளி தோவுலகி னம்மா*
*புண்டரிகை போலுமிவ ளின்னல்புரி கின்ருள்*
*அண்டமுத னயகன தாவியனை யாளைக்*
*கொண்டகல்வ தேகரும மென்றுணர்வு கொண்டான்.*

சூடாமணிப் படலம் - அநுமன், பிராட்டியிடமிருந்து அடையாளமாகச் சூளாமணியைப் பெற்றுக் கொண்டமையைக் கூறும் படலம் என விரியும். சூடாமணி - தலையில் சூடும் ஓர் அணிகலன்.

'புண்டரிகை போலும் இவள் - தாமரை மலரில் உள்ள திருமகள் போன்ற இப்பிராட்டி, இன்னல் புரிகின்ருள் - துன்புற்று வருந்துகின்ருள். உலகில் துணை உண்டு என்னல் எளிதோ - (இவள் படுந் துயரத்திற்கு) உலகத்தில் ஒப்பு உண்டு என்று சொல்வது எளிதாகுமோ? (ஆகாது என்றபடி); அண்டம் முதல் நாயகனது ஆவி அனையாளை - அண்டங்களுக்கெல்லாம் ஆதித் தலைவனுன இராமபிரானுடைய பிராணன் போன்ற இவளை, கொண்டு அகல்வதே கருமம் - இவ்விடம் விட்டு எடுத்துக் கொண்டு அகன்று (இராமபிரானிடம்) செல்வதே செய்யத் தக்க காரியமாகும்;' என்று உணர்வு கொண்டான் - என்று (அநுமன்) மனத்தில் எண்ணங் கொண்டான். அம்மா: வியப்பை உணர்த்தும் இடைச்சொல்.

முன் படல இறுதியில், 'ஒன்று இசைப்பான் உணர்ந்தான்' என்று கூறிய உணர்வு இங்கே குறிக்கப்பெற்றது. 'அண்ட முதல் நாயகன்' என்பதற்கு ஏற்ப, 'புண்டரிகை' திருமகளைக் குறிக்கும் என்றும் கொள்ளலாம். இப்பொருளில், 'போலும்' என்பது அசை; ஒப்பு. 'அரவணைத் துயிலினீங்கிய, தேவனே அவன் இவள் கமலச் செல்வியே' (396.)பிராட்டி இன்னல் புரிகின்ருளாதலில், இவளைக் கொண்டகல்வதே செய்யத்தக்க காரியம் என்று அநுமன் துணிந்தான் என்க. பிராட்டி இராமபிரானுடைய உயிர்; 525; 'உண்டு துணை யென்னல் எளிதோ' என்பதனைக் கவிக்கூற்ருக்கி, இவ்வாறு கருதிய அநுமனுக்கு ஒப்பு வேறு உண்டோ? என்றும் பொருள் கூறுவர். அன்றியும், 'இவளுக்கு இந்நிலையில் வேறு துணையுண்டோ?, என்று அநுமன் கூறிக்கொண்டதாகவும் கூறுவர்.

(பி-ம்.) 1. துணை யென்பதெளி தோ: உலகி லென்று.

2. புண்டரிக மேருவன தோள்வலி புகன்றுன்; புண்டரிக மேரு வென வின்னபுகல் கின்றுன்; புண்டரிகர் மேருவென வின்ன புகல்கின்றுன்; புண்டரிகை போலுமயி லன்னபுன மானே; புண்டரிதன் னெஞ்சினெரு புந்திநினை வுற்றுன்; புண்டரீகர் பேருமென வின்னபுகல் கின்றுன்.

4. கரும மென்பது குறித்தான்: என்றுரை குறிப்பான். (1)

608. *கேட்டியடி யேனுரை முனிந்தருளல் கேளான்*
*வீட்டியிடு மேலவனை வேறல்வினை யன்ருல்*
*ஈட்டியினி யென்பயனி ராமனெதிர் நின்னைக்*
*காட்டியடி தாழ்வெனிது காண்டியிது காலம்.*

'அடியேன் உரை கேட்டி - அடியேனுகிய என் வார்த்தையைக் கேட்க; முனிந்தருளல் - கோபம் கொள்ளற்க ; கேளான் - பகைவனுன இராவணன், வீட்டியிடுமேல் - (அவன் குறிப்பிட்டுச் சொன்னபடி) உன்னைக் கொன்றுவிடுவானெனின், அவனை வேறல் வினை அன்று - அந்த இராவணனைப் (பின்) வெல்லுதல் செய்யத்தக்க காரியமாக ஆகாது; ஈட்டி இனி என் பயன் - இனி, பலவாறு வார்த்தைகளைத் தொகுத்துப் பேசி என்ன பயன்? நின்னை இராமன் எதிர் காட்டி - உன்னை இராமபிரான் எதிரே கொண்டு போய் அவர் காணுமாறு செய்து, அடி தாழ்வென் - அவர் திருவடிகளை வணங்குவேன்; இது காண்டி - இதனை நீ காண்பாயாக; இது காலம் - இதுவே அதற்கு ஏற்ற காலமாகும். ஆல்: அசை.

இது முதல் 616 ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர்; இவை அநுமன் பிராட்டியிடம் விண்ணப்பித்தவற்றைக் கூறி, அச் செய்யுளி லுள்ள, 'என்று தொழு தின்னடி பணிந்தான்' என்பதனேடு முடியும். 'முனிந்தருளல்' என்றது இச் செயலுக்குப் பிராட்டி உடன்படாளோ என்பதை அநுமன் முன்னறிந்து சமர்தானம் செய்ய வணக்கமாய்க்கூறிக் கொண்டதாம். கேளான்-பகைவன்; அதாவது கேள் அல்லாதவன்; கேள் - உறவு அல்லது நட்பு. வீட்டியிடுதல்: இராவணன், 'தீதுயிர்க் கிழைக்கும் நாளும் திங்களோ ரிரண்டில் தேய்ந்தது' (479) என்று அறுதி யிட்டுக் கூறியுள்ளபடிப் பிராட்டியை அவன் கொன்றுவிடுவான் என்பது கருதிக் கூறியது.

(பி-ம்.) 1. முனிந்திடுதல் கேளால்; முனிந்தருளல் கேதம்: அருளல் கேளாய்; கேளார்.

2. விட்டியிடு வெய்யவனை; வீட்டிடு மேலவனை; மேலவரை: பூட்டிய விராவணனை வென்றல் பொருளன்ருல்: அவனை வென்றல்; அவரை வேறல்: வென்றுவினை; வென்றவினை வினை யென்ருல்.

3. நீட்டியினி; ஈட்டியினி யென்பல: ஈட்டியென வேபல்; ஈட்டு செய லெற்கினி யிராமனெதி ருன்னே.
4. அடி தாழுவது: காணியிது காலம்; காண்டியெதிர் காலம். (2)

609. *பொன்றிணி பொலங்கொடியென் மென்மயிர் பொருந்தித்*
*துன்றிய புயத்தினி திருத்திதுயர் விட்டாய்*
*இன்றுயில் விளைக்கவொ ரிமைப்பினிறை வைகும்*
*குன்றிடை யுனைக்கொடு குதிப்பெனிடை கொள்ளேன்.*

'பொன் திணி பொலம் கொடி - பொன்னைத் திணித்து அமைக்கப் பெற்ற அழகிய கொடி போன்றவளே! என் மென் மயிர் துன்றிப் பொருந்திய - எனது மென்மையான உரோமங்கள் அடர்ந்து பொருந்தியுள்ள, புயத்து இனிது இருத்தி - தோளில் நன்றாக எழுந்தருளி இருப்பாயாக; துயர் விட்டாய் - அதனோடு உன் துயரை நீ விட்டு நீங்கினவள் ஆவாய்; இன் துயில் விளைக்க ஓர் இமைப்பின் - இனிய தூக்கம் உண்டாக, ஒரு கண நேரத்தில், இறை வைகும் குன்றிடை - நம் இறைவனான இராம பிரான் தங்கியிருக்கும் மலையினிடத்து, உனை கொடு குதிப்பென் - உன்னைக் கொண்டு போய்க் குதிப்பேன்; இடை கொள்ளேன் - நடுவில் தாமதிக்க மாட்டேன்.

இறை வைகும் குன்று: இராமபிரான் தங்கியிருந்த மலை; கிட்கிந்தையை அடுத்த பிரஸ்ரவணம் என்றும் மலை என்று வான்மீகம் கூறும். இடை கொள்ளேன் - இதனால் யான் தளர்ச்சி அடைய மாட்டேன் என்னலும் ஆம்; இடை - தளர்ச்சி, அல்லது துன்பம்.

(பி-ம்.) 1. என் மாமயிர்; என் புன்மயிர்.
2. புயத்தினி திருக்க; புயத்திடை யிருக்க; துயர்விட்டே.
3. இமைப்பினிடை வைகும்; இமைப்பினிடை மற்றக்.
4. குதிப்பனிடை. (3)

610. *அறிந்திடை யரக்கர்தொடர் வார்களுள ராமேல்*
*முறிந்துதிர நூறியென் மனச்சின முடிப்பென்*
*நெறிந்தகுழ னின்னிலைமை கண்டுநெடி யோன்பால்*
*வெறுங்கைபெய ரேனொருவ ரானும்விளி யாதேன்.*

'நெரிந்த குழல் - சுருண்ட கூந்தலையுடையவளே! அரக்கர் அறிந்து இடை தொடர்வார்கள் உளர் ஆமேல் - அரக்கர்கள் (யான் உன்னை எடுத்துப் போவதை) அறிந்து நடுவே வந்து போர்புரிவார்கள் உளரானால்,

ஒருவரானும் விளியாதேன்-ஒருவராலும் சாகாவரமும் ஆற்றலும் பெற்ற யான், முறிந்து உதிர நூறி - (அவ்வரக்கர்கள் தோற்று) உடல் ஒடிபட்டுக் கீழே உதிர்ந்து விழக்கொன்று, என் மன சினம் முடிப்பென் - நான் முன்னமேயே மனத்திற் கொண்டுள்ள கோபத்தை ஒருவாறு முடித்துக் கொள்வேன்; நின் நிலைமை கண்டும் - நீ இங்குச் சிறையில் அவதியுறும் இந் நிலைமையை நான் நேரில் பார்த்தும், நெடியோன்பால் - பெரியோனை இராமபிரானிடத்தில், வெறும் கை பெயரேன்-வெறுங் கையொடு திரும்பிப்போக மாட்டேன்.

அநுமன் பலமுறை இலங்கை அரக்கரைக் கொல்வதாக மனத்திற் கொண்ட கோபம்; 315, 325, 328, 468 469. நெறிந்த குழல்; குழல் நெறிந்திருத்தல் அழகாகும்; 488, 546; பெரியாழ்வார் திருமொழி, 3, 10: 1. அநுமன் சாகாவரம் பெற்றமை; 85, 561, 1062; உயுத்த: மருத்து மலைப். 114. உத்தர. அநுமப். 36-39. அறிந்து தொடர்வார் என்றமையால், தான் பகைவர் அறியாமல் செல்வதை அநுமன் குறித்தவாறு.

(பி-ம்.) 1: உளராயின். 2. முறிந்தெதிர; முறிந்தயர. 3. குழ லின்னிலைமை; குழல் நின்னை நிலை கண்டு: நெடி யோர்பால். 4. வெறுங்கையொடு போகிலென தாண்மைவிளி யாதோ: விளிவில்லேன். (4)

611. *இலங்கையொடு மேகுதிகொ லென்னினு மிடந்தென்*
*வலங்கொளொரு கைத்தலையின் வைத்தெதிர் தடுப்பான்*
*விலங்கினரை நூறிவரி வெஞ்சிலையி னோர்தம்*
*பொலங்கொள்கழ லூழ்குவெனி தன்னைபொரு ளன்றால்.*

'அன்னை - தாயே! இலங்கையொடும் ஏகுதி என்னினும் - 'இலங்கையோடும் என்னை எடுத்துக்கொண்டு போவாயாக' என்று நீ கட்டளையிட்டாலும், இடந்து - (இந்த இலங்கையைப்) பெயர்த்தெடுத்து, என் வலம் கொள் ஒரு கைத்தலையில் வைத்து - என் வலக்கரத்தில் வைத்துக்கொண்டு, எதிர் தடுப்பான் விலங்கினரை - எதிரே வந்து என்னைத் தடுக்க வந்து குறுக்கிட்டுப் பகைப்பவரை, நூறி-கொன்று, வரி வெம் சிலையினோர் தம்-கட்டமைந்த கொடிய வில்லேந்திய இராமலக்ஷ்மணர்களின், பொலம் கொள் கழல் - பொன்னால் அமைந்த வீரக் கழல்களணிந்த பாதங்களை, தாழ்குவென் - வணங்குவேன்; இது பொருள் அன்று-இதைச் செய்வது எனக்கு ஒரு பெரிய காரியம் அன்று. கொல், ஆல்: அசைகள்.

வலம் கொள் கை; பெரியோரிடத்தில் ஒரு பொருளை இடக் கரத்தில் கொண்டு போதல் முறை அல்லாமையோடு அபசாரத்திற்கு இடமும் ஆகுமாதலால், அநுமன் பிராட்டியைத் தன் வலக்கையில் எடுத்துச்

செல்வதாகக் கூறினன் என்க; இனி, வலிமை பொருந்திய ஒரு கையில் என்று பொருள் கூறுவாறும் உளர். மற்றொரு கையால் விலங்கினரை நூறுதற் பொருட்டு, ஒரு கையால் எடுத்துச் செல்வதாகக் கூறினன் என்பதாம். அநுமன் இலங்கையை இடந்து எடுத்துச் செல்லும் ஆற்றல் அமைந்தவன்; 328; 469; கிட்கிந்தா. மகேந்திரப். 21.

(பி-ம்.) 1. இலங்கையொ டெடுத்தகல்தி யென்னினு மிடந்தென்: ஏகுதிகொ டென்னினும் இடந்தே.
2. வலங்கலொரு; வலங்கஒளாரு: வைத்திடை தடுப்பான்: தடுப்பன்; தடுப்பார்; தடுப்பின்.
3. நூறிவரு வெஞ்சிலைவி னோதன்.
4. பொலன்கழல்கள்: தாழ்குவ னிணைத்தபொரு ளென்னுல்: தாழ்வனிது வன்னை. (5)

612. அருந்ததியு ரைத்தியழ கற்கருகு சென்றுன்
மருந்தனைய தேவிநெடு வஞ்சர்சிறை வைப்பில்
பெருந்துயரி னோடுமொரு வீடுபெறு கில்லாள்
இருந்தனளெ னப்பகரி னென்னடிமை யென்னும்.

'அருந்ததி-அருந்ததி போன்றவளே! அழகற்கு அருகு சென்று-அழகனாகிய இராமபிரான் அருகே போய், 'உன் மருந்து அனைய தேவி - உன் தேவாமிர்தத்திற்கு ஒப்பான தேவி, வஞ்சர் நெடு சிறை வைப்பில் - மாயம் பொருந்திய அரக்கர்களுடைய நீண்ட சிறையிடத்து, பெரும் துயரினோடும் - பெரிய துன்பத்தோடும், ஒரு வீடு பெறுகில்லாள் இருந்தனள் என - ஒரு விடுதலை பெறாதவளாய் இருந்தாள்' என்று, பகரின் - யான் போய்ச் சொன்னால், என் அடிமை என் ஆம் - என் அடிமைத் தொழில் தன்மை என்ன தகுதியுடைத்தாகும்? (அல்லது என்ன பயன்படும்?); உரைத்தி - இதனை நீ (ஆலோசித்துச்) சொல்வாயாக.

கற்பிற் சிறந்த மகளை அருந்ததி என்று கூறுவது வழக்காதலின், பிராட்டியை அருந்ததி என்றான் அநுமன்; அருந்ததி வசிட்ட முனிவரின் மனைவி; பிராட்டியை அருந்ததி என்பது; 410, 602; ஆரண்ய. சடாயு வுயிர்: 23; 190; கிட்கிந்தா: பிலநீங்கு. 50. இராமபிரானை அழகன் என்பது; 197, 390; பால. மிதிலைக். 39; அயோத்யா. நகர்நீங்கு. 188; கிட்கிந்தா அரசியற். 37; உயுத்த. கும்ப. 354. பிராட்டி மருந்து போன்றவள்: 332. நெடுஞ்சிறைவைப்பு; 499.

(பி-ம்.) 1. அருந்ததியுன் என்பின னவற்கருகு சென்றுன்.
3. பொருந்துயரி னோடு: நெடு வீடுபெறு கில்லா(து); விடுபெற வில்லா; பெறவில்லா(து) (6)

613. *புண்டொர்வ கற்றியபு யத்திஞெடு புக்கேன்*
*விண்டவர்வ லத்தையும் விரித்துரை செய்கேனே*
*கொண்டுவரு கிற்றிலெ னுயிர்க்குறுதி கொண்டேன்*
*கண்டுவரு கிற்றிலெனெ னக்கழறு கேனே.*

'புண் தொடர்வு அகற்றிய புயத்திஞெடு புக்கேன் - பகைவரால் போரில் புண்படுதலை நீக்கிய புயங்களோடு (இராமபிரானிடம்) சென்ற வஞசி, விண்டவர் வலத்தையும் - பகைவர்களான அரக்கர்களுடைய வலிமையையும், விரித்து உரை செய்கேனே - விரிவாய் எடுத்துக் கூறும் வலியுடையேன் ஆவனே? கொண்டு வருகிற்றிலென் - உன்னை எடுத்துக் கொண்டு வரும் வலி இல்லாதவனுனேன்; உயிர்க்கு உறுதி கொண்டேன்-என் உயிரைக் காப்பாற்றிக் கொள்வதில் தீவிரமானேன்; கண்டு வருகிற்றிலென் - பிராட்டியை யான் கண்டு வர முடியவில்லை; என கழறுகேனே - என்று சொல்லுந் திறமுடையவனே?

இதனால், 'புண் தொடர்ந்த புயங்களோ டல்லாமல், போரிற் புறங் கொடுத் தோடி, தன் உயிரே பெரிது என்று அதனைக் காப்பாற்றிக் கொண்டு, பகைவர் வலியைப் பெரிதும் விரித்துரைத்து இராமபிரான் முன் போய் நிற்பேனே? பிராட்டியைக் கொண்டு வர முடியவில்லை என்று சொல்லுவேனே? அல்லது பிராட்டியைக் காணவே முடியவில்லை என்று யான் ஒரு பொய்யைச் சொல்லும் திறமுடையவனே?' என்று அநுமன் தனக்குண்டாகக் கூடிய இழிந்த நிலைமையைப் பிராட்டிக்குத் தெரியப்படுத்திக் கொண்டான் என்க; வீரனுக்குப் புண் கொண்ட புய முடையவனுய்ச் செல்வதே சிறப்பு என்பதாம்; குறள். 776. 'கொண்டு வரு கிற்றிலென், கண்டுவருகிற்றிலென்' ஒப்பு: 822.

(பி-ம்.) 1. புண்டர வகற்றிய: பு யத்தினிடை: பு யத்திஞெடு போய்யாள்: புக்கே.
2. விண்டவர் நலத்தையும் வலத்தைபும் விரிப்பேன்: வலத்தையு முரத்தையும் விரிப்பேன்: விண்டுவி னடிக்கழல் வணங்கியென் விரிப்பேன்.
4. கண்டன ளிருந்தன ளெனக்: கண்டன னிருந்தன ளெனக். (7)

614. *இருக்குமதில் சூழ்கடிபி லங்கையையி மைப்பின்*
*உருக்கியெரி யாலிகல ரக்கரையு மொன்ரு*
*முருக்கிநிரு தக்குலமு டித்துவினை முற்றிப்*
*பொருக்கவகல் கென்னினும தின்றுபுரி கின்றேன்.*

'மதில் சூழ் இருக்கும் கடி இலங்கையை - மதில்களால் சூழப் பெற்றிருக்கும் காவலோடு கூடிய இலங்கையை, இமைப்பின் - இமை

கொட்டும் நேரத்திற்குள், எரியால் உருக்கி - நெருப்பால் உருகி யோடச் செய்து, இகல் அரக்கரையும் ஒன்று முருக்கி - எதிர்த்துப் போரிட வரும் இங்குள்ள இராவணன் முதலான அரக்கர்கள் எல்லாரையும் ஒருசேரக் கொன்று, நிருதக் குலம் முடித்து - அரக்கர் குலத்தையே மீதி இல்லா மல் அழித்து, வினை முற்றி - மேற்கொண்ட காரியத்தைக் குறைவின்றி முடித்துக் கொண்டு, பொருக்க அகல்க என்னினும்-விரைவில் போவாய் என்று நீ கட்டளையிட்டாலும், அது இன்று புரிகின்றேன் - அதனை இன்றே யான் செய்கின்றேன்.

இலங்கையை உருக்கி என்றது, அது பொன்னாலும் மணியாலும் அமைந்த நகரமாதலின்; 96, 104, 110, 116, 123. பொருக்க - விரைவாக; 'பொருக்கென வெழுந்துபோய்ப் புரையுட் புக்கனர்' பால. திருவவதாரப். 42.

(பி-ம்) 1; சூழக மிலங்கை: சூழணி யிலங்கையை; சூழுமவ் விலங்கையை: இமைக்கண்.
2 உருக்கியிக லால்வரு மரக்கணையு மொன்றாய்; இ எரியால் வரும்; ஒன்றே.
4 பொருக்கென வகன்றெனினு மின்று: இதின்றுபுரி கின்றேன் (8)

615 *இந்துநுத னின்னொடவ னெய்தியிகல் வீரன்*
*சிந்தையுறு வெந்துயர்த விர்ந்ததெளி வோடும்*
*அந்தமில ரக்கர்குல மற்றவிய நூறி*
*நந்தலில்பு விக்கணிடர் பிற்களைத னன்றால்.*

'இந்து நுதல் - சந்திரன் போன்ற (அழகிய) நெற்றியையுடைய பிராட்டியே! நின்னொடு அவன் எய்தி - உன்னோடு அவ்விடம் சென்று, இகல் வீரன் - போரிற் சிறந்த வீரனை இராமபிரானுடைய, சிந்தை உறு வெம் துயர் தவிர்ந்த தெளிவோடும் - மனத்தில் உள்ள கொடுந் துயரம் நீங்கியதால் ஏற்பட்ட தெளிவுடனே, அந்தம் இல் அரக்கர் குலம் அற்று அவிய நூறி - முடிவற்றதான அரக்கர் கூட்டங்கள் அழிந்து ஒழியக் கொன்று, நந்தல் இல் புவிக்கண் - அழிதல் இல்லாத இந்தப் பூமியினிடத்து, இடர் - (அவ்வரக்கர்களால் உண்டான) துன்பங்களை, பின் களைதல் நன்று - பிறகு நீக்குதல் நல்லதாகும். ஆல் : அசை.

முதலில் பிராட்டி இராமபிரான்பால் போய்ச்சேர வேண்டும் என்பது: அவன் துயர் நீங்கிப் பிறகு அரக்கர்களை அழித்து உலகின் துயரைப் போக்கலாம் என்பதும் அநுமன் கருதிக் கூறியதாகும். இந்து என்பது, இங்கு, நுதல் என்றமையால் எட்டாம் நாள் சந்திரனைக் குறிப்பதாகும். நந்தல் இல் புவி - தழைத்தல் இல்லாது வருந்தும் பூமி என்றும்

பொருள் கொள்ளலாம். 'இவணேகி - இந்த இலங்கையிலே பெருமாளும் தேவரீரும் திரும்பியெழுந்தருளி' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. நின்னேடிவண்: இவணேகியிகல்.
2. துயர் சிதைத்தயர்வு தீர்வுற்று; தணிந்து தெளிவோடும். தவிர்ந்து. (9)

616 வேறினிவி ளம்பவுள தன்றுவிதி யாலிப்
பேறுபெற வென்கணரு டந்தருளு பின்போய்
ஆறுதுய ரஞ்சொலிள வஞ்சியடி யன்றோள்
ஏறுகடி தென்றுதொழு தின்னடிப ணிந்தான்.

'அம் சொல் இள வஞ்சி - அழகிய சொற்களையுடைய இளம் வஞ்சிக் கொடி போல்பவளே! வேறு இனி விளம்ப உளது அன்று - வேறு யான் இனிக் கூற உள்ளது இல்லை; விதியால் - உன் கட்டளையின் மீது, இப்பேறு பெற - (இராமபிரானிடத்தில் உன்னைச் சேர்த்தேன் என்னும்) இந்தப் பாக்கியத்தை யான் பெறுமாறு, என் கண் அருள் தந்தருளு-என் பால் அருள் புரிவாயாக; பின் போய்-அப்பால் (இராமபிரானிடம்) போய், துயரம் ஆறு-நீ துன்பம் நீங்கி ஆறுதல் அடைவாயாக; அடியன் தோள் கடிது ஏறு-(ஆதலின்) அடியேன் தோளின் மீது விரைவாய் ஏறுவாயாக;' என்று தொழுது இன் அடி பணிந்தான் - என்று சொல்லித் தொழுது பிராட்டியின், இனிய நல்வாழ்வைத் தரத்தக்க திருவடிகளை அநுமன் பணிந்து வணங்கினன்.

விதியால் - யான் முன் செய்த நல்வினையின் பயனாக என்று பொருள் கூறுதலும் ஆம். அஞ்சொல் இளவஞ்சி: இரண்டாம் வேற்றுமையில், இல் பொருள் உவமைப் புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. இன்-இன்பம்; 'இன்வள ரிளம்பிறை' (சீவக.1008); இன்னடி, 'நற்றுள்' என்பது போல; குறள். 2.

(பி-ம்) 1. உளதின்று; உளதில்லை. 2. அருளு பின்னே; அருளு மின்னே
3. ஆறுதுயர் தேவியடி யேனிரு புயத்தின்.
4. தொழு தின்னன விசைத்தான். (10)

வேறு

## அநுமன் வேண்டுகோளுக்குப் பிராட்டி இசையாமை 617-32

617. ஏய நன்மொழி யெய்த விளம்பிய
தாயை முன்னிய கன்றனை யான்றனக்
காய தன்மை யரியதன் றெனத்
தூய மென்சொ லினையன சொல்லினள்.

ஏய நல்மொழி எய்த விளம்பிய - தகுதியான நல்ல வார்த்தைகளைப் பொருந்தும்படிக் கூறிய, தாயின் முன்னிய கன்று அனையான் தனக்கு - தாய்ப் பசுவின் முன்னேக்கி நின்ற இளங்கன்று போன்ற அநுமனிடம், 'ஆய தன்மை - நீ கூறியவை, அரியது அன்றும் என - உன்னால் செய் வதற்கு அரிய காரியம் அன்று' என்று கூறி, இனையன-பின்வருமாறுள்ள, தூய மென் சொல் - பரிசுத்தமானவையும் மென்மை பொருந்தினவையு மான சொற்களை, சொல்லினள் - பிராட்டி அநுமனுக்குச் சொல்ல லானாள்.

தாயின் முன்னிய கன்று-தாய்ப் பசுவை அடைந்து நிற்கும் கன்றும் ஆம்; முன்னுதல் அடைதல். தாய்ப்பசு பிராட்டிக்கும், கன்று அநுமனுக்கும் உவமைகள்; தாயை முன்னிய கன்று; அயோத்யா. மந்திரப். 58; கைகேசிசூழ்வினைப். 104; ஆரண்ய அகத்தியப். 5. தூய மென்சொல்-என்ற தொடரை அன்மொழித் தொகையாகப் பிராட்டிக்கு ஆக்கிப் பொருள் கொள்ளலும் அமையும். தூய்மை அவள் கற்பின் தன்மையையும், மென்மை அவள் மனத்தின் தன்மையையும் காட்டின.

(பி-ம்.) 1. மொழி யின்ன விளம்புறும்: எய்தி விளம்பிய.
2. தாயின் முன்னிய.
3. ஆய செய்கை தகாதைய கேளளுத்: அரியதன் ருலெனத்.
4. சொல்லுவாள். (11)

618. *அரிய தன்றுநின் னுற்றலுக் கேற்றதே*
*தெரிய வெண்ணினை செய்வதுஞ் செய்தியே*
*உரிய தன்றென வோர்கின்ற துண்டதென்*
*பெரிய பேதைமைச் சின்மதிப் பெண்மையால்.*

'அரியது அன்று - நீ செய்வதாகக் கூறியது உனக்கு அருமை யானது அன்று; நின் ஆற்றலுக்கு ஏற்றதே தெரிய எண்ணினை - உன் வல்லமைக்குப் பொருத்தமானதையே நன்றாக ஆலோசித்துச் சொன் னாய்; செய்வதும் செய்தியே - செய்து முடிக்கவும் செய்வாய்; (ஆனால்), அது - (நீ செய்வதாகக் கூறிய) அக்காரியம், என் பெரிய பேதைமை சின்மதி பெண்மையால் - எனது அறியாமை மிக்க சிற்றறிவினையுடைய பெண் தன்மையால், உரியது அன்று என - ஏற்றது அன்று என்று, ஓர் கின்றது உண்டு - என் மனம் உணர்கின்றது உண்டு.

இதன், தொடர்ச்சி அடுத்து வரும் 632 ஆம் செய்யுளோடு முடிவு பெறும். 'அரியதன்று' என்று முன் செய்யுளிற் கூறியதையே மறுபடி யும் இங்குக் கூறுகின்றாள். 'ஆற்றலுக் கேற்றதே' என்றமையால் அறி

வுக்கு ஏற்றதன்று என்பது தொனிக்கும். பேதைமை - யாதுமறியாமை; குறள். பேதைமை. பரிமேல். உரை. பெரிய பேதைமைச் சின்மதி: முரணணி; இது வினயமொழி. பெண்மைக்கு உரியது பேதைமை; 'பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்'; 'பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்து' என்றுராகலின்; இதனாலேயே பெண்ணைப் பேதையென்பதும் ஆம்.

(பி-ம்.) 1. அன்றுன தாற்றலுக்(கு); உனக் காற்றலுக்(கு): ஏற்றதை; ஏற்றன.
2. எண்ணினை யேலிது செய்துபின்: செய்வது செய்தியே: செய்தி யேல்.
3. உரிய தல்லவிச் செய்கையென் றுற்றிடில்; உண்டெனை.
4. பேதைமை தான்பிறி தில்லையால். (12)

619. *வேலை யின்னிடை யேவந்து வெய்யவர்*
*கோலி வெஞ்சர நின்னெடுங் கோத்தபோ*
*தால மன்னவர்க் கல்லையெற் கல்லையால்*
*சால வுந்தடு மாறுந் தனிமையோய்.*

'வெய்யவர் - கொடியவரான அரக்கர்கள், வேலையின் இடையே வந்து - கடலின் நடுவில் (நீ என்னை எடுத்துச் செல்லும் போது) வந்து, கோலி - (உன்னை) வளைத்துக் கொண்டு, நின்னெடும் - உன்மீது, வெம் சரம் கோத்த போது - கொடிய அம்புகளைப் பூட்டிப் போர் செய்யும் போது, ஆலம் அன்னவர்க்கு அல்லை-விஷம் போன்ற கொடிய அவ்வரக் கர்களுடன் எதிர்த்துப் போர் செய்ய முடியாதவனும், எற்கு அல்லை ஆல் - என்னைக் காப்பாற்ற முடியாதவனும், ஆவாய்; (ஆதலின்), தனிமையோய் - துணை யற்றவனாய் உள்ளவனே! சாலவும் தடுமாறும் - அப்போது (என் மனமும் உன் மனமும்) மிகவும் தடுமாற்றம் அடையும்.

அரக்கருக்கு ஆலம்: அவருடைய கரு நிறத்தையும், கொடிய செயலையும் கருதியதாம்; 'ஆல காலந் திரண்டன்ன ஆக்கையார்' (ஆரண்ய. கரன்வதைப். 11); 'இருடி ரண்டுவந் தீண்டிய தென்னவே' (ஆரண்ய. கரன்வதைப். 28). சாலவும் தடுமாறும் என்பதைப் பிராட்டி என்றேனும், அநுமன் என்றேனும் கொள்ளலும் ஆம்.

(பி-ம்.) 2. கோலி நின்னெடும் வெஞ்சமர் கோத்தபோ(து): வெஞ்சமர் நின்னெடுங். 3. எற் கல்லையேல்.
4. தடு மாறுந் தகுதியோ; தடு மாறுதி தன்மையோய்; தடு மாறுந் தகைமையோய். (13)

620. *அன்றி யும்பிறி துள்ளதொன் றாரியன்*
*வென்றி வெஞ்சிலை மாசு ணும் வேறினி*
*நன்றி யென்பதம் வஞ்சித்த நாய்களின்*
*நின்ற வஞ்சனை நீயு நினைத்தியோ.*

'அன்றியும் - இது அல்லாமலும், பிறிது ஒன்று உள்ளது - (என்னை நீ எடுத்துச் செல்லக் கூடாது என்பதற்கு) வேறு ஒரு காரணமும் இருக்கிறது; (அஃது என்ன வென்றால்), ஆரியன் - பூசிக்கத்தக்க இராம பிரானுடைய, வென்றி வெம் சிலை - வெற்றியைத் தரும் கொடிய வில், மாசு உணும் - (அதற்கு ஆற்றல் இல்லை என்று கூறும்படியான) ஒரு குற்றத்தைக் கொள்ள இடமாகும்; இனி வேறு - இதல்லாமல் வேறும் ஒன்று உள்ளது; (அது யாதெனில்), நன்றி என்பதம் - நலத்துக்கு உரிய தென்னும் தெய்வ காரியத்திற்கு அமைத்த அவிச்சோற்றை, வஞ்சித்த - திருட்டுத்தனமாய் அபகரித்து எடுத்துச் சென்ற, நாய்களின் நின்ற வஞ்சனை-நாய்களினிடத்து உள்ள திருட்டுச் செயலை, நீயும் நினைத்தியோ - நீகூட நினைக்கின்றாயோ?

வென்றி வெஞ்சிலை - விசய கோதண்டம். மாசு உணும் - தோஷத்தைத் தன்னிடம் கொண்டதாகும். வில்லிற்கு மாசு: 318; 624: இங்குக் கூறியவாறு அநுமனால் பிராட்டி விடுவிக்கப்படுவது இராமபிரானின் புகழுக்குக் குறைவாகும் என்று அவள் கூறிய செய்தி முதனூலிலும் கூறப்படும்: சுந்தர. 37: 55. பதம் - அவிசு; சூடா. நிகண்டு.: 'மிகு பதம் வரையாது கொடுத்தோய்' புறநா. 2: 16. 'அவிசை நாய் கௌவிக் கொண்டது போல' என்பது, உலகிற் பெரும்பாலும் வழங்கிவரும் பழமொழி; இதே கருத்தைப் பிராட்டி பஞ்சவடியில் தான் இருந்த பன்ன சாலையில் இராவணன் தன்னை அபகரிக்க வந்தகாலை, அவனை நோக்கி, 'அவியை நாய் வேட்ட தென்ன வென்சொனா யரக்க' (ஆரணிய. சடாயு வுயிர் 69.) என்று கூறியது காண்க. இவ்வுவமையையே இங்குப் பிராட்டி கூறியதாக அத்யாத்ம ராமாயணமும் கூறும். 'நன்றி என்பதம்' என்றது, உலக நன்மையின் பொருட்டுத் தேவர்களுக்கு வேள்வி முதலிய வைதிக அக்னியில் அளிக்கும் அவியுணவு என்க. நன்றிமென்பதம் என்ற பாடம் கிடைப்பின் சிறக்கும். அவி உணவு பிராட்டிக்கும், அதனை வஞ்சித்த நாய்கள் இராவணன் மாரீசன் முதலிய அரக்கர்களுக்கும் உவமை. நீயும்: உம்மை, உயர்வு சிறப்பின் வந்தது; உத்தம நெறியில் உள்ள நீயும், என்பதாம்; 'உத்தம' வெனு வினைய வாசக முரைத்தாள்' 559; 600 ஆம்செய்யுளாலும், அநுமன் உத்தம குணங்கள் விளங்கும். 'அரக்கர்கள் என்னைத் திருட்டுத் தனமாய் இங்குக் கொண்டுவந்தது போல, நீயும் என்னை இங்கிருந்து திருட்டுத் தனமாய் எடுத்துப் போவதை நினைக்கலாமோ?' என்று அநுமனுக்குப் பிராட்டி அறிவுறுத்தினாள் என்க; இங்கு உம்மை, எஞ்சியது தழுவிய எச்ச உம்மையாகும்.

(பி-ம்) 1. பிறி துண்டுள தாரியன்; பிறி தொன்றுள்ள தாரியன்; உள்ள துண்டாரியன்.
2. வென்றவெஞ்; மாசுறும்; மாசுன்னும் வீறுசால்: வென்றினி.
3. நன்றி யென் படுவர்: நன்றி யென்பவோ வஞ்சித்த நாயவன்; நன்றி மற்றிலை நாடி லிராவணன்: வஞ்சித்த நாய்தனை; வஞ்சித்த நாள்களில்,
4. நீரு நினைந்திரோ; நீரும் நினைப்பதோ; நீரும் நினைந்திரோ. (14)

621. *கொண்ட போரினெங் கொற்றவன் விற்றொழில்*
*அண்ட ரேவரு நோக்கவென் னாக்கையைக்*
*கண்ட போரரக் கன்விழி காகங்கள்*
*உண்ட போதன்றி யானுளெ னாவெனோ.*

'கொண்டபோரின்-மேற்கொண்டதாய் இனி உண்டாகும் போரில், எம் கொற்றவன் வில் தொழில் - எங்கள் அரசனான இராமபிரானுடைய விற்போரின் செயலை, அண்டர் ஏவரும் நோக்க - தேவர்கள் யாவரும் வியந்து பார்த்துக் கொண்டிருக்க, என் ஆக்கையைக் கண்ட போர் அரக்கன் விழி - என் உடம்பைத் (தகாத காதல் கொண்டு) பார்த்த போரிடும் அரக்கனான இராவணனுடைய விழிகளை, காகங்கள் உண்ட போது அன்றி - காக்கைகள் குத்தித் தின்றபோது அல்லாமல், யான் உளென் ஆவெனோ - யான் உண்மை உள்ளவள் ஆவேனோ?

'இராவணன் இராமபிரான் போரில் அம்பினால் இறந்து விழ, அவன் விழிகளைக் காகங்கள் கொத்தித் தின்னும்வரை யான் என்னை உயிரோடு உள்ளவளாகக் கருதமாட்டேன்' என்பது பிராட்டி கருத்து. பிறர் மனைவியை இச்சித்து நோக்கிய கண்களுக்குத் தண்டனை, அவ்விழிகளைக் காக்கைகள் குத்தித் தின்னும் நிலை அடைவதாகும். போர்க்களத்தில் இறந்துபட்டோர் விழிகளைக் காகங்கள் உண்பது; 666; ஆரண்ய. கரன்வதைப். 88; தக்க. 562.

(பி-ம்.) 1. போரினுங்: போரினுட்: போரிலென்: போரிலெங்: போரினுன்; போரினென்.
2. அண்ட ரானவர்; அண்ட வானவர்: ஏவருங் காண.
3. வாளரக் கன்.
4. யானுளங் கூர்வனோ: யானுள னுவனோ. (15)

622. *வெற்றி நாணுடை வில்லியர் விற்றொழில்*
*முற்ற நாணில ரக்கியர் மூக்கொடும்*
*அற்ற நாணின ராயின போதன்றிப்*
*பெற்ற நாணமும் பெற்றிய தாகுமோ.*

'வெற்றி நாண் உடை வில்லியர்-வெற்றியைத் தரும் நாண் பூட்டிய வில்லை ஏந்திய இராம லக்ஷ்மணர், வில் தொழில் முற்ற - தம் விற்களின் போர்த்தொழிலை முற்றுப்பெறும்படி நிறைவேற்ற, நாண் இல் அரக்கியர் - வெட்கம் இல்லாத அரக்கமாதர்களுடைய, அற்ற மூக்கொடும் அற்ற நாணினர் - மூக்கணிகளும், மங்கல நாண்களும் அற்றவர்களாய், ஆயின போதன்றி - ஆனபோது அல்லாமல், பெற்ற நாணமும் - நான் பெற்றுள்ள நாணம் என்ற குணமும், பெற்றியது ஆகுமோ - சிறப்புப் பெற்றது என்று சொல்லத் தகுமோ?

அற்ற என்ற சொல்லை நடுநிலையாகக் கொண்டு மூக்குடனும், நாணுடனும் கூட்டுக. மூக்கு - இங்கு மூக்கிலணியும் மூக்குப் பொட்டைக் குறிக்கும் ஆகுபெயர். கணவனை இழந்த மகள் மூக்குப் பொட்டும் மங்கல நாணும் குழையும் அகற்றியிருப்பர். அரக்கியர், நாண் என்னும் பெண்மைக் குணம் அற்றவர், என்பதும், பிராட்டி, அஃது நன்கு அமையப் பெற்றவள், என்பதும் இச் செய்யுளில் தொனிப்பதும் காண்க.

(பி-ம்.) 1. முற்றி நாணி லரக்கியர்; முற்று நாளில்; நாணிவ் வரக்கியர்.
3. மற்று நாணினர்; இற்ற நாணினர்; மற்று நாணிலர்: ஆக்கிய போதன்றிப். (16)

623. *பொற்பி றங்கலி லங்கை பொருந்தலர்*
*எற்பு மால்வரை யாகில தேயெனின்*
*இற்பி றப்புமொ ழுக்குமி ழுக்கமில்*
*கற்பும் யான்பிறர்க் கெங்ஙனங் காட்டுகேன்.*

'பொன் பிறங்கல் இலங்கை-பொன்மலையில் உள்ள இலங்கை நகர், பொருந்தலர் - பகைவர்களாகிய அரக்கர்களுடைய, எற்பு மால் வரை ஆகிலதே எனின் - எலும்பின் பெரிய மலையாக ஆகாவிடில், இல் பிறப்பும் - நற்குடியில் பிறந்த என் சிறப்பையும், ஒழுக்கும் - என் நல்லொழுக்கத்தையும், இழுக்கம் இல் கற்பும் - (சிறிதும்) வழுவுதல் இல்லாத என் கற்பையும், யான் பிறர்க்கு எங்ஙனம் காட்டுகேன் - நான் உலகில் உள்ள பிறர்க்கு எவ்விதம் தெரிவிக்கும் திறமுடையவளாவேன்!

இலங்கை நகர் பொன்மலையான மேருவின் சிகரங்களின் மூன்றால் அமைந்தது ஆதலின், பொற்பிறங்கல் இலங்கை எனப்பட்டது; 24. எற்பு- என்பு என்பதின் விகாரம். இழுக்கம் - வழுவுதல்; அல்லது தளர்ச்சி; 'இழுக்கம் இழிந்த பிறப்பாய் விடும்'; குறள். 133. பொன் மலையான இலங்கை என்பு மலையாக மாறுதல் என்றதின் சொன்னயம் நோக்கத் தக்கது. இக் கருத்தை, 'கற்புடைத் தேவியை விடாது காத்தியேல்,எற்புடைக் குன்றமா மிலங்கை'என்ற வீடணன் வாக்கிலும்(உயுத்த

வீடண. 56) காட்டப்படுகிறது. இற்பிறப்பு மொழுக்கு மிழுக்கமில் கற்பும் காட்டல்: 'இற்பிறப் பென்ப தொன்று மிரும்பொறை யென்ப தொன்றும் கற்பெனும் பெயர தொன்றும் களிநடம் புரியக் கண்டேன்' 1273. உயர்வு, குடிப்பிறப்பும் கற்பும்; கலித். முல்லை 14. நச். உரை. 'கற்பும் யான் பிறர்க் கெங்ஙனம் காட்டுகேன்;' ஒப்பு: 'கற்பினை யெப்பரி சிழைத்துக் காட்டுகேன்'; (508).

(பி-ம்.) 1. பொற்பி லங்கு மிலங்கை பொலிவழிந்(து): இலங்கை புகுந்தவர். 2. வரை யாக்கிய தில்லெனில்: ஆகிய தில்லென. 3. ஒழுக்க மிழுக்கு. 4. யான் பெற்ற தெங்ஙனங். (17)

624. *அல்லன் மாக்க ளிலங்கைய தாகுமோ*
*எல்லை நீத்த வுலகங்கள் யாவுமென்*
*சொல்லி னாற்சுடு வேனது தூயவன்*
*வில்லி னாற்றற்கு மாசென்று வீசினேன்.*

'அல்லல் மாக்கள் இலங்கையது ஆகுமோ - பிறருக்குத் துன்பத்தைத் தரும் (கொடிய) விலங்குகள் போன்ற அரக்கர் வாழும் இலங்கை அளவு உள்ளதாக மட்டும் ஆகுமோ? எல்லை நீத்த உலகங்கள் யாவும் - வரம்பு கடந்த உலகங்கள் எல்லாவற்றையும், என் சொல்லினால் சுடுவேன் - என் கோபத்தில் உண்டாகும் சாபச் சொல்லால் சுட்டு எரித்து விடுவேன்; அது - அவ்வாறு செய்வது, தூயவன் வில்லின் ஆற்றற்கு - பரிசுத்தனான இராமபிரானுடைய கோதண்டம் என்னும் வில்லின் வலிமைக்கு, மாசு என்று வீசினேன் - குறையை உண்டாக்கும் (என்று) அந்த எண்ணத்தை அப்புறம் வீசி அகற்றினேன்.

கற்புடை மகளிர் தம் கணவர் பெருமைக்குக் குறைவை நாட மாட்டாராதலின், 'தூயவன் வில்லி னாற்றற்கு மாசு என்று வீசினேன்' என்றாள்; 620 ஐயும் காண்க. சொல்லினால் சுடுதல்; மறக்கற்பு. 'வீரபத்தினி - மறக் கற்புடையாள்; கோப்பெருந்தேவி - அறக் கற்புடையாள்; ஆக ஆறியகற்புஞ் சீறிய கற்புமெனக் கற்பு இருவகை' என்று சிலப். பதிகம் 38-54. உரையையும் காண்க. இவ்வாறே இராமபிரானுக்கு அடியனான உண்மை அநுமனும் கூறினன்; 318.

(பி-ம்.) 1. அல்லின்: அல்ல ரக்க ரிலங்கைய தோமற்றம்: இலங்கையொடாகுமோ 4. மாசென்று விட்டெனன். (18)

625. *வேறு முண்டுரை கேளது மெய்ம்மையோய்*
*ஏறு சேவகன் மேனியல் லாலிடை*
*ஆறு மைம்பொறி நின்னையு மாணெனக்*
*கூறு மிவ்வுருத் தீண்டுதல் கூடுமோ.*

'மெய்ம்மையோய் - உண்மை நெறியில் உள்ளவனே! உரை வேறும் உண்டு - சொல்லத்தக்க வார்த்தை வேறொன்றும் உள்ளது; அது கேள் - அதனை நீ கேட்பாயாக; ஏறு சேவகன் - நாளும் உயர்ந்து வளரும் வீரத்தன்மையுடைய இராமபிரானது, மேனி அல்லாமல் - திருமேனியை அல்லாமல், இடை - நடுவே, ஆறும் ஐம்பொறி நின்னையும் - அடங்கி அமைதியுடன் இருக்கும் ஐந்து புலன்களையுடைய உன்னையும், ஆண் என கூறும் இ உரு - ஆண் என்று இலக்கணம் (அல்லது, உலகம்) சொல்லும் இந்த உன் உருவத்தை, தீண்டுதல் கூடுமோ - யான் தொடுதல் தக்கதாகுமோ?

மெய்மையோய் என்றது - நீ வஞ்சகமாய் பொய் சொல்ல வில்லை என்பதைக் குறிப்பதாம். அன்றியும், மெய்ந்நெறி காணின் நீயும் நான் சொல்வதின் உண்மையைக் காண்பாய் என்று கூறினளாகும். இராமபிரானை, 'ஏறு சேவகன்' என்பது; அயோத்யா. தைலமாட்டு. 42; ஆரண்ய. விராதன் வதைப். 32; உயுத்த. கும்ப. 342, 349; ஏறு சேவகன் என்பதற்கு ஆண் சிங்கம் போன்ற வீரத்தன்மையுடைய இராமபிரான் என்று பொருள் கூறுவாரும் உளர். ஆறுதல் - அடங்கி அமைதியோடு இருத்தல்; 'தெளிந்தாறிய பெரியார்' (வி. பா. தீர்த்த. 11). 'நீ ஐம்புலன்களை அடக்கிய மேலோனாயினும் ஆண் என்னும் பிரிவினில் உள்ளவன்; ஆதலின், உன் உருவை யான் தீண்டி, உன் தோளில் ஏறி வருவது என் பெண் தன்மைக்குத் தகாது' என்று கூறினள்; அதாவது, பழக்க மில்லாததையும் தீண்டத் தகாததையும் காணுங்கால் உண்டாகும் அருவருப்பு அல்லது கூச்சம் மகளிர்க்கு உள்ள அருங் குணங்கள் நான்கினுள் ஒன்றான பயிர்ப்பு என்றதாகும். அத்தன்மை மேலிட்ட பிராட்டி அநுமனை நோக்கி அவ்வாறு கூறினள் என்க. கற்பின் மகளிரின் இலக்கணங்களுள் ஒன்று கணவனல்லாத அன்னிய ஆண்களைத் தொடாமை என்பதும் குறிக்கப்பட்டது. கூறும் நின் உரு என்றதற்கு, நீ ஏறுதற்குக் காட்டிக் கூறிய உன் தேகம் என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. வேறு முண்டது: உண்டது மெய்ம்மையோய் கேளது; உண்டது கேளிது; உண்டது கேளுரை; உண்டொன்று கேளது: உண்டது கேளிது மெய்ம்மையே.
4. கூறி லிவ்வுருத்: தீண்டவுங் கூறுமோ. (19)

626. *தீண்டி னுனெனி னித்தனை சேண்பகல்*
*ஈண்டு மோவுயிர் மெய்யி னிமைப்பின்முன்*
*மாண்டு தீர்வனென் றேநிலம் வன்கையால்*
*கீண்டு கொண்டெழுந் தேகினன் கீழ்மையான்.*

'கீழ்மையான் - இழிந்த குணமுடைய இராவணன், தீண்டினன் எனின் - என்னைத் தொட்டிருந்தான் என்றால், இத்தனை சேண்பகல் உயிர் மெய்யில் ஈண்டுமோ - அவனுக்கு இவ்வளவு நெடிய காலம் உயிர் உடலில் பொருந்தி இருக்குமோ? இமைப்பின் முன் மாண்டு தீர்வன் என்றே - தொட்ட அந்தக் கணத்திலேயே இறந்து அழிந்து போவன் என்று அவன் கருதியே, நிலம் வன் கையால் கீண்டு கொண்டு எழுந்து ஏகினன் - (யான் இருந்த பன்னசாலை நின்ற) நிலத்தைத் தன் இருபது வலிய கைகளால் அடியோடு பெயர்த்து என்னை எடுத்துக் கொண்டு மேலே எழுந்து சென்றான்.

கீழ்மையான் என்றது, பிறர் மனைவியை விரும்பும் கீழ்மைக் குண முடையவன் என்பதாம்; 'பிறன்கடை நின்றாரிற் பேதையரில்' என்ற மையும் நோக்குக: (குறள். 142). தீண்டினன் எனில், 'இராவணன் உன்னை எடுத்துச் சென்றானே என்று நீ என்னைக் கேட்பாயானால்' என்று பிராட்டி அநுமனை நோக்கிக் கூறியதாகக் கொள்வாரும் உளர்; அப் பொருள் சிறவாது. இராவணன் பிறர் மனைவியை வலுவில் தீண்டினால் உடனே அவன் இறப்பன் என்பது அவனுக்கு ஏற்பட்டிருந்த சாபம். இச் சாப வரலாறு பின் அடுத்த செய்யுளால் விளங்குவது காண்க. இராவணன் நிலம் கீண்டு கொண்டெழுந்தேகியது. 'ஆண்டா யிடைதீ யவனு யிழையைத், தீண்டா லெனுமே லுரைசிந்தை செய்யாத், தூண்டா னெனலா முயர்தோள் வலியாற், கீண்டா னிலம்யோ சனை கீழொடு மேல்' (ஆரண்ய. சடாயுவுயிர். 74). இவ்வாறே இராவணன் பிராட்டியை நிலத்துடன் பெயர்த்தெடுத்தே கொண்டு போனான் என்று அத்யாத்ம. ஆரண்ய. 7: 52-53. கூறும்.

(பி-ம்.) 1. தீண்டு வானெனின்; தீண்டு வேன்; தீண்டி னேனெனில்; தீண்டினனென வித்தனை: இத்துணைச் சேண்பகல்.
2. ஈண்டு மேயுயி ரெண்ணி லிமைப்பின்முன்; ஈண்டு மெய்யுயி ரெண்ணி லிமைப்பின்முன்; ஈண்டு மோசிறி தெண்ணில்; வேண்டு மோசிறி தெண்ணில்.
3. மாண்டு போதுமன் றேநிலம்; போதுமென் றேநிலம்: தீர்வதன் றே: தீர்வனென் றெண்ணித்தன் வன்கையால்.
4. கீண்ட மண்ணொடிங் கேற்றினன்; கொண்டெழுந் தானந்தக் கீழ்மையோன். (20)

627. மேவு சிந்தையின் மாதரை மெய்தொடில்
தேவு பொன்றலை சிந்துக நீயெனப்
பூவின் வந்த புராதன னேபுகல்
சாவ முண்டென தாருயிர் தந்ததால்.
க. 60.

'மேவு சிந்தை இல் மாதரை - (உன்னை) விரும்பும் மனம் இல்லாத மகளிரை, நீ மெய் தொடில் - நீ அவர்களின் உடலைத் தீண்டுவாயானால், தேவு பொன்தலை சிந்துக - தெய்வ வரத்தோடு கூடியவையும், பொன் முடிகள் அணியப் பெற்றவையுமான உன் தலைகள் பத்தும் அறுந்து உதிர்ந்து போக;' என - என்று, பூவின் வந்த புராதனனே புகல்-திருமால் உந்தித் தாமரையில் தோன்றிய நீண்ட காலமாய் உள்ள பிரம தேவனே சொன்ன, சாவம் உண்டு - ஒரு சாபம் இராவணனுக்கு உண்டு; எனது ஆருயிர் தந்தது - (அச்சாபமே) என் அரிய உயிரை இதுவரை போகாது அளித்துக் காத்து வந்தது. ஆல்: அசை.

பிரமதேவரை வணங்கச் சென்ற புஞ்சிகஸ்தலை என்னும் அரமகளை இராவணன் கண்டு வலிந்து கற்பழிக்க, அதனை அறிந்த பிரமதேவர் இராவணனை நோக்கி, 'இனி உன்னை விரும்பாத மகளிரை நீ தீண்டுவை யேல் உன் தலைகள் அற்று உதிர, நீ அழிவு எய்துவை' எனச் சபித்தனர், என்று வான்மீகம். யுத்தகாண்டம் பதின்மூன்றும் சருக்கத்தில் கூறப் பெற்றுள்ளது. இத்தகைய சாபம் இராவணனுக்கு நளகூபரனாலும் அரம்பையாலும் இடப்பட்டது என்று உத்தர. திக்குவிசயப். 168 ஆம் செய்யுள் கூறும். படைப்பின் முதலில் திருமால் உந்தித் தாமரையி னின்றும் தோன்றினவர்; ஆதலின் பிரமதேவர், 'புராதனன்' எனப் பட்டார். சாப முண்டதென் னுருயிர் தந்ததால், என்று பாடம் கொள்ள லும் சிறப்புடைத்தாகும். தேவுபொன் தலை என்றது, இராவணன் தலைகள் பகைவரால் அறுப்புண்டாலும் அவை மீண்டும் முளைக்கும் தெய்வ வரம் பெற்றமையால்; அப்படி வரம் பெற்றிருந்தும் மேவு சிந்தையில் மாதரை மெய்தொடில் அத்தலைகள் மீண்டும் முளையாமல் அற்றுக் கீழே விழும் என்பதாம். புராதனனே என்ற ஏகாரம் தேற்றம். இராவண னுக்கு மூதாதையும் அவனுக்குப் பல நல் வரங்கள் ஈந்தவருமாய் இருந்தும் அப் பிரமதேவரே, ஆற்றுது இட்டார் என்பதைக் குறிப்பித்த தாம். பிரமசாபம் இராவணனுக்குள்ளமை; 1276; ஆரண்ய, சடாயு வுயிர், 143.

(பி-ம்.) 2. தேவு வன்றலை சிந்துக தீதெனப்; பாவி வன்றலை சிந்தெனப் பாரதி: சிந்தெனப் பார்மதிப்; சிந்தெனப் பாரினில்; சிந்தின தீதெனப்; சிந்திடப் போமெனுப்; சிந்துறுந் தீதெனப்.

3. புரந்தர னேபுகல்; புராதனன் முற்புகல். (21)

628. *அன்ன சாப முளதென வாணையால்*
*மின்னு மௌலியன் வீடணன் மெய்ம்மையான்*
*கன்னி யென்வயின் வைத்த கருணையால்*
*சொன்ன துண்டு துணுக்க மகற்றுவாள்.*

ஆண்மையால்

'அன்ன சாபம் உளது என - அப்படிப்பட்ட சாபம் ஒன்று இராவ ணனுக்கு ஏற்பட்டுள்ளது என்று, ஆணையால் - உறுதியாக (அல்லது பிரமாணமாக), மின்னு மௌலியன் - ஒளி வீசும் கிரீடத்தையுடைய வனும், மெய்ம்மையான் - உண்மை நெறியில் உள்ளவனுமான, வீடணன் கன்னி - வீடணனுடைய மகளாகிய திரிசடை என்பவள், துணுக்கம் அகற்றுவாள் - எனக்கு ஏற்பட்ட அச்சத்தினலுண்டான நடுக்கத்தைப் போக்குவாளாய், என் வயின் வைத்த கருணையால் - என்னிடம் அவள் வைத்துள்ள இரக்கத்தினல், சொன்னது உண்டு - எனக்குச் சொன்ன செய்தி ஒன்று உள்ளது.

மின்னு மௌலியன் என்றது, பிறகு அவ்வீடணன் இலங்கைக் கரசனுய் முடி சூட்டிக் கொள்வதைப் பிராட்டி ஆசி முகமாய் முன் கூட்டிக் குறிப்பிட்டருளினுள் என்பதாம். இதனல், பின்னர் வீட்ண னுக்கு இராமபிரான் உத்தரவுப்படி முடிசூட்டுவதற்கும் பிராட்டியின் ஆசீர்வாதம் முன்னதாகத் துணை நின்றது என்றுங் கொள்ளற்பாலதாம். வீடணன் கன்னி இராவணன் பெற்ற சாப வரலாற்றைப் பிராட்டிக்குக் கூறினுள் என்பது பின்னும், உயுத்த. விபீடணனடைக்கலப். 101 ஆம் செய்யுளிற் கூறப்பெறும்.

(பி-ம்.) 1. உளதென வாண்மையான்; என தாணையால்.
2. வீடணன் மேன்மையான்: மௌலியன் மெய்மைய வீடணன். மோலியன் வீடண னின்றருள், மெய்ம்மையான் வீடணன்.
3. கருணையாள். 4. உண்டென் றுணுக்க மகற்று வாள். (22)

629. *ஆய துண்மையி னுனும தன்றெனின்*
*மாய்வென் மன்ற வறம்வழு வாதென் றும்*
*நாய கன்வலி யெண்ணியு நானுடைத்*
*தூய்மை காட்டவு மித்துணை தூங்கினேன்.*

'ஆயது உண்மையினலும் - அந்தச் சாபம் இராவணனுக்கு ஏற் பட்டுள்ளது என்ற உண்மையினலும், அறம் மன்ற வழுவாது என்றும் - தருமம் நிச்சயமாகத் தவருது என்றும், நாயகன் வலி எண்ணியும் - என் தலைவனுன இராமபிரானுடைய வலிமையை நினைத்துப் பார்த்தும், நானுடை தூய்மை காட்டவும் - நான் கொண்டுள்ள என் தூய தன்மையை உலகுக்கு விளக்கிக் காட்டவும், இ துணை தூங்கினேன் - இவ்வளவு நாட்கள் (இங்கு யான் உயிர் வைத்துக்கொண்டு) தாமதித் திருந்தேன்; அது அன்று எனில் - அவ்வாறு இராவணனுக்கு ஒரு சாபம் இல்லையென்றல், மாய்வென் - இறந்தேயிருப்பேன்.

'உண்மையின் நானும் மன்ற மாய்வென்' என்று இயைத்துப் பொருள் கொள்வாரும் உளர். பிராட்டி உயிர்விடாது இருந்ததற்கு

இச் செய்யுளில் கூறிய காரணங்களோடு, இராவணன் அவளை மெய் தொட்டுத் தீண்டாமையும் (626) கூட்டிக் கொள்ளத் தகும். நானுடைத் தூய்மை காட்டவும், என்பது 621, 622, 623 ஆம் செய்யுள்களைத் தழுவி நின்றமை காண்க.

(பி-ம்.) 1. ஆய தன்மையி னுலும்: உண்மைய தாயினு மன்றேனில்.
2. மாய்வ னென்று மறம்; மாய்வ தென்று மறம்.
3. நானுடைத். 4. இத்தனை தூங்கினேன். (23)

630. *ஆண்டு நின்று மரக்க னகழ்ந்துகொண்*
*டீண்டு வைத்த திளவ லியற்றிய*
*நீண்ட சாலை யொடுநிலை நின்றது*
*காண்டி யையநின் மெய்யுணர் கண்களால்.*

'ஆண்டு நின்றும் - அப்பஞ்சவடியிலிருந்து, அரக்கன் அகழ்ந்து கொண்டு ஈண்டு வைத்தது-அரக்கனாகிய இராவணன் பெயர்த்தெடுத்துக் கொண்டு வந்து இங்கே என்னை வைத்திருக்கும் இடம், இளவல் இயற்றிய - இளைய பெருமானாகிய இலக்குவன் அமைத்த, நீண்ட சாலை ஒடும் - பெரிய பன்னசாலையுடனே, நிலை நின்றது - நிலைத்து இப்பொழுது இருப்பதை, ஐய - ஐயனே! நின் மெய் உணர் கண்களால் காண்டி - உன் உண்மையைக் கண்டறிய வல்ல கண்களால் பார்ப்பாயாக.

பன்னசாலை இளவல் இயற்றியது; ஆரண்ய. சூர்ப்பணகைப். 7. அதே பன்னசாலையிலேயே பிராட்டி அசோக வனத்தில் இருந்தது; 1275. மெய்யுணர் கண் - உண்மையை நல்லறிவால் துருவி உணரும் கண்; மெய்யுணர்வு - தத்துவஞானம். 'மெய்மையோய்' என்று பிராட்டி அநுமனை முன் (625) விளித்ததும் காண்க: முன் கூறிய 625 ஆம் பாட்டினால் பிராட்டி இராவணன் தன்னைத் தொட்டு எடுத்து வராது தன்னை மண்ணுடன் பெயர்த்து எடுத்து வந்தான் என்று சொல்லி, அப் பன்னசாலையையும் காட்டித் தன் தூய்மையைக் காட்டிக் கொண்டாள் என்க. கண்களால் காணல் என்றல், 216, 1269.

(பி-ம்.) 1. நின்றவ் வரக்கன். 3. சாலை யுடனிலை.
4. மெய்யுரைக் கண்; மெய்யுரை கண்; மென்மலர்க் கண்; மொய்ம்மலர்க் கண். (24)

631. *தீர்வி லேனி தொருபக லுஞ்சிலை*
*வீரன் மேனியை மானுமிவ் வீங்குநீர்*
*நார நாண்மலர்ப் பொய்கையை நண்ணுவேன்*
*சோரு மாருயிர் காக்குந் துணிவினுல்.*

'ஒரு பகலும் இது தீர்வு இலேன் - ஒரு போதும் இப் பன்ன சாலையை விட்டு நீங்காத நான், சோரும் ஆருயிர் காக்கும் துணிவினுல் - தளர்வுறும் என் அரிய உயிரைக் காக்க வேண்டும் என்ற உறுதியினுல், சிலை வீரன் மேனியை மானும்-வில் வீரனுன இராமபிரான் திருமேனியை ஒத்திருக்கும், இ வீங்கு நீர் - இந்த மிகுந்த தன்மையுடைய, நார நாண் மலர்ப் பொய்கையை நண்ணுவேன் - நீரையுடையதும், அன்று மலர்ந்த தாமரைப் பூக்களை உடையதுமான நீர்நிலையை (சிலநேரம்) சென்றடைவேன்.

அத் தாமரைப் பொய்கை இராமபிரான் திருமேனிக்கு ஒப்பாக இருப்பதால், அதனைக் கண்டால் இராமபிரானைக் கண்டது போன்ற ஓர் ஆறுதல் உண்டாவதால், அங்குப் பிராட்டி சென்ருள் என்பதாம். பொய்கையில் அடர்ந்துள்ள தாமரை இலைகள் இராமபிரானுடைய பசிய திருமேனிக்கும், ஆங்காங்குத் தோன்றும் தாமரை மலர்கள் அவனது கண் வாய் கை கால்களுக்கும், உவமையாய் இருந்தனவால், பிராட்டி அதனை நோக்கி ஒருவாறு இராமபிரானையே கண்டாற் போல ஆறுதல் அடைய அங்குச் செல்வாள் என்க; 'மாயக் கூத்தா வாமனு வினையேன் கண்ணு கண்கைகால், தூய செய்ய மலர்களாச் சோதிச் செவ்வாய் முகிழதாச், சாயல் சாமத் திருமேனி தண்பா சடையாத் தாமரைநீள், வாசத்தடம் போல் வருவானே ஒருநாள் காண வாராயோ' என்ற ஆழ்வார் அருளிச் செயலையும் (திருவாய்மொழி. 8. 5: 1) இங்கு நோக்குக.

(பி-ம்.) 1. எனதாருயிர் செஞ்சிலை; தீர்வி லென்னி லொருபொழு தும் சிலை.
2. வீரன் மேனி யெனுங்குளிர் மேவிய.
3. பொய்கையி னண்ணுவான்: நண்ணுறச்.
4. சேரு மாசையிற் காக்குந் திறத்தினுல். (25)

632. *ஆத லானது காரிய மன்றைய*
*வேத நாயகன் பாலினி மீண்டனை.*
*போதல் காரிய மென்றனள் பூவையக்*
*கோதி லானு மினையன கூறினுன்.*

'ஐய - ஐயனே! ஆதலால் - யான் மேற்கூறிய காரணங்களால், அது காரியம் அன்று - (நீ என்னை எடுத்துச் செல்வதாகக் கூறிய) அது செய்யத்தக்க காரியம் ஆகாது; இனி வேத நாயகன்பால் மீண்டனை போதல் காரியம் - இப்பொழுது வேதங்களுக்குத் தலைவனுன இராமபிரானிடம் திரும்பிப் போவதே நீ செய்யத்தக்க செயல் ஆகும்;' என்றனள் பூவை - என்று பிராட்டி கூறினுள்; அ கோது இலானும் - அந்தக் குற்ற

மற்ற அநுமனும், இனையன கூறினன் - (பின்வருமாறு) இவற்றைச் சொல்லலானான்.

பூவை - பெண். அது காரியம் அன்று என்றதால், அநுமன் 'என் தோளின் மீது யான் உன்னை எடுத்துச் செல்கிறேன்' என்றதைப் பிராட்டி தன் வாயால் மீண்டும் சொல்ல விருப்பமின்றிக் குறிப்பிட்டாள் என்க. இராமபிரானை வேத நாயகன் என்பது; 338, 1107; உயுத்த. அங்கதன் தூது. 21; கும்பகருணன் வதைப். 152.

(பி-ம்.) 1. ஆத லாலது வன்றைய காரியம்; காரிய மன்றுநீ; காரிய மன்றயர்.
2. பாலின்ன மீன்டனை: மீண்டயல்; மீண்டுறப்.
3. போத லேநல மென்றனள்; பூவையைக். (26)

## அநுமன், இராமபிரானிடம் கூறவேண்டுவன கேட்டல் 633-34

633. *நன்று நன்றிவ் வுலகுடை நாயகன்*
*தன்று ணைப்பெருந் தேவி தவத்தொழில்*
*என்று சிந்தை களித்துவந் தேத்தினன்*
*நின்ற சங்கை யிடரொடு நீங்கினன்.*

'நின்ற இடரோடு சங்கை நீங்கினன் - இச் சொற்களைக் கேட்டு, தான் அதுவரை கொண்டிருந்த துன்பங்களினின்றும் ஐயங்களினின்றும் நீங்கிய அநுமன், 'உலகுடை நாயகன் தன் துணை இ பெரும் தேவி தவத் தொழில் நன்று நன்று என்று - உலகங்கள் எல்லாம் தமக்கு நாயகனாகக் கொண்ட இராமபிரானுடைய வாழ்க்கைத் துணையாய் அமைந்த இந்தப் பெருமை வாய்ந்த தேவியாகிய பிராட்டியின் தவச் செயல் மிகவும் நன்ருய் உள்ளது' என்று, சிந்தை களித்து - மிகவும் மனம் மகிழ்வுற்று, உவந்து ஏத்தினன் - விருப்பினால் பிராட்டியைப் பாராட்டித் துதித்தான்.

நன்று நன்று: அடுக்கு உவகைப் பொருளது. இராமபிரானை, 'உலகுடை நாயகன்' என்பது; உயுத்த, அங்கதன்தூது. 22, உலகுடை நாயகன் என்பதற்கு உலகத்தைத் தனக்கு உடைமையாகக் கொண்ட அரசன் என்னலும் ஆம்; உலகு உடை நாயகன் தன் துணை பெருந் தேவி; உலகமாகிய பூமி தேவியின் நாயகனான திருமாலின் துணைவியான பெருந்தேவி என்னும் திருமகளான பிராட்டி என்றும் கொள்ளலாம்; பெருந்தேவி என்ற பெயர் திருக்கச்சிப் பதியில் கோயில் கொண்டு எழுந்தருளியுள்ள அருளாளப் பெருமான் தேவியாகிய திருமகளுக்கு வழங்கி வருவதும் காண்க; திருமகளைப் பெரிய பிராட்டி என்று சொல்வதும்

நோக்கத்தக்கது. சீதாப் பிராட்டியைப் பெருந்தேவி என்றமை, 324, 1270; பெரியாழ்வார் திருமொழி. 3. 10: 4. பிராட்டியின் தவச் செயல்: 401, 403, 1253, அநுமன் சங்கை இடரொடு நீங்கியது: இராவணன் பிராட்டியைத் தீண்டுவானோ அல்லது கொன்று விடுவானோ என்ற சங்கையும், அப்படி நிகழ்ந்துவிட்டால், இராமபிரான் முதலானவர்க்கும் தேவர்க்கும், முனிவர்க்கும் அறத்திற்கும் உண்டாகும் இடர்களும் ஆம்; இவை நீங்கியதாவது, இராவணன் பிராட்டியை அணுகானென்பதும், அவ்வாறின்றி அணுகினால், பிராட்டியின் கற்பின் ஆற்றலால் இராவணனோடு இலங்கையே அழிந்துவிடும் என்பதும் அறிந்தான் ஆதலானும் என்க. இக் கருத்துக் கொண்டே அவன் இராமபிரானிடம் மீண்டுவந்து கூறியபோது, 'அண்டர் நாயகவினித் தவிர்தி யையமும் பண்டுள துயருமென்' (1269) என்று கூறினான் என்க. 'நின்ற சங்கை - பிராட்டியை இராவணன் எப்படிக் கொண்டு வந்தானென்ற சங்கை' என்பது பழைய உரை.

(பி-ம்.) 2. தேவி நலத்தகை; தேவி தவச்செயல்.
3: களித்துவந் தெய்தினான். (27)

634. *இருளு ஞால மிராவண னாலிது*
*தெருளு நீயினிச் சில்பக றங்குறின்*
*மருளு மன்னவற் கியான்சொலும் வாசகம்*
*அருளு வாயென் றடியி னிறைஞ்சினான்.*

(மேலும் அநுமன் பிராட்டியை நோக்கி), 'நீ இனி சில்பகல் தங்குறின் - நீ இங்குச் சில நாட்கள் தங்கி யிருப்பாயெனில், இராவணனால் இருளும் ஞாலம் இது - இராவணனால் நன்னிலையினின்றி இருளடைந்ததுபோலக் கேடுற்ற இந்த உலகம், தெருளும் - தெளிவடைந்து மேன்மையுறும்: (ஆகவே, நான் செல்கின்றேன்); மருளும் மன்னவற்கு - உன் பிரிவினால் மயக்குற்று வருந்தும் இராமபிரானுக்கு, யான் சொலும் வாசகம்-யான் போய்ச் சொல்லக் கூடிய வார்த்தைகளை, அருளுவாய் - சொல்லி யருள்வாயாக;' என்று அடியின் இறைஞ்சினான் - என்று விண்ணப்பித்து அப்பிராட்டியின் திருவடிகளில் வணங்கினான்.

சில்பகல் என்றது, பிராட்டி கூறிய ஒரு மாத எல்லையைக் குறித்தது: அதற்குள் இராமபிரான் வானரப் படைகளுடன் அங்கு வந்து இராவணன் முதலிய அரக்கர்களை அழித்துப் பிராட்டியைச் சிறைவீடு செய்து மீட்டுக் கொள்வான் என்று அநுமன் உறுதி கொண்டு கூறியதாகும் - ஞாலம் தெருளும் - உலகம் இராவணனுடைய கொடுமையினின்றும் நீங்கி நலமுறும், இராமபிரான் அங்கு வந்து பிராட்டியை

மீட்டுப் போகும் வரை, பிராட்டி இவ்வுலக நலத்தைக் கருதி அங்குச் சிறையிருக்க வேண்டியதாகும் என்னும் உண்மையை அநுமன் உணர்ந்து கூறியது எனவும் கொள்ளக் கிடக்கும். இவ்வாறு பிராட்டி சிறையிருந்தமையாலன்றோ, 'ஸீதாயா: சரிதம் மஹத்' என்று வடமொழியிலும், 'சிறையிருந்தாள் ஏற்றங் கூறுவாம்' என்று தமிழ் மொழியிலும் ஆன்றோர் பிராட்டிக்கு ஏற்றங் கூறுவாராயினர்! இச் சிறப்புப் பற்றியே, 'சிறையிருந்தாள் ஏற்றம்' என்றே இராமாயணத்திற்கு ஒரு பெயரும் ஏற்பட்டது என்க. 'மருளும் மன்னவற்கு வாசகம் அருளுவாய்' என்றமையால், இராமபிரானின் மருட்சி நீக்கத்தக்க வாசகத்தையே அநுமன் விரும்பினன் என்று கொள்ள வேண்டும்.

(பி-ம்.) 1. இராகவ னுளிது.
2. தெருளு நிற்கொடு சில்பக லியிவண்: சில்பக றீங்குறில்; பகற் றிங்குறில். 3. மருவு மன்னவற். (28)

## பிராட்டி கூறியவை 635-44

635. *இன்னு மீண்டொரு திங்க ளிருப்பல்யான்*
*நின்னை நோக்கிப் பகர்ந்தது நீதியோய்*
*பின்னை யாவி பிடிக்கின் றிலேனந்த*
*மன்ன னாணை யிதனை மனக்கொணீ.*

'நீதியோய் - நீதி நெறியில் உள்ளவனே! யான் இன்னும் ஒரு திங்கள் ஈண்டு இருப்பல் - நான் இன்னும் ஒரு மாத காலம் தான் இங்கு இருப்பேன்; பின்னை ஆவி பிடிக்கின்றிலேன் - அவ்வொரு மாதத்திற்குப் பிறகு என் உயிரை வைத்துக் கொள்ளமாட்டேன்; அந்த மன்னன் ஆணை - அந்த இராமபிரான் மேல் இதனை ஆணையிட்டுக் கூறுகின்றேன்; நின்னை நோக்கிப் பகர்ந்தது இதனைநீ மனக்கொள் - உன்னை நோக்கிச் சொல்லிய இந்த உறுதியை நீ மனத்தில் (திடமாகக்) கொள்வாயாக.

இராமபிரானை, 'மன்னன் என்ற பெயரால் குறிப்பிட்டது, கணவன் என்ற முறையில் என்னைக் காக்க வராவிடினும், ஒரு மன்னன் என்ற முறையில் அவனுடைய பிரஜைகளுள் ஒருத்தி என்றுவது கருதிக் காக்க வேண்டிய கடமை அப்பிரானுக்கு உண்டு என்பதைச் சுட்டிக் காட்டியதாம். நம் தம் மன்னன் என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம். ஆணை என்பது தான் கூறிய உறுதி மொழிக்குச் சாட்சி கூறியதாகும். 'ஒரு திங்கள் இருப்பல் யான்' என்று சூளுரைத்தது, இராவணன், 'இரண்டு மாதத்திற்குள் நீ இணங்காவிடில் உன்னைக் கொன்றுவிடுவேன்' என்று கூறியுள்ளமையால் (479), அதற்கு முன்னதாக இராமபிரான் தன்னை மீட்க வேண்டுமென்ற நோக்கத்தோடு ஒரு மாத காலம் தவணை

கூறி, அது தவறினுல் தான் இறப்பது திண்ணம் என்பதைத் தெரிவிக்கு மாறு அறுதியிட்டதாகும். பிராட்டி, 'இன்னும் ஒரு திங்கள் இருப்பது' என்றது பின்னும் 638, 672; இல் வலியுறுத்தப்படுவது காண்க. வான்மீகத்திலும் இவ்வாறே ஒருமாத எல்லை குறித்துப் 'பின்னை உயிர் வாழேன்' என்று பிராட்டி கூறியதாகச் சொல்லியிருப்பது காண்க. 'பிடிக்கின்றிலேன்' என்றது அதற்கு முன்னரே நீங்க வேண்டிய நிலையில் உள்ள உயிரை அந்த ஒரு மாத அளவு வரை தான் வலிதிற் பிடித்து வைத்துக் கொள்வதாகக் கருதிக் கூறியது என்க. 'இதனை மனக்கொள் நீ' என்றது 'யான் கூறிய இந்த உறுதியின்படி இறந்துபடுவேன் என்பதையும், 'நீ இதை மறவாதே; மறந்தால் நீ இது காறும் எடுத்துக் கொண்ட முயற்சிகள் யாவும் பயனற்றுப் போம்' என்பதையும் அநுமனுக்கு அறிவுறுத்தியதுமாம். இச் செய்யுள் முதல் 644 முடிய பிராட்டி அநுமனிடம் கூறுதல்.

(பி-ம்.) 1. இருப்பனுல்.
2. நோக்கிப் பெயர்ந்தபி னீதியாற்: பகர்ந்திடின்: நீதியாய்.
3. பின்னை யாக்கை பிடிக்கு கிலேனுந்த: எங்குள்: எந்தன்.
4. மனக்கொள்வுாய். (29)

636. *ஆரந் தாழ்திரு மார்பற் கமைந்ததோர்*
*தாரந் தானல ளேனுந் தயாவெனும்*
*ஈரந் தானகத் தில்லையென் ருலுந்தன்*
*வீரங் காத்தலை வேண்டென்று வேண்டுவாய்.*

'ஆரம் தாழ் திரு மார்பற்கு - மாலை படிந்த அழகிய மார்பையுடைய இராமபிரானுக்கு, அமைந்தது - ஏற்ற, ஓர் தாரம் தான் அலள் எனும் - (நான்) ஒரு மனைவி என்பவள் அல்லாவிட்டாலும், தயா எனும் ஈரம் தான் அகத்து இல்லை என்ருலும் - (என்மீது) தயை என்ற ஈரப்பசை மனத்தில் இல்லாவிடினும், தன் வீரம் காத்தலை-(பிறருக்காக அன்றேனும்) தனக்கு உரித்தான வீரத் தன்மையைக் காப்பது, வேண்டு என்று - நீர் விரும்பத்தக்கது என்று, வேண்டுவாய் - இராமபிரானிடத்தில் நீ கேட்டுக் கொள்வாயாக.

இனி, 'ஆரந் தாழ் திருமார்பற்குத் தன் வீரங் காத்தலை வேண்டு என்று வேண்டுவாய்' என இயைத்தலும் ஒன்றும். அமைந்ததோர் தாரம் - எல்லா நற்குணங்களும் அமைந்த ஒரு மனைவி; தாரம், தயா. வடசொற்கள், தயா, தயை எனற்பாலது இங்கு இயல்பாய் நின்றது: ஈரம் - நீர்ப்பசை; இங்கு, இரக்கத்தைக் குறித்தது. எளியளாகிய என் நலம் கருதாவிடினும், தன் சுய நலமாகிய வீரத்தைக் கருதியாவது

இராமபிரான் தன்னை மீட்க வேண்டுமென்று பிராட்டி குறிப்பிட்டுச் சொல்லியது ஆகும். வேண்டு - தேவையானது அல்லது இன்றியமையாதது. வேண் + து = வேண்டு; தொழிற் பெயர்; வேண்டுகோடற் பொருண்மைக் கண் வந்தது. இனி, 'மார்பற்கு வேண்டு' என்று இயைத்து அதனை உருபு மயக்கமாகக் கொண்டு, மார்பனை வேண்டு என்று பொருள் கொள்வாரும் உளர். காத்தலை; ஐ: சாரியை.

(பி-ம்.) 1. ஆரந் தார்திரு; ஆரந் தாழ்ந்திரு; ஆரந் தாழகன் மார்பற்.
2. தாரந் தானலெ னேனும்; அலவென்னுந்: இவளென்னும்; அல்ல னேனும்; அல்ல ளேனும்.
3. ஈரந் தான்மனத்; தன்னகத்; இல்லளென் றுலுந்தன்.
4. வீரந் தாங்குதல் வேண்டென்று; காத்தலை வென்றென்று; விள்ளுவாய். (30)

637. ஏத்தும் வென்றி யிளையவற் கீதொரு
வார்த்தை சொல்லுதி மன்னரு ளாலெனைக்
காத்தி ருந்த தனக்கே கடனிடை
கோத்த வெஞ்சிறை வீடென்று கூறுவாய்.

'கூறுவாய்-என் விருத்தாந்தங்களைப் போய் இராமபிரானிடம் கூறும் நீ, ஏத்தும் வென்றி இளையவற்கு - யாவரும் கொண்டாடும் வெற்றி மேம்பாட்டையுடைய இளைய பெருமானான இலக்குவனுக்கு, மன் அருளால் எனை காத்து இருந்த தனக்கே - தலைவனான இராமபிரான் அருளிய கட்டளைப்படி என்னைக் காத்துக் கொண்டிருந்தவரான அவர் தமக்கே, இடை கோத்த வெம் சிறை வீடு கடன் என்று - நடுவில் வந்து புகுந்த கொடிய இச் சிறையினின்று விடுதலை செய்யும் கடமை உள்ளது என்று, ஈது ஒரு வார்த்தை சொல்லுதி - இந்த ஒரு செய்தியைச் சொல்வாயாக.

முன்னும் பின்னுமுள்ள செய்யுள்களின் வினை முடிவிகளின் போக்குக்கு இணங்க, 'இளையவற்கு ஒரு வார்த்தை சொல்லுதி' என்று தொகுத்துக் கூறி. 'மன்னனருளால் எனைக் காத்திருந்த தனக்கே இடை கோத்த வெஞ்சிறை வீடு கடன்' என்று கூறுவாய் எனப் பின் விரித்துக் கூறியதாகப் பொருள் கொள்ளலும் ஆம். இளையவற்கு என்பதில் உள்ள கு உருபு ஏழாம் வேற்றுமைப் பொருளில் வந்தது. காத்திருந்த தனக்கே; ஏ: தேற்றம்; பிரிநிலையும் ஆம்.

இதன்பின் சில சுவடிகளில் அடியிற் காணுமாறு ஒரு பாடல் அதிகமாக உள்ளது.

சேண்ட வானெறி செல்பகற் றீங்கற
மீண்டு தம்பியும் வீரனு மூர்புகப்
பூண்ட பேரன்பி னேருடன் போதியால்
ஈண்டி யான்வரம் வேண்டின னீறிலாய்.

(பி-ம்.) 1. ஏற்ற வென்றி; ஏற்றும் வென்றி; ஆர்த்த வென்றி: இளையவற் கிங்கொரு: ஈங்கொரு: ஆண்டொரு.
2. வார்த்தை கூறுதி: மன்னுயி ராலெனைக்.
3. காத்து நின்ற. (31)

638. *திங்க ளொன்றினென் செய்தவந் தீர்ந்ததால்*
*இங்கு வந்தில னேயெனின் யாணர்நீர்க்*
*கங்கை யாற்றங் கரையடி யேற்குந்தன்*
*செங்கை யாற்கடன் செய்கென்று செப்புவாய்.*

'திங்கள் ஒன்றின் என் செய்தவம் தீர்ந்ததால் - (நான் முன் கூறிய படி) ஒரு மாத கால அளவில் (யான் உயிர் வைத்திருப்பதான) என் தவ நியமம் முடிந்துவிடும் ஆதலால், இங்கு வந்திலனே எனின் - (அந்தக்கால அளவுக்குள்) இராமபிரான் இங்கு வரவில்லை என்றால், யாணர்நீர் கங்கை யாற்றங் கரை - அழகிய நீர்ப் பெருக்கையுடைய கங்கை நதிக் கரையில், அடியேற்கும் - அடியாளாகிய எனக்கும், தன் செம் கையால் கடன் செய்கென்று - தமது சிவந்த கையினால் இறந்தோர்க்குச் செய்யும் அந்திய கிரியையாகிய கடனைச் செய்து முடிக்கட்டும் என்று, செப்பு வாய் - (யான் சொன்னதாக நீ) சொல்வாயாக.

பிராட்டி உயிர் வாழ்வது ஒரு மாதம் என்று தவணை யிட்டது; 635. செய்தவம் - இராமபிரான் வந்து தன்னை மீட்பதற்காகச் செய்த தவம்; 633; உயுத்த. மீட்சிப். 74. யாணர் - அழகு; பிங்களம்; புது வருவாய் எனக் கூறுவாரும் உளர். ஆற்றங்கரை; அம் சாரியை; நாற்றங்கால் என்பது போல; ஆற்று அம் கரை - ஆற்றின் அழகிய கரை எனப் பொருள் கூறலும் ஆம். இது பிராட்டி மேற் குறிப்பிட்ட அந்த ஒரு மாதத் தவணை கடந்தால் இறப்பதை உறுதிப்படுத்தியதாகும். அன்றி யும், கங்கையாற்றங்கரை அடைந்தோர் அங்குத் தம் பிதுர்க்கள் நற்கதி யடையச் சிராத்தம், தர்ப்பணம் முதலியன செய்வது நம்மனோர் மரபு. அடியேற்கும்; உம்மை, இறந்தது தழுவிய எச்சவும்மை; அதாவது இராமபிரான் தம் தந்தை முதலிய தம் பிதுர்க்களுக்குச் சிராத்தம் தர்ப் பணம் முதலிய சடங்குகள் செய்வார்; அப்போது தனக்கும் செய்ய அநுமன் மூலம் கேட்டுக் கொண்டாள் என்பதாம். இனி, அடியேற்கும் என்ற உம்மை, மனைவி என்ற உரிமை பாராட்டா விடினும் என்னை

ஓர் அடியாளாகக் கருதியேனும் என்ற பொருளை உட்கொண்ட இழிவு சிறப்பும்மையாகவும் கொள்ளலாம், செய் தவம் தீர்ந்தது என்றது; உறுதிப்பொருளில் வந்த கால வழுவமைதி.

(பி-ம்.) 1. செய்தவத் தாலவன்: தீர்தலால்; தீர்தர.
2. வந்தில ரேயெனின்: யாண்டுநீர்க்.
3. கரைதனி லெற்குந்தன்; கரையினி லெற்குந்தன்,
4. செய்யென்று; செய்கெனச். (32)

639. *சிறக்கு மாமியர் மூவர்க்குஞ் சீதையாண்*
*டிறக்கின் றுதொழு தாளெ னுமின்னசொல்*
*அறத்தி னுயகன் பாலரு ளின்மையால்*
*மறக்கு மாயினு நீமற வேலையா.*

'ஐயா - அப்பனே! சிறக்கும் - பெருமையால் உயர்வுற்ற, மாமியர் மூவர்க்கும்-என் மாமியர்களான கோசலை, சுமத்திரை, கைகேயி என்னும் மூவர்க்கும், ஆண்டு இறக்கின்றுள் சீதை - அந்த இலங்கையில் இறக்கும் நிலையில் இருப்பவளான சீதை, தொழுதாள் எனும்-உங்களை வணங்கினுள் என்னும்; இன்ன சொல் - இந்த வார்த்தையை, அறத்தின் நாயகன் பால் - தருமத்தின் தலைவனுன இராமபிரானிடம், அருள் இன்மையால் - (என்பால் அப் பெருமானுக்குக்) கருணையில்லையாதலால், மறக்குமாயினும் - (என்னைப் பற்றி என் மாமியர்களிடம் சொல்ல) அவன் மறந்து போனுலும், நீ மறவேல் - நீ மறவாதே.

சிறக்கும் மாமியர் என்றது, சக்கரவர்த்தியின் பட்டத்துத் தேவியர் என்ற சிறப்புப் பற்றியும், மாமியர் என்ற மரியாதைக்குரிய சிறப்பு நோக்கியும் ஆம். இன்ன, அறத்தின் நாயகன் பால் சொல் என்றும், அருள் இன்மையால் அவ் விராமபிரான் மறந்து விடலாம்; ஆனுலும் நீ மறவாது அம் மாமியரிடம் சொல் என்றும், வகுத்துப் பொருள் கூறுவாரும் உளர். 'மறவேலையா': இரங்கிக் கேட்டுக் கொள்வதும் ஆம். இனி, இராமபிரான் அயோத்திக்குச் செல்லுங் காலை அவருடன் அநுமனும் போவான் என்ற நிச்சயத்தால் அங்கிருக்கும் மாமியர்க்குத் தன் வந்தனங்களை, அவ்வநுமன் மூலம் தெரிவித்துக் கொண்டாள் என்க.

(பி-ம்.) 3. அரு ளின்றியே. (33)

640. *வந்தெ னைக்கரம் பற்றிய வைகல்வாய்*
*இந்த விப்பிற விக்கிரு மாதரைச்*
*சிந்தை யாலுந்தொ டேனென்ற செவ்வரம்*
*தந்த வார்த்தை திருச்செவி சாற்றுவாய்.*

வந்து என்னை கரம் பற்றிய வைகல்வாய் - இராமபிரான் மிதிலா நகர் வந்து என்னைப் பாணிக்கிரகணம் செய்து மணந்து கொண்ட அந்த நாளில், 'இந்த இ பிறவிக்கு - இந்த மானிடப் பிறவியில், இரு மாதரை - இரண்டாவது மாதை, சிந்தையாலும் தொடேன்-என் மனத்தாற் கூட எண்ண மாட்டேன்;' என்ற - என்று உறுதி மொழி கூறியதான, செவ் வரம் தந்த வார்த்தை-சிறந்த வரம் தந்ததாகவுள்ள செய்தியை, திருச் செவி சாற்றுவாய் - அவர் காதில் (தனியே மெல்லச்) சொல்லுவாயாக.

இங்கு இராமபிரான் கூறியதாக உள்ள செய்தி பால காண்டத்தில் கூறப்படவில்லை. முன்னே கூருததைப் பின்னே எடுத்துக் கூறலாகிய கம்பர் மரபுக்கு இஃது ஓர் உதாரணமாகும். கரம்பற்றுதல் - பாணிக் கிரகணம் என்னும் மணச் சடங்கு. வைகல்-நாள், அல்லது முகூர்த்தம். சிந்தையாலும் என்பதற்கு உபலக்ஷணத்தால் வார்த்தையாலும் செய லாலும் என்று வருவித்துக் கொள்க. திருச் செவி சாற்றுவாய் என்றமை யால். 'பலர் கேட்க இடமின்றி, தனித்து மெதுவாக அவர் காதிற்படச் சொல்' என்ருள்; தன் நாயகன் மேல் தான் குறை கூறுவதாகப் பிறர் அறியக்கூடாதென்பது பிராட்டியின் கருத்து போலும். இஃது இரமா பிரானுக்குக் கூறியனுப்பிய அடையாள மொழியன்று. அவர் செய்த பிரதிக்ஞையை நினைவூட்டி அது தவருது வந்து தன்னை மீட்க வேண்டிய பொறுப்பைத் தெரிவித்து அப்பொறுப்பைக் கருதியேனும் தன்னை வந்து மீட்டுக்கொள்ளல் வேண்டும் என்பதை உணர்த்தியதாம். இந் தவிப் பிறவிக்கு; 'இற்றை இப்பகல்' (476); 'இந்தவிப்பெயர்' (உயுத்த. இரணியன் வதைப். (26) என்பன போல, உறுதிப் பொருளில் வந்தது. திருமாலாகவுள்ள நிலைமையில் இருபத்தியனியரைக் கொண்டிருக்க. இராமாவதாரமான நிலையில் ஏகபத்னீ விரதனுயிருக்கின்றமை தொனிப் பது காண்க. இரு மாதரை - இரண்டாவதாகிய மாதரை என விரிக்க.

(பி-ம்.) 2. பிற விக்கொரு; பிற விக்கினி மாதரை.
3. சிந்தை யால்நினை யேனென்று: தொடேமென்ற; என்று.
4. தந்த வாறு: செவிச் சாற்றுவாய். (34)

641. ஈண்டு நானிருந் தின் னுயிர் மாயினும்
மீண்டு வந்து பிறந்துதன் மேனியைத்
தீண்ட லாவதொர் தீவினை தீர்வரம்
வேண்டி னுடொழு தென்று விளம்புவாய்.

'ஈண்டு நான் இருந்து - இந்த இலங்கையிலேயே (நான் உம்மால் மீட்கப்படாமல்) சிறையிலிருந்து, இன் உயிர் மாயினும் - இனிய உயிர் நீங்கி இறந்தாலும், மீண்டு வந்து பிறந்து - மறுபடியும் உலகில் யான்

வந்து பிறந்து, தன் மேனியைத் தீண்டல் ஆவது ஓர் - அப்பெரு மானுடைய திருமேனியைத் தழுவி மகிழும்படியான ஒரு, தீவினை தீர் வரம் - குற்றமற்ற நல் வரத்தை, தொழுது வேண்டினுள் - வணங்கிக் கேட்டுக் கொண்டாள்' என்று விளம்புவாய் - என்று நீ விண்ணப்ப செய்து கொள்வாயாக.

தீவினை தீர் வரம் - பெருமானைப் பிரிதலாகிய கொடிய வினை நீங்கும் நல் வரம். ஒப்பு: 'மன்னவனே யிப்பிறப்பிற் கண்டு மணந்திலனேல், இன்னமொரு பிறப்பிலானுலுமேழையேன், தன்னந் தனியே யிருந்து தவ மாற்றியுமுன், பொன்னகல முள்ளுருகப் புல்லா தொழிவேனோ'; (நைடதம். பிரிவுறு:17); 'இம்மை மாறி மறுமை யாயினும், நீயா கியரென் கணவனை, யானு கியர்நின்னெஞ்சுநேர் பவளே'; (குறுந். 49: 3-5) இது காறும் பிராட்டி இராமபிரான் தன்னிடம் இரக்கங்கொண்டு வர மாட்டானோ என்றெண்ணிக் கூறியவை; அடுத்தசெய்யுள் தான் அவனுடனிருக்கும் பேறு பெறப் போவதில்லையென்று ஏங்கிக் கூறுவது.

(பி-ம்.) 1. நானிறந் தின்னுயிர்.
3. தீண்டி டும்படி தீவினை தீர்தவம்: செய்வினை தீர்வரம்: (35)

642. *அரசு வீற்றிருந் தாளவு மாய்மணிப்*
*புரசை யானையின் வீதியிற் போதவும்*
*விரசு கோலங்கள் காண விதியிலேன்*
*உரைசெய் தென்னையென் னூழ்வினை யுன்னுவேன்.*

'வீற்றிருந்து அரசு ஆளவும்-(இராமபிரான்) சிறப்புடன் எழுந்தருளி யிருந்து கோசல நாட்டை ஆட்சி செய்யவும், ஆய் மணி புரசை யானையின் வீதியில் போதவும்-அசையும் மணிகளோடு கூடியதும் கழுத் திலிடு கயிற்ருேடு கூடியதுமான யானைமீது (அயோத்திநகர்) அரச வீதியில் உலாப் போவதுமான, விரசு கோலங்கள் - பொருந்தி விளங்கும் அலங் காரங்களை, காண விதி இலேன் - (உடனிருந்து) கண்டு மகிழும் முன் செய்த நல்வினை யில்லாத யான், உரை செய்து என்னை - இப்பொழுது பேசுவதால் என்ன பயன் உண்டாகும்? என் ஊழ்வினை உன்னுவேன்-என் னுடைய பண்டை வினையைச் சிந்தித்து வருந்தி அடங்கியிருப்பவ ளாவேன்.

ஆய்தல் - அசைதல்; 'ஆய்மறியே'; (திருச்சிற். 125, உரை.) ஆய்மணிப் புரசை யானை - ஆராய்ந்து பொறுக்கி எடுத்த மணிகள் கோக்கப் பெற்ற கழுத்துக் கயிற்றையுடைய யானை என்னலும் ஒன்றும். புரசை - யானையின் கழுத்திற் கட்டும் கயிறு; பால. நகரப். 7; பெருங் 3. 20. 64, இது, பிராட்டி, பிறர் மீது குறை கூறிப் பயனில்லை யென்று தன் ஊழ் வினையை நோக்கி நொந்து கொண்டது என்க.

(பி-ம்.) 2. போகவும். 3. விரசை; விரைசெய்.
4. உரைசெய் தென்பல: யென் றாழ்வினை: ஊழ்வினை யுள்ளதேல். (36)

643. தன்னை நோக்கி யுலகந் தளர்தற்கும்
அன்னை நோய்க்கும் பரதனங் காற்றுறும்
இன்ன னேய்க்குமங் கேகுவ தன்றியே
என்னை நோக்கியிங் கெங்ஙன மெய்துமோ.

'தன்னை நோக்கி - (இராமபிரான்) தான் அயோத்தி நீங்கி வனத்திற்கு வந்ததை யெண்ணி, உலகம் தளர்தற்கும் - உலகத்து மக்கள் வருந்துவதற்கும், அன்னை நோய்க்கும்-தாயாகிய கௌசலையின் துன்பத்திற்கும், பரதன் அங்கு ஆற்றுறும் இன்னல் நோய்க்கும் - பரதன் அங்குப் பொறுமையுடன் இருந்து வருந்தும் துயரத்திற்கும், அங்கு ஏகுவது அன்றி - தீர்த்தருள அங்குப் போகாமல், என்னை நோக்கி - (ஒருத்தியும்) தகுதியற்றவளுமான) என் துன்பத்தை அவற்றினும் பெரிதாகக் கருதி, இங்கு எங்ஙனம் எய்தும் - இங்கு எவ்வாறு வந்தடைவார்? (வரமாட்டார் என்றவாறு). ஏ, ஓ: அசைகள்.

உடலை வருத்தும் நோய் போல இன்னல் மனத்தை வருத்து மாதலின் இன்னல் நோய் எனப்பட்டது. குடிகளும், தாயும், தம்பியும் அங்கு வருந்த அவர்களை நோக்காது, என் ஒருத்தியைக் கருதி என்னை விடுவித்துக் காக்க இராமபிரான் இங்கு வரான் என்பது பிராட்டியின் எண்ணம் என்பதாம் குடிகள் முதலியோர் வருத்தம்: அயோத்யா. நகர்நீங்கு, 96-114.

(பி-ம்.) 2. அன்னை மார்க்கும்: மன்னை நோக்கும்: மன்னை நோக்கிப் பரதன் மயங்குறும்; மயக்குறும்; மயங்கற்கும்.
3. இன்ன னேக்கியு மேகுவ தன்றியும்; இன்ன நோக்கி ஏகுத லன்றியே; அன்றியிங்(கு).
4. நோக்கிவந் தெங்ஙனம் ; நோக்கியு மெங்ஙனம் ; நோக்கின னெங்ஙனம்; நோக்கியீங் கெங்கனம். (37)

644. எந்தையர் முதலினர் கிளைஞர் யார்க்குமென்
வந்தனை விளம்புதி கவியின் மன்னனைச்
சுந்தரத் தோளனைத் தொடர்ந்து காத்துப்போய்
அந்தமி றிருநகர்க் கரச னுக்கென்பாய்.

'எந்தையர் முதலினர் - என் தந்தையாகிய சனக மகாராசன் முதலாக உள்ளவர்களான, கிளைஞர் யார்க்கும் - என் சுற்றத்தார் எல்லா

ருக்கும், என் வந்தனை விளம்புதி - என் வணக்கத்தைத் தெரிவிப்பாயாக: கவியின் மன்னனை - வானரங்களுக்கு அரசனை சுக்கிரீவனை (நோக்கி), சுந்தரத் தோளனை - அழகிய தோள்களையுடைய இராமபிரானை, தொடர்ந்து காத்துப் போய் - பின் தொடர்ந்து காப்பாற்றிச் சென்று, அந்தம் இல் திரு நகர்க்கு - அழிவற்றதான அழகிய அயோத்தி நகருக்கு, அரசன் ஆக்கு என்பாய்- முடிசூட்டி அரசனைச் செய்வாயாக என்று (யான் கேட்டுக் கொண்டதாக நீ) தெரிவிப்பாயாக.

இராமபிரானைச் சுந்தரத் தோளன் என்பது; பால. மிதிலைக் காட்சி. 56; கடிமணப், 56; அயோத்யா. மந்திரப். 72; ஆரண்ய. மாரீசன் வதைப். 240. அயோத்தி என்பதற்குப் பகைவரால் எதிர்க்க முடியாதது என்னும் பொருளுண்மையால் அந்தமில் நகர் எனப்பட்டது. 635 முதல் இதுகாறும் பிராட்டி கூறியவை.

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு ஒரு செய்யுள் அதிகமாக உள்ளது.

என்றுரைத் திடுதிபின் னயோத்தி யெய்தினல்
வென்றிவெஞ் சிலையினுன் மணம்வி ழைந்திடா
தன்றியே மறைநெறிக் கருக னல்லனல்
பொன்றிணி மௌலியும் புனைத லில்லையால்.

(பி-ம்.) 1. எந்தையே முதலிய; எந்தையாய் முதலிய: முதலிய்ன ரினைஞர்.
2. வந்தனை யியம்புதி; விளம்பினை.
3. தோள்களைத்; தோழனை.
4. அந்தமு ளிருநகர்க்; நந்தமுன் றிருநகர்க்; நெடுநகர்க்: அரசனுக்குவாய். (38)

## அநுமன் பிராட்டியைத் தேற்றுதல். 645-80

645. *இத்திற மனையவ ளியம்ப வின்னமும்*
*தத்துற வொழுந்திலை தைய னீயெனு*
*எத்திறத் தேதுவு மியைந்த வின்னுரை*
*ஒத்தன தெரிவுற வுணர்த்தி னனரோ.*

அனையவள் - அப்பிராட்டி, இ திறம் - இவ்விதம், இயம்ப - சொல்ல, (அநுமன்), 'தையல் - பிராட்டியே; நீ இன்னமும் - நீ இதன் மேலும், தத்துறவு ஒழிந்திலை - துன்புறுதலை விட்டாயில்லை'; எனு - என்று, எதிறத்து ஏதுவும் இயைந்த - எல்லாவிதக் காரணங்களும் அமைந்த, இன் உரை - இனிய ஆறுதல் மொழிகளோடு, ஒத்தன - பொருந்தின

வற்றை, தெரிவு உற - அறிந்து கொள்ளும்படி, உணர்த்தினன் - அறியச் சொன்னான். அரோ: அசை.

திறம் - விதம்; 'இத்தி றத்தி னிடருறு வாடனை' (அயோத்யா. நகர் நீங்கு. 15.) தத்துறல்-துன்பம்; பால, திருவவதாரப். 103; மிதிலைக் காட்சிப், 125. தையல் - பெண்.

(பி-ம்.) 1. இத்திற மினையன விளம்ப வின்னுநீர்; அனையன: இன்னன விளம்ப; இயம்ப வின்று நீர்.
2. தத்துற லொழிந்திலீர் தைய லீரென.
3. ஏதுவு மெடுத்தங் கின்னுரை; இசைந்த; இயைந்த தின்னுரை.
4. ஒத்திடும் படிதெளிந் துரைத்தன் மேயினன்: உணர்த்து வானரோ. (39)

வேறு

646. வீவாய் நீயிவண் மெய்யஃதே
ஓய்வா னின்னுயி ருய்வானும்
போய்வா னந்நகர் புக்கன்றே
வேய்வான் மௌலியும் மெய்யன்றே.

'நீ இவண் வீவாய்-நீ இவ்விடத்தில் இறந்து போவாய்! மெய் அஃதே - அது உண்மையானதே! இன்னுயிர் ஓய்வான் - (உன்பிரிவின் துயரால்), தன் இனிய உயிர் ஓய்வுற்று அழியும் நிலையில் இருக்கும் இராமபிரான், உய்வான் ஆம் - பிழைத்து உயிர் வாழ்வானும்! போய்-காட்டை விட்டுப் போய், வான் அ நகர் புக்கு-உயர்ந்த அந்த அயோத்தியா நகர் புகுந்து, மௌலியும் வேய்வான் அன்றே - மணிமுடி சூட்டிக்கொள்வான் அல்லனே? மெய் அன்றே - இவையனைத்தும் உண்மையாய் நிகழக் கூடிய காரியம் அல்லவோ? அல்ல என்பதாம்.

இச்செய்யுளில், பிராட்டி கூறியவற்றை (642. 644) அநுமன் ஏற்றது போல் மறுத்து எதிர்மறைப் பொருள்படக் கூறும் நயம் நோக்கத் தக்கது. ஏ, ஆம், ஓ என்பன எதிர்மறைப் பொருளன.

(பி-ம்.) 1. வீய்வாய் நீயிவண் மேவாதே: நீயிவண் மெய்யாதே: மெய்யாமே.
2. ஓவான்: ஓய்வாய் நின்னுயிர்: தன்னுயிர். (மெய், வாய்)
3. போவான்: போய்வா னிந்நகர்; மேய்வா னந்நகர்; போய் வாழ் நன்னகர்: புக்குவதும்.
4. மேய்வான் மௌலியும்: வேய்வர மௌலியு மெய்யன்றே: மோலியு மெய்யாமாம்; மௌலியு மேயன்றே, (40)

647. கைத்தோ டுஞ்சிறை கற்போயை
வைத்தோ னின்னுயிர் வாழ்வானும்
பொய்த்தோர் வில்லிகள் போவாராம்
இத்தோ டொப்பது யாதுண்டே.

'கற்போயை - கற்பின் நெறியில் உள்ள உன்னை, கைத்து ஓடும் சிறை வைத்தோன் - யாவரும் வெறுத்து விலகி ஓடும்படியான கொடிய சிறையில் வைத்த இராவணன், இன் உயிர் வாழ்வானும் - தன் இனிய உயிரோடு வாழ்ந்திருப்பானும்! ஓர் வில்லிகள் பொய்த்து போவாராம் - ஒப்பற்ற வில்லையுடைய இராம லக்ஷ்மணர்கள் தங்கள் கடமையினின்றும் தவறிப் போவார்களாம்! இத்தோடு ஒப்பது யாது உண்டு - இந்தச் சொற்களுக்கு ஒப்பாகக் கூறுவதற்கு வேறு என்ன இருக்கிறது? ஒன்றுமில்லை என்றபடி ஏ: அசை.

கற்போய்; ஓய், விளி உருபு; கற்பு ஓய் எனப் பிரித்து, கற்பின் நெறியில் உள்ள அன்னையாகிய உன்னை, எனப் பொருள் கொள்ளலும் ஏற்கும் ஓய் - அன்னே; 'என்னினிச் செய்வ தெம்மோய்' (1272), பொய்த்தல் - தவறுதல்; 'விண்ணின்று பொய்ப்பின்' (குறள். 13); "வான் பொய்ப் பினுந் தான் பொய்யா, மலைத்தலைய கடற்காவிரி" (பட்டினப். 5-6,); பொய்த்து - முன் தண்டக வனத்து முனிவர்களுக்குக் கூறிய உறுதி மொழியைத் தவறி, என்னலும் ஆம். வில்லிகள் என்றது, தம் வில் வலி காட்டி இராவணன் முதலிய அரக்கர்களை அழித்து உம்மை மீட்காது போகார் என்பதையும், தண்டக வனத்து முனிவர்க்குத் தம் வில்லை முன்னிட்டு 'அமைந்த வில்லு மருங்கணைத் தூணியுஞ், சுமந்த தோளும் பொறைத் துயர் தீருமால்' (ஆரண்ய. அகத்தியப். 20,) என்று இராமபிரான் சூளுரை கூறியதையும் குறிப்பிட்டபடி என்னலும் ஒன்றும். இதோடு என்பது இத்தோடு என எதுகை நோக்கி, விரித்தல் விகாரம் பெற்றது. 'கைத்தோடும் சிறை-உன் கற்புக்குப் பயந்துதானே வெறுத்தோடும் சிறை' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. கைத்தா குஞ்சிறை. 2. வைத்தோ னிங்குயிர்;
3. பொய்த்தே வில்லிகள்; போய்த்தோ ராவிகள்.
4. ஒப்புளதி யாது; ஒப்புள யாது; ஒப்புள தேதுண்டோ. (41)

648. நல்லோய் நின்னை நலிந்தோரைக்
கொல்லோ மெம்முயிர் கொண்டங்கே
எல்லோ முஞ்செல வெங்கோனும்
வில்லோ டுஞ்செல வேண்டாவோ,

'நல்லோய் - நற்குணமுடைய பிராட்டியே! நின்னை நலிந்தோரை - உன்னை வருத்திய அரக்கர்களை, கொல்லோம் - கொல்லாதவர்களாகி, எம் உயிர் கொண்டு - எங்கள் உயிரையே பெரிதாகப் பாதுகாத்துக் கொண்டு, எல்லோமும் அங்கே செல - நாங்கள் எல்லோரும் அயோத்திக்கு உடன் செல்லவும், எம் கோனும் - எங்கள் தலைவரான இராமபிரானும், வில்லோடும் செல வேண்டாவோ-வில்லேந்தியவராய் அயோத்திக்குச் செல்லவும் வேண்டாவோ?

வேண்டாவோ என்பது, வேண்டுங் காரியம் அன்று என்னும் எதிர் மறைப் பொருளது. ஆதலின், 'யாங்களும் இராமபிரானும் அரக்கரைக் கொன்று உம்மை மீட்டுக் கொண்டன்றி அயோத்திக்குப் போகோம்' என்று அநுமன் உறுதி கூறியதாம். இதில் அநுமன், தன்னையும் மற்ற வானர வீரர்களையும் உட்படுத்தியது, தம் அரசனுன சுக்கிரீவன் இராமபிரானிடம் தான் பிராட்டியை மீட்டுத் தருவதாக முன் உறுதி கூறியுள்ளதைக் கருதி என்க. சுக்கிரீவன் உறுதி கூறியது; கிட்கிந்தா. கலன் காண். 18-26. வில்லோடும் என்றது, வில்லிருக்கவும் அதனை உபயோகித்துப் பகைவரை அழித்துப் பிராட்டியை மீட்காது சென்ருல் இராமபிரானேடு அவன் கை வில்லுக்கும் பழிப்புண்டாகும் என்பது தெரிவித்தபடி. இராமபிரானின் வில் பழி பூணுவதை அநுமனும் பிராட்டியும் விரும்பாதவர்கள்; ஆதலால் அதனை இங்குப் புலப்படக் கூறினன் அநுமன் என்க; 318, 624,

(பி-ம்.) 1. நல்லாய்: நலிந்தோனைக்.
2. கொல்லா தெம்முயிர்; கெல்லோ மேலுயிர்; கொல்லே மெம்முரை. 3. எல்லோரு முடனெங் கோனும். (42)

649. *நீந்தா வின்னலி னீந்தாமே*
*தேய்ந்தா ருத பெருஞ்செல்வம்*
*ஈந்தா னுக்குனை யீயாதே*
*ஓய்ந்தா லெம்மி னுயர்ந்தார்யார்.*

'நீந்தா இன்னலின் நீந்தாமே - (நாங்கள்) நீந்திக் கடக்க முடியாத துன்பக் கடலில் நீந்தி வருந்தாமல், தேய்ந்து ஆருத பெரும் செல்வம்-குறைந்து அடங்காத பெரிய செல்வத்தை - ஈந்தானுக்கு, எங்களுக்கு அளித்த இராமபிரானுக்கு, உனை ஈயாதே-உன்னை (மீட்டு) அளிக்காமல், ஓய்ந்தால் - செயலற்று (நாங்கள்) அடங்கியிருந்தோமானுல், எம்மில்-வானரர்களாகிய எங்களைப் போல, உயர்ந்தார் யார்-உயர்ந்தவர்கள் வேறு யார் இருக்க முடியும்? (இழிந்தோர் ஆவோம்) என்றபடி.

இன்னலில் நீந்தாமே, என்றமையால் இன்னல், துன்பக் கடல் என்னப்பட்டது. இன்னல் நீ நீந்தாமே என்று கொண்டும் பொருள்

உரைக்கலாம். ஆருத செல்வம்-அடங்காத செல்வம்; ஆறுதல் அடங்கி யிருத்தல்; இனி, அருத என்பது ஆருத நீண்டதென விகாரப்படுத்து வாரும் உளர். பெருஞ் செல்வம் ஈந்தது, வாலியைக் கொன்றுசுக்கிரீவனைக் கிட்கிந்தைக்கு அரசனுக்கியது. இது, தம் தலைவனுன சுக்கிரீவனுக்கு அளித்த சிறப்பைத் தன்னேடு சேர்ந்த வானரர்களுக்கு அளித்ததாக அநுமன் பாராட்டிக் கூறியது ஆகும். இதற்கு ஒப்பு. உயுத்த. திருமுடி சூட்டுப். 40 ஆம் உயர்ந்தார் யார் என்பது இழிந்தார் என்ற பொருளிற் கூறிய வஞ்சப் புகழ்ச்சியுமாம். எம்மின் உயர்ந்தார்-எம்மை விட உயர்ந்தோர்கள் என்று எல்லாப் பொருளிலும் பொருள் கொள்ளலாம். இச் செய்யுள், 'எந்நன்றி கொன்ருர்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்ற (குறள். 110) கருத்தைக் குறித்தது.

(பி-ம்.) 1. நீந்தா வின்னலை: விந்நிலை: நின்னிலை: நீந்தா வுன்சிறை நீங்காதே. 2. தேய்ந்தே ருத; தேய்ந்தோ டாத. 4. ஓய்ந்தார் தம்மி னுயர்ந்தாரார். (43)

650. *நன்ருய் நல்வினை நல்லோரைத்*
*தின்ருர் தங்குடர் பேய்தின்னக்*
*கொன்ரு லல்லது கொள்ளேனு*
*டென்ரு னுக்கிவை யேலாவோ.*

'நல் வினை நன்று ஆய் நல்லோரை - தவம், நியமம் முதலிய நற் கருமங்களை நன்ருக ஆராய்ந்து செய்யும் நல்லோர்களான முனிவர்களை, தின்ருர் தம் - கொன்று தின்ற அரக்கர்களுடைய, குடர் பேய் தின்ன - குடல்களைப் பேய்கள் தின்னும்படி, கொன்ருல் அல்லது நாடு கொள்ளேன்-கொன்று தீர்த்தா லல்லாமல் யான் என் கோசல நாட்டுக்கு அரசனுகப் போவதை ஏற்றுக் கொள்ள மாட்டேன்;' என்ருனுக்கு - என்று தண்டகவன முனிவர்களுக்குச் சூளுரை கூறி அபயமளித்த இராமபிரானுக்கு, இவை ஏலாவோ-நீ கூறியவை ஏற்காவோ? (ஏற்கா என்றபடி.)

ஏல் - தகுதி அல்லது பொருத்தம்; ஏலாவோ, என்பது முன் செய்யுள்களில் வந்தன போல எதிர்மறைப் பொருளது. இராமபிரான் தண்டகவனத்து முனிவர்களுக்குக் கூறியது; ஆரண்ய. அகத்தியப். 17-22. இராமபிரான் அரக்கர்களை அழித்தன்றித் தன் நாட்டுக்குத் திரும்பேன்' என்று முனிவர்க்கு உறுதி கூறியதை வலியுறுத்திப் பின் சூர்ப்பணகையிடத்தும் கூறியது காண்க; ஆரண்ய. சூர்ப்பணகைப். 136.

(பி-ம்.) 1. நன்று நல்வினை: நன்றே: நன்றால்: நன்றால் நல்லுரை நல்லோரைத். 2. குடர் கொய்தின்னங்.
3. கொன்று ரல்லது: கொள்ளாநா(டு). 4. ஏயாவோ. (44)

651. *மாட்டா தார்சிறை வைத்தோயை*
*மீட்டா மென்கில மீள்வாமே*
*நாட்டார் நல்லவர் நன் னூ லும்*
*கேட்டா ரிவ்வுரை கேட்பாரோ.*

'மாட்டாதார் - பகைவரான அரக்கர்களால், சிறை வைத்தோயை - சிறைவைக்கப்பட்ட உன்னை, மீட்டாம் என்கிலம் - மீட்டுக் கொண்டோம் என்னும் பெருமையைப் பேசாதவர்களாய், மீள்வாமே-யாங்கள் திரும்பிப் போவாமோ ? (மாட்டோம் என்றபடி); நாட்டார் - நாட்டில் உள்ளோர்களான, நல்லவர் - நற்குணமுள்ளார்களும், நல் நூலும் கேட்டார் - நல்ல சாத்திர நூல்களைக் கேட்டு அறிந்தோர்களுமான பெரியோர்களும், இ உரை கேட்பாரோ - இப்படிப்பட்ட வார்த்தைகளைக் கேட்டு ஏற்றுக்கொள்வார்களோ ?

மாட்டாதார் - சேர மாட்டார்தவர்களான பகைவர்கள்; அருகே இல்லாதவர்; மாடு - அருகு; கூடாதார், ஒட்டாதார் என்பன போல. கேட்டார் - நூல் கேட்டார்; குறள். 643. பரி. உரை. வைத்தோயை; செய்வினை, இங்குச் செயப்பாட்டு வினைப் பொருளில் வந்த வினையாலணையும் பெயர். நாட்டார் - நாட்டிலுள்ள பொதுமக்களும் என்று தனித்துப் பொருள் கொள்ளலும் ஒன்றும்.

(பி-ம்.) 1. மாட்டா தான்: வைத்தாயை,
2. மீட்டோ மென்கில மீளாபோ; மீட்டோ மென்றசொல் விள்ளாமல்; என்குலம் வீவாமே; என்கிலம் வீவாமே: மீள்வாமேல்; மீள்வான்மேல்.
3. நாட்டார் நட்பினர் நன்னூலோர்.
4. கேட்டார்; கேட்டர லென்ன கிளர்ப்பாரோ. (45)

652. *பூண்டாள் கற்புடை யாள்பொய்யாள்*
*திண்டா வஞ்சகர் தீண்டாமுன்*
*மாண்டா ளென் று மனந்தேறி*
*மீண்டால் வீரம் விளங்காதோ.*

'பூண்டு ஆள் கற்பு உடையாள் - கற்பை அணிகலமாகப் பூண்டு ஆளும் சீதாதேவி பொய்யாள் - தான் கூறிய தவணை தவறுதவளாய்,

தீண்டா வஞ்சகர் தீண்டாமுன் - நெருங்கத்தகாத கவட்டுத் திருட்டுத் தனமுடைய அரக்கர் தன்னைத் தொடுவதற்கு முன்னமே, மாண்டாள் என்று - இறந்து விட்டாள் என்று அறிந்து, மனம் தேறி - இராமலக்ஷ்மணர்களும், யாங்களும் மனம் தெளிவடைந்து, மீண்டால் - வீணே திரும்பிச் செல்வோமேயானால், வீரம் விளங்காதோ - எங்கள் வீரத் தன்மை விளங்க மாட்டாதோ? (சிறிதும் விளங்காது என்பதாம்;)

பொய்யாள் - ஒழுக்கம் தவருதவளாய் என்று பொருள் கொள்ளலும் ஒன்றும்; 647, உரை. தீண்டா வஞ்சகர்: இராவணன் பிராட்டியை மெய் தொட்டுப் பற்றிக் கொணராது அவள் இருந்த பன்னசாலையோடு பெயர்த்து எடுத்து வந்தான் என்ற செய்தியை உறுதிப் படுத்துவதாகக் கூறுவதும் ஆம். விளங்காதோ: இது எதிர்மறைப் பொருளில் வந்த பிற குறிப்பாகும்.

(பி-ம்.) 1. பொய்ம்மை. 2. தீண்டாள்.
3. என்னு மனந்தேறி; என்ன மனந்தேறி. (46)

653. *கெட்டேன் நீயுயிர் கேதத்தால்*
*விட்டா யென்றிடின் வெவ்வம்பால்*
*ஒட்டா ரோடுல கோரேழும்*
*சுட்டா லுந்தொலை யாதன்றே.*

'கெட்டேன் - ஐயோ! அழிந்தேன்! நீ கேதத்தால் உயிர் விட்டாய் என்றிடில் - நீ சோகத்தால் உன் உயிரை விட்டு நீங்கினாய் என்றால், (பிறகு) வெம் அம்பால் - கொடிய தனது அம்பினால், ஒட்டாரோடு - பகைவர்களான அரக்கர்களோடு, ஓர் உலகு ஏழும் சுட்டாலும் - (இராமபிரான்) உலகங்கள் ஏழையும் எரித்து அழித்தாலும், தொலையாது அன்றே - அவரோடு எங்கட்கும் ஏற்படும் பழி நீங்காது அல்லவோ?

கெட்டேன் - இரக்கக் குறிப்பைக் குறிக்கும் ஒரு சொல். பிராட்டி உயிர் விடுவதாகக் கூறியது; 638. உலகு ஏழும் சுட்டாலும் என்றது, முன் இராமபிரான் சினந்து கூறியதைக் குறிப்பிட்டதும் ஆம்; 568; ஆரண்ய. சடாயுவுயுர். 204-206.

(பி-ம்.) 1. கெட்டே நீயுயிர்; கெட்டே னின்னுயிர்; கிட்டா துன்னுயிர்.
2. விட்டா யென்றனை: மெல்லம்பால்; மேலம்பால்; மேலன்பால்; மேலென்பால்; மேலம்பார்; மேலென்பரர்.
3. ஒட்டா ரேழுல கோரம்பால்: உல கீரேழும்.
4. சுட்டா னுந்: சுட்டா டுந்தொலை யாமன்றே: தொலை யாதம்மா. (47)

654. *முன்னே கொல்வான் மூவுலகும்*
*பொன்னே பொங்கிய போர்வில்லான்*
*என்னே நின்னிலை யீதென்ருல்*
*பின்னே செம்மை பிடிப்பானே.*

'பொன்னே - திருமகளான பிராட்டியே! முன்னே மூவுலகும் கொல்வான் பொங்கிய போர் வில்லான் - முன்பே, மூவுலகங்களையும் கொல்லும் பொருட்டுக் கோபித்து எழுந்த போரிற் சிறந்த வில் ஏந்திய இராமபிரான், நின் நிலை ஈது என்ருல் - உன் தன்மை இவ்வாறு உள்ள தென்று நான் சொன்னுல், பின்னே - அதைக் கேட்ட பின்னும், செம்மை பிடிப்பானே - பொறுமையைக் கடைப்பிடிப்பானே? என்னே - இஃது எவ்வாருகும்?

முன்னே மூவுலகும் கொல்வான்; என்றது; 653 உரை. பொன்னே என்றது பிராட்டி திருமகள் அவதாரம் என்ற உண்மையை அநுமன் அறிந்து கூறியது; 'இவள் கமலச் செல்வியே' (395), என்றமை நோக்குக. செம்மை, இங்குப் பொறுமை யென்ற பொருளில் நின்றது; சிறப்பு, சமாதானம். நன்னிலைமை என்றும் பொருள் கொள்ளலாம்.

இச் செய்யுள் ஓரேட்டில் கீழ்க்காணுமாறு உள்ளது.

அன்னே நீயிறந் தாயென்ருல்
முன்னே மூவுல கும்முண்டோன்
தன்னே ராவி தரித்தாலும்
பின்னே ருவி பிடிப்பானே.

(பி-ம்) 1. முன்னே மூவுல குங்கொல்வான்: கொல்வான்:
2. ஓங்கிய போர்வில்லான்
3. இன்னிலை யென்ருலும்; நீயிலை யென்ருலும்.
4. பின்னே மெய்மை. (48)

655. *கோளா ருயிர் கோளோடும்*
*மூளா வெஞ்சின முற்ருகா*
*மீளா வேலயல் வேறுண்டோ*
*மாளா தோபுவி வானேடும்.*

மூளா வெம் சினம்-(எளிதில்) மேற் கிளம்பாத இராமபிரானுடைய கொடுங்கோபம், கோள் ஆனர் உயிர் கோள் ஒடும் - தீயோரான அரக்கர்களுடைய உயிர்களைக் கொள்ளுதல் மட்டுமோடு, முற்று ஆகா-முற்றுப் பெற்றதாய் அடங்காது; மீளாவேல் - அவர் கோபம் திரும்பி அடங்கா விட்டால், புவி வானேடும் மாளாதோ - இப்புவி வானுலகோடு சேர்ந்து

அழியாதோ? (அழிந்து போகும் என்றபடி): அயல் வேறு உண்டோ - பிறிதுவேறு ஒன்று உள்ளது ஆகுமோ?

கோள் ஆனர் - கொலையை மேற்கொண்டவர் என்றும் பொருள் கூறுவர், கோள் - கொலை; கிட்கிந்தா. அநுமப். 12. கோள், இராகு கேது என்னும் கொடிய கிரகங்கள் போன்ற அரக்கர் என்றலும் அமையும். மூளா வெஞ்சினம்: மேலோங்காத கொடும் சினம்; அதாவது இராமபிரான் இயல்பிலே கோபத்தை அடக்கியாளும் பொறுமைக் குணம் அமைந்தவன் என்பதாம். அயல் வேறுண்டோ என்பதற்கு, அவ்வரக்கர் தப்பியோடுதற்கு வேறு இடம் உண்டோ என்றும் பொருள் கொள்ளலாம்; 'போதலோ வரிது போனற் புகலிட மில்லை' (உயுத்த. கும்பகருணன் வதைப். 140.) சில பிரதிகளில் இச் செய்யுள் இடம் மாறி உள்ளது.

(பி-ம்.) 1. கோளா ருருயிர்: கோளா ருனுயிர்; கேளாய் நின்றுயிர்: உயிர் கேளோடும்; உயிர் கேடானல்.
2. மூளான் வெஞ்சின மூண்டாக்கால்; முற்முக; முற்முத: முற்ருது; முற்ருதே.
3: மீளா மேலவன்; மீளா வேலவை; மீளா மேல்வரின்; மீளா வேலவன்; மீளா தேபின்னும்; மீளா வெல்வன; மீளா மேல்வயின். 4. தெரி வானேடும். (49)

656. *தாழித் தண்கட றம்மோடும்*
*ஏழுக் கேழுல கெல்லாமன்*
*ருழிக் கையவ னம்பம்மா*
*ஊழித் தீயென வுண்ணுதோ.*

'அம்மா - அம்மையே! அன்று - உன் நிலைமையை யான் (போய்ச்) சொல்லக் கேட்ட அன்று, ஆழி கை அவன் அம்பு - சக்கராயுதமேந்திய கையையுடைய திருமாலான இராமபிரானுடைய அம்பு, தாழி தண் கடல் தம்மோடும் - ஆழ்ந்து குளிர்ந்த கடல்களோடும், ஏழுக்கு ஏழ் உலகு எல்லாம் - ஏழோடு ஏழாக உள்ள உலகங்கள் (பதினான்கு உலகங்கள்) யாவற்றையும், ஊழி தீ என உண்ணுதோ - பிரளயத்தில் எழும் தீ உலகங்களை அழிப்பது போல உண்டு அழிக்க மாட்டாதோ? (அழிக்கும் என்றபடி).

இராமபிரானை ஆழியான் என்பது: உயுத்த- வீபீடணனடைக்கலப். 142: கும்பகருணன்வதைப், 115. ஆழி கை-சக்கரரேகையையுடையகை எனலும் ஆம். ஆழி அவன் என்பதும் ஒன்றாம்: அம்பு உண்ணுதோ என்க. தாழி தண்கடல்-தாழ்ந்து பள்ளமாய் இருக்கும் குளிர்ந்த நீரையுடைய

கடல். தாழி; பகுதிப்பொருள் விகுதி. இனி, தாழ் இத் தண் கடல் எனப் பிரித்துப் பொருள்கொள்ளலும் ஆம். ஏழுக்கு ஏழு: நான்காம் வேற்றுமைக் குரிய குவ்வுருபு இங்கு மூன்றும் வேற்றுமைப் பொருளில் வந்த உருபு மயக்கம். அம்மா என்பதை, இரக்கத்தையும் வியப்பையும் உணர்த்தும் இடைச் சொல் எனக் கொள்ளலும் தகும். உண்ணுததை உண்பது போலக் கூறுதல் மரபுவழுவமைதி; நன். சூ: 409;

(பி-ம்.) 1. தாழ்வுற் றேழ்கடல்: தன்கட றன்னேடும்; கண்டகர் தம் மோடும். 2. உலகுக் கெல்லாம். 3. ஆழிக் கையைய னம்பம்மா, 4. உண்ணுவோ. (50)

657. *படுத்தான் வானவர் பற்ருரைத்*
*தடுத்தான் றீவினை தக்கோரை*
*எடுத்தான் நல்வினை யெந்நாளும்*
*கொடுத்தா னென்றிசை கொள்ளாயோ.*

'(இராமபிரான்), வானவர் பற்ருரை படுத்தான் - தேவர்க்குப் பகைவரான அரக்கர்களை அழித்தான்; தீவினை தடுத்தான் - உலகிற் பாவச் செயல்களை விலக்கினன்; தக்கோரை எடுத்தான் - முனிவர் முதலிய மேலோர்களை ஆதரித்து ஓங்கச் செய்தான்; நல்வினை எந்நாளும் கொடுத்தான் - நற் கருமங்கள் எந்நாளும் வளரும்படி அளித்தருளினன்;' என்று இசை கொள்ளாயோ - என்று உலகம் சொல்லும் புகழை நீ அடைய மாட்டாயோ?

இச்செய்யுளில், இராமாவதாரத்தின் காரணமான, தீயாரை அழித்தல் தக்கோரைக் காத்தல், அறத்தை நிலைநாட்டல் ஆகிய செயல்கள் கூறப் பெற்றமை நோக்கற்பாலது. இவ்வுண்மையை, அநுமன் பின் இராவணனுக்கு, 'அறந்தலை நிறுத்தி வேத மருள்சுரந் தறைந்த நீதித், திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர், இறந்துக நூறித் தக்கோரிடர்துடைத் தேக வீண்டுப் பிறந்தனன் றன்பொற் பாத மேத்துவார் பிறப்பறுப்பான்' என்று அறிவுறுத்தியது காண்க.(1123).கொள்ளாயோ என்றது, கொள்வாய் என்ற எதிர்மறைப் பொருளில் பிராட்டிக்கு அநுமன் உறுதி கூறியது என்க. இது கற்புடைய மகளிர் தன் கணவனுக்கு உண்டாகும் புகழைக் கருதித் தன் துயரை ஆற்றியிருத்தல் கடன் என்ற உண்மையை அநுமன் பிராட்டிக்கு நினைவூட்டினதும் ஆகும். இனி, நீ இறக்காமல் சிறிது காலம் காத்திரு; அவ்வாறு இங்கு நீ இன்னும் சிறிது காலம் சிறையிருந்து செய்யும் தவமே உலக நன்மைகளுக்குப் பெருங் காரணமாகும்' என்று அநுமன் கருதிக் கூறியதும் என்னலாம். இக் கருத்து அடுத்த செய்யுளாலும் விளங்குவது காண்க.

படுத்தான் முதலிய வினைமுற்றுக்கள், துணிவு பற்றி வந்த காலவழு வமைதி யென்க. எடுத்தல் - காப்பாற்றுதலுமாகும்; நான்மணிக். 81.

(பி-ம்.) 1. படுத்தாழ்: படுத்தாள்; படுத்தான் மன்னவர்; படுத்தான் மண்ணவர்.

2. தடுத்தா டிவினை: தக்கோருக் (கு).

3. எடுத்தார்: எடுத்தரள்; எடுத்தாள் கற்பற மெந்நாளும்.

4. கொடுத்தாள்: என்றிவை: கொள்வாரோ: என்றுரை கொள் ளாரோ. (51)

658. *சின்னு ணீயிடர் தீராதே*
*இன்னு வைகலி னெல்லோரும்*
*நன்னுள் கா ணுத னன்றன்றே*
*உன்னு னல்லற முண்டாஞல்,*

'நீ சில நாள் இடர் தீராதே - நீ இன்னும் சில நாட்கள் துன்பம் தீராமல், இன்னு வைகலின் - இனிமையற்று (இங்குத்) தங்கியிருப்பதினால், எல்லோரும் நல் நாள் காணுதல் - உலகத்தில் உள்ளோர் எல்லோரும் நல்ல காலத்தைக் கண்டு மகிழ்தல், நன்று அன்றே - நல்லது அல்லவா? (நல்லதேயாம் என்றபடி); உன்னல் நல் அறம் உண்டாம் - உன்னுல் உலகில் நல்ல தருமங்கள் தலையெடுத்துத் தோன்றும். ஆல்: அசை,

இவ்வாறு உலக நன்மை கருதிப் பிராட்டி கடுந்தவம் புரிந்த செய்தியை அநுமன் பின், 'இற்பிறப் பென்ப தொன்று மிரும்பொறை யென்ப தொன்றும், கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்' (1273) என்றும், 'தவஞ் செய்த தவமாந் தையல்' (1275) என்றும் பெரிதும் பாராட்டிக் கூறியது காண்க. எல்லோரும் நன்னுள் காணுதல் என்றமையால், பிராட்டியின் தவத்தால் தீயவரானவர்க்கும் நன்மையே விளையும் என்பது கூறப்பெற்றது. உலகம் வாழவே பிராட்டி அசோகவனத்துள் கொடுமை என்னுந் தீயினிடையே நின்று எவரும் செய்யவொண்ணுத தவம் புரிந்தனள் என்னும் அரிய கருத்து இங்கே தொனிப்பது கண்டுணர்தற்குரியது. இராமாவதாரத் தத்துவம் பிராட்டி இச்சிறையிருத்தல் மூலமாகவே நிலையுற்றது என்க. முன் செய்யுளையும் நோக்குக. இக் காண்டத்தின் நடுநாயகமாய் அமைந்த இவ்விரு செய் யுட்களாலும் பிராட்டி பட்ட துன்பங்கள் யாவும் உலகத்தில் விளைந்த அநீதிகளால் விளைந்தனவே என்பதும், உலகுடை அன்னையாகிய அப் பெருமாட்டி இவ்வுலகம் உய்யும் பொருட்டே அத்துயர்களைத் தாங்கி நின்ருளென்பதும் விளக்கப் பெற்றமை காண்க.

இப்பாடல் ஒரு சுவடியில் பின்வருமாறு மாறிக் காணப்படுகிறது.

உன்னு னல்லற முண்டாக
இன்னுள் வைகலி னெல்லோரும்
நன்னுள் காணுத னன்றென்றுல்
சின்னு ளின்னிடர் தேராதோ.

(பி-ம்.) 1. சின்னு ணியிடை: தீராதாய்; தீராதால்.
3. நன்னுள் நண்ணுதல்: நன்னுதல்: நன்னுள் கரணுக.
4. உன்னு நல்லறம். (52)

659. *புளிக்குங் கண்டகர் புண்ணீருள்*
*குளிக்கும் பேய்குடை யுந்தோறும்*
*ஒளிக்குந் தேவ ருவந்துள்ளம்*
*களிக்குந் நல்வினை காணுயோ.*

'புளிக்கும் கண்டகர் புண் நீருள்-யாவரும் வெறுக்கும் கொடியோரான அரக்கர்களுடைய புண்களிலிருந்து பெருகி வரும் குருதி வெள்ளத்தில், குளிக்கும் பேய் குடையும் தோறும் - குளிக்கின்ற பேய்கள் அந்த வெள்ளத்தில் முழுகும்போதெல்லாம், ஒளிக்கும் தேவர் - இப்பொழுது இராவணனுக்கஞ்சி ஒளிந்து வாழும் தேவர்கள், உள்ளம் உவந்து - மனம் மகிழ்ந்து, களிக்கும் நல்வினை - களிப்படையும் நற் செயலை, காணுயோ - நீ உண்டாக்க மாட்டாயோ?

புளிக்கும் - வெறுப்பைத் தரும் என்ற பொருளில் வந்தது; 'ஆர்ந்தோர் வாயிற் றேனும் புளிக்கும்' குறுந். 354. 2. இதனுல் புளிப்பு பொதுவாக வெறுக்கத் தக்கசுவை என்பது கொள்ளக்கிடக்கும். 'புளிக்கும் கண்டகர் - மாறுபடும் பேர்' பழைய உரை. கண்டகர், முள் போன்ற கொடியவர். 318; ஆரண்ய. கரன்வதைப். 124; மாரீசன்வதைப். 180, திருவரங்கத்தந்தாதி. 42. புளிக்கும் புண்ணீர் எனவும் இயைக்கலாம். குடைதல் - உட்புகுந்து துளைந்து நீராடுதல்; பால. நீர்விளையாட்டுப். 11, 12. பேய்கள் புண்ணீரில் குளித்தல்; 659. காண்டல் - உண்டாக்குதல்; 'முனைவன் கண்டது முதனூலாகும்' (தொல். பொருள்: 649)

(பி-ம்.) 3. தேவரும் வந்துள்ளங். 4. காணுவோ. (53)

வேறு

660. *ஊழியி னிறுதியி னுருமெ றிந்தெனக்*
*கேழ்கிளர் சுடுகணை கிழித்த புண்பொழி*
*தாழிருங் குருதியிற் றரங்க வேலைகள்*
*ஏழுமொன் றுகிநின் றிரைப்பக் காண்டியால்.*

ஊழியின் இறுதியின் உரும் எறிந்தென - யுக முடிவுக் காலத்தில் இடி விழுந்து தாக்கினுற் போல, கேழ் கிளர் சுடுகணை - ஒளி விளங்குவனவும் நெருப்பைப் போல் சுட்டெரிப்பனவுமான இராமபிரானுடைய அம்புகள், கிழித்த புண் பொழி-பிளந்த (அரக்கர்களுடைய உடற்) புண்களிலிருந்து சொரியும், தாழ் இரும் குருதியில் - ஆழ்ந்த பெரிய குருதி வெள்ளத்தினுல், தரங்க வேலைகள் ஏழும் - அலைகளுடைய கடல்கள் ஏழும், ஒன்று ஆகி நின்று-ஒன்ருகச் சேர்ந்து ஒரே வெள்ளமாகி எழுந்து, இரைப்ப காண்டி - முழங்கக் காண்பாய். ஆல்: அசை.

தாழ் - ஆழம்; 656. ஏழ் வேலை; பால், தயிர், நெய், சுத்தநீர், கள், கருப்பஞ்சாறு, உப்பு இவற்ருல் நிறைந்த கடல்கள் என்பது புராண வரலாறு. சுடுகணை; சுடுசுரம் என்பது போல; பால. தாடகை. 73. குருதியில்: வேற்றுமை மயக்கம்.

(பி-ம்.) 1. ஊழியி னுருமெறிந் தென்னக் கேழ்கிளர்: எறிந்தன,
2. கேழினச் சுடு: ஆழியான் சுடுகணை கிழித்த புண்பொழி.
3. தாழியங் குருதி; தாழிய குருதி; குருதியாற்: தரங்க மாக்கடல்; தரங்க வார்கடல்.
4. எழுமொன் ருக: நின் றிசைக்கக்; இரைக்கக். (54)

661. சூலிரும் பெருவயி றலைத்துச் சோர்வுறும்
ஆலியங் கண்ணிய ரறுத்து நீத்தன
வாலியுங் கடப்பரும் வலத்த வானுயர்
தாலியம் பெருமலை தயங்கக் காண்டியால்.

சூல் இரும் பெரு வயிறு அலைத்து - கருவுற்றது போல மிகப் பெரிதாய் விளங்கும் வயிற்றில் அடித்துக் கொண்டு, சோர்வு உறும் - சொரிகின்ற, ஆலி அம் கண்ணியர் - நீர்த்துளிகளைக் கொண்ட கண்களையுடைய அரக்கிமார்கள், அறுத்து நீத்தன - அறுத்துப் போகட்ட, வாலியும் கடப்ப அரும் - வாலியாலும் தாண்டிக் கடக்க முடியாத, வான் உயர் - ஆகாயமளவும் உயர்ந்து விளங்கும், வலத்த - வலிமையுடையனவான, தாலி அம் பெரு மலை - அவர்களின் தாலிகளால் ஆன பெரிய மலைகள், தயங்கக் காண்டி - விளங்கப் பார்ப்பாயாக: ஆல்: அசை. அம்: சாரியைகள்.

இரும் பெரும் வயிறு - முன்னமே பெரிதாய் உள்ள அரக்கியர் வயிறு, சூல் கொண்டதால் மேலும் பெரிதாய்த் தோன்றிற்று என்றலும் ஒன்றும். இனி, முட்டை போன்று உருண்டு பருத்திருக்கும் வயிறு என்னலும் ஆம்; சூல் - முட்டை; 'ஞமலி தந்த மனவுச்சூல் உடும்பின்;' (பெரும்பாண். 132.) இரும் பெரும்: ஒரு பொருட் பன்மொழி.

அலைத்தல் - அடித்தல்; 'வயிறலைத் தோடவோடி' (பால. ஆற்றுப். 14.) ஆலி - மழைத்துளி; (சூடா. நிகண்டு.) வாலியும்: உம்மை உயர்வு சிறப்பை உணர்த்துவது; வாலி எம் மலைகளையும் எளிதில் தாவிக் கடந்து செல்பவன்; கிட்கிந்தா. மராமரப், 77. தயங்குதல் - விளங்குதல்; 'தயங்கு தாரகை' (கிட்கிந்தா. வாலிவதைப், 53.). இச் செய்யுள் சில சுவடிகளில் இடம் மாறி இருக்கின்றது.

(பி-ம்.) 1. சூலியம் பெரு; சூலுறும் பெருவயி றலைத்துத் துன்புகொண்(டு)
2. ஆலுறு மரக்கிய ரறுத்து நீக்கவும்: கண்ணினர்; கண்ணியர் துடித்து; அறுத்து நீவின:
3. கடப்பரும் வனப்ப: கடப்பதற் கரிய தாய்வளர்.
4. பெருவரை: தயங்கிச். (55)

662. *விண்ணினீ ளியநெடுங் கழுதும் வெஞ்சிறை*
*எண்ணினீ ளியபெரும் பறவை யீட்டமும்*
*புண்ணினீர்ப் புணரியிற் படிந்து பூவையர்*
*கண்ணினீ ராற்றினிற் குளிப்பக் காண்டியால்.*

'விண்ணின் நீளிய - ஆகாயமளவும் நீண்டு உயர்ந்த, நெடும் கழுதும்- பெரிய பேய்களும், எண்ணின் நீளிய - எண்ண முடியாதபடி நீண்ட அளவையுடைய, வெம் சிறை பெரும் பறவை ஈட்டமும் - கொடிய சிறகுகளையுடைய பெரிய பறவைக் கூட்டங்களும், புண்ணின் நீர் புணரியில் படிந்து - அரக்கர்களுடைய புண்ணினின்று பெருகிய இரத்த வெள்ளமாகிய கடலில் தோய்ந்து மூழ்கி, பூவையர் கண்ணின் நீர் ஆற்றி னில் - அரக்க மகளிர் கண்ணிலிருந்து பெருகி ஓடும் நீராலாகிய ஆற்றில், குளிப்ப - அவ் விரத்தக் கறைகள் போகக் கழுவிக் குளிப்பனவாக, காண்டி - (நீஅவற்றைக்) காண்பாயாக. ஆல்: அசை.

விண்ணின் நீடிய - ஆகாயத்தையும் கடந்து உயர்ந்ததென்று எல்லைப் பொருளாகவும் கொள்ளலாம். குருதி வெள்ளத்தில் பேய்கள் குளிப்பது; 659. எண்ணி னீளிய பெருஞ்சிறை வெம்பறவை என இயைத்துக் கோடலும் அமையும், பறவை ஈட்டம் - பிணம் தின்னும் கழுகு முதலிய பறவைகளின் கூட்டம். கடலில் மூழ்கியவர் பின் ஆற்றில் மூழ்குதலாகும் வழக்கம் இங்குக் குறிக்கப் பெற்றது காண்க.

(பி-ம்.) 1. விண்ணி னீடிய: விண்ணின்மேற் படநிமிர் கழுகும்: பெருங் கழுதும்;
2. எண்ணி நீளிய; எண்ணினுற் கடந்தபல் பறவை நீடிய: நெடும் பறவை.

3. புண்ணினீர்ப் புணரி; புண்ணினீர்ப் பரவையிற்; புண்ணினிற் பரவை யிற்: புண்ணிநீர்ப் பரவையுட் படிந்திப் பூவையர்; படிந்த.
4. ஆற்றிடைக் : ஆற்றிடை குளிப்பக்: ஆற்றிடைக் குளிக்கக். (56)

663. *கரம்பயின் முரசினங் கறங்கக் கைதொடர்*
*நரம்புக ளிமிழிசை நவில நாடகம்*
*அரம்பைய ராடிய வரங்கி னாண்டொழில்*
*குரங்குகண் முறைமுறை குனிப்பக் காண்டியால்.*

'கரம் பயில் முரசு இனம் கறங்க-கைகளால் அடிக்கப்படும் பேரிகை முதலிய வாத்தியங்களின் கூட்டம் ஒலிக்க, கை தொடர் நரம்புகள் இமிழ் இசை நவில - கை விரல்களால் தொடர்ந்து வருடப் பெற்ற நரம் புகள் ஒலிக்கின்ற வீணை, யாழ் முதலியன இனிய கீதங்கள் எழுப்ப, அரம்பையர் நாடகம் ஆடிய அரங்கின் - தெய்வ மகளிர் நடனமாடிய நாடக மேடைகளில், ஆண் தொழில் குரங்குகள் - ஆண்மைக்குரிய (வீரத்தொழிலையுடைய) குரங்குகள், முறை முறை-வரிசை வரிசையாக, குனிப்ப - குதித்து ஆடுவனவாக, காண்டி - (அதை நீ) பார்ப்பாயாக. ஆல்: அசை.

'கறங்க, நவில, ஆடிய அரங்கு என்க. முரசு - பேரி; இங்கு நாடகத் திற்கு ஏற்ப மத்தளம் முதலிய தோற்கருவிகளாகக் கொள்க. இராவணன் முதலிய அரக்கர்களுக்கு அடிமைகளான தேவமாதர்கள் ஆடினர் என்பது; 281. அரம்பையர் ஆடிய அரங்கில் இனி, குரங்குகள் ஆடும் என்பது கருத்து. பகைவர் நாட்டு மங்கல நிலைகளை, வென்றவர் இழிவு படுத்தல் மரபு; ஒப்பு. புறநா. 15. 9-10; 16: 6.

(பி-ம்.) 1. கரம் பெயர்.
2. நரம்பிய லிமி: நரம்பினு மிமிழிசை: நரம்பிடை யேழிசை; நரம் பினி லெழுமிசை: நல்ல நாடகம்,
3. ஆடுறு மாங்கின் மீதினில்; அரங்கி னுடெழில்: ஆண்டெழில்: அரங்கி னேடிநிற். 4. தனித்தனிக் குதிப்பக்: குளிப்பக். (57)

664. *புரையுறு புன்றொழி லரக்கர் புண்பொழி*
*திரையுறு குருதியா றீர்ப்பச் செல்வன*
*வரையுறு பிணப்பெரும் பிறக்க மண்டின*
*கரையுறு நெடுங்கட லார்ப்பக் காண்டியால்.*

'புரை உறு புன் தொழில் அரக்கர் - குற்றங்கள் பொருந்தியுள்ள இழி தொழில்களையுடைய அரக்கர்களது, புண்பொழி-(இராமபாணங்கள்

பிளந்த) புண்களிலிருந்து பெய்யப்பெற்ற, திரை உறு குருதி ஆறு - அலைகள் பொருந்திய குருதி வெள்ளத்தையுடைய நதி, ஈர்ப்ப-இழுப்ப தால், செல்வன - செல்பவையான, வரை உறு பிண பெரும் பிறக்கம்- மலைபோன்ற பிணங்களின் பெரிய கூட்டம், மண்டின - அடர்ந்தவை களாய், கரை உறு நெடும் கடல் தூர்ப்ப-கரையைத் தாக்கி அலைக்கின்ற பெருங் கடலைத் தூர்த்து மேடாகச் செய்வனவாக, காண்டி-(அதை நீ) பார்ப்பாயாக. ஆல்: அசை.

புரை - குற்றம்; 'புரை தீர்ந்த நன்மை பயக்கு மெனின்' (குறள். 292.) வரை உறு; உறு: உவம வாசகம். பிணப்பிறக்கம்: உயுத்த. நாகபாசப். 156; கரை உறு நெடுங்கடல்; உறுதல் - தாக்கி அழித்தல், குறள். 662. பரி. உரை.

(பி-ம்.) 1. புரையறு: அரக்கன் புன்மொழி.
2. யா றிரைத்துச் சேண்படர்.
3. வரையறு: வரைபுரை பிணக்குவை வாரிக் கொண்டுபோய்.
4. கரையறு. (58)

665. *வினையுடை யரக்கரா மிருந்தை வெந்துகச்*
*சனகியென் றொருதழ னடுவட் டங்கலான்*
*அனகன்கை யம்பெனு மளவி லூதையால்*
*கனகநீ டிலங்கைநின் றுருகக் காண்டியால்.*

'சனகி என்று ஒரு தழல் நடுவண் தங்கல் ஆல்-சீதை என்று சொல் லும் ஒரு நெருப்பு இந்த இலங்கையின் நடுவே தங்கி யிருப்பதாலும், அனகன் கை அம்பு எனும் - குற்றமற்றவனான இராமபிரானுடைய கையினால் ஏவப்பெறும் அம்புகள் என்னும், அளவு இல் ஊதையால் - அளவில்லாத பெருங் காற்றினாலும், வினை உடை அரக்கர் ஆம் இருந்தை வெந்து உக - கொடுந் தொழிலையுடைய அரக்கர்களாகிய கரிகள் வெந்து சாம்பராய்ப் போய் உதிர, கனக நீடு இலங்கை - பொன்னால் அமைந்த நெடிய இலங்கை நகரம், நின்று உருக - அதனிடையிருந்து உருக, காண்டி - (அதை நீ) பார்ப்பாயாக. ஆல்: அசை.

அரக்கராம் இருந்தை வெந்து உகவும், கனக நீடிலங்கை நின்று உருகவும் காண்டி என இயைக்க. இருந்தை - கரி. பிராட்டி அரக் கரைச் சுடத் தோன்றிய தீ; ஆரண்ய. சூர்ப்பணகை. 58; உயுத்த. மந்திரப். 75. இலங்கை பொன் மயமானது; 116, 128, 190, 214, 232, 240. இதில் அரக்கரை இருந்தையாகவும், சீதையைத் தழலாகவும், இராமபிரான் அம்பைக் காற்றாகவும், பொன்மயமான இலங்கையை

உருகும் பொன்னாகவும் உருவகப்படுத்தியுள்ளது. இராமபிரான் அம்புக்குக் காற்று; பால. தாடகைவதைப், 74.

(பி-ம்.) 1. வினைவலி யரக்கரிந் தனத்தில் வெந்துகச்: அரக்கராம் விறகு வெந்துகச்: அரக்கர்கள் யாரும் வெந்துகச்.
2. தனல் நடுவட்; நடுவுட் டங்குலால்.
3. அனகன்வா யம்பெனும்: அனகன தம்பெனு: அனகனல லம்பெனு மவைக ளூதையாய்: அனில வூதையால்:
4. கனகமா மிலங்கை; கனதமா விலங்கை: இலங்கைவெந் துருகக். (59)

666. *தாக்கலி லிராவணன் றலையிற் றாயின*
*பாக்கிய மனையநின் பழிப்பின் மேனியை*
*நோக்கிய கண்களை நுதிகொண் மூக்கினல்*
*காக்கைகள் கவர்ந்துகொண் டுண்ணக் காண்டியால்.*

'காக்கைகள் - காகங்கள், தாக்கல் இல் இராவணன் தலையில் தாயின - பிறரால் தாக்கப்படாத இராவணனுடைய தலைகளில் தாம் தாவி ஏறினவைகளாய், பாக்கியம் அனைய நின் பழிப்பு இல் மேனியை - பெரும் செல்வமே போன்ற உன்னுடைய குறை கூறுவதற்கில்லாத திருமேனியை, நோக்கிய கண்களை - (காம இச்சையுடன்) பார்த்த (அவன் இருபது) கண்களையும், நுதி கொள் மூக்கினல் - கூர்மை பொருந்திய தம் அலகினல், கவர்ந்து கொண்டு - பிடுங்கி எடுத்துக் கொண்டு, உண்ணக் காண்டி - உண்ணப் போவதையும் பார்ப்பாயாக. ஆல்: அசை.

பிராட்டி திருமகளாதலின் அவள் மேனி பாக்கியம் எனப் பெற்றது: நோக்கிய கண் - கெட்ட எண்ணத்துடன் பார்த்த கண்; 'பிறர் மனை நோக்குவோமை' (உயுத்த. கும்பகருணன். 153.). பிராட்டி 621 இல் கூறியதற்கு இணங்க அநுமன் இங்குக் கூறியது காண்க. காக்கைகள் படுகளத்தில் விழுந்து இறந்து கிடப்பவர் கண் களைத் தோண்டியுண்பது; ஆரண்ய. கரன்வதை. 88; தக்க. 562.

(பி-ம்.) 1. தாக்கிக லிராவணன்: தாக்கிய தசமுகன் றலையிற் றேவிழப்: தலையிற் றுதலின்; தலையிற் றுங்கினை; தாயின: (60)

667. *மேலுற விராவணற் கழிந்து வெள்கிய*
*நீலுறு திசைக்கரி திரிந்து நிற்பன*
*ஆலுற் வனையவன் றலையை யவ்வவை*
*காலுறக் கணைதடிந் திடுவ காண்டியால்.*

மேல் இராவணற்கு உற அழிந்து - முன் இராவணனை எதிர்த்துப் போரிட மிகவும் தோற்று, வெள்கிய - வெட்கமுற்ற, நீல் உறு திசை கரி - நீல நிறம் அமைந்த திசைகளில் (காவல் புரியும்) யானைகள், திரிந்து நிற்பன - மனம் மாறுபட்டு (வெட்கி) நிற்பனவாயுள்ளன; ஆல் உறவு அனையவன் தலையை - ஆல மரத்தை ஒத்த அந்த இராவணன் தலைகளை, அவ்வவை - அந்த அந்தத் திசை யானைகளின், கால் உற - காலிற் போய் விழும்படி, கணை தடிந்து இடுவ - இராமபிரான் அம்புகள் துண்டித்துத் தள்ளிக் கொண்டுபோய்ப் போடுவதை, காண்டி - நீ பார்ப்பாயாக. ஆல்: அசை.

நீல் உறு திசை - நீல நிறம் பொருந்திய திசை; பரந்த வெளி நீல நிறமாய்த் தோன்றுமாதலின் நீல் உறு திசை என்னப்பட்டது; கடல், வானம் முதலியவை நீல நிறமாய் விளங்குவன நோக்குக. பரம் பொருளாகிய திருமாலின் நிறம் நீலமாக வுள்ளதும் காண்க. நீல் - நீலம் என்பதின் கடைக்குறை; நீனிறமேகம், நீனிறவரக்கர், என்பன போல். திரிந்து நிற்பன - தாம் தோற்றுப் போன அவமானம் தாங்காமல் முகம் மாறுபடத் திரும்பி நின்றன என்பதாம். ஆல் உறவு அனையவன்; இராவணன் ஆலமரம் போலப் பல தலைகளையும் கைகளையும் உடைய ஒப்புமை பற்றி; 'விழுதுடை ஆலன்ன மெய்யன்' (உயுத்த. முதற்போர்ப். 250). இனி, இஃதன்றி, ஆல் உற - களிக்கும்படி, எனவும், பிறவாறும் பொருள் கூறிப் போந்தாரும் உளர். எட்டுத் திக்குக்களோடு, மண் வான் ஆகப் பத்துத் திசைகளிலும் ஒவ்வொன்றாக இராவணன் தலைகள் பத்தும் போய் விழ என்பதாம்.

ஓரேட்டில் இப்பாடல் கீழ்க்காணுமாறு உளது:

மேலுறு மரக்கனுக் கஞ்சி வெள்கிய
நாலிரு திசைக்கரி நடுக்கம் நீங்கிட
ஆலமொத் தவன்றலை யனைத்து மவ்வயிற்
காலுறக் கணைகளைந் தெறிவ காண்டியால்.

(பா-ம்.) 1. மேலுறும்: இராவணற் கஞ்சி; இராவணற் கழிஞ்சி: அழிந்த வெஃகிய; அஞ்சி வெள்கின: வெட்கிய.

2. திசைகளிற் கரிநி கர்ப்பன.

3. மாலுற: மாலுற விராவணன் றலையை; வாலுறு யானையின் றலையை வவ்வலின்; வாலுற வினையவன் றலையை யவ்வவை: தலையை யவ்வழி; தலையை வவ்வலிற்: வவ்விய.

4. காலுறு கணை: காலறக்: காலுற மிதித்துநின் றுள்கக் காண்டியால்; கடிந் திறப்பக். (61)

668. *நீர்த்தெழு முகின்மழை வழங்கு நீலவான்*
*வேர்த்ததென் றிடையிடை வீசும் வேரறப்*
*போர்த்தெழு பொலங்கொடி யிலங்கைப் பூழியோ*
*டார்த்தெழு கழுகிரைத் தாடக் காண்டியால்.*

'**நீர்த்து எழு** - நீரையுடையதாய் மேலெழும், **முகில் மழை வழங்கு நீலவான்** - மேகத்தால் மழையைப் பொழியும் நீலநிறமான ஆகாயம், **வேர்த்தது என்று** - வியர்வையை அடைந்தது என்று எண்ணி, **இடை இடை** - இடையிடையே (அடிக்கடி), **வேர் அற** - (அந்த வானின்) வியர்வை நீங்க, **வீசும்** - வீசுகின்ற, **போர்த்து எழு பொலம் கொடி இலங்கை** - அவ்வானைப் போர்த்துக் கொண்டு மேலே ஓங்கி விளங்கும் அழகிய கொடிகளையுடைய இலங்கையில், **பூழியோடு ஆர்த்து எழு** - (போர்க்களத்தில் எழுந்த) புழுதிகளோடு முழக்கமிட்டு எழுகின்ற, **கழுகு இரைத்து ஆட** - கழுகுகள் இரைத்துக் கொண்டு ஆடுவதை, **காண்டி** - நீ பார்ப்பாயாக. **ஆல்;** அசை.

வான் வேர்த்ததென்று அவ்வானைப் போர்த்துத் துடைப்பன போல மேற் கிளம்பி விளங்கும் கொடிகளையுடைய இலங்கைப் போர்க்களத்துப் புழுதியோடு கழுகுகள் அங்குப் பெருமூச்சு விட்டு முழக்கத்தோடு ஆடுவதைக் காண்பாய் என்பதாம். போர்க்களத்தில் கழுகு முழக்க மிட்டு ஆடுதல்; **அயோத்யா.** கிளைகண்டு. 38; **உயுத்த.** மீட்சிப். 55. '**இந்தக் கவி ஆகாசம் வேர்த்ததென்று வீச விசிறிக் காட்டினது போலக் கொடியாடும் இலங்கையானது புழுதியோடு புழுதியாய்க் கடலிலே யாழ்வது பொருள்' என்பது பழைய உரை.**

ஓரேட்டில் இச்செய்யுள் கீழ்க் காணுமாறுளது.

நீர்த்தெழு புனல்மழை வழங்கு நீலவான்
வேர்த்தயல் மறைந்திட வெம்மை யோடரும்
போர்க்களத் தரக்கர்தம் முடலம் பூழிபட்
டார்த்தெழுங் கழுகொடங் கிரைப்பக் காண்டியால்,

(பி-ம்.) 1. **நீர்த்தொழு கினமழை வழங்கு: கன்மழை; கனமழை; கணமழை; கணமழை.**
2. **இடையிடை விசும்பு வீசிப்போய்: வீச வீசப்போய்; பொங்கி வீசலில்; வீசி வீசிப்பொற்; விசும்பு வீதிபோற்; விசும்பு வீசலிற்: வீசு தூசுபோல்; வீச வீசிநீர்.**
3. **போர்த்தெழப்: இலங்கை பூமியோ(டு): இலங்கை யூழியோ;**
4. **ஆர்த்தெழு கழுதிரைத்: ஆர்த்தெழுந் திரைத்துநின் றுடக்.**

669. *நீனிற வரக்கர்தங் குருதி நீத்தநீர்*
*வேலைமிக் காற்ருெடு மீள வேலைசூழ்*
*ஞாலமுற் றுறுகடை யுகத்து நச்சருக்*
*காலனும் வெறுத்துயிர் காலக் காண்டியால்.*

'நீல் நிற அரக்கர் தம் - நீல நிறமான அரக்கர்களுடைய, குருதி நீத்தம் - இரத்த வெள்ளம், நீர் வேலை மிக்கு - நீரையுடைய கடலில் நிரம்பி அதனினும் மிகுந்து, ஆற்ருெடு - அந்த இரத்த ஆற்றின் வழியோடு, மீள - திரும்பிச்செல்ல, வேலை சூழ் ஞாலம் முற்று உறு கடையுகத்து - கடல் சூழ்ந்த உலகத்தை அழிக்கும் யுக முடிவில், நச்சு அரு காலனும் - ஆசை நீங்காத காலதேவனும், வெறுத்து உயிர் கால - (யாங்கள் நிகழ்த்தப் போகும் போரில்) உண்ணும் உயிர்களாகிய உணவு தெவிட்டிப் போய், அவ்வுயிர்களை வெளியே கக்க, காண்டி - நீ பார்ப்பாயாக! ஆல்: அசை.

நீல் - நீலம்; 667 உரை. உயிர் கால - பெருமூச்சு விட எனக் கொள்ளலும் ஆம்: அதிகமாக உண்டமையால் தாங்காது காலன் பெருமூச்சு விட்டான் என்க; காலனும், உம்மை உயர்வு சிறப்பினது. உயிரைக் காலன் உண்பதாகக் கூறுவது கவிமரபு. காலன் - யமனுக்கு ஏவல் செய்வோன்; சீவக. 1144. அடிக். நச்சு - விருப்பம்; பெரும்பாண். 420-21, நச்; உரை,

(பி-ம்.) 1. நீனிறத் தரக்கர்: நீர்த்தநீர்;
2. வேலையிற்: காருெட மீள; வேலையின் மும்மடி யிரைத்து வேலைசூழ்.
3. ஞாலமுற் றுங்கடை; முற் றுறுங்கடை; முற் றிறுங்கடை: கடை நணுக நச்சருக்; நஞ்சருக். (63)

670. *அணங்கிள மகளிரொ டரக்க ராடுறும்*
*மணங்கிளர் கற்பகச் சோலை வாவிவாய்ப்*
*பிணங்குறு வான்முறை பிடித்த மாலைய*
*கணங்கொடு குரக்கினங் குனிப்பக் காண்டியால்.*

'அணங்கு இள மகளிரொடு - தெய்வப் பெண்களாகிய இள மகளிரோடு, அரக்கர் ஆடு உறும் - அரக்கர்கள் நீராடுவதற்கு உரிய, மணம் கிளர் கற்பக சோலை வாவிவாய் - மணம் மிகுந்த கற்பகச் சோலை சூழ்ந்த தடாகத்தின் இடத்தில், பிணங்கு உறு - நேரின்றி மாறுபட்டு வளைந்திருக்கும், வால் முறை பிடித்த மாலைய - ஒன்றன் வாலை ஒன்ருகப் பற்றின வரிசையுடையனவாய், கணம் கொடு - கூட்டமாக இருந்து

கொண்டு, குரங்கு இனம் குனிப்ப - குரங்குக் கூட்டங்கள் குதித்தாடு வதை, காண்டி - நீ பார்ப்பாயாக. ஆல்: அசை.

அணங்கு இளமகளிர்-ஆடவரை வருத்தும் அழகுடைய இளமைப் பருவ மங்கையர் எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும். பிணங்குறு வால்-இயற்கையில் வளைந்துள்ள வால். குரங்குகள் வால் பிடித்துச் செல்லுதல்; கிட்கிந்தா. பில நீங்கு. 30.

(பி-ம்.) 1. அணங்கினை மகளிரொ; அணங்கினர் மகளிரொ: அணங்கன மகளிரோ டரக்கர் நாடுறு: அரக்க னுடுறும். 2. வாவிகள்.
3. பிணங்குறு குடர்; பிணங்குவ வரன்; பிணங்குறு விரன்; பிணங் கலில் மாடங்கள்; பிறங்குஞ் சாலைகள்: வரன்முறை பிணித்த மாலை யக்: பிணித்த மாலைகள்.
4. கணங்கிளர் கழுதினம்; கணங்கொடு பேய்களும்: களிப்பக்; குளிப்பக்; முடிப்பக். (64)

671. *செப்புற லென்பல தெய்வ வாளிகள்*
*இப்புறத் தரக்கரை முருக்கி யேகின*
*முப்புறத் துலகையும் முடுக்கி முட்டலால்*
*அப்புறத் தரக்கரு மவியக் காண்டியால்.*

'பல செப்பு உறல் என் - பலவாறு சொல்லுதல் ஏன்? தெய்வ வாளிகள் - (இராமபிரான் தூண்டிய) கடவுட்டன்மை வாய்ந்த அத் திரங்கள், இ புறத்து அரக்கரை முருக்கி - இலங்கையிலுள்ளோர் முதலான இவ்வண்டத்து அரக்கர்கள் யாவரையும் கொன்று, ஏகின - அப்பாற் சென்றவை, புறத்து - வெளியே, மு உலகையும் - மண், விண், பாதலமென்னும் மூன்று உலகங்களையும், முடுக்கி - தாக்கி, முட்டலால் - இடிப்பதால், அ புறத்து அரக்கரும் - புற அண்டத்திலுள்ள அரக்கர்களும், அவிய காண்டி - அழிவதை நீ காண்பாயாக. ஆல்; அசை.

அப்புறத்து அரக்கர் என்று வேறுபடக் கூறினமையால், இப்புறத் தரக்கர் என்பதற்கு இவ் விலங்கையில் உள்ளோர் முதலான அரக்கர் எனப் பொருள்கொள்ளப்பட்டது. இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

கொற்றவன் சரத்தினுற் குலைகு லைந்துக
இற்றதி லங்கையென் றிரங்கி யேங்கவே
மற்றொரு மயன்மகள் வயிற லைத்துகப்
பொற்றொடி நீயுங்கண் டிரங்கப் போதியால்.

(பி-ம்) 1. செப்புவ தென்பல. 2. முடுக்கி யேகின; யேகியே,
3. முப்புவ னத்திலு முடுகி மூசுபோ; துருவி முட்டலால்; முருக்கி விட்டலால்; முடிக்க ஊட்டலால்: மூட்டலால்,
4. அரக்கரை யவிக்கக் காண்டியால். (65)

672. *ஈண்டொரு திங்களீ யிடரின் வைகவும்*
*வேண்டுவ தன்றியான் விரைவின் வீரனைக்*
*காண்டலே குறைவுபின் காலம் வேண்டுமோ*
*ஆண்டகை யினியொரு பொழுது மாற்றுமோ.*

'ஈண்டு - இங்கு, நீ ஒரு திங்கள் இடரின் வைகவும் வேண்டுவது அன்று - நீ இன்னும் ஒரு மாத காலம் துன்பத்துடன் இருப்பதாகக் கூறியது வேண்டற்பாலதன்று; யான் விரைவின் வீரனைக் காண்டலே குறைவு-யான் விரைவாகச் சென்று மகா வீரனை இராமபிரானைக் காண வேண்டுவதுதான் குறை; பின் காலம் வேண்டுமோ - அதற்குப் பிறகும் காலம் வேண்டுமோ? (வேண்டாம் என்றபடி); ஆண்டகை இனி ஒரு பொழுதும் ஆற்றுமோ-ஆடவரிற் சிறந்த இராமபிரான் இனிமேலும் ஒரு கணப் பொழுதும் பொறுத்திருப்பானோ? (மாட்டான் என்பதாம்,)

பிராட்டி இலங்கையில் இன்னும் ஒரு மாத காலமே இருப்பதாக அறுதி யிட்டுக் கூறியது; 635, 638. பொழுது - காலக் கணக்கில் மிகச் சிறிதாகிய கண நேரத்தைக் குறிப்பிட்டது என்க. ஒரு பொழுதும் - ஒரு நாளும் என்றும் கூறுவர். இதுவரை அநுமன் வானரச்சேனை இலங்கையை அழிக்கப் போகும் செய்தியைக் கூறிப் பிராட்டிக்குத் தைரியம் வரச் செய்து, இனி இராமபிரானின் சோகநிலையைக் கூறத் தொடங்குகிறான்.

(பி-ம்.) 1. திங்களிவ் விடரின் வைகுதல்; திங்களிங் கிடரின் வைகுதல்.
2: வேண்டுத லின்றுநான்; வேண்டிய தில்லையால்.
3. காண்டலோர் குறையன்றிக் காலந் தாழ்க்குமோ: குறை பின்னுங். (66)

673. *ஆவியுண் டென்னுமீ துண்டுன் னுருயிர்ச்*
*சேவகன் றிருவுருத் தீண்டத் தீந்திலாப்*
*பூவிலை தளிரிலை பொரிந்து வெந்திலாக்*
*காவிலை கொடியிலை நெடிய கானெலாம்.*

'ஆவி உண்டு என்னும் ஈது உண்டு-இராமபிரானுக்கு உயிர் என்பது ஒன்று உள்ளது என்னும் இச் சொல் சொல்ல இடம் மட்டும் உள்ளது; நெடிய கான் எலாம் - நீண்ட காடு எங்கும், உன் ஆர் உயிர் சேவகன் - உன் அரிய உயிர் போன்ற மகாவீரனை இராமபிரானுடைய, திரு உரு

தீண்ட - அழகிய திருமேனி படுவதால், தீந்திலா - எரிந்து போகாத, பூ இலை தளிர் இலை-பூவும் இல்லை; தளிர்களும் இல்லை; பொரிந்து வெந்திலா - பொரி போலாகி வெந்து போகாத, கா இலை - சோலைகளும் இல்லை; கொடி இலை - கொடிகளும் இல்லை.

பிராட்டியைப் பிரிந்திருக்கும் இராமபிரானுடைய விரகத்தியால், அவர் திருமேனி தீண்டிய சோலைகள், கொடிகள், தளிர்கள், பூக்கள் எல்லாம் எரிந்தும், பொரிந்தும், வெந்தும் போயின என்றும், இராமபிரான் உயிருடன் இருக்கிறான் என்று மட்டும் சொல்லலாமேயன்றி உணர்ச்சி எதுவும் அற்றவனாயிருக்கிறான் என்றும் அநுமன் கூறினன் என்க; 625.

(பி-ம்.) 1. ஆவியுண் டெனினுமீ; ஆவியுண் டில்லையென் றிருக்கு மாண்டொழில்: உண்டெனன் றுருயிர்ச்.
2. சேவக றிருவடி: தீண்டித்: தீண்டத் தீதிலாப்: தீர்கிலாக்.
3. பூவில தளிரில: காவிலை கொடியிலை நெடிய கானெலாம்.
4. காவில கொடியில: கானில; பூவிலை தளிரிலை பொரிந்து போயதே. (67)

674. சோகம்வந் துறுவது தெளிவு தோய்ந்தன்றோ
மேகம்வந் திடித்துரு மேறு வீழினும்
ஆகமும் புயங்களு மழுந்த வைந்தலை
நாகம்வந் தடர்ப்பினு முணர்வு நாறுமோ.

சோகம் வந்து உறுவது தெளிவு தோய்ந்து அன்றோ - (மனத்தில்) துன்பம் வந்து பொருந்துவது (அம்மனத்தில்) தெளிவான நினைவு பொருந்தியிருந்தால் அல்லவா? மேகம் வந்து உரும் ஏறு இடித்து வீழினும் - மேகம் சூழ்ந்து வந்து பேரிடியும் இடித்துக் கீழே விழுந்தாலும், ஆகமும் புயங்களும் - மார்பிலும் தோள்களிலும், அழுந்த - (பற்கள்) அழுந்தும்படி, ஐம் தலை நாகம் வந்து அடர்ப்பினும்-ஐந்து தலைகளையுடைய நாகப் பாம்பு சீறி வந்து கடித்து வருத்துவதாயினும், உணர்வு நாறுமோ - இராமபிரானுக்கு உணர்ச்சி தோன்றுமோ? (தோன்றாது என்றபடி).

தன் நினைவு அற்றபோது சோகம், மகிழ்ச்சி முதலிய உணர்ச்சிகள் தோன்றா என்பதாம். இடி விழுந்தாலும், பாம்பு கடித்தாலும் அவன் உணரமாட்டான் என்றனன். ஒப்பு: 'யானை தாக்கினு மரவுமேற் செலினு, நீனிற விசும்பின் வல்லேறு சிலைப்பினும், சூல்மகண் மாறா மறம்பூண் வாழ்க்கை' (பெரும்பாண். 134-5.) 'பெருமாள் ஒரு நாளாகிலும் தெளிந்திருந்தா லல்லவோ சோகத்தை யறியப் போகிறார்' என்பது பழையஉரை.

(பி-ம்.) 1. தெளிந்து தோய்ந்தன்றே: தெளிவு சோர்ந்தன்றே; தெளிவு தோன்றுமோ: தோய்ந்தின்றே.
2. இடித்துவந் துருமு வீழ்கினும்; இடித்துநின் றுருமு வீழ்தலும்; வீழ்கிலும்.
3. அருந்த வைந்தலே 4. உணர்வு நண்ணுமோ. (68)

675. *மத்துறு தயிரென வந்து சென்றிடை*
*தத்துறு முயிரொடு புலன்க டள்ளுறும்*
*பித்தநின் பிரிவினிற் பிறந்த வேதனே*
*எத்தனே யுளவவை யெண்ணு மீட்டவோ,*

'மத்து உறு தயிர் என - மத்திஞல் கடையப்படுதலால் குழப்பம் அடையும் தயிரைப் போல, வந்து சென்று இடை தத்துறும்-முன்னும் பின்னும் சென்று இடையே தடுமாறி உழலும், உயிர் ஒடும்-உயிரிேேடும், புலன்கள் தள்ளுறும் பித்தம் - ஐம்புலன்களும் தள்ளப்பட்டு உணர்ச்சி யற்றவையாகி நிற்கும் பைத்திய நிலே, எத்தனே உள - எவ்வளவு வகை களாக உள்ளனவோ? அவை - அவ்வகை யெல்லாம், நின் பிரிவினில் பிறந்த வேதனே - உன் பிரிவினுல் இராமபிரானுக்கு உண்டான துன்பங் களே; எண்ணும் ஈட்டவோ - (அவை) எண்ணும் வலிமையுடையன ஆகுமோ? (ஆகா என்றபடி).

பிராட்டியைப் பிரிந்ததினுல் இராமபிரானுக்கு உண்டான பித்த மயக்கம், உலகில் உயிர்கள் பித்தான நிலேயில் அனுபவிக்கும் மயக் கங்கள் எவ்வளவு உண்டோ அவற்றினும் மேலாக உள்ளது என்பதாம். மத்துறுதயிர்; ஆரண்ய. சடாயுகாண். 23; சீவக. 421.

(பி-ம்.) 1. வந்து சேணிடை. 2. உயிரொடும்: புலன்க டம்மொடும்.
3. பித்துநின்; பித்தளின்; பித்தரின்: பித்தன பிரிவிளில்: பிறந்தி றந்தன: பிரிந்தி றப்பதங் (கு); பிறந்தி றப்பதங் (கு).
4. எத்தனே யளவதென் றெண்ண லாவதோ: எண்ண மீட்டவே: என்று மீட்டதோ.
3.4. பித்தனின் பிரிவினிற் பிறந்தி ருப்பதங், கெத்தனே யளவையென் றெண்ணற் பாலதோ. (69)

676. *இந்நிலே யுடையவன் றரிக்கு மென்றெணும்*
*பொய்ந்நிலே காண்டியான் புகன்ற யாவுமுன்*
*கைந்நிலே நெல்லியங் கனியிற் காட்டுகேன்*
*மெய்ந்நிலே யுணர்ந்துநீ விடைதந் தீயென்ருன்.*

'இ நிலே உடையவன் - இத்தகைய மனச் சோர்வு உள்ள இராமபிரான், தரிக்கும் என்று எணும் - (உன்னேப் பிரிந்து) உயிர்

தரித்துத் (தாமதித்து) இருப்பான் என்று நீ எண்ணுகின்ற, பொய் நிலை காண்டி - உண்மை யல்லாத நிலைமையை நீயே பின் நேரில் காண்பாய்; மெய் நிலை - இத்தகைய உண்மை நிலையை, நீ உணர்ந்து - நீ அறிந்து, விடை தந்து ஈ - விடை தந்தருள்; யான் புகன்ற யாவும் - நான் கூறிய அனைத்தும், உன் கை நிலை நெல்லி அம் கனியில் - உனது கையில் உள்ள நெல்லிக் கனிபோல, காட்டுகேன் - யான் தெளிவாய்க் காட்ட வல்லேன், என்ருன் - என்று அநுமன் கூறினன். அம்: சாரியை.

காண்டி என்பதை முன்னிலை யசையாகவும் கொள்ளலாம். கை நிலை நெல்லியம் கனி: 513. உரை. இங்குக் கூறியபடியே அநுமன் செய்து காட்டியதை, 'முன்னை நீக்குவென் மொய்சிறை யென்ற நீ, பின்னை நீக்கி யுவகையும் பேசினை' என்று பிராட்டியே பின்னும் கூறினள். (உயுத்த. மீட்சி. 27). பின்வரும் 3 செய்யுட்கள் பிராட்டி காண்டற் குரியவற்றை அநுமன் பின்னும் விரித்துக் கூறுவனவாம்.

(பி-ம்.) 1 இன்னிலை: உடையவ னிருக்கு மென்றவுன்: தரிக்கு மென்றி யேல்; இருக்கு மென்றியேல்; இருக்கு மென்றவுன்.

2-4. சில சுவடிகளில் வரிகள் புரண்டுள்ளன.

2. பொன்னிலை: பொய்ந்நிலை யன்றியான்: கொண்டியான்; கண்டியான். 3. கைவரு நெல்லி: நெல்லியின் கனியிற்.

4. மென்னிலை; அன்னிலை யுணர்ந்துழி யடைந்த தீதெனப்; மெய்ந்நிலை நிற்கநீ விடைதந் தரயபின்; மெய்ந்நிலை யுணர்ந் துழி விடைதந் தீதியேல்; உணர்ந்துழி மிடைந்த தீதெனின்; விடைதந் தீகெனப்; விடைதந் தீரென. (70)

677. *தீர்த்தனுங் கவிக்குலத் திறையுந் தேவி நின்*
*வார்த்தைகேட் டுவப்பதன் முன்ன மாக்கடல்*
*தூர்த்தன விலங்கையைச் சூழ்ந்து மாக்குரங்*
*கார்த்தன கேட்டுவந் திருத்தி யன்னை நீ.*

'அன்னை - தாயே! தீர்த்தனும் - தூயோனான இராமபிரானும், கவி குலத்து இறையும் - குரங்கினங்களுக்கு அரசனான சுக்கிரீவனும், தேவி - நின் வார்த்தை கேட்டு உவப்பதன் முன்னம் - தேவியாகிய நீ சொல்லி யனுப்பிய வார்த்தைகளைக் கேட்டு மகிழ்வதன் முன்னதாக, மா கடல் தூர்த்தன - (இடையேயுள்ள) பெரிய கடலைத் தூர்த்தவைகளாய், இலங்கையைச் சூழ்ந்து - இந்த இலங்கை நகரைச் சுற்றி வளைத்துக் கொண்டு, மா குரங்கு ஆர்த்தன கேட்டு - பெரிய குரங்குகள் பெரு முழக்கத்துடன் கர்ச்சித்தவற்றைக் கேட்டு, உவந்து நீ இருத்தி - மகிழ்ந்து நீ இருப்பாயாக.'

இராமபிரானும் சுக்கிரீவனும் உன் நிலை கேட்டு மகிழும் முன்னே, குரங்குகள் ஊக்க மேலிட்டுக் கடலைத் தூர்த்து இலங்கையைச் சூழ்ந்து போர்க் குரிய ஆரவாரங்களைச் செய்யும் என்பதாம்; இது, இக் காரியம் விரைவில் நிகழக் கூடியதை உணர்த்தும் முறையில் அநுமனால் கூறப் பெற்றது எனக் கொள்ளற்பாலதாம். இஃது உயர்வுநவிற்சியணி. இராமபிரானைத் திர்த்தன் என்பது; பால. உலாவியற். 32; ஆரண்ய. கரன்வதைப். 186; உயுத்த. விபீடண. 143.

(பி-ம்.) 1. குலத் திறையின் தேவிநின்.
3. தூர்த்தென: தூர்த்தட விலங்கையைச் சூழ்ந்து வானரம்: சூழ்ந்த; சூழு.
4. ஆர்ப்பது; ஆர்த்தது: இருந்த வையைநீ. (71)

678. எண்ணரும் பெரும்படை யீண்டி யிந்நகர்
நண்ணிய பொழுதது நடுவ ணங்கைநீ
விண்ணுறு கலுழன்மேல் விளங்கும் விண்டுவின்
கண்ணனை யென்னெடு புயத்திற் காண்டியால்.

'நங்கை - பிராட்டியே! எண் அரும் பெரும்படை - கணக்கிட முடியாத பெரிய வானரப் படைகள், ஈண்டி - திரண்டு, இ நகர் நண்ணிய பொழுது - இந்த இலங்கை நகரை யடைந்தபோது, அது நடுவண் - அந்த வானரப் படைகளின் இடையே, விண் உறு கலுழன் மேல் விளங்கும் விண்டுவின் - ஆகாயத்தில் சஞ்சரிக்கும் கருடாழ்வான்மீது எழுந்தருளி விளங்கும் விஷ்ணுவாகிய திருமாலைப் போல, கண்ணனை - இராமபிரானை, என் நெடு புயத்தில் நீ காண்டி - என்னுடைய நெடிய தோள்களின் மீது விளங்க நீ காண்பாய். ஆல்: அசை.

நங்கை - வடிவிற் சிறந்த பெண்: அண்மை விளி. கலுழன் விண்டு என்பன, கருடன் விஷ்ணு என்னும் வடமொழிப் பெயர்களின் திரிபுகள். கண்ணன்; கிருஷ்ணன் என்ற வடமொழிப் பெயரின் திரிபு; கிருஷ்ணன் - கருநிறமானவன் என்ற ஒற்றுமை பற்றி இராமபிரானுக்கும் வந்தது; இராமபிரானைக் கண்ணன் என்று கூறுவது; பால. உலாவியல். 6; கோலங் காண். 4; அயோத்யா. கங்கைப். 40; ஆற்றுப். 50; 54; ஆரண்ய. சூர்ப்பணகை. 85.

(பி-ம்) 1. கவிப்படை.
2. பொழுதத னடுவ; பொழுதத்து; பொழுதத்தின்: நடுக்கண்.
3. விண்ணுறக் கருளன் மேல்: கலுழனில் விளங்குந் தேவுபோல்.
4. என்னெடு வெரிநிற்: முதுகிற்: என்பெருந் தோளில்; (72)

679. *அங்கதன் றோண்மிசை யிளவ லம்மலைப்*
*பொங்கிளங் கதிரெனப் பொலியப் போர்ப்படை*
*இங்குவந் திறுக்குநீ யிடரி னெய்துறும்*
*சங்கையு நீங்குதி தனிமை நீங்குவாய்.*

'அங்கதன் தோள் மிசை - அங்கதனுடைய தோள்களின் மீது, இளவல் - இளைய பெருமானான இலக்குவன், அம் மலை பொங்கு இளம் கதிர் என பொலிய-அழகிய உதயகிரியின் மீது மேற் கிளம்பித் தோன்றும் பால சூரியனைப் போல விளங்க, போர்ப்படை - போரில் வல்ல வானரப் படைகள், இங்கு வந்து இறுக்கும் - இந்த இலங்கையில் வந்து இறங்கித் தங்கும்; நீ இடரின் எய்துறும் சங்கையும் - நீ இனி, துன்பத்தை அடைவாய் என்ற சந்தேகத்தையும், நீங்குதி - நீங்கியிருப்பாய்; தனிமை நீங்குவாய் - இராமபிரானை நீங்கித் தனித்திருக்கும் இந் நிலைமையையும் நீங்குவாய்.

உதய கிரியில் தோன்றும் சூரியன் ஒளிமிக்க பொன்னிறமாய் விளங்குவ தாதலால், இளைய பெருமானுக்கு ஒப்புக் கூறப்பெற்றது. இலக்குவற்குக் காலைக் கதிரோன்; **அயோத்யா.** நகர்நீங்கு. 123. இலக்குவன் பொன்னிறமானவன்; **அயோத்யா.** நகர்நீங்கு. 126. **ஆரண்ய.** அயோமுகிப்: 85. இறுத்தல் - தங்குதல்; பால. எழுச்சி. 82. இடர்: இராமபிரானைப் பிரிந்ததும் இராவணனால் சிறை வைக்கப் பெற்று வருந்துதலுமான இடர். சங்கை: அநுமன் சொல்லிய வண்ணம் இராமபிரான் வந்து மீட்டுப் போவானோ, மாட்டானோ என்ற சங்கை. இடரும் சங்கையும் நீங்குதல்; 633.

(பி-ம்.) 2. பொங்குவெங் கதிரெனப்; கனலெனப்: பொலியும் பொற்புடை: பொற்படை.
3. இங்குவந் தனுக்கும்: நீ யிருண்ட மையலும்; இடரின் முற்றிய; இடரின் முற்றவும்; இடரு முன்மனசீ
4. நீக்குதி: தருமம் நீங்கலாய். (73)

680 *குராவருங் குழலிநீ குறித்த நாளினில்*
*விராவரு நெடுஞ்சிறை மீட்க லானெனில்*
*பராவரும் பழியொடு பாவம் முற்றுதற்*
*கிராவண னல்லனே யிராம னென்றனன்.*

குரா அரும் குழலி - குராமலரின் அரிய மணங் கமழும் கூந்தலையுடைய பிராட்டியே! நீ குறித்த நாளினில் - (இங்கு) நீ குறிப்பிட்டுத் தவணை கூறிய ஒரு மாத காலத்திற்குள்ளேயே, விராவரு நெடுஞ்சிறை மீட்கலான் எனில்-(இராமபிரான்) சூழ்ந்துள்ள கொடிய பெரிய சிறையினின்று உன்னை மீட்க முடியாது போவானானால், பராவரும்-பரவிவரும்,

பழியொடு பாவம் முற்றுதற்கு - நிந்தனையோடு பாவமும் (பற்றிக் கொண்டு) நிறைவதற்கு, இராவணன் அல்லனே - (அந்த இராமபிரான்) இராவணனாகிய நீசன் அன்றே; இராமன் என்றனன் - அவன் இராம பிரானே அல்லனே! என்றனன்' - (என்று உறுதி கூறினான் அநுமன்.)

சீதை குராவருங்குழலி; 'குரவங்குவி கோங்கலர்கொம்பு' (ஆரண்ய. சரபங்கர். 1) குரா: ஒருவகை மலர்; வடமொழியில் குரவகம் எனப்படும் இச் சொல், குரவு, குரவம் என வருதலும் உண்டு; குரா - வாசனையும் ஆம். பழியும் பாவமும் இராவணனையே சாரும் அல்லாமல் இராம பிரான்பால் சாராவாகையால், அவன் உடனே வந்தே தீருவான் என்று அநுமன் கூறினனென்க. அன்றியும் இதனை அநுமன் கூறிய வஞ்சினம் என்று கூறலும் ஆம், 645 ஆம் செய்யுள் முதல் இதுவரையில் அநுமன் பிராட்டியைத் தேற்றக் கூறிய மொழிகளாம் என்க.

பி-ம்.) 1. குழலியிக் குறித்த; குழலிநிற் குறித்த; குழலியைக் குறித்த; குழலினி குறித்த: குறித்த நாளினே; குறித்த நாளில்வந்.
2. தராவுவெஞ் சிறையுனை மீட்: கடுஞ்சிறை; வெஞ்சிறை.
3. பழியொடும்: பாவம் பற்றுதற் (கு).
4. இராவண னவனிவ னிராமன்: அல்லவே. (74)

வேறு

## பிராட்டி தேறிக் கூறுதல் 681-84

681. *ஆக விம்மொழி யாசில கேட்டறி வுற்றாள்*
*ஓகை கொண்டு களிக்கு மனத்த னுயர்ந்தாள்*
*போகை நன்றிவ னென்பது புந்தியின் வைத்தாள்*
*தோகை யுஞ்சில வாசக மின்னன சொன்னாள்.*

ஆக - இவ்விதமாக, ஆசு இல இம்மொழி-குற்றமற்ற இவ்வார்த்தை களை, கேட்டு-(அநுமன் சொல்லக்) கேட்டு, அறிவு உற்றாள் - (பிராட்டி) அறிவு தெளிவுற்றவளாகி, ஓகை கொண்டு களிக்கும் மனத்தள் உயர்ந் தாள் - மகிழ்ச்சி கொண்டு களிக்கும் மனமுடையவளாய், ஓர் உயர் நிலையடைந்தாள்; (ஆதலால்), 'இவன் போகை நன்று என்பது - இந்த அநுமன் இனி இராமபிரானிடம் போய்ச் சேருவது நலம் தரத்தக்கது' என்பதை, புந்தியின் வைத்தாள்-மனத்தில் எண்ணினவளாய், தோகை யும் - மயில் போன்ற அப்பிராட்டியும், இன்னன சில வாசகம் சொன்னாள்- பின்வருமாறு சில வசனங்களைச் சொல்வாளானாள்.

ஓகை, புந்தி என்பன, உவகை, புத்தி என்ற சொற்களின் விகாரங்கள்.

(பி-ம்.) 1. மொழி யாதிகள் கேட்: யாசிகள் கேட்டறி: கேட்டமிவுற்றுள்.
2. ஓகைகண்டு; ஓகையுண்டு; மனத்தவ ளுய்ந்தாள்: மனத்தினள்: மனத்தொ டுவந்தாள்.
3. போகநன்; போகனன்றி: புந்தியின் வைத்ததே.
4. சொல்வாள். (75)

682. *சேறி யைய விரைந்தனை தீயவை யெல்லாம்*
*வேறி யானினி யொன்றும் விளம்பலென் மேலோய்*
*கூறு கின்றன முன்குறி யுற்றன கோமாற்*
*கேறு மென்றவை சொல்லென வின்ன விசைப்பாள்.*

'ஐய - ஐயனே! மேலோய் - மேன்மையுடையவனே! விரைந்தனை சேறி - விரைவாக (இராமபிரானிடம்) செல்வாயாக; தீயவை எல்லாம் வேறி - இனி உண்டாகும் கேடுகளையெல்லாம் நீ வெல்லுவாயாக; இனி யான் ஒன்றும் விளம்பலென் - இனிமேல் யான் வேறு ஒன்றும் சொல்லப் போவதில்லை; கூறுகின்றன - யான் இப்பொழுது சொல்லுவன, முன் குறி உற்றன - முன்னமே உள்ள அடையாளங்களைக் குறிப்பன; கோமாற்கு ஏறும் - அவை இராமபிரானுக்கு ஏற்றுக் கொள்ளத்தக்க சான்றுகள் ஆம்;' என்று - என்று கூறி, 'அவை சொல் என - அவற்றை நீ இராமபிரானிடம் போய்ச் சொல்' என்று, இன்ன இசைப்பாள் - பின் வரும் அச் செய்திகளைப் (பிராட்டி) கூறுவாளாயினள்.

விளம்பலென் என்பதை விளம்பல் என் எனப்பிரித்து, வேறு சொல்வதற்கு என்ன இருக்கிறது என்று பொருள் கொள்ளலும் ஆம். 'செல்தி, வெல்தி என்பன ஆதி நீண்டு, சேறி, வேறி என ஆயின: 'வித்தக சேறி என்றுர்' (14), 'வெல்வாய் நீயேல் வேறி', (182.)

(பி-ம்.) 1. சேறி யைய வுரைத்தனை: விரைந்தன: விரைந்து தெரிந்தனை யெல்லாம்: தீயன வெல்லாம்.
2. வேறு யானினி; வேறும் யானினி யொன்றும்: மேலோர்.
3. கூறுகின்றனள்: கூறுகின்ற குறிப்பவை யொன்றுள கோமாற்: முன்குறிப் புற்றன.
4. கேறுமின்றிவை: சொல்லின ளின்சொ லிசைப்பாள்; சொல்லுதி யென்றதி சைப்பாள்; சொல்லின ளின்னசொல் லிசைப்பாள். (76)

683. *நாக மொன்றிய நல்வரை யின்றலை மேனுள்*
*ஆகம் வந்தெனை வள்ளுகிர் வாளி னளைந்த*
*காக மொன்றை முனிந்தயல் கல்லெழு புல்லால்*
*வேக வெம்படை விட்டது மெல்ல விரிப்பாய்.*

'மேல் நாள்-முன்னே ஒருநாள், நாகம் ஒன்றிய நல் வரையின் தலை - வான் உலகத்தைப் போய்த் தொடர்ந்த அழகிய சித்திரகூட மலையின் இடத்து, காகம் ஒன்று வந்து - ஒரு காகமானது வந்து, ஏனை ஆகம் வள் உகிர் வாளின் அளைந்ததை-என்னுடைய மார்பைத் தன் கூரிய நகமாகிய வாளினால் கிளறித் தோண்டியதை, முனிந்து - (இராமபிரான் கண்டு) கோபித்து, அயல் கல் எழு புல்லால் - அருகே கல்லின் இடையே வளர்ந்திருந்த (தருப்பைப்) புல்லைக் கொண்டு, வேக வெம் படை விட்டது - விரைவிற் செல்லக் கூடிய பிரும்மாத்திரமென்னும் கொடிய அத்திரத்தை ஏவியதை, மெல்ல விரிப்பாய் - மெதுவாய்த் (தனிப்படத்) தெரிவிப்பாயாக!

நாகம் ஒன்றிய என்பதற்கு யானைகள் பொருந்தி வாழ்ந்திருந்த எனப் பொருள் கொள்ளலும் ஆம்; நாகம் என்பது மலை, வான், யானை பாம்பு, பாதலம், புன்னுகம், எனும் பல பொருளது; காகம் தன் மூக்கினால் அளைந்தது என்று வான்மீகம் கூறும். புல்லால் வேக வெம்படை விட்டது; 'வல்லவனுக்குப் புல்லும் ஆயுதம்;' 'குருவிக்குத் தக்க ராம சரம்' என்னும் பழமொழிகளும் இராமபிரானுடைய இச் செயல் பற்றி வழங்குவ வென்பர். தன்னுடைய ஆகத்தை ஒரு காகம் அளைந்த கொடுஞ் செயலை இராமபிரான் மட்டும் அறிந்ததாதலாலும், இது தக்க சான்று ஆகுமாதலாலும், அதனைப் பலரறியச் சொல்ல விரும்பாமல் பிராட்டி மெல்ல விரிப்பாய் என்று கூறினாள் என்க. இவ்வரலாறு சித்திர கூடத்தில் நிகழ்ந்ததென்றே அநுமநாடகமும் கூறும். இது, முன் அயோத்யா காண்டத்தில் கூறப்படாது இங்குக் கூறப்பெற்றுள்ளமை, கம்பர் வரலாறுகளைக் கூறும் முறைக்கு ஒரு சான்று.

இச் செய்யுளின் பின், அச்சுப்புத்தகங்களில், பிராட்டியைக் காகம் ஊறுபடுத்தியதாக உள்ள இச் செய்தியை விரிப்பனவாய் அடியிற் காணுமாறு மேலும் ஐந்து செய்யுள்கள் உள்ளன, அவை யாம் ஆராய்ந்த பல பழைய ஓலைச் சுவடிகளில் இல்லை. அச் செய்யுள்களின் நடையும் பெரிதும் மாறுபட்டுள்ளது. மேலும், அடையாளமாக மெல்லக் கூறும்படி பிராட்டி கூறியதில் இவ்விதம் விரிவாகக் கூறியிருக்கச் சிறிதும் இடமில்லை. வான்மீகத்திலும் இவ்வரலாறு இவ்விடத்தில் ஒரே சுலோகத்தில் (ஸர்க்கம். (40:4) குறிக்கப்பெற்றதும் சான்றாகும் ஆதலின், அவை, பின் பிறரால் இயற்றப்பெற்று இடைச்செருகலாகச் சேர்க்கப் பெற்றவை எனக் கருதி, அவை மூலபாடத்துடன் சேர்க்காமல் அதிகப் பாடல் என்ற முறையில் பின்னே தனியே குறிக்கப்பெற்றுள்ளன.

1. அங்க தஞ்சி நடுங்கி யயன்பதி யண்மி
   இங்கு நின்வர வென்னை யெனக்கனல் வெய்த
   மங்கை பங்கனெ டெண்டிசை யுஞ்செல மற்றோர்
   தங்க டங்க ளிடங்கண் மறுத்தமை தைப்பாய்.

2. இந்தி ரன்றரு மைந்த னுறுந்துயர் யாவும்
அந்த ரத்தினி னின்றவர் கண்டினி யந்தோ
எந்தை தன்சர ணன்றியொர் தஞ்சமு மின்றால்
வந்த வன்சரண் வீழ்கென வுற்றதும் வைப்பாய்.

3. ஐய நின்சர ணஞ்சர ணென்றவ னஞ்சி
வையம் வந்து வணங்கிட வள்ளன் மகிழ்ந்தே
வெய்ய வன்க ணிரண்டொடு போகென விட்ட
தெய்வ வெம்படை யுற்றுள தன்மை தெரிப்பாய்.

4 எந்தை நின்சர ணஞ்சர ணென்றவி தன்னால்
முந்தை யுன்குறை யும்பொறை தந்தன முந்துன்
சந்த மொன்று கொடித்திரள் கண்க டமக்கே
வந்தோர் கண்மணி நிற்கென வைத்ததும் வைப்பாய்.

5. வேகம் விண்டு சயந்தன் வணங்கி விசும்பிற்
போக வண்டர்கள் கண்டலர் கொண்டு பொழிந்தார்
நாக நம்ப னிளங்கிளை நன்குண ராத
பாகு தங்கிய வென்றியி னின்சொல் பணிப்பாய்.

(பி-ம்.) 1. நாக மொன்றில் குலவரை; நாக முத்தொரு மால்வரை நண்ணிய போதென்.
ஆக வத்தெனை; ஆகம் நொந்துற வள்ளுகிர்: அள்ளுகிர்.
3. முனிந்தியல்.
4. வேக வெஞ்சரம் விட்டது மெல்ல விசைப்பாய். (77)

684. *என்னொ ரின்னுயிர் மென்கிளிக் கார்பெய ரீகேன்*
*மன்ன வென்றலு மாசறு கேகயன் மாதென்*
*அன்னை தன்பெய ராகென வன்பினொ டந்நாள்*
*சொன்ன மெய்ம்மொழி சொல்லுதி மெய்ம்மை தொடர்ந்தோய்.*

'மன்ன- அரசனே! என் ஒர் இன் உயிர் மென் கிளிக்கு- என்னுடைய ஒப்பற்ற இனிய உயிர் (போன்று யான் அன்புடன் வளர்த்து வரும்) மென்மை பொருந்திய கிளிக்கு, ஆர் பெயர் ஈகேன்- யாருடைய பெயரை யான் இடுவேன்?' என்றலும் - என்று (யான் இராமபிரானை ஒரு போது) கேட்டதும், மாசு அறு கேகயன் மாது என் அன்னைதன் - குற்ற மற்ற கேகய மன்னன் மகளும், என் தாயாருமாகியவளின், பெயர் ஆக என-பெயராக இருக்கட்டும் என்று, அன்பினொடு-(அக் கைகேயி அன்னை பால் தான் கொண்ட, அன்பின் (உணர்ச்சி) யோடு, அ நாள் சொன்ன மெய் மொழி - (அயோத்தியில் யாங்கள் இருந்த அப்போது) என்னிடம் சொன்ன உண்மையான வார்த்தையை, மெய்ம்மை தொடர்ந்தோய் -

உண்மை நெறியில் நடக்கும் அநுமனே! சொல்லுதி - யான் அடையாள மாகச் சொன்னதாகச் சொல்வாயாக!.

இராமபிரான் கைகேயி அன்னையிடம் மெய்யன்பு கொண்டவனு தலின், அவ்வம்மை பெயரைக் கிளிக்கு வைக்கச் சொன்னான் என்க. இராமபிரான் கைகேயி அன்னைபால் மெய்யன்புள்ளவ னென்பது; 'கேகயன் மாமகள் கேழ்கிளர் பாதம், தாயினு மன்பொடு தாழ்ந்து வணங்கா' (பால. கடிமணப். 95; ); 'தீய ளென்றுநீ துறந்தவென் றெய்வமு மகனும், தாயுந் தம்பியு மாம்வரந் தருகெனத் தாழ்ந்தான்'; 'கைகயன் றனயைமுந்தக் காலுறப் பணிந்து மற்றை' (உயுத்த. மீட்சிப். 129, 343.) குடும்பத்துப் பெரியோர் பெயர்களைத் தம் மக்கள், அன் புடைய பொருள்கள் முதலியவற்றுக்கு இடுவது மரபு என்பதற்கும் இச் செய்தி ஒரு சான்றாகும். இச் செய்தியை அழகர் கிள்ளைவிடு தூது. கிளியைப் பாராட்டும் பகுதியில் பின்வருமாறு அழகுபட விரிக்கின்றது: 'முன்பொரு நாள், கோசலை கையிற் குரிசி லுனைப்புகழ்ந்து, பேசினுனைப் புகழ்ந்து பேசாரார்' (235).

(பி-ம்) 1. என்ன வென்னுயிர்; என்ன தின்னுயிர்: பின்னு மங்கொர் கிளிக்கினி யார்பெய ரீவோம்: 3. தன்பெய ராக்கென. 4. மென்மொழி: மேன்மை தொடர்ந்தோய்; மென்மை தொடர்ந் தோய். (78)

## பிராட்டி சூடாமணியைக் கொடுக்க, அதனை அநுமன் ஏற்றுக்கொள்ளுதல் 685-90

685. *என்று ரைத்தினி தித்தனை பேரடை யாளம்*
*ஒன்று ணர்த்துவ தில்லென வெண்ணி யுணர்ந்தாள்*
*தன்றி ருத்துகி லிற்பொதி வுற்றது தானே*
*வென்ற தச்சுடர் மேலொடு கீழுற மெய்யால்.*

என்று இத்தனை பேர் அடையாளம் இனிது உரைத்து - என இவ்வளவு சிறந்த அடையாளங்களை இனிமையாகச் சொல்லி, ஒன்று உணர்த்துவது இல் என எண்ணி உணர்ந்தாள் - மேலும் ஒன்று தெரி விப்பது இல்லையென்று ஆலோசித்து அறிந்தவளான பிராட்டி, தன் திரு துகிலில் பொதிவு உற்றது - தன்னுடைய ஆடையில் முடிந்து வைக்கப் பெற்றிருந்ததும், மெய்யால் - உண்மையில், மேலொடு கீழ் உற அச் சுடர் தானே வென்றது - வானும் பூமியும் பொருந்தும்படி சுடர்களுக் கெல்லாம் தலைமை பெற்ற அந்தச் சூரியனைத் தானே வென்றதுமான, (சூடாமணியைக் கைக்கொண்டாள்).

இச் செய்யுளும் அடுத்ததும் ஒரு தொடர். துகிலிற் பொதிவுற்றது: 'ஆடையின்கண் ணிருந்தது' (689.) அச்சுடர் வென்றது, 'ஒளியோனு மிம்மாநகர் வந்தான்.........அரக்கரயிர்த்தார்' (687.) மெய்யால் - தன் மெய்யால் என்றும் பொருள் கொள்வர். இம்மணியின் வரலாற்றைப் பின் 689 குறிப்பிற் காண்க.

(பி-ம்.) 1. என்றி சைத்தன ளித்தனே; என்று ரைத்தன ளித்தனே; என்று பற்பல வுற்றுறு; உரைத்தன ளெத்தனே.
2. ஒன்று தப்பிய தில்லென வோதிய பின்னர்.
3. பொலி வுற்றது தானே.
4. வென்றி முச்சுட ரைக்கடி தோர்மணி மெய்யாள்: சுடர் மேலன கீழுற; சுடர் கீழன மேலுற; மேலெனக் கீழுறு மெய்யால். (79)

686. வாங்கி னுடன் மலர்க்கையி னன்னது முன்னு
ஏங்கி னுனவ் வநுமனு மென்கொலி தென்னு
வீங்கி னுன்வியந் தானுல கேழும் விழுங்கித்
தூங்கு காரிருண் முற்று மிரிந்தது சுற்றும்.

அன்னது முன்னு - அத்தகைய மணியை (அடையாளமாகக் கொடுக்க) எண்ணி, தன் மலர் கையின் வாங்கினுள் - (அதனைத்) தன் தாமரை மலர் போன்ற கையில் எடுத்தாள்; 'இது என் கொல் என்னு அ அநுமனும் ஏங்கினுன்-இது என்ன?' என்று எண்ணி அந்த அநுமனும் ஏக்கமுற்ருன்; வியந்தான் வீங்கினுன் - வியந்து உடல் பூரிப் படைந் தான்; (அப்போது) உலகு ஏழும் விழுங்கி தூங்கும் கார் இருள் சுற்றும் முற்றும் இரிந்தது-உலகங்கள் ஏழையும் உட்கொண்டு தங்கியிருந்த கரிய இருட்டு சுற்றுப்புறம் முழுவதும் இல்லாது ஓடியது.

இருள் இரிந்தது சூடாமணியின் ஒளியால் என்க.

(பி-ம்.) 1. கையி னன்றது; கையி லன்றது; கையின் மன்னனே: கையி ஞல்மன முன்னு; கையி ஞள்மன முன்னுள்.
2. ஏங்கினுளவ்; ஏங்கி னுனட லநுமனும்; ஏங்கினுளவண் மாருதி:
3. வீங்கி னுனுடல் மூவுல கோடு விழுங்கித்: உல கேழையும் விழுங்கி: ஏழினும் வீங்கித்: விழுங்கத்.
4. முற்று முடிந்து தொலைந்த: இரிந்தன சுற்ற; இரிந்த தொலைந்தே: சுற்றி; சுற்று; சுற்றில். (80)

687. மஞ்ச லங்கொளி யோனுமிம் மாநகர் வந்தான்
அஞ்ச லன்னென வெங்கண ரரக்க ரயிர்த்தார்
சஞ்ச லம்புரி சக்கர வாகந் தளிர்த்த
கஞ்ச மும்மலர் வுற்றன காந்தின காந்தம்.

'மஞ்சு அலங்கு ஒளியோனும் - மேகங்கள் அலைந்து சிதறும் ஒளியை யுடைய சூரியனும், அஞ்சலன் இ மாநகர் வந்தான் என - பயப்படாத வனுய் இந்தப் பெரிய இலங்கை நகரில் வந்து விட்டான் போலும்'! என்று, வெம் கண் அரக்கர் அயிர்த்தார் - அச்சத்தைத் தரும் கண்களையுடைய அரக்கர்கள் ஐயங் கொண்டனர்: சஞ்சலம் புரி சக்கரவாகம் தளிர்த்த - வருந்திய சக்கரவாகப் பறவைகள் மகிழ்ச்சி அடைந்தன; கஞ்சமும் மலர்வு உற்றன-தாமரைகளும் மலர்ச்சி யடைந்தன; காந்தம் காந்தின - சூரிய காந்தக் கற்கள் ஒளிவிட்டு விளங்கின.

அலங்குதல்-அசைந்து சிதறுதல். 'அலங்குளைப் புரவி' (புறநா. 2.). சூடாமணியின் ஒளியைக் கண்டதும் இராவணனுக்கு அஞ்சி இலங் கையில் புகாத சூரியன் அங்கு வந்துவிட்டான் என்று அரக்கர்கள் அயிர்த்தனர். இலங்கையில் சூரியன் புகான் என்பது: 116; 118, 193; ஒப்பு: 'இலங்கையி லாதவன் போகக் கண்டானென் னிதயத்தனே' (திருவரங்கத்தந்தாதி, 23.) சக்கரவாகம்: இரவில் தன் துணைப் பறவை யைப் பிரிந்து வருந்திப் பகலில் கூடி மகிழும் இயல்புள்ளது; இது சக்கர வாளம் என்றும், நேமிப்புள் என்றும் வழங்கப்பெறும். சூடாமணியின் ஒளி உயர்திணைப் பொருள்களையும் அஃறிணைப் பொருள்களையும் மயங்க வைத்தது என்க. இவ்வருணனையால் விடியற்கால நேரம் அண்மித்தது என்று குறித்ததாகவும் கொள்ளலாம்.

(பி-ம்.)
1. மஞ்சி லங்; ஒளி யானுமிவ் வாணகர்.
2. அஞ்ச லென்னென; அஞ்ச லன்கொ லெனுவெவ் வரக்க ரயிர்த்தார்; அயர்ந்தார்.
3. சஞ்ச லம்விரி: தஞ்ச லங்கெட வந்தது சக்கர வாகம்: விரி சக் கர வாகமுந் தளிர்த்த; சக்கர வாக முயிர்த்த.
4. மலர் வுற்றது; காந்தின காந்த. (81)

688. கூந்தன் மென்மழைக் கொண்முகின் மேலெழு கோளின்
வேந்த னன்னது மெல்லிய றன்றிரு மேனி
சேந்த தந்தமில் சேவகன் சேவடி யென்னக்
காந்து கின்றது காட்டினண் மாருதி கண்டான்.

மழைகொள் - குளிர்ச்சியைக் கொண்டுள்ள, மெல் கூந்தல் முகில் மேல்-பிராட்டியின் மென்மையான கூந்தலாகிய மேகத்தின் மீது, எழு கோளின் வேந்தன் அன்னது - மேற் கிளம்பித் தோன்றும் கிரகங்களுக்கு அரசனான சூரியனை ஒத்திருப்பதும், மெல்லியல் தன் திருமேனி சேந்தது - மென்மை பொருந்திய பிராட்டியின் அழகிய திருமேனியைப் போலச் சிவந்துள்ளதும், அந்தம் இல் சேவகன் சேவடி என்ன காந்துகின்றது -

(இத்தன்மைத்து என்று) முடிவு கூற முடியாத மகா வீரனுன இராம பிரானுடைய சிவந்த பாதங்கள் போல ஒளி வீசுகின்றதும் ஆன (அச் சூடாமணியை), காட்டினள் - பிராட்டி அநுமனுக்குக் காட்டினுள்; மாருதி கண்டான் - (அதனை) அநுமன் பார்த்தான்.

மழை கொள் என்பதை முகிலுக்கும் கூட்டலாம். கோளின் வேந் தன்-நவக் கிரகங்களுக்கு நாயகனுன சூரியன். பிராட்டியின் கூந்தலுக்கு மேகமும், அக்கூந்தல் மேல் விளங்குவதான சூடாமணிக்கு மேகத்தின் மேல் தோன்றும் சூரியனும் உவமைகள் ஆயின. சூடாமணி, சூரியன் போலும், பிராட்டி திருமேனி போலும், இராமபிரான் திருவடி போலும் ஒளி வீசியது என்க. பிராட்டியின் திருமேனி மாற்றுயர்ந்த செம்பொன் நிறமானதால் சேந்தது எனப்பட்டது என்று கொள்ளத்தக்கதாம். பிராட்டியின் திருமேனி நிறம் பொன்; ஆரண்ய. சூர்ப்பணகைப். 62, மாரீசன்வதை. 67, 87. வேந்த னன்னது, சேந்தது, காந்துகின்றது எனப் பிரித்துக் கூறியதின் நயம் ஓர்க.

(பி-ம்.) 1. மழை கொண்டவள் விண்ணுறு கோளின்.
2. வேந்த தன்னது மெல்லிய றன்னெழின் மேனி; நற்றிரு மேனி.
3. சேர்ந்த தம்மியல்; சேந்த சேவக னன்குறு சேவடி யென்னக்: சேவடி யென்கை; சேவடி போல; சேவடி புரையூஉக்.
4. காந்து நன்மணி. (82)

689. சூடை யிம்மணி கண்மணி யொப்பது தொன்னுள்
ஆடை யின்கணி ருந்தது பேரடை யாளம்
நாடி வந்தென தின்னுயிர் நல்கினை நல்லோய்
கோடி யென்று கொடுத்தனண் மெய்ப்புகழ் கொண்டாள்.

மெய் புகழ் கொண்டாள்-உலகில் உண்மையான பெரும் புகழைக் கொண்ட பிராட்டி, 'நாடி வந்து எனது இன் உயிர் நல்கினை நல்லோய் - என்னைத் தேடி வந்து எனது இனிய உயிரை அளித்த உயர்ந்தோனே! சூடை இ மணி - சூடை என்னும் இந்த இரத்தினம், கண்மணி ஒப்பது - என் கண்மணி போன்ற அருமை வாய்ந்தது; தொல் நாள் ஆடையின் கண் இருந்தது - வெகு நாட்களாய் என் ஆடையில் முடிந்து வைத் திருந்தது; பேர் அடையாளம் - (இராமபிரானுக்கு) இது யாவற்றினும் சிறந்த பெரிய அடையாளமாகும்; கோடி என்று - (இதனை நீ அடை யாளப் பொருளாய்க்) கொள்வாயாக' என்று சொல்லி, கொடுத்தனள் - (அதை) அநுமனிடம் கொடுத்தாள்.

சூடா என்பது தமிழ் விதிப்படி சூடை என ஆயிற்று. கண்மணி - கண்ணினுள் விளங்கும் மணி. மற்ற உறுப்புக்களில் கண் சிறந்தது;

அதனினும் சிறப்புள்ளது அக் கண்ணில் உள்ள மணியாதலின், அது சூடாமணிக்கு உவமை கூறப்பட்டது; கண்மணியைப் போல அதனைப் பிராட்டி காத்து வந்தாளாதலின் கண்மணி யெனப்பட்டது. அநுமன் பிராட்டியின் உயிரை அளித்தவன் என்பது, 560, 601. சூடாமணி, இது தலையில் அணிந்து கொள்ளும் இரத்தினத்தால் செய்த ஓர் ஆபரணம்: இராவணன் தன்னை அபகரித்துப் போகும் வழியில் ஆகாயத்திலிருந்து ருசியமுக பருவதத்தின் மீது இருந்த வானரங்களுக்கு அருகில்,மற்ற தன் அணிகலன்களை யெல்லாம் கழற்றிப் போகட்ட பிராட்டி, இந்தச் சூடா மணியின் பெருமை கருதி அதனை மட்டும் தன் ஆடையில் சேமித்து முடித்து வைத்திருந்தாள் என்க. கணவரைப் பிரிந்த மகளிர் அணி களை அணிதல் சிறப்பன் றாதலாலும், ஆடையில் வைத்துக் காப்பாற்றி வந்தாள் என்க. 'நியமனப்படி சித்திர கூடத்திலே வைத்து ஆடை யிலே முடிந்தது' என்பது **பழைய உரை.**

சூடாமணியைப் பற்றி வான்மீகம் கூறுவன: பிராட்டி கூறியது: 'இராமபிரானுக்கு உள்ளபடி தெரிந்த அடையாளம் இது; வீரனை இராம பிரான் இம்மணியைக் கண்டவுடனே மூவர்களான என்னுடையவும், தாயினுடையவும், தசரத மன்னருடையவும் ஞாபகத்தைப் பெறுவர்.' **சுந்தர.** 39:1-2; இராமபிரான் சூடாமணியைக்கண்டபோது கூறியது: 'இந்தச் சூடாமணி யென்ற ஆபரணோத்தமமானது சீதைக்கு எனது மாமனாரால் (ஜனகரால்) விவாஹ காலத்தில் கொடுக்கப்பெற்றது; நீரில் பிறந்த இம்மணி மிகவும் மனமகிழ்ந்த இந்திரனால் யாகத்தில் பரிசாய்க் கொடுக்கப்பட்டது;. இம்மணியைப் பார்த்து எனது தந்தையாரையும், ஜிதேந்திரியரான விதேக மன்னரையும் பார்த்ததாக எண்ணுகிறேன்; சீதையை அடைந்தது போலவும் எண்ணுகிறேன், **சுந்தர.** 66: 4,-7.

இவ்வாறன்றி, சூடாமணி என்னும் இந்த ஆபரணம் முன், சூரிய வமிசத்து அரசர் ஒருவருக்கு வருண ராஜனால் வெகுமதியாக அளிக்கப் பெற்றது; அவ்வரச பரம்பரையில் குலதனமாக வைத்துக் காக்கப்பட்டு வந்தது; அந்தச் சூடாமணியைத் தசரத சக்கரவர்த்தி தன் மருமகளான பிராட்டிக்குக் கலியாண காலத்தில் ஓர் அணிகலமாக அளித்தார். அச் சூடாமணியை தன் மாமனாரால் அளிக்கப் பெற்ற சிறப்பு நோக்கிக் கழற்றி எறியாமல் பத்திரமாய்த் தன் ஆடையில் அவள் பொதிந்து வைத் திருந்தாள் என்றும் கூறுவர். சூடாமணி வருணன் கொடுத்ததே என்ப தற்குச்சான்று, 735.

(பி-ம்.) 1. **சூடை யின்மணி: சூடு றுமணி கண்மணி யொப்பதுதூய்தென்.**
2. **ஆடை யூடு பொதிந்துள தீதடை யாளம்.**
3. **என தாருயிர் நல்கினை: நல்கிய நம்பா.**
4. **மெய்புகழ்: கொண்டான்.** (83)

690. *தொழுது வாங்கினன் சுற்றிய தூசினின் முற்றப்*
*பழுது றுவகை பந்தனை செய்தனன் பல்கால்*
*அழுது மும்மை வலங்கொ டிறைஞ்சின னன்போ*
*டெழுது பாவையு மேத்தின ளேகின னிப்பால்.*

தொழுது வாங்கினன் - (அநுமன் பிராட்டியை), வணங்கி அந்தச் சூடாமணியை வாங்கிக் கொண்டு, முற்ற பழுது உறு வகை - நன்றாக அதற்கு ஒரு பழுதும் வராதபடி, சுற்றிய தூசினின் - தான் உடுத்திருந்த ஆடையில், பந்தனை செய்தனன் - முடிந்து பத்திரப்படுத்தி வைத்துக் கொண்டான்; பல் கால் அழுது-(பிராட்டியைப் பிரிந்து போக வேண்டியதை நினைந்து) பல முறை அழுது, மும்மை வலம் கொடு-மூன்று தடவை அவளைச் சூழ்ந்து வலம் வந்து, இறைஞ்சினன் - (மீண்டும்) வணங்கினான்; எழுது பாவையும் - சித்திரத்தில் எழுதிய பாவை போன்ற அழகுடைய பிராட்டியும், அன்பொடு ஏத்தினள் - அன்புடன் அநுமனைப் புகழ்ந்து ஆசீர்வதித்தனள்; ஏகினன் - அநுமனும் அவ்விடம் விட்டுச் சென்றான்; இப்பால் - இதன்பின் யாது நடந்ததோவெனில், (அது அடுத்துக் கூறுவாம் என்பதாம்.)

ஏத்துதல் - வாழ்த்துதல், 73; சீவக. 324. ஒரு செய்தியைச் சொல்லிப் பின் வேறு செய்தி தொடங்குவதைக் குறிப்பிட, இப்பால் என்று சொல்லி நிறுத்துவது ஆசிரியர் மரபு: **ஆரண்ய.** சூர்ப்பணகைப். 7; **உயுத்த.** இந்திரசித்து. 71.

(*பி-ம்.*) 1. வாங்கின னங்கொரு தூசிடைச் சுற்றிப்: தூசினன்:
2. பந்தனஞ் செய்தனன்: செய்தபின் வந்தித்; செய்தனன் முந்துற்(று).
3. தொழுது: இறைஞ்சினன் றூயோன்:
4. பாவையு மொத்தனள்: பாவையன்னாள் விடை .யீந்தனனிப்பால். (84)

சூடாமணிப்படலம் முற்றும்



## 6. பொழிலிறுத்த படலம்.

பொழிலிறுத்த படலம்-பிராட்டி அளித்த சூடாமணியுடன் அவளிடமிருந்து விடை பெற்று அகன்ற அநுமன் தன் வருகையை இராவணன் அறியும் பொருட்டு, அசோக வனத்தை அழித்தமை கூறும் படலம் என விரியும். இப்படலம் சில ஏட்டுப் பிரதிகளில், **பூங்காவனப் படலம், வனபங்கப் படலம்** என்ற பெயருடன் குறிக்கப் பெற்றுள்ளது. மற்றும் சில பிரதிகளில் இப்படலமும் அடுத்த படலமும் சேர்ந்து ஒன்ருய், **அரக்கர்வதைப் படலம், கிங்கரர்வதை தோரணப் படலம், கிங்கரர் அரக்கர்வதைப் படலம்** என்ற பெயர்களுடன் காணப்படுகின்றது.

### அநுமன் தன்னுள் ஆராய்தல் 691–97

691. *நெறிக்கொடு வடக்குற நினைப்பினி னிமிர்ந்தான்*
*பொறிக்குல மெழப்பொழி லிடைக்கடிது போவான்*
*சிறுத்தொழின் முடித்தகற றீதென றெரிந்தான்*
*மறித்துமொர் செய்ற்குரிய காரிய மதித்தான்.*

நெறி கொடு-அநுமன் இனி தான் செல்ல வேண்டிய வழியை மேற்கொண்டு, வடக்கு உற - வடக்குமுகமாகச் (செல்லும்), நினைப்பினில் - நினைப்போடு, நிமிர்ந்தான் - (அதற்கு ஏற்ப) பெரிய உருவை எடுத்துக் கொண்டவனுய், பொறி குலம் எழ-வண்டின் கூட்டங்கள் அஞ்சி உறக்கத்தை விட்டு எழ, பொழில் இடை-அந்த அசோக வனத்தினிடையே, கடிது போவான் - விரைந்து செல்பவனுன அநுமன், 'சிறு தொழில் முடித்து அகறல் - (பிராட்டியைக் கண்ட இந்த) ஒரு சிறு செயலை மட்டும் முடித்துக் கொண்டு போவது, தீது எனல் தெரிந்தான் - (தன் பெருமைக்குக்) குறைவு' என்பதை உணர்ந்தவனுய், மறித்தும் ஓர் செயற்கு உரிய காரியம் மதித்தான் - மீண்டும் தான் செய்வதற்கு ஏற்றதான ஒரு செயலை எண்ணினுன்.

பொறிக்குலம்-வண்டின் கூட்டம்; பொறி என்பது சினையாகுபெயராய் வண்டைக்குறித்தது: பொறி - வண்டு; 'பொறி கலந்த பொழில்' (தேவாரம்.) இரவில் உறங்கிக் கிடந்தவண்டுகள் அநுமன் கடிது சென்ற அதிர்ச்சியால் அஞ்சி யெழுந்தன என்க. சிறுத்தொழில்: வலித்தல் விகாரம்; சிறுத்தாம்பு, சிறுத்தொண்டன் என்பன போல. பொறிக்குல மெழ' என்றமையால் விடியற்காலம் நெருங்கிற்று என்பதையும் சுட்டியதாகலாம். பொறிக்குல மலர்ப்பொழில், என்று பாடங் கொண்டு, இலக்

குமியின் அமிசமான பிராட்டி தங்கியிருந்த பொழில் என்றும் பொருள் கூறுவர், பொறி - இலக்குமி (பிங்களம்) செய்து முடிக்க வேண்டிய காரியத்தில் ஏவப்பட்டபொழுது எவனொருவன் முதற்காரியத்திற்கொரு கேடுமின்றிப் பிற பலவற்றையும் சாதிக்கின்றானோ, அவன் செயல்முடிப் பதில் வல்லவனாகின்றான்' என்று இங்கு அநுமன் கருதியதாக வான்மீகம் கூறும். (சர்க்கம். 41. 5.)

(பி-ம்.) 1. வடக்குறு: வடக்கினி.
2. பொறிக்குல மலர்ப்பொழி: கடிது போனான்.
3. முடித்தகல்கை: தெளிந்தான்; நினைந்தான்.
4. மறித்தொரு செயற்: காரண மதிப்பான். (1)

692. *ஈனமுறு பற்றலரை யெற்றி யெயின்மூதூர்*
*மீனநில யத்தினுக வீசி விழிமானை*
*மானவன் மலர்க்கழலின் வைத்துமிலெ னென்றால்*
*ஆனபொழு தெப்பரிசி னானடிய னாவேன்.*

'ஈனம் உறு பற்றலரை-இழிவான செயல்கள் பொருந்திய பகைவர் களான (இந்த இலங்கையில் உள்ள) அரக்கர்களை, எற்றி-தாக்கி அழித்து, எயில் மூதூர்-மதில்கள் சூழ்ந்த இந்த இலங்கை நகரை, மீன நிலயத்தின் உக வீசி - (பலவகை) மீன்களுக்கு இருப்பிடமான கடலில் சிதறி விழும்படி வீசி எறிந்து, விழிமானை - விழியால் மானை ஒத்த பிராட்டியை, மானவன் மலர் கழலில் வைத்துமிலென் என்றால் - இராமபிரானுடைய தாமரை மலர் போன்ற கழலணிந்த திருவடிகளில் (காணிக்கை போல) வைத்து வணங்க வில்லேன் என்றால், ஆன பொழுது-அந் நிலையில் யான் உள்ள போது, எ பரிசின் நான் அடியன் ஆவேன் - எவ்விதத்தில் நான் இராமபிரானுக்கு உண்மை அடியனாக ஆவேன்?

ஈனம் உறு பற்றலர் - இழிவுக்குணம் உள்ள பெரிய பகைவர் என்றும், ஈனத்தொழின் மிக்க பகைவர் என்றுங் கொள்ளலும் ஆம்; உறு-மிகுதிப் பொருளைத் தரும் உரிச்சொல். மீன நிலயம்: வடமொழித் தொடர். விழிமான்: மான் விழி என்பது விழிமான் என மாறியது; இஃது இலக்கணப் போலி; புறநகர், வாயில் என்பன போல, மகளிர் விழியை மானுக்கு உவமையாகக் கூறுவது; பால. அகலிகை. 74; கோலங் காண். 7; ஆரண்ய. சூர்ப்பணகை; 33. மானவன்-மனு குலத்திற் பிறந்த இராமன்; பால. கார்முகப் 31. அநுமன் இராமபிரானுக்கு அடியன் என் னும் நிலையை விரும்புபவன்; 'அடியேனைப் முடியேனே' (314). இக்

காரணம் பற்றியே ஆன்றோரும் அநுமனைத் திருவடி என்னும் பெயராலே குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது; அநுமனைத் திருவடி யென்பது; கிட்கிந்தா. மகேந்திரப். 26; வி. பா. புட்பயாத். 59.

(பி-ம்.) 1. எற்றி யிகன்மூதூர். 2. நிலயத்தினுற; நிலயத்தினிடை. 3. வைத்துமில னல்லேன். 4. எப்பணியினல்; எப்படியினுல்: எப்படி யவர்க்கடிய னுவேள். (2)

693. வஞ்சனை யரக்கனை நெருக்கிநெடு வாலால்
அஞ்சி னுட னஞ்சுதலை தோளுற வசைத்தே
வெஞ்சிறையில் வைத்துமிலென் வென்றுமிலெ னென்றால்
தஞ்சமொரு வர்க்கொருவ ரென்றறகவாமோ.

'வஞ்சனை அரக்கனை - திருட்டுத் தன்மை பொருந்திய அரக்கனான இராவணனை, நெடு வாலால் - (என்) நீண்ட வாலினால், அஞ்சின் உடன் அஞ்சு தலை - பத்துத் தலைகளையும், தோள் உற - இருபது தோள்களும் பொருந்தும்படி, நெருக்கி அசைத்து-நெருக்கிக் கட்டி, வெம் சிறையில் வைத்தும் இலென் - கொடிய சிறையில் வைத்தேனும் அல்லேன்; வென்றும் இலென்-அல்லது அவனைப் போரில் வென்றேனும் அல்லேன்; என்றால்-என்று சொல்லுவமானால், ஒருவர்க்கு ஒருவர் தஞ்சம் என்றல் - ஒருவருக்கு ஒருவர் பற்றுக்கோடு என்ற உறுதி மொழி கூறல், தகவு ஆமோ-தகுதியுடையது ஆகுமோ; (ஆகாது என்றபடி.) ஏ, அசை.

இராவணனை வஞ்சனை அரக்கன் என்றது. திருட்டுத் தனமாய்ப் பிராட்டியைக் கவர்ந்து வந்தமையால் என்க: அஞ்சு; ஐந்து, என்பதின் போலி. அசைத்தல்-கட்டுதல்; 'புலித்தோலை அரைக்கசைத்து' (சுந்தரர் தேவாரம்). தஞ்சம் ஒருவர்க்கொருவர் என்றது, இராமபிரானும் சுக்கிரீவனும் ஒருவர்க்கொருவர் உற்ற துணையாக நட்புக் கொண்டதைக் குறிப்பிட்டது. இங்குச் சுக்கிரீவனுன தன் அரசனுக்கு உள்ள பொறுப்பை அநுமன், தன்மேல் ஏற்றிக் கொண்டதாகும்.

(பி-ம்.) 1. அரக்கரை. 2. அஞ்சினெடு மஞ்சு: தோளுற வரைத்தென்: விசித்தே. 3. வேறுமிலன். 4. என்றறகு மன்றே; என்கைதவ றன்றே. (3)

694. கண்டநிரு தக்கடல் கலக்கியென் வலத்தால்
திண்டிற லரக்கனு மிருக்கவொர் திறத்தின்
மண்டவுத ரத்தவள் வடிக்குழல் பிடித்துக்
கொண்டுசிறை வைத்திடுத லிற்குறையு முண்டோ.

'கண்ட நிருத கடல் - என் எதிரில் யான் கண்ட அரக்கர் கூட்டமாகிய கடலை, என் வலத்தால் கலக்கி- என் வலிமையினால் கலக்கமுற்று அழியச் செய்து, திண் திறல் அரக்கனும் இருக்க - மிக்க வலிமையுடைய அரக்கனான இராவணனும் பார்த்துக் கொண்டிருக்க, ஓர் திறத்தின் - ஒப்பற்ற என் வல்லமையினால், மண்ட உதரத்தவள்-(அவன் பட்டத்து மனைவியான) மண்டோதரியின், வடி குழல் பிடித்து-வாரி முடித்த கூந்தலைப் பற்றி, சிறை கொண்டு வைத்திடுதலில் - சிறையாகக் கொண்டு வைப்பதில், குறையும் உண்டோ - குற்றம் உண்டாகுமோ? (உண்டாகாது என்பதாம்.)

கடல்: மிகுதியையும் பெருமையையும் குறிப்பதாகும். கடல். என்பதற்கேற்ப. கலக்கி எனப்பெற்றது. திண் திறல்: ஒரு பொருட் பன்மொழி. மண்ட உதரத்தவள்: மந்தோதரி, என்ற வடசொல்லின் திரிபு; இது சுருங்கிப் படிந்த வயிற்றையுடையவள் என்னும் பொருளது. இச் சொல் வண்டோதரி என்றும் வழங்குவதுண்டு; 'வண்டோதரிக்குப் பேரருளின்பளித்த பெருந்துறை மேயபிரானை' (திருவாசக. குயிற் பத்து. 2). வடிக்குழல்; 328. குறை உண்டோ-வேறு செய்ய வேண்டிக் குறையாய் உள்ள செயல் உள்ளதோ என்னலும் ஆம்; 'கோதென்றுண்டில ளித்தனை யேகுறை' (பால. தாடகைவதைப். 56); 'நிறை தவத்தின் குறை முடித்து' (ஆரண்ய: சூர்ப்பணகை. 114).

(பி-ம்.) 1. கலக்கினன் வலத்தில்; நல் வலத்தில்.
2. திறத்தால்.
3. மண்டுக தரத்திதன்: மண்டுக திரத்தி; மண்டுமுத ரத்தினாள்: மலர்க் ரழல்.
4. குறைவ துண்டோ;

(4)

695. *மீட்டுமினி யெண்ணும்வினை வேறுமுள தன்றால்*
*ஓட்டியிவ் வரக்கருயி ருண்டுரிமை யெல்லாம்*
*காட்டுமது வேகரும மற்றவர் கடும்போர்*
*மூட்டும்வகை யாவதுகொ லென்றுமுயல் கின்றான்.*

'மீட்டும் இனி எண்ணும் வினை வேறும் உளது அன்று - மறுபடியும் (யான்) கருதக் கூடிய செயல் வேறொன்றும் இல்லை; இ அரக்கர் உயிர் ஓட்டி உண்டு - இந்த இராக்கதர்கள் உயிர்களை ஓடச் செய்து கொன்று, உரிமை எல்லாம் காட்டும் அதுவே கருமம் - யான் இராமபிரானுடைய அடிமை யென்னும் என் உரிமைத் தன்மை யெல்லாம் வெளிப்படையாகக் காட்டுவதே நான் செய்யத்தக்க செயலாகும்; அவர் கடும் போர் மூட்டும் வகை யாவது கொல் என்று - அவ்வரக்கர்கள் கடுமை

யான போரை மூட்டும் விதம் எது ஆகும்' என்று, முயல்கின்றான் - அநுமன் அதற்கு உரிய செயலை முயற்சியோடு ஆலோசிப்பானாயினன். ஆல், மற்று, அசைகள்.

அநுமன், அரக்கரைப் போர் மூட்டி அழிப்பது, தான் இராம பிரானுக்கு உண்மை அடிமை யென்பதை நிலை நாட்டுவதோடு, அச் செயல் தனக்கு உரிய தென்றும் கருதினான் என்க; முன் 'நடித்து வாழ் தகைமையதோ வடிமைதான்' (315) என்றமையும் நோக்குக. கொல்: அசை என்று கொள்ளலும் ஒன்றும்.

(பி-ம்.) 1. யென்றுவினை; யெண்ணுவினை.
2. ஓட்டிய வரக்கரை: யுலைத்தென்வலி யெல்லாம்.
3. காட்டுமிது வேகரும மன்னவர்; மாட்டுமிது வேகரும மற்றிவர்: கொடும்போர்.
4. யாவதெவ வெண்ணிமுயல்; யாவதுகொ லென்னமுயல்: வகையாதென மதித்து முயல். (5)

696. *இப்பொழி லினைக்கடி திறுக்குவெ னிறுத்தால்*
*அப்பெரிய பூசல்செவி சார்தலு மரக்கர்*
*வெப்புறு சினத்தரெதிர் மேல்வருவர் வந்தால்*
*துப்புற முருக்கியுயி ருண்பலிது சூதால்.*

'இ பொழிலினை - இந்த அசோக வனம் என்னும் சோலையை, கடிது இறுக்குவென் - விரைவில் முறித்து அழிப்பேன்; இறுத்தால் - அவ்வாறு யான் அழித்தால், அ பெரிய பூசல் செவி சார்தலும் - அந்தப் பெரிய ஆரவாரம் காதிற் பட்டதும், அரக்கர் வெப்பு உறு சினத்தர் - இராக்கதர்கள் வெம்மை மிக்க கோபம் உள்ளவர்களாய், எதிர் மேல் வருவர் - என்மேல் எதிர்த்துப் போர் புரிய வருவார்கள்; வந்தால் - அவ்வாறு வந்தால், துப்பு உற முருக்கி - என் வலிமை பொருந்தக் கொன்று, உயிர் உண்பல் - அவர்கள் உயிர்களை அழிப்பேன்; இது சூது - இதுவே யான் செய்யத்தக்க உபாயமாகும். ஆல்: அசை.

பூசல்-ஆரவாரம் அல்லது பேரொலி; 'பூசல் வண்டரற்றுங் கூந்தல்' (ஆரண்ய. சூர்ப்பணகை. 47); 'புண்கணீர் பூச றரும்' (குறள். 71). துப்பு-வலிமை, சாமர்த்தியம், மிடுக்கு. சூது-உபாயம் அல்லது தந்திரம்: சீவக. 2870.

(பி-ம்.) 3. வெப்புறு மனத்தர்: சினத்தரிகன் மேல்: சினத்தெதிர மேல்; சினத்தினெடு மேல்.
4. துப்பற: சூளால்; தூய்தால். (6)

697. *வந்தவர்கள் வந்தவர்கண் மீள்கிலர் மடிந்தால்*
*வெந்திற லரக்கனும் விலக்கரு வலத்தால்*
*முந்துமெனி லன்னவன் முடித்தலை முடித்தென்*
*சிந்தையுறு வெந்துயர் தவிர்த்தினிது செல்வேன்.*

—

'வந்தவர்கள் வந்தவர்கள் மீள்கிலர் மடிந்தால் - என்னை எதிர்த்துப் போர் செய்ய மேன்மேலும் வந்த அரக்கர்கள் எல்லாரும் திரும்பிச் செல்லாது மடிந்தார்களானால், வெம் திறல் அரக்கனும் - கொடிய வலிமையுடைய இராவணனும், விலக்கு அரு வலத்தால் - பிறரால் தடுத்து விலக்க முடியாத வலிமையோடு, முந்தும் எனில் - என் மீது போர் புரிய முற்பட்டு வருவானானால், அன்னவன் முடி தலை முடித்து - அவன் கிரீடங்கள் அணிந்த தலைகளை அழித்துக் கொன்று, என் சிந்தை உறு வெம் துயர் தவிர்த்து - என் மனத்தில் உள்ள கொடுந் துக்கத்தையும் நீக்கி, இனிது செல்வேன் - மகிழ்ச்சியோடு திரும்பிப் போவேன்.

வந்தவர்கள் வந்தவர்கள்: அடுக்கு, விரைவுப் பொருளது. இராவணனைத் தான் தடிய வேண்டுமென்பது அநுமனுக்குப் பலமுறை உண்டான எண்ணமாதலால், 'அன்னவன் முடித்தலை முடித்தென் சிந்தையுறு வெந்துயர் தவிர்த்து' என்றனன் என்க; 314, 315, 468, 469.

(பி-ம்.) 1. வந்தவர்கள் மாளமடிவித்தல்: மீள்கில.
2. விலக்கரும் வலத்தால்; வெலற்கரும் வரத்தான்: வெலற்கரு மனத்தான்; வெலற்கரும் வலத்தான்.
3. முடித்தலைகள் பத்தும்: யிடித்தென்; முரித்தென்; பிடித்தென்; இடித்தென்.
4. உறு காரிய முடித்நலது செல்லேன்; உறு கோபமுமவித்தினிது: சிந்தியென் மனச்சின முடித்தினிது. (7)

## அநுமன் பொழில் இறுத்தல்

698. *என்றுநினை யாவிரவி சந்திர னியங்கும்*
*குன்றமிரு தோளனைய தன்னுருவு கொண்டான்*
*அன்றுல கெயிற்றிடைகொ ளேனமென லானுன்*
*துன்றுகடி காவினை யடிக்கொடு துகைத்தான்,*

என்று நினையா - என்று நினைத்து, இரவி சந்திரன் இயங்கும் - சூரியனும் சந்திரனும் சுற்றி வலம் வரும், குன்றம் அனைய இரு தோள் - மேரு இரண்டாக அமைந்ததென்னும்படியான இரண்டு தோள்களையுடைய, தன் உருவு கொண்டான் - தன் பெரிய உருவை எடுத்துக்கொண்ட அநுமன், அன்று உலகு எயிற்று இடை கொள் ஏனம் எனல் ஆனுன் - முற்காலத்தில் பூமியைத் தன் பற்களின் இடையே கொண்ட

வராகமூர்த்திக்கு ஒப்பாக விளங்கினவனாகி, துன்று கடி காவினை-மரங்கள் அடர்ந்த அந்தக் காவல் மிகுந்த (அசோக வனம் என்னும்) சோலையை, அடிகொடு துகைத்தான்-தன் பாதங்களால் தாக்கி மிதித்து அழித்தான்.

இரவி சந்திரனியங்கும் இரு குன்ற மனைய தோள் என இயைத்து சூரிய சந்திரர் உதித்து அத்தமிக்கும் இரு மலைகளாகிய உதயகிரி அத்த கிரி போன்ற இரு தோள்கள் என்னலும் ஒன்றும். இரண்டு மேரு மலைகள் இருந்தால் அவை அநுமன் தோள்களுக்கு உவமையாம் என்பது இல் பொருளுவமை. அநுமனுக்கு மேரு; 28, 589. அநுமனுக்கு வராக மூர்த்தி; கிட்கிந்தா. பிலநீங்கு. 69. கடிகா: பகைவர் அணுகாதபடி வளர்க்கப்படும் காவற்சோலை; அதனை வெட்டுதலும் அழித்தலும் பகைவர் இயல்பாம். கடிகா: 708; புறநா. 23. 9: மதுரைக். 153.

(*பி-ம்.*) 1. என்றுநினை யாவினிது.
2. குன்றுமிரு. குன்றனைய தோளனு மனங்குருவு.
3. எயிற்றிடையு மேனமென; எயிற்றினடை; அன்றலை கிடந்தகட லேனமென. 4. துவைத்தான். (8)

## சோலை அழிந்த விதம் 699-729

699. *முடிந்தன பிளந்தன முரிந்தன நெரிந்த*
*மடிந்தன பொடிந்தன மறிந்தன முறிந்த*
*இடிந்தன தகர்ந்தன வெரிந்தன கரிந்த*
*ஒடிந்தன வொசிந்தன வுதிர்ந்தன பிதிர்ந்த.*

(அப்போது அநுமனது கால்களால் துகைக்கப்பட்ட அச் சோலையி லுள்ள மரங்களில் பல), முடிந்தன - அழிந்து போயின; பிளந்தன-பிளந்து போயின; முரிந்தன - வளைந்து போயின; நெரிந்த - ஒன்றோடொன்று தாக்கி நொருங்கி அழிந்தன; மடிந்தன - தலை குப்புற மடிந்து வீழ்ந்தன; பொடிந்தன - பொடியாய்ப் போயின; மறிந்தன - கீழ் மேலாகக் கவிழ்ந் தன; முறிந்த - துண்டுகளாகப் போயின: இடிந்தன - இடிக்கப் பட்டு அழிந்தன; தகர்ந்தன - சிதள் சிதளாய்த் தெறித்துப் போயின; எரிந்தன - எரிந்து போயின: கரிந்த - கரியாய்ப் போயின; ஒடிந்தன - ஒடிபட்டன; ஒசிந்தன - துவண்டு சாய்ந்தன; உதிர்ந்தன - வலியற்று உதிர்வன ஆயின; பிதிர்ந்த - சின்ன பின்னமாயின.

முரிதல் - வளைதல்; 'முரிந்து கடை நெரிய வரிந்த சிலைப்புருவமும்' (மணி. 18:162.)முறிதல்-துண்டுகளாதல்;முறி-துண்டு; 'இந்து முறியென் றியம்புவார்' (நள, 1: 35). ஒசிதல் - துவளுதல்; 'கலந்தவர் போல

வொல்கி யொசிந்தன சில' (பால. பூக்கொய்ப். 10.) இங்கு இடத்திற் கேற்ப வினைகளை அடுக்கிக் கூறும் அழகு நோக்கற்பாலது.

(பி-ம்.) 1. முறிந்தன நெரிந்த; எரிந்த.
2. படிந்தன பொரிந்தன பறந்தன முறிந்த; பொடிந்தன பரிந்தன முறிந்த.
3. இடிந்தன கரிந்தன வெரிந்தன சரிந்த; வெதிர்ந்தன கரிந்த.
4. எதிர்ந்தன பிதிர்ந்த. (9)

700. *வேரொடு பறிந்தசில வெந்தசில விண்ணில்*
*காரொடு செறிந்தசில காலினொடு வேலைத்*
*தூரொடு மறிந்தசில தும்பியொடு வானோர்*
*ஊரொடு மலைந்தசில வுக்கசில நெக்க.*

சில வேரொடு பறிந்த - சில மரங்கள் வேர்களோடு பிடுங்கப் பட்டு இடம் விட்டு ஓடின; சில வெந்த - சில மரங்கள் வெந்து போயின; சில விண்ணில் காரொடு செறிந்த - சில மரங்கள் ஆகாயத்தில் உள்ள மேகத் தோடு நெருங்கின; சில - சிலமரங்கள், காலினோடு - காற்றினால், வேலை தூரொடு மறிந்த-கடலில் உள்ள சேற்றோடு குப்புற்று வீழ்ந்து அழிந்தன; சில தும்பியொடு வானோர் ஊரொடு மலைந்த-சில மரங்கள் வண்டுகளோடு தேவ நகரங்களில் சென்று மோதின; சில உக்க - சில மரங்கள் சிதறிச் சிந்தின; சில நெக்க - சில மரங்கள் நெருங்கி உருவிழந்து அழிந்தன.

வானோர் என்பதை நடுநிலையாகக் கொண்டு தேவர்கள் ஊரில் யானை களோடு பொருதன எனக் கொள்ளலும் ஆகும். தூரொடு என்பதற்குப் புதராகச் சென்று என்றும் பொருள் கொள்வர்.

(பி-ம்.) 1. வேரொடு மறிந்தசில: வேரொடு பரிந்த சில; வீழ்ந்தசில விண்ணிற்.
2. காரொடு மறிந்த சில: காவினொடு; காலினொடு மோடித்.
3: தூரொடு செறிந்தசில தும்பியொடும் வானோர்: தூரொடு பறிந்த சில; தூரிடை மறிந்த சில. 4. ஊரொடு மறிந்தசில. (10)

701. *சோனைமுதன் மற்றவை சுழற்றிய திசைப்போர்*
*ஆனைநுக ரக்குளகு மானவடி பற்று*
*மேனிமிர விட்டன விசும்பின்வழி மீப்போய்*
*வானவர்க ணந்தன வனத்தையு மடித்த.*

சோனை முதல் மற்றவை-மேகத்தைத் தம்மிடங் கொண்ட மற்றும் சில மரங்கள், சுழற்றிய - அநுமனால் சுழற்றி எறியப்பட்டவைகளாய்,

திசை போர் யானை நுகர குளகும் ஆன - எட்டுத் திசைகளைக் காக்கும் போரிற் சிறந்த யானைகள் உண்ணத் தழை உணவாயின; அடி பற்று மேல் நிமிர விட்டன - அடியைப் பற்றி மேலே எழ வீசி யெறியப்பட்ட சில மரங்கள், விசும்பின் வழி-ஆகாய வழியே, மீ போய்-மேலே சென்று, வானவர்கள் நந்தன வனத்தையும் - தேவர்கள் சிங்கார வனங்களையும், மடித்த - அழித்தன.

சோலை முதன் மற்றவை என்றதால் அம் மரங்களின் மீது மேகங்கள் வந்து படிந்திருந்தன என்பதோடு, அம் மரங்கள் மேக மண்டலம் வரை ஓங்கி வளர்ந்திருந்தன என்பதும் பெறப்படும். சோலை முதல் என்பதற்கு மழைக்குக் காரணமான என்றும் கூறலாம். திசையானை-திக்கயங்கள். அநுமனால் எறியப்பட்ட மரங்கள் எட்டுத் திக்குக்களிலும் சென்று விழ, அங்கங்குள்ள திசையானைகள் அங்கங்கு விழுந்த அம் மரங்களின் இலைகளை உணவாக்கிக் கொண்டன என்பதாம். நந்தனவனம் - இந்திரனுடைய சிங்காரத் தோட்டம்; 'அந்தர மருங்கி னந்தன வனத்தொடு' (பெருங். இலாவண. 12: 49.). மரங்கள் நிலத்தின் எட்டுத் திக்குக் களிலும் வானத்தில் நெடுந்தூரமட்டும் வீசப்பட்டன என்பது பொருள். போர் யானை என்பது, அவை இராவணனிடம் போரிட்டமை கருதி என்க.

(பி-ம்.) 1. சோலைமுகி லற்றயல் சுழற்றின: மற்றைய சுழற்றின திசைப் போர்; மற்றைய சுழற்றிய திசைப்போர்.
2. மானபடி பற்று; மானபிடி பற்று.
3. மீனினம் விழுந்திட: விசும்பின்மிசை மீப்போய்.
4. வனத்தையு மொடித்த: வனத்தையு மழித்த. (11)

702. *அலைந்தன கடற்றிரை யரக்கரகன் மாடம்*
*குலைந்துக விடிந்தன குலக்கிரிக ளோடு*
*மலைந்துபொடி யுற்றன மயங்கிநெடு வானத்*
*துலைந்துவிழு மீனினொடு வெண்மல ருதிர்ந்த.*

கடல் திரை அலைந்தன - (அநுமன் வீசி எறிந்த மரங்கள் போய் வீழ்ந்தமையால்) கடலின் அலைகள் கிளர்ச்சிகொண்டு அலைவன ஆயின; அரக்கர் அகல் மாடம் - அந்த நகரில் உள்ள அரக்கர்களுடைய அகன்ற மாளிகைகள், குலைந்து உக - நிலைகெட்டுச் சிதறிச் சிந்தும்படி, இடிந்தன - இடிந்து போயின; குலகிரிகளோடு மலைந்து பொடி உற்றன - அம்மரங்கள் அஷ்ட குல பருவதங்களோடு தாக்கிப் பொடி களாகப் போயின. நெடு வானத்து - நெடிய வானத்தில், உலைந்து விழு மீனினொடு - நிலை கலங்கி விழுந்த நட்சத்திரங்களோடு, மயங்கி - வேற்றுமை தெரியாதனவாய்க் கலந்து, வெண்மலர் - (வீசியெறியப்

பட்ட அம்மரங்களின்) வெண்ணிறமான பூக்கள், உதிர்ந்த - உதிர்ந்து கீழே விழுந்தன.

குலக்கிரிகள்: இமயம், மந்தரம், கயிலாயம், விந்தம், நிடதம் ஏமகூடம், நீலம், கந்தமாதனம் என்பன; (பிங்களம்.) அநுமனால் வீசி மேலே எறியப்பட்ட மரங்கள் வானில் போய்த் தாக்க, அம் மரங்களி லிருந்த பூக்கள், தாக்கப்பட்ட நட்சத்திரங்களோடு வேற்றுமை தெரி யாமல் மயங்கிக் கீழே உதிர்ந்து வீழ்ந்தன என்பதாம். விண்மீனுக்கு மலர்: ஒப்பு: திருவரங்கத்தந்தாதி. 77.

(பி-ம்.) 1. அரக்கரணி; அரக்கரிகல்; அரக்கநகர்; அரக்கரெழில்.
2. குலைந்துக விடித்தன; குலைந்தன விடிந்தன.
4. உலைந்துநெறி: மென்மலர்: மலர் செறிந்த. (12)

703. *முடக்குநெடு வேரொடு முகந்துலக முற்றும்*
*கடக்கும்வகை வீசின களித்ததிசை யானை*
*மடப்பிடியி னுக்குதவ மையினிமிர் கைவைத்*
*திடுக்கியன வொத்தன வெயிற்றினிடை நால்வ.*

முடக்கு நெடு வேரொடு முகந்து - மடங்கிய நீண்ட வேர்களோடு வாரி, உலகம் முற்றும் கடக்கும் வகை - உலக முழுவதும் கடந்து செல் லும்படி, வீசின - அநுமனால் வீசியெறியப்பட்ட மரங்கள், களித்த திசை யானை-மதமேற் கொண்ட திக்குயானைகளின், எயிற்றின் இடை நால்வ - தந்தங்களின் இடையே தொங்குகின்றவைகளாய், மட பிடியினுக்கு உதவ-(அவ்வியானைகள் தம்) இளமை பொருந்திய பெண் யானைகளுக் குக் கொடுக்க, மையின் நிமிர் கை வைத்து - மேகத்தைப் போல மேலே நிமிர்ந்து எழுந்த தன் துதிக்கையில் வைத்து, இடுக்கியன ஒத்தன - இடுக்கிக் கொண்டுள்ளனவற்றை ஒத்திருந்தன.

'அநுமனெறிந்தவை யானையின் கோட்டிலே பட்டுத் தொத்திக் கொண்டிருந்தன; (அவை) அந்த யானை பிடிக்குக் கொடுக்கக் கையினால் இடுக்கி யெடுத்து வைத்தது போன்றிருந்தன என்பது' பழைய உரை. (யானையின்) எயிற்றினிடை நால்வ என்று கூட்டுக. நால்வ ஒத்தன என்க.

(பி-ம்.) 1, முடக்கிநெடு; முடக்கநெடு வானெடு: உலகு முற்றும்.
2. கடிக்கும்வகை: வீசிய கடங்கொ டிசையானை.
3. மையனிமிர் கைவைத்; உதவு மாறுநிமிர் கைவைத்.
4. இடுக்கியென வொத்தன; இடுக்கியொ டெடுத்தன; இடுக்கின வொ டொத்தள; இடுக்கியீ டெடுத்தன: இடைநால்வாய்: (13)

704. விஞ்சையுல கத்தினு மியக்கர்மலை மேலும்
துஞ்சுதலில் வானவர் துறக்கநக ரத்தும்
பஞ்சியடி வஞ்சியர்கண் மொய்த்தனர் பறித்தார்
நஞ்சமனை யானுடைய சோலையி னறும்பூ.

நஞ்சம் அனையானுடைய சோலையின் நறும் பூ - விடம் போன்ற கொடிய இராவணனுடைய சோலையாகிய அசோக வனத்து மணம் மிக்க பூக்களை, (அநுமன் வீசி எறிந்த மரங்கள் தத்தம் இடங்களில் வந்து சேர்ந்தமையால்), விஞ்சை உலகத்தினும் - வித்தியாதரர் உலகத்திலும், இயக்கர் மலை மேலும் - யக்ஷர்கள் வாழும் மலைகளின் மீதும், துஞ்சுதல் இல் வானவர் துறக்க நகரத்தும் - இறத்தல் என்பது இல்லாத தேவர்களுடைய சுவர்க்க நகரத்திலும் உள்ள, பஞ்சி அடி வஞ்சியர்கள்-செம் பஞ்சு பூசப்பெற்ற பாதங்களையுடைய மகளிர்கள், மொய்த்தனர் பறித்தார் - கூட்டமாய் நெருங்கி வந்தவர்களாய்ப் பறித்து எடுத்துக் கொண்டார்கள்.

இராவணனுடைய அசோக வனத்துப் பூக்கள், விஞ்சை உலகத்தார்க்கும், இயக்க நாட்டவர்களுக்கும், சுவர்க்க நாட்டு வானவர்க்கும் கிடைக்கத்தகாத அருமையுடையன என்பதும், கொடிய இராவணனுக்கு அஞ்சி அவர்கள் அப்பூக்களை அடைய முடியாமல் வருந்தி இருந்தனர் என்பதும், இப்பொழுது அச் சோலை மரங்களை அநுமன் மேலே வீசி எறிந்தமையால், அவை மேற்கூறிய உலகங்களில் போய்ச் சேர, அம் மரங்களின் அரிய பூக்களை அந் நாட்டு மகளிர்கள், பறித்துக் கொள்வாராயினர் என்பதும் கூறப்பெற்றன விஞ்சை உலகம் - வித்தியாதரர் உலகம். இயக்கர் - யக்ஷர். துறக்க நகரம் - அமராவதி.

(பி-ம்.) 2. துஞ்சலில் வானவர். 3. மொய்த்தன பறித்தார்.
4. சோலைய நறும்பூ. (14)

705. பொன்றிணி மணிப்பரு மரந்திசைகள் போவ
மின்றிரிவ வொத்தன வெயிறிரிவ வொத்த
ஒன்றினெடு மொன்றிடை புடைத்துதிர்வ வூழி
தன்றிரள்க ளோடுவிழு தாரகையு மொத்த.

பொன் திணி மணி - பொன்னிற் பதிக்கப் பெற்ற இரத்தினங்களால் அமைந்த, பருமரம் - பருத்த அந்த அசோக வனத்து மரங்கள், திசைகள் போவ - நான்கு திசைகளிலும் செல்வன, மின் திரிவ ஒத்தன - மின்னல்கள் சஞ்சரிப்பன போலும், வெயில் திரிவ ஒத்த - சூரியர்கள்

திரிவன போலும் விளங்கின; ஒன்றினொடும் ஒன்று இடை புடைத்து உதிர்வ - (அவ்வாறு வீசி எறியப் பட்ட மரங்கள்) இடையே ஒன்றோ டொன்று தாக்கப்பட்டுத் தகர்ந்து தூளாகிக் கீழே உதிர்கின்றவை, ஊழி - யுக முடிவுக் காலத்தில், தன் திரள்களோடு விழும் தாரகையும் ஒத்த - தன் கூட்டங்களோடு விழும் நட்சத்திரங்களையும் ஒத்தன.

ஊழிக் காலத்தில், சூரியன் திசை திரிந்து இயங்குவதும், தாரகை கள் உதிர்வனவும் ஆம்; ஆதலின், ஊழி என்பதை இங்கு இடை நிலையணியாகக் கொண்டு, மரங்கள் அவ்வூழியில் மின் திரிவ ஒத்தன, வெயில் திரிவ ஒத்த, தம் திரள்களோடு விழு தாரகையும் ஒத்த என இயைக்க.

(பி-ம்.) 1. பொன்றினி பயப்பய மரந்திசைகள் போவ; பொன்றின: பொன் றிணி மணிப்பய மரம்: வயப்பய மரம்; வயப்பழு மரம்; மணிப் பழு மரம்.
2. மின்றிரியல்: வெயிற்கதிரு மொத்த.
3. ஒன்றினிடை யொன்றிடை; யுடைத்துதிர்வ வூழித்: ஒன்றி னுட னென்றடி படத்தகர்வ தூழி.
4. தன்றிர ளொடுக்கி: திரள்க ளோடும்: சென்றகடை சிந்திவிழு.
(15)

706. புள்ளினொடு வண்டுமிஞி றுங்கடிகொள் பூவும்
கள்ளுமுகை யுந்தளிர்க ளோடினிய காயும்
வெள்ளநெடு வேலையிடை மீனினம் விழுங்கித்
துள்ளின மரன்பட நெரிந்தன துடித்த.

புள்ளினொடு - பறவைகளோடு, வண்டும் மிஞிறும் - வண்டுகளையும் மிஞிறுகளையும், கடி கொள் பூவும் - நறுமணமுள்ள பூக்களையும், கள்ளும் - தேனையும், முகையும் - அரும்புகளையும், தளிர்களோடு இனிய காயும் - தளிர்களோடு சுவையுள்ள காய்களையும், வெள்ள நெடு வேலை யிடை-நீர்ப் பெருக்கையுடைய நெடிய கடலினிடையேயுள்ள, மீன் இனம் விழுங்கி-பலவகைப் பட்ட மீன் கூட்டங்கள் விழுங்கி, துள்ளின- களித்துத் துள்ளினவை, மரன் பட-(அநுமன் வீசிய) மரங்கள் தம்மேற் பட்டுத் தாக்கினமையால், நெரிந்தன துடித்த - (அவை உடல்) நெரிந்து துடித்தன.

வண்டும் மிஞிறும் புள்ளினத்தனவேனும், புள்ளினொடு என்று உட னிகழ் பொருள் படப் பிரித்துக் கூறினமையின், புள் என்பதற்கு மற்றப்

பறவைகள் எனப் பொருள் கொள்ளப்பட்டது. வண்டு, மிஞிறு என்பன, அவற்றின் இன வேறு பாட்டைக் குறிப்பன. மரத்தின் பூ முதல் காய் ஈருகப் பல பொருள்களைச் சொல்லியதால், இங்கு உப லக்ஷணத்தால் கனியையும் கூட்டிக் கொள்ளல் தகும். மீனினம் துள்ளினமை, முன்னே உதிர்ந்து விழுந்த புள் முதலியவற்றை அருந்தின தாலும், துடித்தமை பின்னே மரம் விழுந்து நெரிந்தமையாலும் என்க.

(பி-ம்.) 1. வண்டுஞிமிறுங் கனிகொள் பூவும்.
2. முகை யுங்கனிக ளோடினிய காவும். (16)

707. தூவிய மலர்த்தொகை சுமந்துதிசை தோறும்
பூவின்மண நாறுவ புலால்கமழ்கி லாத
தேவியர்க ளோடுமுயர் தேவரினி தாடும்
ஆவியென லாயதிசை யார்கலிக ளம்மா.

தூவிய மலர் தொகை சுமந்து - (அநுமன் வீசிய மரங்களிலிருந்து உதிர்ந்து) தூவப்பெற்ற பூத் தொகுதிகளைத் தாங்கி, திசை தோறும் - திசைகள் எங்கும், பூவின் மணம் நாறுவ - பூவின் நறுமணம் நாறப் பெற்றவைகளாயும், புலால் கமழ்கிலாத - புலால் நாற்றம் வீசுவன அல்லாதவையாயும் உள்ள, திசை ஆர்கலிகள் - நான்கு திசைகளிலு முள்ள கடல்கள், தேவர் - வானில் உள்ள தேவர்கள், உயர் தேவியர்களோடும் - சிறந்த தத்தம் தேவியர்களோடும், இனிது ஆடும் - மகிழ்வோடு நீராடுகின்ற, ஆவி எனல் ஆய - (தாமரை முதலிய பூக்க ளோடு கூடிய) பொய்கை என்று சொல்லத்தக்கனவாய் ஆயின. அம்மா: வியப்பை உணர்த்தும் அசை.

ஆர்கலிகள் தேவருலகில் உள்ள பூம் பொய்கை போல் விளங்கின. கடல் மணம் கமழ்தல்; 112, 245. ஒப்பு: 'புதுப்புனல் குடையுமாதர் பூவொடு நாவி பூத்த கதுப்புறு வெறியே நாறுங் கருங்கடற் றரங்கம்' (பால. நாட்டுப். 11.). ஆவி - பொய்கை; கிட்கிந்தா. பம்பைப். 26; திருவெங்கைக்கோவை: 24. கடலின் புலால் நாற்றம் ஒழிந்து பூக்களின் மணம் விஞ்சியதால் அக்கடல்களில் விழுந்த பூக்களின் தொகுதிகளின் மிகுதி உணர்த்தப்பெற்றது. மரங்கள் விழுந்தமையால் கடல்களும் பொய்கை போலாயின என்க.

(பி-ம்.) 1 சுமந்த திசை தோறும்.
4. ஆவியென லானதிரை; வாவியென லானதிரை. (17)

708. இடந்தமணி வேதியு மிறுத்தகடி காவும்
தொடர்ந்தன துரந்தன படிந்துநெறி தூரக்
கடந்துசெல வென்பது கடந்ததிரு காலாய்
நடந்துசெல லாகுமென லாகியது நன்னீர்.

க. 68.

இடந்த மணி வேதியும் - (அநுமனால்) பெயர்த்து எறியப்பட்ட இரத்தினமயமான மேடைகளும், இறுத்த கடி காவும்-ஒடித்து எறியப் பட்ட காவலுள்ள சோலையும், தொடர்ந்தன-ஒன்றையொன்றுதொடர்ந் தனவாக, துரந்தன - வேகமாகச் சென்றவை, படிந்து - கடலில்போய்ப் படிந்து, நெறி தூர-(அதனை)வழி போலத் தூர்த்தலால்,நன்னீர்-அந்த நல்ல நீரையுடைய கடல், கடந்து செலவு என்பது கடந்தது-தாண்டிச் செல்ல வேண்டியது என்ற தன்மையைக் கடந்ததாகி, இரு காலால் நடந்து செலல் ஆகும் எனல் ஆகியது - (அநுமன் தன்) இரு கால்களால் இனி நடந்து செல்லக் கூடியது என்று சொல்லத்தக்கதாய் ஆயிற்று.

துரந்தன - வேகமாய்ச் சென்றன; துரம் என்ற வடசொல்லுக்கு வேகம் என்பது பொருள்; வேகமாய்ச் செல்வது என்னும் காரணமாகக் குதிரைக்குத் துரகம் என்ற வடமொழிப் பெயர் வந்தமை நோக்குக; இங்குத் துர என்பது வினைப்பகுதியாக முற்றுத் தன்மையை அடைந்து துரந்தன என ஆயிற்று என்க. அநுமன் கடந்து வந்த அக்கடல் வேதியும் கடிகாவும் விழுந்து, இனி நடந்து செல்லக் கூடியதாய் ஒரு வழி அமை யப் பெற்றது என்க. ஒப்பு: 134. நன்னீர் என்றமை, முன் செய்யுளில் கூறப்பட்டபடி அக்கடல் நறுமணங் கமழ்ந்து விளங்கியதால் எனக் கொள்ளற்பாலதாம்.

(பி-ம்.) 1. இடைந்தமணி: வேதிகையு மிற்றகடி.
2. தொடர்ந்தன தொடர்ந்தன: தொடர்ந்திடை விடாதெறி தலிற் கடல்கடுரக்: நெடி தூரக்.
3. செல லென்பது; கடந்தகரை யைக்கடிதி னூழிவரு காலால்; கடந்தது செலென்பது கடந்த திருகாலால். (18)

709. *வேனில்விளை யாடுசுட ரோனினொளி விம்மும்*
*வானினிடை வீசிய விரும்பணை மரத்தால்*
*தானவர்கள் மாளிகை தகர்ந்துபொடி யான*
*வானவிடி யாலிடியு மால்வரைகண் மான.*

வேனில் விளையாடு சுடரோனின் - கோடைக்காலத்தில் முழு உற்சாகத்தோடு எரிக்கும் சூரியனைப் போல, ஒளி விம்மும்-பிரகாசம் மிகு கின்ற, வானின் இடை - ஆகாயத்தின் இடத்தில், வீசிய இரும் பணை மரத்தால் - (அநுமன்) வீசியெறிந்த மிகப் பெரிய மரங்களால், வான இடியால் இடியும் மால் வரைகள் மான - ஆகாயத்திலிருந்து விழும் இடியினால் நொருங்கிப் போன பெரிய மலைகளைப் போல, தானவர்கள் மாளிகை-அசுரர்களுடைய மாளிகைகள், தகர்ந்து பொடி ஆன-இடிந்து பொடியாயின.

இரும்பணை; ஒரு பொருட் பன்மொழி. இனி, இரும்பணை மரத்தால் என்பதற்குப் பெரிய கிளைகளோடு கூடிய மரங்களால் என்று பொருள் கொள்ளலும் அமையும்; பணை - கிளை. தானவர் - காசிபருக்குத் தனு என்பாளிடம் பிறந்த அசுர பரம்பரையினர். இவர்கள் அரக்கரினும் வேறுவர்.

(பி-ம்.) 1. வேனல்: சுடரோனில்: சுட ரோனொளியின் விம்மும்: விளை வான சுட ரோனுலவு மேலாம்:
2. தானவர்தம் மாளிகை:வானமிசை மாருதி வலிந்தெறி மரத்தால்.
3. தளர்ந்துபொடி: பொடியாய.
4. இடியா லொடியும்: மால்வரைக ளம்மா. (19)

710. எண்ணிறரு கோடிக ளெறிந்தன செறிந்தே
தண்ணெனன்மழை போலிடை தழைத்தது சலத்தால்
அண்ணலநு மானட லிராவணன தந்நாள்
விண்ணினுமொர் சோலையுள தாமென விரித்தான்.

சலத்தால் - கோபத்தால், எறிந்தன - (அநுமனால்) எறியப்பட்டன வான, எண் இல் தரு கோடிகள் - கணக்கற்ற மரக் கூட்டங்கள், செறிந்து - அடர்ந்து, தண் என் மழைபோல் இடை தழைத்தது - குளிர்ந்த மேகம்போல இடைவெளியில் தழைந்து விளங்கியது; அண் ணல் அநுமான் - பெருமை தங்கிய அநுமன், அ நாள் - அக்காலத்து, அடல் இராவணனது - வலிமை பொருந்திய இராவணனுடையது ஆன, விண்ணிலும் ஓர் சோலை உளது ஆம் என விரித்தான் - வானத்தும் ஒரு சோலை உள்ளது என்று சொல்லும்படி விரிவுறச் செய்தான் (என ஆயிற்று) ஏ; அசை.

கோடி - தொகுதி; கூட்டம்; சீவகோடிகள் என்பதுபோல. 'விண்ணுமொரு சோலை யுளதாமென விரிந்த' என்ற பாடம் கிடைப்பின் பொருள் சிறக்கும்; அவ்வாறு பாடம் கிடைத்தால் தழைத்தது விரிந்த என வினை முடிவு கொள்ளும். இராவணனுக்கு உரியதான ஒரு சோலை விண்ணிலும் உண்டு என்னும்படி அநுமன் மரங்களைப் பிடுங்கி வானத் தில் விரித்தான் என்க. வானத்தில் சோலை விரிதல்: 18. இச் செய்யுளில் அநுமான் என்ற பிரயோகம் அரிதாக வந்துள்ளது.

(பி-ம்.) 1. எண்ணறரு; எண்ணிறிரு; எண்ணிலிரு: எண்ணினிரு: எண் ணில் பல வொண்டரு வெறிந்தன.
2. போலவை தழைப்பன விசும்பின்: தழைந்தது.
3. இராவணனுக் கந்நாள்.
4. விண்ணினொரு; விண்ணு மொரு; விண்ணிலு மோர்: விளைத் தான்; விதித்தான். (20)

711. தேனுறை துளிப்பநிறை புட்பல சிலம்பப்
பூநிறை மணித்தரு விசும்பினிடை போவ
மீன்முறை நெருக்கவொளி வாளொடுவில் வீச
வானிடை நடக்குநெடு மானமென லான.

தேன் உறை துளிப்ப - தேன் துளிகள் சிந்தவும், நிறைபுள் பல சிலம்ப - அங்கு நிறைந்து வாழ்ந்துவந்த பல பறவைகள் ஒலிக்கவும், பூ நிறை மணி தரு - பூக்கள் நிறைந்தஇரத்தின மயமான மரங்கள், விசும்பின் இடை போவ - ஆகாயத்தினிடத்தே போவனவாய், மீன் முறை நெருக்க - (அவ்வானில் உள்ள) நட்சத்திரங்கள் முறையே நெருக்கவும், ஒளி வாள் ஒடு வில் வீச - ஒளியானது வாள் போலவும் வில் போலவும் வீசவும், வானிடை நடக்கும் நெடு மானம் எனல் ஆன- ஆகாயத்தினிடம் செல்லும்நெடிய விமானம் என்று சொல்லத்தக்கனவாக ஆயின.

அம் மரங்களில் உள்ள பூக்களும், அவற்றில் உள்ள மணிகளும் வீசும் ஒளி, வாள் போலும் வில் போலும் விளங்கின. மானம்: விமானம் என்பதின் முதற்குறை. நெருக்கலும் வீசலும் ஆகியவற்றைத் தருக்களோடும் கூட்டிப் பொருள் கூறலாம்.

(பி-ம்.) 1. தேனுறை தளிர்க்கணிறை: தளிர்க்கணுறை; துளித்தநிறை; துளிக்க நிறை.
2. விசும்பினிடை யேபோய்; விசும்பின்மிசை போய: இடை போய; மிசை போவ; மிசை போய.
3. மீனணி நெருக்கிய பரப்பொடும் விளங்கும்: மேன்முறை நெருக்கியொளி: நெருக்க வெயில்: ஒளிவானெடு வில்வீச.
4. வானிடை நடாய; வானிறை நடக்கும்: என லானுன். (21)

712. சாகநெடு மாப்பணை தழைத்தன தனிப்போர்
நாகமனை யானெறிய மேனிமிர்வ நாளும்.
மாகநெடு வானிடை யிழிந்துபுனல் வாரும்
மேகமென லானநெடு மாகடலின் வீழ்வ.

தனி போர் நாகம் அனையான் எறிய - ஒப்பற்ற போரிற் சிறந்த யானை போன்ற அநுமன் வீசி எறிவதால், நெடு மா பணை சாகம் தழைத்தன - நீண்ட பெரிய கிளைகளும் இலைகளும் தழைத்தனவும், மேல் நிமிர்வ-மேலே எழுந்து விளங்குவனவும், நெடு மா கடலின் வீழ்வ - பின் நெடிய பெரிய கடலில் வீழ்வனவுமான மரங்கள், நாளும் - எப்பொழுதும், நெடு மாக வான் இடை இழிந்து - மிகப் பெரிய ஆகாயத்தினின்றும் கீழ் இறங்கி, புனல் வாரும் மேகம் எனல் ஆன - (கடலில் உள்ள) நீரை முகக்கும் மேகங்கள் என்று சொல்லத்தக்கனவாய் விளங்கின.

சாகம் - இலை; 'சாகந் தழைத்து' (பால. நகரப். 75.) மாகம்-பெரும் வானம்; கம் - ஆகாயம்; (பிங்கலம்) மாகவான்: ஒருபொருட்பன் மொழி. பெரிய மேகங்கள் கடல் நீரை முகக்க, அக்கடலின் மீது இறங்கு வன போல, அநுமன் வானத்தில் எறிந்த பெரிய மரங்கள் கடலின் மீது விழுந்தன என்க.

(பி-ம்.) 1. சாகை நெடு மாபணை; சாகர நெடும்பணை; சாகைகள் நெடும் பணை; சாகைபெறு மாதரு வலிந்தடு சினப்போர்.
2. மேனிமிர்வ தான; மேனிமிர்வ நரனு; மேனியன நாளும்: எறிய வேநனி விசும்பில்.
3. இழந்துபுனல் வாரும்; போகி மறு காலவை யிழிந்து.
4. மேகமென லாயநெடு; லாகுநெடு; வானநெடு; லாய்நெடிய. (22)

வேறு

713. ஊன முற்றிட மண்ணி னுதித்தவர்
ஞான முற்றுபு நண்ணினர் வீடெனத்
தான கற்பகத் தண்டலை விண்டலம்
போன புக்கன முன்னுறை பொன்னகர்.

ஊனம் உற்றிட - குறை அல்லது குற்றம் உண்டாக, மண்ணில் உதித்தவர் - (அதன் காரணமாகச் சுவர்க்க வாழ்வை விட்டுப்) பூமியில் வந்து பிறந்தவர்கள். ஞானம் முற்றுபு - பின் ஞானம் பூர்த்தியாக அமைந்த பொழுது, வீடு நண்ணினர் என-துறக்கத்தை அடைந்தாரைப் போல, தான கற்பக தண்டலை - கொடையிற் சிறந்த கற்பக மரங்கள் அடர்ந்த அந்த அசோகவனம் என்னும் சோலை, விண் தலம் போன- அநுமன் வீசி யெறியப்பட்டு ஆகாய வழியாய்ச் சென்று, முன் உறை பொன்னகர் புக்கன - முன் தங்கி இருந்த சுவர்க்க உலகம் போய்ச் சேர்ந்தன போன்றன.

துறக்கத்திலிருந்து இராவணனால் கொண்டு வரப்பெற்று இலங்கையி லுள்ள அசோக வனத்தில் இருந்த கற்பக விருக்ஷங்கள், இப்பொழுது அநுமனால் வானில் வீசியெறியப்பட்டனவாய், முன் துறக்கத்தில் இருந் தோர் குறையுற்றுப் பூமியில் பிறந்து, மீண்டும் தவம் செய்து ஞானம் பெற்று முன்னிருந்த பொன்னுலகை அடைந்தவரை யொத்து வானுலகு சென்றன என்க. தேவர்களும் சாபமுற்றுத் தரையிற் பிறந்து பின்பு துறக்கமடையும் வரலாறுகளை உட்கொண்டும் கூறிய தென்க. கற்பகம் என்பது சாதி ஒருமையால் ஐந்தருக்கள் என்றும் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. ஊன முற்றிடை: மண்ணில் உதிர்ந்தவர்; வானி லுதிர்ந்தவர்.
2. ஞான முற்றிட: முற்றிடை; உற்றபின்: நண்ணுவர்; நண்ணுயர்; நண்ணினர்; நண்ணின.

3. தண்டரு விண்டலம்; விண்டகம்; விண்டயல்.
4. முன்னுடை பொன்னகர். (23)

714. *மணிகொள் குட்டிம மட்டித்து மண்டபம்*
*துணிப டுத்தயல் வாவிக டூர்த்தொளிர்*
*திணிசு வர்த்தலஞ் சிந்திச் செயற்கரும்*
*பணிப டுத்துயர் குன்றம் படுத்தரோ.*

மணி கொள் குட்டிமம் மட்டித்து - (அநுமன்) இரத்தினங்கள் இழைத்து அமைக்கப் பெற்ற திண்ணைகளைத் தகர்த்து, மண்டபம் துணி படுத்து - மண்டபங்களைத் துண்டுகளாகச் செய்து, அயல் வாவிகள் தூர்த்து - அருகிலுள்ள தடாகங்களைத் தூர்த்து, ஒளிர் திணி சுவர் தலம் சிந்தி - விளங்கும் வலிய சுவர்களை இடித்துச் சிதற எறிந்து, செயற்கு அரும் பணி படுத்து - செய்வதற்கு அரிய வேலைப் பாடமைந்த பொருள் களையெல்லாம் அழித்து, உயர் குன்றம் படுத்து - உயர்ந்த குன்றுகளை அழித்து, அரோ: அசை

இதுவும் அடுத்த செய்யுளும் குளகம். குட்டிமம் - கல் படுத்த மேடை; திண்ணை; பால. நகரப். 39; கிட்கிந்தா, கிட்கிந்தைப். 109: 'குட்டிமம் மட்டித்து - தளக்கல்லைப் பிடுங்கி' (பழைஉரை.) வாவி. வாபி என்னும் வடமொழித் திரிபு. குன்றம்-செய் குன்று என்னலும் ஆம். மட்டித்து, 715. இச் செய்யுளால் அசோக வனத்திலிருந்த கட்டடங் கள் அழிந்தமை கூறப்பட்டது.

(பி-ம்.) 1. மணிகொள் மாடங்கள் மட்டித்து: மணிப டுத்தொளிர் கூடங் கள் பண்டபம்: மண்டபத்
2. அய லாழிகள்; அயலாவிகள்; தூர்த்தொளி; தூர்த்துயர்.
4. பணிய டுத்துயர்; பணியெ டுத்துயர்; பணிப டுத்தருங்: பருத்ததே. (24)

715. *வேங்கை செற்று மராமரம் வேர்பறித்*
*தோங்கு கற்பகம் பூவொ டொடித்துராய்ப்*
*பாங்கர்ச் சண்பகப் பத்தி பறித்தயல்*
*மாங்க னிப்பணை மட்டித்து மாற்றியே.*

வேங்கை செற்று - வேங்கை மரங்களை அழித்து, மராமரம் வேர் பறித்து - ஆச்சாமரங்களை வேரோடு பிடுங்கியெறிந்து, ஓங்கு கற்பகம் பூ ஒடு ஒடித்து - உயர்ந்த கற்பக மரங்களைப் பூக்களுடன் (அழகு கெட) அழித்து, பாங்கர் உராய் சண்பக பத்தி பறித்து - பக்கங்களில்

உராய்ந்து கொண்டிருந்த சண்பக மரங்களின் வரிசைகளைப் பறித்து எறிந்து, அயல் மா கனி பணை மட்டித்து மாற்றி - பக்கங்களில் இருந்த மாமரங்களின் கனிகளோடுகூடிய கிளைகளை முறித்து நிலைகெடச் செய்து (அழித்தனன்.) ஏ: அசை.

மராமரம் - இது வடமொழியில் சால விருக்ஷம் எனப்படும். அழித்தனன் என வினை வருவிக்கப் பெற்றது. கற்பகம் தெய்வத்தரு ஆதலின் அவை அழியவில்லை என்பதும், அவற்றின் அழகு அல்லது பூக்கள் அழிந்தன என்றும் கொள்ளத்தக்கதாம். மட்டித்து; 715, பாங்கர்: ஒருவகை மரமும் ஆம்; குறிஞ்சிப். 85.

(பி-ம்.) 1. வேரறுத்(து). 2. கற்பகப்பூ. 3. பாங்கு சண்பகம். 4, மாங்க னித்திரள். (25)

716. *சந்த னங்க டகர்ந்தன தாம்படர்*
*இந்த னங்களின் வெந்தெரி சிந்தின*
*முந்த னங்கன் வசந்தன் முகங்கெட*
*நந்த னங்கள் கலங்கி நடுங்கவே.*

தகர்ந்தன சந்தனங்கள் தாம் - (அநுமனால்) தகர்த்து எறியப்பட்ட (அசோகவனத்துச்) சந்தன மரங்கள், அனங்கன் முந்து வசந்தன் முகம் கெட - மன்மதனுக்கு முன் வரும் அவன் நண்பனான வசந்தன் என்பவனுடைய, முகம் பொலிவு இழந்து போகவும், நந்தனங்கள் கலங்கி நடுங்க - வானில் உள்ள நந்தனங்கள் என்னும் பூந்தோட்டங்கள் கலங்கி நடுக்க முறவும், இந்தனங்களின் வெந்து படர் எரி சிந்தின - விறகுகளைப்போல எரிந்து தொடர்ந்த நெருப்பைக் கக்கின. ஏ: அசை.

இலங்கை அசோக வனத்தில் பற்றிய நெருப்பால் அங்கிருந்த சந்தன மரங்கள் தீப்பற்றி எரிய, அதனால் வானில் உள்ள நந்தனங்கள் என்னும் பூஞ்சோலைகள் கலங்கி நடுங்கின. அந்த நந்தனங்களில் இருந்த வசந்தன் முகமும் அழகு அழிந்து கெட்டது என்க. நந்தனம் - தேவலோகத்தில் உள்ள பூஞ்சோலை; இது நந்தனவனம் எனவும் வழங்கும்; 'சுரகுலாதிபன் றாய்மலர் நந்தனம் (பிரபுலிங்க. காப்பு. 1;) 'அந்தர மருங்கில் நந்தன வனத்தொடு' (பெருங். இலாவண. 12; 49). வசந்தன் -மன்மதனுடைய நண்பன்; இவன் வசந்த காலத்திற்கு உரிய தேவன். அனங்க வசந்தன் என்பதை இரு பெயரொட்டாகக்கொண்டு மன்மதனாகிய வசந்தன்எனப் பொருள் கொள்வாருளர். வசந்தன், மன்மதனின் வேறானவன்; இவன் இந்திரன் மனைவியான சசிதேவியின் மக்களுள் ஒருவன் என்பர்; தக்க. 470. உரை. வசந்தனை முன்னிட்டுக் கொண்டு மன்மதன் தோன்றுவான் என்பது கவிமரபு ஆதலின், முந்தனங்க வசந்தன் எனப்பட்டது, நந்த

னங்கள்; இலங்கையில் இராவணன் கொணர்ந்து வைத்த வானுலகத்துப் பூஞ்சோலைகள் என்றலும் ஆம். இலங்கையில் சந்தனங்கள் எரி சிந்தி நந்தனங்களை நடுங்கச் செய்தன என்க.

(பி-ம்.) 1. தகர்ந்தன சண்பகம்; தகர்ந்தன சாரகில்: தாள்பட; தாம்பட.
2. இந்த னங்களில் வந்தெரி: எரி சிந்திட.
3. முந்த னங்கன் வருந்தன்: வசந்த முகங்கெட.
4. நந்த னங்கள் கரிந்து நலன்கெட. (26)

717. *காம ரங்கனி வண்டு கலங்கிட*
*மாம ரங்கண் மடிந்தன மண்ணொடு*
*தாம ரங்க வரங்கு தகர்ந்துகப்*
*பூம ரங்க ளெரிந்து பொரிந்தவே.*

காமரம் கனி வண்டு கலங்கிட - காமரம் என்னும் பண்ணைக் கனியப் பாடும் வண்டுகள் கலக்கமடைய, மா மரங்கள் மண்ணொடு மடிந்தன - (அவ்வசோக வனத்துப்) பெரிய மரங்கள் தரையோடு மடிந்து விழுந்தன; அரங்கு தாம் - நாடக சாலைகள், அரங்க - அழியும்படியும், தகர்ந்து உக - சிதைவுண்டு சிந்தும்படியும், பூ மரங்கள் எரிந்து பொரிந்த - பூக்களையுடைய பல மரங்கள் எரிந்து பொரிந்து சாம்பராய்ப் போயின. ஏ: அசை,

காமரம் - சீகாமரம் என்னும் பண். காமரங்கனிதல்; அயோத்யா. நகர்நீங்கு. 201. மா மரங்கள், மா என்னும் மரங்களும் ஆம். அரங்கல் - அழிதல். அரங்கு - சபை அல்லது மேடை; ரங்கம் என்னும் வட சொல் அரங்கம் என்ருகிப் பின் அரங்கு எனத் திரிந்தது. சில சுவடிகளில் இதன் பின் 'பவள மாக்கொடி' என்று தொடங்கும் செய்யுள் (719) காணப் படுகிறது.

(பி-ம்.) 1. காம ரங்களி; காம ரங்களில்; காம ரங்களால்; காம ரங்களின்.
2. மண்ணொடுந். 3. தாம டங்க.
4. எரிந்து புகைந்தவே: புகைந்ததே. (27)

718. *குழையுங் கொம்புங் கொடியுங் குயிற்குலம்*
*விழையுந் தண்டளிர்ச் சூழலு மென்மலர்ப்*
*புழையும் வாசப் பொதும்பும் பொலன்கொடேன்*
*மழையும் வண்டு மயிலு மடிந்தவே.*

குழையும் - இலைகளும், கொம்பும் - சிறு கிளைகளும், கொடியும் - கொடிகளும், குயில் குலம் விழையும் - குயில்களின் கூட்டங்கள்

விரும்பும், தண் தளிர் சூழலும் - குளிர்ந்த தளிர்கள் அடர்ந்த இடங்களும், மென் மலர் புழையும் - மிருதுவான பூக்களையுடைய வழிகளும், வாச பொதும்பும் - மணமிக்க புதர்களும், பொலன் கொள் தேன் மழையும் - பொன்னிறம் கொண்ட தேனின் மழையும், வண்டும் - அத் தேனையுண்ணும் வண்டுகளும், மயிலும்-அங்குள்ள மயில்களும், மடிந்த- இறந்து அழிந்தன, ஏ: அசை.

'மென்மலர் புழையும் - மெல்லிய பூவின் துளையும்' என்பது பழைய உரை. புழை - நுழைவாயிலும் ஆம். இச் செய்யுள் சில சுவடிகளில் இடம் மாறியிருக்கிறது.

(பி-ம்.) 3. பொழிலும் வாசப்: பொதும்பர் பொலன்: புலன்கொடேன்.
4. மயிலும் படிந்தவே: மயிலு மழிந்தவே. (28)

719. *பவள மாக்கொடி வீசின பன்மழை*
*துவளு மின்னெனச் சுற்றிடச் சூழ்வரை*
*திவளும் பொற்பணை மாமரஞ் சேர்ந்தன*
*கவள யானையி னோடையிற் காந்துவ.*

வீசின - அநுமனால் வீசி எறியப்பட்ட, பவள மா கொடி - பவழம் போன்று சிவந்த கொடிகள், பல் மழை துவளும் மின் என-பல மேகங்களிடத்து அசையும் மின்னல் போல, சூழ்வரை சுற்றிட - (இலங்கையைச்) சூழ்ந்திருந்த மலைகளில் சுற்றிக்கொள்ள, சேர்ந்தன-அநுமனால் வீசி எறியப்பட்டு அம் மலைகளைப் போய்ச் சேர்ந்தவைகளான, திவளும் பொன் பணை மா மரம் - விளங்குகின்ற பொன் மயமான கிளைகளோடு கூடிய பெரிய மரங்கள், கவள யானையின் ஓடையில் காந்துவ - பெரிய உருண்டைகளாகத் தன் உணவை உண்ணும் யானையின் முக படாம் போல ஒளி வீசி விளங்கின.

பவழக் கொடி கடலில் வளர்வதாதலின் பவழம் போன்ற செந்நிற மான கொடி என்னப் பெற்றது. வீசி எறியப்பட்ட கொடிகள் மேகங்களில் தோன்றும் மின்னல்கள் போல் மலைகளில் சுற்றிக் கொண்டன. அம்மலைகளை அடைந்த பொன் மயமான கிளைகளுடைய மரங்கள் யானையின் முக படாம் போல விளங்கின. கவளயானை; கிட்கிந்தா. பம்பைப்; 18. ஓடை - யானையின் முகபடாம்; பால. திருவவதாரப். 110; ஆரண்ய. விராத. 18. இச் செய்யுளும் சில சுவடிகளில் இடம் மாறியிருக்கிறது.

(பி-ம்.) 1. வீதியின் பன்மழைத்; வீதிநற் பன்மழை: பவள மென்கொடி வீசிப் பன்மழை.
2. சூழ்வரை சுற்றிட; சுற்றிடைச் சூழ்வர; சூழ்வரை சுற்றிய: துவளு மின்னென்ற சூழ்வரை சுற்றிடத்.

3. திவளு மோர்பணே; திவளும் வன்றருச் சிந்திட வெண்டிசைக்.
4. ஓடையிற் காந்தவே; காய்ந்தவே; ஓடையைக் காய்ந்ததே. (29)

720. *பறவை யார்த்தெழு மோசையும் பன்மரம்*
*இறவெ டுத்த விடிக்குர லோசையும்*
*அறவ னார்த்தெழு மோசையு மண்டத்தின்*
*புறநி லத்தையுங் கைம்மிகப் போயதே.*

பறவை ஆர்த்து எழும் ஓசையும் - (அநுமன் அசோக வனத்தை அழித்ததால் அங்குள்ள) பறவைகள் பெருங் கூச்சலிட்டு எழுகின்ற ஓசையும், பல் மரம் இற எடுத்த இடி குரல் ஓசையும்-பல மரங்கள் ஒடிபட, அதனால் உண்டான இடியின் ஒலி போன்ற ஓசையும், அறவன் ஆர்த்து எழும் ஓசையும்-அறத்தின் வடிவனை அநுமன் பெருமுழக்கம் இடுவதால் உண்டான ஓசையும், அண்டத்தின் புற நிலத்தையும் - இவ் வண்டத்திற்கு அப்பால் உள்ள இடங்களையும், கைமிகப் போயது - கடந்து சென்றன. ஏ; அசை.

அநுமன் அறவன்; அதாவது தரும வடிவானவன்; 774. கைம் மிகல் - அளவு கடந்து செல்லுதல்; ஆரண்ய. மாரீசன் வதைப். 38.

(பி-ம்.) 1. ஓதையும். 2. இற லெடுத்த; இறவொடிக்கு மிடிக்: ஓதையும்.
3. அறவ ஞர்ப்புறும்: ஓதையும்.
4 நிலத்தினுங்: புறநி லங்கடந் தப்புறம் போயதால். (30)

ஜொதிலம்

721. *பாட லம்படர் கோங்கொடும் பன்னிசைப்*
*பாட லம்பனி வண்டொடும் பல்திரைப்*
*பாட லம்புறு வேலையிற் பாய்ந்தன*
*பாட லம்பெறப் புள்ளினம் பாறவே.*

புள்ளினம்-பறவைகளின் கூட்டம், பாடு அலம் பெற-துன்பத்தை மிகுதியாக அடைய, பாற - (அதனால் அவ்விடம் விட்டுச்) சிதறி ஓட, பாடலம் - பாதிரி மரங்கள், படர் கோங்கொடும் - படர்ந்த கோங்கு மரங்களோடும், பன் இசை பாடல் அம் பனி வண்டொடும் - சிறப் பிக்கப் பெறும் இசையோடு கூடிய பாடல்களை யுடைய அழகிய குளிர்ந்த வண்டுகளோடும், பல் திரை பாடு அலம்பு உறு-பல அலைகள் கரைகளை வந்து தழுவி அலம்பும், வேலையில் பாய்ந்தன - கடலில் போய்ப் பாய்ந் தன போல் வேகமாய் விழுந்தன, ஏ; அசை.

அநுமன் அசோக வனத்தை அழித்ததால் அங்கிருந்த பறவைகள் மிக வருந்தியோட, கோங்கு மரங்களோடு, பாதிரி மரங்கள், ஒலிக்கும் வண்டுகளுடன் அலைகள் கரையில் புரண்டு அலம்பும் கடலில் போய்ப் பாய்ந்தன போல விழுந்தன என்க. 'பாடலம் - பாதிரி; பாடலம் பனி வண்டு - பாடலும் அழகும் உண்டான வண்டு; பாடு அலம்புறு வேலை- பக்கமொலிக்குங் கடல்: பாடலம் பெற-மடிவும் துக்கமும் பெற்றதால்' என்பன **பழைய உரை.** இப்பாடல் **யமகம்** என்னும் அணியில் அமைந்தது.

(பி-ம்.) 1. கோங்கொடு பன்னிசை: பண்ணிசை.
2. பாட லம்படர்; படு; பணி; பாட லன்புறு வண்டும் பஃறிரைப் வண்டொடும் வென்றிழை; வண்டும் பஃறிசைப்.
3. பாட லம்புயர்; புய; புரை; புற.
4. பாட லம்படப்; பாட லம்புறப்: பார்ப்பொடே; பார்ப்பவே. (31)

722. *வண்ட லம்புந லாற்றின் மராமரம்*
*வண்ட லம்புன லாற்றின் மடிந்தன*
*விண்ட லம்புக நீங்கிய வெண்புனல்*
*விண்ட லம்புக நீண்மரம் வீழ்ந்தன.*

வண்டு அலம்பு நல் ஆற்றின் மராமரம் - வண்டுகள் ஒலிக்கப்பெற்ற அழகிய சாலை வழியிலிருந்த ஆச்சா மரங்கள், வண்டல் அம் புனல் ஆற்றின் மடிந்தன - வண்டலோடு கூடிய நல்ல நீரையுடைய ஆற்றில் போய் விழுந்து அழுந்தின; விண் தலம் புக நீங்கிய நீள் மரம் - வானுலகில் போய் விழும்படி (அநுமன் வீசியதால்) நீங்கி மேற்சென்ற நீண்ட மரங்கள், விண்டு அலம்பு கம் - திருமால் கால் அலம்பியதான ஆகாயத்தில் உள்ள, வெண் புனல் வீழ்ந்தன - வெண்மையான நீரையுடைய ஆகாயகங்கையில் போய் விழுந்தன.

மராமரங்கள் பூமியில் உள்ள ஆற்றிலும் மற்ற நீள் மரங்கள் வானகங்கையிலும் விழுந்தன. கம்பநாடர் 'வண்டலம் புனல் ஆறு' என்பதைத் தம் தேசாபிமானம் நோக்கிக் காவிரி நதி என்று கூறினர் என்பாரும் உளர். 'வண்டலம்புநல் லாற்றின் மராமரம் வண்டலம் புனலாற்றின் மடிந்தன - சுரும்பு பாடும் நல்வழியையுடைய மராமரம் மணலுடைத்தாய அழகிய புனலாற்றின் மடிய, விண்டலம் புக நீங்கிய மென்மரம் (என்று அந்வயம்) - விண்டலம் புக்கிழிந்து முழங்க' என்பன **பழைய உரை.**

(பி-ம்.) 1. வண்ட லம்புன லாற்றின். 2. வண்ட லம்புந லாற்றின்.
3. மென்புனல்.
4. மென்மரம்; மென்மலர்: வீழ்ந்தவே; வீய்ந்தன. (32)

723. *தாம ரைத்தடம் பொய்கைசெஞ் சந்தனம்*
*தாம ரைத்தன வொத்தது கைத்தலின்*
*காம ரங்களி வண்டொடுங் கள்ளொடும்*
*காம ரங்கமழ் பூக்கடல் கண்டவே.*

உகைத்தலின் - (அநுமன் பலவகை மரங்களை) வீசி எறிந்ததால், தாமரை தடம் பொய்கை - தாமரை மலர்களையுடைய பெரிய தடாகம், செம் சந்தனம் தாம் அரைத்தன ஒத்தது - சிவந்த சந்தனக் கட்டைகளை அரைத்துக் கரைத்தது போன்று விளங்கியது; (மேலும்), கா மரம் - அசோகவனம் என்னும் சோலையில் உள்ள மரங்கள், காமரம் களி - காமரம் என்னும் பண்பாடிக் களிக்கின்ற, வண்டொடும் - வண்டுக ளோடும், கள்ளொடும் - அங்குள்ள தேனோடும், கமழ் பூகடல் கண்ட - மணம் வீசும் பூக்கடலை உண்டாக்கின. ஏ: அசை.

பூக்கடல் - கடல் போன்று பரந்த பூவின் மிகுதியைக் குறிப்பது. அநுமன் மரங்களை வீச அவை குளங்களில் விழுந்ததனால் அக் குள நீர் சந்தனக்குழம்புகள் போல ஆயிற்று. வேறிடத்தில் வீழ்ந்த மரங்கள் வண்டுகளாலும் தேனாலும் பூவாலும் பூக்கடலைப் போல ஆயின என்க. சில சுவடிகளில் இதன்பின் 'புல்லும் பொற்பணைப்' என்று தொடங் கும் 726 ஆம் செய்யுள் காணப்படுகிறது.

(பி-ம்.) 1. செஞ் சந்தனத்: பொய்கைகள் சேர்ந்தன.
2. தாம ரைத்தது வொத்தது கைத்தலின்: அரைத்ததை யொத்தது.
3. வண்டொடுங் காரொடுங்.
4. காம ரக்கழல்; காம ரக்கழை: பூக்கடன் கண்டதே. (33)

724. *சிந்து வாரந் திசைதொறுஞ் சென்றன*
*சிந்து வாரம் புரைதிரை சேர்ந்தன*
*தந்து வாரம் புகநெடுந் தாழ்வரை*
*தந்து வாரந் துகள்படச் சாய்ந்தவே.*

(அநுமன் வீசி எறிந்ததால்) சிந்துவாரம்-கருநொச்சி மரங்கள், திசை தொறும் சென்றன - நான்கு திசைகளிலும் சென்றனவாய், சிந்து வார் அம் புரை திரை சேர்ந்தன - கடலில் உள்ள நீண்ட அழகிய உயர்ந்த அலைகளை (எழுப்பிக்கொண்டு) கடலைச் சேர்ந்தன; (அவ்வலைகள்) தம் துவாரம் புக - தம் துவாரங்களான குகைகளுள் புக, நெடும் தாழ் வரை -நீண்ட அடிவாரத்தோடு கூடிய மலை, தம் துவாரம் துகள் பட சாய்ந்த -(அந்த இலங்கை மாளிகைகளின்) வாயில்கள் தூளாகும்படிச் சாய்ந்து விழுந்தன. ஏ: அசை.

அநுமனால் பிடுங்கி எறியப்பட்ட கரு நொச்சி மரங்கள் கடலில் விழ, அங்கிருந்து எழுந்த பேரலைகள் மலைக்குகைகளின் உட்புகுந்து மலைகளைச் சாய்க்க, அவற்றால் நகர மாளிகைகளின் வாயில்கள் உடைந்தன என்க, இப்படிக்கன்றி, திரைகள் தாழ்வரைத் துவாரங்கள் புக, அம்மலைகள் தம்மீதுள்ள சந்தன மரங்கள் பொடியாகச் சாய்ந்தன என்றும் பொருள் படக் கூறலாம்; இப்பொருளில், ஆரம் - சந்தன மரங்கள், துகள் படத் தந்து - தூளாகச் செய்து, நெடுந் தாழ்வரை - நீண்ட மலையடிவாரங்கள், சாய்ந்தன - சாய லுற்றன என்று கொள்ள வேண்டும். இன்னும் வேறு விதமாகவும் பொருள் காண்பர். சிந்துவாரம் - கருநொச்சி; 'வஞ்சி பித்தகஞ் சிந்துவாரம்' குறிஞ்சிப். 89.

(பி-ம்.) 1. சிந்து வாரத் திசை: சிந்தின
2. புரைதொறுஞ் சேர்ந்தன; புரைவரை சேர்ந்தன: சேர்ந்தென.
3. புதவொடு தாளறத்; புகழ்நெடுந் தாழ்வரை; புரைபடத் தாழ் வரை; புகைநெடுந் தாழ்வரைத்; புதலொடுந் தாளன.
4. தந்து வானம் துகள்புகச் சாய்ந்தவே: வரைபடச் சாய்ந்தவே: தரைபடச் சாய்ந்தவே: சார்ந்தவே. (34)

725. *நந்த வானத்து நாண்மலர் நாறின*
*நந்த வானத்து நாண்மலர் நாறின*
*சிந்த வானந் திரிந்துகச் செம்மணி*
*சிந்த வானந் திரிந்த திரைக்கடல்.*

நந்தவானத்து - அசோக வனம் என்னும் நந்தவனத்தில் உள்ள, நாறின நாள் மலர்-மணம் வீசிய அன்று மலர்ந்த பூக்கள், நந்த-(அநுமன் வீசி எறிந்தமையால்) மிகுதியாக, வானத்து-ஆகாயத்தினிடத்தில், நாள் மலர் நாறின - நட்சத்திரங்கள் மலர்ந்தன போலத் தோன்றின; சிந்து - (எறியப்பட்ட) புளிய மரங்கள், அ வானம் திரிந்து உக-அந்த வானத்தில் திரிந்து பின் கடலில் சிதறி விழ, திரைகடல் - அலைகளோடுகூடிய கடலில், வால் நந்து - ஒளி தங்கிய வெண்சங்குகள், செம்மணி சிந்த - (அஞ்சி) சிறந்த இரத்தினங்களான தம் முத்துக்கள் சிதற, திரிந்த - அங்குமிங்கும் அலைந்தன.

நந்தவானம் - நந்தவனம் என்பதின் விகாரம்; 805. நந்தவனம் - பூந் தோட்டம். 'நந்த நந்தவனங்களி னுண்மலர்' (அயோத்யா. கிளை கண்டு. 14.) சிந்து-புளியமரம்; சிஞ்சா என்ற வடசொல்லின் திரிபு. இதன் பின் சில சுவடிகளில் 'ஆனைத்தான' என்று தொடங்கும் செய்யுள் காணப்படுகிறது. (728). 722 முதல் 725 முடிய உள்ள பாடல்கள் முன் னிரண்டு அடிகள் ஒருவிதமாகவும் பின்னிரண்டு அடிகள் திரிந்து வேறு விதமாகவும் மடங்கி யமக அணிகளாக அமைந்துள்ளன.

(பி-ம்.) 1. நந்தவானத்த நாண்மலர் நாறுதேன்; வானத்து ணுண்மலர்: நாறுந்தேன்.
2. நந்த வானத்த: வானத்தின்: வானத்து ணுண்மலர்: நாறிய.
3. சிந்து வானந்: சிந்த வானந் திரிந்து: சிந்து வானத் தெரிந்துகு செம்மணி; தெரிந்ததுகச்.
4. சிந்து வானந்: திரைந்த திரைக்கடல். (35)

726. புல்லும் பொற்பணைப் பன்மணிப் பூமரம்
கொல்லு மிப்பொழு தேயெனுங் கொள்கையால்
எல்லில் விட்டு விளங்கிய விந்திரன்
வில்லு மொத்தன விண்ணுற வீசின.

விண் உற வீசின - வானத்தை அடையும் படி அநுமனுல் வீசி யெறியப்பட்ட, பொன் பணை புல்லும் - பொற்கிளைகள் பொருந்தப்பெற்ற, பல் மணி பூ மரம் - பலவகை இரத்தினங்களாகிய பூக்களையுடைய மரங்கள், இப்பொழுதே கொல்லும் எனும் கொள்கையால் - இப்பொழுதே (அநுமன் இந்த இலங்கையை) அழித்து விடுவான் என்ற குறிப்பால், எல்லில் விட்டு விளங்கிய-இரவில் ஒளிவிட்டு விளங்கிய, இந்திரன் வில்லும் ஒத்தன - இந்திர வில்லையும் போன்றன ஆயின.

எல் - இரவு; எல்லிற்கருங்கொண்மு நாலடி 8. அநுமன் வானில் வீசியெறிந்த மரங்கள் இந்திர வில் போல் ஒளி விட்டு விளங்கின. பொற்பணைப் பூமரம், 114. இந்திரவில் பல நிறங்களையுடையது. இரவில் இந்திரவில் தோன்றுதல் உற்பாதம். இச் செய்யுள் சில பிரதிகளில் இல்லை.

(பி-ம்.) 1. புல்லு பொற்பனை: மணிப் பொன்மரம். 2. கொள்கைய.
3. எல்லி லிட்டு விளங்கிய: எல்லெ டுத்து விளங்கிய திந்திரன்.
4 வீசினன். (36)

727. மயக்கில் பொற்குல வல்லிகள் வாரிநேர்
இயக்க றத்திசை தோறு மெறிந்தன
வெயிற்க திர்க்கற்றை யிற்றுவி ழுந்தென
புயற்க டற்றலை புக்கன போவன.

மயக்கு இல் பொன் குல வல்லிகள் - மயங்குதலில்லாத தெளிவான பொன்னால் அமைந்த கொடிகளின் கூட்டங்கள், வாரி - அநுமன் கைகளால் வாரி, நேர் இயக்கு அற - நேரான தொடர்பு அற்றுப் போகும்படி, திசை தோறும் எறிந்தன - எல்லாத் திசைகளிலும் எறியப்பட்டவை,

வெயில் கதிர் கற்றை இற்று விழுந்தென - வெயிலின் கிரணங்களின் தொகுதி அறுந்து விழுந்தன போல, புயல் கடல் தலை - மேகங்கள் படிந் துள்ள கடலினிடத்து, புக்கன போவன - புகுந்து போவன. ஆயின.

மயக்கில் - மாசற்ற என்றும் கூறலாம், இயக்கற - உயிரற எனலும் ஆம். இச் செய்யுளும் அடுத்ததும் சில பிரதிகளில் பின்னும் முன்னு மாக மாறியுள்ளன.

(பி-ம்.) 1. மயக்கும்: குல வள்ளிகள் வாரின: வாரிமற்; வாரியின்.
2. இய்க்குறத் திசை.
3. கற்றை யற்றுற வீழ்ந்தன; கற்றை இற்றிடை விழுந்தென; கற்றை இற்றுக வீழ்ந்தவை; கற்றை வீற்றிடை வீழ்ந்தன.
4. புக்கன போல்வன: போன்றவே. (37)

728. *ஆனைத் தானமு மாட லரங்கமும்*
*பானத் தானமும் பாய்பரிப் பந்தியும்*
*ஏனைத் தாரணி தேரொடு மிற்றன*
*கானத் தார்தரு வண்ணல் கடாவவே.*

அண்ணல் - பெரியோனான அநுமன், கானத்து ஆர் தரு - அசோக வனத்து விளங்கிய மரங்களை, கடாவ - வீசி எறிய, ஆனை தானமும் - யானைகள் கட்டும் இடங்களும், ஆடல் அரங்கமும் - நடனசாலைகளும், பான தானமும் - அரக்கர்கள் மதுபானம் செய்யும் இடங்களும், பாய் பரி பந்தியும் - பாய்ந்தோடும் குதிரைகள் கட்டப்பெற்ற இடங்களான இலாயங்களும், ஏனை - மற்றுமுள்ள, தார் அணி தேரொடும் - மாலை களால் அலங்கரிக்கப்பெற்ற தேர்களோடும், இற்றன - அழிந்தன. ஏ: அசை.

கானத்தார் தரு அண்ணல்-வனவாசத்தில் உள்ள இராமலக்ஷ்மணர் தூதாகத் தந்து அனுப்பிய அண்ணலாகிய அநுமன் எனப் பொருள் கொள்வாரும் உளர்.

(பி-ம்.) 2. பாய்பரித் தானமும்.
3. தாரணிந் தேரொடு மிற்றன; தாரணித் தேரொடும். (38)

729. *பெரிய மாமர னும்பெருங் குன்றமும்*
*விரிய வீசலின் மின்னெடும் பொன்மதில்*
*நெரிய மாட நெருப்பெழ நீறெழ*
*இரியல் போன விலங்கையு மெங்கணும்.*

பெரிய மா மரனும் - மிகப் பெரிய மரங்களையும், பெரும் குன்றமும் - பெரியமலைகளையும், விரிய வீசலின்-(அநுமன்) பிளவுபடும்படி வீசி எறிந்ததால், மின் நெடும் பொன் மதில்-ஒளிவீசும் நீண்ட பொன்மயமான மதில்கள், நெரிய - நெரிந்து தூளாக, மாடம் நெருப்பு எழ நீறு எழ - மாடங்கள் நெருப்புமேலோங்கவும். சாம்பராக மேலெழவும், இலங்கையும் - அந்த இலங்கை நகரில் உள்ளாரும், எங்கணும் இரியல் போன - எப்புறமும் திசைகெட்டு ஓடு வாராயினர்.

இலங்கை: இடவாகு பெயராய் அங்கிருந்த அரக்கர்களைக் குறிப்பது.

(பி-ம்.) 2. வீசலி லின்னெடும்; வீசின னின்னெடும்: விண்படர் பொன் மதில். 3. நெரிய மாடு; எரியுமாட: நீறெழீஇ.
4. போன திலங்கையும்; போன திலங்கைமற் றெங்கணும். (39)

வேறு

## சந்திரன் மறைதல்.

730. *தொண்டையங் கனிவாய்ச் சீதை*
*துவக்கினு லென்னைச் சுட்டாய்*
*விண்டவா னவர்கண் முன்னே*
*விரிபொழி லிறுத்து வீக்கக்*
*கண்டனை நின்று யென்று*
*காணுமே லரக்கன் காய்தல்*
*உண்டென வெருவி னுன்போ*
*லொளித்தன னுடுவின் கோமான்.*

'தொண்டை அம் கனி வாய் சீதை துவக்கினல்-ஆதொண்டையின் அழகிய கனி போன்ற வாயிதழையுடைய சீதையாகிய பிணிப்பில் யான் கட்டுண்டிருக்கும் நிலையினல், என்னை சுட்டாய் - என்னை எரி போல் சுட்டு வருத்தினய்; விண்ட வானவர்கள் முன்னே - என்னேடு போரில் எதிர்த்து நிற்க மாட்டாது விலகிச் சென்ற தேவர்களுக்கு முன்னே (அதாவது அவர்கள் பார்த்திருக்க), விரி பொழில் இறுத்து வீக்க கண்டனை நின்றய் - அகன்ற (என்) அசோக வனம் என்னும் சோலையை (ஒரு குரங்கு) ஒடித்து அழிக்கப் பார்த்துக் கொண்டு வாளா நின்றய்;' என்று-என்று நினைத்து, காணுமேல் அரக்கன் காய்தல் உண்டு என - காண்பானேல் அரக்கனகிய இராவணன் தன்னை வருத்துதல் செய்யக் கூடு மென்று, வெருவினன் போல் - அஞ்சினவன்போல, உடுவின் கோமான் - நட்சத்திரங்களுக்கு நாயகனன சந்திரன், ஒளித்தனன் - மறைந்தனன்.

இச்செய்யுள் சந்திராஸ்தமய வருணனை. தொண்டை: ஆதொண்டை என்பதன் முதற்குறை; ஆதொண்டைக்கனி உருவிலும் நிறத்திலும் மகளிர் வாய் இதழுக்கு உவமை. இனி, 'சீதை துவக்கு' என்பதற்குச் சந்திரன், தன் உடன் பிறந்த திருவாகிய சீதைபால் தான் கொண்ட பற்றால், எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும். துவக்கு-பிணிப்பு. காதல் கொண்டோரைச் சந்திரன் தன் நிலவால் சுடுவான் என்பது கவிமரபு. விண்ட வானவர்-தனக்குப் பகைவராய் உள்ள தேவர் என்னலும் ஆம். சந்திரன் இயல்பாய் அஸ்தமித்ததை இராவணனுக்கு அஞ்சி மறைந்ததாகக் கூறியது ஏதுத்தற்குறிப்பேற்ற அணியாகும். சந்திரனை நட்சத்திரங்களுக்கு நாயகன் என்பது புராணக் கொள்கை: தாராபதி என்பதும் நோக்குக.

(பி-ம்) 1. துயக்கினு லென்னைச்.
2. வானவர்தம் முன்னே விரிபொழி லிறுத்து வீசக்; விண்டவர் விசும்பின் மீது; விண்டல மீத ளாவும்.
3. கண்டன னின்று யென்று. 4. வெருவினுப்போல். (10)

## அநுமன் செயலால் உலகெங்கும் ஒளி வீசல்

731. காசறு மணியும் பொன்னுங் காந்தமுங் கஞல்வ வாய
மாசறு மரங்க ளாகக் குயிற்றிய மதனச் சோலை
ஆசைக டோறு மையன் கைகளா லள்ளி யள்ளி
வீசின விளக்க லாலே விளங்கின வுலக மெல்லாம்.

காசு அறு மணியும் - குற்றமற்ற இரத்தினங்களும், பொன்னும் - தங்கமும், காந்தமும்-சூரியகாந்தம், சந்திர காந்தம் என்னும் கற்களும், கஞல்வ ஆய - விளங்குவனவான, மாசு அறு மரங்களாக குயிற்றிய - குற்றமற்ற மரங்களாக இழைத்து அமைத்த, மதனச்சோலை - மன்மதனுக்கு இருப்பிடமாயமைந்த அசோக வனம் என்னும் பூஞ்சோலை (மரங்கள்), ஆசைகள் தோறும் - திசைகளில் எல்லாம், ஐயன் - அநுமன், கைகளால் அள்ளி அள்ளி வீசின - தன் இரு கைகளாலும் வாரி வாரி வீசியெறியப்பட்டனவாய், விளக்கலாலே - பெரு ஒளியைச் செய்தமையால், உலகமெல்லாம் விளங்கின - எல்லா உலகங்களும் (அந்த இருளில்) நன்கு விளங்கின ஆயின.

சந்திரன் மறைந்ததால் ஏற்பட்ட இருளில் இரத்தினமயமான மரங்களை அநுமன் வாரி வீசி எறிந்தமையால், அவ்விரத்தின ஒளிகளால் எல்லா உலகங்களும் பிரகாசமுற்றன என்க. சந்திரன் அஸ்தமித்த

பின்னும் இருள் இருந்தது என்பது இதனுல் தெரிவதால், அவ்விருள் சந்திரன் அஸ்தமித்துச் சூரியன் நன்கு புலருமுன் உள்ள இருள் எனக் கொள்ளற்பாலதாம். ஏனெனில், அநுமன் இலங்கையில் பிரவேசித்த தும், தேடிப் பிராட்டியைக் கண்டதும் பௌர்ணமி யென்று கருதப்படுவதாலும், (148-151) அவ்விரவின் பிற்பகுதியில் அநுமன் அசோக வனத்தை அழித்தமையாலும் மேற்கூறிய இருள், சந்திரன் மறைந்து சூரியன் நன்கு தோன்றும் வரை, இடைப் போதில் உள்ள சிறு இருள் என்று கொள்வதே ஏற்புடைத்தாகும். மதனச்சோலை - மன்மதன் செயல்படற்குரிய சோலை எனினும் ஆம். கனல்வ - நெருக் குவன எனினும் ஆம்.

(பி-ம்.) 1. காசொடு மணியும்: கனல்வ தாய; ஆன: கனல்வ மாட்டி.
2. குயிற்றிய மலர்ப்பூஞ் சோலை: மரங்க ளாகச் செய்தொளி வயங் குஞ் சோலை.
3. ஐயனங் கையால்: கைகளால் வாரிவாரி; நன்கையால் வாரி வாரி.
4. வீசினன் விளக்க லாலே: விளக்கி னுலே: வீசிமே லெறித லாலே விழுந்தன. (41)

## விலங்கு, பறவைகளின் நிலை 732-33

732. *கதறின வெருவி யுள்ளங் கலங்கின விலங்கு கண்கள்*
*குதறின பறவை வேலை குளித்தன குளித்தி லாத*
*பதறின பதைத்த வானிற் பறந்தன மறிந்து பார்வீழ்ந்*
*துதறின சிறகை மீள வொடுக்கின வுலந்து போன.*

விலங்கு கதறின - அவ்வசோக வனத்தில் இருந்த மிருகங்கள் வீரிட்டுக் கத்தின; வெருவி உள்ளம் கலங்கின - அஞ்சி மனக் குழப்பம் அடைந்தன; கண்கள் குதறின - அவற்றின் கண்கள் புண்ணுகிப் பொங்கின; பறவை - அங்கிருந்த பறவைகள், வேலை குளித்தன-கடலில் விழுந்து ஆழ்ந்தன; குளித்து இலாத - அவ்வாறு கடலில் விழாதவை, பதறின பதைத்த - துடித்துப் பதைப்புண்டு, வானில் பறந்தன - ஆகா யத்தில் பறந்து, வை, மறிந்து, பார் வீழ்ந்து-திரும்பிப் பூமியில் விழுந்து, உதறின சிறகை-சிறகுகளை உதறிக் கொண்டு, மீள ஒடுக்கின உலந்து போன-மீண்டும் (அச்சிறகுகளை) ஒடுக்கிக் கொண்டு அழிந்து போயின.

இதில், அநுமன் அசோக வனத்தை அழித்ததால் அங்கிருந்த மிரு கங்களும், பறவைகளும் அஞ்சி அடைந்த செயல்கள் கூறப் பெற்றுள்ளன. அநுமன் முன் மகேந்திரத்தைக் காலால் அழுத்தி யெழுந்த போது விளைந்தவற்ரேடு இவற்றை ஒப்பிடுக.

(பி-ம்.) 1. விளங்கு கண்கள்: சிலது கண்கள்.
2. குதறின சிலது வேலை குளித்தன சிலது கூவிப்: குளிர்ந்தி லாத.
3. பதறின சிலது வானிற்: மறந்து; பறிந்து
4. உதறின சிதறி மீள வொருங்கின: சிறைக ளோய வுலர்ந்தன பறவை யெல்லாம்: உலர்ந்து போன; உலைந்து போன. (42)

733. தோட்டொடுந் துதைந்த தெய்வ
மரந்தொறும் தொடுத்த புட்டங்
கூட்டொடுந் துறக்கம் புக்க
குன்றன குவவுத் திண்டோள்
சேட்டகன் பரிதி மார்பன்
சீறியுந் தீண்ட றன்ஞல்
மீட்டவன் கருணை செய்தாற்
பெறும்பதம் விளம்ப லாமோ.

குன்று அன குவவு திண்தோள் - மலைபோன்று திரண்ட வலிய தோள்களையுடைய, சேடு அகல் பரிதி மார்பன் - அழகினால் பரந்த சூரியன் போன்ற மார்பையுடைய அநுமன், சீறியும் தீண்டல் தன்னால் - கோபித்த போதும் தன் கைகளால் தொட்ட சிறப்பினால், தெய்வ மரம் தோறும் - அங்கிருந்த தெய்வத் தன்மை வாய்ந்த கற்பகம் முதலிய மரங்களில் எல்லாம், புள் - பறவைகள், தோட்டொடும் துதைந்த தொடுத்த தம் கூட்டொடும் - இலைகளோடும் நெருங்கினவையாய்த் தொடுத்து அமைக்கப்பெற்ற தம் கூடுகளுடன், துறக்கம் புக்க - சுவர்க் கத்தைப் போய்ச் சேர்ந்தன; மீட்டு - இவ்வாறன்றி, அவன் கருணை செய் தால் - அவ்வநுமன் கருணையே செய்வானானால், பெறும் பதம்-(அதனால் அக் கருணை செய்யப்பட்டோர்) அடையக்கூடிய நற்பதவியை, விளம் பல் ஆமோ - நம்மால் விளம்பக் கூடுமோ? (ஆகாது என்றபடி.)

அநுமன் மரங்களை வீசி எறிந்ததால் அம்மரங்களில் இருந்த பறவை கள் தம் கூட்டொடும் வானிற் சென்ற செயலைக் கவி, 'அவை கூட்டொ டும் சுவர்க்கம் புகுந்தன' என்று இரட்டுற மொழிதலாற் சிறப்பித்தது ஆம். அநுமனால் கருணை செய்யப்பெற்றோர் சுவர்க்கத்தினும் மேலான மோட்சம் அடைவர் என்பது இதனால் விளங்கா நிற்கும். இச்செய்தி, ஆரண்ய. கரன்வதைப். 125 ஆம் செய்யுளை நினைப்பூட்டுவதோடு, ஆண்டானாகிய இராமபிரானுடைய சிறப்புக் குணத்தை அவனடியானாகிய அநுமனுக்கும் கூட்டிக் காட்டப் பெற்றது என்னலும் ஆம். அநுமன் ஆராதனையும் பக்தியும் நாட்டிற் பெருகிய காலத்தில் இந்நூல் எழுந்த மையை இப் பாடல் அறிவுறுத்தும். சேடு - இளமையும் ஆம்.

(பி-ம்.) 1. தோட்டொடும் தொடர்ந்த: துதைந்து தெய்வ மரம்: தோட்டலர் துதைந்த.
2. கூட்டொடு துறக்கம்; துறக்க மாக; துறக்கம் போய: குன் றெனக்.
3. சிறியுந் தீங்கி லாதால்: தீண்ட வன்னுள்; தீண்ட வந்நாள்.
4. மீட்டிவன்: பெறும்பயன்: விளம்ப லாமே. (43)

## பிராட்டி தங்கியிருந்த மரமொன்றே நிலைத்திருத்தல்

734. *பொய்ம்முறை யரக்கர் காக்கும் புள்ளுறை புதுமென் சோலை*
*விம்முறு முள்ளத் தன்ன மிருக்குமவ் விருக்க மொன்றும்*
*மும்முறை யுலக மெல்லா முற்றுற முடிவ தான*
*அம்முறை யையன் வைகு மாலென நின்ற தன்றே.*

பொய் முறை அரக்கர் காக்கும் - பொய்யே தமக்கு ஒழுக்கமாகக் கொண்ட அரக்கர்கள் காத்துவரும், புள் உறை புது மென் சோலை - பறவைகள் தங்கியிருக்கும் அதிசயக்கத்தக்க மென்மையான அசோக வன மென்னும் சோலையில், விம் உறும் உள்ளத்து அன்னம் - துக்கத் தால் மனம் விம்மலுறும் அன்னம் போன்ற பிராட்டி, இருக்கும் அ விருக்கம் ஒன்றும் - தங்கியிருக்கும் அந்தச் சிம்சுபாமரம் ஒன்று மட்டும், மு முறை உலகம் எல்லாம் - (சுவர்கம், பூமி, பாதலம் என்னும்) மூன்று வகைப்பட்ட உலகங்கள் எல்லாம், முற்று உற முடிவது ஆன-முழுவதும் அழிவதாகிய, அ முறை - அந்தப் பிரளய காலத்தில், ஐயன் வைகும் - திருமால் பள்ளி கொண்டு தங்கியிருக்கும், ஆல் என - (இலையையு டைய) ஆலமரம் போல, நின்றது - அழிபடாமல் தங்கியிருந்தது. அன்று, ஏ: அசைகள்.

பிரளயத்தில் உலகங்களெல்லாம் அழியவும், அழியாது தனித்து நிற்கும் ஆலமரத்தின் ஓர் இலை மீது சிறு குழந்தை வடிவில் திருமால் பள்ளி கொண்டிருப்பார் என்பது புராண வரலாறு; திருமால் ஆலிலையிற் பள்ளியிருப்பது: 1122; அயோத்யா. நகர்நீங்கு. 11; ஆரண்ய. கவந் தப். 43; பெருமாள் திருமொழி. 8: 7. ஆல்-திருமால் பள்ளிகொண் டருளிய ஆலவிருக்ஷம். தக்க. 646 உரை. பிரளய காலத்தில் அழியாமல் நிற்கும் ஆல் போல, அசோக வனம் அழியத் தான் அழியாமல், நின்று பிராட்டிக்கு நிழல் கொடுத்தது அந்த ஒரு சிம்சுபாமரமே; மற்றவை யாவும் அழிந்தன.

(பி-ம்.) 1. அரக்கன் சோலை யரவையும் பொடிய தாக்கி: புள்ளுறு நறு மென் சோலை. 2. இருக்குமவ் விருக்கை யொன்று.
3. முற்றுறு முடிவ தான.
4. அம்முறை யமலன்; அம்முறை அமரன்: நின்ற தம்மா. (44)

## சூரியோதயம்

735. *உறுசுடர்ச் சூடைக் காசுக் கரசினை யுயிரொப் பானுக்*
*கறிகுறி யாக விட்டா ளாதலான் வறிய ளந்தோ*
*செறிகுழற் சீதைக் கன்றோர் சிகாமணி தெரிந்து வாங்கி*
*எறிகட லீவ தென்ன வெழுந்தன னிரவி யென்பான்.*

உறு சுடர் சூடை காசுக்கு அரசினை - ஒளி பொருந்திய, தலையில் அணியும் இரத்தினங்களுக்கு அரசான சூடாமணியை, உயிர் ஒப்பானுக்கு - தன் உயிர் போன்ற நாயகனை இராமபிரானுக்கு, அறிகுறி ஆக விட்டாள் - பிராட்டி ஓர் அடையாளப் பொருளாக (அநுமனிடம்) கொடுத்தனுப்பிவிட்டாள்: ஆதலான் - ஆகையாலே, அந்தோ - ஐயோ, வறியள் - இப்பொழுது ஓர் அணியும் இல்லாது வறியளாய் உள்ளாள் (என்று), செறி குழல் சீதைக்கு-அடர்ந்த கூந்தலையுடைய சீதாதேவிக்கு, எறிகடல்- அலையை எறியும் கடல், அன்று-அப்பொழுது, ஓர் சிகாமணி-தலையில் அணிதற்குரிய மற்றொரு சூடாமணியை, தெரிந்து வாங்கி-ஆராய்ந்து எடுத்து, ஈவது என்ன - கொண்டு வந்து கொடுப்பது போல, இரவி என்பான் எழுந்தனன் - சூரியன் என்பவன் (கீழ்க் கடலின்றும்) எழுந்து தோன்றினன்.

அந்தோ: இரக்கத்தை உணர்த்தும் சொல். இது சூரியோதய வருணனை; ஊர்தேடு படலம் முதல் இது காறும் கூறப்பெற்ற நிகழ்ச்சிகள் யாவும் ஓரிரவில் நிகழ்ந்தவை என்க. சூடைக்காசுக்கரசு, சிகாமணி என்பன ஒரு பொருளன; கடல் ஈவது என்ன - முன்தான் கொடுத்ததான மணி இப்பொழுது பிராட்டியிடம் இல்லை என்று, மறுபடியும் கடலாகிய வருணராஜன் ஓர் அரிய சூடாமணியைப் பிராட்டிக்குக் கொடுத்ததை ஒப்பச் சூரியன் தோன்றினன் என்று தற்குறிப்பேற்றமாகச் சிறப்பிக்கப் பெற்றது. சூடாமணியின் இவ்வரலாற்றை 689 உரையில் காண்க.

(பி-ம்.) 1. சூடைக் காசவ் வுயிரினை: காசை யுயிரினை; காசை யுயிரினுக்; காசர முயிரினை; காசங் குயிரினை: உறுசுடர்க் சூரியசூடாமணியுயி ரோம்பு வானுக்.
2. வியந்தா ளாதலில்: வறியா ளந்தோ. 3. சீதைக்கென்றோர் (45)

## அநுமன் நின்ற நிலை

736. *தாழிரும் பொழில்க ளெல்லாந் துடைத்தொரு தமிய னின்றான்*
*ஏழினோ டேழு நாடு மளந்தவ னெனலு மானான்*
*ஆழியி னடுவ ணின்ற வருவரைக் கரசு மொத்தான்*
*ஊழியி னிறுதிக் காலத் துருத்திர மூர்த்தி யொத்தான்.*

தாழ் இரும் பொழில்கள் எல்லாம் துடைத்து - தாழ்ந்து தழைந்த பெரிய அசோக வனம் என்னும் சோலையில் உள்ள எல்லாவற்றையும் அழித்து, ஒரு தமியன் நின்றான் - தன்னந்தனியனாய் நின்ற அநுமன், ஏழினோடு ஏழு நாடும் அளந்தவன் எனலும் ஆனான் - பதினான்கு உலகங் களையும் முன் திரிவிக்கிரமனாய் நின்று அளந்த திருமால் என்று சொல்லத் தக்கவனாகவும் இருந்தான்; (அதுவன்றி), ஆழியின் நடுவண் நின்ற - பாற்கடலின் நடுவே (மத்தாக) நின்ற, அருவரைக்கு அரசும் ஒத்தான் - அரிய மலைகளுக்கு அரசனான மந்தரமலையையும் போன்றவனானான்; (மேலும்), ஊழியின் இறுதி காலத்து - கற்பாந்த காலத்தில் (நிற்கும்), உருத்திர மூர்த்தி ஒத்தான் - பிரளய காலாக்நி ருத்திரன் என்னும் சர்வ சங்கார மூர்த்தியையும் ஒத்து நின்றான்.

அசோகவனம் முழுவதும் அழித்துத் தனியனாய் நின்ற அநுமனுக்கு உலகமெல்லாவற்றையும் அளந்த பேருருவோடு நின்ற திரிவிக்கிரம மூர்த்தியும், பாற் கடல் நடுவே இணையற்று விளங்கி, அதனைக் குழப்பிய மந்தரமலையும், உலகமெல்லாவற்றையும் ஊழியில் அழித்துத் தனித்து நின்ற உருத்திர மூர்த்தியும் உவமைகள். அநுமனுக்கு உலகளந்த மால். 33; கிட்கிந்தா. பிலநீங்கு. 70. அநுமனுக்கு மந்திரமலை, 797; கிட்கிந்தா. மகேந்திரப்: 28. அநுமனுக்கு உருத்திரமூர்த்தி: 1180, 1182. இவ்வுவ மைகள் செயலாலும் உருவத்தாலும் ஏற்புடைத்தாக அமைந்துள்ளமை காண்க.

(பி-ம்.) 1. எல்லா மழித்தொரு: தனியே நின்றான்; தனிய னின்றான். 2, ஏழு லோக மளந்தவ னென்ன லானான்: என்ன லாகும்; என்று மானான். 3. நடுவு நின்ற: 4. உருத்திரன் றனையு மொத்தான். (46)

## அரக்கியர் வினவும் பிராட்டி விடையும் 737-38

737. *இன்னன நிகழும் வேலை யரக்கிய ரெழுந்து பொங்கிப்*
*பொன்மலை யென்ன நின்ற புனிதனைப் புரிந்து நோக்கி*
*அன்னையீ தென்ன மேனி யார்கொலென் றச்ச முற்றார்*
*நன்னுத றன்னை நோக்கி யறிதியோ நங்கை யென்றார்.*

இன்னன நிகழும் வேலை-இவ்வாறு அசோக வனம் அழிந்த போது, அரக்கியர் - (அங்குப் பிராட்டியைக் காத்திருந்த) அரக்கிமார்கள், எழுந்து பொங்கி-(அநுமன் விஞ்சையால் தாம் உறங்கிக்கொண்டிருந்த, உறக்கத்தினின்றும்) எழுந்து மனம் கொதித்து, பொன்மலை என்ன நின்ற புனிதனை - பொன்மலையான மேரு போல் நின்ற பரிசுத்தனான அநுமனை, புரிந்து நோக்கி - நன்றாக உற்றுப் பார்த்து, அன்னை-அம்மா என்று ஏக்க

முற்று, 'ஈது என்ன மேனி - இதோ தெரியும் இஃது என்ன உருவம்? யார் கொல் - இது யாரோ?' என்று அச்சம் உற்றார் - என்று பயம் கொண்டவராகி, நன்னுதல் தன்னை நோக்கி - அழகிய நெற்றியையுடைய பிராட்டியைப் பார்த்து, 'நங்கை அறிதியோ என்றார்-நங்கையே, நீ அறிவாயோ?' என்று பிராட்டியை வினவினர்.

அநுமன் திருமேனி பொன் நிறமாதலாலும், மலை போன்ற பெருமையுடைமையாலும், மேருமலைக்கு உவமை: 28, 40, 73. 'அன்னையென்றது அம்மாவென்று ஏக்கமுற்றது' என்பது பழைய உரை. முன் உருக்காட்டு படலத் தொடக்கத்தில் அநுமன் பிராட்டியைத் தனியே காண எண்ணிச் செய்த விஞ்சையின் வலியால் உறங்கிய அரக்கியர் இந்த அசோக வனம் அழிந்ததை இதுவரை உணராது உறங்கிக் கிடந்தனர் என்பது இச் செய்யுளால் விளங்குவதாகும்.

(பி-ம்.) 1. இன்னணம் நிகழும். 2. புகன்று நோக்கி: பொருந்த நோக்கி. 3. ஈ தென்னை மேனி. 4. அறிதியே. (47)

738. *தீயவர் தீய செய்த தீயவர் தெரியி னல்லால்*
*தூயவர் துணித லுண்டே நும்முடைச் சூழ லெல்லாம்*
*ஆயமா னெய்த வம்மா னிளையவ னரக்கர் செய்த*
*மாயமென் றுரைக்க வேயு மெய்யென மையல் கொண்டேன்.*

('அதைக்கேட்ட பிராட்டி), தீயவர் தீய செய்தல் - கொடியோர் கொடிய செயலைச் செய்தலை, தீயவர் தெரியின் அல்லால்-அவர் போன்ற கொடியோரே தெரிந்து கொள்வரல்லாமல், தூயவர் துணிதல் உண்டே- கொடுமையற்ற நல்லோர்கள் அறிவர் என்று நிச்சயிக்க முடியுமோ? (முடியாது என்பதாம்);, எல்லாம் நும்முடை சூழல் - இவையெல்லாம் அரக்கியர்களாகிய உங்களுடைய சூழ்ச்சியேயாகும்; (ஏனெனில்), ஆய மான் எய்த-முன் வனத்தில் மானாகி வந்த மாரீசன் என்னருகில் வர, அ மான் அரக்கர் செய்த மாயம் என்று இளையவன் உரைக்கவேயும் - அந்த மான் அரக்கர் செய்த மாயச் செயலால் வந்தது என்று இளையபெருமானான இலக்குவன் எடுத்துச் சொல்லிய போதும், மெய் என மையல் கொண்டேன் - (அவன் அறிவுறுத்தியதை நம்பாமல்) அஃது உண்மையான மானே என்று (மயங்கி அதனை அடைய) ஆசை கொண்டேன்.

சூழல் - சூழ்ச்சி; சூடா. நிகண்டு: திருவாய்மொழி, 7: 5: 4. 'மையல் கொண்டேன்' என்றதால், அதனால் யான் இங்கு இத் துயரடையக் காரணமாயிற்று என்பதைக் குறிப்பிட்டபடி, இங்குப் பிராட்டி தான் அநுமனை அறியாதவளாகவே உரைக்கின்றனள்.

(பி-ம்.) 1. தீய செய்கை தீயவர் தேரி னல்லால்; தீமை செய்தாற் றீயவர் தேரி னல்லால்: தீய செய்யிற் றீயவர்: தீயவர் செய்யுந் தீமை தீயவ ரறித லல்லால்; தீய செய்யத் தீயவர்.

2. தெரித லுண்டோ; நும்முறை: தூயவ ரறித லுண்டோ வும் முடைச் சூழ லுள்ளான்.

3. ஏயமா னெய்த மானை; மாயமா னெய்த; மேயமா னெய்த: ஆய பொன் மானி னெய்த விளவலீ தரக்கன் செய்த: வா ளரக்கர் செய்த.

4. உரைக்க வேறு; உரைக்க வேவு; என் னுரைத்த போது மறுத்துநா னிடரின் வந்தேன்: மதியின்றி மையல்: கொண் டான். (48)

## அநுமன் சயித்தியமொன்றைப் பிடுங்கி வீசுதல் 739-44

739. என்றன ளரக்கி மார்கள் வயிறலைத் திரியல் போகிக்
குன்றமு முலகும் வானுங் கடல்களுங் குலைய வோட
நின்றதோர் சயித்தங் கண்டா னீக்குவ லிதனை யென்னுத்
தன்றடக் கைக ணீட்டிப் பற்றினுன் ருதை யொப்பான்.

என்றனள்-என்று பிராட்டி அவ்வரக்கியர்க்கு மறுமொழி கூறினுள்; அரக்கி மார்கள்-அக்காவல் அரக்கியர், வயிறு அலைத்து இரியல் போகி - வயிற்றில் அடித்துக்கொண்டு நிலை தடுமாறிச் சென்று, குன்றமும் உலகும் வானும் கடல்களும் குலைய-மலையும் இத்தப் பூவுலகும் வானமும் கடல்களும் தடுமாறும்படி, ஓட - ஓடா நிற்க, தாதை ஒப்பான் - தன் தந்தையாகிய வாயுதேவனை யொத்த வலிமையுடைய அநுமன், நின்றது ஓர் சயித்தம் காண்டான் - அங்கு நிலை பெற்று விளங்கிய அரக்கர்களது ஓர் ஓம மண்டபத்தைப் பார்த்து, இதனை நீக்குவல் என்னு - இதை இவ்விடம் விட்டுப் பெயர்த்தெறிவேன் என்று, தன் தட கைகள் நீட்டி பற்றினுன் - தன் பெரிய கைகளை நீட்டி அதனைப் பற்றிக் கொண்டான்.

மகளிர் துயருறுங்காலை வயிற்றில் அடித்துக் கொள்ளுதல்; பால, ஆற்றுப். 14; ஆரண்ய. சூர்ப்பணகைப். 115; கரன்வதைப். 190. சயித்தம்: இது சைத்யம் என்னும் வட சொல்லின் திரிபு; ஓமம் வேள்வி முதலியன புரியும் மண்டபம் எனப்படும்; 'வானேங்கு சிமயத்து வாலொளி சயித்தம்' (மணி. 28: 131.) வான்மீகத்திலும் இது சைத்யம் என்றே வழங்கப்பெற்றுள்ளது. அநுமன் வாயுகுமாரன்; வாயுதேவன் வலிமையும் வேகமும் பெற்றவன்; 29.

(பி-ம்.) 1. அரக்கர் மாதர் வயிறு: போதக்; போக்கிக்.

2. குன்றமும் வானும் மண்ணுங் கடல்களும்: உலகு மண்ணுங் கடல்: குலையப் போனுர்.

3. நின்றசெய் குன்று; நின்றதோர் சயிலங்: நின்றதோர் குன்றங்; வேரங்: செய்தி: நீக்குவா னிதனே. 4. நீட்டிப் பறித்தனன்.(49)

740. கண்கொள வரிது மீது கார்கொள வரிது திண்கால்
எண்கொள வரிது தீரா விருள்கொள வரிது மாக
விண்கொள நிவந்த மேரு வெள்குற வெதும்பி யுள்ளம்
புண்கொள வுயர்ந்த திப்பார் பொறைகொள வரிது போலாம்.

(அச்சயித்தம்), கண் கொள அரிது-யாரும் தம் கண்ணின் பார்வை கொண்டு அதன் முழு உருவையும் பார்க்க முடியாதது; கார் மீது கொள அரிது மேகங்களும் எட்டி அதன் மேற் கொள்ள முடியாத உயர மானது; திண் கால் எண் கொள அரிது - வலிய காற்றும் அதனை அடைவதற்கு எண்ண முடியாதது; தீரா இருள் கொள அரிது - நீங்காத யுகாந்த இருளும் வந்து மேற் கொள்ள முடியாதது; மாக விண் - பெரிய ஆகாயத்தை, கொள - தன் இடமாகக் கொள்ளும்படி, நிவந்த - மேலோங்கி எழுந்த, மேரு - மேருமலையும், வெள்கு உற - வெட்கி, உள்ளம் வெதும்பி புண் கொள - மனம் நொந்து புண் அடையும்படி, உயர்ந்தது-உயர்ந்து விளங்கியது; இ பார் பொறை கொள அரிது போல் ஆம் - இந்தப் பூமி அதன் பாரத்தைத் தாங்கிக் கொள்வதற்கு முடியாதது போன்றது போலும் என்று சொல்லத் தக்கதாகும்.

கார் கொள அரிது- மேக மண்டலத்திற்கும் மேலாக உள்ளது. கால் கொள அரிது - வாயு மண்டலத்திற்கும் மேலாக உள்ளது. மாகம், விண்: ஒரு பொருளன; 'மாக விசும்பு' புறநா. 35:8. பார் பொறை கொள அரிது; ஒப்பு. 749.

(பி-ம்.) 1. கால்கொள வரிது: தன் கால்: அரிது கையால்.
2. வரிதி ராவு மிருள் கொள; இராவு மெதிர்கொள வரிது: மருள் கொள: வரிது மாகம்; வரிது நாக: வரிது மாக மிருள்கொள வரிது மேனி.
3. நிமிர்ந்த மேரு; வந்த மேரு; வுயர்ந்த மேரு.
4. மண்கொள வுயர்ந்த: கொள வெளிது போலாம். (50)

741. பொங்கொளி நெடுநா ளீட்டிப் புதியபால் பொழிவ தொக்கும்
திங்களை நக்கு கின்ற விருளெல்லாம் வாரித் தின்ன
அங்கைபத் திரட்டி யான்ற வுணையா லழகு மானப்
பங்கயத் தொருவன் ருனே பசும்பொனாற் படைத்த தம்மா.

புதிய பால் பொழிவது ஒக்கும் - புதிய பாலைச் சொரிவது போன்று விளங்கும், திங்களை நக்குகின்ற இருள் எலாம் வாரித் தின்ன - சந்திரனை

நக்கி யுண்ணும் இருள் அனைத்தையும் ஒருசேர வாரித் தின்னும் பொருட்டு, அம் கை பத்து இரட்டியான் தன் ஆணையால் - அழகிய கைகள் இருபது உடைய இராவணனுடைய கட்டளைப்படி, பங்கயத்து ஒருவன் தானே - தாமரை மலர் மீது விளங்கும் பிரமதேவனே, பொங்கு ஒளி நெடு நாள் ஈட்டி - வளரும் ஒளியை நெடு நாட்களாய்த் தேடிச் சேர்த்து, அழகு மான - அழகினால் சிறந்தோங்கும்படி, பசும் பொனால் படைத்தது அம்மா - பசிய பொன்னால் இந்தச் சயித்தம் செய்தது போலும்!

திங்கள் பால் பொழிவது - சந்திரன் நிலா வீசுவது; பால் போன்ற வெண்மையுடைமையின் நிலவு பாலெனப்பட்டது; பால் உவமையாகு பெயர். நிலவுக்குப் பால். 150, 151; பால. உண்டாட்டு. 8; உயுத்த, இலங்கைக் கேள்வி. 8. திங்கள் ஒளியை இருள் நக்குவதென்றது, அப்பேரிருளில் சந்திரன் ஒளி மறைந்து அழிவதைக் குறிப்பதாம். பால் என்பதற்கு ஏற்ப, நக்குதல் என்ற சொல் குறிக்கப்பட்டது ஒரு நயம். அம்மா என்பது கேள்விக்கு இடமாகும் வியப்புப் பொருளில் கொள்ளப்பட்டது.

(பி-ம்.) 1. நெடுநா நீட்டி; நெடுநீ ராயும்; நெடுங்கை நீட்டி; நெடுநீ ராட்டி; நெடுநாணீட்டி; நெடுங்கை நீட்டிப் புதிய பால் பிழிவ தொக்கும்; புதியனல் பிழிவ.
2. நக்கு கின்றது; திங்களைத் துரந்து திக்கி னிருளெலாம்.
3. தங்கைபத் திரட்டி; ஆணையி னழகு வாய்ப்ப; அழகு மான.
4. படைத்த மேனுள். (51)

742. *தூணெலாஞ் சுடருங் காசு சுற்றெலா முத்தஞ் செம்பொன்*
*பேணலா மணியின் பித்திப் பிடரெலா மொளிகள் விம்மச்*
*சேணெலாம் விரியுங் கற்றைச் சேயொளிச் செல்வற் கேயும்*
*பூணலா மெம்ம னோராற் புகலலாம் பொதுமைத் தன்றே.*

தூண் எலாம் சுடரும் காசு - (அந்தச் சயித்தத்தின்) தூண்களில் எல்லாம் ஒளி வீசும் இரத்தினங்களுடையவும், சுற்று எலாம் முத்தம் செம்பொன் - சுற்றுப்புறங்களில் (பிராகாரங்களில்) எல்லாம் உள்ள முத்துக்கள், சிவந்த பொன்கள் ஆகிய இவற்றினுடையவும், பேணல் ஆம் பித்தி பிடர் எலாம் மணி - விரும்பத்தக்க சுவர்களின் புறங்கள் எல்லாம் உள்ள இரத்தினங்களுடையவுமான, ஒளிகளின் - ஒளிகளுடைய, சேண் எலாம் விம்ம விரியும் கற்றை - ஆகாயம் எங்கும் மிகுதியாகப் படரும் தொகுதிகள், சேய் ஒளி செல்வற்கு ஏயும் - சிவந்த ஒளியையே செல்வமாக உடைய சூரியனுக்கும் கூட, பூணல் ஆம் - ஏற்றுப் பூணத்தக்

கனவாம்; (ஆதலின்), எம்மனோரால் - எம் போன்றவர்களால், புகலல் ஆம் பொதுமைத்து அன்று - எடுத்துக் கூறுவதற்கான பொதுவான காரியம் அன்று. ஏ: அசை.

'சேணெலாம் விம்ம விரியும் கற்றை' என்பதனைச் சேயொளி செல்வற்கு என்பதுடனும் இயைத்துப் பொருள் கூறலாம். பித்தி - சுவர்; 'பித்தி தன்னிடைப்...பொறித்த, சத்த கோடி மந்திரம்', (விநாயகபு.) 79: 35.) பித்தி அடுக்கமும் ஆம்; 'அண்ட பித்தி பிளந்து' அண்டங்களின் அடுப்பமும் அடுக்கும் பிளந்து (தக்க, 631உரை). ஒரு சுவடியில் இச்செய்யுளுடன் **பூங்காவனப்படலம்** முற்றும்.

(பி-ம்.) 1. சுற்றெலா மற்றச் சொன்னம்; மற்றைச் சொன்னம்; மாற்றச் சொன்னம்; மயரச் சொன்னம்: தூணெலாந் துகிருங் காசுஞ் சுற்றெலாஞ் சுடரும் செம்பொன்.
2. பணியின் பித்தி; மணியின் பத்தி. 3 செல்வர்க் கேயும்.
4. புகழெலாம் புதுமைத் தன்றே: பொதுமைத் தாமோ. (52)

743. *வெள்ளியங் கிரியைப் பண்டு வெந்தொழி லரக்கன் வேரோ*
*டள்ளின னென்னக் கேட்டா னத்தொழிற் கழிவு தோன்றப்*
*புள்ளிமா மேரு வென்னும் பொன்மலை யெடுப்பான் போல*
*வள்ளுகிர்த் தடக்கை தன்னான் மண்ணின்றும் வாங்கி யண்ணல்*

அண்ணல் - பெரியோனான அநுமன், வெம் தொழில் அரக்கன் - கொடிய தொழில்களை மேற்கொண்ட அரக்கனான இராவணன், பண்டு - முன், வெள்ளி அம் கிரியை - வெள்ளிமலையான அழகிய கயிலையை, வேரோடு அள்ளினன் என்ன கேட்டான் - அடி வேரோடு வாரியெடுத்தான் என்று உலகம் கூறக் கேட்டவனாய், அ தொழிற்கு அழிவு தோன்ற-(இராவணன் செய்த) அந்தத் தொழிலுக்கு ஒரு குறைவு உண்டாகுமாறு, புள்ளி மாமேரு என்னும்-புள்ளிகள் போலப் (பல நிறங்களைக் கொண்ட) பெரிய மேரு எனப்படும், பொன்மலை எடுப்பான் போல - பொன்மலையை எடுப்பவன் போல, வள் உகிர் தடக்கை தன்னால் - கூர்மையான நகங்களையுடைய தன் பெரிய கைகளால், மண்ணின்றும்-தரையிலிருந்தும், வாங்கி-அந்தச் சயித்தத்தை எளிதில் பெயர்த்தெடுத்து,

இச் செய்யுளும் அடுத்த செய்யுளும் இயைந்து முற்றுப் பெறும் குளகமாகும். அள்ளுதல் - பிரயாசையின்றி எளிதில் எடுத்துக் கொள்ளுதல். புள்ளிமா மேரு; மதிப்புக்குரிய பெரிய மேருமலை என்றும், பல முழைகளையுடைய மேருமலை என்றும் பொருள் கொள்வாரும் உளர். மலைக்குப் புள்ளியென்பது பொதுவான ஓர் அடைமொழியாக வருவதும்

ஆகும். 'புள்ளிமால்வரை' (பால. ஆற்றுப்: 4; கிட்கிந்தா. கிட்கிந்தைப். 19:) வாங்குதல் - எளிதில் எடுத்துக் கொள்ளுதல். அச்சயித்தம் மாமேருவினும்உயர்ந்ததாகக் கூறப்பெற்றமையின், (740) அதன் பெருமையும் வலிமையும் அறியப்படுவதோடு, அதனை எளிதில் எடுத்து வீசிய அநுமன் பேராற்றல் விளங்குவதுங் காணலாம். உகிர்த் தடக்கை என்றதனால் நகங்களால்,மண்ணைப் பெயர்த்தது புலனாகும். சில சுவடிகளில் பொழிலிறுத்த படலம் இச் செய்யுளுடன் முடிகிறது.

(பி-ம்.) 1. கிரியை மேனுள் வெந்: பண்டவ் வெந்தொழில்.
2. என்னக் கொண்டான்: என்னத் தானு மவன்றிறற் கழிவு: அறத்தொழிற் கழிவு; அன்னவதோ ரழிவு; அத்தொழிற் கிழிவு.
3. பொன்வரை. 4. மண்ணின்று வாங்கி வள்ளல். (53)

744. *விட்டன னிலங்கை தன்மேல் விண்ணுற விரிந்த மாடம்*
*பட்டன பொடிக ளான பரந்தன பாங்கு நின்ற*
*சுட்டன பொறிகள் வீழத் துளங்கின ரரக்கர் தாமும்*
*கெட்டனர் வீர ரம்மா பிழைப்பரோ கேடு சூழ்ந்தார்.*

இலங்கை தன் மேல் விட்டனன் - (பெயர்த்தெடுத்த அந்தச் சயித்தத்தை அநுமன்) இலங்கை நகர்மீது வீசி எறிந்தான்; விண் உற விரிந்த மாடம்-ஆகாயத்தில் பொருந்த விரிவாய் அமைந்த மாளிகைகள், பட்டன பொடிகள் ஆன - அச்சயித்தம் மேல் வந்து பட்டனவாய்ப் பொடிகளாக உதிர்ந்தன; பாங்கு பரந்தன நின்ற சுட்டன - அவற்றின் அருகே பரந்து நின்ற பொருள்களையெல்லாம் (அத் தாக்கலால் எழுந்த தீ) சுட்டன; பொறிகள் வீழ அரக்கர்தாமும் துளங்கினர் - அவ்வாறு சுடப்பட்டதால் எழுந்த தீப்பொறிகள் விழ, அரக்கர்களும் சுடப்பட்டவர்களாய் நடுக்க முற்றனர்; வீரர் கெட்டனர் - வீரர்களான மற்ற அரக்கர்கள் அழிந்தனர்; கேடு சூழ்ந்தார் பிழைப்பரோ - பிறர்க்குக் கேடு செய்தோர்கள் தாம் கேடு அடைவதினின்றும் தப்பிப் பிழைப்பரோ? (மாட்டார் என்றபடி). - அம்மா: இரக்கத்தை உணர்த்தும் இடைச் சொல்.

இச்செய்யுள் வேற்றுப் பொருள்வைப்பணியின்பாற்படும்,

(பி-ம்.) 1. உயர்ந்த மாடம்.
2. பட்டன முடிக ளான: பகுத்தன பாங்கு நின்ற: பொடிக ளாகப் பன்னரு மூழித் தீயிற்.
3. பொறிகள் பின்னைத்; பொறிகள் மீளத் துளங்கின வரக்கர்; துஞ்சின வரக்கர்; துளங்கின வரக்கர்.
4. வீர மம்மா: அம்மா வுய்வரோ. (54)

## பருவத்தேவர் இராவணனிடம் சென்று கூறுதல் 745-7

745. *நீரிடு துகில ரச்ச நெருப்பிடு நெஞ்சர் நெக்குப்*
*பீரிடு முருவர் தெற்றிப் பிணங்கிடு தாளர் பேழ்வாய்*
*ஊரிடு பூச லார வுளைத்தன ரோடி யுற்ருர்*
*பாரிடு பழுவச் சோலை பாலிக்கும் பருவத் தேவர்.*

பார் இடு பழுவசோலை-(சுவர்க்கத்திலிருந்து) பூமியின் ஒரு பகுதியாகிய இலங்கையில் (இராவணனால் கொண்டுவந்து காக்கப் பெற்றுவந்த) தொகுதியாய் மரங்கள் அடர்ந்திருந்த அசோகவனம் என்னும் பூஞ்சோலையை, பாலிக்கும் பருவதேவர்-(இராவணன் ஆணையினால்) பாதுகாத்துவந்த அந்த அந்தப் பருவகாலத்துக்குரிய தேவர்கள், நீர் இடு துகிலர்-(அச்சத்தால்) தம் சிறு நீரை விட்டுக்கொண்ட ஆடையையுடையவர்களாகவும், அச்ச நெருப்பு இடு நெஞ்சர் - பயமாகிய நெருப்பு இடப்பெற்ற மனமுடையவர்களாகவும், நெக்கு பீர் இடும் உருவர்-தாக்கப்பட்டு இரத்தம் பெருக்கெடுத்து ஓடும் உருவத்தை யுடையவர்களாகவும், தெற்றி பிணங்கிடு தாளர் - நடக்க முடியாமல் பிணங்கி ஒன்ருேடொன்று பின்னிக் கொண்ட கால்களையுடையவர்களாகவும், பேழ் வாய் ஊர் இடு பூசல் ஆர-தங்கள் பிளந்த பெரிய வாய்களினால் அந்த இலங்கை நகரில் பெரிய ஒலி முழக்கம் உண்டாகும்படி, உளைத்தனர் - ஊளையிட்டவர்களாகவும், ஓடி உற்ருர் - ஓடி இராவணனிடம் போய்ச் சேர்ந்தனர்.

நீரிடு துகிலர், நெருப்பிடு நெஞ்சர், பீரிடும் உருவர், பிணங்கிடுதாளர் என்பன வெல்லாம் வடமொழி நடையை மேற்கொண்டவை. பருவத் தேவர் - ஆறு பருவங்களுக்கு உரிய தேவர்கள் அறுவர். ஆறு பருவங்கள்; கார், கூதிர், முன்பனி, பின்பனி, இளவேனில், முதுவேனில் என்பன. இப் பருவத்தேவர்கள் இராவணனுக்கு அஞ்சி, அவன் விருப்பப்படி அவ்வசோக வனத்தில் என்றும் மேற் கூறிய ஆறு பருவகாலங்களுக்குரிய பூ, காய், கனி, முதலியவற்றையும், குளிர்ச்சி, வெப்பம் முதலியவைகளையும் அவன் வேண்டும் போதெல்லாம் அளித்து வந்து அச்சோலையைக் காத்து வந்தனர் என்பதாம். இவ்வாறு இராவணன் இருதுக்களுக்கு உரிய தேவர்களையும் பிறதேவர்களையும் தன் விருப்பப்படிப் பணிவிடை புரியப் பணித்திருந்தான் என்பது, ஆரண்ய. மாரீசன் வதைப் படலத்துங் காணலாம். பழுவம் - அடர்த்தி, தொகுதி. இச் செய்யுள் அச்சத்தால் விளையும் மெய்ப்பாடுகளை விளக்கும்.

(பி-ம்.) 1. துகில ரஞ்சி நெருப்: அச்ச நெருப்பிடு நெஞ்ச முற்றிப்: நெஞ்சார் நெக்குப்; நெஞ்சர் முற்றி: நெக்கிப்.

2. உருவார் தெற்றிப் பிணங்கிய தாளார்: தோளர்; தோளார்: பிணங்கிய வெயிற்றுப் பேழ்வாய்.

3. பூச லார வுரைத்தனர்; பூச லார்நின் றுளைத்தனர்; பூசலாக வுரைத்தனர்; பூச லோங்க விளைத்தனர்.

4. பாரிடு பவ்வச் சோலை: பவளச் சோலை: பாரிக்கும் பருவத் தேவர்: பருவ முள்ளார். (55)

746. *அரிபடு சீற்றத் தான்ற னருகுசென் றடியின் வீழ்ந்தார்*
*கரிபடு திசையி னீண்ட காவலாய் காவ லாற்றேம்*
*கிரிபடு குவவுத் திண்டோட் குரங்கிடை கிழித்து வீச*
*எரிபடு பஞ்சி னொய்தி னிற்றது கடிகா வென்றார்.*

அரி படு சீற்றத்தான் தன்-சிங்கத்தினிடம் உண்டாகும் கோபத்தை யுடைய இராவணன், அருகு சென்று - அருகே போய், அடியின் வீழ்ந் தார் - அவன் அடிகளில் வீழ்ந்து பணிந்தவர்களான பருவத் தேவர், 'கரிபடு திசையின் நீண்ட காவலாய்-(திக்) கயங்கள் பொருந்திய திக்குக் கள் வரையில் நீண்டு பரந்த ஆட்சியுடையோய்! காவல் ஆற்றேம் - யாங் கள் (இப்பொழுது) அந்த அசோக வனத்தைக் காக்கும் வலியற்றவர் களானோம்; கிரி படு குவவு திண் தோள்-மலை படுத்துப் போகும்படியான திரண்ட வலிய தோள்களையுடைய, குரங்கு - ஒரு குரங்கு, இடை கிழித்து வீச - அச் சோலையிடை புகுந்து அதனைச் சின்ன பின்னமாக அழித்து வீசியெறிய, கடிகா - காவல் மிக்க அச்சோலை, எரிபடு பஞ்சின்- நெருப்புப் பற்றிய பஞ்சு போல, நொய்தின் இற்றது என்றார் - விரைவில் அழிந்தது' என்று கூறினர்.

அரிபடு சீற்றத்தான் - சிங்கத்தை அழிக்கும் கோபத்தையுடைய இராவணன் என்றும், வெட்டுதற்குரிய கோபம் என்றும் பொருள் கொள்ளலாம். 'கிரிபடு குவவு திண்டோள்' என்பதில் படு என்பதை உவம வாசகமாகக் கொண்டு, மலை போன்று பருத்து உயர்ந்த வலிய தோள் என்றும் பொருள் கூறலும் ஆம். பறித்து அல்லது ஒடித்து வீச என்னுமல், 'கிழித்து வீச' என்றமையால் அச் சோலை மரங்களையும் சயித்தம் முதலிய வலிய பெரிய கட்டிடங்களையும் நுண்ணிய பொருள் களைக் கிழித்தெறிவது போல எளிதில் அழித்தமை புலப்படுவதோடு, அநுமன் ஆற்றலும் விளங்குவதாம். இராவணனிடம் முறையிட்டவர் கள் அஞ்சியோடிய அரக்கியர் என்று முதனூல் கூறும்.

(பி-ம்.) 2. திசையி னின்ற காவலர்: திசையை வென்ற காவலர் காவல்.

3. குரங்கொன்று கிழித்து.

4. எரிபடு துகிலின்; எரிபடு தீயின். (56)

747. *சொல்லிட வெளிய தன்றுற் சோலையைக் காலிற் கையில்*
*புல்லொடு துகளு மின்றிப் பொடிபட நூறிப் பொன்னுல்*
*வில்லிடு வோமந் தன்னை வேரொடும் வாங்கி வீசச்*
*சில்லிட மொழியத் தெய்வ விலங்கையுஞ் சிதைந்த தென்றுர்.*

(அப் பருவத் தேவர்கள் மீண்டும் இராவணனிடம்), சொல்லிட எளியது அன்று-அக் குரங்கு செய்த அட்டூழியங்களை யாங்கள் சொல்லி முடிக்க முடியாதது ஆகும்; சோலையை - அந்த அசோக வனத்தை, காலில் கையில்-(அக்குரங்கு) தன் கால்களாலும் கைகளாலும், புல் ஒடு துகளும் இன்றி - அங்குப் புல்லும் தூசியும் இல்லாதபடி, பொடிபட நூறி - தூளாகும்படி அழித்து, பொன்னுல் வில் இடு ஓமம் தன்னை - பொன்னுல் ஒளி வீசும் வேள்வி மண்டபமான சயித்தத்தை, வேரொடு வாங்கி வீச - வேரோடு எளிதிற் பிடுங்கி வீசி யெறிய, சில் இடம் ஒழிய - ஒரு சிறு இடமே நீங்கலாக, தெய்வ இலங்கையும் - தெய்வத் தன்மை பொருந்திய இந்த இலங்கை நகரமும், சிதைந்தது என்றுர் . அழிந்து போயிற்று என்று தெரிவித்தனர். ஆல்: அசை.

புல்லிடு துகள்என்று கொண்டு புல்லில்பொருந்திய தூசி என்றும் பொருள் கொள்ளலாம். ஓமம் - சயித்தம்; (739): பின்னும் (748) (761) ஓமமென்று வருதல் காண்க. சில் இடம். பிராட்டி இருந்த சிறு இடத்தைக் குறித்தது. தெய்வ இலங்கை என்றது, இலங்கை தெய்வக் கம்மியனுன விசுவ கன்மாவால் அமைக்கப்பட்டதாதலின்; 103.

(பி-ம்.) 1. சொல்லிடை: சோலையிற் காலிற் கையிற்: கையிற் காலிற்;
2. புல்லிடு துகளு மின்றிப் பொறிபட நூறிப் பொன்ரு.
3. வில்லிடு மேருத்; குன்றந்; வேரந்; வால வெற்பை.
4. ஒழியத் தேய: தெய்வ நகரமுந்: சிதைந்த தன்றே. (57)

பொழிலிறுத்த படலம் முற்றும்

# 7. கிங்கரர் வதைப் படலம்

## இராவணன் இகழ்ச்சியும் பருவத்தேவர் கூற்றும் 748-49

748. *ஆடகத் தருவின் சோலை பொடிபடுத் தரக்கர் காக்கும்*
*தேடரு மோமம் வாங்கி யிலங்கையுஞ் சிதைத்த தம்மா*
*கோடர மொன்றே நன்றி திராக்கதர் கொற்றஞ் சொற்றல்*
*மூடரு மொழியா ரென்ன மன்னனு முறுவல் செய்தான்.*

கிங்கரர் வதைப் படலம் - இராவணன் ஏவிய கிங்கரர் என்னும் இராக்கதர்களை அநுமன் அழித்த வரலாற்றைக் கூறும் படலம் என்று விரியும். கிங்கரர் என்பார் அருகில் நின்று பணியியற்றுபவராவர். இப் படலச் செய்தியை' முன் படலத்தோடு கூட்டியும் சில சுவடிகள் அமைத்துள்ளன.

(இவ்வாறு சொல்லக்கேட்டு) கோடரம் ஒன்றே - ஒரு குரங்கே!' ஆடக தருவின் சோலை-பொன்னால் அமைந்த மரங்களையுடைய அசோக வனம் என்னும் பூஞ்சோலையை, பொடி படுத்து - தூளாகும்படி அழித்து, அரக்கர் காக்கும் தேடு அரும் ஓமம் வாங்கி - அரக்கர்கள் காவல் புரியும் எங்கும் தேடிக் காண்பதற்கரிய வேள்வி மண்டபத்தைப் பறித்து, இலங்கையும் சிதைத்தது-இலங்கையையும் அழித்து விட்டது! இராக்கதர் கொற்றம் நன்றிது - அரக்கர்களுடைய வீரம் நன்றாக இருக்கிறது! சொற்றல் மூடரும் மொழியார் என்ன - இவ்வாறு சொல்வதை மூடர்கள் கூடச் சொல்லார்' என்று கூறி, மன்னனும் முறுவல் செய்தான்-அரக்கர் மன்னனான இராவணனும் புன்சிரிப்புக் கொண்டான்.

மன்னன் முறுவல் செய்தமை; எள்ளற் குறிப்பு; ஒப்பு: 'சுட்டது குரங்கெரி சூறை யாடிடக், கெட்டது கொடிநகர் கிளையு நண்பரும், பட்டனர் பரிபவம் பரந்த தெங்கணும், இட்டதிவ் வரியணை யிருந்த தென்னுடல்' (உயுத்த. மந்திரப். 12.); கோடரம் - குரங்கு; 'கொய் தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத் துருவு கொண்டு' (934). சில சுவடிகளில் இச் செய்யுள்முதல் மூன்று செய்யுள்கள் பொழிலிறுத்த படலத்தின் இறுதியில் உள்ளன.

(பி-ம்.) 1. தருவின் சோலை: சோலை யொடிபடுத்(து).
2. தேடரு மேரு; தேடருங் குன்றம்; தேடரும் வேரம்.
3. நன்றிங் கிராக்கதர் சொற்றஞ் செற்ற: நன்றிவ் விராக்கதர்: கோடர மென்றிர் வென்றி யிராக்கதர் கொற்றந்தேரா.
4. மூடர்தம் மொழியே யென்ன: என்னு மன்னவுன். (1)

749. *தேவர்கள் முன்னும் பின்னு மதனுருச் சுமக்குந் திண்மைப்*
*பூவல யத்தை யன்றோ புகழ்வது புலவர் போற்றும்*
*மூவரி னொருவ னென்றே புகலினு முடிவி லாத*
*ஏவம ரலைக்கும் செங்கைக் குரங்குகா ணின்னு மென்றார்.*

(அவ்வாறு இராவணன் இகழ்ந்ததைக் கண்டு), தேவர்கள் - அப் பருவத் தேவர்கள், (அரசனை நோக்கி), 'அதன் - அக்குரங்கின், உரு - உடலை, முன்னும் பின்னும் - எக்காலத்தும், சுமக்கும் - சுமந்து நிற்கின்ற, திண்மை பூவலயத்தை அன்றோ - வலிமை யுடைய பூமியை அல்லவா, புகழ்வது - புகழ வேண்டியது, புலவர் போற்றும் - தேவர்கள் வாழ்த்துகின்ற, மூவரின் - மும்முதற் கடவுளருள், ஒருவன் என்றே புகலினும் - ஒருவனே ஆவன் என்று சொன்னாலும், முடிவு இலாத - (அவன் வலிமைகள்) முடிவற்றனவாகும்; செங்கை குரங்கு-(இரத்தம் தோய்ந்து) சிவந்த கையையுடைய இக்குரங்கு, இன்னும் ஏவு அமர்-இன்னும் உன்னால் ஏவப்படும் போரினையும், அலைக்கும் - சிதைக்கும்; காண்-நீ இதனைக் காண்பாயாக' என்றார் - என்று கூறினர்.

பருவத்தேவர் அச்சத்தால் தம் அரசன்முன் பகைவரைப் புகழலாகாது என்பதை மறந்தும், அவன் அக்குரங்கை எள்ளுதல் நேரியதன்று என்பதைத் தெரிவிக்கவும் இவ்வாறு கூறினர் என்க. அது என்றும், ஒருவன் என்றும் திணைமாறிக் கூறியதும் அநுமனின் உண்மைத் தன்மையை அறியாமையால் என்க. 'இதன் உரு - இந்தக்குரங்கின் வடிவை; முன்னும் பின்னும் - அநுமன் பிறந்த நாள் முதலாக இனிமேலிருக்குமட்டும்; ஏவு அமர் அலைக்கும் - நீ ஏவும் படைகளைக் கொல்வன், என்று தேவரான ஆறு பருவத்தவரும் சொன்னார்' என்பன பழைய உரை. முன்னும் பின்னும் என்பதை, இடத்தால் பின்னும் முன்னும் என்றும் பொருள் கொள்ளலாம். புலவர் - அறிஞர் என்னலும் ஆம். செங்கை செம்மையான (வலிய) கை எனலும் ஆம்.

சில சுவடிகளில் இச் செய்யுளும் முந்தின செய்யுளும் இடம் மாறி உள்ளன. சில சுவடிகளில் இச்செய்யுளுடன் முன் படலம் முற்றும். ஒரு சுவடியில் இதன் பின், பின்வரும் ஓர் அதிகப்பாடல் காணப்படுகிறது;

எனப்பதம் வணங்கி யன்னு ரியம்பிய வார்த்தை கேளாக்
கனக்குர லுருமு வீழக் கனமலை சிதறத் தேவர்
மனத்தறி வழிந்து சோர மாக்கட லிரைப்புத் தீரச்
சினத்துவாய் மடித்துத் தீயோ னகைத்திவை செப்ப லுற்றான்.

(பி-ம்.) 1. பின்னு மன்ன வதனுருச்; பின்னு முன்னுந் தன்னுருச்; முன்னும் பின்று மிதனுருச்; பின்னு முன்னு மதனுருச்; சுமக்குந் தன்மைப்.

2. அன்னேன் றன்னெடு புலவர்: அன்றே புகழ்வது: புலவர் போலும்.
3. என்று புகல்கினும்: மூவரு மொன்ருய் நின்று புகலினும்; மூவரி லொருவ னென்றே: முடியா தாரோ.
4. ஏவமக் குரங்கை யைய காணுதி யின்னே யென்ருர்; ஏவுமா சூரங்க தையா காணுதி யிறைவ வின்னும். (2)

## அநுமனின் ஆரவாரம் 750 - 51

750. *மண்டலங் கிழிய வாயின் மறிகடன் மோழை மண்ட*
*எண்டிசை சுமந்த மாவுந் தேவரு மிரியல் போகத்*
*தொண்டைவா யரக்கி மார்கள் சூல்வயி றுடைந்து சோர*
*அண்டமும் பிளந்து விண்ட தாமென வநும னுர்த்தான்.*

(இவ்வாறு பருவத் தேவர் கூறி முடித்த போது), அநுமன் - (அசோகவனத்தில் நின்ற) அநுமன், மண்டலம் கிழிய - பூமண்டலமும் வான மண்டலமும் கிழிய, மறி கடல் - அலைகள் மடங்கி வீசும் கடலின் நீர், மோழை - கிழாரு ஈப் (பாய்ந்து), வாயில் மண்ட - (இலங்கை நகர மாளிகைகளின்) வாயில்களில் நெருங்க, எண் திசை சுமந்த மாவும் - எட்டுத் திசைகளிலும் நின்று பூமியைச் சுமக்கும் யானைகளும், தேவரும் - திக்குப் பாலகர்களும், இரியல் போக - அஞ்சி ஓட, தொண்டை வாய் அரக்கிமார்கள் - ஆதொண்டைக்கனி போன்ற சிவந்த அதரங்களை யுடைய அரக்கியர், சூல் வயிறு உடைந்து சோர - கருப்பம் முதிர்ந்த வயிறு சிதைந்து சோர்வடைய, அண்டமும் பிளந்து விண்டது ஆம் என - அண்டமே பிளந்து விள்ளப்பட்டு விட்டது என்று கூறும்படி, ஆர்த்தான் - ஒரு கூச்சலிட்டான்.

மண்டலம் - மண், தலம் என்றும் பிரித்துப் பொருள் கூறலாம். மோழை-கிழாறு; குமிழியும் ஆம்; 'அண்டம் மோழை யெழ' (திவ். திருவாய். 7. 4: 1.). சூல் வயிறு - பருத்த வயிறும் ஆம்.

சில அச்சுப் புத்தகங்களில் இச் செய்யுளுடன் பொழிலிறுத்த படலம் முடியும்.

(பி-ம்.) 1. மண்டலங் கிழிந்த வாயின்; கிழிந்த வாயான்; கிழித்த வாயின்; கிழிந்த தென்ன; கிழிந்து பாயும்.
2. சுமந்த யானை; சுமந்த யானைத். (3)

751. *அருவரை முழையின் முட்டு மசனியி னிடிப்பு மாழி*
*வெருவரு முழக்கு மீசன் வில்லிறு மொலியு மென்னக்*
*குருமணி மகுட கோடி முடித்தலை குலுங்கும் வண்ணம்*
*இருபது செவியி னூடு நுழைந்ததவ் வெழுந்த வோசை.*

அருவரை முழையின் முட்டும் அசனியின் இடிப்பும் - பெரிய மலைக் குகையில் போய்த் தாக்கும் இடியின் முழக்கமும், ஆழி வெருவரு முழக்கும்-பிரளயகாலத்தில் கடல் கொந்தளித்து அச்சமுண்டாக்கிவரும் பேரொலியும், ஈசன் வில் இறும் ஒலியும்-(சிவபிரானுடைய வில்லை இராம பிரான் ஒடித்ததால் உண்டான ஓசையும், என்ன-என்று சொல்லும்படி, குருமணி மகுட கோடி முடி தலை குலுங்கும் வண்ணம்-பருத்த இரத்தினங்கள் பதிக்கப்பெற்ற கிரீட வரிசைகள் பொருந்திய சிகைகளை யுடைய பத்துத் தலைகளும் குலுங்கும்படி, எழுந்த ஓசை - (அநுமன் ஆர்த்ததால்) எழுந்து கிளம்பிய அந்த ஓசை, இருபது செவியின் ஊடு-இராவணன் இருபது காதுகளின் வழியே, நுழைந்தது - உட்புகுந்து சென்றது.

அநுமன் ஆர்ப்பின் பெருமை இங்குக் கூறப்பெற்றது. ஈசன் வில்லிடு மொலியும் எனப்பாடம் கொண்டு, இராமபிரான் வில்லில் நாண் ஏற்றி உண்டாக்கும் ஒலி என்று பொருள் கொள்வாரும் உளர்; இராமபிரானை ஈசன் என்பது, 'என்றனர் சாதக மீசற்கு' (பால. திருவவதார: 111) இதன் பின் ஒரு சுவடியில் ஓர் அதிகப்பாடல் உள்ளது:

ஓசையி னிடிப்புங் கேட்டாங் குருத்தெழு சினத்த ழுகி
ஈசன்மா லெனினு மொவ்வா தீதொரு குரங்கு போலாம்
கூசிடா திலங்கை புக்கிக் குலமலர்ச் சோலை யோடு
மாசறு நகரை மாய்க்கும் வலிமைநன் றென்ன நக்கான்.

(பி-ம்.) 4. நுழைந்தன வெழுந்த வோசை; நுழைந்த தன் றெழுந்த வோசை. (4)

## இராவணன் கட்டளை

752. *புல்லிய முறுவ ரேன்றப் பொருமையுஞ் சிறிது பொங்க*
*எல்லையி லாற்றன் மாக்க ளெண்ணிறந் தாரை யேவி*
*வல்லையி னகலா வண்ணம் வானையும் வழியை மாற்றிக்*
*கொல்லலிர் குரங்கை நொய்திற் பற்றுதிர் கொணர்மி னென்றான்.*

புல்லிய முறுவல் தோன்ற - (இராவணன்), அற்பமான சிறு நகை உண்டாக, பொருமையும் சிறிது பொங்க - பொருமையும் சிறிது மேற் கிளம்ப, எல்லை இல் ஆற்றல் மாக்கள் எண் இறந்தாரை - அளவற்ற வலிமையுடைய ஏவலாளர் எண்ணிறந்தவர்களை, ஏவி - தூண்டி, 'வானையும் வழியை மாற்றி - ஆகாயத்திலும் வழியில்லாமல் தடை செய்து, குரங்கை - அவ்வானரத்தை, அகலா வண்ணம் - தப்பி அப்புறம் செல்லாதபடி, வல்லையில் - விரைவில், கொல்லலிர் - கொல்லாதவர்களாய்

நொய்தில் - எளிதில், பற்றுதிர் கொணர்மின் என்ருன் - பற்றிக் கொணர் வீராக' என்று உத்தரவிட்டான்.

புல்லிய முறுவல்-புன் சிரிப்பு; எள்ளல்: நகையும் ஆம். பொருமை-பொறுமை இன்மை; அதாவது பிறர் சிறப்புக்கண்டு மனம் சகிக்காமை. ஆற்றன்மாக்கள் - ஏவிய பணி புரியும் கிங்கரர்கள். கிங்கரர் (805); இவர் கள் (அருகில் நின்று) ஏவுதலைச் செய்பவர். இவர்களின் எண்ணிக்கை 8000 என்று பாஸ. அபிஷேக நாடகமும், 20,000 என்று, அத்யாத்ம ராமாயணமும், 80,000 என்று வான்மீகமும் கூறும். இங்கு 'எண்ணிறந் தார்' எனப்பட்டது. ஒரு சுவடியில் இதனுடன் நகரழி படலம் முற்றும்.

இதே சுவடியில் அடுத்த படலத்தின் முதற் செய்யுளாகப் பின்வரும் ஓர் அதிகப் பாடல் காண்கின்றது—:

என்றலு மிருகை கூப்பி யிருநுதல் படியிற் றேயச்
சென்றடி படிந்து மண்ணுந் தேவருந் திசையு முட்க
வென்றியன் றெனினும் வல்லே விரைந்துநாம் போகி வீரந்
துன்றிய குரங்கைத் தூக்கித் தருதுமென் றிசைத்துப் போனர்.

இப்பாடல் பிறிதொரு சுவடியில் மற்றுஞ் சில பாட பேதங்களுடன் காணப் படுகின்றது.

(பி-ம்.) 2. எல்லையி ரரக்க ரானே றெண்ணிறந்: எல்லையி லரக்கர் தம்மி லிசைந்தகிங் கரரை நோக்கி. 3. வானிடை யழிவு. 4. கொணர்தி றென்ருன்: கொணர்தி றென்முன்.

## கிங்கரர் போர்க்குப் புறப்படல் 653-68

753. சூலம்வாண் முசலங் கூர்வே றேமரந் தண்டு பிண்டி
பாலமே முதலா வுள்ள படைக்கலம் பரித்த கையர்
ஆலமே யனைய மெய்ய ரகலிட மழிவு செய்யும்
காலமே லெழுந்த மூரிக் கடலெனக் கடிது செல்வார்.

சூலம்........பாலம் - சூலம், வாள், உலக்கை, கூர்மையான வேல், தோமரம், தண்டாயுதம், பிண்டிபாலம், முதலா உள்ள படைக்கலம் பரித்த கையர் - இவை முதலாக உள்ளனவான பலவகை ஆயுதங்களைத் தாங்கிய கைகளையுடையவர்களும், ஆலமே அனைய மெய்யர் - விஷமே தொகுத்துள்ளது போன்ற கருநிற உடலை யுடையவர்களுமான (அக்கிங் கரர்கள்), அகல் இடம் - விசாலமான இந்த உலகத்தை, அழிவு செய்யும்

- நாசமாக்கும், காலம் மேல் எழுந்த - யுகாந்த ஊழிக் காலத்திலே மேற்கிளம்பிய. மூரி கடல் என-வலிய கடலைப் போல, கடிது செல்வார்-வேகமாய்ப் போவாராயினர்.

நிறத்தில் ஆலமே அனையவர்; விரைவிலும் தோற்றத்திலும் கடலை ஒத்தவர் என்க. பரித்தல் - தாங்குதல்; 'பரித்த செல்வ மொழியப் படரு நாள்' (555); 'பரித்த காவினர் பப்பர ரேகினர்' (பால. எழுச்சிப்: 38). அரக்கர் மேனிக்கு ஆலம்; ஆரண்ய, கரன்வதைப்: 11, இப்படைக்கலப் பெயர்கள் பின்னும் 758 இல் வருவன காண்க.

(பி-ம்.) 2. படைத்த கையர். 3. மெய்ய ரகிலமு மழிவு.
4. காலமே யெழுந்த: சென்றூர். (6)

754. *நானில மதனி னுண்டு போரென நவிலி னச்சொல்*
*தேனினுங் களிப்புச் செய்யுஞ் சிந்தையர் தெரித்து மென்னின்*
*கானினும் பெரிய ரோசை கடலினும் பெரியர் கீர்த்தி*
*வானினும் பெரியர் மேனி மலையினும் பெரியர் மாதோ.*

(அவ்வாறு செல்லும் அக்கிங்கரர்கள்). நானிலம் அதனில் போர் உண்டு என நவிலின் - உலகில் போர் ஏற்படுவது உண்டு என்று சொன்ன காலை, அ சொல் - அந்த வார்த்தை, தேனினும் களிப்பு செய்யும் சிந்தையர் - தேனைவிட உருசியை உண்டாக்கும்படியான மனமகிழ்ச்சியுடையவர்கள்; தெரித்தும் என்னின் - (அன்னோர் தன்மையை) அறிவிப்போம் என்றால், கானினும் பெரியர் - (நிறத்தில்) காட்டை விடப் பெரியவர்; ஓசை கடலினும் பெரியர் - (தாம் இடும்) கர்ச்சனையில் கடலைவிட மேம்பட்டவர்; கீர்த்தி வானினும் பெரியர் - கீர்த்தியில் ஆகாயத்தை விடப் (பரந்த) பெருமையுடையவர்; மேனி மலையினும் பெரியர்-உடலின் தோற்றத்தில் மலையை விடப் பெரியவர்கள். மாது, ஓ: அசைகள்.

மலையைத் தோற்றத்திற்கு உவமை கூறினமையின், கான் அன்னோர் நிறத்திற்குக் கூறப்பட்டது என்க; இதில் அவ்வரக்கர்களுடைய நிறம், ஒலி, கீர்த்தி, மேனி இவற்றிற்குப் பெரியனவாய் உள்ள, காடு, கடல், வான், மலை முதலியனவும் சிறியன என்றமையால், வேறு உவமைப் பொருள்கள் இல்லை என்பதைக் குறிப்பிட்ட படியுமாம். 'நானில மதனில் ...சிந்தையர்; 'போரென்ன வீங்கும் பொருப்பென்ன பொலன்கொடிண்டோள் (பால. பூக்கொய்; 18); ஒப்பு. 'செரு வேட்டுச் சிலைக்குஞ் செங்க ணுடவர்' (அகநா. 157). 4); 'போரெனிற் புகலும் புனைகழல்

மறவர்' (புறம்: 31. 9). நிலம், வான், கடல் மூன்றும் பெருமைக்கு எல்லையாகக் கூறப்படுதல்: குறள்: 102, 103, 272; குறுந். 3, 386.

(பி-ம்.) 1. நானிலத் தினிலு முண்டு: நவிலுங் காலை; நவிலு மச்சொற்.
2. தெரிது மென்னிற்: எண்ணிற்.
3. கானிலும் பெரிய ராசை: பெரிய கீர்த்தி; பெரியர் சீர்த்தி. (7)

755. திருகுறுஞ் சினத்துத் தேவர் தானவ ரென்னுந் தெவ்வர்
இருகுறும் பெறிந்து நின்ற விசையினுல் வசையென் றெண்ணிப்
பொருகுறும் பென்று வென்றி புணர்வது பூவுண் வாழ்க்கை
ஒருகுறுங் குரங்கென் றுள்ளி நெடிதுநா ணுழக்கு நெஞ்சர்.

(அக்கிங்கரர்கள்), திருகு உறும் சினத்து - முரண்கொண்ட கோபத்தையுடைய, தேவர் தானவர் என்னும் - தேவர்கள் அசுரர்கள் என்று சொல்லப் பெறும், தெவ்வர் இரு குறும்பு எறிந்து நின்ற - பகைவர்களாகிய இரண்டு குறுநில மன்னர் போன்று தாழ்ந்தவர்களைத் தாக்கி அழித்து விளங்கிய, இசையினுல் - தமக்குண்டான கீர்த்தியினுல், பொரு குறும்பு என்று வென்றி புணர்வது-தாம் போரிடுவதற்கு உரிய பகையென்று எதிர்த்து வெற்றி கொள்வது, வசை என்று எண்ணி - தமக்குப் பழிப்புக்கு இடமாகும் என நினைத்தும், பூ உண் வாழ்க்கை ஒரு குறும் குரங்கு என்று உள்ளி - அது பூ முதலிய சாகப் பொருள்களை உண்டு வாழும் அற்பமான குறுகிய உடலமைப்புடைய ஒரு குரங்கு என்பதை நினைத்தும், நெடிது நாண் உழக்கும் நெஞ்சர் - பெரிதும் வெட்கத்தால் வருந்தும் மனமுடையவர்கள்.

தானவர் - தனு என்னும் ஒரு மாதினிடம் உதித்த ஒருவகை அசுரர். குறும்பு - தொல்லையுண்டாக்கும் குறுநில மன்னர் போன்ற பகைவர்; 'குறும்பு போன்ற தரக்காம்பல்' (பால மிதிலைக் 73). இனி, தெவ்வர் குறும்பு என இயைத்து, பகைவரின் வலி என்றும் கொள்ளலாம். நாண் உழக்கும் நெஞ்சர்: தேவர் தானவர்களை வென்று, அடக்கிய வீரமுடைய தாம் மெல்லிய பூவை உண்ணும் வாழ்க்கையுடைய ஒரு குரங்கைப் பகையாகப் பெற்று அதனுடன் பொர நிகழ்ந்த தம் நிலைமையை நினைத்து வருந்தும் மனத்தினர். பூவுண் வாழ்க்கைக் குரங்கு; ஒப்பு, 'கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரம்' (934,).

(பி-ம்.) 1. திருகுறு சினத்துத்: சினத்திற் றேவர்.
2. இருகுறும் பெறிந்து நின்ற விறற்கிது வசையா மீதோர்: நின்ற விறற்கிது வசையென் றெண்ணப்.
3. பொருகுறும் பொன்று வென்றி புணர்வது: பொருகுறும் வென்றி யென்று புகல்வதோ: பூவின் வாழ்க்கை: புவன வாழ்க்கை.

4. நாணெழுக்கு நெஞ்சர்; நாளுழக்கு நெஞ்சர்; நெடிது தா ணெடுக்கு நெஞ்சன்; நேடி நா ணெழுக்கு நெஞ்சர். (8)

756. *கட்டிய வாள ரிட்ட கவசத்தர் கழலர் திக்கைத்*
*தட்டிய தோளர் மேகந் தடவிய கையர் வானை*
*எட்டிய முடியர் தாளா லிடறிய பொருப்ப ரீட்டிக்*
*கொட்டிய பேரி யென்ன மழையெனக் குமுறுஞ் சொல்லார்.*

(அக்கிங்கரர்கள்), கட்டிய வாளர்-இடையில் கட்டித் தொங்கவிட்டுள்ள வாளையுடையவர்கள்; இட்ட கவசத்தர் கழலர் - பூண்ட கவசத்தையும் வீரக் கழல்களையும் உடையவர்கள்; திக்கை தட்டிய தோளர் - திக்குகளைப் போய்த் தட்டித் தாக்கிய தோள்களையுடைவர்கள்; மேகம் தடவிய கையர் - மேகங்களைத் தடவும்படி நீண்ட கைகளையுடையவர்கள்; வானை எட்டிய முடியர் - வான மண்டலத்தை எட்டித் தொட்ட தலையை யுடையவர்கள்; தாளால் இடறிய பொருப்பர் - (நடந்து செல்லும்போது) தம் கால்களால் இடறியெறியும் மலைகளையுடையவர்கள்; ஈட்டி கொட்டிய பேரி என்ன மழை என - ஒன்று சேர்ந்து அடித்து முழக்கப்பட்ட முரசங்கள் போலவும், இடிக்கும் மேகங்களே போலவும், குமுறும் சொல்லார் - பெருமுழக்கமாகப் பேசும் சொற்களையுடையவர்கள்.

இச் செய்யுளின் வினைகள் வட மொழி நடையைப் பின்பற்றி முடிந்தன. இடறிய பொருப்பர் - நடக்கும்போது இடைப்பட்ட மலைகள் இவர்கள் கால்களால் இவர்கள் அறியாமலே இடறப்பட்டுப் புறம்போய் விழுவன என்க.

(பி-ம்.) 2. தட்டிய தொழிலர்: தழுவிய வுடலர் வானை; தடவிய வுடலர் வானை.
3. முடியர் காலி லிடறிய; தாளி னிடறிய; தாள ரிடறிய பொருப்பர்: பொருப்பர் நீட்டிக். (9)

757. *வானவ ரெறிந்த தெய்வப் படையிடும் வடுக்கண் மற்றைத்*
*தானவர் துரந்த வேதித் தழும்பொடு தயங்கு தோளர்*
*யானையும் பிடியும் வாரி யிடும்பில வாய ரீன்ற*
*கூனல்வெண் பிறையிற் றோன்று மெயிற்றினர் கொதிக்குங் கண்ணர்.*

(மேலும் அக்கிங்கரர்கள்), வானவர் எறிந்த தெய்வ படை இடும் வடுக்கள் - தேவர்கள் தம் மீது வீசி எறிந்த தெய்வத்தன்மை பொருந்திய ஆயுதங்களால் உண்டான வடுக்கள், மற்றை - அத்

தேவரின் வேறுன, தானவர் துரந்த வேதி தழும்பொடு - அசுரர்கள் போரில் தூண்டிய ஆயுதங்களால் உண்டான தழும்புகளோடு (சேர்ந்து), தயங்கு தோளர் - விளங்கும் தோள்களையுடையவர்கள்; யானையும் பிடியும் வாரி இடும் பில வாயர் - ஆண் யானைகளையும் பெண் யானைகளையும் ஒரு சேர வாரியெடுத்துப் போகட்டுக் கொள்ளும் பிலம் போன்ற பெரிய வாயையுடையவர்கள்; ஈன்ற - (அவ்வாய்கள்) ஈன்றவையான, கூனல் வெண் பிறையில் தோன்றும் எயிற்றினர்-வளைந்த வெண்பிறைகள் போல விளங்கும் பற்களையுடையவர்கள்; கொதிக்கும் கண்ணார் - கோபத்தால் கொதிக்கின்ற கண்களையுடையவர்கள்.

யானையை அடுத்துப் பிடி என்றமையால் அந்தயானை ஆண்யானையெனக் கொள்ளப்பட்டது. அரக்கர் பிலவாயர்; பால. தாடகை வதைப்: 49. ஆரண்ய. கரன்வதைப்: 101. இவர்கள் வானவரையும், தானவரையும் வென்றவர்; 765. தோளர். வாயர், எயிற்றினர் என்க.

(பி-ம்.) 1. தெய்வ வடுபடை வடுக்கள்: வயப்படை: படைபடு வடுக்கள்.
2. தானவ ரெறிந்த வேதித் தழும்புகள் தயங்குந் தோளார்.
3. இடுங்கய வாய ரீன்ற; யிடுமயில் வாய ரீன்ற.
4. கூனவெண்; கூன வெம். (10)

758. *சக்கர முலக்கை தண்டு தாரைவாள் பரிகஞ் சங்கு*
*முற்கர முசுண்டி பிண்டி பாலம்வேல் சூல முட்கோல்*
*பொற்கரக் குலிசம் பாசம் புகர்மழு வெழுகோல் குந்தம்*
*விற்கருங் கணைவிட் டேறு கழுக்கடை யெழுக்கண் மின்ன.*

(அக்கிங்கரர்கள்), சக்கரம் - சக்கராயுதங்கள், உலக்கை - உலக்கைகள், தண்டு - தண்டாயுதம் என்னும் கதைகள், தாரை வாள் - ஒழுங்குபட்ட வாயை உடைய வாளாயுதங்கள், பரிகம்-இரும்புத்தடிகள், சங்கு - சங்கவாத்தியங்கள், முற்கரம் - சம்மட்டிகள், முசுண்டி - முசுண்டி என்னும் ஆயுதங்கள், பிண்டிபாலம் - எறி ஈட்டிகள், வேல் - வேலாயுதங்கள், சூலம் - திரி சூலங்கள், முட்கோல் - முட்கோல் என்னும் பல கூரிய முட்களையுடைய ஒருவகை ஆயுதங்கள். பொன் கர குலிசம் - பொன்னாலான பிடியோடு கூடிய வச்சிராயுதங்கள்; பாசம் - பகைவரைக் கட்டிப் பிணிக்கும் கயிறுகள், புகர் மழு - ஒளியுள்ள கோடாலிகள், எழு இரும்புத்தண்டுகள், கோல் - அம்புகள், குந்தம் - எறியீட்டிகள், வில் வில்லுகள், கரும் கணை-பெரிய அம்புகள், விட்டேறு - வீசி எறியப்படும் விட்டேறு என்னும் ஆயுதங்கள், கழுக்கடை எழுக்கள்-கூரிய நுனியையுடைய இரும்புத்தடிகள், மின்ன - இவை ஒளிவீச,

இச்செய்யுள் அடுத்த செய்யுளிலுள்ள 'முடுகுகின்றார்' என்பதுடன் முடியும்.

தாரை - ஊதும் ஒருவகை வாத்தியமும் ஆம். பரிகம் - கேடகம், எழு - கம்பம்; கருங்கணை - பலவித பற்கள் அமைந்த அம்புகளுமாம்; கருக்கரிவாள் என்பதும், பனைமட்டையின் முட்களுக்குப் பனைக்கருக்கு என்று சொல்வதும் இங்கு நோக்கத்தக்கது.

(பி-ம்.) 1. சக்கர முசலந் தண்டு: பரிசை சங்கம்; பேரி சங்கு.
2. முசுண்டி பாலம் வேலெழுச் சூல முட்கோல்; முசுண்டி பாலம் வேல்மழுச் சூலம்.
3. எழுக்கோல்: எழுப்பொற்; எழுபொற்.
4. கவண்விட் டேறு: கழுப்படை: மிக்குறுங் கணைவில் லாதி மேம்படும் படைகளுள்ளார். (11)

759. பொன்னின்று கஞலுந் தெய்வப் பூணினர் பொருப்புத் தோளர்
மின்னின்ற படையுங் கண்ணும் வெயில்விரிக் கின்ற மெய்யர்
என்னென்றார்க் கென்னென் னென்றா ரெய்திய தறிந்தி லாதார்
முன்னின்றார் முதுகு தீயப் பின்னின்றார் முடுகு கின்றார்.

(அக்கிங்கரர்கள்). பொன் நின்று கஞலும் தெய்வ பூணினர்-பொன் அமைந்து விளங்கும் தெய்வத் தன்மையுடைய அணிகளையுடையவர்; பொருப்பு தோளர் - மலைபோன்ற தோள்களையுடையவர்; மின் நின்ற படையும் கண்ணும் வெயில் விரிக்கின்ற மெய்யர் - பிரகாசம் பொருந்திய ஆயுதங்களையும் கண்களையும் வெயில் போல ஒளியைப் பரப்பப் பெற்ற உடல்களையும் உடையவர்; (அவர்கள்) என் என்றார்க்கு - 'ஏன் போவது தடைப்படுகிறது என்று தம்முன் நின்றவர்களைக் கேட்டவர்க்கு, எய்தியது அறிந்திலாதார் - அவர்கள் போகமுடியாமல் நெருக்கத்தால் தடையுற்றதை அறியாதவர்களாகி, பின் நின்றார் - அவர்களுக்குப் பின்னே நின்றவர், முன் நின்றார் முதுகு தீய - தம் முன்னே நின்றவர்களுடைய முதுகுகள் அவர்களது மூச்சுக் காற்றால் தீப்பட்டன போலச் சூடு கொள்ள, என் என் என்றார் - என்ன என்ன என்று விரைந்து வினவுபவராய், முடுகுகின்றார் - விரைந்து மேற் செல்வா ராயினர்.

என் என் என்றார்: அடுக்கு விரைவுப் பொருளது. தெய்வப் பூணினர் - முன் தோற்றுப்போன தேவர்களிடமிருந்து கவர்ந்து கொண்ட ஆபரணங்களைத் தரித்தவர் எனக் கொள்ளலும் ஒன்றும். கண் வெயில் விரித்தல் - கோபத்தால் கண்கள் வெயில் போல ஒளி வீசுதல்: கோபம், அநுமன் மேற் கொண்டது. அவ்வரக்கர்கள் இவ்வாறு அநுமன் மீது போருக்குச் செல்கையில் முன்னே போகமுடியாமல் நெருக்கமுற,

அவர்கள் அதன் காரணமென்ன வென்று வினவ, அது அறியாதவர் களாய் அவர்களுக்குப் பின்னின்றோர்கள் 'தடைப்பட்டது, ஏன்' என் என்று கேட்பவர்களாய் அவர்களுக்குப் பின்னும் மேன் மேலும் நெருக்கு பவர்களாய் விரைந்து மேற்செல்வாராயினர்; இதனால் அப் படை செல்லுகையில் முன்னும் பின்னும் அவர்களாலே நெருக்கம் ஏற் பட்டது என்பதாம்.

(பி-ம்.) 1. பொன்னிறம்; பொன்னின்ற கழலர். பொருவிற் றோளார்.
2. மின்னிறப்: மின்னினர்ப் படையுங்; மின்னின்று; மின்னின்ருர் படையும்.
3. என்னென் கின்ருர்; கென்னென் கின்ருர்: எய்திய தறிகிலாதார்.
4. முதுகுந் தீயப்; முதுகு தோயப்; மூசு கின்ருர். (12)

760. *வெய்துறு படையின் மின்னர் வில்லினர் வீசு காலர்*
*மையுறு விசும்பிற் றோன்று மேனியர் மடிக்கும் வாயர்*
*கைபரந் துலகு பொங்கிக் கடையுக முடியுங் காலைப்*
*பெய்யவென் றெழுந்த மாரிக் குவமைசால் பெருமை பெற்றார்.*

(அக்கிங்கரர்கள்) வெய்துறு படையின் மின்னர் - கொடுமை பொருந்திய ஆயுதங்களின் ஒளியையுடையவர்களாய், வில்லினர் - விற்களை யுடையவர்களாய், வீசு காலர் - வேகமாய் நடந்து செல்வதால் காற்றை எழுப்பி வீசுகின்றவர்களாய், மை உறு விசும்பில் தோன்றும் மேனியர் - மேகங்கள் பொருந்திய ஆகாயம்போன்ற கரிய மேனியையுடையவர் களாய், மடிக்கும் வாயர் - கோபத்தால் மடிக்கும் வாயினராய், கை பரந்து - பக்கங்களில் பரவி, உலகு பொங்கி - உலகின் மீது (கடல்கள்) பொங்கி, கடையுகம் முடியும் காலை - யுகங்கள் முடியும் காலத்தில், பெய்ய என்று எழுந்த - பெருமழை பெய்வதற்கு மேற்கிளம்பிய, மாரிக்கு - பிரளய வருஷமாகிய மழைக்கு, உவமை சால் பெருமை பெற்றார் - உவமைக்கு ஏற்ற பெருமையைப் பெற்றவர்களாய் விளங் கினர்.

'துறுபடை - வெற்றிமாலை புனையும் படை' என்பது பழையவுரை. யுகாந்தகாலத்தில், மின்னலும் வானவில்லும், பெருங்காற்றும், கூடிய மேகக் கூட்டம் உண்டாகிப் பெருமழை பெய்யக் கடல்கள் பொங்கி உலகை மேற்கொள்ளும்; அத்தகைய யுகாந்தமேகம் போல அவ்வரக் கர்கள் விளங்கினர் என்பதாம். இவ்வரக்கர்களுடைய படைகளின் ஒளி மின்னல்களாகவும், அவர்கள் விற்கள் இந்திரவில்லாகவும், அவர்கள் மேனி கருமேகமாகவும், அன்னோர் யுகாந்தகாலப் பெருமழைக்கு உவமை யாயினர் என்க.

(பி-ம்.) 1. படையின் மன்னர்: படையின் பின்னர்.
2. மையறு: தோன்றும் வாளினர்: இடிக்கும் வாயர்,
3. கைபரிந் துலகு: உலகம் பொங்கி: முடியுங் காலம். (13)

761. *பனியுறு செயலைச் சிந்தி யோமமும் பறித்த தம்மா*
*தனியொரு குரங்கு போலா நன்றுநந் தருக்கென் கின்றார்*
*இனியொரு பழிமற் றுண்டோ விதனினென் றிரைத்துப் பொங்கி*
*முனிவுறு மனத்திற் றாவி முந்துற முடுகு கின்றார்.*

(அவர்கள்), 'பனி உறு செயலை சிந்தி-குளிர்ச்சி பொருந்திய அசோக வன மென்னும் பூஞ்சோலையைச் சிதற அழித்து, ஓமமும் பறித்தது தனி ஒரு குரங்குபோல் ஆம் - அங்கிருந்த வேள்வி மண்டபத்தையும் பறித்து எறிந்தது பிறிதொரு துணையின்றித் தனியாய் வந்துள்ள ஒரு குரங்கு என்றால், நன்று நம் தருக்கு என்கின்றார் - நம் வலிமை மிக நன்றாய் இருக்கிறது!' என்று சொல்லுகின்றவர்களாய், 'இதனின். இனி ஒரு பழிமற்று உண்டோ - இதைவிட இனி நம் அரக்கர் குலத்திற்கு ஒரு நிந்தனைவேறு உண்டோ! (இல்லை என்றபடி)' என்று இரைத்து - என்று ஆரவாரம் செய்து, பொங்கி முனிவு உறு மனத்தில் - பொங்கி எழும் கோபங்கொண்ட மனத்தோடு, முந்து உற தாவி - ஒருவரை யொருவர் முற்படத் தாவி, முடுகுகின்றார் - விரைந்து செல்வாராயினர். அம்மா: வியப்பைக் குறிக்கும் இடைச்சொல்.

செயலை - அசோகம்; 'செயலைத் தண்டளிர் துயல்வரு காதினன்' (முருகு. 207.) ஓமமும்: உம்மை, உயர்வு சிறப்பின் பாற்படும்; அதன் பெருமை தோன்ற நின்றது. குரங்கு போலாம் என்பது இழிவுப் பொரு ளில் ஒப்பில் போலியாக வந்தது. தருக்கு - வலிமை; 'எதிர்செயுந் தருக் கிலாமையின் நீங்கினர்' (பால. தாடகை வதைப்; 40.)

(பி-ம்.) 1. பனியுறு சோலை: சிந்திக் குன்றமும்: பாதவம் பறித்துத் தம்மிற்.
2. நன்று நம் நகர்க்கென் கின்றார்: நன்றெம ராற்ற லென்றார்: தருக்கே யென்றார்
3. இனியுறு பழி: இதிலென வெழுந்து பொங்கி; எரிந்து பொங்கி; எறிந்து பொங்கி: சீறிந்து பொங்கி; விரைத்துப் பொங்கி.
4. மனத்தின் மெய்யர்: மனத்திற் றாமே; மனத்திற் றூப மெழுந் துற. (14)

762. *எற்றுறு முரசும் விண்ணு ணேறவிட் டெடுத்த வார்ப்பும்*
*சுற்றுறு கழலுஞ் சங்குந் தெழிதெழித் துரப்புஞ் சொல்லும்*
*உற்றுடன் றொன்று யோங்கி யொலித்தெழுந் தூழிப் பேர்வில்*
*நற்றிரைக் கடல்க ளோடு மழைகளை நாவ டக்க.*

எற்று உறு முரசும் - தாக்கி அடிக்கப்படும் பேரிகளின் ஓசையும் வில் நாண் ஏறவிட்டு எடுத்த ஆர்ப்பும் - வில்லில் நாணை ஏற்றி உண்டாக்கிய நாணொலியோடு முழக்கிய ஆரவாரமும், சுற்றுறு சுழலும் - காலிற் சுற்றிக் கட்டிய வீரக்கழல்களின் ஒலியும், சங்கும் - சங்குகளை முழக்கும் ஒலியும், தெழி தெழித்து உரப்பும் சொல்லும் - (அவ்வரக்க வீரர்கள்) அதட்டி அதட்டிப் பேசும் கடுஞ் சொற்களின் ஒலியும், உடன் உற்று ஒன்ருய் ஓங்கி - ஒன்று சேர்ந்து ஒரு மிக்க மேலோங்கி, ஒலித்து எழுந்து - முழக்க மிட்டு எழுந்து, ஊழி பேர்வில் - யுகங்கள் முடிந்து மாறுங் காலத்தில், நல் திரை கடல்களோடு - பெரிய அலைகளோடு எழும் கடல்களின் கொந்தளிப்போடு, மழைகளை - அக்காலத்தில் உண்டாகும் பிரளய கால மழைகளின், நா அடக்க - ஒலியை அடக்கும் படி (மிகுந்து விளங்க),

முரசு, கழல், சங்கு, நா, என்பவை இங்குத் தானி ஆகு பெயர்களாய் அவற்றினின்று எழுந்த ஒலிகளைக் குறிப்பன. இச்செய்யுள் முதல் 765 வரை ஒரு தொடர்.

(பி-ம்.) 1. வின்னு ணேறுவிட்; ஏறுமிட் டெடுத்த: வின்னு ணெடுத்திடு மார்ப்பு மோசை.
2. தெழித் தெழித் துரைக்கும்: தெழித் தழித்; தெழித் தெழத்: சுழலும் வீரர் சொல்லெனு மிடிப்பி னுர்ப்பும்.
3. உற்றெழுந் தொன்ருய்ப் பொங்கி: ஒன்ற வோங்கி: ஊழிப் பேர்ச்சி.
4. மலைகளை நாவடக்க; பெற்றுறு கடல்கள் மோதும் பேரொலி யடக்கிற் றம்மா. (15)

763. *தெருவிட மில்லென் றெண்ணி வானிடைச் செல்கின் ருரும்*
*ஒருவரி னொருவர் முந்தி முறைமறுத் துரைக்கின் ருரும்*
*புருவமுஞ் சிலையுங் கோட்டிப் புகையுயிர்த் துயிர்க்கின் ருரும்*
*விரிவில திலங்கை யென்று வழிபெரு விழிக்கின் ருரும்*

தெரு இடம் இல் என்று எண்ணி - தெருவில் தாம் நடந்து செல்வதற்குப் போதுமான இடம் இல்லை யென்று கருதி, வான் இடை செல்கின்ருரும் - ஆகாய வழியாய்ச் செல்கிறவர்களும், முறை மறுத்து -படை வீரர்கள் அனுசரிக்க வேண்டிய கட்டுப்பாட்டைக் கடந்து, ஒருவரின் ஒருவர் முந்தி-ஒருவரை யொருவர் முன்னிட்டு, உரைக்கின்ருரும் - பேசுகின்றவர்களும், புருவமும் சிலையும் கோட்டி - தம் புருவங்களையும் விற்களையும் வளைத்து, புகை உயிர்த்து உயிர்க்கின்ருரும் - புகையைப் போலப் பெரு மூச்சு விடுகின்றவர்களும், விரிவு இலது இலங்கை என்று - இந்த இலங்கை நகர் தாம் நடந்து செல்வதற்கு ஏற்ற அகலப் பரப்பை

அடையவில்லை என்ற காரணத்தால், வழிபெறு-தாம் செல்லும் வழியைப் பெறுதவர்களாய், விழிக்கின்ருரும் - இன்ன செய்வதென்று அறியாமல் மருண்டு விழித்துக் கொண்டிருக்கிறவர்களும்,

புருவம் கோட்டுதல், சினத்திற்ருேன்றும் மெய்ப்பாடு; சிலப். அரங் கேற்று. காதை. வெகுண்டோ னவிநயம். புகை புயிர்த்தலும் சினத்திஞல் நிகழ்வதேயாகும். சில சுவடிகளில் இச் செய்யுள் 2, 3 அடிகள் முன் பின்ஞக மாறி அமைந்துள்ளன.

(பி-ம்.) 1. இல்லை யென்று: வானிடஞ் செல்கின்.
2. முந்த முறை: முறைமறுத் துருக்கின்ருரும்: உரை மறுத் துரைக்கின்ருரும்.
3. புகையென வுயிர்க்கின்ருரும்; புகைவர வுயிர்க்கின் ருரும்.
4. வழி பெற விளிக்கின்ருரும்: விரிவில வீதியென்று விளம்பியே விடுகின் ருரும். (16)

764. வாளினை விதிர்க்கின் ருரும் வாயினை மடிக்கின் ருரும்
தோளுறக் கொட்டிக் கல்லைத் துகள்படத் துகைக்கின் ருரும்
தாள்பெயர்த் திடம்பெ ருது தருக்கினர் நெருக்கு வாரும்
கோள்வளை யெயிறு தின்று தீயெனக் கொதிக்கின் ருரும்.

வாளினை விதிர்க்கின்ருரும் - (தம் கையில் ஏந்திய) வாள்களை அசைத்து ஆட்டுகின்றவர்களும், வாயினை மடிக்கின்ருரும் - (கோபத்தால்) தம் வாயிதழை மடிக்கின்றவர்களும், தோள் உற கொட்டி -தோள்களைக் கைகளால் புடைத்து, கல்லை துகள் பட துகைக்கின்ருரும் - (வழியிற்பட்ட) பாராங் கற்களைத் தூளாகப் போகும்படி (தம் கால்களால் மிதித்து) நொருக்குகிறவர்களும், தாள் பெயர்த்து இடம் பெருது - தம் கால்களை (நடக்க) பெயர்த்து மேலே அடிவைப்பதற்கு இடம் அடையாதவர்களாய், தருக்கினர் நெருக்குவாரும்-செருக்குக் கொண்டு ஒருவரை யொருவர் நெருக்குகின்றவர்களும், கோள் வளை எயிறு தின்று - வலிய வளைவான தம் பற்களைக் கடித்து, தீ என கொதிக்கின்ருரும் - நெருப்பைப் போலக் கொதித் தெழுகின்றவர்களும் (ஆயினர்).

விதிர்த்தல் - சுழற்றுதல் என்னலும் ஆம். வாயினை மடித்தல் - சினத்தின் குறி; சிலப். அரங்கேற்று: வெகுண்டோன் அவிநயம். தோள் கொட்டுதல் சினத்தின் செயல்; 756. எயிறு தின்றல்; பால. தாடகை வதைப். 51.

(பி-ம்.) 1. வாளுறை; வானிற; வாளுற.
2. தோளுறத் தட்டிக்: துகள்பட மிதிக்கின் ருரும்: தோளிடைக் கொட்டு வாரும் துகளெழ நடக்கின்ருரும்.

3. தாள்பெயர்த் தெடுக்கொ ணுத நெருக்கிடை தருக்கு வாரும்.
4. தீதெனக்; தீயெழக்; தீயுறக் கொதிக்கின் ருரும். (17)

## வேறு

765. *அனைவரு மலையென நின்ரு ரளவறு படைகள் பயின்ருர்*
*அனைவரு மரியி னுயர்ந்தா ரகலிட நெளிய நடந்தார்*
*அனைவரும் வரனி னமைந்தா ரசனிமி னணிக ளணிந்தார்*
*அனைவரு மமரரை வென்ரு ரசுரரை யுயிரை யயின்ருர்.*

அனைவரும் மலை என நின்ருர்-அவ்வரக்கர்கள் அனைவரும் மலைகளைப் போல நின்றனர்; அளவு அறு படைகள் பயின்ருர் - அவரெல்லோரும் பல படைக்கலப் பயிற்சியைப் பெற்றிருந்தனர்; அனைவரும் அரியின் உயர்ந்தார் - அவரெல்லாரும் சிங்கங்கள் போலச் சிறந்து விளங்கினர்; அகல் இடம் நெளிய நடந்தார்-அன்னோர் அகன்ற இப்பூமி (தாம் வலிந்து அடிவைத்துச் செல்வதைத் தாங்காது) நெளியும்படி நடந்தனர்; அனை வரும் வரனில் அமைந்தார் - அவரெல்லோரும் பல வரன்களைப் பெற்ற மைந்தவராளுர். அசனி மின் அணிகள் அணிந்தார் - அன்னோர் இடியில் உண்டாகும் மின்னல்களைப் (போல ஒளி வீசும்) பல அணிகளைத் பூண்டி ருந்தனர்; அனைவரும் அமரரை வென்ருர் - அவரனைவரும் தேவர்களைப் போரில் வென்றவர்கள்; அசுரரை உயிரை அயின்ருர் - அசுரர்களுடைய உயிர்களை உண்டவர்கள். (ஆவர் என்பதாம்)

மலை என நின்ருர்; 'அளக்கலாகா வளவும் பொருளுந் துளக்கலாகா நிலையுந் தோற்றமும் உடைமையால் மலை உவமையாயிற்று. (நன்னூல். சூ. 28.) மேனி மலையினும் பெரியர் என்றமை நோக்குக. (754) இவர்கள் அமரரையும் அசுரரையும் வென்றது; 755, 757. அசுரரை யுயிரை யயின் ருர்; 'ஆவைப் பாலைக் கறந்தான், என்பதுபோல,

(பி-ம்.) 1. அனைவரு மலையி னுயர்ந்தார்.
2. அமரி லுயர்ந்தார்; அடலி னமைந்தார்.
3. வானி னிமிர்ந்தா ரசனியி னிடிக ளணைந்தார்: அனைவரு மம ரிடை வந்தா ரழகுறு மணிக ளணிந்தார்: அணிக ளமைந்தார்.
4: அசுரரை வேரொடு தின்ருர்; உயிரொடு தின்ருர். (18)

766. *குறுகின கவசரு மின்போற் குரைகழ லுரகரும் வன்போர்*
*முறுகின பொழுதி னுடைந்தார் முதுகிட முறுவல் பயின்ருர்*
*இறுகின நிதிகிழ வன்பே ரிசைகெட வளகை யெறிந்தார்*
*தெறுகுன ரின்மையின் வன்ரே டினவுற வுலகு திரிந்தார்.*

(அக்கிங்கரர்கள்) குறுகின கவசரும் - உடலோடு நெருங்கிப் பொருந்திய கவசமுடைய நிவாதகவசர் என்னும் அசுரர்களும், மின் போல் குரைகழல் உரகரும் - மின்னலைப் போல ஒளி வீசுவனவும், ஒலிப் பனவுமான வீரக்கழல்களணிந்த நாகர்களும், வன் போர் முறுகின பொழுதின் - கொடிய போர் முற்றிய காலத்து, உடைந்தார் - தோற்று வலியற்றவர்களாகி, முதுகு இட-முதுகு காட்டி ஓட, முறுவல் பயின்றார் - அவர்களைப் பார்த்து இழிவுதோன்ற முன் நகைத்தவர்கள்; இறுகின நிதி கிழவன் - தளராது உறுதியுற்று நிறைந்திருந்த நிதிக்கு உரியவனான குபேரனுடைய, பேர் இசை கெட - பெரும்புகழ் அழிய, அளகை எறிந் தார் - அவனது அளகாபுரி என்னும் தலை நகரத்தையும் (முன்) எதிர்த்துத் தாக்கியழித்தவர்கள்: தெறுகுனர் இன்மையின்-மேலும் தம் எதிர் நின்று போர் செய்பவர் வேறு பிறர் இல்லாமையினால், வன் தோள் தினவு உற - தமது வலிய தோள்கள் தினவு அடைய, உலகு திரிந்தார் - உலகம் எங்கும் திக்கு விசயம் செய்து திரிந்தவர்கள்.

நிவாத கவசர்: எக்காலத்தும் தம் உடலை விட்டு நீங்காது இறுகி யமைந்த கவசத்தையுடைய அசுரர்கள்: இவர்கள் முப்பது கோடியர்; ஆற்றலின் மிக்கவர்; இராவணன் திக்கு விசயத்தில் இவர்களை எதிர்த் தான். அக் காலை இக் கிங்கரர்கள் இராவணனுடனிருந்து அந்நிவாத கவசருடனும் மற்றை உரகர், குபேரன் முதலியவர்களுடனும் போர் புரிந்து திக்குவிசயம் செய்தவர்கள். இந்த நிவாத கவசரும் இராவ ணனும் ஏற்ற தாழ்வுகளற்ற வலியுடையவர்கள் என்பதை அறிந்த பிரம தேவர், அவர்களைச் சமாதானப் படுத்தி நட்புறச் செய்தனர் என்று முதனூல் கூறும். இவ்வாறு போர் நின்றதை. இக்கிங்கரர் தம் வெற்றி யாகக் கருதினர் போலும்! இந்த நிவாத கவசரைப் பின் பாண்டவருள் ஒருவனான அருச்சுனன். போரில் வென்று அழித்தனன் என்பது மகா பாரதம், வனபருவம். நிவாதகவச வதம் என்னும் பகுதியால் அறிய லாம். தெறுகுநர் என்றிருக்கப் பாலது, எதுகை நோக்கி, தெறுகுனர் எனத் திரிந்து வந்தது. முதுகிடை முறுவல் பயில்தல்: ஒப்பு 'ஒன்னாத் தெவ் வருலைவிடத் தார்த்து' (பெரும்பாண். 419:;). மலைபடு: 386; குறுந். 393: 4-6; அகநா; 36: 2-3; 209; 4-6; 246: 13-4; புறநா. 77: 9-12, போரின்மையால் தோள் தினவுறுதல்; பால. அரசியற்: 12; பரசு ராமப்: 18. ஆரண்ய; கரன்வதைப்: 63.

(பி-ம்.) 1. குறுகினர் தலைவரும்; குறுகின தவமுய லம்பொற்: மின்பொற் குரைகழல்.

2. முறுகிட முறுவல்; முறுகிய பொழுதி லுடைந்தே.

3. வளைகை யெறிந்தார்.

4. தெறுகுநர் குமையின வன்றோள்: தெறுகுரல் மறுகினர் வன் றோள் தெறுகில ரின்மையின் வன்றோள். (19)

767. *வரைகளை யிடறுமி னென்றுன் மறிகடல் பருகுமி னென்றூல்*
*இரவியை விழவிடு மென்றூ லெழுமழை பிழியுமி னென்றூல்*
*அரவின தரசினை யொன்றூ தரையினெ டரையுமி னென்றூல்*
*தரையினை யெடுமெடு மென்றூ லொருவரஃ* தமைதல் சமைந்தார்.

வரைகளை இடறு மின் என்றூல் - (இராவணன்) 'மலைகளைக் காலால் இடறித் தள்ளுங்கள்' என்று சொன்னாலும், மறிகடல் பருகு மின் என்றூல் - 'அலைகள் மடங்கி விழும் கடல் நீரை வாரிக் குடியுங்கள்' என்றூலும், இரவியை விழ விடுமின் என்றூல் 'சூரியனை வானினின்றும் கிழே விழத் தள்ளி விடுங்கள்' என்றூலும், எழு மழை பிழியுமின் என்றூல்- 'வானத்தில் எழுந்து செல்கின்ற மேகங்களைப் பிடித்துப் பிழிந்து நீர் வற்றச் செய்யுங்கள்' என்றூலும், அரவினது அரசினை ஒன்றூ - 'பாம்பு களுக்கு அரசனை ஆதி சேடன் ஒருவனை மட்டுமோ (மற்ற அரவு களையும் சேர்த்து), தரையினேடு அரையுமின் என்றூல் - தரையோடு சேர்த்து உருத் தெரியாமல் அரைத்து விடுங்கள்' என்றூலும், தரையினை எடும் எடும் என்றூல் - 'பூமியைத் தூக்கி எடுங்கள்' என்றூலும், ஒருவர் அஃது அமைதல் சமைந்தார் - அவ்வரக்க வீரர்களில் ஒருவரே அச் செயல்களைத் தனியே செய்து முடிக்கும் தகுதியமைந்தவர் ஆவர்,

'அரவின தரசினை யொன்றூல்' எனப் பாடம் கிடைப்பின் பொருள் சிறக்கும். எடும் எடும் என்ற அடுக்கு விரைவுப் பொருளது; இப் பொருள் 'மலையகழ் குவனே கடறூர்க் குவனே. வான்வீழ்க் குவனே வளி மாற்றுவ னெனத்தான் முன்னிய துறைபோகலின்' என்ற பட்டினப் பாலைப் பகுதியையும் (271-3), 'ஆலங்கடறூர்த்தன் மலையகழ்த லிவை வல்லார்' என்ற சிந்தாமணிப் பகுதியையும் (2165) 'கடல் கலக்கல் கொல், மலையிடித்தல் கொல், கடுவிடப் பொறிப் பணமணிப் 'பிட ரொடித்தல் கொல், படை நினைப்பெனப் பிரளயத்தில் திரளவே' என்ற கலிங்கத்துப் பரணித் (343) தாழிசையையும் ஒத்திருப்பது காண்க. இவை செயற்கரிய செயல்கள்.

(பி-ம்.) 1. வரையினை: பருகிடு மென்றூல்
2. இரவியை வழி விடு; இரவியை விளிவிடும்; எழுமழை பெரியுமி னென்றூல்; பிரியுமி தென்றூல்; எறிபடை யெறியுமி னென்றூல்.
3. அரசனை யொன்று யழல்பட: அரசனை யஞ்சா தரையிடை யசையுமி னென்றூல்.
4. ஒருவர்த மமைதல்: தலைவரு மொருமை சமைந்தார் ஒருவர: தியற்றல் சமைந்தார். (20)

768. *தூளியி னிமிர்பட லம்போ யிமையவர் விழிதுற வெம்போர்*
*ஆளியி னினமென வன்றூ ளடுபுலி நிரையென விண்டோய்*
*மீளியி னணியென வன்றூ லலைகடல் விடமென வெஞ்சார்*
*வாளியின் விசைகொடு திண்கார் வரைவரு* வனவென வந்தார்.

தூளியின் நிமிர் படலம் போய் - (அந்த வீரர்கள் செல்வதால்) எழுந்த தூசிகளால் ஆகிய படலம் மேலே சென்று, இமையவர் விழி துற- தேவர்கள் விழிகளை மூடி நெருங்கி அடைத்து விட, வெம் போர் ஆளியின் இனம் என - கொடிய போர் புரியும் ஆற்றலுடைய சிங்கங் களின் கூட்டம் போலவும், வல் தாள் அடு புலி நிரை என - வலிய தாள்களை உடையனவும், எதிர்ப் பட்டோரை அழித்துக் கொல்லும் வலி யுடையனவுனமான புலிகளின் வரிசைகள் போலவும், விண் தோய் மீளியின் அணி என - ஆகாயத்தைத் தொடும் (உயரமுள்ள) பேய்களின் வரிசைகள் போலவும், ஓல் அலை கடல் அன்று விடம் என - முழங் கும் அலைகளையுடைய பாற் கடலில் முன் உண்டான விஷம் போலவும், எஞ்சார் - பின்னிடாதவர்களாய் (அதாவது முன்னேறிச் செல்பவர் களாய்), வாளியின் விசைகொடு - அம்பின் வேகத்தை மேற் கொண்டு, திண் கார் வரை வருவன என - வலிய கரிய மலைகளே நடந்து வருகின்றன என்னும்படி, வந்தார் - (அநுமனை நோக்கி) வந்தனர்.

படலம் - துணிபோன்று படர்ந்த பொருள்; இருட் படலம், மேகப் படலம் என்பன நோக்குக. துறுதல் - நிறைந்து அடைதல்; 'சோர் பொழு தணி நகர் துறுகுவர்' (பால. திருவவதாரப். 132); 'துறுநீர்க் கடம்பு' (சிறுபாண். 69. ந. உரை). வன்றாளடு புலி என்றது, புலி தன் வலிய தாளால் அடித்துப் பிற பிராணியைக் கொல்லும் இயல்பினது ஆதலின். மீளி - பேய்; 'சீய. மாவு மீளியும், செறிந்த மைந்த முந்த சில்லி புல்லு மாழி கூடுதேர்' (உயுத்த. மூலபல: 80.) ஓல் - முழக்கம்; 'முந்நீர் ஓல்கிளர்ந்து வாவுற் றென்ன', (பால. கார்முகப்: 37); இது ஓலம் எனவும் வரும். 'வரைவருவது'; ஒப்பு. மைவரை நெருப்பெரிய வந்த தென வந்தாள்'; (பால: தாடகை வதைப்: 47.)

(பி-ம்.) 1. போய்ச் சுரர்விழி பொதுளுற வெம்போர்.
2. மீளியர் வெருளியொ டஞ்சா விரைபுலி நிரையென வெம்பும் : விரைபுலி விரைவ தெனப்போய்.
3. கூளியி னடமி.·. தென்றூற் குரைகடல் விடமென வெஞ்சார்: ஆளியி னினமென மேலா மலைகடல் விடமென: வன்னூர்: விரிகடல் விடமென. 4 மழைவருகுவதென. (21)

## கிங்கரர் பொழிலை வளைத்தலும், அநுமன் நிலையும் 769-773

769. *பொறிதர விழியுமி ரொன்றே புகையுக வயிலொளி மின்போல்*
*செறிதர வுருமதிர் கின்றார் திசைதொறும் விசைகொடு சென்றார்*
*எறிதரு கடையுக வன்கா லிடறிட வுருமி னினம்போய்*
*மறிதர மழையகல் விண்போல் வடிவழி பொழிலை வளைந்தார்.*
க. 74.

(அக்கிங்கரர்கள்), உயிர் ஒன்றே - மூச்சுக்காற்று ஒன்று மட்டுமே அல்லாமல், விழி பொறி தர - விழிகள் (கோபத்தால்) நெருப்புப் பொறி களை வெளிப்படுத்தவும், புகை உக-புகையை வெளியே கக்கவும், அயில் ஒளி மின் போல் செறிதர-(அவர்கையில் ஏந்திய) வேல்களின் ஒளிகள் மின்னல்கள் போல அடர்ந்து விளங்கவும், உரும் அதிர்கின்றார்- இடிகள் போலக் கர்ச்சிக்கின்றவர்களாய், திசை தொறு விசை கொடு சென்றார்-நாற்றிசைகளிலும் சூழ்ந்து வேகமாகச் சென்றனர்; கடையுகம் எறிதரு வன் கால் இடறிட - யுகாந்த காலத்தில் வீசியடிக்கும் வலிய ஊழிக் காற்று பேர்த்து எறிய, உரும் இனம் போய் மறிதர-இடியின் கூட்டங்கள் இடம் விட்டுப் பெயர்ந்து மடங்கி விழ, மழை அகல் விண் போல்-மேகங்கள் நீங்க நிர்மலமாய் விளங்கும் ஆகாயம் போல, வடிவு அழி பொழிலை வளைந்தார்-(பழமை)உருவம் அழிந்து (வெட்ட வெளியாய் இருந்த) அந்த அசோக வனத்தைச் சூழ்ந்து கொண்டனர்.

முன் இரண்டடிகள் கிங்கரர் சென்றமையும், பின் இரண்டடிகள் பொழிலின் நிலைமையையும் கூறும். உயிர்-காற்று; (பிங்களம்). புகையுக என்றமையால் உயிர் என்பதற்கு மூச்சுக் காற்று என்று பொருள் கொள்ளப்பட்டது. கடை யுகத்தில் பெருங் காற்று அடிக்க, அதனால் தாக்கித் தள்ளப்பட்ட மின் இனங்களைப் போல அவ்வனத்தில் இருந்த மரங்கள் மறிந்து வீழ்ந்து கிடக்க, மேகம் விலகிய ஆகாயம் போலத் தன் முன்னை உருக் கெட்டு வெட்ட வெளியாய்க் கிடந்த அசோக வனத்தை அவ்வரக்கர் வீரர்கள் சூழ்ந்து கொண்டனர் என்க. கடை யுகப் பெருங்காற்றுக்கு அநுமனும், அக்காற்றால் தாக்கப்பட்ட மின் இனங்களுக்கு அம்மரங்களும் உவமைகள் ஆயின. மரங்களை மின்னினம் என்றமை அவை பொன்னாலும், மணிகளாலும் அமைந்தவை யாதலின்.

(பி-ம்.) 1. பொறியனல் விழியினர் பேழ்வாய் புகையெழ வெயிறுகள் தின்றார்: அயிலொடு மின்போல்.
2. செறிதரு முருமிடி போல்வார் திசைதிசைதடவினர் சென்றார்: உருமெதிர் கின்றார் திசைதொறுந் திசை தொறும்: வுரமதி கின்றார் திசையொடு திசைசெறு கின்றார்.
3. வன்கா லெழுபொழு துடுவி னினம்போய்; இனம் போல்.
4: மறிதரு மழை: மழையுகள்; மழையுக; மழைதர வலசிய விண். (22)

770. *வயிரொலி வளையொலி வன்கார்* மழையொலி முரசொலி மண்பால்
*உயிருலை வுறநிமி ரும்போ ருறுமொலி செவியி னுணர்ந்தான்*
*வெயில்விரி கதிரவ னும்போய்* வெருவிட வெளியிடை விண்டோய்
*கயிலையின் மலையென நின்ற னனையவர்* வருதொழில் கண்டான்.

வெயில் விரி கதிரவனும் போய் வெருவிட - வெயிலைப் பரப்புகின்ற சூரியனும் அஞ்சிப்போக, விண் தோய் கயிலையின் மலை என - ஆகாயத்தை எட்டிய கயிலை மலைபோல, வெளி இடை நின்றான்-வெட்ட வெளியாய் அழிந்து கிடந்த அவ்வசோக வனத்தின் நடுவே நின்ற அநுமன். வயிர் ஒலி-ஊது கொம்புகளின் ஒலியும். வளை ஒலி - சங்குகளின் ஒலியும், வன் கார் மழை ஒலி முரசு ஒலி - வலிய கார் காலத்து மேக ஒலிபோன்ற முரசங்களின் முழக்கமும், மண் பால் உயிர் உலைவு உற - பூமியில் உள்ள பிராணிகள் நடுக்கம் அடைய, நிமிரும் போர் உறும் ஒலி- ஓங்கும் போர் வருவதைக் குறிக்கும் ஒலியும், செவியின் உணர்ந்தான் - காதாற் கேட்டுணர்ந்தவனாகி, அனையவர் வரும் தொழில் கண்டான் - அவ்வரக்க வீரர்கள் போர்க்குவரும் செயலை நேரில் பார்த்தான்.

வெயில் விரி கதிரவன் வெருவியது: அநுமன் முன் சிறு குழந்தைப் பருவத்தே தன்னைப் பற்ற வந்ததை எண்ணி மீண்டும் அவன் தன்னைப் பற்ற வருவானோ என்று. சூரியனை அநுமன் பற்றச் சென்றது: 64; கிட்கிந்தா. மகேந்திரப். 12; உத்தர. அநுமப்: 12.

(பி-ம்.) 1. வண்கார்; வண்பால்: முரசொலி விண்பால்; மண்பார்; வானோர்.
2. போ ருருமொலி: பே ருருமெறி.
3. வெருவொடு மறைதர விண்டோய்: வெளியிட விண்டோய்.
4. கறுவினர் வருதொழில். (23)

771. *இதவிய லிதுவென முந்தே யியைவுற வினிது தெரிந்தான்*
*பதவிய லறிவு பயந்தா லதினல பயனுள துண்டோ*
*சிதவியல் கடிபொழி லொன்றே சிதறிய செயறரு திண்போர்*
*உதவியை யினிதி னுவந்தா னெவரினு மதிக முயர்ந்தான்.*

எவரினும் அதிகம் உயர்ந்தான் - யாவரினும் மிகவும் சிறந்த அநுமன், முந்தே - முதலிலே, இது இத இயல் என - தான் செய்த இந்த அசோகவனத்தை அழித்தது நற்செய்கை என்று, இயைவு உற இனிது தெரிந்தான்-பொருத்தமாக நன்றாகத் தெரிந்து கொண்டவனான்; பத இயல் அறிவு பயந்தால்-பக்குவமான இயல்புடைய அறிவு ஒருவனுக்கு உண்டானால், அதின் நல பயன் உளது உண்டோ-அதைவிட நல்லதான பயன் தரத்தக்கது வேறு உண்டோ?(இல்லையென்றபடி); (அதுபோல), கடி பொழில் சிதைவு இயல் ஒன்றே - காவலோடு கூடிய அசோக வனத்தை அழித்தது ஆகிய செய்கை ஒன்று மட்டுமே, சிதறிய செயல் தரு-(அரக்கர்கள் தோற்றுச்) சிதறி அழிந்தோடும் செயலைத் தருகின்ற, திண் போர் உதவியை - வலிய போராகிய ஓர் உபகாரம் தனக்கு

ஆனதைக் (கண்டு), இனிதின் உவந்தான்-அதனை ஓர் இனிய செயலாகக் கருதி மகிழ்ந்தான்.

அசோக வனத்தை முதலில் அழிப்பது என்று ஆலோசித்துச் செய்தது, தான் விரும்பியபடி ஒரு போரைத் தனக்கு உதவியது என்று அநுமன் மிகக் களிப்புக் கொண்டான் என்க; இவ்வாறு அநுமன் முன் கருதியது; 696, 697. எவரினும் அதிகம் உயர்ந்தான் — அறிவாலும் திறலாலும் உருவாலும் எவரினும் மேம்பட்ட அநுமன் என்னலும் ஒன்றும்; 588 594, கிட்கிந்தா. மராமரப்: 34, 36. இத இயல் - இதத்தைத் தரும் செயல்; பத இயல் அறிவு-பக்குவ இயல்பை உடை அறிவு. 'பதவிய லறிவு பயந்தா லதினல பயனுள துண்டோ' என்பதற்குச் சொற்களைப் பற்றிய இலக்கண அறிவு பெற்றால் அதனைவிட அடையும் பயன் வேறு உண்டோ என்னலுமாம்; 'ஏக: சப்த; ஸம்யக் ஜ்ஞாத: ஸுஷ்டு ப்ரயுத்த: ஸ்வர்கே லோகே காமதுக் பவதி' என்பது மஹாபாஷ்ய வசனம். இச் செய்யுளின் முதலடியில் கூறப் பெற்ற செய்திக்கு இரண்டாம் அடி காரணமாய் அமைந்துள்ளது. இதனை அர்த்தாந்தர நியாஸம் என்றும், வேற்றுப் பொருள் வைப்பணி என்றும் கூறுவர்.

(பி-ம்) 1. இயவிய திதுவென; இதவிய முதுவென; இதமுறு மிதுவென: இசைவுற வினிது; இமையவ ரினிது; இதயம தினிதுதெரிந்தே.
2. பதவிய வறிவு; பதமுறு தொழில்கள் துணிந்தா லதினல பயனுள துண்டால்.
3. சிதைவில கடிபொழி; சிதவிய கடிபொழி லென்றே செயறரு திண்பேர்: சிதைவறு கடிபொழி லின்றே சிதறிய செயலது.
4. இனிது நினைந்தான்; உதவிய தெனவு முவந்தான். (24)

772. இவனிவ னிவனென நின்று ரெரியென முதல்வ ரெதிர்ந்தார்
பவனனின் முடுகி நடந்தார் பகலிர வுறமிடை கின்றார்
புவனியு மலையும் விசும்பும் பொருவரு நகரு முடன்போர்த்
துவனியி லதிர விடம்போற் சுடர்விடு படைக டுரந்தார்

இவன் இவன் இவன் என நின்றார் - இவன் தான் (அந்தக் குரங்கு) என்று அநுமனைக் குறிப்பிட்டுப் பல முறையும் காட்டிச் சிலர் நின்றனர்; முதல்வர் எரி என எதிர்ந்தார் - அவர்களில் தலைவராய் உள்ளவர் நெருப்புப் போல எதிர்த்துப் போர் புரியவந்தனர்; பவனனின் முடுகி நடந்தார் - காற்றுப் போல விசையாக நடந்து வந்தனர்; பகல் இரவு உறமிடைகின்றார் - (அவ்வாறு அவர்கள் உடல்களின் கரு நிறத்தால்) பகலிலேயே இரவு உண்டாக நெருங்குவராயினர்; புவனியும் மலையும்

விசும்பும்-பூமியும் மலைகளும் ஆகாயமும், பொருவு அரு நகரும்-ஒப்பற்ற அந்த இலங்கை நகரும், உடன் போர் துவனியில் அதிர - ஒன்று சேர்ந்து போரொலியால் அதிர்ச்சியடைய, விடம்போல் சுடர் விடு படைகள் துரந்தார் - விஷத்தைப் போன்று கொடியனவாயும் ஒளியை வெளிவிடு கின்றனவுமான போர்ப் படைகளைத் தூண்டினார்கள்.

இவன் இவன் இவன் என்ற அடுக்கு விரைவுப் பொருளாயும், வெகுளிப் பொருளாயும் மும்முறை வந்தது; நன்னூல். சூ. 365. பவனன் - காற்றுக் கடவுளாகிய வாயு தேவன்; 'பவனனிற் றிரிகுநர் பதகிமைந் தர்கள்' (பால. தாடகை வதைப்: 41.) துவனி - முழக்கம், இது, த்வனி என்ற வட சொல்லின் திரிபு;

(பி-ம்.) 1. இதுவென முதலி யெதிர்ந்தார்: இவனிவ னெனவு மொழிந்தா ரிதுகவி யெனவு மறிந்தார்.
2. பவனனில் விசைகொடு வந்தார்: முடுகி யடைந்தார்; முடுகி யடர்ந்தார்.
3. பொருவரு கடலு முடன்போர்
4. துவனியி னதிர: அதிரும் விடம்போற்; அதிர வுடன்றார். (25)

773. *மழைகளு மறிகட லும்போய் மதமற முரச மறைந்தார்*
*முழைகளின் வாய்க டிறந்தார் முதுபுகை கதுவ முனிந்தார்*
*பிழையில படவர வின்றோள் பிடரிற வடியிடு கின்றார்*
*கழைதொடர் வனமெரி யுண்டா லெனவெறி படைஞர் கலந்தார்.*

மழைகளும் மறிகடலும் போய் மதம் அற - மேகங்களும் மறிந்து விழும் கடலும் அவற்றின் செருக்காகிய முழக்கமும் அழிந்துபோக, முரசம் அறைந்தார் - போர் முரசங்களை அடித்து முழக்கினவர்களும், முழைகளின் வாய்கள் திறந்தார் - மலைக்குகைகளைப் போலத் தம் வாய் களைத் திறந்தவர்களும், முது புகை கதுவ முனிந்தார் - முற்றிய புகை கவிந்து பற்றிக்கொள்ளும்படி பெருஞ் சினங் கொண்டவர்களும், பிழை இல - குற்ற மற்றனவயான, பட அரவின் தோள் பிடர் இற - படங்களை யுடைய ஆதி சேடனை அரவின் தோள்களும், பின் கழுத்துகளும் ஒடிய, அடியிடுகின்றார்-அடி பெயர்த்து வருகிறவர்களும், கழை தொடர் வனம் எரி உண்டால் என - மூங்கில்கள் அடர்ந்த காடு நெருப்புண்டு எரிந்தது போல, எறி படைஞர் கலந்தார்-வீசித்தாக்கும் படைக்கலங்களை யுடைய வர்களுமான அப்போர் அரக்கர்கள் போர்க்களத்தில் வந்து திரண் டனர்.

போர்க்களம் கழை வனத்துக்கு; வி. பா. கிருட்டினன்றூதுச்: 6.

(பி-ம்.) 1. மறைதர முரசம்; மறையவு முரசம்.

2. முழைக ளிதழ்கள் துறந்தார்; முழைகளி னிருள்க டுறந்தார்; முழைகளி னிருதர் திறந்தார்; முழைகளி னிதழ்களை மென்றே: முதுபகை கருதி முனிந்தார்; முதிர்புகை கதுவ; முதுபகை கதுவ.

3. பிழைபயில் படவர வின்றேல்: புழையுறு பட: படவரவின் செல்: பிடரிட. 4. பகைஞர் கலந்தார். (26)

## அநுமன் கிங்கரர் போர் 774-800

774. *அறவனு மதனை யறிந்தா னருகினி னமைய வடைந்தான்*
*இறவினி னுதவு நெடுந்தா ருயர்மர மொருகை யியைந்தான்*
*உறவரு துணையென வொன்றே யுதவிய வதனை யுகந்தான்*
*நிறைகடல் கடையு நெடுந்தாண் மலையென நடுவ* ணிமிர்ந்நான்.

அறவனும் அதனை அறிந்தான் - தருமமே ஒரு வடிவாயுள்ள அவ்வநுமனும் அவ்வாறு அரக்கர் படை அங்கு வந்துற்றதை அறிந்தவனாகி, இறவினின் உதவும் நெடும் தார் உயர் மரம் - அழிந்து போயும் உதவி புரிவதான ஒரு நெடிய ஒழுங்காய் நீண்ட உயர்ந்த மரத்தின், அருகினின் அமைய அடைந்தான் - அருகே பொருந்துமாறு சென்று, உற வரு துணை என - உற்றவிடத்தில் வந்து உதவிபுரியும் ஒப்பற்ற துணைவனைப் போல, ஒன்றே உதவிய அதனை - தனித்து இருந்து தனக்கு உதவி புரிந்த அம்மரத்தை, உகந்தான் - விரும்பினவனாய், ஒரு கை இயைந்தான் - ஒரு கையில் அதை எடுத்துக் கொண்டு, நிறை கடல் கடையும் நெடும் தாள் - நிறைந்த பாற் கடலைக் கடைந்த நீண்ட அடிப்பாகத்தையுடைய, மலை என - மந்தர மலையைப் போல, நடுவண் நிமிர்ந்தான் - அவ்வசோக வனத்தின் நடுவில் நிமிர்ந்து நின்றான்.

அநுமனை அறவன் என்பது; 720. அநுமனால் மற்ற மரங்களெல்லாம் வீசப்பட்டு நெடுந்தூரம் போய் விழ இந்த ஒரு மரம் மட்டும் அங்குக் கீழே கிடந்தது என்பதும், அது தான் இறந்தும் உதவிபுரியும் ஒரு நண்பனே போலத் தனக்கு ஆயது என்பதும் பொருள். இறவினு முதவுதல் - இறந்தும் கொடுத்தல்; 'ஆந்துணையுங் காப்பர் அறிவுடையோர்' (வாக் குண்டாம். 30). அடியின் கருத்தைப் போன்றது. 'செத்துங் கொடுத் தான் சீதக்காதி; என்பதும் ஒப்பாகலாம். கிங்கரரைக் கொல்ல அநுமன் எடுத்துக்கொண்டது கோபுரவாயிலுக் கிட்டியிருந்த ஓர் இரும்புக்கம்பம்; தோரணமரம் என்று முதனூல் கூறும். அநுமனுக்கு மந்தரமலை; கிட்கிந்தா, மகேந்திரப்: 28. மந்தரமலை கொண்டு பாற்கடல் கடைந்தது; பால. அகலிகைப்: 21; அயோத்யா. நகர் நீங்கு, 123; கிட்கிந்தா. மராமரப்: 76: வாலிவதைப்: 17, 144; உயுத்த. அங்கதன் றூதுப்: 24.

இதன் பின் ஒரு பிரதியில் பின்வரும் இரு பாடல்கள் அதிகமா யுள்ளன.

அ. அதுபொழு தவரது கண்டா ரடுபடை பலவு மெறிந்தார்
கதிகொடு சிலவர் தொடர்ந்தார் கணைபலர் சிலைகள் பொழிந்தார்
குதிகொடு சிலவ ரெழுந்தே குறுகினர் கதைகொ டறைந்தார்
மதியொடு சிலவர் வளைந்தார் மழுவயில் சிலவ ரெறிந்தார்.

ஆ. அநுமனு மவர்விடு படையா லவனுடல் குருதிக ளெழவே
சினவன லெழவொரு திணிமா மரமதி னுடல்சித றிடவும்
தனுவொடு தலைதுகள் படவும் சரமழை பலபொடி படவும்
தினவுறு புயமொடி படவும் திசைதிசை யொருதனி திரிவான்.

(பி-ம்.) 1. அறிவனு மதனை யறிந்தா னெனவரு கமைய வடைந்தான்: அருகினி லிதனை யறிந்தோன்; அருகினி னழகி னமைந்தான்; அழகனை மனதி னினைந்தான்.

2. இறைவரு வயிர நெடுந்தோ ளெழுபணை மரமிற வன்கால்; இறவரும் வயிர நெடுந்தோ ளெழுபனை மரமிகல் வந்தாய்; இறல்வரு வயிர நெடுந்தோ ளெழுபணைமரமிக வன்கால்.

3. உறு பொரு துணையென வொன்றோ; உறுபொரு துணையென வன்றோ: உறவொரு துணை.

4. நெடுந்தூண்: மலையென வநும னிமிர்ந்தான்; மலையென வவனு நிமிர்ந்தான்: நடுவி னிமிர்ந்தான். (27)

775. பருவரை புரள்வன வொன்றோ படர்மழை யருவி நெடுங்கால்
சொரிவன பலவென மண்டோய் துறைபொரு குருதி சொரிந்தார்
ஒருவரை யொருவர் தொடர்ந்தா ருயர்தலை யுடைய வுருண்டார்
அருவரை நெரிய விழும்பே ரசனியு மறைய வறைந்தான்.

அருவரை நெரிய விழும் - பெரிய மலைகள் நெரிந்து தூளாகுமாறு விழுகின்ற, பேர் அசனியும் மறைய - பெரிய இடிகளும் அவ்வோசையில் மறைந்து போக, அறைந்தான் - (அநுமன்) அம்மரத்தைக் கொண்டு அவ்வரக்கர்களை ஓங்கி அடித்தான்; (அதனால்), பருவரை புரள்வன ஒன்றோ - பெரிய மலைகள் புரண்டு போவன போல மட்டுமோ; படர் மழை அருவி - அம்மலைகளின் மீது படர்ந்திருந்த மேகங்களினின்றும் பெருகியோடி விழுந்த அருவிகளாகிய, நெடும் கால் - நீண்ட வாய்க்கால் கள், பல சொரிவன என - பல சொரிகின்றன போல, மண் தோய் துறை பொரு குருதி சொரிந்தார் - தரையில் தங்கி நின்ற நீர்த்துறைகளைத் தாக்கி நிரம்பும்படியாக இரத்த வெள்ளங்களைச் சொரிந்தவர்களாகி, ஒருவரை ஒருவர் தொடர்ந்தார் - (அவ்வரக்கர்கள்), ஒருவரை ஒருவர்

பின்பற்றி, உயர்தலை உடைய உருண்டார் - உயர்வுற்ற தம் தலைகள் உடைபட்டுப் போக உருண்டோடி அழிந்தனர்.

அரக்கர் உடல்களுக்குப் பெரிய மலைகளும், அவர்கள் உடல்களி லிருந்து சொரிந்த இரத்த வெள்ளங்களுக்கு மலைகளிலிருந்து விழும் அரு விக் கால்வாய்களும் உவமைகளாயின.

(பி-ம்.) 1. பருவரை புரைவன னன்றேள் பனிமலை: நெடுந்தோண் மிசையடி படவு மொடிந்தே.
2. சொரிதரு குருதி படிந்தார் துடையொடு கழல்க ளிழந்தார்: பல வென விண்டோய்.
3. ஒருவரி னொருவர் தொடர்ந்தா ருடல்தலை யுடைய வுருண்டார்.
4. நெளிய விழும்போ ரசனியு; நெரிய விரும்போ ரசனியு: அரு வரை சிதற விழும்போ ரசனியி னனுமனுமனறைந்தான். (28)

776. *பறைபுரை விழிகள் பறிந்தார் படியிடை நெடிது படிந்தார்*
*பிறைபுரை யெயிறு மிழந்தார் பிடரொடு தலைகள் பிளந்தார்*
*குறையுயிர் சிதறி நெரிந்தார் குடரொடு குருதி சொரிந்தார்*
*முறைமுறை படைக டெரிந்தார் முடையுடன் மறிய முறிந்தார்.*

(அவ்வரக்கர்கள்), முறை முறை - பலமுறை, படைகள் தெரிந்தார் - (அநுமன் மீது) தம் ஆயுதங்களைத் தெரிந்தெடுத்து வீசினர்; பறை புரை விழிகள் பறிந்தார் - (அநுமன் அம்மரங் கொண்டு தாக்கியதால்) அவர்களிற் சிலர் பறை போன்று பெரிதாயிருந்த தம் விழிகள் பறிக்கப் பட்டவர்களாயினர்; படி இடை நெடிது படிந்தார்-சிலர் தரை இடத்து நீள விழுவாராயினர்; பிறை புரை எயிறும் இழந்தார்-சிலர் பிறைச் சந்திரன் போன்று வளைந்த தம் பற்களையும் இழந்தவராயினர்; பிடர் ஒடு தலைகள் பிளந்தார் - சிலர் பின் கழுத்துக்களுடன் தம் தலைகளும் பிளவு பட்ட வராயினர்: குறை உயிர் சிதறி நெரிந்தார் - சிலர் தம் குற்றுயிரும் சிதறிப் போக ஒருவர் மேல் ஒருவராய் வீழ்ந்து நெரிப்புண்டு அழிந்தனர்; குடர் ஒடு குருதி சொரிந்தார் - சிலர் தம் குடல்களோடு இரத்தத்தையும் வெளியே சொரிந்து அழிந்தனர்; முடை உடல் மறிய முறிந்தார் - சிலர் முடை நாற்றமுடைய தம் உடல்கள் அழியும்படி முறிந்து அழிந்தனர்.

அரக்கர் விழிகளுக்குப் பறைகள்: வட்டமாயும் பெரியவையாயும் உள்ளமையால் உவமை: 'பேய்க்கண் ணன்ன பிளிறுகடி முரசம்' (பட்டினப்: 236); 'பறையன்ன விழித்த கண்ணுள்' (தகடூர் யாத்திரை); 'பறைக்கட் பேய்மகள்' (சிலப். 26: 208): அரக்கர்கள் எயிற்றுக்குப் பிறை; 78, 173; பால. தாடகைவதைப்: 49; ஆரண்ய, கரன் வதைப்: 98.

(பி-ம்.) 1. விழிகள் பறித்தார்: படியிடை சிலவர் படிந்தார்; படையிடை நெடிது படிந்தார். 2. எயிறு பிளந்தார்: தலைகள் பிதிர்ந்தார்,
3. சிதற நெரிந்தார்: குருதி குழைந்தார்.
4. படைக ளெறிந்தார்: மறிய முதிர்ந்தார்; எறிந்தே முனிவொடு சிலவர் முனைந்தார், (29)

777. புடையுடை விழிகன லின்காய்
பொறியிடை மயிர்கள் புகைந்தார்
தொடையொடு முதுகு துணிந்தார்
சுழிபடு குருதி சொரிந்தார்
படையிடை யொடிய நெடுந்தோள்
பறிதர வயிறு திறந்தார்
இடையிடை மலையின் விழுந்தா
ரிகல்பொர முடுகி யெழுந்தார்.

இகல் பொர முடுகி எழுந்தார் - போர் புரியக் கடுகி எழுந்து வந்த அவ்வரக்கர்கள், புடை உடை விழி கனலின் - இரு பக்கங்களிலுமுள்ள விழிகளிலிருந்து உண்டாகும் நெருப்பின், காய் பொறி இடை-எரிக்கின்ற தீப் பொறிகளின் இடையே, மயிர்கள் புகைந்தார் - தம் மயிர்கள் புகையப் பெற்றனர்; தொடை ஒடு முதுகு துணிந்தார் - தம் தொடைகளோடு முதுகும் துண்டிக்கப் பெற்றார்; சுழி படு குருதி சொரிந்தார் - சுழிகள் பல உண்டாக இரத்த வெள்ளங்களைக் கக்கினார்கள்; படை இடை ஒடிய - தாம் கையிற் கொண்ட போர்ப் படைக் கருவிகள் இடையே ஒடிந்து போக, நெடும் தோள் பறிதர - தம் நெடிய தோள்கள் உடலிலிருந்து பறிக்கப் பட்டுப் போக, வயிறு திறந்தார்-தம் வயிறுகள் திறந்து விளங்கப் பிளவு பட்டனர்; இடை இடை மலையின் விழுந்தார் - பயந்து ஓடியவர்கள் அப் போர்க்களத்தின் இடையே பல இடங்களில் மலை போல விழுந்து கிடந்தனர்.

இது அளைமறிபாப்புப் பொருள்கோள். இடையிடை மலையின் விழுந்தாரிகல் பொர முடுகி யெழுந்தார், என இயைத்துப் பொருள்கோடலும் ஆம்.

(பி-ம்.) 1. புடையுடை விடுகன லின்காய்; புடை புடை; புடையிடை; கால் புகையிட மயிர்கள்: புடையுறு கனலின் விழுந்தார் சிலர் விழி பொடிய விழுந்தார்.
2. சுழியடு: துணிந்தார் சிலருடல் குருதி சொரிந்தார்
3. படைபல கெழுமு கரந்தோள்: படையிடை யொழிய: வயிறு துறந்தார்.
4. இடைசிலர் மலைக ளெறிந்தே: இடைமலை யனவென விழுந்தார்: எதிர்ந்தார். (30)

778. *புதைபட விருளின் மிடைந்தார் பொடியிடை நெடிது புரண்டார்*
*விதைபடு முயிரர் விழுந்தார் விழியொடு விளியு மிழந்தார்*
*கதைகொடு முதிர மலைந்தார் கணைபொரு சிலையர் கலந்தார்*
*உதைபட வுரனு நெரிந்தா ருயிரொடு குருதி யுமிழ்ந்தார்.*

கதை கொடு முதிர மலைந்தார் - தண்டாயுதங்களைக் கொண்டு கடும் போர் புரிந்தவர்களும், கணை பொரு சிலையர் கலந்தார் - அம்புகளைக் கொண்டு போர் புரியும் வில்லையுடையவர்களாய் அங்கு வந்து கூடியவர்களுமான அவ்வரக்கர்கள், உதைபட-அநுமனால் உதைபட்டு, உரனும் நெரிந்தார் - தம் மார்பும் நெரியப் பட்டு, உயிரொடு குருதி உமிழ்ந்தார் - தம் உயிரோடு இரத்தத்தையும் வெளியே கக்கினர்; இருளின் மிடைந்தார்-இருளைப் போல (கருநிற முள்ளவர்களாய் அங்குக் கூடி) நெருங்கின மற்றும் சில அரக்கவீரர்கள், பொடி இடை புதை பட நெடிது புரண்டார் - கீழே கிடந்த தூசிகளின் இடையே புதைந்து போக நெடுந் தூரம் புரண்டனர்; (வேறு சிலர்), விதைபடும் உயிரர் விழுந்தார் - விதை தெளித்தது போல நெடுக வீசப்பட்டு அழிந்து போன உயிரினராய் ஆங்காங்கு விழுந்து கிடந்தனர்; விழி ஒடு விளியும் இழந்தார் - மற்றும் சிலர் தம் விழிகளோடு பேச்சும் இழந்தவர்கள் ஆயினர்.

இருளில் புதைபட எனவும் கூட்டிப் பொருள் கொள்ளலாம். மிடைந்தார், முற்றுக்களைத் தனித் தனியே கொண்டும் பொருள் கூறலாம். முதிரமலைதல்; ஆரண்ய. மாரீசன் வதைப்: 174. விதை படும் என்பதற்குச் சிந்திப் போன என்று பொருள் கொள்ளலும் ஆம். விளியும் இழந்தார் - ஓசையும் அடங்கிக் கிடந்தார் என்னலும் ஒன்றும்.

(பி-ம்.) 1. புதைபடு மிருளின்; புதைபட ரிருளின்: உருளின் மிடைந்தார்: படுமிருளி னடந்தார்: பொறியிடை நெடிது.
2. உயிரர் விரிந்தார்; உயிரு மிழந்தார்: விளிவொடு விழியும்; விளியொடு மொழியு; விழியொடு விழியும்: விதைபடு மணியின் விழுந்தார் சிலர் விளி யொளியு மிழந்தார்.
3. கதையொடு: கதிகொடு: கணைபெரழி சிலையர்; சிலர்கணை மழைகள் சொரிந்தார்; சிலையர் கலைந்தார்.
4. நெரிந்தா ருதரெருடு; குமிழி யுமிழ்ந்தார்: உதைபட வுயிரு மொழிந்தார் சிலருடல் குருதி சொரிந்தார். (31)

779. *அயலயன் மலைகொ டறைந்தா ரடுபகை யளவை யடைந்தார்*
*வியவிட மறைய விரிந்தார் மிசையுல கடைய மிடைந்தார்*
*புயரெடு மலையின் விழுந்தார் புடைபுடை திசைதொறு சென்றார்*
*உயர்வுற விசையி னெதிர்ந்தா ருடலொடு முலகு துறந்தார்.*

(அவ்வரக்கர்கள்), அயல் அயல் மலைகொடு அறைந்தார்-பக்கங்களி லெல்லாம் இருந்த மலைகளைப் பிடுங்கிக் கொண்டு கடாவினர்கள்: அடு பகை அளவை அடைந்தார் - பகைவரை அழிக்கும் பகைத் தன்மையின் எல்லையை அடைந்தனர்; வியல் இடம் மறைய விரிந்தார் - அகன்ற இப் பூமியின் இடப்பரப்பு மறையும் படி பரந்து நின்றார்கள்; மிசை உலகு அடைய மிடைந்தார் - மேல் உலகு முழுவதும் நெருங்கப் போய்ச் சேர்ந்தார்கள்; புயல் தொடு மலையின் விழுந்தார் - மேகம் அளாவிய மலைகளே போல (அநுமனால் அடிக்கப்பட்டுக் கீழே) விழுந்தார்கள்; புடை புடை திசை தொறு சென்றார் - பக்கம் பக்கமாகத் திசை களில் எல்லாம் சென்றார்கள்; (மற்றும் சிலர்), உயர்வு உற விசையின் எதிர்ந்தார் - பெருமையடைய வேகமாக அநுமனை எதிர்த்துப் போரிட் டவர்கள், உடல் ஒடும் உலகு துறந்தார் - (தம்) உடலொடு இவ்வுலகத் தையும் துறந்து இறந்தார்கள்.

(*பி-ம்.*) 1. மலையொ டறைந்தா ரடுபகை யளகை யடைந்தரர்: மறையொ டறைந்தா னடு; அயல்பல நிருத ரெழுந்தே யடுசமர் புரிய வடைந்தார்.
2. மிசையுல கிடைய மிடைந்தார்: விசையுல கெவையும்.
3. கடலின் விழுந்தார்; மயலின் விழுந்தார்; புடைபுடை சிதை வொடு சென்றார்: திசைதிசை சென்றார்; திசையொடு புடை புடை சென்றார்: புயல்படி கடலின் வளைந்தார் புடைவரு மவரை யுயர்ந்தோன்.
4. உயர்வற விசையின்: உயிர்பெற விசையின்: எறிந்தா னுட லொடு: உலகு திரிந்தார். (32)

வேறு

780. *பற்றித் தாளொடு தோள்பறித் தெறிந்தனன் பாரின்*
*இற்ற வெஞ்சிறை வெற்பின மாமெனக் கிடந்தார்*
*கொற்ற வாலிடைக் கொடுந்தொழி லரக்கரை யடங்கச்*
*சுற்றி வீசலிற் பம்பர மாமெனச் சுழன்றார்.*

பற்றி -(அநுமன் அவ்வரக்கர்களைப்) பிடித்து, தாள் ஒடு தோள் பறித்து எறிந்தனன் - அவர்களுடைய கால்களையும் தோள்களையும் பிடுங்கி எறிந்தான்; (அதனால் அவர்கள்), வெம் சிறை இற்ற வெற்பு இனம் ஆம் என பாரின் கிடந்தார் - வலியுள்ள சிறகுகள் அற்ற மலைக் கூட்டங்கள் என்று சொல்லும்படி (அவ்வரக்கர்கள்) பூமியில் விழுந்து கிடந்தனர்; (மேலும்), கொடும் தொழில் அரக்கரை - கொடிய செயல் களையுடைய பல அரக்கர்களை, கொற்ற வால் இடை அடங்க-தன் வலிய வாலினிடை யடங்கியிருக்கச் செய்து, சுற்றி வீசலில்-சுழற்றி வீசினதால், பம்பரம் ஆம் என சுழன்றார் - பம்பரம் போலச் சுற்றினர்.

இங்கு அநுமன் வால் கயிருகவும், அரக்கர்கள் பம்பரங்களாகவும் அநுமன் பம்பரம் விடுவோனுகவும் உவமிக்கப் பெற்றன.

(பி-ம்.) 1. தோளொடு தாள்பறித் தெறியவே பழகி; பறிந் தெழுதலும்; பறிந் தெழுந்தவர் பகழி; பற்றித் தோளொடு தோள்பறித் தெறி தலும்.
2. இற்றுப் பாரிடை: இற்ற சித்திர மிடைந்தன வாமெனக்: இற் றைக் குத்திர மிடைந்தன; இற்ற சித்திர மிழுந்தனவாமென க்.
3. சொற்ற வாலிடை: அரக்கரை மடங்கச்.
4. வீசிடப் பம்பர மெனநின்று: மாமென நின்ருர். (33)

781. *வாள்க ளிற்றன விற்றன வரிசிலை வயிரத்*
*தோள்க ளிற்றன விற்றன சுடர்மழுச் சூலம்*
*நாள்க ளிற்றன விற்றன நகையெயிற் றீட்டம்*
*தாள்க ளிற்றன விற்றன படையுடைத் தடக்கை.*

(அநுமன் தாக்கினதால்), வாள்கள் இற்றன-அவ்வரக்கர்களுடைய வாள்கள் ஒடிந்தன; வரிசிலை இற்றன - கட்டுக்கள் அமைந்த அவர்களுடைய விற்கள் ஒடிந்தன; வயிர தோள்கள் இற்றன - வயிரம் போன்ற வலிமையுடைய (அவர்கள்) தோள்கள் அற்றுப் போயின; சுடர் மழு சூலம் இற்றன-பழுக்கக் காய்ச்சின இரும்புபோல ஒளி வீசும் சூலாயுதங்கள் ஒடிபட்டுப் போயின; நாள்கள் இற்று அன நகை எயிற்று ஈட்டம் இற்றன - நட்சத்திரங்கள் உதிர்ந்து விழுந்தன போல ஒளி விளங்கும் பற்களின் தொகுதிகள் அற்று விழுந்தன; தாள்கள் இற்றன - அவ்வரக்கர்களுடைய கால்கள் துண்டிக்கப்பட்டு விழுந்தன; படை உடை தடக்கை இற்றன - (அவர்களின்) ஆயுதங்களை யுடைய பெருங்கைகள் அற்று விழுந்தன.

இங்கு நகை எயிறுகளுக்கு நாள்கள் உவமை. இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

(பி-ம்.) 1. வார்சிலை யிற்றன வயிரத். 2. சுடர்மழுச் சூலம்.
3. நாள்க ளிற்றன வரக்கர்தம் நகையெயி றொடிந்து: நகையெயி றீட்டம். (34)

782. *தெறித்த வன்றலை தெறித்தன செறிசுடர்க் கவசம்*
*தெறித்த பைங்கழல் தெறித்தன சிலம்பொடு பொலந்தார்*
*தெறித்த பன்மணி தெறித்தன பெரும்பொறித் திறங்கள்*
*தெறித்த குண்டலந் தெறித்தன கண்மணி சிதறி.*

வன்தலை தெறித்த-அரக்கர்களுடைய வலிய தலைகள் சிதறி அப்பால் விழுந்தன; சுடர் செறி கவசம் தெறித்தன - சுடர் மிகுந்த கவசங்கள்

சிதறி விழுந்தன; பைம் கழல் தெறித்த-பசிய (பொன்னால் ஆகிய) வீரக் கழல்கள் சிதறி விழுந்தன; சிலம்பொடு பொலம் தார் தெறித்தன-அவர் களின் சிலம்புகளோடு பொன்மாலைகளும் சிதறி வீழ்ந்தன; பல் மணி தெறித்த - பல வகைப்பட்ட அவர்களுடைய அணிகளில் இருந்த பல இரத்தினங்கள் சிதறி வீழ்ந்தன; பெரும் பொறி திறங்கள் தெறித்தன - அவர்கள் அணிந்த பெருமைக்குரிய வீரபட்டம் முதலிய விருதுகள் சிதறி வீழ்ந்தன; குண்டலம் தெறித்த - அவர்களுடைய குண்டலங்கள் சிதறி விழுந்தன; கண்மணி சிதறி தெறித்தன - அவர்களுடைய கண் களின் கருவிழிகள் சிதறுண்டு விழுந்தன.

பொலம் தார் - அழகிய மாலை என்னலும் ஒன்றும். பொறி - வீர பட்டம், விருது என்பன; 'வேந்தன் பெயராற் பொறியும் பெற்றான்' (சீவக. 1792.); 'வெல் பொறியும் நாடும்...கொடுத்தளித்தான்' (பு. வெ. 128.) திறங்கள் - வகைகள். ஆடவர் சிலம்பணிதல் இங்குக் கூறப் பட்டது.

(பி-ம்.) 1. தெறித்த வன்புயம் தெறித்தன: தெறித்தலிற் செறிசுடர்க்.
2. பைங்கழ லெறிந்தன: சிரத்தொடு பொலன்றாள்.
3. பெரும் பொறித் திங்கள். 4. கண்மணி சிதற. (35)

783. உக்க பற்குவை யுக்கன துவக்கெலும் புதிர்வுற்
றுக்க முற்கர முக்கன முசுண்டிக ளுடையுற்
றுக்க சக்கர முக்கன வுடறிறந் துயிர்கள்
உக்க கப்பண முக்கன வுயர்மணி மகுடம்.

பல் குவை உக்க - அவ்வரக்கர்களுடைய பற்களின் குவியல்கள் சிந்தின; துவக்கு எலும்பு உக்கன - தோல்களும், எலும்புகளும் சிந்தின; முற்கரம் உதிர்வு உற்று உக்க - முற்கரம் என்னும் ஆயுதங்கள் சிதறி அழிந்தன; முசுண்டிகள் உடைவு உற்று உக்கன - முசுண்டி என்னும் போர்ப்படைகளும் சிதறியழிந்தன; சக்கரம் உக்க - சக்கராயுதங்கள் சிதறி அழிந்தன; உடல் திறந்து உயிர்கள் உக்கன - அவர்களுடைய உடல்கள் பிளவுபட்டு உயிர்கள் சிந்திப் போயின; கப்பணம் உக்க - அரிகண்டம் என்னும் ஆயுதங்கள் சிதறிப் போயின; உயர் மணி மகுடம் உக்கன - உயர்ந்த இரத்தினங்களால் அமைந்த அவர்கள் கிரீடங்கள் சிதறிப் போயின.

781 ஆம் செய்யுளில் அநுமன் செய்த போரில் இற்றனவும் 782 இல் தெறித்தனவும் இச் செய்யுளில் உக்கனவும் முறையே கூறப் பெற்றன. இறுதல் - அற்று நீங்குதல்; தெறித்தல் - சிதறி நீங்குதல்; உகுதல் - சிந்தி நீங்குதல். துவக்கு - தோல்; வடசொல்.

(பி-ம்.) 1. உக்கன வுறுப்பெலும் புதிர்வுற்: நுறுக்கெலும்பு.
2. உக்க முக்கர முசுண்டிமுட் கழுக்கடை யொழிவுற்: முசுண்டிக ளுடைய.
3. உக்க முளைக ளுக்கன நிணக்குழம் புலேவுற்: உக்க மத்தக முக்கன நிணக்குவை குலேவுற்: உடறுறந் துயிர்கள்.
4. உக்க சக்கர முக்கன வுடறுறந் துயிர்கள்: உக்க மற்புய முக்கன. (36)

784. *தாள்க ளாற்பலர் தடக்கைக ளாற்பலர் தாக்கும்*
*தோள்க ளாற்பலர் சுடர்விழி யாற்பலர் தொடரும்*
*கோள்க ளாற்பலர் குத்துக ளாற்பலர் தத்தம்*
*வாள்க ளாற்பலர் மரங்களி ஞற்பலர் மடிந்தார்.*

தாள்களால் பலர் - (அநுமன்) கால்களால் பலரும், தட கைகளால் பலர் - அவன் பெரிய கைகளால் பலரும், தாக்கும் தோள்களால் பலர் - மோதும் தோள்களாற் பலரும், சுடர் விழியால் பலர் - ஒளிவீசும் விழிகளில் (உண்டான நெருப்பினுல்) பலரும், தொடரும் கோள்களால் பலர் - பற்றிப் பிடித்தலால் பலரும், குத்துகளால் பலர் - கைகளால் குத்தினதால் பலரும், தத்தம் வாள்களால் பலர் - அவரவ-கள் வாள்களாலேயே பலரும், மரங்களினுல் பலர் - மரங்களைக் கொண்டு எறிவதால் பலரும், மடிந்தார் - இறந்தார்.

சுடர் விழியால் என்பதை விழிச்சுடரால் என்று மாற்றிப் பொருள் கொள்ளலும் ஆம். வாள்களால் பலர் - அவரவர் வாள்களைப் பிடுங்கி அவற்ருலே அவ்வரக்கர்களை வெட்டி அழித்தான் என்பதும் ஆம், மரங்கள் - கொடுமரம் அல்லது கணைமரம் என்பவற்றின் முதற்குறையாகக் கொண்டு தத்தம் என்பதை இதற்குங் கூட்டி அவரவர் விற்களாலும், அல்லது கணைமரங்களாலும் அநுமன் அடித்ததால் பலரும் மடிந்தனர் என்று பொருள் கொள்ளலும் ஒன்றும்.

(பி-ம்.) 1. பலர் தருக்கும், 2. பலர் சுடரும்.
3. குன்றுக ளாற்பலர், 4. மரங்களாற் பலர்பலர் மடிந்தார். (37)

785. *ஈர்க்கப் பட்டனர் சிலர்சில ரிடியுண்டு பட்டார்*
*பேர்க்கப் பட்டனர் சிலர்சிலர் பிடியுண்டு பட்டார்*
*ஆர்க்கப் பட்டனர் சிலர்சில ரடியுண்டு பட்டார்*
*பார்க்கப் பட்டனர் சிலர்சிலர் பயமுண்டு பட்டார்.*

சிலர் - சில அரக்கர்கள், ஈர்க்க - அநுமன் அவர்களைப் பிடித்து இழுத்ததால், பட்டனர் - இறந்தனர்; சிலர் இடி உண்டு பட்டார் - மற்றும் சிலர் இடிக்கப் பட்டு இறந்தனர்; சிலர் பேர்க்க பட்டனர் - சிலர் அவ்விடம் விட்டுப் பெயர்த்து அப்புறம் எறியப் பட்டு இறந்தனர்; சிலர் பிடி உண்டு பட்டார் - வேறு சிலர் அநுமனால் பிடிக்கப் பட்டு இறந்தனர்; சிலர் ஆர்க்க பட்டனர் - இன்னும் சிலர் கட்டப் பட்டு இறந்தனர்; சிலர் அடியுண்டு பட்டார் - மற்றும் சிலர் அநுமனால் அடிக்கப் பட்டு இறந்தனர்; சிலர் பார்க்கப் பட்டனர் - சிலர் அநுமன் கோபித்துப் பார்த்ததாலே அச்சமுற்று அழிந்தனர்; சிலர் பயம் உண்டு பட்டார் - வேறு சிலர் பயந்து இறந்தனர்.

ஆர்த்தல் - கட்டுதல்; பிணித்தல்; 'என்றுந்தேய்வுறு தூணியார்த்து' (பால, கையடைப்: 19.); 'ஆர்த்த கணவ னகன்றனன்' (சிலப். 9: 37.); 'ஆர்க்கப் பட்டனர்' என்பதற்கு அநுமன் பெருங்கர்ச்சனை செய்ய, அதனாலே நிலை கலங்கி இறந்தனர் என்னலும் ஆம்.

(பி-ம்.) 1. இடிப்புண்டு பட்டார்; இடருண்டு பட்டார்; இடையுண்டு பட்டார். 2. பிடிப்புண்டு. 4. பயங்கொண்டு. (38)

786. *ஓடிக் கொன்றனன் சிலவரை யுடலுட ரேறும்*
*கூடிக் கொன்றனன் சிலவரைக் கொடிநெடு மரத்தால்*
*சாடிக் கொன்றனன் சிலவரைப் பிணந்தொறுந் தடவித்*
*தேடிக் கொன்றனன் சிலவரைக் கறங்கெனத் திரிவான்.*

கறங்கு என திரிவான் - காற்றாடி போலத் திரிந்த அநுமன், சிலவரை ஓடி கொன்றனன் - சில அரக்கர்களை ஓடிப் பிடித்துக் கொன்றான்; சிலவரை உடல் உடல் தோறும் கூடிக் கொன்றனன் - சில அரக்கர்களை ஒருவர் உடல் மற்றவர் உடலிற் கூடி மோதச் செய்து கொன்றான்: சிலவரை கொடி நெடு மரத்தால் - வேறு சிலரை அங்கிருந்த நீண்ட ஒரு கொடி மரத்தால், சாடி கொன்றனன் - அடித்துக் கொன்றான்; சிலவரை பிணம் தொறும் தடவி தேடி கொன்றனன் - சிலரைப் பிணங்களினிடை ஒளிந்திருப்பதைத் தடவித் தேடிக் கண்டு பிடித்துக் கொன்றான்.

'உடல் தொறும் கூடிக் கொன்றனன் - உடல்களை எல்லாம் கூட வைத்துக் கொன்றான் என்றும், கூடி என்பதற்கு அவரவர் உடல் அருகே அநுமன் சேர்ந்து என்றும் பொருள் கொள்ளலாம். கொடி நெடு மரம் - நீண்ட கொடி மரம்; அதாவது தோரண ஸ்தம்பம். அங்கு ஒரு தோரணஸ்தம்பம் இருந்ததென்பதும், அதன் மேல் அநுமன் வீற்றிருந்தான் என்பதும்; 860, 892. இனி, கொடிகள் படர்ந்த நீண்ட மரம் எனக் கொள்வதும் ஆம். கறங்கு - காற்றாடி; 803; ஆரண்ய, விராதன் 50; கரன்வதைப்: 156, அநுமன் கறங்கெனத் திரிதல்; 803.

(பி-ம்.) 1, உடலுட லோடும்: சிலவரை யுருக்கின னெருங்கே.
2. கொடு நெடு மரத்தால்: குலவரை மரத்தால். (39)

787. முட்டி னூர்பட முட்டினன் முறைமுறை முடுகிக்
கிட்டி னூர்படக் கிட்டினன் கிரியென நெருங்கிக்
கட்டி னூர்படக் கட்டினன் கைகளான் மெய்யில்
தட்டி னூர்படத் தட்டினன் மலையெனத் தகுவான்.

மலை என தகுவான் - பெரிய மலையென்று சொல்லத் தக்க தோற்றத்தையுடைய அநுமன், முட்டினூர் - தன்னை முட்டினவர், பட- அழிந்து போகும்படி. முட்டினன் - தான் அவர்களை முட்டினன்: முறை முறை - வரிசை வரிசையாக, முடுகி - வேகத்தோடு வந்து, கிட்டினூர்- தன்னருகடைந்தவர்கள், பட - அழியும்படி, கிட்டினன் - தானும் அவர் அருகே நெருங்கிச் சென்றான்: கிரி என நெருங்கி - மலை போல அருகே சென்று, கட்டினூர் - தன்னைக் கட்டினவர்கள், பட - இறந்து படும் படி, கட்டினன் - அவர்களைப் பிணித்தான்; கைகளால் மெய்யில் தட்டினூர் - தம் கைகளால் தனது உடலில் தட்டினவர்; பட - அழியும் படி, தட்டினன் - தானும் எதிர்த்துத் தட்டிக் கொன்றான்,

'முறை முறை முடுகி; 'கிரியென நெருங்கி: 'கைகளால்' என்பன வற்றை அநுமனுக்கும் அரக்கர்களுக்கும் கூட்டிப் பொருள் கொள்க. இதனால் யார் யார் எவ்வகை தன்னை எதிர்த்தாரோ அவ்வகையே அநுமன் அன்னோரை எதிர்த்து அழித்தான் என்பதாம்.

(பி-ம்.) 1. முட்டி னூர்தமை முட்டினன்: முறை முறை முடுக்கிக்.
2. கிரியொடு நெருங்கிக்; நெருக்கிக். 3. கைகளின் மெய்யின்.
2, 3, 4 அடிகள் சில சுவடிகளில் முன் பின்னாக மாறியுள்ளன. (40)

788. உறக்கி னுங்கொல்லு முணரினுங் கொல்லுமால் விசும்பில்
பறக்கி னுங்கொல்லும் படரினுங் கொல்லுமின் படைக்கும்
நிறக்க ருங்கழ லரக்கர்க ணெறிதொறும் பொறிகள்
பிறக்க நின்றெறி படைகளைக் கைகளாற் பிசையும்.

உறக்கினும் கொல்லும்-அரக்கர்கள் சோர்வுற்ற (மறந்த) நிலையிலும் (அவர்களை) அநுமன் கொல்வான்; உணரினும் கொல்லும் - நல்லுணர்வு கொண்ட நிலையினும் (அவர்களைக்) கொல்வான்; விசும்பில் பறக்கினும் கொல்லும் - அவர்கள் வானத்தில் பறந்து சென்றாலும் அவர்களைப் பிடித்துக் கொல்வான்; படரினும் கொல்லும் - (தரையில்) நடந்து சென் றாலும் (அவர்களைக்) கொல்வான்; மின் படைக்கும் - மின்னலை உண்

டாக்கும். கரும் நிற - கரிய மேகம் போன்ற நிறத்தையுடைய, கழல் அரக்கர்கள் - வீரக் கழல் அணிந்த அரக்கர்கள், நெறிதொறும்-வழிகளி லெல்லாம், பொறிகள் பிறக்க - தீப்பொறிகள் தோன்ற, நின்று எறி படைகளை - நின்று வீசி யெறியும் ஆயுதங்களை, கைகளால் பிசையும் - அநுமன் தன் கைகளால் பிசைந்து நொறுக்குவான். ஆல்: அசை.

கருங் கழல் எனக்கூட்டி பெரிய கழல் எனவும் கொள்ளலாம்; கருமை - பெருமையும் வலிமையும் ஆம்; திவாகரம்: புறநா. 21: 7. உரை. பிறக்க என்பதை, பிறங்க என்பது எதுகை நோக்கி வலிந்தது எனக் கொண்டு, விளங்க எனப் பொருள் கொள்ளலும் அமையும்.

(பி-ம்.) 1. மறக்கினுங் கொல்லும்.
2. படியினுங் கொல்லுமின்: மின் படைக்கை; மின் பகைசேர்: கொல்லுமிப் படைக்கு.
3. அரக்கர்வா ளெறிதொறும்; அரக்கர் தாமெறி; அரக்கர்களெறி.
(41)

789. *சேறும் வண்டலு மூளையு நிணமுமாய்ச் செறிய*
*நீறு சேர்நெடுந் தெருவெலா நீத்தமாய் நிரம்ப*
*ஆறு போல்வருங் குருதியவ் வநுமனு லலைப்புண்*
*டீறில் வாய்தொறு முமிழ்வதே யொத்ததவ் விலங்கை.*

மூளையும் நிணமும் - அவ்வரக்கர்களுடைய மூளைகளும் கொழுப்புக்களும், சேறும் வண்டலுமாய் - சேறும் வண்டல்களுமாக, செறிய - அடர்ந்து நெருங்க, நீறு சேர் நெடும் தெரு எலாம் - புழுதிகள் சேர்ந்த நீண்ட அந்த இலங்கை நகரின் தெருக்களிலெல்லாம், நீத்தமாய் நிரம்ப - வெள்ளப் பெருக்காய் நிறைந்து விளங்க, ஆறுபோல் வரும் - ஒரு நதியைப் போலப் பெருகி வருகின்ற, குருதி - இரத்தம், அ அநுமனுல் அலைப்பு உண்டு - அந்த அநுமனுல் அங்கு மிங்கும் அலையும்படி தள்ளப்பட்டு, அ இலங்கை - அந்த இலங்கை நகரம், ஈறு இல் வாய் தொறும் - முடிவில்லாத பல வாய்களின் வழியே, உமிழ்வது ஒத்தது - கக்குவதுபோல் விளங்கியது. ஏ: தேற்றப் பொருளது.

அநுமனுல் கொல்லப்பட்ட அவ்வரக்கர்களுடைய இரத்த வெள்ளம் நதியாகவும், அவர்களுடைய மூளைகளும் நிணங்களும் அவ்வெள்ளத்தில் கலந்து வரும் சேறும் வண்டல்களாகவும் கொள்ளப் பட்டதோடு, அக்குருதி வெள்ளம் அநுமனுல் தள்ளி யலைக்கப் படுவது இலங்கை நகரே தன் பல வாய்களால் இரத்தத்தைக் கக்குவது போலும் இருந்தது என்க. நீறு - புழுதி; 'அருவி துகளவிப்ப நீறடங்கு தெரு' (சிறுபாண். 201 நச். உரை.) இதன் பின் கீழ் வரும் ஐந்து பாடல்கள் ஒரு சுவடியில் அதிகமாகக் காணப்படுகின்றன—:

க, 76.

(அ) உரைத்த வெண்பதி னுயிர கோடி கிங்கரரோ
டிரைத்து வந்தமாப் பெரும்படை யரக்க ரெண்ணிலரைத்
தரைத்த லத்தினிட் டரைத்தொரு தமியனின் றதுகண்
டுருத்தவ் வெண்பதி னுயிர கோடிய ருடன்றார்.

(ஆ) சினந்து மற்றவர் தீயெழப் படைக்கலஞ் சிதறிக்
கனந்து வன்றிய தெனக்கரு மலையெனக் கடல்போல்
அனந்த னுந்தலை துளக்குற வமரர்க(?)ளிடியுறு மரவின்
மனந்து ளக்குற வழைத்தன ரெண்டிசை மருங்கும்.

(இ) எடுத்தெ றிந்தன ரெழுமழுச் சிலர்சிலர் நெருக்கித்
தொடுத்தெ றிந்தனர் சூலங்கள் சுடுகதைப் படையால்
அடித்து நின்றனர் சிலர்சில ரருஞ்சிலைப் பகழி
விடுத்து நின்றனர் வெய்யவர் விளைந்தவெஞ் செருவே.

(ஈ) ஒளிந்தி டுங்கடை யுகத்தினி லுற்றகா ரினங்கள்
வளைந்து பொன்கிரி மேல்விழு மிடியென மறவோர்
பொழிந்த பல்படை யாவையும் புயத்திடைப் பொடிபட்
டழுந்த மற்றவ ரோடும்வந் தடுத்தன னநுமன்.

(உ) கட்டு மென்றனர் குரங்கிது கடியகைப் படையால்
வெட்டு மென்றனர் விழிவழி நெருப்புக விறலோர்
கிட்டி நின்றமர் விளைத்தனர் மாருதி கிளர்வான்
முட்டு மாமர மொன்றுகொண் டவரொடு முனைந்தான்.

(பி-ம்.) 1. நிணமுமாய்த் திணிய; திரியும்.
3. யாறு கொண்டவக் குருதிய தனுமனு லலைப்புண்.
4. ஈறில் புண்டொறு முமிழ்வன வொத்ததவ். (42)

790. *கருதி வாலினுங் கையினும் கடிகையிற் கட்டிச்*
*சுருதி யேயன்ன மாருதி மரத்திடைத் துரப்ப*
*நிருத ரெந்திரத் திடுகரும் பாமென நெரியக்*
*குருதி சாறெனப் பாய்ந்தது குரைகடற் கூனே.*

சுருதியே அன்ன மாருதி - வேதத்திற்கே ஒப்பான (நிலைபெற்றிருப் பதும் தவறாமையும் உடைய) அநுமன், கருதி-எண்ணி, வாலினும் கையி னும் கடிகையில் கட்டி-தன் வாலாலும் கைகளாலும் (வெட்டப்பட்ட) கருப்பங்கழித் துண்டுகளைப் போல (அவ்வரக்கர்களைக்) கட்டி, மரத்து இடை துரப்ப - மரங்களுக்கு இடையே வீசி எறிய, நிருதர் - அவ்வரக் கர்கள், எந்திரத்து இடு கரும்பு ஆம் என நெரிய - ஆலையில் இடும் கரும்பு களைப் போலே நெரிந்து போக, குருதி - (அவ்வாறு நசுக்கப்பட்ட

அன்னோர் உடல்களிலிருந்து பெருகிய) இரத்தம், சாறு என - கருப்பஞ் சாறு போல, குரை கடல் கூனை பாய்ந்தது - ஒலிக்கின்ற கடலாகிற மிடாவிற் போய்ப் பாய்ந்தது.

அரக்கர்களை அநுமன் தன் வாலினாலும் கைகளாலும் வெட்டப்பட்டக் கருப்பங்கழித் துண்டுகளைப் போலக் கட்டி எதிரில் இருந்த மரங்களுக்கு இடையே வீசி யெறிய, அவர்கள் அதனால் நசுக்குண்டு பெருகிய இரத்த வெள்ளம் பாய்ந்து ஓடிக் கடலில் வீழ்ந்தது, கருப்பங் கழிகளை எந்திரத்தில் இட்டு ஆட்ட, அதன் சாறு பெருகி ஓடி ஒரு மிடாவிற் போய் விழுந்தது போல விளங்கியது என்பதாம். கூனை - வாயகன்று உட்குழிந்த மட்பாத்திரம்; இது ஆலையில் கருப்பஞ்சாறு போய் விழுவதற்கு வைத்திருக்கும் பாத்திரம்; 'கருப்பேந்திரத்தொழுகு சாறகன் கூனை' (கிட்கிந்தா. ஆறு செல் 49.); 'கூனையுங்குண்டு சட்டியும் பானையுஞ் செயுமங் குசப்பயல் யான்' (தனிப்பாடல்.) கடிகை - துண்டம்; 'கரும்பெறி கடிகையோடு...கவளங் கொள்ளா' (சீவக. 1076). இதன் பின் ஓர் அதிகப்பாடல் கீழ்க் காணுமாறு ஒரு சுவடியில் உளது—:

தலையொ டிந்திட வடித்தனன் சிலர்தமைத் தாளின்
நிலையொ டிந்திட வடித்தனன் சிலர்தமை நெருக்கிச்
சிலையொ டிந்திட வடித்தனன் சிலர்தமை வயப்போர்க்
கலையொ டிந்திட வடித்தன னரக்கர்கள் கலங்க.

(பி-ம்.) 1. கருது காலினுங் கையினுங் கடிகையிற் கட்டிச்; கருது வாலினுங் காலினுங் கையினுங் கட்டிச்; வாலினுங் கையினுங் கடிதுறக் கட்டி; கடுமையிற் கட்டி.
2. மரத்திடைத் தூரப்பான்; துவைப்ப, 3. நெரிவார்.
4. பாய்வது குறைகடற் கூனில்; பாய்வன குரைகடற் கூனை. (43)

791. எடுத்த ரக்கரை யெறிதொறு மவருட லெற்றக்
கொடித்திண் மாளிகை யிடிந்தன மண்டபங் குலைந்த
தடக்கை யானைகண் மடிந்தன கோபுரந் தகர்ந்த
பிடிக்கு லங்களும் புரவியு மவிந்தன பெரிய.

அரக்கரை எடுத்து எறி தொறும் - அநுமன் அவ்வரக்கர்களைத் தூக்கி எடுத்து வீசும் போதெல்லாம், அவர் உடல் எற்ற- அவ்வரக்கர்கள் உடல் போய்த் தாக்கினதால், கொடி திண் மாளிகை இடிந்தன - கொடிகளோடு விளங்கிய வலிய மாளிகைகள் இடிந்து போயின; மண்டபம் குலைந்த-பல மண்டபங்கள் உருக்குலைந்து அழிந்தன; தட கை யானைகள் மடிந்தன - பெரிய துதிக்கைகளையுடைய ஆண் யானைகள் இறந்தன; கோபுரம் தகர்ந்த - கோபுரங்கள் இடிந்து சிதை வுண்டன; பெரிய பிடி

குலங்களும் புரவியும் அவிந்தன - பெரிய பெண்யானைகளின் கூட்டங்களும் பெரிய குதிரைக் கூட்டங்களும் அழிந்தன.

பெரிய, குலம், என்னும் அடைகளைப் புரவிக்கும் கூட்டுக. பின் பிடிக்குலம் தனித்துக் கூறப் பெற்றமையின், முன் உள்ள தடக்கை யானைகள் என்பது ஆண் யானைகளெனக் கொள்ளப்பட்டது

(பி-ம்.) 1. எறிதலு மவருடல்; எறியமற் றவருடல் விழுந்தே.
2. தண் மாளிகை: மாளிகை யிடந்தன. 3. யானைகண் மறிந்தன.
4. அவிந்தன பொரிய; இறந்தன பெரிதால். (44)

792. *தத்த மாடங்க டம்முட லாற்சிலர் தகர்த்தார்*
*தத்த மாதரைத் தங்கழ லாற்சிலர் சமைத்தார்*
*தத்த மாக்களைத் தம்படை யாற்சிலர் தடிந்தார்*
*எத்தி மாருதி தடக்கைக ளான்விசைத் தெறிய.*

மாருதி தட கைகளால் எத்தி விசைத்து எறிய - அநுமன் தன் பெருங்கரங்களால் தாக்கி வேகமாய் வீசி எறிந்ததால், சிலர் தத்தம் மாடங்கள் - சில அரக்கர்கள் அவரவர் சொந்த மாடங்களை, தம் உடலால் - (அநுமனால் வீசி எறியப்பட்ட) தம் உடல்கள் வந்து தாக்கினமையால், தகர்த்தார் - உடைத்தனர்; சிலர் தத்தம் மாதரை தம் கழலால் சமைத்தார் - சில அரக்கர்கள் அவரவர் மனைவியரைத் தமது கால்களால் துவைத்து அழித்தனர்; சிலர் தத்தம் மாக்களை தம் படையால் தடிந்தார் - சில அரக்கர்கள் அவரவர் குழந்தைகளைத் அவரவர் ஆயுதங்களாலே வெட்டுப் பட்டு இறக்கச் செய்தனர்.

அவ்வரக்கர் அழிவு, அவர் வீடு, மனைவி மக்கள் அழிவதற்கு உடன் காரணமாயிற்று என்பதாம். இனி, அசோகவனத்தில் இருந்த மரங்கள் முதலியவற்றை அநுமன் முன்னமே அழித்து எறிந்து விட்டானதலின், அவ்வரக்கர்களை அடிப்பதற்கு வேறு தக்க கருவி கிடைக்கப் பெறாமல் அவர்களையே பற்றி வீசி யெறிந்து அவர்களையும், அவர்கள் வீடுகள், முதலியவற்றையும் அழித்தொழித்தான் என்பதாம். மாக்கள்: இங்கு மக்கள் என்பதின் விகாரமாகக் கொள்க. சமைத்தல் - அழித்தல்; 930; தக்க. 483; எத்தி - எற்றி என்பது எதுகை நோக்கித் திரிந்தது; 'எத்திய வயில் வேல் குந்தம்' (419); 'எத்தி-மாருதி பெருமானை வாழ்த்தி; எத்தி: தலைக்குறை' என்பது. பழைய உரை.

(பி-ம்.) 1. தத்த மானிகைத்.
2. தழங்கழலாற்: சிலர் தடிந்தார்; சிலர் தவிர்த்தார்; தகர்த்தார்.
3. மக்களைத்: தகர்த்தார்; தத்தம் மைந்தரைத் தம்படை யாற்சிலர் சரித்தார். 4. தத்தி மாருதி; விசித் தெறிய; எடுத் தெறிய. (45)

793. ஆடன் மாக்களி றனையவ னரக்கியர்க் கருளி
வீடு நோக்கிய செல்கென்று சிலவரை விட்டான்
கூடி னார்க்கவ ருயிரெனச் சிலவரைக் கொடுத்தான்
ஊடி னார்க்கவர் மனைதொறுஞ் சிலவரை யுய்த்தான்.

ஆடல் மா களிறு அனையவன் - பகைவரைக் கொல்லும் வலிமை பொருந்திய பெரும் ஆண்யானை போன்ற அநுமன், அரக்கியர்க்கு அருளி- (தம் கணவராகிய அரக்கர் போருக்குச் சென்றமை நினைந்து வருந்திக் கொண்டிருந்த) அரக்க மகளிர்பால் கருணை கொண்டு, சிலவரை - அங்கு வந்து பொருத சில அரக்கர்களை, வீடு நோக்கிய செல்கென்று - வீடு நோக்கி நீங்கள் போங்கள் என்று, விட்டான் - அவர்களைக் கொல் லாது விட்டான்; கூடினார்க்கு அவர் உயிர் என சிலவரை கொடுத்தான் - (அப்பொழுதுதான் புதிதாய் மணந்து) சேர்ந்து வாழ்ந்திருந்த சில அரக்க மகளிர்க்கு, அவர்கள் உயிர் போன்ற கணவர்களான அவ்வரக்கர் களிற் சிலரைக் கொல்லாது திரும்பி அளித்து உதவினன்; ஊடினார்க்கு அவர் மனை தொறும் சிலவரை உய்த்தான் - ஊடல் கொண்டிருந்த சில அரக்க மகளிர்க்கு (அவ்வூடல் தீர்ந்து கூடி இன்புறும் வண்ணம்) அன்னோர் கணவர்களான சில அரக்கர்களை அவரவர் வீட்டிற்குச் செல்லுமாறு போகச் செய்தான்.

விட்டான், கொடுத்தான், உய்த்தான் என்பன வெல்லாம் அநுமன் வீசி எறிந்ததில் சிலர் உயிர் தப்பித் தத்தம் வீடு சேர்ந்தனர் என்பதைக் கவி இவ்வாறு அநுமனுடைய கருணைச் செயலாகச் சிறப்பித்தார் எனக் கொள்ளற்பாலதாம்.

(பி-ம்) 2. நோக்கியே செல்கென்று; நோக்கியு மீள்கென்று: செல்கெனச் சிலவரை; மீள்கெனச் சிலவரை: நோக்கினை செல்கெனச் சிலவரை யெறிந்தான். 3. கூடு வாரவர்க் குயிரெனச். 4. ஊடி னாரவர்க் குயிரெனச் சிலவரை, (46)

794. தருவெ லாமுடற் றடமதி லெலாமுடற் சதுக்கத்
துருவெ லாமுட லுவரியெ லாமுட லுள்ளூர்க்
கருவெ லாமுடற் காவுமெ லாமுட லரக்கர்
தெருவெ லாமுட றேசமெ லாமுடற் சிதறி.

சிதறி - (அநுமன் வீசுதலால் அரக்கர்களின் பிணங்கள்) சிதறி, தரு எலாம் உடல் - மரங்களில் எல்லாம் (அவ்வரக்கர்களுடைய) உடல்கள்; தட மதில் எலாம் உடல்-அந்நகரில் சூழ்ந்திருந்த அகன்ற மதின் மீதெல் லாம் உடல்கள்; சதுக்கத்து உரு எலாம் உடல் - நாற் சந்தி கூடும் இடங்

களின் வடிவம் எல்லாம் உடல்கள், உவரி எலாம் உடல்-கடல்களெங்கும் உடல்கள்; உள்ளூர் கரு எலாம் உடல் - அவ்விலங்கையின் அகநகரில் இருந்த கருவான உள்ளிடங்களிலெல்லாம் உடல்கள்; காவும் எலாம் உடல் - நகர்ச் சோலைகளில் எல்லாம் உடல்கள்; அரக்கர் தெரு எலாம் உடல் - அரக்கர்கள் வாழும் தெருக்களிலெல்லாம் உடல்கள்; தேசம் எலாம் உடல் - அந்த இலங்கைப் பிரதேசமாகிய வெளியிடம் முழுவதும் உடல்கள் (ஆக இருந்தன).

சதுக்கம் - நாற்சந்தி; மேடையும் ஆம். கரு-நடு விடம், உள்ளூர்க் கரு: நகரைத் தோற்றிவைத்த இடம் எனலும் ஆம்; 'கருவைக்கு நெடு நகரை' 327,

(பி-ம்.) 1. தெருவெ லாமுடல்: தெற்றி யெல்லாம்: உடல் சேண்போம்.
2. வரையெ லாமுடல் வாரியெ லாமுடல் வாரிக்.
3. காய மெலாமுட லரக்கர்: கரையெ லாமுடல் கானமெ லாமுடல் கடும்போர்ச்.
4. செருவ லானடத் தேசமெல் லாமுடல் சிதறி. (47)

795. *ஊனெ லாமுயிர் கவர்வுறுங் காலனேய்ந் துலந்தான்*
*தானெ லாரையு மாருதி சாடுகை தவிரான்*
*மீனெ லாமுயிர் மேக மெலாமுயிர் மேன்மேல்*
*வானெ லாமுயிர் மற்றுமெ லாமுயிர் சுற்றி.*

ஊன் எலாம் உயிர் கவர்வு உறும் - உடல்களில் உள்ள உயிர்களை எல்லாம் பற்றிக் கொள்ளும், காலன் ஓய்ந்து உலந்தான் - யமன் (அநுமனால் கொல்லப்பட்ட அவ்வரக்கர்களின் உயிர்கள் அளவு அவன் ஆற்றலுக்கும் மேற்பட்டுப் போனமையால் அவனால் மேலும் கவர முடியாமல்) வலிமை இழந்து ஓய்ந்தவனானான்; (அப்படியிருந்தும்), மாருதி எலாரையும் தான் சாடுகை தவிரான் - அநுமன் அவ்வரக்கர் எல்லாரையும் தான் அழிப்பதை நீங்கினானல்லன்: (அவ்வரக்கர் உயிர்கள்), சுற்றி- (எங்கும்) சுழன்று, மீன்எலாம் உயிர் - நட்சத்திர மண்டலங்களில் எல்லாம் அவர்கள் உயிர்கள்; மேகம் எலாம் உயிர் - மேக மண்டலங்களிலெல்லாம் உயிர்கள்; மேல் மேல் வான் எலாம் உயிர் - மேல் மேலும் விளங்கும் வான உலகங்களில் எல்லாம் அவர்கள் உயிர்கள்; மற்றும் எலாம் உயிர் - அவ்வான உலகங்கள் எல்லாவற்றுக்கும் அப்பால் உள்ள புற அண்டத்தும் அவ்வரக்கர்கள் உயிர்கள் (ஆக இருந்தன).

மேன் மேல் வான்-ஒன்றன் மேல் ஒன்றாய் உள்ள பூமி ஒழிந்த வான் உலகங்களாகிய ஆறு உலகங்கள்; சுற்றி என்பதனை மீன், மேகம், வான், மற்றுமெலாம் என்பனவற்றோடு தனித்தனியே கூட்டியும் பொருள்

உரைக்கலாம். முன் செய்யுளில் உடல் சிதறின கூறி, இங்கு உயிர் சிதறினமை கூறப்பெற்றது.

(பி-ம்.) 1. கானெ லாமுயிர்; ஊனு லாவுயிர்: ஓய்ந் தமைந்தான்; ஓய்ந் துயர்ந்தான்; ஓய்ந் துய்ந்தான்; ஓய்ந் திருந்தான்; நொந் துலேந்தான்.
2. சாடுதல் தவிரான்: தரனெல் லாரையு மாருதி தடிதலிற் சுடர்வான்.
4. சுற்ற: மற்றுமெல் லாமுயிர் மயங்க. (48)

796. ஆக விச்செரு விளைவுறு மமைதியி லரக்கர்
மோக முற்றின ராமென முறைமுறை முனிந்தார்
மாக முற்றவு மாதிர முற்றவும் வளைந்தார்
மேக மொத்தனர் மாருதி வெய்யவ னொத்தான்.

ஆக - இவ்விதமாக, இ செரு விளைவு உறும் அமைதியில் - இந்தப் போர் நடைபெறும் சமயத்தில், அரக்கர் மோகம் முற்றினர் ஆம் என - (மற்றும் சில) அரக்கர்கள் மயக்கத்தால் ஆசை முற்றினவர்கள் போல, முறை முறை முனிந்தார் - மேன் மேனும் கோபம் கொண்டவர்களாகி, மாகம் முற்றவும் - வானிடம் முழுவதும், மாதிரம் முற்றவும் - திக்குகள் முழுவதும், வளைந்தார் - சூழ்ந்து அநுமனே வளைந்து கொண்டு, மேகம் ஒத்தனர் - கரிய மேகம் போல விளங்கினர்; மாருதி வெய்யவன் ஒத்தான் - அநுமன் சூரியனேப் போல விளங்கினன்.

இது, ஆசை மிகுந்தோருக்குத் தாம் செய்யும் செயலின் தன்மையும் அதனுல் விளேயும் கேடும் தெரிய மாட்டா; அது போல, போரில் வெறி கொண்ட அரக்கர் அறிவிழந்து அநுமனே எதிர்த்துத் தமக்கே கேடு விளைவித்துக் கொண்டனர் என்பது உணரவைத்ததாம். அரக்கர்கள் கரு நிறத்தினராதலின் மேகமாகவும், அநுமன் பொன்னிறமுடையவனுதலின் இளஞ் சூரியனுகவும் உவமிக்கப் பெற்றனர். மேலும் மேகத்திற்குச் சூரியன் பகையாதலால், அவனேச் சூழ்ந்த மேகம் விலகி அழிவது போல இவ்வரக்கரும் அழிவர் என்பதும், அநுமன் அவர்களே வென்று வெற்றிச் சிறப்புடன் விளங்குவன் என்பதும் குறிப்பால் உணர வைத்ததும் ஆகும். அமைதி - சமயம்: அயோத்யா. கிளேகண்டு: 69. ஆரண்ய. சரபங்கர் : 39.

(பி-ம்.) 1. விளேகின்ற வமைதி; அமைதியா லரக்கர்: செரு விளைவுறு மளவின்மற் றரக்கர்.
2. மோக முற்றன ராமென: மோக ரித்துவந் தடுத்தனர் முறை முறை நெருக்கி: குனிந்தார்; முனிந்தார்; திரிந்தார்.
3. மாக முற்றினு மாதிர முற்றினும் வளைந்தார். (49)

797. *அடல ரக்கரு மார்த்தலி னலேத்தலி னுரப்*
*புடைவ ளைத்துயர் பெருமையிற் கருமையிற் பொலிவின்*
*மிடல யிற்படை மீனென விலங்கலிற் கலங்கும்*
*கடனி கர்த்தனர் மாருதி மந்தரங் கடுத்தான்.*

அடல் அரக்கரும் - வலிமை வாய்ந்த அவ்வரக்கர்களும், ஆர்த்தலின் - ஆரவாரம் செய்வதினாலும், அலேத்தலின் - முன்னும் பின்னும் ஓடி வருத்துவதினாலும், ஆர புடை வளைத்து உயர் பெருமையில் - முழுவதும் பக்கங்களில் வளைத்துக் கொண்டு மேற் கிளம்பிவரும் பெருந் தன்மையினாலும், கருமையில் - கருநிறம் கொண்டுள்ளமை யாலும், பொலிவில்-தோற்றத்தினாலும், மிடல் அயில் படை மீன் என இலங்கலில் - வலிய அவர்கள் கொண்டுள்ள வேற்படைகள் மீன்களென விளங்குவதனாலும், கலங்கும் கடல் நிகர்த்தனர் - கொந்தளிக்கும் கடலுக்கு ஒப்பாக விளங்கினர்; மாருதி - அநுமனும், மந்தரம் கடுத்தான் - அக் கடலேக் கலக்கும் மந்தர மலேயை ஒத்தவனானான்.

இச் செய்யுளில் அரக்கர்களைக் கடலாகவும், அநுமனைக் கடல் கலக்கும் மந்தர மலேயாகவும் உவமிக்கப் பெற்றது. கடலுக்கும் அரக்கருக்கும் சிலேடை, ஆர்த்தல் அலேத்தல் வளைத்துயர் பெருமை, கருமைநிறம், பொலிவு, மிடல் இவற்றாலும், வேல்களாகிய மீன்க ளுடைமையாலும் என்க. முன் பாற் கடலேக் கலக்கிய மந்தர மலே இந்த அரக்கராகிய கருங் கடலேக் கலக்கியது என்னுமாறு அநுமன் விளங்கினான் என்பதாம். அநுமனுக்கு மந்தரம்; 42.

(பி-ம்.) 1. அலேத்தலி னயரப்; அடர்த்துப்; அமரா; அடலரக் கர்வந் தடுத்தபி னநுமன்கை மரத்திற்.
2. புடைபெருத் துயர்; புடைவ ளைத்தலின்; புடைப டத்தலே கலங்கலிற் கருமையிற் பொலிவின்.
3. மிடலி யற்படை; மிடல டற்படை மின்னென: விளங்கலிற் கலங்கும்; விலங்கையிற் கலங்கும். (50)

798. *கரத லத்தி னுங் காலி னும் வாலி னுங் கதுவ*
*நிரைம ணித்தலே நெரிந்துகச் சாய்ந்துயிர் நீப்பார்*
*சுரர்ந டுக்குற வமுதுகொண் டெழுந்தநா டொடரும்*
*உரக ரொத்தன ரநும னுங் கலுழனை யொத்தான்.*

கரதலத்தினும் காலினும் வாலினும் கதுவ - அநுமனுடைய கைகளாலும் கால்களாலும் வாலினாலும் பற்றப்பட்டவராய், நிரை தலே நெரிந்து மணி உக-வரிசையாய்த் தம் தலேகள் நெரியப்பட்டு (அத்தலேகளிலுள்ள) இரத்தினங்கள் சிந்திவிழ, சுரர் நடுக்கு உற-தேவர்கள் நடுக்கம் அடைய,

சாய்ந்து உயிர் நீப்பார் - கீழே சாய்ந்து உயிர் விடுபவர்களாகிய கிங்கரர், அமுது கொண்டு எழுந்த நாள் - (கருடன்) அமிர்தத்தை அபகரித்து எழுந்து சென்றபோது, தொடரும் உரகர் ஒத்தனர்-அங்குத் தொடர்ந்து காவலாய் இருந்த நாகர்களை ஒத்தவராயினர்; அநுமனும் - அநுமானும், கலுழனை ஒத்தான்-(அவ்வமுதத்தை வலிய எடுத்துச் சென்ற) கருடனைப் போன்று விளங்கினான்.

கலுழன் அமுதம் எடுத்த வரலாறு; 32, 43. சுரர் நடுக்குற என்பதை. அமுது கொண்டு என்பதனோடும் கூட்டலாம். இவ்வரலாறு, வியாச. ஆதி. அத். 32, 33. அநுமன் கலுழனை ஒத்தது; 32, 84. கரதலத்தினும் ......கதுவ; ஒப்பு : 798.

(பி-ம்.) 1. வாலினுங் காலினுங் கதுவ.
2. சரிந்திடு மரக்கர்; சரிந்துயிர் நீப்பார்; உயிர் துறப்பார்; உயிர் நிற்பார்.
3. எழுந்திடத் தொடரும்; நாடோறும்; நாட்டொடரும்; நாட் டொலையும்.
4. உரகமொத்தனர்: அநுமளக் கலுழனை: கலுழனே யொத்தான்.
(51)

799. மான முற்றதன் பகையினுன் முனிவுற்று வளைந்த
மீனு டைக்கட லிடையினி னுலகெலா மிடைந்த
ஊன றக்கொன்று துகைக்கவு மொழிவிலா நிருதர்
ஆனை யொத்தன ராளரி யொத்தன னநுமன்.

மானம் உற்ற தன் பகையினுல் - செருக்குக் கொண்ட அரக்கர்களாகிய தன் பகையினுல், முனிவுற்று - (அநுமன்) கோபங் கொண்டு, வளைந்த மீனுடை கடல் இடையினின் உலகு எலாம் - சூழ்ந்ததும் மீன்களைத் தன்னிடம் கொண்டதுமான கடலின் இடையில் உள்ள அந்த இலங்கையாகிய பிரதேசத்தில், மிடைந்த - தன்னோடு போர் புரிய நெருங்கி அடர்ந்து வந்த, ஊன் அற கொன்று துகைக்கவும் - அரக்கர்களுடைய, உடல்களை முற்றிலும் மிதித்துக் கொல்லவும், ஒழிவு இலா நிருதர் - அழியாது இருந்த அரக்கர்கள், ஆனை ஒத்தனர் - யானைகளை ஒத்து விளங்கினர்; அநுமன் ஆள் அரி ஒத்தனன் - அநுமன் வீரம் மிக்க சிங்கத்தை ஒத்து விளங்கினன்.

மானம்-தன் மதிப்பும் ஆம். 'மான நோக்கிற் கவரிமா வனைய நீரார்' (அயோத். மந்திர: 7,); 'மான மழிந்தபின் வாழாமை முன்னினதே' (இனிது நாற்பது. 14.) இங்கு உலகு என்பது, இலங்கைத் தீவையே குறிக்க நின்றது. ஊன் - ஊனிலாய உடல்கள்; ஊன் முதலாகு பெயர்.

ஆள்அரி - வலிமை மிக்க சிங்கம்; ஆள் - மற்ற விலங்குகளைத் தன் வலியால் அடக்கி ஆளுகின்ற: 'ஆனேறேன வாளரி யேறிதென' (ஆரண்ய. சரபங்கர். 24); ஆளரி - நரசிங்கமும் ஆம்.

(பி-ம்.) 1. மான முற்றதம்; மான முட்கூட மனமழன் றதின்மிக வளைத்தார்; முனிவுற வளைந்த.

2. கட லுலகினி னுளவெலா: னுலகினு ளுலகெலா: உலகினி லுயி ரெலாம் விளிய.

3. ஊனுறக் கொண்டு: துகைக்கையி னெழிவிலா வரக்கர்: கொன்று தின்றுடல் வளர்த்தபோர் நிருதர்.

4. ஆளியை யொத்தன னநுமன். (52)

800. எய்த வெற்றின வெறிந்தன வீர்த்தன விகலில்
பெய்த குத்தின பொதுத்தன துளைத்தன பிளந்த
கொய்த சுற்றின பற்றின குடைந்தன பொலிந்த
அய்யன் மற்பெரும் புயத்தன புண்ணளப் பரிய.

இகலில் - போரில், எய்த - (அவ்வரக்கர்கள்) அம்பு கொண்டு எய்தவைகளாலும், எற்றின - தாக்கினவைகளாலும், எறிந்தன - வீசி எறிந்தவைகளாலும், ஈர்த்தன - இழுத்தவைகளாலும், பெய்த - சொரிந்தவைகளாலும், குத்தின-குத்தியவைகளாலும், பொதுத்தன-உள் அழுத்தினவைகளாலும், துளைத்தன - துளைத்தனவற்றாலும், பிளந்த - பிளந்தனவாலும், கொய்த - பறித்தனவாலும், சுற்றின - சுற்றினவாலும், பற்றின - பிடித்தனவாலும், குடைந்தன - குடைந்தனவாலும், பொலிந்த - விளங்கிய, ஐயன் மல் பெரும் புயத்தன புண் - சிறப்புக்குரிய அநுமனுடைய வலிமையில் சிறந்து விளங்கும் பெரிய புயங்களில் உண்டான புண்கள், அளப்பு அரிய - அளவிட முடியாதனவாய் மிகுந்து இருந்தன.

பொதுத்தல் - பொத்தலாகச் செய்தல்; பொத்தலால் அமைவது பொந்து. ஐயன் - மரியாதைக் குரிய பெருமையுடையவன். அநுமனை ஐயன் என்பது: 188, 190, 584, 682 ௦01.

(பி-ம்.) 1. ஈர்த்தன வில்லிற்.

2. பொய்த குத்தின; பொய்து குத்தின: குற்றின பொறுத்தன; பெய்து றுத்தின பிறங்கிடப் பிளந்தன போழ்ந்த.

3. கொய்து: சுற்றின குடைந்தன பொலிந்தன குவியல்: கொய்த குத்தின கொடும்படை யவர்விடக் கொடும்போர்.

4. புண்ணளப் பரிதால். (53)

## அநுமன் வெற்றியும் வானவர் மகிழ்ச்சியும் 801-04

801. *கார்க்க ருந்தடங் கடல்களும் மழைமுகிற் கணனும்*
*வேர்க்க வெஞ்செரு விளைத்தெழும் வெள்ளெயிற் றரக்கர்*
*போர்க்கு ழாத்தெழு பூசலி னையனைப் புகழ்வுற்*
*றார்க்கும் விண்ணவ ரமலையே யுயர்ந்ததன் றமரில்.*

கார் கரும் தடம் கடல்களும் - கரிய பெரிய இட மகன்ற கடல் களும், மழை முகில் கணனும் - மழையைப் பொழியும் மேகக் கூட்டங் களும், வேர்க்க - (அஞ்சி) வியர்த்துச் சோர்வு அடையும்படி, வெம் செரு விளைத்து எழும் - கொடும் போரைத் (தீவிரமாய்) உண்டாக்கி மேற் கொண்டுவந்த, வெள் எயிற்று அரக்கர்-வெள்ளிய பற்களையுடைய அவ்வரக்கர்களுடைய, போர் குழாத்து எழு பூசலின் - போர் வீரர்களின் கூட்டத்தில் உண்டாகும் ஒலியைவிட, விண்ணவர் - தேவர்கள், ஐயனை புகழ்வு உற்று-பெரியோனான அநுமனைப் புகழ்ந்து, ஆர்க்கும் - மகிழ்ச்சி யால் ஆரவாரம் செய்யும், அமலையே-ஒலியே, அன்று அமரில் உயர்ந்தது- அன்று போரில் மேம்பட்டது.

கருங் கடல் - பெரிய கடல்; கருமை - பெருமை; பூசல் - ஒலி; 745.

(பி-ம்.) 1. கருங்கடற் கணங்களும்; கடலினும் மழைமுகிற் கண்ணும்; மழைமுதற் கண்ணும்; கணமும்.
2. வெஞ்சமர்; வெஞ்சமம்: செரு விளைந் தெழும்.
3. போர்க்கு ளரர்த் தெழும்; போர்க்க ளூர்த் தெழும்; போர்க் களத்தெழும். போர்க்க வார்த்தெழு.
4. வானவ ரமலையு மெழுந்ததன்: அமலையே வுலர்ந்ததன் றமரில்; அமலையு முயர்ந்தன: ஆர்க்கும் வானவ ரார்ப்பொலி யுயர்ந்த தன் றமரில். (54)

802. *மேவும் வெஞ்சினத் தரக்கர்கண் முறைமுறை விசையால்*
*ஏவும் பல்படை யெத்தனை கோடிக ளெனினும்*
*தூவுந் தேவரு முனிவரு மகளிருஞ் சொரிந்த*
*பூவும் புண்களுந் தெரிந்தில மாருதி புயத்தில்.*

மேவும் வெம் சினத்து - கொடிய கோபம் பொருந்திய, அரக்கர் கள், - அங்குப் போர்செய்த அரக்கர்கள், முறை முறை - பல தடவை, விசையால் ஏவும் பல் படை எத்தனை கோடிகள் எனினும் - விசையுடன் தூண்டிய பல வகை ஆயுதங்கள் எவ்வளவோ கோடிக்கணக்கானவை என்றாலும், புண்களும் - அவைகளால் உண்டாக்கிய புண்களும், தூவும்

தேவரும் முனிவரும் மகளிரும் சொரிந்த - தூவினவர்களாய்த் தேவர் களும் தேவரிஷிகளும் தேவமகளிர்களும் சொரிந்தனவான, பூவும்-மலர் களும், மாருதி புயத்தில் - அநுமன் புயங்களில், தெரிந்தில - வேற்றுமை தெரியாமலிருந்தன.

அநுமன் வெற்றி கொண்டமையைக் குறித்து வானிலிருந்து தேவர் களும் தெய்வ விருடிகளும், அரம்பையரும், இருடி மனைவியரும் அவன் மீது மலர் தூவினர் என்க. புண்ணும் பூவும் தெரிந்தில என்றதால், அநுமனுக்கு அப்புண்கள் அப் பூக்களைப் போலவே ஊறு செய்யாமல் விளங்கின என்பதும் கொள்ளற் பாலதாம். பூவும் புண்களும் தெரிந் தில; ஒப்பு: 855.

(பி-ம்.) 1. மேவு வெஞ்சினத்து. 2. ஏவு பல்படை.
3. தூவு தேவரு; மகளிரு முனிவரும்.
4. பூவு புண்களும்: மாருதி புயங்கள். (55)

803. *பெயர்க்குஞ் சாரிகை கறங்கெனத் திசைதொறும் பெயர்வின்*
*உயர்க்கும் விண்மிசை யோங்கலின் மண்ணின்வந் துறலின்*
*அயர்த்து வீழ்ந்தன ரழிந்தன ரரக்கரா யுள்ளார்*
*வெயர்த்தி லன்மிசை யுயிர்த்தில னல்லற வீரன்.*

நல் அற வீரன்-சிறந்த தருமத்தை மேற்கொண்ட வீரனான அநுமன், கறங்கு என சாரிகை பெயர்க்கும் - காற்றாடிபோல இடசாரி வலசாரி யாக இடம் விட்டுப் பெயர்ந்து செல்வான்; திசைதொறும் பெயர்வின் விண் மிசை உயர்க்கும் - நாற்றிசைகளிலும் பெயர்ந்து செல்வதால் ஆகாயத்தின் மீது உயர்வான்; ஓங்கலின் மண்ணின் வந்து உறலின் - (அவ்வநுமன்), மலை போலத் தரைமீது வந்து பொருந்துவதால், அரக்க ராய் உள்ளார்-அங்கிருந்த அரக்கர்கள், அயர்த்து வீழ்ந்தனர் அழிந்தனர்- சோர்வுற்றுக் கீழே வீழ்ந்து இறந்து போயினர்; (ஆனால் அநுமனோ), வெயர்த்திலன் - களைப்புற்று வெயர்த்தானும் அல்லன்; மிசை உயிர்த் திலன் - பெரு மூச்சு விட்டானு மல்லன்.

'நல்லற வீரன்' என்பதை நடுநிலையணியாகக் கொண்டு; பெயர்க்கும் .........மண்ணின் வந்துறலின் என்பதற்கும், வெயர்த்திலன் மிசையுயிர்த் திலன் என்பதற்கும் கூட்டப்பட்டது. சாரிகை - வட்டமாய் ஓடித்திரி தல்; ஆரண்ய. விராதன்வதைப்: 37; இது, சாரி எனவும் வரும்; கிட் கிந்தா வாலிவதைப். 37. அநுமன் கறங்கெனத் திரிதல்; 786.

(பி-ம்.) 1. திசைதொறும் பெயர்வில்; திரிதொறும் பெயர்வின்: பெயரா; பெயர்வுற்.

2. ஓங்கலில் மண்ணில்வந் துறலால். 3. விழ்ந்தனர் கழிந்தனர்.
4. வியர்த்திலன்: உரு வசைத்தில னுயிர்த்திலள்; உரு வசைந்தில னுயிர்த்திலன்; உரு வுணங்கில னயர்த்திலன்: உட லசைத்தில னுயிர்த்திலன். (56)

804. எஞ்ச லில்கணக் கறிந்தில மிராவண னேவ
நஞ்ச முண்டவ ராமென வநுமன்மே னடந்தார்
துஞ்சி னாரல்ல தியாவரு மமர்த்தொழிற் றொலைவுற்
றஞ்சி னாரில்லை யரக்கரில் வீரர்மற் றியாரே.

இராவணன் ஏவ - இராவணன் கட்டளையிட, அநுமன் மேல் நடந்தார் - அநுமன் மீது போர்க்குச் சென்ற அவ்வரக்கர் வீரர்களுடைய, எஞ்சல் இல் கணக்கு அறிந்திலம் - குறைவுபடாத கணக்கு இவ்வளவு என்று யாம் அறிந்தோமில்லை; (ஆனால்), நஞ்சம் உண்டவர் ஆம் என - விஷம் உண்டவர்களைப் போல, துஞ்சினார் அல்லது - இறந்து போனார் களே யன்றி, யாவரும்-அவ்வரக்கர் எல்லாரும், அமர் தொழில் தொலைவு உற்று - போர்த் தொழிலை விட்டு நீங்கி, அஞ்சினார் இல்லை - அச்சமுற்றுத் திரும்பி ஓடினார் இல்லை: அரக்கரில் வீரர் மற்று யாரே - (ஆதலால்) அவ் வரக்கர்களைப் போலச் சிறந்த போர்வீரர்கள் வேறுயாரே உள்ளார்? (ஒருவரும் இலர் என்பதாம்).

எஞ்சலில் கணக்கறிந்திலம்; 'ஆற்றன்மாக்கள் எண்ணிறந்தாரை' (752) நஞ்ச முண்டவரை அவ்வரக்கருக்கு உவமித்ததால், நஞ்சம் உண்டார் நிச்சயம் இறப்பதுபோல அவர்களும் இறந்து போவர் என்பதும். அநுமனுடன் போர்புரிதல் விஷத்தோடு போர் புரிவது போலாம் என்பதும் கொள்ளக் கிடக்கும். இனி, 'நஞ்ச முண்டவ ராமென வநுமன் மேன டந்தார்' என்பதற்கு ஆலகாலவிடத்தையுண்ட உருத்திர மூர்த்திபோல நடந்து போரிட வந்தனர் என்று பொருள் கொள்வதும் ஒன்றும். அவ் வாறு கொண்டால், உருத்திர மூர்த்தியின் கோபத்திற்கே அவர்களை உவமித்ததாகக் கொள்ளற்பாலதாம். 'இராவணன் ஏவல் நஞ்சம் உண்ட என்று பாடங்கொள்ளின், ஏவலாகிய விடத்தையுண்டவர் என்று பொருள்தருவதால், இராவணன் ஏவலே அன்னோர்க்கு விடமாய் அவர் களைக் கொன்றது என்பதாகும்.

(பி-ம்.) 1. எஞ்ச லிக்கணத் தறிந்திலர்.
2. நஞ்ச முற்றவ ராமென: உண்டவ னுமன்ன வநுமன்: நஞ்சி னெத்தவா ளரக்கர்க ளநுமன்மே னடந்தே.
3. அல்ல யாவரு; அல யாவரும்: மறத்தொடுந் தொலைவுற்(று): துஞ்சி னார்கள்மற் றெவர்களு மமர்த்தொழில் துறந்தாங்(கு).
4. எஞ்சி னாரில்லை; மற்றாரோ: மற் றெவரோ. (57)

## காவலர் கிங்கரர் அழிந்ததை இராவணனுக்கு அறிவித்தல் 805 - 11

805. *வந்த கிங்கர ரேயெனு மாத்திரை மடிந்தார்*
*நந்த வானத்து நாயக ரோடினர் நடுங்கிப்*
*பிந்து காலினர் கையினர் பெரும்பயம் பிடரில்*
*உந்த வாயிரம் பிணக்குவை மேல்விழுந் துளைவார்.*

வந்த கிங்கரர் - அநுமனுடன் போரிட வந்த கிங்கரர்களான அரக்கர்கள். ஏய் எனும் மாத்திரை - ஏய் என்ற ஒலிக்குறிப்பிற்கு உள்ள அளவில், மடிந்தார் - இறந்தனர்; நந்த வானத்து நாயகர்-(உடனே), அந்தச் சோலையைக் காத்து வந்த காவல் தலைவர்கள், ஓடினர் - ஓட்டமெடுத்துச் சென்றவர்களாய், நடுங்கி பிந்து காலினர் கையினர் - நடுக்கத்தால் பின்னிடுகின்ற கால் கைகளையுடையவர்களாய், பெரும் பயம் பிடரில் உந்த-பெரும் அச்சம் பின் கழுத்தைப் பிடித்துத்தள்ள, ஆயிரம் பிணக்குவை மேல் விழுந்து உளைவார் - ஆயிரக்கணக்காய்க் கிடந்த பிணக் கூட்டத்தின்மேல் தடுக்கி விழுந்து வருந்தினர்.

கிங்கரர் - ஏவலாளர்; வடசொல். வந்தவர், கிங்கரர் என்பது இப் பாடலால் தெளிவாகிறது; இவர் 'ஆற்றல் மாக்கள்' (7.2) ஆவர். ஏயெனுமாத்திரை; 899. ஏய்: ஒலிக் குறிப்பு; 'ஏ யெனப் பூதமொன் றெழுந்த தேந்தியே' (பால. திருவவதாரப்: 87.) நந்தவானம் - நந்தவனம் என்பதின் விகாரம்; 725, நாயகர் - காவலாளிகளான பருவத் தேவரும் ஆம்; 745. பிந்து காலினர் கையினர்: இராவணனிடத்தில் தெரிவிப்பதற்கு அஞ்சி முன்னால் அடியெடுத்து வைக்கும் உறுதியின்மையால் தளர்ச்சியுற்றுப் பின்னுற்ற காலினர் கையினர் என்க; கை பின்னுறல்; கை வீசிச் செல்லும் பெருமிதமின்றி அஞ்சினராதலால்.

(பி-ம்.) 1. வந்தங் கேயெனு மாத்திரை யாம்படி மடிந்தார். 2. நந்தல் நல்வனங் காக்குந ரோடி. 3. பிடரின்: 4. உய்ந்த வாயிரம்: உந்த வாருயிர்: விழுந் துருள்வார். (58)

806. *விரைவி னுற்றனர் விம்மினர் யாதொன்றும் விளம்பார்*
*கரத லத்தினுற் பட்டது கட்டுரைக் கின்றார்*
*தரையி னிற்கிலர் திசைதொறு நோக்கினர் சலிப்பார்*
*அரசன் மற்றவ ரலக்கணே யுரைசெய வறிந்தான்.*

விரைவின் உற்றனர் - (இராவணன் முன்னே) விரைவாகப் போய்ச் சேர்ந்த அவர்கள், விம்மினர் - ஏக்கமுற்று, யாதொன்றும் விளம்பார் - ஒன்றும் சொல்லமுடியாதவர்களாய், பட்டது - அங்கு நிகழ்ந்த

வற்றை. கரதலத்தினுல் - தம் கைகளின் சைகைகளால், கட்டுரைக்கின்ருர் - தெரிவிப்பவர்களானுர்கள்; தரையின் நிற்கிலர் - தரையின் நிற்க மாட்டாமல், திசை தொறும் நோக்கினர் சலிப்பார் - நாற்றிசைகளையும் பார்த்து நடுங்கினுர்கள்; அரசன் அவர் அலக்கணே உரை செய அறிந்தான் - அரக்கர்க்கரசஞன இராவணன் அவர்கள் பட்ட துன்பமே (அங்கு நேர்ந்த படு தோல்வியைத்) தெரிவிக்க அறிந்து கொண்டான். மற்று: அசை.

கரதலத்தினுற் கட்டுரைக்கின்ருர் என்றது: நிகழ்ந்த அக்கிங்கரர் அழிவைச் சொல்ல அச்சத்தால் நாவெழாமல் என்க. 'தரையி னிற்கிலர் திசை தொறு நோக்கினர் சலிப்பார்' என்றது பெருந்துயரும் அச்சமும் உற்ருேருக்கு நினைப்பின்றியே நிகழும் மெய்ப்பாடுகளைக் குறித்தது.

(பி-ம்.) 1. விம்மலுற் றியாதொன்றும்; விம்மலால் யாதொன்றும்: வினவினர்க் கியாதொன்றும். 2. பட்டதுங் கட்டுரைக்
3. திசைதொறு மொத்தினர்: நோக்கினர் சலிப்பால்: தரையினிற் கில ரொக்குநர் திசைதொறுஞ் சலிப்பர்.
4. உரைத்திட வறிந்தான்; உணர்த்திட வறிந்தான். (59)

807. *இறந்து நீங்கின ரோவின்றெ னுணையி னிகந்தார்*
*துறந்து நீங்கின ரோவன்றி வெஞ்சமந் தொலைந்தார்*
*மறந்து நீங்கின ரோவென்கொல் வந்ததென் றுரைத்தான்*
*நிறஞ்செ ருக்குற வாய்தொறு நெருப்புமிழ் கின்ருன்.*

நிறம் செருக்கு உற - உடல் அகம்பாவத்தால் நிமிர்ந்து விளங்க, வாய் தொறும் நெருப்பு உமிழ்கின்ருன் - தன் பத்துவாய்களினுலும் நெருப்பைக் கக்கிய இராவணன், 'இன்று இறந்து நீங்கினரோ - அக்கிங்கரர்கள் போரில் அக்குரங்கால் இன்று இறந்து ஒழிந்தார்களோ? என் ஆணையின் இகந்தார் - (அல்லது) என் ஆணையைக் கடந்தவராய், துறந்து நீங்கினரோ - போர் செய்வதை விட்டுச் சென்ருர்களோ? அன்றி - அது வல்லாமல், வெம் சமம் தொலைந்தார் - கொடிய போரில் தோல்வியுற்றவராய், மறந்து நீங்கினரோ - (அந்த அவமானம் தாங்காமல்) என்னையும் மறந்து போய் விட்டார்களோ? என் கொல் வந்தது - என்ன தான் வந்து நேரிட்டது?' என்று உரைத்தான் - என்று வினவினுன்.

மறந்து நீங்கினரோ: என்பதற்குப் போர் வீரர்க்குரிய, மானம் செருக்கு முதலியவற்றை மறந்து என்றும், தம் நிலை, குடும்பம் முதலியவற்றை மறந்து என்றும், யான் ஒரு தலைவன் இருக்கின்றேனே என்பதையும் என் ஆற்றலையும் மறந்து என்றும் பொருள் கொள்ளலாம். நிறம் - உடல்; 'மெல்லியலை மல்லற், றன்னிறமொன்றி லிருத்தி நின்றேன்' (திருச்சிற். 58); நிறம் - மார்பும் ஆம்.

(பி-ம்.) 1. ஆணையை யிகழ்ந்து; ஆணையி னெழுந்தார்.
2. நீங்கின ரோவென்றி: சமர் தொலைந்தார்: சொல்லும் வெஞ் சமர்த் தொழிகள்.
3. நீங்கினரோ வென்னை: என்கொல் வந்ததென் (று): நீங்கின ரோவென வந்ததென் றுரைத்தான். (60)

வேறு

808. *சலந்தலைக் கொண்டன ராய தன்மையார்*
*அலந்திலர் செருக்களத் தஞ்சி னரலர்*
*புலந்தெரி பொய்க்கரி புகலும் புன்கணார்*
*குலங்களி னவிந்தனர் குரங்கி னாலென்றார்.*

(அவ்வாறு இராவணன் கூறக்கேட்ட நந்தவனத்து நாயகர்), 'சலம் தலை கொண்டனராய தன்மையார் - தீராச்சினம் மேற்கொண்ட வீரத் தன்மையுடைய அக்கிங்கரர்கள், அலந்திலர் - வருந்தி ஓடினரல்லர்; செரு களத்து அஞ்சினர் அலர்-போர்க்களத்தில் எதிர்த்து நிற்க அஞ்சினர்களும் அல்லர்; புலம் தெரி பொய் கரி புகலும் புன்கணார் குலங்களின்-தம் அறிவுக்குப் பொய் என்று தெரிந்தும் பொய்ச்சாட்சி சொல்லும் இழிந்த அற்பர்களுடைய குலங்கள் போல, குரங்கினால் அவிந்தனர் என்றார் - அந்தக் குரங்கால் போரில் இறந்தழிந்தனர்' என்று கூறினர்.

சலம்-தீராக்கோபம்; போர் என்னலும் ஆம். புலந்தெரி பொய்க்கரி: -மனச்சாட்சிக்குத் தெரிந்தும் அதற்கு மாறாய்ப் பொய்ச்சாட்சி சொல்லுதல்; பொய்க்கரி கூறுதல் குலத்தை வேரோடு அழிக்கும் என்பது; அயோத்யா. பள்ளியடைப். 102; ஆரண்ய. கரன்வதைப்: 124; உயுத்த. வருணனை வழிவேண்டு. 25; மூலபல. 145.

(பி-ம்.) 1. கொண்டவவ் வரக்கன் றன்மையால்: கொண்டவராய தன்மையர்; தன்மைதான்: கொண்டவ் வரக்கர் தன்மைதான்; கொண்டவர்க் கனைய தன்மையார்: கொண்டவர் சாற்றுவார் பின்னும். 2 அலந்தனர்; அலர்ந்திலர்; அலைந்திலர்.
3 புலன்றரு பொய்க்கரி புகன்ற: பொய்க்கரி போன: பொலந் தருங் கிரியெனப் பொலியுங் கிங்கரர்: புண்கணார்.
4. குலங்களின் வீழ்ந்தனர்: குலங்களோ டிறந்தனர் (61)

809. *ஏவலி னெய்தின ரிருந்த வெண்டிசைத்*
*தேவரை நோக்கின னுணுஞ் சிந்தையான்*
*யாவதென் றறிந்திலிர் போலு மாலென்றான்*
*(மூவகை யுலகையும் விழுங்க மூள்கின்றான்.*

மூவகை உலகையும் விழுங்க மூள்கின்ருன் - சுவர்க்கம் பூமி பாதலம் என்னும் மூன்று வகைப்பட்ட உலகங்களையும் விழுங்குவதற்கு மேற்கொண்டவன்போல் கோபத்தால் விளங்கியவனும், நாணும் சிந்தையான் - (தனக்கு ஏற்பட்ட அவமானத்திற்கு) நாணிய மனம் உடையவனுமான இராவணன், ஏவலின் எய்தினர் இருந்த எண் திசை தேவரை நோக்கினுன் - தன் கட்டளைப்படி தன் அருகே வந்திருந்த எட்டுத் திசைகளைக் காக்கும் தேவர்களைப் பார்த்தவனாய், யாவது என்று அறிந்திலிர் போலும் என்ருன் - 'நடந்த செய்தி என்னவென்று நீங்கள் அறியவில்லை போலும்' என்று (அதட்டிக் கேட்டான்.) ஆல்: அசை.

(பி-ம்.) 1. ஏவலி லெய்தின னிருக்க; ஏவலி னிருந்தன ரிருந்த; ஏவலரியம்பவீ திருந்த.
2. நோக்கின னுஞ்: நோக்கினன் சினந்து நீரிவை.
3. ஆவ தொன்று: அறைந்திலீர்.
4. உலகமும் விழுங்க மூழ்கினுன்; மீள்கின்ருன்: முடிக்க மூண்டுளான். (62)

810. *மீட்டவ ருரைத்திலர் பயத்தின் விம்முவார்*
*தோட்டல ரிணர்மலர்த் தொங்கன் மோலியான்*
*வீட்டிய தரக்கரை யென்னும் வெவ்வுரை*
*கேட்டதோ கண்டதோ கிளத்து வீரென்ருன்.*

அவர் - அந்த நந்தவனத்து நாயகர், பயத்தின் விம்முவார் - அச்சம் மேற்பட்டவர்களாய், மீட்டு உரைத்திலர் - மீண்டும் மறுமொழி கூறினுர் அல்லர்; தோடு அலர் இணர் மலர் தொங்கல் மோலியான் - இதழ்களோடு விரிந்த கொத்தாக விளங்கிய பூக்களால் ஆகிய மாலை (புனையப்பெற்ற) கிரீடங்களையுடைய இராவணன், 'வீட்டியது அரக்கரை என்னும் வெம் உரை - (அந்தக் குரங்கு) நாம் அனுப்பிய கிங்கரர்களான அரக்கர்களைக் கொன்றது என்று நீங்கள் கூறிய கொடுஞ் சொல், கேட்டதோ - நீங்கள் பிறர் சொல்லக் கேட்டதோ? கண்டதோ - (அன்றி நீங்கள்) நேரில் கண்டதோ? கிளத்துவீர் என்ருன் - (உண்மையை உள்ளவாறு) கூறுங்கள்' என்று கேட்டான்.

கிளத்துவீர் என்றது, காலரை நோக்கிக் கூறியது. கேட்டதோ கண்டதோ என்றதால், கிங்கரர்கள் இறந்து போயிருப்பார்கள் என்பதில் இரர்வணன் நம்பிக்கை கொள்ளாமல் கூறியது ஆகும். மீட்டவர் உரைத்திலர்' என்பதை, எண்டிசைத் தேவருக்கும் கூட்டலாம்.

(பி-ம்.) 2. தொங்கல் மாலையான்.
3. வீட்டின தரக்கரை யென்னும் மெய்யுரை: வெய்துரை: ஈட்டிய லரக்கரைக் குரக்கி றுத்தசொற். 4. கிளர்த்து வீர் (63)

811. கண்டன மொருபுடை நின்று கண்களால்
தெண்டிரைக் கடலென வளைந்த சேனையை
மண்டலந் திரிந்தொரு மரத்தி னுனுயிர்
உண்டதக் குரங்கினி யொழிவ தன்றென்றூர்.

'ஒரு புடை நின்று கண்களால் கண்டனம் - யாங்கள் ஒரு பக்கத்தில் (மறைந்து) நின்று எங்கள் கண்களால் நேரில் பார்த்தோம்; தெள் திரை கடல் என வளைந்த சேனையை - தெளிந்த அலைகளையுடைய கடல் போலப் பரந்து சூழ்ந்திருந்த அக்கிங்கரர்களாகிய அரக்கர் சேனையை, மண்டலம் திரிந்து - வட்டமாகச் சுற்றிச் சுற்றித் திரிந்து, ஒரு மரத்தினல்- ஒரு பெரிய மரத்தைக் கொண்டு (அடித்ததால்), உயிர் உண்டது - (அக் குரங்கு) அப்படை வீரர்கள் உயிர்களை அழித்து விட்டது; அக் குரங்கு இனி ஒழிவது அன்று என்றூர் - அந்தக் குரங்கு இனி இவ்விலங்கையை இதோடு விட்டுப் போகாதுபோல் இருக்கிறது' என்று கூறினர். (அதாவது இலங்கை முழுவதும் அழித்தபின்தான் போகும் என்றபடி.)

(பி-ம்.) 2 வந்த சேனையை. 3. மரத்தி னலடித்; மரத்தி னலடி.
4. குரங்கின மொழிவதன் றென்றூர்; ஒழிவதென் றென்றூர்.

கிங்கரர் வதைப் படலம் முற்றும்.

# 8. சம்புமாலி வதைப் படலம்

## இராவணன் சீற்றம்

812. *என்றலு மரக்கர் வேந்த னெரிகதிர் வாளை நோக்கிக்*
*கன்றிய பவழச் செவ்வா யெயிறுபுக் கழுந்தக் கவ்வி*
*ஒன்றுரை யாடற் கில்லா னுடலமும் விழியுஞ் சேப்ப*
*நின்றவா ளரக்கர் தம்மை நெடிதுற நோக்குங் காலை*

சம்புமாலி வதைப் படலம் - இராவணன் கட்டளையால் போருக்கு வந்த சம்புமாலி என்பவனை அநுமன் வதை செய்த படலம் என விரியும்.

என்றலும் - என்று சோலைக்காவலர்கள் சொல்லவும், அரக்கர் வேந்தன் - அரக்கர்க்கிறைவனான இராவணன், எரி கதிர் வாளை நோக்கி - நெருப்புப் போலக் கதிர்களை வீசி ஒளி-பரப்பும் தன் சந்திரஹாஸம் என்னும் வாளைப் பார்த்து, கன்றிய - கோபத்தை வெளிப்படுத்திய, பவழம் செவ்வாய் - பவழம் போன்று சிவந்த தன் வாயின் இதழில், எயிறு புக்கு அழுந்த கவ்வி - பற்கள் புகுந்து அழுந்தும்படி பற்றி, ஒன்று உரை ஆடற்கு இல்லான் - ஒன்றும் பேசுவதற்கு இல்லாதவனாய், உடலமும் விழியும் சேப்ப-தன் உடலும் விழிகளும் (கோபத்தால்)சிவப்பாக, நின்ற வாள் அரக்கர் தம்மை - தன்னருகே நின்ற வாளேந்திய அரக்கர்களை, நெடிது உற நோக்கும் காலை - நன்றாகப் பார்த்தபோது.

இச் செய்யுள் முன் படல இறுதிச் செய்யுளோடு ஒத்த தொடர்புடைமையாலும், இன்றியமையாததாய் இருத்தலாலும், இரண்டு சுவடிகளில் உள்ளபடி இங்குப் பதிப்பிக்கப் பெற்றது. இதுவும் அடுத்த செய்யுளும், சேர்ந்து வினை முடிவுகொள்ளும் குளகமாகும். வாளை நோக்கிக் கூறுதலும், சூளுரை உரைத்தலும் வீரர் செயல்கள். பற்களால் இதழை அழுத்துதல், விழி சேத்தல் இவை வெகுளியில் உண்டாகும் மெய்ப்பாடுகள்.

(பி-ம்.) 1. னெரிகதி ரென்ன. 3. ஒன்றுரையாடா தில்லான். (1)

## இராவணன் சம்புமாலிக்கு இட்ட கட்டளை

813. *கூம்பின கையி னின்ற குன்றிவர் குவவுத் திண்டோள்*
*பாம்பிவர் தறுகட் சம்பு மாலியென் பானைப் பாரா*
*(வாம்பரித் தானை யோடு வளைத்ததன் வலியை மாற்றித்*
*தாம்பினிற் பற்றித் தந்தென் மனச்சினந் தணித்தி யென்றான்)*

கூம்பின கையின் நின்ற - குவித்து வணங்கிய கைகளையுடையவனாய் அருகே நின்ற, குன்று இவர் குவவு திண் தோள்-குன்றுபோல் உயர்ந்து திரண்ட வலிய தோள்களையுடைய, பாம்பு இவர் தறுகண் சம்புமாலி என்பானை பாரா - பாம்பை ஒத்த அஞ்சாத்தன்மையுடைய சம்புமாலி என்பவனைப் பார்த்து, 'வாம் பரி தானையோடு வளைத்து-தாவிச் செல்லும் குதிரைப்படைகளோடு அந்தக் குரங்கை வளைத்து, அதன் வலியை மாற்றி - அதன் வலிமையை அழியச்செய்து, தாம்பினில் பற்றி தந்து - நீண்ட கயிற்றால் கட்டி என்முன் கொண்டுவந்து தந்து, என் மன சினம் தணித்தி என்றான் - என் மனத்திலுள்ள கோபத்தை ஆற்றுவாயாக' என்று கூறினான் இராவணன்.

இவர்: முன்னையது, உயர்ந்த என்னும் பொருளது; 'இவர்கின்ற தளவில் காதல்' (கிட்கிந்தா. மராமரப்: 15); பின்னையது, ஒப்பு என்னும் பொருளது; 'அரும்பிவர் மென்முலை' (பு - வெ: 285,). சம்புமாலி: இராவணன் முதன் மந்திரியான பிரஹஸ்தன் குமாரன்; வான்மீகம்.

(பி-ம்.) 1. கைய னாகி முன்னின்ற குவவுத்: குன்றெனக் குவவுத்.
2. என்பவனைப் பாரா; என்பானை நோக்கி.
3. வளைந்ததள் மறனை; மதத்தை; வளைந்து மற்றதனை; வளைந்து நீ குரங்கைப் பற்றித்.
4. தாம்பினிற் பிணித்துத் தந்தென்: தவிர்த்தி யென்றான். (2)

## சம்புமாலி தன் படைகளுடன் போர்க்குப் புறப்பட்டமை 814-26

814. *ஆயவன் வணங்கி யைய வளப்பரு மரக்கர் முன்னே*
*நீயிது முடித்தி யென்று நேர்ந்தனை நினைவி னெண்ணி*
*ஏயினை யென்னப் பெற்றா லென்னில்யா ருயர்ந்தா ரென்னாப்*
*போயின னிலங்கை வேந்தன் போர்ச்சினம் போவ தொப்பான்.*

ஆயவன் - அந்தச் சம்புமாலி என்பவன், வணங்கி - இராவணனை வணங்கி, 'ஐய - ஐயனே, அளப்பு அரும் அரக்கர் முன்னே - அளவிட முடியாத பல அரக்கர்களுக்கு முன்னிலையில், நினைவின் எண்ணி நீ இது முடித்தி என்று - (மனத்தில் நன்றாய் என்னைப் பற்றி) ஆலோசித்து 'நீ இக் காரியத்தைச் செய்து முடிப்பாயாக' என்று, நேர்ந்தனை ஏயினை என்னப் பெற்றால் - தீர்மானித்துக் கட்டளை யிட்டீர்கள் என்னும் பெருமையை யான் அடையப்பெற்றேன் என்றால், என்னில் யார் உயர்ந்தார் என்னா - என்னைப் போல உயர்ந்தவர் வேறு யாரே உள்ளார்?' என்று, சொல்லி, இலங்கை வேந்தன் போர் சினம் போவது ஒப்பான்-இலங்கைக் கரசனான இராவணனுடைய போரில் மூண்டு எழும் கோபமே ஓர் உரு

எடுத்துப் போவது போன்றவனாகி, போயினன் - (அநுமனோடு போர் செய்து அவனைப் பற்றிக்கொண்டு வரச்) சென்றான்.

ஒப்பு; 'மாருதி யல்லனாகி நீயெனு மாற்றம் பெற்றேன், ஆரினி யென்னோ டொப்பா ரென்பதோ ரின்ப முற்றான்' (உயுத்த. அங்கதன் தூதுப்: 18).

(பி-ம்.) 1. அளப்பரு மளக்கர்; முன்னர்.
2. நீயிது பிடித்தி: நேர்ந்தது; நேர்ந்தெனை: நினைவி னென்னை.
3. ஏவினை: ஏயினை யென்னில் மற்றோ ரெனக்குமே லுயர்ந்தோ ரென்னாப்.
4. பொருசினப்: பேரல்வ தொப்பான்: வேந்தன் பொன்னடி தொழுது மாதோ. (3)

815. *தன்னுடைத் தானை யோடுந் தயமுகன் றருகென் றேய*
*மன்னுடைச் சேனை யோடுந் தாதைவந் தீந்த வாளின்*
*மின்னுடைப் பரவை யோடும் வேறுளோர் சிறப்பின் விட்ட*
*பின்னுடை யனிகத் தோடும்* பெயர்ந்தனன் பெரும்போர் பெற்றான்.

பெரும் போர் பெற்றான் - பெரிய போர் செய்யும் பேறு பெற்ற சம்புமாலி, தன்னுடை தானையோடும் - தனக்குரிய சேனைகளோடும், தயமுகன் தருகென்று ஏய - பத்து முகங்களையுடைய இராவணன் அழைத்துவருக என்று ஏவிய, மன் உடை சேனையோடும் - நிலைபெற்ற பெருஞ் சேனைகளோடும், தாதை வந்து ஈந்த-தன் தந்தையாகிய பிரகஸ் தன் என்பான் அங்குக் கொண்டு வந்து கொடுத்த, மின் உடை வாளின் பரவையோடும் - மின்னல் போல் ஒளி வீசுதலையுடைய வாட்படை வீரர் களாகிய சேனைக் கடலோடும், வேறு உளோர் சிறப்பின் விட்ட-மற்றும் உள்ளோர் பெருமைப்பட மிகுதியாகத் தன்னுடன் அனுப்பி வரச் செய்த, பின் உடை அனிகத் தோடும்-பின்னே காவலாக வந்த சேனைக ளோடும், பெயர்ந்தனன் - சென்றான்.

மன்னுடைச் சேனை - அரசனான இராவணனுக்குத் தனியே உரிய தான படை என்னலும் அமையும். தாதை-சம்பு மாலியின் தந்தையாகிய பிரகஸ்தன்; இவன் இராவணனுடைய தலைமை மந்திரி ஆவன். பரவை - கடல்: இங்கு மிகுதியைக் குறிக்க வந்தது: ஒப்பு: 'ஈந்தே கடந்தானிரப் போர்கடலெண்ணி னுண்ணூல், ஆய்ந்தே கடந்தானறி வென்னு மளக்கர் வாளால், காய்ந்தே கடந்தான் பகை வேலை கருத்து முற்றத், தோய்ந்தே கடந்தான் திருவிற் றொடர்போக பௌவம்' (பால. அரசியற் : 5.) இச் செய்யுளில் சம்பு மாலியின் சேனையின் வகைகள் கூறப்பட்டன.

(பி-ம்.) 1. தன்னுடைத் தானை யோடுந் தந்திரக் கிழவர் சூழ்ந்த: தச முகன் தருக்கின் றேய.

2. மாதவந் தீய்ந்த வாளின்: அரசுவந் தீய்ந்த வாளின்; மாசறத் தீர்ந்த வாளின்; வாசவன் றந்த வாளின்; மால்மகன் வரத்தா லீய்ந்த:

3. மின்னுடைப் படையி னேடும்: மேவலர் கொடுத்துப் போன.

4. பின்னுடைச் சேனை சூழச் சென்றனன்: பின்னிடை: பொன் னுடைத் தேர்க ளோடும் போயினன் புகழின் மிக்கான். (4)

816. *உருமொத்த முழக்கிற் செங்கண்*
*வெள்ளெயிற் ேறாடை நெற்றிப்*
*பருமித்த கிரியிற் றோன்றும்*
*வேழமும் பதுமத் தண்ணல்*
*நிருமித்த வேள்வி முற்றி*
*யென்னலா நிலைய நேமி*
*சொரிமுத்த வெண்கோட் டுச்சித்*
*துகிற்கொடித் தடந்தேர் சுற்ற.*

உரும் ஒத்த முழக்கின் - இடிபோன்ற பிளிறுதலையும், செங்கண் - சிவந்த கண்களையும், வெள் எயிற்று - வெண்மையான தந்தங்களையும், ஓடை நெற்றி - முக படாம் அணிந்த நெற்றியையும் உடைய, பருமித்த கிரியில் தோன்றும் - சிறப்பாக அலங்கரிக்கப்பட்ட மலைகள் போல விளங்கிய, வேழமும் - யானைகளும், நேமி - சக்கரங்களையுடையனவும், வெண்கோட்டு உச்சி - வெண்ணிறமான கம்பத்தின் உச்சியில், சொரி முத்த துகில் கொடி - முத்துக்களைச் சொரியும் வெண்ணிறத் துணிக் கொடிகளையுடையனவும், பதுமத்து அண்ணல் - தாமரைமலர்மீது விளங்கும் பெருமை தங்கிய பிரமதேவன், நிருமித்த - ஏற்படுத்திய, வேள்வி முற்றி என்னல் ஆம் நிலைய - யாகம் முடித்து உண்டாக்கிய தென்று சொல்லத் தக்கனவுமான, தடம் தேர் சுற்ற - பெரிய தேர்கள் பலவும் தன்னைச் சூழ்ந்து வர,

இச் செய்யுள், அடுத்த செய்யுளோடு தொடர்ந்து முடியும்; யானைப் படை, தேர்ப்படை இவற்றின் தன்மை இங்குக் கூறப் பெற்றது. பருமித்த: பெருமிதம் கொண்ட என்றும், பருத்து விளங்கிய என்றும் பொருள் கொள்ளலாம். வேள்வி முடித்து அதனின்று தேர் முதலியன அடைதல்; உயுத்த. திக்கு விசயம். 249. வெண் கோட்டு உச்சியில் கட்டப் பெற்ற துகிற் கொடிகள் ஆடுவது முத்துகளைச் சொரிவது போல விளங்கியது என்றும் கொள்ளற் பாலதாம். தேர்-தேர்களும்; உம் வருவிக்கப் பெற்றது.

(பி-ம்.) 1. ஒள்ளெயிற் ேறாடை.

2. பருமித்த கதியிற்; கரியிற்: பருமத்த கிரிபோல்: பதுமத்தெண்ணி

3. நிருமித்த வெழிலி முற்றிற் றென்னலா: வேள்வி யுற்ற வெண்ணலா.
4. சொரிமுத்த மாலை சூழுந் துகிற்கொடித்; சூழ்ந்து துகிற்; சூழுஞ் சிறு கொடி: சொரி முத்தின் மாலை சூழுந் தேர்களுந் தொடரப் போனுர்: தேர் தோன்ற. (5)

குதிரைப்படை கூற்றுவன்

817. *காற்றினை மருங்கிற் கட்டிக் கால்வகுத் துயிருங் கூட்டிக்*
*கூற்றினை யியற்றி யன்ன குலப்பரி குழுவக் குன்றின்*
*தூற்றினி னெழுப்பி யாண்டுத் தொகுத்தன சுழல்பைங் கண்ண*
*வேற்றினப் புலியே றென்ன விரிந்தது பதாதி யீட்டம்.*

மருங்கில் காற்றினை கட்டி - பக்கங்களிலுள்ள காற்றைப்பிடித்துத் தொகுத்து, கால் வகுத்து - அவற்றிற்கு நான்கு கால்களையும் உண்டாக்கி, உயிரும் கூட்டி - உயிரையும் அதில் சேர்த்து, கூற்றினை இயற்றி அன்ன - யமனைப்படைத்தது போன்ற, குல பரி குழுவ-சிறந்த சாதிக் குதிரைகள் திரண்டு வர, குன்றின் - மலைகளிடத்தினின்றும், தூற்றினின் - காட்டுப் புதர்களினின்றும், எழுப்பி - (பதுங்கிக்கிடந்தவற்றை) எழச் செய்து, ஆண்டு தொகுத்தன-அப்போர்ப்படையில் சேர்த்துத் தொகுத்தவை போன்றவையும், சுழல் பைம் கண்ண - சுழல்கின்ற பசிய நிறத்துக் கண்களையுடையவையுமான, வேற்று இன புலி ஏறு என்ன - வெவ்வேறு வகைப்பட்ட பல ஆண்புலிகளே போன்ற, பதாதி ஈட்டம் - (காலாட் படையினரான) அரக்கர்படை வீரர்களுடைய கூட்டம், விரிந்தது - மிகுந்து விளங்கியது.

சம்புமாலியுடன் சென்ற குதிரைப்படைகளும், காலாட்படைகளாகிய அரக்கர் வீரர்களும் குறிப்பிடப் பெற்றனர். இதில் குதிரைகள் காற்றுப்போல வேகமாய்ச் செல்லக் கூடியவை என்பதோடு கூற்றுவனைப் போல வலிமையும் பகைவரை அழிக்கும் தன்மையுமுடையன என்றும், அரக்கர் படைவீரர்கள் மலைகளிலும் புதர்களிலும் பதுங்கிக் கிடந்த பல வகைப்பட்ட புலிகளை ஒன்று திரட்டப்பட்டனபோன்று விளங்கினர் என்றும் கூறியதாம்.

(பி-ம்.) 1. வகுத் தனைய காட்சி.
2. கூற்றினை யேற்றி யன்ன; கூற்றினை வெற்றி: குழுவுங் குன்றில்; பரிக் குழுவுங் குன்றத்,
3. தூற்றமுற் றுடைய தின்டோ ளுருமிடைச் சுழலுங் கண்ணர்: யாண்டு தொகுத்தன சுழலுங் கண்ண: சுழலுங் கண்ண; கண்ணின்.
4. ஏற்றினப்புலி: ஏற்றிளம் புலியே றென்ன வேகின பதாதி யீட்டம்: வியத்தெழும் பதாதி; விரைந்தெழு; இயைந்தது பதாதி. (6)

818. தோமர முலக்கை கூர்வாள் சுடர்மழு குலிசந் தோட்டி
தாமரந் தின்ற கூர்வேல் சக்கர மெழுக்கள் சாபம்
காமரந் தண்டு பிண்டி கப்பணங் கால பாசம்
மாமரம் வலயம் வெங்கோன் முதலிய வயங்க மாதோ.

தோமரம் - தோமரம் என்னும் ஒருவகை எறியும் ஆயுதங்கள், உலக்கை-உலக்கைகள், கூர்வாள் - கூர்மையான வாட்கள், சுடர் மழு - ஒளி வீசும் கோடாலிகள், குலிசம்-வச்சிராயுதங்கள், தோட்டி-அங்குங்ச கள், தாம் அரம் தின்ற கூர்வேல் - அரத்தினால் அராவிக் கூராக்கப்பட்ட வேலாயுதங்கள், சக்கரம் - சக்கராயுதங்கள், எழுக்கள் - இருப்புத் தடி கள், சாபம் - விற்கள், காமரம் - காமரம் என்ற ஒருவகை ஆயுதங்கள், தண்டு - கதைகள் என்னும் தண்டாயுதங்கள், பிண்டி - பிண்டிபாலங் கள், கப்பணம் - நெரிஞ்சி முட்படைகள், கால பாசம் - யமபாசங்கள் என்னும் கயிறுகள், மாமரம் - பெரிய மரங்கள், வலயம் - வளையங்கள், வெம்கோல் - கொடிய அம்புகள், முதலிய - இவை முதலான பல ஆயு தங்கள், வயங்க - விளங்க, மாது ஓ; அசைகள்.

இச் செய்யுள் அடுத்து வரும் செய்யுள்களோடு தொடர்ந்து மேல் 821 ஆம் செய்யுளில் வரும் 'செல்ல' என்பதுடன் இயைந்து பொருள் படும். காமரம் - காவடிமரம் என்னலும் ஆம். இதனில் ஆயுதவகைகள் கூறப்பட்டன.

(பி-ம்.) 2. கூர்வே றழலொளி வட்டம் சாபம்: சக்கர மழுக்கள்: எழுவிற் சாபம்.
3. காமர்தண் டெழுக்கள் காந்துங்; காமர்தண் டிலேவேல் சூலங்: காமர்தண் டிலேவே லேந்துங். 4. மயங்க மாதோ. (7)

819. எத்திய வயில்வேல் குந்த மெழுமுத லினைய வேந்திக்
குத்திய திளைப்ப மீதிற் குழுவின மழைமாக் கொண்டல்
பொத்துகள் பொருவி னன்னீர் சொரிவன போவ போலச்
சித்திரப் பதாகை யீட்டந் திசைதொறுஞ் செறிவ செல்ல

எத்திய - தாக்கி எறியப்பட்ட, அயில் வேல் குந்தம் - கூரிய வேல் கள் எறியீட்டிகள், எழு முதல் - இரும்புத் தடிகள் முதலான, இனைய - இத்தகைய பல ஆயுதங்களை, ஏந்தி - கைகளில் ஏந்தினவர்களாய், குத் திய திளைப்ப-குத்திக் குடைய, மீதில் குழுவின மழை மா கொண்டல் - மேலே கூடியிருந்த மழையைப் பொழியக்கூடிய பெரும் நீருண்ட மேகங்கள், பொத்து உகள் - பொள்ளப் பட்டுச் சிந்தும், பொருவு இல் நல் நீர் சொரிவன போவ போல - ஒப்பில்லாத நல்ல நீரைச் சொரிவன

வாய் போவன போல, சித்திர பதாகை ஈட்டம் - அழகிய கொடிகளின் கூட்டம், திசைதொறும்-எல்லாத்திசைகளிலும், செறிவ செல்ல-அடர்ந் தனவாய்ப் போக.

எற்றிய என்பது எதுகை நோக்கி எத்திய என வந்தது. அவ்வரக்கர் கள் ஏந்திய அயில் முதலிய ஆயுதங்கள் தாக்கிக் குத்திக் குடைந்ததால் மேலே கூடியிருந்த மேகங்கள் துளைக்கப்பட்டு, நழுவி விழுந்த நல்ல நீரைச் சொரிவனவாய்ப் போகின்றவை போலச் சித்திரக் கொடிகளின் கூட்டம் நாற்றிசைகளிலும் செறிய அச்சேனை சென்றது என்க. கொடி கள் வானத்தை முட்டிச் சென்றன என்றும் பொருள் கொள்ளலாம். சித்திரப் பதாகை - சித்திரங்கள் எழுதிய கொடிகளும் ஆம்.

(பி-ம்.) 1. எத்திய வலிவேல்: எழுக்கழு முதல வேந்தி: முதலனைய வேந்திக்: எழு மழு முதல வேந்தக்.
2. மழைமாக் கொண்மூப்; மதமாக் கொண்டல்: குத்திய விசும்பின் மேய குலமழைக் கொண்டல் கீறப்.
3. பொத்துகு பொருவி: பொத்துள போல நன்னீர்; பொத்துகு சொரிந்த நீரின் வெள்ளங்கள் போவ தேபோல்.
4. பதாதி யீட்டந்: செறிந்து செல்ல; செல்லச் செல்ல: செறிய செல்ல; செறியச் செல்ல; செறிந்து போய. (8)

820 பல்லியந் துவைப்ப நன்மாப்
பணிலங்கண் முரலப் பொற்றேர்ச்
சில்லிக ளிடிப்ப வாசி
சிரித்திடச் செறிபொற் றாரும்
வில்லுநின் றிசைப்ப யானை
முழக்கம்விட் டார்ப்ப விண்டோய்
ஒல்லொலி வானிற் றேவ
ருரைதெரி வொழிக்க மன்னோ.

பல்லியம் துவைப்ப - பலவகை வாத்தியங்கள் ஒலிக்க, நல் மா பணிலங்கள் முரல - அழகிய உயர்ந்த பெரிய சங்குகள் முழங்க, பொன் தேர் சில்லிகள் இடிப்ப-பொன்னாலமைந்த தேர்களின் சக்கரங்கள் (வேக மாய் உருள்வதால்) ஒலியை உண்டாக்க, வாசி சிரித்திட - குதிரைகள் சிரிப்பனபோலக் கனைக்க, செறி பொன் தாரும் வில்லும் - அடர்ந்த பொன்னால் அமைந்த கிண்கிணிமாலைகளும் வில்லும், நின்று இசைப்ப - ஆங்காங்கு நிலைத்து ஒலி செய்ய, யானை முழக்கம் விட்டு ஆர்ப்ப - யானை கள் பெரு முழக்கத்தை உண்டாக்கிப் பிளிற, விண் தோய் ஒல் ஒலி - (இவ்வாறாகத் தோன்றி) வானில் எட்டிய ஒல் என்னும் ஓசை, வானின் தேவர் உரை தெரிவு ஒழிக்க - ஆகாயத்தில் உள்ள தேவர்கள் பேசும்

வார்த்தைகளைத் தெரிந்து கொள்ள முடியாமல் நீக்கி விட, மன், ஓ: அசைகள்.

சில்லி - தேர்ச் சக்கரம்; பால. கடிமணப்: 71. பொற்றார்-பொற் கிண்கிணிமாலை; 'உரத்தகைப் பொற்றாரரற்று மார்பில்' (பெருங். 1, 38. 326). ஒல் - அனுகரணம்; அயோத்யா. ஆற்றுப்: 22, 27.

(பி-ம்.) 1. பணிலங்கள் முழங்கப் பொற்றேர்ச்: ப.'.றேர்ச்; பைம்பொற்.
3. வில்லிநின் றிசைப்பு மானை முழக்கம்; வில்லிநின் றார்ப்பு மானை முழக்கம்; வில்லிநின் றிசைப்பும் யானை: முழக்கும்விண் டரர்ப்ப.
4. எல்லொலி வானிற் றேவ ரைத்தொழி லிரைத்த மன்னோ: உரைத்தொழி லொழித்த மன்னோ: ஒழிக்கு மன்னோ: தேவ ரொண்செவி யடைத்த மாதோ. (9)

821. *மின்னகு கிரிகள் யாவு மேருவின் விளங்கித் தோன்றத்*
*தொன்னகர் பிறவு மெல்லாம் பொலிந்தன துறக்க மென்ன*
*அன்னவன் சேனை செல்ல வார்கலி யிலங்கை யாய*
*பொன்னகர் தகர்ந்து பொங்கி யார்த்தெழு தூளி போர்ப்ப.*

அன்னவன்சேனை செல்ல-(இவ்வாறு), அந்தச் சம்புமாலியின் படைகள் செல்வதால், ஆர்கலி இலங்கை ஆய-கடல் சூழ்ந்த இலங்கை என்னும், பொன் நகர் - பொன்னாலமைந்த நகரம், தகர்ந்து - சிதைபட்டு, ஆர்த்து எழு தூளி - அதனால் உண்டாகிய முழக்கமிட்டெழும் தூசிகள், பொங்கி போர்ப்ப - மேற்கிளம்பிப் போர்த்தது போலப் படிந்ததாலே, மின் நகு-ஒளியால் விளங்குகின்ற, கிரிகள் யாவும்-மலைகள் எல்லாம், மேருவின் விளங்கித் தோன்ற-மேரு மலை போலப் பிரகாசித்து விளங்க, தொல் நகர் பிறவும் எல்லாம் துறக்கம் என்ன பொலிந்தன - பழமையான அந்த இலங்கை நகரும், அதனைச் சார்ந்த மற்றவை யாவும் பொன்னுலகமான சுவர்க்கலோகம் போல விளங்கின.

நகுதல் - விளங்குதல்; 'பொன்னக் கன்ன சடை' (தேவா. 644. 1.) மேருவின் தோன்றியது; மேருவைப் போலப் பொன்னிறமாய் அல்லது மேருவை விடப் பொன்னிறமாய் என்னலும் ஆம். துறக்கம் - பொன்னுலகம்.

(பி-ம்.) 1. மின்னுகு கிரிகள்; மின்னுகு கரிகள்: விளங்கத் தோன்ற: மன்னிய மலைக ளெல்லா மேருவின் வயங்கத் தோன்ற.
2. பொன்னகர்: பலவு மெல்லாம்: பொலிந்தது: நன்னில மான தெல்லாம் நாகரு ரான தென்ன. 3. சேனை யெல்லா மார்கலி.
4. பொன்னகர் துறந்து: கரந்து: எழுந்தூளி; போர்க்க: பொன்னக ரெழுபொற் றூளி யெங்கணும் பொலிந்த தம்மா. (10)

822. ஆயிர மைந்தொ டைந்தா மாழியந் தடந்தே ரத்தேர்க்
கேயின விரட்டி யானை யானையி னிரட்டி பாய்மா
போயின பதாதி சொன்ன புரவியி னிரட்டி போலாம்
தீயவன் றடந்தேர் சுற்றித் தெற்றெனச் சென்ற சேனை.

தீயவன் தடம் தேர் சுற்றி - கொடியோனான அந்தச் சம்புமாலியின் பெரும் தேரைச் சூழ்ந்து, தெற்று என சென்ற சேனை - விரைவாகப் போன அச்சேனையில், ஐந்தோடு ஐந்து ஆயிரம் - பத்தாயிரம், ஆழி அம்; தடம் தேர் ஆம் - சக்கரங்களையுடைய அழகிய பெரிய தேர்கள் ஆம் அ தேர்க்கு இரட்டி ஏயின யானை-அத் தேர்களுக்கு இரு மடங்கு பொருந்தின யானைகள் (ஆகும்); யானையின் இரட்டி பாய்மா - அந்த யானைகளைப் போல இரு மடங்கு குதிரைகள் (ஆகும்); போயின பதாதி- அவனுடன் போன காலாட்கள், சொன்ன புரவியின் இரட்டி போல் ஆம் - முன் சொன்ன குதிரைகளின் இரு மடங்கு போல் ஆகும்.

ஆகவே சம்புமாலியுடன் சென்ற சேனைகளில் தேர்கள் பதினாயிரம், யானைகள் இருபதாயிரம், குதிரைகள் நாற்பதாயிரம், காலாட்கள் எண்பதாயிரம் என்க. இது, சேனையின் தொகுதி கூறியது.

(பி-ம்.) 1. ஆயிரந் தடந்தே ரத்தேர்க் (கு); ஆழியந் தேரத் தேர்க்கு: தடந்தேர் தொக்க; ஆயிரத் திரட்டி கோடி யாழியந் தடந்தேர் சூழ்ந்த. 2. ஏயத னிரட்டி யானை.
4. சுற்றத் தெற்றென: தேர் சூழ்ந்து போயின சேனை யம்மா. (11)

823. வின்மறைக் கிழவர் நானு விஞ்சையர் வரத்தின் மிக்கார்
வன்மறக் கண்ண ராற்றல் வரம்பிலா வயிரத் தோளார்
தொன்மறக் குலத்தர் தூணி தூக்கிய புறத்தர் மார்பாம்
கன்மறைத் தொளிருஞ் செம்பொற் கவசத்தர் கடுந்தே ராளர்.

கடும் தேராளர் - வேகமாய்ச் செல்லும் தேர் வீரர்கள், வில் மறை கிழவர் - தநுர் வேதத்தில் தேர்ந்தவர்; நானு விஞ்சையர் - பல வித்க் கலைகள் அறிந்தவர்; வரத்தின் மிக்கார் - பெற்ற வரங்களால் சிறந்தவர் கள்; வன் மற கண்ணர் - வலிய வீரத்தைக் காட்டும் கண்களை யுடையவர்; வரம்பு இலா ஆற்றல் வயிர தோளார்-எல்லையில்லா வலிமை வாய்ந்த வயிரம் போன்று உறுதியான தோள்களையுடையவர்; தொல் மற குலத்தர் - பழமையான வீரக்குடியில் தோன்றியவர்கள்; தூணி தூக்கிய புறத்தர் - அம்புப் புட்டிலைத் தொங்கக் கட்டிய முதுகை யுடையவர்கள்; மார்பு ஆம் கல் மறைத்து ஒளிரும் செம் பொன் கவசத் தர் - மார்பாகிய மலையை மறைத்து விளங்கும் சிவந்த பொன்னாலான கவசங்களையுடையவர்கள்.

கிழவர் - உரியவரும் ஆம்; கிழமை-உரிமை; இரு நிலக் கிழவன் என்பதுபோல. விஞ்சை-மாய வித்தையும், மந்திர வித்தையும் ஆம்; 'விஞ்சைவினை செய்தான்'; 489. இது தேரர் திறமை கூறியது.

(பி-ம்.) 1. **நாணு விஞ்சையர்: நாளும் விஞ்சையர்; காணு விஞ்சையர்: வரத்தின் மிக்கோர்.**
2. **வன்மறைக் கண்ணர்; வன்மரத் தண்ணல்: வரம்பிலார்: தோளான்.**
3. **தொன்மறைக் குலத்தர்; மழைக் குலத்தர்.**
4. **கன்மறைத் திமைக்குஞ்.** (12)

824. *பொருதிசை யானை யூரும் புனிதரைப் பொருவும் பொற்பர்*
*சுரிபடைத் தொழிலு மற்றை யங்குசத் தொழிலுந் தொக்கார்*
*நிருதியிற் பிறந்த வீரர் நெருப்பிடை பொழியும் கண்ணர்*
*பரிதியிற் பொலியு மெய்யர் படுமதக் களிற்றின் பாகர்.*

படு மத களிற்றின் பாகர் - உண்டாகும் மதத்தையுடைய ஆண் யானைகளைச் செலுத்தும் போர்வீரர்கள், பொரு திசை யானை ஊரும் புனிதரை பொருவும் பொற்பர் - போரிடும் திசையானைகளை ஊர்ந்து செல்லும் பரிசுத்தரான திக்பாலர்களை நிகர்க்கும் பொலிவு அமைந்தவர்கள்; சுரி படைத் தொழிலும்-வாட்படைத் தொழிலிலும், மற்றை அங்குசத் தொழிலும் தொக்கார் - மற்றும் அங்குசம் கொண்டு யானையைச் செலுத்திப் போர் புரியும் தொழிலிலும் சேர்ந்து தேர்ந்தவர்கள்; நிருதியின் பிறந்த வீரர் - நிருதியென்னும் தென் மேற்குத் திக்கிற்குரிய காவல் மகளின் வழியில் பிறந்த வீரர்கள்; நெருப்பு இடை பொழியும் கண்ணர்- நெருப்பை இடையிடையே பொழிகின்ற கண்களையுடையவர்கள்; பரிதியில் பொலியும் மெய்யர் - சூரியனைப்போல (ஒளிவிட்டு) விளங்கும் உடலை உடையவர்கள்.

சுரிபடை - வாளாயுதம்; சுரிகை என்பதின் முதனிலைத் தொழிற்பெயர்; சுருள் வாளும் ஆம். அங்குசம் - யானைத் தோட்டி என்னும் ஒரு படை. நிருதி - தென்மேற்குத் திக்குக்குக் காவலாய் உள்ள ஒரு பெண் தெய்வம்; அவள் வழியிற் றோன்றினமையால் இவர்கள் நிருதர் எனப் பெயர் பெற்றனர்; இவர்கள் அரக்கரில் ஒரு வகையர் என்றும், தேவ கணங்கள் பதினெண் வகையினருள் ஒருவராவர் என்றும் சொல்லப் பெறுவர். ஆனால் அரக்கர்களை நிருதர் என்ற பெயராலே குறிக்கப் பெறுவதும் உண்டு. ஆரண்ய. விராதன்வதைப்: 29, 35: சூர்ப்பணகைப்; 56, 138. இச்செய்யுள் களிற்றின் பாகரான வீரர் திறம் கூறியது.

(பி-ம்.) 1 பொருந்திசை: ஊரும் புரந்தரன் போலும் பொற்பர்.
2. சொரிபடைத்: மற்று மங்குசத்; தொழிலும் வல்லார்.
3. நெருப்பென நீட்டுங் கண்ணர்: நெருப்புரை நீட்டுங்: நெருப் பிடை பரப்பும்: நெருப்புறை நீக்குங்.
4. பரிதியிற் பொலிந்த: மதக் கரியின் பாகர். (13)

825. *ஏர்கெழு திசையுஞ் சாரி பதினெட்டு மியல்பி னெண்ணிப்*
*போர்கெழு படையுங் கற்ற வித்தகப் புலவர் போரில்*
*தேர்கெழு மறவர் யானைச் சேவகர் திறத்திற் செல்லும்*
*தார்கெழு புரவி யென்னத் தம்மனந் தாவப் போனார்.*

ஏர் கெழு திசையும் - எழுந்து செல்ல வேண்டிய திசைகளையும், சாரி பதினெட்டும் - பதினெட்டு வகைகளான சாரிகளையும், இயல்பில் எண்ணி - எண்ண வேண்டிய முறைப்படி ஆராய்ந்து, போர் கெழு படையும் கற்ற - போர்க்குரிய ஆயுதங்களையும் கையாளக் கற்றுத் தேர்ந்த, வித்தக புலவர் - அறிவாளிகளான குதிரை வீரர்கள், போரில் தேர் கெழு மறவர்-போரில் தேர் செலுத்தும் வீரர்களுடையவும், யானை சேவகர் - யானை வீரர்களுடையவும், திறத்தில் - சார்பில், செல்லும் தார் கெழு புரவி என்ன - தாம் ஏறிச்செல்லும் கிங்கிணி மாலைகள் விளங்கும் குதிரைகளைப் போல, தம் மனம் தாவ போனார் - தம்மனமும் முன்னே தாவிச் செல்ல அப்போர்க்களத்தை நோக்கிச் சென்றனர்.

புலவர், மறவர் சேவகர் திறத்தில் புரவி என்ன மனம் தாவப் போனார் என்க. சாரி பதினெட்டு - குதிரைகள் செல்லும் பதினெட்டு வகைக்கதி பேதங்கள்: பு. வெ. 356. 'புரவியென்னும் தம்மனம் என்றது, குதிரை புத்திக்கு ஒத்த வண்ணம் நடக்கையினாலே அந்தக் குதிரைதானே அவர் கள் மனம்' என்பது பழைய உரை. குதிரையே தம் மனமாகக் கொண்டு அதையன்றி வேறொன்றையும் கருதாதவர் என்றும், குதிரை போல விரைவாய்ச் செல்லும் மனமுடையவர் என்றும் பொருள் கொள்ளலு மாம். 'புரவி முன்னந் தம்மனம் தாவச் சென்றார்' என்று பாடம் கிடைப் பின் சிறக்கும். இது, குதிரை வீரர் திறம் கூறியது.

(பி-ம்.) 1. ஏர்கெழு கதியும்; குசையும்; ஈரெழு திசையும்; ஈரெழு புவியும்.
2. பொர்செழும் புடையும்: வித்தகர் புலவர்; வித்தகப் பொருநர் மேலாம்.
3. சினத்திற் செல்லும்; சரத்திற் செல்லும்: தேர்வரு மறவர் யானைச் சேவகர் திறத்திற் செல்லார்.
4. தாவிப் போவார்: புரவிப் பாகர் தாவிமேல் விசும்பிற் போனார். (14)

826. *அந்நெடுந் தானை சுற்ற வமரரை யச்சஞ் சுற்றப்*
*பொன்னெடுந் தேரிற் போனுன் பொருப்பிடை நெருப்பிற் பொங்கித்*
*தன்னெடுங் கண்கள் காந்தத் தமனியக் கவச மார்பின்*
*மின்னிட வெயிலும் வீச வில்லிடு மெயிற்று வீரன்.*

வில் இடும் எயிற்று வீரன் - ஒளியை உண்டாக்கும் பற்களையுடைய வீரனை சம்புமாலி, பொருப்பு இடை நெருப்பில் பொங்கி - மலையிட மிருந்து நெருப்பு எழுந்தாற் போல மேற்கிளம்பி, தன் நெடும் கண்கள் காந்த-தனது நீண்ட கண்கள் ஒளி வீச, தமனிய கவசம் மார்பின் மின்னிட - (தான் அணிந்திருந்த) பொற்கவசம் மார்பிலே மின்ன, வெயிலும் வீச - வெயில் போல ஒளியும் வீச, அ நெடும் தானை சுற்ற - மேற்கூறிய அந்த நால்வகைச் சேனைகளும் தன்னைச் சுற்றிவர, அமரரை அச்சம் சுற்ற - தேவர்களைப் பயம் சூழ்ந்து கொள்ள, பொன் நெடும் தேரில் போனுன் - பொன்னாலமைந்த ஒரு பெரிய தேரில் ஏறிச் சென்றான்.

அமரரை அச்சம் சுற்றியது, இவனால் அநுமனுக்கு ஆபத்து வருமோ என்று. பொருப்பிடை நெருப்பில் என்பதை, நெருப்பிடை பொருப்பில் எனமாற்றி, நெருப்பைத் தன்னிடங் கொண்ட எரிமலை போல, எனவும் பொருள் கொள்ளலாம். இடை - இடம்: இது ஏழனுருபு, காந்துதல் - ஒளி வீசுதல்; 687.

(பி-ம்.)
1. அந்நெடுந் தானை சூழ வமாருக் கச்சஞ் சூழ.
2. தேரி னேறிப் பொருபடை: போன பொருபடை நெருப்பிற்; நெருப்புப் பொங்கி.
3. தாழ்பெருங் கவச மார்பின்: காந்தித் தாரொடுங் கவச மார்ப்ப; காந்தத் தாரொடு கவச மார்பின்: கவச மார்ப்ப.
4. மின்னிடை வெயிலும்; மின்னெடு வெயிலும்; மின்னெடு வெயிலே: வில்லொடு மெயிற்று வீரன்; நிலவுகு மெயிற்று வீரன்; எயிற்றின் வீரன். (15)

## படைகண்ட அநுமன் நிலையும் செயலும் 827-33

827. *நந்தன வனத்து ணின்ற நாயகன் றூதன் றானும்*
*வந்தில ரரக்க ரென்னு மனத்தினன் வழியை நோக்கிச்*
*சந்திரன் முதல வானமீனெலாந் தழுவ நின்ற*
*இந்திர தனுவிற் றேன்றுந் தோரண மிவர்ந்து நின்றான்.*

நந்தன வனத்துள் நின்ற நாயகன் தூதன் தானும்-அந்த அசோகவன மென்னும் நந்தவனத்தில் தனித்து நின்ற தலைவனை இராமபிரான் தூதனை அநுமனும், 'வந்திலர் அரக்கர் என்னும் மனத்தினன் - மேலும்

அரக்கர்கள் தன்னுடன் போர்க்கு வரவில்லையே' என்ற எண்ணமுடைய வனுகி, வழியை நோக்கி - அவர்கள் வரும் வழியைப் பார்த்து, சந்திரன் முதலவான மீன் எலாம் - சந்திரனைத் தம் தலைவனுகக் கொண்ட வானில் உள்ள நட்சத்திரங்களெல்லாம், தழுவ நின்ற - சூழ்ந்திருக்க விளங்கிய, இந்திர தனுவில் தோன்றும்-இந்திர வில் என்னும் வான வில்லைப் போலத் தோன்றிய, தோரணம் இவர்ந்து நின்றுன் - ஆங்கிருந்த தோரணவாயில் மீது ஏறி நின்றுன்.

நாயகன் - எல்லோருக்கும் தலைவனுன இராமபிரான். நாயகன் தூதன்: 1125; உயுத்த அங்கதன் தூது. 21, இந்திரதனு பகலில் தான் தோன்றும்; இரவில் நட்சத்திரங்களோடு விளங்காது; ஆதலால் இங்கு இந்திரதனுவைத் தோரணத்திற்கு உவமித்தது இல்பொருள் உவமையெனக் கொள்ளற் பாலதாம், இந்திரவில் பல நிற ஒளிகளை வெளியிடுவது போலத் தோரணமும் பல இரத்தினங்களால் ஆக்கப் பெற்றமையால் பலநிற ஒளிகளை வீசி நின்றது என்க. தோரணத்திற்கு இந்திரவில்; 951. தோரணத்தின்மீது அநுமன் நின்றது; 892, 951. தோரணவாயில்: பால. நகரப். 71; சிலப். 5: 104: திருப்பாவை: 16. இராசராச. உலா. 80. இத் தோரணவாயில், இராவணன் இந்திரனைப் போரில் புறங்கண்டு அவன் தலைநகராகிய அமராவதியில் இருந்ததை அபகரித்து இங்கு அசோக வனத்தின் வாயிலில் கொண்டு வந்து வைத்த ஓர் அலங்கார வாயில்; 892.

(*பி-ம்.*) 1. வனத்தி னின்ற.
3. முதல்வ ரான: வான தாரகை தவழ நின்ற: தழூவி நின்ற:
4. தனுவி னின்ற தோரணம்: தோரண மேறி நின்றுன்; தோரணத் தேறி நின்றுன். (16)

828. *கேழிரு மணியும் பொன்னும் விசும்பிருள் கிழித்து நீக்கும்*
*ஊழிருங் கதிர்க ளோடுந் தோரணத் தும்பர் மேலான்*
*சூழிருங் கதிர்க ளெல்லாந் தொக்கிடச் சுடருஞ் சோதி*
*ஆழியி னடுவட் டோன்று மருக்கனே யனைய னுனுன்.*

கேழ் இரு மணியும் பொன்னும்-நிறம் அமைந்த பெரிய இரத்தினங் களும் பொன்னும், விசும்பு இருள் கிழித்து நீக்கும் - வானில் இருந்த இருளைக் கிழித்துப் போக்கும், ஊழ் இரும் கதிர்களோடு - முதிர்ந்த பெரிய கிரணங்களோடும் கூடிய, தோரணத்து உம்பர் மேலான் - அத் தோரண (வாயிலின்) மேல் ஏறி நின்ற அநுமன், சூழ் இரும் கதிர்கள் எல்லாம் தொக்கிட - தன்னைச் சூழ்ந்து பெரும் கிரணங்கள் யாவும் ஒன்று கூடிட, ஆழியின் நடுவண் தோன்றும் - கடலின் இடையே உதித்து விளங்கும், சுடரும் சோதி அருக்கனே அனையன் ஆனுன் - சுடர் விட்டுப் பிரகாசிக்கும் சூரியனை ஒப்பானவன் ஆனுன்.

அனையன் ஆழியின் நடுவட்டோன்றுமருக்கனே ஆனன், என இயைத்துப் பொருள் கோடலும் ஒன்றும்; அனையன் - அத் தோரணத் தும்பர் நின்ற அநுமன். அநுமனுக்குச் சூரியன்: 30.

(பி-ம்.) 1. கிழித்து விங்க; கழித்து நீங்க:
2. ஊழொடு கதிர்; கதிர்கள் வீசுந் தோரணத்
3. சூழிருங் கோட்க ளெல்லாம்; கொடிக ளெல்லாம்: தொத் திடச் சுடரும்; தோற்றிடச்: தொத்திடத் தொடரும்.
4. ஆழியங் கிரியிற் றேன்று: நடுவுட் டோன்று மருக்கனு மனைய னானன். (17)

829. *செல்லொடு மேகஞ் சிந்தத் திரைக்கடல் சிலைப்புத் தீரக்*
*கல்லளை கிடந்த நாக முயிரொடு விடமுங் காலக்*
*கொல்லிய லரக்கர் நெஞ்சிற் குடிபுக வச்சம் வீரன்*
*வில்லென விடிக்க விண்ணேர் நடுக்குற வீர னார்த்தான்*

செல் ஒடு மேகம் சிந்த - இடியோடு மேகங்கள் சிதறிவிழ, திரை கடல் சிலைப்பு தீர - அலைகளையுடைய கடல் தன் ஒலி அடங்கிப் போக, கல் அளை கிடந்த நாகம் உயிர் ஒடு விடமும் கால - மலைப் பொந்துகளில் தங்கிக் கிடந்த பாம்புகள் தம் உயிரையும் விஷத்தையும் ஒன்று சேர்ந்து கக்க, கொல்லியல் அரக்கர் நெஞ்சில் அச்சம் குடிபுக - பிறரைக் கொல்லும் தன்மையுடைய அரக்கர்தம் மனத்தில் பயம் வந்து அடைய, விண்ணோர் நடுக்கு உற - தேவர்கள் நடுக்கம் அடைய, வீரன் வில் என இடிக்க - (ரகுவீரனை இராமபிரான் கோதண்ட மென்னும்) வில்லின் நாணொலி போல முழக்க, வீரன் ஆர்த்தான் - சிறந்த வீரனை அநுமன் கர்ச்சனை செய்தான்.

செல் - இடி; பரிபாடல். 13: 44; பிங்களம். செல் என்பதற்கு வானம், மேகம், இடி என்னும் பொருள்களும் உண்டு. இங்குச் செல் லொடு மேகம் என்றமையால், இடி எனப் பொருள் கொள்ளப்பட்டது அளை - பொந்து. அளை கிடந்த நாகம்: 'அளைபுகு மரவு' (பால. திருவ வதாரப்: 106.) இடி ஓசைக்கு நாகம் நடுங்குதல்; பால. கார்முகப். 35; உலாவியற் 30; நாலடி: 164. 'மானம் வில்லென வெடிக்க' என்று பாடங்கொண்டு, 'அரக்கர் கைவில் முறிந்தது போலப் பெருமை யும் கெட்டது' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. செல்லிடு மேகம்: மேகஞ் சிந்தித்: செல்லிடு வுருவுஞ் சிந்தத் திரைக்கட லிரைப்புத் தீர.
2. கல்லுழைக்; கல்லணை; கல்லளைக்; நாக ருயிரொடு.

3. கொல்லெயிற் றரக்கர்: அச்சம் வானம்: அச்ச மானம்.

4. வில்லென வெடிக்க; வேட்க; வில்லெலா மிடிக்க; வில்லொடு மிடிய.

830. *நின்றன திசைக்கண் வேழ நெடுங்களிச் செருக்கு நீங்கத்*
*தென்றிசை நமனு முள்ளந் துணுக்கெனச் சிந்த வானில்*
*பொன்றலின் மீன்க ளெல்லாம் பூவென வுதிரப் பூவும்*
*குன்றமும் பிளக்க வேலை துளக்குறக் கொட்டி னன்றோள்.*

திசை கண் நின்றன - எட்டுத் திக்குக்களிலும் நின்றவையான, வேழம் நெடும் களி செருக்கு நீங்க - யானைகள் தம் பெரிய மதக் களிப்பினால் உண்டாகும் கருவம் நீங்க, தென் திசை நமனும் - தெற்குத் திசையில் உள்ள (அத்திசைக்குத் தலைவனான) யமனும், துணுக்கு என உள்ளம் சிந்த-திடுக்கிட்டு மனம் சிதற, வானில் பொன்றல் இல் மீன்கள் எல்லாம் - ஆகாயத்தில் உள்ள அழிவு பெறாத நட்சத் திரங்கள் யாவும், பூ என உதிர - பூக்களைப் போலக் கீழே உதிர்ந்து விழ, பூவும் குன்றமும் பிளக்க - பூமியும் (அதன் மேலுள்ள) மலைகளும் பிளந்து போக, வேலை துளக்கு உற - கடல்கள் கலங்க, தோள் கொட்டினன் - (அநுமன்) தன் தோள்களைத் தட்டினான்.

நமனும்: உம்மை உயர்வு சிறப்பினது; நமன் எல்லா உயிர்களையும் கவர்ந்து செல்லும் ஆற்றல் மிக்கோனாதலின். பூ என - மென்மையான பூக்கள் உதிர்வன போல. பூ - பூமி வடசொல். இங்குப் பூ, மலர், பூமி என்னும் பொருள்களில் வந்தன. தோள் கொட்டுதல் வெற்றியைக் குறிக் கும் வீரர்களின் செயல்; 3; ஆரண்ய. சடாயுவுயிர். 118.

(பி-ம்.) 1. நின்றிடு திசையின் வேழ.
2. உள்ள நடுக்குறச் சிந்தி; உள்ளந் திடுக்கிடச் சிந்தி: சிந்தி வானில். 3. பொன்றவிண் மீன்: உதிர்ந்து பூவும்.
4 குன்றமும் பிளப்ப; பிளந்து; பிளக்க வீரன் புயத்திடைக் கொட்டி யார்த்தான். (19)

831. *அவ்வழி யரக்க ரெல்லா மலைநெடுங் கடலி னார்த்தார்*
*செவ்வழிச் சேற லாற்றார் பிணப்பெருங் குன்றந் தெற்றி*
*வெவ்வழிக் குருதி வெள்ளம் புடைமிடைந் துயர்ந்து வீங்க*
*எவ்வழிச் சேறு மென்றார் தமருடம் பிடறி வீழ்வார்.*

அவழி- அப்போது, அரக்கர் எல்லாம்-போருக்குச் சென்ற அவ்வரக் கர்கள் யாவரும், அலை நெடும் கடலின் ஆர்த்தார்-அலைகளோடு கூடிய

பெரும் கடலைப் போலக் கர்ச்சித்தார்கள்; செம் வழி சேறல் ஆற்ருர் - அவர்கள் சரியான நல்ல வழியே போக முடியாதவர்களாகவும், பிண பெரும் குன்றம் தெற்றி - பிணங்களாகிய பெரிய குன்றுகளால் தடுக்கப் பெற்று, வெம் வழி குருதி வெள்ளம் - கொடிய வழிகளில் வந்த இரத்த வெள்ளமானது, புடை மிடைந்து உயர்ந்து வீங்க - பக்கங்களில் நெருங்கி மேலோங்கி அதிகரிக்க, எ வழி சேறும் என்ருர் - எவ்விதமாய் நாம் போர்க்களம் போய்ச் சேருவோம் என்று மயங்கினவர்களாகவும், தமர் உடம்பு இடறி வீழ்வார் - (இதற்கு முன் இறந்து கிடந்த) தம் சுற்றத்தவரான அரக்கர்களுடைய உடம்புகளின் மீது இடறி வீழ்வாராயினர்.

செவ்வழி - நேர்ப்பாதை.

(பி-ம்.) 1. மழை நெடுங் கடலின்: கடலி லார்த்தார்.
2. சேறல் செல்லார்: செவ்வழி செல்ல லாற்ருர்; குன்றத் தேறி; குன்றஞ் செற்றி; குன்றத் தேற்றி.
3. வெள்ளம் படைமிடைந்; படையொடு மிடைந்து வீங்க; படைமிடைந் துதைந்து வீங்க: மிடைத்துயர்ந்து: வெள்ளத் திடைதடு மாறி வீங்கி.
4. இவ்வழிச் சேரும்: தமருட லிடறி வீழ்வார்; தமருட னிடறி. (20)

832. *ஆண்டுநின் றரக்கன் வெவ்வே றணிவகுத் தனிகந் தன்னை*
*மூண்டிரு புடையு முன்னு முறைமுறை முடுக வேவித்*
*தூண்டினன் ருனுந் திண்டேர் தோரணத் திருந்த சூரன்*
*வேண்டிய தெதிர்ந்த தென்ன வீங்கினன் விசயத் திண்டோள்.*

அரக்கன் - அரக்கனுகிய சம்புமாலி, ஆண்டு நின்று - தான் நின்ற அவ்விடத்திலேயேயிருந்து, அனிகம் தன்னை வெவ்வேறு அணிவகுத்து - சேனைகளை வேறு வேறு பிரிவுகளாக வரிசைப் படுத்தி, இருபுடையும் முன்னும் மூண்டு முறை முறை முடுக ஏவி - தன் இருபுறமும் முன்னும், மேற்கிளம்பி வரிசை வரிசையாய் வேகமாகச் செல்லக் கட்டளையிட்டு, தானும் திண் தேர் தூண்டினன் - தானும் தனது வலிய தேரைச் செலுத்திச் சென்ருன்; (இதனைக் கண்ட), தோரணத்து இருந்த சூரன் - (அங்கிருந்த) தோரண வாயில் மேல் இருந்த சூரனை அநுமன், வேண்டியது எதிர்ந்தது என்ன - தான் விரும்பியது வந்து தன் முன் எதிர்ப்பட்டது என்று, விசய திண் தோள் வீங்கினன் - தனது வெற்றி தரும் (வீரத்) தோள்கள் பூரிப்படைந்தான்.

தோரணத்து மேல் அநுமன் இருந்தது; 827. விசயத்திண்டோள்; விசயம் வைகும் விலங்கற்ருே ளலங்கல் வீர' (15.) 'வந்தில ரரக்க

ரென்னும் மனத்தினன் வழியை நோக்கி......நின்ருன் (827) என்று கூறிய தற்கு ஏற்ப, 'வேண்டிய தெதிர்ந்த தென்ன வீங்கினன்' என்னப் பட்டது.

(பி-ம்.) 1. ஆண்டுநின் றனிகந் தன்னை யணிவகுத் தரக்கன் வேறு: அரக்கன் வேருே ரணி.

2. மூண்டிரு படையும்; மூண்டரு படையு முன்னு முறைமுறை பெருக வேவி: மூச வேவி: பருகு வேவித்: விரைவி னேவி.

3. இருந்த தோன்றல்; வீரன்.

4. எதிர்ந்தா ரென்ன; எதிர்ந்தா னென்னு; வேண்டிய திருந்தா னென்ன: விசயத் தோள்கள். (21)

833. *ஐயனு மமைந்து நின்ரு னுழியா னளவி னுற்றல்*
*நெய்சுடர் விளக்கிற் ருேன்றும் நெற்றியே நெற்றி யாக*
*மொய்ம்மயிர்ச் சேனை பொங்க முரணமை யுகிர்வாண் மொய்த்த*
*கைகளே கைக ளாகக் கடைக்கூழை திருவா லாக.*

ஆழியான் - சக்கரப் படையுடைய திருமாலான இராமபிரானின், அளவு இல் ஆற்றல் - அளவற்ற வலிமையையுடைய, ஐயனும் - பெருமைக்குரிய அநுமனும், நெய் சுடர் விளக்கில் தோன்றும் நெற்றியே - நெய் ஊற்றப் பெற்றுச் சுடர் விட்டு ஒளிரும் விளக்கைப் போல விளங்கும் தன்னுடைய நெற்றியே, நெற்றி ஆக - முன்னணிச் சேனையாகவும், மொய் மயிர் சேனை பொங்க - தன் மேனியில் நிறைந்து விளங்கும் உரோமராசிகளே சேனை வீரர்களாக நிமிர்ந்து விளங்கவும், முரண் அமை உகிர் வாள் மொய்த்த கைகளே - வலிமை பொருந்திய நகங்களாகிய வாள்கள் மிகுதியாகக் கொண்ட அவன் இரு கைகளே, கைகளாக - இரு புறமும் அமைந்த பக்கச் சேனைகளாகவும், திரு வால் கடை கூழை ஆக - தன் அழகிய வாலே பின்னணிச் சேனையாகவும், அமைந்து நின்ருன் - (தானே தன் உருவை ஒரு போர்ப்படை) அமைப் பாக அணிவகுத்துக் கொண்டு நின்ருன்.

சேனைக்கு நெற்றி; முன்னணிப் படை.; 'நெற்றியி லரக்கர்பல செல்ல' (உயுத்த. ஒற்றுக் கேள்விப்; 6.) கைகள் - பக்கப் படைகள், பிங்களம். கூழை-பின்னணிப் படை எனப்படும்; 'கூழைதார் கொண்டி யாம் பொருதும்' (புறநா. 88. 1.) அநுமன் மேனியில் நிமிர்ந்து நிறைந்து நின்ற உரோமராசிகள் நடுப்படையில் நிற்கும் போர் வீரர்களுக்கு உவமிக்கப் பெற்றன. நெய் சுடர் விளக்கின்: ஒப்பு: 'நெய்யுறு விளக்கனுய்' (513).

(பி-ம்.) 1. அளவி னுற்ற; அளவி லாற்ற: அளவி னுமம்,

2. நெய்யெரி விளக்கிற்.

3. மயிர் சேனை யாக முரணுகிர் படைக ளாக; முரணுகிர் வில்வாள் மொய்த்த; முரணுகி ரயில்.
4. கடைக் குழை திருவா லாக (22)

## போர் 834-57.

834. *வயிர்கள்வால் வளைகள் விம்ம வரிசிலை சிலைப்ப மாயாப்*
*பயிர்களார்ப் பெடுப்ப மூரிப் பல்லியங் குமுறப் பற்றிச்*
*செயிர்கொள்வா ளரக்கர் சீற்றஞ் செருக்கினர் படைகள் சிந்த*
*வெயில்கள்போ லொளிகள் வீச வீரன்மேற் கடிது விட்டார்.*

வயிர்கள் வால் வளைகள் விம்ம - கொம்புகளும் வெண்மையான சங்குகளும் முழங்க, வரி சிலை சிலைப்ப-கட்டுக்கள் அமைந்த வில்லுகள் நாணோசை செய்ய, மாயா பயிர்கள் - ஒழியாத பறவை ஒலிகள், ஆர்ப்பு எடுப்ப - பேர் ஒலியை உண்டாக்க, மூரி பல்லியம் குமுற-வலிய பல வாத்தியங்கள் முழங்க, செயிர்கொள் வாள் அரக்கர் - பகைமை கொண்ட வாளேந்திய அரக்கர்கள், சீற்றம் செருக்கினர் - கோபத்தால் பெருமிதங் கொண்டவர்களாய், வெயில்கள் போல் ஒளிகள் வீச-வெயில் களைப் போலப் பல ஒளிகள் வீசும்படி, படைகள் பற்றி சிந்த - ஆயுதங் களை ஏந்திப் பொழிய, வீரன்மேல் கடிது விட்டார் - மகா வீரனான அநு மன் மீது விரைந்து (அவற்றை) விட்டனர் (பிரயோகித்தார்கள்.)

வயிர் - ஊது கொம்பு; பால. நகரப். 61. அரக்கர் படைகள் பற்றி வீரன் மேல் கடிது சிந்த விட்டனர் என இயைக்க. பயிர்-புள் ஒலி; பிங்க ளம். பறவை ஒலி போலொலிக்கும் வாச்சியங்களைக் குறித்தும்ஆம்.

(பி-ம்.) 1. வயிரவால் வளை: வார்சிலை: வரிசிலை வயங்கு நாணிற்: சிலை சிலம்ப மாயப்; சிலை யரவ மார்ப்ப: வயிர்கடாழ் பீலி தூம்பே ரடர்குறி வளைகள் காலம்.
2. பல்லிய முழங்கப் பற்றிச்: பல்லியந் துவைப்பப் பற்றிச்: எடுப் பப் பொங்கிப் பல்லியங் குமுறி யார்ப்பச்.
3. சீற்றச் செருக்கிடை படைகள் சிந்த சீற்றச் செருக்கின படை: சிந்தி.
4. வெயில் கொள்பே ரணிகள் வீச: கடிதின் விட்டார்; செல்ல விட்டார். (23)

வேறு

855. *கருங்கழ லரக்கர்தம் படைக்கலங் கரத்தால்*
*பெருங்கட லுறப்புடைத் திறுத்துகப் பிசைந்தான்*
*விரிந்தன பொறிக்குல நெருப்பென வெகுண்டான்*
*டிருந்தவன் கிடந்ததொ ரெழுத்தெரிந் தெடுத்தான்.*

ஆண்டு இருந்தவன் - அங்குத் தோரணவாயின் மீது இருந்த அநுமன், கரும்கழல் அரக்கர் தம் படைக்கலம் - பெரிய வீரக் கழலணிந்த அவ்வரக்கர்களுடைய ஆயுதங்களை, பெரும் கடல் உற - பெரிய கடலிடத்துப் போய் விழுமாறு, கரத்தால்-தன கைகளால், புடைத்து இறுத்து ஊக பிசைந்தான் - அடித்து ஒடித்துச் சிந்தப் பிசைந்து அழித்தெறிந்தான்; (பின் அவ்வநுமன்), விரிந்தன - எங்கும் பரவினவான பொறி குல நெருப்பு என-தீப் பொறிக் கூட்டத்தையுடைய நெருப்பைப் போல, வெகுண்டு - கோபம் கொண்டவன் ஆகி, கிடந்தது ஓர் எழு தெரிந்து எடுத்தான்-அங்குக்கிடந்த ஒரு கணையமரத்தைத் தேர்ந்து எடுத்துக்கொண்டான்.

விரிந்த பொறிக்குலம் என்பதற்கு வண்டின் கூட்டங்கள் அச்சத்தால் எங்கும் பரந்து ஓடின எனப்பொருள் கொள்ளலும் ஆம். பொறி - வண்டு: 691. எழு-கணையமரம்; சிறுபாண். 49. நச் உரை. முதனூலில் இது பரிகமெனப்பட்டது.

(பி-ம்.) 1. கருங்கட லரக்கர்: அரக்கர் விடு கைப்படை வலத்தாற்.
2. கட லுகப்: கடல் விழும்படிப் பிசைந்தவை யெறிந்தான்; திறத்துகப் பிசைந்தான்.
3. நிறைந்தெழு பொறிக்: வெகுண்டான்.
4. இருந்தனன் கிடந்ததோ: இரும்பென வியன்றதோ ரெழுத்தனி யெடுத்தான்: எழுத்தெழித் தெடுத்தான். (24)

836. *இருந்தன னெழுந்தன னிழிந்தன னுயர்ந்தான்*
*திரிந்தனன் புரிந்தன னெனநனி தெரியார்*
*விரிந்தவர் குவிந்தவர் விலங்கினர் கலந்தார்*
*பொருந்தினர் நெருங்கினர் களம்படப் புடைத்தான்.*

இருந்தனன் எழுந்தனன் இழிந்தனன் உயர்ந்தான் - (தோரண வாயின் மேல் இருந்த (அநுமன்) எழுந்து கீழ் இறங்கி நிமிர்ந்தவனாகி, திரிந்தனன் புரிந்தனன் என - அங்கு மிங்கும் திரிந்து போர் செய்தான் என்று, நனி தெரியார்-நன்கு தெரிந்து கொள்ள மாட்டாதவர்களாய், விரிந்தவர், குவிந்தவர் - பரவினவர்களும் சேர்ந்து குவிந்தவர்களும், விலங்கினர் கலந்தார் - விலகிச் சென்றவர்களும், ஒன்று படக் கலந்து கொண்டவர்களும், பொருந்தினர் நெருங்கினர் - அப்போர்க்களத்தில் பொருந்தியிருந்தவர்களும், நெருங்கி நின்றவர்களும், களம் பட புடைத்தான் - அப்பொருகளத்தில் அழிந்து போக (அவ் வெழுவால்) ஒரு சேர அடித்துக் கொன்றான்.

நிமிர்ந்தான் - பேருரு எடுத்தவனாகி என்னலும் அமையும். திரிந்தனன் புரிந்தனன் என நனி தெரியார் - அநுமன் திரிந்ததையும் செய்த

செயல்களேயும் அவ்வரக்கர் தெரிந்து கொள்ள முடியாதபடி அவ்வளவு விரைவாய்த் திரிந்து அழித்தான் என்பதாம்.

(பி-ம்.) 1. இருந்தன னுயர்ந்தன னிரைந்தன னெழுந்தான்.

2. புரிந்தன னெனனிடை திரிந்தார்; புரிந்தனன் தெரிந்தனன் தெரியா; நனிதிரியார்: பொருந்தொழில் புரிந்தவ ரோடே பொர விசைந்தான்.

3. விரிந்தனர் குவிந்தனர்; விலங்கினர் குலேந்தார்; குலேந்தார்: எரிந்தெழு சினங் கொடெதிர் நிற்பரினி யாரோ,

4. பொருந்தினர் பிரிந்தனர்; பொருந்தினர் கலங்கினர்: களப்படப் புடைத்தான்; அகப்படப் புடைத்தான்; பரந் திடை நெருங்கினர் படும்படி புடைத்தான்; புதைத்தான். (25)

837. எறிந்தன வெய்தன விடிக்குமுரு மென்னச்
செறிந்தன படைக்கல மிடக்கையிற் சிதைத்தான்
முறிந்தன தெறுங்கரி முடிந்தன தடந்தேர்
மறிந்தன பரித்திரள் வலக்கையில் மலேக்க.

எறிந்தன - அரக்கர்களால் எறியப்பட்டவைகளும், எய்தன - எய்யப்பட்டவைகளும், இடிக்கும் உரும் என்ன செறிந்தன-இடிக்கின்ற இடியே போல நெருங்கியவைகளுமான, படைக்கலம் - ஆயுதங்களே, இட கையின் சிதைத்தான் - தனது இடக்கையால் அநுமன் அழித்தான்; வல கையின் மலேக்க - தன் வலக்கையால் போர்புரிய, தெறும் கரி முறிந்தன - எதிர்த்து அழிக்கும் வலிமை வாய்ந்த யானைகள் முறிபட்டு இறந்தன; தடம் தேர் முடிந்தன - வலிய தேர்களும் அழிந்தன; பரி திரள் மறிந்தன - குதிரைக் கூட்டங்கள் மடங்கி வீழ்ந்து இறந்தன.

முதல் இரண்டடிகளும் அநுமன் செயல்களாகவும் பின் இரண்டடிகள் அச் செயல்களால் விளைந்தனவாகவும் அமைந்துள்ளன.

(பி-ம்.) 1. விடியுரு மேன்மேற் விடியுரு மேறென.

2. சொரிந்தனர் படைக்: சொரிந்தன படைக்: சிதைப்பான்.

3. தெறுங்கிரி: செறுங்கரி; நெடுங்கரி: முறிந்தன மதவரை முறிந்தன தடந்தேர்,

4. மறிந்தனர் பரி; மறிந்தன வயப்பரி; பரிதிரை; பரிக்குலம்; பரித்திரை: மலேக்கையின் மலேந்தான்; மலேத்தான்; மலேத் தான்; மலிந்தான். (26)

838. நெரிந்தன தடஞ்சுவர் நெரிந்தன பெரும்பார்
நெரிந்தன நுகம்புடை நெரிந்தன வதன்கால்
நெரிந்தன கொடிஞ்சுக ணெரிந்தன வியன்ருர்
நெரிந்தன கடும்பரி நெரிந்தன நெடுந்தேர்.

தடம் சுவர் நெரிந்தன - தேர்களின் பெரிய சுவர் என்னும் உறுப்புக்கள் நெரிந்தன; பெரும் பார் நெரிந்தன - பெரிய பார் என்னும் அச்சுக் கட்டைகள் நெரிந்து போயின; நுகம் புடை நெரிந்தன - நுகத்தடிகள் பக்கங்களிலே நெரிந்து போயின: அதன் கால் நெரிந்தன - அவற்றின் அகன்ற சக்கரங்கள் நெரிந்து போயின; கொடிஞ்சுகள் நெரிந்தன - மேல் தட்டுகள் நெரிந்து போயின; வியன் தார் நெரிந்தன - சிறந்த மாலைகள் நெரிந்து போயின; கடும் பரி நெரிந்தன-வேகமாய்ச் செல்லும் குதிரைகள் நெரிந்து போயின; நெடும் தேர் நெரிந்தன - (இவ்வாறாக) பெரும் இரதங்கள் நெரிந்து' பாழாயின.

இச் செய்யுளில் தேரின் பல உறுப்புக்கள் கூறப் பட்டுள்ளன. சுவர் - ஒரு தேருறுப்பு; ரதகுப்தி எனப்படுவது. நுகம் - புரவி கட்டும் நுகத்தடி; 'புரவி பூண்ட பொன்னுகம்' (பெருங். 1, 48; 15.) கொடிஞ்சு; கொடுஞ்சி - தாமரைப் பூவடிவமாகப் பண்ணித் தேரின் முன்னே நடப்படுவதோர் உறுப்பு. 'கொடுஞ்சி நற்றேருங் குதிரையும் யானையும் காலாட் குழாத்தொடு நால்வகைப் படையும்' (பெருங். 1. 49: 57,-58 ) பரி, இங்குத் தேரிற் கட்டிய குதிரை. இச்செய்யுள் தேர்ப் படையின் அழிவு கூறியது. இதுவும் அடுத்த பாட லும் சில சுவடிகளில் இடம் மாறியுள்ளன.

(பி-ம்.) 1. நெரிந்தன நெடுங்கொடி நெரிந்தன நெடும்போர்.
2. நெரிந்தன வகன்றுள்; நெரிந்தன தடஞ்சில்.
3. கொடிஞ்சிகள்; கொடுஞ்சிலை: நெரிந்தனர் வியன்றுர்.
4. கடுந்தேர்; தடந்தேர். (27)

839. *இழந்தன நெடுங்கொடி யிழந்தன விருங்கோ*
*டிழந்தன நெடுங்கர மிழந்தன வியன்றுள்*
*இழந்தன முழுங்கொலி யிழந்தன மதம்பா*
*டிழந்தன பெருங்கத மிருங்கவு ளியானை.*

இரும் கவுள் யானை (அநுமனால் அடிக்கப்பட்ட) பெரும் கன்னங்களையுடைய யானைகள், நெடும் கொடி இழந்தன (தம் மீது உயர்த்தப் பட்டிருந்த) நீண்ட கொடிகளை இழந்தன; இரும் கோடு இழந்தன - தம் பெரிய தந்தங்களை இழந்தன; நெடும் கரம் இழந்தன - நீண்ட துதிக்கைகளை இழந்தன; வியன் தாள் இழந்தன - பெருங் கால்களை இழந்தன; முழங்கு ஒலி இழந்தன - பிளிறும் பேரொலிகளை இழந்தன; மதம் பாடு இழந்தன - மதம் தோன்றி ஒழுகுவதை இழந்தன; பெரும் கதம் இழந்தன-தம் பெரிய கோபத்தை இழந்தன.

இதனால் அநுமனால் யானைப்படைகள் அழிந்தமை கூறப்பட்டது. யானைமேற் கொடி; புறநா.9: 7: பதிற்றுப் .52: 1. 69; 1.2, 88: 17, நெடுநல்: 87

(பி-ம்.) 1. இழந்தன நெடுங்கோ (டு); இழந்தன நெடுந்தேர்: நெடுங் கால்: இழந்தன நெடுந்தலை யிழந்தன விருங்கோ (டு).
2. வியன்றூர்; பருந்தாள்: வியன்றோள்.
3. மதப்பா (டு); மதம்போர். (28)

840. ஒடிந்தன வுருண்டன வுலந்தன பொலன்றார்
இடிந்தன வெரிந்தன நெரிந்தன வெழுந்தாள்
மடிந்தன மறிந்தன முறிந்தன வயப்போர்
படிந்தன முடிந்தன கிடந்தன பரிமா.

பரிமா - குதிரைப் படைகள், ஒடிந்தன உருண்டன உலந்தன - உடலுறுப்புக்கள் ஒடியப் பட்டுக் கீழே விழுந்து உருண்டு இறந்தன; பொலன் தார் இடிந்தன எரிந்தன நெரிந்தன - (சிலவற்றின்) பொன்னு லாகிய கிண்கிணி மாலைகள் இடிந்து எரிந்து நெரிந்து தூளாயின; எழும் தாள் மடிந்தன மறிந்தன முறிந்தன - விழுந்த சில குதிரைகள் எழும் போது அவற்றின் கால்கள் மடிப்புண்டும், முன் பின்னாகத் திருப்பப் பட்டும் முறிந்தும் போயின; வய போர் படிந்தன முடிந்தன கிடந்தன - (இவ்வாறு பல குதிரைகள்) வலிய போரில் தரையில் படிந்தவைகளாய் இறந்து கிடந்தன.

இதனால் குதிரைப்படைகளின் அழிவு கூறப்பட்டது. தார் - கிண் கிணி மாலை. 'ஆடக மாற்றுந்தார் புரவி வட்டமும்' (சீவக. 84.).

(பி-ம்.) 1. உலர்ந்தன; உலைந்தன; புலந்தார்: உருண்டன விழுந்தன வுலந்தே.
2. நெரிந்தன வெழுந்த: எரிந்தன வெழுந்தன தகர்ந்த: இடிந்தன பொடிந்தன வெரிந்தன நெரிந்தே.
3. மடிந்தன படிந்தன; முறிந்தன மலைபோல்: மலைப்போர்; மடிந்தன முறிந்தன மறிந்தெழு செந்நீர். (29)
4. கிடந்தபரி மாவே; வெம் பரிமா; படிபாய்மா; கிடந்தன பாய்மா: படிந்தன கிடந்தன பரந்தபரி யீட்டம். (28)

841 வெகுண்டனர் வியந்தனர் விழுந்தன ரெழுந்தார்
மருண்டனர் மயங்கினர் மறிந்தன ரிறந்தார்
உருண்டன ருலைந்தன ருழைந்தனர் குழைந்தார்
சுருண்டனர் புரண்டனர் தொலைந்தனர் மலைந்தார்.

மலைந்தார் - அநுமனோடு போர் செய்த அரக்கர்களில் (சிலர்), வெருண்டனர் வியந்தனர் விழுந்தனர் - வெருண்டு (அநுமன் பராக்கிரமத்தை) வியந்த வண்ணம் கீழே விழுந்தனர்; எழுந்தார் - (அப்படி விழுந்தவர்களில் சிலர்) எழுந்தார்; மருண்டனர் மயங்கினர் மறிந்தனர் இறந்தார் - மருண்டும் மயங்கியும் குப்புற விழுந்தும் இறந்தனர்; (மற்றும் சிலர்), உருண்டனர் உலைந்தனர் உழைந்தனர் குழைந்தார் - உருண்டு. வருந்தி, உடல் துவண்டு அழிந்தனர்; (மற்றும் சிலர்), சுருண்டனர் புரண்டனர் தொலைந்தனர் - சுருண்டு புரண்டு இறந்தனர்.

இது, அரக்கர் வீரர்களின் காலாட் படையினர் அழிவு கூறியது. இனி, அநுமன் போரிட்ட முறை கூறப்படும்.

(பி-ம்) 1. நடுங்கினர் விழுந்தனர் விழுந்தே: வியர்த்தனர் விழுந்தன ரெழுந்தார்.
2. மயங்கினர் மறந்தனர்; வயங்கினர். மறந்தனர்: மருண்டன ரொடிந்தனர் மறிந்தனர் மறந்தார்.
3. உலைந்தன ருழுந்தனர்: உலந்தன ருழைந்தார்; உலைந்தன ருடைந்தன ருடைந்தே. (30)

842. *கரிகொடு கரிகளைக் களப்படப் புடைத்தான்*
*பரிகொடு பரிகளைத் தலத்திடைப் படுத்தான்*
*வரிசிலை வயவரை வயவரின் மடித்தான*
*நிரைமணித் தேர்களைத் தேர்களி னெரித்தான்.*

(அநுமன்) கரிகொடு - படையிலுள்ள யானைகளைக் கொண்டே, கரிகளை - பிற யானைகளை, களப்பட - அப்போர்க்களத்தில் அழிய, புடைத்தான் - எடுத்து அடித்தான்; பரி கொடு - குதிரைகளை எடுத்துக் கொண்டே, பரிகளை - அங்குள்ள குதிரைகளை, தலத்து இடை படுத்தான் - தரையினிடத்தில் வீழ்த்தி யழித்தான்; வரிசிலை வயவரை - கட்டுக்கள் அமைந்த வில்லேந்திய வீரர்களை, வயவரின் மடித்தான் - அவ்வீரர்களிற் சிலரை எடுத்து விட்டெறிந்து அழித்தான்; நிரை மணி தேர்களை தேர்களின் நெரித்தான் - வரிசையாய் மணிகள் கட்டப்பெற்ற தேர்களை அத்தேர்களை எடுத்து எறிந்து நெரித்துத் தூளாக்கி அழித்தான்.

இதனால், அநுமன் நாற்படைகளையும் அவற்றைக் கொண்டே அழித்தான் என்பது கூறப்பட்டது.

(பி-ம்.) 1. கரியொடு கரிகளை: புதைத்தான்.
2. பரியொடு: பரிகளைப் படும்படி படுத்தான்.
3. வயவுரின் வயவரின் மடித்தான்: அடித்தான்.

4. நிரையணித் தேர்களைத்: தேர்களி னிரைத்தான்; தேர்களால்: தேர்கொடு நெரித்தான். தேர்களி னிறுத்தான்; மணித்தோள் களைத் தோள்களி னெரித்தான். (31)

843. *மூளையு முதிரமு முழங்கிருங் குழம்பாய்*
*மீளருங் குழைபடக் கரிவிழுந் தழுந்தத்*
*தாளொடுந் தலையுகத் தடநெடுங் கிரிபோல்*
*தோளொடு நிருதரை வாளொடுந் துகைத்தான்.*

மூளையும் உதிரமும் முழங்கு இரும் குழம்பாய் - மூளையும் குருதியும் சப்திக்கின்ற பெரும் குழம்பு போலாகி, மீள் அரும் குழை பட - அதனின்று மேற்கிளம்பி மீள்வதற்கு முடியாத சேருகப் போக, கரி விழுந்து, அழுந்த - (அச் சேற்றில்) யானைகள் விழுந்து அழுந்தியிறந்து போக, தாளொடும் தலை உக - கால்களும் தலைகளும் சிந்தி விழ, தட நெடும் கிரி போல் நிருதரை-பெரிய நீண்ட மலைபோன்ற அரக்கர்களை, தோளொடும் வாளொடும் துகைத்தான்-அவர்கள் தோள்களையும் கையில் ஏந்தியிருந்த வாள்களையும் சேர்த்து ஒன்ருகத் துகைத்து அழித்தான்.

அநுமன் அரக்கர் வீரர்களை அழித்ததால் அவர்கள் மூளை, இரத்தம் இவற்ருலான சேற்றில் யானைகள் வீழ்ந்து எழுந்துவர முடியாமல் அதில் ஆழ்ந்து இறந்தன என்க.

(பி-ம்.) 1. உதிர மு மடிவுறு குழம்பாய்: முருங்கிருங் குழம்பாய்,
2, மிளிரும்; யாளிரும்: விழுந் தழுந்தி: கோளுறு குடலொடு குழைபட வழுந்தித்.
3. கோளொடுந் தலையுக; தடக்கைய கரிபோல்.
4. நிருதரை யாளொடுந்: வாளொடு துகைத்தான். (32)

844. *மல்லொடு மலைமலைத் தோளரை வளைவாய்ப்*
*பல்லொடு நெடுங்கரப் பகட்டொடும் பருந்தாள்*
*வில்லொடு மயிலொடும் விறலொடும் விளிக்கும்*
*சொல்லொடு முயிரொடு நிலத்தொடுந் துகைத்தான்.*

மல்லொடு மலை - மல் யுத்தத்தால் போர் செய்யும், மலை தோளரை-மலை போன்று பெரிய தோள்களையுடைய அரக்கர் வீரர்களை, வளை வாய் பல்லொடும் - வளைந்த வாயிலிருந்த பற்களோடும், நெடும் பகடு கரம் ஒடும் - வலிய கைகளோடும், பரும் தாள் வில்லொடும்-பருத்த அடிமை அடியை யுடைய வில்லுகளோடும், அயிலொடும் - வேல்களோடும், விறலொடும்-வீரத்தன்மையோடும், விளிக்கும் சொல்லொடும்-முழங்கும்

சொற்களோடும். உயிரொடும்-அவர்கள் உயிர்களோடும், நிலத்தொடும் துகைத்தான் - தரையோடு ஒன்று படத் துகைத்து அழித்தான்.

பகடு - பருமை. அல்லது வலிமை: 'பகட்டு மார்பின்' (புறநா. 88: 4.). பருந்தாள் வில்: தாள், கால் என்னும் பொருளில் வந்தது.

(பி-ம்) 1 மலைதலத் தோளினர்: மலைமலைத் தோளினர். வளையாப்; முறை வாய்ப்: மலைமலை தோளினர் வயவரைப்.
2. பல்லொடுங் களப்படப் பகட்டொடும் பறித்தான்: பகட்டொடும் படுத்தான்.
3. வில்லொடும் வாளொடும் வேலொடும் விளிக்கும்: வில்லொடு மெயிலொடும் வெயிலொடும் விளிக்கும்: வில்லொடு மயிலொடும் வாளொடும் விளிக்கும். 4. தேய்த்தான். (33)

845. *புகைநெடும் பொறிபுகுந் திசைதொறும் பொலிந்தான்*
*சிகைநெடுஞ் சுடர்விடுந் தேர்தொறுஞ் சென்றான்*
*தகைநெடுங் கரிதொறும் பரிதொறுஞ் சரித்தான்*
*நகைநெடு படைதொறுந் தலைதொறு நடந்தான்.*

(மேலும் அநுமன்). புகை நெடும் பொறி புகும் திசை தொறும் பொலிந்தான்-புகையோடு கூடிய நெடிய நெருப்புப் பொறிகள் புகுந்து செல்லும் நாற்றிசைகளிலும் விளங்கினான்; சிகை நெடும் சுடர்விடும் தேர் தொறும் சென்றான் - சிகரங்களினின்று நீண்ட ஒளி விடும் தேர்கள் இருக்கு மிடமெல்லாம் சென்றான்; தகை நெடும் கரி தொறும் பரி தொறும் சரித்தான் - சிறப்பமைந்த பெரிய யானைகள் குதிரைகள் இருக்கு மிடங்களிலெல்லாம் சஞ்சரித்தான்; நகை நெடும் படை தொறும் - (தன்னைப் பார்த்து ஓர் அற்பக் குரங்கென்று) ஏளனம் செய்து சிரித்த பெரும் போர்ப்படைகள் தோறும், தலை தொறும் நடந்தான் - அப்படையில் உள்ள வீரர்கள் தலைதோறும் நடந்து சென்று அவர்களை அழித்தான்.

(பி-ம்.) 1. பொறியுகுந்; பொலிந்தார்ச்; புலந்நரர்; புலர்ந்தார்: பொலந் தார்ச்: புகையொடும் பொறிபடத் திசைதொறும் புரண்டார்.
2. தேர்தொறும்செறிதாள்; செறித்தார்: செறித்தாட்; செறிந்தான்; சுடர்விடும் படைதொறுஞ் செறிதாட்.
3. கிரிதொறும் பரிதொறும்: பரிதொறும் தடவாய்: பரிதொறும் சலித்தான்; சலித்தார்; சலத்தார்.
4. நகைதொறும்: நகைநெடுஞ் சிலைதொறும்: நகையொடும் படையொடும் தலையொடு நடந்தார்: நெடுந் தலைதொறும் படைதொறும் நடந்தான். (34)

846. *வென்றிவெம் புரவியின் வெரிநினும் விரவார்*
*மன்றலந் தாரணி மார்பினு மணித்தேர்*
*ஒன்றினின் றொன்றினு முயர்மத மழைதாழ்*
*குன்றினுங் கடையுகத் துருமெனக் குதித்தான்.*

வென்றி வெம் புரவியின் வெரிநினும் - வெற்றியைத் தரத் தக்க வலிய குதிரைகளின் முதுகுகளிலும், விரவார் மன்றல் அம் தார் அணி மார்பினும் - பகைவர்களான அவ்வரக்கர்களுடைய மணங் கமழும் அழகிய மாலை யணிந்த மார்புகளிடத்தும், மணி தேர் ஒன்றின் நின்று ஒன்றினும் - மணிகள் கட்டப் பெற்ற தேர்கள் ஒன்றிலிருந்து மற்றொன்றினும். உயர் மத மழை தாழ் - உயர்ந்தோங்கிய மதமாகிய மழை கீழே தாழ்ந்து ஓடப் பெற்ற, குன்றினும்-மலைபோன்ற யானைகள் மீதும், கடையுகத்து உரும் என - யுக முடிவுக்காலத்தில் தோன்றும் இடியே போல. குதித்தான் - (அநுமன்) குதித்து அழித்தான்.

மணித்தேர் - அழகிய தேர் அல்லது இரத்தினங்கள் இழைக்கப் பெற்ற தேர் என்றும் பொருள் கொள்ளலாம்: 842. மதமழை தாழ் குன்று என்ற குறிப்பால் யானை என்பதை உணர்த்திற்று.

(பி-ம்.) 1. வென்றிய புரவியின்: வென்றியம் புரவி: புரவியின் றேரினும் விரவார்; புரவியின் முதுகினும்.
2. மன்றறுந் தாரணி; மன்றலத் தாரணி; தார் மணி; மணித் தோள்.
3 உமிழ்மத மழைதாழ்; மும்மத மழைதாழ்: உயர்மதக் கரியாம்
4. எனக் கொதித்தான். (35)

847. *பிரிவரு மொருபெருங் கோலெனப் பெயரா*
*இருவினை துடைத்தவ ரறிவென வெவர்க்கும்*
*வருமுலை விலைக்கென மதித்தனர் வழங்கும்*
*தெரிவையர் மனமெனக் கறங்கெனத் திரிந்தான்.*

பிரிவு அரும் ஒரு பெரும் கோல் என - நீங்காது நின்று நடைபெறும் ஒரு பெரிய அரசனது செங்கோலைப் போலவும், பெயரா - நீங்காத, இருவினை துடைத்தவர் அறிவு என - புண்ணியம் பாவம் என்ற இருவினைகளை அழித்த ஆன்றோர்களது அறிவைப் போலவும், எவர்க்கும் - (இன்னார் இனையார் என்ற மாறுபாடு கருதாமல்) எல்லாருக்கும், வரு முலை விலைக்கு என மதித்தனர் - தம் வளர்ந்துவரும் முலைகளை அவர்கள் கொடுக்கும் விலைப்பொருளுக்கே என்று தீர்மானித்தவர்களாய், வழங்கும் - அவர்கள் கொடுக்கும் பொருளுக்குத் தக்கபடி அளித்து வரும், தெரிவையர் மனம் என - விலைமகளிர் மனத்தைப் போலவும், கறங்கு

என-காற்ருடியைப் போலவும், திரிந்தான்-அநுமன் அப் பொருகளத்தில் திரிந்து போராடினுன்.

பிரிவரு பெரும் கோலென - அரசனுடைய செங்கோல் உறங்காது நின்று உலகெங்கும் பரந்து ஆணை செலுத்துவது போல; 'உறங்கு மாயினு மன்னவன் றன்ெளி,கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்' (சீவக; 24 ). இருவினை துடைத்தவர் அறிவு, எல்லா நுட்பமான விஷயத்திலும் தடையின்றி நோக்கி ஆராயும் பெருமையுடையது. விலைமகள் மனம்: பால. நகரப்: 14; மிதிலைக்காட்சி. 16; அயோத்யா. நகர்நீங்கு. 109. இருவினை துடைத்தவர் மனத்தையும், விலைமகள் மனத்தையும் ஒன்று கூட்டி உரைத்தது: பால. தாடகைவதைப். 15, கறங்கு-காற்ருடி; 786.

(பி-ம்.) 1. பெருநெடுங் காலெனப்; பெருகிய கடையுகத் தொருபெருங் காலென 2. அருவினை துடைத்தயர்.
3. வரிமுலை: விலக்கென: மதித்தயல் வழங்கும்; மதித்தவர் வழங் கும்; வரிவிலை முலைபகர் மனத்தொடு மருவும்.
4. தெரிவையர் தம்மனக் கறங்கெனத். (36)

848. *அண்ணலவ் வரியினுக் கடியவ ரவன்சீர்*
*நண்ணுவ ரெனும்பொரு ணவையறத் தெரிப்பான்*
*மண்ணினும் விசும்பினு மருங்கினும் வலித்தார்*
*கண்ணினு மனத்தினுந் தனித்தனி கலந்தான்.*

அண்ணல் - பெரியோனுகிய அநுமன், அ அரியினுக்கு அடியவர் - அந்தத் திருமாலுக்கு அடியவர்கள், அவன் சீர் நண்ணுவர் எனும் பொருள் - அவனுக்குரிய சிறப்புக்களை அடைவர் என்று கூறப்படும் சாத்திரப் பொருளை, நவைஅற தெரிப்பான் - சிறிதும் குற்றத்திற்கு இட மின்றித் தெளிவாகத் தெரிவிப்பவனுகி, மண்ணினும் விசும்பினும் - பூமி யிலும் வானத்திலும், மருங்கினும் - பக்கங்களில் உள்ளதிசைகளிலும், வலித்தார் - வலிமை கொண்டு போரிட்ட அவ்வரக்கர்களுடைய, கண் ணினும் மனத்தினும் - கண்களிலும், மனத்தினும், தனி தனி கலந்தான் - ஒவ்வொருவரிடமாகவும் கலந்து விளங்கினுன்.

திருமால் அடியவர் அப்பெருமானுக்குரிய சிறப்புக்களை அடைவர் என்ற உண்மையை விளக்குவான் போல, அத்திருமால் எங்கும் நிறைந் திருப்பதற்குத் தானும் அன்று அவன் ஒப்பப் புவியிலும் விசும்பிலும் சுற் றுப் புறங்களிலும் அரக்கர்களின் மனத்திலும் கண்ணிலும் எங்கும் விளங் கினுன் என்க. ஒப்பு: 'எங்ஙனே யிறைவ ருலகு பொதி வடிவ மெவ்வுடம் பினு மடங்குமா, றங்ஙனே யவர்கள் விசுவ ரூபமு மடங்கி நின்றபடி யத னிலே' (தக்க 425,) வீரர் போர்க்களத்தில் எங்கும் காணப்படுதல்; ஒப்பு: 'முன்னேயுளன் பின்னேயுளன் முகத்தேயுள னகத்தின், தன்னேயுளன்

மருங்கேயுளன் றலைமேலுளன் மலைமேல், கொன்னேயுள னிலத்தேயுளன் விசும்பேயுளன் கொடியோர், என்னேயொரு கடுப்பென்றிட விருஞ் சாரிகை திரிந்தான்' (உயுத்த. மூலபல வதைப். 115).

(பி-ம்.) 1. அண்ணல்வா ளரியினுக் கடியனு யவன்சீர்: அரியெனுங் கடவுள்மற் றவன்சீர்.

3. மருங்கினும் மலைந்தார்; வலிந்தரர்; மலிந்தார். அணிந்தார். (37)

849. *கொடித்தடந் தேரொடுங் குரகதக் குழுவை*
*அடித்தொரு தடக்கையி னிலத்தினிட் டரைத்தான்*
*இடித்துநின் றதிர்கதத் தெயிற்றுவன் பொருப்பைப்*
*பிடித்தொரு தடக்கையி னுயிருகப் பிழிந்தான்.*

(அநுமன்), கொடி தடம் தேர் ஒடும் - கொடிகளோடு விளங்கும் பெரிய தேர்களோடும், குரகத குழுவை-குதிரைக் கூட்டங்களை, ஒரு தட கையின் அடித்து - தனது ஒரு பெரிய கையால் அடித்து, நிலத்தின் இட்டு அரைத்தான் - தரையிலிட்டு அரைத்து அழித்தான்; இடித்து நின்று அதிர் - இடி இடிப்பது போல முழங்கும், கதத்து எயிற்று வன் பொருப்பை-கோபங் கொண்ட தந்தங்களையுடைய வலிய மலைபோன்ற யானைகளை, ஒரு தட கையின் பிடித்து - தன் மற்றொரு பெருங்கையால் பிடித்து, உயிர் உக பிழிந்தான் - அவற்றின் உயிர் சிந்தப் பிழிந்து கொன்றான்.

தடக்கையின் உயிர் உகப் பிடித்துப் பிழிந்தான், என்பதற்கு யானையைப் பிடித்துத் துதிக்கை வழியே அதன் உயிர் சிந்தப் பிழிந்தான் என்று பொருள் கொள்ளலும் அமையும்.

(பி-ம்.) 2. தடக்கை யானிலத்: நிலத்துற வரைத்தான்.

3. இடத்துநின் றதிர்த்ததோ ளெயிற்று: இடித்துநின் றதிர்குர லெயிற்று: நின்றதி கதத்து: நின்றெதிர்த்தவவ் வெயிற்றுடைப் பொருப்பைப்: றெதிர்மதத் தெயிற்றிணைப் பொருப்பை.

4. தடக்கையா லுயிருகப். (38)

850. *கறுத்தெழு மனத்தின ரெயிற்றினர் கயிற்றூர்*
*செறுத்தெரி விழிப்பவர் சிகைக்கழு வலத்தார்*
*வெறுத்தெழு மறலிக ளிவரென வெதிர்ந்தார்*
*ஒறுத்துருத் திரனெனத் தனித்தனி யுதைத்தான்.*

கறுத்து எழு மனத்தினர் - கோபித்து எழுகின்ற மனத்தையுடையவர்களும், எயிற்றினர்-பயங்கரமான கோணற் பற்களையுடையவர்களும்,

கயிற்ருர் - பாசம் எனும் கயிற்றை யுடையவர்களும், செறுத்து எரி விழிப்பவர் - பகைத்து நெருப்புப் போல விழிப்பவர்களும், சிகை கழு வலத்தார் - கூரிய கழு என்னும் படைவலியுடையவர்களுமான அரக்கர்கள், வெறுத்து எழு மறலிகள் இவரென - பகைத்து மேற் ருெடரும் யமன்கள் போல, எதிர்ந்தார் - (சினமேற் கொண்டு) எதிர்த் தனர்; (அவர்களை), ஒறுத்து - கடிந்து, உருத்திரன் என - உருத்திர மூர்த்தியைப் போல, தனி தனி உதைத்தான் - அநுமனும் ஒவ்வொரு வராக உதைத்து அழித்தான்.

சிகைக்கழு - சுடரும் சூலம். அரக்கர்களை மறலிகளுக்கு உவமை யாக்கியதற்கியைய அநுமனை அம் மறலியை உதைத்து அழித்த உருத் திர மூர்த்தியாகிய சிவபெருமாளுக உவமிக்கப் பெற்றது; மேலும், உருத்திரனே. அநுமனுக அவதரித்த உண்மை இங்கு விளக்கப் பெற்றது என்னலும் ஆம். உருத்திரனே அநுமனுக அவதரித்தவன்; பால: திருவவதார; 28: இனி, இராமபிரான், (கிட்கிந்தா, மராமரப். 20) இலங்கை மாதேவி (181), இராவணன், (112) ஆகிய மூவரும் அநு மனைக் கண்டு இவன் சிவபெருமான் ருனே என்று ஐயப் பட்டதும் இங்கு நோக்கற் பாலதாம்.

(பி-ம்.) 1. கறுத்தெழு நிறத்தினர்: பிணித்திடு கயிற்ருர்: எயிற்றினர் கதத் தால்.
2. சிகைக்கெழு வலத்தார்: சிதைத்தெழு வலத்தார்; வலத்தரல்.
3. மறுத்தெழு மறலி; மறுத்தெழு மறத்தினர்: இவரென வதிர்ந் தார்; வதிந்தார்; வெறுத்தெழு மரக்கரி னரக்கரை விதிர்ந்தான்.
4. உறுத்துரு வுருத்திரன்; ஒறுத்தன வுருத்திர னெனத்தனி; அறுத்துருத் திரனெனத். (39)

851. *சக்கரந் தோமர முலக்கைதண் டயில்வாள்*
*மிக்கன தேர்பரி குடைகொடி விரவி*
*உக்கன குருதியம் பெருந்திரை யுருட்டப்*
*புக்கன கடலிடை நெடுங்கரப் பூட்கை.*

உக்கன குருதி அம் பெரும் திரை உருட்ட - அரக்கர்கள் சிந்திய இரத்த வெள்ளத்துப் பெரும் அலைகள் உருட்டித் தள்ளிச் செல்வதால் (அவற்றின் இடையே), சக்கரம் - சக்கரங்களும், தோமரம் - கை வேல் களும், உலக்கை - உலக்கைகளும், தண்டு - கதைகளும், அயில் - வேல் களும், வாள் - வாட்களும், மிக்கன - மிகுந்தனவாகி, தேர் பரி குடை கொடி விரவி - தேர்களும் குதிரைகளும் குடைகளும் கொடிகளும் ஒன்ருகக் கலந்து, நெடும் கர பூட்கை - நீண்ட துதிக்கைகளையுடைய யானைகள், கடல் இடை புக்கன - கடலின் இடையே போய்ப்புகுந்தன,

அரக்கர்களுடைய இரத்த வெள்ளத்தின் அலைகள் சக்கரம் முதற் பல ஆயுதங்களையும், தேர், குதிரை, குடை, கொடி முதலியவற்றையும் உருட்டிக் கொண்டு போக, அவற்றோடு நீண்ட துதிக்கைகளையுடைய யானைகளும் அவ்வெள்ளம் இழுத்துக் கொண்டு போகப்பட்டனவாய்க் கடலினிடையே புக்கன என்க.

(பி-ம்.) 1. உலக்கைசெண் டயில்வாள்.
2. மிக்கவன் தேர்; மிக்குறுந் தேர்: விரிகுடை கொடியோ(டு) கொடி வரிவில்; கொடு விரவி.
3. குருதியப் பெருந்; குருதியும்: உருட்டி.
4. புக்கன கனலிடை: புக்கன கரியொடுங் கடலிடை பொலிய: நெடுநகர்ப் பூட்கை; நெடுங்கதப் பூட்கை. (40)

852. எட்டின விசும்பினை யெறிபட வெழுந்த
முட்டின மலைகளை முயங்கின திசையை
ஒட்டின வொன்றையொன் றூடடித் துடைந்து
தட்டுமுட் டாடின தலையொடு தலைகள்.

தலைகள் - அவ்வரக்கர்களுடைய தலைகள், எறிபட - அநுமனால் வீசி எறியப்பட்டு, எழுந்த - மேலெழுந்து சென்றவைகளாய், விசும்பினை எட்டின - ஆகாயத்தைப் போய் எட்டின; மலைகளை முட்டின - இடைப் பட்ட மலைகளைப் போய் முட்டின; திசையை முயங்கின - திக்குக்களைப் போய்த் தழுவின; ஒன்றை ஒன்று ஊடு அடித்து உடைந்து ஒட்டின - ஒன்றில் ஒன்று உட்சென்று அடிபட்டு உடைந்து ஒன்றாய் ஒட்டிக் கொண்டன; தலையொடு தட்டுமுட்டு ஆடின-மற்றத் தலைகளோடு ஒன்று சேர்ந்து தட்டு முட்டுக்களாய் ஆங்காங்குக் குவிந்து கிடைந்தன.

(பி-ம்.) 1. விசும்பினை யெழுப்பட வெழுந்த; விசும்பினை யிடையுற வெழுந்து: எழுபடை: அழுந்த.
3. உருட்டிடத் துடைந்து; ஊட்டிடத் துடைந்து. (41)

வேறு

853 கானே காவல் வேழக் கணங்கள் கதவா ளரிகொல்ல
வானே யெய்தத் தனியே நின்ற மதமால் வரையொப்பான்
தேனே புரைகண் கனலே சொரியச் சீற்றஞ் செருக்கின்றான்
தானே யானுன் சம்பு மாலி காலன் றனையொப்பான்.

கானே காவல் வேழக் கணங்கள்-காடே தமக்குக் காவல் இடமாகக் கொண்ட யானைக் கூட்டங்களை, கத வாள் அரி கொல்ல - கோபமுள்ள

ஒளிதங்கிய ஒரு சிங்கம் கொல்ல, வானே எய்த - அவை இறந்து விண்ணுலகடைய, தனியே நின்ற - பிறிது ஒரு துணையின்றித் தனியாக விடப்பட்டு நின்ற, மத மால் வரை ஒப்பான் - மதங்கொண்ட பெரிய யானை போன்றவனும், காலன் தனை ஒப்பான் - யமன் போன்றவனுமான, சம்புமாலி - சம்புமாலி, தானே ஆனான் - தான் ஒருவனே எஞ்சியவனாக ஆகி, தேனே புரை கண் - (தன்) தேனையொத்துச் சிவந்த கண்கள், கனலே சொரிய - நெருப்பைக் கக்க, சீற்றம் செருக்கினான் - கோபம் மிக்கவனானான்,

போரில் இறந்த மற்ற அரக்கர்கள் இறந்துபட்ட யானைக் கூட்டங்களுக்கும், அநுமன் அவ்வியானைகளைக் கொன்ற சிங்கத்திற்கும், சம்புமாலி தனியே விடப்பட்ட ஒரு யானைக்கும் உவமை. மதமால் வரை - யூதநாயகன்; சம்புமாலி, தேனே புரைகண்; தேன், சிவப்பிற்கு.

(பா-ம்.) 1. வாளரிகன்ற; கொன்ற: தின்ற: கானுர்வேழக் கணங்க ளெல்லாங் கதவா ளரியாற் கடிதிறந்து.
2. வானே யேற; வானே றென்னத் தனியே: வானேயேறத் தலைமை கொடுநின்ற வொருமா கரியொப்பான்.
3. புரையுங் கண்கள் கனல் சொரிய: சீற்றஞ் செருக்கினன்; சீற்றத் தருக்கினன்; சீற்றந் திருகினன்.
4. சம்பு மாலி காலன் தன்மையான்; சண்டன் போன்ற தகைமையான்; காலன் போன்ற தகைமையான்; தன்மையான்; தானே நின்றான் சம்புமாலி தறுகட் கூற்றந் தனையொப்பான்.
(42)

854. *காற்றிற் கடிய கலினப் புரவி நிருதர் களத்துக்கார்*
*ஆற்றுக் குருதி நிணத்தோ டடுத்த வள்ளற் பெருங்கொள்ளைச்*
*சேற்றிற் செல்லாத் தேரி னாழி யாழு நிலைதேரா*
*வீற்றுச் செல்லும் வெளியோ வில்லை யளியன்* விரைகின்றான்.

காற்றில் கடிய - காற்றை விட வேகமாய்ச் செல்லக் கூடிய, கலின புரவி நிருதர் - கடிவாளம் பூட்டப் பட்ட குதிரை வீரர்களான அரக்கர்கள், களத்து உக்கார் - போர்க்களத்தில் விழுந்து அழிந்தனர்; குருதி ஆற்று நிணத்தோடு அடுத்த-இரத்த ஆற்றில் கொழுப்புக்களோடு சேர்ந்த, அள்ளல் பெரும் கொள்ளை சேற்றில் - நெருங்கிய மிகப் பெரிய சேற்றில், செல்லா தேரின் - போக முடியாத தன் தேரினது, ஆழி - சக்கரங்கள், ஆழும் நிலை தேரா - ஆழ்ந்து போகும் நிலைமையை உணராது, வீற்று செல்லும் வெளியோ இல்லை - வேறு பிரிந்து போகும் இடமோ இல்லாமற்போக, அளியன் விரைகின்றான் -

யாவரும் கண்டு இரங்கத்தக்க நிலையுடையவனாய்ச் (சம்புமாலி) விரைந்து செல்வானாயினன்.

அள்ளல் - நெருக்கம்; திருவிருத்த. 12. வீற்றுச் செல்லும் வெளி; வீற்று - வேறுபடுகை; (பிங்). மற்றும் என்றும் பொருள் கொள்ளலாம்; 'வீற்று மாயிரம் வெங்கணை தூவினன்' (கந்தபு. சிங்கமுக. 402.)

(பி-ம்.) 1. களலின் மிகக் கடிய கலினப் புரவி நிருதர் களத்து: காற்றிற் புரவி நிருதர் களத்து: காற்றிற் புரவி நிருதருடல் சிதறிக் களத்தி னெழுங்குருதி.

2. நிணந்தொடுத்த வள்ளற் பள்ளப் பெருங் கொள்ளைச்: நிணத்தோ டள்ளல் வெள்ளப் பெருங்கொள்ளைக்: ஆற்றிற் குமையு நிணக்கடல்க ளடுத்த வள்ளற் பெருங்கொள்ளைச்.

3. தேரினன் தெழித்துச் செல்லும் நிலைதீரா; ஆழியாழு நிலை தீரா: சேற்றிற் புதைய வருந்திண்டேர் செலுத்திச் செல்லு மரக்க னெதிர்.

4. ஏற்றுத் திறல்மா ருதிக்கடவு ளென்பா னிவையொன் றுரைக்கின்றான். (43)

855. *ஏதி யொன்றாற் றேரு மஃதா லெளியோ ருயிர்கோடல்*
*நீதி யன்றா லுடன்வந் தோரைக் காக்கும் நிலையில்லாய்*
*சாதி யன்றே பிறிதென் செய்தி யவர்பின் றனிநின்றாய்*
*போதி யென்றான் பூத்த மரம்போற் புண்ணாற் பொலிகின்றான்.*

பூத்த மரம் போல் புண்ணால் பொலிகின்றான் - பூத்து விளங்குகிற பூமரம் போல உடலெங்கும் புண்களால் நிறையப் பெற்று விளங்க நின்ற அநுமன், (சம்புமாலியைப் பார்த்து), 'ஏதி ஒன்றால் - (உன்னிடம்) ஆயுதம் ஒன்று மட்டு முள்ளது; தேரும் அஃது ஆல் - தேரும் உனக்கு ஒன்றே தான் உள்ளது; உடன் வந்தோரை காக்கும் நிலை இல்லாய் - உன்னோடு கூடப் போருக்குத் துணையாய் வந்தவர்களை நீ காப்பாற்றும் நிலைமையில் இல்லை; அவர் பின்தனி நின்றாய் - அவர்கள் எல்லோரும் இறந்து போக நீ மட்டும் தனியாக இருக்கின்றாய்; எளியோர் உயிர் கோடல் நீதி அன்றால் - எளியோர் உயிரைக் கொள்ளுதல் நீதி நெறிக்கு ஏற்ற தன்று; சாதி (இனி நீ என்னோடு போர் செய்வையேல்) நீ நிச்சயம் இறந்து படுவாய்; பிறிது என் செய்தி - நீ வேறு என்ன செய்யப் போகிறாய்? (ஒன்றும் செய்ய வழி இல்லை என்றபடி); போதி என்றான் - ஆதலால் இனி நீ இங்குப் போரிடாமல் திரும்பிப் போவாயாக' என்று கருணை மேலிட்டு இரங்கிக் கூறினான். அன்று, ஏ: அசைகள்.

பூத்தமரம் - செவ்விய பூக்கள் நிறைந்து விளங்கும் பூமரம் என்னும் ஒருவகை மரம்; அம் மரம் பூத்து விளங்கும் போது இலைகள் ஒன்றும்

இன்றி ஒரே சிவப்புப் பூக்களால் நிறைந்து விளங்கும். உடலெங்கும் புண்கள் நிறைந்து விளங்கும் அநுமனுக்குப் பூத்த பூமரம் உவமை. பூவும் புண்ணும்: ஒப்பு: 802; குறுந். 284. அநுமன் இப்போரில் உடலெங்கும் புண்பட்டமை; 1254. 'ஏதி யொன்ருல்.........போதி யென்ருன்': ஒப்பு: 'ஆளையாவுனக்.........இன்று போய்ப் போர்க்கு நாளை வாவென நல்கினன்' உயுத்த. முதற்போர். 256.) இதனல் ஆண்டான் கருணைத் திறம் அடியவனிடமும் அமைந்தமை காணத் தக்கது.

(பி-ம்.) 1. ஏதி யென்ருற் றேரும்: எளியோர் தமைக்கோறல்: உயிர் கொண்டால்: ஏதி யென்ற படை கரத்தி னில்லர் தமதா ருயிர் கோடல்.
2. நீதி யன்ரு லுடன்வந்தோர் தமையுங் காக்கு நிலையில்லாய்.
3. சாதி யேறே; சாதி யின்றே பிறிதென்ன செய்வா யொருவன் றனி நின்ருய்.
4. பூத்த மரம்போல் வல்லை பெரலிகின்ருன்: பூணுற் பொலி கின்ருன். (44)

856. *நன்று நன்றுன் கருணை யென்னு நெருப்பு நகநக்கான்*
*பொன்று வாரி னொருவ னென்ருய் போலு மெனையென்னு*
*வன்றிண் சிலையின் வயிரக் காலால் வடித்திண் சுடர்வாளி*
*ஒன்று பத்து நூறு நூரு யிரமு முதைப்பித்தான்,*

(சம்புமாலி), 'உன் கருணை நன்று நன்று என்னு - உன்னுடைய கருணை மிகவும் நன்ருய் இருக்கிறது' என்று, நெருப்பு நக நக்கான் - நெருப்புத் தோன்றச் சிரித்து, 'எனை பொன்றுவாரிள் ஒருவன் என்ருய் போலும் என்னு - என்னைப் (போரில்) இறப்பவருள் ஒருவன் என்று நீ சொன்னுய் போலும்' என்று, வன்திண் சிலையின் வயிர காலால்-மிக வலிய தன் வில்லின் வயிரம் போன்று உறுதியான தண்டினுல், வடிதிண் சுடர் வாளி - கூர்மை வாய்ந்த வலிய ஒளி வீசும் அம்புகளை, ஒன்று பத்து நூறு நூருயிரமும் - ஒவ் ஒன்ருகவும், பப்பத்தாகவும், நூறு நூருகவும், லக்ஷ லக்ஷமாகவும், உதைப்பித்தான் - (அநுமன் மீது) செலுத்தினன்.

நன்று நன்று; அடுக்கு இகழ்ச்சிப் பொருளது. வன் திண்: ஒரு பொருட் பன்மொழி. உதைத்தல் - வலிந்து செலுத்துதல்; 'இச்சிலை யுதைத்தகோற் கிலக்கம் யாதென்பார்' (பால. கார்முகப்; 9.)

(பி-ம்.) 1. நெருப்பு முகநக்கான்; நெருப்பும் புகையு முறநக்கான்; நெருப்பு நகைநக்கான்: என்னு நகைத்தாங் கரக்கன் சினந் தெனை நீ.
2. பொன்று மவரி லொருவ னென்றே புகன்ருய் போலு மறி யென்னு.

3. வடித்திண் வயிரச் சுடர்வாளி: சிலைநாணொலி யெழுப்பி வயிரத் தொளிருஞ் சுடர்ப்பகழி.

4. ஒன்றும் பத்தும் நூறுமென வாயிரமு முதைப்பித்தான்: பத்து நூறு யிரமு முடனே யுதைப்பித்தான்: ஒன்றும் பத்தும் நூறு மோரா யிரமு நொடியி னுதைப்பித்தான். (45)

857. *செய்தி செய்தி சிலைகைக் கொண்டால் வெறுங்கை திரிவோரை*
*நொய்தின் வெல்வ தரிதோ வென்னு முறுவ லுறநக்கான்*
*அய்ய னங்கு மிங்குங் காலா லழியு மழையென்ன*
*எய்த வெய்த பகழி யெல்லா மெழுவால் வழுவித்தான்.*

அய்யன்-சிறந்தோனான அநுமன், 'சிலை கை கொண்டால்-நீ வில்லைக் கையில் கொண்டால், வெறும் கை திரிவோரை - ஆயுத மின்றி வெறும் கைகளோடு திரிகிறவர்களை, நொய்தின் வெல்வது அரிதோ - எளிதில் வெல்வது அரிய செயல் ஆகுமோ? செய்தி செய்தி-(உன் வல்லமைகளை) நன்றாகச் செய்'; என்னு - என்று சொல்லி, முறுவல் உற நக்கான் - பற்கள் தோன்றுமாறு நகைத்தான்; எய்த எய்த பகழி எல்லாம் - சம்புமாலி மேன் மேலும் தூண்டிய அம்புகள் அனைத்தையும், காலால் அழியும் மழை என்ன - காற்றினால் சிதறி அழியும் மழைத் தாரைகள் போல, எழுவால் - தான் கையிற் கொண்ட எழுவினாலே, அங்கு மிங்கும் வழுவித்தான் - எல்லாப் புறங்களிலும் நழுவிச்சிதறிப் போக அடித் தான்.

செய்தி செய்தி; அடுக்கு இகழ்ச்சிப் பொருளில் வந்தது எய்த எய்த: அடுக்கு விரைவுப் பொருளது. சம்புமாலி எய்த அம்புகள் அநுமன் எழுவைக் கொண்டு அலைக்க, மழைத் தாரைகள் காற்றால் சிதறுவனபோலச் சிதறி அழிந்தன என்றமையால், அவ்வம்புகள் மழைத் துளிகள் போல அநுமனை ஊறு செய்யாவாகிச் சிதறுண்டன என்க. இதன்பின் ஒரு பிரதியில் பின்வருமாறு ஓர் அதிகப் பாடல் காண் கின்றது:—

அதுகண் டரக்கன் சினந்திருகி யாடற் பகழி யறுநூறு
முதிரும் வயப்போர் மாருதிதன் புயத்தின் மூழ்க விடுவித்தான்
புதையுண் டுருவிப் புறம்போகப் புழுங்கி யநுமன் பொடியெழும்பக்
குதிகொண டவன்றேர் விடும்பாகன் றலையிற் சிதறக் குதித்தனனால்.

(பி-ம்.) 1. சிலைகைக் கொண்டாய்: சிலைக்கை கொண்டால்: வெறுங்கை கொண்டு திரிவோரை: செய்திண் பெரும்போர்ச் சிலைகொண் டாய் செறுத்தாய் வெறுங்கை யுடையாரை.

2. என்று முறுவ லுறநக்க; என்னு நோவா முறுவ லுறநக்கு; என்று முறுவ லுகந்த திருமுகத்தான்; முறுவ லுறநக்காங்(கு):

3. கைய னங்கு மிங்கும்; கையின் வெய்ய சிலைவளைத்துக் கால்வீ ழருவி மழையென்ன: கையன் விடுத்த வவையெல்லாங் காலால்: கையின் வன்போர்ச் சிலைவலியாற் கால மழைகள் பொழிவதுபோல.

4. எய்த பகழி யெல்லா மெழுவா லகல விழுவித்தான்: எய்த வெய்த பகழியினை யெழுவா லகல விழுவித்தான்: ஏய்த பகழி யதனையெல்லா மெழுவாற் கடிதி னிறுவித்தான்: அகல்வித் தான்: அழிவித்தான். (46)

## சம்புமாலி அழிவு 858-59

858 *முற்ற முனிந்த நிருதன் முனியா முன்னும் பின்னுஞ்சென்*
*றுற்ற பகழி யுருது முறியா வுதிர்கின் றதையுன்னுச்*
*சுற்று நெடுந்தே ரோட்டித் தொடர்ந்தான் றொடருந் துறைகாணுன்*
*வெற்றி யெழுவைப் பிறைவா யம்பா லறுத்து வீழ்த்தினுன்.*

முற்ற முனிந்த நிருதன்-மிகவும் சினங் கொண்ட அந்த அரக்கனுன சம்புமாலி முனியா - மேலுங் கோபித்து. முன்னும் பின்னும் சென்று உற்ற பகழி - அநுமனுக்கு முன்னுகவும் பின்னுகவும் பொருந்தச் சென்று போயடைந்த அம்புகள். உருது - அநுமன் மேல் தாக்காது, முறியா உதிர்கின்றதை உன்னு - முறிந்து கீழே சிந்தி விழுகின்றதை நினைத்து, சுற்று - அவ்வநுமனைச் சுற்றிலும் வளைந்துள்ள, நெடும் தேர் ஓட்டி தொடர்ந்தான் - தனது பெரிய தேரை ஓட்டி நெருங்கினுன்; தொடரும் துறைகாணுன்- அப்படியும் அநுமனைக் கிட்டும் வழி அறியாமல், வெற்றி எழுவை - (அதுகாறும் அநுமனுக்கு) வெற்றியை அளித்து வந்த எழுவை, பிறைவாய் அம்பால் - தனது அர்த்த சந்திர பாணம் என்னும் அம்பினுல், அறுத்து வீழ்த்தினுன் - துண்டாக வெட்டிக் கீழே தள்ளி னுன்.

வீழ்த்தினுன் என்பது 'விழச் செய்தான்' என்றிருந்தால் ஓசை குறை படாது இனிது ஒலிக்கும்.

(பி-ம்.) 1. முற்ற முனித்தான்; முற்று முனிந்தான்: முற்ற முடிந்தான் பாக னென நிருதன் முனிந்தாங் கவன்பின்னும்.

2. பகழி யுருவண்ணம்: உற்று விசிக மழைபொழிய வொடித்தா னநும னதுகண்டான்.

3. தேரோடி; தேர்தா னோட்டித்: தொடருமுவறு: துறைகாணு.

4. இறுத்து வீழ்த்தினுன்: இறுத்து வீழ்த்தா னிகலரக்கன்: வெற்ற வெழுவை மழுவாயம் பொன்று லறுத்துவிட்டினனுல். (47)

859. *சலித்தா னையன் கையா லெய்யுஞ் சரத்தை யுகச்சாடி*
*ஒலித்தா னமரர் கண்டா ரார்ப்பத் தேரி னுட்புக்குக்*
*கலித்தான் சிலையைக் கையால் வாங்கிக் கழுத்தி னிடையிட்டு*
*வலித்தான் பகுவாய் மடித்து மலைபோற் றலைமண் ணிடைவீழ.*

ஐயன் - அநுமன், எய்யும் சரத்தை கையால் உக சாடி - (சம்புமாலி தன் மீது) எய்த அம்பைத் தன் கைகளால் சிந்தும்படி அடித்து, சலித்தான் - சலிப்படைந்து, அமரர் கண்டு ஆர்ப்ப - தேவர்கள் பார்த்து (மகிழ்ச்சியால்) ஆரவாரம் செய்ய, ஒலித்தான் - ஓர் ஒலி செய்தவனாய், கலித்தான் தேரின் உள்புக்கு - செருக்குற்ற அந்தச் சம்புமாலியின் தேரினுள் புகுந்து, சிலையை - (அவன் கையிற் பிடித்த) வில்லை, கையால் வாங்கி - தன்கையால் எளிதில் பற்றி, பகுவாய் மடித்து - தன் சிறந்த வாயை மடித்துக் கொண்டு, மலைபோல் தலை மண்ணின் இடை வீழ - மலைபோன்ற அவன் தலை தரையிடத்தே விழும்படி, கழுத்தின் இடையிட்டு - அவனுடைய கழுத்தின் நடுவே மாட்டி, வலித்தான் - பிடித்து இழுத்துத் தள்ளினான்.

எழு சம்புமாலியால் துண்டிக்கப் படவே, அநுமன் தன் கைகளால் அவன் எய்த அம்புகளைச் சிதறியோட அடித்துச் சலித்தானாகி, அவன் தேரினுட் பாய்ந்து அவன் வில்லைப் பிடுங்கி அதனால் அவன் தலை விழ இழுத்தழித்தான் என்க. சிலையைப் பறித்து என்னாது வாங்கி என்றமையால், எளிதில் பிரயாசை யின்றி எடுத்துக் கொண்டது விளங்கும். ஒலித்தல், தழைத்தலும் ஆம்: சீவக. 653, உரை.

(பி-ம்.) 1. சலித்தா னரக்கன்; சலித்தா னவன்றன்: கரத்தா லெய்யும்: சிரங்கள் பொடியாக்கி.

2. ஒலித்தா ரமரர்; ஒலித்தாங் கெழுந்து குதித்தரக்கன் றேரிற்பாய்ந் தங் குடன்புக்குக்; ஒலித்தார் சுழலுந் தாரு மார்ப்பத் தேரின்; கண்டார்ப் பவுயர் மாமலரித்: கண்டே யுவப்ப வுயர்தேரின்.

3. கலித்தான் கையிற் சிலைபறித்துக் கழுத்தினிடைபோட் டொரு வலியாய்: கழுத்தி னிடையே யிட்டுலைய.

4. பகுவாய் மடித்த மலை: மிடித்தம் மலை: பகுவா யரக்கன்மணித் தலையற் றுடல்மண் ணிடைவீழ. (48)

## தோல்வியை இராவணன் அறிதலும் அவன் செயலும் 860-63

860. *குதித்துத் தேருங் கோல்கொ ளாளும் பரியுங் குழம்பாக*
*மிதித்துப் பெயர்ந்து நெடுந்தோ ரணத்தை வீரன் மேற்கொண்டான்*
*கதித்துப் பழிந்து கழிந்தார் பெருமை கண்டு களத்தஞ்சி*
*உதித்துப் புலர்ந்த தோல்போ லுருவத் தமர ரோடினரால்.*

வீரன் - மகாவீரனான அநுமன், குதித்து - அத்தேரிலிருந்து கீழே குதித்து, தேரும் கோல் கொள் ஆளும் - அச்சம்புமாலியின் தேரும் அத்தேரை ஓட்டும் கோலைக் கொண்ட தேர்ப்பாகனும், பரியும் - அத்தேரிற் பூட்டியிருந்த குதிரைகளும், குழம்பாக மிதித்து - குழம்பு போல இளகி ஓடத் தன் கால்களால் மிதித்து, பெயர்ந்து - மீண்டு அவ்விடம் விட்டுச் சென்று, நெடும் தோரணத்தை மேற் கொண்டான் - தான் முன்னிருந்த நெடிய தோரண வாயிலின் மீது ஏறிக் கொண்டான்; அமரர் - அச் சோலையைக் காத்து வந்த பருவத் தேவர். கதி துப்பு அழிந்து - விரைந்து செல்லும் வலிமை யழிந்து, பெருமை கண்டு - அநுமனுடைய பெரும் பராக்கிரமத்தைக் கண்டு, களத்து அஞ்சி கழிந்தார் - அப்போர்க் களத்திலிருக்கப் பயந்து நீங்கினவர்களாய், உதித்துப் புலர்ந்த தோல் போல் உருவத்து - பருத்துக் காய்ந்து போன தோல் போன்ற உருவத்தினராகி, ஓடினர் - அச்செய்தியைத் தெரிவிக்க இராவணன் அரண்மனை நோக்கி ஓடினர். ஆல்: அசை.

அமரர்; இங்கு, பருவத் தேவர்.

(பி-ம்.) 1. கோல்கொள்ளு மாளும்: கோல்கொள் வானும்; தேருங் காலாளும் கரியும் பரியும் குழம்பாக.
2. மிதித்துப் பெயர்த்து: மிதித்துப் பின்னுந் தோரணத்தின் மீதாங் கநுமன் வீற்றிருந்தான்.
3. கதித்துப் பழித்து: கதித்துக் களித்துக்: கணத்தஞ்சி: கொதித்துப் பொருத படையரக்கர் கொடும் போர்க் களத்தி னிறந்தது கண்(டு).
4. உதித்துப் பொலிந்த: உதிர்த்துப் புலர்ந்த தோல்போ லமர ருவத்தரக்க ரோடினரால்: புலர்ந்த து நத்தித் தோல்: பொலிந்த தொல்லிருள்போ லுருவத் தரக்க ரோடினர்: உருவத் தவுண ரோடினர். (49)

861. *பிரிந்து புலம்பு மகளிர் காணக் கணவர் பிணம்பற்றி*
*விரிந்த குருதிப் பேரா றீர்த்து மனைக டொறும்வீச*
*இரிந்த திலங்கை யெழுந்த தழுகை யின்றிங் கிவனாலே*
*சரிந்த தரக்கர் வலியென் றெண்ணி யறமுந் தளிர்த்ததால்.*

விரிந்த குருதி பேர் ஆறு - பரந்த இரத்த வெள்ளம் ஆகிய பெரிய நதி, பிரிந்து புலம்பும் மகளிர் காண - தம் கணவர் இறந்தமையால் இரங்கிப் புலம்பும் மகளிர்கள் நேரில் காணுமாறு, கணவர் பிணம் பற்றி ஈர்த்து மனைகள் தொறும் வீச - அவரவர் கணவருடைய பிணங்களைப் பிடித்து இழுத்து வந்து அவரவர் வீடுகள் தோறும் கொண்டு வந்து வீச, இலங்கை இரிந்தது - (அதைக் கண்ட) இலங்கை நகரம் நிலை குலைந்து அலைந்தது; அழுகை எழுந்தது-அழுகைக்குரல் எங்கும் மேலோங்கியது;

இன்று இங்கு இவனுலே - இன்றைக்கு இந்த இலங்கையில் இந்தக்குரங் காலே, அரக்கர் வலி சரிந்தது என்று எண்ணி-அரக்கர்களுடைய வலிமை அழிந்தது என்று நினைத்து, அறமும் தளிர்த்தது - தருமமும் தழைப் புண்டு மகிழ்ந்தது. ஆல்: அசை.

இலங்கை: இட ஆகுபெயராய் இலங்கை நகரத்தவரைக் குறித் தது. அரக்கர்கள் பாவத்தின் வடிவானவர் ஆதலின், அவர்கள் அநும ஞல் அழிந்தமையால் தருமம் ஓங்கி மகிழ்வுற்றது என்க. 'அறமும் தளிர்த் தன்றே' என்ற பாடம் கிடைப்பின் செய்யுள் ஓசை நன்கு தழைக்கும்.

(பி-ம்.) 1. பரிந்து புலம்பு: புலம்ப மகளிர்: புலம்பு மகளிர்: புலம்பு மாக்கி யர்கள்.
2. பெரியாறீர்த்து; பெயரா றீர்த்து; போராறங் கீர்த்து வீடு தொறும்போக.
3. இரிந்த திலங்கை யெழுமழுகை பிறந்த தின்றிங் கிவனுலே: அழுகை யொலியிங் கிவலே,
4. அறமுஞ் சாலத் தளிர்த்தால்: வலியினியென் றெண்ணி யறமுந் தளிர்த்ததால்.

862. புக்கா ரமரர் பொலந்தா ரரக்கன் பொருவில் பெருங்கோயில்
விக்கா நின்ருர் விளம்ப லாற்ருர் வெருவி விம்முவார்
நக்கா னரக்க னடுங்க லென்ரு னையா நமரெலாம்
உக்கார் சம்பு மாலி யுலந்தா னென்றே குரங்கென்ருர்.

பொலன் தார் அரக்கன் பொருவு இல் பெருங்கோயில் அமரர் புக்கார் - பொன்னுலான மாலை அணிந்த அரக்கனுன இராவணனுடைய ஒப்பில்லாத பெரிய அரண்மனையில் தேவர் புகுந்து, விக்கா நின்ருர்-விக்க லெடுத்து நின்றனர்; விலம்பல் ஆற்ருர் - பேசும் வலிமை இழந்தவரானுர்; வெருவி விம்முவார் - பயந்து ஏங்குவாராயினர்; அரக்கன் நக்கான்-இரா வணன் சிரித்து, 'நடுங்கல் என்ருன் - நடுங்காதீர்' என்று கூறினுன்; (அதனுல் தைரியங் கொண்ட அக்காவற்றேவர்), 'ஐயா நமர் எலாம். உக்கார் - ஐயா! நம்மவரான அரக்கர் அனைவரும் இறந்தனர்; சம்புமாலி உலந்தான்-சம்புமாலியும் அழிந்தான்; ஒன்றே குரங்கு என்ருர்- (இவ்வள வுக்கும் அங்கு எதிர்த்துப் போர் புரிவது) ஒரே குரங்குதான்' என்று கூறினர்.

அசோக வனத்தைக் காக்குந் தேவர்கள் இராவணன் ஏவலின் படி காவல் புரிபவராதலானும், அவ்விராவணனிடத்திலுள்ள அச்சத்தாலும் அரக்கர்களை நமர் என்று உறவு தோன்றக் கூறினர் என்க.

(பி-ம்.) 1. புக்கா ரரக்கர்; புக்கா ரவர்தாம்: பொலந்தார் வேந்தன்: புக்கார் தூதர் கடிதோடிப் பொலிந்தா ரரக்கன் பெருங்கோயில்.

2. விம்மி விரிவார்; வெருவி விம்மி விம்முவார்: விக்கா நின்றூர் விளம்புகில்லார் வெருவித் திடுக்கிட் டேங்கிடுவார்.

3. நக்கா னரக்க னடுங்க லென்னே வுரைமி னெனப்பின் னம ரெல்லாம்.

4. சம்பு மாலியுமற் றுலந்தா ஞென்றே குரங்கென்றூர். (51)

863. என்னு மளவி னெரிந்து வீங்கி யெழுந்த வெகுளியான்
உன்ன வுன்ன வுதிரக் குமிழி விழியூ டுமிழ்கின்றூன்
(சொன்ன குரங்கை யானே பிடிப்பென் கடிது தொடர்ந்தென்றூன்)
அன்ன துணர்ந்த சேனைத் தலைவ ரைவ ரறிவித்தார்.

என்னும் அளவில் - என்று கூறிய அளவில், எரிந்து வீங்கி எழுந்த - எரிந்து கொண்டு மிகுந்து மேற்கிளம்பிய, வெகுளியான் - கோபங் கொண்ட இராவணன், உன்ன உன்ன - (அவ்வாறு சம்புமாலி முதலிய அரக்கர்கள் போரில் இறந்த செய்தியை) நினைக்க நினைக்க, விழியூடு - விழிகளின் வழியே, உதிர குமிழி உமிழ்கின்றூன் - இரத்தக் குமிழிகளை வெளியிடுகின்றவனுய், 'சொன்ன குரங்கை - நீவிர் சொன்ன அந்தக் குரங்கை, யானே கடிது தொடர்ந்து பிடிப்பென் என்றூன் - யானே விரைந்து சென்று பிடித்து வருவேன்' என்று கூறினுன்; அன்னது உணர்ந்த சேனை தலைவர் ஐவர்-அதை உணர்ந்த சேனைத்தலைவர்களான ஐவர், அறிவித்தார் - இராவணனிடம் பின் வருமாறு தெரிவிப்பாராயினர்.

அறிவித்தது: அடுத்த படலத்தில் கூறப்படும். சேனைத்தலைவர் ஐவர். இவர்கள் பஞ்ச சேனுபதிகள் எனப்படுவர். இவர்கள், விருபாட்சன், யூபாட்சன், துர்த்தரன், பிரகஸன், பாசகர்ணன் என முதனூல் கூறும். சம்புமாலி வதத்திற்குப் பிறகு ஏழு மந்திரி குமாரர்கள் வதம் நிகழ்ந்த செய்தி முதனூலில் உள்ளது.

(பி-ம்.) 1. என்று மளவி விடிக்குலங்கள் சிதறக் கரத்திற் கரம் புடைந் தாங்(கு).

2. உன்னு மளவி லுதிரக்: குன்னு மனத்தி னழன் றுதிரக் குமிழி விழியூ டுமிழ்ந்திட நீர்; விழியோடு.

3. யானே தொடர்ந்து பிடிப்பன் கடிதென்னு; சொன்ன குரங்கைத் தொடர்ந்தினிப்போய்ப் பிடிப்பன் யானென் றெழலுற்றுன்.

4. அன்னது கண்டே சேனைத்: ஐவ ரமைவித்தார்; அறை வித்தார்: அறைவுற்றூர்: அன்ன தறிந்தங் கைவர் படைத் தலைவர் வணங்கி யறைந்திடுவார்: (52)

சம்புமாலி வதைப் படலம் முற்றும்.

# 9. பஞ்சசேனுபதிகள் வதைப் படலம்

## பஞ்சசேனுபதிகளின் வேண்டுகோள் 864-67

864. *சிலந்தி யுண்பதோர் குரங்கின்மேற் சேறியேற் றிறலோய்*
*கலந்த போரினின் கட்புலக் கடுங்கனல் கதுவ*
*உலந்த மால்வரை யருவியா றொழுக்கற்ற தொக்கப்*
*புலர்ந்த மாமதம் பூக்குமன் றேதிசைப் பூட்கை.*

பஞ்சசேனுபதிகள் வதைப்படலம்-அநுமன் இராவணனின் சேனைத் தலைவர் ஐவரைக் கொன்ற செய்தியைக் கூறும் படலம் என விரியும்.

(பஞ்சசேனுபதிகள் இராவணனைநோக்கி), 'திறலோய்-வலிமைவாய்ந் தவனே! சிலந்தி உண்பது ஓர் குரங்கின் மேல் சேறியேல்-சிலந்தி என்னும் சிறு பூச்சியைப் பிடித்துத் தின்று உயிர்வாழும் அற்பப் பிராணியான ஒரு குரங்கின் மேல் போர் செய்ய நீ போவாயானால், கலந்த போரில் - நீ எதிர்த்துப் புரிந்த போரில், நின்கண் புலம் கடும் கனல் கதுவ - உனது கண்களினின்றும் (கோபத்தால்) எழும் கொடிய நெருப்பு சூழ்ந்து பற்றிக் கொள்ள, உலந்த மால் வரை - கோடை வெயிலால் காய்ந்து போன பெரிய மலையில், அருவி ஆறு ஒழுக்கு அற்றது ஒக்க - அருவிகள் தம் வழியே செல்லும் ஓட்டம் அற்றுப் போனது போல, திசை பூட்கை - திக்குயானைகளின், புலர்ந்த மா மதம் - முன் வரண்டு உலர்ந்துபோன பெரு மதம், பூக்கும் அன்றே - மீண்டு தழைந்து விளங்கும் அல்லவா?' (என்றனர்)

அருவியாறு வற்றிப் போன மலைக்கு, மதமடங்கிப் போன திக்கயங்கள் உவமை. ஒரு குரங்கை எதிரிட்டு இராவணன் போர்க்குச் சென்றால், அது அவனுடைய வன்மைக் குறைவைத் தெரிவிப்பதோடு, முன் தோற்ற திக்கு யானைகளும் அவனை இழிவாய் நினைத்து மதச்செருக்குக் கொள்ளும் என்று கூறினர்.

(*பா-ம்.*) 1. சிலம்பி: சேறியோ திறலோய்: சேறியேற் றிறனிற்.
2. கலந்த போரினுன்: புலக் கடுங்கனல்: யோரினுன் கட்கனல் கதுவுற மேனுள்.
3. உலர்ந்த: நால்வரை: ஒழுக்கற வொழுக்கிப்; ஒழுக்கற்ற வொழுக்கிப்; ஒழுக்கற்ற தொழுக்கம்; ஒழுக்கற்ற வொப்ப அலம்பு மால்வரை யருவியொரத் தொழுக்கிய மதம்போய்.
4. புலந்த: புலம்பு மாதிரப் பூட்கையின் றேயுனை நகுமால். (1)

865. இலங்கு வெஞ்சினத் தஞ்சிறை யெறுழ்வலிக் கலுழன்
உலங்கின் மேலெழுந் தென்ன நீ குரங்கின்மே லுருக்கின்
அலங்கன் மாலைநின் புயநினைந் தல்லுநன் பகலும்
குலுங்கும் வன்றுயர் நீங்குமால் வெள்ளியங் குன்றம்.

'இலங்கு வெம் சினத்து அம்சிறை எறுழ் வலி கலுழன் - விளங்கும் கொடிய கோபத்தோடு கூடியதும், அழகிய சிறகுகளையுடையதுமான மிக்க வலிமை வாய்ந்த கருடன், உலங்கின் மேல் எழுந்து என்ன - ஒரு கொசுகின் மேல் போர் செய்ய எழுந்து சென்றாற் போல, நீ குரங்கின் மேல் உருக்கின் - நீ ஒரு அற்ப குரங்கின் மீது பகைத்துப் போர் புரியச் சென்றால், வெள்ளி அம் குன்றம்-அழகிய வெள்ளிமலை யென்னும் கயிலை மலை, அலங்கல் மாலை நின் புயம் நினைந்து - அசைந்தாடும் மாலையணிந்த உன் புயங்களின் வலிமையை நினைந்து, அல்லும் நல் பகலும் - இரவிலும் நல்ல பகலிலும்,, குலுங்கும் வன் துயர் - அச்சத்தால் குலுங்கி நடுங்கும் கொடும் துன்பம், நீங்கும் - நீங்கிக் கவலையற்றுப் போகும். ஆல்: அசை.

கலுழனுக்கு வடமொழியில் சுபர்ணன் என்றொரு பெயருண்டா தலின், அதை நோக்கி அஞ்சிறைக் கலுழன் எனப்பட்டது. எறுழ்வலி; ஒரு பொருட் பன்மொழி. அலங்கன் மாலை: இதனையும் ஒரு பொருட் பன்மொழி என்னலும் ஆம். உலங்கு - கொசுகு; உயுத்த. மந்திரப். 20; இது ஒலுங்கு எனவும் வழங்கும்,

(பி-ம்.) 1. வெஞ்சினத் தருஞ்சிறை.
2. உலங்குமே லெழுந்தன்ன; விழுந்தன்ன: மேலுருத்தல்: உருக்கில்; எதிர்க்கின்.
3. அலங்கன் மாலையாய்; மார்பநின்: நண்பகலும்; அல்லும் பகலும்.
4. குலுங்கு கின்றன தங்குமால்: வானுயர்: வென்றியங் குன்றம். (2)

866. உறுவ தென்கொலோ வுரனழி வென்பதொன் றுடையார்
பெறுவ தியாதொன் றுங் காண்கிலர் கேட்கிலர் பெயர்ந்தார்
சிறுமை யீதொப்ப தியாதுநீ குரங்கின்மேற் செல்லின்
முறுவல் பூக்குமன் றேநின்ற மூவர்க்கு முகங்கள்.

'நீ குரங்கின் மேல் செல்லின் - நீ ஒரு குரங்கை எதிர்த்து அதனோடு போர் செய்யச் சென்றால், உறுவது என் கொலோ - இதனால் உனக்கு உண்டாகக் கூடிய நன்மை அல்லது பெருமை என்ன இருக்கிறது? சிறுமை ஈது ஒப்பது யாது - இதற்கு ஒத்த தாழ்வான செயல் வேறு யாதுண்டு? (ஒன்றும் இராது என்றபடி); (மேலும் இதனால்), உரன் அழிவு

என்பது ஒன்று உடையார் - தம் வலிமை அழிந்துபோம் என்னும் நிச்சயத்தையுடையவர்களான (மும்மூர்த்திகள்), பெறுவது யாதொன்றும் காண்கிலர் கேட்கிலர் - (உனக்கு முன்னின்று, தாம்) அடையும் பெருமை ஒன்றையும் காணுதவர்களும் கேட்டறியாதவர்களுமாய், பெயர்ந்தார் - உன்னேடு எதிர்த்துப் போர் புரிவதை விட்டு நீங்கினவர்களாய், நின்ற மூவர்க்கும் - ஒதுங்கி நின்ற மும் மூர்த்திகளுக்கும், முகங்கள் முறுவல் பூக்கும் அன்றே - முகங்கள் (இப்பொழுது உன் செயலை நினைப்பதால்) புன் சிரிப்புக் கொள்ளுமல்லவா?

முறுவல் பூத்தல், இழிந்த நிலைமை நோக்கி. இராவணனுக்கு மூவரும் ஒதுங்கினர் என்பது கூறப்பட்டது. உரனழிவு உறுவது என்கொலோ என்ப தொன்றுடையார், என்று கூட்டியும் பொருள் உரைக்கலாம். 'உனக்கு ஒரு கேடு எப்போ வருமென்று ஓடிப்போன மும் மூர்த்திகள்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. வானிழி வென்ப; வரனிழிவென்ப வானில வென்ப தென்று: உறுவ தென்னிலோ வுரனழி: உறுவ செய்துதம் முரணழி வில்லதொன்றுடையார்.
2. வெறுவதி யாதெனிற் காண்கிலர் கேட்கிலர் பெயர்ந்தார்.
3. சிறுமையா தொப்பது: சிறுமைமீக் கொப்பதி யாது: மேற்சேறின். (3)

867. *அன்றி யும்முனக் காளின்மை தோன்றுமா லரச*
*வென்றி யில்லவர் மெல்லியோர் தமைச்செல விட்டாய்*
*நன்றி யின்றென்று காண்டியே லெமைச்செல நயத்தி*
*என்று கைதொழு திறைஞ்சின ரரக்கனு மிசைந்தான்.*

'அரச - அரசனே! அன்றியும் - இவை அல்லாமலும், உனக்கு ஆள் இன்மை தோன்றும் - உனக்கு ஏவற்பணி புரியும் வீரர்கள் இல்லாமை விளங்கும்; (மேலும்), வென்றி இல்லவர் மெல்லியோர் தமை செல விட்டாய் - வெற்றி பெறத்தகாதவர்களையும், வலியிற் குறைந்தவர்களையும் நீ முன் போருக்குப் போக அனுப்பினுய்; இன்று ஒன்று நன்றி காண்டியேல் - இன்று ஒரு நற்செயலை நீ காண விரும்புவாயானுல், எமை செல நயத்தி என்று - எங்களைப் போருக்குச் செல்ல விரும்புவாய்' என்று சொல்லி, கை தொழுது இறைஞ்சினர் - (அச் சேனுபதிகள்) கைகளால் கும்பிட்டு வணங்கினர்; அரக்கனும் இசைந்தான் - இராவணனும் அவர்களுக்கு உடன் பட்டான். ஆல்: அசை.

ஆள் - ஆண்மையுடைய வீரர்; ஊழியரும் ஆம்; பு - வெ. 2; 7, 7: 13. இதற்கு முன் அநுமனுடன் போரிடச் சென்ற, கிங்கரர்களினும், சம்புமாலியினும் இப்பஞ்ச சேனுபதிகள் வலியர் என்பது விளங்குகின்றது.

(பி-ம்.) 1. தோன்றுமா லாக.
2. வென்றி வில்லியர் மெல்லியர்: தம்மையே மேற்செல்ல விட்டாய்: செலவிட்டார்.
3. நன்றி நீயின்று காண்டியேல்: எம்மை யேகென விடுத்தி.
4. என்று கைதொழு திராவண னேகுமி னென்றான். (4)

## சேனைகளின் புறப்பாடு 868-87

868. *உலக மூன்றையு மொருங்குபெற் றாரென வுவந்தார்*
*திலக மண்ணுற வணங்கினர் கோயிலைத் தீர்ந்தார்*
*அலகி றேர்பரி கரியொடு மிடைந்தபோ ரரக்கர்*
*தொலைவி றானையைக் கதுமென வருகெனச் சொன்னார்.*

உலகம் மூன்றையும் ஒருங்கு பெற்றார் என உவந்தார் - (அப்பஞ்ச சேனபதிகள் இராவணனால் போர்க்கு அனுப்பப்பெற்ற மகிழ்ச்சியால்) மூன்று உலகங்களையும் ஒருமிக்கத் தாமே பெற்றனர்போல மகிழ்ச்சி மேற்கொண்டனர்; திலகம் மண் உற வணங்கினர் - தம் நெற்றியில் அணிந்திருந்த திலகம் தரையில்பட இராவணனை நோக்கிக் கீழே படிந்து வணங்கினர்; கோயிலை தீர்ந்தார் - அவ்வரண்மனையைவிட்டு நீங்கினர்; அலகு இல் தேர் பரி கரி ஒடு மிடைந்த போர் அரக்கர் தொலைவு இல் தானையை - எண்ணிக்கை அற்ற தேர்கள் குதிரைகள் யானைகள் இவற்றோடு நெருங்கிய போரிற் சிறந்த அரக்கர்களையுடைய அழியாத சேனைகளை, கதும் என - விரைவாக, வருகென - வருக என்று, சொன்னார் - கட்டளையிட்டனர்.

'உலகம் மூன்றையும் ஒருங்கு பெற்றாரெனவுவந்தார்' என்பது அவர்கள் போரிற்கொண்ட ஆர்வமும், அதனினும் அன்னோர் அடையக் கூடிய பெரும்பேறு வேறு இல்லை என்று அவர்கள் கொண்ட துணிவும் புலப்பட நின்றது. திலகம் - நெற்றியில் அணியும் பொட்டு. தொலைவில் தானை - அழியா வலிமை பெற்ற சேனை எனலும் ஒன்றும். வருகென; வருகவென என்பதின் தொகுத்தல் விகாரம்.

(பி-ம்.) 1. உலக மூன்றிற்கு முதன்மைபெற் றாரென வுயர்ந்தார்: மூன்றுந் தம் முடைமை; மூன்றிற்கு முரிமை: பெற்றுளரென.
2. கோயிலிற் றீர்ந்தார்.
3. பரி யானையோ டடைந்த; பரி யானையோ டாளணி மிடைந்த.
4. தொலைவி லாதன; தொலைவி லாதது. (5)

869. *ஆனை மேன்முர சறைந்தனர் வள்ளுவ ரழைத்தார்*
*பேன வேலையிற் புடைபரந் ததுபெருஞ் சேனை*
*சோன மாமழை முகிலெனப் போர்ப்பணை துவைப்ப*
*மீன வானிடை மின்னெனப் படைக்கல மிடைந்த.*

வள்ளுவர் - (பறைஅறைவோரான) வள்ளுவர், ஆனை மேல் முரசு அறைந்தனர் அழைத்தார் - யானை மீது ஏறிப் போர் முரசை முழக்கிச் (சேனையை) அழைத்தனர்; பெரும் சேனை - பெரிய போர்ப் படைகள், பேன வேலையில்-நுரையையுடைய கடலைப் போல, புடை பரந்தது-எப் புறங்களிலும் பரவி நிறைந்தது; சோன மா மழை முகிலென - விடாது பெய்யும் பெரிய மழையையுடைய மேகம் போல, போர் பணை துவைப்ப - போர் முரசங்கள் ஒலிக்க, மீன வானிடை மின் என - நட்சத் திரங்கள் கூடிய ஆகாயத்தினிடத்துத் தோன்றும் மின்னல்களைப் போல, படைக்கலம் மிடைந்த - போர்படைக் கருவிகள் நெருங்கி ஒளியால் விளங்கின.

வள்ளுவர் ஆனைமேல் முரசறைதல்: பால. திருவவதாரப்: 116; எழுச்சிப். 8 ;பெருங்: 2:2; 25-55. பேனம்-நுரை; 'பேனவெண் குடைய வாய' (உயுத்த - பிரமாத்திரப்: 145). துவைத்தல் - ஒலித்தல்; 'பல்லியந் துவைப்ப' (பால: திருவவதாரப்: 96.) சோனம் - மேகம்; 'சோனந் தரு குழல்' (ஆளுடை. மும்மணிக்: 12.) போர்ப்பணை: ஆரண்ய: கரன்வதைப்: 25.

(பி-ம்.) 1. வள்ளுவ ருரைத்தார்; அமைந்தார்: ஆனை மேல்வரும் வள்ளு வனறைமுர சோதை.
2. போன வேலையிற் றுடைபரந் தெழுந்தது பொருஞ்சேனை: பரந்தெ ழுந்தது சேனை.
3. சோன மாமுகில் மழையெனப்: துவைத்த; துவைக்க; துகைத்த. 4. வானிடு வில்லெனப்; வானிடு மின்னெனப். (6)

870. *தானை மாக்கொடி மழைபொதுத் துயர்நெடுந் தாள*
*மான மாற்றரு மாருதி முனியநா ளுலந்து*
*போன மாற்றலர் புகழெனக் கால்பொரப் புரண்ட*
*வான யாற்றுவெண் டிரையென வரம்பில பரந்த.*

மழை பொதுத்து உயர் நெடும் தாள - மேகத்தைப் பொத்துக் கொண்டு மேலே உயர்ந்து செல்லும் நீண்ட கால்களையுடையனவும், வான யாற்று வெள் திரை என - ஆகாயகங்கை யென்னும் ஆற்றின் வெண்மையான அலைகளென்று சொல்லும்படி, வரம்பு இல பரந்த - எல்லையற்றனவாய்ப் பரவியிருந்தனவுமான, தானை மா கொடி - அவ் வரக்கர் சேனையில் விளங்கிய பெரிய (வெண்ணிறக்) கொடிகள், மாற்று அரு மான மாருதி - மாற்ற முடியாத பெருமையையுடைய அநுமன், முனிய - கோபித்துப் போரிட, நாள் உலந்து போன - (அதனால் தம்) ஆயுட்காலம் அழிந்து போன, மாற்றலர் புகழ் என - பகைவராகிய

அரக்கர்களுடைய புகழே போல, கால் பொர புரண்ட - காற்றுத் தாக்கப் புரண்டு சலித்தன.

தாள் - கொடித்தண்டு. கொடிக்கு வானயாற்றுத்திரை: தக்க. 257; 634; நைடதம்; நகரப்; 23; திருக்குற்ருலப். நாட்டுச். 86; நகர, 9. நெடும் தாள திரையென வரம்பில பரந்த தானைமாக் கொடி, மாற்றலர் புகழெனப் புரண்ட என இயைக்க. மாற்றலர் புகழ்க்குக் கொடிச்சீலை யும் அநுமனுக்குக் காலும் உவமைகள். புகழ் வெண்ணிறமானதென்பது கவிமரபாதலின், அது வெண்கொடிக்கு உவமிக்கப்பெற்றது. தானைமாக் கொடி - துணியால் ஆகிய பெருங் கொடி என்னலுமமையும். இது வரையில் அரக்கர்கள் பெற்றுள்ள வெற்றிப்புகழ் அநுமனுடன் முன் அவர்கள் பொருதமையால்புரண்டு மாறின என்னலும் ஆம்.

(பி-ம்.) 1. கூன மாக்கொடி; கூனல் மாக்கொடி; வரனில் மாக்கொடி: உயர்நெடுங்கோல; நெடுந்தான; நெடுந்தானை.
2. மான மாத்தகு: உலைந்து: உலர்ந்து: ஞான மாருதி முனிந்திட விறந்துநா ளுலந்து.
3. புகழ்பொரக் காலெனப் புரண்ட ; கால்பொரப் பொரும்.
4. வான யாற்றின்வெண் டிரையென வரம்பில போந்த. (7)

871, *விரவு பொற்கழல் விசித்தனர் வெரிநுற விளங்கச்*
*சரமொ டுக்கின புட்டிலுஞ் சாத்தினர் சமையக்*
*கருவி புக்கன ரரக்கர்மாப் பல்லணங் கவினப்*
*புரவி யிட்டதேர் பூட்டின பருமித்த பூட்கை.*

அரக்கர் - அந்த இராக்கத வீரர்கள், விரவு பொன் கழல் விசித்தனர்- (வீரத்திற்கு அடையாளமாகப்) பொன்னுலமைந்த வீரக்கழல்களைக் கட்டிக் கொண்டனர்; சரம் ஒடுக்கின புட்டிலும் வெரிந் உற விளங்க சாத்தினர் - அம்புகளை உள்ளே கொண்ட அம்புப்புட்டிலையும் முதுகிற் பொருந்தி விளங்க அணிந்து கொண்டனர்; சமைய கருவி புக்கனர் - நன்ருக அமையும்படிக் கவசங்களையும் இட்டுக் கொண்டனர்; புரவி மா பல்லணம் கவின இட்ட - குதிரைகள் சிறந்த சேணங்கள் விளங்க அணியப்பட்டன; தேர் பூட்டின - தேர்கள் பூட்டப்பட்டன; பூட்கை பருமித்த - யானைகள் அலங்கரிக்கப்பட்டவை ஆயின.

கருவி - கவசம்: 'இளைஞருங் கருவி வீசினுர்' (சீவக. 2214. உரை.) பல்லணம்-குதிரைச் சேணம்; உயுத்த. மூலபல: 14. பருமித்தல் - அலங் கரித்தல்; 'பல் கதிராரமும் பூணும் பருமித்து' (சீவக. 2113.) இங்குச் சதுரங்க சேனைகளையும் போர்க்கோலம் செய்து விட்டமை குறிக்கப் பெற்றது.

(பி-ம்.) 1. வெரிநுற்று விளவ்க; வெரிநிடை விளங்க.
2. சரமெர டுங்கின; ஓடுக்கிய; ஓடுக்கினர்: சரமொ டுங்கினர் புட்டிலுந் தாங்கினுர் சமைந்து.
3. பல்லணங் கவினப்; பல்லணக் கலினப்: கருவி மாறுள கைக் கொடு பல்லணங் கவினும்.
4. புரவி யீட்டந்தேர்; புரவி யிட்டதேர் பூட்டினர்: பருமிதப் பூட்கை; புரவி யிட்டதேர் பருமிதப் பூட்கையிற் பொலிந்தார். (8)

872. *ஆறு செய்தன வாஹனயின் மதங்களவ் வாற்றைச்*
*சேறு செய்தன தேர்களின் சில்லியச் சேற்றை*
*நீறு செய்தன புரவியின் குரமற்றந் நீற்றை*
*வீறு செய்தன வப்பரிக் கலினவாய் விலாழி.*

ஆனையின் மதங்கள் ஆறு செய்தன - (போர்க்குச் சென்ற) ஆனைப் படையின் மதப் பெருக்குகள் (போகும் இடங்களில்) ஆறுகளை உண்டாக்கின; அ ஆற்றை-அந்த மத நீர் ஆற்றை, தேர்களின் சில்லி-அங்குச் சென்ற தேர்ப்படையின் சக்கரங்கள், சேறு செய்தன - (ஓடிச்) சேருகக் குழப்பி விட்டன; அ சேற்றை-அவ்வாறு உண்டாகிய சேற்றை, புரவியின் குரம் - குதிரைப்படையின் குளம்புகள், நீறு செய்தன-மிதித்துப் புழுதியாகச் செய்தன; அ நீற்றை-அவ்வாறு செய்யப்பட்ட அந்தப் புழுதியை, அ பரி கலின வாய் விலாழி - அக் கடிவாளம் பூட்டப் பெற்ற குதிரைகளின் வாயிலிருந்து வழிந்த நுரைகள், வீறு செய்தன - வீறு வீருய்ப் பிளவுபடச் செய்தன. மற்று அசை.

வீறு - பிளப்பு; 'மதுரைப் பெருமுற்றம் போல நின் மெய்க்கட் குதிரையோ வீறியது' (கலித். 96: 23-24.); வீறு - வேறுமாம். 'வீறு வீறியங்கும்' (புறநா. 173:8.)

(பி-ம்.) 2. சேறு செய்தன வரக்கர்தேர்ச்.
3. புரவியின் குரமற்றை; குரமந்த நீற்றை: குழாமந் நீற்றை.
4. ஈறு செயதன ரிராக்கத ரிகலிலா வாழி; ஈறு செய்தன வரக்கர் தங் கால்களா லெழுப்பி; ஊறுசெய்தன /கரிபரி யுமிழுமவ் விலாழி: மீறுசெய்தன வயப்பரிக்: கலினமா விலாழி. (9)

873. *வழங்கு தேர்களி னிடிப்பொடு வாசியி னுர்ப்பும்*
*முழங்கு வெங்களிற் றதிர்ச்சியு மொய்கழ லொலியும்*
*தழங்கு பல்லியத்த மலையுங் கடையுகத் தாழி*
*முழங்கு மோதையின் மும்மடங் கெழுந்தது முடுகி.*

வழங்கு தேர்களின் இடிப்பு ஒடு - செல்லுகின்ற தேர்களினுல் உண்டாகும் ஒலிகளோடு, வாசியின் ஆர்ப்பும் - குதிரைகளின் கனைப்பும், முழங்கு வெம் களிற்று அதிர்ச்சியும் - பிளிறுகின்ற கொடிய யானைகளின் முழக்கங்களும், மொய் கழல் ஒலியும் - அரக்க வீரர்களின் நெருங்கிய வீரக்கழல்களின் ஒலிகளும், தழங்கு பல்லியத்து அமலையும் - ஒலிக்கும் பல வாத்தியங்களின் முழக்கங்களும் (கூடி), கடை உகத்து ஆழி முழங்கும் ஓதையின் - யுக முடிவுக்காலத்தில் கடல்கள் கொந்தளித்து ஒலிக்கும் ஓசையை விட, மும் மடங்கு முடுகி எழுந்தது-மூன்று மடங்கு அதிகமாக வலிந்து மேற்கிளம்பியது.

ஒலி, தழங்கல், அமலை, ஓதை என்பன ஒரு பொருள் குறிக்கும் பல பெயர்கள். இவ்வாறு கூறப்படுவதை இந் நூலிற் பல இடங்களிலும் காணலாம்: ஒப்பு: 'ஆறுபா யரவ மள்ள ராலைபா யமலை யாலைக், சாறுபாயோசை வேலைச் சங்குவாய் பொங்கு மோதை, ஏறுபாய் தமர நீரி லெருமைபாய் துழனி யின்ன, மாறுமா றுகித் தம்மில் மயங்குமா மருத வேலி' (பால. நாட்டுப்: 3). எழுந்தது: எண்வழுவமைதி.

(பி-ம்.) 1. வழங்கு தோள்களின்: தேரொலியிடிப்பொடு.
2. அதிர்ச்சியும் பொலங்கழல்.
3. அமலையுஞ் சாரெழு கடல்கள்.
4. மும்மடி யெழுந்தது; எழுந்தது விரைந்து. (10)

874. ஆழித் தேர்த்தொகை யைம்பதி னுயிர மஃதே
சூழிப் பூட்கைக்குந் தொகையவற் றிரட்டியின் றொகைய
ஊழிக் காற்றன்ன புரவிமற் றவற்றினுக் கிரட்டி
பாழித் தோணெடும் படைக்கலப் பதாதியின் பகுதி.

ஆழி தேர் தொகை - சக்கரங்களையுடைய தேர்களின் கணக்கு, ஐம்பதினுயிரம் - ஐம்பதினுயிரம் என்னும் எண்ணிக்கை கொண்டது: சூழி பூட்கைக்கும் தொகை அஃதே-முகபடாம் அணிந்த யானைகளுக்குள்ள தொகையும் அந்த ஐம்பதினுயிரமே யாகும்: ஊழி காற்று அன்ன புரவி - யுகாந்த காலத்திற் றேன்றி வீசும் பெருங்காற்றுப் போல வேகமாகச் செல்லும் குதிரைகள், அவற்றின் இரட்டி தொகைய - அந்தத் தேர் படை, யானைப் படைகளைப் போல இருமடங்கு தொகையுடையன; பாழி தோள் நெடும் படை கலம் பதாதியின் பகுதி-பருத்த தோள்களையும், நெடிய படைக்கலங்களையும் கொண்டவையான காலாட் படைப் பிரிவுகளின் கணக்கு, அவற்றினுக்கு இரட்டி - அந்தக் குதிரைப்படைகளுக்கு இருமடங்கு தொகையுடையது. மற்று: அசை,

இதனால், இந்தப் பஞ்சசேனாபதிகளுடன் சென்ற சேனைகள், தேர்கள் ஐம்பதினாயிரம், யானைகள் ஐம்பதினாயிரம், குதிரைகள் லக்ஷம், காலாட்கள் இரண்டுலக்ஷம் ஆகிய கணக்கைக் கொண்டவை யென்பதாம். முதல் 'அவற்றினுக்கு' யானையும் குதிரையும் என்று கொண்டு இரண்டின் தொகையையும் கூட்டிக் கணக்கிடலும் ஆம்.

(பி-ம்.) 1. தொகை யன்பதி னாயிர கோடி.
2. ஆழிப் பூட்கைய திரட்டியிற் றொகையதற் கிரட்டி.
3 காற்றன புரவிமற் றவற்றினொன் றிரட்டி; காற்றின்வெம் புரவி யென் னுனவதற் கிரட்டி: மற் றவற்றொன்பா னிரட்டி.
4. தோள்வலிப் படைக்கலப்: பதாதியின் றொகுதி. (11)

875. கூய்த்த ருந்தொறுந் தருந்தொறுந் தானைவெங் குழுவின்
நீத்தம் வந்துவந் தியங்கிடு மிடனின்றி நெருங்கக்
காய்த்த மைந்தவெங் கதிர்ப்படை யொன்றொன்று கதுவித்
தேய்த்தெ ழுந்தன பொறிக்குல மழைக்குலந் தீய்ப்ப.

கூய் தரும் தொறும் தரும் தொறும் - படைத் தலைவர்கள் கூவி அழைக்கும் போதெல்லாம் (வந்து சேரும்), வெம் தானை குழுவின் நீத்தம் - கொடிய அச்சேனைக் கூட்டத்தின் பெருக்கம், வந்து வந்து - மேன் மேலும் வந்து, இயங்கும் இடன் இன்றி - அவை சஞ்சரிப்பதற்குப் போதிய இடம் இல்லாமல், நெருங்க-நெருங்கி நிற்க, காய்த்து அமைந்த - உலைக்களத்திற் காய்ச்சிக் கூராக வடித்த, வெம் கதிர்படை - கொடிய சுடர்களைப் பரப்பும் (அச் சேனைகளின்) ஆயுதங்கள், ஒன்று ஒன்று கதுவி - ஒன்றோடொன்று பற்றி உராய்ந்து, தேய்த்து - அவற்றைத் தேய்த்துக்கொண்டு, பொறி குலம் - (அவற்றிலிருந்து உண்டான) தீப்பொறியின் கூட்டங்கள், மழைகுலம் தீய்ப்ப - மேகக்கூட்டங்களைச் சுட்டெரிக்க, எழுந்தன - மேற்கிளம்பிச் சென்றன.

இஃது அரக்கப் போர்ப்படை வீரர்களின் கூட்டத்தின் பெருக்கத்தையும், அப்படை வீரர்கள் ஏந்திச் சென்ற போர்ப்படைக் கருவிகளின் மிகுதியையும் குறிப்பிடுவதாகும்.

(பி-ம்.) 1. கூய்த் தருதொறும் தெருத்தொறுந் தானையின் குழுவின்,
2. நீத்தம் வந்தியங் கிடுமிட மின்றியே நெருங்கக்.
3. காய்த்த மைத்த. 4. மழைக்குலம் தீய. (12)

876. பண்ம ணிக்குல யானையின் புடைதொறும் பரந்த
ஒண்ம ணிக்குல மழையிடை யுருமென வொலிப்பக்
கண்ம ணிக்குலங் கனலெனக் காந்துவ கதுப்பின்
தண்ம ணிக்குலம் மழையெழுங் கதிரெனத் தழைப்ப.

பண் - அலங்கரிக்கப்பட்ட, குல மணி யானையின்-சிறந்த குலத்திற் பிறந்த உயர்ந்த யானைகளின், புடைதொறும்-இருபக்கங்களிலும், பரந்த -பரவி விளங்கின, ஒள் மணி குலம்-ஒளியை யுடைய மணிகளின் கூட்டம், மழை இடை உரும் என ஒலிப்ப - மேகத்தினிடையே தோன்றும் இடியைப் போல ஓசை செய்ய, கண் மணி குலம் கனல் என காந்துவ - கண்ணின் மணியாகிய விழிக்கூட்டம் கனலே போல ஒளி வீசின; கதுப்பின் தண் மணி குலம் - கன்னங்களில் அணியப் பெற்ற குளிர்ந்த மணியாகிய முத்துக்களின் கூட்டம், மழை எழும் கதிர் என தழைப்ப-மேகத்தினின்று வெளிப்படும் சந்திரனே போல நிறைந்து விளங்கின.

குலம் என்பது; முதலடியில் உயர்வு என்றும், மற்றை யடிகளில் கூட்டம் என்றும் பொருள் படும். முதலடியில் உள்ள மணி, குலம் என்பவை, ஒருபொருட் பன்மொழி. தண்மணி - குளிர்ந்த ஒளியை வீசும் இரத்தினம்; அதாவது முத்து; தண் என்பதைக் கதிருக்கும் கூட்டித் தண்கதிர், எனக் கொண்டு, சந்திரன் என்று பொருள் கொள்ளப் பட்டது. இங்கு, மணி என்ற சொல், பல பொருள்களில் வந்துள்ளமை நோக்கத் தக்கது. இப்படிக்கின்றி, 'சேனையினுள் பல கண்டைகள் யானை மணியோசையினிடை ஒலிக்கவும், அரக்கர்களின் கண்கள் நெருப்புப் போல மின்னவும், அவர்கள் தலைச்சிகைமீதுள்ள இரத்தினங்கள் கதிர் போலப் பிரகாசிக்கவும்' என்று பொருள் கொள்வாரும் உண்டு. இப் பொருளில், கதுப்பு, ஆடவர் தலைமயிர் என்று பொருள்படும். இதுமுதல் மூன்று பாடல்கள் சில சுவடிகளில் இடம் மாறிக் காண்கின்றன. ஒரு சுவடியில் இச் செய்யுள் இல்லை.

(பி-ம்.) 1. பன்மணிக்குலம்: யானையின் படைதொறும்; மலர்ந்த.
2. உருமிடித் தன்ன: ஒலிக்க. 3. காந்துற மார்பில்.
4. தன்மணிக்குல முழையெழு. (13)

877. *தொக்க தாம்படை சுரிகுழன் மடந்தையர் தொடிக்கை*
*மக்க டாயர்மற் றியாவருந் தடுத்தனர் மறுகி*
*ஒக்க வேகுது மென்றனர் குரங்கின்முன் னெருவர்*
*புக்கு மீண்டில ரென்றழு திரங்கினர் புலம்பி.*

தொக்கது ஆம் படை - அவ்வாறு திரண்டதான படை வீரர்களை, சுரி குழல் மடந்தையர் - சுருண்ட கூந்தலையுடைய மகளிர்களும், தொடி கை மக்கள் - தொடி என்னும் முன்கையில் அணியும் வளைகளையுடைய மக்கள்களும், தாயர் - அவர்கள் அன்னைமார்களும், மற்று யாவரும் - உறவினர்களாயுள்ள மற்றவர்களும், மறுகி - மனம் குழம்பி, 'குரங்கின் முன் ஒருவர் புக்கு மீண்டிலர் - (இதுவரை அந்தக்) குரங்குக்கு

முன்னே போர்க்களம் புகுந்து திரும்பிப் பிழைத்து வந்தார் ஒருவரும் இல்லை;' என்று புலம்பி அழுது இரங்கினர் - என்று சொல்லிப் புலம்பி அழுது வருந்தியவர்களாய், 'ஒக்க ஏகுதும் என்றனர் - நாம் அனைவரும் ஒன்று சேர்ந்து அக்குரங்கின் முன் போய் மடிவோம்' என்று கூறி, தடுத்தனர் - (அவர்களை மேற் செல்ல விடாமல்) தடை செய்தனர்.

தொடி - கையை ஒட்டி முன்னே இறுக அணியும் ஒருவகை வளை. ஒருவர் ஒரு காரியமாய் வெளியே செல்லும்போது, அவரது உறவினரோ, அவர்களிலும், அவரது மனைவியோ தடை செய்தாலும்,'எங்குப் போகிருய்? யானும் வருகிறேன்' என்று கூறினுலும், அவர் மேற்கொண்ட காரியம் நிறைவேருமற் போவதுடன், அது பெருங் கேட்டையும் விளைவிக்கும் என்பது நிமித்த நூற் கொள்கையும், நம்மனோர் துணியும் ஆம். ஆதலின், இவ்வாறு இப்படைவீரர்களை இவர்கள் தடை செய்தது அன்னோர் அழிவை முன் கூட்டித் தெரிவித்தது என்க. இவ்விதமே, இந்நூலில், முன் வாலி சுக்ரீவனோடு போருக் கெழுந்த காலை அவன் மனைவி தாரை என்பாள் வந்து தடுத்ததும், அதனால் அவன் அழிவுற்றதும் மற்றுமோர் ஏற்ற சான்றாகும்.

(பி-ம்.)
1. தொக்க தம்படை;தொக்க மாப்படை; தொக்க ரக்கர்தம்படைக் குழல்:
2. மக்க டாயம்: தொடர்ந்தனர் மறுகி: மறுகுற்.
3. ஒக்க வேகுதுங் குரங்கினுக் குயிர்தர வொருவர்: ஒக்க வேகுது மென்றனர் குரங்கின் முன்னொருவர்; ஒக்க வார்த்துமுன் குரங்கினைத் தொடர்ந்தவ ரொருவர்; ஒக்க வேருது மென்றனர் குரங்கினுக் கொருவர்.
4 என்றெழுந் திரங்கினர்; என்றழு தேங்கினர்; எனவழு திரங்கினர். (14)

878. கைப ரந்தெழு சேனையங் கடலிடைக் கலந்தார்
செய்கை தாம்வருந் தேரிடைக் கதிரெனச் செல்வார்
மெய்க லந்தமா னிரைவரு முவமையை வென்றார்
ஐவ ரும்பெரும் பூதமோ ரைந்துமொத் தமைந்தார்.

ஐவரும் பெரும் பூதம் ஓர் ஐந்தும் ஒத்து அமைந்தார் - அந்த ஐந்து சேனாதிபகளும் ஐந்து பூதங்களும் ஒன்று சேர்ந்தன போல விளங்கினவர்களாய், கை பரந்து எழு - பக்கங்களிற் பரவிக் கிளம்பிய, சேனை அம் கடல் இடை - சேனைகளாகிய அழகிய பெருங்கடலின் நடுவே, கலந்தார்-போய்ச்சேர்ந்து கொண்டனர்; தாம் - அவர்கள், செய்கை வரும்-(எப்பொழுதும் ஓயாது) சென்றுகொண்டிருக்கும், தேர் இடை கதிர் என-(ஓராழித்) தேரினிடத்து விளங்கும் சூரியனே போல, செல்வார் -

செல்பவராயினர்; மெய் கலந்த மால் நிரை வரும் உவமையை வென்ருர்- உடல்கள் பெற்ற மேக வரிசைகள் ஒன்று சேர்ந்து வருகின்றன என்னும் உவமையை வென்று விளங்கினர்.

மேக வரிசைகள் ஒன்று கூடி வருகின்றதென்னும் உவமையை வென்று, அதனினும் சிறந்து விளங்கினர். மால் - மேகம்; **பிங்களம்**; 'சிலைமா லுரும்' (தஞ்சைவா. 164.) ஐவர்: 863 உரை. 'மெய் கலந்தமால்- சரீரம் ஒத்த மேகம்' என்பது பழைய உரை. ஐந்து பூதம் ஐவர்க்கு; **ஒப்பு. வி. பா. சூது. 77.**

(பி-ம்.) 1. கைகலந்தவெம் சேனை; கைகலந்தெழுஞ்சேனை; கைபரந்த வெஞ் சேனையங் கடலிடை கலந்தே.
2. செய்த தாருமென் றேரிடைக்; செய்பெருந்தடந் தேரிடைக்; கதிரெனத் திரிவார்.
3. மெய்கலந்தமா னிகர்வரு: மெய்கலந்தமா நிருதரு: மெய்பரிந்திடு நீசரவ் விறல்வலி யரக்கர். 4. பூதங்களைந்தும். (15)

879. *முந்தி யம்பல கறங்கிட முறைமுறை பொறிகள்*
*சிந்தி யம்புறு கொடுஞ்சிலை யுருமெனத் தெறிப்பார்*
*வந்தி யம்புறு முனிவர்க்கு மமரர்க்கும் வலியார்*
*இந்தி யம்பகை யாயவை யைந்துமொத் திசைந்தார்.*

முந்து இயம் பல கறங்கிட - முன்னே வாச்சியங்கள் பல ஒலிக்க, முறை முறை பொறிகள் சிந்தி - வரிசை வரிசையாய் (அடிக்கடி) நெருப்புப் பொறிகளைச் சிதறிக் கொண்டு, அம்பு உறு கொடும் சிலை - அம்புகள் பூட்டி எய்யக் கூடிய கொடிய வில்லை, உரும் என தெறிப்பார் - நாண் தெறித்து இடிபோல ஒலியை உண்டாக்குவார்; இயம்புறு முனிவர்க்கும் அமரர்க்கும் - புகழ்தற்கு உரிய முனிவர்களுக்கும், தேவர்களுக்கும், வலி ஆர் பகை ஆயவை - வலி பொருந்தினவையாய் விளங்கும் பகையான, இந்தியம் ஐந்தும் ஒத்து - இந்திரியங்கள் ஐந்தும் ஒப்பாகி, வந்து இசைந்தார் - அப்போர்க்களத்தில் வந்து பொருந்தினர்.

கொடுஞ்சிலை-வளைந்த வில் என்னலும் ஒன்றும். தெறித்தல் - நாண் உறுதி அறிய விரலாற்சுண்டி ஒலியுண்டாக்குதல்; இவ்வொலி வடமொழி யில் குணத்தொனி எனப்படும். இயம்புதல் - துதித்தல்; 'ஞானக் கொடி தனை ......... யியம்பு வோமே' (குற்ருலக் குறவஞ்சி: 7.) முனிவர்க்கும் அமரர்க்கும் உட்பகையாய் இருந்து அன்னோர் தவத்திற்கும் சிறப்புக்குங் கேட்டையுண்டாக்கும் ஐம்புலன்கள் போல, இச் சேனைத் தலைவர் ஐவரும், இராவணனேடு உடன் பழகி அவன் பெருங்கேட்டிற்குக் காரண

மாய் உள்ளவர் என்பது உணர வைத்ததாம். வந்து......வலியார் - தாமாகவே வந்து இயம்புகிற முனிவர்களையும் தேவர்களையும் விட வலிமை மிக்கவர் எனலும் ஆம். வந்தியம்புறு முனிவர் - வலிய வந்து உபதேசிக்கும் முனிவர்' என்பது பழைய. உரை. 'அஞ்செனும் புலன்க ளொத்தார், என்று இவர்களைப் பின்னும் (927) கூறுவது காண்க.

(பி-ம்.) 1. முந்தி யம்பறை: கறங்கிடை.
2. சிந்தி யங்குறு; சிந்தி யம்புவ; சிந்து மம்புறு: சில வயவர் பொற் றேரில்.
3. வந்து நின்றனர் முனிவர்க்கு; இயம்புறு பமரர்க்கு முனிவர்க் கும் வலியார்.
4. பகை யாவையும்; பகை யாலவை; பகை யைந்துமொத் தடலுற வமைந்தார்; ஒத் திருந்தார்: இயைந்தார். (16)

880. *வாசவன்வயக் குலிசமும் வருணன்வன் கயிறும்*
*ஏசி றென்றிசைக் கிழவன்ற னயின்முனை யெழுவும்*
*ஈசன் வன்றனிச் சூலமு மென்றிவை யொன்றும்*
*ஊசி போல்வதோர் வடுச்செயா நெடும்புய முடையார்.*

வாசவன் வய குலிசமும் - இந்திரனுடைய வெற்றிதரும் வச்சிராயுதமும், வருணன் வன் கயிறும் - வருண தேவனுடைய வலிய பாசம் என்னும் கயிறும், ஏசு இல் தென் திசை கிழவன் தன் - பழிப்பற்ற தெற்குத் திசைக் குரிய யமனுடைய, அயில் முனை எழுவும் - கூரிய முனையை யுடைய தண்டாயுதமும், ஈசன் தனி வன் சூலமும்-சிவபெருமானுடைய ஒப்பற்ற வலிய திரி சூலமும், என்று இவை ஒன்றும் - என்று பெருமை யாய்ச் சொல்லக் கூடிய இவை ஒன்றும், ஊசி போல்வது ஓர் வடு செயா - ஊசி குத்துவது போன்ற ஒரு வடுவைக் கூடச் செய்ய முடியாத, நெடும் புயம் உடையார் - நீண்ட தோள்களையுடையவர்.

இந்திரன், வருணன், யமன், சிவபிரான் இவர்களின் படைகளாலும் ஊறு செய்யப் படா வலிய புயம் அமைந்தவர்கள் என்று கூறப்பட்டது. வருணன் கயிறு; வருணபாசம் எனப்படுவது; தக்க. 491; 786.

(பி-ம்.) 1. வருணன்றன் கயிறும்:
2. ஏசு தென்றிசைக்; ஆசி றென்திசைக்: எரிமுனை யெழுவும்; எரி முனை யெழுவும்.
3. என்றிவை யாவும்: ஈசன் கையுறுஞ் சூலமு மென்றிவை யெறிய.
4. ஊசி போழ்வதோர்; போதலோர்: ஊசி யின்முனை யொடிந் தென வொடித்திடும் புயத்தார். (17)

881. *சூர்த டிந்தவன் மயிலிடைப் பறித்தவன் றோகை*
*பார்ப யந்தவ னன்னத்தி னிறகிடைப் பறித்த*
*மூரி வெஞ்சிற கிடையிட்டுத் தொடுத்தன முறுக்கி*
*வீர சூடிகை கயிறிட்டு நெற்றியின் விசித்தார்.*

(அப்பஞ்சசேனுபதிகள்), சூர் தடிந்தவன் - சூரபதுமனைக் கொன்ற முருகக் கடவுளின், மயில் இடை - வாகனமான மயிலினிடத்திலிருந்து, பறித்த - பிடுங்கி எடுத்துக் கொண்ட, வல் தோகை - வலிய இறகுகளையும், பார் பயந்தவன் - பூமியைப் படைத்த நான்முகனின், அன்னத்தின் இறகு இடை - (வாகனமான) அன்னத்தின் இறகுகளின் இடத்திருந்து, பறித்த மூரி வெம் சிறகு - பறித்து எடுத்த வலியவையும் அழகியவையுமான சிறகுகளையும், இடை இட்டு தொடுத்தன முறுக்கி - இடையிடையே வைத்துத் தொடுத்து முறுக்கி, வீர சூடிகை - வீர சூடிகை என்னும் ஆபரணத்தை, நெற்றியின் - நெற்றியிலே, கயிறு இட்டு விசித்தார் - கயிறு போட்டுக் கட்டி அணிந்து கொண்டிருந்தனர்.

வீர சூடிகை - வீரர்கள் அணியும் நெற்றிச் சுட்டி.

(பி-ம்.) 1. பறித்ததொல் லிறகும்; பறிந்திடுந் தோகை.
2. இடையிடைப் பறித்த; சிறகிடைப் பறிந்த.
3. மூரி வெஞ்சிலை யிடை; மூரி வெஞ்சிறை யிடையிடை தொடுத்தன முறுகி.
4. வீர சுட்டிகை: வீர சூடிகை நெற்றியி னயலிட்டு. (18)

882. *பொன்றி ணிந்ததோ ளிராவணன் மார்பொடும் பொருத*
*அன்றி ழந்தகோ டரிந்திடு மழகுறு குழையர்*
*நின்ற வன்றிசை நெடுங்களி யானையி னெற்றி*
*மின்றி ணிந்தன வோடையின் வீரபட் டத்தர்.*

(அப்பஞ்சசேனுபதியர்), பொன் திணிந்த தோள் இராவணன் - பொற் கவசம் (அல்லது ஆபரணங்கள்) நெருங்கி நிறைந்த தோள்களையுடைய இராவணனுடைய, மார்பு ஒடும் - மார்பினேடும், பொருத அன்று - (திக்குக் கஜங்கள்) போர் புரிந்த அக்காலத்தில், இழந்த கோடு- இழந்தவையான கொம்புகளை, அரிந்திடும் - வெட்டிச் செய்யப்பட்ட, அழகு உறு குழையர் - அழகு பொருந்திய குண்டலங்களையுடையவர்; நின்ற வல் திசை களி நெடும் யானையின் - (அவ்வாறு தோற்று) நின்ற வலிய செருக்குற்ற திக்கு யானைகளின், நெற்றி - நெற்றியில், மின் திரிந்து அன ஓடையின் - மின்னல் திரிவது போல ஒளி வீசும் (அவற்றின்) நெற்றிப்பட்டங்களினுல் ஆன, வீர பட்டத்தர் - வீர பட்டம் என்னும் நெற்றிப் பட்டங்களை யுடையவர்.

திக்கயங்களோடு இராவணன் போர் புரிந்தபோது இப்பஞ்சசேனு பதிகளும் அவனுடன் உடன் போனவர் என்பதும், அங்கு அவ்வியானை களின் கொம்பு முறிபடவே அம் முறிபட்ட யானைக் கொம்புகளைக் கொண்டு குழைகள் அமைத்து அவற்றை இவர்கள் காதுகளிலும், அவ் வியானைகளின் நெற்றிப்பட்டங்களைக் கொண்டு அமைத்த வீரபட்டங் களை நெற்றிகளிலும் அணிந்தவர்கள் என்பதும் விளங்கும். வீரபட்டம்; வீரர்கள் அணியும் நெற்றிப்பட்டம்; பால, கடிமணப்: 54; ஆரண்ய, கரன்வதைப். 159. 881, 882, என்ற செய்யுட்களால் வீர சூடிகை வேறு; வீரபட்டம் வேறு எனத் தெரிகிறது. சூடிகை இறகுகளாலும், பட்டம் பொன்னுலும் அமைவனவாகும். இச் செய்யுள் ஒரு சுவடியில் இல்லை.

(பி-ம்.) 1. பொன்ற ணிந்ததா ரிராவணன்: தோள் தசமுகன் மார்பிடைப்.
2. அழகுறு முழையர்; அருகுறு குழையர்: அன்றெ டிந்தவன் றிசைக்கரிக் கொண்டனன் குழையார்.
3. தின்றி டுந்திசை தேருமக் கடகரி நுதலின் நெடுங்களி யிக னெடு நெற்றி.
4. மின்ற ணிந்தன: வீரவட் டத்தார். (19)

வேறு

883. *இந்திர னிசையிழந் தேகு வானிகல்*
*தந்திமுன் கடாவினன் முடுகத் தாமதன்*
*மந்தர வாலடி பிடித்து வல்லையேல்*
*உந்துதி நீயென வலித்த வூற்றத்தார்.*

இசை இழந்து - (இராவணனெடு போர் புரிந்ததால்) தன் புகழ் அழிந்து, ஏகுவான் - தோற்றுத் திரும்பிப் போன, இந்திரன் - இந்திரன், இகல் தந்தி முன் கடாவினன் முடுக - வலிமையுள்ள (தன்) யானை யாகிய ஐராவதத்தை விரைவாகச் செலுத்த, தாம் - இந்தப் பஞ்ச சேனுபதிகள், அதன் மந்தர வால் அடி பிடித்து-அதன் மென்மையான வாலின் அடியைப் பற்றிப் பிடித்துக் கொண்டு, 'வல்லையேல் உந்துதி நீ என - (இந்திரனை நோக்கி) நீ வலிமையுள்ள வனுனல் நீ (உன் யானையை) மேற் செலுத்துவாய்' என்று, வலித்த ஊற்றத்தார் - பிடித்து இழுத்துத் (தடை செய்த) வலிமையுடையவர்கள்.

தந்தி-யானை; தந்தத்தையுடைமையால். மந்தரம் - அழகும் ஆம். மந்தர அதன் வால் என்று இயைத்து - மந்தர மலை போன்ற அவ்வியானை யின் வாலை எனப் பொருள் கொள்வாரும் உளர். ஊற்றம் -வலிமை.

(பி-ம்.) 1. இந்திர னிலையிழந்(து); இந்திர னமரிழந்(து).
2. தந்திமுன் கடந்தவன்: கடவினன்; ஓடத் தாமதன்.

3. மந்தர வாலதி: பிந்துரு வாலினே.
4. உந்துதி யினியென; உந்திடு நீயென; உந்துநீ யினியென. (20)

வேறு

884. *நிதிநெடுங் கிழவனை நெருக்கி நீணகர்ப்*
*பதியொடும் பெருந்திருப் பறித்த பண்டைநாள்*
*விதியொடு மன்னவன் விழுந்து வெந்நிடப்*
*பொதியொடும் வாரிய பொலன்கொள் பூணினர்.*

(அப்பஞ்சசேனுபதிகள்), நெடும் நிதி கிழவனை - பெருஞ் செல்வத்திற்கு உரியோனான குபேரனை, நெருக்கி - போரில் தாக்கி, நீள் நகர் பதியொடும் - நீண்ட நகராகிய அளகாபுரியொடும், பெரும் திரு-அவன் பெரும் செல்வத்தையும், பறித்த பண்டை நாள் - அபகரித்துக் கொண்ட முற்காலத்தில், அன்னவன் - அந்தக் குபேரன், விதியொடு விழுந்து வெந் இட - விதி வகையால் தோற்று விழுந்து முதுகிட்டு ஓட, பொதி ஒடும் வாரிய - சுமைகளாக வாரிக்கொண்ட, பொலன் கொள் பூணினர் - பொன்னுற் செய்யப்பட்ட அணிகலன்களையுடையவர்கள்.

இராவணன் குபேரனேடு போர் புரிந்து, அவன் அளகை நகரையும் அதிலிருந்த நிதியங்களையும் அபகரித்துக் கொண்டான். அக்காலை இந்தப் பஞ்சசேனுபதிகள் இராவணனுடன் அங்குப் போருக்குச் சென்றிருந்த போது, அங்குக் கிடைத்த பல பொன்னணிகளை எடுத்துத் தாம் அணிந்து கொண்டனர் என்பதாம். இராவணன் இலங்கை நகரையும் நிதியையும் அபகரித்தது; உத்தர. வரையெடுத்த.62.

(பி-ம்.) 1. நிதி பெறுங் கிழவனை.
2. பதியொடு நெடுந்திரு; பதியொடும் பொலிதிருப் பறித்துப்.
3 அன்னவ னிழிந்து; இழந்து; விழுந்து: வெந்நொடும்; வென்னெடும்; வெறிது போயிட: விதியென வன்னவன் வெந்நிட் டோடவே. (21)

885. *பானிறுத் தந்தகன் பணிய னுகிநின்*
*கோனிலைத் திலனென வுலகங் கூறலும்*
*நீனிறத் திராவணன் முனிவு நீக்குவான்*
*காலனைக் காலினிற் கையிற் கட்டினர்.*

(அப்பஞ்சசேனுபதிகள்). பால் நிறுத்து அந்தகன் - விதியை நிலை நிறுத்தும் யமன், பணியன் ஆகி - பணியாளன் ஆகி, நின் கோல் நிலைத்

திலன் என - உன் கோலின் ஆணையை எண்ணாது (தருக்கியிருக்கின்றான்) என்று, உலகம் கூறலும் - உலகத்தோர் சொல்லவும், (அதனால்), நீல் நிறத்து இராவணன் முனிவு நீக்குவான் - கரு நிறத்தையுடைய இராவணன் கொண்ட கோபத்தை நீக்கும் பொருட்டு, காலனை - அந்த யமனை, காலினில் கையினில் கட்டினார் - காலிலும் கையிலும் கட்டினார்கள்.

பால் நிறுத்தந்தகன் - அவரவர் ஊழ் வினைகளை நிலை நிறுத்தும்படி ஏற்றவாறு தண்டனை விதிக்கும் யமன் என்பதாம்; பால் - விதி: அயோத்யா. மந்திரப். 8 ; (பு. வெ. 281.).

(பி-ம்.) 1. பானிறுத் தந்தணன்; பணியி னுல்வரும்.
2. கோனிணைந் திலனெனக் கொடியர் கூறலும்.
3. நீனிறத் தசமுகன் நினைக்க முன்புபோய்: நீக்குவார்.
4. கானிறக் காலனை: காலனைக் கையினாற் காலிற் கட்டினார்; ஊனுடைக் காலன்கை யொடியக் கட்டினார். (22)

886. *மலைகளை நகுந்தட மார்பர் மால்கடல்*
*அலைகளை நகுநெடுந் தோள ரந்தகன்*
*கொலைகளை நகுநெடுங் கொலையர் கொல்லனூ*
*துலைகளை நகுமன லுமிழுங் கண்ணினர்.*

(அப் பஞ்சசேனாபதிகள்), மலைகளை நகும் தட மார்பர்-மலைகளைப் பார்த்து இகழும் விசாலமான மார்பினையுடையவர்கள் ; மால் கடல் அலைகளை நகும் நெடும் தோளர் - பெரிய கடலின் அலைகளைப் பழிக்கும் நீண்ட தோள்களையுடையவர்கள்; அந்தகன் கொலைகளை நகும் நெடும் கொலையர் - யமனுடைய கொலைத் தொழிலைப் பழிக்கும் பெரிய கொலைச் செயல்களை மேற் கொண்டவர்கள்; கொல்லன் ஊது உலைகளை நகும் - கொல்லன் (துருத்தி கொண்டு) ஊதும் உலைக்களங்களைப் பார்த்து, இகழ்ந்து (சிவப்பன போல), அனல் உமிழும் கண்ணினர் - நெருப்பைக் கக்குகின்ற கண்களையுடையவர்கள்.

மலைகளை நகுதல்: தம்மினும் அவை மெலிந்தன என்பது நோக்கி. தோள்கள் அலைகளை நகுதல் அன்னோர் தோள்களைப் போல, உருண்டு திரண்டு உயர்ந்தோங்கும் தன்மை இன்மை நோக்கி. அந்தகன் கொலைகளை நகுதல்: யமன் ஆயுள் முடிந்தவர்களை மட்டும் ஆராய்ந்து கொண்டு போவதன்றி இவர்களைப் போல எதிர்ப் பட்டோர் அனைவரையும் கொல்லும் தன்மையின்மையால்; ஒப்பு. 'சாற்று நாளற்ற தெண்ணித் தருமம்பார்த், தேற்றும் விண்ணென்ப தன்றி யிவளைப்போல், நாற்றங் கேட்டலுந் தின்ன நயப்பதோர், கூற்றுண் டோசொலை

கூற்றுறழ் வேலினாய்' (பால. தாடகைவதைப்: 64.) கொல்லன் உலை யைக் கண் நகுதல்: அவற்றினும் மிகுதியாக அனலுமிழ்தல் பற்றி.

(பி-ம்.) 1. நகநெடு மார்பர்: மாகடல்; மாக்கடல்: மலைகளின் பெருந்தட மார்பர். 2. அலைகடந் தளந்திடுந் தாள ரந்தகன். 4. துலையன னகுமழ லூதுங் கண்ணினர். (23)

887. தோல்கிளர் திசைதொறு முலகைச் சுற்றிய
சால்கிளர் முழங்கெரி தழங்கி யேறினும்
கால்கிளர்ந் தடிப்பினுங் காலங் கையுற
மால்கடல் கிளரினுஞ் சரிக்கும் வன்மையார்.

காலம் கை உற - யுக முடிவுக்காலம் அருகே அடைய, தோல் கிளர் திசை தொறும் - (திக்கு) யானைகள் விளங்கும் எட்டுத் திக்குக் களிலும், உலகை சுற்றிய-உலகம் யாவையும் சுற்றிச் சூழ்ந்து கொண்ட, சால் கிளர் முழங்கு எரி - மிகுந்து ஓங்கி முழக்கத்தோடு கூடிய யுகாந்தக் காலத்தீ, தயங்கி ஏறினும் - பேரொலியோடு மேற்கிளம்பினும், கால் கிளர்ந்து அடிப்பினும் - ஊழிக் காற்று மேற்கிளம்பி வீசியடித்தாலும், மால் கடல் கிளரினும் - பெருங்கடல்கள் ஒன்று சேர்ந்து பொங்கி யெழுந்தாலும், சரிக்கும் வன்மையார் - (இப்பஞ்சசேனாதிபதிகள் அவற்றை யெல்லாம் சிறிதும் பொருட்படுத்தாமல் அலட்சியமாகச்) சஞ்சரிக்கும் ஆற்றலுடையவர்கள்.

உலகெங்கும் பெருந் தீ எழுந்து மூடலும், பெருங் காற்றடித்து யாவற்றையும் அழித்தலும், கடல்கள் கொந்தளித்து எழுந்து உலகில் பரவுதலும், யுகாந்த கால நிகழ்ச்சிகள் ஆம். தோல் - யானை; 'தோலு ரிந்து கழன்றன தோலெலாம். (1183); 'தோல் பெயரிய வெறுழ் முன் பின்' (புறநா: 7: 6.). சரித்தல் - சஞ்சரித்தல்; நடத்தலும் ஆம்.

(பி-ம்.) 1. தோல்சுமந் திடுதிசை யுலகம் சுற்றியேழ்: உலகு சுற்றிய. 2. தாள்கிளர்; தாலமுற் றிடுமெரி தழங்கி: சால்கிளர் தழங்கெரி. 3. கால்கிளர்ந் தோங்கினும்; கிளர்ந் திடிப்பினுங்; அடர்ப்பினுங்: கால்கிளர்ந் தடிப்பினுங் கழியுங் காலத்தின்: காலங் கையற; காலங் கையுற. 4. சிரிக்கும் வன்மையார், (24)

## அநுமன் படைகளைக் காணல். 888-90.

888. இவ்வகை யைவரு மெழுந்த தானையர்
மொய்கிளர் தோரண மதனை முற்றினர்
கையொடு கையுற வணியுங் கட்டினர்
ஐயனு மவர்நிலை யமைய நோக்கினன்.

இ வகை ஐவரும்-இவ்விதம் அந்தப் பஞ்சசேனுபதிகளும், எழுந்த தானையர் - மேனேக்கி எழுந்த சேனைகளையுடையவர்களாய், மொய் கிளர் தோரணம் அதனை முற்றினர் - வலிமையால் விளங்கும் தோரண வாயிலைச் சூழ்ந்து, கையொடு கையுற - ஒரு பக்கத்தோடு மற் ெருரு பக்கமும் பொருந்த, அணியும் கட்டினர் - சேனைகளை அணி வகுத்து அமைத்தனர்; ஐயனும் அவர் நிலை அமைய நோக்கினன் - அநு மனும் அவர்களுடைய போர் நிலைமையை நன்ருகப் பார்த்தான்.

ஐவர்; 862, உரை.

(பி-ம்.) 1. இவ்வகை யனைவரும் எழுந்த தானையும்.
2. செருக்கள மதனை முன்னினர்.
3. வழியுங் காட்டினர்; அணியுங் காட்டினர்.
4. நிலை யறிய நோக்கினன்; நிலை அதனை நோக்கினன்.

889. அரக்கர்த மாற்றலு மளவில் சேனையின்
தருக்குமம் மாருதி தனிமைத் தன்மையும்
பொருக்கென நோக்கிய புரந்த ராதியர்
இரக்கமு மவலமுந் துளக்கு மெய்தினர்.

அரக்கர் தம் ஆற்றலும் - அவ்வரக்கர்களுடைய வலியையும், அளவு இல் சேனையின் தருக்கும் - அளவற்ற அச்சேனையின் பெருமிதத் தையும், அ மாருதி தனிமை தன்மையும் - அந்த அநுமனது தனியாய் இருக்கும் நிலையையும், பொருக்கென நோக்கிய - திடீரென்று விரை வில் நோக்கிய, புரந்தராதியர் - இந்திரன் முதலிய தேவர்கள், இரக்கமும் அவலமும் துளக்கும் எய்தினர் - இரக்கமும் துன்பமும், நடுக்கமும் (ஒருங்கே) அடைந்தனர்.

புரந்தராதியர், முன் இராவணன் திக்கு விசயம் செய்தகாலை, அவ னுடன் வந்த இந்தப் பஞ்சசேனுபதிகளின் ஆற்றலை நன்கு அறிந்தவராத லாலும், அநுமன் தனியனுய் இருக்கும் நிலைமையையும், அவ்வரக்கப் படையின் மிகுதியையும் கண்டு, அநுமன் நிலைமைக்கு இரக்கமும், அவலமும், துளக்கும் எய்தி வருந்தினர், புரந்தராதியர் - இந்திரன் முத லிய திக்குப்பாலர்கள் என்னலும் ஆம், இந்திரன் முதலினேர் முன் இவர்களால் ஈடழிந்தது; 880-885. பொருக்கென: விரைவின் குறிப்பு.

(பி-ம்.) 1. அரக்கர தாற்றலும்.
2. தருக்கறு மாருதி; தருக்குமா மாருதி: தனித்த தன்மையும்.
3. நோக்கினர் புலவர் புந்திகொண்(டு).
4. இரக்கமுற் றவர்மனம்: துளக்க மெய்தினர். (26)

890. *இற்றன ரரக்கரிப் பகலு ளேயெனுக்*
*கற்றுணர் மாருதி களிக்குஞ் சிந்தையான்*
*முற்றுறச் சுலாவிய முடிவி ருனையைச்*
*சுற்றுற நோக்கித்தன் ருேளை நோக்கினுன்.*

(ஆனுல்), இ பகல் உளே அரக்கர் இற்றனர் என - இன்றைப் பகற் பொழுதுக்குள்ளே இவ்வரக்கர்கள் அழிவர் என்று, கற்று உணர் மாருதி (நூல்களைக்) கற்றுத் தேர்ந்த அநுமன், களிக்கும் சிந்தையான் - மகிழ் கின்ற மனத்தினனுய், முற்று உற சுலாவிய முடிவு இல் தானையை-முழு வதும் சூழ்ந்து கொண்ட எல்லை அற்ற அவ்வரக்கர் படைகளை, சுற்றுஉற நோக்கி - சுற்றிலும் நன்ருய்ப் பார்த்து, தன் தோளை நோக்கினுன் - (வீர மகிழ்ச்சியால்) தன் தோள்களைப் பார்த்துப் பெருமிதங் கொண்டான்.

கற்றுணர் மாருதி; கிட்கிந்தா. மராமரப்; 20; மகேந்திரப்; 9; அநுமன் தன் தோளை நோக்கல்; 948.

(பி-ம்.) 1. பகலு ளேயெனக்; பகலு மேயெனுக்.
3. முற்றுறச் சுற்றிய; முடிவின் ருனையைக். (27)

## அரக்கர் அநுமனைப் பற்றிக் கருதுதல்

891. *புன்றலைக் குரங்கிது போலு மாலமர்*
*வென்றது விண்ணவர் புகழை வேரொடும்*
*தின்றவல் லரக்கரைத் திருகித் தின்றதால்*
*என்றன ரயிர்த்தனர் நிருத ரெண்ணிலார்.*

எண் இலார் நிருதர்-எண்ணிக்கையிட்டுச் சொல்ல முடியாது அளவு கடந்த அரக்கர்கள், 'புல் தலை குரங்கு இது போலும் - சிறிய தலையை யுடைய குரங்கு இது தானே, மால் அமர் வென்றது - பெரிய போரில் வெற்றி கொண்டது? விண்ணவர் புகழை - தேவர்களுடைய புகழை, வேர் ஒடும் தின்ற வல் அரக்கரை - வேரோடு அழித்துத் தின்ற வலிய அரக்கர்களை, திருகி தின்றது - முறுக்கித் தின்றது?' என்றனர் அயிர்த் தனர் - என்று ஐயங் கொண்டனர். ஆல்: அசை.

போலும் என்பது ஒப்பில் போலி ஆகும். எண் இலார் - ஆலோ சனையற்றவர் என்றும் பொருள் கொள்ளலாம். 'அமர் வென்றது போலுமால்' என்றும் கூட்டியும் பொருளுரைக்கலாம்.

(பி-ம்.) 1. போலு மால்செரு.
2. வென்றவிண் ணவர்களை யடங்க வேரொடும்.
3. தீர்த்த தன்றதால்; தீரத் தின்றதால்; நீரத் தின்றதிங்.
4. அயர்த்தனர்: உயிர்த்தன ரரக்க ரெண்ணினுர். (28)

## அநுமன் பேருருவங் கொள்ளல்

892. *ஆயிடை யநுமனு மமரர் கோனகர்*
*வாயினின் றிவ்வழிக் கொணர்ந்து வைத்தமாச்*
*சேயொளித் தோரணந் தும்பர்ச் சேணெடு*
*மீயுயர் விசும்பையும் கடக்க வீங்கினன்.*

அ இடை - அப்போது, அநுமனும் - அநுமானும், அமரர்கோன் நகர் வாயில் நின்று - தேவர்க்கிறைவனை இந்திரனுடைய தலைநகராகிய அமராவதியின் வாயிற் புறத்திலிருந்து, இ வழி கொணர்ந்து வைத்த - இவ்விடத்து (அபகரித்துக்) கொண்டுவந்து வைத்த, மா சே ஒளி தோரணத்து உம்பர் - மிகுந்த செந் நிறத்தையுடைய தோரண வாயிலின் மேலே, சேண் நெடு மீ உயர் - நெடுந்தூரமாக மேலே உயர்ந்துள்ள, விசும்பையும் கடக்க - ஆகாயத்தையும் கடந்து செல்லுமாறு, வீங்கினன் - பேருரு எடுத்து நின்றான்.

சேய் ஒளி எனக் கொண்டு - வெகு தூரம் பரவிய ஒளியையுடைய என்றும் கொள்ளலாம். தோரணம்: 827, உரை.

(பி-ம்.) 1. அரக்கர் கோனகர்.
2. வாயினின் றவ்வழிக்; வாயிடை மலரயன் வகுத்து வைத்த மாச். 3. உம்பர்ச் சென்றுளான்; உம்பர் நின்றுசேண். (29)

## படைகளுடன் அநுமன் நடத்திய போர் 893-908.

893. *வீங்கிய வீரனை வியந்து நோக்கிய*
*தீங்கிய லரக்கருந் திருகி னர்சினம்*
*வாங்கிய சிலையினர் வழங்கி னர்படை*
*ஏங்கிய சங்கின மிடித்த பேரியே.*

வீங்கிய வீரனை - அவ்வாறு பெருவடிவு கொண்டு நின்ற வீரனான அநுமனை, வியந்து நோக்கிய - வியப்புடன் பார்த்த, தீங்கு இயல் அரக்கரும் - பிறர்க்குத் தீமை புரிதலே தமக்கு இயல்பாகக் கொண்ட அவ்வரக்கர் படை வீரர்களும், சினம் திருகினர் - கோபம் மிகுந்து, வாங்கிய சிலையினர் - வில்லை வளைத்தவர்களாய், படை வழங்கினர் - அம்புகளாகிய ஆயுதங்களை (அநுமன் மீது) தூண்டினர்; சங்கு இனம் ஏங்கிய - சங்குகளின் கூட்டம் ஒலி செய்தன; பேரி இடித்த - முரசங்கள் இடி போல முழங்கின. ஏ: அசை.

(பி-ம்.) 1. வியந்து நோக்கியே. 2. தீங்குடை யரக்கர்,
3. வாங்கிய நிலையினர்; வாங்கினர் வரிசிலை,
4. ஏங்கின சங்கம்; ஏங்கிடைச் சங்கம்; ஏங்கின சங்கத்தி னிடித்த பேரியே. (30)

894. *எறிந்தன ரெய்தன ரெண்ணி றந்தன*
*பொறிந்தெழு படைக்கல மரக்கர் போக்கினர்*
*செறிந்தன மயிர்ப்புறந் தினவு தீர்வுறச்*
*சொறிந்தன வெனவிருந் தையன் றூங்கினன்.*

அரக்கர் - அவ்வரக்கர் படை வீரர்கள், பொறிந்து எழு எண் இறந்தன படைகலம் - அனற் பொறிகளை விட்டுக் கொண்டு மேற் கிளம்பி வந்த ஆயுதங்களை, எறிந்தனர் எய்தனர் - எறிந்தும் எய்தும், போக்கினர்- அநுமன் மீது செலுத்தினர்; மயிர் புறம் செறிந்தன - (அப்படைகள் அநுமன் மீதுள்ள) அடர்ந்த உரோமக் கூட்டங்களில் போய் நெருங்கித் தாக்கியவைகளாய், தினவு தீர்வு உற சொறிந்தன என - அவ்வநும னுக்கு உண்டான உடல் தினவைப் போக்கச் சொறிந்தன போல இருக்க, இருந்து - அந்நிலையிலிருந்து, ஐயன் தூங்கினன் - அநுமனும் அதனால் மெய்மறந்து அயர்வது போல அமைதியுற்றிருந்தான்.

அநுமன் மீது அவ்வரக்கர்கள் எய்த படைக்கலங்கள் அநுமன் திரு மேனியின் மயிர்க்கால்களின் இடயே செறிந்து தாக்கியது தினவுண்ட வனுக்குச் சொறிவது போல இதமாய் இருந்தது; ஆதலின் அவை அவனுக்கு ஊறு சிறிதுஞ் செய்யவில்லை என்பதாம்.

(பி-ம்.) 1. எண்ணி றந்தனர்; எண்ணி லாதன.
2. படைக்குல மரக்கர் போக்கிடச்: நிருதர் பொங்கினர்.
3. தினவு தீர்தர.
4. சொறிந்தன வெனவிருந் தநுமன்; சொறிந்தன னெனவிருந் (31)

895. *உற்றுட னரக்கரு முருத்து டற்றினர்*
*செற்றுற நெருக்கினர் செருக்குஞ் சிந்தையார்*
*மற்றையர் வரும்பரி சிவரை வல்விரைந்*
*தெற்றுவெ னெனவெழு வநுவ னேந்தினன்.*

அரக்கரும் - அவ்விராக்கதர்களும், செருக்கும் சிந்தையார் - அகந்தை கொண்ட மனத்தினராய், உடல் உற்று - உடனே சேர்ந்து,

உருத்து உடற்றினர் - கோபித்துப் போரிட்டு, செற்று உற நெருக்கினர்- அடர்ந்து வந்து தாக்கினுர்கள்; அநுமன் - அநுமனும், மற்றையர் வரும் பரிசு - மற்றுமுள்ளவர்களும் வந்து தன்னுடன் போர் புரியும் விதமாக, 'இவரை வல் விரைந்து எற்றுவென்என - இவ்வரக்கர்களை மிக விரைவாகத் தாக்கி அழிப்பேன்' என்று, எழு ஏந்தினுன்-அங்கிருந்த ஓர் எழுவை எடுத்துக் கொண்டான்.

செற்று - அடர்ந்து அல்லது நெருக்கி; 'மணி செற்றுபு குயிற்றி' (பால. கையடைப்: 5). 'பெருங்களிறு செற்றி வந்து சேர்ந்தன' (சீவக. 277. ந. உரை.). பரிசு - விதம்; 532;

(பி-ம்.) 1. உற்றுடன் றரக்கரு; உற்றிடு மரக்கரு: உருத்து டன்றவர்; உடற்றியே.
2. தெற்றினர் தெழித்தனர் செருக்குஞ் சிந்தையார்; கற்றுணர் மாருதி களிக்குஞ் சிந்தையான்.
3. மற்றையர் யாவரும் பரிசில் வல்விரைந்(து): மற்றை யாவரும் : பற்றிமற் றிவர்தனைப் பாற வல்விரைந்(து).
4. எற்றுவ னெனவொரு வெழுத்தெரிந் தெடுத்தான்; எற்று வானென: அநும னெய்தினுன். (32)

896. ஊக்கிய படைகளு முருத்த வீரரும்
தாக்கிய பரிகளுந் தடுத்த தேர்களும்
மேக்குயர் கொடியுடை மேக மாலைபோல்
நூக்கிய கரிகளும் புரள நூறினுன்.

ஊக்கிய படைகளும் - அரக்கர்கள் தன் மீது செலுத்திய ஆயுதங்களும், உருத்த வீரரும் - கோபித்து வந்த வீரர்களும், தாக்கிய பரிகளும்- வந்து மோதிய குதிரைகளும், தடுத்த தேர்களும் - தன்னைத் தடுத்து நின்ற தேர்களும், மேக்கு உயர் கொடி உடை - மேலே உயர்ந்த கொடிகளைக் கொண்ட, மேக மாலை போல் நூக்கிய கரிகளும் - மேக வரிசை போன்ற தூண்டப்பட்ட யானைகளும், புரள - கீழே விழுந்து புரளும்படி, நூறினுன் - (அநுமன்) கொன்றுன்.

ஊக்கம் - உள்ள மிகுதி; மனம் மெலிதலின்றி வினைசெய்தற் கண் கிளர்ச்சியுடைத்தாதல். நூக்குதல் - தூண்டுதல்; 'நூறு வாயென மாதலி நூக்கினுன்' (உயுத்த. இராவணன் வதைப். 174.). கொடியுடை கரிகள்; 870. சீவக. 2212.

(பி-ம்.) 2. தாக்கின: தடம்பொற் றேர்களும்.
3. குடைகளும் மேக மாலைபோல். 4: நூக்கினுன். (33)

897. *வார்மதக் கரிகளின் கோடு வாங்கிமாத்*
*தேர்படப் புடைக்குமத் தேரின் சில்லியால்*
*வீரரை யுருட்டுமவ் வீரர் வாளினுல்*
*தாருடைப் புரவியைத் துணியத் தாக்குமால்.*

(அநுமன்), வார் மத கரிகளின் கோடு வாங்கி-நீண்ட மதயானை களின் கொம்புகளைப் பறித்து, மா தேர் பட புடைக்கும் - பெரிய தேர்கள் அழிய அடிப்பான்; அ தேரின் சில்லியால் வீரரை உருட்டும் - அப்படி அழிந்த தேர்களின் சக்கரங்களால் (அங்கு எதிர்த்த) வீரர் களைக் கீழே விழுந்து உருண்டழியச் செய்வான்; அ வீரர் வாளினுல் - அவ்வாறு உருண்டு வீழ்ந்த வீரர்கள் கீழே போடக் கிடந்த வாள்களைக் கொண்டு, தார் உடை புரவியை - கிண்கிணிமாலை அணிந்த குதிரைகளை. துணிய தாக்கும் - துண்டு பட்டழியத் தாக்கி வெட்டுவான். ஆல்; அசை.

வாங்குதல் - எளிதில் எடுத்துக் கொள்ளுதல். மாத்தேர் - குதிரை கள் பூட்டப் பட்ட தேர் என்னலும் ஒன்றும். இதனுல் அங்குத் தான் அழித்த பொருள்களையே ஆயுதங்களாகக் கொண்டு அப்படைகளை அநுமன் அழித்தான் என்பதாம். அநுமன் இவ்வாறேபோர் புரிந்தமை; 842, 898.

(பி-ம்.) 2. தேர்களைப். 3. வீரலரப் படுக்குமவ் வீரர் மெய்யினுல்.
4 புரவிக டகரத் தாக்குமால். (34)

898. *இரண்டுதே ரிரண்டுகைத் தலத்து மேந்திவே*
*றிரண்டுமால் யானைபட் டுருள வெற்றுமால்*
*இரண்டுமால் யானைகை யிரண்டி னேந்திவே*
*றிரண்டுபா லினும்வரும் பரியை யெற்றுமால்.*

(அநுமன்), இரண்டு தேர் இரண்டு கை தலத்தும் ஏந்தி - இரண்டு தேர்களைத் தன்னிரு கைகளில் தாங்கி எடுத்து, வேறு இரண்டு மால் யானை பட்டு உருள எற்றும் - வேறே (எதிர் வந்த) இரண்டு பெரிய யானைகள் அழிந்து உருளுமாறு தாக்குவான்; கை இரண்டின் இரண்டு மால் யானை ஏந்தி - தன் இரு கைகளிலும் வேறு இரண்டு பெரிய யானை களை ஏந்தி எடுத்து, இரண்டு பாலினும் வேறு வரும் - இரு புறங்களி லும் வேறு வந்த, பரியை எற்றும் - குதிரைகளைத் தாக்கியடிப்பான். ஆல்; அசைகள்.

(பி-ம்.) 1: தலமு மேந்திவே(று); தலத்தி னேந்திவே(று): ஏந்தி யங்(கு).
2. இரண்டுபால் வரும்பெருங் கரியை யெற்றிவேறு; இரண்டுபா லினும் வருங் கரியை; இரண்டுசார் பினும்பொரு கரிகளெற்று மால்.
3. இரண்டுமா மதகரி யிருகை யாலெடுத்: யிரண்டு மேந்தி வே(று).
4. வரும் புரவி யெற்றுமால்; வரு பரியைக் கொல்லுமால். (35)

899. *மாயிர நெடுவரை வாங்கி மண்ணிலிட்*
*டாயிரந் தேர்பட வரைக்கு மாலழித்*
*தாயிரங் களிற்றையோர் மரத்தி னுலடித்*
*தேயெனு மாத்திரை யெற்றி முற்றுமால்.*

(மேலும் அநுமன்), மாயிரம் நெடுவரை வாங்கி - பக்கத்தேயுள்ள உயர்ந்த மலையை எளிதில் எடுத்து, ஆயிரம் தேர் பட மண்ணில் இட்டு அழித்து அரைக்கும் - ஆயிரக்கணக்கான தேர்களை அழியத் தரையிலிட்டுச் சிதைத்து அரைப்பான்; ஏய் எனும் மாத்திரை - ஏய் என்று உரைக்கும் அளவு நேரத்திற்குள், ஆயிரம் களிற்றை - ஆயிரம் யானைகளை, ஓர் மரத்தினுல் அடித்து எற்றி - ஒரு மரத்தைக் கொண்டு அடித்துத் தாக்கி, முற்றும் - (அவற்றை) மாளச் செய்யும். ஆல்: அசைகள்.

மாயிரம்; 'மாயிர நேமியாதி மலைசுட்டு' (தக்க, 440.). வாங்குதல் - பெயர்த்தல். சில சுவடிகளில் இதன் பின்னுள்ள ஐந்து செய்யுட்கள் முன் பின்னுக இடம் மாறி அமைந்துள்ளன.

(பி-ம்.) 1. மாயிரு நெடுவரை: மாயிரும் பெருவரை பறித்து: மண்ணிடை. 2. அரைக்கி மாலெடுத்(து): அழிக்கு மாற்கடிது.
3. மரத்தி னுலெடுத்.
4. மாத்திரத் தெற்றி முற்றுமால்: எறிந்து முற்றுமால்; இறுத்து முற்றுமால். (36)

900. *விசையின்மான் றேர்களுங் களிறும் விட்டகல்*
*திசையுமா காயமுஞ் செறியச் சிந்துமால்*
*குசைகொள்பாய் பரியொடுங் கொற்ற வேலொடும்*
*பிசையுமா லரக்கரைப் பெருங்க ரங்களால்.*

(மேலும் அவ்வநுமன்), விசையின் - வேகமாக, மான் தேர்களும் - குதிரைகள் பூட்டப்பட்ட தேர்களையும், களிறும் - யானைகளையும், விட்டு - விட்டெறிந்து, அகல் திசையும் ஆகாயமும் - அகன்ற திசைகளும் ஆகாயமும், செறிய - போய் நிறையும் படி, சிந்தும் - சிதறி விழச் செய்வான்; அரக்கரை - (அங்குப் போரிட வந்த) அரக்கர் வீரர்களை, பெரும்

கரங்களால் - தனது பெரிய கைகளால், குசை கொள் பாய் பரி ஒடும் - (அவர்கள் ஏறிவந்த) கடிவாளம் பூட்டப்பட்ட தாவிவரும் குதிரைக ளோடும், கொற்ற வேல் ஒடும் - (அவர்கள் கைப்பிடித்த) வெற்றிதரும் வேல்களோடும், பிசையும் - பிசைந்து கொல்லுவான். ஆல்; அசைகள்.

மான் தேர்: 'மான்றேர்த் தொழிற்கு மடைத்தொழிற்கு மிக்கோ னென்(று') (நள. கலி நீங்கு, 25.) திசையும் மா காயமும் எனப் பிரித்தும் பொருள் கொள்ளலாம்; காயம்: ஆகாயம் என்பதின் முதற்குறை, இச் செய்யுளால் அநுமன் நால்வகைப் படைகளையும் அழித்தமை கூறப் பெற்றது. குசை - பிடரி மயிரும் ஆம், (பிங்களம்).

(பி-ம்.) 1. விசையுள தேரும்வெங் களிறும் வாரியத்.
2. திசையுமாச் சிகரமும்: சிதையச் சிந்துமால்.
3. குசைகொள்மாப்: குசையுறும் பாய்பரிக் குழுவி னேடுறப்,
4, பிசையுமற் றரக்கரைப். (37)

901. உதைக்கும்வெங் கரிகளை யுழக்குந் தேர்களை
மிதிக்கும்வன் புரவியைத் தேய்க்கும் வீரரை
மதிக்கும்வல் லெழுவினு லரைக்கு மண்ணிடைக்
குதிக்கும்வன் றலையிடைக் கடிக்குங் குத்துமால்.

(மேலும் அநுமன்), வெம் கரிகளை உதைக்கும்-(எதிர்த்த) கொடிய யானைகளைத் (தன் கால்களால்) உதைப்பான்; உழக்கும் தேர்களை மிதிக் கும் - (போர்க்களத்தைக்) கலக்கிவரும் தேர்களை மிதித்து அழிப்பான்; வன் புரவியை தேய்க்கும் - வலிய குதிரைகளைத் (தரையிலிட்டுத்) தேய்ப்பான்; வீரரை - போர் வீரர்களான அரக்கர்களை, வல் எழுவினால்- (தான் கையிற் கொண்ட) வலிய எழுவால், மண்ணிடை மதிக்கும் - தரையிடை யிட்டுக் குழம்பாக்குவான்; அரைக்கும்-அந்த எழுவாலேயே (அவர்களை) அரைப்பான்; வன் தலை இடை குதிக்கும் - (மேலும்) அவ் வரக்கரின் வலிய தலையிடத்தே குதிப்பான்; கடிக்கும் குத்தும் - (அவர்க ளைக்) கடிப்பான், குத்துவான். ஆல்: அசை.

மதித்தல் - கடைவது போலக் குழப்புதல்: மதிக்கும் வல் எழு - பாராட்டிப் புகழக் கூடிய வலிய எழு என்றும் பொருள் கொள்ளலாம்,

(பி-ம்.) 1. உதைக்கும்வன் கரிகளை: உடைக்குந் தேர்களை.
2. மதிக்கும்வன் புரவியை: விசயத் தோடமர்.
3. வதிக்கும்வல்; அதுக்கும்வல்: அரைக்கும் விண்ணிடைக்: வல் லரக்கர்கள் மடிய மண்ணிடைக்,
4. குதிக்கும்வா ளெயிற்றினுற்: வன் றலைகளை யொடிக்கும் குத்து மால். (38)

902. தீயுறு பொறியுடைச் செங்கண் வெங்கைமா
மீயுறத் தடக்கையால் வீரன் வீசுதோ
றாய்பெருங் கொடியன கடலி லாழ்வன
பாயுடை நெடுங்கலம் படுவ போன்றவே.

தீ உறு பொறி உடை - நெருப்பில் உண்டாகும் பொறிகளையுடைய, செம் கண் வெம் கைமா - சிவந்த கண்களையுடைய கொடிய யானைகளை, வீரன் தட கையால் மீ உற வீசுதோறு-மகா வீரனான அநுமன் தன் வலிய கைகளால் ஆகாயத்திற் சென்றடைய வீசி எறியும் போது, ஆய் பெரும் கொடியன - தேர்ந்து கட்டப்பட்ட பெரிய கொடிகளையுடைய, பாய் உடை நெடும் கலம் - பாய்கள் விரிக்கப்பட்ட பெரிய மரக்கலங்கள், கடலில் ஆழ்வன படுவ போன்ற - கடலில் ஆழ்ந்து மூழ்குவன போன்று விளங்கின. ஏ: அசை.

செங்கண் வெங்கைமா; கிட்கிந்தா. பம்பை, 2. கைம்மா என்பது கைமா என்றாயிற்று. ஆய் பெரும் கொடியன என்பதைக் கலங்களுக்கும், யானைகளுக்கும் கூட்டுக. போரில் பெருகும் இரத்த வெள்ளமே கடலாகவும், அதில் ஆழ்ந்து செல்லும் யானைகள் ஆழும் மரக்கலங்களாகவும் உவமிக்கப் பெற்றன; ஒப்பு: கலிங்கத்துப். களம் பாடியது, 4; சீவக. 2796. இதில் அநுமனால் அழிக்கப்பட்ட யானைப் படைகள் குறிக்கப்பட்டன.

(பி-ம்.) 1. தீயுறு பொறியிடை: பொறிதிகழ்.
2. வீரன் வீசுதேர்: மீயுறு தடக்கையால் வீழ.
3. ஆய்பொருங் கொடிநெடுங் கடலி லாழ்வன: கொடியின்வீழ் கடலி லாழ்வன; ஆய்வுறுங் கணக்கில கடலி லாழ்ந்தன.
4. பாயறு நெடுங்கலப் பகுதி தாழ்ந்தபோல்: படிவ போன்றவே.
(39)

903. தாரொடு முருளொடுந் தடக்கை யாற்றனி
வீரன்விட் டெறிந்தன கடலின் வீழ்வன
வாரியி னெழுசுடர்க் கடவுள் வானவன்
தேரினை நிகர்த்தன புரவித் தேர்களே.

தனி வீரன் - ஒப்பற்ற வீரனான அநுமன், தட கையால் விட்டு எறிந்தன - வலிய தன் கைகளால் வீசி எறியப்பட்ட, புரவி தேர்கள்-குதிரைகள் பூட்டப்பெற்ற இரதங்கள், தார் ஒடும் - கிண்கிணி மாலைகளோடும், உருள் ஒடும் - சக்கரங்களோடும், கடலில் விழ்வன - கடலிடம் போய் வீழ்வனவாய், வாரியின் - கடலிலிருந்து, எழு-உதிக்கின்ற, சுடர் கடவுள்

வானவன் - ஆயிரம் சுடர்களோடு கூடிய கடவுளாகிய சூரிய தேவனு டைய, தேரினை நிகர்த்தன - தேருக்கு ஒப்பாய் விளங்கின. ஏ; அசை.

இதில், அநுமனால் அழிக்கப்பட்ட தேர்ப்படைகள் குறிக்கப் பெற் றன. அத்தேர்கள் ஒவ்வொன்றும் கடலில் அழுந்தியும், மூழ்காமலு மிருக்கிற நிலைக்குக் கடலிலிருந்து எழும் கதிரவன் தேர் உவமை.

(பி-ம்.) 1. தாரொடு பொருதன; தாரொடு பொருதனித்: தாரொடு பொருந் தின.
2. விட் டெறிதலிற் கடலில் வீழ்ந்தன.
3. வாரியி னெடுஞ்சுடர்க்: பருதி வானவன். 4. தேர்களை. (40)

901. *மீயுற விண்ணிடை முட்டி வீழ்வன*
*ஆய்பெருந் திரைக்கட லழுவத் தாழ்வன*
*ஓய்வன புரவிவா யுதிரங் கால்வன*
*வாயிடை யெரியுடை வடவை போன்றவே.*

(அநுமன் வீசி எறிந்ததால்), மீ விண் இடை உற - மேலேயுள்ள ஆகாயத்தினிடத்துப் பொருந்த, முட்டி வீழ்வன ஆய்-போய் முட்டுண்டு கீழே வீழ்கின்றனவாய், பெரும் திரை கடல் அழுவத்து ஆழ்வன-பெரிய அலைகளோடு கூடிய கடலின் பள்ளத்தில் ஆழ்ந்து போவனவும், ஓய் வன - ஓய்ந்தடங்கிப் போவனவுமான, புரவி - குதிரைகள், வாய் உதிரம் கால்வன - வாய்களினின்றும் இரத்தம் சொரிகின்றவை, வாய் இடை எரி உடை வடவை போன்ற - வாயிடத்து நெருப்பையுடைய வடவாமுகாக்கினி போன்று விளங்கின. ஏ : அசை.

வடவை என்பது, கடலில் உள்ள நீர் கொந்தளித்து எழாதபடி அந்நீரைச் சுவறச் செய்யும் தீயைத் தன் முகத்திற் கொண்டுள்ளதாய்க் கடவுளால் அமைக்கப் பெற்ற ஒரு பெண் குதிரை என்று நூல்கள் கூறும். இங்குக் குதிரைகள் வடவைக் குதிரைக்கும், அவற்றின் வாயி லிருந்து வெளிப்படும் குருதி அவ்வடவைக் குதிரை வாயிலிருந்து தோன்றும் செந்தீக்கும் உவமைகள் ஆயின. இதில் குதிரைப்படை அநுமனால் அழிந்தமை கூறப்பட்டது.

(பி-ம்.) 1. மீயுறு விண்ணினை : மீவிசைத் தெறிதலின் விரன் விண் ணெழுந்(து):
2. தாய்தரைக் கடல்விழுந் தாழ்ந்த வெண்கணக்.
3. ஒய்வில புரவிக ளுதிரங்: உதிரங் கான்றன.
4. வாயெரிப் பரியெனும் : போன்றதே; போன்றன. (41)

905. *வரிந்துற வல்லிதிற் சுற்றி வாலினுல்*
*விரிந்துற வீசலிற் கடலின் வீழ்குநர்*
*திரிந்தனர் செறிகயிற் றரவி ளுற்றிரி*
*அருந்திறன் மந்தர மனைய ராயினர்.*

வாலினல் வல்லிதின் உற சுற்றி வரிந்து - அநுமன் தன் வாலினுல் அழுத்தமாகச் சுற்றிக் கட்டி, விரிந்து உற வீசலின் - வெகு துரம் விரிந்து செல்லும்படி வீசி யெறிந்ததால், கடலில் வீழ்குநர் திரிந்தனர் - கடலில் போய் விழுந்து சுழல்கின்ற அரக்கர் படைவீரர்கள், செறி கயிற்று அரவினுல் திரி - நெருங்கிய கயிருகிய வாசுகி என்னும் பாம்பினுல் கடையப்பட்டுச் சுழன்ற, அரும் திறல் மந்தரம் அனையர் ஆயினுர் - அரிய வலிமை பெற்ற மந்தர மலையை ஒத்தவர் ஆனுர்.

இங்கு அரக்கர்கள் மந்தர மலைக்கும், அநுமன் வால் வாசுகி என்னும் பாம்புக்கும் உவமைகள் ஆயின. இதில், அரக்கர்களாகிய காலாட் படைகள் அழிந்தமை கூறப்பெற்றது. அநுமன் வால் நாகம் ஒத்தது; 35.

(பி-ம்.) 1: வரிந்துற வல்லியற்; வருந்திற லரக்கரைச்: வலிதனிற்; வலியினில். 2. கடலின் வீழ்ந்தவர். 3. தெரிந்துறத் திரிந்தனர் செறியெயிற் றரா; அரவி னுற்சுழல். (42)

906. *வீரன்வன் றடக்கையா லெடுத்து வீசிய*
*வார்மதக் களிற்றினிற் றேரின் வாசியின்*
*மூரிவெங் கடல்புகக் கடிது முந்தின*
*ஊரின்வெங் குருதியா றீர்ப்ப வோடின.*

வீரன் - மகா வீரனுன அநுமன், வன் தட கையால் - (தனது) வலிய பெரிய கைகளால், எடுத்து வீசிய - எடுத்து எறியப்பட்ட, வார் மத களிற்றினில் - நீண்ட மதப் பெருக்கையுடைய யானைகளை விடவும், தேரின் - தேர்களை விடவும், வாசியின் - குதிரைகளை விடவும், (விரைவாக), ஊரின் வெம் குருதி ஆறு ஈர்ப்ப - அந்த இலங்கை ஊரில் ஓடிய இரத்த வெள்ளத்தையுடைய ஆறு இழுத்துச் செல்ல, ஓடின - ஓடினவையான (மற்ற யானை தேர் குதிரை காலாட்களின் பிணங்கள்), மூரி வெம் கடல் புக கடிது முந்தின - வலிய கொடிய கடலில் புக விரைந்து முன் சென்றன ஆயின.

அநுமனுல் வீசிக் கடலில் எறியப்பட்ட யானை, தேர், குதிரை, காலாட்கள் இவற்றை விட வேகமாக அப்போருகளத்தில் அநுமனுல் இறந்த யானைகள், குதிரைகள் வீரர்கள் இவற்றின் பிணங்கள் அந்த

இலங்கையிற் பெருகியோடின இரத்த வெள்ளம் நிறைந்த ஆற்றிலே ஈர்த்துச் செல்லப்பட்டு முந்திக் கடலிற் போய் விழுந்தன என்பதாம்.

(பி-ம்.) 2. வார்மத கரியினில்; கிரியினில்; மதச் சிகரியில்.
3. கடிதின் முந்தின.
4. ஊரவெங் ; ஊரல்வெங் : ஊரும்வெங் : குருதியா றிரைப்ப : குருதியா றிரைத்தங் கோடிற்றே. (43)

907 *பிறைக்கடை யெயிற்றன பிலத்தின் வாயின*
*கறைப்புனற் பொறிகளோ டுமிழுங் கண்ணின*
*உறைப்புறு படையின வுதிர்ந்த யாக்கைகள்*
*மறைத்தன மகரதோ ரணத்தை வானுற.*

உறைப்பு உறு படையின - தாக்கி உறுத்தப்பட்ட ஆயுதங்களைத் தம்மேல் உடையனவும், பிறை கடை எயிற்றின - பிறையின் நுனி போன்று வளைந்த பற்களையுடையனவும், பிலத்தின் வாயின - குகை போன்ற வாய்களையுடையனவும், கறை புனல் பொறிகளோடு உமிழும் கண்ணின - கறை படிந்த இரத்தமாகிய நீரை, நெருப்புப் பொறிகளோடு உமிழ்கின்ற கண்களையுடையனவுமான, உதிர்ந்த யாக்கைகள் - கீழே உதிர்ந்தவை போலச் சிந்திக்கிடந்த அரக்கர் உடல்கள், வான் உற - ஆகாயமட்டும் பொருந்தி, மகர தோரணத்தை மறைத்தன- (அநுமன் இருந்த) அந்த மகர தோரண வாயிலை மறைத்து விட்டன.

பிறைக் கடை எயிறு ; பிறை போன்ற கடைவாய்ப் பற்கள் எனினும் அமையும். அரக்கர் வீரர்களின் யாக்கைகள் எயிற்றின, வாயின, கண்ணின, ஆகி ஆகாயம் எட்டும் படி ஓங்கி, முன் அநுமன் இருந்த அம் மகர தோரணத்தை மறைத்துக் கொண்டன. இதனுல், அநுமனுல் இறந்த அரக்கர்களின் யாக்கைகளின் மிகுதி கூறப்பட்டது. தோரணத்தில் மகர வடிவு அமைந்திருந்தமை இச் செய்யுளால் அறியலாம்.

(பி-ம்.) 1. எயிற்றின.
2. கறைக்கனற் ; பொறைகளோ டுயிருங் கண்ணன.
3. உறைத்தபு படையின; உறுப்புறு படையின; பறைப்புகு படையன; உதிர யாக்கைகள். 4. தோ ரணத்தை மன்னியே (44)

908 *குன்றுள மரமுள குலங்கொள் பேரெழு*
*ஒன்றல பலவுள வுயிருண் பானுளன்*
*அன்றினர் பலருள ரையன் கையினில்*
*பொன்றுவ தல்லது புறத்துப் போவரோ.*

(அநுமன் எடுத்துத் தாக்குவதற்கு), குன்று உள - குன்றுகள் இன்னும் பல உள்ளன; மரம் உள - மரங்களும் உள்ளன; குலம் கொள் பேர் எழு ஒன்று அல பல உள - சிறப்புடைய பெரிய எழு ஒன்று அன்று, மற்றும் பல உள்ளன; உயிர் உண்பான் உளன் - உயிர்களைப் பற்றி உண்பவனான யமனும் காத்துக் கொண்டு அங்குள்ளான்: அன்றினர் பலர் உளர் - பகைவரான அரக்கர்களும் இன்னும் பலர் உள்ளனர்; ஐயன் கையினில் பொன்றுவது அல்லது - (அப்பகைவர்கள்) அநுமன் கையால் இறந்து படுவது அல்லாமல், புறத்து போவரோ - வெளியே தப்பிப் போவார்களோ? (மாட்டார் என்றபடி.)

உயிருண் பானுளன் - உயிர்களை உண்ண அநுமனும் இருக்கின்றான் எனப் பொருள் கொள்வாரும் உளர். அன்றினர் - பகைவர்; அன்றினர் வெந்து வீழவும்; (தேவாரம் 306 : 10.) 'அன்றினர் - கோபித்தவர்'; **பழைய உரை.** இதனால் அவ்வரக்கர்களுக்கு அநுமன் கையால் இறப்பதன்றி வேறு போக்கிடம் இல்லை என்பதாம், இங்கு, எள்ளலின் அடியாகப் பிறந்த நகைச் சுவை வெளிப்படுகின்றது.

(பி-ம்.) 1. **குலங்கள் பேரெழு; குலங்கொள் போரெழு: குன்றொடு மரமெழு வென்னுங் கோல்படை.**
3. **கன்றினர் பலருளர்: ஐயன் கையுள.**
4. **பொன்றுவ ரல்லது.** (45)

## படைகளின் அழிவு

909 *மழுமுதற் கண்ணுதன் முருகன் றாதைகைம்*
*மழுவெனப் பொலிந்தொளிர் வயிர வான்றனி*
*எழுவினிற் பொலங்கழ லரக்க ரீண்டிய*
*குழுவினைக் கரியெனக் கொன்று நீக்கினான்.*

முழுமுதல் கண்ணுதல் - சர்வேச்வரனும், நெற்றிக் கண்ணையுடையவனும், முருகன் தாதை - முருகப் பெருமான் தந்தையுமான சிவபிரானுடைய, கை மழு என - கையில் உள்ள மழு என்னும் கோடாலியைப் போல, பொலிந்து ஒளிர் - விளங்கி ஒளி வீசும், வயிர வான் தனி எழுவினில் - உறுதி பெற்றுச் சிறந்த ஒப்புயர்வு அற்ற எழுவினால், பொலம் கழல் அரக்கர் ஈண்டிய குழுவினை - பொற் கழலணிந்த அரக்கர்களான திரண்ட கூட்டத்தை, கரி என கொன்று நீக்கினான் - (அச் சிவபிரான்) யானையைக் கொன்று (அழித்தது போலக்) கொன்று தொலைத்தான்.

கண்ணுதல்; நுதல்கண் என்பது மாறிக் கண்ணுதல் என ஆயிற்று: இது இலக்கணப் போலி. முருகன் - குமாரக் கடவுள்; முருகு -

இளமை அல்லது அழகு ; முருகக் கடவுள் இளமையிலும் அழகிலும் சிறந்தவன் என்பதாம். மழு - பழுக்கக் காய்ச்சிய இரும்பு என்பதும் ஆம். சிவபிரான் மழுப்படை கொண்டுள்ளமை பிரசித்தம்: அநுமனே மழுவெனப் பொலிந்தனன் என்றும் பொருள் கூறலாம். 'கரியென' என்பதற்கு - யானைகளை முன் அழித்தது போல, என்றும், எரிந்த கரி போல அழிந்து போகும்படி என்றும், தான் ஒரு யானை போல விளங்கி, என்றும் பொருள் கொள்வாரும் உளர். சிவபிரான் யானையைக் கொன்றமை அவருடைய அட்ட வீரட்டங்களுள் ஒன்று.

(பி-ம்.) 1. மழுவெனப் பொலிந்ததோர்.
2. குழுவினைக் களப்படக்; கரிப்படக்; கடிதினிற்; குறைபடக், (46)

வேறு

## பஞ்சசேனுபதிகளுடன் நடந்த போர் 910-26

910. *உலந்தது தானை யுவந்தன ரும்பர்*
*அலந்தலை யுற்றதவ் வாழி யிலங்கை*
*கலந்த தழுங்குரல் கண்டனர் நின்ற*
*வலந்தரு தோளவ ரைவரும் வந்தார்.*

தானை உலந்தது - சேனைகள் அழிந்தன; உம்பர் உவந்தனர் - தேவர்கள் மகிழ்வுற்றனர்; அ ஆழி இலங்கை அலம் தலை உற்றது - அந்தக் கடல் சூழ்ந்த இலங்கை நகர் துன்பத்தை மேற் கொண்டதாய், அழும் குரல் கலந்தது - அழும் ஓசை எங்கும் கலந்தது; கண்டனர் - அதைக் கண்டவர் ஆகி, நின்ற வலம் தரு தோளவர் ஐவரும் - அங்குப் போர் முனையில் நின்ற வலியைத் தரும் தோள்களையுடைய பஞ்சசேனுபதிகளும், வந்தார் - அநுமனோடு போர் புரிய எதிர்த்து வந்தனர்.

அலந்தலை என்பதை ஒரு சொல்லாகக் கொண்டு துன்பம் என்று பொருள் கோடலும் அமையும்; 'இவள் பேச்சு மலந்தலையாய்' (பெரியாழ்வார். 3. 7: 1.) ஐவர்; 862. உரை.

(பி-ம்) 1. உலர்ந்தது. 2, அலர்ந்தலை. (47)

911. *ஈர்த்தெழு செம்புன லெக்க ரிழுக்கத்*
*தேர்த்துணை யாழி யழுத்தினர் சென்ருர்*
*ஆர்த்தன ராயிர மாயிர மம்பால்*
*தூர்த்தன ரஞ்சனைத் தோன்றலை யென்ருர்.*

செம்புனல் ஈர்த்து எழு எக்கர் - இரத்த வெள்ளம் இழுத்துக் கொண்டு போவதால் மேலே குவிந்து எழுந்துள்ள மணல் திட்டுகள், இழுக்க - உள்ளே இழுப்பதினால், தேர் துணை ஆழி அழுத்தினர் சென்றார் - தம் தேர்களின் இரு சக்கரங்களையும் அம் மணற்சேற்றில் அழுத்தியவர் களாய் மேற்சென்ற அப் பஞ்சசேனாபதிகள், அஞ்சனை தோன்றலை ஏன்றார்-அஞ்சனாதேவி மைந்தனான அநுமனை எதிர்த்து, ஆர்த்தனர் - ஆரவாரஞ் செய்தவர்களாய், ஆயிரம் ஆயிரம் அம்பால் - ஆயிரக்கணக்கான பல அம்புகளால், தூர்த்தனர் - அவ்வநுமன் உடலை மூடி நிறைத்தனர்.

செம்புனல் - இரத்தம். ஆயிரம் என்பது எண்ணின் மிகுதியைக் குறித்து நின்றது. தோன்றல் - மகன் (பிங்களம்).

(பி-ம்) 1. ஈர்த்த செழும்புனல்; ஈர்த்தழி செம்புனல்; ஈர்த்தழி; புனற் சேற்றி னிழுக்கும்.
2. அழுந்தினர் சென்றார்: அழுந்தின ரெழுந்தனர்: யாழி யருந் தினர் சென்றார். (48)

912. எய்த கடுங்கணை யாவையு மெய்தா
நொய்தக லும்படி கைகளி னூறாப்
பொய்தக டொன்று பொருந்தி நெடுந்தேர்
செய்த கடும்பொறி யொன்று சிதைத்தான்,

எய்த கடும் கணை யாவையும் எய்தா - (அந்தப் பஞ்சசேனாபதிகள்) எய்த கொடிய அம்புகள் எல்லாம் தன்னை வந்து அடையாமல், நொய்து அகலும்படி - எளிதில் ஒழிந்து அப்புறம் போகும்படி, கைகளின் நூறா - தன் கைகளால் தட்டி அழித்து, பொய்து - உள்ளே குடைந்து, அகடு ஒன்று பொருந்தி நெடும் தேர் செய்த - நடுவே பொருந்துமாறு பெரிய தேர்வடிவாய் அமைந்த, கடும் பொறி ஒன்று சிதைத்தான் - விரைந்து செல்லக் கூடிய எந்திரம் ஒன்றை அழித்தான்,

தேர் போல அமைந்திருந்த ஓர் எந்திர விமானத்தை அநுமன் அழித்தான் என்பதாம்.

(பி-ம்) 1. எய்த கொடுங்கணை.
2. நொய்தக லும்படி யாவையும் நூறா; நொய்த தெனும்படி கைகளி னூறா; கைதரு மோரெழு வாற்கடி தோடி.
3. பெய்தக டொன்று; பொருந்து நெடுந்தேர்; வெய்தொரு வன் வரு தேர்விளி வெய்தச்.
4. சென்று சிதைத்தான்: செய்து கடும்பொறி சிந்த வடித்தான். (49)

913. *உற்றுறு தேர்சிதை யாமு னுயர்ந்தான்*
*முற்றின வீரனை வானின் முனிந்தான்*
*பொற்றிர ணீளெழு வொன்று பொறுத்தா(ன்)*
*எற்றின னஃதவன் வில்லினி லேற்ருன்.*

உற்று உறு தேர் சிதையா முன் - (பொறி) பொருந்திய அப் பெரிய தேர் அழிபடு முன்னே, உயர்ந்தான் - அவ்வரக்கன் அத் தேரினின்று மேலே உயர்ந்து எழுந்தான்; முற்றின வீரனை - அவன் அங்கும் தன்னை மேலெழாதபடி முற்றிக் கொண்ட வீரனுன அநுமனை, வானின் முனிந்தான் - ஆகாயத்திலிருந்தபடியே எதிர்த்தான்; (அவனை), பொன் திரள் நீள் எழு ஒன்று பொறுத்தான் - கரும் பொன்னுல் திரட்டப்பட்ட நீண்ட எழு ஒன்றை (அனுமன்) தாங்கினவனுகி, எற்றினன் - தாக்கியடித்தான்; அஃது - அவ் வெழுவை, அவன் - அந்த அரக்கன், வில்லினில் ஏற்ருன் - தன் வில்லால் (தன்மேல் விழாதபடி தாங்கித்தடுத்தான்.

(பி-ம்) 1. உற்றுள தேர்சிதை யாமுன் னெழுந்தே,
2. முற்றிய வீரனை: வெற்றி நெடுங்கணை விசினன் வீரன்.
3, நீடெழு வொன்று பொடித்தாங்(கு).
4. வில்லின னேற்ருன்; வில்லினி னேன்ருன்; எற்றிய வன்கர வில்லை யிறுத்தான். (50)

914. *முறிந்தது மூரிவி லம்முறி யேகொண்*
*டெறிந்த வரக்கனோர் வெற்பை யெடுத்தான்*
*அறிந்த மனத்தவ னந்தவெ ழுக்கொண்*
*டெறிந்த வரக்கனை யின்னுயி ருண்டான்.*

மூரி வில் முறிந்தது - (அந்த அரக்கனுடைய) வலிய வில் முறிந்து போயிற்று; அ முறியே கொண்டு - அந்த வில்லின் முறிந்த துண்டையே கையிற் கொண்டு, எறிந்த அரக்கன் - அநுமன் மீது வீசி எறிந்த அந்த அரக்கன், ஓர் வெற்பை எடுத்தான் - மீண்டும் ஒரு மலையை அநுமன் மீது எறியத் தூக்கினுன்; அறிந்த மனத்து அவன் - அச் செய்கையை மனத்தில் அறிந்த அநுமன், அந்த எழு கொண்டு - முன் அவன் எந்திரத் தேரை அழித்த (அந்த) எழுவைக் கையிற் கொண்டு, எறிந்த அரக்கனை - தன் மீது வில் முறி கொண்டு எறிந்த அவ்வரக்கனுடைய, இன் உயிர் உண்டான் - இனிய உயிரை அழித்தான்.

முறி - முறியப்பட்டது; முதனிலைத் தொழிற் பெயர், அரக்கன் மலையை எறிய எடுப்பது அறிந்து, அதற்கு முன்னே அநுமன் அவனை எழுவால் அடித்து உயிரைப் போக்கினுன் என்க. இவ்வாறு அநுமனுல

கொல்லப்பட்டவன் துர்த்தரன் என்ற பெயரினன் என்று வான்மீகம் கூறும்.

(பி-ம்) 1. முறி யேகண்(டு): அம்முறி போக. 2. எறிந்தவ் வரக்கன்.
3. மனத்தவ னவ்வெழு வேகொண்(டு.)
4. எறிந்தவ் வரக்கனை யின்னுயிர் கொன்றான். (51)

915. *ஒழிந்தவர் நால்வரு மூழி யுருத்த*
*கொழுந்துறு தீயென வெஞ்சிலை கோவாப்*
*பொழிந்தவர் வாளி புகைந்தன கண்கள்*
*விழுந்தன சோரியவ் வீரன் மணித்தோள்.*

ஒழிந்தவர் நால்வரும் - மற்றை நான்கு சேனைத் தலைவர்களும், ஊழி உருத்த கொழுந்து உறு தீ என - ஊழிக் காலத்தில் சினந்து எழுந்த சுடர்க் கொழுந்துகள் விளங்கிய பெரும் தீயைப் போல, வெம் சிலை கோவா - தம் கொடிய வில்களில் நாண் பூட்டி, வாளி பொழிந்தனர் - அம்புகளை (அநுமன் மீது) சொரிந்தனர்; கண்கள் புகைந்தன - அவ் வரக்கர்கள் கண்கள் கோபத்தால் புகைந்தன; அ வீரன் மணிதோள் சோரி விழுந்தன - அவ்வம்புகள் பட்டதால் அந்த வீரனான அநுமனுடைய அழகிய தோள்களிலிருந்து இரத்தப் பெருக்குகள் விழுந்தன.

உறு தீ - பெருந் தீ; முன் 'உறுதேர்' என்றமைபோல; 913. புகைந்தன கண்கள்; என்பதை அநுமனுக்குங் கூட்டியுரைப்பாரும் உளர். ஒழிந்தவர் நால்வர்; 862. உரை; துர்த்தரன் மாண்டபின் எழுந்த வீரர்கள் விருபாக்ஷன், யூபாக்ஷன் என்ற இருவர்களே என்று முதனூல் கூறும்.

(பி-ம்) 1. ஊழி யுருத்து; ஊழியின் மூள்வெங்.
2. கொழுந்தது தீயென: வெய்துறு கொட்பர்; கொட்பப்; வெஞ்சிலை கோலி. 3. பொழிந்தவன் வாளி: புகைந்தனர்.
4. சோரிகள் வீரன். (52)

916. *ஆயிடை வீரனு முள்ள மழன்றான்*
*மாய வரக்கர் வலத்தை யுணர்ந்தான்*
*மீயெரி யுய்ப்பதொர் கற்செல விட்டான்*
*தீயவ ரச்சிலை யைப்பொடி செய்தார்.*

அ இடை - அப்பொழுது, வீரனும் - சிறந்த வீரனான அநுமனும், உள்ளம் அழன்றான் - மனம் கொதித்தவனாகி, மாய அரக்கர் - வஞ்சனை

யிற் சிறந்த அவ்வரக்கர்களுடைய, வலத்தை உணர்ந்தான் - வலிமை அறிந்து, மீ எரி உய்ப்பது ஓர் கல் - மேலே நெருப்பை உமிழ்வதான ஒரு கற்பாறையை, (அல்லது, மலையை) செல விட்டான்-அவர் மீது சென்று தாக்கும்படி வீசிவிட்டெறிந்தான்; தீயவர் - கொடியோரான அவ் வரக்கர், அ சிலையை பொடி செய்தார் - அந்தக் கற்பாறையைத் (தம் ஆயுதங்களால் அடித்துப்) பொடியாக உதிரச் செய்தனர்.

(பி-ம்.) 2. வரத்தை யுணர்ந்தான்:: உணர்ந்தோர்.
3. மீயெரி யொப்பதோர்: மீயுயர் வெற்பவர் மேற்செல விட்டான்.
4. தீயவ ரம்பி னிடைப்: தீயவன். (53)

917. *தொடுத்த தொடுத்த சரங்க டுரந்தார்*
*அடுத்தகன் மார்பி னழுந்த வழன்றுன்*
*மிடற்றெழி லான்விடு தேரொடு நொய்தின்*
*எடுத்தொரு வன்றனை விண்ணி னெறிந்தான்.*

தொடுத்த தொடுத்த - மேன் மேலும் அச் சேனுபதிகள் பூட்டி விட்ட, சரங்கள் துரந்தார் - அம்புகளை அநுமன் மீது தூண்டினார்கள்; அடுத்து அகல் மார்பில் அழுந்த-(அவை) அவன் அகன்ற மார்பில் போய் அழுந்திப் புகுந்து கொள்ள, அழன்றுன் - அதனல் சீற்றங் கொண்ட, மிடல் தொழிலான் - வலிய போர்த் தொழிலையுடைய அநுமன், விடு தேரொ்டு - செலுத்தி வந்த தேரோடு, ஒருவன் தனை எடுத்து - அந் நால் வருள் ஒருவனைத் தூக்கி எடுத்து, விண்ணின் எறிந்தான் - ஆகாசத்தில் வீசி எறிந்தான்.

தொடுத்த தொடுத்த: அடுக்கு விரைவுப் பொருளது. அநுமன், மற்றும் நின்ற நால்வரில் ஒருவனை அவன் தேரோடு கூடச் சேர்த்து எடுத்து வானில் எறிந்தான் என்பதாம். மிடல் தொழிலான் என்றதை ஒருவன் என்பதுடன் கூட்டியும் பொருள் கொள்ளலாம்,

(பி-ம்.) 1. தொடுத்தன கோடி சரங்க டுரந்தார்: சரங்க டுரந்த.
2. அடுத்தன மார்பி லழுந்த வனந்த: மார்பி லழுந்தி: அழுந்தி யனன்ற; அழுந்த வனன்ற: அழுத்தி யகன்ற: அழுந்திய போதின்.
3. மிடற் றெழிலான்: விடத் தொழிலான்: தேரொடு மெய்தி; தேர் கொடு நொய்தின்; வெய்தின்: (54)

918. *ஏய்ந்தெழு தேருமவ் விண்ணினை யெல்லாம்*
*நீந்திய தோடி நிமிர்ந்தது வேகம்*
*ஓய்ந்தது வீழ்வதன் முன்னுயர் பாரில்*
*பாய்ந்தவன் மேலுடன் மாருதி பாய்ந்தான்,*

ஏய்ந்து எழு தேரும் - (அவ்வாறு எறியப்பட்டுப் பொருந்தி மேலே எழுந்து சென்ற அத்தேரும், அ விண்ணினை எல்லாம் - அந்த ஆகாய வெளி எங்கும், நீந்தியது ஓடி நிமிர்ந்தது - கடந்து ஓடி மேற்சென்று, வேகம் ஒய்ந்தது - முடிவில் வேகம் குறைவுற்று, வீழ்வதன் முன் - கீழே விழுவதற்கு முன்னமே, உயர் பாரில் பாய்ந்தவன் மேல் - உயர்ந்த பூமியில் பாய்ந்து குதித்த அவ்வரக்கர் தலைவன் மீது, உடன் - உடனே மாருதி பாய்ந்தான் - அநுமன் பாய்ந்தான்.

அநுமனால் வீசியெறியப்பட்ட தேர் வேகம் குறைந்து கீழே விழு முன் அத்தேரில் இருந்த சேனைத்தலைவன் கீழே பாய்ந்து குதித்தான். அப்படி அவன் குதிக்குமுன் அநுமன் அவன் மீது உடனே பாய்ந்தான் என்பதாம். இனி அத்தேர் கீழே வீழ்வதன் முன், மாருதி உயர் பாரில் பாய்ந்து அத்தேரோடு கீழ் விழும் அவ்வரக்கன் உடல்மேல் பாய்ந் தான் என இயைத்துப் பொருள் கோடலும் அமையும்;

(பி-ம்.) 1. ஏய்ந்தொரு தேரும்: தேரிமிழ் விண்ணினை: தேரொ டெழுந்த னன் விண்ணின்.
2. நீந்திய கொடியின் நிமிர்ந்தன மேகம்; நீந்திய தோட நிமிர்ந் தது: நீந்தின னோடி.
3. வீழ்ந்ததன் முன்: வீழ்ந்தன முன்: ஒய்ந்தது தேர்விழ முன்னி வன் முன்பே.
4. பாய்ந்தனன் மாருதி மேற்படப் பாய்ந்தான். (55)

919. *மதித்த களிற்றினின் வாளரி யேறு*
*கதித்தது பாய்வது போற்கதி கொண்டு*
*குதித்தவன் மால்வரைத் தோள்கள் குழ :*
*மிதித்தனன் வெஞ்சின வீரருள் வீரன்.*

வெம் சின வீரருள் வீரன் - கொடிய சினமிக்க வீரர்களுக்குள் பெரு வீரனான அநுமன், மதித்த களிற்றினின் - தருக்குற்ற யானையின் மீது, வாள் அரி ஏறு கதித்தது பாய்வதுபோல் - ஒளி தங்கிய ஆண் சிங்கம் கோபங்கொண்டு பாய்வதுபோல, கதி கொண்டு - வேகங்கொண்டு, குதித்து - அவன் மீது குதித்து, அவன் மால் வரை தோள்கள் குழம்ப - அவனுடைய பெரிய மலைபோன்ற தோள்கள் குழம்பு போலாக, மிதித்த னன் - தன் கால்களால் மிதித்துக் கொன்றான்,

மதித்த - மதங்கொண்ட என்றும், வாள் அரி - கொடிய சிங்கம் என்றும் பொருள் கொள்ளலாம். கதித்தல் - கோபித்தல்; 'காயெரி யனைய கள்ள வுள்ளத்தாள் கதித்த லோடும்' (ஆரண்ய. சூர்ப்பணகைப்: 65.) வீரருள் வீரன்; அநுமன் இங்குக் கூறப்பட்டனன். இங்கு இறந்த வன் பஞ்சசேனாபதிகளில் இரண்டாமவன் ஆவன்.

(பி-ம்.) 1. மதத்த களிற்றின்; மதித்த களிற்றினை; மகிந்த களிற்றவ்.
2. கதிர்த்தது பாய்வது. 3. குதித்தனன் மால்வரை மேனி. (56)

920. மூண்ட சினத்தவர் மூவர் முனிந்தார்
தூண்டிய தேரர் சரங்கள் துரந்தார்
வேண்டிய வெஞ்சமம் வேறு விளைப்பார்
யாண்டினி யேகுதி யென்றெதிர் சென்றார்,

மூவர் மூண்ட சினத்தவர் முனிந்தார் - மீதியிருந்த மூவர் அதிகரித்த கோபம் உள்ளவர்களாய் (அநுமனிடம்) வெறுப்புற்றவராகி, தூண்டிய தேரர் - தம் தேர்களைச் செலுத்தியவர்களாய், சரங்கள் துரந்தார் - (அநுமன் மீது) அம்புகளைத் தூண்டினர்; வேண்டிய வெம் சமம் வேறு விளைப்பார் - (அவர்கள் மேலும்) தாம் விரும்பிய கொடும் போரை வேறு விதங்களிலும் செய்யத் தொடங்கினவர்களாகி, 'யாண்டு இனி ஏகுதி - இனி நீ எங்குத் தப்பிப் போவாய்' என்று கூறி, எதிர் சென்றார் - அநுமன் முன் எதிர்த்துச் சென்றார்கள்.

ஐவரில் இருவர் அழிந்தமை முன் கூறப்பட்டது. சமம் - சமரம் என்ற வட சொல்லின் விகாரம்; இது சமர் என்றும் வழங்கும். இதன் பின் ஒரு சுவடியில் பின்வரும் மூன்று அதிகப் பாடல்கள் உள்ளன.

அ என்றவ ரேவு சரங்க ளிறுத்தே
பொன்றுவிர் நீரிது போதென வங்கோர்
குன்றிரு கைக்கொ டெறிந்தவர் கொற்றம்
இன்றுமு டிந்ததெ னத்தனி யார்த்தான்.

ஆ அப்பொழு தங்கவ ராயிர கோடி
வெப்படை வெஞ்சரம் வீசினர் வீசித்
துப்புறு வெற்பத னைத்துகள் செய்தே
மெய்ப்படு மாருதி மேற்சரம் விட்டார்.

இ விட்ட சரத்தை விலக்கியவ் வீரன்
வட்ட விசும்புறு மாமரம் வாங்கித்
தொட்டெறி தற்குமுன் னேதுக ளாகப்
பட்டிட வெய்யவர் பாணம் விடுத்தார்.

(பி-ம்.) 1. சினத்தினர்.
2. தூண்டு சினத்தர்: தூண்டினர் தேர்கள்; தூண்டு சரம்பல கோடி துரந்தே.

3. வேண்டின வெஞ்சமம்: வேண்டினர் வெஞ்சமம்: சமர் கோலி வலைந்தான்.

4. ஈண்டினி தேகுவ தென்றெதிர்: ஏகுதி யெம்மெதி ரென்றுன்: எங்கன மேகுதி யென்றுர். (57)

921. திரண்டுயர் தோளிணை யஞ்சனைச் சிங்கம்
அரண்டரு விண்ணுறை வார்களு மஞ்ச
முரண்டரு தேரவை யாண்டொரு மூன்றில்
இரண்டை யிரண்டு கையிற்கொ டெழுந்தான்.

திரண்டு உயர் தோள் இணை அஞ்சனை சிங்கம் - பருத்து உயர்ந்த இரு தோள்களையுடைய அஞ்சனுதேவி பெற்ற சிங்கம் போன்ற அநுமன், அரண் தரு விண் - பாதுகாவலாயுள்ள ஆகாயத்தில், உறைவார்களும் - வசிக்கின்ற தேவர்களும், அஞ்ச - பயப்பட, ஆண்டு - அங்கு இருந்த, முரண் தரு-வலிமைவுடைய, தேர் அவை ஒரு மூன்றில் - தேர்கள் ஒரு மூன்றில், இரண்டை-இரண்டு தேர்களை, இரண்டு கையில் கொடு எழுந்தான் - தன்னிரு கைகளிலும் எடுத்துக்கொண்டு மேலே கிளம்பினுன்.

அநுமனை அஞ்சனைச் சிங்கம் என்பது; கிட்கிந்தா. மராமரப்: 67; அரண் தரு விண்ணுறைவார் - தங்களை அடைந்தவர்களுக்குப் பாதுகாவலைத் தரும் தேவர்கள் என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. தோளின னஞ்சனைச். 2. மருண்டு விசும்புறை. 3. யாங்கொரு மூன்றின். 4. இரண்டு மிரண்டு கையிற்கொ. (58)

922. தூங்கிய பாய்பரி சூத ருலைந்தார்
வீங்கிய தோளவர் விண்ணின் விசைத்தார்
ஆங்கது கண்டவர் போயக லாமுன்
ஓங்கினன் மாருதி யொல்லையி னுற்றுன்.

தூங்கிய பாய் பரி சூதர் உலைந்தார் - (அவ்வாறு அநுமன் அத்தேர்கள் இரண்டையும் எடுத்துக்கொண்டு வானில் எழுந்தபோது) அவற்றில் தொங்கி, பாயும் இயல்பை உடைய குதிரைகளும், அத்தேர்ப் பாகர்களும் இறந்தனர்; வீங்கிய தோள் அவர் - அத்தேர்களில் இருந்த பருத்த தோள்களையுடைய அவ்விரு தலைவர்களும், விண்ணில் விசைத்தார் - அத்தேர்களிலிருந்து கிளம்பி ஆகாயத்தில் விரைந்து சென்றனர்; ஆங்கு அது கண்டு - அப்போது (அவ்வாறு அவர்கள் தப்பி வானில் போவதைப்) பார்த்து, அவர் போய் அகலா முன் - அவர்கள் நீங்கிப் போகா முன்னம் மாருதி ஓங்கினன் ஒல்லையின் உற்றுன் - அநுமன் உயர்ந்து மேல் எழுந்தவனுய் விரைவில் அவர்களை அடைந்தான்.

தூங்குதல் - தொங்குதல்; 'தூங்கு தூணி' ஆரண்ய. கரன்வதைப்: 182. ஒல்லை - விரைவு; 'ஒருவந்த மொல்லை கெடும்' (குறள். 563.)

(பி-ம்.) 1. தூங்கின: உலந்தார்; உலர்ந்தார்.
2. வீங்கின: விண்ணி லிசைந்தார்; விண்ணிடை பாய்ந்தார்.
3. கண்டவ ராமடர் செய்முன்.
4. ஓங்கின மாருதி: எல்லையி னுற்றுன். (59)

923. *கானிமிர் வெஞ்சிலை கையி னிறுத்தான்*
*ஆனவர் தூணியும் வாளு மகைத்தான்*
*ஏனைய வெம்படை யில்லவ ரெஞ்சார்*
*வானிடை நின்றுயர் மல்லின் மலைந்தார்.*

கால் நிமிர் வெம் சிலை கையின் இறுத்தான் - இரு நுனிகளோடு நிமிர்ந்துள்ள (அவர்கள்) கொடிய விற்களை (அநுமன்) தன் இருகைகளால் ஒடித்து, ஆனவர் தூணியும் வாளும் அகைத்தான்-அவர்களுடைய அம்புப் புட்டில்களையும் வாள்களையும் முறித்து நாசமாக்கினான்; ஏனைய வெம்படை இல்லவர் எஞ்சார் - வேறு போருக்குரிய ஆயுதம் இல்லாத அவர்கள் பின்வாங்காதவர்களாய், வான் இடை நின்று உயர் மல்லின் மலைந்தார் - ஆகாயத்தில் நின்று (அநுமனோடு) சிறந்த மற்போர் புரிந்தனர்.

கால் - வில்லின் இரு கோடி அல்லது நுனி; 'ஒரு தனு இரு கால் வளைய; (ஞானசம்பந்தர் தேவாரம். திருவெழு கூற்றிருக்கை: 14.) அகைத்தல் - அழித்தல் அல்லது முறித்தல்;பிங்களம். 'உம்ப லகைதத வொண்முறி' (மலைபடுகடாம், 429.)

(பி-ம்.) 2. தூணியு மம்பு மறுத்தரன்; தூணியும் வாளு மிறுத்தான்.
3. ஏனையோர் வெம்படை: இல்லென வஞ்சார். (60)

924. *வெள்ளை யெயிற்றர் கறுத்துயர் மெய்யர்*
*பிள்ள விரித்த பெரும்பில வாயர்*
*கொள்ள வுருத்தெழு கோளர வொத்தார்*
*ஒள்ளிய வீர னருக்கனை யொத்தான்.*

வெள்ளை எயிற்றர் - வெண்ணிறமான பற்களையுடையவர்களும், கறுத்து உயர் மெய்யர் - கருநிறத்தோடு உயர்ந்து விளங்கிய உடலையுடையவர்களும், பிள்ள விரித்த பெரும் பிலவாயர் - பிளக்கும்படியாக விரிந்து விளங்கிய பெரிய குகைபோன்ற வாய்களையுடையவர்களுமான அவ் இருவரும், கொள்ள உருத்து எழுகோள் அரவு ஒத்தார் - பற்றி உட்கொள்ளக் கோபித்து மேல் எழுந்து வரும் வலிய இராகு கேது என்

னும் இரு பாம்புகளைப் போன்றவர்களானுர்; ஒள்ளிய வீரன் அருக்கனை ஒத்தான் - சிறந்த வீரனுன அநுமனும் சூரியனைப்போல் விளங்கினுன்.

கறுத்து உயர் மெய்யர் - என்பதற்கு கோபித்து மேல் வளர்ந்த உடல்களையுடையவர் எனக் கொள்ளலும் ஆம். கறுத்தல் - சினத்தல்; 'கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள'(தொல். சொல்: உரியியல்; 74.) பிள்ளல் - பிளவுபடுதல்; 'பிள்ளப்பட்டன நுதலோடைக் கரி' (958). கோளரவு; இரு பெயரொட்டாகவும் கொள்ளலாம். ஒள்ளிய - சிறப் புற்ற 'ஒள்ளிய துணர்ந்தே னென்ன வீடணற் குரைப்பதானுன்' (உயுத்த. அங்கதன்தூது; 1.) அவ்வரக்கர் வீரர் இருவரும் இராகு கேது என் னுங் கொடிய கோள்களுக்கும், அநுமன் சூரியனுக்கும் உவமை. அநு மனுக்குச் சூரியன்; 30.

(பி-ம்.) 2. பிள்ளை விரித்த: பிலப்பெரு வாயர்; பிலம்பெறு வாயர்.
3. கொள்ள வுருத்தடர். 4. ஒள்ளிகல் வீரன்; அள்ளிகல் வீரன்.
(61)

925. *தாம்பென வாலின் வரிந்துயர் தாளோ*
*டேம்ப லிலாரிரு தோள்க ளிறுத்தான்*
*பாம்பென நீங்கினர் பட்டனர் வீழ்ந்தார்*
*ஆம்ப னெடும்பகை போல்பவ னின்ருன்.*

ஏம்பல் இலார் - சிறிதும் தளர்ச்சி இல்லாத அவ்வரக்கர் தலைவர் இருவருடைய, இரு உயர் தாள் ஓடு தோள்கள் - உயர்ந்த இரு கால்க ளோடு இரு தோள்களையும், வாலின் - தன் வாலினுல், தாம்பு என - தாம் புக் கயிற்ருல் கட்டுவது போல, வரிந்து - கட்டி, இறுத்தான் - ஒடித் தான்; பாம்பு என நீங்கினர் - இராகு கேதுக்கள் என்னும் பாம்புகள் போல அவர்கள் நீங்கியவர்களாய், பட்டனர் வீழ்ந்தார் - இறந்து கீழ் வீழ்ந்தனர்; ஆம்பல் நெடும் பகை போல்பவன் - அல்லிக்கு நெடும் பகைவனுன சூரியன் போன்ற அநுமன், நின்ருன் - ஒருவித இடையூறும் இல்லாமல் நின்றனன்.

ஏம்பலிலாது, விருப்பமில்லாமல் என்றும் பொருள் கொள்வர். ஏம்பல் - விருப்பம். 'ஏம்பலோ டுறையு மாயன்' (காஞ்சிப்பு. சலந்தரீச, 17,) தாம்பு - நீண்ட கயிறு. இதில் அரக்கர் தலைவர் இருவரும் இராகு கேதுக்கள் என்னும் இரு கோள்களாகிய பாம்புகளுக்கும். அநுமன் வால் தாம்புக்கும், அநுமன் சூரியனுக்கும் உவமைகள் ஆயின. சூரியனைக் கண்ட ஆம்பல் கூம்பிச் சோரும் ஆதலால் சூரியனை ஆம்பலுக்குப் பகைவன் என்பது கவிமரபு. ஆம்பல் நெடும் பகை - யானைக்குப் பெரும் பகையாகிய சிங்கம் எனவும் கொள்ளலாம்; ஆம்பல் - யானை, (பிங்களம்).

(பி-ம்.) 1. வாலின் வலித்துயர். 2. ஏம்ப லிலாவிரு; ஏம்பலில் தாரிரு;
3. பாம்பென வீங்கினர்: பட்டனர் விழ்வார்.
4. போலவ னின்ருள்: போல்பவ ஞர்த்தான்; போர்விண்ணி னின்ருன். (62)

926. *நின்றவ னேனைய னின்றது கண்டான்*
*குன்றிடை வாவுறு கோளரி போல*
*மின்றிரி வன்றலை மீது குதித்தான்*
*பொன்றிய வன்புவி தேரொடு புக்கான்.*

நின்றவன் - அவ்வாறு நின்ற அநுமன், ஏனையன் - அந்த ஐவருள் மீதியாய் இருந்த ஒருவன், நின்றது - தன்னை எதிர்த்து எதிரில் நின்றதை, கண்டான் - பார்த்து, குன்று இடை வாவு உறு கோளரி போல - குன்றி னிடத்துத் தாவும் சிங்கம் போல, மின் திரி வன் தலை மீது குதித்தான் - மின்னலைப் போலத் தன் மாயையால் அடிக்கடி தோன்றி மறையும் அப் படைத் தலைவனுடைய வலிய தலை மீது குதித்தான்; அவன் பொன்றி தேர் ஒடு புவி புக்கான்-(அதனால்) அவன் இறந்து தன் தேரோடு புவியில் விழுந்தான்.

குன்றிடை வாவுறும் கோளரி - இரு குன்றுகளின் இடையே தாவிச் செல்லும் சிங்கம் என்னலும் ஒன்றும்: ஒப்பு 'குன்றினின் ருெரு குன்றினிற் குப்புறும், பொன்றுளங்குளைச் சீயமும் போன்றனன்' (கிட்கிந்தா. கிட்கிந்தைப்: 15.) இவ்வாறு ஐவர்களுள் ஒருவனை எழு வாலும், ஒருவனை மிதித்தும், இருவரை வானத்தில் எறிந்து அவர் தோள் களை இறுத்தும், ஒருவனைத் தலைமீது குதித்தும் அநுமன் கொன்ருெழித் தான். இவர்களுள் துர்த்தரன் முதலிலும், விருபாக்ஷன், யூபாக்ஷன் என்ற இருவர் அடுத்தும், பிறகு பிரகஸன், பாஸகர்ணன் என்ற இரு வரும் கொல்லப்பட்டனர் என்று வால்மீகம் கூறும்.

(பி-ம்.) 1. நின்றன னேனையன்; நின்றனன் மற்றவ னின்றது.
2. வாயுறு கோளரி; தாவுறு கோளரி: கோளரி யன்னுன்.
3. மின்றிய வன்றலை.
4. பொரு தேரொடு மாய்ந்தரன்; புவி மீது புரண்டான். (63)

வேறு

## ஐவர் அழிவும் அதனை இராவணன் அறிதலும் 927-30

927. *வஞ்சமுங் களவும் வெஃகி வழியலா வழிமே லோடி*
*நஞ்சினும் கொடிய ராகி நவைசெயற் குரிய நீரார்*
*வெஞ்சின வரக்க ரைவ ரொருவனே வெல்லப் பட்டார்*
*அஞ்செனும் புலன்க ளொத்தா ரநுமனு மறிவை யொத்தான்.*

வஞ்சமும் களவும் வெஃகி - வஞ்சத் தன்மையையும் களவுத் தொழிலையும் விரும்பி, வழி அலா வழிமேல் ஓடி - நல்வழி அல்லாத தீய வழியிலேயே ஓடித் திரிந்து, நஞ்சினும் கொடியர் ஆகி-விடத்தை விடக் கொடிய தன்மையுடையவர்களாகி, நவை செயற்கு உரிய நீரார் - பிறர்க்குத் தீமை செய்வதையே தம் குணமாகக் கொண்டவரான, வெம் சின அரக்கர் ஐவர் - கொடும் சினமுடைய அரக்கர்களான ஐந்து தலைவர்களும், ஒருவனே வெல்லப்பட்டார் - அநுமன் ஒருவனாலேயே வெல்லப்பட்டவர்களாகி, அஞ்சு எனும் புலன்கள் ஒத்தார்-ஐந்து புலன் களுக்கு ஒப்பாயினர்; அநுமனும் அறிவை ஒத்தான் - அநுமனும் அப் புலன்களை வென்று சிறக்கும் பேரறிவை ஒத்தவனானான்.

வெஃகுதல் - விரும்புதல்; 'உயிர் வெஃகுவார்க் கில்லை வீடு' (நன்னூல். சூ. 92 உரை - மேற்.) இங்குப் பஞ்சசேனாபதிகளுக்குத் தீய வழியிற் செல்லும் ஐம்புலன்களும், அவர்களை வென்ற அநுமனுக் குப் புலன்களை வென்ற அறிவும் உவமைகள் ஆயின. இச் செய்யுள் அழகிய முற்றுவமை கொண்டுள்ளது காண்க. வழியலாவழி; உயுத்த. அங்கதன் றூது: 4.

(பி-ம்.) 1. வஞ்சமுங் களவும் பொய்யும்: வழியிலா வழி.
3. பைங்கழ லரக்கர்.
4. ஐம்பெரும் பூத மொத்தா ரநுமன்நல் லறிவை யொத்தான்: அவனுநல் லறிவு போன்றான்: அறிவு போன்றான். (64)

928. நெய்தலை யுற்ற வேற்கை நிருதரச் செருவி னேர்ந்தார்
உய்தலை யுற்று மீண்டா ரொருவரு மில்லை யுள்ளார்
கைதலைப் பூசல் பொங்கக் கடுகினர் கால னுட்கும்
ஐவரு முலந்த தன்மை யனைவரு மமையக் கண்டார்.

அ செருவில் நேர்ந்தார் - அப்போரில் எதிரிட்டவரான, நெய் தலை உற்ற வேல் கை நிருதர் - நெய்யைத் தன்னிடம் பூசப் பெற்ற வேல் ஏந்திய கைகளையுடைய அரக்கர்கள், உய்தலை உற்று மீட்டார் ஒரு வரும் இல்லை - தப்பிப் பிழைத்துத் திரும்பினோர் ஒருவரும் இல்லை; உள்ளார் அனைவரும் - அங்குப் போரிடாமல் மறைந்து பிழைத்திருந்த அரக்கர் அனைவரும், காலன் உட்கும் ஐவரும் உலந்த தன்மை - யமனும் அஞ்சும் பஞ்சசேனாபதிகள் அழிந்து போன செய்தியை, அடைய கண் டார் - நேரில் கண்டறிந்து, கை தலை - போர்க்களத்தினின்று, பூசல் பொங்க - பேரொலி மேலிட, கடுகினர் - (இராவணனிடம்) விரைந்து ஓடினார்கள்.

ஆயுதங்களுக்கு நெய் பூசுதல்: அயோத்யா. வனம்புகு: 6, கை - படையுறுப்பு; பிங்களம், 'கைகளே கைகளாக' 833; கைத்தலை என்று

இருக்கற்பாலது எதுகை நோக்கி இயல்பாயிற்று. பூசல் - ஒலி. 'உள்ளார் - மடியா தொளித்தவர்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. நிருதரிச் செருவில்.
3. கைதலை வைத்தே மாதர் கடுகித்தங் காந்த ரான.
4. ஐவரு முற்ற தன்மை யனைவரு மறியக் கண்டார்: ஐவரு மடிந்த தன்மை. (65)

929. *இறுக்குறு மின்னே நம்மைக் குரங்கென விரங்கி யேங்கி*
*மறுக்குறு கின்ற நெஞ்சின் மாதரை வைது நோக்கி*
*உறுக்குறு சொல்லா னூழித் தீயென வுலக மேழுஞ்*
*சுறுக்கொள நோக்குவான்றன் செவித்தொளை தீயச் சொன்னர்.*

(அவ்வாறு கடுகிச் சென்ற அரக்கரைக் கண்டதும்), 'குரங்கு நம்மை இன்னே இறுக்குறும் என - அந்தக் குரங்கு நம்மை இப்பொழுதே கொன்று விடும்' என்று, ஏங்கி இரங்கி - ஏக்க முற்று வருந்தி, மறுக்கு உறுகின்ற நெஞ்சின் - கலக்கமுறும் மனத்தோடு (நடுங்கிக் கொண்டு நிற்கிற), மாதரை - தன் அருகே யிருந்த மகளிரை, வைது - நோக்கி (இராவணன்) நிந்தித்துப் பார்த்துக்கொண்டு, உறுக்கு உறு சொல்லான் - அதட்டும் கடுஞ் சொற்களால், ஊழி தீ என உலகம் ஏழும் சுறு கொள - யுக முடிவுக் காலத்தில் தோன்றும் பெருந் தீ என உலகங்கள் ஏழும் தீய்ந்து போகும்படி, நோக்குவான் தன் - தம்மைப் பார்க்கும் இராவணனுடைய, செவி தொளை - இருபது காதுகளின் துவாரங்களும், தீய - தீந்து போகும்படி, சொன்னர் - (பின்வருமாறு) கூறினர்கள்.

கூறினமை அடுத்த செய்யுளிற் காணப்படும். உறுக்குதல் - காய்தல், தண்டித்தல்; 'காலனைத் தானலற, உறுக்கிய சேவடியான் கடவூருறை யுத்தமனே' (தேவா. கடவூர் வீரட்டம்: திருவிருத்தம்; 4, திருநாவுக்கரசர்.) சுறுக்கொளல்; பால. மிதிலைக்: 50. செவித் தொளை தீய்தல் - காதால் கேட்க முடியாத கொடுமையாயிருத்தல்,

(பி-ம்.) 1. இறுக்குறு மின்றே நம்மை; இன்று நம்மை; என்று நம்மை; இறுக்குறு மும்மை யெல்லாம்: இக்குரங் கென்ன வேங்கி.
2. மாத ரைவரை வைது நோக்கி: வைது போக்கி.
3. உறுக்குறுந் தூத ரூழித் தீயென வுலக மூன்றும்; சொல்லா ரூழித் தீ. 4. சுறுக்குற நோக்குவான்: தீயச் சொல்வார். (66)

930. *தானையு முலந்த தையா தலைவருஞ் சமைந்தார் தாக்கப்*
*போனபின் மீள்வேம் யாமே யதுவும்போர் புரிகிலாமை*
*வானையும் வென்று ளோரை வல்லையின் மடிய தூறி*
*ஏனைய ரின்மை சோம்பி யிருந்ததக் குரங்கு மென்ருர்.*

'ஐயா - ஐயனே! தானையும் உலந்தது - சேனையும் அழிந்தது; தலைவரும் சமைந்தார் - தலைவர்களான பஞ்சசேனுபதிகளும் மாண்டனர்; தாக்க - போர் செய்ய, போன பின் - போன பிற்பாடு, யாமே மீள்வேம் - யாங்கள் தாம் மீண்டவர் ஆவோம்; அதுவும் போர் புரிகிலாமை - அவ்வாறு மீண்டதும் யாங்கள் போரிடாமல் இருந்ததால்தான்; அ குரங்கு- அந்தக் குரங்கு, வானையும் வென்று உளோரை - வானுலகத்தையும் வெற்றி கொண்ட அத் தலைவர்கள் ஐவரை, வல்லையின் - விரைவில், மடிய நூறி - கொன்றழித்து, ஏனையர் இன்மை - மற்றும் போர் செய்வோர் இல்லாமையால், சோம்பி இருந்தது என்றார் - வேறு செயலற்றுச் சோம்பல் மேற்கொண்டிருந்தது' என்று கூறினர்கள்.

உலந்தது - முடிவுற்றது; சமைதல் - அழிதல், இறத்தல். பால திருவவதாரப். 52, தக்க, 398, 483. பஞ்சசேனுபதிகள் இறந்ததை இராவணனிடம் தெரிவித்தவர் போரிடாமல் பதுங்கியிருந்த அரக்கர்கள் என அறியக்கிடக்கும்.

(பி-ம்,) 1. உலந்ததைய தலைவரும்; ஐவர் தலைவரும்; ஐந்து தலைவரும்.
2. போனபின் னேடி யாரு மெய்தும்போர் புரிகி லாமை; போன பின் நாடி யாரு மெய்தும்போர்; போனவர் தம்மில் மீண்டோம் யாமமர் புரிகி லாமை: போனபின் மீள வோடி பொய்த்தமர் புரிகி லாமை: போனபின் பதனே டியாரு மெய்தும் போர் புரிகி லாமை.
3. வல்லையின் மடித்துப் பின்னும், (67)

பஞ்சசேனுபதிகள் வதைப்படலம் முற்றும்.

# அக்ககுமாரன் வதைப் படலம்

## அக்ககுமாரன் அநுமனுடன் போர்க்கெழ விடைபெறுதல் 931-36

931. *கேட்டலும் வெகுளி வெந்தீக் கிளர்ந்தெழு முயிர்ப்ப னாகித்*
*தோட்டலர் தெரியன் மாலை வண்டொடுஞ் சுறுக்கொண் டேற*
*ஊட்டரக் குண்ட போலு நயனத்தா னொருப்பட் டானைத்*
*தாட்டுணை தொழுது மைந்தன் றடுத்திடை தருதி யென்றான்.*

அக்க குமாரன் வதைப்படலம் - இராவணனின் குமாரனான அக்கனை அநுமன் வதை செய்ததைக் கூறும் படலம் என விரியும். இப் படலத்தின் இறுதி, பிரதிகளில் பலவாறு உள்ளது.

கேட்டலும் - (பஞ்சசேனாபதிகளும் படைகளும் இறந்தனரென்று கூறிய அச் சொற்களைக்) கேட்டவுடனே, வெகுளி வெம் தீ - கோபக் கொடுந் தீ, கிளர்ந்து எழும் உயிர்ப்பன் ஆகி - பொங்கி மேற் கிளம்பும் பெரு மூச்சுடையவனாகி, தோடு அலர் தெரியல் மாலை - இதழ்கள் மலரப் பெற்றதும் தேர்ந்து தொடுக்கப்பட்டதுமான அவனுடைய மாலை, வண்டு ஒடும் - அதில் மொய்த்திருக்கும் வண்டுகளோடு, சுறுக்கொண்டு ஏற - தீய்ந்து போகுமாறு மிக, ஊட்டு அரக்கு உண்ட போலும் நயனத்தால் - பூசப்பட்ட அரக்கு உண்டது போலச் செந்நிறமாய் விளங்கிய கண்களையுடையவனாய், ஒருப்பட்டானை - போருக்கு ஆயத்தமாய் எழுந்து நின்ற இராவணனை, மைந்தன்-அவன் குமாரனான அக்ககுமாரன், தாள் துணை தொழுது - (அவ்விராவணனுடைய) இரு பாதங்களையும் வணங்கி, தடுத்து - (போர்க்குச் செல்லாமல் அவனைத்) தடுத்து, இடை தருதி என்றான் - (யான் சென்று அக்குரங்குடன் போர் புரியுமாறு) எனக்கு இடம் தருவாயாக என்று கேட்டுக்கொண்டான்.

தெரியல் மாலை; ஒரு பொருட் பன்மொழியும் ஆம். இனி, 'தெரியல், மாலை வண்டொடும்' மாலை அதில் வரிசையாய் மொய்த்திருந்த வண்டுகளோடும், எனப் பொருள் கோடலும் அமையும் சுறுக் கொள்ளுதல்; 929; கிட்கிந்தா. கலன்காண். 10. 'அரக்கு ஊட்டுண்ட' என மாற்றியும் கொள்ளலாம். ஒருப்படுதல் - இயைந்திருத்தல்; 'ஒருப்படடான் பொருப்பை ஒப்பான்' என்றதையும் நோக்குக; 15. இடை - இடம்; 'வெயிலிடைத் தந்த விளக்கு' 333; 'இடையிலை யுலகினி லென்ன வீண்டிய' (பால. எழுச்சிப்: 10.); இடை - பேசச் சமயமும் ஆம்.

'நம்பன் சிறிதே இடை தந்திது கேட்க', (சீவக. 1975) அரக்கு ஊட்டுதல் - செந்நிறச் சாயம் பூசுதல்; அரக்கு - செந்நிறம்; அரக்காம்பல் என்பது போல; 'ஊட்டரக் கூட்டிய வனைய வொண்கழுன்' (உயுத்த. வீடணன் 1.) இனி, இடைதடுத்து என மாற்றி, நடுவே தடுத்து, தருதி - அப்பணியை எனக்குக் கொடுப்பாயாக, எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும், மைந்தன் - அக்ககுமாரன்; இவன் மண்டோதரி மகன்; இந்திரசித்தின் தம்பி. அக்கன் - அக்ஷன் என்பதின் தமிழ்த்திரிபு; அழிவில்லாதவன் என்பது பொருள், சில பிரதிகளில் இச் செய்யுள் முன்னுள்ள பஞ்சசேனுபதிகள் வதைப் படலத்தின் ஈற்றில் உள்ளது.

(பி-ம்.) 1. கிளர்ந்தெழ விலங்கன் மார்பில்; கிளர்ந்தெழச் சிறந்த மார்பில் கிளந்தெழ வலங்கன் மார்பில்.
2. தோட்டலந் தெரியன். 3. நயனத்த னெருப்பட் டானே.
4. தாட்டுணைத் தொழுது: மைந்தன் விடைதரு கென்று சொல்வான்; தடுத்திறை தருதி யென்ருன். (1)

932. *முக்கணு னூர்தி யன்றே மூவுல கடியிற் ருயோன்*
*ஒக்கவூர் பறவை யன்றே யவன் றுயி லுரக மன்றே*
*திக்கய மல்ல தேபுன் குரங்கின்மேற் சேறி போலாம்*
*இக்கட னடியேற் கீதி யிருத்தியீண் டினிதி னெந்தாய்*

(மேலும் அக்ககுமாரன்), 'எந்தாய் - என் தந்தையே! முக்கணுன் ஊர்தி அன்றே - (நீ இப்போது எதிர்த்துப் போர் புரிவதாகக் கருதியது), மூன்று கண்களையுடைய சிவபெருமானுடைய வாகனமாகிய இடபம் அல்லதே! மூ உலகு அடியில் தாயோன் - மூவுலகங்களையும் தனது ஈரடிகளால் தாவியளந்த திருமாலின், ஒக்க ஊர் பறவை அன்றே - சிறப்பமைய ஊர்ந்து செல்லும் பறவையாகிய கருடன் அல்லதே! அவன் துயில் உரகம் அன்றே - அத் திருமால் பள்ளி கொள்ளும் பாம்பாகிய ஆதி சேடனும் அல்லதே! திக்கயம் அல்லதே - திக்குக்களில் இருக்கும் யானைகளுள் ஒன்றும் அல்லதே! புன் குரங்கின் மேல் சேறி போலாம் - அற்ப ஒரு குரங்கின் மீது (போர்க்குச்) செல்கிருய் போலும்! இ கடன் அடியேற்கு ஈதி - இந்தக்கடமையை அடியனுகிய எனக்குத் தந்தருள்வாயாக; ஈண்டு இனிதின் இருத்தி - இங்கு நீ (கவலையின்றி) இனிதாக இருப்பாயாக,

இதுவும் அடுத்த செய்யுளும் குளகமாய், 'ஏவுதி யென்னை என்ருன்' என்பதோடு இயைந்து வினை முடிவு பெறும். முக்கணுன் - சந்திரன் சூரியன் அக்னி ஆகிய மூன்று கண்களையுடைய சிவபிரான்; 934; 990. 'நீ விலங்குகளோடு எதிர்த்துப் போர் புரியச் செல்வதே இழுக்கு;

அப்படி இருந்தாலும் சிவபிரானின் இடபம், திருமாலின் கருடன், திக் கஜம், ஆதிசேடன் இவற்றேடு போர் செய்தாலும் ஒருவாறு நேராகும்; அற்பக்குரங்கு ஒன்றோடு போர் செய்வது உன் பெருமைக்கும் வலிமைக் கும் இழுக்காகும்' என்ருன்; இது, (மேற்கூறியவை) முன் இராவண னுடன் போர் புரிந்து தோற்றமையைக் குறிப்பிட்டதும் ஆகும்: உத்தர. திக்விசயப்படலம்.

(பி-ம்.) 1. ஊர்தி யன்றேல்; மூன்றுல கடியிற் ருயோன்: முக்கணு னல்ல வன்றே னூர்தியன் றுலக மூன்றும்.
2. பறவை யன்றேல்: துயி லரவ மன்றேல்.
3. திக்கய மல்லதேல்: திக்கய மல்ல வாகிற்; திக்கய மன்றீங் கிதோர்.
4. இப்பணி யடியேற் கிதீ: ஈந்திங் கிருத்திநீ யினிதி னெந்தாய். (2)

933. *அண்டர்கோன் றன்னைப் பற்றித் தருகென வடியே னிற்கக்*
*கொண்டனை யெம்முன் றன்னைப் பணியென* நெஞ்சங் கொண்ட
*துண்டது தீரு மன்றே யுரனிலாக் குரங்கொன் றேனும்*
*எண்டிசை வென்ற நீயே யேவுதி யென்னை யென்ருன்.*

'அடியேன் நிற்க - அடியேனுன நான் (உன் ஆணையை ஏற்றுச் செய்ய உன் அருகு) காத்திருக்கவும் (என்னை ஏவாது), என் முன் தன்னை - என் தமயனுன மேகநாதனை, 'அண்டர் கோன் தன்னை பற்றி தருகென - தேவர் இறைவனுன இந்திரனைச் சிறைப்படுத்தித் தருவா யாக' என்று, பணி கொண்டனை என-அவனை அத் தொழிலைச் செய்யக் கொண்டாய் என்று, நெஞ்சம் கொண்டது உண்டு - என் மனத்தில் யான் எண்ணியதுண்டு; உரன் இலா குரங்கு என்றேனும் - வலியற்ற ஒரு குரங்கே என்ருலும், அது தீரும் அன்றே - (அதனைப் பிடித்துத் தந்தால்) அக்குறை எனக்கு ஒருவாறு நீங்குமல்லவா? (ஆதலின்), எண் திசை வென்ற நீயே - எட்டுத் திக்குகளையும் வென்ற நீயே, என்னை ஏவுதி என்ருன் - என்னை அத்தொழிலுக்கு ஏவுவாயாக' என்று (இரா வணனை அக்ககுமாரன்) கேட்டுக் கொண்டான்.

(பி-ம்.) 1. தருகெனு தடிய னேனிற்; தருகெனு வடியேன் நிற்க.
2. என்முன் றன்னை: பணியென நெஞ்சங் கோடல்: நெஞ்சங் கோடி. 3. தீரு மின்றே ருரனிலாக் குரங்கென் ருலும்: (3)

934. *கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரத் துருவு கொண்டு*
*கைதவங் கண்ணி யீண்டோர் சிறுபிழை யிழைக்குங் கற்பால்*
*எய்தின னிமையா முக்க ணீசனே யென்ற போதும்*
*நொய்தினின் வென்று பற்றித் தருகுவெ னடியி னுன்பால்.*

'இமையா முக்கண் ஈசனே - இமைப்பது இல்லாது எப்பொழுதும் திறந்திருக்கும் மூன்று கண்களையுடைய சிவபிரானே, கொய்தளிர் கோதும் வாழ்க்கை - கொய்யும் தளிர்களை மெதுவாய்க் கடித்துத் தின்னும் எளிய வாழ்வையுடைய, கோடரத்து உருவு கொண்டு - குரங்கின் உருவை மேற் கொண்டு, கைதவம் கண்ணி - வஞ்சனையைக் கருத்தில் எண்ணி, ஈண்டு ஓர் சிறு பிழை இழைக்கும் கற்பால் - இங்கு ஒரு சிறு இழிவு செய்யும் கருத்தோடு, எய்தினன் என்ற போதும் - வந்து அடைந்தான் என்றாலும், நொய்தினில் வென்று - (அவனை) எளிதில் வென்று, நொடியின் உன்பால் பற்றி தருகுவென் - ஒரு நொடி நேரத்தில் உன்னிடம் பிடித்துக் கொண்டு வந்து தருவேன்'.

கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரம்; ஒப்பு. 177, 864; உயுத்த. கும்பகருணன். 280. குரங்கு தளிர்கோதும் வாழ்க்கை யுடையது; மலைபடு. 313; குறுந். 288. கைதவம் - வஞ்சனை; 'கைதவந்தானீக்கிக் கருத்திற் கறையகற்றி' (நள: கலிதொடர்; 65.) ஈசனே; ஏகாரம் தேற்றம். சிறு பிழை: அரக்கர் பெருமைக்கு அநுமன் செயல், அற்பமானது என்னும் பெருமிதங்கொண்டு கூறியது. இது "குட்டத்தைச் சேது கட்டி" என்று இராவணன் பின் கூறியதை ஒக்கும். (உயுத்த. அங்கதன்றூது: 22.) கற்பு - எண்ணம் அல்லது நோக்கம்; 'நமனை யின்றிவன் கண்ணிடை நிறுத்துவென் என்னுங் கற்பினன்' (உயுத்த, கும்பகருணன். 307). இதுவும் அடுத்த செய்யுளும் ஒரு தொடராகி, 936 இல் உள்ள இயம்பி என்பதனோடு முடியும்.

(பி-ம்.) 1. கொய்திலை கோதும்: கோடரத் துருவங் கொண்டு: குரங்கின துருவங் கொண்டு.
2. கைதவ மியற்றி யீண்டோர் சிறு பழி: கைதவ மெண்ணி யீண்டிங் கெம்மொடுங் கனன்று போருக்(கு).
3. எய்தின ரயன்மா லீச னென்றிடும் போதும் யானே.
4 நொய்தினிற் பற்றி நும்பாற் றருவனே ரிமைப்பி னம்மா. (4)

935. *துண்டத்தூ ணதனிற் றோன்றுங் கோளரிசுடர் வெண் கோட்டு*
*மண்டொத்த நிமிர்ந்த பன்றி யாயினு மலைத லாற்ற*
*அண்டத்தைக் கடந்து போகி யப்புறத் தகலி னென்பால்*
*தண்டத்தை யிடுதி யன்றே நின்வயிற் றந்தி லேனேல்.*

'துண்ட தூண் அதனில் தோன்றும் - துண்டமாகிய ஒரு கம்பத்தினின்றும் தோன்றிய, கோளரி (ஆயினும்) - சிங்கமானாலும், சுடர் வெண் கோட்டு - ஒளியையுடைய வெள்ளிய பல்லில், மண் தொத்த - இந்தப் பூமி ஒரு துகள் போலத் தொத்திக் கொண்டிருக்க, நிமிர்ந்த - ஓங்கி வளர்ந்த, பன்றி ஆயினும் - வராகமே ஆனாலும், மலைதல் ஆற்ற -

என்னுடன் போர் புரியும் வலிமையில்லாதவை ஆம்; அண்டத்தை கடந்து போகி-இவ்வண்ட கோளகையைத் தாண்டி அப்பாற் சென்று, அ புறத்து அகலின்-புற அண்டத்தில் அகன்று சென்ருலும், நின் வயின் தந்து இலேன் ஏல்-உன்னிடத்தே யான் அதைப் பிடித்துக்கொண்டு வந்து தராது விட்டேன் என்ருல், தண்டத்தை இடுதி - அதற்காக உரிய தண்டனையை எனக்கு நீ இடுவாயாக!:' அன்று, ஏ; அசைகள்.

இஃது ஒரு குரங்கு அல்லாது நரசிங்கமும், அல்லது ஆதிவராக மூர்த்தியுமே ஆனுலும் என்று, மிருக வடிவில் பெருமை வாய்ந்த இரண்டைக் கூறினன். அன்றியும், முன் செய்யுளில் முக்கணனையும், இச்செய்யுளில் திருமாலையும் அக்கன் இகழ்ந்தமை கூறப்பட்டதும் ஆம். தண்டம்-தண்டனை; புறநா. 10: 6. அன்றே-அன்றைக்கே என்று பொருள் கூறுவாரும் உளர்.

(பி-ம்.) 1. துண்டத்திற் றூணிற் ருேன்றுங்: துண்டத்தூ ணிடையிற் ருேன்றும்.

2. மண்டொத்து நிமிர்ந்த பன்றி: மண்டொத்த நிமிரான் கேழல்; மலைந்த போதில்.

3. கடந்து போகி லப்புறம் போயு மென்பால்; பொங்கி யப்புறம் போகி லென்பால்; அப்புறம் போக வெம்பால்.

4. தண்டத்தை யிடுதி யின்றே; இடுநீ யன்றே; இடுநீ யின்றே. (5)

936. *எனவிவை யியம்பி யீதி விடையென விறைஞ்சி நின்ற*
*வனைகழல் வயிரத் திண்டோண் மைந்தனை மகிழ்ந்து நோக்கித்*
*துனைபரித் தேரி னேறிச் சேறியென் றினைய சொன்னுன்*
*புனைமலர்த் தாரி னுனும் போரணி யணிந்து போனுன்.*

என இவை இயம்பி - என்று இச்சொற்களைக் கூறி, 'விடை ஈதி என - அனுமதி எனக்கு அளிப்பாயாக' என்று, இறைஞ்சி நின்ற-வணங்கித் தன் எதிர் நின்ற, வனை கழல் வயிர திண் தோள் மைந்தனை-கட்டிய வீரக்கழல்களையும், வயிரம் போன்று உறுதி வாய்ந்த வலிய தோள்களையுமுடைய தன் மகனுன அக்ககுமாரனை, மகிழ்ந்து நோக்கி-(இராவணன்) மகிழ்ச்சியோடு பார்த்து, 'துனை பரி தேரின் ஏறி - விரைந்து செல்லும் குதிரைகள் பூட்டப் பெற்ற தேர் மீது ஏறி, 'சேறி என்று - நீ போவாயாக' என்று, இனைய சொன்னுன் - இவ்விதமான மற்றும் பல மொழிகளைக் கூறினுன்; மலர்புனை தாரினுனும் - மலர்களால் அலங்காரமாகத் தொடுத்த மாலையை அணிந்துள்ள அக்க குமாரனும், போர் அணி அணிந்து போனுன் - போர்க் கோலம் பூண்டு சென்ருன்.

துனை - விரைவு; 'கதழ்வும் துனைவும் விரைவின் பொருள' (தொல். சொல். 315.) இனைய - துன்பத்தைத் தரும் வார்த்தைகளை எனலும்

ஆம். இனை - துன்பம்; இச் சொல் அவ்வக்க குமாரன் அழிவுக்குக் காரணமாய் இராவணன் வாயினின்றும் முன் கூட்டி எழுந்தது எனக் கோடலும் அமையும்.

(பி-ம்.) 2. வனைகழல் மைந்தன் றன்னை மதித்தனன் மகிழ்ந்து நோக்கி.
3. துனைபரித் தடந்தே ரேறிச்.
4. புனைமணித் தாரி னானும்: பணிந்து போனான். (6)

## அக்ககுமாரனின் படையெழுச்சி 937-46

937. *ஏறின னென்ப மன்னோ விந்திர னிகலில் விட்ட*
*நூறொடு நூறு பூண்ட நொறில்வயப் புரவி நோன்றேர்*
*கூறின ரரக்க ராசி குமுறின முரசக் கொண்மூ*
*ஊறின வுரவுத் தானை யூழிபேர் கடலை யொப்ப.*

இந்திரன் இகலில் விட்ட - இந்திரன் முன் போரில் தோற்றுக் கை விட்டுப் போன, நொறில் வய - விரைவுள்ளனவும் வெற்றி தரக் கூடின வுமான, நூறொடு நூறு - இருநூறு, புரவி பூண்ட நோன் தேர் - குதிரைகள் பூட்டப் பெற்ற வலிய தேரின் மீது, ஏறினன் - (அக்க குமா ரன்) ஏறினான்; அரக்கர் ஆசி கூறினர் - அரக்கர்கள் (அவனுக்கு) வாழ்த் துக் கூறினார்கள்; முரச கொண்மூ குமுறின - முரசங்களாகிய மேகங் கள் முழங்கின; உரவு தானை - வலிய சேனைகள், ஊழி பேர் கடலை ஒப்ப - யுக முடிவுக் காலத்தில் நிலை பெயர்ந்து (பொங்கி) வரும் கடலைப் போல, ஊறின - மேன்மேலும் அதிகமாகத் தொடர்ந்தன. என்ப, மன், ஓ, என்பன: அசைகள்.

நொறில் - விரைவு; ஆரண்ய, கரன்வதைப்; 159. நோன்-வலிமை; 'நோன்மையே நுவலு நாகர்' (22.) ஊறு - மிகுதி; 'ஊறுகொண்ட முரசுமி ழோதை' (அயோத்யா. பள்ளியடைப்; 17.)

(பி-ம்.) 1. இகலி னிட்ட.
3. ஆறென வரக்கர் சூழ வார்த்தன முரசக் கொண்மூ.
4. ஊறின புரவித் தானை. (7)

938. *பொருகடன் மகர மெண்ணி லெண்ணலாம் பூட்கை பொங்கித்*
*திரிவன மீன்க ளெண்ணி லெண்ணலாஞ் செம்பொற் றிண்டேர்*
*உருவுறு மணலை யெண்ணி னெண்ணலா முரவுத் தானை*
*வருதிரை நிரையை யெண்ணி னெண்ணலாம் வாவும் வாசி.*

பொரு கடல் மகரம் எண்ணின் - மோதும் கடலில் உள்ள சுறு மீன்களை எண்ணக் கூடுமானால், பூட்கை எண்ணல் ஆம் - (அக்ககுமார னுடன் போருக்குச் சென்ற) யானைகளை எண்ணிக் கணக்கிடலாம்; பொங்கி-மேற் கிளம்பி, திரிவன மீன்கள் எண்ணின் - அக்கடலில் திரிவன ஆன வேறு மீன்களை எண்ணக் கூடுமானால், செம் பொன் திண் தேர் எண் ணல் ஆம்-(அவ் வக்ககுமாரனுடன் சென்ற) சிவந்த பொன்னால் ஆக்கப் பெற்ற வலிய இரதங்களை எண்ணக் கூடும்; உருவு உறு - (அக்கடல் அலைகள்) ஊடுருவிக் கரையில் ஒதுக்கப்பட்ட, மணலை எண்ணில் - மணல்களை ஒவ்வொன்றாக எண்ணக் கூடுமானால், உரவு தானை எண்ண லாம் - (அவனுடன் சென்ற) வலிய சேனை வீரர்களை எண்ணக் கூடும்; வரு திரை நிரையை எண்ணின்-(அக்கடலில்)ஒன்றன் பின் ஒன்றாக வந்து கொண்டிருக்கும் அலைகளின் வரிசைகளை எண்ணிக் கணக்கிட முடியு மானால், வாவும் வாசி எண்ணலாம் - (அவனுடன் சென்ற) தாவிச் செல் லும் குதிரைகளைக் கணக்கிடலாம்.

அக்ககுமாரனுடன் சென்ற சதுரங்க சேனைகளின் அளவைக் கணக் கிட முடியாது என்றவாறு. மகர மீன்கள் மீனினங்களுள் வலிமையும், பெருமையும் உடையன ஆதலின், யானைகள் அவற்றிக்கு உவமை யாயின. மீன்கள் பொன்னிறமும் வலிமையும் எப்பொழுதும் சலிக்கும் தன்மையும் உடைமையால் தேர்களுக்கு உவமை ஆயின. தேருக்கு மீன்; அயோத்யா, தைலமாட்டுப். 2. அளவிட முடியாப் பொருள் களுக்கு, கடலிலும் ஆற்றிலும் ஒதுக்கப்பட்டு விளங்கும் மணற் குவியல் களை உவமை கூறுவது தமிழ் நூல் மரபாதலின், சேனை வீரர்களின் தொகுதிக்குக் கடல் கரையில் ஒதுங்கும் மணல் தொகுதி உவமை ஆயிற்று; புறநா. 9: 11; 43: 23; சிலப். 28: 125. 6. குதிரைக்கு அலை: 'தாளுலாவு பங்கயத் தரங்கமே துரங்கமா' (பால, நகரப். 19); அன்றி யும், பதிற்றுப்பத்து 42 ஆம் பாட்டுக்கு, 'கலிமாப் பொழிந்தவை எண் ணின்': (15) 'புணரியிற் பல' (23) அடிகளுக்கு, 'உளையொடு கூடிய உருவத்தாலும் மிகுதியினாலும் குதிரைகள் வெண்டலைப் புணரியை ஒத்தன; தாவிச் செல்லுதல் பற்றியும் அலைகளைக் குதிரைக்கு உவமை கூறுதல் மரபு' என்ற ஸ்ரீ ஐயரவர்களின் அடிக்குறிப்பும் இங்கு நோக்கத் தக்கது. கிங்கரர்களுடன் சென்ற சேனைக்குத் தொகை கூறுமலும், சம்புமாலி, பஞ்சசேனுபதிகள் ஆகியவர்களுடன் சென்ற சேனைகளுக் குத் தொகை கூறியும், அக்ககுமாரனுடன் சென்ற சேனைப் பெருக்குக் குத் தொகை சொல்ல இயலாது என்று சுட்டியும் செல்வது நோக்கத் தக்கது.

(பி-ம்.) 1. பூட்கை வானின். 2. திரிதரு மீன்கள்; திரியின மீன்கள்; திரையின மீன் கணங்கள்.

4. வருதிரை மரபி னெண்ணின்: வாவு மாவும்; வாவு வாசி. (8)

939. *ஆறிரண் டடுத்த வெண்ணி லாயிரங் குமர ராவி*
*வேறிலாத் தோழர் வென்றி யரக்கர்தம் வேந்தர் மைந்தர்*
*ஏறிய தேரர் சூழ்ந்தா ரிறுதியின் யாவு முண்பான்*
*சீறிய காலத் தீயின் செறிசுடர்ச் சிகைக ளன்னார்.*

இறுதியில் யாவும் உண்பான் - யுகமுடிவுக் காலத்தில் உலகில் உள்ள பொருள்கள் அனைத்தையும் அழிக்கும் பொருட்டு, சீறிய கால தீயின் - சீறி எழுந்த ஊழித் தீயின், செறி சுடர் சிகைகள் அன்னார் - அடர்ந்த ஒளியையுடைய நெருப்புச் சுடர்க் கொழுந்துகள் போன்றவர்களும், ஆவி வேறு இலா தோழர் - அவ்வக்ககுமாரனன்றித் தமக்கு உயிர் வேறு இல்லாத தோழர்களுமான, வென்றி அரக்கர் தம் வேந்தர் மைந்தர் - வெற்றியையுடைய அரக்கர் குல அரசர்களின் குமாரர்களுமான, எண்ணில் ஆறு இரண்டு அடுத்த ஆயிரம் குமரர் - எண்ணிக்கையில் பன்னிரண்டு ஆயிரம் ஆன மைந்தர்கள், ஏறிய தேரர் - தேர்களில் ஏறினவர்களாய், சூழ்ந்தார் - அவ்வக்ககுமாரனைச் சூழ்ந்து சென்றனர்.

ஊழித் தீயின் சுடர்ச் சிகைகளின் தோற்றம் போன்று, பன்னீராயிரம் அரக்க அரச குமாரர்கள் அக்ககுமாரனுடன் போருக்குச் சென்றனர் என்பதாம். ஊழித்தீ அக்க குமாரனுக்கும், அதன் கொழுந்து தோழர்களுக்கும் எனக் கொள்ளினும் ஆம். ஏறிய தேரர்: இது வடமொழி நடை. ஆவி வேறிலாத் தோழர்; 'ஆவியொன் றிரண்டுடம்பு' (சீவக. 1017) என்றது போல.

(பி-ம்.) 1. ஆறிரண் டெடுத்த; எண்ணு லாயிரங் குமரர்: எண்ணூ ருயிரம்.
2. தொழிலர் வென்றி: அரக்கர்தம் மைந்தர் மைந்தன்; அரக்கர் தம் மைந்தர் பொற்றேர்.
3. ஏறினர் புடையிற் சூழ்ந்தார்; ஏறிய தேரைச் சூழ்ந்தார்; யாவு முண்ணு; உண்ணச். 4. சிகையி னன்னார். (9)

940. *மந்திரக் கிழவர் மைந்தர் மதிநிறை யமைச்சர் மக்கள்*
*தந்திரத் தலைவ ரீன்ற தனயர்கள் பிறருந் தாதைக்*
*கந்தரத் தரம்பை மாரிற் றோன்றின ரரக்க ரானோர்*
*எந்திரத் தேரர் சூழ்ந்தா ரீரிரண் டிலக்கம் வீரர்.*

மந்திர கிழவர் மைந்தர் - மந்திராலோசனைக் குரியோருடைய குமாரர்கள், மதி நிறை அமைச்சர் மக்கள் - புத்தியில் மிக்க மந்திரிகளுடைய மைந்தர்கள், தந்திர தலைவர் ஈன்ற தனயர்கள் - சேனைத் தலைவர்கள் பெற்ற புதல்வர்கள், அந்தரத்து அரம்பைமாரில் - தேவலோகத்துத் தெய்வ மகளிரிடம், தாதைக்குத் தோன்றினர் அரக்கர் ஆனோர் - தன் தந்தையாகிய இராவணனுக்குப் பிறந்த அரக்கரானவர்கள், பிறரும் -

இவர்களன்றி வேருனவர்களும், (ஆகிய), ஈர் இரண்டு இலக்கம் வீரர் - நான்கு லக்ஷம் வீரர்கள், எந்திரத் தேரர் - எந்திரம் அமையப் பெற்ற தேர்களையுடையவர்களாய், சூழ்ந்தார் - அக்ககுமாரனைச் சூழ்ந்து (துணையாகிப் போருக்குச்) சென்றனர்.

மந்திரக் கிழவர் - அரசனுடன் மந்திராலோசனைக்கு உரியோர்; 'மந்திரக் கிழவரை வருகென் றேவினன்' (அயோத்யா. மந்திரப் 4). இச் செய்யுளில் மந்திரக் கிழவரும் அமைச்சரும் வேருகக் கூறப்பட்டுள்ளது. குறளின்படி, அமைச்சு என்பது அரசனின் ஆறங்கங்களுள் ஒன்ருகும்; ஐம்பெருங் குழுவில் அமைச்சர் (அமாத்தியர்) ஓர் உறுப்பினர் என்பதும் சிலப்பதிகாரத்தால் தெரியவருகிறது. கம்பராமாயணம் அயோத்தியா காண்டம் மந்திரப்படலத்தாலும், உயுத்த காண்டம் மந்திரப் படலத்தாலும், சில சிறந்த சமயங்களில் அரசர் தாம் ஆலோசிக்க வேண்டி அழைக்கும் அமைச்சர் உள்ளிட்ட வேறு பலரையும் மந்திரக் கிழவர் என்ற சொல் குறிக்கு மென்று கொள்ளலாம். தந்திரத் தலைவர்: 'தந்திர வினைஞர்' (சிலப். 26. 41.) தந்திரம் - படை (பிங்களம்). 'தாதைக் கந்தரத்தரம்பை மாரிற் ருேன்றினர் - அவரவர் தகப்பன்மார் அரம்பையரைப் புணரப் பிறந்த பேர்' பழைய உரை. எந்திரத் தேர்-'பூணியின்றிப் பொறி விசைக் கொளீஇ' (பெருங். 2. 9; 16) என்றபடி பூணும் குதிரை முதலியன இன்றிப் பொறியினு லியங்கும் தேர்.

(பி-ம்.) 1. மதிநெறி யமைச்சர். 2, தனயரென் றிவர்கள் தாதைக்.
3. தோன்றினோ ராதி யானோர்; தோன்றின ராதி யானோர்; தோன்றின ரரக்க ரானோர்.
4. எந்திரத் தரக்கர் வந்தார்: தேரர் வந்தார். (10)

941. *தோமர முலக்கை சூலஞ் சுடர்மழு குலிசந் தோட்டி*
*ஏமரு வரிவில் வேல்கோ லீட்டிவா ளெழுவிட் டேறு*
*மாமரம் வீசு பாச மெழுமுளை வயிரத் தண்டு*
*காமரு கணையங் குந்தங் கப்பணங் கால நேமி.*

தோமரம்-தோமரம் என்ற ஒருவகை எறியும் ஆயுதங்கள், உலக்கை-உலக்கைகள், சூலம் - திரி சூலங்கள், சுடர் மழு - ஒளி வீசும் கோடாலிகள், குலிசம் - வச்சிராயுதங்கள், தோட்டி - அங்குசங்கள், ஏ மரும் வரி வில் - அம்பு பொருந்தும் கட்டமைந்த வில்லுகள், வேல் - வேலாயுதங்கள், கோல் - அம்புகள், ஈட்டி - ஏறி யீட்டிகள், வாள் - வாள்கள், எழு - இரும்புத் தடிகள், விட்டேறு - எறி கோல்கள், மா மரம் வீசு பாசம் - பெரிய மரங்களையும் வீசிக் கீழ் வீழ்த்தவல்ல கயிறுகள், எழு - பகைவர் மேல் எழுகிற, வயிர முளைத்தண்டு - வயிரத்தாலான தண்டாயுதங்கள், காமரு கணையம் - அழகு பொருந்திய வளைதடிகள், குந்தம் - குத்துக்

கோல்கள், கப்பணம் - அரிகண்டம் என்னும் ஆயுதங்கள், கால நேமி - ஒருவகைக் சக்கரங்கள்.

இது அடுத்த செய்யுளுடன் முடியும். இப்பாடல் முன் 818 ஆம் பாடலோடு ஒத்திருப்பது காண்க. முளைத்தண்டு - முளையினையுடைய தண்டாயுதம், சீவக. 1136. நச். உரை. மரம் என்பது ஓர் ஆயுதம் என்பாருமுளர்.

(பி-ம்.) 2. வரிவில் வெங்கோல். 3. பாசம் வளையயில் வயிரத் தண்டு.
4. காமரங் கணையம், (11)

942. *என்றிவை முதல யாவு மெழிறிகழ் படைக ளீண்டி*
*மின்றிரண் டனைய வாகி வெயிலொடு நிலவு வீசத்*
*துன்றிருந் தூளி பொங்கித் துறுதலா லிறுதி சொல்லாப்*
*பொன்றிணி யுலகம் யாவும் பூதல மான மாதோ.*

என்று இவை முதல - என்று (முற் கூறப் பெற்ற) இவ்வாயுதங்கள் முதலாயுள்ள, யாவும் எழில் திகழ் படைகள் ஈண்டி - எல்லா அழகு விளங்கும் ஆயுதங்களும் நெருங்கி, மின் திரண்டு அனைய ஆகி - மின்னல் கள் ஒன்று கூடின போல விளங்கி, வெயில் ஒடு நிலவு வீச - வெயிலையும் நிலவையும் வீச, துன்று இரும் தூளி பொங்கி - நெருங்கிப் பெரும் தூசி கள் மேற் கிளம்பி, துறுதலால் - (வானில்) நெருங்கினமையால், இறுதி சொல்லா - முடிவுக் காலம் இது என்று சொல்ல முடியாத, பொன் திணி உலகம் யாவும் - பொன் திணிந்து அமைக்கப் பெற்ற சுவர்க்க உலகமெல்லாம், பூதலம் ஆன - பூவுலகம் போன்று விளங்கின. மாது, ஓ: அசைகள்.

சேனைகள் செல்வதால் எழுந்த தூசிகள் வானில் நிறைந்து பொருந் தினமையால் பொன்மயமான சுவர்க்கலோகம் எல்லாம் பூலோகமாக மாறிப் போயின என்பதாம். மின் திரண்டனையவாகி வெயிலொடு நிலவு வீச - படைகள் சில மின்னல் போலவும் சில வெயில் போலவும் சில நிலவு போலவும் ஒளி வீச, என்னலும் ஆம். பொன்றிணி யுலகம் பூதலம் ஆன; ஒப்பு: 'வானம் பழுவ மான' (18.) ஒரு பிரதியில் இதன் பின் அடியிற்கண்டபடி ஒரு பாடல் அதிகமாக உள்ளது.

கடுவையின் மரங்க ளோடு சகடைக டிமிலை தாக்க
உடுவின மான தெல்லா முதிர்ந்தபூ வுதிர்ந்த தென்ன
அடுபுலி யனைய வீர ரணிகளா லார்ப்பு மானை
நெடுமணி முழக்கு மோங்கி மண்ணுல கதிர்ந்த தன்றே.

இப் பாடல் வேறு சில பிரதிகளில், பின் பாசப்படலத்தில் 992 ஆம் செய்யுளின் கீழ்க் குறித்துள்ள அதிகப் பாடல்களில் ஒன்றாகக் காணப் படுகிறது.

(பி-ம்.) 1. முதல வாய வெழிறிகழ்: எறிகடற் படைகள்; எறிதரு படைகள். 2. அனைய சோதி வெயிலொடு. 4. உலக மான பூதலம் வாழி மாதோ; உலக மான பூதல மெவையு மாதோ: புலவர் வானப் பூதல மான மாதோ. (12)

943. *காகமுங் கழுகும் பேயுங் காலனுங் கணக்கில் காலம்*
*சேகுற (வினையிற் செய்த தீமையுந் தொடர்ந்து செல்லப்)*
*பாகியல் கிளவிச் செவ்வாய் படைவிழி பணைத்த வேய்த்தோள்*
*தோகையர் மனமுங் கண்ணுந் தும்பியுந் தொடர்ந்து சுற்ற*

காகமும் - காகங்களும், கழுகும் - கழுகுகளும், பேயும் - பேய்களும், காலனும் - யமனும், கணக்கு இல் காலம் - கணக்கிட முடியாத நீண்ட காலமாய்,சேகு உற வினையில் செய்த தீமையும் - திண்மையுண்டாக அவ்வரக்கர்கள் தாம் செய்த தீவினைகளால் விளைந்த பாவமும், தொடர்ந்து செல்ல - அவ்வக்ககுமாரன் முதலிய படை வீரர்களைத் தொடந்து செல்ல, பாகு இயல் கிளவி செ வாய் - சருக்கரைப் பாகு போன்ற இனிய சொற்களைப் பேசும் சிவந்த வாய்களையும், படை விழி - (வேல், வாள், அம்பு முதலிய) ஆயுதங்கள் போன்ற விழிகளையும், பணைத்த வேய் தோள் - பருத்த மூங்கில் போன்ற, தோள்களையும் உடைய, தோகையர் - அவ் வரக்கர்களுக்கு உரிய மகளிர்களுடைய, மனமும் கண்ணும் - மனமும் கண்களும், தும்பியும் - வண்டுகளும், தொடர்ந்து - அவர்களைத் தொடர்ந்து, சுற்ற - சுற்றிச் செல்லவும்.

இது முதல் 947 ஆம் செய்யுள் முடிய ஒரு தொடர். அக்ககுமாரன் போரெழுச்சி இங்குக் கூறப்பட்டது. காகம், கழுகு, பேய்கள் போரில் அரக்கர் இறந்துபடுவார்கள் என்று முன்னமே அறிந்து, அவ்வுடல்களையும், குருதி முதலியவற்றையும் உண்ணக் கருதி அவர்களைத் தொடர்ந்தன என்க. காலன் சென்றது, அவர்கள் உயிரைக் கவர என்க. தீமை கொடர்ந்தமை, அவர்கள் செய்த பாவங்களுக்குத் தக்க தண்டனையாக அவர்களைக் கொல்லுவிக்க. தோகையர் மனமும் கண்ணும் தொடர்ந்தமை, அன்னோர் பிரிவை ஆற்றாமையால். தும்பிகள் தொடர்ந்தமை, அவ்வீரர்கள் அணிந்து சென்ற போர் மாலையில் உள்ள தேனைப்பருகும் அவாவினால்.

(பி-ம்.) 2. சேகற வினையில்; சேகுறுந் தேவற்கிட்டும். 3. பாகுறு கிளவிச்: பாகுறு பவளச் செவ்வாய்: பணைமுலை பணைத்த.

4. மானமுந் தொக்க தும்பியுந்; மனமுந் தொங்கற் றும்பியுந்: தொடர்த்து சுற்றி; தொடர்ந்து செல்ல; தொடரப் போனன்(13)

944. உழைக்குல நோக்கி னர்க ளுலந்தவர்க் குரிய மாதர்
அழைத்தழு குரலின் வேலை யமலையி னரவச் சேனை
தழைத்தெழு மொலியி னுனப் பல்லியந் துவைத்த லால்விண்
மழைக்குர லிடியிற் சொன்ன மாற்றங்க ளொளிப்ப மன்னே

உலந்தவர்க்கு-இதற்கு முன் போரில் அநுமனல் இறந்துபோன வீரர் களுக்கு, உரிய மாதர் - மனைவிமார், காதன் மகளிர் முதலிய, உழை குல நோக்கினர்கள் - மான் கூட்டங்கள் போன்ற மருண்ட பார்வைகளை யுடைய அரக்கர் மகளிர், அழைத்து அழு குரலின் - தம் கணவர்களை நினைத்து அழைத்து அழுகின்ற குரலினலும், வேலை அமலையின்-கடலின் ஒலியினலும், அரவ சேனை தழைத்து எழும் ஒலியின் - ஆரவாரத்தோடு கூடிய சேனைகள் மிகுந்து மேற் கிளம்பிச் செல்லும் ஓசையானும், நான பல்லியம் துவைத்தலால்-பலவகை வாத்தியங்கள் ஒலித்தலாலும், விண் மழை குரல் இடியில் - ஆகாயத்தில் உள்ள மேகங்களின் ஓசையான இடியாலும், சொன்ன மாற்றங்கள் - ஒருவருக் கொருவர் சொன்ன வார்த்தைகள், ஒளிப்ப - (கேட்போர் செவியிற் புகாது ஒன்றுக்குள் மற் ருென்ருக) மறையவும், மன், ஓ: அசைகள்.

இடியிற் சொன்ன மாற்றங்கள் என ஒன்ருய் இயைத்து, இடிபோற் சொன்ன வார்த்தைகள் எனப் பொருள் கோடலும் அமையும். மாதர் அழுகுரல் ஓசை அக்க குமாரனுக்கும் அவனுடன் சென்ற அரக்கர்களுக் கும் இனி உண்டாகப்போகும் கேட்டிற்கு உற்பாதத்தைக் குறிப்பிட் டது என்னலும் அமையும். துவைத்தலால், வேற்றுமை மயக்கமாக வும் கொள்ளலாம். மாற்றம், சேனைத் தலைவனை அக்கன் கூறும் கட்டளை மொழிகள் எனவும் கொள்க.

(பி-ம்.) 1. உழைக்குல நோக்கி மார்க ளுலந்தவர்க்: உழைக்குல மென்ன நின்ருங் குலர்ந்தவர்க்.
2. அழைத்தெழு குரலின்; அழைத்தழுங் குரலி னேசை யமலையு மரக்கர் சேனை.
3. ஒலியி னேசைப் பல்லியந் துவைக்கத் தாவி: ஒலியினேதை: துவைக்கத் தாவின்; ஒலியுஞ் சாரும் பல்லியந் துவைப்புந் தாவி.
4. இடியின் சொன்ன: ஒழிய மன்னே; ஒழியப் போனர்; ஒழிப் பப் போனர்: குர லடங்க வோங்கி வானுறச் சென்ற மாதோ. (14)

945. *மெயிற்கர மணிகள் வீசும் விரிகதிர் விளங்க வெய்ய*
*அயிற்கர வணிகள் நீல வவிரொளி பருக வ.ஃ.தும்*
*எயிற்றிளம் பிறைக ளீன்ற விலங்கொளி யொதுங்க யாணர்*
*உயிர்க்குல மிரவு மன்று பகலன்றென் றுணர்வு தோன்ற.*

மெயில் கரம் மணிகள் வீசும்-அவ்வரக்கர்கள் உடலில் அணிந்த ஒளியோடு கூடிய இரத்தினங்கள் வீசும், விரி கதிர் விளங்க - விரிந்த கிரணங்கள் விளங்கவும், வெய்ய அயில் கர அணிகள் - கொடிய வேலேந்திய கைகளில் அணிந்துள்ள அணிகலன்கள், நீல அவிர் ஒளி பருக - அவர்களுடைய உடலில் கருநிறமாக விளங்கும் ஒளியைப் பருகி அழிக்க, அஃதும் - அந்த அயில் கர அணிகளின் ஒளியும், எயிற்று இளம் பிறைகள் ஈன்ற-அவ்வரக்கர்களுடைய பற்களாகிய இளம் பிறைகள் உண்டாக்கிய, இலங்கு ஒளி ஒதுங்க - விளங்கும் ஒளியில் ஒதுங்கி மறையவும், உயிர்க் குலம் - பிராணிகளுக்கு, இரவும் அன்று பகல் அன்று என்று - இரவும் இல்லை பகலும் இல்லையென்று சொல்லும்படி, யாணர் உணர்வு தோன்ற-புதிய உணர்ச்சி உண்டாகவும்,

கரம் - ஒளி. அயிலணிகள்: அயிலும் அணிகளும் என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம். இரவுமன்று பகலுமன்று; ஒப்பு: 'பருவமோ வாமுகிற் படலமூடிக்கிடந் திரவுண்டே னைப்பக லில்லையொல் லென் றிழிந், தருவியோவாபுரண் டசும்புபற் றித்தட, வரையின்றூழ் வர்கிலம் வழங்கலா கார்களே' (சூளா. 785). முன் செய்யுளில் ஒருவகை ஒலி மற்ற ஒளியினுள் அடங்கியது கூறப்பெற்றது போல இச் செய்யுளிலும் கூறப் பட்டுள்ளது காண்க. இச் செய்யுள் பிரதிகள் தோறும் பல வேறுபாடுகளுடன் காணப்படுகிறது. ஒரு சுவடியில் இப்பாடலே இல்லை. ஆதலின், இச் செய்யுளை ஸ்ரீ ஐயரவர்கள் திருத்தியுள்ளபடி பதிப்பித்து உரையும் எழுதப்பட்டது.

ஒரு பிரதியில் இச் செய்யுள் இல்லாமல் அவ்விடத்தில் பின்வரும் செய்யுள் உள்ளது:-

பத்தியிற் றேர்கள் செல்லப் பவழக்காற் குடைகள் சுற்ற
முத்திளிற் கவிகை சூழ முகிலென முரச மார்ப்ப
மத்தவெங் கரிகள் யாவும் மழையென விருண்டு தோன்றத்
தத்திய பரிக டன்னிற் சாமரை தழைப்பப் போனன்.

இப் பாடல் வேறு சில பிரதிகளில், பின் பாசப்படலத்தில் 992 ஆம் செய்யுளின் கீழ்க் குறித்த அதிகப்பாடலுள் காண்கின்றது.

(பி-ம்.) 1. வெயிற்கர மணிகள் வீசும் விரிகதிர் விழுங்க வெய்ய. 2. அயிற்கர மணிக ளாலு மவிரொளி. 4. உயிர்க்குல மிரவு. (15)

946. ஓங்கிருந் தடந்தேர் பூண்ட வுளைவயப் புரவி யொல்கித்
தூங்கின வீழத் தோளுங் கண்களு மிடத்த துள்ள
வீங்கின மேக மெங்குங் குருதிநீர்த் துள்ளி வீழ்ப்ப
ஏங்கின காக மார்ப்ப விருளில்விண் ணிடிப்ப மாதோ.

ஓங்கு இரும் தடம் தேர் பூண்ட - உயர்ந்த பெரிய விசாலமான தேர்களில் கட்டப்பட்ட, உளை வய புரவி - புறமயிர்களையுடைய வெற்றியைத் தரக்கூடிய குதிரைகள், ஒல்கி தூங்கின வீழ - சோர்ந்து தூங்கி விழவும், இடத்த தோளும் கண்களும் துள்ள - (அவ்வரக்க வீரர்களுடைய) இடப்புறத் தோள்களும் கண்களும் துடிக்கவும், வீங்கின மேகம் - பெருத்த மேகங்கள், எங்கும் குருதி நீர் துள்ளி வீழ்ப்ப - எவ்விடத்தும் இரத்தமாகிற நீர்த்துளிகளைச் சொரியவும், காகம் ஏங்கின ஆர்ப்ப-காகங்கள் ஏங்கினவைகளாய் ஆரவாரமிட்டுக் கரையவும், இருள் இல் விண் - இருள் அடையாத (அதாவது நிர்மலமாயிருந்த) ஆகாயம், இடிப்ப-இடிமுழங்குவதுபோல ஒலி உண்டாக்கவும், மாது,ஓ: அசைகள்.

இப் பாடலில் குறிக்கப்பெற்றவை அனைத்தும், அக்ககுமாரனுக்கும் அவனுடன் போருக்குச் சென்ற படைகளுக்கும் இனி உண்டாகும் கேட்டையுணர்த்தும் உற்பாதங்கள் ஆம்.

இதன் பின் ஒரு பிரதியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

தீயவல் லரக்கர் தம்மிற் சிலர்சிலர் செம்பொற் சின்னம்
வாயின்வைத் தூத வீரர் வழியிடம் பொருது செல்லக்
காயும்வெங் களிறு காலாள் கடும்பரி கடுகிச் செல்ல
நாயகன் றூதன் றானும் நோக்கின னகையுங் கொண்டான்.

இப் பாடலும் சில மாறுபாடுகளுடன் வேறொரு பிரதியில், பின் பாசப் படலத்தில் 992 ஆம் செய்யுளின் கீழ்க் குறித்துள்ள அதிகப் பாடல்களுள் ஒன்றாக உள்ளது.

(பி-ம்.) 2. தூங்கின வீரர் தோளும் கண்களு மிடத்துத் துள்ள: தூங்கின வீரத் தோள்கண் ணிடப்புறந் துடிக்க வானின்.
3. வீங்கின மேக மெல்லாம்: துளிகள் வீழ்ப்ப; வீழ.
4. வெருளில்விண்: இருளின்விண் ணிடித்த மாதோ.

## அநுமன் அக்ககுமாரனைக் கண்டு ஆராய்தல் 947-50

947. வெள்ளவெஞ் சேனை சூழ விண்ணுளோர் வெருவி விம்ம
உள்ளநொந் தனுங்கு வெய்ய கூற்றமு முறுவ றுன்னத்
துள்ளிய சுழல்கட் பேய்கடோள்புடைத் தார்ப்பத் தோன்றும்
கள்ளவி ழலங்க லானைக் காற்றின்சேய் வரவு கண்டான்.

வெள்ள வெம் சேனே சூழ - வெள்ளம் என்னும் பெரும் கணக்கின வான கொடிய சேனேகள் தன்னேச் சூழ்ந்து வரவும், விண் உளோர் வெருவி விம்ம - வானிலுள்ள தேவர்கள் அஞ்சிக் கலக்க முறவும், உள் ளம் நொந்து அனுங்கு - மனம் நொந்து வருந்தியிருந்த, வெய்ய கூற்ற மும் - கொடிய யமனும், முறுவல் துன்ன - புன் சிரிப்பை மேற் கொள்ள வும், துள்ளிய சுழல் கண் பேய்கள் - துள்ளிக் குதித்த சுழலும் கண்களே யுடைய பிசாசுகள், தோள் புடைத்து ஆர்ப்ப - தம் தோள்களேக் கொட்டி ஆரவாரம் செய்யவும், தோன்றும் கள் அவிழ் அலங்கலானே - விளங்கும் தேன் சொரியும் மாலே யணிந்த அக்ககுமாரனே, காற்றின் சேய் - வாயு குமாரனுன அநுமன், வரவு கண்டான் - போர்க்கு வருவ தைப் பார்த்தான்.

விண்ணுளோர் வெருவி விம்மியது அநுமனுக்கு என்ன ஆபத்து உண்டாகுமோ என்று, உள்ளம் நொந்து; அனுங்கு கூற்று என்றது, அக்க குமாரனுடைய வீரத்திற்கு அதுகாறும் கூற்று அஞ்சி மனம் வருந்திய தால் என்க. முறுவல் துன்ன என்றது, அக்ககுமாரன் இறந்து போவான் என்ற நிச்சயத்தாலும், தான் அச்சமின்றி அநுமன் பலத்தால் நிரம்ப அரக்கர் உயிர்களேக் கவர்ந்து செல்லலாம் என்ற துணிவாலும் என்க. பேய்கள் தோள் புடைத்து ஆர்த்தமை, இறந்துபடும் அரக்கர் உடல் களாகிய உணவு தமக்கு மிகுதியாய்க் கிடைக்கும் என்ற மகிழ்ச்சியால். வெள்ளம் - ஒரு பேரெண்; பிங்களம். சுழல்கட் பேய்; 'சுழல்கட் சூர்ப் பேய்' (கலிங்கத்துப்) 117.

(பி-ம்.) 2. உள்ளநொந் தேங்கி: உள்ளநொந் தனுங்கி; அழுங்கி: கூற்றமு முளேந்து சோரத்.

3 துள்ளின சுழல்: சுழல்கட் பேய்தோள்: புடைத் தார்க்கத் தோன்றும்; அரக்கர் தோன்றும்.

4. கள்ளவிழ் மாலே யானேக். (17)

948. *இந்திர சித்தோ மற்றவ் விராவண னேயோ வென்னுச்*
*சிந்தையி னுவகை கொண்டு முனிவுற்ற குரக்குச் சீயம்*
*வந்தனன் முடிந்த தன்றே மனக்கருத் தென்ன வாழ்த்திச்*
*சுந்தரத் தோளே நோக்கி யிராமனேத் தொழுது சொன்னுன்.*

முனிவு உற்ற குரங்கு சீயம் - (அக்ககுமாரன் வரவுகண்டு) கோபங் கொண்டு நின்ற குரங்குகளுள் சிங்கம் போன்ற அநுமன், 'இந்திரசித்தோ மற்ற அ இராவணனேயோ என்னு - (இப்பொழுது போருக்கு வரும் இவன்) இந்திரசித்தோ? அல்லது, (நான் எதிர்பார்த்து நிற்கும்) அந்த இராவணனேதானே?' என்று, சிந்தையின் உவகை கொண்டு-மனத்தில்

மகிழ்ச்சி மேற்கொண்டு, சுந்தர தோளை நோக்கி வாழ்த்தி - தனது அழகிய தோள்களைப் பார்த்து (அவற்றுக்கு) வாழ்த்துக் கூறி, இராமனை தொழுது - இராமபிரானை மனத்தால் நினைத்து வணங்கி, 'வந்தனன் - போருக்கு உரியவன் வந்து விட்டான்; முடிந்தது அன்றோ மன கருத்து - என் மனத்திற் கொண்ட எண்ணமும் நிறைவேறி விட்டது அல்லவா?' என்ன சொன்னான் - என்று சொல்லிக் கொண்டான்.

குரக்குச் சீயம்; கிட்கிந்தா. மராமரப்: 58; முன் அஞ்சனைச் சிங்கம் என்றதையும் நோக்குக; 921; கிட்கிந்தா. மராமர. 67. வீரர்கள் தக்க போர் கிடைக்குமிடத்துத் தம் தோளை நோக்கி மகிழ்தல் வீரக் குறிப்பு; 890. இந்திரசித்தோ, இராவணனேயோ என்று இங்கு ஐயுறுவதை, முன், கும்பகர்ணனைக் கண்டபோதும், (225), (236) இல் இந்திரசித்தைக் கண்டபோதும் ஐயுற்ற நிலைமையோடு ஒப்பிடுக. உவகை கொண்டு முனிவுற்ற; உவகை எதிர் பார்த்தது விளைந்தமையாலும், முனிவு அவன் கொடுமை எண்ணியும் என்க. இராமனைத் தொழுதல் அடிமைச் சிறப்பு; அநுமன் பெரிய காரியங்களைத் தொடங்கும் போதெல்லாம் இராமனை நினைத்துத் தொழுதல் காணலாம்.

(பி-ம்.) 1. இராவணன் ருனே.
2. உவகைதோன்ற; உவகை தோன்றித் தெளிவுற்ற குரக்குச்.
3. வந்தன முடிந்த தன்றே; முடிந்த தின்றென் மனக்கருத் தென்று வாழ்ந்திச்.
4. சுந்தரத் தோளி னுனை யிராமனை: வாழ்த்திச் சொன்னுன். (18)

949. *எண்ணிய விருவர் தம்மு ளொருவனேல் யான்முன் செய்த*
*புண்ணிய முளதா லெங்கோன் றவத்தொடும் பொருந்தி னுனே*
*நண்ணிய யானு நின்றேன் காலனு நணுகி நின்ருன்*
*கண்ணிய கரும மின்றே முடிக்குவென் கடிதி னென்ருன்.*

'எண்ணிய - யான் இப்போது போருக்கு வருபவராக எண்ணிய, இருவர் தம்முள் - இந்திரசித்து, இராவணன் என்னும் இருவர்களுள், ஒருவனேல் - இவன் ஒருவனுக இருந்தால், யான் முன் செய்த புண்ணியம் உளது - யான் முன்னே செய்த புண்ணிய வினை உள்ளது; என் கோன் தவத் தொடும் பொருந்தினுனே - எங்கள் இறைவனுன சுக்கிரீவனும் செய்த தவப்பயன் பொருந்தப் பெற்றவனுனுன்; நண்ணிய யானும் நின்றேன் - யானும் இவன் அருகே இருக்கின்றேன்; காலனும் நணுகி நின்ருன் - (இவன் உயிரைக் கொண்டு போகக்) கூற்றுவனும் அருகே நிற்கின்றவனுனுன்; கண்ணிய கருமம் - யான் கருதிய காரியம், இன்றே கடிதின் முடிக்குவென் - இன்றைக்கே விரைவில் முடித்து

விடுவேன்;' என்ருன் - என்று தனக்குள் அநுமன் சொல்லிக் கொண்டான். ஆல்: அசை.

கண்ணிய கருமம்; 'இராவணனைக் கொன்று இராமபிரானுக்குச் சுக்கிரீவன் கடமைப்பட்ட கைங்கரியத்தைத் தன் மூலம் நிறைவேற்றி வைப்பதும் ஆகும்; ஆதலால் தான் செய்த புண்ணியத்தாலும் சுக்கிரீவன் செய்த தவப்பயனுலும் இன்று என் எதிரில் இராவணன் வந்தான்' என்று அநுமன் கருதினுன். கண்ணுதல் - கருதுதல்; கணக்கிடுதல்; 'கண்ணிய நாள் கழிந்துளவால்'; (323.)

(பி-ம்.) 1. ஒருவனே யான்முன் செய்த; ஒருவனு லியானு நோற்ற.
2. உளதர் மெங்கோன்: தவத்தொடு பொருந்தி: எங்கோன் பெரன் னடி பொருந்த நெஞ்சின்.
3. காலனு மமைந்து; காலனு நயந்து: எண்ணிய நானு நீத்தேன் காலனு மெதிர்ந்து நின்ருள்.
4. முற்றுவன் கடிதி; முடிக்குவன் காண்டி. (19)

950. *பழியில துருவென் ருலும் பஃறலை யரக்க னல்லன்*
*விழிகளா யிரமுங் கொண்ட வேந்தைவென் ருனு மல்லன்*
*மொழியின்மற் றெவர்க்கு மேலான் முரட்டொழின் முருக னல்லன்*
*அழிவிலொண் குமரன் யாரோ வஞ்சனக் குன்ற மன்னுன்.*

(மேலும் அநுமன் அக்கனை உற்று நோக்கி), 'உரு பழி இலது என்ருலும் - இவனுடைய வடிவம் குற்றம் அற்றது என்ருலும், பல் தலை அரக்கன் அல்லன் - இவன் பல (பத்துத்) தலைகளையுடைய அரக்கனுன இராவணன் அல்லன்; விழிகள் ஆயிரமும் கொண்ட வேந்தை வென்ருலும் அல்லன் - ஆயிரம் கண்களையுடைய தேவராஜனுன இந்திரனை வென்ற மேகநாதனும் அல்லன்; முரண் தொழில் முருகன் அல்லன் - போர்த் தொழிலிற் (சிறந்த) முருகக் கடவுளும் அல்லன்; மொழியின் - (ஆராய்ந்து) கூறுமிடத்து, (இவன்) எவர்க்கும் மேலான் - யாவர்க்கும் மேம்பட்ட வீரனுகக் காணப்படுகின்ருன்; அஞ்சன குன்றம் அன்னுன் - நீல மலைபோல விளங்குகின்ருன்: அழிவு இல் வெம் குமரன் யாரோ - கேடு என்பதே இல்லாத பராக்கிரமமுடைய இக்குமாரன் யாரோ? மற்று: அசை.

அநுமன் மேகநாதனையும் இராவணனையும் முன் கண்டவனுதலால், (235, 301 - 313.) அவர்கள் இருவருள் இவன் ஒருவன் அல்லன் எனத் தெரிந்து கொண்டான். மேகநாதன் இந்திரனைவென்று சிறைப்படுத்தியவனுதலால் இந்திரசித்து எனப் பெயர் பெற்றனன். முருகன் போர்த் தொழிலிற் சிறந்தவனுதலால், வீரருக்கு முருகன் உவமை; 'கடம்பமர்

நெடுவே ளன்ன மீளி' (பெரும்பாண். 75), அக்ககுமாரன் கருநிறத்தனுதலின் அஞ்சனக்குன்று அவனுக்கு உவமை. அழிவு - கேடு; (பிங்களம்.) இம் மூன்று செய்யுள்களாலும் அநுமன் ஆராய்ச்சியும், அக்கனின் பெருமையும் கூறப்பெற்றன.

(பி-ம்.) 1. பலதலை யரக்கன்.
2. விழியிடை யிமைப்பின் மேனு எரியைவென் றுனு மல்லன்; விழியிடை யிமைக்கு மேனுள்.
3. மொழியின்மற் றவற்றின் மேலான்; மற் றவர்க்கு மேலான்; மற்றான்சே யான.
4. அழிவில்வெங் குமர னுரோ; அழகுறும் குமர னுரோ. (20)

## அக்ககுமாரன் அநுமனைக் கண்டமை

951. என்றவ னுவந்து விண்டோ யிந்திர சாப மென்ன
நின்றதோ ரணத்தி னும்ப ரிருந்ததோர் நீதி யானை
வன்றொழி லரக்க னோக்கி வாளெயி றிலங்க நக்கான்
கொன்றதிக் குரங்கு போலா மரக்கர்தங் குழாத்தை யென்னு.

என்றவன் - என்று ஐயுற்றவனுகி, உவந்து - மகிழ்வுற்று, விண்தோய் இந்திர சாபம் என்ன -வானிற் பொருந்து விளங்கும் இந்திரவில் போன்று, நின்ற தோரணத்தின் உம்பர் - நின்றதான தோரணவாயிலின் மேலே, இருந்தது ஓர் நீதியானை-தங்கியிருந்த ஒப்பற்ற நெறியுடையவனுன அநுமனை, வல் தொழில் அரக்கன்-கொடுஞ் செயலையுடைய அரக்கனுன அக்கன், நோக்கி - பார்த்து, 'இ குரங்கு - இந்த குரங்குதானே, அரக்கர் தம் குழாத்தை - போருக்கு வந்த அரக்கக் கூட்டத்தை, கொன்றது போல் ஆம் என்னு - கொன்றது போலும்' என்று கூறி, வாள் எயிறு இலங்க நக்காள் - ஒளி தங்கிய தன் பற்கள் தோன்றச் சிரித்தான்.

அநுமனும் அக்ககுமாரனும் ஒருவரையொருவர் முதன்முதல் கண்டு கொண்டபோது, அவரவர் தம் எதிரியை ஆராய்ந்த வேற்றுமையின் தன்மை நோக்கத்தக்கது. தோரணத்திற்கு இந்திரவில், 827. நீதி - நெறி அல்லது ஒழுக்கம், நக்கான்-சிரித்தான். இஃது இகழ்ச்சியைக் குறிக்கும் சிரிப்பு.

(பி-ம்.) 1. சாப மென்னு.
2. நின்றேதோ ரணத்தின்: இருந்தபோர் நீதி யானை; உம்பர் நின்றமா ருதியென் பானை.
4. குழாத்தை யென்றுன்; குழுவை யென்றுன்; குழுவை யென்னு. (21)

## சாரதியின் எச்சரிக்கை

952. *அன்னதா நகுசொற் கேட்ட சாரதி யைய கேண்மோ*
*இன்னதா மென்ன லாமோ வுலகிய லிகழ லம்மா*
*மன்னனோ டெதிர்ந்த வாலி குரங்கென்றுன் மற்று முண்டோ*
*சொன்னது துணிவிற் கொண்டு சேறியென் றுணரச் சொன்னான்*

அன்னது ஆம் நகு சொல் கேட்ட - அத்தன்மைத்தான நகைச் சொல்லைக் கேட்ட, சாரதி - (அவ்வக்ககுமாரனின்) சாரதி, 'ஐய-ஐயனே! கேண்மோ - யான் சொல்வதைக் கேட்பாயாக; உலகு இயல் இன்னது ஆம் என்னல் ஆமோ - உலகில் நடைபெறும் செயல்கள் இத்தன்மை யான என்று துணிந்து கூற முடியுமோ? இகழல் - (இவன் தோற்றத் தைக் கண்டு இவன் அற்பக் குரங்குதானே என்று) இகழாதே; (ஏனெ னில்), மன்னனோடு-நம் அரசனை இராவணனோடு, எதிர்ந்த வாலி - முன் எதிர்ந்து வந்து அவனைப் பிணித்த வாலி என்பவன், குரங்கு என்றால் - ஒரு குரங்கு என்று சொல்லப்படுவதால், மற்றும் உண்டோ - மேலும் சொல்லுவதற்கு இடமுண்டோ? சொன்னது துணிவில் கொண்டு சேறி - (ஆதலால்) யான் சொன்ன இவ்விஷயத்தை உறுதியாக மனத்திற் கொண்டு, (இதனிடத்தில் வெற்றி பெற வேண்டுமே, என்ற எண்ணத் துடன்) செல்வாயாக' என்று, உணர சொன்னான்-என்று அவன் அறிந்து கொள்ளுமாறு கூறினான். அம்மா: இரக்கப் பொருளில் வந்த உரிச்சொல்.

இராவணனோடு வாலி எதிர்த்தது, உத்தர: வாலி வாலாற் கட்டுண்ட படலம் நோக்குக. 'எதிர்ந்த' என்றது, இராவணன் வாலிவாலிற் சிறைப்பட்டதை மறைத்துக் கூறியதாகும். இங்குச் சாரதியின் அறிவுச் சிறப்பு நோக்கற்பாலது. நகுசொல் - ஏளன வார்த்தை எனலும் ஆம்; 'வாளெயிறிலங்க நக்கான்' (951) என்றதை உட்கொண்டு கூறியது.

(பி-ம்.) 1. அன்னதா மச்சொற்: அன்னவன் சொல்லக் கேட்டுச்.
2. இன்னதா லென்ன தாமோ: இன்னதென் றுரைக்க லாமோ.
3. குரங்கென்றுன் மாறு முண்டோ.
4. சொன்னதே துணிவிற்: தொன்னிலை துணிவிற் கொண்டு தொடர்தி: உணர்ந்து சொன்னான். (22)

## அக்ககுமாரனின் வஞ்சினம்

953. *விடந்திரண் டனைய மெய்யா னவ்வுரை விளம்பக் கேளா*
*இடம்புகுந் தினைய செய்த விதனொடு சீற்ற மெஞ்சத்*
*தொடர்ந்துசென் றுலக மூன்றுந் துருவினெ னொழிவு றமல்*
*கடந்துபின் குரங்கென் றோதுங் கருவையுங் களைவெ னென்றான்.*

விடம் திரண்டு அனைய மெய்யான் - விஷம் திரண்டு ஒன்று சேர்ந்து வந்தது போன்ற உடலையுடைய அக்ககுமாரன், அ உரை விளம்ப

கேளா-சாரதி கூறிய அச்சொற்களைக் கேட்டு சீற்றம், 'எஞ்ச - (எனக்கு உண்டான) கோபம் குறையாமல் மிஞ்ச, இடம் புகுந்து இனைய செய்த - நம்மிடத்திற் புகுந்து வருந்துதற்கு இடமான கேட்டைச் செய்த, இதன் ஒடும் தொடர்ந்து சென்று - இக் குரங்கைக் கொல்வ தோடு தொடர்ச்சியாக மேற் சென்று, உலகம் மூன்றும் ஒழிவு உறுமல் துருவினென் கடந்து-மூவுலகங்களும் சிறிதிடமும் தப்பி விடாமல் உட் புகுந்து தேடிக் கடந்து. பின் - பிறகு, குரங்கு என்று ஓதும் கருவையும்-குரங்கென்று சொல்லக் கூடிய கருப்பத்தில் கருத்தன்மையாய் உள்ள சிசுவையும், களைவென் என்றான் - அழித்து விடுவேன்' என்று சபதம் கூறினன்.

கருமைக்கும் பண்புக்கும் விடம் திரண்டது உவமை; ஆரண்ய. கரன்வதைப்: 11. இனைய - துன்பம் தருவன; சீவக. 292; இனைய செய்த - இத் தன்மையான கேடு செய்த என்னலும் ஒன்றும், கரு-கருப் பம், அல்லது சிசு: 'சோரர்தங்கருவைத் தங்கள் கரு வெனத்தோளி லேந்தி' (வி - பா. நிரைமீட்சிச்: 117.) கருவையும்: உம்மை இழிவு சிறப்பு: இதன் பின் ஒரு பிரதியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

புலிப்போத்தின் வயவ ரெல்லாம் பொருகரி பரிதேர் பொங்கக்
கலித்தார்த் தும்ப ரோடக் கடையுகத் தெறியுங் காலின்
ஒலித்தாழி யுவர்வுற் றென்ன வும்பர்தோ ரணத்தை முட்ட
வலித்தார்திண் சிலைக ளெல்லா மண்டின சரத்தின் மாரி.

இப்பாடல் சில பிரதிகளில் பின், பாசப்படலத்தின் 992 ஆம் செய் யுளின் கீழ்க் குறித்துள்ள அதிகப் பாடல்களுள் காண்கின்றது.

(பி-ம்.) 1. அனைய மெய்யன்; இவ்வுரை விளம்பக் கேளா; அவ்வுரை யியம்பக் கேளா; விளம்பக் கேட்டேம்.
2. இடம்புகுந் தனைய செய்த; இதனோடுஞ் சீற்றம்; சீற்ற மெங்கண்: இடம் புகுந் தமர்செய் புன்றோற் குரங்கதைச் செகுத்து மேலும்.
3. தொடர்ந்துயா னுலக: துருவி னின் றொழிவருமல்.
4. குரங்கென் றாலும். (23)

## படைகளுடன் போர் 954-60.

954. ஆர்த்தெழுந் தரக்கர் சேனை யஞ்சனக் குரிய குன்றைப்
போர்த்தது பொழிந்த தம்மா பொருபடைப் பருவ மாரி
வேர்த்தனர் திசைகாப் பாளர் சலித்தன விண்ணு மண்ணும்
தார்த்தனி வீரன் றானுந் தனிமையு மவர்மேற் சார்ந்தான்.

அரக்கர் சேனை - அரக்கர் படைகள், ஆர்த்து எழுந்து - ஆரவாரம் செய்து மேற்கிளம்பி, அஞ்சனைக்கு உரிய குன்றை - அஞ்சனாதேவிக்கு உரிய (மைந்தனான) குன்று போன்ற அநுமன் மீது, பொருபடை பருவ மாரி - போர்க்குரிய ஆயுதங்களாகிய பருவ கால மழையை, பொழிந்தது போர்த்தது - சொரிந்து அவனை மூடிவிட்டது; திசை காப்பு ஆளர் வேர்த்தனர் - எட்டுத் திக்குகளைக் காப்பதற்கு உரிய திக்குப் பாலர்கள் (அச்சத்தால்) உடல் வெயர்த்துத் தவித்தனர்; விண்ணும் மண்ணும் சலித்தன - வானுலகும் மண்ணுலகமும் அசைந்தன; தார் தனி வீரன் - மாலையணிந்த ஒப்பற்ற வீரனான அநுமன், தனிமையும் தானும் - தனிமையே தனக்குத் துணையாக, அவர்மேல் சார்ந்தான் - எதிர்த்து வந்த அவ்வரக்கர் மீது போரிடச் சென்றான். அம்மா: இரக்கத்தை உணர்த்தும் சொல்.

அநுமனைக் குன்று என்றது, அவனது பெரியதும் வலியதுமான பேருருவைக் கருதி என்க. குன்று என்றதற் கேற்ப அதன் மீது பருவ மாரி பொழிந்தது எனப்பட்டது. அநுமனைத் 'தார்த்தனி வீரன்' என்றது, அவன் அணிந்திருந்த மாலையைக் குறிப்பதாகும்; அநுமன் மாலை அணிந்துள்ளமை; 16, 58. தானும் தனிமையும், தனக்குப் பிறிதொரு துணையில்லாமல் சென்றதைக் குறிப்பது. தானும் தனிமையும்; பால. மிதிலைக் காட்சிப். 139.

இதன்பின் ஒரு பிரதியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப்பாடல் உள்ளது.

எடுத்தன னெழுவொன் றங்கை யெடுத்திக லரக்கர் சிந்தப்
பொடித்தன னிரதம் வாசி பொருங்களி றிதனை யெல்லாம்
முடித்தன னெடிப்பிற் பின்னு மூசுபோ ரரக்கர் வெள்ளம்
அடுத்தமர் கோலி மேன்மே லடுபடை தூவி யார்த்தார்.

(பி-ம்.) 1. ஆர்த்துவந் தரக்கன். 2. போர்த்திடப்: பொழியடைப்.
3. வேர்த்தன திசைகாப் பாளர்: சலித்தது விண்ணு மண்ணும்; மெலிந்தது விண்ணும் மண்ணும்.
4. தார்த்திகழ் வீரன்: தனிமையின் வரமேற் சென்றான்: தனிமையு மவர்மேற் சார்ந்தான். (24)

955. *எறிந்தன நிருதர் வெய்தி னெய்தன படைகள் யாவும்*
*முறிந்தன வீரன் மேனி முட்டின மூரி யானை*
*மறிந்தன மடிந்த தேரும் வாவுமாக் குழுவு மம்மா*
*நெறிந்தன வரம்பில் யாக்கை யிலங்கைதன் னெறியிற் பேர.*

நிருதர் வெய்தின் எறிந்தன எய்தன படைகள் யாவும் - அரக்கர்கள் வேகமாக வீசி எறிந்தவைகளும், தூண்டியவைகளுமான ஆயுதங்கள்

எல்லாம், வீரன் மேனி முட்டின - வீரனான அநுமனுடைய உடலைத் தாக்கினவையாய், முறிந்தன-(உட்செல்ல முடியாமல்) ஒடிந்து போயின; மூரி யானை - வலிமை பொருந்திய யானைகள், மறிந்தன - இறந்தன; தேரும் வாவு மா குழுவும் - இரதங்களும் தாவிச்செல்லும் குதிரைக் கூட்டங்களும், மடிந்த - இறந்தன; இலங்கை தன்நெறியில் பேர - இலங்கை நகர் தன் இயல்பில் மாறுபட, வரம்பு இல் யாக்கை நெறிந்தன-எல்லையிட்டுக் கூறமுடியாத வீரர்களின் உடல்கள் நொறுங்கி அழிந்தன. அம்மா: வியப்பை உணர்த்தும் சொல்.

அநுமனை எதிர்த்த நாற்படைகளும் அவனை ஊறு செய்யமாட்டாமல் அழிந்தமை கூறப்பட்டது; நகரமும் நிலைகுலைந்து பிணக்காடாயிற்று என்பதாம். எறிந்தன எய்தன - வீசித் தாக்கும் ஈட்டி, வேல், வாள் போன்ற சத்திரங்களும், துரந்து விடப்பட்ட அம்புகள் போன்ற அத்திரங்களும் என்க. மறிதல் - உருண்டு தலை கீழாய் விழுதல்; அழிதல்; 'வீழ்ந்தனவே......மலைபுரை யானை மறிந்து' (பு. வெ. 135); 'மறிந்த மகன் றனைச் சுட நான் வந்தேனையா' (அரிச்சந்திர. மயான: 38) மரிந்தன நெரிந்தன என்பவை எதுகை நோக்கித் திரிந்தன என்னலும் ஆம்.

(பி-ம்.) 1. எறிந்தனர் நிருதர்; எறிந்தடல் நிருபர் நெரய்தி னேவிய படைகளெல்லாம்: எய்தின படைகளெல்லாம்; எய்திய படைகளெல்லாம்.
2. முகர யானை; மொகர யானை; முகரி யானை: முறிந்திட வநுமன் மோதி முனிந்தனன் மூரி யானை.
3. மறிந்தன தேரு மானு மரக்கரு மற்று மெல்லாம்: வாம்பரிக் குழுவு மாவின்; வாவுமாக் குழுவு மாவி; குழுவு முற்றும்.
4. பிறிந்தன: யாக்கை நிணக்குழம் பாய தம்மா. (25)

956. *காயெரி முளிபுற் கானிற் கலந்தெனக் காற்றின் செம்மல்*
*ஏயெனு மளவிற் கொல்லு நிருதர்க்கோ ரெல்லை யில்லை*
*போயவ ருயிரும் போகித் தென்புலம் படர்தல் பொய்யா*
*தாயிர கோடி தூத ருளர்கொலோ நமனுக் கம்மா.*

முளி புல் கானில் காய் எரி கலந்து என - உலர்ந்துபோன புற்காட்டில் தீய்க்கும் நெருப்புச் சேர்ந்தது போல, காற்றின் செம்மல் - வாயு குமாரனான அநுமன், ஏய் எனும் அளவின் - ஏய் என்று சொல்லும் கால அளவுக்குள், கொல்லும் நிருதர்க்கு ஓர் எல்லை இல்லை - கொல்லும் அரக்கர்களுக்கு ஓர் அளவு கூறமுடியாது; போய் அவர் உயிரும்-போருக்குச் சென்ற அவ்வரக்கர்களின் உயிர்களும், தென் புலம் போகி படர்தல் பொய்யாது - தென் திசையாகிய யமனுலகு போய்ச் சேருதல் தவறாது; (அப்படி அளவற்ற அவ்வரக்கர் உயிர்களைக் கவர்ந்து செல்ல), நமனுக்கு-

யமனுக்கு, ஆயிர கோடி தூதர் உளர் கொலோ - ஆயிரம் கோடி தூதர்கள் உள்ளார்களோ? அம்மா: வியப்பை உணர்த்தும் இடைச் சொல்.

காயெரி அநுமனுக்கும், முளி புல்கான் அரக்கர்களுக்கும் உவமைகள். புல் - மூங்கிலும் ஆம்; முளிபுல்: 'புன்முளி' சிலப். காடுகாண். 76. கொல் ஓ; கொல்; இங்கு ஐயப் பொருளிலும், ஓ: வினப் பொருளிலும் வந்தன.

(பி-ம்.) 1. காயெரி புரிபுற் கானிற்: முளிபுற் கானைக்.
3. பேரய்வரு முயிரும் போக்கும்: தென்புலம் புகுதல் பொய்யோ: போயின துயிர்பின் னெங்குந் தென்புலம் படர்நல் பேரயத்.
4. தூத ருள்ளதோ: தூதர்க் கடங்குமோ நமனுக் கம்மா. (26)

957. *வரவுற்ருர் வாரா நின்ருர் வந்தவர் வரம்பில் வெம்போர்*
*பொரவுற்ற பொழுதும் வீரன் மும்மடங் காற்றல் பொங்கி*
*இரவிப்பேர்க் கதிரோ னூழி யிறுதியி னென்ன லானுன்*
*உரவுத்தோ ளரக்க ரெல்லா மென்பிலா வுயிர்க ளொத்தார்.*

வர உற்ருர் - போருக்கு வர இருப்பவர்களும், வாரா நின்ருர் - இப்பொழுது வந்துகொண்டிருப்பவர்களும், வந்தவர் - முன் வந்தவர்களும் ஆன அரக்கர்கள், வரம்பு இல் வெம் போர் பொர உற்ற பொழுதும் - அளவு கூற முடியாத கொடிய போரில் எதிர்த்துத் தாக்கத் தொடங்குந் தோறும், வீரன் - வீரனை அநுமன், ஆற்றல் மும் மடங்கு பொங்கி - (முன்னிலும்) வலிமை மூன்று மடங்கு அதிகமாகி, ஊழி இறுதியின் - யுக முடிவான பிரளய காலத்தில், இரவி பேர் கதிரோன் என்னல் ஆனுன்; இரவி என்னும் பெயரையுடைய கதிரவன் என்னும்படி விளங்கினுன்; உரவு தோள் அரக்கர் எல்லாம் - (அங்கு வந்து எதிர்த்த) வலிமை பொருந்திய தோள்களையுடைய அரக்கர்கள் யாவரும், என்பு இலா உயிர்கள் ஒத்தார் - எலும்பற்ற உயிர்களான புழுக்களைப் போன்றவரானுர்கள்.

'வரவுற்ருர் வாராநின்ருர் வந்தவர்' என்பது, இனிப் போருக்கு வர இருப்பவர், இப்பொழுது வருகின்றவர்கள். முன் வந்தவர்கள் ஆகிய முக் காலத்தவர்களையும் உணர்த்தியது. இரவி - ரவி என்ற வடசொல்லின் திரிபு; பிரகாசிப்பவன் என்பது பொருள். என்பிலா உயிர்கள் - புழுக்கள்; புழுக்களைச் சூரியனுடைய வெயில் காய்ந்து அழிக்கும்; 'என்பிலதனை வெயிற் போலக் காயுமே, அன்பி லதனை யறம்' (குறள்: 77) அநுமனுக்கு ஊழிக்காலக் கதிரோனும், அரக்கர்களுக்கு என்பிலா உயிர்களாகிய புழுக்களும் உவமைகளாயின. புழுக்கள் வெயிலிற் பட்

டுத் தாமே மடிவன போல அவ்வரக்கர்கள் அநுமனெதிரில் மடிந்தனர் என்க. வெம்மையிற் புழுக்கள் மடிதல்:' ஒப்பு: கிட்கிந்தா. பிலநீங்கு:23.

(பி-ம்.) 1. வந்தனர் வரம்பில் வெம்போர்.

2. பொரவுற்றுர் பொழுது: பொரவுற்று ரதுபோ தையன்: ஆற்றல் பொங்க.

3. எரியிற்போய்க் கதிரோன்; விரவிப்போய்க் கதிரேரன்; இரவிப் பொற் கதிரோன்: இரவுப்பொற் கதிரோன்; இரவிப்பொற் கதிரி னூழி; வெருவிப்போய்க் கதிரோன்; இரவிப்புத் தேள்வந் தூழி யிறுதியிற் காய்வ தொத்தான்.

4. உரவுத்தோள் நிருத ரெல்லாம்: உயிரு மொத்தார். (27)

## வேறு

958. *பிள்ளப் பட்டன நுதலோ டைக்கரி*
*பிறழ்பொற் றேர்பரி பிழையாமல்*
*அள்ளப் பட்டழி குருதிப் பொருபுன*
*லாறு கப்படி சேருக*
*வள்ளப் பட்டன மகரக் கடலென*
*மதில்சுற் றியபதி மறலிக்கோர்*
*கொள்ளப் பட்டன வுயிரென் னும்படி*
*கொன்றா னைம்புலன் வென்றானே.*

அள்ளப்பட்டு அழி-அநுமனுல் வாரி எடுக்கப்பட்டு அழிந்த, பொரு குருதிபுனல் - (அரக்கர்களுடைய), மோதும் இரத்த வெள்ளமாகிய நீர், ஆறு ஆக - ஆறுபோலப் பெருகி ஓட, படி சேறு ஆக - அதனுல் புவி யும் சேருக, பிள்ள பட்டன நுதல் ஓடை கரி - அநுமனுல் பிளந்து எறியப்பட்டு அழிந்த, நெற்றியில் முகபடாமுடைய யானைகளும், பிறழ் பொன் தேர் பரி - குப்புற்று விழுந்த பொன்தேர்களும் குதிரைகளும், பிழையாமல் - தவறிப் போகாமல், (தன்பால் வந்தடைந்தமையால்), மகர கடல் வள்ளப்பட்டன என - சுருமீன்கள் மிகுந்த கடல்கள் வளம் பெற்றன என்று கூறும்படியும், மதில் சுற்றிய பதி - மதில்கள் சுற்றியுள்ள இலங்கை நகரத்திலுள்ள, உயிர் - உயிர்களெல்லாம், மற லிக்கே கொள்ளப்பட்டன என்னும்படி - யமனுக்கே (உரியனவாகக்) கொள்ளப்பட்டன என்று சொல்லும்படியும், ஐம்புலன் வென்றான் - தன் ஐந்து புலன்களையும் வென்ற அநுமன், கொன்றான்-கொன்று அழித் தான், ஏ: அசை.

பிள்ளப்படுதல் - பிளக்கப்படுதல்; 924, வள்ளப்பட்டன - வளம் பெற்றன; வள் - வளம்; 'வள்ளிதழ் மாலை மார்பன்' (சீவக. 2732);

இனி, வளைப்பட்டன என்பது எதுகை நோக்கி ஒற்று மிக்கது எனலும் ஆம். 'மதில் சுற்றியபதி மறலிக்கு' என இயைத்து, மதிலால் சூழப் பெற்ற, நகரையுடைய யமனுக்கு, எனவும் பொருள் கொள்ளலாம்; மறலியின் பதி ஸம்யமினி என்பதாம். அநுமன் ஐம்புலன்களை வென்ற வன்: 514.

(பி-ம்.) 1. பிள்ளப் பட்டது நுதல்; பிள்ளைப் பட்டன; நுதலோ டைக்கிரி.
2. அள்ளற் பட்டழி; அள்ளல் பட்டன: குருதிப் பெரும்புனல்.
3. வள்ளற் பட்டன; வள்ளைப் பட்டன; நகர் மறலிக்கோர்: மள் ளப் பட்டெழு மகரக் கடலென வளைவுற் றவர்பட மறலிக் கோர்.
4. கொள்ளைப் பட்டுள துயிர். (28)

959. *தேரே பட்டன வென்றார் சிலர்சிலர்*
*தெறுகட் செம்முக வயிரத்தோட்*
*பேரே பட்டன ரென்றார் சிலர்சிலர்*
*பரியே பட்டன பெரிதென்றார்*
*காரே பட்டன நுதலோ டைக்கட*
*கரியே பட்டன கடிதென்றார்*
*நேரே பட்டனர் படமா டேதனி*
*நில்லா வுயிரொடு நின்றாரே.*

நேரே பட்டனர் பட - போரில் அநுமனுக்கு எதிரே தோன்றிய அரக்கர் வீரர்கள் அழிந்து போக, மாடே - பக்கத்தே, நில்லா உயிரொடு தனி நின்றார்-(அப்போரைப் பார்த்த அளவிலே அச்சத்தால் தம்முடலில்) நில்லாது தத்தளிக்கும் நிலையில் உள்ள உயிரோடு தனியே நின்று கொண்டிருந்தவர்களில், சிலர் - சிலர், தேரே பட்டன என்றார் - தேர் களே அழிந்து போயின என்றார்; சிலர் - மற்றும் சிலர், தெறு கண் - கோபிக்கும் கண்களையும், செம் முகம் - கோபத்தாற் சிவந்த முகங் களையும், வயிர தோள் - வயிரம் போன்று உறுதியான தோள்களையு முடைய, பேரே - காலாட் படையினரான போர் வீரர்களே, பட்டனர் என்றார் - அழிந்து போயினர் என்று சொன்னார்; சிலர் - மற்றும் சிலர், பரியே பெரிது பட்டன என்றார் - குதிரைகளே அதிகமாக அழிந்து போயின என்றனர்; சிலர் - வேறு சிலர், காரே பட்டன - மேகம் போன்றனவான, நுதல் ஓடை கட கரியே-நெற்றியில் முகபடாம் அணிந்த வையும் மதங்கொண்டவையுமான யானைகளே, கடிது பட்டன என் றார் - விரைவாய் அழிந்தன என்றனர். ஏ: அசை.

இதனால் சிலர் தேர்களையும், சிலர் வீரர்களையும், சிலர் குதிரை களையும், சிலர் யானைகளையுமே, தனித்தனி பார்த்து நின்று, அவ்வவற்றின்

அழிவின் மிகுதியால் பிற ஒன்றையும் நோக்கும் திறமின்றி, தாம் கண்டதையே கூறுவாராயினர். இச் செய்யுள், 'தோள் கண்டார் தோளே கண்டார் தொடுகழற் கமல மன்ன, தாள்கண்டார் தாளே கண்டார் தடக்கைகண் டாரு மஃதே, வாள்கொண்ட கண்ணூர் யாரே வடிவினை முடியக் கண்டார், ஊழ்கண்ட சமயத் தன்னா னுருவுகண் டாரை யொத்தார்' (பால. உலாவியற்: 19) என்று சிறப்பித்த செய்யுளை நினைப்பூட்டுகின்றது. பேர் - ஆள். 'நிருதப்பேர், ஆளின் வனம் நின்றதனை' (ஆரண்ய. கரன்வதைப். 166) 'நாயகப் பேர் ஆர் தட்டினும்' (தனிப் பாடல்.) காரே பட்டன; பட்டன என்பது உவம வாசகம்.

(பி-ம்.) 1. தேரே பட்டன வென்றனர்.
2. பேரே பட்டன வென்றூர்; பெரிதே பட்டன பரியென்றூர்.
3. காரே பட்டவ னுதலோடை: பட்டது கடிதென்பார்.
4. நேரே பட்டவர்: நேரே பட்டவர் மாடே பட்டனர் நில்லா: நில்லா வுயிர்கொடு நின்றூரே: நேரே பட்டவர் படமா டேபடு கில்லா ருயிர். (29)

960. ஆழிப் பொருபடை நிருதப் பெருவலி
யடலோ ராய்மக ளடுபேழ்வாய்த்
தாழிப் படுதயி ரொத்தார் மாருதி
தனிமத் தென்பதொர் தகையானுன்
ஏழிப் புவனமு மிடைவா ழுயிர்களு
மெறிவே லிளையவ ரினமாக
ஊழிப் பெயர்வதொர் புனலொத் தாரன
லொத்தான் மாருத மொத்தானே.

ஆழி பொரு படை நிருத பெரு வலி அடலோர் - கடல் போல் கொந்தளித்துத் தாக்கும் சேனையில் உள்ள அரக்கர்களாகிய பெரிய வன்மை வாய்ந்த வீரர்கள், ஆய் மகள் - ஆயர் குலமகள், அடு - பாலைக் காய்ச்சித் தோய்த்து வைத்த, பேழ் வாய் தாழி படு தயிர் ஒத்தார் - பெரிய வாயையுடைய மிடாவில் கடையப்படும் தயிர்போலக் குழைந்து வருந்தினர்; மாருதி - அநுமனே, தனி மத்து என்பது ஓர் தகை ஆனுன் - ஒப்பற்ற (அத்தயிரைக் கடையும்) ஒரு மத்து என்றும் சொல்லத்தக்க தன்மையை யுடையவனுனன்; எறிவேல் இளையவர் - எறிந்து தாக்கும் வேலை உடைய அரக்கரான இளவீரர்கள், இ ஏழு புவனமும் - இந்த ஏழு உலகங்களும், இடை வாழ் உயிர்களும் - அவற்றின் இடத்தே வாழ்கின்ற உயிர்கள் யாவும், இனம் ஆக - ஒன்றுகக் கூடின போன்றிருக்க, ஊழி பெயர்வது ஓர் புனல் ஒத்தார் - (அவர்கள்) யுக முடிவுக் காலத்தில் பொங்கி வரும் ஓர் பிரளய வெள்ளத்தை ஒத்து விளங்கினர்;

மாருதம் ஒத்தான் - (வலிமையில்) காற்றுப்போன்ற அநுமன், அனல் ஒத்தான் - (அந்த ஊழி வெள்ளத்தைப் பருகி அழிக்கும் வடவாமுகாக்கினி என்னும் ஊழித்) தீயை ஒத்து விளங்கினன். ஏ: அசை.

ஆய் மகள் - இடைப்பெண். தாழிப் படு தயிர்; 675: ஆரண்ய. சரபங்க 29; சடாயுகாண். 23; இளையவர் - இளமைப் பருவத்து வீரர்கள். ஏழிப் புவனம்-ஏழு தீவுகளாய் உள்ள இவ்வுலகம் என்னலும் ஆம். ஊழித் தீ; 939 உரை. மாருதம் ஒத்தான்: தந்தையே மகனுவான் என்ற உண்மையை உணரவைத்தது என்னலும் ஆம். ஏழிப் புவனமும் அரக்கர் மயமாய் இருந்தது என்பது, முன் 960 ஆம் செய்யுளின் கருத்தைத் தழுவிக் கூறியதாகும். முதலிரண்டடிகளில் அப்போர்க்களம் தயிர்த் தாழியாகவும், அக்களத்தில் அகப்பட்ட அரக்க வீரர்கள் தாழியில் உள்ள தயிராகவும், அநுமன் அத்தயிரைக் கடையும் மத்தாகவும் உருவகப் படுத்தியதாகும். பின் இரண்டடிகளில் அரக்கர்கள் ஊழிக் காலப் பிரளயமாகவும், அநுமன் அதனை நீக்கும் அனலாகவும் உவமிக்கப்பட்டனர். மிடை வாழ் உயிர் எனப் பிரித்துப் பொருள் கொள்வாரும் உளர். ஊழிப் பெயர்வதொர் புனலொத்தான், என்ற பாடங்கொண்டு, பழைய உரை, 'அநுமன் ஜலப்ரளயம், அக்னிப்ரளயம், வாயுப்ரளயம் மூன்று மொத்தான்' என்று கூறுகிறது, இவ் விளக்கத்தின்படி அரக்கர் சேனை ஏழு புவனங்களுக்கும் அவற்றிலுள்ள உயிர்ப் பிராணிகளுக்கும் ஒப்பு; அநுமன் அவற்றை அழிக்கும் மகாப்ரளயத்திற்கு ஒப்பு.

(பி-ம்.) 1. அடலோ ரமர்கள மடுபேழ்வாய்: ஆழிப் பொருபடை கொடுவந் தமர்செயு நிருதக் குழுவின ரவரெல்லாம்.
3. ஏழிற் புவனமும்: ஏழிப் புவனமொ டுயர்மற் றெவைகளுமழியக் கடையுக முடிநாளில்.
4. ஊழிப் பெயர்வதொர் புயலொத் தானனல்: ஊழிப் பெயர்கடலொத்தார் நிருதரவ் வடனவக் கொத்தன னுரவோனே. (30)

## அக்ககுமாரன் வதை 961-8

961 கொன்ற னுடன்வரு குழுவைச் சிலர்பலர்
குறைகின் றுருடல் குலைகின்றார்
பின்று நின்றன ருதிரப் பெருநதி
பெருகா நின்றன வருகாக
நின்றார் நின்றிலர் தனிநின் றானொரு
நேமித் தேரோடு மவனேரே
சென்றான் வன்றிற லயில்வா யம்புக
டெரிகின் றான்விழி யெரிகின்றான்.
க. 92.

உடன் வரு குழுவை - (இவ்வாறு அக்ககுமாரனோடு) போருக்கு வந்த அரக்கர் கூட்டத்தை, கொன்றான் - (அநுமன்) கொன்றான்; சிலர் குறைகின்றார் - சிலர் இறந்தனர்; பலர் - மற்றும் பல அரக்கர்கள், உடல் குலைகின்றார் - உடல் நடுக்குற்றனராய், பின்று நின்றனர் - போர் செய்ய மாட்டாது பின்னிட்டுச் சென்றவராயினர்; உதிர பெரு நதி பெருகா நின்றன - இரத்தப் பேராறுகள் பெருகத் தலைப்பட்டன; அருகு ஆக நின்றார் நின்றிலர் - (அவ்வக்ககுமாரனுக்கு) அருகே நின்ற அரக்க வீரர் கள் அங்கே நிற்கமாட்டாமல் அப்புறம் சென்று விட்டனர்; தனி நின் றான் - (துணையின்றித்) தனியே நின்ற அவ்வக்ககுமாரனும், ஒரு நேமி தேர் ஓடும் - ஒப்பற்ற சக்கரங்களையுடைய தேரோடும், அவன் நேரே சென்றான் - அந்த அநுமனுக்கு எதிரே சென்றவனாகி, விழி எரிகின் றான் - (கோபத்தால்) கண்கள் நெருப்பு எரிவது போல் விளங்க, வன் திறல் அயில்வாய் அம்புகள் தெரிகின்றான் - மிக்க திறமை வாய்ந்த கூரிய முனைகளையுடைய அம்புகளை அநுமன் மீது தேர்ந்து விடுகின்றவ னானான்.

சிலர் பலர் குறைகின்றாருடல் குலைகின்றார்: இது, சிலர் குறைகின்றார் பலர் உடல் குலைகின்றார் என நிரனிறையணியாகக் கொள்ளப்பட்டது. சிலர் பலர் என்ற வழக்குப்பற்றி பொருள் கூறுதலும் ஆம். இச்செய் யுள் முதல் அக்ககுமாரனும் அநுமனும் தனித்து நின்று போர் புரிந்தமை கூறப்படும்.

(பி-ம்.) 1. சிலர்பலர் திசைநின் றாருடல்.
2. பெருகா நின்றன வருகாரும்: பெருகா நின்றன குறைநின்றார்.
3. நின்றார் போன்றினர்: நேமித் தேர்விடு நெடுநேரே; அவர்நேரே
4. அம்புக டெரிகின் றான்மன மெரிகின்றான். (31)

962 *உற்றா னிந்திர சித்துக் கிளையவ*
*னொருகா லேபல ருயிருண்ணக்*
*கற்றா னும்முக மெதிர்வைத் தானது*
*கண்டார் விண்ணவர் கசிவுற்றார்*
*எற்றா மாருதி நிலையென் பாரினி*
*யிமையா விழியினை யிவையொன்றோ*
*பெற்றா மல்லது பெற்றா மென்றனர்*
*பிரியா தெதிரெதிர் செறிகின்றார்.*

இந்திரசித்துக்கு இளையவன் உற்றான் - (இவ்வாறு) இந்திரசித்துக் குத் தம்பியான அந்த அக்ககுமாரனும் (அநுமனுக்கு எதிரே) வந்தடைந்

தான்; ஒரு காலே பல உயிர் உண்ண கற்றுனும் - ஒரு தடவையிலேயே பல உயிர்களை அழிக்கும் போர்த் தொழில் கற்ற அநுமனும், முகம் எதிர் வைத்தான் - அவனுக்கு எதிர் முகமாய் நின்றுன்; அது கண்டார் விண்ணவர் - அந் நிலையைக் கண்ட தேவர்கள், கசிவு உற்றுர் - மனம் சோர்வுற்றவர்களாகி, 'எற்று ஆம் மாருதி நிலே என்பார் - (இனி) அநுமனுடைய நிலைமை எவ்வாருகுமோ?' என்று சொல்பவராய், 'இமையா விழியினை பெற்றும் - இமைத்தலில்லாமல் எப்பொழுதும் திறந்துள்ள விழிகளைப் பெற்றேம்; இவை ஒன்றே - இவ்விமையா விழிகளைப் பெற்றமை மட்டுமோ? அல்லது பெற்றேம் - நல்லது அல்லாததாகிய தீமையின் நுகர்ச்சியை அல்லவோ கூடப் பெற்றுக் கொண்டோம்?' என்றனர் - என்று சொல்லிக் கொள்பவர்களாய், பிரியாது - ஒருவரோடொருவர் பிரிந்து போகாமல் ஒன்று கூடி, எதிர் எதிர் - அப் பொருகளத்திற்கு எதிர்ப் புறங்களில் (வானத்தில்), செறிகின்றுர் - நெருங்கி நின்றனர்.

அநுமனும் அக்ககுமாரனும் நேரில் எதிர்த்துப் போர் தொடங்கியது கண்ட வானவர் அநுமனுக்கு இனி என்ன நிலே ஏற்படுமோ என்று மனம் இளக்கமுற்றனர். அன்றியும் அப்பொருகளத்தைப் பார்க்க விருப்பமின்றி வானில் அவ்விடம் விட்டு எதிர்ப்புறங்களை நோக்கிச் சென்று மறைந்தனர் என்றும் கூறலாம். எதிர் வைத்தல் - எதிர்ப் புறம் பார்த்து நிற்றல். எற்று-எத்தன்மைத்து. செறிதல் - நெருங்குதல்; மறைதலும் ஆம்; 'அன்ன நன்னுதன் மென்னடைக் கழிந்து, நன்னீர்ப் பண்ணை நளிமலர்ச் செறியவும்' (சிலப். 2; 55 - 56.) அது காறும் இமையா விழிகள் பெற்றமை நல்ல தாக இருக்க. இப்பொழுது அநுமனுக்கு அக்கனுல் உண்டாகக்கூடிய துன்பங்களைப் பாராது மூடிக் கொள்ள முடியாமல் இருப்பதால், அவ் விமையா விழிகளால் தீமையையே தாம் பெற்றதாகக் கருதி வானவர் அஞ்சினர் என்க.

இதன் பின் ஒரு பிரதியில் அடியிற்காணுமாறு இரண்டு பாடல்கள் அதிகமாக உள்ளன.

அ. 'செறிநா ணுருமொலி கொண்டா னெருபது
திசைவாய் கிழிபட வழல்கின்றுன்
இறுவா யிதுபொழு தென்று னெரிகணை
யெழுகார் மழைபொழி வதுபோலப்
பொறிவாய் திசைதொறு மின்று ரையினிலே
பொலியச் சினமொடு பொழிகின்றுன்
உறுமா ருதியுட லுகவெங் குருதிக
ளொழியா தவனெடு மலேவுற்றுன்.

ஆ. மலைபோ லுறுபுய வலிமா ருதிசினம்
வந்தே றிடவெந் திரமுந்தெரித்
துலையா தவன்விடு சரமா ரிகள்பல
துண்டப் படும்வகை மிண்டித்தன்
வலிசேர் கரமதி லெழுவால் முழுதையு
மண்டித் துகள்பட முடிவித்தான்
புலிபோ லடுசின நிருதன் கண்டழல்
பொங்கிப் பொருசிலை வளைவித்தான்.

(பி-ம்.) 1. உற்று னிந்திர் கோபற் கிளைவ ஞெருதானே பலர்; ஒருநாளே பலர்.
2. கற்று னும்மெதிர் வுற்று னடலோடு கண்டார் வானவர்.
3. எற்றே மாருதி; நிலையென் றுரினி: இமையவர் விழியினை: இமையா விழியினை: இவன்வெல்லப்.
4. பெற்றே நல்லது பெற்றும்: பெற்று னல்லது; பெற்று நல்லது: பெற்றே மென்றனர்; சேர்கின்றுர். (32)

963. *எய்தான் வாளிக ளெரிவா யுமிழ்வன*
*வீரே ழெதிரவை பார்சோரப்*
*பொய்தான் மணியெழு வொன்று லன்றது*
*பொடியா யுதிர்வுற வடிவாளி*
*வெய்தா யினபல விட்டான் வீரனும்*
*வேறோர் படையிலன் மாறுவெங்*
*கைதா னேபொரு படையா கத்தொடர்*
*காலார் தேரதன் மேலானுன்.*

எரி வாய் உமிழ்வன-நெருப்பைத் தம்மிடம் நின்று கக்குவனவான, ஈர் ஏழ் வாளிகள் எதிர் எய்தான் - பதினன்கு அம்புகளை (அக்ககுமாரன்) எதிரே (அநுமன் மீது) தூண்டினுன்; அவை பார் சோர - அவ்வம்புகள் தரையில் தளர்வுற்று விழும்படி, மணி எழு ஒன்றுல் - அழகிய எழு ஒன்றுல், பொய்தான் - (அநுமன் அவற்றை) அழித்து வீழ்த்தினுன்; அன்று அது பொடியாய் உதிர்வு உற-அப்பொழுது அந்த எழு பொடி யாய் உதிர்ந்து போகும்படி, வெய்து ஆயின வடி வாளி பல விட்டான் - (மேலும்) கொடுமையான கூரிய அம்புகள் பலவற்றை (அக்ககுமாரன்) விட்டான்; வீரனும் - வீரனுன அநுமனும், வேறு ஓர் படை இலன் - வேறொரு ஆயுதம் தன்னிடம் இல்லாதவனுகி, மாறு - (அவ்வம்புகளுக்கு) எதிராக, வெம் கை தானே பொரு படை ஆக-வலிய தன் கைகளையே போர் செய்யும் படைகளாகக் கொண்டு, தொடர் கால் ஆர் தேர் அதன் மேல் ஆனுன் - தன் முன்னே தொடர்ந்து வரும் சக்கரங்கள் பொருந்திய (அக்ககுமாரன்) தேரின் மேல் ஏறினுன்.

பொய்தல் - வீழ்த்துதல். மாறு - மாறுபடாமல்; பிரதியாக எனவும் பொருள் கொள்வர். கால் - சக்கரம்.

(பி-ம்.) 1. எய்தா னெரியுமி ழீரேழ் பகழிக ளவையும் பொடிபட வெழு வாலே: உமிழ்வன விதமா யெதிரெதிர்: ஈரே ழெதிரெதி ரவை சோரப்.

2. வைதான் மாருதி யதுபோ தவன்மணி யெழுவும் பொடிபட வடிவாளி; ஒன்று லன்றிது பொடியா யுதிர்வுற: உதிர்பட வடி வாளி; உதிரவும் வடிவாளி. 3. படையிலன் வீரர் வெங்.

4. கைதா னேயொரு: காலார் தோரண மேலானுன்: கைதா னெருபடை யாகக் கொண்டொரு காலார் தேரதின் மேலானுன் (33)

964. *தேரிற் சென்றெதிர் கோல்கொள் வானுயிர்*
*தின்ருன் பொருவரு செறிதிண்டேர்*
*பாரிற் சென்றது பரிபட் டனவவன்*
*வரிவிற் சிந்திய பகழிக்கோல்*
*மார்பிற் சென்றன சிலபொற் ருேளிடை*
*மறைவுற் றனசில வறவோனும்*
*நேரிற் சென்றவன் வயிரக் குனிசிலை*
*பற்றிக் கொண்டெதி ருறநின்ருன்.*

தேரில் சென்று - அநுமன் அந்த அக்ககுமாரன் தேரினுள் போய், எதிர் கோல் கொள்வான் - முன்னே (குதிரைச் சம்மட்டி என்னும் சவுக்குக்) கோல் கொண்டு தேரை ஓட்டும் சாரதியினுடைய, உயிர் தின்ருன்- உயிரை அழித்தான்; (ஆகவே), பொருவு அரு செறி திண் தேர் - (அந்த) ஒப்பற்ற கெட்டியான வலிய தேர், பாரில் சென்றது - தரையில் விழுந்தது; பரி பட்டன - (அத் தேரில் பூட்டப்பட்டிருந்த) குதிரைகளும் இறந்தன; அவன் வரி வில் சிந்திய - அந்த அக்ககுமாரன் தன் கட்டுகள் அமைந்த வில்லினல் பொழிந்த, பகழி கோல் சில - அம்புகளில் சில, மார்பில் சென்றன - அநுமன் மார்பினுள் நுழைந்து சென்றன; சில - மற்றும் சில அம்புகள், பொன் தோள் இடை மறைவு உற்றன - (அவ்வநுமன்) பொன்போன்ற தோள்களின் இடத்தே புகுந்து மறைந்து கொண்டன; அறவோனும் - தரும வடிவான அவ்வநுமனும், நேரில் சென்று - அவ்வக்ககுமாரன் எதிரே சென்று, அவன் வயிர குனி சிலை - அவனுடைய உறுதி வாய்ந்த வளைந்த வில்லை, பற்றிக்கொண்டு - பிடுங்கிக்கொண்டு, எதிர் உற நின்ருன் - அவனுக்கு எதிரே நின்ருன்.

கோல் கொள்ளுதல் - சாட்டைக்கோல் கொண்டு குதிரைகளைச் செலுத்துதல்; 'பனிவரு மலர்க்கணப் பரதன் கோல்கொள' (பால.

கடிமணப் : 73;) 'கலிச் சூதின், மால் கொண்டான் கோல் கொண்டமா' (நள. கலிநீங்கு: 45.) அநுமன் பொன் மேனியனுதலின் அவன் தோள் கள் பொற்றோள் எனப்பட்டன. 73. அநுமனை அறவோன் என்பது; 774.

(பி-ம்.) 1. தேரிற் சென்றொரு தேரூர் வானுயிர் தின்று னதுபோ தத் தின்டேர்: தின்று னப்பொரு.

2. பாரிற் சென்றில பரிபட் டனவவன் வறிவிற் கோலிய.

3. மறைவுற் றனசிலை.

4. பாரிற் சென்றவன்; பற்றிக் கொண்டவ னெதிர் நின்றான். (34)

965. ஒருகை யாலவன் வயிரத் திண்சிலை
யுற்றுப் பற்றலு முரவோனும்
இருகை யாலெதிர் வலியா முன்னம
திற்றோ டியதிவர் பொற்றோளான்
சுரிகை வாளவ னுருவிக் குத்தலு
மதனைச் (சொற்கொடு வருதூதன்)
பொருகை யாலிடை பிதிர்வித் தான்முதிர்
பொறியோ டும்படி பறியாவே.

உரவோனும்-(இவ்வாறு அக்கன் எதிருற நின்ற) வலியோனான அநு மனும், ஒரு கையால் - தன் ஒரு கையினால், அவன் வயிர திண் சிலை - அந்த அக்ககுமாரனுடைய வயிரம் போன்ற வலிய வில்லை, உற்று பற்றலும் - நெருங்கிப் பிடித்துக் கொள்ள, இரு கையால் எதிர் வலியா முன்னம் - (அக்கன்) தன் இரு கைகளால் (அவ்வில்லைத்தன்) எதிரே இழுக்கும் முன்னம், அது இற்று ஓடியது - அந்த வில் ஒடிந்து அப்பால் ஓடி விழுந்தது; அவன் சுரிகை வாள் உருவி குத்தலும் - (அதுகண்ட) அக்ககுமாரன் தன் உடைவாளை உருவி அநுமன் மீது குத்தலும், இவர் பொன் தோளான் - உயர்ந்த அழகிய தோள்களையுடைய இராம பிரானுடைய, சொற் கொடு வரு தூதன் - கட்டளைப்படி வந்த அநுமன், அதனை - அந்த வாளை, பறியா - பறித்து, முதிர் பொறி ஓடும்படி - மிக்க நெருப்புப் பொறிகள் சிந்தியோடும்படி, பொரு கையால் - போர் புரியும் தன் ஒரு கையால், இடை பிதிர்வித்தான் - நடுவில் ஒடிந்து விழச் செய் தான், ஏ: ஈற்றசை.

அக்கனும் அநுமனும் நெருங்கிப் போர் புரிந்த செய்தியை இச் செய் யுள் கூறுகின்றது. உரவோனும் உற்றுப்பற்றலும், இரு கையால் எதிர் வலியா முன்னம் - வலிய அநுமனும் உற்றுப் பற்றினவுடன் தன் இரு கைகளால் தன் எதிரே வலிந்து இழுக்கு முன்னம், அது இற்று ஓடியது என்க. சுரிகைவாள்; இரு பெயரொட்டு,

(பி-ம்.) 1. வயிரச் சிலையினை: வயிரச் சிலைதனை; வயிரக் குனிசிலை.
2. இருகை யாலவன்; இருகை யாலது: இற்றோ டியதோளிர் பொற் றோளின்; இற்றோ டியவிவர்.
3. சுரிகை யாலவ னுருவிக்; சுரிகை வாளெதி ருருவிக்; சுரிகை யாலெதி ருருவிக்.
4. ஒருகை யாலிடை: படி யெறியாவெ: பொருகை யாலெதிர் கடிதிற் பற்றிய தொடிவித் தானுதிர் பொடியாக. (35)

966. *வாளா லேபொர லுற்றா னிற்றது*
*மண்சே ராமுனம் வயிரத்திண்*
*தோளா லேபொர முடுகிப் புக்கிடை*
*தழுவிக் கோடலு முடன்முற்றும்*
*நீளா ரயிலென மயிர்தைத் திடமணி*
*நெடுவா லவனுட னிமிர்வுற்று*
*மீளா வகைபுடை சுற்றிக் கொண்டது*
*பற்றிக் கொண்டனன் மேலானன்.*

வாளாலே பொரல் உற்றான்-வாள் கொண்டு போர் புரியத் தொடங்கிய அக்ககுமாரன், அது இற்று மண் சேரா முனம்-அந்த வாள் (அநுமனால்) ஒடிந்து தரையில் விழு முன்னமே, வயிர திண் தோளாலே பொர முடுகி - வயிரம் போன்று வலிமை வாய்ந்த தன் தோள்களால் போர் புரிய வேகமாக வந்து, இடை புக்கு தழுவி கோடலும் - அவ்விடம் வந்து அநுமனைத் தழுவிக் கொள்ளவும், நீள் ஆர் அயில் என - நீண்டு விளங்கும் வேல்கள் என்னும்படி, உடல் முற்றும் - அக்ககுமாரனின் உடல் முழுதும், மயிர் தைத்திட - அநுமனுடைய உரோமங்கள் குத்தி உட்புக, மணி நெடு வால் - (அவ்வநுமனுடைய) அழகிய நீண்ட வால், அவன் உடல் நிமிர்வு உற்று மீளா வகை - அவ்வக்கனுடைய உடல் மேற்கிளம்பி மீளாதபடி, புடை சுற்றி கொண்டது - உடலின் எப்புறங்களிலும் சுற்றிப் பிணித்துக் கொண்டது; பற்றிக் கொண்டனன் - (இவ்வாறு அக்க குமாரனைப்) பற்றிக் கொண்ட அநுமன், மேல் ஆனான் - (அவ்வக்கனைக் கீழே தள்ளி அவன்) மேலே எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

அநுமன் உடலின் உரோமங்கள் நீண்ட வேல்கள் போல அக்ககுமாரன் உடலெங்கும் போய்ப் பதிந்து உட்புக, அவன் மேற் கிளம்பி எங்கும் அகன்று போகாதபடி அவன் உடலில் எப்புறமும் அநுமன் வால் சுற்றிக் கொண்டது. அதனால், அநுமன் அவனைப் பற்றிக் கொண்டு அவன் மீது எழுந்து உட்கார்ந்து கொண்டான் என்க.

(பி-ம்.) 1. வாளா லேபொர வுற்ருள் மற்றதை மடிவித் தநுமனும் வயிரத் தின்: மண்சேர் வதனின்மூன் வயரத்தின்; மண்சே ராதுமுன்·
2. தழுவிக் கொண்டலும் வழுவிப்போய்; தழுவிக் கொண்டலு முடல்சுற்றும்; தழுவிக் கோடலும் வழுவிப்போய்.
3. மயிர்தைத் தலுமணி; மயிர்தைத் தனமணி.
4. மீளா வகையுடல்:சுற்றிக் கொண்டயில் பற்றிக் கொண்டனன் மேலானே. (36)

967. பற்றிக் கொண்டவன் வடிவா ளெனவொளிர்
பல்லிற் றுகநிமிர் படர்கையால்
எற்றிக் கொண்டலி னிடைநின் றுமிழ்சுடர்
மின்னின் னினம்விழு வனவென்ன
முற்றிக் குண்டல முதலா மணியுக
முழைநா லாவிவர் குடர்நாலக்
கொற்றத் திண்சுவல் வயிரக் கைகொடு
குத்திப் புடையொரு குதிகொண்டான்.

பற்றிக் கொண்டு - அநுமன் அவ்வாறு அக்ககுமாரனைப் பற்றிக் கொண்டு, அவன் வடிவாள் என ஒளிர் - அவனுடைய கூரிய வாள்போல் விளங்கும், பல் இற்று உக - பற்கள் பிடிப்பு அற்றுச் சிந்த, நிமிர் படர் கையால் - ஓங்கிய தன் அகன்ற கையினுல், எற்றி - (கன்னத்தில்) மோதி, கொண்டலின் இடை நின்று உமிழ் - மேகத்தின் இடத்திலி ருந்து வெளி வருகின்ற, சுடர் மின்னின் இனம் விழுவன என்ன - ஒளி தங்கிய மின்னலின் கூட்டங்கள் கீழே வீழ்கின்றன போல, குண்டலம் முதலாம் மணி முற்றி உக - குண்டலம் முதலிய ஆபரணங்களில் உள்ள இரத்தினங்கள் அழிந்து சிந்த, நாலா இவர் குடர் - தொங்காது விளங்கிய அவனுடைய குடல்கள், முழை நால - குகைத் துவாரங்கள் போல வெளியே தொங்க, கொற்ற திண் சுவல் - வெற்றியைத் தரும் வலிய மேடுபோல் உயர்ந்த, வயிர கை கொடு - வயிரம் போன்று உறுதியான தன் கையைக் கொண்டு, குத்தி - அவனைக் குத்தி, ஒரு புடை குதி கொண்டான் - ஒரு புறத்தே குதித்தான்.

மேலே ஏறி நின்ற அநுமன் அக்ககுமாரனைத் தன் கையால் எற்றி அவன் பற்களை மேகத்தினின்றும் மின்னல்கள் உதிர்வன போல உதிர்த்தும், அவன் குண்டலம் முதலான அணிகளிலிருந்த மணிகளை உதிரச் செய்தும், வலிய மேடுபோல் உயர்ந்த கையால் அவன் வயிற்றில் குத்திக் குடர்கள் தொங்கி விழச் செய்தும், ஒருபுடை குதி கொண்டான் என்று முடிவு செய்க. சுடர் - இடியும் ஆம். முழை நாலா இவர் குடர் என்பதற்கு, முழைபோல் தொங்காது விளங்கும்

குடர்கள் என்றும், நாலா இவர் முழை குடர் - பலவாறு செறிந்து விளங்கும் முழைகள் போன்ற குடர் என்றும் பிறவாறும் பொருள் கொள்ளலாம். முற்றியுக - முழுவதும் சிந்த என்னலும் அமையும். திண் சுவல்-வலிய பிடரியில் எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும்; இவ்வாறு கொண்டால், அநுமன் அக்ககுமாரன் பிடரில் குத்த, அந்த அதிர்ச்சியால் அவன் குடர்கள் பிதுங்கி வெளிவந்தன எனக் கொள்ளவேண்டும்.

(பி-ம்) 1. பல்லற் றுகநிமிர்; பல்லிற் றுகவலி பெறுகையால்.
2. எற்றிக் கொண்டன ளிடை: சுட ருருமின் னினம்.
3. மணியுக: மோதித் தலையொடு வுடல்சிந்தக்: குழைவாய் நாவொடு. 4. கொற்றத் திண்சுடர். (37)

968. *நீத்தா யோடின வுதிரப் பெருநதி*
*நீரா கச்சிலை பாராகப்*
*போய்த்தாழ் செறிதசை யரிசிந் தினபடி*
*பொங்கப் பொருமுயிர் போகாமல்*
*மீத்தா நிமிர்சுடர் வயிரக் கைகொடு*
*பிடியா விண்ணொடு மண்காணத்*
*தேய்த்தா னூழியி னுலகேழ் தேயினு*
*மொருதன் புகழிறை தேயாதான்.*

ஊழியின் - உக முடிவில், உலகு ஏழ் தேயினும் - ஏழுலகங்களும் அழிந்த போதும், ஒரு தன் புகழ் இறை தேயாதான் - ஒப்பற்ற தன் புகழிற் சிறிதும் தேயாது விளங்கும் அநுமன், நீத்தாய் ஓடின உதிர பெரு நதி - அக்ககுமாரன் உடலிலிருந்து வெள்ளமாக ஓடிய இரத்தப் பெருக்காலாகிய பெரிய ஆறே, நீர் ஆக - (அரைக்கும் போது விடும்) நீராகவும், பார்-பூமியே, சிலை ஆக-அரைக்கும் கல்லாகிய அம்மியாகவும், போய் தாழ் செறி தசை - அத் தரையில் போய் விழுந்து தொகுத்து நின்ற அவனுடைய தசைகள், அரி சிந்தினபடி பொங்க - அரிசிகள் சிந்திக் கிடப்பன போல மிகுந்து விளங்கவும், பொரும் உயிர் போகாமல் -எதிர்த்து அவத்தைப்படும் உயிர் போகாது இருக்கும் போதே, மீத்து ஆ நிமிர் - மேலாக எழுந்து ஓங்கிய, சுடர் வயிர கை கொடு-ஒளி தங்கிய வயிரம் போன்று உறுதியான தன் இரு கைகளைக் கொண்டு, பிடியா - அவன் உடலைப் பிடித்து, விண் ஒடு மண் காண - வானிலுள்ள தேவர்களும் பூமியில் உள்ளவர்களும் காணும்படி, தேய்த்தான் - அரைத்து உருவில்லாமற் சேருக்கினன்.

தேயாதான் தேய்த்தான் என்பது முரணணி. அரிசிந்தினபடி; அரைக்கும் போது, அதிர்ச்சியால் அம்மியில் உள்ள அரிசிகள் சிந்துவன

போல, அக்கன் உடலிலிருந்து தசைத் துண்டுகள் சிதறிப்புறங்களில் விழுந்து விளங்கின என்பதாம். 'அரிசிந்தினபடி - திருமால் நரசிங்கமாக உதித்து இரணியன் குடலைச் சிந்தியபடி' என்பது பழைய உரை. அம்மி யிட்டரைத்ததல்; 308 உரை.

இதன் பின் ஒரு பிரதியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

மாய்ந்தான் மாருதி கையா லகிலமு
முடையான் மகனென வானோர்கண்
டோய்ந்தா ரிலர்குதி கொண்டா ருவகையி
ஞெழியா நறுமலர் சொரிகின்றார்
சாய்ந்தார் நிருதர்க ளுள்ளார் தமருட
லிடறித் தரைமிசை விழவோடித்
தேய்ந்தார் சிலர்சிலர் பிடரிற் குதியடி
படவோ டினர்சிலர் செயலற்றார்.

(பி-ம்.) 1. நீரா கச்சிலை மாருக: நீரா கச்செறி பாரெங்கும்.
2. போய்த்தாழ் செறிபடை: பொங்கிப் போமுயிர்: போய்த்தா முச்செறி தசைபொத் தியவுடல் புகவுற் றிடுமுயிர் போகாமுன்.
3. மண்ணொடு விண்காண.
4. ஊழியொ டுலகந் தேயினு: ஊழியோ டுலகேழ்: ஒருவன் புகழிறை. (38)

## பின் உண்டான போர்க்கள நிகழ்ச்சி 969-77

969. புண்டாழ் குருதியின் வெள்ளத் துயிர்கொடு
புக்கார் சிலர்சிலர் பொதிபேயின்
பண்டா ரத்திடை யிட்டார் தம்முடல்
பட்டார் சிலர்சிலர் பயமுந்தத்
திண்டா டித்திசை யறியா மறுகினர்
செத்தார் சிலர்சிலர் செலவற்றார்
கண்டார் கண்டதொர் திசையே விசைகொடு
கால்விட் டார்படை கைவிட்டார்.

(இவ்வாறு அக்ககுமாரன் ஒழிய), சிலர் - படையிலிருந்த அரக்கர்களிற் சிலர், புண் தாழ் குருதியின் வெள்ளத்து - (இறந்த மற்ற அரக்கர்களுடைய) தசைகள் அழுந்தி விளங்கும் இரத்த வெள்ளத்தினுள், உயிர் கொடு புக்கார் - (அநுமனுக்குப் பயந்து) தம் உயிரோடு புகுந்து ஒளிந்து

கொண்டனர்; சிலர் - மற்றும் சில அரக்கர்கள், பேயின் - பேய்களால், பொதி - சேர்த்துவைக்கப்பட்ட, பண்டாரத்திடை-பிணங்கள் நிறைந்த குவியலினிடத்து, தம் உடல் இட்டார் - (போய்ப் புகுந்து) தம் உடலை இட்டு மறைத்துக் கொண்டனர்; சிலர் - மற்றும் சில அரக்கர்கள், பயம் உந்த - அச்சம் முன் பிடித்துத் தள்ள, பட்டார் - இறந்து ஒழிந்தனர்; சிலர் திண்டாடி - வேறு சிலர் தத்தளித்து, திசை அறியா மறுகினர் செத்தார் - இன்ன திசை இது, என்று கூடத் தெரியாமல் வருந்தி இறந்தனர்; சிலர் செலவு அற்றார் - சில அரக்கர்கள் எங்கும் செல்லும் வலிமை அற்றவர்கள் ஆனார்கள்; சிலர் - வேறு சிலர், படை கை விட்டார் - தம் கையில் இருந்த ஆயுதங்களைக் கீழே நழுவ விட்டவர்களாய், கண்டார் கண்டது ஓர் திசையே - அவரவர் எதிரே கண்ட கண்ட திசை நோக்கியே, விசைகொடு - வேகமாய், கால்விட்டார் - ஓட்டமெடுத்தனர்.

புண் - தசை; 'பிறவற்றின் புண்ணுமாந்தி' (சீவக. 2822.) கால் விடுதல் - அறவே நீங்கி ஒழிதல் என்னலும் ஆம்; கால் விடுதல்; உயுத்த. கும்பகருணன் வதைப். 168.

(பி-ம்.) 1. பொருபேயின்.
2. பண்டாரத்திடை யிடையே தம்முடல்: பட்டாரிற்சில.
3. யறியார் மறுகினர் சென்றார் சிலர்சிலர்: மறுகினர் செற்றார்: சிலர் சிலர் செலவுற்றார்.
4. காலவிட் டார்சிலர் கைவிட்டார். (39)

970. மீனாய் வேலையை யுற்றார் சிலர்சிலர்
பசுவாய் வழிதொறு மேய்வுற்றார்
ஊனார் பறவையின் வடிவா னார்சிலர்
சிலர்நான் மறையவ ருருவானார்
மானார் கண்ணிள மடவா ராயினர்
முன்னே தங்குழல் வகிர்வுற்றார்
ஆனார் சிலர்சில ரையா நின்சர
ணென்றார் நின்றவ ரரியென்றார்.

சிலர் மீனாய் வேலையை உற்றார் - சில அரக்கர்கள் (தம் மாயையால்) மீன் வடிவம் எடுத்துக் கொண்டு கடலில் போய் அடைந்தனர்; சிலர் பசுவாய் வழிதொறும் மேய்வு உற்றார் - மற்றும் சில அரக்கர்கள் பசுவின் வடிவில் மாறி வழிகளில் எல்லாம் அச்சமின்றிப் (புற்களை) மேய்வாராயினர்; சிலர் - வேறு சிலர், ஊன் ஆர் பறவையின் வடிவு ஆனார் - (அப் போர்க்களத்தில் உள்ள) மாமிசத்தைத் தின்னும் (கழுகு, காகம் முதலிய)

பறவைகள் வடிவையுடையவராய் மாறி நின்றூர்கள்; சிலர் நால் மறையவர் உருவு ஆனுர் - சில அரக்கர்கள் நான்கு வேதங்களை ஓதும் அந்தணர் உருவை எடுத்துக்கொண்டனர்; சிலர் - வேறு சிலர், மான் ஆர் கண் இள மடவார் ஆயினர் - மான் போன்ற கண்களையுடைய இளமகளிர் உருவையெடுத்து, தம் குழல் முன்னே வகிர்வு உற்றூர் ஆனுர் - தம் கூந்தலை முன்புறம் வகிடு எடுத்துக் கொண்டவர் ஆயினர்; சிலர் ஐயா நின் சரண் என்றூர் - வேறு சிலர் 'ஐயனே யாம் உன் அடைக்கலம்' என்று அநுமனிடம் தஞ்சம் புகுந்தனர்; நின்றவர் - மற்றுமுள்ளோர், அரி என்றூர் - ஹரி என்ற திருமால் திருநாமத்தைக் கூறி நின்றனர்.

சுத்தவீரர் சாதுவான பசுமுதலிய விலங்குகள், வேதியர், மகளிர் முதலியவர்களைக் கொல்லாமை, படைமடம் படாமை எனப்படும்; உயுத்த. அங்கதன்தூது 41; புறநா. 9; 142; 6; சிறுபஞ்ச. 41; சீவக. 2258-59. 2261; சிலப். 26; 225-8; சூடா. 9; 10. போரில் எதிர் நிற்க ஆற்றுது தப்பிப் பிழைக்க விரும்பியவர், அந்தணர் மகளிர் முதலினேர் வேடம் தாங்கி மறைந்து செல்லுதல்; கலிங்கத்துப். போர் பாடியது; 63-66 'சிலர் அரி என்றூர்' என்பதற்கு ஹரி நாம பஜனம் செய்தார் என்றும், நாங்களும் குரங்குகளே ஆவோம் என்றும், 'நின்றவர் அரி' எனக் கூட்டி 'அதோ நின்றவர்களே விரோதிகள்' என்றும், பிறவாறும் பொருள் கூறுவர்; 'கோவிந்தம் இட்டார்' என்பது பழைய உரை.

(பி-ம்) 1. மீனுய் வேலையி லுற்றூர்: மீனுர் வேலையை: மேய்கின்றூர்.
2. பறவையின் வடிவுற்றூர்.
3. மானுர் கண்ணிணை; மானேர் கண்ணிணை: மடவா ராயவன்: மடவா ராயிவன்; முன்னே நாசியை; முன்னே குஞ்சியை.
4. ஐயா வுன்சரண்: சர ணென்றூர் சிலரரி யாமென்றூர்; நின்றவ ரளியென்றூர். (40)

971. தந்தா ரமுமுறு கிளையுந் தமையெதிர்
தழுவுந் தொறுநும தமரல்லேம்
வந்தேம் வானவ ரென்றே கினர்சிலர்
சிலர்மா னுயரென வாய்விட்டார்
மந்தா ரங்கிளர் பொழில்வாய் வண்டுக
ளானுர் சிலர்சிலர் மருள்கொண்டார்
இந்தா ரெயிறுக ளிறுவித் தார்சில
ரெரிபோற் குஞ்சியை யிருள்வித்தார்.

சிலர் - சில அரக்கர்கள், தம் தாரமும் உறு கிளையும் - தம்முடைய மனைவிகளும், நெருங்கின உறவினர்களும், தமை எதிர் தழுவும்

தோறும் - தம்மைக் (கண்ட மகிழ்ச்சியால்) எதிர் வந்து தழுவிக் கொண்ட போதெல்லாம், (அநுமனுக்கு அஞ்சி, தம் தாரம் முதலி யோரை நோக்கி), 'நும தமர் அல்லேம் - யாங்கள் உங்கள் பந்துக்கள் அல்லோம்; வானவர் வந்தேம் என்று-நாங்கள் தேவர்கள்; இப்போரைப் பார்க்க வந்தோம்' என்று கூறிக்கொண்டு, ஏகினர் - அப்பால் தப்பிச் சென்றனர்; சிலர் - இன்னும் சிலர்; மானுயர் என வாய் விட்டார் - யாங்கள் மானிடர் (அரக்கரல்லோம்),என்று பெருங் குரலிட்டுச் சொன் ஞர்கள்: சிலர்-வேறு சிலர்,மந்தாரம் கிளர் பொழில்வாய்-மந்தார மரங்கள் விளங்கும் அப் பொழிலினிடத்து, வண்டுகள் ஆனூர்-வண்டிகளின் வடிவு எடுத்துக் கொண்டனர்; சிலர் மருள் கொண்டார் - சிலர் செய்வது இன்னதென்று அறியாமல் மயங்கி நின்றனர்; சிலர் - சில அரக்கர்கள், இந்து ஆர் எயிறுகள் இறுவித்தார் - பிறைச்சந்திரன் போன்று வளைந் துள்ள தம் பற்களை ஒடித்துக் கொண்டனர்; எரி போல் குஞ்சியை - நெருப்புச் சுடர் போலச் சிவப்பு நிறமாய் எழுந்து நிற்கும் தம் தலை மயிர்களை, இருள்வித்தார்-இருள் போலக் கறுப்பாக்கிக் கொண்டனர்.

'தமர் அல்லேம், வானவர்' என்றது தாம் அரக்கர் என்பதை அநு மன் அறிந்தால் கொன்று விடுவானென்று அஞ்சி என்க. மானுயர்: - மானிடர் என்பதின் திரிபு; 'மானுயர்த் திருவடிவினன்' 296. வாய் விட் டார் - வாய் விட்டுச் சொல்லிக் கொண்டனர்; பேச்சினுல் மானிடர் போல அபிநயித்தார் என்பதும் ஆம். மந்தாரம் தேவ தருக்கள் ஐந்தி னுள் ஒன்று; தேவதருக்கள் அங்கு இராவணனுல் கொண்டு வரச் செய்து வளர்க்கப் பெற்றவை, மருள் கொண்டார் - பித்தர்கள் போல் நடித்தனர் என்றும் கொள்ளலாம். இதுகாறும் தோற்ற அரக்கர் தாம் தப்பச் செய்து கொண்ட செயல்கள் கூறப்பெற்றன.

(பி-ம்.) 1. தந்தா ரமுமுது கிளையும்; நுமர் தமரல்லேம்; தமரல்லோம்.
2. வந்தோம் வானர மென்றே கினர்; வானவ ரென்ருர் சிலர்சிலர்: மா னுட ரென.
3. பொழில்வாழ் வண்டுகள்: சிலர்சிலர் மயல்கொண்டார்.
4. இந்தா மெயிறு: குஞ்சிகள் விரிவித்தார்; குஞ்சிக ளரிவித்தார்; குஞ்சிக ளிருள்வித்தார்; இருள் போல் குஞ்சியை யிருள்வித்தார்.
(41)

வேறு

972. குண்டலக் குழைமுகக் குங்குமக் கொங்கையார்
வண்டலைத் தெழுகுழற் கற்றைகால் வருடவே
விண்டலத் தகவிரைக் குமுதவாய் விரிதலால்
அண்டமுற் றுளதவூ ரழுதபே ரமலையே.

குண்டல குழை முக குங்கும கொங்கையார் - குண்டலம் என்னும் குழையாகிய அணியையுடைய முகத்தையும், குங்குமச் சேறு அணிந்த கொங்கைகளையும் உடைய அரக்கர் மகளிர், வண்டு அலைத்து எழு குழல் கற்றை கால் வருட - வண்டுகள் அலைவுண்டு மேற்கிளம்பி எழும்படியாகத் தம் முடித்த கூந்தலின் தொகுதி அவிழ்ந்து தம் கால்களில் விழுந்து புரள, அலத்தக விரை குமுத வாய் விண்டு விரிதலால் - செம்பஞ்சு ஊட்டப் பெற்றதும் வாசனை யுடையதும் செங்குமுத மலர் போன்றதுமான வாய்கள் திறந்து விரிவடைதலால், அ ஊர் அழுத பேர் அமலை- அந்த இலங்கையிலுள்ளவர் அழுத பெரும் ஓசை, அண்டம் உற்று உளது-இவ் வண்டகோளகை முழுதும் போய்ப் பரந்தது. ஏ: அசைகள்.

குண்டலக் குழை - குண்டலமாகிய குழை என்னும் காதணி; இருபெயரொட்டு. குங்குமக் கொங்கை - குங்கும நிறமான செஞ்சாந்து பூசப் பெற்ற கொங்கை. கூந்தல் அவிழ்ந்து கால் வருட அதனால் அக் கூந்தலில் மொய்த்திருந்த வண்டுகள் அலைப்புண்டு மேற்கிளம்பி எழுந்தன என்க. அலத்தகக் குமுத வாய்; வாய்க்கும் மகளிர்செம்பஞ்சுக் குழம்பு பூசிக் கொள்வது உண்டு; 'அம்ம லரடியுங் கையு மணிகிளர் புவழ வாயும்......வலத்தக மெழுதி யிட்டாள் (சீவக. 2446.) அலத்தகக் குமுதம் - செங்குமுதமும் ஆம். இச் செய்யுள் முதல் 977 முடிய கணவரை இழந்த மகளிர் செயல்கள் கூறப்படும்.

(பி-ம்) 2. கற்றைகால் வருடலால்.
3. விண்டலைத் தகவிரைக் குமுதவாய்; விண்டலத் தகவினற்; விண்டலர் தகவிரைக்: விண்டுயிர்த் திடுவிரைக்; இதழ்க் குமுதவாய். (42)

973. *கதிரெழுந் தனையசெந் திருமுகக் கணவன்மா*
*டெதிரெழுந் தடிவிழுந் தழுதுசோ ரிளநலார்*
*அதிநலங் கோதைசே ரோதியோ டன்றவூர்*
*உதிரமுந் தெரிகிலா திடைபரந் தொழுகியே.*

கதிர் எழுந்து அனைய செம் திரு முக கணவன் மாடு - சூரியன் உதித்தது போன்ற சிவந்த முகங்களையுடைய தம் கணவர்களிடம், எதிர் எழுந்து - முன்னே எழுந்து சென்று, அடி விழுந்து அழுது சோர் - அவர்கள் பாதங்களில் விழுந்து அழுது சோர்கின்ற, இள நலார் - இள மகளிருடைய, அதி நலம் கோதை சேர் ஓதி ஓடு - மிக அழகுடைய மாலை அணிந்துள்ள (அவர்கள்) கூந்தலுடனே, அன்று அ ஊர் உதிரமும் - அன்று அந்த இலங்கை நகரில் பெருகியோடிய இரத்த வெள்ளமும், இடை பரந்து ஒழுகி - (பல) இடங்களில் பரவிச் சென்று, தெரிகிலாது - வேற்றுமை தெரிய முடியாமல் இருந்தது ஏ: அசை.

ஓதி - பெண்பால் கூந்தல்; 99. இடை - இடம், வேற்றுமையும் ஆம். உதிரம், இள நலார் ஓதியோடு வேற்றுமை அறிய முடியாது அவ் ஊரிடத்துப் பரந்து ஒழுகியது என்க. அரக்கர் மகளிர் கூந்தல் செந்நிற மானது; 99, 276. உதிரம் ஊரில் பரந்து கிடந்தது போல், ஆங்காங்கு விழுந்து புரண்ட மகளிர் கூந்தலும் எங்கும் பரந்து கிடந்தது என்பதுமாம்.

(பி-ம்.) 1. செம் முகமுடைக் கணவன்மார்: கணவன்மார் (எதிர்).
2, எதிரெழுந் திடைவிழுந்; அழுதுசோ ரின்னலார்.
3. அதிரவங் கோதை: புதியபைங் கோதைசேர்: ஓதியோ டொன்றவூர் 4. தெரிகிலா தவர்திரண் டொழுகவே. (43)

974. தாவில்வெஞ் செருநிலத் திடையுலந் தவர்தமேல்
ஓவியம் புரைநலார் விழுதொறுஞ் சிலருயிர்த்
தேவுகண் களுமிமைத் திலர்களா மிவையெலாம்
ஆவியொன் றுடலிரண் டாயதா லேகொலாம்.

வெம் செரு நிலத்து - கொடிய அந்தப் போர்க்களத்தில், தாவு இல் இடை - ஒதுக்கிடம் இல்லாத இடத்தில், உலந்தவர் தம் மேல் - இறந்து கிடந்த அரக்க வீரர் மீது, ஓவியம் புரை நலார் விழுதொறும் - சித்திரப் பதுமை போன்ற அரக்க மகளிர் அடிக்கடி விழும் போது, சிலர் - அம் மகளிர்களுள் சிலர், உயிர்த்து - மூச்சு விட்டு, ஏவு கண்களும் இமைத் திலர்கள் ஆம் - அம்பு போன்ற தம் கண்களும் இமையாதவர்களாய் மூடியிருந்தவர்களாம்; இவை எலாம் - இச் செய்கைகள் எல்லாம், ஆவி ஒன்று உடல் இரண்டு ஆயது ஆலே கொல் ஆம் - அக் கணவன் மார்க்கும் அம்மகளிர்க்கும் உயிர் ஒன்றும் உடல் இரண்டுமாய் ஆன தாலே போலும்.

வீரர்களுக்கும் அவர் மனைவியர்க்கும் உயிர் ஒன்றும் உடல் இரண்டு மாதலின் அவர்கள் மேல் விழுந்த மகளிர் உயிர் நீத்தனர்; இது மூதானந்தம் எனப்படும்; பு. வெ. 262. இவ்வித உயரிய கற்பின் நிலைக்கு, இராவணன் மனைவி மந்தோதரியும், நெடுஞ்செழியன் மனைவி கோப்பெருந்தேவியும், சூரபதுமன் மனைவி பதுமகோமளையும் சிறந்த எடுத்துக் காட்டுக்கள் ஆவர்.

(பி-ம்) 1. தாவியஞ் செருநிலத் திடையுலந் தவர்தம்மேல்.
2. புரைநலா ருறவிழுந் துளர்சிலர்.
3. இமைத் தனர்களா மிதுவெலாம்; இமைத் தவர்களா லிது வெலாம்: இதுவெலாம்.
4. இரண் டாதலா லேகொலாம்; ஆதலா லேகொலோ. (44)

975. ஓடினு ருயிர்களு டுடல்கள்போ லுதவியாய்
வீடினார் வீடினார் மிடையுடற் குவைகள்வாய்
நாடினார் மடநலார் நவையிலா நண்பரைக்
கூடினா ரூடினா ரும்பர்வாழ் கொம்பனார்.

மட நலார் - பேதைமைத் தன்மையுடைய அரக்கர் மகளிர், உயிர்கள் நாடு உடல்கள் போல்-தம் உயிர்களை நாடிச்செல்லும் உடல்களைப் போல, ஓடினார் - தம் கணவரைத் தேடிக் கொண்டு ஓடினவராய், வீடினார் வீடினார் மிடை உடல் குவைகள்வாய் - ஆங்காங்கு இறந்து பல திறப்பட நெருங்கிக் கிடந்த உடற் குவியல்களிடத்து; நாடினார் - தேடிக் கண்டவர்களாகி, நவை இலா நண்பரை - குற்றமற்ற தம் நண்பர்களான கணவர்களை, உதவியாய் கூடினார் - (தாமும் இறந்து சுவர்க்கத்தில்) அக்கணவர்களுக்கு உதவி புரிவார்களாகக் கூடினார்கள்; உம்பர் வாழ் கொம்பு அனார் - அச் சுவர்க்கத்தில் வாழும் பூங்கொம்பு) கள் போன்ற, அர மகளிர், ஊடினார் - தெய்வமகளிர் (அது கண்டு பிணக்கமுற்றனர்.

போரில் இறந்த வீரரை அரமகளிர் கூடி மகிழ்வர் என்பது நூன் மரபு. பின்பு இறந்து அவ்வீரரைக் கூடிய மனைவியரைக் கண்டு அர மகளிர் ஊடினர் என்க. உயிர்கள் நாடு உடல்கள்' என்பது இரட்டுற மொழிதலால் அமைந்தது காண்க. கணவருடன் இறந்த மகளிரும் வீரச்சுவர்க்கம் புகுந்தமை இச் செய்யுளில் கூறப்படுகிறது. இங்கு, உயிர்கள் கணவன் மார்; உடல்கள் மனைவியர்.

(பி-ம்.) 1. ஓடினு ருடல்களு முயிர்கள்போல்: ஓடினு ருயிர்கொடா தோம் புமா றுற்றுளார்: உடல்கள்போ லுறுதியால்.
2. வீடினார் மிடலுடற் குவைகள்வா யனையவாய்; வீடினார் மிடையுடற் குவைகள்வாய் மிகவுமே: மிடையுளக் குவைகள்வாய்.
3. நவையிலார் நண்பரைக்: நாடினார் சிலநல்லார் நவையில்லா நண்பரைக். (45)

976. தீட்டுவா ளனையகட் டெரிவையோர் திருவனாள்
ஆட்டினின் றயர்வதோ ரறுதலைக் குறையினைக்
கூட்டிநீ யோருயிர்த் துணைவனெங் கோவினை
காட்டுவா யாதியென் றழுதுகை கூப்பினாள்.

தீட்டுவாள் அனைய கண் - தீட்டப் பெற்ற வாள் போன்ற கண்களை யுடைய, தெரிவை ஓர் திரு அனாள் - திருமகள் போன்ற ஓர் அரக்கி, ஆட்டில் நின்று - கூத்தாடும் தொழிலில் இருந்து, அயர்வது ஓர் - களைப் புற்ற ஒரு, அறுதலை குறையினை - தலையறுப்புண்ட கவந்தமாகிய குறை

யுடலை, கூட்டி - அதன் தலையோடு பொருத்திவைத்து, 'நீ ஓர் உயிர் துணைவன் என் கோவினை - நீ ஒப்பற்ற உயிர்த் துணைவனும் என் தலைவனு மான கணவனை, காட்டுவாய் ஆதி என்று - எனக்குக் காட்டுவாயாக' என்று சொல்லி, அழுது - அழுதவளாய், கை கூப்பினாள் - (அதனை நோக்கித் தன்) கைகளைக் குவித்து வணங்கினாள்.

ஆயிரம் போர் வீரர் மடிந்த களத்தில் ஒரு குறையுடலான கவந்தம் ஆடும் என்பர். இப்படிப் பல கவந்தங்கள் இராமராவணயுத் தத்தும், கரன்வதையிலும், கலிங்கத்துப் போரிலும் ஆடின என்பதைக் காணலாம். அந்தக் குறையுடலோடு அதன் தலையைப் பொருத்திய தால் அது பேசும் என்று எண்ணி ஒருத்தி 'என் கோவினை நீ எனக்குக் காட்டு' என்று அதனைக் கைகூப்பிக் கேட்டுக் கொண்டாள் என்பதாம்; என் (கோவினுக்கு நீ) ஓர் உயிர்த்துணைவன் ஆதலின் நீ அறிவை, காட்டுதி எனவும் பொருள் கொள்ளலாம். இதனால் அப்போர்க்களத்தில் உயி ருடன் பேசுதற்குரிய ஒருவரும் இலர் என்பது விளங்கும்.

(பி-ம்.) 1. தெரிவையங் கொருத்திதான்: திருவினாள்.
2. ஆட்டநின் றயர்வதோர்: ஓட்டிநின் றயர்வதோ ருறுதலைக்.
3. கூட்டிநின் றுருயிர்; கூட்டியென் னுருயிர்: துணைவரெங் கோனினை; எங் கோனைநீ.
4. காட்டுவா யெனமொழிந் தழுதுகை கூப்பினாள். (46)

977. ஏந்தினா டலையையோ ரெழுதருங் கொம்பனாள்
காந்தனின் றாடுவா னுடற்கவந் தத்தினை
வேந்தனீ யலசினாய் விடுதியா னடமெனாப்
பூந்தளிர்க் கைகளான் மெய்யுறப் புல்லினாள்.

ஓர் எழுத் அரும் கொம்பு அனாள் - சித்திரத்தில் எழுதுவதற்கு அரிய பூங்கொம்பு போன்ற ஓர் அரக்கர் மகள், தலையை ஏந்தினாள் - அறுபட்டுக் கிடந்த (அவளுடைய கணவன்) தலையைக் கையில் ஏந்தி எடுத்துக் கொண்டவளாய், நின்று ஆடுவான் - அப் பொருகளத்தில் நின்றாடும், காந்தன் உடல் கவந்தத்தினை - தன் கணவனுடைய குறை யுடலை, (கைகளால் பிடித்துக் கொண்டு), 'வேந்தன் நீ அலசினாய் - அரசனே! நீ ஆடியதால் களைப்புற்றாய்; நடம் விடுதி எனா - நீ நடனம் செய்வதை விடுவாயாக' என்று, பூம் தளிர் கைகளால் - தன் அழகிய தளிர் போன்ற கைகளால், மெய் உற - அக் கணவன் குறை உடலை நன்றாக, புல்லினாள் - இறுகத் தழுவி நிறுத்துவாளாயினள். ஆல்: அசை.

அலசினாய் - வருந்தினாய்: தக்க: 42. மெய் உற - தன் உடலில் பொருந்த என்றும் பொருள் கொள்ளலாம்.

க. 94.

இச்செய்யுளின் பின், பிரதிகளில் மூன்று பாடல்கள் அதிகமாக உள்ளன. (இவற்றில் (அ) அச்சுப்புத்தகங்களில் காண்கின்றது. ஆனால் அது சுவடிகளில் காணப்பெறுமையாலும், இதிற் கூறிய செய்தி வேறு செய்யுட்களால் விளங்குவதாலும் அதிகப் பாடலாகக் கணக்கிடப் பெற்றது. (ஆ) ஒரு பிரதியில், பாசப் படலத்தின் முதற் செய்யுளாகக் காண்கின்றது. (இ) வேறு சில பிரதிகளில் அதிகமாகக் காண்கின்றது.

(அ) நாடினர் நாடியே நனைவருங் கொம்பனார்
வாடினர் கணவர்தம் மார்புறத் தழுவியே
வீடின ரவ்வயின் வெருவிவிண் ணவர்கடாம்
ஓடின ரரசன்மாட் டணுகிநின் றுரைசெய்வார்.

(ஆ) ஈதுமற் றிசைவுற விதுகண் டேங்கியே
மாதுய ரத்தொடு மறுகு நெஞ்சுடை
தூதருற் றோடினர் தொழுது மன்னனுக்
கோதின ரோதல்கேட் டுளந்து ளங்கினாள்.

(இ) இன்னன நிகழ்வுளி யிராக்க தக்குழாம்
மன்னிய சோதியு மரக்கன் மைந்தனும்
தன்னிக ரநுமனா லிறந்த தன்மையை
முன்னினர் சொலவவன் முன்பு கேட்டனன்.

(பி-ம்.) 1. எழுதுபூங் கொம்பனாள்: எழுதுமென் கொம்பனாள்.
2. காந்தநின் றுடுவாய்; காந்திநின் றுடுவான்: உடற்கவந் தத்தினின்.
3. வேந்துநீ யலசினாய்: விடுதிமா நடமெனாய்;
4. கையினான் மெய்யுற: கையினாள் மெய்யுறப். (47)

## அக்ககுமாரன் அழிவை அரண்மனையிலுள்ளோர் அறிதல் 978-80.

978. அவ்வகை கண்டவ ரமரர் யாவரும்
உய்வகை யரிதென வோடி மன்னவன்
செவ்வடி யதன்மிசை வீழ்ந்து செப்பினார்
எவ்வகைப் பெரும்படை யாவு மாய்ந்ததே.

அ வகை - அவ்விதம் அநுமனால் அரக்கர்கள் இறந்தமை, கண்டவர் அமரர் யாவரும் - நேரிற் கண்ட பருவத்தேவர் அனைவரும், உய் வகை அரிது என - (இனி, இலங்கையில் உள்ள அரக்கர்கள்) பிழைத்து வாழ்வது அரிய செயலாகும் என்று, ஓடி - வேகமாய் ஓடிப்போய், மன்னவன் செ அடி அதன் மிசை வீழ்ந்து - அரசனான இராவணனின்

சிவந்த அடிகளின் மீது விழுந்து வணங்கி, எ வகை பெரும் படை யாவும் - எவ்விதமான பெரிய சேனைகள் எல்லாம், மாய்ந்தது செப்பினர் - அழிந்து போன செய்தியைக் கூறினர். ஏ: அசை.

இப்பாடல் அச்சுப் பிரதிகளில் இல்லை; ஆயினும் பழைய ஏட்டுப் பிரதிகள் பலவற்றிலும் உள்ளமையாலும், பொருட்டொடர்பு உடைமையாலும் இஃது இங்குப் பாட வரிசையில் சேர்த்துக் கொள்ளப் பெற்றது.

(பி-ம்) 1. கண்டன ரமரர். 3. செய்யடி யதன்மிசை, (48)

979. *கயன்மகிழ் கண்ணிணை கலுழி கான்றுகப்*
*புயன்மகிழ் புரிகுழல் பொடிய ளாவுற*
*அயன்மகன் மகன்மக னடியின் வீழ்ந்தனள்*
*மயன்மகள் வயிறலைத் தலறி மாழ்கினள்.*

(இச் செய்தியைக் கேட்ட), மயன் மகள் - மயன் என்னும் அசுரசிற்பியின் மகளான மந்தோதரி என்பவள், கயல் மகிழ் கண் இணை கலுழி கான்று உக - கயல் மீன் போல் மதர்த்திருக்கும் கண்கள் இரண்டும் நீர் பெருகிச் சிந்த, புயல் மகிழ் - மேகம் போன்ற, புரி குழல் - முருக்கிப் பின்னப்பட்ட கூந்தல், பொடி அளாவு உற - புழுதியில் புரண்டலைய, அயன் மகன் - பிரமதேவன் மகனான புலஸ்தியர் என்னும் முனிவரின், மகன் மகன் - மகனான விச்ரவஸ் என்பவரின் புதல்வனான இராவணனுடைய, அடியில் வீழ்ந்தனள் - அடிகளில் வீழ்ந்தவளாய், வயிறு அலைத்து - வயிற்றில் அடித்துக் கொண்டு, அலறி- வாய் விட்டுக் கத்தி, மாழ்கினள் - வருந்தினள்.

அயன் மகன் மகன் மகன் - பிரமதேவரின் கொள்ளுப் பேரனான இராவணன்; 483. மண்டோதரி மயன் மகள்; 290. கயல் மகிழ், புயல் மகிழ் என்பவற்றுள் உள்ள மகிழ் என்ற சொற்கள் இரண்டையும் உவம வாசகமாகவே கொள்ளலும் ஆம். புரிகுழல் - முப் புரியாகப் பின்னப் பட்ட கூந்தல் என்றலும் அமையும். மகளிர் பெரும் துக்கம் வந்த விடத்து வயிற்றில் அடித்துக் கொள்ளும் இயல்பினர்; 739. 988.

ஒரு சுவடியில் இச் செய்யுளோடு இப்படலம் முடிகிறது.

(பி-ம்) 1. கயலுறழ் கண்ணிணை. 2. புயல்கமழ்: புயல்பொரு. 4. அழுது மாழ்கினள். (49)

980. *தாவருந் திருநகர்த் தைய லார்முதல்*
*ஏவரு மிடைவிழுந் திரங்கி யேங்கினர்*
*காவலன் கான்மிசை விழுந்து காவன்மாத்*
*தேவரு மழுதனர் களிக்குஞ் சிந்தையார்.*

(இச் செய்தி கேட்டு), தா அரும் திரு நகர் தையலார் முதல்-குற்ற மற்றதான அழகிய அந்த இலங்கா நகரத்து மகளிர் முதலாக, ஏவரும் - எல்லாரும், இடை விழுந்து இரங்கி ஏங்கினர் - இராவணனுடைய பாதங் களிடத்தே விழுந்து வருந்தி ஏக்க முற்றழுதனர்; காவல் மா தேவரும் - அந்த அசோகவனத்தைக் காத்து வந்த பெருமைக்குரிய பருவத் தேவர்களும், களிக்கும் சிந்தையார் - (இராவணனுக்கு உண்டான அக் கேட்டிற்கு உள்ளூற) மகிழ்கின்றவர்களாய், காவலன் கால் மீசை விழுந்து - இராவணன் கால்கள் மீது விழுந்து, அழுதனர் - (வெளித் தோற்றத்தில்) அழுவாராயினர்.

தேவரும்; உம்மை. எதிரது தழுவிய எச்சவும்மை. இங்கு இரா வணன் பேச முடியாத நிலையில் ஆழ்ந்திருந்மை அறியக் கிடக்கும். சில சுவடிகளில் இப்படலம் இச் செய்யுளுடன் முடியவில்லை.

இதன் பின், அடியிற் கண்ட இரு பாடல்சுள் ஓர் ஏட்டுப் பிரதியில் அதிகமாக உள்ளன.

(அ) மைந்தனை மடித்தது குரங்கென் றோதவும்
வந்தது போலுநம் வாழ்வு நன்றெனச்
சிந்தையி னழன்றெரி விழித்துச் சென்றுநீர்
இந்திரன் பகைஞனைக் கொணரு வீரென்றான்.

(ஆ) என்றலு மேவலுக் குரிய ரோடியே
சென்றுமற் றவனடி பணிந்து தீமைவந்
தொன்றிய திறங்களு முரைத்து நுந்தையும்
இன்றுனைக் கூவின னெனவுஞ் சொல்லினர். (50)

அக்ககுமாரன் வதைப்படலம் முற்றும்.

# 11. பாசப்படலம்

## இந்திரசித்தின் சீற்றம் 981-85

981. *அவ்வழி யவ்வுரை கேட்ட வாண்டகை*
*வெவ்விழி யெரியுக வெகுளி வீங்கினுன்*
*எவ்வழி யுலகமுங் குலேய விந்திரத்*
*தெவ்வழி தரவுயர் விசயச் சீர்த்தியான்.*

பாசப்படலம் - அநுமன் இந்திரசித்தின் பாசத்தால் கட்டுண்டமையைக் கூறும் படலம் என விரியும். ஒரு சுவடியில் இஃது 'இந்திரசித்துப் பாசப்படலம்' என்ற பெயருடன் காணப்படுகிறது.

அ வழி அ உரை கேட்ட ஆண்டகை-அப்போது (அக்கன் இறந்தான் என்ற) அந்த வார்த்தையைக் கேள்வியுற்ற ஆடவரிற் சிறந்தவனும், எ வழி உலகமும் குலேய - எந்த உலகமும் நடுங்கி வருந்த, இந்திர தெவ்வு அழிதர-இந்திரனுகிய பகைவன் வலி அழிந்து தோற்றுப் போக, உயர் விசய சீர்த்தியான் - சிறந்த வெற்றிச் சிறப்புப் பெற்றவனுமான மேகநாதன், வெம் விழி எரி உக - கோபத்தால் வெம்மை மிக்க தன் விழிகளிலிருந்து நெருப்புச் சிந்த, வெகுளி வீங்கினுன்-கோபம் மிக்கவனுனன்.

'இந்திர தெவ்வழி தரவுயர் விசயச் சீர்த்தியான்' என்றமையால், மேகநாதன் இந்திரசித்து எனப் பெயர் பெற்ற வரலாறு கூறப்பெற்றது, இந்திரத் தெவ்வு - தேவராகிய பகை எனவும் பொருள் கொள்ளலாம்; இந்திரர் - தேவர்; 'இந்திரர் அமிழ்த மியைவ தாயினும்' (புறநா: 182). சீர்த்தி-மிகு புகழ்; இது கீர்த்தியினும் மிக்கது; (தொல். சொல், 313.). மேகநாதன் விசயச்சீர்த்தி பெற்றது, 994.

(பி-ம்,) 2. வெவ்வழி யெரியுக: யெரிபுக. 3. எவ்வுழி: குலேய விந்திரன்.
4. தெவ்வனேப் பிணித்திடும்: விசயச் செய்கையான்;விசயக் கீர்த்தியான்; விசையிற் செய்கையான். (1)

982. *அரஞ்சுடர் வேற்றன தனுச னிற்றசொல்*
*உரஞ்சுட வெரியுயிர்த் தொருவ னேங்கினுன்*
*புரஞ்சுட வரிசிலேப் பொருப்பு வாங்கிய*
*பரஞ்சுட ரொருவனேப் பொருவும் பான்மையான்.*

அரம் சுடர் வேல் - அரத்தினால் அராவி ஒளி வீசப்பெற்ற வேலை யுடைய, தனது அனுசன் - தன் தம்பியான அக்ககுமாரன், இற்ற சொல் - (போரில்) இறந்தான் என்ற வார்த்தை, உரம் சுட - (தன்) இதயத்தை நெருப்புப் போல் தாக்கிக் கொளுத்த, எரி உயிர்த்து - நெருப்புச் சுடர் போலப் பெருமூச்சு விட்டுக் கொண்டு, புரம் சுட - திரி புரங்களைச் சுடுவதற்கு, வரி சிலை பொருப்பு வாங்கிய - கட்டுக்கள் அமைந்த வில்லாக மேருமலையை வளைத்த, பரம் சுடர் ஒருவனை - மேலான சோதி வடிவான சிவபெருமானை, பொருவும் பான்மையான் - ஒப்பாகும் தன்மையுடையவனான, ஒருவன் - ஒப்பற்ற மேகநாதன், ஓங்கினான் - (போருக்கு) எழுந்தான்.

அரம் சுடர் வேல்: பால. மிதிலைக் காட்சிப். 14; சீவக 461; 1507. பரஞ்சுடர் - திவ்ய தேஜஸ் உடையவன். மேகநாதன் எரி யுயிர்த்து ஓங்கியது, எரிபோன் மேனிப் பிரானான சிவபெருமான் கனலாய்ஓங்கியதற்கு உவமை. இந்திரசித்து ஈசனுக்கு ஒப்பு: 237.

(பி-ம்.) 1. அரஞ்சுடு வேற்றன இளவ லற்றசொல்; இளவ லிற்றசொல்; இளவ லற்றசொல்
2. உரஞ்சுட வரிசிலை யொன்று: வரிசிலை யொன்று வாங்கினான்; வேகமீக் கொழுந்த வோங்கினான்; ஓங்கிமுப்; ஒருவ னேகினான்;
3. புரஞ்சுடு மொருவனிற் பொலிந்து தோன்றினான்; புரஞ்சுட நெடுஞ்சிலைப் பொருப்பு வாங்கிய: பொருப்பை வாங்கிய. (2)

983 ஏறினன் விசும்பினுக் கெல்லை காட்டுவ
ஆறிரு நூறுபேய் பூண்ட வாழித்தேர்
கூறின கூறின சொற்கள் கோத்தலால்
பீறின நெடுந்திசை பிளந்த தண்டமே.

விசும்பினுக்கு எல்லை காட்டுவ - ஆகாயத்திற்கு மேலே உள்ள எல்லை இவ்வளவுதான் என்று காட்டுவதை போலத் தன் உயர்ச்சியால் தெரிவிப்பனவான, ஆறு இரு நூறு பேய் - பன்னிரண்டு நூறு (அதாவது. ஆயிரத்து இரு நூறு) - பேய்கள், பூண்ட - பூட்டப் பெற்ற, ஆழி தேர் - (வலிய) சக்கரங்களையுடைய தேரில், ஏறினன் - (மேகநாதன்) ஏறினான்; கூறின கூறின சொற்கள் - அவன் அவ்வப்போது பல திறப் படக் கூறிய வீரத்தைக் குறிக்கும் கடுஞ் சொற்கள், கோத்தலால் - ஒன்றோடொன்று தொடுத்து வந்தமையால், நெடும் திசை பீறின - (அவ்வதிர்ச்சியில்) நெடிய திசைகள் எல்லாம் பிளவுபட்டன; அண்டம் பிளந்தது - இவ் வண்ட கோளகையும். பிளவுண்டது போலாயிற்று, ஏ; அசை,

'பேய் விசும்பினுக்கு எல்லை காட்டுவ' என்பது, ஆகாயத்தின் மேல் எல்லை வரை உயர்ந்து விளங்கிய தோற்றத்தையுடையன என்பதாம்; 'தட்டிவானைத் தகர்க்குந்தலையின' கலிங்கத். பேய்களைப் பாடியது: 8. கூறின கூறின: அடுக்கு மிகுதிப் பொருளது. இந்திரசித்து நான்கு புலிகள் பூட்டிய தேரொன்றில் ஏறிச் சென்றதாக முதனூல் கூறும். ஒரு பிரதியில் இதனுடன் அக்ககுமாரன் வதைப்படலம் முற்றும்.

(பி-ம்.) 1. ஏறின விசும்பினுக்கு: எல்லை காட்டுவான்; காட்டுவது: நாட்டுவ. 2. ஆறிரு கோடிபேய். 3. சேறின சில்லொலி யிடிப்புச் சேர்த்தலால். (3)

வேறு

984. *ஆர்த்தன கழலுந் தாரும் பேரியு மசனி யென்ன*
*வேர்த்துயிர் குலைய மேனி வெதும்பின னமரர் வேந்தன்*
*சீர்த்தது போரு மென்னுத் தேவர்க்குந் தேவ ராய*
*மூர்த்திக டாமுந் தந்தம் யோகத்தின் முயற்சி விட்டார்.*

கழலும் தாரும் பேரியும் - இந்திரசித்து அணிந்த வீரக் கழல்களும் மாலைகளும் (அவனுடன் சென்ற) முரசங்களும், அசனி என்ன - இடி முழக்கம் என்னும்படி, ஆர்த்தன - சேர்ந்து ஒலித்தன; அமரர் வேந்தன் - தேவர்க்கிறைவனை இந்திரன், உயிர் குலைய மேனி வேர்த்து வெதும்பினன் - தன் உயிர் நடுங்க, உடல் வியர்த்து அச்சத்தால் வெதும்பி வருந்தினன்; தேவர்க்கும் தேவர் ஆய மூர்த்திகள் தாமும் - தேவர்களுக்கும் தெய்வங்களாகிய பிரம விஷ்ணு சிவன் என்னும் மூன்று மூர்த்திகளும், போரும் சீர்த்தது என்னு - போர் உச்ச நிலை அடைந்தது என்று, தம் தம் யோகத்தின் முயற்சி விட்டார் - அவரவர் தம்யோகத்தில் உள்ள ஊக்கத்தை விட்டனர்.

தார்-முன்னணிச் சேனை என்னலும் ஒன்றும்; பிங்களம் பு. வெ. 267; யோகம் - உத்யோகம் என்றதன் முதற்குறையும் ஆம். பிரமன் தான் வேதம் ஓதித்தத்துவ முணரும் மோன நிலையில் இருப்பதையும், திருமால் அரவணை மேல் அறிதுயிலாகிய யோக நித்திரையில் இருப்பதையும், சிவபிரான் தக்ஷிணாமூர்த்தியாய் யோக நிலையில் இரும்பதையும் விட்டு, 'இனி இப் போரில் என்ன விபரீதம் நிகழுமோ?, என்று எண்ணிப் பார்ப்பவராயினர் என்க.' 'இந்த இருவர் போரும் மகா சிறப்பாயிருக்குமென்று வந்தார் சிவனும்பிரமனும்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. அசனி யஞ்சு. 2. குலைந்து மேனி. 3. சீர்த்தது பொருளு மென்னுத். 4. தந்தம் யோகத்தின். (4)

௯௩௫ தம்பியை யுன்னுந் தோறுந் தாரைநீர் ததும்புங் கண்ணன்
வம்பியல் சிலையை நோக்கி வாய்மடித் துருத்து நக்கான்
கொம்பியன் மாய வாழ்க்கைக் குரங்கினுற் குரங்கா வாற்றல்
எம்பியோ தேய்ந்தா னெந்தை புகழன்றோ தேய்ந்த தென்றான்.

தம்பியை உன்னும் தோறும் - தன் தம்பியாகிய அக்ககுமாரனை நினைக்கும் போதெல்லாம், தாரை நீர் ததும்பும் கண்ணன் - தாரையர்க நீர் ஒழுகும் கண்களையுடைய இந்திரசித்து, வம்பு இயல் சிலையை நோக்கி - கட்டமைந்த தன் வில்லைப் பார்த்து, வாய் மடித்து உருத்து நக்கான் - எழுந்த கோபத்தால் தன் வாய் இதழை மடித்துக் கோபங் கொண்டு சிரித்தான்; கொம்பு இயல் மாய வாழ்க்கை-மரக் கொம்பு களில் சஞ்சரிக்கும் நிலையில்லா வாழ்க்கையையுடைய, குரங்கினுல் (ஓர் அற்பக்) குரங்கால், குரங்கா ஆற்றல் - வளையாத (அல்லது சோர்வு படாத) வலிமை வாய்ந்த, எம்பியோ தேய்ந்தான் - என் தம்பியா அழிந் தான்? (இல்லை), எந்தை புகழ் அன்றோ தேய்ந்தது என்றான் - என் தந்தையாகிய இராவணனுடைய புகழ் அன்றோ அழிந்தது' என்று கூறி வருந்துவானாயினன்.

தாரை - ஒழுக்கு, வம்பு - கச்சு, புதுமையும் ஆம். வாய் மடித்தல், வெகுளியிற் றோன்றும் மெய்ப்பாடு. நக்கான்; நகுதல் பெருந் துயரம் வந்த விடத்தும் தோன்றுதல் இயற்கை. மாய வாழ்க்கை - நிலை பெருத வாழ்வு; 'வாழ்வாவது மாயம்' (சுந்தரர் தேவாரம்). கொம்பியல் மாய வாழ்க்கைக் குரங்கு; ஒப்பு; 934. குரங்கு தல் - குறைதல் அல்லது வளைதல்; சீவக. 262, 657. தேய்ந்தான்-உருத் தெரியாமல் தேய்ந்து போனுன் என்னலும் ஆம்; அநுமனுல் அக்ககுமாரன் உருத் தெரியா வண்ணம் தேய்ந்தமை; 968. எந்தை புகழன்றோ தேய்ந்தது என்ற மையால், அக்ககுமாரன் இராவணன் புகழுக்குக் காரணமாய் இருந் தவன் என்பதும், ஒரு குரங்கு இராவணன் மைந்தனைத் தேய்த்தழித்த தால் அவன் புகழ் அழிந்தது என்பதும் ஆம். இது ஒழிப் பணி: இரா வணன் புகழில் இந்திரசித்துக்கிருந்த மதிப்பு இதனுல் விளங்குகிறது. எம்பியோ என்பதில், ஓ; எதிர்மறை வினு. வீரர் தம் ஆயுதத்தை நோக் குதல்; 479. உரை.

(பி-ம்.) 1. தம்பியை நினையுந் தோறும்.
2. அம்பியல் சிலையை; வாய்மடித் தழன்று நக்கான்; வாய்மடுந் தடுத்து நக்கான்; மடித் திடித்து நக்கான்.
3. கொம்பிடை வதியும் வாழ்க்கை; கொம்பினிற் குதிக்கும்: குரங் கினுற் குறுகா வாழ்க்கை; குறையா வாற்றல்; விலங்கா வாற்றல்.

(5)

## இந்திரசித்தின் சேனை மிகுதி

986. *வேறிரண் டனவும் வில்லு மிடைந்தவும் வெற்பென் றூலும்*
*கூறிரண் டாக்கும் வாட்கைக் குழுவையுங் குணிக்க லாற்றேம்*
*சேறிரண் டருகு செய்யுஞ் செறிமதச் சிறுகண் யானை*
*ஆறிரண் டஞ்சு நூற்றி னிரட்டிதேர்த் தொகையு மஃதே.*

(இந்திரசித்துடன் அப்பொழுது எழுந்த), வெற்பு என்றூலும் - மலை எதிர்த்துள்ள தென்றூலும், கூறு இரண்டு ஆக்கும்-அதனை இரு கூறுகப் பிளக்கக் கூடிய, வேல் திரண்டனவும் - வேல் வீரர்கள் படை திரண்டு வந்தவையும், வில்லு மிடைந்தவும் - வில் வீரர்கள் படை நெருங்கி வந்தவையும், வாள் கை குழுவையும் - வாளேந்திய கையையுடைய படையின் கூட்டத்தையும், குணிக்கல் ஆற்றேம் - இவ்வளவின என்று கணக்கிட்டுக் கூறும் வலியுடையோ மல்லோம்; இரண்டு அருகு சேறு செய்யும் - தன் இரு புறங்களிலும் நிலத்தைச் சேருக்கும், செறி மத சிறு கண்-நிறைந்த மதங்களையும் சிறிய கண்களையுமுடைய, யானை- யானைப் படையின் தொகை, ஆறு இரண்டு அஞ்சு நூற்றின் இரட்டி - பன்னீராயிர மாகும்; தேர் தொகையும் அஃதே - தேர்ப்படைகளின் தொகையும் அப்பன்னீராயிரமே.

'இந்திரசித்தினுடன் போருக்குச் சென்றவை யானைகள் பன்னீரா யிரம், தேர்கள் பன்னீராயிரம்; மற்றை வேற்படை, விற்படை, வாட் படை வீரர்களின் தொகையை யாம் கணக்கிட்டுக் கூறும் திறமையுடை யேம் அல்லேம்' என்னும் கவிக் கூற்ருக இப்பாட்டு எழுந்தது என்க. யானையின் பேருருவுக்குத் தக்கவாறின்றிச் சிறியனவாய்க் கண்கள் அமைந்துள்ளமையால், சிறுகண்யானை, என்னப்பட்டது; அயோத்யா. தைலமாட்டுப்; 12; ஆரண்ய. கரன்வதைப்; 33. வெற்பென்றூலும் கூறி ரண்டாக்கும் என்பதனை வாளோடு மட்டும் கூட்டிச் சொல்வதும் ஆம்; 'கற்படை போழினுங் கதுவாய் போகா, தெற்புடம் பறுக்கு மியற்கைத் தாகிக், கொற்புனைந் தியற்றிய கொலையமை கூர்வாள்' (பெருங்: 1: 46; 87-9). குணிக்கல்; எண் கூட்டிப் பெருக்குதல்.

(பி-ம்.) 1. வேறிரண் டெனவும் வில்லும்; வேறிரண் டனைய வில்லும்; வில்லு மிடைந்துள. 2. கூறிரண் டெறியும் வாட்கை. 4. ஆறிரண் டைந்து; ஆறிரண் டைந்து கோடி யிரட்டித் தொகையு மற்றே. (6)

## இந்திரசித்து இராவணனை அணுகிக் கூறுதல் 987-92.

987. ஆயமாத் தானை தான்வந் தண்மிய தண்ம வேனைத்
தீயவா ணிருதர் வேந்தர் சேர்ந்தவர் சேரத் தேரின்
ஏயெனு மளவின் வந்தா னிராவண னிருந்த யாணர்
வாயிதோய் கோயில் புக்கா னருவிசோர் வயிரக் கண்ணான்.

ஆய - அவ்வாறமைந்த, மா தானை தான் வந்து அண்மியது-குதிரைப் படைதானும் (அப் பன்னீராயிரமாக) வந்து அங்குக் கூடியது; அண்ம - அவ்வாறு அப்படைகள் பலவும் வந்து சேர, ஏனை - மற்றுமுள்ள, தீய வாள் நிருதர் வேந்தர் - கொடிய வாளேந்திய அரக்கர் அரசர்கள், சேர்ந்தவர் சேர - போருக்கு உதவியாக வந்து சேர்ந்தவர்களும் தன்னொடும் கலந்து கொள்ள, ஏய் எனும் அளவில் - ஏய் என்று சொல்லும் ஒலிக் குறிப்பின் அளவிற்குள், அருவி சோர் வயிர கண்ணன் - அருவி போல நீர் ஒழுகுகின்ற பகைமை கொண்ட கண்களையுடைய இந்திரசித்து, தேரில் வந்தான் - தேரில் ஏறி வந்து, இராவணன் இருந்த யாணர் வாயில் தோய் கோயில் புக்கான் - இராவணன் தங்கியிருந்த அழகிய வாயில் அமைந்த அரண்மனையுட் புகுந்தான்.

மாத்தானை - குதிரைப்படை; போர்ப்படைகள், 'ஒத்தவில் வேல் வாள் யானை யுயர்பரி தேரோ டாறே' (சூடா. நிகண்டு) என்றபடி, படைகள் ஆறனுள், முன் பாடலில் வேற்படை முதலிய ஐந்தினைக் கூறி, இப் பாடலில் ஒழிந்த குதிரைப்படையைத் தனித்துக் கூறியது எனக் கொள்ளற்பாலதாம். நிருதர் வேந்தர் - இராவணன் ஆட்சிக்கு உட்பட்ட அரக்கர்களான சிற்றரசர்கள் என்பதாம். ஏய் எனும் அளவு; 956.

(பி-ம்.) 1. வந் தணவின தணவு தானைத்; வந் தண்மிய வந்த வாண்மைத்; வந் தண்மிய தன்மை யானை; வத் தடைந்நன வடைந்த போதில்.
2. தியவர் நிருதர்: நிருதர் சேனைத் தலைவர்கள்.
4. வாயில்சேர் கோயில் புக்கான்; புக்கரன் மழையினீர் வழங்குங் கண்ணன்: (7)

988. தாளிணை வீழ்ந்தான் றம்பிக் கிரங்கினான் றருக ணானும்
தோளிணை பற்றி யேந்தித் தழுவின னழுது சோர்ந்தான்
வாளிணை நெடுங்கண் மாதர் வயிறலைத் தலறி மாழ்க
மீளிபோன் மொய்ம்பி னானும் விலக்கினன் விளம்ப லுற்றான்.

(இராவணனின் அரண்மனை புகுந்த இந்திரசித்து), தாள் இணை வீழ்ந்தான் - இராவணன் இரு பாதங்களில் வீழ்ந்து, தம்பிக்கு இரங்கி

ஞன் - தன் தம்பி அக்ககுமாரன் இறந்தமைக்கு வருந்தினன்: தறுகணு னும் - அஞ்சாமையுடைய இராவணனும், தோள் இணை பற்றி ஏந்தி - (இந்திரசித்தின்) இரு தோள்களையும் பிடித்துத் தாங்கி, தழுவினன் அழுது சோர்ந்தான் - அவனைத் தழுவிக்கொண்டு தானும் அழுது வருந்திச் சோர்வுற்றான்; இணை வாள் நெடும் கண் மாதர் - இரு வாள்கள் போன்ற நீண்ட கண்களையுடைய அரக்கர் குல மகளிர்கள், வயிறு அலைத்து அலறி மாழ்க - வயிற்றில் அடித்துக்கொண்டு வாய்விட்டுக் கதறி மயங்கிச் சோர, மீளி போல் மொய்ம்பினனும் - யமனை ஒத்த வலிமையுள்ள இந்திரசித்தும், விலக்கினன் - அம்மகளிர்களை விலக்கி, விளம்பல் உற்றான் - (இராவணனுடன் அடியிற்காணுமாறு) சொல்லத் தொடங்கினன்.

'வாளிணை நெடுங்கண் மாதர்' என்பது மந்தோதரியையும், இறந்த அக்ககுமாரன் மனைவியர்களையும் மற்றும் உறவினரான மகளிரையும் குறிக்கும். வயிறலைத்தல்: 979. உரை. மாழ்குதல் - வருத்தத்தால் மயங்கிச் சோருதல்; அயோத்யா. பள்ளியடை: 127; ஆரண்ய. மாரீசன்வதைப்; 237. மீளி - யமன்; 'மீளியுடம்பிடித் தடக்கை யோடா வம்பலர்' (பெரும்பாண். 75, நச். உரை).

ஒரு சுவடியில் இச் செய்யுளுடன் அக்ககுமாரன் வதைப்படலம் முற்றும்.

(பி-ம்.) 1. தாளிணை விழுந்து தம்பிக் கிரங்கிய தறுக ணனை; இரங்குவான் றருக ணனும்.
2. தோளிணைப் பற்றி: அழுது சோர்வான்.
3. வாளினை நெடுங்கண் ணார்தம்: நெடுங்கட் டாய்தன் வயிறலைத் திரங்கி யேங்க.
4. மொய்ம்பன் றனும்: விலக்கினன். (8)

989. *ஒன்றுநீ யுறுதி யோரா யுற்றறிந் துளைய கிற்றி*
*வன்றிறற் குரங்கி னாற்றன் மரபுநீ யுணர்ந்து மன்னோ*
*சென்றுநீர் பொருதி ரென்று திறத்திறஞ் செலுத்தித் தேயக்*
*கொன்றனை நீயே யன்றோ நிருதர்தங் குழுவை யெல்லாம்.*

'நீ உறுதி ஒன்றும் ஓராய் - நீ நன்மை தரத் தக்கதான ஒன்றையும் சிந்திக்கின்றாய் யல்லை; உற்றறிந்து உளையகிற்றி - நடந்ததை எண்ணி வருந்துகின்றாய்; நீ வன் திறல் குரங்கின் ஆற்றல் மரபு உணர்ந்து - நீ மிக்க திறமையுடைய குரங்கின் வலியின் தன்மையை முறைப்படி அறிந்து, 'சென்று நீர் பொருதிர் என்று-போய் நீங்கள் அக்குரங்குடன் போர் செய்யுங்கள்' என்று, திறம் திறம் செலுத்தி - வரிசை வரிசை

யாய் மேன்மேலும் செல்லச் செய்து, நிருதர் தம் குழுவை எல்லாம், அரக்கருடைய கூட்டங்களையெல்லாம், நீயே தேய கொன்றனை அன்றோ- நீயே குறையக் கொன்று விட்டாய் அன்றோ? மன் ஓ: அசைகள்.

உறுதி - நன்மை; 'உறுதி பயப்ப கடைபோகா வேனும்' (நீதி நெறிவிளக்கம்: 49). உளைதல் - வருந்துதல்; ஆரண்ய. சூர்ப்பண கைப்: 73; உயுத்த அங்கதன்றூதுப்: 38. திறத்திறம் - பல திற மாக; திறம் - கூறுபாடு, நீயே: ஏகாரம் நிருதர்களைக் காக்க வேண்டிய நீயே, என்று, எதிரது தழுவிய ஏகாரமும் ஆம், பின் இந்திரசித்து இவ் வாறே இராவணனிடம் கூறுதல்; (உயுத்த' நாகபாசப். 7.) உணர்ந் தும் அன்னே என்றும் பிரித்தலாம்; அன்னே, கழிவிரக்கம். இச் செய்யு ளில், இந்திரசித்து மானத்தின் பொருட்டாகத் தந்தையையும் இகழ்ந்து கூறுதல் காண்க. சில சுவடிகளில் இச் செய்யுளே இப்படலத்தின் தொடக்கமாகும்.

(பி-ம்.) 1. உற்றிருந் துளைய கிற்றி. 2. மரபுளி யுணர்ந்து மன்னு.
3. திறந்திறஞ்: செலுத்தத் தேயக்.
4. கொன்றனை யன்றோ நீயே: அரக்கர்தங் குழுவை யெல்லாம்.
(9)

990. கிங்கரர் சம்பு மாலி கேடிலா வைவ ரென்றிப்
பைங்கழ லரக்க ரோடு முடன்சென்ற பகுதிச் சேனை
இங்கொரு பேரு மீண்டா ரில்லையேற் குரங்க தெந்தாய்
சங்கர னயன்மா லென்போர் தாமெனுந் தரத்த தாமே.

'எந்தாய் - என் தந்தையே! கிங்கரர் - கிங்கரர் என்னும் போர் வீரர் கள், சம்புமாலி - சம்புமாலி என்னும் வீரன், கேடு இலா ஐவர் - அழிவில் லாத பஞ்சசேனபதிகள், என்று இ பைம் கழல் அரக்கரோடும் - என்ற இந்தப் பசிய பொற்கழல்கள் அணிந்த அரக்கர் தலைவர்களுடன், உடன் சென்ற பகுதி சேனை - கூடப் போருக்குச் சென்ற பெரும் பகுதியான சேனைகளில், இங்கு ஒரு பேரும் மீண்டார் இல்லையேல் - இங்கு ஒருவர் கூடத் திரும்பி வந்தவர் இல்லையானால், குரங்கு அது - குரங்காகிய அது, சங்கரன் அயன் மால் என்போர் தாம் எனும் - சிவபிரான், பிரமன், திரு மால் என்று சொல்லப்படும் மும் மூர்த்திகள் தாம், என்று சொல்லக் கூடிய, தரத்தது ஆம் - தகுதியுடையதாகும். ஏ; அசை.

கிங்கரர்; 752. உரை. சம்புமாலி - இராவணனுடைய அமைச்சர் தலைவனான பிரகத்தன் என்பான் புதல்வன். இராவணனுடன் சென்று பல காலமாய்த் திக்விசயஞ் செய்து தேவர்களையும் பிறரையும் வென்று புகழ்பெற்றவராதலின், கேடிலா ஐவர் எனப்பட்டனர். மும்மூர்த்திகள் முன் தனித்தனி இராவணனுடன் போரிட முடியாமை உணர்ந்தவர்,

இப்பொழுது அம் மூவரும் ஒன்று சேர்ந்து அநுமன் உருவில் வந்திருக்க வேண்டும் என்று இந்திரசித்துக் கருதினன் என்பதாம். இச் செய்யுளால் இந்திரசித்தின் ஆராய்ச்சித்திறனும், பகைவனை மதிக்கும் வீரமும் புலப் படுகின்றன.

(பி-ம்.) 1. கேழிலா வைவர்; ஐவ ரான.
2. உடன்சென்ற பஞ்ச சேனை: உடன்வந்த பகுதிச் சேனை.
3. இங்கொரு வருமீண் டார்தா மில்லை: பேரு மீண்ட தில்லையாற்.
4. ஆமெனுந் தரத்த தன்றே. (10)

991. *திக்கினை வென்று மேனா டிரிபுரந் தீயச் செற்ற*
*முக்கணன் வாளை வாங்கி யுலகொரு மூன்றும் வென்றாய்*
*அக்கனைக் கொன்று நின்ற குரங்கினை யாற்றல் காட்டிப்*
*புக்கினி வென்று மென்றாற் புலம்பன்றிப் புலமைத் தாமோ.*

திக்கினை வென்று - எட்டுத் திக்குகளையும் வென்று, மேல் நாள் - முன்னம், திரிபுரம் தீய செற்ற - முப்புரங்கள் எரிந்துபோக அழித்த, முக்கணன் - மூன்று கண்களையுடைய சிவபிரான் (கொடுத்த), வாளை வாங்கி - சந்திரஹாஸம் என்னும் வாளையும் பெற்று, உலகு ஒரு மூன்றும் வென்றாய் - சுவர்க்கம், பூமி, பாதாலம் என்னும் ஒரு மூன்று உலகங் களையும் வென்று உன் ஆட்சிக்கு உள்ளடக்கினாய்; (அத்தகைய ஆற்ற லுடைய நீ), அக்கனை கொன்று நின்ற-(இங்கு வந்து) அக்ககுமாரனைக் கொன்று (அஞ்சாது இன்னும் கொடுமை புரிய) நின்ற, குரங்கினை - குரங்கை, ஆற்றல் காட்டி - நம் வலிமைகாட்டி, இனி - காரியம் விஞ் சிய பிறகு, புக்கு வென்றும் என்றால் - போர்க்களம் சென்று நாம் வெல் லுவோம் என்று சொன்னால், புலம்பு அன்றி - அது வீண் பிதற்றலே அல் லாமல், புலமைத்து ஆமோ - அறிவுடைய செயல் ஆகுமோ? (ஆகாது என்றபடி)'

இக்குரங்கு உன் மகனைக் கொல்லுமட்டும் இடங் கொடுத்து விட்டு, பின்பு அதனிடம், 'மூவுலகும் வென்ற நீ சென்று போர் புரிந்து வெற்றி கொள்ள முயல்வது அறிவுடைமை ஆமோ? ஆடவிட்டு நாடகம் பார்ப் பது போல வன்றோ இருக்கிறது இது?' என்று இராவணனை இந்திரசித்து இடித்துக் கூறியதாம். இராவணன் திக்கினை வென்றது; உத்தர. திக்கு விசயப், அவன் உலக மூன்றும் வென்றமை, 433, 443. அவன் முக்கணன் வாள் வாங்கியது: 449. திரிபுரம் - பொன், வெள்ளி, செம்பு என்னும் மூன்று உலோகங்களால் ஆன அரண்களால் தனித்தனியே அமைந் திருந்த மூன்று நகரங்கள்.

(பி-ம்.) 1. திக்கய வலியு மேனுள்; திக்கினை வென்ற மேலைத்; வென்ற வேலை; வென்று மேலை; வென்ற நீயே; வென்றும் மேனுட்.

2. முக்கணன் கயிலை யோடு முலகொரு; முக்கணன் வாளும் பெற்று வுலகொரு மூன்றுஞ் செய்தாய்; முக்கணன் மாயன் முனிவ் வுலகொரு மூன்றுஞ் செய்து.

3. மக்களைக் கொன்று; குரங்குக்கே யாற்றல் காட்டி; குரங்கினை யாற்றல் காண்டிப்: அக்கணம் வென்று நிற்கோர் குரங்கின தாற்றல் காணப்.

4. புக்கில வேறு மென்றூற் புயவலி புலமைத்; புக்கில மெளிய தென்றூற் புயவலி பொருந்திற் றுமோ. (11)

992. ஆயினு மைய நொய்தி னுண்டொழிற் குரங்கை யானே
ஏயெனு மளவிற் பற்றித் தருகுவெ னிடரென் றென்றும்
நீயினி யுழக்கற் பாலை யல்லையீண் டிருத்தி யென்னுப்
போயின னமரர் கோவைப் புகழொடு கொண்டு போந்தான்.

'ஆயினும் - ஆனாலும், ஐய - ஐயனே! நொய்தின் - எளிதில், ஆண் தொழில் குரங்கை - வீரச் செயலிற் சிறந்த அக் குரங்கை, யானே-யான் ஒருவனே, ஏய் எனும் அளவில் - ஏய் என்னும் சொல் உச்சரிக்கும் நேர அளவுக்குள், பற்றி தருகுவென்-பிடித்துக் கொண்டு வந்து தருவேன்; நீ இனி இடர் என்று ஒன்றும் உழக்கல் பாலை அல்லை-நீ இனிமேல் துயர் என்று ஒன்றைச்சிறிதும் கொண்டு வருந்த வேண்டியது இல்லை: ஈண்டு இருத்தி என்னு - இங்கு (கவலையின்றி) இருப்பாயாக' என்று (இராவண னுக்குச்) சொல்லி, அமரர் கோவைப் புகழ் ஒடு கொண்டு போந்தான் - தேவர்க்கரசனுன இந்திரனை அவன் அடைந்திருந்த புகழ்களோடு சிறைப்பற்றிக் கொண்டு போனவனுன மேகநாதன், போயினன் - (அநுமனேடு போர் புரியச்) சென்றுன்.

ஆண்-வீரன், 'ஆணணி புகுதலும்' (சிறு பாண்: 211. நச். உரை,) ஆண் தொழில் - வீரனுக்குரிய செயல், எனலும் அமையும்;

இச் செய்யுளின் பின், அச்சுப் பிரதிகளில் அடியிற்காணும் ஒரு பாடல் உள்ளது. அது, இங்கு ஆராய்ந்த பழைய ஏட்டுச் சுவடிகள் ஒன்றிலும் இல்லை; ஆதலின், அதனைப் பாட வரிசையில் சேர்த்துக் கொள்ளவில்லை.

உடைந்தவல் லிருணோற் றுப்பல் லுருக்கொடக்கதிர்க்குழாங்கள்
மிடைந்தன மிலைச்சி யாங்கு மெய்யணி பலவு மின்னக்
குடைந்துவெம் பகைவ ருன்றேய் கொற்றப்போர் வாள்வில் வீச
அடைந்தகா ரரக்கர் தானை யகலிட மிடமின் றென்ன.

மேலும், இந்த, 'ஆயினு மைய' என்று தொடங்கும் (992) செய்யுளுக்குப்பின் சில ஏட்டுச் சுவடிகளில் அடியிற் காணுமாறு பல பாடல்கள் சிற்சில பிரதிபேதங்களுடன் காணப்படுகின்றன.

1. பத்தியிற் றேர்கள் செல்லப் பவழக்காற் குடைகள் சுற்ற
முத்தினிற் சிவிகை தன்னை முகிலெனத் தேர்கள் சுற்ற
மத்தவெங் கரிக ளெல்லா மழையென விருண்டு தோன்றத்
தத்திய பரிக டன்னிற் சாமரை பதைப்ப வந்தான்.

(பி-ம்.) 2. முத்துநீர்ச். 3. மருண்டு. 4. தம்மிற்.

2. சங்குகண் முழங்கப் பேரி கடையுகத் திடியின் வீழ
வெங்குரற் றிமிலை யோடு கடுவையின் மரங்கள் வீங்கத்
தொங்கலின் குழாமுந் தூளி வெள்ளமும் விசும்பைத் தூர்ப்பத்
திங்களிற் குடைகள் பூப்பத் திசைக்களி றிரிய வந்தான்.

(பி-ம்.) 1. பேரி சகடைக ளிடையில். 2. கெடுவையின் தறிலை,
3. தூர்க்கத். 4. திசைக்களி றிரிய

3. தீயினிற் சேர வைத்த சின்னங்கள் வேறு வேறு
வாயினி லூது வீரர் வழியிடம் பெருது செல்லக்
காயெரி கின்ற கண்ணி னரக்கர்கள் கடுத்துச் செல்ல
நாயகன் றூதன் ருனு நோக்கின னகையுங் கொண்டான்.

(பி-ம்.) 1. செல்ல: செவ்வே வைத்துச். 2. வாயினின்றூத.
3. தாயவள் சொன்மாருது தவம்புரிந் தறத்தி னின்ற 4. நேர்ந்தன.

4. செம்பொனிற் றேரிற் பாங்கர்ச் செங்குடைத் தொங்கற் காடும்
உம்பரிற் கொம்ப ரொத்த வொருபிடி நுசுப்பிற் செவ்வாய்
வம்பவிழ் குழலி னூர்கள் சாமரை வகைந்து வீசக்
கொம்பொடுங் கோடு தாரை குடர்பறித் தூத வந்தான்.

(பி-ம்.) 3. பதைத்து. 4. கொம்பொடு கோடு; கொம்பொடுங் கோளி.

5. தொங்கலின் காடு நூரு யிரமென்பர் தோகைப் பிச்சம்
பங்கமில் பணிலம் பத்துப் பத்துநூ ருகு மென்பர்
செங்குடை வெண்மை நீலம் பச்சையோ டினைய வெல்லாம்
பொங்கொளி மன்னு கோடிப் புரந்தவா தித்தர் சுற்ற.

(பி-ம்.) 1. என்ப தோகைய வாகிப்: தோகை பிச்சம். 3. நீலப்.
4. புரந்தர கிதகோடி: புரந்தரா தித்தர்.

6. தீயெழு பொன்னின் சின்னம் சின்னம்வீ ழரக்க வீரர்
வாய்களி னூத மண்ணும் வானமு மறுகிச் சோர
ஆயது முடிவு காலங் கிளர்ந்தன னரக்க னென்று
வாய்களிற் பேசி வானோர் மண்டினர் மலைத னோக்கி.

(பி-ம்.) 1. பொன்னிற் சின்னமேவி: சின்னவிழ்.
2. மண்ணு மானமும்: சோர்ந்த(து): சேர்ந்தார்.
3. கிளர்ந்தனரரக்கர். 4. மலைகள்.

7. அரந்தரு மயிலிற் காடு மழலுமிழ் குந்தக் காடும்
சரந்தரு சிலையிற் காடுந் தானவர் கடலு மின்ன
நிரந்தரஞ் சங்கு தாரை நிலமகள் முதுகை யாற்றுள்.
புரந்தர சித்து வந்தா னென்றன பொன்னின் சின்னம்.

(பி-ம்.) 3. முதுகை யாற்றப். 4. புரந்தரன் றன்னை வென்றோன்.

8. புலித்தோலிற் பலகை யெல்லாம் பொருகடற் புரவி யென்னக்
கலித்தோடி யும்ப ரோடு மோடின கால னஞ்ச
ஒலித்தொழி யுவாவுற் றன்ன வும்பர்தோ ரணத்தை முட்ட
வலித்தார்திண் சிலைக ளெல்லா மண்டின சரத்தின் மாரி.

(பி-ம்.) 1. பொருகட் புரவி தென்ன 2. ஓட்டின. 3. ஒலித்தாழி

9. தடுவையின் மரங்க ளோடு சகடைக டிமிலை தாக்க
உடுவின மான வெல்லா முதிர்ந்தன பூவி தென்ன
அடுபுவி யனைய வீர ரமரினி லார்ப்பு மானை
நெடுமணி முழக்கு மோதை மண்ணக நிறைந்த தன்றே.

(பி-ம்.) 4. முழக்க மோத.

வேறு

10. எண்பதி னுயிர கோடி யிருஞ்சிலை
புண்பயில் வெஞ்சரம் பூட்டின ரொன்றோ
விண்புகு தோரண மெல்லை மறந்த
மண்புகழ் கீர்த்தியன் மாருதி வாழ்ந்தான்.

(பி-ம்.) 2. பூட்டினரன்றோ, 3. மெல்ல நிறைந்து: மறைந்தது.
4. புகு சீர்த்தியன்.

11. பாரெழு வாட்படை பத்திரு வெள்ளம்
ஆறிரு கோடியின் வேலி னமைந்தார்
கூறிடு வெள்ள மிடைந்தது குந்தம்
வீறுடை மாருதி மேல்வரு சேனை

(பி-ம்.) 1. மாறெழு, பாறெழு வார்படை. பத்தினில்.
3. நூறெரு வெள்ள மமைந்தது நொந்த. 4. மேலின்.

12. பந்தென வாடிய பாய்பரி யெல்லாம்
சிந்தையின் முந்தின தேர்கள் செறிந்த
அந்தியின் மேனிய வானைக ளெல்லாம்
வந்தன மண்ணை யடித்துகள் மாய்ப்ப.

(பி-ம்.) 4. வண்ணனை யத்: யடித்தக மாய.

13. சங்குகள் தாரைகள் சச்சரி சின்னம்
எங்கு மியம்பின பேரி யிடித்த
வெங்குர லிற்பறை விண்ணி னிறைந்த
பொங்கி யரக்கர் பொருக்கென வந்தார்.

(பி-ம்.) 1. சங்கொடு. 2. யிடிப்ப.

14. பார்த்தன பார்த்தன பாய்பரி யெங்கும்
தேர்த்திரள் தேர்த்திர ளேதிசை யெங்கும்
கார்த்திரண் மேனியி னிற்கய மெங்கும்
ஆர்த்தனர் மண்டு மரக்கர்க ளெங்கும்.

(பி-ம்.) 2. திர ளெத்திசை 4. ஆர்த்தன.

15. நுகம்படு தேரவை நூற்றிரு கோடி
யுகம்பிறி தொன்றுவந் துற்றது வென்ன
அகம்படு வாயி லரக்கர்க ளென்ன
அகம்படி வீரர்க ளையிரு வெள்ளம்.

(பி-ம்.) 1. நூறிரு கோடி. 2. யுகம்பிறி தென்னவந்.
4. அகம்படு வீரர்க.

16. வெள்ளமொர் நூறுடை விற்படை யென்பர்
துள்ளிய வாட்படை சொல்லிட வொண்ணுப்
பொள்ள றருங்கரப் பூட்கையு மஃதே
கள்ள வரக்கனைச் சுற்றினர் காப்பார்.

(பி-ம்.) 3. பொள்ளல் கருங்கரிப்.

17. ஆய பெரும்படை யன்னது கண்டு
மாய மிகுந்திறல் வானர வீரன்
நாயக னைத்திசை நாடி வணங்கி
மேயதொ ரின்பம் விளங்கிட நின்ருன்.

(பி-ம்.) 1. செல்வது கண்டு: ஆய்வது கண்டு.
3. நோக்கி நயத்தால்.

18. ஆழி யினைய வரக்கர் பெரும்படை
ஏழுல கும்மிட மில்லென வீண்டிச்
சூழு மெழுந்தனர் தோன்றினர் தம்மைக்
கோழியி னெக்குறக் கூவிடு கின்ருன்.

(பி-ம்.) 1. ஆழி யனுனை. 2. வீண்டச்.
4. கோழியி னுக்கிய, கோழியி னுக்குவக்; கோழியி னேக்குவ.

19. மாருதி கூவ மகிழ்ந்தன னுகிக்
கூரிய புந்தியிற் கோனைக் குறிக்கொள்
காரென மேனி யரக்கர்கள் காணு
வாரிக ளூடு மடுத்தன வாளி.

(பி-ம்.) 1. கூறி; கூவி. 2. கோவன் குறிக்கொடு.
3. காரணி மேனி: காணுன். 4. வாளிக ளூடு.

20. தூளி மிடைந்துருத் தோன்றல வாகி
யாளியி னுனை யறிந்தில னுகிச்
சூளுற நோக்கினன் சோதனை பெற்ருன்
கோனை யமர்ந்தனன் கூறுதல் செய்தான்.

(பி-ம்.) 1. உருத் தொன்றில வாகி. 2. யாளிய னுனை: யாளிய னுனை.
3. சூழுற 4. கோளமைந் தனனவை.

21. இந்திரன் முன்பு மிடுந்திரள் சோதிச்
சந்திர வெண்குடை தானெதிர் கண்டான்
அந்தமில் கேள்விய னுனைகள் காணுச்
சிந்தை யுவந்து சிரித்துட னின்ருன்.

(பி-ம்.) 1. நெடுந்திரள் சோதிச். 3. அந்தக னேறிய வானைகள்.
4. சிரித்திட நின்ருன்.

22. சிந்தை யுவந்தவ னுகி யரக்கன்
முந்தி யெழுந்து முனிந்தமை நோக்கி
வெந்திற லாய்விரை வின்வரு கென்ருன்
இந்திர சித்திவ னென்ப திசைத்தான்.

(பி-ம்.) 1. சிரித்தெதிர் நின்ருன்: ஆகியதீயோன்.
2. புந்தி யரக்கர் கணைத்தமை நோக்கி: அழைத்தமை நோக்கி.

23. என்றவன் மாற்ற மியம்புதல் கேட்டுக்
குன்ற மெனும்புய வானர வீரன்
நன்றிது நன்றிது வென்ன நயந்தான்
சென்றணை வுற்ற தரக்கர்கள் சேனை.

(பி-ம்.) 2. வென்றி மிகுந்திறல் 4. அரக்கன சேனை.

24. ஊழி யெழுந்துல கத்தை யொடுக்க
வாழியல் தானை யரக்க ரடங்க
ஏழுல கும்மிட மில்லையெ னும்படி
ஆழி கிளர்ந்தன வென்ன வளைத்தான்.

(பி-ம்.) 2 அரக்கர்க டங்க. 4. அழைத்தான்.

வேறு

25. சந்திர னருக்கனெடு தாரகை யினங்கள்
சிந்திட வெழுந்துதிசை யீண்டவெதிர் செவ்வே
வந்தவிவ் வரக்கர்குழு வன்மையிது வென்ருல்
இந்திரனை யன்றியுல கேழும்வெலு மென்ருன்.

(பி-ம்.) 1. வெழுந்த திசைமீண்ட. 3. வன்மையிது.

(பி-ம்.) 1. ஆண்டெழிற் குரங்கை: குரங்கை நானே.
2. இடரின் ஞென்றும்; இடர்மற் ஞென்றும்.
3. நீயினி யுழத்தற் பாலை: நீதுய ருழக்கற் பாலை நீடினி திருத்தி யென்று: அல்லை நீ டிருத்தி யென்னுப்; நீ யிருத்தி யென்று.
4. போயின னிலங்கை வேந்தன் போர்ச்சினம் போவ தொப்பான்: அமரர் கோனை.

## இந்திரசித்தின் படையெழுச்சி 993-4

993 ஆழியுந் தேரு மாவு மரக்கரு முருக்குஞ் செங்கண்
சூழிவெங் கோப மாவுந் துவன்றிய நிருதர் சேனை
ஊழிவெங் கடலிற் சுற்ற வொருதனி நடுவ ணின்ற
டாழிமா மேரு வொத்தான் வீரத்தின் பன்மை தீர்த்தான்.

**ஆழி அம் தேரும்** - சக்கரங்களோடு கூடிய அழகிய தேர்களும், **மாவும்** - குதிரைகளும், **அரக்கரும்** - அரக்க வீரர்களும், **முருக்கும் செங்கண் சூழி வெம் கோப மாவும்** - பகைவரை அழிக்கும் சிவந்த கண்களையும் முகபடாத்தினையும் கொடிய சினத்தையுமுடைய யானைகளும், **துவன்றிய** - நெருங்கிய, **நிருதர் சேனை** - அரக்கர் படைகளும், **ஊழி வெம் கடலில் சுற்ற**-யுக முடிவாகிய பிரளயகாலத்தில் கொந்தளித்தெழும் கடலைப் போலத் தன்னை சூழ்ந்து வர, **வீரத்தின் பன்மை தீர்த்தான்** - வீரம் என்பது (பலரிடத்தில் உள்ளது என்னும்) பன்மைப் பொருளில் கொள்வதை நீக்கித் (தன் ஒருவனிடத்தே தனித்து உள்ளதாக ஒருமைப் பொருளிற் கொண்ட) மேகநாதன், **தனி நடுவண் நின்ற** - ஒன்றேயாகத் தனித்து (அவ்வெள்ளத்தின் இடையே விளங்கி) நின்ற, **ஒரு பாழி மா மேரு ஒத்தான்** - ஒப்பற்ற பருத்த மகா மேரு என்னும் மலையை ஒத்து விளங்கினன்.

'உருக்குஞ் செங்கண்' எனப் பிரித்துப் பொருள் கொள்ளலும் ஒன்றும்; உருக்குதல் - கோபித்தல்; மேரு மலை ஊழிக்காலத்தில் மற்றவை யாவும் அழியத் தான் மட்டும் அழியாது அவ்வெள்ளத்தினிடையே தனித்தோங்கி விளங்கும். ஊழி வெள்ளத்திற்குச் சேனைப் பரப்பும், மேரு மலைக்கு மேகநாதனும் உவமைகள். வீரத்தின் பன்மை தீர்த்தது: வீரம் பல திறமாய்ப் பிரிந்து பலரிடம் பன்மையில் விளங்காமல் இம்மேகநாதனிடத்தே திரண்டு வந்து ஒருமையில் தங்கியிருந்தது என்பதாம். இது பொது நீங்கிய தனிச் சிறப்பு என்பதாம். இந்திரசித்தின் வீரச் சிறப்பு; 992; உயுத்த. நாகபாசப். 5; பிரமாத்திரப்: 24; இந்திரசித்து வதைப்: 30, 56. துவற்றுதல் - நெருங்கி நிறைதல்; 'வானம் வெளியறத் துவன்றி வீழும்' (உயுத்த. நாகபாசப்; 97.) செங்கண்; கோபக் குறிப்பு. 'வெங்கோபமா - கொடிய சினங் கொண்ட போர் யானை. மேருவொத்தான் என்பதை அநுமனுக்கு ஆக்கிப்பொருள் கொள்வாரும் உளர்.

(பி-ம்.) 1. அரக்கனை யுருக்குஞ் செங்கண்; அரக்கரை முருக்குஞ்; அழலுஞ் செங்கண்.
2. வெங் கோல மாவும்; வெங் களிறு மாகத்: துன்னிய நிருதர்: துன்றிய நிருதர்; நிருதச் சேனை.
3. சுற்ற வோதநீர்: நடுவு ணின்ற.
4. வீரத்தின் பான்மை; பன்மை தீர்த்தான்; பான்மை தீர்த்தான்: அருமை தீர்த்தான். (31)

994 *சென்றன னென்ப மன்னோ திசைகளோ டுலக மெல்லாம்*
*வென்றவ னிவனென் றுலும் வீரத்தே நின்ற வீரன்*
*அன்றது கண்ட வாழி யநுமனை யமரி னுற்றல்*
*நன்றென வுவகை கொண்டான் யாவரு நடுக்க முற்றார்.*

சென்றனன்-இவ்வாருகப் போருக்குச் சென்ற, இவன் - இந்த இந்திரசித்து, திசைகளோடு உலகம் எல்லாம் வென்றவன் என்ருலும் - எட்டுத் திசைகளோடு மூவுலகங்களையும் வென்று புகழ்பெற்றவஞயினும், வீரத்தே நின்ற வீரன் - வீர வாழ்க்கையிலேயே நிலைபெற்று நின்ற மகா வீரன் (ஆதலால்), அது அன்று கண்ட - போர்க்களச் சிதைவாகிய வீரச் செயலை அன்று புரிந்த, வாழி அநுமனை - (புகழ்ச் சிறப்புடன்) வாழும் அநுமனை, (பார்த்து), அமரின் ஆற்றல் நன்று என - அவனது போரின் வல்லமை சிறப்புடைத்து என்று பாராட்டி, உவகை கொண்டான் - மகிழ்ச்சி கொண்டான்; யாவரும் நடுக்கம் உற்ருர் - (அது கண்டோர்) அனைவரும் (என்ன விளையுமோ என்று) நடுங்கினர். என்ப, மன், ஓ: அசைகள்.

வாழி அநுமன்-புகழ் வாழ்வே வாழ்க்கையாகக் கொண்ட அநுமன்; இனி 'ஆழியநுமனை' எனக்கொண்டு, திருமாலுடைய ஆழிப் படையாகிய சுதர்சனம் போன்ற அநுமனை யென்றும், கம்பீரத்தில் கடல் போன்ற அநுமன் என்றும், கடல் கடந்து வந்த அநுமன் என்றும், பிறவாறும் பொருள் கூறுவாரும் உளர். மற்றும், வாழி என்பதை அசையாகக் கொள்ளலும் உண்டு. அநுமன் தன் பகைஞனேயாயினும், அவன் ஆற்றிய வீரச் செயலை இந்திரசித்து பெரிதும் பாராட்டியது, அவனது உயர்ந்த வீர லக்ஷியத்தைக் குறிப்பிடுகின்றது என்க; பகைவரின் வீரத்தைக் கொண்டாடுவது அன்றியும், அவன் வீரர்களுள் வீரன் என்பதையும் குறித்தவாருகும்; 'வில்லாளரை யெண்ணில் விரற்கு முன்னிற்கும் வீரன்'; 'வீரரென்பார்கட் கெல்லாம் முன்னிற்கும் வீரர் வீரன்'; 'இவனேடெஞ்சும் ஆண்டொழிலாற்றல்' (உயுத்த. நாகபாச. 5; இந்திரசித்து வதைப். 30, 31.) என்று பலவிடங்களில் இவன் பாராட்டப் பெற்றிருகின்றமை காண்க. அன்றது கண்ட; கண்ட - செய்த; 'நகரங் கண்டபடலம்' என்பது போல,

(பி-ம்.) 2. வென்றன னென்ற போதும்: விருந்தென நின்ற வீரன்.
3. நன்றது கண்ட வாழி: அநுமனு மமரி னுற்றல்: நன்றது கண்ட வெம்போ ரநுமனு மமரி னுற்றல்.
4. அனைவரு நடுக்க முற்ருர்; நடுக்கங் கொண்டார். (14)

## இந்திரசித்து போர்க்களங் கண்டு வருந்துதல் 995-1002

995. *இலைகுலாம் பூணி னுனு மிரும்பிணங் குருதி யேற்ற*
*அலகில்வெம் படைக டெற்றி யளவிடற் கரிய தாகி*
*மலைகளுங் கடலும் யாறுங் கானமும் பெற்று மற்ருேர்*
*உலகமே யொத்த தம்மா போர்ப்பெருங் களமென் றுன்னு.*

இலை குலாம் பூணினனும் - இலைகள் விளங்குவன போலச் சித்திர வேலைப்பாடுகளையுடைய அணிகளையுடைய இந்திரசித்தும், பெரும் போர் களம் - அந்தப் பெரும் போர்க்களமானது, இரும் பிணம் - போரில் இறந்த அரக்கர்களுடைய பெரும் பிணங்கள், குருதி - இரத்தங்கள், ஏற்ற - (ஆகிய இவை) தாங்கிக் கொண்டு வந்து சேர்த்த, அலகு இல் வெம் படைகள் - கணக்கற்ற பலவகைக் கொடிய ஆயுதங்கள், தெற்றி - (இடையிடையே ஆங்காங்குக் குறுக்கிட்டுத்) தடை செய்ய, அளவு இடற்கு அரியது ஆகி - அளவிட்டுக் கூற முடியாதனவாகி, மலைகளும் கடலும் யாறும், கானமும் பெற்று - (அவற்றுலான பல) மலைகளையும் கடல்களையும் ஆறுகளையும் காடுகளையும் தன்னிடம் அமையப்பெற்று, மற்று ஓர் உலகமே ஒத்தது என்று உன்னு - வேறு ஓர் உலகமே போலப் பரந்து கிடந்தது என்று கருதி, அம்மா:வியப்பை உணர்த்தும் இடைச்சொல்.

பூணினன் உன்னு என்று இயைக்க; இதனை அடுத்த செய்யுளோடு இயைத்து 'விம்மல் கொண்டான்' என்று வினை முடிவு கொள்க. இலை குலாம்பூண்-இலைபோல் பல அமைக்கப் பெற்று விளங்கும் அணியும் ஆம். இது பத்திராவலி என்னும் ஓர் ஆபரணம்; 'இலைகொண்ட பூணினீர்' (சீவக. 653.) ; 'இலை முகப்பைம் பூணிறை' (நீதிநெறிவிளக்கம். 27.) இறந்த வீரர்களுடைய அப்போர்ப் பெருங்களம், பிணப்பெருங் குவியல் களாகிய மலைகளும், இரத்த வெள்ளங்களாகிய நதிகளும், கடல்களும், ஆங்காங்குச் செறிந்து ஊன்றிக் கிடந்த பலவகை ஆயுதங்களாகிய காடுகளும் அடையப்பெற்று வேறோர் உலகம் போல இந்திரசித்துக்குத் தோன்றியது என்பதாம். தெற்றுதல்-செறிந்து தடுத்துக் கிடத்தல் 831.

(பி-ம்.) 1. இலைகுலாம் பூணி னன்ற னிரும்பனைக் கரங்க ளேற்ற: குருதி யெற்ற; குருதி பெற்ற: குருதி யீர்த்த: குருதி யோங்க.
2. படைக ளெற்றி; வேற் படைகள் யாவும். (15)

996. *வெப்படை கில்லா நெஞ்சிற் சிறியதோர் விம்மல் கொண்டான்*
*அப்படை வேலை யன்ன பெருமைய ராற்ற லோடும்*
*ஒப்படை கில்லா ரெல்லா முலந்தனர் குரங்கு மொன்றே*
*எப்படை கொண்டு வெல்வ திராமன்வந் தெதிர்க்கி லென்றான்.*

'அப்பு அடை வேலை அன்ன பெருமையர் - நீர் நிறைந்த கடல் போன்ற (அளக்க வொண்ணுப்) பெருமையுடையவர்களும், ஆற்றல் ஓடும் ஒப்பு அடைகில்லார் - தம் வல்லமையுடன் ஒப்புமை அடையப் பெருதவர்களுமான, எல்லாம் - அரக்க வீரர்கள் யாவரும், உலந்தனர் - (இப் போரில்) அழிந்தனர்: குரங்கும் ஒன்றே - (இவ்வளவு வீரர்களையும் கொன்ற) குரங்கும் ஒன்றேதான் உள்ளது; இராமன் வந்து எதிர்க்கில் -

(இனி), இராமன் (மற்ற வானரங்களுடன்) இங்கு வந்து நம்மை எதிர்த்துப் போர் புரிந்தால், எப்படை கொண்டு வெல்வது - (அவனை) எந்தப் படைகளைக் கொண்டு எதிர்த்து வெற்றி கொள்வது?,' என்றான் - என்று சொல்லி, வெப்பு அடைகில்லா நெஞ்சில் - (இது வரை வருத்தத்தால்) வெப்பம் அடையாத தன் மனத்தில், சிறியது ஓர் விம்மல் கொண்டான் - (இந்திரசித்து) ஓர் ஏக்க உணர்ச்சி கொள்வானாயினன்.

வெப்பு - வருத்தம்; தாப உணர்ச்சியும் ஆம்; பால. மிதிலைக் காட்சிப்: 99; ஆரண்ய. அயோமுகிப்; 62. அப்பு - நீர். வேலையன்ன பெருமையர் என்றது, கடல் போல் பரந்த படைப் பெருமையோடு இராவணனுடன் திக்குவிசயம் முதலான பல போர்களில் வென்று பெரும் பெருமைபெற்றவர் என்பதாம். ஒப்படை கில்லா - ஒப்பு என்று ஒன்றை இவருடன் சேர்த்துச் சொல்வதற்கு இல்லாத. குரங்கும்: உம்மை இழிவு சிறப்பினது. படைகளிற் பெரும்பாலன அநுமன் ஒருவனாலேயே அழிந்தமையாலும், இறந்த படை வீரர்க ளெல்லாம் மிக்க வலிமை வாய்ந்தவராதலாலும், படைகளுடனே வரும் இராமனை இனி, எப்படை கொண்டு வெல்வது என்று இந்திரசித்து நெஞ்சில் விம்மல் கொண்டான் என்க,

(பி-ம்.) 1. வெப்படைக் கில்லா நெஞ்சிற் பெரியதோர்.
2. அப்புடை வேலை யென்ன: பெருமையா னுற்றல் நோக்கி.
3. ஒப்படைக் கில்லார்; ஒப்படைக் கல்லார்; ஒப்படைக் கியலார்; ஒப்படைக் கில்லா தியாரு மிறந்தனர் குரங்கு மொன்றே:எல்லா முலந்தன. 4. இராமன்மே லேற்கி னென்றான். (16)

997. *கண்ணனு ருயிரை யொப்பார் கைப்படைக் கருத்தின் மிக்கார்*
*எண்ணலாந் தகைய ரல்ல ரிறந்தெதிர் கிடந்தார் தம்மை*
*மண்ணுளே நோக்கி நோக்கி வாய்மடித் துயிர்த்தான் மாயாப்*
*புண்ணுளே கோலிட் டன்ன மானத்தாற் புழுங்கு கின்றான்.*

கண் அனார் - கண் போன்று அருமையானவரும், உயிரை ஒப்பார் - தன் உயிர் போன்றவரும், கை படை கருத்தின் மிக்கார் - கையிற் படையேந்திப் போர் புரியும் எண்ணத்தில் ஊக்க மிக்கவருமான இராக்கதப் போர் வீரர்கள், எண்ணல் ஆம் தகையர் அல்லர் - எண்ணிக் கணக்கிடும் தகுதிக்கு அடங்காதவர்கள்; இறந்து எதிர் கிடந்தார் தம்மை - போர்க்களத்தில் தன் எதிரே இறந்து கிடந்தார்களை, மண் உளே நோக்கி நோக்கி - தரையில் (பல இடங்களிலும்) பார்த்துப் பார்த்து, வாய் மடித்து உயிர்த்தான் - வாய் இதழை மடித்துக் கொண்டு பெரு மூச்சு விட்டவனாய், மாயா புண் உளே கோல் இட்டு அன்ன - ஆறாத புண்ணுக்

குள் ஒரு கோலைக் கொண்டு குத்தினாற் போல, மானத்தால் புழுங்குகின்றான் - (இந்திரசித்து) அவமானத்தால் (மனமும் உடலும்) வெதும்புகின்றவன் ஆனான்.

அருமையும் உயர்வும் உடையோரைக் கண்ணுக்கு உவமிப்பது கண் உறுப்புக்களுள் சிறந்தமையால்; 'கண்ணிற் சிறந்த வுறுப்பில்லை' (நான்மணிக்: 55.) உயிரை ஒப்பார்: உயிரினும் சிறந்தது பிறிதில்லை ஆதலின் தன் உயிர் போல் சிறந்தவர். 'எண்ணலாந் தகைய ரல்லர்' என்பதற்கு நினைக்க முடியாது சிறந்த மேன்மைக் குணமுடையவர் எனவும் கொள்ளலாம். நோக்கி நோக்கி; அடுக்கு மிகுதிப் பொருளது. வாய் மடித்தல்: வெகுளியிற்றோன்றும் மெய்ப்பாடு. மாயாப் புண்ணுளே கோலிடுதல்: புண் தானே துயர் தருவதோடு அதனுள் கோலை விட்டுக் குத்தினால் அத்துயர் மேலும் பல மடங்கு அதிகமாய் வருத்தும்; அது போல இராவணன், முதலிலேயே தன்னை அநுமனோடு போர் செய்ய அனுப்பாது பெருங்கேட்டை உண்டாக்கிய துன்பமும், அக்கன் முதலியோரை இழந்ததால் உண்டான துன்பமும் தன் மனத்தில் முன்பே வருத்திக் கொண்டிருக்க, இப்பொழுது நேரில் அவ்வீரர் எண்ணிலர் இறந்து கிடப்பது கண்டதும், இந்திரசித்துக்கு அத்துயரம் அதிகமானது என்க. மானம் - அவமானம் என்பதின் முதற்குறை. 'வஞ்சியை மீட்கிலேனென்னும் மானமும்'; (ஆரண்ய. சடாயுவுயிர் நீத்த; 145.); மானம், மானத்தின் கேட்டினைக் குறித்ததும் ஆம். இட்டன்ன; இட்டதன்ன என்பதின் தொகுத்தல் விகாரம். புண்ணுள்ளே கோலிட்டன்ன; ஒப்பு); 'வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையான்' (உயுத்த. இராவணன் சோகப் 10;); கலித்; 83: 30; 84; 30; 120: 17; பெருங். 1; 33:95; 4. 13: 130; பெரியபு; சிறுத்தொண்ட. 50; கந்த. குமார. 46; தஞ்சை, 113; நைடத. நகர்நீங்கு. 8.

(பி-ம்.) 1. கண்ணனு ருயிரே; கண்ணலா ருயிரே; கண்ணுநு ருயிரே; கண்ணின்மா மணியே யொப்பார்; உயிரே யொப்பான்; கைப்படை கருத்தின் மிக்கான்; கைப்படைக் கலத்திற் காப்பார்; கலக்கிக் காப்பரர்.
2. எண்ணிலார் கைய ரல்லரர்; எண்ணலாந் தகைய ரில்லா திறந்திடை: இறந்திடைக் கிடந்தார்: இறந்தனர் கிடந்தார் தம்மை.
3. வாய்மடித் துருத்து; உருத்தான். (17)

998. *கானிடை யத்தைக் குற்ற குற்றமுங் கரனார் பாடும்*
*யானுடை யெம்பி வீந்த விடுக்கணும் பிறவு மெல்லாம்*
*மானிட ரிருவ ரானும் வானர மொன்றி னானும்*
***ஆனிடத் துளவென் வீர மழகிற்றே யம்ம வென்றான்.***

கான் இடை - தண்டக வனத்திடத்து, அத்தைக்கு உற்ற - என் அத்தையாகிய சூர்ப்பணகைக்கு நேர்ந்த, குற்றமும் - (மூக்கு முதலிய அறுப்புண்ட) குறைபாடும், கரனார் பாடும் - கரன் முதலானோர் இறந்து பட்டதும், யான் உடை எம்பி வீந்த இடுக்கணும் - என்னுடைய தம்பி அக்ககுமாரன் அழிந்த துன்பமும், பிறவும் எல்லாம் - மற்ற (அசோக வனம் அழிந்தமை முதலியனவுமான) யாவும், மானிடர் இருவரானும் வானரம் ஒன்றினாலும் ஆனிடத்து - இராமலக்ஷ்மணர் என்னும் மனிதர் இருவராலும் குரங்கு ஒன்றாலும் ஆன போது, என் உள வீரம் - என்னிடத்து உள்ள வீரத்தன்மை, அழகிற்றே அம்ம என்றான் - அழகாக இருக்கிறது என்று இந்திரசித்து வருந்திக் கூறினான்.

கரனார்: ஆர் என்ற பன்மை விகுதி, கரன், தூடணன், திரிசிரன் என்னும் மூவரைக் குறித்து வந்தது. கரன் இந்திரசித்துக்குச் சிறிய தந்தை யென்னும் முறைமையாலும், வீரத்திற் சிறந்த பெருமையுள்ளவனாதலாலும், ஆர் விகுதி கொடுத்துச் சிறப்பிக்கப் பெற்றது என்னலும் ஆம். யானுடைய - என்னுடைய; 'நானுடைத் தூய்மை காட்டவும்' என்றது போல; (629.) மானிடர் இருவரால் ஆனவை, அத்தைக்குற்ற குற்றமும் கரனார் பாடும். வானரம் ஒன்றினால் ஆனது, எம்பி வீந்த விடுக்கணும் என்க. ஆனிடம்: ஆன இடம் என்பதின் விகாரம்; அழகிற்று அழகுடைத் தன்று என்னும் எதிர்மறைப் பொருளது. 'என் வீர மழகிற்றேயம்ம' என்றது தன்னை இகழ்ந்து கொண்டது: பின்பு உயுத்த. மந்திரப். 12. ஆம் செய்யுளில் இராவணன் கூறிக் கொண்டமையும் காண்க. அம்ம: இரக்கப் பொருளைக் குறிக்கும் இடைச்சொல்.

(பி-ம்) 2. ஏனுடைத் தம்பி; எப்பி வீழ்ந்த; வீழ்ந்த; பிறனு மெல்லாம்.
4. யானிடைத் துளவென் வீரம்; ஆனதே யுளவென் வீரம்: அழகிற்றென் றினைய சொன்னான்; அழகிதே யம்ம வென்றான். (18)

999. *நீர்ப்புண்ட வுதிர வாரி நெடுந்திரைப் புணரி தோன்ற*
*ஈர்ப்புண்டற் கரிய வாய பிணக்குவ டிடறிச் செல்வான்*
*தேய்ப்புண்ட தம்பி யாக்கை சிவப்புண்ட கண்க டயில்*
*காய்ப்புண்ட செம்பிற்றோன்றக் கறுப்புண்ட மனத்தன் கண்டான்.*

நீர்ப்பு உண்ட உதிர வாரி-நீர்த் தன்மை கொண்ட குருதி வெள்ளம் நிறைந்த, நெடும் திரை புணரி தோன்ற - நெடிய அலைகளோடு கூடிய கடல் எதிரில் தென்பட, ஈர்ப்பு உண்டற்கு அரிய ஆய - (அந்தக் குருதி வெள்ளத்தால்) இழுத்துச் செல்வதற்கு முடியாதவையான, பிண குவடு இடறி செல்வான் - பிண மலைகளைத் (தேர்க் கால்களால்) இடறிக் கொண்டு செல்லும் மேகநாதன், தேய்ப்பு உண்ட தம்பி ஆக்கை -

அநுமனுல் தேய்க்கப் பட்டு, உருவில்லாமற் போன தன் தம்பியான அக்ககுமாரனுடைய உடலை, சிவப்பு உண்ட கண்கள் தீயில் காய்ப்பு உண்ட செம்பில் தோன்ற - கோபத்தால் செந்நிறமான தன் கண்கள் நெருப்பில் காய்ச்சப்பட்ட செம்பு போல விளங்க, கறுப்பு உண்ட மனத்தன் - கோபங் கொண்ட மனத்தோடு, கண்டான் - பார்த்தான்.

நீர்ப்புண்ட உதிரவாரி; 968. ஈர்ப்புண்டற்கு அரிய ஆனமை: அப் பிணக்குவடுகள் பெரியனவாயும் மிக்க வலிமையுடையனவாயும் இருந்தமையால் என்க. தம்பி யாக்கை தேய்ப்புண்டு உருவில்லாமற் போனமை; 967. சிவப்பு, கறுப்பு என்பன கோபத்தைக் குறிக்கும் சொற்கள்: 'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள' (தொல், சொல். உரியியல், 74.); 'கருமை செம்மை என்னுது, கறுப்பு, சிவப்பு எனத் தொழிற்படுத்தினுர், அவை வெகுளியை உணர்த்தினமையின்' நச். உரை. கண்ணுக்குச் செம்பு: 'செம்பு காட்டிய கண்ணிணை' (ஆரண்ய கரன்வதைப், 145); 'செம்புக்குஞ் சிவந்த செங்கட்' (உயுத்த, மகுட பங்கப்: 36),

(பி-ம்.) 1. நீப்புண்ட வுயிர வாகி நெருப்புண்ட நிறத்திற் ருேன்றி; நீய்ப் புண்ட வுயர வாகி; நெருப்புண்ட நிலத்திற் ருேன்றி; நெடுந் திரைப் புணரி தோன்றி; பரவை தோன்றி.
2. வீப்புண்டற் கரிய வாய; வீப்புண்ட கரிய வாய வெம்பிண மிடறிச் செல்வான்; குவ டிடறச் செல்வான்.
3. சிவப்புண்ட கண்டு தீயில்; சிவப்புண்ட தழலி னேறி.
4. செம்பிற் ருேன்றும். (19)

1000. தாருகன் குருதி யன்ன குருதியிற் றனிமாச் சீயம்
கூருகிர் கிளைத்த கொற்றக் கனகன்மெய்க் குழம்பிற் ருேன்றத்
தேருகக் கையின் வீரச் சிலையுக வயிரச் செங்கண்
நீருகக் குருதி சிந்த நெருப்புக வுயிர்த்து நின்ருன்.

(அக்கன் உடல்), தாருகன் குருதி அன்ன குருதியில் - தாருகாசுரனுடைய இரத்தம் போன்ற இரத்தப் பெருக்கில், தனி மா சீயம் - ஒப்பற்ற பெரிய நரசிங்கமூர்த்தி, கூர் உகிர் கிளைத்த - தன் கூரிய நகங்களால் கிளறிப் பிளந்த, கொற்ற கனகன் மெய் குழம்பில் - வலிமை பொருந்திய இரணியனுடைய உடல் குழம்பாகக் கலக்கப்பட்டுக் கிடந்தது போல், தோன்ற - உருத் தெரியாமல் கிடந்து விளங்க, (அதனைக் கண்டு), தேர் உக - தான் ஏறிவந்த தேரும் நிலை குலைய, கையின் வீர சிலை உக - தன் கையிற் பிடித்திருந்த வீரத் தன்மையிற் சிறந்த வில்லும் நழுவ, வயிர செம் கண் நீர் உக குருதி சிந்த - பகைமையைக் காட்டும்

தன் சிவந்த கண்கள் நீரையும் குருதியையும் சிந்த, நெருப்பு உக - நெருப்பையும் கக்க, உயிர்த்து நின்றான் - (இந்திரசித்து) பெருமூச்சு விட்டுக் கொண்டு ஏங்கி நின்றான்.

தாருகன்; ஓர் அசுரன்; காளி தேவியால் அழிக்கப்பட்டவன்; 'தாருகன் பேருரங் கிழித்த பெண்ணு மல்லள்' (சிலப். 20; 39. 40); இவன், தாரகனின் வேறானவன்: தாரகன் குமாரக் கடவுளால் சங்கரிக் கப்பட்டவன். அக்ககுமாரன் உடல் விழுந்து கிடந்த இடத்தின் குருதிப் பெருக்குக்குத் தாருகன் குருதியும், அது உருத் தெரியாமல் சிதைந்து கிடந்ததற்கு இரணியன் உடலும் உவமைகள். மற்றச் சிங்கங்களைப் போலல்லாது நர வடிவுங் கலந்த சிங்கமாதலின், தனிமாச் சீயம் எனச் சிறப்பிக்கப் பெற்றது. கனகன் - பொன்னிறமானவன்; கனகம்; ஹிரண் யம் - பொன். நீருகுதல், தம்பி அவ்வாறு அலங்கோலமாய் உருத் தெரியாமல் அழிந்து கிடப்பதால் உண்டான சோகத்தால். குருதி சிந்து தலும், நெருப்பு உகுதலும், உயிர்த்தலும்: தமக்கு உண்டான கேடு கருதி அநுமன் மேல் உண்டான கோபத்தால். இவை சினத்திலும் சோகத்திலும் தோன்றும் மெய்ப்பாடுகள். இதுகாறும் இந்திரசித்து போர்க்களம் புகுந்த தன்மை கூறப்பட்டது.

(பா-ம்.) 1. சாருறுந் தம்பி யாக்கைக் குருதியத் தனிமாச் சீயக்: குறுதியாற் றனிமாச் சீயக்.
2. கூருகிர் வாய்ந்த: கூருகி ரனைந்த; கூருயிர் கிழிக்கச் சோம்பும் கனககன். 3. தேருகக் காறள் ளஃடச் சிலைநெக.
4. அயிர்த்து நின்றான்: உயிர்த்துச் சொல்வான். (20)

1001. வெவ்விலை யயில்வே லுந்தை வெம்மையைக் கருதி யாவி
வவ்வுதல் கூற்று மாற்று மாறுமா றுலகின் வாழ்வார்
அவ்வுல கத்து ளேரே லஞ்சுவ ரொளிக்க வையா
எவ்வுல கத்தை யுற்று யெம்மை நீத் தெளிதி னெந்தாய்.

'எந்தாய் - என் அப்பனே! வெம் இலை அயில் வேல் உந்தை வெம் மையை கருதி - கொடியதும் இலை போன்ற முனையுடையதும் கூரிய தும் ஆன வேலையுடைய உன் தந்தையின் (இராவணனது) கோபத்தை மனத்தில் எண்ணி, கூற்றும் - கூற்றுவனும், ஆவி வவ்வுதல் ஆற்று - உன் உயிரை அபகரித்துச் செல்லும் வலியுடையது அன்று; மாறு மாறு உலகின் வாழ்வார் - மற்றும் வெவ்வேறு உலகங்களில் உள்ளவர்களும், அ உலகத்து உளேர் ஏல்-இறந்து அக் கூற்றுவனுலகில் இருப்பார்களே னும், ஒளிக்க அஞ்சுவர்-உன்னை அங்கு ஒளித்துவைத்துக் கொள்ள அச் சங்கொள்வர்; ஐயா - ஐயனே! எம்மை எளிதின் நீத்து - (உண்மை

இவ்வாறிருக்க), எங்களையெல்லாம் எளிதில் விட்டு நீங்கி, எ உலகத்தை உற்றாய் - நீ வேறு எந்த உலகத்தைப் போயடைந்தாய்!.

கூற்றுவனும் இராவணனுக்கு அஞ்சி அக்ககுமாரனை அபகரித்துச் செல்லமாட்டான்; இறந்து யமலோகம் சென்றுள்ள மற்ற உலகத்தவரும் அவ்விராவணன்பாற் கொண்ட அச்சத்தால் அக்ககுமாரனை அங்கு ஒளித்து வைத்துக்கொள்ள அஞ்சுவர் என்பதாம். 'ஐயா! எந்தாய்: என்பன அன்பின் மிகுதியால் இந்திரசித்து அக்ககுமாரனைக் குறித்து இரங்கிக் கூறியவை. இவை மரபு வழுவமைதியின்பால் வந்தன. மாறு மாறுலகின் வாழ்வார், அவ்வுலகத்துளேரேல் அஞ்சுவர்; என்பதில், அவ்வுலகத்து, என்பதற்கு அந்தத் தத்தம் உலகங்களில் என்றும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. கருதி வீரம்.
2. வவ்வுதல் கூற்று மாற்றான்: கூற்றுஞ் செய்யான் மற்றவெவ்வுலகத் தோரும்; மாறுபல் லுலகின் வாழ்வார்.
3. அவ்வுல கத்து ளோரும்.
4. நீத் தினிதி னெந்தாய்; நீத் தினிதி னென்றான்; நீந் தேகி னெந்தாய்; நீத் தெம்பி யென்றான். (21)

1002. ஆற்றல னாகி யன்பா லறிவழிந் தயரும் வேலை
சீற்றமென் றொன்று தானே மேனிமிர் செலவிற் றாகித்
தோற்றிய துன்ப நோயை யுள்ளுறத் துரந்த தம்மா
ஏற்றஞ்சா லாணிக் காணி யெதிர்செலக் கடாய தென்ன.

ஆற்றலன் ஆகி - (தன் தம்பியாகிய அக்கன் இறந்துபோன துக்கத்தை) பொறுக்கமாட்டாதவனாய், அறிவு அழிந்து - அறிவு மயங்கி, அன்பால் - அவ்வக்கன்பால் தான்கொண்ட அன்பினால், அயரும் வேலை- (இந்திரசித்து)தளர்ச்சியுற்று வருந்தும் போது, சீற்றம் என்று ஒன்று தானே - கோபம் என்ற ஒரு குணமே, மேல் நிமிர் - மேற் கிளம்பி, செலவிற்று ஆகி-செல்லும் தன்மையுடையதாகி, ஏற்றம் சால் ஆணிக்கு-நன்றாய் ஏறி உள் நுழைந்த ஓர் ஆணிக்கு, எதிர் செல ஆணி கடாயது என்ன-அது பின் வாங்கிச் செல்ல மற்றோர் ஆணியைத் தாக்கி அடித்தது போல, தோற்றிய துன்ப நோயை - மனத்தினுள் தோன்றிய துயரம் என்ற நோயை, உள் உற துரந்தது - உள்ளுக்குள்ளே யிருந்து ஒழிந்து வெளிப்பட்டுப் போகச் செய்தது. அம்மா: வியப்பையும் இரக்கத்தையும் உணர்த்தும் இடைச் சொல்.

இதனால், இந்திரசித்து கொண்டிருந்த துயரத்தை அவனது சீற்றம் எதிர்கொண்டு தாக்கி அழியச் செய்தது என்பதாம். இது ஒன்றில்

பதிந்திருந்த ஆணியைப் போக்க, அதன் எதிரே வேருேர் ஆணி கொண்டு அடிப்பது போல. இச் செய்யுளில் சோகத்தை வீரம் மாற்றிய தான, ஒரு சுவை மற்ருெரு சுவையை மாற்றும் தன்மை கூறப்பட்டது.

(பி-ம்) 1. ஆற்றல னனைய னுகி.
2. சீற்றமென் றெழுந்த செந்தீச் சிந்தையிற் செறுத்துத் தோன்றத்: மேனிமிர் செலவிற் ருக.
3. நோயைத் துறந்தவன் துறந்து தேரை: உள்ளந்தாற் றுறந்த தம்மா.
4. ஏற்றஞ்சா லாணி யாணி யெதிர்; ஆணி யாணிக்கு; ஏற்றஞ்சேர் திறலி னுனுக் கெதிர்செலக் கடவு கின்ருன்: ஏற்றிருஞ் செருவி லாணிக் கெதிர்செலக் கடாய தென்ன. (22)

வேறு

## அநுமன் இந்திரசித்தைக் கண்டு வியத்தல் 1003-1006

1003. ஈண்டிவை நிகழ்வுழி யிரவி தேரெனத்
தூண்டுறு தேரின்மேற் ருேன்றுந் தோன்றலை
மூண்டுமுப் புரஞ்சுட முடுகு மீசனின்
ஆண்டகை வனைகழ லநும னேக்கினுன்.

ஈண்டு இவை நிகழ்வு உழி-இவ்விடத்தில் இவ்வாறு இச் செயல்கள் நடக்க, இரவி தேர் என - சூரியனும் அவனுடைய தேரும் போல, தூண்டு உறு தேரின் மேல் - செலுத்தப்பட்ட தேரின் மீது, தோன்றும் தோன்றலை-விளங்கும் இராவணன் புதல்வனை இந்திரசித்தை, மூண்டு - சீற்றம் மேற்கொண்டு, மு புரம் சுட - திரி புரங்களை எரித்ததற்கு, முடுகும் ஈசனின் - விரைந்து செல்லும் சிவபிரானைப் போன்ற, ஆண்தகை - ஆண்மைக் குணம் மிக்க, வனை கழல் அநுமன் - பூண்ட கழல்களை யுடைய அநுமன், நோக்கினுன் - பார்த்தான்.

இரவி தேர்; உம்மைத் தொகை, அநுமன் சிவபிரானுக்கு உவமை, அவன் சிவபிரான் அம்சமாக அவதரித்தவன் என்பதைக் குறிக்க வந்தது; 934, 1112: பால. திருவவதாரப்: 28; கிட்கிந்தா. மராமரப்: 20.

(பி-ம்.) 1. ஈண்டது நிகழ்வுழி; ஈண்டிது நிகழ்வுழி; ஈண்டிய பாகனு மிரவி தேரெனத்
2. தூண்டுயர்; தூண்டிய; தூண்டுவ தேரின்; தூண்டினன் றேரின்
3. முடுக்கும் வீரனில்; முடுக்கு மீசனில்: ஈசன்போல்.

4. ஆண்டகை யுணர்வினி லநுமன்; ஆண்டகை யநுமனும் நோக்கி யுன்னுவான். (23)

வேறு

1004. *வென்றே னிதன்முன் சிலவீரரை யென்னும் மெய்ம்மை*
*அன்றே முடுகிக் கடிதெய்தி யழைத்த தம்மா*
*ஒன்றே யினிவெல் லுதறோற்ற லடுப்ப துள்ள*
*தின்றே சமையும் மிவனிந்திர சித்து மென்பான்.*

இதன் முன் சில வீரரை வென்றேன் என்னும் மெய்ம்மை - இதற்கு முன் யான் சில அரக்க வீரர்களை வென்றேன் என்னும் உண்மை. முடுகி கடிது எய்தி அழைத்தது அன்றே - மிக்க விரைவாகச் சென்று என் எதிர் வரும்படி (இவனை) இங்கு அழைத்து வந்தது அல்லவா? இனி வெல்லுதல் தோற்றல் ஒன்றே அடுப்பது உள்ளது - யான் இனி வெற்றி யடைவது அல்லது தோற்பது என்பவற்றுள் ஒன்றே அடையக் கூடிய தாகும்; இன்றே சமையும் - (அவ்விரண்டில் ஒன்று) இன்றைக்கே அமையும்; இவன் இந்திரசித்தும் என்பான் - இவன் இந்திரசித்து என்பவனே ஆவான். அம்மா: வியப்பை உணர்த்தும் இடைச்சொல்.

இதுவும் அடுத்த இரண்டு பாடல்களும் அநுமன் கூற்று. பல்லாயிரக் கணக்கான அரக்க வீரர்களையும், கிங்கரர், சம்புமாலி, பஞ்ச சேனாபதிகள், அக்ககுமாரன் முதலிய மகா வீரர்களையும், போரிற் கொன்று அநுமன் பெரு வெற்றி யெய்தியிருந்தும், அவற்றினால் தான் பெருமை பாராட்டிக் கொள்ளாமல், வென்றேன் சில வீரரை யென்றது, அநுமன் இடத்து அமைந்திருந்த தற்புகழ்ச்சியில்லாப் பெருந்தன்மையைப் புலப்படுத்துவதாகும். முடுகி கடிது, என்பன ஒரு பொருளைக் குறித்து வந்தன. ஒன்றே, இன்றே; ஏகாரங்கள் தேற்றப் பொருளன. இந்திரசித்தும்; உம்மை உயர்வு சிறப்பின்பாலது. அநுமன், வருபவன் இந்திரசித்து என்று அறிந்து கொண்டது; முன், பிராட்டியை இலங்கையில் தேடியபோது இந்திரசித்து அவன் மாளிகையில் உறங்கிய நிலையில் இருக்கக் கண்டவனாதலாலும் என்க. அநுமன் முன் இந்திரசித்தைக் கண்டது; 233-237.

இதன் பின் ஒரு சுவடியில் பின்வரும் செய்யுள் காணப்படுகிறது :—

என்றே யிவனிப் பொழுதென் கையினால் மடிந்தால்
நன்றே மலர்மே லுறைநான் முகனாதி தேவர்
பொன்றோ மினியென் றிருந்துயிர் போற்று தற்கு
நின்றே துயர்தீர நிறுத்தின னென்ப மன்னோ.

(பி-ம்.) 1. வீரரை யென்னும் வெம்மை; யென்னு மேன்மை.
2. கடிதெய்த வழைத்த தம்மா; எய்த யிழைத்த தம்மா.
3. நன்றே யினிவெல் லுதரேற்ற எம்பா லடுப்பது.
4. இற்றே யமையும்; நின்றே யமையும்: இந்திர சித்த தென் பான்; இந்திர சித்து வென்பான். (24)

1005. கட்டே றுநறுங்கமழ் கண்ணியிக் காளை யென்கைப்
பட்டா லதுவேயவ் விராவணன் பாடு மாகும்
கெட்டே மெனவெண்ணியக் கேடறு கற்பி னாளை
விட்டே குவதன்றி யரக்கரும் வெம்மை தீர்வார்.

கட்டு ஏறு . உடற் கட்டிற் சிறந்து ஓங்கும், கமழ் நறும் கண்ணி - பரிமளிக்கும் மணம் பொருந்திய தலையிற் சூடும் மாலை யணிந்த, இ காளை- இந்த இடபம் போன்ற இந்திரசித்து, என் கை பட்டால் - என் கையால் போரில் இறந்து படுவனாைல், அதுவே அ இராவணன் பாடும் ஆகும் - அச் செயலே அந்த இராவணன் அழிவாகவும் முடியும்; அரக்கரும் - மற்றுள்ள அரக்கர்களும், கெட்டேம் என எண்ணி - இனித் தாம் திண்ணமாய் அழிவோம் என்று எண்ணி, அ கேடு அறு கற்பினாளை - அந்தக் கேடு என்பது இல்லாத கற்புடைய பிராட்டியை, விட்டு ஏகுவது அன்றி- இராமபிரானிடம் கொண்டு விட்டுப் போவது அல்லாமல், வெம்மை தீர்வார் - பகைமை நீங்கி அஞ்சிச் சமாதானமும் அடைவார்.

ஆடவரில் சிறந்தவனைக் காளை என்று கூறுவது கவி மரபு; பால. தாடகைவதைப்: 47; ஆரண்ய. விராதன்வதைப்: 21; காளை - இடபம். பாடு: படு என்ற முதனிலை திரிந்த தொழிற்பெயர். இந்திரசித்து அழிந்தால் இராவணன் வலியும் அழிந்தது (அதாவது இராவணனும் அழிவான்) என்றமையால் இந்திரசித்தே இராவணன் வலிமைக்கு மூலமாவான் என்பது அநுமன் கருத்து. இஃது, 'இவனை யின்றுணை யுடையபோ ரிராவண னென்னே, புவன மூன்றையும் வென்ற தோர்பொருளெனப் புகறல்' (237) என்று முன் அநுமன் கூறியுள்ளதை வலியுறுத்துகின்றது. கெட்டேம்: இறப்பது திண்ணம் என்ற துணிவை யுணர்த்திய கால வழுவமைதி. அரக்கரும்: உம்மை: உயர்வு சிறப்பு; இயல்பாக வெம்மைக் குணமுள்ள அரக்கரும் அதனை விட்டொழித்துச் சமாதான முறையில் வாழ்வார் என்பதாம்.

(பி-ம்.) 1. நறுமலர்க் கண்ணியிக் காளை யென்கை: கட்டேறு கண்ணிவிற் காளையிக் காவி லென்கை.
2. பட்டா லதுவெய்ய விராவணன்; பட்டா லிதுவேயவ் விராவணன். 3. கேடருங் கற்பி னாளை.
4. விட்டேகு வரன்றி; விட்டேகும தன்றி. (25)

1006. *ஒன்ருே விதனுன்வரு மூதிய மோண்மை யானைக்*
*கொன்றே னெனினிந்திர னுந்துயர்க் கோளு நீங்கும்*
*இன்றே குடிகெட்ட தரக்க ரிலங்கை யானே*
*வென்றே னவிராவணன் றன்னையும் வேரொ டென்ருன்.*

'இதனுல் வரும் ஊதியம் ஒன்ருே - இந்த இந்திரசித்தை யான் கொல்லும் இச்செயலால் விளையக் கூடிய நன்மை ஒன்று தானே? (பல வாம் என்றபடி); (அவை யாவை யெனில்), ஒண்மை யானை கொன்றேன் எனின் - ஒளியுற்ற இந்த இந்திரசித்தை யான் கொன்றேன் என்ருல், இந்திரனும் துயர் கோளும் நீங்கும் - (முன் இவனுல் சிறைப்படுத்தப் பட்ட) இந்திரனும் துன்பத்திலிருந்து நீங்குவான்; இன்றே இலங்கை அரக்கர் குடி கெட்டது - இன்றே இலங்கையும் அதன் அரக்கர் குடிக ளும் அழிந்தனவாகும்; யானே அ இராவணன் தன்னையும் வேரொடு வென்றேன் - நானே அந்த இராவணனையும் அடியோடு வென்றவனு வேன்'; என்ருன் - என்று அநுமன் எண்ணினுன்.

ஒன்ருே; ஓகார வினு எதிர்மறைப் பொருளது. ஒண்மை - ஒளி: அதாவது, 'பிறராற் செயற்கரிய செய்வேமென்று கருதும் ஊக்கமிகுதி' (குறள், 971. பரி உரை.) வேரொடு வெல்லுதல்-பின் சந்ததி தோன்று வதற்கு இடமில்லாதபடி அடியோடு அழித்தல். யானே வென்றேன் என்றது, இராமபிரான் வந்து வெல்ல வேண்டிய பணியை யானே செய்து முடிப்பேன் என்றதும் ஆம். இராவணனை அநுமன் முன் தானே கொல்லப் பலமுறை துணிந்தது இப்பொழுது பலித்தது என்று எண்ணினுன் என்பதும் ஆம். அநுமன் இராவணனைக் கொல்ல நினைத் தது; 314, 315, 328, 468, 469. இராவணன் தன்னையும்; உம்மை உயர்வு சிறப்பு. குடி கெடுதல் - குலத்தோடு நாசமாதல் என்பதும் ஆம். இந்திரசித்து வதையால், இராமவதாரப் பயனுகிய தீயோரை ஒறுத்தல், நல்லோரைக் காத்தலாகிய அறம் நிறுவப்படும் என்று அநுமன் கருதி னுன் என்க. அ விராவணன்: செய்யுள் ஓசை நோக்கி இயல்பாய் நின்றது.

(பி-ம்.) **1. ஒன்ருேவிவ னுல்வரு மூதியம். 2. கோளை நீங்கும்.**
**3. இன்றேகடி கெட்டது; இன்றேயறக் கெட்டது; இன்றேவலி.**

**(26)**

## அநுமன் படைகளுடன் போரிடுதல் 1007-13

1007. *அக்காலை யரக்கரு மானையுந் தேரு மாவும்*
*மூக்கா லுலகம்மொரு மூன்றையும் வென்று முற்றிப்*
*புக்கா னின்முன்புக் குயர்பூசல் பெருக்கும் வேலை*
*மிக்கானும் வெகுண்டோர் மராமரங் கொண்டு மிக்கான்.*

அ காலை - இவ்வாறு அநுமன் எண்ணிக் கொண்டு நின்றபோது, முக்கால் - மூன்று முறை, உலகம் ஒரு மூன்றையும் வென்று முற்றி புக்கானின் முன் - முன் மூவுலகங்களையும் வென்று எதிரில்லாமல் முடித்து, இலங்கையில் வெற்றி வீரனுய்ப் புகுந்த இந்திரசித்தின் முன்னே, அரக்கரும் - அரக்கர்களாகிய காலாட்படையும், ஆனையும் - யானைப்படையும், தேரும் - தேர்ப்படையும், மாவும் - குதிரைப்படையும், புக்கு - புகுந்து, உயர் பூசல் பெருக்கும் வேலை - உயர்ந்த ஆரவாரத்தைப் பெரிதும் உண்டாக்கிய போது, மிக்கானும் - பெரியோனுன அநுமனும், வெகுண்டு ஓர் மராமரம் கொண்டு - சினங்கொண்டு ஓர் ஆச்சா மரத்தைக் கையிற் பிடுங்கி எடுத்துக்கொண்டு, மிக்கான் - (போர் செய்யப்) பேருருக் கொண்டவனுனுன்.

அநுமனின் போர் முறை இது முதல் கூறப்படும். இந்திரசித்து மூவுலகங்களையும் மும்முறை வென்றவன். 'உலகெலாம் பலகால் முற்ற வென்ற' என்று பின்னும் (1024) கூறுவர். இவன் உலகம் மூன்றையும் மும்முறை வென்ற செய்திக்கு ஆதாரம் ஆராயத்தக்கது. முற்றி முதிர்ந்து; எதிரில்லாமல் முடித்து. புக்கானின் முன்; இன், சாரியை; இந்திரசித்து தன் முன்னேநால்வகைப் படைகளுங் கொண்டு போர் செய்யப் புக, அப்படைகள் பூசல் பெருக்கின என்க. பூசல்-ஆரவாரம். மிக்கான் - வீரம் மிகுந்து எதிர்த்தான் எனலும் ஆம்.

இதன் பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப்பாடல் உள்ளது.

> எழுந்தா னெழுந்தபொழுதங் கரக்கரு மெண்ணில் கோடி
> பொழிந்தர்ர் படைகளவை யாவையும் பொடிந்து சிந்திக்
> கழிந்தோ டிடத்தன்கை மராமரங் கொண்டு வீசிச்
> செழுந்தார்ப் புயத்தண்ணல் செறுத்துடன் மோத லுற்றுன்.

(பி-ம்.) 1. அக்காலை யரக்கனும். 2. மூன்றையும் சென்று முற்றப்.
3. புக்கா னிவன்முன்பு செறுபூசல் விளைக்கு மேல்வை: புக்கார் மனம் வலிபுக்குயர் பூசல் பொருந்தும் வேலை.
4. மிக்கானேர் மராமரம் வேரொடுங் கொண்டெ ழுந்தான்; கொண்டு வீக்க; கொண்டு புக்கான். (37)

1008 உதையுண் டனயானை யுருண்டன யானை யொன்றே
மிதியுண் டனயானை விழுந்தன யானை மேன்மேல்
புதையுண் டனயானை புரண்டன யானை போரால்
வதையுண் டனயானை மறிந்தன யானை மண்மேல்.

யானை உதை உண்டன - அவ்வரக்கர் சேனையில் இருந்த யானைகள் அநுமனால் உதைக்கப் பெற்றன; யானை உருண்டன - அந்த யானைகள் உருண்டோடின; ஒன்று ஓ - இது மாத்திரந்தானோ? யானை மிதி உண்டன - சில யானைகள் அநுமனால் மிதிக்கப்பட்டுப் போயின; யானை விழுந்தன - சில யானைகள் கீழே விழுந்தன; யானை மேல் மேல் புதை உண்டன - சில யானைகள் ஒன்றன் மேல் ஒன்றாகப் புதைந்து போயின; யானை புரண்டன-சில யானைகள் புரண்டோடின; யானை போரால் வதை உண்டன - மற்றும் சில யானைகள் போரில் வதைக்கப்பட்டன; யானை மண்மேல் மறிந்தன - சில யானைகள் தரைமீது மல்லாந்து விழுந்தன.

இது முதல் நான்கு செய்யுட்கள் அரக்கர்களின் நால்வகைப் படைகளும் அழிந்தமை கூறும். ஒன்றோ: எண்ணிடைச் சொல் என்பர்; 'அறனொன்றோ வான்ற வொழுக்கு' 'பொய்படு மொன்றோ' (குறள். 148, 836. பரி, உரை.)

(பி-ம்,) 1. உதைப்புண் டன: உதையுண்ட தானை யுருண்டன வானை.
2. மிதிப்புண் டன: மிதியுண்டன தானை விழுந்தன வானை.
3. புதைப்புண் டன: புதையுண்டன தானை புரண்டன வானை.
4. வதைப்புண் டன: வதையுண்டன தானை வதைந்தன வானை: மண்ணில். (28)

1009. முடிந்த தேர்க்குல முறிந்தன தேர்க்குல முரணிற்
றிடிந்த தேர்க்குல மிற்றன தேர்க்குல மச்சிற்
றொடிந்த தேர்க்குல முக்கன தேர்க்குல நெக்குப்
படிந்த தேர்க்குலம் பறிந்தன தேர்க்குலம் படியில்.

தேர்க்குலம் முடிந்த - சில தேர்க் கூட்டங்கள் முழுவதும் அழிந்தன; தேர்க்குலம் முறிந்தன - சில தேர்க் கூட்டங்கள் பகுதிகள் முறிவு பட்டன; தேர்க்குலம் முரண் இற்று இடிந்த - சில தேர்க் கூட்டங்கள் வலியழிந்து இடிப்புண்டு அழிந்தன; தேர்க்குலம் இற்றன - சில தேர்க் கூட்டங்கள் மூட்டுக்கள் அற்று விழுந்தன; தேர்க்குலம் அச்சு இற்று ஒடிந்த - சில தேர்க் கூட்டங்கள் அச்சுக்கள் வலியற்றுப்போய் ஒடிந்தன; தேர்க்குலம் உக்கன - சில தேர்க் கூட்டங்கள் பொடியாய்ச் சிதறி விழுந்தன; தேர்க்குலம் நெக்கு படிந்த - சில தேர்க்கூட்டங்கள் நெருங்கி மோதப்பட்டுக் கீழே படிந்தன; தேர்க்குலம் படியில் பறிந்தன - சில தேர்க் கூட்டங்கள் தரையில் புழைந்து அழிந்தன.

இதில் அநுமனால் இந்திரசித்தின் தேர்ப்படைகள் பலவாறு அழிந்தமை கூறப்பெற்றுள்ளது.

(பி-ம்,) 3. தேர்க்குல முக்கி. 4. தேர்க்குலம் படியின். (29)

1010. *சிரனெ ரிந்தவுங் கண்மணி சிதைந்தவுஞ் செறிதாள்*
*தரனெ ரிந்தவு முதுகிறச் சாய்ந்தவுந் தார்பூண்*
*உரனெ ரிந்தவு முதிரங்க ளுமிழ்ந்தவு மொளிர்பொற்*
*குரனெ ரிந்தவுங் கொடுங்கழுத் தொடிந்தவும் குதிரை.*

குதிரை - (இந்திரசித்தின் படையில் இருந்த) குதிரைகள், சிரம் நெரிந்தவும் - அநுமனால் தலை நொருங்கிப் போனவையும், கண்மணி சிதைந்தவும் - கண்களின் விழிகளாகிய மணிகள் அழியப் பெற்றவையும், செறி தாள் தரம் நெரிந்தவும் - நெருங்கி வலியுற்ற கால்களின் தொகுதிகள் நொருங்கப் பெற்றவையும், முதுகு இற சாய்ந்தவும் - முதுகு ஒடியக் கீழே சாய்ந்து விழுந்தவையும், தார் பூண் உரம் நெரிந்தவும் - கிங்கிணி மாலை முதலிய அணிகள் பூண்ட மார்புகள் நெரிந்து போனவையும், உதிரங்கள் உமிழ்ந்தவும் - இரத்தங்களைக் கக்கினவையும், ஒளிர் பொன் குரம் நெரிந்தவும் - பிரகாசிக்கின்ற பொன் (சதங்கை முதலியன அணிந்த) குளம்புகள் நொருங்கப் பெற்றவையும், கொடும் கழுத்து ஒடிந்தவும் - வளைந்த கழுத்துக்கள் ஒடிந்தவையும். (ஆயின).

செறிதாள் தரம் நெரிந்த-நெருங்கிய கால்களின் வலிமை ஒழிந்தன என்று கூறுவாரும் உளர்.

(பி-ம்.) 1. செறிதார்; செறிகால். 2. முதுகறச் சாய்ந்தவும்.
3. இழந்தவு மொளிபொற்; இழந்தவு மொடியாக்.
4. கொழுங்கழுத் திழந்தவும்: கழுத் திற்றவும். (30)

1011. *பிடியுண் டார்களும் பிளப்புண் டார்களும் பெருந்தோள்*
*ஒடியுண் டார்களுந் தலையுடைந் தார்களு முருவக்*
*கடியுண் டார்களுங் கழுத்திழந் தார்களும் மரத்தால்*
*அடியுண் டார்களு மச்சமுண் டார்களு மரக்கர்.*

அரக்கர் - இந்திரசித்துடன் போர்க்கு வந்த காலாட் படையினரான அரக்கர்கள், பிடி உண்டார்களும் - அநுமனால் பிடிக்கப்பட்டவர்களும், பிளப்பு உண்டார்களும் - உடல் பிளக்கப் பட்டவர்களும், பெரும் தோள் ஒடி உண்டார்களும்-பெரிய தோள்கள் ஒடியப்பட்டவர்களும். தலை உடைந்தார்களும் - தலைகள் உடையப் பெற்றவர்களும், உருவ கடி உண்டார்களும் - (உடல் முழுவதும்) நன்றாகக் கடிக்கப் பெற்றவர்களும், கழுத்து இழந்தார்களும் - கழுத்து இழந்தவர்களும், மரத்தால் - (அநுமன் கையிற் கொண்டிருந்த) ஆச்சா மரத்தால், அடி உண்டார்களும் - அடிக்கப் பெற்றவர்களும், அச்சம் உண்டார்களும் - பயங் கொண்டவர்களுமாக (ஆயினர்.).

உருவ - முழுவதும் நன்றாக; 'புயவலியை நீ யுருவ நோக்கையா' (பால. குலமுறை; 26.); ஊடுருவும்படி என்றும் பொருள் கொள்வர்.

(பி-ம்.) 1. பிளத்தலுண் டார்களும்; பிளப்புமுண் டார்களும்.
2. தலைநெரிந் தார்களும்.
3. இடியுண் டார்களும்: கழுத்திறந் தார்களுங் காத்தால். (31)

1012. *வட்ட வெஞ்சிலை யோட்டிய வாளியும் வயவர்*
*விட்ட வெந்திறற் படைகளும் வீரன்மேல் விழுந்த*
*சுட்ட மெல்லிரும் படைகலைச் சுடுகலா ததுபோல்*
*பட்ட பட்டன திசைதொறும் பொறியொடும் பரந்த.*

வயவர் - அரக்க வீரர்கள், வட்ட வெம் சிலை ஓட்டிய - வட்டமாக வளைத்த கொடிய விற்களினின்றும் விரைந்து செல்லுமாறு தூண்டிய, வாளியும் - அம்புகளும், விட்ட வெம் திறல் படைகளும் - எறிந்த கொடிய வலிய மற்ற ஆயுதங்களும், வீரன் மேல் விழுந்த-மகா வீரனான அநுமன் மேல் விழுந்தவைகளாய், சுட்ட மெல் இரும்பு - காய்ச்சப் பெற்ற மெதுவான இரும்பானது, அடைகலை-பட்டடைக் கல்லை, சுடுகலாதது போல - சுட்டழிக்கும் ஆற்றலில்லாதது போல, பட்ட பட்டன- அநுமன் மீது மேல் மேலும் பட்டவை அனைத்தும், திசை தொறும் பொறி ஒடும் பரந்த - நாற்றிசைகளிலும் நெருப்புப் பொறிகளைச் சிந்தின வாய்ப் பரவிச் சென்றன.

வில்லை இழுத்து வளைக்கும் போது அது வட்டவடிவாய் நிற்கும் ஆதலின் வட்ட வெம் சிலை என்னப்பட்டது. மெல்லிரும்பு - தீயிற் காய்ந்து சூடேறியதால் மெதுத் தன்மை யடைந்த இரும்பு. அடைகல் -ஆதாரமாய் அடியில் நிறுத்தப் பெறும் பட்டடைக் கல்; காய்ச்சின இரும்பு அடைகல்லை ஊறு செய்யமாட்டாது, தானே பொறி விட்டுச் சிதைவுறுவது போல, அநுமன் மீது பட்ட படைகள் அவனை ஊறு செய்யாது சிதையலுற்றன என்று கூறியவாறு. சுடுதல், இங்கு அழித்தல்,

(பி-ம்.) 1. சிலை யெட்டிய வாளியும்; சிலை யோடிய வாளியும்; சிலை யொழிந்திடு வாளியும்.
2. விட்ட விட்டவெம் படைகளும்; விட்ட வெம்படைக் கலன் களும்; வெம் படைகளைச் சுடர்சிலா தனபோல் வீழ்ந்த.
3. சுட்ட வல்லிரும்படைகலை:படைகலைத் தொடர்கலா ததுபோல்; அடைகல்லிற் றெகத்தெறிப் பனபோல்.
4. திசையொடும் பொறியொடும். (32)

1013. *சிகையெ ழுஞ்சுடர் வாளிக ளிராக்கதர் சேனை*
*மிகையெ ழுஞ்சினத் தநுமன்மேல் விட்டன வெந்து*
*புகையெ ழுந்தன வெரிந்தன கரிந்தன போத*
*நகையெ ழுந்தன குளிர்ந்தன வானுளோர் நாட்டம்,*

இராக்கதர் சேனை - அரக்கர் படை வீரர்கள், மிகை எழும் சினத்து- மிகுந்து மேற் கிளம்பும் கோபத்தோடு, அநுமன் மேல் விட்டன - அநுமன் மீது விடப்பட்டவையான, சிகை எழும் சுடர் வாளிகள் - சுடர்கள் ஓங்கும் ஒளியுடைய அம்புகள், வெந்து - (அநுமன் உடலில் வெம்மைத் தீயால்) தாம் வெந்து, புகை எழுந்தன எரிந்தன கரிந்தன போத - புகை யெழுந்தவைகளாய், எரிந்து கரிந்தவையாய்ப் போக, வான் உளோர் நாட்டம் - (அதனைக் கண்ட) தேவர்களின் கண்கள், நகை எழுந்தன குளிர்ந்தன - மகிழ்ச்சி மேலிட்டுக் குளிர்ப்புண்டன.

மிகை எழுஞ் சினத்து. என்பதை அநுமனுக்கு அடையாக்கு வாரும் உளர். அரக்கர்கள் அநுமன்மீது விட்ட வாளிகள் சிகையெழும் சுடர் உடையனவேனும், அவை, அநுமன் உடல் வெம்மையால் வெந்து புகையெழுந்து, எரிந்து, கரிந்து போயின என்பதாம். அநுமன் உடலில் வெம்மை, போரில் எழுந்த சீற்றத்தால் உண்டானது.

இதன்பின் ஒரு பிரதியில் அடியிற்காணும் இரு பாடல்கள் அதிக மாக உள்ளன.

அ. செறுத்தெ ழுந்திடு மரக்கர்க டிசைதிசை நெருக்கி
மறித்து வெஞ்சமர் மலைதலு மாருதிக் கடவுள்
கறுத்து வஞ்சகர் சிரத்தொடு கரம்புயஞ் சிதறிப்
பொறித்தெ றித்திடப் புடைத்தனன் பொருபணை மரத்தால்.

ஆ. புகைந்த ரக்கர்கள் விடுங்கொடும் படைகளைப் பொறியிற்
றகைந்து மற்றவ ருடல்களைத் தலைகளைச் சிதறி
மிகுந்தி றற்கரி பரிமணித் தேரிவை விளியப்
புகுந்த டித்தனன் மாருதி யனைவரும் புரண்டார்.

(பி-ம்.) 1. வாளிக ளிந்திர சித்து.
2. விட்டனன் வெதுப்பி: அநுமன்மேல் விடவிடச் சிதறி.
3. நெரிந்தன கரிந்தன பொரிந்த.
4. நகையெ ழுந்தன விமைத்தன; நகையெ ழுந்தன முகிழ்த்தன. (33)

## இந்திரசித்து அநுமனுடன் போரிடுதல் 1014-1032.

1014. *தேரும் யானையும் புரவியு மரக்கருஞ் சிந்திப்*
*பாரின் வீழ்தலுந் தானொரு தனிநின்ற பணைத்தோள்*
*வீர (வீர னு முறுவலும் வெகுளியும் வீங்க)*
*வாரும் வாருமென் றழைக்கின்ற வநுமன்மேல் வந்தான்.*

தேரும் யானையும் புரவியும் அரக்கரும் - தேர்களும், யானைகளும், குதிரைகளும் அரக்கப் போர்வீரர்களுமாகிய நால்வகைப் படைகளும், சிந்தி - சிதறி, பாரின் வீழ்தலும் - தரையில் (அடிபட்டு அழிந்து) விழுந்திடவே, தான் ஒரு தனி நின்ற - தான் ஒருவன் மட்டுமே தனியாய் நின்ற, பணை தோள் வீர வீரனும் - பருத்த தோள்களையுடைய வீரர்களுள் சிறந்த வீரனான இந்திரசித்தும், முறுவலும் வெகுளியும் வீங்க - புன் சிரிப்பும் கோபமும் அதிகரிக்க, 'வாரும் வாரும் என்று அழைக்கின்ற - '(போருக்கு) வாருங்கள் வாருங்கள்' என்று மேன் மேலும் உற்சாகத்தோடு கூப்பிடுகின்ற, அநுமன் மேல் வந்தான் - அநுமன் மீது எதிர்த்துப் போரிட வந்தான்.

தேரும்.........அரக்கரும் என்பதில் உள்ள உம்மைகள் எண்ணும்மைகள். வீரர் வீரன் - இந்திரசித்து; இந்திரசித்தின் வீரச் சிறப்பு: 993. உரை. முறுவலும், வெகுளியும்: இகழ்ச்சியும், சினமும் கூடி விளைந்தவை. வாரும் வாரும்: அடுக்கு விரைவுப் பொருளையும் இகழ்ச்சிப்பொருளையும் குறிப்பது.

(பி-ம்.) 1. யானையு மரக்கரும் புரவியுஞ் சிந்திப்: சிதறி.
3. வீரர் வீரனும். 4. வாரு வாருமென் றுரைக்கின்ற. (34)

1015. *புரந்த ரன்றலை பொதிரெறிந் திடப்புயல் வானில்*
*பரந்த பல்லுரு மேற்றினம் வெறித்துயிர் பதைப்ப*
*நிரந்த ரம்புவி முழுவதுஞ் சுமந்த நீடுரகன்*
*சிரந்து ளங்கிட வரக்கன்வெஞ் சிலையைநா ணெறிந்தான்.*

புரந்தரன் தலை பொதிர் எறிந்திட - இந்திரன் தலை நடுக்கம் மேலிட, வானில் பரந்த புயல் பல் உரும் ஏற்று இனம் - ஆகாயத்தில் பரந்து விளங்கிய மேகங்களில் உள்ள பல பெரிய இடிகளின் கூட்டம், வெறித்து -அச்சத்தால் பிரமித்து விறைப்புண்டு, உயிர் பதைப்ப - உயிர் பதைப்புக் கொள்ளவும், நிரந்தரம் - ஒழிவில்லாமல் எப்பொழுதும், புவி முழுவதும் சுமந்த நீடு உரகன் - பூமி முழுவதும் தாங்கிய நீண்ட பாம்பாகிய ஆதிசேடன், சிரம் துளங்கிட - தன் ஆயிரம் தலைகளும் நடுக்கமுறவும், அரக்கன்-இராக்கதனாகிய இந்திரசித்து, வெம்-சிலையை நாண் எறிந்தான் - தன் கொடிய வில்லின் நாணைத் தெறித்தான்.

பொதிர் - நடுக்கம்; 'சிரம் பொதிர்ந் தமர ரஞ்ச' (உயுத்த. பிரமாத்திரப்: 13.) வெறித்தல், விறைப்பாக அசைவற்று நிற்றல்; 'உருமேறு வெறித்து வீழ' (கிட்கிந்தா. வாலிவதைப்: 30); 'மெல்ல மெல்ல வெறித்தது வெருகி' (ஆரண்ய. மாரீசன்வதைப்: 241.) இதன் பின், 'ஓர் அதிகப் பாடல்' என்ற ஐயரவர்களின் குறிப்பு உள்ளது. நூல் நிலையத்திலுள்ள சுவடிகளில் அத்தகையபாடல் காணப் பெறவில்லை.

(பி-ம்.) 2. பரந்து பல்லுரு மேற்றினம்: ஏற்றினம் வெறிந்து: பரந்த பற்பல வுருமினம் விழவுயிர் பதைப்ப.

3. நிரந்த ரந்தலை நெடுநிலஞ் சுமந்தபே ருரகன்; நிரந்த ரம்புவி தன்னெடுஞ் சுமந்தநீ டுரகன்; பேருரகன்.

4. சிரந்து ளங்கிட வார்த்து; சிரஞ்ச லித்திட வரக்கன். (35)

1016. *ஆண்ட நாயகன் றூதனு மயனுடை யண்டம்*
*கீண்ட தாமெனக் கிரியுக நெடுநிலங் கிழிய*
*நீண்ட மாதிரம் வெடிபட வவனெடுஞ் சிலையில்*
*பூண்ட நாணிறத் தன்னெடுந் தோள்புடைத் தார்த்தான்.*

ஆண்ட நாயகன் தூதனும் - எல்லா உயிர்களையும் அன்புடன் காத்து ஆண்டருளும் (திருமாலின் அவதாரமாகிய) இராமபிரானின் தூதனான அநுமனும், அயனுடை அண்டம் கீண்டது ஆம் என - பிரமாண்டமே பிளந்தது என்று சொல்லும்படியும், கிரி உக - மலைகள் பொடியாய் உதிரவும், நெடு நிலம் கிழிய - நீண்ட இந்தப் பூமி கிழிந்து போகவும், நீண்ட மாதிரம் வெடிபட - நெடிய திசைகள் வெடித்துப் போகவும், அவன் நெடும் சிலையில் பூண்ட நாண் இற - அந்த இந்திரசித்தின் நீண்ட வில்லிற் பூட்டப்பட்ட நாண் அற்றுப் போகவும், தன் நெடும் தோள் புடைத்து ஆர்த்தான் - தன்னுடைய நெடிய தோள்களைக் கொட்டிக் கர்ச்சனை செய்தான்.

ஆண்ட நாயகன் - நம்மை ஆட்கொண்ட எம்பெருமானான இராமபிரான் என்றலும் ஒன்றும்; பால. திருவவதாரப்: 26. அயனுடைய அண்டம் பூமியினும் வலிதாதலின், கீண்டது என்றும், பூமி அவ்வண்டத்தும் வலிமையிற் குறைவுள்ளதாதலின் கிழிந்தது என்றும் வலிமை மென்மை கருதிக் கூறப்பட்டன. முன் இந்திரனும், உருமேறும், ஆதிசேடனும் நடுங்கச் செய்த இந்திரசித்தின் சிலை நாண் இற்றுப் போகும்படி அநுமன் தோள் புடைத் தார்த்தான் என்பதாம். வீரர்கள் தம் தோள் கொட்டி ஆர்த்தல்; 3. உரை.

(பி-ம்.) 4. பூண்ட நாணற: தன்னெழிற் றோள்களைப் புடைத்தான்: தன்னெடுந் தோள்கொட்டிப் புடைத்தான். (36)

1017. *நல்லை நல்லையிஞ் ஞாலத்து நின்னொக்கு நல்லார்*
*இல்லை யில்லையா லெறும்வலிக் கியாரொடு மிகல*
*வல்லை வல்லையின் ருகுநீ படைத்துள வாணுட்*
*கெல்லை யெல்லையென் றிந்திர சித்துவு மிசைத்தான்.*

'நல்லை நல்லை - நீ மிகவும் சாமர்த்தியம் உள்ளவன்; இ ஞாலத்து - இந்தப் பூமியில், நின் ஒக்கும் நல்லார் இல்லை இல்லை - உனக்குச் சமனை நல்லோர் ஒருவரும் இல்லை; எறுழ் வலிக்கு - உன்னுடைய மிக்க வலிமைக்கு, யார் ஒடும் இகல வல்லை வல்லை - நீ யாரோடும் போர் புரிய மிகவும் வல்லமையுடையாய்; நீ படைத்து உள வாழ் நாட்கு எல்லை எல்லை இன்று ஆகும் - (ஆனல்), நீ அடைந்துள்ள உன் வாழ் நாளுக்கு இன்றே முடிவு எல்லையாக அமையும்'; என்று - என்று, (அநுமனை நோக்கி) இந்திரசித்து உம் இசைத்தான் - இந்திரசித்தும் (இகழ்ந்து தன் வீரம் தோன்றப் பெருமிதத்தோடு) கூறினன். ஆல்: அசை.

அடுக்குகள் மிகுதிப் பொருளிலும் இகழ்ச்சிப் பொருளிலும் வந்தன. எறுழ்வலி; ஒரு பொருட் பன்மொழி. இச் செய்யுளை, அரிச்சந்திர புராணம், மயானகாண்டம், 42 ஆம் செய்யுள் ஒத்தமைந்திருத்தல் காண்க. இந்திரசித்துவும்; உகரம் கெடாமல் நின்றது; 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே' என்பதுபோல்,

(பி-ம்.) 1. ஞாலத்து நின்னெக்க நல்லார்; ஞாலத்தில்: ஞாலத்துள்.
2. இல்லை யில்லை யேயெலெறுழ்; இல்லை யில்லைநின் னெறுழ்வலிக் கியார்களு மிகல்போர்
3. வல்லை வல்லையின் றருகுநீ படைத்துடை வாணுட்; வல்லை வல்லையென் றுருகுநீ படைத்துடை
4. எல்லை யில்லை; எல்லை யெல்லையொன் றில்லையென் றிராவணி சொன்னுன்; இந்திர சித்துநின் றிசைத்தான். (37)

1018. *நாளுக் கெல்லையு நிருதரா யுலகத்தை நலியும்*
*கோளுக் கெல்லையுங் கொடுந்தொழிற் கெல்லையுங் கொடியீர்*
*வாளுக் கெல்லையும் வந்தன வகைகொண்டு வந்தேன்*
*தோளுக் கெல்லையொன் றில்லையென் றநுமனுஞ் சொன்னுன்.*

'கொடியீர் - கொடியோரான அரக்கர்களே! நாளுக்கு எல்லையும் - உங்கள் வாழ்நாள்களுக்கு ஒரு முடிவும், நிருதர் ஆய் உலகத்தை நலியும் கோளுக்கு எல்லையும் - அரக்கராய் வந்து உலகத்தை வருத்தும் உங்கள் தீய கொள்கைகளுக்கு ஒரு முடிவும், கொடும் தொழிற்கு எல்லையும் - உங்கள் கொடிய செய்கைகளாகிய பாவத்திற்கு ஒரு முடிவும், வாளுக்கு எல்லையும் - உங்கள் வாள் முதலிய படைக்கலங்களுக்கு ஒரு முடிவும், வந்தன - இப்பொழுது வந்து விட்டன; வகை கொண்டு வந்தேன் - (ஏற்ற இடம், பொருள், ஏவல் முதலிய) உபாயங்களைக் கொண்டு இங்கே யான் வந்துள்ளேன்; தோளுக்கு எல்லை ஒன்று இல்லை - (ஆனல்), என் தோளாற்றலுக்கு ஒரு முடிவான அளவு கிடையாது', என்று அநுமனும் சொன்னுன் - இவ்வாறு அநுமனும் இந்திரசித்துக்கு மறுமொழி கூறினன்.

கொடியீர் என்றது, இந்திரசித்தோடு கூடி வந்த எல்லா அரக்கர்களையும் சேர்த்துக் கூறியது. கோள் - தீமை, பாவம், கொடுமை, என்னும் பல பொருள் குறிக்கும், வாள் என்றது, இங்கு ஆயுதப் பொதுவைக் குறித்து வந்த சிறப்புப் பெயராகும்.

(பி-ம்.) 1. உலகின நலியும்.
3. வசைகொண்டு வந்தேன்; அவைகொண்டு வந்தேன்; அவை கொள வந்தேன்; அவைகொள வருமென்.
4. எல்லையு மில்லென வநுமனுஞ். இல்லென வநுமனுஞ். (38)

1019. *இச்சி ரத்தையைத் தொலைப்பெனென் றிந்திரன் பகைஞன்*
*வச்சி ரத்தினும் வலியன வயிரவான் கணைகள்*
*பச்சி ரத்தம்வந் தொழுகிட வானவர் பதைப்ப*
*அச்சி ரத்தினு மார்பினு மழுத்தலு மநுமன்*

இந்திரன் பகைஞன்-இந்திரசித்து, 'இ சிரத்தையை தொலைப்பென்' என்று - (இந்தக் குரங்கின்) இந்த நம்பிக்கையை அழித்து விடுவேன்' என்று, வச்சிரத்தினும் வலியன - வச்சிராயுதத்தை விட மிக்க வலிமை வாய்ந்த, வயிர வான் கணைகள் - வலிமை வாய்ந்த சிறந்த அம்புகளை, பசுமை இரத்தம் வந்து ஒழுகிட-புதிய இரத்தம் வந்து ஒழுகும்படியும், வானவர் பதைப்ப-தேவர்கள் (கண்டு, 'இனியாதாகுமோ' என்று) துடிப்புக் கொள்ளவும், அ சிரத்தினும் மார்பினும் அழுத்தலும் - அவ்வநும னுடைய தலையிலும் மார்பிலும் அழுந்த ஏவவும், அநுமன் - அநுமன்,

இச் செய்யுள் அடுத்த செய்யுளோடு இயைந்து வினை முடிவு கொள்ளும். சிரத்தை: ச்ரத்தா என்ற வட சொல்லின் திரிபு. பச்சிரத்தம்-புதிய இரத்தம்; அரிச்சந்திர. விவாக. 124; பசுமை-புதுமை; பட்டினப். 165, நச் உரை வானவர் பதைப்ப: தேவர்கள் அநுமனுக்கு என்ன ஆபத்து உண்டாகுமோ என்றும், இனி அரக்கர்களால் தமக்கு மேலும் என்ன கேடு சம்பவிக்குமோ என்றும் பதைப்பாராயினர் என்பதாம்.

(பி-ம்.) 1. இச்சி ரத்தையைத் துணிப்பனென்று.
3. வானவர் பதையா.
4. மார்பினுஞ் செறித்தலு மநுமன்; புயத்தினு மழுத்தலு மநுமன். (39)

1020. *குறிது வானென்று குறைந்திலன் கொடுஞ்சினங் கொண்டான்*
*மறியும் வெண்டிரை மாகட லுலகெலாம் வழங்கிச்*
*சிறிய தாய்சொன்ன திருமொழி சென்னியிற் சூடி*
*நெறியி னின்றதன் னுயகன் புகழென திமிர்ந்தான்.*

(அநுமன்) கொடும் சினம் கொண்டான் - (கணைகள் அழுந்தப் பெற்ற அநுமன்), கொடிய கோபங்கொண்டு, வான் குறிது என்று - வானம் உயரத்தில் குறுகியது என்று சொல்லும்படி, குறைந்திலன் - தன் தோற்றத்தில் குறையாதவனாய், (அதாவது அதனினும் உயரமாக வளர்ந்து), சிறிய தாய் சொன்ன திருமொழி சென்னியில் சூடி - தன் சிறிய தாயாகிய கைகேயி சொன்ன கட்டளை மொழிகளைத் தன் தலையால் ஏற்று, மறியும் வெண் திரை மா கடல் உலகு எலாம் - மடங்கி விழும் வெண்மையான அலைகளையுடைய பெரிய கடலால் சூழப்பெற்ற உலகு முழுவதும், வழங்கி - (தன் தம்பியாகிய பரதனுக்கு) அளித்து, நெறியில் நின்ற - அற நெறியில் தங்கி நின்ற, தன் நாயகன் புகழ் என - தன் தலைவனான இராமபிரான் புகழே போல, நிமிர்ந்தான் - (அந்த வானினும் மேலாக ஓங்கிப்) பேருரு எடுத்துக் கொண்டு நின்றான்.

'சிறிய தாய் சொன்ன திரு மொழி சென்னியிற் சூடி' என்பது நடுநிலையணியாகக் கொள்ளப்பட்டது. அநுமன் எடுத்த பேருருவுக்கு இராமபிரான் புகழ் ஒப்பு; இராமபிரான் புகழ் எங்கும் பரவியது; 155. இராமபிரான் தன் சிற்றவை சொற் சென்னியிற் சூடியது; அயோத்யா. கைகேயி சூழ்வினைப்; 110. கைகேயி சொல்லைத் 'திருமொழி' என்றது; இராமபிரான் கைகேயிபாற் கொண்டிருந்த அன்பையும், பெருந்தன்மையையும் குறிப்பதாகும்; கைகேயியின் அம்மொழிகளே அரக்கர்கொடுமையைப் போக்கித் தேவர் முனிவர் முதலிய நல்லோர் துயர் நீங்கி உலகம் உய்வதற்குக் காரணமாய் இருந்தமையால் என்க. முன், அநுமன் பிராட்டியின் முன் (587) பேருரு எடுத்து நின்ற போது, வான் முகடு முட்டுமென் றுருவொடு வளைந்த மூர்த்தியாய்க் குனிந்து நின்றது போலன்றி, இங்கு நெடுஞ்சினங்கொண்ட நிலையில், 'குறிது வானென்று குறைந்திலனாய், நிமிர்ந்த மூர்த்தியாய் ஓங்கி நின்றான், என்பதாம். அநுமன் இராமபிரான் புகழ்போல் பேருருவோடு, எங்கும் வியாபித்து நின்றான் என்க.

(பி-ம்.) 1. குறிது வானென; குறிய வானென்று: குறைந்தில னெடுஞ்சினங். 2. மால்கடல்: உலகெலாம் வழங்க. (40)

1021. *பாக மல்லது கண்டில னநுமனைப் பார்த்தான்*
*மாக வன்றிசை பத்தொடும் வரம்பிலா வுலகிற்*
*கேக நாதனை யெறுழ்வலித் தோள்பிணித் தீர்த்த*
*மேக நாதனு மயங்கின னுமென வியந்தான்.*

மாக வன் திசை பத்து ஒடும் - பெரிய வானம் முதலான வலிய திசைகள் பத்தோடும், வரம்பு இலா உலகிற்கு - எல்லையற்ற பல உலகங்களுக்கு, ஏக நாதனை - தனித் தலைவனான இந்திரனை, எறுழ் வலி தோள்

பிணித்து ஈர்த்த - மிக்க வலியுடைய தோள்களைக் கட்டி இழுத்து வந்த மேகநாதனும் - இந்திரசித்தும், அநுமனை பார்த்தான் - (பேருரு எடுத்த) அநுமனைப் பார்த்தான்; பாகம் அல்லது கண்டிலன் - அநுமனது உருவில் ஒரு சிறு பகுதியே அல்லாமல் முழு உருவும் காணாதவனாகி, மயங்கினன் ஆம் என - திகைப்புண்டவன் போல, வியந்தான் - ஆச்சரியமுற்றான்.

மாகம்-பெரிய ஆகாயம்; ஆகாயம் மற்றப் பூதங்களினும் பெரியதும் மற்றவைகளுக்குப் பிறப்பிடமானதும் ஆதலின். அநுமனுடைய பேருருவின் சிறப்பு; 587-593. பீமனுக்கு அநுமன் தன் பேருருக் காட்டிய போது, 'படியின தெல்லை பதத்தின தெல்லை, மடியின தெல்லையவ் வானின தெல்லை, அடியின தெல்லை யளப்பரி தென்றால், முடியின தெல்லை மொழிந்திட லாமோ' (வி. பா. புட்பயாத்திரைச்: 51.) என்று சிறப்பித்தமையும் நோக்கற்பாலதாம். மேகநாதன் - மேகம் இடித்தது போன்ற ஒலியுடையவன்; இப் பெயர்க்காரணம்; உத்தர. இராவணன் பிறப்புப். 56.

(*பி-ம்*) 2. திசை பத்தொடும் வென்றுவா னுலகின்.
3. ஏக நாயகன்: ஏகி யிந்திர னெனும்; பிடித் தீர்த்த.
4. மயங்கிப்பின் கொடுஞ்சரம் விதைத்தான். (41)

1022. *நீண்ட வீரனு நெடுந்தடக் கைகளை நீட்டி*
*ஈண்டு வெஞ்சர மெய்தன வெய்திடா வண்ணம்*
*மீண்டு போய்விழ வீசியங் கவன்விட்ட தடந்தேர்*
*பூண்ட பேயொடு சாரதி தரைப்படப் புடைத்தான்.*

நீண்ட வீரனும் - அவ்வாறு பேருருக் கொண்ட வீரனான அநுமனும், நெடும் தடம் கைகளை நீட்டி - நீண்ட பெரிய தன் கைகளை எதிரே நீட்டி, எய்தன ஈண்டு வெம் சரம் எய்திடா வண்ணம்-(இந்திரசித்தினால்) எய்யப்பட்டு விரைந்து வருகின்ற கொடிய அம்புகள் (தன்னுடலிற்) படாதபடி, மீண்டு போய் விழ வீசி - திரும்பிக் கீழே விழும்படி வீசி, அங்கு அவன் விட்ட தடம் தேர் - அங்கே அவன் செலுத்திய பெரிய தேரில், பூண்ட பேய் ஒடு - பூட்டியிருந்த பேய்களோடு, சாரதி - தேர்ப் பாகனும், தரை பட - தரையில் விழுந்து அழியும்படி, புடைத்தான் - அடித்தான்.

கைகளை நீட்டிப் புடைத்தான் எனக் கூட்டுக. பேய்கள் இந்திர சித்தின் தேரிற் பூட்டப் பெற்றமை: 983.

(*பி-ம்.*) 1. தடங் கைகளை; கையினை நீட்டி. 2. ஈண்ட வெஞ்சரம்.
3. வீசியாங் கவன்மிடற் றடந்தேர்.
4. பூண்ட மாவொடு சாரதி யொடும்படப். (42)

1023. *ஊழிக் காற்றன்ன வொருபரித் தேரவ னுதவப்*
*பாழித் தோளவ னத்தடந் தேர்மிசைப் பாய்ந்தான்*
*ஆழிப் பல்படை யனையன வளப்பருஞ் சரத்தால்*
*வாழிப் போர்வலி மாருதி மேனியை மறைத்தான்.*

**அவண்** - அங்கிலையில், **ஊழி காற்று அன்ன** - ஊழிக்காலத்தில் வீசும் பெருங் காற்றுப் போல (வேகமாய் செல்லும்), **ஒரு பரி தேர் உதவ** - குதிரைகள் பூட்டிய ஒரு தேரை (வேறு ஒரு சாரதி) கொண்டு வந்து தர, **பாழி தோள் அவன்** - பருத்த தோள்களையுடைய அந்த இந்திர சித்து, **அ தடம் தேர் மிசை பாய்ந்தான்** - அந்தத் தேர் மீது பாய்ந்து ஏறி, **பல் ஆழி படை அனையன** - பல சக்கராயுதங்கள் போன்ற, **அளப்பு அரும் சரத்தால்** - அளவிட்டுச் சொல்ல முடியாத அம்புகளால், **வாழி போர் வலி மாருதி மேனியை மறைத்தான்** - நீடூழி வாழும் போர் வலியிற் சிறந்த அநுமனுடைய திருமேனியை மூடி மறைத்து விட்டான்,

அவண் - அவ்விடத்தில் என்னலும் ஆம். ஊழிக் காற்று வலிமைக்கும் விரைவுக்கும் உவமை. ஒரு தேர் - ஒப்பற்ற தேரும் ஆம். முன் இருந்தது பேய் பூட்டிய தேரும், இப்பொழுது வந்தது பரி பூட்டிய தேரும் ஆகும். ஊழிக் காற்று அன்ன, என்பதை, பரியோடும், தேரோடும் கூட்டுக. உதவியவர் சேமத் தேரினர் என்க. ஆழி அனையன அளப்பரும் பல் படைச் சரத்தால் என இயைந்து, கடல் போன்று அளவிட முடியாத பல ஆயுதங்களாகிய அம்புகளால் எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும்.

(பி-ம்.) 1. ஊழிக் காற்றென்ன; காற்றென; காற்றன: காற்றென வருபரித் தேர்பின்னு முதவப்.
2. பாழித் தோளவ னத்: தேர்மிசைப் பாய்ந்தாங்கு.
3. ஆழிப் பல்படை யனையவன்; ஆளிப் போத்தன்ன வரக்கனு மளப்பருஞ். 4. போர்மலி மாருதி. (43)

1024. *உற்ற வாளிக ளுரத்தடங் கினவுக வுதருக்*
*கொற்ற மாருதி யனையவன் றேர்மிசைக் குதித்துப்*
*பற்றி வன்கையாற் பறித்தெழுந் துலகெலாம் பலகால்*
*முற்ற வென்றபோர் மூரிவெஞ் சிலையினை முறித்தான்.*

**கொற்ற மாருதி** - வலிமை மிக்க அநுமன், **உரத்து அடங்கின உற்ற வாளிகள் உக** - தன் மார்பில் பதிந்தனவாய்ப் பொருந்திய அம்புகள் சிந்திப் போக, **உதரு** - (அவற்றை) உதறியெறிந்து, **அனையவன் தேர் மிசை குதித்து** - அந்த இந்திரசித்தின் தேர் மீது எழும்பிக் குதித்து

உலகு எலாம் பல கால் முற்ற வென்ற - உலகம் யாவையும் பலமுறை முழுவதும் வென்றதான, போர் மூரி வெம் சிலையினை - போரிற் சிறந்த அவனுடைய வலிய வில்லை, வன் கையால் பற்றி - தன் வலிய கையினுல் பிடித்து, பறித்து எழுந்து - பிடுங்கிக் கொண்டு மேலே கிளம்பி, முறித்தான் - (அதனை) ஒடித்தெறிந்தான்.

இந்திரசித்து உலகமெலாம் பல கால் வென்றது; 1006. உரை, மூரி - வலிமை, பெருமை, பழைமை.

(பி-ம்.) 1. ஊத்தடங் கினவுள; அடங் கினவிழ வுதருக்: உடற்புகுந் தனவிழ வுதரு.
2. மாருதி யவன்பெருந் தேர்மிசைக்; தேர்மிசைக் குதித்தான்.
3. வன்கையிற் றனிபறித்து: பறித்தெறிந் துலகெலாம்.
4. முற்றி வென்ற: முற்ற வென்றவன் மூரி. (44)

1025. *முறிந்த வில்லின்வல் லோசைபோய் முடிவதன் முன்னம்*
*மறிந்து போரிடை வழிக்கொளா வயிரவாட் படையால்*
*செறிந்த வான்பெருஞ் சிறையற மலைகளைச் செயிரா*
*எறிந்த விந்திர னிட்டவான் சிலையினை யெடுத்தான்.*

(இந்திரசித்து), முறிந்த வில்லின் வல் ஓசை போய் முடிவதன் முன்னம்-ஒடிபட்ட அந்த வில்லின் வலிய ஓசை அடங்குவதற்கு முன்னதாக, மறிந்து போர் இடை வழி கொளா - மீண்டும் போரில் வழிக் கொண்டவனுய், வயிர வாள் படையால் - வச்சிராயுத மென்னும் வாளால், செறிந்த வான் பெரும் சிறை அற - அடர்ந்த மிகப் பெரிய சிறகுகள் அறும்படி, மலைகளை செயிரா - மலைகளைச் சினந்து, எறிந்த - தாக்கி வீழ்த்திய, இந்திரன் - இந்திரன், இட்ட - (தன்னிடம் முன்) தோற்றுப்போர்க்களத்தில்) விட்டுச் சென்ற, வான் சிலையினை - பெரிய வில்லை, எடுத்தான் - (கையில்) எடுத்துக் கொண்டான்.

இந்திரன் மலைகளின் சிறகுகளைத் தன் வயிரவாட் படையால் துணித்தது; 55. வழிக் கொளா, செயிரா என்பன செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினைகள். ஓசை முடிவதன் முன் - ஒலி ஓயும் முன்னம், ஒலி ஒரு கணத்திற்குள் பல்லாயிரம் காததூரம் விரைவில் பரவும்; அக்கணத்தினும் விரைவாக இந்திரசித்து வேறு ஒரு வில்லை எடுத்தான் என்பதாம். இது விரைவின் மிகுதியைக் குறிக்க வந்தது. வயிர வாட் படை - வச்சிரமாகிய வாள் எனினும் அமையும்; போரில் தோற்ற இந்திரன் வில்லை மேகநாதன் பெற்றது; உயுத்த; நாகபாசப். 16.

இதன் பின் ஒரு பிரதியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது.

எடுத்து நாணொலி யெழுப்பின னெண்டிசைக் கிரியும்
படித்த லங்களும் வெடிபடப் பகிரண்ட முடையத்
தொடுத்த வானவர் சிரதலந் துளக்கிடச் சினங்கொண்
டடுத்தம் மாருதி யயர்ந்திட வடுசரந் துரந்தான்,

(பி-ம்.) 2 மறிந்து பாரிடை 'வழிக்கொளாக்: மறிந்த போரிடை: வழிக் கொள்வான் வயிரவாட்.
3. பெரு மலைகளைச் சிறகறச்; மலைகளைச் சிறகறச் சினங்கொண்(டு)',
4 வார் சிலையினை; மாச் சிலையினை: ஓர் சிலையினை.

1026. நூறு நூறுபோர் வாளியோர் தொடைகொண்டு நொய்தின்
மாறில் வெஞ்சினத் திராவணன் மகன்சிலை வளைத்தான்
ஊறு தன்னெடு மேனியிற் பலபட வொல்கி
ஏறு சேவகன் றூதனுஞ் சிறிதுபோ திருந்தான்.

ஓர் தொடை நூறு நூறு போர் வாளி கொண்டு - ஒரு தொடுப்புக்குப் பல நூறு போரில் சிறக்கும் அம்புகளாகக் கொண்டு, நொய்தின் - விரைவில், மாறு இல் வெம் சினத்து இராவணன் மகன் - எதிர் இல்லாத கொடிய கோபத்தையுடைய இராவணன் மகனை இந்திரசித்து, சிலை வளைத்தான் - (அந்த இந்திரன்) வில்லை வளைத்து (அம்புகளைப் பொழிந்தான்); ஏறு சேவகன் தூதனும் - நாளும் வளர்ந்தேறும் வீரத் தன்மையுடைய இராமபிரான் தூதனை அநுமனும், தன் நெடு மேனியில் ஊறு பல பட - தன் நெடிய திருமேனியில் பல காயங்கள் உண்டாக, சிறிது போது ஒல்கி இருந்தான் - சிறிது நேரம் தளர்ச்சியுற்றிருந்தான்.

நூறு நூறு-நூற்றுக் கணக்காக, மாறு - ஒப்பும் ஆம்; சீவக, 2261. உரை. ஊறு - காயம் அல்லது புண்; 'ஊறறியா மெய்யாக்கை' (புறநா. 167: 6), ஏறு சேவகன் - இராமன்; 625; உரை ஒல்குதல் - நுடங்குதல்; சாய்தலும் ஆம்; சிறுபாண். 135; நச். உரை; பட்டினப். 250. நச், உரை.

(பி-ம்) 2. மாறு வெஞ்சிலை. 3. பலபட வோங்கி.
4. சிறிதுநொந் திருந்தான். (46)

1027. ஆர்த்த வானவ ராகுலங் கொண்டறி வழிந்தார்
பார்த்த மாருதி தாருவொன் றங்கையாற் பற்றுத்
தூர்த்த வாளிகள் துணிபட முறைமுறை சுற்றிப்
போர்த்த பொன்னெடு மணிமுடித் தலையிடைப் புடைத்தான்.

ஆர்த்த வானவர் ஆகுலம் கொண்டு - முன் மகிழ்ந்து ஆரவாரஞ் செய்த தேவர்கள் (அநுமன் சலித்தது கண்டு) துன்பம் மேற்கொண்டு, அறிவு அழிந்தார் - புத்தி மயங்கி வருந்தினர்; பார்த்த மாருதி - அது கண்ட அநுமன், தாரு ஒன்று அம் கையால் பற்ற - மரம் ஒன்றைத் தன் உள்ளங்கையாற் பற்றிக் கொண்டு, தூர்த்த வாளிகள் துணிபட - (இந்திரசித்து தன் உடல் முழுவதும்) நிரப்பியது போலத் தூண்டிக் குவித்த அம்புகள் துண்டுகளாகச் சிதறி யோட, முறை முறை சுற்றி -பல முறைகள் (அம்மரத்தைச்) சுழற்றி, பொன் மணி நெடு முடி போர்த்த தலையிடை - பொன்னாலும் மணிகளாலும் செய்து நீண்டதாய் விளங்கிய கிரீடம் கவித்துள்ள இந்திரசித்தின் தலையிடத்து, புடைத்தான் - (அம் மரத்தாலே) ஓங்கியடித்தான்.

ஆர்த்தவ் வானவர் என்பது எதுகை நோக்கி ஆர்த்த வானவர் என இரட்டாது இயல்பாயிற்றென்றும் கொண்டு பொருள் கூறுவர். பொன் னெடு மணி முடிபோர்த்த தலை. எனக் கொண்டுகூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது.

(பி-ம்) 1. ஆவலங் கொளிஇயறி வழிந்தார்; வானவ ராங்கது கண்டறி வழிந்தார். 2. அங்கையிற் பற்றித். 3. வாளிக டுணியுற: முறைமுறை துணிபடச்: முறைமுறை சுழற்றிப். 4. தலத்திடைப் புடைத்தான். (47)

1028. *பார மாமர முடியுடைத் தலையிடைப் படலும்*
*தாரை யின்னெடுங் கற்றைகள் சொரிவன தயங்க*
*ஆர மால்வரை யருவியி னழிகொழுங் குருதி*
*சோர நின்றுளந் துளங்கின னமரரைத் தொலைத்தான்.*

பார மாமரம் முடியுடை தலையிடை படலும் - வலியதும் பெரியது மான அந்த மராமரம் கிரீடத்தையுடைய (இந்திரசித்தின்) தலையிடத்துத் தாக்கலும், தாரையின் நெடும் கற்றைகள் சொரிவன தயங்க - (குருதி) ஒழுக்கின் நீண்ட தொகுதிகள் சொரிந்து விளங்க, மால் வரை ஆர அருவியின் - பெரிய மலைக்கு இட்ட மாலையென விளங்கும் அருவியைப் போல, அழி கொழும் குருதி சோர - வழிந்து விழுகின்ற கொழுமையான இரத்தம் அவனுடலின் இரு புறங்களிலும் கீழ் இறங்கி விழ, அமரரை தொலைத்தான் - தேவர்களைப் பின்னிட்டு ஓட அடித்த இந்திரசித்து, நின்று - (ஏங்கித் தளர்ச்சியுற்று) நின்று, உளம் துளங்கினன் - மனம் நடுக்க முற்றான்.

தாரை - ஒழுக்கு; 'தாரை கொள்ளத் தழைப்பன சாலியே' (பால; நாட்டுப்: 25.) வரைக்கு அருவி ஆரம் போன்று விளங்குவது போலக்

குருதி சொரிந்தது என்க; அருவிக்கு ஆரம்; பால. வரைக் காட்சிப்: 57: இந்திரசித்தின் உடல் மலைக்கும், இரத்த ஒழுக்கு அதன் மீதுள்ள அருவிக்கும் ஒப்பு.

(பி-ம்.) 1. பார மாமணி முடி. 2. கற்றைகள் சுற்றின தயங்க: சுற்றிய தயங்க; சூழ்ந்தெனத் தயங்க.
3. ஆர மாமலை யருவியில் வழிகொழுங் குருதி: அருவியி னிழி கொடுங் குருதி: அழிபெருங் குருதி.
4. நின்றுட றுளங்கினன்: அமரரைத் துரந்தான். (48)

1029. நின்று போதம்வந் துறுதலு நிறைபிறை யெயிறு
தின்று தேவரு முனிவரு மவுணருந் திகைப்பக்
குன்று போனெடு மாருதி யாகமுங் குலுங்க
ஒன்று போல்வன வாயிரம் பகழிகோத் துய்த்தான்.

நின்று - அவ்வாறு (இந்திரசித்து) சிறிது நேரம் அயர்ச்சியுற்று நின்று, போதம் வந்து உறுதலும் - பிறகு தன் அறிவு வந்தடைந்த வுடன், பிறை நிறை எயிறு தின்று - பிறைகள் போல் வாயில் நிறைந் திருந்த பற்களைக் கடித்து, தேவரும், முனிவரும் அவுணரும் திகைப்ப - தேவர்களும், இருடிகளும் அசுரர்களும் யாதாகுமோ என்று ஏக்க முற, குன்று போல் நெடும் மாருதி ஆகமும் குலுங்க - மலைபோன்ற நெடிய உருவைக் கொண்ட அநுமனுடைய உடலும் நடுங்க, ஒன்று போல்வன - ஒரே தன்மையான(வேறுபாடு இல்லாத), ஆயிரம் பகழி கோத்து- ஆயிரம் அம்புகளை வில்லிற் பூட்டி, உய்த்தான் - அநுமன் மீது செலுத் தினன்.

போதம் - அறிவு; நினைவு. எயிறு தின்றல் - சினத்திற்றோன்றும் மெய்ப்பாடு; கிட்கிந்தா. வாலிவதைப் 91. அவுணரும் தேவர்கணத் தில் ஒருவகையின ராதலானும், அவர்களையும் முன் இராவணன் போரில் துன்புறுத்தினவ னுதலாலும், தேவர்கள் முனிவர்களோடு அவுணரும் திகைத்தனர். மாருதி ஆகத்திற்குக் குன்று உவமை.

(பி-ம்.) 1. வந் தெழுதலும்; நிறைபிறை யெயிற்றைத்.
2. அவுணரு முனிவரும்; தேவரு முனிவரும் சிந்தனை திகைப்பக்.
3. குன்று போல்வரு மாருதி: மாருதி நெஞ்சமுங் குலுங்க.
4. பகழிகோத் தெய்தான்; பகழிகொண் டுய்த்தான். (49)

1030. உய்த்த வெஞ்சர முரத்தினுங் கரத்தினு மொளிப்பக்
கைத்த சிந்தையன் மாருதி நனிதவக் கனன்றுன்
வித்த கன்சிலை விடுகணை விசையினுங் கடுகி
அத்த டம்பெருந் தேரோடு மெடுத்தெறிந் தார்த்தான்.

உய்த்த வெம் சரம் - அவ்வாறு இந்திரசித்து செலுத்திய கொடிய அம்புகள், உரத்தினும் கரத்தினும் ஒளிப்ப - (அநுமனுடைய) மார்பிலும், கைகளிலும் புகுந்து மறைந்து கொள்ள, கைத்த சிந்தையன் - வெறுப் புற்ற மனத்தினனுன, மாருதி - அநுமன், நனி தவ கனன்ருன் - மிகவும் கோப மேற்கொண்டவனுய், வித்தகன் சிலே விடு கணை விசையினும் - ஞான வடிவான இராமபிரான் தூண்டும் அம்பின் வேகத்தினும், கடுகி - அதிக வேகமாகச் சென்று. அ தடம் பெரும் தேர் ஒடும் எடுத்து எறிந்து- அந்த இந்திரசித்தின் இட மகன்ற பெரிய தேரோடு கூட அவனையும் தூக்கி எடுத்து வீசி எறிந்து, ஆர்த்தான் - பெரு முழக்கமிட்டான்,

நனி தவ - ஒரு பொருட் பன்மொழி. வித்தகன் - இராமபிரான். வேகத்திற்கு இராமபிரான் அம்பை உவமை கூறுவது இந் நூலாசிரியர் மரபு; கிட்கிந்தா. கிட்கிந்தைப்: 12; உயுத்த, அங்கதன்றூதுப்; 13; மீட்சிப்; 203,

(பி-ம்.) 1. உரத்தினுஞ் சிரத்தினும்: உரத்தினு முடம்பினுங் குளிக்க,
2. கைத்த சிந்தனை மாருதி: மாருதி யாகுமுங் கனன்ருள்; அதிக முங் கனன்ருன்; கதுமெனக் கனன்ருன்,
3. வித்த கச்சிலே.
4. அத்து டைப்பெருங்: எய்த்து டைத்தடந்: அத்த கைத்தடந்; அச்சு டைத்தடந்; அத்த டந்தனித்: எறிந்துநின் ருர்த்தான். (50)

1031. *கண்ணின் மீச்சென்ற விமையிடைக் கலப்பதன் முன்னம்*
*எண்ணின் மீச்சென்ற வெறுழ்வலித் திறலுடை யிகலோன்*
*புண்ணின் மீச்சென்று பொழிபுனல் பசும்புலால் பொடிப்ப*
*விண்ணின் மீச்சென்ற தேரொடும் பார்மிசை விழுந்தான்.*

கண்ணின் மீ சென்ற இமை - கண்ணின் மேலே சென்ற மேலிமை, கலப்பதன் இடை முன்னம் - கீழிமையோடு வந்து சேரும் இடையள வுக்கு முன்னமே, (அதாவது நொடியளவுக்குள்ளே), எண்ணின் மீ சென்ற - கணக்கிடுவதற்கு முடியாது மேற் சென்ற, எறுழ் வலி திற லுடை இகலோன் - மிக்க வலிமையுடைய போர் வீரனுன இந்திரசித்து, புண்ணின் மீ சென்று பொழி - தன் உடலில் ஏற்பட்ட புண்களினின்று மேற் கிளம்பிச் சிந்துகின்ற, புனல் பசும் புலால் பொடிப்ப - குருதியும் பசிய ஊனும் வெளிப்பட, விண்ணின் மீ சென்ற தேர் ஒடும் - (அநுமன் எறிந்ததால்) வானின் மீது சென்ற தன் தேரோடும், பார் மிசை விழுந் தான் -தரை மீது விழுந்தான்.

எண்ணின் மீச் சென்ற-மனத்தால் கருதுவதற்கும் முடியாது மேலே சென்ற என்னலும் ஒன்றும். பொடித்தல் - அரும்புதல், தோன்றுதல்; 'போய்ப் பொடித்தன மயிர்ப் புறத்த' (கிட்கிந்தா. வாலிவதைப்; 7.)

க. 100.

(பி-ம்) 1. சென்ற விசும்பிடை; இமைப்பிடை: கலப்பதன் முன்னே.
3. பொழிபுலால் பசும்புனல் பொடிப்ப: பொறிப்ப.
4. விண்ணின் மேற்சென்று: பாரிடை விழுந்தான். (51)

1032. *விழுந்து பாரடை யாமுன மின்னெனு மெயிற்றுன்*
*எழுந்து மாவிசும் பெய்தின னிடையவன் படியில்*
*செழுந்திண் மாமணித் தேர்க்குலம் யாவையுஞ் சிதைய*
*உழுந்து பேர்வதன் முன்னெடு மாருதி யுதைத்தான்,*

மின் எனும் எயிற்றுன் - மின்னலைப் போல ஒளி வீசும் பற்களை யுடைய இந்திரசித்து, விழுந்து பார் அடையா முன்னம் - விழுந்து தரையை அடையும் முன்னமே, எழுந்து மா விசும்பு எய்தினன் - எழுந்து பெரிய ஆகாயத்தை அடைந்தான்; இடை - அதற்கு இடையே, நெடு மாருதி - நீண்ட உருவுடைய அநுமன், உழுந்து பேர்வதன் முன் - உழுந்து உரு ளும் நேரத்திற்குள், அவன் செழும் திண் மா மணி தேர் குலம் யாவை யும் - அந்த இந்திரசித்தின் வளம் மிக்க வலிய சிறந்த இரத்தினங்கள் பதித்த தேர்க் கூட்டங்கள் எல்லாவற்றையும், படியில் சிதைய - தரை யில் தகர்ந்து விழ, உதைத்தான் - தன் காலால் உதைத்துத் தள்ளினுன்.

இந்திரசித்து தேரோடு தரையில் விழுந்தவுடன் சிறிதும் தாமதிக் காது எழுந்து மேற்சென்றுன் என்பதும், அவ்வாறு அவன் மேற் செல் லும் கால அளவுக்குள் (அதாவது, உழுந்து உருளும் நேரத்திற்குள்) அநுமன் அவனுடைய மற்றைத் தேர்க் குலத்தை உதைத்துச் சிதையச் செய்தான் என்பதும், அதி விரைவில் நிகழ்ந்த செயல்கள் ஆம். உழுந்து உருண்டு பேர்வது, மிக விரைவான சிறு நேரம்; 52; உரை. மாருதி தேர்க் குலம் முழுமையும் சிதைத்தது. இந்திரசித்து பின்னும் எத்தேரையும் பெறும லிருத்தற்கு.

(பி-ம்.) 1. பாரிடை யழுந்துமுன்; மின்னன்ன மெய்யான்.
2. மால்விசும் புற: எய்தின னெய்திய விடையில்; இடையவன் படையில்.
3. செழுந்தண் மாமணித்: யாவையுஞ் சிதையா. (52)

## இந்திரசித்து நான்முகன் படைக்கலம் எடுத்து விசுதல் 1033-1035

1033. *ஏறு தேரில னெதிர்நிற்கு முரனில னெரியில்*
*சீறு வெஞ்சின்ந் திருகின னந்தரந் திரிவான்*
*வேறு செய்வதோர் வினைபிறி தின்மையின் விரிஞ்சன்*
*மாறி லாப்பெரும் படைக்கலந் தொடுப்பதே மதித்தான்.*

ஏறு தேர் இலன் - மீண்டும் ஏறிப் போர் புரிய வேறு தேர் இல்லாத வனாய், எதிர் நிற்கும் உரன் இலன் - நேரே நின்று போர் செய்யும் வலிமையும் அற்றவனாக, எரியில் சீறு வெம் சினம் திருகினன் - நெருப்பைப் போலச் சீறி எழுகின்ற கொடும் கோபம் முடுகி, அந்தரம் திரிவான் - வானிற் சஞ்சரிக்கும் இந்திரசித்து, வேறு செய்வது ஓர் வினை பிறிது இன்மையின் - செய்வதற்குரிய செயல் வேறு இல்லாமையால், விரிஞ்சன் - பிரம தேவனுடைய, மாறு இலா பெரும் படைக்கலம் - நிகர் இல்லாத பெரிய ஆயுதமாகிய பிரமாத்திரத்தை; தொடுப்பதே - தூண்டுவதாகிய கடுஞ் செயலையே, மதித்தான் - (செய்யத்) துணிவு கொண்டான்.

சினம் திருகுதல்; 110; ஆரண்ய. மாரீசன் வதைப்; 174. வேறு செய்வதோர் வினை பிறிதின்மையின் என்றமையால், பிரமாத்திரம் மிக அருமையாகவே ஆளுதற்குரியது என்பது விளங்கும். மாறிலாப் பெரும் படைக்கலம் என்றமையால். அதன் திறன் கூறப்பட்டது; 'அந்தணன் படைக்கலம் தொடுக்க வ்வுலக மூன்றையுஞ் சுடும்' (உயுத்த. பிரமாத்திரப்; 81.) என்று பிரமாத்திரத்தின் சிறப்பு கூறப் பெற்றிருப்பதும் காண்க.

(பி-ம்.) 2. திருகுகின் றுன்றிரி வானும்; திருகின னந்தரந் திரிவான். அந்தரத் துழல்வான். 3. வினைபிறி தின்மையால். 4. தொடுப்பதாய்; தொடுந்திட. (53)

1034. *பூவும் பூநிற வயினியுந் தீபமும் புகையும்*
*தாவில் பாவனை யாற்கொடுத் தருச்சனை சமைத்தான்*
*தேவி யாவையு முலகமுந் திருத்திய தெய்வக்*
*கோவி னான்முகன் படைக்கலந் தடக்கையிற் கொண்டான்.*

பூவும் - மலர்களும், பூ நிற அயினியும் - பூப் போன்று தூய்மை கொண்ட சோறும், தீபமும் - தீப ஆராதனையும், புகையும் - பரிமள தூபமும், தாவு இல் பாவனையால் - கேடு இல்லாத அடையாள முத்திரைகளால், கொடுத்து - சமர்ப்பித்து, அருச்சனை சமைத்தான் - அருச்சனைகளையும் செய்தவனாகி, தேவு உலகம் யாவையும் - தேவர்கள், மற்ற உலகில் உள்ள சராசரப் பொருள்கள் ஆகிய எல்லாவற்றையும், திருத்திய - முறைப்படி படைத்த, தெய்வக் கோவின் - தெய்வக் கடவுளாகிய, நான் முகன் - பிரம தேவனுடைய, படைக்கலம் - ஆயுத மான பிரமாத்திரத்தை, தடம் கையில் கொண்டான் - தனது பெரிய கையில் எடுத்துக் கொண்டான்.

பூ - மலர் மாலையால் அலங்கரித்தலைக் குறிக்கும். பூ நிற அயினியும் தீபமும் புகையும் என்பதை எதிர் நிரல் நிறையாகக் கொள்ளற் பால

தாம்; தூப தீப நைவேத்யம் என்பது பூஜையில் கொள்ளப்படும் முறை யாதலின், பாவனையாற் கொடுத்தல் மனத்தாற் சங்கற்பித்தலும் வெளி யிற் தந்திர முறையில் முத்திரைகளால் சமர்ப்பித்தலும் ஆம். இங்கு யுத்தகளத்தில் விரிவாக ஆராதனை செய்ய முடியாது; ஆதலின் பாவனை யாற் கொடுத்து என்னப் பட்டது. அயினி - சோறு; 'ஆய் நிற வயினி சுற்றி' (பால. கோலங்காண்: 18).

(பி-ம்.) 1. பாவனை யாதரித் (து).
2. தேவும் யாவையும்; தேவுமி யாவையும்.
3. கையாற் கொண்டான். (54

1035. கொண்டு கொற்றவெஞ் சிலைநெடு நாணொடு கூட்டிச்
சண்ட வேகத்த மாருதி தோளொடுஞ் சார்த்தி
மண்டு ளங்கிட மாதிரந் துளங்கிட மதிதோய்
விண்டு ளங்கிட மேருவுந் துளங்கிட விட்டான்,

கொண்டு - அந்தப் பிரமாத்திரத்தை கையிற் கொண்டு, கொற்றம் வெம் சிலை நெடு நாண் ஒடு கூட்டி - அதை வலிய தனது கொடிய வில்லின் நீண்ட நாணோடு சேர்த்து, சண்ட வேகத்த மாருதி தோள் ஒடும் சார்த்தி - கொடிய வேகத்தை மேற்கொண்ட அநுமனுடைய தோள்களுக்கு இலக்காகக் குறிவைத்து, மண் துளங்கிட - பூமி நடுங்க மாதிரம் துளங்கிட - திசைகள் நடுங்க, மதி தோய் விண் துளங்கிட - சந்திரன் தங்கிய வானம் நடுங்கிட, மேருவும் துளங்கிட - மேரு மலையும் நடுக்கங் கொள்ள, விட்டான் - (அதனைத்) தூண்டிவிட்டான்.

சண்ட வேகம் - வலிய வேகம். சண்ட மாருதம் என்பதையும் நோக்குக, மாருதி தோளொடும் சார்த்தியது, அவன் தோளைக் கட்டு தற்கு. மேருவும்: உம்மை உயர்வு சிறப்பினது; ஊழிக் காலத்தும் துளங்காதது மேருமலை ஆதலின், உம்மையாற் சிறப்பிக்கப் பெற்றது. பிரமாத்திரத்தின் வலிமை இச் செய்யுளில் தெரிவிக்கப்பட்டது.

(பி-ம்.) 1. கொண்டு கோத்நவெஞ் சிலை.
2. வேகத்தம் மாருதி: வேகத்தின் மாருதி புயந்தனக் கிலக்காய்:
3. மண்டு ளங்கிட மா நதந் துளங்கிட.
4. துளங்கிட விடுத்தான். (55)

## மாருதி சாய்தலும் அரக்கர் களித்தலும் 1036-42

1036. தணிப்ப ரும்பெரும் படைக்கலந் தழலுமிழ் தறுகண்
பணிக்கு லங்களுக் கரசின துருவினைப் பற்றித்
துணிக்க வுற்றுயர் கலுழனுந் துணுக்குறச் சுற்றிப்
பிணித்த தப்பெரு மாருதி தோள்களைப் பிறங்க,

தணிப்பு அரும் பெரும் படைக்கலம் - யாராலும் அடக்குவதற்கு அரிய பெருமை பொருந்திய ஆயுதமாகிய அந்தப் பிரமாத்திரம், தழல் உமிழ் தறுகண் - நெருப்பைக் கக்கும் கொடுமையுடைய, பணி குலங்களுக்கு அரசினது உருவினை பற்றி - பாம்பின் குலங்களுக்கு அரசனுடைய வடிவத்தை ஏற்றுக் கொண்டு, துணிக்க உற்று உயர் கலுழனும்-அதனைத் துண்டாக்க வந்த உயர எழும் கருடனும், துணுக்கு உற- (முடியாது) நடுக்கமடைய, அ பெரு மாருதி தோள்களை பிறங்க சுற்றி - அந்தப் பெரிய அநுமன் தோள்களை நன்றாகச் சுற்றிக் கொண்டு, பிணித்தது - கட்டிவிட்டது.

கலுழனும்-பாம்புகள் கண்டு அஞ்சியோடும் வலியுடைய கருடனும்; உம்மை உயர் சிறப்பினது, பிறங்க-நன்றாக, மிகுதியாக; பிங்களம். இந் நூலில் இப் பாடலைப் போல் பின்னும் சில பாடல்களிலும் இந்திரசித்து ஏவிய பிரமாத்திரம், அநுமனைக் கொடிய பாம்பின் உருக்கொண்டு பிணித்திருந்தது எனக் கூறப் பெற்றுள்ளது. ஆனல் முதனூலாகிய வான்மீகத்தில் அந்தப் பிரமாத்திரம் தன் மந்திர சக்தியாலே அநுமனைக் கட்டியதாகவே கூறப் பெற்றுள்ளமை காணலாம். மேலும் இந் நூல் உயுத்த காண்டத்தில் இவ்விந்திரசித்து இலக்குவன் மீது ஏவிய பிரமாத்திரமும், அரவாக ஆகாமை நோக்கற் பாலதாம்.

(பி-ம்.) 1. தணிப்பருந்திறற் படை.
2. அரசன்றன் னுருவினைப் பகையால்.
3. துனுக்க முற்றுயர் கலுழனு நடுக்குறச் சுற்றிப்: துணுக்க முற்றிடக் கெளவிய கலுழனைச் சுற்றி.
4. பிணித்த போற்பெரு மாருதி புயங்களைப் பிணித்த. (56)

1037. *திண்ணென் யாக்கையைத் திசைமுகன் படைசென்று திருக*
*அண்ணன் மாருதி யன்றுதன் பின்சென்ற வறத்தின்*
*கண்ணி னீரொடுங் கனகதோ ரணத்தொடுங் கடைநாள்*
*தண்ணென் மாமதி கோளொடுஞ் சாய்ந்தெனச் சாய்ந்தான்.*

திசை முகன் படை - (நான்கு) திசைகளையும் நோக்கிய நான்கு முகங்களையுடைய பிரமதேவன் ஆயுதம், திண் என் யாக்கையை-வலிமையுடைய (அநுமன்) உடலை, சென்று திருக - போய்ச் சுற்றி வருத்த, அண்ணல் - பெரியோனான அநுமன், அன்று தன் பின் சென்ற - (அவன் இலங்கையில் புகுந்து) அன்று அவனைத் துணைகொண்டு அவனோடு கூடச் சென்ற, அறத்தின் கண்ணின் நீரொடும் - தரும தேவதையின் கண்ணீரொடும், கடை நாள் - உலகமழியும் யுக முடிவுக்காலத்தில், தண் என் மா மதி - குளிர்ச்சியுடன் விளங்கும் சந்திரன், கோள் ஒடும் - ஊர்

கோளொடும் சேர்ந்து, சாய்ந்து என - சாய்ந்து விழுந்ததே போல, கனக தோரணத்து ஒடும் - பொன் மயமான தோரண வாயிலோடும், சாய்ந்தான் - படிந்து சாய்ந்து விழுந்தான்.

அறம் அதற்கு முன் இலங்கையுள் சென்றதன்று: அது அநுமனைத் துணைகொண்டு புகுந்தது என்பதாம்; இலங்கையில் முன் அறம்புகாதிருந்தமை; 118. அறம் கண்ணீரொடு சாய்ந்தது, அதன் துணை சாய்ந்ததால் மதி கோளொடு சாய்ந்தது போல அநுமனும் தோரணத்தோடு சாய்ந்தான் என்பதாம். மதி அநுமனுக்கும், தோரணம் கோளுக்கும் ஒப்பு. கோள் - ஊர்கோள்; முதற்குறை. இனி' கோளொடும்' என்பதற்கு மற்றக் கோள்களோடும் என்று கூறலும் அமையும். இங்குப் பல ஒளிகளையுடைய கோள்களின் கூட்டத்திற்குத் தோரணம் ஒப்பு என்க.

(பி-ம்.) 1. திண்ணன் யாக்கையை.
2. மாருதி யயர்வொடு மாழிசூழ் தலத்தில்; மாருதி யறிவொடு மாழிசூழ் தலத்தில்.
8. கண்ணி னீளிய கனகத். 4. தண்ண மாமதி. (57)

1038. *சாய்ந்த மாருதி சதுமுகன் படையெனுந் தன்மை*
*ஆய்ந்து மற்றித ணுணையை யவமதித் தகறல்*
*ஏய்ந்த தன்றென வெண்ணினன் கண்முகிழ்த் திருந்தான்*
*ஓய்ந்த தாமிவன் வலியென வரக்கன்வந் துற்றான்.*

சாய்ந்த மாருதி - அவ்வாறு சாய்ந்த அநுமன், சதுமுகன் படையெனும் தன்மை ஆய்ந்து - (தன்மேற் செலுத்தியது) பிரமாத்திரம் என்னும் உண்மையை உணர்ந்தறிந்து, இதன் ஆணையை அவமதித்து அகல்தல் ஏய்ந்தது அன்று என எண்ணினன் - இதன் அதிகாரத்தை இகழ்ந்து இதனை விட்டு நீங்குதல் மரியாதைக்கு ஏற்புடையது ஆகாது எனக் கருதியவனாய், கண் முகிழ்த்து இருந்தான் - கண்ணை மூடிக்கொண்டு அதற்குக் கட்டுபட்டவன் போல் இருந்தான்; அரக்கன் - இராக்கதனாகிய இந்திரசித்தும், இவன் வலி ஓய்ந்தது ஆம் என - இவனுடைய வலிமை ஓய்ந்து போயிற்றும் என எண்ணி, வந்து உற்றான் - அவ்வநுமன் அருகில் வந்தடைந்தான், மற்று: அசை.

சதுமுகன்: சதுர்முகன் என்பதின் விகாரம். பிரமன், தன் அத்திரத்தால் ஒருமுறை ஒரு முகூர்த்த காலம் கட்டுப்படும்படியாக முன் கூறியிருந்தமையாலும், அதற்கு அடங்கி அநுமன் இங்குக் கட்டுப்பட்டது போல அடங்கிக் கண் முகிழ்த்திருந்தான் என்னலும் ஒன்றும். அநுமன் பிரமாத்திரத்தால் ஒருமுறை கட்டுப்படப் பிரமனால் முன் விதிக்கப்பட்டு

தாக வான்மீகம் கூறும்; (சுந்தர காண்டம் சர்க்கம், 48 சுலோகம் 40-43.)

(பி-ம்) 1. திசைமுகன் படையெனுந். 2 ஆய்ந்து மற்றிவன்; அவமதித் தகற்சி; அகல்கை. 3. ஓய்ந்த தாலிவன். (58)

1039. உற்ற காலையி னுயிர்கொடு திசைதொறு மொதுங்கி
அற்ற நோக்கினர் நிற்கின்ற வாளெயிற் றரக்கர்
சுற்றும் வந்துடல் சுற்றிய தொளையெயிற் றரவைப்
பற்றி யீர்த்தன ரார்த்தனர் தெழித்தனர் பலரால்.

உற்ற காலையில் - (இவ்வாறு இந்திரசித்து அநுமன் அருகில் வந்து) சேர்ந்த போது, உயிர் கொடு - அநுமனுடன் போர் புரிய அஞ்சித் தம் உயிரைக் காப்பாற்றிக் கொண்டு, திசை தோறும் ஒதுங்கி - நான்கு திசைகளிலும் ஓடி மறைந்து, அற்றம் நோக்கினர் நிற்கின்ற வாள் எயிற்று அரக்கர் பலர் - தமக்கு (அனுகூலமான) சமயத்தை எதிர் பார்த்தவர்களாய் நின்ற, ஒளி தங்கிய பற்களையுடைய அரக்கர்களிற் பலர், சுற்றும் வந்து - அநுமனை நாற்புறங்களிலும் சூழ்ந்து வந்து, உடல் சுற்றிய தொளை எயிற்று அரவை - அநுமன் உடலைச் சுற்றிக் கொண்டிருந்த துவாரமுள்ள விஷப் பற்களையுடைய அரவு வடிவான அந்தப் பிரமாத்திரத்தை, பற்றி ஈர்த்தனர் - பிடித்து இழுத்து ஆர்த்தனர்; தெழித்தனர் - பெருமுழக்கமிட்டு அநுமனை அதட்டினர். ஆல்: அசை.

அற்றம் - சந்தர்ப்பம்; பால. திருவவதாரப்: 41; அகலிகை: 75. தொளை எயிறு, நச்சுப் பல்லாததால்.

(பி-ம்.) 1. உயிர்கொண்டு திசைதொறும்.
2. அற்ற நோக்கின ரறநின்று வாளெயிற் றரக்கர்; அற்ற நோக்கினின் றயிர்க்கின்ற வாளெயிற் றரக்கர்.
3. சுற்று வந்துடல். (86)

1040. குரக்கு நல்வலங் குலைந்ததென் றுவலங் கொட்டி
இரைக்கு மாநக ரெறிகட லொத்ததெம் மருங்கும்
திரைக்கு மாசுணம் வாசுகி யொத்தது தேவர்
அரக்க ரொத்தனர் மந்தர மொத்தன னநுமன்.

குரங்கு நல் வலம் குலைந்தது என்று - குரங்கினுடைய நல்ல வலிமை நிலை கெட்டது என்று, ஆவலம் கொட்டி - வாய்விட்டு உரக்கக் கத்தி, இரைக்கும் மா நகர் - முழக்க மிடும் அந்தப் பெரிய இலங்கை நகரம்,

எறி கடல் ஒத்தது - அலை மோதும் கடலை ஒத்திருந்தது; எ மருங்கும் திரைக்கும் மாசுணம் - எப் புறமும் அநுமன் உடலைச் சுற்றிப் பிணித்த பிரமாத்திரமாகிய பாம்பு, வாசுகி ஒத்தது - வாசுகி என்னும் பாம்பை ஒத்து விளங்கியது; தேவர் அரக்கர் ஒத்தனர் - முன் கடல் கடைந்த தேவர்களை அரக்கர்கள் ஒத்து விளங்கினர்; அநுமன் மந்தரம் ஒத்தனன் - அநுமன் (அக் கடல் கடைய நடுவே நாட்டிய) மந்தர மலையைப் போல விளங்கினான்.

இச் செய்யுளால், அநுமன் நகருக்குள் ஈர்க்கப்பட்டமை புலனாகும். இலங்கை நகரைக் கடலாகவும், அநுமனை மந்தர மலையாகவும், பிரமாத்திரமாகிய பாம்பை வாசுகியாகவும், அரக்கரைத் தேவராகவும், உவமித்தார்; இது முற்றுவமை. ஆவலங் கொட்டல் - வாய் விட்டுக் கத்தி ஆரவாரித்தல்; உயுத்த. விபீடணனடைக்கலப்: 150.

(பி-ம்.) 1. குறைந்ததென் றுவலங்: குலைந்தவென் றுவலங்.
3. செருக்கு மாசுணம். (60

1041. *கறுத்த மாசுணங் கனகமா மேனியைக் கட்ட*
*அறத்துக் காங்கொரு தனித்துணை யாநின்ற வநுமன்*
*மறத்து மாருதம் பொருதநாள் வாளரா வரசு*
*புறத்துச் சுற்றிய மேருமால் வரையையும் போன்றான்.*

கறுத்த மாசுணம் - கோபங் கொண்ட அந்தப் பிரமாத்திரமாகிய பாம்பு, கனக மா மேனியை - பொன்னிறமான அநுமன் திருமேனியை, கட்ட - வலிதில் இறுக்கிப் பிணிக்க, அறத்துக்கு ஆங்கு ஒரு தனி துணை ஆ நின்ற அநுமன் - தருமத்திற்கு அந்த இலங்கையின் ஒரு தனித்துணைவனாக இருந்த அநுமன், மறத்து - வலிமையுடைய, மாருதம் பொருத நாள்-பெருங்காற்று (வாயுதேவன்) எதிர்த்துத் தாக்கிய காலத்து, வாள் அரா அரசு - ஒளி தங்கிய அரவுக்கரசனான ஆதிசேடன், புறத்து சுற்றிய-தன் வெளிப் புறமெல்லாம் நன்றாகச் சுற்றிக் கொண்டதாய் இருந்த, மேரு மால் வரையையும் போன்றான் - மேரு மலையையும் ஒத்து விளங்கினான்.

கறுத்த - கோபித்த; 'கறுப்புஞ் சிவப்பும் வெகுளிப் பொருள' என்பதாதலின்; (தொல். உரியியல்: 74.); கறுப்பு, சிவப்பு என்பன பிற்காலத்தில் நிறத்தின் பெயராக வழங்கி வருவதைக்கொண்டு, கறுத்த மாசுணம் என்பதற்குக் கரு நிறமான பாம்பு எனப்பொருள் கொள்வாருமுளர். கறுத்தல் - கோபித்தல் என்ற பொருளிலே வருவது இந் நூலுட் பல விடங்களிலும் காணலாம்; 'கறுத்த மாமுனி'; (பால. கையடை: 14;) 'கறுப்புறு மனமு' (பால. நாட்டுப். 16.)

அநுமன் அறத்துக்குத் துணையானவன்; 1037. உரை. அநுமன் பொன் மேனியன்; 78. அநுமன் மேருவுக்கு; 28; 589.

(பி-ம்.) 1. மேனியைக் கதுவ: மேனியைப் பற்ற.
2. தனித்துணை யெனநின்ற.
3. பொருதநாள் வாசுகி யென்பான். (61)

1042. வந்தி ரைத்தனர் மைந்தரு மகளிரு மழைபோல்
அந்த ரத்தினும் விசும்பினுந் திசைதொறு மார்ப்பார்
முந்தி யுற்றதோ ருவகைக்கோர் கரையிலை மொழியின்
இந்தி ரன்பிணிப் புண்டநா ளொத்ததவ் விலங்கை.

மைந்தரும் மகளிரும் வந்து இரைத்தனர் - (அரக்கர்களில்) மைந்தர்களும், பெண்பாலரும், வந்து ஒலி செய்தவராய், மழை போல் - மேகங்களைப் போல். அந்தரத்தினும் - வெற்றிடங்களிலும், விசும்பினும் - ஆகாயத்தினும், திசை தொறும் - நான்கு திசைகளிலும், ஆர்ப்பார் - பெரு முழக்க மிடுவராயினர்: முந்தி உற்றது ஓர் உவகைக்கு - யாவற்றினும் முன்னதாக அவர்கள் அடைந்த மகிழ்ச்சிக்கு, ஓர் கரை இல்லை - ஓர் எல்லை இல்லை; மொழியின் - (அம் மகிழ்ச்சியை ஒருவாறு) கூறுவோமெனில், அ இலங்கை - அந்த இலங்கை நகர். இந்திரன் பிணிப்பு உண்ட நாள் ஒத்தது - இந்திரன் மேகநாதனால் முன் கட்டிச் சிறைபடுத்திக் கொண்டு வரப்பெற்ற நாளில் அடைந்த பெரும் குதூகலத்தை ஒத்து விளங்கியது.

இலங்கை - இலங்கையில் வாழும் அரக்கர்; இடவாகு பெயர். மைந்தர் என்பது ஆடவரில் இளைஞர்களையும், மகளிர் என்பது பெண்பாலரில் இளம் பருவத்தினரையும் குறிக்கும். முந்தியுற்ற உவகை - அவர்கள் அநுமனால் அடைந்ததுன்பங்களை யெல்லாம் கடந்து, முன்னதாக வந்த மகிழ்ச்சி என்பதாம். முந்தி இந்திரன் பிணிப்புண்ட நாள் என இயைத்தும் பொருள் கூறலாம்.

(பி-ம்.) 1. மகளிரு மழையின்.
2. திசைசதொறு மார்த்தார்; அந்த ரத்தினும் புவியினுந் திசை தொறுமாக.
3. முந்தி யுற்றபே ருவகைக்கோர் கரையில்லை; கரையிலை முனையின். (62)

பாசப் படலம் முற்றும்.

# 12. பிணிவிடு படலம்

## அநுமன் கட்டுண்டதைக் கண்ட அரக்கர்களின் ஆரவாரம் 1043-1059.

1043. *எய்யுமி னீருமி னெறிமின் போழுமின்*
*கொய்யுமின் குடரினைக் கூறு கூறுகள்*
*செய்யுமி னுலகிடைத் தேய்மின் றின்னுமின்*
*உய்யுமே லில்லைநம் முயிரென் றோடுவார்.*

பிணிவிடுபடலம் - அநுமன் பாசத்தினின்று விடுபட்ட செய்தியைக் கூறும் படலம் என்று விரியும். சில சுவடிகளில் இது **பிணிவீட்டுபடலம், பிணிவீட்டுப்படலம்,** என்றும் காணப்படுகின்றது.

'எய்யுமின் - (இந்தக் குரங்கை) அம்பு கொண்டு எய்யுங்கள்; ஈருமின் - (வாள் கொண்டு) வெட்டுங்கள்; எறிமின் - (ஈட்டி வேல் முதலியன கொண்டு தாக்கிக்) குத்துங்கள்; போழுமின் - (கோடாலியால்) பிளவுங்கள்; குடரினை கொய்யுமின் - குடல்களைப் பறித்திடுங்கள்; கூறு கூறுகள் செய்யுமின் - அக்குரங்கைத் துண்டு துண்டுகளாகச் செய்யுங்கள்; உலகு இடை தேய்மின் - (இதன் உடலைத்) தரையிலே போட்டுத் தேயுங்கள்; தின்னுமின் - (இதன் உடலைத்) தின்னுங்கள்; உய்யும் ஏல்- இது பிழைத்துப் போகுமானால், நம் உயிர் இல்லை-நம் உயிர் இராது', என்று ஓடுவார் என்று சொல்லிக்கொண்டு அநுமன் இருக்கும் இடத்திற்கு (அரக்கர்கள்) ஓடிவந்தார்கள்.

இவை, பிணிப்புண்ட அநுமனைக் கண்ட அரக்கர்கள் கூற்று, கூறு கூறு: அடுக்குப் பன்மைப் பொருளையுணர்த்துவது. எய்யுமின் முதல், தின்னுமின் என்பது வரையுள்ள ஏவல் வினை அரக்கர்கள் ஒருவர்க்கொருவர் கூறிக் கொண்டவை. இல்லை என்பது இங்குத் துணிவுப் பொருளையுணர்த்தி நின்றது.

(பி-ம்.) 1. எறிமி னெற்று மின்; இகழு மின் போழுமின்; இரும்பிற் போழ்குமின்.
2. குடர்களைக் கூறு. 3, செய்யுமின் மண்ணிடைத் தேய்மின்.
4. நம் முயிரென் றூர்சிலர். (1)

1044. *மைத்தடங் கண்ணியர் மைந்தர் யாவரும்*
*பைத்தலை யரவெனக் கனன்று பைதலை*
*இத்தனை பொழுதுகொண் டிருப்ப தோவென*
*மொய்த்தனர் கொலைசெய முயல்கின் றூர்சிலர்*

மைம் தடம் கண்ணியர் - மை எழுதப் பெற்ற அகன்ற கண்களை யுடைய அரக்கர் மகளிர், மைந்தர் - அரக்கர் வாலிபர், யாவரும்-ஆகிய எல்லோரும், பை தலை அரவு என கனன்று-படத்தோடு கூடிய தலையை யுடைய பாம்பு போலக் கோபங் கொண்டு, 'பைதலை - இந்தப் பயலை, இத்தனை பொழுதுகொண்டு இருப்பதோ' என - இவ்வளவு நேரம் உயி ருடன் வைத்துக்கொண்டு நாம் வாளா இருப்பதோ' என்று கூறி, மொய்த்தனர்-அநுமனைச் சூழ்ந்து மொய்த்துக்கொண்டனர்; சிலர் கொலை செய முயல்கின்றார் - சில அரக்கர்கள் அநுமனைக் கொல்ல முயற்சி செய்வாராயினர்.

பைத்தலை யரவு - விஷப்பைகளைக் தலையில் உடைய பாம்பு என்ன லும் ஆம். அரவெனக் கனலுதல், ஆரண்ய. கரன்வதைப். 184. பைதல் - பயல்; இது இகழ்ச்சிப் பொருளில் கூறியது; திருவாய்மொழி. 9. 5. 6: 'பைதலோ டிணங்கேல்' ஆத்திசூடி. கண்ணியர், மைந்தர் யாவரும் மொய்த்தனர்; சிலர் கொலை செய முயன்றனர் என்பதாம்.

(பி-ம்.) 2: கனன்று பையலை; கனன்று பாங்குவந்(து).
3. இத்தனை பொழுதுதாழ்த் திருப்ப தோவென.
4: முயல்கின் றார்பலர். (2)

1045. நச்சடை படைகளா னலியு மீட்டதோ
வச்சிர வுடன்மறி கடலின் வாய்மடுத்
துச்சியி னழுத்துமி னுருத்த தின்றெனில்
கிச்சிடை யிடுமெனக் கிளக்கின் றார்சிலர்.

சிலர் - வேறு சிலர், 'நச்சு அடை படைகளால் நலியும் ஈட்டது ஓ - (இக் குரங்கு) விஷம் பொருந்திய ஆயுதங்களால் அழியும் வலியுடை யதோ? (அன்று என்றபடி); வச்சிர உடல் மறி கடலின் வாய் மடுத்து- இக்குரங்கின் வயிரம் போன்று உறுதியமைந்த உடலை (அலைகள்) மடங்கி விழும் கடலினிடம் தள்ளி, உச்சியில் உருத்து அழுத்துமின் - (வெளிக் கிளம்பாதபடி) இதனைத் தலை உச்சியில் நன்றாக அழுத்துங்கள்; அது இன்று எனின் - அவ்வாறு செய்யவில்லை யென்றால், கிச்சு இடை இடும்- நெருப்பி னிடையே (இதனைப்) போகட்டுக் கொளுத்துங்கள்'; என - என்று, கிளக்கின்றார் - சொல்வராயினர்.

வச்சிரம் - உடல் வச்சிர மலையையொத்த உடல். 'இவன் உடல் வச்சிரத்தாலும் அழியாது' என்பது பழைய உரை. மடுத்தல் - புகுத் தலும் ஆம். உச்சி - உச்சந்தலை; 'ஊராரை யுச்சி மிதித்து'; (கலித். 104. 76.) 'கடலின் வாய்மடுத் துச்சியி னழுத்துமின் - தலையைப் பிடித் துக் கடலிலே அமிழ்த்துங்கோள்' என்பது பழைய உரை, கிச்சு -

நெருப்பு; 'இச்சி றுருக்கிட் டுய்த்தன னென்ன' (ஆரண்ய. மாரீசன் வதைப். 176.)

(பி-ம்.) 1. நச்சுறு படைகளால்; நச்சுடை படைகளால்; நச்சுறு படைகளி னலிதற் கிடரு.
3. உச்சியை யமுக்குமி னுருத்த தன்றெனிற்; உருத்த தாள்களிற்.
4. கிளத்தி னூர்பலர்; கிளர்க்கின் றூர்சிலர். (3)

1046. எந்தையை யெம்பியை யெம்மு னோர்களைத்
தந்தனை போகெனத் தடுக்கின் றூர்பலர்
அந்தரத் தமரர்த மாணை யாலிவன்
வந்ததென் றுயிர்கொள மறுகி னூர்பலர்

பலர் - இன்னும் பலர், 'எந்தையை எம்பியை எம் முனோர்களை - (உன்னால் உயிர் போக்கப்பட்ட) எம் தந்தையை, எம் தம்பியை, எம் தமையன்மார்களை, தந்தனை போகு என - (திரும்பி எம்மிடம்) கொண்டு வந்து கொடுத்து அப்பாற்போ' என்று சொல்லி, தடுக்கின்றூர் - அநுமனைப் பற்றிச் செல்லும் வழியை மறித்துத் தடைசெய்வாராயினர்; பலர்-வேறு பலர், 'அந்தரத்து அமரர் தம் ஆணையால் இவன் வந்தது என்று - வானில் உள்ள தேவர்களின் கட்டளைப்படி இவன் இங்கு வந்ததாகும்' என்று, உயிர் கொள மறுகினூர் - அந்த அநுமன் உயிரைப் பற்றிப்பறிக்க முடியாது வருந்தினூர்.

தேவர்கள் அரக்கர்களுக்குப் பகைவராதலின் அவர்கள் கட்டளைப் படி அநுமன் இலங்கைக்கு வந்திருக்க வேண்டுமென்பது பல அரக்கர் களது எண்ணம். மறுகுதல் - மனங் குழம்புதல்; 'மறுகக் கடல் கடைந் தான்' (இயற்பா. 2: 68); மறுகுதல், மனம் மாறுபடுதல் என்று சிலர் பொருள் கூறுவர். 'உயிர்கொள வந்தவனென்று மறுகினூர்' என்பது பழைய உரை. 'இவன் தேவர்கள் அனுப்ப வந்தவன்; ஆதலால் இவனும் ஒரு தேவனே என்று எண்ணி, தேவர் சாவாதவராதலின் மறுகினர் என்க.

(பி-ம்.) 2. தடுக்கின் றூர்சிலர். 3. ஆணை யாலிவன்.
4. வந்ததின் எகர்க்கென மதிக்கின் றூர்சிலர்; வந்ததின் றுயிர் கொள மறுக்கின் றூர்பலர்; மறுகு வார்பலர். (4)

1047. ஒங்கலம் பெருவலி யுயிரி னன்பரை
நீங்கல மின்றொடு நீங்கி னுமினி
ஏங்கல மிவன்சிரத் திருந்த லாற்றிரு
வரங்கல மென்றழு மாத ரார்பலர்.

'ஓங்கல் அம் பெரு வலி உயிரின் அன்பரை - மலை போன்ற அழகும் பெருவலிமையும் வாய்ந்த எங்கள் உயிர் போன்ற கணவன்மார்களே, நீங்கலம் - இதுவரை யாங்கள் பிரிந்திருந்தோம் அல்லோம்; இன்று ஒடு நீங்கினும் - (இவனால்) இன்றோடு நீங்கினவர்க ளானோம்; இனி ஏங்கலம் - இனி யாம் ஏக்கமுற்று வருந்தமாட்டோம்; இவன் சிரத்து இருந்து அலால் - இவன் தலையையே பீடமாகக் கொண்டு உட்கார்ந்து இருந் தல்லாமல், திரு வாங்கலம் - எங்கள் திருமங்கல நாணை நாங்கள் வாங்கி அகற்ற மாட்டோம்' என்று அழும் மாதரார் பலர் - என்று சொல்லி அழுத அரக்க மகளிர் பலர் ஆவர்,

திரு - மாங்கலியம். தாலி வாங்கும் துக்கச் சடங்காகிய அவலச் சுவையில், பழிக்குப் பழி வாங்கும் வஞ்சினங் கூறும் மறக் குடி மகளிரிடம் காணும் வீரச் சுவை இங்கு இவ்வரக்கர் மகளிர் மீது ஏற்றிக் கூறப் பட்டது என்க.

(பி-ம்.) 1. ஓங்கரும் பெருவலி; ஓங்கலின் பெருவலி; ஓங்கலம் புயவலி; உயிரி னண்பரை.
2. நீங்கில மென்றொடு; நீங்கிலம் மிவன்றன்னால்: நீங்கி னோமினி.
3. யாங்களு மிவன்சிர மற்ற லாற்றிரு: சிர மிற்ற லாற்றிரு; சிரத் திருந்த லாற்றிரு; சிர மிருந்த லாற்றிரு.
4. மாத ரார்சிலர். (5)

1048 கொண்டன ரெதிர்செலுங் கொற்ற மாநகர்
அண்டமுற் றதுநெடி தார்க்கு மார்ப்பது
கண்டமுற் றுளவருங் கணவர்க் கேங்கிய
குண்டல முகத்தியர்க் குவகை கூரவே.

கொண்டனர் - அநுமனைப்பற்றி இழுத்துக் கொண்டு செல்பவர்களுக்கு, எதிர் செலும் - எதிரே வேடிக்கை பார்க்கச் செல்லும், கொற்ற மா நகர் - வெற்றியையுடைய அந்தப் பெரிய இலங்கை நகரின் அரக்கர்கள், நெடிது ஆர்க்கும் ஆர்ப்பு அது - பெரிதாய் முழக்கும் ஆரவார ஒலி, கண்டம் உற்று உள - (அநுமனால் போரில்) துண்டாக்கப் பட்டுள்ள, அரும் கணவர்க்கு ஏங்கிய - தம் அரிய கணவர்களுக்காக ஏக்க முற்று வருந்திய, குண்டல முகத்தியர்க்கு - குண்டலம் விளங்கும் முகங்களையுடைய அரக்கர் மகளிர்க்கு, உவகை கூர - மகிழ்ச்சி மேலோங்கி வர, அண்டம் உற்றது - இவ்வண்ட கோளம் எங்கும் சென்று பரவியது. ஏ: அசை.

மா நகர் ஆர்ப்பு அண்ட முற்றது என்க. இனி, அண்ட முற்றது ஆர்க்கும் ஆர்ப்பது என இயைத்து, அண்டகோளம் முற்றும் சென்று

ஒலிக்கும் ஆரவாரவொலி குண்டல முகத்தியர்க்கு உவகை கூர விளங்கியது என முடிவு செய்தலும் ஒன்றும், இதில் அவலச் சுவையில், உவகைச் சுவை தோன்றினமை கூறப்பட்டது.

(பி-ம்.) 1. கொண்டன னெதிர்; கொண்டலி னெதிர்; கொண்டணை கின்றனர் கொற்ற மாநகர்க்(கு). 2. அண்ட முற்றுள.
3. கண்டமற் றுலந்ததங்: கண்டமற் றிறந்ததங்: கணவர்க் கோங்கிய; கணவர்க் கெய்திய.
4. முகத்திய ரோகை கூரவே; ஓகை கூறவே. (6)

1409. வடியுடைக் கனற்படை வயவர் மால்கரி
கொடியுடைத் தேர்பரி கொண்டு வீசலின்
இடிபடச் சிதைந்தமால் வரையி னில்லெலாம்
பொடிபடக் கிடந்தன கண்டு போயினுன்.

வடி உடை கனல் படை வயவர்-கூர்மை பொருந்திய நெருப்பைப் போன்ற கொடிய ஆயுதங்களைக் கொண்ட போர் வீரர்களாகிய அரக்கர்களையும், மால் கரி - பெரிய யானைகளையும், கொடிஉடை தேர் - கொடிகளையுடைய தேர்களையும், பரி- குதிரைகளையும், கொண்டு வீசலின் - எடுத்து அநுமன் (முன்) வீசியதால், இடி பட சிதைந்த - இடிந்து நொருங்கிய. மால் வரையின் இல் எலாம் - பெரிய மலைகள் போன்ற மாளிகைகள் எல்லாம், பொடி பட கிடந்தன கண்டு - பொடியாய் உதிர்ந்து கிடந்தவைகளைப் பார்த்துக் கொண்டு, போயினன் - (அநுமன் நகர வீதிகள் வழியே அரக்கர்கள் இழுத்துச் செல்லச்) சென்றான்.

அநுமன் மனத்தினுள் மகிழ்ச்சியை வெளிக்காட்டாது சென்றமை இச் செய்யுளில் கூறப் பெற்றது.

(பி-ம்.) 1. வடிவுடைக் கனற்படை; வடிசுடர்ப் படைக்கலம்.

1050. (முயிறலைத் தெழுமுது மரத்தின் மொய்ம்புதோள்)
கயிறலைப் புண்டது கண்டுங் காண்கிலா
தெயிறலைத் தெழுமித ழரக்க ரேழையர்
வயிறலைத் திரியலின் மயங்கி னூர்பலர்,

முயிறு - முயிறு என்னும் ஒருவகை எறும்புகள், அலைத்து எழு - துன்புறுத்தி மேற் செல்லும், முது மரத்தின் - ஒரு பழைய மரத்தைப் போன்ற. மொய்ம்பு தோள்- அநுமனது வலிய தோள்களை, கயிறு அலைப்பு உண்டது கண்டும் - பாசத்தால் கட்டி வருத்தியிருப்பதைப் பார்த்தும், காண்கிலாது - (பயத்தினால்) பார்க்காமல், எயிறு அலைத்து எழும் இதழ் அரக்கர் ஏழையர் - பற்கள் (அச்சத்தினால்) நடுங்கி மேற்கிளம்பும்

இதழ்களையுடைய அரக்கர் மாதர்கள், வயிறு அலைத்து இரியலின் - வயிற்றில் அடித்துக்கொண்டு போகுமிட மறியாமல் நிலை கெட்டு ஓடுதலினால், பலர் மயங்கினர் - பலர் மயக்க முறுவாராயினர்.

முயிறு செந்நிறமான ஒருவகைக் கொடிய எறும்பு; இது முசிறு என்று வழங்கப் பெறும்; 'முயிறு மூசு குடம்பை' (நற். 180;) சில மரங்களில் இவை கூட்டமாகக் கூடு கட்டி மரம் முழுவதும் மொய்த்துக் கொண்டு வாழும்; மரத்தில் ஏறினவர்கள் அல்லது பற்றினவர்கள் மீது இவை பல ஒருமித்து விரைவில் ஏறிக் கடித்துத் துன்புறுத்தும். இங்கு அநுமன் முதுமரத்திற்கும், பாசம் முயிறுகளின் தொடர்புக்கும் உவமைகள். ஏழையர் வயிறலைத் திரிய அதுகண்டு அரக்கர் மயங்கினர் என்று ஒரு சாரார் பொருள் கூறுவர். ஏழையர், பகைவன் பிணிப்புண்டதைக் கண்டும், அச்சத்தால் அதனை உணராமல் அஞ்சினர் என்க. மொய்ம்புத் தோள் என்று இருக்க வேண்டியது செய்யுள் ஓசை நயம் நோக்கி இயல் பாயிற்று. வயிறலைத்தல்; 979.; கண்டு காண்கிலாது, கண்டு காணுதல்: திருச்சிற். 162.

(பி-ம்.) 1. முயறலைத் தெழுமுது நிலத்தின் முன்புதோள்; முயறலைத் தெழுமதி மெய்யள் மூரித்தோள்: முது மரத்தின் முன்புதோள். 2. கயிறசைக் கின்றதைக் காண்கி லார்சிலர்: கண்டுங் காண்கிலர்; காண்கிலார். 3. எயிறலைத் தழுதெழு மரக்கர். 4. மயங்கி னர்சிலர். (8)

1051. ஆர்ப்புற வஞ்சின ரடங்கி னர்பலர்
போர்ப்புறச் செயலினைப் புகல்கின் றார்பலர்
பார்ப்புறப் பார்ப்புறப் பயத்தி னற்பதைத்
தூர்ப்புறத் திரியலுற் றோடு வார்பலர்.

பலர் ஆர்ப்பு உற அஞ்சினர் அடங்கினர் - பல அரக்கர்கள் நகரில் பெரிய ஆரவாரம் உண்டாக, (அதனைக் கேட்டுப்) பயந்தவர்களாய் அடங்கியிருந்தனர்; பலர் - மற்றும் பல அரக்கர்கள், போர் புற செயலினை புகல்கின்றார் - அநுமன் போர்க்களத்தில் செய்த வீரச் செயல்களை எடுத்துக் கூறுவாராயினர்; பலர் - வேறு பல அரக்கர்கள், பார்ப்பு உற பார்ப்பு உற - (அநுமனைப்) பார்க்கும் போதெல்லாம், பயத்தினால் பதைத்து - அச்சத்தால் நடுங்கி, ஊர் புறத்து - நகரின் வெளிப்புறம் நோக்கி, இரியல் உற்று ஓடுவார் - நிலைகெட்டு ஓடுவாராயினர்.

ஆர்ப்புற்றமை; 1048. போர்ப்புறச்செயல் - புறப் பொருளின் பாற்படும் போர்ச் செயல் என்னலும் ஆம். பார்ப்புற பார்ப்புற: அடுக்கு மிகுதிப் பொருளது.

(பி-ம்.) 1. ஆர்ப்புறு மலர்களை யடக்கி ஞர்சிலர்: அடங்கு வார்பலர்.
2. போர்ப்புறச் செலவினை: புகழ்கின் ருர்பலர்; புகழ்கின் ருர்சிலர்.
4. ஆர்ப்புறந் திரியனுற் ருடு வார்சிலர்: ஓடு வார்சிலர். (9)

1052. காந்துறு கதழெயிற் றரவின் கட்டொரு
(பூந்துணர் சேர்த்தெனப் பொலியும் வாண்முகம்)
தேர்ந்துறு பொருள்பெற வெண்ணிச் செய்யுமின்
வேந்துறல் பழுதென விளம்பு வார்சிலர்.

'காந்து உறு - எரிக்குந் தன்மை பொருந்திய, கதழ் எயிற்று அரவின் - கொடுமையான விஷப் பற்களையுடைய பாம்பின், கட்டு - (இந்தப் பிரமாத்திரப்) பிணிப்பானது, ஒரு பூம் துணர் சேர்த்து என - ஒரு பூமாலை கொண்டு கட்டினது போல, வாண் முகம் பொலியும் - ஒளி பொருந்திய (இந்தக் குரங்கின்) முகம் விளங்குகின்றது; (ஆதலால்), உறு பொருள் பெற தேர்ந்து எண்ணி - சிறந்த நன்மையை அடைய நன்ருக ஆராய்ந்து எண்ணி, செய்யுமின் - செய்யுங்கள்; வேந்து உறல் - (இந் நிலையில் இக் குரங்கு) அரசனிடம் போய்ச் சேர்தல், பழுது என - தவருதும்' என்று, சிலர் விளம்புவார்-சில அரக்கர் சொல்லலாஞர்.

சிலர் 'பிரமாத்திரத்தால் இக் குரங்கு வருந்துவதாக இல்லை; ஒரு பூமாலை பூண்டிருப்பது போல இருக்கிறது; இந் நிலையில் இதனை அரசனிடம் கொண்டு போதல் தவருகும்; ஆதலின் யோசித்துச் செய்யுங்கள்' என்றனர். சிலர் அரசனிடம் ஆலோசனையின்றிப் பகைவனை அழைத்துச் செல்லக் கூடாது என்ற உண்மையைத் தம் நுண்ணிய அறிவால் ஊகித்துக் கூறினர். என்றும், ஒரு சில அரக்கர்கள், 'அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங், கடுத்தது காட்டு முகம்' (குறள். 706) என்றபடி. 'இவன் முகப் பொலிவினுல், உண்மையை ஆராய்க என்றும் கூறினர் என்க. இச் செய்யுளின் பின், பாடல்கள் பல சுவடிகளில் மாறிக்கிடக்கின்றன.

(பி-ம்.) 1. காந்துகட் டழிலெயிற் றரவின்: காந்தெழு கதழெயிற்.
2. பூந்துண ரசைத்தெனந்; அசைந்தெனப்: பூந்துணர் மதியெனப் பொலிந்த. 3. தேய்ந்துறு பொருள்பெற.
4. வேய்ந்தது சிறிதென விளம்பு வார்சிலர்: விளம்பு வார்பலர். (10)

1053. ஒளிவரு நாகத்திற் கொல்க லுண்மையன்
(றெளிவர லன்றித னெண்ணம் வேறெனுக்)
களிவரு சிந்தையாற் காண்டி நங்களைச்
சுளிகிலை யாமெனத் தொழுகின் ருர்சிலர்.

'ஒளிவு அரு நாகத்திற்கு - மறைவு என்பது இல்லாது வெளிப்படையாய்ப் பற்றியுள்ள பிரமாத்திரமாகிய பாம்புக்கு, ஒல்கல் - (இக் குரங்கு) தளர்வது போலக் காணப்படுவது, உண்மை அன்று - உண்மையில்லை (பாசாங்கு ஆகும்); எளிவரல் அன்று - (இது செய்துள்ள அட்டகாசங்களை நோக்குமிடத்து), இஃது எளிதில் கட்டுப்படக் கூடியதன்று; இதன் எண்ணம் வேறு என - இதனுடைய உள் எண்ணம் வேறு (கெட்டதாக இருக்கும்') என்று எண்ணி, சிலர்-சில அரக்கர்கள், (அநுமனிடம் அச்சங் கொண்டு), 'களி வரு சிந்தையால் காண்டி - மகிழ்ச்சி பொருந்திய மனத்தோடு எங்களைப் பார்ப்பாயாக; நங்களை சுளிகிலை - எங்களைக் கோவிக்காதே'; என - என்று சொல்லி, தொழுகின்றார் - அநுமனைத் தொழுது வணங்குவராயினர். ஆம்; அசை.

ஒளி வரு நாகம் என்று பிரித்தும் பொருள் கொள்ளலாம். இது, அநுமனைக் கட்டி இழுத்துச் செல்லும் அரக்கர் தலைவனை நோக்கிச் சில அரக்கர் கூறியதாகப் பொருள் கொள்வாரும் உளர்.

(பி-ம்.) 1. ஒல்கி வண்மையால்; ஒல்க லாமையன்(று); ஒல்கிற் றில்லையால்; ஒல்குந் தன்மையால்; ஒளிவரும் பாசத்துக் கொல்கிற் றில்லியால்.
2. இளிவா லின்றுபின்; எளிவா லின்று; எளிதா வன்றிதின்;
3. களிபெறுஞ் சிந்தையாற்; சிந்தையாய்க் காண்டி; காண்டியெங்களைச். 4. களியலை; சுளியலை நீயெனத். (11)

1054. பைங்கழ லநுமனைப் பிணித்த பாந்தளைக்
கிங்கர ரொருபுடைக் கிளர்ந்து பற்றினர்
ஐம்பதி னுயிர ரளவி லாற்றலர்
மொய்ம்பினி னெறுழ்வலிக் கருளன் மும்மையார்.

பைம் கழல் அநுமனை - பசிய (பொன்னாலாகிய) வீரக்கழல் அணிந்த அநுமனை, பிணித்த பாந்தளை - பற்றியிருந்த பாம்பு வடிவான பிரமாத்திரத்தை, மொய்ம்பினின் - பராக்கிரமத்தில், எறுழ் வலி கருளன் - மிக்க வலிமையுற்ற கருடாழ்வானை விட, மும்மையார் - மும் மடங்கு அதிகமான வலிமையுடையவர்களும், அளவு இல் ஆற்றலர் - அளவில்லாத சக்தி வாய்ந்தவர்களுமான, கிங்கரர் ஐம்பதினுயிரர் - ஐம்பதினாயிரம் ஏவலாளர்கள், ஒருபுடை - ஒரு புறமாய், கிளர்ந்து - கூடி, பற்றினர் - பற்றிச் செல்வாராயினர்.

பைங்கழல் - பசுமையான கழல் என்றமையால், பசுமை நிறமான பொன்னாற் செய்த கழல் என்று வருவித்துப் பொருள் கொள்ளப்பட்டது;

பசுமை: அழகும் ஆம். அரக்கர்களின் கூற்றுக்களுக்கு இடையே நிகழ்ச்சிகளையும் கூறிச் செல்வது, அநுமன் மேலும் மேலும் நகருக்குள்ளே நுழைந்து கொண்டிருப்பதைக் காட்டும் கவிசாதுரியமாகும்.

(பி-ம்.) 1. பிணித்த பாசத்தைக். 2. ஒருபுடைப் பற்றி யிர்க்கின்றார்.
3. ஆயிர மரக்க ராண்டொழில்; அரக்க ரோடெ ழில்.
4. மொய்ம்பினர்: பொங்கிய கலுழனிற் பொலிந்த மும்மையார். (12)

1055. *திண்டிற லரக்கர்தஞ் செருக்குச் சிந்துவான்*
*தண்டலி றன்னுருக் கரந்த தன்மையான்*
*மண்டமர் தொடங்கிய வான ரத்துருக்*
*கொண்டன னந்தகன் கொல்லென் றார்பலர்.*

'திண் திறல் அரக்கர் தம் செருக்கு சிந்துவான் - மிக்க வலிமையுடைய அரக்கர்களுடைய கருவத்தை அழிக்கும் பொருட்டு, அந்தகன் (முன் இராவணனுக்குத் தோற்றோடிய) கூற்றுவன், தண்டல் இல் தன் உரு கரந்த தன்மையான் - தடைப்படாத தன் உருவத்தை மறைத்துக் கொண்ட நிலையனாகி, மண்டு அமர் தொடங்கிய வானரத்து உரு கொண்டனன் கொல் - மிகுந்த போர் தொடங்கிச் செய்த (இந்த) வானரத்தின் உருவத்தைக்கொண்டு வந்தான் போலும்'; என்றார் பலர் - என்று கூறினார் பல அரக்கர்கள்.

திண் திறல்: ஒருபொருட் பன்மொழி. கூற்று இராவணனுக்குத் தோற்றது, உத்தர. திக்குவிசயப் படலத்திற் காண்க. கொல் - ஐயப்பொருளது. இஃது அநுமன் யாவன் என்பதைப் பற்றி அரக்கர் தமக்குள் ஆராய்ந்தமையைத் தெரிவிப்பதாகும்.

(பி-ம்.) 1. திண்டிற லரக்கரைச் செருக்குஞ் சிந்தையால்; செருக்குஞ் சிந்துவான். 2. கரந்து தாழ்விலா.
3. மண்டமர் தொடங்கினன்: தொடங்குற.
4. கொல்லென் பார்பலர்; சிலர். (13)

1056. *அரமியத் தலந்தொறு மம்பொன் மாளிகைத்*
*தரமுறு நிலந்தொறுஞ் சாள ரந்தொறும்*
*முரசெறி கடைதொறு மிரைத்து மொய்த்தனர்*
*நிரைவளை மகளிரு நிருதர் மைந்தரும்.*

நிரை வளை மகளிரும் நிருதர் மைந்தரும் - (கைகளில்) வரிசையாகப் பல வளையல்கள் அணிந்த அரக்க மகளிரும், அரக்க வாலிபர்களும்,

அரமிய தலம் தொறும் - மாளிகைகளின் மேல் இடங்கள் எல்லாவற்றிலும், அம் பொன் மாளிகை தரம் உறு நிலம் தொறும் - அழகிய பொன்னால் அமைந்ததும் சிறப்புவாய்ந்ததுமான இடங்களிலும், சாளரம் தொறும் - பலகணிகளிடங்களிலும், முரசு எறி கடை தொறும், பேரிகைகள் முழக்கும் இடங்களிலும், இரைத்து மொய்த்தனர் - முழக்கமிட்டுக் கொண்டு கூடி நெருங்கியிருந்தனர்.

தர முறு நிலம்; தரம் - மேன்மை பொருந்திய நிலை; தரம், மலை என்பாருமுளர். இச் செய்யுள், வீதியில் இடமில்லாமையைச் சுட்டியது.

(பி-ம்.) 2. தாமுறு நிலைதொறுஞ்.
3. நிரைத்து மொய்த்தனர்; இரைந்து மொய்த்தனர்.
4. மகளிரு நிரைந்த மைந்தரும்; நிரைந்ந மாந்தரும். (14)

1057. *கயிலையி னொருதனிக் கணிச்சி வானவன்*
*மயிலியற் சீதைதன் கற்பின் மாட்சியால்*
*எயிலுடைத் திருநகர் சிதைப்ப வெய்தினன்*
*அயிலெயிற் றொருகுரங் காயென் பார்பலர்.*

'கயிலையின் ஒரு தனி கணிச்சி வானவன் - கயிலை மலை மீது உள்ள ஒப்பற்ற மழு என்னும் கோடாலியைத் தன் ஆயுதமாகக் கொண்ட சிவ பிரானுன தேவன், மயில் இயல் சீதை தன் கற்பின் மாட்சியால் - மயில் போன்ற சாயலையுடைய சீதையின் கற்பின் பெருமையால், அயில் எயிற்று ஒரு குரங்காய் - கூரிய பற்களையுடைய ஒரு குரங்கு வடிவாய், எயில் உடை திருநகர் சிதைப்ப எய்தினன் - மதில்களையுடைய இந்த அழகிய இலங்கை நகரை அழிக்க வந்து அடைந்துள்ளான்' என்பார் பலர் - என்று பல அரக்கர்கள் கூறுவாராயினர்.

கணிச்சி - சூலாயுதமும் ஆம். கற்பின் மாட்சி; மனைமாட்சி (குறள் 60) என்பது போல. சீதை தன் கற்பின் மாட்சியால், கணிச்சி வானவன் ஒரு குரங்காய்த் திருநகர் சிதைப்ப எய்தினன் என்ற கருத்தினை ஓர்க.

(பி-ம்.) 3. சிதைப்ப வெண்ணினன்; சிதைக்க வெண்ணினன்.
4. அயிலெயிற் றுக்குரங்காய்: அயிலெயிற் றுக்குரங்காமென் பார்: என் ரூர்சிலர்; என் பார்சிலர். (15)

1058. *அரம்பையர் விஞ்சை நாட்டளக வல்லியர்*
*நரம்பினு மினியசொன் னாக நாடியர்*
*கரும்பிசைச் சித்திய ரியக்கர் கன்னியர்*
*வரம்பறு சும்மையர் நலைம யங்கினர்.*

அரம்பையர் - தேவ மகளிர், விஞ்சை நாட்டு அளக வல்லியர் - வித்தியாதர நாட்டுக் கூந்தலையுடைய கொடி போன்ற பெண்கள், நரம்பினும் இனிய சொல் நாக நாடியர் - நரம்புக் கருவியாகிய வீணையை விட இனிமையான சொற்களையுடைய நாக கன்னியர், கரும்பு இசை சித்தியர் - கரும்பின் சுவை போன்ற இனிய இசைகளைப் பாடும் சித்தர் கணப் பெண்கள், இயக்கர் கன்னியர் - யக்ஷர் குல மகளிர், (ஆகிய இவர்கள்), வரம்பு அறு சும்மையர் - அளவற்ற தொகுதியினராய், தலை மயங்கினர் - பல இடங்களிலும் கலந்து நிறைந்திருந்தனர்.

அளகம் - தலையின் முன் பக்கமுள்ள மயிர்; கூந்தலின் ஐம்பால் வகையுள் ஒன்றென்பர் நச்சினார்க்கினியர். சீவக. 2437. உரை. சும்மை- ஒலியும் ஆம்; 'இழுமென் சும்மை' பொருந: 65. தலை மயங்குதல் - கலந்திருத்தல்; பால. நாட்டுப்: 54. இதிற் கூறப் பெற்ற தேவர் மகளிர் முதலியவர், இராவணனால் அபகரிக்கப்பட்டு இலங்கையில் கொண்டு வந்து வைத்திருந்த அவனுடைய காதன் மகளிர் ஆவர்; உத்தர. திக்கு விசயப்: 92, 93.

(பி-ம்.) 3. கரும்பியல் சித்தியர். 4. சும்மையின் றலை மயங்கினர். (16)

1059. *நீரிடைக் கண்டுயி னெடிய நேமியும்*
*தாருடைத் தனிமல ருலகின் றாதையும்*
*ஓருடற் கொண்டுதம் முருவ மாறினர்*
*பாரிடைப் புகுந்தனர் பகைத்தென் பார்பலர்.*

'நீர் இடை கண் துயில் நெடிய நேமியும் - பிரளய வெள்ளத்தில் யோக நித்திரை செய்யும் பெரிய சக்கராயுதத்தையுடைய திருமாலும், தனி மலர் தார் உடை உலகின் தாதையும் - ஒப்பற்ற தாமரை மலர் மாலையை உடைய உலகங்களைப் படைத்த ஆதி பிதாவாகிய பிரம தேவனும், ஓர் உடல் கொண்டு - சேர்ந்து ஓர் உடலைத் தாங்கி, தம் உருவம் மாறினர் - தமது வடிவை மாற்றிக் கொண்டவர்களாய், பாரிடை புகுந்தனர் - தரையில் வந்து அவதரித்துள்ளார்; பகைத்து என் - நாம் பகை கொண்டு போரிடுவதால் என்ன பயன் உண்டாகப் போகிறது?. (ஒன்றும் பயனில்லை என்பதாம்), என்பார் பலர் - என்று கூறினர் பலர்.

நேமி - சக்கராயுதம்; அது இங்கு அவ்வாயுதத்தையுடைய திருமாலுக்கு, ஆகுபெயராய் வந்தது; 1112; இராசராசனுலா. 28. நீரிடைக் கண்டுயில் நெடிய நேமி-நாராயணன்; நாராயணன் நீரைத் தன்னிருப்பிட

மாக உடையவன்; நீர் - பாற்கடல் நீரும் ஆம். திருமால் கண் துயில்தலை யோக நித்திரை என்றும் அறிதுயில் என்றும் கூறுவர்; 'உறங்குதியா லுறங் காதாய்' என்றமையும் நோக்குக; (ஆரண்ய, விராதன்வதைப்; 57.). தனி மலர் - சிறந்த தாமரை மலர்; பிரமதேவன் தாமரைப் பூமாலையுடை யவன். அநுமனைப் பலர் திருமாலும் பிரமனும் ஒருருவாய் வந்தவன் என்று கருதினர். முன் சிவபிரானே இந்தக் குரங்காய் வந்தானென்று சிலர் கருதி யது போல, (1057.) மற்றும் பலர் திருமாலும், பிரம தேவனும் சேர்ந்து ஒருரு எடுத்து இங்ஙனம் ஒரு குரங்காய் வந்துள்ளார் என்றும் கருதலாயி னர். ஒப்பு:, 'சங்கர னயன்மா லென்பார் தாமெனுந் தரத்த் தாமே. (989)' 'நேமியோ குலிசியோ நெடுங்க ணிச்சியோ, தாமரைக் கிழவனோ' (1112.)

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப் பாடல் உள்ளது:

இனையன பற்பல ரிசைப்ப வெந்திறல்
அநுமனை அமர்க்களம் நின்று வஞ்சகர்
புனைதிரு நகரிடைக் கொண்டு போதலை
நினையினர் நெடிதுற நெருக்கி நேர்ந்துளார்.

(பி-ம்.) 1. நீருடைக் கண்டுயில்: நெடிய நேமியான்.
2. உலகிற் ருதையும்: தாருடைத் தவிசுறுந் தருமத் தேவனும்.
3. உருவு மாற்றினர். 4. என் பார்சிலர். (17)

## அநுமனைக் கண்ட சிலர் இரங்கினமை

1060. *அரக்கரு மரக்கியர் குழாமு மல்லவர்*
*கரக்கிலர் நெடுமழைக் கண்ணி னீரது*
*விரைக்குழற் சீதைதன் மெலிவு நோக்கியோ*
*இரக்கமோ வறத்தின தெண்மை யேகொலோ.*

அரக்கரும் அரக்கியர் குழாமும் அல்லவர் - அரக்க ஆடவர் மாதர் களுடையகூட்டம் அல்லாதவர்களான தேவர் முதலியோர், நெடு மழை கண்ணின் நீர் அது கரக்கிலர் - நெடிய மழைபோலும் (பெருகிய தம்) கண்ணீரை மறைக்காதவர்களாயினர்; (அவ்வாறு அவர்கள் இருந்தது). விரை குழல் சீதை தன் - மணம் பொருந்திய சீதாதேவியின், மெலிவு நோக்கியோ - துன்பத்தைக் கருதியோ, இரக்கமோ - அநுமனுக்கு உண்டான துன்பத்தினால் ஏற்பட்ட இரக்கத்தாலோ, அறத்தின் எண்மையே கொலோ - தருமத்தின் பாற் கொண்ட எண்ணத்தினா லேயோ?.

அரக்கர் யாவரும் அச்சம், வெறுப்பு, சினம் ஆகியவை கொண்டிருக்க, தேவர் முதலியோர் இரக்கமும் துன்பமும் கொண்டிருந்தனர் என்று கூறப்பட்டது. 'அறத்தின் எண்மையே கொலோ' தருமத்தின்; பால் இவர்களுக்குள்ள இயல்பான எளிமைத் தன்மையினலோ என்னலும் ஆம். கொல்: ஐயப் பொருளை உணர்த்திய உரிச்சொல்.

(பி-ம்) 1. குழுவு மல்லவர். 2. கரக்கிலா நெடுமழை.
4. எளிமையேகொலாம்; உரிமை யேகொலோ. (18)

## அநுமன் கொண்ட கருத்து 1061-1066

1061. *ஆண்டொழி லநுமனு மவரொ டேகினன்*
*மீண்டிலன் வேறென்றும் விரும்ப லுற்றிலன்*
*ஈண்டிது வேதொடர்ந் திலங்கை வேந்தனைக்*
*காண்டலே நலனெனக் கருத்தி னெண்ணினன்.*

ஆண் தொழில் அநுமனும் - ஆண்மைத் தொழிலின் மிக்க அநுமனும், மீண்டிலன் - திரும்பிச் செல்லாதவனும், வேறு ஒன்றும் விரும்பல் உற்றிலன் - வேறு ஒன்றையும் விரும்பாதவனும், 'ஈண்டு இதுவே தொடர்ந்து - இங்கு இப்படியே தொடர்ந்து, இலங்கை வேந்தனைக் காண்டலே நலன் என - இலங்கைக்கு அரசனை இராவணனைப் பார்ப்பதே நல்லதாகும்' என்று, கருத்தின் எண்ணினன் - மனத்தில் எண்ணினவனுமாகி, அவரொடு ஏகினன் - அவ்வரக்கர்களுடன் தானும் கூடச் சென்றான்.

மீண்டிலன் - கருத்து மீண்டவனாய் இல்லாதவனாய்; வெறொன்றும் விரும்பலுற்றலன் - தன்னை இகழ்ந்துரைக்கும் அரக்கர்களை அங்கேயே வதைத்தல் போன்ற வேறோர் எண்ணத்தையும் விரும்பாதவனாய்; என்றும் கூறலாம்.

(பி-ம்.) 2. மீண்டிலன் வேறிலன்; மீண்டினி வென்றலும்; மீண்டிலன் வேண்டிலன்; மீண்டலு மேற்றலும்.
3. ஈண்டது வேதொடர்ந்து; ஈண்டினி யான்றொடர்ந்(து)
4. கருதி யுன்னுவான். (19

1062. *எந்தைய தருளினு மிராமன் சேவடி*
*சிந்தைசெய் நலத்தினுந் தேவ ரீந்தன*
*முந்துள வரத்தினும் பாச முற்றுறச்*
*சிந்துவெ னயர்வுறு சிந்தை சீரிதால்.*

எந்தை அது அருளினும் - என் தந்தையாகிய வாயுதேவருடைய திருவருளாலும், இராமன் சே அடி சிந்தை செய் நலத்தினும் - இராம பிரான் சிவந்த திருவடிகளை (யான்) தியானம் செய்யும் புண்ணியத்தி னுலும், தேவர் ஈந்தன முந்து உள வரத்தினும் - எனக்குத் தேவர்கள் அருளிய முன்னுள்ளதான வரங்களாலும், பாசம் முற்றுற சிந்துவென் - இந்தப் பிரமாத்திரத்தின் கட்டு முழுவதும் சிதறிப் போகச் செய்வேன்: (ஆயினும்), அயர்வு உறு சிந்தை சீரிது - இதனுல் நான் களைப்புற்ற மனத்தோடு இருப்பதே சிறப்புடைத்தாகும். ஆல்: அசை.

அநுமனுக்கு அவன் தந்தையாகிய வாயுதேவரும், மற்றை வான வரும் அருள் புரிந்தவரங்களின் வரலாறு; உத்தர. அநுமப்படலம் காண்க. 'தான் இப் பிரமாத்திரத்தால் கட்டுண்டு மயங்கியதாக இருந் தால், இவர்கள் தன்னை இராவணனிடம் ஈர்த்துச் செல்வர்; அதனுல் இராவணனைக் காண்டலும், அவனுக்கு நன் மொழி கூறலும், அம் மொழி கேட்டு அவன் பிராட்டியை இராமபிரானிடம் கொண்டு விடவும் இடமேற்படும். அஃதின்றேல் அவனுடைய மன நிலையையும் மற்று வலிமையையும் அறிய இடமேற்படும்;' என்பது கருதி அநுமன் அவ்வரக்கர்கள் தன்னைக் கட்டியீர்த்துச் செல்ல அடங்கியிருந் தான் என்பதாம். அடுத்து வரும் நான்கு கவிகளும் அநுமனுடைய இவ் வெண்ணத்தை மேலும் விளக்குவன காணலாம்.

(பி-ம்.) 1. எந்தைதன் னருளினும்.
2. நலத்தினுஞ் சீதை வானவர்; நலத்தினுந் தெய்வ வந்தணர்.
3. தந்துள வரத்தினுந் தறுகட் பாசமுஞ்; முந்துநன் மொழியினும் பாசம் முற்றுறச்.
4. சிந்துவெ னுய்வுறு; சிந்துவென் றேருகிற் சீரிதல்லவால். (20)

1063. *வளையெயிற் றரக்கனை யுற்று மந்திரத்*
*தளவறு முதியரு மறிய வாணையால்*
*விளைவன விளம்பினுன் மிதிலை நாடியை*
*இளகின னென்வயி னீத லேயுமால்.*

'வளை எயிற்று அரக்கனை உற்று - வளைந்த பற்களையுடைய அரக்க னை இராவணனை அடைந்து, மந்திரத்து அளவு அறு முதியரும் அறிய - அவனுடைய ஆலோசனை சபையில் உள்ள அளவிடுதற்கு முடியாத முதியோர்களும் அறியும்படி, ஆணையால் விளைவன விளம்பினுல் - இராம பிரான் கட்டளையின்படி மேல் நிகழக் கூடிய செயல்களை யான் எடுத்துக் கூறினுல், இளகினன் - மனம் இளக்க முற்றவனுய், மிதிலை நாடியை - மைதிலியை, என் வயின் ஈதல் ஏயும் - என்னிடம் கொடுத்து விடக்கூடும். ஆல்: அசை.

மிதிலை நாடி - சீதாதேவி; மிதிலை நாட்டிற்குச் சிறப்பை அளிப்பவள்; காழி நாடன், ஆலி நாடன், கம்ப நாடன், மல்லி நாடி எனப்பெயர்கள் ஆன்றோர்க்கு வழங்கப் பெறுவனவும் நோக்குக.

(பி-ம்.) 1. அரக்கனைக் கண்டு மந்திரந். 2. அறிய வாணையின்.
3. வினைவினை விளம்பினன்; வினைவல விளம்பினல்; வினைவினை யியம்பினல்:
4. இளகின னயந்தவ னியதல்: இளகிநெஞ் சென்வயின். (21)

1064. *அல்லதூஉ மவனுடைத் துணைவ ராயினர்க்*
*கெல்லையுந் தெரிவுறு மெண்ணுந் தேறலாம்*
*வல்லவ னிலைமையு மனமுந் தேறலாம்*
*சொல்லுக முகமெனுந் தூது சொல்லவே.*

'அல்லதூஉம் - அது அல்லாமலும், அவனுடை துணைவர் ஆயினர்க்கு-அந்த இராவணனுடைய துணைவர்களாய் உள்ளவரின், எல்லையும் தெரிவுறும் - அளவும் தெரியலாகும்; எண்ணும் தேறலாம்-அத் துணைவர்களுடைய கணக்கும் தெரிந்து கொள்ளலாம்; முகம் எனும் தூது சொல்லவே-ஓர் அரசனுக்கு முகம் என்று சொல்லத்தக்க தூதனாக நான் போய் (இராமபிரான் சொல்லி அனுப்பிய விஷயத்தை இராவணனிடம்) சொன்னவுடன், சொல் உக - (அவன் வாயினின்று) வார்த்தைகள் சிந்துவன போல வெளிப்பட, வல்லவன் நிலைமையும் மனமும் தேறலாம் - அதனால் வலிமையுடைய அவ்விராவணனுடைய நிலையும், மனப் போக்கும் தெரிந்து கொள்ளலாம்.

எண் - வலிமையும் ஆம். தூதன், அனுப்பிய அரசனுடைய முகம் போன்றவன். அல்லதூஉம்: உயிரளபெடை.

(பி-ம்.) 1. அல்லதென் னுயகன் வரவு மன்னவர்க்:துணைவனு யிற்றேல்.
2. எல்லையுந் தெளிவுறும்: என்றுந் தேறலாம்:தேரலாம்:எல்லையில் படைத்துணை யிசைந்த தன்மையில்.
3. வல்லவர்:மனமுந் தோன்றநாம்; மனமுவந்தேர்ந்துரை:வல்லவர் நிலைமையு மற்று நேருறச்.
4. சொன்லுது முகம்; முகமெனத்; முகமே:சொல்லுவ னலமுடைத் தூதின் வாய்க்கவே. (22)

1065. *வாலிதன் னிறுதியும் மரத்திற் குற்றதும்*
*கூலவெஞ் சேனையின் குணிப்பி லாமையும்*
*மேலவன் காதலன் வலியும் மேன்மையும்*
*நீனிறத் திராவண னெஞ்சிற் றைக்குமால்.*

'வாலி தன் இறுதியும் - வாலியின் அழிவும், மரத்திற்கு உற்றதும்- ஏழு மராமரங்களுக்கு நேர்ந்ததும், வெம் கூல சேனையின் குணிப்பு இலாமையும் - கொடிய குரங்கின் படையினுடைய அளவற்ற தன்மையும், மேலவன் காதலன் வலியும் மேன்மையும் - சூரியனுடைய புதல்வனை, சுக்கிரீவனுடைய வலிமையும், பெருமையும், நீல் நிறத்து இராவணன் நெஞ்சில் தைக்கும் - கரு நிறத்தையுடைய இராவணன் மனத்தினுட் புகுந்து பதியும். ஆல்; அசை.

கூலம் - குரங்கு; பிங்களம்; கூலம் - வால்; லாங்கூலம் என்றதன் சிதைவு; வாலின் சிறப்பு நோக்கிக் குரங்கைக் குறித்தது போலும். குணிப்பு - கணக்கு; 986. மேலவன் - சூரியன்; வானில் சஞ்சரிப்பவன் என்பது பொருள். வாலிக் குற்றது முதலியன: இராவணனை அச்சுறுத்தத் தக்கன; அவற்றைக் கூறி அச்சத்தின் வழியால் அவனை நல்வழிப் படுத்தலாமென்று அநுமன் கருதினன் என்க.

(பி-ம்.) 1. மரத்துக் குற்றதும்:உற்றவும்;
2. கூலஞ்சேர் சேனை: சேனையின் பரப்புங் கோளிறைப்.
3. வலியு மெய்ம்மையால்; மேன்மையால்:பாலகன் வலிமையு மெடுத்துப் பன்னினுல்.
4. நீலமெய் யிராவணன்: நெஞ்சி னிற்குமால். (28)

1066. *ஆதலா னரக்கனை யெய்தி யாற்றலும்*
*நீதியு மனக்கொள நிறுவி நின்றதில்*
*பாதியின் மேற்செல நூறிப் பயப்பயப்*
*போதலே கருமமென் றநுமன் போயினுன்.*

'ஆதலால்-ஆகையால், அரக்கனை எய்தி-அரக்கனாகிய இராவணனை யடைந்து, ஆற்றலும் நீதியும் மனம் கொள நிறுவி - இராமபிரானுடைய பராக்கிரமத்தையும், நெறி முறையையும் அவன் உள்ளத்தில் பதியும்படி செய்து, (அவன் இணங்காவிடில்), நின்றதில் - (இதுவரை என்னுற் கொல்லப்பட்டவை போக) மீதியாய் உள்ள அரக்கர் சேனையில், பாதியின் மேல் செல நூறி - பாதிக்கு மேலாகும்படி அழித்து, பயப்பய போதலே-(அவசரப்படாமல்) மெதுவாகப் போவதே, கருமம் என்று- நான் செய்யத் தக்க காரியமாகும்' என்று எண்ணி, அநுமன் போயினுன் -அநுமன் அடங்கி அவ்வரக்கருடன் சென்றுன்.

பயப்பய - மெதுவாக; இரட்டைக் கிளவி; 'பாடகக் காலினுரைப் பயப்பயக் கொண்டு போனுர்' (பால. எழுச்சிப்: 53). நிறுவி, நூறி என்றமையால், நூறுதலாகிய தன் கடமையைச் செய்யவேண்டு

மென்றும், ஆனால் கொடுமதியான அவன் அச் சொற்களுக்கு இணங்கானென்றும் கருதினமையாகும். பாதியின் மேற்செல என்றது. அரக்கனின் படையில் பெரும் பாகத்தை என்பதாம். அன்றியும், முன்பு கொன்றது பாதி, நின்றது பாதி; அப் பாதியையும் கொன்று எனக் கொள்வாரும் உளர்.

(பி-ம்.) 2. நீதியற் கரனுயிர் குடித்த செய்தியும்; குடித்த செவ்வியும்:நீதியு மனங்கொள நிறுத்து நின்றது.

3. பாதியு மேற்செல:நூறிப் பையவே.

4. கருமமென் றுணரப் போயினன். (24)

## அநுமன் கட்டுண்ட செய்தியை இராவணன் அறிதல் 1067-1070.

1067. *கடவுளர்க் கரசனைக் கடந்த தோன்றலும்*
*புடைவரும் பெரும்படைப் புணரி போர்த்தெழ*
*விடைபிணிப் புண்டது போலும் வீரனைக்*
*குடைகெழு மன்னனிற் கொண்டு போயினான்,*

(இவ்வாறாக), கடவுளர்க்கு அரசனை கடந்த தோன்றலும் - தேவர்களுக்கு அரசனான இந்திரனை (போரில் சிறைபிடித்து) வென்ற வீரனான இந்திரசித்தும், புடை வரும் பெரும் படை புணரி போர்த்து எழ-பக்கங்களில் சூழ்ந்து வரும் பெரிய அரக்கர் சேனையாகிய கடல் கவிந்து வர, விடை பிணிப்பு உண்டது போலும் வீரனை - ஓர் எருது கட்டுண்டது போல விளங்கும் அநுமனை, குடை கெழு மன்னன் இல் கொண்டு போயினான் - (கொற்றக் குடையோடு விளங்கும் (அரக்கர்) அரசனான இராவணன் இருக்கும் இடத்திற்கு (அரண்மனைக்குப்) பற்றிக் கொண்டு சென்றான்.

விடை. ஆண்மைக்கும் பெருமிதத்திற்கும் உறைவிடமானது; 'கயிறரி, யெருத்திற் கதழுந்துறைவன்' (குறுந். 117: 4.)

(பி-ம்.) 3. இடையினிற் சடையன் போலும் வீரனைக்.

4. குடைகெழு மன்னன்முன். (25)

1068. *தூதுவ ரோடினர் தொழுது தொல்லைநாள்*
*மாதிரங் கடந்தவற் குறுகி மன்னநின்*
*காதலன் மரைமலர்க் கடவுள் வாளியால்*
*ஏதில்வா னரம்பிணிப் புண்ட தாமென்றார்.*

தூதுவர் - இந்திரசித்தினால் அனுப்பப்பெற்ற தூதர்கள், ஓடினர் - முன்னே ஓடினவர்களாய், தொல்லை நாள் மாதிரம் கடந்தவன் குறுகி -

பண்டு திசைகளையெல்லாம் வென்ற இராவணனை அணுகி, தொழுது - வணங்கி, 'மன்ன - அரச! நின் காதலன் - உன் மகனான இந்திரசித்து, மரை மலர் கடவுள் வாளியால் - தாமரை மலர்மீது விளங்கும் பிரம தேவனது படையாகிய பிரமாத்திரத்தால், ஏதில் வானரம் - பகைமை கொண்ட குரங்கு, பிணிப்புண்டது - கட்டப்பட்டுள்ளது', என்றார் - என்று தெரிவித்தனர். ஆம்: அசை.

மரை மலர் - தாமரை மலர்; மரை - தாமரை என்பதின் முதற் குறை: ஏதில் - பகைமை; சீவக. 270, 2885, 2943. இச்செய்யுள் சுருங்கச் சொல்லல் என்னும் அழகுக்கு ஓர் உதாரணமாகும்.

(பி-ம்.) 1. தூதுவர் கடிதுபோய்த் தொழுது சொல்லினர்.
2. மாதிரங் கடந்ததோள் மன்னர் மன்னநின்.
3. காதலன் செருவினிற் கடவு ளாமெனப்: கடவுள் பாசத்தால்; கடவுளேவினால்.
4. பேதியா வானரம் பிணித்திட்டா னென்றார்: ஓதிய வானரம் பிணித்த தோர்கென்றார்: பிணிப் புண்ட தாமென. (26)

1069. கேட்டலுங் கிளர்சுடர் கெட்ட வானென
ஈட்டிருள் விழுங்கிய மார்பின் யானையின்
கோட்டோடும் பொருதபே ராரங் கொண்டெதிர்
நீட்டின னுவகையி னிமிர்ந்த நெஞ்சினன்.

கேட்டலும் - அதனைக் கேட்டவுடன், உவகையில் நிமிர்ந்த நெஞ்சினன் - மகிழ்ச்சியால் ஓங்கிய மனமுடைய இராவணன், கிளர் சுடர் கெட்ட வான் - ஓங்குகின்ற ஒளி அழிந்த ஆகாயத்தை, ஈட்டு இருள் விழுங்கிய என - தொகுக்கப்பட்ட இருள் விழுங்கியது போன்ற, மார்பின் - (மிக்க கருநிறமான) தன் மார்பினிடத்து, யானையின் கோடு ஒடும் பொருத - (முன்) திக்கசங்களின் தந்தங்களோடு புரண்டு மோதிக் கொண்டிருந்த, பேர் ஆரம் கொண்டு - பெரிய முத்துமாலையைக் கழற்றிக் கொண்டு, எதிர் நீட்டினன் - அந்தத் தூதனுக்கு வெகுமதியாகக் கொடுத்தான்.

சுடர் கெட்ட வான் - சூரிய சந்திரர் ஒளியில்லாத வானம்; அதாவது இருண்ட வானம்; இராவணன் நிறம் கருமையாதலின், அவன் மார்புக்குச் சுடர் கெட்ட வானம் உவமையாயிற்று. வானத்தை உவமித்தது: வான்போல் அவன் மார்பு பரந்துள்ளதாதலின். ஈடு - வலிமையும் ஆம். ஈட்டு இருள்; ஒப்பு 'கூட்டுமை போற்சிறந்த கூரிருள்' (நள. சுயம்வர: 102.) இராவணன் தூதுவர்க்குப் பேராரம் நல்கியது, கைகேயி கூனிக்கு முத்தாரம் அளித்ததை நினைப்பூட்டுகின்றது; அயோத்யா. மந்தரை சூழ்ச்சிப். 52. இராவணன் மாலை கொடுத்தது அத்தூதுவரின் தலைவனுக்கு என்க.

(பி-ம்.) 1. கிளர்சுடர் கிடைத்த வானென; கேட்ட வானென: கேட்டலுங் கிளர்மதி நிலவின் கேழென.
2. வீட்டிருள் விழுங்கிய வெள்ளை வாரணக்.
3. கோட்டெதிர் பொருத: பொருதபே ரார்வங் கொண்டெதிர்: கோட்டொடி தரநிமி ராகங் கொண்டெதிர்.
4. உவகையா னிமிர்ந்த: நிறைந்த நெஞ்சினன். (27)

1070. எல்லையி லுவகையா லிவர்ந்த தோளினன்
புல்லுற மலர்ந்தகட் குமுதப் பூவினன்
ஒல்லையி னோடிநீ ருரைத்தென் னாணையால்
கொல்லலை தருகெனக் கூறு வீரென் றான்.

எல்லை இல் உவகையால் இவர்ந்த தோளினன் - அளவு இல்லாத மகிழ்ச்சியால் பூரித்து வளர்ந்த தோள்களையுடையவனும், புல்லுற மலர்ந்த கள் குமுத பூவினன் - தழுவுதல் அமைய மலர்வுற்றுத் தேனை யுடைய குமுதப் பூவைக் கையில் கொண்டு இருப்பவனுமான இரா வணன். 'ஒல்லையில் நீர் ஓடி - விரைவில் நீங்கள் ஓடிச்சென்று, என் ஆணை யால் உரைத்து - என் கட்டளையாகச் சொல்லி, 'கொல்லலை தருக என- அந்தக் குரங்கைக் கொல்லாது உயிருடன் இங்குக் கொண்டு வந்து தரு வாய்' என்று, கூறுவீர் என்றான் - இந்திரசித்தினிடம் சொல்லுவீர்' என்று சொன்னான்.

அரசர்கள் செங்கழுநீர்ப் பூவைக் கையிற் பிடித்திருத்தல் மரபு: சீவக. 429, 1887, 2358; பெருங். 1:38: 308-309; 3.5:87-88 இனி, மலர்ந்த கண் குமுதப் பூவினன் எனப் பிரித்து, மகிழ்ச்சியால் மலர்ந்த கண்களாகிய குமுதப் பூக்களையுடைய இராவணன் என்னலும் ஒன்றும். முதலடி தோளைச் சுட்டியதால் அதற்கிணங்க இரண்டாமடி கையைச் சுட்டியதே நேரிதாகும், தருகென: தொகுத்தல் விகாரம். கொல்லலை- கொல்லாதே.

(பி-ம்.) 1. எல்லையி னுவகையி னெழுந்த தோளினன்.
2. புல்லுற நிமிர்ந்தகட்: குமுதப் பூவனன்: சொல்லினன் றாத்தை நோக்கித் தோன்றல்பரல்.
3. ஒல்லையி னீவிர்போ யுரைத்தென் னாணையால். (28)

## அநுமன் நிலையைப் பிராட்டி கேட்டு வருந்துதல் 1071-78

1071. அவ்வுரை தூதரு மாணை யால்வரும்
தெவ்வுரை நீக்கினா னறியச் செப்பினர்
இவ்வுரை நிகழ்வுழி யிருந்த சீதையாம்
வெவ்வுரை நீங்கினா ணிலைவி ளம்புவாம்.

தூதரும் - தூதர்களும், ஆணையால் - இராவணன் கட்டளைப்படி, அ உரை - (இராவணன் கூறிய) அந்தச் சொற்களை, வரும் - (தம் எதிரே அநுமனைப் பற்றிக் கொண்டு) வரும், தெவ் உரை நீக்கினன் - பகைவர் என்ற சொல்லையே போக்கிய இந்திரசித்து, அறிய செப்பினர் - தெரிந்து கொள்ளும்படி கூறினர்கள்; இ உரை நிகழ் உழி - இப்பேச்சு இவ்வாறு நிகழ்ந்துகொண்டிருக்க, இருந்த - சீதையாம்-அசோக வனத்தில் காவலில் இருந்த சீதாதேவியாகிய, வெவ் உரை நீங்கினள் நிலை விளம்புவாம்- கொடிய பழிச் சொல்லின் நீங்கியவளின் நிலைமையைக் கூறுவோம்.

இதுவும் அடுத்த இரண்டு செய்யுட்களும் கவிக்கூற்று. 'தெவ்வுரை நீக்கினன்'; ஆரண்ய. சூர்ப்பணகை. 117; தெவ்வுரை நீக்கினன் - பகைவர் புகழைப் போக்கியவன் என்றும் பொருள் கொள்ளலாம். உரை - கீர்த்தி, புகழ்; 'உரைசால் பத்தினிக் குயர்ந்தோ ரேத்தலும்' (சிலப். பதிகம்:56.) வெவ்வுரை நீங்கினள் - கொடுஞ் சொல் இல்லாது இனிய மொழி பேசுபவள் என்றலும் ஒன்றும்; இராவணன் மாட்டுச் சாப மொழிகூறி, அவனை அழிக்காத குணமுடைய பிராட்டி என்றும் பொருள் கொள்வர். இனி. 'ஆணையால் வரும் அவ்வுரை அறியச் செப்பினர்' என்றும். 'வெவ்வுரை நீங்கினள் இருந்த சீதையாம்' என்றும் கொண்டு பொருள் கூறலாம். முதனூலில், அநுமன் கட்டுண்ட செய்தியைப் பிராட்டி அறிந்து வருந்தியதாகக் கூறப்படவில்லை.

(பி-ம்.) 1. அவ்வுரை யவருந்தம் மாணை யால்வரும்: அவ்வுரை தூதரு மமர ராகிய.
2. தெவ்வரை நீக்கினன்; தெவ்வுரம் நீக்கினன்: தீயச் செப்பினர்; திரியச் செப்பினர்.
3. இவ்வுரை நிகழ்வுழி யீது கேட்டவச்.
4. செவ்வியள் சீதைதன் நிலைமை செப்புவாம். (29)

1072. *இறுத்தனன் கடிபொழி லெண்ணி லோர்பட*
*ஒறுத்தன னென்றுகொண் டுவக்கின் றுளுயிர்*
*வெறுத்தனள் சோர்வுற வீரற் குற்றதைக்*
*கறுத்தலில் சிந்தையாள் கவன்று கூறினள்.*

கடி பொழில் இறுத்தனன் - மணம் மிக்க அசோகவனத்தை ஒடித் தழித்தான்; எண் இலோர் பட - எண்ணிக்கையற்றவர்களாய் அரக்கர்கள் அழிய, ஒறுத்தனன் - கொன்றான்;' என்று கொண்டு - என்று பிறர் சொன்னதைக் கேட்டு அறிந்து கொண்டு, உவக்கின்றாள் - மகிழ்ச்சியோடிருந்த பிராட்டிக்கு, கறுத்தல் இல் சிந்தையாள் - கோபம் அல்லது

வெறுப்பு இல்லா மனமுடைய திரிசடை, உயிர் வெறுத்தனள்-(பிராட்டி) தன் உயிரை வைத்துக்கொண்டு வாழ்வதில் வெறுப்புற்றவளாய், சோர்வு உற - தளர்ச்சி அடையும்படி, வீரற்கு உற்றதை - மகா வீரனான அநும னுக்கு ஏற்பட்ட துன்ப நிலைமையை, கவன்று கூறினள் - மனக் கவலை யுடன் சொன்னாள்.

கடி - காவலும் ஆம். கறுத்தல் - வெறுத்தல், பகைமைகொள்ளு தல். சிந்தையாள், உவக்கின்றாள் சோர்வுறக் கூறினள் என்றியைக்க. இறுத்தனன்......உவக்கின்றாள்' என்பதைத் திரிசடைக்கே கூட்டியும் பொருள் கொள்ளலாம்.

*(பி-ம்.)* 3. வெறுத்தனள் வெதும்பினள்: வீரற் குற்றநோய்க்; வீரற் குற்ற தோர்.
4. கறுத்தெழு சிந்தையாள்: கவன்று கூறுவாள்; கனன்று கூறி னாள்: பொறுத்திலள் துயரெனுங் கடலிற் புக்கினாள். (30)

1073. *ஓவி யம்புகை யுண்டது போலவோர்*
*பூவின் மெல்லியன் மேனி பொடியுறப்*
*பாவி வேடன்கைப் பார்ப்புற வெய்துறும்*
*தூவி யன்னமன் னாளிவை சொல்லினாள்.*

(பிராட்டி), ஓர் பூவின் மெல்லியல் மேனி - ஒப்பற்ற மலர் போன்ற மென்மைத் தன்மையுடைய தன் திருமேனி, ஓவியம் புகை உண்டது போல - சித்திரம் புகை மூடி ஒளி குறைந்தது போல, பொடி உற - வியர்வை தோன்ற, பாவி வேடன் கை பார்ப்பு உற - பாவியாகிய ஒரு வேடன்கையில் தன் குஞ்சு அகப்பட, வெய்து உறும் - துன்பத்தால் வருந்தும், தூவி அன்னம் அன்னாள் - மென்மையான இறகுகளோடு கூடிய அன்னம் போன்றவளாக, இவை சொல்லினாள் - பின் வருமாறு சொல்லி வருந்துவளாயினள்,

பிராட்டியின், ஓவியம் புகையுண்ட நிலை; 'ஓவியம் புகை யுண்டதே யொக்கின்ற வுருவாள்' (340). பொடியுறல் - வியர்வை தோன்றுதல்; மயிர்க்கூச் செறிதலும் ஆம். பிராட்டி அன்னத்திற்கும் அநுமன், அதன் பார்ப்புக்கும் உவமையாக்கப் பெற்றனர். பார்ப்பினிடத்தில் தாய்ப் பற வைக்குள்ள அன்புபோல, உலக மாதாவாகிய பிராட்டி அநுமனிடத்திற் கொண்ட பற்றும் ஆம்.; 'பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின் றான்' (ஆரண்ய. சடாயுகாண்: 41.) என்றமையும் ஒப்பு நோக்குக.

*(பி-ம்.)* 1. உண்டது போலொளிர்.
2. மெல்லிய மேனி பொடிப்புற; பொடிபட,

3. வேடன்கைப் பற்றுற வெய்துறும்; ஙீகப் பார்ப்புறப் பேதுறும்.
4. இவை சொல்லுவாள். (31)

1074. *உற்றுண் டாய விசும்பை யுருவினுய்*
*முற்றுண் டாய்கலை யாவையு முற்றுறக்*
*கற்றுண் டாயொரு கள்ள வரக்கனுல்*
*பற்றுண் டாயிது வோவறப் பான்மையே.*

'உற்று உண்டாய - மற்றப் பூதங்களைத் தன்னிடங் கொண்டு முதலில் உண்டான, விசும்பை - ஆகாயத்தை, உருவினுய் முற்றுண்டாய் - ஊடுருவி மேற் சென்றவனுகி (அதாவது அதனை அளாவி நிறைந்து,நின்று) கலையாவையும்-அறுபத்து நான்கு என்னும் கலைகள் யாவற்றையும், முழுதுற-முழுவதும் பொருந்த, கற்றுண்டாய் - (சூரியபகவான் முன் எதிரே நின்றவாறு அவனுடன் சென்று) கற்றுத் தேர்ந்தாய்; (அப்படிப்பட்ட நீ) ஒரு கள்ள அரக்கனுல் - ஒரு திருட்டுத்தனமுள்ள இராக்கதனுல், பற்றுண்டாய் - சிறைப்படுத்தப் பெற்றுய்; இதுவோ அற பான்மை - இது தானே தருமத்தின் இயல்பு! ஏ; அசை.

மற்ற பூதங்கள் ஆகாயத்திடமிருந்து உண்டானவை; 'வானின்றிழிந்து வரம்பி கந்த மாபூதத்' (அயோத்யா. மந்திரப். 1,) 'சகல கலைகளையும் கற்ற நீ, ஒரு கள்ள அரக்கனுல் கட்டுண்டாயே' என்று அநுமனை எண்ணிப் பிராட்டி வருந்தினுள். கள்ள அரக்கன் என்றது; இராவணன் திருட்டுத்தனமாய்த் தன்னை யபகரித்து வந்த செயலை அவன் மகன் மேலேற்றிக் கூறியது; இந்திரசித்து அநுமனைக் கட்டி வந்த செயலை ஏவுதற் கருத்தாவாகிய இராவணன் மேலேற்றிக் கூறியதும் ஆம். கள்ளம் - வஞ்சகம் என்றலும் ஒன்றும். உற்றுண்டாய விசும்பை யுருவினுய்' என்பதற்கு முன் அநுமன் விசுவரூபமெடுத்து வானளாவி நின்றதைக் குறிப்பதாகக் கூறுதலும் ஒன்றும். ஆற்றலும் அறிவும் படைத்தவர்கள் நலமடைதல் அறத்தின் பான்மை; இங்குஎதிரிடையான பலன் ஏற்பட்டுள்ளதால் அறத்தின் பான்மையோ! என்று பிராட்டி ஐயமுற்றனள் என்க.

(பி-ம்.) 3. கள்ள வரக்கன்கைப். (32)

1075. *கடல்க டந்து புகுந்தனை கண்டகர்*
*உடல்க டந்துநின் றூழி கடந்திலை*
*அடல்க டந்த திரள்புயத் தண்ணனீ*
*இடர்க டந்திலை வந்திட ரேலுமோ.*

இறை எச்சம்

அடல் கடந்த திரள் புயத்து அண்ணல் - பகைவர் வலிமையைக் கடந்த பருத்த புயங்களையுடைய பெரியோனே! கடல் கடந்து புகுந்தனை - கடலைத் தாண்டி வந்து இந்த இலங்கையில் வந்து புகுந்தாய்; கண்டகர்-முள்போன்ற கொடியோரான பல அரக்கர்களுடைய, உடல் கடந்து நின்று - உடல்களை அழித்து வெற்றி கொண்டு நின்றும், ஊழி கடந்திலை-உன் வாழ்நாளைப் போக்காது வாழ்ந்தனை; (அப்படியிருந்தும்), நீ இடர் கடந்திலை - நீ உன் துன்பங்களினின்றும் நீங்கினையில்லை; இடர் வந்து ஏலுமோ - உனக்கும் இடர் நேருமோ!

கண்டகர் - முட்போன்ற கொடியோர்; பகைவர்; 659. உரை: ஊழி - வாழ்நாள்; 'அன்ன வாக நின்னூழி' (புறநா. 185; 19.) ஊழி கடந்திலை- நீ உன் உயிர் அழியப் பெறுமலிருந்தாய். இடர் கடந்திலை; இடர்கள் தந்திலை என்று பிரித்துப் பொருள் காண்பாரும் உண்டு.

(பி-ம்.) 1. கடர்கடந்து.
2. உடர்கடந்து: நின்னூழி கடந்திலை; நின்னூறு கடந்திலை.
3. திரள்புயத் தையநீ.
4. இடர்கடந்தனை: இடர்க ளைந்திட வந்திட செய்தினாய்: வந்திடர் மேலுமே. (33)

1076. *ஆழி காட்டியென் னாருயிர் காட்டினாய்*
*ஊழி காட்டுவெ னென்றுரைத் தேனது*
*வாழி காட்டுவ துண்டுன் வரைப்புயப்*
*பாழி காட்டிப் பழியையுங் காட்டினாய்.*

'ஆழி காட்டி என் ஆர் உயிர் காட்டினாய் - இராமபிரானுடைய திருவாழியை எனக்கு அடையாளமாகக் காட்டி, (போக்க நினைத்த) என் அரிய உயிரையும் அழியாது நிலை நிற்கச் செய்தாய்; ஊழி காட்டுவென் என்று உரைத்தேன் - கற்பகோடி காலம் உன் வாழ்நாள் நீடிக்கும் என்று உனக்கு உறுதி மொழியான ஆசி கூறினேன்; அது வாழி காட்டுவது உண்டு - அது பொய்க்காது உன் வாழ்நாளை நீடித்துக் காட்டும் என்பது உறுதியேயாகும்; (அவ்வாறாக), உன் வரை புய பாழி காட்டி- உனது மலைபோன்ற புயத்தின் பெருமையை அரக்கர்களுக்குப் போரில் நீ தோன்றச் செய்து, பழியையும் காட்டினாய் - (பின் அவ்வரக்கரிடம் கட்டுப் படும்படியான) ஒரு பழியையும் உண்டாக்கிக் கொண்டாய்,

திருவாழியே பிராட்டியின் உயிரை நிலைக்கச் செய்ததால் 'ஆழி காட்டி யென்னாருயிர் காட்டினாய்' என்றாள். திருவாழி பிராட்டியின் உயிரை நிலைக்கச் செய்தது; 558 1077, பிராட்டி அநுமனுக்கு ஊழி காட்டியது; 561.

(பி-ம்.) 1. ஆருயிர் காட்டினுய்க்(கு); காட்டினே; காட்டி நிற்(கு).
2. சூழி காட்டுவ னென்: ஊழி காட்டுவா யென்றுரைத்.
3. வாழி காட்டுமென் றுண்(டுன்); வாழி காட்டுமோன் றுண்டு: வாழி காட்டு முனக்குன்.
4. பாழி காட்டிய யரும்பழி காட்டினுய்; பூழி காட்டி யரும்பழி பூட்டினுய்; வரும்பழி காட்டினுய்; பரும்பழி காட்டினுய். (34)

1077. கண்டு போயினை நீணெறி காட்டிட
மண்டு போரி னரக்கனை மாய்த்தெனைக்
கொண்டு மன்னவன் போமெனுங் கொள்கையைத்
தண்டி னுயெனக் காருயிர் தந்தநீ.

'எனக்கு ஆர் உயிர் தந்த நீ - எனக்கு அரிய உயிரை அளித்த நீ, கண்டு போயினை - நீ (இராமபிரான் ஆணைப்படி) என்னைக் கண்டு சென்ருய்; (அதற்கு மேல் நீ கூறிச் சென்றபடி), மண்டு போரின் - அடர்ந்த கடும் போரினிடத்து, அரக்கனை - அவ் அரக்கனை, மாய்த்து - அழித்து. நீள் நெறி காட்டிட - மீளாத நீண்ட நெறியை (இராவணனுக்கு இராம பிரான்) உண்டாக்கி, எனை மன்னவன் கொண்டு போம் எனும் கொள் கையை - என்னை மன்னவனுன இராமபிரான் மீட்டுக்கொண்டு போவார் என்று (நீ உறுதி கூறி, யானும் நம்பிக் கொண்டிருந்த) கோட்பாட்டை, தண்டினுய் - தவிர்த்து நடந்தாய் !

நீணெறி காட்டிட - நீ நெடுக வழிகாட்ட என்று பொருள் கொள் வாரும் உளர். தண்டுதல் - தவிர்ந்து செல்லுதல்; 'கற்றல் வேண்டுவோன் வழிபாடு தண்டான்' (முதுமொழிக்.) 'தண்டினுய் - திருப்பி வாங்கிக் கொண்டாய்' என்பது' பழைய உரை. பிராட்டிக்கு அநுமன் ஆருயிர் தந்தமை; 1076 உரை.

(பி-ம்) 1. கண்டு போகியிந் நீணெறி; கண்கு போயின நீணெறி; கண்டு போயின நீநெறி காட்டிட; கண்டு போயினை நீவலி காட்டிப் பின்; தீநெறி.
2. போரி லரக்கரை; போரி லரக்கனை; மாய்த்த நிற்கு.
3. கொண்டு மானவன் போம்; கொண்டு போயின எமென்னுங் கோளினைத்.
4. தண்டி னுயிலே யென்னுயிர் தந்தநீ: என தாருயிர் தந்தநீ. (35)

1078. ஏயப் பன்னின னின்னதன் னுருயிர்
தீயக் குன்று பிடியுறத் தீங்குறும்
தாயைப் போலத் தளர்ந்து மயங்கினுள்
தீயைச் சுட்டதோர் கற்பெனுந் தீயினுள்,

தீயை சுட்டது ஓர் கற்பு எனும் தீயினுள் - நெருப்பையும் சுட்டு அவிக்கும் ஒரு கற்பு என்னும் பெரிய தீயையுடைய பிராட்டி, ஏய இன்ன பன்னினள் - பொருந்த இவ்விதம் பிரலாபித்துச் சொல்லின வளாய், கன்று பிடி உற திங்குறும் தாயை போல - கன்று (புலி முதலிய கொடிய மிருகத்தினிடம்) பிடிபட வருந்தும் தாய்ப் பசுவைப்போல, தன் ஆர் உயிர் தீய - தன் அரிய உயிர் எரிந்து குறைவுற, தளர்ந்து மயங்கினுள் - சோர்வுற்று மயக்கமுற்ருள்.

கன்று பிடியுறத் திங்குறும் தாயைப்போல; 'கன்று பிரிந்துழிக், கறவை யொப்பக் கரைந்து கலங்கினுள்' (அயோத்யா. நகர் நீங்கு: 14). இங்கு. அநுமன் கன்றுக்கும் அவன் அரக்கராற் பிணிப்புண்டது கன்று பிடிப்பட்டதற்கும், அது கேட்டு வருந்தும் பிராட்டி தாய்ப்பசுவுக்கும் உவமைகள். 'தாயின் முன்னிய கன்று; 617 உரை; பிராட்டியின் கற்பெனுந்தீ தீயைச் சுட்டமை: உயுத்த. மீட்சிப்: 85, 91. சுட்டது என்று இறந்தகாலத்தில் கூறியது, சுடும் என்ற உறுதியால் வந்த காலவழுவமைதியாகவும், பின் மீட்சிப் படலத்தில் நிகழ்வதான செய்தியை நமக்கு முற்கூட்டிக் கவி எடுத்துக் காட்டியதாகவும் கொள்ளலாம். பன்னுதல்-பிரலாபித்தல்; திருப்பித் திருப்பிச் சொல்லுதலும், விரித்துச் சொல்லுதலும் ஆம். 1074 ஆம் செய்யுள் முதல் இச் செய்யுள்வரை பிராட்டி அநுமன் பிணிப்புண்டதை அறிந்து வருந்தியதைக் கூறியது; இப் பகுதி, 'கற்பெனு தீயினுள்' என்று முடிவது, அத்தீயே பின்பு அநுமன் வாலிலிட்ட தீயாக மாறி, இலங்கையைச் சுடக் காரணமானதைச் சூசிப்பதாக ஆவது காணத்தக்கது. மடவார் துயரம் வீணுகாது என்பதற்கு இஃது ஓர் சான்று.

(பி-ம்.) 1. ஏய வின்னன: இன்னன தன்னுயிர்.
2. தேய கன்று பிடியுறத்; தேய கன்று மிடியுற: பிடியுண்டு தீங்குறும்; பிடியுணத் தேய்ந்துறும்.
3. தளர்ந்து மயர்ந்தனள். 4. தீயைச் சுட்டதோர் தீயெனுங் கற்பினுள்.

(36)

## அநுமன் இராவணன் கோயிலடைதல்

1079. பெருந்த கைப்பெரி யோனைப்பி ணித்தபோர்
முருந்தன் மற்றை யுலகொரு மூன்றையும்
அருந்த வப்பய னுலர சாள்கின்ருன்
இருந்த வப்பெருங் கோயில்சென் றெய்தினுன்.

பெரும் தகை பெரியோனை - பெருமைக் குணத்திலும் உருவிலும் அறிவிலும் பெரியோனான அநுமனை, பிணித்த - கட்டிய, போர் முருந்தன் - போரில் வல்லவனான இந்திரசித்து, மற்றை உலகு ஒரு மூன்றையும் - இலங்கையோடல்லாது மற்ற சுவர்க்கம், பூமி, பாதலம் என்னும் மூன்று உலகங்களையும், அரும் தவ பயனால் - தான் முன் செய்த அரிய தவப்பயனால், அரசாள்கின்றான் - அரசனாயிருந்து ஆள்கின்றவனான இராவணன், இருந்த அ பெரும் கோயில் சென்று எய்தினான் - தங்கியிருந்த அந்தப் பெரிய அரண்மனையில் சென்று அடைந்தான்.

முருந்தன் - சமர்த்தன்; திறமைவாய்ந்தவன்; பிரசித்தன். மற்றை: மற்று (மற்று+ஐ), ஐயீற்றுடை குற்றுகரம்; அசை எனலும் ஒன்றும். 'உரந்த மற்ற வுலகொரு மூன்றையும்' என்ற பாடங்கொண்டு, உரந்த மற்றது - அளவற்றது' என்று பழைய உரை பொருள் கூறும். ஒரு சுவடியில் இச் செய்யுளுடன் பாசப் படலம் முடிகின்றது; இதன் மேல் வேத்தவைப் படலம் என்று உள்ளது.

(பி-ம்.) 1. பிணித்தவன்; பிணித்தபேர்; பெரி யோனும்பி ணிப்புடன்.
2. உருந்த மற்ற வுலகொரு; முருந்த மற்ற; உரந்த மற்ற; உரந்தழைத்த வுல கொரு மூன்றையும்; பொருந்து மூன்று புவனப்
3. பரப்பையும். அருந்த வப்பய னாற்றனி யாள்கின்றான்.
4. இருந்த கற்பகச் சோலைசென் றெய்தினான்; சோலையி னெய்தினான். (37)

வேறு

## இராவணன் கொலுவீற்றிருக்கை 1080-96

1080. *தலங்கண் மூன்றிற்கும் பிறிதொரு மதிதழைத் தென்ன*
*அலங்கல் வெண்குடை கண்குடை யவிரொளி பரப்ப*
*வலங்கொ டோளினான் மண்ணின்றும் வானுற வெடுத்த*
*பொலங்கொண் மாமணி வெள்ளியங் குன்றெனப் பொலிய.*

அலங்கல் வெண் குடை - முத்து முதலிய மணிச்சரங்கள் அசையப் பெறும் வெண்குடை, தலங்கள் மூன்றிற்கும் பிறிது ஒரு மதி தழைத்து என்ன - மூவுலகங்களுக்கும் ஒளி வீசும்படி வேறு ஒரு சந்திரன் சிறந்து விளங்குவது போல, கண் குடை அவிர் ஒளி பரப்ப - (காண்போர்) கண்களைக் குடைவது போலக் கூச்சத்தை உண்டாக்கி விளங்கும் ஒளியைப் பரவச் செய்யவும், வலம் கொள் தோளினால்-(இராவணன்) தன் வலிமை கொண்ட தோள்களால், மண் நின்றும் வான் உற எடுத்த - தரையிலிருந்து வானைப் போய்ப் பொருந்த (முன்) தூக்கி யெடுத்த, பொலம்

கொள் மா மணி வெள்ளி அம் குன்று என - அழகு கொண்ட சிறந்த இரத்தினங்களையுடைய கயிலையங் கிரியாகிய வெள்ளிமலை போல, விளங்க - விளங்கவும்.

இதுமுதல் 1096 முடிய ஒரு தொடர்; 1097-ல் உள்ள 'இருந்த' என்பதுடன் முடியும்.

வெண்குடை தழைத்தென்ன, பரப்ப, எடுத்த குன்றெனப் பொலிய என்று கூட்டுக. கண் குடை அவிரொளி என்றமையால், அக்குடை மற்றை அரசர்கள் குடை போலத் தண்ணொளி பரப்பாது, பார்ப்போர் கண்கள் கூசும்படியான கொடிய ஒளியையுடைய வெங்குடையாய் விளங்கியது என்று தொனிப்பதுங் காண்க. அக்குடை, வானுற எடுத்த வெள்ளியங்குன்று என்று உவமிக்கப் பெற்றதால், அது இல் பொருள் உவமையாயிற்று என்னலும் ஆம். இதிலிருந்து 1097-வரை உள்ள பாடல்கள், சபையில் இராவணன் இருந்து விளங்கிய தோற்றத்தை விளக்குவனவாம். முன் அவன் உறங்கியபோது உண்டான தோற்றப் பொலிவுக்கும் இதற்கும் உள்ள ஒற்றுமை வேறுபாடுகள் இங்கு நோக்கத் தக்கது. அலங்கல் வெண்குடை - மாலைகள் தொங்கவிடப் பெற்ற வெண்குடை என்னலும் ஒன்றும். வலங்கொள் தோளினன், எனக்கொண்டு வலிய தோள்களையுடைய இராவணன் எனப்பொருள் கோடலும் அமையும். இச் செய்யுளில், குடைக்கு மதியும், மலையும் உவமைகளாகக் கூறபபட்டன.

(பி-ம்.) 1. தலங்கொண் மூன்றிற்கும்.
2. வெண்குடை தண்ணிழ லவிரொளி; தனிக்குடை யவிரொளி; நித்தில மவிரொளி; தனக்குடை யவிரொளி.
3. வலங்கொ டோள்பல. (31)

1081. புள்ளு யர்த்தவன் றிகிரியும் புரந்தர னயிலும்
தள்ளின் முக்கணன் கணிச்சியுந் தாக்கிய தழும்பும்
கள்ளு யிர்க்குமென் குழலியர் முகிழ்விரற் கதிர்வாள்
வள்ளு கிர்ப்பெருங் குறிகளும் புயங்களின் வயங்க.

புள் உயர்த்தவன் திகிரியும் - கருடனாகிய பறவை விளங்க உயர்த்தப் பட்ட கொடியையுடைய திருமாலின் சுதர்சனமென்னும் சக்கராயுதமும், புரந்தரன் அயிலும் - இந்திரனுடைய வச்சிராயுத மென்னும் வாட் படையும், முக்கணன் தள் இல் கணிச்சியும் - மூன்று கண்களையுடைய சிவபிரானுடைய விலக்க முடியாத சூலாயுதமும், தாக்கிய - தன்மீது பட்டு உண்டாக்கிய, தழும்பும் - வடுக்களும், கள் உயிர்க்கும் மென் குழலியர் - தேனைச் சொரியும் மிருதுவான கூந்தலையுடைய தன் காதன்

மகளிர், முகிழ் - அரும்புகள் போற் குவிந்த, விரல் - விரல்களில் உள்ள, கதிர் வாள் வள் உகிர் - சுடரோடு கூடிய வாள் போன்ற கூரிய நக நுனிகளால் உண்டாக்கிய, பெரும் குறிகளும் - பெரிய அடையாளங்களும், புயங்களில் விளங்க - தன் புயங்களிலே விளங்கவும்,

இச் செய்யுள் இராவணன் தோள்களின் வருணனை கூறியதாகும்; அவன் வீரமும் காதலும் தோள்களிற் காணப்பட்டமை காண்க. சிவபிரானுடைய சூலாயுதம் யாவராலும் விலக்க முடியாததாதலின், தள்ளில் கணிச்சி யெனப்பட்டது. கணிச்சி மழு வென்னும் கோடாலியும் ஆம். கதிர்வாள்: ஒரு பொருட் பன்மொழியாகக் கொண்டு, மிக்க ஒளியுடைய என்றும் பொருள் கொள்ளலாம்: வாள் - ஒளி. புணர்ச்சியில் இராவணனுடைய காதன் மகளிர் அவனைத் தழுவலால் அவன் தோள்களில் உண்டான அம்மகளிரது கை நக வடுக்கள் போலத் திருமால், இந்திரன், சிவபிரான் ஆயுதங்கள் அவன் தோள்களில் பட்டு வடுவாக்கினவே யொழிய, அவற்றால் அதன் ஊறு சிறிதும் அடைந்தானல்லன் என்பதும் அவன் தோளாற்றலின் பெருமையும் விளங்குவதாகும். கள்ளுயிர்க்கும் மென்குழல்: குழலிற் சூட்டியுள்ள பூக்களிலிருந்து தேன் உயிர்த்தலைக் குறிப்பதாகும். மகளிர் ஆடவர்க்கு உகிர்க்குறி செய்தல்- உயுத்த. படைத்தலைவர். 66; கலி; 72 11 - 12; 82: 28 - 30; 88: 10 : 11; 91: 12.

(பி-ம்.) 1. உயர்த்தவன் நேமியும்.
2. தள்ளி முக்கணன்; தள்ளு முக்கணன்: முக்கணன் கணிச்சியிற்.
3. குழலியர் கைவிரல்.
4. குறியோடம் புயங்களும் வயங்க: குறியொடும்: புயந்தொறும் வயங்க (39)

1082. *துன்று செம்மயிர்ச் சுடர்நெடுங் கற்றைகள் சுற்ற*
*நின்று திக்குற நிரைத்தன கதிர்க்குழா நிமிர*
*ஒன்று சீற்றத்தி னுயிர்ப்பெனும் பெரும்புகை யுயிர்ப்பத்*
*தென்றி சைக்குமோர் வடவன றிருத்திய தென்ன.*

துன்று செம் மயிர் சுடர் நெடும் கற்றைகள் சுற்ற நின்று - அடர்ந்த சிவந்த மயிர்களின் ஒளி வீசும் நீண்ட தொகுதிகள் சுற்றி நின்றவையாகி, திக்கு உற நிரைத்தன கதிர் குழாம் நிமிர - எட்டுத் திக்குகளிலும் வரிசையாய் அடர்ந்துச் சுடரின் கூட்டம் மேலோங்க, ஒன்று - பொருந்திய, சீற்றத்தின் உயிர்ப்பு எனும் பெரும்புகை - கோபத்தால் எழுந்த பெருமூச்சு என்னும் பெரும்புகை, உயிர்ப்ப-வெளிப்பட, தென் திசைக்கும் - தெற்குத் திசைக்கும், ஓர் வட அனல் - ஒரு வடவைத் தீயை, திருத்தியது என்ன - அமைத்துள்ளது போல (விளங்கவும்),

இதுவும் அடுத்த செய்யுளும் இராவணனின் சிரங்களின் வருணனையைக் கூறும். அவனுடைய பத்துத் தலைகளிலும் மேலே உயர்ந்து விளங்கிய செம்பட்டை மயிர்கள் சிவந்த தீச்சுடர்கள் போலவும், கோபத்தால் அவன் விட்ட பெருமூச்சுக்கள் அவ்வனலின் மேல் தோன்றும் பெரும் புகை போலவும் விளங்கின; அத்தோற்றம் தென் திசைக்கும் ஓர் வடவைத் தீ அமைந்தது போலவும் விளங்கியது. தென் திசைக்கும்: இறந்தது தழுவிய எச்சவும்மை, வடதிசையில் கடலில் அனல் இருப்பது போல, தென்திசையில் கடலிடையே உள்ள இலங்கையிலும் ஓர் அனல் இருந்தது என்னும்படி இராவணன் விளங்கினன் என்பதாம். 'சீற்றத்தின் உயிர்ப்பு எனும் பெரும்புகை'; உயிர்ப்பும்; சீற்றமும் அநுமன் தன் மைந்தன் அக்ககுமாரனையும் மற்றும் பல அரக்கர் படை வீரர்களையும் அழித்தமையால் உண்டானவை. இங்கு இராவணன் சிரங்களைத் தீ என்பதற்கேற்பப் பின் (1084)ய் அவனைக் கடல் என்றது காண்க.

(பி-ம்.) 1. கற்றைகள் சுற்றி.
2. திக்குற நிரல்படக்; திக்குறு நிறைதர; திக்கிற்று நிரைதர: தின்று தேக்குசெங் கதிரெனத் திசுழுமற் றின்னும்,
3. ஒன்று சீற்றத்தீ: பெரும்பகை உயிர்ப்பத். உயிர்ப்புறுங் கழற்சிகை யெனவும். 4. திருத்திய தெனவும்: (40)

1083. மரக தக்கொழுங் கதிரொடு மாணிக்க நெடுவாள்
நரக தேயத்து ணடுக்குரு விருளையு நக்கச்
சிரம னைத்தையுந் திசைதொறுந் திசைதொறுஞ் செலுத்தி
உரகர் கோனினி தரசுவீற் றிருந்தன னொப்ப

மரகதம் கொழும் கதிர் ஒடு - (தன் கிரீடங்களில் உள்ள) மரகதங்களின் செழுமையான ஒளிகளுடனே, மாணிக்க நெடுவாள் - மாணிக்க மணிகளின் நீண்ட ஒளிகள், நரக தேயத்துள் நடுக்கு உரு இருளையும் - நரகலோகத்தில் அசைக்க முடியாது நிலைபெற்று அடர்ந்த இருட்டையும், நக்க - நக்கி அழித்து உண்ண, சிரம் அனைத்தையும் - தன் பத்துத் தலைகளையும், திசைதொறும் திசைதொறும் செலுத்தி - ஒவ்வொரு திசையிலும் திரும்பித் திரும்பிப் பார்த்து, உரகர்கோன் இனிது அரசு வீற்றிருந்தனன் ஒப்ப - பாம்புகளுக்கு அரசனான ஆதிசேடன் மகிழ்ச்சியோடு அரசு கட்டிலில் வீற்றிருந்தது போல் விளங்கவும்,

இச் செய்யுளில் இராவணன் ஆதிசேடனுக்கு ஒப்பாகக் கூறப்பட்டுள்ளான். நரக வுலகு எப்பொழுதும் அடர்ந்த இருளால் மூடுண்டிருக்கும் என்பது, 'அடங்காமை ஆரிரு ளுய்த்து விடும்'; குறள்.: 121. பரி.

உரை. இராவணன் பத்தாகிய பல சிரங்களையுடைமையால், உரகர் கோனுக்கு உவமையாக்கப் பெற்ருன். இருளையும்: உம்மை உயர்வு சிறப்பினது, திசைதொறுந் திசைதொறும்; அடுக்கு, எண்ணுப் பொருளின் பால், மிகுதியைக் குறிப்பது. உரகம் - பாம்பு; மார்பால் ஊர்ந்து செல்வது என்பது பொருள்.

(பி-ம்.) 1. மாணிக்கச் சுடரும்.
2. தேயத்து நடுக்குற; நடுக்குறி; நடுக்குறு மிருளை:நரகி டைப் படுங் கொடியவல் லிருளையு நக்கிச்.
3. திசையுறத் திசையுறச் செலுத்தி. 4. இனி நாகவீற். (41)

1084. குவித்த பன்மணிக் குப்பைகள் கலையொடுங் கொழிப்பச்
சவிச்சு டர்க்கல னணிந்தபொற் ருேளொடு தயங்கப்
புவித்த டம்படர் மேருவைப் பொன்முடி யென்னக்
கவித்து மாலிருங் கருங்கட லிருந்தது கடுப்ப.

குவித்த பல் மணி குப்பைகள் - தொகுத்துப் பதிப்பிக்கப் பெற்ற பல இரத்தினங்களின் கூட்டங்கள், கலை ஒடும் கொழிப்ப - மேலாடையுடன் புரண்டு விளங்கவும், அணிந்த - அணியப்பெற்ற, சவி சுடர் கலன் - ஒளியின் சுடரை வீசும் ஆபரணங்கள், பொன் தோள் ஒடும் தயங்க - பொன் (கவசமணிந்த) தோள்கள் இருபதோடும் விளங்கவும், (அதனல்) மால் இரும் கரும் கடல் - மிகப் பெரிய கரிய கடலானது, புவி தடம் படர் - பூமியினிடத்துப் படர்ந்து விளங்கும், மேருவை பொன் முடி - என்ன கவித்து - மேரு மலையைப் பொன் முடியாகக் கவித்துக் கொண்டு, இருந்தது கடுப்ப - வீற்றிருந்தது போல் விளங்கவும்.

மாலிருங் கருங்கடல் மேருவை முடியாகக் கவித்துக் கொண்டு வீற்றிருந்ததே போல இராவணன் வீற்றிருந்தான் என்பதாம். கரிய நிறமுடையவனுதலால், இராவணனுக்குக் கருங்கடலும், பொன்னும் மணிகளும் தன்னிடமுடைமையாலும், உயர்ந்து விளங்கும் தோற்றத்தாலும் அவன் கிரீடத்தொகுதிகளுக்கு மேருமலையும் உவமைகள் ஆயின. இது இல்பொருளுவமை. மால் இரும்: ஒரு பொருட் பான்மொழி; இனி, மாலிரும், கரும் என்பனவற்றை, ஒன்று சேர்த்து ஒருபொருட் பன்மொழியாகவும் கொள்ளலாம். கருமை - பெருமை. இராவணனைக் கடல் என்று உவமித்ததற் கேற்ப, அலைகள் கொழிப்பன போல இரத்தினங்களும் மேலாடையும் ஒளி கொழித்தமை கூறப்பெற்றது. இராவணனை அநுமன் கண்டபோது, அவனுடைய தோற்றம் முதனூலில் 49ஆம் சர்க்கம் 1-14 சுலோகங்களில் மிக அழகாகக் கூறப்பட்டுள்ளமையையும் காண்க.

(பி-ம்.) 1. குவித்த பொன்மணிக்:தலைதொறுங் கொழிப்ப; அலையொடுங் கொழிப்ப; தலையொடும் பனிப்ப.
2. சவிச்சு டர்க்கன லணிந்தவயி ரோளொடு: சவிச்சு டர்க்குழை கலந்தபல் லாளனந் தயங்க; அணிந்தபோ லானனந் தயங்க; அணிந்தமென் றோளிணை தயங்க.
3. புவித்த லம்படர்; பொன்முடி யாக,
4. கவித்த மரலிருங்: கவித்தொர் மாப்பெருங்: இருந்தெனக் கவின. (42)

1085. *சிந்து ராகத்தின் செறிதுகில் கச்சொடு செறியப்*
*பந்திவெண்முத்தி னணிகலன் முழுநிலாப் பரப்ப*
*இந்து வெண்குடை நீழலிற் றாரகை யினம்பூண்டு*
*அந்தி வானுடுத் தல்லுவீற் றிருந்ததா மென்ன.*

சிந்துராகத்தின் செறி துகில் - சிவப்பு நிறம் செறிந்த ஆடை, கச்சு ஒடும் - அரைப்பட்டிகையுடன், செறிய-இறுகக் கட்டப்பட்டு விளங்க, பந்தி வெண் முத்தின் அணிகலன் முழு நிலா பரப்ப - வரிசையாய்க் கோக்கப்பட்ட வெண்மையான முத்துக்களாகிய மாலை முதலிய ஆபரணங்கள் பூர்ண சந்திரன் நிலவு வீசுவதுபோல ஒளியைப் பரவச் செய்ய, இந்து வெண் குடை நிழலில் - சந்திரன் போல் வட்ட வெண்குடையின் நிழலின், அல்லு-இரவு, அந்திவான் உடுத்து-மாலையில் தோன்றும் செவ்வானத்தை ஆடையாக உடுத்து, தாரகை இனம் பூண்டு - நட்சத்திரங்களின் கூட்டத்தை அணிந்து, வீற்றிருந்தது ஆம் என்ன - சிறப்புடன் எழுந்திருந்தது என்று சொல்லும்படியும்.

இராவணன் செவ்வாடையுடுத்து வெண்முத்தினுலான அணிகலங்கள் பூண்டு சந்திர வட்டவெண்குடையின் கீழ் வீற்றிருந்த தோற்றம், இரவு செவ்வாடையுடுத்துச் சந்திரனுகிய வெண்குடை நீழலில் தாரகைகளாகிய முத்து மாலைகளை அணிந்து விளங்கியது போல இருந்தது என்பதாம். இதனுல், அப்பொழுது இராவணன் செந்நிற ஆடை உடுத்திருந்தனன் எனத் தெரிகின்றது. சிந்துராகம், சிறந்த மாணிக்கம் வகைகளுள் ஒன்று. இச்சொல் சிந்துராகரம் என்ற வடமொழியின் சிதைவு; சிந்துராகரம் என்பது உதயகிரிச் சாரலில் ஓடும் ஒரு செந்நிறமான நதி. இந் நதி பதினுறு சதுர்யுக காலம் பாய்ந்ததால், அங்குள்ள கற்கள் சிவப்பேறி மாணிக்கங்கள் ஆயின என்பர்; *சீவக.* 169. நச். உரை.; 'செங்கேழாகரங்கடுக்கு மற்றோரணிமுடி' (கூவப். தாருகன்; 200.) என்றமையும் நோக்குக.

(பி-ம்.) 1, சிந்து வராத்தின்: காசொடுஞ் செறிப்ப; கச்சொடு செறிப்ப
2. அணிகல முழுநிலா. (43)

1086. *வண்மைக் குந்திரு மறைகட்கும் வானினும் பெரிய*
*திண்மைக் குந்தனி யுறையுளான் முழுமுகந் திசையில்*
*கண்வைக் குந்தொறுங் களிற்றொடு மாதிரங் காக்கும்*
*எண்மர்க் கும்மற்றை யிருவர்க்கும் பெரும்பய மெய்த.*

வண்மைக்கும் - கொடையால் உண்டாகும் புகழுக்கும், திருமறை கட்கும் - தெய்வத் தன்மை பொருந்திய வேதங்களுக்கும், வானிலும் பெரிய திண்மைக்கும் - ஆகாயத்தினும் பெரிய வலிமைக்கும், தனி உறையுளான் - ஒப்பற்ற இருப்பிடமாய் உள்ளவனான இராவணன், முழு முகம் திசையில் கண் வைக்கும் தொறும் - தன்னுடைய பத்து முகங் களையும் ஒருமிக்க வைத்து எல்லாத் திசைகளிலும் நோக்கும்போதெல் லாம், களிற்றொடு மாதிரங் காக்கும் எண்மர்க்கும் - அந்த அந்தத் திக்கில் உள்ள யானையோடு அந்த அந்தத் திக்கைக் காக்கும் எட்டுத் திசைக் காவலர்கட்கும், மற்றை இருவர்க்கும்-மற்றவையான வானின் மேலும் பூமியின் கீழுமுள்ள, துருவன், ஆதிசேடன் என்னும் இருவர்க்கும், பெரும் பயம் எய்த - பெரிய அச்சம் வந்து அடையவும்,

வண்மை - புகழ்; சூடா. நிகண்டு.; வண்மை வலிமையும் ஆம். பிங்களம், மறைகட்கும்: இராவணன் மறைகள்யாவும் நன்கு ஓதின வன்; 483; ஆரண்ய: மாரீசன் வதைப்: 179.; சடாயு உயிர்நீத்த: 21; 41, உயுத்த மந்திரப்; 48. வானினும் பெரிய திண்மை: வான், பெரு மைக்கு. மற்றையிருவர்: பிரமன், சிவபிரான் என்றும், சந்திர, சூரியர்கள் என்றும், அச்வினி தேவர்கள் என்றும் பல திறமாய்க் கொள்வர். இவ் வாறே வானவரிருவர் என்று, பின்னும் 1048 இல் கூறுவர்.

(பி-ம்.) 1. வானினு முயர்ந்த.
2. தன்மைக்குந் தனியுறை: உறையுளாய்: உறையுளாஞ் செழு முகம். 4. பெரும்பய மியற்ற. (41)

1087. *ஏக நாயகன் றேவியை யெதிர்ந்ததன் பின்பு*
*நாகர் வாழிட முதலென நான்முகன் வைகும்*
*மாக மால்விசும் பீறென நடுவுள வரைப்பில்*
*(தோகை மாதர்கள் மைந்தரிற் றேன்றினர் சுற்ற.)* ஒன்றாம்

ஏக நாயகன் தேவியை - தன்னிலும் பிறிதொரு தலைவனில்லாத் தனித்தலைவனான இராமபிரானின் தேவியாகிய பிராட்டியை, எதிர்ந்த தன் பின்பு - சந்தித்து நோக்கிய பிறகு, நாகர் வாழ் இடம் முதல் என - சர்ப்ப சாதியர்களான நாகர்கள் வாழுமிடமான பாதலம் முதல்,

நான்முகன் வைகும் - பிரமதேவன் வாழும், மாக மால் விசும்பு ஈறு என - பெரிய வானில் உள்ள ஆகாயமான பிரமலோகம் ஈருக, நடுவுள வரைப்பில் - இடையேயுள்ள உலகங்களில் உள்ள, தோகை மாதர்கள் - மயில் போன்ற மகளிர், மைந்தரில் சுற்ற தோன்றினர் - (இராவணனுக்குக் காம உணர்ச்சி உண்டாக்கும் தன்மையின்றி) ஆடவர்கள் என்னுமாறு அவனைச் சூழ்ந்து விளங்கவும்,

பிராட்டியைப் பார்த்த இராவணனுடைய கண்களுக்கு மற்றை உலக மகளிர்கள் ஆடவர்போலப் புலப்பட்டனர் என்க.

(பி-ம்) 1. நாகர் வாழ்விட முதலென; நாகர் வாழுல காதியாய்: மாக மாநில முதலி.
3. நடுவண வரைப்பில். 4. மைந்த ரொத்தன வயஞ்சூழ. (45)

1088. வான ரங்களும் வானவ ரிருவரு மனிதர்
ஆன புன்றெழி லோரென விகழ்கின்ற வவரும்
ஏனை நின்றவ ரிருடியர் சிலரொழிந் தியாரும்
தூந வின்றவே லரக்கர்தங் குழுவொடு சுற்ற.

வானரங்களும் - குரங்குகளும், வானவர் இருவரும் - சிவபிரான், திருமால் ஆகிய இரு தேவர்களும், மனிதர் ஆன புல் தொழிலோர் என இகழ்கின்ற அவரும் - மனிதர் என்னும் அற்பத் தொழில்களையுடையவர் என்று (அரக்கர்கள்) இகழ்கின்றவர்களும், ஏனை நின்றவர் இருடியர் சிலர் ஒழிந்து - மற்றும் உள்ளவரான இருடியர்கள் சிலரும் நீங்க, யாரும் - மற்றுள்ளோர் அனைவரும், தூ நவின்ற வேல் அரக்கர் தம் குழு ஒடு சுற்ற-மாமிசம் படிந்த வேலாயுதங்களை ஏந்திய அரக்கர்கள் கூட்டமொடு தன்னைச் சூழ்ந்து நிற்கவும்.

மும்மூர்த்திகளில் பிரமதேவன், இராவணனுடைய குலத்து முன்னேன் ஆதலானும், அவன் இராவணனிடத்தில் அன்புடன் ஏவல் புரிபவ னுதலாலும், அப் பிரமனெழிந்த மற்றை இருவரான சிவபிரான், திருமால் ஆகிய இரு தேவர்களையே இங்குக் குறித்ததாகும். இராவணன் தவம் செய்து பிரமதேவரிடம் வானரம், மனிதர் இருவரும் அற்பமானவர் எனக் கருதி, அவர்களை யொழித்து ஏனையரால் தனக்கு அழிவு ஏற்படாதிருக்க வரம் வேண்டிப் பெற்றுனுதலின், அவ் வானரரையும் மனிதரையும் இங்கு நீக்கிக் கூறியது என்பதாம். தூ - மாமிசத்தை. நவின்ற - நாற்றத்தால் தெரிவிக்கின்ற, என்னும் கருத்தில் வந்துள்ளது.

(பி-ம்.) 1. வான ரங்களு மானவ ரிருவரு மனித்தர்.
3. நின்றவ ரிருடிகள். 4. குழாத்தொடுஞ் சுற்ற. (46)

1089. *நரம்பு கண்ணகத் துள்ளுறை நறைநிறை பாண்டில்*
*நிரம்பு சில்லரிப் பாணியுங் குறடுநின் றிசைப்ப*
*அரம்பை மங்கைய ரமிழ்துகுத் தாலன்ன பாடல்*
*வரம்பி லின்னிசை செவிதொறுஞ் செவிதொறும் வழங்க*

நரம்பு கண் அகத்து - நரம்புக் கருவியாகிய வீணை முதலிய வாத்தியங்களிடத்து, உள் உறை நறை - உள்ளே தங்கியுள்ள இசை யாகிய தேனும், நிறை பாண்டில் - இலக்கணம் நிறைந்த கஞ்சக் கருவி யும், நிரம்பு சில்லரிப் பாணியும் - நிரம்பிய சில்லரி என்னும் வாத்தியத் தாளமும், குறடும் - குறடு என்னும் தாளக் கருவியும், நின்று இசைப்ப- பாட்டிற்கு ஒத்து ஒலிக்க, அரம்பை மங்கையர்-தேவ மகளிர், அமிழ்து உகுத்தால் அன்ன - அமிர்தத்தைச் சிந்தினாற் போன்ற, பாடல் - பாடிய பாடல்களின், வரம்பு இல் இன் இசை-எல்லை சொல்ல முடியாத இனிய இசையானது, செவிதொறும் செவிதொறும் - தனது இருபது செவிகளி லும், வழங்க - வந்து ஒலி செய்யவும்,

நரம்பு - தந்திகளைக் கொண்ட வீணை முதலிய இசைக் கருவிகள்; நரம்பு: சினையாகு பெயராய் அதனையுடைய இசைக் கருவிகளைக் குறித் தது. கண் - தோற் கருவிகளுக்கு வாரால் இழுத்துக் கட்ட அமைந் துள்ள சிறு துவாரங்கள். சில்லரிப் பாணி - சிலவாகிய அரிகளையுடைய தாளமும் என்னலாம். அரி - பருக்கைக் கற்கள்; பாணி - தாளம்; ஆகு பெயராய்த் தாளக் கருவிக்கும் ஆயிற்று; 'கொட்டு மசையுந் தூக்கு மளவும், ஒட்டப் புணர்ப்பது பாணியாகும்' (சிலப். 3. 16: அடியார்க். உரை. மேற்.) அரம்பை மங்கையர் - அரம்பை முதலான தேவ மகளிர் என்னலும் ஆம். அமிழ்து உகுத்தா லன்ன பாடல்; ஒப்பு; பால. திருவவ தாரப். 108; கார்முகப். 40.

(பி-ம்.) 1. நரம்பு றுங்கணத்: கண்ணகத் துள்ளுடை; துள்ளிடை.
2. கரம்பு சில்லரிப்.
3. அரம்பை யேமுதல் மங்கைய ரமுதுகும் பாடல்.
4. வரம்பி லின்சுவை: மயங்க; மாந்த. (47)

1090. *கூடு பாணியி னிசையொடு முழவொடுங் கூடத்*
*தோடு சீறடி விழிமனங் கையொடு தொடரும்*
*ஆட னோக்குறி னருந்தவ முனிவர்க்கு மமைந்த*
*வீடு மீட்குறு மேனகை மேனகை விளங்க*

பாணியின் கூடு இசை ஒடும் - தாளத்தோடு கூடிய பாட்டுடனும், முழவு ஒடும் - மத்தள ஒலியுடனும், கூட - ஒன்று சேர, தோடு சீறு அடி - தாமரை யிதழை யொத்த சிறிய பாதச் சதிவரிசை, விழி மனம்

கையொடு தொடரும் - விழிப்பார்வை, அதிலேயே ஒன்றிய மனம், கையினல் காட்டும் அபினயக் குறிகள் ஆகியவை ஒன்ருக அமைந்த, ஆடல் நோக்கு உறின் - நாட்டியத்தைப் பார்த்தால், அரும் தவ முனிவர்க்கும் - அரிய தவஞ் செய்து பெற்ற முனிவர்களுக்கும், அமைந்த வீடு - அமைந்துள்ளதான வீட்டுலகை, மீட்குறும் - வேண்டாமென்று விட்டு வரும்படி (அம்முனிவர்களை) இழுக்கவல்ல, மேல் நகை - உயர்ந்த நகை முகத்தையுடைய, மேனகை - மேனகை என்னும் தேவமாது, விளங்க - தன் அருகே விளங்கவும்.

தாளத்திற்கும் இசைக்கும் பொருந்த் காலடியின் சதி வரிசையோடு விழியும், மனமும், கை முத்திரை முதலிய குறிகளும் தொடர்ந்து வரும் தனது ஆடலைக் கண்டால், அருந்தவஞ் செய்து அடையும் வீட்டுலகினின்றும் முனிவர்களையும் தன்னிடம் வசீகரித்து இழுக்கவல்ல சிறந்த புன்சிரிப்போடு கூடிய மேனகை என்னும் தேவகணிகை அருகே இராவணன் சபையில் சிறந்து விளங்கிஞள் என்பதாம். மேனகை மேல் நகை விளங்க, என்று பிரித்து, இவ்வாறு ஆடிக் கொண்டிருந்த மேனகையின் மீது இராவணன் புன்சிரிப்புக் கொள்ளவும் என்று சிலர் பொருள் கூறுவர்; 'தோகை மாதர்கள் மைந்தரிற் ரேன்றினர் சுற்ற' (1087) என்று கூறியதற்கு, இப் பொருள் சிறவாமை நோக்குக. சீறடி: சிறுமை அடி. தோடு - மலரிதழ்; இங்குத் தாமரை மலர் இதழைக் குறிப்பது ஆகும்; இது பாதத்திற்கு உவமையாக வந்தது. காலின் சதியைத் தழுவி, விழி, மனம், கை செல்வது ஆடலின் சிறந்த லக்ஷணமாகும்; பால. மிதிலைக்காட்சிப். 9; உத்தர. சீதைவனப், 24.

(பி-ம்.) 2. சீறடி மங்கையர் விழியொடு: விழிமன மங்கையோர் தொடரும். 3. முனிவரு மமைந்த; முனிவர்க்கு மடைய.
4. மேனகை யரம்பையர் விளங்க; மேனகை மங்கையர் விளங்க; மேனகை யரம்பையும் விளங்க. (48)

1091. ஊடி ஞர்முகத் துறுநற வொருமுக முண்ணக்
கூடி ஞர்முகக் களிநறை யொருமுகங் குடிப்பப்
பாடி ஞர்முகத் தாரமு தொருமுகம் பருக
ஆடி ஞர்முகத் தாரமு தொருமுக மருந்த.

ஊடிஞர் முகத்து உறுநறவு - தன்னுடன் ஊடலால் பிணக்கங் கொண்ட மகளிரின் முகங்களினிடத்துத் தோன்றுகின்ற இன்பரசமாகிய தேனை, ஒரு முகம் உண்ண - (தனது பத்து முகங்களில்) ஒரு முகம் நுகரவும், கூடிஞர் முகம் களி நறை - தன்னுடன் கூடிய மகளிரது முகத்திலே உண்டான சந்தோஷமாகிய தேனை, ஒரு முகம் குடிப்ப -

(அவனுடைய) மற்றொரு முகம் பருகவும், பாடினார் முகத்து ஆர் அமுது ஒரு முகம் பருக - தன்பால் விருப்புற்றுப் பாடிய மகளிர் முகத்திற் றோன்றிய இசையாகிய தேனை ஒரு முகம் அருந்தவும், ஆடினார் முகத்து ஆர் அமுது ஒரு முகம் அருந்த - தன் முன் விருப்போடு ஆடிய மகளிர் முகத்திற் றோன்றும் அழகாகிய அமிர்தத்தை அவன் மற்றொரு முகம் அருந்தவும்,

'ஊடுதல் காமத் திற்கின்பம்' (குறள்; 1330.), என்றாராகலின் ஊடுதலை நறவு போல் உண்டு மகிழ்ந்தான் என்பதாம். 'கூடினார் முகத்துக் களிநறை' - 'இவ்விராவணனை யாம் கூடப் பெற்றோமே' என்றதால் உண்டான மகிழ்ச்சியாகிய தேன். 'பாடலும் ஆடலும் காமத்திற்குத் தூண்டுகோல் ஆதலால், அவை ஆரமுது போல் சுவையை அளித்தன.

இச்செய்யுளில், முகம் என்பதற்குப் பக்கம் என்று பொருள் கொண்டு, இராவணன் நான்கு பக்கங்களிலும் நோக்கிப் புரிந்த செயல்களைக் குறிப்பிடுவதாகக் கொள்வது ஏற்புடைத்தாகும். இதுவும் 1090 ஆம் செய்யுட் கருத்துக்கு முரணானது காண்க. இவை மூன்றும் திருமுருகாற்றுப்படையைப் பின்பற்றி இடைச் செருகலாகப் பின் சேர்க்கப்பட்டன என்றே கொள்ளற் பாலன. இவற்றுள் ஒரு செய்யுளை மட்டும் கொண்ட மூன்று சுவடிகள் இங்கு உள்ளன. எனினும், பழைய சுவடிகள் பலவற்றுள் இம் மூன்று பாடல்களும் காணப்படுவதால் இங்கு அவை பாடவரிசையில் சேர்த்துக் கொள்ளப் பெற்றன.

(பி-ம்.) 1. முகத் துறுநறை பொரு; முகத் துறநறை யொரு; முகத் துறை நறை யொரு. 2. ஒருமுகங் கூடிப்.
3. முகத் தாலமிர் தொரு; முகத் தமிழ்திசை.
4. முகத் தணியமு(து); முகத் தனியெடுத் தொரு; முகக் களியமு தொரு. (49)

1092. *தேவ ரோடிருந் தரசிய லொருமுகஞ் செலுத்த*
*மூவ ரோடுமா மந்திர மொருமுக முயலப்*
*பாவ காரிதன் பாவக மொருமுகம் பயிலப்*
*பூவை சானகி யுருவெளி யொருமுகம் பொருந்த.*

ஒருமுகம் தேவரோடு இருந்து அரசு இயல் செலுத்த - (இராவணனுடைய) ஒருமுகம் (தனக்கு அடங்கிய குடிகளாகிய) தேவர்களுடன் கூட இருந்து அரசாட்சி ஆணைகளைச் செலுத்தவும், மூவர் ஓடும் மா மந்திரம் ஒரு முகம் முயல - புரோகிதன், மந்திரி, சேனைத்தலைவன் ஆகிய மூவருடன் மாட்சியுற்ற மந்திராலோசனைகளில் மற்றொரு முகம் முயன்றிருக்கவும், பாவகாரிதன் - பாவத்தைச் செய்பவனான அவனுடைய, பாவகம்-நினைவுகளை, ஒரு முகம் பயில-மற்றொரு முகம் சிந்தனை செய்ய

வும், பூவை சானகி உருவெளி ஒரு முகம் பொருந்த - பிராட்டியின் உரு வெளித் தோற்றத்தில் அவனது மற்றொரு முகம் பொருந்திநிற்கவும்,

ஐம்பெருங் குழுவினரான, புரோகிதர், மந்திரியர், சேனைத் தலைவர், தூதர், சாரணர் என்பாருள் முதலில் உள்ள புரோகிதர், மந்திரிகள் சேனைத் தலைவர் ஆகிய மூவரே சிறந்தவராதலின், 'மூவரோடு மா மந்திரம் ஒருமுகம் முயல' எனப்பட்டது. இவர்களை மந்திரி, தந்திரி, அமைச்சர் எனலும் ஆம். இவ்வாறன்றி. மூவரோடு என்பதற்குத் திரி மூர்த்திகளோடு என்று கூறுவாரும் உளர், அது பொருந்தாது. பாவ காரி - பாவத்தைச் செய்பவன்: 1099; அயோத்யா.' கிளைகண்டு நீங்கு; 99., உயுத்த மந்திரப் 88; திருநாவுக். தேவாரம். திருக்குறுந். 9; பெரியாழ்வார் திருமொழி. 4. 4; 1. தக்க 249. உரை; பாவகம்-பாவனை; நினைவு; பாவகத்தை, அவிநயம் என்று நாடக நூல் கூறும்; சிலப். 8. 13 அடியார்க்கு. (உரை.) பூவை-பெண்; 632. உருவெளி-காதல் கொண்ட வரை இடைவிடா நினைப்பினால் அவர் தன் எதிரில் இருப்பது போல விளங் கும் ஒரு போலித் தோற்றம். சில சுவடிகளில் இச் செய்யுள் இல்லை.

(பி-ம்.) 1. இருந் தொருமுக மரசியய் பெனுத்த.
3. பாவ காரிதன் பரவங்க ளொருமுகம்: ஒருமுகம் நினையப்.
4. சானகி யுருவொடு மொருமுகம்; உருவழி. (50)

1093. *காந்தண் மெல்விரற் சனகிதன் கற்பெனுங் கடலை*
*நீந்தி யேறுவ தெங்ஙனென் றொருமுக நினையச்*
*சாந்த ளாவிய கொங்கைநன் மகளிர்தற் சூழ்ந்தார்*
*ஏந்து மாடியி னொருமுக மெழிலினை நோக்க.*

காந்தள் மெல் விரல் சனகி தன் கற்பு எனும் கடலை - செங்காந்தள் மலர் போன்ற மெல்லிய விரல்களையுடைய பிராட்டியின் கற்பு என்னும் கடலை, நீந்தி ஏறுவது எங்ஙன் என்று - நீந்திக் கரையேறுவது எவ்வாறு என்று, ஒரு முகம் நினைய - அவனுடைய மற்றொரு முகம் நினைத்து ஏக்கமுற, சாந்து அளாவிய கொங்கை - சந்தனம் பூசப் பெற்ற கொங்கைகளையுடைய, தன் சூழ்ந்தார் - தன்னைச் சூழ்ந்திருந்தவர் களான, நல் மகளிர் - அழகிய பெண்கள், ஏந்தும் ஆடியின் - கையில் தாங்கிக் காட்டுகின்ற கண்ணாடியில், எழிலினை - தன் அழகை, ஒரு முகம் நோக்க - அவனுடைய மற்றொரு முகம் பார்த்துக் கொண்டிருக்கவும்,

இச் செய்யுள் சில சுவடிகளில் இல்லை.

(பி-ம்.) 2. ஏறுவ தென்றென வொருமுக நினைப்பச்; நினையச்.
3. சாய்ந்த ளாவிய வனமுலை மகளிர்.
4. முக மியல்புட னிலங்க. (51)

1094. *பொதும்பர் வைகுதேன் புக்கருந்து தற்ககம் புலரும்*
*மதம்பெய் வண்டெனச் சனகிபான் மனஞ்செல மறுகி*
*வெதும்பு வாரகம் வெந்தழி வார்நகில் விழிநீர்*
*ததும்பு வார்விழித் தாரைவே ரோடொறுந் தாக்க.*

பொதும்பர் வைகு தேன் - மரச் செறிவினிடத்து உள்ள தேனை, புக்கு அருந்துதற்கு - அங்குப் போய்க் குடிப்பதற்கு, அகம் புலரும் - (முடியாமல்) மனம் வாடி வருந்தும், மதம் பெய் வண்டு என-மதத்தைப் பெருக்குகின்ற வண்டைப் போல, சனகி பால் மனம் செல - பிராட்டியிடத்துத் தன் மனம் போக, (அதனையறிந்து), மறுகி வெதும்புவார் - துன்பமுற்று மனம் வாடுபவர்களும், அகம் வெந்து அழிவார் - மனம் புழுங்கி அழிபவர்களும், நகில் - முலைகளினிடத்தே, விழி நீர் ததும்புவார்- கண்களினின்றும் நீர் ததும்பி வழியப் பெற்றவர்களுமான, இராவணனுடைய காதன் மகளிருடைய, விழி தாரை - கண்களின் வரிசையாகிய, வேல் - வேல்கள், தோள் தொறும் தாக்க - தனது இருபது தோள்கள் ஒவ்வொன்றிலும் வலிந்து பாயவும்,

வண்டு புக அகம் புலரும் என்றதால் அப்பொதும்பரின் செறிவின் மிகுதியைக் குறிப்பிட்டதாகும்; பொதும்பர் - பொங்தும் ஆம்; 406 பொதும்பரில் வைகு தேன், சானகிக்கும்; புலரும் மதம் பெய்வண்டு, இராவணனுக்கும்; உவமைகள். மதம் - காமச் செருக்கால் மூடுண்ட மயக்கம். இராவணன் மனம் சனகிபால் செல்ல, அதனால் மனம் வருந்தும் அவன் காதன் மகளிர் வெதும்பி, வெந்தழிந்து, விழிநீர் நகில்களில் ததும்பி விழத் தம் கண்களால் இராவணனை வருத்தத்துடன் நோக்குவாராயினர் என்பதாம்.

(பி-ம்.)
1. புக்கருந் துதற்கரும் பொருளாய்; புலமும்; தடையால்.
2. சனகிமேல் மாமனஞ் செல்ல; மனஞ்சென்று மறுக.
3. வெதும்பு வார்முகம் வெந்தழி வாவிழி முழுநீர்: வெந்தழி வாரது விழிநீர்; வார்முலை விழிநீர்; வார்முழு விழுநீர்.
4. வேல் புயந்தொறுந் தாக்க; தாக்கி, (52)

1095. *மாற ளாவிய மகரந்த நறவுண்டு மகளிர்*
*வீற ளாவிய முகிண்முலை மெழுகிய சாந்தின்*
*சேற ளாவிய சிறுநறுஞ் சீதளத் தென்றல்*
*ஊற ளாவிய கடுவென வுடலிடை நுழைய.*

மாறு அளாவிய - (விரகதாபத்தில் உள்ளோர்க்குப்) பகைமை பொருந்தியதான, மகரந்த நறவு உண்டு - (மலர்களில் உள்ள) மகரந்தப் பொடிகளுடன் கலந்த தேனைப் பருகி, மகளிர் வீறு அளாவிய - பெண்

களுடைய செருக்குற்று விளங்கும், முகிழ் முலை மெழுகிய சாந்தின் - அரும்பு போன்ற கொங்கைகளிற் பூசப் பெற்ற சந்தனத்தின், சேறு அளாவிய - சேற்றில் கலந்து வந்த, சிறு நறும் சீதள தென்றல்-இளமையும் மணமும் உடைய குளிர்ந்த தென்றல் காற்று, ஊறு அளாவிய கடு என - துன்பம் கலந்த விடம் போல, உடல் இடை நுழைய - அவ்விராவணனுடைய உடலினிடத்து நுழைந்து வருத்தவும்,

மாறு - பகைமை; மற்றையோர்க்கு இன்பம் தரும் மகரந்தம் நறவு முதலியன, விரகதாபத்தில் உள்ளோர்க்குப் பகையாகத் துன்பம் தருவன ஆதலின், 'மாற ளாவிய மகரந்த நறவு' எனப்பட்டது. தென்றல் இயற்கைப் பொருள்களின் மணங்களை வாரி வருதல் இயல்பு: சிலப். 2:14-18. இங்கு, இராவணன்மீது வீசிய தென்றல் அவனைச் சூழ்ந்த மகளிரிடமிருந்து மணத்தினை வாரி வந்தது நோக்கத்தக்கது. தென்றல், இயல்பாகவே விரகதாபத்தில் உள்ளோர்க்கு ஊறு தரும்; அத்தென்றல் இப்போது பூவின் மகரந்தங்களையும், நறவையும் உண்டு, மகளிர் முகிண் முலைச் சாந்தின் சேற்றில் அளைந்து வந்ததால் கடு என இராவணன் உடலில் நுழைந்தது என்பதாம். சீதளத் தென்றல்; தென்றலுக்குரிய குளிர்ச்சி, நறுமணமுடைமை, மென்மை என்ற முக்குணங்களுள் முதன்மைக்குணம் பெற்ற தென்றல் என்க. மாறளாவிய தென்றல், என இயைத்து, இதுவரை இராவணன் ஆணைக்கு அஞ்சி அவனுக்கு ஏவல் புரிந்து வந்த தென்றல், இப்பொழுது இராவணன் பிராட்டிபால் கொண்ட காதலால் விரகமேலிட்டு வருந்த, இதுவே அவனுக்குக் கேடிழைக்கத் தக்க சமயமென்று அறிந்து மகரந்தம், நறவு முதலியன கொண்டு. துணைவலியுடன் கடுவென அவன் உடலிற் புகுந்து வருத்தத் தொடங்கியது என்றும் கொள்ளற்பாலதாம். மகரந்தம், நறவு, தென்றல் இவை காமத்திற்கு உத்தீபனப் பொருள்கள்; ஆதலின் இவற்றால் இராவணனுக்கு விரகதாபம் அதிகரித்தது என்பதாம். வீறளாவிய முகிண் முலை; 'அகிற் சேறணிந்த முலைத் திருமங்கை தன், வீறணிந்து' (பால, ஆற்றுப். 2,) முகிழ்+முலை=முகிண்முலை; வீர சோழியம்; 'ஐம்மூன்றதாமுடல்,' 18ஆம்'என்ற சூத்திரவிதி பொருந்துமாறு காண்க.

(பி-ம்.) 1. நறையுண்டு மகனிர்; நறையுடன் மகளிர்.
2. முகிழ்முலை மெழுதிய. 3. சீகரத் தென்றல்.
4. உடலிடை நுழைப்ப: இடையிடை நுழைய. (53)

1096. *திங்கள் வாணுதன் மடந்தையர் சேயரி கிடந்த*
*அங்க யத்தடந் தாமரைக் கலரியோ னுகி*
*வெங்கண் வானவர் தானவ ரென்றிவர் விரியாப்*
*பொங்கு கைகளாந் தாமரைக் கிந்துவே போன்றும்,*

திங்கள் வாள் நுதல் மடந்தையர்-எட்டாம் நாள் சந்திரன் போன்ற ஒளி வீசும் நெற்றியையுடைய மகளிர்களுடைய, சேய் அரி கிடந்த அம் கய தடம் தாமரைக்கு - சிவந்த இரேகைகள் பரவிக் கிடந்த அழகிய தடாகத்திலுள்ள பெரிய தாமரை மலர் போன்ற முகங்களுக்கு, அலரியோன் ஆகி - சூரியனைப் போல மகிழ்ச்சியை உண்டாக்கியும், வெம் கண் வானவர், தானவர் என்று இவர் - தனக்குப் பகைவரான தேவர்கள் அசுரர்கள் என்று சொல்லும் இவர்களுடைய, விரியா - விரிந்து மலராத, பொங்கு கைகள் ஆம் தாமரை - விளங்கும் கைகளாகிய தாமரை மலர்களுக்கு, இந்துவே போன்றும் - சந்திரனே போல் விளங்கவும்,

இராவணன், தன் காதன் மகளிர் முகங்களாகிய தாமரைக்குச் சூரியனே போலும், தன் பகைவர்களான தேவர், தானவர்களுடைய கைகளாகிய தாமரைகளுக்குச் சந்திரனே போலும் விளங்கினான் என்பதாம். சூரியனைக் கண்டால் தாமரை மலர்வது போல அவன் காதன் மகளிர் அவனைக் கண்டு முகமலர்வுற்று மகிழ்ந்தனர் என்பதும், சந்திரனைக் கண்டால் தாமரை கூம்புவது போலத் தேவர்கள் அசுரர்கள் அவன் எதிரில் பணிவுடன் கைகுவித்து நின்றனர் என்பதும் இதனால் பெறப்பட்டன. 1080 முதல் 1096 வரையுள்ள செய்யுட்களில் இராவணன், அக்கன் முதலானோர் இறந்த அத்துயரத்தைப் பாராட்டாது, இந்திரசித்தின் அவ்வெற்றியையே பெரிதாய்க் கருதி, ஆடம்பரத்துடன் அவனை வரவேற்றதாக முதனூலில் இல்லை. ஒரு சுவடியில் இச் செய்யுள் பின்வருமாறு காண்கிறது.

திங்கள் வாணுதல் மடந்தையர் செவ்வரிச் செழுங்கட்
பங்க யத்திரட் கலரியின் பரிசென வாகித்
துங்க வானவர் முதலிய தூயவர் வதனப்
பொங்கு தாமரைக் கிந்துபோன் றிராவண னிருந்தான்.

(பி-ம்.) 2. அங்க யந்தடந் தாமரை.
3. வானவ ரென்றவர் விரியாப்; என்றிவை விரியா.
4. பொங்கு கைத்தடத் தாமரை. (54)

## இராவணனைக் கண்ட அநுமனின் சீற்றம் 1097-1101

1097. இருந்த வெண்டிசைக் கிழவனை மாருதி யெதிர்ந்தான்
கருந்தி ணகத்தை நோக்கிய கலுழனிற் கனன்றான்
திருந்து தோளிடை வீக்கிய பாசத்தைச் சிந்தி
உருந்து நஞ்சுபோல் பவன்வயிற் பாய்வெனென் றுடன்றான்.

இருந்த எண் திசை கிழவனை-இவ்வாறு வீற்றிருந்த எட்டுத் திக்குக் களுக்கும் தலைவனான இராவணனை, மாருதி எதிர்ந்தான் - அநுமன் தன் எதிரே கண்டான்; கரும் திண் நாகத்தை நோக்கிய கலுழனில் கனன்றான் - கரிய வலிய சர்ப்பத்தைக் (கருநாகத்தை) கண்ட கருடன் போல அவன் கோபங் கொண்டவனாய், 'திருந்து தோள் இடை வீக்கிய பாசத்தை சிந்தி - சிறந்து விளங்கும் என்னுடைய தோள்களி டத்துக் கட்டியுள்ள நாக பாசமாகிய பிரமாத்திரத்தைச் சிதறி அடித்துப் போக்கி, உருந்து நஞ்சு போல்பவன் வயின் - வருத்தும் விஷம் போன்ற வனான இராவணனிடம், பாய்வென் என்று உடன்றான் - யான் பாய்ந்து துன்புறுத்துவேன்' என்று கோபம் மேற்கொண்டான்.

எண்டிசைக் கிழவன்-எட்டுத் திக்குக்களையும் வென்று அவற்றைத் தனக்கு உரிமையாக்கிக் கொண்ட இராவணன் என்க. கரும் திண் நாகம் - பெரியதும் வலிமையுள்ளதுமான சர்ப்பம் என்னலும் ஒன்றும்; திண்ணாகம் எனப்பாலது எதுகை நோக்கி இயல்பாயது. இராவண னுக்கு நிறத்தாலும் வலிமையாலும் கொடுமையாலும் கருநாகத்தையும், அநுமனுக்கு அந்நாகத்தைக் கொல்லும் வலிமையுடைய கலுழனையும் உவமைகளாகக் கூறப்பட்டது. அநுமனைக் கருடனாகக் கூறியது: 1176. திருந்து தோள் - சாமுத்திரிகா லட்சணத்திற் கூறியுள்ளபடி செம்மை யாய் (அதாவது அழகாய்) அமைந்த தோள்; 'திருந்து சேவடி பணிந் தனன்' (தணிகைப்: சீபரி: 451). உருத்து என்பது எதுகை நோக்கி மெலிந்தது.

(பி-ம்.) 1. இருந்த வேலையி னெண்டிசைக் கிழவனை; இருந்த முச்சகத் திறைவனை. 3. வீக்கிய வுரகத்தைச் சிந்தி. 4. உருந்த நெஞ்சுபோ லவன்; அருந்து நெஞ்சுபோல் பவன்: நஞ்சுபோ லிவன்; நஞ்சுபோ லவன். (55)

1098. உறங்கு கின்றபோ துயிருண்டல் குற்றமென் றொழிந்தேன்
பிறங்கு பொன்மணி யாசனத் திருக்கவும் பெற்றேன்
திறங்க ளென்பல சிந்திப்ப திவன்றலை சிதறி
அறங்கொள் கொம்பினை மீட்டுட னகல்வெனென் றமைந்தான்.

'உறங்குகின்ற போது - தூங்கும் போது, உயிர் உண்டல் - ஒருவன் உயிரைப் போக்குதல், குற்றம் என்று - பழிக்கு இடமாகும் என்று எண்ணி, ஒழிந்தேன் - (முன் இவனைக் கொல்லாது) நீங்கினேன்; பிறங்கு பொன் மணி ஆசனத்து இருக்கவும் பெற்றேன் - (இப்பொழுது இவன்) விளங்கும் பொன்னாலும் மணியாலும் அமைந்த சிங்காதனத்து வீற்றிருக் கவும் காணப்பெற்றேன்; திறங்கள் பல என் சிந்திப்பது - (இனிப்) பல விதங்களாய் என்ன ஆராய்தற்கு இருக்கிறது? (ஆராய வேண்டுவதில்லை என்றபடி); இவன் தலை சிதறி - இவன் தலைகளைச் சிதறி விழச்செய்து.

அறம் கொள் கொம்பினை - மகளிர்க்குரிய அறமாகிய கற்பினைத் தன் பாற்கொண்டுள்ள பூங் கொம்பு போன்ற பிராட்டியை, மீட்டு உடன் அகல்வென் - (சிறையினின்றும்) மீட்டுக்கொண்டு தாமதிக்காமல் உடனே (இராமபிரான் இடத்திற்குச் செல்ல இங்கு நின்றும்) நீங்குவேன்;' என்று அமைந்தான் - என்று அநுமன் உறுதி செய்து கொண்டான்.

இராவணன் உறங்கியபோது அநுமன் அவனைக் கொல்லலாகாது என்று நீங்கினான் என்பது முன் ஊர்தேடு படலத்தில் கூறப்படவில்லை. அறங்கொள் கொம்பு - அறத்திற்கு ஒரு பற்றுக்கோடு போல விளங்கும் பிராட்டி எனப் பொருள் கொள்ளலும் அமையும். இதுமுதல் அநுமன் இராவணனைக் கண்டதும் அவன் கொண்ட எண்ணங்கள் கூறப்படுகின்றன.

(பி-ம்.) 1. உயிருண்டிலன் குற்றமென். 2. இருக்கவும் பெற்றான்.
3. திறங்கொ டென்பல: தலை சிந்தி.
4. மீட்டுடன் போவனென்; மீட்டுட னகல்வதென்; என்றுறுத்தான். (56)

1099. தேவர் தானவர் முதலினர் சேவகன் றேவி
காவல் கண்டிவ ணிருந்தவர் கட்புலன் கதுவப்
பாவ காரிதன் முடித்தலை பறித்திலெ னென்றால்
ஏவ தாமினி மேற்செயு மாள்வினை யென்றான்.

'சேவகன் தேவி காவல் கண்டு - சிறந்த வீரனான இராமபிரானுடைய தேவியாகிய பிராட்டி சிறைக்காவலில் வைக்கப்பெற்றிருக்கக் கண்டும், இவண் இருந்தவர் - (அவளை மீட்பதற்கு ஆற்றலின்றியும், இராவணனுக்கு அஞ்சியும்) இங்கு வாளா பார்த்துக் கொண்டு இருந்தவர்களான, தேவர் தானவர் முதலினர் - தேவர்கள் அசுரர்கள் முதலினோருடைய. கண்புலன் கதுவ - கண்களுக்கு நன்றாய்த் தெரியும்படி, பாவகாரி தன் முடி தலை பறித்து இலென் என்றால் - பாவியின் முடிகளுடைய பத்துத் தலைகளையும் யான் பறித்து எறியேன் என்றால், இனிமேல் செயும் ஆள் வினை - இனி நான் மேலே செய்யக்கூடிய அடிமைத் தொழில், ஏவது ஆம் என்றான் - எதுதான் ஆகும் என்று வினவிக்கொண்டான்.

(பி-ம்.) 1. முதலினர் யாவரும் திசையிற்.
2. காவல் காண்டிவ னிருந்தவர்; காவ லேவல்கொண் டிருந்தவர்.
3. பறித்திலே னென்னில்: பறிக்கல னென்றால்.
4. ஏவ தியானினி; ஆவ தாமினி: யாவ தாமினி. (57)

1100. மாடி ருந்தமற் றிவன்புணர் மங்கையர் மறுகி
ஊடி ரிந்திட முடித்தலை திசைதொறு முருட்டி
ஆடல் கண்டுநின் றார்க்கின்ற ததுகொடி தம்மா
தேடி வந்ததோர் குரங்கெனும் பெரும்பொருள் தெரிய.

'தேடி வந்தது ஓர் குரங்கு - சீதையைத் தேடிக் கொண்டு வந்த தான ஒரு குரங்கு, மாடு இருந்த இவன் புணர் மங்கையர் மறுகி - இவ்விராவணன் அருகே இருந்தவர்களும் இவன் சேரத்தக்கவர்களு மான மகளிர்கள் திகைப்புற்று வருந்தி, ஊடு இரிந்திட - உட்புறம் நிலை கலங்கி ஓட, முடி தலை திசைதொறும் உருட்டி - கிரீடம் தரித்த இவன் தலைகளைப் பத்துத் திசைகளிலும் போய் உருண்டோடும்படிச் செய்து, ஆடல் கண்டு - அத் தலைகள் துள்ளிக் குதிப்பன பார்த்து, நின்று ஆர்க்கின்றது - நின்று பெரு முழக்கமிடுகின்றது, அது கொடிது - அக்குரங்கு மிகவும் கொடியது;' எனும் - என்று எல்லோரும் சொல்லும் பெரும் பொருள் தெரிய - பெரிய புகழ் தெரியும்படி, மற்று: அசை. அம்மா: இரக்கத்தை யுணர்த்தும் இடைச்சொல்.

இஃது அடுத்த செய்யுளோடு சேர்ந்து குளகமாய் நின்று முடிவு பெறும். அநுமன் தன்னை ஒரு குரங்கு என்று சொல்லிக்கொள்வது: 318.

(பி-ம்.) 1. மங்கையர் மயங்கி; தேவியர் மயங்க: மங்கையர் மருவி.
2. ஊடி ருந்திட; ஊடி ருந்தவன் முடித்தலை.
3. ஆடல் கொண்டுநின் றார்க்கின்றது: ஆடல் கண்டுநின் றுடுத லதுநெடி தம்மா; பெரி தம்மா.
4. குரங்கெனும் வாசகஞ் சிறிதோ.

1101. நீண்ட வாளெயிற் றரக்கனைக் கண்களி னேரே
காண்டல் வேண்டியிவ் வுயிர்சுமந் தெதிர்சில கழறி
மீண்ட போழ்துண்டு வசைப்பொருள் வென்றிலே னெனினும்
மாண்ட போதினும் புகழன்றி மற்றுமொன் றுண்டோ,

'நீண்ட வாள் எயிற்று அரக்கனை - நீண்ட வாள் போன்று விளங்கும் பற்களையுடைய இராவணனை, கண்களின் நேரே காண்டல் வேண்டி - நான் கண்களால் நேரில் பார்க்க விரும்பி, இ உயிர் சுமந்து - இந்த என் உயிரை என் உடலில் வைத்துத் தாங்கிக் கொண்டிருந்து, எதிர் சில கழறி - (இவனைக் கண்டபின்) இவன் நேரே சில மொழிகளைக் கூறி- மீண்ட போழ்து - திரும்பிச் சென்றபோதும், வசை பொருள் உண்டு - எனக்குப் பழியாகிய நிந்தனையே ஏற்படும்; வென்று இலேன் எனினும்,

இங்கு யான் இவனை வெல்லாவிட்டாலும், மாண்ட போதினும்-அல்லது இங்கே இவர்களோடு போர் புரிந்து மாண்ட போதும், புகழ் அன்றி மற்றும் ஒன்று உண்டோ - யான் அடைவது புகழே அல்லாமல் வேறு ஒன்று நிகழுமோ? (புகழே உண்டாகும்; இகழ்ச்சி உண்டாகாது என்றபடி).

வாள் எயிறு - ஒளி தங்கிய பற்கள் என்னலும் ஒன்றும். உயிர் சுமந்து என்று கூறியது இந்திரசித்திடம் தான் கட்டுப்பட்ட குறையை நினைந்து என்க. வசைப் பொருள், தான் கட்டுண்டதாலும், அவ்வரக்கர் களையும் இராவணனையும் கொன்று பிராட்டியைச் சிறை மீட்காது செல்வதாலும் உண்டாவன. வென்றிலேன் எனினும், என்ற உம்மை வெல்வது பெரும்பாலும் உறுதியென்பதைக் குறித்து வந்த எதிரது தழுவிய எச்சவும்மை. புகழ்: இராமபிரான் கைங்கரியத்தில் ஈடுபட்டுப் பகைவரோடு எதிர்த்துப் போர் புரிந்து அதில் இறந்தாலும் இம்மை மறு மைப் புகழ்களைப் பெறலாம் என்பது. 1100, 1101 ஆகிய இரு பாடல் களும் அநுமன், தன் முன் கண்ட இராவணனைக் கொல்லத் துணிந்தமை யைக் கூறின.

(பி-ம்.) 1. கண்களி னெதிரே.
2. காண்டு பின்னரு முடல்சுமந்; சுமந் தெரிசில கழறி; எதிர்சில கழற.
3. மீண்ட போதினில் வசைத்திறம் வென்றிலே னெனினும்: மீண்ட போதுண்டு: வென்றியன் றெனினும்.
4. மாண்டு போகினும்: மற்றுமொன் றுளதே. (56)

## அநுமன் மேலும் ஆராய்தல் 1102-1107

1102. என்று தோளிடை யிறுக்கிய பாசமிற் றேகக்
குன்றின் மேலெழுங் கோளரி யேறெனக் குதியில்
சென்று கூடுவ லென்பது சிந்தனை செய்யா
நின்று காரிய மன்றென நீதியி னினைந்தான்.

என்று - என்று இவ்வாறு எண்ணி, தோள் இடை இறுக்கிய பாசம் இற்று ஏக - தன் தோள்களிடத்து இறுக்கிக் கட்டிய பிரமாத்திர மாகிய பாசம் அறுந்து ஒழியும்படி, குன்றின் மேல் எழும் கோளரி ஏறு என - குன்றின் மேல் தாவ எழும்பும் ஆண் சிங்கம் போல, குதியில் சென்று கூடுவல் என்பது சிந்தனை செய்யா - ஒரு குதி குதித்துப் பாய்ந்து இந்த இராவணனை அடைவேன் என்று எண்ணி, நின்று-பிறகு ஆலோசித்து நின்று, 'காரியம் அன்று என நீதியின் நினைந்தான் - இது நான் செய்யத்தக்க நல்ல காரியம் அன்று' என்று அநுமன் நீதியை யொட்டிக் கருதுவானாயினன்.

குன்றின் மேலெழு கோளரிக்கு அநுமனை உவமித்தது; இங்குக் குன்று இராவணன்; 'இராவணக்குன்று' (உயுத்த. மருடபங்கப்: 39) என்றமையும் நோக்குக. இவ்வாறு முன் பலமுறை இராவணனை அநுமன் கொல்ல நினைத்துப் பின் அடங்கியது; 316-18. 469. அநுமன் நினைத்தவை பின் நான்கு பாடல்களில் கூறப்பெறும்.

(பி-ம்.) 1. என்று தோளினை: பாசத்தை யீர்த்துக்: பாசமிற் றேடக்.
2. எழு கோளரி.
3. சென்று கூடுவ னென்பது: சிந்தனை செய்ய; சிந்தித்துப் பின்னும். 4. சிந்தையி னினைந்தான்: நீதியை நினைந்தான். (60)

## வேறு

1103. *கொல்லலாந் தரத்தனு மல்லன் கொற்றமும்*
*சொல்லலாந் தரத்தனு மல்லன் றொல்லைநாள்*
*அல்லெலாந் திரண்டன்ன நிறத்த னாற்றலை*
*வெல்லலா மிராமனாற் பிறரும் வெல்வரோ.*

'கொல்லல் ஆம் தரத்தனும் அல்லன் - இந்த இராவணன் என்னால் கொல்லக்கூடிய தன்மையன் அல்லன்; கொற்றமும் - இவன் வலிமையும், சொல்லல் ஆம் தரத்தனும் அல்லன் - பிறரால் எடுத்துக் கூறக் கூடிய எளிய தகுதியுடையவனும் அல்லன்; தொல்லை நாள் அல் எலாம் திரண்டு அன்ன நிறத்தன் - நெடுங்காலமாய் உள்ள இருட்டு என்பதெல்லாம் ஒன்றாகத் திரண்டு வந்தது என்னும்படியான கரிய நிறத்தை யுடையவனான இவனுடைய, ஆற்றலை - வலிமையை, இராமனால் வெல்லல் ஆம் - இராமபிரான் ஒருவனாலேதான் வெல்லல் கூடும்; பிறரும் வெல்வரோ - வேறு யாரேனும் இவனை வெல்வார்களோ? (மாட்டார் என்றபடி).

தொல்லை நாள் அல்லெலாம்: யுக முடிவுக் காலத்தில் உள்ள இருட்டனைத்தும் எனக் கொள்ளலும் ஆம். கொல்லலாந் தரத்தனும் அல்லன் என்றது, தன்னால் இராவணனைக் கொல்லமுடியாது என்பதையும், தூது வந்த தன்னால் கொல்லக்கூடிய தகுதியுடையவன் அன்று என்பதையும் அநுமன் சிந்தித்துத் துணிந்தான் என்பதாம். ஒப்பு. 'இவனை வெல்லத் தோற்றத்தோர் கூற்றமுண்டே, எல்லுண்ட படைகைக் கொண்டா னெதிருண்டே யிராமன்கையில், வில்லுண்டே யுண்டெடன் றெண்ணி யாற்றவும் வியந்து நின்றான்' (உயுத்த. அங்கதன்றூது: 16.)

(பி-ம்.) 1. கொல்லலாம் வலத்தனு; வரத்தனு.
2. வெல்லலாந் தரத்தனு மல்லன் மேலைநாள்.
3. திரண்டன நிறத்த னாற்றலை: புல்லுமா தவத்தின் பொருந்து மாற்றலை.

1104. என்னையும் வெலற்கரி திவனுக் கீண்டிவன்
தன்னையும் வெலற்கரி தெனக்குந் தாக்கினல்
அன்னவே காலங்கள் கழியு மாதலால்
துன்னருஞ் செருத்தொழி றொடங்க றூயதோ.

'என்னையும் வெலற்கு இவனுக்கு அரிது - என்னை வெல்வதற்கு இவனுக்கு அரியதாகும்; (முடியாது என்றபடி); ஈண்டு - இவ்விடத்தில், இவன் தன்னையும் - இவ்வளவு துணை வலியோடு கூடிய இவனையும், எனக்கும் வெலற்கு அரிது - எனக்கும் வெல்வதற்கு அரியதாகும்; (மேலும்), தாக்கினல் - இவனோடு நான் எதிர்த்துப் போர் செய்தால், அன்னவே - அத்தன்மையாக ஒருவருக்கொருவர் வெல்ல முடியாமலே, காலங்கள் கழியும் - காலங்கள் பல சென்றுவிடும்; ஆதலால் - ஆகையால், துன் அரும் - நெருங்குதற்கு அரிய, செரு தொழில் தொடங்கல் - போர்த் தொழிலைத் தொடங்குவது, தூயதோ - நல்லதாகுமோ? (ஆகாது என்றபடி).

போர் புரிதல் தூயதன்று என்றதற்குக் காரணங்களை மேல் வரும் செய்யுட்களில் அநுமனே கூறுவன்.

(பி-ம்.) 1. இவனுக் கீண்டவன். 2. எனக்குத் தாக்கினல்.
3. என்னவே காலங்க ளிறக்கு மாதலால்: கழிக்கு மாதலால்.
4. துன்னரு மமர்த்தொழில்: தொடங்கத் தூயதே: தூய்தன்றால்.

(62)

1105. ஏழுய ருலகங்கள் யாவு மின்புறப்
பாழிவன் புயங்களோ டரக்கன் பல்தலைப்
பூழியிற் புரட்டலென் பூணிப் பாமென
ஊழியான் விளம்பிய வுரையு மொன்றுண்டால்.

'ஏழு உயர் உலகங்கள் யாவும் இன்பு உற - பூமி முதல் மேலே உயர்ந்து விளங்கும் ஏழு உலகங்கள் எல்லாம் இன்பம் அடையும்படி, அரக்கன் - இராவணனுடைய, பாழி வன் புயங்கள் ஓடு - பருத்த அவன் வலிய இருபது தோள்களோடு, பல் தலை - பலவான பத்துத் தலைகளையும், பூழியில் புரட்டல் - புழுதியில் புரளும்படி வெட்டித் தள்ளுதல், என் பூணிப்பு ஆம் என - என் சங்கற்பம்' என்று', ஊழியான் - இராமபிரான், விளம்பிய உரையும் ஒன்று உண்டு - சொன்ன சபதவுரையும் ஒன்று உள்ளது. ஆல்: அசை.

ஏழு உயர் உலகம் - பூலோகம், புவர்லோகம், சுவர்லோகம், மகலோகம், சனலோகம், தவலோகம், சத்தியலோகம் என்பன. யாவும். கீழேழு மேலேழுலகங்கள் யாவும் என்றும் கொள்ளலாம். உலகம்: என்

பது இங்கு இடவாகு பெயரால் உலகில் உள்ள உயிர்களைக் குறிப்பது. பூணிப்பு-சங்கற்பம்; சொன்னபடி செய்தல்; உயுத்த. அதிகாயன் 180. இராமபிரான் இராவணுதி யரக்கர்களைக் கொன்று அருள்புரிவதாகத் தண்டகவனத்து இருடிகளுக்கு முன் உறுதி கூறியதோடு, சூர்ப்பணகையிடத்தும் அச்சங்கற்பத்தை உறுதிபடுத்திக் கூறியுள்ளமை காண்க; ஆரண்ய. சூர்ப்பணகைப்: 136. இராமபிரானை, 'ஊழியான்' என்றது, ஊழிக்காலத்தும் அழியாத பரம் பொருளாகிய திருமாலே இராமபிரானுக அவதரித்துள்ள உண்மையை உணர்ந்து கூறியதாம்.

(பி-ம்.) 1. ஏழுபே ருலகங்கள்; ஏழுய ருலகங்கள்; ஏழிரு புவனங்களி யாவையும்.
3. பூமியிற் புரட்டுவன்; புரட்டலென்: பூமியிற் பொடிபடப் பொருனென்றுமுன். (63)

1106. *இங்கொரு திங்களே யிருப்பல் யானென*
*அங்கணு யகன்றன தாணை கூறிய*
*மங்கையு மன்னுயிர் துறத்தல் வாய்மையால்*
*பொங்குவெஞ் செருவிடைப் பொழுது போக்கினுல்.*

'பொங்கு வெம் செரு இடை பொழுது போக்கினுல் - (யான் இங்கு இப்பொழுது நினைத்தபடி) மிகுந்த கொடிய போரிடத்தில் காலத்தைக் கழித்தால், 'இங்கு ஒரு திங்களே யான் இருப்பல் என - இந்த இலங்கையில் இன்னும் ஒருமாத கால அளவே யான் இருப்பேன்' என்று, அம் கண் நாயகன் தனது ஆணை கூறிய - அழகிய இடமாகிய உலகிற்கு நாயகனுன இராமபிரான் மீது ஆணையிட்டு உறுதி கூறிய, மங்கையும் - பிராட்டியும், (தன்னை மீட்க இராமபிரான் வராமை கண்டு), மன் உயிர் துறத்தல் வாய்மை ஆல் - தன்னிடம் பொருந்திய உயிரைத் துறந்து விடுதல் நிச்சயம் ஆகும்; (ஆதலாலும்),

இன்னும் ஒரு மாதமே உயிர்வைத்திருப்பேன் என்று பிராட்டி அநுமனிடம் இராமபிரான்மேல் ஆணையிட்டுக் கூறியது; 635, அங்கணுயகன்- அழகிய கண்களையுடைய தன் கணவனுன இராமபிரான் என்னலும் ஆம்.

(பி-ம்.) 2. அங்கணு யகன்றனி யாணை; அங்கணு யகன்றனக் காணை.
3. மங்கையு மின்னுயிர்: துறக்கும் வாய்மையால். (64)

1107. *ஆதலா னமர்த்தொழி லழகிற் றன்றரும்*
*தூதனுந் தன்மையே தூய்தென் றுன்னினுன்*
*வேதநா யகன்றனித் துணைவன் வென்றிசால்*
*ஏதில்வா ளரக்கன திருக்கை யெய்தினுன்.*

'ஆதலால் - மேற்கூறிய காரணங்களால், அமர் தொழில் அழகிற்று அன்று - (யான்) போரிடுதல் அழகுடைய செயல் இல்லை; அரும் தூதன் ஆம் தன்மையே தூய்து - சிறப்புடைய தூதன் என்ற நிலையை மேற்கொள்ளுதலே எல்லாவற்றிற்கும் குற்றமற்ற நன்மை தரத்தக்கது;' என்று உன்னினன் - என்று நினைத்தவனாகி, வேத நாயகன் தனி துணைவன் - வேதங்களுக்குத் தலைவனான இராமபிரானுடைய ஒப்பற்ற துணைவனான அநுமன், வென்றி சால் - வெற்றிமிக்க, ஏதில் வாள் அரக்கனது - பகைவனான வாளேந்திய இராவணனுடைய, இருக்கை எய்தினன் - கொலு வீற்றிருக்கும் இடத்தை நெருங்கினன்.

இராமன் வேத நாயகன் என்பது; 20. 632 உரை. இராமபிரான் அநுமனைப் பிராட்டிபால் தூது அனுப்பியதே யன்றி, இராவணன்பால் தூதாகச் சென்று வர அனுப்பாதிருக்கவும், அநுமன், மேல் நிகழ வேண்டியவற்றை எண்ணி தானே தன்னை இராவணன்பால் இராமன் அனுப்பிய தூதன் எனச் சொல்லிக்கொள்வதே தூய்தெனத் துணிந்தான் என்க. இதுவரை, இராவணனைத் தூரத்திலே யிருந்து கண்டு அநுமன் தனக்குள் கூறிக் கொண்டவையாம்.

(பி-ம்.) 1. அழகிற் றன்றெனத்; அழகி தன்றெனத்; அழகி தன்றருந். 2. தூய தென் றுதான் துணை வன். 3. வென்றியரல்: தூதன் வென்றிசால். 4. ஏதிவா ளரக்கன் (65)

## இந்திரசித்து அநுமனை இராவணனுக்கு அறிமுகப் படுத்துதல். 1108-1110

1108 *தீட்டிய வாளெனத் தெறுகட் டேவியர்*
*ஈட்டிய குழுவிடை யிருந்த வேந்தற்குக்*
*காட்டின னநுமனைக் கடலி னாரமு*
*தூட்டிய வும்பரை யுலைய வோட்டினான்.*

தீட்டிய வாள் என-(கூர்மையாகும்படி) தீட்டப்பட்ட வாள் போல, தெறு கண் தேவியர்-(பார்ப்போர் மனத்தில் ஊடுருவிச் சென்று) வருத்தும் கண்களையுடைய தனக்குரிய மனைவியர், ஈட்டிய குழு இடை - ஒன்று சேர்ந்து இருந்த கூட்டத்தினிடையே, இருந்த ஏந்தற்கு-இருந்த அரசனான இராவணனுக்கு, கடலின் ஆர் அமுது ஊட்டிய உம்பரை - பாற்கடலினின்றும் உண்டான அரிய அமுதத்தை உண்ட தேவர்களை, உலைய ஓட்டினன் - வருந்தும்படி போர் புரிந்து பின்னிட்டுத் தோற்றோடச் செய்தவனான இந்திரசித்து, அநுமனை காட்டினன் - அநுமனை நேரிற் காணுமாறு செய்தான் (அறிமுகப்படுத்தினன்).

இராவணன் தேவியார் கண்கள், உருவிலும் கொடுமையிலும் வாள் போன்றவை என்பதாம். ஈட்டிய, ஊட்டிய என்றவை இங்குத் தன் வினைப் பொருளில் வந்தன.

(பி-ம்.) 2. இருந்த வீரற்கு. (66)

1109. புவனமெத் தனையவை யனைத்தும் போர்கடந்
தவனையுற் றரியுரு வான வாண்டகை
சிவனெனச் செங்கணு னெனச்செய் சேவகன்
இவனெனக் கூறிநின் றிருகை கூப்பினான்.

புவனம் எத்தனை அவை அனைத்தும் - உலகங்கள் எத்தனையுள்ளனவோ அவை எல்லாவற்றையும், போர் கடந்தவனை உற்று - போரில் வென்றுகொண்ட இராவணனை (இந்திரசித்து) அடைந்து: 'ஆண்டகை- ஆடவரிற் சிறந்தோனே! அரி உருவான இவன் - குரங்கு வடிவாயுள்ள இவன், சிவன் என, செம் கணன் என - சிவபிரான் போலும் திருமால் போலும், செய் - போர் செய்த. சேவகன் - சிறந்த வீரன்', எனக் கூறி- எடுத்துச் சொல்லி, நின்று - அவன் எதிரே நின்று, இரு கை கூப்பினான் - தன் இரண்டு கைகளையும் குவித்து வணங்கினான்.

போர்கடந்தவன் - இராவணன்; முன், செய்யுளில் உள்ள 'உம்பரை யுலைய வோட்டினான்' என்ற இந்திரசித்து, இச் செய்யுளுக்கும் தோன்றா எழுவாயாய்த் தொக்கி நின்றது. இனி அரியுருவான 'ஆண்டகை' என் பதையும், அநுமனுக்கே இயைத்துப் பொருள் கொள்ளலும் ஒன்றும். இதில், இந்திரசித்து அநுமனுடைய போர்ச் சிறப்பையும், வலிமையை யும் பாராட்டிக் கூறினான் என்பதோடு, அத்தகைய வீரனை அநுமனைப் பிணித்துக் கொணர்ந்த தன் ஆற்றலையும் உட்பொருளாய்த் தோன்ற வைத்தமையும் புலப்படுத்துவதாகும்.

(பி-ம்) 2. உரு வமைந்த வாண்டகை.
3. செங்கண் மாலென்னச் செய்தவன்; செங்கணு னென்னச் சேவகன்; செய்த சேவகன்.
4. நின்றெதி ரிறைஞ்சினான். (67)

1110. நோக்கிய கண்களா னெறிற்க னற்பொறி
தூக்கிய வநுமன்மெய் மயிர்சு றுக்கொளத்
தாக்கிய வுயிர்ப்பொடு தவழ்ந்த வெம்புகை
நீக்கிய வவனுடல் விசித்த பாம்பினே.

நோக்கிய கண்களால் - (இராவணன் அநுமனைச் சினத்தோடு) பார்த்த அக் கண்களினின்றும் உண்டான, நொறில் கனல் பொறி- விரைந்து சென்ற நெருப்புப் பொறிகள், தூக்கிய அநுமன் மெய் மயிர்- சிமிர்ந்து விளங்கிய அநுமனுடைய உடலில் உள்ள உரோமங்கள், சுறு கொள - சுறுசுறு வென்று தீய்ந்து எரிய, தாக்கிய-அவ்வநுமனை மோதிய, உயிர்ப்பு ஒடும்-அவ்விராவணனுடைய பெருமூச்சுக்களோடு. தவழ்ந்த- தழுவிச் சென்ற, வெம் புகை - வெப்பமுள்ள புகைகள், அவன் உடல் விசித்த பாம்பின் - அவ்வநுமன் உடலைப் பிணித்திருந்த பாம்பைப் போல, வீக்கிய - அவனைக் கட்டின. ஏ: அசை.

புகை இராவணன் பத்து நாசிகளினின்றும் புறப்பட்டவை ஆதலின், வீக்கிய எனப் பன்மை வினை கொண்டு முடிந்தது. 34. வீக்குதல் - மூடு தலுமாம்.

(பி-ம்.) 1. நோக்கிய கட்பொறி நுவன்ற வாய்களில்.
3. தரக்கிய புகையொடுந்; தவழ வெம்புகை. (68)

## இராவணன் வினா. 1111-1115.

1111. *அன்னதோர் வெகுளிய னமர ராதியர்*
*துன்னிய துன்னலர் துணுக்கஞ் சுற்றுற*
*என்னிவண் வரவுநீ யாரை யென்றவன்*
*தன்மையை வினவினன் கூற்றின் றன்மையான்.*

கூற்றின் தன்மையான் - கூற்றுவன் போன்ற கொடுந்தன்மை யுடைய இராவணன், அன்னது ஓர் வெகுளியன் - அத்தன்மையான ஒரு கோபம் மேற் கொண்டவனாகி, அமரர் ஆதியர் - தேவர்கள் முதலாக உள்ள, துன்னிய துன்னலர் - தன்னைச் சூழ்ந்திருந்த பகைவர்கள், துணுக்கம் சுற்று உற - நடுக்கம் சூழ்ந்துள்ளவர்களாக, (அநுமனை நோக்கி), 'இவண் வரவு என் - இந்த இலங்கைக்கு நீ வந்தது என்ன காரணம்? நீ யாரை என்று - நீ யார்' என்று, அவன் தன்மையை வின வினன் - அந்த அநுமனுடைய நிலைமையை அறியக் கேட்கலானான்.

ஓர் வெகுளி - ஒப்பற்ற கோபம் என்னலும் ஆம். அமரராதியர், இப்பொழுது இராவணனுக்கு அடங்கி அருகே நின்று ஏவல் புரிவா ரேனும், அன்னோர் அவனிடத்தில் பகைமை பாராட்டுவோ ராதலின், துன்னலர் எனப்பட்டார். துன்னலர் என்பது நெருங்காதவர், அல்லது சேராதவர் என்ற பொருளில் பகைவரைக் குறிப்பது. துணுக்கம் சுற்றுறல்; இராவணனது அக்கோபத்தால் என்ன விபரீதம் விளை யுமோ என்று அஞ்சினராதலின், இராவணனைக் கூற்றின் தன்மையான்

என்றது, இரக்கமின்றிப் பிறர் உயிரை வாங்கும் கொடுந்தொழில் உடைமைபற்றி. இது முதல் 5 செய்யுட்கள் இராவணன் அநுமனை வினவியவை.

(பி-ம்.) 1. அன்னவோர் வெகுளியன் வெகுளியா லமர ராதியர்.
2. துன்னிய துன்னின துணுக்கஞ் சுற்றுற.
4. வினவினுன் றலங்கள் மூன்றுளான். (69)

1112. நேமியோ குலிசியோ நெடுங்க ணிச்சியோ
தாமரைக் கிழவனோ தறுகட் பஃறலைப்
பூமிதாங் கொருவனோ பொருது முற்றுவான்
நாமமு முருவமுங் கரந்து நண்ணினாய்.

(அவன் அநுமனை நோக்கி), 'நேமியோ - நீ சக்கராயுதத்தை யுடைய திருமாலோ? குலிசியோ - வச்சிராயுதனான இந்திரனோ? நெடும் கணிச்சியோ - நீண்ட சூலாயுதத்தையுடைய சிவபெருமானோ? தாமரை கிழவனோ - தாமரை மலரைத் தனக்கு உரிய இடமாகக் கொண்ட பிரமதேவனோ? தறுகண் பல் தலை-அஞ்சாமையும் பல ஆயிரம் தலைகளையுமுடைய, பூமி தாங்கு ஒருவனோ - பூமியைத் தாங்கிக் கொண்டிருக்கும் ஒருவனாகிய ஆதிசேடனோ? பொருது முற்றுவான் - போர் செய்து (இவ்விலங்கையை) அழிக்கும் பொருட்டு, நாமமும் உருவமும் - (மேற் கூறிய ஒருவனைப்) பெயரையும் உருவையும், கரந்து நண்ணினாய்-மறைத்துக் கொண்டு இங்கு வந்துள்ளாய்.

அநுமனை அரக்கர்களும் இவ்வாறே எண்ணுதல்; 1057, 1059.

(பி-ம்.) 3. பொருது முற்றுற: (70)

1113. நின்றசைத் துயிர்கவர் நீலக் காலனோ
குன்றசைத் தயிலுற வெறிந்த கொற்றனோ
தென்றிசைக் கிழவனோ திசைநின் றுட்சியர்
என்றிசைக் கின்றவ ரிவருள் யாவனீ.

(அவர்களல்லாமல்), 'நின்று - எதிரே நின்று, அசைத்து - தன் பாசத்தால் கட்டி, உயிர் கவர் - பிராணிகளின் உயிரைப் பற்றிக் கொள்ளும், நீல காலனோ - கருநிறமுள்ள காலனோ? குன்று அசைத்து அயில் உற எறிந்த - கிரௌஞ்ச கிரி என்னும் மலையை அசையச் செய்து அதனுள் தன் வேல் சென்று பிளக்க அதனைத் தாக்கிய, கொற்றனோ - வெற்றியையுடைய குமாரக் கடவுளோ? தென்திசை கிழவனோ-தெற்குத்

திசைக்கு உரியவனுன யம தரும ராசனே? திசை நின்று ஆட்சியர் என்று - மற்றத் திக்குகளில் நிலைபெற்று ஆட்சி செய்பவர் என்று, இசைக்கும் - சொல்லப்படும், இவருள் - இத்தகையோருள், நீ யாவன்- நீ யார்?

காலன் என்றும், தென் திசைக் கிழவன் என்றும் வேருகக் கூறியது, காலன் தென்திசைக் கிழவனுன யம தருமராஜனின் ஆணையைச் செலுத்தும் ஒரு சேவகனே ஆவன் என்பதை விளக்க வந்தது- ஒப்பு. 'தருமராச னேவ வந்த கூற்றினைக் குமைப்பர் போலுங் குறுக்கைவீரட்டனுரே' (திருநாவுக்கரசர் தேவாரம், திருக்குறுக்கை திருநேரிசை: 2) காலன் - பிராணிகளின், வாழ்நாட் காலத்தைக் கணக்கிட்டுத் தருமராஜனுக்குத் தெரிவிப்பவன். இனி, தென்றிசைக் கிழவன் என்பதற்கு அகத்தியர் என்று சிலர் கூறுவர். அவர் இராவணனைக் கந்திருவத்தாற் பிணித்து, அவனைத் தமிழ் நாட்டிற்கு வந்து இடையூறு விளைக்காதிருக்கச் செய்து விடுவித்து அருள் புரிந்தனர் என்பது தொல்காப்பியம் பாயிரம் நச்சினுர்க்கினியர் உரையால் விளங்குவதால், அது பொருளன் றென்க. கிரௌஞ்சகிரியை முருகன் பிளந்தது; 'குன்றங் கொன்ற குன்ருக் கொற்றத்து விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவன்' 'குன்ற மெறிந்தாய் குரைகடலிற் சூர் தடிந்தாய்' (திருமுருகாற்றுப்படை. 266-267; ஈற்று வெண்பா.) முன் இந்திரனையும், யமனையும் தனியே கூறியுள்ளமையால் திசைநின் ருட்சியர் என்பது: அவ்விருவரை யொழிந்த மற்றை ஆறு திக்குப்பாலகர்கள் எனக் கொள்ளற்பாலதாம்.

(பி-ம்.) 1. நின்றிசைத் துயிர்; நின்றனைத் துயிர்.
2. குன்றசைத் தயிலுக: குன்றினைப் பிளந்தவேற் குமரனே கொடுந். 3. நின் ருட்சியோர்; நின் ருட்சியார்.
4. தம்மில் யாவனீ; யாருள் யாவனீ: யாவர் யாருனீ. (71)

1114. *அந்தணர் வேள்வியி னுக்கி யாணையின்*
*வந்துற விடுத்ததோர் வயவெம் பூதமோ*
*முந்தொரு மலருளோ னிலங்கை முற்றுறச்*
*சிந்தெனத் திருத்திய தெறுகட் டெய்வமோ.*

(அன்றி), 'அந்தணர் - முனிவர்கள், வேள்வியின் - யாகத்தினின்றும் ஆக்கி - உண்டாக்கி, ஆணையின் - தம் கட்டளைப்படி, வந்து உற விடுத்தது - என்னை வந்து அடையும் வண்ணம் அனுப்பியதான, ஓர் வய வெம் பூதமோ - ஒரு வலிமைமிக்க கொடிய பூதமோ? முந்து ஒரு மலர் உளோன் - எவற்றுக்கும் முன்னதாகத் தாமரை மலரில் உள்ள

பிரமதேவன், இலங்கை முற்று உற - இலங்கை நகரம் அழிவடைய: 'சிந்து என - சிதற அடி' என்று, திருத்திய - புதிதாகப் படைத்தனுப்பிய, தெறு கண் தெய்வமோ - பகைத்து எரிக்கும் கண்களையுடைய ஒரு தெய்வமோ?' (என்று இராவணன் அநுமனை வினவினன்).

முனிவர்கள் - தண்டகாரணிய வாசிகளான முனிவர்கள் எனக் கொள்ளலாம்.

(பி-ம்,) 1. வேள்விசெய் தாக்கு மாணை யின்; அங்கி யாணையால்.
3. முந்துற மல.
4. சிந்துறத் திறத்துமோர் திகிரித் தேரனோ: தறுகட் டெய்வமோ. (72)

1115. *யாரை நீ யென்னையிங் கெய்து காரியம்*
*ஆருனை விடுத்தவ ரறிய வாணையால்*
*சோர்விலை சொல்லுதி யென்னச் சொல்லினன்*
*வேரொடு மமரர்தம் புகழ்வி ழுங்கினன்.*

அமரர் தம் புகழ் - தேவர்கள் புகழை, வேர் ஒடு விழுங்கினன்-அடியோடு உண்டவனான இராவணன், (மேலும் அநுமனை நோக்கி), 'நீ யாரை - நீ யார்? இங்கு எய்து காரியம் என்னை - இங்கு நீ வந்த காரியம் யாது? ஆர் உனை விடுத்தவர் - உன்னை யார் அனுப்பினவர்? அறிய - நான் தெரிந்து கொள்ளும்படி, ஆணையால் - என் கட்டளைப்படி, சோர்வு இலை சொல்லுதி - தவறில்லாமல் உள்ளபடி சொல்வாயாக;' என்ன சொல்லினன் - என்று கூறினன்.

விழுங்கினன். என்பது அழித்தான் என்ற பொருளில் வந்த மரபு வழுவமைதி. 'யாரை நீ யென்னையிங் கெய்து காரணம்' ஒப்பு. 1111.

(பி-ம்,) 1. ஆரைநீ: எய்து காரணம்: எய்துங் காரணம்,
3. சோர்வில: எனவுஞ் சொல்லுவான்.
4. வேரொடு நிருதர்தம். (73)

## அநுமன் விடை 1116-1124

1116. *சொல்லிய வனைவரு மல்லலென் சொன்னவப்*
*புல்லிய வலியினோ ரேவல் பூண்டிலென்*
*அல்லியங் கமலமே யனைய செங்கணோர்*
*வில்லிதன் றூதன்யா னிலங்கை மேயினேன்.*

(அநுமன்), 'சொல்லிய அனைவரும் அல்லென் யான் - நீ சொன்ன அவ்வனைவரும் அல்லேன்: சொன்ன - நீ கூறிய, அ புல்லிய வலியினோர் - அந்த அற்ப வலியுள்ளவர்களுடைய, ஏவல் பூண்டிலென் - கட்டளையை யான் ஏற்றுவந்தேன் அல்லேன்; அல்லி அம் கமலமே அனைய - அக விதழ்களோடு கூடிய அழகிய தாமரை மலரே போன்ற, செம் கண் ஓர் வில்லி தன் - சிவந்த கண்களையுடைய ஒப்பற்ற ஒரு வில்வீரனுடைய, தூதன்- தூதனுவேன். யான் இலங்கை மேயினேன்-நான் இந்த இலங்கை நகரை அடைந்தேன்.

இச் செய்யுள் முதல் 1124 முடிய, அநுமன் கூறிய மறுமொழி. இராவணன் கூறிய திரிமூர்த்திகள், இந்திரன். ஆதிசேடன், காலன், முருகன், தருமராசன், மற்ற திக்பாலகர்கள் யாவரும் இராமபிரா னுக்கு வலியிற் குறைந்தவர்கள் என்பதும், மும்மூர்த்திகளுக்கும் மேம் பட்ட பரம் பொருளே இராமபிராஞக அவதரித்துள்ளார் என்பதும் அநுமன் துணிபு; இவ்வுண்மைவிளங்கப் பெறுவது, 1122; பால. திருவவ தாரப்; 137; கடிமணப்: 61; 99, செய்யுட்களாலும், விராதன், இந்திரன் கவந்தன முதலினோர் துதிகளாலும் நன்கு விளங்குவன காணலாம்.

(பி-ம்.) 1. அனைவரு மல்லன்; அல்லன் சொல்லிய.
2. புல்லியல் வலியின ரேவல் பூண்டிலன்; வலியினு ரேவல்.
3. அணைய செங்கணுன்.
4. தூதன்வந் திலங்கை மேவினேன்; தூதின்வந் திலங்கை மேவி னேன்; தூதனேன் றிலங்கை மேயினேன். (74)

1117. *அனையவன் யாரென வறிதி யாகியேல்*
*முனைவரு மமரரு மூவர் தேவரும்*
*எனையவ ரேனையர் யாவர் யாவையும்*
*நினைவரும் வினையமு முடிக்க நின்றுளான்.*

'அனையவன் யார் என - அந்த வில் வீரன் யாவன் என்று, அறிதி ஆகியேல் - நீ அறிய வேண்டுவையானுல், முனைவரும் - முனிவர்களும், அமரரும் - தேவர்களும், மூவர் தேவரும் - கடவுளாகிய மும்மூர்த்தி களும், எனையவர் ஏனையர் - மற்றும் இன்னுரென்று சொல்லப்படுவர், யாவர்-யார் உளரோ அவர்களும், யாவையும் - அவரொழிந்த அஃறிணைப் பொருள்களாயுள்ளவைகளும், நினைவு அரும்-நினைப்பதற்கு அரியதான, வினையமும்-காரியங்களையும், முடிக்க-செய்து முடிக்க, நின்று உளான்- சங்கற்பித்து நிற்பவன் ஆவன்.

முனைவர் - யாவரினும் முன் கருதத்தக்க மேலோரான முனிவர்; 'வினையி னீங்கி விளங்கிய வறிவின் முனைவன் கண்டது முதனூ லாகும்' (தொல், பொருள்:649.) வினையம் - செயல்.

(பி-ம்.) 1. அறிதற் குற்றியேல். 2. முனிவரும்.
3. எனையவர் யாவரும் யாவா யாரையும்.
4. நினைவரு மிருவினை: நின்றுளோன். (75)

## வேறு

1118. *ஈட்டிய வலியு மேனு ளியற்றிய தவமும் யாணர்க்*
*கூட்டிய படையுந் தேவர் கொடுத்தநல் வரமுங் கொட்பும்*
*தீட்டிய வாழ்வு மெய்தத் திருத்திய பிறவு மெல்லாம்*
*நீட்டிய பகழி யொன்ருன் முதலொடு முடிக்க நின்ருன்.*

ஈட்டிய வலியும் - நீங்கள் தேடிச் சேர்த்துக் கொண்ட வலிமைகளையும், மேல் நாள் இயற்றிய தவமும் - முன்னுளில் நீங்கள் புரிந்த தவப்பயன்களையும், யாணர் கூட்டிய படையும் - புதிதாய் நீங்கள் சேர்த்து வைத்துள்ள அரிய படைகளையும், தேவர் கொடுத்த நல் வரமும் - தேவர்கள் உங்களுக்கு அளித்துள்ள சிறந்த வரன்களையும், கொட்பும் - மற்றும் உள்ள உங்கள் சுழற்சிகளையும், தீட்டிய வாழ்வும் எய்த திருத்திய பிறவும் எல்லாம் - சிறப்போங்க வாழும் வாழ்க்கையை அடையச் செவ்வனே விளங்கச் செய்த மற்றயாவற்றையும், நீட்டிய பகழி ஒன்ருல் - (என் தலைவன்) தான் நேரே செல்லுமாறு தூண்டிய தன் அம்பு ஒன்றினுல், முதல் ஒடு முடிக்க நின்ருன் - வேரொடு அழிக்கச் சங்கற்பித்து, அதில் உறுதி கொண்டுள்ளான்.

இங்கு இராமபிரானின் கோட்பாடு கூறப்பட்டது. கொட்பு - தந்திரம் அல்லது சுழற்சி; 25 உரை; கொட்பு-கொள்கையும் ஆம். நீட்டிய பகழி; நீண்டதாய் உள்ள அம்பு என்றலும் அமையும்.

(பி-ம்.) 1. ஈட்டுநின் வலியும்: தவமும் வென்றிக்.
2. கூட்டிய படையு மீசன்:
3. தீட்டிய பிறவு மெய்தித்; தீட்டிய வறிவு மிக்க; தீட்டிய திறலும் வாழ்வு தேடிய பிறவு மெல்லாம்.
4. பகழி யொன்ருல் நெருப்பெழ வெரிக்க நின்ருன்: முதலொடு நீக்க நின்ருன். (76)

1119. *தேவரும் பிறரு மல்லன் றிசைக்களி றல்லன் றிக்கின்*
*காவல ரல்ல னீசன் கயிலையங் கிரியு மல்லன்*
*மூவரு மல்லன் மற்றை முனிவரு மல்ல னெல்லைப்*
*பூவல யத்தை யாண்ட புரவலன் புதல்வன் போலாம்.*

தேவரும் பிறரும் அல்லன் - (அந்த வில் வீரன் உங்களிடம் போரில் தோற்றோடிய) தேவர்களினும் மற்றையோர்களினும் ஒருவன் அல்லன்; திசை களிறு அல்லன் - திக்கயங்களில் ஒன்றுமல்லன்; திக்கின் காவலர் அல்லன் - திக் பாலர்களில் ஒருவனும் அல்லன்; ஈசன் கயிலை அம் கிரியும் அல்லன் - சிவபெருமானுடைய கயிலாய மலையோ என்றால், அதுவும் அல்லன்; மூவரும் அல்லன்-மும்மூர்த்திகளுமல்லன்; மற்றை முனிவரும் அல்லன் - மற்ற முனிவர்களும் அல்லன்; எல்லை பூவலயத்தை ஆண்ட புரவலன் - பூமியின் எல்லையுள்ளளவும் (தானே ஏக சத்ராதிபதியாக) ஆட்சி புரிந்த, புரவலன் புதல்வன் போல் ஆம் - ஓர் அரசனுடைய குமாரனேதான் ஆவன்,

தேவர்முதல். கயிலையங்கிரி வரையில் அனைத்தும், முன் இராவண னிடம் தோற்றவையாதலின், அவற்றில் ஒன்று இவ்வானர உருவொடு தன்னிடம் பகை பாராட்டி வந்ததோ என்று அவன் கருதலாம் என, அவற்றில் ஒன்று அல்ல னென்று முற்கூட்டி அறிவித்தது: 'நேமியோ... கணிச்சியோ தாமரைக் கிழவனோ' (1113) என்று இராவணன் சங்கை யுற்றதற்கு விடையாக; 'மூவரு மல்லன்' என்றும், முனிவர்க்கு அவன் செய்துள்ள தீங்கு கருதி அன்னோர் அவனைப் பகைத்து வந்தாரோ என்று எண்ணுவதற்கு இடமின்றி, 'முனிவரு மல்லன்' என்றும் கூறி, தனக்குப் பகைவனாகக் கருதாது அற்பமாகக் கருதும் மானிடனை, 'ஒரு மன்னவன் புதல்வனே' என்று அவன் வியப்புறுமாறு கூறிய அநும னுடைய சொற்றிறம் இதனால் விளங்ககும் பெற்றியும் உய்த்துணரற் பாலதாம்.

(பி-ம்.) 1. களி றூர்தித் திக்கிற்.
2. வெள்ளிக் கயிலையங் கிரிய னல்லன்: காவல ரல்ல விசோல் கயிலையங் கிருயனுநி.
3. முனிவரு மல்ல னெண்ணில்: அல்ல னெல்லை; அல்லன் றெல்லை. 4. புரவல னொருவன் போலாம். (77)

1120. போதமும் பொருந்து வேள்விப் புரையறு பயனும் பொய்தீர்
மாதவஞ் சுமந்து தீரா வரங்களு மற்றும் யாவும்
யாதவ னினைந்தா னன்ன பயத்தன வேது வேண்டின்
வேதமு மறமுஞ் சொல்லு மெய்யற மூர்த்தி வில்லோன்.

போதமும் - மெய்ஞ்ஞானமும், பொருந்து வேள்வி புரைஅறு பய னும் - சாஸ்திரங்களுக்குப் பொருந்தினவான யாகங்களைச் செய்ததால் உண்டான குற்றமற்ற நற்பயன்களும், பொய் தீர் - பொய்மை இல்லாத, (அதாவது தவறாத), மாதவம் - பெருந்தவத்தால், சுமந்து தீரா வரங்

களும் - தாங்கி அழியாத வரன்களும், மற்றும் யாவும் - மற்றும் அடைந்துள்ள சிறப்புக்கள் யாவும், யாது அவன் நினைந்தான் அன்ன பயத்தன - அவன் என்ன நினைத்தானே அவ்வாறே பயனளிக்கக் கூடியவையாய் அமைவன ஆயின; ஏது வேண்டின் - (இவ்வாறு அவன் நினைப்பதற்கு ஏற்ப அவை பயனளிப்பதற்குக்) காரணம் கூறவேண்டுமேல், வில்லோன் - யான் கூறிய அந்த வில் வீரன், வேதமும் அறமும் சொல்லும் மெய் அறமூர்த்தி - வேதங்களும் தருமமும் அந்த மெய்மையான அற உருவினனான பரம் பொருளே ஆவன்.

போதம் - மெய்ஞ்ஞானம். போதம் முதல் யாவும், பரம் பொருளாகிய கடவுளின் ஆணைப்படி நடப்பன என்பதும், அப்பரம் பொருளே இவ் வில்லோன் என்பதும், அப்பரம் பொருள் நினைத்த மாத்திரத்தில் இராவணன் அடைந்துள்ள எல்லாச் சிறப்புக்களும் அகன்று அழியும் என்பதும் இதனால் இராவணனுக்கு உணர்த்தப்பட்டன. 'வில்லோன்' என்ற குறிப்பால், அவன் நினைத்தவாறு யாவும் நடைபெறும் எனினும், அவன் கையில் ஒரு வில்லையும் உடையான் என்று அநுமன் இராவணனுக்கு அச்சுறுத்தியதுமாகும். இச் செய்யுளில் பரம்பொருளின் தன்மையைக் கூறிப் பின்வரும் இரு செய்யுட்களில் அப்பரம் பொருளே இராமனாக அவதரித்துள்ளான் என்பதை விளங்கவைப்பதும் காண்க.

(பி-ம்.) 1. பொருந்தும் வேன்விப்: புரையறும் பயனும்.
2. மாதவஞ் சார்ந்த நீரா: மற்று முற்றும்.
3. பயக்குவ வியம்ப வேண்டில்: அன்ன வேதுவே வேண்டில் வேண்டா: யாதெவ னினைந்தா னன்ன: யாதுமன் னவவிற் றேன்று மென்பதற் கேது வேண்டின்.
4. வேதங்கள் முடிவிற் சொல்லு மேலையோ னறத்தின் மூர்த்தி.

(78)

1121. காரணங் கேட்டி யாயிற் கடையிலா மறையின் கண்ணும்
ஆரணங் காட்ட மாட்டா வறிவினுக் கறிவாய் நின்றான்
போரணங் கிடங்கர் கவ்வப் பொதுநின்ற முதலே யென்ற
வாரணங் காக்க வந்தா னமரரைக் காக்க வந்தான்.

'காரணம் கேட்டி ஆயின் - (அந்த முதற்கடவுள் வில்லோனாய் ஓர் அரச குமாரனாய்த் தோன்றியுள்ளமைக்குக்) காரணம் யாது என்று கேட்பாயானால், கடை இலா மறையின் கண்ணும் - முடிவு இல்லாத வேதங்களினிடத்தும், ஆரணம் காட்டமாட்டா - அவ் வேதங்களின் (முடிவான உபநிடதங்களாலும்) இன்னதென்று குறிப்பிட்டுக் காட்ட முடியாத, அறிவினுக்கு அறிவாய் நின்றான் - ஞானத்திற்கே ஓர் அறிவு போன்றுள்ளவன்; போர் அணங்கு இடங்கர் கவ்வ-போரிட்டு எதிர்த்துத்

துன்பத்தைத் தரும் முதலை கௌவிக் கொள்ள, பொது (இன்ன கடவுளென்று பேர் குறிப்பிடப் பெருது, எல்லாவற்றிற்கும்) பொதுத் தன்மையாக விளங்கிகின்ற, முதலே என்ன - 'ஏ ஆதிமூலப் பொருளே! என்று அலறிக் கூவ, வாரணம் காக்க வந்தான் - (அவ்வாறு கூவிய) கஜேந்திரனென்னும் யானையைக் காக்க அன்று ஓடி வந்தவன்; அமரரைக் காக்க வந்தான் - (இப்பொழுது) தேவர்களைக் காக்க அவதரித்துள்ளான்.

வேதத்தின் ஒரு பகுதியான ஆரணியகத்தைக் குறிப்பது ஆரணம்; இங்கு உபநிஷத்து என்று கொள்ளப்பட்டது; இது ஞான மார்க்கத்தைத் தெரிவிப்பது; இச்சொல் பொதுவாக வேதத்திற்கே தமிழில் வழங்கப் பெறும். அறிவினுக்கு அறிவு - அறிவுக்கு அறிவாயுள்ள பரம்பொருளாகிய கடவுள்; 'ஆய்ந்த வுணர்வி னுணர்வே' என்று இராமபிரானை இந்திரன் கூறியதும் இக் கருத்தைத் தழுவியதாகும்; (ஆரண்ய. சரபங்கர்; 27.) அணங்குதல்-வருத்துதல்; அமரரைக் காக்க வந்தான் என்றது தேவர்களை வருத்தும் கொடியோரான இராக்கதர்களை அழித்து அத்தேவர்களைக் காக்க வந்தவன் என்று இராவணனுக்குச் சுட்டிக் காட்டியதும் ஆம். பரம் பொருளாகிய கடவுள், வாரணங் காக்க வந்த சௌலப்ய குணத்தைக் குறிப்பிட்டுக் காட்டி, அப் பரம்பொருளே இராம்பிரான் என்பதை விளங்க வைத்ததாம், இவ்வுண்மை 'கடுத்த கராங் கதுவநிமிர் கையெடுத்து மெய்கலங்கி, உடுத்ததிசை யனைத்தினுஞ் சென் றுெலிகொள்ள வுறுதுயரால், அடுத்தபெருந் தனிமூலத் தரும் பரமே பரமேயென், றெடுத்தொருவா ரணமழைப்ப நீயோவன்றே னென்ருய்'' (ஆரண்ய. விராதன்வதைப்: 49;) என்று முன் விராதன் முகத்தாலும் விளங்கவைத்தமை நோக்கற்பாலதாம்; திருமால் கஜேந்திரனுக்கு அருள் புரிந்த வரலாற்றின் விரிவு, பாகவதம் 8. 2, இலும், அரிதாஸர் அருளிய, கஜேந்திரமோட்சம் என்னும் நூலினுங் காண்க.

(பி-ம்.) **2. அறிவினுக் கறிவு மன்னன். 3. பொதுநின்று முதலே. வானவற் காக்க வந்தான்.** **(79)**

1122. *மூலமு நடுவு மீறு மில்லதோர் மும்மைத் தாய*
*காலமுங் கணக்கு நீத்த காரணன் கைவி லேந்திச்*
*சூலமுந் திகிரி சங்குங் கரகமுந் துறந்து தொல்லை*
*ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும்விட் டயோத்தி வந்தான்.*

'மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் காரணன் - ஆதி, நடு, முடிவு என்னும் நிலைகள் இல்லாமல், எவற்றுக்கும் காரணமாயும் உள்ள தலைவன், மும்மைத்து ஆய காலமும் கணக்கும் - இறப்பு, நிகழ்வு, எதிர்வு என இலக்கணமுறையால் வகுத்துக் கூறப்படும் மூன்று காலங்களையும்,

இவ்வளவினது என்று கலைஇத நூலால் எண்ணிக் கூறப்படும் கணக்கை யும், நீத்த காரணன் - அவற்றிற்கு அடங்காமல் வியாபித்துள்ள பரம் பொருள்; (அப் பரம்பொருள்), கை வில் ஏந்தி - கையில் ஒரு வில்லை ஏந்திக் கொண்டு. சூலமும், திகிரி, சங்கும், கரகமும், துறந்து - (சிவ பிரானுகவுள்ள நிலையில் ஏந்தியுள்ள) சூலத்தையும், (திருமாலாய் உள்ள நிலையில் ஏந்தியுள்ள) சக்கரம், சங்கு என்பவற்றையும், (பிரமனுய் உள்ள நிலையில் ஏந்தியுள்ள) கமண்டலத்தையும் விட்டு நீங்கி, தொல்லை ஆலமும் மலரும் வெள்ளிப் பொருப்பும் விட்டு - அம் மும்மூர்த்திகளாய் நின்ற போது (அவரவர்) இருப்பிடங்களாய்க் கொண்ட, ஆலிலையையும், தாமரை மலரையும், வெள்ளி மலையாகிய கயிலை மலையையும் விட்டு, அயோத்தி வந்தான் - அயோத்தி நகரில் இராமபிரானுக அவதரித்தான்.

இனி, மூலமும் நடுவு மீறும் இல்லதோர் மும்மைத் தாய காலமும் என்றும், மும்மைத் தாய கணக்கும் என்று கொண்டு, அக் காலத்தை யும், கணக்கையும் கடந்து அப்பால் நின்ற காரணன் எனப் பொருள் கொள்ளலும் ஆம். கணக்கு என்பது இங்கு எண்ணைக் குறிப்பது. கால மும், எண் என்னும் கணக்கும் நம் சிற்றறிவுக்கு ஏற்றவாறு நூலோர் களால் ஒருவாறு வகுக்கப் பெற்றுள்ளனவே யன்றி, அவற்றின் ஆதி, நடு, முடிவு என்பன இன்னவை என்று குறிக்க முடியாவாதலின் என்க. இங்கு மூலமும் நடுவும் ஈறும் இல்லதோர் காரணன் என்று கொண்டு உரைக்கப்பட்டது. ஒப்பு: அயோத்யா. கைகேசி சூழ். 91; ஆரண்ய சரபங்கர். 28. சூலமும் திகிரி சங்கும் கரகமும் என்பதற் கிணங்க, நேர் நிரனிறை யணியிலோ, எதிர் நிரனிறை யணியிலோ அமையாமல், ஆலமு மலரும் வெள்ளிப் பொருப்பும் என்று கூறியுள்ளமையால், இது கொண்டு கூட்டுப் பொருள்கோள் எனக் கொள்ளற்பாலதாம். மும்மூர்த்தி களாய்ப் பிரிந்த பரம் பொருள் ஒன்ருக இங்கு இராமனுய்த் திருவயோத் தியில் அவதரித்தது என்பதை; 1117 உரையிற் காண்க. 'மேலும், 'பூமலை நீருறைபுள் புள்ளேறு புட்கொடி, வாய்மைவே லாழி படைக் கலம் - நாமம், பிரம னிறைகண்ணன் பொன்நீக்கார் மேனி, கருமம் படைப்பழிப்பு காப்பு.' (யாப். விருத். 94) என்ற பாடலையும் ஒப்பு நோக்குக.

(பி-ம்.) திகிரி சங்கம்: 4. வெள்ளிக் குன்றும் நீத்து. (80)

1123. *அறந்தலை நிறுத்தி வேத மருள்சுரந் தறைந்த நீதித்*
*திறந்தெரிந் துலகம் பூணச் செந்நெறி செலுத்தித் தீயோர்*
*இறந்துக நூறித் தக்கோ ரிடர்துடைத் தேக வீண்டுப்*
*பிறந்தனன் றன்பொற் பாத மேத்துவார் பிறப்ப றுப்பான்.*

'தன் பொன் பாதம் ஏத்துவார் பிறப்பு அறுப்பான் - தன்னுடைய பொன்னடிகளை ஏத்துவாரான அடியார்களுடைய பிறவி நோயைப் போக்கி (மோட்ச பதவி யளிப்பவனுன அப் பரம் பொருள் சொரூபன்), அறம் தலை நிறுத்தி - அறத்தைத் தலை நிமிர்ந்து ஓங்கி வளரச்செய்து, வேதம் அருள் சுரந்து அறைந்த - வேதங்கள் உயிர்களிடத்து மிக்க அருள் கொண்டு சொல்லி அறிவித்துள்ள, நீதி திறம் - நீதியின் வழிகளை, உலகம் தெரிந்து பூண - உலகத்தோர் தெரிந்து அவற்றை ஏற்றுப் பின் பற்றி நடக்க, செம் நெறி செலுத்தி - செம்மையான வழியிலே செல்லச் செய்வதான ஆட்சி செய்து, தீயோர் இறந்து உக நூறி-கொடிய பாவி கள் இறந்து அழியக் கொன்று, தக்கோர் இடர் துடைத்து - மேலோ ரான நன்மக்களுக்கு உள்ள துன்பங்களை அழித்து, ஏக - (பின் தன் னுடைய பரமபதத்திற்குப்) போவதாகச் சங்கற்பித்து, ஈண்டு பிறந் தனன் - இவ்வுலகில் (அதாவது அயோத்தியில்) திருவவதாரஞ் செய் துள்ளான்.

ஒரு பிரபு ஒன்றையும் எதிர்பாராது தானுகவே அருண்மேலீட்டால் எளியோர்க்கு வலிந்து உதவுவது போல, வேதங்கள் ஜீவகோடிகள் உய்ந்து கரையேற அருள் சுரந்துள்ளமையால் அவற்றைப் பிரபுஸம் ஹிதை என்னும் நூல் வகையில் ஆன்றோர் வகுத்துள்ளமை இங்கு நோக் கத் தக்கது. தலை நிறுத்துதல்-இருக்க வேண்டிய இடத்தில் வழுவாமல் நிலைபெறச் செய்தல் என்னலும் ஆம். இது தர்ம ஸம்ஸ்தாபனம் எனப் படுவது. இராமபிரான் அறம் நிலை நிறுத்தத் தோன்றினுன்: அயோத்யா. நகர்நீங்கு. 168. திறம் தெரிந்து: வழிகளை உணர்ந்து. அறிந்து என்னலும் ஒன்றும். திறம் - வழி; 'அறனெடு புணர்ந்த திறனறி செங்கோல்' (பொருந: 230.) இனி, திறன் என்பதற்குக் கோட்பாடு அல்லது வழி எனவும் பொருள் கொள்ளலாம். செங்நெறி செலுத்துதல் - செங்கோல் ஆட்சியைச் செய்தல்: 'நல்லறத்தின் செந்நெறியினுய்த்துத் திருவளித்தும் (ஆரண்ய. சரபங்கர்: 26.) இனி, ஈண்டு என்பதை விண்டு எனக் கொண்டு, 'தன் பொற்பாத மேத்துவார் பிறப்பறுப்பான் - தன் பொற்பாதம் ஏத்தும் அடியார் பிறப்பு அறுத்து நற்கதியளிக்கும் பொருட்டு, விண்டு பிறந்தனன் - திருமால் திருவவதாரம் செய் துள்ளான்,' எனப் பொருள் கூறுவாருமுளர். இச் செய்யுள் பரித் ராணுய ஸாதூநாம், விநாசாய ச துஷ்கிருதாம், தர்ம ஸம்ஸ்தாபனர்த்தாய ஸம்பவாமி யுகே யுகே' என்று கண்ணபிரான் பார்த்தன் மூலமாக உலகுக் கறிவுறுத்தியுள்ள கீதா வாக்கியத்தை அடியொற்றி யமைந்துள்ளமை நோக்கற்பாலதாம். இவ்வசனத்தின் கருத்தை மேற் கொண்டே இராம வதாரம் ஏற்பட்டதென்பதை இந் நூலாசிரியர் மற்றும் பல விடங்களில் வலியுறுத்திச் செல்வது காண்க; 657; பால. குலமுறை; 20: ஆரண்ய. விராதன்வதைப்; 50; சரபங்கர்; 30; கிட்கிந்தா. வாலிவதைப்; 132, இங்கு அவதாரப் பயன் கூறப்பெற்றது.

(பி-ம்.) 2. சேணெறி செலுத்தி; செய்நெறி செலுத்தி; சென்னெறி செலுத்தி: செலுத்தத் தியோர்.

3. நூறித் தேவ ரிடர்; ஏக வீண்டும்; ஏக விண் ந.

4. பிறந்தது பிறவி நோய்க்கு மருந்திவன் பிறிதெவன் றுண்டோ பொற் பாத மோதுவார்; ஏற்றுவார்: பிறவி தீர்ப்பான்; பிறப்ப றுப்பார். (81)

1124. *அன்னவற் கடிமை செய்வே னுமமு மநும னென்பேன்*
*நன் னுத றன்னைத் தேடி நாற்பெருந் திசையிற் போந்த*
*மன்னரிற் றென்பால் வந்த தானைக்கு மன்னன் வாலி*
*தன்மக னவன்றன் றூதன் வந்தனென் றனியே னென்ருன்.*

'அன்னவற்கு அடிமை செய்வேன் - அத்தன்மையான இராமபிரானுக்கு அடிமைத் தொழில் யான் செய்பவன்: நாமமும் அநுமன் என்பேன் - பெயரும் அநுமன் என்று சொல்லப் பெறுவேன்; நல் நுதல் தன்னை தேடி - (அழகிய) நெற்றியையுடைய சீதாதேவியைத் தேடிக் கொண்டு, நால் பெரும் திசையில் போந்த-நான்கு பெருந் திசைகளிலும் சென்ற, மன்னரில் - தலைவர்களுள், தென்பால் வந்த தானைக்கு மன்னன் - தென்திசை நோக்கித் தேடி வந்த வானர சேனைக்குத் தலைவன், வாலி தன் மகன் - வாலியின் மகனை அங்கதன் ஆவான்; அவன் தன் தூதன் - (நான்) அவ்வங்கதனுடைய தூதன் ஆவேன்; தனியேன் வந்தனென் - பிறிதோர் துணையின்றித் தனியாகவே யான்இங்கு வந்துள்ளேன்' என்ருன் - என்று அநுமன் கூறினன்.

முன் ஐந்து செய்யுட்களில் இராமபிரானின் உண்மைத் தன்மையை உணர்த்தி, இச்செய்யுளில் அநுமன் தன்னையும் தான் வந்த காரியத்தையும் அறிமுகப்படுத்துகின்ருன். 'அன்னவற் கடிமை செய்வேன்; வாலி தன்மகனவன்றன் றூதன்' என்று கூறியதன் நயம் ஓர்க. அநுமனின் சொற் செல்வத்திற்கு இஃதொரு சான்று. நன்னுதல் - இங்குப் பெண் என்ற பொதுப்பொருளில் வந்துள்ளது. மன்னன்-இங்குத் தலைவன் என்றபொருளில் வந்தது; சேனை மன்னர்கள்; கந்தபுரா. 1. இரண்டாநாள் சூரபன்மன் யுத்த. 47. வந்தனன் தனியேன், என்றமையால் 'இவ்வொருவனுலே இலங்கை இவ்வளவு கேடுற்றதே; மற்றும் இவன்போல் பலர் வந்தால் இலங்கை யாதுபடுமோ' என்று இராவணனுக்கு, அச்சம் தோன்றுமாறு கூறியதாம்; இவ்வச்ச நிலை, பின் இராவணனுக்கு, உயுத்த. அங்கதன் றூது, 24 25 ஆம் பாடல்களால் உண்டாதும் நோக்குக.

(பி-ம்.) 1. அநும னென்பேர். 2. திசையும் போந்த.

4. தன்மக ளவன்றன் னேவற் றூதன்யான் றமியே னென்ருன்; அவனதேவற் றூதன்; வந்தனன் றமிய னென்ருன். (82)

## மேலும் இராவணன் அநுமனை வினவுதல் 1125-1131

1125. *என்றலு மிலங்கை வேந்த னெயிற்றின மெழிலி நாப்பண்*
*மின்றிரிந் தென்ன நக்கு 'வாலிசேய் விடுத்த தூத*
*வன்றிற லாய வாலி வலியன்கொ லரசின் வாழ்க்கை*
*நன்றுகொ லென்ன லோடும் நாயகன் றூத னக்கான்.'*

என்றலும் - என்று அநுமன் கூறலும், இலங்கை வேந்தன் - இலங்கைக்கரசனான இராவணன், எயிற்று இனம் - (தன்) பல் வரிசைகள், எழிலி நாப்பண் மின் திரிந்து என்ன - மேகத்தினிடையே மின்னல் திரிந்தது போல, நக்கு - நகைத்து, (அநுமனை நோக்கி), 'வாலி சேய் விடுத்த தூத - வாலி குமாரன் அனுப்ப வந்த தூதனே! வன் திறல் ஆய வாலி வலியன் கொல் - மிக்க வலிமையுள்ள வாலி நலனும் வலிமையும் உள்ளவனாய் வாழ்கின்றனனா? அரசின் வாழ்க்கை நன்று கொல்-அவனுடைய அரசாட்சி நன்கு நடைபெறுகின்றதா?' என்னல் ஓடும் - என்று கேட்டவுடன், நாயகன் தூதன் நக்கான் - யாவர்க்குந் தலைவனான இராமபிரானுடைய தூதனான அநுமன் சிரித்தான்.

எழிலி நாப்பண் மின் திரிந்தன்ன: இராவணனின் கரிய உரு மேகத்திற்கும், அவன் பற்கள் அம்மேகத்தினிடைத் தோன்றும் மின்னலுக்கும் உவமைகளாயின. தூத: அண்மைவிளி. வன்திறல்: ஒருபொருட் பன்மொழி; வன் திறல் என்றது - வாலி தன்னைத் வாலிற் சுற்றிக்கட்டித் தொங்கலிட்டுக் கொண்டு திரிந்த பேராற்றலைத் தான் சொல்லாவிடினும், அவன் வாய் வெளிபடுத்தியது என்க. கொல் என்பது இந்த இரண்டு இடத்தும் ஐயப்பொருளில் வந்த இடைச்சொல்; வாலியின் தூதன் என்னுமல் அவன் மகன் தூதன் என்றமையால் எழுந்த ஐயம். வாலியிடம் தனக்குள்ள அச்சத்தால் எழுந்ததாகவும் கொள்ளலாம். இராவணன் நகைத்ததற்கும், அநுமன் நகைத்ததற்கும் உள்ள வேற்றுமை நயம் காணத்தக்கது.

(பி-ம்.) 1. எயிற்றின்மே லெழிலி நாப்பவ்; எயிற்றின தெழிலி நாப்பண்; எயிற்றினி னிலவு தோன்ற. 2. மின்றெரிந் தென்ன: தூதா: 3. வன்றுணை யாய வாலி 4: நன்றுகொல் லென்றலோடு (83)

1126. *அஞ்சலை யரக்க பார்விட் டந்தர மடைந்தா னன்றே*
*வெஞ்சின வாலி மீளான் வாலும்போய் விளிந்த தன்றே*
*அஞ்சன மேனி யான்ற னடுகணை யொன்றான் மாழ்கித்*
*துஞ்சினன் எங்கள் வேந்தன் சூரியன் றோன்ற லென்றான்,*

(அநுமன் இராவணனை நோக்கி) 'அரக்க - ஏ இராக்கதனாகிய இராவண! அஞ்சலை - பயப்படாதே: வெம் சின வாலிபார் விட்டு அந்தரம் அடைந்தான் - கொடிய சினத்தோடு கூடிய வாலி இறந்து பூமியைவிட்டு வானுலகம் அடைந்து விட்டான்; மீளான்-இனித் திரும்பி வரமாட்டான்; அன்றே வாலும் போய்விளிந்தது-அன்றைக்கே அவன் வாலும் அழிந்து போய் விட்டது; அஞ்சன மேனியான் தன் - மைபோன்ற கரிய நிற முடையவனான இராமபிரானுடைய, அடு கணை ஒன்றால் - பகையை அழிக்க வல்ல அம்பு ஒன்றினால், மாழ்கி துஞ்சினன் - (அவ்வாலி) வருந்தி இறந்தான்; எங்கள் வேந்தன் சூரியன் தோன்றல் - (இப்பொழுது) எங்கள் அரசனாய் இருப்பவன் சூரியன் குமாரனான சுக்கிரீவன், என்றான் - என்று கூறினான்; அன்று ஏ: அசைகள்.

'வாலும் போய் விளிந்தது' என்றது முன் அவன் அவ்வாலாற்கட்டுண்டு வருந்தியதை நினைப்பூட்ட; இராவணன் வாலி வாலால் கட்டுண்டது; 5'8 உரை, இங்கு அநுமன் கூறியவை எள்ளற் சுவையும் நகைச்சுவையும் அமைந்துள்ளமை காண்க.

(பி-ம்.) 1. அஞ்சலை யரக்கர் கோவே யாண்டவ னிமைப்பின் யாண்ட. 2. மீளா னவனும்போய் விளிந்தா னன்றே. 3. மஞ்சன மேனி யான்றன் வடிக்கணை யொன்றால் வாலி; ஒன்று லாலி. 4. எங்கள் கோமான்: (84)

1127. என்னுடை யீட்டி னலவ் வாலியை யெறுழ்வா யப்பால்
இன்னுயி ருண்டதிப் போ தியாண்டையா னிராம னென்பான்
அன்னவன் றேவி தன்னை யங்கத னாடலுற் ற
தன்மையை யுரைசெய் கென்னச் சமீரணன் றனயன் சொல்வான்.

(அது கேட்ட இராவணன்) 'என் உடை ஈட்டினால் - எந்த உட்கருத்தினால், (அல்லது நிலைமையினால்), இராமன் என்பான் - இராமன் என்பவன், அ வாலியை - அந்த வாலியை, எறுழ் வாய் அம்பால் - வலிமை பொருந்திய அம்பினால், இன் உயிர் உண்டது-அவன் இனிய உயிரை அழித்தது? இப்போது யாண்டையான் - (அந்த இராமன்) இப்போது எங்கேயிருக்கின்றான்? அன்னவன் தேவி தன்னை-அவனுடைய தேவியாகிய சீதையை, அங்கதன் நாடல் உற்ற தன்மையை - அங்கதன் தேடத்தொடங்கிய தான நிலைமையை, உரை செய்க என்ன - நீ எனக்கு எடுத்துச் சொல்லுவாயாக' என்று இராவணன் கூற, சமீரணன் தனயன் சொல்வான்-வாயு குமாரனான அநுமன் அதற்குப் பின்வருமாறு மறுமொழி கூறினான்.

ஈட்டினால் - 'குற்றத்தினால்' (பழைய உரை.) சமீரணன் - வாயு தேவன்; நன்றாகச் சஞ்சரிப்பவன் என்னும் பொருளது. சமீரணன், தனயன்; வடசொற்கள்.

(பி-ம்.) 1. என்னமெய் வலிகொண் டப்பேர் வாலியை யிகலி னம்பால்: எறும்வா யம்பின்.
2. இன்னுயிர் கொண்ட தெப்போ தெங்குள ளிராம னென்பான்; இன்னுயி ருண்ட தெங்கே.
3. அங்கவ னுடை லுற்ற.
4. தன்மையென் னுரைப்பா யென்னச் சமீரணன் சிறுவன் சொல் லுான்: உரைசெய் யென்னச் சமீரணன்; தனயன் சொன்னான். (85)

1128. தேவியை நாடி வந்த செங்கணாற் கெங்கள் கோமான்
ஆவியொன் றாக நட்டா னருந்துயர் துடைத்தி யென்ன
ஓவியர்க் கெழுத வொண்ணா வுருவத்த னுருமை யோடும்
கோவியற் செல்வ முன்னே கொடுத்துவா லியையுங் கொன்றான்.

தேவியை நாடி வந்த - தன் தேவியாகிய சீதையைத் தேடிக் கொண்டு வந்த, செங்கணாற்கு - சிவந்த கண்களையுடைய இராமபிரானுக்கு, எங்கள் கோமான் - எங்கள் தலைவனான சுக்கிரீவன், ஆவி ஒன்று ஆக நட்டான் - இருவருக்கும் ஓர் உயிர் போல நட்புக் கொண்டவனாகி, 'அரும் துயர் துடைத்தி என்ன - (எனக்கு என் தமையனான வாலியால் ஏற்பட்டுள்ள) கொடிய துன்பத்தை நீக்கி அருள்வாயாக' என்று குறையிரந்து கேட்டுக்கொள்ள, ஓவியர்க்கு எழுத ஒண்ணா உருவத்தன் - சித்திரமெழுதுவோர்க்கு எழுத முடியாத அழகு அமைந்த திருவுருவத்தையுடைய இராமபிரான், உருமையோடும் - சுக்கிரீவன் மனைவியாகிய உருமை என்பவளோடும், கோ இயல் செல்வம் முன்னே கொடுத்து - வானர அரசினுக்கு உரிய செல்வமனைத்தையும் முன்னதாக அவனுக்கு அளிப்பதாக உறுதிமூலம் அளித்து, வாலியையும் கொன்றான் - (பின்) வாலியையும் அழித்துவிட்டான்.

இராமபிரானை ஓவியர்க்கெழுத வொண்ணா உருவத்தன் என்றது; கிட்கிந்தா. வாலிவதைப்: 78. உருமை: சுக்கிரீவன் மனைவியாகிய இவளை வாலி முன் அபகரித்துக் கொண்டிருந்தான்; கிட்கிந்தா. மராமரப். 109. இராமபிரான் வாலியைக் கொன்று அவளை மீட்டு மீண்டும் சுக்கிரீவன்பால் ஒப்பித்தான் என்பது வரலாறு. உருமை: ருமா என்ற வடசொல்லின் திரிபு. கோவியற் செல்வம் முன்னே கொடுத்தது: தன் வாக்கால் உறுதி கூறியளித்தது; இவ்வாறே இராமபிரான் பின் தன்னைச் சரண்புகுந்த விபீஷண ஆழ்வானுக்கும் முடிசூட்டி உறுதி அருளிய அருஞ் செயல் இங்கு நோக்கத்தக்கதாகும்.

(பி-ம்.) 1. தேவியை நாடவந்த: நாடி வந்த செந்திரு மால்பர லெங் கோன்,

2. நட்டேன் எருந்துயர். 3. உருவத்தா னுரிமை யோடும்.
4. கோவியல் செல்வந் தானே கொடுந்து: கோவியற் றரும முன்னே. (86)

1129. ஆயவன் றன்னோ டாண்டுத் திங்களோர் நான்கும் வைகி
மேயவெஞ் சேனை சூழ வீற்றினி திருந்த வீரன்
போயினி நாடு மென்னப் போந்தனம் புகுந்த தீதென்
றேயவன் றூதன் சொன்னா னிராவண னிதனைச் சொன்னான்.

'ஆயவன் தன் ஒடு-அந்தச் சுக்கிரீவன் உடன்பாட்டினோடு, ஆண்டு-அவ்விடத்தில், (அந்தருசியமுக மலையில்), திங்கள் ஓர் நான்கும் வைகி-மழைக் காலமாகிய ஒரு நான்கு மாத காலமளவும் தங்கியிருந்து, இனிது வீற்று இருந்த வீரன் - இனிமையாகத் தங்கியிருந்த மகா வீரனான இராம பிரான், மேய வெம் சேனை சூழ - வந்து சேர்ந்த கொடிய வானர சேனை சூழ, 'இனி போய் நாடும் என்ன-(நீங்கள்) இனிப் போய்ப் பிராட்டியைத் தேடுங்கள்' என்று சொல்ல, போந்தனம் - நாங்கள் தேடி வந்தோம்; புகுந்தது ஈது என்று - நடந்த காரியம் இது' என்று, ஏயவன் தூதன் சொன்னான் - ஏவிய இராமபிரானுடைய தூதனான அநுமன் சொன்னான்; இராவணன் இதனை சொன்னான் - (அதனைக் கேட்ட) இராவணன் பின் வரும் இவ்வார்த்தைகளைக் கூறுவானாயினன்.

இராமபிரான் திங்கள் ஓர் நான்கு வைகியது, மழைக் காலமாகிய நான்கு மாதங்கள்; கிட்கிந்தா. அரசியற். 44. ஏயவன் என்பதற்கு ஏவி அனுப்பிய அங்கதன் என்பாரும் உளர்.

(பி-ம்.) 1. ஆண்டுந் திங்களோ ராறு வைகி: ஆண்டிரு திங்கள் வைகி; ஆண்டோர் திங்களோர் நான்கின்,
2. சேனை யோடும் விற்றிருந் தானை வீரன்; வீற்றிருந் தருளும் வீரன்.
3. போயினீர் நாடு மென்னப்; போயினி நாடு மென்னாப்.
4. இதனைச் சொல்வான்; இதனைப் பேசும். (87)

1130. (உங்குலத் தலைவன் றன்னோ டொப்பிலா வுயர்ச்சி யோனை
வெங்கொலை யம்பிற் கொன்றாற் காட்டொழின் மேற்கொண் டீரேல்)
எங்குலப் புறநுஞ் சீர்த்தி நும்மொடு மியைந்த தென்றால்
மங்குலிற் பொலிந்த ஞால மாதுமை யுடைத்து மாதோ,

உம் குல தலைவன் தன் ஒடு - உங்கள் வானர குலத்திற்குத் தலைவனாக இருந்ததோடு, ஒப்பு இலா உயர்ச்சியோனை-தனக்கு நிகர் பிறர் இல்

லாத மேன்மையுடைய வாலியை, வெம் கொலை அம்பில் கொன்றற்கு - கொடிய கொலை செய்யும் அம்பினால் கொன்ற இராமனுக்கு, ஆள் தொழில் மேல் கொண்டீர் ஏல் - அடிமைத் தொழில் செய்ய ஏற்றுக் கொண்டீர்களானால், நும் சீர்த்தி எங்கு உலப்பு உறும் - உங்கள் புகழ் எங்கே அழிவடையும்! நும் ஒடும் இயைந்தது என்றால் - (இவ்விதச் செயல்) உங்களோடு பொருந்தியுள்ளதானால், மங்குலில் பொலிந்த ஞாலம் - மேக வளத்தினால் சிறந்து விளங்கும் இந்த உலகு, மாதுமை உடைத்து மாதோ - அழகுடைத்தாகுமல்லவா?

'உங்குலத் தலைவனோடு' என்பதற்கு உங்கள் குலத்தலைவனான சுக்கிரீவனோடு என்று பொருள் கூறுவாரும் உளர். 'எங்குலப்புறும்' 'மாதுமையுடைத்து' என்பன எதிர்மறைப் பொருளில், இகழ்ச்சிக் குறிப்பில் உள்ளன. தம் அரசனைக் கொன்றவனுக்கு ஆட்செய்தல் இழிவுடையோர் செயல் என்பதை எதிர்மறைப் பொருளில், வஞ்சப்புகழ்ச்சியாக, இராவணன் நிந்தித்தான் என்க. மாதுமை என்பது, அறியாமை பெண்தன்மை எனவும் பொருள்படும். 'மாதோ' என்னும் அசைகள் இங்கு வினாப் பொருள் குறித்து நின்றன.

(பி-ம்.) 3. எங்குலப் புறுதுங் கீர்த்தி; எங்குலப் புறினுங் கீர்த்தி துப்பொடு மியைந்த தென்றால். (88)

1131. தம்முனைக் கொல்வித் தன்னாற் கொன்றவற் கன்பு சான்ற
உம்மினத் தலைவ னேவ யாதெமக் குரைக்க லுற்ற
தெம்முனைத் தூது வந்தா யிகல்புரி தன்மை யென்னை
நொம்மெனக் கொல்லா நெஞ்ச மஞ்சலை நுவறி யென்றான்.

'தம் முனை கொல்வித்து - தன் தமையனை (ஒருவனைக் கொண்டு) கொல்லச் செய்து, அன்னான் கொன்றவற்கு - அப்படி அவனைக் கொன்றவனுக்கு, அன்பு சான்ற - அன்பு மேற்கொண்ட, உம் இன தலைவன் ஏவ - உங்கள் இனத்திற்குத் தலைவனான சுக்கிரீவன் கட்டளையிட, யாது எமக்கு உரைக்கல் உற்றது - என்ன நீ எனக்குச் சொல்ல வந்தது? (மேலும்), எம் முனை தூது வந்தாய் - எமது முன்னிலையில் ஒரு தூதனாக வந்த நீ, இகல் புரி தன்மை என்னை - போர் செய்த காரணம் யாது? நொம் எனக் கொல்லாம் - (ஆராயாமல்) விரைவில் உன்னைக் கொல்ல மாட்டோம்; நெஞ்சம் அஞ்சலை - மனம் பயப்படாமல், நுவல்தி என்றான் - (உள்ள செய்தியைத் தெளிவாய்) கூறு' என்று இராவணன் அநுமனை நோக்கிக் கூறினான்.

முன் - தமையன்; அதாவது முன்தோன்றியவன். நொம், விரைவுப் பொருளை உணர்த்த வந்த ஒலிக்குறிப்பு. இது, முன் 1130 இல் கூறிய நிந்தனையை இங்கு மீண்டும் மேற்கொண்டு கூறியதாகும். இதில், தமை

யனைக் கொல்லச் சூழ்ச்சிசெய்து, தனக்கு ஒரு தீங்கும் செய்யா தவனைக் கொன்ற ஒருவனுக்கு அடிமைபோல் வேலை செய்யும் இழிந்தோனுன உன் தலைவன் என்னிடம் உன்னைத் தூதாக அனுப்ப அவனுக்கு என்ன தகுதியிருக்கிறது என்பதை இராவணன் சுட்டிக் காட்டியதும் ஆம்.

(பி-ம்.) 1. கொல்வித் தின்னும் கொள்றவர்க் கடிமை சான்ற.
2. எமக் குரைக்க வேண்டி.
4. நும்மினைக் கொல்லாம்: நும்மெனக் கொல்லா முன்ன மஞ்சலை: நொம்மெனக் கொல்லார். (89)

## வேறு

## அநுமன் மறுமொழி 1132-1148

1132. துணர்த்த தாரவன் சொல்லிய சொற்களைப்
புணர்த்து நோக்கிப் பொதுநின்ற நீர்மையை
உணர்த்தி னுல துறுமென வுன்னருங்
குணத்தி னுனு மினையன கூறினுன்.

உன்ன அரும் குணத்தினுனும் - நினைத்து அளவிட முடியாத அரிய நற்குணமுடைய அநுமனும், துணர்த்த தார் அவன் சொல்லிய சொற்களை - பூங்கொத்துக்களால் அமைந்த மாலை அணிந்துள்ள இராவணன் சொன்ன வார்த்தைகளை யெல்லாம், புணர்த்து நோக்கி - தொகுத்து ஆராய்ந்து பார்த்து, 'பொது நின்ற நீர்மையை உணர்த்தினுல் - யாவருக்கும் பொதுவாகவுள்ள சிறந்த தன்மையை இப்பொழுது எடுத்துக் கூறினுல், அது உறும் என - அது பயனளிக்கும்' என்று எண்ணி, இனையன கூறினுன் - பின்வரும் விஷயங்களை எடுத்துரைப்பானுயினன்.

புணர்த்தல் - தொகுத்தல், சேர்த்தல். நீர்மை - சிறந்தகுணம்; 'நீர்மை யுடையார் சொலின்' (குறள்: 195.) அநுமன் குணத்தாற் சிறந்தவன்; 156; கிட்கிந்தா, மராமரப்: 11. இச் செய்யுள் முதல் 1148 முடிய அநுமன் இராவணனுக்கு உரைத்த நீதிகளாம்.

(பி-ம்.) 1. துணர்த்த ராவணன் சொல்லிய.
2. புணர்ந்து நீக்கிப் பொதுநின்ற நீதியை:
3. உணர்ந்த லேநல னென்றுகொண் டுன்னரும். (90)

1133. தூது வந்தது சூரியன் கான்முளை
ஏது வொன்றிய நீதி யியைந்தன
சாது வென்றுணர் கிற்றியேற் றக்கன
கோதி றந்தன நின்வயிற் கூறுவாம்.

'சூரியன் கான்முளை தூது வந்தது - சூரிய குமாரனுன சுக்கிரீவனுடைய தூதாக யான் இங்கு உன்னிடம் வந்தது ஆகும்; (நான் சொல்லுவன), ஏது ஒன்றிய - தக்க காரணங்கள் பொருந்தியவையும், நீதி இயைந்தன - நீதியோடு கூடியவையும், தக்கன - உன் நன்மைக்கு ஏற்றவையும், கோது இறந்தன - குற்றமற்றவையும் ஆம்; சாது என்று உணர்கிற்றியேல் - நல்லன என்று நீ கேட்டுணர்வாயாகில், நின் வயின் கூறுவாம் - உன்னிடம் யான் கூறுவேன்.

கான்முளை (கால்—முளை) - பரம்பரையில் தோன்றினவன்; அதாவது புத்திரன். சூரியன் கான்முளை - ஒப்பு, 'சோதியான் மகன்' 1148).

(பி-ம்.) 2. நீதி யியைந்தனை: இசைத்தனன்.
3. சாது வொன்று: உணர்வா யெனிற் சூனவை.
4. கூறுகேன். (91)

1134. *வறிது வீழ்த்தனை வாழ்க்கையை மன்னறம்*
*சிறிது நோக்கலை தீமை திருத்தினுய்*
*இறுதி யுற்றுள தாயினு மின்னுமோர்*
*உறுதி கேட்டி யுயிர்நெடி தோம்புவாய்.*

'வாழ்க்கையை வறிது வீழ்த்தனை - உன் வாழ்நாளை வீணே கெடுத்துக் கொண்டாய்; மன் அறம் சிறிதும் நோக்கலை - அரசியல் தருமத்தைச் சிறிதும் நீ நோக்கினுயல்லை; தீமை திருத்தினுய் - பாவத்தைச் செழிக்கச் செய்து விட்டாய்; இறுதி உற்று உளது ஆயினும் - உனக்கு அழிவுக்காலம் வந்துள்ளது ஆனுலும், இன்னும் ஓர் உறுதி கேட்டி - இந்த நிலையிலும் யான் கூறும் ஒரு நன்மை தரத்தக்கதைக் கேட்பாயாக; உயிர் நெடிது ஓம்புவாய் - (அதனுல் நீ) நெடுங்காலம் உன் உயிரைப் பாதுகாத்துக் கொள்வாய்.

'இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற் குறுதி பயப்பதாந் தூது' (குறள். 690) என்றபடி, அநுமன் தனக்கு வரக்கூடிய ஊறு யாதாகும் என்பதையுங் கருதாமல் உறுதி கூறுவதைப் பின்வரும் செய்யுட்களிலும் காணலாம்.

(பி-ம்.) 1. வாழ்க்கையை மன்னற்கும்.
3. இறுதி யிற்றுள தாயினு: ஆயினு மின்னுயிர்க்(கு); இன்னதோர். 4. கேட்டுன் னுயிர். (92)

1135. *போயிற் றேநின் புலன்வென்று போற்றிய*
*வாயிற் றீர்வரி தாகிய மாதவம்*
*காயிற் றீர்வருங் கேடருங் கற்பினுல்*
*(தீயிற் றூயவ ளைத்துயர் செய்ததால்)* 1. தூய்மை
2. வலிமை

'காயில் தீர்வு அரும் - (தான்) கோயித்தால் தடுக்க முடியாததும், கேடு அரும் - அழியாததுமான, கற்பினல் - கற்பையுடைமையால்' தீயில் தூயவளை-நெருப்புப் போலத் தூய்மை பெற்றுள்ள பிராட்டியை, துயர் செய்ததால்-நீ துன்பப்படுத்தியதால், நின் புலன் வென்று போற்றிய - உன் ஐம்புலன்களையும் வென்று அடக்கிக் காத்துவந்த, வாயில் தீர்வு அரிது ஆகிய மாதவம் - எவ்வழியாலும் நீங்காததான உன் அரிய தவப் பயன், போயிற்றே - உன்னை விட்டு நீங்குவதாக ஆயிற்றே!,

தீயிற்றூயவள் 1078. ஆரண்ய; சூர்ப்ப. 58; உயுத்த மீட்சி. 85. காயில் தீர்வரும் கற்பு: 'உய்யுமே யுலகிவ ளுணர்வு சீறினல், வையு மேன் மலர்மிசை யயனு மாயுமே' (உயுத்த. மீட்சிப். 95.) நெடுநாள் அரிதில் முயன்று செய்த தவப்பயன், கற்பினளைத் துயர்செய்த ஒரு பிழையினுல் அழியும் என்று கூறினன் என்க. இராவணன் அரிய தவம் செய்து வரன் பெற்றமை; ஆரண்ய. மாரீசன்வதைப்; 178, உத்தர. இராவணன் பிறப்பு: 26. 'போயிற்றே; துணிவுபற்றி வந்த காலவழுவ மைதி. தீயவற்றையும் புனிதமாக்குந் தன்மையது ஆதலின் தீ பிராட் டிக்கு உவமை.

(பி-ம்.) 1. போயிற் றீர்நும். 3. ஆயிற் றீர்பெருங்; ஆயிற் றேபெருங். 4. தீயிற் றூயவ ளைத்துயர். (93)

1136. *இன்று வீந்தது நாளைச் சிறிதிறை*
*நின்று வீந்த தலாலிறை நிற்குமோ*
*ஒன்று வீந்தது நல்லுணர் வும்பரை*
*வென்று வீக்கிய வீக்கம் விதியினல்,*

'இன்று வீந்தது - இன்றைத்தினம் என்பதும் அழிந்ததே ஆகும்; நாளை - நாளைத்தினம் என்று சொல்லப்படுவது, சிறிது இறை நின்று வீந்தது அலால் - சிறிது நேரம் நின்றதாயிருந்து அழிவதே யாகுமல்லா மல், இறை நிற்குமோ - சிறிது நேரம் நிலைபெற்றிருக்குமோ? (நிற்காது என்றபடி); நல் உணர்வு உம்பரை-நல்ல அறிவுடைய தேவரை, வென்று வீக்கிய வீக்கம் ஒன்று-வெற்றிகொண்டு தொகுத்துத் தேடிவைத்த (உன்) வாழ்வின் பெருமையாகிய ஒன்று, விதியினல் - உனக்கு ஏற்பட்டுள்ள விதியின் கொடுமையால், வீந்தது - அழிந்து போயிற்று.

'இன்று வீந்தது நாளைச் சிறிதிறை நின்று வீய்ந்ததா லிறை நிற்கு மோ' என்பது முன் பிராட்டியை நோக்கி இராவணன் 'இன்றி றந்தன நாளை யிறந்தன' (432) என்று கூறியதையே அநுமன் மீட்டும் கூறி,

அவனுக்கு அறிவுறுத்துவது இங்கு நோக்கத்தக்கது. இன்று வீய்ந்தது, நாளை ......வீந்தது என்பதால், துணிவுப் பொருளில் எதிர்காலத்து இறந்தகாலத்தை ஏற்று, 'வீக்கம் விதியினால் வீந்தது' என்று காலவழுவமைதியில் கூறியதும் என்க. 'ஒன்று, என்றது. இனித்தான் நல்ல மதியிலே பொருந்துவாய் என்றது; வீக்கம் - செல்வம்' பழைய உரை.

(பி-ம்.) 2. வீந்த தலாலிறை; வீய்வ தல்லாலிறை; வீய்ந்த தலாலிறை; வீய்த தல்லாதினி.
3. ஒன்ற வீய்ந்தது; வீய்ந்தன; வீந்தன: நல்லுண ரும்பரை.
4. வீங்கிய விக்கம்; வீக்கிய வாக்கம்: வீக்கம் மிகுந்ததால்; மிகுந்ததால். (94)

1137. தீமை நன்மையைத் தீத்தலொல் லாதெனும்
வாய்மை நீக்கினை மாதவத் தால்வந்த
தூய்மை தூயவ டன்வயிற் றோன்றிய
நோய்மை யாற்றுடைக் கின்றனை நோக்கலாய்.

'தீமை-பாவமானது, நன்மையை-நல்ல அறங்களை, தீத்தல் ஒல்லாது எனும் - அழிக்கும் வலிமையுடையதன்று, என்று சொல்லப்படும், வாய்மை நீக்கினை - ஆன்றோர் கூறும் உண்மையையும் நீ அகற்றி விட்டாய்; மாதவத்தால் வந்த தூய்மை - பெரிய தவத்தைச் செய்ததால் உனக்கு வந்த தூய்மை நிலையை, நோக்கலாய் - ஆலோசிக்காதவனாய், தூயவள் தன் வயின் தோன்றிய நோய்மையால் - கற்பின் தூய்மையுடைய பிராட்டிபால் உனக்கு உண்டான ஆசை நோயினால், துடைக்கின்றனை - (அத் தூய்மையையும்) அழித்து விடுகின்றாய்.

தீமை நன்மையைத் தீத்தலொல்லாது என்பது. ஒப்பு. 'அறம் வெல்லும் பாவந் தோற்கும்'(190). தூய்மை: நன்மையும் ஆம். நோய்மை-காமம்; வருத்தந்தரும் செயலும் ஆம். பாவம் அறத்தை வெல்லாது' என்பது உலக தர்மம்; அத்தருமமும் உன்னிடத்தில் பொய்த்து விட்டது; ஏனெனில் நீ பிராட்டிபால் கொண்ட பாவ எண்ணமானது நீ தவத்தால் பெற்ற புண்ணியத்தை இல்லாமற் செய்துவிட்டது என்றும், 'தீமை நன்மையைத் தீத்த லொல்லாது என்ற உண்மையைப் புறக்கணித்து நீ பிராட்டியிடம் குற்றம் செய்தவனானாய்; அதன் விளைவு யாதெனில், உன் தவப்பயன் அழிந்து நாசமுறுதலே யாகும்' என்று அநுமன் கூறினான் என்க.

(பி-ம்.) 1. நன்மையைத் தீர்த்தல்.
2. வாய்மை நீக்கின மாதவத் தால்: வாய்மை மாற்றினை.
3. தூயவள் தன்மையிற் றோன்றிய. 4. துடைக்கின்றது நோக்கலாய். (95)

1138. *திறந்தி றம்பிய காமச் செருக்கினுல்*
*மறந்து தத்த மதியின் மயங்கினுர்*
*இறந்தி றந்திழிந் தேறுவ தேயலால்*
*அறந்தி றம்பின ராருள ராயினுர்.*

'திறம் திறம்பிய காம செருக்கினுல் - (பிறருடைய மனைவி என்ற) முறையைக் கடந்த சிற்றின்ப அகந்தையால், மறந்து - நல் வழியை மறந்து, தம்தம் மதியின் மயங்கினுர் - தங்கள் தங்கள் அறிவில் மயக்க முற்றவர்கள், இறந்து இறந்து-செத்துச் செத்து, இழிந்து ஏறுவதே அலால் - கீழ் நிலையில் மேன்மேலும் தாழ்ந்து மிகுவது அல்லாமல், அறம் திறம்பினர்-(அவ்வாறு) தருமத்தை மாறி நடந்தவர், ஆர் உளர் ஆயினுர் -யார் நன்னிலையில் நிற்பவராய் இருந்தார்கள்? (ஒருவரும் இல்லை, என்றபடி.)

திறம் திறம்புதல்; 'பிறன் பொருளாட் பெட்டாழுகுதல்'; குறள். 141. இறந்திறந்து இழிந்தேகுதல்; பிறன் மனைவியைக் காதலிப்போன் பல பிறவிகள் இழிந்த நிலையில் பிறந்து பிறந்து, மேன்மேலுந் துன்புறுவன் என்பதாம்; 'உம்மை, வலியாற் பிறர்மனைமேற் சென்றுரே, யிம்மை யலி யாகி யாடியுண் பார்' (நாலடி. 85.) அறமாற்றலர் வாழ்வு வீயும் என்பது; அயோத்யா. கிளை கண்டுநீங்கு: 19; கிட்கிந்தா. அரசியற்: 35; உயுத்த: கும்பகருணன் வதைப்: 84. இறந்திறந்து: அடுக்கு மிகுதிப்பொருளது

(பி-ம்.) 1. திறம் திரும்பிய.
2. மறந்தி றந்த மதியின் மயங்கினுர்: மதியங் குற்றனர்.
3. இறந்தி றந்திறந் தேறுவ தேயலால்; இறந்து வந்திட ரெய்துவ ரின்னுமற். (96)

1139. *நாமத் தாழ்கடன் ஞாலத் தவிந்தவர்*
*ஈமத் தான்மறைந் தாரிள மாதர்பால்*
*காமத் தாலிறந் தார்களி வண்டுறை*
*தாமத் தாரின ரெண்ணி னுஞ் சார்வரோ.*

'நாமத்து ஆழ் கடல் ஞாலத்து - அச்சத்தைத் தரும் ஆழ்ந்த கடல் சூழ்ந்த உலகில், இள மாதர்பால் காமத்தால் இறந்தார் - இள மகளிரிடம் கொண்ட காமத்தில் அளவுமீறினவராய், களி வண்டு உறை தாம தாரினர் - கள்ளை உண்டு மகிழும் வண்டுகள் மொய்க்கும் மலர் மாலையணிந்துள்ளவர், அவிந்தவர் - புகழ்முதலியன யாவும் அவிந்தவராய், ஈமத்தால் மறைந்தார் - சுடுகாட்டு நெருப்பால் அழிந்துபோனவர்கள், எண்ணினும் சார்வரோ-எண்ணிக்கையில் அடங்குவார்களோ? (எண்ணற்றவராவர் என்றபடி).

நாமம் - அச்சம்; பால. அகலிகைப், 22. களி வண்டுறை தாமத் தாரினர், என்றது அரசர்களைக் குறித்தபடி. காமத்தால் இறத்தல்-காமத்தில் மிதமிஞ்சி நின்று நெறி கடந்து நிற்றல். ஒப்பு. 'எளிதென வில்லிறப் பான்' (குறள், 145.) காமத்தால் - வேற்றுமை மயக்கம். ஈமத்தான் மறைந்தார் - இறந்தொழிந்தவர் என்றபடி. பழைய உரை, ஈமத்தார், என்று பாடங்கொண்டு 'சுடுகாட்டு மாலைபோலக் கழிபட்டுப் போவார்' என்று பொருள் கூறும். மாரீசன் இராவணனுக்கு எடுத்துக் கூறிய நீதி மொழிகளிலும் (ஆரண்ய. மாரீசன்வதைப், 181) இக்கருத்தே கூறப்படுவது காண்க. 'களி வண்டுறை தாமத் தாரினர்' என்பதால் பெருவாழ்விலுள்ள அரசர்களை ஏதுவாக எடுத்துக் காட்டி, மற்றையோர்க்கும் அறிவுறுத்தியது எனக்கொள்ளத்தகும்.

(பி-ம்) 1. ஞாலம் புரந்தவர்; ஞாலம் நலிந்தவவ்; ஞாலம் தவிர்ந்ததம்; ஞால நடுக்குற: ஞாலத்து நற்றவம்.
2. வாமத்தான் மறைந்தார்; ஈமத்தர் நறைத்தார்; ஈமத்தா ரிறந் தார்: ஈமத்தா லறிந்தா ரன்றி மாதர்பரல்.
3. கரை வண்டுறை; கலி வண்டறை; கறை வண்டுறை.
4. என்னினும் சார்வரோ. (97)

1140. *பொருளுங் காமமு மென்றிவை போக்கிவே*
*றிருளுண் டாமென வெண்ணல ரீதலும்*
*அருளுங் காதலிற் றீர்தலு மல்லதோர்*
*தெருளுண் டாமென வெண்ணலர் சீரியோர்.*

'சீரியோர் - அறிவொழுக்கங்களாற் சிறந்த மேலோர், பொருளும் காமமும் என்று இவை போக்கி - செல்வத்தில் ஆசையும் சிற்றின்பமான காமத்தில் ஆசையும் ஆகிய இவற்றைத் தவிர்த்து. வேறு-வேருக, இருள் உண்டு ஆம் என எண்ணலர் - இருள் உண்டு என்று நினைத்தா ரல்லார்; ஈதலும் - வறியோர்க்குக் கொடுப்பதும், அருளும் - யாரிடத்தும் அருளுடன் இருத்தலும், காதலில் தீர்தலும் - மேற்கூறிய பொருளிடத்தும் சிற்றின்பத்தினிடத்தும் பற்று விட்டு நீங்குதலும், அல்லது ஓர்- அல்லாததான ஒரு, தெருள் உண்டாம் என எண்ணலர் - வேறொரு நல்லறிவு உள்ளது என்று நினையார்.

இங்கு. இருள், நரகம்; தெருள், மோட்சம் எனவும் கொள்ளற் பாலன: பொருளாசை பெண்ணாசை என்பனவே பேரிருள் போன்று நல்வழியை மறைப்பன ஆம். இருள் என்றமையால் இவை பெரும் நரகத்தைத் தரத்தக்கன என்றும் கொள்ளத்தகும். 'பரதிரவியமும் பரஸ்திரீ ஆசையான காமமும் அல்லாமல் வேறே இருள் உலகி லில்லை என்பதும், கொடை முதலானவையும் சிவகாருணியமும் அவாவறுத்தலு

மல்லாமல் வேறே ஞானமில்லை யென்பதும் நன்குயறிவர் பெரியோ ரெனப் பொருள்' **பழைய உரை.**

(பி-ம்.) 1. **என்றிவை போற் பிறி (து).**
2. **இருளு முண்டெனா: எண்ணல ராதலும்; எண்ணில ரீதலும்.**
3. **காதலி னீங்கலும்; காமத்தை மாற்றலும;**

**(98)**

1141. *இச்சைத் தன்மையி னிற்பிற ரில்லினை*
*நச்சி நாளு நகையுற நாணிலே*
*பச்சை மேனி புலர்ந்து பழிபடூஉம்*
*கொச்சை யாண்மையுஞ் சீர்மையிற் கூடுமோ.*

இச்சை தன்மையினில் - ஆசையின் இயல்பினால், பிறர் இல்லினை நச்சி - அயலார் மனைவியை விரும்பி, நாளும் நகை உற - அதனால் எந் நாளும் பிறர் தன்னை இகழ்ந்து சிரிக்க, நாண் இலே - வெட்கமற்றவனுய், பச்சை மேனி புலர்ந்து - பசுமையாய் (வளம் பெற்றிருந்த) உடம்பு (காம ஈடுபட்டால்) உலர்ந்து போகப்பெற்று, பழிபடூஉம் - எல்லாரும் கூறும் நிந்தைக்குள்ளாகும், கொச்சை ஆண்மையும் - இழிவான ஆண் தன்மையோடிருத்தலும், சீர்மையில் கூடுமோ - சிறந்த குணங்களில் சேர்க்கப்படுமோ? (மாட்டாது என்பதாம்).

பிறனில் விழைவான் என்றும் பழிக்கப் பெறுவான் என்பது: 'எளி தென வில்லிறப்பா னெய்து மெஞ்ஞான்றும். விளியாது நிற்கும் பழி'; 'பகைபாவ மச்சம் பழியென நான்கும், 'இகவாவா மில்லிறப்பான் கண்'; (குறள்; 145 - 146;) 'அறம்புகழ் கேண்மை பெருமையிந் நான்கும், பிறன்றார நச்சுவார்ச் சேரா - பிறன்றார, நச்சுவார்ச் சேரும் பகைபழி பாவமென், றச்சத்தோ டிந்நாற் பொருள்' (நாலடி. 82), பச்சைமேனி- இளமை மேனியும் ஆம். படூஉம்: இன்னிசை யளபெடை. சில சுவடி களில் இதன் பின்னுள்ள 3 செய்யுட்கள் முன்னும் பின்னுமாக மாறி அமைந்துள்ளன.

(பி-ம்.) 1. **இச்சை யாவலி னுற்பிற ரில்லினை: 2. நகையுற நாணிலன்; நவையுற நாணிலர். 2. நாணலே; நாணிலன்.**
3. **உலர்ந்து பழிபடும்; பழிப்பொடும்.**

**(99)**

1142. *ஓத நீருல காண்டவ ருன்றுணைப்*
*போத நீதிய ராருளர் போயினர்*
*வேத நீதி விதிவழி மேல்வரும்*
*காத னீயறத் தெல்லை கடத்தியோ.*

'ஓதம் நீர் உலகு ஆண்டவர் போயினர் - அலைகளோடு கூடிய நீரை யுடைய கடலால் சூழ்ந்த உலகத்தை ஆண்டு பின் இறந்த அரசர்கள், உன் துணை - உன் அளவு, போதம் நீதியர் ஆர் உளர் - அறிவும் நீதியும் பெற்றவர் யார் இருக்கின்றனர்? வேத நீதி - வேதங்களையும் நீதிகளையும் (உலகுக்களித்த), விதி வழி மேல் வரும் காதல் நீ - பிரமதேவன் பரம் பரையின் வழியே வந்து, தோன்றியுள்ள மகனான நீ, அறத்து எல்லை கடத்தியோ-தருமத்தின் வரையறையைக் கடந்து செல்பவனாவையோ?

ஓதம் - அலை; 'கடலோதங் காலலைப்ப; (திவ். இயற்பா. முதற்றிரு வந்தாதி: 16) ஓதம் - கடலும் ஆம்; 'ஓதமலி நஞ்சுண்ட வுடையானே' (திருவாசகம். திருவே, 3.) ஓத நீர் உலகம் என்பதற்குக் கடல் நீரால் சூழப்பெற்ற உலகம் என்று பொருள் கொள்ளலும் ஒன்றும். வேதமும் நீதியும் உண்டாக்கிய பிரமதேவன் மரபிற் பிறந்த நீயே அறத்தின் வரம் பைக் கடக்கலாகுமோ என்று இராவணன் குலச்சிறப்பைக் கூறி அநுமன் அவன் தவறை எடுத்துக் காட்டினான் என்க. இராவணன் பிரமதேவன் பேரனுக்கு மகன்; 483. காதல் - காதலன்; மகன்;' இரா வணன் காதல்' (உயுத்த, பிரமாத்திரப். 164.)

(பி-ம்.) 1. ஆண்ட வரின்றுணை. 2. ஆருளர் பொய்யிலா. 3. விதிவழிச் செல்வரும். 4. காத லாலறத் தெல்லை கடத் தியோ: காதை நீ: (100)

1143. *வெறுப்புண் டாய வொருத்தியை வேண்டினால்*
*மறுப்புண் டாயபின் வாழ்கின்ற வாழ்வினில்*
*உறுப்புண் டாய்மிக வோங்கிய நாசியை*
*அறுப்புண் டால தழகென லாகுமே*

வெறுப்பு உண்டு ஆய ஒருத்தியை-தன்மீது பிரியமில்லாது வெறுப் புக் கொண்ட ஒருமாதை, வேண்டினால்-விரும்பினால், மறுப்பு உண்டாய பின் - நேரே மறுக்கப்படுதல் உண்டானபிறகு, வாழ்கின்ற வாழ்வினில் - வெட்கமில்லாமல் உயிர்வைத்துக் கொண்டு பின் வாழும் வாழ்வைவிட, உறுப்பு உண்டு ஆய் - பார்ப்பதற்கு அழகான அவயவமாய், மிக ஓங்கிய நாசியை - முகத்தின் நடுவே எடுப்பாய் விளங்கும் மூக்கை, அறுப்பு உண்டால் - ஒருவரால் அறுக்கப் படுவதை அடைந்தால், அது - அந்த நாசியற்றமுகம், அழகு எனல் ஆகுமே - அழகுடைத்து என்று சொல்ல லாம் அல்லவா?

மறுப்புண்ட வாழ்க்கையைவிட நாசி அறுப்புண்ட வாழ்க்கை அழ கானது என்று அநுமன் கூறினான். மூக்கிலா முகத்தின் இழிவு, ஆரண்ய, சூர்ப்பணகைப், 143. உயுத்த. கும்பகருணன். 359.

(பி-ம்.) 1. வெறுப்புண் டாகப் பிறனில் விரும்பினல்.
2. மறுப்புண் டானபின்; மறுப்புண் டான்பின்னும்; மறுப்புண் டாமுல கத்தவர் வாழ்வினுக் (கு).
3. உறுப்புண் டாய்நடு; உறுப்புண் டாகிய; உறுப்புண் டாயவர்க் கோங்கிய: ஒறுப்புண் டாய்மிக.
4. இறுப்புண் டாலது: அழ்கில தாகுமோ. (101)

1144. பாரை நூறுவ பற்பல பொற்புயம்
ஈரை நூறு தலையுள வென்னினும்
ஊரை நூறுங் கடுங்கன லுட்பொதி
சீரை நூறவை சேமஞ் செலுத்துமோ.

பாரை நூறுவ பல்பல பொன்புயம் - உலகை அழிக்கவல்ல பற்பல அழகிய புயங்களும், ஈர் ஐ நூறு தலை உள என்னினும் - ஆயிரம் தலைகளும் உனக்கு உள்ளன என்றாலும், சேமம் செலுத்துமோ - அவை உனக்கு நலத்தை உண்டாக்குமோ?(ஆக்கா என்பதாம்); அவை-(ஆனால்) அவை, ஊரை நூறும் கடும் கனல் உள் பொதி - ஊரையே அழிக்கும் கொடிய கனலினை உள்ளே பொதிந்து (பத்திரப்படுத்தி வைத்த). நூறு சீரை - பல சீலைகளே ஆம்.

உனக்கு இப்பொழுது இருப்பனபோல இருபது புயங்களும் பத்துத் தலைகளுமேயன்றி மேலும் பல புயங்களும், ஆயிரம் தலைகளுமே இருந்தாலும் அவற்றால் நன்மையுண்டாகுமோ? அவையெல்லாம் ஊரை அழிக்கவல்ல பெரு நெருப்பிடைப் பொதிந்துவைத்த பல சீலைகளே போல் அழிந்து போம் என்பதாம். சீரை. நூறு என்றதில் நூறு என்பது மிகுதியைக் குறிப்பது. சீரை - சீலை (பிங்களம்);சீரை-கந்தைத் துணியும் ஆம்; 'செடிபடுந் துணியுடைச் சீரை சுற்றினன்' (திருவாலவாயுடையார். 54: 19.) பல புயங்களும், தலைகளுமுடைய நீ பிராட்டி கற்பென்னுங் கடுந்தீ முன் கந்தைத் துணியின் குவியலே போல்வாய் என்பதாம். 2-ம் அடியில் ஐந்நூறு என்பது, எதுகை நோக்கி ஐ நூறு' என்று நின்றது.

(பி-ம்) 1. பாரைஞ் நூறுவ. 2. ஈரைஞ் நூறு.
3. ஊரைஞ் நூறு; ஊரை நூறு கடுங்கனல்: கடுங்கன லுட்படச்.
4. சீரைஞ் நூறு. (102)

1145. புரம்பி ழைப்பருந் தீப்புகப் பொங்கினேன்
நரம்பி ழைத்தநின் பாடலி னல்கிய
வரம்பி ழைக்கு மறைபிழை யாதவன்
சரம்பி ழைக்குமென் றெண்ணுதல் சாலுமோ.

'புரம் பிழைப்பு அரும் தீ புக பொங்கினேன் - முப்புரங்கள் தப்ப வொண்ணுத நெருப்புப் புகும்படி கோபித்த சிவபெருமான், நரம்பு இழைத்த நின் பாடலின் - உன் கை நரம்புகளைத் தந்திகளாகக் கொண்டு நீ பாடிய உன் சாம கானத்திஞல், நல்கிய - அருள் சுரந்து உனக்கருளிய, பிழைக்கும் - (வரன்கள்) தவறினுலும் தவறும்; மறை பிழையாதவன் - வேத நெறிதவருதவனுன இராமபிரானுடைய, சரம் பிழைக்கும் என்று எண்ணுதல் - அம்பு தன் குறியில் தவறும் என்று நினைத்தல், சாலுமோ - பொருந்துமோ (பொருந்தாது என்பதாம்,)

இராவணன் கயிலையங்கிரியில் அழுந்தி யிடர்ப்பட்ட காலை, தன் தலை ஒன்றையும், கைந் நரம்புகளையும் எடுத்து யாழாக அமைத்துச் சாம கானம் பாடிச் சிவபெருமானை மகிழ்வித்து வரம்பெற்றது: உத்தர. வரை யெடுத்த; 74-75. இராமபிரான் மறைபிழையாதவன்: கிட்கிந்தா. வாலி வதைப்: 74. பிழைத்தல் - தவறுதல். இராவணனுக்கு ஈசனருளிய வரம், மூன்றரைக் கோடியாண்டு வாழ்தல்.

(பி-ம்.) 1. புரம்பொ டித்தெரி தீப்புகப்: தீயுகப் பொங்கியோர்.
2. நரம்பி ழைத்தன பாடலின்; நண் பாடலின். (103)

1146. *ஈறி னுளுக வெஞ்சலி னற்றிரு*
*நூறி நொய்தினை யாகி நுழைதியோ*
*வேறு மின்னு நகையாம் வினைத்தொழில்*
*தேறி னுர்பலர் காமிக்குஞ் செவ்வியோய்.*

'தேறினுர் பலர் - தெளிந்த ஞானமுடையோர் பலரும், காமிக்கும் செவ்வியோய் - விரும்பும் சிறப்புக்களையுடையவனே! ஈறு இல் நாள் உக - அழியாத உன் மூன்றரைக் கோடி ஆயுளும் சிந்தியழிய, எஞ்சல் இல் நல் திரு நூறி - குறைவுபடாத மூவுலகாளும் நல்ல செல்வங்களை யும் அழித்துக் கொண்டு, நொய்தினை ஆகி - எளியோன் போலாகி, வேறும் - (இப்பெருவாழ்வை விட்டு) வேருகிய, இன்னும் நகை ஆம் வினை தொழில் - மேலும் இழித்து நகைப்பதற்கு இடமான செய்கை யில், நுழைதியோ - நுழைய விரும்புகிருயோ?

வேறும் என்றது, பிறனில் விழைதலாகிய இழிந்த வாழ்க்கையைக் குறித்தது: பிராட்டிபால் இராவணன் கொண்ட கெட்ட எண்ணத்தைத் தன் வாயாற் கூறக் கூசி அநுமன் வேறும் என்று குறிப்பிட்டது என்க. நகையாம் வினைத்தொழில் - நகுதலுக்குக் காரணமான செயல்.

(பி-ம்.) 1. ஈறி னுளுக: ஈறி லாதுனக் கெய்திய பொற்றிரு.
2. நூறி னெய்திடு மெஃகி னுழைதியோ; நூற நோக்கின ரேதி னுழைதியோ: நூறி நொய்தி னழிய நுனித்தியோ.

3. வேறு மிந்நகை யாய வினைத்தொழில்; வேறு மின்னவை யாய் வினைத்தொழில்.
4. தேறி னுய்பல: தேறி னூர்பின்னுங் காமித்தல் செவ்வியோ. (104)

1147. பிறந்து ளார்பிற வாத பெரும்பதம்
சிறந்து ளார்பெருந் தேவர்க்குந் தேவராய்
இறந்து ளார்பிறர் யாரு மிராமனை
மறந்து ளாருள ராகிலர் வாய்மையால்.

பிறந்துளார் - உலகில் பிறந்துள்ளார்களும், பிறவாத பெரும் பதம் சிறந்துளார் - மீண்டும் பிறப்பது இல்லாத வீடுபேறு அடைந்து சிறந்தவர்களும், பெரும் தேவர்க்கும் தேவராய் இறந்துளார் - பெருமை பொருந்திய தேவர்க்கும் தேவராகச் சிறந்து விளங்குபவர்களான, பிறர் யாரும்-பிற தெய்வங்களும் (மும் மூர்த்திகளும்), இராமனை மறந்துளார் ஆகிலர் - இராமபிரானை மறந்தவர் அல்லர்; வாய்மை - இஃது உண்மை. ஆல்; அசை.

பிறவாத பெரும் பதம் - வீடுபேறு; இது பிறவாநெறி எனவும் படும்; 'மறுகா நெறி' (என்றமையுங் காண்க. ஆரண்ய. சரபங்கர்:20). இறப்பு-சிறப்பு; 'இறந்த கற்பினாட்கு' (கலித். 9.); 'இறப்ப நிழல்பயந் தாங்கு;' 'இறப்ப நினையுங்கா லின்னா தெனினும்' (நாலடியார். 38, 174).

(பி-ம்.) 1. பிற வாத பெருந்தவம்,
2. சிறந்து ளார்மற் றுந் தேவர்க்குந் தேவராய்.
3. இறந்து ளார்பலர்; பிறந்து ளார்பிறர்.
4. மறந்து ளார்க ளுளர்சிலர் வாய்மையால். (105)

1148. ஆத லாற்ற னரும்பெறற் செல்வமும்
ஓது பல்கிளை யும்முயி ரும்முறச்
சீதை யைத்தரு கென்னெனச் செப்பினான்
சோதி யான்மக னிற்கென்று சொல்லினான்.

'ஆதலால் - ஆகையால், தன் பெறல் அரும் செல்வமும் - தன்னுடைய பிறர் அடைதற்கு அரிய பெரிய செல்வமும், ஓது பல் கிளையும் - பல பந்துக்கள் என்று சொல்லப்படுபவர்களும், உயிரும் - உன் உயிரும், உற - நிலைபெற்று இருக்க, சீதையை தருக என் என - சீதையைக் கொண்டுவந்து இராமபிரானிடம் தருவாய் என்று சொல்லென, சோதி யான் மகன் - சூரியன் மைந்தனான சுக்கிரீவன், நிற்கு என்று சொல்லினான் - உனக்கு (என்னிடமாகச்) சொல்லியனுப்பினான்' என்று (அநுமன் இராவணனிடம்) சொன்னான்.

உயிர் உறுதல் - பிழைத்திருத்தல். சோதியான் மகன் நிற்கு செப்பினன் என்றியைக்க. 1116 ஆம் செய்யுள் முதல் இச் செய்யுள் வரை இராவணன் வினவுக்கு அநுமன் கூறிய விடையும், அறமொழிகளான உபதேசங்களும் ஆம்.

(பி-ம்.) 2. உயி ரும்பெறச்; உயி ருய்ந்துறச்.
3. தரு கென்றனச்; தரு கென்றுறச் செப்பினன்
4. மக னிற்கெனச். (106)

## மேலும் இராவணன் வினவும் அநுமன் விடையும் 1149-1158

1149. என்ற லும்மிவை சொல்லிய தெற்கொரு
குன்றில் வாழுங் குரங்குகொ லாமிது
நன்று நன்றென மாநகை செய்தனன்
வென்றி யென்றென்று தானன்றி வேறிலான்.

என்றலும் - என்று அநுமன் சொன்னவுடன், வென்றி என்று ஒன்று தான் அன்றி வேறு இலான் - வெற்றியென்று சொல்லப்படும் ஒன்று தானே அல்லாமல் வேறொன்றை (இதுகாறும்) அறியாதவனான இராவணன், 'இவை எற்கு சொல்லியது - இச்செய்திகளை எனக்குச் சொன்னது, குன்றில் வாழும் ஒரு குரங்கு கொல் ஆம் - மலையில் திரிந்து வாழும் ஓர் அற்பக்குரங்கு போலும்! இது நன்று நன்று என - இது மிகவும் நன்றாய் இருக்கிறது!' என்று சொல்லி,' மா நகை செய்தனன் - பெருஞ் சிரிப்புக் கொண்டான்,

நன்று நன்று: அடுக்கு இகழ்ச்சிக் குறிப்பு. 'குன்றில் வாழுங் குரங்கு' என்றது. அநாகரிகமான ஒரு பிராணி என இகழ்ச்சி தோன்றக் கூறியது. 'கொய்தளிர் கோதும் வாழ்க்கைக் கோடரம்' (934) என்றது போல.

(பி-ம்.) 1. சொல்லி யதற்கு; சொல்லிய வெற்கொரு.
3. நன்றென வேநகை செய்தனன்.
4. வென்றி யன்றென்று: (107)

1150. குரக்கு வார்த்தையு மானிடர் கொற்றமும்
நிரக்கு நீதி கொலாம்நெறி நீங்கியென்
புரத்தி னுட்டருந் தூது புகுந்தபின்
அரக்க ரைக்கொன்ற வஃதுரை யாயென்றான்.

(இராவணன் அநுமனை நோக்கி), 'குரங்கு வார்த்தையும் - ஒரு குரங்கு சொல்லியனுப்ப அதை மற்றொரு குரங்கு சொல்லுவதான இவ் வார்த்தைகளும், மானிடர் கொற்றமும் - மனிதர்களுடைய வலிமையும், நிரக்கும் நீதி கொல் ஆம்-நேர்மையான நீதியே போலும்! (இல்லையென்ற படி); (அது கிடக்க), என் புரத்தின் உள் - என் நகரத்தினுள், தரும் தூது புகுந்த பின் - ஒருவன் அனுப்பிய தூதனைப் புகுந்த பின்னர், நெறி நீங்கி - (தூதனுக்கு உள்ள) நெறியைக் கடந்து, அரக்கரை கொன்ற அஃது - நீ இங்குள்ள அரக்கர்களைக் கொன்ற அக்காரணத்தை, உரையாய் என்றான் - சொல்லுவாய்' என்று இராவணன் அநுமனை வினவினான்.

நிரத்தல் - நேர்மையாதல்; அல்லது ஒழுங்கர்தல்; இனி. பிரகாசிக்கும் அல்லது சிறப்புறும் என்ற பொருளில் நிறக்கும் என்ற சொல், எதுகை நோக்கித் திரிந்தது எனக் கொள்ளலும் ஆம். இதன்பின் அடியிற் காணுமாறு ஓர் அதிகப்பாடல் ஒரு சுவடியில் காணப்படுகிறது.

என்னக் கேட்ட வரக்கனுக் கீறிலாத்
தன்னோ ராற்றலின் மாருதி சாற்றுவான்
என்னோர் நாயக னேவலின் வாரிதி
தன்னைத் தாண்டிவந் தேனுன்னைக் காணவே.

(பி-ம்.) 2. இருக்க நிற்கநீ யென்கொ லடாவிரும்; இருக்க மற்றுநீ.
3. புரத்தி னுள்ளொரு.
4. கொன்ற தஃதுரை யாதென்றான்: செற்ற தென்னது கூறென்றான். (108)

1151 *காட்டு வாரின்மை யாற்கடி காவினை*
*வாட்டி னேனென்னைக் கொல்ல வந்தார்களை*
*வீட்டி னேன்பின்னை மென்மையி னாலுன்றன*
*மாட்டு வந்தது காணு மதியினால்.*

(அநுமன்), 'காட்டுவார் இன்மையால் - உன்னை எனக்குக் காட்டுபவர் ஒருவரும் இங்கு இல்லாமையால், கடி காவினை வாட்டினேன் - நறுமணமுள்ள அசோகவனம் என்னும் சோலையை அழித்தேன்; என்னைக் கொல்ல வந்தார்களை - (அதனாற் சினந்து) என்னைக் கொல்ல வந்த அரக்கர்களை, வீட்டினேன் - அழித்தேன்; பின்னை - பிறகு, மென்மையினால் - (என் போர்த் தன்மையை விட்டு யான்) சாந்தநிலையில் அடங்கியிருந்தமையால், உன் தன் மாட்டு வந்தது - உன்னிடம் நான் வந்ததானது, காணும் மதியினால் - உன்னைக்கண்டு செய்தி கூறவேண்டும் என்ற எண்ணத்தால் (ஆகும்).

'காட்டுவா ரின்மையால்; என்பதற்கு அயலிடமிருந்து இங்கு வந்த என்னைக் கண்டு பிடித்து உன்னிடம் கொண்டுவந்து காட்டவேண்டிய தக்க சாரணர் முதலிய வீரர் இங்கு இல்லாமையால் என்றும் பொருள் கொள்ளலாம். கடிகா - காவலுள்ள சோலை என்னலும் ஒன்றும். கொல்ல வந்தார்களை வாட்டியது, தன் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டியும், அவ்வாறு காப்பாற்றிக் கொள்ளாவிடில் உன்னைக் காண வந்த தூது காரியம் நடைபெறாது என்று கருதியும் ஆம். பின்னை மென்மையால் உன்றன் மாட்டு வந்தது; தான் போரில் மேலும் முனைந் திருந்தால் தன்னை வெல்வது ஒருவராலும் முடியாது என்பது புலப்படுவ தோடு, நாள் பல வீணே கழியும், வந்த காரியம் நடைபெறாது என்று கருதியும் ஆம்.

(பி-ம்.) 2. மாட்டி னேனெனைக்; வாட்டி னேனெனைக்.
3. பின்னை மேன்மையி னாலுன்றன்; பின்னு மென்மையினால்.
4. வந்ததுங் காணுன் மதியினால்: காண்மின் மதியினால்.

## அநுமனைக் கொல்ல இராவணன் கட்டளையிடுதலும் வீடணன் தடுத்துக் கூறலும் 1152-1158

1152. *என்னு மாத்திரத் தீண்டெரி நீண்டுக*
*மின்னும் வாளெயிற் றன்சினம் வீங்கினன்*
*கொன்மி னென்றனன் கொல்லியர் சேர்தலும்*
*நின்மி னென்றனன் வீடண னீதியான்.*

என்னும் மாத்திரத்து - என்று அநுமன் சொன்ன அளவில், ஈண்டு எரி நீண்டு உக - நிறைந்த நெருப்பு நெடுந்தூரம் போய்ச்சிந்த, மின்னும் வாள் எயிற்றன் - ஒளி வீசும் வாள்போன்ற பற்களையுடைய இராவணன், சினம் வீங்கினன் - கோபம் மிக்கவனாகி, 'கொல்மின் என்றனன் - இந்தக் குரங்கைக் கொல்லுங்கள்' என்று கட்டளையிட்டான்; கொல்லியர் சேர்தலும் - கொலையாளிகளான அரக்கர்கள் அநுமனை அடைதலும், நீதியான் வீடணன் - நீதி நெறியில் நடப்பவனான வீடணன் என்பவன், 'நின்மின் என்றனன்-நில்லுங்கள்' என்று அக் கொலையாளிகளைத் தடுத்து அடக்கினான்.

மின்னும் வாள் எயிற்றன் - மின்னல்போல் ஒளியும், வாள் போல் உருவும் கூர்மையும் உள்ள பற்களையுடையவன் என்னலும் ஆம். வீடணன் நீதியான் என்பது; உயுத்த. வீபீடணனடைக்கலப்: 100; கும்பகருணன்வதைப்: 134, 356.

(பி-ம்.) 1. மாத்திரத் தின்னெறி சிந்திட: மீண்டுக.
2. எயிற் றுன்சினம்: சினம் வீங்கியே.
3. கொன்மி னென்றலும்: கொல்லுநர்: கோறிடச் சேறினர். (110)

1153. *ஆண்டெ ழுந்துநின் றண்ண லரக்கனை*
*நீண்ட கையின் வணங்கின னீதியான்*
*மூண்ட கோப முறையதன் றாமென*
*வேண்டு மெய்யுரை பைய விளம்பினன்.*

நீதியான் - நீதி நிலை அறிந்து நடக்கும் வீடணன், ஆண்டு - அப்பொழுது, எழுந்து நின்று - எழுந்து நின்று கொண்டு, அண்ணல் அரக்கனை - பெருமைதங்கிய அரக்கனான இராவணனை (நோக்கி), நீண்ட கையின் வணங்கினன் - நீண்ட தன் கைகளைக் (கூப்பி) வணங்கினவனாய், 'மூண்ட கோபம் - இப்பொழுது மிகுதியாய்க் கொண்ட கோபம், முறையது அன்று ஆம் என - நீதிமுறைமையுடையதன்று ஆம்' என்று, வேண்டும் மெய் உரை - யாவரும் விரும்பத்தக்க உண்மை வார்த்தைகளை, பைய விளம்பினன் - அமைதியுடன் கூறினான்.

வேண்டும் - அந்நிலைக்கு வேண்டுவதான, என்றலும் ஒன்றும். மெய்யுரை - சாஸ்திரப் பிரமாணம் என்னலும் ஆம். பைய விளம்பினன்: கோபங்கொண்டவனை எதிர்த்துக் கோபத்தோடு தாக்கிச் சொன்னால் அவனுக்கு மேலும் சினம் மூளும்; அதனால் கேடு விளையும் என்பதையுணர்ந்து, அமைதியாகச் சொன்னான் என்க.

(பி-ம்.) 2. நீண்ட கையன்; வணங்கின னீதியாய்; வணங்கிப்பின் நீதியாய்.
4. மெய்ம்மை; பையன் விளம்பினன்; யென்ன விளம்பினன்: யின்ன விளம்பினன்; விளம்புதன் மேயினன். (111)

## வேறு

1154. *அந்தண னுலக மூன்று மாதியி னறத்தி னாற்றித்*
*தந்தவன் மரபின் வந்தாய் தவநெறி யுணர்ந்து தக்கோய்*
*இந்திரன் கரும மாற்று மிறைவனீ யியம்பு தூது*
*வந்தனெ னென்ற பின்னுங் கோறியோ மறைகள் வல்லோய்.*

தக்கோய் - சிறந்தோனே! மறைகள் வல்லோய் - வேதங்களில் தேர்ச்சியுள்ளோனே! உலகம் மூன்றும் - சுவர்க்கம் பூமி, பாதலம் ஆகிய மூவுலகங்களையும், ஆதியின் - முதலில், அறத்தின் ஆற்றி தந்தவன் - தர்மத்தின் நெறியே படைத்தளித்தவனான, அந்தணன் - பிரமதேவனுடைய, மரபின் வந்தாய் - குலவழியே தோன்றினாய்; தவநெறி

உணர்ந்து-(நீ அடைந்துள்ள) தவநெறியின் சிறப்பை உணர்ந்து, இந்திரன் கருமம் ஆற்றும் இறைவன் நீ - (மூவுலகாளும்) இந்திரனும் நீ ஏவிய காரியத்தைச் செய்யும் படியான நிலையில் உள்ள தலைவனாக இருக்கிறாய்; (அப்படியுள்ள நீ) இயம்பு தூது வந்தனென் என்ற பின்னும் - ஒருவன் கூறியதைச் சொல்லும் தூதனாக இங்கு வந்தேன் என்று சொன்ன பிறகும், கோறியோ - (அவனைக்) கொல்லுகின்றாயோ?

இந்திரன் கருமம் மாற்றும் இறைவன் நீ என்பதற்கு, இந்திரன் கருமமாகிய மூவுல காட்சித் தொழிலை அவனிடமிருந்து மாற்றி அவனை ஏவல் கொண்டுள்ள நீ என்றும், அவ்விந்திரனுக்கு உரிய வேலையை மாற்றி இவ்வாறு செய் என்று உத்தரவளிக்க வல்ல நீ என்றும் பொருள் கொள்ளலாம். ஒரு சுவடியில் இதனுடன் பிணிவிடு படலம் முடியும். இராவணன் பிரமன் குலத்தில் வந்தவன்; மறை வல்லோன்; 483.

(பி-ம்.) 2. தந்தவ னன்புக் கான்ற: தந்தயன் மரபின் வந்தாய் தவநெறியாய தக்கோய்; தத்தவன் மரபில் வந்த தவநெறி: தந்தவன் மரபு தந்த: தந்தவ னன்பு சான்ற; தந்தவ னன்பு தந்த.
3. இந்திரன் றிருவை மாற்றும்; இந்திர திருவை மாற்றும்; இந்திரனகரு மாறும்; இந்திர தரும மற்றும்.
4. வந்தன னென்ற பின்புங்: கொல்லியோ மறைகள் வல்லாய். (112)

1155. *பூதலப் பரப்பி னண்டப் பொகுட்டி னுட் புறத்துட் பொய்தீர்*
*வேதமுற் றியங்கு வைப்பின் வேறுவே றிடத்து வேந்தர்*
*மாதரைக் கொலைசெய் தார்க ளுளரென வரினும் வந்த*
*தூதரைக் கொன்று ளார்கள் யாவரே தொல்லை நல்லோர்.*

'பூ தல பரப்பின் - இப்பூமிப் பரப்பினிடத்தும், அண்ட பொகுட்டின் உள் - அண்ட கோளகை உள்ளும், புறத்துள் - இவ்வண்டத்திற்கு வெளியிலும் உள்ளவான, பொய் தீர் - பொய்யில்லாத (அதாவது அழியாது நித்தியமாய் விளங்கும்). வேதம் உற்று இயங்கும் வைப்பின் - வேத நெறி பொருந்தி வழங்கிவரும் உலகங்களில், வேறுவேறு இடத்து வேந்தர் - வெவ்வேறு இடங்களில் உள்ள அரசர்களில், மாதரை கொலை செய்தார்கள் உளர் என - மகளிரைக் கொலை செய்தவர்கள் உள்ளார் என்று, வரினும் - சொல்லப்படுமானாலும், தொல்லை நல்லோர் - பழைமையான மேலோர்கள், வந்த தூதரை கொன்று உளார்கள் யாவர் - தம்மிடம் பிறர் அனுப்ப வந்த தூதரைக் கொன்றுள்ளவர் யாரேயுள்ளார்? (ஒருவரும் இல்லை என்பதாம்). ஏ:அசை.

பாவங்களுள் பெண் கொலை கொடிது; அதனினும் கொடிது தூதனைக் கொல்லுதல் என்பதாம். பெண் கொலை செய்தார் சிலர் உளர்;

ஆனல் தூதரைக் கொன்றவர் ஒருவரும் இல்லை என்று வீடணன் கூறினன்.

(பி-ம்.) 1. பூதலப் பொருப்பி லண்டப்; பொகுட்டிடை புறத்து; பரப்பி லண்டப் புறத்தினப் புறத்துட்:புறத்துப் பொய்தீர்.

2. வேதமுற் றுயர்ந்த வைப்பின்; முற்றுயங்கு வைப்பின்.

3. மாதரைக் கொன்று ளோர்கள்.

4. தூதரைக் கொலைசெய் தார்கள்: யாவரோ தொல்லை நல்லார். (113)

1156. பகைப்புல னணுகி யுய்த்தார் பகர்ந்தது பகர்ந்து பற்றார்
மிகைப்புல னடக்கி மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட
தகைப்புலக் கருமத் தோரைக் கோறலிற் றக்கார் யார்க்கும்
நகைப்புலன் பிறிதுண் டாமே (நங்குல நவையின் றாமே)

'பகை புலன் அணுகி-பகைவர் இடத்தை அச்சமில்லாது அடைந்து, உய்த்தார் பகர்ந்தது பகர்ந்து - ஏவி அனுப்பியவர் சொல்லிய செய்திகளை உள்ளபடியே சொல்லி, பற்றார் மிகை புலன் அடக்கி - பகைவர்க்கு உண்டாகும் கோப உணர்ச்சிகளைத் தன் சொல் திறமையால் அமைதி யுற அடங்கச் செய்து, மெய்ம்மை விளம்புதல் விரதம் பூண்ட - உண்மை சொல்லுதலே தமக்கு விரதமாகக் கொண்ட, தகை புல கருமத்தோரை- மேன்மையான அறிவின் தொழிலையுடைய தூதர்களை, கோறலின் - கொல்லுதைவிட, தக்கார் யார்க்கும் நகை புலன் பிறிது உண்டாமே - (இதனல்) அறிவினலும் ஒழுக்கத்தாலும் சிறந்த மேலோர் யாவர்க்கும் இகழ்ந்து சிரிப்பதற்கு (இதையன்றி) இடம் வேறு உண்டாகுமோ? நம் குலம் நவை இன்று ஆமே - நம் குலம் குற்றமில்லாதாகுமோ?

பகை புலன் - பகைவர் இடம், புலன்-இடம்; இது புலம் என்பதின் போலி. 'பற்றார் மிகைப்புலன் - சத்துருவான ஐம்புலன்' பழைய உரை. தூதலக்ஷணம் இன்னதென்பதை இச் செய்யுள் அறிவிப்பது காணலாம்; ஒப்பு. குறள். 688. 'கருமத்தோர் - தூதுவர்' பழைய உரை. ஏகார வினுக்கள் எதிர்மறைப் பொருளன.

(பி-ம்.) 1. பகைப்புல னணுகி யுற்றார்:பகைப்புல முடைய ரேவப் பகுதல் பகர்ந்த வாய்மை.

2. புல னெடுக்கி.

3. தகைப்புலத் தருமத் தோரை:கொல்லலிற் றகைய யார்க்கும்: கோறலிற் றக்கயார்க்கும்; கோறலிற் றகைய லார்க்கும்:கொன் றிடிற் றக்கோர்.

4. பிறிதென் றுண்டோ நங்குல நலனுண் டாமோ; நங்குல நவை யுண் டாமோ; நங்குலம் நவையுண் டாக. (114)

1157. முத்தலை யெஃகன் மற்றை முராந்தகன் முனிவன் முன்னு
அத்தலை நம்மை நோனு வமரர்க்கு நகையிற் ருமால்
எத்தலை யுலகங் காக்கும் வேந்தநீ வேற்ருே ரேவ
இத்தலை யெய்தி ஞனைக் கொல்லுத லிழுக்க மின்னும்.

'எத்து அலை உலகம் காக்கும் வேந்த நீ - மோதுகின்ற கடல் சூழ்ந்த உலகத்தையெல்லாம் காத்துவரும் அரச! நீ, வேற்ருேர் ஏவ-பகைவர் ஏவி அனுப்ப, இ தலை எய்திஞனை - இங்குத் தூதனுய் வந்தடைந்த இவனை, கொல்லுதல் இழுக்கம் - கொல்வது குற்ற முடைத்தாகும்; (மேலும்), மு தலை எஃகன்-மூன்று தலைகளையுடைய சூலத்தையுடைய சிவபெருமானும், மற்றை முராந்தகன் - மற்றுமுள்ள முரன் என்னும் அசுரனை அழித்த திருமாலும், முனிவன்-பிரமதேவனும், முன்னு-முதலான, நம்மை நோனு - நம்மைக் கண்டு பொருமை கொள்ளும், அ தலை - அந்த வானத்தில் உள்ள, அமரர்க்கும் - தேவர்களுக்கும், நகை இற்று ஆம் - நகைப்பதற்கு இடமாகும்; இன்னும் - இதன் மேலும், ஆல்; அசை.

இச்செய்யுள் அடுத்த செய்யுளோடு பொருள் முடிவுகொள்ளும், எஃகம் - உருக்கிரும்பினல் ஆக்கப்பட்ட ஆயுதப் பொது: இங்கு முத்தலை என்ற அடை திரி சூலத்தைக் குறிப்பது; 'ஒண் கவரெஃகமும்' (அயோத்யா. மந்தரை சூழ்ச்சிப்: 11). முரன் என்னும் அசுரனை மாய்த்து அருள் புரிந்தமையால், திருமாலுக்கு முராந்தகன் என்னும் பெயர் உண்டாயிற்று. முனிவன் - பிரமன்; தவ நியமத்தில் எப்பொழுதும் இருப்பவன் என்பது பொருள். எற்று என்பது எதுகை நோக்கிப் போலியாக எத்து என வந்தது. அலை - சினையாகுபெயராய் கடலுக்காயிற்று. அகரச்சுட்டு, தூரத்தில் உள்ளதைக் குறிக்குமாதலால், அத்தலை என்பது வானத்தையும், இகரச்சுட்டு அருகேயுள்ளதைக் குறிக்குமாதலால், இத்தலை என்பது இலங்கையையும் குறிப்பனவாம்; இழுக்கம் - குற்றம்; தவறு. 'இழுக்க, மிழிந்த பிறப்பாய் விடும்' (குறள். 133)

(பி-ம்.) 1. முனிவன் முன்னேர்: முராந்தகன் முளரி வந்தோன்; மற்றை முளரியின் முனிவன் முன்னேன்:

2. அத்தலை நகைப்பர் நம்மை யமரரு நகைக்க லாவார்: அத்தலை நம்ம ஞேரு மமரர்க்கு; நம்மை நோவா.

3. எய்த்தலை யுலகிற் காக்கும் வேந்தனீ வேற்ரு ரேவ: எத்தகு வுலகங் காக்கும் வேந்தனீ வேற்ரு ரேவ: மெய்த்தலை யுலகங் காக்கும்; வேந்தநின் மாற்ருே ரேவ; வேற்ருே ரேவல்.

1158. இளையவ டன்னைக் கொல்லா
திருசெவி மூக்கொ டீர்ந்து
விளைவுரை யென்று விட்டார்
வீரராய் மெய்ம்மை யோர்வார்
களைதியே லாவி நம்பா
லிவன்வந்து கண்ணிற் கண்ட
அளவுரை யாமற் செய்தி
யாதியென் றமையச் சொன்னான்.

'வீரர் ஆய் மெய்மை ஓர்வார் - சுத்த வீரர்களாய் நின்று உண்மையைக் கடைப்பிடிப்பவர்களான இராமலக்ஷ்மணர், இளையவள் தன்னை கொல்லாது - (நம்மிடம் வந்து தகாத முறையில் நடந்த) நம் தங்கையாகிய சூர்ப்பணகையைக் கொல்லாது, மூக்கு ஒடு இருசெவி ஈர்ந்து - மூக்கோடு அவள் காதுகளையும் அறுத்து, 'விளைவு உரை என்று விட்டார் - நிகழ்ந்த விஷயத்தை (உன் தமையனிடம் போய்ச்) சொல்' என்று அவளை உயிருடன் அனுப்பிவிட்டனர்; (அங்ஙனமாக), ஆவி களைதியேல்-நீ இந்தத் தூதனுடைய உயிரைப் போக்குவாயானால், நம்பால் இவன் வந்து கண்ணில் கண்ட அளவு உரையாமல் செய்தி ஆதி என்று - நம்மிடம் இவன் வந்து இங்கு அவன் கண்ணால் கண்ட விஷயங்களின் அளவை அங்குச் சென்று அவர்களுக்கு உரையாதபடி நீ செய்கிறவனாக ஆகிறாய்' என்று, அமைய சொன்னான் - புத்தியிற் பொருந்துமாறு (வீடணன்) கூறினான்.

(பி-ம்.) 1. இருஞ்செவி.
2. வீரர்யார் மெய்ம்மை பார்ப்பார்; மேன்மை பார்ப்பார்; மேன்மை கர்ப்போர்.
3. களைதியா லாவி நம்பால்; நண்பால்: களைதியே லிங்கு நம்பால்.
4. உளவுரை யாமற்: அளவையங் கறியச்: அறியக் சொன்னான்; உளையச் சொன்னான். (116)

## அநுமன் வாலுக்கு நெருப்பிட இராவணன் கட்டளையிடல்.

வேறு

1159. நல்ல துரைத்தாய் நம்பியிவ
னவைசெய் தானே யானாலும்
கொல்லல் பழுதே பெரியவரைக்
கூறிக் கொணர்தி கடிதென்னாத்
தொல்லை வாலை மூலமறச்
சுட்டு நகரைச் சூழ்போக்கி
எல்லை கடக்க விடுமின்க
ளென்றா னின்றா ரிரைத்தெழுந்தார்.

(வீடணன் கூறியவற்றைக் கேட்டு இராவணன் அவனை நோக்கி), 'நம்பி - சிறந்தோனே! நல்லது உரைத்தாய் - நீ நல்ல நீதியை எடுத்துக் கூறினாய்; இவன் நவை செய்தானே ஆனாலும் - இந்த வானரன் குற்றம் செய்தவனே ஆனாலும், கொல்லல் பழுதே-(இவனைக்) கொல்வது குற்றமே ஆகும்; (என்று, பின் அநுமனை நோக்கி), 'போய் கூறி அவரை கொணர்தி கடிது என்று - நீ போய் அவ்விராம லக்ஷ்மணர்களிடம் எம் நோக்கத்தைக் கூறி, விரைவில் அவர்களை இங்குப் போர்க்கு அழைத்து வருவாய்' என்று சொல்லி, (பின்பு அங்கிருந்த அரக்கர்களை நோக்கி), 'தொல்லை வாலை-இந்தக் குரங்கின் தொல்லைக்கிடமான வாலை, மூலம் அற - அடியோடு அற்றுப்போக, சுட்டு - நெருப்பிட்டு எரித்து, நகரை சூழ் போக்கி - இவனை நம் நகரைச் சுற்றி இழுத்துச் சென்று, எல்லை கடக்க விடுமின்கள் என்றான் - இந்த நகரெல்லை கடந்து செல்ல விட்டுத் துரத்துங்கள்' என்று கூறினான்; நின்றார்-அருகே நின்ற அரக்கர்களும், இரைத்து எழுந்தார்-ஆரவாரஞ் செய்து கொண்டு கிளம்பினார்கள்.

தொல்லை வால்: முன் இராவணன் தான் வாலிவாலால் கட்டுண்டதை நினைத்தும், (1127) இனி இவ்வநுமன் வாலால் துயர் யாது வரக்கூடுமோ என்று கருதியும் கூறியதாகும். நகரைச் சூழ் போக்கச் சொல்லியது. தூதனாய் வந்த இவன் இந்நகரச் சிறப்புக்களை நன்றாகக் கண்டறிந்து போய்ச் சொல்லட்டும் என்றும், இவன் செய்த கேட்டிற்குத் தக்க தண்டனை கிடைத்ததென்று அந்நகரில் உள்ள அரக்கர்கள் கண்டு மகிழ்ந்து (அநுமனை) இகழ்தற்கும் ஆம். நீ அவரைக் கூறிக் கொணர்தி என்றது இகழ்ச்சியால் கூறியதென்க. பழுது-குற்றம் (திவா.)இராவணன் வரலாற்றில் இஃதோரிடமே அவன் பிறர் கூற்றுக்கு இணங்கியது காணத்தக்கது. அரச நீதியின்பால் அவனுக்கிருந்த மதிப்பு இதனால் தெரியலாகும்.

(பி-ம்.) 1. நல்ல வுரைத்தாய்: நவையில செய்தா னானாலும்; இவன்றானவைசெய் தானென்றும்.
2. கொல்லல் பழுதே போதியிடர் கூறிக் கொணர்தி கடிதென்னாத்; பழுதே யினிக்கடி திற்போடா நரனைக் கொணர்தியெனச்; போயடா கூறி; போயடர் கூறி;
3. வாலமூலம்; மூலமுறச். (118)

## அயன் படைப் பிணிவீடும் பாசப் பிணிப்பும் 1160-62.

1160. ஆய காலத் தயன்படையோ
டிருப்ப வாகா தனவிடுகை
தூய பாச மெனப்பலவுங்
கொணர்ந்து பிணிமின் றேளென்னா
மேய தெய்வப் படைக்கலத்தை
விதியின் மீட்டான் போர்வென்றான்
ஏயெ னமுன் னிடைபுக்குத்
தொடைவுன் கயிற்றாற் பிணித்தீர்ப்பார்.

ஆய காலத்து-அந்த நேரத்தில், போர் வென்றான் - போரில் வெற்றி பெற்ற இந்திரசித்து, 'அயன் படையோடு இருப்ப அனல் இடுகை ஆகாது-(அநுமன்) பிரமாத்திரத்தால் கட்டுண்டு இருக்கும் போது அவன் உடலில் நெருப்பிடுதல் தகாது; (ஆதலின்), தூய பாசம் என பலவும் கொணர்ந்து - சிறந்த கயிறுகள் என்று சொல்லும் பலவற்றையும் கொண்டுவந்து, பிணிமின் தோள் என்று - இவன் தோள்களை இறுக்கிக் கட்டுங்கள்' என்று (அரக்கர்களிடம் சொல்லி), மேய தெய்வ படைக் கலத்தை விதியின் மீட்டான் - அநுமன் மீது பொருந்தியிருந்த தெய்வத் தன்மையுள்ள பிரமாத்திரம் என்னும் ஆயுதத்தை, மந்திர விதிப்படித் திரும்ப மீட்டுக் கொண்டான்; ஏய் என்று முன் - ஏய் என்னும் ஒலிக்குறிப் பின் அளவின் முன்னே, இடை புக்கு -(அருகில் நின்ற அரக்கர்கள்) அநு மனிடம் சென்று, தொடை வன் கயிற்றால் பிணித்து ஈர்ப்பார் - தொகுத் துத் திரிக்கப்பட்ட வலிய கயிறுகளால் அநுமனைக் கட்டி இழுப்பா ராயினர்.

அநுமனை முன் அரக்கர்கள் இராவணன் சபைக்கு இழுத்து வரத் தொடங்கிப் பிணித்த போதே, பிரமாத்திரம் மற்றொரு கட்டுக்கு அடங் காது அவனைவிட்டு விலகிப் போயிற்று என்றும், அதனை இந்திரசித்து அறிந்தானென்றும், அநுமனும் அதனையுணர்ந்திருந்தும், இராவணனைத் தான் நேரிற்கண்டு அவனிடம் இதமாய்ப் பேசி அவன் நிலையுணர்ந்து கொள்ள எண்ணி, அப்பிரமாத்திரத்தில் கட்டுப்பட்டு இருப்பதுபோலவே இருந்தான் என்றும் வான்மீகம் கூறும், சில சுவடிகளில் இச் செய்யு ளுடன் பிணிவிடு படலம் முற்றும்.

(பி-ம்.) 1. ஆய காலை: இருப்பக் கனலு மிடலாகா: இருப்ப வரக்கர் கனலிடுகை; கனலிடுதல்:
2. பாச மெனைப்பலவும்: பாசந் தனைவிடுமென் றுரைத்தான் தூய வீடணனும்.
3. படைக்கலத்தை மீட்டானமரர் போர்வென்றான்.
4. ஏயெ னுமுன் னரக்கர்பிடித் தெறுழ்வன் கயிற்றால் பிணித் தீர்த்தார். (118)

1161. *நாட்டி னகரி னடுவுள்ள*
*கயிறு நவிலுந் தகைமையவோ*
*வீட்டி னாச னெடும்பாச*
*மற்ற தேரும் விசிதுறந்த*
*மாட்டும் புரவி யாயமெலா*
*மருவி வாங்குந் தொடையழிந்த*
*பூட்டு வல்லி முதலாய*
*புரசை யிழந்த போர்யானை,*

வீட்டின் ஊசல் நெடும் பாசம் அற்ற - இலங்கை நகரின் வீடுகளில் உள்ள ஊஞ்சல்கள் நீண்ட தம் கயிறுகள் அற்றன ஆயின; தேரும் விசி துறந்த-தேர்களும் அவற்றில் கட்டப்பட்டிருந்த கயிறுகளை இழந்தன; மாட்டும் புரவி ஆயம் எலாம்-பிணிக்கப்படும் குதிரைச் சாலைகளில் எல்லாம், மருவி வாங்கும் தொடை அழிந்த-பூட்டி அவிழ்க்கும் கயிறுகள் ஒழியப் பெற்றன; போர் யானை-போர்ப்படையைச் சேர்ந்த யானைகள், பூட்டும் வல்லி-பூட்டப்படும் வல்லிக் கயிறுகள், புரசை முதலாய - கழுத்திற் கட்டப்படும் கயிறுகள் முதலியவற்றை, இழந்த-இழந்தவை ஆயின; (என்றால்), நாட்டின் நகரின் நடு உள்ள - அந்த இலங்கையைச் சுற்றிய நாட்டுப்புறங்களிலும் அந்த இலங்கை நகரிலும் உள்ளனவான, கயிறு-கயிறுகள், நவிலும் தகைமையவோ-சொல்லுந் தன்மையுடையன ஆகுமோ? (ஆகா என்பதாம்).

வல்லி - யானையின் வயிற்றி னிடையே கட்டப்பெறும் கயிறு; இது அல்லிக் கயிறு எனவும் ஆம்; இதனைக் காற்சங்கிலி யென்றும் கூறுவர். சீவக. 2240, 2263, 2280, உரை. தக்க. 39. உரைக்குறிப்பு. அல்லி - அரைஞாணுமாம். நவிலும் தகைமையவோ, என்றமையால் எல்லாக் கயிறுகளும் வந்தன என்பதாம். இதுவும் அடுத்த செய்யுளும், ஸ்ரீஐயரவர்களுக்கு உடன்பா டில்லையென்பது அவர்களுடைய குறிப்பிலிருந்து தெரியவருகிறது. ஆனாலும், கிடைத்த சுவடிகளி லெல்லாம் இவை இருத்தலால், இங்குப் பாடவரிசையில் கொள்ளப் பட்டன.

(பி-ம்.) 1. நாட்டுந் தரும நடுவுள்ள; நாட்டுப் புறத்து நகரியினிற்; நாட்டு நகரி தனிலுள்ள; நாட்டு நகரி யிடையுள்ள: நவிலும் தகையனவோ.

2. ஊச லெனும்பா சம்தேரின்; விசித்த விறற்கயிறும்:விசிமறந்த.

3. வாட்டும் புரவி பயிலாய மெல்லர மருங்கும் தொடையிழந்த: கூட்டும் புரவி யினமனைத்துங் கொண்ட புரசை நறுந்தொடையல்;

4. வல்லி மூட்டோடும்:வல்லி முட்கோடும். (119)

1162. மண்ணிற் கண்ட வானவரை
வலியிற் கவர்ந்த வரம்பெற்ற
எண்ணற் கரிய வேனையரை
யிகலிற் பறித்த தமக்கியைந்த
(பெண்ணிற் கமைந்த மங்கலத்திற்
பிணித்த கயிறே யிடைபிழைத்த)
கண்ணிற் கண்ட வன்பாச
மெல்லா மிட்டுக் கட்டினர்.

க. 112,

மண்ணில் கண்ட - (இராவணன் திக்குவிசயஞ் செய்தகாலே) பூமியில் பல விடங்களில் கண்டு கவர்ந்து கொள்ளப்பட்டவைகளும், வான வரை வலியில் கவர்ந்த - தேவர்களேத் தன் வலிமை காட்டி அபகரித்துக் கொண்டுவரப்பட்டவைகளும், வரம் பெற்ற - வரங்களால் அடைந்தவைகளும், எண்ணற்கு அரிய - எண்ண முடியாத, ஏனையரை இகலில் பறித்த - மற்றேர்களேப் போரிட்டுப் பறித்துக்கொண்டவைகளுமாக, கண்ணில் கண்ட வன் பாசம் எல்லாம் இட்டு கட்டினர் - தாம் கண்ணல் பார்த்த வலிய கயிறுகள் எல்லாம் கொண்டு வந்து போட்டு அரக்கர்கள் அநுமனேக் கட்டினர்கள்; தமக்கு இயைந்த பெண்ணிற்கு அமைந்த - அரக்கர்களாகிய தங்களுக்கு மனேவியராய்ப் பொருந்தியிருந்த மகளிர்க்கு அமைந்தனவான, மங்கலத்தில் பிணித்த - திருமங்கலியம் என்னும் தாலியில் பிணித்துக் கட்டியிருந்த, கயிறே இடை பிழைத்த- கயிறுகளே கவரப்படாமல் நடுவில் தங்கினவை ஆயின.

இடை பிழைத்த-அவ்விடத்துக் கவரப்படாமல் தங்கினவை ஆயின எனலும் ஆம்.

(பி-ம்.) 1. மண்ணிற் பறித்த; மண்ணிற் கொண்ட; கவர்ந்து வரம்பெற்ற; கவர வரம்பெற்ற.

2. எண்ணற் கரிய தேவரிட மிகலிற் பறித்த தமக்கிசைந்த.

3. பெண்ணிற் கியையும்; இயைந்த; இடையிடத்த: பெண்ணிற் கணிந்த மங்கலத்தில் பிணித்த கயிறே கடையாக.

4. கண்ணிற் கண்டே நெடும்பாசம்; கண்ணிற் கண்ட கயிறனேத்து மிட்டாங் கரிஜிற் கட்டினர். (120)

## அநுமன் நினேப்பும் நிலேயும், 1163-64.

1163. *கடவுட் படையைக் கடந்தறத்தி னணே கடந்தே னகாமே*
*விடுவித் தளித்தார் தெவ்வவரே வென்றே னன்றே விவர்வென்றி*
*சுடுவிக் கின்ற திவ்வூரைச் சுடுகென் றுரைத்த துணிவென்று*
*நடுவுற் றைய மறநோக்கி முற்று முவந்தா னவையற்றான்.*

'நவை அற்றன் - குற்றமற்றவனை அநுமன், 'கடவுள் படையை கடந்து - தெய்வத்தன்மையுடைய பிரமாத்திரத்தை மீறி, அறத்தின் ஆணே கடந்தேன் ஆகாமே - தருமத்தின் கட்டளேயைக் கடந்தவன் என்னும் குற்றத்திற்கு உள்ளாகாமல், தெவ் அவரே - பகைவர்களாகிய அரக்கர்களே, விடுவித்து அளித்தார்-(மற்றும் கயிறுகொண்டு கட்டி என்னேக் அப்பாசத்தினின்று)விடுவித்து உதவி செய்தார்கள்; இவர் வென்றி வென்றேன் அன்று ஓ-இவர்கள் தம் வெற்றி யென்று சொல்லிக் கொண்டிருப்பதை நான் வென்றுவிட்டேன் அல்லனே? சுடுவிக்கின்றது-இராவணன் என்னே வாலிற் கொளுத்திச் சுடச் செய்கின்ற இது, இ ஊரை

சுடுகென்று உரைத்த துணிவு என்று-இந்த ஊரை நீ சுடு என்று எனக்குச் சொன்ன தெளிவுரை யாகும்'; என்று, நடுவு உற்று ஐயம் அற நோக்கி - நடுநிலையில் இருந்து சந்தேக மில்லாமல் ஊகித்துப் பார்த்து, முற்றும் உவந்தான் - நிரம்ப மகிழ்ச்சியுற்றான்.

பிரமாத்திரத்திற்குப் பெருமை குறையக் கூடாதென்று அநுமன் அடங்கியிருந்தா னென்பது; 1038.

(பி-ம்.) 1. கடிந் தறத்தின்: கடந்தோர் விளிவெய்த.
2. விடுவித் தளிந்தார் தேவரோ: விடுவித் ததுவும் நல்லறமே யின்றே வென்றே னிவர்வென்றி: இன்றே யிவர்வென்றி.
3. சுடுவிக் கின்ற ரிவ்வூரைச் சுடுதற் கொண்ணு மெனக்கிதுவே.
4. நடுவுற் றமைய முறநோக்கி: நடுவுற்றைய னுறநோக்கி; நடுவுற் றமைநன் றெனவநும னுவந்தான் மனத்தி னவையில் லான்; நவையுற்றான். (121)

1164. நொய்ய பாசம் புறம்பிணிப்ப
நோன்மை யிலன்போ லுடனுணங்கி
வெய்ய வரக்கர் புறத்தலைப்ப
வீடு முணர்ந்தே விரைவில்லான்
ஐயன் விஞ்சை தனையறிந்து
மறியா தான்போ லவிஞ்சையெனும்
பொய்யை மெய்யே நடிக்கின்ற
யோகி போன்றான் போகின்றான்.

நொய்ய பாசம் புறம் பிணிப்ப-வலிமையற்ற கயிறுகள் தன் உடலைக் கட்ட, நோன்மை இலன் போல் உடல் நுணங்கி - வலிமையில்லாதவன் போலத் தன்னுடல் வாடி, வெய்ய அரக்கர் புறத்து அலைப்ப - கொடிய இராக்கதர்கள் பக்கங்களிலிருந்து அங்குமிங்கும் இழுத்து வருத்த, வீடும் உணர்ந்தே - அவர்களிடமிருந்து விடுவித்துக் கொள்ளும் வழியை அறிந்தவனாய் இருந்தும், விரைவு இல்லான் - அதில் விரைவு இல்லாத வனை, ஐயன் - பெருமைக்குணமுடைய அநுமன், விஞ்சை தனை அறிந்தும்-ஆத்மஞானமாகிய வித்தையை அறிந்திருந்தும், அறியாதான் போல் - அறியாதவன் போல, அவிஞ்சை எனும் பொய்யை - அஞ் ஞானம் என்னும் பொய்ப் பொருளை, மெய்யே நடிக்கின்ற - மெய்ப் பொருள் போல எண்ணி உலகத்தோர்க்கு வேடத்தால் காட்டி நடிக் கின்ற, யோகி போன்றான் - ஒரு யோகியைப் போன்றவனாய், போகின் றான் - அவ்வரக்கர்களால் இழுக்கப்பெற்று அவர்களுடன் செல்வானா யினன்;

விஞ்சை - பிரம ஞானம்; அவிஞ்சை - பொய்யுணர்வாகிய மாயை. உலக வாழ்க்கையின் நிலையின்மையையும், வீடுபேற்றின் அழிவில்லா உண்மையையும், அதனையடையும் திறனையும் நன்கு உணர்ந்திருந்தும், உலக மக்கள் நற்கதியடைய அவர்களுடன் ஒருவராய்ப் பழகி நடித்து வரும் ஒரு யோக புருஷன் போல், அநுமன் அரக்கர்களுக்கு உட்பட்டு அவர்கள் இழுக்கும் வழியெல்லாம் அவர்களுடன் தானுஞ்சென்று, அன்னோர் செய்த துன்பங்களுக்கும், இழித்துரைகளுக்கும் உள்ளாகி, உழலும் ஒரு பாமரன் போலச் சென்றான் என்பதாம். பிரமஞானிகள் மற்றவர்கள் போல உலகில் உழன்று திரிந்து வந்தனர் என்பதை ஜடபரதர் சரிதையாலும், மற்றும் புராணங்களாலும் நன்கு அறியலாம். புறம் - உடம்பு; 1170; 'பைம்புறப் படுகிளி' (ஐங்குறு. 260.)

(பி-ம்.) 1. பாசம் புரம்பிணிப்ப; உறப்பிணிப்ப: பாச முறப்பிணிப்ப வதனுற் சோம்பி நுடங்கினன்போல்.

2. புறத்நிலைத்த போது முடலம் விரைவில்லா(து).

3. விஞ்சை தனியறிந்து: விச்சை தனையறிந்து: ஐய னவர்செய் வினையறிந்து மறியான்போல்.

4. மெய்ப்போ னடிக்கின்ற: யோகி போலே போகின்றான். (122)

## அநுமன் வாலினுக்குத் தீயிடல் 1165-67.

1165. வேந்தன் கோயில் வாயிறொறும்
　　விரைவிற் கடந்து வெள்ளிடையில்
போந்து புறநின் றிரைக்கின்ற
　　பொறைதீர் மறவர் புறஞ்சுற்ற
ஏந்து நெடுவால் கிழிசுற்றி
　　முற்றுந் தோய்த்தா ரிழுதெண்ணெய்
காந்து கடுந்தீக் கொளுத்தினா
　　ரார்த்தா ரண்டங் கடிகலங்க.

(அவ்வாறு கட்டிய ஏவலாளர்கள் அநுமனை ஈர்த்துக் கொண்டு), வேந்தன் கோயில் வாயில் தொறும் - அரசனான இராவணனுடைய அரண்மனை வாயில்கள் எல்லாம், விரைவில் கடந்து - விரைவாகக் கடந்து சென்று, வெள்ளிடையில் போந்து - வெட்டவெளியை அடைந்து, புறம் நின்று-(அநுமன்) பக்கங்களில் சூழ்ந்து நின்று கொண்டு, இரைக்கின்ற பொறை தீர் மறவர் - முழக்கமிடுகின்ற பொறுமையற்ற (மற்றுமுள்ள அந்நகர) அரக்க வீரர்கள், புறம் சுற்ற-நாற்புறங்களிலும் சூழ்ந்து கொள்ள, ஏந்து நெடு வால் கிழி சுற்றி - (அநுமனின்) நிமிர்ந்து விளங்கும் நீண்ட வாலில் கந்தைத் துணிகளைச் சுற்றி, இழுது எண்ணெய் - நெய் இழுதிலும் எண்ணெயிலும், முற்றும் தோய்த்தார் - முழுதும் தோய்த்து.

காந்தும் கடும் தீ கொளுத்தினர் - (அதில்) எரியும் கொடிய நெருப்பைக் கொளுத்தி, அண்டம் கடி கலங்க ஆர்த்தார் - அண்ட கோளம் முழுவதும் நிலைகுலையப் பெரு முழக்க மிட்டனர்.

இராவணனின் ஏவலாளர்கள் அநுமனை ஈர்த்துக் கொண்டு அரண்மனை வாயில்களைக் கடந்து வெள்ளிடை அடைந்து, மற்றுமுள்ள அரக்க வீரர்கள் ஆரவாரஞ்செய்து புறம் சுற்ற, அவ்வநுமன் வாலில் கிழி சுற்றி நெய் எண்ணெய் முதலியவற்றில் தோய்த்து எரியிட்டு அண்டம் கலங்க ஆரவாரம் செய்தனர் என்பதாம். கிழி - கிழிக்கப்பட்ட துணி என்பது பொருள். இழுது - நெய்; 'இழுதமை யெரிசுடர் விளக்கு' (சீவக 2630).

(பி-ம்.) 1. வேந்தன் கோயி னெடுவாயில் விரைவிற் கடந்து; கோயில் வாயிலொடு.
2. புறநின் றூர்க்கின்ற; பொறைநீ ரரக்கர் புடைசூழ்ந்தாங்(கு); மறவர் புடைசுற்ற.
3. ஏய்ந்த வாலில் துகில லனைத்தும் சுற்றி யெண்ணெய் தனைத் தோய்த்து: கிழிசுற்றி முழுதுங்.
4. காந்து சுடுந்தீ; காய்ந்து கடுந்தீ: கொளுத்திப்பின் னார்த்தார்.
(123)

1166. ஒக்க வொக்க வுடன்விசித்த வுலப்பி லாத வுடற்பாசம்
பக்கம் பக்க மிருகூறாய் நூறா யிரவர் பற்றினர்
புக்க படைஞர் புடைகாப்போர் புணரிக் கணக்கர் புறஞ்செல்வோர்
திக்கி னளவா லயனின்று காண்போர்க் கெல்லை தெரிவரிதால்

ஒக்க ஒக்க - பல ஒன்று சேரும்படி, உடன் விசித்த - ஒன்றின் மேல் ஒன்றாய் இறுக்கிக் கட்டிய, உலப்பு இலாத - அழியாத, உடல் பாசம் - அநுமன் உடலில் கட்டப்பட்ட கயிறுகளை, பக்கம் பக்கம்-இரு பக்கங்களிலும், இரு கூறாய் - இரண்டு பிரிவுகளாக, நூறு ஆயிரவர் பற்றினர் - நூறாயிரம் அரக்கர்கள் பிடித்துக் கொண்டார்கள்; புடை காப்போர் - பக்கத்திலிருந்து காவல் புரிபவர்களாய், புக்க படைஞர் - அங்கு வந்துபுகுந்த ஆயுதங்கள் ஏந்திய வீரர்கள், புணரி கணக்கர்-சமுத்திரம் என்னும் தொகையளவைக் கொண்டவர்களாயினர்; புறம் செல்வோர் - அவர்களுக்குப் புறமாய்ச் சூழ்ந்து உடன் செல்வோர்கள், திக்கின் அளவு ஆல் - திக்குக்கள் உள்ள அளவும் பரந்து நின்றவர் ஆயினர் ஆதலின், அயல் நின்று காண்போர்க்கு எல்லை தெரிவு அரிது - அவர்களுக்கு அயலே நின்று அக்காட்சியைக் காண்போர்களுடைய அளவைத் தெரிந்து கணக்கிட முடியாததாகும், ஆல்: அசை,

அநுமனைப்பற்றிக் கயிற்ருல் ஈர்த்தவர் நூருயிரவர்; 1176. அவர்கள் பக்கத்தே காவல் புரிந்து சென்ருேர் சமுத்திரம் என்னும் பேரெண்ணின் அளவினர். அவர்களைத் தொடர்ந்து சென்ருேர் திக்குக்கள் அளவும் பரவினராய் மிகுந்திருந்தனர். ஆதலின் அங்குவந்து காண நின்ருேரைக் கணக்கிட முடியாததாய் இருந்தது என்பதாம். சமுத்திரம்: ஒரு பேரெண்; (பிங்களம்); சமுத்திரம் என்னும் பெயர் அதன் பரியாயப்பெயராகிய புணரி என்பதால் இங்குக் குறிக்கப்பெற்றது. இச் செய்யுள் மேன்மேலுயர்ச்சி என்னும் அணியின் பாற்படும்.

(பி-ம்.) 1. ஒக்க வநும னுடல்விசித்த உலப்பில் லாத பாசமிரு: உரப்பாசம். 2. பக்க மொருநூ ருயிரம்பே ரரக்கர் வலிதிற் பற்றிநின்ருர்: பக்க பக்க மிரு: 3. படைஞர் புறங்காப்போர்: பெரும்போர்த் தலைவர் புடைசெல்வோர்: புணரி யரக்கர். 4. திக்கி னடங்கா தயல்நின்று: அளவாய் முன்னின்று. (124)

1167. *அந்த நகருங் கடிகாவு மழிவித் தக்கன் முதலாயோர்*
*சிந்த நூறிச் சீதையொடும் பேசி மனிதர் திறஞ்செப்ப*
*வந்த குரங்கிற் குற்றதனை வம்மின் காண வம்மென்று*
*தந்தந் தெருவும் வாயிருறும் யாரு மறியச் சாற்றினுர்.*

(இராவணனின் ஏவலர்கள்), 'அந்த நகரும் - இலங்கை நகரையும், கடிகாவும் - காவல் மிகுந்த அசோகவனம் என்னும் சோலையையும், அழிவித்து - அழியச் செய்தும், அக்கன் முதலாயோர் - அக்ககுமாரன் முதலிய சிறந்த அரக்கர் வீரர்கள், சிந்த-சிதறி அழிய, நூறி-கொன்றும், சீதை ஒடும் பேசி - சீதையோடும் தனியே பேசியும், மனிதர் திறம் செப்ப வந்த - நம் அரசனிடத்து அந்த (அற்ப) மனிதர்களாகிய இராமலக்ஷ்மணர் வலிமையைச் சொல்லவும் வந்த, குரங்கிற்கு உற்றதனை - இந்தக் குரங்குக்கு நேர்ந்த தண்டனையை, வம்மின் காண வம் என்று-வந்து காண வாருங்கள் வாருங்கள்' என்று, தம் தம் தெருவும் வாயில் தொறும்-தங்கள் தங்கள் தெருக்களிலும் வீட்டு வாயில்களிலும் ஒவ்வோரிடத்தும், யாரும் அறிய-உள்ளோர் அனைவரும் அறியும்படி, சாற்றினுர்-கூறினுர்கள்.

அக்கன் முதலோரை என்றது;அக்கன் இராவணன் மைந்தனும் பெரும் வீரனுமாதல் பற்றி. மனிதர் என்றது இகழ்ச்சிக் குறிப்பினது. கடிகா - நறுமண மிக்க சோலை என்னலும் ஆம். வம்மின்; 'புண்ணியரே வம்மின்' (ஆரண்ய. சடாயுவுயிர். 189;) வம்; 'ஏனேரும் தம்மென' (மதுரைக். 747) என்புழித் தம் என்பது தாருமென நின்ருற்போல வம்மென்பது வாருமென்னும் பொருட்டாய் நின்றது' என்ற (பொருந. 101, நச்.) உரை இங்கு நோக்கத் தக்கது. சாற்றுதல், பறைசாற்றுதலும் ஆம்.

(பி-ம்.) 1. அந்த னக்கருங்: அழுத்தீண் டரக்க ரளப்பிலரை.
2. சித்த வதைத்துச் சிதையுடன்: மனிதன் சொற்ற திறஞ்செப்ப; செப்பிக். 3. குரக்குக் குற்றசெயல் காண வம்மின் வம்மி னென்று; வம்மின் காண வம்மினெனத்.
4. தந்தந் தந்தந் தெருவுதொறும்: ஒருவர்க் கொருவர் சாற்றினரால். (125)

## பிராட்டியின் துயரம்

1168 ஆர்த்தா ரண்டத் தப்புறத்து
மறிவிப் பார்போ லங்கோடிங்
கீர்த்தார் முரச மெற்றினு
ரிடித்தார் தெழித்தா ரெம்மருங்கும்
பார்த்தா ரோடிச் சானகிக்கும்
பகர்ந்தா ளவளு முயிர்பதைத்தாள்
வேர்த்தா ளுலந்தாள் விம்மினுள்
விழுந்தா ளழுதாள் வெய்துயிர்த்தாள்.

அண்டத்து அப்புறத்தும் அறிவிப்பார் போல - (அரக்கர்கள்) இவ் வண்ட கோளகைக்கு அப்பால் உள்ள இடங்களிலும் அறிவிப்பவர் போல, ஆர்த்தார் - பேராரவாரஞ் செய்தனர்; (சிலர்) அங்கு ஓடு இங்கு ஈர்த்தார் - அங்கும் இங்குமாக அநுமனைக் கட்டி இழுத்தார்கள்; முரசம் எற்றினுர் - (சிலர்) பேரிகைகளைத் தாக்கி அடித்து ஒலி யெழுப்பினுர்கள்; இடித்தார் - (சிலர்) அநுமனை இடித்துத் தள்ளினுர்கள்; தெழித்தார் - (சிலர்) அதட்டினுர்கள்; எ மருங்கும் பார்த்தார் - (சிலர்) எப்புறமும் சுற்றிப் பார்த்தனர்; ஓடி சானகிக்கும் பகர்ந்தார் - (சிலர்) ஓடிப் போய் (அநுமனுக்கு உற்ற நிலையைப்) பிராட்டிக்கும் சொன்னுர்கள்; அவளும்- (அதுகேட்ட) அப்பிராட்டியும், உயிர் பதைத்தாள் - உயிர் துடித்து வருந்தினுள்; வேர்த்தாள்-உடல் வியர்ப்புற்ருள்; உலந்தாள் - (மனம்) அழிந்தாள்; விம்மினுள் - பொருமினுள்; விழுந்தாள்-தரைமீது விழுந்தாள்; அழுதாள் - வாய்விட்டு அழுதாள்; வெய்து உயிர்த்தாள் - (தாபத்தால்) வெப்பமாக மூச்சுவிடுவா ளாயினுள்.

அண்டத்து அப்புறத்திலும் அறிவிப்பார் போல், ஆர்த்து முரசம் எற்றினுர் எனக் கூட்டி உரைத்தலும் ஆம். எற்றினுர் - தாக்கி அடித்தார். இடித்தார்; இடிபோல் ஒலிக்கத் தாக்கினுர் என்னலும் ஒன்றும். பகர்ந் தார்: பகர்ந்தவர் காவலரக்கியர் எனக் கொள்ளற் பாலது.

(பி-ம்.) 2. முரசம் பலவறைந்தா ரிடித்தார்.
3. போர்த்தா ரோடி: சனகிக்கு: இவள்கேட் டுடல் பதைத்தாள்.
4. உலர்ந்தாள் விம்மினுள்: விம்மிவிம்மி விழுந்தா னெழுந்தாள்: விழுந்தா ளழிந்தாள். (126)

## பிராட்டியின் வேண்டுகோளும், அதன் விளைவும்

## 1169-72

1169. தாயே யனைய கருணையான் றுணையே யேதுந் தகவில்லா
நாயே யனைய வல்லரக்கர் நலியக் கண்டா னல்காயோ
நீயே யுலகுக் கொருசான்று நிற்கே தெரியுங் கற்பதனில்
தூயே னென்னிற் றொழுகின்றே னெரியே யவனைச் சுடலென்றுள்.

(பிராட்டி அக்கினியை நினைத்து), 'எரியே - ஏ நெருப்புக்கடவுளே! 'தாயே அனைய கருணையான்-தாய்போன்ற கருணையை என்பாற் கொண் டுள்ள அநுமனுக்கு, துணையே - துணைவனே! தகவு ஏதும் இல்லா - தகுதி யான நற்குணமொன்றும் இல்லாத, நாயே அனைய வல் அரக்கர் - நாய் போல இழிந்த வலிமையுடைய அரக்கர்கள், நலிய கண்டால் - (அவ்வநு மனைத்)துன்புறுத்த நீ பார்த்தால், நல்காயோ-நீ அவனுக்குத் துணைபுரிய மாட்டாயோ?நீயே உலகுக்கு ஒரு சான்று-நீதான் உலக மனைத்துக்கும் ஒப்பற்ற சாட்சியாய் விளங்குபவன்; நிற்கே தெரியும் - உனக்கே நன்மை தீமை என்பன அனைத்தும் தெரியும்; ஆதலால் கற்பு அதனில் தூயேன் என்னில் - நான் கற்பின் தன்மையால் தூய்மையுடையவள் என்பது உண்மையானல், அவனை சுடல் - அந்த அநுமனை நீ சுடாதே'; தொழு கின்றேன் - உன்னை வணங்கிக் கேட்டுக் கொள்கிறேன்: என்றுள் - என்று பிராட்டி உறுதியிட்டுக் கூறினள்.

பிராட்டி அநுமனைத் தாய் என்றது: 560. அக்கினியை அநுமனுக் குத் துணைவன் என்றது; அவன் வாயு தேவனுக்கு உற்ற துணைவனுத லால் என்க. நீயே உலகுக்கு ஒரு சான்று: பின் இராமபிரான் 'அழிப்பில சான்றுநீயுலகுக்கு'' (உயுத்தமீட்சிப்: 97.) என்று அக்கினித்தேவனை நோக்கிக் கூறுவதாலும் வலியுறப் பெறுவது காண்க. சுடல் - சுடாதே; எதிர்மறை ஏவல் வினை முற்று. நீயே, நிற்கே, என்பவற்றில் உள்ள ஏகா ரங்கள் தேற்றப்பொருளன. தூயேனென்பது நிற்கே தெரியும் என்றும் கூட்டலாம். தூயேன் என்னின்; 561 'மனத்தினுல் வாக்கினுல் மறுவுற் றேனெனின், சினத்தினுல் சுடுதியால்', (உயுத்த. மீட்சிப். 84, என்று பிராட்டி கூறியதையும் காண்க.

(பி-ம்.) 1. கருணையினுன் தூத னவனைத் தகவில்லா: கருணையான் துணையை. 2. அடலரக்கர் நலிவு செய்தா ராலும்.
3. நினக்கே தெரியுங் கற்பதனுல்: கற்பினுல்; கற்பெல்லாம்.
4. என்னிற் சுடரெரியே தொழுதே னவனைச்சுட(ல்) (127)

வேறு

1170. *வெளிர்த்தமென் னகையவள் விளம்பு மேல்வையில்*
*ஒளிர்த்தவெங் கனலவ னுள்ள முட்கினுன்*
*தளிர்த்தன மயிர்ப்புறஞ் சிலிர்ப்பத் தண்மையால்*
*குளிர்த்ததக் குரிசில்வா லென்பு கூரவே.*

வெளிர்த்த மென் நகை அவள் - வெண்ணிறமும் மென்மையுமான பற்களையுடைய பிராட்டி, விளம்பும் ஏல்வையில் - அவ்வாறு அக்கினி தேவனைக்குறித்துக் கூறியபோது, ஒளிர்த்த வெம் கனல் அவன் உள்ளம் உட்கினுன் - ஒளிவிட்டு விளங்கிய கொடிய தீக் கடவுள் மனத்தில் அச்சங் கொண்டான்; புறம் மயிர் - (அதனுல் அநுமனின்) உடலின் மேலுள்ள உரோமங்கள், தண்மையால் - குளிர்ச்சியால், சிலிர்ப்ப - புளகித்து, தளிர்த்தன - செழிப்புற்றன; அ குரிசில் வால் - அந்தச் சிறந்த அநுமனின் வால், என்பு கூர - எலும்பு வரையிலும் மிக, குளிர்த்தது - (உட்புறமும்) குளிர்ச்சியடைந்தது. ஏ: அசை.

மென் நகை - அழகிய பற்கள் என்னலும் ஒன்றும். ஏல்வை-எல்லை அல்லது அளவு; இது எல்வை எனவும் வழங்கும். மயிர்ப்புறம் சிலிர்த்தல் - சீதளத்தால் உடலில் உரோமங்கள் வெளியே நிமிர்ந்து நிற்றல் என்றும் கொள்ளலாம்; இது மயிர்க்கூச்செறிதல் எனப்படும். புறம்-உடல். 1164; இச் செய்தி பின்னும் உயுத்த. இரணியன்வதைப்: 86 இல் கூறப்படுதல் காண்க.

(பி-ம்.) 1. வெளுத்தமென்; வெளிர்த்தவெண்; விளர்ந்தவெண் ணகை.
2. ஒளிர்த்தடுங் கனல்; ஒத்தவெங் கவல்.
3. சலிப்பத் தன்மையால். 4. வாலன்பு கூரவே (128)

வேறு

1171. *மற்றினிப் பலவென் வேலை வடவனல் புவிய ளாய*
*கற்றைவெங் கனலி மற்றைக் காயத்தீ முனிவர் காக்கும்*
*முற்றுறு மும்மைச் செந்தீ முப்புர முருங்கச் சுட்ட*
*கொற்றவ னெற்றிக் கண்ணின் வன்னியுங் குளிர்ந்த வன்றே.*

வேலை வட அனல் - கடலின் வடக்கே உள்ள (வடவாமுகாக்கினி என்னும்) நெருப்பும், புவி அளாய கற்றை வெம் கனலி - பூமியில் கலந்து விளங்கும் தொகுதியான வெப்பமுள்ள நெருப்பும், மற்றை காய தீ - வேருன ஆகாயத்தில் பொருந்திய நெருப்பும், முனிவர் காக்கும் முற்று உறு மும்மை செம் தீ - முனிவர் முதலியோர் அவிந்திடாமற் பாதுகாத்து வரும் வைதிக மூன்று அக்கினிகளும், மு புரம் முருங்க

சுட்ட - அசுரர்களுடைய திரிபுரங்கள் அழியச் சுட்டெரித்த, கொற்ற வன் நெற்றி கண்ணின் வன்னியும் - வெற்றி மிக்க சிவபெருமானு டைய நெற்றிக் கண்ணிடத்துப் பொருந்தியுள்ள நெருப்பும், குளிர்ந்த - குளிர்ச்சியை யடைந்தன; மற்று இனி பல என் - மேலும் இனிப் பல சொல்வது என்ன இருக்கிறது? அன்று, ஏ: அசைகள்.

பிராட்டியின் விருப்பினுல் அக்கினி சாந்தமடைய, பிற இடங்களிலும் விளைந்தவை சமத்காரமாகக் கூறப்பட்டன. மற்ற நெருப்புக்களைக் கூறி, அதனோடு கொற்றவன் நெற்றிக் கண்ணின் வன்னியும் என்று உம்மை யால் சிறப்பித்தது, சிவபிரான் நெற்றிக் கண்ணின் அழலின் சிறப்பைத் தனியே உணர்த்துவதாகும். காயம்: ஆகாயம் என்பதின் முதற்குறை; இனி, காயத்தீ என்பதற்கு, உடலிற் பொருந்தியுள்ள ஜாடராக்கினி எனக் கொள்வாரும் உளர். மும்மைத்தீ; ஆகவனீயம், காருகபத்தியம், தட்சி ணுக்கினிம் என்னும் மூன்று வைதிக அக்கினிகள். மேற்கூறிய நெருப்புக் கள் எல்லாம் குளிர்ப்புற்றன; ஆதலின் மற்றினிப் பலவென்? என்ருர். இச் செய்யுளுக்குப் பூட்டு விற்பொருட் கோளாகவும் பொருள் கோடலும் ஆம்: வடவனல்: வடவை அனல் என்பதின் விகாரமாகவும் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. வடவனல் புவியின் வாழும்.
2. காய்கதிர் முனிவர்.
3. முற்றுற மும்மைச் செந்தீ: முப்புர முடியச் சுட்ட.
4. கண்ணின் நெருப்புமே: குளிர்ந்த தம்மா. (129)

1172. *அண்டமுங் கடந்தா னங்கை யனலியுங் குளிர்ந்த தங்கிக்*
*குண்டமுங் குளிர்ந்த மேகத் துருமெலாங் குளிர்ந்த கொற்றச்*
*சண்டவெங் கதிர்க ளாகித் தழங்கிருள் விழுங்குந் தாவில்*
*மண்டலங் குளிர்ந்த மீளா நரகமுங் குளிர்ந்த மாதோ.*

அண்டமும் கடந்தான் - இவ்வண்ட கோளகையையும் கடந்து அப்புறத்தான ஸத்தியலோகத்தில் வாழும் பிரமதேவனுடைய, அம் கை அனலியும் - உள்ளங்கையில் உள்ள நெருப்பும், குளிர்ந்தது - குளிர்ச்சி யடைந்தது; அங்கி குண்டமும் - (அப்பிரமதேவன் வேள்வியின் பொருட்டு வளர்த்துவரும்) வைதிக அக்கினிக்குண்டங்களும், குளிர்ந்த -குளிர்ச்சியடைந்தன; மேகத்து உரும் எலாம் குளிர்ந்த - மேகத்தி னிடையேயுள்ள இடிகள் யாவும் குளிர்ச்சியுற்றன; கொற்ற - வலிமை கொண்ட, சண்டவெம் கதிர்கள் ஆகி - வலிய வெப்பம் மிகுந்த கிரணங் களாக ஆகி, தழங்கு இருள் விழுங்கும் - ஒலித்து எழும் இருளை விழுங் குகின்ற, தா இல் மண்டலம் - அழிவற்ற சூரிய மண்டலங்கள், குளிர்ந்த - குளிர்ச்சியடைந்தன; மீளா நரகமும் - தன் தன்மையினின்றும் மாருத

(அதாவது நெருப்புமயமாய் உள்ள ஒருவகை) நரகமும், குளிர்ந்த-குளிர்ச்சியடைந்தது. மாது, ஓ; அசைகள்.

அண்டமும் கடந்தான்-அண்டங்களையெல்லாம் கடந்து அப்புறத்தும் வியாபித்துள்ளவனான சிவபெருமானுடைய, அம் கை அனலி - அழகிய கையில் ஏந்தியிருக்கும் நெருப்பும் எனப் பொருள் கொள்ளலும் ஒன்றும். அண்டமுங் கடந்தான் - சிவபெருமான்; ஒப்பு. திருவாச. குயிற். 1. தழங்கு இருள் - (நள் என்று) ஒலிக்கும் இருள்; 'நள்ளென் யாமத்துப் பள்ளி கொள்ளான்;' (நெடுநல். 186.) நரகங்களுள் மீளா நெருப்புள்ளது ஒன்று உள்ளது என்பர்.

(பி-ம்.) 1. அண்டமுங் கடந்தா னங்கை யங்கியும் குளிர்ந்த வங்கிக்:
3. கதிரினூழி முடிவினிற் றருக்கும் பானு: சண்டவெங் கதிரவாகித். (130)

## அநுமன் நிலையும் செயலும் 1173-80

1173. *வெற்பினு லியன்ற தன்ன வாலினை விழுங்கி வெந்தீ*
*நிற்பினுஞ் சுடாது நின்ற நீர்மையே நினைவி னோக்கி*
*அற்பினு ரருத சிந்தை யநுமனுஞ் சனகன் பாவை*
*கற்பினு லியன்ற தென்பான் பெரியதோர் களிய னானான்*

அன்பின் நார் அருத சிந்தை அநுமனும் - இராமபிரான்பால் தான் கொண்டுள்ள பக்தியாகிய பற்று நீங்காத மனத்து அநுமனும், வெம் தீ - அந்தக் கொடிய நெருப்பு, வெற்பினுல் இயன்றது அன்ன - மலையினுல் அமைக்கப்பட்டது போன்ற, வாலினை விழுங்கி நிற்பினும் - (தன்) வாலை உட்கொண்டு நின்றாலும், சுடாது நின்ற நீர்மையே - தன்னைச் சுட்டு வருத்தாது குளிர்ச்சியோடு விளங்கிய தன்மையையே, நினைவின் நோக்கி - தன் மனத்தால் நன்கு ஆராய்ந்து உணர்ந்து,' சனகன் பாவை கற்பினுல் இயன்றது-(இது) சனகராஜன் குமாரியாகிய பிராட்டியின் கற்பின் சிறப்பால் ஆனது' என்பான் - என்று தீர்மானித்தவனாகி, பெரியது ஓர் களியன் ஆனான் - பெரியதான ஒரு மகிழ்ச்சியுற்றவன் ஆனான்.

வாலுக்கு வெற்பு அதன் வலிமையாலும் உருவின் பெருமையாலும் என்க. நீர்மை - சிறப்பும் ஆம்; 'பயனில நீர்மையுடையார் சொலின்' (குறள். 195), அற்பு: அன்பு என்பது எதுகை நோக்கி வலிந்தது; 'அற்புக் காழி யனனரிச் சந்திரன்' (அரிச்சந்திரபுராணம். மயான; 47) அன்பு - இங்கு பக்தி. இங்கு அநுமனின் யூகம் வெளிப்படுதல் காண்க.

(பி-ம்.) 1. வெற்பினி லியன்ற தன்மை வாலினை; விழுங்குஞ் செந்தீ.
2. நீர்மையை நினைவின்: நினைந்து நோக்கி.
3. அருத வுள்ளத் தநுமனும்.
4. கற்பினீ தியன்ற தென்னப்: இயன்ற தென்ன. (131)

1174. *அற்றையவ் விரவிற் ருன்ற னறிவினுன் முழுது முன்னப்*
*பெற்றில னெனினு மாண்டொன் றுள்ளது பிழையு ருமே*
*மற்றுறு பொறிமுன் செல்ல மறைந்துசெல் லறிவு மானக்*
*கற்றிலா வரக்கர் தாமே காட்டலிற் றெரியக் கண்டான்.*

அற்றை அ இரவில் - அன்று (ஊர்தேடும் போது) அந்த இராப் பொழுதில், தான் தன் அறிவினுல் முழுதும் உன்ன பெற்றிலன் எனினும்- தான் தன் அறிவினுல் இலங்கையின் சிறப்புக்கள் முழுவதையும்அறிந்து கொள்ள முடியாதவனுய் இருந்தும், ஆண்டு - அவனைப்பற்றி ஈர்த்துச் சென்ற அப்பொழுது, ஒன்று உள்ளது பிழை உருமே-அந்நகரில் உள்ள ஒன்றும் தப்பிவிடாமல், கற்று இலா அரக்கர் தாமே காட்டலில்-கற்றறி வில்லா (மூடர்களான) அவ்வரக்கர்கள் தாங்களே எல்லாவற்றையும் காட்டிக்கொண்டு சென்றதனுல், உறு பொறி முன் செல்ல-புறத்தே பொருந்தியுள்ள இந்திரியங்கள் முன்னே காட்டிச் செல்ல, மறைந்து செல் அறிவு மான - அவற்றினிடத்து மறைந்து தொடர்ந்து செல்லும் அறிவைப்போல, தெரிய கண்டான் - அவ்விலங்கையின் இடங்கள் பொருள்கள் ஒவ்வொன்றையும் நன்ருய் விளங்கப் பார்த்தான், மற்று : அசை.

பிராட்டியை நாடி ஊர் தேடியலைந்தபோது பார்க்காதவிடங்களை இப்பொழுது அரக்கரின் செயலால் அநுமன் காண இடம் கிடைத்தது என்க. இந்திரியம் முன் செல்ல, அறிவு பின் செல்லுதல் வழக்கு; அன்றியும் 'பொய்யை மெய்யேபோல் நடிக்கின்ற யோகி போன்ருன்' (1164) என்றபடி, அநுமன் இந்திரியங்களில் வழியே செல்லும் சாதாரண மனிதனைப்போலக் காணப்பட்டு, பகைவர் இழுத்துச் செல்ல அவர்கள் பின்னே சென்ருனென்பதும், அவ்வாறு நடிக்கும் யோகியர் மனம் உண்மையில் மெய்ப்பொருளை நாடிச் செல்வதுபோல அவனுடைய மனம் ஊரை நன்ருகக் காண்பதில் ஊற்றமுற்றது என்றும் கொள்க. பகைவனிடமிருந்து தூதனுய் வந்து பெருங்கேடிழைத்த ஒருவனுக்குத் தாமே நகரின் நிலைமையைக் காட்டிக்கொடுத்தாராதலின், கற்றிலா வரக்கர் எனப்பட்டார். 'இந்தக் கவிப்பொருள்: முன்னம் இராத்திரி கண்டும் காணுதது, இன்று நன்ருய்ப் பார்த்துக் கொள்ளும், தீக்கொளுத்த வென்று அரக்கர் காட்டுவது போல், அவர் முன்னே ஐம்பொறி நடக்க, அதுக்குள்ளே ஒளித்திருக்கும் அறிவொத்தான்' என்பது; பழைய உரை.

(பி-ம்.) 1, முழுது முள்ளப்: முழுது மள்ளப்.
2. பெற்றில தெனினும்: அன்னேன் செய்கையும் பழுது ருமல்.
3. மற்றுமைம் புலன்கள் கூற மருள்கடந் தறிவும் போலக்.
4. கற்றில வரக்கர்; காட்டலிற் கருதிக் கொண்டான். (132)

1175. *முழுவதுந் தெரிய நோக்கி முற்றுமூர் முடியச் சென்ருன்*
*வழுவுறு கால மீதென் றெண்ணினன் வலிதிற் பற்றித்*
*தழுவின ரிரண்டு நூரு யிரம்புயத் தடக்கை தாம்போ*
*டெழுவென நால விண்மே லெழுந்தனன் விழுந்த வெல்லாம்.*

முழுவதும் தெரிய நோக்கி - அந்த இலங்கை நகர் முழுவதும் நன்ருய்ப் பார்த்துக்கொண்டு, ஊர் முற்றும் முடிய சென்ருன் - அந்நகர் முழுவதும் மற்றும் மேலும் பார்க்கவேண்டிய இடம் சிறிதும் இல்லாமல் நெடுகச் சென்ற அநுமன், வழுவு உறு காலம் ஈது என்று - இனி யான் நீங்க வேண்டிய காலம் இதுவாகும் என்று, எண்ணினன் - கருதினவனுய், வலிதில் பற்றி தழுவினர் - (தன்னை) வலியுடன் பற்றித் தழுவிக் கொண்ட அரக்கர்களுடைய, இரண்டு நூருயிரம் புயம் தட கை - இரண்டு லட்சம் பெரிய தோள்களும், தாம்பு ஓடு - (அவர்கள் இழுத்துவந்த) கயிறுகளோடு, எழு என நால- தூண்கள் போலத் தொங்க, விண்மேல் எழுந்தனன் - (அவர்களையும் பற்றிக்கொண்டவனுய்) வானின் மேல் உயர எழும்பினுன்; எல்லாம் விழுந்த-(அப்படி எழுந்தபோது), அவ்வரக்கர் கூட்டம் எல்லாம் கீழே விழுந்தன.

நூருயிரவர் (லக்ஷம்) அரக்கர்கள் அநுமனை இழுத்துச் சென்றனர்; 1166; 1176. ஆதலின், இங்கு அவர்கள் தோள்கள் இரண்டு நூருயிரம் எனப்பட்டது. புயத்திற்கு எழு உவமை. வழுவு உறு காலம் ஈது என்று-தன்னைக் கட்டியுள்ள பிணிப்பினின்றும் கழன்று செல்லுங் காலம் இதுவே ஆகும் என்று' எனப்பொருள் கோடலும் அமையும்.

(பி-ம்.) 1. முழுவதுங் கருத்தி னேக்கி மொய்நகர்; முடிவிற் சென்ருன்.
2. வழுவுவ காலம்: வலியிற் பற்றித்.
3. தழுவின னிரண்டு: தடக்கைத் தாம்போடு.
4: எழநிமிர்ந் தெழுந்தான் விண்மேல் விழுந்தன ரரக்க ரெல்லாம்: எழுவென லான விண்மேல். (133)

1176. *இற்றவா ளரக்கர் நூரு யிரவரு மிழந்த தோளார்*
*முற்றினு ருலந்தா ரையன் மொய்ம்பினே டுடலை மூழ்கச்*
*சுற்றிய கயிற்றி னேடுந் தோன்றுவா னரவின் சுற்றம்*
*பற்றிய கலுழ னென்னப் பொலிந்தனன் விசும்பின் பாலான்.*

இற்றவாள் அரக்கர் நூறு ஆயிரவரும்-(கீழ்வீழ்ந்தமையால்) ஒடிந்து போன வாள்களையுடைய அந் நூருயிரம் அரக்கர்களும், இழந்த தோளார் - தோள்களை இழந்தவர்களாய், முற்றினுர் உலந்தார் - முழுவதும் அழிந்தனர்; ஐயன் - அநுமன், மொய்ம்பினேடு - தோள்களோடு,

உடலை மூழ்க சுற்றிய கயிற்றினேடும் - அவன் உடலைச் சுற்றியிருந்த கயிற்ருேடும், விசும்பின் பாலான் - ஆகாயத்திடத்து, தோன்றுவான் - விளங்குபவனுய், அரவின் சுற்றம் பற்றிய - பாம்பின் கூட்டம் உடலிற் பற்றியிருக்க, (ஆகாயத்திற் பறந்து செல்லும்), கலுழன் என்ன - கருடனைப்போல, பொலிந்தனன் - விளங்கிஞன்.

அரக்கர் கயிறுகளாற் பிணிப்புண்டு வானில் விளங்கிய அநுமனுக்கு அரவுகளாற் சுற்றப் பட்டு வானில் எழுந்து செல்லும் கருடன் உவமை. அநுமனுக்கு அரவுபற்றிய கருடன் உவமை. 84. மொய்ம்பு - தோள்: 'பூந்தாது மொய்ம்பினவாக' (கலித். 88: 2); 'முழவுறழ் மொய்ம்பினர்' (பெருங்: 2. 6: 127).

(பி-ம்.) 2. மொய்ம்பினே டுடலைய மூழ்க. 3. வா ளரவம் சுற்றிப். 4. படர்விசும் பமைய நின்ருன். (134)

1177. *துன்னலர் புரத்தை முற்றுஞ் சுடுதொழிற் றொல்லை யோரும்*
*பன்னின பொருளு நாணப் பாதக ரிருக்கை பற்ற*
*மன்னனை வாழ்த்தி வாழ்த்தி வயங்கெரி மடுப்பெ னென்னுப்*
*பொன்னகர் மீதே தன்போர் வாலினைப் போக விட்டான்.*

துன்னலர் புரத்தை - பகைவருடைய நகரை, முற்றும்-முழுவதும், சுடுதொழில் - சுட்டெரிப்பதான தொழிலைப் பற்றி, தொல்லையோரும் பன்னின - தொல்லாசிரியர்களும் விளக்கிச் சொல்லிய, பொருளும்-புறப் பொருள்துறைகளும், நாண - வெட்கிக் குறைவுபடுமாறு, பாதகர் இருக்கை பற்ற-கொடியோர்களான (அவ்வரக்கர்கள்) வாழும் மாளிகை கள் எல்லாம் பற்றிக் கொள்ள, வயங்கு எரி மடுப்பென் என்று - விளங் கும் நெருப்பு மூட்டுவேன் என்று, மன்னனை வாழ்த்தி வாழ்த்தி - தன் தலைவனை இராமபிரானைப் பலமுறை வாழ்த்தித் துதித்து, பொன் நகர் மீதே - பொன் மயமான அந்த இலங்கை நகரின்மேலே, தன் போர் வாலினை-தன் போர்த்திறத்திற் சிறந்து விளங்கும் வாலை, போக விட்டான் - செல்லுமாறு அநுமன் செலுத்தினுன்.

பகைவர் புரத்தைச் சுட்டெரித்தல் உழபுலவஞ்சி என்னும் புறத் திணைத் துறையாகும்: பு, வெ. 49; மன்னனை வாழ்த்தி வாழ்த்தி: போர் முனையில் வெற்றி காணுமிடத்துத் தம் மன்னனை வாழ்த்துதல் வீரர் மரபு; சீவக. 778; பெருங். 1. 43: 42; 3. 17: 229. வாழ்த்தி வாழ்த்தி; அடுக்கு மகிழ்ச்சி மிகுதியைக் குறிக்க வந்தது. போர் வால்: 1178; 'வால் வலி காட்டிப் போந்த' (உயுத்த. மகுடபங்க. 37.) என்ற தால்விளங்கும்.

இதன்பின் அடியிற் காணுமாறு ஒரு செய்யுள் அச்சிட்ட பிரதிகளில் காணப்படுகின்றது. ஆயினும், அப்பாடல் யாம் ஆராய்ந்த பழைய ஏட்டுச் சுவடிகளில் காணப் பெருமையால், அதனைப் பாட வரிசையில் சேர்த்துப் பதிப்பிக்கவில்லை.

தன்னிறைக் குறுகண் வெய்யோர் தாமியற் றலுங்கேட் டின்னே
அன்னவர்க் கிறுதியாக வணிநக நழிப்ப லென்னுச்
செந்நிறச் சிகையை வெம்போர் மழுப்பின்னர்ச் சேற லொக்கும்
அன்னிறத் தண்ண றூத னனல்கெழு கொற்ற நீள்வால்.

(பி-ம்.) 1. சுடுதொழிற் றெல்லை யோனும்; தொழிற் றூயோன் றூனும்.
2. பன்னிய பொருளே நாணப்; பொருளே நண்ணி; பொருளே யானுன்: பன்னிடிற் றனக்கு நாணப் பாதகர் புரத்தைப் பார்த்தே.
3. வாழ்த்திப் பின்னும் வயங்கெரி: மன்னுதன் கடவுள் வாழ்த்தி வயங்கெரி யிடுவ னென்னுப்:
4. பொன்னக ரதன்மேற் றன்னோர். (135)

1178. *அப்புறழ் வேலை காறு மலங்குபே ரிலங்கை தன்னை*
*எப்புறத் தளவுந் தீய வொருகணத் தெரித்த கொட்பால்*
*துப்புறழ் மேனி யண்ணன் மேருவில் குழையத் தோளால்*
*முப்புரத் தெய்த கோலே யொத்ததம் மூரிப் போர்வால்.*

உறழ் அப்பு வேலை காறும் - மாறி அலையும் நீர்மிக்க கடல்வரையிலும், அலங்கு பேர் இலங்கை தன்னை - விளங்கிய பெரிய இலங்கை நகரை, எ புறத்து அளவும் தீய - எல்லாப் பக்கங்களின் எல்லை வரையிலும் எரிந்துபோக, ஒரு கணத்து எரித்த கொட்பு ஆல் - ஒரு கண நேரத்தில் எரித்த திறமையினல், அ மூரி போர் வால் - அந்த அநுமனுடைய வலிய போர்த்திறம் அமைந்த வால், துப்பு உறழ் மேனி அண்ணல் -பவழம் போன்று செந்நிறமான திருமேனியையுடைய சிவபிரான், மேரு வில் குழைய - மேரு மலையாகிய தன் வில் வளைய, தோளால்-தன் தோள் வலியால், மு புரத்து எய்த - திரிபுரங்களின் மீது தூண்டிய, கோலே ஒத்தது - (திருமாலாகிய) அம்பே போன்றிருந்தது.

அநுமன் வாலுக்கு முப்புரம் எரித்த அம்பு உவமை. 'முன்னையிட்ட தீ முப்புரத்திலே, பின்னையிட்ட தீ தென்னி லங்கையில்' என்ற பட்டினத்தார் பாடல் இங்குக் கருதத்தக்கது. முதலில் உள்ள, உறழ்தல், மாறுதல் என்னும் பொருளிலும், பின் உள்ளது ஒப்பு என்னும் பொருளிலும், வந்துள்ளன. சிவபிரான் பவழம் போன்ற செம்மேனியன்; தே. 270: 5, திருவாசகம். அதிசயப்பத்து 7.

இதன்பின் அச்சுப்பிரதிகளில் அடியிற் காணும் ஒரு பாடல் உள்ளது அது பழைய சுவடிகளில் இல்லாமையால் பாடவரிசையில் கொள்ள வில்லை.

உகக்கடை யுலகம் யாவு முணங்குற வொருதன் னாட்டம்
சினக்கொழுங் கனலை வீசுஞ் செயன்முனம் பயில்வான் போல
மிகைத்தெழு தீய ராயோர் விரிநகர் வீயப் போர்வால்
தகைத்தலி னேன்மை சாலுந் தனிவீரன் சேணி லுய்த்தான்.

(பி-ம்.) 1. வேலை சூழும்: வேலை தானும்: போரி லங்கை. 2. எப்புலத் தளவுங்: தெரிக்குங் கொட்பால்; தெரித்து மான. 3. கொப்புறழ் மேனி யான: குழைத்த தோளான்; குயின்ற தோளால். 4. ஒத்தது மூரிப். (136)

1179. *வெள்ளியிற் பொன்னி னாக விளங்குபொன் மணியின் விஞ்சை*
*தெள்ளிய கடவுட் டச்சன் கைம்முயன் றரிதிற் செய்த*
*தள்ளரு மனைக டோறு முறைமுறை தாவிச் சென்றான்*
*ஒள்ளெரி யோடுங் குன்றத் தூழிவீ ழுருமோ டொப்பான்.*

வெள்ளியின் பொன்னின் - வெள்ளியாலும் பொன்னாலும், விளங்கு பொன் மணியின் - பிரகாசிக்கின்ற அழகிய இரத்தினங்களாலும், ஆக-அமையும்படி, விஞ்சை தெள்ளிய - சிற்பவித்தையில் தேர்ந்த' கடவுள் தச்சன் - தெய்வச் சிற்பியான விசுவகர்மன், கை முயன்று-தன் கை வன்மையால் முயற்சி செய்து, அரிதில் செய்த - அருமையாக அமைத்த, தள் அரு மனைகள் தோறும் - அழித்தற்கு முடியாத அருமையான மாளிகைகளில் எல்லாம், ஒள் எரி ஓடும் - ஒளி தங்கிய (தன் வால்) நெருப் போடும், குன்றத்து - மலைமீது, ஊழி வீழ் - யுக முடிவுக்காலத்தில் விழுகின்ற, உரும் ஓடு ஒப்பான் - இடிக்கு ஒப்பானவனான அநுமன், முறை முறை-வரிசை வரிசையாக (ஒவ்வொருமாளிகையிலும்), தாவி சென்றான் - தாவித் தாவி (தீயைப்பற்றி வைத்துக்கொண்டு) செல்வானாயினன்.

கை முயலுதல்-செய்வதறிந்து செய்தல்: 'கையறியாமை யுடைத்து' (குறள்: 925.); அலங்கரித்தலும் ஆம்; கை - ஒப்பனை, (பிங்களம்). மாளிகைகள் குன்றங்களுக்கும், அநுமன் அவற்றின் மேல் வீழும், இடிக் கும் உவமைகள்.

(பி-ம்.) 1. பொன்னி னானு விளங்கு; பொன்னி னாகர். 2. கைமுறை திருந்தச் செய்த. 3. தள்ளூறு மனை: தாவ லுற்றான். 4. ஒள்ளரி யோடும்; ஒள்ளரி யுறையுங் குன்றி னாழி. (137)

1180. *நீனிற நிருதர் யாண்டும் நெய்பொழி வேள்வி நீக்கப்*
*பால்வரும் பசிய னன்பான் மாருதி வாலைப் பற்றி*
*ஆலமுண் டவனின் றூட்ட வுலகெலா மவியி னுண் ணும்*
*காலமே யென்ன மன்னோ கனலியுங் கடிதி னுண்டான்.*

நீல் நிற நிருதர்-கருநிறமுள்ள அரக்கர்கள், யாண்டும்-எங்கும், நெய் பொழி வேள்வி நீக்க-(அந்தணர்) நெய்யைச் சொரிந்து செய்யும்யாகங் களைச் செய்யாமல் தடுக்க, பால் வரும் பசியன் - (அதனால்) தன்னிடம் வந்த பசியையுடையவனான, கனலியும் - நெருப்புக்கடவுளும், மாருதி வாலை அன்பால் பற்றி - (அநுமன்) வாலை அன்புடன் பற்றிக்கொண்டு, ஆலம் உண்டவன் நின்று ஊட்ட-விஷத்தையுண்ட சிவபெருமானே ஏவி உண்பிக்க, உலகு எலாம் அவியின் உண்ணும் காலமே என்ன-உலகங்கள் யாவற்றையும் அவியை உண்பதுபோல் உண்ணும் யுகாந்த காலதேவதை யைப் போல, கடிதின் உண்டான்-விரைவில் அந்த இலங்கை நகரைப் பற்றி எரித்து உண்டான். மன், ஓ: அசைகள்.

அரக்கர் நீல நிறம் உடைமை, உருவத்தாலும் மனத்தாலும் ஆம்; கிட் கிந்தா. கார்காலப். 4. அழிக்குங் கடவுளான சிவபிரான் ஏவ, காலாக்கினி ஊழிக்காலத்தில் உலகை அழித்து உண்பது போல, அரக்கர்கள் கொடுமைகளால் வேள்வி செய்வார் அற்றுப்போக, அதனால், அவியுண வைப் பெறாது பசிமேற் கொண்ட அக்கினிதேவன் இப்பொழுது அநுமன் வாலைத் துணையாகப்பற்றி இலங்கை நகரை யுண்பவனானான் என்பதாம்; ஆலமுண்டவன் அநுமனுக்கும், உலகெலாம் உண்ணும் பிரளயத் தீ அந்த அநுமன் வாலின் தீக்கும் இலங்கை உலகுக்கும் உவமைகளாயின. அக் கினி தேவன் பசியுற்றது; ஒப்பு: 'நெய்யி ழந்தது பாலி ழந்தது, நீள் பெரும் பசி தீருமே' (தக்க. 767.) அன்பால் மாருதி வாலைப்பற்றி என்ப தால், தன் நண்பனான வாயுதேவன் மகன் இந்த அநுமன் என்ற அன்பு முறையினால் என்க. மேலும் அநுமனை மாருதி என்ற சொல்லால் குறிப் பிட்டதால் அவ்வன்பு முறை வலியுறுத்தப்பெறுவது காணலாம். மருத் தின்மைந்தன் மாருதி: தத்திதாந்த நாமம். அநுமன் வாலைப் பற்றிச் செல்லுதல்: ஒப்பு: 31.

(பி-ம்.) 1. நீல்நிற நிருத ரீண்ட; நீலமெய் நிருத ரீண்டு; நிருதர் யாண்டு; நீல்நிற வரக்கன் யாண்டு: நெய்பொழி வேள்வி நீக்கி; வேள்வி நீங்கி; வேள்வி நீந்த.
2. மால்வரும் பசியோ னன்ன; பாலதால் பசியை யுன்ளான்.
3. அவிய வுண்ணும்: அழிவி னுண்ணும்: அழிய வுண்ணும்.
4. காலவெவ் வனல்போல் சீறிக் கனலியுங். (138)

*பிணிவிடு படலம் முற்றும்*

# 13. இலங்கை யெரியூட்டு படலம்.

## மனைகளில் எரி பாய விளைந்தவை 1181-1198

1181. *கொடியைப் பற்றி விதானங் கொளுத்தித்தாள்*
*நெடிய தூணைத் தடவி நெடுஞ்சுவர்*
*முடியச் சுற்றி முழுது முருக்கிற்றால்*
*கடிய மாமனை தோறுங் கடுங்கனல்.*

இலங்கை யெரியூட்டு படலம்-இலங்கை நகரை அநுமன் நெருப்பை யூட்டி எரித்த செய்தியைக் கூறும் படலம் என விரியும். சில சுவடிகளில் இப்படலம், ஊர்சுடு படலம் என்றும். எரியூட்டு படலம் என்றும் காணப்படுகிறது.

கடும் கனல் - அநுமன் வாலிலிட்ட கொடிய நெருப்பு, கடிய மா மனைதோறும்-(இலங்கை வீதிகளிலுள்ள) காவலோடு கூடிய பெரிய வீடுகளிலெல்லாம், கொடியை பற்றி - (கட்டப்பட்டிருந்த) கொடிகளைப் பற்றிக் கொண்டும், விதானம் கொளுத்தி - மேற்கட்டுகளை எரித்தும், தாள் நெடிய தூணை தடவி - அடிகளோடு நீண்டு விளங்கிய தூண்களைத் தழுவியும், நெடும் சுவர் முடிய சுற்றி-நீண்ட சுவர்கள் முழுவதும் சுற்றிக் கொண்டும், முழுதும் முருக்கிற்று - அம் மாளிகைகள் முழுவதும் எரித்தழித்தது. ஆல்:அசை.

விதானம்-சித்திர ஆடையால் அமைக்கப் பெறும் மேற்கட்டு; இது இப்பொழுது அசுமானகிரி என வழங்கும்; 'ஓர் விதான நிழல் வந்தாள்' (பால. கோலங்காண்:26). கடிய மா மனை - சிறப்பமைந்த பெரிய மாளிகை; கடி - சிறப்பு.

ஒரு சுவடியில் பின்வரும் ஓர் அதிகப்பாடல் இப்படலத்தின் முதற் செய்யுளாக உள்ளது.

தெய்வ நாயகி கற்பெனுஞ் செந்தழல்
எய்து மாருதி வாலிடைப் பேணியே
பொய்கொள் வஞ்சகர் புல்லர் புரமெலாம்
வெய்தி னுண்ட தகைமை விளம்புவாம்.

(*பி-ம்.*) 1. கொளுத்திமேல்; கொளுத்தியே; கொளுவித்தான்; கொளுத்திப் பின். 2. தூணைத் தழுவி; தடவி நெடுஞ்சுடர்.
3. கடிகொள் மாமனை; கடிகொள் மாநகர்; மாமனைத் தோன்றுங் கடுங்கனல். (1)

1182. *வாச லிட்ட வெரிமணி மாளிகை*
*மூச முட்டி முழுது முருக்கலால்*
*ஊச லிட்டன வோடி யுலைந்துபோய்ப்*
*பூச லிட்ட விரியற் புரமெலாம்.*

வாசல் இட்ட எரி - மாளிகையின் வாசலிலே அநுமன் இட்ட நெருப்பு, மணி மாளிகை மூச முட்டி - இரத்தினங்களால் அமைக்கப் பட்ட மாளிகையை மொய்த்தாற் போற் சூழ்ந்து தாக்கி, முழுதும் முருக் கலால் - முழுமையும் எரித் தழித்தமையால், இரியல் புரம் எலாம் - நிலை தளர்ந்த அந்நகர வாசிகள் யாவரும், ஊசல் இட்டு அன ஓடி - ஊஞ்சல் ஆடுவதுபோல (போகும் வழியறியாது முன்னும் பின்னுமாக) ஓடி, உலைந்து போய் - வருந்தி, பூசல் இட்ட - பேரொலியை உண்டாக் கினர்,

இங்கு, புரம்என்றது இடவாகு பெயராய் அவ்விலங்கையில் வாழும் அரக்கர்களைக் குறித்தது. ஊசலிடுதல் - முன்னும் பின்னும் அலைதல்.

*(பி-ம்.)* 1. மூசி முட்டி: முழுது முருக்கிற்றால்.
2. ஊச லொத்தவ ரோடி யுலைந்துவாய்ப்: உலைந்துளைப்;
4. பூச லிட்டுத் திரியும் புரமெலாம்; பூச லிட்ட திரியப் புரமெலாம்; அரிதிற் புரமெலாம்; தெரியப் புரமெலாம்; விரியப் புரமெலாம்; இரியப் புரமெலாம். (2)

1183. *மணியி னுய வயங்கொளி மாளிகை*
*பிணியிற் செஞ்சுடர்க் கற்றை பெருக்கலால்*
*திணிகொ டீயுற்ற துற்றில தேர்கிலார்*
*அணிவ ளைக்கைநல் லாரல மந்துளார்.*

மணியின் ஆய - இரத்தினங்களால் அமைக்கப்பட்ட, ஒளி வயங்கு மாளிகை - ஒளியால் நிறைந்து விளங்கிய மாளிகைகள், பிணியின் செம் சுடர் கற்றை பெருக்கலால்-(நெருப்புப்) பற்றியதால் உண்டான சிவந்த சுடர்த் தொகுதியை (தம் பிரதிபிம்பங்களால்) அதிகரிக்கச் செய்ததால், திணி கொள் தீ உற்ற - அடர்ந்து நெருப்புற்ற இடங்களையும், துற்றில - நெருப்புப் பற்றாத இடங்களையும், தேர்கிலார் - தெரிந்து கொள்ள முடி யாதவர்களாய், அணி வளை கை நல்லார் - அழகிய வளையல்களை அணிந்த கைகளையுடைய மகளிர்கள், அலமந்து உளார் - இன்ன செய்வதென்று அறியாமல் குழப்பமடைந்து வருந்தினர்,

துற்றுதல் - கவ்வுதல்; 'இகலன்வாய்த் துற்றிய' (களவழி. 28). ஓரிடத்தில் பற்றிய தீச்சுடரின் பிரதிபிம்பங்கள் அம்மாளிகையில் இரத்தினங்கள் பதித்துள்ள பல இடங்களிலும் தோன்றினமையால் உண்மையில் தீ பிடித்த இடம் இதுவென்றும், தீ பிடியாத இடம் இதுவென்றும் அறிந்து கொள்ளமுடியாது, அம்மாளிகை எங்கும் தீ பற்றியதாகவே கருதி அணிவளைக்கை நல்லார் அலமந்தனர் என்க. அணிவளை; வினைத்தொகையும் ஆம்.

(பி-ம்.) 1. மணியிற் செய்த வயங்கொளி; மணியி னுற்செய் தழகுறு மாளிகைப்.
2. பணியிற் செஞ்சுடர்க்; பிணியி லஞ்சுடர்க்; பிணியு நெஞ்சுடைக்: கற்றை பெருத்தலால்; பரத்தலால்.
3. துணிக டியுற் றெரிதலிற் றேர்கிலார்; துணிகொள் தீயுற வுற்றது.
4. அலம் வந்துளார். (3)

1184. *வானகத்தை நெடும்புகை மாய்த்தலால்*
*போன திக்கறி யாது புலம்பினர்*
*தேன கத்த மலர்பல சிந்திய*
*கான கத்து மயிலன்ன காட்சியார்.*

தேன் அகத்த - தேனையுள்ளே கொண்டுள்ள, பல மலர் சிந்திய - பலவித மலர்கள் சிதறி வீழப் பெற்று விளங்குகின்ற, கானகத்து-காட்டிலுள்ள, மயில் அன்ன காட்சியார் - மயில் போன்ற (அழகிய) தோற்றத்தையுடைய மகளிர், நெடும் புகை - நெடுந்தூரம் பரந்த புகை, வானகத்தை மாய்த்தல் ஆல் - ஆகாயத்தை மறைத்தமையால், போன திக்கு அறியாது புலம்பினர் - தாம் சென்றது இன்ன இடம் என்று அறிந்து கொள்ள முடியாது வாய்விட்டு அழுவாராயினர்.

மாய்த்தல்-மறைத்தல்; 'களிறு மாய்க்குங் கதிர்க்கழனி' (மதுரைக். 247. நச். உரை.) புகை சூழ்ந்த மாளிகையுள்ளிருந்த மகளிருக்கு, இருள் சூழ்ந்த கானகத்தில் உள்ள மயில்கள் உவமை.

(பி-ம்.) 1. நெடுங்கனல்; மாய்த்ததால்: மாய்த்தவால். 2 தேன கத்து;
3. மலர்ப்பலி; மலர்சிலர் சிந்திய; மலர்சில; மலர்சிந்தி யரக்கியர். மலர்பொலி சீர்பெறும். (4)

1185. *கூய்க்கொ ழும்புனல் குஞ்சியிற் கூந்தலின்*
*மீச்சொ ரிந்தனர் மாதரும் வீரரும்*
*ஏய்த்த தன்மையி னுலெரி யின்மையும்*
*தீக்கொ ளுந்தின வுந்தெரி யாமையால்.*

வீரரும் மாதரும் - அரக்கவீரர்களும் மகளிரும், ஏய்த்த தன்மையினால்-(தீ அரக்கர்களுடைய தலை உரோமங்களுக்கு) ஒப்புடைமையால், எரி இன்மையும்-நெருப்புப் பற்றுமையும், தீ கொளுந்தினவும் - தீ பற்றி எரிந்தவையும், தெரியாமையால் - தெரிந்து கொள்ள முடியாமையால், கூய் - கூச்சலிட்டுக் கொண்டு, கொழும் புனல் - நிரம்ப நீரை, குஞ்சியில்-ஆடவர் தலைமயிரில் (மகளிரும்), கூந்தலில் - பெண்களின் தலைமயிரில் (ஆடவரும்), மீ சொரிந்தனர் - மேலே சொரிவாராயினர்.

அரக்கரின் தலைமயிர் நெருப்புப் போலச் சிவந்துள்ளமை; 1213. அவர்கள் நெருப்புப் பற்றினமையும் பற்றுமையும் உணரமாட்டாமல், ஒருவர் தலைமீது மற்றொருவர் நீரை ஊற்றினர் என்க. ஒப்பு; 'நெஞ்சிலீரமு நீதியுங் குடிபுகா நிருதர் சென்னியில் வன்னி, குஞ்சி நீடுற வளர்வபோ லசைந்து செங்கொழுந்து விட்டன மேன்மேல்' (வி. பா. காண்டவ. 23.) குஞ்சி ஆண்களின் தலைமயிர். கூந்தல் - பெண்களின் தலைமயிர். ஏய்த்தல் - ஒத்தல்.

(பி-ம்.) 1. கொ ழுங்கனல்; கொ ழும்புகை.
2. மீச்செ றிந்தன; மீக்கொ ளுந்தினர்: விச்சொ ரிந்தன மாருதம் வீரரும்: வீரரும் மாருதம்.
3. ஏத்த தன்மை: ஏத்த செம்மயி ரால்: எரி யில்லவும்.
4. கொளுத்தின வும்: தெரி கின்றிலரர். (5)

1086. *இல்லிற் றங்கும் வயங்கெரி யாவையும்*
*சொல்லிற் றீர்ந்தன போலருந் தொல்லுருப்*
*புல்லிக் கொண்டன மாயைப் புணர்ப்பறக்*
*கல்லித் தம்மியல் பெய்துங் கருத்தர்போல்.*

மாயை புணர்ப்பு அற கல்லி- மாயையின் பற்று நீங்க (அதனைத் தம் அறிவால்) களைந்து, தம் இயல்பு எய்தும் - தமது இயல்பான (ஆத்ம ஞான) நிலையை அடையும், கருத்தர் போல் - நோக்கமுடைய மேலோர் போல, இல்லில் தங்கும் வயங்கு எரி யாவையும் - அரக்கர் வீடுகளில் தங்கி விளங்கி வந்த நெருப்புக்கள் யாவும், சொல்லில் தீர்ந்தன போல் - (இராவணனுடைய) கட்டளைச் சொல்லினின்று விடுபட்டவை போல, அரும் - அருமையான, தொல் உரு புல்லிக் கொண்டன - பழைய உருவைக் கூடின.

இராவணனுக்கு அஞ்சி இலங்கை நகரில் அதுகாறும் அரக்கர்களுக்குப் பயன்படக்கூடிய அளவில் பணி புரிந்துவந்த நெருப்புக்கள், இப்பொழுது இராவணன் ஆணையைக் கடந்து அநுமன் வைத்த தீயுடன் ஒன்றுபட்டுத் தம் பழைய உருவை மேற்கொண்டன என்பதாம். இல்லங்

களில் தங்கின எரிகள் பலவாதலின் அவை பன்மையிற் கூறப்பெற்றன. அன்றி, அரக்கர்களுக்கு அடங்கிக்கிடந்த வைதிக அக்கினிகளாகிய முத்தீக்களும் ஆம். மாயைப் புணர்ப்புற்ற ஆன்மா, இராவணன் சொல்லிற் கிடந்த தீக்கும், பரமான்மா, அநுமன் வைத்த நெருப்புக்கும், இல்லிற்றீ கட்டளை நீங்கியது, சீவான்மா மாயையைக் கல்லி நீக்கிக் கொண்டமைக்கும், இருநெருப்புக்களும் புல்லிக் கொண்டமை ஜீவாத்மா பரமாத்மாவுடன் ஐக்கியமாவதற்கும் உவமையாயின காண்க. 'அகத்து நெருப்பும் அநுமார் இட்டதீயு மொன்றுனது மகாத்துமாக்க ளெப்படி மகாத்துமாக்களைக் கூடுவர், அப்படிப் பொருள்' பழைய உரை. இச்செய்யுளைப் பற்றி ஸ்ரீ ஐயரவர்கள் ஐயுறுகின்றனர் என்பது அவர்களின் குறிப்பினால் தெரியவருகின்றது.

(பி-ம்.) 1. தங்கு வயங்கெரி,
2. சொல்லிற் றங்குமன் போடருந் தொல்லுருப்: போல்வன தொல்லுருப். போர்வன/தொல்லுருப்.
3. புல்லுக் கொண்டன; புல்லிக் கொண்டது.
4. கல்லித் தம்மறி வெய்துங் கருத்தர்போல்: எய்து கருத்தர்போல். (6)

1187. ஆய தங்கொர் குறளுரு வாயடித்
தாய எந்துல கங்க டரக்கொள்வான்
மீயெ ழுந்த கரியவன் மேனியில்
போயெ ழுந்து பரந்தது வெம்புகை.

ஓர் குறள் உருவாய் - முதலில் ஒரு வாமன உருவாய்ச் சென்று, தர-(மாவலி தனக்குக்) கொடுக்க, உலகங்கள் அடி தாய் அளந்து கொள்வான் - மூவுலகங்களையும் தன் அடிகளால் தாவி அளந்து கொள்ளும் பொருட்டு, மீ எழுந்த - (திரிவிக்கிரமனாய்ப்) பேருருவுடன் வானோங்கி எழுந்த, கரியவன் மேனியில்-கருநிறத்தையுடைய திருமாலின் திருமேனி போல, வெம் புகை - வெப்பமான புகை, அங்கு எழுந்து போய் பரந்தது ஆயது-அவ்விலங்கையில் மேலெழுந்து போய் எங்கும் பரந்ததாக ஆயிற்று.

மேலெழுந்த கரும் புகைக்கு உலகம் அளக்க எழுந்த திரிவிக்கிரமனை திருமால் உருவம் உவமை. புகைப் பரப்பின் மிகுதி இங்குக் கூறப்பட்டது.

(பி-ம்.) 1. ஒய்வி லங்கோர் குறளுருக் கொண்டடி.
2. ஆய ளந்துல கங்கள்.
3. மீயெ ழுந்து: மேனிபோல். (7)

1188. *நீல நின்ற நிறத்தன கீழ்நிலை*
*மாலின் வெஞ்சின யானையை மானுவ*
*மேல்வி ழுந்தெரி முற்றும் விழுங்கலால்*
*தோலு ரிந்து கழன்றன தோலெலாம்.*

நீலம் நின்ற நிறத்தன - கருநிறம் பொருந்தினவாய் இருந்த. தோல் எலாம் - அவ்விலங்கையில் இருந்த யானைகள் யாவும், மேல் விழுந்து எரி முற்றும் விழுங்கலால் - நெருப்பு தம் மேல் விழுந்து உடல் முழுவதும் விழுங்கியது போலச் சூழ்ந்து பற்றிக்கொண்டதால், தோல் உரிந்து கழன்றன - தம் தோல்கள் உரிந்து நீங்கப் பெற்றவை, கீழ் நிலை - கிழக்குத் திசையில் உள்ள. மாலின் - இந்திரனுடைய. வெம் சின யானையை - கொடிய கோபத்தோடு கூடிய(ஐராவதம் என்னும்) வெள்ளை யானையை, மானுவ - ஒத்தன ஆயின,

இலங்கையில் இருந்த இயல்பாய்க் கருநிறமுடைய யானைகள் தம் மேல் நெருப்புச் சூழ்ந்து பற்றிக்கொண்டதால், அவற்றின் தோல் உரிந்து போக, கீழ்த்திசையில் உள்ள இந்திரனது ஐராவதம் என்னும், யானையைப் போன்று வெண்மையாய்க் காணப்பட்டன என்பதாம். மால்-இந்திரன்; (பிங்களம்). மாலின் என்ற சொல்லிற்கு மயக்கத்தை யுடைய என்றும் பொருள் கூறுவர். இச்செய்யுளும் ஐயுறுதற்கு இடமாயுள்ளது என்பது ஸ்ரீ ஐயரவர்களின் குறிப்பு.

(பி-ம்.) 1. நீல மெய்யி லரக்கரைப் போல்நிலை; நிற நிலைக் கீழ் நிலை; நிற நிலக் கீழ்நிலை; நிற நில்ம் கீழ்நிலை.
2. மாலும் வெஞ்சின மும்மத மாய்ந்துற: யானையின் மானுவ.
3. மேலெ ழுந்தெரி. (8)

1189. *மீதி மங்கலந் தாலன்ன வெம்புகை*
*சோதி மங்கலத் தீயொடுஞ் சுற்றலால்*
*வீதி மங்குலின் வீழ்புனல் மீப்படர்*
*ஓதி மங்களின் மாத ரொதுங்கினர்.*

மீது இமம் கலந்தால் அன்ன வெம்புகை - மேலே பனி கலந்தது போன்று விளங்கிய வெப்பமான புகை, சோதி மங்கு அல் அ தீயொடு - ஒளியின் மங்குதல் இல்லாத (மிக்க ஒளி பொருந்திய) அந்த நெருப்போடு, சுற்றலால் - சுற்றிக் கொண்டிருந்ததால், வீதி - வீதியிலே, மாதர் - பெண்கள், மங்குலின் வீழ்புனல் - மேகங்களினின்று வீழ்கின்ற மழைநீரை, (விட்டு) மீ படர் - மேலே செல்லுகின்ற, ஓதிமங்களின் - அன்னப்பறவைகளைப் போல, ஒதுங்கினர் - நீங்கிச் சென்றனர்.

அன்னங்கள் மழைக் காலத்தில் கலங்கிய நீரை விட்டுச் சுத்தமான நீரைத்தேடிப் போகும் இயல்பின என்பர்,

(பி-ம்.) 1. மீதி மங்கலத் தான நெடும்புகை.
2. தீயொடு சுற்றலால்; சோதி மங்கலந் தன்னொடு; மங்கலந் தீயொடு; சோதி வெஞ்சுடர்த் தீயொடுஞ்.
3. மேதி மங்குலின்; வீதி மங்கல விழ்புளல் மீப்புனல்: மீப்பட; விழ்புனல் வீழ்மட.
4, மாத ரொடுங்கினர். (9)

1190. *பொடித்தெ ழுந்த பெரும்பொறி போவன*
*இடிக்கு லங்களின் வீழ்வன வெங்கணும்*
*வெடித்த வேலை வெதும்பிட மீன்குலம்*
*துடித்து வெந்து புலர்ந்துயிர் சோர்ந்தவால்.*

பொடித்து எழுந்த பெரும் பொறி - தூள்களாய் மேற்கிளம்பிய பெரிய நெருப்புப் பொறிகள், போவன - மேலே போவனவும், வீழ்வன - கீழே விழுவனவுமாக, எங்கணும் இடி குலங்களின் வெடித்த - எங்கும் இடிக் கூட்டங்களைப் போல வெடித்தன; (அதனால்) வேலை வெதும்பிட - கடல் வெப்பம் மேலிட, மீன் குலம்-அக் கடலில் உள்ள மீனினங்கள், துடித்து வெந்து புலர்ந்து உயிர் சோர்ந்த - (அவ்வெப்பத்தால்) துடித்து வெந்து காய்ந்து உயிர் ஒடுங்கி இறந்தன. ஆம்: அசை.

நெருப்புப் பொறிகள் மேற்சென்று வெடித்துக் கீழே விழ, அதனால் கடல் வெப்பமுற, அங்குள்ள மீனினங்கள் துடிப்புண்டும் வெந்தும், உலர்ந்தும், உயிர் ஒடுங்கியும், மாய்ந்தன என்பதாம்.

(பி-ம்.) 1. பொடித்தெழுந்து:பெரும்புளல் போல்வன; பேர்வன; போலன: பெரும்பொறிக் கற்றைகள்.
2. வீழ்த்தலு மெங்கணும்; வீழ்தலி னெங்கணும்; வீழலி லெங் கணும்; வீழ்ந்திட வெங்கணும்.
3. வெடித்து வேலை வெதும்பின.
4. சோர்ந்ததால்: சோர்தலால். (10)

1191. *பருகு தீமடுத் துள்ளுறப் பற்றலால்*
*அருகு நீடிய வாடகத் தாரைகள்*
*உருகி வேலையி னூடுபுக் குற்றன*
*திருகு பொன்னெடுந் தண்டிற் றிரண்டவால்.*

பருகு தீ மடுத்து - (தன்னிடம் கிடைப்பன யாவற்றையும்) பருகும் இயல்பையுடைய நெருப்பு சூழ்ந்து நிறைந்து, உள் உற பற்றல் ஆல் -

- உள்ளே புகுந்து பற்றி எரிதலால், அருகு நீடிய ஆடக தாரைகள் - அருகே நீண்ட பொன்னின் ஒழுக்குகள், உருகி-உருகிப்போய், வேலையின் ஊடு புக்கு உற்றன - கடலினுள் புகுந்தவைகளாய், திருகு நெடும் பொன் தண்டில் - முறுக்குக்கள் அமைந்த நீண்ட பொன் தண்டுகள் போல, திரண்ட - திரண்டு விளங்கின. ஆல்: அசை.

நெருப்பு மடுத்தமையால் மாளிகைச் சுவர் முதலியவற்றின் பொன், உருகித் தாரையாய்க் கடலினுட் புகுந்தவை, குளிர்ந்து திருகு தண்டுகள் போலத் திரண்டு விளங்கின.

(பி-ம்.) 2. நீட்டிய வாடகத்: ஆடகக் கூடங்கள்.
3. உருகு வேலையின்; உற்றவை.
4. திருகில்: தூணிற் றிரண்டவால். (11)

1192. *உரையின் முந்துல குண்ணு மெரியதால்*
*வரைநி வந்தன பன்மணி மாளிகை*
*நிரையி னீணெடுஞ் சோலையி னிற்குமோ*
*தரையும் வெந்தது பொன்னெனுந் தன்மையால்.*

உரையின் முந்து - பெரியோர் (சாப) மொழியைப் போல விரைவாக, உலகு உண்ணும் எரி அது - உலகை அழிக்கும் நெருப்பானது, வரை - மலைபோல, நிவந்தன - உயர்ந்தனவாயுள்ள, பன் மணி மாளிகை நிரையின் - பல மணிகள் பதித்த மாளிகை வரிசைகளோடும், நீள் நெடும் சோலையின் - நீண்டு உயர்ந்த சோலைகளோடும், நிற்குமோ - (எரித்து அதனுடன்) நிற்குமோ? (நிற்காது); தரையும் பொன் எனும் தன்மையால் வெந்தது - (அந் நெருப்பால்) இலங்கை நிலமும் பொன்னாலமைந்திருந்ததால் வெந்தழிந்தது. ஆல்; அசை.

பெரியோர் சாபச் சொல், சொல்லப்பட்டவரை அன்றி, அவர் குடியையும் அழிக்கும்; குறள். 898. முந்து - விரைவுப் பொருளில் வந்தது. உரையின் முந்து. புகழினும் சிறந்து விளங்கிய என்றும், சொன்னவுடனே எரிக்கும் தன்மை வாய்ந்த என்றும், பெரியோர் சாப மொழியைக் காட்டிலும் விரைவாக என்றும் பொருள் கொள்வர்; 'சொல்லொக்குங் கடியவேகம்'(பால. தாடகைவதைப். 73). நிரையின் சோலையின் என்றவற்றிலுள்ள உருபை, ஒப்புப் பொருளிலும் கொண்டு பொருள் கூறலாம். மற்ற இடங்களில் நெருப்புப்பற்றினால் தரையாவது எரிந்து போகாது தங்கும்; இலங்கையில் அத்தரையும் பொன் ஆதலால் அதுவும் உருகி அழிந்தது என்பதாம்.

(பி-ம்.) 1. உண்ணு மெரியெனின். 2. வரைநி வந்தன்ன.
3. நிறையு நீணெடு; சோலைகள்; சோலையும். (12)

1193. *கல்லி னும்வலி தாம்புகைக் கற்றையால்*
*எல்லி பெற்ற திமையவர் நாட்டிடம்*
*வல்லி கோலி நிவந்தன மாமணிச்*
*சில்லி யோடுந் திரண்டன தேரெலாம்.*

கல்லினும் வலிது ஆம் புகை கற்றையால் - கல்லைவிட வலிமையான புகையின் தொகுதியால், இமையவர் நாட்டு இடம் - தேவலோகத்தின் இடமெல்லாம், எல்லி பெற்றது - இருளை அடைந்தது; வல்லி கோலி - கொடிகளால் அலங்கரிக்கப்பெற்று, நிவந்தன - மேலோங்கிய, தேர் எலாம் - இரதங்கள் எல்லாம், மாமணி சில்லியோடும் -சிறந்த இரத்தினங்கள் இழைக்கப்பெற்ற தம் உருளைகளோடும், திரண்டன - அத்தீயால் ஒன்றாய்ச் சேர்ந்து உருகி ஒரே தொகுதியாய் அமைந்தன.

எல்லி இரவும் ஆம். வல்லி - கொடி; 'வல்லிபோல இரத்தினங் கிடந்தது' (பழைய உரை). தேர்கள் பொன்னால் அமைந்தன ஆகையால் அவை எரியில் உருகித் திரண்டன என்க.

(பி-ம்.) 2. இமையவர் நாடதும்; நாட்டியல்; நாடினும்; நாட்டிலும்.
3. வல்லி போல; வல்லி பூட்டி; நிமிர்ந்தன: பொன்மணிச். (13)

1194. *பேய மன்றினி லன்று பிறங்கெரி*
*மாய ருண்ட நறவை மடுத்ததால்*
*தூய ரென்றிலர் வைகிடந் துன்னினால்*
*தீய ரன்றியுந் தீமையுஞ் செய்வரால்.*

பேய மன்றினில் - மதுச்சாலையில், அன்று பிறங்கு எரி - அன்று விளங்கிய நெருப்பு, மாயர் உண்ட நறவை மடுத்ததால் - மாயையில் வல்ல அவ்வரக்கர்கள் உண்ட கள்ளைத் (தானும்) புகுந்து குடித்ததால், தூயர் என்று இலர் - சுத்தமானவர் என்று சொல்லத் தகாதவர், வைகு இடம் துன்னினால்-இருக்கும் இடத்தை (தூயவர்) சென்றடைந்தால், தீயர் அன்றியும் தீமையும் செய்வர் - தாம் கெட்டவர்களாய் ஆவதுடன் தீங்கான செயல்களையும் புரிவர் (என்பது விளங்கும்). ஆல்: அசை.

நெருப்பு அரக்கர்களுடைய பான சாலையில் புகுந்து அதனை நாசமாக்கி எரித்துண்ட செய்தி, தீயவரிடத்தைச் சேர்ந்த தூயவரும் தீயராவதோடு தீமையும் புரிவர் என்பதை விளக்குகின்றது; இது வேற்றுப் பொருள் வைப்பணி. பேயம் - பானம் செய்தற்கு உரிய பொருள்; இது வடசொல்; இங்குக் கள்ளைக் குறித்தது. மன்று - பொதுவிடம்; இங்குப் பொதுவாக எல்லோரும் சென்று கட்குடிக்கும் இடத்தைக் குறித்து நின்றது. உண்ட நறவு-உண்ணும் நறவு என்பது இங்கு முக்

காலத்துக்கும் பொதுவாக உள்ளதை இறந்த காலத்தால் குறிப்பிட்டது காலவழுவமைதியாகும்; இனி, அரக்கர்கள் உண்டு மீதியாக வைத்திருந்த நறவு என்னலும் ஒன்றும். தீமையும்; எண்ணும்மை; எச்ச உம்மையும் ஆம்.

(பி-ம்) 1. பேய மன்றினி னின்று; மன்றெனி லன்று: மன்றெனி லின்று; பேயும் செந்தழ லன்று பிலப்பெரு.
2. மாயருண்ட நறவு மடுத்தலால்; ஆய ருண்ட நறவு: நறவு மடுத்தலால்; வாய் ருண்ணற வும்மடுத் துண்டலால்.
3. தூயர் தீயவர் வைகிடம்: துன்னினுன்.
4. தீய ரேயன்றித் தூயவ ராவரோ: தீயதுஞ் செய்வரால். (14)

1195. *தழுவி லங்கை தழங்கெரி தாய்ச்செல*
*வழுவில் வேலை யுலையின் மறுகின*
*எழுகொ ழுஞ்சுடர்க் கற்றைசென் றெய்தலால்*
*குழுவு தண்புனன் மேகங் கொதித்தவே.*

இலங்கை தழுவு தழங்கு எரி - இலங்கை நகரில் தழுவி ஒலியோடு விளங்கும் நெருப்பு, தாய் செல-தாவிச் சென்றதால், வழுவு இல் வேலை - இலங்கை நகரைவிட்டு அகலாது சுற்றியிருக்கும் கடல்கள், உலையின் மறுகின - உலைநீரைப் போலச் சூடாகிக் கொதித்தன: எழு கொழும் சுடர் கற்றை - மேலே எழும்பும் அடர்ந்த சுடரின் தொகுதி, சென்று எய்தல் ஆல்-(மேலே) போய் அடைந்ததால், குழுவு தண் புனல் மேகம்-(வானத்தில்) ஒன்று கூடியிருந்த குளிர்ந்த நீரையுடைய மேகங்கள், கொதித்த - சூடுண்டு கொதித்தன. ஏ: அசை.

(பி-ம்.) 1. தயங்கெரி; எழுந்தெரி; தாய்ச்செலீஇ; தார்ச்செல; எரி யாய்ச் செல; தாவிட.
3. எழுமெழுஞ்சுடர்; எழுவெழுஞ்சுடர்க்,
4. தழுவு தண்புனல்; கொதித்ததே. (15)

1196. *ஊனி லோடு மெரியொ டுயங்குவார்*
*கானி லோடு நெடும்புனல் காணெனு*
*வானி லோடு மகளிர் மயங்கினுர்*
*வேனி லோடருந் தேரிடை வீழ்ந்தனர்.*

ஊனில் ஓடும் - தம் உடலின் தசையினுள் புகுந்து ஓடும், எரி ஒடு உயங்குவார் - நெருப்போடு வருந்துபவர்களாய், வானில் ஒடு மகளிர் - ஆகாய மார்க்கமாய் எழுந்தோடிய அரக்க மகளிர், மயங்கினர் - மயக்க முற்றவர்களாய், கானில் ஓடும் நெடும்புனல் காண் எனு - காட்டில் ஓடு

கின்ற நீண்ட ஆற்று வெள்ளம் இதோ உள்ளது என்று தம்முடன் வந்த வர்க்குக் கூறி, வேனில் ஓடு அரும்தேர் இடை வீழ்ந்தனர் - வேனிற் காலத்தில் நீரோடுவது போலத் தோன்றும் அரிய பேய்த்தேரின் இடையே விழுந்து (அங்கும் நீர் கிடைக்காமல் வருந்தினர்).

வேனிற் காலத்தில், பரந்த வெளியிலும் வானிடத்தும் சூரிய வெப் பத்தால் ஆவி நுட்பமடைந்து மேலெழுந்து தோன்றும் காட்சி ஒரு நீர்ப் பிரவாகம் பெருகி விளங்குவது போலத் தோன்றும். இத்தகைய தோற்றம் கானல் நீர் என்றும், பேய்த்தேர் என்றும் சொல்லப்படும். கானல் நீர்; பால. தாடகை; 13, 14.

(பி-ம்.) 1. ஊனி லேரடு மெரியெரி யோங்குமால்; ஊனின் மேனியி னுள் ளெரி சுட்டிட. எரியொ டுங்குவார்.
2. கான லோடு : வேனில் வாயுறுங் கானலின் மெய்ப்புகை.
3. கான மூடிடக் கண்புனல் சிந்தியோ: மகளிர் மயங்குவார்.
4. வேனி லோடிருந் தேரிடை; வானி லோடு மகளிர் மயங்கினர் (16)

1197. *தேன வாம்பொழி றீப்படச் சிந்திய*
*சோனை மாமலர்த் தும்பி தொடர்ந்தயல்*
*போன தீச்சுடர் புண்டரி கத்தடம்*
*கான மாமென வீழ்ந்து கரிந்தவே.*

தேன் அவாம் பொழில் - (வண்டினங்கள்) தேனை விரும்பி அடையும் அந்நகரத்துச் சோலைகளில், தீ பட - நெருப்புப் பற்றிக்கொள்ள, சிந்திய - (அதனால்) சிதறிய, சோனைமா மலர் தும்பி - நீருண்ட மேகம் போலப் பூக்களில் மொய்த்துக் கொண்டிருந்த வண்டுகள், தொடர்ந்து அயல் போன - அந்தச் சோலைகளைத் தொடர்ந்து அப்பாலும் பரவிச் சென்ற, தீ சுடர்-நெருப்புச் சுடர்களை, புண்டரிக தடம் கானம் ஆம் என-பெரிய தாமரைக் காடு என்று எண்ணி, வீழ்ந்து - அவற்றில் போய் விழுந்து, கரிந்த - கரிந்து போயின, ஏ: அசை.

வண்டுகள் கருநிற மாதலின் நீருண்ட மேகத்திற்கு உவமை; தேன் அவாம் பொழில் - வண்டுகள் விரும்பி அடையும் பொழில், என்னலும் ஆம்; தேன்-வண்டு; திவாகரம். அவ்வண்டுகளின் மிகுதி சோனை மேகம் எனப்பட்டது. சோலையிலுள்ள பூக்களில் தேனைப் பருகி நின்ற வண்டு கள் அங்குத் தீப்பற்றினமையால் எழுந்து மேற் சென்றவை, மேலே வேறு நெருப்பு, தாமரைக்காடு பூக்களால் நிறைந்து விளங்குவது போலிருக்கக் கண்டு அதில் போய் விழுந்து கரிந்து போயின என்பதாம். நெருப்புச் சுடரின் மிகுதியான தோற்றம் இங்குத் தாமரைக் காடு போல்

விளங்கியது; தாமரைக்கு நெருப்பு; அயோத்யா, வனம்புகு. 39; உயுத்த. மீட்சிப்; 85. ஒப்பு; 'அள்ளற் பழனத் தரக்காம்பல் வாயவிழ, வெள்ளந் தீப் பட்ட தெனவெரீஇப்-புள்ளினந்தங், கைச்சிறகாற் பார்ப்பணைக்குங் கவ்வை யுடைத்தரோ, நச்சிலைவேற் கோக்கிள்ளி நாடு' (முத்தொள்.) இச் செய்யுள், மயக்கவணியின் பாற்படும். ஒரு சுவடியில் இச்செய் யுள் இல்லை.

(பி-ம்.) 1. தேனெ லாம். 2. தும்பிதொடர்ந்தலை. 3. சுடப் புண்ட ரிகத். (17)

1198. நற்க டம்மிது நம்முயிர் நாயகர்
மற்க டந்தெற மாண்டனர் வாழ்விலம்
இற்க டந்தினி யேகலம் யாமென
விற்க டந்த நுதலியர் வீடினர்

வில் கடந்த நுதலியர்-வில்லின் வடிவத்தை வென்ற அழகிய நெற்றி யையுடைய சில (உத்தம) அரக்கர்மகளிர், 'நம் உயிர் நாயகர் - நம் உயிர்த்துணைவரான கணவர், மற்கடம் தெற - ஒரு குரங்கு கொல்ல, மாண்டனர் - இறந்து போயினர்; யாம் வாழ்வு இலம்-இனியாம் மங்கல வாழ்க்கையில்லாதவர் ஆனோம்;இல்கடந்து இனி ஏகலம்-(இனி கைம்மை நிலையில்) வீட்டைத் தாண்டி வெளியே போகக் கூடாதவர் ஆயினோம்;' என - என்று நினைத்து, 'இது நல் கடம்-இதுவே நல்ல கடப்பாடு உடை யதாகும்' என்று துணிந்து, வீடினர்-(அந்த நெருப்பிலே விழுந்து) இறந் தனர்

இல் கடந்து - இல்லற நெறியைத் துறந்த கைம்மை நிலையில் என் னலும் ஆம். கைம்மை நெறியில் இருப்பவர், வீட்டை விட்டு வெளிச் செல்லாமல், தவ நியமங்களில் இருக்க வேண்டியவர் என்பது விளங் கும்; புறநா. 244: 4; 10, மணி. 2: 47; சிலப். 18: 35. கற்புடைய மாதர் கைம்மை நிலையில் வாழ விரும்பாது நெருப்பில் வீழ்தல்; மணி. 2: 45.

(பி-ம்.) 1. நற்க டனிது; நற்க டுந்திறல்; நாயகன்.
2. மற்க டுந்திறல்; மற்க டங்கொல்ல; வாழ்விலேம்.
4. நுதற்சிலர்; நுதற்சியர். (18)

## சோலைகள் எரிதல்

1199. பூக்க ரிந்து பொறிப்பொறி யாயடை
நாக்க ரிந்து சினைநறுஞ் சாம்பராய்
மேக்க ரிந்து நெடும்பணை வேருறக்
காக்க ரிந்து கருங்கரி யானவே.

பூ கரிந்து - மலர்கள் எல்லாம் கரிந்து போய், பொறி பொறியாய் - பொறிகளாக மாறி, அடை நா கரிந்து-இலையாகிய நாவும் கரியாகி, சினை நறும் சாம்பராய் - சிறு கிளைகள் நல்ல சாம்பல் போலாகி, மே கரிந்து- அதன் மேலுள்ள மற்றப் பாகங்களும் கரிந்து போய், நெடும் பணை வேர் உற - நீண்ட கிளைகளும் வேர்களும் ஒன்றுபட, கா கரிந்து - சோலைகள் முழுவதும் கரிந்துபோய், கரும் கரி ஆன - பெரிய கரிக்குவியல்களாக ஆயின. ஏ: அசை.

நா:-இலை, மரத்திற்கு நாக்குப் போன்று விளங்குவது. நறும் சாம்பர் -சந்தனம் முதலிய பல மணம் தரும் மரங்கள் இருந்தமையால் அச்சாம்பரும் மணம் பொருந்தியிருந்தது என்க.

(பி-ம்.) 1. முறிபொறி யாயடை; பொடிபொடி யாயிட; ஆயிடை.
2. நாக்கெ ரிந்து; தாக்கெ ரிந்து: நனை நறுஞ் சாம்பராய்; சினை நெடுஞ் சாம்பராய்.
3. மீக்க ரிந்து; வேர்க்க ரிந்து; மேக்கெ ரிந்து.
4. கடுங்கரி யானவே. (19)

## மேலுலகங்களும் எரிதல் 1200-1202.

1200. கார்மு ழுக்க வெழுங்கனற் கற்றைபோய்
ஊர்மு ழுக்க வெதுப்ப வுருகின
சோரொ ழுக்க மருமையிற் றுன்றுபொன்
வேர்வி டுப்பது போன்றன விண்ணெலாம்.

கார் முழுக்க - மேகங்களை முழுகச் செய்யும்படி, எழும் கனல் கற்றை - மேல் எழுகின்ற நெருப்பின் தொகுதி, போய் ஊர் முழுக்க வெதுப்ப-மேற்சென்று வான் நகர் முழுவதையும் சுட்டெரிக்க, உருகின சோர் ஒழுக்கம் - உருகினவையாய்ச் சொரியும் தாரைகள், அருமையில்- நீங்காது தொடர்ந்து விளங்கும் தன்மையால், விண் எலாம் - வான நாடு முழுவதும், துன்று பொன் வேர் விடுப்பது போன்றன - அடர்ந்தபொன் மயமான வேர்களை விட்டன போல விளங்கின.

அநுமன் இட்ட தீ, வானில் தாக்க, அவ்வானநாடு அவ்வெம்மை தாங்காது, பொன் வேர்வைவிட அவை கீழே சொரிந்தன என்னலும் ஒன்றும்; வேர் - வேர்வை; 172: பொருந. 80. ஒரு சுவடியில் 1200-02 மூன்று செய்யுட்கள் இல்லை.

(பி-ம்.) 2. வெதும்பி உருகின; வெதும்ப வுருக்கின; வெதுப்ப வுருக்கின.
3. சோர்வொ ழுக்கம். 4. வேர்வி ழுப்பது. (20)

1201. *நெருக்கி மீமிசை யோங்கு நெருப்பழல்*
*செருக்கும் வெண்கதிர்த் திங்களைச் சென்றுற*
*உருக்கி மெய்யி னமுத முகுத்தலால்*
*அரக்க ருஞ்சில ராவிபெற் றாரரோ.*

நெருக்கி - அடர்ந்து, மீ மிசை - மிக உயரமான வானத்தில், ஓங்கு நெருப்பு அழல் - ஓங்கி (யெழுந்த) நெருப்பின் சுடர், செருக்கும் - பெருமிதம் கொண்ட, வெண் கதிர் திங்களை - வெள்ளிய கிரணங்களையுடைய சந்திர மண்டலத்தை, சென்று உற - போய்ப் படிய, உருக்கி - (அதனை) உருகச் செய்து, மெய்யின் அமுதம் உகுத்தலால் - அவ்வரக்கர்கள் உடலில் அதன் அமுதத்தைச் சிந்தியதால், அரக்கரும் சிலர் - இறந்த அரக்கர்களுள் சில பேர்களும், ஆவி பெற்றார் - உயிர் பெற்றார்கள். அரோ: அசை.

அநுமனால் போரில் இறந்தும், நெருப்பால் சுடப்பட்டும் தம் உயிரிழந்த அரக்கர்களில் சிலர், அநுமன் இலங்கையில் இட்ட நெருப்பு சந்திர மண்டலத்தைப் போய்த் தாக்கி அச்சந்திரனிடத்திற் பொருந்திய அமிர்தத்தை உருக்கிக் கீழே விழுத்தியதால் உயிர் பெற்றார் என்பதாம். மெய்யின் அமுது உக - சந்திரன் உடலிற் பொருந்திய அமிர்தம் கீழே சிந்த என்று பொருள் கூறுவாரும் உளர். நெருப்பழல்; நாலடி 124. சந்திர மண்டலம் அமுதமய மானது; 'மண்டலந்தனை நிழலெனு மரபினுற் றனது, மண்டலம் பொழி யமிழ்தின்மெய் குளிரவே வைத்தோன்' (வி. பா. குருகுலச். 3). மீமிசை: ஒருபொருட்பன்மொழி.

(பி-ம்.) 1. நெருக்க மீமிசை; நெருப்பெழச்; நெருப்பெழல். 2. திங்களைச் சேணுற. 3. உருக்கு மெய்யின். (21)

1202. *பருதி பற்றி நிமிர்ந்தெழு பைங்கனல்*
*கருகி முற்று மெரிந்தெழு கார்மழை*
*அருகு சுற்று மிருந்தைய தாயகல்*
*உருகு பொற்றிர ளொத்தன னொண்கதிர்,*

பருதி பற்றி நிமிர்ந்து எழு பைம் கனல் - சூரிய மண்டலத்தைப் பற்றிக் கொண்டு மோலோங்கி எழுகின்ற இப்புதிய நெருப்பினால், கருகி முற்றும் எரிந்து எழு கார் மழை - கருகிப்போய் முழுவதும் எரிந்து கிளம்பிய கரிய மேகங்கள், அருகு சுற்றும் இருந்தை அது ஆய் - அருகில் நாற்புறமும் சூழ்ந்திருந்த கரியைப் போல விளங்க, ஒள் கதிர் - ஒளி தங்கிய சூரியன், அகல் உருகு பொன் திரள் ஒத்தனன் - (நடுவே வைக்கப் பெற்ற) அகலில் உருகும் பொன் தொகுதியைப் போன்று விளங்கினான்.

சூரியனிடத்து உள்ள நெருப்பினும் வேறாய் அங்கு அடைந்த அநுமன் இலங்கையிலிட்ட புது நெருப்பு இது ஆதலின் பைங்கனல் எனப் பட்டது. பசுமை-புதுமை; 'பைந்தா ரெங்க ளிராமன்' (கிட்கிந்தா. சம் பாதிப். 441) 'மேகம் கரியாய்ச் சட்டியி லுருகும் பொன்னுன இரவி' பழைய உரை. [குறிப்பு:-1201, 1202 இவ்விரு செய்யுட்களிலும் ஒரே சமயத்தில் சந்திரனும், சூரியனும் உள்ளவர்களாக வருணிக்கப் படுகின் றனர். முன் 148 ஆம் செய்யுளால் அநுமன் இலங்கையில் புகுந்தது பௌர்ணமி யென்று அறியப் படுகிறது. ஆகவே அநுமன் பௌர்ணமி யன்று இரவில் பிராட்டியைத் தேடிக் கண்டானென்றும், மறு நாளிரவு விடியும் நேரத்தில் இலங்கையில் எரியூட்டினுனென்றும் கொள்ளலாம். இவை ஆராயற்பாலன.]

(பி-ம்.) 1. நினைந்தெழு பைங்கனல்.
2. கருதி முற்றும்; எழுங் கார்மழை. (22)

## குதிரைகள் எரிபடுதல்

1203. *தளைகொ ளுந்திய தாவெரி தாமணி*
*முளைகொ ளுந்தி முகத்திடை மொய்த்தபேர்*
*உளைகொ ளுந்த வுலந்துலை வுற்றன*
*வளைகு ளம்பின் மணிநிற வாசியே.*

தளை கொளுந்திய - (குதிரைகளின்) பூட்டுக்களை எரித்ததாய், தாவு எரி - மேலே தாவி எழும்பிய நெருப்பு, தாமணி முளை கொளுந்தி- கழுத்துக் கயிற்றுடனே அக்கயிறு கட்டப்பட்டிருந்த முளைகளையும் எரித்து, முகத்து இடை மொய்த்த - முகத்தின் நடுவே அடர்த்தியாய்த் தொங்கிக் கொண்டிருந்த, பேர் உளை கொளுந்த - பெரிய புறமயிர்கள் கொளுத்தப்பட்டு எரிய, வளை குளம்பின் மணி நிற வாசி-வளைந்த குளம் புகளையுடைய அழகிய நிறத்தவான குதிரைகள், உலந்து - வாடித் தவித்து, உலைவு உற்றன - அழிந்தன. ஏ:அசை.

தளை - விலங்குபோல் காலில் பூட்டப்படும் கயிறு. தாமணி-பெருங் கயிறு; அல்லது கழுத்திற் பூட்டுங்கயிறு. குதிரையின் காற்குளம்பு பிளவுபடாத ஒற்றைக் குளம்பாதலின் வளைகுளம்பு எனப்பட்டது. வாசி:வாஜி என்ற வடமொழியின் திரிபு.

(பி-ம்.) 1. தளைகொ ளுத்திய: தாம்பணி; மாமணி.
2. முளைகொ ளுத்தி: வைத்தபேர்.
3. உளைகொ ளுந்த வுலைந்தலை வுற்றன; எரிந்துலை வுற்றன. (23)

## எரியுள் அகப்பட்ட அரக்கர் அரக்கியர் நிலை 1204-1208

1204. *எழுந்து பொற்றலத் தேறலி னீள்புகைக்*
*கொழுந்து சுற்ற வுயிர்ப்பிலர் கோளுற*
*அழுந்து பட்டுள ரொத்தயர்ந் தாரழல்*
*விழுந்து முற்றினர் கூற்றை விழுங்குவார்.*

கூற்றை விழுங்குவார் - யமனை ஒருசேர வாயில் போட்டு கடிக்காது விழுங்கக் கூடிய ஆற்றல் அமைந்த அரக்கர்கள், எழுந்து - (அந் நெருப்புக்குத் தப்பிப் பிழைக்க மேலே) எழுந்து, பொன் தலத்து ஏறலின் - பொன்னுலகான சுவர்க்கத்திற்கு மேலேறிச் செல்லும் போது, நீள் புகை கொழுந்து சுற்ற - நீண்ட புகையின் கொழுந்தாகிய நுனி தம்மைச் சூழ்ந்து கொள்ள, உயிர்ப்பு இலர் - அதனால் மூச்சு விடமாட்டாதவர்களாய், கோள் உற - அதனாலேயே பற்றப்பட, அழுந்து பட்டுளர் ஒத்து - அந்தப் புகையில் அழுந்தி இறந்தவரைப்போல, அயர்ந்தார் - மயக்க முற்றவர்களாகி, அழல் விழுந்து முற்றினர் - அங்கிருந்த நெருப்பிலே விழுந்து அழிந்தனர்.

மேலே எழ முயன்றும் முடியாமல் புகையால் சூழப்பெற்று, அதில் அழுந்தி மயக்கமுற்று அந்நெருப்பிலேயே விழுந்து அழிந்தனர் என்பதாம்.

(பி-ம்.) 1. பொற்றலத் தேறினர் தேறினர் மெய்ப்புகை; தேறலி னப்புகை. 2. கோளு முற்(று); கோள முற்(று); கோப முற்(று); கோளினல். 3. அழுந்து நெஞ்சத் தரக்கர்செந் தீயிடை; அழுந்தி யுக்கனர் போலயர்ந்தார். 4. விழுந்தி றந்தனர். (24)

1205. *கோசி கத்தினி லுற்ற கொழுங்கனல்*
*தூசி னுத்தரி கத்தொடுஞ் சுற்றுரு*
*வாச மைக்குழல் பற்ற மயங்கினர்*
*பாசி ழைப்பர வைப்பட ரல்குலார்.*

பசுமை இழை - பசிய பொன்னாலான அணிகளையுடையவரும், பரவை படர் அல்குலார் - கடல் போன்று பரந்த அல்குலை உடையவருமான அரக்கர் மாதர்களின், கோசிகத்தினில் உற்ற கொழும் கனல் - (அவர்கள்) அரையில் உடுத்த பட்டாடைகளில் பற்றிக் கொண்ட பெரும் நெருப்பு, உத்தரிக தூசின் ஓடும் சுற்று உரு - மேலாடையுடனே சூழ்ந்து பற்றிக் கொண்டு, வாசம் மை குழல் பற்ற - நறுமணம் பொருந்திய கரு நிறமான கூந்தலில் பற்றிக் கொள்ளவும், மயங்கினர் - என்ன செய்வதென்பதை அறியாது நிலையழிவா ராயினர்.

கோசிகம் - பட்டாடை; பால. கோலங்காண்: 13; 'கோசிகம் - கொய்சகம் வைத்த புடைவை' பழைய உரை. தூசு - பருத்தி ஆடை. மைக்குழல் - மேகம்போன்ற கரிய கூந்தல் என்றலும் ஒன்றும்; மை - மேகம்; மை - அஞ்சனமும் ஆம்.

(பி-ம்.) 1. கோசி கத்துகி லுற்ற: கொடுங்கனல்.
2. உத்தரி யத்தொடு சுற்றுரு: தூசிலு. (26)

வேறு

1206. *நிலவி ளக்கிய துகிலினை நெருப்புண நிருதர்*
*இலவி னுஞ்சில முத்துள வெனுநகை யிளையார்*
*புலவி யின்கரை கண்டவ ரமுதுகப் புணரும்*
*கலவி யின்கரை கண்டிலர் மண்டினர் கடன்மேல்.*

புலவியின் கரை கண்டவர் - (அதுவரை) ஊடலில் ஈடுபட்டிருந்து அதன் முடிவு அடைந்தவர்களான, நிருதர் - அரக்கர் மைந்தர்களும், இலவினும் சில முத்து உள எனும் நகை இளையார் - செவ்விலவின் மலரினும் சில முத்துக்கள் பிறப்பது உண்டு என்று சொல்லக்கூடிய பற்களை யுடைய அரக்கர் மகளிரும், நில விளக்கிய துகிலினை - நிலவு என்று சொல்லும்படி யிருந்த தம் வெண்ணிற ஆடைகளை, நெருப்பு உண - நெருப்புப் பற்றி எரிக்க, அமுது உக புணரும் - இன்பம் ததும்பிப் பெருகப் புணரும், கலவியின் கரை - கூடும் புணர்ச்சியின் எல்லையை, கண்டிலர் - காணாதவர்களாய், கடல் மேல் மண்டினர் - (அந் நெருப்பைத் தணித்துக் கொள்ளும் பொருட்டுக்) கடலிற் போய்(நெருங்கி) விழுந்தனர்.

நில - நிலவு; நன். சூ. 172; இனி நிலவு இளக்கிய எனப் பிரித்து நிலவைத் தம் வெண்மையால் குறைபடுத்திய எனவும் பொருள் கொள்ளலாம். 'நில விளக்கிய - நிலவை ஓட்டும்' பழைய உரை. நில விளக்கிய துகில்; ஒப்பு. 'பானிலாக் கதிரன வம்மென் பைந்துகில்' (சீவக; 2635). நிருதர் இளையார் என இயைத்து நிருதமகளிர் எனவுங் கொள்ளலாம். இலவு - செவ்விலவமலர்; இது சினையாகு பெயர்; மகளிர் வாய்க்கு இலவ மலர் உவமை ஆனமையின் உவமையாகு பெயராகவும் வந்தது ஆதலின் இங்கு இருமடியாகு பெயராயிற்று. இலவிதழ் மகளிர் வாய்க்கு உவமை; பால. 38; எழுச்சிப்: 68. முத்துக்கள் பிறக்குமிடங்களென நூல்கள் கூறப் பெறுவனவற்றுள் இலவமலர் இல்லாமையை நோக்கி உம்மையினுற் சிறப்பிக்கப் பெற்றது; இஃது இல் பொருளுவமை. ஊடுதல் காமத்திற்கு இன்பம் பயத்தலால் ஊடலி

லேயே இருந்தவர் அதன் இறுதியில் புணர்ச்சியின்பத்தில் புக, நெருப்பு ஆடைகளைப் பற்றினமையால், அதுவும் முடிவு பெறாது கடலில் போய் விழுந்தனர் என்க.

(பி-ம்.) 1. நிலவி லங்கிய; நிலவு கக்கிய: புலவி நன்கொடு திருத்திப்பின் பொருந்துறப் புணர: நெருப்புணர் நிருதர்.
2. நிலவின் வெண்டுகில் நீக்கினர் நெருப்புற நிருதர்.
3. இலவி னும்சில முத்துள தெனும்நகை யுடையார்.
4. கலவி யின்கடல் கண்டிலர்: மண்டினர் கனல்மேல். (26)

1207. *பஞ்ச ரத்தொடு பசுநிறக் கிளிவெந்து பதைப்ப*
*அஞ்சனக் கண்ணி னருவிநீர் முலைமுன் றி லலைப்பக்*
*குஞ்ச ரத்தன கொழுநரைத் தழுவுறுங் கோதிப்பால்*
*மஞ்சி டைப்புகு மின்னெனப் புகையிடை மறைந்தார்.*

பசுமை நிற கிளி - (தாம் வளர்த்த) பசுமை நிறமுள்ள கிளிகள், பஞ்சரத்து ஒடு வெந்து பதைப்ப - தாம் இருந்த கூடுகளோடு நெருப்பில் வெந்து உயிர் துடிக்க, (அது கண்ட வருத்தத்தால்), அஞ்சன கண்ணின் அருவி நீர் - மை எழுதப் பெற்ற தம் கண்களினின்றும் அருவி போலப் பெருகும் நீர், முலை முன்றில் அலைப்ப - தம் தனங்களின் முகட்டி னிடத்து விழுந்து வருத்த, குஞ்சரத்தன கொழுநரை - யானை போன்ற தம் கணவர்களை, தழுவு உறும் கொதிப்பால் - (அன்னோர் இறந்து சென்ற இடத்தைத் தாமும்) சேர்ந்து அவரை தழுவிக் கொள்ள விரும் பும் பதைப்பு மேலீட்டால், மஞ்சு இடை புகு மின் என - மேகத்தினி டையே புகுந்து செல்லும் மின்னலைப்போல, புகை இடை மறைந்தார் - அங்கிருந்த புகையினிடத்து மறைந்து இறந்தனர்.

இடை - இடம், மகளிர் ஆபத்து வந்தவிடத்துத் தாம் வளர்த்து வந்த பைங்கிளிக்கு உருகுதல்; 13. அலைத்தல் - வீழ்ச்சியின் மிகுதியால் வருத்துதல்; 'பெருமுலை யலைக்குங் காதின்' (முருகு: 50). கொழு நரைத் தழுவுறுங் கொதிப்பு: கற்புடை மகளிர் இறந்த கணவர் சென்ற இடத்தை நாடிச் செல்லக் கொள்ளும் உணர்ச்சிமேலீடு. மஞ்சு, புகைக் கும், மின் அம்மகளிர்க்கும் உவமைகள்.

இரண்டு சுவடிகளில் இச்செய்யுளின் 2, 3 அடிகள் முறைமாறிக் காண்கின்றன.

(பி-ம்.) 1. பசுநறுங் கிளி. 2. முலையின்வந் தலைப்பக்.
3. தழுவிநேர் கொதிப்பால். (27)

1208. *வரையி னைப்புரை மாடங்க ளெரிபுக மகளிர்*
*புரையில் பொற்கலன் வில்லிட விசும்பிடைப் போவார்*
*கரையி னுட்புகைப் படலையிற் கரிந்தனர் கலங்கித்*
*திரையி னுட்பொலி சித்திரப் பாவையின் செயலார்.*

**வரையினை புரை மாடங்கள்** - மலைகளைப் போன்ற மாளிகைகளில், **எரி புக** - நெருப்புப் பற்ற, **மகளிர்** - அங்கிருந்த மகளிர்கள், **புரை இல் பொன் கலன் வில் இட** - குற்றமில்லாது சிறந்து விளங்கும் அவர்களுடைய பொன் அணிகள் ஒளி வீச, **விசும்பு இடை போவார்** - வானிடையே எழுந்து செல்பவர்களாய், **கரை இல் நுண் புகை படலையில்** - அளவுகடந்த நுட்பமான புகையின் தொகுதியில், **கலங்கி** - (நிறம்) மாறி, **திரையின் உள் பொலி** - திரையின் மறைவின் விளங்கும், **சித்திர பாவையின் செயலார்** - அழகிய பதுமையின் செயலை அடைந்தவர்களாய், **கரிந்தனர்** - தம் ஒளி குன்றிக் கரிந்து போயினர்.

மகளிர்க்குச் சித்திரப்பாவையும், புகைக்குத் திரையும் உவமைகள்.

(பி-ம்.) 2. **புரையி னற்கலன் விசும்பிடை வில்லிடப் போவார்:**
3. **கரையி னுண்புகை; கரையில் வெண்புகைப்; கரந்தனர் கலிங்கத்: கரிந்தனர் கலிங்கத்: கரைய ரும்புகைப் படலையிற் கண்ணொளி கலங்கித்.**
4. **திரையி னிற்பொலி: திரையி னுட்பொதி: பாவையொத் தயர்ந்தார்.** (28)

## வனங்கள் எரிதல் 1209-1210

1209. *அகரு வுந்நறுஞ் சாந்தமு முதலிய வனேகம்*
*புகரி னன்மரத் துறுவெறி யுலகெலாம் போர்ப்பப்*
*பகரு மூழியிற் காலவெங் கடுங்கனல் பருகும்*
*மகர வேலையின் வெந்தன நந்தன வனங்கள்.*

**பகரும் ஊழியில்** - (நூல்கள்) கூறுவதான யுகமுடிவுக் காலத்தில், **கால வெம் கடும் கனல்**-காலாக்னி என்னுங் கொடிய நெருப்பு, **பருகும் மகர வேலையின்**-உறிஞ்சி வற்றச் செய்யும் மகர முதலிய மீன்கள் வாழும் கடல்கள் (அழிந்தன) போல, **நந்தன வனங்கள்** - அந்த இலங்கையில் இருந்த சிங்காரத் தோட்டங்கள், **அகரு உம்** - அகிற் கட்டைகளும், **நறும் சாந்தமும்** - மணங்கமழும் சந்தன மரங்களும், **முதலிய**-முதலான, **அனேகம்** - பல, **புகர் இல் நல் மரத்து உறு வெறி** - குற்றமற்ற சிறந்த மரங்களிற் பொருந்தியுள்ள நறுமணம், **உலகு எலாம் போர்ப்ப** - உலகம் முழுவதும் பரந்து கவிந்து கொள்ளும்படி, **வெந்தன** - (அத் தீயில்) வெந்து அழிந்தன.

பிரளய காலத்தில் உண்டாகும் கொடுங்கனல் கடல்களைச் சுவறச் செய்யும் என்பதாம், நந்தவனங்கள் - இராவணன் தேவருலகிலிருந்து இலங்கையில் கொண்டு வந்து பாதுகாத்து வந்த இந்திரனது பூங்கா வனமும் ஆம்; 'அந்தர மருங்கி னந்தன வனத்தொடு' (பெருங். 2. 12:49)

(பி-ம்.) 1. அகரு நன்னறுஞ் சாந்தமும்; அகிலி னன்னறுஞ்: அகருவும்நறுஞ் சந்தனத் தருமுத லனேகம்.
2. புகரி னன்மணத் துளவெறி: உலகெலாம் பொலிய.
3. ஊழியிற் சாலவுங் கடுங்கனல்; காலவெங் கொடுங்கனல். (29)

1210. *மினல்ப ரெந்தெழு கொழுஞ்சுட ரிலங்கையூர் விழுங்கி*
*நினைவ ரும்பெருந் திசையுற விரிகின்ற நிலையால்*
*சினைப ரந்தெரி சேர்ந்திலா நின்றவுஞ் சிலவெம்*
*கனல்ப ரந்தவுந் தெரிந்தில கற்பகக் கானம்.*

மின்னல் பரந்து எழு கொழும் சுடர் - மின்னல் போல ஒளி பரவி எழும் செழித்த நெருப்பின் சுவாலை, இலங்கை ஊர் விழுங்கி - இலங்கை நகரத்தை உட்கொண்டு, நினைவு அரும் பெரும் திசை உற - நினைப்பதற்கு அரிய பெரிய திசைகளைப் போய் அடைய, விரிகின்ற நிலையால் - பரந்து விளங்கும் தன்மையால், கற்பக கானம் - கற்பகச் சோலைகள், சில - சிலவை, சினை பரந்து எரி சேர்ந்து இலா நின்றவும் - கிளைகளில் பரவி நெருப்புப் பற்றுமல் நின்றவைகளும், வெம் கனல் பரந்தவும் - கொடிய நெருப்புப் பற்றி எரிந்தவைகளும், தெரிந்து இல - வேற்றுமை தெரியாதனவாய் இருந்தன.

இலங்கையில் இருந்த கற்பகக் காடுகள் இயற்கையில் ஒளியுடைமையால் அநுமன் இட்ட தீயால் எரிந்தவை இன்னவையென்றும் எரியாதவை இன்னவையென்றும் அறிந்துகொள்ள முடியாதபடி விளங்கின என்பதாம். வானுலகத்துக் கற்பகக் கானம் இராவணனால் கவர்ந்து கொண்டுவந்து இலங்கையில் வைக்கப்பட்டிருந்தது; 112. இனி, நினைவரும் பெருந்திசை யுற விரிகின்ற என்றமையால் சுவர்க்கத்திலுள்ள கற்பகக் கானமும் ஆம்.

(பி-ம்.) 1. மினிற்பரந்து: வினைபரந் தெழு: சுட ருலகெலாம் விழுங்கி; விழுங்க.
2. நினைப்பரும் பெருந்திசை: திசைதொறுஞ் செலநின்ற நிலையில்.
3. சினைப் பரந்தெரி: எரி சேர்ந்தில நின்ற; சொரிந்தில நின்ற: சினைப் படுந்தளிர் சிவந்தன நின்றவுஞ் சிலவெங். (30)

## புகையினுல் விளைந்தவை 1211-1212

1211. *மூளும் வெம்புகை முற்றுறச் சுற்றிய முழுநீர்*
*மாளும் வண்ணமா மலைநெடுந் தலைதொறும் வழங்கிப்*
*பூளை வீயெனப் போவன புணரியிற் புனலின்*
*மீள யாவையுந் தெரிந்தில முகிற்கண மிசையே.*

முகில் கணம் - மேகக் கூட்டங்கள், முழு நீர் மாளும் வண்ணம் - தாம் உண்ட நீர் முழுவதும் அற்றுப் போகும்படி, மா மலை நெடும் தலை தொறும் வழங்கி - பெரிய மலைகளின் நீண்ட சிகரங்களிலெல்லாம் பெய்து, புணரியில் புனலின் மீள - கடலின் நீரினிடத்து மீண்டு செல்ல, பூளை வீ என போவன - பூளைப்பூப் போல் வெண்ணிறமாய்ப் போகின் றவை, மூளும் வெம்புகை முற்று உற - மிகுந்து எழுந்த (அநுமனிட்ட தீயினுல் இலங்கையில் உண்டான) கொடிய புகை (வானில்) எங்கும் கவிந்து கொள்ள, யாவையும் தெரிந்தில - வழியையும் இடையேஉள்ள வற்றையும் தெரியாதனவாய், மிசையே சுற்றிய - வானிலேயே சுற்றி அலைந்தன.

முகிற் கணம் தாம் உண்ட நீரை மலைகளில் வழங்கி மீண்டும் கட லில் நீர் பருகச் செல்லும்போது, புகை மிகுதியாய் வானெங்கும் சூழ்ந்து கொண்டதால் வானில் போகும் இடம் அறியாமல் அங்கேயே சுற்றுவன ஆயின, பூளை வீ, வெண்ணிறமானதால் நீரற்ற மேகத்திற்கு உவமையாயிற்று. பூளைவீ; பால, மிதிலைக்காட்சிப் 1, இச் செய்யுள் கொண்டு கூட்டுப் பொருளில் அமைந்துள்ளது.

(பி-ம்.) 1. வெம்புகை விழுங்கலிற் சுற்றுற: புகை மூடலின் முதுநில வரைப்பின்.
2. தலைதொறு மயங்கிப்: வாழும் கல்லின்மா மலைநெடுந் தலை தொறு மயங்கிப்.
3. பூளைவீ யன்ன போவன: புணரியிற் புனல்கள்.
4. முகிற்கண மிசைப்ப: விண்முகிற் கணம்போல். (31)

1212. *மிக்க வெம்புகை விழுங்கலின் வெள்ளியங் கிரியும்*
*ஒக்க வெற்பினே டன்னமுங் காக்கையி னுருவ*
*பக்க வேலையின் படியது பாற்கடன் முடிவில்*
*திக்க யங்களுங் கயங்களும் வேற்றுமை தெரியா.*

மிக்க வெம் புகை விழுங்கலின் - மிகுந்த வெப்பமான புகை (உல கெங்கும்) சூழ்ந்து கொண்டதால், வெள்ளி அம் கிரியும் - வெள்ளி மலை யெனப்படும் (வெண்ணிறமான) கயிலை மலையும், வெற்பினேடு ஒக்க -

மற்ற மலைகளோடு ஒப்பாகக் கருநிறமடைந்தது; அன்னமும் காக்கையின் உருவ - (வெண்ணிறமான) அன்னப்பறவைகளும் காக்கைகளைப் போலக் கரிய உருவின ஆயின; பால் கடல்-(வெண்ணிறமான) பாற்கடலும், பக்க வேலையின் படியது-அருகேயுள்ள மற்றக் கடலின் தன்மையை (அதாவது கருநிறத்தை) மேற் கொண்டது; முடிவில் - எல்லைக் கோடியில் உள்ள, திக்கயங்களும் - எட்டுத்திக்கு யானைகளும், கயங்களும் - (கரிய நிறமுள்ள) மற்ற யானைகளும், வேற்றுமை தெரியா - நிறங்களில் வேறுபாடு தெரியாதபடி எல்லாம் கருநிறமாய்க் காணப்பட்டன.

படி - ஒப்பு; 527. இச் செய்யுள் தத்குணவணி என்பர். திக்கயங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொறு நிறமுடையவையேனும் அவை இப் பெரும் புகையின் கருமையால் மூடுண்டு மற்ற யானைகளைப் போலக் கருமையாகவே காணப்பட்டன என்பதாம்.

(பி-ம்.) 1. மிக்க வெண்புகை: வெம்புகை விழுங்கின.
2. காக்கையி னுருவாம்; உருவாய்ப்.
3. பக்க வேலையும் பாற்கடற் படிவமு முடிவிற்; வேலையின் படிவமு பாற்கட முடிவிற்..
4. திக்க யங்களும் புகையினால் வேற்றுமை தெரியா; காக்கையும் வேற்றுமை தெரியா. (32)

## அரக்கர் கடலினுள் விழுதல் 1213-1214

1213. *கரிந்து சிந்திடக் கடுங்கன றொடர்ந்துடல் கதுவ*
*உரிந்த மெய்யின ரோடினர் நீரிடை யொளிப்பார்*
*விரிந்த கூந்தலுங் குஞ்சியு மிடைதலிற் றுனும்*
*எரிந்து வேகின்ற தொத்ததவ் வெறிதிரைப் பரவை.*

கரிந்து சிந்திட - கருகி உதிர்ந்து போகும்படி, கடும் கனல் தொடர்ந்து உடல் கதுவ - கொடிய நெருப்பு தொடர்ந்து தம் உடல்களைப் பற்றி மூடிக்கொள்ள, உரிந்த மெய்யினர் - அதனால் தம் மேல் தோல் உரிந்த உடல்களையுடையரான அரக்கர்கள், ஓடினர் - ஓடி, நீர் இடை ஒளிப்பார் - கடல் நீரினுள் புகுந்து ஒளிந்து கொள்வாராயினர்; விரிந்த கூந்தலும் குஞ்சியும் - அரக்கரின் பெண்டிர் ஆடவர் என்ற இரு பாலாரின் தலைமயிரும், மிடைதலில்-(அக்கடலில்) மிகுந்து நிறைந்தமையால், அ எறி திரை பரவை - அந்த அலைகள் மோதும் கடல், தானும் எரிந்து வேகின்றது ஒத்தது - தானும் நெருப்பால் எரிபட்டு வேகின்றது போலச் (செந்நிறமாய்) விளங்கியது.

அரக்கரில் இருபாலர் குஞ்சியும் கூந்தலும் செந்நிறமாதலின், அவர்கள் கடலிற் படியக் கடல் தீப்பற்றியது போல் விளங்கியது என்க.

(பி-ம்.) 1. கடுங்கன லடர்ந்துடல் கதுவ.
2. ஓடினர் நீரிடை யொளித்தார்; ஓடினர் கடலிடை யொலித்தார்.
3. கூந்தலுங் குருதியு மிடை; கூந்தலுங் குஞ்சியு மெரிதலாற்:
4. எரிந்து வேகின்ற தொத்தன. (33)

1214. *மருங்கின் மேலொரு மகவுகொண் டொருதனி மகவை*
*அருங்கை யாற்பற்றி மற்றொரு மகவுநின் றரற்ற*
*நெருங்கி நீணெடு மெரிகுழல் சுறுக்கொள நீங்கிக்*
*கருங்க டற்றலை வீழ்ந்தன ரரக்கியர் கதறி.*

மருங்கின் மேல் ஒரு மகவு கொண்டு - இருப்பில் ஒரு குழந்தையை வைத்துக் கொண்டு, ஒரு தனி மகவை - மற்றொரு குழந்தையை, அரும் கையால் பற்றி - தன் அரிய கையால் பற்றிக் கொண்டு, மற்று ஒரு மகவு நின்று அரற்ற - வேறு ஒரு குழந்தை பின்னே நின்று வாய்விட்டுக் கதறிக் கொண்டுவர, நெருங்கி நீள் நெடும் எரி குழல் சுறு கொள - அடர்ந்து மிக நீண்ட தம் எரிபோன்ற கூந்தல் அத்தீயால் சுறுசுறுவென்ற ஒலியுடன் தீய்ந்து போக, அரக்கியர்-அரக்க மாதர்கள், நீங்கி - தம்மிடம் விட்டுச் சென்று, கதறி - வாய் விட்டு அழுதுகொண்டு, கரும் கடல் தலை வீழ்ந்தனர் - கரிய கடலினிடத்துப் போய் வீழ்ந்தார்கள்.

மருங்கு - இடை; இது மருங்குல் எனவும் வழங்கும். அருங்கையாற் பற்றிய குழந்தை சிறியது என்பதும், மருங்கினில் இருந்தது அதற்கும் இள வயதானது என்பதும், நின்று அரற்றிய மகவு அவற்றுள் மூத்ததென்பதும் விளங்கும்; இனி, அருங்கையால் பற்றி: அரியயைிகளுல் பிடித்துக்கொண்டு என்றலும் ஒன்றும். கருங்கடல் - பெரிய கடலுமாம்; கருமை - பெருமை. குழல் சுறுக் கொள்ளுதல்: 'கூறு மங்கையர் நறுங்கூந்தலின்சுறு, நாறுகின்றது' (உயுத்த. மந்திர. 13.) சுறு நாற்றம் - தீப்படு கின்ற தசை மயிர் முதலியவற்றிலிருந்து உண்டாகும் கெட்ட நாற்றம், தக்க. 184. குறிப்,

(பி-ம்.) 2. இருங்கையாற்: மகவுபின் னரற்ற; நின் றகற்ற; முன் னரற்ற.
3. நீணெடு நிறை; நிணேடு நறை: நெருங்கி நீண்டிடு நெறிகுழல்; நெருங்கி நீரொடு; நெருங்கி ஞரொடு: நெருங்கு செந்தழல் சுடச்சுடச் சுறுக்கினி னீங்கிக்: நீக்கிக். (34)

## ஆயுதங்கள் உருகுதல்

1215. *வில்லும் வேலும்வெங் குந்தமு முதலிய விறகாய்*
*எல்லு டைச்சுட ரெனப்புக லெஃகெலா முருகித்*
*தொல்லை நன்னிலை தொடர்ந்தபே ருணர்வினர் தொழில்போல்*
*சில்லி யுண்டையிற் றிரண்டன படைக்கலத் திரள்கள்.*

வில்லும் வேலும் குந்தமும் முதலிய விறகாய் - (அங்கு ஆயுதச் சாலையில் இருந்த) விற்களும் வேல்களும், கொடிய எறியீட்டிகளும் முதலாம் பல படைக்கலங்கள் விறகுகளாய் அமைய, எல் உடை சுடர் என புகல் - ஒளியுடைய சூரியன் என்று சொல்லும்படி, எஃகு எலாம் உருகி - எஃகினால் அமைந்த அவற்றின் பாகங்கள் யாவும் அத் தீயில் உருகி, படைக்கல திரள்கள் - ஆயுதத் தொகுதிகள், தொல்லை நல் நிலை தொடர்ந்த - (கருமவயத்தால் பல பிறவி வேறுபாடுகளில் உழன்று பின்) தம் பழைய உயர் நிலையை நாடிச் சென்ற, பேர் உணர் வினர் தொழில் போல் - பெரும் ஆத்மஞானிகள் செயல்போல, (அவற்றின் பழைய நிலையாகிய), சில்லி உண்டையில் - சிறு உண்டையாக, திரண்டன - திரண்டு கிடந்தன.

விறகானமை: வில் மூங்கிலால் அமைந்ததையும், வேல் குந்தம் முதலியவற்றின் பிடி முதலிய மரப்பகுதிகளையும் குறிப்பிட்டது. ஆயுதங்களின் எஃகினால் அமைந்த பாகங்கள் உருகின தோற்றம் ஒளியினாலும் வடிவாலும் எல்லுடைச் சுடருக்கு ஒப்பாயிற்று. மாயைத் தொடர்பால் பல வேறு பிறவிகளில் உழன்று பின் ஆத்ம ஞானம் அடைந்தோர் அப் பிறவிகளினின்றும் விடுபட்டு முன் நிலையை அடைவது போல, பல வேறு ஆயுதங்களாய் உருவெடுத்திருந்த எஃகு, தீயில் உருகத் தம் உருவங்கள் மாறிப் பழைய இரும்பின் வடிவத்தை அடைந்தன. ஆயுதங்களாய் இருந்த நிலை பல் வேறு பிறவிகளுக்கும், அநுமன் இட்ட தீ அஞ் ஞானத்தைப் போக்கும் ஞான உணர்வுக்கும், சிறு உருண்டையாய் மாறினது, பூர்வ நிலை எய்தியதற்கும் உவமைகள் ஆயின. சில்லி - சிறுதுண்டு; உயுத்த. சேதுபங். 22. எல்லுடைச் சுடர் - சூரியன்.

(பி-ம்.) 1. முதலிய வெயில்கால்; முதலிய விறகால்; முதலிய விறகா.
2. புக ரெஃகெலா; சுட ராயுதம் யாவையு முருகிச்.
3. சொல்லு பேதத்தின் ஞெகையறத் துறந்துதொல் லுருவாய்ச்: தொடர்ந்துதே ருணர்வன்ன தொழிலாற்; உணர்வினர் தோலால். 4. சல்லி யுண்டையில்: படைக்கலச் சாலை. (35)

## யானைகள் அழிதல்.

1216 *செய்து டர்க்கன் வல்லியும் புரசையுஞ் சிந்தி*
*நொய்தி னிட்டவன் றறிபறித் துடலெரி நுழைய*
*மொய்த டச்செவி நிறுத்திவான் முதுகினின் முறுக்கிக்*
*கையெ டுத்தழைத் தோடின வோடைவெங் களிறு.*

ஓடை வெம் களிறு - நெற்றிப் பட்டம் அணிந்த கொடிய யானைகள், உடல் எரி நுழைய - தம் உடலில் நெருப்புப் புகுந்து எரிய, துடர்

செய் கன வல்லியும் - சங்கிலியாகச் செய்யப்பட்ட கனமான பூட்டு விலங்கையும், புரசையும் - கழுத்தில் இடப்படும் கயிற்றையும், சிந்தி - சிதற விட்டு, இட்ட வல் தறி நொய்தின் பறித்து - தம்மைக் கட்டியிருந்த வலிய கம்பங்களை எளிதில் பிடுங்கி எறிந்து, மொய் தட செவி நிறுத்தி - வலிய அகன்ற (தம்) காதுகளை மேலே தூக்கி நிறுத்தி, வால் முதுகினில் முறுக்கி - தம் வால்களை முதுகுப் புறமாய்ப்படிய முறுக்கி நீட்டி, கை எடுத்து அழைத்து - தம் துதிக்கைகளை மேலே தூக்கிக் கொண்டு வாய் விட்டுக் கதறி, ஓடின - (பயந்து) ஓடின.

துடர் - சங்கிலி; இது தொடர் எனவும் வழங்கும்; சங்கிலி பல கரணைகள் ஒன்றாகத் தொடுக்கப் பெற்றுள்ளமையால் தொடர் எனப் பட்டது; தொடர் விலங்கும் ஆம்; துடர் தொடர் என்பதின் திரிபு. வல்லி; 1161; தக்க. 39 உரை. அஞ்சிய யானைகளின் மெய்ப்பாடுகள் இங்குக் கூறப்பெற்றன; முன் வேறுவிதமாக 6 ஆம் செய்யுளிற் கூறி யுள்ளமை காண்க. அழைத்தல் வாய்விட்டுக் கதறுதல்; 'பற்பல பன்னி நின் றழைத்தாள்' (ஆரண்ய. சூர்ப்பணகைப்; 100).

(பி-ம்.) 1. செய்தொ டர்க்கழல்; செய்து டைப்பெரு வல்லிமிம் : தொடர்க் கன வல்லியும் புரோசையும் சிந்தி.
2. நொய்தி லிட்ட: நோய்த டுந்திடுந் தறி.
3. மொய்க டச்செவி நிறுத்திவான் முதுகினை முறுக்கி: மொய்த மைச்செவி: செவி யகற்றியவ் வாலினை: செவி முடுக்கியொன் வாலினை முறுக்கி. 4. கரிமா; களிமா. (36)

## பறவைகள் அழிதல்

1217. *வெருளும் வெம்புகைப் படலையின் மேற்செல வெருவி*
*இருளுங் வெங்கடல் விழுந்தன வெழுந்தில பறவை*
*மருளின் மீன்கணம் விழுங்கிட வுலந்தன மனத்தோர்*
*அருளில் வஞ்சரைத் தஞ்சமென் றடைந்தவ ரனைய.*

மனத்து ஓர் அருள் இல் - தம் மனத்தில் ஓர் அருள் என்பது இல் லாத, வஞ்சரை - வஞ்சனையுடைய கொடியோரை, தஞ்சம் என்று அடைந்தவர் அனைய - அடைக்கலமாகப் போய்ப் புகுந்தவர்களைப் போல, பறவை - பறவைகள், வெருளும் வெம் புகை படலையின் மேல் செல வெருவி - அச்சத்தை உண்டாக்கும் வெப்பமான புகைப் பரப்பின் மேலே கடந்து செல்ல அஞ்சினவைகளாய். இருளும் வெம் கடல் விழுந்தன - இருண்டு விளங்கிய கொடிய கடலில் வீழ்ந்து, எழுந்தில - மேற்கிளம்ப முடியாது, மருளின் மீன் கணம் விழுங்கிட - மதக்

கொழுப்புக் கொண்டுள்ள மீன் கூட்டங்கள் விழுங்க, உலந்தன - இறந்து அழிந்தன.

இருளுங்கடல்: இயல்பாய்க் கருநிறமுடைய கடல் புகை இருள் போல் மேலே கவிந்தமையால் மேலும் இருண்டு விளங்கியது என்க. பகைவர்க்குப் பயந்து ஓடி வஞ்சகரைச் சரண் புகுந்தோர்க்குப் பறவைகளும், அவ்வஞ்சகருக்குக் கடலும் மீன்களும் உவமைகள் ஆயின. தஞ்சமென் றடைந்தோரை அழிப்பவர் கொடிய பாவியர் ஆதலால், அருளில் வஞ்சர் எனப்பட்டது. அருள் இல் - தெய்வத் திருவருள் அற்ற என் றும்பொருள் கொள்ளலாம்; அதாவது தஞ்சமடைந்தோரைக் கெடுத்தோர்க்குக் கடவுள் அருள் இல்லை என்பது விளங்கும். படலை - படலம் என்னும் வடசொல்லின் திரிபு. அருளில் வஞ்சரைத் தஞ்ச மென்றடைந்தவர் அழிவர் என்பது ஒரு நீதி. இதன் பின் ஒரு சுவடியில் மூன்று அதிகப் பாடல்களும், ஒரு சுவடியுல் ஓர் அதிகப்பாடலும் (ஈ) காணப்படுகின்றன.

(அ) தேரெ ரிந்தன வெரிந்தன திறற்பரி யெவையும்
தாரெ ரிந்தன வெரிந்தன தருக்குறு மதமா
நீரெ ரிந்தன வெரிந்தன நிதிக்குவை யிலங்கை
ஊரெ ரிந்தன வெரிந்தன வரக்கர்தம் முடலம்.

(ஆ) எரிந்த மாளிகை யெரிந்தன விலங்கொளிப் பூண்கள்
எரிந்த பூந்துகி லெரிந்தது முரசின முதலாய்
எரிந்த மாமணிப் பந்தர்க ளெரிந்தது கடிகா
எரிந்த சாமரை யெரிந்தது வெண்குடைத் தொகுதி.

(இ) ஆட ரங்குக ளெரிந்தன வரக்கியர் சிறுவ
ரோடெ ரிந்தன ருலப்பில்பல் கொடிகளு மெரிந்த
தேட ருமணிச் சிவிகையோ டருந்திற லரக்கர்
வீடெ ரிந்தன வெரிந்திடா திருந்ததென் வினவில்.

(ஈ) இனைய காலையின் மயனுமுன் னமைத்ததற் கிரட்டி
புனைய மாருதி நோக்கின னின்ன புகல்வான்
வனைய மென்னுருத் துவசம்நீ பெறுமென மகிழ்வோ
டனைய னீங்கிட வனலியு மறுபடி யுண்டான்.(?)

(பி-ம்) 1. படலையின் மீச்செல். 2. இருளும் வேலையின் விழுந்தன.
3. மருளும் மீன்கணம்: விழுங்கிட வுலர்ந்தன.
4. அடைந்தன ரனைய: அடைந்தவர் போல.

## இராவணன் அரண்மனையுள் தீ புகுதல்—1218 - 1222

1218. *நீரை வற்றிடப் பருகிமா நெடுநிலந் தடவித்*
*தாரு வைச்சுட்டு மலைகளைத் தழற்செய்து தனிமா*
*மேருவைப் பற்றி யெரிகின்ற காலவெங் கனல்போல்*
*ஊரை முற்றுவித் திராவணன் மனைபுக்க துயர்தீ.*

உயர் தீ - உயர்ந்து எழுந்த அந்நெருப்பு, வற்றிட நீரை பருகி - (கடல், குளம், முதலிய நீர்நிலைகள்) வற்றிப் போகும்படி (அவற்றிலுள்ள) நீரை உறிஞ்சி, மா நெடு நிலம் தடவி - பெரிய இலங்கையின் நிலத்தைத் தழுவி, தாருவை சுட்டு - அங்குள்ள மரக்கட்டைகளைச் சுட்டெரித்து, மலைகளை தழல் செய்து - மலைகளைத் தணல்போல விளங்கும்படி வேகச் செய்து, தனி மா மேருவை பற்றி எரிகின்ற கால வெம் கனல் போல் - ஒப்பற்ற மகா மேரு என்னும் மலையைப் பற்றி எரியும் ஊழிக்காலத்துக் கொடிய தீயைப் போல, ஊரை முற்றுவித்து - அவ்விலங்கை நகர் முழுவதையும் எரித்தழித்து, இராவணன் மனை புக்கது - இராவணனுடைய அரண்மனையுள் புகுந்தது.

இராவணன் மனைக்கு மேருவும், அநுமனிட்ட அத்தீக்குக் கால வெங் கனலும் உவமைகளாயின. தாரு - மரக்கட்டை,

(பி-ம்.) 1. நீரை வற்றிடைப் பருகி.
2. தாரு வைச்சுட்டு மாளிகை மேற்சென்ற தனிமா.
3: பற்றி யெரிக்கின்ற.
4. முற்றிவித்: இராவண னுறையுளிற் புகுந்து. (38)

1219. *வான மாதரு மற்றுள மகளிரு மறுகிப்*
*போன போனதிக் கனைவரு மறிகிலர் போனார்*
*ஏனை நின்றவ ரெங்கணு மிரிந்தன ரிலங்கைக்*
*கோன வானவர் பதிகொண்ட நாளெனக் குலைந்தார்,*

வான மாதரும் - இராவணன் மாளிகையில் இருந்த தேவ மகளிரும், மற்று உள மகளிரும்-மற்றும் உள்ள (இயக்க, கந்தருவ, சித்த வித்தியாதரர் முதலான) மகளிர்களும், அனைவரும் - எல்லோரும், மறுகி - கலங்கி, போன போன திக்கு அறிகிலர் போனார்-அவரவர் போன திக்கு இன்னது என்று அறியாதவர்களாய் நிலைகெட்டுச் சென்றனர்; ஏனை - மற்றும், நின்றவர் - ஓடாமல் நின்றவர்கள், எங்கணும் இரிந்தனர் - எங்கும் சுற்றித் திரிந்தவர்களாய், இலங்கை கோன் - இலங்கைக்கு அரசனான இராவணன், அ வானவர் பதி கொண்ட நாள் என - அந்தத் தேவர் தம்

தலைநகராகிய அமராவதியைப் பற்றிக்கொண்ட நாள்போல, குலைந் தார் - நிலை குலைந்து வருந்தினர்.

அ வானவர் என்பது எதுகை நோக்கி இயல்பாய் நின்றது. இராவ வணன் அமராவதியைக் கொண்டது, அவன் மகன் மேகநாதன் மூலம் நிகழ்ந்ததை இராவணன் மேலேற்றிக் கூறியது என்க.

(பா-ம்) 2. திக் கறிகில ரனைவரும்; திக் கறிவரு மறிவிலார்; திக் கறிகில ருவமாப்; அறியலர்.
4. நாளெனக் குலைவார். (39)

1220. நாவி யுந்நறுங் கலவையுங் கற்பக நக்க
பூவு மாரமு மகிலுமென் றினையன புகையத்
தேவு தண்மழை செறிபெருங் குலமெனத் திசையின்
பாவை மார்நறுங் குழல்களும் பரிமளம் பரந்த.

நாவியும் - (அங்கு இராவணன் அரண்மனையில் வைத்திருந்த) கத் தூரியும், நறும் கலவையும் - மணமிக்க கலவைச் சாந்துகளும், கற்பகம் நக்க பூவும் - கற்பக விருக்ஷங்களில் மலர்ந்த பூக்களும், ஆரமும் - சந் தனமும், அகிலும் - அகில் கட்டைகளும், என்று இனையன - என்று சொல்லத்தக்க இவ்விதமான வாசனைப் பொருள்கள் எல்லாம், புகைய - எரிந்து புகையாக, தண் செறி மழை பெரும் குலம் என - (அதனால்) குளிர்ச்சி நிறைந்த மேகங்களின் பெருங்கூட்டம் போல, திசையின் தேவு பாவைமார் - (எல்லாத்) திசைகளிலும் உள்ள தெய்வ மகளிர்களுடைய, நறும் குழல்களும் - (இயற்கை) மணம் பொருந்திய கூந்தல்களும், பரிமளம் பரந்த - புதிய நன்மணம் பரவப் பெற்றவை ஆயின.

நகுதல் - இங்கு மலர்தல் என்னும் பொருளில் வந்தது; 'நக்கலர் துழாஅய்' (பரிபாடல். 4:58.) 'திசையின் தேவு பாவைமார்' என்பதற்குத் திக் பாலர்களின் தேவியர்கள் எனப் பொருள் கொள்வதும் ஒன்றும்; இனி, தேவு தண் மழை என்பதற்குத் தெய்வத்தன்மையுடைய குளிர்ந்த மழை என்னலும் ஆம்; மழையைத் தெய்வமாகக் கருதிப் போற்றுவது; ''மாமழை போற்றுது மாமழை போற்றதும்,...... மேனின்று தான் சுரத் தலால்'' (சிலப். 1: மங்கல வாழ்த்து.) 'தேவுநறுங்குழல்' என இயைத்து, தெய்வமணங் கமழுங் கூந்தல் எனவும் பொருள் கொள்ளலாம். குலம் - கூட்டம்.

(பா-ம்.) 1. நாவி யின்நறுங்: கூற்பக வனமும்; கற்பக நணைசேர்.
3. தேவு தேன்மழை; தேவு மென்மனச்: குலமெனச் சகத்தில்.
4. பாவை மார்கடன்: பரிமளங் கமழ்ந்த; பயந்த: கலந்த. (40)

1221. சூழும் வெஞ்சுடர் தொடர்ந்திட யாவருந் தொடரா
ஆழி வெஞ்சினத் தாண்டொழி லிராவணன் மனையின்
ஊழி வெங்கன லுண்டிட வுலகமென் றுயர்ந்த
ஏழும் வெந்தென வெரிந்தன நெடுநிலை யேழும்.

சூழும் வெம் சுடர் தொடர்ந்திட - எங்கும் சூழ்ந்த வெப்பமான நெருப்புச் சுடர் போய்ப் பற்றிக் கொள்ள, யாவரும் தொடரா - யாரும் அணுக வொண்ணாத, ஆழி வெம் சினத்து ஆண் தொழில் இராவணன் - கடல் போன்ற (பெரிய) சினத்தோடு கூடிய வீரச் செயலுடைய இரா வணனுடைய, மனையின் - அரண்மனையின், நெடு நிலை ஏழும் - நீண்டு உயர்ந்து ஏழு நிலைமாடங்களும், ஊழி வெம் கனல் உண்டிட - யுகாந்த காலத்துக் கொடிய நெருப்பு உண்ண, உலகம் என்று உயர்ந்த ஏழும் வெந்தது என - மேலேயுள்ள உலகங்கள் என்ற ஏழும் வெந்து அழிந்தன என்று சொல்லத் தக்கவாறு, எரிந்தன - எரிந்து அழிந்தன.

ஊழித் தீயில் மேலேழுலகங்களும் அழிவனபோல் இராவணனது அரண்மனையின் ஏழுநிலை மாடங்களும் எரிந்தழிந்தன என்பதாம். இராவண னது அரண்மனையின் ஏழுநிலை மாடங்கள் மேலேழு உலகங்களுக்கும், ஊழித்தீ அநுமனிட்ட தீக்கும் உவமைகளாயின. 'வெந்தது என' என்பது வெந்தென என்று விகாரத்தால் தொகுக்கு நின்றது. ஏழும்: முற்றும்மை. நெடுநிலை யேழும்; என்பதற்கு 'உயர்ந்த எழுநிலத்தையுடைய மாடத்து' என்று கூறும் சிலப். புறஞ்சேரி; 69. அடியார்க்குநல்லாருரையும் இங்கு நோக்கத்தக்கது.

(பி-ம்.) 1. சூழும் வெங்கனல்: யாவையும் துரந்துடன் முருக்கி: யாவ ரும் தொடர்வரர்.
2. வாழி வெஞ்சினத். 3. உண்டிட வுரைக்குமே லுலகம்.
4. வெந்தன வெரிந்தன; வெந்தன வொத்தன: நெடுநில மேழும். (41)

1222. பொன்றி ருத்திய தாதலி னிராவணன் புரைதீர்
குன்ற மொத்துயர் தடநெடு மாநிலைக் கோயில்
நின்ற துற்றெரி பருகிட நெகிழ்வுற வுருகித்
தென்றி சைக்குமோர் மேருவுண் டாமெனத் தெரிந்த.

இராவணன் - இராவணனுடைய, புரை தீர் - குற்றம் நீங்கிய, குன் றம் ஒத்து உயர்-மலையைப் போல் உயர்ந்த, தட நெடு மா நிலை கோயில் - இடமகன்று உயர்ந்த பெரிய ஏழு நிலைகளையுடைய அரண்மனை, பொன் திருத்தியது ஆதலின் - பொன்னால் அமைக்கப் பெற்றதாதலால், நின்ற துற்று எரி பருகிட - நின்றவற்றைப் பற்றி எரிக்கும் நெருப்பு உண்ண.

நெகிழ்வு உற உருகி-நெகிழ்ந்து உருகி, தென் திசைக்கும் ஓர் மேரு உண்டு ஆம் என - தெற்குத் திசையினிடத்தும் ஒரு மேருமலை உள்ளது என்று சொல்லும்படி, தெரிந்த - விளங்கியது.

மேருமலை வடக்கே வெகு தூரத்திற்கு அப்பால் உள்ளது என்பது புராணக் கொள்கை. இராவணன் அரண்மனை, மேருமலைபோலப் பெருமையும், உன்னதமும் வாய்ந்து பொன்னால் அமைந்தமையால், அஃது எரியும் போது வடக்கே மேருமலை இருப்பது போலத் தெற்குத் திசையிலும் ஒரு மேருமலை இருக்கிறது என்று சொல்லும்படி விளங்கியது. தென்றிசைக்கும்: உம்மை; இறந்தது தழுவிய எச்சப் பொருளது; இழிவு சிறப்பும் ஆம். திசைக்கு: உருபுமயக்கம்.

(பி-ம்.) 1. திருத்திய தாயதால். 2. குன்றெ னப்பெரும்.
3. நின்று சுற்றெரி; நின்று துற்றெரி: நெரியுற வுருகித்: நெறிவுற வுருகித். 4. ஆமெனத் தெரிக்க. (42)

## இராவணன் முதலியோர் தப்பியோடல்

1223. *அனைய காலையி னரக்கனு மரிவையர் குழுவும்*
*புனைம ணிப்பொலி புட்பக விமானத்துப் போனார்*
*நினையு மாத்திரை யாவரு நீங்கினர் நினையும்*
*வினையி லாமையின் வெந்ததவ் விலங்கன்மே லிலங்கை.*

அனைய காலையின் - அவ்வாறு இராவணன் அரண்மனை தீப்பற்றி எரிந்தபோது, அரக்கனும் அரிவையர் குழுவும் - இராவணனும் அவனது உரிமை மாதர் கூட்டமும், புனை மணி பொலி - அலங்கரிக்கப்பட்ட இரத்தினங்களால் விளங்கும், புட்பக விமானத்து போனார் - (அந்நெருப்புக்குத் தப்பப்) புட்பக விமான மீது ஏறி மேலே சென்றனர்; யாவரும் - அவ்விலங்கையில் இருந்த மற்ற எல்லா அரக்கர்களும், நினையும் மாத்திரை - நினைத்தவுடனே, நீங்கினர் - எல்லோரும் அவ்விடம் விட்டு அகன்றனர்; நினையும் வினை இலாமையின்-நினைத்ததைச் செய்யக் கூடிய செயல் தன்னிடம் அமையப் பெறாமையால், அ விலங்கன் மேல் இலங்கை - அந்தத் திரிகூட மலையின் மேலுள்ள இலங்கை நகர், வெந்தது - தீயில் வெந்தது.

புட்பக விமானம், அதன் மீது உள்ளோர் நினைத்தவாறு நினைத்த இடத்திற்குச் செல்லும் சக்தி வாய்ந்தது. அரக்கர்கள் தாம் நினைத்த இடத்திற்குச் செல்லும் சக்தி வாய்ந்தவர். ஆதலின், இராவணனும் அவன் அரிவையர் குழுவும் புட்பக விமான மேறி வெளியே சென்றனர். அரக்கர்களும் தம் மாயையால் எழுந்து வெளியே சென்றனர். அவ்வாறு செல்லும் சக்தியற்ற அஃறிணைப் பொருளான இலங்கை நகர் அங்

கேயே யிருந்து நெருப்பில் அழிந்தது என்பதாம். விலங்கன்மே விலங்கை: 530.

இதன்பின் வரும் அதிகப்பாடலொன்று ஒரு சுவடியில் உள்ளது:--

தாவில் மேலவர்க் கருந்துயர் விளைத்திடிற் றமக்கே
மேவு மத்துய ரெனும்பொருள் மெய்யுற மேனாள்
தேவர் தம்பதிக் கிராவண னிட்டசெந் தழல்போல்
ஓவி லரிதெரித் துண்டமை யுரைப்பதற் கெளிதோ.

(பி-ம்.) 2. பொலன் புட்பகத் தேர்மிசைப்.
3. நினையு மாத்திரத்து: மாத்திரை யாகவே நீங்கினர்.
5. வினையி லாமையி னுலுடன் வெந்ததவ் விலங்கை: வெந்தன விலங்கன் மேல். (43)

## இலங்கை எரியும் காரணத்தை இராவணன் வினவி அறிந்து சினத்தல் 1274-1278

1224. *ஆழித் தேரவ னரக்கரை யழலெழ நோக்கி*
*ஏழுக் கேழென வடுக்கிய வுலகங்க ளெரியும்*
*ஊழிக் காலம்வந் துற்றதோ பிறிதுவே றுண்டோ*
*பாழித் தீசுட வெந்ததென் னகரெனப் பகர்ந்தான்.*

ஆழி தேர் அவன் - சக்கரங்களைக் கொண்ட தேரையுடைய இராவணன், அரக்கரை அழல் எழ நோக்கி - தன்னுடன் வந்த அரக்கர்களைத் தன் விழிகளில் நெருப்புக் கிளம்பும் சினத்துடன் பார்த்து, ஏழுக்கு ஏழு என அடுக்கிய உலகங்கள் - கீழேழுக்கு நேராக மேலும் ஏழாக அடுக்கி அமைத்தன போல உள்ள (பதினான்கு) உலகங்களும், எரியும் - எரிந்து போகும்படியான, ஊழி காலம் வந்து உற்றதோ - பிரளயகாலம் (இப்பொழுது) வந்து விட்டதோ? பிறிது வேறு உண்டோ - வேறு ஏதாவது நிகழ்ந்ததோ? நகர் பாழி தீ சுட வெந்தது என் என - இந்த இலங்கை நகர் பெரு நெருப்பு எரிக்க வெந்து அழிந்ததற்குக் காரணம் என்னவென்று, பகர்ந்தான் - கேட்டான்.

'ஊழிக் காலத்தில் பதினான்கு உலகங்களும் தீயால் அழியும்; அந்த ஊழிக்காலம் இப்பொழுது வந்து விட்டதா? பின் எக்காரணத்தால் இந் நகர் தீ சுட வெந்தது?' என்று இராவணன் மற்ற அரக்கரை நோக்கி வினவினான் என்க, பாழி - பெருமை.

(பி-ம்.) 2. ஏழென வியம்பிய வுலகுக ளெரியும். 3. பிறிதுற்ற லுண்டோ.
4. சுட வந்தது; சுட வந்ததென் பகரெனப்: என் னேவென வறைந்தான். (44)

1225. *கரங்கள் கூப்பினர் தங்கிளை திருவொடுங் காணார்*
*இரங்கு கின்றவல் லரக்கரீ தியம்பின ரிறையோய்*
*தரங்க வேலையி னெடியதன் வாலிட்ட தழலால்*
*குரங்கு சுட்டதீ தென்றலு மிராவணன் கொதித்தான்.*

(அங்ஙனம் இராவணன் வினவியதும்) தம் கிளை திரு ஒடும் காணார் - தம் சுற்றத்தார்களைத் தம் செல்வத்தோடும் காணாதவர்களாய், இரங்கு கின்ற வல் அரக்கர் - வருந்துபவராய் இருந்த அவ்வலிய அரக்கர்கள், கரங்கள் கூப்பினர் - கைகளைக் குவித்து வணங்கினவர்களாய், ஈது இயம்பினர் - பின்வரும் இச்செய்தியைச் சொன்னார்கள்; 'இறையோய் - அரசனே! தரங்கம் வேலையின் நெடிய - கடல் அலையிலும் நீண்டதான, தன் வால் இட்ட தழலால் - அக்குரங்கின் வாலில் நாம் இட்ட நெருப் பால், குரங்கு சுட்டது ஈது - அக்குரங்கு எரித்தது இது ஆகும்;' என்ற லும் - என்று சொன்னவுடன், இராவணன் கொதித்தான் - இராவணன் கோபமேற் கொண்டான்.

கிளை - சுற்றம்; உவமையாகு பெயர். சுட்ட தீது எனப்பிரித்தும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1 கூப்பினர் தங்களை. 2. அரக்கரு மியம்பினர்.
3. வேலையி னெடிதின்; நெடிதின் வாலிட்டன தழலால்.
4 சுட்டதென் றுரைத்தலும் சுட்டதீங் கென்றலும்; சுட்டன வென்றலும்; சுட்டது வென்றலும். (45)

1226. *இன்று புன்றொழிற் குரங்குதன் வலியினா லிலங்கை*
*நின்று வெந்துமா நீறெழு கின்றது நெருப்பு*
*தின்று தேக்கிடு கின்றது தேவர்கள் சிரிப்பார்*
*நன்று நன்றுபோ ரிராவணன் வலியென நக்கான்.*

'இன்று - இன்றைக்கு, புன் தொழில் குரங்கு தன் வலியினால் - அற்பத் தொழிலையுடைய (ஒரு) குரங்கின் வலிமையால், இலங்கை நின்று வெந்து மா நீறு எழுகின்றது - (நம்) இலங்கை நகர் நின்று எரிந்து பெரும் சாம்பல் எழுந்து கிளம்புகின்றது; நெருப்பு தின்று தேக்கு இடு கின்றது - நெருப்பும் (நகரை) உண்டு ஏப்பம் விடுகின்றது; தேவர்கள் சிரிப்பார் - (இதனைக் கண்டால் நமக்குத் தோற்று வலியிழந்த) தேவர் களும் நகைப்பார்கள்; இராவணன் போர் வலி நன்று நன்று என-இரா வணனுடைய போர்த் திறமை மிக நன்றாக இருக்கிறது!' எனக் கூறி, நக்கான் - (வெகுளி மேலீட்டால்) சிரித்தான்.

இலங்கை நின்று - இலங்கையும் தப்பமாட்டாது நின்; எனக் கொள்ளலும் ஆம். தின்று தேக்கிடுதல் - அதிகம் உண்டமையால்

ஏப்பமிடுதல்; நெருப்பு ஏப்பம் விடுதல், இராவணனுக்கு அஞ்சாமை யாலும் ஆம். நன்று நன்று: அடுக்கு இகழ்ச்சிப் பொருளது; வெகுளிப் பொருளதும் ஆம்.

(பி-ம்.) 1. என்று கொல்குரங் கன்னதிவ் வலியுள திலங்கை; ஒன்று போல்குரங் கன்னதன் வலியின திலங்கை.
2. நின்று வெந்துயர்; நின்று வெந்துறு நீறெழு: நீறெழும் படிபெரு நெருப்புத் 4. நன்று நன்றுபோல். (46)

வேறு

1227. உண்டநெ ருப்பைக், கண்டனர் பற்றிக்,
கொண்டணை கென்றான், அண்டரை வென்றான்.

அண்டரை வென்றான் - தேவர்களை வென்றவனான இராவணன், 'உண்ட நெருப்பை - இலங்கையை எரித்த அக்கினிக் கடவுளை, கண்டனர் - பார்த்தவர்கள், பற்றிக் கொண்டு அணைக - பிடித்துக் கொண்டு இங்கு வருவீர்களாக' என்றான் - என்று கட்டளையிட்டான்.

அவன் ஆணைக்கு அஞ்சி அதுகாறும் அடங்கியிருந்த அக்கினி இப்பொழுது அந்நகரையே யெரித்தமையால் இராவணன் அதனிடம் கோப முற்று அதனைப்பிடித்து வரச் செய்தான் என்க.

(பி-ம்.) 1. உண்டெதிர் நெருப்பை; 2. கண்டெதிர் பற்றிக்.
3. கொண்டணை கென்றனன். (47)

1228. உற்றக லாமுன், செற்ற குரங்கைப்
பற்றுமி னென்றான். முற்ற முனிந்தான்.

முற்ற முனிந்தான் - மிகவும் சினமுற்றவனான இராவணன், 'செற்ற குரங்கை - நமக்கு இவ்வளவு அழிவு செய்த அக்குரங்கை, உற்று அகலா முன் - அவ்விடம் சென்று அது தப்பிப் போகா முன்னம், பற்றுமின் என்றான் - பிடித்து வாருங்கள்' என்று கட்டளையிட்டான்.

(பி-ம்.) 2. கற்ற குரங்கைப். 4. முற்று முனிந்தான். (48)

## அரக்கர்கள் அநுமனை நாடிக் காண்டல் 1229-1233

1229. சாரய னின்றார். வீரர் விரைந்தார்,
நேருது மென்றார், தேரினர் சென்றார்.

சார் அயல் நின்றார் - இராவணனைச் சார்ந்து பக்கத்தில் நின்ற (அரக்கர்களான), வீரர் - போர் வீரர்கள், நேருதும் என்றார் - (அவ்வாறே) போய்ச் சேர்ந்து அக்குரங்கைப் பிடித்து வருகிறோம் என்று, விரைந்தார் - விரைந்து, தேரினர் சென்றார் - தேரின் மேலேறிச் சென்றனர்.

நேர்தல் - உடன்படுதல்; எதிர்த்துப் போரிடுதலும் ஆம். தேரினர் - தேர்ந்துணர்ந்த வீரர்கள் என்றும், தேடினவர்களாய் எனவும் பொருள் கொள்ளலாம்.

(பி-ம்.) 1. சாரயல் சாரா. 3. நேரிது வென்றே. (49)

1230. *எல்லை யிகந்தார், வில்லர் வெகுண்டார்,*
*பல்லதி காரத், தொல்லர் தொடர்ந்தார்.*

எல்லை இகந்தார் - அளவு கடந்தவர்களான, வில்லர் - வில் வீரர்கள், வெகுண்டார் - கோபமுற்றெழுந்தனர்; பல் அதிகார தொல்லர் - பலவகை அதிகாரப் பதவியில் தொன்றுதொட்டு உள்ளவர்களும், தொடர்ந்தார் - அந்த வில் வீரர்களைத் தொடர்ந்து சென்றனர்.

(பி-ம்.) 1. வல்லை யிகந்தார்: எல்லை யிகழ்ந்தார். 3. புல்லதி காரத்
4. தொல்லை பயந்தார்; தெல்லை பயத்தார்; தொல்லர் பெயர்ந்தார். (50)

வேறு

1231. *நீர்கெழு வேலை நிமிர்ந்தார், தார்கெழு தானை சமைந்தார்,*
*போர்கெழு மாலை புனைந்தார், ஓரெழு வீர ருயர்ந்தார்.*

உயர்ந்தார் ஓர் எழு வீரர் - அவ்வீரர்களுள் உயர்ந்த ஓர் எழுவர், போர்கெழு மாலை புனைந்தார் - போரிடுதற்குரிய சிறந்த (அடையாளமாகிய தும்பை) மாலையைத் தரித்தவர்களாய், நீர்கெழு வேலை நிமிர்ந்தார் - நீர் மிகும் கடல் போல் நிமிர்ந்து எழுந்தவர்களாய், தார் கெழு தானை சமைந்தார் - முன்னணியிற் செல்லும் சிறந்த சேனையில் அமைந்து சென்றனர்.

போர் கெழுமாலை; இங்குத் தும்பை; பு. வெ. 127. தார்கெழு தானை - தூசிப்படை, முன்னணிப்படை; பு. வெ. 41, 71.

(பி-ம்.) 1. வேலையி னீளும். 2. தானை யமைந்தோர்.
3. போர்கெழு மோதை புனைந்தார். (51)

1232. *விண்ணினை வேலை விளிம்பார், மண்ணினை யோடி வளைந்தார்,*
*அண்ணலை நாடி யணைந்தார், கண்ணினின் வேறயல் கண்டார்.*

விண்ணினை - வானத்தையும், வேலை விளிம்பு ஆர் - கடலின் விளிம்பிலே (அதாவது ஓரத்திலே) பொருந்தியுள்ள, மண்ணினை ஓடி வளைந்தார் - இலங்கைப் பூமியையும் ஓடிச் சென்று சூழ்ந்து கொண்டவர்களாய், அண்ணலை நாடி அணைந்தார் - பெரியோனான அநுமனை நாடி அருகுற்ற அவ்வீரர், (அவன்), அயல் - அருகே, வேறு - தனியே யிருக்க, கண்ணினில் கண்டார் - தம் கண்களில் தெரியப் பார்த்தார்.

கண்ணில் காண்டல்; 'கண்டனென் கற்பினிக் கணியைக் கண்களால்' 1269.

(பி-ம்.) 1. வேலை விளிப்பார்: விண்ணிடி போல வெகுண்டார். 2. மண்ணிடை யோடி. 3. அண்ணலை யோடி. 4. கண்ணெதிர் நிற்பன கண்டார். (52)

1233. *பற்றுதிர் பற்றுதி ரென்பார், எற்றுதி ரெற்றுதி ரென்பார்,*
*முற்றினர் முற்று முனிந்தார், கற்றுணர் மாருதி கண்டான்.*

'பற்றுதிர் பற்றுதிர் என்பார் - (இக்குரங்கைப்) பிடித்துக் கொள்ளுங்கள், பிடித்துக் கொள்ளுங்கள் என்று சொல்வாரும், எற்றுதிர் எற்றுதிர் என்பார் - இதனைத் தாக்கி அடியுங்கள், தாக்கி அடியுங்கள்' என்று சொல்வாரும், முற்றினர் - அநுமனை வளைத்துக் கொண்டவர்களாய், முற்றும் முனிந்தார்-மிக்க கோபங்கொண்டு எதிர்த்தனர்; கற்று உணர் மாருதி கண்டான் - நூல்களைக் கற்று உணர்ந்த அறிவனான அநுமன் அவர்களைப் பார்த்தான்.

பற்றுதிர் பற்றுதிர்; எற்றுதிர் எற்றுதிர் என்னும் அடுக்குகள் விரைவுப் பொருளன. கற்றுணர் மாருதி; 1237; கிட்கிந்தா. மகேந்திரப்: 9, 15; மராமரப்: 20.

(பி-ம்.) 1. பற்றுதி ரென்றார். 2. எற்றுதி ரென்றார். 3. சுற்றுதிர் சுற்றுதி ரென்பார்; என்றார்; முற்றி முனிந்தார்; முற்றுநர் முற்று முனிந்தார்; முற்றுறை வோரு முனிந்தார்; முற்றுதிர் முற்றுதி ரென்பார். (53)

## அநுமன் அரக்கர்களைக் கொன்று வெளியேறல் 1234 1240

1234. *ஏல்கொடு வஞ்ச ரெதிர்ந்தார், கால்கொடு கைகொடு கார்போல்*
*வேல்கொடு கோலினர்வெந்தீ, வால்கொடு தானும் வளைத்தான்,*

வஞ்சர் - கொடிய அவ்வரக்கர்கள், கார் போல் - மேகங்கள்போல, ஏல் கொடு - எதிர்கொண்டு, எதிர்ந்தார் - தோன்றினவர்களாகி, கால் கொடு கை கொடு வேல் கொடு கோலினர் - கால்களைக் கொண்டும் கைகளைக் கொண்டும், வேல்களைக் கொண்டும் (அநுமனை) வளைத்துக் கொண்டனர்; வெம் தீ வால் கொடு - வெவ்விய நெருப்புள்ள (தன்) வாலைக் கொண்டு, தானும் - (அவ்வரக்கர்களை) அநுமனும், வளைத்தான் - வளைத்துக் கொன்டான்.

'கால் கொடு கை கொடு கார் போல்' என்பதற்குக் கால்களும் கைகளும் கொண்டுள்ள மேகங்கள் போல, என்று பொருள்கொள்வாரும் உளர்; அவ்வாறு கொண்டால் அஃது இல்பொருளுவமையாகும். அரக்கர்கள் கருநிறமுடையவர் ஆதலின் அவர்களுக்குக் கார் உவமை ஆகும்.

(பி-ம்.) 2. கால் போல். 3. வேல்கொடு வேலினர் வெந்தீ. (54)

1235. பாதவ மொன்று பறித்தான், மாதிரம் வாலின் வளைத்தான்,
மோதினன் மோத முனிந்தார், ஏதியு நாளு மிழந்தார்.

மாதிரம் வாலின் வளைத்தான் - எல்லாத் திசைகளிலுமிருந்து (அவ்வரக்கர்களைத் தன்) வாலால் வளைத்துக் கொண்ட அநுமன், பாதவம் ஒன்று பறித்தான் - ஒரு மரத்தைப் பறித்துக் கொண்டு, மோதினன் - அவ்வரக்கர் மீது தாக்கியடித்தான்; மோத - அவ்வாறு அடித்ததால், முனிந்தார் - அப்பகைவர்களான அரக்கர்கள், ஏதியும் நாளும் இழந்தார் - தம்முடைய ஆயுதங்களையும், வாழ்நாளையும் இழந்தனர்.

முனிந்தார் - கோபித்துப் போரிட்ட அவ்வரக்கர்கள் என்றலும் அமையும். ஏதியும் நாளும்; உடனிகழ்ச்சிப் பொருள்.

(பி-ம்.) 1. பாதப மொன்று பகுத்தான். 2. வாலின் வளைந்தான்.
3. மோதினர் மோத முனிந்தான்; மோதினன் மோதி.
4. ஓதிய நாளு முலந்தார். (55)

1236. நூறிட மாருதி நொந்தார், ஊறிட வூனொடு புண்ணீர்
சேறிட வூரிடு செந்தீ, ஆறிட வோடின தாறாய்.

மாருதி நூறிட - அநுமன் (அவ்வாறு) அழிக்க, நொந்தார் - அதனால் வருந்தினவர்களான அவ்வரக்கர்கள், ஊறு இட - காயம் உண்டாக்க, ஊன் ஒடு புண்ணீர் சேறு இட - தசைகளோடு கூடிய இரத்தப் பெருக்கங்கள் சேற்றை யுண்டாக்க, ஊர் இடு செம் தீ ஆறிட - (அவ்விரத்தப் பெருக்கால்) அநுமன் அவ்விலங்கையி லிட்ட செங்கனல் ஆறி அணைந்து போகும்படி, ஆறாய் ஓடினது - ஆறு போலப் பெருக்கெடுத் தோடியது.

(பி-ம்.) 2. ஊனிடு புண்ணீர்.
3. ஊரடு செந்தீ: சேறிட வேயெறி செந்தீ. (56)

1237. *தோற்றினர் துஞ்சின ரல்லார், ஏற்றிகல் வீர ரெதிர்ந்தார்,*
*காற்றின் மகன்கலை கற்ருன், கூற்றினு மும்மடி கொன்ருன்.*

துஞ்சினர் அல்லார் தோற்றினர் - (அப்போரில்) இறந்தோர்கள் அல்லாமல் அங்குத் தென்பட்டவர்களான, ஏறு இகல் வீரர் - ஆண் சிங்கம் போன்ற போர் வீரர்கள், எதிர்ந்தார் - அநுமனை எதிர்த்துப் போரிட்டனர்; கலை கற்ருன்-எல்லாக்கலைகளையும் கற்ற, காற்றின் மகன்-வாயு குமாரனுன அநுமன், கூற்றினும் மு மடி - யமனிலும் மும் மடங்கு (வலிமை யுடையவனுகி), கொன்ருன் - அவர்களைக் கொன்றுவிட்டான்.

கூற்றினும்: உம்மை, உயர்வு சிறப்பு. அநுமன் கலை கற்றவன்: 1233. உரை.

(பி-ம்.) 1. தோற்றிலர் துஞ்சின ரல்லால்; தோற்றமுன் துஞ்சினர் போக.
3. மகன்கருத் தவரைக். 4. மும்மடி கொண்டான். (57)

1238. *மஞ்சுறழ் மேனியர் வன்ருேள், மொய்ம்பினர் வீரர் முடிந்தார்,*
*ஐம்பதி னுயிர ரல்லார், பைம்புனல் வேலை படிந்தார்.*

மஞ்சு உறழ் மேனியர் - மேகம் போன்று (கரியநிறமுடைய) உடல்களையுடையவரும், வன் தோள் மொய்ம்பினர் - வலிய தோள்வலி யுடையவர்களுமான, வீரர் - அவ்வரக்கர் படை வீரர்கள், ஐம்பதின் ஆயிரர் - ஐம்பதாயிரம் பேர்கள், முடிந்தார் - (அநுமனுல் அங்கு) இறந்தனர்: அல்லார் - அவர்கள் அல்லாது (தப்பி யோடினவர்), பைம் புனல் வேலை படிந்தார் - பசிய நீரையுடைய கடலிற் போய் விழுந்தனர்.

பைம்புனல் வேலை: கடல் நீர் கருமை நிறமுடையதேனும், கருமை, பசுமை, நீலம் முதலிய நிறங்களை ஒரு தன்மையாகக் கருதும் கவிமரபு பற்றி இங்குப் பைம் புனல் எனப்பட்டது. இதன் பின் ஒரு சுவடியில் ஓர் அதிகப் பாடல் உள்ளது.

மற்ருெரு கோடியர் வந்தார், உற்றெதி ரோடி யுடன்ருர்,
கற்றுறு மாருதி காய்ந்தே, சுற்றினன் வால்கொடு தூங்க.

(பி-ம்.) 1. மைம்புற மேனியர்: வம்புறு மேனியர் வன்ருேள்.
2. ஐம்பது கோடிய ரல்லார்: 3. மொய்ம்பினர் வீரர் முடிந்தோர். (58)

1239. *தோய்ச்சனன் வாலதி தோயாக், காய்ச்சின வேலை கலந்தார்,*
*போய்ச்சிலர் பொன்றினர் போனார், ஏச்சென மைந்த ரெதிர்ந்தார்.*

வாலதி தோய்ச்சனன் - (அநுமன் தன் வாலை நெருப்பு அணைய அக் கடலில்) தோய்த்தான்; தோயா - (அவ்வாறு) தோய்க்கவே, காய்ச்சின - காய்ச்சியது போலச் சூடேறிய, வேலை - கடலில், போய் கலந்தார் சிலர் - முன்னர்ப் போய் விழுந்த அரக்கர்களிற் சிலர், பொன்றினர் போனார் - இறந்தவர்கள் ஆயினர்; மைந்தர் - (அக்கடலினின்று வெளி வந்த) வலிமையுடைய வீரர்கள், ஏச்சு என - (இவ்வாறு நாம் ஒளிந்தி ருப்பது) பழிப்புக்கு இடமாகும் என்று எண்ணி, எதிர்ந்தார் - அநுமனை (மீண்டும்) எதிர்த்துப் போரிடுவாராயினர்.

தோய்ச்சனன்: தோய்த்தனன் என்பதன் போலி. வாலதி - வால்; வி. பா. புட்ப: 22, 52, 53. ஏச்சு - பழிப்பு, நிந்தனை. மைந்தர் - வலிமை யுடைய வீரர்; மைந்து - வலிமை. 'மைந்தர் - ஏழு பெயர்' (பழைய உரை).

(*பி-ம்.*) 1. தோய்த்தனன் வாலதி தோய; வாலது தோயக்: தோய்ந்தழல் வாலிடை சுற்றிக்.
2. காய்த்துயர்; காய்த்திய; காய்ச்சிய: காய்த்தவ ரைக்கட லிட் டான். 3. போய்த்திலர்: போய்த்துயிர் பொன்றினர் போமுன்;
4. ஏய்த்தெழு; ஏய்த்தெழு வோரு மெதிர்ந்தார்: ஏய்த்தனர் வீர ரெதிர்ந்தார். (59)

1240. *சுற்றினர் தேரினர் தோலா, விற்றொழில் வீரம் விளைத்தார்,*
*எற்றினன் மாருதி யெற்ற, உற்றெழு வோரு முலந்தார்.*

சுற்றினர் தேரினர் - (எதிர்ந்த வீரர்கள்) சுழன்று ஓடிய தேர்மீது உற்றவர்களாய், தோலா - தோல்வியடையாத, வில் தொழில் வீரம் விளைத்தார் - தம் விற்போர்த் தொழிலில் வீரத்தைக் காட்டிப் போர் செய்தனர்; மாருதி எற்றினன் - அநுமன் அவர்களைத் தாக்கியடித்தான்; எற்ற - அவ்வாறு அடிக்க, உற்று எழுவோரும் - உறுத்து மேலும் போர் செய்ய எழுந்த அவர்களும், உலந்தார் - அழிந்தனர்.

எழுவோர் கடலிலிருந்து எழுந்து வந்தவரும் என்றும் கொள்ளலாம். எழுவோர்: முன் 1231 இல் குறிப்பிட்ட ஒரேழு வீரர் அல்லர். அவர்கள் இறந்தமை, 1235 ஆல் அறியக்கிடக்கும். இதன்பின் ஒரு சுவடியில் பின்வரும் 3 பாடல்கள் காணப்படுகின்றன.

உற்றவர் யாரு முலர்ந்தார், மற்றது போதினில் வானோர்,
வெற்றி கொள் மாருதி மீதே, பொற்றரு மாமலர் போர்த்தார்.

வன்றிறல் மாருதி கேண்மோ, நின்றிடி னீபடு தின்றே,
சென்றிடு வாயெனத் தேவர், ஒன்றிய வானி னுரைத்தார்.

விண்ணவ ரோதிய மெய்ம்மை, எண்ணி யிராமனை இன்றே,
கண்ணுற லேகட வென்றுங், கண்ணலு மவ்வயின் மீண்டான்.

(பி-ம்.) 1. தேர்கொடு தோலர்.
2. விற்றிறல் வீரம்; வீரர்: வீரம் வினைந்தார்.
3. எற்றின மாருதி; எற்றெழு மாருதி; எற்றென மாருதி.
4. வீர ருலைந்தார்: உலர்ந்தார். (60)

## பிராட்டி யிருந்த இடம் எரியால் ஊறுபடாமை

1241. *விட்டுயர் விஞ்சையர் வெந்தீ, வட்ட முலைத்திரு வைகும்,*
*புட்டிரள் சோலை புறத்தும், சுட்டில தென்பது சொன்னார்.*

விட்டு உயர் விஞ்சையர் - அவ்விடம் விட்டு மேலே சென்ற வித்தியாதரர், 'வெம் தீ - அநுமனிட்ட அக்கொடிய தீ, வட்ட முலை திரு வைகும் - வட்டமான தனங்களையுடைய பிராட்டி தங்கியிருக்கும், புள் திரள் சோலை புறத்தும் சுட்டு இலது - பறவைகள் கூடியிருக்கும் சோலையின் உள்ளேயும், வெளிப்புறத்தையும் சுடவில்லை;' என்பது - என்ற செய்தியை, சொன்னார் - (அநுமன் அறியும்படி) பேசிக்கொண்டனர்.

அநுமன் தன் வாலாற் கொளுத்திய தீயால் அசோகவனத்திலிருந்த பிராட்டியும் அத்தீப்பட்டு இறந்து விட்டாளோ என்று வருந்த, ஆகாயத்தில் செல்லும் சாரணர் பிராட்டியிருக்குமிடம் மட்டும் எரியாது இருக்கும் அதிசயத்தை வியந்து பேசிக்கொண்டு செல்வதை உற்றுக் கேட்டு மனம் தேறுவனாயினன் என்று முதல்நூல் கூறும். மேலும், அநுமன் இட்ட தீயால், அசோகவனத்தில் பிராட்டி இருந்த இடமும் விபீஷணன் மாளிகையும் அன்றி இலங்கை நகரில் மற்றயாவும் அழிந்தன என்பதும் அம் முதனூலாலே விளங்குவது காணலாம். இங்கு அவ்விஷயத்தை இனி, அநுமன் மேற்கொள்ளும் விரைவு செயற்கு ஏற்பத் தொகுத்துச் சுருக்கமாகக் கூறப்பெற்றது என்க.

(பி-ம்.) 1. விட்டொளிர். 4. சுட்டில னென்பது; சுட்டிலை யென்பது. (61)

## அநுமன் பிராட்டியைப் பணிந்து விடை கொண்டேகல் 1242-1244

1242. *வந்தவர் சொல்ல மகிழ்ந்தான், வெந்திறல் வீரன் வியந்தான்,*
*உய்ந்தெனை னென்ன வுயர்ந்தான், பைந்தொடி தாள்கள் பணிந்தான்*

வந்தவர் சொல்ல - அங்கு வானில் வந்த வித்தியாதரர் (அவ்வாறு) சொல்ல, வெம் திறல் வீரன் மகிழ்ந்தான் - வெவ்விய திறமையுடைய வீரனான அநுமன் மகிழ்ச்சி யடைந்து, வியந்தான் - பிராட்டியின் கற்பின் தன்மையைப் பாராட்டி, உய்ந்தனன் என்ன உயர்ந்தான் - நான் (கொடும் பழியினின்றும் தப்பினேன் என்று அவ்விடம் விட்டு மேல் எழுந்தவனாகிச் (சென்று), பைம் தொடி தாள்கள் பணிந்தான் - பசிய (பொன்) வளையல்களை அணிந்த பிராட்டியின் திருவடிகளில் பணிந்து வணங்கினான்.

தானிட்ட தீயினால் பிராட்டி இறந்து போயிருந்தால் உண்டாகக் கூடிய பழியினின்றும் நீங்கினானதலின் உய்ந்தனன் என்னப்பட்டது. வியந்தது: கற்பின் தீயாகிய பிராட்டியின் முன் தன் வாலினில் உள்ள தீ அணுக முடியாத சிறப்பை நினைந்து என்க. பிராட்டி கற்பின் தீ என்பது; ஆரண்ய. சூர்ப்பணகைப்: 58. பைந்தொடி என்பது இங்குப் பெண் என்னும் பொதுப் பொருளில் வந்தது. ஒரு சுவடியில் 2, 3 அடிகள் முறைமாறி யுள்ளன.

(பி-ம்.) 1. மகிழ்ந்தாங்(கு).
2. வெந்திறல் வீரன் வியன்றேள்; வெந்துயிர் வீரன்: உய்ந்தன னென்ன வுவந்தே.
3. வெந்திறல் வீரனு மேவிப்: உவந்தான். (62)

1243. *பார்த்தனள் சானகி பாராக், கூர்த்தெரி மேனி குளிர்ந்தாள்,*
*வார்த்தையென் வந்தனை* யென்னாப்; போர்த்தொழில் மாருதி போனான்.

பார்த்தனள் சானகி - அவ்வாறு வந்து வணங்கின அநுமனைப் பார்த்த பிராட்டி, பாரா-பார்த்தவுடன், எரி மேனி கூர்த்து குளிர்ந்தாள்- தீப்பற்றியெரிவது போல் வருந்திய தன் உடல் மிகவும் குளிர்ச்சியடைந் தவளானாள்; வார்த்தை என்-மேலும் யான் சொல்லவேண்டிய வார்த்தை வேறு என்ன இருக்கிறது (ஒன்றுமில்லை யென்றபடி); வந்தனை என்னா - நமஸ்காரம் என்று சொல்லி, போர் தொழில் மாருதி போனான் - போர்த் தொழிலிற் சிறந்த அநுமன் (இராமபிரானிருக்கும் இடம் நாடிச்) சென்றான்.

கூர்த்து எரி மேனி என்றது: அநுமன் வாலில் நெருப்பிடப்பட்டது என்ற செய்தியை அறிந்த பிராட்டி அதனால் தன் மேனி எரியாற் சுடப் படுவது போன்று மிகவும் வருந்தி யிருந்தாளாதலின் என்க. குளிர்ந்தாள்: அநுமன் அத்தீயாலும், போரிட்ட அரக்கர்களாலும் ஓர் ஊறும் எய்தா மல் வரக்கண்டா ளாதலின். வார்த்தை யென்: பிராட்டி சொல்ல வேண் டியதும், தான் சொல்ல வேண்டியதும் முன்னமே தெளிவாகப் பேசப் பட்டனவாதலின் இனி வேறு இல்லை என்னுங் குறிப்பில் உள்ளது. 'வார்த்

தையென் வந்தனை யென்ன - வார்த்தையுண்டோ வென்று பிராட்டி கேட்டருளத், தேவரீரைச் சேவிக்க விடை கொண்டேனென்று விண்ணப்பம் செய்தார் மாருதி' என்பது பழைய உரை. வார்த்தை யென். என்றதால் இனிச் செய்ய வேண்டியது இராமபிரான் போருக் கெழுந்து வரலாகிய செயலொன்றே என்று குறித்ததும் ஆகலாம், போர்த் தொழில் மாருதி: இனி நடக்கவேண்டிய பெரும் போர் நிகழ்ச்சியைக் கருதிச் சென்ற மாருதி என்னலும் ஆம், இதன் பின் ஒரு சுவடியில் பின் வரும் செய்யுள் காணப்படுகிறது:—

வாலிதின் ஞான வலத்தால், மாலுறு மைம்பகை மாய்த்தே
மேல்கதி மேவுறு மேலோர், போல்வய மாருதி போனுன்.

(பி-ம்.) 2. கோர்த்தெரி மேனி குளிர்ந்தரன்.
3. வார்த்தையென் வந்தன னென்னுப். (63)

1244. *தெள்ளிய மாருதி சென்ருன், கள்ள வரக்கர்கள் கண்டால்,*
*எள்ளுவர் பற்றுவ ரென்னு, ஒள்ளெரி யோனு மொளித்தான்.*

'தெள்ளிய மாருதி - தெளிந்த அறிவுடைய அநுமனே, சென்ருன் - (என்னைத் தனியே விட்டுப்) போய் விட்டான்; கள்ள அரக்கர்கள் கண்டால் - திருட்டுச் செயலையுடைய அரக்கர்கள் யான் தனித்திருப்பதைப் பார்த்தால், எள்ளுவர் பற்றுவர் என்னு - (இராவணன் முன் ஆணையிட்ட படி என்னை) நிந்தித்துப் பிடித்துச் செல்வர்' என்று எண்ணி, ஒள் எரி யோனும் ஒளித்தான் - ஒளி பொருந்திய அக்கினித் தேவனும் தன்னை மறைத்துக் கொண்டான்.

அநுமனைத் துணையாக இதுகாறும் தான் அடைந்திருந்தமையால், அவனுக்கு அஞ்சி அரக்கர்கள் அணுகிப் பற்ற முடியவில்லை என்றும், இனித் தன்னை அரக்கர்கள் பற்றி இராவணனிடம் விடுவர்; விட்டால் தனக்கு அவனுல் தண்டனை கிடைக்கும் என்றும் அஞ்சி, எரியோன் ஒளித்தான் என்பதாம். தெள்ளிய மாருதி என்பது; 599; கிட்கிந்தா. மராமரப். 36. ஒரு சுவடியில் இப்படலம் இங்கு முடியாமல் மேலும் செல்லுகின்றது.

(பி-ம்.) 3. எள்ளலர்; எள்ளலர் பற்றல ரென்னு. (64)

இலங்கையெரியூட்டு படலம் முற்றும்.

# 14. திருவடிதொழுத படலம்

## அநுமன் இலங்கையினின்று திரும்புதல் 1245-46.

1245. *நீங்குவென் விரைவி னென்னு நினைவினன் மருங்கு நின்ற*
*ஆங்கொரு குடுமிக் குன்றை யருக்கனி லணைந்த வையன்*
*வீங்கின னுலகை யெல்லாம் விழுங்கின னென்ன வீரன்*
*பூங்கழ றொழுது வாழ்த்தி விசும்பிடைக் கடிது போனான்.*

திருவடி தொழுத படலம் - இஃது அநுமன், இலங்கையில் பிராட்டியைக் கண்டு திரும்பிச் சென்று, இராமபிரான் திருவடிகளைத் தொழுது, பிராட்டியின் விருத்தாந்தங்களைக் கூறிய செய்தியைக் கூறுவது என விரியும். இனி, அநுமனைச் சிறிய திருவடியென்று வழங்கி வரும் சிறப்புக் கேற்ப, (சிறிய) திருவடியாகிய அநுமன் இராமபிரானை வணங்கிப் பிராட்டியைக் கண்டுவந்த செய்தியைக் கூறும் படலம் எனக் கோடலும் ஒன்றும், அநுமனைத் திருவடி என்று சொல்வது' கிட்கிந்தா. மகேந்திரப்: 26; வி, பா. புட்பயாத்: 59. சில சுவடிகளில் இது திருவடி தொழு படலம் என்றும், (ஒரு சுவடியில்), அநுமார் மீட்சிப் படலம் என்றும், வேறு பெயர்களுடனும் காணப்படுகிறது. சில சுவடிகளில் இப் படலம், (1) மீட்சிப்படலம் (2) மதுவனப் படலம், (3) அநுமத் காட்சிப் படலம் என மூன்றாகப் பிரிந்து காண்கிறது.

விரைவின் - வேகத்தில், நீங்குவென் என்னும் நினைவினன் - (இவ் விலங்கையை) நீங்கிச் செல்வேன் என்ற எண்ணமுடையவனாய், ஆங்கு - அவ்விடத்தில், மருங்கு நின்ற - அருகேயிருந்த, ஒரு குடுமிக் குன்றை - சிகரத்தோடு விளங்கிய ஒரு மலையை, அருக்கனின் - சூரியனைப் போல, அணைந்த ஐயன் - சேர்ந்த அநுமன், உலகை எல்லாம் விழுங்கினன் என்ன வீங்கினன் - உலகம் யாவையும் (தன் திருவயிற்றுள் அடங்கும்படி) விழுங்கிய திருமாலே போலப் பேருருவைக் கொண்டு, வீரன் பூம் கழல் தொழுது வாழ்த்தி - இரகு வீரனான இராமபிரானின் அழகிய கழலணிந்த திருவடிகளை (தன் மனத்தால்) வணங்கித் துதித்து, விசும்பு இடை - ஆகாய மார்க்கமாக, கடிது போனான்-விரைவில் சென்றான்.

அநுமன் கடல் தாவிய வரலாற்றை ஒரு நீண்ட படலத்தில் கூறி, அவன் திரும்பிய செய்தியை இரண்டே பாடல்களில் அமைத்த கருத்து நோக்கத்தக்கது. குடுமிக்குன்றை அணைந்த அருக்கனில் என இயைத்து, சிகரங்களோடு கூடிய உதயகிரியை அடைந்த சூரியனைப் போல என்ன

னுமாம், திருமால் உலகங்களை விழுங்கியது; பால. வேள்வி: 26. அநுமன் இலங்கையிலிருந்து கடல் கடக்க ஏறிய மலை அரிஷ்டம் என்னும் பெயரது என வான்மீகம் கூறும். 'வடக்கு வாசற் சுவேல பருப்பதம்' 'என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. நீங்குதல் கரும மென்றே நினைந்துமா ருதியாந் தேவன்.
2. அருக்கனி னணைந்த; அருகினி லணைந்த: அணைந்த மெய்யன்; இலங்கை வெற்பி னருக்கனைத் தும்பர் தாவி.
3. பூங்கழற் றெழுது. (1)

1246. மைந்நாக மென்ன நின்ற குன்றையு மரபி னெய்திக்
கைந்நாக மனையோ னுற்ற துணர்த்தினன் கணத்தின் காலைப்
பைந்நாக நிகர்க்கும் வீரர் தன்னெடு வரவு பார்க்கும்
கொய்ந்நாக நறுந்தேன் சிந்துங் குன்றிடைக்குதியுங்கொண்டான்.

கை நாகம் அனையோன் - துதிக்கையையுடைய யானையைப் போன்ற அநுமன், மைநாகம் என்ன நின்ற குன்றையும் - மைநாகம் என்று சொல்லப்படும் இடையே நின்ற மலையையும், மரபின் எய்தி-(முன் அதனிடம் சொல்லிவந்த) முறையே யடைந்து, உற்றது உணர்த்தினன் - இலங்கையில் நிகழ்ந்த செய்திகளை (அதனிடங்) கூறி, கணத்தின் காலை - ஒரு க்ஷண நேரத்திலேயே, தன் நெடும் வரவு பார்க்கும்-நெடுநேரமாகத் தன்னுடைய வருகையை எதிர்பார்த்திருக்கும், பை நாகம் நிகர்க்கும் வீரர்-படமெடுத்து எழுந்து நோக்கும் பாம்பு போன்று (அநுமன் வரவை எதிர்நோக்கிப் பார்த்துக் கொண்டிருந்த அங்கதன் முதலிய வானர) வீரர்கள் நின்ற, கொய் நாக நறும் தேன் சிந்தும்-பறித்து எடுக்கக் கூடிய சுரபுன்னை மரங்களின் மலர்கள் தேனைச் சிந்திக் கொண்டிருக்கும், குன்று இடை - மகேந்திர மலையினிடத்து, குதியும் கொண்டான் - குதித்தலையும் செய்தான்.

இச் செய்யுளில் நாகம் என்பது அடிதோறும் வெவ்வேறு பொருளில் வந்துள்ளது, இது பல பொருள் குறித்த ஒரு பெயர்த் திரிசொல் எனப்படும். ஒப்பு: சீவக 17; வி. பா. அருச்சுனன் தீர்த்த யாத்திரை. 10. பாம்பு ஒன்றை ஆவலோடு பார்க்கும் போது படமெடுத்துக் கொண்டு எழுந்து நோக்கு மியல்பினது; அதைப்போல வானரர்களும் அநுமன் வரவு நோக்கித் தலையெடுத்து நின்றனர் என்க. நாகம் - சுரபுன்னை; 'நறுவீ யுறைக்கும் நாகம்' (சிறுபாண்: 88). அநுமன் மைநாகத்திற்குச் சொல்லிவந்தது; 62. நெடுந்தூரத்திலிருந்து வரும் வரவு என்றலும் அமையும்.

(பி-ம்.) 1. மெனும் பேர் கொண்ட. 2. துணர்த்தியக் கணத்தின்வெம் போர். 3. த்தனைய வீரர்; தம்மொடும்; நூக்கும் வீரர். (2)

## அநுமனைக் கண்ட வானரர் மகிழ்ச்சி 1247-50

1247. *போய்வருங் கரும முற்றிற் றென்பதோர் பொம்மல் பொங்க*
*வாய்வெரீஇ நின்ற வென்றி வானர வீரர் மன்னோ*
*பாய்வரு நீளத் தாங்க ணிருந்தன பறவைப் பார்ப்புத்*
*தாய்வரக் கண்ட தன்ன வுவகையிற் றளிர்த்தா ரம்மா.*

பாய் வரு நீளத்து ஆங்கண் - (தாய்ப்பறவை ஆவலோடு) பாய்ந்து உட்புக வரும் கூட்டினிடத்து, இருந்தன பறவை பார்ப்பு - இருந்தவை களான பறவைக் குஞ்சுகள், தாய் வர கண்டது அன்ன - (அக்குஞ்சு களுக்காக இரைதேடச் சென்ற தம்) தாய்ப் பறவை வரக்கண்டன போல, வாய் வெரீஇ நின்ற வென்றி வானர வீரர் - (அநுமன் நிலை யாதா குமோ என்று அச்சத்துடன்) வாய் விட்டுப் புலம்பிக் கொண்டிருந்த வெற்றிக்குரிய வானர வீரர்களான அங்கதன் முதலினோர், போய் வரும் கருமம் - (பிராட்டியைத் தேடிக் கண்டு அநுமன்) மீண்டு வருதலாகிய தம் காரியம், முற்றிற்று - முற்றுப் பெற்றதாயிற்று; என்பது ஓர் பொம் மல் பொங்க - என்பதான ஒப்பற்ற பொலிவு மேலோங்க, உவகையில் - மகிழ்ச்சியால், தளிர்த்தார் - உடல் பூரித்து நின்றனர். அம்மா; வியப் பைக் குறிக்கும் இடைச்சொல். மன், ஓ: அசைகள்.

பொம்மல்; பொலிவு; அதாவது சிறப்புக்குரிய மகிழ்ச்சி; (பிங்களம்) நீளம் - பறவைக் கூடு: ஆரண்ய. மாரீசன்வதைப்: 126. இது நீடம் என்ற வடசொல்லின் திரிபு. பார்ப்பு - இறகுகள் நன்கு முளைக்கப் பெறாத இளம் பறவைக் குஞ்சு; 'பார்ப்பைப் பார்க்கும் பறவையிற் பார்க்கின்றான்' (ஆரண்ய. சடாயுகாண். 180). தாயைக் கண்ட பார்ப்பன்ன என்றமையால், அக்கூட்டத்தில் அநுமன் உயர்நிலை அறியற்பாலது.

(பி-ம்.) 1. பொருமல் பொங்க; பொம்மல் நீங்க; பொம்மல் பொங்குற்.
2. வாய்வெரு நின்ற; வாய்வெரி நின்ற: வாய்வரு நின்ற: ஆய் வருந் திறல்சேர் வென்றி வானர வீ ராங்கண்.
3. பாய்வுறு மநுமன் றன்னைக் கண்டனர் பறவைப்:
4. கண்ட தென்ன: கண்ட தேபோ லுவகையில்: உவகையால். (3)

1248. *அழுதனர் சிலவர் முன்னின் றார்த்தனர் சிலவ ரண்மித்*
*தொழுதனர் சிலவ ராடித் துள்ளினர் சிலவ ரள்ளி*
*முழுதுற விழுங்கு வார்போன் மொய்த்தனர் சிலவர் முற்றும்*
*தழுவினர் சிலவர் கொண்டு சுமந்தனர் சிலவர் தாங்கி.*

(அநுமனைக் கண்ட அவ்வானரவீரர்களுள்), சிலவர் - சிலர், அழுத னர்-மகிழ்ச்சியால் அழுதார்கள்; சிலவர்-சில பேர், முன் நின்று ஆர்த்தனர்-

அநுமன் முன்னே நின்று (சந்தோஷத்தால்) கர்ச்சனை செய்தனர்; சிலவர் - சிலர், அண்மி தொழுதனர் - அநுமன் அருகே சென்று அவனை வணங்கினர்; சிலவர் - மற்றும் சிலர், ஆடி துள்ளினர் - கூத்தாடிக் குதித்தனர்; சிலவர் - வேறு சிலர்; அள்ளி முழுது உற விழுங்குவார் போல் - (அநுமனை) வாரியெடுத்து முழுவதும் உட்புக விழுங்குபவர் போல, மொய்த்தனர் - (அவனை) நெருங்கிச் சூழ்ந்து கொண்டனர்; சிலவர் முற்றும் தழுவினர் - சிலர் அவன் உடல் முழுவதும் தம்மீது படும் படித் தழுவிக் கொண்டனர்; சிலவர் - இன்னும் சிலர், கொண்டு தாங்கி சுமந்தனர் - அநுமனைத் தாங்கித் தூக்கிச் சுமந்து கொண்டார்கள்.

அழுதனர்: அன்பிற் குரியோரைக் காணுதிருந்து கண்டபோது மகிழ்ச்சியால் அழுவதும், கண்ணீர் பெருக்குவதும் இயற்கை. அள்ளி விழுங்குவார் போல்: 'பருகுவ னன்ன ஆர்வத்த னாகி' (நன். பாயிரம்). இவை யாவும் தாய்வரக் கண்ட பார்ப்புக்களின் செயல்களாகவும் அமைவன உணர்க. இங்குக் கூறப்பட்ட வானரர்களின் செயல்கள் யாவும் அவர்கள் கொண்ட கவலைக்குப் பின் உண்டான மகிழ்ச்சியால் நிகழ்ந்தவை.

(பி-ம்.) 1. சிலவரன்பில்; சிலவர்மேவி. 2. சிலவ ரோடித்.
3. சிலவர்சுற்றும்.
4. சிலவர் தாங்கிச் சுமந்தனர் சிலவ ரம்மா: சுமந்தனர் தலைவர் தாங்கி. (4)

1249. தேனொடு கிழங்குங் காயு நறியன வரிதிற் றேடி
மேன்முறை வைத்தோ மண்ண லுகர்ந்தனை மெலிவு தீர்தி
மானவாண் முகமே யெங்கட் குரைத்தது மாற்ற மென்னுத்
தா நுகர் சாக மெல்லா முறைமுறை சிலவர் தந்தார்.

சிலவர் - சில வானரர்கள் (அநுமனை நோக்கி), 'அண்ணல் - பெரியோனே! மான வாள் முகமே - பெருமையும் ஒளியும் பொருந்திய உன் முகமே, மாற்றம் - (நற் செய்தியாகிய) சொற்களை, எங்கட்கு உரைத்தது - எங்களுக்குத் தெரிவித்து விட்டது; (ஆதலால்), நறியன - நல்ல சுவையுள்ளவையான, தேன் ஒடு கிழங்கும் காயும் - தேனோடு கிழங்கும் காய்களும், அரிதில் தேடி - அருமையாய் முயன்று தேடிக் கொண்டு வந்து, மேல் முறை வைத்தோம் - (நாங்கள்) சிறப்புடன் வைத்திருக்கிறோம்; நுகர்ந்தனை மெலிவு தீர்தி என்னு - (அவற்றை) அருந்திக் களைப்பைத் தீர்த்துக் கொள்வாயாக;' என்று, தாம் நுகர் சாகம் எல்லாம் - தாம் உண்பதற்காக வைத்திருந்த, காய், கனி, கிழங்கு இலை முதலியவை அனைத்தையும், முறை முறை தந்தார் - ஒன்றன் பின் ஒன்றாகக் கொண்டுவந்து கொடுத்தனர்,

முகமே எங்கட்கு உரைத்தது: உள்ளத்துள்ளதை முகம் தெரிவிப்பது; குறள். 706. நீ போய்க் கண்ட செய்திகளைக் கூறிக் களைக்க வேண்டா. நீ வெற்றியுடன் திரும்பியதை உன் முகத்திலிருந்தே கண்டோம். தேனொடு கிழங்குங் காயும், என்றதற்கு உபலக்ஷணத்தால் கனிகளையும் என்று கூட்டியு முரைக்கலாம். இப்பொழுது உண்டு இளைப்பாறு என்று கூறினர் என்க. தாம் நுகர் சாகம் - குரங்குகளாகிய தாம் உண்ணக் கூடிய இலையுணர்வு. மேன்முறை - மேன்மையாக. முறை முறை - ஒவ்வொருவராக என்னலும் ஒன்றும்.

(பி-ம்.) 1. தேனொடுங் கிழங்கும்: நறவன்ன வரிதிற்.
2. மேன்முறை வைத்தேம்: வைத்தோம் வீரா நுகர்ந்துநின்: மெலிவு தீர.
3. மானவன் முகமே: நங்கட் குரைத்தது மாற்ற மென்று. (5)

1250. தாள்களின் மார்பிற் றோளிற் றலையினிற் றடக்கை தம்மில்
வாள்களின் வேலின் வாளி மழைகளின் வகிர்ந்த புண்கள்
நாள்கண்மே லுலகிற் சென்ற நம்பிதன் கண்ண வாக
ஊழ்கொள நோக்கி நோக்கி யுயிருக வுயிர்த்து நொந்தார்.

(அவ்வானரர்கள்), தாள்களின் - அநுமனுடைய பாதங்களிலும், மார்பில் - மார்பிலும், தோளில் - தோள்களிலும், தலையினில் - தலையிலும், தட கை தம்மில் - பெரிய கைகளிலும், வாள்களின் - (அரக்கர்களான பகைவர்களுடைய) வாள்களாலும், வேலின் - வேல்களாலும், வாளி மழைகளின் - அம்பு மழைகளாலும், வகிர்ந்த - பிளந்த, புண்கள்-காயங்கள், உலகில் சென்ற நாள்கள் மேல் - இதுவரை உலகிற் கழிந்துள்ள நாள்களே போல (அளவு கடந்தனவாய்), நம்பி தன் கண்ண ஆக - ஆடவரிற் சிறந்த அநுமன் உடலினிடத்து உள்ளனவற்றை, ஊழ் கொள நோக்கி நோக்கி - முடிவுறப் பார்த்துப் பார்த்து, உயிர் உக உயிர்த்து நொந்தார்-தம் உயிர் சிந்திப் போகுமாறு பெருமூச்சு விட்டு வருந்தினர்,

வாள் மழை - வாளிகளாலாகிய மழை; இருபெயரொட்டு; அதாவது மழைபோல மிகுதியாக அம்புகளை எய்தல். 'நாள்கள் மேலுலகிற் சென்ற' என்பதற்கு, வானுலகில் உள்ள நட்சத்திரங்களின் எண்களைக் கடந்து மேற்சென்ற எனவும் பொருள் கொள்ளலாம்; ஒப்பு: 'வையத் திறந்தாரை யெண்ணிக்கொண் டற்று' (குறள். 22); இஃதன்றி, உலகில் நாள்கள் மேல் சென்ற நம்பி என இயைத்து, உலகில் உள்ளார் வாழ் நாட்களின் அளவின் மேல் சென்று சிரஞ்சீவியாக உள்ள நம்பியாகிய அநுமன் மேல் எனப்பொருள் கொள்ளலும் ஒன்றும். 'பரமபதம்

போல அழியாது வயது பெற்ற அநுமன்' என்பது பழைய உரை. ஊழ் கொள - முறையாக எனப் பொருள் கோடலும் அமையும். நோக்கி நோக்கி: அடுக்கு துன்ப உணர்ச்சிப்பொருள் நிலையது. இச் செய்யு ளால் அநுமன் மீது தோன்றிய புண்களின் மிகுதியும், அவன்பால் மற்ற வானர வீரர்கள் வைத்திருந்த பெரு மதிப்பும். அன்பும் நன்கு விளங்கு வன காணலாம்.

(பி-ம்.) 1. தோளிற் றலைகளில்:தலைகளில் வேலில் வில்லில்:தலைகளிற் றடக்கை:தடக்கை தன்னில்.

2. வாள்களின் வேலிற் கோலின் மழையினின் வகுத்த புண்கள்: வாள்களிற் பட்டு மேனி மழையென வகிர்ந்த புண்ணீர்: வகிர்ந்து புண்கள்.

3. நாள்களிற் சென்ற புண்ணீர் நம்பிதன் கண்ண வாகி:நாள் கள்பே ருலகிற் சென்ற வெண்ணென நம்பி தன்னை:நாள் செய்வோ னுலகிற் சென்ற நம்பிதன் மேனி மீதாங்:சென்ற வெண்ணன நம்பி கண்ண;கண்ண வாகி.

4. உயிர்த்துயிர்த் துயங்கி நொந்தார்:உயிருக வுலைந்து யிர்த்தார்: உயிர்த்து நைந்தார்;உளைந்து யிர்த்தார்:உயிருக வுருத்துச் சொல்வார்:உயிர்த்து நின்றார். (6)

## அநுமன் பிராட்டியின் செய்தி கூறல் 1251–53

1251. *வாலிகா தலனை முந்தை வணங்கின னெண்கின் வேந்தைக்*
*காலுறப் பணிந்து பின்னைக் கடன்முறை கடவோர்க் கெல்லாம்*
*ஏலுற வியற்றி யாங்க ணிருந்திவ ணிருந்தோர்க் கெல்லாம்*
*ஞாலநா யகன்றன் றேவி சொல்லின ணன்மை யென்றான்.*

முந்தை வாலி காதலனை வணங்கினன் - (அநுமன்) முன்னால் வாலி குமாரனான அங்கதனை வணங்கி, எண்கின் வேந்தை - கரடிகளுக்கு அர சனான சாம்பவனை, கால் உற பணிந்து - அவன் அடிகளிற் பொருந்தும் படி நமஸ்கரித்து, பின்னை - அதன் பிறகு, கடவோர்க்கு எல்லாம் - உரி யோர்களுக்கு எல்லாம், கடன் முறை - செய்யத்தக்க வணக்க உபசா ரங்களை, ஏல் உற - பொருத்தமாக, இயற்றி-செய்து, ஆங்கண் இருந்து - அங்கு ஒரு புறத்தே அமர்ந்திருந்து, இவண் இருந்தோர்க்கு எல்லாம் - இங்குள்ளவரான (உங்கள்) அனைவர்க்கும், ஞால நாயகன் தன் தேவி - உலகுடை நாயகனான இராமபிரானது தேவியாகிய பிராட்டி, நன்மை - நலந்தருவனவான ஆசீர்வாதங்களை, சொல்லினள் என்றான் - சொல்லி அருளினாள் என்று கூறினன்.

வாலி காதலனை முந்தை வணங்கியது; அங்கதன், இளவரசனும், தம் படைத்தலைவனும் ஆதலால். எண்கின் வேந்தை அடிபணிந்தது;

பிரம குமாரனுதலாலும், வயதினுலும் அறிவாலும் சிறந்தவனுதலாலும், தன்னைக் கடல்கடந்து இலங்கை சென்று பிராட்டியைத் தேடிவருமாறு ஊக்கி அனுப்பிய தனிச் சிறப்புடையோனுதலாலும் என்க. ஞால நாயகன்றன் றேவி சொல்லினள் நன்மை என்றமையால் பிராட்டியின் கற்பு, உயர்குணம், அன்பு, அருள் இவைகளை விளக்காமல் விளங்கவைத்தது ஆகும். ஞால நாயகன் றன்றேவி, என்றமை. இனி, இராமபிரான் இராவண வேட்டஞ்செய்து பிராட்டியை மீட்டு அவளுடன் மீண்டும் திருவயோத்தி யெய்தி மணிமுடிசூடி உலகுடைமன்னனுய் இனிது விளங்குவான் என்ற துணிவைப் புலப்படுத்தியதும் ஆம்.

(பி-ம்.) 1. முந்தி வணங்கின:எண்கின் மன்னைக்:எண்கின் வேந்தன்
2. காலுற நோக்கிப்:காலுற வணங்கிப் பின்னர்க் கடன்முறை.
3. மேலுற வியற்றி:இருந்தவ னெதிர்த்தோர்க் கெல்லாம்; இருந்த பின் னிருந்தோர்க் கெல்லாம். (7)

1252. *என்றலுங் கரங்கள் கூப்பி யெழுந்தன ரிறைஞ்சிப் போற்றி*
*நின்றன ருவகை பொங்க விம்மலா னிமிர்ந்த நெஞ்சர்*
*சென்றது முதலா வந்த திறுதியாய்ச் செப்பற் பாலை*
*வன்றிற லுரவோ யென்னச் சொல்லினன் மருத்தின் மைந்தன்.*

என்றலும் - என்று (அநுமன்) கூறியவுடன், எழுந்தனர் - (அவ்வானர வீரர்கள் அனைவரும்) எழுந்து நின்றவர்களாய், கரங்கள் கூப்பி - தம் கைகளைக் குவித்து, உவகை பொங்க - அன்பு மேலிட, இறைஞ்சி போற்றி - (பிராட்டியை மனத்தால்) வணங்கித் துதித்து, விம்மலால் நிமிர்ந்த நெஞ்சர் - பூரிப்பால் நிமிர்ந்து (ஊக்கங்கொண்ட) மனமுடையோர்களாய், (அநுமனை நோக்கி) வன் திறல் உரவோய் - மிக்க வலிமையுடையோனே! சென்றது முதல் ஆ - நீ இங்கிருந்துசென்றது முதலாக, வந்தது இறுதியாய் - (இப்பொழுது) இங்கு வந்து சேர்ந்தது முடிவு ஆக, செப்பல் பாலை - (நிகழ்ந்த செய்திகள் அனைத்தையும் எங்கட்கு எடுத்துச்) 'சொல்வாயாக'; என்ன - என்று கேட்டுக்கொள்ள, மருத்தின் மைந்தன் - வாயுகுமாரனுன அநுமன், சொல்லினன் - (பின்வருமாறு) சொன்னுன்.

செப்பற்பாலை: அநுமன் சொல்லின் செல்வனுதலால்; (கிட்கிந்தா. மராமரப்:20); சொல்லுந் தகுதியுடையோய் என விளியாகக் கொள்ளலும் அமையும். வன்திறலுரவோய், ஒருபொருட்பன்மொழி; இங்கு மூன்றடுத்து வந்தது; இது அநுமனுடைய மனம் வாக்கு காயம் என்னும் மூன்றின் வன்மையைக் குறிப்பது எனக் கொள்ளலும் ஏற்கும்.

(பி-ம்) 1. எழுந்தெதிரிறைஞ்சித்: இறைஞ்சித் தாழா; இறைஞ்சித் தாழ்ந்து.
2. பொங்கி யளிதரு நெஞ்ச ராகிச்: விம்மலாய் நிமிர்ந்த: நிறைவுடன் நிமிர்ந்த. 3. முதலாய் வந்து: செப்ப வேண்டும்.
4. உரவோ யென்றான் வாலிசே யவனும் சொன்னான்; சொல்லினன் வாலி மைந்தன்: சொல்லுவான் வாலி மைந்தன். (8)

1253. *ஆண்டகை தேவி யுள்ளத் தருந்தவ மமையச் சொல்லிப்*
*பூண்டபே ரடையா ளங்கைக் கொண்டதும் புகன்று போரில்*
*நீண்டவா ளரக்க ரோடு நிகழ்ந்ததும் நெருப்புச் சிந்தி*
*மீண்டதும் விளம்பான் றன்றன் வென்றியை* விளம்ப வெள்கி.

ஆண்தகை - ஆண்மைக் குணம் நிறைந்த அநுமன், தேவி உள்ளத்து அரும் தவம் - பிராட்டி தன் மனத்தில் (உறுதியாய்க் கொண்டுள்ள) அரிய கற்பாகிய தவச் சிறப்பை, அமைய சொல்லி - (அவர்களுக்கு விளங்கும்படித்) தெளிவாகச் சொல்லி, பூண்ட பேர் அடையாளம் கை கொண்டதும் புகன்று - அவள் அணிந்திருந்த பெரிய அடையாளப் பொருளான சூடாமணி என்னும் அணியைத் தான் கைக்கொண்டுவந்துள்ளதும் கூறி, தன் வென்றியை தான் விளம்ப வெள்கி - தன் வெற்றிச் சிறப்பைத் தானே கூறிக் கொள்ள வெட்கமுற்றவனாய், போரில் - (இலங்கையில் நடந்த) போரில், நீண்ட வாள் அரக்கர் ஓடு நிகழ்ந்ததும் - நெடிய வாள்களையுடைய இராக்கதர்களுடன் நடந்தவைகளும், நெருப்பு சிந்தி மீண்டதும் - (அவ்விலங்கையை) நெருப்பிட்டுக் கொளுத்தித் தான் திரும்பி வந்ததுமான செய்திகளை, விளம்பான் - சொன்னானல்லன்.

பிராட்டி தன் கற்பின் ஆற்றலால் இலங்கையையும் அரக்கர்களையும் அழிக்கும் திறமைபெற்றிருந்தும், தன் தலைவனான இராமபிரானுக்கு வெற்றிச் சிறப்பினால் வரக்கூடிய பெருமையை அளிக்கவும், அதனால் உலகுய்யவும் உறுதிகொண்டு, இராவணனாலும், காவல் அரக்கியர்களாலும் உண்டான நிந்தனைகளையும், அச்சுறுத்தல்களையும் பொருட்படுத்தாது, ஊணுறக்கமின்றிப் பொறையாகிய பெருந்தவத்தை மேற்கொண்டிருந்தாளாதலின், அச் சிறப்பு விளங்கத் 'தேவி யுள்ளத்து அருந்தவம்' என்னப்பட்டது. அடையாளம் கைக் கொண்டதும் என்றதால் தன்சொல்லால் அறியக்கூடியதை மேலும் நன்றாக உறுதிப் படுத்த அடையாளப் பொருள் தான் பெற்றுள்ளதை எடுத்துக் காட்டியதும் ஆம். 'தோன்றாத் தோற்றித் துறைபல முடிப்பினுந், தான்றற் புகழ்தல் தகுதியன்றே' (நன். சூ 52.) என்பதற் கேற்ப, அநுமன் தன் வென்றியைத் தானே விளம்ப வெள்கினன். சான்றோர் புகழ்க்கு நாணுவர்: கலித்: 119:6; குறுந்: 252:7; புறநா. 152:21-22; 285:13-14: திரிகடுகம்: 6, அநுமன் வானரர்களின் வினவுக்கு விடையாகத் தான் இலங்கை

சென்று வந்த வரலாற்றை, முதனூல் 225 சுலோகங்கள் கொண்ட இரண்டு சர்க்கங்களில் (58, 59) கூறியிருக்க, கம்பர் இவ்வொரு செய்யுளிலே அதனைச் சுருக்கித் திறம்பெற அமைத்த ஆற்றல் பெரிதும் வியக்கத்தக்கது. இது சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்னும் அழகு பற்றியது.

(பி-ம்.) 1. ஆண்டகை யிராமன் றேவி நிலையெலா மமரச் சொல்லி; தேவிக் குள்ள வருத்தமு.
3. நீண்டகோ ளரக்கர்; நீண்டதோ ளரக்கர்: நெருப்புத் தூண்டி.
4. விளம்பான் செய்த:விளம்பான் ருன்செய்:உரைப்பவெள்கி. (9)

1254 *பொருதமை புண்ணே சொல்ல வென்றமை போந்த தன்மை*
*உரைசெய வூர்தீ யிட்ட தோங்கிரும் புகையே யோதக்*
*கருதலர் பெருமை தேவி மீண்டிலாச் செயலே காட்டத்*
*தெரிதர வுணர்ந்தேம் பின்ன ரென்னினித் தேர்வ தென்ருர்.*

(வானரர்கள் அநுமனை நோக்கி), 'பொருதமை - (நீ சொல்லாவிடினும்) நீ அங்குப் போர்புரிந்ததை, புண்ணே சொல்ல - உன் உடலிற் காணப்படும் புண்களே தெரிவிக்கவும், வென்றமை - (அங்கு உன்னை எதிர்த்த பகைவரை) நீ வென்ற தன்மையை, போந்த தன்மை உரை செய - இங்கு நீ திரும்பி வந்த நிலையே சொல்லவும், ஊர் தீ இட்டது - அப்பகைவர் ஊரை நீ தீ இட்டுக் கொளுத்தியது, ஓங்கு இரும் புகையே ஓத - மேலெழுந்து தோன்றின பெரும் புகையே தெரிவிக்கவும், கருதலர் பெருமை - பகைவர்களுடைய வலிமை முதலிய சிறப்புகளை, தேவி மீண்டு இலா செயலே காட்ட-பிராட்டி உன்னுடன் திரும்பிவராத செயலே எடுத்துக் காட்டவும், தெரிதர உணர்ந்தேம் - (நீ சொல்லாமலே) தெளிவாக விளக்க அறிந்து கொண்டோம்; பின்னர் என் இனி தேர்வது என்ருர் - பிறகு யாங்கள் நீ விளக்க உன்னிடமிருந்து உணர்ந்து கொள்வது என்ன இருக்கிறது?' என்று கூறினர்.

கருதலர் - நன்மையை நினையாதவர் என்ற பொருளில் பகைவரைக் குறிப்பது. தெரிதர:இங்குத் தர என்பது துணைவினை. வென்றமை; வென்றியன்றி அநுமன் திரும்பான் என்ற அன்னேர் உறுதியைப் புலப்படுத்துவதாகும். புண்ணே, புகையே, செயலே என்பனவற்றிலுள்ள ஏகாரங்கள் பிரிநிலைப் பொருளன. 1253ல் உரையில் கூறிய சுருங்கச் சொல்லுமுறைக்கு இச் செய்யுளும் ஓர் எடுத்துக் காட்டாகும்.

(பி-ம்.) 1 வென்றதைப் போந்த; வென்றவை:பொருபடை யரக்கர் தன்மை: வென்றியன் போந்த தன்மை
2· ஓங்கரும் புகை:புகையே யொந்த:உரையாடல் நெருப்புண் டென்றே யோங்கிரும் புகைகண் டோர்கள்,

3. பெருமை சீதை:செயலே காட்டித்;கருதல்போ லநுமன் செயகை காட்டிய தாத லலே.

4. உணர்ந்தார்:என்னினிச் செய்து மென்ருர். (10)

## அனைவரும் இராமபிரானிடம் செல்ல எழுதல்

1255. *யாவது மினிவே றெண்ண வேண்டுவ திறையு மில்லை*
*சேவகன் றேவி தன்னைக் கண்டது விரைவிற் செப்பி*
*ஆவதவ் வண்ண லுள்ளத் தருந்துய ரகற்ற லேயாம்*
*போவது புலமை யென்னுப் பொருக்கென வெழுந்துபோனர்.*

(அவர்கள் ஒருமித்து), இனி வேறு எண்ண வேண்டுவது - இனி (நாம்) வேறு ஆலோசிக்க வேண்டியது, யாவதும் இறையும் இல்லை - எதுவும் சிறிதும் இல்லை; ஆவது - நாம் இனி செய்யத்தக்கது, சேவகன் தேவி தன்னை - இராமபிரானின் தேவியாகிய பிராட்டியை, கண்டது விரைவில் செப்பி - பார்த்து வந்த செய்தியை (தாமதிக்காமல்) விரைவில் (அவரிடம்) கூறி, அண்ணல் உள்ளத்து அரும் துயர் அகற்றல் ஏ ஆம் - அப்பெருமானது மனத்தில் உள்ள அரிய துயரத்தைப் போக்குவதே ஆகும்; போவது புலமை என்னு - ஆதலின், நாம் இராமபிரானிடம் (உடனே) போவதே அறிவுள்ள காரியமாகுமென்று கூறி, பொருக்கு என எழுந்து போனர் - (அவர்கள்) விரைவில் எழுந்து சென்றனர்.

இது எல்லா வானர வீரர்களும் ஒரு சேரத் தீர்மானித்துச் சென்ற செயலைத் தெரிவிப்பதாகும். பொருக்கென: விரைவுக் குறிப்பு: பால. திருவவதாரப்: 42. ஒரு சுவடியில் இச்செய்யுளோடு, இலங்கை யெரியூட்டு படலம் முற்றும் என்றும், வேறு இரண்டு சுவடிகளில் மீட்சிப்படலம் முற்றும், என்றும் காணப்படுகிறது.

இச் செய்யுளின் பின், பல அச்சுப் பிரதிகளிலும், சில சுவடிகளிலும் கீழே காணும்செய்யுட்கள் வானரர்கள் மதுவனத்தில் தங்கிச் செய்த செயல்களைக் கூறுவனவாக உள்ளன. சிற்சில சுவடிகளில் காணப்படும் செய்யுட்களோடு, பிற அதிகப் பாடல்களும் காணப்படுகின்றன; (அவை உரிய செய்யுள்களின் கீழ்) (i), (ii) என்ற எண்களாற் குறிக்கப் படுகின்றன. (1256) எண்ணுள்ள பாடல் மதுவனச் செய்தியைக் கூறும் பாடல்களில் (ஆ) என்று குறிக்கப் பெற்றுள்ளது. இப்பாடல்களில் அமைந்த செய்தி வான்மீகத்திலும் அத்யாத்ம இராமாயணத்திலும் காணப்பெற்றனவே எனினும், அநுமன் மகேந்திரத்துக்குத் திரும்பி வந்ததும் அவன் கூறியவற்றைக் கம்பர் மிகச் சுருக்கமாக அமைத்த தோடு, 1255 ஆம் செய்யுளில் 'சேவகன் றேவி தன்னைக் கண்டது

விரைவிற் செப்பி, ஆவதவ் வண்ண லுள்ளத் தருந்துய ரகற்ற லேயாம், போவது புலமை யென்னுப் பொருக்கென வெழுந்து போனர்' என்று கூறி, இடையிலே அவர் மதுவனத்தில் தங்கிக் காலங் கழித்தனர் என்று கொள்வது அவர் கருத்துக்கு ஒவ்வாது என்க. பழையவுரையிலும், சிறந்தவை என்று கொள்ளத் தக்க சுவடிகளிலும் இப்பகுதி இல்லை. மேலும், இம்மதுவனச் செய்தியைக் கூறும் இப்பாடல்களின் நடையும் இந்நூல் நடைக்கு ஏற்ற சிறப்பினதாக இல்லை, ஆதலால், இப்பதிப்பில் அவை விடப்பெற்றன. ஆனுல், அப்பாடல்களைச் சுவடிகளில் ஒப்பிட்டு ஆராய்ந்த திருத்தங்களுடன் கீழே அதிகப்பாடல்களாகக் குறிக்கப் பெற்றுள்ளன.

(அ) போயினர் களிப்பி னேடும் புங்கவன் சிலையி னின்றும்
ஏயின பகழி யென்ன வெழுந்துவிண் படர்ந்து தாவிக்
காய்கதிர்க் கடவுள் வானத் துச்சியிற் கலந்த காலைத்
தாயின வீரர் தாமும் மதுவன மதனிற் சார்ந்தார்.

(குறிப்பு; இச்செய்யுள் முதல் பின்வருவன, மதுவனப்படலம் என்ற பெயருடன் சில சுவடிகளிற் காணப்படுகின்றன.)

(ஆ) ஏதநா ளிறந்த சால வருந்தின திருந்த சேனை
ஆதலால் விரைவிற் செல்ல லாவதொன் றறிய வெம்மைச்
சாதநீர்த் தளித்த வீர தந்தரு ணறவ மென்னப்
போதுநாம் வாலி சேய்பா லென்றுட னெழுந்து போனர்.

(குறிப்பு: இச்செய்யுளுக்குப் பிரதியாக 1256 ஆம் செய்யுள் கொள்ளப்பட்டது.)

(இ) அங்கதன் றன்னை யண்மி யநுமனு மிருகை கூப்பிக்
கொங்குதங் கலங்கன் மார்ப நின்னுடைக் குரக்குச் சேனை
வெங்கத மொழிந்து சால வருந்தின வேடை யோடி
இங்கிதற் களித்தல் வேண்டு மிருனுமிழ் பிரச மென்றுன்.

(ஈ) நன்றென வவனு நேர்ந்தா னரலையு நடுங்க வார்த்துச்
சென்றுறு பிரசந் தூங்குஞ் செழுவன மதனி னூடே
ஒன்றின்மு னென்று பாயு மொடிக்கும்பின் பிரச மெல்லாம்
தின்றுதின் றுவகை கூருந் தேனுக ரளியின் மொய்த்தே.

(உ) ஒருவர்வாய்க் கொள்ளுந் தேனை யொருவருண் டொழிவ ருண்ண
ஒருவர்கைக் கொள்ளுந் தேனை யொருவர் கொண்டோடிப் போவார்
ஒருவரோ டொருவ ரொன்றித் தழுவுவ ருழுவை மொய்ம்பின்
ஒருவர்மே லொருவர் தாவி யொல்லென வோதை கூர்வார்.

(ஊ) இன்னண நிகழுங் காலை யெரிவிழித் தெழுந்து சீறி
அந்நெடுஞ் சோலை காக்கும் வானர ரவரை நோக்கி
மன்னெடுங் கதிரோன் மைந்த னுணையை மறுத்து நீயிர்
என்னினைந் தென்செய் தீர்மன் னும்முயிர்க் கிறுதி யென்ன.

(எ) முனியுமா லெம்மை யெங்கோ னென்றவர் மொழிந்து போந்து
கனியுமா மதுவ னத்தைக் கட்டழித் திட்ட தின்று
நனிதரு கவியின் ருனை நண்ணலர் செய்கை நாண
இனியெமாற் செயலின் றென்னத் ததிமுகற் கியம்பி னுரால்.

(ஏ) கேட்டவன் யாவ ரேயெம் மதுவனங் கேடு சூழ்ந்தார்
காட்டுமென் றுரைத்தா னன்னுர் வாலிசே யேவற் கண்ணின்
ஈட்டமுற் றெழுந்த தானை யிறுதியில் நீல னென்பான்
வீட்டினன் மதுவார் சோலை வெகுளியின் விரைந்து மேன்மேல்.

(ஐ) உரங்கிளர் கதிரோன் மைந்த னுணையா லுறுதி கொண்டே
குரங்கினந் தன்னை யெல்லாம் விலக்கினங் கொடுமை கூறிக்
கரங்களா லெற்ற நொந்தோங் காவலா யென்னக் காதல்
தரங்கெழு வாலி வீய்ந்த துணர்ந்திலன் றனயன் ருனும்,

(ஒ) எனவுரைத் தசனி யென்ன வெழுந்திரைத் திரண்டு கோடிக்
கனைகுரற் கவியின் சேனை கடலெனக் கடிதிற் சுற்ற
புனைமதுச் சோலை புக்கான் மதுநுகர் புனிதச் சேனை
அனகனை வாழ்த்திப் பின்ன ரங்கத னடியின் வீழ்ந்த.

(ஓ) இந்திரன் வாலிக் கீந்த வின்சுவை மதுவின் கானம்
அந்தரத் தவர்க்கு நோக்கற் கரியவென் னுணை தன்னைச்
சிந்தினை கதிரோன் மைந்தன் றிறலினை யறிதி யன்றே
மந்தர மனைய தோளா யிற்றதுன் வாழ்க்கை யின்றே.

(குறிப்பு: இச்செய்யுள் அச்சுப் பிரதிகளில் உள்ளது; இங்குள்ள சுவடிகளில் இல்லை).

(ஔ) மதுவனந் தன்னை யின்னே மாட்டுவித் தனைநீ யென்னுக்
கதுமென வாலி சேய்மே லெறிந்தனன் கருங்கற் பாறை
அதுதனைப் புறங்கை யாலே யகற்றியங் கதனுஞ் சீறித்
ததிமுகன் றன்னைப் பற்றிக் குத்தினன் றடக்கை தன்னுல்.

(குறிப்பு: இதன்பின் சில பிரதிகளில் பின்வருமாறு இரண்டு அதிகப் பாடல்கள் உள்ளன).

(i) குத்தின னென்ன லோடும் குலைந்திடு மெய்ய னாகி
மற்றொரு குன்றந் தன்னை வாங்கினன் மதுவ னத்தைச்
செற்றவன் மேலே யேவிச் சிரித்தனன் றதிமு கன்றான்
இற்றனன் வாலி சேயென் றிமையவ ரியம்புங் காலை.

(ii) ஏற்றொரு கையாற் குன்றை யிருந்துக ளாக்கி மைந்தன்
மாற்றொரு கையான் மார்பி லடித்தலு மாண்டா னென்னக்
கூற்றின்வா யுற்று னென்னு வும்பரார் குலையப் பானு
மேற்றிசை யுற்று னென்னு விளங்கினன் மேரு வொப்பான்.

(க) வாய்வழிக் குருதி சோர வலக்கையான் மலங்க மோதிப்
போய்மொழி கதிரோன் மைந்தற் கென்றவன் றன்னைப் போக்கித்
தீயெழும் வெகுளி பொங்க மற்றவன் சேனை தன்னைக்
காய்கனல் பொழியுங் கையாற் குத்துதிர் கட்டி யென்றான்.

(ங) பிடித்தனர் கொடிக டம்மாற் பிணித்தனர் பின்னு முன்னும்
இடித்தன ரசனி யஞ்ச வெறுழ்வலிக் கரங்க ளோச்சித்
துடித்தன ருடல்கள் சோர்ந்தார் சொல்லுதிர் நீரு மென்ன
விடுத்தனன் வாலி மைந்தன் விரைவினுற் போன வேலை.

(ச) அலைபுனற் குடையு மாபோ லருநற வருந்தித் தந்தம்
தலைவர்கட் கினிய தேனுங் கனிகளும் பிறவுந் தந்தே
உலைவுறு வருத்தந் தீர்த்திட் டுயர்வனத் திருந்தா ரிப்பால்
வலைவளைத் தென்னக் கங்குல் வளைந்தது மறைந்தான் பானு.

(பி-ம்.) 1. யாவையு மினிவே றெண்ண; யரவதிங் கினிவே றெண்ண வேண்டுவ. 2. கண்டமை விரைவிற்: விரைவிற் செப்பல். 3. ஆவது வள்ளல்: ஆவதங் கண்ணல்: அருந்துய ராற்ற லே; அகற்ற லாம்யாம். 4. போவதே கரும மென்னுப்: புலமை யென்னப். (11)

### அநுமன் முன்னே செல்லுதல்

1256. *ஏதுநா ளிறந்த சால வருந்தின திருந்த சேனை*
*ஆதலால் விரைவிற் செல்ல லாவதன் றளிய மெம்மை*
*சாதறீர்த் தளித்த வீர தலைமகன் மெலிவு தீரப்*
*போதுநீ முன்ன ரென்றார் நன்றென வநுமன் போனான்.*

(அவ்வானரர்கள் மேலும் அநுமனை நோக்கி), 'அளியம் எம்மை சாதல் தீர்த்து அளித்த வீர - அன்புக் குரியோமான எங்களைச் சாவதினின் றும் நீக்கிக் காத்தருளிய மகா வீரனே! ஏது நாள் சால இறந்த - பிராட்டி

யைத் தேடிவருங் காரணமாய்க் குறிப்பிட்ட நாட்கள் மிகவும் கடந்தவை ஆயின; இருந்த சேனை - இங்கு உன் வரவை நோக்கித் தங்கியிருந்த சேனை, வருந்தினது - துயரமேற் கொண்டது; விரைவில் செல்லல் ஆவது அன்று - வேகமாய்ச் செல்லும் வலியுடையது அன்று; ஆதலால் தலைமகன் மெலிவு தீர - ஆதலின் நம் தலைவனான இராமபிரான் துன்பம் நீங்க, நீ முன்னர் போது என்றார் - நீ முன்னதாக (அப்பெருமானிடம்) போவாயாக' என்று கூறினர்; நன்று என - (நீங்கள் கூறுவதே) நல்லது என்று, அநுமன் போனான் - அநுமன் (இராமபிரான் இருக்குமிடம் நோக்கிச்) சென்றான்.

ஏது நாள் - பிராட்டியைத் தேடிவரும் காரணமாய், எல்லையிட்டுக் கூறியநாள்; அது ஒரு மாதத் தவணையாகும்: கிட்கிந்தா. நாடவிட்ட: 11 வருந்தின திருந்த சேனை: குறிப்பிட்ட நாட்கள் கடந்தமையால், இனி திரும்பிச் சென்றால் அரசனான சுக்கிரீவன் தண்டிப்பான் என்று வருந்தியிருந்த சேனை; நீ பிராட்டியைக் கண்டு வெற்றியுடன் வரவேண்டுமே என்ற கவலையால் ஊண் உறக்கமின்றி வருந்தியிருந்த சேனை யென்றலும் அமையும். வானரர் சாகத் துணிந்தது; கிட்கிந்தா: சம்பாதிப். 11. ஏதில் நாளி றந்தது என்ற பாடங்கொண்டு, பழைய உரை 'ஏதில் நாளிறந்தது - ஒரு காரணமில்லாமல் நாட்களுஞ் சென்றதினாலும், இருந்த சேனை - இந்த (ச்) சேனை இருப்பிலே இருக்கையினாலும்' என்று பொருள் கூறுகிறது.

(பி-ம்.) 1. ஏயநாள்: ஏதநாள்: ஏதநா; ஏதநா ளிறந்து சால வென்பதோர் வருத்த நெஞ்சத்; ஏதிநாள் கழிய வெங்கும் வருந்திய தெமது சேனை; ஏதில் நான்.
2. ஆதலால் விரைவிற் செல்லா தையநீ யெம்ம னோர்கள்.
3. சாதநீர்த் துடையை யின்னும் தலைமகன் மெலிவு தீர்க்கப் (12)

கவிக்கூற்று.

1257. *முத்தலை யெஃகி னாற்கு முடிப்பருங் கரும முற்றி*
*வித்தகத் தூதன் மீண்ட திறுதியாய் விளைந்த தன்மை*
*அத்தலை யறிந்த தெல்லா மறைந்தன மாழி யான்மாட்*
*டித்தலை நிகழ்ந்த வெல்லா மியம்புவா னெடுத்துக் கொண்டாம்.*

வித்தக தூதன் - வல்லமை பொருந்திய (இராமபிரான்) தூதனான அநுமன், முத்தலை எஃகினாற்கும் - மூன்று தலைகளையுடைய சூலத்தை ஏந்திய சிவபெருமானுக்கும், முடிப்பு அரும் கருமம் முற்றி - செய்து முடித்தற்கு அரிய காரியத்தை நிறைவேற்றி, மீண்டது இறுதியாய் - திரும்பி வந்தது முடிவாக, அ தலை விளைந்த தன்மை - அங்கு நிகழ்ந்த

செய்திகளைப் (பற்றியும்), அறிந்தது எல்லாம்-யாம் உணர்ந்தவை எல்லா வற்றையும், அறைந்தனம்-எடுத்துரைத்தோம்: இ தலை ஆழியான் மாட்டு -இங்கு இராமபிரானிடத்து, நிகழ்ந்த எல்லாம் - நிகழ்ந்தசெய்திகள் அனைத்தையும், இயம்புவான் எடுத்துக் கொண்டாம்-(இனி), சொல்லத் தொடங்குகிறோம்.

இச்செய்யுள் கவிக்கூற்று. முத்தலை எ.·.கு-திரிசூலம். எ.·.கினுற்கும் உம்மை உயர்வு சிறப்பினது. வித்தகத் தூதன் என்றது செயற்கரும் செயல்கள் செய்தமைபற்றி; அவை. அநுமன் கடல் கடக்கப் புறப்பட்டது முதல். மீண்டது வரை செய்த அருஞ் செயல்கள். வித்தகம்-வல்லமை; 'வித்தக வில்லி' னுற்குத் திருவினை'யாடற் கேற்ற (448:) 'வித்தகமும்விதிவசமும் வெவ்வேறே புறங்கிடப்ப'(பால:கார்முகப்: 19). அ தலை என்பது அநுமன் இயங்கிய அவ்விடத்தில் என்றும், இ தலை என்பது இராமபிரான் தங்கிய இவ்விடத்தில் என்றும் கொள்க.

இதன்பின் ஒருபாடல் சில சுவடிகளில் அடியிற் காணுமாறு அதிகமாக உள்ளது; இது சில அச்சுப்புத்தகங்களிலும் காணப்படுகிறது.

சேற்றிள மரைமலர்த் திருவைத் தேர்கெனக்
காற்றின்மா மகன்முதற் கவியின் சேனையை
நாற்றிசை மருங்கினு மேனி நாயகன்
தேற்றின னிருந்தனன் கதிரின் செம்மலே.

(பி-ம்.) 1. முத்திறக் கண்ணி னுனும்.
2. வித்தகன் றூதும்.
3. அத்தலை வினைந்த தெல்லாம்; அறிந்த தெல்லாம்.
4. நிகழ்ந்த தன்மை யாவையும் விளம்ப லுற்றும்; எடுத்துக் கொண்டோம். (13)

வேறு

## இராமபிரானின் துயர் நிலை 1258-1264.

1258. *கார்வரை யிருந்தவக் கதிரின் காதலன்*
*சீரிய சொற்களாற் றெருட்டச் செங்கணுன்*
*ஆருயி ராயிர முடைய னுமெனச்*
*சோர்தொறுஞ் சோர்தொறு முயிர்த்துத் தோன்றினுன்.*

செம் கணுன்-சிவந்த கண்களையுடைய இராமபிரான், சோர் தொறும் சோர் தொறும்-(பிராட்டியைப் பிரிந்த துயரத்தால்) சோர்வுற்று ஓய்ந்து உயிர் அடங்கியது போல இருந்தபோதெல்லாம், கார் வரை இருந்த அ

கதிரின் காதலன் - கரிய (பிரசிரவண) மலையில் (அவனுடன்) இருந்த அந்தச் சூரிய குமாரனை சுக்கிரீவன், சீரிய சொற்களால் தெருட்ட - சிறந்த மொழிகளைக் கூறித் தேற்ற, ஆயிரம் ஆர் உயிர் உடையன் ஆம் என - (இராமபிரான்) பல அரிய உயிர்களையுடையவன் போல, உயிர்த்து தோன்றினான் - ஓய்ந்து மீண்டும் உயிர் பெற்றவன் போலப் (பலமுறை) மூச்சு விட்டுக் கொண்டு காணப்பெற்றான்.

இராமபிரான் பலமுறை உயிர் அடங்கியது போலக் கிடந்து மீண்டு உயிர் வந்தவன் போல உயிர்த்து விளங்கியதால் அவன் ஆயிரம் உயிர்களையுடையவன் என்பதைக் காட்டுவான் போல விளங்கினான்என்பதாம். ஆயிரம் என்பது இங்குப் பல எண்களைக் குறிக்க வந்தது. சோர்தொறும் சோர் தொறும் அடுக்கு மிகுதிப் பொருளது. இராமபிரான் தங்கியிருந்த மலை பிரசிரவரணம் என்பது முதனுலால் தெரியவரும். கார்வரை - மேகங்கள் படிந்திருந்த மலை என்னலும் ஆம். இதனால் பிராட்டியைத் தேடி வர, வானர வீரர்களை அனுப்பியபின் சுக்கிரீவன், இராமபிரானுக்குத் தேறுதல் கூறிக்கொண்டு, அப்பெருமான் அருகில் தங்கியிருந்தான் என்று கருதஇடமாகும்.

(பி-ம்.) 1. கார்வரை யனையவன் முன்பு காவலர்; கார்வரை யிருந்துள்ள: கார்வரை மேனியான்: கார்வரை யிருந்துளன்.
2. சீரிய சொற்களிற்.
3. ஆருயிர் சிறிதுதா னுடைய னுமெனச்: ஆருயிர் தேய்ந்துள முடைய னுமென. 4. உயிர்த்துத் தோன்றுவான். (14)

1259. *தண்டலி னெடுந்திசை மூன்றுந் தாவினர்*
*கண்டிலர் மடந்தையை யென்னுங் கட்டுரை*
*உண்டுயி ரகத்தென வொறுக்க வும்முளன்*
*திண்டிற லநுமனை நினையுஞ் சிந்தையான்.*

தண்டல் இல் - தடையில்லாது, நெடும் திசை மூன்றும் - நீண்ட (வடக்கு, கிழக்கு, மேற்கு என்னும்) மூன்று திசைகளிலும், தாவினர் - தாவிச் சென்ற வானரவீரர்கள், மடந்தையை - பிராட்டியை, கண்டிலர் என்னும் - கண்டாரில்லை என்று கூறிய, கட்டுரை - உறுதிச் சொல், அகத்து உயிர் உண்டு என - தன்னுள் உயிர் இருக்கின்றது என்னும் நிலையில், ஒறுக்கவும் - தன்னை வருத்தவும், திண் திறல் அநுமனை - மிக்க வலிமை வாய்ந்த அநுமனை, நினையும் சிந்தையான் - எண்ணுகின்ற மனத்தினை இராமபிரான், உளன் - உயிர் உள்ளவன் என்ற நிலையில் இருந்தான்.

அநுமன் தென்றிசை நோக்கிச் சென்றனனாதலின், மற்றத் திசைகள் வடக்கு, கிழக்கு மேற்கு என்டவை ஆயின. அத்திசைகளிற் சென்றவர்

பிராட்டியைக் காணுதவராய்த் திரும்பி வந்தனர் என்பது ஏற்பட்டது. அவ்வாறு அவர்கள் கூறிவிட்டமையால் மனமுடைந்திருந்தான் என்க அநுமனை நினையும் சிந்தையான்: அநுமன் நாடிச் சென்ற காரியத்தை இனிது முடித்தே வருவன் என்ற துணிவான எண்ணத்தினனுன இராம பிரான், உயிர் உடையன் என்ற நிலையில் நின்றுன் என்று கூறப்பட்டது. உண்டுயி ரகத்து என - அகத்து உயிர் இருக்கிறது என்று ஆராய்ந்து பார்த்துச் சொல்லக் கூடிய நிலையில் எனப் பொருள் கோடலும் அமை யும்; ஒப்பு. 565

இதன்பின் ஒரு சுவடியில் அடியிற் காணுமாறு ஓர் அதிகப்பாடல் உள்ளது.

நோக்கிற் றென்றிசை யல்லது நோக்குருன்
ஏக்குற் றேக்குற் றிரவி குலத்துளான்
வாக்கிற் றூய வநுமன் வருமெனப்
போக்கிப் போக்கி யுயிர்க்கும் பொருமலான்.

(பி-ம்.) 1. தண்டில: தாயினர். 3. கொண்டுயிர் சுமந்தனன் பின்னுங் கோளரி. 4. நினையுஞ் சிந்தையால். (15)

1260. *ஆரிய னருந்துயர்க் கடலு ளாழ்பவன்*
*சீரிய தன்றுநஞ் செய்கை தீர்வரும்*
*மூரிவெம் பழியொடு முடிந்த தாமெனச்*
*சூரியன் புதல்வனை நோக்கிச் சொல்லுவான்.*

ஆரியன் - பெருமைக்குரிய இராமபிரான், அரும் துயர் கடல் உள் ஆழ்பவன் - கொடுந் துன்பக் கடலினுள் ஆழ்ந்து வருந்துபவனாய், சூரி யன் புதல்வனை நோக்கி - சூரிய குமாரனான சுக்கிரீவனைப் பார்த்து, 'நம் செய்கை சீரியது அன்று - நாம் மேற் கொண்ட காரியம் சிறந்ததாக இல்லை; தீர்வு அரும் - தீராத, மூரி வெம் பழி ஒடு - (அது) வலிய கொடிய நிந்தனையோடு, முடிந்தது ஆம் என-முடிந்ததாக ஆகும்' என்று, சொல் லுவான் - பின்வருமாறு எடுத்துக் கூறுவானானான்.

நம் செய்கை: அதுவரை பிராட்டியைத் தேட எடுத்துக் கொண்ட முயற்சி. இனி நம் செய்கை சீரியதன்று எனத் தொகுத்துக் கூறியதை மேல்வரும் நான்கு செய்யுள்கள் வகுத்துக் கூறுவன காணலாம்.

(பி-ம்.) 1. கடலி னுழ்பவன். 2. சீரிய வன்றுநஞ் செய்கை தேரின்
3. பூரிய வெம்பழி பொடித்த தாமெனச்: மூரிவெம் பகழியால் முடித்து நாமெனச்: முடித்தும் யாமெனச்: மூரிவெம் பழிபெற முடித்த தாமெனச்.
4. சூரியன் சிறுவனை: நோக்கிச் சொல்லினுன். (16)

1261. குறித்தநா ளிகந்தன குன்றத் தென்றிசை
வெறிக்கருங் குழலியை நாடன் மேயினர்
மறித்திவண் வந்திலர் மாண்டு ளார்கொலோ
பிறித்தவர்க் குற்றுள தென்ன பெற்றியோ.

'குறித்த நாள் இகந்தன-நாம் குறிப்பிட்டுக் கூறிய தவணை நாட்கள் கடந்தன; குன்ற-அவ்வாறு அத்தவணை நாட்கள் கழிந்து போகவும், தென்திசை-தெற்குத் திசையில், வெறி கரும் குழலியை - நறுமண முடைய கரிய கூந்தலையுடைய சீதையை, நாடல் மேயினர் - தேடுதலை மேற்கொண்டு சென்ற அநுமன் முதலினோர், மறித்து இவண் வந்திலர் - திரும்பி இங்கு வந்தாரல்லர்: மாண்டுளார் கொல் ஓ - (அவர்கள்) மாண்டு விட்டார்கள் போலும்? பிறித்து-வேறு, அவர்க்கு உற்று உளது - அவர் களுக்கு ஏற்பட்டது, என்ன பெற்றி ஓ-என்ன தன்மையதோ? (அறிகிலம் என்பதாம்).

பிறிது என்பது பிறித்து என எதுகை நோக்கி இரட்டித்தது.

(பி-ம்.) 1. குறித்த நாளிறந்தன; நாள் கழிந்தன; நாளி ருந்தனம்: நாள் முழு துங் குறைந்த.
2. வெறித்தருங் குழலியை: நாட மேயினர்.
3. யாண்டு ளார்கொலோ: யாண்டு ளார்கொலாம்.
4. குறித்தவர்க்; குற்றது கூறு பெற்றியோர்: என்னை பெற்றியோய் (17)

1262. மாண்டன ளவளிவண் மாண்ட வார்த்தையை
மீண்டவர்க் குரைத்தலின் விளித னன்றெனப்
பூண்டதோர் துயரொடு பொன்றி னர்கொலோ
தேண்டின ரின்னமுந் திரிகின் றார்கொலோ.

'(இது வன்றி), அவள் மாண்டனள் - அச்சீதை இறந்துவிட்டாள்; இவண் மீண்டு - இவ்விடத்திற்குத் திரும்பிவந்து, மாண்ட வார்த்தையை அவர்க்கு உரைத்தலின் - அவ்வாறு அவள் இறந்த செய்தியை அந்த இராமபிரான் முதலியவர்களுக்குச் சொல்லுவதிலும், விளிதல் நன்று என-நாம் இறந்து போதலே நல்லது என்று எண்ணி; பூண்டது ஓர் துயர் ஓடு-தாம் மேற்கொண்ட ஒரு துன்பத்தினோடு, பொன்றினர் கொல், ஓ-(அவ்வநுமன் முதலினோர்) இறந்தார்களோ? (அதுவன்றி), இன்னமும் தேண்டினர் - இன்னும் தேடினவர்களாய், திரிகின்றார் கொல் ஓ - வேறு பல இடங்களிலும் திரிந்து கொண்டிருக்கிறார்களோ?

வார்த்தை:வார்த்தா என்னும் வடசொல்லின் திரிபு; வார்த்தா - செய்தி. தேண்டினர் - தேடினர்; 'தேண்டினேன் கண்டேன் வாழி' (525) என்றதையும் நோக்குக; இது செய்யுள் விகாரம். ஓ; இரண்டிடத்தும் வினுப்பொருளில் வந்தது.

(பி-ம்.) 1. அவளவண்: இவர் மாண்ட: அவளினி மாண்ட: மாண்டனள் போலுங்கொல் மாதவ் வார்த்தையை.
3. பூண்டதோர் துயர்கொடு. 4. திரிகின் ருர்களோ. (18)

1263. கண்டன ரரக்கரைக் கறுவு கைம்மிக
மண்டமர் தொடங்கினுர் வஞ்சர் மாயையால்
விண்டல மதனின்மே யினர்கொல் வேறிலாத்
தண்டலி னெடுஞ்சிறைத் தளைப்பட் டார்கொலோ.

'அரக்கரை - (சீதையை எடுத்துச் சென்ற இராவணன் முதலிய) அரக்கர்களை, கண்டனர் - பார்த்து, கறுவு கை மிக - கோபம் அதிகரிக்க, மண்டு அமர் தொடங்கினுர் - நெருங்கிய போரைத் தொடங்கினவர்களாகி, வஞ்சர் மாயையால் - வஞ்சகச் செயலுடைய அவ்வரக்கர்களின் மாயச் செயலால், விண் தலம் அதனின் - சுவர்க்கத்தினிடத்து, மேயினர் கொல் - (இறந்து) அடைந்துவிட்டார்களோ? (அல்லது) வேறு இலா - தப்பி வருவதற்கு வேறு வழி இல்லாத, தண்டல் இன் நெடும் சிறை தளைப்பட்டார் கொல் - நீங்குதல் இல்லாத பெரும் சிறையினிடத்து, விலங்கு பூண்டு அடைத்து வைக்கப் பெற்ருர்களோ? ஓ:அசை.

(பி-ம்.) 1. கறுப்புக் கைமிக; கதுவு கைமிக்; அரக்கனைக் கண்டு கைமிக.
2. தொடங்கிய வஞ்சர்; தொடங்கினர் வஞ்சர்; தொடங்கிய வஞ்ச: தொடங்கியவ் வஞ்சன்.
3. விண்டல மேயின ரோகொல்: விண்டல மேயின ரென்கொல் வென்றிலா(து); விண்டல மெய்தின ரேகொல் வேறிலாத்; வென்றிலாத்: எண்ணிலார்.
4. தண்டலிற் கொடுஞ்சிறை தளைப்பட் டார்களோ (19)

1264. கூறின நாளவ ரிருக்கை கூடலம்
ஏறலஞ் சுதுமென வின்ப துன்பங்கள்
ஆறின ரருந்தவ மமைகின் ருர்கொலோ
வேறவர்க் குற்றதென் விளம்பு வாயென்ருன்.

'கூறின நாள் - (நமக்குத் தவணையாகக் குறிப்பிட்டுச்சொன்ன) நாட்களுள், அவர் இருக்கை - அந்த இராமன் முதலினோர் இருப்பிடத்தை, கூடலம் - நாம் சேர்ந்தோமல்லோம்; ஏறல் அஞ்சுதும் என - (இனி அங்

குப் போய்ச்) சேரும் செயலுக்கு அஞ்சுகின்றோம்;' என - என்று தீர்மானித்து, இன்ப துன்பங்கள் ஆறினர் - இன்பம் துன்பம் என்பனவற்றினின்றும் தணிந்தவர்களாய், அரும் தவம் அமைகின்றார் கொல் ஓ அரிய தவத்தில் ஈடுபட்டு மற்றவற்றை மறந்தார்களோ? வேறு என் அவர்க்கு உற்றது - வேறு என்ன அவர்களுக்கு நேரிட்டது? விளம்புவாய் என்றான் - நீ ஊகித்து அறிந்து சொல்வாயாக;' என்று இராமபிரான் சுக்கிரீவனை நோக்கிக் கூறினான்.

இன்ப துன்பங்கள் ஆறினர் - இன்ப துன்பங்கள் ஒடுங்க அமைதியடைந்தவர்களாய்; இது உலகப்பற்று நீங்குவதற்கும், பேரின்பம் எய்துவதற்கும் காரணமான தவத்திற்கு உறுதி யளிப்பதாகும். அவர்கள் அஞ்சியது தவனை கடந்து சென்றால் சுக்கிரீவன் தண்டிப்பானென்று எண்ணி. ஏறல் - செல்லுதல்.

இதன்பின், அச்சுப் பிரதிகளிலும் சில ஏட்டுப் பிரதிகளிலும் அடியிற் காணுமாறு சில பாடல்கள் அதிகமாக உள்ளன. அவை, முன் 1255இன் அடிக்குறிப்பிற் கூறியபடி மதுவன நிகழ்ச்சியின் தொடர்பைக் கூறுவன ஆதலின், அவையும் இங்குப் பாடவரிசையிற் சேர்த்துக் கொள்ளப் பெறாமல் கீழே தனியே அதிகப் பாடல்களாகக் குறிக்கப்பெற்றன.

(அ) என்றுரைத் திடருழந் திருக்கு மேல்வையில்
வன்றிறற் றதிமுகன் வான ரேசன்முன்
தன்றலைப் பொழிதரு குருதி தன்னெடும்
குன்றெனப் பணிந்தன னிருகை கூப்பியே.

(ஆ) எழுந்துநின் றையகே ளின்று நாளையோ
டழிந்தது மதுவன மடைய வென்றலும்
வழிந்தழி குருதியின் வதன நோக்கியே
மொழிந்திடிங் கியாரது முடித்து ளோரென.

(இ) நீலனுங் குமுதனு நெடிய குன்றமே
போலுயர் சாம்பனும் புணரி போர்த்தென
மேலெழு சேனையும் விரைவின் வந்துறுச்
சால்புடை மதுவனந் தனைய ழிப்பவே.

(ஈ) தகைந்தவச் சேனையைத் தள்ளி யின்னையும்
இகழ்ந்துரைத் தியைந்தனன் வாலி சேய்மனக்
குகந்தன புகன்றவவ் வுரைபொ றாமையே
புகைந்தொரு பாறையின் புணர்ப்பு நீக்கியே.

(உ) இமைத்தன்முன் வாலிசே யெழில்கொள் யாக்கையைச்
சமைத்தியென் றெறிதரப் புறங்கை யாற்றகைத்
தமைத்தரு கனலென வழன்றெற் பற்றியே
குமைத்துயிர் பதைப்பநீ கூறு போயென்றான்.

(ஊ) ஏம்பலோ டெழுந்துநின் றிரவி கான்முளை
பாம்பணை யமலனை வணங்கிப் பைந்தொடி
மேம்படு கற்பினா ளென்னு மெய்ம்மையைத்
தாம்புகன் றிட்டதிச் சலமென் றோதினான்.

(எ) பண்டரு கிளவியா டன்னைப் பாங்குறக்
கண்டன ரன்னதோர் களிப்பி னுலவர்
வண்டறை மதுவன மழித்து மாந்திய
தண்டநா யகவினி யவலந் தீர்கென.

(ஏ) வந்தனர் தென்றிசை வாவி னாரெனப்
புந்திநொந் தென்னைகொல் புகலற் பாலரென்
றெந்தையு மிருந்தன னிரவி கான்முளை
நொந்தவத் ததிமுகன் றன்னை நோக்கியே-

(ஐ) யாரவ ணிறுத்தவ ரியம்பு வாயென
மாருதி வாலிசேய் மயிந்தன் சாம்பவன்
சோர்வறு பதினெழு வோர்க டுன்னினார்
ஆர்கலி நாணவந் தார்க்குஞ் சேனையார்.

(ஒ) என்றவ னுரைத்தலு மிரவி காதலன்
வன்றிறற் றதிமுகன் வதன நோக்கியே
ஒன்றுனக் குணர்த்துவ துளது வாலிசேய்
புன்றொழிற் செய்கைசேர் புணர்ப்ப னல்லனால்.

(ஓ) கொற்றவன் பணிதலைக் கொண்டு தேடினார்
சுற்றிய திசையெலாந் துருவித் தோகையைப்
பற்றிய பகைஞரைக் கடிந்து பாங்கர்வந்
துற்றன ரவரையா முரைப்பதி யாதென்றான்.

(ஔ) அன்றியும் வாலிசே யரச தாதலால்
பின்றுத லரிதது பிழைப்பில் சிந்தையாய்
ஒன்றுநீ யுணரலை யுறுதி யோர்ந்தினிச்
சென்றவன் றனைச்சரண் சேர்தி யீண்டென்றான்.

(குறிப்பு:) ஒரு சுவடியில் இச்செய்யுள் இல்லை; இதற்கு மாறாக அடியிற்காணும் செய்யுள் உள்ளது).

என்றவத் ததிமுகன் றன்னை யேனைய
வன்றிற லரசிளங் குரிசில் மைந்தனைப்
பின்றுத லவனையென் பேசற் பாற்றுநீ
இன்றுபோ யவனடி யேத்துவா யென்றான்.

(க) வணங்கிய சென்னியன் மறைத்த வாயினன்
உணங்கிய சிந்தைய னெடுங்கு மேனியன்
கணங்களொ டேகியக் கான நண்ணினன்
மணங்கிளர் தாரினன் மறித்தும் வந்தரோ.

(ங) கண்டனன் வாலிசேய் கறுவு கைம்மிக
விண்டவ னம்மெதிர் மீண்டு ளானெனின்
உண்டிடு குதுமுயி ரென்ன வுன்னினன்
தொண்டெனத் ததிமுகன் றெழுது தோன்றினன்.

(ச) போழ்ந்தென யான்செய்த குறைபொ றுக்கென
வீழ்ந்தன னடிமிசை வீழ வாலிசேய்
தாழ்ந்துகைப் பற்றிமெய் தழீஇக்கொண் டும்மையான்
சூழ்ந்தது பொறுக்கென முகமன் சொல்லினன்.

(ஞ) யாமுதற் குறித்தநா ளிறத்த லெண்ணியே
பேமுறத் துயர்துடைத் தளித்த பெற்றிபோல்
தாமரைக் கண்ணவன் றுயரந் தள்ளநீர்
போமெனத் தொழுதுமுன் னநுமன் போயினன்.

(குறிப்பு): இச்செய்யுள் ஒரு பிரதியில் இல்லை. சில பிரதிகளில் இதனுடன் மதுவனப்படலம் முற்றும்.

(ட) வன்றிறற் குரிசிலு முனிவு மாறினன்
வென்றிகொள் கதிருந்தன் வெம்மை யாறினன்
என்றுகொண் டியாவரு மெழுந்து போதலே
நன்றென வேகினர் நவைக்க ணீங்கினர்

(குறிப்பு) இதன்பின் ஒரு சுவடியில் இப்பதிப்பில் உள்ள 1256ம் செய்யுள் பிரதிபேதத்துடன் காண்கின்றது.

(ண) இப்புறத் திராமனு மிரவி சேயினை
ஒப்புற நோக்கிவந் துற்ற தானையர்
தப்பறக் கண்டன மென்ப ரோதகா
தப்புறத் தென்பரோ வறைதியா லென்றான்.

(பி-ம்.) 1. கூறிய நாள்.
2. ஏறின சூலமென் றின்ப துன்பங்கள்: இன்ப துன்புகள்.
3. அருந்தவ மயர்கின் றூர்கொலோ; ஆகின் றூர்களோ.
4. உற்றது விளம்புவாய்; உற்றதை விளம்புவாய்; உற்றது வினவுவாய். (20)

## அநுமன் தோன்றுதல்.

1265. *என்புழி யநும னு மிரவி யென்பவன்*
*தென்புலத் துளனெனத் தெரிவ தாயினுன்*
*பொன்பொழி தடக்கையப் பொருவில் வீர னும்*
*அன்புறு சிந்தையா னமைய நோக்கினுன்.*

என்புழி - என்று (இவ்வாறு இராமபிரான் சுக்கிரீவனை நோக்கி) வினவிய காலத்தில், அநுமனும் - அநுமனும், இரவி என்பவன் - சூரியன், தென் புலத்து உளன் என - தெற்குத் திசையில் தோன்றியுள்ளான் போல, தெரிவது ஆயினுன் - (அவர்கள் கண்களில்) காணப்பட்டான்; பொன் பொழி தடகை - இரப்போர்க்குப் பொன்னை (மிகுதியாகச்) சொரிந்தருளும் பெரிய கைகளையுடைய, அ பொருவு இல் வீரனும் - அந்த ஒப்பற்ற வீரனை இராமபிரானும், அன்பு உறு சிந்தையான்- அன்பு மிக்க மனமுடையவனுய், அமைய நோக்கினுன்-அவ்வநுமனை நன்ருகப் பார்த்தான்.

அநுமனைச் சூரியனுகவும், அவன் தென்புலத்தினின்று வந்தானுதலின் சூரியன் தென்திசையிலிருந்து வருவதாகவும் கூறப்பெற்றது: முன் இலங்கை நோக்கிக் கடல் கடந்து சென்ற அநுமனை 'வடக்கெழுந் திலங்கை செல்லும் பருதிவா னவனு மொத்தான்' (30) என்பதற்கேற்ப, இப்பொழுது, தெற்கிருந்து வரும் சூரியனுக உவமிக்கப் பெற்றது. பொன் பொழி தடக்கை - அழகு ததும்பி வழியும் பெருங்கை என்னலும் அமையும்; (பொன் - அழகு). பொரு வில் வீரன் எனப் பிரித்து, போர் புரிவதிற் சிறந்த கோதண்டம் என்னும் வில்லையுடைய பெரு வீரனுன இராமபிரான் எனப் பொருள் கோடலும் ஒன்றும். அமைய நோக்குதல் - நன்ருக ஊன்றிப் பார்த்தல்; ஒப்பு. 39, 591. ஒரு சுவடியில் இச்செய்யுளிலிருந்து அடிதொழுது அநுமக் காட்சிப்படலம் என்று தொடங்கும்.

(பி-ம்.) 2. தென்புறத் துளனெனத்.
3. பொன்பொழி தடக்கையான்.
4. அன்புறு சிந்தையன்; அன்புறச்சிந்தையன்;மையயல் நோக்கினுன். (21)

## அநுமன் செயலும் இராமபிரான் அவன் குறிப்பினை உணர்தலும் 1266-68

1266. *எய்தின னநுமனு மெய்தி யேந்தறன்
மொய்கழ றொழுதிலன் முளரி நீங்கிய
தையலை நோக்கிய தலையன் கையினன்
வையகந் தழீஇநெடி திறைஞ்சி வைகினான்.*

அநுமனும் - அநுமனும், எய்தினன் - அவ்விடத்தை அடைந்தனன்; எய்தி - அவ்வாறு வந்தடைந்து, ஏந்தல் தன் - பெருமையிற் சிறந்த இராமபிரானுடைய, மொய் கழல் - வலிய கழலணிந்த திருவடிகளை, தொழுது இலன் - வணங்காதவனாய், முளரி நீங்கிய - தாமரை மலரை விட்டு நீங்கிப் பூமியில் அவதரித்த, தையலை - (திருமகளாகிய) பிராட்டியை, நோக்கிய - அவள் இருக்கும் தென்திசை நோக்கிய, தலையன் கையினன் - தலையையும் கைகளையும் உடையவனாய்த் (திரும்பி), வையகம் தழீஇ - பூமியைத் தழுவியது போலப் படிந்து, நெடிது இறைஞ்சி - நீண்ட (ஸாஷ்டாங்க) நமஸ்காரம் செய்து, வைகினான் - இருந்தான்.

மொய்கழல் - நெருங்கிய கழல் என்னலும் ஒன்றும். முளரி நீங்கிய தையல்; 395; ஒப்பு. 'போதினை வெறுத்தரசர் பொன்மனை புகுந்தாள்' (பால. கோலங்காண்:35); 'அரவிந்த மலரு ணீங்கி... திருவிங்கு வருவாள் கொல்லோ' (ஆரண்ய:சூர்பணகை:59). இனி முளரி நீங்கிய தையல் என்பதற்கு நெருப்பும் கிட்ட அணுக அஞ்சி ஒதுங்கிய கற்பின் சிறப்புடைய தையலாகிய சீதை எனப் பொருள் கூறலும் ஒன்றும்; (முளரி - நெருப்பு) நெருப்பு சுடாமல் அகன்றது; அநுமன் இட்ட தீ இலங்கை முழுவதும் எரித்தும், பிராட்டியிருந்த இடத்தை மட்டும் அணுகாது அகன்றதாலும். 1241., பின்பு இலங்கைப் போர் முடிந்தபின் பிராட்டி, நெருப்பிற் பாய்ந்தபோது அத் தீ அவளைச் சுடாது ஒழிந்தமையாலும் விளங்கும்; உயுத்த. மீட்சிப். 85. அநுமன், இராமபிரானை வணங்கித் தான் பிராட்டியைக் கண்டுவந்த செய்தியை எடுத்துக் கூறாமல், முதலில் பிராட்டியின் திசை நோக்கி வணங்கினது, அப்பிராட்டி உயிர் வாழ்வதும், அவளது கற்பின் சிறப்பும் குறிப்பினால் எளிதில் விளங்க வைத்ததாகும். இவ்வாறே அங்கதன் முதலிய வானர வீரர்களுக்கு,முன், 'ஞாலநாயகன்றன் றேவி சொல்லினள் நன்மை என்றான்' (1251) என்பதால், பிராட்டியின் நன்னிலை முதலியவற்றைக் குறிப்பால் உணரவைத்ததும் இங்கு நோக்கற்பாலதாம். இவ்வாறு, அநுமன் குறிப்பால் அறிவித்ததை இராமபிரான், முற்றும் உணர்ந்து கொண்டானென்பது அடுத்த செய்யுளில் நன்கு விளங்குவது காண்க. இவ்வாறு அநுமன் பிராட்டியிருந்த திசைநோக்கி வணங்கியதை, இங்குக் கூறியதுபோல முதலில் வைத்துக் கூறாமல், இராமபிரான் வினவியபின் அவ்வாறு வணங்கிக்

கூறலாயினன் என்று முதனூல் கூறும். திசைநோக்கித் தொழுதல் என்னும் மரபு: அயோத்யா. குகப். 30; 38:சீவக. 849. 'இறைஞ்சி வைகினன் - பெருமாளைச் சேவித்தான்' என்பது பழைய உரை.

(பி-ம்.) 1. எய்தி யெந்தைதன்.
2. மொய்கழற் றெழுதிலன்; கழ லெந்தைதன்.
3. தையல்வை கியதிசை நோக்கித் தாழ்ந்துபின்.
4. வையநா யகனையு மிறைஞ்சி வாழ்த்தினன்: வையமேல் விழுந்தடி வணங்கி வாழ்த்தினன் (22)

1267. திண்டிற லவன்செய றெரிய நோக்கினன்
வண்டுறை யோதியும் வலியண் மற்றிவன்
கண்டது முண்டவள் கற்பு நன்றெனக்
கொண்டனன் குறிப்பினு லுணருங் கொள்கையான்.

குறிப்பினல் உணருங் கொள்கையான் - குறிப்பைக் கொண்டு செய்தி யனைத்தையும் நன்கு உணர்ந்து கொள்ளும் நுண்ணறிவுடைய இராமபிரான், திண்திறல் அவன் செயல் - மிக்க திறமையுடைய அவ்வநுமனுடைய அச்செயலை, தெரிய நோக்கினன்-நன்ருகப் பார்த்து அறிந்து, வண்டு உறை ஓதியும் - வண்டுகள் தங்கியுள்ள கூந்தலையுடைய பிராட்டியும், வலியள் - நன்னிலையில் உறுதியுடன் இருக்கிருள்; இவன் கண்டதும் உண்டு - இவ்வநுமன் அவளை நேரில் பார்த்து வந்ததும் உண்டு; அவள் கற்பும் நன்று - அவளுடைய கற்புநிலையும் சிறப்புற்றிருக்கின்றது; என - என்று, கொண்டனன் - ஊகித்துக் கொண்டான். மற்று:அசை;

பிராட்டி வலியள்; அநுமன் அவளைக் கண்டான்; அவள் கற்பும் சிறந்துள்ளது; அதனுலே அவள் இருக்கும் திசைநோக்கி இங்கு முன்னர்த் தொழுகின்ருன் என்று இராமபிரான் ஊகித்து நன்கு அறிந்து கொண்டான் என்பதாம். இராமபிரான் குறிப்பினு லுணருங் கொள்கையான்; 'இங்கித ஞானது கோஸலா:' என்பதையும் நோக்குக.

(பி-ம்.) 1. தெரிந்து நோக்கினர்.
2. வண்டிற லோதியும்; வண்டிய லோதியும்; வண்டற லோதியும்; வண்டம ரோதியும் வலியள் மற்றிவள்,
3. நன்றெனுக். 4. கொண்டவான்: உணர்ந்த கொள்கையான் (23)

1268. ஆங்கவன் செய்கையே யளவை யாமெனு
ஓங்கிய வுணர்வினல் விளைந்த துன்னினன்
வீங்கின தோள்புனற் கண்கள் விம்மின
நீங்கிய தருந்துயர் காத னீண்டதே.

(இராமபிரான்), ஆங்கு அவன் செய்கையே - அங்கு அநுமன் செய்த குறிப்பான அச் செயலே, அளவை ஆம் என - பிராட்டியின் நன்னிலைக்கு ஓர் அளவுகோல் ஆகும் என்று, ஓங்கிய உணர்வினல் - சிறந்து ஓங்கி விளங்கிய தன் அறிவினல், விளைந்தது உன்னினன் - அங்கு நடந்த செய்திகளை நுட்பமாய் உணர்ந்து அறிந்துகொண்டான்; (அதனுல்), தோள் வீங்கின - அப்பெருமானது தோள்கள் மகிழ்ச்சியால் பூரித்தன; கண்கள் புனல் விம்மின - கண்கள் ஆனந்தக் கண்ணீரால் பெருக்கெடுத்தன; அரும் துயர் நீங்கியது - அவனுடைய நீங்குதற்கரிய துயரமும் நீங்கிற்று; காதல் நீண்டது - பிராட்டிபாற் கொண்ட அன்பும் வளர்வதாயிற்று. ஏ: அசை.

பெரிதாகிய பொருளைச் சிறிதாகிய அளவுகோல் கொண்டு அளப்பது போல, அநுமன் பிராட்டியை முதலில் வணங்கிய சிறு செயல் அப்பிராட்டியின் கற்பின் பெருமையை அளந்து தெரிவிக்கும் அளவைக் கோலாக ஆயிற்று என்பதாம். இதன் பின் ஒரு சுவடியில் பின்வரும் அதிகப்பாடல் காணப்படுகிறது.

வனைகருங் குழலியைப் பிரிந்த மாத்துயர்
அனகனுக் கவளெதி ரணைந்த தாமென
மனநிலை யெழுந்தபே ருவகை மாட்சிகண்
டநுமனு மண்ணலுக் கறியக் கூறுவான்.

(பி-ம்.) 1. செய்கையை யளவை யாமென; செய்கையி னளவைக் கொண்டுதான்.
2. ஓங்கினன் வினையினன்: ஓங்குதல் லுணர்வினல் விளைந்ததுன்னியே.
3. வீங்கினன் றேள்புனல் கண்கள் விம்மினன்: மலர்க் கண்கள் விம்மின: வீங்கின புயமலர்க் கண்: புனல் மலர்க்கண் விம்மின.
4. நீங்கின தருந்துயர்: நீங்கின வருந்துயர். (24)

## அநுமன் பிராட்டியின் நிலைமை கூறுதல். 1269 - 79

1269. கண்டனென் கற்பினுக் கணியைக் கண்களால்
தெண்டிரை யலைகட லிலங்கைத் தென்னகர்
அண்டர்நா யகவினித் தவிர்தி யையமும்
பண்டுள துயருமென் றநுமன் பன்னினன்.

அநுமன் - அநுமன் (இராமபிரானை நோக்கி), 'அண்டர் நாயக - தேவர்களுக்குத் தலைவனே! தெள் திரை அலை கடல் இலங்கை தென் நகர் - தெளிவானவும் சுருளுமியல்புடையனவுமான அலைகளோடு கூடிய

கடல் சூழ்ந்த இலங்கை என்னும் தெற்கேயுள்ள நகரில், கற்பினுக்கு அணியை - கற்பிற்கு ஓர் அணிகலம் போன்ற பிராட்டியை, கண்களால் கண்டனென் - என் கண்களாலேயே (பிரத்யக்ஷமாய்ப்) பார்த்தேன்; இனி - இனிமேல், ஐயமும் பண்டு உள துயரும் தவிர்தி என்று - உம் சந்தேகத்தையும், இதுகாறும் கொண்டுள்ள துயரங்களையும் நீக்குவீராக' என்று, பன்னினன் - மற்றும் விளக்கிச் சொல்வானானன்.

மற்ற சொற்களால் சொல்லத் தொடங்கினால் பிராட்டியின் நிலையையும் அவள் வாழ்வையும் பற்றி என்ன சொல்லப் போகிறானோ என்ற ஏக்கத்தையுண்டாக்குமாதலால், அவ்வாறு கொள்வதற்குச் சிறிதும் இடமின்றி முதன் முதலே, கண்டனென் என்று கூறினான்; கற்பினுக்கு அணியை என்றதால் அப்பிராட்டியின் கற்பின் சிறப்பின் பெருமையாகிய அவளுடைய ஒழுக்கச் சிறப்பையும் கூறி, அப்பெருமானுடைய ஐயமும் துயரமும் தவிர்க்கும் முறையில் சொல்லின் செல்வனது சொற்சிறப்பு இனிது விளங்குவது நோக்கி இன்புறத்தக்கதாகும். கண்களாற் கண்டனென் என்றது, பிறர் சொல்லக் கேட்டு வந்தேனல்லேன், நேரில் கண்டேன் என்பதாம்; 'காசில் கண்ணினை சான்றெனக் கண்டனன்' என முன் கூறியுள்ளமையும் காண்க. (428). மேலும் இரவில் கருநிறத்தரக்கியர் குழுவினிடையே மின்போல ஒளிவீசி விளங்கிய பிராட்டியின் திருவுருவம், அநுமன் கண்களுக்கு நன்கு புலப்பட்டது என்பதாம். இங்குக் கூறியவாறே, 'த்ருஷ்டா ஸீதா' என்று கூறியதாகவே முதனூலும் அமையும். கண்களாற் காண்டல் என்பது. 216; 630. இச்செய்யுள் முதல் 1290 முடிய அநுமன் பிராட்டியின் நிலைமையை இராமபிரானுக்குக் கூறியவை. துயர் - பிரிவிற்றுயர். ஐயம், கண்டானோ இல்லையோ என்றதாலும், கற்பின் நிலை கருதியும் ஏற்பட்டவை.

(பி-ம்.) 1. கற்பினுக் கணங்கைக்.
3. அண்டநாயக; துறத்தி யையமும்.
4. அநுமன் பன்னுவான்.

## வேறு

1270. உன்பெருந் தேவி யென்னு முரிமைக்கு முன்னைப் பெற்ற
மன்பெரு மருகி யென்னும் வாய்மைக்கு மிதிலை வேந்தன்
தன்பெருந் தனயை யென்னுந் தன்மைக்குந் தகைமை சான்ற
என்பெருந் தெய்வ மையா வின்னமுங் கேட்டி யென்பான்.

'ஐயா - ஐயனே! உன் பெரும் தேவி என்னும் உரிமைக்கும்-உமது பெருமைக்குரிய மனைவி என்னும் பற்றுக்கும், உன்னை பெற்ற மன் பெரும் மருகி என்னும் வாய்மைக்கும் - உம்மைப்பெற்ற அரசரான

தசரத சக்ரவர்த்தியின் பெருமைக்கேற்ற மருமகள் என்னும் சிறப்புக்கும், மிதிலை வேந்தன்தன் - மிதிலை நகருக்கிறைவனுன சனகராஜனுடைய, பெரும் தனயை என்னும் தன்மைக்கும் - சிறந்த குமாரி என்னும் குணச்சிறப்புக்கும், தகைமை சான்ற - சிறப்பு அமைந்த (குணங்களையுடைய பிராட்டி), என் பெரும் தெய்வம்-எனது சிறந்த தெய்வமாய் உள்ளாள்; இன்னமும் கேட்டி - இன்னமும் யான் (பிராட்டி மூலம் அறிந்து கொண்ட) செய்திகளைக் கேட்டருள்வீராக!' என்ருன் - என்று அநுமன் கூறி மேல் சொல்லத் தொடங்கினுன்.

பிராட்டி என்ற எழுவாயை வருவித்துக் கொண்டு, 'என் பெருந் தெய்வம் ஐயா!' என்பதனை இராமபிரானுக் காக்கிப் பொருள் கொள்வாரும் உளர். இதனுல், பிராட்டி பிறந்து புகுந்த இரு குலங்களின் பெருமைக்குக் காரணமாய்ச் சிறந்து விளங்குகின்ருள், என்று அநுமன் கண்டறிந்து கூறினுன் என்பதாம். மேலும், இப்பிராட்டியின் சீரிய ஒழுக்கமே இவ்விரு குலங்களின் சிறப்பை இன்றும் உலகம் பாராட்டச் சிறந்த ஏதுவாய் உள்ளது என்பதும் அறியற்பாலதாம்; 'மண்ணிடை யாவரி ராகவ னன்றி மாதவ மறத்தொடும் வளர்த்தார்' என்று (பால. நகரப்: 5) துணிந்து சிறப்பிக்கப் பெறும் தருமாத்மாவான இராமபிரானுடைய தேவி என்ற உரிமைக்கு ஏற்றவாறு அறக் கற்பின் அணியாய் நின்ருளாதலின் பிராட்டியை 'உன் பெருந்தேவி என்னும் உரிமைக்கும்' என்றும், 'மறக்கமுற் ருதன வாய்மை காத்தவன், துறக்க முற்ருன்' என்றும், (ஆரண்ய. சடாயுகாண்: 19) 'வாய்மையு மரபுங் காத்து, மன்னுயிர் துறந்த வள்ளல் (கிட்கிந்தா. வாலிவதைப்: 76 ) என்றும் பாராட்டியுள்ளதற் கேற்ப, 'மன்பெரும் மருகியென்னும் வாய்மைக்கும்' என்றும், பற்றனைத்துங் கடந்த பரம யோகியாகிய சுகப்பிரமம் முதலிய மகான்களும் வந்து, காத்திருந்து அறிவுரை கேட்டுத் தெளியப் பெறும் மகாஞானியாகிய சனகராசன்மகளாய், 'சனகன்பெற்ற அன்னத்தை' (கிட்கிந்தா வாலிவதைப். 78) என்னும் பெருமைக்கேற்ப, நல்லறிவு சிறந்து விளங்க நின்ருளாதலின், 'மிதிலை வேந்தன், தன்பெருந்தனயை யென்னுந்தன்மைக்கும் தகைமை சான்ற' என்றும், அநுமன் ஆராய்ந்துணர்ந்து. கூறினுன் என்பதாம். இனி, என் பெருந்தெய்வம் என்றதால், அநுமன், 'கற்புக்கடம் பூண்ட வித்தெய்வ மல்லது, பொற்புடைத்தெய்வம் யாங்கண் டிலமால்! (சிலப். 15: 143-4) என்ற உண்மைப் பொருளை, உணர்ந்து உறுதி கொண்டான் என்பதும் விளங்குவதாகும். இனி இராமபிரானினும், பிராட்டியை அநுமன் தன் பெருந் தெய்வமாகக் கண்டு கொண்டவன் என்பதையும் இதனுல் விளங்கவைத்த சிறப்பு, உய்த்துணர்ந்து போற்றத் தக்கதாம்: இதனுலன்ரே, 'ஸீதாயாச் சரிதம் மகத்' என்றும், 'சிறையிருந்தா ளேற்றங் கூறுவாம்' என்றும் ஆன்ருேர் பிராட்டிக்குத் தனிச் சிறப்பைத்தந்து பாராட்டிக் கூறினர் என்பதும் விளங்குவதாகும்.

(பி-ம்.) 2. மிதிலை மன்னன்.

3. தன்பெருந் தைய லென்னுந் தலைமைக்கும் தகைமை சான்ருள்; தன்பெரும் புதல்வி யெள்னும்: தகைமைக்கும் தலைமை சான்ருள்.

4. ஐய வென்னினும்: நன்பெருந் தெய்வ நங்கை நலமின்னுங் கேட்டி யென்பால்; கேட்டி யென்ருன். (26)

1271. பொன்னல தில்லைப் பொன்னை யொப்பெனப் பொறையி னின்ருள்
தன்னல தில்லைத் தன்னை யொப்பெனத் தனக்கு வந்த
நின்னல தில்லை நின்னை யொப்பென நினக்கு நேர்ந்தாள்
என்னல தில்லை யென்னை யொப்பென வெனக்கு மீந்தாள்.

பொன்னை ஒப்பு - பொன்னை ஒத்து இருப்பது, பொன் அலது இல்லை- பொன்னே அல்லது பிறிது ஒரு பொருள் இல்லை; என பொறையில் நின்ருள் - என்று உவமை கூறும்படி பொறுமையில் தலைசிறந்து நின்ருள்; தன்னை ஒப்பு தன் அலது இல்லை என - தனக்கு ஒப்பு தானே அல்லாது வேறு இல்லை என்பது போல, தனக்கு வந்த - (தன் பாக்கிய விசேடத்தால்) தனக்குக் கணவனுக வந்தமைந்த, நின்னை ஒப்பு நின் அலது இல்லை என - உமக்கு ஒப்பு நீவிரே அல்லாது வேறு ஒருவர் இல்லை என்னும் சிறப்பை, நினக்கு நேர்ந்தாள் - உமக்குத் (தன் ஒழுக்க மேம்பட்டால்) அளித்துள்ளாள்; என்னை ஒப்பு - (அடியனுகிய) எனக்கு ஒப்பு, என் அலது இல்லை என - யானே யாவேன் என்னும் சிறப்பை, எனக்கும் ஈந்தாள் - எளியேனுகிய எனக்கும் அளித்துள்ளாள்.

பொன், தீயில் உருக்கிப் பின் தகடாக அடிக்கப் பெற்றும் கம்பியாக இழுக்கப் பெற்றும் மற்றும் பலவித மாறுபாடான நிலைமைகளுக்கு உள்ளானுலும், அவற்ருல் தன் பெருமை சிறிதுங் குறைவுருது மேலும் சிறந்த ஒளியும் உருவும் அடைந்து பல்லோரும் விரும்பி அணியும் உயர்ந்த அணிகலங்களாய், விளங்குவதே போல, பிராட்டியும், இராவணனுல் அபகரிக்கப்பட்டுக் காவல் அரக்கியர்களாலும், அவனுலும் பலவித நிந்தை மொழிகளால் தாக்குண்டும், அச்சுறுத்தப்பட்டும் தன் நிலையிற் சிறிதும் குன்ருது மேலும் உறுதியுடன் சிறந்து விளங்கினுளாதலின், பிராட்டிக்கு இங்குப் பொன் உவமிக்கப் பெற்றது. மகளிர்க்கெல்லாம் தான் எவ்வாறு சிறந்துள்ளாளோ, அவ்வாறே மனைவியைப் பெற்ற ஆடவர்க்கெல்லாம் நீவிர் சிறந்தவர் என்னும் பெருமையை நுமக்குத் தன்னெழுக்கச் சிறப்பால் உவந்தருளியுள்ளாள் பிராட்டி என்பதாம். வனங்களில் வாழும் இழிந்த சாகாமிருக வருக்கத்திற் பிறந்த எளியேன் பிராட்டியைத் தேடிக் கண்டு, நும்பாற் றெரிவித்து அதனுல் விளையக் கூடிய உலகப் பெருநன்மைக்குக் காரணமான நிலையில் இருக்கச் செய்த பெரும் பேறு எனக்கு அளித்துள்ளாளாதலின், 'என்னலதில்லை யென்னை

யொப்பென எனக்கும் ஈந்தாள்' என்றும் பிராட்டியைப் பலவிதங்களால் அநுமன் பாராட்டிக் கூறினன் என்பதாம். இராமபிரானும் பிராட்டியும் ஒருவருக்கொருவர் சிறிதும் ஏற்றத்தாழ்வுகள் இன்றி ஒரு படித்தான ஒப்புமை யுடைய தலைவர் தலைவியர் ஆதலின், நேர்ந்தாள் என்ற சொல்லாலும், தான் எளியோனென அடிமை யென்பதும், பிராட்டி மகோந்நதமான சிறப்பில் உள்ள பெருமாட்டி என்பதும் விளங்குவதோடு, இச்சிறப்பு அவள் தனக்கு அருள் சுரந்தளித்தது என்பதும் தோன்ற ஈந்தாள் என்ற சொல்லாலும் கூறியதால் விளங்குவது காணத்தக்கது. 'ஈ தா கொடு' என்னும் நன்னூல் பொதுவியல்: சூ. 56 ஐயும் இங்கு நோக்கற்பாலதாம். பிராட்டியின் பொறுமை; 1273; ஆரண்ய. கவந்தப். 1.

(பி-ம்.) 1. தனக்கு வந்தாள்.
3. நின்னை ஒப்பவர்: நின்னை நேர்ப்பன; ஒப்பவர் நினக்குமுன்னேவல்.
4. எனக்கு மீந்தாய்: எனக்கு மெந்தாய்: ஒப்பவ னெனக்குமென்றாய். (27)

1272. *உன்குல முன்ன தாக்கி யுயர்புகழ்க் கொருத்தி யாய*
*தன்குலந் தன்ன தாக்கித் தன்னையித் தனிமை செய்தான்*
*வன்குலங் கூற்றுக் கீந்து வானவர் குலத்தை வாழ்வித்*
*தென்குல மெனக்குத் தந்தா ளென்னினிச் செய்வ தெம்மோய்.*

'எம் ஓய் - எமது தாயாகிய பிராட்டி, உன் குலம் உன்னது ஆக்கி - உனது குலம் உன்னால் சிறப்புள்ளதாகி உன் பெயரால் நிலைபெறுமாறு செய்து, உயர் புகழ்க்கு ஒருத்தி ஆய தன் குலம் - உயர்ந்த புகழ்க்குத் தன்னலாது பிறர் இல்லையென்னும் தனிச் சிறப்பினையுடைய தான் பிறந்த (சனகர்) குலச் சிறப்பு, தன்னது ஆக்கி - தன் பெயரால் சிறந்து விளங்குமாறு செய்து, தன்னை இ தனிமை செய்தான் - தன்னை இவ்வாறு (உன்னை விட்டுப் பிரிந்து) தனித்து வருந்தும்படி செய்த இராவணனுடைய, வன் குலம் கூற்றுக்கு ஈந்து - கொடிய அரக்கர் குலத்தை யமனுக்கு அளித்து, வானவர் குலத்தை வாழ்வித்து - அந்த (இராவணனால் வருந்தும்) தேவர்கள் கூட்டங்களை நல்வாழ்வு பெறச் செய்து, என் குலம் எனக்கு தந்தாள் - வானரனாகிய என் குலத்தை (உலகம் கொண்டாடும் சிறப்பை) எனக்கு அளித்துள்ளாள்: என் இனி செய்வது - இனி என்ன சிறப்பு (அப்பிராட்டி) செய்யக் கூடியது உள்ளது? (வேறு இல்லை என்பதாம்.)

இனி அரக்கர் குலம் மாய்வதும், வானவர் குலம் வாழ்வதும், தன் குலம் உலகில் சிறப்புற்றேத்தப் பெறுவதும் இப்பிராட்டியின் கற்பால்

நிகழக் கூடிய உறுதியை அநுமன் இங்குத் தன் மதி நுட்பத்தால் ஊகித்துத் துணிந்து கூறிய பெற்றி நோக்கி இன்புறற்பாலதாம்.

(பி-ம்.) 1. ஒருந்தி யான; ஒருத்தி தோன்றும்.
2. இத் தன்மை செய்தான்: இத் தன்மை செய்த; அத் தனிமை செய்த,
3. மன்குலம் மறலிக் கீந்து: வன்குல மறலிக் கீந்து: வானவர் குலமுங் காத்தின்(று); குலமுங் காத்து; குலமுங் காத்நிட்.
4. செய்வ தம்மா. (28)

1273. விற்பெருந் தடந்தோள் வீர வீங்குநீ ரிலங்கை வெற்பின்
நற்பெருந் தவத்த ளாய நங்கையைக் கண்டே னல்லேன்
இற்பிறப் பென்ப தொன்று மிரும்பொறை யென்ப தொன்றும்
கற்பெனும் பெயர தொன்றுங் களிநடம் புரியக் கண்டேன்.

'வில்பெரும் தடம் தோள் வீர-கோதண்டமென்னும் வில்லேந்திய பெரியவும் இட மகன்றதுமான தோள்களையுடைய வீரனே! வீங்கு நீர் இலங்கை வெற்பில் - மிகுந்து விளங்கும் நீரையுடைய (கடலாற் சூழப் பெற்ற) திரிகூட மலைமேலாகிய இலங்கையில், நல் பெரும் தவத்தள் ஆய - சிறந்த பெரிய கற்பாகிய தவநெறியில் பொருந்தியுள்ள, நங்கையை - பிராட்டியை, கண்டேன் அல்லேன் - யான் காணவில்லை; (பின்னைக் கண்டவை எவையெனில்), இல் பிறப்பு என்பது ஒன்றும் - உயர்குடிப் பிறப்பு என்று சொல்லப்படுவது ஒன்றும், இரும் பொறை என்பது ஒன்றும் - பெரும் பொறுமை என்பது ஒன்றும், கற்பு எனும் பெயர் அது ஒன்றும் - கற்பு என்ற பெயரையுடையது ஒன்றும், களி நடம் புரிய கண்டேன் - (ஆகியவை ஒன்று கூடி) களிப்போடு நடனமாடப் பார்த்தேன்.

பிராட்டியை அநுமன் காணுமுன் அப்பிராட்டியின், நற்குலச் சிறப்பும், துன்பங்களையெல்லாம் பொருட்படுத்தாது தன் கணவன் வந்து தன்னை மீட்பான் என்று மேற்கொண்டிருந்த பொறுமைக் குணமும், கற்பின் திறமும் அவள் முன் சிறந்து தோன்றின வாதலின், அவற்றையே தான் முதலிற் கண்டதாகக் கூறினன். பெண்டிர்க்குரிய சீரிய குணங்கள், குலம், பொறை, கற்பு என்பன; 'குலம் பொறை கற்பிவை சுமந்த கோசலை' (அயோத்யா. பள்ளியடைப். 94). கற்பெனும் பெயர்; பெயர் - பொருள். இவை களிநடம் புரிதலாவது, இப்பிராட்டியை அடைய என்ன பேறு செய்தோமென்று, அவை சிறந்தோங்கி மகிழ்வுறுதல். இலங்கை வெற்பில் என்பதை, வெற்பிலங்கையில் என மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது.

(பி-ம்.) 1. விற்பெருந் தடக்கை வீர: விலங்குநீ ரிலங்கை.
2. தவத்து ளாய; ளுய: கண்டி லேன்யான்.
3. எற்பிறப் பென்பதோன்று மிருட்பிறை யென்பதொன்றும்.
4. கற்பெனுங் கற்ப தொன்று: கற்பெனுங் கடவுள் பூண்டு: நடஞ் செய்யக் கண்டேள். (29)

1274. கண்ணினு முளைநீ தையல் கருத்தினு முளைநீ வாயின்
எண்ணினு முளைநீ கொங்கை யிணைக்குவை தன்னி னோவா
தண்ணல்வெங் காம னெய்த வலரம்பு தொளைத்த வாறுப்
புண்ணினு முளைநீ நின்னைப் பிரிந்தமை பொருந்திற் றுமோ.

'நீ தையல் கண்ணினும் உளை - நீ பிராட்டியின் கண்களிலும் எப்பொழுதும் நீங்காது இருக்கின்றாய்; கருத்தினும் நீ உளை - அவள் சிந்தையிலும் நீங்காது தங்கியிருக்கின்றாய்; வாயின் எண்ணினும் நீ உளை - அவள் வாயினின்று தோன்றும் சொற்கள் ஒவ்வொன்றிலும் நீ இருக்கின்றாய்; கொங்கை இணை குவை தன்னில் - அவளது இரு தனங்களின் குவடுகளிலும், ஓவாது - ஒழிவுறாமல், அண்ணல் வெம் காமன் எய்த - பெருமையும் கொடுமையுமுடைய மன்மதன் ஏவிய, அலர் அம்பு தொளைத்த - மலர்க்கணைகள் தொளைத்ததால் உண்டான, ஆறு புண்ணினும் - ஆறாத புண்களிலும், நீ உளை - நீ இருக்கின்றாய்; (ஆதலால்), நின்னை பிரிந்தமை பொருந்திற்று ஆமோ - அப்பிராட்டி உன்னைப் பிரிந்துள்ளாள் என்பது பொருத்தமான செய்தி ஆகுமோ? (ஆகாது என்பதாம்).

இதனால், பிராட்டி இராமபிரானை, மனம், மொழி, மெய் என்பவற்றால் எப்பொழுதும் பிரியாதிருந்தாள் என்பது விளங்கும்; கண்ணை விட்டு நீங்காது இருத்தலாவது உருவெளித் தோற்றத்தால் இராமபிரான் அவள் கண்முன் நீங்காது விளங்குவது. கருத்தில் இருப்பது; எப்பொழுதும் இராமபிரானையே சிந்தித்திருப்பது; 334. நீ வாயின் எண்ணினும் இருப்பது, எப்பொழுதும் உன் திருநாமமே சொல்லிக் கொண்டிருப்பதால். கொங்கை இணைக்குவை .....புண்ணில் நீ இருப்பது, பிராட்டி நினைத் தழுவியது போல எண்ணியிருப்பதால். கண்ணினு முளைநீ முதலியன: ஒப்பு. 'எந்திழையார். கண்ணினு நாடுங் கருத்தினு நீயன்றிக் கண்டிலனே' (சிராமலைக் கோவை, 61).

(பி-ம்.) 1. நீ யாயின்; நீ வையத்(து).
2. எங்கனு முளைநீ கொங்கை: இணையினு முளைநீ வெய்ய; தன்னி னெவ்வர(து: எண்ணி லோவா; தன்னி லோவா; தன்னி லொவ்வா.
3. எய்த வயிலம்பு துளைக்க வாறுப்: தொளைத்த மாறுப்.
4. நின்னைப் பிரிந்தவை: பிரிந்தவள்; பிரிந்தது. (30)

1275. *வேலையு ளிலங்கை யென்னும் விரிநக ரொருசார் விண்டோய்*
*காலையு மாலை தானு மில்லதோர் கனகக் கற்பச்*
*சோலையங் கதனி னும்பி புல்லினுற் றொடுத்த தூய*
*சாலையி னிருந்தா ளைய தவஞ்செய்த தவமாந் தையல்.*

'ஐய - ஐயனே! தவம் செய்த தவம் ஆம் தையல் - தவம்என்பது செய்த தவத்தின் பயனுய் விளங்கும் பெண்ணுகிய பிராட்டி, வேலை உள் இலங்கை என்னும் விரி நகர் ஒருசார் - கடலின் இடையே உள்ள இலங்கையென்னும் பெரிய நகரின் ஒருபுறத்தே, விண் தோய் - ஆகாய மளாவி யுள்ளதும், காலையும் மாலைதானும் இல்லது ஓர் - காலை மாலை என்ற பேதம் இல்லாது ஒரே விதமாய் விளங்கும் ஒரு, கனக கற்ப சோலை அங்கு அதனின் - பொன்மயமான கற்பக விருக்ஷங்கள் உள்ள அசோக வனம் என்னும் சோலையின் உள்ளே, உம்பி புல்லினுல் தொடுத்த - (முன்) உன் தம்பி (இலக்குவன்) புற்களால் வேய்ந்து அமைத்த, தூய சாலையின் - (அதே) பரிசுத்தமான பன்ன சாலையில், இருந்தாள் - தங்கி யிருந்தாள்.

பொன்மயமான கற்பக விருக்ஷங்கள் முதலிய தெய்வத்தருக்கள் அங்கு ஒளி வீசியதால் பகல் இருள் என்ற பேதமின்றி எப்போதும் அசோகவனத்தில் ஒளி வீசிக் கொண்டிருந்தது என்பதாம். பஞ்சவடி யில் இலக்குவனுல் கட்டப்பட்ட பன்னசாலையைத் தரையோடே பெயர்த்துப் பிராட்டியைக் கொண்டுபோய் இராவணன் இலங்கையி லுள்ள அசோகவனத்திடை வைத்திருந்தான் என்பது; 626, 630; ஆரண்ய. சடாயு வுயிர்நீத்த; 74, 146. தவம் என்பது பிராட்டியை யடைவதற்குப் பெருந்தவம் செய்ததுள்ளது என்பதாம். தவத்தை மேற்கொண்டார் அளவில்லார் மற்றும் பலர் உள்ளாரேனும், இப் பிராட்டி கொண்ட பெருந்தவமே, மூவுலகுந் தழைக்க, அறம் வளர, தீவினை யொடுங்கக் காரணமாதலால், 'தவஞ் செய்த தவமாந் தையல்' என்னப்பட்டது.; ஒப்பு. 'விரிந்திடுதீ வினைசெய்த வெவ்வியதீ வினையா லும், அருங்கடையின் மறையறைந்த வறஞ்செய்த வறத்தாலும், இருங் கடகக் கரதலத்திவ் வெழுதரிய திருமேனிக், கருங் கடலைச் செங்கனி வாய்க் கவுசலையென்பாள்பயந்தாள்'! (பால. குலமுறை: 20); தவஞ் செய்த தவம்; ஆரண்ய. சூர்ப்பணகைப். 18. கற்பகச்சோலை என்பது. கற்பச் சோலை எனத் தொக்கது. தேவலோகத்தி லிருந்த கற்பக விருக்ஷங்களை இராவணன் பறித்து வந்து இலங்கையில் பல இடங்களி லும், அசோகவனத்திலும் வைத்திருந்தான் என்பது; 114, 125, 204, 281, 304.

(பி-ம்.) 1. **விரிபொழிற் சாரல்: விரிநகர்ச் சால விண்டோய்; விரிநகர்ச் சாலை விண்டோய்: இலங்கை தன்னுள் விரிந்தொரு சாரல் விண்டோய்: விரிந்ததோர் சார விண்டோய்.**

2. இல்லது கனகக் கற்பச்: இல்லதோர் கற்ப கப்பூஞ்.
3. சோலையங் கதனுளும்பி; சோலையு மதனு ளும்பி.
4. சாலையு ளிருந்தா ளைய; தவம்செய்த தனைய தையல். (31)

1276. மண்ணொடுங் கொண்டு போனான் வானுயர் கற்பி னுடன்
புண்ணிய மேனி தீண்ட வஞ்சுவா னுலகம் பூத்த
கண்ணகன் கமலத் தண்ணல் கருத்திலாட் டொடுதல் கண்ணின்
எண்ணருங் கூறாய் மாய்தி யென்றதோர் மொழியையெண்ணி.

'உலகம் பூத்த - உலகங்களைப் படைத்த, கண் அகன் கமலத்து அண்ணல் - இடமகன்ற தாமரை மலர் மீது விளங்கும் பெரியோனான பிரமதேவன், (இராவணனை நோக்கி), 'கருத்து இலாள் தொடுதல் கண்ணின் - உன்னிடம் விருப்பம் இல்லாதவளை நீ வலியத் தீண்டுதல் கருது வாயானால், எண் அரும் கூறாய் மாய்தி - நினைப்பதற்கு அரிதான பிளவு களாய் வெடிப்புற்று இறப்பாய்;' என்றது - என்று கூறியுள்ள, ஓர் மொழியை எண்ணி - ஒரு சாபச் சொல்லைக் கருதி, (இராவணன்), வான் உயர் கற்பினாள் தன் - மிகச் சிறந்த கற்புடைய பிராட்டியின், புண்ணிய மேனி தீண்ட அஞ்சுவான் - பரிசுத்தமான திருமேனியைத் தீண்ட (அவன்) அச்சமுற்றவனாய், மண் ஒடும் கொண்டு போனான் - அவள் இருந்த தரையோடு பெயர்த்து எடுத்துக்கொண்டு போனான்.

பிரமன் இராவணனுக்கிட்ட சாப வரலாறு; 627. உரை.

(பி-ம்.) 1. மானிடக் கற்பினுடன். 2. தீண்ட லஞ்சுவான்: புவனம்பூத்த
3. கமலத் தண்ணல் கற்புளார் தம்மைத் தீண்டில்: கருத்தினாற் றொடுதல் கண்ணின்: தொடுத்த கண்ணில்: தொடுதல் முன்னம்.
4: எண்ணருஞ் சிரமீ ரைந்து மிறுமெனுஞ் சாப மெண்ணி: எண்ணருங் கூறு மியாக்கை யென்பதோர் மொழியுண் டென்பான்: கூறு முன்றன் சிரமென்ற மொழியுண் டென்பான்: கூறும யாக்கை யெனப்புகல் சாபத் தீட்டால். (32)

1277. தீண்டில னென்னும் வாய்மை திசைமுகன் செய்த முட்டை
கீண்டில தனந்த னுச்சி கிழிந்தில தெழுந்து வேலை
மீண்டில சுடர்கள் யாவும் விழுந்தில வேதஞ் செய்கை
மாண்டில வென்னுந் தன்மை வாய்மையா னுணர்தி மன்னோ.

'தீண்டிலன் என்னும் வாய்மை-பிராட்டியை இராவணன் தீண்டினா னில்லை என்னும் உண்மையை, திசைமுகன் செய்த முட்டை - பிரம தேவன் படைத்த அண்ட கோளம், கீண்டு இலது - பிளந்து போக

வில்லை; அனந்தன் உச்சி கிழிந்திலது - ஆதிசேடனது தலைகளோடு கூடிய படம் கிழிந்து போகவில்லை; வேலை எழுந்து மீண்டில - கடல்கள் பொங்கியெழுந்து மேற்கிளம்பி உலகங்களை அழித்துக் கொண்டு செல்லவில்லை; சுடர்கள் யாவும் விழுந்தில - சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஒளியுள்ள கிரகங்கள் முதலியன, கீழே விழுந்து அழியவில்லை; வேதம் செய்கை மாண்டில - வேதங்களும் அவற்றிற் கூறியுள்ள விதி ஒழுக்கங்களும் அழிந்தனவல்ல; என்னும் தன்மை - என்ற இந்நிலைமைகள், வாய்மையால் - இன்னும் நிச்சயமாய் நிலைபெற்றுள்ளன என்பதால், உணர்தி-நீ உணர்ந்துகொள்வாயாக. மன், ஓ: அசைகள்.

வாய்மை வாய்மையால் உணர்தி என இயக்க- இராவணன் பிராட்டியைத் தீண்டிலன் என்ற உண்மை கடல்கள் எழுந்து பொங்காமை முதலிய நிகழ்ச்சிகளால் அறியக் கிடக்கும் என்பதாம். பிராட்டியின் புனிதத் தன்மையால்தான் இயற்கை மாறுபடாமல் நிற்கிறது என்று கூறியதாம். முட்டை - அண்டகோளம்.

(பி-ம்.) 1. தீண்டலன்: என்னற் குண்மை திசைமுகன் படைத்த வண்டம்.
2. கீண்டல: கிழிந்தில வெழுந்து வேலை.
3. சுடரிரண்டும்: வேதச் செய்கை; வேத மெய்மை. (33)

1278. *சோகத்தா ளாய நங்கை கற்பினாற் றொழுதற் கொத்த*
*மாகத்தார் தேவி மாரும் வான்சிறப் புற்றார் மற்றைப்*
*பாகத்தா ளல்ல ளீசன் மகுடத்தாள் பதுமத் தாளும்*
*ஆகத்தா ளல்லண் மாய னாயிர மோலி யாளால்.*

'சோகத்தாள் ஆய-(உன்னைப் பிரிந்த பெரும்) துக்கத்தையுடையவளான, நங்கை - பிராட்டியின், கற்பினால் - கற்பின் சிறப்பால், மாகத்தார் தேவிமாரும் - வானில் உள்ள தேவர் மனைவியர்களும், தொழுதற்கு ஒத்த வான் சிறப்பு உற்றார் - யாவரும் வணங்குவதற்கு ஏற்ற பெரும் சிறப்பை அடைந்தார்; மற்றை-இதுவல்லாமல், ஈசன் பாகத்தாள் அல்லள்-(உமாதேவியும்) ஈசனது இடப்பாகத்திலே இருப்பவள் என்று சொல்வதற்கு அல்லாதவளாய், மகுடத்தாள்-அப்பரமன் சடாமகுடத்தின் மீதேயிருக்கும் சிறப்பினை யடைந்தவளானாள்; பதுமத்தாளும்-தாமரை மலர்மீது வீற்றிருக்கும் திருமகளும், மாயன் ஆகத்தாள் அல்லள் - அத்திருமாலின் திருமார்பில் வீற்றிருப்பவள் என்பதன்றி, ஆயிரம் மோலியாள்-அப்பெருமானது ஆயிரம் முடிகள்மீது விளங்குபவளானாள். ஆல்: அசை.

உயர்ந்தோர் ஒருவரால் மற்றையோரும் சிறப்பெய்துவர் என்றபடி. பிராட்டியின் கற்பின் உயர்வு, மற்றத் தெய்வமகளிர், உமாதேவி, திருமகள் முதலியவர்க்கும் மேலும் சிறப்பை உண்டாக்குவதாயிற்று என்ப

தாம். ஆயிரம் மோலி; 'காலாயிர முடியாயிர மாயிரங்கை பரப்பி' (திருவரங்கக் கலம்பகம் 6) இது விராட் புருஷனை திருமாலைக் குறிப்பிட்டபடி; 'ஸஹஸ்ர சீர்ஷா புருஷ:' என்ற புருஷஸூக்த வசனமும் இங்கு நோக்கற்பாலதாம். இங்கு ஆயிரம் என்பது அளவுகடந்த எண்ணைக் குறிப்பதாகும். மோலி: மௌலி என்பதின் திரிபு. பெண் தெய்வங்களிற் சிறந்த உமாதேவி, திருமகள் இவரைக் குறிப்பிட்டதால், மற்றைக் கற்புடை மகளிரும் சிறப்பெய்தினர் என்பது உபலக்ஷணத்தாற் கொண்டது என்பதும் அமையும். 'சிறையிருந்தவ ளேற்றத்தால் மாதர்குல ஏற்றஞ் சொல்கிறது இச்செய்யுள் என்கிறான் கம்பன். பரம வைணவனுதலின்' என்ற பிள்ளை லோகாசாரியர் வாக்கும் இங்கு நோக்கத்தக்கது.

(பி-ம்.) 3. பாகத்தா ளிப்போ தீசன்; பாகத்தா ளோடு மீசன். (34)
4. மௌளலி யாளால்.

## அநுமன் தான் பிராட்டியைக் கண்ட வரலாறு கூறல்

## 1279–89

1279. *இலங்கையை முழுது நாடி யிராவண னிருக்கை யெய்திப்*
*பொலங்குழை யவரை யெல்லாம் பொதுவுற நோக்கிப் போனேன்*
*அலங்குதண் சோலை புக்கே னவ்வழி யணங்க னாளைக்*
*கலங்குவெண் டிரையிற் றூய கண்ணின்நீர்க் கடலிற் கண்டேன்.*

இலங்கையை முழுதும் நாடி - (நான்) இலங்கை நகர் முழுவதும் தேடிப்பார்த்து, இராவணன் இருக்கை எய்தி - இராவணன் இருப்பிடத்தை அடைந்து, பொலன் குழை அவரை எல்லாம் - பொன்னாலமைந்த குழையென்னும் காதணியை அணிந்த மகளிரை எல்லாம், பொது உற நோக்கி போனேன் - பொதுவாகப் பார்த்துப் போனேன்; அலங்கு தண் சோலை புக்கேன் - (பிறகு) அசைந்தாடும் குளிர்ந்த அசோக வனம் என்னும் சோலையுள் புகுந்து பார்த்தேன்; அ வழி - அவ்விடத்தில், அணங்கு அனாளை - தெய்வப் பெண்போன்ற பிராட்டியை, கலங்கு வெள் திரையிற்று ஆய - கலங்கியனவும், வெண்மையானவுமான அலைகளோடு கூடிய, கண்ணின் நீர் கடலில் - அவளது கண்ணீராகிய கடலின் (இடையே), கண்டேன் - பார்த்தேன்.

முன் செய்யுளில் அநுமன் பிராட்டியின் கற்பின் ஏற்றத்தைக் கூறிப் பின் இச்செய்யுளால் அவள் இருந்த நிலையைத்தான் கண்டபடி கூறுகின்றான். முன், (1269) இல், 'கண்டனென் 'கற்பினுக் கணியைக் கண்களால்' என்ற செய்தியை இங்கு உறுதிப்படுத்தும் அநுமனின்

சொற்றிறமும் அப்பிராட்டிபால் அவன் கொண்டுள்ள உயர் மதிப்பும் பாராட்டற் பாலனவாம். முன், 'கண்ணினீர் பெறுந் தடத்திடையிருந்த தோர் அன்னத் தன்மையாள்' (593) என்றதையும் ஒப்பு நோக்குக.

(பி-ம்.) 1. இலங்கையை முழுது நோக்கி.
2. அவரு மெல்லாம் பொதுவற: நோக்கிப் போயோர்.
3. புக்குற் றவ்வழி யணங்கினுளை.
4. கலங்குதெண்: கண்ண நீர்க் கடலுட் கண்டேன். (35

1280. அரக்கிய ரளவற் றூர்க ளலகையின் குழுவு மஞ்ச
நெருக்கினர் காப்ப நின்பா னேசமே யச்ச நீக்க
இரக்கமென் றொன்று தானே ரேந்திழை வடிவ மெய்தித்
தருக்குயர் சிறையுற் றன்ன தகையளத் தமிய ளம்மா.

'அளவு அற்றூர்கள் அரக்கியர் - (எண்ணி) அளவிடமுடியாத அரக்கியர், அலகையின் குழுவும் அஞ்ச - பேய்களின் கூட்டங்களும் கண்டு (அணுக) அஞ்சும்படி, நெருக்கினர் காப்ப - (நாற்புறமும் இடைவெளியில்லாதபடி) நெருக்கி நின்றவர்களாய் (பிராட்டியைச் சூழ்ந்திருந்து) காவல் புரிய, அச்சம் - (அதனுல் தனக்குண்டான) அச்சத்தை, நின்பால் நேசமே நீக்க - உன்பால் தான் கொண்டுள்ள அன்பின் மிகுதியே போக்க, அ தமியள் - அந்தத் தனியளாகிய பிராட்டி, இரக்கம் என்று ஒன்றுதான்-இரக்கம் என்று சொல்லப்படும் ஒரு குணமே, ஓர் ஏந்திழை வடிவம் எய்தி - ஒரு பெண்வடிவை அடைந்து, தருக்கு உயர் சிறை உற்று அன்ன - கொடுமை மிக்க சிறையில் அடைப்பட்டிருப்பது போன்ற, தகையள் - தன்மையுடையவளாய் இருக்கிறுள். அம்மா: வியப்பையும் இரக்கத்தையும் குறிக்கும் இடைச்சொல்.

அலகையின் குழுவும்: உம்மை உயர்வு சிறப்பினது. பேய்கள் பிறரை அச்சுறுத்தும் பயங்கரமான தோற்ற முடையன; அப்பேய்களும் அஞ்சும்படியான கொடிய தோற்ற முடையவர்கள் அக்காவலரக்கியர் என்பதாம்; இது,' பெண்ணென்றுல் பேயும் இரங்கும், இவ்வரக்கியர் பெண்பாலரா யிருந்தும் அப்பேய்களுக்குள்ள அன்புகூட இல்லாத கொடிய இயல்பினர் என்பது விளங்கவைத்ததுமாம். நின்பால் நேசமே அச்சம் நீக்க: இராவணனுலும் காவல் அரக்கியராலும் தனக்குண்டான அச்சத்தைப் பிராட்டி இராமபிரான்பால் கொண்டுள்ள அன்பினுல் வென்று நிற்கும் சிறப்பு விளக்கப்பட்டது. பிராட்டியை, இரக்கம் என்பதே ஒரு பெண் வடிவெடுத்துக் கொடிய சிறைப்பட்டு வருந்துகின்றது, என்று உருவகமுகத்தால் கூறியதால், அவலச்சுவையின் உயர்வில் இங்குச் சித்திரிக்கப் பெற்றது என்னலாம். முன், 'பிரிவெனுந்

துய்ருருவு கொண்டா லன்ன பிணியாள்' (336) என்றதை ஒப்பு நோக்குக.

இச் செய்யுளின் பின், இரண்டு செய்யுட்கள் அச்சுப் பிரதிகளில் காணப்படுகின்றன. அவை சிறந்த பழைய சுவடிகளிலும் பழைய உரைச் சுவடியிலும் இல்லாமையாலும், அநுமன் தான் பிராட்டியைக் கண்ட செய்தியைச் சுருக்கமாக அமைக்கும் இப்பகுதிக்கு ஏற்றவையா யில்லாமையாலும் அவை அதிகப்பாடல்களாகக் கொள்ளப் பட்டன.

(அ) மாண்பிறந் தமைந்த கற்பின் வானுத னின்பால் வைத்த
சேண்பிறந் தமைந்த காதல் கண்களிற் றெவிட்டித் தீராக்
காண்பிறந் தமையா னீயே கண்ணகன் ஞாலந் தன்னுள்
ஆண்பிறந் தமைந்த செல்வ முண்டனே யாதி யன்றே.

(ஆ) அயிர்ப்பிலர் காண்பார் முன்னு மறிந்தில ரெனினு மைய
எயிற்புனை யிலங்கை மூதூ ரிந்திரன் யாக்கைக் கேற்ற
மயிற்புனை யியலி னுரு மைந்தரு நாளு மாங்கே
உயிர்பொடு முயிரி னேடு மூசனின் ருடு வாரும்.

(பி-ம்) 1. அளவற்ருரு மலகையின்: அமரர்தங் குழுவும்: அரக்கிய ரளப்பிலாதோர் குழுஉக்கொண்டாங் கெவரு மஞ்சச்.

2. செருக்கினன் கண்டு செய்ய மெய்க்கன றீக்கச் சீர்த்த: நெஞ்சமே யச்சநீக்க: நெருக்கினர் நெருக்கக் கண்டு நேர்ந்தனன் நேர்ந்த சிந்தை: நெருங்கினர் கண்டு கண்டு: நெருக்கினர் காப்பு திற்பர்: நின்பா னேயமே யாக நீந்த: செருக்கொடு புரியுந் தீமைக் கஞ்சியே வரிதிற் றிர்ந்த.

3. இரக்கமொன் ருென்று தானே: தானே யேந்திழை

4. தருக்கிய சிறை: தருக்கிய திறையிற் றன்ன; தருக்கிய சிறையிற் றன்ன: தையலத் தமிய ளம்மா: தகைமையள் தமிய ளம்மா. (36)

1281. தையலை வணங்கற் கொத்த விடைபெறுந் தன்மை நோக்கி
ஐயநா னிருந்த காலை யலங்கல்வே லிலங்கை வேந்தன்
எய்தின னிரந்து கூறி யிறைஞ்சின னிருந்த நங்கை
வெய்துரை சொல்லச் சீறிக் கோறன்மேற் கொண்டு விட்டான்

'ஐய - ஐயனே! தையலை வணங்கற்கு ஒத்த - பிராட்டியை (நான்) வணங்குவதற்குத் தகுதியான, இடை பெறும் தன்மை நோக்கி - நேரத்தை அடையும் தன்மையை எதிர் பார்த்து, நான் இருந்த காலை - நான் இருந்தபோது, அலங்கல் வேல் இலங்கை வேந்தன் - மாலை விளங்கும் வேல் ஏந்திய இலங்கைக்கிறைவனை இராவணன், எய்தினன் -

அங்குவந்து, இரந்து கூறி இறைஞ்சினன் - (தன்னை விரும்பும்படி) இரக்கத்தோடு பல வார்த்தைகளைச் சொல்லிப் பிராட்டியை வணங்கினான்; இருந்த நங்கை - அங்கே சிறையிருந்த அப்பிராட்டியும், வெய்து உரை சொல்ல - கடுஞ்சொற்களைக் கூறி (அவனைக் கண்டிக்க), சீறி கோறல் மேற்கொண்டு விட்டான் - (அதைக் கேட்ட அவன்) கோபித்து அப்பிராட்டியைக் கொல்லத் தலைப்பட்டு விட்டான்.

கோறல் - கொல்லுதல்; முதனிலை திரிந்த தொழிற்பெயர்; கொல்: பகுதி.

(பி-ம்.) 1. இடம்பெறுந் தன்மை.
2. நொய்தியா னிருந்த கரலை நுதிகொள்வே லிலங்கை வேந்தன்
3. இருந்து நங்கை: இரந்து நங்கை.
4. கொண்டு விண்டான்; கொண்டு மீட்டான். (37)

1282. *ஆயிடை யணங்கின் கற்பு மையநின் னருளுஞ் செய்ய*
*தூயநல் லறனு மென்றிங் கினையன தொடர்ந்து காப்பப்*
*போயின னரக்கி மாரைச் சொல்லுமின் போமி னென்றுங்*
*கேயின வவரெ லாமென் மந்திரத் துறங்கி யிற்றார்.*

'ஐய - ஐயனே! ஆ இடை - அப்பொழுது, அணங்கின் கற்பும் - பிராட்டியின் கற்பின் வலியும், நின் அருளும் - உனது அருளின் சிறப்பும், செய்ய தூய நல் அறனும் - சிறந்ததும் பரிசுத்தமானதுமான நல்ல தருமமும், என்று இனையன - என்று சொல்லத்தக்க இவை, தொடர்ந்து காப்ப - அவளைப் பின்பற்றி நின்று பாதுகாத்துக் கொண்டிருக்க, அரக்கி மாரை - காவல் அரக்கியரை நோக்கி, 'போமின் சொல்லுமின் என்று - நீங்கள் போய் அவளுக்குப் புத்தி சொல்லுங்கள்,' என்று சொல்லி, போயினன் - (இராவணன்) அவ்விடம் விட்டுச் சென்றான்; ஏயின அவர் எலாம் - அவ்வாறு ஏவப்பட்ட அந்த அரக்கியரெல்லாரும், என் மந்திரத்து - யான் செய்த மந்திரத்தின் திறத்தால், உறங்கி இற்றார் - தூங்கிச் செயலற்றவரானார்.

என்றிங்கு, என்பதில் இங்கு என்பதும், என்றாங்கு என்பதில் ஆங்கு என்பதும் இசை நிறைக்க வந்த அசைகளாகும். முன் செய்யுளில், 'கோறன்மேற் கொண்டுவிட்டான்' என்று கூறி, இச்செய்யுளில் கற்பு முதலியன தொடர்ந்து காப்பப் போயினன் என்றமையால் இராவணனின் கொடிய எண்ணத்தைக் கற்பு முதலிய தெய்வ சக்திகளே காத்தன என்று அநுமன் குறித்தனன் என்க. அநுமன் மந்திரத்து அரக்கியரைத் தூங்கச் செய்தது; 489 உரை.

க. 124.

(பி-ம்.) 2. அனையது தொடர்ந்து காப்ப.
3. சொல்லுமின் போமி னென்றுங்(த): பொருந்துறப் புரிமி னென்றுங்.
4. ஏயின வவர்க ளெல்லா மந்திரத் துறங்கு கின்றார்: ஏயின வவர்க ளெல்லா மெந்திரத் துறங்கு கின்றார். (38)

1283. *அன்னதோர் பொழுதி னங்கை யாருயிர் துறப்ப தாக*
*உன்னினள் கொடியொன் றேந்திக் கொம்பொடு முறைப்பச் சுற்றித்*
*தன்மணிக் கழுத்திற் சார்த்து மளவையிற் றடுத்து நாயேன்*
*பொன்னடி வணங்கி நின்று நின்பெயர் புகன்ற போழ்தில்,*

'அன்னது ஓர் பொழுதின் - அத்தன்மையான சமயத்தில், நங்கை - பிராட்டி, ஆர் உயிர் துறப்பது ஆக - தன் அரிய உயிரைவிட்டு நீங்குவதாக, உன்னினள் - நினைத்தவளாய், கொடி ஒன்று ஏந்தி - ஒரு கொடியைக் கையில் எடுத்து, கொம்பு ஒடும் உறைப்ப சுற்றி - ஒரு மரக்கிளையொடும் (அதை) வலிவாகச் சுற்றிக்கட்டி, தன் மணி கழுத்தில் சார்த்தும் அளவையில் - தன் அழகிய கழுத்தில் சேர்த்துச் சுருக்கிட்டுக் கொள்ளப் போகும் சமயத்தில், நாயேன் - எளியேனான அடியேன், தடுத்து-(அவ்வாறு பிராட்டி சுருக்கிட்டுக் கொள்வதைத்) தடுத்து, பொன் அடி வணங்கி நின்று - அவளுடைய அழகிய பாதங்களை வணங்கி நின்று, நின் பெயர் புகன்ற போழ்தில் - உன் திருநாமத்தைச்சொன்ன போதினில்,

இச் செய்யுள் அடுத்த செய்யுளொடு இயைந்து குளமாகி, சொன்னுள் என்ன வினைகொண்டு முடியும். நாயேன் என்பது அடியார் தம் பணிவைத் தெரிவிக்கக் கூறும் சொல் ஆகும். ஒரு கொடி கொண்டு மரக்கிளையில் சுற்றித் தன் கழுத்திற் சுருக்கிட்டுக் கொண்டு உயிர்விடத் துணிந்த அமங்களகரச் செய்தியை, நூலாசிரியர் முன் (உருக்காட்டு படலத்தில்) கூற விரும்பாது விடுத்து, இங்கு அநுமன் வாக்கால் கூறி உண்மையை விளங்கவைத்தார் என்க. இவ்வாறு ஓரிடத்தில் கூறவேண்டியதைப் பிறிதோரிடத்தில் வேறோரு முகமாய் அறிவுறுத்துவது ஒரு நாடகமுறைக்கு ஒத்ததாகும். அதனாலேயே இந்நூல் கம்ப நாடகம் என்னும் பெயர் பெறுவதாயிற்று; 510 உரையையும் காண்க. அநுமன் இராமபிரான் திருநாமத்தைக் கூறிப் பிராட்டி உயிர்துறத்தலைத் த்டுத்தது; 510; 1284.

(பி-ம்.) 1. அன்னபோ தழுது நங்கை.
2. கொம்பிடை யுறைக்கச் சுற்றித்.
3. கழுத்திற் பூட்டு மளவையில்: தடுத்து நானும்.
4. வணங்கி நின்பேர் புகன்றனன் புகன்ற: புகழ்ந்த பேரழ்தில்: போதில். (39)

1284. *வஞ்சனை யரக்கர் செய்கை யாமென மனக்கொண் டேயும்*
*அஞ்சன வண்ணத் தான்றன் பெயருரைத் தளிய வென்பால்*
*துஞ்சுறு பொழுதிற் றந்தாய் துறக்கமென் றுவந்து சொன்னாள்*
*மஞ்சன வண்ணக் கொங்கை வழிகின்ற மழைக் கணீராள்.*

'மஞ்சு அன - மேகம் போன்று எழுந்து ஓங்கிய, வண்ண கொங்கை வழிகின்ற - அழகிய தனத்தின் மீது விழுந்து வழிந்தோடுகின்ற, மழை கண் நீராள் - மழைபோல் சொரிகின்ற கண்ணீரையுடைய பிராட்டி, வஞ்சனை அரக்கர் செய்கை ஆம் என - (யான் அவள் முன் தோன்றி உன் திருநாமத்தைச் சொல்லி முன்னின்றது) வஞ்சனை (மிக்க) அரக்கர்களுடைய செயலேயாகும் என்று, மனக் கொண்டேயும் - தன் மனத்தில் கொண்டாளெனினும், 'துஞ்சு உறு பொழுதில் - (யான்) இறக்கும் சமயத்தில், அளிய என்பால் - இரக்கத்திற்கு உரிய என்னிடத்தில், அஞ்சன வண்ணத்தான் தன் பெயர் உரைத்து - மைபோலும் கரிய மேனியுடைய இராமபிரானுடைய திருப்பெயரைச் சொல்லி, துறக்கம் தந்தாய் என்று உவந்து சொன்னாள் - எனக்குச் சுவர்க்கத்தை அளித்தவனானாய்;' என்று மகிழ்ந்து (என்னிடம்) கூறினாள்.

அநுமன் இராமநாமம் சொல்லிக் கொண்டே பிராட்டியைக் கண்டது; 510; 515, 1283. துறக்கம் என்பது இங்குத் துறக்கத்தை ஒத்த பேரின்பம் என்க. அன்றியும் அநுமன் தோன்றி, நரகத்துக்கு ஏதுவாகும் தற்கொலை நீக்கித் துறக்கம் தந்தானென்று கூறினாளுமாகும். துஞ்சுகறு போழ்தில் ஸ்ரீராமநாமம் சொல்லக் கேட்கப் பெற்றோர் துறக்கம் எய்துவரென்பது, 'இறுவ ரம்பினி ராமவென் றுரும்பர், நிறுவரென்பது நிச்சய மாதலான்' என்ற இந்நூற்பாயிரச் செய்யுளாலும் அறியக் கிடக்கும். மழைக்கண்: 335: 1287; ஆரண்ய. மாரீசன் வதைப். 250. இங்கு மகிழ்ச்சியிற் பெருகும் கண்ணீர், ஆதலால் மழைபோல் குளிர்ந்த கண்ணீராள் எனக் கொள்ளலும் ஏற்கும். கொங்கைக்கு மேகம், அதன் எழுச்சி நோக்கிக் கூறியது; இராசராசனுலா: 138. இனி மஞ்சு அன பொழிகின்ற, என இயைத்துப் பொருள் கூறுவாரும் உளர்.

(பி-ம்.) 1. அரக்கன் செய்கை: செய்கை யிதுவென.
2. வண்ணத் தான்ற னருந்திரு நாமம்: பெயருரைத் தனையே யென்பால்.
3. துறக்க லென் றுவந்(து).
4. மஞ்சன மென்ன: வனமென் கொங்கை. (40)

1285. *அறிவுறத் தேறச் சொன்ன பேரடை யாளம் யாவும்*
*செறிவுற நோக்கி நாயேன் சிந்தையிற் றிருக்க மின்மை*
*முறிவற வெண்ணி வண்ண மோதிரங் காட்டக் கொண்டாள்*
*இறுதியி னுயிர்தந் தீயு மருந்தொத்த தனைய தெந்தாய்,*

'எந்தாய்-எங்கள் தந்தை போன்ற பெருமானே! அறிவு உற - புத்தியில் பொருந்தும்படி, தேற சொன்ன - தெளிவு அடையும்படி (யான்) கூறிய, பேர் அடையாளம் யாவும் - பெரிய (சிறந்த) அடையாளங்களையெல்லாம், செறிவு உற நோக்கி-(பிராட்டி) ஆழ்ந்து ஊடுருவிப் பார்த்து, நாயேன் சிந்தையில் திருக்கம் இன்மை - அடியேன் மனத்தில் வஞ்சகம் இல்லாமையை, முறிவு அற எண்ணி - மாறுபாட்டிற்கு இடமின்றி (நன்கு) எண்ணிப்பார்த்து, வண்ண மோதிரம் காட்ட கொண்டாள் - அழகிய நினது திருவாழியை யான் அடையாளமாகக் காட்ட அதனைப் பெற்றுக் கொண்டாள்; அனையது - அந்த மோதிரம், இறுதியின் - உயிர் போகும் முடிவுக் காலத்தில், உயிர் தந்து ஈயும் - உயிரை நிலைபெறக் கொடுத்தருளும், மருந்து ஒத்தது-மிருத சஞ்சீவினீ என்னும் ஓடதியைப் போன்றதாயிற்று.

பேரடையாளம் - சிறந்த அடையாளம் என்னலும் ஒன்றும், பேரடையாளம் என்பது 685, 687. திருக்கம் - முரண்பாடும் ஆம். மோதிரம் பிராட்டிக்கு உயிர் தந்தீயும் மருந்தானது; 'வீயுமுயிர் மீளும், மருந்து மென லாயது வாழிமணி யாழி' (558). தந்தீயும் என்பதை ஒரே சொல்லான வினைத் திரிசொல் என்னலும் ஏற்கும். இனி, பேரடையாளம் யாவும் வண்ண மோதிரம் காட்டக்கண்டாள்' என இயைத்து, இராம பிரானுடைய ராம என்னும் பெயரும், (அம் மோதிரத்தைத் தான் பல கால் பார்த்துப் பழகியிருந்த) அடையாளங்கள் யாவற்றையும் அம் மோதிரம் தெரிவிக்க நேரில் பார்த்துத்தெரிந்து கொண்டாள் என்னும் பொருள் பொதிந்திருப்பது கூர்ந்து நோக்கத் தக்கதாம்.

(பி-ம்.) 1. அறிவுறத் தெரியச் சொன்ன: அறிவுற வெடுத்து நீசொல் பேரடை: அடை யாள மைய: அடை யாள மாக; அடை யாள மரய.

2. செறிவுறச் சொன்ன போதும் சிந்தையையுற்றதன்மை: சிந்தையுற் றிருக்குந் தன்மை; சிந்தையிற் றெரிநுந் தன்மை; தெரிக்குந் தன்மை.

3. குறியுரை யெண்ணி; குறியுள வெண்ணி; குறிப்புரை யெண்ணி.

4. ஆழி யெந்தாய். (41

1286. ஒருகணத் திரண்டு கண்டே னொளிமணி யாழி யூன்றத்
திருமுலைத் தடத்து வைத்தாள் வைத்தலுஞ் செல்வ நின்பால்
விரகமென் பதனின் வந்த வெங்கொழுந் தீயி னுல்வெந்
துருகிய துடனே யாறி வளித்தது குளிர்ப்புள் ளூற,

'செல்வ - பாக்கியவானே! ஒரு கணத்து - ஒரு கண நேரத்திற் குள்ளே, இரண்டு கண்டேன் - இரண்டு (அபூர்வ நிகழ்ச்சிகளை) யான் அத்தருணம் அங்குப்) பார்த்தேன்: (அவை யாவையெனில்), ஒளி மணி ஆழி-அந்த ஒளி வீசும் இரத்தினங்கள் பதிப்பிக்கப் பெற்ற மோதிரத்தை, ஊன்ற - நன்ருகப் பதியும்படி, திருமுலை தடத்து வைத்தாள் - (பிராட்டி தன்) அழகிய தனங்களினிடத்து வைத்து அணைத்துக் கொண்டாள்; வைத்தலும் - அவ்வாறு வைத்தவுடன், நின் பால் விரகம் என்பதனின் வந்த - உன்னிடம் விட்டுப் பிரிந்தது என்பதால் உண்டான, வெம் கொழும் தீயினல் - கொடிய செழித்த நெருப்பினல், வெந்து உருகியது - (அந்த மோதிரம்) சூடேறி உருகிவிட்டது; குளிர்ப்பு உள் ஊற-(இனி நீ வந்து தன்னை மீட்டுக் கொண்டு போவாய் என்ற நிச்சய மேற்பட அத ஞல் உண்டான) மகிழ்ச்சியால் உடன் உண்டான குளிர்ச்சி தன் உடலின் உள்ளே பெருக, உடனே ஆறி வலித்தது-அப்பொழுது (அம் மோதிரம் உருகிய நிலையில் உள்ள வெப்பம்) ஆறி முன்போல் உறுதிப் பட்டது.

தலைவனைப் பிரிந்த தலைவி, தன் தலைவனது அரிய பொருளைக் கண்ட விடத்து அத்தலைவனையே நேரிற் கண்டதுபோல எண்ணுதலும், அதனைத் தன் முலைத்தடத்து வைத்து முயங்கி மகிழ்தலும் இயல்பு. இவ் வாறே, பிராட்டியின் அணிகலன்களைக் கண்ட இராமபிரான், பிராட்டியை நேரிற் கண்டதுபோல் எண்ணியதையும், அங்கு நிகழ்ந்தவற்றையும் ஒப்பு நோக்குக; கிட்கிந்தா. கலன்காண்; 6, 7. ஆழிகண்ட பிராட்டி நிலை: 553-559. ஒரு கணத்திரண்டு தோன்றுதல் ஒப்பு 337. விரகம் - காதலர்க்கு, ஒருவரை யொருவர் பிரிந்த நிலையில் உண்டாகும் ஒருவகை நோய் போன்ற துன்பம்.

(பி-ம்.) 1. கண்டே ளொளிமணி யாழி யுன்றன்; யாழி யான்றத்.
2. திருமுலைத் தலத்து: செல்வ நுன்பால்.
3. விரகமிக் கதனில்.
4. குளிப்புள் ளூன்ற; துளிர்த்த தாகி. (42)

1287. வாங்கிய வாழி தன்னை வஞ்சரூர் வந்த தாமென்
றுங்குயர் முழைக்க ணீரா லாயிரங் கலச மாட்டி
ஏங்கின ளிருந்த தல்லா லியம்பல ளெய்த்த மேனி
வீங்கினள் வியந்த தல்லா லிமைத்தில ளுயிர்ப்பு விட்டாள்.

'வாங்கிய ஆழி தன்னை - (பிராட்டி) என்னிடமிருந்து பெற்றுக் கொண்ட அந்த மோதிரத்தை, வஞ்சர் ஊர் வந்ததாம் என்று - வஞ்சக ரான அரக்கர் வசிக்கும் அந்நகருக்கு அது வந்து (தன் புனிதத்

தன்மையை இழந்தது) என்று எண்ணி, ஆங்கு - அப்பொழுது, உயர் மழைகண் நீரால்-சிறந்த மழை போன்று (குளிர்ந்த) தன் கண்களினின்று பெருகிய ஆனந்தக் கண்ணீரால், ஆயிரம் கலசம் ஆட்டி - ஆயிரங் குடங் களால் (அபிஷேகம் செய்து புனிதப் படுத்துவது போல) நீராட்டி, ஏங்கி னள் இருந்தது அல்லால் - ஏங்கிச் செயலற்று இருந்தாள் அல்லாமல், இயம்பலள் - ஒன்றும் பேசாது இருந்தனள்; எய்த்த மேனி வீங்கினள் - இளைத்த தன் உடம்பு மகிழ்ச்சியால் பூரித்தவளாகி, வியந்தது அல்லால் - (இராமபிரான் தன்பாற் கொண்ட கருணையையும், தன் துயர் நீங்க வழி ஏற்பட்ட நிலைமையையும்) தனக்குள்ளே வியந்து பாராட்டிக் கொண்ட தல்லாமல், இமைத்திலள் - (அவ்வாழியை நோக்கிய கண்களை) மூடா மல் நோக்கிய வண்ணம், உயிர்ப்பு விட்டாள் - மூச்சுவிடுதலினின்றும் நீங்கினவள் ஆனாள். (மூச்சு அடங்கிச் செயலற்றிருந்தாள் என்றபடி).

ஆயிரங் கலச மாட்டல்: ஏதேனும் நிகழ்ந்த அபசாரங்களால் தூய்மை குறைய இடமாகும் என்று எண்ணியும், மேலும் தெய்வ சான்னித்தியம் சிறந்தோங்கக் கருதியும் ஆயிரங் குடங்களில் தூய நீரை நிரப்பி விதிப்படி வேத மந்திரங்களை ஜபித்துக் கடவுள் திருவுருவத்திற்கு அபிஷேகம் செய்தல். இதனை ஸஹஸ்ர கலசாபிஷேகம் என்பர். பிராட்டி கண்ணீர் அவ்வாழிமேல் சொரிந்ததை, வஞ்சகரான இராவணன் முதலிய அரக்கர் வாழும் தூய்மையற்ற இடத்திற்கு அத்திருவாழி வந்ததால் அதன் தூய்மை இழந்து விடுமே என்று அஞ்சிப் பிராட்டி அதற்கு ஆயி ரங் கலச நீராட்டி அதனைத் தூய்மைப்படுத்தினாள் என்று இங்குச் சிறப் பிக்கப் பெற்றது. இராமபிரான் திருவாழிகண்ட மகிழ்ச்சியால் பிராட்டி தன் செயல்மறந்திருந்த நிலையை பின்னிரண்டு அடிகளால் அநுமன் விளக்கியது காண்க. இவ்வாறே முன் அநுமன் கொடுத்த மோதிரத் தைப் பிராட்டி கண்டபோதும் (555)ல் விளக்கப் பெற்றமை நோக்கத் தக்கதாம்.

(பி-ம்.) 2. ஓங்குயர் மழைக்கண்; ஆங்கவள் மழைக்.
3. இயம்புவ ளுயிர்ப்பும் விட்டாள்: இயம்பல ளெடுத்தமேனி: இயம்பல ளெய்த்து மேனி,
4. ஓங்கிய வுவகை யோடு முன்னின்ற வூச னின்றுள்: உண் ணின்ற வூச னீங்கி: வீங்கினள் வெயர்த்த தல்லா லிமைத்தில ளுயிர்ப்பு விட்டாள்: உயிர்ப்பு விண்டாள். (43)

1288. *அன்னவட் கடியே னுன்னிற் பிரிந்தபி னடுத்த வெல்லாம்*
*சொன்முறை யறியச் சொல்லித் தோகைநீ யிருந்த சூழல்*
*இன்னதென் றறிகி லாமை யித்துணை தாழ்த்த தென்றேன்*
*மன்னநின் வருத்தப் பாடு முணர்த்தினென் னுயிர்ப்பு வந்தாள்.*

'மன்ன - தலைவ! அடியேன் - அடியனாகிய யான், உன்னில் பிரிந்த பின் - உன்னைவிட்டு (பிராட்டி) நீங்கிய பிறகு, அடுத்த எல்லாம்-நிகழ்ந்தவை அனைத்தையும், அன்னவட்கு - அவளுக்கு, அறிய - அறிந்து கொள்ளுமாறு, சொல் முறை சொல்லி - யான் சொல்ல வேண்டிய முறைப்படித் தெரியப்படுத்தி, தோகை - மயில் போன்றவளே! இது நணை தாழ்த்தது - இவ்வளவு காலம் தாமதமானது, நீ இருந்த சூழல் இன்னது என்று அறிகிலாமை-நீ இருந்த இடம் இவ்விடத்திலுள்ளது என்று அறிந்து கொள்ள முடியாமையாலேயே யாகும்; என்றேன் - என்று சொல்லி, நின் வருத்தப்பாடும் உணர்த்தினென் - (அவள் பிரிவால்) உமக்குள்ள வருத்தத்தையும் அறிவித்தேன்; உயிர்ப்பு வந்தாள் - (அதுகேட்டு மூச்சு விடுதல் உற்றாள்.

பிராட்டியை இராமபிரான் அதுவரை வந்து காணாமைக்குக் காரணம் அவள் இருப்பிடம் அறியாமையே என்பது முன்னமே அநுமன் பிராட்டியிடம் நேரிற் கூறியதும் காண்க; 512. முன் செய்யுளில் உயிர்ப்பு விட்டாள் என்றும், இதில் உயிர்ப்பு வந்தாள் என்றும் கூறிய நயம் ஓர்க. இதனால் பிராட்டியின் சோக நிலையையும், பின்கொண்ட மகிழ்ச்சியையும் அநுமன் விளக்கிய பெற்றி இங்கு உய்த்துணரத்தக்கதாம்.

(பி-ம்.) 1. அன்னவட்கடிய னேனிற்: அடியே னும்மிற்; அடிய னுன்னில். 3. அறிகி லாமே: இத்தனை தாழ்த்த. 4. உயிர்ப்பும் வந்தாள். (44)

1289. *இங்குள தன்மை யெல்லா மியல்புளி யியம்பக் கேட்டாள்*
*அங்குள தன்மை யெல்லா மடியெனுக் கறியச் சொன்னாள்*
*திங்களொன் றிருப்பெ னென்றா ளன்னது தீர்ந்த பின்னை*
*மங்குவ துண்மை யென்றுன் மலரடி சென்னி வைத்தாள்.*

'இங்கு உள தன்மை எல்லாம்-இவ்விடத்துள்ளனவான நிலைமைகள் யாவற்றையும், இயல்புளி - நடந்தபடியே, இயம்ப கேட்டாள் - யான் சொல்லக் கேட்டுத் தெரிந்து கொண்டாள்; அங்கு உள தன்மை எல்லாம் அடியெனுக்கு அறிய சொன்னாள் - அங்குள்ளனவான நிலைமைகளையெல்லாம் அடியேனாகிய எனக்கு அறிந்து கொள்ளும்படி விளக்கிக் கூறினாள்; திங்கள் ஒன்று இருப்பென் என்றாள் - இன்னும் ஒரு மாதகாலம் யான் உயிர்வைத்துக் கொண்டிருப்பேன் என்று (அறுதியிட்டுக்) கூறினாள்; அன்னது தீர்ந்த பின்னை - அந்த ஒருமாத காலம் முடிந்த பிறகு, மங்குவது உண்மை என்று - (தான்) இறந்துபடுவது நிச்சயம் என்று, உன் மலர் அடி சென்னி வைத்தாள் - உன் தாமரை மலர்போன்ற திருவடிகளைத் தன் சிரமீது வைத்து (வணங்குவது போல) வணங்கிச் சொன்னாள்.

இயல்புளி - நடந்தபடி, முறைப்படி: 'வியலக வேந்தனை யியல்புளி யெதிர்கொண்டு' (பெருங். 2; 13; 37.) பிராட்டி திங்களோன் திருப் பென் என்றது; 635, 638, 672, மங்குதல் - அழிதல்; 'மங்குந ரில்லென வரம்பில் வையகம்......ளேம்பினேன்' (பால. திருவவதாரப்: 2.) மலரடி சென்னி வைத்துச் சொல்லியது: அத்திருவடிகளைச் சாட்சியாக நினைத்து உறுதி கூறியதுமாம்.

(பி-ம்.) 1. எல்லாம் யானவர்க கியம்பக்: எல்லா மியம்பின னமையக். இயைபுழி யியம்பக்: இயைபுளி.
2. அடிய னேற்கு.
3. இருப்பெ னின்னுந் திருவுளந் தீர்ந்த பின்னர்.
4. மங்குவ னுயிரோ டென்றுன் குரைகழற் றலைக்கண் வைத் தாள்; மலரடி தலைக்கண் வைத்தாள். (45)

## அநுமன் இராமபிரானிடம் சூடாமணி அளித்தல்

1290. *வைத்தபின் றுகிலின் வைத்த மாமணிக் கரசை வாங்கிக்*
*கைத்தலத் தினிதி னீந்தா டாமரைக் கண்க ளார*
*வித்தக காண்டி யென்று கொடுத்தனன் வேத நன்னூல்*
*உய்த்தன கால மெல்லாம் புகழொடு மோங்கி நிற்பான்,*

வேத நல் நூல் - சிறந்த வேத சாஸ்திரங்கள், உய்த்தன - அறுதியிட்டுக் கூறியவையான, காலம் எல்லாம் - காலக்கணக்குகள் எல்லாம் உள்ள அளவும், புகழ் ஓடும் ஓங்கி நிற்பான் - தன் புகழோடும் வளர்ந்து வருபவனான அநுமன், வைத்தபின் - (அவ்வாறு உன் மலரடிகளைச் சிரம்) வைத்து வணங்கிக் கூறிய பிறகு, துகிலின் வைத்த - தன் ஆடையில் முடித்து வைத்திருந்த, மா மணிக்கு அரசை - இரத்தினங்களுக் கெல்லாம் தலைமை பெற்றுயர்ந்த சூடாமணியை, வாங்கி - (அவிழ்த்து) எடுத்து, கை தலத்து இனிதின் ஈந்தாள் - அடியேன் கையில் விருப்புடன் கொடுத்தருளினாள்; வித்தக - 'அறிவிற் சிறந்த பேரியோய்! தாமரை கண்கள் ஆர காண்டி என்று - உன் தாமரையிதழ் போன்ற கண்கள், கண்டு திருப்தியடையப் பார்த்தருள்வாயாக' என்று கூறி, கொடுத்தனன் - (அச் சூடாமணியை இராமபிரானிடம்) கொடுத்தான்.

வேத நன்னூ லுய்த்தன கால மெல்லாம்: வேதசாஸ்திரங்கள் உலகில் வழங்கு வனவாயுள்ள காலம் எல்லாம் (அதாவது வேத சாஸ்திரமுள்ள வரையில்) என்று பொருள் கொள்ளலும் ஒன்றும்; 'வேதமுள்ளளவும்... நீ இலங்கைக்கரசனாய் வாழி' யென்று வீடணனுக்கு இராமபிரான் உறுதி கூறியதாக அருணாசலக் கவிராயர் தம் இராமநாடகக் கீர்த்தனையில் கூறியுள்ளதையும் இங்கு ஒப்பு நோக்கற்பாலதாம்.

(பி-ம்.) 1. ஈந்தே விடைதந்தாள் கமலக்கண்ணுல்: தாமரைக்கண்ண ளாகி: கண்களாற்.
3. என்றம் மணியினைக் கொடுத்தான் வேத: கொடுத்தனன் வேத நூலும். 4. உய்ந்தன கால மெல்லாம். (46)

## சூடாமணிகண்ட இராமபிரான் நிலை 1291-92

1291. பைப்பயப் பயந்த காமம் பரிணமித் துயர்ந்து பொங்கி
மெய்யுற வெதும்பி யுள்ளம் மெலிவுறு நிலையை விட்டான்
ஐய னுக் கங்கி முன்ன ரங்கையாற் பற்றும் நங்கை
கையென லாயிற் றன்றே கைபுக்க மணியின் காட்சி.

கை புக்க மணியின் காட்சி - (இராமபிரான்) கையில் புகுந்த அந்தச் சூடாமணியின் தோற்றம், ஐயனுக்கு - அந்த இராமபிரானுக்கு, அங்கி முன்னர் - (திருமணச் சடங்கில் வைதிக) அக்கினியின் முன்பு, அம் கையால் பற்றும் - தன் அழகிய கையினுல் பற்றிய, நங்கை கை எனல் - பிராட்டியின் கையைப் போல, ஆயிற்று - விளங்கியது ; (ஆதலின்) பயந்த - (அதனுல்) உண்டான, காமம் - ஆசை உணர்ச்சி, பை பய பரிணமித்து - மெல்ல மெல்லப் பெருகி, உயர்ந்து பொங்கி-மேலே எழுந்து வளர்ந்து, மெய் உற வெதும்பி - உடல் நன்ருய் வெப்பமுற்று, உள்ளம் மெலிவு உறும் - மனம் தளரும், நிலையை விட்டான் - நிலைமையை நீக்கினவனுனன். அன்று, ஏ:அசைகள்.

அம்மணியை இராமபிரான் தன் கையிற் கொண்டமை தன் விவாக காலத்தில் பிராட்டி கையைப் பற்றியது போல மகிழ்ச்சியை அளித்தது. சூடாமணி பிராட்டிக்கு விவாக காலத்தில் அளிக்கப் பெற்றது என்பதும் இங்குக் கருதத் தக்கது.

(பி-ம்.) 1. பைப்பைய; பையவுட்; பையுற; பைபய; பையென: பரிணமித் துயர்ந்த பண்பின்; உயர்ந்துட் பொங்கி: பரந்த காமப் பசலைமீ தெழுந்து பொங்க. 2. எய்துவா னெய்துங் காலத் திறை விதன் விதியி னீட்டால் : மெய்யுறு வெதும்பின் சிந்தை மெலிவுறு நிலைமை விட்டான்; மெலிவுறு மெலிவை நீத்து: நிலைமை விட்டான். 3. ஐய னுங் கலங்கி.
4. கைக்கொண்ட மணியின் காட்சி (47)

1292 பொடித்தன வுரோம மேன்மேற் பொழிந்தன கண்ணீர் பொங்கித்
துடித்தன மார்புந் தோளுந் தோன்றின வியர்வின் றுள்ளி
மடித்தது மணிவா யாவி வருவது போவ தாகித்
தடித்தது மேனி யென்னே யாருளர் தன்மை தேர்வார்.

(சூடாமணியைப் பெற்றவுடன் இராமபிரானுக்கு), உரோமம் பொடித்தன - உடலின் உரோமங்கள் (நிமிர்ந்து) விளங்கின; கண் நீர் பொங்கி மேன் மேல் பொழிந்தன - கண்ணீர் மேற்கிளம்பி மேன்மேலும் சொரிந்தன; மார்பும் தோளும் துடித்தன - மார்பும் தோள்களும் துடித்தன; வியர்வின் துள்ளி தோன்றின-வியர்வையின் துளிகள் தோன்றுவன ஆயின; மணி வாய் மடித்தது-அழகிய வாய் இதழ் மடிப்புண்டது; ஆவி வருவது போவது ஆகி - மூச்சு வெளியே வருவதும் உள்ளே போவதும் போல ஆகி, மேனி தடித்தது-உடல் பூரித்தது; என்னே-என்ன வியப்பு! தன்மை தேர்வார் - அப்பொழுது இராமபிரான் அடைந்த நிலைமையை ஆராய்ந்து அறியவல்லார், யார் உளர் - யாரே உள்ளார்? (ஒருவரும் இல்லை என்பதாம்.)

மணிவாய்: பவழம் போன்ற வாய் என்னலும் ஒன்றும்; பவழம் மணிகளுள் ஒன்றாகலின். துள்ளி - துளி, சூடாமணி பெற்ற இராமபிரான் செயலை, 'தொண்டை வாய்மயி லளித்தசூடாமணி யளிப்ப, அண்டர் நாயக னம்மணி கண்மணிக் களித்தான்' (செவ்வைச் பாகவதம். 2302.) என்று கூறுஞ் சிறப்பும் நோக்கத்தக்கது. இதன் பின், அச்சுப் புத்தகங்களில் பின்வரும் செய்யுளொன்று காணப்படுகின்றது; அது, பின் 1296 இல் கூறப்படும் செய்திக்கு முரணாயிருத்தலாலும், பழமையும் சிறப்பும் பெற்ற சுவடிகளில் இல்லாமையாலும் அதிகப் பாடலாகக் கொள்ளப்பட்டது.

ஆயிடைக் கவிக ளோடு மங்கதன் முதலி னுயோர்
மேயினர் வணங்கிப் புக்கார் வீரனைக் கவியின் வேந்தைப்
போயின கரும முற்றிப் புகுந்ததோர் பொம்ம றன்னூற்
சேயிரு மதிய மென்னத் திகழ்தரு முகத்த ராகி.

(பி-ம்.) 1. பொலிந்தன கண்ணீர்: கண்ணீர் விங்கித்.
2. தோளு மார்புந்: வெயர்வின் புள்ளி; வெயர்வு மெய்யின்: தோன்றினயாவுந் துன்னி. (48)
3. மணிவாய் வீரம்: போவ தாகத்.
4. துடித்தது மேனி யென்னே காகுத்தன் தன்மை யோர்வாம்: அந்தோ யாரவன் றன்மை சொல்வார். (48)

## சுக்கிரீவன் கூறுதலும் இராமபிரான் தேறுதலும்

1293. ஆண்டைய னருக்கன் மைந்த னையகே ளரிவை நம்பால்
காண்டலுக் கெளிய ளானு ளென்றபின் காலந் தாழ
ஈண்டினு மிருத்தி போலா மென்றன னென்ற லோடும்
தூண்டிரண் டனைய தோளான் பொருக்கென வெழுந்து சொன்னான்.

(அப்பொழுது), ஆண்டையன் - அருகில் இருந்தவனுன, அருக்கன் மைந்தன் - சூரிய குமாரனுன சுக்கிரீவன், (இராமபிரானை நோக்கி), 'ஐய கேள் - ஐயனே கேட்டருள்வீராக! அரிவை - பிராட்டி, நம்பால் காண்டலுக்கு - நாம் நம்மிடம் அழைத்துக் கொணர்தற்கு, எளியள் ஆனுள் - எளிய தன்மையில் உள்ளாள், என்ற பின் - என்று அறிந்த பிற கும், காலம் தாழ - வீணே காலம் தாமதமாக, ஈண்டு இனும் இருத்தி போல் ஆம் என்றனன் - இங்கு இன்னும் இருக்கிறீர் போலும்!' என்று கூறினுன்: என்றல் ஓடும் - என்று (அவ்வாறு அவன்) தூண்டி விரைவுப் படுத்தியவுடன், தூண் திரண்டு அனைய தோளான் - தூண்கள் திரண்டு விளங்குவன போன்ற தோள்களையுடைய இராமபிரான், பொருக்கு என - விரைவாக, எழுந்து - எழுந்து நின்று, சொன்னுன் - (பின்வருமாறு 'படைகள் எழுக' என்று) சொன்னுன்.

அரிவை: இங்குப் பருவப் பெயராக ஆகாமல் பெண் என்ற பொதுப் பெயராய் நின்றது. பொருக்கென: விரைவுக் குறிப்பு; பால. திருவவ தாரப்; 42, 70. எழுந்தது, தான் செயலில் இறங்கியதைக் குறிக்கும்.

(பி-ம்.) 1. ஆண்டையின்; ஆண்டகை; ஆண்டைய வருக்கன். 2. என்ற லுங் காலந்: என்றன்ன கருத்து ளானுங். 3. ஈண்டினி திருத்தி. 4. தூண்டிரன் டன்ன: எழுந்து போனுன்; எழுந்து சொல்வான். (49)

## வானரச்சேனை எழுதல் 1294–96

1294. *எழுகவெம் படைக ளென்று னேயெனு மளவி லெங்கும்*
*முழுமுர செற்றிக் கொற்ற வள்ளுவர் முடுக்க முந்திப்*
*பொழிதிரை வேலை யேழும் புடைபரந் தென்னப் பொங்கி*
*வழுவலில் வெள்ளத் தானை தென்றிசை வளர்ந்த தன்றே,*

'எழுக வெம் படைகள் என்றுன் - வலியவானரப்படைகள் இலங்கை நோக்கி எழுவனவாக' என்று இராமபிரான் கூறினன்: (அவ்வாறு கூற லும்), ஏ எனும் அளவில் - ஏ என்று உச்சரிக்கும் கால அளவுக்குள் (அதாவது உடனே), கொற்ற வள்ளுவர் – வெற்றியுடைய பறையறை விப்போர், எங்கும் முழு முரசு எற்றி முடுக்க - எங்கும் பெரிய முரசுகளை முழக்கி விரைவுப் படுத்த, பொழி திரை வேலை ஏழும் - அலைகளை வீசும் கடல்கள் ஏழும், புடை பரந்து என்ன - இடம் விட்டு வெளியே விரிந்து சென்றனபோல, வழுவல் இல் வெள்ள தானை - பின்னடையாத (எழு பது) வெள்ளம் கொண்ட வானரச் சேனைகள், முந்தி பொங்கி - முன்ன தாக எழுந்து, தென் திசை வளர்ந்தது - தென் திசை நோக்கி அடர்ந்து சென்றன. அன்று, ஏ: அசைகள்.

**வள்ளுவர்:** முரசறைவிப்போர்; இங்கு வானரருள் முரசறைவிப் போரைக் குறித்ததாகும், வெள்ளம் - ஒரு பேரெண்; 520 **உரை.** எழுபது வெள்ள வானர சேனைகள் எழுந்தமை ஏழு கடல்களும் பொங்க எழுந்து சென்றதாக உவமிக்கப் பெற்றது.

**இதன்பின், பின்வரும் செய்யுட்கள் அச்சுப்பிரதிகளில் காணப்படு கின்றன. அவை பழைய சுவடிகளில் இல்லை. ஆதலால் அதிகப் பாடல்களாகக் குறிக்கப் பெற்றுள்ளன.**

(அ) நீலனை நெடிது நோக்கி நேமியோன் பணிப்பா னந்தம்
பால்வருஞ் சேனை தன்னைப் பகைஞர்வந் தடரா வண்ணம்
சால்புற முன்னர்ச் சென்று சரிநெறி துருவிப் போதி
மால்தரு களிறு போலும் படைஞர்பின் மருங்கு சூழ.

(ஆ) என்றுரைத் தெழுந்த வேலை மாருதி யிருகை கூப்பிப்
புன்றொழிற் குரங்கெ னுதென் றோளிடைப் புகுதி யென்னுத்
தன்றலை படியிற் றாழ்ந்தா னண்ணலுஞ் சரணம் வைத்தான்
வன்றிறல் வாலி சேயு மிளவலை வணங்கிச் சொன்னான்.

(இ) நீயினி யென்றன் றோண்மே லேறுதி நிமல வென்ன
வாய்புதைத் திறைஞ்சி நின்ற வாலிகா தலனை நோக்கி
நாயகற் கிளைய கோவும் நன்றென வவன்றன் றோண்மேல்
பாய்தலுந் தகைப்பி லானை படர்நெறி பரந்த தன்றே.

(ஈ) கருடனில் விடையிற் றோன்று மிருவருங் கடுப்பக் காலின்
அருடரு குமரன் றோண்மே லங்கத னலங்கற் றோண்மேல்
பொருடரும் வீரர் போதப் பொங்கொளி விசும்பிற் றங்கும்
தெருடரு புலவர் வாழ்த்திச் சிந்தினர் தெய்வப் பொற்பூ.

(உ) வையக மதனின் மாக்கண் மயங்குவர் வயவெஞ் சேனை
எய்திடி னென்ப துன்னி யிராகவ னினிதி னேவப்
பெய்கனி கிழங்கு தேனென் றினையன பெறுதற் கொத்த
செய்யமால் வரையே யாருச் சென்றது தகைப்பில் சேனை.

(*பி-ம்.*) 1. எழுகவென் படைஞர்; எழுகவென் படையை: என்றதோ ரளவி லெங்கும். 2. முழுமுறை சொற்றற் கேற்ற; சொற்றக் கொற்ற; முர சறைந்தார் கொற்ற வள்ளுவன் முடுக்க; வள்ளு வன் முடுக்கி; வள்ளுவர் முரசங் கொட்ட. 3. பொழிதிரை யன்ன வேலை புடைபரந்: பொழுதினில் வேலை யேழும் புவி பரந் தென்னப் பொங்கி. 4. வழுவில: தென்றிசை பரந்த வன்றால்: தென்றிசைச் சென்ற மாதோ. (50)

1295. *வீரரும் விரைவிற் போனார்*
*விலங்கன்மே லிலங்கை வெய்யோன்*
*பேர்விலாக் காவற் பாடும்*
*பெருமையு மரணுங் கொற்றக்*
*கார்நிறத் தரக்க ரென்போர்*
*கணிதமும் பிறவு மெல்லாம்*
*வார்கழ லநுமன் சொல்ல*
*வழிநெடி தெளிதிற் போனார்,*

வீரரும் விரைவில் போனார் - இராம லக்ஷமணர்களான வீரர்களும் விரைந்து சென்றனர்: வார் கழல் அநுமன் - நீண்ட கழலணிந்த அநுமன், விலங்கன் மேல் இலங்கை - திரிகூடம் என்னும் மலையின் மீதுள்ள இலங்கை நகரின், வெய்யோன் பேர்வு இலா காவல்பாடும் - சூரியன் பெயர்ந்து செல்வது இல்லாத இராவணனுடைய காவற்றன்மையையும், பெருமையும் - அவ்விராவணனுடைய (அல்லது அந்த இலங்கையினுடைய) மற்றச் சிறப்புக்களையும், அரணும் - கோட்டை முதலிய அரண்களையும், கொற்ற - வலிமைதங்கிய, கார் நிறத்து அரக்கர் என்போர் - கரிய நிறத்தையுடைய அங்குள்ள அரக்கர் என்பாருடைய, கணிதமும் - கணக்கும் (தொகையும்), பிறவும் எல்லாம் - மற்றுமுள்ள பெருமைகள் யாவற்றையும், சொல்ல - அவர்களுக்கு எடுத்துச் சொல்லிக் கொண்டுபோக, வழி நெடிது எளிதில் போனார் - (அவற்றைக் கேட்டுக் கொண்டே) பெரிய வழியையெல்லாம் எளிதாகக் கடந்து அவர்கள் சென்றார்கள்.

வீரர், அநுமன் சொல்ல வழிநெடிது எளிதில் போனார் என்க. வீரர் என்பது சுக்கிரீவன் முதலிய வானர வீரர் அனைவரையும் குறிக்கும் என்பாரும் உளர். வெய்யோன் பேர்வு இலா காவல்பாடும் - கொடியோனான இராவணனது சிறிதும் பெயர்க்க முடியாத கடிய காவற்றன்மையையும் என்று பொருள் கோடலும் அமையும். பெருமை-எண்ணிக்கையாலும். வலிமையாலும் பெரிதாய் உள்ள தன்மை. கணிதம் - கணக்கிட்டுக் கூறும் அளவு. அரண்;மதில் அகழ் முதலியன. வழிச் செல்வோர்க்கு நடையினால் உண்டாகும் சோர்வு தோன்றாதிருக்க, கதை சொல்லிக் கொண்டு செல்வது போல, அநுமன், இராவணன் பெருமை, இலங்கை நகர்ச் சிறப்பு, அரக்கர் வலிமை முதலியவற்றைச் சொல்லிக் கொண்டு சென்றான் என்பதாம். விலங்கன் மேலிலங்கை; 330, 1225.

(பி-ம்.) 1. இலங்கை வேந்தன். 2. சோர்விலாக் காவற்; சோர்விலர் வலியும்: பெருமையும் மற்றும் சொல்லி; பெருமையு மரணுதுற்ற; பெருமையுந் துணிவும் சீரும். 3. அரக்கர் தங்கள்; அரக்க ரென்னு முதலிய: கார்நிற வரக்கர் சேனை கணிப்பிலார் திறமும் மற்றும். (51)

1296. *அந்நெறி யிரண்டு நாளி லங்கதன் முதலி னோர்கள்*
*பொன்னடி வணங்கினுரைப் புகழ்ந்துடன் பொருந்திப் போவார்*
*இன்னெடும் பழுவக் குன்றி லின்னுழி யிறுத்துப் பின்னர்*
*பன்னிரு பகலிற் சென்று தென்றிசைப் பரவை கண்டார்.*

அ நெறி - அவ்வழியில், இரண்டு நாளில் இரண்டு-நாட்களில், அங்கதன் முதலினோர்கள் - (முன் அநுமனை இராமபிரான் பால் முந்திச் செல்லுமாறு அனுப்பிய) அங்கதன் முதலான வானர வீரர்களான, பொன் அடி வணங்கினுரை - (தம்) பொன்னடிகளை வணங்கினவர்களை, புகழ்ந்து - புகழ்ந்து பாராட்டி, உடன் பொருந்தி போவார் - அவர்களுடன் சேர்ந்து போகின்றவர்களான (சுக்கிரீவனின் வானரப்படை வீரர்கள்), இன் நெடும் பழுவ குன்றில்-இனிய நீண்ட சோலைகள் அடர்ந்த மலைகளில், இன் உழி-தங்குவதற்கு உரிய இனிய இடங்களில், இறுத்து - (ஆங்காங்குத்) தங்கியிருந்து, பின்னர் - பிறகு, பன்னிரு பகலில் - பன்னிரண்டு நாட்களில், சென்று - வழி நடந்து சென்று, தென் திசை பரவை கண்டார் - தென் திசையில் உள்ள கடலைக் கண்டார்கள்.

அங்கதன் முதலினோர் அநுமனை இராமபிரான்பால் முந்திச் செல்ல அனுப்பியது; 1256. பகல் - நாள். இரண்டு நாளில்-இராம லக்ஷமணர்களோடு சுக்கிரீவன் தன் வானரப் படைகளுடன் இலங்கை நோக்கிப் புறப்பட்ட இரண்டாம் நாளில், அங்கதன் முதலினோர் வந்து அப்படையுடன் சேர்ந்து கொண்டார் என்பதாம். வான்மீகத்தில் இக்காண்டம் பிராட்டி துயர் நீங்கியிருந்தாள் என்று அநுமன் இராமபிரானுக்குச் சொன்ன செய்தியுடன் முடிகின்றது.

(பி-ம்.) 1. அந்நெறியிரண்டு நாளி லங்கதன் முதலினோர்கள்: அந்நெறி நெடிதன் றெண்ணி யங்கத னநுமன் றேண்மேல்.

2. பொன்னடி வணங்கி னுரைப் புகழுடன் பொருந்திப் போவார்: புணர்ந்தனர் பொருந்திப் போனார்; புகழ்ந்துடன் பொருந்திப் போவார்.

3 பவழக் குன்றில்; பழுவக் குன்றி லின்னுழி யிறுத்திப் பின்னர்; இன்னுமை யிறுத்துப் பின்னர்: பருமாக் குன்றி லின்னுமை யிறுத்துப் பின்னர். (52)

திருவடிதொழுத படலம் முற்றும்.

கம்பராமாயணம் சுந்தரகாண்டம் முற்றும்.









# செய்யுண் முதற்குறிப்பகராதி

## [ எண் - செய்யுள் எண் ]

—★—

---

# அரும்பத முதலியவற்றின் அகராதி

## [எண் - செய்யுள் எண்]

—★—

# வரலாறுகளின் அகராதி

அகத்தியர் கடல் குடித்தது: 15. தேவர்களை வருத்திய விருத்திராசுரன் இந்திரனின் வச்சிராயுதத்துக்கு அஞ்சிக் கடலினுள் ஒளித்துக் கொள்ள, தேவர்களின் வேண்டுகோளால் அகத்தியர் அக்கடல் நீரைப் பருகி அவ்வசுரனைக் கொல்வித்தனர்.

அகத்தியர் தமிழ் உரைத்தது: 462. அகத்தியர் சிவபெருமான் பால் (முருகன்பால்) தமிழ் கற்றுப் பொதிய மலையிலிருந்து கொண்டு மாணவர்க்குத் தமிழ் கற்பித்தனர்.

அநுமன் சூரியன் தேர்மேல் குதிகொண்டது: 64, 241. அநுமன் பாலப் பருவத்தினனாயிருந்த போது, உதய சூரியனைத் தான் உண்ணத் தக்க கனியெனக் கருதி, அவனை நோக்கி வானத்தில் பாய்ந்தனன்.

ஆதிசேடனுக்கும் வாயு தேவனுக்கும் உண்டான பிணக்கு; 24. 28, 35, 1041. ஒரு காலத்தில் ஆதிசேடனுக்கும் வாயு தேவனுக்கும் எவருடைய வலிமை விஞ்சியது என்றது பற்றிப் பிணக்குண்டாக, அதனை அறியத் தேவர்களின் விருப்பப்படி, சேடன் மேருவின் சிகரமொன்றனைத் தன் உடலால் சூழ்ந்துகொள்ள, வாயு தன் முழுவன்மையுடன் அச்சிகரத்தைப் பெயர்க்க முயன்றும் கூடவில்லை; பின்பு கருடன் அங்கு வர, சேடன் உடல் சிறிது நெகிழ்வுற்றது அச்சமயம் பார்த்து வாயு பலமாக வீச, முத்தலைகளுடன் விளங்கிய அச்சிகரம் பெயர்ந்து நெடுந்தூரம் சென்று கடலில் வீழ்ந்தது. பிற்காலத்தில் இலங்கை அதன்மீது கட்டப்பெற்றது.

இந்திரன் மலைகளின் சிறகரிந்தது: 40. மலைகள் சிறகு பெற்றிருந்த காலத்தில் அவற்ருலுண்டான துன்பங்களை நீக்கும் பொருட்டு இந்திரன் தன் வச்சிராயுதத்தால் அச்சிறகுகளை வெட்டி அம்மலைகளை அசையமுடியாதபடி செய்தனன். அவனிடமிருந்து தப்பித்தது மைந்நாக மென்னும் மலையாகும்.

இராவணன் கயிலையை அள்ளியது: 12, 26, 303, 449, 451, 460, 743. இராவணன் அளகாபுரியை வென்று புட்பக விமானத்திலேறி வந்து கொண்டிருந்த போது, அது கயிலையை அணுக, அது மேல் செல்லமாட்டாமல் நின்று விட்டது; கயிலையின் பெருமையை நந்தி கேசுவரன் கூறவும், அவன் கேளாமல், தன்னைத் தடுத்த மலையைப் பெயர்த்து விடுவதாகக் கூறி

அதனை எடுத்தனன். அப்பொழுது அம்மலையிலிருந்த இருடிகள் முதலினோர் துணுக்க முற்றனர். உமாதேவி அஞ்சித் தன் கணவரைத் தழுவினள். அவற்றைக் கண்ட சிவபெருமான் தம் திருவடிப் பெரு விரலினால் அம் மலையை அழுத்த, இராவணன் அதன் அடியில் அகப்பட்டுக் கதறினான். அப்பொழுது அவன் அமைச்சர்கள் கூற, அவன் தன் தலைகளி லொன்றைத் தடிந்து, தன்கைந்நரம்புகளை அதனிற் பூட்டிஒரு, வீணையாக்கிச் சாமகீதம் பாடி இறைவனைப் போற்ற, சிவபெருமான் மகிழ்ந்து அவனை மலையினின்று விடுவித்ததோடு மூன்றரைக் கோடி ஆயுளையும், வாள் ஒன்றையும் ஈந்து விடை கொடுத்தனுப்பினார்.

இராவணன் நிவாதகவசரை ஒடுக்கியது. 766. செய்யுள் உரை காண்க.

கருடன் அமுதம் கொண்டு சென்றது: 22, 32, 43. கருடன் காசிபருக்கு விநதையிடம் தோன்றியவன்; அவன் மாற்றாந்தாயின் பால் அடிமையுற்றிருந்த தன் தாயை விடுதலை செய்ய, தெய்வலோகத்தில் கொடிய காவலில் வைக்கப் பெற்றிருந்த அமுதத்தை நாகருலகுக்கு எடுத்து வந்தான். இவ்வாறு விநதையின் அடிமையை நீக்குவித்து, உடனே தான் கொண்டு வந்த அமுதத்தை நாகர் உண்ணுதபடி அவர்களை வஞ்சனையால் அகலச் செய்து, அதனை மறுபடியும் எடுத்து வந்து தேவருலகத்தில் முன்னிருந்த இடத்தில் வைத்து விட்டான்,

கார்த்த வீரியன் 464. இவன் ஒரு மன்னன். அத்திரி முனிவர் புதல்வர் அருளால் இவன் ஆயிரங் கைகள் பெற்றான். இவன் மகளிரொடு நருமதையில் நீர்விளையாடலைச் செய்து கொண்டிருந்தான். இவன் ஆடிய நீர் அங்கு அப்பொழுது வந்திருந்த இராவணனை நனைக்க, அவன் வெகுண்டு போர் தொடுக்க, கார்த்த வீரியன் அவனைக் கட்டித் தன் நகரம் கொண்டு சென்றான். பின்பு புலத்தியன் இவனை அடைந்து புகழ்ந்து தன் மகனான இராவணனை விடுவித்துக் கொண்டு சென்றான்.

பின்பு ஒரு நாள் இவன் சமதக்னி தவம் செய்து கொண்டிருந்த இடத்தை அடைந்து, அவரிடமிருந்து காமதேனுவைக் கவர்ந்து சென்றான். அதனையறிந்த முனிவரின் குமாரனான பரசுராமன் வெகுண்டு கார்த்த வீரியனைக் கொன்றான்,

சிவபிரான் திரிபுரங்களை எரித்தது: 452, 991, 1003, 1145, 1171, 1178. தாரகாசுரன் புதல்வர்களான வித்யுன்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்ற மூவரும் சிவபெருமான் அருளால் பொன், வெள்ளி, இரும்புகளாலாகிய கோட்டைகளை அமைத்துக் கொண்டு தேவர்களை வருத்தினர். தேவர்கள் சிவபெருமானிடம் முறையிட, அவர் போருக்கெழுந்தனர். அப்பொழுது தேவர்கள் பலரும் அவருக்குப் பரிவாரங்களாக அமைந்து சென்றனர். ஆனல் அத்தேவர்களுக்கு ஆணவம் மிக, சிவபெருமான் அதனைக் கண்டு புன்னகை கொள்ள அந்நகையே திரிபுரங்களை எரித்தது,

சிவபிரான் நஞ்சுண்டது: 181, 517, 1180. தேவர்களும் அசுரர்களும் திருப்பாற் கடலைக் கடைய அதனின்று கொடிய நஞ்சு உண்டாயிற்று. அதன் கொடுமையால் உலகமெல்லாம் தீய, சிவபெருமான் அருள் கொண்டு அந்நஞ்சினைத் தாமே உண்டனர், அஃது அவர் கண்டத்தில் தங்கிற்று,

சிவபிரான் யானை உரி போர்த்தது: 78, 139. யானையின் உருவில்

தோன்றித் தேவர்களையும், பின் சிவபெருமானையும் பகைத்து வந்த கயாசுரன் என்ற அரக்கனைக் கொன்று அதன் தோலை அவர் போர்த்துக்கொண்டனர். சிவபெருமானிடம் பகைத்த முனிவர்கள் அனுப்பிய யானையை அவர் கொன்று அதன் உரியைப் போர்த்துக் கொண்டனர் என்றும் கூறுவர்.

சூரியனை அரவு தீண்டுதல்: 170, 339, 481, 545. பாற்கடலில் உண்டான அமுதைத் திருமால் மோகினி உருவங்கொண்டு தேவர்களுக்கு மட்டும் பகிர்ந்து வருவதை உணர்ந்த இராகு தேவவுருக்கொண்டு அத்தேவர்களின் இடையில் நின்று தானும் வாங்கிப் புசித்தனன்; இச்செயலைச் சூரிய சந்திரர்கள் திருமாலுக்கு அறிவிக்க, அவர் இராகுவைச் சட்டுவத்தால் தலையிலடிக்க அவன் தலைவேறு உடல் வேறாகி, அமுதம் உண்டமையால் தலை இராகு வென்றும் உடல் கேது வென்றும் ஆகி, சூரியசந்திரர்கள்மீது பகை கொண்டு அவர்களை அவ்விருவரும் பிடித்து வருகின்றனர். இச் சமயங்களே கிரகணங்கள் எனப் பெறும்.

தாருகாசுரன் வதை: 1000. தாருகன் ஓர் அசுரன் பெண்ணலன்றிப் பிறரால் கொல்லப்படலாகாதென்று வரம் பெற்றிருந்தான். தேவர்களை அவன் வருத்த, காளிதேவி அவனைக்கொன்றாள். இப்பெயருடைய வேறு அசுரர்களும் உண்டு.

திருமால் ஆமையாகி மந்தரம் ஏந்தியது: 42. திருப்பாற்கடல் கடையப் பெற்றபோது மந்தரமலை அசைய, அதனை நிறுத்தும் பொருட்டுத் திருமால் ஆமையாக அவதரித்து அதனைத் தம் மீது தாங்கிக் கொண்டனர், இதுவே கூர்மாவதாரம்.

திருமால் இரணியாக்கனை அழித்தது: 458. காசிபருக்குத் திதியிடம் தோன்றியவன்; இரண்யனின் சகோதரன். இவன் தேவர்களை வருத்தி, ஒருமுறை பூமியைப் பாய்போல் சுருட்டிக் கொண்டு கடலுள் ஒளித்தனன்; திருமால் வராகமாகி இவனைக் கொன்றனர்.

திருமால் உலகளந்தது: 33, 313: 591, 932, 1187: மாவலி ஓர் அசுரன்; பிரகலாதனின் பேரன். இவன் தேவர்களுக்குப் பகைவன். திருமால் வாமன உருவெடுத்து இவனிடம் மூவடி மண் யாசித்துப்பெற்று, பின்பு பேருருக்கொண்டு ஓரடியால் மண்ணுலகையும், ஓரடியால் விண்ணுலகையும் அளக்க, மூன்றுமடிக்கு இடமின்மையால் தன் தலை மீது அவ்வடியை ஏற்றுக் கொண்டான்.

திருமால் கஜேந்திரனைக் காத்தது: 1121: கஜேந்திரன் யானைகட்கு அரசன். ஒருநாள் ஒரு தடாகத்தில் நீரருந்தச் சென்றபோது அங்கிருந்த முதலையொன்று இதனைப் பற்றியீர்க்க, இஃது ஆயிரம் ஆண்டுகள் முயன்றும் முதலையினின்றும் விடுபட இயலாமல் களைப்புற்றுப்பின் ஆதிமூலமே என்று கதற திருமால் அங்கு வந்து முதலையைக்கொன்று அவ்வியானையைக் காத்தனர்.

திருமால் தேவர்க்கு அமுதமீந்தது 195: சூரியனை அரவு தீண்டிய வரலாறு காண்க.

திருமால் நரசிங்கமாய் இரணியனை அழித்தது: 302, 405, 935, இரணியன் திதியின் மகன்; இரணியாக்கனின் சகோதரன். எளிமையில் சாகாவரம் பெற்றவன். பிரகலாதனின் தந்தை. திருமால் இரணியாக்கனைக் கொன்றதனால் சினந்து திருமாலை முற்றிலும் பகைத்தனன். தன் மைந்தன் திருமாலின் அடிமையாயிருப்பதைக் கண்டு வெகுண்டு அவன் காட்டிய தூணினை

உதைக்க, அதினுள்ளிருந்து திருமால் நரசிங்கமாகத் தோன்ற அவரால் கொல்லுண்டான்.

திருமால் பிரமனைத் தோற்றுவித்தது: 44, 119. உலகப் பிரளயத்திற்குப் பின் பாற்கடலில் சயனித்திருந்த திருமால் தம் சங்கற்பத்தால் தம் நாபியினின்று சுவர்ண அண்டத்தை உண்டாக்கி அதனின்று பிரமனைத் தோற்றுவித்தனர். தாமரையினின்று தோற்றுவித்தனர் என்றும் கூறுவர்.

திருமால் மதுகைடவரை அழித்தது; 77. மது, கைடவன் என்ற இருவர் திருமாலிடம் தோன்றி அசுரராயினர். அவர்கள் பிரமதேவனிடமிருந்து வேதங்களைப் பறித்துக்கொண்டு நீரினுள் மறைய, பிரமனின் வேண்டுகோளால் திருமால் ஹயக்ரீவராகி அவர்களைப் பாடி மயக்கி வேதங்களைத் திரும்பப் பெற்றூர். பின்பு அவர்கள் திருமாவிடமே போர்புரிய, திருமால் அவர்களிடமிருந்தே, அவர்களை இறக்கச் செய்வதாக வரம் பெற்று அவர்களைக் கொன்றனர்.

திருமால் முரனை அழித்தது: 347, 1157. இப்பெயருள்ள அசுரர்கள் இருவர்; ஒருவனைக் கண்ணபிரான் கொன்றூர்; இவன் நரகாசுரனின் அமைச்சனும் படைத்தலைவனுமாவான்; இந்நூலிற் குறிக்கப்பெற்ற முரன் வேறனவனுகும்.

துருவாசர் இந்திரனுக்குச் சாபமிட்டது: 46 துருவாசர் ஒரு முனிவர், இவர் ஒருக்கால் தேவி அணிந்திருந்த மாலையைப் பெற்று இந்திரனுக்கு அளிக்க, அவன் அதனைத் தன் யானையிடம் கொடுத்து மிதிக்கச் செய்தமையால், முனிவர் சினங்கொண்டு அவன் செல்வமெல்லாம் இழக்கும்படி சாபமிட்டார். பாற்கடலைக் கடைந்தபோது அவற்றை இந்திரன் திரும்பவும் பெற்றுன்.

பரசுராமன் இராமபிரானுல் அடங்கியது: 456. இவர் கார்த்தவீரியனை வென்ற வரலாறு முன் கூறப்பெற்றது, இராமபிரான் இவரை வென்றமை இராமாயண வரலாருகும்; பால காண்டம் பரசுராமப் படலம் காண்க.

வாலி பாற்கடல் கடைந்தது: 46, 774, 1040. பாற்கடல் , த சமுத்திரங்களுள் ஒன்று. இதனைத் தேவர்களும் அசுரர்களும் ஒருக்கால் கடைந்தனர். அதற்காக அவர்கள் மந்தரகிரியை மத்தாவும் வாசுகியைக் கயிருகவும் கொண்டனர். மந்தரகிரி ஒரு சமயம் சரியத் திருமால் ஆமையாகி அதனைத் தாங்கி நின்றனர், முதலில் இதனின்று கொடிய நஞ்சுண்டாக அதனைச் சிவபெருமான் எடுத்து அருந்தினர். பின் பலகாலம் முயன்றும் அமுதம் வராமல் தேவாசுரர் களைத்து நின்ற போது அங்குச் சென்ற வாலி தான் ஒருவனுகவே நின்று அமுதத்தைவெளிப்படுத்தினுன், அமுதம் மோகினி உருவத்தில் வந்த திருமாலால் தேவர்களுக்கு அளிக்கப்பெற்றது.

முருகன் குன்றெறிந்தது: 1113, கிரவுஞ்சன் என்ற அசுரன் மலையுருவடைந்து முருகக் கடவுளுக்கு எதிராக நின்ற தாருகனுக்கு இடம் கொடுத்தனன்; அக்கடவுளின் சேனைத் தலைவனை வீரவாகு முதலியோரை மயக்கித் தன் குகையிலிருத்தினுன். முருகக் கடவுள் தம் வேலாயுதத்தால் அம்மலையைப் பிளந்து அசுரர்களைக் கொன்று தம் நண்பர்களை விடுவித்தார்.





